யதீந்த்ரப்ரவண ப்ரபாவம்

பிள்ளை லோகம் ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி

வித்வான் சிரோமணி

(சொல்வேந்தர்)

5.7.1967.



வித்வான், திராவிட சிரோமணி, சொல்வேந்தர்,
யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம், பிள்ளைலோகம்,
ஸ்தலசயனத்துறைவார்
78, T. P. கோயில் தெரு
திருவல்லிக்கேணி
சென்னை - 600 005

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸ்ரீபாஷ்யம்.

( ச்ருதப்ரகாசிகா ஸஹிதம் )

# தமிழ் மொழி பெயர்ப்பு.

ஜிஜ்ஞாஸாதிகரணம்

Sri bhashya with Shruthaprakashika

திருச்சி
ஸேண்ட்ஜோஸப் காலேஜ் ஸம்ஸ்க்ருத தலைமைப் பண்டிதர்
மஹாவித்வான், ஸாரஸ்வத ஸாரஜ்ஞர், கவிசிகாமணி,
ஸ்ரீமத் உ. வே. டி. வி. ஸ்ரீநிவாஸாச்சார்யா
T V Srinivasacharya (Tr.)
ஸ்வாமிகளால்
மொழி பெயர்க்கப்பெற்று.

ஸ்ரீமத் உ. வே.
A. V. கோபாலாச்சாரியார் அவர்கள், M.A., B.L.,
அவர்களால் பார்வையிடப்பட்டு.

ஸ்ரீரங்கம்.
ஸ்ரீ பாஷ்யம் தமிழ் மொழிபெயர்ப்பு ஸங்கத்து பிரிஸிடெண்டு
T. D. இராமஸ்வாமி நாயுடு அவர்களால்

கும்பகோணம்
லார்ட் ரிப்பன் அச்சுயந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.
Lord Ripon Press, Kumbakonam
1930.



Rs. 7 8 0

॥ ஸ்ரீ: ॥

# ஸ்ரீ பாஷ்யத்தின் முகவுரை.

ஸ்ரிய:பதியாயும் பரம காருணிகனாகவும் ஷாட்குண்ய பரிபூர்ணனாகவுமிருக்கிற ஸ்ரீமன நாராயணன், த்யாஜ்யோபாதேயங்களுக்கு உரித்ததான இஷ்டா நிஷ்டங்களையும், அவைகளின் ஸாதனங்களையும் நன்கு பகுத்தறிவதற்காக வேதாந்தமென்கிற ப்ரமாணதீபத்தை பகுத்தறிவுள்ள பிராணி வர்க்கங்களுக்கு அளித்து, அவதாரம் முதலியவற்றின் மூலமாக அதன் ஞான ஒளியை உலகில் நன்றாகப் பரவச்செய்தான். அத்தகைய சிறப்புற்ற ஞான தீபப்ரபையானது க்ருதயுகத்தில் அவ்வண்ணமே நிலைபெற்றிருந்தது. த்ரேதாயுகத்தில் சிறிது மாறுபட்டது. த்வாபரயுகத்தில் சிதறுண்டது. அதனால் தத்வஜ்ஞானத்தை இழந்து பராவர தத்துவ விஷயத்தில் மாறாட்டமுள்ளவர்களான ப்ரஹ்ம ருத்ராதி தேவர்கள் ஸ்ரீமன் நாராயணனைச் சரணமடைந்து முற்றிலுமழிந்துபோன ஜ்ஞானத்தை உலகின்கண் பிரகாசிப்பிக்கச்செய்ய வேண்டுமென்று வேண்ட, அவ்வண்ணமே அவர்களுடைய கோரிக்கைக்கு இணங்கி உலகமுய்யுமாறு ஸ்ரீமன் நாராயணன் தாமே பராசர மஹரிஷி வாயிலாக ஸத்யவதீ தேவிக்குப் புதல்வனாகத் தோன்றினார். நதியின் நடுத்திட்டில் ஆவிர்ப்பவித்ததினால் த்வைபாயனர் என்றும், ப்ரஹ்மஜ்ஞான தீபப்ரபையினால் ஜீவகோடிகளுடைய அஜ்ஞாநாந்தகாரத்தை ஓட்டி, மீண்டும் அது அவைகளை அணுகா வண்ணம் அதை இழுக்கும் வல்லமையுடையவராக இருப்பதுபற்றி மாதா பிதாக்கள் ப்ரத்யக் திருஷ்டியினால் க்ருஷ்ணனென்றும் பெயரிட்டு அழைத்தனர். அறியாவண்ணம் ஒன்றுபட்டுக்கலந்து குவிந்திருந்த வேதங்களை ருக், யஜுஸ், ஸாம, அதர்வ வென்று நான்காகப் பகுத்து அவ்வாறு பகுக்கப்பட்டிருக்கிற ஒவ்வொன்றையும் முறையே இருபத்தொரு விதமாயும், நூற்றொன்றுவிதமாயும, ஆயிரம் விதமாயும், ஒன்பது விதமாயும், பிரித்து அவைகளை அத்தியயனம் செய்வதற்குத் தக்க முறைகளை உபதேசித்து உலகத்தில் சிஷ்யர்கள் முகமாக பரவச்செய்ததனால் வ்யாஸரென்கிற திருநாமத்தையும் வஹித்தார். இத்தகைய மகிமை வாய்ந்தவராக இருப்பதனால் ஸாக்ஷாத வேதபுருஷனே' "ஸகோவாச வயாஸ: பாராசர்ய:" என்று புகழ்ந்தான். பரமக்ருபாநிதியான ஸ்ரீ வேதவயாஸ மஹரிஷியானவர் கர்மஸ்வரூப ப்ரதிபாதகமாக இருக்கிற அந்த வேதத்தின் பூர்வபாகத்திற்கு தன்னுடைய சிஷ்யனான ஜைமினி மஹரிஷியைக் கொண்டு பன்னிரண்டு அத்தியாயங்களடங்கிய பூர்வமீமாம்ஸா ஸூத்ரங்களையும் காசக்ருத்ஸ்ந மஹரிஷியினால் நான்கு அத்தியாயங்களடங்கிய தேவதா காண்ட ப்ரதிபாதகமான ஸூத்திரங்களையும் செய்வித்து ப்ரம்ஹஸ்வரூபப்ரதிபாதகமான உத்தரபாகத்தை நன்கு உலகில் ப்ரகாசிக்கும்படி செய்யக்கருதி, தாமே நான்கு அத்தியாயங்களடங்கிய ஐநூற்று நாற்பத்தைந்து ப்ரஹ்ம ஸூத்ரங்களைச் செய்தார். சுருங்கின அக்ஷரங்களுடனும் விரிந்த பொருளுடனும் இருப்பதுடன் ஸாரவத்தாகவும் ஸர்வதோமுகமாகவும் அநர்த்தக சப்தங்களில்லாததாகவும் நிர்தோஷமாகவுமிருப்பதனால் இந்த ப்ரஹ்ம ஸூத்திரமொன்றே ஸூத்ர லக்ஷணத்துக்கு இசைந்த இலக்கியம். யோக தசையில் மந்திரங்களை நேரில் காண்பவர்களே ரிஷிகள் என்று கூறப்படுவார்கள். அப்படி ஆசார்யருடைய உபதேசமின்றி தன் யோக மஹிமையினாலேயே மந்திரங்களை ஸாக்ஷாத்கரித்தவரான வ்யாஸ மஹரிஷியினால் இயற்றப்பட்டிருக்கிற ஸூத்திரங்களின் கருத்தை அவர்போன்ற மஹரிஷியே அறியவல்லவர். ஏனெனில் ஸர்வஜ்ஞர்களான ரிஷிகளின் அபிப்பிராயத்தை ப்ரத்யக் த்ருஷ்டி இல்லாத ஸாமான்யமான மனிதன் அறியத் திறமையுடையவனாக ஆகான். ஆர்ஷமான வசனங்கள் ப்ரம விப்ரலம்ப ப்ரமாதங்களில்லாததாகவும் ஸத்யார்த்த ப்ரதிபாதகங்களாகவு மிருப்பதனாலேயே வேதோபப்ரும்ஹணங்களாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கின்றன. ஆதலால்

அப்படிப்பட்ட மஹரிஷி குலதுரந்தரரான வேதவியாஸரால் அனுக்ரஹிக்கப்பட்டிருக்கிற ப்ரஹ்ம ஸூத்ரங்களின் கருத்தை உள்ளபடி ஆர்ஷ த்ருஷ்டியால் உணர்ந்து போதாயன மஹரிஷியினால் விரித்து உரைக்கப்பட்டுள்ள வ்ருத்திக் கிரந்தத்தை மூலமாகக்கொண்டு அவதரித்திருக்கிற ஸ்ரீ பாஷ்யமே இவ்வுலகின்கண் ஸம்ஸாரக் கடலில் வீழ்ந்து கரை காணாமல் மூழ்கித் தவிக்கிற ப்ராணிகளுக்கு வீடு பெறுவதில் இன்றியமையாத ஸாதனமாக விளங்குகிறது. ஸூத்திரங்களை அனுஸரியா நின்ற பதங்களால் எங்கு ஸூத்ரார்த்தம் எடுத்துரைக்கப்படுமோ, முதலில் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ள தன்னுடைய சொற்களே எங்கு விரித்துப் பொருள் தெளிவுபடக் கூறப்படுமோ, அதை அறிஞர்கள் பாஷ்யமெனக் கூறுகின்றனர். இவ்வாறு பகரப்பட்டுள்ள இலக்கணத்துக்கு இணங்கி இருக்கிற இந்த ஸ்ரீ பாஷ்யத்திற்கு கர்த்தா ஸ்ரீ ராமானுஜ முனிவர்.

ப்ரஹ்ம ஸ்வரூபத்தை இடைவிடாமல் எக்காலத்திலும் மனனம் செய்து அஜ்ஞான இருளை ஞானச்சுடரொளியினால் போக்கி பரமார்த்த ஸாக்ஷாத்காரம் செய்து தான் நேரில் கண்டவண்ணம் உள்ளது உள்ளபடி ப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் அதன் குண விபூதிகளையும் இதில் பரக்கப்பேசி இருப்பதால் இதை உபநிஷத்தென்றே அபியுக்தர்கள் கூறுகின்றனர். மேலும் இந்த பாஷ்யமானது திருக்கச்சிநம்பி முகமாக கச்சிமா நகரில் திருக்கோயில் கொண்டிருக்கிற ஸ்ரீ பேரருளாளன் நியமனப்படி, அந்த பகவத் ப்ரோக்தார்த்தங்களை அவ்வண்ணமே அமைத்து இயற்றி இருப்பதால் புலவறிவாளர்களான மனிதர்களால் செய்யப்பட்டுள்ள மற்ற போலிபாஷ்யங்களை விட ஆயிரம் மடங்கு மேற்பட்டதாக இருக்கிறது. ஔபநிஷத பரம புருஷ ஸ்வரூபியாக இருக்கிற ஸ்ரீ பேரருளாளன் திருக்கச்சி நம்பி முகமாக இளையாழ்வாருக்கு உபதேசித்த ரஹஸ்யார்த்தங்கள் ஆறு. அவைகளாவன:— நானே பரதத்துவம், ப்ரபத்தி மோக்ஷோபாயம். நிர்யாண ஸமயத்தில் என்னுடைய ஸ்மரணம் நுவறு மலுண்டாக வேண்டுமென்பது அவசியமில்லை. சரீரத்தின் முடிவில் மோக்ஷம். நம்முடைய மதம் விசிஷ்டாத்வைதம். பெரிய நம்பிகளை ஆச்ரயிக்க வேண்டியது என்று. உலகத்தில் ஆர்ஷ கிரந்தங்கள் அளவிறந்தவைகளாக இருந்தபோதிலும் ஸ்ரீ வால்மீகி மஹரிஷியினால் இயற்றப்பட்ட ஸ்ரீமத் ராமாயணமொன்றே ப்ரதிபாத்ய நாயகரான ஸ்ரீ ராமபிரானால் நேரில் கேட்டு அபிநந்திக்கப்பட்டதால் எவ்வாறு அஸாதாரணமான உத்கர்ஷத்தைத் தாங்கி ஜ்வலிக்கிறதோ, அவ்வாறாகவே இந்த ஸ்ரீபாஷ்யமும் உபநிஷதர்த்த விவரண ரூபமாக இருக்கிற இந்த கிரந்தத்தால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற பரம புருஷனால் நேரில் ஸ்வாபிப்ராயத்தைத் திருக்கச்சி நம்பியிடம் வெளியிட்டு இந்த ஸ்ரீ ராமானுஜமுனிவரைக்கொண்டு செய்விக்கப்பட்டிருப்பதால் மிதஜ்ஞர்களால் ப்ரமம், ப்ரமாதம், அசக்தி, விப்ரலம்பம் முதலிய தோஷங்களால் தூஷிக்கப்பட்டுள்ள மனதுடனும் ஆக்ரஹத்துடனும் சேர்ந்து சூத்ரார்த்தங்களை நன்கு பராமர்சியாமலும் முன்பின் தன்னுடைய சொற்களில் வரும் குற்றங்களைக் கவனியாமலும் துரர்த்தங்களால் நிறைந்த பிரமாண ஹீனவசன ஜாலங்களால் நிறைத்து இயற்றப்பட்டிருக்கிற மற்ற அபஸித்தாந்த கிரந்தங்களனைத்தையும் மேரு கிரியின் சிருங்கத்திலிருப்பவன் பூமியிலிருப்பவர்களைப் பார்ப்பதுபோல் பார்த்து நகையுறுகின்றது. இந்த ஸ்ரீ பாஷ்ய கிரந்தமானது விஷய வைலக்ஷண்யத்தைப் போல் வக்த்ருவைலக்ஷண்யத்தையும் பொதிந்து கொண்டிருக்கிறது.

இந்த கிரந்தநிர்மாதாவான ஸ்ரீ பகவத் ராமானுஜ முனிவர் ஸ்ரீ பெரும்பூதூரில் ஆஸூரிகுல திலகரான கேசவ ஸோமயாஜிக்கு கலியுகம் ௪௧௧௮-வதான பிங்கள வருஷம் சித்திரை மாஸம் திருவாதிரை நக்ஷத்திரத்தில் அருமைப்புதல்வராகத் தோன்றினர். வேதாந்தஸூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யமுகத்தாலே ஸமீசீனார்த்தங்களைத் தெரிவிக்கைக்

-காக தம் பக்கலில் அல்லும் பகலுமகலாமல் நிரந்தர சேஷ வ்ருத்தி நிரதராக இருக்கிற திருவநந்தாழ்வானையே எம்பெருமான் நேரில் நியமித்து இந்த இளைய ஆழ்வாராக அவதரிக்கச் செய்ததினால் இவர் தெய்வத்தன்மை வாய்ந்தவரென்று உலகிலுள்ளோர் பூஜிக்கின்றனர். இந்த மஹானுபாவர் ஜநித்தவாறே ஸ்ரீ பெரிய திருமலை நம்பிகள் ஸ்ரீ பெரும்பூதூருக்கு எழுந்தருளி சிசுவைக் குளிரக் கடாக்ஷித்து, 'லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:' என்கிறபடி திவ்யலக்ஷ்மீ ஸம்பன்னனாக இருப்பதால் இளைய பெருமாள் திருநாமமே தகும் என்று இராமாநுஜன் என்று திருநாமம் சாத்தினார். ஸத்ஸித்தாந்தத்தை உலகில் நிலைநிறுத்தி அபஸித்தாந்தங்களை ஓட்டி அஜ்ஞர்களாகவும் அநாதர்களாகவுமிருந்த ஜனங்களை ரக்ஷிக்கவந்த ஸ்வாமியானதால் உடையவர் என்றும் இந்த திவ்யவ்யக்தியை அழைப்பார்கள். இந்தத்திருநாமத்தைப் பெரிய பெருமாள் அர்ச்சகமுகத்தால் இவருக்கு அளித்தான். ஜ்ஞாநாதிகளாலும் அமாநுஷங்களான சக்தி விசேஷங்களாலும் அநிதரஸாதாரண ஜகத்ரக்ஷண ஸாமர்த்தியத்தினாலும் எம்பெருமானோடு ஐக்கிய பாவனையினால் இந்தமகா புருஷனை எம்பெருமானார் என்றும் கூறுவார்கள். இவர் பால்யத்தில் யாதவ ப்ரகாசனிடம் பூர்வபக்ஷ சாஸ்திரங்களை ஸவிஸ்தாரமாகக்கேட்டவர். ஞானவ்ருத்தராக ஆகவேஅதிபால்யத்திலேயே வைராக்யத்தால் உலகப்பற்றைவிட்டு துரீயாச்ரமத்தைக் கைகொண்டார். பிறகு இவருடைய ஞானவைராக்யாதிகளாலும், அனுஷ்டானத்தினாலும், ப்ரஹ்மஞானத்தாலும், இவரிடம் ஈடுபட்டு இவருக்கு உபாத்தியாயராக இருந்த அந்த யாதவப்ரகாசனே இவரை ஆசார்யனாக ஆச்ரயித்து த்ரிதண்டி ஸந்யாஸத்தை ஏற்று கோவிந்த ஜீயர் என்று இவரால் இடப்பட்ட நாமதேயத்தையும் வஹித்து இவருக்கு சிஷ்யனாகவுமானார். இவர் ஒன்பதினாயிரம் ஸந்யாஸிகளுடனும் பன்னீராயிரம் பரமைகாந்திகளுடனும் எங்கும் ஸஞ்சரித்து துர்வாதிகளையும் குத்ருஷ்டிகளையும் வாதத்தால் ஜயித்து ஆங்காங்கு இந்த விசிஷ்டாத்வைதமதத்தை ஸ்தாபித்துக்கொண்டு ஸ்ரீ ஸரஸ்வதி பீடத்தேற எழுந்தருள, ஸரஸ்வதியும் எதிர்கொண்டு அழைத்து தத்வார்த்தங்களைக் கொண்டு இந்தபாஷ்யம் உம்மால் இயற்றப்பட்டிருப்பதால் இந்த க்ரந்தம் ஸ்ரீ பாஷ்யமென்று உலகில் வழங்கத்தக்கது. இந்த மஹநீய க்ரந்தகர்த்தாவான உமக்கு ஸ்ரீ பாஷ்யகாரர் என்று இன்று நாம் பெயர்கொடுத்தோம் என்று சொல்லி, ஸ்ரீ பாஷ்யத்தைச் சிரஸாவஹித்து தனக்கு ஆராத்யதேவதையான லக்ஷ்மீ ஹயக்ரீவனையும் அந்த ஸ்ரீ பாஷ்யத்தையும் உடையவர்கையிலே கொடுக்கவே, உடையவரும் அந்த மஹாதனங்களைப் பெற்று மனமகிழ்ந்து மீண்டும் அநேக தேசங்களில் நிரங்குசமாக ஸஞ்சாரம் செய்து விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்தை பரவச்செய்து வைஷ்ணவஸித்தாந்த த்வஜத்தை உலகில் நிலைநாட்டினார். இந்த தத்வார்த்தப்ரதிபாதகமான ஸ்ரீ பாஷ்யக்ரந்தத்தால் உடையவர் இவ்விருள் தருமாஞாலத்தில் ஆழ்ங்கால்பட்டிருக்கிற சேதனர்களுக்கு ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களைத் தெரிவித்து வர்ணாச்ரமதர்மங்களை வழுவாமலனுஷ்டிப்பவர்களுக்கே பரமபுருஷார்த்தஸித்தியுண்டென்பதை துலக்கிக் காட்டியிருக்கிறார். இவர் இயற்றிய க்ரந்தங்கள் ஒன்பது. அவைகளாவன-ஸ்ரீ பாஷ்யம், ஸாரம்; தீபம், வேதார்த்தஸங்க்ரஹம், ஸ்ரீரங்ககத்யம், சரணாகதிகத்யம், ஸ்ரீ வைகுண்டகத்யம், நித்யம், கீதாபாஷ்யம்.

விஷயம், ஸம்சயம், விசாரம், நிர்ணயம், ப்ரயோஜனம் ! என இவ்வைந்து விஷயங்களையும் அடக்கிக்கொண்டிருப்பது அதிகரணமென்று சொல்லப்படும். அத்தகைய லக்ஷணமுள்ள அதிகரணங்கள் இதில் நூற்றைம்பத்தாறு இருக்கின்றன. ஒன்பதினாயிரம் க்ரந்தமென்று இந்த பாஷ்யம் அபியுக்தர்களால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மூலமாக இருக்கிற ப்ரஹ்மஸூத்ரமானது நான்கு அத்தி-

யாயங்களடங்கியது. ஒவ்வொரு அத்தியாயமும் நான்குபாதங்களுடன் கூடியது. முதலாவது ஸமன்வயாத்தியாயம். இரண்டாவது அவிரோதாத்யாயம். மூன்றாவது ஸாதனாத்யாயம். நான்காவது பலாத்யாயம். முதல் அத்யாயங்கள் இரண்டையும் விஷயத்விகமென்றும், பிந்தின அத்யாயங்கள் இரண்டையும் விஷயித்விகமென்றும் வேதாந்திகள் கூறுகின்றனர். நான்கு அத்தியாயங்களடங்கிய இந்த ப்ரஹ்மஸூத்ரங்களில் பதினாறு பாதங்கள் அடங்கியிருக்கின்றன. முதலாவது அயோகவ்யவச்சேதபாத மென்றும், இரண்டுமூன்று நான்குபாதங்கள் அன்யயோகவ்யவச்சேதபாதங்களென்றும், ஐந்தாவது ஸம்ருதிபாத மென்றும், ஆறாவது தர்க்கபாதமென்றும், ஏழாவது வியத்பாதமென்றும், எட்டாவது ப்ராணபாதமென்றும், ஒன்பதாவது வைராக்யபாதமென்றும்,பத்தாவது உபயலிங்கபாதமென்றும்,பதினோராவது குணோபஸம்ஹாரபாதமென்றும், பன்னிரண்டாவது அங்கபாதமென்றும், பதிமூன்றாவது ஆவருத்திபாதமென்றும், பதிநான்காவது உத்க்ராந்திபாதமென்றும், பதினைந்தாவது கதிபாதமென்றும், பதினாறாவது முக்திபாத மென்றும். கூறப்படுகிறது.

உபநிஷத்துக்களென்று கூறப்படுகிற வேதாந்த பாகங்களுக்கு விசிஷ்டாத்வைதத்திலேயே முக்கியமான கருத்து என்கிற பரமதத்வார்த்தத்தை இந்த பாஷ்யம் துலக்கமாக நிரூபிக்கிறது. அத்வைத மெனகிற பதத்திற்கு 'ஐக்யம்' என்று பொருள். இதின்வ்யுத்பத்தி இவ்வாறு கண்டுகொள்ளத்தக்கது. த்வயோர்பாவ: த்விதா, த்விதைவ த்வைதம், நத்வைதம் அத்வைதம-ஒன்றாகஇருத்தலென்று பொருள். 'விசிஷ்டஸ்ய அத்வைதம் விசிஷ்டாத்வைதம்' சித்துக்களையும், அசித்துக்களையும், விசேஷணங்களாகக்கொண்ட ப்ரஹ்மமானது ஒன்று என்றுஅர்த்தம். இதனால் ப்ரஹ்மம் ஒன்றே மெய்யாகஇருக்கும்பொருள். அதைத்தவிர்த்து மற்றது யாதும் உண்மைப்பொருளல்ல. எல்லாம் மித்யை என்று சொல்லுகிற மாயாவாதிகளின் மதக்கோட்பாடு முற்றிலும் ச்ருதிவிருத்தமென்று காட்டப்பட்டது. இந்த விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்தின் கொள்கையானது, எல்லாச்ருதிகளுடைய உண்மையான கருத்தைக் கவர்ந்துகொண்டிருக்கிறது. ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமஞ்ஜஸ்யம் இந்த ஸித்தாந்தத்திலேயே குடிகொண்டிருக்கிறது. விசிஷ்டாத்வைத மதமானது சருதிபலததினால் ப்ரஹ்மத்திறகே உபாதானகாரணத்வத்தையும், நிமித்த காரணத்வத்தையும, ஸாதிக்கிறது. ஆதலால் இவர்கள் அபின்னநிமித்தோபாதான வாதிகள் என்று உலகில வழங்கப்படுகின்றனர். ஸூக்ஷ்மசித சித் விசிஷ்டப்ரஹ்மமே காரணம். ஸ்தூலசித சித்விசிஷ்ட அந்த ப்ரஹ்மமே கார்யமாகவுமாகிறது. இநத ஸித்தாந்தததில் ப்ரஹ்மம் பரிணாமிகாரணம். இந்த ஸித்தாந்திகளைப்போல் மாயாவாதிகளும் ப்ரஹ்மததிற்கு உபாதானத்வத்தையும், நிமித்தத்வத்தையும் ஸாதிக்கின்றனர். ஆனால் அவர்கள் விவர்த்தோபாதானத்வத்தையே ப்ரஹ்மத்துக்கு ஸாதிக்கின்றனர். ப்ரஹ்மமே ஸத்யம் ஜகத் மித்யை. கானலிலும், கயிற்றிலும், முறையேதண்ணீர், ஸர்ப்பம் என்று ப்ராந்திஉண்டாவதுபோல், ப்ரஹ்மஸ்வரூபத்தை மறைக்குந்தன்மை பொருந்திய அவித்யையால் ஸ்வயம்ப்ரகாசவஸ்துவான ப்ரஹ்மமே மறைக்கப்பட்டு அதின்விக்ஷேபசக்தியினால் அதினிடம் பற்பலவிதமானப்ராபஞ்சிகவஸ்துககள் தோன்றுகின்றன. உண்மையில் ப்ரஹ்மத்தைத்தவிர மற்றது ஒன்றுமே கிடையாது. ப்ரஹ்மசைதன்யம் ஒன்றே அவித்யையினால் கவரப்பட்டதாக இருந்துகொண்டு நாநாவிதசேதநாசேதநவர்க்கங்களாகப் பாவிக்கிறது. இவ்வளவு ப்ரமங்களுக்கும் அதிஷ்டானம் ப்ரஹ்மமே. அஹம்ப்ரஹ்மாஸ்மி என்கிற மஹாவாக்யார்த்தஜ்ஞானத்தால் முற்கூறப்பட்டுள்ள அவித்யை நீங்கி தன் கண்டத்திலுள்ள மணியைத்தான் தெரிந்துகொள்வதுபோல தன் ஸ்வரூபத்தை 'நானே ப்ரஹ்மமாக இருக்கிறேன்' என்று தான் தெரிந்துகொள்வதுதான் மோக்ஷமென்றும் கூறு

கின்றனர். இந்த அத்வைதஸித்தாந்தத்தில் ம்ருஷாவாதிகள் அபேதச்ருதிகளைத் தவிர்த்து மற்ற எல்லாச்ருதிகளுக்கும் எள்ளும் தண்ணீர் வார்த்துவிட்டார்கள். பௌத்தர்களோ ச்ருதிகள் அனைத்துக்கும் தாரைவார்த்தார்கள்.

இந்தவிசிஷ்டாத்வைதஸித்தாந்தமோ எல்லாச்ருதிகளுக்கும் நல்வரவுகூறி அவைகளின் வரவை ஏற்று அவைகளைத் தலைவர்களாக ஏற்படுத்தித் தான் அவைகளுக்கு விதேயமாக இருந்து தொண்டுபுரிகிறது. பேதச்ருதிகள் அபேதச்ருதிகள் ஸகுண ச்ருதிகள் நிர்குணச்ருதிகள் எல்லாவற்றிறகும் இம்மதத்திலேயேஸாமஞ்ஜஸ்யம் ஸம்பவிக்கிறது. வேதபுருஷனுடைய உண்மையான அபிப்ராயத்துக்கு இதுதான் இணக்கமுள்ள மதமாக இருக்கிறது. பேதச்ருதிகள் கூறியபடி இந்தமதத்தில் ப்ரஹ்மமும் பற்பல சிதசித்வஸ்துக்களும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. அபேதச்ருதிகளுக்கும் பேதச்ருதிகளுக்கு பாதமின்றி விசிஷ்டவஸ்துவின் ஐக்யத்தில் கருத்து கூறப்பட்டிருக்கிறது. ஸகுணச்ருதிகளுக்கு இந்த ஸித்தாந்தத்தில் நிகரற்ற முடிசூட்டப்பட்டிருக்கிறது. நிர்குணச்ருதிகளுக்கும், ஸகுணச்ருதிகளுக்கு விரோதமின்றி ஹேயகுணங்களின் இன்மையை உணர்த்துவதில் நோக்கு கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் ஸர்வச்ருதி மனோஹரமான இந்த ஸத்ஸித்தாந்தமானது இம்மண்ணுலகில் கற்பகவிருக்ஷம்போல் வேண்டும் பயன்களைப் பயப்பதில் பத்தகங்கணமாக பிரகாசிக்கிறது. ப்ரஹ்மமேப்ரபஞ்சரூபமாக பரிணமிக்கிறதென்று கூறினால் அப்போது ப்ரஹ்மத்திற்கு ஸ்வரூபவிகாரம் ஏற்படுகிறது. இது நிர்விகாரச்ருதிகளுக்கு விரோதமென்று வினவப்படுமேயாகில், அவ்வண்ணமல்ல; காரணவஸ்தையிலும்கார்யாவஸ்தையிலும் ப்ரஹ்மத்தைவிட்டு அகலாமல் அத்துடன் சேர்ந்தேஇருக்கிற சிதசித்வஸ்துக்களே காரியாவஸ்தையில் ஸ்தூலரூபமான ஸ்வரூபஸ்வபாவவிகாரங்களைக் கொள்ளுகின்றன. காரணவஸ்தையில் அவைகளே ஸ்வகாரணத்தில் ஸூக்ஷ்மமாக ஒடுங்கி ப்ரஹ்மத்தைவிட்டு தனித்து பிரித்து உரைக்கக் கூடாவண்ணம் நிலைபெற்றிக்கின்றன. சித்துக்களுக்கு ஸ்வரூபவிகாரம் கிடையாது. ஸ்வபாவ விகாரமாத்திரமே. அசித்துக்களுக்கோ ஸ்வரூப விகாரம் ஸ்வபாவவிகாரம் இரண்டும் உண்டு. சித்துக்களுக்கு ஸ்வரூபவிகாரமென்பது ஞானவிகாஸம். அசித்துக்களுக்கு ஸ்வரூப விகாரமென்பது ஸூக்ஷ்ம ரூபத்தைவிட்டு ஸ்தூல ரூபத்தைத் தாங்கி இருத்தல். ஸ்வபாவவிகாரமென்பது புதிதாக ஆவிர்பவித்திருக்கிற ரூப, ரஸ, கந்த, ஸ்பர்ச, சப்த, குணங்களோடு கூடியிருத்தல். இந்த விகாரங்கள் ப்ரஹ்மத்தினிடம் விசேஷணங்களாக இருக்கிற சித்துக்களிடத்திலும் அசித்துக்களிடத்திலும் ஸம்பவிக்கிறதேயொழிய, விசேஷ்யபூதமான ப்ரஹ்மத்தினிடம் ஒருக்காலும் ஸம்பவிக்கிறதேயில்லை. அது இரண்டு அவஸ்தைகளிலும் நிர்விகாரமாகவே இருந்துகொண்டு ஜ்ஞானாநந்தமயமாகவும் தேசகால வஸ்து பரிச்சேதமில்லாததாகவும் அமலமாகவும் ஜ்வலிக்கிறது. சிதசித்விசிஷ்டவஸ்துவே விகரிக்கும்பொழுது விகாரம் பேதமின்றி மூன்றிலும் ஸம்பவிக்கவேண்டியதாக இருக்க எங்ஙனம் விசேஷணம்சங்களான சிதசித்துக்களில் மாத்திரம்? என்று கேட்கில், மூன்று வஸ்துக்களுக்கும் ஸ்வரூப ஸ்வபாவங்கள் வ்யவஸ்திதங்களாகஇருப்பதால் சேர்ந்திருத்தலாலேயே ஒன்றின் ஸ்வபாவம் மற்றொன்றுக்கு வருவதற்கு ஹேதுவில்லை. விசேஷணமாக நிற்கிற சித்ஸம்பந்தத்தால் ப்ரஹ்மத்துக்கு விகாரம் ஏற்றுக்கொள்ளப் படுமேயாகில் ப்ரஹ்மம் அபுருஷார்த்தங்களுக்கு ஆஸ்பதமாகும். அவ்வாறே அசித்ஸம்பந்தத்தால் ப்ரஹ்மத்திற்கு விகாரம்வரின் ஸ்வரூப ஸ்வபாவாந்யதாபாவங்கள் ஸம்பவிக்கவேண்டியதாகும். நிர்விகார ச்ருதிபலத்தால் இவைகள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன. எந்த அவஸ்தைகளிலும் ப்ரஹ்மத்தை விகாரம் அணுகா. சிகப்பு, வெளுப்பு, கருப்பு நிறமுள்ள மூன்று நூல்களால் நெய்யப்பட்ட ஒரு வஸ்திரத்தில் எந்த எந்த நூல்கள் எந்த எந்த இடங்களில் போய் இருக்கிறதோ அவ்வவ்விடங்

களில் அந்தந்த நிறமிருக்கிறதே ஒழிய இடம் மாறி நிறங்கள் கலந்து காணப்படுகி. தில்லை. அவ்வாறாகவே காரணாவஸ்தையைவிட்டு கார்யாவஸ்தையை அடைந்திரு ரும் ஸமயத்தில் நிர்விகார ஸ்வபாவமான ப்ரஹ்மம் நிர்விகாரமாகவே இருக்கிறது காரணாவஸ்தையில் ஸ்வபாவ ஸங்கோசமுள்ளதாக இருந்த சித்துக்கள் கார்யாவஸ்தை யில் ஞானவிகாஸரூபமான ஸ்வபாவ விகாரத்தைப் பெறுகின்றன. இங்ஙனமே காரண வஸ்தையில் ஸங்குசித ஸ்வரூப ஸ்வபாவமுள்ள அசித்துக்களும் கார்யாவஸ்தையி ஸ்தூல ஸ்வரூப விகாரத்தையும் வ்யக்தமான ரூபரஸ கந்தஸ்பர்ச சப்தரூப விகார ங்களையும் அடைகின்றன. ஆகையால் சிதசித்துக்களை சரீரங்களாகக் கொண்டிருந் போதிலுங்கூட அவைகளின் ஸம்பந்தத்தினால் நிர்விகாரமான ப்ரஹ்மத்திற் அபுருஷார்த்தாச்ரயத்வமும் ஸ்வரூபஸ்வபாவவிகாரமும் ஸம்பவிப்பதில்லை. ஆயினு கார்யதசையில் ஸ்தூல நியந்த்ருத்வ ரூபமான விகாரம் ப்ரஹ்மத்தை அணுகமே அணுகும். அப்படிப்பட்ட விகாரம் ப்ரஹ்மத்திற்குவரின் யாதொரு ச்ருதிவ்யாகோ மில்லாததினால் அது மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

அதாதோ தர்ம ஜிஜ்ஞாஸா என்கிற ஸூத்ரம் தொடங்கி 'அநாவ்ருத்திச்சப்தா அநாவ்ருத்திச் சப்தாத்' என்கிற ஸூத்திரம்வரையிலுள்ள இருபது அத்தியாயங்களட ங்கிய ஸூத்ரங்கள் அனைத்தும் 'கர்மகாண்டம் ப்ரஹ்மகாண்ட'மென்று வழங்குகிற இ ண்டுபாகங்களடங்கிய வேதமென்கிற ஒரு ப்ரபந்தத்தின் வியாக்கியானமானதா லமந்த்ரமும் ஒரே சாஸ்திரம். இது விஷயத்தில் போதாயன மஹர்ஷியின் 'ஸம்ஹி மேதச்சாரீரகம் ஜைமினீயேந ஷோடசலக்ஷணேந இதி சாஸ்த்ரைகத்வஸித்தி:' என் ற வசனம் முக்கிய ப்ரமாணம். இவற்றுள் முந்தியபாகமான பூர்வ மீமாம்ஸாசாஸ் த்திரத்தினால் பசு புத்ரன வ்ருஷ்டி அன்னம் ஸ்வர்க்கம் முதலிய ஐஹிகாமுஷ்மிகபல களுக்கு ஸாதனமான தர்மம் நிரூபிக்கப்படுகிறது. "உத்தரபாகமான சாரீரக மீமாம்ஸ சாஸ்திரத்தில்" ப்ரஹ்மஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது. இந்த சாரீரக மீமாம்ஸாசாஸ்தி த்தில் 'பூர்வத்விகமென்று'' வழங்கப்படுகிற முதல் இரண்டு அத்தியாயங்களாலும் சேத சேதனங்களைக்காட்டிலும் விலக்ஷணமாயும் எல்லாஜகத்துக்களுக்கும் காரணமாகவும் க்கிறப்ரஹ்மத்தின ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது. 'உத்தரத்விக'' மென்கிறபிந்தின ண்டு அத்தியாயங்களாலும் முறையே உபாஸனமும் பலமும் நிரூபிக்கப்படுகிறது. அ லும் ஸமன்வயாத்யாயம் என்கிற முதலத்தியாயத்தில் ப்ரஹ்மத்திற்கு ஜகத் காரண வம் நிரூபிக்கப்படுகிறது. எல்லாகாரணவாக்கியங்களும் ப்ரஹ்மத்தினிடம் நன்றாக அ வயிப்பதால் இதற்கு ஸமன்வயம்என்று அன்வர்த்தமான நாமதேயம். இதிலும முதல் ருக்கிற நான்கு ஸூத்ரங்களால் இந்த வேதாந்த சாஸ்திரமும் ஆரம்பிக்க வேண்டு இல்லை எனகிற சங்கையை நிராகரித்து சாஸ்திராரம்ப ஸமர்த்தனம் செய்யப்பட் ருப்பதால் இந்த நான்கு ஸூத்திரங்களும் சேர்ந்து ஒரு பேடிகை என வழங்கப் கிறது.

இந்த சாரீரசாஸ்திரத்தில் முதன்மை வாய்ந்துள்ள நான்கு ஸூத்திரங்களாலு முறையே சாஸ்திரத்தின் அரம்பத்திற்கு மூலமாக இருக்கிற வ்யுத்பத்தியின இன்மை, ப்ரதிபத்தியினது தௌஸ்த்யம், மற்றொன்றினால் ஸித்தித்தல், பயனில் மை என்கிற இந்நான்கு சங்கைகளும் நிராகரிக்கப்பட்டன. முதல் அத்தியா தில் முதல் பாதத்தால் ப்ரஹ்மமானது ஜகத்காரணமே என்பதும், மற்ற மூன்று ங்களால் ப்ரஹ்மமே ஜகத் காரணம் என்பதும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதல ப்ரஹ்மலக்ஷணத்திற்கு மந்தபுத்திகளால் ஸந்தேஹிக்கப்பட்ட அஸம்பவாவ்யாப்தி ஷங்கள் பரிஹரிக்கப்பட்டன. இவ்வாறு முதல்அத்தியாயத்தால் சிதசித்விலக்ஷண ம், ஞாநாநந்த ஸ்வரூபியாகவும், அபரிமிதோதாரகுண ஸாகரமாகவும், நிகில

தேககாரணமாகவும் ஸர்வாந்தராத்மாவாகவுமிருக்கிற பரப்ரஹ்மமானது வேதாந்தங்களால் அறியத்தக்கதென்று கூறப்பட்டது. பிறகு இந்த அர்த்தம் எவ்விதத்தாலும் ப்ரமாணங்களாலோ, யுக்திகளாலோ, நியாயங்களாலோ அசைக்கவொண்ணாதது என்பதை நிரூபிப்பதற்காக இரண்டாவதுஅத்தியாயம் தொடங்கப்படுகிறது.இதற்கு அவிரோதாத்தியாயம் என்று பெயர். முற்கூறப்பட்டுள்ள பொருள்களில் சுருதிகளுக்கும் ப்ரமாணங்களுக்கும் ஸ்மிருதிகளுக்கும் நியாயங்களுக்கும் விரோதமின்மையை விளக்கிக்காட்டுவதுபற்றி இதற்கு இப்பெயர் வாய்ந்துள்ளது. இந்த அத்தியாயமானது "ஸ்மிருதிபாதம், தர்க்கபாதம், வியத்பாதம், ப்ராண பாதம்" என நான்கு பாதங்களடங்கியது. முதலாவது ஸ்மிருத்யதிகரணத்தில்ஸாங்கியஸ்மிருதி விரோதம் வருவதால் வேதாந்தங்களுக்கு ப்ரஹ்மபரத்வம் சொல்லக்'கூடாதென்று சொல்லுகிற ஸாங்க்யனுடைய ப்ரத்யவஸ்தானத்தைக் கணிசித்து வேதத்தால்;புகழப்பெற்றவர்களும், யோகதசையில் மந்திரங்களை ஸாக்ஷாத்கரித்தவர்களும்,ஆப்த தமர்களுமான மன்வாதிகளுடைய தத்துவார்த்த ப்ரதிபாதகங்களான அநேக ஸ்மிருதிகளின் விரோதம் வருவதால் ப்ரமம் விப்ரலம்பம் ப்ரமாதம் முதலிய தோஷங்களுள்ள பரிமித ப்ரஜ்ஞரான கபிலரிஷியினுடைய ஸ்மிருதியானது ஆதரிக்கத் தக்கதல்ல வென்பதை ப்ரமாணங்களாலும் அவைகளுக்கு உபஷ்டம்பகங்களானயுக்திகளாலும் நிரூபித்திருக்கிறார். அதற்கடுத்த அதிகரணத்தால் அப்ரஹ்மாத்மக ப்ரதான காரணவாதியான ஹிரண்ய கர்ப்பரால் செய்யப்பட்டுள்ள யோக ஸ்மிருதியும் ச்ருதி விரோதத்தால் தகர்க்கப்பட்டது. பிறகு முறையே பாசுபதமதம் முதலிய புறச் சமயக்கோட்பாடுகளும் நிரஸிக்கப்பட்டு பரபக்ஷநிரஸனத்தை முன்னிட்டு ஸ்வபக்ஷ ஸ்தாபனமும் செய்யப்பட்டிருக்கிறது.

மூன்றாவதான உபாஸனாத்தியாயத்தினால் ப்ரஹ்மப்ராப்திக்கு உபாயம் சிந்திக்கப்படுகிறது. இது வைராக்கியபாதம், உபயலிங்கபாதம் குணோபஸம்ஹாரபாதம், அங்கபாதமென நான்கு பாதங்களடங்கியது. ப்ரஹ்மப்ராப்திக்கு உபாயபூதமான உபாஸநத்தின் சிந்தனமிங்கு செய்யப்படுகிறது. அடையப்படத்தக்க ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்ற வஸ்துக்களிடம்'பற்றுதலில்லாமலிருத்தலும், அடையப்படத்தக்க ப்ரஹ்மத்தினிடம் ஆசையும், உபாஸனாரம்பத்திற்குச் சிறந்த உபாயங்களாதலால் அவைகள் ஸித்திப்பதின்பொருட்டு ஜீவனுக்கு லோகாந்தரஸஞ்சாரத்திலும் ஜாகரண ஸ்வப்நாத்யவஸ்தைகளிலும் ஸம்பவிக்கிற தோஷங்களும், ப்ரஹ்மத்திற்கு அப்படிப்பட்ட தோஷங்களில்லாமலிருத்தலும்,ஸமஸ்தகல்யாண குணங்களுக்கு ஆஸ்பதமாக இருத்தலும், முறையே ஒன்று இரண்டு பாதங்களால் ப்ரதிபாதிக்கப் படுகிறது. மூன்றாவது பாதத்தில் ப்ரஹ்மோபாஸனங்களுடைய குணோபஸம்ஹார விகல்ப நிர்ணயத்தின்பொருட்டு வித்யைகளின் பேதாபேத சிந்தை தொடங்கப்படுகிறது. நான்காவதான அங்கபாதத்தில் வித்யையினால் புருஷார்த்தமா? அல்லது வித்யை அங்கமாகக்கொண்ட கர்மாவினால் புருஷார்த்தமா என்பது வ்சாரிக்கப்படுகிறது. இவ்விதமாக மூன்றாவது அத்தியாயத்தினால் ஸாதனங்களோடு வித்யை சிந்திக்கப்பட்டது. நான்காவதான பலாத்தியாயத்தில் வித்யைகளின் ஸ்வரூப சோதனத்தை முன்னிட்டு வித்யாபலம் சிந்திக்கப்படுகிறது. இந்த விசிஷ்டாத்வைத வேதாந்த ஸித்தாந்தத்தில் புண்யம் பாபமென்கிற இருவினைகளும் தீர்ந்து கர்மபந்தத்தினின்று விடுபட்டு மூர்த்தன்ய நாடியினால் உத்க்ரமித்து தேவயான மார்க்கத்தால் அப்ராக்ருதமான ஸ்தான விசேஷத்தை அடைந்து பகவத்ஸான்னித்தியம் பெற்று தன் முடியில் அந்த பரமபுருஷனுடைய சரணாரவிந்த ஸம்பர்க்கத்தால் குணாவிஷ்காவிர்ப்பாவத்தைப் பெற்று மீண்டும் ப்ரக்ருதிஸம்ஸர்க்கத்தை அடையாமல்பரப்ரஹ்மத்தோடு வாசியற அகண்டபரிபூர்ணாநந்தத்தை ஜீவன் அனுபவிப்பதே மோக்ஷ

மெனக் கூறுகின்றனர். இந்த பரம புருஷார்த்த ப்ராப்தியே வேதாந்த சாஸ்திரத்திற்கு பரமப்ரயோஜனம். இந்த அத்தியாயத்தின் முதல் பாதத்தில் ப்ரஹ்ம ப்ராப்திக்கு ஸாதனமாக விதிக்கப்பட்டிருக்கிற வேதனமானது ஒரு தரம் அனுஷ்டித்தாலே போதுமென்பதுதான் சாஸ்திரத்தினது கருத்தா? அல்லது அடிக்கடி பலதடவை அனுஷ்டிக்க வேண்டுமென்பது சாஸ்திரத்தினது கருத்தா என்று விசாரித்து வேதனம் அஸக்ருதாவ்ருத்தமே சாஸ்திரார்த்தமென்று தெளிய நிர்ணயம் கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவது பாதத்தால் ஜீவனுடைய உத்க்ராந்தி ப்ரகாரம் சிந்திக்கப்படுகிறது. மூன்றாவது பாதத்தால் மூர்த்தன்ய நாடியினால் உத்க்ரமித்துச் செல்லுகிற வித்யா நிஷ்டனுடைய மார்க்கம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இவவாறாக ப்ரஹ்மத்தை உபாஸிப்பவர்களுக்கும் ப்ரக்ருதி வியுக்தமாகவும் ப்ரஹ்மாத்மகமாகவும் ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தை உபாஸிப்பவர்களுக்கும் அர்சிராதி மார்க்கத்தால் மறுபடி ஸம்ஸாரத்தில் மீட்சி இல்லாவண்ணம் கமனம் கூறப்பட்டது. நான்காவது பாதத்தால் முக்தர்களுடைய ஐச்வர்யப்ரகாரம் நனகு ஸவிஸ்தாரமாக உபபாதிக்கப்பட்டிருக்கிறது.

வேதநம் உபாஸனம் தியானம் பக்தி அநுத்யானம் இந்த பதங்களெல்லாம் பர்யாயங்கள். "நிதித்தியாஸன" மென்கிற ஒரு அர்த்தத்தையே இவைகள் உணர்த்துகின்றன, நிதித்யாஸனமாவது—அதிவிசதமான ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாயும் தைலதாரை போல இடை வெளியற்றதாயும் உத்க்ரமணகாலம்வரையில் அனுவர்த்திக்கத் தக்கதாயும் நாள்தோறும் அப்யாஸத்தினால் உண்டுபண்ணத்தக்க அதிசயத்தோடு கூடியதாயுமிருக்கிற பரமபுருஷவிஷய மான ப்ரீதிரூபாபன்ன ஸ்மருதி ஸந்ததியே. இதுபரபக்தி,பரஞ்ஞானம், பரமபக்தியென்று உத்தரோத்தரம் மேல் மேல் சிறப்புள்ள மூன்றுபர்வாக்களுடன் கூடியது. இந்த பக்தியே மோக்ஷஸாதநமென்பது இந்த வேதாந்தசாஸ்திரத்தின் பரமதாத்பர்யம். இதைக்கருத்தில் கொண்டே இந்த ஸ்ரீபாஷ்ய கிரந்தத்தில் தொடக்கத்திலே "சேமுஷீ பக்திரூபா" என்று இன் நூலாசிரியர் பக்தியையே ஆசம்ஸித்தார். இந்த பக்திமார்க்கததில் இழிய வலலமை இல்லாதார்க்கு ப்ரபத்திதான் மோக்ஷாபாயமாக அணுகத்தக்கது. இதுதான் எளிதில் அந்த பரமபுருஷனை வசீகரிப்பதற்குத்தகுந்த ஸாதனம். இந்தஅர்த்தத்தை "தஸ்யசவசீகரணம் தச்சரணாகதிரேவ", என்று ஸ்ரீபாஷ்யகாரரே இந்த கிரந்தத்தில் ஆநுமாநிகாதிகரணத்தில் அருளிச்செய்தார். பக்தியில் த்ரைவர்ணிகர்களுக்கே அதிகாரம். சூத்ரர்கள் முதலியவர்களுக்கு அதிகாரமில்லை. பக்தியென்பது அவதாநத்தாலும் நெடுங்காலத்தாலும் சக்தியினாலும் ஞானத்தாலும் காலவிளம்பஸஹநசக்தியினாலும் ஓயாமலனுஷ்டிப்பதாலும் ஸாதிக்கத தக்கதாக இருப்பதுபற்றி அசக்தர்களுக்கு அஸாத்தியமே. ப்ரபத்தியோ வர்ணவயவஸ்தை இல்லாமலே அந்தணர்முதலாக அந்தியர்ஈறாக அனைவர்களாலும் எளிதில் அனுஷ்டிக்கத்தக்கதாக இருப்பதாலும் ஸ்வல்பமாதலாலும் ஒருதடவை ஒருக்ஷணம் செய்யதக்க கார்யமாக இருப்பதாலும் அந்திமஸ்ம்ருதியை அபேக்ஷியாமலே மோக்ஷரூபமான பரமபுருஷார்த்தத்தைப் பயக்கும் தன்மைவாய்ந்திருப்பதாலும் இதையே அசக்தர்கள் இக்கலியில் அவலம்பிக்கின்றனர். இந்த கிரந்தத்தில் மஹாத்மாவான ஸ்ரீபாஷ்யகாரரால் புறச்சமயங்கள் முற்றிலும் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. அச்சமயஙகளுள் எந்தந்த அம்சங்கள் வேதவிருத்தங்களோ அவைகள் நிராகரிக்கப்பட்டிருககின்றன. இதில் "ப்ரத்யக்ஷம், அனுமானம், சப்த"மென மூன்றுப்ரமாணங்களே அப்யர்ஹிதங்களாதலால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ச்ருதிகளின் தாத்பர்யத்தை நனகு பராமர்சித்து சிதசிதீச்வர தத்துவவ்யவஸ்தைகளும் செய்யப்பட்டிருக்கின்றன. இதில் தத்துவங்கள் 26. பக்ஷபேதத்தால் கால-

த்தைச்சேர்த்து 27 தத்துவங்களென்றும் சொல்லுவார்கள். சுத்தஸத்துவத்தைச் சேர்த்து 28 என்றும் சொல்வது உண்டு. ஆன்மாக்கள் "பத்தர் முக்தர் நித்யா" என மூவகைப்பட்டிருக்கின்றனர். மோக்ஷதசையில் முக்தனானவனுக்கு ப்ரப்ரஹ்மத்தோடு ப்ரஹ்மயாதாத்ம்யாநுபவரூபமான போகமாத்திரத்தில் ஸாம்யமுண்டு. உலகத்தை ஆக்கல், அழித்தல்,நிருத்தல் இவை மூன்றும் அஸாதாரணப்ரஹ்மக்ருத்யமே. இத்தமூன்றுடன் லக்ஷ்மீபதித்வமும் அந்த ப்ரஹ்மத்துக்கே அஸாதாரணம்.

ந ஶூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:।
ஸர்வவர்ணேஷு தே ஶூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்தநே ॥

என்று பகவத்பக்தியாகிற குணவிசேஷ ஸத்பாவங்களாலே நான்காவது வர்ணத்தார்களுக்கு ப்ராஹ்மண்யமும், உத்க்ருஷ்டவர்ணத்தார்களுக்கு சூத்ரத்வமும் சொல்லப்பட்டிருக்கிறது. "திருஸாரபியானாலும் கோத்வம் கழியாதிறே" என்கிற அபியுக்த வசனத்தின்படி ஜாதிமாறாவிட்டாலும் பகவத்பக்தியின் ப்ரபாவத்தால் சூத்திரர்களுக்கும் பிராஹ்மணர்களைப்போல் ச்ரைஷ்ட்யமும் மரியாதையும் உண்டாகிறதென்பது கண்டாகுருஷ்டமென்று பூர்வாசார்யர்கள் கூறி இருக்கின்றனர். பரமபுருஷார்த்தரூபமான மோக்ஷத்தைப் பெறுவதில் எல்லோரும் ஸமானர்கள். அதில் ஒருத்தருக்கும் வேற்றுமை இல்லை.

யோஹ்யேநம் ஶ்வபாகம் வேத தேவா அபி ந தம் விது:।

என்று பகவத்ஜ்ஞானமுடையவனுடையப்ரபாவம் தேவர்களாலும்பரிச்சேதிக்கவொண்ணாதென்கிறார்களிறே. 'குலந்தரும்' என்கிற பாட்டுக்கு வியாக்கியானம் பண்ணின அபியுக்தரும் "ஜன்மத்தால் வ்ருத்தத்தால் குறைந்தானொருத்தனுக்கு பகவத்ஸம்பந்தமுண்டானால் அவனை இவையுடையானொருத்தன் தாழ நினைக்கக்கூச வேண்டும்படியாயிற்று பகவத் ப்ரபாவமிருக்கும்படி "என்று கூறி, "ச்லாகை குணநிபந்தனை" என்று நிஷ்கர்ஷித்தார்.

ஆபஸ்தம்பதர்மத்தில் ஆர்யாதிஷ்டிதா வா ஶூத்ரா: ஸம்ஸ்கர்த்தார: ஸ்யு:। என்று பிராஹ்மணனுக்கு வைச்வதேவார்த்தமான அன்னத்தை பக்குவம்செய்வதில் நான்காவது வர்ணத்தார்கள் தகுதியுள்ளவர்களென்றுஸ்பஷ்டமாகப்பகர்ந்திருக்கிறார்.

உபாயஶக்தி: ப்ராரப்த வ்யதிரிக்தாக நாஶநீ ।
ஸாத்யஶக்திஸ்து ஸா ஹந்த்ரீ ப்ராரப்தஸ்யாபி ஸாத்வி ॥

என்கையால் ஸர்வோத்தமமயான ஸாத்தியபக்தி என்கிற ப்ரபத்தியை அனுஷ்டித்து ப்ராரப்தபாபங்களையும் கழித்து நிர்மலஸ்வரூபர்களாக பகவத்ப்ரஸாதத்தை எதிர்பார்த்திருக்கிற பாகவதோத்தமர்களுக்கு எவர்கள்தான் ஸமானர்கள். சமாதிகுணங்களாலும் வ்ருத்தத்தாலும், ஆசாரத்தாலும், சீலத்தாலும், பாகவதோபாஸனத்தாலும், ஆசார்யப்ரதிபத்தியினாலும் பகவத்பக்தியினாலும், மற்றவர்களைப்போலல்லாது விசேஷித்து ஸச்சூத்ரர்களென்று வியவஹரிக்கப்படத்தக்க வ்யக்திகளுக்கு புராணேதிஹாஸங்களில்போல் அத்யாத்ம சாஸ்திரத்திலும் ப்ரவ்ருத்தி அப்யர்ஹிதமே.

ஶ்ராவயேச்சதுரோ வர்ணாந் க்ருத்வா ப்ராஹ்மணமக்ரத: ।

என்கிறவசனத்தின்படி ப்ராஹ்மணமுகமாக உபதேசம்பெற்று புராணேதிஹாஸார்த்தங்களைக்ரஹிப்பதுபோல் அத்யாத்மசாஸ்திரார்த்தத்தையும் ஆசார்யமுகமாக உபதேசம் பெற்று நிஷ்கர்ஷம்செய்து ஸம்சயவிபர்யயங்களறதேவதாஸ்வரூபமின்னதென்று தெளிந்து பந்தநிவ்ருத்தியை முன்னிட்டு மோக்ஷஸாம்ராஜ்யத்தைப் பெறுவதற்கு யாவரும் தகுதியுள்ளவர்கள். எல்லோரும் எளிதில் அதிகரிக்கக்கூடியதான லலிதமான தமிழ்பாஷையில் தூலவகாஹமான வேதாந்தார்த்தங்களை பண்டிதர் முதலாக

பாமரர் எளுக அறிந்து ஆநந்திக்கும்படி செய்த இம்மஹான்களுடைய உதாரஸ்வபாவத்தை என்னென்று எடுத்து உரைப்பது. வர்ணபேதமின்றி எல்லாரும் இந்த ஸ்ரீ பாஷ்யத்தை இந்த தமிழ்பாஷையினால் அறிந்து உஜ்ஜீவிக்கும்படியான பாக்கியம் இம்மண்ணுலகில் இந்தக்ரந்தத்தின் வாயிலாக ஏற்பட்டது. இது பகவானுக்கு முகோல்லாஸத்தை உண்டுபண்ணுகிறது. உடையவர் ஸம்பந்தம்பெற்ற எல்லோரும் இதை அதிகரிக்கத் தகுந்தவர்கள். நம்முடைய ஸித்தாந்தத்தில் ஸ்ரீராமாநுஜ முனிவரை ஆச்ரயித்த ஒவ்வொருவரும் மோக்ஷத்திற்கு அதிகாரிகளாகிறபொழுது அவர்கள் வேதாந்தத்தின் கருத்தை அறிந்தே தீரவேண்டும். ப்ரணவார்த்தத்தையும் வேதாந்தார்த்தங்களையும் தெளிவாக வெளியிடுகிற நம்மாழ்வார் திவ்யஸூக்திகளைப்போல ஸ்ரீ பாஷ்யார்த்தப்ரதிபாதகமான இந்த திராவிடபாஷ்யத்தையும் ஜாதிபேதமின்றி எல்லோரும் அறிந்து உஜ்ஜீவிக்கத் தகுதியுள்ளவர்களாக ஆகிறார்கள். ஸ்வார்த்தத்தில் நோக்கமில்லாமல் தனவ்யயத்தையும் சரீரச்ரமத்தையும் புத்திக்லேசத்தையும் பாராட்டாமல் விடாமுயற்சியுடன் இந்ததிவ்யகைங்கர்யத்தில் ஈடுபட்டு எல்லோரும் இம்மண்ணுலகில் வேதாந்தார்த்தத்தை அறிந்து முக்திமார்க்கத்தை அணுகும்படியான உபாயத்தை நன்கு காட்டிக்கொடுத்தவர்களான இந்த பாகவத சிரோமணிகள் நீடூழிகாலம் அரோகத்ருடகாத்ரர்களாகவும் திவ்ய ஸம்பத்துடன் உத்தரோத்தரம் விருத்தியடைந்து இம்மையில் கீர்த்தியைப்பெற்று நெடுங்காலம் வாழ்ந்து மறுமையிலும் அகண்ட பரிபூர்ணப்ரும்மாநந்தத்தையும் அனுபவித்து பிறவித்துன்பத்தை அகற்றி சாச்வதபதவியை அடைந்து ஸுகித்திருப்பார்களாக.

ஸ்ரீரங்கம் ஸ்ரீ பாஷ்யம் தமிழ் மொழிபெயர்ப்புச்சங்கத்தின் அக்கிராஸனாதிபதியாகிய திருக்குடந்தை ஸ்ரீமான் T. D. இராமஸ்வாமி நாயுடு அவர்களுடைய விடாமுயற்சியினாலும் தனவ்யயத்தாலும் இந்த மஹனீயக்ரந்தம் அச்சிட்டு முடிவு பெற்று வெளியில் ப்ரசாரமடைந்து எல்லா ஆஸ்திகர்களையு மாநந்தமடையும்படி செய்கிற விஷயம் எல்லோருக்கும் தெரிந்ததே. பரோபகார துரந்தரராகவும் இருக்கிற இந்த ஸ்ரீமான் இராமஸ்வாமி நாயுடு அவர்கள் விஷயத்தில் ஸாதுக்கள் அனைவர்களும், மிகுந்த நன்றி அறிவுபாராட்டுவதுடன் இந்த மஹாக்ரந்தத்தை தாங்களும் வாங்கிமற்றவர்களையும் வாங்கும்படி செய்வித்து இவருடைய முயற்சியை ஸபலமாகும்படிசெய்து பகவன்முகோல்லாஸத்தை உண்டுபண்ணுவார்களென்று திடமான நம்பிக்கையுள்ளவனாகயிருக்கிறேன்.

திருச்சினாப்பள்ளி,
9—11—29.

தட்டை, வாதூல
ஸ்ரீநிவாஸதாஸன்.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உபோத்காதம்.

---

வடமொழியில் தர்சனம் என்று மதத்திற்கும் பெயர். பொருள்களைக் காட்டும் கண்ணிற்கும் பெயர். மிகச்சிறந்த நற்கதிக்கு வழிகாட்டுவது தர்சனத்தின் கார்யம்: ஆத்மாவின் உயர்ந்த க்ஷேமத்திற்கு கண்போல நின்று வழிகாட்டுவதால் தர்சனமென்றுபெயர் இந்திரியங்களுக்கும் மனனுணர்வுக்கும் புலப்படாத பரம்பொருள், தர்மம், முதலியவைகளை நமக்குத்தெரியச் செய்வது வேதமென்பது வைதிகர்களின் கொள்கை. வேதத்தை த்தினையேனும் ஒப்புக்கொள்ளாத மதங்களை ப்ராஹ்யதர்சனமென்று வியவஹரிப்பர். பாஹ்யமென்பது வேதத்திற்கு புறம்பாயுள்ள தர்சனங்களைச் சொல்லும். பௌத்தமதமும், ஜைனமதமும் நமது தேசத்தில் பிறந்தனவாயினும், அந்தமதத்திற்குள்ள ப்ராசீனமான ஸூத்திரங்களும் மற்ற க்ரந்தங்களும் வடமொழியிலும் அதன் திரிபுகளான பாளி மாகதீ முதலிய ப்ராக்ருத பாஷைகளிலும் ஏற்பட்டனவாயினும், வேதத்தை பிரமாணமல்லவென்று தள்ளிவிட்டதால், அந்த மதங்கள் வேதபாஹ்யங்களென்று சொல்லுவர். வேதத்தை ஒப்புக்கொள்ளாத சார்வாகாதி தர்சனங்களும் பாஹ்ய மதங்கள். ஸ்ரீ ஸாயணாசாரியருடைய ஸர்வதர்சன ஸங்க்ரஹத்தில் பாஹ்ய தர்சனங்களையும் பற்றி வியாஸங்கள் வரையப்பட்டன "ஷட்தர்சனம்"; என்று ப்ராசீனமாக ஆறு தர்சனங்களுக்குப் பெயர்—ஸாங்க்யம், யோகம், கௌதமீயம், வைசேஷிகம், மீமாம்ஸை, வேதாந்தம், என்று ஆறு தர்சனங்கள். இந்த தர்சனங்களில் கடையிரண்டு தர்சனங்கள் வேதத்தின் ப்ராமாண்யத்தை முழுவதும் ஒப்புக் கொள்ளுவன. மற்றைய நான்கிலும், தங்களுக்கு இஷ்டமான வேதவாக்கியங்களை மட்டும் தங்கள் மதத்திற்கு ஆதாரமாக ஒப்புக்கொள்ளுவன, வேதத்தின் ப்ராமாண்யத்தை முழுவதும் ஒப்புக் கொள்ளாததால் அவைகளைப் புறமென்று சில கிரந்தங்களில் சொல்லுவதுண்டு. மீமாம்ஸாதர்சனத்தில் கர்மகாண்டத்திற்கு ப்ராதான்யத்தைச் சொல்லுவர். கர்மங்களை அனுஷ்டிப்பதற்குக் கர்த்தா அவசியம் வேண்டியபடியாலும், கர்த்தாவும் கர்மங்களுக்கு த்ரவ்யங்களைப்போல் சேஷமாவதாலும், கர்மானுஷ்டானத்திற்கு சேஷபூதனான கர்த்தாவின் ஸ்வரூபம் தெரிந்துக்கொள்வதற்காக மட்டும் வேதாந்தங்கள் உபயோகப்படுகின்றனவென்றும், வேதாந்தங்கள் ஸ்வதந்திரமாக ப்ரமாணமாகாவென்றும், ஞானம் கர்மத்துக்கங்கமென்றும், வேதாந்திகள் சொல்லுகிறபடி ஆத்மஞானத்திற்குக் கர்மங்கவல்லவென்றும் சொல்லுவர். வ்யாஸர் காலத்தில் இந்த ஆறுமதங்களும் நடைபெற்றிருந்தன. வேதாந்தம தவிர மற்ற ஐந்து தர்சனங்களும் வெகுகாலம் பிரகாசமில்லாமல் நீங்கிப் போய்விட்டது.

ஆகமங்கள்என்று பஞ்சராத்ரம், பாசுபதம், சாக்தம், என்கிற தந்திரங்களின் கிரந்தங்களைச் சொல்லுவர். பஞ்சராத்ரம் மட்டும் வைதிகமான வேதாந்தத்திற்கு ஒற்றுமையுள்ளதென்றும், அது வேதாந்தத்துடன் சேர்ந்ததென்றும், உடையவரும் ஸ்ரீமத் வாசார்யரும் கொள்ளுகிறார்கள். ஸ்ரீ சங்கராசாரியர் பாஞ்சராத்ரம் வ்யூஹ ப்ரக்ரியை சொல்லுமிடத்தில் மட்டும் பிரமாணமல்லவென்றும், மற்ற அம்சங்களி

லெல்லாம் பிரமாணமென்றும் ஸூத்ரபாஷ்யத்தில் கூறுகிறார். ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் "சதுர்வ்யூஹ:"; என்கிற திருநாமத்தை வியாக்கியானம் செய்யுமவஸரத்தில் பகவான், வாஸுதேவனே நான்கு வ்யூஹங்களையும் பரிக்ரஹம் செய்திருப்பதாகச் சொல்லும். வ்யாஸ ஸ்மிருதிவசனத்தை உதாஹரித்து நான்கு வ்யூகங்களும் பரமாத்மாவின் ரூபங்களென்று கூறுகிறார்கள். அத்வைத ஸம்பிரதாயத்தில் பிரஸித்தமான கல்பதருவில் பஞ்சராத்திரத்தின் ப்ராமாண்யத்தை நாம் ஸமர்த்தனம் செய்வது போலவே ஸமர்த்தித்திருக்கிறார். பாசுபதாகமம் முதலியது வேதாந்தத்திற்கொவ்வாதென்று ஸூத்திரகாரர் தள்ளினார். பாசுபதத்தையும், சாக்தத்தையும், சிலர் சார்ந்து வந்தாலும், வைதிக மதங்களுள் வேதாந்த தர்சனமொன்றே பெரும்பான்மையாகப் ப்ரசாரத்திலுள்ளது. இந்த தர்சனத்திற்கு வேதாந்தங்களென்னும் உபநிஷத்துக்கள் மூலப் பிரமாணமாகும். வேதத்தின் முடிவு பாகத்திற்கு வேதாந்தமென்று பெயர். ஞானத்தின் முடிவென்றும் வேதாந்தத்திற்கர்த்தம் பொருந்தும். வேதாந்தத்திற்கு மேற்பட்ட சாஸ்திரமில்லையென்பர். மூலப்பிரமாணங்களான உபநிஷத்துக்களின் அபிப்பிராயங்களைத் தெளிவாய்க்காட்டுவது உபப்ரும்ஹணங்களென்கிற ஸ்ரீ ராமாயணம், மஹாபாரதம் ஸ்ரீ விஷ்ணுபுராணம் முதலிய இதிஹாஸ புராணங்களின் காரியம். இதிஹாஸ புராணங்களால் வேதார்த்தங்களைத் தெளிந்து கொள்ளவேணும். வேதங்களற்பமே படித்தவனிடமிருந்து "எங்கே என்னைத் தப்பர்த்தவர்ணனத்தால் மோசம் செய்துவிடுவானோ!" என்று, நடுங்குகின்றனவென்று சொல்லுவர். உபப்ரும்ஹணங்களை ஸ்ம்ருதிகளென்றும் அநுமானமென்றும் ஸூத்ரகாரர் வ்யவஹரிக்கிறார். வேதத்தை ப்ரத்யக்ஷமென்றும், ஸ்ம்ருதிகளை அநுமானமென்றும் வ்யவஹரிக்கிறார். வேதங்களின் அர்த்தங்கள் ஸ்ம்ருதிகளிலும் தெளியாமல், ஸ்ம்ருதிகளுக்கும் பல அர்த்தங்கள் கொள்ளும்படியாகி, வேதார்த்தங்களை நிர்ணயிப்பதற்காக நியாயஸஞ்சாரம் செய்வது மீமாம்ஸையெனப்படும்.

மீமாம்ஸையென்பது, உயர்ந்த விஷயத்தைப்பற்றி விசாரத்தைச்சொல்லும். மீமாம்ஸை என்பது ப்ரேமையுடனும பூஜ்யதா புத்தியுடனும விசாரித்து நிர்ணயமும் செய்யவேண்டுமென்கிற ஆசையைச் சொல்லும். லக்ஷணையினால் அது விசாரமாகிய மீமாம்ஸையைச் சொல்லுமென்றும் சிலர் சொல்லுவர். தர்மம் என்பது நம்முடைய ச்ரேயஸ்ஸுக்கு ஸாதனமாக வேதத்தினால் விதிக்கப்படுமவையும் தெரியப்படுத்தப்படுவதையும் சொல்லும். ஸாதனத்தை உபாயமென்றும் சொல்லுவர். தர்மம் என்பது ஸித்தமென்றும், ஸாத்தியமென்றும் இருவகைப்படும். பகவான் ஸித்தமான தர்மம். நம்முடைய ஸகல ச்ரேயஸ்ஸுகளையும் ஸாதிப்பதான தர்மங்கள் ஸாத்யோபாயமெனப்படும். ஸாதிப்பதான தர்மங்களினால் ஸித்தனான பகவான் ஸந்தோஷப்படுத்தப்பட்டு, அவன் அந்த கர்மங்களுக்குப் பலம் கொடுக்கவேணும். ஸாத்யமான தர்மங்கள் நேரில் அத்ருஷ்டத்தையுண்டு பண்ணிப் பலங்கொடுப்பிக்கின்றனவென்று பூர்வமீமாம்ஸகர் சொல்லுவர். அந்த கர்மங்களினால் ஆராதிதனான ஈச்வரன் தான் பலம் கொடுக்கிறானென்று ஸூத்ரகாரருடைய மதம். "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்"; என்று ஸித்தனான பகவானையே தர்மமென்று கூறப்பட்டிருக்கிறது. வேறு ப்ரமாணங்களாலறியக் கூடாத ஈச்வரன் போன்ற இந்த வஸ்துவை வேதத்திலேயே ஸித்தமான வேதாந்தங்கள் பிரமாணமாகத் தெரிவிக்கின்றனவென்று ஸமந்வயாதிகரணத்தில் கூறுகிறார். தர்மங்களை அறிய விரும்புகிற ஜிஜ்ஞாஸுக்களுக்கு ஸ்ருதிதான் கதியென்று சாஸ்திரம் தர்மவிஷயத்தில் வேதங்களின் உண்மையான

தாத்பர்யத்தை நிர்ணயம் செய்துகொள்வதற்கு மீமாம்ஸை அங்கமாகும். வேதம் அகில ஸாதனம். மீமாம்ஸை என்கிற விசாரம் அங்கம். வேதாந்த விசாரமான மீமாம்ஸை முழுவதும் ஏகசாஸ்திரமென்று உடையவர் திருவுள்ளம்.

' பிறகு ப்ரம்ஹ மீமாம்ஸை செய்யவேண்டும் ', என்று, முதல் ஸூத்திரத்தால் சாஸ்திராரம்பத்தை ஸமர்த்தனம் செய்யப்ராரம்பிக்கிறார். பிறகு ஒருமீமாம்ஸை ஆரம்பிக்கப்படுகிறதென்று சொல்லுவதால் இதற்குமுன் வேறு மீமாம்ஸை நடந்ததென்றும், அதற்குப்பிறகு இன்னும் ஒருமீமாம்ஸை ஆரம்பிக்கிறதென்று மர்த்தம் கொள்ளுவது ஸ்வாரஸ்யமென்று ச்ருதப்ரகாசிகையில் காட்டப்படுகிறது. பூர்வதந்திரமென்கிற அநேக க்ரந்தங்களில் ஜைமினீயமீமாம்ஸையைச்சொல்லுவது வழக்கம். பூர்வதந்திரத்திற் சொன்ன விஷயத்தை மறுபடியும் இங்கே சொல்லுவானேனென்று ஸ்ரீசங்கரபாஷ்யத்திலும் புநருக்ததோஷத்தை சங்கித்துப்பரிஹாரம் செய்யப்படுகிறது. ஸ்ரீமத்வமதத்திலும் உடையவர் மதத்திலும் இரண்டு மீமாம்ஸைகளும் வேதார்த்த விசாரம் செய்யும் ஏகசாஸ்திரமாகும். இப்படிக் கொருசாஸ்திரமாயிருந்தாலும் நம் ஸ்வரூபஞானத்திற்காக அவசிய முபாதேயமான உத்தர மீமாம்ஸைக்கே இந்த நான்காவது யுகத்தில் நமக்கு அவகாசம் கிடைப்பதரிதாகையால், முன்பாகத்திலிருந்து ஆரம்பிக்காமல் முடிவுபாகத்திலேயே இறங்குகிறோமென்று அதிகரண ஸாராவளியில் கூறப்பட்டது.

ஆறு தர்சனங்களுக்கும் வேண்டிய ஆதாரங்களையும், யுக்திகளையும் காட்டுவது மூலமாய் ஸ்வமதத்தின் முக்கிய அம்சங்களை தெளிவுக்குக் குறையில்லாமல் ஐயந்திரிபறச்சுருக்க ஸூத்திரங்களென்ற குறள் வாக்கியங்களால் அந்தந்த தர்சனப்ரவர்த்தகர்களான ஸூத்திரகாரர்களால் உரைக்கப்பட்டிருக்கின்றன. வேதாந்த தர்சனத்திற்கு ஸூத்திரகாரர் வ்யாஸரென்கிற பாதராயணர். ஸூத்திர மென்பது நூலுக்குப்பெயர். ஒருதர்சனத்திற்கு நூல்பிடித்து ஒரு ஒழுங்காய் மார்க்கமேற்படுத்துவது ஸூத்திரநூலின் வேலை. ஒருவஸ்துவின் அளவைத்தெரிந்து வரையறுப்பதற்கும் ஸூத்திரமென்கிற நூல்வேணும். தத்துவங்களை அளவிடுவதாலும் ஸூத்திரமென்னும் பெயர் நன்கு அமைந்ததென்று சொல்லலாம். வேதாந்த வாக்யங்களென்கிற புஷ்பங்களைத் தொடுக்கும் நூல் ஸூத்திரமெனப்படுமென்பது ஸ்ரீ சங்கர பாஷ்யத்தில் கூறப்பட்டது. வேதம் என்கிற சப்த ப்ரம்ஹமான ஸ்ரீ என்றும் தேவியையும் அவருடைய நாயகனுமாகிய நாராயணனென்றும் ப்ரம்ஹத்தையும், விவாஹம் செய்துவைக்கும் மங்கள ஸூத்திரம் ப்ரம்ஹ ஸூத்திரமாகுமென்று பட்டரால் ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தின் மங்கள ச்லோகத்தால் த்வனியால்காட்டப்பட்டது.

ப்ரம்ஹம் என்று வேதத்திற்கு பெயர், பரப்ரம்ஹத்திற்கும் பெயர். சப்தப்ரம்ஹத்தையும் பரப்ரம்ஹத்தையும் புணர்த்துவைக்கும் மாங்கள்யஸூத்திரம் ப்ரம்ஹஸூத்திரமெனப்படுமென்று த்வனி. உபநிஷத்தென்னு மம்ருதஸமுத்திரத்தை, ஸூத்திரமென்னும் கயிறுகளைக்கொண்டுகடைந்து ஸாரதமமான அமிருதத்தைத்திரட்டி யெடுப்பதால், உபநிஷத்துக்களைக் கடைந்து ஸாரத்தைத்திரட்டி யெடுக்க ஸாதனமாகும் கயிறுகள் ஸூத்திரங்களாகுமென்று அதிகரணஸாராவளியினிறுதியில் வேதாந்தசாரியனுடைய பாசுரம். மூன்றுவிதமான யோஜனைகளிலும் ஸூத்திரமென்பதற்கு நூலென்னும் ரூடியான பொருளாதரிக்கப்படுகிறது. ஸூசனம் செய்வது ஸூத்திரமென்பது

யௌளகிகமான பொருள். ஸூத்திரங்களே ஒரு தர்சனத்திற்கு முதல் நூலாகும்—வழி நூலுமாகும். அந்த ஸூத்திரங்கள் மிகச்சுருக்கியவையான படியால், அவைகளின் அபிப்பராயங்கள் வார்த்திகமெனும் விருத்தி கிரந்தங்களால் விவரிக்கப்படும். பூர்வ மீமாம்ஸைக்கு குமாரில பட்டர் செய்தவார்த்திகங்களிருந்தாலும் அதற்கு உபவர்ஷ ரென்பவர் விருத்திகிரந்தம் செய்ததாக சபரபாஷ்யத்திலும் ஸ்ரீ சங்கரபாஷ்யத்திலும மற்ற ப்ராசீனகிரந்தங்களிலும் கூறப்படுகிறது. பூர்வமீமாம்ஸை ஸூத்திரங்கள் ஜைமினி மஹருஷியா லியற்றப்பட்டன. அவர் வ்யாஸருடைய சிஷ்யரென்று மஹா பாரதத்தில் கூறப்பட்டது: அதற்கு பாஷ்யகாரர்சபரஸ்வாமி உத்தரமீமாம்ஸையை சாரீரக மீமாம் ஸையென்று எல்லோரும் வியவஹரிப்பர். இதற்கு விருத்திகாரர் உபவர்ஷர் என்று அத்வைத க்ரந்தங்களி னபிப்பிராயமெனச் சொல்லலாம். போதாயனர் இதற்கு விருத் திகாரர் என்றும், அந்த விருத்திகாரர்தத்தைத்ரமிட பாஷ்யகாரர் முதலிய பூர்வாசார்யர் கள் சுருக்கமாய் ஸங்க்ரஹித்ததாகவும், அந்த க்ரந்தங்களினபிப்பிராயங்களை யனுஸரித்து ஸூத்ரார்த்தங்களுக்கு பாஷ்யம் செய்வதாக உடையவர் ஸாதித்திருக்கிறார். போதா யன விருத்தியிலிருந்தும் த்ரமிடபாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும, ச்ருதப்ரகாசிகை யிலும் சில வாக்கியங்களுதாஹரிக்கப் பட்டிருக்கின்றன. ஸ்ரீ பாஷ்யகாரர்ந்த க்ரந்தங் களை கடாக்ஷித்தது நிச்சயம். அந்த க்ரந்தங்க ளிப்பொழுது கிடைக்கமாட்டாது.

"சாரீரக ஸூத்திரங்களுக்கு மூலப்ரமாணங்கள் வேதாந்தங்களும், உபப்ருமஹணங் களான ஸ்ம்ருதிகளுமென்றும் சொன்னோம வேதாந்தங்களின் ஹ்ருதயத்தையும் ஸூத் திரங்களின் ஹ்ருதயத்தையும் நன்றாய்த் தெளிந்துகொள்ள வேதந்தமிழ்செய்த மாற னுடைய ப்ரபந்தங்கள் நன்றாய் உபகரிக்கின்றனவென்பதை அத்யாத்ம சாஸ்த்ரத்தில் பரிச்ரமப்பட்டவர்களறிவர். வேதாந்தாசார்யரென்று ப்ரஸித்தரான தூப்பில்பிள்ளை ஆழ்வார்களின் திராவிட ப்ரபந்தங்களைத் தெளியவோதி ' தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே " என்றும, திருவாய்மொழியின் முதல் இரண்டு திருவாய்மொழிக ளாலும் ப்ரம்ஹஸூத்திரத்தின் அதிகரணங்கள் முழுவதையும் ஸங்கிரகிக்கப்பட்டன வாகவும் கூறுகின்றார். அப்படியே முழுவதும் ஸங்க்ரஹிக்கப்பட்டதாக விஸ்தாரமாகப் பெரியோர்களால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது அந்த நிரூபணங்களைப் பார்த்தால சாரீ ரகம் முழுவதும் இரண்டுதிருவாய்மொழிகளில் யதாக்ரமமாகயடைக்கப்பட்டிருக்கின்ற தென்று நன்கு விளங்கும். அதிலும் முதல்பாசுரத்தில் நான்கு அத்தியாயங்களின் விஷ யங்களையும் நான்குஅடிகளால் ஸங்கிரகித்திருக்கிறா உயர்வற வுயர்நல முடையவ னெவனென்று ப்ரம்ஹத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறார். ஜ்ஞானானந்த மயத்வம் ப்ரம் ஹத்தின் ஸ்வரூபலக்ஷணமென்று சொல்லுவர். ஆநந்தவல்லியிலோதப்பட்ட ப்ரம்ஹத் தின் கணக்கிடக்கூடாததும், வாக்குக்கும் மனதிற்கு மெட்டாததுமான ஆனந்தமயத் வத்தை ஆனந்தமயமான தம்முடைய ஸஹஸ்ரகாதையான ப்ரபந்தத்திறுதியிலேயே ஸாதித்தருளினர். ஜகத்காரணத்வத்தை இலக்கணமாக ஸூத்ரககாரருரைத்தபடி ஆழ் வாரும் கூறவேண்டாவோ? வென்று கேள்விவரலாம். அதற்குப் பரிஹாரமுண்டு. ப்ருகு வல்லியி னாரம்பத்தில் ப்ருகுவினால் தன்னுடைய புத்திரனுக்கு "எதனிடமிருந்து இந்த சேதனாசேதன பூதங்கள் முழுவதும் பிறக்கின்றனவோ, பிறந்தனவெல்லாம எதனால் ஜீவித்திருக்கின்றனவோ, ப்ரளயமடையும்காலத்தில் எல்லாம எதில் லயத்தை யடை கின்றனவோ, அதை இன்பத்துடன விசாரிக்கவேணும அதுதான் பிரமஹம்மென்று உபதேசித்தார். அந்த இலக்கணச் சொல்லமைதியை யனுஸரித்து ஆழ்வாரும் "யவன் அவன்" என்று மூன்றுத்தரம் கூறினர். அந்தபிரம்ஹம் பொதுவாக யவனெவனென்று

முதலில் கூறப்பட்டதிலிருந்து மட்டும் அது இன்னதென்று நன்கு விளங்கவில்லை. இந்தக் குறையைத்தீர்த்து குறிப்பாக ப்ரம்ஹம் இன்னதென்று அறிவிக்க ஆனந்தவல்லியின் முடிவில் " ஆனந்தத்திலிருந்துதான் இந்தப் பிராணிகளெல்லாம் பிறக்கின்றன " " பிறந்ததெல்லாம் அதனாலேயே உயிர்த்து வாழ்கின்றன, பிரளய காலத்தி லத்தையே மீண்டு அடைகின்றன " " ஆனந்தந்தான் ப்ரம்ஹம் " என்று தீர்மான வாக்யத்தைக் கூறினார் இதனால் ஆனந்தமென்றும ஆனந்தமயனே ஜகத்காரணமென்று ப்ருகுவல்லியின் தீர்மானமென்று நிச்சயமாயேற்படுகிறது. ஆழ்வார் முதலடியில் ஆனந்தமய ஸ்வரூபத்தைச் சொன்னதால், ஜகத்காரணமான ஆனந்தத்தையே கூறினதாகிறது. ஸூத்திரக்காரர் ஜகத்காரணத்தை இலககிணமாகக் கூறியதற்கும் ப்ருகுவல்லியின் முடிவான தீர்மானத்தையனுசரித்து அந்தக்காரணம் ஆனந்தமென்று ஸூசிப்பதில் நோக்கு. ஆழ்வார் இந்த ஸூக்ஷ்மமான விஷயத்தை வெளிப்படுத்துவதற்காக ஆனந்தமயம் என்கிற முடிவுரையையே தெளிவாகக் காட்டிவிட்டார். ஆனந்தமயன் என்பதையிட்டு காரணத்வத்தை ஆழ்வார் ஸூசனம் செய்தார். ஸூத்திரக்காரர் காரணத்தைக்கூறி ஆனந்தமென்றும் ஸ்வரூபலக்ஷணத்தை ஸூசனம் செய்தார். இருவருக்கும் இரண்டிலும் தாத்பர்யம். ஸூத்திரகாரர் ப்ருகுவல்லியினாரம்பவாக்யத்தை யெடுத்தார். ஆழ்வார் முடிவான தீர்மான வாக்யத்தை யெடுத்தார். ஆழ்வார் அநுபவத்திலாழவேண்டியதைக்கருதி ஆனந்த வாக்யத்தையே தமது சாஸ்த்ராரம்பத்திற் கைப்பற்றினர்.

ப்ரம்ஹ ஸூத்திரத்திற் கனேக பாஷ்யங்களுள. அதில் பிரஸித்தமானதும் பிரசாரத்திலுள்ளன மூன்று. ஸ்ரீகண்ட பாஷ்யம் சைவ விசிஷ்டாத்வைதமென்று அந்த பாஷ்ய வாக்கியங்களால் ஸ்புடமாய்த்தெரிகிறது. ஆரம்பணாதிகரணத்தில் ' நாம் விசிஷ்டாத்வைத வாதிகள்" என்று ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறார். அந்த பாஷ்யம் அநேக பாகங்களில் உடையவர் ஸ்ரீ பாஷ்யத்தை அநுஸரித்து அந்த பாஷ்யம் அத்வைதத்திலேயே தாத்பர்யமுடையதென்று நிரூபிக்க அப்பய்ய தீக்ஷிதர் ரொம்பவும் சிரமப்பட்டிருக்கிறார். ஆனந்தலஹரியில் ச்லோகரூபமாயும் அதற்கு வியாக்கியான ரூபமாயும் இதை நிரூபித்திருக்கிறார். இதுவிஷயமாக அவர் செய்திருக்கும் "சிவாத்வைத நிர்ணய" என்கிறகிரந்தம் இப்பொழுது சென்னை கலாசாலையாரால் அச்சிடப்பட்டு வருகிறது. ஸ்வல்பதினத்தில் பிரசாரமாகும். தீக்ஷிதருக்கு முன்னிருந்தவர்கள் நீலகண்ட பாஷ்யத்தை விசிஷ்டாத்வைத மதமென்றே அபிப்பிராயப்பட்டார்கள். சிவார்கமணிதீபிகை யென்னும் ஸ்ரீ கண்டபாஷ்ய வியாக்யானத்தில் தீக்ஷிதர் அனேகமாக ஸ்ரீ பாஷ்யத்திற்கும் ச்ருதப்ரகாசிகைக்கு மொத்தே வ்யாக்யானம் செய்திருக்கிறார். ஸ்ரீ பாஷ்யம் முந்தியா? ஸ்ரீகண்டபாஷ்யம் முந்தியா? என்பதைப்பற்றி ஒரு வாதம் கிளம்பி விசாரம் நடந்துவருகிறது. ஸ்ரீபாஷ்யம் முந்தியதென்று தீக்ஷிதர் சிவார்க்கதீபிகையில் ஸ்பஷ்டமாக கூறுகிறார். அவருக்கும் முந்தியுள்ள புற மதக்ரந்தங்களில் ஸ்ரீகண்டரை ராமாநுஜ மததஸ்கரரென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. தஸ்கரரென்றால் அந்த பாஷ்யத்திலிருந்து களவுசெய்தவரென்று பொருள். ச்ருதப்ரகாசிகைகாலத்தில் அந்த பாஷ்யம் பரசாரமாயிருந்தது ஸந்தேகம். ஒவ்வொரு அதிகரணத்தின் முடிவிலும் பரமத வியாக்யானங்களை அனுவாதம்செய்து அவைகளைப்பற்றி விசாரம் செய்யப்படடிருக்கிறது. ஸ்ரீகண்ட பாஷ்யத்தைப்பற்றி பிரஸ்தாபிக்கப்படவில்லை. ச்ருதப்ரகாசிகைக்குமுன் மாத்வ பாஷ்யம் ஏற்பட்டதென்பது நிச்சயம். அந்த மதத்தை அனுவாதம் செய்யாததற்குக் காரணம், அது உடையவர்தர்சனத்திற்கு முக்கியமான தத்துவபாகங்களில் ஒற்றிருப்பதுதானென்று நினைக்கவேணும். ஸூத்திரங்களி னர்த்தமாகவுரை செய்யும

க்ரமம் அத்யந்தம் வேற்றுமையிருந்தாலும், தத்த்வஹிதபுருஷார்த்தங்களி லனேகமாக ஒத்திருப்பதால் அந்த பாஷ்யத்திற் கெதிர்க்கக்ஷி சொல்லவில்லை. ஆனால் ஸத்வித்யா விசாரத்தில் மட்டும் ப்ரதான வஸ்துவாகிய ப்ரம்ஹஜ்ஞானத்தினு லெல்லா மறியப்பட்டதாக ஔபசாரிகமாகக் கொள்ளவேணுமென்று அந்த பாஷ்யத்தில் கூறப்பட்டதை மட்டும் அங்கீகாரம் செய்வது உசிதமில்லை யென்று ஸாதிக்கப்பட்டது. மாத்வமதஸ்தரை ஏகாயனரென்று ஒரு விஷயத்தில் மட்டும் பேதப்படுவதாக ஈட்டில் வ்யவஹரித்திருக்கிறார் வேதாந்தாசார்யர் அவர்கள் மதத்தை நமக்கு நெருங்கிய மதமென்று சததூஷணியிலும் “ [illegible] ” என்கிற ஶ்லோகத்திலும் ஸாதித்தார். பரமதபங்கம் முதலிய கிரந்தங்களில் ஸ்ரீகண்ட பாஷ்யத்தையாவது மதத்தையாவது எடுக்கவில்லை. ஸூக்தையிலும், சந்திரிகையிலும், அந்த மதத்தினது வாதமாவது தூஷணமாவது கிடையாது. சந்திரிகைக்கு வ்யாக்கியானமான ப்ரகாசம் என்றும் கிரந்தத்தில்மட்டும், நீலகண்டபாஷ்யத்திற்கும், சிவார்க்கமணிதீபிகைக்கும் அநுவாதமிருக்கிறது. அந்த பாஷ்யம் பிந்தியதென்பதற்கு ப்ரபலமான காரணங்கள் வேதாந்த தீபிகையில் அனேக வியாஸங்களில் விஸ்தாரமாக காட்டப்பட்டிருக்கின்றன

ஸ்ரீ சங்கரபாஷ்யம் ஸ்ரீ பாஷ்யத்திற்கு அநேக வருஷங்களுக்கு முந்தியது. அந்த பாஷ்யத்தை அங்கீகரிக்காமல் அதினம்சங்களை விஸ்தாரமாகத் தூஷிக்கும் விஷயத்தில் இப்பொழுது ப்ரசாரத்திலுள்ள கிரந்தங்களில் முதல் க்ரந்தம் ஸ்ரீ ஆளவந்தாருடைய ஸித்தித்திரயமும் ஆகமப்ராமாண்யமும். ஸித்தித்திரயம் ஸூத்திரங்களின் வியாக்யானமாக ஏற்படவில்லை. பஞ்சராத்ராதிகரண ஸூத்திரங்கள் மட்டும் ஆகம ப்ராமாண்யத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டன. போதாயன வ்ருத்தியும் திரமிடபாஷ்யமும் இப்போது கிடையாது. போதாயனர், டங்கர், த்ரமிடர், குஹதேவர் முதலியவர்கள் நம் தர்சன விஷயமாய் உடையவருக்கு முன்பு க்ரந்தங்கள் செய்தவர்கள். போதாயன விருத்தியை உடையவர் கடாக்ஷித்து அதை அநுஸரித்து ஸ்ரீபாஷ்யம் ஸாதித்தாரென்பது ஸித்தம் ஸித்திதரயம், ஸ்ரீபாஷ்யத்திற்கு ஒரு முக்கியமான ஆதாரம் அதிலுள்ள அநேக வாக்கியங்கள் அப்படியே ஸ்ரீபாஷ்யத்தில் முதலதிகரணத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. நம் தர்சனத்தோரெல்லாரும் ஸ்ரீ பாஷ்யத்தையும் அதற்கு லோகோத்தரமான வியாக்யானமான ச்ருதப்ரகாசிகையையும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம், நம் தர்சனத்திலுள்ள ஏற்றம் ஸ்ரீ பாஷ்யத்தையும் அதின் வியாக்யான பூதங்களான க்ரந்தங்களையும் ஸேவித்தால்தான் பூர்ணமாய்த்தெரியும். புற மதத்தார்கள் கேட்கும் கேள்விகளுக்கு இந்த கிரந்தங்களின் ஸஹாயமில்லாமல் ஸமாதானம் சொல்லுவது கடினம்.

ஸ்ரீ சங்கரபாஷ்யம் சுமார் 40 வருஷங்களுக்குமுன்பு ஜர்மனிதேசத்திய ஸம்ஸ்க்ருத்வித்வானாகிய டாக்டர் தீபா என்பவரால் வெகு அழகாக இங்கிலீஷில் மொழி பெயர்க்கப்பட்டது. அந்த மொழிபெயர்ப்பில் ஒரு தோஷமும்கூட அகப்படாது. அவர் காசியில் வித்வான்களின் உதவியோடு இரண்டு பாஷ்யங்களையும் நன்றாக கற்றறிந்தவர். ச்ருதப்ரகாசிகையின் விஷயங்களையும் அவர்க்ரஹித்தவர். சங்கரபாஷ்யத்திற்கு அவர் ஒருவிஸ்தாரமான முகவுரை எழுதியிருக்கிறார். அதில் இரண்டு பாஷ்யங்களுடைய வியாக்யானங்களையும் அனேகஅதிகரணங்களில் சீர்தூக்கிப்பார்த்திருக்கிறார். விஸ்தாரமாக இரண்டு வ்யாக்யானங்களின் ஸ்வாரஸ்யங்களை விசாரித்திருக்கிறார்.

உடையவர் பாஷ்யம் ஸூத்ராக்ஷரங்களுக் கனுகுணமென்று தம்முடைய நிர்ணயத்தை வியக்தமாகக்காட்டியிருக்கிறார். இருவர்களுக்குள் விவாதம் வந்தால், மத்தியஸ்தனுடைய உக்தியைக்கொண்டு ஸாதுத்வத்தை நிர்ணயம்செய்ய வேண்டுமென்பது ப்ரஸித்தம். ஸூத்ராக்ஷரங்களுக்கு வியாக்கியானம் செய்வதாக பாஷ்யகாரர் செய்தருளிய ப்ரதிக்ஞை இப்படிக் கொத்த மத்தியஸ்தர் நிர்ணயத்தால் ஸத்யாபிதமாகிறது. ச்ருதப்ரகாசிகையில் கூறப்பட்ட உக்திகளை எடுத்து அவர் காட்டியிருக்கிறார். சுமார் 30 வருஷங்களுக்குமுன் ஸ்ரீபாஷ்யத்தையும் அவர் இங்கிலீஷில் மொழிபெயர்த்து பிரசுரம் செய்திருக்கிறார். அந்த மொழி பெயர்ப்பை வாசித்து வெளிதேசங்களில் வேதாந்தவிசாரத்தில் ருசியுள்ள வித்வான்கள் நமது மதத்தைத் தெரிந்து கொண்டு வருகிறார்கள். பெரும்பான்மையாக அந்த மொழி பெயர்ப்பு ஸரியாகவேயிருக்கிறது. 30 வருஷங்களுக்குமுன் இங்கிலீஷில் மொழிபெயர்ப்பு ஏற்பட்டிருந்தும் “ஸ்ருதி டெஷுவஹஸூரிமய:” என்றபடி ஆழ்வார்களவதரித்த இந்த தமிழ் நாட்டில் இனிமையான தமிழ் பாஷையில் இந்தக்ரந்தம் இதுகாறும் மொழிபெயர்க்கப்படாதது பெரிய குறையேயாகும். ச்ருதப்ரகாசிகையுடன் ஸ்ரீபாஷ்யத்தைத் தமிழ் மொழி பெயர்த்துவைத்து அச்சிட்டு ப்ரசுரம் செய்யும் மஹானுபாவர்களை நாம்மிகவும் க்ருதக்ஞர்களாகப் புகழ்ந்து பல்லாண்டு பாடுகிறோம்.

ஸ்ரீபாஷ்யத்தின் பெருமையை தீபா என்றும் ஜர்மனிதேசத்து வித்வான் புகழ்ந்திருப்பது மட்டுமல்ல. இந்த தர்சனத்தை அனுஸரித்து வட தேசத்தில் நிம்பார்ககர், பாஷ்யம் செய்தார், வல்லபரும், சைதன்யரும் நம்தர்சனத்தை அனேக அம்சங்களிலனுஸரித்தவர்கள். மத்வஸம்ப்ரதாயங்களில் ஸூத்ரவ்யாக்யானத்தைப்பற்றி தர்க்கம் செய்தாலும், ச்ருதப்ரகாசிகையில் கூறப்பட்ட அனேக யுக்திகளை அத்வைதத்திற்கு விரோதமாக அவலம்பித்திருக்கிறார்கள். சந்திரிகையையும், ச்ருதப்ரகாசிகையையும் ஒற்றுப்பார்த்தால் இது நன்கு விளங்கும். விசிஷ்டாத்வைதமான ஸ்ரீகண்ட பாஷ்யத்திற்கு வியாக்யானமான சிவார்கமணி தீபிகையில், ச்ருதப்ரகாசிகையின் யுக்திகள் அனுஸரிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீபாஷ்யத்தின் பெருமையை வேதாந்தசார்யர் பலவாறும் புகழ்ந்திருக்கிறார். ஸ்ரீ பாஷ்யத்தை ப்ரவர்த்திப்பதே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ப்ரதானகைங்கர்யமென்று ரஹஸ்யத்ரயஸாரத்தில் கூறினார். ஸங்கல்ப ஸூர்யோதயம் முதலிய க்ரந்தங்களில் எதுவரையில் எத்தனை ஆவ்ருத்தி பாஷ்யத்தைக் காலக்ஷேபம் சொல்லிவித்திருக்கிறோமென்று ஸாதிக்கிறார். தம்முடைய காலங் கழிந்ததெப்படியென்று கூறும் பொழுது—தமது யௌவன முழுவதும் யதி ஸார்வ பௌமருடைய ஸ்ரீஸூக்திகளை ஆவ்ருத்திகள் செய்வதினால் பரமபோக்யமாய் அனுபவிக்கப்பட்டதென்கிறார். ஸங்கல்ப ஸூர்யோதயத்திலிரண்டாவது அங்கத்தில் பாஷ்யத்தை கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் யௌவனபருவம் முதலே நன்றாய் அபாயமான ப்ரீதியுடன் அனுபவிக்கவேண்டுமென்றும், இந்தஸம்ஸாரமென்னும் நள்ளிருளில் ஸ்ரீபாஷ்யமென்னும் தீபம் உடையவரா லேற்றிவைக்கப் பட்டதென்றும் கூறுகிறார், சததூஷணியின் வாதங்க ளனேகமாய் ஸ்ரீ பாஷ்யத்தில் முதலதிகரணத்தில் விசாரிக்கப்பட்ட விஷயங்களைப் பற்றியன. ஸ்ரீபாஷ்யத்தை அனேக ஆவ்ருத்திகள் சிஷ்யர்களுக் கத்யயனம் செய்வித்து அதன்பிறகு அதிகரண ஸாராவளி செய்ததாகக் கூறுகிறார்.

நம் தர்சனத்தை நாம் புகழ்வது பெரிதல்ல. ஸ்ரீ பாஷ்யத்திலும் ச்ருதப்பிர காசிகையிலும் கூறப்பட்ட தூஷணங்களை மற்ற மதத்தார் ஒப்புக்கொண்டதற்கு அனுஸமாக தங்கள் வியாக்யானத்தை திருத்தியதினால் உடையவர் பாஷ்யத்தின் உண்மையும் ஸ்வாரஸ்யமும் நன்று விளங்கும். முதலாவது அத்தியாயம் இரண்டாம்பாதம் முதலாவது அதிகரணமான ஸர்வத்ர ப்ரஸித்தோப தேசாதிகரணத்தில் முதல் ஸூத்திரத்தை ஒரே பதமாக ஸ்ரீ சங்கரபாஷ்யத்தில் வியாக்யானம் செய்தார். உடையவர் ஸ்ரீ பாஷ்யத்தையும், ச்ருதப்ரகாசிகையையும் நன்றாய்ப்படித்த அப்பய்யதீக்ஷிதர் ந்யாய ரக்ஷாமணியென்னும் க்ரந்தத்தில் நம் ஸ்ரீ பாஷ்யத்திற்போல இரண்டு பதங்களாகவே வைத்து வியாக்யானம் செய்தார். பஞ்சராத்ராதிகரணத்தில் பஞ்சராத்ரத்தை ஸூத்திரக்காரர் சிலவம்சங்களில் மட்டும் பரமதமென்று தூஷித்ததாக ஸ்ரீ சங்கர பாஷ்யத்தில் கூறப்பட்டது அதன் வியாக்யானமான பாமத்திக்கு வியாக்யானமான கல்பதரு க்ரந்தத்தில், பாஞ்சராத்திரத்தை ஸூத்திரக்காரர் தூஷிக்கவில்லையென்றும் அதில் ஆக்ஷேபிக்கப்பட்ட அம்சங்களுக்கு, அதாவது வ்யூஹோத்பத்திக்கும், ஜீவோத்பத்திக்கும் கௌணமாக அர்த்தம் சொல்லவேணுமென்றும் ஸமர்த்தித்தார். இது ஸ்ரீ பாஷ்யத்தையனுஸரித்ததாகும ஆநந்தமயாதிகரணத்தில் ஸூத்திரங்களுக்கும் ஸ்ரீ சங்கர பாஷ்யத்தில் செய்யப்பட்ட முந்தி வ்யாக்கியானமாகிய இரண்டாவது வர்ணகம் ஸூத்திரங்களுக்கு நேர் விருத்தமென்றும், ஸூத்திரங்களின் அர்த்தம் ஸ்ரீபாஷ்யம் வியாக்கியானத்தைப் போன்ற விருத்திக்காரருடைய உரைப்படிதானென்றும் கல்பதருவிலொப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. 4வது அத்யாயம் 8வது பாதம் முடிவில் கார்யாதிகரணத்தில் முதலில் ஸித்தாந்தத்தையும் பிறகு பூர்வபக்ஷத்தையும். ஸூத்திரக்காரர் கூறியதாக ஸ்ரீ சங்கரபாஷ்ய வ்யாக்யானம் முதலில் ஸித்தாந்தோபக்கிரமமாக ஒரு அதிகரணம் பிரவ்ருத்தித்துப் பிறகு பூர்வபக்ஷத்தைச் சொன்னால் கடைசியில் அந்தப்பூர்வபக்ஷத்தை நிஷேதம்செய்து ஸித்தாந்தத்தைக் காட்டவேணுமென்று ச்ருதப்பிரகாசிகையில் நிரூபித்தார். இந்த யுக்தி அபேத்யமானதென்று இதையொப்புக்கொண்டு கௌட ப்ரம்ஹாநந்திய மென்ற க்ரந்தக்காரர் தாம் செய்திருக்கும் ஸூத்திர வியாக்யானத்தில் இறுதி ஸூத்திரத்திற்கு அதற்கு முன பூர்வபக்ஷத்தைத் தள்ளி மறுபடியும் ஸித்தாந்தத்தை உறுதிப்படுத்தினதாக அர்த்தம் செய்தார் அப்படிச் செய்திருப்பது ஸ்ரீ சங்கரபாஷ்யத்திற்கு நேர் விருத்தம். உதாஹரணத்திற்கு ஸ்தாலீபுலாக ந்யாயத்தால் சிலதையெடுத்துக்காட்டினோம். ஸ்ரீ பாஷ்யம ச்ருதப்ரகாசிகை இந்த இரண்டு க்ரந்தங்களின் ரஸம் அநுபவரஸிகர்களறிவார் புத்திமான்களுடைய ரஸநாடியை இந்தக்ரந்தங்கள் தொட்டு ரஸம் புத்தியில் விச்சேதமில்லாமலோடிக கொண்டிருக்கும்படி செய்யுமென்று வேதாந்தாசார்யரனுபவித்தும் பேசியவார்த்தை.

ஸ்ரீ பாஷ்யத்திற்கு ச்ருதப்ரகாசிகையைத தவிர மேகனாத ஸூரி என்பவர் செய்த ப்ராசீன வியாக்யானம் ஒன்றுண்டு. அந்த வியாக்யானம் அகப்படாவிட்டாலும், அதற்கு மாத்ருகைகளிருக்கின்றன. முதல் நான்கு ஸூத்திரங்களாகிய நான்கு அதிகாரணங்களில் முதல்அதிகரணமட்டும் சாஸ்திராரம்பத்தை ஸமர்த்திப்பதாயும், ஜந்மாத்யதிகரணம்முதல் சாஸ்த்ர மாரம்பித்துவிட்டதென்றும் பாஷ்யக்காரருக்குத் தாத்பர்யமென்றும் அர்த்த வியாக்யானத்தில் ஸமர்த்திதருப்பதை ஆக்ஷேபித்து ச்ருதப்ரகாசிகையில் யுக்திகள் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. அதிகரண ஸாராவளியில் அந்த பக்ஷத்தை சிலர் பக்ஷமென்று கூறப்பட்டது. ச்ருதப்ரகாசிகாசார்யருடைய ஆசார்யரான அம்மாள் என்கிற வரதாசார்யர் தத்துவஸாரம் என்றும் ஒரு சிறிய க்ரந்தம் ஸாதித்திருக்கிறார். அதிலுள்ள ச்லோகங்கள் சிலது ச்ருதப்ரகாசிகையிலுதஹரிக்கப்பட்டிருக்கிறது.

ச்ருதப்ரகாசிகை விஸ்தாரமாயிருக்கிறதென்று அதன் விஷயங்களை ஸங்கிரஹித்து ச்ருதப்ரதீபிகை யென்ற ஒரு வியாக்யானமும் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. அதில் சில பாகம் விசாகப்பட்டணத்தில் மஹாவித்வானான பரவஸ்து ஸ்வாமியால் அச்சிடப்பட்டது. ச்ருதப்பிரகாசிகையைப் போன்ற ஸம்பூர்ணமான வியாக்யானம் ஸ்ரீ பாஷ்யத்திற்கு அமைந்தது ஸ்ரீ வைஷ்ணவ லோகம் பண்ணின புண்ணியமே. வடமொழியிலிது ஒருமுப்பத்தாறாயிரம். இதன் பெருமையையும், ரஸத்தையும் அனுபவிப்பதினும் வேறு பேறில்லை. இதை ஸுலபமாக எல்லோரும் எளிதில் அனுபவிக்கும்படி தமிழ்செய்து ப்ரசுரம் செய்யும் மஹோபகாரத்திலும் பேருதவியில்லை. இதனினும் பெரிய கைங்கரியமில்லை ச்ருதப்ரகாசிகாசார்யருக்கு ஸுதர்சன பட்டர் என்று திருநாமம். வியாஸாரியரென்று இவருக்குப் பெரிய பெருமாள் சாற்றின திருநாமம் என்பது ப்ரஸித்தம். இங்கில்லாதது எங்குமில்லை, மற்ற கிரந்தங்களிலுள்ளது இங்கேயுளது என்றும், மஹத்வத்தாலும், பாரவத்வத்தாலும், மஹாபாரதமெனப்படும் என்றும் கொண்டாடப்பட்ட மஹாபாரதம் போன்ற பெருமையுளது இந்த கிரந்தம் என்பதைத் திருவுள்ளம்பற்றி வியாஸரென்றே திருநாமம் சாத்தினதற்கு ஔசித்யம். அத்யாத்ம சாஸ்திரத்தில் இது ஒரு மஹாபாரதமாகும். இதில் நடக்கும் வாதயுத்தங்களை மஹாபாரதயுத்தங்களுக்கொப்பிடலாம். ஜயம் எப்பொழுதும் ராமானுஜனாகிய கண்ணனுக்கு. ஸுதர்சனத்திற்கே ஜயம். ஜயமென்று மஹாபாரதத்திற்குப் பெயர். இந்த க்ரந்தத்தை ஆதியில் வேதாந்தாசார்யார் ரக்ஷித்து ப்ரவ்ருத்திப்பித்ததாக ஸம்ப்ரதாயம். அவருடைய அதிகரண ஸாராவளி இதற்கும் ஸ்ரீ பாஷ்யத்திற்கும் ஸங்க்ரஹம். இதற்கு பாவப்ரகாசிகை யென்றொரு வியாக்யானம் உபநிஷத் பாஷ்யகாரரென்று ப்ரஸித்திபெற்ற ரங்கராமாநுஜ ஸ்வாமியால் ஸாதிக்கப்பட்டது. அதுவுமச்சிடப்பட்டிருக்கிறது.

இந்த ச்ருதப்பிரகாசிகைக் க்ரந்தத்தின் பெருமை தத்வமார்த்தாண்டமென்னும் கிரந்தத்தைப் பார்த்தால் நன்கு விளங்கும். மாத்வ ஸம்ப்ரதாயத்தில் சந்திரிகை யென்கிற ஒரு அருமையான கிரந்தம். அதில் ஒவ்வொரு ஸூத்திரத்திற்கும் தங்கள் ஸம்ப்ரதாயத்திலுள்ள அர்த்தமே ஸரியென்றும் மற்ற பாஷ்யகாரர்கள் அர்த்தங்கள் ஸ்வரஸமல்லவென்றும் கூறியிருக்கிறார். ஒவ்வொரு அதிகரணத்திலும் ஸ்ரீ பாஷ்யத்தையும் ச்ருதப்ரகாசிகையையும் அநுவாதம் செய்து அதன் பேரில் கோடி சொல்லியிருக்கிறார். அந்த கோடிகளுக்கு ஸமாதானம் செய்து ச்ருதப்ரகாசிகார்த்தங்களை ஸமர்த்தனம் செய்ய அந்த க்ரந்தம் ஏற்பட்டது.

[illegible]

என்று வ்யாஸாசார விஷயமாய் அந்த க்ரந்தத்தில் மங்களம் ப்ரபஞ்சம்முழுவதற்கும் ஸமரூம வியாகரணம் செய்த பெரிய பெருமாளால் இவருக்கு வியாஸரென்கிற ஒரு அபூர்வமான திருநாமம் சாற்றப்பட்டதென்று அங்கே கூறினர். சந்திரிகையின் கோடிகளை யனுவாதம் செய்து அதற்கு ஸமாதானம் ச்ருதப்ரகாசிகையின் அக்ஷரங்களைக்கொண்டே கிடைக்கிறதாக மிகவும் அழகாக அங்கே நிரூபித்திருக்கிறார். ச்ருதப்ரகாசிகையை எழுத்தெழுத்தாய் அந்த ஸ்வாமி அனுபவித்து ரஸித்து மனப்பாடம் செய்தவரென்று அவர் க்ரந்தத்தால் தெரிகிறது. ‘‘[illegible]’’ என்று அங்கெடுத்து உதாஹரித்திருக்கிறார். இப்பொழுதும் ஸ்ரீ பாஷ்யத்திற்கும், ச்ருதப்ரகாசிகைக்கும் மேல் கோடிகள் சொல்லுவதாக ஒரு க்ரந்தம் செய்து அச்சிடப்பட்டிருக்கிறது.

ச்ருதப்ரகாசிகையைக் கொண்டே அந்த க்ரந்தத்திற்கு ஸுலபமாய் ஸமாதானம் சொல்லலாம்.

உபநிஷத்துக்களுக்கு மற்றபாஷ்யகாரர்கள் பாஷ்யம் செய்ததுபோல் ஸ்ரீ பாஷ்யகாரர் பாஷ்யங்களருளிச்செய்யாவிட்டாலும், அந்தந்த அதிகரணங்களில் விஷய வாக்கியங்களான கண்டங்களிற்கு விஸ்தாரமாக பாவங்களை ஸாதித்திருக்கிறார். அத்ராதிகரணத்திலும் ஆநுமாநிகாதிகரணத்திலும், கடவல்லி வியாக்யாதமாயிற்று. தஹராதிகரணத்தில் தஹரப்ரஜாபதி வாக்யங்கள் வ்யாக்யாதமாயிற்று வேதார்த்த ஸங்க்ரஹத்திலும், ஜிஜ்ஞாஸாதிகரணத்திலும் ஸத்வித்யாதிகள் வியாக்யாதமாயிற்று. ச்ருதப்ரகாசிகையில் உபநிஷத்துக்களிலுள்ள முக்கியமான வாக்கியங்கள் முழுவதும் வியாக்யானம் செய்யப்பட்டுள்ளன. ச்ருதப்ரகாசிகை வாக்யங்கள் அங்கங்கே விஸ்தாரமாய் உபநிஷத்பாஷ்யத்தில் வரையப்பட்டிருக்கின்றன. ஆறாயிரப்படியின் வியாக்யானமான இருபத்திநாலாயிரப்படியில் ச்ருதப்ரகாசிகையில் ஸாதிக்கப்பட்ட அம்சங்களை அங்கங்கே உதாஹரித்திருக்கிறார். உபநிஷத்தின் வாக்கியங்களுக்கும் நம்முடைய பக்ஷத்திலும் பிறர் பக்ஷத்திலுமுள்ள ஸ்வாரஸ்யங்களை கணக்கிட்டு திராசில் வைத்து நிறுத்து இந்த க்ரந்தத்தில் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. இந்தக்ரந்தங்களிலுள்ள அருமையான விஷயங்களின் பெருமையை இங்கே எடுத்துரைப்பதற்கு அவகாசமில்லாததால், மற்றொரு ஸமயத்தில் விரித்துரைப்போம். ஸகுண நிர்குண வாக்கியங்களுக்கு உடையவர் ஸாதித்தபடிதான் விஷயவ்யவஸ்தையால் வ்யாக்யானம்செய்தது உசிதமென்பதற்கு ஒரே சிறிய வாக்யத்தால் 15 அபேக்ஷிதமான யுக்திகளை ஸங்க்ரஹித்திருக்கிறார். இதை 448-வதுபக்கத்தில் கண்டுகொள்க. ப்ரதானப்ரதிதந்த்ரமாகிய சரீரசரீரபாவத்தை விஸ்தாரமாய் உபபாதிக்கும் ஸுபாலோபநிஷத்திற்குத் தாமே வ்யாக்யானம் செய்திருக்கிறார். இவர் வ்யாஸரென்று திருநாமம் சாத்தப்பெற்று, ஸ்ரீபாகவதத்திற்கு சுகபக்ஷீயமென்று ஒரு அழகான வியாக்யானம்ஸாதித்து அது ப்ருந்தாவனத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. அதையநுஸரித்தே வீரராகவீயம் என்னும் வியாக்யானம் செய்யப்பட்டதென்று அந்தவியாக்யாதா ஸாதித்தார். இவர்பெருமையும் ஞானமும் அளவிடக்கூடாததாயிருந்தும் இவராசார்யராகிய அம்மாளிடம் கேட்ட அர்த்தங்களையே தாம் வெளிப்படுத்துகிறதாக க்ரந்தத்திற்குத திருநாமம் சாற்றினார். இதனால் இவருடைய ஆத்மகுணங்கள் ப்ரகாசிதமாயிற்று. வேதாந்தாசார்யரும் இதையனுஸரித்து ‘‘[illegible]’’ என்று ஸாதித்தார்

இக்காலத்தில் பகுத்தறிவுள்ள எல்லோரும் தினவுசெட விஷயங்களை விசாரித்து ஸாரதமமான தர்சனமின்னதென்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறார்கள். அது நியாயமே. கேவலம் மூடச்ரத்தையினால் மட்டும் ஒரு தர்சனம் நீடித்து நிற்கமாட்டாது. இப்போது தமிழ் செய்து அச்சிட்டிருக்கிற இந்த இரண்டு க்ரந்தங்களை நன்றாய்த்தெரிந்து கொண்டுவிட்டால், நம் தர்சனத்தைச் சார்ந்தவர்கள் சலிக்கமாட்டார்கள். ஞானத்தினால் மட்டுமே தான் மோக்ஷம் கைகூடுமென்பது ப்ரஸித்தம். ‘‘ஸாவித்யா யாவிமுக்தயே’’ என்று மோக்ஷத்தை ஸாதித்துக்கொடுக்கும் வித்யைதான் வித்யையாகும். மானிடரெல்லோரும் ஞானத்தால் மோக்ஷத்தையடைய விரும்புவர். மோக்ஷருசியுடையவரெல்லோரும், இந்த அத்யாத்ம வித்யையையதிகரிக்க அதிகாரிகளாவர். ஸ்ரீ பாஷ்யம் இரண்டாவதுச்லோகத்தில் [illegible] என்பதில் ஸ்வமனஸ: என்பது ஸாராஸாரவிவேகமுள்ளவர்களால் இந்தக்ரந்தம் அதிகரிக்கத்தக்கது என்று ச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிச்

செய்துளர். "ஆத்யஸ்யந: குலபதே:" என்கிறபடியே ப்ரபந்நஜநகூடஸ்தரான ஆழ்வாருக்கு, ஈச்வரன் தன் ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை நிர்ஹேதுக க்ருபையாலே காட்டிக் கொடுக்க அந்த ஜ்ஞானம் பக்திரூபாபந்ந ஞானமாகையாலே அவற்றினுடைய அநுபவ ஜனித ப்ரீதியுள்ளடங்காமல் வழிந்த திராமிடோபநிஷத்தை ஸ்ரீமந்நாதமுனிகள் "ஆழ்வாருடைய ப்ரஸாதத்தாலே லபித்து பின்பு ஆசார்ய உபதேச க்ரமத்தாலே ஸ்ரீஆளவந்தார் அந்த திராமிடோபநிஷத் ப்ரஸித்தமான தத்வஹிதங்களை லபித்து அத்தைத்தாமும் அநுசந்தித்து ஸம்ஸாரிகள் துர்க்கதியைக்கண்டு அவர்கள் இத்தை இழக்கவொண்ணாதென்று பரம க்ருபையாலே ஸகலோபநிஷத் ரகஸ்யமாம் துர்ஜ்ஞேயமான அர்த்தத்தை ஸர்வாதிகாரமாம்படி ஸ்தோத்ரரூபேண அருளிச்செய்திருக்கிறார்" என்று பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யான அவதாரிகையில் ஸாதித்துளார். இங்கு ப்ரதிபாதிக்கப் படுகிறதும், ஆழ்வார் தாம் பெற்றதும், அதடியாக ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமான பூர்வாசாரியர்களாகவும் வந்து "லோகே அவதீர்ண பரமார்த்த ஸமக்ரபக்தி" என்கிறபடியே பகவத் பக்திக்கு நேட்டுமடையான ஸர்ஸாரத்திலே, பரமபதத்தில் பரிமாறக்கடவ இந்த ஸாத்ய பக்தி "நான்முகனார் பெற்ற நாட்டுளே நற்பாலுக்குய்த்தனன்" என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியின்படியே ஸர்வாதிகாரமாயிற்று. இதற்கேற்ப தத்வத்ரய வியாக்யான அவதாரிகையில் ஸ்ரீமணவாள மாமுனிகளும் "சாஸ்த்ர அப்பியாஸத்திற்கு அநதிகாரிகளான ஸ்திரீசூத்ராதிகளுக்கு முமுக்ஷுத்வமுண்டானாலும் நிஷ்ப்ரயோஜநமாம்படி யிருக்கையாலும், உபதேச கம்யமாமளவில் உக்ததோஷம் ஒன்றுமில்லை யென்று அருளிச் செய்திருக்கிறார்.

பஞ்ச ஸம்ஸ்கார ஸம்பந்நனாய் முமுக்ஷுவான சேதநன் பகவத் விஷயத்திலும் மற்ற திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களிலும் பொதிந்துகிடக்கிற ரகஸ்யார்த்தங்களையும் உடையவர் ப்ரஸாதித்த ஸ்ரீபாஷ்யம், ஸ்ரீபகவத்கீதா பாஷ்யம், பூர்வர்களருளிச்செய்த ரகஸ்யத்ரய, தத்வத்ரய, தத்வசேகர, தத்வதீபாதிரகஸ்ய கிரந்தங்களையும், ஸ்தோத்ர ரத்ந, கத்யத்ரய பஞ்சஸ்தவ, ஸ்ரீரங்கராஜஸ்தவாதி ஸ்தோத்ர பாடங்களையும், ஸம்சய விபர்யயமற அறிவதில் அவைகளிலும் அவற்றின் வ்யாக்யானங்களிலும் உதாஹரிக்கப்பட்டிருக்கிற சுருதிகளின் அர்த்தங்களை அறிந்துகொள்வது அவசியாபேக்ஷிதம். மேற்கூறிய வ்யாக்யானங்களில் உதாஹரிக்கப் பட்டிருக்கிற சுருதிவாக்யங்களை உச்சரித்து தெரிந்துகொள்ளுமிடத்து அபசூத்ராதிகரண நியாயம் ப்ரஸங்கிக்குமென்பது "ஆஜ்யாவேக்ஷணே" நியாயத்தாலே பரிஹ்ருதம். ஸ்ரீபாஷ்யத்தை அதிகரிப்பதற்கு பாஷ்யகாரரால் கூறியுள்ள அர்த்தித்வ ஸாமர்த்திய நியமங்கள் "உபய பரிகர்மித ஸ்வாந்தஸ்ய" இத்யாதிப்படியே அதி க்ருதாதிகாரமான ஸாதன பக்தியைப்பற்றியதே யன்றி ஸாத்ய பக்திவிஷயமன்று. முமுக்ஷுவாய் ப்ரபந்நனான சேதநனுக்கு உபதேச கம்யமாய் வருமளவில் ஸ்ரீபாஷ்யகாரர் அபசூத்ராதி கரணத்தில் ஸாதனபக்தி அதிகாரிக்கு அபேக்ஷிதமென்று கூறின ஸாமர்த்தியம் இவ்வதிகாரிக்கும் வரத் தட்டில்லை. "ஸுமனஸ:" என்ற சப்தத்திற்கு அர்த்தமாகக்கொண்ட ஸாராஸார விவேசனம் இவ்வதிகாரிக்குமுண்டு. உடையவர் திருவடிஸம்பந்தமுடைய அனைவரும் இந்த பாஷ்யத்தையும் ச்ருதப்ரகாசிகையையும் நன்றாய் கற்றுணர்ந்து அநுபவத்திற்குக் கொண்டு வரவேணும்.

"பொலிக பொலிக" வென்று ஸ்ரீ வைஷ்ணவதர்சனத்திற்கும், ஸ்ரீ பாஷ்யத்திற்கும், ச்ருதப்ரகாசிகைக்கும் இஹபர லோகோபகாரமாகத் தமிழ்செய்த ஸ்வாமிக்கும், இந்த க்ரந்தத்தைத் தமிழ்நாட்டில் பிரசுரிக்கும்படி செய்யும் புண்யபுருஷர்களுக்கும், ஸம்ருத்தியை ஆசாஸனம் செய்வதே நமது கடமை.

"ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்"

அ. வி. கோபாலாசாரியன்.

# ஸ்ரீபாஷ்யம் தமிழ் மொழிபெயர்ப்புச் சங்கத்தின் மெம்பர்கள், அபிமானிகள், மற்றும் பொருளுதவி செய்தவர்களின் திருநாமங்கள்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ இத்யாதி வானமாமலைமடம் ஜீயர்ஸ்வாமிகள்.
ஸ்ரீமான் இளையாழ்வார் தாசர் அவர்கள் மெட்டிலிப்பட்டி. கோவில் பட்டி.
,, கொப்பியம், திருநாராயண பிள்ளை அவர்கள் சீர்காழி.

( மெம்பர்கள் )

,, **R. K** வேணுகோபால நாயுடு அவர்கள். B.A.B.L.
,, அழகிரிராமாநுஜதாசர் அவர்கள் ஸ்ரீ ரங்கநிலயம்
,, C. இராமாநுஜம் பிள்ளை அவர்கள், ஸ்ரீரங்கம்.
,, வரயோகிராமாநுஜதாசர் அவர்கள். ,
,, ஆளவந்தார் ராமாநுஜதாசர் அவர்கள் ,,
,, வடமலைப்பிள்ளை அவர்கள் கண்டிராக்டர்,,
,, N. ராமையநாயுடு அவர்கள் டாகடர் ,,
,, தி லெ கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் ,
,, T. V. பாலகிஷ்ணபிள்ளை அவர்கள் மிராசுதார் திருச்சிகோட்டை
,, M. A. கோவிந்தராஜுலு நாயுடு அவாகள் ரங்கூன் ,,
,, ஏ. மா. மாமுண்டிகோனார் அவர்கள் ,
,, T N. ரெங்கநாயகலு அண்டு பிரதர்ஸ் உறையூர்
,, தேசாய் அங்கண்ணசெட்டியாரவர்கள் சென்னை
,, பக்தாங்கிரிரேணு முதலியார் அவர்கள் ,
,, திலலை, கோவிந்தபிள்ளை அவர்கள் சிதம்பரம்
,, எ. வெ. ஸ்ரீநிவாச செட்டியார் அவர்கள் திருக்குடந்தை
,, கெந்தபொடி கோதண்டபாணி செட்டியார் அவர்கள் ,,
,, ஜில்லடி, சாமுஅய்யா அவர்கள்
,, T. D. இராமஸ்வாமி நாயுடு அவர்கள திருப்புறம்பயம்
,, சாரங்கபாணி ராமாநுஜதாசர் அவாகள் மேலபட்டி மதுரை
,, C. சௌரிராஜபிள்ளை அவர்கள நாகப்பட்டணம்
,, மெ கு ரெங்கசாமி நாயககர் அவர்கள் சஙகாலிங்கபுரம்
,, பெருமாள இராமானுஜதாசா அவர்கள் கிருஷ்ணப்பநாயக்கன்பட்டி.
,, தேவபிரான் இராமானுஜதாசர் அவர்கள் நாலாட்டம்புத்தூர்
,, புலிகுத்தி சின்ன கிருஷ்ணஸ்வாமிகள், சாத்தூர்
,, இராமாநுஜதாசர் அவாகள் மினிவா ரங்கூன்
,, இராமசாமி நாயக்கர் அவர்கள் (அ) சிந்தாமணி திருச்சி
,, கலியன்ராமானுஜதாசர் அவர்கள் (அ) அம்மாபேட்டை.
,, பங்கபச்செல்விதாசர் அவர்கள் (அ) ஸ்ரீரங்கம்
,, கன்னையநாயுடு அவர்கள் டாக்டர் (அ) சென்னை
,, ராமாநுஜதாசர் அவர்கள் மரவாடி (அ சிதம்பரம்
,, J வெங்கடேச நாயுடு அவர்கள சூபரவைசர் மனனார்குடி.

---

இதில் விட்டுப்போனவர்களின் திருநாமங்களை அடுத்த ஸஞ்சிகையில் வெளியிடப்படும்.

|| 𑌶𑍍𑌰𑍀𑌃 ||

|| 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌨𑌮𑌃 ||

ஸ்ரீபாஷ்யகாரரருளிச்செய்த

# ஸ்ரீ பாஷ்யம்.

## முதல் அத்யாயம்.

### முதல் பாதம்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍.

𑌅𑌖𑌿𑌲𑌭𑍁𑌵𑌨𑌜𑌨𑍍𑌮𑌸𑍍𑌥𑍇𑌮𑌭𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌲𑍀𑌲𑍇
𑌵𑌿𑌨𑌤𑌵𑌿𑌵𑌿𑌧𑌭𑍂𑌤𑌵𑍍𑌰𑌾𑌤𑌰𑌕𑍍𑌷𑍈𑌕𑌦𑍀𑌕𑍍𑌷𑍇 ।
𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑌿𑌰𑌸𑌿 𑌵𑌿𑌦𑍀𑌪𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑍇
𑌭𑌵𑌤𑍁 𑌮𑌮 𑌪𑌰𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌶𑍇𑌮𑍁𑌷𑍀 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌾 ॥

## ஸ்ரீபாஷ்யத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு.

ஸமஸ்த புவனங்களுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாராதிகளை லீலையாக உடையவனும்; வணங்கின பற்பல பக்தர்களையும், ப்ரபன்னர்களையும், அவர்கள் ஸம்பந்தம் பெற்றவர்களையும் ரக்ஷிப்பதில் ப்ரதான ஸங்கல்பமுள்ளவனும்; வேதாந்தத்தில் விசேஷித்து ப்ரகாசிப்பவனுமான ப்ரஹ்மமென்று ப்ரஸித்திபெற்ற ஸ்ரீநிவாஸனிடத்தில் எனக்கு பக்திரூபமான ஜ்ஞானம் நிலைபெற்றிருக்கவேண்டும்.

ஸ்ரீஸுதர்சனபட்டரருளிச்செய்த

## ஸ்ரீ ஸ்ருதப்ரகாசிகையின் தமிழ் மொழிபெயர்ப்பு.

𑌵𑌰𑌦𑌂 𑌵𑌿𑌬𑍁𑌧𑍇𑌶𑌾𑌨𑌂 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌧𑌿𑌂 𑌕𑌰𑍁𑌣𑌾𑌨𑌿𑌧𑌿𑌮𑍍 ।
𑌶𑌰𑌣𑍍𑌯𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌯𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌣𑌤𑌾𑌰𑍍𑌤𑌿𑌹𑌰𑌂 𑌹𑌰𑌿𑌮𑍍 ॥

1. பக்தர்களுக்கு அபீஷ்டங்களைக்கொடுப்பவனும், ஹம்ஸதிகளுக்கு இறைவனும், ஸம்பத்துகளுக்கு நிதியாக இருப்பவனும் (லக்ஷ்மிக்கு நித்யவாஸஸ்தானமாக இருப்பவனும்) கருணைக்கடலும், ரக்ஷணத்தில் ஸமர்த்தனும், வணங்கினவர்களின் துன்பத்தை, அல்லது பாபத்தை அபகரிப்பவனுமான ஹரியை நான் சரணமடைகிறேன்.

**வஹிரந்தஸ்தமஶ்சேதி ஜ்யோதிர்வந்தே ஸுதர்ஶநம் |**
**யேநாவ்யாஹதஸங்கல்பம் வஸ்து லக்ஷ்மீதரம் விது: ||**

2. உள்ளும் புறமுமுள்ள இருளை அடியோடு அறுக்கும் தன்மை வாய்ந்த ஸுதர்சனமென்கிற ஜோதியை வந்தனம் செய்கிறேன்.—எதனுல் லக்ஷ்மியை தரித்துக்கொண்டிருக்கிற (வாஸுதேவன் என்கிற) வஸ்துவானது தடையற்றதான ஸங்கல்பத்துடன் கூடியதாக ப்ரகாசிக்கிறதென்று (மகான்கள்) அறிகிருர்களோ.

**ஸம்யங்ந்யாயகலாபேந மஹதா பாரதேந ச |**
**உபப்ரும்ஹிதவேதாய நமோ வ்யாஸாய விஷ்ணவே ||**

3. யுக்திகளால் அசைக்கவொண்ணாத சிறந்த ந்யாயங்களின் ஸமூஹத்தாலும், மஹாபாரதத்தாலும், வேதார்த்தவிசதீகரணம் செய்தவரும், விஷ்ணுஸ்வரூபியாகவுமிருக்கிற வ்யாஸமஹர்ஷிக்கு வந்தனம்.

**தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகிநே |**
**ய: ஶ்ருதிஸ்ம்ருதிஸூத்ராணாமந்தர்ஜ்வரமஶீஶமத் ||**

4. யோகிகளுக்குள் சிறந்தவரான அந்த ராமானுஜாசார்யருக்கு நான் வந்தனமளிக்கிறேன்.—எவர் ச்ருதிகளுடையவும் ஸ்ம்ருதிகளுடையவும் (ப்ரஹ்ம) ஸூத்ரங்களுடையவும் உள் ஜ்வரத்தைத்தணியும்படி செய்வித்தாரோ.

**வந்தேஹம் வரதார்யம் தம் வத்ஸாபிஜநபூஷணம் |**
**பாஷ்யாம்ருதப்ரதாநாத்யஸ் ஸஞ்ஜீவயதி மாமபி ||**

5. ஸ்ரீவத்ஸவம்சத்துக்கு அலங்காரமாக இருக்கிற அந்த வரதாசாரியரை நான் வந்தனம் செய்கிறேன்.—எவர் பாஷ்யமாகிற அம்ருதத்தைப்பருகச்செய்து என்னைக்கூட நன்கு ஜீவிக்கச்செய்கிருரோ.

**ப்ரபத்யே ப்ரணவாகாரம் பாஷ்யம் ரங்கமிவாபரம் |**
**பரஸ்ய ப்ரஹ்மணோ யத்ர ஶேஷித்வம் ஸ்புடமீக்ஷ்யதே ||**

6. வேறு ஒரு ரங்கவிமானம் போல் ப்ரணவாகாரமாக ப்ரகாசிக்கிற பாஷ்யத்தை சரணமாக வரிக்கிறேன்.—எதில் ப்ரஹ்மத்தின் *சேஷித்வமானது ஸ்பஷ்டமாகக்காணப்படுகிறதோ.

**ஶ்ருதாந்தேஷு ஶ்ருதம், பாஷ்யே மதம், த்யாதம் ஹ்ருதம்புஜே |**
**லக்ஷ்மீபதிம் ப்ரபத்யேஹம் த்ருஷ்டம் ஶ்ரீரங்கதாமநி ||**

7. வேதாந்தங்களில் கேட்கப்பட்டவரும், பாஷ்யத்தில் மனனம் செய்யப்பட்டவரும், ஹ்ருதயகமலத்தில் த்யானிக்கப்பட்டவரும், ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் காணப்பட்டவருமான ஸ்ரீதரனை நான் சரணமடைகிறேன்.

---

* சேஷித்வம் - பிறர்களால் உண்டு பண்ணப்பட்டிருக்கிற அதிசயத்தை (மேன்மையை)த்தாங்கி இருத்தல்.

இதனால், ''ஆத்மா வா அரே! த்ரஷ்டவ்ய:, ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:''

என்கிற ச்ருதியின் அர்த்தம் அநுஸந்திக்கப்பட்டதுடன் அந்த ச்ருதியினால் ப்ரதிபாதிக்கப்பட்ட பரமாத்மா ஶ்ரீரங்கநாதனென்றும் நிச்சயிக்கப்பட்டது.

ப்ரமாணஞ்ச ப்ரமேயஞ்ச ப்ரமாதாரஶ்ச ஸாத்விகா: |
ஜயந்து க்ஷபிதாரிஷ்டம் ஸஹ ஸர்வத்ர ஸர்வதா ||

8. † ப்ரமாணமும், ப்ரமேயமும் ‡ ஸத்வோத்தரர்களான $ ப்ரமாதாக்களும் எல்லாவிடத்திலும், எப்பொழுதும் சேர்ந்து அரிஷ்டம் நசிக்கும்படி ஜயம் பெறுவார்களாக.

அவிஸ்தராஸ்ஸுகம்பீரா ராமாநுஜமுநேர்கிர: |
தர்ஶயந்து ப்ரஸாதேந ஸ்வம் பாவமகிலம் ஸ்புடம் ||

9. விஸ்தாரமில்லாததும், மிக்க காம்பீர்யமுள்ளதுமான ஶ்ரீராமானுஜமுனியினுடைய வாக்குகள் ¶ ப்ரஸாதகுணத்தால் தன்னுடைய கருத்தனைத்தையும் திடமாகக் காண்பிக்கவேண்டும்.

ஶ்ரீரங்கேஶாஜ்ஞயா லப்தவ்யாஸஸம்ஜ்ஞம் ஸுதர்ஶநம் |
வாக்விஜயிந: ஸூநும் பாஷ்யே பக்திரசோதயத் ||

10. ஶ்ரீரங்கநாதனுடைய ஆஜ்ஞையினால் அடையப்பட்ட வ்யாஸர் என்கிற நாமதேயத்தை வகித்தவனும், வாக்விஜயிபட்டரின் புத்ரனுமான ஸுதர்சனனை ஶ்ரீபாஷ்யத்திலுள்ள பக்தியானது (ஶ்ரீபாஷ்ய விவரணத்தில்) ஏவியது.

ஆசார்யேப்யஶ்ஶ்ருதம் தைஶ்ச ப்ரயுக்தைஶ்ச யோஜிதே|
ஸௌகர்யாய புபுத்ஸூநாம் ஸங்க்ரஹ்ய ப்ரகாஶ்யதே ||

11. ஆசார்யர்களிடமிருந்து கேட்கப்பட்டதும், அவர்களால் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற சப்தங்களோடு சேர்க்கப்பட்டிருப்பதுமான அர்த்தமானது அறிய விருப்பமுள்ளவர்களின் ஸௌகர்யத்திற்காக ஒன்று சேர்த்து ப்ரகாசிப்பிக்கப்படுகிறது.

க: க்ருத்ஸ்நம் வேத்தி பாஷ்யார்த்தம்! ஶ்ருதாம்ஶஸ்ஸ்தாப்யதே க்ருதி: |
ஆட்யை: காகணிகேவைஷா நோபேக்ஷ்யா பாஷ்யவித்தமை: ||

12. ஶ்ரீபாஷ்யத்தின் அர்த்தம் அனைத்தையும் எவன் அறியத்திறமையுள்ளவன்! என்னுடைய இந்த விவரணக்ரந்தமானது எந்த அம்சம் (ஆசார்யரிடத்திலிருந்து என்னால்) கேட்கப்பட்டிருக்கிறதோ அது (உலகத்தில்) நிலை பெறுவதற்காக. தனவான்களால் $ காகணிகை போல, ஶ்ரீபாஷ்யத்தில் விசேஷப்ரஜ்ஞையுள்ளவர்களாலும் கூட இந்த ச்ருதப்ரகாசிகை உபேக்ஷிக்கத்தக்கதல்ல.

† ப்ரமாணம் – ப்ரமாகரணம்.

‡ ப்ரமேயம் – ப்ரமாணத்தாலறியத்தக்க வஸ்து.

$ ப்ரமாதா – ப்ரமாணத்தால் வஸ்துவை அறிபவன்.

¶ ப்ரஸாதம் – விரைவாக அர்த்தத்தை உணர்த்தும் சப்தசக்தி

$ காகணிகா – ஒரு சிறு நாணயம். அதாவது ஒரு பைசா.

பா⁴ஷ்யே வ்யாக்²யாந்வயம் ஸ்வயம் யதிபதிர் வ்யாக்²யாஸ்யதே வாசாம்
தஸ்யா கா³ம்பீ⁴ர்யதோ(அ)நவஸ்தி²திரிதி தத்க்ருதிஸ்ஸோ ஜட³ஸ்தத்³ஷ்டிர் ।
ப்ரஷ்டவ்ய: கஸ்ய ஸர்வஜ்ஞ ஸ ஹி ந ந: ப்ரத்யக்ஷகோ³சரோ(அ)ஸௌ
தத்³பா⁴ஷ்யம் ஸ ச பா⁴ஷ்யக்ருத் ஸ ச ஹரி: ஸர்வே ப்ரஸீத³ந்து ந: ॥

13. யதிராஜர் தாமருளிச்செய்த பாஷ்யத்தைத்தாமே வ்யாக்யானித்திருப்பாரேயாகில் வ்யாக்யானவாக்குகளிலுள்ள அப்படிப்பட்ட காம்பீர்யத்தினுல் அதை விவரிப்பதற்காக மற்றொரு வ்யாக்யானம் வேண்டும். அதுவும் அர்த்தகாம்பீர்யமுள்ளதாதலால் அதையும் விவரிக்க மற்றொரு வ்யாக்யானம் வேண்டியிருக்கும். இவ்வண்ணம் அநவஸ்தை ஏற்படும். மிதமான மதியை உடையவர்களோ அந்த ஸ்ரீயதிபதியின் வாக்குகளுக்கு வெகுதூரத்திலேயே நிற்கத்தக்கவர்கள். ஸர்வஜ்ஞனை பரமாத்மாவையே நாடி ஸ்ரீபாஷ்யத்திற்கு ஒரு வ்யாக்யானம் செய்தருளவேண்டுமென்று வேண்டிக்கொள்வோமென்றால் அவர் நம்முடைய கண்களுக்குப்ரத்யக்ஷமாகக்கூடியவரல்ல. ஆகையால் அந்த பாஷ்யம், அந்த பாஷ்யத்தைச்செய்தருளினவர், அந்த ஹரி, எல்லாரும் நம்மிடத்தில் அனுக்ரஹம் செய்யக்கடவர்கள்.

இஷ்டாநிஷ்டங்களேயும், அவற்றின் ஸாதனங்களேயும் முறையே பெறுவதிலும், விடுவதிலும் விருப்பமுற்றவர்களும், ப்ரமாணுதீனமான ப்ரமேயநிச்சயமுள்ளவர்களுமான எல்லா புருஷர்களுக்கும் அலௌகிக $ † புருஷார்த்தமாகவும், அதற்கு ஸாதனரூபமாகவுமிருக்கிற வஸ்துவானது சப்தப்ரமாணத்தாலேயே அறியத்தக்கது. அதிலும் புருஷபுத்தி தோஷமாவதால் அழுக்கடையாத வேத'‡ மென்கிற அக்ஷரராசியே முக்யப்ரமாணமாக ஆச்ரயிக்கத்தக்கதென்பது ஸித்தம். அந்த வேதத்திலும் முந்தின பாகமாக இருக்கிற கர்மகாண்டமானது பசு, புத்ர, வ்ருஷ்டி, அன்னம், ஸ்வர்கம் முதலான * ஐஹிகங்களேயும் ¶ ஆமுஷ்மிகமான ஸர்வாபீஷ்டங்களேயும் ப்ரதிபாதிக்கிறதாக அறியப்படுகிறது. பரமபுருஷார்த்தத்தையும், அதன் ஸாதனங்களேயும்

$ அலௌகிகம் – சாஸ்த்ரத்தாலறியத்தக்கது.

† புருஷார்த்தம் – தர்மம், அர்த்தம், கர்மம், மோக்ஷம், புருஷர்களால் அர்த்திக்க (வேண்ட)ப்படுவதால் புருஷார்த்தம் என்று பெயர்.

‡ வேதம் – வேதயதி—அறிவிக்கிறது (தர்மாதர்மங்களே) என்கிற சப்த வ்யுத்பத்தியினுல் வேதமென்று கூறப்படுகிறது. இது யோகரூடமான பதம்.

ப்ரத்யக்ஷேணுனுமித்யா வா யஸ்தூபாயோ ந வித்யதே.
ஏநம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா

என்று வேதபாஷ்யத்தின் துடக்கத்தில் ஸாயணரும் நிருக்தி கூறியிருக்கிறார். (இதற்கு அர்த்தம்)ப்ரத்யக்ஷத்தாலும் அனுமிதியினுலும் உலகத்தில் எந்த இஷ்ட ப்ராப்தியுபாயமும், அநிஷ்டநிவ்ருத்தியுபாயமும் அறியப்படுகிறதில்லேயோ அப்படிப்பட்ட உபாயங்களே அறிவதற்கு ஸாதனமாக இருப்பதால் இதை வேதமென்று (பெரியோர்கள்) அறிகிறார்கள்.

* ஐஹிகபலம் - இந்த உலகத்தில் அனுபவிக்கக்கூடிய க்ருஹம், ஆராமம், க்ஷேத்ரம் பசு, புத்ரன், பார்யை முதலியது.

¶ ஆமுஷ்மிகபலமாவது - ஸ்வர்கம், ஸ்வாராஜ்யபாலனம், • ஸத்யலோகவாஸம் முதலியது.

தெரிவிப்பது அதற்கு மேற்பட்ட ப்ரஹ்மகாண்டம். அது பூர்வாசார்யர்களுக்கு அபிமதமான முக்திராஜமார்க்கத்திற்கு முட்கள்போன்ற பல குத்ருஷ்டி¶ களுடைய அநேக துர்வசனங்களால் அழிவுண்டாயிற்று. அந்த குத்ருஷ்டிகள் காட்டின கொடிவழியில் இழிந்து மயங்குகிற உலகத்தை உஜ்ஜீவிக்கச்செய்ய வேண்டுமென்கிற எண்ணத்தினுல் நன்கு ஆராய்ந்து, நன்று, தீதெனப்பகுத்து அறிவதில் ஸமர்த்தர்களான பூர்வாசார்யர்களால் பரிசயம செய்யப்பட்டுள்ளதும், புராதனமாகவே இருப்பதுமான நல்வழியை முட்களில்லாமல் செய்து பரமபுருஷார்த்தத்தை வேண்டுகிற சேதனர்களை க்ருதார்த்தர்களாகச்செய்வதற்கு ஸம்ஸாரத்திலுள்ள தாபத்ரயத்தால் மிகவும் வருந்துகிற ஜனங்களின் அத்ருஷ்டவைபவத்தாலவதரிக்கும்படி செய்விக்கப்பட்டவரும், பரமகாருணிகருமான, பகவானுன, ஸ்ரீபாஷ்யகாரரால் சாரீரகசாஸ்த்ரமானது வ்யாக்யானம் செய்தருளப்பட்டது. வ்யாக்யானம் செய்யத்தக்க க்ரந்தங்கள் மஹர்ஷிகளால் செய்யப்பட்டவைகள். அவைகளுக்கு வ்யாக்யானங்களும் மஹர்ஷிகளால் செய்யப்பட்டிருக்குமாகில் அவைகளே அனுஸரிக்கத்தக்கவைகள். ரிஷியாக ‡ இல்லாதவன் ஸூக்ஷ்மதர்சி ஆகான். ரிஷியின் அபிப்ராயத்தை ரிஷியே தானுக அறிவதற்குத்தகுதியுள்ளவன். மந்தபுத்தியுள்ள மற்றவன் அறியான். ஒரே ரிஷியினுல் சொல்லப்பட்டிருக்கிற வசனங்களுக்கு அந்யோன்யம் விரோதம் வரின் பூர்வபக்ஷா* பிப்ராயம் வைபவவாதம் ¶ முதலிய காரணங்களால் அவிரோதம் ஏற்படுத்தத்தக்கது. பல வக்தாக்களின் வசனங்களுக்கு விரோதம் எவ்விதத்தாலும் பரிஹரிக்க முடியாமற்போனுல் எது யுக்திக்கு இசைந்திருக்குமோ அதுவே ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும். ஆதலால் தோஷமில்லை. எவர்கள் வ்யாக்யானிக்கத்தக்க க்ரந்தங்களும், வ்யாக்யானங்களுமிருக்க அவைகளை அனுதரித்து, அவைகளுக்கு விருத்தமான க்ரந்தங்களைச் செய்கிறுர்களோ அவர்கள் ஆக்ரஹத்தினுல் கவரப்பட்ட மனதையுடையவர்கள்; பண்டிதர்கள் என்கிற எண்ணமுள்ளவர்கள்; பாண்டித்யத்தை வெளியிடுவதில் நோக்கமுள்ளவர்கள்; என்பதில் அவர்களுடைய க்ரந்தபிரவிருத்தியே ப்ரமாணமாகும். ஸ்ரீபாஷ்யகாரரைத்தவிர்த்த மற்ற ஸூத்ரவ்யாக்யாதாக்கள் † ஆர்ஷவ்யாக்யானங்களை மீறி நடந்தவர்களென்பது 'உபாஸத்ரைவித்யாத், ஸர்வத்ரப்ரஸித்தோபதேசாத், பூமா ஸம்ப்ரஸாதாத், அத்யுபதேசாத், தஹர உத்தரேப்ய:' இவை முதலான ஸூத்ரங்களில் நன்கு ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது. இந்த பாஷ்யத்திலோ என்றுல் † வ்ருத்தி க்ரந்தத்தை அனுஸரித்தல் பிரதிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது. பரிஹரிக்க முடியாத பாதகங்கள் அறியப்படாமையால் அந்த ப்ரதிக்ஞையானது மனதொப்பிச்சொல்லியதல்லவென்று ஸந்தேகிக்கத்தக்கதல்ல. ஆனுலும் கர்ம¶ மீமாம்ஸையில் சிற்சில இடங்

¶ குத்ருஷ்டிகள் - வேதவிருத்தார்த்தங்களை உரைப்பவர்கள்.

‡ ரிஷி - யோகதசையில் மந்த்ரங்களை நேரில் காண்பவர். வேதத்திற்கும் இந்தப் பெயருண்டு.

* பூர்வபக்ஷம் - நிச்சிதமான ஸித்தாந்த வசனத்தினுல் பாதிக்கப்படுகிற யுக்தியில்லாத கக்ஷி.

¶ வைபவ வாதம் - ஒரு அர்த்தத்தைப்புகழ்வதில் நோக்கத்துடன் கூடிய வாதம்; அல்லது 'இப்படியும் சொல்வோம்'; ஆக்ஷேபணை ஏற்பட்டால் ஸமர்த்திப்போம்.' என்று வித்யையில் தேட்டையால் கூறப்படும் வசனம்: இதை ப்ரௌடி வாதமென்றும் சிலர் கூறுவார்கள்.

† ஆர்ஷம் - ரிஷிகளால் கூறப்பட்டது.

† வ்ருத்தி - போதாயன மஹர்ஷியினுல் கூறப்பட்டுள்ளதும் ஸ்ரீபாஷ்யத்துக்கு மூலமாயுமுள்ள க்ரந்தம்.

¶ மீமாம்ஸா - விசாரணை.

களில் பிறபட்டிருக்கிற வ்யாக்யாதாக்களால் குழப்பம் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. ஆயினும், அந்தக் $ கர்மமீமாம்ஸையில் (மந்த்ரங்களின்) ப்ரயோகமார்கத்தில் தடுமாற்ற மில்லாமையால் அனுஷ்டானமாத்ரத்தைச்சார்ந்ததாயுள்ள ஸ்வர்கம் முதலிய பல ஸித்தியானது தேவதைகளின் ‡ ஸ்வரூபம். அந்த தேவதாஸ்வரூபத்தின் உண்மையான நிலைமை ஸத்† கார்யவாதம் முதலியவைகளின் அறிவைக்கருதாதென்றும், பரமபுருஷார்த்தமான மோக்ஷமானது ஞானமொன்றினாலேயே ஸாதிக்கத்தக்கதாக இருப்பதினால் ஞானமார்கத்தில் தடுமாற்றமேற்படுவது ¶ ஆத்மஹானியை உண்டுபண்ணக்கூடியதாகையால் அதற்கு விபரீதமான ஜ்ஞானங்கள் அவசியம் பரிஹரிக்கத்தக்கவைகளென்றும் (பிந்தின மேல்) பாகமாகிய ப்ரஹ்மமீமாம்ஸையிலும் அந்தந்த அர்த்தங்களுக்கு ஸாதகங்களாகக்கூறப்பட்டிருக்கிற முன் பாகத்தைச்சார்ந்த அர்த்தங்கள் நன்கு காண்பிக்கப்பட்டேயிருக்கிற ரீதியினால் சொல்லப்படாமலிருந்தபோதிலும் சிக்ஷிக்கத்தக்க அர்த்தங்கள் ஸுலபமாக நிர்வஹிக்கத்தக்கவைகளென்றுமெண்ணி பகவான் ஸ்ரீபாஷ்யகாரர் ப்ரஹ்மஸூத்ரங்களையே விவரிக்கத்துடங்குகிறார்.

இவ்வண்ணம் துடங்கவேண்டுமென்று விரும்பப்பட்ட ப்ரபந்தமானது இடையூறின்றி முடிவு பெறுவதற்காகவும், அபிவ்ருத்தி அடைவதற்காகவும், ஸ்ம்ருதியினாலும் ஆசாரத்தினாலும் ஸித்தமான இஷ்டதேவதோபாஸன ரூபமான ‡ மங்களத்தை சாப்தமாக அனுஷ்டிக்கிறார். ('அகில' என்கிற பதத்தை முதன்மையாகக் கொண்ட ச்லோகத்தினால்) † "மங்களாசாரயுக்தாநாம் நித்யஞ்ச ப்ரயதாத்மனாம், ஜபதாம் ஜுஹ்வதாஞ்சைவ விநிபாதோ ந வித்யதே" என்றல்லவோ ஸ்ம்ருதி கூறுகிறது; எல்லா க்ரந்தக்காரர்களாலும் ஆசரிக்கப்படுகிறது; கேட்பவரின் மனஸ்ஸமாதானத்தின் பொருட்டு சாஸ்த்ரார்த்த ஸங்க்ஷேபமும், செய்யப்படுகிறது. எவ்வாறெனில், $ சோதனாஸூத்ரத்தினால் தர்மத்தினுடைய ஸ்வரூபமும், ப்ரமாணமும் ச்ருத்யர்த்தங்களால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. கேட்பவர் விஷயங்களை ஸுலபமாகத்தெரிந்து கொள்வதற்காக விரிவான விஷயங்களைச்சொல்பவன் துடக்கத்தில் சுருங்க எடுத்து உரைப்பது உலகத்தில் பிரஸித்தமே.

---

$ வேதத்தில் முந்தின பாகம் கர்மாக்களையே ப்ரதிபாதிப்பதால் கர்மகாண்டமென்றும், பிந்தின உபநிஷத் பாகங்கள் ப்ரஹ்மத்தை நிரூபிப்பதால் ப்ரஹ்மகாண்டமென்றும் கூறப்படுகிறது.

‡ தேவதா – ஹோமம் செய்யப்படுகிற ஹவிஸ்ஸுக்கு உத்தேச்யமான வ்யக்தி. தேவ ஏவ தேவதா, ஸ்வார்த்தத்தில் தல் ப்ரத்யயம்.

† ஸத்கார்யவாதம் – காரணவஸ்துவினிடத்தில் ஸூக்ஷ்மமாக ஒடுங்கி இருந்த கார்யமே பின்பு ஸ்தூல ரூபத்துடன் வெளிப்படுகிறதென்று கூறுதல்.

¶ ஆத்மா – (ஆப்னோதி) சேதனாசேதனங்கள் அனைத்தையும் வ்யாபித்திருக்கிறான் என்பதினால்—

‡ மூன்று விதமான மங்களங்கள் :—காயிகம், வாசிகம், மானஸம்.

† சோதனாஸூத்ரம் — 'சோதனாலக்ஷணோர்த்தோ தர்ம:' என்கிற பூர்வமீமாம்ஸா ஸூத்ரம்.

$ (மங்களா)—மங்களாசாரத்தோடு கூடியவர்களும், எப்பொழுதும் பரிசுத்தமான சித்தவ்ருத்தி உள்ளவர்களும், (மந்த்ரங்களை) ஜபிக்கிறவர்களும், (சாந்திக, பௌஷ்டிக) ஹோமங்களைச்செய்பவர்களுமான (ஸாதுக்களுக்கு) (ஒருவிதமான) அனர்த்தமும் உண்டாகாது.

†"இஷ்டம் ஹி விதுஷாம் லோகே ஸமாஸவ்யாஸதாரணம்." என்று வசனம். சாஸ்த்ரார்த்தத்தின் ஸங்க்ஷேபத்தினால் $ வஸ்துநிர்தேசமும்,'பவது' என்பதினால் ஆசீர்வாதமும் செய்யப்பட்டவைகளாக ஆகின்றன. 'விநத' என்னும் 'பக்திரூபா' என்னும் பதங்களால் ப்ரஹ்மவிஷயத்தில் வணக்கம் அறியப்படுவதால் ப்ரணாமமும் பலித்தது. 'ணமு ப்ரஹ்வத்வே' 'வணக்கம்' என்றல்லவோ ‡ தாது. இவ்வாறாக மூன்று விதமான மங்களமும் செய்யப்பட்டதாக ஏற்படுகிறது. ச்லோகத்தின் முதல் பாதத்தினால் முந்தின இரண்டு அத்யாயங்களின் அர்த்தம் சுருங்க ப்ரதிபாதிக்கப்பட்டது. இரண்டாவது பாதத்தினால் பிந்தின இரண்டத்யாயத்தினுடைய அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. கர்மமீமாம்ஸையில் ப்ரதிபாதிக்கத்தக்க விஷயபேதத்தால் * ஷட்கபேதம்போல் இங்கேயும் ‡ விஷயம், $ விஷயி என்கிற ப்ரதிபாத்யபேதத்தால் ¶ த்விகபேதம் ஏற்படுகிறது. உபாயம், உபேயம் இரண்டும் சாஸ்த்ரத்தால் ப்ரதிபாதிக்கத்தக்கவைகள். ப்ரஹ்மமானது † ஸித்தோபாயமாகவும், உபேயமாகவுமிருக்கிறது. பக்தியானது ஸாத்யோபாயம். இந்த ச்லோகத்திலுள்ள ஏழாம் வேற்றுமைப்பதங்களால் ஸித்தோபாயரூபமாயும் $ உபேயமாயுமிருக்கிற ப்ரஹ்மம் சொல்லப்படுகிறது. உண்டாகுதலென்கிற அர்த்தத்தை உணர்த்துவதால், 'புவன'சப்தம் கார்யவர்கத்தைக்குறிக்கிறது. ¶ ரூடிசக்தியினால் அந்தக்கார்யவர்கங்

---

† (இஷ்டம்) - உலகத்தில் சுருங்கச்சொல்லியதை விரித்துரைப்பது அறிஞர்களுக்கு இஷ்டமன்றோ.

$ வஸ்துநிர்தேசம் — க்ரந்தத்தினால் ப்ரதிபாதிக்கத்தக்க முக்யவிஷயத்தைக் கூறுதல்.

‡ தாது — க்ரியாவாசகம்.

* ஷட்கம் — ஆறு அத்யாயங்களடங்கிய ஒரு க்ரந்தஸந்தர்ப்பம்.

‡ விஷயம் — நிரூபணத்திற்கு உரித்தானது.

$ விஷயி — விஷயத்துடன் கூடியது.

¶ த்விகம் — இரண்டு அத்யாயங்களடங்கிய ஒரு க்ரந்தஸந்தர்ப்பம். சாரீரகசாஸ்த்ரத்திலுள்ள நான்கு அத்யாயங்களும் இரண்டு த்விகங்களாகப்பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதலாவதான ஸமன்வயாத்யாயம், இரண்டாவதான அவிரோதாத்யாயம், இவ்விரண்டுடன் கூடின க்ரந்தஸந்தர்ப்பமானது விஷயத்விகம் என்று கூறப்படுகிறது. ஏனெனில், சேதநாசேதனவிலக்ஷணமாயும், அகிலஜகதேககாரணமாயும் இருக்கிற ப்ரஹ்மமானது ப்ரதிபாத்யவிஷயமாக இருப்பதால். அதற்குமேலுள்ள ஸாதனாத்யாயம், பலாத்யாயம் இவ்விரண்டுடன் கூடின க்ரந்தஸந்தர்ப்பமானது விஷயத்விகமென்று கூறப்படுகிறது. ஏனெனில், இதிலுள்ள உபாஸனையும், பலமாகிய பரிபூர்ணப்ரஹ்மானந்தானுபவமும் ப்ரஹ்மத்தை விஷயீகரித்துக்கொண்டிருப்பதால்.

† ஸித்தோபாயம் — ஸித்தமான உபாயம். மனிதனுடைய ப்ரயத்னத்தால் பக்தி-ப்ரபத்திகளைப்போல் ஸாதிக்கத்தகாததாக இருப்பதால் இந்தப்பெயர்.

$ உபேயம் — உபாயத்தால் நாடத்தக்கது.

¶ ரூடம் — ரூடிசக்தியினால் அல்லது ஸங்கேதத்தால் அர்த்தத்தை உணர்த்துகிற சப்தம். பதங்கள் ரூடம், யௌகிகம், யோகரூடம், யௌகிகரூடம், என நான்கு வகைப்பட்டிருக்கின்றன. அவயவார்த்தத்தின் பொருத்தத்தால் பொருளை விளக்கும் சப்தம் யௌகிகம். அவயவசக்தியினாலும், ரூடியினாலும் ஒரே பொருளை உணர்த்தும் சப்தம் யோகரூடம். யோகசக்தியினாலும், ரூடியினாலும் தனித்தனிப்பொருள்களை உணர்த்தும் பதம் யௌகிகரூடம்.

களுககுக்காரணமான குயவன் முதலியவர்களுக்கு விலககம். புவனசப்தமோ மிகப் பெரிதாக இருக்கிற கார்யவிசேஷத்தில் ரூடியுள்ளது. 'அகில' என்கிற பதத்தால் எல்லா இடங்களிலும், எக்காலஙகளிலும் உள்ள அண்டஸமூஹங்கள் கூறப்படுகின்றன. அதனுல் நான்முகன் முதலியவர்கள் விலக்கப்பட்டவர்கள். கொஞ்சம் அல்லது சிதறினது கிலம்; அப்படியில்லாதது அகிலம். கார்யங்களில் ப்ரஹ்மத்தினுடைய ஸ்ருஷ்டி முதலிய செய்கைகளுக்கு விஷயமாகாதது ஒன்றுமில்லை என்று பொருள். இந்த † வ்யதிரேக வசனத்தினுல் உலகங்கள் பெரும்பான்மையாக ப்ரஹ்மஸ்ருஷ்டியாதிகளுக்கு விஷயமே; சிலது விஷயமல்லாமலுமிருக்கலாமென்கிற ஸந்தேகம நீக்கப்பட்டது. இது 'உனக்குத் தெரியாததொன்றுமில்லை' என்பது போன்றது. ஆகையால் 'ஸகல' என்று ¶ அன்வய முகத்தால் கூறப்படவில்லை. அகாரத்தினுல் க்ரந்தத்தினது ஆரம்பம வரித்திப்பதின் பொருட்டு 'நிகில' என்று கூறவில்லை. $ "அ இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதானம், பகவதோ வாசகம் மகாரம் ப்ரயுஞ்ஜாநேந கிந்நம மங்களம் ந க்ருதம்;" என்றும் பெரியோர்களால் உரைக்கப்பட்டிருககிறது. இங்கு அகாரத்தை பகவத்வாசகமாகச் சொல்வதில் கரந்தகாரருக்குக்கருத்து இல்லாவிட்டாலும் பகவானைப்பொருளாக உணாத்தும் சக்திஸம்பந்தம் இந்த அக்ஷரத்துக்கு இருப்பதால் அகாரம் மங்களகரமானது. 'அ இ உண்' என்கிற இடத்தில் அகாரம்போல. ந என்கிற அவ்யயத்திற்கு நிஷேதத்தைச் சொல்லும் தன்மை இருந்தபோதிலும் நிஷேதிக்கத்தக்க வஸ்துவைச்சார்ந்து (ஸந்தர்ப்பத்திற்குத்தக்கபடி) மங்களமும், அமங்களமும் பொருள் ஆதலால் குறைவை மறுத்து சீர்மையைக்காட்டுவதில் தாத்பர்யமிருப்பதால் 'நிஷ்ப்ரத்யூஹமுபாஸ்மஹே' இது முதலான நிர்தேசம்போல இதுவும் மிக்க மங்களகரமானது. 'அகில' சப்தத்தினுல் † சிதசித்துக்களுடைய பேதமும் குறிக்கப்பட்டிருக்கிறது. (ஜன்ம) நித்யநைமித்திகப்ராக்ருதரூபமாயுள்ளது. (ஸ்தேமா) ஸ்திதி அதுவும் அந்தர்யாமி, விஷ்ணுவின் அவதாரம், லோகபாலர்கள், மன்வாதிகள், அரசர்கள், மாதா, பிதா முதலியவர்கள் முகமாகச்செய்யப்படுகிற பல்வகைப்பட்டுள்ளது விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. * (பங்க:) நித்யம், நைமித்திகம், ப்ராக்ருதம் என மூன்று வகைப்பட்டுள்ளது. மோக்ஷமும் ‡ லயத்தில் அடங்கினதாக இருந்த போதிலும் அது சாஸ்த்ரத்

† வ்யதிரேகம் - சொல்லக்கருதிய விஷயத்தின் இன்மையை மறுத்துக்கூறுதல்.

¶ அன்வயம் - சொல்லக்கருதிய விஷயத்தை சப்தத்தால் நேராகக்கூறுதல்.

$ அ - என்கிற அக்ஷரமானது பகவானை நாராயணனுக்கு முதன்மையான வாசகம் பகவத்வாசகமான அகாரத்தை ப்ரயோகியாநின்ற க்ரந்தகர்தாவால் என்ன மங்களம் தான் அனுஷ்டிக்கப் படவில்லை! எல்லாமங்களங்களும் அனுஷ்டிக்கப்பட்டன என்று கருத்து.

† சித் - ஜீவன். அசித் - ஜடவஸ்து.

* (ப்ரளயம்) - நித்யம், நைமித்திகம், ப்ராக்ருதம் என மூன்று விதம். நாள்தோறும் ஸுஷுப்தி ஸமயத்தில் ஜீவன் ஆத்மாவினிடம் போய் லயிப்பது நித்யப்ரளயம். நான்முகன்உறக்கத்தை நிமித்தமாகக்கொண்டு உண்டாவது நைமித்திகப்ரளயம். ஸ்தூலமான ப்ரபஞ்சம் முழுவதும் ப்ராக்ருதியில் லயித்து அது பரமாத்மாவினிடம் ஏகீபாவத்தை அடைவது ப்ராக்ருதப்ரளயம்.

‡ லயமாவது காரணபூதமான் ப்ரஹ்மத்தினிடத்தில் சேதனுசேதனவர்கங்கள் அனைத்தும் அதிஸூக்ஷ்ம ஸ்வரூபத்துடன் ஒடுங்குதல். அதாவது பிரிக்கமுடியாத ஓா - தமான ஸம்யோகவிசேஷம் இந்த லயமானது மோக்ஷத்திலும் ஸமானம். ஆனுல் இந்த

துக்கு முக்ய ப்ரயோஜனமானதால் இதில் உட்படுத்தப்படவில்லை. ஆனதுபற்றியே ஆதி சப்தத்திலும் உட்படுத்தத்தக்கதல்ல. அந்த 'ஆதி' சப்தமானது பொதுவாக இருப்பதால் மோக்ஷமென்கிற அர்த்தத்தை ஸ்பஷ்டமாக உணர்த்துவதற்குக்காரணமாகாது. பூர்வாசார்யர்களால் தனித்தே மிக்க ஸ்பஷ்டமாக மோக்ஷம் நிர்தேசிக்கப்பட்டிருக்கிறது. 'ஜகதுத்பவ, ஸ்திதி, ப்ரணச, ஸம்ஸார, விமோசனாதய:' என்றும், 'ஜகஜ்ஜன்ம, ஸ்திதி, த்வம்ஸமஹானந்தைகஹேதவ:' என்றும் நிர்தேசங்கள். அவ்வாறே பகவத்பாஷ்யகாரரும் வேதார்த்தஸங்க்ரஹத்தில், 'உத்பவ, ஸ்திதி, ப்ரளய, ஸம்ஸார, நிவர்த்தனைக,ஹேதுபூத'' என்று நிர்தேசித்திருக்கிறார். பாஷ்யத்திலும் 'நிகிலஜகதுதயவிபவமஹானந்தைககாரணம்' என்று தனித்தே எடுத்து உரைக்கப்பட்டிருக்கிறது. 'விநத' இது முதலான பதங்களால் ஸ்திதியில் அந்தர்பூதமான ஸ்வர்கம் முதலிய ஸாம்ஸாரிகபலப்ரதத்வத்திற்குத்தனித்து நிர்தேசம் வேண்டுவதில்லை. அஸாதாரணமாயும், பரமப்ரயோஜனமாயுமிருக்கிற மோக்ஷம் ஒன்றுக்கே தனித்து நிர்தேசம் வேண்டும். 'ஆதி' சப்தத்தால் ஸ்ருஷ்டியாதிகளுக்கு யோக்யமான அந்த:ப்ரவேசம், நியமனம், முதலியது குறிக்கப்படுகிறது. அவ்விதமாகவே பாஷ்யத்தில் 'ஜகதுத்பத்திஸ்திதிஸம்ஹாராந்த:ப்ரவேசநியமனாதிலீலம்' என்று தாமே சொல்லப்போகிறார். 'ஜன்ம, க்ஷேம, பங்க.' என்கிற சொல்லினாலேயே அந்த:ப்ரவேசநியமனாதிகளும் அர்த்தஸித்தமென்று பொருள் கொள்வது யுக்தமல்ல.' † அத்யாஸபக்ஷத்திலும் ‡ பரிணாமபக்ஷத்திலும் அதற்கு ஆர்த்திகத்வமில்லாமையால் அதை விலக்குவதின் பொருட்டு தன்மதத்தில் தனித்துச்சொல்லத்தக்கதாக இருத்தலாலும், சப்தத்தாலேயே விளங்கக்கூடியதாக இருக்க, அதற்கு அர்த்தத்தினால் ஸித்தியைக்கல்பிப்பது தகாததாலும், விரிவாகச்சொல்லப்பட்ட அர்த்தத்தை சுருக்கமாக எடுத்து உரைப்பதில் விவக்ஷிதம் பொருந்துதலாலும், அந்த:ப்ரவேசநியமனாதிகள் அர்த்தஸித்தங்களெனப்பொருள் கொள்வது பொருந்தாது. 'லீலா' சப்தத்தினால் பகவான் பரிபூர்ணனாக இருப்பதால் பிறருக்கு அதீனனாக இராமை, தன்னிஷ்டப்படி செய்தல்,முதலியவைகள் கூறப்படுகின்றன. இந்த விஷயம் மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ¶ "அப்ரமேயோ நியோஜ்யஸ்ச யத்ர காமகமோ வசீ, மோததே பகவான் பூதைர்பால: க்ரீடனைரிவ'' என்று. அப்ரமேயத்வம் - பரிபூர்ணனை இருத்தல், அநியோஜ்யத்வம் - இதர சேதனனால் ப்ரேரணம் செய்யத்தகாமை. 'யத்ர காமகம': என்கிற இந்த பதத்தினால் காற்று, ஜலம், முதலியவற்றின் ப்ரேரணத்தினால் ஸம்பவிக்கிற அபுத்திபூர்வகமான சலனம் முதலிய சேஷ்டைகள் விலக்கப்படுகின்றன. அல்லது தன்னிச்சையினால் செய்கிற ப்ரவ்ருத்திக்குத்தடையில்லாமை. தனக்கு அதீனமான லீலோபகரணங்களோடு கூடி இருத்தல் 'வசீ' சப்தத்தின் அர்த்தம். எவனுக்கு விச்வம் வசமாக இருக்கிறதோ

லயத்தில் லயித்த வஸ்துக்களுக்கு மீண்டும் மீட்சி உண்டு. மோக்ஷத்தில் மீண்டுவருதலில்லை. இக்காரணம் பற்றியே ஆத்யந்திகலயம் மோக்ஷமெனக் கூறப்பட்டிருக்கிறது.

† அத்யாஸபக்ஷமாவது - இது 'அத்வைத' ஸித்தாந்தத்தைக்கருதிச்சொல்லியபடி. அத்யாஸமென்றால் ப்ரமம். கிளிஞ்சலைப்பார்த்து வெள்ளி என்று எண்ணுதல்போல் ப்ரஹ்மஸ்வரூபத்தை அறியாமையால் அதனிடம் ப்ரபஞ்சம் என்கிற ப்ரமம்.

‡ பரிணாமபக்ஷமாவது - இது யாதவப்ரகாசமதம். ப்ரஹ்மமே சேதனாசேதனரூபமாகப்பரிணமிக்கிறது என்பது அவர்கொள்கை. இது மிகவும் பாபகரமான பக்ஷம்.

¶ (அப்ர) - ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களால் அறியத்தகாதவனும், பிறரால் ஏவத்தகாதவனும், தடையற்ற ப்ரவ்ருத்தியுள்ளவனும், உலகங்கள் அனைத்தையும் தன்வசத்தில் வைத்துக்கொண்டிருப்பவனுமான பகவான், சிறுவன் மரப்பாவைகளால் விளையாடுவது போல், ப்ராணிகளால் விளையாடுகிறான்.

அவன் வசீ. இந்த்ரிய பராதீனமான சேஷ்டை இல்லாமையைச்சொல்லுகிறதாகவாவது 'வசீ' சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. பாலகத்ருஷ்டாந்தத்தினால் லீலைக்கு வேறு ப்ரயோஜனத்தில் அபேக்ஷையில்லாமை விளக்கப்பட்டது. இதனால் ராஜாக்கள் பந்தய மாகப்பொருட்களைக்கட்டி ஆடும் சூதாட்டம் முதலியது விலக்கப்பட்டது. கார்யவர் கத்தை அபேக்ஷித்து பகவானுடைய மகிமை மிகப்பெரிது என்பது 'க்ரீடநகை': என்ற தனால் பலித்தது. † ப்ரயோஜகனுடைய செய்கையன்றோ லீலை, ஆதலால் பங்க மொன்றை மாத்திரம் லீலை என்று சொல்லவேண்டியிருக்க ‡ ப்ரயோஜ்யவ்யாபாரங்களான ஜன்மஸ்திதிகளை எவ்வாறு லீலையென்று சொல்லலாமெனில், மறுமொழி கூறுகிறார். † "பஹுஸ்யாம் ப்ரஜாயேய" என்றே ச்ருதி. அதனால் ப்ரயோஜகவ்யாபாரம் போல் ப்ரயோஜ்யவ்யாபாரங்களையும் லீலை ¶ என்று சொன்னதினால் உபாதானத்வம் பலித்தது. 'லீலா' சப்தத்தால் நிமித்தத்வமும் ஸித்தித்தது. 'பங்காதி' என்ற சொல்லை ஈற்றிலுடைய பதஸமுதாயத்தினால் முதலத்யாயத்தின் அர்த்தம் சுருக்கமாகக்கூறப்பட்டது. பூர்ண காமனுக்குச்செய்கை ஒன்றும் பொருந்தாது என்கிற ஆக்ஷேபத்தைப்பரிஹரிக்கிற லீலா சப்தத்தால் விரோதபரிஹாரபரமான இரண்டாவது அத்யாயத்தின் அர்த்தம் ஸூசிக் கப்பட்டது. இவ்வாறாக பூர்வத்விகத்தில் சொல்லப்பட்ட காரணத்வரூபமான பரத்வம் சுருங்கக்கூறப்பட்டது. அவனே ஆச்ரயிக்கத்தக்கவன் என்பதற்காக உத்தரத் விகத்தில் சொல்லப்பட்டிருக்கிற $ அபிகம்யத்வ, மோக்ஷப்ரதத்வரூபமான ஸௌலப் யம் ஸங்க்ஷேபமாக ('விநத' இது முதலானதால்) கூறப்படுகிறது. மஹாமேரு வுக்கும், மண்கட்டிக்கும் உள்ள கேவலமான மேன்மையும், ஸௌலப்யமும், நன்மை யை அடையக்கருதி, நாடுகிறவர்களுக்கு பயன்படாததலால் அவைகளை விலக்குவதற்காக இந்த இரண்டு பதமும் விசேஷணங்கள். விசேஷமாக வணங்கினவர்கள் விநதர்கள். ந்யாஸோபாஸனரூபமான எல்லா வித்யாவிசேஷங்களிலும் நிலைபெற்றவர்கள் விவக்ஷிக் கப்பட்டிருக்கிறார்கள். பலவாறாக இருததலும் "தது பர்யபி பாதராயண:, ஊர்த்வரேதஸ் ஸூச" இது முதலியதால் மேலே சொல்லப்போகிற தேவத்வ, மனுஷ்யத்வ,வர்ணாச்ரமாதி பேதத்தினாலும் ஜன்மம்,ஒழுக்கம,குணங்கள் இவைகளாலுமென்று கருதப்பட்டிருக்கிறது.

† ப்ரயோஜகன் – நியந்தா, அதாவது கார்யங்களில் ஏவுகிற ப்ரபு.

‡ ப்ரயோஜ்யன் – ஏவலைச்செய்கிற கிங்கரன்.

† (பஹுஸ்யாம்) – விசித்ரானந்தசித்சின்மிச்ரவ்யஷ்டிஜகத்ரூபமாய் நானே பஹுவாக ஆகக்கடவேன். அதற்காக தேஜோபன்னாதி ஸமஷ்டிரூபமாகப்பரிணமிக்ககடவேன்

¶ அத்ராதிகரணத்தில் சொல்லியபடி சராசரங்களனைத்தையும் ஸம்ஹரிப்பது பர மாத்மாவுக்கு விளையாட்டே. ஏனெனில் அவன் ஸ்வதந்த்ரனாதலால், தன்னிச்சையினாலே வேறு பலனை உத்தேசிக்காமல் செய்வதால். ஸ்ருஷ்டி, ஸ்திதிகள், நான்முகன் முதலியவர் களாலும், மாதாபிதாக்களாலும், செய்யப்படுவதால் அவ்விரண்டும் ப்ரயோஜ்யர்களுடைய க்ருத்யம். அது அவர்களுக்கு லீலையாகாது. ப்ரபுவால் நியமிக்கப்பட்டவலவோ நிர்பந்தத்துடன் அந்தவேலையைச்செய்கின்றார்கள். ஆதலால் ஸ்ருஷ்டி, ஸ்திதிகள், ப்ர யோஜகனை பரமாத்மாவுக்கு எவ்வாறு லீலையாக ஆகும் எனில், 'பஹுஸ்யாம் ப்ரஜா யேய' என்று ஸங்கல்பித்து பரமாத்மா தானே சராசரரூபியாகத்தோன்றி உள்ளே ப்ரவேசம், நியமனம் இவைகளால் அவைகளுக்கு ஸ்திதியையும் செய்வதால் அந்த ஸ்ருஷ்டி, ஸ்திதிகளும், ப்ரயோஜகனை பரமாத்மாவின் வியாபாரங்களே. ஆகையால் மூன்று செய்கைகளும் பரமாத்மாவுக்கு லீலை. இவ்வாறு ஶ்ருதி கூறியதால் ப்ரஹ்ம த்திற்கு உபாதானத்வமும், 'லீலை' என்றதினால் அதற்கே நிமித்தத்வமும், ஸித் தித்தது.

$ அபிகம்யத்வம் – ஸுலபமாக எல்லோராலும் நாடத்தக்க தன்மை.

பகவத்ஜ்ஞானத்தால் ஸத்தையைப்பெறுதல் ‘பூத’ சப்தத்தின் அர்த்தம். † “ அஸ்தி ப்ரஹ்ம மேதி சேத் வேத, ஸந்தமேநம் ததோ விது:” என்றல்லவோ ஶ்ருதி. ஸ்வரூபலாபம் பெற்றவர்களுக்கும் ¶ “ தேஷாமேவாநுகம்பார்த்தமஹமஜ்ஞானஜம் தம:, நாசயாம் யாத்மபாவஸ்த:, ததாமி புத்தியோகந்தம், அஹம் ஸ்மராமி மத்பக்தம்.” இது முதலான வசனங்களால் ஸாக்ஷாத்கார, விரோதிநிவர்த்தனம் முதலியது பகவானுடைய பாரமாகவே யிருப்பதால் $ ஸ்வரூப ப்ரச்யுதி ஸம்பவிக்காது. பூதங்களுடைய வ்ராதம், பூதவ்ராதம். தன்னை ஆஶ்ரயித்தவர்களின் ஸம்பந்தம் பெற்றவர்கள்கூட அக்காரணத்தினாலேயே பகவானுக்கு ரக்ஷிக்கத்தக்கவர்களாக ஆகிறார்களென்று அபிப்ராயம். † ‘ஆஸ்போடயந்தி பிதர: ப்ரந்ருத்யந்தி பிதாமஹா:, வைஷ்ணவோ ந: குலே ஜாதோ நஸ்ஸந்தாரயிஷ்யதி.’ என்றும், ‡‘பசுர்மனுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவஸம்ஶ்ரயா:, தேநைவ தே ப்ரயாஸ் யந்தி தத் விஷ்ணோ:பரமம் பதம்.’ என்றும் வசனங்கள் கீழ் கூறிய அர்த்தத்தைத்தெரிவிக் கின்றன. ‘ப்ராஹ்மணஸமாஜ:’ என்கிற வ்யவஹாரத்தில் ‘ஸமாஜ’ ஶப்தம்போல் ‘வ்ராத’ ஶப்தம் ஆறும் வேற்றுமையிலுள்ள பூதஶப்தத்தால் உணர்த்தப்பட்ட அர்த்தத்தோடு வேறு படாத அர்த்தமுள்ளதாக இருக்கவேண்டுமென்றால், அவ்வாறு அல்ல. ‘ராஜபரிஷத்’ முத லிய வ்யவஹாரங்களில் ஆறும் வேற்றுமையிலுள்ள ‘ராஜ’ ஶப்தத்தால் கூறப்பட்டிருக்கிற அர்த்தத்தைவிட வேறான அர்த்தம் ஸமுதாயத்தை போதிக்கிற சப்தத்திற்குக்காணப்படுவ தால், ஸமாஸத்தில் அடங்கிய ஆறும் வேற்றுமையானது ஸம்பந்தமாத்ரத்தைத்தெரிவிப்ப தாலும், ஸமுதாயத்தால் போதிக்கத்தக்க அர்த்தமானது ஆறும் வேற்றுமையிலிருக்கும் ஶப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்தைக்காட்டிலும் வேறாக இருக்கக்கூடா தென்கிற நியமமில்லாமையாலும், ஸமுதாயவாசகஶப்தம் கேட்கப்பட்டவுடன் ஸமுதாயி கள் எவைகளென்று அபேக்ஷிக்கையில் பக்கத்திலிருக்கிற ஶப்தத்தால் சொல்லத்தக்க அர்த்த நிஷ்டமான ஸமுதாயம் ஶீக்ரமாக அறியப்படுகிறபடியால், ப்ராஹ்மணஸமுதாயம் முதலிய வ்யவஹாரங்களில் ஸமுதாயியை விட ஸமுதாயத்திற்கு பேதமின்மை அறியப் படுகிறது ‘ராஜபரிஷத்’ இது முதலிய வ்யவஹாரங்களில் ஸமுதாயியைக்காட்டிலும் ஸமுதாயத்திற்கு பேதமும் காணப்படுவதால் அந்தந்த ஸ்முதாயக்ரஹை ப்ரமாணங் களை அநுஸரித்து அர்த்தத்தை வர்ணிப்பது யுக்தமாதலால் கீழ் கூறப்பட்ட அர்த்தமே பொருத்தமுள்ளது. இவ்விதம் பொருள் கொண்டதனால் ‘வ்ராத’ ஶப்தப்ரயோகம் அர்த்த

---

†( அஸ்தி ப்ரஹ்மேதி) - ப்ரஹ்மமிருக்கிறதென்று எவன் அறிகிறானோ அவனை ஸத் என்று அறிகிறார்கள்.

¶ (தேஷாமேவ) - அவர்களிடம் தயவினாலேயே அவர்களுடைய மனதிலிருந்து கொண்டு நான் அஜ்ஞானத்தினாலுண்டான இருளை நாசம் செய்கிறேன். அப்படிப் பட்ட புத்தியோகத்தைக்கொடுக்கிறேன். நான் பக்தனை ஸ்மரிக்கிறேன்.

$ ஸ்வரூபப்ரச்யுதி - பரமாத்மாவுக்கு சேஷனாக இருத்தலே சேதனனுக்கு ஸ்வரூபம். ஸ்வாதந்த்ரியம் வஹித்து இவன் ஒருகார்யத்தைச்செய்தானேயாகில் அது இவனுடைய சேஷத்வஸ்வரூபத்துக்கு விருத்தம். அப்பொழுது சேஷத்வரூபமான ஸ்வரூபத்தினின்று இவனுக்கு நழுவுதலுண்டாகும்.

† (ஆஸ்போடயந்தி) - நம்முடைய குலத்தில் வைஷ்ணவன் பிறந்துவிட்டான்; அவன் நம்மை உத்தாரணம் பண்ணப்போகிறான்? என்று பித்ருக்கள் கைகொட்டுகிறார்கள். பிதாமஹர்கள் அதிகமாகக்கூத்தாடுகிறார்கள்.

‡ பசுவோ, மனிதனோ, பக்ஷியோ, எவர்கள் வைஷ்ணவஸம்பந்தம் பெற்றவர்களோ அவர்கள் அந்த ஸம்பந்தத்தினாலேயே அப்படிப்பட்ட விஷ்ணுவினுடைய ஸர்வோத்தம ஸ்தானத்தை அடைவார்கள்.

முள்ளதாக ஆகும். இஷ்டத்தை அடைவித்தல், அநிஷ்டத்தை விலக்குதல், ரக்ஷை எனப்படும். அதில்(ஏகதீக்ஷ:) ப்ரதான ஸங்கல்பமுள்ளவன். தன் ஸத்தையைக்காட்டிலும் தன்னை அணுகினவர்களை ரக்ஷிக்கிற ஸங்கல்பத்தை நிறைவேற்றுவது அபிமதமாதலால் ரக்ஷை ப்ரதானமாயிற்று. * "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்." என்று கூறப்பட்டிருக்கிறது. ‡ "காமமாத்மானம், பார்யாம், புத்ரம் வா, உபருந்த்யாத் நத்வேவ தாஸகர்மகரம்." என்று ஆபஸ்தம்பர் சொல்லியிருக்கிறார். இப்படிப்பட்ட இந்த ஸ்ம்ருதி எவனுடைய ஆஜ்ஞையோ அவனுக்குக்கூட அப்படி அநுஷ்டிப்பது மிகவும் அபிமதம் என்பது 'அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்.' என்கிறதினால் அறியப்படுகிறது. தீக்ஷாப்ராதான்யத்தால் ரக்ஷாப்ராதான்யம் பலித்தது. 'தீக்ஷா' ஶப்தத்தினால் ஆஶ்ரிதரக்ஷணம் ஸ்வப்ரயோஜனமென்று காண்பிக்கப்பட்டது. வ்ரதத்தினின்று தவறுதலாலும், அதை நிறைவேற்றுதலாலும், ஸம்பவிக்கிற அர்த்தமும், நன்மையும், வ்ரதத்தை அனுஷ்டிப்பவனுக்கே 'ததாம்யேதத் வ்ரதம் மம.' என்று சொல்லியிருப்பதால் ஆஶ்ரித ரக்ஷணம் அவனுடைய வ்ரதம். 'விரத' 'ரக்ஷா' ஶப்தங்களால் மூன்றாவது, நான்காவது அத்யாயார்த்தங்கள் ஸங்க்ரஹிக்கப்பட்டன. இவ்வண்ணமாக ஜகத்காரணத்வ, மோக்ஷப்ரதத்வங்கள் கூறப்பட்டன. இவ்விரண்டும் ராஜனுக்கு சத்ரசாமரங்கள் போல் ப்ரஹ்மத்துக்கு அஸாதாரணசின்ஹங்கள். பரத்வ, ஸௌலப்ய, குணங்கள் ஆஶ்ரயிக்கத்தக்க தன்மைக்குக்காரணங்களாக அறியப்பட்டிருக்கின்றன. எப்படியென்றால் † 'ய ஏனம் விதுரம்ருதாஸ்தே பவந்தி.' என்று தொடங்கி'ஸம்பாஹூப்யாம் நமதி ஸம்பதத்ரைர்த்யாவா ப்ருதிவீ ஜநயந்தேவ ஏக:.' என்றும் ¶'ஸர்வலோகமஹேஶ்வரம்,ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்,ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம் ருச்சதி.' என்றும் ப்ரமாணத்தைத்தெரிந்து கொள்வோமேயாகில் ப்ரமேயஶரீரம் திடமாக வித்திக்கும். ஆதலால் இரண்டு த்விகங்களுக்கும் ஶேஷமாயிருக்கிற நான்கு ஸூத்ரங்களுடைய அர்த்தத்தைச்சொல்லிக்கொண்டு ப்ரமேயாநுரூபமான ப்ரமாணத்தைக்காட்டுகிறார். (ஶ்ருதிஶிரஸி விதீப்தே) என்பதால். 'எப்பொழுதும் கேட்கப்படுகிறது' என்கிற அவயவார்த்தத்தால் 'ஶ்ருதி' என்று வேதத்திற்குப்பெயர். † அபௌருஷேயமானதால் தோஷமின்மை விவக்ஷிக்கப்பட்டது. இதனால் ப்ராமாண்யம் முதலிய

* (அப்யஹம்) - உயிரை விட்டாலும் விடுவேன்.

‡ (காமமாத்மானம்) - இது ஆபஸ்தம்பதர்மத்தில் இரண்டாவது ப்ரச்னம், ஒன்பதாவது கண்டிகையிலிருக்கிற ஸூத்ரம்.

தாஸனாக ஆகி எவன் ஊழியம் செய்கிறானோ, அவன் தாஸகர்மகரன். அவனை உபரோதிக்கலாகாது-அன்னத்தைக்கொடாமல் பசியால் வருந்தும்படி செய்யலாகாது.

தன்னையோ, மனைவியையோ, புத்ரனையோ அன்னபானாதிகளின் குறைவினால் ஸம்பவிக்கக்கூடிய வருத்தத்துக்கு உள்ளாக்கிக்கொள்ளலாம். அடிமைபூண்டவனை ஒருபொழுதும் வருத்தலாகாதென்று கருத்து.

† (ய ஏனம்) - எவர்கள் இவனை அறிகிறார்களோ, அவர்கள் முக்ததுல்யர்களாக ஆகிறார்கள்.

¶ (ஸர்வலோகமஹேஶ்வரம்) - எல்லா உலகங்களுக்கும் மஹேச்வரனாக இருப்பவனும், எல்லா ப்ராணிகளுக்கும் ஸுஹ்ருத்தாகவுமிருக்கிற என்னை அறிந்து ஶாந்தியை அடைகிறான்.—கீதை.

† அபௌருஷேயம் - மனிதனால் உண்டு பண்ணப்படாதது.

வற்றில் உபயோகமுள்ள பூர்வமீமாம்ஸாந்யாயங்களுக்கு † உபஜீவ்யத்வம் இங்கு ஸூசிப்பிக்கப்பட்டது. 'ஸிரஸ்' ஸப்தத்தால் அநந்யபரத்வம் விவக்ஷிக்கப்பட்டது. மந்த்ர, ப்ராஹ்மண, பாகங்களாயிருக்கிற உபநிஷத்துகள் பரதத்வத்தையே ப்ரதானமாக ப்ரதிபாதிக்கின்றனவன்றோ. (விதீப்தே) பூர்வபாகத்திலும் அக்னி, இந்திரன் முதலான தேவதாரூபமாக ப்ரஹ்மமே ப்ரதிபாதிக்கப்படுகிறது என்பது 'ததேவாக்னிஸ்தத்வாயு:' இது முதலான உபநிஷத்வாக்யத்தினாலேயே அறியப்படுவது பற்றி விசேஷித்து ப்ரகாசிக்கிற தன்மை விதீப்தமென்று கூறப்பட்டது; அல்லது, அல்பஸுகத்துக்கு ஸாதனபூதமாயும், துக்கரூபமாயுமிருக்கிற * ப்ரவ்ருத்தி, ‡ நிவ்ருத்திரூபமான ப்ரயோஜனம் பூர்வபாகத்தில் தீப்தம். ப்ரஹ்மமோவென்றால், ஸ்வயம் நிரதிஸயாநந்தரூபமாகையால் பரமபுருஷார்த்தபூதமாக மேல்பாகத்தில் விசேஷமாய் தீப்தம் என்று கருத்து. இதனால் † 'ஸமந்வயாதிகரணத்தின் அர்த்தம் ஸூசிக்கப்பட்டது. † வ்யுத்பத்திலக்ஷண ஸௌஷ்டவமில்லாவிடில் ஸ்ருதிஸிரஸால் அறியத்தக்க தன்மை பொருந்தாததாலும், 'ஸ்ருதிஸிரஸ்' ஸப்தமானது வேறு ப்ரமாணங்களுக்கு வ்யாவர்த்தகமாகயிருத்தலாலும், அதற்கு முந்தின மூன்று அதிகரணங்களின் அர்த்தமும் இங்கு த்யோதனம் செய்யப்பட்டதாக ஆகிறது. 'ப்ரஹ்மணி' என்ற ஸாமாந்யபதம் உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள 'ஸத் ப்ரஹ்ம, ஆத்மா, இது முதலான ஸாமாந்ய சப்தங்களைக்காட்டுவதற்காக. (ஸ்ரீநிவாஸே) என்ற விசேஷ பதமானது நாராயணஸப்தம் முதலான விசேஷ ஸப்தங்களைக்காட்டுவதற்காக. 'பஸுநா யஜேத' 'ச்சாகஸ்ய வபாயா மேதஸ:' என்கிற இடத்தில் $ 'ச்சாகோவா மந்த்ரவர்ணாத்' என்கிற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிற ந்யாயத்தினால் 'பசு' ஸப்தத்துக்கு ச்சாகத்தில் பர்யவஸாநம் நிர்ணயிக்கப்பட்டிருப்பதால், ஸாமாந்யவாசக சப்தங்களுக்கு விசேஷவாசகஸப்தமிருந்தால், அதில் பர்யவஸாநம் ஸாஸ்த்ரஸம்மதம்.

† உபஜீவ்யத்வம் – ப்ராதான்யம்.

* ப்ரவ்ருத்தி – விஷயாநுபவேச்சையால் இந்த்ரியங்களின் மூலமாய் வெளிப்படும் மனதின் போக்கு.

‡ நிவ்ருத்தி – விஷயாநுபவங்களினின்று உண்டாகும் மனதின் ஒழிவு.

† ஸமந்வயாதிகரணம் நான்காவது. இதில் பரமபுருஷார்த்தபூதமான ப்ரஹ்மம் வேதாந்தவாக்யங்களில் அபிதேயமாக நன்கு அந்வயிப்பதால் ப்ரஹ்மத்துக்கு ஸாஸ்த்ரப்ரமாணகத்வம் ஸித்திக்கிறதென்பது ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு முந்தி முறையே மூன்று அதிகரணங்கள்:—முதலாவது, ஜிஜ்ஞாஸாதிகரணம். இரண்டாவது, ஜன்மாத்யதிகரணம். மூன்றாவது, சாஸ்த்ரயோந்யதிகரணம்.

† வ்யுத்பத்தி—பதங்களுக்கு அர்த்தங்களோடு ஸம்பந்தம் அறிந்து கொள்ளுதல்.

† 'ச்சாகோவா மந்த்ரவர்ணாத்'-இது பூர்வமீமாம்ஸாஸூத்ரம். ச்சாகபசுந்யாயமாவது.- ஓரிடத்தில் 'பசுநா யஜேத.' என்கிற விதியினால் பசுகரணகமான யாகம் செய்யத்தக்கதென்று ஏற்படுகிறது. 'பசு' ஸப்தம் நான்குகாலுள்ள எல்லா ப்ராணிகளையும் குறிப்பதால் எந்தப்பசுவைக்கொண்டு யாகம் செய்கிறதென்று ஸந்தேஹம் வரின், மேலே, ச்சாகஸ்ய வபாயா:, என்கிற வாக்யத்தில்'ச்சாக'பதமிருப்பதால் ப்ரக்ருதமான பசுசப்தம் ச்சாகரூபமான பசுவைக்குறிக்கிறதென்று ஸாமாந்யமான பசுபதத்துக்கு விசேஷமான ச்சாகபதத்தில் பர்யவஸாநம் செய்வது. அந்யதாநுபபத்தியினால் ஸாமாந்யவாசகசப்தங்களை விசேஷங்களிலேயே பர்யவஸாநம் செய்யவேண்டும்.

இதனால் ஸத்ப்ரஹ்ம, ஆத்மா, முதலான ஸாமாந்ய பதங்களுக்கு நாராயணரூப விசேஷத்தில் பர்யவஸாநம ஸூசிக்கப்பட்டது 'ஸ்ரீநிவாஸ' பதத்துக்கு ஸமபத்துகளுக்கு இருப்பிடமாயுள்ளவர் என்கிற அவயவார்த்தத்தினால் நித்யவிபூதியுடன் கூடியிருத்தல் ஸூசிக்கப்பட்டது. ரூடிசக்தியினால தரிமூர்த்திஸாம்யமும், த்ரிமூர்த்திகளுக்கு ஐக்கியமும், ப்ரஹ்மமானது த்ரிமூர்த்திகளுக்கு மேலாக இருக்கிறது என்பதும், நிஷேதிக்கப்பட்டது, ஈச்வரனே ப்ரஹ்மம; அவன் மும்மூர்த்திகளைவிட வேருயிருக்கும் ஸதாசிவன்; ப்ரஹ்மாதிகளான மூவரும் ஈச்வரத்தன்மையில்லாதவர்கள் என்கிற பக்ஷமும் நிராகரிக்கப்பட்டது. (பரஸ்மிந்) இந்தப்பதத்தினால் 'பரமத: ஸேதூந்மாந' என்ற அதிகரணத்தின் அர்த்தஸூசனம். அதனால் 'ப்ரஹ்மவிதாப்நோதி பரம்' என்கிற இடத்தில் ப்ராப்யத்தை பரபதத்தால் சொல்லியிருப்பதினால் உபேயாந்தரவ்யாவ்ருத்தி ஏற்பட்டது. அல்லது ஜகத்காரணத்வவிஷயத்தில சங்கிக்கப்பட்ட தோஷத்தை விலக்குவதற்காக, 'நஸ்தாநதோபி' என்கிற அதிகரணஸித்தமானதும், † சோதகவாக்யங்களால் சொல்லப்பட்டதுமான ¶ உபயலிங்கத்துடன் கூடியிருத்தலால் உண்டான $ வைலக்ஷண்யம் ஸூசிக்கப்பட்டது. பிறகு உபாயஸ்வரூபத்தைச்சொல்லுகிருர். (சேமுஷீ) இது ஸாமான்யசபதம். (பக்திரூபா) இது விசேஷசப்தம். இந்த இடத்திலும் 'ச்சாகோ வா மந்த்ரவர்ணாத்'. என்கிற ந்யாயம் அங்கீகரிக்கத்தக்கது. 'சேமுஷீ' பதத்தை எடுத்ததினால் * ஜ்ஞான கர்மங்களுடைய ஸமுச்சயம் வ்யாவ்ருத்திக்கப்பட்டது. (பக்திரூபா) என்றதினால் வாக்யார்த்தஜ்ஞானம் வ்யாவ்ருத்திக்கப்பட்டது. $ 'பாவத்தபாவம் கதோ பக்த்யா மாஸ்த்ராத் வேத்மி ஜநார்தனம்,' 'பக்த்யாத்வநன்யயா, ஜ்ஞாதும், த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச' என்று சொல்லப்பட்டிருக்கிற ரீதியில் ஜ்ஞானத்துக்கும், தர்சனத்துக்கும், ப்ராப்திக்கும் ஸாதனமான பக்தியும் இங்கு விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது; பொதுவாக 'பக்திரூபா' என்று சொல்லியிருப்பதால். "அஹமஸ்ம்யபராதாநாமாலய:" இது முதலான இடத்தில் கூறியிருக்கிற வண்ணம் தன்னை அநுஸந்தித்துக்கொண்டு சொல்லுகிருர் (மம) என்று. (பவது) பக்தி மிகவும் ருசியுள்ளதாக இருப்பதால் பக்தர்களாலேயே பிரார்த்திக்கத்தக்கதாக இருத்தல் ஸூசிக்கப்பட்டது. அல்லது, பக்தியானது எல்லோருக்கும் ருசிக்காதேன்றேனில், கூறுகிருர் (மம) என்று. பித்தம் தணிந்தவனுக்குப்பால் மிகவும் ருசியுள்ளதாகத் தோன்றுவதுபோல, ப்ரதிபந்தகமான பாபமற்ற எனக்கு என்று கருத்து. (ரக்ஷைகதீக்ஷே) என்கிற பதம் தொடங்கி (பரஸ்மிந்) என்கிற பதத்தை ஈருககொண்ட பதங்களால் உபேயபூதனுக இருப்பவனே ஸித்தோபாயமென்று கூறப்பட்டது. (பக்திரூபா) என்பதால் ஸாத்யோபாயம் சொல்லப்பட்டது. இந்த ஸ்லோகத்தில் மாஸ்த்ரத்தினுல் ப்ரதிபாதிக்கத்தக்க விஷயங்களில் ஏகதேசமான பரபக்ஷநிராஸமும் அர்த்தாத் ஸூசித

---

† சோதகவாக்யம்—ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம.

¶ உபயலிங்கம்—ஹேயப்ரத்யநீகத்வம். கல்யாணகுணைகதானத்வம்.

$ வைலக்ஷண்யம்—வேற்றுமை. (வேறுபாடு)

* கர்மயோகமானது ஜ்ஞானத்தை இடையிட்டும், இடையிடாமலும் மோக்ஷஸாதகமென்று விசிஷ்டாத்வைதவேதாந்திகளின் கொள்கை. ஜ்ஞானம், கர்ம, இரண்டும் சேர்ந்தே ஸமப்ரதானங்களாக இருந்து மோக்ஷத்தைப்பயக்கிறதென்பது மதாந்தரஸ்தர்களின் கொள்கை.

$ (சுத்தபாவம்) - பக்தியினால் சுத்தமான சித்தவ்ருத்தியை அடைந்திருப்பவனுன நான் மாஸ்த்ரத்தினுல் ஜநார்தனனை அறிகிறேன். (மஹாபாரதம்.)

மாகிறது. 'ஜன்ம, ஸ்தேம, பாங்காதி,' சப்தங்களால் † ஒரே காலத்தில் ஸ்ருஷ்டியாதிகளை ஏற்றுக்கொள்ளாதவர்களான ஹாட்டர்களும், ப்ராஹாகரர்களும் திரஸ்கரிக்கப்பட்டார்கள். 'லீலா' பதத்தினுல் ஈஸ்வரனை ஸாக்ஷியாக மாத்திரம் இருப்பவனுக ஒப்புக்கொள்கிற ஹிரண்யகர்பமதம் நிரஸிக்கப்பட்டது 'விநத' இது முதலான பதங்களால் ஜீவன்களுக்கு அந்யோன்யம் அபேதத்தையும், ப்ராஹ்மத்தோடு அபேதத்தையும் சொல்லுகிற ப்ராஹ்மாஜ்ஞானவாதிகளும் நிரஸிக்கப்பட்டார்கள். 'ஸ்ருதிஸிரஸி' என்கிற பதத்தால் வேதபாஹ்யர்களான சார்வாக, பௌத்த, ஜைனர்கள் நிரஸிக்கப்பட்டார்கள். அதே பதத்தினுல் ஆநுமானிகேச்வரவாதிமதமும் தகர்க்கப்பட்டது. 'ப்ராஹ்மணி' என்கிற பதத்தினுல் அப்ராஹ்மாத்மகப்ரதானத்தையும், பரமாணுவையும் காரணமாகக் கூறுகிற ஸாங்க்ய, வைசேஷிகாதிமதங்கள் நிரஸிக்கப்பட்டன. 'ஸ்ரீநிவாஸ' பதத்தினுல் பாசுபதாதிமதம் நிரஸிக்கப்பட்டது. இதனுலேயே ஈச்வரோத்தீர்ணப்ராஹ்மாதிகளும், பேதாபேதவாதிகளும் திரஸ்கரிக்கப்பட்டார்கள். 'பேமுஷீ' பதத்தால் ஜ்ஞானகர்மஸமுச்சயத்திற்கு உபாயம் சொல்லுகிறவர்களின் மதம் நிரஸிக்கப்பட்டது. 'பக்திரூபா' என்றதினுல் வாக்யார்த்தஜ்ஞானமாத்திரத்தை உபாயமாகச்சொல்லுகிறவர்கள் தகர்க்கப்பட்டனர். என அனுஸந்திக்கத்தக்கது. (மங்கள ஸ்லோகவ்யாக்யானம் முற்றிற்று.)

---

𑌪𑌾𑌰𑌾𑌶𑌰𑍍𑌯𑌵𑌚𑌸𑍍𑌸𑍁𑌧𑌾𑌮𑍁𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌦𑍁𑌗𑍍𑌧𑌾𑌬𑍍𑌧𑌿𑌮𑌧𑍍𑌯𑍋𑌦𑍍𑌧𑍃𑌤𑌾𑌂
𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌗𑍍𑌨𑌿𑌵𑌿𑌦𑍀𑌪𑌨𑌵𑍍𑌯𑌪𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌜𑍀𑌵𑌨𑍀𑌂 ।
𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍁𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑌿𑌵𑍍𑌯𑌾𑌘𑌾𑌤𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌂
𑌆𑌨𑍀𑌤𑌾𑌂 𑌤𑍁 𑌨𑌿𑌜𑌾𑌕𑍍𑌷𑌰𑍈𑌃 𑌸𑍁𑌮𑌨𑌸𑍋 𑌭𑍌𑌵𑌾𑌃 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌵𑌹𑌂 ॥

---

உபநிஷத்தாகிற பாற்கடலின் மத்தியிலிருந்து எடுக்கப்பட்டதும், ஸம்ஸாரமாகிற நெருப்பின் இடைவிடாத எரிச்சலால் ப்ராணபூதமான பரமாத்மாவை லபிக்கப்பெருத ஆத்மாக்களை உஜ்ஜீவிக்கச்செய்கிறதும், பூர்வாசார்யர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டதும், வெகு மதிவிகல்பங்களால் ஸமீசீனர்த்தங்களுக்கு வ்யாகாதம் நேர்ந்ததினுல் அவகாஹிக்க அரிதாம்படி தூரத்திலே விலகி நின்றதும், அம்ருதாக்ஷரங்களால் ஸமீபத்தில் கொண்டுவரப்பட்டிருக்கிறதுமான வ்யாஸருடைய வசனும்ருதத்தை இவ்வுலகில் நுண்ணறிவினர் நாள்தோறும் பருகுவாராக.

---

†'பஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்று ஸங்கல்பித்து உடனே அசேதனவர்கங்களை உண்டுபண்ணி, அவைகளில் அந்தந்த கர்மாக்களுக்குத்தக்க ஜீவன்களை ப்ரவேசிக்கச்செய்து, அந்த ஜீவன்களுக்குள் தானும் அந்தர்யாமியாக அநுப்ரவேசித்து உலகத்தை ரக்ஷிப்பதால், பரமபுருஷனுல் செய்யப்படும் ப்ரபஞ்சஸ்ருஷ்டியும், ரக்ஷணமும் ஒரே ஸமயத்திலென்றே ஏற்படுகின்றன. 'யஸ்ய ப்ராஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:; ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்' என்கிற ச்ருதியினுலும், 'நஷ்டே லோகே' என்கிற உபப்ராஹ்மணவசனங்களினுலும் ப்ரபஞ்சத்தின் உபஸம்ஹாரம் ஒரே ஸமயத்திலேதான்.

வேதத்தினாலேயே உபாயோபேயங்கள் அறியப்படுங்கால், உம்மால் சொல்லத்தக்கது யாது? என்றால் அதற்கு உத்தரமருளிச்செய்கிறார். 'பாராசர்ய' என்று. தன் ப்ரபந்தத்துக்கு பரமப்ரயோஜனமாதலால் ஸித்தரூபமாகிய பரமவிஷயமானது முன் ச்லோகத்தில் காண்பிக்கப்பட்டது. ஸாத்யரூபமான ப்ரயோஜனமும் 'ரக்ஷா' பதத்தினால் அதி ஸங்க்ஷேபமாகக்காட்டப்பட்டது. பிறகு இரண்டாவது ச்லோகத்தில் தன் ப்ரபந்தத்துக்கு மத்ய விஷயமும், பரம்பரையாக ப்ரஹ்மவிஷயத்வமும், தன் ப்ரபந்தத்துக்கு ஸம்யக்ஞானம் அடுத்ததான மத்யப்ரயோஜனமென்பதும், பரம்பரையாக முக்தியானது பரம ப்ரயோஜனமென்பதும், தன்னால் வ்யாக்கியானிக்கத்தக்க க்ரந்தமானது ப்ரமாணமூலமென்பதனால், வ்யாக்யேயங்களான மற்ற க்ரந்தங்கள் ப்ரமாணத்தை மூலமாக உடையவைகளல்லவென்றும், தன்னால் வ்யாக்யானிக்கப்படும் 'ப்ரஹ்மஸூத்ரத்தை விஷயமாகக்கொண்ட மற்ற பாஷ்யங்களை விலக்குவதின் பொருட்டு, தன்னால் செய்யப்பட்ட ப்ரபந்தத்துக்கு ஸாம்ப்ரதாயிகத்வம் முதலியதும் சப்தத்தால் சொல்லப்படுகிறது. ஸ்துதிரூபமான, குருபாஸநரூபமங்களாசாரமும் ச்லோகத்தின் அர்த்தத்தினால் செய்யப்படுகிறது. † "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதன:" ¶ "தத் வித்தி ப்ரணிபாதேந" ‡ "ததாமி புத்தியோகம் தம்." இது முதலியவைகளால் ஆசார்யனை அனுகுவதற்குங்கூட பகவத்கடாக்ஷம் ஹேதுவென்று அறியப்படுவதால், பரதேவதோபாஸனத்துக்கு அடுத்தது குருபாஸனம் என்பது யுக்தம். அவ்வாறே ச்ருதி †"யஸ்ய தேவே பரா பக்திர்யதா தேவே ததா குரௌ." என்று முன்னோர்களாலேயே அவ்வாறு ஆசரிக்கப்பட்டிருக்கிறது. எப்படியெனில், பகவானான வைசம்பாயனரால் $ 'நமஸ்க்ருத்ய ஹ்ருஷீகேசம்' என்றும்; ‡ 'நமோ பகவதே தஸ்மை வ்யாஸாய." என்று த்ரமிடாசார்யர்களாலும்; ¶ "நம: ப்ரவரகுணைகாஸ்பதாய, ஸ்திரத்ரஸகுலபீஜகும்பபூதாய, புவனகோசஸ்ய கோப்த்ரே ப்ரஹ்மணே, நமோ ஜைமிநயே, வேதரஹஸ்யஸம்புடநிகூட விஷ்பாரயித்ரே ந்யாயப்ரஜ்வலிதசேதஸே, நமோஸ்த்வாசார்யேப்ய:" என்று, பிந்தினவர்களாலும், * "விசுத்தஜ்ஞான தேஹாய" † "அபிவந்த்ய குருனௌ"

---

† (ஜாயமானம்)—பூமியில் ஜனிக்கும்போது எந்த சேதனனை மதுஸூதனன் கடாக்ஷிக்கிறானோ.

¶ (தத்வித்தி)—ஸாஷ்டாங்க வந்தனத்தினால் அதை அறிவாயாக:—(கீதை)

‡ (ததாமி)—அந்த புத்தியோகத்தை நான் கொடுக்கிறேன்:—(கீதை)

† (யஸ்ய)—எவனுக்கு பரமாத்மாவினிடம் பரபக்தி இருக்கிறதோ; எப்படி பரமாத்மாவினிடத்திலோ அப்படியே ஆசார்யனிடத்திலும்.

$ (நமஸ்க்ருத்ய)—ஹ்ருஷீகேசனை நமஸ்கரித்து.

‡ (நமோ பகவதே)—பகவானான அந்த வ்யாஸருக்கு வந்தனம்.

¶ (நம:ப்ரவர)—மிக்க சிறப்புற்ற குணங்களுக்கு முக்ய ஆதாரமாக இருப்பவரும், ஸ்தாவர, ஜங்கம ஸமூஹங்களாகிற வித்துகளுக்கு ஸ்தாபககும்பம் போன்றவரும், புவனகோசத்தை ரக்ஷிப்பவரும், ஸ்வரூபத்தாலும், குணங்களாலும் எல்லையற்ற மேன்மை வாய்ந்த ப்ருஹத்வ' குணம் பொதிந்தவருமான பரமாத்மாவுக்கு வந்தனம். வேதங்களாகிற ரஹஸ்யார்த்த ஸம்புடங்களில் மறைத்து வைக்கப்பட்டிருக்கிற அர்த்தரத்னங்களை ப்ரகாசப்படுத்துகிறவரும், ந்யாயங்களால் நன்றாக ஜ்வலிக்கிற மனதை உடையவருமான ஜைமினிக்கு வந்தனம். ஆசார்யர்களின் பொருட்டு வந்தனம்.

* (விசுத்த) - பரிசுத்தமான ஜ்ஞானத்தை உருவமாகக்கொண்ட,—

† (அபிவந்த்ய) - தொடக்கத்தில் ஆசாரியர்களை நமஸ்கரித்து,—

என்றும் ¶ "ப்ரணம்ய ஹேதுமீச்வரம் முநிம் காணுதமன்வதே" என்றும் ஆசரிக்கப்பட்டது. 'பாராசர்ய' சப்தத்தினுல் பிறப்பின் ஏற்றம் கூறப்பட்டது. $ 'ஸஹோவாச வ்யாஸ:பாராசர்ய:' என்று ஶ்ருதியில் ப்ரஸித்தம். அவருக்கே பாதராயணர் என்றும் பெயர்.

† "த்வீபே பதரிகாமிச்ரே பாதராயணமச்யுதம், பராசராத் ஸத்யவதீ புத்ரம் லேபே பரந்தபம்" என்று மஹர்ஷியினுலேயே கூறப்பட்டிருக்கிறது. என்றாலும், வேறு ரிஷியினிடம் கூட பாதராயணசப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் ஸூத்ரகாரரைச் சொல்லுகிற பாதராயண சப்தம் பராசரபுத்ரரையே குறிக்கிறது. அவ்வாறே ஸ்காந்தத்தில் வ்யக்தமாக உரைக்கப்பட்டிருக்கிறது. ‡ "நாராயணுத் விநிஷ்பந்நம் ஜ்ஞானம் க்ருதயுகே ஸ்திதம்,கிஞ்சித்ததந்யதாபூதம் த்ரேதாயாம்,த்வாபரே கிலம், கௌதமஸ்ய ரிஷே:சாபாத்.

ஜ்ஞானே த்வஜ்ஞானதாம் கதே. ஸங்கீர்ண புத்தயோ தேவா ப்ரஹ்மருத்ரபுரஸ்ஸரா: சரண்யம் சரணம் ஜக்முர்நாராணமநாமயம், தைர்விஜ்ஞாபிதகார்யஸ்து பகவான் புருஷோத்தம: அவதீர்ணே மஹாயோகீ ஸத்யவத்யாம் பராசராத், உத்ஸன்னன் பகவான் வேதானுஜ்ஜஹார ஹரி:ஸ்வயம். சதுர்தா வ்யபஜத்தாம்ஶ்ச சதுர்விம்சதிதா புன: சததா சைகதா சைவ ததைவச ஸஹஸ்ரதா.க்ருஷ்ணோத்வாதசதா சைவ புனஸ்தஸ்யார்த்த வித்தயே. சகார ப்ரஹ்மஸூத்ராணி யேஷாம் ஸூத்ரத்வமஞ்ஜஸா, அல்பாக்ஷரமஸந்திக்தம் ஸாரவத் விச்வதோ முகம். அஸ்தோமமநவத்யஞ்ச ஸூத்ரம் ஸூத்ரவிதோ விது

¶ (ப்ரணம்ய) - ஜகத்காரணமான ஈச்வரனை வந்தனம் செய்து அதற்குப்பிறகு கணுதமஹர்ஷியை—

$ (ஸஹோவாச) - பராசரபுத்ரனை அந்த வ்யாஸர் சொன்னார்.

† (த்வீபே பதரிகா) - ஸத்யவதீதேவியானவள் இலந்தை மரங்களுடன் கூடின (யமுனையாற்றின் நடுவிலுள்ள) திட்டில் அரிஷட் வர்க்கங்களை நிராகரித்தவரும், அச்யுதனுடைய அம்சபூதனுகவுமிருக்கிற பாதராயணர் என்கிற புத்ரனை பராசரரிடத்திலிருந்து அடைந்தாள்.

‡ (நாராயணுத்) - நாராயணனிடத்திலிருந்து உண்டான ஜ்ஞானம் க்ருதயுகத்தில் நிலைபெற்றிருந்தது. த்ரேதாயுகத்தில் அது கொஞ்சம் மாறுபட்டத்தை அடைந்தது. த்வாபரத்தில் சிதறிப்போய்விட்டது. கௌதமரிஷியினுடைய சாபத்தால் ஜ்ஞானமானது அஜ்ஞானபாவத்தை அடையவே தத்வநிச்சயமில்லாமையால் ஸங்கீர்ணபுத்தியுள்ள ப்ரஹ்மா, ருத்ரன் முதலான தேவர்கள் ரக்ஷணத்தில் ஸமர்த்தனும், தோஷமற்றவனுமான நாராயணனை சரணமடைந்தார்கள். அவர்களால் விஜ்ஞாபனம் செய்யப்பட்ட கார்யத்தை உடையவரும், ஆறு குணங்களுள்ளவரும், மஹாயோகியாகவுமிருக்கிற புருஷோத்தமன் பராசரரிடத்தினின்று ஸத்யவதியினிடத்தில் அவதரித்தார். ப்ரஹ்ம, ருத்திராதிகளை பலாத்கரித்து ஸம்ஹரிப்பவரான பகவான் தானே வ்யாஸரூபியாகத்தோன்றி சிதறிப்போன வேதங்களை உத்தாரணம் செய்தார். அவைகளை நான்காகப்பங்கிட்டார். அவ்வாறே நூற்றொன்றாகவும், ஆயிரமாகவும்,பன்னிரண்டாகவும் பகுத்து அவைகளின் அர்த்தங்களைத் துலக்கிக்காட்டுவதற்காக ப்ரஹ்மஸூத்ரங்களைச்செய்தார்,—எவைகளுக்கு ஸூத்ரத்வம் உள்ளபடி அமைந்திருக்கிறதோ. ஸூத்ரத்தின் ஸ்வரூபமறிந்தவர்கள்,—பரிமிதமான அக்ஷரங்களுள்ளதும், ஸந்தேஹத்தை அறுக்கும் தன்மை பொருந்தியதும், ஸாரமுள்ளதும், எவ்வழியிலும் ப்ரவ்ருத்திக்கும் வல்லமையுள்ளதும், நிரர்த்தகமான சப்தமில்லாததும், தோஷமற்றதுமான சப்தஜாலத்தை ஸூத்ரமென்று அறிகிறார்கள்.

‡ "நிர்விசேஷிதஸூத்ரத்வம் ப்ரஹ்மஸூத்ரஸ்ய சாப்யத: ஸவிசேஷாணி ஸூத்ராணி" ஹ்யபராணி விதோ விது: முக்யஸ்ய நிர்விசேஷேண சப்தோங்யேஷாம் விசேஷத: இதி வேதவித: ப்ராஹு: சப்ததத்வார்த்தவெதிந:, ஏவம் விதாநி ஸூத்ராணி க்ருத்வா வ்யாஸோ மஹாயசா: ப்ரஹ்மருத்ராதிதேவேஷு மனுஷ்யபித்ருபக்ஷிஷு, ஞானம் ஸம்ஸ்தாப்ய பகவான் க்ரீடதே பரமேச்வர:"

'வசஸ்ஸுதாம்' 'வசஸ்' சப்தத்திற்கு அர்த்தத்தில்தாத்பர்யம். எப்படியெனில், 'வேதவித், சாஸ்த்ரவித்' இது முதலிய இடங்களில் வேதம் முதலிய சப்தங்களுக்கு அர்த்தபரத்வத்தைக்கண்டிருப்பதால், அர்த்தத்தைச்சொல்வதல்லவோ வாக்யம். ரூபகப்ரகரணமாதலாலும் 'ஸுதா' சப்தத்தில் லக்ஷணையைக்கல்பிப்பதில் பயத்தினாலும், வசஸ்ஸினுடைய ஸுதை என்று சில ஆசார்யார்கள் சொன்னார்கள். ஸுதைபோல் வசஸ் என்று உபமித ஸமாஸத்தை வேறு ஆசார்யர்கள் ஆதரிக்கிறார்கள். 'ஸுதா' சப்தத்தினால் போக்யமாயிருக்கும் தன்மை அபிப்ராயவிஷயம். இவ்வாறாக அவாந்தர விஷயம் உரைக்கப்பட்டது. அங்ஙனமாகில் எவ்வாறு ப்ரஹ்மத்துக்கு விஷயத்வமென்கிற சங்கைவரின் ப்ரஹ்மவிஷயத்வம் ஸத்வாரகமென்று சொல்லுகிறார்.—(உபநிஷதிதி). ப்ரஹ்மத்தினிடத்தில் நெருங்கி இருப்பதால் உபநிஷத். 'உபநிஷண்ணத்வாத் வா உபநிஷத்' என்றல்லவோ வாக்யம். "கஹநே ஹ்யயம் வித்யா ஸந்நிவிஷ்டா" என்று அதின் விஷயமான த்ரமிடபாஷ்யம். "ப்ரஹ்மண்யுபநிஷண்ணு" என்று அது விஷயமாய் வாமனருடைய டீகை. நேராக ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிற திறமையுள்ளது உபநிஷத். (துக்த) சப்தத்தினால் பூர்வபாகத்தைக்காட்டிலும் உபநிஷத்தானது ஸாரமென்று விளக்கப்பட்டது. 'ஆரண்யகஞ்ச வேதேப்ய:, † ஓஷதிப்யோ, யதாம்ருதம்." என்பது இதில் ப்ரமாணம். (அப்தி) சப்தத்தினால் ஆலோசிக்கப்பட்டிருககிற உபநிஷத்துகள் அநந்தங்கள் என்பது ஸூசிக்கப்பட்டது. (மத்ய) சப்தத்தினால் எல்லா வாக்யங்களும் முக்யார்யத்தத்தை விடாமலிருக்கின்றனவென்று அபிப்ராயம். சுற்றிலுமுள்ள எல்லா ப்ரதேசங்களையும்விட மத்யப்ரதேசத்திற்கு ஸமபந்தமானது துல்யமாகவன்றோ இருக்கிறது! (உத்ருத) சப்தத்தால் மிக்க ஆழ்ந்த இடத்திலிருந்து நன்றாக மூழ்கி மேலே எடுப்பதைச்சொல்லுகிறபடியால் மீதியின்றி எல்லா அர்த்தங்களுமெடுக்கப்பட்டதென்று ஸூசிக்கப்படுகிறது. தன் க்ரந்தத்திற்கு அவாந்தர விஷயம் உபநிஷத், அதற்கு விஷயம் ப்ரஹ்மம் என்று பரம்பரையாக ப்ரஹ்மம் ப்ரதிபாத்யமாகிறது. பாதராயணஸூத்ரங்களுக்கு உபநிஷத்தை மூலமாகச்சொன்னதினால் ஸாங்க்யாதிக்ரந்தங்களுக்கு அப்ராமாண்யம் பலிததது. அக்காரணத்தினாலேயே அவைகளை அனாதரித்து இவைகளுக்கு வ்யாக்யானஞ்செய்யப்படுகிறதென்பது ஸூசிதமாயிற்று. சுருக்கமாக சாஸ்த்ரத்தினாலுண்டாகிற பரமப்ரயோஜனத்தைக்கூறுகிறார் (ஸம்ஸார) என்று. 'ஸம்ஸாராக்னி' சப்தத்தால் ஸம்ஸாரம் முழுமையும் * தாபத்ரயரூபமென்பது விவக்ஷிக்கப்பட்டது.

---

‡ ப்ரஹ்மஸூத்ரம்ஒன்றுக்கே தனித்த 'ஸூத்ர' சப்தத்தால் வ்யவஹரிப்பது பொருத்தமுள்ளதாதலால் மற்றஸூத்ரங்களை ஸவிசேஷங்களென்றே அறிஞர்கள் அறிகிறார்கள். சப்தங்களின் தத்வார்த்தவேதிகளான வேதவித்துகள் முக்யத்திற்கு நிர்விசேஷசப்தத்தாலும், மற்றவைகளுக்கு ஸவிசேஷசப்தத்தாலும் அபிதானமென்று கூறுகிறாகள். அதிக கீர்த்தியுள்ளவரும், பரமேச்வரனுகவுமிருக்கிற வ்யாஸரூபியான பகவான் இப்படிப்பட்ட ஸூத்ரங்களைப்பண்ணி ப்ரஹ்மருத்திராதிகளான தேவர்களிடத்திலும், மனுஷ்யர்களிடத்திலும், பித்ருக்களிடத்திலும், பக்ஷிகளிடத்திலும் ஜ்ஞானத்தை நிலைநிறுத்தி க்ரீடிக்கிறார்.

† (ஆரண்ய) - ஓஷதிகளிடத்திலிருந்து அம்ருதம்போல் வேதங்களினின்று (ஸாரமான) வேதாந்தபாகம் எடுக்கப்பட்டிருக்கிறது.

* தாபத்ரயங்கள்:—ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம்.

'இதில் ப்ரமாணம், $ "ஸ்வாகேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர்நாஸ்தி நிர்வ்ருதி:" என்று. ஸங்கோசமின்றி எப்பொழுதும் நாற்புறங்களிலும் ஜ்வலித்தலைச்சொல்லுகிற (தீபந) சப்தத்தால் வித்யாலாபத்திற்கு மூர்த்தி ஒரு ஸமயத்திலாவது இது அணைக்கத் தக்கதாக இருந்ததில்லையென்பது அபிப்ரேதம். தீபநமும் ஆத்யாத்மிகாதி ரூபத்தால் பலவகைப்பட்டுள்ளது. அந்த மூன்றிலும் ஒவ்வொன்றும் சாரீரம், மானஸம், வாசிகமெனப் பல்வகைப்பட்டிருக்கிறது. ஆத்மாக்களுக்கு ப்ராணன் பரமாத்மா. இது ¶ "ஸர்வாணி ஹவா இமாநி பூதானி ப்ராணமேவாபிஸம்விசந்தி" † "கோஹ்யே வாந்யாத் க: ப்ராண் யாத்" முதலான ச்ருதிகளில் ஸித்தம். (ப்ருத) சப்தத்தால் அதினுடைய அலாபமும் இரண்டு வி, அப, என்ற உபஸர்கங்களால் அதற்கு (பகவத்லாபத்திற்கு) அறுதித்வமும் விவிபத்வமும் விவக்ஷிக்கப்பட்டது. ஞான, தர்சன, ப்ராப்திகளில் ஒன்று கூட லபிக்காமை யால் அலாபம் பலவிதமாயுள்ளது. (ஸஞ்ஜீவினீம்) ஜீவனம்—உஜ்ஜீவனம். அதாவது, ஸம்ஸாரத்தை வேரோடு களைதல். 'ஸம்' என்கிற சபதத்தால் கைவல்யத்தை விலக்கின படி. இதற்குமேல் ஸாம்ப்ரதாயிகமென்பதைக்கூறுகிறார். (பூர்வ)என்பதால் பூர்வசப்தத்தி னுல் சங்கரர் முதலான பிற்காலத்தவர்கள் விலக்கப்பட்டனர். (ஸம்ரக்ஷிதாம்) உபதேச மாத்ரத்தினுலல்ல, க்ரந்தரூபத்தாலுமென்று கருத்து. பூர்வாசார்யக்ரந்தங்களால் அர்த ஸ்வரூபம் நிர்ணயிக்கப்பட்டுவிட்டால் உம்முடைய க்ரந்தகரணப்ரவ்ருத்திக்கு யாதுபயன் ? என்று வினவ, மருமொழி அளிக்கிறார் 'பஹுமதி—'என்று. அநேகங்களான மதிகள் அல்லது,அநேகர்களுடைய மதிகள். அவைகளுடைய பரஸ்பர வ்யாகாதத்தினுலும், அவை களால் நல்ல அர்தம் நாசம் செய்யப்பட்டதினுலும் அர்வாசீனர்களால் எவ்விதத்தினு லும் உள்ளே ப்ரவேசிக்க முடியாமையைக்கூறுகிறார் 'தூரஸ்திதாம்' என்று. உள்ளபடி அறியாதது மாத்ரமல்ல, விருத்தமாகவும் ப்ரதிபத்தி உண்டாய்விட்டது என்று கருத்து. ஸூத்ரம் முதலான அவாந்தரவிஷயத்திற்குத்தன் க்ரந்தம் விஷயீ என்பது முன்பு கண் டோக்தமாக இல்லை. ஆதலால், அதைக்கூறுகிறார் (ஆநீதாம்) என்ற. அம்ருதபக்ஷத்தில் (நிஜாக்ஷரை:) காயத்ரியின் அவயங்களான ‡ அம்ருதாக்ஷரங்களால் என்று கருத்து. அத னுல் என் அக்ஷரங்களால் என்று சொல்லவில்லை. (ஸுமனஸ:) ஸாராஸார விவேசனத்தை

$ (ஸ்வர்கேபி) – ஸ்வர்கத்திலும் கீழே விழுவதினின்று பயந்து க்ஷயோன்முகனுக இருக்கிறவனுக்கு ஸுகம் கிடையாது.

¶ (ஸர்வாணி ஹவா) – இந்த எல்லா பூதங்களும் பிராணசப்தவாச்யனுன பரமாத்மா வையே அபிமுகமாக ப்ரவேசிக்கிறதன்றோ.

† (கோஹ்யேவா) – ஆனந்தமயனுன ஆகாசசப்தவாச்யனுன பரமாத்மா இல்லாவிடில் எவன் தான் சலிப்பான்.எவன் தான் உச்ச்வாஸ நிச்வாஸமுள்ளவனுக உயிரோடிருப்பான்.

‡ அம்ருதஹரணேபாக்யானம் :— கிருஷ்ணயஜுர்வேதம் 6-வதுகாண்டத்தில் இந்த உபாக்யானம் ஸவிஸ்தரமாகக்கூறப்படுகிறது. அதாவது—நாகமாதாவான கத்ருவுக்கு அடிமையாயிருந்த 'விநதை' என்கிற தன்தாயை அவ்வடிமையினின்று மீட்கவேண்டி, வேதஸ்வரூபியான கருடன் ஸ்வர்கலோகம் சென்று,—அம்ருதத்தைப்பாதுகாத்துக் கொண்டு ஒருவருக்கும் கொடாமல் தன்வசமாக்கிக்கொண்டிருந்த இந்த்ரனேடு அநேக சந்தஸ்களை அனுப்பிக்கடும்போர் புரிந்தார். அதில் ஜயம்பெறுமல், கடைசியாகயிருந்த காயத்ரீச்சந்தஸை அனுப்பி சண்டைசெய்து இந்த்ரனை அபஜயமடையச்செய்து காயத் ரீச்சந்தஸைச்சார்ந்த அக்ஷரங்களால் அம்ருதத்தை அபஹரித்துவந்து கத்ருவிடம் கொடுத்து தன்தாயாரான விநதையை அடிமைத்தொழிலின்று மீட்சியடையச்செய்தார்.

அறிந்தவர்கள். இதனால் அஸத்துகளுடைய அபரிக்ரஹம் தோஷமல்ல என்பது கூறப்பட்டது. தேவர்கள் முதலானவர்களுக்கு வ்ருத்திகாரருடைய க்ரந்தம் முதலியவற்றால் ஸுலபமாக அர்த்தக்ஞானமேற்படுமாததால்(பௌமா:)என்று அருளிச்செய்கிறார்.(பிஸந்த் வங்ஹம்) ரஸ்யதையின் அதிசயத்தால் போதுமென்ற த்ருப்தியை உண்டுபண்ணுகிற தில்லை, என்று கருத்து. வேறு பலனைவிட பகவத்ப்ராப்த்யுபாயமே மிகக ஸ்வாதுவாயுள்ளது. § "க்வ நாகப்ருஷ்டகமனம புனராவ்ருத்திலக்ஷணம், க்வ ஜபோ வாஸுதே வேதி முக்திபீஜமநுத்தமம்." என்று ப்ரமாணம். அல்லது, கம்பீரமாயிருப்பதால் நாள்தோறும் பரிசீலனஞ்செய்யத்தக்கதென்று கருத்து.

𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍:— 𑌭𑌗𑌵𑌦𑍍𑌬𑍋𑌧𑌾𑌯𑌨𑌕𑍃𑌤𑌾𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍂𑌤𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌸𑌂𑌚𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍁𑌃। 𑌤𑌨𑍍𑌮𑌤𑌾𑌨𑍁𑌸𑌾𑌰𑍇𑌣 𑌸𑍂𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌿 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇।

𑌸𑍂। 𑌅𑌥𑌾𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾 ॥ க-க-க

𑌅𑌤𑍍𑌰𑌾𑌥𑌶𑌬𑍍𑌦 𑌆𑌨𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑍇 𑌭𑌵𑌤𑌿। 𑌅𑌤𑌃𑌶𑌬𑍍𑌦𑍋 𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑍁𑌭𑌾𑌵𑍇।

***போதாயனபகவானால் செய்யப்பட்டுள்ளதும், விஸ்தீர்ணமாயுமிருக்கிற ப்ரஹ்மஸூத்ரவ்ருத்தியை பூர்வாசார்யர்கள் மிகச் சுருக்கமாகச்செய்தார்கள். அவர்களுடைய மதத்தை அநுஸரித்தே ஸூத்ராக்ஷரங்கள் வ்யாக்யானஞ்செய்யப்படுகின்றன.***

ஸூ. அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா

(பிறகு) ஆதலால், தர்மவிசாரத்தில் இச்சை.

***இந்த ஸூத்ரத்திலிருக்கிற 'அத' சப்தமானது கர்மவிசாரத்திற்குப்பிறகு என்கிற அர்த்தத்தை உணர்த்துகிறது. 'அத:' என்கிற சப்தமானது முந்தின கர்மவிசாரத்திற்கு ஹேதுத்வத்தைக் காட்டுகிறது.***

ச்ருதப்ரகாசிகை:—அங்ஙனமாகில், புராதனமான க்ரந்தங்களே படிக்கத்தக்கவைகள்; அபூர்வமான க்ரந்தத்தைச்செய்வதாலும் அதை வெளியிடும் ப்ரயதனகௌரவத்தாலும் யாது பயனெனில், உத்தரம் கூறுகிறார். 'பகவதிதி' பகவான் என்று சொன்னதினால் சங்கரர் முதலியவர்கள் போல ரிஷி அநாப்தரல்ல. போதாயநர் என்று சொன்னதினால் 'பூர்வாசார்ய' சப்தமும் சேர்ந்து விவரிக்கப்பட்டது. "விஸ்தீர்ணாம் ஸஞ்சிக்ஷுபுரிதி" இதனால் வ்ருத்தி முதலிய க்ரந்தங்களால் இப்புவியிலுள்ள இக்காலத்தவர்களுக்கு உபயோகமில்லாமை ஸூசிக்கப்பட்டது. போதாயனரால் மிகவும் பெரிதான வ்ருத்திக்ரந்தம் செய்யப்பட்டது. த்ரமிடபாஷ்யகாரர் முதலியவர்களோவென்றால் பரபக்ஷநிரஸனம் முதலியதை அநுஸரித்து அதிக சுருக்கமாக க்ரந்தங்களைச்செய்தார்கள். அதிவிஸ்தீர்ணமாயும், அதிஸங்க்ஷிப்தமாயுமிருக்கிற க்ரந்தங்கள் பெரும்பான்மையாய் சிறந்த ஆயுளும், புத்தியுமுள்ள ஜனங்களடர்ந்த தேசாந்தரங்களிலும், காலாந்தரங்களிலும் பயன்படுகின்றன.

§ (க்வ நாக) – மீண்டுவருதலை ஸ்வபாவமாக உடைய ஸ்வர்க்கமனமெங்கே! முக்திக்குச்சிறந்த வித்தான வாஸுதேவஜபம் எங்கே!

க்காலத்திலுள்ள எல்லா மனிதர்களுக்கும் நூறு வருஷகாலம் ஆயுளாவது, யிருள்ளவரை க்ரந்தங்களில் உழைப்பாவது, ஜன்மஸித்தமான அறிவாவது இல்லை. புதலால், பரமதநிராஸத்திற்காகவும், அதிக விஸ்தாரமில்லாமையால் விஷயங்களை ஸுலப ாகத்தெரிந்துகொள்வதற்காகவும், ஸூத்ரம் வ்யாக்யானம் செய்யத்தக்கதென்று கருத்து.

'தன்மதாநுஸாரேண' இதனால் தன்னால் உத்ப்ரேக்ஷிக்கப்பட்ட மதாந்தரத்தை அனு ஸரித்து வ்யாக்யானம் செய்யப்படவில்லை என்பது கூறப்பட்டது. ஸூத்ரத்திலடங்கிய பதங்களின் ப்ரக்ருதி, ப்ரத்யய விபாகத்திற்கு அனுகுணமாகச்சொல்லுகிறோம்; நம்மால் உத்ப்ரேக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தில் ஸூத்ராக்ஷரங்களை ஒருவிதமாகச்சேர்ப்பிக்கிறோம்—என்கிற ஆக்ரஹமில்லை.—என்று கருத்து. 'வ்யாக்யாஸ்யந்தே' • வி-ஆ என்கிற உபஸர் கங்களால் அபேக்ஷிதவிஸ்தாரமும், அநபேக்ஷிதஸங்க்ஷேபமும் ஸூசிப்பிக்கப்பட்டது.

"§ ஸூத்ரார்த்தோ வர்ண்யதே யத்ர வாக்யைஸ்ஸூத்ராநுஸாரிபி:, ஸ்வபதாநிச வர்ண்யந்தே பாஷ்யம் பாஷ்யவிதோ விது:" என்றல்லவோ பாஷ்யலக்ஷணம். ஆகவே, ஸூத்ரவ்யாக்யானத்திற்கு ஆநுரூப்யமில்லாமையால் 'அகில' இது முதலானது பாஷ்யத் தில் சேர்க்கை பெறாது என்று சொல்ல ஒண்ணாது. ஸூத்ரதாத்பர்யார்த்தத்தில் நோக் குள்ளதாதலால் பாஷ்யத்திலடங்கியதே. ஸூத்ரதாத்பர்யபரத்வமானது ச்லோகவ்யாக் யானத்தில் ஸ்பஷ்டம். மேலும், தொடங்கவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கிற க்ரந்தம் இடையூறின்றி முடிவுபெறுவதற்காக மங்களாசரணம் செய்யப்படுவதால், பாஷ்யத்திற்கு உபயோகமாக இருந்துகொண்டு பாஷ்யத்திலடங்கினதாகவே ஆகிறது. சாபரபாஷ்யம், சாங்கரபாஷ்யம், முதலியவற்றில் நமஸ்காரம் காணப்படாமையால் இந்த பாஷ்யத்தில் நமஸ்காரத்தைக்கூறியது பொருந்தாதென்று சொல்லக்கூடாது. ஏனெனில், த்ரமிட பாஷ்யத்தில் ‡ "நம:ப்ரவரகுணைகாஸ்பதாய" என்று தேவதா, குரு, நமஸ்காரம் செய்யப் பட்டிருக்கிறது. சாபரபாஷ்யத்திலும், சாங்கர பாஷ்யத்திலும் ஈச்வரனை ஒப்புக்கொள் ளாமையாலும், ஜீவப்ரஹ்மபேதத்தை ஏற்றுக்கொள்ளாமையாலும், நமஸ்காரம் அனாதரிக் கப்பட்டது. இந்த க்ரந்தத்திலோவென்றால் ஸித்தாந்தத்திற்கு ஆனுரூப்யமிருப்பதால் நமஸ்காரம் மிகவும் பொருத்தமுள்ளது. சங்கரக்ரந்தத்தின் தொடக்கத்திலும் நமஸ்காரம் முதலிய மங்களாசரணமில்லாமையால் வ்யாக்யாதாக்கள் குக்ரந்தமென்று ஸந்தேகித்து 'யுஷ்மத்-அஸ்மத்' என்கிற பதங்களை முதன்மையாகக்கொண்ட க்ரந்தத்தில் ப்ரத்யகர்த் தானுஸந்தானமிருப்பதால் ¶ ஆர்த்திகமாக மங்களாசாரம் செய்யப்பட்டிருக்கிறதென்று ஸந்தேகத்தை பரிஹரித்துக்கொண்டார்கள்.

ஜிஜ்ஞாஸாதிகரணம்.

அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா,

முன்பு பதங்களை வ்யாக்யானம்பண்ணப்போகிறவராக தொடக்கத்தில் 'அத' சப்தத் தை வ்யாக்யானிக்கிறார். "அத்ராயமதசப்த ஆனந்தர்யே பவதி" என்று. † "பதச்சே த: பதார்த்தோக்திர் விக்ரஹோ வாக்யயோஜநா, ஆக்ஷேபஸ்ய ஸமாதானம் வ்யாக்யானம்

§ (ஸூத்ரா)-ஸூத்ரங்களை அனுசரிக்கின்ற வாக்கியங்களால் எந்த இடத்தில் ஸூத் ரார்த்தம் வர்ணிக்கப்படுகிறதோ, தன்னால் சொல்லப்பட்ட பதங்களும் விவரிக்கப்படுகின் றனவோ, அதை பாஷ்யமென்று பாஷ்யத்தை அறிந்தவர்கள் கூறுகின்றார்கள்.

‡ (நம:ப்ரவர) - மிக்க சிறந்த குணங்களுக்கு முக்யமான ஆதாரமாக இருக்கிற வருக்கு நமஸ்காரம்.

† (பதச்சேத:)—பதங்களைப்பகுத்தல், பதார்த்தங்களை உரைத்தல், விக்ரஹம், வாக் யங்களின் யோஜனை, ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்—என வ்யாக்யானம், ஐந்து விஷயங்க ளுள்ளதென்று சொல்லப்படுகிறது.

¶ ஆர்த்திகம்—முன்பின் இருக்கிற அர்த்தஸந்தர்ப்பத்தால் ஏற்படுவது.

பஞ்சலக்ஷணம்." என்றல்லவோ வ்யாக்யானத்தின் லக்ஷணம். இந்த 'அத', 'அத:' என்கிற இரண்டு சப்தங்களும் வ்யாக்யானம் செய்யத்தக்கவைகளல்ல. ஏனெனில், ப்ரயோஜனமில்லை. அஜ்ஞானம், ஸம்சயம், விபரீதநிச்சயம் இவைகளை நிவ்ருத்தி செய்வதற்கல்லவோ வ்யாக்யானம்! ஆநந்தர்யத்திலும், ப்ரக்ருதத்தினுடைய ஹேதுபாவத்திலும் இவ்விரண்டு பதங்களுக்கும் ப்ரஸித்தி இருப்பதால் இங்கு அஜ்ஞானமில்லை. இவ்விரண்டு பதங்களுக்கும் வேறு அர்த்தங்கள் இருந்தபோதிலும் முன் கூறப்பட்ட அர்த்தங்களையே முக்யமாக உணர்த்துவதில் பெரும்பான்மையாக ப்ரஸித்தியிருப்பதால் இங்கு ஸம்சயமுமில்லை. 'ஹரி' என்கிற சப்தத்தைக்கேட்பவனுக்கு ஸாஸ்ஞாதிகளுள்ள வ்யக்தியில் ஸம்சயமுண்டாவதில்லையன்றே! அதினாலேயே விபர்யயமும் தூரத்தில் விலக்கப்பட்டதே—என்றால், இந்தக்கேள்விக்கு ஸமாதானம் சொல்லுகிறோம். ஆநந்தர்யரூபார்த்த நிர்ணயமும், வ்ருத்தஹேதுபாவபரத்வநிர்ணயமும் பூர்வவ்ருத்தவிசேஷஜ்ஞானத்தை அபேக்ஷிப்பதால், அதன் ப்ரதீதி,இங்கு இல்லாமையால், ப்ரஸித்திப்ராசுர்யமானது அபவாதமுள்ளதாக இருப்பதாலும், 'அத:' சப்தத்திற்கு அதிகாரம் முதலிய அர்த்தங்களிலும் 'ஏதத்' சப்தத்திற்கு 'ஏததுக்தம்பவதி' இது முதலிய வாக்யங்களில் கூறப்போகிற அர்த்திலும், எல்லாவேற்றுமைகளுடைய அர்த்தத்தையும் சொல்லுகிற தஸிலந்தமான 'இத:' இது முதலிய இடங்களில் ஐந்தாம்வேற்றுமைப் பொருளைக்காட்டிலும் வேறாக இருக்கிற பொருளிலும் ப்ரயோகம் காணப்படுவதாலும்,—ஸம்சய-*விபர்யயங்கள் உண்டாகலாம். அதைப்போக்குவதற்காக அத, அத: என்கிற சப்தங்களுக்கு வ்யாக்யானம் செய்வது பொருந்துமென நினைத்து அவைகள் வ்யாக்யானிக்கப்படுகின்றன.

இந்த இடத்தில், அத சப்தத்துக்கு 'அதிகாரம் அர்த்தம் என்று சொல்லுவது பொருந்தாது; அதிகாரம் என்றால் ப்ரஸ்தாவம், அதாவது ப்ரக்ருதவிஷயம் என்றல்லவோ அர்த்தம். ஆகவே, 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸை ப்ரஸ்தாவிக்கப்படுகிறது.' என்றால், இது மந்தப்ரயோஜநமுள்ள வசனம். ஏனெனில்,—'இது தொடங்கப்படுகிறது.' என்று முதலில் சொல்லாமலேயே ஓர் விஷயத்தைத்தொடங்கின மாத்ரத்தால் 'இது தொடங்கப்படுகிறது.' என்று தெரியவரும். சொல்லப்போகிற விஷயமானது, 'இப்பொழுது சொல்லப்போகிறேன்.' என்று சொல்லாமலேயே அருகிலுள்ளவனால் 'இது சொல்லப்படுகிறது.' என்றுதானே அறியப்படும்;—'இது சொல்லப்படவில்லை.' என்று அறிய முடியாதன்றோ?

அல்லது, 'ப்ரஸ்தாவத்துக்கு யோக்யம்' என்று அர்த்தம் சொல்வோம் என்றால், அப்பொழுதுகூட ந்யாயத்தை ப்ரதிபாதிக்கிற ஸூத்ரத்துக்கு உபதேசத்தை ஞாபகப்படுத்துவதில் தாத்பர்யம் இல்லையாதலால், யுக்தியாலேயே 'ஆரம்பத்துக்கு யோக்யம்.' என்று அர்த்தம் ஏற்படும். ஏனெனில், யோக்யத்வம் சப்தத்தால் சொல்லப்படவில்லை.

மேலும், 'அத்யாஹாரத்தால் அதிகாரம்' என்று பொருள்படுத்தலாம்; 'ஆநந்தர்யம் அர்த்தம்' என்று சொல்லுகிற பக்ஷத்தில் கூட 'கர்த்தவ்யா' (செய்யவேண்டும்) என்று அத்யாஹாரம் செய்துகொள்ளவேண்டியிருக்கிறதே—என்றால், அப்படியல்ல. அத்யாஹாரத்தால் 'அதிகாரம் அர்த்தம்' என்று சொன்னாலும், அத்யாஹாரம் செய்த 'அதிகாரம்' என்கிற பதத்துக்கு அந்வயம் ஒட்டாது. 'ச யோக்யா' என்றால் 'ஸமுச்சயத்துக்கு யோக்யம்' என்னும் அர்த்தம் எப்படி சப்தத்தால் சொல்லமுடியாதோ, அப்படியே 'அத யோக்யா' என்கிற இடத்திலும் 'அதிகரிப்பதற்கு யோக்யம்' என்று அர்த்தம் சொல்லமுடியாது. ஆகையால் தான் மஹாபாஷ்யத்தில்—'சப்தாநுசாஸனம் என்கிற சாஸ்த்ரம் அதிகரிக்கப்பட்டதெனத்தெரிந்துகொள்ளவேண்டும்.' என்று சொல்லப்பட்டிருக்கிறதே ஒழிய, 'அதிகரிக்க யோக்யம்' என்றில்லை. 'அதிகரிக்கப்பட்டது' என்பதுகூட பலிதார்த்தத்தைச்

* விபர்யயம்-அந்யதாஜ்ஞானம். கயிற்றைப்பார்த்து ஸர்ப்பமென்று எண்ணுதல்.

சால்லுகிறதேயன்றி வாசநிகோக்தி இல்லை. ஏனெனில், ச முதலியவைகளுக்கு யோதகத்வமே ஸ்வபாவம். இவ்விடத்தில் அதிக்ருதம் என்று அர்த்தம் சொன்ன ும் வையர்த்யம் சொல்லியாய்விட்டது. ஆனால், சப்தாநுசாஸநத்தின் தொடக்கத் லோ அதிகாரம்—என்கிற அர்த்தமானது கதியில்லாமல் ஆச்ரயிக்கப்பட்டது. பயநம் ஆனதும் வேதாத்யயனம் செய்கிறவனால் அத்யயனம் செய்யவேண்டிய ங்கமான வ்யாகரணத்துக்கு அஸாதாரணமான வ்ருத்தவிசேஷம் உண்டாவதில்லை ன்றோ! இவ்விடத்திலோவெனில், ப்ரயோஜநமுள்ள வேறு அர்த்தம் கிடைக்கை ல் அத சப்தத்துக்கு அதிகாரம் என்கிற அர்த்தத்தை ஆச்ரயிப்பது அயுக்தம். த: சப்தத்துக்கு ஆநந்தர்யம் என்று அர்த்தம் சொன்னால் ஏற்படும் ப்ரயோஜநம் பிறகு சால்லப்படும். அத சப்தத்துக்கு மங்களம் வாச்யார்த்தம் அல்ல. ஆனால், சங்கநாதம் பால் காதால்கேட்ட மாத்ரத்தில் அத சப்தம் மங்களத்தை உண்டுபண்ணும். அத ப்தத்துக்கு வேறு அர்த்தம் இருந்தபோதிலும், ஓங்காரத்தைப்போல் இதற்கும் மங்களம் ஸித்தம். ஏனெனில், அத சப்தம் ஓங்காரத்துக்கு ஸமமாகவன்றோ ஸ்ம்ருதியில் சொல் லப்படுகிறது! §"ஓங்காரஶ்சாதஶப்தஶ்ச த்வாவேதௌ ப்ரஹ்மண:புரா, கண்டம் பித்வா விநிர்யாதௌ தஸ்மாந்மாங்களிகாவுபௌ." என்று—

அல்லது, அத சப்தம் மங்களவாசகம் என்று ஒப்புக்கொண்டாலும், ப்ரஹ்மஜிஜ்ஞா ஸை மங்களரூபமானது—என்று பொருள்பட்டு ப்ரஹ்மஜிஜ்ஞாஸை புகழப்படுவதுபோ லாகும். ஆகவே, ஸூத்ரம் அர்த்தவாதம் என்று ஏற்படும்; ந்யாயநிபந்தகத்வம் ஸித்திக் காது. ஜிஜ்ஞாஸாபதத்துக்கு இதை விசேஷணமாகக்கொள்ளாவிடில் 'மங்களம் பவதி' என்று வாக்யபேதம் ஏற்படும். ப்ரக்ருதமான அர்த்தத்தைவிட்டு வேறு அர்த்தம் சொல் லுவதும் சரியல்ல; அது ப்ரக்ருதத்தைக்காட்டிலும் இனி சொல்லப்போவது வேறு அர் த்தம் என்று தெரிவிக்கிறது; அதுவும் வேறுகல்பத்தை உபந்யஸிக்கும் விவக்ஷையில் தான் காணப்பட்டிருக்கிறது. இவ்விடத்திலோ என்றால், வேறு கல்பம் உபந்யஸிக்கப் படாமையால் அது உபபன்னமாகாது. அத சப்தத்துக்கு வினவைப்பொருளாகக்கொள் ளுவதும் பொருந்தாது. ஏனெனில், வசநவ்யக்தியானது ப்ரச்நப்ரதிவசநமாக இல்லை. அப்படியானால், 'கிம் ப்ரஹ்மஜிஜ்ஞாஸா கர்த்தவ்யா?' என்று கேள்வியிருக்க வேண்டும்; 'ஸா கர்த்தவ்யா?' என்று வேறொரு வாக்யத்தால் பதிலும் இருக்கவேண்டும். ஆனால், பதிலாக இங்கு ஒரு வாக்யத்தையும் காணோம்.

அத சப்தத்துக்கு முழுமையும் எனப்பொருள் கொண்டால், ப்ரஹ்மஜிஜ்ஞாஸை யானது முழுவதும் செய்யத்தகுந்தது—என்று அர்த்தம் ஏற்படும்; அதுவும் பொருந்தாது, ஏகதேசம் செய்யவேண்டுமோ!—என்ற ஸந்தேஹத்திற்கே இடமில்லையாதலால். இங்கு செய்யவேண்டியது மாத்ரம் ஸந்தேஹத்துக்கு இடமேயன்றி அதன் ஏகதேசமல்ல. இந்த ஸந்தேஹத்தைப்போக்கடிப்பதற்குத்தான் இருக்கிறது இந்த ஸூத்ரம். மேலும், அத: ஶப்தத் ஸம்பந்தமானது அத ஶப்தத்திற்கு அதிகாரம் முதலிய பலவேறு அர்த்தங் களை நிவாரணம் செய்கிறது. அத: ஶப்தமோவெனில் ப்ரக்ருதார்த்தத்தை ஹேதுவாகப் பராமர்சித்துக்கொண்டு, அத ஶப்தத்தினால் உபஸ்தாபிக்கப்பட்டு,ஸாமர்த்யத்தால் ஆக்ஷிப் தமான 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' பதத்தைப்பராமர்சிக்கிறது. அவ்விடத்தில் அத ஶப்தத்தால் உணர்த்தப் அதிக்ருதத்வம் என்கிற அர்தத்தைப்பராமர்சிக்குமாகில், அப்பொழுது

§ (ஓங்கார) – ஓங்காரம், அத:ஶப்தம், இவ்விரண்டும் முன்காலத்தில் ப்ரஹ்மத்தின் கண்டத்தைக்கிழித்துக்கொண்டு வெளிப்பட்டன. ஆகவே, இவை மங்களகரமானவைகள்.

'அதிக்ருதத்வாத் அதிகாத்தவ்யா' என்று ஹேதுவுக்கு * ஸத்யாவிசிஷ்டத்வமான தோஷம் வரும். மங்களமானது ஶப்தத்தால் சொல்லப்படவில்லையாதலால் வேறு பதத்தைப்பராமர்சிக்கும் யோக்யதை கிடையாது. அதற்கு வாசயத்வத்தை ஒப்புக்கொண்டபோதிலும், அதற்கும், ப்ரக்ருதாபேக்ஷத்வத்திற்கும், கார்த்ஸ்ந்யத்துக்கும் (முழுமைக்கும்) பூர்வபக்ஷயுக்தி விரோதமில்லையாகையால் அவைகள் ஹேதுவாகப்பராமர்சிக்கத்தகுந்தவையல்ல; அமங்களத்வ, ப்ரக்ருதாநபேக்ஷத்வ, அகார்த்ஸ்ந்யங்களால் பூர்வபக்ஷத்திற்கு உத்தாநம் இல்லையன்றோ! † ந்யஸூத்ரங்களும் விருத்தார்த்தத்தை நிரஸநம் செய்வதில் நோக்கமுள்ளவைகள் ப்ரஶ்நவாக்யத்திலுள்ள ப்ரஶ்நமோ அதே வாக்யத்தில் ஹேதுவாகப்பராமர்சிக்கத்தகுதியற்றதே. 'கிம் ப்ரஹ்மஜிஜ்ஞாஸா கர்த்தவ்யா?' என்னும் வாக்யம் முடிவுபெறாமலிருக்கையில், கிம்ஶப்தார்த்தமானது எப்படி ஹேதுவாகப்பராமர்சிக்கப்படலாம். ஆகையால், அதஶப்தமானது அத:ஶப்தபராமர்சயோக்யமான அர்த்தமுள்ளது—என்று ஒப்புக்கொள்ளப்பட்டால், அப்பொழுது அதிகாரம் முதலிய அர்த்தங்கள் பொருந்தாது.

ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபதஸாமர்த்யத்தினால் ஆக்ஷிப்தமாயும், பூர்வவ்ருத்தமாய் அந்தந்த வ்யாக்யாதாக்களால் அபிமானிக்கப்பட்டதாயுமுள்ள கர்மவிசாரத்திற்கு அத:ஶப்தத்தால் பராமர்சமானது இச்சிக்கப்படுமாகில், ஜிஜ்ஞாஸைக்கு உபயோகமற்ற அர்த்தம் அத:ஶப்தத்தால் ஆக்ஷேபிக்கத்தகாது'; உபயோகமுள்ள அர்த்தம்தான் அதசப்தத்தால் ஆக்ஷேபிக்கத்தகுந்தது. ஆகவே, அதைப்பராமர்சிக்கிற அத:ஶப்தத்தால், ஜிஜ்ஞாஸைக்கு உபயோகமாயிருப்பது பற்றி, அதற்குப்பூர்வபாவியான அர்த்தவிசேஷத்திற்கு உபஸ்தாபநம் ஏற்படுகிறது. இவ்விதம் அதசப்தத்துக்கு ஸ்வாரஸிகமான 'ஆநந்தர்யம்' என்ற அர்த்தம் கிடைக்கையில், அஸ்வாரஸமாயும், விபலமாயுமுள்ள பலவேறு அர்தங்களை ஸ்வீகரிப்பது பொருந்தாது. ஆகையால், அத:ஶப்தம்போல், ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபதஸாமர்த்யம்கூட அதஶப்தத்திற்கு அதிகாரம் முதலிய அர்த்தங்களை உணர்த்தும் தன்மையைத்தடுக்கும்.

இவ்விதம் வேறு எந்த அர்த்தமும் பொருந்தாது என்பதைக்காட்டிக்கொண்டு, அதஶப்தத்துக்கு 'ஆநந்தர்யம்' என்கிற அர்த்தத்தையே 'அத்ர' என்று தொடங்கி உபபாதநம் செய்கிறார்.

'அதஶப்தம் ஆநந்தர்யார்த்தத்தில்' என்று ப்ரதிக்ஞை. 'அத்ர, அயம், ஹவதி' என்கிற இம்மூன்று பதமும் அதற்கு உபபாதகம். அவற்றுள் 'ஹவதி' என்னும் பதத்தால் ஆநந்தர்யத்தில் ஸ்வாரஸ்யம் ஸூசிக்கப்படுகிறது. அந்த ஸ்வாரஸ்யத்தை மாற்றுகிற † பூர்வவ்ருத்தாப்ரதிபத்தியை 'அத்ர' என்னும் பதத்தால் ஸ்ரீபாஷ்யகாரர் பரிஹரிக்கிறார்.

* ஹேதுவுக்கு ஸாத்யாவிசிஷ்டத்மாவது—ஸாத்யஸந்தேஹாதீன, ஸந்தேஹவிஷயத்வம். 'பர்வதம் வந்ஹியையுடையது, வந்ஹியை யுடையதாயிருப்பதால்,'—என்பது போலுள்ளவை ஸாத்யஹேதுநிர்தேசஸ்தலங்கள்.

† ந்யஸூத்ரங்கள்—ந்யாயநிபந்தநங்களான ஸூத்ரங்கள். இவை ஜைமிநி எழுதிய பூர்வமீமாம்ஸாஸூத்ரங்களும், வ்யாஸர் எழுதிய ப்ரஹ்மஸூத்ரங்களுமாம். ந்யாயங்களாவன,—ப்ரமாணங்களுக்கு யாதொரு பாதகமுமில்லாமல் ஸாதிக்கத்தக்க அர்த்தங்களை ஸாதிப்பதற்கு வேண்டிய யுக்திகள், அதாவது, ப்ரதிக்ஞா, ஹேது, உதாஹரணம், உபநய, நிகமனம், என்கிற பரார்த்தாநுமான ப்ரயோஜகங்களான பஞ்சாவயவவாக்யங்கள். இவைகளில் சிலவற்றை மூலமாகக்கொண்டு ஸூத்ரங்கள் ப்ரவ்ருத்தித்திருப்பதால் ந்யஸூத்ரங்களென்று சொல்லப்படுகின்றன.

† பூர்வவ்ருத்தாப்ரதிபத்தி - என்றால் இதற்குமுன் நேரவில்லை என்கிற ஜ்ஞானம்.

'அத்ர'—வேதத்தின் உத்தரபாகவிசாரரூபமான ப்ரஹ்மமீமாம்ஸையின் முதல் ஸூத்ரத்தில்—என்று இந்தப்பதத்திற்கு அர்த்தம். ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபதஸாமர்த்யத்தால் பூர்வபாகத்தின் விசாரரூபமான வ்ருத்தவிசேஷம் ஆக்ஷேபிக்கப்பட்டது என்று கருத்து 'அயம்'—வேறு ஹேதுவை அபிப்ராயங்கொண்டு இந்தப்பதத்தைச்சொல்லுகிறார். இந்த அயஶப்தம்-'அயஶப்தாநுஶாஸநம், அய யோகாநுசாஸநம்' முதலிய ஸூத்ரங்களிலுள்ள அயஶப்தத்தைக்காட்டிலும் வேறு-என்று அர்த்தம். இதனால் பக்கத்தில் அத:ஶப்தத்தை யுடைய இந்த அயஶப்தம்—என்று சொன்னது போலாகிறது. இந்த அர்த்தம் வேதாந்த ஸாரத்திலன்றோ ஸ்ரீபாஷ்யகாரரால் கண்டோக்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது! ப்ரக்ரு தத்தைப்பராமர்சிக்கிற அத:ஶப்தத்தால் பூர்வவ்ருத்தமானது சொல்லப்பட்டது,—என்று கருத்து. இவ்விதம் ஒன்று சேர்ந்த இவ்விரண்டு பதங்களின் ஸ்வாரஸ்யத்தால், ஸாமாந்ய மாய் சொல்லப்பட்டு,விசேஷமாய் ஆக்ஷிப்தமான பூர்வவ்ருத்தம் ஸித்தித்தது. ஆகையால், ஸ்வாரஸ்யத்துக்கு அபவாதகமான பூர்வவ்ருத்தாப்ரதிபத்தி இல்லை. எனவே, அயஶப்தம் 'ஆநந்தர்யம்' என்கிற அர்த்தத்தையே சொல்லுகிறதென்று வாக்யார்த்தம். இவ்விதம் அய சப்தத்துக்கு—உத்தரபாகவிசாரத்தின் முதல் ஸூத்ரத்தை அடைந்திருப்பதையும், அத: ஶப்தத்தை அருகில் வைத்துக்கொண்டிருப்பதையும், ஆநந்தர்யம் என்கிற அர்த்தத்தில் இருக்கும் ஸ்வாரஸ்யத்தையும் காட்டுகிற, ஆநந்தர்யத்துக்கு உபபாதகங்களான, 'அத்ர, அயம், ஹவதி' என்னும் பதங்களாலேயே இந்த முதல் ஸூத்ரத்தில் கதியில்லாமல் ஒப்புக் கொள்ளவேண்டியதாயிருந்த மற்றைய அர்த்தங்களுக்கு அநாதரவு பலித்தது.

இனி, 'அத: ஶப்தோ வ்ருத்தஸ்ய ஹேதுபாவே' என்று தொடங்கி அத:ஶப்தத்தை வ்யாக்யாநம் பண்ணுகிறார்.

'வ்ருத்தஸ்ய' என்றதால் † ப்ரக்ருதியின் அர்த்தம் சொல்லப்பட்டது. 'ஹேதுபாவே' என்று ப்ரத்யயத்தின் அர்த்தம். இது ப்ரதிக்ஞை. இவ்விடத்திலும் 'அத்ர, அயம், பவதி' என்று $ அநுஷங்கிக்கப்பட்ட மூன்று பதமும் உபபாதகம். ப்ரக்ருதி, ப்ரத்யயம், இவ் விரண்டும் இப்பொழுது சொன்ன அர்த்தத்தில் நோக்குள்ளவைகள்என்கிற ப்ரஸித்திப்ராசுர்யமானது 'பவதி' சப்தத்தால் காட்டப்பட்டது. 'அத்ர' என்பதற்கு முன்போலவே அர்த்தம் இதனால் வ்ருத்தவிசேஷமும், அதற்கு ஹேதுத்வயோக்யதையும் ஆக்ஷிப்தமா யிற்று. அந்த யோக்யதையும் சீக்ரத்தில் வெளியாகப்போகிறது. 'அயம்:' ஆநந்தர்யார்த் தத்தில் ஸ்வாரஸ்யமாகிற அய ஶப்தத்தை முதலில் வைத்துக்கொண்டிருக்கிற. இத னால் வ்ருத்தஸாமாந்யம் ஆக்ஷிப்தமாயிற்று.

அய ஶப்தத்தின் அர்த்தநிர்ணயமானது, அத: ஶப்தத்தின் அர்த்தநிர்ணயத்தை ஆபேக்ஷிப்பதாலும், அத:ஶப்தத்தின் அர்த்தநிர்ணயமானது அய ஶப்தத்தின் அர்த்த

---

† ப்ரக்ருதி-ப்ரத்யயத்தை ஏற்றுக்கொள்ளும் பதம். அதாவது பகுதி. அத: என்னும் சப்தத்தில்—'இதம்' என்கிற பதம் ப்ரக்ருதி. அதன்மேல் 'தஸி' என்கிற ப்ரத்யயம் (விகுதி) ஶப்தாநுசாஸநத்தால் விதிக்கப்பட்டிருக்கிறது. தஸிப்ரத்யயம் வரும்பொழுது ப்ரக்ருதியாயுள்ள 'இதம்' சப்தம் முதலில் அ என்று ஆதேசம் பெற்று 'அத:' என்று மாறுகிறது. இங்கு 'வ்ருத்தம்' என்பது ப்ரக்ருதியின் அர்த்தம்; 'ஹேதுபாவம்' என்பது தஸிப்ரத்யயத்தின் அர்த்தம்.

$ அநுஷங்கமாவது—ஒருமுறை ஓரிடத்தில் அந்வயித்த பதத்தையே ப்ரயோஜநத் தை விரும்பி மறுமுறை மேலுள்ள வாக்யத்திலோ, பதத்திலோ சேர்ப்பது.

நிர்ணயத்தை ஆபேக்ஷிப்பதாலும் ‡ அந்யோந்யாச்ரயதோஷம் வருமேயென்றால்,—அப்படியல்ல. அத ஶப்தத்திற்கு ஆநந்தர்யத்திலுள்ள ஸ்வாரஸ்யமானது அத: ஶப்தார்த்தநிர்ணயத்தை எதிர்பார்க்கவேயில்லை. இவ்விதமே, அத: ஶப்தத்தின் வ்ருத்தஹேதுபாவபரத்வமான ஸ்வாரஸ்யமும் அத ஶப்தார்த்தநிர்ணயத்தை எதிர்பார்க்கிறதில்லை. அத ஶப்தமானது தன் ஸ்வாரஸ்யத்தாலும், சேர்ந்து ப்ரயோகிக்கப்பட்ட அருகிலுள்ள வேறுபதத்தின் ஸ்வாரஸ்யத்தாலும் ஆநந்தர்யத்தையே சொல்லுகிறது. அப்படியே அத: ஶப்தமும் தன் ஸ்வாரஸ்யத்தாலும், அதோடு சேர்ந்த மற்றொரு பதத்தின் ஸ்வாரஸ்யத்தாலும் வ்ருத்தார்த்தஹேதுத்வத்தை உணர்த்துகிறது—என்பது 'பவதி, அயம்' என்கிற இவ்விரண்டு சப்தங்களாலும் நன்கு காட்டப்பட்டதாகிறது. இவைகளும் ¶ அப்யுச்சயயுக்திகள். 'அத்ர' என்னும் பதத்தால் குறிக்கப்பட்ட ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபதத்தின் ஸாமர்த்யத்தாலேயே இரண்டு பதங்களுக்கும் முன் சொல்லிய அர்த்தபரத்வம் ஸித்திப்பதால். ஆதலால், தன் ஸ்வாரஸ்யத்தாலும், பக்கத்திலுள்ளபதத்தின் ஸ்வாரஸ்யத்தாலும், ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபத ஸாமர்த்யத்தாலும் அத அத: ஶப்தங்களிரண்டும் எப்படி அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறதோ அதே அர்த்தத்தையுடையவைகள் என்பதனுல் தோஷமில்லை.

அத அத: ஶப்தங்களிரண்டில் ஒன்று போதுமென்பதும் ஸரியல்ல. ஏனெனில், அநந்தரகாலத்தை உபஸ்தாபிக்கிற அத ஶப்தமானது, நடந்தேறப்போகிற ப்ரஹ்மஜிஜ்ஞாஸைக்கு விசேஷணமாயிருக்கிறது; அத:ஸப்தமானது முன் நடந்திருக்கிற கர்மஜிஜ்ஞாஸைக்கு ஹேதுபாவத்தைச்சொல்லுகிறது. ஆகவே, பர்யாயத்வம்(ஒரே அர்த்தத்தை உணர்த்துதல்)என்பது அத அத: ஶப்தங்களுக்கு இல்லையாதலால் இவ்விரண்டில் ஒன்றுபோதுமென்பது தகாது. மேலும், * ப்ரதிக்ஞாஹேதுரூபமாக இவ்விரண்டு பதங்களுக்கும் ப்ரயோஜநம் வேறுபட்டிருக்கிறது. ப்ரஹ்மஜிஜ்ஞாஸை செய்யத்தகுந்தது—என்றல்லவோ ப்ரதிக்ஞை! என்றால் அப்படியல்ல. 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' என்று தர்மியைநிர்தேசித்தார். அத என்று ஸாத்யதர்மத்தைக் கூறியபடி கர்த்தவ்யதாமாத்ரம் ஸாத்யதர்மமல்ல. ஆநந்தர்யத்வவிசிஷ்ட கர்த்தவ்யத்வமே ஸாத்யதர்மம். இவ்வாறாக, அத அத: ஶப்தங்களிரண்டுக்கும் 'ப்ரதிக்ஞா ஹேது' என்கிற அர்த்தஹேதததால் விபாகம் 'அதாதோ தர்மஜிஜ்ஞாஸா' என்கிற இடத்திலும் ஸமாநம். இப்படி அர்தங்களின் வேறுபாட்டை விவக்ஷிக்கவில்லையாதலால், அத யோகாநுஶாஸநம், அத ஶப்தாநுஶாஸநம்' முதலிய இடங்களில் அத: ஶப்தம் ப்ரயோகிக்கப்படவில்லை.

மேலும், ப்ரஹ்மஜிஜ்ஞாஸா பதஸாமர்த்யத்தால் ஆக்ஷிப்தமானதால் மனதில் ஊன்றியுள்ள கர்மவிசாரத்திற்கு ஹேதுபாவமானது அத:ஶப்தத்தாலேயே அறியத்தக்கதாகிறது; ஆகவே, அதஶப்தத்தால் என்ன ப்ரயோஜநம்?-எனில், அப்படியல்ல. அதஶப்தமானது

‡ அந்யோந்யாசரயம்:—இது ஒரு விதமான வாக்யார்த்ததோஷம். இது இரண்டுவிதம். அவைகளாவன:—உத்பத்தௌ அந்யோந்யாச்சரயம். ஜ்ஞப்தௌ அந்யோந்யாச்ரயம். இரண்டு வாக்யார்த்தங்களும் அந்யோந்யம் (ஒன்று மற்றொன்றை) தவறாமல் அபேக்ஷிப்பதால் (அந்யோந்யாபேக்ஷாரூபமான ப்ரதிபந்தகத்தால் வாக்யார்த்தஜ்ஞானமாவது, வாக்யார்த்தத்தின் உத்பத்தியாவது இல்லாமல போவது.)

¶ அப்யுச்சயயுக்திகள் - அதிகமான யுக்திகள். அப்யுச்சயபதம் 'கூட' என்னும் அர்த்தத்தில் சாஸ்த்ரகாரர்களால் உபயோகிக்கப்படுகிறது.

* ப்ரதிக்ஞாஹேதுரூபம் - 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸை செய்யத்தகுந்தது' என்பது ப்ரதிக்ஞாவாக்யம். 'கர்மவிசாரம் முந்தி நடந்திருப்பதால்,' என்பது ஹேதுவாக்யம். (ப்ரஹ்மஜிஜ்ஞாஸா கர்த்தவ்யா, கர்மவிசாரஸ்ய பூர்வவ்ருத்தத்வாத்.)

ஆநந்தர்யரூபார்த்தத்தின் மூலமாய் வ்ருத்தமானகர்மவிசாரரூபஹேதுவுக்கு வேறு சாஸ்த்ரச்ரவணத்தினால் விலக்கத்தைக்கருதாமையைக் காண்பிக்கிறது. இதனால் வேதாந்தச்ரவணத்துக்குமுன் வேறுசாஸ்த்ரங்களைக்கேட்காமல் ஸம்பாதிப்பது அசக்யமாதலாலும், சாஸ்த்ராந்தரங்கள் அஸமயத்தால் பீடிக்கப்பட்டிருப்பதாலும், சாஸ்த்ராந்தரங்களை அபேக்ஷித்துவராத்தக்க நித்யாநித்யவஸ்துவிவேகாதிகளுக்கு பூர்வவ்ருத்தித்வநிராஸம் பலித்ததாகும்! ஆனால் முன் நடந்த ஏதோ ஒன்றை பூர்வவ்ருத்தம் என்றுசொல்லக்கூடாது. சொன்னால் § அதிப்ரஸங்கம் வரும். ஆகையால், இனி வரப்போகிற ப்ரஹ்மவிசாரத்துக்கு உபயோகமாய் எந்த பூர்வவ்ருத்தம் இருக்கிறதோ அது அதஶப்தத்தினால் உபஸ்தாபிக்கப்படுகிறது.

சாஸ்த்ராந்தரச்ரவணநைரபேக்ஷ்யம்போல ஹேதுத்வமும் அந்த வஸ்துஸாமர்த்யத்தினாலேயே ஸித்திக்கையில் அத: ஶப்தத்தினால் என்ன ப்ரயோஜநம்?—என்றால், அப்படியல்ல. அத:ஶப்தமானது அதஶப்தத்தால் ஆக்ஷேபிக்கப்பட்டுள்ள ஹேதுவின் அஸித்திசங்கையை பரிஹரிப்பதற்கு மிகவும் அவச்யமானது. †ஹேதுவோ வசிஷ்டமாயிருக்கிறது. ஸூத்ரகாரர் அபிப்ராயப்பட்டிருக்கிற அந்த விசிஷ்டஹேதுவினுடைய விசேஷண, விசேஷ்யாம்சங்களைச்சார்ந்த அஸித்திசங்கையும், அதன்பரிஹாரமும் மேலே காண்பிக்கப் படப்போகிறபடியால் இந்த அத அத:ஶப்தங்களிரண்டும் மிகுந்த ப்ரயோஜநமுள்ளவை.

---

பாஷ்யம்:—

**அதீதஸாங்கஸஶிரஸ்கவேதஸ்ய அதிகதால்பாஸ்திரபலகேவலகர்மஜ்ஞாநதயா ஸஞ்ஜாதமோக்ஷாபிலாஷஸ்ய அநந்தஸ்திரபலப்ரஹ்மஜிஜ்ஞாஸா ஹ்யநந்தரபாவிநீ |**

---

**வ்யாகரணம் முதலிய அங்கங்களோடும், உபநிஷத்தாகிற ஶிரஸோடும் கூடிய வேதங்களை அத்யயனம்செய்து, கர்மவிசாரம் பண்ணி, கேவல கர்மங்கள் அல்பமாகவும் அஸ்திரமாகவுமுள்ள பலனையே கொடுப்பவைகள் என்றும் அறிந்து, மோக்ஷத்தில் அபிலாஷம் பிறந்திருக்கிற சேதநனுக்கு அநந்தமாயும், ஸ்திரமாயுமிருக்கிற பலனை விளைக்கும் ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்கிற இச்சையன்றோ அநந்தரம் உண்டாவது.**

---

ச்ருதப்ரகாசிகை:—'அத்ர' என்கிற பதத்தால் ஸூசிக்கப்பட்ட 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' பதத்தின் ஸாமர்த்யத்தினால் ஸித்தமான ¶ வ்ருத்த, ‡ வர்த்திஷ்யமாணங்களையும், அவ்விரண்டுக்குமுள்ள ஹேதுஹேதுமத்பாவத்தையும் விவரித்துக்கொண்டு முன்சொன்ன ஆநந்தர்யத்தை நிரூபணம்பண்ணுகிறார் ' அதீத ' என்ற வாக்யத்தால்.

---

† ஹேது விசிஷ்டமாயிருப்பதாவது - வ்ருத்தஸ்ய கர்மவிசாரஸ்ய அல்பாஸ்திர பலத்வாத் - என்று விசிஷ்ட ஹேதுஸ்வரூபநிர்தேசம்.

§ அதிப்ரஸங்கமாவது - அலக்ஷ்யத்தில் லக்ஷணஸத்தை (இருப்பது) அல்லது நியமத்துக்குத்தவறுதல்.

¶ வ்ருத்தம் - நடந்த விஷயம்.

‡ வர்த்திஷ்யமாணம் - நடக்கப்போகிற விஷயம்.

'கர்மக்ஞான' சப்தத்தால் வ்ருத்தம் கூறப்பட்டது. 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' பதத்தால் வர்த்திஷ்யமாணம் சொல்லப்பட்டது. 'அல்பாஸ்திரபல, அநந்தஸ்திரபல—' என்னும் இவ்விரண்டு சப்தங்களால் ஹேதுஹேதுமத்பாவம் காண்பிக்கப்பட்டது. 'கேவல' சப்தத்தால் ப்ரஹ்மக்ஞானபூர்வகமாயுள்ள கர்மாவை விலக்குகிறார்.

கர்மக்ஞானம்தான் பூர்வவ்ருத்தம் என்பது எப்படி?— அநந்தஸ்திரபலப்ராப்திதான் எப்படி உண்டாகும்?— என்று ஸந்தேஹம் உண்டானால், 'அதீத' என்று தொடங்கிய பதத்தால் விவரிக்கிறார். 'ஸபிரஸ்கவேத' என்கிற சப்தத்தால் முழுவேதத்தின் அத்யயனமும் விவக்ஷிக்கப்பட்டது; வ்யாக்யாநபௌர்வாபர்யத்துக்கு ஹேதுமான ¶வ்யாக்யேய - க்ரந்தத்தின், $பௌர்வாபர்யநியமமும், இரண்டு பாகங்களும் சேர்ந்து ஒரே ப்ரபந்தம் என்பதும் இந்த சப்தத்தாலேயே ஸூசிப்பிக்கப்படுகிறது. 'ஸாங்க' சப்தத்தால் அநந்தஸ்திரபலத்துக்கு § ஆபாதப்ரதீதியை உண்டுபண்ணுவதில் காரணத்வம் காட்டப்பட்டது. *"க்ருஷ்ணபக்ஷே ததாங்காநி, உபநீயது ய: பிஷ்யம் வேதமத்யாபயேத் த்விஜ:, ஸகல்பம், ஸரஹஸ்யஞ்ச தமாசார்யம் ப்ரசக்ஷதே." இதுமுதலான வசநங்கள் 'அதீதஸாங்கஸசிரஸ்கவேதஸ்ய' என்கிற இடத்தில் அபிப்பிராயப்படப்பட்டுள்ளன. இவ்விதம் 'அதீத' என்று தொடங்கப்பட்டு, ஆறும் வேற்றுமையிலுள்ள இரண்டு விசேஷணங்களால் 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' பதத்தின் ஸாமர்த்யத்தால் பாதுகாக்கப்படும் அத அத: ஶப்தங்களால் ஏற்படுத்தப்பட்டுள்ள அதிகாரி விசேஷம் காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. கர்மங்களை நன்றாய் அறிந்தவனும், ஸாம்ஸாரிகபலன்களில் நிர்வேதம் அடைந்தவனும், அநந்தமாயும், ஸ்திரமாயுமிருக்கிற பலத்தை அடையவிரும்புகிறவனுமான சேதனனன்றோ சாஸ்திரத்திற்கு அதிகாரி.

**"அநந்தஸ்திரபலப்ரஹ்மஜிஜ்ஞாஸா."**

அளவற்றதும்; சாச்வதமாயுமுள்ள பலரூபமான ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்ற விருப்பம்—என்று அர்த்தம். அநந்தஸ்திரபலத்வம் என்பது ஜிஜ்ஞாஸைக்கு விசேஷணமானால், ஜிஜ்ஞாஸைக்கு அத்தன்மை ஆகமங்களால் உண்டான விவேகத்தின் மூலமாய்,— என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

'அநந்தரபாவிநீ'—என்னும் பதத்தால், 'அத அத:' சப்தங்களால் கிடைத்துள்ள ஹேதுவின் சாஸ்த்ராந்தர † நைரபேக்ஷ்யம் விவக்ஷிக்கப்பட்டது. கர்மவிசாரத்திற்குப் பிறகு ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கது—என்பதில், கர்மாக்கள் அல்பாஸ்திரங்கள் என்னும் நிர்ணயத்துடன் கூடிய அநந்தஸ்திரபலத்தின் ஆபாதப்ரதீதி—என்பது விசிஷ்ட ஹேது. அத:சப்தத்தால் வ்ருத்தமான கர்மவிசாரத்துக்கு ஹேதுத்வம் சொல்லப்பட்

---

¶ வ்யாக்யேயம் - வ்யாக்யாநம் செய்யத்தகுந்த க்ரந்தம்.

$ பௌர்வாபர்யம் - முன்னும் பின்னுமாயுள்ள வரிசைக்ரமம்.

§ ஆபாதப்ரதீதியாவது மேலெழுந்தவாரியாக உண்டாகும் ஸம்சயவிபர்யயஸஹமான ஜ்ஞானம்.

* (க்ருஷ்ணபக்ஷே) க்ருஷ்ணபக்ஷத்திலும் அவ்வாறே வேதாங்கங்களும் கற்கத்தகுந்தவைகள். எந்த ப்ராஹ்மணன் உபநயநம் செய்துவைத்து சிஷ்யனுக்கு கல்பத்துடனும், ரஹஸ்யமான மந்த்ரங்களுடனும் அத்யயநம் செய்து வைக்கிறானோ அவனைத்தான் ஆசார்யன் என்று சொல்லுகிறார்கள்.

† நைரபேக்ஷ்யம் - மற்றொன்றை எதிர்பாராதிருத்தல்.

டிருப்பதாலும்,—கர்மவிசாரமானது ‡ ஸாங்க வேதாத்யயனத்தால் உண்டான அநந்தஸ்திர பலாபாதப்ரதீதியை முன்னிட்டு வருவதாலும்,—'அடிக்கடி செய்யவேண்டும்' என்கிற விதி முதலியவைகளால் கர்மாக்கள் அல்பாஸ்திரமான பலனுள்ளவைகள் என்கிற எண்ணத்துக்குக்காரணமாயிருப்பதாலும் இது விசிஷ்டஹேது. இத்தன்மையுள்ள விசிஷ்டஹேதுவானது—"அதிகதால்பாஸ்திரபலகேவலகர்மஜ்ஞானதயா ஸஞ்ஜாதமோக்ஷாபிலாஷஸ்ய" என்னும் பதங்களால் சொல்லப்பட்டது.

இங்கு 'அதிகத' என்கிற பதத்தால் கர்மாக்கள் பலத்தின் மூலமாய் ஒதுக்குவதின் பொருட்டு அறியத்தக்கவைகள்—என்பது கண்டோக்தமாயிற்று. ஸ்வரூபத்தால் க்ரஹிப்பதற்காக அறியத்தக்கதென்பதும் கூட கர்மவிசாரத்தின் பூர்வவ்ருத்தத்வத்தில் ஹேது; அபேக்ஷிதமான கர்மஸ்வரூபத்தின் ஞானமும், கேவல கர்மாக்களுக்கு அல்பாஸ்திரத்வ பலஜ்ஞானமும் கர்மமீமாம்ஸையினால் நிச்சயிக்கத்தக்கது;—என்றுமல்லவோ மேலே சொல்லப்போகிறார். அந்த கர்மஸ்வரூபஜ்ஞானம் முதலியவைகளில் கர்மாக்கள் ஸ்வரூபத்தால் உபாதேயங்கள்—என்கிற ஜ்ஞானம் அநந்தஸ்திரபலாபாதப்ரதீதியில் உள்ளடங்கியது. உபாயம், அதன் இதிகர்த்தவ்யதாவிசேஷங்கள், இவைகளோடு கூடவேயன்றோ அநந்தஸ்திரபலாபாதப்ரதீதி—என்பதால் விசிஷ்டஹேதுவில் அந்தர்பாவமும், மேல் க்ரந்தத்தின் அவிரோதமும் ஸித்திக்கிறது.

ஆனால், கர்மவிசாரம் ப்ரஹ்மவிசாரத்திற்கு நிரபேக்ஷஹேதுவாயிருக்குமாகில்,—கர்மவிசாரம் செய்த யாவராலும் ப்ரஹ்மமானது விசாரிக்கப்படவேண்டுமாதலால், ஸ்வர்கார்த்தமான கர்மாக்களை அனுஷ்டிப்பவர்களே இல்லாமற்போக நேரிடுமே—எனில், அப்படியல்ல. ஏனென்றால், மீமாம்ஸையைக்காதால் கேட்காமலிருந்தபோதிலும், உபாத்யாயர் முதலியவர்களின் வசநத்தினால் எவர்கள் அனுஷ்டிக்கிறார்களோ அவர்களுக்கு ஸ்வர்கார்த்தமான கர்மாக்களை அனுஷ்டிப்பதில் விரோதம் கிடையாது. மீமாம்ஸையைக்கேட்டும் எவர்கள் ஸ்வர்கத்தில் விருப்பமுள்ளவர்களோ அவர்களுக்கு அத்ருஷ்டதோஷத்தாலும், அஸமீசினமான வ்யாக்யானங்களைச்செவியுற்று மோக்ஷத்தில் விருப்பமில்லாமை ஸம்பவிப்பதாலும்.

ஸாங்காத்யயநம் கர்ம விசாரத்துக்கு பூர்வவ்ருத்தமாகில் ஸாங்கவேதாத்யயநம் செய்த எல்லோராலும் கர்மாவானது விசாரிக்கப்படவேண்டியதாகும் ; ஆனால், அப்படிச்செய்யப்படுவதில்லை. வேதாத்யயநம் செய்திருந்தபோதிலும், அநேகர் கர்மமீமாம்ஸாச்ரவணமில்லாதவர்களாகவே காணப்படுகின்றனர். அவர்களுக்கு கர்மவிசாரம் இல்லாதிருப்பது அத்ருஷ்டம், தேசம், காலம் முதலியவற்றின் வைகுண்யத்தால் ஏற்படுகிறதே தவிர ஸாங்காத்யயநத்துக்கு பூர்வவ்ருத்தத்வம் இல்லாமையால் அல்ல ;—என்றாலும், அது இவ்விடத்திலும் ஸமாநம். அப்படியே ஸாதநசதுஷ்டயம் முதலானது ஸித்தித்திருந்தபோதிலுங்கூட ப்ரஹ்மவிசாரத்தை அறியாதவர்களாகவே அநேகர் காணப்படுவதால், ஸாதநசதுஷ்டயம் முதலியவற்றிற்கு ப்ரஹ்மவிசாரத்தைக்குறித்து நியமேந காரணத்வம் எவ்விதம் பொருந்தும் ?—என்று சோத்யம் ஏற்பட்டால், அதற்கு பூர்வவ்ருத்தவாதிகள் கூட அத்ருஷ்டம் முதலியவற்றின் 'வைகுண்யத்தால் தோஷமில்லை' என்று பரிஹரிக்க வேண்டிவரும். அதுவும் இங்கு ஸமாநம்தான். ஆகவே, பரிஹரிக்கமுடியாத வேறு தூஷணங்கள் அவர்களுக்கு அதிகம். ஆகையால், பானை செய்வதற்குக்குயவன்போல், ப்ரஹ்மவிசாரத்துக்கு கர்மவிசாரம் அவச்யம் முன்பாகவே இருந்து தீரவேண்டும். த்ருஷ்

‡ வேதாங்கங்கள் ஆறு :—சிக்ஷை, வ்யாகரணம், ச்சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம்.

டாத்ருஷ்டப்ரதிபந்தகம் இல்லாத புருஷனுக்கு ஸமீசீநமாயுள்ள கர்மவிசாரம் ப்ரஹ்ம விசாரத்திற்கு புஷ்கலமான காரணமாகிறது. ஆதலால், ஒரு தோஷமுமில்லை.

இவ்விதம் அத அத:ஶப்தங்களின் அர்த்தம் நிரூபிக்கப்பட்டது.

பாஷ்யம்:—

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌷𑌷𑍍𑌠𑍀। '𑌕𑌰𑍍𑌤𑍃𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌕𑍃𑌤𑌿' 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍 । 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿, 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑍇𑌽𑌪𑌿 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾𑌯𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃। 𑌤𑌥𑌾𑌪𑌿, 𑌆𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌦𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌿𑌕𑌸𑍍𑌯𑍈𑌵 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌷𑌷𑍍𑌠𑍀 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇। 𑌨 𑌚 ¶ '𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑌵𑌿𑌧𑌾𑌨𑌾 𑌷𑌷𑍍𑌠𑍀 𑌨 𑌸𑌮𑌸𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌷𑌷𑍍𑌠𑍍𑌯𑌾𑌃 𑌸𑌮𑌾𑌸𑌨𑌿𑌷𑍇𑌧𑌃 𑌶𑌙𑍍𑌕𑌨𑍀𑌯𑌃; '𑌕𑍃𑌦𑍍𑌯𑍋𑌗𑌾 𑌚 𑌷𑌷𑍍𑌠𑍀 𑌸𑌮𑌸𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑍍𑌰𑌸𑌵𑌾𑌤𑍍

***ப்ராஹ்மத்தை அறிய வேண்டுமென்கிற இச்சை ப்ராஹ்மஜிஜ்ஞாஸை. 'ப்ராஹ்மண:' என்று கர்மார்த்தத்தில் ஷஷ்டீ வந்திருக்கிறது. 'க்ர்த்ருகர்மணோ: க்ருதி' என்று விசேஷித்து ஷஷ்டியை விதித்திருப்பதால், ஸம்பந்தஸாமாந்யத்தை பரிக்ரஹித்தாலும், ஜிஜ்ஞாஸையானது கர்மாவைக்கருதுவதால் இந்த ஷஷ்டிக்கு கர்மார்த்தத்வம் ஸித்திக்கிறது. ஆகிலும், ஆக்ஷேபத்தால் கிடைப்பதைவிட ஆபிதாநிகமே க்ராஹிக்கத்தக்கதாதலால் கர்மணி ஷஷ்டீ க்ராஹிக்கப்படுகிறது. 'ப்ரதிபதத்தால் விதிக்கப்பட்ட ஷஷ்டியானது ஸமாஸத்துக்கு விஷயமாவதில்லை' என்பதால், கர்மணி ஷஷ்டிக்கு ஸமாஸத்தில் நிஷேதம் சங்கிக்கத்தக்கதல்ல. ஏனெனில், 'க்ருத்யோகாச ஷஷ்டீ ஸமஸ்யதே' என்று ‡ ப்ரதிப்ரஸவம் ஸம்பவிப்பதால்.***

ச்ருதப்ரகாசிகை:—பிறகு 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' பதத்திற்கு அர்த்தம் சொல்லவிரும்பி அது ஒரே பதமாவதற்கு ஸமாஸம் காரணமாதலால் முதன்முதல் ஸமாஸார்த்தத்தை நிரூபிக்கிறார், 'ப்ரஹ்மண:' இது முதலிய வாக்யத்தால். † கர்மத்வகரணத்வாதி-ஸம்பந்த விசேஷங்களில் மற்றைய விபக்திகள் 'கர்மணித்விதீயா' முதலிய ஸூத்ரங்களால் விதிக்கப்

¶'ப்ரதிபதவிதாநாச ஷஷ்டீ ந ஸமஸ்யதே இதி வக்தவ்யம்.' இது காத்யாயநருடைய வார்த்திகம். (இதற்குப்பொருள்) ஒரு ஸூத்ரத்தில் ஆநுபூர்விவிசேஷத்தோடு ஒருவார்த்தை எடுக்கப்பட்டு அதின் ஸம்பந்தத்தால் ஷஷ்டீ விதிக்கப்பட்டால் அந்த ஷஷ்டியந்தபதங்களுக்கு ஸமாஸம் கிடையாது. விக்ரஹவாக்யம் மாத்ரமே.

‡ ப்ரதிப்ரஸவம் - அபவாதத்துக்கு அபவாதம்.

† காரகவிபக்தி 6—1. கர்த்ருத்வம், 2. கர்மத்வம், 3. கரணத்வம், 4. ஸம்ப்ரதாநத்வம் 5. அபாதாநத்வம், 6. அதிகரணத்வம். (சேஷே ஷஷ்டி. இதுகாரகமல்ல.)

பட்டுள்ளன. 'ஷஷ்டீ சேஷே' என்னும் ஸூத்ரத்தால் ஸம்பந்தஸாமாந்யத்தில் ஷஷ்டீ விதிக்கப்பட்டிருக்கிறது. இங்கு அந்த ஷஷ்டிக்கு ஸாமாந்யவிஷயத்வத்தை சங்கித்து கர்மவிஷயத்வம் நிச்சயிக்கப்படுகிறது. அந்த இடத்தில் பொதுவாக ஸமாஸமானது அநேக விபக்திஸாதாரணமாயிருப்பதால், விபக்தியந்தரஸந்தேஹத்தை நீக்குவதற்காக இங்கு அவைகளுக்கு அனுபபத்தியை நினைத்துக்கொண்டு விக்ரஹவாக்யத்தைக்காட்டுகிறார் 'ப்ரஹ்மணோஜிஜ்ஞாஸா' என்று. சதுர்த்தியை (நான்காம் வேற்றுமையை) எடுத்துக் கொண்டால் ப்ரயோஜனம் கிடைத்தபோதிலும்,—‡ ப்ரகருதிவிக்ருதிபாவம் இல்லாத இடத்தில் சதுர்த்தீஸமாஸம் வரகூடாதாகையால், அதை எடுக்கவில்லை.

'ஸப்தமீ' என்று யோகவிபாகத்தால் 'ப்ரஹ்மணி ஜிஜ்ஞாஸா' என்று ஸமாஸம் வந்தாலும், ப்ரஹ்மத்துக்கு விஷயத்வம் தான் ஸித்திக்குமே ஒழிய ப்ரயோஜநத்வம் ஸித்திக்காது. ஆகவே, ஸப்தமீயை (ஏழாம் வேற்றுமையை) எடுக்கவில்லை.

¶ 'சங்குலயா கண்ட:' என்பதுபோல் த்ருதீயா - (மூன்றாம் வேற்றுமை) ஸமாஸத்தை ஒப்புக்கொண்டாலும் விஷயத்வம், ப்ரயோஜநத்வம்,இரண்டும் ஸித்திக்காதென்று கருத்து.

'ப்ரஹ்மண:' என்கிற இந்த ரூபம் பஞ்சமீ (ஐந்தாம் வேற்றுமை) ஷஷ்டீ (ஆறாம் வேற்றுமை) இரண்டுக்கும் ஸமானமாகயிருப்பதாலும், ஷஷ்டிக்கு அநேக அர்த்தங்கள் இருப்பதாலும், அதன் நிர்ணயத்துக்காகவும் 'ப்ரஹ்மண இதி' என்று சொல்லுகிறார். எந்த விதியினால் இந்த விபக்தி வருகிறது?—என்றால், 'கர்த்ருகர்மணோ:' என்று சொல்லுகிறார்.

ஷஷ்டியானது கர்த்ருகர்மா இரண்டுக்கும் ஸாதாரணமாயிருந்தபோதிலும்,தாபத்ரயத்தால் பீடிக்கப்பட்டவனுக்கே ப்ரஹ்மஜிஜ்ஞாஸாகர்த்ருத்வம், ப்ரஹ்மத்துக்கே கர்மத்வம் என்கிற அபிப்ராயத்தால் 'ப்ரஹ்மண இதி கர்மணிஷஷ்டீ' என்று சொன்னார். கர்மணி ஷஷ்டியை ஸ்வீகரித்தால் ப்ரஹ்மத்துக்கு விஷயத்வ,ப்ரயோஜநத்வங்கள் ஸித்திக்கும்.

இப்படியானால், ஸம்பந்தஸாமான்ய பரிக்ரஹசங்கா விஷயமான 'யத்யபி' என்று தொடங்கப்படும் பாஷ்யத்துக்கு உத்தானம் எவ்வாறு பொருந்தும்?—இதோ பதில்சொல்லுகிறோம். ஸம்பந்த ஸாமாந்யத்தை அங்கீகரித்தபோதிலும், ஜிஜ்ஞாஸாபதத்தின்ஸாமர்த்யத்தால் ப்ரஹ்மத்துக்கு கர்மத்வம் ஸித்திப்பதாலும்,—பரம்பரையாக ஸம்பந்தம்பெற்ற—† உபாய, § உபாஸக, ¶ப்ரதிபந்தம் முதலியவைகளுக்கும் ஜிஜ்ஞாஸ்யத்வம் ஸித்திப்பதாலும்,—ப்ரதிபதத்தால் விதிக்கப்பட்ட ஷஷ்டிக்கு ஸமாஸநிஷேதம் இருப்பதாலும்,—அங்கே ஸாமர்த்யத்தால் ஷஷ்டிக்கு கர்மார்த்தத்வஸித்தியையும், ப்ரஹ்மாநுபந்திகளுக்குங்கூட ஜிஜ்ஞாஸ்யத்வஸித்தியையும் 'யத்யபி' என்பதால் சங்கிக்கிறார்.

'ஸம்பந்தஸாமாந்யபரிக்ரஹோ' என்னும் இடத்தில் 'பரி' என்கிற உபஸர்கபலத்தால் ப்ரஹ்மாநுபந்திகளுக்குங்கூட ஜிஜ்ஞாஸ்யத்வஸித்தி ஸூசிப்பிக்கப்படுகிறது. பரித:(நாற்

‡ ப்ரக்ருதி - வேறுபாட்டுக்கு ஆதாரமான மூலவஸ்து. விக்ருதி - வேறுபாடு. ஓர் அவஸ்தையிலிருந்து அவஸ்தாந்தரப்ராப்தி.

¶ 'சங்குலயா கண்ட:' கண்டக்கோடரியால் வெட்டப்பட்ட ஓர் துண்டு.

† உபாயம் - பக்தி, அல்லது ப்ரபத்தி.

§ உபாஸகன் - பக்தன்.

¶ ப்ரதிபந்தங்கள் - உபாஸநாவிரோதிகள்—அல்லது இடையூறுகள்.

புறங்களிலும்) க்ரஹணததாலன்றோ பரித: இருக்கிற வஸ்துக்களுக்கும் க்ராஹ்யத்வம் ஸித்திக்கிறது. ஆகவேதான், மேலே 'க்ருஹ்யதே' என்று சொல்லப்பட்டதேயொழிய 'பரிக்ருஹ்யதே' என்றில்லே. அவ்விரண்டையும் 'ததாபி, என்று தொடங்கி பரிஹரிக்கிறார்.

இந்த இடத்தில் இதுதான் அர்த்தம்—ப்ரதானமாயுள்ள ப்ரஹ்மத்துக்கும், அப்ரதானமாயுள்ள மற்றவைகளுக்கும், கர்மத்வம் ஆக்ஷேபத்தால் ஸித்திக்கிறதென்பதைவிட ப்ரதானப்ரஹ்மநிஷ்டமான கர்மத்வத்திற்கு நேராக வாசகசப்தத்தால் $ அபிதானமும், மற்றவைகளுக்கு ப்ரதானஸம்பந்தத்தாலும், ஆகாங்க்ஷாபலத்தாலும், ஸித்திக்கிற கர்மத்வத்திற்கு ஸாமர்த்யத்தினால் ஸித்தியும் ஏற்றுக்கொள்ளத்தக்கது. ஆகையால், "தாமதித்து வரும் புத்திக்கு எது காரணமோ அதைவிட சீக்ரபுத்திக்குக்காரணமாயுள்ளதற்கு அதிகபலம் உண்டு"—என்கிற ந்யாயத்தால் ப்ரதிபதவிஹிதமான ஷஷ்டியே க்ரஹிக்கத் தகுந்தது. ஷஷ்டிக்கு ஸம்பந்தஸாமான்யவிவக்ஷையிருந்தால் கர்மத்வபுத்தியானது விளம்பமுள்ளதாகும். கர்த்யோகஷஷ்டியை விவக்ஷித்தால் அது சீக்ரமாய் உண்டாகும். கர்த்ருத்வம், கர்மத்வம் என்கிற இரண்டு அர்த்தங்களும் ஸூத்ரத்தால் ப்ரதிபன்னமாயிருப்பதால் கர்மத்வபுத்தியானது விளம்பித்து வரக்கூடியது—என்றால், அப்படிச்சொல்லக் கூடாது. அறியவேண்டுமென்று எண்ணமுள்ள கர்த்தா கர்மஜ்ஞானமுள்ளவன் என்று அறியப்பட்டிருப்பதால் கர்மத்வரூபமான அர்த்தமன்றோ முதன்முதல் புத்தியில் ஏறும்.

ஸமாஸநிஷேதத்தை ஆசங்கித்து 'நச' என்ற பரிஹரிக்கிறார். ச—என்பது சங்காஸமுச்சயத்தில். அபவாதத்திற்கு அபவாதம் ப்ரதிப்ரஸவம் எனப்படும். 'ஸர்ப்பிஷோ ஜ்ஞானம்' இது முதலிய ப்ரயோகங்களில்,'ஜ்ஞோவிதர்த்தஸ்ய கரணே' என்கிற ஸூத்ரத்தால் விதிக்கப்பட்டுள்ள ஷஷ்டியில் ஸமாஸநிஷேதம் நிலே பெறுகிறது. 'ஸர்ப்பிஷினால் (நெய்யினால்) ப்ரவ்ருத்தி' என்றல்லவோ அந்த வாக்யத்துக்கு அர்த்தம். ஜ்ஞானபதம் க்ருதந்தம் தான். ஆயினும், ஸர்ப்பிஷ: என்ற ஷஷ்டியானது க்ருத்ப்ரத்யயஸம்பந்தத்தால் விதிக்கப்பட்டதல்ல. ஏனெனில், 'ஸர்ப்பிஷோ ஜாநீதே' என்பது திஙந்தபதார்வயார்ஹமாக இருப்பதாலும், தாதுவுக்கும், விபக்திக்கும் ப்ரவ்ருத்தி, அதன் காரணம்—என்ற அர்த்தம் இருப்பதாலும், அவையனைத்தும் கர்மத்வமானது க்ருத்ஸம்பந்தத்தால் விதிக்கப்பட்டது என்று சொல்லும் பக்ஷத்தில் ஸித்திக்காது. ஆகையால், இங்கே 'க்ருத்யோகாச' என்கிற ப்ரதிப்ரஸவசாஸ்த்ரத்திற்கு ப்ராப்தியில்லாததால் ஸமாஸநிஷேதம் அவகாசமுள்ளதாயிற்று.

இந்த ஷஷ்டீ வ்யாக்யாநம் செய்யத்தகுந்ததல்ல. ஏனெனில், ஸூத்ரத்தில் இது ப்ரயோகிக்கப்படவில்லே. ப்ரயோகிக்கப்பட்ட சப்தமல்லவோ போதகம். ப்ரயோகிக்கப் படாதது போதகமாகாது. போதகசப்தமே வ்யாக்யானிக்கத்தக்கது. ப்ரயோகிக்கப் படாமலிருந்தாலும், ஸ்மரிக்கப்பட்ட விபக்தியானது போதத்தை உண்டுபண்ணுவதால் அது வ்யாக்யானிக்கத்தக்கது,—என்றால், இவ்விதம் சொல்லக்கூடாது. ஏனெனில், அதன்ஸ்மரணமின்றியே அர்த்தப்ரதிபத்தி உண்டாவதால். அர்த்தப்ரதிபத்தியும் ¶ ப்ராதி

$ அபிதானம் - சப்தத்தால் சொல்லப்படுதல்.

¶ ப்ராதிபதிகம்—தாது, ப்ரத்யயம், ப்ரத்யயார்த்தம் இல்லாததாயும், அர்த்தமுள்ளதுமான சப்தஸ்வரூபமும், க்ருத் தத்திதப்ரதயயாந்தங்களும், ஸமாஸமும் ப்ராதிபதிகம்.

பதிகத்தாலும் ¶ லக்ஷணையாலும் உண்டாகிறது. லக்ஷணையும் § யோக்யதை முதலிய வைகளால் ஸித்திக்கிறது. ஆகையால், அநுசாஸநத்தினுல் (ஸூத்ரத்தால்) ஷஷ்டிக்கு வ்யாக்யாநம் யுக்தமல்ல—என்றால், ஸமாதானம் சொல்லுகிறோம்.

ப்ரயோகிக்கப்படாத விபக்தியின் அர்த்தத்திற்கு ப்ராதிபதிகத்தால் லக்ஷணையன்றோ ஸமாஸம். இந்த இடத்தில் லக்ஷ்யார்த்தத்துக்கு உபலக்ஷணமாக விபக்தி அனுப்ரவிஷ்டை. (கூட ப்ரவேசித்ததாக இருக்கிறது) ஆகையால், லக்ஷ்யார்த்தவிசேஷநிர்ணயத்தின் பொருட்டு விக்ரஹவாக்யத்திலுள்ள ஷஷ்டீ வ்யாக்யாநிக்கத்தக்கதே.

அப்படியானால், அது அனுசாஸநத்தினுல் வ்யாக்யாநிக்கத்தகுந்ததல்ல. லாக்ஷணி கார்த்தமன்றோ யோக்யதை முதலியவற்றால் நிச்சயிக்கப்படுகிறது. 'கங்கையில் இடைச்சேறி' (கங்காயாம் கோஷ:) இது முதலிய இடங்களில் அனுசாஸநவசத்தால் கரை லக்ஷ்யார்த்தமாகிறதில்லையன்றோ! ஆனால, யோக்யதை முதலியவற்றால் தான் லக்ஷ்யார்த்தம் ஸித்திக்கிறது—என்றால், அப்படியல்ல. எல்லா லக்ஷணைகளிலும் யோக்யதை முதலிய வற்றாலேயே அர்த்தநிர்ணயநியமம் இல்லாமையால், ப்ராதிபதிகத்தினுல் வேறு ப்ராதிபதிகத்தின் அர்த்தலக்ஷணையில் நியமம் கிடையாது. ப்ராதிபதிகத்தால் விபக்தியர்த்தத்துக்கு லக்ஷணை சொல்லுகிற இடத்திலோ இந்த விபக்தியர்த்தம் லக்ஷ்யம். வேறு விபக்தியின் அர்த்தம் லக்ஷ்யமல்ல என்கிற நியமம் இருக்கிறது. அதுவும் சப்தாநுசாஸநாதீனமாக இருப்பதால் அதை அநுஸரித்து நிரூபிப்பதே யுக்தம். இங்கே ஸம்பந்தஸாமாந்யத்தை லக்ஷ்யார்த்தமாகச்செய்து அதனுல் கர்மத்வததை ஆக்ஷேபிப்பதைவிட முதலிலேயே சப்தாநுசாஸநத்தினுல் அனுமதிக்கப்பட்ட கர்மத்வத்துக்கே லக்ஷணை யுக்தமானது. ஆத லால், ஸமஸ்தபதலக்ஷ்யார்த்தவிசேஷநிர்ணயத்துக்காக அநுசாஸநத்தை அநுஸரித்து, லக்ஷ்யார்த்தத்துக்கு உபலக்ஷணமாயுள்ள, விக்ரஹவாக்யத்திலிருக்கும் ஷஷ்டீ வ்யாக்யாநம் செய்யத்தக்கது.

அல்லது, (லுப்த) தோன்றி மறைந்துள்ள விபக்தியுடன் கூடிய சப்தத்தால் விபக்தியின் அர்த்தத்தை அறிவிப்பது முக்யமாகும். ஸம்பந்தமுள்ள வஸ்துவுக்கன்றோ லக்ஷணை காணப்பட்டிருக்கிறது. ஸம்பந்தத்துக்குமாத்ரம் லக்ஷணை காணப்படவில்லையே. விபக்தியர்த்தமோ ஸ்வயம் ஸம்பந்தரூபமாயுள்ளது. ஸம்பந்தமானது வேறு ஸம்பந்தத்தை அபேக்ஷிக்காமலே தன்னிடத்தில் ஸம்பந்தித்ததின் கார்யத்தை உண்டுபண்ணுவதால் லக்ஷணை ஸம்பவிக்காது—என்று சொல்லக்கூடாது. ஏனெனில், ஸம்பந்தம் ஸ்வபர நிர்வாஹம்—என்கிற விஷயத்தை அறியாதவர்களுக்குக்கூட விபக்தியர்த்தப்ரதீதி ஏற்படுவதால். ஸம்பந்தமானது தன்ஸத்தையினுல் லக்ஷணைக்குக்காரணமல்ல. ஆனால், அறி

¶ லக்ஷணை—சப்தத்தின் ஒரு வ்ருத்தி. 'கங்கையில் இடைச்சேறி' என்று ஒருவன் சொன்னுல், 'கங்காபதவாச்யமான ப்ரவாஹத்தின்மீது இடைச்சேறி இருக்கிறது' என்று பொருந்தாதாகையால், கஙகாபதமானது லக்ஷணவ்ருத்தியினுல் கங்காதீரத்தை உணர்த்துகிறது. இந்த இடத்தில் கங்காபதம் லக்ஷகம். தீரம் லக்ஷ்யம். இந்த அர்த்தத்தை உணர்த்தும் சப்தசக்தி லக்ஷணை.

§ யோக்யதையாவது. வாக்யத்தின் அர்த்தங்கள் அந்யோந்யம் விரோதமில்லாமல் அன்வயித்தல். ஆகாங்க்ஷை, யோக்யதை, ஆஸத்தி, தாத்பர்யம் இந்நான்கும் சேர்ந்திருந்தாலொழிய ஒருவாக்யம் வக்தாவினுல் கருதப்பட்ட அர்த்தத்தை உணர்த்தத்திறமையுள்ளதாக ஆகாது.

யப்படுவதினுலேயே காரணம். அப்படியில்லாவிடில் † அதிப்ரஸங்கம் வரும். இவ்விதம் லக்ஷணுனுபபத்தியினுல் ப்ரயோகம் அந்யதாஸித்தமாயிருப்பதால், ஸமஸ்தசப்தத்தால் விபக்தியர்த்தபோதநம் முக்யம். அமுக்யமாயிருந்தால்கூட நமக்கு என்ன கெடுதல் !

விக்ரஹவாக்யத்திலும் கர்மத்வம் எவ்வாறு வாச்யமாகும்? ப்ரயோகிக்கப்பட்டாலுங் கூட, உபபதவிபக்தியானது ப்ரயோஜநமற்றது. அதற்கு விதியானது—'தாரா: களத்ரம்' என்பதுபோல் ப்ரயோகத்திற்கு ஸாதுத்வத்தின்பொருட்டே. அர்த்தமோ வென்றுல்,—அர்த்தஸாமர்த்தியத்தால் ஆக்ஷிப்தமாகிறது. ஆகையால்தான், § காரகவிபக்தியைக்காட்டிலும் $ உபபதவிபக்திக்கு பலக்குறைவு. ஸமாஸத்திலோ, ப்ரயோகிக்கப்படாத உபபதவிபக்தியானது எப்படித்தான் கர்மத்வரூபமான அர்த்தத்தை உணர்த்தும்?—இந்தக் கேள்விக்கு பின்வருமாறு உத்தரம்.

ஆபிதாநிகம் போல, க்ருதந்தப்ரயோகத்தால் சீக்ரபுத்திவிஷயத்வரூபகுண ஸாம்யத்தினுல் ஆபிதாநிகத்வ வசனம் பதாந்தரச்ரவணுபேக்ஷாமாத்ரத்தால், ஆக்ஷேபம் முதலியவைகளாற்போல், விளம்பாதிக்யமில்லை. ஸாமான்ய ஷஷ்டீ பக்ஷத்தில் ஸம்பந்தஸாமாந்யத்தை அறிந்து ஜிஜ்ஞாஸாசப்தார்த்தத்தைசார்ந்திருககிற ஸகர்மகத்வஸ்வபாவாலோசனையினுல் அர்த்தவிசேஷநிச்சயம் எற்படுவதைவிட, க்ருதந்தபதச்ரவணமாத்ரத்தால் உண்டாகும் கர்மத்வபுத்தி சீக்ரமானது—என்று ஒருவிதமாகப்பரிஹாரம்.—'கர்மணி த்விதீயா' என்பதுபோல், 'கர்த்ருகர்மணோ: க்ருதி.' என்று ஸப்தம்யந்தத்தால் நிர்தேசிக்கப்பட்ட கர்த்ருகர்மாக்களுக்கு அபிதேயத்வம் அநுசாஸநத்தின் ஸ்வாரஸ்யாநுகுணம்—என்பது ஸ்ரீபாஷ்யகாரரால் கருதப்பட்ட பரிஹாரம்—என்று ஸம்ப்ரதாயம். காரகவிபக்தியைக் காட்டிலும் உபபதவிபக்திக்கு பதாந்தரஸம்பந்தவிதாநரூபவைஷம்யம் இருக்கவே இருக்கிறது. பதாந்தரஸம்பந்தத்தால் அறியத்தக்க தன்மையிருப்பது ஆபிதாநிகத்வ விரோதியல்ல. எனெனில்,—அதற்கு சில இடங்களில் முக்யார்த்த வ்யவஸ்தாபகத்வம் இருப்பதால். 'ஆதித்யஸ்ய காவ: ப்ரகாசயந்தி' இது முதலியவை இங்கு உதாஹரணங்கள். அந்த இடத்தில் ஆதித்யாதிபதாந்தரஸம்பந்தத்தால் கோசப்தத்திற்கு கிரணம் என்கிற அர்த்தத்தைக்கொடுக்கும் தன்மை லாக்ஷணிகமல்ல. பதாந்தரபராமர்சத்தை அபேக்ஷிப்பதால் உபபதவிபக்தியானது விளம்பித்து வரும் புத்திக்கு ஹேதுவாயிருக்கிறது. காரகவிபக்தியோவென்றுல், அதை அபேக்ஷிக்காமல் சீக்ரபுத்தி ஹேதுவென்று ப்ராபல்ய தௌர்பல்யவிபாகமேயன்றி ஸார்த்தகத்வ-நிரர்த்தகத்வங்களால் வைஷம்யம் கிடையாது. விபக்திச்ரவணம் இல்லாமையால் அமுகயத்வம் பரிஹரிக்கப்பட்டது.

---

ஸாஷ்யம்:—

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌚 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑍋 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌨𑌿𑌖𑌿𑌲𑌦𑍋𑌷𑍋𑌽
𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌾𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇𑌯𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤
𑌮𑍋𑌽𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।

---

† அதிப்ரஸங்கம்—அதிவ்யாப்திரூபமான தோஷம்.

§ காரகவிபக்தி—க்ரியா, காரகபாவஸம்பந்தத்தால் விதிக்கப்படும் விபக்தி.

$ உபபதவிபக்தி—ஸமீபத்திலுள்ள பதஸம்பந்தத்தால் விதிக்கப்படும் விபக்தி. உபபதவிபக்தியைக்காட்டிலும் காரகவிபக்தி அதிக பலமுள்ளதென்று வையாகர்ணர்களின் கொள்கை. உப-ஸமீபத்திலுள்ள பதஸம்பந்தத்தால வருகிற, விபக்தி - வேற்றுமையுருபு - உபபதவிபக்தி. பக்கத்திலுள்ள சப்தத்தை நோக்கி அடைகிற விபக்தி உபபதவிபக்தி. 'நம:,ஸ்வாஹா' முதலிய சப்தங்கள் இருந்தால் உண்டாகிற சதுர்த்தீமுதலியவேற்றுமைகளுக்கு உபபதவிபகதியெனப்பெயர்.

**ப்ரஹ்மசப்தத்தினால் ஸ்வபாவத்தினாலேயே ஹேயகுணங்களொன்றுமில்லாதவனும், எல்லையற்ற மேன்மை தங்கிய எண்ணிறந்த மங்களகுணஸமூஹங்களுள்ளவனுமான புருஷோத்தமன் சொல்லப்படுகிறான்.**

ச்ருதப்ரகாசிகை:—

இவ்வாறாக ஸமாஸாந்தர்கதமான விபக்தியர்த்தம் நிரூபிக்கப்பட்டது. பிறகு ஸமஸ்தமான இரண்டு பதங்களுக்குள் முதலிலுள்ள ப்ரஹ்மசப்தத்தை வ்யாக்யானிக்கிறார் 'ப்ரஹ்ம சப்தேந ச' என்ற வாக்யத்தால். ப்ரஹ்மசப்தத்துக்கு ப்ரதானம் முதலிய அர்வாசீனமாயுள்ள அர்த்தாந்தரங்களில் ப்ரயோகம் காணப்படுவதாலும்,—மற்றைய வ்யாக்யாதாக்களால் ஈச்வரனைத்தவிர்த்த வேறு வஸ்து பரத்வமாய் வ்யாக்யானம் செய்யப்பட்டிருப்பதாலும்,—சிலர் தேவதாந்தரபரத்வம் ஒப்புக்கொள்வதாலும்,—இவற்றையெல்லாம் விலக்குவதற்காக ப்ரஹ்மசப்தத்தால் * புருஷோத்தமன் தான் சொல்லப்படுகிறான்—என்று ப்ரதிக்ஞை செய்கிறார். புருஷோத்தமசப்தத்தின் ரூடியால் ப்ரஹ்மசப்தத்துக்கு வேறு தேவதைகளை அர்த்தமாகச்சொல்லுவது நிராகரிக்கப்பட்டது அவயவசக்தியால் பத்தர்களாயும், முக்தர்களாயுமுள்ள சேதனர்களைவிட வேறுபாடு ஆர்த்திகமாய் ஸித்திக்கிறது. தன்னையொழிய மற்றைய வஸ்துக்களில் வைலக்ஷண்யமாத்ரம் த்ருணாதிகளுக்குங்கூட இருப்பதால் அதை விலக்குவதற்காக '**ஸ்வபாவத:**' என்று தொடங்கிய இரண்டு விசேஷணங்களால் அந்த வேறுபாட்டைப்பிரித்துக்காட்டுகிறார். (இரண்டு விசேஷணங்களாவன—ஸ்வபாவத: நிரஸ்தநிகிலதோஷ:, அநவதிகாதிசயாஸங்க்யேயகல்யாணகுணகண:)

இந்த இரண்டு விசேஷணங்களும் சப்தசக்தியாலும், அர்த்தசக்தியாலும் 'ப்ரஹ்மசப்தம் புருஷோத்தமனையே சொல்லுகிறது'—என்பதற்கு உபயோகங்களாகச்சொல்லப்பட்டனவேயொழிய ப்ரவ்ருத்திநிமித்தங்களாகச்சொல்லப்படவில்லை. குணத்தாலும் பெரிதாகியவளவில், சப்தசக்திக்கு அஸங்கோசம் ஏற்படுவதாலும்,— எல்லா தோஷங்களையும் நிவர்த்திக்கிற அளவிறந்த ஆனந்தத்தை முமுக்ஷு அடைவதற்குக்காரணமாவதாலும்,—இதரவாதிகளால் சொல்லப்பட்ட அவித்யை முதலிய தோஷஸம்பந்தத்தையும், நிர்குணத்வத்தையும் விலக்குவதற்காகவும்,—உபாதியினால் கவரப்பட்டிருக்கிற ப்ரஹ்மஸ்வரூபத்துக்கே கர்மவச்யத்வ, துக்கித்வாதிகளை விலக்குவதற்காகவும்,—'ஜ்ஞானம் முதலிய சக்திஸம்பந்தமே இவனுக்கு இயற்கையாயுள்ளது; ஸர்வஜ்ஞநிரதிசயானந்தம் முதலியவற்றின் ஸம்பந்தம் ஏதோ ஒரு ஸமயத்தில் தான் உண்டாகிறது—என்று சொல்லும் மதத்தை விலக்குவதற்காகவும் 'ஸ்வபாவத:' என்று தொடங்கிய இந்த இரண்டு விசேஷணங்கள் காட்டப்பட்டன.

சில தோஷங்களின் நிராஸமும், எல்லாதோஷங்களின் நிராஸமும் பக்தர்களுக்கும், முக்தர்களுக்கும், நித்யர்களுக்குங்கூட இருப்பதால் அதை விலக்குவதற்காகவே 'ஸ்வ

* புருஷோத்தமபதம் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் யோகரூடம். 'புருஷஸ்சாஸௌ உத்தமஸ்ச புருஷோத்தம: ; புருஷாணாம் உத்தம: புருஷோத்தம: புருஷேஷு உத்தம: புருஷோத்தம: ,—என்று மூன்றுவிதமான ஸமாஸம் அபியுக்தர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மூன்று ஸமாஸங்களுக்குள் ஷஷ்டீ ஸமாஸம் பலஹீநம். ஏனெனில், அநுசாஸனமில்லை. 'புருஷேப்ய: உத்தம: புருஷோத்தம':—என்று சில அபியுக்தர்கள் சொல்லுகிறார்கள் இது மிகவும் சிறந்தது.

பாவத: நிரஸ்த நிகிலதோஷ:’ என்று அருளிச்செய்தார். ஏனெனில், நித்யர்களுக்குங்கூட பகவானுடைய நித்யஸங்கல்பாதீனமாயன்றோ நித்யநிர்தோஷத்வம் இருக்கிறது. ஸ்வ பாவத்தினால் இல்லையே.

‘ஸ்வபாவத:’ என்னும் பதத்தை மேலேயும் சேர்த்துக்கொள்ளவேண்டும். அப்படிச் சேர்த்தால் குணங்கள் அவித்யையினால் கல்பிதங்கள் என்கிற பக்ஷத்துக்கு வ்யாவ்ருத்தி ஏற்படும்.

‘தே யே சதம்’ என்னும் இடத்தில் பூர்வபூர்வமாயுள்ள குணங்களைவிட உத்தரோத்தரகுணங்களுக்கு அதிசயமானது வரம்புள்ளதாதலால் அதை வ்யாவ்ருத்திப்பதற்காக ‘அநவதிகாதிசய’ பதம் ப்ரயோகித்திருக்கிறார். அவ்விடத்தில் ப்ரஹ்மகுணாதிசயமானது வாக்குக்கும், மனஸுக்கும் விஷயமாகாததாலால் ‘அநவதிகம்’ என்று சொன்னார். வசித்வம் முதலிய குணங்கள் ஸத்யஸங்கல்பத்தில்உள்பட்டவை யென்று மேலே உபந்யாஸிக்கப் போகிறார். ஆதலால், ஏதோ ஒரு குணத்தில் அதன் ப்ரகாரபேதமுள்ள அநேக குணங்களுக்கு அந்தர்பாவம்—என்கிற அபிப்ராயமுள்ளது ‘கண’சப்தம்.

மேலும்,—“அநவதிகாதிசயசப்தம் குணங்களுக்கு விசேஷணமானால், கணசப்தத்தோடு ஸாமாநாதிகரண்யம் இல்லாமையால், பஹுவ்ரீஹி ஸமாஸம் வராது. கணசப்தத்துக்கு விசேஷணமாகச்சொல்லுவதும் தகாது, குணங்களின் ஸ்வரூபவன்றோ அநவதிகாதிசயமுள்ளது, கணஸ்வரூபமல்லவே” என்று ஆக்ஷேபம் வந்தால்,—அப்படியல்ல, கணம்தான் விசேஷ்யம். ஆகவே, பஹுவ்ரீஹி ஸித்திக்கிறது. ஆனாலும், அர்த்தவசத்தால் கணத்திலடங்கிய ஒவ்வொரு குணவ்யக்திக்கும் அநவதிகாதிசயத்வம் பலிதமாகும். எப்படியென்றால்,—“இந்த கோஷ்டீ அபிஜநங்களையுடையது, சாஸ்த்ரத்தில் தேர்ச்சியுள்ளது.” என்கிற வாக்யத்தில் சாஸ்த்ரம் முதலியவை கோஷ்டிக்கு விசேஷணங்களாகக் கூறப்பட்டிருந்தாலும் அந்த கோஷ்டியிலிருப்பவர்களுக்கே சாஸ்த்ரம் முதலியவற்றின் ஸம்பந்தம் ஏற்படுகிறது. ஸமூஹத்துக்கு இல்லையன்றோ! ஆகையால், கோஷ்டியில் சேராதவர்களுக்கு சாஸ்த்ரம் முதலியவை இல்லையென்று சொல்லவேண்டி வரும்.

மேலும், அஸங்க்யேயத்வத்தையும் கணத்துக்கு விசேஷணமாகச்சொல்லுவதுதான் பொருந்தும். கணத்துக்கு அஸங்க்யேயத்வம் நேர்ந்தால் கைமுத்யந்யாயத்தால் குணங்களுக்கும் அஸங்க்யேயத்வம் ஸித்திக்கிறது.

‘அநவதிகாதிசய’ சப்தத்தால் அவர்களுடைய குணங்கள் ஜகத்வ்யாபாரத்துக்கு அநநுகுணமாயிருப்பது பற்றி பகவானுடைய குணங்களைவிட நிக்ருஷ்டமாயிருப்பதால் நித்யஸித்தர்களுடைய வ்யாவ்ருத்தியும் உண்டாகிறது. அவர்களுக்கு அத்யந்தாநுகூலமான அந்த பகவத்குணவிபூதிஸாக்ஷாத்காரம் நிரவதிகாதிசயமாயிருந்தபோதிலும், அப்படிப்பட்ட அஸங்க்யேயகுணங்களில்லாமையால் அவர்களுக்கே வ்யாவ்ருத்தி ஸித்தித்தது. அல்லது, அநுஷங்கம் செய்யப்பட்ட ‘ஸ்வபாவத:’ என்கிற பதத்தினாலாவது நித்யஸித்தவ்யாவ்ருத்தி ஸம்பவிக்கிறது. அவர்களுக்கு அப்பேற்பட்ட குணங்கள் பகவானுடைய நித்யமான இச்சையின் அதீனம். ஸ்வரூபத்தால் அநவதிகாதிசயத்வமில்லாமையாலும் நித்யஸித்தவ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. அவர்களோ அணுஸ்வரூபிகள். இங்கே ஸ்வரூபத்துக்குக்கூட அநவதிகாதிசயத்வம் உண்டு—என்கிற அபிப்ராயம் உள்ளடங்கியிருக்கிறது. ஏனெனில், விபுத்வம்கூட குணங்களுள் அடங்கியிருப்பதால் ‘விபுத்வம் ஸ்வரூபத்தாலும், குணங்களாலும்’ என்று உபபாதகக்ரந்தத்தில் சொல்லியிருப்பதாலும் கண்டு கொள்ளவேண்டியது.

'அபிதீயதே'—முக்யவ்ருத்தியால் சொல்லப்படுகிறது. இந்த க்ரந்தத்தில்'யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம்.' என்கிற ச்ருதியும் இந்த ஸூத்ரத்திற்கு ஒத்திருப்பதால் அநுஸந்திக்கத்தகுந்ததே. அங்கே "ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்மவித்யாம்" என்று ப்ரஹ்மசப்தம் புருஷபர்யாயமாக ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது.

𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍:—

**𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌬𑍃𑌹𑌤𑍍𑌤𑍍𑌵𑌗𑍁𑌣𑌯𑍋𑌗𑍇𑌨 𑌹𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌃 । 𑌬𑍃𑌹𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣 𑌗𑍁𑌣𑍈𑌶𑍍𑌚 𑌯𑌤𑍍𑌰𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌂 𑌸𑍋𑌽𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑍍𑌯𑍋𑌰𑍍𑌥𑌃 । 𑌸 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌏𑌵 । 𑌅𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌮𑍁𑌖𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌤𑌦𑍍𑌗𑍁𑌣𑌲𑍇𑌶𑌯𑍋𑌗𑌾𑌦𑍌𑌪𑌚𑌾𑌰𑌿𑌕𑌃 । 𑌅𑌨𑍇𑌕𑌾𑌰𑍍𑌥𑌕𑌲𑍍𑌪𑌨𑌾𑌯𑍋𑌗𑌾𑌤𑍍, 𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌵𑌤𑍍 ।**

***எல்லா இடங்களிலும் பெருமை என்னும் குணத்தின் ஸம்பந்தத்தாலன்றோ ப்ரஹ்மசப்தம் வழங்கப்படுகிறது. எந்த வஸ்துவினிடத்தில் ஸ்வரூபத்தாலும்,குணங்களாலும் அளவிறந்த மேன்மை வாய்ந்த ப்ருஹத்வம் (பெருந்தன்மை) இருக்கிறதோ அதுதான் இந்த சப்தத்துக்கு முக்யமான அர்த்தம்; அந்த வஸ்து ஸர்வேச்வரனே. ஆதலால், ப்ரஹ்மசப்தமானது அந்த ஸர்வேச்வரனிடத்திலேயே முக்யவ்ருத்தியுள்ளது. ஒரே சப்தத்துக்கு அநேகம் அர்த்தங்களில் வ்ருத்தியைக்கல்பிப்பது சாஸ்த்ரவிருத்தமாதலால் 'பகவத்' சப்தம்போல் இந்த ப்ரஹ்மசப்தமும் அந்த ஸர்வேச்வரனைத் தவிர மற்றைய வஸ்துக்களில் அந்த ப்ருஹத்வகுணலேசம் இருப்பதுபற்றி ஔபசாரிகமாக வழங்கப்படுகிறது.***

*ச்ருதப்ரகாசிகை:—*

*இவ்விதம் ப்ரதிக்ஞை செய்த அர்த்தத்தை முதலில் 'ஸர்வத்ர' என்று தொடங்கி சப்தஸாமர்த்யத்தால் உபபாதிக்கிறார். அதில் அர்த்தாந்தரங்களில் ப்ரஹ்மசப்தப்ரயோகத்திற்கு அந்யதாஸித்தியைச்சொல்லவிரும்பி அதற்கு உபயோகமுள்ள குணஸம்பந்தத்தைக்காட்டுகிறார்.*

*"ஸர்வத்ர" ப்ரஹ்மசப்தம் ப்ரயோகத்திற்கு விஷயமாயிருக்கிற எல்லா வஸ்துக்களிலும் ப்ருஹத்வமென்கிற குணத்தின் ஸம்பந்தம் இருக்கிறது—என்று பொருள்.*

*இந்த சப்தம் புருஷோத்தமனிடத்தில் கௌணமாகவும், மற்ற வஸ்துக்களிடத்தில் முக்யமாகவும் ஏன் ஆகக்கூடாது?—என்கிற இந்தக்கேள்விக்கு பதில் "ப்ருஹத்வஞ்ச" என்று தொடங்கிச்சொல்லுகிறார். ப்ருஹத்வகுணமாத்ரஸம்பந்தமுள்ள எல்லா வஸ்து*

விலும் பரஹ்மசப்தத்துக்கு ப்ரயோகமில்லாமையால் ஸ்வரூபத்தாலும், குணங்களாலும் எல்லையற்ற மேன்மைவாய்ந்த ப்ருஹத்வம் ‡ ப்ரவ்ருத்திநிமித்தம் என்று பொருள்.

† "ப்ருஹதி ப்ரும்ஹயதி தஸ்மாதுச்யதே பரம் ப்ரஹ்ம, ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாச்ச தத் ப்ரஹ்மேத்யபிதீயதே." என்கிற ச்ருதிஸ்ம்ருதிகளாலே ப்ருஹத்வம், ப்ரும்ஹணத்வம் இரண்டும் ப்ரவ்ருத்திநிமித்தங்கள் என்று அறியப்படுகிறது. ஆகவே, இங்கு எப்படி ப்ருஹத்வம்மாத்ரம் ப்ரவ்ருத்திநிமித்தமென்று சொல்லக்கூடும்?—என்றால், பதில் சொல்லுகிறோம். குணங்களால் ஏற்பட்டிருக்கிற ப்ருஹத்வத்தில் ப்ரும்ஹணத்வம் அடங்கியிருப்பதால்என்று விடைசொல்லுகிறோம். "ஸசாநந்த்யாய கல்பதே"என்கிற ச்ருதிப்ரஸித்தமான ஸகலஸங்கோசநிவ்ருத்திபூர்வக-நிரவதிகக்ஞானவிகாஸரூப-ஆநந்த்யத்தை வஹித்தலன்றோ ப்ரும்ஹணத்வமாவது. அது ஸகல ஹேயகுணங்களுக்கும் விரோதியாயிருத்தல் க்ஷமை, கருணை முதலிய மோக்ஷப்ரதானத்துக்கு உபயோகமுள்ள குணகணங்களோடு சேர்ந்திருத்தலன்றோ! ஆதலால்தான், 'இயற்கையாகவே எல்லாதோஷங்களையும் நிரஸித்தவன்'—இதுமுதலியவைகள் ப்ரதிக்ஞாவாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியாகில், ஸ்வரூபத்தால் ப்ருஹத்வமே நிமித்தமாயிருக்கட்டும்; கௌரவத்தால் என்னபயன்?—என்றால், அப்படியல்ல. ஸ்வரூபத்தால் ப்ருஹத்தாயிருப்பதால் ப்ருஹத்வ குணம் முதலியவற்றுக்குக்கூட ப்ரஹ்மசப்தவாச்யத்வம் ப்ரஸங்கிக்குமன்றோ.

அப்படியானால், குணங்களால் ப்ருஹத்வமே நிமித்தமாயிருக்கட்டும்—என்றால், அதுவும் கூடாது. சப்தசக்திக்கு ஸங்கோசமின்மை ஸ்வபாவமாகவே இருக்கிறது. ஸ்வரூபத்தாலும் ப்ருஹத்வம் இருப்பதால் "ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ப்ரஹ்ம." என்றே ச்ருதி. குணங்களால் ப்ருஹத்வம் என்பது ஸத்வாரகமான ப்ருஹத்வம். குணங்களின் வழியாயன்றோ அந்த ப்ருஹத்வம்.

ஸ்வரூபத்தாலும், குணங்களாலும, நிரதிசயப்ருஹத்வமான வஸ்துவானது புருஷோத்தமனைத்தவிர வேறொன்றும இருக்கலாம்; அல்லது, வேறொன்றாகவேயாவது இருக்கலாம்—என்ற ஸந்தேஹத்தை **'ஸச'** என்று தொடங்கிப்பரிஹரிக்கிறார்.

இங்கு சகாரம் சங்காநிவ்ருத்தியைககாட்டுகிறது. ஸர்வேச்வரசப்தத்தாலும், ஏவகாரத்தாலும் § "தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம்—நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே" என்ற இரண்டு வாக்யத்தின் அர்த்தம் விவக்ஷிக்கப்பட்டது.

அதனால் என்ன ப்ரயோஜநம்? எனில், **'அத:'** என்று தொடங்கி உத்தரம் சொல்லுகிறார்.

---

‡ ப்ரவ்ருத்திநிமித்தம் - ஒரு வார்த்தை எந்தப்பொருளைச்சொல்லுகிறதோ அந்தப் பொருளின் அஸாதாரணதர்மம்தான் அவ்வார்த்தையின் ப்ரவ்ருத்திக்கு நிமித்தம், ஆகவே கடம் என்றால் குடம் தான் அர்த்தமாகும். படத்தின் தாமம் கடத்துககு நிமித்தமாகாததால் கடம் படத்தைச்சொல்லாது.

† ப்ருஹதி - பெரிதாயிருப்பதாலும், பெரிதாகச்செய்வதாலும் 'பரம் ப்ரஹ்ம'என்று சொல்லப்படுகிறது.

§ தமீச்வராணாம் - ப்ரஹ்மா முதலிய ஈச்வரனுககெல்லாம் ச்ரேஷ்டனாயும், மஹேச்வரனாயும் உள்ளவன்-(ந தத்ஸம) அவனுக்கு ஸமம் ஒருவருமில்லை, மேலாக யாருமில்லை.

'அத:' என்பதற்கு—அநவதிகமான அதிசயத்துடன் கூடிய ப்ருஹத்வமுள்ளவனிடத்தில் ப்ரஹ்மசப்தம் முக்யமாயிருப்பதாலும, ஸர்வேச்வரனுக்கே அப்பேற்பட்ட ப்ருஹத்வகுணஸமபந்தம் இருப்பதலாலும் - என்று அர்த்தம்.

அது எவ்விதம் அங்கேயே முக்யவ்ருத்தமாகும்?—வேறு இடத்திலும் ப்ரஹ்மசப்தம் ப்ரயோகிக்கப்படுகிறதே!—என்றால், 'தஸ்மாத்' என்று தொடங்கி பதில் சொல்லுகிறார். தஸ்மாத் - அந்த ப்ரஹ்மத்தைககாட்டிலும்—என்று அர்த்தம்.

எல்லா இடத்திலுமே ஏன் ப்ரஹ்மசப்தம் முக்யமாகக்கூடாது?—என்ற கேள்விக்கு 'அநேகார்த்த' என்று பதிலளிக்கிறார். 'அநேகார்த்த'— பரப்ரஹ்மத்தைத்தவிர மற்றவைகளில் ப்ரயோகம அந்யதாஸித்தமாகையால் அவ்விடங்களில் சக்தியைக்கல்பிக்க வேண்டாம். அநந்யதாஸித்தமாகாத ப்ரயோகம் தான் சக்தியைக்கல்பிக்கிறது—என்று ந்யாயம் இருக்கிறதென்று கருத்து. ப்ருஹத்வகுணஸம்பந்தமுள்ள எல்லா வ்யக்திகளிலும் ஒரு சக்தியினாலேயே முக்யத்வம் ஸித்தித்தால் அநேக சக்தி கல்பனமாவது, கௌணத்வமாவது ஸம்பவிக்காது என்றால் 'பகவத்சப்தம்போல்' என்று காண்பிக்கிறார். அவ்விதமே ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பகவத்சப்தத்தை விஷயீகரித்து சொல்லப்பட்டிருக்கிறது. $ "தத்ர பூஜ்யபதார்த்தோக்திபரிபாஷாஸமந்வித: சப்தோயம் நோபசாரேண, அந்யத்ரஹ்யுபசாரத:" என்று.

இதனால் ப்ரஸ்துதமான சோத்யத்துக்கு எவ்விதம் பரிஹாரம் சொல்லப்பட்டதாகும்? இந்தக்கேள்விக்குப்பின்வருமாறு பதில்:—ப்ருஹிதாதுவில் 'மநிந்' ப்ரத்யயாந்தத்தினால் நிஷ்பன்னமான ப்ரஹ்மசப்தத்துக்கு ப்ரதானம் முதலியவைகளில் காணப்படுகிற ப்ரயோகமானது அவயவசக்தியாலல்ல. அப்படியிருந்தால், ப்ருஹத் 'மஹத்' இது முதலிய சப்தங்கள் போல ஆபேக்ஷிகமான ப்ருஹத்வஸம்பந்தம் பெற்ற எல்லா வஸ்துக்களிடத்திலும் ப்ரயோகம் வரும். ஆனால், அவ்வாறு ப்ரயோகிக்கப்படுகிறதில்லை. த்ரஸரேணுக்குங்கூட, அதைவிட மிகவும் அணுவாயுள்ள வேறு வஸ்துக்களைக்காட்டிலும் மஹிமகுணமுள்ளதென்று சொல்லுகிறார்கள். த்ரியணுகம் முதலியவற்றில் ப்ரஹ்மசப்தத்திற்கு மாத்ரம் ப்ரயோகத்தைக்காணோம். இவ்விதம் எல்லா இடங்களிலும் ப்ரயோகம் காணப்படுவதால் பங்கஜசப்தவ்யவஸ்தாபகமாயும், குமுதம் முதலிய புஷ்பங்களில் வ்யாவ்ருத்தமாயும், தாமரஸத்தையே அநுவர்த்திக்கிறதுமான பத்மத்வஜாதியைப்போல்,—ப்ரஹ்மசப்தத்துக்கு விஷயமான ஐந்தாறு வ்யக்திகளில் தொடாந்திருக்கிறதும், வேறு வ்யக்திகளை விட்டு விலகி நிற்பதுமான ரூபம் காணப்படாமையால் அநேக சக்தி கல்பிக்கவேண்டியதாக ஏற்பட்டால்,—அநந்யதாஸித்தமான ப்ரயோகம் சக்திகல்பகமாகையால், ப்ரஹ்மசப்தப்ரயோக விஷயமான மற்றவைகளிலும் ப்ருஹத்வகுணலேசத்தின் ஸம்பந்தத்தினால் ப்ரயோகம் அந்யதாஸித்தம். ஆகவே, அநேக சக்தி கல்பிப்பது சரியல்ல. ஆதலால், ப்ரவ்ருத்திநிவ்ருத்திபுஷ்கலமாயுள்ள பரமபுருஷனிடத்தில் தான் ப்ரஹ்மசப்தம் முக்யவ்ருத்தம். மற்றைய இடங்களில் ஔபசாரிகம் தான். "சக்திஸங்கோசத்தைப்பொருத்துக்கொள்ளும் ஔபசாரிக ப்ரயோகம் ஸம்மதம் தான்; ஆனால், அது எல்லா இடத்திலும் வரக்கூடாது." என்கிற இந்த ந்யாயத்தை மனதில் வைத்துக்கொண்டு—"பகவத் சப்தம் புருஷோத்தனிடம் தான் முக்யம்; வேறு வஸ்துக்களிடத்தில் அமுக்யம்" என்று ஸ்ரீபராசர மஹரிஷியால் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில்,

$ தத்ர - பூஜ்யமான அர்த்தத்தைச்சொல்லும் இந்த பகவத்சப்தமானது புருஷோத்தமனிடம முக்யமாகயோகரூடியினால்ப்ரயோகிக்கப்படுகிறது.மற்றவர்களிடம்ஔபசாரிகம்.

'பகவத்' சப்தத்துக்கு ஜ்ஞானம்மாத்ரம் ப்ரவ்ருத்திநிமித்தமா? அல்லது, தடையற்ற ஜ்ஞானம் முதலிய யாவும் ப்ரவ்ருத்திநிமித்தமா? முதலில் சொன்னது தான் ஸரி என்றால், எறும்பு முதலிய ஜந்துக்களிடம் கூட பகவத்சப்தம் ப்ரயோகிக்க வேண்டிவரும். இரண்டாவதுதான்ஸரிஎன்றால், எல்லா வஸ்துவிலும் தடையற்ற ஜ்ஞானம் முதலியவை இல்லை. யாதலால் ப்ரவ்ருத்திநிமித்தம் ஸித்திக்காது. ஆகவே, ஒரு சக்தியால் எல்லா இடத்திலும் முக்யத்வம் என்பதும் கூடாது. ஆதலால், அநேக சக்தி கல்பிப்பது அயுக்தம். ப்ரயோகங்கள் எல்லாம் அந்யதாஸித்திப்பதா என்பது ஸ்ரீபராசருடைய அபிப்ராயம்.

"உத்பத்திம் ப்ரளயஞ்சைவ பூதாநாமகதிம் கதிம்-வேத்திம்வித்யாம் அவித்யாஞ்சஸ வாச்யோ பகவாநிதி" என்கிற க்ரந்தத்தால் சொல்லப்பட்ட ஔபசாரிக பகவச்சப்தப்ரயோகத்துக்கு யோக்யங்களான வ்யக்திகளில் எந்த அலௌகிகார்த்தஸாக்ஷாத்காரசக்தி இருக்கிறதோ அதையே ப்ரவ்ருத்திநிமித்தமாகக்கொண்டு பகவச்சப்தம் எல்லா இடத்திலும் முக்யமாகலாமே—என்றால், அப்படியல்ல. அலௌகிகார்த்தஸாக்ஷாத்காரம் மட்டும் ப்ரயோகத்துக்கு அவிஷயங்களான வ்யக்திகளை விலக்கத்திறமையுள்ளதாக ஆகாது. அங்ஙனமாகில், ஸமாதிபர்யந்தமான யோகநிஷ்டையில் நிலைபெற்றவர்களான கேசித்வஜர், காண்டிக்யர், ப்ரஹ்லாதர் முதலியவர்களிடத்திலும் பகவச்சப்தம் ப்ரயோகிக்கவேண்டிவரும். ப்ரயோகமோ அவ்வாறு காணப்படவில்லை. மேலும், ப்ரத்யக்ஷமூலவ்யுத்பத்தியினால் 'கோ' முதலிய சப்தங்களுக்குப்போல், சாஸ்த்ரமூலமான வ்யுத்பத்தியினால் நிறைந்த ஆறுகுணங்கள் முதலியவற்றுடன் கூடியவரிடத்தில் தான் பகவச்சப்தத்துக்கு முக்யத்வம் அறியப்படும். "ஜ்ஞான, சக்தி, பல, ஐச்வர்ய, வீர்ய தேஜாம்ஸ்யசேஷத: பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர் குணாதிபி:" நிர்தோஷத்வபர்யந்தங்களான ஜ்ஞாந, சக்தி—முதலியவைகள் ப்ரவ்ருத்திநிமித்தமாதலால் வாச்யத்வம் சொல்லப்படுகிறது. நிர்தோஷத்வமும் நிமித்தமாதலால் வாச்யமாகிறது. இல்லாவிடில் அதைச்சொன்னது பயனற்றதாகும். அவாச்யமெல்லாம் நிஷேதிக்கத்தக்கதல்லவன்றோ. சொல்லாமலிருந்தாலே அவாச்யத்வம் ஸித்திக்கிறதே.

ஜ்ஞாந, சக்தி—முதலியவைகளில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக ப்ரவ்ருத்திநிமித்தத்வமில்லை. ஆனால், ஜ்ஞாநம் முதலிய குணஸமுதாயத்துக்கு மாத்ரம்தான். இப்படியில்லாவிடில், 'அசேஷத:' என்கிற பதம் வீணாகும். ஏனெனில், 'ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய, என்று சொல்லியிருக்கிறது. தவிர, கோ முதலியவற்றில் அதிப்ரஸங்கம் வரும் என்ற பயம் இருக்கிறது. ஆகையால், மேன்மை வாய்ந்த ஜ்ஞானம் ஜ்ஞானம் முதலியவற்றின் கூட்டத்துக்கே ப்ரவ்ருத்திநிமித்தத்வம் சொல்லப்பட்டதென்று ஒத்துக்கொள்ளத்தக்கது.

இவ்விதம் ந்யாயத்தினால் ஸித்தமான அர்த்தத்துக்கு ஆகமத்தால் ஸித்தமான அர்த்தம் பாஷ்யத்தில் 'பகவச்சப்தவத்' என்று த்ருஷ்டாந்தம் காட்டப்பட்டிருக்கிறது. இவ்வாறே, வேதவ்யாஸமஹர்ஷியால், "பரம் ஜைமிநிர்முக்யத்வாத் ஸ்யாச்சைகஸ்ய ப்ரஹ்ம சப்தவத்." இது முதலான ஸூத்ரங்களில் ப்ரஹ்மசப்தத்துக்கு பகவானிடத்திலேயே முக்யவ்ருத்தி மேலே கூறப்படுகிறது. ஆதலால், இங்கே எவ்வாறு அர்த்தம் சொல்லப்பட்டதோ அதே யுக்தமானது.

இவ்வாறே ஸ்ரீகாருடபுராணத்திலும்—§ "வேதே ஸூரி ப்ரயோகாச்ச குணயோகாச்ச சார்ங்கிணி—தஸ்மிந்நேவ ப்ராஹ்மசப்தோ முக்யவ்ருத்தோ மஹாமுநே." என்று

§ வேதே ஸூரி – மஹர்ஷே! வேதத்தில் அதிகமாய் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதாலும், அவயவார்த்தமானது நன்கு பொருந்தியிருப்பதாலும், ப்ரஹ்மசப்தம் அந்த சார்ங்கதரனை ஸ்ரீமந்நாராயணனிடத்திலேயே முக்யவ்ருத்தியுள்ளது.

தொடங்கி,—¶ "யஸ்மிந் ப்ரயுஜ்யமாநே து குணயோகஸ்ஸுபுஷ்கல: தத்ரைவ முக்ய வ்ருத்தோயமந்யத்ர ஹ்யுபசாரத:" என்று ஸ்பஷ்டமாக சொல்லப்பட்டிருக்கிறது. இவ் விதம் சப்தஸாமர்த்யம் உபபாதிக்கப்பட்டது.

𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍 —

𑌤𑌾𑌪𑌤𑍍𑌰𑌯𑌾𑌤𑍁𑌰𑍈𑌰𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌸 𑌏𑌵 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌃 𑌅𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌏𑌵 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾𑌕𑌰𑍍𑌮𑌭𑍂𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 । 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾 । 𑌇𑌚𑍍𑌛𑌾𑌯𑌾 𑌇𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌹 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥

**ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், என்கிற மூன்று தாபங்களால் துன்பப்படும் ஸம்ஸாரிகளால் மோக்ஷத்திற்காக அறியத்தக்கவன் அவனே. ஆகையால், அறியவேண்டுமென்கிற விருப்பத்திற்கு கர்மாவாக இருக்கிற ப்ரஹ்மம் ஸர்வேச்வரனே. அறிவதற்கு விருப்பம்—என்கிற பொருளுள்ளது 'ஜிஜ்ஞாஸா' என்னும் பதம். இச்சையானது இச்சைக்கு விஷயமாக இருப்பதை ப்ரதானமாக உடையதாதலால் இச்சிக்கப்படும் ஜ்ஞானமே இங்கு விதிக்கப்படுகிறது.**

ச்ருதப்ரகாசிகை:—

இதற்குப்பிறகு ப்ரஹ்மசப்தமானது அநேக அர்த்தங்களை முக்யவ்ருத்தியினால் உணர்த்தும் தன்மை வாய்ந்திருந்தபோதிலும் இந்த ஸூத்ரத்திலுள்ள அந்த சப்தத்திற்கு அர்த்தஸ்வபாவத்தால் புருஷோத்தமபரத்வமே சொல்லப்படுகிறது 'தாபத்ரயாதுரை:' என்று. "ஸ ஏவ அம்ருதத்வாய" என்கிற பதங்களால் † "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி-நாந்ய: பந்தா:" இது முதலான ச்ருதியின் அர்த்தம் விவக்ஷிக்கப்பட்டது. அந்த ச்ருதியின் அர்த்தம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதினாலேயே புருஷோத்தமன் சொல்லப்படுகிறான் என்று உரைக்கப்பட்டது. ச்ருதிக்குங்கூட முன்கூறப்பட்ட ஹேயப்ரத்யநீகத்வ, கல்யாணகுணாகரத்வ விசிஷ்டனே தாபத்ரயத்தால் வருந்துகிறவர்களால் உபாஸிக்கத்தக்கவனே தவிர்த்து தாபத்ரயத்தால் வருந்துகிறவர்களுக்குள் ஒருவனல்லவென்று கருத்து. சிறைச்சாலையில் விலங்கினால் பந்திகப்பட்டால் அவனே அவ்விலங்கினின்று விடுதலையை வேண்டுகிறவர்களால் வேண்டத்தக்கவனல்லவன்றோ. அவ்வாறே விஷ்ணுபுராணத்தில் தோஷமில்லாதவனும், கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமாயும் உள்ளவனே முக்தியை அடையவிருப்பமுள்ளவர்களால் உபாஸிக்கத்தக்கவனென்று கூறப்பட்டிருக்கிறது.—"ஸ ஸர்வபூதப்ரக்ருதிம் விகாராந்." (அவன் எல்லா

¶ யஸ்மிந் – எந்த அர்த்தத்தில் இந்த ப்ரஹ்மசப்தம் ப்ரயோகிக்கப்பட்டால் அவயவார்த்தஸம்பந்தம் நன்கு பொருந்துமோ அந்த அர்த்தத்திலேயே முக்யவ்ருத்தியுள்ளது. அதைத்தவிர வேறு அர்த்தங்களில் ப்ரயோகிக்கப்படுமாகில் அந்தப்ரயோகம் உபசாரத்தாலன்றோ ஸித்திக்கிறது.

† தமேவம் – இவ்விதமாக ப்ரஹ்மத்தை அறிந்தவன் இந்த இடத்தில் (உபாஸநாதசையில்) முக்ததுல்யனாக ஆகிறான். வேறு வழியில்லை.

பூதங்களுக்கும் மூலகாரணமான மூலப்ரக்ருதியையும் அதினின்று உண்டாகிற கார்யவர்க்கங்களையும்) "ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ" (எல்லா மங்களகுணஸ்வரூபி அவன்) இதுமுதல் "தஜ்ஞானமஜ்ஞானமதோந்யதுக்தம்" (இதைவிட வேறானது அஜ்ஞானம்) இதுவரையிலுள்ள சப்தஸந்தர்பத்தால், 'ப்ரஹ்ம' சப்தவ்யாக்யானத்தை முடிக்கிறார் 'அத:' என்று. தோஷமில்லாதவனாகவும் மங்கள குணங்களுள்ளவனாகவுமிருக்கிற ஸர்வேச்வரனே தாபத்ரயத்தினால் வருந்தப்பட்டவர்களால் அறியத்தகுந்ததாகச்சொன்ன ப்ரஹ்மம் ஸர்வேச்வரனே என்று பொருள். இல்லையேல், கீழ் கூறப்பட்ட இந்த சப்தஸாமர்த்யத்தினாலும், அர்த்தஸாமர்த்யத்தினாலும் என்று அத: சப்தத்துக்குப் பொருள்.

ப்ரஹ்மசப்தமானது $ வ்யுத்பந்நமாகவோ, ¶ அவ்யுத்பந்நமாகவோ, எவ்வாறாக இருந்துகொண்டு பகவானிடத்தில் முக்யமாக இருக்கிறது?—அவ்யுத்பன்னமென்றுசொல்லும்பக்ஷத்தில் போதிக்கும் தன்மையில்லாத அந்த சப்தமானது ஓரிடத்திலும் முக்யமாகாது. வ்யுத்பன்னமான அந்த சப்தம் முக்யமெனபதும் கூடாது. அலௌகிகமான அர்த்தத்தில் வ்யுத்பத்தி ஸம்பவிக்காததால் அறியப்படாததும், வ்யவஹாரத்திற்கு விஷயமல்லாமலுமிருக்கிற வஸ்துவில் புத்திபூர்வகமாகவும், * யாத்ருச்சிகமாயுமுள்ள வ்யுத்பத்தியானது எவ்வாறு உண்டாகும்?

(உத்தரம் சொல்லப்படுகிறது.) காமினீ, சந்தனம், க்ருஹம்—முதலியவைகளில் ப்ரயோகத்தினால் ஸுகமென்கிற பொருளை உணர்த்தும் தன்மையுள்ளதென்று நிச்சயிக்கப்பட்ட ஸ்வர்கசப்தத்திற்கு—"யஸ்மிந்நோஷ்ணம்" (எந்த இடத்தில் சூடில்லையோ) இது முதலான † அர்த்தவாதபதத்தின் சேர்க்கையால் ‡ அலௌகிகஸுக விசேஷவிஷயமாகவும் எவ்வாறு வ்யுத்பத்தி ஏற்படுகிறதோ,—லோகத்தில் ஓரிடத்தில் அவ்யுத்பந்நமாயிருந்தபோதிலும் § யூப, ஆஹவநீய, ஸ்ப்ய, கபால, சஷால, சாத்வால—முதலிய சப்தங்களுக்கு வாக்யார்த்தத்தின் சேர்க்கையாலும், பதாந்தரங்களின் சேர்க்கையாலும் எவ்வாறு அந்தந்த அர்த்தவிஷயமான வ்யுத்பத்தி ஸித்திக்கிறதோ—இவ்வாறாக, ப்ரஹ்ம, ஆத்மா, ஈச்வராதி சப்தங்களுக்கும் உலகத்தில் சில அர்த்தங்களில் ப்ரயோகத்தினால் வ்யுத்பத்தி இருந்தாலும், இல்லாவிடினும் "யதோ வா இமானி பூதானி ஜாயந்தே" (எவனிடத்தினின்று இந்த சிதசித்ரூபமான ப்ரபஞ்சங்களுண்டாகின்றனவோ) "ஸத்யம், ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம." (விகாரத்திற்கு ஆஸ்பதமான அசேதநவஸ்துவைக்காட்டிலும்

$ வ்யுத்பந்நம் – போதிகத்தக்க அர்த்தத்துடன் ஸம்பந்தநிச்சயமுள்ளது.

¶ அவ்யுத்பந்நம் – போத்யார்த்தஸம்பந்தநிச்சயமில்லாதது.

* யாத்ருச்சிகம் – யத்ருச்சையாய் ஸம்பவிப்பது.

† அர்த்தவாதம் – வேதத்திலுள்ள ப்ராஹ்மணபாகத்தின் ஓர் பகுதி—தேவதையையாவது, த்ரவ்யத்தையாவது, கர்மாவையாவது, பலத்தையாவது புகழ்ந்து பேசும் ஓர்விதபாகம், பெரும்பான்மையாக விதிசேஷமாயிருந்துகொண்டு விதேயார்த்தத்தை துதிப்பதில் நோக்கமுள்ளது.

‡ அலௌகிக – பரலோகத்தில் உண்டாகிற ஸ்வர்காதிஸுகம்.

§ யூப – மாடுகட்டும் தூண். ஆஹவநீய – த்ரேதாக்நிகளுள் ஒன்று. ஸ்ப்ய – ஹோமஸாதனபாத்ரம். கபால – புரோடாசத்தை பக்வம் செய்கிற மண்ஓடு. சஷால – பசுபந்தனஸ்தம்பத்தில் போடப்பட்டிருக்கும் வளையம். யூபகடகம் என்றும் சொல்லுவார்கள். சாத்வால – யாகசாலையில் நான்கு மூலைச்சதுரமாக போடப்பட்டிருக்கும் ஒரு வேதி.

விலக்ஷணமாயும், ப்ரகாசமற்ற ஜடவஸ்துவைக்காட்டிலும் வேறாகவும், தேசகாலவஸ்துக்களால் அளவிடப்படாததாயுமிருக்கிற ப்ரஹ்மம்.) இது முதலான ப்ரஸித்தார்த்தமுள்ள வாக்யவிசேஷம், பதவிசேஷம் ஆகிய இவற்றின் சேர்க்கையினால் அலௌகிகமான பரமாத்ம விஷயத்வநிச்சயமானது உபபன்னமாகிறது. ஆகையால், ப்ரஹ்மசப்தத்திற்கு முன் கூறப்பட்ட நீதியினால் பகவானிடத்திலேயே முக்யத்வம் பொருத்தமுள்ளது.

பிறகு '**ஜிஜ்ஞாஸா**' என்கிறசப்தத்தின் வ்யாகபாஷிக்கத்தக்க தன்மையை வெளியிடுவதற்காக ப்ரக்ருதிப்ரத்யயங்களின்பாகுபாட்டை '**ஜ்ஞாதுமிச்சா ஜிஜ்ஞாஸா**' என்பதால் காட்டுகிறார். விஷயவைலக்ஷண்யத்தைசசார்ந்திருக்கிற இச்சையானது எவ்வாறு விதிக்கத்தக்கது என்கிற ஆக்ஷேபத்துக்கு உத்தரம் 'இச்சாயா' என்பதால் அருளிச்செய்கிறார். ஞானம் விதிக்கத்தக்கது என்று '**இஷ்யமாணப்ரதானத்வாத்**' என்பதால் சொல்லுகிறார். ஸந்ப்ரத்யயத்தால் சொல்லத்தக்க இச்சைக்கு தாதுவின் அர்த்தமான ஞானம் கர்மா. ஏனெனில், கர்மஸித்திக்காகவே க்ரியை இருப்பதால். யாகஸம்பந்தமான $ வ்ரீஹி முதலியவற்றிற்கு ப்ரோக்ஷணம் முதலியது போல், கர்மாவுக்கு க்ரியை சேஷமாக இருக்கிறது. கர்த்தாவினுடைய க்ரியையினால் அடைவதற்கு எது ப்ரதானமாக விரும்பப்படுகிறதோ அது கர்மா. ஆதலால், ப்ரக்ருதிக்கு அர்த்தமான ஜ்ஞானத்தை கர்மாவாக உடைய இச்சையானது அந்த கர்மஸித்தியையே ப்ரயோஜனமாகக்கொண்டது. ஆகவே, இச்சையானது இச்சிக்கப்படுகிற ஜ்ஞானத்தை ப்ரதானமாகக்கொண்டிருத்தலால் இஷ்யமாணமாயிருக்கும் ஜ்ஞானமே விதேயமென்று பொருள்.

'ஜிஜ்ஞாஸை செய்யத்தக்கது' என்று விதியிருக்கையில் எவ்வாறு ஞானம் விதேயமாகலாம்?—என்றால், பதில் சொல்லப்படுகிறது. ¶ "ஸ்நாத்வா புஞ்ஜீத" "ப்ராங்முகோ புஞ்ஜீத" என்கிற இடங்களில் 'புஜி' தாது விதிப்ரத்யயாந்தமாயிருப்பதால் போஜனம் செய்யத்தக்கதென்பது அறியப்பட்டிருந்தபோதிலுங்கூட, விதிக்கு ஸ்நாநத்திலும், தவறாமல் கிழக்கு முகமாக இருப்பதிலுமே தாத்பர்யமென்று அர்த்தஸ்வபாவத்தால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அவ்விரண்டும் அப்ராப்தமாக இருப்பதால் அப்ராப்தமான அர்த்தத்தைத் தெரிவித்தாலன்றோ சாஸ்த்ரம் ப்ரயோஜனமுள்ளதாக ஆகும். அந்த வாக்யத்தில் வேறு காரணத்தால் ப்ராப்தமான போஜனம் அனுவதிக்கப்படுகிறது. அவ்வண்ணமாகவே இச்சைக்கு விதேயத்வம் ஸம்பவியாததாலால், அந்த இச்சைக்கு விதேயமாயிருக்கிற விசாராத்மக ஜ்ஞாபகமே தாத்பர்யத்தால் விதிக்கப்படுகிறது. இஷ்யமாணமாயுள்ள ஞானம் இங்கே அபிப்ராயப்படப்பட்டிருக்கிறதென்றல்லவோ வேதாந்தஸாரத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஸந்ப்ரத்யயாந்தநிர்தேசமும்—"நிதித்யாஸிதவ்ய:" (த்யானம் செய்யத்தக்கவன்) "விஜிஜ்ஞாஸிதவ்ய:" (அறியவேண்டுமென்று விரும்பத்தக்கவன்) "தத் விஜிஜ்ஞாஸஸ்வ." (அதை அறிய விரும்பு) இது முதலான ச்ருதிவாக்யங்களையனுசரித்து செய்

$ வ்ரீஹீந் ப்ரோக்ஷதி - என்கிற இடத்தில் யாகஸம்பந்தம் பெற்ற வ்ரீஹிக்கு ப்ரோக்ஷணம் அதிசயாதாயகமாக இருப்பதால் வ்ரீஹிக்கு ப்ரோக்ஷணம் சேஷமாவது போல்—'ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா' என்கிற இடத்திலும் ஜ்ஞா-தாதுவாச்யமாயுள்ள ஜ்ஞான ரூபமான கர்மாவுக்கு ஸந்ப்ரத்யயவாச்யமாயுள்ள இச்சாரூபமான க்ரியை மேன்மையை உண்டு பண்ணுவதாயிருப்பதுபற்றி சேஷமாகிறது. சேஷம் - வேறு வஸ்துவுக்கு அதிசயத்தை உண்டுபண்ணும் வஸ்து. சேஷியாவது - வேறொன்றால் உண்டாகும் மேன்மையை அடையும் வஸ்து.

¶ ஸ்நானம் செய்துவிட்டு சாப்பிடவேண்டும். கிழக்குமுகமாயிருந்து சாப்பிடவேண்டும்.

யப்படுகிறது. ச்ருதியும் உபாயதசை தொடங்கி பகவத்ஜ்ஞானம் ப்ரீதிரூபமாகவே இச்சாவிஷயமாவதால் அவ்வாறு நிர்தேசிக்கிறது. அல்லது, ப்ரஹ்மஜிஜ்ஞாஸா என்கிற ஸந்நந்தநிர்தேசமானது விசாரம் ராகப்ராப்தம் என்பதை அறிவிப்பிக்கிறது. 'தர்மஜிஜ்ஞாஸா' என்கிற இடத்திலும் இப்படியே.

இந்த இடத்தில் தர்க்கரூபமான ஜ்ஞானம் விதேயம். தர்க்கத்தால் உபகரிக்கப்படும் வாக்யத்தினாலுண்டாகிற ஜ்ஞானம் பலமாதலால் விதேயமல்ல. ப்ரமிதிரூபமான ஜ்ஞானம் விதேயம். தர்க்கரூபமான ஞானம் ஆர்த்தமென்று பிறர் சொன்னதும் உள்ளடங்கியிருக்கிற விசாரத்தை ஆக்ஷேபிக்கிறது. அதனாலும் முன்சொன்ன பக்ஷமே மிகவும் சிறந்தது. வேதாந்தார்த்தவிசாராத்மக ந்யாயநிபந்தந ரூபமான சாஸ்த்ரமன்றோ ப்ரஹ்மமீமாம்ஸை—என்று ப்ரஸித்தியுள்ளது. ப்ரஹ்மவிஷயகமான யதார்த்தஜ்ஞானம் பலம். அதனாலன்றோ ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கதென்று பாஷ்யத்தில் இனி கூறப்போகிறார்.

ஜ்ஞானஸாமாந்யத்தைப்பொருள் படுத்துகிற ஸந்நந்தமான இந்த 'ஜ்ஞா' தாதுவுக்கு விசேஷாகாங்க்ஷை வரின், தகுதியுள்ள விசேஷத்தில் பர்யவஸாநமல்லவோ ந்யாயமாகும். ப்ரஹ்மத்தினுடைய ஜிஜ்ஞாஸை செய்யத்தக்கது; † கபிலர் ‡ ஸௌகதர் முதலியவர்களுக்கு அபிமதங்களான ப்ரதானம், ப்ரக்ருதி முதலிய தத்வங்களுடைய ஜிஜ்ஞாஸை செய்யத்தக்கதல்லவென்று இந்த ஸூத்ரத்தை அறியத்தக்க வஸ்துவிசேஷநிர்ணயத்தில் நோக்குள்ளதாக யாதவப்ரகாசார்யர் வ்யாக்யானம் செய்தார். அதை விலக்குவதற்காக இஹசப்தம். 'இஹ' இந்த முதல் சூத்திரத்தில் என்று பொருள். ப்ரஹ்மத்துக்கு ஜிஜ்ஞாஸ்யத்வமாத்ரம் ஸித்திதாலன்றோ அதற்கே ஜிஜ்ஞாஸ்யத்வம் ஸித்திக்கும். இரண்டும் ஸூத்ரத்தால் ப்ரதிபாத்யமாகா. ஏனெனில், ப்ரஹ்மம் ஜிஜ்ஞாஸ்யமே; ப்ரஹ்மமே ஜிஜ்ஞாஸ்யமென்று வாக்யபேதம் ப்ரஸங்கிப்பதால்.

முக்தியில் விருப்பமுள்ளவர்களால் ப்ரஹ்மமானது தவறாமல் அறியத்தக்கது என்பது தந்த்ராந்தரஸித்தமான ப்ரதானம் முதலியவைகளுக்கு அஜிஜ்ஞாஸ்யத்வஜ்ஞானமில்லாவிடில் ஸித்தி பெறாதாதலால்,—ப்ரஹ்மஜிஜ்ஞாஸ்யத்வம் ஸமர்த்திக்கப்பட்டால் ப்ரதானம் முதலியவைகளுக்கு அஜிஜ்ஞாஸ்யத்வஸமர்த்தனம் தானாக வருகிறது. ஆதலால், வாக்யபேதம் வராதென்று சொல்லக்கூடாது. ஏனெனில், — அத்யயனக்ரமத்தினால் வேதாந்தார்த்தமானது நிரூபிக்கப்படவேண்டிய ஸந்தர்பத்தில் முந்தின பாகத்தின் விசாரமான பிறகு உத்தரபாகவிசாரத்திற்கு ப்ரதாநாதிநிரஸநாபேக்ஷை ஸம்பவியாமையால் ஒரு ப்ரபந்தத்தில் ஒரு பாகம் நிரூபிக்கப்பட்டபிறகு அதனுடைய மற்றொருபாக நிரூபணத்திற்கு வேறு ப்ரபந்தத்தினுடைய ப்ரமேயநிராஸஸாபேக்ஷை உண்டாகாது. பூர்வஷட்கம் நிரூபிக்கப்பட்டபிறகு உத்தரஷட்கநிரூபணமானது கபில,ஸௌகதாதி மதங்களின் நிராஸமில்லாவிடில் சம்பவியாது—என்பது பொருந்தாதன்றோ. வேதாந்தார்த்தத்

---

† கபிலர் ஸாங்க்யமதத்தை ப்ரவ்ருத்தி செய்தவர்.

‡ ஸௌகதர் - புத்தர். இவரை பகவதவதாரமாகச்சொல்லுவார்கள். இவர் நான்கு சிஷ்யர்களுக்கு புத்தமதத்தை உபதேசித்தார். அவர்கள்—வைபாஷிகன், ஸௌத்ராந்திகன், யோகாசாரன், மாத்யமிகன்—எனப்பெயர் கொண்டவர்கள். புத்தர் தன் மதத்தின் கொள்கையை நான்கு சிஷ்யர்களுக்கும் முறையே—எல்லாம் துக்கம், எல்லாம் க்ஷணிகம், எல்லாம் ஸ்வலக்ஷணம், எல்லாம் சூன்யம்—என்று நான்கு விதமாய் உபதேசித்தார். இவருக்கு அஹிம்ஸை பரமதர்மம். ரோஹிணீ நதிக்கரையிலுள்ள கபிலவாஸ்து நகரத்தில் சுத்தோதனராஜனுக்கு மாயாதேவியிடம் இவர் ஜனித்தார்.

தில் ச்ரத்தை த்ருடப்படுவதற்காக அபேக்ஷிக்கப்பட்டிருக்கிற இதரபக்ஷநிரஸநம் இங்கே செய்யப்படுகிறதென்கிற மதம் யாதொன்றுண்டோ அது உப்பன்னமாகாது. ஏனெனில், செய்ததைச்செய்தலென்கிற தோஷம் சம்பவிப்பதால்,

இது சொல்லப்பட்டதாக ஆகிறது. இங்கே ப்ரதானம் முதலியவைகளுக்கு அஜிஸ்ஞாஸ்யத்வமானது வேதாந்தங்களுக்கு அவைகளில் அபிப்ராயமில்லாமையை உபபாதிப்பதினால் ஸமர்த்திக்கப்படுகிறதா?—அல்லது, கபில, ஸுகதாதிகளுடைய சாஸ்த்ரப்ராமாண்யத்திற்கும் ப்ரமேயத்திற்கும் இருக்கிற நிலைதவறுதலை ப்ரதி பாதிப்பதினால் ஸமர்த்திக்கப்படுகிறதா?—முந்தினபக்ஷம் சரியல்ல—ஈக்ஷத்யதிகரணம் முதலியவைகளால் வேதாந்தவாக்யங்களுக்கெல்லாம் அவைகளின் தாத்பர்யமின்மை சொல்லப்போகிறபடியால் இங்கு சொல்லத்தக்கதொன்றுமில்லை. இரண்டாவதும் சரியல்ல. ஏனெனில், வேதவிருத்தமான ஸ்ம்ருதிகளுக்கு அப்ராமாண்யம் பூர்வ மீமாம்ஸையிலேயே ஸமர்த்திக்கப்பட்டிருக்கிறது. மேலும், ஸாங்க்ய, ஸௌகதாதிகளுக்கு அபிமதமான ப்ரமேயத்தினுடைய நிலைதவறுதலானது தர்க்கபாதத்தில் ப்ரதிபாதிக்கப் படப்போகிறது. "விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம், இதரேஷாஞ்சானுபலப்தே: ஏதே நயோக: ப்ரத்யுக்த:, உதாஸீநாநாமபிசைவம் ஸித்தி: அந்த்யாவஸ்திதேஶ்சோபாய நித்யத் வாதவிசேஷ:" இது முதலிய ஸூத்ரங்களால் அவர்கள் சொன்ன மோக்ஷஸ்வரூபங்க ளையும், அவற்றின் உபாயங்களையும் நிராகரிக்கப்போவதால் இங்கு சொல்ல வேண்டிய தில்லை; மேலும் "ஏதேந ஸர்வேவ்யாக்யாதா வ்யாக்யாதா:" என்கிற இடத்தில் "அனுவ் ருத்தி:சப்தாத்" என்கிற சாஸ்த்ரத்தின் முடிவிலும் ஸத்ரங்களின் அப்யாஸத்திற்கு சொல்லப்படாத அம்சங்களைத்தெரிவிப்பது பலம். அநுக்தாம்சமானது ஸாங்க்ய, யோகங் களால் அறியத்தக்கதென்று சொல்லுகிறவர்களுக்கும், மோக்ஷமானது ஸாங்க்ய, யோகங்க ளுடைய ஸமுச்சயத்தை அபேக்ஷித்திருக்கிறதென்று ப்ரதிபாதிக்கிறவர்களுக்கும், ஸௌக தர் முதலியவர்களைப்போல், ஸாங்க்யர் முதலியவர்களுடைய நிரஸநத்தினாலே சாரீகசாஸ்த் ரத்திற்கே ஆரம்பணீயத்வ ப்ரதிஜ்ஞையானது மிக்க விருத்தமாக ஆகும்.

ஸாங்க்ய, யோகங்கள் ஆதரிக்கத்தக்கவைகளல்லவென்று சொன்னது விருத்தாம்சங் களைகருதி என்று?—அல்ல. விருத்தாம்சமானது ஆதரிக்கத்தகாததென்பது ¶ விரோ தாதிகரணந்யாயத்தாலேயே ஸித்தம். ஆதலால், யாதவப்ரகாசரால் செய்யப்பட்ட ஸூத் ரதாத்பர்யவர்ணநம் உபபன்னமாகாது என்பது தான் இஹசப்தத்தின் அபிப்ராயம்.

'விதீயதே' அறியப்படாததை அறிவித்தல் எனப்பொருள்படும் விதியானது இங்கே விவக்ஷிக்கப்படுகிறது. ப்ரவ்ருத்திக்காதவனை ப்ரவ்ருத்திக்கச்செய்தல் எனப் பொருள் படும் விதியல்ல. இச்சையினால் ப்ரவ்ருத்தியானது மேலே கூறப்படுவதால் ராகத்தினால் ப்ரவ்ருத்தித்தவனுக்குங்கூட பூர்வபக்ஷயுக்தியினால் அனாரம்பணீயத்வபுத்தி உண்டாகில் ஆரம்பணீயத்வ ஜ்ஞாபனமல்லவோ அஜ்ஞாதஜ்ஞாபனம். அதனால் 'விதீ யதே' என்பதற்கு தானே ப்ரவ்ருத்திக்கிறானென்கிற மேல் க்ரந்தத்தோடு விரோதமில்லை. இவ்வண்ணம் பதார்த்தங்கள் வ்யாக்யானிக்கப்பட்டன.

---

¶ விரோதாதிகரணந்யாயம்—"விரோதே த்வநபேக்ஷ்யம் ஸ்யாத்" என்று பூர்வ மீமாம்ஸாஸூத்ரம். ச்ருதி, ஸ்ம்ருதி இரண்டுக்கும் விரோதம் வந்தால் ஸ்ம்ருதியை அனாதரித்து ச்ருதியை ஆதரிக்கவேண்டும். ஏனெனில், ச்ருதியானது அபேக்ஷிக் காமல் ஸ்வதந்த்ரப்ரமாணமாகிறது. ஸ்ம்ருதியோ தன்னால் கூறப்பட்டுள்ள அர்த்தப்ர மாண்யத்திற்கு மூலபூதமான வேதத்தை எதிர்பார்க்கிறது.

பாஷ்யம்:—

பூர்வபாகாவகதகர்மஜ்ஞாநஸ்ய அல்பாஸ்திர ஃபலத்வாத் உபரிதநபாகாவஸேயஸ்ய ப்ரஹ்மஜ்ஞாநஸ்யாநந்தாக்ஷயஃபலத்வாச்ச பூர்வவ்ருத்தாத் கர்மஜ்ஞாநாதநந்தரம் தத ஏவ ஹேதோர்ப்ரஹ்ம ஜ்ஞாதவ்யமித்யுக்தம் பவதி। ததாஹ வ்ருத்திகார:,--'வ்ருத்தாத் கர்மாதிகமாதநந்தரம் ப்ரஹ்மவிவிதிஷா' இதி। வக்ஷ்யதி ச "கர்மப்ரஹ்மமீமாம்ஸயோரைகஶாஸ்த்ர்யம் ஸம்ஹிதமேதச்சாரீரகம் ஜைமிநீயேந ஷோடஶலக்ஷணேநேதி ஶாஸ்த்ரைகத்வஸித்தி:" இதி ॥

---

*மீமாம்ஸையின் முக்கின பாகமான கர்மகாண்டத்தால் அறியப்பட்ட கர்மாக்கள் அல்பமாயும், நச்வரமாயும் உள்ள பலன்களுடன் கூடியிருத்தலாலும், மேல் பாகத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கிற ப்ரம்மஜ்ஞானமானது முடிவில்லாததாயும், அழிவில்லாததுமான பலத்தையுடையதாதலாலும்,-முந்தி நடைபெற்றிருக்கிற கர்மவிசாரத்திற்குப்பிறகு கர்மாக்கள அல்பாஸ்திரபலப்ரதங்களென்கிற அக்காரணத்தினாலேயே ப்ரஹ்மம் அறியத்தக்கதென்று கூறப்பட்டதாக ஆகிறது. "முந்தி நடந்த கர்ம விசாரத்திற்குப்பிறகு ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்கிற விருப்பம்"—என்று வ்ருத்திக்ராந்தத்தைச்செய்தருளின போதாயனர் கூறுகிறார். கர்மமீமாம்ஸை, ப்ரஹ்மமீமாம்ஸை இரண்டும் ஒரே சாஸ்த்ரமென்று சொல்லப்போகிறார். "இந்த சாரீரகசாஸ்த்ரமானது பதினாறு அத்யாயங்களடங்கி இருக்கிற ஜைமினிப்ரோக்தமான பூர்வமீமாம்ஸையோடு நியதபௌர்வாபர்யமுள்ள ஒரு வ்யாக்யேயவ்யாக்யானரூபமாக இசைந்திருப்பதுபற்றி ஒரே சாஸ்த்ரமென்பது ஸித்தித்தது" என்று.*

---

*ச்ருதப்ரகாசிகை:—பிறகு 'மீமாம்ஸா' என்று தொடங்கி ஸூத்ரத்தினுடைய வாக்யார்த்தத்தைக்கூறுகிறார்.*

*இந்த இடத்தில் "பூர்வ வ்ருத்தாத் கர்மஜ்ஞானாதநந்தரம் தத ஏவ ஹேதோ:" என்றதனால் அத, அத: சப்தங்களுடைய அர்த்தம் கூறப்பட்டது. 'ப்ரம்மஜ்ஞாதவ்யம்' என்பதனால் ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபதத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது. ஜ்ஞாதவ்யம் விசாரத்துக்குத்தகுந்தது. 'தத ஏவ' என்கிற ஏவகாரத்தால், அதசப்தத்தால் சாஸ்த்ராந்தரங்களுடைய ஜ்ஞானத்தைக்கருதாமை பலிததது என்று அபிப்பிராயம். 'உக்தம் பவதி' சப்தத்தால் அர்த்தத்தாலும் என்று அபிப்ராயம்.*

இந்த ஸூத்ரத்திற்கு இந்த அர்த்தம் எவ்வாறு ஏற்படுமே என்று ஸந்தேகம்வர அதை உபபாதிக்கிறார். 'மீமாம்ஸா இது முதலியதால்' 'அதோ அத:' இது முதலிய பதங்களால் எவ்வாறு பொருள் கூறப்பட்டதோ அதே ஸரியானது. கர்மப்ரஹ்மமீமாம்ஸைகள் ஒரே சாஸ்த்ரமாதலால், தவறாமல் முன்பின்னாக இருக்கிற இரண்டு பாகங்களுடன் கூடிய வேதமென்கிற ஒரு ப்ரபந்தத்துக்கு இரண்டும் சேர்ந்து ஒரு வ்யாக்யானரூபமாக இருப்பதால் இரண்டும் ஒரே சாஸ்த்ரம் இந்த இடத்தில் வ்யாக்யானிக்கத்தக்க வேதமானது முன்னும் பின்னும் இருக்கிற இரண்டு பாகங்களோடு கூடி இருக்கிறதென்றும்,—அக்காரணத்தால் அதற்கு வ்யாக்யானமாக இருக்கிற மீமாம்ஸையும் முன் பின்னாக அமைந்துள்ள இரண்டு பாகங்களுள்ளதென்றும்,—பதயோஜனையிலும், வாக்யயோஜனையிலும் சொல்லத்தக்கது. அவ்வாறு இருந்தாலும் க்ரந்தலாகவத்திற்காக பதயோஜனையில் "அதீதஸாங்க ஸசிரஸ்கவேதஸ்ய" என்று வ்யாக்யானிக்கத்தக்க (வேதத்திற்கு) மாத்ரம் நியதபௌர்வாபர்யமுள்ள இரண்டு பாகங்களுடன் சேர்ந்திருக்கும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இடத்திலேயென்றால், வாக்யயோஜனையில் வ்யாக்யானத்திற்கு நியதபௌர்வாபர்யங்களான இரண்டு பாகங்களோடு கூடியிருப்பதால் ஐகசாஸ்த்ர்யம் கூறப்பட்டிருக்கிறது. இரண்டிடத்திலும் இரண்டும் அநுஸந்திக்கத்தக்கது.

ஹி-ஆக சப்தங்களால் மீமாம்ஸைகளிரண்டும் ஒரே அவயவி என்பது ஸூசிக்கப்பட்டது. 'பூர்வ, உபரிதந' சப்தங்களால் க்ரமநியமம் உரைக்கப்பட்டது. 'கர்ம, ப்ரஹ்ம' சப்தங்களால் வருத்தவர்த்திஷ்ய மாணங்கள் சொல்லப்பட்டன. அல்பாஸ்த்திரபலத்வ, அநந்தஸ்திரபலத்வசப்தங்களால் அவ்விரண்டுக்கும் ஹேதுஹேதுமத்பாவம் உபபாதிக்கப்பட்டது. முக்தியின் உபாயத்திற்கு உபயோகியாக இருப்பதால் கர்மாக்கள் ஸ்வரூபத்தால் உபாதேயங்கள் என்கிற ஜ்ஞானம் அநந்தஸ்திரபலாபாதப்ரதீதியில் உள்ளடங்கியது. அதனால் தனித்து உபந்யஸிக்கவில்லை. இவ்விதம் க்ரமவிசேஷத்துடன் கூடிய வ்யாக்யானிக்கத்தக்க ஒரு க்ரந்தத்துக்கு வ்யாக்யானமாக இருப்பதினால் கர்ம ப்ரஹ்ம மீமாம்ஸைகளுக்கு ஐகசாஸ்த்ரயம் ஏற்படுவதால் ஸூத்ரத்திற்கு இங்கே சொல்லப்பட்ட அர்த்தமே பொருத்தமானது என்று பொருள்.

முன் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்ட வ்ருத்திகாரருடைய மதாநுஸாரத்தை * வ்ருத்திக்ரந்தத்தோடு † ஸம்வாதமுள்ளதைக்காட்டுகிறார். 'ததாஹ' என்பதால் கர்மவிசாரத்துக்கு பூர்வவ்ருத்தத்வமானது வாசகசப்தத்தால் சொல்லப்பட்டது மாத்ரமல்ல; ஐகசாஸ்த்ரோக்தியினால் ஆக்ஷிப்தமாகவுமிருக்கிறது.—என்று அபிப்ராயமுள்ளவராக 'லக்ஷ்யதி சேதி' எனச்சொல்லுகிறார். 'வ்ருத்தாத்' என்று தொடங்கி இருக்கிறதும், 'ஸம்ஹிதம்' என்கிற பதத்தை முதன்மையாகக்கொண்டிருப்பதும் வ்ருத்திக்ரந்தங்களின் காண்க. 'சாரீரகம்' ப்ரஹ்மமீமாம்ஸை, ஜகத்தை சரீரமாக உடையவன் பரமாத்மா சாரீரன்; "தஸ்யைஷ ஏவ ‡ சாரீர ஆத்மா" (அவனுக்கு இந்த சாரீரனே ஆத்மா) என்று ச்ருதி. அந்தசாரீரவிஷயத்தைப்பற்றிய சாஸ்த்ரம் சாரீரகம் என்று சொல்லப்படுகிறது. $ ஷோடசலக்ஷணை (பதினாறு அத்யாயங்களடங்கின பூர்வமீமாம்ஸையோடு) ஸம்ஹி

* வ்ருத்தி—போதாயநமஹர்ஷியால் செய்யப்பட்ட ப்ரஹ்மஸூத்ரவிவரணம்.

† ஸம்வாதம்—ஒற்றுமை.

‡ சாரீரன்—சேதநங்களையும், அசேதநங்களையும் சரீரமாகக்கொண்டிருப்பதால் பரமாத்மா சாரீரன்.

$ லக்ஷணம்—அத்யாயம்.

**தம்'** நியத ¶ பௌர்வாபர்யத்துடன் கூடின வ்யாக்யானிக்கத்தக்க வேதத்திற்கு வ்யாக்யான ரூபமாகயிருப்பதினால் ஸங்கதமென்று கருத்து. 'அர்த்தைகத்வாதேகம் வாக்யம்' (பொருள் ஒன்றாயிருப்பதால் வாக்யம் ஒன்று) என்கிற ந்யாயத்தாலே ப்ரதிபாத்யவஸ்து ஒன்றாக யிருப்பதால் வ்யாக்யானிக்கப்பட்ட வேதத்திற்கும் ஏகப்ரபந்தத்வம் உண்டாகும். வேதம் புருஷார்த்தபரமாகவும், ப்ரஹ்மபரமாகவாகவும் இருப்பதினால் அதுவும் உபபன்னமாகிறது. "ஸர்வே வேதா யத்பதமாமனந்தி" (எல்லா வேதங்களும் அடையத்தக்க எந்த ப்ரஹ்மத்தை சொல்லுகின்றதுகளோ) "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" (எல்லா வேதாங்களாலும் நானே அறியத்தக்கவன்) என்றன்றோ ச்ருதிஸ்ம்ருதிகள். வேதார்த்தவிசாரத்திற்குத்தகுந்ததாக இருப்பதால் மீமாம்ஸைக்கு ஏகப்ரபந்தத்வம், இந்த ஐகசாஸ்திரத்தினால் பூர்வவ்ருத்தத்வம் கர்மவிசாரத்திற்கு ஆக்ஷேபிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம்:—

கர்மப்ரஹ்மவிசாரங்களுக்கு ஐகசாஸ்த்ரயமிருக்குமேயாகில் அப்பொழுது க்ரந்தத்தின் தொடக்கத்தில் "அதாதோ வேதார்த்தஜிஜ்ஞாஸா" என்று ஸாதாரணமான அர்த்தம் ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கலாம். இவ்வண்ணம் ப்ரதிஜ்ஞை செய்யவில்லை. பூர்வபாகத்திற்கும் அஸாதாரணமான அர்த்தமே ப்ரதிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது—'அதாதோ தர்மஜிஜ்ஞாஸா' என்று. ஆகையால், ஐகசாஸ்த்ர்யம் இல்லை. இதற்கு பதில் சொல்லுகிறோம் "அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா" என்பதே இரண்டு பாகங்களுக்கும் ஸாதாரணமாக இருக்கும் அர்த்தத்தில் ப்ரதிஜ்ஞை. கர்மவிசாரமோவென்றால்,—ப்ரஹ்மமீமாம்ஸையின் மூன்றாவது அத்யாயத்தைச்சார்ந்த, நான்காவது பாதத்தில் சேர்ந்து விடுகிறது. எப்படி நிக்ரஹத்தில் உள்ளடங்கின *ச்சலம், ஜாதி இரண்டுக்கும் ஆஹ்நிகபேதத்தால் தனித்து உக்தியோ,—எப்படி நிக்ரஹத்தில் அந்தர்பூதங்களான ‡ஹேத்வாபாஸங்களுக்கு அத்யாயபேதத்தால் தனித்து உக்தியோ—அவ்வாறே ப்ரஹ்மவிசாரத்தில் உள்பட்டிருந்தபோதிலும் (கர்மாவை) வேறுபடுவது உபபன்னமாகிறது. பஹுக்ரந்தங்களால் ப்ரதிபாதிக்கத்தகுந்ததாக இருப்பதுபற்றி தனியாகப்பிரிக்கப்பட்டிருக்கிறது. அதிலும் முந்தி இருத்தலானது மேலே சொல்லப்போகிற உபஜீவ்ய, உபஜீவக பாவம்முதலிய ஹேதுக்களால் ஸித்திக்கிறது. இது சொல்லப்பட்டதாக ஆகிறது. அர்த்த க்ரமத்தால் ப்ரஹ்ம †மீமாம்ஸையில் மூன்றாவது அத்யாயத்தின் நான்காவது பாதத்தோடு கர்மவிசாரம் பொருந்துகிறது. ப்ரதிபத்திஸௌகர்யரூபமான க்ரமத்தால் கர்மவிசாரத்துக்கு பூர்வபாவம் ஸங்கதமாகிறது என்று. இவ்வண்ணமாவது ஸாதர்ம்ய §ஸமம் வைதர்ம்யஸமம் என்கிற இரண்டு ஜாதிகளையும் நிரூபித்ததனால் இரண்டையும் அனுஸரித்ததான ப்ரதிதர்மஸமம் எவ்வாறு அர்த்தஸித்தியோ இவ்வாறாக இரண்டு பாகங்களுக்கும் அசாதாரணங்களாக இருக்கிற அர்த்தவிஷயமான இரண்டு ப்ரதிக்ஞைகள் செய்யப்பட்டால் ஸாதாரணமான அர்த்தப்ரதிக்ஞை ஆர்த்தமாக ஸித்திபெறலாம்—ஸாதாரணமான அர்த்தம் ப்ரதிக்ஞை பண்ணப்பட்ட போதிலுங்கூட அஸாதாரணமான அர்த்தம்

¶ பௌர்வாபர்யம்—முன்பின்னாக இருத்தல்.

*ச்சலம் - அர்த்தாந்தராபிப்ராயத்தால் ப்ரயோகிக்கப்பட்டதற்கு வேறு அர்த்தத்தைக் கல்பித்து தூஷிப்பது. ஜாதி—அஸதுத்தரம்.

‡ஹேத்வாபாஸங்கள்—ஹேதுக்களைச்சேர்ந்த தோஷங்கள் அல்லது, துஷ்டஹேதுக்கள்,

†மீமாம்ஸா—வேதார்த்தவிசாரம். 'மாந்' தாது. ஸ்வார்த்தத்தில் 'ஸந்' ப்ரத்யயம்.

§ ஸமம்—ஜாதிதோஷத்தின் உட்பிரிவு.

தனித்தே ப்ரதிக்ஞை செய்யத்தக்கது. தர்மஜிஜ்ஞாஸை ப்ரதிக்ஞை செய்யப்பட்டிருந்தபோதிலும் ''அதாத: சேஷலக்ஷணம், அதாத: க்ரத்வர்த்தபுருஷார்த்தயோர்ஜிஜ்ஞாஸா'' என்கிற இது முதலிய இடங்களில் அஸாதாரணமாக இருக்கிற அர்த்தவிஷயகமான ப்ரதிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால், இரண்டு பாகங்களுக்கும் அஸாதாரணங்களாக இருக்கிற அர்த்தங்களின் ப்ரதிக்ஞையினால் அதையனுஸரித்திருக்கிற ஸாதாரணமான அர்த்தத்தின் ப்ரதிக்ஞையும் ஆர்த்தமாக ஆகலாமென்று முதலில் '' அதாதோ தர்மஜிஜ்ஞாஸா '' என்று ப்ரதிக்ஞை செய்யப்பட்டது. 'வேதார்த்தஜிஜ்ஞாஸா' என்று கூறப்படவில்லை. அல்லது, '' அதாதோ தர்மஜிஜ்ஞாஸா '' என்பதே ஸாதாரணமான ப்ரதிக்ஞை. அலௌகிகமாகவும், ச்ரேயஸ்ஸாதனமாகவும் இருப்பதல்லவோ தர்மம். அதை அனுஸரித்திருப்பதுப்ரதிபாதிக்கத்தக்கது. தர்மமோ ஸாத்யமென்றும், ஸித்தமென்றும் இருவகைப்பட்டிருக்கிறது. ஸித்தரூபமான வஸ்துவினிடத்தில் தர்மசப்தத்திற்கு ப்ரயோகம் மஹாபாரதத்தில் காணப்பட்டிருக்கிறது. எப்படியெனில்,-''யேச வேதவிதோ விப்ரா யே சாத்யாத்மவிதோ ஜனா: தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதனம்.'' (வேதார்த்தத்தையறிந்த அந்தணர்களும், வேதாந்தார்த்தத்தையறிந்த ஜனங்களும் மஹாத்மாவான விஷ்ணுவை சாசவதமான தர்மமென்று சொல்லுகிறார்கள்.) அவ்வண்ணமே ஜ்ஞானத்தினால் சிறப்புற்றவர்களாலும் 'அலௌகிகத்வே ஸதி ச்ரேயஸ்ஸாதனத்வம்'என்பதை ப்ரவ்ருத்திநிமித்தமாக எண்ணி ஸித்தரூபமான அர்த்தத்தில் தர்மசப்தம் ப்ரயோகிக்கப்பட்டது. ''த்ரவ்யம், க்ரியை, குணம், முதலியவைகளுக்கு தர்மத்வம் ஸ்தாபிக்கப்படப்போகிறது. அவைகள் இந்திரியங்களாலறியத்தக்கதாக இருந்தபோதிலும்கூட தர்மசப்த வாச்யங்கள். ஆனால் த்ரவ்யத்வாதிரூபத்தால் அவைகள் தர்மங்களாகா''. இது முதலியதில். அந்த இடத்தில் த்ரவ்யம் முதலியது இருந்தபோதிலும்கூட க்ரியையின் ப்ராதான்யத்தால் பூர்வபாகமானது ஸாத்யதர்மபரம். உபாஸனங்களும், அதற்கு அங்கங்களும் இருந்தபோதிலும் ப்ரஹ்மப்ரதானமானதால் மேல் பாகம் ஸித்ததர்மபரம். ஆகையால், இரண்டு பாகங்களின் விசாரத்திற்குப்பொதுவானது முதல் ப்ரதிக்ஞை. அதில் தர்மசப்தத்திற்கு ஸாத்யதர்மவிஷயமாக விசேஷப்ரஸித்தி இருப்பதாலும், புத்திஸ்தமாக இருப்பதாலும், அது பூர்வபாகத்தால் அறியப்பட்டபடியால் முதன்மை வாய்ந்திருப்பதாலும், தர்மஜிஜ்ஞாஸா பதத்தினாலேயோ, † தந்த்ரத்தினாலேயோ, அர்த்தத்தினாலேயோ ப்ரதிக்ஞாவிஷயத்வம் ஸபன்னமாதலாலும் § சோதனாஸூத்ரத்தில் அதின் லக்ஷணம் கூறப்பட்டது. ஸித்தரூபமான தர்மவிசேஷமானது சாதாரண ப்ரதிக்ஞையினாலேயே அர்த்தத்தினால் ப்ரதிக்ஞை பண்ணப்பட்டிருந்தபோதிலும் அதற்கு பஹுக்ரந்தங்களால் ¶ வ்யவதான மேற்பட்டிருப்பதாலும், சப்தத்தால் அது போதிக்கத்தகுந்ததாக ஆகாது என்கிற சங்கையை பரிகரிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினாலும், மீண்டும் ப்ரதிக்ஞை செய்யப்பட்டது. அதற்கு 'ஜன்மாதி' ஸூத்ரத்தில் லக்ஷணம் கூறப்பட்டிருப்பதால் ஐகசாஸ்த்ர்யம் தகுதியுள்ளதே.

---

† தந்த்ரம் - ஒரே சப்தத்தை அர்த்தங்களின் வேறுபாட்டைக்கருதி இருமுறை ஆவ்ருத்தி செய்து கொள்ளுதல்.

§ சோதனாஸூத்ரம் - ''சோதனாலக்ஷணோர்த்தோ தர்ம:'' என்று ஜைமினியின் பூர்வமீமாம்ஸையில் இரண்டாவது ஸூத்ரம்.

¶ வ்யவதானம் இடைவெளி அல்லது விலக்கம்.

(பூர்வபக்ஷம்.)

பூர்வபாகம் 'ஸாத்யதர்மப்ரதானம்' என்கிற சொல்லானது கீழ் உதாஹரிக்கப் பட்டிருக்கிற வசனத்தோடு விரோதிக்கிறது. அந்த பூர்வபாகத்திலும் ஸித்ததர்ம ரூபமான பரமபுருஷன் கர்மாக்களால் ஆராதிக்கத்தக்கவனாக இருப்பதுபற்றி ப்ரதான ப்ரதிபாத்யத்வம் அறியப்படுவதால், அந்த வசனத்தில் 'வேதவித்' என்கிற சப்தம் பூர்வ பாகத்தின் அறிவை உணர்த்துகிறது. † கோபலீவர்தந்யாயத்தால் "விஷ்ணுர்நாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே" (விஷ்ணு என்கிற ப்ரஸித்தி பெற்ற அந்த பரமபுருஷன் வேதங்களிலும், வேதாந்தங்களிலும் ப்ரதிபாதிக்கப்படுகிறான்.) என்கிற வசனத்தோடு அர்த்தத்தில் ஒன்றுபட்டிருப்பதாலும் அப்ரதானமாகவாவது கர்மாக்கள் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால் விரோதமில்லையென்று சொல்வது கூடாது. ஜைமினி மஹர்ஷிக்கு கர்மாக்களை ப்ரதானமாக ப்ரதிபாதிப்பதல்லவோ அபிமதம்,உங்களாலும் அவ்வாறே கூறப்பட்டிருப்பதால் உண்மைதான்.'ராஜபுருஷன்' என்கிற வ்யவஹாரத்தில் ராஜாவுக்கு எவ்வாறு தாத்பர்யகோசரத்வரூபப்ராதான்யமிருக்கிறதோ, அவ்வாறே, பரமாத்மாவுக்கு உள்ளபடி ப்ராதான்யமிருக்கிறது. ராஜபுருஷனுக்குப்போல, சாப்தமான ப்ராதான்யம் கர்மத்துக்கே. அது திரஸ்கரிக்கப்பட்டிருக்கவில்லை. ஏனெனில், அங்கே அதற்கு பரமாத்மாராதனரூபத்வம் அறியப்படாமையால் அந்த பரமபுருஷாராதன ஜ்ஞானம் அவசியம் ஸம்பாதிக்கத்தக்கதல்ல. கர்மாக்கள் கொஞ்சகாலத்தில் முடிவுள்ளதான ஸ்வர்கம் முதலிய பலத்தையே கொடுப்பவைகளென்கிற விவேகத்துக்கு பரதேவதாஜ்ஞானாபேக்ஷைவேண்டியதில்லையென்பது ச்ருதி ஸ்ம்ருதிகளால் அறியப்படுகிறது." யோ ஹ வா ஏததக்ஷரம் கார்க்ய விதித்வாஸ்மின் லோகே ஜுஹோதி யஜதே, தபஸ்தப்யதே, பஹூநி வர்ஷஸஹஸ்ராண்யந் தவதேவாஸ்ய தத் பவதி-அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தாச ப்ரபுரேவச, ந து மாமபி ஜானந்தி தத்வேநாதஶ்ச்யவந்திதே" (ஹே கார்க்ய, சாச்வதமான இந்த ப்ரஹ்மத்தை அறிந்து கொள்ளாமல் இவ்வுலகில் எவன் ஹோமம் செய்கிறானோ, யாகம் செய்கிறானோ, தவம் புரிகிறானோ) (நானே எல்லா யஜ்ஞங்களையும் அநுபவிப்பவன். நானே ப்ரபு அப்படி யாகாதிகளை அனுஷ்டிப்பவர்களில் எவர்கள் என்னை இந்த ஸ்வபாவமுள்ளவனென்று அறியார்களோ அவர்கள் உயர்பதம் பெற்றும் அதினின்று நழுவுகிறார்கள்) என்று. ஆதலால், அந்த ப்ரஹ்மஸ்வரூபமான, ஜ்ஞானநைரபேக்ஷ்யஸ்வரூபமான ப்ராதான்யம் கர்மங்களுக்கு இருக்கிறது. ஆகையால், பூர்வபாகத்தில் கர்மாக்களுக்கு முதலில் ப்ராதான்யம் அறியப்பட்டது. பிறகு அறியத்தக்கதான பரமாத்மாராதனரூபத்வமும் விருத்தமல்ல. ஆதலால், ப்ரதிஜ்ஞை உபபன்னமாவதால் சாஸ்த்ரங்கள்இரண்டுக்கும் ஐக்யம் பொருந்தும்.

ஆனால், ஜைமினிமஹர்ஷியினால் கர்மப்ரஹ்மமீமாம்ஸைகளுக்கு ஐகசாஸ்த்ர்யம் கூறப்படவில்லை. அப்படியிருந்தபோதிலும் அதை ஏற்றுக்கொண்டு அதோடு ஒரே சாஸ்த்ரமாக வ்யாஸமஹர்ஷியினால் ப்ரஹ்மஸூத்ரம் செய்யப்பட்டது யுக்தம். ஏனெ

---

† கோபலீவர்தந்யாயம்—கோவைக்கொண்டுவா, காளையையும் கொண்டுவா—என்கிற வ்யவஹாரத்தில் பலீவர்தமும் கோவானதால்—'காமாநய' என்கிற வசனத்தாலேயே பலீவர்தாநயனமும் ஸித்திக்கையில்,—'பலீவர்தஞ்சாநய' என்கிற வசனம் பயனற்றதாகிறது. அது பயன்படுவதற்கு ச்ருதி 'கோ' பதம் 'பலீவர்தேதரகோபரம்' என்று நிச்சயிக்கப்படுகிறது. இதுவும் ஸாமாந்யவிசேஷ ந்யாயத்தைச்சார்ந்ததே. இந்த இடத்தில் வையர்த்யபரிஹாரம் முக்யபலம். ஸாமாந்யவிசேஷந்யாயத்திலோ அந்யதாநுபபத்தியினால் விசேஷசாஸ்த்ரத்தால் ஸாமான்யசாஸ்த்ரத்துக்கு ஸங்கோசம் ஏற்படுத்தத்தக்கது.

னில்,—“அததர்த்ததயா க்லுப்தமபி யோக்யமபேக்ஷிதம் தாதர்த்யமர்ஹதி க்ராமே குல்பே பூர்வதடாகவத்” (க்ராமம் புதிதாக ஏற்படுத்தவேண்டியதாக இருந்தால் ஏற்கனவே முந்தி இருக்கிற தடாகத்தை அந்த க்ராமத்துக்கு உபயோகப்படுத்திக்கொள்வதுபோல், ப்ரஹ்மக் ஞானஸம்பாதனத்தை ப்ரயோஜனமாகக்கருதி ஜைமினியினல் செய்யப்படாமலிருந்த போதிலுங்கூட, ப்ரஹ்மக்ஞானம் கர்மாவை அபேக்ஷித்திருப்பதால் அதையும் இத்துடன் சேர்த்து ஒரே சாஸ்த்ரமெனக்கொள்வது பொருத்தமாகும். இவ்வாறு வக்தாவினுடைய கருத்தும், ஸம்பவமும் காட்டப்பட்டது.

பாஷ்யம்:—

𑌅𑌤𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌿𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌭𑍇𑌦𑍇𑌨 𑌷𑌟𑍍𑌕𑌭𑍇𑌦𑌃, 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌭𑍇𑌦𑌶𑍍𑌚 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑌯𑍋𑌰𑍍𑌭𑍇𑌦𑌃 । 𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 ‘𑌅𑌥𑌾𑌤𑍋 𑌧𑌰𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯 “𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌤𑍍 𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌤𑍍” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌨𑍍𑌤𑌂 𑌸𑌂𑌹𑌤𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 ॥

**ஆகையால், ப்ரதிபாதிக்க வேண்டுமென்று விரும்பப்பட்ட அர்த்தபேதத்தால் ¶ ஷட்கபேதம் போலும், அத்யாயபேதம் போலும், பூர்வோத்தரமீமாம்ஸைகளிரண்டுக்கும் பேதம். மீமாம் ஸாசாஸ்த்ரமானது—‘அதாதோ தர்மஜிஞாஸா’ என்று தொடங்கி ‘அநாவ்ருத்தி: சப்தாத், அநாவ்ருத்தி: சப்தாத்’ என்கிற ஸூத்ரம் வரை ஒருக முக்கினது பிக்கின்து என்பதற்கு நியாமகமான ஸம்பந்த விசேஷத்தால் க்ரமவிசேஷமுள்ளதாக அமைந்திருக்கிறது.**

ச்ருதப்ரகாஸிகை:—

சாரீரகசப்தத்தால் ஸூசிப்பிக்கப்பட்டிருக்கிற ப்ரதானமாய் ப்ரதிபாத்யமான வஸ்து பேதத்தாலும், ஜைமினீயசப்தத்தால் ஸூசிப்பிக்கப்பட்ட கர்த்ருபேதத்தாலும், அவ்விரண் டினலும் பலித்த ப்ரயோஜனபேதத்தாலும், அர்த்தவிரோததத்தாலும், இந்த ஐகசாஸ்த்ர்யம் கூடாது.—என்கிற சங்கையை **அத:** என்று தொடங்கி பரிஹரிக்கிருர்.

**அத: ப்ரதிபிபாதயிஷித** வ்ருத்திகாரால் சொல்லப்பட்ட ஏகவ்யாக்யேய வ்யாக்யானரூபஸம்பந்தத்தால் என்றுபொருள். ஷட்கபேதமும், பூர்வமீமாம்ஸையில் அத்யாயபேதமும், அங்கே மேலேயும் நிதர்சனர்த்தமாகக்காட்டப்பட்டது. அர்த்த பேதமில்லாவிடில் ஏகஷட்கமாகவாவது ஏகாத்யாயமாகவாவது இருக்கலாம். ஆதலால், அவயவி ஒன்று என்பது ஸித்தித்தபிறகு அவாந்தரங்களான அர்த்தங்களின் வேறு

¶ ஷட்கம்—ஆறு அத்யாயங்களடங்கிய க்ரந்தஸந்தர்பம். பூர்வமீமாம்ஸாசாஸ்த்ரத்தி லிருக்கிற பன்னிரண்டு அத்யாயங்களும் ஆறு அத்யாயங்கள் வீதம் இரண்டாகப்பிரிக்கப் பட்டிருக்கின்றன. முதல் ஆறு அத்யாயங்கள் அடங்கிய க்ரந்தஸந்தர்பம் ப்ரதமஷட் கம். இதை ப்ரக்ருதிஷட்கமெனக்கூறுவார்கள். இரண்டாவது, ஆறு அத்யாயங் களடங்கிய க்ரந்தஸந்தர்பம். த்விதீயஷட்கம். இதை விக்ருதிஷட்கம் என்பார்கள்.

பாடானது மஹாவாக்யத்தினுடைய ஏகத்வத்துக்கு விரோதியாகாது. எவ்வாறு பதார்த்த பேதங்கள் வாக்யார்த்தத்தின் ஏகத்வத்துக்கு விரோதியாகாதோ, அவ்வாறு என்று கருத்து. இதனால் ப்ரதிபாத்யபேதம் பரிஹரிக்கப்பட்டது. இரண்டு ஷட்கங்களில் சிந்திக்கப் பட்டிருக்கிற ப்ரக்ருதிவிக்ருதிகளுடைய ப்ரயோஜனபேதமான சாஸ்த்ரங்களுடைய வேறுபாட்டுக்குக்காரணமாகாததால் ப்ரயோஜனபேதமும் அர்த்தாத் பரிஹரிக்கப்பட்டது. இதனால் வருத்திகாந்தத்திலுள்ள 'ஷோடசலக்ஷண' சப்ததாத்பர்யமும் காட்டப்பட் டது. 'பூர்வோத்தரமீமாம்ஸா' சப்தத்தால் 'ஜைமினீய, சாரீரக' சப்தங்களும் விவரிக்கப் பட்டன. 'ப்ரதிபிபாதயிஷித' சப்தத்தால் அர்த்தவிரோதம் பரிஹரிக்கப்பட்டது. ப்ரதிபாதிப்பதற்கு இஷ்டப்பட்ட வஸ்துவன்றோ ப்ரதிபிபாதயிஷிதம். அது தாத்பர்யவிஷயமான அர்த்தம். விருத்தமாக ப்ரதீதிவிஷயமாகிற தேவதாநிராஸாதி களில் தாத்பர்யமில்லை என்று அபிப்ராயம்.

மேல் ஆக்ஷேபம்:—

இவ்விதம் எப்படி சொல்லக்கூடும்? வேதமானது யஜ்ஞாதிக்ரியாநுஷ்டானங்களை ப்ரயோஜனமாகக்கொண்டிருப்பதால் ஸித்தபரவாக்யங்களெல்லாம் அந்த க்ரியைகளுக்கு சேஷம் என்றல்லவோ ஸூத்ரகாரரால் கண்டோக்தமாய்க்கூறப்பட்டிருக்கிறது. அது விருத்தமாகவே ஆகிறது. ஆகையால், சாஸ்த்ரபேதம்.

இப்படியல்ல. "பதே ஜுஹோதி. ஆஹவநீயே ஜுஹோதி. ந ஹிம்ஸ்யாத். பசுமாலபேத." (காலடியில் ஹோமம் செய்கிறான். ஆஹவநீயாக்நியில் ஹோமம் செய் கிறான். ஒன்றையும் ஹிம்ஸிக்கக்கூடாது. பசுவை யக்ஞத்தில் கொல்லவேண்டும்.) என்பது போலவும்,—வ்யாகரணசாஸ்த்ரத்தில் "கர்மண்யண், ஆதோநுபஸர்கே க:" (கர்மகாரகன் உபபதமாயிருக்கையில் தாதுவின் மீது 'அ' என்ற விகுதி வருகிறது. ஆகா ரத்தை ஈற்றிலுடைய தாதுககளின்மீது 'க' என்கிற விகுதி ஏறுமானால் உபபதம்உபஸர்க மாயிருக்கக்கூடாது) என்பது போலவும்,—$ உத்ஸர்காபவாதந்யாயத்தால் சாஸ்த்ரங்களு டைய ஐக்யத்துக்கு விரோதமில்லை. பொதுவாக ஸித்தபரவாக்யங்களுக்கு க்ரியாசேஷத் வம் சொல்லப்பட்டிருந்தால், ஸித்தபரவாக்யசேஷத்துக்கு விதிசேஷத்வம் உண்டா? இல்லையா?—என்று விசாரித்து, ஸ்வயம் புருஷார்த்தமாகயிராத ஸித்தபரவாக்யங்களே க்ரியாசேஷங்கள்.—ஸ்வயம் புருஷார்த்தமாக பர்யவஸிக்கிற ஸித்தபரவாக்யங்கள் அந்த க்ரியைக்கு சேஷமாக ஆகா—என்று நிர்ணயிப்பதன்றோ யுக்தம். எப்படி, ஹோமம் ஸாமாந்யமாக ஆஹவநீயத்தில் செய்யத்தக்கதென்று ஏற்பட்டிருந்தாலும், 'ஹோமவிசேஷ மான குதிரையின் காலடியில்'—என்று நிச்சயிக்கப்படுகிறதோ, எப்படி, ஸாமாந்யமாய் ஹிம்ஸாநிஷேதம் இருந்தபோதிலும்கூட, ஹிம்ஸாவிசேஷம் செய்யலாம் என்று சொல் லப்படுகிறதோ,—எப்படி ஸாமாந்யமாய் கர்மகாரகன் உபபதமாயிருந்தால் 'அண்' ப்ரத் யயம் வருவதாயிருக்கையில், ஆகாராந்ததாதுக்களைக்காட்டிலும கப்ரத்யயவிதியோ,— அங்கு சாஸ்த்ரபேதமில்லையோ—அப்படியே இவ்விடத்திலும் அபேதம்கொள்ளத்தக்கது.

தேவதாநிராஸத்திலும் தாத்பர்யம் கிடையாது. வேதாந்தம் கேளாதவர்களுக்கு கர்மாவில் ஏற்படும் அச்ரத்தையைத்தடுப்பதற்காக அது கர்மப்ராதாந்யத்தை ப்ரதிபாதிக் கிறது. "நஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே. அபிது நிந்திதாதிதரத் ப்ரசம்ஸி

$ உத்ஸர்கம் - பொதுவான விதி. அபவாதம் - விசேஷவிதி. "பரிஹ்ருத்யாத் வாததோஷாந் தத உத்ஸர்கோபிநிவிசதே" என்கிற வசனத்தின்படி அபவாத சாஸ்த்ரத் தின் ப்ரவ்ருத்திக்குத் தகுந்த லக்ஷ்யத்தை விட்டு மற்றைய லக்ஷ்யங்களில் உத்ஸர்கசாஸ் த்ரம் நிலைபெறுகிறது.

தும்" (நிந்தையானது நிந்திக்கத்தகுந்த வஸ்துவை நிந்திப்பதற்காகவே ப்ரவ்ருத்திப்பதில்லை. ஆனால், நிந்திக்கத்தகுந்ததைவிட வேறு வஸ்துவின் மேன்மையை வெளியிடுவதற்காக.) என்று ந்யாயமறிந்தவர்கள் சொல்லுகின்றனர். அல்லது, வேதப்ராமண்யத்திலும் கர்மாக்கள் அவச்யம் செய்யத்தகுந்தவை—என்பதிலும் தாத்பர்யமிருப்பதால் 'தேவதையில்லை' என்று சொன்னது கர்மவிரோதிகளை நிராகரிக்க வேண்டுமென்கிற எண்ணத்தால் * அந்வாருஹ்யவாதமாயிருக்கலாம். தன்னுடைய அதிகமான அபிமானத்திற்கு விஷயமாயிருப்பதை அநாதரித்துங்கூட சத்ருநிராகரணம் காணப்படுகிறது. எப்படியென்றால், "அபீஷ்டார்த்தவ்யயேநாபி ஜய்தி க்ஷேத்ரஹாரிணம்—லப்தக்ஷேத்ரைர்ந துஷ்ப்ராப: ஸ்யாதர்த்த இதி நிச்சயாத்." (ப்ரியமான பொருளைச்செலவுசெய்தாவது தன்நிலத்தை அபகரித்தவனை ந்யாயஸ்தலத்தில் ஜயிக்கிறான்,—நிலம் கிடைத்தால் பொருளையடைவது வருத்தமல்ல என்கிற நிச்சயத்தால்.) இவ்விதமே, அபிமததரனை ஈச்வரனை நிராகரித்தாவது வேதப்ராமாண்யஸமர்த்தநம் செய்தால் பிறகு அபிமத ஸித்தி ப்ரயத்னமின்றியே அடையப்படும்—என்று ஜைமிநியின் அபிப்ராயம். அதன் ஸித்திப்ரகாரமும் அவராலேயே சொல்லப்பட்ட † 'ராத்ரிஸத்ரந்யாயம்' முதலியவற்றைச் சார்ந்ததென்று மேலே வ்யக்தமாகும். அதன் ஸித்தியை ஒப்புக்கொண்டமாத்ரத்தினாலேயே அதன் அநாதரவாதத்திற்கு விரோதம் ஒன்றுமில்லை,—அது அந்வாரோஹித்து செய்யப்பட்டிருப்பதால்.

அது எப்படி அந்வாருஹ்யவாதமென்று நிச்சயிக்கப்படுகிறதெனில், பதில் சொல்லுகிறோம்.

"ஸம்பதத்ரேதி ஜைமிநி:, அந்யார்த்தம் து ஜைமிநி:, பரம் ஜைமிநிர்முக்யத்வாத். ப்ராஹ்மேண ஜைமிநி:" இது முதலிய ப்ரஹ்மஸூத்ரங்களாலேயே ப்ரஹ்மஸ்வரூபம், அதன் குணம், அதன் உபாஸநம், அவற்றின் பலம், முதலியவற்றின் அங்கீகாரம் ஜைமிநிக்கு இருப்பதாக அறியப்படுவதாலும்,—மஹாபாரதத்திலும், ஜஹயக்ரீவ உபாக்யானாதிகளில் பகவானை வ்யாஸருடைய உபதேசத்தால் அடையப்பட்ட பரமாத்மஜ்ஞானமுள்ளதாக அறியப்படுவதாலும்,—இக்காரணங்களாலே விருத்தமான அர்த்தத்தில் தாத்பர்யமில்லாமையால் அர்த்தவிரோதமில்லை.

மேலும், அர்த்தவிசேஷம் எவ்விதத்திலும் பரிஹரிக்கமுடியாது. ஏனென்றால், விசேஷா * திதேசங்களை நிரூபிப்பதில் நோக்கமுள்ள 8-வது அத்யாயத்தில்—§ விக்ருதிகளில் ‡ ப்ரக்ருதிதர்மாதிதேசம் செய்யத்தக்கதாக ஏற்படும் ஸந்தர்பத்தில்—எந்த கர்மா

---

* அந்வாருஹ்யவாதம்—விரோதிகளை நிக்ரஹிப்பதற்காக விஷயத்தை அபிமதம் போல் சொல்லுதல்.

† ராத்ரிஸத்ரந்யாயம்,—'ப்ரதிஷ்டையில் விருப்பமுள்ளவன் ராத்ரிஸத்ரத்தை அனுஷ்டிக்கக்கடவன் என்று' ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. அர்த்தவாதமெல்லாம் ச்ருதியின் அர்த்தத்தை ஸ்துப்பதிலேயே தாத்பர்யமுள்ளதாயிருந்தபோதிலும் இங்கு ராத்ரிஸத்ரத்துக்கு ப்ரதிஷ்டை பலமாகவும் ஆகிறது.

* அதிதேசம் - ஏற்கனவே ஓரிடத்தில் சொல்லியிருப்பதை மற்றொரு இடத்தில் ஏறிடுதல்.

§ விக்ருதி - அதிதிச்யமான தர்மவதீ—அதாவது, அதிதேசிக்கப்பட்ட தர்மத்துடன் கூடியது.

‡ ப்ரக்ருதி - அதிதேசாங்கப்ரயோஜநதர்மவதீ—அதாவது, அதிதேசத்துக்கு ப்ரயோஜனமான தர்மத்தையுடையது.

வில் எந்த கர்மத்தினுடைய தர்மாதிதேசம் செய்யவேண்டும் என்று அபேக்ஷிக்கையில்,— எந்த கர்மாவுக்கு எந்த கர்மாவோடு த்ரவ்யஸாம்யமோ, தேவதாஸாம்யமோ இருக்கிறதோ, அதில் அந்த தர்மம் அதிதேசிக்கத்தக்கதென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்த இடத்தில் எந்த கர்மாவுக்கு ஒரு கர்மாவோடு த்ரவ்யஸாம்யமும், மற்றொன்றோடு தேவதாஸாம்யமும இருக்கிறதோ, அந்த தர்மமே அதிதேசிக்கப்படவேண்டும். தேவதாஸாம்யமுள்ள கர்மாவின் தர்மம் அதிதேசிக்கத்தக்கதல்ல—என்று ஜைமினி மஹர்ஷியினால் "த்ரவ்யதேவதாஸாம்யே த்ரவ்யம் பலீய:" (த்ரவ்யஸாம்யமும் தேவதாஸாம்யமும் வந்தால் த்ரவ்யஸாம்யம் ப்ரபலம்.) த்ரவ்யப்ரதானம் சொல்லப்பட்டது.

த்ரவ்யம் ப்ரதானமென்று சொன்னது அதிவதாமல்ல. ஏனென்றால் அனுஷ்டான விரோதம் ஏற்படுவதால். த்ரவ்யப்ராதான்யத்தாலன்றோ அனுஷ்டானம் காணப்படுகிறது. ஆகையால், த்ரவ்யத்துக்கு ப்ராதான்யம் சொல்லுகிற ஜைமினிக்கு தேவதாநிராஸத்தில் தாத்பர்யமுண்டு.

இவ்விஷயத்தில் ஸமாதானம் சொல்லுகிறோம்.

ஸத்பாவாஸத்பாவங்களால் த்ரவ்யதேவதைகளுடைய ப்ராதான்யாப்ராதான்யங்கள் சொல்ல உத்தேசிக்கப்படவில்லை. ஆனால் விளம்பித்தும், விளம்பமின்றியும் ப்ரவ்ருத்திக்கிற ப்ரமாணங்களுக்கு விஷயமாக இருப்பதுதான் உத்தேச்யம். த்ரவ்யமோ அவிளம்பிதப்ரத்யக்ஷத்தால் அறியத்தகுந்தது. தேவதையோவென்றால், விளம்பிதமான சாஸ்த்ரத்தினால் அறியத்தகுந்தது. விளம்பாவிளம்பங்களே ச்ருதிலிங்கம் முதலியவற்றிலும், ப்ரத்யக்ஷாநுமானாதிகளிலும், முன்பின்னிருப்பவைகளுக்கு ப்ராபல்யத்திலும் காரணங்கள்.

ஹவிஸாக இருக்கும் தன்மை சாஸ்த்ரத்தினாலேயே அறியத்தகுந்ததாதலால் த்ரவ்யத்துக்கும் ப்ராதான்யம் இல்லை யென்றால்,—

இப்படியல்ல. † சரு ‡ புரோடாசம் முதலிய த்ரவ்யமன்றோ ப்ரத்யக்ஷமாகக்கண்டறியப்படுகிறது. அதில் ஹவிஷ்ட்வம் என்கிற தர்மம் மாத்ரமே சாஸ்த்ரத்தால் அறியத்தகுந்தது. தேவதைக்கு மாத்ரம் ஸ்வரூபம், ச்ரேயஸ்ஸாதனத்வம், முதலிய தர்மம்— இவ்விரண்டும் சாஸ்த்ரத்தினால் அறியத்தக்கது. ஆகவே, ஸ்வரூபத்தாலும், க்ரமத்தாலும், விளம்பமுள்ள ப்ரமாணத்தால் அறியத்தகுந்ததாயிருப்பதால், தேவதைக்கு அப்ராதான்யம். தர்மமாத்ரம் சாஸ்த்ரத்தால் அறியத்தககதாயிருந்தபோதிலும், தர்மிரூபமான அம்சத்தினால் அவிளம்பிதமான ப்ரமாணத்தால் அறியத்தக்கதாயிருப்பதால் ஹவிஸுக்கு ப்ராதான்யம். ஆகவே, ப்ராதான்யாப்ராதான்யங்கள் ப்ரமாணத்தை த்வாரமாகக்கொண்டிருப்பதால் ஸ்வரூபத்தின் அஸத்தையில் (இன்மையில்) தாத்பர்யமில்லாததுபற்றி தேவதாநிராஸவசனம் வேறு விஷயத்தில் நோக்குள்ளது. இவ்விதம், வேறு அர்த்தங்களும் நிரூபணம் செய்ய முடியுமாதலால் அர்த்தவிரோதமில்லை.

ப்ரஹ்மஸூத்ரங்களாலேயே ஜைமினியின் பக்ஷம் அநுவதித்து நிராகரிக்கப்பட்டிருப்பதால் எவ்விதத்தாலும் பரிஹரிக்கமுடியாது. எப்படியெனில், "பலமத உபபத்தே:" என்கிற ஸூத்ரத்தில் ஈச்வரன் கர்மபலன்களைக்கொடுப்பவன் என்பதால், "தர்மம் ஜைமி

† சரு—ஹோமஸாதனமாக இருப்பதும், மந்த்ரத்தினால் பரிசுத்தமுமான சால்யன்னம் முதலியது.

‡ புரோடாசம்—தேவதோத்தேசமாக ஸம்ஸ்கரிக்கப்பட்ட நெய்கலந்த மாவு.

நிரத ஏவ' என்கிற ஸூத்ரத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டுள்ள தர்மம் பலப்ரதம் என்றவிஷயம் அநுவதித்து நிராகரிக்கப்பட்டிருக்கிறது.

அப்படியல்ல. ச்ருதியினால் சொல்லப்பட்டிருத்தல், உபபத்தி,—இவ்விரண்டாலும் ஒரு காலவிசேஷத்தில் வரப்போகிற பலன்களுக்கு ஸாதனம் மாத்ரம் ஜைமினியால் சொல்லப்படவே அவ்விரண்டினாலேயே இங்கு பலஸாதனவிசேஷஸித்தி சொல்லப்பட்டிருப்பதால் ஆக்ஷேபம் சரியல்ல.

“சேஷத்வாத் புருஷார்த்தவாதோயதா“ “அந்யார்த்தம் து ஜைமினி:” என்கிற ஸூத்ரத்தில் வேதாந்தத்தினால் சொல்லப்பட்ட ஆத்மஜ்ஞானம் கர்மசேஷமாதலால் ஆத்மாக்களுக்கு கர்மசேஷத்வம் சொன்னது “அதிகோபதேசாத்” என்கிற ஸூத்ராந்தரத்தோடு விரோதப்படுகிறது. விகல்பத்தால் விரோதம் ஸம்பவிக்காது. ஏனெனில், வஸ்துவிகல்பம் கூடாது. ஜைமினியால் அந்யபதம் உபந்யஸிக்கப்பட்டதென்று சொல்லவுங்கூடாது. ஜைமினிமதமாயிருப்பதால் ஸித்தாந்தியால் நிராகரிக்க முடியாததலால் விரோதம்.

இப்படியல்ல. சத்ருவின் நிராஸத்தை பலமாகக்கொண்டிருக்கிற ஜைமினியின் அந்வாருஹ்யவாதத்திற்கு அவ்விதம் உபந்யாஸமும், நிராஸமும் பொருந்தலாம். அப்படியில்லாவிடில், “பரம் ஜைமினி:” இது முதலிய ஸூத்ரங்களுக்கு ஒன்றோடொன்று விரோதமும், பாரதவசனவிரோதமும் வரும். ஜைமினியின் அந்வாருஹ்யவாதத்தைத் தெரிந்துகொள்ளாதவர்களுக்குத்தான் அவர் சொல்லிய விஷயத்தில் தத்வபுத்தி உண்டாகுமென்று அதைத்தடுப்பதற்காக ப்ரஹ்மஸூத்ரத்தில் அதன் உபந்யாஸநிராஸங்கள் இரண்டும் செய்யப்பட்டன. ஆகையால் தான், “பராமர்சம் ஜைமினி:” என்கிற ஸூத்ரத்தில் நைஷ்டிகம் முதலிய †ஆச்ரமங்களின் நிராகரணமும் பரிஹரிக்கப்பட்டது. ஏனெனில், “தத்பூதஸ்ய” என்கிற ஸூத்ரத்தில் நைஷ்டிகன் முதலியவர்களுக்கு ஆச்ரமப்ரம்சமானது ஜைமினிக்கு அநபிமதம் என்று சொல்லியிருப்பதால். ஆச்ரமமே அநபிமதமானால் அதிலிருந்து ப்ரம்சமும் அநபிமதம் என்று சொல்லமுடியாது. ஆகையால், வீராகனைத் தவிர மற்றவர்களுக்கு அக்நிஹோத்ரம் முதலியவற்றைத்தடுப்பதற்காக ஆச்ரமாந்தரங்களைத்தடுத்ததும் முன்போல் அந்வாருஹ்யவாதம். அதுவும் பூர்வமீமாம்ஸையில் ஸூத்ரத்தால் சொல்லப்படவில்லை. ஆனாலும் ‘ஔடுலோமி' முதலியவர்களின் மதம்போல் அநுவதித்து நிராகரிக்கப்பட்டிருக்கிறது.

---

† ஆச்ரமங்கள் – ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வாநப்ரஸ்தம், ஸந்யாஸம்—என நான்கு வகைப்படும். இந்நான்கும ப்ராஹ்மணன் ஒருவனுக்கே. க்ஷத்ரியனுக்கும், வைச்யனுக்கும்—ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வாநப்ரஸ்தம் இம்மூன்றுதான். ப்ரஹ்மசாரிகள்—ஸாவித்ரன், ப்ராஜாபத்யன், ஸௌம்யன், ஆக்நேயன், வைச்வதேவன், உபகுர்வாணன் நைஷ்டிகன்—என ஏழுவகைப்படுகிறார்கள். உபநயனமானபிறகு அத்யாயோபாகர்மா வரையில் ஸாவித்ரீமந்த்ரத்தை மாத்ரம் உச்சரிக்க அதிகாரமுள்ளவனாதலால், ஸாவித்ரன். நியமாத்யயனகாலத்தில் ப்ராஜாபத்யம் முதலிய நான்கு காண்டங்களை க்ரமமாய் அத்யயநம் செய்கையில் அந்தந்தக்காண்டஸம்பந்தமாய் ப்ராஜாபத்யன், ஸௌம்யன், ஆக்நேயன், வைச்வதேவன், என்று ப்ரஹ்மசாரிக்குப்பெயர். குருகுலத்தில் வேதாத்யயனத்தையும், வேதவ்ரதத்தையும் விதிப்படி அநுஷ்டித்து முடித்தபிறகு, ஆசார்யன் கோரினபடி குருதக்ஷிணை ஸமர்ப்பித்து, ஸ்நாதகவ்ரதத்தையும் முடித்து க்ருஹஸ்தாச்ரமத்துக்கு வருபவன் உபகுர்வாணப்ரஹ்மசாரி. உயிருள்ளவரையில் ப்ரஹ்மசர்யவ்ரதத்தோடு குருகுலத்திலேயே இருந்து முக்தியடைபவன் நைஷ்டிகன்.

ஆனால், மதுவித்யையில் வஸ்வாதிகளுக்கு அதிகாரமில்லையென்று சொன்னது அதிகாரத்தைச்சொல்லும் வார்த்தையோடு இது விரோதப்படுகிறதே என்று சொல்லக் கூடாது. அதிகாரோக்தியானது வஸ்வாதிதேவதாங்கீகாரத்துக்கு அடையாளமாதலால் சாஸ்த்ரங்களின் ஐக்யத்துக்கு விரோதமில்லாமையால் அதை வெளிப்படுத்துவதில் ப்ரயோஜனமில்லை. "ஸாவம் ஜைமிநி:" என்ற ஸூத்ரத்தில் சொன்ன பக்ஷங்களும் சாஸ்த்ர ஐக்யத்துக்கு விரோதமில்லாதவைகள். கூபவிசாரத்தில் அவைகளுக்கு ஸமர்த்தனமில்லாதலால் அந்தக்கேள்விக்கே அவகாசமில்லை. ஆகவே, அர்த்தவிரோதம் கிடையாது. கர்த்ருபேதபரிஹாரம் ப்ரவித்தமாயிருப்பதால் சப்தத்தால் சொல்லப்படவில்லை. அதனால் தான் சப்தத்தால் ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது. தூர்த்ஸ்வாமி, கபர்தி இவ்விருவரும் செய்த ஆபஸ்தம்பஸூத்ரவ்யாக்யானத்துக்கு வ்யாக்யானம் செய்யத்தகுந்த க்ரந்தத்தின் ஐக்யத்தினால் ஏகப்ரபந்தத்வம் காணப்படுகிறதன்றோ ! பாணினீஸூத்ரங்களுக்கு $ வாமனன், ஜயாதித்யன் என்கிற இரண்டு பண்டிதர்களால் செய்யப்பட்டு முன்பின்னாக அமைந்திருக்கிற இரண்டு வ்ருத்தி க்ரந்தங்களுக்கும் வ்யாக்யேயங்களின் ஐக்யத்தால் ஏக வ்யாக்யானத்வம் காணப்படுகிறது. ஆகையால், ஐகசாஸ்த்ர்யம் உபபன்னம.

ஒரே சாஸ்த்ரம் என்பது இருக்கட்டும். பௌர்வபர்யநியமம் எப்படி? என்கிற ஸந்தேஹத்தைப்பரிஹரிப்பதற்காக வ்ருத்திக்ரந்தத்திலிருக்கிற ¶ 'ஸம்ஹிதம்' என்றபதத்தை "மீமாம்ஸா"—என்று தொடங்கி ஸ்ரீபாஷ்யகாரர் விவரிக்கிறார்.

க்ரமவிசேஷத்தோடு கூடிய ஐகசாஸ்த்ர்யம் 'ஸம்ஹிதம்' என்ற பதத்தினால் கருதப்பட்டிருக்கிறது. 'ஆரப்ய, ஏவமந்தம்' (இது தொடங்கி இதுவரையில்) என்பதினால் பௌர்வஷர்யநியமம் சொல்லப்பட்டது. 'ஸங்கதிவிசேஷண'—இந்தப்பதத்தால், பாடக்ரமம்,—சேதநர்களுக்கு தர்மார்த்தகாமங்களில் முதலில் ப்ரவ்ருத்தி உண்டாகும் அர்த்தஸ்வபாவம்,—உபநிஷத்துகளில் அங்காங்கிபாவத்தை ப்ரதிபாதிக்கிற வாக்யங்களில் யக்ஞம் முதலிய கர்மாக்களுக்கு பதார்த்தபாவத்தால் ஸம்பந்தம்,—சில வித்யைகளில் யக்ஞங்களையும், அவற்றின் உபகரணம் முதலியவைகளையும், த்ருஷ்டவிசேஷங்களாகக் கூறுதல்,—கர்மப்ரஹ்மவிசாரங்களுக்கு த்ருஷ்டாந்ததார்ஷ்டாந்திகஸாவம்,—வித்யைக்கும், கர்மாவுக்கும் § உத்பாத்யோத்பாதகஸாவமிருப்பதால் அவைகளுக்கு சேஷமான விசாரங்களும் அந்தக்ரமத்தையே அநுஸரித்திருக்க வேண்டுமென்கிற உபபத்தியும்,—வேதவ்யாக்யானமாயுள்ள மீமாம்ஸையில் உத்தரபாகத்துக்கு பூர்வபாகத்தில் சொல்லப்பட்ட ந்யாயங்களை அபேக்ஷித்தல்,—என்பதும 'ஸங்கதிவிசேஷண' என்ற பதத்தால் அபிப்பிராயங்கொள்ளப்பட்டன. இவ்வாறான பௌர்வாபர்யநியாமகஸங்கதிவிசேஷத்தோடு "விசிஷ்டக்ரமம்" க்ரம விசேஷமுள்ளது—என்று அர்த்தம்.

வேதப்ராமாண்யம் ஸித்திப்பதற்காக முதல் அத்யாயம் முந்தியிருக்கட்டும். இரண்டாவது அத்யாயத்துக்கு முன் ப்ரஹ்மவிசாரம் ஏன் இருக்கக்கூடாது ?

கூடாது. அங்கங்கே சொன்ன ஸங்கதிவிசேஷங்களால் பதினாறு அத்யாயங்களுக்கும் வரிசைக்ரமம் ஸித்திப்பதாலும், ப்ரஹ்மவிசாரம் அதற்குப்பின் வருவதாலும் இதை

$ வாமனன், ஜயாதித்யன்—இவ்விருவரும் ஜைனர்கள். பாணினீ செய்த வ்யாகர்ண-அஷ்டாத்யாயிக்கு ஸூத்ரக்ரமமாக 'காசிகாவ்ருத்தி' என்னும் க்ரந்தத்தை இவ்விருவரும் செய்தார்கள்.

¶ ஸம்ஹிதம் - ஸங்கதம். இசைக்கப்பட்டிருப்பது.

§ உத்பாத்யம் - உண்டுபண்ணத்தகுந்த கார்யம். உத்பாதகம்-ஹேது.

அபிப்ராயப்பட்டு "ஸங்கதிவிசேஷேண விசிஷ்டக்ரமட்" என்று சொன்னர். இவ்விதம் ஜகசாஸ்த்ர்யம், பௌர்வாபர்யநியமம், சாஸ்த்ரத்துக்கு ஆரம்பிக்கவேண்டிய யோக்யதை, ஆகிய இம்மூன்றும் ப்ரதிக்ஞை செயயப்பட்டது.

பாஷ்யம்:—

ததா ஹி — வ்ருத்திகாரஸ் 'ஸ்வாத்யாயோऽத்யேதவ்ய:' (யஜு-ஆர ௨. ௧௫) இத்யனேனைவ ஸ்வாத்யாயஶப்தவாச்யவேதாக்ய அக்ஷரராஶேர் க்ரஹணம் விதீயதே। தச்ச க்ரஹணம் கிம்ரூபம்? கதம் ச கர்தவ்யம்? — இத்யபேக்ஷாயாம், — "அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணமுபனயீத, தமத்யாபயீத" (ஶத-ப்ரா) இத்யனேன,

"ஶ்ராவண்யாம் ப்ரௌஷ்டபத்யாம் வா உபாக்ருத்ய யதாவிதி।
யுக்தஶ்சந்தாம்ஸ்யதீயீத மாஸாந் விப்ரோऽர்தபஞ்சமாந்"
(மநுஸ்ம்ரு. ௪. ௯௫) இத்யாதிவ்ரதநியமவிஶேஷோபதேஶைரபேக்ஷிதாநி விதீயந்தே.

அவ்விதமே முதன்முதல் "வேதம் அத்யயநம் செய்யவேண்டும்" என்கிற விதியினுல் அத்யயநத்தினுலேயே ஸ்வாத்யாயசப்தத்தால் சொல்லத்தகுந்த வேதமென்கிற அக்ஷரராசிகளின் க்ரஹணம் விதிக்கப்படுகிறது. அந்த அத்யயநமும், எவ்விதம்?—எப்படிச்செய்யவேண்டும்?—என்கிற அபேக்ஷையில் 'எட்டு வயதுள்ள ப்ராஹ்மணனுக்கு உபநயனம் செய்து வேதத்தை அத்யயநம் செய்து வைக்கவேண்டும்' என்கிற விதியிருப்பதால் ச்ராவண-மாதத்தின் பௌர்ணமாஸியிலாவது, ப்ரோஷ்டபதிமாதத்தின் பௌர்ணமாஸியிலாவது விதிப்படி வேதாரம்பம்செய்து ப்ராஹ்மணன் நியமத்துடன் நாலரை மாதம் அத்யயனம் செய்யவேண்டும்" என்று இது முதலிய வ்ரதநியமவிசேஷோபதேசங்களால் அபேக்ஷிக்கப்பட்டவைகள் விதிக்கப்படுகின்றன.

ச்ருதப்ரகாசிகை:—

முன் சொல்லப்பட்ட அங்கங்களோடும், சிரஸோடும் கூடிய வேதாத்யயனத்துக்கு ப்ரமாணத்தையும், ஸாதனசதுஷ்டயத்தை எடுத்துரைப்பதற்கு ஸமயமில்லாத்தையும் காண்பித்துக்கொண்டு ப்ரதிக்ஞை செய்யப்பட்ட மூன்று அர்த்தங்களையும் உபபாதிப்பதற்காக 'ததாஹி' என்று சொல்லுகிருர்.

ப்ரதிக்ஞை செய்த மூன்று அர்த்தங்களையும் உபபாதிப்பதற்காக 'ப்ரதமம்' என்று அத்யயனவிதியை நிரூபிக்கிருர்.

வேதப்ராமாண்யஸமர்த்தநம் போல கர்மவிசாரத்தால் ஸித்தித்த அத்யயனவிதிநிரூபணம் ஏன் ஆச்ரயிக்கப்படுகிறதில்லை?—என்ருல்,

அப்படியல்ல, ஏனெனில், பின் காலத்திலிருந்த வ்யாக்யாதாக்களால் அவ்விடத்தில் அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. அக்ஷரராசிக்ரஹணபர்யந்தத்வம் தான் ஸ்ரீவ்யாஸபகவானுக்கு அபிமதம்—ஏனெனில், "அத்யயனம் மாத்ரமுள்ளவனுக்கு" என்றல்லவோ மேலே சொல்லுகிறார்! ஆகையால், அங்கே சொல்லப்போகிற அர்த்தமானது சாஸ்த்ரம் 'ஆரம்பிக்கத்தகுந்தது' என்பதற்காக இங்கே ப்ரதிபாதிக்கப்படுகிறது. அத்யயனவிதிக்கு அக்ஷரராசிக்ரஹணமாத்ரபர்யந்தத்வம் நிரூபிக்கப்பட்டால் சாஸ்த்ராரம்பணீயத்வம் ஸித்திக்கிறது. முழுவதும் விஷயமென்று நிரூபிக்கப்பட்டால் ஐகசாஸ்த்யமும், பௌர்வாபர்யநியமமும் ஸித்திக்கிறது:

அக்ஷரக்ரஹணமாத்ரத்தை அத்யயநசப்தம் சொல்லுமேயாகில் எவ்வாறு ஆரம்பணீயத்வம்? — எனில், இவ்வாறாக:—அத்யயநவிதிக்கு அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் ஏற்பட்டால், அர்த்தஜ்ஞானத்துக்கு "அதீத்ய ஸ்நாயாத்" (அத்யயநம் செய்து § ஸ்நாதக வ்ரதம் அனுஷ்டிக்கவேண்டும்) "ஆசார்யகுலாத் வேதமதீத்ய அபிஸமாவ்ருத்ய" (ஆசார்ய க்ருஹத்தினின்று வேதாத்யயநஞ் செய்து ஸமாவர்த்தநஞ் செய்து) என்று யக்ஞாதி, கர்மானுஷ்டானத்துக்கு சேஷமாக விநியோகமிருப்பதால், உபநிஷத்துகளில் ஸித்தமான ப்ரஹ்மஜ்ஞானத்துக்குங்கூட கர்மசேஷத்வம் வரவேண்டியதாகும். அந்த ஜ்ஞானத்துக்கு "ஆத்மாவா இதம்" (இந்த ப்ரபஞ்சம் ஆத்மாவே) "ப்ரஹ்ம வா இதம்" (இந்த உலகம் ப்ரஹ்மமே) "அயமாத்மா ப்ரஹ்ம" (இந்த ஆத்மா ப்ரஹ்மம்) இது முதலான வேதாந்தத்திலிருக்கிற ப்ரஹ்மசப்தம் ஆத்மபர்யாயமாதலால் ஆத்மஜ்ஞானத்திற்கு ஆத்மவிஷயத்வம் இருப்பதால், வ்ரீஹி முதலியவற்றின் வாயிலாக ப்ரோக்ஷணம் முதலியவற்றுக்குப்போல, த்வாரபூத ஆத்மாவுக்கும் கர்மசேஷத்வம் ஏற்பட வேண்டியதாக ஆகும்.

ஸமுத்ரம் முதலியவற்றின் த்யானம் போல, ஆத்மஜ்ஞானத்துக்கும் அத்ருஷ்டம் முதலியவற்றின் வாயிலாக கர்மசேஷத்வம் இருப்பதால், ஸமுத்ரம்போல ஆத்மா கர்மசேஷமல்ல என்று சொல்லக்கூடாது.—ஏனென்றால், கர்மசேஷமாக ஏற்பட்டிருக்கிற ஆத்மாவுக்கு த்வாரபாவம் ஸம்பவிப்பதாக இருக்கையில் அத்ருஷ்டகல்பநம் கூடாததலால். ஸமுத்ரத்துக்கு யக்ஞோபகாரகத்வம் ஸம்பவியாமையாலல்லவோ அத்ருஷ்டகல்பனம்.

ஆத்மாவுக்கு பலத்தைக்கொடுக்கும் தன்மை பொருந்தியிருப்பதால் கர்மசேஷமென்று சொல்வது பொருந்தாது. ஸம்ப்ரதிபன்னமான ஆத்மாவினால் ஆத்மஜ்ஞானத்துக்கு கர்மசேஷத்வம் ஸித்தித்திருக்க அஸம்ப்ரதிபன்னமான ஆத்மாவுக்கு கர்மசேஷத்வகல்பனம் கூடாது. ஜீவனைவிட விலக்ஷணனாக ஆத்மா நிச்சயமாக ஸித்திக்கவில்லையன்றோ! ஆகையால், அனுஷ்டானத்திற்கு சேஷமாக இருக்கிற ஆத்மா கர்மாக்களில் கர்த்தாவாக இருக்கிற ஜீவனேதான்—என்று வேதாந்தங்கள் ஜீவப்ரதிபாதகபரங்களாதால் அந்த ஜீவனைக்காட்டிலும் வேறான ஈஶ்வரனிருப்பதில் ப்ரமாணமில்லாமையால், அப்ராமாணிகமான ஈஶ்வரவிசாரரூபமான சாஸ்த்ரம் ஆரம்பிக்கத்தக்கதல்ல—என்று ஏற்படும். அக்ஷரராசிக்ரஹணமாத்ரபர்யந்தம் (அத்யயன சப்தார்த்தமாகில்), அர்த்தஜ்ஞானத்துக்கு அநுஷ்டானசேஷத்வமில்லாமையால், கர்மாக்களில் கர்த்தாவாக இருக்கிற ஜீவாத்மாவைவிட வேறான ஆத்மாவுக்கு ப்ரதிபாதகம் ஸம்பவிக்கிறபடியால் ப்ராமாணிகமான பரமாத்மவிசாரரூபமான சாஸ்த்ரம் ஆரம்பிக்கத்தக்கதாக ஆகும். ஆதலால், அத்யயநவிதியானது நிரூபிக்கப்படுகிறது.

---

§ ஸ்நாதகவ்ரதம்—வேதத்தை அத்யயநம் செய்து, வ்ரதத்தையும் முடித்த ப்ரஹ்மசாரியினால் அனுஷ்டிக்கத்தக்க ஒரு வ்ரதவிசேஷம். இதை ஸமாவர்த்தனமென்றும் கூறுவார்கள்.

அதில் ப்ராபாகரர்களுக்கு அபிமதமான அத்யயனம், ஸக்துஹோமம் போல், ப்ரதானகர்மா என்பதையும், ஸ்வரூபத்தினுல் விதேயமென்பதையும், அத்யாபனவிதிப்ரயுக்த மென்பதையும், உபநயநம் அத்யாபனத்துக்கு அங்கமென்பதையும், அநாதரித்தும்,—$ கௌமாரிளர்களுக்கு அபிமதமான அத்யயனம், அவகாதம் முதலியதுபோல், குணகர்மா, நியமம் விதேயம், அத்யயனம் ஸ்வவிதிப்ரயுக்தம், உபநயனம் அத்யயனத்திற்கு அங்கம்,—என்கிற நான்கையும்—இருவர்களுக்கும் ஸம்மதமில்லாத அக்ஷராராசிக்ரஹணமாத்ரபர்யந்தத்வத்தையும் சுருக்கமாக ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார். '**ப்ரதமம்**' என்பதால் '**ப்ரதமம்தாவத்**' முதலிலேயே—'யாவத்தாவச்ச ஸாகல்யேவதௌ மானேவதாரணே' (யாவத்தாவத் இரண்டு சப்தங்களும் முழுமையும் என்கிற அர்த்தத்திலும், எல்லை, அளவு, நிச்சயம், இந்த அர்த்தங்களிலும ப்ரயோகிக்கப்படுகின்றன) என்று நிகண்டுகளைச்செய்தவர்கள் கூறுகின்றனர். முதன்மையாவது சாஸ்த்ரவிசேஷங்களைக்கேட்பதற்குரிய நிலைமையை அபேக்ஷித்து முந்தியிருத்தல். கர்பகாலம் தொடங்கி எட்டாவது வர்ஷத்தில் உபநயநம் செய்யப்பட்டிருக்கிறவனுக்கல்லவோ அத்யயனம்,—அதற்கு முன் சாஸ்த்ராந்தரபரிச்ரமத்துக்கு அநர்ஹனானதால். அத்யயனவிதிக்கு உடன்பட்டிருப்பவனை (மாணவகனுக்கு) ஸாங்காத்யயனத்திற்குப்பிறகு கர்மவிசாரம் அவச்யம் செய்யவேண்டுமென்பது தானுகவே ஏற்படுவதால் ஸாதநசதுஷ்டயம் முதலிய பூர்வவ்ருத்தவிசேஷங்களால் ஏற்படவேண்டுமென்பது ஸந்தர்பவிருத்தம் என்கிற விஷயம் "ப்ரதமந்தாவத்" என்பதினுல் பலித்தது.

"வேதாக்ய" என்கிற சப்தமானது லௌகிகமான அக்ஷராராசியை விலக்குவதற்காக. "வேதாக்ய" என்கிற சப்தத்தினுல் முழுமையும் அத்யயனம் செய்யத்தக்கதென்பது ஸூசிக்கப்பட்டது. வேதாந்தபாகம்மாத்திரம் ஸ்வாத்யாயசப்தவாச்யமல்ல. 'அத்யயநே' என்று சொன்னதினுல் அப்ரதானகர்மத்வம் ஸூசிதமாயிற்று. ஹோவார்த்ததாத்வர்த்தத்திற்கு அந்யனிடத்தில் ஸ்திதி அறியப்படுவதால், அத்யயனத்துக்கு ப்ரதானகர்மத்வத்தைச்சொல்லவேண்டுமென்று விருப்பமுள்ளவராக இருப்பரேயாகில், அப்பொழுது "ஸ்வாத்யாயத்தினுல் அத்யயனம் ஸம்பாதிக்கத்தக்கது" என்று வசநமிருந்திருக்கும். "அத்யயநேநைவ" என்கிற, ஏவகாரத்தால் நியமவிதித்வம் த்யோதனஞ்செய்யப்பட்டது. புஸ்தகம் பார்ப்பது முதலியவைகளால் வேதம் க்ரஹிக்கக்கூடாதென்று பொருள். "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" என்று அத்யயனவிதிவாக்யத்தை எடுத்ததினுல் ஸ்வவிதிப்ரயுக்தத்வம் ஸூசிப்பிக்கப்பட்டது. "அத்யாபயேத்" என்று வாக்யமெடுக்கப்பட்டிருக்கவில்லை. ப்ராதம்யவசநத்தினுல் அத்யயனம் உபநயநத்தை அங்கமாகவுடையதென்பது பலித்தது. சாஸ்த்ராந்தரபரிச்ரமத்துக்குத்தகாத கர்பாஷ்டமவர்ஷாபிப்ராயத்தாலன்றோ முதன்மைகூறப்பட்டது. அத்யயனத்துக்கு ப்ராதம்யமானது "அஷ்டவர்ஷம் ப்ராம்மணமுபநயீத" என்று. உபநயனவிஷயமாகக்குறிக்கப்பட்டிருக்கிற காலத்திற்கு உபநயனம் வாயிலாக அத்யயன சேஷத்வம் இருந்தாலொழிய உபபன்னமாகாது. இவ்வண்ணம் ¶ ஐந்து அர்த்தங்கள் சுருக்கமாக ப்ரதிக்ஞை செய்யப்பட்டதாக ஆகிறது,

$ குமாரிளபட்டர்—மீமாம்ஸா சாஸ்த்ரப்ரவர்த்தகர்களுக்குள் ஒருவர்.

¶ ஐந்து அர்த்தங்கள் :—

க. அத்யயனத்திற்கு, அவகாதம் முதலியவற்றுக்குப்போல், குணகர்மத்வம்.
உ. ,, ,, ,, ,, நியமவிதித்வம்
ரு. ,, ,, ,, ,, ஸ்வவிதிப்ராயுக்தத்வம்.
ச. ,, ,, ,, ,, உபநயனத்திற்கு அத்யயனுங்கத்வம்.
ரு. ,, ,, ,, ,, அக்ஷராராசிக்ரஹணமாத்ரபர்யந்தத்வம்.

இந்த அத்யயனவிதிவாக்யத்தில் அத்யயனத்திற்கு ப்ராதம்யமும், ஸாங்கத்வமும், உபநயனத்தை அங்கமாகக்கொண்டிருத்தலும் தோன்றுது. ஏனென்றால்—"உபநீத, தமத்யாபயேத்" என்கிற வாக்யாந்தரத்தால் அத்யயனத்திற்கு அத்யாபநவிதிப்ரயுக்தத்வமும், அத்யாபனத்திற்கு உபநயனாங்கத்வமும், அறியப்படுகிறதென்று ஸந்தேஹம் வர, அதற்குப்பரிஹாரங்கூறுகிறார்—"தச்ச" என்று. சகாரம் சங்கையின் நிவ்ருத்தியிலிருக்கிறது. அது "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" என்கிற வாக்யத்தால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறதென்று பொருள்.

"ஆத்யே த்வத்யயநே நைவ காசிதஸ்தி பலச்ருதி: தாரணே ஜபயஜ்ஞேஷு யா ஸாப்யேவம் நிவாரிதா" (முதன்மையான அத்யயனத்தில் ஒருவிதமான பலச்ரவணமுமில்லை. தாரணத்திலும், ஜபயஜ்ஞத்திலும், எந்த பலச்ருதியுண்டோ அதுவும் இவ்வண்ணம் நிரஸிக்கப்பட்டது) என்று ஜபம் முதலியதுகூட அத்யயனசப்தத்தால் சொல்லத்தக்கதாதலால் அவைகளில் ப்ரஸ்துதாத்யயனத்திற்கு ஆத்யாத்யயனத்வநிச்சயத்தின்பொருட்டு "கிம்ரூபம்" என்று கூறுகிறார். ஒரு தடவை உச்சாரணரூபமா? அல்லது, அடிக்கடி உச்சாரணரூபமா? ஸ்வதந்த்ரோச்சாரண ரூபமா? அல்லது பாதந்த்ரோச்சாரணரூபமா? என்று பொருள். பாதந்த்ரோச்சாரணரூபத்வமும், அஸக்ருதுச்சாரணரூபத்வமும் இருந்தாலன்றோ ஆத்யாத்யயனத்வம் ஸித்திக்கிறது.

"கம்ரும்" எதை அங்கமாகவுடையது என்று பொருள்.

"இத்யபேக்ஷாயாம்" (அபேக்ஷையுண்டாகில்) அபேக்ஷிதங்கள் விதிக்கப்படுகின்றன என்று அந்வயம். ப்ராதம்யத்தையும், ஆசார்யன் சொன்னபிறகு அதை அநுஸரித்து உச்சரிக்க வேண்டுமென்பதையும், உபநயனத்தை அங்கமாகக்கொண்டிருப்பதையும் காட்டுவதற்காக "அஷ்டவர்ஷம்" என்று சொல்லுகிறார். இதனால் ப்ராதம்யம் ஸித்தித்தது. காலம் உபநயனத்தின்வாயிலாக † அத்யயனத்திற்கு சேஷமாதலால், 'ப்ராஹ்மணமுபநயீத' என்று இரண்டாம் வேற்றுமையின் ச்ரவணத்தால் மாணவகசேஷத்வமறியப்படுவதால், § உபநயனத்திற்கு அவனை அடைந்துள்ள அத்யயனாங்கத்வம் ஸித்திக்கிறது. உபநயனமானது "ஸ்வரிதஞித: கர்த்ரபிப்ராயே க்ரியாபலே" என்கிற ஸூத்திரத்தினால் விதிக்கப்படாததாலும், அதற்கு அத்யாபனாங்கத்வஸித்தியில்லை. "அத்யாபயேத்" என்றதினால் பாதந்த்ரோச்சாரணரூபத்வம் ஸித்தித்தது.

"த்வாதசாஹேந ப்ரஜாகாமம் யாஜயேத், அநநாத்யகாமம் யாஜயேத், நிஷாதஸ்தபதிம் யாஜயேத்" என்கிற விதிகளால் ஏற்பட்ட யாஜநம்போல, அத்யாபனமும் பொருள் முதலியவற்றை ஸம்பாதிப்பதற்குக்காரணமாயிருப்பதுபற்றி ராகப்ராப்தமாதலால் விதேயமாகாததாலும் அத்யாபனத்தில் அதிகாரிவிசேஷச்ரவணமில்லாமையாலும், அத்யயனத்திற்கு அத்யயனஞ்செய்விக்கிற ஆசார்யனை முன்னிட்டிருத்தல் கூறப்படுகிறதென்பதினால் இது அத்யயனாங்கவிதி என்று கருத்து.

உபாகர்மம் முதலிய வ்ரதநியமங்களை அங்கங்களாகக்கொண்டிருப்பதையும், அங்கங்களோடு கூடியிருப்பதையும் காட்டுவதற்காக கூறுகிறார். "ச்ராவண்யாம்" (திருவோணநக்ஷத்திரத்துடன் கூடின பௌர்ணமாஸியில்) என்று. ¶"அர்தபஞ்சமாந்மாஸாநித்யாதி"

† அத்யயனம்—முக்யமானது. இதற்கு அங்கம் உபநயனம். இந்த உபநயனத்திற்கு காலம் அங்கம். சேஷம்—அதிசயத்தை உண்டுபண்ணுகிற வஸ்து.

§ உபநயநம்—ஆசார்யன் பக்கலில் வேதாத்யயனத்திற்காக மாணவகனைச்சேர்ப்பித்தல், எந்த காமாவில் ஏற்படுகிறதோ அது.

¶ அர்தபஞ்சமாந் மாஸாந் - நாலரை மாதங்கள் முழுமையும்.

—நாலரை மாதங்கள் இது முதலியது—ஆதி சப்தத்தாலெடுக்கப்பட்ட "அதஊர்த்வந்து ‡ ச்சந்தாம்ஸி சுக்லேஷு நியத: படேத்—வேதாங்காநி ரஹஸ்யஞ்ச க்ருஷ்ணபக்ஷேஷு ஸம்படேத்" இது முதலான வசனங்களால் அங்காத்யயனத்திற்குக்காலம் காட்டப் பட்டது.

"வ்ரதம்" வேதாரம்பம், காண்டவ்ரதம் முதலியது. 'நியம'மானது "பத்யு ஹ வா ஏதத் ச்மசானம் யச்சூத்ர:—தஸ்மாத் சூத்ரஸமீபே நாத்யேதவ்யம்" (சூத்ரன் என்பவன் ஜங்க மச்மசானம், ஆகையால், சூத்ரன்பக்கலில் அத்யயனஞ்செய்யக்கூடாது.) இது முதலாகக் கூறப்பட்டிருக்கிற தேசம், காலம், பக்ஷம், அபக்ஷம், இது முதலியவைகளுடைய வ்ய வஸ்தாரூபமாயுள்ளது. "அத்யாபயேத்" என்றும், "வ்ரதநியமவிசேஷோபதேசைச்ச" என்றும் தனித்து நிர்தேசமானது ச்ருதிஸ்ம்ருதிவிபாகத்தாலும், ¶ விப்ரதிபன்னத்வ $ அவிப்ரதிபன்னத்வவிபாகத்தாலும் செய்யப்பட்டிருக்கிறது. உபாகர்மம் முதலிய வ்ரத நியமங்கள் போல, உபநயனமும் அத்யயனத்திற்கு அங்கமென்பது கருத்து. அது எந்த ஸ்வரூபமுள்ளது, எவ்வாறு செய்யத்தக்கது; என்று அபேக்ஷிக்கையில், அங்ஙங்களை விதிக் கிற இந்த வாக்யங்களால் அபேக்ஷிக்கப்பட்டவைகள் விதிக்கப்படுகின்றனவென்று பொருள்.

பூர்வபக்ஷம்:—

"அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணம்" என்கிற வாக்யத்தில் உபநயனத்திற்கு அத்யய னங்கத்வம் அறியப்படுகிறதென்பது ஸரியல்ல. அது உபநயனம் செய்விக்கத்தக்க மாணவகனுடைய ஸாமீப்யம் வாயிலாக அத்யேதாவை ஆகாங்க்ஷிக்கிற அத்யாபனத் திற்கன்றோ அங்கமென்று அறியப்படுகிறது. "உபநீயது ய: சிஷ்யம்" (எவன் சிஷ்ய னுக்கு உபநயனத்தைச்செய்வித்து) இது முதலான ஸ்ம்ருதிவசனத்தாலும் அது அறி யப்படுகிறது—என்றால், மறுமொழி சொல்லப்படுகிறது,

"ப்ராஹ்மணமுபநயீத" என்கிற இடத்தில் இரண்டாம் வேற்றுமையின் ச்ரவணத் தால் உபநயனம் மாணவகனுக்கு சேஷமென்று அறியப்படுகிறது. உபநயனமும், அதைச் சார்ந்திருக்கிற அத்யயனமும் மாணவனுக்கு சேஷம். அதில் † அந்தரங்க § பஹிரங்கங் யாயத்தால் உபநயனம் அத்யயனத்துக்கு அங்கமே. "உபநீயது ய:சிஷ்யம் வேதமத்யா பயேத் த்விஜ: ஸகல்பம் ஸரஹஸ்யஞ்ச தமாசார்யம் ப்ரசக்ஷதே" (எந்த அந்தணன், சிஷ்யனுக்கு உபநயனத்தைச்செய்து வேதத்தை கல்பங்களோடும், ரஹஸ்யங்களோடும் அத்யாபனம் செய்விப்பனோ அவனை ஆசார்யனென்று சொல்லுகிறார்கள்) என்கிற வச

‡ அத ஊர்த்வந்து—தைமாதத்தில் புஷ்யநக்ஷத்திரத்துடன் கூடின பௌர்ணமாஸி யில் உத்ஸர்ஜனவ்ரதத்தைச்செய்து விட்டு அதற்குமேல் அத்யயனம் செய்த வேதபாகங் களை சுக்லபக்ஷங்களில் ஆவ்ருத்தி செய்யவேண்டும். வேதாங்கங்களான வ்யாகரணம் முத லியவைகளையும், ரஹஸ்யத்தையும், க்ருஷ்ணபக்ஷங்களில் படிக்கவேண்டும்.

¶ விப்ரதிபன்னத்வம்—விப்ரதிபத்திக்கு விஷயமாக இருத்தல்.

$ அவிப்ரதிபன்னத்வம்—விப்ரதிபத்திக்கு விஷயமாகாமல் எல்லோராலும் ஏகமுக மாக ஒப்புக்கொள்ளப்பட்டிருத்தல்.

† அந்தரங்கம்—அல்பநிமித்தத்தை அபேக்ஷித்திருப்பது.

§ பஹிரங்கம்—அநேகநிமித்தங்களை அபேக்ஷித்திருப்பது.

னத்தில் 'உபநீய' என்று, ¶ 'கத்வா' ச்ருதியிருப்பதால் உபநயனத்துக்கு அத்யாவனங்கத்வம் தருந்தது. அந்தரங்கத்வமென்பது வஸ்துஸாமர்த்யரூபமான லிங்கமன்றோ? ஆதலால், க்த்வாச்ருதி அதிக பலமுள்ளது என்று சொல்வதுகூடாது.

அந்தரங்கத்வமோவென்றால், ப்ரத்யக்ஷச்ருதியினால் ஸித்தம். 'க்த்வா' ச்ருதியோ என்றால், ஸ்ம்ருதியையடைந்திருக்கிறதாயும், அநுவாதவசனத்திலிருக்கிறதாயுமிருக்கிறது. ஆதலால், இது ஸ்ம்ருதிவசனத்திலிருப்பதால் மூலச்ருதியை அபேக்ஷித்தல்,—அநுவாதரூபமான வசனத்தை அடைந்திருத்தலால் வேறு விதியை அபேக்ஷித்தல்,—என விளம்பத்துக்கு இரண்டு காரணங்களிருக்கின்றன. * ச்ருதிலிங்காதிகளில் விளம்பித்து வருகிற யுக்திக்கு ஹேதுவாகயிருத்தலன்றோ பாதௌர்பல்யஹேது. ஆதலால், இரண்டு விளம்பங்களால் அபஹதமான க்த்வாச்ருதியானது அதிக பலமுள்ளதாகா.

மேலும், ச்ரோத்ரியன், உபாத்யாயன், குரு, இது முதலான பெயர்களை விதிக்கும் ப்ரகரணத்திலிருக்கிற இந்த வசனமானது உபநயனஞ்செய்து அத்யாபனஞ்செய்விக்கிறவனுக்கு ஆசார்யனென்று பெயரை விதிப்பதில் நோக்குள்ளதாக இருப்பதுபற்றி க்த்வா ச்ருதியானது உபநயனம், அத்யாபனத்துக்கு அங்கமென்பதில் ப்ரமாணமாக ஆவதற்குத் தகுதியுள்ளதாகா. மேலும், "ஸ்வரிதஞித: கர்த்ரபிப்ராயேக்ரியாபலே" (ஸ்வரிதத்தையும், அழிந்து போவதை ஸ்வபாவமாகக்கொண்ட, 'ஞ' காரத்தையும் இத்தாகக்கொண்ட தாதுக்களின் மீது க்ரியையினால் உணர்த்தப்பட்ட பலன் கர்த்தாவை அணுகியிருக்குமேயாகில் ஆத்மநேபதமென்று பெயருள்ள ப்ரத்யயங்கள் வரும்) என்கிற ஸூத்ரத்தினால் ஆத்மநேபதம் வருவதாக இருந்தபோதிலும், "ஸம்மானநோத்ஸஞ்ஜநாசார்யகரணஜ்ஞாநப்ருதிவிகணநவ்யயேஷு நிய:" (மர்யாதை, மேலே தூக்குதல், ஆசார்யகஞ்செய்தல், ஞானம், கூலி கொடுத்தல், கடன்தீர்த்தல், செலவிடுதல், இந்த அர்த்தங்களில் 'நீ' என்கிற தாதுவின்மீது ஆத்மநேபதமென்று பெயருள்ள ப்ரத்யங்கள் வருகின்றன) என்கிற ஸூத்ரத்தால் மீண்டும் ஆத்மநேபதவிதானமானது பலம் கர்த்தாவை அடையாமலிருந்தபோதிலும்கூட இந்த ப்ரத்யயங்கள் வரத்தடை இல்லை—என்று கூறுவதால் உபநயனம் அத்யாபனத்துக்கு அங்கமாகா. அந்த ஸூத்ரத்திற்கு வ்ருத்தி எழுதினவர் பலம் கர்த்தாவை அணுகாமலிருந்தபோதிலும் ஆத்மநேபதப்ரத்யயங்கள் வருவதற்காக இந்த ஸூத்ரம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதென்று பகர்ந்திருக்கிறார்.

கர்த்ரபிப்ராயத்வமாவது கர்த்தாவினிடத்திலேயே க்ரியாவாச்யபலம் நாடியிருக்க வேண்டுமென்பது. அந்த ஏவகாரப்பொருளை மறுப்பதற்காக மீண்டும ஸூத்ரவிதானம். பலம் இரண்டிடத்திலும் ஸம்பந்தமுள்ளது. ஆகையால், மாணவகன் வாயிலாக உபநயன

---

¶ க்த்வா—இது இறந்தகாலத்தைக்காட்டும் ஒரு ப்ரத்யயம். 'உப' என்கிற உபஸர்க்கத்தோடு கூடிய 'நீ'என்கிற தாதுவின்மீது 'க்த்வா' என்கிற ப்ரத்யயம் வந்து உப-நீ-த்வா. என்று ரூபம் முதலில் ஏற்பட்டு, பிறகு 'த்வா' ப்ரத்யயத்திற்கு 'ய' என்கிற ஆதேசம் வந்து 'உபநீய' என்கிற சப்தம் நிஷ்பன்னமாகிறது. உபநயனத்தைச்செய்துவிட்டு, பிறகு அத்யயனத்தை செய்விக்கவேண்டும் என்பதினால் அத்யாபனத்திற்கு ப்ராதான்யமும், உபநயனத்திற்கு அத்யாபனங்கத்வமும் ஸித்தித்தது.

* ச்ருதி, லிங்கம், வாக்யம், ப்ரகரணம், ஸ்தானம் ஸமாக்யை, என ஆறு ப்ரமாணங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன, இவைகளுக்குள் முந்தி முந்தியிருப்பதைவிட பிந்திபிந்தியிருப்பவைகள் துர்பலங்கள். ஏனெனில், விளம்பித்து அர்த்தோபஸ்திதியை உண்டு பண்ணுவதால்—என்பது பூர்வமீமாம்ஸகர்களின் கொள்கை.

பலம் ஆசாரியனிடத்தில் ஸம்பந்திக்கிறபடியால் அத்யாபனாங்கத்வம தகுந்தது என்று சொல்வாயேயாகில்,—அது ஸரியல்ல. "அக்நீநாததீத" (அக்னிகளை ஆதானஞ் செய்ய வேண்டும்) என்கிற இடத்தில் ஆத்மநேபதமானது 'கர்த்ரபிப்ராய'ஸூத்ரத்தால் விதிக்கப் பட்டிருந்தபோதிலும், பலம் இரண்டிடங்களிலும் அந்வயிப்பதால் நியமத்தை நிஷேதிப் பதற்காக இந்த ஸூத்ராரம்பம் என்பது பொருதாதாதலால் பலத்துக்கு கர்த்ரபிப்ராயத்வ மாத்ரம் நிஷேதிக்கப்படுகிறது என்று அர்த்தங்கொள்ளவேண்டும். அதனுல் அத்யா பனாங்கத்வமில்லை 'கர்த்ரபிப்ராய' சப்தத்தினுல் கர்த்தாவைத்தவிர்த்த மற்ற சேதனனி டத்தில் பலஸம்பந்தமின்மை விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அதனுல் 'அக்நீநாததீத' என் கிற இடத்தில் தோஷமில்லை.

மீண்டும் ஸூத்ரத்தால் ப்ரத்யயவிதானத்துக்கு அதை மறுப்பதுதான் பலம் என்கிற தீர்மானத்தில் ஆசாரியனிடத்தில்கூட பலஸம்பந்தத்துக்கு உபபத்தி இருப்பதால் உப நயனத்திற்கு அத்யாபனாங்கத்வம் சொல்வதே பொருந்துமென்கிற ஆக்ஷேபம் சரியல்ல. "ருத்விஜோவ்ருணீதே" (ருத்விக்குகளை வரிக்கின்றான்) என்கிறவிடத்தில் ¶'ஸ்வரித' என் கிற பதத்தை முதலிலுடையதான ஸூத்ரத்தால் ஆத்மநேபதம் விதிக்கப்பட் டிருந்தாலும் கர்த்தாவைத்தவிர்த்து வேறு சேதனர்களிடத்திலும் பலஸம்பந் தம் காணப்படுவதால் மறுபடி ஸூத்ரவிதானத்திற்கு நியமநிஷேதார்த்தத்வம் சொல் வது பொருத்தமில்லாமல் போவதுபற்றி புநர்விதானம் கர்த்ரபிப்ராயமாத்ரத்தை நிஷே திக்கிறது—எனப்பொருள்படுத்தப்பட்டிருப்பதால் உபநயனம் அத்யாபனத்துக்கு அங்க மல்ல. க்ரியாபலமாவது க்ரியையை அடுத்து வரும் பலம். அதற்கு, கர்த்தாவிடத்தில் அந் வயமேற்படுவது கர்த்ரபிப்ராயத்வம். ஆகையால், ஆசார்யகமானது உபநயனக்ரியையை அடுத்து வருந்தன்மையுள்ளதாக இராமையாலும், அவ்யவஹிதமானபலத்துக்கு கர்த்ரு காமித்வமில்லாமையாலும், ஆத்மநேபதம் வராமல் போக, அவ்யவஹிதபலத்துக்கு கர்த்ர பிப்ராயத்வமில்லாமல் போனுலுங்கூட ஆத்மநேபதம் 'ஸம்மாநந' என்கிற ஸூத்ரத்தினுல் விதிக்கப்படுகிறது. ஆகையால், பலம் கர்த்ரபிப்ராயமாக இராமலிருந்தபோதிலும், வ்ய வஹிதமான ஆசார்யகநிஷ்பத்தியை ப்ரயோஜனமாகக்கொண்டிருத்தலால் உபநயனத் துக்கு அத்யாபனாங்கதவம், விருத்தமல்லவென்று கூறுவது சரியல்ல.

"அக்நீநாததீத" என்கிற இடத்தில் "ஸ்வரித" என்கிற ஸூத்ரத்தினுல் ஆத்மநே பதம் விதிக்கப்பட்டிருந்தாலும் அக்நிஸம்ஸ்காரத்தால் வ்யவஹிதமான ஆஹிதாக்நித்வா-

¶ 'ஸ்வரிதஞித: கர்த்ரபிப்ராயே க்ரியாபலே' என்கிற ஸூத்ரத்திலிருக்கிற கர்த்ரபிப் ராயபதம் கர்த்தாவை நாடியிருக்கிறதென்கிற அர்த்தத்துடன் கூடியது. அதாவது க்ரியை யின் பலமானது கர்த்தாவை அடைவதாக இருக்குமேயாகில், உபயபதிதாதுக்களின் மீது ஆத்மநேபதப்ரத்யயங்கள்வரும். அந்த தாதுக்கள் ஸ்வரிதத்தையாவது, ஞகாரத்தையாவது இத்தாகக்கொண்டிருக்கவேண்டும்—என்று ஸூத்ரத்தின்பொருள். உதாஹரணம்—உப நயீத—அத்யயனம் செய்விப்பதற்காக பையனை விதியினுல் தன்பக்கலே அடையச்செய்து கொள்ளவேண்டும் என்று அர்த்தம் ஏற்படும். அங்ஙனமாகில், உபநயனத்தாலுண்டாகிற பலமாகிய ஆசார்யகரணம், சிஷ்யசுச்ரூஷை முதலியவைகள் ஆசார்யனை அணுகுவதால் உபநயனம் அத்யாபனத்துக்கு அங்கமாய்விடும். அத்யயனாங்கமாகாது. ஆகையால், 'உப நயீத' என்கிற இடத்தில் இங்கு கூறப்பட்டுள்ள ஸூத்ரத்தால் ஆத்மநேபதப்ரத்யயத்தை சொல்லக்கூடாது. "ஸம்மாநந......" என்கிற ஸூத்ரத்தாலேயே ப்ரத்யயத்தை விதிக்க வேண்டும். அதற்கு அப்பொழுது ஆசார்யகரணமே அர்த்தம். உபநயனபூர்வகமான அத்யாயனத்தினுலன்றோ உபநேதாவினிடத்தில் ஆசார்யத்வம் ஸ்வீகரிக்கப்படுகிறது.

ஆபத்திரூபமான பலத்துக்கு கர்த்ருகாமித்வம் காணப்படுவதால். ஆதலால், அகர்த்ரபிப்ராயார்த்தமான 'ஸம்மகாநந' என்கிற ஸூத்ரமானது பலமாத்ரத்துக்கு கர்த்ருஸம்பந்தத்தைத்தடுப்பதற்காக.

ஸம்ஸ்காரத்துடன் கூடிய அதிநியானது பலமாதலால் ஆதானஞ்செய்பவனிடத்தில் வ்யவஹிதபலாந்வயமில்லை என்று கேட்கப்படுமேயாகில்,—அப்படியானால், உபநயனஸம்ஸ்காரத்துடன் கூடினமாணவகஸித்தியே அவ்யவஹிதமான பலமென்று கர்த்ரபிப்ராயஸூத்ரத்தினாலேயே ஆத்மநேபதம் ஸித்திப்பதால் அகர்த்ரபிப்ராயஸூத்ரம் பயனற்றதாக ஆகும். இவ்வாறாகில், வ்யவஹிதமோ, அவ்யவஹிதமோ பலம் மாத்ரம் அகர்த்ரபிப்ராய ஸூத்ரத்தால் நிவாரணஞ் செய்யப்படுகிறது—என்றாலோ, உபநயனகர்த்தாவுக்கு ப்ரவ்ருத்தியே உபபன்னமாகாது. ஏனெனில், ''ப்ரயோஜனமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே'' (அறிவில் குறைவுடையவனாக இருந்தாலும் ஒருவனும் பலனைக்கருதாமல் கார்யங்களில் ப்ரவர்த்திக்கமாட்டான்) எனில்—இப்படியல்ல, உபநயனபலம் மாணவகனைச்சார்ந்திருந்தபோதிலும் ஆசார்யனுக்கு தக்ஷிணை கொடுக்கவேண்டியதென்கிற வேறு விதியினால் ப்ராப்தமான தக்ஷிணாரூபபலத்தில் விருப்பத்தினால் ப்ரவ்ருத்திக்கு உபபத்தி வருவதால்.

இதனால் அகர்த்ரபிப்ராயஸூத்ரமானது அஸாதாரணமான பலஸம்பந்தத்தின் இன்மையை விஷயமாகக்கொண்டிருப்பதால், மற்றொன்றினால் இடையூறில்லாத க்ரியாபலத்திற்கு கர்த்ரபிமதத்வந்தான் கர்த்ரபிப்ராயத்வம். அந்த கர்த்தாவுக்கு அநபிமதமாக இருத்தல்தான் அகர்த்ரபிப்ராயத்வம் என்பதும் யுக்தமன்று, —க்ரியாபலத்துக்கு கர்த்ரநபிமதத்வம் விருத்தமாதலால், ஆசார்யநிஷ்பத்திக்கு உபயோகியான மாணவகஸம்ஸ்காரத்துக்கு ஆசார்யாநபிமதத்வம் பொருந்தாதாதலால். ஆகையால், உபநயனமானது அத்யயனஞ்செய்யப்போகிற மாணவகனுடைய ஸாமீப்யமுகத்தால் அத்யாபநாங்கமன்று. பின்னையோ வென்றால், அத்யயனாங்கமே. அத்யாபநவிதியானது அத்யயனத்தை ப்ரயோகிக்கிறதில்லை. 'அத்யாபயேத்' என்கிற விதியோவென்றால், 'த்வாதசாஹேந ப்ரஜாகாமம்' (ஸந்ததியில் விருப்பமுள்ளவனை பன்னிரண்டு நாள்களால் நிறைவேறத்தக்க த்வாதசாஹமென்கிற யாகவிசேஷத்தால் யாகம் செய்விக்கவேண்டும்.) இதுமுதலிய விதிபோல் என்று சொல்லப்பட்டிருக்கிறது. என்றாலும், 'ப்ரஜாகாமம், அந்நாத்யகாமம்' (ஸந்ததியில் அபிலாஷையுள்ளவன் அன்னம்முதலியவற்றில் ஆசையுள்ளவன்) என்பதுபோல, § ப்ரயோஜ்ய கர்த்ருவ்யாபாரமாக இருக்கிற அத்யயனத்திற்கு ‡ அதிகாரிவிசேஷணமான பலம் கேட்கப்படவில்லை. அப்படியிருந்தபோதிலும் 'ஸ்வாத்யாயஸித்தி:' அதிகாரிவிசேஷணமாக ஆகலாம், $ ஸ்வாத்யாயோத்யேதவ்ய என்று ஸ்வாத்யாயத்திற்கு அத்யயனஸாத்யத்வம் அறியப்படுவதால். எவ்வாறு 'அக்நீநாததீத' என்கிற இடத்தில் அக்னிகள் ஆதானத்தால் ஸாத்யங்களென்று அறியப்படுவதால் அக்நிஸித்தியானது அதிகாரிவிசேஷணமோ அவ்வாறு.

---

§ ப்ரயோஜ்யன் - ஏவல் செய்கிறவன். ப்ரயோஜகன் - ஏவுகிறவன். ப்ரதாநன்.

‡ அதிகாரிவிசேஷணம் - கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கிற ஒருவனுடைய ப்ரவ்ருத்திக்கு முக்யஸாதநமாகவும், ஏற்கனவே ஸித்தமாகவும் இருக்கிற ஒரு தர்மம்—'ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்காமோ யஜேத' என்கிற இடத்தில் யாகம் செய்பவனை அதிகாரியிடமிருக்கும் ஸ்வர்ககாமனை அதிகாரிவிசேஷணம். அதிகாரிவிசேஷணம் என்பது முந்தியே ஸித்தமாதலால் விதேயமாகாது.

$ 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்கிற விதியினால் ஸ்வயாத்ராயசப்தவாச்யமான அத்யயநம் விதிக்கப்பட்டிருப்பதால் அத்யயநவிஷயத்தில் இது ஸ்வவிதி.

அத்யயனம் ஸ்வவிதிப்ரயுக்தமாகில் அனுஷ்டானஞ்செய்பவர்களே இல்லாமல்போகும் என்று சொல்லக்கூடாது. அறிவில் சிறந்த அத்யேதாக்கள் இருக்கிறார்களன்றோ! அவ்வண்ணம் பகவான் ஆபஸ்தம்பர் கூறியிருக்கிறார். "தஸ்மிந்நபிஜநவித்யாஸமுதேதம் ஸமாஹிதம் ஸம்ஸ்கர்த்தாரமீப்ஸேத்" (அந்த உபநயனவிஷயத்தில் நல்லவம்சம், வித்யை இவைகளோடு கூடியிருப்பவனும் வெளி இந்த்ரியங்களையும், மன இந்த்ரியத்தையும், ஒடுக்கினவனுமான ஒருஉத்தமஅந்தணனை ஸம்ஸ்கர்த்தாவாக அடைய விரும்பவேண்டும்). அவர்கள்விஷயத்தில் பரவிதிப்ரயுக்தத்வம் சொல்லப்பட்டால் அத்யயனம் உபபன்னமாகாது. அப்ரபுத்தவிஷயத்திலோவென்றால், ஸ்வதந்த்ரமான அத்யயனவிதிக்கு மாணவகன் விஷயம்—என்பதை அறிந்து ஹிதத்தை விரும்புகிறவர்கள் மாணவகனுக்கு அத்யயநம் முதலியவற்றைச்செய்விக்கின்றனர். ஆகையால், ப்ரபுத்தர்கள், அப்ரபுத்தர்கள்—விஷயத்திலும் அத்யயநத்திற்கு ஸ்வவிதிப்ரயுக்தத்வம் யுக்தம். பரவிதிப்ரயுக்தத்வம் சொன்னால் நித்யமான அத்யயனத்திற்கு காம்யவிதிப்ரயுக்தத்வம் ஏற்படும். அதனால் அனுஷ்டானநியமம் உண்டாகாது,—ஆசார்யகத்தில் விருப்பமுள்ளவனன்றோ அத்யாபகன்; அவனுக்கு ஆசார்யகத்தில் விருப்பமில்லாவிட்டால் அத்யயனம் ஸித்தியாமல் போவதால். அத்யாபகர்கள் ஏராளமாகயிருப்பதால் அத்யயனம் ஸித்திக்கிறது எனில்—அல்ல, அத்யாபகர்களைவிட அத்யயனஞ்செய்பவர்களே அதிகமாயிருப்பதாகக்காணப்படுவதால். ஆதானமானது மேலேயுள்ள க்ரதுவிதிப்ரயுக்தமாக இருந்த போதிலுங்கூட காம்யவிதிமாத்ரப்ரயுக்தமல்ல, 'வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத—யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹோதி' (ஒவ்வொரு வஸந்தகாலத்திலும் ஜோதிஷ்டோமத்தினால் தேவதாராதனம் செய்யவேண்டும். உயிருள்ளவரையில் அக்நிஹோத்ரம் செய்யவேண்டும்) என்கிற நித்யவிதி இருப்பதினால். · இது முதலானது இங்கே அனுஸந்திக்கத்தக்கது. ஆகையால், எவ்வாறு அர்த்தம் உரைக்கப்பட்டதோ அதுதான் பொருத்தமுள்ளது.

---

𑌭𑌾𑌷𑍍𑌯𑌂:—

𑌏𑌵𑌂 𑌸𑌤𑍍𑌕𑍁𑌲𑌪𑍍𑌰𑌸𑍂𑌤𑌸𑍍𑌯 𑌸𑌦𑌾𑌚𑌾𑌰𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑍋𑌪𑍇𑌤𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌨𑍀𑌤𑌸𑍍𑌯 𑌵𑍍𑌰𑌤𑌨𑌿𑌯𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑌾𑌰𑌣𑌾𑌨𑍂𑌚𑍍𑌚𑌾𑌰𑌣𑌂 𑌅𑌕𑍍𑌷𑌰𑌰𑌾𑌶𑌿𑌗𑍍𑌰𑌹𑌣𑌮𑌧𑍍𑌯𑌯𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌧𑍍𑌯𑌯𑌨𑌞𑍍𑌚 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌃; '𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑍇𑌤𑌵𑍍𑌯𑌃' 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌵𑌗𑌮𑌾𑌤𑍍। 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍋 𑌹𑌿 𑌨𑌾𑌮 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌕𑌰𑌣𑌂 𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾 [illegible]

---

இவ்வண்ணமாக நற்குலத்தில் உதித்தவனும், நல்லொழுக்கத்தில்நிலைபெற்றவனும், ஆத்மகுணங்களுள்ளவனும், வேதார்த்தங்களை அறிந்திருப்பவனுமான ஆசார்யனால் உபநயனம் பண்ணப்பட்டு, வ்ரதநியமவிசேஷங்களோடும் கூடின மாணவகனுக்கு ஆசார்யோச்சாரணாநூச்சாரணரூபமான அத்யயனமானது அக்ஷரராசிக்ரஹணத்தை பலமாகக்கொண்டதென்று அறியப்படுகிறது.

**அத்யயநமும் ஸ்வாத்யாயமென்று சொல்லப்படுகிற (வேதத்திற்கு) ஸம்ஸ்காரம்; ஸ்வாத்யாயம் அத்யயனம செய்யத்தக்கதென்கிற (விதியினுல்) ஸ்வாத்யாயத்திற்கு கர்மத்வம் அறியப்படுகிறது. ஸம்ஸ்காரமோவென்ருல் கார்யவிசேஷத்தில் யோக்யதையை உண்டுபண்ணுதல். ஸ்வாத்யாயத்திற்கு ஸம்ஸ்கரிக்கப்படத்தக்க தன்மை பொருந்தமுள்ளது,—தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் அவைகளின் ஸாதனங்களையும்அறிவிப்பதினுலும் ஜபம் முதலியதால் ஸ்வரூபத்தாலும அவைகளுக்கு ஸாதனமாக இருப்பதாலும்.**

---

ச்ருதப்ரகாசிகை :—

அங்கவிதியுடன் கூடின ப்ரதானவிதியினுல் அங்கஸ்வரூபமும், அங்கிஸ்வரூபமும் எவ்வாறு அறியப்பட்டதாக ஆயிற்றென்ருல், 'எவம்' எனத்தொடங்கிச்சொல்லுகிருர். இவ்வண்ணம் அங்கவிதிகளோடுகூட ப்ரதானவிதியானது நிரூபிக்கப்பட்டதாலென்று அர்த்தம். 'ஸத்ஸந்தாந' என்பதால் 'அந்த உபநயநவிஷயத்தில் நல்ல 'வம்சம், வித்யை' என்கிற ஆபஸ்தம்பருடைய வசனத்தின் அர்த்தமானது அநுஸந்திக்கப்பட்டது. ஆத்ம குணங்கள்,—க்ரோதமின்மை முதலியவைகள். இதனுல் 'ஸமாஹித' சப்தத்தினுடைய அர்த்தம் கூறப்பட்டது. 'வேதவித்' என்கிற சப்தத்தால் 'வித்யாஸமுபேத' என்கிற சப்தத்தினுடைய அர்த்தம் சொல்லப்பட்டது. 'வேதவிதாசார்யோபநீதஸ்ய' ஆசார்ய விசேஷணமானது உபநயனத்தின் வாயிலாக மாணவகனுக்காகச்சொல்லப்பட்டிருக்கிறது. உபநயனம் அத்யாபனுங்கமாக ஆகும்பொழுது * மாணவகவிசேஷணம் எவ்வாறு ஆசார் யார்த்தமாக ஆகிறதோ, அவ்வாறு—என்று கருத்து. 'வ்ரதநியமவிசேஷயுக்தஸ்ய' வ்ரதநியமவிசேஷம் போல் † ஆசார்யவிசேஷணமும் மாணவகார்த்தமென்று கருத்து. 'உச்சரிக்கப்பட்ட ஆசார்யனுடைய சொற்களை அநுஸரித்து சிஷ்யன் அச்சொற்களை உச் சரிக்கவேண்டும்' என்றதனுல் பாதந்த்ரோச்சாரணரூபத்வம் காட்டப்பட்டது. 'அக்ஷர ராசிக்ரஹணபலம்' என்கிற பதமானது அடிக்கடி ஆவ்ருத்தி செய்யத்தக்கதென்கிற அர்த்தத்திற்கும் ஆக்ஷேபகமென்பதைக்காட்டுகிருர். எப்படி 'வ்ரீஹீநவஹந்தி' (நெல்லுகளைக்குத்துகிருன்) என்கிறவிடத்தில் த்ருஷ்டபலத்தில் லேசங்கூட விடத் தகாதது பற்றி குத்துதலானது உமி போகிற வரையில்—என்பது சொல்லப்படாம லிருந்தபோதிலும், ஆவ்ருத்திஸித்தமாக இருக்கிறதோ, அப்படியே இவ்விடத்திலும் ஸாமர்த்யத்தினுல் ஆவ்ருத்தி ஸித்திககிறது—த்ருஷ்டப்ரயோஜநத்தை விடாமலே நியமம் விதிக்கத்தக்கதாக இருப்பதால் "ஆசார்யோச்சாரணநூச்சாரணம்" என்ற தனுலும், 'வேதவிதாசார்யோபநீதஸ்ய' என்றதனுலும் அத்யயனம் அத்யாபயிதாவை எதிர்பார்த்திருப்பதனுல் அதற்கு பாதந்த்ரோச்சாரணரூபத்வமும், ஸ்வவிதிப்ரயுக்தத்வ மும், உபநயனுங்கத்வமும் உரைக்கப்பட்டது. 'ஆசார்யோச்சாரணநூச்சாரணம் அக்ஷர ராசிக்ரஹணபலம்' என்கிற பதங்களால் அத்யயனம் எந்த ஸ்வரூபமுள்ளது என்கிற

---

* மாணவகவிசேஷணம்—வ்ரதநியமானுஷ்டனம் முதலியது.

† ஆசார்யவிசேஷணம்—ஸத்ஸந்தாநப்ரஸூதி, ஸதாசாரநிஷ்டை, ஆத்மகுண பூர்த்தி முதலியது.

ஆகாங்க்ஷை தணிக்கப்பட்டது. 'வேதவிதாசார்யோபஸந்நஸ்ய' 'வ்ரதநியமவிசேஷ யுக்தஸ்ய' என்கிற பதங்களால் எவ்வாறு செய்யத்தக்கது என்கிற அபேக்ஷை பூர்த்திசெய்யப்பட்டது. 'அக்ஷராசிக்ரஹணபலம்' என்றதனால் ஸ்வாத்யாயத்தை க்ரஹிப்பதில் விருப்பத்தோடு கூடியிருத்தல் அத்யயநாதிகாரிவிசேஷணமென்றும் ஸூசிப்பிக்கப் பட்டது.

'ஸக்தூந் ஜுஹோதி' (மாவுகளை ஹோமஞ் செய்கிறான்) என்கிற இடத்தில் புருஷன் ஸக்துஹோமத்தாலுண்டான அத்ருஷ்டத்தை அடையத்தக்கவனாக இருப்பதால், ஸக்துஹோமம் எவ்வாறு புருஷஸம்ஸ்காரமோ, அவ்வாறே அத்யயனம் புருஷனுக்கு ஸம்ஸ்காரமாகில், இதற்கு அக்ஷராசிக்ரஹணபலத்வம் ஸித்தியாது. அபூர்வ ஸித்தியை பலமாகக்கொண்டிருப்பதால் ஸ்வாத்யாயஸித்தியானது பலமாகாது. அதனால், அக்ஷராசிக்ரஹணம் பலமில்லாமல் போவதால் ஆவ்ருத்தி ஏற்படாததுபற்றி அத்யயனமானது ஒரு தடவை உச்சாரணரூபமாகவே ஆய்விடுமென்று ஸந்தேகித்து 'அத்யயனஞ்ச' என்று கூறுகிறார். உபநயநாங்கத்வம் போலவும், ஸ்வவிதிப்ரயுக்தத்வம் போலவும், இதுவும் உபபாதிக்கத்தக்கதென்று பொருள். "ஸ்வாத்யாயஸம்ஸ்கார:" ஸக்துஹோமம் அபூர்வத்தை விஷயமாகக்கொண்டிருப்பதால் எவ்வாறு புருஷஸம்ஸ்காரமோ அவ்வாறாக இது புருஷஸம்ஸ்காரமல்லவென்று பொருள். ஏனெனில், "ஸ்வாத்யாய" என்று சொல்லுகிறார். தவ்யப்ரத்யயத்தால் கர்மத்வம் அறியப்படுகிறது. ஸ்வாத்யாயத்துக்கு கர்மத்வமே தவிர்த்து, புருஷனுக்கு கர்மத்வமில்லை. கர்த்தாவினுடைய க்ரியையினால் அடைவதற்கு இஷ்டதமமாக இருப்பதல்லவோ கர்மா ஆதலால், அத்யயனம்ஸ்வாத்யாயத்திற்கு ஸம்ஸ்காரம், புருஷனுக்கு இல்லையென்று பொருள்.

க்ரியையினால் நிஷ்பாத்யமான வஸ்து முதலிவற்றுக்கும் பொதுவான கர்மத்வமானது எவ்வாறு ஸம்ஸ்கார்யத்வத்தில் ஹேதுவாகக்கூறப்படுகிறது—என்று கேள்விவர, அதற்காக, நிர்வர்த்யத்வவிகார்யத்வாநுபபத்தியை எண்ணி 'ஸ்வாத்யாயஸ்ய' என்று மறுபடியும் சொன்னது. வஸ்துஸாமர்த்யத்துடன் கூடிய கர்மத்வஜ்ஞானம் ஸம்ஸ்கார்யத்வத்தில் ஹேதுவென்று கருத்து. வேறு பலம் ஸம்பவிக்கிறதாக இருக்க, ப்ராப்யத்வமாத்ரத்தில் பர்யவஸாநமும் தகாதது.

கர்மத்வமாத்ரம் அறியப்படுவதினால் ஸம்ஸ்கார்யத்வமேற்படுமாகில் "ஸக்தூந் ஜுஹோதி, ஸுவர்ணம் பார்யம்" என்கிற இடங்களில் ஸக்து, ஸ்வர்ணம் இவ்விரண்டுக்கும் ஸம்ஸ்காரயத்வமில்லையே—என்று, சங்கைவர, ஸம்ஸ்காரஸ்வரூபத்தை சோதிக்கிறார். 'ஸம்ஸ்காரோ நாமஹி' என்று. 'ஹி,நாம' இந்த இரண்டு பதங்களாலும் ப்ரஸித்தியும், ப்ரதியோகியின் அங்கீகாரமும் ஸூசிப்பிக்கப்படுகிறது. அல்லது, அபிச என்கிற அவ்யயம்போல, அநேகாவ்யயங்களுக்கு துல்யரூபமுள்ள ஒரு சப்தமாகவும் கொள்ளலாம். என்றாலும், இருக்கிற ஸ்வபாவத்துக்கு மேன்மை உண்டுபண்ணுதல் ஸம்ஸ்காரமென்று சென்றகாலத்துக்கும், வருங்காலத்துக்கும் உபயோகியான, ஸம்ஸ்காராநுரூபமான அநுகதலக்ஷணம்; ஆயினும், ஸ்வாத்யாயத்திற்கு பூதகாலோபயோகம் ஸம்பவியாமையால் வருங்காலத்துக்கு உபயோகப்படக்கூடிய ஸம்ஸ்காரலக்ஷணம் இங்கு கூறப்பட்டது. ஸம்ஸ்காரலக்ஷணம் உபபன்னமாகாமையால், 'ஸக்தூந் ஜுஹோதி' இது முதலிய இடங்களில் ப்ரத்யயஸ்வாரஸ்யத்தாலறியப்பட்ட கர்மத்வம் பக்னம்—என்று கருத்து. இந்த இடத்திலோவென்றால், அவ்வாறு அநுபபன்னமாகாது என்று 'ஸம்ஸ்கார்யத்வம்ச' எனச்சொல்லுகிறார். சகாரம் சங்கையின்நிவர்த்தியைக்காட்டுகிறது. எந்தக்காரணத்தாலென்றால், சொல்லுகிறார் 'தர்மார்த்த'

என்று. '**புருஷார்த்தசதுஷ்டயஸாதந**' என்பதினுல் முன்சொல்லப்பட்டுள்ள வ்யாக்யேயத்தின் ஐக்யத்திற்காக ப்ரயோஜனத்துடன் கூடிய அர்த்தத்தைத்தெரிவித்தல் என்பது அநுகதமென்று காட்டப்பட்டதாக ஆகிறது—அல்லது, புருஷார்த்தபரத்வம் அநுகதமானது. தர்மம் முதலியவற்றிலோ புருஷார்த்தத்வம் அநுகதமாயுள்ளது; இஷ்டம், அதன் ஸாதனம்—இரண்டும் புருஷார்த்தமாதலால். அர்த்தகாமங்களிலும், அவைகளின் உபாயங்களிலும் சிலது லோகஸித்தங்கள்; ஆயினும், குபேரன், இந்த்ரன் முதலானவர்களுடைய ஐஶ்வர்யரூபமும், மிக்க மேன்மை வாய்ந்திருக்கிற அர்த்தகாமங்களும், அவைகளின் ஸாதநங்களும், லோகஸித்தமான பசுபுத்ராந்நாதிகள் ‡ சித்ரை—முதலியதால் ஸாத்யங்கள் என்பதும் லௌகிகப்ரமாணகோசரமாதலால், நான்கு புருஷார்த்தங்களும் வேதவேத்யங்களென்று சொன்னது பொருத்தமுள்ளதே. '**அவபோதித வத்தால்**' அனுஷ்டானத்திற்கு உபயோகமான ஜ்ஞானத்தை உண்டு பண்ணுவதாலென்று கருதது. அர்த்தத்தை அறிவிக்குந்தன்மையானது 'ஹூம்' முதலிய மந்த்ரசாஸ்திரத்திலுள்ள பீஜாக்ஷரங்களுக்கு இல்லாமையால் அவ்யாப்திதோஷம் வர, அதை '**ஜபாதிநா**' என்பதால் பரிஹரிக்கிறார். '**ஸ்வரூபேணாபி**' அர்த்தஜ்ஞானம், அநுஷ்டானம் இரண்டும் இல்லாவிடினும் ஜபிக்கப்படுகிற அக்ஷரமாத்ரத்தினுலேகூட என்று பொருள். ஆதிசப்தத்தினுல் அத்யாபனம் க்ரஹிக்கத்தக்கது. அனுஷ்டானத்திற்கு அநுகுணமான ஜ்ஞானமும், ஜபம் முதலியதும் அத்யயனத்தினுல் ஸம்ஸ்கரிக்கப்பட்ட ஸ்வாத்யாயத்தினுலேயே என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அன்றிக்கே, புருஷார்த்தங்கள், அவைகளின் ஸாதனங்கள்—இவைகளைத்தெரிவித்தலோடு அவைகளுக்கு ஸாதநத்வமென்கிற அர்த்தமும் சப்தத்தால் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. அவைகளுக்கு ஸாதனமாக இருத்தலும் இரண்டு ப்ரகாரமாக. அதாவது,—ஜபம் முதலியவற்றாலும், மறக்காமல் உள்ளத்தில் தரிக்கப்படுகிற ஸ்வரூபத்தாலுமென்று. ஆகையால், மத்தியில் ஸமுச்சயம்செய்துகொள்ளத்தக்க அர்த்தத்தை ஸமுச்சயிப்பதில் கருத்துள்ளது '**அபி**' சப்தம்.

இவ்வண்ணமாக நியமவிதித்வமும் உபபாதிக்கப்பட்டதாக ஆகிறது.

**பாஷ்யம்:—**

**ஏவமத்யயநவிதிர்மந்த்ரவத் நியதஸ்வராக்ஷரராஶிக்ரஹணமாத்ரே பர்யவஸ்யதி। அத்யயநக்ருஹீதஸ்ய ஸ்வாத்யாயஸ்ய ஸ்வபாவத ஏவ ப்ரயோஜநவதர்த்தாவபோதித்வதர்ஶநாத் க்ருஹீதாத் ஸ்வாத்யாயாதவகம்யமாநாந் ப்ரயோஜநவதோர்த்தாநாபாததோ த்ருஷ்ட்வா தத்ஸ்வரூபப்ரகாரவிஶேஷநிர்ணயபலேஷு வாக்யவிசாரரூபேஷு மீமாம்ஸாஶ்ரவணேஷ்வதீதவேத: புருஷ: ஸ்வயமேவ ப்ரவர்த்ததே.**

**இவ்வண்ணமாக அத்யயனவிதியானது * மந்த்ரம் போல நியமத்தோடு கூடின அக்ஷரராசிக்ரஹணமாத்ரத்தில் பர்யவ**

‡ சித்ரா—ஓர் காம்யயாகம்.

* மந்த்ரம் போல—அத்யயனுேபகாரகமான சந்நோமித்ர: இது முதலிய மந்த்ரம் போல.

**ஸானமடைகிறது. அத்யயனத்தினுல் பெற்றுக்கொள்ளப்பட்ட வேதத்துக்கு ஸ்வபாவத்தினுலேயே ப்ரயோஜனங்களுள்ள அர்த்தங்களைத்தெரிவிக்கிற தன்மை காணப்படுவதால், க்ரஹிக்கப்பட்ட வேதத்தால் அறியப்படுகிற ப்ரயோஜநங்களுள்ள அர்த்தங்களை மேலெழக்கண்டு அவைகளின் ஸ்வரூபஸ்வபாவவிசேஷநிர்ணயங்களை பலமாகக்கொண்ட வேதவாக்யவிசாரரூபமான மீமாம்ஸையைக்கேட்டுணர்வதில், வேதாத்யயனஞ்செய்த புருஷன் தானுகவே ப்ரவ்ருத்திக்கிருன்.**

*ச்ருதப்ரகாசிகை:—*

*அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் சப்தஸ்வாரஸ்யத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகிறதா? அல்லது, அர்த்தம் பொருந்தாமல் போவதினுலா?—என்று விகல்பத்தை அபிப்ராயப்பட்டு அவற்றுள் சப்தஸ்வாரஸ்யத்தைப்பற்றி பதில் சொல்லப்போகிறவராக அத்யயனவிதி நிரூபணத்தை உபஸம்ஹரிக்கிருர். 'ஏவம்' என்று 'மந்த்ரவத்' என்று தனித்து நிர்தேசமானது, வ்ரதத்துக்கு உள்பட்டோ, உள்படாமலோ அத்யயனத்துக்கு உபகாரமான மந்த்ரமென்கிற அபிப்ராயமுள்ளது. 'சந்நோமித்ர:' இது முதலான மந்த்ரங்களுக்கு வ்ரதாநுப்ரவேசமில்லாமல் கூட ஜபமாத்ரத்தா உபகாரத்வமிருக்கிறதன்றே! நியமங்கள் முன் சொல்லலப்பட்டவைகள். அன்றிக்கே, எவ்வாறு சிறுவனுக்கு உபநாயன காலத்திலும், ஸந்த்யோபாஸனம் முதலிய கர்மாக்களை அனுஷ்டிக்கும் காலத்திலும் விதிக்கப்படுகிற உச்சாரணமானது நியமத்துடன் கூடின அக்ஷரபடனமாத்ரமே ஒழிய அர்த்தஜ்ஞானஸம்பாதனமில்லேயோ அதுபோல; பாலகர்களுக்கு முதலில் மந்த்ரார்த்தங்களை அறிவது ஸம்பவிக்காதன்றே!*

*அக்ஷராசிக்ரஹணம்—நியமனத்துடன் கூடின வேதாக்ஷரங்களின் உச்சாரணமே அத்யயனசப்தத்திற்கு முக்யமான அர்த்தம்,—"வேதாநாம் கிஞ்சிதநீத்ய ப்ராஹ்மண: ஏகாம் சாகாமதீத்ய ச்ரோத்ரிய: அங்காத்யாயீ அநூசாந: கல்பாதயாயீ ரிஷி: கல்பஸூத்ரப்ரவசனுத்யாயீ ப்ரூண:" (வேதங்களில் அல்பபாகத்தை அத்யயனம் செய்தவன் 'ப்ராஹ்மணன்', ஒருசாகையை அத்யயனம் செய்தவன் 'ச்ரோத்ரியன்', அங்கங்களை அத்யயனம் செய்தவன் 'அநூசாநன்', கல்பத்தை அத்யயனம் செய்தவன் 'ரிஷி', கல்பஸூத்ரப்ரவசனங்களை அத்யயனம் செய்தவன் 'ப்ரூணன்',என்று,)இதுமுதலான ப்ரயோகமிருப்பதால். தன்னுடைய சாகையின் ஒருபாகத்தை அத்யயனம் செய்தவனுக்கு அர்த்தஜ்ஞானம் ஸம்பவிக்காதன்றே; அங்காத்யயனத்தைத்தனித்து எடுத்திருப்பதால், அது இல்லாவிட்டால் அர்த்தஜ்ஞானத்திற்கு ப்ரஸங்கமில்லாமையால். ஸ்வாத்யாயசப்தமும் அர்த்தஜ்ஞானத்தை உணர்த்தாது. தன் சாகையை மட்டும் சொல்லுகிறதாதலால் அத்யயனகர்மத்வம் ஸ்வாத்யாயத்திற்கே தகுந்தது; அர்த்தஜ்ஞானத்துப்பொருந்தாது,—அத்யயனத்துக்கு ப்ரயோஜனகாங்க்ஷை உண்டாகுங்கால், த்ருஷ்டப்ரயோஜனம் ஸம்பவிப்பதாக இருக்க, அத்ருஷ்டப்ரயோஜனகல்பனம் தகாதாதலால். அக்ஷரக்ரஹணமே அதில் தோற்றுவதாலும், "ஹ்ராம்" முதலியவற்றில் அநுகதமாயிருப்பதாலும், அதை ஸ்வீகரிப்பதே யுக்தமாம். விலகியிருப்பதாலும், எல்லாவிடத்திலும் இல்லாமையாலும் அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் கூடாதென்று அபிப்ராயம். ஒருதடவை உச்சரிப்பதை அளவாகக்கொண்டிருக்*

கும் தன்மையை வ்யாவ்ருத்திப்பதற்காக அக்ஷரக்ரஹணத்தில் ப்ரயவஸானம் கூறப்பட்டது.

''மாத்ரச்' ப்ரத்யத்தால் விதிவ்யாபாரத்திற்கு அர்த்தஜ்ஞானபர்யந்தத்வத்தை விலக்கினபடி. ''பர்யவஸ்தி'' எப்படி 'அக்நீநாததீத' என்கிற வாக்யம் ஆதானமாத்ரபரமோ மேலேயுள்ள க்ரதுவிநியோகபர்யந்தமாகாதோ, எவ்வாறு, ''காரீர்யா வ்ருஷ்டிகாமோ யஜேத'' (மழைவேணுமென்கிற எண்ணமுள்ளவன் காரீரியாகத்தால் தேவதைகளை த்ருப்தி செய்விக்க வேண்டும்.) என்கிற வாக்யம் வ்ருஷ்டிஸித்திபர்யந்த கர்மவிசேஷபரமோ, வ்ருஷ்டிக்கு மேல்பட்டுள்ள பலஸித்தியின் உபயோகத்தை ப்ரதானமாகக்கொள்ளாதோ, அவ்வாறாக என்று கருத்து.

இவ்வண்ணமாக சப்தஸ்வாரஸ்யத்தினால் அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் நிரூபிக்கப்பட்டது. பிறகு அர்த்தாநுபபத்தியைப்பரிஹரிக்கிறார். அநுபபத்திசங்கை மூன்று விதமாக உள்ளது. அந்த சங்கையின் விதங்களாவன:—

க விதியானது அக்ஷரக்ரஹணமாத்ரபரமாயிருக்கும் பக்ஷத்தில் க்ரஹணத்துக்கு சேஷமாக விநியோகிக்கப்பட்டிருக்கிற ஸ்வாத்யாயத்திற்கு அர்த்தபரத்வத்தில் ப்ரமாணமில்லாமையால் அவிவக்ஷிதார்த்தத்வம் ஏற்படும்;

உ. மீமாம்ஸைக்கு ப்ரவர்த்தகமில்லாமையால் அநாரம்பணீயத்வம் ஏற்படும்;

ந. அக்ஷரங்களை மாத்ரம் க்ரஹிப்பதென்பது துக்கரூபமாதலால் விதிக்கு ப்ரயோஜனபர்யவஸானம் இல்லாமல் போகவேண்டியதாக வரும்—என்று.

இந்த மூன்று சங்கைகளின் நிராகரணத்தை முன்னிட்டு அத்யயனவிதிக்கு அர்த்தஜ்ஞானபர்யந்தத்வத்தையும், அதை நிமித்தமாகக்கொண்ட ப்ரஹ்மவிசாராரம்பசங்கையையும் நிராகரித்துக்கொண்டு வேதமென்கிற ஒரு ப்ரபந்தத்துக்கு வ்யாக்யானரூபமாக இருப்பதால் கர்மப்ரஹ்மவிசாரங்களிரண்டுக்கும் ஐகசாஸ்த்ர்யத்தையும் காண்பிக்கிறார்— 'அத்யயநக்ருஹீதஸ்ய' என்பதால்.

இந்த இடத்தில் அங்கங்களுடன் கூடின அத்யயனம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது, 'அதீதஸாங்கவேதாத்யயநாத்' என்றும் 'கது ச ஸாங்கவேதாத்யயநாத்' என்றுமிருக்கிற முன்பின் க்ரந்தங்களுடைய ஒற்றுமையினால். அதனாலன்றே ப்ரயோஜனமுள்ள அர்த்தத்திற்கு ஆபாதப்ரதீதி ஸித்திக்கிறது. அர்த்தங்கள்—யஜ்ஞம், உபாஸனம், முதலியவை. அவைகள் ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலியவைகளை ப்ரயோஜனமாயுள்ளவை. ப்ரயோஜனமுள்ள அர்த்தமென்கிற சப்தத்தால், காக்கையின் பற்களைப்போல, பரீக்ஷை செய்யத்தகாதவைகள் என்கிற சங்கையானது நிராகரிக்கப்பட்டது.

"ப்ரயோஜநவதர்த்தாவபோதித்வதர்சநாத்" இதனால் விதிக்கு பரம்பரையாக புருஷார்த்தத்தில் பர்யவஸானம் சொல்லப்பட்டதாக ஆகிறது. அத்யயனத்திற்கு நேரான ப்ரயோஜனம் அக்ஷராசிக்ரஹணம் என்று சொல்லப்பட்டது, 'அத்யயநக்ருஹீதஸ்ய' என்கிற பதத்தால் இது பொருள்—விதிக்கு நேராக புருஷார்த்தபர்யவஸானம் விவக்ஷிக்கப்பட்டதா? அல்லது, பரம்பரையாகவா? அர்த்த ஜ்ஞானபர்யந்தத்வம் சொன்னபோதிலுங்கூட, விதிக்கு நேராக ப்ரயோஜனபர்யவஸானம் பொருந்தாது,—அநுஷ்டானத்தையும், அபூர்வத்தையும், இடையிட்டு ஸ்வர்கமே ப்ரயோஜனமாக இருப்பதாலும், அத்யயனவிதிக்கு ஸ்வர்க்கபர்யந்தத்வம் ஒப்புக்கொள்ளப்படாமையாலும். பரம்பரையினால் புருஷார்த்தபர்யவஸானம் என்று சொன்னாலோ அது எங்கள் பக்ஷத்திலும் ஸம்பவிக்கிறது— என்று.

'ஸ்வாபாவ்' சப்தத்திற்கு அர்த்தத்தை அறிவிக்கிற சக்தி ஸ்வபாவத்தாலென்று பொருள். வ்யுத்பன்னபதபதார்த்தங்களைக்குறித்து சப்தத்துக்கு அர்த்தத்தை உணர்த்தும் தன்மையானது ஸ்வபாவஸித்தமென்பது உலகத்தில் ப்ரஸித்தம். ஏவகாரமானது விதியின் அபேக்ஷை வேண்டாமையைக்காட்டுகிறது. வேறு அர்த்தத்தில் ப்ரயோகிப்பது சப்தத்துக்கு ஸ்வபாவஸித்தமான அர்த்தபரத்வத்தை விலக்காது, ஜபவிதிபோல. பிறருக்கு யாகம் செய்வித்தாலும், அல்லது, ப்ரதிக்ரஹம் செய்தாலும் அந்த பாபநிவ்ருத்தியின் பொருட்டு உபவாஸமிருந்து மூன்று தடவை தன்வேதத்தை அத்யயனம் செய்யவேண்டும்; அல்லது, மூன்று நாள் காயத்ரீஜபம் செய்யவேண்டும்; வேதத்தையே நித்யம் ஜபிக்கவேண்டும்—இது முதலான விதியானது வேதத்தினுடைய அர்த்தபரத்வத்தைத் தடைசெய்யாது.

அத்யயனம் செய்யப்பட்ட வேதம் தானாகவே அர்த்தத்தை உணர்த்துமேயானால் மீமாம்ஸையால் யாதுபயன் எனில், கூறுகிறார் 'க்ருஹீதாத்' என்று. 'க்ருஹீதாத்' க்ரஹிக்கப்பட்ட மாத்ரத்தினாலே; அத்யயனத்தினால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற என்று சொல்லியிருப்பதால். அதனால், மீமாம்ஸை என்கிற இதிகர்த்வ்யதையின் இன்மை விவக்ஷிக்கப்பட்டது. ஆபாதப்ரதீதியானது ஸம்சயவிபர்யங்களைப்பொதிந்து கொண்டிருக்குமாதலால் அவைகளைப்பரிஹரிப்பதற்காக மீமாம்ஸை என்று கருத்து. 'அத்யயநக்ருஹீதஸ்ய' இது முதலியதினால் வேதத்திற்கு போதகத்வஸ்வபாவம் சொல்லப்பட்டது. அங்கு ப்ரயோஜனவதர்த்த சப்தமானது பரம்பரையாக புருஷார்த்தத்தில் பர்யவஸானத்தைத்தெரிவிப்பதற்காக. மேலே அதற்குக்காரணமான ஆபாதப்ரதீதியை உண்டுபண்ணுதலென்கிற தன்மையானது ஸஹகாரிகளின் இன்மையால் உண்டாவதுபற்றி பௌநருக்த்யதோஷமில்லை.

வேதத்துக்கு ஆபாதப்ரதீதியை உண்டுபண்ணுவது ஸ்வபாவமாக மாட்டாதே, ப்ரமையை உண்டுபண்ணுவதே ஸ்வபாவமாதலால். மீமாம்ஸையாகிற பரிகாரமில்லாதபோது அந்த வேதம் ப்ரமையை உண்டுபண்ணமாட்டாதென்று சொல்லுவது ச்ருதியினுடைய ப்ரமிதிஜனகத்வஸ்வபாவத்திற்கு விரோதியன்று. எப்படி ஸூர்யப்ரகாசம் முதலான ஸஹகாரிகளில்லாவிடில் ரூபம் முதலியவை அறியப்படாமலிருப்பதினாலேயே, அந்த ரூபாதிகளுடைய அநுபலம்பமானது கண் முதலிய இந்த்ரியங்களுக்கு இயற்கையாயுள்ள ரூபாதிஸாக்ஷாத்காரசக்தியைக்கெடுக்காதோ—அப்படிப்போல, ஆபாதப்ரதீதியில் கூட ப்ரயோஜனமுள்ளதென்கிற ஜ்ஞானமிருக்கிறதென்பதைக்காண்பிப்பதற்காக மறுபடியும் 'ப்ரயோஜனவதர்த்த' என்கிற சப்தம் என்றறிக. ப்ரயோஜனமுள்ள அர்த்தத்தின் ஆபாதப்ரதீதியன்றோ அதன் நிர்ணயத்தில் இச்சையை உண்டுபண்ணும். ப்ரயோஜனமில்லாத காக்கையின் தந்தம் முதலியவற்றின் ஆபாதப்ரதீதியானது அதன் நிர்ணயத்தில் ப்ரதீதியை உண்டுபண்ணுகிறதில்லையன்றோ! ஆபாதமாக அறியப்படுகிறவைகளைக்கண்டு என்று அந்வயம். அர்த்தங்களுடைய அவகம்யமாநத்வத்தைக்கண்டு என்று அர்த்தம், தன்னுடைய புத்தியின் உத்பத்தியைக்கண்டு என்பதுபோல. ப்ரயோஜனமுள்ள அர்த்தத்தின் ஆபாதப்ரதீதியானது தன் அநுபவத்தால் ஸித்தமாக இருப்பதால் அதை மறுப்பது சக்யமல்லவென்று கருத்து.

வ்யாகரணம் முதலிய சாஸ்த்ரங்களின் பலஸ்வரூபங்களைக்காட்டிலும் விலக்ஷணங்களான மீமாம்ஸாபலஸ்வரூபங்களைக்காட்டுகிறார் "தத்ஸ்வரூப" என்று. ஸ்வரூபவிசேஷங்கள் அங்கிகள்; ப்ரகாரவிசேஷங்கள் அங்கங்கள். பூர்வபக்ஷத்தில் கூறப்பட்டுள்ள ஸ்வரூபப்ரகாரங்களைக்காட்டிலும் ஸித்தாந்திக்கப்பட்டிருக்கிற பலஸ்வரூபங்

களுக்கு வைஷம்யமானது 'விசேஷ' சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. 'ப்ரயோஜனவதர்த்தஸ்வாத்யாயவேதமீமாம்ஸா' சப்தங்கள் பூர்வோத்தரபாகங்களிரண்டுக்கும் பொதுவாக இருக்கின்றன. 'ஸ்வயமேவ' தானாகவே, விதியினாலல்ல. 'அதீதவேத: புருஷ:' என்கிற இரண்டு பதங்களும் அதற்கு உபபதாகங்கள். 'அதீதவேத' அத்யயன விதிவ்யாபாரமானது அனுஷ்டிதாம்சத்தில் பர்யவஸிப்பதால் மீமாம்ஸையில் அதற்கு ப்ரவர்த்தகத்வமில்லை—என்பது த்யோதனம் செயயப்பட்டது. சேதனனாக இருப்பதால் பலத்துடன் கூடின அர்த்தங்களுடைய ஆபாதப்ரதீதியினால் தானாகப்ரவ்ருத்திக்கிறானென்பது புருஷசப்தத்தின் அபிப்பராயம்.

அத்யயனத்துக்கு அக்ஷராராசிக்ரஹணமாத்ரம் பலமென்று ஏற்படுகிற பக்ஷத்தில் ராகத்தினால் ப்ரவ்ருத்தித்தல் என்பதுகூட உபபன்னமாகாது. "வேதாங்கானி ஸமஸ்தானி க்ருஷ்ணபக்ஷேஷு ஸம்படேத் நிஷ்காரண: ஷடங்கோ வேதோத்யேய:வேதமத்யாபயேத் த்விஜ: ஸகல்பம் ஸரஹஸ்யஞ்ச" (வேதத்தினுடைய அங்கங்களான வ்யாகரணம், ஜ்யோதிஷம் முதலியவைகளனைத்தையும் அபரபக்ஷத்தில் படிக்கவேண்டும். த்ருஷ்டபலனைக் கருதாமல் ஆறு அங்கங்களுடன் கூடின வேதமானது அத்யயனம் செய்யத்தக்கது. கல்பங்களோடும், ரஹஸ்யங்களோடும் கூடின வேதத்தை ப்ராஹ்மணன் அத்யயனம் செய்விக்க வேண்டும்) இதுமுதலியவைகளால் விதிக்கப்பட்டிருக்கிற அங்காத்யயனமும் அக்ஷரக்ரஹணபர்யந்தமாக இருப்பதால் வ்யாகரணம் முதலியவற்றால் அர்த்தாவபோதமில்லாமையாலும், ப்ரக்ருதிப்ரத்யயஜ்ஞானமில்லாமையாலும் ஆபாதப்ரதீதி உண்டாகாது, எனில்,—

அப்படியல்ல. வ்யாகரணம் முதலியவை வேதாங்கங்களாக இருப்பதால் அங்கிக்கு கொஞ்சமேனும் உபகரிக்காமலிருப்பவைகளுக்கு அங்கத்வம் பொருந்தாததலால் ப்ரயோஜனம் அவச்யம் கல்பிக்கவேணும். அவ்வாறு கல்பிக்கவேண்டிய இடத்தில் த்ருஷ்டமான ஒருவித ப்ரயோஜனம் ஸம்பவிப்பதாயிருக்க அதைவிட்டு அத்ருஷ்டப்ரயோஜனகல்பனம் கூடாததலால், பதம் முதலியவற்றின் அவரோதஸ்வரூபமான த்ருஷ்டமான ப்ரயோஜனமே ஸ்வீகரிக்கத்தக்கது. அதுஇல்லாவிடில் அங்கத்வம் பொருந்தாததலால் வ்யாகரணம் முதலியவைகளால் பதபதார்த்தவாக்யார்த்தஜ்ஞானம் ஸித்திப்பதால் ப்ரயோஜனத்வாரா அர்த்தங்களின் ஆபாதப்ரதீதியினால் மீமாம்ஸாரம்பம் உபபன்னமாகிறது.

அத்யயனம் செய்த புருஷன் தானாகவே ப்ரவ்ருத்திக்கிறான் என்றதனால் "அதாதோ தர்மஜிஜ்ஞாஸா" என்கிற ஸூத்ரம் அர்த்தாத் வ்யாக்யானம் செய்யப்பட்டது. விதிக்கு அக்ஷராராசிக்ரஹணபர்யந்தத்வம் நிச்சயிக்கப்பட்டால் ப்ராவர்த்திக்குந்தன்மை இல்லாமையாலும், ஸ்வாத்யாயத்திற்கு அர்த்தப்ரவ்ருத்தியில் ப்ரமாணமில்லாமையாலும், மீமாம்ஸை ஆரம்பிக்கத்தக்கதல்லவென்று பூர்வபக்ஷம். அங்கங்களோடு கூடின வேதாத்யயனத்திற்குப் பிறகு சப்தத்திற்குத்தானாகவே அர்த்தத்தை உணர்த்தும் ஸ்வபாவம் காணப்படுவதால் வேறு ப்ரவர்த்தகமான வஸ்து ஒன்று இல்லாமலிருந்தபோதிலும்கூட ராகத்தினால் ப்ரவ்ருத்தி உபபன்னமாவதால் (மீமாம்ஸை) ஆரம்பிக்கத்தக்கதே என்று ஸித்தாந்தம்.

(கேள்வி) கர்மவிசாரம் ராகப்ராப்தமாகும் பக்ஷத்தில் "அதீத்ய ஸ்நாயாத்" (அத்யயனம் செய்து ஸ்நாதகவ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்) என்கிற ஸமாவர்த்தன ஸ்ம்ருதியானது ச்ருதிக்கு பாதகமாகும். (கர்மவிசாரம்) வைதமாக இருக்குமேயாகில் ஸ்ம்ருதியைக்காட்டிலும் ச்ருதி அதிக பலமுள்ளதாகையால் ஸ்ம்ருதி (ச்ருதிக்கு) இடம் கொடுக்கும் எனில், இப்படியல்ல.

அத்யயனவிதியைச்சார்ந்திருக்கிற அக்ஷராராசிக்ரஹணபர்யந்தத்வம், அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம்—ஆகிய இவை இரண்டுக்குள் எதை அபிப்ராயப்பட்டு இவ்வண்

ணம் உரைக்கப்பட்டது? அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் என்பதைக்கருதிச்சொல்லப் பட்டிருந்தாலோ, அப்பொழுது, "அதீத்ய ஸ்நாயாத்" என்கிற ஸ்ம்ருதியிலுள்ள அத்ய யன சப்தத்திற்கு ச்ருதியிள்ள சப்தத்தோடு அர்த்தத்தில் ஒற்றுமை வந்து விட்டபடியால் விரோதமில்லை. அக்ஷராராசிக்ரஹணபர்யந்தத்வம் என்பதை எண்ணிச்சொன்னாலோ, அப்போதும் துல்யமாக அர்த்தமிருப்பதால், விரோதமில்லை. மேலும், விரோதம் வந் தாலும் ப்ரத்யக்ஷசருதியுமிருக்கிறது. எங்ஙனமெனில், ச்சாந்தோக்யத்தில் "ஆசார்ய குலத்தினின்று முறை தவறாமல் வேதத்தை அத்யயனம் செய்து குருவுக்குச்செய்ய வேண்டிய சுச்ரூஷாசேஷமான தக்ஷிணைதானத்தினால் அவருடைய ஸம்மதி பெற்று ஸமாவர்த்தனம் செய்து கொண்டு குடும்பத்தில் சுத்தமான இடத்தில்"—இது முதலி யது. ஆதலால், ஸ்ம்ருதிவசனத்துடன் கூடின ஸ்நாநச்ருதியானது மிக்க பலமுள்ளது. ஆகையால், ச்ருதிஸ்ம்ருதிவசனங்கள் இரண்டுக்கும் ப்ராபல்யதௌர்பல்யங்களைச்சொல் லுவது ப்ரயோஜனமற்றது.

இங்ஙனமாகில், ச்ருதியினாலும் ராகத்தால் ப்ரவ்ருத்தியானது பாதிக்கப்படுமே எனில், இல்லை, ஸமாவர்த்தனத்தைச்செய்தவனுக்கும் ராகத்தால் ச்ரவணமுபபன்னமாவதால்.

ஸமாவர்த்தனமானது அத்யயனத்திற்குப்பிறகு செய்யவேண்டியதாக இருப்பதால் அந்த ஸமாவர்த்தனத்தை முன்னிட்ட க்ருஹஸ்தகர்மானுஷ்டானங்களால் தடை செய்யப் படாத ச்ரவணஸமயம் கிடைக்காமையால் மீமாம்ஸையின் அநாரம்பம் ப்ரஸங்கிக்குமெனில், இங்ஙனமல்ல. ஸமாவர்த்தனத்தைச்செய்தவனாக இருந்தபோதிலும் வேதாத்யயனச்ர வணத்தில் நோக்கமுள்ளவனுக்கு ஸமயம் நேர்வதுபோல, ஸமயம் ஸம்பவிக்கலாம்.

ஆசார்யனுக்கு அத்யாபனம் விஹிதம்; க்ருஹஸ்தனுக்கு ச்ரவணம் விதிக்கப்பட வில்லையே என்றால், அப்படியல்ல—யாஜனப்ரதிக்ரஹங்கள் போல் அத்யாபனம் ராக ப்ராப்தமாக இருப்பதால். ராகப்ராப்தமாயிருந்தபோதிலும் அத்யாபனமானது ப்ரதிக்ரஹம் முதலியவற்றால் பொருளைத்தேடவேண்டுமென்கிற சாஸ்த்ரத்தினால் அனுமதிக்கப்பட் டிருக்கிறதெனில், ச்ரவணமும் நிஷேதிக்கப்படாததாலும் யக்ஞாநுஷ்டானத்துக்கு உப யுக்தமாக இருப்பதாலும் சாஸ்த்ராநுமதம்.

'ஸம்வத்ஸரே ஸம்வத்ஸரே த்வௌ த்வௌ மாஸௌ ஸமாஹிதஆசார்யகுலே வஸேத் பூய: ச்ருதிமிச்சந்நிதி ச்வேதகேது:' (மறுபடியும் வேதச்ரவணத்தில் விருப்பமுள்ளவன் சித்தஸமாதானமுள்ளவனாக வருஷந்தோறும் இரண்டு இரண்டு மாதங்கள் முழுமையும் ஆசார்யக்ருஹத்தில் வஸிக்கவேண்டும் என்று ச்வேதகேது) என்று தொடங்கி "தச்சாஸ்த் ரைர்விப்ரதிஷித்தம் நிவேசே ஹி வ்ருத்தே நையமிகாநி சரூயந்தே அக்நிஹோத்ரமதிதய:" என்பதால் க்ரஹஸ்தனுக்கு ச்ரவணம் நிஷித்தமென்று கூறப்பட்டிருக்கிறதென்றால் அப்படியல்ல,—

இரண்டு மாதங்கள் முழுவதும் குருகுலவாஸமானது அநுஷ்டானத்திற்குத்தடை யாக இருப்பதால் அது மாத்ரமே நிஷேதிக்கப்பட்டிருப்பதால். விவாஹம் ஆனவுடன் அக்நிஹோத்ரம், அதிதிஸத்காரம் முதலிய க்ருஹஸ்ததர்மநியதங்களான கர்மாக்கள் சாஸ்த் ரத்தினால் விதிக்கப்பட்டிருக்கின்றன என்றல்லவோ கூறப்படுகிறது. ஆசார்யனுக்கும் அனுஷ்டானத்திற்கு உபரோதமின்றி ச்ராவணம் சாஸ்த்ரத்தினால் ஸம்மதிக்கப்பட்டிருக் கிறது. ஆகையால், அனுஷ்டானத்தின் உபரோதாநுபரோதங்களைக்காரணமாகக்கொண்ட அநுமதியையும், அநநுமதியையும் விஷயமாய்க்கொண்டிருத்தல் † ச்ரவணத்துக்கும்

† ச்ரவணம் – கேட்கல்

§ ச்ராவணத்துக்கும் ஸமானம். அதனாலேயே, க்ருஹஸ்ததர்மநிஷ்டர்களான யுதிஷ்டிரர் முதலியவர்களுக்கு பீஷ்மர் முதலியவர்களிடத்திலிருந்து ச்ரவணமானது பாரதம் முதலிய இதிஹாஸங்களில் ப்ரதிபாதிக்கப்படுகிறது.

என்றாலும், சராவணகாலமேதான் ச்ரவணகாலம். ஆயினும், ச்ரோதாவுக்கு, தீர்த்தங்கொண்டு வருதல், விறகுதேடுதல் முதலியவைகளால் அநுஷ்டானத்திற்கு உபரோத மேற்படுமெனில், அல்ல,—

அத்யயனவிதியினால் விதிக்கப்பட்ட உதகாஹரணம் முதலிய கார்யமானது அத்யயனம் முடிந்ததனாலேயே முடிவு பெறுவதால். பொருள் சேர்த்தல், புகழ்ச்சியைத்தேடுதல் முதலிய ப்ரயோஜனாந்தரங்களில் விருப்பத்தாலும், சிஷ்யனிடத்திலுள்ள ஸ்நேகத்தாலும் குருவுக்கு ச்ராவணம் உபபன்னமாகிறது.

ச்ரவணத்தைச்செய்விக்கிற ஆசார்யன் அர்த்தங்களை அறிந்தவனாக இருப்பதால் அனுஷ்டானம் பொருந்தும். ச்ரோதாவுக்கு அர்த்தஜ்ஞானமில்லாமையால் அனுஷ்டானம் ஸம்பவியாதென்றால், அப்படியல்ல,—உபநயனம் தொடங்கி அநுஷ்டானமுள்ளவர்களான ஹிதைஷிகளின் வசனத்தினால் அனுஷ்டானமுபபன்னமாவதால். அங்ஙனமாகில், ஹிதைஷியினுடைய வாக்யமே போதும், எதற்காக மீமாம்ஸையின் ச்ரவணம் என்றால், ஹிதைஷிகளுடைய வசனத்திற்கு ப்ரமாணமூலத்வநிச்சயத்தின் பொருட்டும், ப்ரச்னம் பண்ணுகின்ற மற்றவர்களுக்கும் தான் உபபாதனம் செய்வதின் பொருட்டும். ஹிதைஷியின்வசனத்தினால் அனுஷ்டானம்ஸம்பவிக்கும் பக்ஷத்தில் சூத்ரன்முதலியவர்களுக்குக்கூட அனுஷ்டானம் ப்ரஸங்கிக்க வேண்டியதாக ஆகும் என்றால், அதுஸம்பவிக்காது. ‘ந சூத்ராய மதிம் தத்யாத் நசாஸ்யோபதிசேத் தர்மம். ந சாஸ்ய வ்ரதமாதிசேத்’ (சூத்ரனுக்கு ஜ்ஞானத்தைக்கொடுக்கக்கூடாது. அவனுக்கு தர்மத்தை உபதேசிக்கக்கூடாது. அவனுக்கு வ்ரதங்களையும் உபதேசிக்கலாகாது) இது முதலான நிஷேதவசனமிருப்பதால் ப்ராஹ்மணர்கள் யக்ஞம் முதலியவற்றைசூத்ரனுக்கு உபதேசிக்கிறார்களில்லையன்றோ. சுச்ரூஷை செய்யாத சூத்ரவிசேஷவிஷயமானதால் இப்படிப்பட்ட நிஷேதவசனங்களுக்கு ஸங்கோசம் செய்ய வேண்டுமென்பது ஸரியல்ல, ஸங்கோசத்தைச்செய்வதற்குத்தகுந்த ப்ரமாணமில்லாமையால். சூத்ரன் யக்ஞம் முதலிய கர்மாக்களுக்குத்தகுதியுள்ளவன் என்பதைக்காட்டுகிற வேறு வசனம் காணப்படவில்லையன்றோ! மேலும், யாகம் செய்பவனால் வேதம் முழுவதும், மந்த்ரவிசேஷங்களும் ஜபிக்கத்தக்கவைகளென்று வசனமிருப்பதாலும், அந்த வேதம் முதலியவைகள் அத்யயனத்தினால் அடையத்தக்கதாலும், அந்த அத்யயனம் உபநயனத்தை அபேக்ஷித்து இருப்பதாலும், அந்த உபநயனத்தில் மூன்று வர்ணத்தார்களுக்கே அதிகாரமிருப்பதாலும், சூத்ரனுக்கு அதிகாரப்ரஸங்கமே இல்லை.

உபநயனவிதியானது, மூன்று வர்ணத்தார்களுடைய அத்யயனவிஷயமாக, ஒதுககக்கூடும். ஆதலால், சூத்ரனுக்கு உபநயனத்தை அபேக்ஷிக்காமலே அத்யயனம் ஸம்பவிக்கலாம். அவனுக்கு யாஜமானமந்த்ரங்களின் உச்சாரணமும் ஸம்பவிக்கலாம் என்றால், கூடாது. “தஸ்மாச்சூத்ரஸமீபே நாத்யேதவ்யம்” (ஆதலால் சூத்ரன் பககலில் அத்யயனம் செய்யத்தக்கதல்ல) “அத ஹாஸ்யவேதமுபச்ருண்வதஸ்த்ரபுஜதுப்யாம் ச்ரோத்ர ப்ரதிபூரணம்” (அப்படிக்கின்றி வேதத்தைக்கேட்டானேயாகில் அவன் காதில் ஈயத்தையும், அரக்கையும் காய்ச்சிவிடவேண்டும்) இது முதலிய சாஸ்த்ரங்களால் சூத்ரனுக்கு வேதச்ரவணம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. எப்பொழுது அத்யயனம் உபநயனாங்கமாக

§ ச்ராவணம் - கேட்பித்தல்

முடிந்ததோ, அதனால் அதில் த்ரைவர்ணிகர்களுக்கே அதிகாரம்; சூத்ரனுக்கு அதில் அதிகாரமில்லை—என்று ஏற்பட்டது. அக்காரணம் பற்றி மந்த்ரவிசேஷணங்களின் உச்சாரணம் உபபன்னமாகாததால் ஹிதைஷிவசனத்தால் சூத்ரன் முதலியவர்களுக்கு யாகாநுஷ்டான ப்ரஸங்கமில்லை. ஆதலால், அபசூத்ராதிகரணவிரோதமில்லை.

மேலும், எவ்வாறு "யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ரம் ஜுஹோதி" (உயிருள்ளவரையில் அக்னிஹோத்ரஹோமம் செய்யவேண்டும்.) இது முதலான விதியானது 'ந ஸ்வாங்கம் ஸ்வவ்யவதாயகம்' (தன்னுடைய அங்கம் தனக்கு § வ்யவதானத்தை உண்டுபண்ணுவதாக ஆகாது) என்கிற ந்யாயத்தால் தனக்கு உபயோகியாயும், ராகப்ராப்தமாயுமிருக்கிற பொருள் சேகரித்தல் முதலியவைகளுக்கு அவகாசத்தைக்கொடுக்கிறதோ—அவ்வாறாக அனுஷ்டானத்துக்கு உபயோகியான மீமாம்ஸாச்ரவணத்திற்கு ஸமாவர்த்தனவிதியும் அவகாசத்தைக்கொடுப்பதாக ஆகும்.

க்த்வாப்ரத்யத்துக்கு ஸமானமான கர்த்தாவோடுகூடி யிருத்தல்,—முந்தின காலத்தில் இருத்தல்—இதுமாத்ரமே பொருள். பிறகு என்கிற பொருள் இல்லை.

(நநு) ஆநந்தர்யமே விதிக்கத்தக்கது. இல்லாவிட்டால் விதி பயனற்றதாகும், துக்க ரூபமான குருகுலவாஸநிவ்ருத்தியானது தானாக வந்துவிடுமாதலால்,—என்று கூறப்படுமே யாகில், அப்படியல்ல. ஆநந்தர்யத்தை அர்த்தமாகக்கொண்டபோதிலும் விதிக்கு வையர்த்யம் வருகிறது, அதுவும் குருகுலவாஸம் துக்கரூபமாக இருப்பதினாலேயே. ஆகையால், நியமத்துடன் கூடிய ஸம்ஸ்காரவிசேஷமே ஸ்நாநமென்று அது விதேயம்; ஆநந்தர்யம் விதேயமல்ல. ஆதலால், 'ஆதீத்ய' என்கிற க்த்வாச்ருதிக்கு விரோதமில்லை. ஆதலால், தானாக ப்ரவ்ருத்திக்கிறான்.

"யோ ஹ வா அவிதிதார்ஷேயச்சந்தோதைவதேநமந்த்ரேண யஜதி யாஜயதிவாத்யா பயதி வா ஸ்தாணும் வர்ச்சதி கர்தம் வாபத்யதே,ப்ரவாமீயதே பாபீயாந்பவதி அயாதயா மாநிவஸ் யச்சந்தாம்ஸி பவந்தி, அத யோ மந்த்ரே மந்த்ரே வேத ஸர்வமாயுரேதி ச்ரேயாமச்சபவ தஸ்மாதேதாநி மந்த்ரே மந்த்ரே வித்யாத்" (எவன் ரிஷிச்சந்தஸ் தேவதைகளை அறியாமல் மந்த்ரத்தினால் செய்வனோ, செய்விப்பனோ அத்ய யனத்தைச்செய்விப்பனோ— அவன் நரகத்தில் விழுகிறான். மிக்க பாபியாகி ரஸ மில்லாமல் போகின்றான். எவன் ஒவ்வொரு மந்த்ரத்திலும் ரிஷிமுதலியவற்றை அறிகிறானோ அவன் பூர்ணமான ஆயுளைப்பெறுகிறான். ச்ரேயஸை அடைகிறான். அவனுடைய வேதங்கள் பழசாகி ரஸமற்றவைகளாக ஆகிறதில்லை. ஆதலால், ஒவ்வொரு மந்த்ரத்திலும் இந்த ரிஷி, தேவதைமுதலியவற்றை அறியவேண்டும்) இது முதலிய ச்ருதியினாலும 'அவிதித்வா ரிஷம் சந்தோதைவதம் யோகமேவச யோத்யாபயேஜ்ஜபேத்வாபி பாபீயாந் ஜாயதேஸ':(ரிஷியையும், சந்தஸையும், தேவதையையும், மந்த்ரத்தின் விநியோகத்தையும் அறியாமல் எவன் மந்த்ரத்தைப் பிறருக்கு அத்யயனம் செய்விப்பானோ, அல்லது ஜபிப்பனோ அவன் மிக்க பாபமுள்ளவனாகிறான்) என்கிற ச்ருத்யுபப்ருஹ்மணமான ஸ்ம்ருதியினாலும் அர்த்தஜ்ஞானவிதானம் பலித்தது,—

மந்த்ரத்தால் ப்ரதிபாதிக்கத்தக்க தேவதாஜ்ஞானம் இங்கு விதிக்கப்பட்டிருப்பதால் ஸமானந்யாயத்தாலும் தைவதசப்தமானது மந்த்ரத்தால் ப்ரகாசிக்கத்தக்க அனுஷ்டேயார்த்தத்தை விளக்கிக்காட்டுவதற்காக இருப்பதாலும், விதிமுதலிய பாகங்களின் அர்த்த ஜ்ஞானமும் விதேயமாகவேண்டுவதாலும். (பலித்தது) யோகமாவது மந்த்ரங்களுடைய

§ வ்யவதானம் - விலக்கம், மறைதல்.

விநியோகம். அதன் ஜ்ஞானமானது ப்ராஹ்மணபாகத்தினுடைய அர்த்தஜ்ஞானத்தை அபேக்ஷித்திருப்பதாலும், என்றால் அல்ல.

ப்ரதிக்ரஹம், ருதுகாலஸம்வேசனம் இவை முதலியவைகளுக்குப்போல ராகப்ராப்தத்வம் போகாது. ப்ராஹ்மணன் ப்ரதிக்ரஹம் முதலியவற்றால் பொருளைத்தேட வேண்டும். ருதுகாலத்தில் பத்னியை போகத்துககாக அணுகவேண்டும். இதுமுதலிய வசனமானது ப்ரதிக்ரஹம் முதலியவற்றுக்கு ராகத்தால் ப்ராப்தியைத்தடுக்காதுபோலும். இந்த வாக்யத்தினாலேயே அர்த்தஜ்ஞானம் விதிக்கப்பட்டிருப்பதால் அத்யயனவிதிக்கு அர்த்தஜ்ஞானபர்யந்தத்வம் ஆச்ரயிகைத்தக்கதல்ல. எப்படி க்ரதுக்கள் வேறு விதியினால் விதித்துவிட்டபடியால் ஆதானவிதிக்கு மேலே உள்ள க்ரதுபர்யந்தத்வம் ஆச்ரயிக்கப் படுகிறதில்லையோ- அப்படிப்போல,இந்த வாக்யமானது அத்யயனம் அர்த்தஜ்ஞானபர்யந்தம் என்பதை விதிக்கிறதில்லை, அர்த்தஜ்ஞானமானது வேறு வாக்யத்தினால் விதிப்பதாலும், இந்த இடத்தில் மந்த்ரமாத்ரத்துக்கு ரிஷி,சந்தஸ்,தேவதைகளுடைய விஜ்ஞானவிதானப்ரதீதியிருப்பதாலும். அதனால வேதமானது ஸாங்கமாக அத்யயனம் செய்யத்தக்கதென்பது விதிக்கும்; அர்த்தஜ்ஞானம் விதிக்காது,—சந்தஸ்தேவதை முதலியவற்றின் ஜ்ஞானமானது சந்தஸ், கல்பம், வ்யாகரணம், நிருக்தம், முதலான க்ரந்தங்களை அபேக்ஷிப்பதாலும், மீமாம்ஸையை அபேக்ஷியாமலிருப்பதாலும்.

விநியோகவிஷயமான ஸந்தேகமுண்டாகும்போது மீமாம்ஸை அபேக்ஷிக்கத்தக்கதாக ஆகுமே என்றால், அப்பொழுது ஸந்தேஹத்தைப்போக்குவதற்காக ராகத்தினால் ப்ரவ்ருத்தியானது உண்டாகலாம்.

"யததீதமவிஜ்ஞாதம் நிகதேநைவ சப்த்யதே—அநக்நாவிவ சுஷ்கைதோ நதஜ்ஜ்வலதி கர்ஹிசித்" (அத்யயனம் பண்ணப்பட்ட எந்த வேதவாக்யமானது அர்த்தஜ்ஞானமின்றி சப்தாநுபூர்வீமாத்ரத்தால் படிக்கப்படுமோ அது நெருப்பில்லாத சாம்பலில் உலர்ந்த விறகு போல ஒருபொழுதும ப்ரகாசிக்காது) என்கிற இந்த வசனமும் அத்யயனவிதிக்கு அர்த்தஜ்ஞானபர்யந்தத்வத்தை அறிவிக்கிறதில்லை. 'அதீதம் அவிஜ்ஞாதம்' என்கிற இந்த ச்லோகத்திலேயே அத்யயனம், அர்த்தஜ்ஞானம்—இரண்டுக்கும் தனித்து நிர்தேசமிருப்பதாலும்,ராகத்தினால் ப்ராப்தமாக இருப்பதை விதிப்பது அசக்யமாதலாலும் வேதங்களில் ஸ்வல்பத்தை அத்யயனம் செய்தவன் ப்ராஹ்மணன்,ஒரு சாகையை அத்யயனம் பண்ணினவன் ச்ரோத்ரியன், அங்கங்களை அத்யயனம் செய்தவன்¶ அநூசானன்—இது முதலியவைகளும், கல்பஸூத்ரப்ரயோகங்களும் அத்யயனத்தைக்காட்டிலும் அர்த்தஜ்ஞானம் வேறாக உள்ளதென்பதை அறிவிக்கின்றன. ஆதலால், ச்ரவணம் துக்கரூபமாதலால் சோம்பலாலேயோ, பொருள் தேடுவது முதலிய வேறு கார்யாஸக்தியினாலேயோ, எவன் ச்ரவணம் செய்கிறதில்லையோ அவனுக்கு ஆசையுண்டுபண்ணுவதற்காக 'யததீதம்' இது முதலியவசனம். எவ்வாறு பச்சகாய்களால் சூதாடாதே, க்ருஷியைத்தெரிந்துகொண்டு நிலத்தை உழுது பயிரிடு—பஹுமதி செய்யப்பட்டவனாக பொருளில் ரமிப்பாயாக— என்கிற வாக்யமானது, சோம்பேறிகளுக்கு ப்ரரோசனையின் பொருட்டோ; ப்ரபலமான பலேச்சையாலன்றோ ப்ரவ்ருத்தி உத்கடமாகும். இவ்வளவு மட்டினாலேயே க்ருஷிக்கும்,பொருள் சேர்க்கைக்கும் ராகப்ராப்தமென்கிற தன்மைக்கு பங்கமுண்டாகாதோ—அப்படிப்போல, இந்த வசனமும் ச்ரவணம் ராகப்ராப்தமென்பதைக் கெடுக்காது. ஆதலால் ராகத்தாலேயே ப்ரவ்ருத்திக்கிறான்.

¶ அநூசானன்:—குருவினிடத்திலிருந்து நியமத்துடன் வேதத்தை ஸாங்கமாய் அத்யயனம் செய்தவன்.

இவ்வண்ணம், வேறொன்றினால் ப்ரவ்ருத்தி ஸம்பவிக்கிறதாயிருக்க சப்தசக்தியை உல்லங்கனம் பண்ணி மீமாம்ஸாச்ரவணத்துக்கு விதேயத்வத்தை கல்பிப்பது யுக்தமல்ல.

பாஷ்யம்:—

தத்ர கர்மவிதிஸ்வரூபே நிரூபிதே, கர்மணாம் அல்பாஸ்திரபலத்வம் ச்ருத்வா அத்யயநக்ருஹீதஸ்வாத்யாயைகதேசோப நிஷத்வாக்யேஷு சாபாதப்ரதீதாநந்தஸ்திரபலாவாப்திப்ரதீதேஸ் தந்நிர்ணயபலவேதாந்தவாக்ய விசாரரூபம் சாரீரகசாஸ்த்ரம் அபிகரோதி | ததா வேதாந்தவாக்யாநி கேவலகர்மபலஸ்ய க்ஷயித்வம் ப்ரஹ்மஜ்ஞாநஸ்ய சாக்ஷயபலத்வம் ச வதந்தி |

'தத்யதேஹ கர்மசிதோ லோக: க்ஷீயத' ஏவமேவாமுத்ர புண்யசிதோ லோக: க்ஷீயதே' (சா. அ. ௧. ௬.)

'அந்தவதேவாஸ்ய தத்பவதி.' (ப்ரு. ௩. அ. ௧0.)

'ந ஹ்யத்ருவை: ப்ராப்யதே ஹி த்ருவம் தத்' (கா. ௨. 10.)

'ப்லவா ஹ்யேதே அத்ருடா யஜ்ஞரூபா:' (மு. ௧. ௨. ௭.)

'பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாந் நாஸ்த்யக்ருத: க்ருதேந |

'தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் |

தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரசாந்தசித்தாய சமாந்விதாய |

'யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம்' (மு. ௧. ௨| ௧௨. ௧௩.)

'ப்ரஹ்மவிதாப்நோதி பரம்' (தை. ௨. ௧. ௧.)

'ந ஸ புநராவர்த்ததே' (சா. ௭. ௧௫. ௨.)

'ஸ ஸ்வராட் பவதி' (சா. ௭. ௨௫. ௨.)

'தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி' (பு. ஸூ. ௧. ௬.)

'தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி நாந்ய: பந்தா அயநாய வித்யதே' (ச்வே. ௩. அ.)

ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி' (ச்வே. ௧. ௬.)

இத்யாதீநி ||

அந்த வேதத்தில் கர்மவிதிஸ்வரூபத்தை நிரூபணம் செய்ய கர்மங்கள் அல்பமாயும், நச்வரமாயுமுள்ள பலனுள்ளவைகள் என பதை அறிந்து, அத்யயநத்தால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற வேதத்தின் ஏகதேசமான உபநிஷத்வாக்யங்களில் மோக்ஷரூபமான அநந்தஸ்திரமாயுள்ள பலத்தில் ஆபாதப்ரதிதியினால் அதன் நிர்ணயத்தைபலமாக உடைய வேதாந்தவாக்யவிசாரரூபமான சாரீரக மீமாம்ஸையில் அதிகாரமுள்ளவனாக ஆகிறான். அப்படியே, வேதாந்தவாக்யங்கள் (ப்ரஹ்மஜ்ஞாநத்தை முன்னிட்டிராத) கேவலகர்மபலத்துக்கு க்ஷயத்தையும், ப்ரஹ்மஜ்ஞாநத்துக்கு அக்ஷயபலத்தையும் காண்பிக்கின்றன.

"எவ்வாறு இவ்வுலகில் க்ருஷிமுதலிய செய்கைகளால் ஸம்பாதிக்கப்பட்ட (வ்ரீஹிமுதலிய) பலமானது க்ஷயிக்கிறதோ, அவ்வாறே மறுமையிலும புண்யத்தால் தேடப்பட்ட ஸ்வர்கம முதலிய பலன்களும் க்ஷயத்தை அடைகின்றன."

"(அந்த கர்மங்களால் அடையப்பட்ட உலகம்) இவனுக்கு முடிவுள்ளதாகவே ஆகிறது."

"அசாச்வதங்களான (கர்மாக்களால்) அது அடையப்படாதன்றோ!"

"யஜ்ஞரூபங்களான ஓடங்கள் (ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைத்தாண்ட எண்ணமுள்ளவர்களுக்கு) த்ருடமுள்ளவைகளல்ல."

"கர்மபலன்களை நன்றாக ஆராய்ந்து (ஸாங்கமாய் வேதாத்யயநம் செய்த) ப்ராஹ்மணன் அவைகளில் நிவ்ருத்தியை அடைய வேண்டும். செய்யப்பட்ட கர்மாவினால் நித்யனான (பரமபுருஷன்) ஸித்திக்கமாட்டான். அந்த ப்ரஹ்மஜ்ஞாநத்தை ஸம்பாதிப்பதற்காக அவன் ஸமித் முதலியவற்றைக்கையில் கொண்டவனாக, வேதாத்யயநம் செய்தவரும், ப்ரஹ்மஸாக்ஷாத்காரமுள்ளவருமான குருவையே நாடவேண்டும்."

"தன்னை அணுகியவனும், வணக்கமுள்ளவனும, நன்றாக மனதை அடக்கியவனும், வெளி இந்த்ரியங்களை ஜயித்தவனுமான அந்த சிஷ்யனுக்கு ப்ரஹ்மத்தை அறிந்தவரான அந்த குரு எந்த விஜ்ஞாநத்தினால் ஸ்வரூபத்தாலும், குணங்களாலும், விகாரமில்லாத புருஷனை அறிகிறாரோ அப்படிப்பட்ட ப்ரஹ்மவித்யையை உண்மையாய் உபதேசிக்கக்கடவர்."

“ ப்ருஹத்வகுணவிசிஷ்டமான வஸ்துவை உபாஸிப்பவன் எல்லா வஸ்துக்களையும் விடச்சிறந்ததான ப்ரஹ்மத்தை அடைகிறான்.”

“ அந்த நிகரற்ற ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிப்பவன் மீண்டும் ஸம்ஸாரத்தைப்பார்க்க மாட்டான்.”

“அவன் கர்மவாச்யனாக ஆகிறதில்லை.”

“இவ்விதம் அவனை அறிபவன் இங்கேயே முக்தனாக ஆகிறான்.”

“ அந்த (பரமபுருஷனை அடைவதற்கு) இதைத்தவிர வேறு வழி கிடையாது.”

“ ஜீவாத்மாவையும், ப்ரேரகனான பரமாத்மாவையும் தனித்திருப்பவர்களென்று அறிந்திருப்பவன் அந்த ப்ருதக்த்வஜ்ஞானத்தினால், (ப்ரீதிக்கு விஷயமாக்கப்பட்டவனாக) மோக்ஷத்தை அடைகிறான்.”

இது முதலியவைகள் என்று (காட்டுகின்றனர்.)

---

ச்ருதப்ரகாசிகை.—

ஜகசாஸ்த்ரியமும், ராகத்தினால் ப்ரவ்ருத்தியும் இருக்கட்டும். பௌர்வாபர்யநியமம் எவ்வாறு ?—என்றால், ‘தத்ர’என்று தொடங்கி பதில் சொல்லுகிறார்.

‘தத்ர’—அந்தவேதத்தில். “கர்மவிதிஸ்வரூபே நிரூபிதே” கர்மபாகம் வேதத்தின் தொடக்கத்தில் இருப்பதால் அத்யயநக்ரமத்திலேயே நிரூபணம் யுக்தமாக இருப்பதால் கர்மவிசாரம் முந்தியதாக ஆயிற்று—என்று கருத்து.

கர்மாக்களுக்கு அல்பாஸ்திரபலத்வமும், அநந்தஸ்திரபலத்வமும் பூர்வபக்ஷவித்தாந்தரூபமாக ஓரிடத்திலும் நிரூபிக்கப்படவில்லை. அப்படியிருக்க எவ்வாறு அல்பாஸ்திரபலத்வஜ்ஞானம் உண்டாகும் ?—என்றால், ‘கர்மவிதிஸ்வரூபே நிரூபிதே’-என்று தொடங்கிச்சொல்லுகிறார்.

கேவலகர்மவிதிஸ்வரூபமே நிரூபிக்கப்பட்டது. அல்பாஸ்திரபலத்வஜ்ஞானமானது ஆவ்ருத்திவிதானம் (மீண்டும் வருவதைச்சொல்லுகிற விதி) முதலியதால் பலித்ததென்று கருத்து. அல்லது, கர்மவிதிஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது. ஆராதிக்கத்தகுந்த பரதேவதாஸ்வரூபம் நிரூபிக்கப்படவில்லை—என்று கருத்து. அவனுடைய ஆராதனமாக கர்மாக்கள் செய்யப்பட்டாலன்றோ அநந்தமான ஸ்திரபலத்வம் ஸித்திக்கும்.

அத்யயநக்ருஹீத்ஸ்வாத்யாய’ அத்யயநத்துக்கு வேதம் முழுவதும் விஷயமாக இருப்பதாலும், உபநிஷத்தானது ஸ்வாத்யாயசப்தத்தில் உள்ளடங்கி இருப்பதாலும்—என்று கருத்து.

‘ஏகதேச’ சப்தத்தால் ஒருப்ரபதந்தத்தின் அம்சம்—என்பது ஸூசிக்கப்பட்டது. ஸாதாரணமான வேதசப்தத்தால் நிர்தேசிக்கப்பட்ட சப்தராசியில் ‘உபநிஷத்’சப்தத்தினால்

மற்றவைகளை ப்ரதிபாதிக்காமல் ப்ரதானத்தையே ப்ரதிபாதிக்கும் பாகத்தைத் தனித்து நிர்தேசிககிறார்.

'வேதாந்த'—சப்தத்தால் விசாரத்தைச்சார்ந்த பௌர்வாபர்யநியமத்துக்கு ஹேது காட்டப்பட்டது. 'மீமாம்ஸா' சப்தத்தால் சொல்லப்பட்ட வ்யாக்யானத்தில் 'சாரீரக' சப்தத்தால் ப்ரதேசபேதத்தை விசேஷிக்கிறார்.

'அந்நவாநந்நதோ பவதி, மஹாந் பவதி ப்ரஜயா பசுபிர் ப்ரஹ்மவர்சஸேந' (ஐச்வர்ய முள்ளவன் ஸுகாநுபவம் பண்ணுகிறான். ஸந்ததியினாலும், பசுக்களாலும், ப்ரஹ்மவர்ச்சஸத்தினாலும் மஹிமையுள்ளவனாக ஆகிறான்.) இது முதலியவைகளால் சொல்லப்பட்ட †ஆநுஷங்கிகமான அல்பாஸ்திரபலன்களை வ்யாவ்ருத்திப்பதற்காக 'அம்ருதத்வரூப' சப்தம் ப்ரயோகிக்கப்பட்டுள்ளது. ஆநுஷங்கிகங்கள் அல்பாஸ்திரங்களாயிருந்தபோதிலும் ப்ரதானபலத்திற்கு அநந்தஸ்திரத்வேந ஆபாதப்ரதீதி இருக்கிறதென்று அர்த்தம். கர்மமீமாம்ஸையினால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட மனதுடன் கூடியிருத்தலால் இதில் அடையத்தக்க ஆநுஷங்கிகமும், ப்ரதானபலமும், ஸம்பவிக்கிறதென்று ச்ரோதாவுக்கு அறிவு உண்டாகவே உண்டாகிறது.

பலமாதலால் இதுவும் அத்யயநம் என்று புத்தி உண்டாகலாம் என்றால் அப்படியல்ல. ஏனெனில்,—

விபக்ஷத்தில் பாதகமில்லாமையால். எப்படி பூமியிலுள்ள ஸுகத்தைவிட ஸ்வர்கம் முதலிய ஸுகம் விலக்ஷணமென்று அறியப்பட்டிருக்கிறதோ, அதிலும் ஒன்றுக்கொன்று வேறுபாடு தேசகாலஸ்வரூபத்தால் அறியப்படுகிறதோ,—அப்படியே அதைக்காட்டிலுங்கூட விலக்ஷணமான ஸுகம் ஸம்பவிக்கலாமென்று அதிகமாய் ராகமுண்டாகும் பொருட்டு இதற்கும் ப்ரதீதி உண்டாகலாம்.

'அதிகரோதி'—அதிகாரியாகிறான். இவ்விதம் கர்மவிசாரம் செய்தவனே அதிகாரியாக ஆகிறான். ஸாதநசதுஷ்டயமுள்ளவன் ஆகான்—என்று அபிப்ராயம் இவ்விதமாக ஐகசாஸ்த்ர்யம், க்ரமம், நியமம், ஆரம்பணீயத்வம்—இவைகள் உபபாதிக்கப்பட்டன.

எந்த வேதாந்தவாக்யங்களால் ஆரம்பணீயத்வத்துக்கு உபயுக்தமான ஆபாதப்ரதீதி உண்டாகிறது—என்பதை 'தயாச' என்பதால் சொல்லுகிறார். எப்படி ஸூத்ரம் வ்யாக்யாநம் செய்யப்பட்டதோ அப்படியே என்று அர்த்தம். சகாரம் சங்கையின் நிவ்ருத்தியிலாவது, ப்ரஸித்தியிலாவது இருக்கிறது. 'கேவல' சப்தத்தினால் ஜ்ஞாநாங்கமான கர்மா வ்யாவ்ருத்திக்கப்பட்டது.

கர்மவிசாரத்தால் கர்மபலன்கள் அழிவுள்ளவைகள் என்று நிச்சயிக்கப்பட்டிருந்தபோதிலுங்கூட மீண்டும் அல்பாஸ்திரபலத்வப்ரதீதியை உண்டு பண்ணும் வாக்யங்கள் யாது காரணம்பற்றி உதாஹரிக்கப்படுகின்றன? அநந்தஸ்திரபலாபாதப்ரதீதியை உண்டு பண்ணும் வாக்யங்களே உதாஹரிக்கத்தக்கவைகள்.

இந்தக்கேள்விக்கு உத்தரம் சொல்லப்படுகிறது:—விசாரம்செய்து கர்மாக்களை அறிந்தவனுக்கல்லவோ நிச்சயிக்கப்பட்ட அர்த்தங்களோடு ஸம்வாதமுள்ள வாக்யங்களைக் காண்பதினால் கர்மபலன்களின் அஸ்தைர்யம் போல, ப்ரஹ்மஜ்ஞாநபலத்துக்கு அக்ஷ

---

† ஆநுஷங்கிகம்—அப்ரதானம்.

யித்வமும் ப்ராமாணிகமாக ஸம்பவிக்கிறதென்கிற ச்ரத்தையை உறுதிப்படுத்துவதற்காகவே (உதாஹரிக்கப்படுகின்றன.)

(**தத்யதா**) லோக்யதே என்ற வ்யுத்பத்தியினால் 'லோக'சப்தம் பலவாசீ. 'அந்தவ தேவாஸ்ய தத் பவதி' என்கிற வசனத்தினால் ஜ்ஞானமில்லாத கர்மாக்கள் அநேக காலங்களாக அநுஷ்டிக்கப்பட்டபோதிலும், அவை பலவிதமாயிருந்தபோதிலும், க்ஷயத்துடன் கூடியிருத்தல் சொல்லப்பட்டதாக ஆகிறது; அந்த வாக்யமானது $ 'யோ வா ஏததக்ஷரம் கார்க்ய விதித்வாஸ்மிந் லோகே ஜுஹோதி, யஜதே, தபஸ்தப்யதே, பஹூநி வர்ஷ ஸஹஸ்ராணி' என்கிற இந்த வாக்யத்தை முந்தினதாகக்கொண்டிருப்பதால்.

அந்தவத்—(முடிவுள்ளது) என்று சொன்னால், க்ரியாஸ்வரூபம் முடிவுள்ளதென்பது உலகத்தில் ப்ரஸித்தமாதலால் அது உபதேசிக்கத்தக்கதல்லவென்று பலத்துக்கே அந்தவத்வம் அர்த்தஸித்தம் என்பதை ப்ரகாசப்படுத்துவதற்காக முந்தி 'தத்யதா' என்ற வாக்யம் எடுக்கப்பட்டிருக்கிறது. ஸாம்ஸாரிகபலத்துக்கு அத்ருவத்வம் இருக்கலாம்—கர்மாக்களாலேயே த்ருவமான பலம் ஸம்பாதிக்கப்படலாம்—என்கிற சங்கையை அகற்றுவதற்காக 'ந ஹ்யத்ருவை: ப்ராப்யதே' என்று எடுக்கிறார்.

'த்ருவம் தத்' என்று வாக்யகண்டம். அதற்கு உபபாதகமாய் அறியப்படுகிற 'ப்லவா ஹ்யேதே அத்ருஷ்டா யஜ்ஞரூபா:' என்கிற வேறு வாக்யத்தை உதாஹரிக்கிறார். ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைக்கடந்து அக்கரை சேரும்படி செய்வதற்கு இவை ஸாமர்த்யமுள்ளவைகள் அல்ல ; ஏனெனில், நடுவில் உடைந்து போகக்கூடியவைகள்—என்று கருத்து.

'பரீக்ஷ்ய லோகாந்' என்று ஸூத்ரயோஜனைக்கு மிகவும் பொருத்தமுள்ளதான கர்மாக்களின் அஸ்திரபலத்வத்தையும், ப்ரஹ்மோபாஸநத்தின் அக்ஷயபலத்வத்தையும் காண்பிக்கிற வாக்யத்தை எடுக்கிறார். இந்த வாக்யத்தில் ந்யாயஸித்தமான அர்த்தத்தை அநுவாதம் செய்ததால் குருபஸதநம் விதிக்கப்படுகிறது.

'கர்மசிதாந்' கர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்ட. 'பரீக்ஷ்ய' மீமாம்ஸாந்யாயங்களால் நிரூபித்து. 'ப்ராஹ்மண:' ஸாங்கமாயும், ஸசிரஸ்கமாயுமுள்ள வேதத்தை அத்யயநம் செய்தவன். 'ய:' என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். ஏனெனில், 'ஸ:' என்று மேலே இருப்பதால். 'அக்ருத:' நித்யன். இங்கு 'புருஷ:' என்பது விசேஷ்யம். ஏனெனில், லிங்கவசத்தாலும், 'அக்ஷரம் புருஷம்' என்று உடனே சொல்லுவதாலும். 'க்ருதேந' கர்மாவினால். 'நாஸ்தி' ஸித்திக்காது—கிடைக்காது. 'இதி' சப்தம் காரணத்தகுந்தது. எவன் நிர்வேதமடைவனோ அவன் அதை அறியும்பொருட்டு குருவையே நாடவேண்டும். 'ஏவ'காரத்தால் நியமவிதித்வம் அறியப்படுகிறது. 'ஸமித்பாணி:' என்பதால் வெறுங்கையுடன் இருக்கக்கூடாதென்று ஏற்படுகிறது. இவ்விஷயத்தில் 'ரிக்தஹஸ்தோ நோபேயாத் ராஜாநம் தைவதம் குரும்' (ராஜா, குரு, தேவதை—இவர்களிடம் வெறுங்கையுடன் போகக்கூடாது) என்று ஸ்ம்ருதி ப்ரமாணம். 'ச்ரோத்ரியம்' வேதாந்தத்தை குருமுகமாகக்கேட்டவனை. 'ப்ரஹ்மநிஷ்டம்' ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் பிறந்தவனை. வேதாந்தம் கேட்டவனாயிருந்தபோதிலும், ப்ரஹ்மநிஷ்டனல்லாதவன் ருசிபேதத்தால் நாடத்தகுந்தவனாகான் என்று கருத்து. 'அபிகச்சேத்' என்பதோடு அந்வயம். 'சம:' வெளி இந்த்ரியங்களை அடக்குதல். ப்ரசாந்தசித்தாய என்னும் பதத்தால் அந்த:கரணம் சொல்லப்பட்டு விட்டபடியால் பரிசேஷாத்

$ யோ ஹ வா—இதற்கு அர்த்தம் ௬0-ம் பக்கத்தில் பார்க்க.

இதுதான் 'சம' சப்தத்தின் அர்த்தம். இதனால் சமமேயுக்தமான அவதானம் விவக்ஷிக்கப்பட்டது. உபாஸநோபயுக்தமான அத்யந்த இந்த்ரியஜயம் முதலியவை சொல்லப்படவில்லை. 'தஸ்மை ஸ வித்வான் ப்ரோவாச' என்று அன்வயம். 'யேந' இந்த நிர்தேசம் விஜ்ஞாநாபிப்ராயமுள்ளது; தத்விஜ்ஞாநார்த்தம் என்றல்லவோ ப்ரக்ருதம். ஸாமாந்யமாய் காரணாபிப்ராயமுள்ளதாவது, லிங்கத்தின் மாறுதலாவது. 'அக்ஷரம்' ஸ்வரூபத்தால் விகாரமற்றது. 'ஸத்யம்' குணத்தினாலும் விகாரமில்லாதது. இவ்விரண்டு பதங்களாலும் அசித், ஜீவன், இவைகளைக்காட்டிலும் வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. 'தாம்' ப்ரஹ்மவித்யாம். 'ப்ரோவாச' ப்ரப்ரூயாத் என்று அர்த்தம், என்று இவ்விதம் வேதாந்தஸாஸ்த்ரத்தில் வ்யாக்யாநம் செய்யப்பட்டிருக்கிறது. ச்சந்தஸி லுங், லங், லிட: என்று லிட்

'ப்ரசாந்தசித்தாய சமான்விதாய' என்கிற பதங்களால் சமம் முதலியவைகளுக்கு பூர்வவ்ருத்தத்வம் அறியப்படுகிறதே—என்றால், இல்லை,—ச்ரவணத்துக்கு உபயோகமான கவனம்மாத்ரம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் உபாஸநத்துக்கு அங்கமாயுள்ள அத்யந்த விஷயவைத்ருஷ்ணயம் விவக்ஷிதமில்லை. அந்த விஷயமும் 'சமதமாத்யுபேத: ஸ்யாத்' என்று நிரூபிக்கப்படப்போகிறது. ஆதலால், நிரூபிக்கத்தகுந்த வஸ்துவால் ஸம்பாதிக்கத்தக்க அவைகளோடு முந்தியே சேர்ந்திருக்கை உபபன்னமாகாது. ச்ருதியும், சாஸ்த்ரத்தினால் உண்டுபண்ணத்தகுந்த ஜ்ஞாநமுள்ள புருஷனுக்கு அதற்குமேல் வரக்கூடிய சமம் முதலியவற்றை அங்கமாகக்கொண்ட உபாஸநத்தைக்காட்டுகிறது.—"தஸ்மாத் ஏவம் வித் சாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூத்வா ஆத்மன்யேவாத்மாநம் பச்யேத்" என்று. (ஆதலால், இவ்வண்ணம் அறிந்தவன் வெளி இந்த்ரியங்களையும், மனதையும் ஒடுக்கினவனாகவும், ஒழிவுள்ளவனாகவும், பொறுமையுள்ளவனாகவும், அவதானமுள்ளவனாகவும், தன்னுள்ளத்தில் ஆத்மாவைப்பார்க்கவேண்டும்.) இங்கு 'ஏவம் வித்' என்பதால் சாஸ்த்ரங்களால் ஜ்ஞாநத்வம் கூறப்பட்டது. 'பூத்வா பச்யேத்' என்றதால் உபாஸநத்துக்கு சமம்முதலியவைகளை அங்கங்களாகக்கொண்டிருத்தல் ஸ்தாபிக்கப்பட்டது. 'ப்ரஹ்மவித்' என்பதால் தனித்த அநந்தஸ்திரபலபரமான வாக்யங்களை உதாஹரிக்கிறார்.

இந்த அனுவாகத்தில் 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்ற ச்ரவணத்தால் அநந்தபலத்வஸித்தி. ப்ராப்யமான ப்ரஹ்மத்துக்கு அநந்தத்வம், ஸ்திரத்வம் இவைகளிருந்தபோதிலும் ப்ராப்தி ஏதோ ஒரு ஸமயத்திலோ என்கிற சங்கையை விலக்குவதற்காக 'நபுந:' என்பதால் அபுநாநிவ்ருத்தியைக் கூறுகிறார். அல்லது, வித்யையினால் அநந்தஸ்திரபலரூபமான ப்ரஹ்மப்ராப்தியைச்சொல்லுகிறார் 'ப்ரஹ்மவித்.' ப்ரதிபந்தகநிவ்ருத்தியை முன்னிட்டு வித்யையினால் ப்ரஹ்மப்ராப்தியை 'நபுந:'என்பதால் சொல்லுகிறார். 'ம்ருத்யு' ப்ரமாதம், அல்லது மோஹம். 'மோஹோ ம்ருத்யுஸ்ஸம்மதோய: கவீநாம்' 'ப்ரமாதம் வை ம்ருத்யுமஹம் ப்ரவீமி' (மோஹமென்பது ம்ருத்யு என்று சொல்லுகிறேன்)என்று இரண்டிடத்திலும் மருத்யுசப்தத்தால் மோக்ஷத்தையும், ப்ரமாதத்தையும் வ்யபதேசித்திருக்கிறது. ப்ரமாதமாவது ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமை. மோஹமென்பது ப்ராந்திஜ்ஞாநம் என்று 'திங்மோஹம்' முதலிய வ்யபதேசத்தால் ஏற்படுகிறது. ம்ருத்யுநிவ்ருத்தி மாத்ரமேயல்ல, கார்யமும் நிவ்ருத்திக்கிறது—என்பதை 'ந பச்யோ ம்ருத்யும் பச்யதி' என்பதால் கூறுகிறார். ஏனெனில், இந்த வாக்யத்துக்குமேல், 'ந ரோகம் நோத துக்கதாம்' என்று ச்ருதிவசநமிருக்கிறது. 'நபுந:' இது முதலிய வாக்யம்—ப்ரஹ்மம் பார்க்கப்பட்டால் ம்ருத்யு முதலியது நிவ்ருத்திக்கிறது-என்பதைத் தெரிவிப்பதற்காக. 'ந பச்யோ ம்ருத்யும்' என்கிற இடத்தில்கூட 'பச்ய'சப்தத்திற்கு ப்ரஹ்மத்தைப்பார்ப்பவன் என்று அர்த்தம். ஏனெனில், 'ததேகம் பச்யதி' என்று அடுத்ததாக

உதாஹரிக்கப்பட்ட வாக்யத்தில் விஷயத்வம் காட்டப்பட்டிருப்பதால். 'ஸ ஸ்வராட்பவதி' கர்மவச்யனுக ஆகிறதில்லை என்ற பொருள். 'ஸ்வராட் ஸ்வதந்த்ரோ விஜ்ஞேய:' (எவன் ஸ்வதந்த்ரனே அவன் ஸ்வராட் என்று அறியத்தக்கவன்) என நிகண்டுகாரர்கள் சொல்லுகிருர்கள். 'தமேவம் வித்வாந்' என்கிற வாக்யத்திஞல் நிர்விசேஷசிந்மாத்ரஜ்ஞாநதேவதாந்தரோபாஸநம் முதலான உபாயாந்தரவ்யாவ்ருத்தி ஸித்தித்தது எனெனில்,புருஷோத்தமோபாஸநமே உபாயமென்று சொல்லியிருப்பதால். அதனுடைய உபாஸநாரூபஜ்ஞாநமும் ஆத்மைக்யவிஷயமன்று. ஆஞல் ப்ருதக்த்வவிஷயம் என்பதை 'ப்ருதகாத்மாநம்'என்பதால் காட்டுகிறா. மத்வா-அறிந்து. 'தத:' ப்ருதகத்வஜ்ஞாநத்திஞல், 'தேந ஜுஷ்ட:' ப்ரீதிக்கு விஷயமாக்கப்பட்டவன். அநுக்ரஹிககப்பட்டவன் மோக்ஷத்தை அடைகிருன். என்ற அர்த்தம். 'இத்யாதீநி வேதாந்தவாக்யாநி-என்று முந்தினதோடு அந்வயம்.

பாஷ்யம்:—

நநு ச ஸாங்கவேதாத்யயநாதேவ கர்மணாம் ஸ்வர்காதிஃபலத்வம், ஸ்வர்காதீநாம் ச க்ஷயித்வம், ப்ரஹ்மோபாஸநஸ்யாத்யந்திகஃபலத்வம் ச ஜ்ஞாயத ஏவ, அநந்தரம் முமுக்ஷோர் ப்ரஹ்மஜிஜ்ஞாஸாயாமேவ ப்ரவ்ருத்தி:, கிமர்த்தா தர்மவிசாராபேக்ஷா ?

ஏவம் தர்ஹி ஶாரீரகமீமாம்ஸாயாமபி ந ப்ரவர்த்திதவ்யம்; ஸாங்கவேதாத்யயநாதேவ க்ருத்ஸ்நஸ்ய ஜ்ஞாதத்வாத் । ஸத்யம்; ஆபாதத: ப்ரதீதிரஸ்த்யேவ, ததாபி ந்யாயாநுக்ருஹீதஸ்ய வாக்யஸ்யார்த்தநிஶ்சாயகத்வாதாபாதப்ரதீதோऽப்யர்த்த: ஸம்ஶயவிபர்யயௌ நாதிவர்த்ததே, அதஸ்தந்நிர்ணயாய வேதாந்தவாக்யவிசார: கர்த்தவ்ய இதி சேத்; தத்வதேவ தர்மவிசாரோऽபி கர்த்தவ்ய இதி வயம் வதாம:॥

அங்கங்களுடன் கூடின வேதாத்யயநத்திஞலேயே கர்மாக்கள ஸ்வர்கம் முதலியவற்றை பலமாக உடையவைகள் என்றும், ஸ்வர்கம் முதலியவை அழிவுள்ளவைகள் என்றும், ப்ரஹ்மோபாஸநமானது மோக்ஷத்தை பலமாகக்கொண்டதென்றும், நிச்சயமாய் அறியப்படுகிறது. பிறகு முக்தியில் விருப்பமுள்ளவன் ப்ரஹ்மவிசாரத்திலேயே ப்ரவ்ருத்திக்கலாம். தர்மவிசாராபேக்ஷை எதற்காக?

என்ருல், அப்படியாகில் சாரீரகமீமாம்ஸையிலும் ப்ரவ்ருத்திக்கக்கூடாது, ஸாங்கவேதாத்யயநத்தாலேயே எல்லாம் அறியப்பட்டிருப்பதால். ஸத்யம்—ஆபாதமான அறிவு இருக்கவே இருக்கிறதென்ருலும், ந்யாயத்திஞல் அநுக்ரஹிக்கப்பட்டுள்ள வாக்யம் அர்த்தநிச்சாயகமாதலால் ஆபாதஜ்ஞாநத்தாலறியப்பட்டிருந்தபோதிலுங்கூட அந்த அர்த்தமானது ஸம்சயவிபர்யயங்களை

விலக்கமாட்டாது. ஆகையால், அதன் நிர்ணயத்தின் பொருட்டு வேதாந்தவாக்யவிசாரம் செய்யத்தக்கதென்றால், அப்படியே தர்ம விசாரமும் செய்யத்தக்கதென்று நீ கண்டுகொள்வாயாக.

ச்ருதப்ரகாசிகை:—

உதாஹரிக்கப்பட்ட ஸ்பஷ்டமான அர்த்தத்துடன் கூடிய வாக்யமாத்ரத்தால் த்ருப்தியடைந்த ஒருவன் 'நநுச' என்று சோதனம் செய்கிறான். இவ்விடத்தில் முன்புள்ள வேறு சோத்யங்கள் கண்டோக்தமாய் இல்லாவிட்டாலும், அவைகளின் பரிஹாரம் கண்டோக்தமாக இருப்பதால் அந்த சோத்யங்கள் அபிப்ராயப்பட்டிருக்கின்றன. ஆகவே, 'ச' சப்தத்தால் அர்த்தஸித்தங்களான அவைகளோடு (அந்த சோத்யங்களோடு) கூட ஸமுச்சயம் தகுந்தது.

'ஸாங்க' கர்மஜ்ஞானத்துக்கு பூர்வவ்ருத்தத்வம் சொல்லுபவனால்கூட ஸாங்காத்யயநம் அபேக்ஷிதமென்று அங்கீகரிக்கப்பட்டிருப்பதால் அதைவிட அதிகாம்சநிராகரணார்த்தமாக 'ஏவ'காரம். அத்யயநம் ஸாங்கமாகச்செய்யவேண்டியதாலும்,—அங்கங்கள் அர்த்தஜ்ஞானத்துக்குக்காரணமாயிருப்பதாலும்,—மீமாம்ஸையை எதிர்பாராமலே ஸ்வர்கம் முதலியவைகள் கேவலகர்மபலங்களென்றும், அவை அழிவுள்ளவைகள் என்றும், ப்ரஹ்மோபாஸநம் அக்ஷயமான பலமுள்ளதென்றும் அறியப்படுகிறதென்று பொருள்.

'ப்ரஹ்மோபாஸநஸ்ய' இதுமுதலிய க்ரந்தம் திருஷ்டாந்தாபிப்ராயபரம். 'ஜ்ஞாயத ஏவ' என்கிற ஏவகாரமானது ஜ்ஞாதத்வஸம்ப்ரதிபத்தியை ஸூசிப்பிக்கிறது. ஜ்ஞாநஸாமக்ரீ ஸித்தமாகவன்றோ இருக்கிறது—என்று அபிப்ராயம். அதனால் என்னவென்றால்,—'அநந்தரம' என்று தொடங்கிசசொல்லுகிறார். கர்மாக்கள் அல்பாஸ்திரபலனுள்ளவைகள்—என்கிற ஜ்ஞாநத்தினால் மோக்ஷத்தில் விருப்பம் உண்டாவதின் பொருட்டன்றோ கர்மவிசாரம். அதை அபேக்ஷிக்காமலே அல்பாஸ்திரபலத்வஜ்ஞானத்தினால் முமுக்ஷுத்வம் ஸித்திப்பதால் ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸையே செய்யத்தக்கது,—தர்மவிசாரத்தில் ப்ரயோஜநமில்லாமையால் என்று பொருள்.

'ஏவம்' என்பதால் பரிஹரிக்கிறார். 'ஏவம் தர்ஹி' உதாஹரிக்கப்பட்ட வாக்யமாத்ரத்தினால த்ருப்தியுள்ளவனாக ஆகிறாயேயாகில். 'க்ருத்ஸ்நஸ்ய' ப்ரஹ்மத்துக்குங்கூட என்று கருத்து. வேதாந்தவாக்யங்கள் கூட ஸ்புடமாகவன்றோ நம்மால் உதாஹரிக்கப்பட்டன. அவைகளுடைய அர்த்தமும் மீமாம்ஸையை அபேக்ஷிக்காமல் அறியப்படுகிறது. ஆதலால் அநந்தஸ்திரபலஜ்ஞாநத்தின்பொருட்டு ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கதல்லவென்று பொருள்.

'ஸத்யம்'என்கிற பதம் அர்தாங்கீகாரத்திலே. ஆபாதப்ரதீதியில் அங்கீகாரம். ப்ரஹ்மவிசாரநைரபேக்ஷ்யத்தில் அநங்கீகாரம். 'ஆபாத' ஆபாதப்ரதீதி அஜ்ஞாநநிவ்ருத்திமாத்ரத்தினால் ஸம்சயவிபர்யயங்களை ஸஹிக்கிற ஜ்ஞானம். ஸம்சயவிபர்யயங்களும் காரணவாக்யங்களிலிருக்கிற ஸத், ப்ரஹ்ம, ஆத்மா, ஆகாச, ப்ராண, வைச்வாநர—முதலிய சப்தங்களால் அர்த்ததத்வம் நிச்சயிக்கப்படாமலிருப்பதால், 'விஜ்ஞாநகந ஏவ ஏதேப்யோ பூதேப்யஸ்ஸமுத்தாய தாந்யேவாநு விநச்யதி' (ஜீவன் இந்த பூதங்களிலிருந்து எழுந்து அவைகளையே அநுஸரித்து விநாசமடைகிறான்,) 'அஸத்வா இதமக்ர ஆஸீத்' (இதுமுதலில்

அஸத்தாகவே இருந்தது.) இது முதலியவற்றால் ஆத்மாவுக்கு அநித்யத்வம் முதலியன அறியப்படுவதால் 'அந்நவாந் அந்நாதோ பவதி, மஹாந் பவதி ப்ரஜயா பசுபிர்ப்ரஹ்மவர்ச்சஸேந' இது முதலியவற்றால் அல்பாஸ்திரபலம் அறியப்படுவதாலும் உண்டாகக்கூடும்! அதனால் ஸாங்காத்யயநமாத்ரத்தால் அவ்விரண்டும் போகாததலால், அவைகளை விலக்கு வது ந்யாயத்தினால் அநுஸரிக்கப்பட்ட வாக்யபலமாதலாலும், ப்ரஹ்மவிசாரம் செய்யத் தகுந்தது—என்று கூறப்படுமேயாகில் என்று அர்த்தம். 'பவாந்' உதாஹரிக்கப்படாத வாக்யாந்தரங்களையுங் கூட பர்யாலோசிப்பதில் ப்ரவருத்திக்கிற நீ என்று கருத்து. 'தயைவ' இந்த ரீதியாக இவ்விடத்திலும் ஸம்சய விபர்யங்களின் நிராஸம் அபேக்ஷிதமென்று தெரிந்துகொண்டவனாக உதாஹரிக்கப்படாத வாக்யங்களைப்பார்க்கவேண்டுமென்று பொருள்.

"அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்யயாஜிந: ஸுக்ருதம் பவதி, பூர்ணாஹுத்யா ஸர்வாந் காமாநவாப்நோதி, ஸர்வாந் லோகாந் பசுபந்தயாஜ்யாபிஜயதி, அபாமஸோமமம்ருதா அபூம, அநந்தம் ஹ வா அபாரம் அக்ஷய்யம் லோகம் ஜயதி யோக்நிம் நாசிகேதம் சிநுதே, நாஸ்யேஷ்டா பூர்த்தே க்ஷீயதே. யோக்நிம் நாசிகேதம் சிநுதே" (சாதுர்மாஸ்யமென்கிற யாகத்தினால் தேவதாராதனம் செய்பவனுக்கு அக்ஷயமான ஸுக்ருதம் உண்டாகிறது. பூர்ணாஹுதியால் எல்லா அபீஷ்டங்களையும் அடைகிறான். பசுபந்தத்தினால் தேவதைகளை பஜிப்பவன் எல்லா லோகங்களையும் அடைகிறான். ஸோமபானம் பண்ணி மோக்ஷம் பெற்றவர்களாக ஆனோம். முடிவில்லாததும், அக்கரையில்லாததும், க்ஷயமில்லாததுமான உலகத்தை அடைகிறான், எவன் நாசிகேதம் என்கிற அக்நியை மந்த்ரத்தினால் ப்ரதிஷ்டை செய்கிறானோ) இது முதலியவைகள் 'அம்ருதத்வம் பஜந்தே, ஸோச்நுதே ஸர்வாந் காமாந், இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்' (மோக்ஷத்தை அடைகிறார்கள். அவன் எல்லா அபீஷ்டங்களையும் அடைகிறான். வேண்டிய போகங்களை அனுபவிக்கிறவனாகவும், காமரூபியாகவும் இந்த உலகங்களில் ஸஞ்சரிக்கிறவனாகவும்) இது முதலிய ப்ரஹ்மவேதநபலவாக்யங்களோடு துல்யங்களான வாக்யங்கள் காணப்படுகின்றன. ஆகையால், உபநிஷத்வாக்யங்களில் போல, உதாஹரிக்கப்படாத வாக்யங்களில் ¶ ஸம்சய விபர்யயங்கள் அநேகம் இருப்பதால் அவைகளை விலக்குவதற்காக கர்மவிசாரம் செய்யத் தகுந்தது—என்று அர்த்தம்.

---

¶ ஸம்சயம்—ஸந்தேஹம். இது த்விகோடிகமாயும், சதுஷ்கோடிகமாயும் உண்டு. இது பாம்போ, அன்றோ! என்று உண்டாகும் ஸம்சயத்தில் பாவம் அபாவம் இரண்டும் விஷய மாயிருப்பதால் இது த்விகோடிகம். 'கட்டையோ! மனிதனோ!' என்று ஸம்சயம் வரின் அது சதுஷ்கோடிகம். ஏனெனில்,—இங்கு கட்டை, அதன் அபாவம், மனிதன், அவனுடைய அபாவம்—நான்கும் விஷயமாக இருப்பதால்.

(लघुपूर्वपक्षः)

ननु च ब्रह्मजिज्ञासाया यदेव नियमेनापेक्षितं, तदेव पूर्ववृत्तं वक्तव्यम्। न च कर्मविचारापेक्षा, ब्रह्मजिज्ञासायाः; अधीतवेदान्तस्य अनधिगतकर्मणोऽपि वेदान्तवाक्यार्थविचारोपपत्तेः। कर्माङ्गाश्रयाण्युद्गीथाद्युपासनानि नात्रैव चिन्त्यन्ते। तथाऽनधिगतकर्मणो न शक्यं कर्तुमिति चेत्, अनभिज्ञो हि भवान् शारीरकशास्त्रविज्ञानस्य। अस्मिन् हि शास्त्रे अनाद्यविद्याकृतविविधभेददर्शननिमित्तजन्मजरामरणादिसांसारिकदुःखसागरनिमग्नस्य निखिलदुःखमूलमिथ्याज्ञाननिबर्हणायात्मैकत्वविज्ञानं प्रतिपिपादयिषितम्। अस्य हि भेदावलम्बिकर्मज्ञानं क्वोपयुज्यते, प्रत्युत विरुद्धमेव, उद्गीथादिविचारस्तु कर्मविशेषाश्रित एव ज्ञानवृत्तिविशेषादिरेव क्रियते। स तु न साक्षात् सङ्गतः, अतो यत्प्रयोजनं शास्त्रं तदपेक्षितमेव पूर्ववृत्तं किमपि वक्तव्यम्।

भाष्यम् । तदपेक्षितञ्च कर्मविज्ञानमेव, कर्मवाक्यार्थज्ञानादनन्तरमपूर्वत्वात्। वक्ष्यति च 'सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत्' (ब्र. सू. ३. ४. २६) इति — अपेक्षिते च कर्मण्यज्ञाते केन समुच्चयः, केन नेति विवेको न शक्यते ज्ञातुम्। अतस्तदेव पूर्ववृत्तम् ॥

---

ப்ரஹ்மஜிஜ்ஞாஸையானது எதைத்தவறாமல் அபேக்ஷிக்கிறதோ அதே பூர்வவ்ருத்தம்—என்று இங்கு சொல்லத்தகுந்தது. ப்ரஹ்மஜிஜ்ஞாஸைக்கு தர்மவிசாராபேக்ஷை கிடையாது, வேதாந்தத்தை அத்யயநம் செய்தவனுக்கு கர்மஜ்ஞாநம் இல்லாமலிருந்த போதிலுங்கூட வேதாந்தவாக்யார்த்தவிசாரம் கூடுமாதலால். கர்மத்துக்கு அங்கமான உத்கீதாதி விஷயமான உபாஸநங்கள் இங்கேயே (வேதாந்தத்திலேயே) சிந்திக்கமுடியாதெனில், சாரீரகசாஸ்த்ரவிஜ்ஞாநத்தை நீ அறியாதவனாகிறாய். இந்த சாஸ்த்ரத்தில் அநாதியான அவித்யையினால் உண்டுபண்ணப்பட்ட பற்பல பேததர்சநத்தை நிமித்தமாகக்கொண்ட பிறப்பு, மூப்பு,

இறப்பு—முதலிய ஸாம்ஸாரிகதுக்கமாகிற கடலில் அமிழ்ந்திருக்கிறவனுக்கு எல்லா துக்கங்களுக்கும் காரணமான மித்யாஜ்ஞாநநாசத்தின் பொருட்டு ஆத்மா ஒன்று-என்கிற ஜ்ஞாநம் ப்ரதிபாதிப்பதற்கு இஷ்டம். இதற்கு பேதத்தை அவலம்பித்திருக்கிற கர்மஜ்ஞாநம் எங்கே உபயோகப்படும். உபயோகப்படாதுமாத்ரமல்ல, நேர்விருத்தமே. உத்கீதம் முதலியவற்றின் விசாரமோவென்றால், கர்மாக்களுக்கு சேஷமாகவே இருந்தாலும் ஜ்ஞாநரூபத்வம் இதற்கு ஸாதாரணமாய் இருப்பதால் இவ்விடத்திலேயே செய்யப்படுகிறது. ஆனால், அது நேரான ஸங்கதமாகாது. ஆகையால், சாஸ்த்ரம் எதை ப்ரதானவிஷயமாக உடையதோ அவ்விஷயத்தினால் பூர்வவ்ருத்தம் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறது—என்று சொல்லத்தகுந்தது.

(அங்கீகாரத்துடன் பாஸ்கரீயர்கள் எதிர்த்து உத்தரம் சொல்லுகிறார்கள்) உண்மை, (ஆனால்) அதினால் அபேக்ஷிக்கப்பட்டது கர்மஜ்ஞாநமே,—கர்மாவோடு ஸமுச்சயிக்கப்பட்ட ஜ்ஞாநத்தினால் மோக்ஷத்தை ச்ருதி சொல்லுவதால். மேலேயும் ஸூத்ரகாரர் சொல்லப்போகிறார்-"ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிச்ருதேரச்வவத்" என்று அபேக்ஷிக்கப்பட்ட கர்மா அறியப்படாமலிருந்தால் எதோடு ஸமுச்சயம், எதோடு ஸமுச்சயமில்லை-என்கிற விபாகம் அறியமுடியாது. ஆதலால், அதே பூர்வவ்ருத்தம்.

---

ச்ருதப்ரகாசிகை:—

இவ்விதம் பலத்வாரா விடுவதற்காக கர்மஜ்ஞாநாபேக்ஷை காட்டப்பட்டது. பிறகு, ஸ்வரூபத்தால் க்ரஹிப்பதன்பொருட்டு தவறாமல் கர்மஜ்ஞாநாபேக்ஷை உளதென்பதைக் காண்பிப்பதற்காக, முமுக்ஷுவுக்கு நித்யமாக கர்மாபேக்ஷை வேண்டியதில்லை—என்கிற எதிரியின் பக்ஷத்தை உபந்யஸிக்கிறார்.

'நநுச' எது அவச்யம் விவக்ஷிதமோ, அதைத்தவிர மற்றதை விலக்குவதற்காக முதல் ஏவகாரம். அவச்யமாய் அபேக்ஷிக்கப்படாமலிருப்பது பூர்வவ்ருத்தமாகக்கூடாது—என்பதற்காக இரண்டாவது ஏவகாரம். அதனால் என்ன? என்றால், 'ந யர்ம' என்று சொல்லுகிறார். எங்ஙனமெனில், 'அதீத' என்று கூறுகிறார். எவர்கள் ப்ரஹ்மவித்யாதிகாரிகளோ, அவர்கள் எல்லோருக்கும் அவச்யமாக அபேக்ஷிதமன்றோ நியமேந அபேக்ஷிக்கப்பட்டது. வேதாந்தமாத்ரத்தை அத்யயநம் செய்தவனுக்கோவெனில் அதிலேயே ஆபாதப்ரதீதியும், அறியவேண்டுமென்கிற விருப்பமும் உண்டாகும். அவனுக்கு கர்மவிஷயமான ஆபாதப்ரதீதி இல்லாமையால் கர்மவிசாரத்தில் நியமேந அபேக்ஷையில்லை' என்று பொருள். அன்றிக்கே, முழுவேதத்தையும் அத்யயநம் செய்திருந்தபோதிலுங்கூட பூர்வஜந்மஸுக்ருதவசத்தால் வேதாந்தவாக்யத்தினாலேயே புபுத்ஸை உண்டாகிறதெனில், அவனுக்கு

கர்மாபேக்ஷை இல்லையென்று அப்பொழுது 'அதீதவேதாந்தஸ்ய' என்கிற பதம் அயோகத்தை வ்யவச்சேதிக்கிறது—அந்யயோகத்தை வ்யவச்சேதிக்கிறதில்லை. முழுவேதத்தின் அத்யயநத்தினால் அபேக்ஷிக்கப்பட்ட வேதாந்தபாகமும் அத்யயநம் செய்யப்பட்டதே—என்று அர்த்தம். இவ்வண்ணம் விடுவதற்காகவும் கர்மா அறியத்தக்கதென்பது நிஷித்தம்.உபாதாநத்திற்காகவும் அறியத்தக்கதல்ல என்பதை உபபாதிப்பதற்காக வேதாந்த மாத்ரத்தை அறிய எண்ணமுள்ளவனுக்கும் கர்மவிசாராபேக்ஷையை 'கர்மாங்க' என்பதால் சங்கிக்கிறார். ஒரு *ஸாமாவுக்கு ஐந்து பாகங்கள் உள்ளன. அவைகளுக்கு வரிசையாக- ப்ரஸ்தாவம், உத்கீதம், ப்ரதீஹாரம், உபத்ரவம், நிதநம்— என்று பெயர். அந்த ஐந்து பக்திகளில் ப்ரஸ்தாவமானது ஹிங்காரபூர்வமாய் காநம் செய்யப்படுகிறது. உத்கீதமானது ப்ரணவபூர்வமாக காநம் பண்ணப்படுகிறது. அதில் ஐந்துவித ஸாமோபாஸனம் ஒரு இடத்தில் விதிக்கப்படுகிறது. "லோகேஷு பஞ்சவிதம் ஸாமோபாஸீத" என்று ஓரிடத்தில் ஸாமாவின் அவயவங்களான ஐந்துகளில் ஒவ்வொரு அவயவோபாஸனம் விதிக்கப்படுகிறது. அதில் உத்கீதத்திற்கு அவயவமாக இருக்கிற ப்ரணவத்தின் உபாஸனம் விதிக்கப்படுகிறது. "ஓமித்யேதத்க்ஷரமுத்கீதமுபாஸீத" என்று (கர்மாங்காச்ரயாணி) கர்மாவுக்கு அங்கபூதமான ‡ உத்கீதாதி விஷயங்கள். கர்மாவை அறியாதவனுக்கு உத்கீதாத்யுபாஸன சிந்தனம் செய்வது முடியாதென்று ப்ரதிஜ்ஞை. 'கர்மாங்காச்ரயாணி' என்பது ஹேது கர்பமான விசேஷணம். கர்மாங்கங்களான உத்கீதம் முதலியவற்றை ஆச்ரயித்த உபாஸனங்கள் என்று சொல்லப்படுமேயாகில் உத்கீத சப்தம் பயனற்றதாக ஆகும். உபாஸன மாத்ரத்துக்கு பக்ஷீகாரமும் அறியப்படுகிறது. ஆகையால், இங்கே வசனவ்யக்தி எவ்வாறு சொல்லப்பட்டதோ அதே சரி. கர்மா அறியப்படாமலிருந்தால் உத்கீதாதி விஷயமான உபாஸனசிந்தையானது செய்யமுடியாததலால் கர்மவிசாரம் அபேக்ஷிக்கப்பட்டது என்று கூறப்படுமேயாகில் என்று அர்த்தம். சிந்தையுடன் பரிஹரிக்கிறார். (அநபிஜ்ஞ இதி) சாஸ்த்ரத்தில் ப்ரதானமாக ப்ரதிபாதிக்கத்தக்க ஜ்ஞானம் இது என்று உன்னால் அறியப்படவில்லை என்று பொருள்.

இதில் ப்ரதானமாக ப்ரதிபாதிக்கத்தக்க ஜ்ஞானமெது என்பதற்கு மறுமொழி கூறுகிறார் 'அஸ்மிந்நிதி'. 'பேத:' அறிகிறவன், அறியத்தக்கது, அறிவு என மூன்று வகைப்பட்டுள்ளது. 'பலவகைப்பட்டிருத்தல்' அதின் உள் பிரிவுகளின் பாஹுள்யம், இவ்வாறு பற்பல பேததர்சனத்திற்குக்காரணம் அவித்யை. அந்த அவித்யைக்கு ஹேது எது என்கிற அநவஸ்தையின் பரிஹாரத்திற்காக அநாதி சம்பதம். இவ்வண்ணம் அவித்யையினால் உண்டுபண்ணப்பட்ட பேததர்சனத்தைக்காரணமாக உடைய ஜன்மஜராமரணம் முதலியதே ஸாம்ஸாரிகதுக்கம். ஆதி சப்தத்தால் நரகம், கர்பவாஸம், முதலியது வாங்கத்தக்கது. ஸம்ஸாரமாவது ப்ருக்ருதி ஸம்பந்தம். அதிலிருந்து உண்டானது ஸாம்ஸாரிகம். அது விலக்கத்தக்கதென்பதற்காகவே துக்கரூபமாகச்சொல்லப்பட்டது.

---

* ஸாமா-கானப்ரதானமாயுள்ள ருக்.

‡ உத்கீதம்—உத்கீதத்தில் அவயவமான ப்ரணவம். இந்த ப்ரணவத்தில் ப்ரஹ்ம த்ருஷ்டி பண்ணி உபாஸனை விதிக்கப்பட்டிருக்கிறது. இதுதான் ப்ரம கோபாஸனம். 'ஸாகர'சப்தமானது அதின் முடிவின்மையைக்காட்டுகிறது 'நிமக்நஸ்ய' என்பதால் துக்க நிவ்ருத்திக்குக்காரணமான உபாயத்தின் அபேக்ஷையானது ஹேதுவாகக்கூறப்பட்டது; அதிகாரஸ்வரூபம் சொல்லப்பட்டது.

ப்ரயோஜனத்தைச்சொல்லுகிறார் 'நகில' என்பதால். மித்யாஜ்ஞானம்-ப்ராந்திஜ்ஞானம்; 'நிகஜஜன்மப்ரவ்ருத்திதோஷமித்யாஜ்ஞானங்களுள் மேல் மேலுள்ளவைகளுக்கு அபாயம் வரின் அதற்கு அடுத்ததற்கு அபாயம் வருவதால்' என்ற பொருளுள்ள வாக்யத்தில் ப்ரயோகமிருப்பதால். ப்ராந்திஜ்ஞானம் என்பது பேததர்சனம். அன்றிக்கே, மித்யாபூதமான அஜ்ஞானம் மித்யாஜ்ஞானம், ஜ்ஞானத்தால் நிவர்த்திகத்தக்கதாக இருப்பதின்பொருட்டு மித்யா சப்தம் அதினுடைய நாசத்திற்காக. அதினுடைய நாசமே மோக்ஷமென்று அபிப்ராயம்.

அதற்கு ஸாதனம் எது என்றால்சொல்லுகிறார் 'ஆத்மைகத்வ விஜ்ஞானம்' என்று. ஸர்ப்பப்ரமத்துக்கு ரஜ்ஜுவின் யாதாத்ம்யஜ்ஞானமன்றோ நிவர்த்தகம். அதே ஒழிய, கர்ம விசேஷமாகாது. இவ்வண்ணம், பேததர்சனம் அவித்யையினால் உண்டுபண்ணப்பட்டிருப்பதினால் ஐக்யஜ்ஞானமே அதற்கு நிவர்த்தகமென்று வேதாந்தவாக்யங்களுக்கு அதிலேயே தாத்பர்யமென்று பொருள். அதனால் என்னவென்றால் சொல்லுகிறார் 'அஸ்யஹி' என்று. 'க்வோபயுஜ்யதே' ஓரிடத்திலுமில்லை. ஜ்ஞானத்தினுடைய ஸ்வரூபோத்பத்தியிலாவது, அதினுடைய பலோத்பத்தியிலாவது, ஜ்ஞாநோத்பத்திஸாதநாநுக்ரஹத்திலாவது உபயோகப்படுகிறதில்லை என்று அர்த்தம். உபயோகமில்லை என்பது மாத்ரமல்ல. ப்ரதிகூலபலத்வங்கூட என்று சொல்லுகிறார் 'ப்ரத்யுத' என்பதால். த்வைதவாஸனையை உண்டுபண்ணுவதாலென்று அபிப்ராயம்.

எனினும், உபநிஷத்துகளில் பழக்கப்பட்டிருப்பதாலும் ப்ரஹ்மமீமாம்ஸையில் நிரூபிக்கப்படானின்றிருப்பதாலும் உத்கீதாத்யுபாஸனம் ப்ரஹ்மவித்யையினால் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறதென்று உத்கீதாதி விசாரம் நேராக ஸங்கதமாகிறதென்றால் சொல்லுகிறார் 'உத்கீதாதி' என்று. அங்ஙனமாகில், உபநிஷத்துகளில் அதின் அத்யயனமும், ப்ரஹ்மவிசாரத்தில் அதின் விசாரமும் எவ்வாறு பொருந்துமெனில் சொல்லுகிறார் ''ஜ்ஞானஸ்வரூபத்வாவிசேஷாதிதி.'' ஜ்ஞானரூபத்வமென்கிற ஸ்வபாவத்தின் ஒற்றுமையினால் புத்திஸ்தமாக இருப்பதால் செய்யப்பட்டது; ப்ரதானமான அர்த்தத்துக்கு உபயோகியாக செய்யப்படவில்லை என்றுபொருள். அதினால் என்-என்கிற ப்ரச்நத்துக்கு உத்தரம் 'ஸத்விதி.' து-சப்தங்கள் இரண்டும் இரண்டு ஸந்தேஹங்களை நிவ்ருத்திக்கின்றன. ப்ரதிபாதிக்கத்தக்க ப்ரதானவஸ்துவுக்கு உபயுக்தமாக இருப்பதற்கே பூர்வவ்ருத்தத்வத்தை நிகமனம் செய்கிறார்—அத:என்று. 'கிமபி' கர்மவிசாரத்தைக்காட்டிலும் வேறு என்று கருத்து. ப்ரதானமான அர்த்தத்துக்கு உபயோகியாக இருப்பதுபற்றி ஏற்படும் 'ஸங்கதி' ஸாக்ஷாத்ஸங்கதி. ஏதோ ஒரு ஆகாரத்தால் ஸாம்யமிருப்பதுபற்றி புத்திஸ்தமாக இருத்தல் ப்ரஸங்காத்ஸங்கதி. ஆதலால், ப்ராஸங்கிகமான உத்கீதாத்யுபாஸனசிந்தையினால் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறதும், ப்ரதாநார்த்தவிருத்தமாகவுமிருக்கிற கர்மவிசாரத்திற்கு பூர்வவ்ருத்தத்வம் தகாது. ஆனால், ப்ரதானமாகப்ரதிபாதிக்கத்தக்க ஆத்மைகத்வவிஜ்ஞானத்தால் அபேக்ஷிக்கப்பட்ட பூர்வவ்ருத்தம் சொல்வதற்குத்தக்கது என்று சொல்லப்பட்டதாக ஆகிறது.

இவ்விடத்தில் பாஸ்கரீயர்கள் எதிர்வாதம் செய்கிறார்கள்:—'பாடமிதி' பாடம் என்பது பாதி அங்கீகாரத்தைக்காட்டுகிறது. சாஸ்த்ரம் எதை ப்ரதானமாகக்கொண்டிருக்கிறதோ, அதினால் அபேக்ஷிக்கப்பட்டதே பூர்வவ்ருத்தம் என்கிற இவ்வளவு மாத்ரத்தில் அங்கீகாரம். 'ததபேக்ஷிதஞ்ச' என்பது ப்ரதிஜ்ஞா—உன்னால் எது அபேக்ஷிக்கப்பட்டதல்லவென்று சொல்லப்பட்டதோ அதே அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறதென்பது எவகாரத்தின் அபிப்ராயம். எதனாலென்றால், சொல்லுகிறார் 'கர்மஸமுச்சித' என்று. ஸமுச்சித சப்தமானது சேர்ந்திருத்தலென்கிற அர்த்தத்தை மாத்ரம் உணர்த்துகிறதே ஒழிய

† ஸமுச்சயபரமல்ல, "அஸ்மாத்வித்யா, ஆத்மவித்யாம்சது ஸமுச்சிதம்யாபதேசாத்" என்கிற இடத்தில் ஸமுச்சித்யபதம்போல. கர்மஜ்ஞாநாப்யாம் என்று நிர்தேசிக்கப்படவில்லை. பின்னையோவெனில், 'கர்மஸமுச்சிதாத்ஜ்ஞாநாத்' என்று விசேஷணவிசேஷ்ய பாவத்தால் நிர்தேசிக்கப்பட்டிருக்கிறது. அதனால், ஜ்ஞானப்ராதான்யம் அறியப்படுகிறது. கர்மத்தை அங்கமாகக்கொண்ட ஜ்ஞானத்தாலென்று அர்த்தம். ச்ருதியும் 'யஜ்ஞேநதாநேந' இது முதலியது விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. கர்மா வித்யாங்கமென்றால், ஸூத்ரகாரரின் ஸம்மதியைக்காட்டுகிறார் 'வக்ஷ்யதிசேதி.' சகாரம் ப்ரதிபாதகஸமுச்சயத்தில். அங்கமாக இருப்பதினால் கர்மாவினுடைய அநுஷ்டானமபேக்ஷிக்கப்பட்டதாக இருக்கும்; அதின் ஜ்ஞானத்துக்கு எவ்வாறு பூர்வபாவித்வம்? கர்மஜ்ஞானமானது ப்ரஹ்மவிசாரத்துக்குப்பிந் தினதாக ஏன் ஆகக்கூடாது?—என்றால் சொல்லுகிறார் 'அபேக்ஷதேசேதி'. ப்ரயாஜம் முதலியதுபோல், நிஷ்பலமான யாகத்துக்கு பலமுண்டாகிற நிலைமையில் அநுக்ராஹக மாக இருப்பதால், அங்கதயா அபேக்ஷை விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது அத்யா யத்தில், நான்காம்பாதத்தில், ஸமாவ்ருத்தனாக இருந்துகொண்டு விவாஹஞ்செய்து கொள் ளாதவன், மனையாளை இழந்தவன் முதலியவர்களுக்கும், ஆச்ரமவிசேஷத்திலிருப்பவர்களு மான ப்ரஹ்மவித்யாநிஷ்டர்களுக்கும் கர்மங்களில், அனுஷ்டிக்கத்தக்கது, தகாதது என்கிற பாகுபாடானது நிரூபிக்கப்படப்போகிறபடியால் அதை அபிப்பிராயப்பட்டு சொல்லப்பட் டது 'கேந முச்சய:,கேந ந' என்று. அல்லது, நித்யநைமித்திகங்களுக்கு ஸமுச்சயம், காம்ய நிஷித்தங்களுக்கு ஸமுச்சயம் கிடையாதென்கிற விபாகம் அறியப்படுகிறதில்லை என்று பொருள்.

இது திரண்டபொருள்—பதார்த்தஜ்ஞானத்தை முன்பட்டதாகவன்றோ வாக்யார்த் தஜ்ஞானமுண்டாகிறது. "யக்ஞேந தாநேந" இது முதலிய வாக்யத்தினால் யக்ஞம் முத லிய கர்மாக்கள் பதார்த்தமாக இருப்பதாலும், வாக்யார்த்தஜ்ஞானம் பதார்த்தஜ்ஞான த்தை முன்னிட்டிருப்பதாலும், யக்ஞம் முதலிய கர்மாக்களின் விசாரம் முந்தியது. 'வ்ரீஹீ நவஹந்தி' இதுமுதலிய 'வாக்யார்த்தஜ்ஞானமானது, வ்ரீஹிமுதலான பதார்த்தஜ்ஞானம் இல்லாவிடில் உபபன்னமாகாதன்றோ, வாக்யார்த்தமானது பதார்த்தஸம்ஸர்கரூபமாக இருப் பதால்.

'பசுவைக்கொண்டுவா' என்கிற வாக்யத்தினால் வ்யுத்பத்தியுண்டாகுங்கால் 'பசுவைக் கொண்டுவருதல்' என்கிற வாக்யார்த்தத்தை முதலில் அறிந்த § ஆவாபோத்வாபமுகத் தால் பிறகு பதார்த்தஜ்ஞானமுண்டாவதால் வாக்யார்த்தஜ்ஞானம் பதார்த்தஜ்ஞானத்தை அவச்யம் முன்னிட்டே வருகிறதென்பது கிடையாது என்றால்,—

உத்தரம் கூறப்படுகிறது. வ்யுத்பன்னசப்தத்தினால் அர்த்தஜ்ஞானமுண்டாகும் ஸமயத்தில் எல்லாவிடத்திலும் பதார்த்தஜ்ஞானத்தை முன்னிட்ட வாக்யார்த்தஜ்ஞான முண்டாகிறது. வயுத்பத்திதசையிலோவென்றால், ப்ரமாணாந்தரத்தாலோ, சப்தாந்தரத் தாலோ வாக்யார்த்தஜ்ஞானம் முந்தி உண்டாகலாம். அதை ஒழிய அதே சப்தத்தாலல்ல, அதற்கு அர்த்தத்தோடு ஸம்பந்தக்ரஹமில்லாமைபற்றி போதகத்வம் இல்லாமையால். வ்யுத்பத்தியில்கூட வாக்யார்தஜ்ஞானம்முந்தியிருக்கவேண்டுமென்கிற நியமமில்லை,-பதாந் தரஸம்பந்தமில்லாமலே இருக்கிற 'அம்பாதாதமாதுல' முதலிய பதங்களுக்கு முதன்மை

† ஸமுச்சயம்—ஸமப்ராதான்யமுள்ள இரண்டு. அல்லது, அதற்குமேல்பட்டிருக்கிற வஸ்துக்களின் சேர்க்கை (அல்லது) அநேகங்களின் சேர்கை.

§ ஆவாபம்—சேர்த்துக்கொள்ளுதல்.

¶ உத்வாபம்—தள்ளுதல்.

யாக அர்த்தத்தில் வ்யுத்பத்தி காணப்படுவதால், இந்த சப்தத்துக்கு இது அர்த்தம் என்கிற வ்யுத்பத்தியில், வாக்யார்த்தஜ்ஞானத்துக்கு பூர்வபாவம் இல்லாமையாலும். இதே வாக்யத்தில் யஜ்ஞம் முதலிய சப்தங்களுக்கு வ்யுத்பத்தி ஸம்பவிக்கிறதென்பதில்லை, வேதநேச்சாஸிஷ்பத்திரூபமான வாக்யார்த்தம் அப்ரத்யக்ஷமாக இருப்பதால் கவாநயனம் முதலியவற்றில்போல், வ்யுத்பத்தி உபபன்னமாகாது. அதனால் பதார்த்தஜ்ஞானத்தை முன்னிட்டு வாக்யார்த்தஜ்ஞானமென்று கூறப்பட்டது.

'பாஸம்' என்கிற பதந்தொடங்கி மேலுள்ள வாக்யங்கள், ஸித்தாந்தியினுடைய சோத்ய ப்ரதானங்களென்று வ்யாக்யாதாக்களால், வ்யாக்யானிக்கப்பட்டிருக்கின்றன. அப்பொழுதும் பதார்த்தவாக்யார்த்தபாவமானது க்ரமவிசேஷணத்திற்கு ஹேதுவாக விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. மேலும், "அபேக்ஷிதேச" என்பதனால் அங்கமாக அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறதென்கிற விவக்ஷையிருப்பதாலும், கர்மாக்கள் ஜ்ஞானத்துக்கு உத்பாதகங்களாக இருப்பதுபற்றி அதற்கு அங்கங்களானபடியால், உத்பாத்யத்திற்கும் உத்பாதகாத்திற்கும் பௌர்வாபர்யம் நியதமாதலாலும், விசாரவிஷயங்களான கர்மஜ்ஞானங்கள் இரண்டுக்கும் பௌர்வாபர்யம் இருப்பதால் அதற்கு சேஷமாக இருக்கிற விசாரங்கள் இரண்டுக்கும், அந்த க்ரமத்தை அடைந்திருத்தல் ந்யாயமென்று கருத்து. † சேஷமாக இருப்பது § சேஷி க்ரமத்தைஅனுஸரித்தே இருக்குமென்பது ந்யாயஸித்தமன்றோ! உதாஹரணம் 'ஸாரஸ்வதௌ ஹோமௌ பவத:' என்று ஸாரஸ்வதஹோமங்கள் இரண்டும் ஒரே ஸமயத்தில் உண்டாயிருந்தபோதிலுங்கூட "யாஜ்யாபுரோநுவாக்யா" மந்த்ரங்களை அனுஸரித்து ஸரஸ்வதீயாகம் முந்தியும், ஸாரஸ்வதயாகம் பிந்தியும் ஏற்படவேண்டியதாக ஆக, அவைகளின் அங்கங்களுக்கும் அந்த க்ரமத்தினாலேயே அநுஷ்டானம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறாப்போல த்ருஷ்டாந்த்தத்தில். தார்ஷ்டாந்திகத்திலும் சேஷிகளுக்கு க்ரமநிச்சாயக ஹேது வைஷம்யமாத்ரமே, அவ்விரண்டுக்கும் க்ரமம் நிச்சயிக்கப்பட்ட பிறகு சேஷத்திற்கு சேஷிக்ரமாநுஸரணம் அங்குமிங்கும் ஸமானம்.

ஆகவே விசாரத்தைக்குறித்து உபாஸனம் சேஷியாகயிருப்பதால், மூன்றாவது அத்யாயத்தில் செய்யப்பட்டிருக்கிற உபாஸனசிந்தனத்திற்கு மாத்ரம் காமவிசாரத்தை அபேக்ஷித்து பிந்தியிருத்தல் வேண்டும் என்றும் சொல்லக்கூடாது. வித்யாவிஷயசிந்தனமும் அவைகளின் பலசிந்தனமும் அதனாலபேக்ஷிக்கப்பட்டிருப்பதால் ப்ரஹ்மமீமாம்ஸை முழுவதும் கர்மவிசாரத்திற்குப்பிறகுதான் இருக்கவேண்டியதாக ஏற்படுகிறது. நிகமநம் செய்கிறார். 'அத:' என்று பாஸமென்கிற சப்தத்தை முதலாகக்கொண்டக்ரந்தமானது ஸித்தாந்தியின் சோத்யபரமாக இருந்தாலும் பாஸ்கரமதத்தில் நோக்குள்ளதென்று சொல்வது உசிதம்; "கர்மஸமுச்சிதாத் ஜ்ஞாநாதபவர்கச்ருதே:" என்கிற இந்த க்ரந்தம், பாஸ்கரபாஷ்யத்தில் இருப்பதாலும், அங்கபாவம் அவனால் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் அது விஷயமான ஸமுச்சயோபாதனத்திற்கு விரோதமில்லாமையாலும். சப்தத்தாலும் அர்த்தத்தாலும் ப்ரத்யபிஜ்ஞை வருவதால் ஸித்தாந்திசோத்யமும் அதில் அந்தர்பூதமாவதாலும் பாஸ்கர பக்ஷத்தையும், யாதவப்ரகாசபக்ஷத்தையும் ஆதாரமாகப்பற்றி 'பாஸ' மென்கிற பதத்தை முதலில்கொண்ட க்ரந்தத்தினால் பக்கத்திலிருப்பவன் சோதநம் செய்கிறானென்று நிர்வாஹம் செய்வது ஸாம்ப்ரதாயிகமாகும்.

† சேஷம் - அப்ரதானம்

§ சேஷி - ப்ரதானம்

அதில் இவ்வண்ணம் யோஜனை—'கர்மஸமுச்சிதாத்' என்பதினுல் ஸமஸமுச்சயம் விவக்ஷிக்கப்பட்டது. கர்மத்தோடு ஸமுச்சயிக்கப்பட்ட ஜ்ஞானத்தால் என்று விசேஷண வ்யபேக்ஷ்ய ஸாவத்தால் நிர்தேசம் செய்ததானது ஜ்ஞானத்திற்கு மோக்ஷோபாயத்வப்ர ஸித்திப்ராசுர்யமடியாக. ச்ருதியும் 'வித்யாஞ்சாவித்யாஞ்ச' இது முதலியது. இந்த வாக் யத்திலுள்ள ம்ருத்யு சப்தமானது உபேயப்ராப்திவிரோதியான கர்மாவைச்சொல்லுகிறது. ப்ரதிபந்தகநிவ்ருத்தி, ப்ரஹ்மப்ராப்தி இவ்விரண்டும் ஸாத்யம்; க்ரமேண கர்ம,ஜ்ஞாநம் ஸாத கங்களென்று யாதவப்ரகாசமதஸ்தர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையால், வித்யாஞ்ச' என்கிற வாக்யத்தில் பூர்வகண்டம் ஸாதனத்வித்வ ப்ரதானமானது, 'வித்யாஞ் சா உத்தரகண்டமோ என்றால் ஸாத்யத்வித்வபரமென்று அவர்களுடைய நிர்வாஹம்.

'வக்ஷ்யதிசேதி'ச சப்தமானது ப்ரதிபாதிக்கப்பட்ட விஷயத்தினுடைய ஸமுச்சயத் தில் அங்கபாவத்தையும் சொல்லப்போகிறார் என்று அர்த்தம். ஜ்ஞானோத்பத்திக்குப்பிறகு கர்மாவுக்கு ப்ரஹ்மப்ராப்திக்கு ப்ரதிபந்தகமாக இருப்பவைகளை விலக்கும் திறமையும், ஜ்ஞானோத்பத்திக்கு முன் கர்மாவுக்கு ஜ்ஞானோத்பாதகத்வசக்தியிருப்பதால் அதற்கு அங் கத்வமுமென்றல்லவோ அவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அங்கத்வப்ரதி பாதகமான ஸூத்ரத்தை எடுக்கிறார் 'ஸர்வாபேக்ஷேதி.' ஸர்வாபேக்ஷா என்கிற ஸூத்ரம் அங்காங்கிபாவத்தைக்காட்டுகிறது. 'ஸஹகாரித்வேநச' என்கிற, ஸூத்ரமானது ஸமுச்சய ப்ரதிபாதகமென்றல்லவோ அவர்களுடைய ப்ரக்ரியை. அங்கபாவததிலும், ஸமுச்சயத்தி லும் ச்ருதிவாக்யமும், ஸூத்ரமும் உதாஹரிக்கத்தக்கதாக இருந்தபோதிலும், க்ரந்தலாக வத்திற்காக ஸமுச்சயத்தில் ச்ருதியும், அங்கஸாவவிஷயத்தில் ஸூத்ரமும் உதாகரிக்கப் பட்டது. அங்கஸாவத்தை ப்ரதிபாதிக்கிற வாக்யங்களை விஷயமாகக்கொண்ட ஸூத் ரத்தை எடுத்ததினுல் பாஸ்கரமதமும் அவலம்பிக்கப்பட்டதாக ஆகிறது. இவ்வண்ணம் இரண்டுவிதமாக கர்மாவின் அபேக்ஷை காட்டப்பட்டது. அதனுலென்னவென்றால் சொல் லுகிறார் 'அபேக்ஷிதே'. ஸமப்ராதான்யத்தினுலும், அங்கபாவத்தாலும், அபேக்ஷிக்கப்பட் டிருக்கிற என்றுபொருள். மற்றதெல்லாம் முன்போல. என்றாலும், யாதவப்ராகாசமதத்தில் கர்மவிசாரத்திற்கு பூர்வவ்ருத்தத்வம் சொல்லப்படவில்லை. எனினும், ஸமுச்சயத்தாலும், அங்கபாவத்தாலும் கர்மஜ்ஞானுபேக்ஷித்தவமென்று அவனுல் உபபாதிக்கப்பட்டிருப் பதால் அவ்வளவு மாத்ரத்தை ஆதாரமாகக்கொண்டு இரண்டு மதங்களையும் அவலம்பித்து சோதனம் செய்கிற பக்கத்திலிருப்பவனுல் பூர்வவ்ருத்தத்வத்தை ஆபாதநம் செய்தல் வாயிலாக சோதநம் செய்யப்பட்டதென்றதனுல் நிகமனக்ரந்தவிரோதமில்லை. ஸமுச்சய சப்தத்தை ப்ரதானமாக அந்வயிப்பதில் ஸ்வாரஸ்யமிருப்பதாலும், அங்கத்வபரமான ஸூத் ரத்தை எடுத்திருப்பதினுல் அதற்குப்பிறகு ஸாத்யத்வத்வம், ஸாதனத்வத்வம்—இரண்டும் நிராகரிக்கப்படப்போகிறபடியாலும் இரண்டு மதங்களை அவலம்பித்து சோதநம் செய்யப் பட்டதென்று பூர்வாசார்யர்களால் நிர்வாஹம் செய்யப்பட்டது.

---

**பாஷ்யம்:—**

**நைதத்யுக்தம்; ஸகலவிஶேஷப்ரத்யநீகசிந்மாத்ரப்ரஹ்ம விஜ்ஞாநாதேவாவித்யாநிவ்ருத்தே: । அவித்யாநிவ்ருத்திரேவ ஹி மோக்ஷ: । வர்ணாஶ்ரமவிஶேஷஸாத்யஸாதநேதிகர்தவ்யதா ரூபாநந்தவிகல்பஸஹஸ்ரம் கத2ம் ஸகலபே4த3த3ர்ஶநநிவ்ருத்திரூபா ஜ்ஞாநநிவ்ருத்தே: கத2மிவ ஸாத4நம் ப4வேத் । ஶ்ருதயஶ்ச கத2ம்**

𑌣𑌾𑌽𑌨𑌿𑌤𑍍𑌯𑌫𑌲𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑍋𑌕𑍍𑌷𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌂, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯𑍈𑌵 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌞𑍍𑌚 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 — "𑌅𑌨𑍍𑌤𑌵𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌭𑌵𑌤𑌿" "𑌤𑌦𑍍𑌯𑌥𑍇𑌹 𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑍋 𑌲𑍋𑌕𑌃 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤 𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌮𑍁𑌤𑍍𑌰 𑌪𑍁𑌣𑍍𑌯𑌚𑌿𑌤𑍋 𑌲𑍋𑌕𑌃 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇." "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌰𑌮𑍍" "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿." "𑌤𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑌿𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍇𑌤𑌿." 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 | 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌵𑍇𑌦𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍌 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌵𑌿𑌦𑌧𑌤𑌿, [illegible] 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌾𑌵𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌨 𑌸𑌮𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍌; 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌤𑍍 | 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌾𑌯𑌾𑌂 𑌜𑌾𑌤𑌾𑌯𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍌 𑌶𑌮𑌾𑌦𑍀𑌨𑍇𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑌙𑍍𑌗𑌸𑌾𑌧𑌨𑌤𑌯𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑍇𑌵𑌾𑌹 — "𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤 𑌉𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍" 𑌇𑌤𑌿 |

இது சரியல்ல,—ஸகலமான விசேஷங்களுக்கும் ப்ரதிபடமாகவும், ஜ்ஞானமாத்ரஸ்வரூபமாகவுமிருக்கிற ப்ரஹ்மவிஜ்ஞானத்திலேயே அவித்யையானது விலகிவிடுவதால். அவித்யையின் நிவ்ருத்தியே யல்லவோ மோக்ஷம். வர்ணவிசேஷம், ஆச்ரமவிசேஷம் ஸாத்யம், ஸாதனம், இதிகர்த்தவ்யதை முதலிய அந்தமில்லாத பேதங்களுக்கு ஆதாரமாக இருக்கிற கர்மாவானது ஸகலபேத ஜ்ஞானநிவ்ருத்திரூபமான அஜ்ஞானநிவ்ருத்திக்கு எவ்வாறு ஸாதனமாகும். ச்ருதிகளும் கர்மாக்கள் அநித்யபலத்தைத் தருவதால் அவைகளுக்குமோக்ஷவிரோதித்வத்தையும், ஜ்ஞானத்துக்குமோக்ஷஸாதனத்வத்தையும் காட்டுகின்றன 'இவனுக்கு கர்மத்தால் அடையப்பட்ட உலகம் முடிவுள்ளதாகவே ஆகிறது.' 'எவ்வாறு இவ்வுலகில் க்ருஷிமுதலிய கர்மாக்களால் தேடப்பட்ட நெல்முதலிய பலம் க்ஷயமுள்ளதோ, இவ்வாறாகவே மறுமையில் புண்யத்தினால் தேடப்பட்ட ஸ்வர்க்கம் முதலியபலனும் க்ஷயமுள்ளதே.' 'ப்ரஹ்மத்தை அறிந்தவன் உத்தமமான பதத்தை அடைகிறான்.' 'ப்ரஹ்மத்தை அறிந்தவன் ப்ரஹ்மமாகவே ஆகிறான்' 'அந்த ப்ரஹ்மத்தையே அறிந்து அவித்யைத்தாண்டுகிறான'—என்கிற இதுமுதலியவைகள். வித்யையானது யஜ்ஞம்முதலிய கர்மாக்களை அபேக்ஷித்திருக்கிறதென்று கூறப்பட்டது. அதுவும்—த்வைதவாஸனஜனகத்வாநித்யபலத்வரூபவஸ்து விரோதத்தாலும், ஸம்ப்ரத்யயாந்தஜிஜ்ஞாஸாபதகத ச்ருதியின் அக்ஷரங்களின் பர்யாலோசனத்தாலும அந்

த:கரணத்திற்கு தெளிவையுண்டுபண்ணி அதன் வாயிலாக ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்கிற இச்சையை உண்டுபண்ணுவதில் உபயோகப்படுகிறதில்லை, விவதிஷந்தி என்கிற ச்ருதி கூறுவதால். விவதிஷை உண்டாய்விட்டால் ஜ்ஞானோத்பத்தியில் சமம், தமம்முதலியவைகளே அந்தரங்கோபாயங்கள் என்பதை ச்ருதியே கூறுகிறது. "சாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மானம் பச்யேத்" (வெளி இந்த்ரியங்களையும் மனதையும் ஒடுக்கினவனாகவும், விஷயங்களினின்று ஒழிவடைந்தவனாகவும், பொறுமையுள்ளவனாகவும், ஸமாதானமுள்ளவனாகவுமாய் ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவைப்பார்க்கக்கடவன்) என்று.

---

ச்ருதப்ரகாசிகை:—

இந்த விஷயத்தில் மறுதளித்துக்கூறுகிறார் "நைதத்யுக்தம்" என்று. விடுவதற்காக கர்மாக்கள் அறியத்தககவைகள் என்பது முந்தியே தள்ளப்பட்டது;—வேதாந்தமாத்ரத்தை அத்யயநம் செய்தவனுக்குகாமவிஷயமான ஆபாதப்ரதீதி இல்லாமையால் கர்மாபேக்ஷையின்மை கூறப்பட்டிருப்பதாலும், புண்ய விசேஷததால் வேதாந்தமாத்ரத்தில் புபுத்ஸை உள்ளவனுக்கு கர்மஜ்ஞானத்தின் அபேக்ஷை சொல்லப்பட்டிருப்பதாலும்.

இவ்விடத்தில் (ஸ்வரூபத்தால்) உபாதானத்தின் பொருட்டு கர்மா அறியத் தக்கது என்பதை நிராகரிக்க எண்ணங்கொண்டவராக ஸமஸமுச்சயத்தாலும், அங்கபாவத்தாலும செய்யப்பட்ட இரண்டு விதமான உபாதானத்திலும் ஸமஸமுச்சயமான உபாதானத்தை முதலில் நிராகரிப்பதற்காக ஸாதநத்வித்வத்தையும், ஸாத்யத்வித்வத்தையும் இரண்டு வாக்யங்களாலே நிரஸநம் செய்கிறார் "ஸகல விசேஷ" என்பதால். எப்போது 'பரமே' என்கிற பதத்தால் தொடங்கப்பட்டிருக்கிற க்ரந்தமானது, பாஸ்கரமதத்தினாலாவது, ஸித்தாந்திமதத்தினாலாவது சோத்யபரமோ, அப்போது பூர்வபக்ஷத்தில் ஸம்பாவிதமான ஸர்வப்ரகாரத்தாலும் கர்மாவினுடைய அபேக்ஷையை நிராகரிக்க விருப்பமுள்ளவராக "உன்னால் ஸமஸமுச்சயம் விவக்ஷிக்கப்பட்டதா, அல்லது, அங்கபாவமா?" என்று விகல்பத்தைககருதி முதலில் ஸமுச்சயபக்ஷத்தை நிரஸிக்கிறார் என்று நிர்வஹிக்கத்தக்கது. 'ஸகலவிசேஷங்கள்' ஸஜாதீயவிஜாதீய ஸ்வகதவ்யாவ்ருத்தியுடன் அந்வயரூபமான விசேஷங்கள். 'அவைகளுக்கு ப்ரத்யநீகம்' ஸர்ப்பம் முதலிய வஸ்துவின் ஆகாரங்களுக்கு ரஜ்ஜுத்வம்போல், அவைகளுசகு நிவர்த்தகமென்று கருத்து. 'சின்மாத்ரம்' மாத்ரச் ப்ரத்யயத்தால் ஜ்ஞாத்ருத்வ ஜ்ஞேயத்வ தர்மங்களுக்கு வ்யாவ்ருத்தி கூறப்பட்டது. அன்றிக்கே, 'ஸகலவிசேஷப்ரத்யநீக' சப்ததகினால் ஸஜாதீயவிஜாதீயபேதப்ரத்யநீகத்வமும், 'சின்மாத்ரம்' என்கிற பக்ஷத்திலுள்ள மாத்ரச் ப்ரத்யயத்தினாலும் தன்னை அடைந்திருக்கிற பேதத்தின் இன்மையும் விவக்ஷிககப்பட்டது. ப்ரத்யநீக சப்தத்தால் நித்யமான அநர்ஹத்வம் விவக்ஷிக்கப்பட்டது கிழிஞ்சல் துண்டு ஒருபோதும் ரஜதத்வஸம்பந்தார்ஹமாகாதன்றோ! நித்யாநர்ஹமாக இருப்பதினாலேயேன்றோ சுக்திஜ்ஞானம் ரஜதத்வநிவர்த்தமாக இருக்கிறது.

"ப்ரஹ்மவிஜ்ஞானாதேவ அவித்யா நிவ்ருத்திரிதி" ரஜ்ஜுதவஜ்ஞானத்திலேயேயன்றோ ஸாப்பத்வ நிவ்ருத்தி வருகிறது; கர்மாவினாலே இல்லையென்பது கருத்து. இவ்

வண்ணம் ஸாதநத்வித்வம்நிரஸிக்கப்பட்டது. ஸாத்யத்வித்வமறியப்பட்டிருக்க எவ்வாறு ஸாதநத்வித்வம்நிராகரிக்கப்படலாமென்று ஸந்தேகம்வர, ஸாத்யத்வித்வத்தை வ்யுதஸநம் செய்கிறார் 'அவித்யா நிவ்ருத்திரேவ ஹி மோக்ஷ' என்பதால். ப்ரஹ்மம் நித்யப்ராப்தமாக இருப்பதால் ப்ரதிபந்தநிவ்ருத்தி ஒன்றே ஸாதிக்கத்தக்கது; அதையடைதலென்பது ஸாதிக்கத்தக்கதல்ல. 'ஹி'சப்தத்துக்கு இது அபிப்ராயம். எந்த ப்ரதிபந்தநிவ்ருத்தியானது கர்மாவினால் ஸாதிக்கத்தக்கதாக உன்னால் சொல்லப்பட்டதோ, அதுவே ஜ்ஞானத்தால் ஸாத்யமென்று ச்ருதிஸ்ம்ருதிஸூத்ரங்களால் சொல்லப்பட்டிருக்கிறது—"தமேவம் விதித்வாதிம்ருத்யுமேதி, ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:, நிசாய்ய தம் ம்ருத்யுமுகாத் ப்ரமுச்யதே, க்ஷீயந்தே சாஸ்யகர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே, ஏவமேவம் விதி பாபம் கர்ம ந ச்லிஷ்யதே, ஜ்ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா, தததிகம உத்தரபூர்வாகயோ:" (அவனை இவ்வண்ணமறிந்து ஸம்ஸாரத்தைத்தாண்டுகிறான். ஸ்ருஷ்டி முதலியவைகளை விளையாட்டாகக்கொண்ட பரமாத்மாவை அறிந்து ம்ருத்யுமுகத்தினின்று விடுபடுகிறான். அந்த பராவரவஸ்து காணபபட்டவுடன் இவனுடைய எல்லா வினைகளும் க்ஷீணிக்கின்றன. இவ்வண்ணமாக பரமபுருஷனை அறிந்தவனிடத்தில் பாபகர்மாவானது ஒட்டாது. ஜ்ஞானமாகிற நெருப்பானது எல்லா கர்மாக்களையும் அவ்வண்ணம் சாம்பலாகச்செய்கிறது. உத்தரபூர்வாகங்கள் முறையே ஒட்டாமையும் நாசமும் ஸம்பவிக்கிறது. இப்படியல்லவோ வித்யாமாகாத்ம்யமறியபபடுகிறது.) இது முதலியவைகளால். ஆதலால், இரண்டு வாக்யங்களால் ஸாத்யஸாதநத்வித்வமிருக்கிறதென்று சொல்லப்பட்டதாக ஆகிறதில்லை.

அவித்யையின் நிவ்ருத்தியே மோக்ஷமாக இருக்கட்டும், அதனால் கர்மாபேக்ஷயத்திற்கு என்னவெனில்,—கூறுகிறார் 'வர்ணாச்ரம' என்று. இந்தப்பதத்தால் முன்கூறப்பட்டுள்ள கர்மாவினுடைய பேதாவலம்பித்வமானது சொல்லவிரும்பப்பட்டதாக ஆகிறது. ஆதி சப்தத்தினால் நிஷித்தங்களும், ப்ராயச்சித்தகர்மங்களும் விவக்ஷிக்கப்படுகின்றன; 'அநந்த' சப்தத்தினால் வர்ணம் முதலியவற்றின் பாஹுள்யம். 'விகல்பம்' பேதம். 'ஸகலபேததர்சனநிவ்ருத்திரூப ஜ்ஞானநிவ்ருத்தே:'மூலமான அஜ்ஞானநிவ்ருத்தியின் பலமன்றோ பேததர்சனநிவ்ருத்தி. அதனால், பேததர்சனநிவ்ருத்தியானது அஜ்ஞானநிவ்ருத்தியிலுள்ளடங்கியதென்று அர்த்தம். 'கதமிவ ஸாதநம்' ஒரு விதத்தாலும் ஸாதநமாகாதென்று கருத்து.

'வசநவிரோதம் வருகிறஇடத்தில் ந்யாயம் முதன்மையை வஹியாது' என்கிற ந்யாயத்தால் ச்ருதிவிஹிதமான கர்மாபேக்ஷயானது பாதிக்கத்தக்கதாக ஆகாதென்று சங்கைவர, சொல்லப்பட்ட உபபத்தியால் ச்ருதியினுடைய ஆனுகூல்யத்தைக்காட்டுகிறார் "ச்ருதயச்ச" என்பதால். உபபத்திமாத்ரமல்ல, அதனால் அனுக்ரஹித்ததாயும் இருக்கிறதென்பது 'ச' சப்தத்தின் கருத்து. முன்பு பேதத்தை அவலம்பித்து விரோதம்சொல்லப்பட்டது. இவ்விடத்திலோவென்றால், பலத்தினுடைய அநித்யதையால் வரும் விரோதமும் வேறு யுக்தியினால் காண்பிக்கப்பட்டது. "அநித்யபலத்வேந" நித்யபலமான மோக்ஷத்திற்கு அநித்யபலத்தைக்கொடுக்கிற கர்மா எவ்வாறு ஸாதனமாகுமென்றுபொருள். "ச்ருதய:"என்பதால் ஒன்றைக்காட்டிலும் அநேகவாக்யங்களுக்கு ப்ராபல்யம் விவக்ஷிக்கப்பட்டது. "தர்சயந்தி" என்பதால் மறைவான அர்த்தமுள்ளதைவிட வ்யக்தமான அர்த்தமுள்ள வாக்யங்களுக்கும் ப்ராபல்யம் கூறப்பட்டது. "அந்தவதேவாஸ்ய" கர்மஸாத்யமாகில் மோக்ஷத்திற்கு அநித்யத்வம் வரும்; நித்யமாகில் கர்மாவுக்கு நச்வரமான பலத்தைக்கொடுக்கும் தன்மை தவறுதலிருத்தலால் என்று கருத்து. இந்த வாக்யத்தில் கர்மாக்கள் அநித்யங்களென்று உரைக்

கப்பட்டது. ''ததயஹ'' என்கிற இந்தச்ருதியினால் கர்மக்ஷயம் பலத்வாரகமென்பது கூறப்பட்டது. பூர்வாக்யமானது அநேககாலங்களாக அனுஷ்டிக்கப்பட்ட எல்லாகர்மாக்களும் முடிவுள்ளதென்பதைத்தெரிவிப்பதற்காக; ''அஸ்மின் லோகே ஜுஹோதி யஜதே தபஸ் தப்யதே பஹூநி வர்ஷஸஹஸ்ராணி அந்தவதேவாஸ்ய தத்பவதி'' என்றல்லவோ ச்ருதிவசனங்கள். அதனாலே கர்மநைரபேக்ஷ்யவாதத்தில் இந்த வாக்யத்தை முதலில் எடுத்தது. 'ப்ரம்மவிதாப்னோதி' என்பதினால் ஜ்ஞானத்துக்கு மோக்ஷஸாதநத்வம் சொல்லப்பட்டது. அடையத்தக்க வஸ்து, அடைகிறவன்—என்கிற பேதத்தை நிஷேதிப்பதற்காக ''ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி'' என்று எடுக்கப்பட்டது. ''தமேவம்''என்கிற ச்ருதி வசனத்தினால் ஜ்ஞானபலத்வம் ப்ரதிபந்தநிவ்ருத்தி என்பது தெளிவாக்கப்பட்டது. ஜ்ஞானபலத்தைத் தவிர்த்த கர்மா முதலியவற்றிற்கு உபாயத்வநிஷேதமும் இதனால் ஸித்தம்; ''நாந்ய:பந்தா:'' என்பதல்லவோ அடுத்த வாக்யம். இவ்வண்ணம் ஜ்ஞானத்துக்கே மோக்ஷோபாயத்வஸாதகதர்க்கத்தால் அனுகாஹிக்கப்பட்டதும், ஸ்புடார்த்தங்களுடன் கூடியதுமான அனேக வாக்யங்களை எடுத்ததனால் ''வித்யாம் சாவித்யாம்ச'' என்று ஸமுச்சயபரமாக பிறரால் சொல்லப்பட்ட ச்ருதியும் அவ்வர்த்தமுள்ளதல்லவென்று கூறப்பட்டதாக ஆகிறது,—அது ஒன்றாக இருப்பதாலும், அஸ்புடமான அர்த்தமுள்ளதாக இருப்பதாலும், தர்க்கத்தோடு சேர்ந்திராமையாலும், வேறு ச்ருதிகளுக்கு விரோதமின்றி வர்ணிக்கத்தக்கதாக இருப்பதாலும்.

இவ்வாறாக ஜ்ஞானமே மோக்ஷத்திற்கு உபாயம் என்பதில் ப்ரமாணங்களாக ச்ருதிகளும், உபபத்திகளும் காட்டப்பட்டன. பிறகு யஜ்ஞாதி ச்ருதியானது வித்யைக்கு கர்மாபேக்ஷையை ப்ரதிபாதிக்கிறதென்பதை நிரஸனம் செய்கிறார்—'யதபிச' என்பதால். ஸித்தாந்தி, பாஸ்கரன், யாதவப்ரகாசன் மூவர்களுக்கும் கர்மாவானது அபிமதமாதலால் இப்படிப்பட்ட ப்ராதான்யத்தை 'அபி'சப்தம் ஸூசிப்பிக்கிறது. ஸமுச்சய பரமான வாக்யத்திற்கு ச்ருத்யந்தரானுகுணமாக நிர்வாகம் வரும்பொழுது யஜ்ஞாதி ச்ருதியும் நிர்வஹிக்கத்தக்கதென்று ஸமுச்சயாபிப்ராயமுள்ளது 'ச'சப்தம், அன்றிக்கே,அபிச என்பது ஒரே பதம். அப்பொழுதும் சொல்லப்பட்ட ப்ரகாரமாக ஸமுச்சயபரம். ''யஜ்ஞாதி கர்மாபேக்ஷாவித்யா'' என்று எது சொல்லப்பட்டதோ இந்த வசனவ்யக்தியில் ஸமுச்சயத்தால் வித்யையினாலபேக்ஷிக்கப்பட்ட எந்தக்கர்மா சொல்லப்பட்டிருக்கிறதோ என்று அர்த்தம். வஸ்துவிரோதமாவது த்வைதவாஸனையை உண்டாக்குதல், அநித்யமனாபலத்துடன் கூடி இருத்தல். ச்ருத்யக்ஷரபர்யாலோசனையாவது ஸம்ப்ரத்யயார்த்தத்தின் நிரூபணம். 'சகாரம்' ஸமுச்சயத்தில். விவிதிஷோத்பத்தியில் உபயோகப்படுகிற மாதிரியைச்சொல்லுகிறார்—''அந்த:கரணேதி.'' ''ந பலோத்பத்தௌ'' மோக்ஷோத்பத்தியில் அல்ல. ''யஜ்ஞேந தானேந அதபஸா நாசகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி'' என்றுச்ருதி. பந்தத்தினின்று விடுபடுகிறார்களில்லையென்று கருத்து. அக்ஷரபர்யாலோசனை எவ்வாறு என்றால் கூறுகிறார் 'விவிதிஷந்தீதி'. ச்ரவணாதிதி. எவம்ச யஜ்ஞாதிச்ருதிபர்யாலோசனத்தினாலும் ஞானகர்மாக்களுடைய ஸமுச்சயம் மறுக்கப்பட்டது. 'நபலோத்பத்தௌ' என்கிறவிடத்தில் பலசப்தத்திற்கு மோக்ஷத்தில் ஸ்வாரஸ்யத்தாலே இவ்வாறு யோஜனைசெய்யப்பட்டது. அன்றிக்கே, ''யஜ்ஞாதி கர்மாபேக்ஷா வித்யா'' என்கிற வசனபங்கியினால் அங்கத்வேந அபேக்ஷிக்கப்பட்டதாக எந்த கர்மா சொல்லப்பட்டதோவென்று பொருள். 'ந பலோத்பத்தௌ வேதி' நோத்பத்தியிலில்லையென்று அர்த்தம். விவிதிஷையை அபேக்ஷித்து வேதனம் பலமன்றோ. மற்றது அனைத்தும் முன்போல. இந்த யோஜனையில் ''யஜ்ஞாதிகர்மாபேக்ஷா வித்யா'' என்று நிர்தேசஸ்வாரஸ்யமிருக்கிறது; —ஏனென்றால்,

இந்த நிர்தேசமானது அங்காங்கிபாவமுள்ள ஸூத்ரஸ்மாரகமாக இருப்பதால். அன்றிக்கே யஜ்ஞாதி என்பதால் நிஷ்பன்னமானகாரணத்திற்கு பலோத்பத்திதசையில் ப்ரயாஜம்முதலியவைபோல, எந்தகர்மா அங்கமென்று சொல்லப்பட்டதோ, அது பொருந்தாது என்று பொருள். ''ந பலோத்பத்தௌ'' மோக்ஷோத்பத்தியிலல்ல காரணமயிருக்கிற வித்யைக்கு அனுக்ரஹமாக உபயோகப்படுகிறதில்லை என்று பொருள். இந்த யோஜனையில் அங்காங்கிபாவஸூத்ரஸ்மாரகநிர்தேசத்திற்கும், 'பலோத்பத்தௌ' என்கிற நிர்தேசத்திற்கும் ஸ்வாரஸ்யமிருக்கிறது. 'விவிதிஷந்தி' என்கிற சொல்லானது 'அஸிநாஜிகாம்ஸதி' என்கிறவசநம் போலாதலால், யஜ்ஞம் முதலியவைகளுக்கு வேதநோபயோகித்வம் ஸம்பவிக்கலாம் என்று சங்கை வருமேயாகில், வேதநோத்பத்தியில் ஹேதுத்வம் ஒப்புக்கொள்ளப்பட்டால் கர்மாவுக்கு இதிகர்தவ்யதாத்வமும், காணத்வமும் உபபன்னமாகாதென்று கூறுகிறார் ''விவிதிஷாயாம்'' என்கிற பதத்தை ஆதியில் கொண்ட இரண்டு வாக்யங்களால். அதில் சமாதிகளோடுகூட ஸமுச்சயத்தாலும், விகல்பத்தாலும் இதிகர்தவ்யதாத்வத்தை முதலில் நிராகரிக்கிறார் ''விவிதிஷாயம்'' என்கிற பதத்தை முதலில் கொண்ட வாக்யத்தினால். இரண்டு ஏவகாரங்களால் கர்மாவுக்கு ஸமுச்சயமும், விகல்பமும் நிரஸிக்கப்படுகிறது. சமம்முதலியவைகளெல்லாம் இந்த்ரியவ்யாபாரங்களின் நிவ்ருத்திரூபமாகையாலும், யஜ்ஞம் முதலிய கர்மாக்கள் அதன் ப்ரவ்ருத்திரூபமாதலாலும், அந்யோந்யம் விரோதிகளாக இருப்பதினால் ஸமுச்சயம் உபபன்னமாகாதென்கிற அபிப்ராயத்தினால் 'சமாதிகளுக்கே' என்று கூறப்பட்டது. ஸமபலமுள்ளவைகளுக்கன்றோ விகல்பம். ''பூத்வாத்மாநம் பச்யேத்'' (ஸமாதானமுள்ளவனாகி ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கவேண்டும்) என்று சமாதிகளுக்கு ஆத்மதர்சனத்தைக்குறித்து நேராகவே ஸாதனத்வமானது ந்யாயாபேக்ஷையில்லாமலே சீக்ரமாக அறியப்படுவதால், அதிக பலமுள்ளவைகளாக இருப்பதாலும், விவிதிஷந்தி என்று யஜ்ஞம் முதலியவைகள் இச்சைக்கு ஸாதனங்களாக ஸ்வரஸமாய் அறியப்பட்டிருந்தபோதிலும், ஸ்வாரஸ்யபங்கத்தினால் ''அஸிநா ஜிகாம்ஸதி'' இதுமுதலான த்ருஷ்டாந்தபர்யாலோசனரூபமான ந்யாயத்தை அபேக்ஷிப்பதினால், கர்மாவுக்கு வித்யாஸாதநத்வம் விளம்பித்து அறியப்படுவதால் துர்பலமாதலாலும், விகல்பம் கூடாதென்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார் ''ச்ருதிரேவாஹ.'' என்று.

அவ்விதமிருந்தபோதிலும், விவிதிஷையினால் அபேக்ஷிக்கப்படுவதால் கர்மாவும் ஜ்ஞானத்துக்கு உபயோகமானது, அவ்வாறிருக்க எப்படி இது விடக்கூடும்—சமாதிகள் எப்படி எடுத்துக்கொள்ளக்கூடும்—என்று ஸந்தேஹவா, அதை விலக்குவதற்காக கர்மாவுக்கு சமாதிகளைக்காட்டிலும் வைஷம்யத்தைக்கூறுகிறார் '' அந்தரங்கோபாயதாம்'' என்று. ''பூத்வா பச்யேத்'' என்கிறதினால் அந்தரங்கத்வம் ஸ்பஷ்டம். விவிதிஷைக்கு முந்தியன்றோ கர்மாவுக்கு உபயோகம்; சமாதிகளோவென்றால், பிறகும் உபயோகப்படுகிறது—என்று எண்ணி ''ஜாதாயாம்'' என்று சொல்லப்பட்டது.

---

பாஷ்யம்—

𑌤𑌦𑍇𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌸𑌦𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌨𑌭𑌿𑌸𑌂𑌹𑌿𑌤𑌫𑌲𑌵𑌿𑌶𑍇-
𑌷𑌕𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑌪𑌿𑌤𑌕𑌷𑌾𑌯𑌸𑍍𑌯 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍌 𑌸𑌤𑍍𑌯𑌾𑌂—'𑌸𑌰𑍍𑌵
𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌚 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌰𑌶𑍍𑌵𑌵𑌤𑍍' (ஶா. கூ. உ. க.)
'𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌂 𑌸𑌹' (தை. உ. க. க:) '𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂

ஶாந்தம் நிரவத்³யம் நிரஞ்ஜநம்' (ஶ்வே. ௬. ௧. ௯.) 'அயமாத்மா ப்³ரஹ்ம' (ப்³ரு. ௨. ௫. ௧. ௯.) தத்த்வமஸி (சா². ௬. ௮. ௭.) இத்யாதி³வாக்யஜந்யஜ்ஞாநாத³வித்³யா நிவர்ததே| வாக்யார்த²ஜ்ஞாநோபாயாஶ்ச ஶ்ரவணமநநநிதி³த்⁴யாஸநாநி | ஶ்ரவணம் நாம — வேதா³ந்தவாக்யாநாமாத்மைகத்வவிஷயப்ரதிபாத³காநீதி தத்த்வத³ர்ஶிந ஆசார்யாந்ந்யாயயுக்தார்த²க்³ரஹணம் | மநநமாசார்யோபதி³ஷ்டஸ்யார்த²ஸ்ய ஸ்வாத்மந்யேவ யுக்திபி⁴ரநுஸந்தா⁴நதஃ ஸ்தி²ரீகரணம் மநநம் | அநாதி³பே⁴த³வாஸநா நிரஸநாயாத்மைகத்வவாஸநாநுவர்தநா — நிதி³த்⁴யாஸநம்| ஏவம் ஶ்ரவணாதி³பி⁴ர்நிரஸ்தபே⁴த³வாஸநஸ்ய வாக்யார்த²ஜ்ஞாநமவித்³யாம் நிவர்தயதீத்யேவம் ஶ்ரவணஸ்யாபேக்ஷிதமேவ பூர்வவ்ருத்தம் வக்தவ்யம்| தச்ச நித்யாநித்யவஸ்துவிவேகஃ, ஶமத³மாதி³ஸாத⁴நஸம்பதி³ஹாமுத்ரார்த²ப²லபோ⁴க³விராக³ஃ, முமுக்ஷுத்வம் சேத்யேதத்ஸாத⁴நசதுஷ்டயம் | அநேந விநா ஜிஜ்ஞாஸாநுபபத்தேரர்த²ஸ்வபா⁴வாதே³வ பூர்வவ்ருத்தமிதி ஜ்ஞாயதே |

---

ஆகையால், இவ்வண்ணமாக முன்புள்ள அநேக ஜன்மங்களில் பலவிசேஷங்களைக் கருதாது செய்யப்பட்ட கர்மாக்களால் பாபங்கள் நாசஞ்செய்யப்பட்ட ஒருவனுக்கு விவிதிஷை உண்டானல், 'ஸோமயனே த்திற்குரியவனே ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிற இந்த ஜகத்தானது ஸ்ருஷ்டிக்கு பூர்வகாலத்தில் ஸத்தாகவே இருந்தது. இரண்டாவதன்றிக்கே ஒன்றேயிருந்தது' 'ப்ரஹ்மம் அஸத்யத்தினின்றும், ஜடவஸ்துக்களினின்றும பரிச்சின்னவஸ்துக்களினின்றும் வ்யாவ்ருத்தமாக இருக்கிறது.' 'அவயவமில்லாதது, க்ரியை இல்லாதது, சாந்தஸ்வபாவமுள்ளது.' 'இந்த ஆத்மா ப்ரஹ்மமாகிறது' 'நீ அதுவாக இருக்கிருய்' — எனகிற இவை முதலான வாக்யங்களாலுண்டான ஜ்ஞானத்தினுல் அவித்யையானது நிவ்ருத்தியடைகிறது. ச்ரவண மநந நிதித்யாஸனங்களும் வாக்யார்த்தஜ்ஞானேபயோகிகள். ச்ரவணமாவது — வேதாந்தவாக்யங்கள் ஆத்மா ஒன்று என்கிற அறிவையுண்டுபண்ணுகிற வித்யையைப்ரதிபாதிக்கின்றனவென்று தத்வதர்சியான ஆசார்யனிடத்தினின்று ந்யாயங்களுடன் கூடின அர்த்தங்களை க்ரஹித்தல். இவ்வண்ணம், ஆசார்யனுல் உபதேசிக்கப்பட்ட அர்த்தத்தைத் தன்மனதில் 'இவ்வண்ணமே ஸரி'

***என்று காரணங்களால் நிலைநிற்கச்செய்வது—மனனம். இதற்கு விரோதியாய் அநாதியான பேதவாஸனையை நிரஸனம் செய்வதின் பொருட்டு இந்த அர்த்தத்தையே இடைவிடாது சிந்தித்தல்—நிதித்யாஸநம். ச்ரவணம் முதலியவைகளால் எல்லா பேதவாஸனைகளும் நீங்கினவனுக்கு வாக்யார்த்தஜ்ஞானம் அவித்யையை நிவ்ருத்தியடையச்செய்கிறதாதலால் இப்படிப்பட்ட ச்ரவணத்துக்கு அவச்யமாய் அபேக்ஷிக்கப்பட்டதாக இருக்கிறதே பூர்வ வ்ருத்தமென்று சொல்லத்தக்கது. அதாவது—நித்யமாயும், அநித்யமாயுமிருக்கிற வஸ்துக்களை, பகுத்தறிதல், சமம், தமம் முதலிய ஸாதனங்களின் ஸம்பத், இம்மையிலும், மறுமையிலும் பலானுபவத்தில் ஆசையின்மை, முக்தியடைவதில் விருப்பமென்கிற நான்கு ஸாதனங்கள். இவையில்லாவிடில் ஜிஜ்ஞாஸை உபபன்னமாகாது. அர்த்தஸ்வாபவத்தினாலேயே இதுவே பூர்வவ்ருத்தமென்று அறியப்படுகிறது.***

---

*ச்ருதப்ரகாசிகை:—*

*ஜ்ஞாநத்தைக்குறித்து கர்மாவுக்கு காரணத்வமுமில்லை என்று சொல்லுகிறார் 'ததேவம்' என்று. காரணத்வம் ஸம்பவிக்கிறதெனெ ஆசங்கித்து நிரஸிக்கிறார், ஒப்புக்கொள்ளுதலாலல்ல. விசுத்தமான மனதல்லவோ காரணம், "மநஸா து விசுத்தேந" (தூய்மை வாய்ந்த மனதால்) என்று ச்ருதி இருப்பதினால். 'தத்' கூறப்பட்ட காரணங்களால் 'ஏவம்' ஸமுச்சயத்தாலும், விகல்பத்தாலும், இதிகர்த்தவ்யதாத்வம் உபபன்னமாகாமல் போகவே ஸ்வர்கம் முதலிய மறுமைப்பயன்களுக்கு ஸாதனமான கர்மாவுக்கு விவிதிஷாஸாதநத்வம் பொருந்தாதென்பதைப்பரிஹரிப்பதின் பொருட்டு 'அநபிஸம்ஹிதபல' என்கிற சப்தம் கூறப்பட்டுள்ளது. விவிதிஷையும் கூட அந்த கர்மாவினால் ஸாதிக்கத்தக்கதாக இருப்பதால் பலமாக ஆகிறது. அந்த விவிதிஷைக்கு அநபிஸம்ஹிதத்வவ்யாவ்ருத்தியின்பொருட்டு "பலவிசேஷ" என்று கூறப்பட்டது. விவிதிஷை விசித்திப்பதை உத்தேசித்து இப்பொழுதுங்கூட அனுஷ்டானத்திற்காக கர்மஜ்ஞானம் அபேக்ஷிக்கப்பட்டது என்கிற ஸந்தேஹநிவ்ருத்தியின்பொருட்டு 'ஜன்மாந்தர' சப்தம். 'அநேக ஜந்மஸம்சித்த' என்கிற இது முதலிய வசநங்களால் இப்பொழுதும் அநுஷ்டிக்கத்தக்கதென்கிற சங்கையை வ்யாவ்ருத்திப்பதற்காக "சித" சப்தம். காரணம் கார்யத்தினால் கல்பிக்கப்பட்டதன்றோ. இப்பொழுது விவிதிஷோத்பத்தி காண்பதனால் முந்தின அநேக ஜந்மங்களில் அனுஷ்டானம் கல்பிக்கத்தக்கதென்று கருத்து.*

*தேந—அந்த கர்மாவினால், ம்ருதிதகஷாயஸ்ய—அழிந்த பாவமுள்ளவனுக்கு. 'கஷாய பக்தி: கர்மாணி ஜ்ஞானம் து பரமா கதி: கஷாயே கர்மபி: பக்வே ததோ ஜ்ஞானம் ப்ரவர்த்ததே (கர்மாக்கள் பாபங்களைப் பக்வம் செய்கின்றன. ஜ்ஞானமோவென்றால் அடையத்தக்கவைகளுக்குள் சிறந்தது. கர்மாக்களால் பாபம் பக்வமானால் பிறகு ஜ்ஞாநம் உண்டாகிறது) என்றல்லவோ ஸ்ம்ருதி.*

இவ்வண்ணம் விதிகளை உண்டான அளவில் ஞாநோத்பத்தி ஸாதனத்தைச்சொல்லுகிறார் 'ஸதேவ' என்று. ஸதேவ இதுமுதலானது காரணவாக்யம். 'ஸத்யம் ஜ்ஞானம்' என்பது சோதகவாக்கியம். ஸத்யஜ்ஞாநாதிவாக்யங்களால் பலித்த வ்யாவ்ருத்தியைத்தெளிவாய் காட்டுவதற்காக "நிஷ்கலம்" முதலான வாக்யம் எடுக்கப்பட்டிருக்கிறது. "அயமாத்மா ப்ரஹ்ம" என்பது ஐக்யவாக்யம். $உபக்ரமம்முதலிய ஆறுவிதமான தாத்பரியங்களோடு கூடிய வாக்யதாத்பர்யத்தை நிர்ணயிப்பதற்கு ஆறுவித ப்ரமாணங்கள் உண்டு. அவை யாவன:—(க) உபக்ரமம்-உபஸம்ஹாரம், (உ) அப்யாஸம், (ங) அபூர்வதை, (ச) பலம், (ரு) அர்த்தவாதம், (சா) உபபத்தி,—இவைகள் தாத்பாய நிர்ணயகளங்கள்.

ஐக்யவாக்யத்தைக்காட்டுகிறார் 'தத்வமஸி' என்று. இந்த வாக்யத்தில் ப்ரஹ்மத்தோடு ஜீவவிசேஷத்திற்கு ஐக்யம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஐக்யமானது எல்லா ஆத்மாக்களுக்குமென்று அறிவிப்பதின்பொருட்டு 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற வாக்யம். இது முதலிய வாக்யம் ஜ்ஞானோத்பத்தியில் காரணம்;—கர்மாவல்ல என்று பொருள். வாக்யத்தாலுண்டாகி ஜ்ஞாநமானது அவித்யைக்கு நிவர்த்தகமாகுமேயாகில், 'ச்ரவணம்' முதலியவைகள் பூர்வகமான த்யானவிதியானது பயனற்றதாக ஆய்விடுமென்று ஆசங்கித்துச் சொல்லுகிறார் 'வாக்யார்த்த' என்று. சகாரமானது சங்கையை விலக்குகிறது. அவைகளுடைய ஸ்வரூபத்தைச்சொல்லுகிறார்—'ச்ரவணம் நாம'என்று. ப்ரதிபாதகாநி—நிஷ்பாதனத்தில் ஸமர்த்தங்கள். வாக்யத்தினுலுண்டான ஞானத்தினுலென்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது.

ஏதத்விரோதி—ஆத்மைகத்வவித்யாவிரோதி. ச்ரவணம் முதலியவைகள் இவ்விதமான ஸ்வரூபமுள்ளவைகளாக இருக்கலாம். இவைகளுக்கு எவ்வாறு வாக்யார்த்தஜ்ஞானத்தில் உபயோகம் எனில் சொல்லுகிறார்—"ச்ரவணமநநாதிபி:" என்ற. வாக்யார்த்தஜ்ஞாநோத்பத்திக்கு விரோதி எதோ அதை நிரஸநம் செய்வது உபயோகமென்று அர்த்தம். இதி—கூறப்பட்டுள்ள காரணத்தினுல். ஜ்ஞாநகர்மஸமுச்சய அங்காங்கிபாவாநுபபத்தி ஹேதுக்களால் என்று அர்த்தம்.

ஏவம்ரூபஸ்ய—பந்தநிவ்ருத்தியில் கர்மாவை அபேக்ஷியாமலிருக்கிற வாக்யார்த்த ஜ்ஞாநத்திற்கு உபக்ரகமமாயிருக்கிற ச்ரவணத்துக்கு; ப்ராஸங்கிகமான அர்த்தத்திற்கு அல்ல. அவச்யாபேக்ஷிதம்—தவருமல் அபேக்ஷிக்கப்பட்டிருகிற. அபேக்ஷிக்கப்பட்டதும் எது, என்றால் சொல்லுகிறார்—'தச்ச' என்று. யாது காரணத்தினுல் இது அபேக்ஷிக்கப்பட்டது, எனில்—கூறுகிறார் 'அநேநவிநா' என்று. ஜிஜ்ஞாஸாநுபபத்தே:—விசாரம் உபபன்னமாகாததால். அநுபபத்தியை உபபாதிக்கிறார்—'அர்த்தஸ்யபாவாத், என்று அர்த்தஸ்வபாவம் எப்படி? இவ்வாருக—நித்யாநித்யவஸ்துவிவேகத்தால் அநித்யஸாம்ஸாரிகபலபோகத்தில் ஆசையின்மையும், நித்யமான புருஷார்த்தத்தில் விருப்பமும் உண்டாகலாம். அதற்குப்பிறகு ச்ரவணம் முதலியவற்றில் ப்ரவ்ருத்தி மனதின் அவதானத்திற்குக்காரணமாக இருப்பதால் சமம் முதலியவைகளின் ஸம்பத்தியானது அந்த ச்ரவணுதிகளுக்கு உபயுக்தமாகிறது. அர்த்தஸ்வபாவாதேவ—பூர்வ ப்ரக்ருதத்தாலேயே என்று ஏவகாராபிப்ராயம். ஜ்ஞானத்துக்கே உபாயத்வமும், கர்மாவுககு அநபேக்ஷிதத்வமும் அர்த்தஸ்வபாவத்தாலன்ருே முன் சொல்லப்பட்டது. அல்லது, "அநேந விநா ஜிஜ்

$ உபக்ரமோபஸம்ஹாராவப்யாஸோ பூர்வதாபலம், அர்த்தவாதோபபத்தீச லிங்கம் தாத்பர்யநிர்ணயே.—

ஞாஸா நுபபத்தே:" சமா முதலியவற்றின் அர்த்தஸ்வாபவத்தால் என்று அர்த்தம். சமம் முதலியது பூர்வவ்ருத்தமாக இருக்கட்டும், கர்மாவும் பூர்வவ்ருத்தமாக இருக்கட்டும் என்றால் விடை அறிவிக்கிறார் 'அர்த்தஸ்வபாவாதேவ' என்று. எந்த அர்த்தஸ்வபாவத்தால் சமம் முதலியவற்றிற்கு பூர்வவ்ருத்தத்வம் ஸித்திக்கிறதோ, அதே அர்த்தஸ்வபாவத்தால் மற்றதுக்கு பூர்வவ்ருத்தத்வநிஷேதம் ஸித்திக்கிறதென்று முதல் ஏவகாரத்துக்கு கருத்து. மற்றது பூர்வவ்ருத்தமல்லவென்பதற்காக இரண்டாவது ஏவகாரம். இந்த இடத்தில் அர்த்தஸ்வபாவசப்தத்தால் சமாதிகளுடைய அர்த்தஸ்வபாவம் சொல்லப்பட்டது. ஜ்ஞாநார்த்தஸ்வபாவமும், கர்மார்த்தஸ்வபாவமும் அபிப்ராயப்பட்டிருக்கிறது;—ஏனெனில், ஜ்ஞானத்திற்கு கர்மாவை அபேக்ஷியாத உபாயமாக இருப்பது ஸ்வபாவமாதலாலும், கர்மாவும் பேதத்தை அவலம்பித்திருப்பதுபற்றி விருத்தஸ்வபாவமுள்ளதாக இருப்பதாலும், சமம் முதலியவைகள் நிவ்ருத்திரூபமாதலால் ப்ரவ்ருத்திரூபமான கர்மாவை விரோதிக்கிற ஸ்வபாவமுள்ளதாக இருப்பதாலும—ஸாதன சதுஷ்டயமே பூர்வவ்ருத்தம். மற்றதல்ல வென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. "இதமேவ பூர்வவ்ருத்தமிதி ஜ்ஞாயதே" இதம் ஏவ சப்தமிரண்டும் அயோக அந்யயோக வ்யவச்சேதபரம். இதம் சப்தமேவென்றால் ஸாதனசதுஷ்டயமே பூர்வவ்ருத்தமென்பதைக்காட்டுகிறது. ஏவகாரமானது கர்மாவின் நிராஸத்தை விளக்குகிறது. சமம் முதலியவைகளின் அர்த்தஸ்வபாவத்தால் அவைகளின் அயோகநிவ்ருத்தி ஏற்படுகிறது. ஆகையால், ஜ்ஞாநகர்மாக்களுடைய அர்த்தஸ்வபாவத்தாலும் அந்யயோகநிவ்ருத்தி உண்டாகிறது.

---

பா⁴ஷ்யம்:—

இத³முக்தம் ப⁴வதி—ப்³ரஹ்மஸ்வரூபதிரோதா⁴யிகாவித்³யாமூலாபாரமார்தி²கம் பே⁴த³த³ர்ஶநமேவ ப³ந்த⁴மூலம்।

ப³ந்த⁴ஸ்யாபாரமார்தி²க:। ஸ ச ஸமூலோऽபாரமார்தி²கத்வாதே³வ, ஜ்ஞாநேநைவ நிவர்த்யதே। நிவர்தகஞ்ச ஜ்ஞாநம் தத்த்வமஸ்யாதி³வாக்யஜந்யம், ததை³தஸ்ய வாக்யஜந்யஸ்ய ஜ்ஞாநஸ்யோத்பத்தௌ காமம் வா, கர்மணாம் நாபேக்ஷா, விவிதி³ஷாயாமேவ து கர்மணாமுபயோக:, ஸ ச பாபமூலரஜஸ்தமோநிப³ர்ஹணத்³வாரேண ஸத்த்வவ்ருத்³த்⁴யா ப⁴வதீதி கர்மாபேக்ஷா யோக³ஸித்³தே⁴த்யா 'ப்³ராஹ்மணா விவிதி³ஷந்தி' (ப்³ரு. ௪. ௪. ௨௨.) இத்யுக்தேரிதி। அத: கர்மஜ்ஞாநஸ்யாநுபயோகா³தே³வ ஸாத⁴நசதுஷ்டயம் பூர்வவ்ருத்தமிதி வக்தவ்யம்।

---

இது சொல்லப்பட்டதாக ஆகிறது. ப்ரஹ்மஸ்வரூபத்தை மறைக்கிற அவித்தியையை மூலமாகக்கொண்ட வாஸ்தவமல்லாத பேதஜ்ஞானமே பந்தத்துக்குமூலம், பந்தமும் பாரமார்த்திகமன்று, அதுவும் (பேதஜ்ஞாநமும்) மூலமாகிற அவித்யையுடன் பாரமார்த்திகமாக இல்லாமலிருப்பதினால் ஜ்ஞாநத்தாலேயே நிவர்த்திக்கப்படு

**கிறது. நிவர்த்தகமான ஜ்ஞாநமானது 'தத்வமஸி' இத்யாதிவாக்யத்தால் உண்டாகிறது. அப்படிப்பட்ட இந்த வாக்யஜந்யஜ்ஞானத்தினுடைய ஸ்வரூபோத்பத்தியிலாவது, கார்யத்திலாவது கர்மாவுக்கு உபயோகம் கிடையாது. விவிதிஷையிலேயே கர்மாக்களுக்கு உபயோகம், அதுவும் பாபமடியாக வந்த ரஜஸ்தமஸ்களின் நாசத்தின் வழியாக ஸத்வகுணத்தின் வ்ருத்தியினால் உண்டாகிறதென்று— இந்த உபயோகத்தைக்கருதி 'ப்ராஹ்மணர்கள் அறிய விரும்புகிறார்கள்' என்று சொல்லப்பட்டது. ஆகையால் கர்மஜ்ஞாநம் உபயோகமில்லாததால் முன்கூறிய ஸாதநசதுஷ்டயமே பூர்வவ்ருத்தமென்று சொல்லவேண்டும்.**

---

ஸகலவிசேஷங்களுக்கும் ப்ரஹ்மம் நிவர்த்தகமாகில், எவ்வாறு ஸம்ஸாரப்ரவ்ருத்தி உண்டாகலாம், எவ்வாறு வாக்யார்த்தஜ்ஞானத்தினாலேயே அவித்யாநிவ்ருத்தி உண்டாகக்கூடும், எதனால் அந்த:கரணத்திற்கு அழுக்கு உண்டாகிறது, கர்மாவினால் எவ்வாறு அதற்குத்தூய்மை ஸம்பவிக்கிறது, அந்த அர்த்தஸ்வபாவங்கள் எவ்வாறு அந்யயோகவ்யவச்சேதங்களுக்கு காரணங்களாக ஆகக்கூடும்—என்கிற சங்கை உண்டாக, முன்கூறப்பட்டுள்ள அர்த்தத்தை ஒன்றாகத்திரட்டிக்காட்டானின்றுகொண்டு சங்கைகளைப்பரிஹரிக்கிறார்—"ஏததுக்தம்" என்று.

'ப்ரஹ்மஸ்வரூபாச்சாதிகா' சப்தத்தினால் ப்ரஹ்மம் ஸகலவிசேஷப்ரத்யநீகமாக இருந்தபோதிலும், ஸ்வரூபத்துக்கு மறைவு ஏற்படுவதால் பேதஜ்ஞாநம் உண்டாகிறது என்று உரைக்கப்பட்டது. பேதமாவது அறிகிறவன், அறியத்தக்கவை முதலியது. அபாரமார்த்திகமான பேததர்சனமே பந்தத்துக்கு மூலம்; கர்மா அல்லவென்று கருத்து. கர்மாவும் ப்ராந்தியடியாக வந்ததென்று கருத்து. அன்றிக்கே, பேததர்சனமே அபாரமார்த்திகம், ஸத்யமாக இருக்கிறதொன்றுமில்லை—என்று கருத்து. அவ்வாறு இருந்தாலன்றோ காமாபேக்ஷை. பந்தமாவது பிறப்பு, இறப்பு முதலியது. "பந்தச்சாபாரமார்த்திக:" அவித்யை அடியாக வந்திருக்கிற அபாரமார்த்திகமான பேதஜ்ஞானத்தின் கார்யமாக இருப்பதால் என்று கருத்து. அதனால் கர்மநைரபேக்ஷயத்திற்கு என்ன ப்ரயோஜனம் எனில், கூறுகிறார்—'ஸச' என்று. "அபாரமார்த்திகத்வாதேவ" முன்கூறப்பட்டதாகவே இருக்கிற அபாரமார்த்யத்தினால் கர்மநைரபேக்ஷ்யஸித்தியென்பது ஏவகாராபிப்ராயம்.

"ஜ்ஞாநேனைவ" கர்மாவினாலல்லவென்று பொருள். அபாரமார்த்தஸர்ப்பநிவ்ருத்திக்கு ரஜ்ஜுஜ்ஞாநத்தைத்தவிர்த்து வைநதேயோபாஸநரூபமான கர்மாபேக்ஷை இல்லையன்றோ. இவ்வண்ணம் ஸமஸமுச்சயம் மறுக்கப்பட்டது. ஜ்ஞாநத்தைக் குறித்தும் கர்மாவுக்கு ஸாதநத்வமில்லையென்று சொல்லுகிறார்—"நிவர்தகஞ்ச" என்று. நிவர்த்தக ஜ்ஞாநம் ப்ரமாணத்தால் உண்டாகிறதென்று கருத்து. ப்ரமாணத்தினாலுண்டாகிற சிப்பி ஜ்ஞானமல்லவோ, வெள்ளியை விலக்குகிறது. இங்கு க்ஷமாதிகளுக்கு இதிகர்த்தவ்யதாத்வமிருப்பதினால் கர்மாவுக்கு விரோதத்தினால் இதிகர்த்தவ்யதாத்வமும் இல்லையென்று அபிப்ராயம்.

அதனாலென்னவெனில் சொல்லுகிறார் 'தஸ்ய' என்று. தஸ்ய—கர்மாவை அபேக்ஷிக்காமலிருக்கிற. ஏதஸ்ய—அத்வைதவிஷயமான. 'தத் ஏதத்' இவ்விரண்டு சப்தங்களுக்கும் பா

ஸ்துதவாசித்வம் ஸமானமாக இருந்தபோதிலும், 'தூரத்திலிருக்கிற ஸமீபத்திலிருக்கிற' என்கிற விசேஷணங்களுடன் கூடின வஸ்துக்களின் பராமர்சமல்லவோ தகுந்தது. அத்வைதவிஷயமென்பதில் காரணத்தைக்கூறுகிறார் 'வாக்யஜந்யஸ்ய' என்று. தத் த்வமஸி-முதலிய வாக்யங்களாலுண்டாயிருப்பதால் அத்வைதவிஷயத்வமென்று கருத்து.

கார்யே—மோக்ஷத்தில். அங்ஙனமாகில், எவ்விடத்தில் உபயோகமென்றால் சொல்லுகிறார் 'விவிதிஷாயாம்' என்று. துசப்தமானது, காரணத்வத்தையும், இதிகர்த்தவ்யதாத்வத்தையும் நிரஸநம் செய்கிறது. உபயோகம் எவ்வாறாக என்பதைக்கூறுகிறார்'ஸச'என்று. பாபமூல என்பது தொடங்கி அந்த:கரணநைர்மல்யத்வாரேண என்று முன் கூறப்பட்டுள்ளது விவரிக்கப்பட்டதாக ஆகிறது. ரஜஸ்தமஸ்களுடைய நாசம் முதலியது, இந்த வாக்யத்தில் சப்தத்தால் ப்ரதிபாதிக்கப்படவில்லை எனில் சொல்லுகிறார் இதீமம் என்று. அபிப்ரேத்ய சப்தத்தத்தால் சங்கைக்குப்பரிஹாரம். இதி என்பது ஹேதுவில். வஸ்து விரோதத்தால்—இதிகர்த்தவ்யதாத்வம்,காரணத்வம் முதலியவற்றின் அனுபபத்தி ஹேதுக்களாலென்பது அர்த்தம். 'இமம் உபயோகம்' ரஜஸ்தமஸ்களின் நாசம் ஸத்வத்தின் அபிவ்ருத்தி ஸ்வரூபமான பரம்பரோபயோகமென்று கருத்து. 'விவிதிஷந்தீத்யுக்தம்' என்பதற்கு 'ஏததுக்தம் பவதி' என்பதோடு அந்வயம். ப்ரக்ருதத்தை உபஸம்ஹாரம் செய்கிறார்—அத: கர்மஜ்ஞாநஸ்ய—என்று. அத:-விடுவதற்கும், எடுப்பதற்கும் கர்மஜ்ஞாநம் அபேக்ஷிதமில்லாமையாலென்று கருத்து.

இவ்விடத்தில் வ்யாக்யாதாக்களால் இரண்டு ஸங்க்ரஹச்லோகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

விரோதாதப்ரமாணத்வாச்சித்தசுத்த்யுபயோஜநாத்.
ஜ்ஞானமாத்ரஸ்ய ஹேதுத்வச்ருதேஸ்ஸாமர்த்யதோபி ச. (க)

க்ஷமாத்யங்கதாம்நாநாத் ந தீகர்மஸமுச்சய:
ச்ரவணாதிக்ரமோந்நித்ரவாக்யஜா தீர்விமோசிகா. (உ)

(விரோதத்தாலும், ப்ரமாணமில்லாமையாலும் சித்தசுத்திக்கு உபயோகப்படுவதாலும், ஜ்ஞாநத்துக்கு மாத்ரம் ஹேதுத்வததைக்கூறுகிற ச்ருதியினாலும், ஸாமர்த்யத்தினாலும் சமாதிகளை அங்கங்களாகக்கொண்டிருப்பதாக ச்ருதிவசனமிருப்பதாலும், ஜ்ஞாநகர்ம ஸமுச்சயமானது மோக்ஷஸாதநமாகாது. ச்ரவணம் முதலியவற்றால் க்ரமமாக ப்ரகாசிக்கிற வாக்யஜந்யஜ்ஞானமே பந்தநிவர்த்தகம்) என்று.

விரோதாத்—என்பதினால் கர்மாக்கள் அநித்யபலத்துடன் கூடியதாக இருப்பதாலும், பேதவாஸனையை உண்டுபண்ணுவதாலும் விரோதம் விவக்ஷிக்கப்பட்டது. 'ஸாமர்த்யத:' என்பதினால் ஜ்ஞாநத்துக்கு மித்யார்த்தநிவர்த்தகத்வத்தில் கர்மநைரபேக்ஷ்யரூபமான வஸ்து ஸாமர்த்யம் விவக்ஷிக்கப்பட்டது.

𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌃

𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇। 𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍇𑌵 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃; 𑌸𑌾 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍇𑌵 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿, 𑌤𑌦𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑍇 𑌹𑌿 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌾𑌕𑍍𑌯𑍈𑌰𑍍𑌵𑌿𑌧𑌿𑌤𑍍𑌸𑌿𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌿𑌂𑌰𑍂𑌪𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌵𑍇𑌚𑌨𑍀𑌯𑌮𑍍। 𑌕𑌿𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑍍?—𑌉𑌤 𑌤𑌨𑍍𑌮𑍂𑌲𑌮𑍁𑌪𑌾𑌸𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍? 𑌇𑌤𑌿। 𑌨 𑌤𑌾𑌵𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌜𑌨𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍; 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑌾𑌨𑌮𑌨𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌪𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌦𑍇𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌃, 𑌤𑌾𑌵𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌶𑍍𑌚 ।

𑌨 𑌚 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑍍—𑌭𑍇𑌦𑌵𑌾𑌸𑌨𑌾𑌯𑌾𑌮𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌕𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌨 𑌜𑌨𑌯𑌤𑌿। 𑌜𑌾𑌤𑍇𑌨 𑌜𑌾𑌤𑍇𑌽𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌹𑌸𑍈𑌵 𑌭𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌦𑍋𑌷𑌾𑌯, 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍈𑌕𑌤𑍍𑌵𑍇 𑌜𑍍𑌞𑌾𑌤𑍇𑌽𑌪𑌿 𑌦𑍍𑌵𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌤𑍍 𑌅𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌮𑌪𑌿 𑌛𑌿𑌨𑍍𑌨𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑍇𑌨 𑌨 𑌬𑌨𑍍𑌧𑌾𑌯 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 ॥

---

இந்த பூர்வபக்ஷத்தில் ஸித்தாந்தம் கூறப்படுகிறது—அவித்யையின் நிவ்ருத்தியே மோக்ஷம் அதுவும் ப்ரஹ்மவிஜ்ஞானத்தினாலேயே உண்டாகிறதென்று எதுசொல்லப்பட்டதோ அது ஒப்புக்கொள்ளப்படுகிறது. (ஆனால்) அவித்யையின் நிவ்ருத்திக்காக வேதாந்தவாக்யங்களால் விதிப்பதற்கு விரும்பப்பட்ட ஜ்ஞாநம் எந்த ஸ்வரூபமுள்ளதென்று விவேசித்தறியத்தக்கது. (அதாவது) அது வாக்யத்தினாலுண்டான வாக்யார்த்தஜ்ஞானமாத்ரமா? அல்லது, அதை மூலமாகக்கொண்ட உபாஸநாத்மகமான ஜ்ஞாநமா? என்று.—நிச்சயமாக வாக்யஜந்யஜ்ஞாநமன்று; அது விதிக்கப்படாமலிருந்தபோதிலும் வாக்யத்தினாலேயே ஸித்திக்குமாதலாலும், அவ்வளவு மாத்ரத்தினாலேயே அவித்யையின் நிவ்ருத்திக்கு உபலப்தியில்லாமையாலும்.

பேதவாஸனை நீங்காமலிருக்குமளவில் வாக்யம் அவித்யாநிவர்த்தகமான ஜ்ஞாநத்தை உண்டுபண்ணுகிறதில்லை. உண்டானாலும் சந்த்ரன் ஒன்று என்கிற நிச்சயமிருந்தபோதிலும் சந்த்ரன் இரண்டு என்கிற ஜ்ஞாநம் நீங்காமலிருப்பதுபோல, பேதஜ்ஞாநம் எல்லோருக்கும் முழுமையும் உடனே நீங்காமலிருந்தபோதிலும் மூலம் அவித்யை அற்றபடியால் பந்தநிமித்தமன்று என்று சொல்ல ஒண்ணாது.

ச்ருதப்ரகாசிகை:—

ஸித்தாந்தத்தை ஆரம்பிக்கிறார் அத்ரோச்யதே—என்று. இந்த பூர்வபக்ஷத்தில் ஸித்தாந்தம் கூறப்படுகிறதென்று அர்த்தம்.

பூர்வபக்ஷங்களில் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தங்களில் விரோதமில்லாத அம்சத்தை ஒப்புக்கொண்டு மறுமொழி கூறுகிறார் 'யதுக்தம்' என்று. அவித்யாநிவ்ருத்தி: ப்ரதிபந்த நிவ்ருத்தி. ஸாதநத்தின் த்வித்வநிராஸனமானது அபிமதமென்று பொருள். எந்த ப்ரதிபந்த நிராஸம் கர்மஸாத்யம்,—என்று சொல்லப்பட்டதோ அதற்கு 'தமேவம் விதித்வாதிம்ருத்யுமேதி' இது முதலியவைகளில் ஞானஸாத்யத்வம் கூறப்பட்டது. ப்ரமப்ராப்தியோவென்றால் தானாக ஸித்தித்திருக்கிறது. ஏவகாரங்களால் வேறு ஸாத்யமும் வேறு ஸாதனமும் வ்யாவ்ருத்திக்கப்படுகிறது. என்றாலும், அநிஷ்டநிவ்ருத்தி, இஷ்டப்ராப்தி இரண்டுமிருக்கிறது. ஆகிலும், ஸ்வதஸ்ஸித்தமாயுள்ள இஷ்டதமமான ப்ரஹ்மப்ராப்திக்கு தனியாக உபாயஸாத்யத்வமில்லாமையால் ப்ரதிபந்தநிவ்ருத்தியே ஸாத்யம். தானாகவே எல்லாவற்றையும் நேராகக் காண்பதில் தகுதியுள்ள ஜ்ஞானமானது ப்ரதிபந்தகம் நிவ்ருத்தித்தவுடன் ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபரூபகுணவிபவம் முதலிய அனைத்தையும் ஸாக்ஷாத்கரிக்கிறது. அணை உடைந்துபோனால் ஜலம் தானாகவே எப்படி செல்லுகிறதோ, ஒருவராலும் நடத்தத்தக்கதல்லவோ, எப்படி கல்லைக்கொண்டு வருவதற்காக வழியை மேடுபள்ளமில்லாமல் ஸமமாக்குதல், அந்தக்கல்லை கடத்துதல் இவ்விரண்டும் எவ்வாறு தனித்தனியான யத்நங்களால் ஸாத்யங்களோ அவ்வாறு இல்லை—என்று அர்த்தம். அல்லது, பாவாந்தரமே அபாவரூபமாதலால் அவித்யாநிவ்ருத்தியே ப்ரஹ்மப்ராப்தியென்று பொருள்.

ஸாத்யஸாதநங்களுடைய த்வித்வநிராஸம் ஒப்புக்கொள்ளப்பட்டதேயாகில் விப்ரதிபத்திவிஷயம் எது?—என்கிற கேள்விக்கு உத்தரம் சொல்லுகிறார் அவித்யா—என்று. ஸாதனஸ்வரூபவிசேஷத்தில் விப்ரதிபத்தி என்று அர்த்தம். கிம்ரூபம்—கர்மங்களை அங்கங்களாகக் கொள்வதற்குத்தகுதியற்றதாக உன்னால் சொல்லப்பட்ட ஜ்ஞானமா?—அல்லது, கர்மங்களை அங்கங்களாகக்கொள்வதற்குத்தகுதியுள்ளதாக நம்மால் சொல்லப்பட்ட ஜ்ஞானமா?—என்று பொருள். கிம்ரூபமென்கிற பதத்தால் கருதப்பட்டதை விவரிக்கிறார் கிம்—என்று. கிம் வாக்யாத்—இது முதலியவற்றால் அந்யமதத்தையும் தன்மதத்தையும் சொல்லுகிறார்; பரமதவிகல்பமல்ல. தொடக்கத்தில் பரபக்ஷநிராகரணம் செய்யப்படுகிறது. தன் பக்ஷத்தை ஸ்தாபநம் செய்தலோ, பிறகு என்று அபிப்ராயப்பட்டுச் சொல்லுகிறார் ந தாவத்—என்று. தூஷிக்கத்தக்கதான இரண்டினுள் ஒன்றின் தூஷணம் செய்யப்படுகிறதில்லை. ஏனெனில் கூறுகிறார் தஸ்ய—என்று. விதாநமந்தரேணபி—ப்ரமாணஜ்ஞானம் வஸ்துதந்த்ரமேயொழிய புருஷதந்த்ரமல்ல, செய்யவும், மாற்றவும் அசக்யமாக இருப்பதால். ஆகையால், புருஷதந்த்ரத்வமில்லாததால் அது விதிக்கத்தக்கதல்ல என்று அவர்களாலேயே சொல்லப்பட்டிருக்கிறதென்று கருத்து. வாக்யாதேவ — ப்ரம்மஸ்வரூபபரவாக்யத்தினாலேயே. வ்யுத்பத்தியுள்ள புருஷனைக் குறித்து ந்யாயாநுக்ருஹீத வாக்யத்திற்கு அர்த்த போதகத்வம் ஸ்வதஸ்ஸித்தமாக இருக்கிறது; விதிக்கு அதீநமல்ல; அதைக்கேட்பதில் புருஷனுக்கு ப்ரவ்ருத்தியும் ராகத்தாலேயே என்று உபபாதிக்கப்பட்டது. என்றாலும் ராகத்தாலல்ல. ஆகிலும், அத்யயநவிதியே அத்யயநம் செய்யப்பட்ட முழு வேதவாக்ய விசாரத்தில் ப்ரவர்த்தகமாதலால் 'ப்ரஜ்ஞாம் குர்வீத' இது முதலான விதியானது ப்ரயோஜனமற்றதே. ப்ரமாணஜ்ஞானத்துக்கு ச்ரேயஸ்ஸாதநத்வம் அலௌகிகமாதலால் அதற்கு

தாத்ரூப்யேண விதேயத்வமுண்டென்று சொல்லுவது சரியல்ல;—சிப்பியில் வெள்ளி முதலிய ப்ரமத்திற்கு நிவர்த்தகமான ஜ்ஞாநத்தைப்போல, பந்தநிவர்த்தகஜ்ஞாநத்துக்கு த்ருஷ்டாந்தத்வம் ஒப்புக்கொள்ளுவதால்.

இதனால் விதிக்கு வையர்த்யம் ஸம்பவிக்கிறது. அதனால் அடிக்கடி ஆவ்ருத்திக்கப்பட்ட ஸாக்ஷாத்காரபக்திஸ்வரூபப்ரதிபாதகங்களும், உயிருள்ளவரையில் அனுஷ்டிக்கத்தக்க அக்நிஹோத்ரம் முதலியவைகளை நிரூபிக்கிறவைகளும், 'யாவந்நவிமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே.'

(எவ்வளவு வரையில் ப்ராரப்தகர்மசேஷமான சரீரத்தால் விடப்படுகிறேனில்லையோ அவ்வளவு காலம் வரையில்தான் விளம்பம். பிறகு ப்ரஹ்மத்தை அணுகி ஸாயுஜ்யத்தை அடையப்போகிறேன்) என்று சரீராவஸாநத்தில் வரப்போகிற முக்தியைச்சொல்லுகின்றவைகளும் நாடீவிசேஷங்களால் ஜீவனுடைய நிஷ்க்ரமணத்தைச்சொல்லுகிற மார்கப்ரதிபாதகங்களுமான அநேக ச்ருதிகள் ப்ரயோஜனமற்றவைகளாக ஆகவேண்டியதாகும் என்று.

இவ்வண்ணம் அநேக ச்ருதிவிரோதத்தைக் காட்டுவதற்காக தஸ்யவிதாநமந்தரேணுபி—என்று கூறப்பட்டது. பிறகு ப்ரத்யக்ஷவிரோதத்தைக்காட்டுகிறார்—'தாவந்மாத்ரேண' என்பதால். அவ்வளவு அம்சமானது அதைவிட அதிகத்திலும் இருக்கிறபடியால் அதை வ்யாவர்த்திப்பதற்காக 'தாவந் மாத்ரேண' என்று உரைக்கப்பட்டது. அநேக சாஸ்த்ரவிரோதரூபமாகவும், ப்ரத்யக்ஷவிரோதரூபமாகவுமிருக்கிற இந்த இரண்டு தூஷணங்களையும் சொல்லானின்ற பகவானை ஆபஸ்தம்பராலும் வாக்யார்த்த ஜ்ஞாநமாத்ரம் மோக்ஷஸாதனமென்பது மறுக்கப்பட்டது. எவ்வாறு என்றால், "புத்தே க்ஷேமப்ராபணம் தச்சாஸ்த்ரைர்விப்ரதிஷித்தம், புத்தேசத் க்ஷேமப்ராபணம் இஹைஹவ ந துக்கமுபலபேத, ஏதேந பரம் வ்யாக்யாதம்" (வாக்யார்த்தஜ்ஞாநம் வந்தவுடன் முக்தியை அடைதலென்பது சாஸ்த்ரவிருத்தம். வாக்யார்த்தஜ்ஞாநமாத்ரத்தினால் ஜீவந்முக்தி வருமானால் இங்கேயே துக்கத்தை அறியாமலிருக்கவேண்டியதாக வரும். இதனால் மற்றதும் வ்யாக்யானிக்கப்பட்டது.) என்று. "சாஸ்த்ரை:" என்கிற பஹுவசனத்தினால் முன் உதாஹரிக்கப்பட்ட அநேக ச்ருதிகளின் விரோதம் கருதப்பட்டது.

விப்ரதிஷேதமாவது அதிக பலமுள்ளதினால் நிராகரிக்கப்படுதல்; ப்ரகரண ஸமம் போல துல்யபலமுள்ளதினால் நிராகரணமல்ல. பஹுசாஸ்த்ரவிரோதம் ப்ரபலதரம். 'பூயஸாம் ஸ்யாத் பலீயஸ்த்வம்' (அதிக வசனங்களுக்கு ஸ்வல்பவசநத்தைவிட பலாதிக்யம் உண்டாகலாம், என்ற ந்யாத்தாலென்கிற அபிப்ராயத்தால் விப்ரதிஷித்தமென்று உரைக்கப்பட்டது.

இந்த தூஷணத்திற்குப் பிறர்களால் இரண்டு விதமாக எந்த மறுமொழி உரைக்கப்பட்டதோ அதை அநுவதித்து தூஷிக்கிறார் நச வாச்யம்—என்று. வாக்யம் ஜ்ஞாநோத்பத்தியை இப்பொழுது உண்டுபண்ணுகிறதில்லை. என்று ஒரு நிர்வாஹம் அதைக் கூறுகிறார் பேதேதி. இப்பொழுது ஜ்ஞாநோத்பத்தி காணப்படுகிறதென்றால் அதன் பரிஹாரத்தின் பொருட்டு சொல்லுகிறார் அவித்யாநிவர்த்தகம்—என்று. பிறகும் வாக்யத்தினாலேயே அவித்யாநிவர்த்தகமான விசதஜ்ஞாநோத்பத்தியுண்டாகுமேயானால் இப்பொழுதே உண்டுபண்ணட்டும் எனில் கூறுகிறார் பேதவாஸநாயாமிதி. ப்ரதிபந்தகாபாவங்கூடகாரணகலாபத்தில் உள்ளடங்கினது. ஆகையால், ஸாமக்ரியின் குறைவினால் ஜ்ஞாநமுண்டாகவில்லை. த்யாநாதிவிதிகள் ப்ரதிபந்தகநிராஸத்துக்கு ஸாதகங்களென்று கருத்து.

இதனால் சாஸ்த்ரப்ரத்யக்ஷவிரோதங்கள் இரண்டும் பரிஹரிக்கப்பட்டவைகளாக ஆகின்றன. ஜ்ஞாநாதிகர்களாக ச்ருதிஸ்ம்ருதிப்ரஸித்தர்களான ஸநகாதிகளுக்குங்கூட ஞாநோத்பத்தி உபபந்நமாகாதென்கிற சங்கையை நீக்குவதற்காக வேறு நிர்வாஹத்தைக் கூறுகிறார் ஜாதேபி—என்று. அவித்யை ஒன்றானதாலும், ப்ரபஞ்சப்ரதிபாஸமானது அத்விதீயமான ப்ரஹ்மத்துக்கு ஸ்வப்நரூபமாக இருப்பதாலும் ஸர்வஸ்ய என்று—கூறப்பட்டது. 'ந தோஷாய' அநிவர்த்தகத்வமானது தோஷத்தின்பொருட்டு ஆகிறதில்லை. ஜ்ஞாநோதயமுண்டாகியும் ப்ரமநிவ்ருத்தி உண்டாகாமலிருப்பதில் த்ருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார் சந்த்ரைகத்வம்—என்று. பேதஜ்ஞாநம் நிவ்ருத்தியாமலிருந்தால் பந்தகமாக ஆகட்டுமென்கிற வினவுக்கு விடை அறிவிக்கிறார் அநிவ்ருத்தமபி என்று. சிந்நமூலத்வேந—அவித்யை என்கிற மூலம் வெட்டப்பட்டு போனபடியால். கார்யகரமாக ஆகிறதில்லை—எவ்வாறு, எரிக்கப்பட்ட வஸ்த்ரமானது முந்தின ஸந்நிவேசத்தோடு அறியப்படாணின்றிருந்தபோதிலும், உடுத்துதல் முதலிய கார்யங்களுக்கு யோக்யமல்லாததாக க்ரமமாக விநாசத்தை அடையுமோ,—எவ்வாறு குயவனால் சுற்றி விடப்பட்ட சக்ரமானது சுற்றும்படி செய்விக்கிறவனுடைய செய்கை ஓய்ந்துபோனாலுங்கூட முந்தின வேகத்துக்கு உடன்பட்டபடியால் கொஞ்சகாலம் தானாகவே சுழன்று க்ரமமாக ஓய்வடைகிறதோ. அவ்வாறு என்று கருத்து.

இங்கு இதி சப்தத்திற்கு ந ச வாச்யம் என்பதோடு அந்வயம்.

பாஷ்யம்:—

[illegible]

வாக்யார்த்தஜ்ஞாநாதந்யதேவ த்யாநோபாஸநாதிஶப்தவாச்யம் ஜ்ஞாநம் வேதாந்தவாக்யைர்விதித்ஸிதம் ||

ந்யாநுக்ருஹீதவாக்யமாகிற ஸாமக்ரீ இருக்கும்பொழுது ஜ்ஞானமுண்டாவதில்லை என்று சொல்வது பொருந்தாது. விபரீத வாஸனையிருக்கும்பொழுதே ஆப்தர்களுடைய உபதேசம், அனுமானம், இவை முதலியவைகளால் பேதவாஸனைகளுக்கு பாதகமாகிற ஜ்ஞானத்தின் உத்பத்தி காணப்படுவதால் பொருந்தாது. வாக்யார்த்த ஜ்ஞாநமுண்டானபோதிலும் அநாதியாயுள்ள அல்பபேத வாஸனையினால் பேதஜ்ஞாநத்துக்கு ஸாமக்ரியான வாஸனையும் மித்யாரூபமானது பற்றி ஜ்ஞாநோத்பத்தியினாலேயே நிவ்ருத்தி அடைந்துவிட்டபடியால் ஜஞாநம் இறந்தும்மித்யாரூபமாக அந்த வாஸனை போகாமலிருக்குமேயாகில் வேறு நிவ்ருத்தவஸ்து இல்லாமையால் ஒருபொழுதும் இந்த வாஸனைக்கு நிவ்ருத்தி உண்டாகாது. வாஸனையின் கார்யமான பேதஜ்ஞாநம், மூலமற்று இருந்தபோதிலும்கூட தொடர்ந்து வருகிறதென்பது பாலனுடைய பேச்சு.

சந்த்ரன் இரண்டு என்கிற ஜ்ஞாநம் முதலியவற்றிலோவென்றால், மித்யாஜ்ஞாநத்துக்கு ஹேதுவான பரமார்த்ததிமிரம் முதலிய தோஷமானது ஜ்ஞாநத்தால் பாதிக்கத்தகாமையால் இந்த ஸந்நிதியிலுங்கூட விநாசமடைகிறதில்லை. ஆகையால், மித்யாஜ்ஞாநத்தின் அநிவ்ருத்தி விருத்தமல்ல.

கயிறு முதலியவற்றில் ஸர்ப்பத்தின் பயம் முதலிய கார்யங்களோவென்றால் ப்ரபலப்ரமாணத்தால் பாதிக்கப்பட்டிருப்பதால் நிவர்த்தி அடைகிறது.

மேலும், பேதவாஸனையின் நிராகரணவாயிலாக ஜ்ஞாநோத்பத்தியை ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கு ஒருபொழுதும் ஜ்ஞாநோத்பத்தி ஸித்தியாது.

பேதவாஸனை அநாதிகாலமாக வ்ருத்தி அடையும்படி செய்யப்பட்டு அபரிமிதமாக இருப்பதாலும், அதற்குவிரோதியான பாவனை அல்பமாக இருப்பதாலும் இதனால் அதை நிரஸிப்பதென்பது பொருந்தாது. ஆகையால் வாக்யார்த்த ஜ்ஞாநத்தைக்காட்டிலும் வேறாகவே இருக்கிற த்யானம், உபாஸநம் முதலிய சப்தங்களால் சொல்லத்தக்க ஜ்ஞாநமானது வேதாந்தவாக்யங்களால் விதிக்க இச்சிக்கப்பட்டிருககிறது.

ச்ருதப்ரகாசிகை:—

முதலில் ஜ்ஞாநோத்பத்தியை தூஷிக்கிறார் ஸத்யாம் என்று. ந்யாயத்தினுலுபகரிக்கப் பட்ட வாக்யமே ஸாமக்ரீ, பேதவாஸனையானது ப்ரதிபந்தமாக இருக்கிறது—என்றால் சொல்லுகிறார் 'ஸத்யாமபி' என்று. நிவர்த்திக்கத்தகுந்த வாஸனை நிவர்த்தகத்தின் உத்பத்திக்கு ப்ரதிபந்தமாகாதென்று பொருள். ஆதிசப்தத்தால் இந்த்ரியம் க்ரஹிக்கப்படுகிறது. எவ்வாறு, நெடுங்காலமாக இருளடைந்த குகையில் தீபமானது ப்ரகாசமுண்டாகாமல் இராதோ, அந்த தீபமானது ஏற்றப்பட்டவுடன் இருள் எவ்வாறு நாசமடைகிறதோ, எவ்வாறு ஒரு இடத்தில் ஸர்ப்பமென்கிற வாக்யத்தினுல் மனிதன் நெடுங்காலம் ப்ரமமுள்ளவனுக இருந்தபோதும், அங்கு ஸர்ப்பமில்லையென்று ஆப்தோபதேசத்தால் அறிகிறானே,—எவ்வாறு காடு எரிக்கப்படவில்லை என்கிற வசநத்தைக்கேட்டு நெடுங்காலம் ப்ரமமுள்ளவனுக்கு பிறகு அங்கு சென்று கணல் முதலிய அடையாளங்களைக் காண்பதினுல் காடு தீயினுல் எரிக்கப்பட்டதென்கிற ஜ்ஞாநம் உண்டாகிறதோ,—எவ்வாறு நெடு நேரமாக ஸர்ப்பமென்று நினைக்கப்பட்டிருந்த வஸ்துவில் ஸமீபத்தில் சென்றவுடன் இந்த்ரியவ்யாபாரத்தால் கயிறு என்கிற ஜ்ஞாநம் உடனே உண்டாகிறதோ—அவ்வாறு என்கிற அபிப்ராயத்தால், 'ஆப்தோபதேசலிங்காதிபிர்பாதகஜ்ஞாநோத்பத்திதர்சநாத்' என்று சொல்லப்பட்டது. வேதாந்தவாக்யமன்றோ தார்ஷ்டாந்திகம். அதனுல் ஆப்தோபதேசம் முதலில் எடுக்கப்பட்டது.

பிறகு இரண்டாவது நிர்வாஹத்தை அநுவதித்து நிரஸிக்கிறார் "ஸத்யபி" என்று. மாத்ரயா—அல்பமென்று அர்த்தம். பவதா—ப்ரஹ்மத்தைத்தவிர்த்த எல்லா வஸ்துக்களுக்கும் மித்யாத்வத்தைச் சொல்லுகிற உன்னுல் என்று கருத்து.

பவதா என்கிற பதத்தினுல் ஸூசிக்கப்பட்ட அர்த்தத்தை விவரிக்கிறார் 'பேதேதி.' வாஸனையுங்கூட மித்யாபூதமாதலால் அதற்கும் ஜ்ஞாநத்தினுல் நிவர்த்தித்தல், அவச்யம் ஆச்ரயிக்கத்தக்கதென்று கருத்து. ஜ்ஞாநமுண்டாகியுங்கூட வாஸனையானது நிவ்ருத்தி அடைவதில்லை, என்று சொல்லப்படுகிறதா?—அல்லது, அது நிவ்ருத்தித்தபோதிலும் காரணமில்லாமலே பேததர்சனமுண்டாகிறதா?—என்ற இரண்டு சங்கைகளை மனதில் வைத்துக்கொண்டு முந்தினதைப்பரிஹரிக்கிறா.

'ஜ்ஞாநோத்பத்தாவபி' ப்ரஹ்மத்தைத்தவிர்த்து மற்றதெல்லாம் மித்யையானபடியால் வாஸனையும் ஜ்ஞாநத்தினுலேயே நிவர்த்திக்கத்தக்கது. அப்படி இல்லாவிடில், நிவர்த்தகாந்தரமும் ஜ்ஞாநமாதலால் அது இதை நிவ்ருத்தியடையச் செய்யாதென்று பொருள். தானுகவே வாஸனை நசிக்கிறதென்றாலோ அது யுக்தமன்று; "ஸ்வயமேவ" என்கிற சப்தத்தால் பாதகஜ்ஞாநாபேக்ஷையின் இன்மை விவக்ஷிக்கப்பட்டிருக்குமாகில், அழிகின்ற வாஸனைக்குங்கூட ஸத்யத்வம் ப்ரஸங்கிக்கும். ஸ்வயமேவ நச்யதி—என்பதினுல் தன்னுலேயே தன்னை நாசப்படுத்திக்கொள்ளுதல் விவக்ஷிக்கப்பட்டிருக்குமேயாகில் வ்யாகாதம். பலத்துக்கு உபாந்த்யமான காரணத்தின் நாசம் முதலியதால் நசிக்கப்படுந்தன்மை இருந்தபோதிலும்கூட ஸத்யத்வப்ரஸங்கம் அவர்ஜநீயமே,—கர்மசப்தம் முதலியவைகளில், வைசேஷிகர்களால் அப்படியே வர்ணிக்கப்பட்டிருப்பதுபற்றி அவைகளுக்கு பாரமார்த்யம் காணப்படுவதால். மேலும், ஸ்வப்நாவஸ்தையில் காணப்படுகிற வஸ்துக்களின் உத்பத்தி முதலியதுபோல, வாஸனை மித்யையாக ஆகும்போது அதன் உத்பத்தி ஸ்திதிகளும் மித்யையாக ஆவதால், அதன் விநாசமும் மித்யாபூதம்; ஆகையால், விநாசவிஷய ப்ரமையானது மீண்டும் இருக்கிறபடியால் சேஷமில்லாமல் ப்ரமநிவ்ருத்தியானது உண்டாகாது

பிறகு இரண்டாவது ஸந்தேஹத்தைப் பரிஹரிக்கிறார் 'வாஸநா' என்று. 'நிந்நமூலம்' அறுக்கப்பட்ட வாஸனையாகிற மூலம். "பாலிசபாஷிதம்" காரணமின்றி கார்யம் உண்டாக வேண்டியதாக ஏற்படுவதால் என்று பொருள்.

பேதஜ்ஞாநம் காரணமில்லாமலே உண்டாகுமேயானால், அப்பொழுது மூக்தியும் ஜ்ஞாநத்தை அபேக்ஷிக்காமலே உண்டாகலாம்,—ச்ரவணம் முதலியதில்லாமலே வாக்யார்த்தஜ்ஞாநமுண்டாகலாம்,—அவித்யையில்லாமலே ஜகத்ப்ரமமும் உண்டாகலாம்,—அதிஷ்டாநமில்லாமலே அவித்யையும் கார்யகாரியாகலாம்—என்று கருத்து. அங்ஙனமாகில், பாதகஜ்ஞாநமிருக்கும்பொழுதே யாது காரணத்தால் சந்த்ரத்வித்வத்திற்கு நிவ்ருத்தி வருகிறதில்லை?—என்கிற வினவுக்கு விடை கூறுகிறார் த்விசந்த்ர:—என்று. துசப்தமானது விவக்ஷிதமான அர்த்தத்திற்கு வைஷம்யத்தை உணர்த்துகிறது. பாதகஸந்நிதாவபி—பாதகஜ்ஞாநத்தின் ஸந்நிதியில் கூட திமிரம், காசம், காமரம்—ஆகிய தோஷங்கள் பரமார்த்தமாதலால் ஜ்ஞாநத்தால் பாதிக்கதகாததாக ஆகின்றன என்று கருத்து

அவைகள் பரமார்த்தங்களென்று வ்யவஹாரத்திற்காவது பிறரால் ஒப்புக்கொள்ளத்தக்கவைகள். இல்லையேல். ஆப்தோபதேசத்திற்கு அடுத்த க்ஷணத்தில கயிற்றில் ஸர்ப்ப வ்யவகாரத்திற்கு நாசம வருவதுபோல, தோஷம், மித்யை என்கிற வசநத்திற்கு அடுத்த க்ஷணத்தில் தோஷநிவ்ருத்தியினால் சந்த்ரத்வித்வ வ்யவகாரங்களுக்கு நாசம் வரவேண்டியதாக ஆகும். ஆகையால், தோஷமிருப்பதால் பேதப்ரமமாகிறது மூலமுள்ளது. இதனால் பாதகஸந்நிதியில் பாதிக்கத்தக்கதின் ஸத்தையும், காரணமில்லாமலே கார்யமுண்டாகுதல் என்கிற இரண்டு தூஷணங்களும் த்ருஷ்டாந்தத்தில் பரிகரிக்கப்பட்டதாக ஆகிறது. அந்ய மதத்திலோவென்றால், இரண்டு தூஷணங்களும் இருக்கவே இருக்கிறது. அப்படியானால், ஆப்தோபதேசம் முதலியவற்றுக்கு வையர்த்யம் வருமென்றால், சொல்லுகிறார்—ப்ரபல என்று. ரஜ்ஜுவில் பாம்புப்ரமமுள்ள மனிதனை அபேக்ஷித்து பயம் முதலிய கார்யங்களின் நிவ்ருத்தியானது பலமாக உரைக்கப்பட்டது. ஆதி சப்தத்தால் ஓடுதல் முதலியது க்ரஹிக்கப்படுகிறது. இரண்டு சந்த்ரன் என்கிற ஜ்ஞாநத்திலும் தன்னுடைய இந்திரியங்கள் தோஷமுள்ளனவைகளல்ல என்கிற புத்தி நிவ்ருத்தியும், ஔஷதம் முதலியவற்றில் ப்ரவ்ருத்தியும் பலம. ஐந்த்ரஜாலிகப்ரமாதிகளில் ப்ரமத்துக்கு ஹேது ப்ரபலமாக இருப்பதால், உள்ளபடியே ப்ரமமாக இருந்தபோதிலும் அஸத்யவிஷயத்வ நிச்சயம் ப்ரதிபந்தமாக ஆகுமென்று அதை வ்யாவர்த்திப்பதற்காக ப்ரபலப்ரமாண சப்தம். 'நிவர்த்தகே' தோற்றமிருந்தபோதிலும் விஷயம் ஸத்யம் என்கிற நிச்சயப்படியாக ஆப்தோபதேசம் முதலியது பயம் முதலியவற்றின் நிவ்ருத்திக்கு ஹேதுவென்று பொருள். அல்லது, உள்ளபடி வஸ்துஸ்வரூபத்தை நேராகக் காண்பதற்கு உரிய ப்ரவ்ருத்தியின் வாயிலால் பயம் முதலியதின் நிவ்ருத்திக்கு காரணமென்று பொருள். துசப்தம் சங்கையை விலக்குகிறது.

ஜ்ஞாநத்தின் அநுத்பத்திபக்ஷமானது அநேகர்களுக்கு அபிமதமாக இருப்பதால் ஸிம்ஹாவலோகநத்தினால் அதை தூஷிக்கிறார்—அபிச என்று. இது ஸர்ப்பமல்ல கயிறு, என்பது போல் த்ருஷ்ட த்வாரத்தாலன்றோ பேதநிராகரணம். அத்ருஷ்ட த்வாரமாக பேதநிராகரணம் ஏற்படுமேயானால் பேதத்துக்கு ஸத்யத்வம் ப்ரஸங்கிக்கும். ஆகையால், அதிகமான பேதவாஸனைக்கு அல்பமான அத்வைத வாஸனையினால் நிராஸம் உபபந்நமாகாதென்று பொருள்.—அத்ருஷ்டத்வாரமாக நிவர்த்யத்வும் சொல்லப்படுமேயாகில் நிவர்த்திக்கத்தக்கதற்கு ஸத்யத்வம் அநிஷ்டமல்ல; த்யா

னத்திஞல் நிவர்த்திக்கத்தக்க ஸர்ப்பத்துக்குப்போல, வ்யவஹார தசையில் வாஸனைக்கு ஸத்யத்வத்தை ஒப்புக்கொள்ளுவதால் ஜ்ஞாநம் உண்டாகிவிட்டதேயாகில் அந்த பேத வாஸனையின் உத்பத்தி, ஸ்திதி, விநாசங்கள் — பாதிக்கப்பட்டவைகளாக ஆகும்— எனில், இவ்வண்ணமல்ல. த்யாநத்தால் நிவ்ருத்திக்கத்தக்க ஸர்ப்பத்திற்கு அநித்யத்வமே. ஒருபொழுதும் பாத்யத்வம் ஸித்திக்கிறதில்லை. அப்படிப்போலவே, அத்ருஷ்டத்திஞல் நிவர்த்திக்கத்தக்க வாஸனைக்கும் வாஸ்தவமான ஸத்யத்வம் ப்ரஸங்கிக்கும். ஐக்ய பாவநாரூபமான நிதித்யாஸநம் ப்ரதிபந்தநிவர்த்தகமாகுமேயாகில், கூறப்பட்டுள்ள தோஷம் வரும். அதுவோ ப்ரதிபந்தநிவ்ருத்தியின்பொருட்டு ஆகாது. பின்னையோவென்ருல், வாக்யார்த்தஜ்ஞாநத்தின் உதயத்துக்கு ஸஹகாரி, என்று சொல்லில், இப்படியல்ல. ஸ்ம்ருதிரூபமான நிதித்யாஸனமானது அனுபவஸாபேக்ஷமாக இருப்பதால் அதற்கு வாக்யார்த்தஜ்ஞாநத்தை உண்டுபண்ணுவதில் ஸஹகாரித்வம் பொருந்தாது—என்ருலும், பரோக்ஷாநுபவத்திற்கு த்யாநம் அநுபகாரமே. ஆகிலும், நிதித்யாஸநத்திஞல் உதவி புரியப்பட்ட வாக்யமானது அபரோக்ஷபுத்திக்கு காரணமாக ஆகலாம்—என்ருல், இவ்வண்ணமல்ல. நிதித்யாஸநத்திஞல் ஸஹகரிக்கப்பட்டிருந்தபோதிலும், சாப்தமாக இருப்பதிஞலேயே அபரோக்ஷஜ்ஞாநத்திற்கு காரணமாகாது, ஜ்யோதிஷ்டோமவாக்யம்போல. இவ்வண்ணமாக சாஸ்த்ரப்ரத்யக்ஷங்களுக்கு விரோதம் வருவதாலும், அவைகளுக்கு அவிரோத நிர்வாஹம் உபபந்நமாகாமையிஞலும், வாக்யார்த்தஜ்ஞாநமாத்ரத்திற்கு நிவர்த்தகத்வம் ஸம்பவியாமையாலும், வேறு வழி இல்லாமையால் வாக்யார்த்தஜ்ஞாநத்தைக்காட்டிலும் வேருகவே இருக்கிற முக்திஉபாயஜ்ஞாநம்விதிக்கப்பட்டிருக்கிறதென்று கூறுகிருர் 'அத:' என்று.

𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍:—

𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃,—'𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤' '𑌅𑌨𑍁𑌵𑌿𑌦𑍍𑌯 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿' '𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌥' '𑌨𑌿𑌚𑌾𑌯𑍍𑌯 𑌤𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍁𑌖𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇' '𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵 𑌲𑍋𑌕𑌮𑍁𑌪𑌾𑌸𑍀𑌤' '𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾 𑌅𑌰𑍇! 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃, 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑍋 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑍋, 𑌨𑌿𑌦𑌿𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌃, 𑌸𑍋𑌽𑌨𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃 𑌸 𑌵𑌿𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌃' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 ।

𑌅𑌤𑍍𑌰 𑌨𑌿𑌦𑌿𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌤𑍍 '𑌅𑌨𑍁𑌵𑌿𑌦𑍍𑌯 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿, 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌧𑍍𑌯𑌾𑌨𑍋𑌪𑌕𑌾𑌰𑌕𑌤𑍍𑌵𑌾𑌦𑌨𑍁𑌵𑌿𑌦𑍍𑌯 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯𑍇𑌤𑍍𑌯𑌨𑍂𑌦𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤, 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑍀𑌤𑌿 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌚𑌾𑌨𑍁𑌵𑌾𑌦𑌃; 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌧𑍀𑌤𑌵𑍇𑌦𑌃 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌵𑌦𑌰𑍍𑌥𑌾𑌵𑌬𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌾𑌯 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑌵𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌶𑍍𑌰𑌵𑌣𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌮𑌨𑌨𑌸𑍍𑌯 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌚𑌾𑌨𑍁𑌵𑌾𑌦𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍇𑌵 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 । 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 𑌚—'𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌸𑌕𑍃𑌦𑍁𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍' (𑌬𑍍𑌰. 𑌸𑍂, ௪. ௧. ௧.) 𑌇𑌤𑌿 ।

ததிதமபவர்கோபாயதயா விதித்ஸிதம் வேதநமுபாஸநமித்யவகம்யதே; வித்யுபாஸ்த்யோர்வ்யதிகரேணாரம்போபஸம்ஹாரதர்ஶநாத் | 'மநோ ப்ரஹ்மேத்யுபாஸீத' இத்யத்ர 'பாதி ச தபதி ச கீர்த்யா யஶஸா ப்ரஹ்மவர்சஸேந ய ஏவம் வேத' 'ந ஸ வேத அக்ருத்ஸ்நோ ஹ்யேஷ:, ஆத்மேத்யேவோபாஸீத' 'யஸ்தத்வேத யத்ஸ வேத ஸ மயைதது'க்த:' இத்யத்ர 'அநு ம ஏதாம் பகவோ தேவதாம் ஶாதி யாம் தேவதாமுபாஸ்ஸே' இதி ||

ச்ருதிகளின் தாத்பர்யமும் அவ்வண்ணமே. "அறிந்து உபாஸனை செய்யக்கடவன்" அறிந்து, ஓம் என்று ஆத்மாவை த்யானி "அவனை ஸாக்ஷாத்கரித்து ம்ருத்யுவின் வாயிலிருந்து விடுபடுகிறான்." ஆத்மாவையே லோகம் உபாஸிக்கடவது. அடே! ஆத்மாவானது நிச்சயமாக காணத்தக்கது, ச்ருதிவசனங்களால் கேட்கத்தக்கது, மனனம் செய்யத்தக்கது, அந்த ஆத்மா தேடத்தக்கது, அது அறிய இச்சிக்கத்தக்கது—இவைமுதலிவைகள்.

இங்கு "நிதித்யாஸிதவ்ய:" என்ற சப்தம் முதலியதோடு ஏகார்த்தமாக இருப்பதால் "அநுவித்ய விஜாநாதி விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத" இவை முதலிய வாக்யங்களால் வாக்யார்த்தஜ்ஞானத்திற்கு த்யாநோபகாரகத்வமேற்படுவதால் "அநுவித்ய விஜ்ஞாய" என்று அநுவதித்து "ப்ரஜ்ஞாம் குர்வீத விஜாநாதி" என்று த்யானம் விதிக்கப்படுகிறது. ச்ரோதவ்ய: என்பதும் அநுவாதம் வேதாத்யயனம் அர்த்தப்ரதானமானதால் வேதாத்யயனம் செய்த புருஷன் ப்ரயோஜனமுள்ள அர்த்தங்களைத்தெரிவிக்கிற சப்தஸ்வபாவத்தைக் கண்டு அதை நிச்சயிப்பதற்காக தானுகவே ச்ரவணத்தில் ப்ரவ்ருத்திக்கிறுன் என்று ச்ரவணம் ப்ராப்தம். மனனமும் ச்ருதமான அர்த்தங்கள் மனதில் நிலைபெறுவதற்காக வேண்டி இருப்பதால் மந்தவ்ய என்பதும் அநுவாதம்.

ஆகையால், த்யானம் மாத்ரம் விதிக்கப்படுகிறது. பின்பு "ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத்" (அடிக்கடி த்யானம் ஆவ்ருத்திக்கத்தக்கது. ச்ருதியினுலே அவ்வண்ணம் உபதேசிக்கப்பட்டிருப்பதால்) என்றும் ஸூத்ரகாரர் கூறப்போகிறுர். ஆகையால் மோக்ஷஸாதனமாக விதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்ட இந்த வேதனமானது உபாஸனமென்று அறியப்படுகிறது.

விதி உபாஸி இவ்விரண்டு பதங்களும் பர்யாயங்களாக ஒன்றோடொன்று கலந்து உபக்ரமவாக்யங்களிலும், உபஸம்ஹாரவாக்யங்களிலும் காணப்படுவதால். "மநோ ப்ரஹ்மேத்யுபாஸீத" (மனதை ப்ரஹ்மமென்று உபாஸிக்கக்கடவன்.) என்கிற இடத்திலும்,

"பாதி ச தபதி ச கீர்த்யா யசஸா ப்ரம்மவர்சஸேந ய ஏவம் வேத." "ந ஸவேத அக்ருத்ஸ்நோ ஹ்யேஷ ஆத்மேத்யேவோபாஸீத," "யஸ்தத்வேத யத்ஸ வேத ஸ மயைதது்க்த:" எவன் இவ்வண்ணம் அறிகிறானோ அவன் கீர்த்தியினாலும் யசஸ்ஸினாலும் ப்ரம்மவர்சஸத்தினாலும் ப்ரகாசிக்கிறான். சத்ருக்களைத்தன் சக்தியினால் வாட்டுகிறான். அவன் அறிகிறானில்லை, அவன் அபூர்ணனன்றோ. ஆத்மா என்றே உபாஸிக்கக்கடவன், எவன் அதை அறிவனோ, எதை அவர் அறிவரோ, அவரும் அதுவும், என்னால் கூறப்பட்டது என்கிற இடத்திலும் "அநு ம தாம் பகவோ தேவதாம் சாதி யாம் தேவதாமுபாஸ்ஸே" (ஹே! * பகவானே! எந்த தேவதையை உபாஸிக்கிறீரோ அப்படிப்பட்ட இந்த தேவதையை எனக்கு உபதேசிப்பீராக) என்றும்.

---

ச்ருதப்ரகாசிகை:—

பாரிசேஷ்யம் மாத்ரமல்ல. அதனால் அநுக்ரஹிக்கதக்க ச்ருதிகளும் இருக்கின்றன என்று கூறுகிறார் ததாச என்று. விஜ்ஞாய என்கிற பதம் முதலாக இரண்டு வாக்யங்களில் ஜ்ஞாநஸாமான்யபோதக சப்தமும், இரண்டு வாக்யங்களின் உபாதாநமும் உபஸர்கங்கள் வெவ்வேறாக இருந்தபோதிலும், விதிப்ரத்யத்தை ஈற்றில் உடைத்தாயிருப்பினும், அவ்யண்ணமில்லாதிருப்பினும்,அர்த்தபேதமில்லை என்பதைத் தெரிவிப்பதற்காக. த்யாயீத என்பது விசேஷசப்தம். நிசாய்ய என்று த்யானத்துக்கு ப்ரத்யக்ஷஸமாநாகாரத்வம் காட்டப்பட்டது. சாய்ரு தர்சனே என்று தாது. உபாஸீத என்பதினால் ஜ்ஞாநத்துக்கு உபாஸந சப்தவாச்யத்வம் ஸித்தித்தது. அந்வேஷ்டவ்ய: என்பதினால் மநநத்தை ப்ரதானமாகக் கொண்ட ச்ரவணம் கூறப்பட்டது. நிதித்யாஸிதவ்ய:, விஜிஜ்ஞாஸிதவ்ய:, என்று எடுத்ததினால் ஸந்நந்தமாக இருந்தபோதிலும் வாக்யமானது இஷ்யமாணஜ்ஞாநப்ரதானம் என்பது காண்பிக்கப்பட்டது. ஸாமாந்ய விசேஷ சப்தங்களாக இருப்பதினால் ஸந்நந்தங்களான

---

* பகவான்—ஆறு குணங்களுள்ளவன்.

"உத்பத்திஞ்ச விநாசஞ்ச பூதாநாமாகதிம் கதிம் |
வேத்தி வித்யாமவித்யாஞ்ச ஸ வாச்யோபகவாநிதி ; என்றும்
ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யசஸ: ச்ரிய:
ஜ்ஞாநவைராக்யயோச்சைவ ஷண்ணாம் பக இதீரணா

என்றும் புராண நிர்வசனம்—

இரண்டு பதங்களும் எடுக்கப்பட்டன. (இத்யேவமாத்யா) இதி சப்தமானது எடுக்கப்பட்டிருக்கிற ச்ருதிவாக்யத்தின் ஸ்வரூபமாத்ரப்ரதர்சகம். ஏவம சப்தமானது ஸம்ப்ரதாயத்தை ஈற்றிலுடைத்தாயிருத்தல், விதிப்ரத்யத்தை கடைசியில் கொண்டிருத்தல், அங்ஙனமில்லாமை, உபஸர்கங்களுடைய வேறுபாடு, இது முதலிய ப்ரகாரங்களைக்காட்டுகிறது. உதாஹரிக்கப்பட்ட வாக்யங்களில் ஜ்ஞாநஸாமான்யத்தை உணர்த்துகிற பதங்களுக்கு விசேஷாகாங்க்ஷை வருங்கால், வாக்யார்த்தஜ்ஞாநஸ்வரூபமான விசேஷம் பர்யவஸாநபூமியாக ஆகலாமென்ற சங்காநிவ்ருத்தியின் பொருட்டு சொல்லுகிறார் அத்ர என்று. அத்ர—எடுக்கப்பட்ட வாக்யங்களில் இத்யேவமாதிஷு: த்யானம் விதீயதே என்று அந்வயம்.

'நிதித்யாஸிதவ்ய இத்யாதிநா' ஆதி சப்தத்தால் ஸந்நிஹிதஜ்ஞாந விசேஷ வாசியான வாக்யாந்தரம் விவக்ஷிக்கப்பட்டது. † ஸர்வசாகாப்ரத்யயந்யாயத்தால் ஐகார்த்யமும்—அது சொல்லப்படாததும், ஆகாங்க்ஷிக்கப்பட்டுள்ளதுமான அர்த்தத்தின் ஸ்வீகாரத்தை பலமாகக்கொண்டதன்றோ. அந்த இடத்தில் "சாகோவாமந்த்ரவர்ணாத்" என்கிற ந்யாயத்தால் ஸாமாந்யவாசிசப்தங்களுக்கு விசேஷத்தில் பர்யவஸாநம். "அநுவித்ய விஜாநாதி, விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத" என்கிற இடத்தில் எந்த பதத்தினால் வாக்யார்த்தஜ்ஞாம் அநுவதிக்கப்படுகிறது—எதனால் த்யாநம் விதிக்கப்படுகிறது—என்று அபேக்ஷை வருங்கால் கூறுகிறார் 'அநுவித்ய விஜ்ஞாயேத்யநூத்ய' என்று. அநுவாதம் எதற்காகவென்றால் சொல்லுகிறார்—த்யாநோபகாரகத்வாத் என்று. 'ப்ரஜ்ஞாம் குர்வீத' விஜாநாதி, என்கிற வாக்யத்வயத்தின் உபாதாநத்திற்கு முன்கூறியதே பலம். இவ்வண்ணம் ஸ்ம்ருதிகளிலும் ஸாமான்யசப்தமானது விசேஷோபஸ்தாபகமிருக்குமேயாகில் அந்த விசேஷத்தில் பர்யவஸித்ததாய் காணப்பட்டிருக்கிறது. 'நிஷித்தபக்ஷணம், ஜைஹ்ம்யம் உத்கர்ஷேச வசோந்ருதம், ரஜஸ்வலாமுகாஸ்வாதஸுராபாநஸமாநி து'. (சாஸ்த்ரங்களால் விலக்கப்பட்டவைகளை சாப்பிடல், கௌடில்யம், சிறப்புள்ளவர்களிடத்தில் பொய் சொல்லுதல், உதக்யையினுடைய அதரபாநம் செய்தல் இவைகள் ஸுராபாத்தை குடிப்பதற்கு ஸமானங்கள்) என்கிற இடத்தில் நிஷித்தஸாமான்யத்தின் பக்ஷணஸாமாந்யம் பாதித்யத்திற்கு ஹேதுவென்று அறியப்பட்டிருக்கிறது. "சத்ராகம் விட்வராஹஞ்ச லசுநம் க்ராமகுக்குடம்,பலாண்டும் க்ருஞ்ஜநஞ்சைவ மத்யா ஜக்த்வா பதேத்விஜ:" (நாய்க்கொடையையும், மலத்தைத்தின்கிற பன்னியையும், வெங்காயத்தையும், ஊர்க்கோழியையும், உள்ளிப்பூண்டையும், ஒரு தலைப்பூண்டையும் புத்திபூர்வகமாக ப்ராஹ்மணன் சாப்பிடுவனேயாகில் பதிதனாவான்.) என்கிற இடத்தில் நிஷித்தத்துக்கு பக்ஷண விசேஷம் பாதித்ய ஹேதுவெனக்காணப்பட்டிருக்கிறது. இங்கு முந்தின க்ரந்தமானது பிந்தின விசேஷகரந்தத்தில் பர்யவஸிக்கிறது.

ஸாமாந்யசப்தம் விசேஷபர்யவஸாயி ஆகட்டும். இங்கேயோவென்றால் ஜ்ஞாநஸாமாந்யவாசியான சப்தமானது 'ச்ரோதவ்ய:' என்று ச்ரவணரூபமான ஜ்ஞாநவிசேஷத்தில் பர்யவஸிக்கட்டும் என்றால் கூறுகிறார்— "ச்ரோதவ்ய இதிச" என்று. சகாரம்

† ஸர்வசாகாப்ரத்யயந்யாயம்,—ஒரு விஷயத்தை பல வேதசாகைகளில் எடுத்து சொல்லியிருந்தால், எந்த சாகையில் அவசியம் வேண்டியதான எந்த பாகம் குறைவோ அதை மற்றொரு சாகையிலிருந்து எடுத்துக்கொள்ளுதல்

(இந்த சாகையில் இல்லாததை அந்த சாகையிலிருந்தும், அந்த சாகையிலில்லாததை இந்தசாகையிலிருந்து எடுத்துக்கொள்ளலாம்.)

சங்கையின் நிவ்ருத்தியிலாவது, ஸமுச்சயத்திலாவது இருக்கிறது. "விஜ்ஞாய அநுவித்ய" என்பது போல, இதுவும் அநுவாதமென்று கருத்து. அதை சுருக்கமாக உபபாதநம் பண்ணுகிறார்—'ஸ்வாத்யாயஸ்ய' என்று. ஆபாதப்ராதீதியினால் ச்ரவணத்துக்கு தானகவே ப்ராப்தி உண்டாகலாம், மநநத்திற்கு அவ்வித ஹேது இல்லாததால் அதில் பர்யவஸாநமுண்டாகவேண்டாமென்றால் சொல்லுகிறார்— 'ச்ரவணப்ரதிஷ்டார்த்தத்வாத்' என்று. சகாரம் முன்போல் என்றறிக. 'தஸ்மாத்யாநமேவ' வாக்யார்த்தஜ்ஞாநமல்ல என்று அர்த்தம். 'ச்ரோதவ்ய:' என்பது புஸ்தகத்தைப்பார்த்துப்படித்தல் முதலியதை வ்யாவ்ருத்தி செய்கிற விதியாக ஏன் ஆகக்கூடாது? என்றால், இவ்வண்ணமல்ல,—வேதாந்தவாக்யங்களுக்கும் புஸ்தகத்தைப்பார்த்தல் முதலியதின் வ்யுதாஸமானது அத்யயனவிதியினால் ஸித்தித்திருப்பதாலும், ப்ரஹ்மமீமாம்ஸையை எழுதல், படித்தல் முதலியது நிஷேதிக்கப்பட்டிராமையாலும், குருபஸதனத்தில் ச்ரவண சப்தத்திற்கு முக்யார்த்தத்வமில்லாமையாலும், அந்த உபஸத்தியானது இங்கே விதிக்கப்பட்டதாக இருந்தபோதிலும், 'குருமேவாபிகச்சேத்' என்கிற வாக்யாந்தரத்தால் ஸித்தித்திருப்பதாலும்.

ந்யாயத்துடன்கூடிய வாக்யமாத்ரத்தால் அறியத்தகாததும் கேவலோபதேசத்தால் அறியத்தக்கதுமான அர்த்தவிசேஷத்தின் ச்ரவணமானது ச்ரோதவ்ய: என்கிற பதத்தினால் விதேயமென்று சொல்வது கூடாது,—மநநத்துக்கு முந்தி இருக்கவேண்டியதாதலால், இந்த ச்ரவணமானது ந்யாயத்தினால் உபகரிக்கப்பட்ட வாக்யஜந்யஜ்ஞாநரூபம் என்று அறியப்படுவதாலும், சப்தஸ்வாரஸ்யத்தினாலும். மந்தவ்ய: என்பது § ஆலம்பநஸம்சீலநரூபமான மநநவிதியென்று சொல்லத்தக்கதல்ல,—ச்ரவண சப்தத்திற்கு ந்யாயோபேதமான வாக்யஜந்யஜ்ஞாநத்துக்குப்போல், மந்தவ்ய சப்தத்திற்கு அந்த ஜ்ஞாநத்தின் ப்ரதிஷ்டாபநத்தில் ப்ரஸித்தி ப்ராசுர்யத்தாலும், அதற்கு அபவாதமில்லாமையாலும், இரண்டுக்கும் அப்ராப்தமான அர்த்த த்வய விதாயித்வத்தை ஒத்துக்கொண்டால் வாக்யபேதம் ப்ரஸங்கிப்பதாலும், கத்யந்தரம் இருக்க விசிஷ்டவிதாநாச்ரயணம் அந்யாய்யமாதலாலும். விதியோவென்றால், பதங்களாலறியப்பட்ட அர்த்தங்களில் ஓரிடத்தில் உபகாக்ஷிணசக்தியுள்ளதாக லாகவத்தின் பொருட்டு அதைத்தவிர்த்த மற்றவைகளில் தானகவே அநுவாதத்தை அபேக்ஷித்து அடையும் தன்மையில்லாமையால், விசிஷ்டத்தில் தாத்பர்யத்தை அடைகிறது. இந்த இடத்திலோவென்றால், அநுவாதத்திற்கு ஸம்பவமிருப்பதால் விசிஷ்டவிஷயத்வகல்பநம் யுக்தமல்ல. ஆகையால், அநுவாதம். இதனால் ச்ரவண சப்தத்திற்கு யாதவமிச்ரனால் சொல்லப்பட்ட நிர்வாஹம் நிரஸிக்கப்பட்டது. இந்த இடத்தில் த்ரஷ்டவ்ய சப்தமானது, உபாயோபேயநிலைகளில் ஸாதாரணமாக இருப்பதால் மேலே நியாமகமாயும் வ்யக்தமான அர்த்தத்துடன் கூடியதுமான வாக்யாந்தரத்தோடுகூட வ்யாக்யானம் செய்யப்படப்போகிறது. நநு ஸாதாரணத்வமில்லை; த்ரஷ்டவ்ய: என்கிற தவ்யத்ப்ரத்யயத்தால் தர்சநத்திற்கு விதேயத்வம் அறியப்படுவதால், பலத்திற்கும் விதேயத்வம் கூடாததால், என்றால் கூறப்படுகிறது—நிதித்யாஸநத்தைப்போல், தர்சநத்திற்கும் விதாநம் ஒப்புக்கொள்ளப்பட்டால் வாக்யபேதம் ப்ரஸங்கிப்பதாலும், நிச்சிதாநுவாதச்ரவண மநந ஸாஹசர்யத்தாலும், விதித்வநிச்சயப்ரதிபந்தத்தால் உபாயத்திற்கு தர்சநரூபத்வவிஷயப்ரமாணம் காணப்படாமையாலும், விசிஷ்டவிதித்வாச்ரயணம் கூடாது. 'மநஸைதாந் காமாந் பச்யந் ரமதே ய ஏதே ப்ரஹ்மலோகே பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே' (மனதினால் இந்த காமங்களைப்பார்த்துக்கொண்டு ரமிக்கிறான்—எவன் ஸ்ரீவைகுண்

§ ஆலம்பநஸம்சீலனம்—அடிக்கடி பகவத்விக்ரஹஸ்வரூபத்தை சிந்தித்தல்.

காரணத்ரயத்தாலும் பரஹிம்ஸையினின்று விலகுதல். தாநம்—பேராசை இல்லாமை. அபித்யா—பிறருடைய வஸ்துவினிடத்தில் தன்னுடையதென்கிற புத்தி, அல்லது, நிஷ்பல சிந்தை. அன்றிக்கே, அந்யனால் செய்யப்பட்ட அபகாரத்தைச்சிந்தித்தல்—அதில்லாமல் அநபித்யை. 'ஸத்யே' என்கிற வாக்யத்திலிருக்கிற ஆதிசப்தத்தால் ஆர்ஜவாதிகளை ப்ரதிபாதிக்கிற வாக்யஸமூஹம் க்ரோடீகரிக்கப்பட்டது. (தேசே—இத்யாதி) அநவஸாதம் அநுத்தர்ஷம் இரண்டும் அவஸாதோத்தர்ஷ விபர்யயரூபமாக இருப்பதால் வாக்யகாரரால் அவஸாதோத்தர்ஷலக்ஷணம் மாத்ரம் கூறப்பட்டது. அதன் விபர்யயரூபமான நஞர்த்தமானது அர்த்தாத் ஸித்திக்கிறதென்று வாக்யகாரருடைய அபிப்ராயம். சோகவஸ்து—சோகநிமித்தமான வஸ்து. அதீதமான புத்ரமரணம் முதலியது. ஆதி சப்தத்தினால் வரப்போகிற பய நிமித்தம் விவக்ஷிக்கப்பட்டது. சோகம் ¶ அதீத விஷயமன்றோ பயமானது. † ஆகாமி விஷயம். அபாஸ்வரத்வமென்பது தைந்யசப்தவிவரணம். அபீஷ்டமான கார்யத்தில் ப்ரவ்ருத்திப்பதற்குத்திறமை இல்லாமை தைந்யமென்று சொல்லப்பட்டதாக ஆகிறது.

'பாஸ்வரத்வவிரோதி' என்றவது தைந்யவிசேஷணம். சசப்தம் பிந்நக்ரமமுள்ளது தஜ்ஜஞ்ச—தைந்யத்தாலுண்டான தைந்யமுமென்று அர்த்தம். பந்து ஜனங்களுடைய தைந்யத்தாலும் தைந்யமுண்டாகும். தேசகாலவைகுண்யம்—சோகநிமித்தமான வஸ்து இவைகளின் மரணம். இவைகளைக்காரணமாகக்கொண்ட மனத்தெளிவின்மையாவது மனத்தெளிவின் விரோதியாவது தைந்யம். தைந்யத்தினாலுண்டான தைந்யமும் மனதினுடைய அவஸாதம் என்று அர்த்தம்.

அல்லது, பிந்நவாக்யமாக யோசிக்கத்தக்கது. தேசகாலவைகுண்யசோகவஸ்த்வாத்யநுஸ்ம்ருதிஜநிதம் மநஸோஅபாஸ்வரத்வமவஸாத:'' எது சொல்லப்பட்டதாக ஆகிறதென்றால் சொல்லுகிறார்—'தஜ்ஜம் தைந்யம்' என்று. அந்த அபாஸ்வரத்வம் 'தஜ்ஜம்.' கூறப்பட்டுள்ள காரணத்துடன் கூடின தைந்யமென்று வ்யாக்யேயவ்யாக்யாநரூபமான வாக்யத்வயமென்று. 'தத்விபர்யய.' இதுமுதலானது பாஷ்யக்ரந்தம். பலஹீநே—மநோபலமில்லாதவனால். 'தத்விபர்யயஜா'—தேசகால ஸாத்குண்ய ப்ரியவஸ்து முதலியவற்றின் மரணத்தால் ''துஷ்டிருத்தர்ஷ:' என்று இவ்வளவு மட்டிலுமே தான் வாக்யம். ''தத்விபர்யய: அநுத்தர்ஷ:' என்பது அர்த்தஸித்தம். ''ஸ்வாத்யாய சௌசஸந்தோஷதபாம்ஸி நியதாத்மவாந்'' என்று அபேக்ஷிக்கப்பட்டிருக்கிற ஸந்தோஷம் எவ்வாறு இழக்கத்தக்கதாக ஆகலாமென்றால் சொல்லுகிறார்—'அதிஸந்தோஷச்ச விரோதீத்யர்த்த:' என்று அஸந்தோஷம் மாத்ரம் விரோதியல்ல. அதிஸந்தோஷமும் விரோதி என்பது சகாரத்தின் அர்த்தம்.

அந்யவிஷயங்களிலேயே எவ்வாறு ப்ரவ்ருத்தி உண்டாகுமோ அவ்வாறான ஸந்தோஷம் அதிஸந்தோஷம். அது விடத்தக்கதென்று ஆகிறது. 'நிர்வசநமபி' என்கிற இடத்திலிருக்கிற அபிசப்தமானது எல்லா நிர்வசநங்களுடைய ஸமுச்சயத்தில். இவ்வண்ணம் பதார்த்தங்கள் வ்யாக்யாநிக்கப்பட்டன. 'தல்லப்தி:' இது முதலிய வாக்யகாரக்ரந்தத்தினுடைய வாக்யார்த்தைக்கூறுகிறார் 'ஏவம்' என்று. இவ்வாறு நியமமுள்ளவனுக்கு ஆச்ரமவிஹிதகர்மாநுஷ்டாநத்தாலென்று தனித்து நிர்தேசமிருப்பதால் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திரூபமான கோடித்வயவிபாகம் காண்பிக்கப்பட்டது. இந்த இரண்டு பதங்களால் கேவல சமாதிகளும், கேவல கர்மாவும், வ்யாவ்ருத்திக்கப்பட்டது. சமாதிகளும், கர்மாவும், சேர்ந்து அங்கமென்று பொருள்.

¶ அதீதம்—சென்றது.
† ஆகாமி—வரப்போகிறது.

எது விவிதிஷாஸாதநமென்று உன்னால் கூறப்பட்டதோ அதினாலேயே வித்யாநிஷ்பத்தி என்பது ஸூத்ரகாராபிப்ராயம். 'இத்யுக்தம் பவதி'—என்று வாக்யார்த்தம் ஏற்படுகிறது என்று அர்த்தம். 'வித்யாஞ்சாவித்யாஞ்ச' என்கிற ச்ருதிக்கு சங்கரயாதவப்ரகாசர்களுக்கு அபிமதமான யோஜனையை நிரஸிப்பதற்காக அதை வ்யாக்யாநம் செய்யத்திருவுள்ளங் கொண்டு உபாதாநம் பண்ணுகிறார் 'ததாச'—என்று.

𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍:—

𑌏𑌵𑌂 𑌨𑌿𑌯𑌮𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑌵𑌿𑌹𑌿𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑍇𑌨𑍈𑌵 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 ।

𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌮𑍍—“𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌞𑍍𑌚𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌞𑍍𑌚 𑌯𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍇𑌦𑍋𑌭𑌯𑌂 𑌸𑌹 । 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌤𑍀𑌰𑍍𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇”(𑌈𑌶𑌾. ௧௧.) 𑌇𑌤𑌿 ।

𑌅𑌤𑍍𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌶𑌬𑍍𑌦𑌾𑌭𑌿𑌹𑌿𑌤𑌂 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 । 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾—𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 । 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌪𑍍𑌰𑌾𑌚𑍀𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮 । 𑌤𑍀𑌰𑍍𑌤𑍍𑌵𑌾 𑌅𑌪𑍋𑌹𑍍𑌯 । 𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 । 𑌅𑌮𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 । 𑌅𑌶𑍍𑌨𑍁𑌤𑍇-𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌤𑌰𑌣𑍋𑌪𑌾𑌯𑌤𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑌰𑌾𑌭𑌿𑌹𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 । 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 “𑌇𑌯𑌾𑌜 𑌸𑍋𑌪𑌿 𑌸𑍁𑌬𑌹𑍂𑌨𑍍 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌤𑌰𑍍𑌤𑍁𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 । (𑌵𑌿.𑌪𑍁. ௬.௬.௧௨.) 𑌇𑌤𑌿 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌰𑍂𑌪𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑌫𑌲𑌤𑌯𑍋𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 𑌪𑌾𑌪𑌶𑌬𑍍𑌦𑌾𑌭𑌿𑌧𑍇𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌸𑍍𑌯 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌭𑍂𑌤𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑍋𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 ॥

இவ்வண்ணம் நியமத்துடன் கூடியவனுக்கு, ஆச்ரமவிஹித கர்மாநுஷ்டானத்தினாலேயே வித்யையின் நிஷ்பத்தி என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்வாறே மற்றொரு ச்ருதியும்—'வித்யை அவித்யை இரண்டையும் எவன் அறிவனோ அவன் அந்த பரப்ரஹ்மத்தை அறிகிறான்—'

'கர்மாவினால் ம்ருத்யுவைக்கடந்து வித்யையினால் அம்ருதத்தை அடைகிறான் என்று. இந்த இடத்தில் அவித்யா சப்தத்தால் சொல்லப்பட்டிருப்பது வர்ணாச்ரமவிஹிதமான கர்மம். அவித்யையினால் கர்மாவினால். ம்ருத்யுவை ஜ்ஞானோத்பத்தி விரோதியானப்ராசீந

**கர்மாவை. தீர்த்வா-போக்கடித்து வித்யையினால்-ஜ்ஞானத்தினால் அம்ருதத்தை-ப்ரஹ்மத்தை அடைகிறனென்று பொருள். ம்ருத்யுவை-விநாசஞ் செய்வதற்கு உபாயமாக அறியப்பட்ட அவித்யையானது வித்யையைக்காட்டிலும் வேறான விஹிதகர்மாவே. ஜ்ஞானயோகி என்று ப்ரஸித்திபெற்ற ஜநகரும், ப்ரஹ்மவித்யையை அதிஷ்டானம் செய்து, அவித்யையினால் ம்ருத்யுவை தரணம் செய்வதற்காக அபரிமிதங்களான யஜ்ஞங்களை அநுஷ்டித்தார்" என்று கூறப்பட்டிருக்கிறது.**

**ஜ்ஞானவிரோதியான கர்மாவானது புண்யபாபரூபமாயுள்ளது. ப்ரஹ்மஜ்ஞானோத்பத்திக்கு விரோதியாய் அநிஷ்டபலன்களை விளைவிப்பதினால் இரண்டும் பாபசப்தத்தால் சொல்லப்படுகின்றன. இதற்கு ஜ்ஞானவிரோதித்வமானது ஜ்ஞானோத்பத்திக்கு ஹேதுவான சுத்தஸத்வத்திற்கு விரோதியான ரஜஸ்தமஸ்களுடைய வ்ருத்தியினடியாக**

ச்ருதப்ரகாசிகை :—

இதனால், கர்மா அபேக்ஷிதமென்கிற விஷயத்தில் ஸம்ப்ரதயமில்லாத ச்ருத்யந்தரம் காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. அப்படியே ச்ருத்யந்தரம் எது உங்களால் வேறு விதமாக வ்யாக்யாநம் செய்யப்பட்டதோ அதுவும், நம்மால் சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு அநுகுணமென்று ததாசப்தத்தையும், அந்தரசப்தத்தையும் ப்ரயோகித்தவருககுக்கருத்து.

ஸங்ரஹிதமாக இருப்பதால் யஜ்ஞாதி வாக்யவைலக்ஷண்யமும் அந்தரசப்தத்தால் அபிப்ராயப்பட்டிருக்கிறது. இந்த வாக்யத்தில் கர்மவாசிசப்தம் கேட்கப்படவில்லையே என்றால், கூறுகிறார் 'அத்ர' என்று. அத்ர இந்த ச்ருதிவாகயத்தில்; "ஆநாத்மந்யாத்மபுத்திர்யா" இது முதலியவைகளிலல்ல. வர்ணாச்ரமவிஹிதமான கர்மாவானது அவித்யாசப்தத்தால் சொல்லப்பட்டதாக இருக்கட்டும், அதனால் சொல்லப்பட்டதாக ஆகிறது ஏன் என்று சங்கை வர பதாந்தரங்களையும் (விவரித்துக்கொண்டு வாக்யார்த்தத்தைக்கூறுகிறார் 'அவித்யா' என்று.

அவித்யையினால்—கர்மாவினால். வித்யயா—ஜ்ஞானேந என்கிற இடத்திலும் கர்மஜ்ஞானசப்தங்களால்—"கஷாயபக்தி : கர்மாணி ஜ்ஞாநந்து பரமாகதி: கஷாயே கர்மபி: பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்தே" கர்மாக்கள் பாபத்திற்கு பரிபாகத்தை உண்டுபண்ணுகிற ஸ்வபாவமுள்ளவைகள். ஜ்ஞாநமோவென்றால், அடையத்தக்கவைகளுக்குள் சிறந்தது. பாபம் கர்மாக்களால் பகவம் செய்யப்பட்டால் பிறகு ஜ்ஞாநமுண்டாகிறது என்று தனக்கு உபஜீவ்யமான அர்த்தத்துடன் கூடின ஸ்ம்ருதியானது ஸ்மரிக்கும்படி செய்யபபட்டதாக ஆகிறது. கர்மாணி கஷாயபக்தி : கஷாயபக்திக்கு நிமித்தங்கள். கஷாயசப்தம் பாபவாசகம்,—'தர்மத்தினால் பாபத்தைப்போக்கடிக்கிறான்' என்கிற வசநத்தோடு ஏகார்த்தமாக இருப்பதால் கஷாயசப்தம் ராகம் முதலியவற்றை போதிக்கிறதாக இருந்தபோதிலும் பாப

நிர்ஹரணமடியாக ராகாதிபரிபாகஹேதுத்வம். 'ஜ்ஞாநம் பரமாகதி:' சிறந்த கத்யுபாயம். இரண்டிடத்திலும் காரணத்தில் கார்யோபசாரம். கஷாயம் பக்வமானால் பிறகு ஜ்ஞாநம் ஸம்பவிக்கிறது—ப்ரஸரிக்கிறதென்று அர்த்தம். இந்த இடத்தில் உபாயவிரோதி நிராஸ கத்வம கர்மாவுக்கு ஸ்பஷ்டம். விவிதிஷை ப்ரவ்ருத்திக்கிறது; மோக்ஷம் ப்ரவ்ருத்திக்கிற தென்று சொல்லப்படவில்லையன்றோ. ஜ்ஞாநம் ப்ரவ்ருத்திக்கிறதென்றே கூறப்பட்டிருக் கிறது. இந்த வாக்யத்தினுடைய அர்த்தத்தை உபஜீவித்து சொல்லுகிறார்—'ம்ருத்யும் ஜ்ஞா நோத்பத்தி விரோதி'—என்று ப்ரஹ்மப்ராப்தி விரோதியல்ல. விவிதிஷாவிரோதியல்ல என்று அர்த்தம். உபேயவிரோதியான கர்மாவுக்கு ஜ்ஞாநநிவர்த்யத்வம் அநேக ச்ருதிக ளாலும், ஸ்ம்ருதிகளாலும் ஸித்தம்.

எப்படி என்றால்—'தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி நாந்ய: பந்தா:, ஏவமேவம் விதி பாபம், கர்ம ந ச்லிஷ்யதே, க்ஷீயந்தேசாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே நிசாய் யதம் ம்ருத்யுமுகாத்ப்ரமுச்யதே, ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாபை:, ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேததா' என்று, இவ்வாறாக உபேயவிரோதிக்கு ஜ்ஞாந நிவர்த்யத்வம் ச்ருதியினால் அறியப்படுவதால் பரிசேஷத்தால் 'நாந்ய: பந்தா' என்று உபேய விரோதி நிராஸத்தில் உபாயாந்தரநிஷேதஸ்வாரஸ்யத்தாலும்,ஸமஸமுச்சய பக்ஷத் தில் கர்மாவும், உபாயமாதலால் வேதநத்தைத்தவிர்த்த மற்ற எல்லாவற்றையும் விஷயீகரிக் கிற அந்ய சப்தத்திற்கு ஸங்கோசம் ப்ரஸங்கிப்பதாலும், 'யஜ்ஞேந விவிதிஷந்தி' என்று கர்மாவுக்கு உபாயஹேதுத்வம் கண்டோக்தமாக இருப்பதாலும், 'கஷாயே கர்மபி: பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே' என்கிற ஸ்ம்ருதியின் ஆநுகுண்யத்தாலும், ஸாமாந்யமான ம்ருத்யுசப்தத்தால் நிரவிக்கத்தக்கது அறியப்பட்டிருந்தபோதிலும் உபாயவிரோதி கர்ம ரூப விசேஷத்தில் பர்யவஸிக்கிறது.

அப்படியே விவிதிஷாஸாதநத்வமானது முன்கூறப்பட்ட அந்யோந்யாச்ரயம் முத லியவற்றால் நிரவிக்கப்பட்டபடியால் பரிசேஷத்தால் 'விவிதிஷந்தி' என்கிற இடத்தி லும், ப்ரக்ருதிப்ரத்யயங்களின் அர்த்தங்களான வேதநம், அதின் இச்சை இவ்விரண்டுக் கும் விசேஷமின்றி யஜ்ஞாதிகள் ஸாதநங்களென்று அறியப்பட்டிருந்தபோதிலும்—'ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே" என்கிற ஸ்ம்ருதி முதலியவைகளுக்கு அநுகுணமாயிருப்பதாலும், நீதியை அறிந்தவர்களால் வேண்டப்பட்ட ப்ரக்ருத்யர்தத ப்ராதாந்யம் நிர்ணயிக்கப்பட் டிருப்பதாலும், ப்ரக்ருத்யர்த்தமான வேதநஸாதநத்வம் ஸித்தமாயிற்று. ஆகையால், உபா யத்துக்கு விரோதியான கர்மாவே இந்த இடத்தில ம்ருத்யு சப்தவாச்யமாயும், அவித்யா நிவர்த்யமாயுமிருக்கிறதென்று அபிப்ராயம். உபாஸநாரூபமாயும் ந்யாயரூபமாயுமிருக்கிற உபேயவிரோதிநிராஸகஜ்ஞாநமானது உத்தரபூர்வபாகம் இரண்டுகளுக்கும் நிராஸகமாக ஆகலாமென்று அதை வ்யாவ்ருத்திப்பதற்காக ப்ராசீநமென்று கூறப்பட்டது. உபாய விரோதிநிராஸககர்மாவானது ப்ராசீனபாபத்தையே தணிக்கிறது, 'உத்தராகத்தைத்தணிக் கிறதில்லை—என்று பொருள். 'தீர்த்வா' என்கிற பதத்தை வ்யாக்யாநிக்கிறார்—'அபோ ஹ்ய' என்று. 'ஏதம் ஸேதும் தீர்த்வா' என்கிற இடத்தைப்போல் ப்ராப்திவசநமல்ல என்று கருத்து. 'அவித்யயா தீர்த்வா' என்கிற இரண்டு பதங்களின் வ்யாக்யாநத்தினால், சங்கரமதயோஜனையானது நிரவிக்கப்பட்டது. அஜ்ஞாநத்தினால் ஸம்ஸாரத்தை அடைந் திருக்கிறவன் என்றல்லவோ அந்த மதயோஜனை. அதில் அவித்யையானது ஹேயமாக அறியத்தக்கது. அவித்யாசப்தமானது விவிதிஷாவிரோதி நிவர்த்தககர்மவாசி என்றுவது, சங்கராபிமதமான யோஜனையாக இருக்கலாம். அவித்யாசப்தம் உபேயவிரோதி நிவர்த்தக கர்மவாசி என்று யாதவப்ரகாசாபிமதமான யோஜனை.

'ஜ்ஞாநோத்பத்தி விரோதி' என்கிற ம்ருத்யுசப்தவ்யாக்யாநத்தினால் அவை இரண்டும் நிரஸிக்கப்பட்டன. இந்த அவித்யாசப்தமானது ஸம்ஸாரத்திற்கு ஹேதுவான அஜ்ஞாநமாக ஏன் ஆகக்கூடாது?—அதற்கு கர்மவாசித்வம் எவ்வாறு?—என்று கேட்கில் சொல்லுகிறார் 'ம்ருத்யுதரண'—என்று தரதிக்கு உத்தரணார்த்தகத்வம் ஸ்வாரஸ்யத்தால் ஸித்தம். ப்ராப்தியை அர்த்தமாகக்கொண்டால் ஸ்வாரஸ்யத்திற்கு பங்கமென்று அபிப்ராயம் அவித்யாசப்தம் கர்மவாசி என்பதைக்காண்பிக்கிறார். 'வித்யேதரத்' என்று. அதைக்காட்டிலும் வேறு என்கிற அர்த்தத்தில, நஞ் என்று கருத்து.

'விஹிதம் கர்மைவ' என்கிற ஏவகாரத்தால் அஜ்ஞாநமும், அவிஹிதகர்மாவும் வ்யாவ்ருத்திக்கப்படுகிறது. இந்த இடத்தில் 'வித்யாஞ்சாவித்யாஞ்ச' என்கிற 'ச' சப்தங்கள் அநுக்தஸமுச்சயபரங்கள்.

வித்யாநுபந்தியாயும், கர்மாநுபந்தியாயுமுள்ளது எது சொல்லப்படவில்லையோ, அது ஸமுச்சயிக்கத்தக்கது. வித்யாநுபந்தியாக இருப்பவை சமதமாதிகள். கர்மாநுபந்தியாக இருப்பவை பலாபிஸந்திகர்த்ருத்வாரமான ராஹித்யம் முதலியவை. அது இரண்டும் 'ச' சப்தத்தால் ஸமுச்சயிக்கத்தக்கது.

அன்றிக்கே, "தர்மே சார்த்தேச காமேச மோக்ஷேச பரதர்ஷப" என்கிற இடத்தில் 'ச' சப்தம் போல், இங்கும் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு விரோதிகள் எவைகளோ அவைகளின் ஸமுச்சயத்தைக்காட்டுகிறவைகளாக இரண்டு 'ச' சப்தங்கள் இருக்கலாம். வித்யாவிரோதியும், கர்மவிரோதியும், ஹாநத்திற்காக அறியத்தக்கவைகளாக இருப்பதால், சப்தங்களால் ஸமுச்சயிக்கப்பட்டவைகளாக ஆகின்றன.

வித்யா-ப்ரஹ்மவித்யா. அதற்கு விரோதி அதற்கு வேறான வஸ்துவை விஷயீகரிக்கிற ஜ்ஞாநம் அது விஷயமான ராகத்வேஷம் முதலியது. அவித்யா—வித்யாங்கமான கர்மம். அதற்கு விரோதியாக இருப்பது. ஸம்ஸாரத்துக்கு ஹேதுவாயும் பலாபிஸந்தி முதலியதோடு கூடியதாயுமிருக்கிற கர்மாவும், பாபமும், அது இரண்டும் விட்டுவிடுவதற்காக அறியத்தக்கதென்பது சப்தங்களுடைய அபிப்ராயம். அன்றிக்கே, ப்ரதிபதத்யோதகங்களாக 'ச' சப்தங்கள் இருக்கலாம். எப்படி என்றால், "தர்மே சார்த்தேச காமேச" என்று பதந்தோறும் எது அபிதேயமோ அதன் ஸமுச்சயத்யோதகத்வம், ப்ரதிபதத்யோதகத்வம்—அது இங்கேயுமிருக்கலாம். இந்த வாக்யத்தில் 'அவித்யா, தரண' சப்தங்களுக்கு கூறப்பட்ட அர்த்த பரத்வத்தை ஸ்தாபிப்பதற்காக உபப்ரும்ஹண வசநத்தைக் காட்டுகிறார்.—'யதோக்தம்' என்று 'ஜ்ஞாநவ்யபாச்ரய:' ஆகமத்தாலுண்டான ஜ்ஞாநமுள்ளவர். 'ப்ரஹ்ம வித்யாமதிஷ்டாய' உபாஸநாத்மகமான ஜ்ஞாநத்தை ஸாத்யமாக அவலம்பித்து என்று அர்த்தம்.

ஜ்ஞாந வித்யா சப்தங்கள் இரண்டுக்கும் அர்த்தபேதமறியவேண்டுமென்கிற இச்சையுண்டாகில் ஆகமத்தினாலும், விவேகம் முதலியவாற்றாலும் உண்டாகிற ஜ்ஞாநங்கள ப்ரக்ருதமாக இருப்பதால், தத்பரத்வாச்ரயணமன்றோ யுக்தம், 'தாத்து: ம்ருத்யும்' என்றதனால் அர்த்தத்தை உணர்த்துந்தன்மையுள்ளது என்கிற த்ருதாதுவானது ப்ராப்தி என்றும் சங்கை விலக்கப்பட்டது.

ஸம்ஸாரத்தை அடைவதற்காக, ப்ரஹ்மவித்தான கேசித்வஜராஜனால் யஜ்ஞம் முதலிய கர்மா அனுஷ்டிக்கப்படுகிறதில்லையன்றோ. ம்ருத்யுசப்தம், வித்யைக்கு விரோதியான கர்மாவைச்சொல்லுகிறதென்று சந்தேகிக்கத் தக்கதல்ல,—'ஜ்ஞாநவ்யபாச்ரய:'

என்றதினால் சாஸ்த்ரத்தினால் உண்டாகிற ஜ்ஞாநம் சொல்லப்பட்டிருப்பதாலும். ப்ரஹ்ம வித்யேச்சையை அதிஷ்டித்து என்று சொல்லப்படவில்லையன்றோ. ஜ்ஞாநோத்பத்திக்கு விரோதியான ப்ராசீநமான கர்மம் என்று புண்யபாப ஸாதாரணகர்மசப்தத்தால் எவ்வாறு கர்மமாத்ரம் நிரஸிக்கத்தக்கதாக சொல்லப்பட்டது. ச்ருதியோவென்றால், 'தர்மேண பாபமபநுததி' என்று பாபரூபமான கர்மவிசேஷத்திற்கு நிராஸகதைச்சொல்லுகிறதென்று சங்கை உண்டாகில், அவ்விடத்திலும் பாபசப்தத்திற்கு புண்யபாபபரத்வத்தைக்காட்டுவதற்காக புண்யபாபம் இரண்டுக்கும் பாபசப்தவாச்யத்தை உபபாதிப்பதின் பொருட்டு அவ்விரண்டுக்கும் ஜ்ஞாநோத்பத்தி விரோதித்வத்தைக் கூறுகிறார்—'ஜ்ஞாநவிரோதிச' — என்று. 'ச'காரம் சங்கையின் நிவ்ருத்தியைக்காட்டுகிறது. புண்யபாபங்கள் இரண்டும் ஜ்ஞாநவிரோதிகளாக ஆகுமேயாகில், எவ்வாறு அவ்விரண்டினுள் ஒன்றான பாபத்திற்கு நிரஸநீயத்வமும் மற்றொன்றான புண்யத்திற்கு நிராஸகத்வமும் ச்ருதியினால் கூறப்படுகிறது—எனில் கூறுகிறார் 'உபயோரபி' என்று. அவ்விரண்டுக்கும், நிவர்த்யத்வமும், பலாபிஸந்தி முதலியதில்லாத தர்மாந்தரத்திற்கே நிவர்த்தகத்வமும் விவக்ஷிக்கப்பட்டதென்று கருத்து.

இரண்டுக்கும் பாபசப்தவாச்யத்வம் எவ்வாறு பொருந்துமென்றால், சொல்லுகிறார் 'ப்ரஹ்மஜ்ஞாநோத்பத்தி' என்று 'அநிஷ்டபலதயா' என்கிற பதத்தினால் ப்ரவ்ருத்தி நிமித்த ஸூசநம் செய்தபடி அலௌகிகத்வமிருந்தாலும் அநிஷ்டாபலாஸாதாரணகாரணத்வம் பாபரூபமாயிருக்குமென்று கருத்து.

அதினால்தான் சாஸ்த்ரம்முதலியதிலும், ஈசவரனிடத்திலும் அதிவ்யாப்தி இல்லை. 'வாஸுதேவே மநோ யஸ்ய ஜபஹோமார்ச்சநாதிஷு தஸ்யாந்தராயோ மைத்ரேய, தேவேந்த்ரத்வாதிகம் பலம் ஏதேவை நிரயாஸ்தாத ஸ்தாநஸ்ய பரமாத்மந:'' (ஹேமைத்ரேய! ஜபம் ஹோமம் அர்ச்சநம்முதலிய கர்மாக்களில் எவனுடைய மனது வாஸுதேவனிடத்தில் பற்றுதலுள்ளதாக இருக்குமோ, அவனுக்கு தேவேந்திரனுடைய பதத்தைப்பெறுதல் முதலிய பலங்கூட இடையூறாக ஆகிறது. ஸௌம்ய! பரமாத்மாவினுடைய ஸ்தாநத்திற்கு இவைகள் நரகங்கள்.) இதுமுதலியவைகளால் புண்யத்துக்கும் முமுக்ஷுவைக்குறித்து அநிஷ்டபலனைக்கொடுக்குந்தன்மை ஸித்தம். ச்ருதியும் பாபத்தோடு கூட முற்கூறப்பட்ட ஸுக்ருதத்தையும், பாப்மசப்தத்தால் நிர்தேசியாநின்றுகொண்டு நிகமநம் செய்கிறது, 'நைதம் ஸேதுமஹோராத்ரம் தரதோ ந ஜரா ந ம்ருத்யுர்ந சோகோ ந ஸுக்ருதம் ந துஷ்க்ருதம் ஸர்வே பாப்மாநோதோ நிவர்த்தந்தே' (இந்த ஸேதுவை அஹோராத்ரங்கள் தாண்டிச்செல்லுகிறதில்லை. ஜரையாவது, ம்ருத்யுவாவது சோகமாவது, ஸுக்ருதமாவது, துஷ்க்ருதமாவது தாண்டிச்செல்லுகிறதில்லை. எல்லா பாபங்களும் இவனிடத்தினின்று நிவர்த்திக்கின்றன) என்று பாப்மசப்தம், சொல்லப்படாத பாபாந்தர விஷயமென்றுசொல்வது ஸரியன்று. துஷ்க்ருதசப்தமானது எல்லோராலுமறியப்பட்ட எல்லா பாபங்களுக்கும் ஸாதாரணமாக இருப்பதால், சொல்லப்படாத பாபாந்தரங்களுக்கு ஸம்பவமில்லாமையால், அதை விஷயமாக உடையதென்பது பொருந்தாது. ஸம்பவித்தபோதிலும், பாப்மசப்தமானது, அந்த பாபாந்தர விஷயத்தளவு ஆகமாட்டாது.

சொல்லப்பட்ட எல்லா ஹேயநிவ்ருத்திக்கும் ஸம்வாதியாக எடுக்கப்பட்ட 'அபஹதபாப்மா ஹ்யேஷ ப்ரஹ்மலோக:' என்கிற அடுத்த வாக்யத்தில், பாப்ம சப்தமானது எல்லா (ஹேய) விஷயமாகக் காணப்படுவதால். சொல்லப்பட்டிராத சில பாபநிவ்ருத்தியைச சொல்லும் பக்ஷத்தில் கூறப்பட்டிருக்கிற ஸர்வ ஹேய நிவ்ருத்தி ஸம்வாதம் ஸித்தியாது.

சோகம்முதலியவைகளில் பாபசப்தம் அமுக்யமாக இருந்தபோதிலும் ஸுக்ருததுஷ்க்ருதங்களில் ப்ரவ்ருத்திநிமித்தம் ஸம்பவிப்பதால் முக்யத்வம் விடவொண்ணாது,—ஓரிடத்தில் அமுகயமாக இருக்கிற வஸ்துவானது, எல்லா இடங்களிலும் அமுக்யமாக இருக்கவேண்டுமென்கிற நியமமில்லாமையால். ஆதலால் "ஸர்வே பாப்மாந:" என்கிற இடத்தில் $ சத்ரிந்யாயத்தால் அஜஹல்லக்ஷணை ஒப்புக்கொள்ளத்தககது. 'தர்மேண பாபம்' என்கிற இடத்தில் முக்யத்வமே.

---

பாஷ்யம்:—

பாபஸ்ய ச ஜ்ஞாநோதயவிரோதித்வம் — 'ஏஷ ஹ்யேவாஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதி' இதி ஶ்ருத்யாவகம்யதே | ரஜஸ்தமோரூபஸ்ய யதார்த்தஜ்ஞாநாவரணத்வம் ஸத்த்வஸ்ய ச யதார்த்தஜ்ஞாநஹேதுத்வம் பகவதைவ ப்ரதிபாதிதம் — 'ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்' இத்யாதிநா —

அதஶ்ச ஜ்ஞாநோத்பத்தயே பாபம் கர்ம நிரஸநீயம் | தந்நிரஸநம் சாநபிஸம்ஹிதபலேநாநுஷ்டிதேந தர்மேண | ததா ச ஶ்ருதி: — 'தர்மேண பாபமபநுததி' இதி | ததேவம் ப்ரஹ்மப்ராப்திஸாதநம் ஜ்ஞாநம் ஸர்வாஶ்ரமகர்மாபேக்ஷம் | அதோ'பேக்ஷிதகர்மஸ்வரூபஜ்ஞாநம், கேவலகர்மணாமல்பாஸ்திரபலத்வ

---

$ சத்ரிந்யாயம்—குடையுள்ள சிலர்களும, குடையில்லாத சிலர்களும சேர்ந்து செல்லுகிற கூட்டத்தைப் பார்த்து—'குடைக்காராகள போகிறார்களென்று சொன்னால் குடைக்காரர்களைச் சொல்லுகிற சத்ரிபதம் குடையுள்ளவர்கள், குடை இல்லாதவர்கள் இவ்விருவர்களையும் போதிக்கிறது. இந்த இடங்களில் அஜஹல்லக்ஷணை ஒத்துக்கொள்ளத்தக்கது. இடத்திலோவென்றால் பதங்களுக்கு அர்த்தங்களை போதிக்கும் வ்யாபாரங்கள் மூன்று—அவையாவன. சக்தி, லக்ஷணை, வ்யஞ்ஜனை.

சக்தியாவது இந்த சப்தத்தால் இந்த அர்த்தம் அறியத்தக்கது என்கிற ஈச்வரனுடைய இச்சை. சில இடங்களில் மனிதர்களுடைய இச்சையைக்காரணமாகக்கொண்ட ஸங்கேதமும்.

லக்ஷணையாவது—வாச்யார்த்தத்திற்கு அநுபபத்திவரின் அந்த வாச்யார்த்தஸம்பந்தத்தால் வேறு அர்த்தத்தை உணர்த்திவைக்கும் சப்தவ்யாபாரம். இது மூன்று விதம். ஜஹல்லக்ஷணை, அஜஹல்லக்ஷணை, ஜஹதஜல்லக்ஷணை என்று. சப்தமானது வாச்யார்த்தத்தை முற்றிலும் இழக்குமேயாகில் ஜஹல்லக்ஷணை. வாச்யார்த்தத்தை விடாமல் வேறு அர்த்தத்தை போதிக்குமேயாகில், அஜஹல்லக்ஷணை. வாச்யார்த்தத்தில் சில பாகத்தை விடாமலிருக்குமேயாகில் ஜஹதஜஹல்லக்ஷணை. இந்த மூன்றுவது லக்ஷணையானது ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஐக்யம் கூறுகிற மாயாவாதிகள் மதத்திற்கே ஏற்கும். மற்ற ஒரு ஸித்தாந்திகளும் இந்த லக்ஷணையை ஒப்புக்கொள்ளார்கள்.

𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌯𑍇 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌨𑍀𑌤𑌿 𑌸𑍈𑌵𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌿𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾𑌯𑌾𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌾 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌾—

பாபத்திற்கும் ஜ்ஞானோதய விரோதித்வமானது 'எவனை நரகத்தில் தள்ள விரும்புகிறானோ அவனை இவனே தீய செயல்களை செய்விக்கிறான்' எனகிற ச்ருதியினால் அறிவிக்கப்படுகிறது. ரஜஸ்தமஸ் இரண்டும் யதார்த்தஜ்ஞானத்திற்கு ஆவரணமென்பதும் ஸத்வமானது யதார்த்தஜ்ஞானஹேது என்பதும் பகவானாலேயே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது "ஸத்வத்தினாலே ஜ்ஞானம் உண்டாகிறது" இதுமுதலியதால்.

ஆதலால், ஜ்ஞானத்தின் உத்பத்தியின்பொருட்டு பாபமான கர்மாநிரஸிக்கத்தக்கது. பலத்தைக்கருதாமல் அநுஷ்டிக்கப்பட்டிருக்கிற தர்மத்தால் அதன் நிரஸநமும ஸித்திக்கிறது. அவ்வாறே ச்ருதி கூறுகிறது. 'தர்மத்தினால் பாபம் நீக்கப்படுகிறது' என்று இவ்விதமாக ப்ரஹ்மப்ராப்திக்கு ஸாதநமான உரிய கர்மங்களை அபேக்ஷித்திருக்கிறது. ஆகையால், அபேக்ஷிக்கப்பட்டிருக்கிற கர்மஸ்வரூப ஜ்ஞானமும், கேவலகர்மாக்கள் அல்பமாயும், அஸ்திரமாயுமிருக்கிற பலத்துடன் கூடியவைகள்—என்கிற ஜ்ஞானமும் கர்மமீமாம்ஸையினால் நிச்சயிக்கத்தக்கதாக இருப்பதால் ப்ரஹ்மஜிஜ்ஞாஸைக்குப் பூர்வவ்ருத்தமாக அதுவே அபேக்ஷிக்கப்பட்டதென்று சொல்லத்தக்கது.

---

ச்ருதப்ரகாசிகை:—

பாபத்துககு எவ்வாறு ஜ்ஞானவிரோதித்வம்?--ரஜஸ்தமஸ்களுக்கல்லவோ அது அறியப்படுகிறது—என்று சங்கைவர த்வாரத்வாரிபாவாததால் அவிரோதத்தைச்சொல்லுகிறார்—அஸ்ய, என்று.

பாபத்துக்கும், ரஜஸ்தமஸ்களுக்கும் ஜ்ஞானவிரோதித்வம் ப்ராமாணிகமாக இருப்பதால் அவைகளுக்கு த்வாரத்வாரிஹாவம் கலபிக்கப்படுகிறதென்று கூறுகிறார்—'பாபஸ்யச'—என்று

இந்த ச்ருதியானது நரகப்ராபணேச்சாவிஷயமாக ஏன் ஆகக்கூடாது?—அதோநயநமானது உந்நயநத்திற்கு விருத்தமாக இருப்பதால என்றால் சொல்லுகிறோம். இந்த இடத்தில் விவக்ஷிக்கப்பட்டிருக்கிற உந்நயநஹேதுத்வம் உபாஸநநிஷ்பாதநஸ்வரூபமாயுள்ளது. உந்நயநமும் ஸ்வாகம முதலிய ஸ்தாநங்களை அடைவிப்பித்தலென்று ஸந்தேகிக்கத்தக்கதல்ல—"யமேப்யோ லோகேப்ய: உந்நிநீஷதி" என்கிற ச்ருதிவாக்யத்தினால் ஸமஸ்தலோகங்களை விட மேலான ஸ்தாநத்தை அடையும்படி செய்தலென்று அறியப்பட்டிருக்கிற உந்நயமானது மோக்ஷப்ரமாண ரூபமாக இருப்பதால், அங்ஙனமாகில், கர்ப, ஜந்ம, ஜரா,

மரணம், முதலிய ஸம்ஸாரப்ராபணம் அதோநயநமாக ஆகட்டும்; உபாஸநவிரோதமாக வேண்டாமெனில்—அல்ல,—உந்நயநத்திற்கு ஜ்ஞாநோத்பாதநத்வாரமாக இருக்கும் தன்மை அறியப்படுவதால். "யம் த்வம் மநுஷ்யாய ஹிததமம் மந்யஸே" (எதை நீர் மனிதனுக்கு மிக்க ஹிதமென்று எண்ணுகிறீரோ) என்கிற உபக்ரமவாக்யத்தினால் "மாமு பாஸ்வ" என்று விதிக்க இச்சிக்கப்பட்டிருக்கிற உபாஸநத்திற்கு அவ்யவஹிதோபாயத்வ மன்றோ அறியப்பட்டிருக்கிறது.

'நாந்ய: பந்தா:' இது முதலான ச்ருத்யந்தரங்களும் அவ்வாறு அறிவிக்கின்றன. அது வும் கர்மங்களுக்கு † அபவர்கத்தைக்குறித்து அவ்யவஹிதோபாயத்வம் சொல்லப்பட்டால் விரோதிக்கும்.

ஆகையால், உபக்ரமம் முதலியவைகளுக்கு விரோதமில்லாமையால் ஸாதுகர்மங் களுக்கு மோக்ஷத்தைக்குறித்து உபாயத்வம் உபாஸநமூலமென்று நிச்சயிக்கப்படுகிறது.

ஆதலால், கர்மங்களுக்கு உந்நயநஹேதுத்வம் உபாஸந நிஷ்பாதந ரூபமென்றும், அதற்கு விபரீதமான அதோ நயநமானது உபாஸநப்ரதிபந்த ரூபமென்றும், மிகவும் ஸ்பஷ் டமாக அறியப்படுகிறது.

மேலும் உந்நயநாதோநயநங்கள் இரண்டும் ஸ்வர்க நரக ப்ராபண ரூபங்களே. ஆகிலும், அஸாது கர்மங்களுக்கு ஜ்ஞாநவிரோதித்வம் ஸித்திக்கிறது—

எப்படியென்றால், §உந்நிநீஷை¶ அதோநிநீஷை இரண்டுக்கும் காரணமின்மை கூறப் படுமேயாகில் பரமாத்மாவுக்கு வைஷம்யநைர்க்ருண்யங்கள் ப்ரஸங்கிப்பதால், நடத்தத்தக்க சேதநஙளவிலுள்ள யாதொரு வ்ருத்தத்வயமுண்டோ அது, கதித்வய நிநீஷைக்கு நிமித்த மாக இருக்கிற அபரிமிதமான புண்யபாப கர்த்ரு விஷயமாக அறியப்படுகிறது.

அதில் இரண்டு கதிகளுக்கும் போதுமான திறமை வாய்ந்த மேன்மேலாக நற்செயல், தீச்செயல்களை செய்வித்தலானது, ஈச்வரனுக்கு, பூதப்ரவேசம் முதலியவற்றைப்போல், ஜீவனுடைய புத்தியை அபேக்ஷிக்காமல் உண்டாகிறதில்லை. அங்ஙனமொப்புக்கொள்ளப் படுமேயாகில், ஜ்ஞாநம், செய்வதிலிச்சை இது முதலியது இல்லாமையால், காற்று,ஜலம் முதலியதால் ப்ரேரணஞ்செய்யப்பட்ட த்ருணம் முதலியவற்றைப்போல் ஸம்ஸாரிகளுக்கு சாஸ்த்ரவச்யத்வமில்லாமல் போவதால், கர்மபலங்களை அநுபவிப்பதென்பது பொருந்தா மல் போகவேண்டியதாகும்.

இவ்வண்ணமாக ஸாம்ஸாரிகளுக்கு கர்மபலபோக்த்ருத்வம் இன்றியமையாதது—என் கிற ந்யாயத்தாலநுக்ரஹிக்கப்பட்டிருக்கிற "ஏஷ ஏவ" இது முதலான இரண்டு வாக்யங் களும் ஜ்ஞாநப்ரதாநத்துக்கு மூலமாயிருக்கிற காரயித்ருத்வவிஷயமென்று நிச்சயிக்கப் படுகிறது. அவ்வாறு நிச்சயம் கொள்வதில் ஸ்ம்ருதியின் அநுக்ரஹமும் உண்டாகிறது. இடையர்கள் கோலைக்கையில் எடுத்து பசுக்களைக்காப்பதுபோல, தேவர்கள் யஷ்டியை எடுத்துக்கொண்டு காக்கிறார்களில்லை. எவனை ரக்ஷிக்கவேண்டுமென்று விரும்புகிறார்களோ அவனை புத்தியோடு சேர்ப்பிக்கிறார்கள். தேவர்கள் எந்த மனிதனுக்கு அவமானத்தைக் கொடுக்க விரும்புகிறார்களோ அவனுடைய புத்தியை இழுத்துவிடுகிறார்கள். அந்த புத்தி

† அபவர்கம்—மோக்ஷம், அல்லது முடிவு.

§ உந்நிநீஷை—மேலான பூதத்திற்குக்கொண்டு வரவேண்டுமென்கிற இச்சை.

¶ அதோநிநீஷை—கீழ்நிலைமைக்குக்கொண்டு போகவேண்டும்—என்கிற இச்சை.

யிலிருந்து விலக்கப்பட்டவனாக நாலும் அடைகிறான். என்றல்லவோ சொல்லப்படுகிறது. அவ்வாறே "அடிக்கடி செய்யப்படுகிற புண்யமானது ப்ரஜ்ஞையை வ்ருத்திபண்ணுகிறது. திடமான ப்ரஜ்ஞையுள்ள மனிதன் நித்யம் புண்யத்தையே செய்ய ஆரம்பிக்கிறான். அடிக்கடி செய்யப்படும் பாபமானது ப்ரஜ்ஞையை நாசமடையச்செய்கிறது. ப்ரஜ்ஞையை இழந்த மனிதன் எப்பொழுதும் பாபத்தையே செய்யத்தொடங்குகிறான்" என்றும் அதில் "புத்திமவர்ஷந்தி ப்ரஜ்ஞாம நாசயதி" என்றும் நல்ல அறிவின் அழிவை முன்னிட்ட அதற்கு விபரீதமான ஜ்ஞாநத்தின் நிஷ்பத்தியானது இங்கே விவக்ஷிக்கப் பட்டிருக்கிறது. அங்ஙனமிலலாவிடில், வேறு கர்மங்களின் ஆரம்பம் உபபந்நமாகாது.

எப்படியும் இந்த வசநகலாபமானது ஸாவகர்மதேவதாஸாமாந்யவிஷயமாக இருக்கிறது, ஆயினும் பகவத்ஜ்ஞாநமானது ஸமயக்ஜ்ஞாநஸாமாந்யத்திற்கு வெளிப்பட்டிராமையால், அஸாதுகர்மாவுக்கு அந்த ஜ்ஞாநவிரோதித்வம் ஸித்திக்கிறது. அவ்வாறே விசேஷித்தும் சொல்லப்படுகிறது—"ததாமி புத்தியோகந்தம் யேந மாம் உபயாந்தி தே, ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி, மாமப்ராப்யைவ கௌந்தேய, ததோ யாந்த்யதமாம் கதிம்" (எதனால் அவர்கள் என்னை அடைகிறாகளோ அப்படிப்பட்டபுத்தியை நான் கொடுக்கிறேன். ஹே குந்தீபுத்ர! அஸுரஜாதியை அடைந்தவர்களாகவும், ஒவ்வொரு ஜந்மத்திலும் மூடர்களாகவும் என்னை அடையாமலே அதினின்று அதமமான கதியை அடைகிறார்கள்) என்றும், இவ்வண்ணம் ந்யாயத்தினாலும், ஸ்ம்ருதியினாலும் உபப்ருமஹணம் செய்யப்பட்ட இந்த ச்ருதியினால் அஸாதுகர்மங்களுக்குப்பொதுவாக ஜ்ஞாநவிரோதம் ஸித்தித்தது. இந்த நிர்வாஹததாலும் முற்கூறப்பட்டது உபபந்நமாகிறது—ப்ரகாரணத்தின் ஒற்றுமை இருத்தலால்.

இவ்வாறாக பாபம் ஜ்ஞாநவிருத்தமென்பதில ப்ரமாணம் காட்டப்பட்டது. பிறகு ரஜஸ்தமங்கள் ஜ்ஞாநவிரோதிகள் என்பதிலும், ஸத்வகுணமானது ஜ்ஞாநத்துக்கு ஹேது என்பதிலும், ப்ரமாணத்தைக்காட்டுகிறார். 'ரஜஸ்தமஸோ:' என்று. அதனால் ப்ரஸ்துத கர்மாபேக்ஷிதத்வத்திற்கு ப்ரயோஜனமென்னவெனில், கூறுகிறார் 'அதப்ச' என்று. அத: பாபத்திற்கு ஜ்ஞாநவிரோதித்வம் சொல்லப்பட்டிருப்பதால். அதினாலும் என் எனில் சொல்லுகிறார்—'தந்நிரஸநஞ்ச'—என்று. பாபசப்தத்தால் சொல்லத்தக்க புண்யபாபம் இரண்டும் நிரஸிக்கத்தக்கதாலால், பாபத்தை விலக்குகிற கர்மாவின் அஸம்பவத்தை ஆசங்கித்து கூறப்பட்டது. † 'அநபிஸம்ஹிதபலேந' இதனால் ஸ்வர்கம் முதலிய பலத்தைக் கொடுக்கிற கர்மங்கள் வ்யாவ்ருத்திக்கப்பட்டன. அநுஷ்டிக்கப்பட்டிருக்கிற—அறியப்பட்ட மாத்ரத்தினாலே அந்த கர்மாவின் நிரஸநம் ஸம்பவியாதென்று கருத்து. அதில் ப்ரமாணம் எது என்றால் கூறுகிறா.-'ததாச ச்ருதி:' என்று. இப்பொழுது நிராஸகவிசேஷத்தில் ப்ரமாணமாக உதாஹரிக்கப்பட்ட வாகயத்தின் அர்த்தநிர்ணயத்திற்கு உபயோகியாக இருப்பதால், இந்த வாக்யத்திலுள்ள நிரஸிககவேண்டிய வஸ்துவாசியான பதத்தினுடைய அர்த்தமானது முன்னமே சிக்ஷிக்கப்பட்டது. நிராஸகவாசிபதத்தினுடைய அர்த்தமானது அடுத்து உரைக்கப்பட்டது.

இந்த தர்மசப்தமானது * க்ருச்ரம் சாந்த்ராயணம் முதலிய † ப்ராயச்சித்தரூபமான

---

† அநபிஸமஹிதம்—கருதப்படாதது.

* க்ருச்சரம—சாந்த்ராயணம், இவைகள் ப்ராயத்சித்த பேதங்கள்.

† ப்ராயசித்தம்—பாபத்தை போக்கடிப்பதற்காக செய்யப்படும் சாஸத்ரியமான கர்மாநுஷ்டாநம். ப்ராயஸ் என்றால் பாபம் சித்தம் என்றால் அதைப்போக்குகிற சாஸ்த்ர ஸம்மதமாக கர்மானுஷ்டாநம்.

ப்ராயம் பாபம் விஜாநீயாத்—சித்தம் தஸ்யவிசோதநம்—என்று நிருக்தி.

தர்மமாத்ர விஷயமாக ஏன் இருக்கக்கூடாது. அநபிஸம்ஹிதபலதாமவிஷயமென்று ஏன் நிச்சயிக்கப்படவேண்டும் எனில் சொல்லப்படுகிறது.

"யஜ்ஞேந, தாநேந, தபஸாநாசகேந சாங்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு:, கஷாயே கர்மபி: பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே. யஜ்ஞதாநம், தப:, கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத், யஜ்ஞோ தாநம் தபஸ்சைவ பாவநாநி மநீஷிணாம், சமோ தமஸ்தபஸ்சௌசம்" (யஜ்ஞத்தாலும், தாநத்தாலும், தபஸ்ஸினாலும், அநசநவ்ரதத்தாலும்—வெளி இந்த்ரியங்களையும் மநதையும் ஒடுக்கினவனாகவும், விஷயங்களிலிருந்து ஒழிவுள்ளவனாகவும், ஸஹநசக்தியுள்ளவனாகவும்—பாபமானது கர்மாக்களால் எரிக்கப்பட்டால் பிறகு ஜ்ஞாநம் உண்டாகிறது. யஜ்ஞம், தாநம், தபம், கர்ம,இவைகள் விவேகிகளுக்கு பரிசுத்தியையுண்டுபண்ணுகிற ஸ்வபாவமுள்ளவைகள் சமம், தமம், தபஸ் சுத்தியாக இருத்தல்; இது முதலிய ச்ருதிஸ்ருதிகளால் முமுக்ஷுவுக்கு அபேக்ஷிதங்களாகச்சொல்லப்பட்டிருக்கிற யஜ்ஞம், தாநம், தபஸ், சமம் முதலியவைகள் இங்கு கூறப்பட்டிருப்பதாலும், "விஜ்ஞாநாதாநந்தோ ப்ரஹ்மயோநி:" இதுமுதலியதால் இந்த ப்ரகரணத்திற்கு ப்ரஹ்மவித்யாவிஷயத்தம் ஸித்தித்திருப்பதாலும், இந்த தர்மசப்தமானது முமுக்ஷுவினால் அபேக்ஷிக்கப்பட்ட அநபிஸம்ஹிதபல தர்மவிஷயமென்று அறியப்படுகிறது.

இந்த இடத்தில் யஜ்ஞதாநாதி பர்யாயங்களில் "தாநேந த்விஷந்தோ மித்ரா பவந்தி" (சத்ருக்கள் கொடையினால் மித்ரர்களாக ஆகிறார்கள்.) இது முதலியதால் ஸாம்ஸாரிகபலகீர்த்தநமானது, "அங்கவாநங்நாதோ பவதி" இது முதலியது போல, ப்ரஹ்மவேதநாதுணமாயும், $ ஆநுஷங்கிகமாயிருக்கிற பலவிஷயமாக எண்ணத்தக்கது,—"பூயோ ந ம்ருத்யுமுபயாஹி வித்வாந்" என்று ப்ரதாநபலச்ரவணத்தால். மேலும், இந்த வாக்யம் எப்படியும் முமுக்ஷுமாத்ரவிஷயமல்ல. ஆயினும், அமுமுக்ஷுமாத்ரவிஷயமுமாகாது,—ப்ரவ்ருத்திநிமித்தம் ஸாதநமாக இருப்பதால். காம்யபலத்தைக்கொடுத்தல் தர்ம சப்தார்த்தமல்லவன்றோ. அலௌகிகமான இஷ்டத்திற்கு அஸாதாரணமான ஸாதநத்தினால் அலௌகிக நிஷ்டா ஸாதாரண காரணத்தைப்போக்க வேண்டுமென்றல்லவோ அர்த்தமாகும்.

அப்படியானால்,முக்தியில் விருப்பமுள்ளவனைக்குறித்து காம்யகர்மாவானது அநிஷ்டபலமுள்ளதாக இருப்பதால், தர்மசப்தத்தால் சொல்லத்தகாததலாலும், பாப சப்தத்தால் சொல்லத்தக்கதில் உள்ளடங்குவதாலும், பக்ஷதர்மதையின் பலத்தினால் பலாபிஸந்தி இல்லாத தர்மத்தினால் புண்யபாபம் இரண்டுக்கும் போக்கக்கூடிய தன்மை சொல்லப்பட்டதாக ஆகும். ஜ்ஞாநம் கர்மாபேக்ஷையுள்ளதென்பதை நிகமநம் செய்கிறார்--'ததேவம்'—என்று. தத்-ச்ருதிஸ்ம்ருதிகள் அவைகளுக்கு அநுக்ராஹகங்களான உபபத்திகள், ஸூத்காரவசநங்கள் இவைகளாலுண்டான, இவ்வண்ணம் உபாயப்ரதிபந்தநிராஸத்திற்காக எல்லா ஆச்ரமிகளுக்கும் அந்தந்த ஆச்ரமதர்மங்களை அங்கங்களாகக்கொண்ட உபாஸநாதிகாரம் மேலே உரைக்கப்படப்போகிறதை மனதில் வைத்துக்கொண்டு ஸர்வாச்ரகர்மாபேக்ஷமென்று உரைக்கப்பட்டது. அதனால் ப்ரஹ்மவிசாரபூர்வவ்ருத்தத்வத்தில் கர்மவிசாரத்திற்கு என்ன ப்ரயோஜநமென்று அபேக்ஷை உண்டாகுங்கால், அநுஷ்டாநம் ஜ்ஞாநஸாபேக்ஷமாக இருப்பதால், ஜ்ஞாநம், மீமாம்ஸாதீநமாதலால், அதின் ஜ்ஞாநம் முந்தியிருக்கவேண்டும் என்று சொல்லுகிறார். 'அத:' ப்ரம்மஜ்ஞாநத்திற்கு பலாபிஸந்தி இல்லாத ஆச்ரமகர்மாவை அபேக்ஷித்திருப்பதால். ஜ்ஞாநம் ஹாநத்திற்காகவாவது, உபாதாநத்திற்காகவாவது வேண்டியது.

$ ஆநுஷங்கிகம்—அப்ரதாநம்.

இங்கேயோ இரண்டுக்காகவுமென்று சொல்லுகிறா—'அபேக்ஷித'—என்று. பலத வாரா ஹாநம். ஸ்வரூபத்தால் உபாதாநம். மீமாம்ஸாசப்தம் பூர்வோத்தரஸாதாரணமாத லால் காமமீமாம்ஸையினுல் நிச்சயிககத்தககதென்று உரைக்கப்பட்டது. 'ஸைவ' எது விருத்தமென்று உன்னுல் நிரஸிககப்பட்டதோ அதுவே என்று அர்த்தம். எது அநபேக்ஷித மென்று அந்யனுல் கூறப்பட்டதோ அதுவே அபேக்ஷிதமென்று கூறப்பட்டது.

**பாஷ்யம்:—**

**அபி ச நித்யாநித்யவஸ்துவிவேகாதயஶ்ச மீமாம்ஸாஶ்ரவண மந்தரேண ந ஸம்பவந்தி; ஃபலகரணேதிகர்தவ்யதாதி காரிவிஶேஷநிஶ்சயாத்ருதே க்ருத்ஸ்நகர்மஸ்வரூபதத்ஃபலதத்ஸ்திரத்வாஸ்தி ரத்வாத்மநித்யத்வாதீநாம் துரவபோதத்வாச்ச |**

**மேலும், நித்யாநித்யவஸ்துவிவேகம் முதலியவைகள் மீமாம் ஸையின் ச்ரவணமில்லாவிட்டால் ஸம்பவியாது,—பலம், கரணம், †இதிகர்த்தவ்யதை, அதிகாரி விசேஷம் இவைகளின் நிச்சயமில்லா விடில், கர்மஸ்வரூபம், அதின் பலம், அதின் ஸ்திரத்வாஸ்திரத் வங்கள் ஆத்மநித்யத்வம் முதலியவைகள் அறிவதற்கு ஸாத்யப் படாததலால்.**

ச்ருதப்ரகாசிகை·—

எது அந்யனுல அபேக்ஷிதமென்று உரைககப்பட்டதோ அதற்கு அநபேக்ஷிதத்வம், கூறப்படுகிறது—'அபிசேதயாதிநா.' 'நிதயாநித்யவஸ்து விவேகாதயஶ்ச'—என்று. சகாரம் து என்பதின் அர்த்தமுள்ளது. முற்றிலும் ஆததவிரோதம் என்று அர்த்தம். 'மீமாம்ஸா ச்ரவணமந்தரேண, கர்மப்ரஹ்மமீமாம்ஸாச்ரவணமிலலாவிட்டால் என்றுஆதநம.' "ந ஸம பத்ஸ்யந்தே" என்றதினுல் பிறகு வருந்தன்மை சொலலப்பட்டது.எதனுலென்றால் சொல் லுகிறார் 'பல'—என்று. பலவிசேஷமாவது போகமோக்ஷரூபமாயுள்ளது.

கரணவிசேஷம்—யஜ்ஞம், உபாஸநம் முதலியது. ப்ரயாஜம் முதலியதும், ஸாதந ஸப்தகமும், போகத்தில் இச்சையுள்ளவனும், மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனும் அதிகாரி விசேஷம். இவைகளின் நிச்சயமில்லாவிடில் கர்மஸ்வரூபமாவது—அங்கங்களோடு கூடின யஜ்ஞாத்மகமாகவும், உபாஸநாத்மகமாயுமுள்ளது.

பாஷ்யகாரரும் யாகாத்மகமாயும், உபாஸநாத்மகமாயுமிருக்கிற கர்மம் என்று உரைக் கப்போகிறார். "ப்ராநாசஶ்ச கர்மண்யப்யாஸாத்" என்றும் ஸூத்ரம்—'உபாஸநாத்மகமான கர்மணி' என்றும் அதற்கு பாஷ்யம். உபாஸநத்திற்கு காமத்வமானது ஸ்ம்ருதிஸந்ததி ரூப மாக இருத்தலால்; அது ப்ரயநஸாத்யமாக இருப்பதால். "ப்ரமாணம் வாசிகை· பக்ஷிம்ரு கதாம் மாநஸைரந்த்யஜாதிதாம்—சரீரஜை கர்மதோஷை: யாதி ஸ்தாவரதாம் நர:" (மனி தன் வாக்தோஷங்களால் பக்ஷிகளாகவும், ம்ருகங்களாவும் பிறக்கிறான். மாநஸதோஷங்க ளால் சண்டாளனுகப்பிறக்கிறான்—சரீரத்தில் உண்டான தோஷங்களால் ஸ்தாவரஜந்மா

†இதிகர்த்தவ்யதை—அங்கம்.

வைப்பெறுகிறான்.) என்கிற இடத்தில் மநுவும் † "மாநஸை: கர்மதோஷை:" என்று சொன்னார். பலமும்—போகம், மோக்ஷமென இரண்டு.

'ஆத்மநித்யத்வாதீநாம்' என்று ஆதிசப்தத்தால் ஆத்மாக்களுக்கு ¶ 'நிர்வாண மய ஏவாயம்' என்று சொல்லப்பட்ட ஜ்ஞாநாநந்தஸ்வரூபத்வம் முதலியது விவக்ஷிக்கப்பப்பட்டது. இங்கு ஸாதநத்துக்கு § ஸாத்யாவிசிஷ்டத்வம் அறியப்படுகிறதென்றால், இப்படி அல்ல. மீமாம்ஸையில் பலகரணேதிகர்த்தவ்யதை முதலியவைகளுக்கு ஒவ்வொரு அதிகரணத்திலும் அந்தந்த ந்யாயங்களால் எந்த நிர்ணயம் செய்யப்படுகிறதோ அது ஹேது ஸாதநம். இவ்வண்ணம் அந்த அந்த அதிகரணந்யாயத்தால் அநுக்ரஹிக்கப்பட்ட ச்ருதி வாக்யங்களால் உண்டாகிற உபாயோபேய விஷயமான யாதொரு ஜ்ஞாநம் உண்டோ அது ஸாத்யம். அந்தந்த வாக்யார்த்த நிச்சயங்களால் அவைகளின் ஸமுதாயரூபமான மஹாவாக்யார்த்த நிச்சயம் ஸாதிக்கப்படுகிறதென்று அர்த்தம். பதார்த்த நிச்சயங்களால் வாக்யார்த்த நிச்சயமென்று சொன்னால் எவ்வாறு ஸாத்யாவிசிஷ்டத்வமில்லையோ, அப்படிப்போல, அதனாலேயன்றோ கரணேதிகர்தவ்யதாதிசப்தங்களால் முந்தி தனித்துச்சொல்லி பிறகு கர்மஸ்வரூபசப்தத்தால் சொல்லப்பட்டது. பலகரண சப்தங்களால் தொடங்கப்பட்டிருக்கிற பாஷ்யக்ரந்தமானது கர்மமீமாம்ஸாமாத்ரவிஷயமாக இருக்குமேயாகில், 'தத்பல ஸ்திரத்வாஸ்திரத்வாத்மநித்யத்வாதீநாம்' என்று சொல்வது யுக்தமன்று. உபபதமில்லாத 'மீமாம்ஸா' சப்தமானது, 'மீமாம்ஸா சாஸ்த்ரம்' என்கிற பதங்களை முதலாகக்கொண்ட பாஷ்யத்தில் பாகத்வயவிஷயமாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதாலும் நாம் சொன்னதே ஸரியான அர்த்தம்.

ஆகையால், கர்மப்ரம்ம விசாரங்களுக்கு அநந்தரஹாவீ (௧) நித்யாநித்யவஸ்துவிவேகமும்—அதற்குப்பிறகு (௨) இம்மையிலும், மறுமையிலும் பலபோகத்தில் வைராக்யமும்—(௩) முக்தியடைய வேண்டுமென்கிற இச்சையும் (௪) சமதமாதிஸாதநஸம்பத்தும். சமதமாதிகளோடு கூடினவனாக இருக்கவேண்டுமென்று ப்ரம்மமீமாம்ஸையிலல்லவோ சமதமாதிஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது. இந்த நான்கும் ஸித்தித்தால் ப்ரஹ்மவிசாரம், ப்ரஹ்ம விசாரத்தால் சமாதி ஸித்தி என்று அந்யோந்யாச்ரயதோஷம் ஸம்பவிக்கும். ஆகையால் பிந்தி வரப்போகிறதற்கு முந்தி நடைப்பெற்றிருத்தல் பொருந்தாது. ஸாங்காத்யயநத்தாலுண்டான ஆபாதப்ரதீதியே நித்யாநித்யவஸ்துவிவேகமென்று கூறப்படுமேயாகில், அது யுக்தமல்ல.

ஆபாதப்ரதீதியானது, இம்மையிலும் மறுமையிலும் பலபோகவிராகத்துக்கும் முமுக்ஷுத்வத்திற்கும் ஹேதுவாகாதன்றோ,—நித்யாநித்யங்களுடைய விபர்யயத்திற்கு ப்ரதீதி வருவதால். மேலும், ஆபாதப்ரதீதியானது இரண்டு பாகங்களின் விசாரத்திற்திற்கும் பொதுவானது.

அதில் முதலில் கர்மவிசாரத்திலேயே தான் ப்ரவ்ருத்தி யுக்தமானது, இரண்டிடத்திலும் புபுத்ஸை வேற்றுமையின்றி இருப்பதாலும், முந்தி இருப்பதை அதிக்ரமிப்பதில்

† மாநஸை:—மாநஸிகங்களான கர்மதோஷங்களால்.

¶ நிர்வாண மய ஏவாயம்—இந்த பரமாத்மா ஆநந்தமயனே.

§ ஸாத்யாவிசிஷ்டத்தும் ஸாதநத்துக்கு அதாவது (ஹேதுவுக்கு) ஸாத்யத்தைவிட வேற்றுமை இன்மை.

காரணமில்லாமையாலும்—வேறு சாஸ்த்ரத்தாலும் நித்யாநித்யவிவேகம்முதலியது உபபந்நமாகாது.

முதலிலேயே புருஷன் அத்யயநவிதிக்கு வச்யனுக இருப்பதால் வேறு சாஸ்திரத்திற்கு அவகாசமில்லாமையால், மேலும் சாத்திராந்தரத்தில் பரமாணுகாரணத்வமும், அப்ரஹ்மாத்மக ப்ரதாநகாரணத்வமும், ககநாதி நித்யத்வமும், நிமித்தமாத்ர ஈச்வரத்வமும்—இவை முதலிய வேதாந்த விருத்தங்களான அர்த்தங்களே அநேகங்கள் அறியப்படுகின்றன.

ஆகையால், வேறு சாஸ்தரங்களினுல் உண்டாகிற நித்யாநித்ய வஸ்து விவேகமானது, வேதாந்தவிருத்தமாதலால் அதின் விசாரத்தைக்குறித்து பூர்வவ்ருத்தமாக ஆவதற்குத்தகுதியுள்ளதல்ல.

மேலும், சாஸ்த்ராந்தரத்தில் ஆறுபதார்த்தங்களின் ஜ்ஞாநமும், பதினறு பதார்த்தங்களின் ஜ்ஞாநமும் இவை முதலியவைகளுக்கு மோக்ஷஸாதநத்வம் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதாலும், வேதாந்தச்ரவணுபேக்ஷை இல்லாமையாலும் அதினுலுண்டாகிற விவேகத்திற்கு பூர்வவ்ருத்தத்வம் யுக்தமல்ல.

'எதனுல் † அப்யுதய § நிச்ரேயஸ வித்தி உண்டாகிறதோ அது தர்மம். ஹலஜாதி நிக்ரஹஸ்தாநங்களுடைய தத்வஜ்ஞாநத்தினுல் மோக்ஷப்ராப்தி என்றல்லவோ ஆங்காங்கு கூறப்படுகிறது மேலும் † "தஸ்மாதேவம் வித் சாந்தோ தாந்த உபரததஸ்திக்ஷு:, ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பச்யேத்" என்று ச்ருதியானது 'ஏவம்வித்' என்கிற சப்தத்தினுல், சாஸ்த்ரத்தினுலுண்டான ஜ்ஞாநத்தை அநுவதித்து 'பச்யேத்' என்று ப்ரதிபந்நமான உபாஸநத்திற்கு அங்கங்களாக சமாதிகளை உபதேசிக்கிறது. ஆகையால், சமாதிகளுககு ச்ரவணபூர்வவ்ருதத்வம ச்ருதிவிருததம். 'ப்ரசாந்தசித்தாய' என்கிற சப்தத்தை முதலிலுடைய ச்ருதியோவென்றுல், ச்ரவணத்திற்கு உபயுக்தமான அவதாநத்தை உண்டுபண்ணுவதற்காக—என்று சொல்லப்பட்டிருக்கிறது. § இதிஹாஸம்¶புராணம் முதலியவைகளை ச்ரவணம்செய்வதினுல் நித்யாநித்யவிவேகம உண்டாகலாமென்றுல் அப்பொழுது அதனுலேயே ப்ரஹ்மஸ்வரூபமறியப்படுவதால ப்ரஹ்மவிசாரம் ஆரம்பிக்கத்தக்கதாக ஏற்படும். இதிஹாஸ புராணங்களிலும் ஸம்சயவிபர்யயங்கள் அதிகமாக இருப்பதால் அவைகளை விலக்குவதற்காக ப்ரஹ்மவிசாரமானது அபேக்ஷிக்கப்படுகிறதென்றுல், ஸம்சயவிபர்யயங்களுடைய பாஹுள்யத்தாலேயே நித்யாநித்யவிவேகங்கூட அவைகளில் ஸம்பாதிக்க முடியாதென்று ஸாதநசதுஷ்டயத்திற்கு பூர்வவ்ருத்தத்வம் தகுதியுள்ளதாகாது.

† அப்யுதயம்—காம்யகர்மாக்களால் அடையப்படும் அல்பபலம்.

§ நிச்ரேயஸம்—நிச்சிதமான ச்ரேயஸ், அதாவது மோக்ஷம நித்யநைமித்திக காமங்கள் இரண்டுக்கும் இந்த நிச்ரேயஸமே பலம்—காம்மயகர்மாக்களுககு அப்யுதயம பலம்.

† தஸ்மாதேவம்—ஆகையால், இவ்வண்ணமறிந்தவன் பஹிரிந்த்ரியங்களை அடக்கினவனுகவும், மனதை அடக்கினவனுகவும், விஷயங்களில் ஒழிவு உள்ளவனுகவும பொருமையுள்ளவனுகரும், சிததஸமாதாநமுள்ளவனுகவும் ஆகி—தன் உள்ளத்திலேயே ஆதமாவை ஸாக்ஷாத்கரிக்கவேண்டும்.

§ இதிஹாஸம்—தர்மார்த்த காமமோக்ஷங்களுடைய உபதேசத்தோடு கூடியதும் முன் காலத்தில் நடந்தேறியதும் பல கதைகளோடு கூடியதுமான புண்யபுருஷர்களின் சரித்ரம்.

¶ புராணம்—ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி, ப்ரளயம் வம்சங்கள், மந்வந்தரங்கள், வம்சங்களை அநுஸரித்த சரித்திரங்கள் இந்த ஐந்து மடங்கினது.

'நித்யாநித்யங்களில் வஸிக்கின்றன' என்று 'நித்யா நித்ய வஸ்துக்கள், அவைகளின் ‡ தர்மங்கள்' என்று தொடங்கி நித்யமான தர்மிக்கு நித்யத்வம், ஸத்யத்வம், அதனாலேயே உபாதேயத்வம் ; அநித்யமான தர்மிக்கு அநித்யத்வம் அஸத்யத்வம் அதனாலேயே ஹேயத்வம் என்று இவ்வண்ணங்களாலும், அவைகளின் தர்மங்களாலும் பிறக்கிற விவேகம் நித்யாநித்யவஸ்து விவேகமென்று வாசஸ்பதியால் எது சொல்லப்பட்டதோ அந்த விஷயத்தில் சொல்லுகிறோம். அநித்யமான வஸ்துவுக்கு முற்றிலும் அஸத்யத்வம் மேலே சொல்லப்போகிற ரீதியினாலே நிரஸிக்கப்பட்டதாக அறியத்தக்கது.

எது நித்யமோ அது உபாதேயம், எது அநித்யமோ அது ஹேயம்-என்கிற இரண்டும் உபபந்நமன்று.

ஸுகம், துக்கநிவ்ருத்தி, அவைகளின் ஸாதநங்கள், அவைகளுக்கு உபயோகிகள் இவைகளுக்கே உபாதேயத்வபுத்தி காணப்படுவதாலும், அவைகளைத்தவிர்த்த மற்றவைகளுக்கு அநுபாதேயதாபுத்தி காணப்படுவதாலும் நித்யமாக இருந்தபோதிலும் துக்கரூபமாகவாவது துக்கநிமித்தமாகவாவது இருக்குமேயாகில், அது ஹேயமென்றே அறியப்படும். இரண்டு ப்ரகாரமாக இல்லாவிட்டால் உபேக்ஷிக்கப்படும், அநித்யமாக இருந்தபோதிலும் ஸுகரூபமாகவாவது, ஸுகநிமித்தமாகவாவது இருக்குமேயானால் அது உபாதாநம் செய்யப்படுகிறது.

ஆனால் நிரூபகனுக்கு ஹேயமாகிறது—என்று கூறப்படுமேயாகில், அல்ல—மேலான வேறு ஸுகத்தின் தர்சநம் அத்யந்த துக்கத்தால் ஸாதிக்கத்தக்க தன்மை, துக்கத்தை பிந்தின பலமாகக்கொண்டிருத்தல் இவைகளின்றிக்கே இருக்குமேயாகில் நிரூபகனுக்குக் கூட அதில் உபாதேயதா புத்தி காணப்படுவதால்.—பாலுடன் சேர்ந்த அந்நத்தின் லாபத்தால் கணம் விடப்படுகிறது. பாழுங்கிணற்றில் விழுந்த சோழி அதை எடுப்பதில் ஸம்பவிக்கக்கூடிய க்லேசமானது, அடைவதினாலுண்டாகிற ஸுகத்தைவிட அதிகமாக இருப்பதால் இழக்கப்படுகிறது.

விஷம் கலந்த அந்நமானது மரணபயத்தால் த்யஜிக்கப்படுகிறது. புஷ்பமாலை, சந்தனம் முதலியதோவென்றால் அவைகளிடத்தினின்று சிறந்த ஸுகம் கிடைப்பதாலும், தொடக்கத்திலும், முடிவிலும் தீவ்ரமான துக்காநுபந்தமில்லாமையாலும் பரிமிதமாக இருந்தபோதிலும் க்ரஹிக்கப்படுகிறது.

ஆகையால், அநித்யத்திற்கு ஹேயத்வமானது அநித்யத்வமாத்ரத்தினால் உண்டு பண்ணப்பட்டதன்று. நித்யமான வஸ்துவானது துக்கத்தோடு கலவாத ஸுகரூபமாக இருப்பதால் அது உபாதேயம், அதில்லாமையால் அநித்யமான வஸ்து ஹேயம் என்று கூறப்படுமேயாகில் கூறப்படுகிறது—நித்யத்திற்கு துக்கத்தோடு கலவாத ஸுகரூபத்வமானது வ்யாப்தியினால் அறியப்படுகிறதா ? அல்லது சாஸ்திரத்தினாலா !

முதலாவது சரியல்ல,—நித்யமான காலம் முதலியவைகளுக்கு ஸுகரூபத்வம் காணப்படாமையால், நித்யமான ஆத்மாவுக்கு துக்கத்தோடு சேராத ஸுகரூபத்வம் காணப்

---

‡ தர்மங்கள்—அலௌகிகமாயும். ச்ரேயஸ்ஸுக்கு ஸாதநமாயிருப்பது தர்மம். இது ச்ரௌதம், ஸ்மார்த்தமென இருவகைப்பட்டுள்ளது. முதலாவன ச்ரௌததர்மம் ஒன்றே ஸ்மார்த்த தர்மங்கள் ஆறுவிதங்கள்.—

அவைகளாவன:—வர்ணதர்மம், ஆச்ரம தர்மம், வர்ணாச்ரம தர்மம், ஜாதிதர்மம், நிமித்த தர்மம், குண தர்மம்—என.

படாமையாலும். 'நான் துககமுள்ளவன்' என்று ஆத்மாவுககல்லவோ துககம் உபலப்தி விஷயமாகிறது

சாஸ்த்ரத்திலென்றால்—வேதத்திலாகில் வேதத்திலுண்டாகிறது ஆபாத ஜஞாநமா ? ப்ரமிதிரூபமா ?

முதல் பக்ஷத்தில் காமப்ரஹ்ம பாகங்களுககுப்பொதுவாக இருப்பதால் கர்மவிசா ரத்தை அதிகரமித்து ப்ரஹ்ம விசாரத்தைககுறிதது அதற்கு பூரவ வருத்தத்வம அநுப பந்நம்.

நிச்சயரூபமானால், மீமாமஸா த்வயபலம் உண்டாகலாம். ஆகமாந்தர மூலத்வம் சொல் லப்படுமேயாகில் விருத்தமாதலால, உபயோகமில்லாமையாலும் அதற்கு இதன் அபேக்ஷை இல்லாமையாலும் பூரவவ்ருத்ததவம் உபபந்நமாகாது. ஆன பின்பு எது நித்யமோ அது உபாதேயம என்று சொல்லப்படுமேயாகில் கூடாது. இவ்வண்ணம் ப்ரதீதி உண்டாகிற தில்லை. பின்னை நிதயமான சுகம ஸம்பவிககிறதேயாகில் அது உபாதேயம்.அது இருக்க அதில் அநித்யம அநுபாதேயமென்று அதில், நித்யஸுகஸம்பவஜ்ஞாநத்திற்கு ப்ரம்ம விசாரத்தின் உபயோக மானது நித்யமான பலத்தைககொடுப்பதில் இச்சையினடியாக என்று சொல்லத்தக்கது. சாஸ்திராந்தரங்களிலும் கர்மகாண்டத்திலும் நிதயபல ஸம்பா வனைக்கு நிவாரகமொன்றுமில்லாமையால், நித்யா நித்ய விவேகம் வந்தவுடன் அவை களும் ஆரம்பிக்கத்தக்கதாக ஆகும். அவைகளிலன்றோ நித்யமான பலம் அறியப்படுகி றது. அது அஸத்தென்று சொல்லப்படுமேயாகில், அந்த அஸத்வமானது அப்ராமாண் யத்தாலாவது § அந்யபரத்தாலாவது இருககவேண்டும். அவைகள் இரண்டும் கர்மமீமாம் ஸை இல்லாவிடில் ஸிததிக்கிறதில்லை என்பதினால் அந்த கர்மமீமாம்ஸைக்கு பூர்வவ்ருத் தத்வம் ஒப்புக்கொள்ளத்தககது. முதல் ஸூத்ரமானது அதைத்தெரிவிப்பதில் நோக குள்ளதென்று சொல்லப்படுமேயாகில் அல்ல,—அதற்கு ஸ்வசாஸ்திராரம்பத்திற்கு யுக்த மான விஷயப்ரயோஜநபரதவமிருப்பதால், சாஸ்திரங்களைககுறித்து அப்ராமண்யாதி ப்ரதிபாதந பரத்வ மில்லாமையால. ஸ்வார்த்தோபயோகியாக இருப்பதால் அதற்கு அப்ராமாண்யம் முதலியது அபிப்ராயப்பட்டிருக்கிறதென்று கொள்ளில், அப்பொழுது அதற்கு ஸ்வோபஜீவ்யஜ்ஞாநம் அபேக்ஷிதமாதலால் கர்மவிசாரத்திற்கும், தர்க்கபாதத் திற்கும் பூர்வவ்ருத்தத்வம் ஏற்படவேண்டியதாக வரும்.

சாஸ்திராந்தராப்ராமாண்யமோவென்றால் கர்மமீமாம்ஸையின் முதல் பாதத்தால் நிச் சயிக்கத்தக்கது, அந்யபரத்வம் வாக்யாந்தரவிரோதம் முதலியவைகளால் நித்யபலத்தின் அவிவக்ஷாத்யவஸாயமும் அந்த இடத்திலுள்ள ந்யாய நிநமாக இருக்கிறது. சாஸ்திராந் தரப்ரமேயத்தின் நிலைகுலைதல் தர்க்கபாதத்தில் காண்பிக்கப்படும். மேலும். முதல் ஸூத்ரத்திலேயே சாஸ்திராந்தரத்திலுள்ள நித்யபலத்தின் அஸத்வமறியப்படுமேயாகில் அந்யோந்யாச்ரயதோஷம் வருகிறது. இப்படியாகில் தர்ம ஜிஜ்ஞாஸா ஸூத்ரத்திலும் அந் யோந்யாச்ரயம் வருமென்று சங்கிக்கத்தக்கதல்ல. பிதாமுதலியவர்களுடைய ப்ரேரணையால் ஸாங்காத்யயநம் செய்த புருஷனுக்கு ப்ரயோஜநமாயுள்ள அர்த்தத்தின் ஆபாதப்ரதீதியினு லேயே ப்ரவ்ருத்திக்கு உபபத்தி இருப்பதால், எவர்களுக்கு தர்மவிசாரம் வைதமோ அவர் களுக்கேதான் அந்யோந்யாச்ரயம். வைதத்வஜ்ஞாநத்தால் விசாரம், விசாரத்தால் வைதத்வ ஞாநமென்று. மேலும், அநித்யபலஹேயதா ஜ்ஞாநத்திற்கு ப்ரம்மவிசாரோபயோகம் சொல்லத்தக்கது.

§ அந்யபரத்வம்—வேறு ஒன்றில் நோக்குள்ளதாக இருத்தல்.

ஸ்வர்கம்முதலிய பலத்திற்கு அநித்யத்வமும், துக்கத்துடன் சேர்ந்திருத்தலும் எவ்வண்ணம் அறியப்படுகிறது.?

சாஸ்திராந்தரத்தினுலென்றால், அதனுலேயே நித்யபுருஷார்த்தம் ஸித்திப்பதால், ஆகாங்க்ஷை இல்லாதபோது ப்ரம்மவிசாரத்தில் ப்ரவ்ருத்தி உண்டாகாது. ஆகையால், அதற்கு பூர்வவ்ருத்தத்வம் உபபந்நமாகாது.எது சுகமோ அது அநித்யமென்று தன்னுல் உத்ப்ரேக்ஷிக்கப்பட்டிருக்கிற தர்க்கமாத்ரத்தினுலென்றால், அதனுலேயே நிரஸ்தமான நித்ய புருஷார்த்த ஸம்பாவனையுடன் கூடி இருந்தால். ப்ரம்மவிசாரம் ப்ரதிபந்திக்கப்படும். துக்க நிவ்ருத்திக்கு முடிவு இல்லாமையாலும், ஸ்வாபாவிகமான ஸுகமானது அநாதியாக இருப்பதாலும், அந்தமில்லை என்பது பொருந்துவதாலும்நித்யபுருஷார்த்த ஸம்பாவனை இல்லை எனில், அல்ல—வேதாந்தச்ரவணத்தை முன்னிட்டு வ்யாப்தி நிச்சயம். அதை முன்னிட்டு வேதாந்தச்ரவணம் என்று அந்யோந்யாச்ரயதோஷம் ப்ரஸங்கிப்பதால்.

ஆகையால்,ப்ரஹ்மவிசாரத்தைக்குறித்து நித்யாநித்யங்களிலுள்ள தர்ம விவேகோபயோகத்திற்காக நித்யாநித்யவிவேகத்தில் பரத்பக்ஷம் ப்ரவ்ருத்தியாதலாலும்,தர்க்கம் அதிப்ரஸக்தமாவதாலும் சாஸ்த்ராந்தரங்கள் ப்ரம்மவிசாரத்தில் அநாகாங்க்ஷையை உண்டுபண்ணுவதாலும், அதின் விரோதத்தால் உபயோகமில்லாமையாலும், வேதமே ப்ரமாணமாக ஆச்ரயிக்கத்தக்கது. அதில் ஆபாதப்ரதீதியானது இரண்டு பாகங்களுக்கும் ஸாதாரணமாக இருப்பதாலும், நித்யாநித்ய நிச்சயமானது இரண்டு மீமாம்ஸைகளின் பலமாக இருப்பதுபற்றி அந்யோந்யாச்ரயம் எவ்விதத்தினுலும் தாண்டமுடியாததாக இருப்பதாலும், நித்யாநித்யங்களை அடைந்திருக்கிற ஹேயோபாதேயத்வஜ்ஞாநம் நித்யாநித்யவஸ்துவிவேகமென்பது யுக்தமன்று.

வேறு சாஸ்திரங்களில் நித்யபலஸம்பாவனைக்கு நிவாரகமில்லாமையால் நித்யாநித்யவிவேகம் முதலியதை உடையவனுக்கு அவைகளிலும் ப்ரவ்ருத்திவரக்கூடுமென்று எது சொல்லப்பட்டதோ, அது சரியல்ல,—முதல் ஸூத்ரம் சாஸ்த்ராந்தரங்களுக்கு நிவாரகமாதலால், ப்ரம்மமே ஜிஜ்ஞாஸ்யம், ப்ரக்ருதி புருஷர்களல்லவென்றல்லவோ ஸூத்ரார்த்தம்—என்று சொல்வது யுக்தமாகாது,—ஸாதநசதுஷ்டயத்துக்கு பூர்வவ்ருத்தத்தைச்சொல்லுகிறவர்களால் இந்த அர்த்தம் அங்கீகரிக்கப்பட்டிராததால். தாபத்ரயஜ்ஞாநத்திற்கு பூர்வவ்ருத்தத்வவாதிகளால் இந்த அர்த்தம் கூறப்பட்டிருக்கிறது. இந்த அர்த்தமும் உபபந்நமாகாது. தயாஹி—எனெனில். நிச்சயமாக இந்த அர்த்தமானது ஸூத்ரகாரரால் உபதேசிக்கப்படவுமில்லை.—ஆனுல் ஸூத்ரங்கள் ந்யாயநிபந்தனமாதலால், உபபாதிக்கப்படுகிறதென்று சொல்லத்தக்கது. உபபத்தியும் சாஸ்த்ராந்தர தௌர்பல்யமேயா? அல்லது ஸ்வசாஸ்த்ரப்ராபல்யமேயா? அல்லது ஸமுச்சிதமான இரண்டுமேயா? இவற்றுள் முதலாவது பொருந்தாது ஸ்வசாஸ்திரத்துக்கு (வேதத்திற்கு) தௌர்பல்யம் வரின் ப்ரம்மத்துக்குங்கூட அறியவேண்டுமென்கிற இச்சாவிஷயத்வமில்லாமல் போவதால் இரண்டாவது சரியல்ல.

சாஸ்த்ராந்தரங்களுக்கு ப்ராபல்யம் உண்டாயின், ப்ரம்மத்துக்கே ஜிஜ்ஞாஸ்யத்வம் ஸித்தியாமல் மூன்றுவதில் ஸூத்திரத்துக்கு வையர்த்யம் வருகிறது,—பூர்வமீமாம்ஸையிலேயே சோதநாஸூத்ரம் முதலியவைகளால் அவை இரண்டும் ஸித்திப்பதால் அவச்யம் பேக்ஷிக்கப்பட்டிருப்பதால். அதனுலேயே அதற்கு பூர்வவ்ருத்தத்வாபத்தியும் ஸித்திக்கிறது. வேதப்ராமாண்யம்மாத்ரம் ஸித்தித்தபோதிலும் அவ்வளவு மாத்ரத்தினுல் ப்ரம்மத்தினிடத்தில் ப்ராமாண்யம் ஸித்தியாதென்றால்—அங்ஙனமாகில், எந்த ஹேதுக்களால் உன

கு ப்ரம்மத்தினிடத்தில் ப்ராமாண்யாஸம்பவ சங்கைகள் பரிஹரிக்கத்தக்கவைகளோ, அவைகளும் ஸித்தவஸ்துவில் வ்யுத்பத்யநுபபத்தி முதலியவை கொன்று அவைகளின் பரிஹாரத்தால் ப்ரம்மத்தினிடத்தில் வேதார்த்தப்ராமாண்ய ஸ்மார்த்தபரத்வம் அங்கீகரிக்கில் நம்முடைய பக்ஷமே ஏற்றுக்கொள்ளப்பட்டதாக ஆகும். அதனாலேயே மூன்று துக்கங்களின் * அபிகாதஜ்ஞாநத்திற்கு பூர்வவ்ருத்தத்வமும் நிரஸிக்கப்பட்டது.

நிரஸநப்ரகாரம் காட்டப்படுகிறது. ஐஹிகதுக்க ஜ்ஞாநமா பூர்வவ்ருத்தமா? அல்லது, நாரகதுக்கஜ்ஞாநமா? அல்லது, ஸ்வர்கமமுதலியது அல்பமாயும் அஸ்திரமாயு மிருப்பதால் தாபத்ரயாந்தர்கதத்வஜ்ஞாநமா? முதலாவதல்ல,—ஆயுர்வேதம் முதலியவைகளால் அவைகளின் நிரஸநோபாயமறியப்படுவதால். வேதாந்த விசாரத்துக்கு நைரபேக்ஷ்யம் வருவதால் இரண்டாவதுமல்ல,—நரகதுக்கத்துக்குக் காரணமான பாபங்களைப் போக்கடிக்கிற வ்ரதநியமங்களை விதிக்கிற சாஸ்திரங்கள்தான் அநேகமாக இருப்பதால் வேதாந்தத்திற்கு நைரபேக்ஷ்யம் வருவதால். மூன்றாவதிலோவென்றால் கர்மவிசாராபேக்ஷை நிசசயமாக உண்டாகலாம்,—முதலிலேயே அத்யயநவிதிவசயனுக்கு சாஸ்த்ராந்தரங்களை அறிவதற்குப் போதுமான ஸமயமில்லாமையாலும், அவஸரமிருந்தபோதிலும் ஸ்வாகாதிகளுக்கு அல்பாஸ்திரத்வஜ்ஞாநமாகிற பூர்வவ்ருத்தத்வம கூடாததாலும் ஆபாதப்ரதீதியும், இதிஹாஸ புராணங்களும் அல்பாஸ்திரத்வாநந்தஸ்திரத் வவிபர்யயப்ரதீதிக்கு ஹேதுவாக இருப்பதாலும்.

---

ஶாஷ்யம்:—

𑌏𑌷𑌾𑌂 𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌞𑍍𑌚 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑌵𑌸𑍇𑌯𑌮𑍍। 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌭𑌿𑌃। 𑌸 𑌚 𑌤𑌾𑌰𑍍𑌤𑍀𑌯𑌃 𑌉𑌦𑍍𑌗𑍀𑌥𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌨𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌣𑍀𑌤𑍀𑌹𑍈𑌵 𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑍀𑌯𑌾𑌨𑌿। 𑌤𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌨𑌭𑌿𑌸𑌂𑌹𑌿𑌤𑌫𑌲𑌾𑌨𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑌾𑌨𑍀𑌤𑌿 [illegible] 𑌏𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌿। 𑌤𑍇𑌷𑌾𑌞𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌧𑌿𑌗𑌮𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑌮𑍍𑌮𑌤𑌾

---

இவைகளுக்கு ஸாதநத்வமானது விநியோகத்தால் நிச்சயிக்கத்தக்கது. விநியோகமும் ச்ருதிலிங்கம் முதலியவைகளால். அதுவோ பூர்வமீமாம்ஸையின் மூன்றாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

உத்கீதம் முதலியவைகளின் உபாஸநங்கள் கர்மத்திற்கு ஸம்ருத்தியை விளைவிக்கக்கூடியவைகளாக இருந்தபோதிலும் ப்ரம்மத்யாநரூபங்களாக இருப்பதால் ப்ரம்மஜ்ஞாநஸாபேக்ஷங்களென்று இங்கேயே சிந்திக்கத்தக்கவைகள். பலத்தைக் கருதாமல் அநுஷ்டிக்கப்பட்டிருக்கிற அக்கர்மங்களும் ப்ரம்மவித்யோத்பாதகங்க

* அபிகாதம்—ஹிம்ஸை.

**ளாக இருப்பதால் அதற்கு சீக்கிரபலப்ரதத்வத்தை உண்டுபண்ணு கிற இந்த உத்கீதாத்யுபாஸநங்கள் இங்கேயே மிக்க பொருத்த முள்ளவைகள். அவைகளுக்கு கர்ம ஸ்வரூபஜ்ஞாநாபேக்ஷயா னது எல்லோருக்கும் ஸம்மதமானது.**

ச்ருதப்ரகாசிகை:—

முன்பு வ்யாக்யேயஸ்வபாவத்தால் கர்மநியமம் கூறப்பட்டது. வ்யாக்யாநஸ்வபாவத் தாலும் அதன் ஸித்தி இப்போது கூறப்படுகிறது—ஏஷாம்—என்று. ஏஷாம்—சமாதி களுக்கு ஸாதநத்வம். சகாரம் ஸமுச்சயத்தில். 'விநியோகாவஸேயம்' விநியோகமாவது அங் கத்வஜ்ஞாபநம். அதனுலென்னவென்றால் கூறுகிறார்—'விநியோகாச்ச' என்று. அத னுலுமென்னவென்றால் கூறுகிறார்—'ஸ ச தார்த்தீய:' என்று. மூன்றாவது அத்யாயத் தில் சொல்லப்பட்டது என்று அர்த்தம். இது நிதர்சநார்த்தமாக சொல்லப்பட்டது.

ப்ரம்மவிசாரமானது கர்மவிசாரத்தில் சொல்லப்பட்ட எல்லா ந்யாயங்களையும் அபே க்ஷித்திருப்பதால் இவைகளன்றோ கர்மமீமாம்ஸாத்யாயங்களின் ப்ரமேயங்கள்.

முதலத்யாயத்தில்—ப்ரமாணலக்ஷணம் சொல்லப்பட்டது.

இரண்டாவது அத்யாயத்தில்—சாஸ்திரபேதம், கர்மபேதம், . பேதத்திற்கு ஹேதுக் களும் சப்தாந்தராப்யாஸ ஸங்க்யாகுண ப்ரக்ரியாநாமதேயங்கள்.

மூன்றாவதில்—அங்கநிரூபணம். ச்ருதி, லிங்க, வாக்ய, ப்ரகரண, ஸ்தாந, ஸமாக்யா நங்கள் அங்கத்வஜ்ஞாபகப்ரமாணங்கள்.

நான்காவதில்—க்ரத்வர்த்தபுருஷார்த்தங்களுடைய பேதநிரூபணத்தால் புருஷார்த் தங்களால் க்ரத்வர்த்தங்களுக்கு யுக்தியானது நிரூபிக்கப்பட்டது.

ஐந்தாவதில்—க்ரமம், ச்ருத்யர்த்த பாட ப்ரவ்ருத்தி முக்ய காண்டங்கள், கர்மப்ர மாணங்கள்.

ஆறாவதில்—அதிகாரி நிரூபணம்.

ஏழாவதில்—ஸாமாந்யாதிதேசம் நிரூபிக்கப்பட்டது.

எட்டாவதில்—விசேஷாதிதேசம்.

ஒன்பதாவதில்—ஊஹம்.

பத்தாவதில்—பாதம். பதினொன்று, பன்னிரண்டுகளில்—தந்த்ரப்ரஸங்கங்கள் இவ்வாறே சொல்லப்பட்டிருக்கிறது.—

'தர்மதீமாநபேதாங்க ப்ரயுக்தி க்ரமகர்த்ருபி: ஸாதிதேச விசேஷோஹ பாத தந்த்ர ப்ரஸக்திபி:' என்று. இந்த ந்யாயங்களின் அபேக்ஷையும், ஸங்கர்ஷ காண்டாபேக்ஷையும் ப்ரம்மவிசாரத்தில ஆங்காங்கு காணத்தக்கது. ஆகையால், 'ஸ ச தார்தீய:' என்பது ப்ர தர்சநார்த்தம் சொல்லப்பட்டது. பிறகு கர்மவிசாராபேக்ஷையில் உபயுக்தியானது கூறப் படுகிறது. 'உதகீதாதி' என்று வேறு ஒன்றோடு ப்ரஸங்கத்தால் வரும் ஸங்கதி கூறப் பட்டது.

இந்த இடத்திலோவென்றால் ஸாக்ஷாத் ஸங்கதி . உபபாதிக்கப்படுகிறது. 'கர்ம ஸம் ருத்யர்த்தாநபி':—என்று 'கர்மஸம்ருத்யர்த்தத்வே தத்ப்ரயோஜநம் தந்நி।வசநாத்' என்கிற

வாக்யகாரவசநம் ஸ்மரிப்பிக்கப்பட்டது. 'ப்ரம்மத்ருஷ்டிரூபாணி' என்று ப்ரம்மமல்லாத வஸ்துவினிடத்தில் ப்ரம்மத்வேந த்ருஷ்டி தான் ப்ரம்மதிருஷ்டி. ப்ரம்மதிருஷ்டிரூபமாக இருப்பதால் ப்ரம்மஜ்ஞாந ஸாபேக்ஷங்களென்று அர்த்தம். 'இதி' என்பது ஹேதுவில் 'இஹைவ சிந்தநீயாநி' கர்மவிசாரத்தில கூடாது. 'தாந்யபிகர்மாணி' உத்கீதம் முதலியவற்றின் உபாஸநங்கள் எவைகளின் ஸம்ருதியை உத்தேசிக்கின்றனவோ அவைகளுமென்று அர்த்தம். 'அநபிஸம்ஹித பலாநி' அநபிஸம்ஹிதபலமாக இருப்பதால ப்ரம்மவித்யைக்கு உத்பாதகங்கள் என்று அர்த்தம்.

'இதி' சப்தம் ஹேதுவில். 'ததஸாத்குண்யாபாதநாநி' ஸாத்குண்யமாவது ப்ரபல ப்ரதிபந்தகமிருக்கும்போதே சீக்ரமாக பலத்தைக்கொடுக்கும் தன்மை, அதை உண்டு பண்ணுகின்றன. ப்ரம்மவித்யையை விரைவாக ஸம்பாதிக்கின்றனவென்று பொருள். 'ஏதாநி' உத்கீதாத்யுபாஸநங்கள். ஆதலால், 'இங்கேயே மிகவும பொருத்தமுள்ளவைகள். ப்ரஸங்காத் ஸங்கதியாவது முக்யவிஷயத்திற்கு உபயோகியாக இல்லாமையால் ஒற்றுமை முதலியதால் புத்தியிலூன்றியிருக்கும் தன்மை ப்ராஸங்கிகஸங்கதி. இரண்டிலொன்றின் அபேக்ஷையிலாவது, இரண்டின் அபேக்ஷையிலாவது உண்டாகிற சங்கதி ஸாக்ஷாத ஸங்கதி. இங்கேயோவென்றால் இரண்டும் அபேக்ஷிதங்களென்று ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. 'ப்ரம்மத்ருஷ்டிரூபாணி' என்று உத்கீதாத்யுபாஸநங்களுக்கு ப்ரம்மஜ்ஞாநாபேக்ஷை சொல்லப்பட்டது. 'ப்ரம்மவித்யோத்பாதகாநி' என்று ப்ரம்மஜ்ஞாநத்துக்கு உத்கீதம் முதலியவற்றின் உபாஸநாபேக்ஷை சொல்லப்பட்டது. இந்த அபிப்ராயத்தால் 'ஸூதராம்' என்று கூறப்பட்டது 'இஹைவ'—என்று உபாயாபேக்ஷை இங்கேயே, இருப்பதால் இந்த இடத்திலேயே மிகவும் பொருத்தமுள்ள ஸங்கதி கர்மவிசாரத்திலில்லை என்று அர்த்தம்.

எவ்வாறு உத்கீதாதி விசாரத்திற்கு ப்ரம்மவிசாரத்திலேயே மிகவும் பொருத்தமுள்ள ஸங்கதி? கர்மவிசாரத்திலும ஸூதராம் ஸங்கதி இருக்கிறது. உபாயாபேக்ஷையினால் ஸங்கதியன்றோ ஸூதராம் ஸங்கதி. உத்கீதாதி புத்திகள கர்மத்திற்கு அங்கங்களாயும் ஆச்ரயித்திருப்பதால் அந்த விசாரத்திற்கு கர்மாபேக்ஷை இருக்கிறது. கர்மங்களுக்கும் ஸ்வ ஸம்ருத்யர்த்தமாக உத்கீதாத்யுபாஸநாபேக்ஷை இருக்கிறதென்று உபாயாபேக்ஷை இருப்பதால்—எனில், உத்தரம் சொல்லப்படுகிறது.

கர்ம ஸம்ருத்யர்த்தங்களான உத்கீதாத்யுபாஸநங்களின் அபேக்ஷை கேவலகர்மங்களுக்கும், வித்யாங்கங்களான கர்மங்களுக்கும் துல்யை, ஆதலால், கர்மஸம்ருத்யர்த்தத்வ ஹேது பொதுவானது,கர்மாங்காச்ரயத்வமானது பூர்வபாக விசாரஸங்கதிக்கு அஸாதாரண ஹேது, ப்ரம்மஜிஜ்ஞாஸாபேக்ஷத்வம் உத்தரபாகவிசாரஸங்கதிக்கு அஸாதாரணஹேது. இவ்வண்ணம் ஸாதாரணாஸாதாரணங்களான இரண்டு ஹேதுக்களுடன் கூடியிருத்தல் ஸமானமாக இருந்தபோதிலும்,ப்ரும்மத்ருஷ்டி ரூபோத்கீதாத்யுபாஸனங்கள் ப்ரம்மஜ்ஞான ஸாபேக்ஷமாக இருப்பதால் அதில்லாவிடில் அவைகளைச்சிந்திப்பது பூர்வபாக விசாரத்தில் அசக்யம். கர்ம விசாரத்திற்குமுன் ப்ரம்மசவிசாரம் உபபன்னமாகிறதில்லையன்றோ,—அவ்விரண்டும் முன்சொல்லப்பட்ட ஸங்கதிவிசேஷங்களோடு கூடியிருப்பதால். உத்தரபாகத்திலோவென்றால் ப்ரம்மஜ்ஞானமாகிறது சுலபமாதலால் கர்மவிசாரஞ்செய்திருப்பவனுக்கு † உத்கீதாத்யுபாஸனசிந்தனம்செய்வது சகயமாகும். அதினாலேயே சக்யமாயிருப்பதால் உத

† உத்கீதம்—ஸாமாவின் ஓர்பாகம். பாகத்தை பக்தி என்று சொல்வார்கள். ஐந்து விதமான பக்திகளில் உத்கீதமென்கிற இரண்டாவது பக்தியானது ப்ரணவபூர்வக கானம் செய்யப்படுகிறது.

கீதாத்யுபாஸனங்கள் உபநிஷத்பாகத்தில் விதிக்கப்பட்டன. அதினாலேயே ப்ரம்மமீமாம்ஸையில் நிரூபிக்கப்பட்டிருப்பதும். இவ்வண்ணமாக வேதாந்தபாகவிஹிதத்வமும், ப்ரஹ்மமீமாம்ஸாவிசாரத்வமும, சக்யத்வரூபமுமான மூன்று வைஷம்யங்களால் விசேஷிக்கப்பட்டுள்ள உபயாபேக்ஷயானது உத்தரபாகத்திலேயே இருப்பதால் அதை ஹேதுவாகக் கொண்டது ஸூத்ராம் ஸங்கதியானது அந்த இடத்திலேயே என்கிற அபிப்ராயத்தால் ''ஸூத்ராமிஹைவ ஸங்கதாநி'' என்று உரைக்கப்பட்டது. அப்ரதானமான அர்த்தத்துக்கும் ஸாக்ஷாத் ஸங்கதி இருப்பதால் அதற்கும் கர்மவிசாரம் அவச்யாபேக்ஷிதமேயென்பது யாதொன்றுண்டோ இதுவும் அப்யுச்சயமான ஹேது ப்ரதாநஹேது தவராமல் அபேக்ஷிக்கப்பட்டிருத்தல் என்கிறது முன்சொல்லப்பட்டது.

அதனால் ப்ருக்ருதாநந்தர்யத்திற்கு என்ன ப்ரயோஜனமென்றால் சொல்லுகிறார 'தேஷாஞ்ச' என்று. 'தேஷாம்' உத்கீதாத்யுபாஸநங்களுக்கு. 'ஸர்வஸம்மதா' அவைகளுக்கு ஸாக்ஷாத் ஸங்கதத்வம் சொல்லப்பட்டாலன்றோ நிந்தை. உத்கீதாத்யுபாஸநம் சிந்திக்கத்தக்கதாக இருக்கும் தருணத்தில் அதற்கு கர்மஜ்ஞாநாபேக்ஷை எல்லோராலும் நிந்திக்கப்படாதது. வேதாந்தாத்யயனம் செய்தவனுக்கு கர்மஜ்ஞாநாபேக்ஷை இல்லையென்று எது சொல்லப்பட்டதோ அது யுக்தமன்று,—வேதாந்தஙகளிலும் உபாயபரமும் முக்திபரமுமாயுள்ள வாக்யமாத்ரத்தை அத்யயநம் செய்த புருஷனுக்கு, ப்ரஹ்மவிசாரத்திலும் மூன்றுவது, நான்காவது அத்யாயங்களில் மாத்ரம் ச்ரவணம் ப்ரஸங்கிப்பதால். மூன்றுவது, நான்காவது அத்யாயங்கள் இரண்டுக்கும் முதல் இரண்டு அத்யாயத்திலும் சொல்லப்பட்ட ந்யாயாபேக்ஷயிருக்கிறதென்றால்—அங்ஙனமாகில், ப்ரம்மவிசாரம் முழுவதும் கர்மவிசாரந்யாயஸாபேக்ஷமாதலால் அதற்கே பூர்வவ்ருத்தத்வம் ஜந்மாந்தரஸுக்ருதவிசேஷத்தால் ஏதோ ஒருவனுக்கு ப்ரம்மவிசாரமாத்ராபேக்ஷை என்று சொன்னால், அவனுக்கு ஸுக்ருதவிசேஷத்தால் மூன்றுவது, நான்காவது அத்யாயமாத்ராபேக்ஷை ஏன் உண்டாகக்கூடாது. அன்றிக்கே புண்யாதிக்யத்தால் ஸமஸ்தப்ரம்மவிசாரநிரபேக்ஷை ஏன் உண்டாகக்கூடாது? மேலும், வேதாந்தங்களில் உபாயபலபரவாக்ய மாத்ராத்யயநம் அசாஸ்த்ரீயமென்று உன்னாலும் சொல்லத்தக்கது. அது வேதாந்தமாத்ராத்யயநத்திற்கும் துல்யம்,—ஸம்பூர்ணமானது விதிக்கப்பட்டிருப்பதால். ஆகையால், விதியை அதிலங்கநம் செய்பவர்களுக்கு எது அபேக்ஷிதமோ அதுவே பூர்வவ்ருத்தமென்பது அஸங்கதம். முழுமையும் அத்யயநம் செய்தவனுக்கும் ஸுக்ருதவசத்தால் ஏதோ ஒரு சமயத்தில் ச்ரவணாபேக்ஷை ஸம்பவிக்கலாமென்றால் முன்பே உத்தரம் சொல்லப்பட்டிருக்கிறது.

'விரோதாதப்ரமாணத்வாத்'' இது முதலிய க்ரந்தத்தால் ஸங்க்ரஹிக்கப்பட்டிருக்கிற தூஷணங்கள் 'அத்ரோச்யதே' இது முதலான விஸ்தார்த பாஷ்யத்தினால் பரிஹரிக்கப்பட்டன. அந்த பரிஹார ப்ரகாரங்களாவன—கர்மங்கள் அநித்யபலத்தைக்கொடுப்பதால் விரோதமென்பது அநபிஸம்ஹிதபலத்துடன் கூடி இருப்பதால் பரிஹரிக்கப்பட்டது. பேதவாஸனையை உண்டுபண்ணுவதால் ஐக்யஜ்ஞான விரோதமும் 'ப்ருதகாத்மாநம்' என்று ப்ருதக்த்வ ஜ்ஞானத்திற்கு மோக்ஷோபாயத்வ ச்ருதியினால் பரிஹரிக்கப்பட்டது. இந்த விரோதம் இனி சொல்லப்படும் வஸ்து ஸாமர்த்யத்தில் அந்தர்பூதமானது. மோக்ஷத்திற்கு ஸகலபேத தர்சந நிவ்ருத்திரூபதையானது ப்ரபஞ்ச மித்யாத்வோபாதாநஸாபேக்ஷமாக இருப்பதால், 'ஐக்யஜ்ஞாநத்திற்கு உபாயத்வமிருந்தபோதிலும் கர்மங்களுக்கு அத்ருஷ்ட த்வாரத்தினால் உபயோகமிருப்பதால் விரோதமில்லை. அப்ரமாணத்வமானது 'க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம் வரிஷ்ட:'—இது முதலிய ஸம்ப்ரத்யயமில்லாத விநியோஜகப்ரமாணங்களால் பரிஹரிக்கப்பட்டது. விவிதிஷார்த்தமான சித்தசுத்தியின் உபயோ

கமோ வேதநோத்பத்திக்கு உபயுக்தமான மனத்தெளிவுக்கு காரணத்வத்தை உபபாதநம் செய்ததினால் விவிதிஷார்தத்வமிருந்தபோதிலும் அதற்கு தினந்தோறும் உத்பத்யபேக்ஷையின் உபபாதனத்தாலும் மறுமொழி கூறப்பட்டது. ஞாநமாத்ரத்திற்கு ஹேதுத்வச்ரவணமும் ஸாதநத்வத்தை ஒப்புக்கொள்ளாமையால் உத்தரமளிக்கப்பட்டது. ஸாமர்த்யமாவது மித்யாபூதமான சப்தத்திற்கு ஜ்ஞாநத்தினாலேயே நிவர்த்திக்கத்தக்க தன்மையாகிற வஸ்துஸாமர்த்யம். அதற்கு ப்ரபஞ்சத்தின் மித்யாத்வத்தை தூஷிப்பதால் மறுமொழி உரைக்கப்பட்டதாக ஆகப்போகிறது. சமாதிகள் அங்கங்களென்று சொல்லுகிற ச்ருதியில் உண்டான விரோதமும் ப்ரவ்ருத்திரூபமான யஜ்ஞாதிகளுக்கும், நிவ்ருத்திரூபமான சமாதிகளுக்கும் விஷயபேதத்தால் விரோதமில்லாதது பற்றி பரிஹரிக்கப்பட்டது. சமாதிகளோவென்றால் அவிஹிதமாயும், அப்ரதிஷித்தமாயும், நிஷித்தகாம்யமாயுமுள்ள விஷயங்களென்று கூறப்பட்டது. வாக்யார்த்தஜ்ஞாநத்திற்கே மோக்ஷோபாயத்வம் ப்ரத்யக்ஷவிரோத, சாஸ்த்ரவிரோதங்களால் நிரஸிக்கப்பட்டது. அதில் நிவ்ருத்திக்கப்படுகிற வாஸனைக்கு நிவர்த்தகமும் உத்பத்திப்ரதிபந்தகத்வமுமில்லாமையாலும் ச்ரவணம்முதலியவற்றிற்கு பேதவாஸனையைப் போக்கடிக்கும் விஷயத்தில் அபேக்ஷை இல்லாமையாலும், அதின் வையர்த்யபரிஹாரம் அநுபபன்னமாதலாலும ச்ரவணம் முதலியதால் க்ரமமாக எழுந்து ப்ரகாசிக்கின்ற வாக்யஜந்யஞாநம் விரோசகம் என்பதும் நிரஸிக்கப்பட்டது.

லகுஸித்தாந்தம்

ஸம்பூர்ணம்.



ஶ்ரீ: ||

## மஹாபூர்வபக்ஷ: ||

யதப்யாஹு: — நிர்விஶேஷ விஶேஷ ப்ரத்யநீக சிந்மாத்ரம் ப்ரஹ்மைவ பரமார்த்த:, தததிரிக்தநாநாவிதஜ்ஞாத்ருஜ்ஞேயதத்க்ருதஜ்ஞாநபேதாதி ஸர்வம் தஸ்மிந்நேவ பரிகல்பிதம் மித்யாபூதம். ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் (சா-௬-௨-௧) அத பரா யயா ததக்ஷரமதிகம்யதே யத்ததத்ரேஶ்யமக்ராஹ்யமகோத்ரமவர்ணமசக்ஷு:ஶ்ரோத்ரம் ததபாணிபாதம் நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம் ததவ்யயம் யத்பூதயோநிம் பரிபஶ்யந்தி தீரா: (மு-௧-௧-௬) ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தை-ஆ-௧-௧) நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம் (ஶ்வே-௬-௧௯) யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:। அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் (கே-௨-௩) ந த்ருஷ்டேர்த்ரஷ்டாரம் பஶ்யே: ந மதேர்மந்தாரம் மந்வீதா: (ப்ரு-௫-௪-௨) ஆநந்தோ ப்ரஹ்ம (தை-ப்ரு-௬) இதம் ஸர்வம் யதயமாத்மா (ப்ரு-௪-௪-௬) நேஹ நாநாஸ்தி கிஞ்சந। ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி (ப்ரு-௬-௪-௧௯) யத்ர ஹி த்வைதமிவ பவதி ததிதர இதரம் பஶ்யதி யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத்கேந கம் பஶ்யேத் தத்கேந கம் விஜாநீயாத் (ப்ரு-௪-௪-௧௪) வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் (சா-௬-௧-௪) யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதரமந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி (தை-ஆ-௭-௨) ந ஸ்தாநதோऽபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி (ஶா-ஸூ-௩-௨-௧௧) மாயாமாத்ரம் து கார்த்ஸ்ந்யேநாநபிவ்யக்தஸ்வரூபத்வாத் (ஶா-ஸூ-௩-௨-௩)

---

ஸ்ரீபாஷ்யம்:—

(ஜ்ஞாத்ரு ஜ்ஞேயம் முதலிய) எல்லா விசேஷங்களுக்கும் ப்ரத்யநீகமாய் சின்மாத்ரமாக விருக்கிற ப்ரஹ்மமே ஸத்யம். அதைத்தவிர்ந்து அந்த பரப்ரஹ்மத்தினிடத்திலேயே ஏற்படப்பட்டிருக்கிற நாநாவிதமான ஜ்ஞாத்ரு ஜ்ஞேயங்கள், அவைகளாலுண்டான ஜ்ஞாநபேதம் முதலியவனைத்தும் மித்யாபூதம். "ஸோமபானம் பண்ணததகுதியுள்ளவனே! இது (ஸ்ருஷ்டிக்கு) முந்தினகாலத்தில் (ப்ரளயகாலத்தில்) இரண்டாவதின்றிக்கே ஒன்றுமாத்திரம் ஸத்ரூபமாகவேயிருந்தது"; "அதற்குமேல் பரவித்யை-எந்த பரவித்யையினால் அழிவற்றதான அந்தப்ரஹ்மம் அறியப்படுகிறதோ, எது கண்ணால் காணவும் மற்ற இந்திரியங்களால் க்ரஹிக்கவும் ஆகாததோ; பெயரும் நிறமுமில்லாததோ; கண் காது, கை கால்களில்லாததோ; நித்யமாயும், விபுவாயும், எங்

கும் நிலை பெற்றதாயும், மிக்கஸூக்ஷ்மமாயும், அறிவற்றதாயும் இருக்கிறதோ; பூதங்களுக்குக்காரணமான அந்தப்ரஹ்மத்தை ஜ்ஞானிகள் ஸாக்ஷாத்கரிக்கிறார்கள்"; "ப்ரஹ்மமானது ஸத்யமாயும், ஜ்ஞானமாயும் அநந்தமாயும் இருக்கிறது"; "அது, அவயவமில்லாததாயும், செய்கையற்றதாயும், சாந்தமாயும், கர்மஸம்பந்தமும், அதன் பயனும் அற்றதாயும் இருக்கிறது"; "(ச்ரவணமநநாதிகளால்) அறியமுடியாததென்று இந்தப்ரஹ்மத்தை எவன் எண்ணுகிறானோ அவனால்தான் இது அறியப்படுகிறது எவன் இது, (ச்ரவணாதிகளால்) அறியத்தக்கதென்று எண்ணுகிறானோ அவனிதையறியான்"; "அறிந்துவிட்டோமென்றுஎண்ணுகிறவர்களுக்கு அந்தப்ரஹ்மம் அறியப்படாததாகவும், அறியத்திறமை இல்லையென்றெண்ணுகிறவர்களுக்கு அறியப்பட்டதாகவும் ஆகிறது"; த்ருஷ்டியைத்தவிர வேறான த்ரஷ்டா இருக்கிறானென்றெண்ணாதே. மதியைத்தவிர வேறான மந்தாவிருக்கிறானென்றெண்ணாதே"; "ஆனந்தரூபம் ப்ரஹ்மம்"; "இவையனைத்தும் இந்த ஆத்மாவே"; "இவ்வுலகில் ஆத்மாவைத்தவிர வேறு நாநாவிதமாயுள்ளதொன்றும் கிடையாது"; "இவ்வுலகில் எவன் ப்ரஹ்மத்தைத்தவிர வேறுவஸ்துக்களிருப்பதுபோலப் பார்க்கிறானோ அவன் அவித்யையின்நின்று (அதிக) அவித்யையையடைகிறான்"; எப்பொழுது இரண்டாக இருத்தல் ஸம்பவிக்கிறதோ அப்பொழுது மற்றவன் மற்றொருவனைப்பார்க்கிறான். எப்பொழுது எல்லாமாத்மாவாகவேயாய்விட்டதோ அப்பொழுது, எவன் எதனால் எவனைப்பார்ப்பான், எவன் எதனால் யாரை அறிவான்"; "குடம் முதலிய வஸ்துக்களின் அவயவஸம்ஸ்தானமும் நாமதேயமும் வ்யாவஹாரிகம், ம்ருத்திகையே உண்மை"; "எப்பொழுது இவன் இந்த ப்ரஹ்மத்தினிடத்தில் கொஞ்சம் பேதத்தைப் பாராட்டுகிறானோ அவனுக்கு பயம் உண்டாகிறது"; "எல்லாவிடங்களிலிருந்தபோதிலும் அந்த பரப்ரஹ்மத்திற்கு ஆச்ரயஸம்பந்தத்தாலுண்டாகக்கூடிய தோஷமணுகுவதில்லை, எல்லாவிடத்திலும் ப்ரஹ்மத்திற்கு ஸாகாரத்வமும் ஸாகாரநிராகாரத்வமென்கிற இரண்டு அஸாதாரண சிஹ்நங்கள் இருக்கின்றனவன்றோ"; (எவ்வித்தத்தாலும் நிரூபிக்கமுடியாததால்) தனவில்கண்ட வஸ்துஸமூஹம் முழுவதும் மாயைமாத்ரமே.

---

ஶ்ருதப்ரகாசிகை:—

\$ ஸாதன சதுஷ்டயம் பூர்வவ்ருத்தமென்கிற விஷயத்தில் வஸ்துஸாமர்த்தியமன்றோ ஹேதுவாக உரைக்கப்பட்டது. அது முந்தி "ப்ரஹ்மஸ்வரூபா†ச்சாதிகா" என்றிது முதலியவற்றால் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. அதை உபபாதித்தல் தூஷித்தல் இவை இரண்டும் வெகுக்ரந்த ஸாத்யமாதலால் அவ்விரண்டும் முன்பு செய்யப்பட

---

\$ ஸாதநசதுஷ்டயமாவது;—நித்யாநித்யவஸ்துவிவேகம், இம்மையிலும் மறுமையிலுமுள்ள பலன்களை அநுபவிப்பதில் ஆசையின்மை, மனதையும் வெளி இந்திரியங்களையுமடக்குதல் முதலிய ஸாதனங்களின் ஸம்ருத்தி, மோக்ஷத்தை அடைவதில் விருப்பம்.

† ஆச்சாதிகா—மறைக்குமது

வில்லை. இதற்குமேல்அவற்றை உபபாதிக்கத்தொடங்குகிறார். முன்பு உபாயோபதேச பரவாக்யங்களின் பர்யாலோசனையினால் வஸ்துஸாமர்த்யத்தைத்தவிர மற்ற ஹேதுக்கள் உபந்யஸிக்கப்பட்டு நிரஸிக்கவும் பட்டன. விதிப்பதற்கு விரும்பப்பட்ட ஜ்ஞானமென்றல்லவோ அங்கு சொல்லப்பட்டது-வஸ்துஸாமர்த்யமோ வென்றால், ஸித்தபரவாக்கியங்களால் ஸித்திப்பது. ' வஸ்துஸ்வரூபோபதேசபரை: ' என்றல்லவோ சொல்லப்படபோகிறது. ஆகவின் ஸ்வரூபபரவாக்ய $பர்யாலோசநாமுகத்தால் அதை உபபாதிக்கத் தொடங்குகிறார்-யதப்யாஹு: என்று. 'அபி' சப்தத்தினால் உபபாதிக்கப்படும் அர்த்தத்திற்கு ப்ராதாந்யம் ஸூசிப்பிக்கப்படுகிறது. ''ஆஹு:'' என்பதனால் க்ரந்தகாரர்கள் அநேகர்கள் என்று ஏற்படுகிறது. இதனால்இக்கிரந்தம் அவ்வவபிரபந்தங்களில் சொல்லப்பட்டுள்ள ஸகலார்த்தங்களையும் தன்னுட்கொண்டிருக்கிறதென்பது காண்பிக்கப்பட்டது. ஸர்வே வேதாந்தா ஆரப்யந்தே இதி யதப்யாஹு; தததாரணீயம், என்று மேலே அந்வயம். முதலில் ப்ரஹ்மமொன்றே ஸத்யம் என்று ப்ரதிஜ்ஞை செய்கிறார்—அசேஷ என்று. அசேஷவிசேஷங்களாவன—சொல்லப்படப்போகிற *ஜ்ஞாத்ரு $ஜ்ஞேயம் முதலியவைகள். அல்லது, ‡விஜாதீய §ஸஜாதீய ¶ஸ்வகதபேதங்கள். ஸ்வகதங்களுக்குள் அந்வயிப்பனவாகவும் ¶வ்யாவ்ருத்தி ரூபங்களாகவுமிருக்கிற விசேஷங்கள் அசேஷசப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுக்கு ப்ரத்யநீகம்—ஸ்வஜ்ஞானத்தால் நிவர்த்தகம். ரஜதத்திற்கு சுக்திபோல வென்று பொருள். நிர்விசேஷத்வம் கூறப்படுமேயாகில் சூந்யதையுண்டாக வேண்டியதாகுமெனில் கூறுகிறார்—சிந்மாத்ரம் என்று. சிச்சப்தத்தால் துச்சத்வத்திற்கு வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. ஸ்வயம் ப்ரகாசத்வமல்லவோ சித்த்வம். 'மாத்ரச்' $ ப்ரத்யயத்தால் ஜ்ஞேயத்வத்திற்கு வ்யாவ்ருத்தியுண்டாகிறது. அன்றிக்கே ப்ரத்யநீகத்வரூப தர்மமும் கூட மாத்ரச்சினால் வ்யாவர்திக்கப்படுகிறது. அன்றிக்கே மாத்ரச்சினால் உள்ளபடி ஸமஸ்த விசேஷங்களின்மை சொல்ல விரும்பப்படுகிறது. 'ப்ரஹ்மைவ' என்கிற ஏவகாரத்தால் ஸகுண ப்ரஹ்மம் வ்யாவர்த்திக்கப்பட்டது. பரமார்த்தமாவது தத்வத்தை தெரிவிக்கிற ப்ரமாணத்திற்கு விஷயம். ஸகுணவாக்யங்களுக்கு தத்வத்தில் நோக்கில்லை. பல விசேஷத்தை உத்தேசித்து செய்யப்படுமுபாஸநத்தில் அவைகள் அந்யபரங்களாக இருப்பதாலென்று கருத்து. ப்ரஹ்மத்துக்கு மட்டும் ஸத்யத்வமெப்படி? மற்றதும் அறியப்படுகிறதன்றோ வென்று சங்கைவரின், ப்ரஹ்மத்துக்கே பரமார்த்தத்வஸித்தியின் பொருட்டும் அதைத்தவிர்ந்த மற்றவைகளுக்கு அந்த ப்ரஹ்மஜ்ஞானத்தால் நிவர்த்யத்வம் ஸித்திப்பதற்காகவும் எல்லாவற்றுக்கும் மித்யாத்வத்தை ப்ரதிஜ்ஞை செய்கிறார்—தத் என்று. †''அதாத ஆதேசோ நேதிநேதி'' இது முதலிய சுருதியில் '' பரக்ருதைதாவத்த்வம் '' என்கிற ஸூத்ர விஷயத்தில் ஸமஸ்தமும் மித்யையானதால் ப்ரஹ்மத்

$ பர்யாலோசனை—பராமாசித்தல்

* ஜ்ஞாத்ரு—ஞானத்துக்கு ஆதாரமாயிருப்பவன், அதாவது அறிகிறவன்.

$ ஜ்ஞேயம்—அறியப்படுவது.

‡ விஜாதீயம்—வேற்றுமைப்பாடுள்ளது.

§ ஸஜாதீயம—ஒற்றுமையுள்ளது.

¶ஸ்வகத—தன்னை அடைந்திருக்கிறது.

¶வ்யாவ்ருத்தி:—வேறுபாடு.

$ ப்ரத்யயம்:—விகுதி.

† அதாத ஆதேசோ நேதி நேதி—இதுவன்று, இதுவன்று என்று புலப்படும் வஸ்துகள் அனைத்தையுமறுத்து ப்ரஹ்மத்தை உபலக்ஷித்தல்.

திற்கும் $மித்யாத்வமானது அத்வைதிகளால் பூர்வபக்ஷமாக நிரஸிக்கப்பட்டதென்று அவ்வபிப்ராயத்தால் கூறப்பட்டது—ஹந்திரோதி என்று. "நேஹ நாநாஸ்தி" இது முதலிய நிஷேதவாக்யத்திற்கு ப்ரஹ்மத்தைத் தவிர்த்து மற்றதிலும் நிஷேதிக்கத்தக்க வஸ்துக்களின் நாநாத்வம் ஸித்திக்கிறதென்பது காண்பிக்கப்பட்டது—நாநாவித என்று முன்பு அசேஷ விசேஷசப்தத்தால் சொல்லப்பட்ட விசேஷத்தை விவரணம் செய்வதற்காகவும், "நேஹநாநாஸ்தி" இது முதலிய வாக்யங்களிலுள்ள நாநாசப்த விவரணத்திற்காகவும், நாநாவிதசப்த வாச்ய பேதம் விவரிக்கப்பட்டது ஜ்ஞாத்ருஜ்ஞேய என்று. "தத்க்ருதஜ்ஞாத்ருபேத— ஜ்ஞாத்ருஜ்ஞேயங்களை விஷயீகரிக்கின்ற ¶வ்ருத்திஜ்ஞானபேதம்" இதனால் வ்ருத்தியில் ஸ்புரிக்கின்ற சைதந்யபேதத்திற்கு ஸ்வரூபப்ரயுக்தத்வம் விலக்கப்பட்டது. பேதசப்தத்தினால் ஒவ்வொன்றிலும் அவாந்தரபேதங்கள் விவக்ஷிக்கப்பட்டன. 'ஆதி' சப்தத்தினால் நிரஸிக்கத்தக்க துக்கரூபமான ஜந்மஜராமரணங்கள் சொல்லப்படுகின்றன; ஸர்வம் என்று சொல்லப்போகிற ச்ருதியிலிருக்கிற ஸர்வசப்தத்திற்கு இது அர்த்தமென்று கருத்து. "தஸ்மிந்" என்பதால் நிரதிஷ்டானப்ரமபக்ஷம் விலக்கப்பட்டது. ஏவகாரத்தால் $அதிஷ்டானபஹுத்வத்திற்கு நிஷேதம் ஸித்திக்கிறது. அப்படியிருந்தாலன்றோ ப்ரபஞ்சத்திற்கு அதத்ப்ரஹ்மஜ்ஞானத்தால் நிவர்த்யத்வம் ஸித்திக்கும். அன்றிக்கே "தஸ்மிந்" என்கிற ஏகவசனத்தினால அதிஷ்டானத்திற்கு ஏகத்வம் ஸித்திக்கிறது. நாநாவித அத்யாஸங்கள் அநேக அதிஷ்டானங்கள் உள்ளவைகளாகக் காணப்படுகின்றன; அவைகளிருக்க நாநா அத்யாஸங்களுக்கு ஒரே அதிஷ்டானமெப்படி ஸம்பவிக்குமெனகிற விரோதத்தையும், ஸ்வயம் ப்ரகாசவஸ்துவுக்கு *அதிஷ்டானத்வ விரோதத்தையும், ஏவகாரம் ஸ்புரிக்கும்படி செய்கிறது. மித்யாபூதம்—பொய்யானது. சொல்லப்போகிற மித்யாத்வ லக்ஷணமுள்ளதென்று அர்த்தம். ப்ரஹ்மமே ஸத்யம் மற்றது மித்யை என்பதில் ப்ரமாணம் யாது எனில் கூறுகிறார்-ஸதேவ என்று, ஸதேவ என்பதனால் விஜாதீயபேதம் விலக்கப்படுகிறது. ஏகமேவ என்பதனால் ஸஜாதீயபேதம் விலக்கப்படுகிறது. அத்விதீயமென்பதனால் தன்னை அடைந்துள்ள பாவாபாவரூபமான பேதம் விலக்கப்படுகிறது. ஆறுவிதமான தாத்பர்ய அடையாளங்களோடுகூடின ஸத்வித்யையிலிருப்பதால் இந்த வாக்யம் முதலில் எடுக்கப்பட்டது. பிறகு ஏவகாரத்தால் பலித்த நிஷேதத்தை ஸ்பஷ்டமாகச்சொல்லுகிற பரவித்யா வாக்யத்தை எடுக்கிறார்—அத என்று இதுவும் காரணத்வ விஷயத்தில சங்கிக்கப்பட்டிருக்கிற தோஷத்தின் நிராஸத்தை தொடக்கத்திற்கொண்டிருக்கிற காரணவாக்யம்; "பூதயோநிம்" என்று சொல்லிவிட்டு பிறகு அதையே விஸ்தரித்திருப்பதால். அத்ரேச்யம், அக்ராஹ்யம்—ப்ரத்யக்ஷத்துக்கு அகோசரம், அநுமானத்திற்கு அகோசரம். அன்றிக்கே, கண்ணுக்கு எட்டாதது; மற்ற இந்த்ரியங்களுக்கும் அகப்படாதது. அகோத்ரம்—நாமதேயமில்லாதது. அவர்ணம்—கருப்பு முதலிய நிறமில்லாதது. அசக்ஷுஃச்ரோத்ரமபாணிபாதம்—ஜ்ஞானேந்திரிய கர்மேந்திரியங்களில்லாதது. நித்யம் விபும்—காலதேசங்களால் அளவிடப்படாதது ஸர்வகதம்—ஜகத்திலுள்ள எல்லாவற்றாலும் அதிஷ்டானமாக ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறது. வஸ்துபரிச்சேதமில்லாததென்று அர்த்தம். ஸுஸூக்ஷ்மம்—அத்ருச்யத்வமானது, §துச்சத்வம் அதிதூரத்வம் முதலியவற்

$ மித்யாத்வம்:—முற்பட்ட தோற்றத்துக்கு விஷயமாக விருந்து யதார்த்தஸித்தமான வஸ்து ஜ்ஞானத்தால் நிவ்ருத்திக்கப்படத்தக்க தன்மையுள்ளது.

¶ வ்ருத்திஜ்ஞானம்:—இந்திரியங்களின் வாயிலாக வெளியில் ப்ரஸரித்து பாஹ்ய விஷயங்களை அவகாஹிக்கும் ஜ்ஞானம்.

$ அதிஷ்டானம்:—ஆதாரம்.

* அதிஷ்டானத்வம்:—ப்ரமத்திற்கு ஆதாரமாயிருக்கை

§ துச்சத்வம்—வஸ்து ஸ்வரூபத்தின் இன்மை.

ரூலன்று, பின்னேயோவெனில், மிக்க ஸூக்ஷ்மமாக இருப்பதனுலென்று அபிப்ராயம். வாக்யபேதத்தால் அநேக யத்நசப்தாந்வயத்திற்கு உபபத்திவருகிறது. பிறகு ஶோதக வாக்யத்தை எடுக்கிருர்—ஸ்ஸ்ம் என்று. காரணவாக்யங்களோடும் மற்ற ஶோதகவாக்யங்களோடும் ஒரே பொருளாயிருப்பதாலும் ஸாமாநாதிகரண்யத்திற்கு வேறு விதத்தால் உபபத்தியில்லாமையாலும் இந்தவாக்யம $ அந்ருத, ஜட, பரிச்சிந்ந வஸ்து வ்யாவ்ருத்தமான நிர்விஶேஷவஸ்துபரமென்று உரைக்கப்படப்போகிறது. நிஷ்களம்—களா:—என்பது அவயவங்கள், அவயவமில்லாததென்று பொருள். அதில் நிஷ்க்ரியத்வம் ஹேது. சாந்தம்—ஆறு ஊர்மிகளில்லாதது பசி தாஹம, சோகம மோஹம், மூப்பு, மரணம் இவைகள் ஊர்மிகள் என்றுசொல்லப்படுகின்றன. நிரவத்யம், நிரஞ்ஜநம்—கர்மஸம்பந்தமும கர்மபலமும் இல்லாதது. இதனுல், *ஸத்யஜ்ஞாநாதிவாக்யங்களுக்குள்ளடங்கியதான வ்யாவ்ருத்தியானது ஸ்பஷ்டமாக்கப்பட்டது. இதற்குமேல் சிந்மாத்ரசப்தத்தால் அபிப்ராயப்பட்ட ஜ்ஞேயத்வவ்யாவ்ருத்தியைக்கூறுகிருர்-யஸ்ய—என்று. அமதம அவிஜ்ஞாதம் என்பதனுல்—ச்ரவண மநநாதிரூபமான ஜ்ஞானங்களுக்கு விஷயமல்ல வென்பது கூறப்பட்டது. இதற்குமேல் த்ருஷ்டத்ருக்வநிஷேதத்தில் கருத்துள்ள வாக்யத்தைக் கூறுகிருர—நத்ருஷ்டே: என்று. இதிலும முற்கூறப்பட்ட ஜ்ஞானத்தினுடைய நிலைமையின் வேறுபாடு விவக்ஷிக்கப்பட்டது. இது புருஷார்த்தமெனபதற்காக சுகமின்மையினின்று வ்யாவ்ருத்தி உரைக்கப்படுகிறது—ஆநந்தோ ப்ரஹ்ம என்று ஆநந்த சப்தமானது ஸுகமின்மையினின்று வ்யாவ்ருத்தி மாத்திரத்தை ப்ரதிபாதிக்கிறது. அதனுலேயே 'ஆநந்தீ' என்று சொல்லவில்லை. இவ்வண்ணமாக ப்ரஹ்மத்திற்கு நிர்விசேஷ சிந்மாத்ரத்வத்தில் சுருதிவாக்யஸமூஹம் உபந்யஸிக்கப்பட்டது. பிறகு ப்ரஹ்மத்தைத்தவிர்ந்த மற்றது அனைத்தும் மித்யை என்பதில் ப்ரமாணம் எடுத்துக்காட்டப்படுகிறது. அதில் முதலில் மித்யாபூதமான ஜகத்தானது ப்ரஹ்மமாகிற அதிஷ்டானத்தில் அத்யஸ்தமென்பதைக் காட்டுகிருர்—"இதம்ஸர்வம் யதயமாத்மா" என்று ஸாமாநாதிகரண்யத்தால். அதிஷ்டானத்துடன் அத்யஸ்தவஸ்துவுக்கு ஸாமாநாதிகரண்யம் அதாவது (ஒற்றுமைச்சொல்) முன் தோற்றத்தை பாதிப்பதற்கல்லவோ காணப்பட்டிருக்கிறது. உதாஹரணம், ரஜ்ஜுவானது ஸர்ப்பமென்று முன்பு, ''எல்லாம் அதனிடத்திலேயே'' என்று ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கிற ப்ரஹ்மத்தினுடைய ஸர்வ ப்ரமங்களுக்கும் ஆதாரத்வமும் இந்த வாக்யத்தால் காண்பிக்கப்பட்டது. ப்ரஹ்மத்தைத் தவிர்ந்த வஸ்துவினது நிஷேதத்தை நேராகச்சொல்லிஇருப்பதைககாட்டுகிருர்-நேஹ நாநாஸ்தி கிஞ்சந என்று. பலவாருகப் பார்ப்பவன் மிக்க அறிவீனன் என்பதைக்காண்பிக்கிருர்—ம்ருத்யோ: என்று. இவ்விடத்தில் ம்ருத்யுவென்பது அவித்யை, ''தமஸோ வா ஏஷ தம: ப்ரவிஶதி" (இவன் சொற்ப இருட்டிலிருந்து மிக்க இருட்டில் ப்ரவேசிக்கிருன்) என்பதுபோல. 'இவ' சப்தத்தால் நாநாத்வத்திற்கு அபாரமார்த்யம காண்பிக்கப்பட்டது. மித்யாபூதமாக இருக்குமேயாகில் ஒரு ஸமயத்தில் நிவ்ருத்தியுண்டாகலாமெனில், சொல்லுகிருர்—யத்ரஹி என்று. யத்ர—எப்போது. த்வைதமிவ பவதி—இவ சப்தம் முன்போல. தத்—அப்போது. இதரன் இதரத்தை இதரத்தினுல் பார்க்கிருன் என்று அர்த்தம்—கேந (எதனுல்) என்று சொல்லப்போகிறபடியால் இதரேண என்கிற பதத்தை அத்யாஹாரம் செய்துக்கொள்ளவேண்டும். யத்ரது என்று. யத்ர-எப்பொழுது, இவனுககு எல்லாம் ஆன்மாவாகவே ஆயிற்றே

---

$ அந்ருதம்:—அஸத்யம், அதாவது மித்யாபூதம்

* ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ப்ரஹ்ம (இது ஶோதகவாக்யம்.) ப்ரமஹ்த்தின் ஸ்வரூபம் இத்தன்மைவாய்ந்தது என்று நன்கு சோதித்து காட்டும் தன்மை பொருந்தி இருத்தலால் இதற்கு இப்பெயர் வாய்ந்தது.

தத்-அப்பொழுது எதனால் எவனைப்பார்ப்பான் 'ஸ:' என்கிறபதம் *அத்யாஹரிக்கத்தக்கது; "இதர:" என்று முன் சொல்லப்பட்டிருப்பதால். 'பஶ்யேத், விஜாநீயாத்' என்று ஜ்ஞானத்தின அவஸ்தாபேதம் உரைக்கப்பட்டது. இதெல்லாம் மித்யை என்பதை த்ருஷ்டாந்தத்தினால் உபபாதிக்கின்ற ச்ருதியை உதாஹரிக்கிறார்-வாசா என்று. விகாரம் குடம்முதலியவற்றின் உருவம், (அதுவும்) நாமதேயமும், வாசாரம்பணம்—$வாகாலம்பநம் (வாக்கை ஆலம்பித்திருக்கிறது) வ்யாவஹாரிகமென்று அர்த்தம். ஆதலால் ம்ருத்திகை (மண்) என்பதே ஸத்யம்—ப்ரஹ்மத்தினிடத்தில் நாநாத்வத்தைப் பார்க்கிறவனுக்கு முற்கூறப்பட்ட ம்ருத்யுசப்தத்தால் சொல்லப்பட்ட அஜ்ஞாநகார்யமான பயத்தையும் காண்பிக்கிறார் யதா ஹி என்று. உதரம்-உ என்பது நிச்சயத்தில், "ததேவர்தம் ததுஸத்யமாஹு: ததேவ ப்ரஹ்ம பரமம் கவீநாம்" (அதே ருதமென்றும் அதே ஸத்யமென்றும் அதே பரப்ரஹ்மமென்றும் ஜ்ஞானிகள் கூறுகின்றார்கள்) என்கிற வாக்யத்திற்போல. அரம் அல்பம். அந்திக்கே உத் அரம் உத் என்பதற்கு பவதி என்பதோடு அந்வயம், 'வ்யவஹிதாஶ்ச' என்கிற வ்யாகரணஸூத்ரத்தால். அரம் சீக்கிரம். யதா ஹ்யேவ இது முதலியவைப்பின் எடுத்ததானது ஸித்தாந்தத்தில் பரிஹார ஸௌகர்யத்திற்காக-அதுவும் முற்கூறப்பட்ட வாக்யங்கள் ஏகவாக்யந்யாயத்தால் பரிஹரிக்கத்தக்கதாக இருப்பதால். ப்ரஹ்மம் நிர்விசேஷசின்மாத்ர மென்பதிலும், அதைத்தவிர்ந்த மற்றவைகள் மித்யை என்பதிலும் ச்ருதி காண்பிக்கப்பட்டது, அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் நிர்விசேஷத்வத்தில் ஸூத்ரம் காண்பிக்கப்படுகிறது—ந ஸ்தாநத: என்று. உபயலிங்கம்—ஸாகாரத்வமும் ஸாகாரநிராகாரத்வமும்—ப்ரஹ்மம் எல்லா இடத்திலும் இருந்த போதிலுங்கூட அதற்கு இல்லை; அது நிராகாரமென்று அர்த்தம். ப்ரஹ்மத்தைத்தவிர்ந்த மற்றவை மித்யை என்பதற்கு ஸூத்ரத்தைச் சொல்லுகிறார்-மாயா என்று-ஸ்வப்நஸமயத்தில் காணப்படும் வஸ்துக்கள் அனைத்தும் மாயாமாத்ரம். யாதுகாரணத்தாலென்றால், அபிவ்யக்த மாகாதஸ்வரூபத்துடன் கூடியிருப்பதால்—நிரூபிக்கமுடியாமையால் பாதிக்கப்பட்டிருப்பதால் என்று அர்த்தம். ஸ்வப்நத்தில் காணப்படுகிற வஸ்துக்களின் மித்யாத்வம் ஜகந்மித்யாத்வத்திற்கு த்ருஷ்டாந்தமாகக் காண்பிக்கப்பட்டது

ப்ரத்யஸ்தமிதபேதம் யத்ஸத்தாமாத்ரமகோசரம் । வசஸாமாத்மஸம்வேத்யம் தஜ்ஜ்ஞாநம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம் (வி-பு-௬-௭-௫௩) ஜ்ஞாநஸ்வரூபமத்யந்தநிர்மலம் பரமார்த்த: । தமேவார்த்தஸ்வரூபேண ப்ராந்திதர்ஶநத: ஸ்திதம் ॥ (வி-பு ௧-௨-௬) பரமார்த்தஸ்த்வமேவைகோ நாந்யோऽஸ்தி ஜகத: பதே । (வி-பு ௧-௪-௩௮) யதேதத்த்ருஶ்யதே மூர்த்தமேதஜ்ஜ்ஞாநாத்மநஸ்தவ । ப்ராந்திஜ்ஞாநேந பஶ்யந்தி ஜகத்ரூபமயோகிந: ॥ ஜ்ஞாநஸ்வரூபமகிலம் ஜகதேதததுத்தய: । அர்த்தஸ்வரூபம் பஶ்யந்தோ ப்ராம்யந்தே மோஹஸம்ப்லவே ॥ யே து ஜ்ஞாநவித: ஶுத்தசேதஸஸ்தேऽகிலம் ஜகத் ॥ ஜ்ஞாநாத்மகம் ப்ரபஶ்யந்தி த்வத்ரூபம் பரமேஶ்வர ॥ (வி-பு ௧-௪-௩௯-௪௦-௪௧) தஸ்யாத்மபரதேஹேஷு ஸதோऽப்யேகமயம் ஹி யத் । விஜ்ஞாநம் பரமார்த்தோ

* அத்யாஹரிக்கத்தக்கது—ஸந்தர்ப்பானுகுணமாக வாக்யபூர்த்தியின் பொருட்டு சப்தத்தையோ அர்த்தத்தையோ சேர்த்துக்கொள்ளுதல்.

$ஆலம்பநம்—ஆச்ரயம்.

𑌹𑌿 𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑍋𑌽𑌤𑌥𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ (வி-பு ௨-௧௪-௩௧) 𑌯𑌦𑍍𑌯𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰𑌃 𑌕𑍋𑌽𑌪𑌿 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌸𑌤𑍍𑌤𑌮 । 𑌤𑌦𑍈𑌷𑍋𑌽𑌹𑌮𑌯𑌂 𑌚𑌾𑌨𑍍𑌯𑍋 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍇𑌵𑌮𑌪𑍀𑌷𑍍𑌯𑌤𑍇 ॥ (வி-பு-௨ ௧௩-௯௰) 𑌵𑍇𑌣𑍁𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌵𑌿𑌭𑍇𑌦𑍇𑌨 𑌭𑍇𑌦𑌃 𑌷𑌡𑍍𑌜𑌾𑌦𑌿𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌃 । 𑌅𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍋 𑌵𑌾𑌯𑍋𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍌 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ (வி-பு-௨ ௧௪-௩௨) 𑌸𑍋𑌽𑌹𑌂 𑌸 𑌚 𑌤𑍍𑌵𑌂 𑌸 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌤𑍍𑌯𑌜 𑌭𑍇𑌦𑌮𑍋𑌹𑌮𑍍 । 𑌇𑌤𑍀𑌰𑌿𑌤𑌸𑍍𑌤𑍇𑌨 𑌸 𑌰𑌾𑌜𑌵𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌯𑌾𑌜 𑌭𑍇𑌦𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 ॥ (வி-பு-௨ ௧௬-௨௩) 𑌵𑌿𑌭𑍇𑌦𑌜𑌨𑌕𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌨𑌾𑌶𑌮𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌗𑌤𑍇 । 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌭𑍇𑌦𑌮𑌸𑌨𑍍𑌤𑌂 𑌕𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ (வி-பு ௬-௭-௯௪) 𑌅𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌶𑌯𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥ (கீ ௧௰-௨௰) 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌭𑌾𑌰𑌤 । (கீ ௧௩-௩) 𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌨𑌾 𑌯𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌯𑌾 𑌭𑍂𑌤𑌂 𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 । (கீ ௧௰-௩௯) 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍋𑌪𑌦𑍇𑌶𑌪𑌰𑍈𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 — 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌸𑌤𑍍𑌯𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾 — 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍 ॥

ஸ்ரீபாஷ்யம்:—

‘ எது ஸத்தாமாத்ரமாய் பேதமில்லாததோ, வசனங்களுக்கு அகோசரமோ, ஸ்வயம்ப்ரகாசமோ, அந்த ஜ்ஞானம ப்ரஹ்மமென்று பெயருள்ளது’. “ ஜ்ஞானஸ்வரூபனையும், அத்யந்த நிர்மலனையும், பரமார்த்த பூதனையும், ப்ராந்திஜ்ஞானத்தால் ப்ரபஞ்சரூபமாகப்பார்க்கப்பட்டவனையுமிருக்கிற அவனையே (விஷ்ணுவையே நமஸ்கரித்து)” “ஜகத்பதியே! நீ ஒருவனே பரமார்த்தமாகவிருப்பவன், வேறொருவனில்லை”. ‘*மூர்த்தமாக எது காணப்படுகிறதோ, இது ஜ்ஞானஸ்வரூபியான உனனுடையதே இதையோகஜ்ஞானமில்லாதவாகள் ப்ராந்தி ஜ்ஞானத்தால் ஜகத்ரூபமாகக்காண்கிறார்கள்’. ‘ஜ்ஞானஸ்வரூபமாகவிருக்கிற இந்த ஸமஸ்த ஜகத்தையும், புத்தியில்லாதவர்கள் ஜடஸ்வரூபமாகப்பாராநின்றுகொண்டு மோஹமாகிறவெள்ளத்தில் சுழலுகின்றார்கள். ஹே! பரமேச்வர! எவர்கள் ஜ்ஞானஸ்வரூபனை ஆத்மாவை அறிந்தவர்களாயும் சுத்தமனதுள்ளவர்களாயும் இருக்கிறார்களோ அவர்கள் உலகமனைத்தையும் ஜ்ஞானாத்மகமான உன்னுடைய உருவமாகக் காண்கிறார்கள்’. “ தன் தேகத்திலும், பிறர் தேகங்களிலும் நிலைபெற்றிராநின்றபோதிலுங்கூட அந்த ப்ரஹ்மத்தினுடைய ஏகமயமாயிருக்கிற யாதொரு விஜ்ஞானமுண்டோ, அதுவன்றோ பரமார்த்தம். த்வைதபாவனை உள்ளவர்கள் உண்மையறியாதவர்கள்”. “ ஹே! வேந்தர்களுள் சிறந்தவனே! என்னைக்காட்டிலும் வேறு ஆகாரமுள்ளவனாக மற்றொருவன் இருப்பானேயாகில் அப்போது இது நான், இது மற்றவன் என்று இவ்வண்ணம் சொல்வதற்காவது பொருத்தமுண்டு”.

* மூர்த்தம்—க்ரியைக்கு ஆதாரமான வஸ்து.

"பேதமின்றி எங்கும் வ்யாபித்திருக்கின்ற காற்றுக்கு புல்லாங்குழல் முதலிய வற்றின் த்வாரபேதத்தினால் எவ்வாறு §ஷட்ஜம் முதலிய நாமபேதங்கள் ஏற் படுகின்றதோ, அவ்வண்ணமே பரமாத்மாவுக்கு பேதமேற்படுகின்றது" "அப்படிப்பட்ட நானும், நீ, அவன், இவை அனைத்தும் ஆத்மஸ்வரூபம். பேதமபக்கத்தை விட்டு விடு இவ்வண்ணம் அவரால் (பரதரிஷியால்) சொல் லப்பட்ட அந்த ராஜசிரேஷ்டன் பரமார்த்ததிருஷ்டியுள்ளவனாக பேதத் தை இழந்தான்". "பேதஜநகமான (அஜ்ஞானமானது) முற்றிலும் நாச மடைந்த பிறகு, ஆத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் வாஸ்தவமாயில்லாத பேத த்தை எவன் உண்டு பண்ணப்போகிறான்". "ஹே! ஆலஸ்யமற்றவனே! (அர்ஜுனா) *வ்யாபனசீலனான நான் எல்லாப்ராணிகளினுடைய உள்ளத்தில் நிலைபெற்றிருக்கிறேன். ஹே! பரதகுலத்திலுதித்தவனே! எல்லா தேகங்க ளிலுமிருக்கிற (ஜீவாத்மாவாகவும்) என்னையறிவாயாக" "சராசரரூபமான பூத வர்க்கங்களுக்குள் நானில்லாமல் எது இருக்குமோ, அது இல்லை" என்கிற இது முதலான வஸ்துஸ்வரூபோபதேசபரங்களான சாஸ்திரங்களால் நிர் விசேஷ சின்மாத்ர ப்ரஹ்மமே ஸத்யம், மற்றது அனைத்தும் மித்யை என்று சொல்வதால்.

**ஸ்ருதப்ரகாசிகை:—**

இவ்விரண்டு அர்த்தங்களில் உபப்ரஹ்மணவசநங்களைக் காண்பிக்கிறார்— **ப்ரத்யஸ்தமித** என்று. ப்ரத்யஸ்தமித பேதம—ஸஜாதீய விஜாதீய பேதமில்லாதது. ஸத்தாமாத்ரம்—ஸ்வகத பேதமில்லாதது, அதனாலேயே வாக்குகளுக்கு அகோசரம், அங்ஙனமாகில் துச்சத்வம் ஏற்படலாம, ஸத்தையில்லாமல் போகுமெனில் கூறுகிறார்— **ஆத்மஸம்வேத்யம்** என்று. தனக்குத்தானே ப்ரகாசம என்று அர்த்தம், **ப்ரஹ்ம ஸம்ஜ்ஞிதம்** என்று. ப்ரஹ்மம் என்று பெயர் மாத்திரமே; ப்ருஹத்த்வம் முதலிய குணங்களின ஸம்பந்தமில்லை என்று கருத்து. நிர்விசேஷமாக இருக்குமேயாகில் எவ்வாறு ஜகத்தின் தோற்றமென்று கேட்பவரின் ப்ரமாணம் எடுக்கிறார்—**ஜ்ஞான ஸ்வரூபம்** என்று. இந்த ச்லோகத்தால் ப்ரபஞ்சமித்யாத்வம கூறப்படுகின்றது. அத்யந்த நிர்மலம்—ஸகல விசேஷங்களுமில்லாதது. அர்த்தஸ்வரூபத்தால்—ஜடஸ்வரூபத்தால். அர்த்தங்களின் நாநாத்வம் ப்ராந்திஸித்தமாதலால் ஒன்றே பரமார்த்தமென்று காண்பிக் கிறார்—**பரமார்த்தஸ்த்வம்** என்று. இதை இரண்டு ச்லோகங்களால் விவரிக்கிறார்— **யதேதத்** இது முதலியதால். ப்ராந்தியாகில் எவனாவது ஒருவனுக்கு நிவர்த்திக்கக்கூடு மென்று அபேக்ஷையுண்டாகில் சிலருக்கு அதன் நிவ்ருத்தியைக்காண்பிக்கிறார்—**யே து ஜ்ஞானவித.** என்று. ஜ்ஞானஸத்யத்வமும் ஜடமித்யாத்வமும் சொல்லப்பட்டது. பிறகு ஜ்ஞானாகாரமான ஆத்மாக்களுக்கு ஐக்யோக்தியைக் காண்பிக்கிறார்—**தஸ்ய** என்று ஏகமயம்- ஏகம். ஆத்ம என்றும பர என்றும் சப்தங்களின் ப்ரயோகத்தால் உண்டாகக் கூடியபேதசங்கையையும் நிரஸிக்கிறார்--**யத்யந்யோஸ்தி** என்று. இதற்கு த்ருஷ்டாந்தம்

§ஷட்ஜம்— ஷட்—ஸ—ஜாயதே உரஸ், கண்டம முதலிய ஆறுஸ்தானங்களினின்றுஉண் டாவதால் ஷட்ஜம என்று பெயர். இது காந்தர்வ சாஸ்திரத்தில் ப்ரஸித்தமான ஸப்த ஸ்வரங்களிலொன்று. இது மயிலினுடைய குரலை ஒத்திருக்கும்.

*வ்யாபனசீலன்—பரவிச்செல்லும் ஸ்வபாவமுள்ளவன்.

சொல்லுகிறார் — வேணுாநீத்ர என்று. உபபாதனஞ்செய்யப்பட்டிருக்கிற இவ்வர்த்தத்தின் உபதேசத்தைக்காண்பிக்கிறார்—ஸோஹம் என்று. உபதேசிக்கப்பட்டபடி செய்தார் என்பதைச்சொல்லுகிறார்—*தத்யாஜ என்று. பிறகு ஆத்மாக்களுக்கு ப்ரஹ்மத்தோடு ஐக்யோக்தியைக் காண்பிக்கிறார்—விபேதஜநகே என்று. பிறகு, பகவத்கீதையில் எல்லா ஆன்மாக்களுக்கும், ஒன்றோடொன்றும், ப்ரஹ்மத்தோடும் ஐக்யோக்தியை உதாஹரிக்கிறார்—அஹமாத்மா என்று. ஸர்வபூதசப்தம் சரீரங்களைச்சொல்லுகிறது, இதை நன்கு வெளிப்படுத்துகிறார்—க்ஷேத்ரஜ்ஞஞ்ச என்று. “ஸர்வக்ஷேத்ரேஷு” என்கிற இப்பதத்தினால் பூதசப்தம் சரீரபரமென்று வெளிப்படுத்தப்பட்டது. அதிலேயே ப்ரஹ்மத்தைத்தவிர்ந்த பதார்த்தங்களுக்கு மித்யாத்வப்ரதிபாதகவசநத்தைக் காண்பிக்கிறார்—நததஸ்தி என்று. வஸ்து ஸ்வரூபோபதேசபரங்களான-உபாயபரங்களல்லாத-அநந்யபரங்களான என்று கருத்து. நிர்விசேஷசிந்மாத்ரமென்று—அர்த்தம் முன்போல. ‘அபிதாநாத’ என்பதற்கு ‘அசேஷ’ என்கிற பதத்தைத்தொடக்கத்தில் கொண்டிருக்கிற முந்திய ப்ரதிஜ்ஞாவாக்யத்தோடுகூட அந்வயம்.

[illegible]

*தத்யாஜ—விட்டான்.

भादिनिरस्तसङ्गम् । एकं सदैकं परमः परेशः स वासुदेवो न यतोऽन्यदस्ति ॥ सद्भाव एवं भवतो मयोक्तो ज्ञानं यथा सत्यमसत्यमन्यत् । एतत्तु यत्संव्यवहारभूतं तत्रापि चोक्तं भुवनाश्रितं ते ॥ (वि-உ-கஉ-சங, சச, சரு) इति । अस्याश्चाविद्याया निर्विशेषचिन्मात्रब्रह्मात्मैकत्वविज्ञानेन निवृत्तिं वदन्ति—"न पुनर्मृत्यवे तदेकं पश्यति", "न पश्यो मृत्युं पश्यति", "यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते, अथ सोऽभयं गतो भवति", "भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः । क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥" (मु-உ-உ-அ) ब्रह्मवेद ब्रह्मैव भवति (मु-ங-உ-கூ) तमेवं विदित्वाऽतिमृत्युमेति नान्यः पन्थाः" इत्याद्याः श्रुतयः ॥

ஸ்ரீபாஷ்யம்—

மித்யாத்வமாவது--முற்பட்டதோற்றத்திற்குவிஷயமாகவிருந்து உள்ளபடி இருக்கிற வஸ்துஜ்ஞானத்தால் நிவ்ருத்திக்கத்தக்க தன்மையுள்ளது. எவ்வாறு ரஜ்ஜு முதலியவைகளை அதிஷ்டானமாகக்கொண்ட ஸர்ப்பம் முதலியவைகளோ (அவைபோல.) தோஷவசத்தாலன்றோ அந்த அதிஷ்டானத்தில் அந்த (வஸ்துவின்) *கல்பநம் ஸம்பவிக்கிறது. இவ்வண்ணம் சின்மாத்ரத்தை சரீரமாகக்கொண்ட பரப்ரஹ்மத்தினிடத்தில் தோஷத்தால் கல்பிக்கப்பட்டிருக்கிற இந்த தேவ திர்யக் மனுஷ்ய ஸ்தாவராதி பேதங்களுள்ள உலகமனைத்தும் யதாவஸ்திதமான ப்ரஹ்மஸ்வரூபஜ்ஞானத்தால் பாதிக்கத்தக்கதாதலால், மித்யா ரூபமாக இருக்கிறது. தோஷமோவெனில், ஸ்வரூபத்தை மறைக்கிறதும், பற்பலவிசித்ர §விக்ஷேபத்தை உண்டுபண்ணுகிறதும், ஸத்தென்றும் அஸத்தென்றும் ¶நிர்வசனம் செய்யத்தகாததுமான அநாதியான அவித்யை. "அவித்யையினாலன்றோ ‡வைபரீத்யத்தை அடைவிக்கப்பட்டிருக்கிறது". "ஸத்யங்களான அவைகளுக்கு அந்ருதம் (அவித்யை) †ஆவரணமாக இருக்கிறது". "அப்பொழுது (ஸ்ருஷ்டிக்குமுன்பு) அஸத்துமில்லை; ஸத்துமில்லை; தமஸ் இருந்தது. பூர்வம் தமஸினால் ஜ்ஞானம்

*கல்பநம்—இங்கு ப்ராந்தி ஜ்ஞானத்தால் ஏற்படுவது.

§விக்ஷேபம்—பலவகையான வஸ்துக்களின் தோற்றம்.

¶நிர்வசனம்—நிர்ணயமான சொல்.

‡வைபரீத்யம்—மாறுபட்டம்.

†ஆவரணம்—மறைவு.

மறைபட்டிருந்தது". "மாயையை ப்ரக்ருதி என்றும், மஹேஶ்வரனை மா யையை உடையவனென்றும் அறியவேண்டும்". "இந்திரன் (பரமாத்மா) மாயைகளால் அநேக உருவங்களை எடுக்கிறான்" "என்னுடைய மாயை எவ்விதத்திலும் தாண்டமுடியாதது". "அநாதியான மாயையினால் உறங்குகிறஜீவன் எப்பொழுது விழித்துக்கொள்ளுகிறானோ" இது முதலியவைகளால் நிர்விசேஷசின்மாத்ர ப்ரஹ்மமே, ஸத் என்றும் அஸத் என்றும் நிரூபிக்கத்தகாத அநாதியான அவித்யையினால், ஸ்வரூபதிரோதாநத்தைப்பெற்று நாநாத்வத்தைத்தானடைந்திருப்பதாகக் காண்கிறதென்று அறியப்படுகிறது. இந்த விஷயத்தில் ப்ரமாணம் கூறப்பட்டிருக்கிறது. "எதனால் ஸமஸ்த க்ஷேத்ரஜ்ஞரூபியாக இருக்கிற அந்தபகவானுக்கு ஜ்ஞானமே ஸ்வாபாவிகமான ரூபமோ (தேவமனுஷ்யாதி) வஸ்துக்கள் ஸ்வரூபமன்றன்றோ, அதினாலேயே மலை, ஸமுத்திரம், பூமி முதலிய வஸ்துபேதங்களை அந்த ஜ்ஞானாகாரமாக இருக்கிற (ப்ரஹ்மத்தின்) ‡வைவித்யாநுஸந்தானமூலங்கள் என்றறிவாயாக. அவித்யாஸம்பந்தமற்றதாயும், பேததர்சனமில்லாததாயும், (அவைகளுக்கு நிமித்தங்களான) எல்லாக்கருமங்களும் நாசமடைந்தபின், (ராகாதி) தோஷங்களினின்று அகன்று, ஜ்ஞானம் எப்பொழுதுஉளதோ அப்பொழுதன்றோ ஸங்கல்பமாகிற (அவித்யை என்கிற) மரத்தின பழங்களான ஆகார பேதங்கள் (தர்மிபூதங்களான) பதார்த்தங்களில் உண்டாவதில்லை. ப்ராஹ்மணா! ஆதலால் விஜ்ஞான (ரூபியான ப்ரஹ்மத்தை)த்தவிர்ந்த வேறு யாதொரு வஸ்துவும் எவ்விடத்திலாவது எக்காலத்திலாவது இருந்ததில்லை விஜ்ஞானமொன்றே, தன்னும் கர்மபேதங்களால் பலவகைப்பட்டிருக்கிற சித்தவ்ருத்தியுடன் கூடியவர்களால் பலவாறாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. சுத்த ஸ்வரூபியாயும், மலமற்றதாயும், சோகமற்றதாயும், லோபம்முதலிய ஸமஸ்தமான மனோமலங்களின் ஸம்பந்தமில்லாததாயும், ஒன்றாயும பிறப்பு வளர்ச்சி முதலியதில்லாததாயும், யாதொரு விஜ்ஞானமுண்டோ, அதுவே தனக்கு மேற்பட்டவன் இல்லாதவனும் ப்ரஹ்மாதிகளுக்குங்கூட நியந்தாவுமான வாஸுதேவன். அவனைவிட வேறொரு வஸ்துவுமில்லை. எவ்வாறு ஜ்ஞானமொன்றே ஸத்யம், மற்றது அஸத்யமோ, இவ்வாறாக ஸத்பாவமானது என்னால் உனக்கு உரைக்கப்பட்டதாகவாகிறது. (ஞானாகாரமாயிருப்பதால் ஸமமாயிருக்கிற) யாதொரு இந்த ப்ரஹ்ம ஸ்வரூபமானது உலகத்தை ஆச்ரயித்து (தேவமனுஷ்யாதிரூபமாக) நன்குவ்யவஹரிக்கத்தக்க பேதமுள்ளதாகவிருக்கிறதோ அதுவும் (அவித்யையே) ஹேதுவென்று (உனக்கு) உரைக்கப்பட்டது, நிர்விசேஷசின்மாத்ர ப்ரஹ்மாத்மைகத்வ விஜ்ஞானத்தினால் இவ்வவித்யைக்கும் நிவ்ருத்தியை (மேலே உதாஹரிக்கப்போகிற சுருதிகள் கூறுகின்றன.) "அந்த (ப்ரஹ்மத்தை)எவன் ஒன்றென்று பார்க்கிறானோ அவன்மீண்டும மருத்புவை

§திரோதானம்—மூடுவது.

‡வைவித்யம்—பற்பலவிதமாக இருத்தல்.

(அவித்யையை) அடைவதில்லை'' ''(அதை) பார்ப்பவன் அவித்யையைப்பாரான்'', ''ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயமாகாததும், சரீரமில்லாததும், இப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளதென்று நிர்வசனஞ் செய்யத்தகாததும், ஆதாரமற்றதுமான இப்ரஹ்மத்தினிடத்து எப்போது இவன் அபயார்த்தமாக நிலைபெறுகிறானோ அதன்பிறகு அபயத்தை அடைந்தவனாகவாகிறான்''. ''பராவர வஸ்துவாகிய (அந்த ப்ரஹ்மமானது) ஸாக்ஷாத்கரிக்கப்பட்டவுடன் ஹ்ருதயத்திலுள்ள முடிச்சு (அவித்யை) பிளக்கப்படுகிறது. எல்லா ஸம்சயங்களும் அறுபடுகின்றன. இவனுடைய கர்மங்கள் எல்லாம் நாசமடைகின்றன''. ''ப்ரஹ்மத்தையறிகிறவன் ப்ரஹ்மமாகவேயாகிறான்''. ''அப்பரமபுருஷனை இவ்வண்ணமறிந்தவன் அவித்யையைக் கடக்கிறான். வேறுவழி கிடையாது'', இது முதலிய சுருதிகள்.

ஶ்ருதப்ரகாசிகை—

ஐயா! வேறு இடத்தில் இருக்கிற வஸ்துவுக்கு மற்றொரு இடத்தில் தோற்றுவது மித்யாத்வமா? அல்லது முற்றிலும் அஸத்வமா? முந்தின கல்பத்தில் ஓரிடத்தில் பாரமார்த்யம் ஒப்புக்கொள்ளப்பட்டதாக ஆகும். இரண்டாவது கல்பத்திலோ என்றால், நிவர்த்திக்கத்தக்கதேயில்லை என்பதனால் சாஸ்த்ரம் பயனற்றதாக ஆகிறது. அத்யந்தாஸத்வம் என்பதும் பொருந்தாது-ஜ்ஞானத்துக்கு விஷயமாவதால். ஸ்வயம் பிரகாச வஸ்துவுக்கு அதிஷ்டானத்வம உபபந்நமாகாது. அத்யாஸம் என்பது தன்னுடைய யதார்த்த ஸ்வரூபத்தின் அப்ரகாசத்தை மூலமாகக்கொண்டதன்றோ. பராதீன ப்ரகாசமான ஜட வஸ்துவுக்கே அது ஸம்பவிக்கிறது. ஆகையால் முந்தி ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிற ப்ரபஞ்சமித்யாத்வமும், ப்ரஹ்மத்தினுடைய அதிஷ்டானத்வமும் அயுக்தம் என்கிற இவ்விரண்டு ஆக்ஷேபங்களில் முந்தினதை பரிஹரிப்பதற்காக மித்யாத்வத்தின் லக்ஷணத்தைக்கூறுகிறார்-மித்யாத்வம்நாம என்று. நிவர்த்யத்வமே மித்யாத்வமென்று சொல்லும்பக்ஷத்தில குண்டாந்தடி முதலியவைகளால் நிவர்த்திக்கத்தக்க கடம்முதலியவற்றில் *அதிவயாப்திவருகிறது. அதைப் பரிஹரிப்பதற்காக ஜ்ஞானசப்தம். அங்ஙனம் லக்ஷணம்கூறினும் சக்தியுள்ள ஈச்வரன் முதலியவர்களுடைய ஸங்கல்பரூபமான ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க வஸ்துவில் அதிவயாப்திவருகிறது. அந்த அதிவயாப்தியும் ''யதாவஸ்தித வஸ்துஜ்ஞான'' மாத்ரத்தால் நிவர்த்யத்வம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதால் பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது. ப்ரபலமான ப்ராந்திஜ்ஞானத்தால நிவர்த்திக்கத்தக்க ஸத்ய ரஜதம் முதலியவைகளில் அதிவயாப்தியைப் பரிஹரிப்பதற்காக 'யதாவஸ்தித' என்கிற சப்தம். 'யதாவஸ்திதஜ்ஞான நிவர்த்யத்வம்' என்று சொல்லப்பட்டால், ஸமாநாதிகரணபுத்தியுண்டாகும் அப்போது, ப்ராந்திஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதில் (ஸத்யரஜதஜ்ஞானத்தில்) உண்டான வ்யபிசாரமானது அப்படியே நிலைபெற்றிருக்கும். அவ்விடத்தில் ஜ்ஞானஸ்வரூபம் யதாவஸ்திதமன்றோ-விஷயத்துக்கே அயதார்த்தத்தன்மை. ஆகையால் யதாவஸ்திதம் ஜ்ஞானமென்று ஸாமாநாதிகரண்ய சங்கையை வ்யாவர்த்திப்பதற்காக யதாவஸ்தித வஸ்துஜ்ஞான நிவர்த்யத்வம் என்று உரைக்கப்பட்டது. ஜ்ஞானப்ராகபாவத்தில் வயபிசாரம் வருவதால் அதை நிரஸிப்பதற்காக ''ப்ரதீயமாநத்வ பூர்வக''பதம். ஜ்ஞானப்ராகபாவமுங்கூட ஒருஸமயத்தில்,

*அதிவயாப்தி—அலக்ஷ்யங்களில் லக்ஷணத்தினிருப்பு.

ப்ரதீயமாநத்வபூர்வகமாக நிவர்த்திக்கப்படுகிறதென்றால் அல்ல-(அதைவ்யாவர்த்திப்ப தற்காக) நியமம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதால். (ஆகையால் நியமேந ப்ரதீயமானத்வ பூர்வக யதாவஸ்திதவஸ்து ஜ்ஞாநநிவர்த்யத்வம் என்று பலித்தது). எவ்வாறு "ஸிமெஷ சப்ஷார்த்தஸம்பந்தே" என்கிற வாக்யத்தில் "ஸிஷஏவ" என்று அவதாரணம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதால் நித்யத்வம் ஸித்திக்கிறதோ; எவ்வாறு "அப்பக்ஷோ வாயு பக்ஷ:" இது முதலியதில் அப்பையே பக்ஷிக்கிறான் என்று §அவதாரணம் ஸித்திக்கிறதோ அவ்வண்ணமாக. பூமிவெடிப்பு என்கிற தோற்றத்திறைல் நிவர்த்திக்கப் பட்ட ரஜ்ஜுஸர்ப்பத்திற்கு யதாவஸ்திதவஸ்துஜ்ஞாநநிவர்த்யத்வம் இல்லாமையால் †அவ்யாப்தி வருகிறதென்றால்; அல்ல—அதுவும் (ரஜ்ஜுஸர்பஜ்ஞாநமும்) யதாவஸ் தித வஸ்து ஜ்ஞாநத்தால் நிவர்த்திப்பதற்குத்தகுதியுள்ளதாய் இருப்பதால். அதனாலே யேயன்றோ *நிவர்த்யத்வம் என்றுசொல்லப்பட்டதேயொழிய ‡நிவ்ருத்தத்வம் என்று சொல்லப்படவில்லை. ஸர்பப்ரமத்தால் உண்டுபண்ணப்பட்டதும் ரஜ்ஜுஜ்ஞா நத்தால் நிவர்த்திக்கத்தக்கதும் பாமார்த்தபூதமுமான பயத்தில் அதிவ்யாப்தி என்று சொல்லவுங்கூடாது. பயமாகிறது க்ஷணிகமானதால் தானாகவே நீங்கின அந்த பயத்துக்கு ரஜ்ஜுஜ்ஞாநநிவர்த்யத்வம் இல்லாமையால். ரஜ்ஜுஜ்ஞாநமோ எனில், மேல்வரப்போகிற பயத்தின் உத்பத்தியைத்தடுக்கிறது. ஆகையால் ப்ரதீ யமாநத்வநியமபூர்வகயதாவஸ்திதவஸ்துகோசரஜ்ஞாநமாத்ரநிவர்த்நீயத்வம் மித்யாத்வம் என்று அர்த்தம். இந்த லக்ஷணத்தால் ஸதஸத் வைலக்ஷண்யம் பலித்தது. அதில் ப்ரதீயமாநத்வபூர்வக என்பதனால் அஸத்வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. மிகு தியால் ஸத்வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது.

இந்த மித்யாத்வலக்ஷணம் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட மித்யாவஸ்துக் களில்தொடர்ந்துவருகிறதென்பதைக்காண்பிக்கிறார்- யுஜ என்று. இனி, கூறியலக்ஷ ணத்தை ¶பக்ஷமாகிய ப்ரபஞ்சத்தில் ஏறிட்டுக்காட்டுவது உசிதமாயினும், ஸ்வப்ரகாசவஸ்துவி னிடத்தில் அத்யாஸம்அஸம்பாவிதமென்கிற இரண்டாவது¶சோத்யத்தைபரிஹரிப்பத ற்குக்கூறுகிறார்-(தொஷவஶாத் தத்ர தத்கல்பநம்)என்று அஜடத்வம்போல் ஜடத்வ மும் அத்யாஸத்திற்கு ஸாதகமாகாது ஜடவஸ்துவினிடத்திலும் தோஷமில்லாவிடில் அத்யாஸம் காணப்படாமையால் ஆதலால் தோஷமேயன்றோ எல்லாவிடத்திலும் கல் பனைக்குமூலம். கல்பகம் தோஷாதீனமாக இருக்கும்போது, தன்னாலேயோ மற்றொ ன்றினாலேயோ, ப்ரகாசம் ஸோபாதிஷ்டானத்வத்திற்கு உபயோகியாக இருக்கிறது. எதிரிலிருந்து ப்ரகாசிக்கின்ற வஸ்துவில்லையோ, ரஜதப்ரமம் உண்டாகிறது தார்ஷ் டாந்திகத்தில் பரிஹரிப்பதற்காக, த்ருஷ்டாந்தத்தில் கல்பகத்திற்கு தோஷாதீனத்வம் கூறப்பட்டது. இவ்வாறு ப்ரதீயமாநத்வபூர்வகயதாவஸ்திதவஸ்துஜ்ஞாநநிவர்த்யத் வரூபமான மித்யாத்வமும் மித்யாபூதமான அர்த்தகல்பநமும் தோஷவசத்தால் என்று த்ருஷ்டாந்தத்தில் *ஸித்திதமான இரண்டு அர்த்தங்களையும் தார்ஷ்டாந்திகத்தில் $அதி

§அவதாரணம்—நிச்சயம்.

†அவ்யாப்தி—லக்ஷ்யங்களுள் சிலவற்றில் இல்லாமலிருத்தல்.

*நிவர்த்யத்வம்—நிவர்த்திக்கப்படும் தன்மை.

‡நிவ்ருத்தத்வம்—நிவர்த்திக்கப்பட்டிருத்தல்.

¶பக்ஷம்—ஸந்தேஹவிஷயமான ஸாத்யத்துடன் கூடியது.

¶சோத்யம்—ஆக்ஷேபனை.

*ஸித்திதமான—சாஸ்திரத்தாலும் ந்யாயத்தாலும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற.

$அதிதேசியாநின்று கொண்டு—ஏறிடாநின்றுகொண்டு.

'தேசியா' நின்றுகொண்டு, இரண்டு சங்கைகளையும் அர்த்தாத் நிராகரிக்கிறார்-ஏவம் என்று. மிகவும் வேற்றுமையில்லாத சில வஸ்துக்களின் அத்யாஸம் ஒரு அதிஷ்டானத்தில் காணப்படுகிறது. எவ்வாறு ரஜ்ஜுமாத்திரத்தில் ஸர்ப்பம், பூமிவெடிப்பு, ஜலதாரை, முதலியவற்றின் அத்யாஸமோ. (அவ்வாறென்றபடி) எப்படி ஒரு அதிஷ்டானத்தில் ஓரேஸமயத்தில் ஒன்றோடொன்று மிகவும் ஒற்றுமையில்லாதவைகளாயும் அநந்தங்களாயுமுள்ள ப்ரபஞ்சங்களின் அத்யாஸம் ? என்பது ஒன்று ; "யஸ்ஸர்வஜ்ஞ:" இது முதலியவைகளில் ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களுள்ளதாக ப்ரஸித்தி பெற்றிருக்கிற ப்ரஹ்மத்தினிடத்தில் எங்ஙனம் அத்யாஸம் ? என்பது இரண்டாவது. சிந்மாத்ரவபுஷி என்பதனால் முன்சொல்லப்பட்டதும், ஸ்வயம் ப்ரகாசத்வத்தால் உண்டென்னப்பட்டிருப்பதுமான அத்யாஸாநுபபத்தியை †ஸ்புரிக்கச் செய்கிறார். பரே ப்ரஹ்மணி என்பதனால் இரண்டு சங்கைகளும் பரிஹரிக்கப்பட்டதாக ஆகின்றன-விலக்ஷணாதிஷ்டானமாக இருப்பதால் எல்லா அத்யாஸங்களும் உபபந்நம் என்று. வைலக்ஷண்யமும் ஸர்வஸாதாரணமான ஸந்மாத்ரரூபத்வம். ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்கள் அபரப்ரஹ்மத்தினிடத்தில். பரப்ரஹ்மத்தினிடத்திலோ வெனில், சிந்மாத்ரமாக இருப்பதால் ஸர்வஜ்ஞத்வாதி குணஸம்பந்தமில்லாமையால், அத்யாஸம் உபபந்நம் என்றும் அபிப்ராயம். அறியப்படுகிற ஆகாரத்தைப் *பராமர்சிக்கின்ற "இதம்" என்கிற பதத்தினாலும், யதாவஸ்திதப்ரஹ்மஸ்வரூபாவபோதபரிபந்தி என்கிற பதத்தாலும், முற்கூறப்பட்ட மித்யாத்வலக்ஷணம் அநுவதிக்கப்பட்டதாக ஆகிறது. தோஷபரிகல்பித மென்பதனால், தோஷவசாத் என்று ஆரம்பித்த வாக்கியத்தால் சொல்லப்பட்டிருப்பது அதிதேசிக்கப்பட்டது. பற்பலவிதமுள்ள எல்லா அத்யாஸங்களையும் காண்பிக்கிறார்-தேவ என்று. மித்யாரூபம்—மித்யாத்வலக்ஷணத்துடன் கூடியிருப்பதால், ரஜ்ஜு ஸர்ப்பம்போல் மித்யை யென்று சொல்லப்பட்டதாக ஆகிறது.

தோஷமென்பது யாது — அது பரமார்த்தமா ? அல்லது அபரமார்த்தமா? பரமார்த்தமாகில் ஜ்ஞானநிவர்த்யமாகாது, அபரமார்த்தமாகில் ப்ரபஞ்சத்திற்குப்போல் (தோஷத்துக்கும்) வேறு கல்பகம் அபேக்ஷிக்கப்படுவதால் அநவஸ்தை வரும். அந்த தோஷமானது, மறைக்கப்படாத பிரஹ்மத்தினிடத்தில்(ப்ரபஞ்சத்தை) கல்பிக்கிறதா? அல்லது மறைக்கப்பட்டிருக்கிற(ப்ரஹ்மத்தினிட)த்திலா?—மறைக்கப்படாத ப்ரஹ்மத்தினிடத்தில் என்று சொல்லப்படுமேயானால் அது உபபந்நமாகாது—ரஜ்ஜுத்வம் ப்ரகாசியாநிற்கையில் (ஸர்ப்பாத்யாஸத்திற்குப்) போல, ப்ரஹ்மத்தினிடத்தில் (ப்ரபஞ்ச) கல்பனை உண்டாவதற்கு விரோதம் வருவதால். விரோதமில்லை என்றால் பிறகும் நிவ்ருத்திவரக்கூடாது. திரோஹிதமாக இருக்கிற ப்ரஹ்மத்தினிடத்தில் எனில், திரோதானம் தானாகவே உண்டாயிருக்கிறதா ? அல்லது வேறு ஒன்றினாலா ? தன்னாலேயே என்று சொல்லப்படுமேயாகில் நிவர்த்திக்கத்தகாத தன்மையாவது அல்லது நிவ்ருத்தியின் ஸ்வரூபத்துக்கே நாசமாவது வரும். வேறொன்றினாலென்றால் வேறாகயிருக்கிற அந்த வஸ்து எது என்று சொல்லவேணும். மேலும், பற்பல அத்யாஸங்களுக்கு பற்பல தோஷமூலத்வம் காணப்பட்டிருக்கிறது. ஆதலால் அநேக தோஷங்கள் ஒப்புக்கொள்ளத்தக்கவைகள் என்கிற இந்த சங்கைகளை பரிஹரிப்பதற்காகச் சொல்லுகிறார்-தோஷஸ் என்று. சகாரம் சங்கையைப் போக்குகின்றது. தோஷம் என்ன ? வென்பதற்கு அவித்யை என்று மறுமொழி. அந்த அவித்யை வாஸ்தவமா? அவாஸ்தவமா? என்

†ஸ்புரிக்க—தோன்றும்படி.

*பராமர்சிக்கின்ற—குறிக்கின்ற.

கிற விகல்பத்தில் ஸதஸத்நிர்வசநீய என்று அபாரமார்த்யத்தை அங்கீகரித்தபடி. அந வஸ்தைக்குப் பரிஹாரம் அநாதி-என்று. ஸ்வரூபதிரோதான சப்தத்தினால் திரோஹி தாதிரோஹித விகல்பத்திற்கு மறுமொழிகூறப்பட்டது. அந்ததிரோதானமும் தன்னாலேயா, வேறொன்றினாலேயா என்கிற விஷயத்தில், திரோதானத்திற்குக்காரணத்தை நிர்த்தேசித்திருப்பதால், வேறொன்றினாலென்று அங்கீகரிக்கப்பட்டது. விவித இது முதலியவற்றால் நாநாத்யாஸங்களுக்கு ஏகதோஷமூலத்வம் கூறப்பட்டது. விக்ஷேபம்—அத்யாஸம். ஆச்சாதிகாவித்யை விக்ஷேபிகாவித்யை என்று அவித்யை ஒன்றுக்கே இரண்டு அவஸ்தைகள். அவர்களுக்கு அபிமதமான அந்த அவஸ்தாத்வயமானது திரோதானத்துக்கும் விக்ஷேபத்திற்கும் ஹேதுத்வஞ் சொன்னதினால்ஸூசிப்பிக்கப்பட்டது.

இவ்வண்ணமாக விருக்கிற அவித்யையை ப்ரதிஜ்ஞைசெய்து இதற்கு அநுகுணமான ப்ரமாணத்தைக்கூறுகிறார்- அந்ருதேந இது முதலியதால். ப்ரத்யூடா:—விபரீத புத்தியை யடைவிக்கப்பட்டன. ப்ரத்யூட சப்தத்தைத் தெளிவாக அறிவதின் பொருட்டு எடுக்கிறார்-தேஷாம் என்று †"அதிதி பாஶாந் ப்ரமுமோக்து" என்கிற விடத்திற் கொள்வதுபோல இங்கு பஹுவசனத்தில் தாத்பர்யமில்லை. இந்த அவித்யைக்கு ஸதஸத்நிர்வசநீயத்வம் கூறப்படுகிறது- நாஸதாஸீந்நோஸதாஸீத் என்று. எது இருந்தது எனில் கூறுகிறார்-தம என்று. தமஶ்ஶப்தத்தினால் "மறைத்தல்" என்கிற அர்த்தம் கருதப்பட்டிருக்கிறது. தமஸ்ஸாவது "அக்ஷரம் தமஸிலீயதே" என்று ப்ரக்ருதிதான் சொல்லப்படுகிறது என்று சங்கைவரின் உதாஹரிக்கிறார்-மாயாந்து ப்ரக்ருதிம் என்று. பற்பல அத்யாஸங்களுக்கு ஹேதுத்வத்தைக் காணபிக்கிறார்-இந்த்ரோமாயாபி: என்று. ஐக்யஜ்ஞாநமில்லாவிடில் இந்த (அவித்யை) நிவர்த்திக்கமுடியாத தென்பதைக் கூறுகிறார்-மம என்று. அநாதித்வத்தைச் சொல்லுகிறார்-அநாதி என்று. இந்த விடத்தில் நியாம்யவஸ்துக்களை அபேக்ஷித்திருக்கிற மஹேச்வரத்வ, இந்த்ரத்வ, பஹுவசநங்களின் ச்ரவணத்தால் விஜாதீய ஸஜாதீய ஸ்வகத பேதங்களோடு கூடியிருத்தல் ஏற்படக்கூடுமாதலால், அதை நிராகரிப்பதற்காக வ்யாக்யாநம் செய்கிறார்-நிர்விசேஷ என்று. ஸகுணத்வம் அறியப்பட்டிருந்த போதிலும், ஸ்வரூப பரவாக்யங்களுக்கு அநுகுணமாக தோஷத்தை வெளியிடுவதில் நோக்குள்ள வாக்யங்களுக்கு, வெளிப்படையாக அர்த்தமாகும் பேதத்தில் தாத்பர்யமில்லை என்று கருத்து. ப்ரஹ்மைவ—இந்த்ராதிசப்தங்களால் உணர்த்தப்பட்டிருந்த போதிலும், ஸ்வரூபபரவாக்யங்களால் உபதேசிக்கப்பட்டிருப்பது ப்ரஹ்மமே என்று கருத்து. (ப்ரமாணங்களாக) எடுக்கப்பட்டிருக்கிற அந்தந்த வாக்யங்களால் அறியப்பட்டிருப்பவைகளான அநாதித்வ, ஸதஸத்நிர்வசநீயத்வ, திரோதாயகத்வ, விவிதாத்யாஸகரத்வங்களைச்சொல்லுகிறார்-அநாத்யவித்யயா இது முதலியதால். ஸ்வகத சப்தத்தால் அதிஷ்டானமாக இருத்தலால் ஸம்பந்தம் விவக்ஷிக்கப்பட்டதே யொழிய, ஸஜாதீய விஜாதீயங்களோடுகூட சேர்த்துசொல்லப்பட்டிருக்கிற ஸ்வகதநாநாத்வம் விவக்ஷிக்கப்பட்டதல்ல.

இவ்வாறாக தோஷவாசியான வாக்யங்களையடைந்திருக்கிற இந்த்ர, மஹேச்வர முதலிய பதஸமூஹமானது அர்த்த ஸ்வாரஸ்யத்தால் ஸ்வரூபபரவாக்யப்ராபல்யத்தை யநுஸரித்து நிர்விசேஷவஸ்து பரமாக வ்யாக்யானிக்கப்பட்டது. அதற்கு மேல், தோஷவாசிகளான உபப்ருஹ்மண வாக்யங்களாலேயே நிர்விசேஷவஸ்துவுக்கே தோஷஸம்பந்தித்வம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதைக் காட்டுகிறார்—யதோக்தம் என்று. ஜகத்தானது சிந்மாத்ரமான ப்ரஹ்மத்தினது அஜ்ஞாநவிலாஸமென்று ப்ரதிஜ்ஞை செய்யப்படுகிறது-ஜ்ஞாநஸ்வரூபம் என்று. நதுவஸ்துபூத:—(அது) சொல்லப்போகிற மலை, ஸமுத்திரம், பூமி முதலியவஸ்துக்களாக ஆகிறதில்லை

†அதிதி:பாசாந்ப்ரமுமோக்து—அதிதிதேவதை பாசத்தைஅவிழ்த்துவிடட்டும்.

என்றுபொருள். விஜ்ஞாநசப்தத்தினால் 'விவிதம் ஜ்ஞாயதே அநேந' என்கிற ‡கரணவ்யுத்பத்தியினால் அவித்யைசொல்லப்படுகிறது. ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்டிருக்கிற ப்ரபஞ்சத்தினுடைய அவித்யாகல்பித ஸ்வபாவத்தை வ்யதிரேகமுகத்தால் உபபாதிக்கிறார்-யதா என்று. சுத்தம்-அவித்யையில்லாதது. நிஜரூபி பேதஹேதுவில்லாதது-அதற்கு நிமித்தமான கர்மங்கள் நாசமடைந்ததினால் ராகம் முதலிய தோஷங்களற்றது. 'ஸமந்தாத்கல்ப்யதே அநேந' என்று ஸங்கல்பம்—அதாவது அவித்யை. வஸ்துஷு—தர்மிபூதங்களான பதார்த்தங்களில். வஸ்துபேதா:—ஆகாரபேதங்கள் ஜகத்தில் காணப்படுகிறபடி வஸ்துபேதம் ஸத்யமல்ல என்பதை உபபாதிக்கும் நடுவிலுள்ள "வஸ்த்வஸ்திகிம், மஹீ கடத்வம்" என்கிற இரண்டு சுலோகங்களும் உபபாதிக்கவேண்டிய அதிக ப்ரமேயமில்லாமையால் இங்கு எடுக்கப்படவில்லை. அப்பிரமாணங்களையும் விஸ்தாரத்தில் எடுக்கப்போகிறார். விஜாதீயபேதமில்லாமையை உபஸம்ஹரிக்கிறார். தஸ்மாத் என்கிற முன்பாதியால். பிறகு ஆத்மபஹுத்வம் கால்பநிகம் என்று சொல்லுகிறார்- விஜ்ஞாநம் என்கிற பாதிசுலோகத்தால்- முன் சொல்லப்பட்டிருக்கிற ஆத்மைக்யத்தை ஏகம் ஸதைகம் என்கிற விடத்தில் 'ஏக' சப்தத்தால் அநுவதித்து, ஸ்வகதநாநாத்வத்தை நிஷேதித்து, பரம பரேசாதி சப்தங்களுக்குங்கூட வஸ்துமாத்ர பரத்வத்தை ப்ரதிபாதிக்கிறார்- ஜ்ஞாநம் என்று. 'விசுத்தம்' இது முதலிய பதங்களால் அவித்யாராஹித்யமும், அந்த அவித்யையினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற பேததர்சநராஹித்யமும், அந்த பேததர்சநமூலமாக ஸம்பவிக்கிற சோகம், லோபம் முதலியவைகளின்மையும் கூறப்படுகிறது. ஸதைகம்—ஜந்மவ்ருத்தி முதலியவைகளால் விடுபட்டது. எதைக்காட்டிலும் வேறொன்று இல்லையோ அது யதோக்த ஸ்வரூபத்துடன் கூடியதென்று அர்த்தம். இது பரமதமல்லவென்று சொல்லுகிறார்-ஸத்பாவ: என்று. ஏதத்ஸுவநாச்ரிதம்—புவநத்தினால் அதிஷ்டானமாக ஆச்ரயிக்கப்பட்ட ஜ்ஞானம். ஸம்வ்யவஹாரபூதம்—நாலாபக்கங்களிலும் வ்யவஹார விஷயமாக எது இருக்கிறதோ அந்த விஷயத்திலும் காரணம் அவித்யை என்று கூறப்பட்டது. அதுவும் பரமதம் அல்ல, உள்ளபடியேசொல்லப்படுகிறதென்றுஅர்த்தம்.

இவ்வண்ணம் விஸ்தபரமான வாக்ய பர்யாலோசனையினால் ப்ரஹ்மத்துக்கே ஸத்யத்வமும், மற்றதுக்கு அவித்யாபரிகல்பிதத்வமும் தத்வமென்று உரைக்கப்பட்டது. கர்மங்கள் அங்கங்களாக இருக்கத்தகாத வாக்யார்த்தஜ்ஞாநத்துக்கு மோக்ஷோபாயத்வம் சொல்லும் ப்ரஸ்துத விஷயத்திற்கு இதனால் என்னப்ரயோஜநம்? என்கிற சங்கைவர, உபாய பரவாக்யங்களுக்கும், விஸ்த பரவாக்யங்களால் அறியப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு அநுகுணமான உபாயபரத்வத்தைக் கூறுகிறார்- அஸ்யா: என்று. சகாரம் சங்கையைவிலக்குகிறது. அஸ்யா: என்கிற பதத்தினால் †ஸதஸதநிர்வசநீயத்வாதி விசேஷண விசிஷ்டத்வம் விவக்ஷிக்கப்பட்டது. அதன் நிவ்ருத்தியில் ப்ரமாணத்தைக் காண்பிக்கிறார்—நபுந: என்று. இங்கு ம்ருத்யு: என்பது அவித்யை. அதன் நிவ்ருத்தியும் ஐக்ய ஜ்ஞானத்தினால் என்றுகூறுகிறார்-ந தேகம்பச்யதி என்று. ம்ருத்யுகார்யமான ரோகம் முதலிய வற்றுக்கும் நிவருத்தியை ஜ்ஞாபநம் செய்கிறார். நபச்யோ ம்ருத்யும்- என்று. 'நரோகம் நோத துக்கதாம்' என்பது அதற்கு சேஷம். நிர்விசேஷவஸ்து ஜ்ஞாநம் உண்டான க்ஷணத்துக்கு அடுத்த க்ஷணத்திலேயே அபய

‡கரணவ்யுத்பத்தியாவது—அநேந என்று மூன்றாம்வேற்றுமையினால் காட்டப்படும் கரணகாரகத்தை முன்னிட்டு ஏற்படுத்தப்படும் சப்தநிஷ்பத்தி.

†ஸத்ஸதநிர்வசநீயம்—இருக்கிறதென்றாவது இல்லையென்றாவது நிரூபிக்கக் கூடாதது.

ப்ராப்தியைக் காண்பிக்கிறார்-யதாஹி என்று. அத்ருஶ்யே—ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயமாகாதது. அநாத்ம்யே ஆத்ம்யம—வயாபிக்கப்படுது, அதாவது சரீரம்; சரீரமில்லாதது. அநிருக்தே—நிர்வசனம் செய்யத்தகாதது. அநலயநே—ஆதாரமில்லாதது. அபயம்—பயமின்மைக்கா . அவ்யயீபாவஸமாஸம். ப்ரதிஷ்டா—நிஷ்டை. வாதிகளால் பந்தத்துக்கு மூலமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற கர்மமும் அவித்யா கல்பிதமாதலால் அதற்கும் ஜ்ஞாநத்தால் நிவ்ருத்தியைக்கூறுகிறார்-பித்யதே என்று. ஹ்ருதயக்ரந்தி:—அவித்யை. முன் வாக்யங்களில் ஸ்வல்பபேதம் அறியப்பட்டது போலாகிறதென்று அதை வ்யாவ்ருத்திப்பதின் பொருட்டு ஜ்ஞாநத்திற்கு ஐக்யவிஷயத்தை ஜ்ஞாபிப்பதற்காக ஐக்யாபத்தியாகிற பலத்தைக் காண்பிக்கிறார்-ப்ரஹ்ம வேத என்று. எவ்வாறு உபாஸநமோ அவ்வாறன்றோ பலம். ஆதலால் ஐக்யஜ்ஞாநமே பந்தநிவர்த்தகமென்று கருத்து. உபாயாந்தரநிஷேதத்திற்காக உதாஹரிக்கிறார்-தமேவம் என்று.

---

𑌅𑌤𑍍𑌰 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍋𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌯𑌥𑌾 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌵𑌚𑌨𑌮𑍍—"𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌂 𑌵𑍈 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌹𑌂 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿, 𑌸𑌦𑌾𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌮𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿" (𑌭𑌾-𑌉-௪௧-௪) 𑌇𑌤𑌿। "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" (𑌤𑍈-𑌆-௧-௧) "𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" (𑌬𑍃-௫-௯-௨௮) 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍋𑌧𑌕𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌵𑌸𑍇𑌯𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌕𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍—"𑌅𑌥 𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑌾𑌵𑌨𑍍𑌯𑍋𑌽𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿, 𑌨 𑌸 𑌵𑍇𑌦" (𑌬𑍃-௩-௪-௧௰) 𑌅𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷𑌃, 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍇𑌵𑍋𑌪𑌾𑌸𑍀𑌤 (𑌬𑍃-௩-௪-௭) 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 (𑌛𑌾-௬-௮-௭) 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾 𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑌿 𑌭𑌗𑌵𑍋 𑌦𑍇𑌵𑌤𑍇, 𑌅𑌹𑌂 𑌵𑍈 𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 𑌭𑌗𑌵𑍋 𑌦𑍇𑌵𑌤𑍇, 𑌤𑌦𑍍𑌯𑍋𑌽𑌹𑌂 𑌸𑍋𑌽𑌸𑍌, 𑌯𑍋𑌽𑌸𑍌 𑌸𑍋𑌽𑌹𑌮𑌸𑍍𑌮𑌿" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌾𑌕𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍। 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 𑌚𑍈𑌤𑌦𑍇𑌵—"𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌤𑍂𑌪𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚" (𑌶𑌾-𑌸𑍂-௪-௧-௩) 𑌇𑌤𑌿। 𑌤𑌥𑌾 𑌚 𑌵𑌾𑌕𑍍𑌯𑌕𑌾𑌰𑌃—"𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌤𑍁 𑌗𑍃𑌹𑍍𑌣𑍀𑌯𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃" 𑌇𑌤𑌿। 𑌅𑌨𑍇𑌨 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌨𑌿𑌖𑌿𑌲𑌸𑍍𑌯 𑌸𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯 𑌬𑌨𑍍𑌧𑌸𑍍𑌯 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾॥

---

**ஸ்ரீபாஷ்யம்.—**

இவ்விடத்தில் ம்ருத்யு சப்தத்தால் அவித்யை கூறப்படுகிறது. இந்த விஷயத்தில் ப்ரமாணம் ஸநத்ஸுஜாதவசநம்—"ப்ரமாதத்தையே ம்ருத்யுவென்று நான் சொல்லுகிறேன். எப்போதும் அப்ரமாதத்தை (ப்ரஹ்மஸ்வரூபத்தை உள்ளபடி யறிதலை) மோக்ஷமென்று சொல்லுகிறேன். "ப்ரஹ்மமானது அஸத்யத்தினின்றும், ஜடத்தினின்றும், தேசகாலங்களால் பரிச்சின்னமானவஸ்துவினின்றும் வ்யாவ்ருத்தமானது". "விஜ்ஞாந

மாநந்தம் ப்ரஹ்ம” இதுமுதலிய ‡பேதாபேதவாக்யங்களால் நிச்சயிக்கத்தக்க நிர்விசேஷ ஸ்வரூப ப்ரஹ்மாத்மைகத்வ விஜ்ஞானமும் “பின்பு அதுவேறு நான்வேறாக இருக்கிறேன் என்றுஎண்ணி எவன் தேவதையை தன்னிலும் வேறாக உபாஸிக்கிறானோ, அவன் அந்த ப்ரஹ்மத்தை அறிகிறானில்லை— இவன் அபூர்ணனன்றோ, தான் என்றே உபாஸிக்கக்கடவன்” “நீ அந்த ப்ரஹ்மமாக இருக்கிறாய்” “ஹே பகவன்! தேவதையே! நீயே நானாகி றேன். பகவன்! தேவதையே! நான் தான் நீ ஆகிறாய். ஆகையால் நான் என்பவன் யாரோ அவன்தான் அந்த பரமாத்மா. எவன் அந்த பரமாத் மாவோ அவன்தான் நானாகிறேன்” என்கிற இது முதலிய வாக்யங்களால் ஸித்தம். இதையே (ஸூத்ரகாரரும்) கூறப்போகிறார், “ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச” தான் என்றே உபாஸிக்க வேண்டும். அவ்வண்ணமல்லவோ (முமுக்ஷுக்கள்) உபாஸிக்கிறார்கள். அவ்வாறே சாஸ்திரங்களும் உபதேசிக்கின்றன என்று. அப்படியே வாக்யகாரரும் “ஆத்மேத்யேவ து க்ருஹ்ணீயாத் ஸர்வஸ்ய தந்நிஷ்பத்தே:” (ஆத்மாவென்றே க்ரஹிக்க வேண்டும்; எல்லாம் அங்கு கல்பிதமாக இருப்பதால்) என்று. இந்த ப்ரஹ்மாத்மைகத்வவிஜ்ஞானத்தினால் மித்யாரூபமானதும் காரணத்துடன்கூடியதுமான பந்தத்திற்கு நிவ்ருத்தி யுக்தமானதே.

---

**ச்ருதப்ரகாசிகை.—**

இந்தவிடத்தில் அவித்யாநிவ்ருத்தியானது அறியப்படுகிறதில்லை; அவ்வர்த்தத்தை உணர்த்துகிற சப்தச்ரவணமில்லாமையால், என்று கேட்கில் சொல்லுகிறார்—அத்ர என்று. “ம்ருத்யுர்தாவதி பஞ்சம:” (ஐந்தாவனாக யமன் ஓடுகிறான்) என்கிற இது முதலிய சுருதிவாக்யத்தில் ம்ருத்யுசப்தத்திற்கு யமன் முதலியவர்களிடத்தில் ப்ரயோகம் காணப்படுவதால், அதை வ்யாவ்ருத்திப்பதற்காகச் சொல்லப்பட்டது-அத்ர என்று. பந்தநிவ்ருத்திபரவாக்யங்களிலென்றர்த்தம். அதில் ப்ரயோகத்தைக் காணபிக்கிறார்-யதா என்று. “ப்ரமாதம் வை” என்கிற வசநத்திற்கு முந்தி “மோஹோ ம்ருத்யு: ஸம்மதோய: கவீநாம்” என்பது கூறப்பட்டது. மோஹம்—விபரீதஜ்ஞானம். அது ம்ருத்யு என்பது அங்கீகரிக்கப்பட்டது. ஸநத்ஸுஜாதரோ ப்ரமாதத்தை ம்ருத்யு வென்கிற சப்தத்தால் வ்யவஹரிக்கிறார். ப்ரமாதமாவது—உள்ளபடி வஸ்துவை அறியாமை. ஸ்வரூபத்தை க்ரஹிக்காவிட்டால் வேறுவிதமாகவன்றோ ஞானம் உண்டாகிறது. ஆகையால் மோஹத்திற்கும் ஹேதுவாக விருக்கிறது, ஆத்மாவினிடத்திலுள்ள ¶அநவதான ரூபமான ப்ரமாதம். இதனால் அதற்கு ஹேதுவாக இருக்கிற அவித்யையே ப்ரமாத சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டது. அந்த அவித்யையே ம்ருத்யு வென்று அபிப்ராயம். எடுக்கப்பட்ட வாக்கியங்களில் ஞானம் அவித்யையைப் போக்குகிறதென்று அறியப்பட்டது. ப்ரஹ்மமானது நிர்விசேஷ சின்மாத்ர மென்பதும், அதனால் ஆத்மாவினுடைய ஏகத்வஜ்ஞானம் நிவர்த்தக மென்பதும் அறியப்படவில்லை என்று

---

‡ பேதாபேதவாக்யம்—ப்ரஹ்மம் காரணமென்றுசொல்வதால், விகாரித்வம்முதலிய தோஷங்கள் வரக்கூடியதாயிருப்பதால் அந்த தோஷங்கள் ப்ரஹ்மத்தினிடத்தில் தட்டாதபடி சுத்தமாகக்காட்ட ப்ரஹ்மஸ்வரூபத்தை தெளிவாய் சோதிக்கும் “ஸத்யம் ஜ்ஞாநம்” இது முதலிய வாக்யம். ¶ அநவதானம்— கவனமின்மை.

கேட்கில்கூறுகிருர்-ஸத்யம்ஜ்ஞான மென்று. ஸத்யஜ்ஞாநாதிவாக்யம்,எல்லாவஸ்துக்களிடத்தினின்றும் ப்ராஹ்மத்திற்கு வ்யாவ்ருத்தியை அறிவிப்பதற்காக எடுக்கப்பட்டது. புருஷார்த்தத்வத்தின் பொருட்டு அஸுகத்தினின்றும் வ்யாவ்ருத்தியை ஞாபிப்பதற்காக எடுக்கப்பட்டது—விஜ்ஞானமானந்தம் என்று. ஆதி சப்தத்தினுல் 'அஸ்தூலம்' இது முதலியது க்ராஹிக்கப்படுகின்றது, இவ்வண்ணம் ப்ராஹ்மத்துக்கு நிர்விசேஷத்வத்தில் சோதகவாக்யங்கள் உதாஹரிக்கப்பட்டன. பிறகு, ப்ராஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்று அறிவிக்கும் ஶ்ருதியை எடுக்கிருர்— அந்ய: என்று. "அந்யோ஽ஸௌ அந்யோ஽ஹமஸ்மி" என்று ஐக்ய உபாஸனவிதியானது பேதவாஸனையை விலக்குவதற்காக § விஹிதமான உபாஸனத்திற்கு ஐக்யம் தான் விஷயமென்று ஞாபிப்பதற்காக ஐக்யோபதேசத்தைக்காண்பிக்கிருர்—தத்வமஸி என்று. உபதேசாநுகுணமாக உபாஸகன் தேவதையைக் குறித்துச்சொல்லுகிருன்— த்வம்வா என்று. உபதேசிக்கப்பட்ட அர்த்தத்தை தன்மனதில் அநுஸந்தானஞ்செய்கிருன், தத்யோஹம் என்று. இந்த அர்த்தம ஶ்ருதிக்கு தாத்பர்ய மென்று காட்டும் பொருட்டு ஸூத்ரத்தைக் காண்பிக்கிருர்—வக்ஷ்யதி ச என்று "ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச"—ஆத்மா என்றே உபாஸிக்கவேணும், அவ்வண்ணமே முமுக்ஷுக்கள் உபாஸிக்கிருர்கள். க்ராஹயந்தி — அவ்வாறே ஶாஸ்திரங்களும் ஞாபிக்கின்றன. ஸூத்ரகாரருடைய அபிப்ராயத்தை அறிந்தவர்களுடைய வாக்யத்தைக்காண்பிக்கிருர்— ததாச என்று. அதில் நிஷ்பன்னமானதால் அதாவது ஆங்கு கல்பிதமாக விருப்பதால், என்று அர்த்தம். ஶ்ருதிமாத்ரமல்ல, அதற்கு அநுக்ராஹக தர்க்கமும் இருக்கிறதென்று சொல்லுகிருர்— அநேநச என்று. சகாரம் ஸமுச்சயத்தில். கர்ம நிரபேக்ஷமான ஞானத்தினுல் நிவர்த்திக்கத்தக்கதென்பதற்காகச் சொல்லுகிருர்—மித்யாரூபஸ்ய என்று. இந்த விசேஷணத்தில ஹேதுத்வம் உள்ளடங்கியிருக்கிறது. ஸகாரணஸ்ய— அவித்யையினுல் உண்டு பண்ணபட்ட பேத தர்சனத்தோடு கூடின பந்தத்திற்கு நிவ்ருத்தியானது யுக்தம், மித்யாஸர்ப்ப நிவ்ருத்தியில் இது ஸர்ப்பமல்ல இது கயிறு என்கிற ஞானத்தைத் தவிர்த்து கர்மாபேக்ஷையில்லை என்று கருத்து.

---

𑌨𑌨𑍁 𑌚 𑌸𑌕𑌲𑌭𑍇𑌦𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾 𑌕𑌥𑌮𑌿𑌵 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌜𑌨𑍍𑌯𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇? । 𑌕𑌥𑌂 𑌵𑌾 "𑌰𑌜𑍍𑌜𑍁𑌰𑍇𑌷𑌾 𑌨 𑌸𑌰𑍍𑌪𑌃" 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾 𑌸𑌰𑍍𑌪𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇? । 𑌤𑌤𑍍𑌰 𑌦𑍍𑌵𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑌃; 𑌇𑌹 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑍂𑌲𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌚— 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌤𑍁𑌲𑍍𑌯𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑍇 𑌵𑌾 𑌕𑌥𑌂 𑌬𑌾𑌧𑍍𑌯𑌬𑌾𑌧𑌕𑌭𑌾𑌵𑌃? 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌯𑍋𑌰𑍍𑌦𑍁𑌷𑍍𑌟𑌕𑌾𑌰𑌣𑌜𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌤𑌦𑌭𑌾𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍—𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑍋𑌰𑌪𑌿 𑌸𑌮𑌾𑌨𑌮𑍇𑌤𑌤𑍍 ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

ஐயா! ப்ரத்யக்ஷவிருத்தமான ஸகலபேதநிவ்ருத்தியானது, எவ்வாறு

---

§ விஹிதம்—விதிக்கப்பட்டது.

சாஸ்திரஜந்யஜ்ஞானத்தினால் உண்டுபண்ணப்படும்? இது பழுதை பாம்பல்ல என்கிற ஞானத்தால் ப்ரத்யக்ஷ விருத்தையான ஸர்ப்பநிவ்ருத்தி எவ்வாறு செய்யப்படலாம்? அங்கு இரண்டு ப்ரத்யக்ஷங்களுக்கு விரோதம். இங்கேயோ ப்ரத்யக்ஷமூலமான சாஸ்திரத்திற்கும் ப்ரத்யக்ஷத்திற்கும் விரோதம் என்றால், துல்யங்களான இரண்டுக்கும் விரோதம்வரின் எவ்வாறு பாத்யபாதகபாவம்? பூர்வோத்தரங்களிரண்டுக்கும் துஷ்டகாரணஜந்யத்வமும் தத்பாவமுமாகிற இவைகளாலென்று கூறப்படுமேயானால், சாஸ்திரம் ப்ரத்யக்ஷம் இவையிரண்டுக்கும் (இந்த நியாயம்) ஸமாநம்.

---

ஶ்ருதப்ரகாசிகை—

பிறகு அநுமானம் ♆ஆகமம் இரண்டும் ‡ வியாப்திக்ரஹணம்*லிங்கதர்சனம், ‡‡ தர்மிப்ரதிபத்தி இவைகளின் பொருட்டும் வ்யுத்பத்தியின் பொருட்டும் ப்ரத்யக்ஷத்தை அபேக்ஷித்திருப்பதால்--அநுஷ்ணோயமக்நி: த்ரவ்யத்வாத்-- "இந்த அக்னியானது உஷ்ணமில்லாதது, த்ரவ்யமாக இருப்பதால்" "ஆதித்யோ † யூப:"சூர்யன் பசுபாதஸ்தம்பம் "யஜமான: || ப்ரஸ்தர:" யாகம் செய்பவன் கல், இது முதலிய விடங்களில் அநுமாநம் ஆகமம், இரண்டும் ப்ரத்யக்ஷவிருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிப்பதில் சக்தியற்றவைகளாகக் காணப்பட்டிருக்கின்றன, ஆதலால், ஶ்ருதியானது ப்ரதயக்ஷ விருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிப்பதில் ஸாமர்த்தியமற்றது என்கிற அபிப்பிராயத்தினால், பேதவாதியானவன் வினவுகிறான்--நநுச என்று. சுருதிவாக்யங்களில் @ அவாந்தரசோத்யங்கள் பரிஹரிக்கப்பட்டபோதிலும், இந்த சோத்யமும் இருக்கிறதென்பது சகாரத்தினர்த்தம். ஸ்வப்நம் முதலியவைகளிலும், ஸர்ப்பம் பூமியின் பிளவு முதலியவைகளிலும், சில பேதநிவ்ருத்தியானது காணப்பட்டிருக்கிறது; அதை விலக்குவதற்காக ஸகல சப்தம். இவ்விடத்தில் ப்ரத்யக்ஷமானதால் பாத்யத்வமில்லையா? அல்லது, § பரோக்ஷமாயிருப்பதாலும் மூலமான ப்ரத்யக்ஷத்தை அண்டியிருப்பதாலும் ஆகமத்திற்கு பாதகத்வமில்லையா? என்கிற இரண்டு சங்கைகளையும் மனதில் வைத்துக்கொண்டு முதலில் ப்ரத்யக்ஷத்வத்தால், அபாத்யத்வம் என்பதைப்பரிஹரிக்கிறார்— கதம் வா என்று. அது ப்ரத்யக்ஷாபாஸமென்று கூறப்படுமேயாகில் அது ஒவ்வாது—முதலில் தோற்றமுண்டாகும் பொழுது ஆபாஸத்வம் அறியப்படாமையாலே பிறகு ப்ரமாண பாதத்தால் அது அறியப்படுகிறதென்று கூறப்படுமேயாகில், அது ப்ரபஞ்சக்ராஹியான ப்ரத்யக்ஷத்திற்கும் ஸமானம். "பேதத்திற்கு சுருதியினால் பாதம் வருவதால்" என்கிற இது இவ்விடத்தில் அபிப்பிராயப்படப்பட்டிருக்கிறது. ப்ரத்யக்ஷத்தை மூலமாகவுடையதாயிருப்பதாலும் பரோக்ஷமாக இருப்பதாலும், சாஸ்திரம் பாதக

---

♆ ஆகமம்—சாஸ்த்ரம். ‡ வ்யாப்தி கிரஹணம்— ஹேதுவும் ஸாத்யமும் தவறாமல் அநேகவிடத்தில் சேர்ந்திருத்தலை கிரஹித்தல்.

* லிங்கதர்சனம்—ஸாத்யத்தை ஸாதிக்கக்கூடிய அதுஷ்டமானஹேதுவைக்காணுதல்.

‡‡ தர்மிப்ரதிபத்தி—வஸ்து ஸ்வரூபஜ்ஞானம்.

† யூபம்—யாகத்தில் பசுவைக்கட்டும் ஸ்தம்பம். || ப்ரஸ்தர:—கல்,

@ அவாந்தரசோத்யங்கள்—இடையில் வரும் ஆக்ஷேபங்கள்.

§ பரோக்ஷம்—நேரில் காணப்படாதது.

மாகாது என்று சங்கிக்கிறார்—தத்ர என்று. இஹது என்று; துல்யத்வத்தை விலக்குவ தற்காக "து" சப்தம். ப்ரத்யக்ஷ மூலஸ்ய என்று. || மூலியாக இருப்பதினால் சாங்கி ரம வ்யாபக மல்லவென்று கருத்து. பாஸ்த்ரஸ்ய என்று பரோக்ஷமாக விருப்பதால் பாதகமல்லவென்று கருத்து. துல்யத்வம் ஹேதுவாக இருக்கும் பக்ஷத்தில், வா ய்ய வ்யாபகபாவமானது மாறியும வரக்கூடுமாகையால் அது † ப்ரயோஜகமல்ல. ஆதலால் அந்த இடத்தில் வா ய்ய வாபக பாவத்தில் உன்னால் வேறு காரணம் சொல்லத்தக்கது. அதுவே நமக்கும் ஹேது என்கிற அபிப்பிராயத்தினால் சொல்லுகி றார்— துல்யயோ: என்று. வா ய்ப வாபக பாவத்தில அநியமத்தை வ்யாவர்த்திப்ப தற்காக பேதவாதி சொல்லக்கூடிய வேறு ஹேதுவை ஆசங்கிக்கிறார்—பூர்வோத்தர யோ: என்று பூர்வோத்தரயோ:—வா ய்யவாபகங்கள் இரண்டுக்கும், உன்னால்சொல் லப்பட்ட ப்ரயோஜகம இவ்விடத்திலும துல்யமென்று கூறுகிறார்—சாஸ்த்ர என்று.

---

[illegible]

---

ஸ்ரீ பாஷ்யம் —

இது சொல்லப்பட்டதாக வாகிறது—வா ய்ய வாபக பாவத்தில் துல் யத்வம், ஸாபேக்ஷத்வம், நிரபேக்ஷத்வம் முதலியது காரணமன்று \$ ஜ்வாலா பேதாநுமானத்தால். ப்ரத்யக்ஷத்திற்கு வா ய்பத்வமானது உண்டாகாமல் போகவேண்டி வருவதால். அவ்விடத்திலோ எனில் ப்ரத்யக்ஷத்தால் ஜ்வாலை ஒன்று என்று அறியப்படுகிறது. ஆனது பற்றி இரண்டு ப்ரமாணங்களுக்கு விரோதம் வரின், எது ஸம்பவிக்கககூடிய அந்யதாஸித்தியுடன கூடிய தோ, அது வா ய்யம் ; † அநந்யதாஸித்தமாயும் ‡ அவகாசமில்லாததாகவுமி ருக்கிற மற்றது வாபகமென்று எல்லாவிடத்திலும் வா ய்யவாபக பாவ நிர்ணயம்.

---

ச்ருதப்ரகாசிகை:—

மூலமூலித்வம் முதலியது உள்ளவிடத்தில் மூலமான ப்ரத்யக்ஷத்திற்கு வாபக த்வமும், மற்றதுக்கு வா ய்பத்வமும் காணப்பட்டிருக்கிறது. ஆகையால், மூலமூலி

---

|| மூலி—மூலத்தை யுடையது. † ப்ரயோஜகம்—காரணம்.

\$ ஜ்வாலாபேதாநுமானமாவது— தீபஜ்வாலையானது பார்க்கும்போது ஒன்றாய் தோன்றினபோதிலும எண்ணெய் திரிமுதலிய ஸாமக்ரிகளின் பேதத்தினால் ஜ்வாலைகள் அநேகங்கள் என்று அநுமாநித்தல்.

† அநந்யதாஸித்தி—வேறுவிதத்தினால் ஸித்திக்க முடியாதது.

‡ அவகாசம்—வேறுபோக்கு இடமில்லாதது,

த்வம், பரோக்ஷத்வ அபரோக்ஷதவம் முதலிய வைஷம்யங்களில்லா மலிருக்கும்போது துஷ்டகாரண ஐக்யத்வம் தத்பாவம் என்கிற இரண்டும் ஸாத்யஸாதக பாவத்தில் ப்ரயோஜகங்களென்கிற சங்கையைக்கூறுகிறார்— ஏதத்துக்தம் என்று. துல்யத்வமிருக்கையில் துஷ்டகாரண ஐக்யதவ தத்பாவங்கள் இரண்டும ப்ரயோஜகங்கள் அல்ல வென்கிற அபிப்ராயத்தினால் துல்ய சப்தம் பிரயோகிக்கப்பட்டது. ‡‡ விசிஷ்டத்துக்கு ஹேது த்வம் வரின் விசேஷணம்சத்துக்குங்கூட ஹேதுத்வம் வருவதால் துல்யசப்தத்தினால் $ ஏகதேசத்தை எடுத்தபடி. துஷ்டகாரண ஐக்யத்வ தத்பாவங்களுக்கு விசேஷணபூத மாயிருக்கிற துல்யத்வம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. துல்யத்வேஸதி—விபரீத, ப்ராபல்ய, தௌர்பல்ய காரணாபாவமிருக்கையில் துஷ்டகாரண ஐக்யதவ தத்பாவங்கள் பிரயோஜகங்களல்ல வென்று பொருள். ஸாபேக்ஷத்வம நிரபேக்ஷதவம்—*மூலமூலிபாவம். ஆதி சப்தத்தினால் பரோக்ஷாபரோக்ஷபாவ, ‡ விளமபாவிளமபங்கள் விவக்ஷிக்கப் பட்டிருக்கின்றன சுருதிலிங்காதிகளில் † விளம்பாவிளம்பங்களாலன்றோ ப்ராபல்ய தௌர்பல்யங்கள். அன்றிக்கே— அப்ரயோஜகமாகக்கூறப்பட்ட துல்யத்வமானது, திருஷ்டாந்தமாக அநுவதிக்கப்பட்டது. வேறுவிதமான வைஷம்ய மில்லாமலிருக் கையில் ‘துஷ்டகாரண ஐக்யதவ தத்பாவங்கள்கூட ஆதி சப்தத்தால் விவக்ஷிக்கப்பட் டிருக்கின்றன. இவைகளுக்கு அப்ரயோஜகத்வத்தை ஒரு திருஷ்டாந்தத்தால் உபபாதனஞ் செய்கிறார்— ஜ்வாலா என்று. “அந்யதா” என்கிற பதம் சேர்த்துக் கொள்ளத்தக்கது. ப்ரத்யக்ஷோபமர்த்தாயோர்கர்த் என்று. +(உபமர்த்தத்திற்கு) அனித்தியானது ப்ரஸங்கிக்கவேண்டிவருவதால் என்று அர்த்தம். ஜ்வாலாபேதாநு மானத்திலேயெனில் *மூல*மூலிபாவமிருக்கிறது. § விளம்பா விளம்பங்களும் இருக்கின றன. அநுமானம் ப்ரத்யக்ஷ ஸாபேக்ஷமாக இருப்பதால்-துல்யதவமிருக்கையில், துஷ்ட காரணஐக்யதவம் அதின் அபாவம் இவ்விரண்டுக்கும்,ப்ரயோஜகதவங்கூட இதனால்தள்ளப் பட்டதாக ஆகிறது—அந்த துல்யத்வ மில்லாமலிருந்தபோதிலுங்கூட ஸாத்ய ஸாதக பாவம் காணப்படுவதால். அதில் எதை விஷயீகரிக்கிற ப்ரத்யக்ஷம் பாதிக்கத்தக்கதாக ஆகிறது எனில் சொல்லுகிறார்— தத்ராஹி என்று. ஐக்யத்தை க்ரஹிக்கிற ப்ரத்யக்ஷம் பாயிக்கத்தக்கதென்று அர்த்தம. அங்ஙனமாகில் எது ப்ரயோஜகமெனில் கூறுகிறார்- ஏவஞ்ச - என்று. துல்யத்வம முதலியவைகளுக்கு ப்ரயோஜகதவமானது பொருந்தா மல் போகவே, த்வயோ: என்று. இரணடு ப்ரத்யக்ஷங்களுக்கும, இரண்டு அனு மானங்களுக்கும், இரண்டு ஆகமஙகளுக்கும், ப்ரத்யக்ஷம் அநுமானம் இரண்டுக்கும், அநுமானம் ஆகமம் இரண்டுக்கும், ப்ரதயக்ஷம் ஆகமம் இரண்டுக்குமாவது என்று பொ ருள். யத்ஸம்ஸாவ்யமாநாந்யதாஸித்தி என்று. ஸாவகாசமாயிருப்பதால் அந்யதா ஸித்தம் என்று அர்த்தம்— அடுத்து அநந்யதாஸித்தம் அநவகாசமென்று சொல்வதால். × விஷயாந்தரலாபமாவது அல்லது அப்ரமாணகோடிநிவேசமாவது ஸாவகாசதவம்- தன்னால் உணர்த்தப்பட்டுள்ள அர்த்தவிஷயப்ராமாண்யததை விட்டுங்கூட ஸம்பா விதமான உத்பத்தியுடன் கூடியிருத்தல் அந்யதாஸித்தத்வம்-விருத்தமான அர்த்தத்தை

‡‡ விசிஷ்டம்—விசேஷணத்துடன் கூடியது. $ ஏகதேசம்—ஒரு அம்சம்.
‡ விளம்பம்—தாமதமாய் அறியப்படுதல். அவிளம்பம்—சீக்கிரம் அறியப்படுதல்.
+ உபமர்த்தம்—நாசம்.
* மூலம்—காரணம், மூலி—ஹேதுவுடன் கூடியது-அதாவது கார்யம்.
§ விளம்பம்—தாமதம், அவிளம்பம—சீக்கிரம்.
× விஷயாந்தரலாபம்— வேறுவிஷயத்தினால் விலக்கப்பெற்று பூர்வத்துக்கு அப்ரமாண கோடி நிவேசம்.

உணர்த்துகிற, பிரமாணத்தை வாயிக்காமலுங்கூட தான் உதித்தல் என்று. கருத்து. அநந்யதாஸித்தம் அநவகாசம் என்று. அநந்யதாஸித்தமாவது - தன்னுடைய அர்த்தத்தில் ப்ராமாண்யமில்லாமல் உண்டாகாமை விருத்தார்த்த அப்ரமாணங்களை வாயியாமல் உண்டாகாமை என்று அர்த்தம்— அதுவும் அநவகாசமாக விருத்தலால். அநவகாசத்வமாவது—வேறு இடம்கிடையாமை, அல்லது அப்ராமாணகோடிநிவேசாபாவம். அப்ராமாணகோடியில் சேர்க்கக்கூடாமை, வேறுபோக்கிடம்கிடையாமை இவ்விரண்டுகாரணங்களால் விருத்தார்த் $ தோபஸ்தாபகமான ப்ரமாணத்தை வாயியாமல் உதியாமை என்று அர்த்தம். இதிலஸர்வத்ர—முற்கூறப்பட்ட விதமாக¶ஸஜாதீயங்களாகவோ, $ விஜாதீயங்களாகவோ இருக்கிற இரண்டு பிரமாணங்களுக்கு விரோதம் வருமாகில், என்று அர்த்தம்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑌾𑌦𑌿𑌨𑌿𑌧𑌨𑌾𑌵𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌾𑌸𑌂𑌭𑌾𑌵𑍍𑌯𑌮𑌾𑌨𑌦𑍋𑌷𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑌵𑌕𑌾𑌶 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌜𑌨𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧 𑌮𑍁𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧 𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶 𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌾𑌵𑌬𑍋𑌧𑍇𑌨 𑌸𑌂𑌭𑌾𑌵𑍍𑌯𑌮𑌾𑌨𑌦𑍋𑌷𑌸𑌾𑌵𑌕𑌾𑌶 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧 𑌵𑌿𑌵𑌿𑌧𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌰𑍂𑌪 𑌬𑌨𑍍𑌧𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌵 । 𑌸𑌂𑌭𑌾𑌵𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌵𑌿𑌵𑌿𑌧𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌭𑍇𑌦𑌦𑌰𑍍𑌶𑌨𑌹𑍇𑌤𑍁𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯𑌾𑌨𑌾𑌦𑌿 𑌭𑍇𑌦𑌵𑌾𑌸𑌨𑌾𑌦𑌿𑌰𑍂𑌪𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑍋 𑌦𑍋𑌷𑌃 ।

ஸ்ரீபாஷ்யம்—

ஆதலால், ஆதியும் அந்தமுமில்லாததும் தொடர்ச்சியாகவும் இருந்து வருகிற ஸம்ப்ரதாயமுள்ளதும், தோஷகந்தமில்லாததும, அவகாசமற்றதுமான சாஸ்திரத்தினுல் உண்டாகக்கூடிய நிர்விசேஷ, நித்யசுத்த முக்த புத்தஸ்வப்ரகாச சின்மாத்ரப்ரஹ்மாத்ம பாவஜ்ஞானத்தினுல், ஸம்பாவ்யமானதோஷத்துடன் கூடியதும் ஸாவகாசமாகவுமிருக்கிற ப்ரத்யக்ஷாதி ஸித்தமான பற்பல விகல்ப ரூபமானபந்தம் நிவ்ருத்தியாவது யுக்தமே. பற்பல விகல்பபேதமுள்ள ப்ரபஞ்சக்ராஹியான ப்ரயத்க்ஷத்திற்கு அநாதி பேதவாஸநாதிரூபமான அவித்யை என்கிற பெயருள்ள தோஷமானது ஸம்பவிக்கக்கூடியதே.

ச்ருதப்ரகாசிகா—

இவ்வண்ணம் வாய்யவாயக பாவத்தில் ப்ரயோஜகமிருக்கட்டும், அதனுல் ப்ரஸ்துதமான சாஸ்த்ர ப்ராபல்யத்திற்கு என்ன பிரயோஜனமென்று வினவினுல் அதற்கு உத்தரம் கூறுகிறுர்.—தஸ்மாத் என்று. தஸ்மாத்— அந்யதாஸித்தத்வம் அநந்யதாஸித்தத்வம் இவ்விரண்டுமே வாய்யவாயகபாவததில் பிரயோஜகமாக விருப்

‡ உபஸ்தாபகமான—உணர்த்துகிற, ¶ ஸஜாதீயம்—ஓர் வகுப்பிலடங்கியது.
$ விஜாதீயம்—வெவ்வேறு வகுப்பைச்சார்ந்தது.

பதால். அநாதி நிதநாவிச்சிந்நஸம்ப்ரதாய என்று விட்டுப்போகாமல் தொடர்ந்து வருகிற ஸம்ப்ரதாயமாதலால், அநாதிநிதனம (ஆதியந்தமில்லாதது). $ ஸம்ப்ரதாயத்துக்கு அவிச்சேத மிருக்கும்போது † காத்ருஸ்மரணம இல்லாமையன்றோ அபௌருஷேயத்வத்திற்கு ஸாதகம். "அநாதிநிதநாஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா। ஆதௌ வேதமயீ திவ்யா யதஸ்ஸர்வா:ப்ரஸூதய:".(எதனிடத்தினின்று அனைத்தும் உண்டாயிருக்கின்றனவோ அப்படிப்பட்டதும, ஆதியந்தமில்லாததுமான வேதமயமான இந்த திவ்ய வாக்கானது, ஆதியில் பரமாத்மாவினால் வெளியிடப்பட்டது). "அநாதிநிதநம் ப்ரஹ்ம" இது முதலிய வசனங்களும் அநாதிநிதந சப்தத்தினால் ஞாபகப்படுத்தப்பட்டன. அதனாலேயேதான் தோஷஸம்பாவனையற்றது. ப்ரமம், ஏமாற்றும் எண்ணம் கவனமின்மை, அசக்தி எனகிறநான்கு தோஷங்களுடன் கூடியிருத்தல், பௌருஷேயத்வததால் உண்டுபண்ணப்படுகிறதன்றோ, அதனாலேயே அநவகாசம். சாஸ்த்ரஜந்ய என்கிற சப்தத்திற்கு ‡‡ அவபோத சப்ததத்தோடு அந்வயம வாக்யவாக்யசபாவததின் அங்கீகாரமானது விரோதத்தை அபேக்ஷித்திருப்பதால், விரோதத்தைக் காணபிக்கிறார்—நிர்விசேஷ இது முதலியதால். நித்யம் - காலததால் அளவிடப்படாதது. சுத்தம் - அவித்யாஸம்பந்தமில்லாதது. அதனாலேயே முக்த சப்தமானது அவித்யையினால் உண்டுபண்ணப்பட்ட பிறப்பு முதலியவற்றின இன்மையை உணர்த்துகிறது. ஸ்வ - ஸம - பிரகாசிக்கின்ற, ஸ்வப்ரகாச சப்தமானது, பூர்வம் புத்தசப்தத்தால் சொல்லப்பட்ட ப்ரகாசமானது பராதீனமென்கிற ஸந்தேஹத்தை நிரஸிப்பதற்காக. தானே ப்ரகாசிக்கின்ற ஸ்வபாவத்துடன் கூடியிருத்தல் ஸ்வப்ரகாசத்வம் - அதுவும சின்மாத்ர சப்தததால் வாச்யமாக விருப்பதால்; ஸ்வயம் ப்ரகாசத்வ மல்லவோ சித்த்வம. சித்ஸ்வரூபத்வமும் ச்ருதி ஸித்தம். மாத்ர சப்தம் ஜ்ஞேயத்வநிராஸத்தில் நோக்குள்ளது. ப்ரஹ்மாத்மபாவாவபோதேந—இப்படிப்பட்ட ப்ரஹ்மத்திற்கும் தனக்கும் ஐக்யஜ்ஞானத்தினால் என்று அர்த்தம். ஸம்பாவ்யமாந என்று. ஸம்பாவ்யமானதோஷத்துடன் சேர்ந்திருப்பதால ஸாவகாசம் - அப்ரமாணகோடியில் இடம் பெற்றது. அதனாலேயே அந்யதாஸித்தத்வமும் பலித்தது. அந்யதாஸித்தத்வமாவது - விபரீதப்ரமாணத்தைப்பாதியாமல் கூட உத்பத்தியின் ஸம்பவம். ப்ரத்யக்ஷாதி என்று ஆதிசப்தத்தால் அநுமானம் முதலியது சொல்லப்படுகிறது. விவிய என்று. தேவாதி ரூபத்தாலும் ஸ்வகார்யமான ஜந்மஜராமரணாதி ரூபத்தாலும் பலவாறாக இருக்கிற ஜ்ஞாத்ரு ஜ்ஞேயாதி விகல்பம் - அதுவே பந்தம், அதின் நிவ்ருத்தி என்று அர்த்தம் ஸம்பாவ்யமானதோஷம் எது வெனில் சொல்லுகிறார்—ஸம்பாவ்யதோஷ என்று. பேதப்ரபஞ்ச: - பேதஸமுதாயம், அன்றிக்கே பேதரூபமான ப்ரபஞ்சம் விவித விகல்ப சப்தமானது, ப்ரபஞ்ச விசேஷணம. அல்லது பேதவிசேஷணம். பேதம் ஜ்ஞாத்ருஜ்ஞேயம் முதலியது. அதுவும் ப்ராஹ்மணாதி ரூபத்தால் பலவாறாக உள்ளது. தேவமனுஷ்யாதி ரூபத்தால் விகல்பமுள்ளது. இக்காலத்திலுள்ளவர்கள் சிலர் காமாலை, § திமிரம முதலியதோஷத்தைககூறுகின்றனர். அது யுக்தமன்று: அது ஏதோ ஒரு ஸமயத்தில் ஸம்பவிப்பதால்: காசாதிகளால் துஷ்டமான ப்ரத்யக்ஷத்தை ஸபக்ஷமாகச் செய்துகொண்டு, மற்றவைகளுக்கு காசாதி துஷ்டத்வம் அநுமானிக்கப்படுகிறது எனில், அல்ல,—அதிப்ரஸங்கம் வருவதால். அநாதி கீதசம் என்று

---

$ ஸம்ப்ரதாயம்—பரம்பரையாக வருகிற ஸதாசார்யாளுடைய உபதேசம்.

† காத்ருஸ்மரணம்—கர்த்தாவை ஸ்மரிப்பித்தல். § திமிரம், காசம்—ஓர்விதமான கண்ணுக்குவரும் ரோகங்கள். ‡‡ அவபோதம்—ஞானம்.

எந்த சாஸ்திரம் சொல்லப்பட்டதோ அதற்கும் ''சப்தத்வாத்'' இது முதலிய ஹேது வால் துஷ்டகர்த்ருத்வாநுமானம் சுலபமாகச் செய்யத்தக்கதன்றோ. அங்கு, கர்த்தா $ யோக்யாநுபலப்தியினால் நிரஸிக்கப்பட்டானென்று சொல்லப்படுமேயானால் அது இவேயும் துல்யம். காசம் முதலியவற்றுக்கு தோஷத்வகல்பநம பொருந்தாமல் போவ தால் அதை வ்யாவ்ருத்திப்பதற்காகக் கூறுகிறார்— அநாதி இது முதலியதால். பேதவா ஸநாதி ரூபா— ஆதிசப்தத்தினால் பேதவாஸனைக்கு ஹேதுவாக இருக்கிற பேததர்ச னம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. இவ்விரண்டுக்கும் ஹேதுஹேதுமத்பாவத்தில் அந் யோந்யாச்ரயதோஷபரிஹாரத்திற்காக அநாதி சப்தம். வீஜாங்குர ந்யாயத்தால் என்று கருத்து பேததர்சனமும் பேதவாஸனையுமன்றோ கார்யாவித்யை அதனால் தான் சொல்லப்பட்டது பேதவாஸநாதி ரூபா அவித்யா என்று. '' ஆதித்யோ யூப: '' இது முதலியவிடங்களில யூபம். ஆதித்யன் முதலியவற்றுக்கு ஐக்யம முதலியவற்றை ப்ரதிபாதியாமலிருப்பது ப்ரத்யக்ஷவிரோதத்தாலல்ல; பின்னையோ, அந்யபரமாகவிருப்ப தால், '' யத்பர: ஶப்த: ஸ ஶப்தார்த்த: '' ( சப்தம் எந்த அர்த்தத்தை ப்ரதிபாதிப்ப தில் முக்கியமான நோக்குள்ளதோ, அதுதான் சப்தத்தினர்த்தம்) என்றல்லவோ ந்யா யத்தை யறிந்தவர்கள் கூறுகின்றனர். அந்யபரத்வமும் தாத்பர்யலிங்கமில்லாமையால் அறியபபடுகிறது. ஆதித்யோ யூப: என்கிற வாக்யம், § யூபாஞ்ஜநவிதிசேஷமாக விருப்ப தால், அந்யபரமென்று அந்யனுடைய அபிப்பிராயம்.

---

நநு சாநாதிநிதநாவிச்சிந்நஸம்ப்ரதாயதயா நிர்தோஷஸ்யாபி ஶாஸ்த்ர ஸ்ய ''ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத'' இத்யேவமாதேர்மோக்ஷ ஶ்ருதிநா பாத்யத்வம் த்ருஶ்யதே । ஸத்யம், பூர்வாபராபச்சே தேந பூர்வஶாஸ்த்ரஸ்ய மோக்ஷஶாஸ்த்ரஸ்ய நிரவகாஶத்வேந பாத்யத் வமேவ । வேதாந்தவாக்யேஷ்வபி ஸகுணப்ரஹ்மோபாஸநபராணாம் ஶாஸ்த்ராணாமயமேவ ந்யாய:, நிர்குணத்வாத் பரஸ்ய ப்ரஹ்மண: । நநு ச '' ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் '' (மு-௨-௨-௭) ''பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச'' (ஶ்வே-௬-௮) ''ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப: '' (சா-௮-௧-௫) இத்யாதிப்ரஹ்மஸ்வ ரூபவிசேஷப்ரதிபாதநபராணாம் கதம் பாத்யத்வம் ? நிர்குணவாக்ய ஸாமர்த்யாத்— இதி ப்ரூம: ॥

---

$ உபலப்தியின் அபாவம் அநுபலப்தி, உபலப்தி - அறிதல், அதின் இன்மை அநுபலப்தி - யோக்யாநுபலப்தியாவது, ப்ரதியோகி ஸத்வப்ரஸஞ்ஜந ப்ரஸஞ்ஜித ப்ரதியோகிகத்வம் - ப்ரதியோகியின் ஸத்தாப்ரஸஞ்ஜநத்தினால் ப்ரஸஞ்ஜிதமான ப்ரதி யோகியோடு கூடியிருத்தல் (உதாஹரணம்) பூமியில் கடம் இல்லாதஸமயத்தில் அந்த கடத்தின் அபாவமானது இந்தயோக்யாநுபலப்திப்ரமாணத்தால் அறியப்படுகிறது, கடம் இங்கு இருக்குமேயானால் பூதலத்தைப்போல அறியப்படும். அப்படி அறியப்படாமை யால் இங்குகடமில்லை என்பது அநுபலப்திக்கு 'யோக்ய'' என்கிற அடைமொழியினால் ஒருபோதும் புலப்படாத ப்ரதியோகிகளான பிசாசம்முதலிய அத்ருச்யவஸ்துக்களின் அபாவமானது இந்தப்ரமாணத்துக்கு விஷயமாகாது. § அஞ்ஜநம்— அபிஷேகம்.

ஸ்ரீபாஷ்யம்—

ஐயா! ஆதியந்தமில்லாமல் அவிச்சிந்ந ஸம்ப்ரதாயத்துடன் கூடியிருப்பதால் தோஷமில்லாமலிருந்தபோதிலும் "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க காமோ யஜேத" (ஸ்வர்க்கத்திலாசையுள்ளவன் ஜ்யோதிஷ்டோமத்தினால் தேவதையை ஆராதிக்கவேண்டும்) என்கிற இது முதலான பேதத்தை அவலம்பித்திருக்கிற சாஸ்திரத்திற்கு பாத்யத்வம ப்ரஸங்கிக்குமே யெனில், உண்மைதான்; பூர்வாபராபச்சேதத்தில் பூர்வசாஸ்திரத்தைப் போல; மோக்ஷ சாஸ்திரத்திற்கு அவகாசமில்லாமையால் அந்த மோக்ஷசாஸ்திரத்தினால் (பேதாவலம்பியான சாஸ்திரம்) பாதிக்கவேபடுகிறது வேதாந்த வாக்கியங்களிலும் பரப்ரஹ்மம் நிர்குணமாக இருப்பதால், ஸகுணப்ரஹ்மோபாஸநபரசாஸ்திரங்களுக்கு இதுவே நியாயம். ஐயா! "யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" 'பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞானபல க்ரியாச" "ஸத்யகாமஸ்ஸத்யஸங்கல்ப:" எவன (எல்லாவற்றையும் ஸாமாந்யாகாரத்தாலுமறிகிறானோ, எல்லாவற்றையும் விசேஷித்துமறிகிறானோ, இவனுக்குச் (பரப்ரஹ்மத்திற்கு) சிறந்த சக்தியானது பற்பலவிதமாக சுருதியினால் கூறப்படுகிறது ஜ்ஞானம்,பலம், க்ரியை, இவைகள் அனைத்தும் ஸ்வபாவஸித்தமாக இருக்கிறது. ஸத்யமான காமமுள்ளவன் - ஸத்யமான ஸங்கல்பமுள்ளவன்) இது முதலிய ப்ரஹ்மஸ்வரூபத்தை நிரூபிப்பதில் நோக்குள்ள சாஸ்திரங்கள் எவ்வாறு பாதிக்கத்தக்கதாக ஆகும்? நிர்குணவாக்யங்களுடைய ஸாமர்த்த்யத்தால், என்று சொல்லுகிறோம்.

ச்ருதப்ரகாசிகை.—

எது தோஷமற்றதென்று உரைக்கப்பட்டதோ, அதிலும் பாத்யபாதகபாவத்திற்கு நிமித்தமாக இருக்கிற அர்த்த விரோதமிருக்கிறது. ஆகையால் அவசியம் இரண்டில் ஒன்றுக்கு பாத்யத்வ முண்டாகலாம். அதில், பாத்யத்வத்தில் ப்ரயோஜகமான யாதொரு துஷ்டகாரண ஜந்யத்வமுண்டோ அது இல்லையே இந்த விடத்தில் எவ்வாறு நிர்வாஹம்? என்கிற அபிப்பிராயத்தால் சோதநஞ்செய்கிறார்--நநு என்று. ப்ராபல்ய தௌர்பல்யங்களுக்கு ஹேதுவில்லையென்று சொல்லுகிறார்—அநாதி என்று. "அபி" சப்தம் விரோதத்தைக்காட்டுகிறது. ஆத்தவிரோதத்தைக் காண்பிக்கிறார்—ஹேஊாவலம்பிந: என்று. ஸத்யமென்கிற பதம் பாதிஅங்கீகாரத்தில். பேதாவலம்பி சாஸ்திரத்திற்கு பாத்யத்வம் என்கிறவிஷயத்தில் அங்கீகாரம - துஷ்டகாரணஜந்யத்வ விஷயத்தில் அநங்கீகாரம். பாத்யபாதகபாவத்தில் அந்யதாஸித்தத்வாநந்யதாஸித்தத்வங்களே ப்ரயோஜகங்கள். முற்கூறப்பட்ட துஷ்டகாரண ஜந்யத்வமும் அந்யதாஸித்தத்வப்ரகாரவிசேஷமன்றோ, இவ்விடத்திலும முகபேதத்தால் அந்யதாஸித்தியை உபபாதிக்கிறார்—பூர்வாபர இது முதலியதால். அபச்சேத நியாயத்தால் பாத்யத்வம் ப்ரத்யக்ஷத்திற்கும் துல்யம், அவ்விடத்தில் தோஷமூலத்வமும் பாத்யத்வவிஷயத்தில் அதிகமான ஹேது. அபச்சேதத்தில் பூர்வாபரசாஸ்திரங்களிரண்டுக்கும் பௌர்வாபர்யமானது, ‡ப்ரமிதியின் உத்பத்தி க்ரமத்தாலல்லது பாடக்ரமத்தாலல்ல "ஜந்து ருதவிக்

‡ ப்ரமிதி—ஜ்ஞானம்.

குக்கள் நன்றாக * அந்வாரம்பணஞ்செய்துகொண்டவர்களாக ஸஞ்சரிக்கின்றார்கள். அத்வர்யுவை ப்ரஸ்தோதா பின் தொடருகிறான்; ப்ரஸ்தோதாவை ப்ரதிஹர்தா; ப்ரதிஹர்தாவை உத்காதா; உத்காதாவை ப்ரஹ்மா; ப்ரஹ்மாவை யஜமானன்" என்று விதிக்கப்பட்டிருக்கிற அந்வாரம்பணத்திற்கு விச்சேதம் வரின் ப்ராயச்சித்தம சொல்லப்படுகிறது. ¶ பஹிஷ்பவமானத்தில் ஸஞ்சரிக்கின்றவர்களுள் உத்காதா, ப்ரதிஹர்தாவை விட்டுவிடுவானேயாகில் தக்ஷிணையில்லாமலே அந்தயஜ்ஞம் நிறுத்தத்தக்கது. அவன் மறுபடியும் யாகஞ்செய்யவேண்டும் முந்தின யாகத்தில் எந்த தக்ஷிணையைக்கொடுக்கப் போவதாக தீர்மானித்திருந்தானோ, அந்த தக்ஷிணையைகொடுக்கக்கடவன். ப்ரதிஹர்த்தா விட்டு விடுவானேயாகில் தன்சொத்துமுழுவதையும் தக்ஷிணையாகக்கொடுத்து யாகத்தை முடித்து விடவேண்டும்' என்று. அப்படிப்பட்ட இந்த இரண்டு சாஸ்திரங்கள் விஷயம். இவ்விடத்தில் உத்காதா ப்ரதிஹர்தா இரண்டுபேர்களுக்கும் வெவ்வேறு ப்ரயோகத்தில் அபச்சேதம் ஸம்பவிக்குங்கால் அதற்கேற்பட்ட ப்ராயச்சித்த சாஸ்திரம் ப்ரவ்ருத்திக்கிறது. ஒரு ப்ரயோகத்திலேயே இருவரும் ஒரேஸமயத்தில் விட்டு விடுவார்களேயாகில், உத்காதாவுக்கு ப்ராயச்சித்தம் ப்ரவ்ருத்திக்கிறது—அவன் வர்க்கத்தில் ப்ரதானனாதலால். ப்ரதாநாபச்சேதமே ஸமாதானஞ்செய்யத்தக்கதாதலால். அன்றிக்கே இதையாவது அதையாவது விகல்பித்தும் அநுஷ்டிக்கலாம்; ஒன்றிலேயே முன் பின்னாக அபச்சேதம் நேர்ந்தால் முந்தின ப்ராயச்சித்தசாஸ்த்ரத்திற்கு தௌர்பல்யமும், பிந்தினசாஸ்திரத்திற்கு ப்ராபல்யமும் கர்மமீமாமஸையில் கூறப்பட்டிருக்கிறது. "பௌர்வாபர்யேபூர்வதௌர்பல்யம் ப்ரக்ருதிவத்" என்று. இவ்விடத்தில், விரோதியுண்டாவதற்கு முன்பே உதித்தபடியினால் பூர்வசாஸ்திரத்திற்கு ப்ராபல்யம். பரசாஸ்திரம் ப்ரதிபக்ஷத்தோடு கூடவே உதிப்பதால் அதற்கு தௌர்பல்யமென்று பூர்வபக்ஷம். ஸித்தாந்தமோவெனில் பூர்வசாஸ்திரம் பிறக்குந்தருணத்தில் விரோதியில்லாமையால் அந்தவிரோதியைபாதியாமலுங்கூட உத்பத்தி ஸம்பவிக்கிறது. பிந்தின சாஸ்திரத்துக்கோ; தானுண்டாகுந்தருணத்தில் விரோதியிருப்பதால் அதை பாதியாமல் தானுண்டாவதென்பது பொருந்தாததலால் முந்தியதை பாதித்தே பிந்தினசாஸ்திரமுண்டாகிறது. ஆதலால், அஸம்பாதஸித்தமாக இருப்பதால் உத்தரசாஸ்திரத்திற்கு ப்ராபல்யமென்று, "பூர்வத்தை பாதியாமல் உத்தரசாஸ்திரத்திற்கு உத்பத்தி ஸித்தியாது"என்றல்லவோ நியாயமறிந்தவர்கள் கூறுகின்றனர்.

ஐயா! உத்தரசாஸ்திரம் உதிக்குமேயானால் பூர்வசாஸ்திரத்தை பாதியாமல் உதிக்கமுடியாது. பூர்வசாஸ்திரம் உத்தரசாஸ்த்ரோத்பத்திக்கு, ஏன் ப்ரதிபந்தகமாகக் கூடாதெனில்?— இவ்வண்ணமல்ல; நிமித்தமுண்டாகும்போது ‡‡ நைமித்திக சாஸ்த்ரம் உதித்தே விட்டதாதலால், அங்கு உதிக்கிற உத்தரசாஸ்த்ரத்திற்கு பூர்வ சாஸ்த்ர பாதமில்லாமல் உத்பத்தி அநுபபந்நமாதலால் முந்தினது பாதிக்கப்பட்டதே. மேலும் சாஸ்த்ரத்தில் எவ்வாறு உரைக்கப்பட்டிருக்கிறதோ அவ்வாறான தக்ஷிணையுடன் கூடிய கர்ம † ஸமாபநமன்றோ சாஸ்திரத்தினால் முந்தியே தானாக ப்ராப்தமாக இருக்கிறது. அதுவோ ப்ராயச்சித்தசாஸ்த்ரத்தினால் வேறாகச்செய்யப்பட்டு விட்டது.

---

* அந்வாரம்பணம்—ஒருவரையொருவர் தொடர்ந்து பின்புறம் கச்சத்தைப்பிடித்துக்கொள்தல்.

¶ பஹிஷ்பவமானம்—ஹோமவேதிக்கு நாற்புறத்திலுமுள்ள வெளிப்ரதேசம்.

‡‡ நைமித்திகம்—நிமித்தத்தினால் ஸம்பவிக்கிறது (அமாவாஸ்யையில் தர்ப்பணம் போலவும் அபச்சேதத்தில் ப்ராயச்சித்தம் போலவும்.

† ஸமாபநம்—நிறைவேற்றுதல்,

இவ்வண்ணம் முக்தி ஸித்தமாக விருக்கிற அர்த்தத்தை வேருகச் செய்கிற ப்ரகாண மாதலால் இவ்விடத்திலும் முக்தியதே பாதிக்கப்படத்தக்கது என்று காமவிசாரத்தில், நிச்சயிக்கப்பட்டது. இவ்வாருக உத்தரசாஸ்திரத்தைப்போல மோக்ஷசாஸ்திரத்திற்கு வேறு அவகாச மில்லாமலிருப்பதால, பேதாவலம்பியான சாஸ்திரம் பூர்வசாஸ்திரம் போல் பாதிக்கப்படுகிறதென்று அர்த்தம் பாதவம ( பிந்தி இருத்தல் ) என்பதும பாடக்ரமத்தாலும, அர்த்தக்ரமத்தாலும். தர்மார்த்தகாமங்களை பயனுககொண்டிருத்த லவன்ரே கர்மத்தில் ப்ரதமபராவண்யம. நிரூபகனுகவும தத்வபரனுகவும இருப்பவ னுக்கன்ரே மோக்ஷேச்சை அப்படிப்பட்ட பௌர்வாபாயங்களில்லாததும வரோத காப்பங்களாகவும ஸகுணோபாஸனபரங்களாகவுமிருக்கிற வேதாந்த வாக்யங்களில் எவ் வாறு நிர்வாஹம என்னில ? சொல்லுகிருர்—வேதாந்த வாக்யேஷ்வபி என்று. 'அபி' சப்தம் * ஸமுச்சயத்தில். பூர்வோத்தரபாகங்களிரண்டுக்கும விரோதம பரிஹரிக்கப்பட் டது. உத்தரபாகத்திலும் விரோதம பரிஹரிக்கப்படுகிறதென்று அர்த்தம். எவ்வாறு இவ்விடத்தில || அபச்சேத நியாயத்திற்கு அவதாரம் என்னில் கூறுகிருா-நிர்குணத்வாத் என்று. 'பர' சப்தத்தால ❀ அர்வாசீனமான ஸகுணப்ரஹ்மத்தின் வ்யாவ்ருத்தி வருகிறது. அபச்சேத நியாய அவதாரணத்திற்கு பலனுக விருக்கிற நிர்குணத்வ வைாயம் காணப்படு வதால் அபச்சேத நியாயம் பிரவேசித்தது என்று அறியத்தக்கது என்று பொருள்.

§"ஜக்ஷக் க்ரீடக் ரமமாண:" இது முதலிய சுருதியினுடைய† தாத்விகத்வாதாத்விகத் வங்களின் நிரூபணத்தை அநாதரித்து முதலில் ஸகுணோபாஸனத்தில $ ப்ராவண்யம. நிரூபகனென்னில் நிர்குண பரப்ரஹ்ம வேதாந்தத்தில அதிகாரியென்று பௌர்வாபர்ய மென்று கருத்து. உபாஸன பரங்களான ஸகுணநிர்குண வாக்யங்களிரண்டுக்கும பலத் தின் வாயிலாக பௌர்வாபாயம் கூறப்பட்டது அதுவோவென்னில் ஸ்வரூப பரங்களான ஸகுண நிர்குண வாக்யங்களிரண்டுக்குமில்லை யாதலால், எவ்வாறு அங்கே பாத்யபாதக பாவம் ? என்று சோதனஞ் செய்கிருர் நநுச என்று விதி நிஷேதரூபமான பௌர்வா பர்யத்தை மனதில வைத்துக்கொண்டு சொலலுகிருர்—நிர்குண என்று.

---

ஸத்யகாமம் ஸவதி—"ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ:" (சா-௩-௧௪-௨) "ஸத்யஸங்கல்ப: ஸத்யகாம: ஸ ப்ரஹ்ம" (தை-ஆ-௧-௧) "நிர்குணம்" (ஆத்மோபநிஷத்) "நிரஞ்ஜநம்" (ஶ்வே-௬-௧௯) இத்யாதி வாக்யாநி ஸவிஶேஷ நிர்விஶேஷ ப்ரதிபாதகாநி ப்ரஹ்ம இதி ப்ரதி பாதயந்தி, உதாஹரணம் ச ஸமர்த்தம் । உபயவிதாநாம் வாக்யாநாம் விரோதே ஸதி நைவாபச்சேதந்யாயேந நிர்குணவாக்யாநாம் ப்ர தாநாவகாசேந பரத்வாத் பலீயஸ்த்வமிதி ந கிஞ்சிதவஹீநம் ॥

---

ஸ்ரீபாஷ்யம —

இது சொல்லப்பட்டதாக ஆகிறது—அஸ்தூலம், அநணு, அஹ்ரஸ்வம்,

---

* ஸமுச்சயம்—கூட்டுமமை. || அபச்சேத:—தொடர்ச்சி விட்டுப்போகுதல்.
❀ அர்வாசீநம்—கீழ்ப்பட்டது.
§ ஜக்ஷக்க்ரீடக்ரமமாண:—சாப்பிடுகிறவன், விளையாடுகிறவன், ரமிக்கிறவன்.
† தாத்விகத்வம்—யாதார்த்யம். $ ப்ராவண்யம்—இழிதல்.

அதீர்க்கம்' "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம" "நிர்குணம் நிரஞ்ஜனம்" (பெருத்ததாக இராததும், அணுவாக இல்லாததும் குட்டையாகவும் நீண்டு மிராததும. ப்ரஹ்மம், அஸத்யமாயும் ஜடமாயுமிருக்கிற வஸ்துக் களினின்று வ்யாவ்ருத்தமாயும் தேசகாலவஸ்துக்களால் அபரிச்சிந்நமான கவுமிருக்கிறது. குணசூந்யமாயும் கர்மஸம்பந்தமில்லாததாகவுமிருக்கிறது இது முதலான வாக்யங்கள், ப்ரஹ்மத்தை எல்லாவிசேஷங்களினின்று விடு) பட்டதாயும் $ கூடஸ்தமாயும் நித்யமாயுமிருக்கிற † சைதந்யமென்று ப்ரதி பாதிக்கின்றன. மற்றவைகளோ, ஸகுண ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கின்றன. இரண்டுவித வாக்யங்களுக்கு விரோதம் வரின், அந்த அபச்சேத நியாயத் தினாலேயே நிர்குண வாக்யங்கள் குணங்களை அபேக்ஷித்திருப்பது பற்றி பிற்பட்டவையாயிருப்பதால், அதிகபலமுள்ளது. ஆதலால் ஒருகுறைவுமில்லை.

---

ஶ்ருதப்ரகாசிகை:—

எவை நிர்குணவாக்யங்கள், எவ்வாறு அவைகளுக்கு ஸாமர்த்தியமெனில் கூறு கிறார்—ஏதுக்தம் என்று. அஸ்தூல இதுமுதலானவாக்யம் குணவிசேஷங்களை மறுப் பதில் கருத்துள்ளது. ஸத்யஜ்ஞாநாதி வாக்யததில் அஸத்யவ்யாவ்ருத்தியானது உள்ள டங்கி இருக்கிறது. நிர்குணம் இதுமுதலான வாக்யம் குணஸாமாந்யநிஷேதத்தில் கருத் துள்ளது. ஆதி சப்தத்தினால் "யத்ததத்ரேஶ்யம" இது முதலியது க்ரஹிக்கப்படுகிறது. விரோதத்தை ஸ்புரிக்கும்படி செய்கிறார்--நிரஸ்த என்று. கூடஸ்த சப்தமானது நிர்விகா ரத்வத்தையாவது ஸர்வாதிஷ்டாநத்வத்தையாவது சொல்லுகிறது. ‡ கூடம்போல் நிலை பெற்றிருக்கிற தென்கிற அர்த்தத்தினாலன்றோ கூடஸ்த சப்தம் ப்ரஹ்மவாசகமாகிறது. "நித்யசைதந்யம்" எனகிறவரையிலுள்ள பதஙகளால் உதாஹரிக்கப்பட்ட நிர்குண ஶ்ருதி யின் அர்த்தமானது ஸங்க்ரஹிக்கப்பட்டது. இதராணி—யஸ்ஸர்வஜ்ஞ: இது முத லிய முன்பு எடுக்கப்பட்டிருககிற வாக்யஙகள். சகாரம் ஸமுச்சயத்தில். ஸகுண நிர்குண பரமாதலால் இரண்டுவிதவாக்யஙகளுக்கும விரோதம். தேநைவ—பூர்வோத்தர பாகங் களுக்கு விரோதம்வரின் உததரவாகயத்திற்கு எது ப்ராபல்ய ஹேதுவாகச் சொல்லப் பட்டதோ, அதினாலேயே என்று அர்த்தம். நிர்குண வாக்யஙகளுககு அதிகபலம் எதனாலென்றால் சொல்லுகிறார்—குணோபேக்ஷத்வேந பாத்வாத் என்று. நிஷேதிக்கப் படத்தக்கதை விஷயமாகக்கொண்டன்றோ நிஷேதம உதிக்கிறது. நிர்விஷயமான நிஷே தமில்லையன்றோ. முந்தயே ப்ரஸக்தமாக இருககிற விஷயத்திற்கு நிஷேதிக்கத்தக்க தன்மை அதனால் நிஷேதிக்கப்படுமதை அபேக்ஷித்திருப்பதால் நிஷேதத்திற்கு பரத்வ

---

$ கூடஸ்தம்—கூடம்போல் ஸ்திரமாக இருக்கிறது. கூடம் என்பது கொல்லன் வேலை செய்யும இடத்தில் இரும்புகளைக் காய்ச்சி அடிப்பதற்காக அங்கு போடப்பட்டி ருக்கிற அடிப்பட்டறை, அதின்மீது அடிக்கப்படும இரும்புகள் பற்பல ஆயுதங்களாக மாறுதலை அடைந்து கொண்டிருந்த போதிலும் இவ்வனைத்துககும் ஆதாரமாயுள்ள கூடம் மாத்திரம ஒருவிதவேறுபாடும் உள்ளதாக ஆகிறதில்லை, ஒரே நிலைமையுடன் எப்போதும் மாறுதலின்றி இருக்கிறது. † சைதந்யம்—ஜ்ஞானம் ;

‡ கூடம்—கருமான் ஓலையில் இரும்புகளைக் காச்சி அடிப்பதற்கு ஆதாரமாக இருக் கிற ஒரு இரும்புப்பட்டறை.

மென்று கருத்து. ஸகுணவாக்யங்களுக்கு வையர்த்ய்மும், உபாஸனவிஷயமாக விருப்பதால், பரிஹரிக்கப்பட்டதென்கிற அபிப்ராயத்தால் ஒரு குறைவுமில்லையென்று கூறப்பட்டிருக்கிறது.

அன்றிக்கே "யஸ்ஸர்வஜ்ஞ:" இது முதலியவாக்யங்களுங்கூட உபாஸனத்திற்கு சேஷங்கள் என்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிறார்—வேதாந்தவாக்யேஷு என்பது முதலாக உபாஸநபராணும் என்று, அந்தவாக்யங்களும் ஃபலவிசேஷார்த்தமாக உபாஸனபரங்களே யொழிய தத்வபரங்களல்லவென்று கருத்து. அபச்சேத ந்யாயாவதாரத்தை உபாதானஞ்செய்கிறார்—நிர்குணத்வாத் என்று அர்த்தம்முன்போல நிர்குணத்வம ஸித்திக்கமாட்டாது—பௌர்வாபர்ய மில்லாமையால். அபச்சேத ந்யாயத்திற்கு அவகாசமில்லாததுபற்றி குணங்களுக்கு பாத்யத்வம் ஸித்தியாமையால். அதனாலேயே ஸகுணவாக்யங்களுக்கு வையர்த்ய பரிஹாரமும் பொருந்துகிறதில்லை. ஸ்வரூப பரமாகவே யறியப்பட்ட வாக்கியங்களுக்கு உபாஸன பரத்வ கல்பநமானது பாத்யத்வ ஸித்த்யதீன மன்றோ என்று. சோதனஞ்செய்கிறார்—நநு ச என்று. பரிஹரிக்கிறார்—நிர்குண என்று. மற்றதெல்லாம் முன்போலவே.

---

𑌨𑌨𑍁 𑌚 “𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮” 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑍇𑌨𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍇𑌃 । 𑌅𑌨𑍇𑌕𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑍇𑌽𑌪𑍍𑌯𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍, 𑌅𑌨𑌭𑌿𑌜𑍍𑌞𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌐𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌨𑌾𑌮 𑌸𑌰𑍍𑌵𑌪𑌦𑌾𑌨𑌾𑌮𑌰𑍍𑌥𑍈𑌕𑍍𑌯𑌮𑍍, 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑍇 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌭𑍇𑌦𑍇𑌨 𑌪𑌦𑌾𑌨𑌾𑌮𑌰𑍍𑌥𑌭𑍇𑌦𑍋𑌽𑌵𑌰𑍍𑌜𑌨𑍀𑌯𑌃, 𑌤𑌤𑌶𑍍𑌚𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌨 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 । 𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌪𑌦𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌤𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌅𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌾𑌭𑌿𑌧𑌾𑌯𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌏𑌕𑌾𑌰𑍍𑌥𑌾𑌭𑌿𑌧𑌾𑌯𑌿𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌤𑍍𑌵𑌮𑌵𑌹𑌿𑌤𑌮𑌨𑌾𑌃 𑌶𑍃𑌣𑍁, 𑌏𑌕𑌤𑍍𑌵𑌤𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌦𑍇𑌕𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌤𑌤𑍍𑌤𑌦𑌾𑌕𑌾𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑌪𑌰𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌪𑌦𑌾𑌨𑌾𑌮𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌤𑌾 𑌚 ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

ஐயா! "ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம" என்கிற விடத்தில் ஸத்யஜ்ஞானாதி குணங்கள் அறியப்படுகின்றன! (மறுமொழி) அல்ல என்று கூறப்படுகிறது—ஸாமாநாதிகரண்யத்தினால் ஏகார்த்தத்வம் அறியப்படுவதால். அநேக குணங்களுடன் கூடின வஸ்துவைச்சொன்ன போதிலும், ஏகார்த்தத்வம் விருத்தமல்லவென்று சொல்லப்படுமேயானால், * அபிதானத்தை அறியாதநீ அஜ்ஞன் தான். ஏகார்த்தத்வமாவது எல்லாபதங்களுக்கும் அர்த்த ஐக்யம். விசிஷ்டபதார்த்தத்தைச் சொல்லுமிடத்தில் விசேஷண பேதத்தால் பதங்களுக்கு அர்த்தபேதம் விடத்தக்கதன்று; ஆகவே ஏகார்த்தத்வம் ஸித்தியாது. இங்ஙனமாகில் விசேஷமின்றி ஒரு அர்த்தத்தையே

---

* அபிதானம்—சப்தசக்தி, அபிதேயம் - அர்த்தம் (வஸ்து),

உணர்த்துவதால் எல்லாபதங்களும் பர்யாயங்களாக ஆகட்டும்! ஒரு அர்த்தத்தையே உணர்த்துகிறதாக விருந்தபோதிலும், அபர்யாயத்வத்தை கவனமுள்ள மனதுடன் கேள் ஏகத்வ தாத்பர்ய நிச்சயமிருப்பதால் ஒரு அர்த்தத்திற்கே அந்தந்த பதார்த்த விரோதிகளுக்கு ¶ ப்ரத்யநீகதையில் நோக்கிருப்பதால் எல்லாபதங்களுக்கும் அர்த்தவத்த்வமும், ஏகார்த்தத்வமும் † அபர்யாயத்வமும் ஸித்திக்கிறது.

---

ச்ருதப்ரகாசிகை:—

நிர்குண வாக்யங்களோடுகூட எடுக்கப்பட்டிருக்கிற ஸத்யஜ்ஞாநாதிவாக்யம் ஸகுண ப்ரதிபாதநபரமென்கிற புத்தியினால் சோதநம் செய்கிறார்— நநுச என்று. சகாரம் சோத்ய ஸமுச்சயத்தில். "ஸத்யஜ்ஞாநாதயோ ஙணா. ப்ரதீயந்தே" என்கிற இடத்தில் ஸத்யஜ்ஞாந சப்தங்கள் ஸத்யத்வஜ்ஞாநத்வபரங்கள் § த்வ்யேகயோர்த்விவசநைகவசநே' என்கிற பாணிநிஸூத்ரத்திலிருக்கிற "த்வ்யே" சப்தங்களிரண்டும் எவ்வாறு த்வித்வ ஏகத்வபரங்களோ அங்ஙனமில்லாவிடில் "த்வ்யேகேஷு" என்றல்லவோ சொல்லத் தக்கதாக ஆகும். அவ்வண்ணமே, ஸ்ரீவத்ஸாங்கமிச்ரர்கள் (அதாவது - கூரத்தாழ்வான்) "குணாஸ்ஸத்யஜ்ஞாந ப்ரப்ருதய உத" என்றார்.

இந்த வாக்யத்தின் வைசத்யத்திற்காக முதலில் ஸாமாநாதிகரண்யம் நிரூபிக்கப்படுகிறது. அது ஓ ஆசார்யபாதர்களால் ப்ரமேயமாலையில் மிக்கதெளிவாக உபந்யஸிக்கப்பட்டிருக்கிறது அவ்வாறே பகவானுன பதஞ்ஜலியினுல், "லடச்ஸஸத்ருஸாந ஞாவ ப்ரதமா ஸமாநாதிகரணே" "தத்புருஷஸ்ஸமாநாதிகரண: கர்மதாரய:" இது முதலான ஸூத்ரங்களிலுள்ள ஸமாநாதிகரண சப்தவிவரணத்திற்காக ஸாமாநாதிகரண்ய லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது— "பிந்நப்ரவ்ருத்திநிமித்தாநாம் சப்தாநாமேகஸ்மிந்நர்த்தே வ்ருத்திஸ்ஸாமாநாதி கரண்யம்" என்று. இதற்கு இது அர்த்தம். ப்ரவ்ருத்திக்கு. எது நிமித்தமோ அது ப்ரவ்ருத்தி நிமித்தம். ப்ரக்ருஷ்டையானவ்ருத்தி ப்ரவ்ருத்தி. சப்தத்திற்கு அர்த்தத்தில் வ்ருத்தியாவது— அதை போதித்தல் அதில் விசேஷ்யமாயிருக்கிற ப்ரதாநார்த்தவிஷயமான வ்ருத்திதான் ப்ரவ்ருத்தி. விசேஷ்யத்திற்கு ப்ராதான்யமும் "குணங்களுடைய ப்ரதிபத்தியானது "குணியின் ப்ரதிபத்திக்காகவன்றோ" என்பதினுல், ஸித்திக்கிறது. அந்த ப்ரவ்ருத்திக்கு, நிமித்தம்— த்வாரம்; ‡ நிமித்த மாத்ரம் பவ ஸவ்யஸாசிந்" இது முதலிய ப்ரயோகம் இருப்பதால். அதுவும்

---

¶ ப்ரத்யநீகதை—விரோதியாயிருத்தல் † பர்யாயங்கள்—ஏகார்த்தக பதங்கள்.

§ த்வ்யேகயோர் த்விவசநைக வசநே—ஒருமை, இருமை இருக்குமிடங்களில் ஏக வசனமும த்விவசனமும வருகின்றன.

ஓ ஆசார்யபாதர்கள்— நடாதூர ஸ்ரீ அம்மாள், இந்த ஸ்வாமிக்கு வரதாசார்யர் என்று திருநாமம்,

‡ நிமித்த மாத்ரம்பவஸவ்யஸாசிந்—(பகவத்கீதை): இடது கையினுலும் பாணங்களை ப்ரயோகிக்குந் திறமையுள்ளவனே! நீ, (இந்த கௌரவர்களைக் கொல்வதில்) த்வாரமாக மாத்ரம் இருப்பாயாக. (தத்புருஷஸ்ஸமாநாதிகரண:கர்மதாரய: லடச்ஸஸத்ருசா நசாவப்ரதமா ஸமாநாதிகரணே) இந்த இரண்டும பாணிநிஸூத்ரங்கள்.

விசேஷணமாக இருக்கிற ஜாதிகுணம் முதலியது. ஸமாந - ஏகம். அதிகரணமாவது- விசேஷணங்களுக்கு ஆதாரபூதமான விசேஷ்யம் 'ஏகஸ்மிந்நர்த்தே வ்ருத்தி.'' என்கிற இடத்தில் ஏகசப்தத்தினால் ஸமாந சப்தத்திற்கு ஸத்ருசார்த்த பரத்வம் நிரஸிக்கப்பட்டது. ஸமாநசப்த ஸாமர்த்தியத்தினால், ஏகசப்தம் ஸாதாரணபரம், ஸமாந சப்தம் ஸாதாரணத்தில் ப்ரயோகிக்கப்படுகிறதன்றோ— § "ஸமாநகர்த்ருகயோ: பூர்வகாலே" என்று. அர்த்த சப்தமும் விசேஷ்யபூதமான பரதாநாபிதேயபரம் இதனால் அதிகரண சப்தமானது விசேஷ்யபரமாக வியாக்கியாநிக்கப்பட்டது.

இது சொல்லப்பட்டதாக ஆகிறது— சப்தங்கள் மூன்றுவிதங்கள். சில சப்தங்கள் விசேஷணத்தாலும் விசேஷ்யத்தாலும் ஒரு அர்த்த முள்ளவைகளே உதாஹரணம் கட:, கும்ப:, நீலம், க்ருஷ்ணம், இது முதலியவைகள். சில சப்தஙகள் இரண்டு ப்ரகாரத்தாலும் அர்த்தபேதமுள்ளவைகள. உதாஹரணம் — கௌ அச்வ:, ¶ மஹிஷ: நீலம், சுக்லம், படம், இது முதலியவைகள். சில சப்தஙகள், விசேஷணத்தால் பின்னார்த்தஙகளாகவும் விசேஷ்யத்தால் ஏகார்த்தஙகளாகவும் இருக்கின்றன. உதாஹரணம்:—நீலமுத்பலம், தேவதத்த: ச்யாமோ யுவா லோஹிதாக்ஷ: இது முதலியவைகள். அவற்றுள் முந்திய இரண்டு கோடிகளிலிருந்து விலகி, மூன்றுவது கோடியில் ப்ரவேசித்திருக்கிற சப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் அவற்றுள் "பிந்நப்ரவ்ருத்திநிமித்தாநாம்" என்பதினால் விசேஷணத்தாலும் விசேஷ்யத்தாலும் ஏகார்த்தங்களானகட:கும்ப: இது முதலியவைகளுக்கு ஸாமாநாதிகரண்யமில்லை என்று கூறப்பட்டது. "ஏகஸ்மிந்நர்த்தே வ்ருத்தி:" என்றதினால் இரண்டினாலும் அர்த்தபேதமுள்ள கௌரச்வோ மஹிஷ: இது முதலியவைகளுக்கு ஸாமாநாதிகரண்யமில்லை என்று கூறப்பட்டது. ஆகையால் விசேஷணத்தால் பின்னார்த்தஙகளாகவும் விசேஷ்யத்தால் ஏகார்த்தங்களாகவுமிருக்கிற நீலமுத்பலம் இது முதலிய சப்தஙகளுக்கே ஸாமாநாதிகரண்யம்— என்று, அதில் ப்ரவ்ருத்தி நிமித்தசப்தங்கள் இரண்டுக்கும் இவ்வண்ணம் அர்த்தம் சொல்லலாம்— ப்ரவ்ருத்தி:—அபிதானம் ; நிமித்தம் – அபிதேயம் அர்த்தசப்தமும் அபிதேயத்தைச் சொல்லுகிறது. வெவ்வேறான அபிதேயங்களுள்ள சப்தஙகளுககு ஒரு அபிதேயத்தில் வ்ருத்தி ஸாமாநாதிகரண்யம் என்றதினால், பின்னவிசேஷணாபிதாயிகளான சப்தங்களுக்கு ஒரு விசேஷ்யத்தில் வ்ருத்தி.— அதாவது பர்யவஸாநம் (இது) ஸாமாநாதிகரண்யமென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. "பிந்ந" என்கிற பதத்தின ஸாமர்த்தியத்தால் நிமித்தசப்த நிர்த்திஷ்டம் விசேஷண பூதமான அபிதேயமென்றும், 'ஏக' சப்த ஸாமர்த்தியத்தால் அர்த்த சப்த நிர்த்திஷ்டம், விசேஷ்ய பூதமான அபிதேயமென்றும் அறியப்படுகிறது. ஆகையால் இரண்டு விதத்தாலும் அநேக விசேஷணாபிதாயிகளான சப்தங்களுக்கு ஒரு விசேஷ்யத்தில் பர்யவஸாநம் ஸாமாநாதிகரண்யம் என்று. "பிந்நப்ரவ்ருத்தி நிமித்தாநாம்" இத்யாதியான ஸாமாநாதிகரண்ய லக்ஷண வாக்யத்தால் சொல்லப்பட்டதாக ஆகிறது. இங்குசொல்லப்பட்ட அர்த்தத்தைவிட முற்கூறப்பட்ட அர்த்தம் சிறப்புற்றது.

ஸமாநாதிகரணபதங்களில் † ப்ராதிபதிகம் விசேஷணாந்வயபரம். அதோடு (விசேஷணத்தோடு) ஸமானமான விபக்தியானது விசேஷ்யைகயத்தைக காட்டுகிறது.

§ ஸமாநகர்த்ருகயோ: பூர்வகாலே—பாணிநி ஸூத்ரம் ¶ மஹிஷ:— எருமை

† ப்ராதிபதிகம்—அர்த்தமுள்ளதும் தாதுவல்லாததும் ப்ரத்யயமல்லாததும் ப்ரத்யயாந்தமல்லாததுமான சப்தஸ்வரூபம். அநேகமாய் பெயர்ச்சொல்லாய் வரும்.

ஸமானவிபக்திகளுக்கு ஐக்யபோதகம் வ்ருத்தி சப்தத்தினால் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அதனால் "ராஜா தஸ்ய புத்ரஸ்ச தர்சநீயௌ" (அரசனும் அவன் புதல்வனும் ஸௌந்தர்யமுள்ளவர்கள்) என்கிற இடத்தில் ராஜ சப்தத்திற்கும் 'தத்' என்கிற சப்தத்திற்கும் ஸாமாநாதிகரண்ய நிவ்ருத்தி ஸம்பவிக்கிறது. அந்த இடத்தில் ப்ரக்ருத பராமர்சியான தச் சப்தப்ராதிபதிகத்தால் ஐக்யம் தெரியவருகிறதே ஒழிய ஸமாந விபக்தியினாலல்ல. அப்படி! நீலாநி உத்பலாநி (கருத்தநெய்தல்கள்) என்கிற இடத்தில் ஸாமாநாதிகரண்யம் வாராமல் போகவேண்டியதாகும். ஏனெனில் விசேஷ்யங்கள் வெகுவாக இருப்பதுபற்றி ஏகார்த்த வ்ருத்தித்வம் பொருந்தாமல் போவதால்; இவ்வண்ணமல்ல:— "ஏகஸ்மிந்" என்கிற பதமானது சேர்ந்து ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற பதாந்தரத்தினால் † உபஸ்தாபிக்கப்பட்ட ஆகாரத்திற்கு அதிகரணமன்று என்பதை வ்யாவ்ருத்திப்பதின் பொருட்டு இருப்பதால். அந்தந்த பதங்களால் உபஸ்தாபிக்கப்பட்டிருக்கிற அனேக விசேஷணங்களை அபேக்ஷித்துப்பொதுவாக இருத்தலன்றோ ஏகசப்தத்தின் அர்த்தம். நீலாநி உத்பலாநி என்கிற இடத்தில் நீலத்வத்திற்கு ஆதாரமாயில்லாத வஸ்துக்களில் உத்பலத்வமானது இருக்கிறதில்லை யன்றோ— ஆகையால் அங்கே ஸாமாநாதிகரண்யம் பொருந்துகிறது. ஆதலால் ஸாமாநாதிகரண்ய லக்ஷணக்ரந்தத்திற்கு எவ்வாறு இங்கே கூறப்பட்டிருக்கிறதோ இது தான் அர்த்தம்.

இந்த இடத்தில் ‡ மருஷாவாதிகள் சொல்லுகிறார்கள்— ஸாமாநாதிகரண்யவாக்யம் ☫ அகண்டார்த்தமுள்ளது. நிரூபிக்கிறார், ஸாமாநாதிகரண்யத்திற்கு ஏகார்த்தபரத்வம் நிர்விவாதம். அதில் ஸாமாநாதிகரண்ய பதங்கள் விசேஷணமாத்ர பரங்களா? அல்லது, விசேஷண விசிஷ்டபரங்களா? அல்லது, ஸ்வரூபமாத்ர பரங்களா? என்று பகுத்தறியத்தக்கது. விசேஷணமாத்ர பரங்களல்ல— விசேஷணங்கள் அநேகார்த்தங்களுள்ளதாதலால். ஏகார்த்தத்வம் ஸித்தியாமையால் விசிஷ்ட பரங்களுமல்ல— விகல்பத்தை ஸஹியாமையால். பதங்களுக்கு விசிஷ்டார்த்த ப்ரதிபாதநமானது க்ரமமாகவா? அல்லது ஒரே ஸமயத்திலேயா? க்ரமமாக என்பது பொருந்தாது. அவற்றுள் முதற்பதத்தால் ப்ரதிபன்னமான விசிஷ்டத்திற்கு மற்றொரு பதமானது தன்னால் உபஸ்தாபிக்கப்பட்டுள்ள விசிஷ்டத்தோடு ஐக்யத்தை விதிக்கிறதா? அல்லது வேறு விசேஷணத்தோடு அந்வயத்தை விதிக்கிறதா? முதல் பக்ஷத்தில் விசிஷ்டைக்யம் விதிக்கப்படுமளவில், இரண்டு விசேஷ்யாம்சங்களைப்போல விசேஷணாம்சபூதங்களான ஜாதிகுணம், இரண்டுக்கும் ஐக்யம் ப்ரஸங்கிக்கவேண்டி வரும். இரண்டாவது பக்ஷத்திலும் விசேஷணங்களுக்கு * அந்யோந்ய ஸமவாயம் ப்ரஸங்கிக்கும். முதலில் ஒரு விசேஷணத்தோடு கூடியதாக அறியப்பட்டிருக்கிற வஸ்துவுக்கு பிறகு வேறு விசேஷணத்தோடு சேர்க்கை பெற்றிருப்பதாக போதிப்பதன்றோ விசேஷணாந்தராந்வய ப்ரதிபாதனம்-அதில் விசிஷ்டத்தைகுறித்து விசேஷணமாக அந்வயிக்கப்படும் சப்தம் பூர்வ

† உபஸ்தாபிக்கப்பட்ட—ஏற்படுத்தப்பட்ட, அல்லது உணர்த்தப்பட்ட;

‡ மருஷாவாதி—ப்ரபஞ்சத்தை மித்யை என்று அபலாபஞ் செய்கிறவன்.

☫ அகண்டார்த்தம—அவயவார்த்தங்களின் பாகுபாடன்றி மொத்தமாகத்தோன்றும் அர்த்தம்.

* அந்யோந்ய ஸமவாயம்—விசேஷணங்கள் இரண்டுக்கும் ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யபாவம். இது சாஸ்திர ஜ்ஞர்களால் ப்ரபலதோஷமென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

விசேஷணத்துக்குங்கூட விசேஷணமாக ஆகிறதாதலால் விசேஷணங்களுக்கு அந்யோந்யவிசேஷண விசேஷ்யபாவப்ரஸங்கம் தடுக்கமுடியாதன்றோ. பதங்களுக்கு க்ரமமாக அர்த்தப்ரதிபாதனமானது விடத்தகாதது—என்னில், எல்லாவாக்யங்களும் உத்தேச்யோபாதேய விபாகமுள்ளதாகயிருப்பதால். ஒரே ஸமயத்தில் அர்த்த ப்ரதிபாதனமென்பதும் ஸரியன்று. ‡‡ உத்தேச்யோபாதேய விபாகத்திற்கு ஹானியானது ப்ரஸங்கிப்பதால் ஒரேஸமயத்தில் ப்ரதிபாதநம் ஸம்பவியாது. ஸம்பவித்தபோதிலும், விசேஷணங்களுக்கு பரஸ்பர ஐக்யம் ப்ரஸங்கிப்பதாலும். இதை நிரூபிக்கிறார். ப்ராதிபதிகங்கள் விசிஷ்டார்த்த பரங்களாகில், ப்ராதிபதிகார்த்தங்களுக்கு ஐக்யத்தைக்காட்டுகிற ஸமாந $ விபக்தி நிர்தேசத்திற்கு விசிஷ்டைக்யபரத்வம் அவசியம ஆச்ரயிக்கத்தக்கதாத※லால், விசேஷ்யஐக்யம்போல விசேஷணங்களுக்கும் ஐக்யம் சொல்லவேண்டியதாக ஆகும் அது பொருந்தாதாதலால், ஸமாநவிபக்தி நிர்தேசமானது விசேஷ்யத்திற்குங்கூட ஐக்யத்தை ப்ரதிபாதிப்பதற்கு ஸாமர்த்தியமுள்ளதாக ஆகாது.

மேலும், விசிஷ்ட பரத்வம் சொல்லில் விசேஷண விசேஷ்யங்களிரண்டாலும் அனேகார்த்தத்வமும், விசேஷண பகுத்வத்தாலும் அநேகார்த்தத்வமும் ஏற்படும். ஆதலால் ஸாமாநாதிகரண்யம் ஸித்தியாது. மேலும் விசேஷணங்களுக்கு § வ்யாவர்த்தகத்வம் ஸ்வபாவமாதலால் விசேஷணபேதத்தால் விசேஷ்ய பேதப்ரஸங்கம் எவ்விதத்தாலும் தடுக்கமுடியாது. இதை உபபாதனஞ்செய்கிறார்; பேதகம் விசேஷணம், பேத்யம் விசேஷ்யமென்றல்லவோ விசேஷணவிசேஷ்யங்களுடைய ஸ்வரூபவிவேகம். விசேஷணங்களுக்கு விசேஷ்யபேதகத்வமானது— வண்ட:, முண்ட:, கட:, பட:, இது முதலிய ப்ரயோகஸ்தலங்களிலும் காணப்படுகிறதன்றோ. நீலம் உத்பலம், தேவதத்த: ச்யாம: யுவா, இது முதலிய ப்ரயோகஸ்தலங்களில் விசேஷணபேதமிருந்தபோதிலும் விசேஷ்யைக்யம் காணப்படுகிறதே என்றால் இது தோஷமல்ல. இந்த இடத்தில் விசேஷணங்களுக்கு ஸ்வாபாவ ஸித்தமாக இருக்கிற விசேஷ்ய பேதகத்வமானது ப்ரத்யக்ஷவிரோதத்தால் தள்ளப்படுகிறது. ப்ரத்யக்ஷாகோசரமான ப்ரஹ்மத்தினிடத்திலோ, விசேஷண பேதத்தால் உண்டுபண்ணப்பட்ட விசேஷ்ய பேதமானது யாரால் தடுக்கக்கூடும். ஆகையால் ஸாமாநாதிகரணவாக்யம் வஸ்துமாத்ரபரமே. நீலம் உத்பலம் இது முதலிய வாக்யத்தில் ஸித்திப்பதுபோல ஸத்யாதி வாக்யத்திலும் ஏகவஸ்த்வாந்தமான தர்மிவாசிபதைக்யத்திலுள் விசேஷ்யைக்யம் ஸித்திக்கிறதென்று சொல்லில், அல்ல; "வண்ட:, முண்ட:, பூர்ணச்ருங்க:, கௌ:," என்கிற இடத்தில் விசேஷ்யபேதமிருப்பதால். ஐயா! விசேஷணபேதமானது விசேஷ்யைக்யத்திற்கு விரோதி அன்று, ப்ரத்யக்ஷமே தான் அதற்கு விரோதி. ப்ரத்யக்ஷத்திற்கெட்டாத ப்ரஹ்மத்தினிடத்தில், ஏகவஸ்த்வந்ததர்மிவாசியானபதைக்யத்தால் தானாக கிடைத்திருக்கிற ஏகத்வமானது தடுக்க முடியாதது என்றால், அல்ல. "வண்டோ, முண்ட:, பூர்ணச்ருங்கோகௌ:" என்று எருது எதிரில் இல்லாதபோது சொல்லும் வாக்யத்திலும் விசேஷ்யபேதம் அறியப்படுவதால். ஆதலால், தர்மிவாசிபதைக்யமானது பரோக்ஷமான ப்ரஹ்மத்தினிடத்தில் ஐக்யப்ரதிபாதந ஸமர்த்தமன்று. ஆகையால் விசேஷணபேதப்ரயுக்தமான

---

$ விபக்தி--வேற்றுமை உருபு;

§ வ்யாவர்த்தகத்வம் — வேறுபாட்டை உண்டுபண்ணுகிற வஸ்துவின் தன்மை.

※ உத்தேச்யம் — விதிக்கவேண்டியதாகக் கருதப்பட்டிருக்கிற குணங்களுக்கோ தர்மங்களுக்கோ ஆதாரமான வஸ்து. ‡‡ விதேயம் —விதிப்பதற்குத் தக்கது.

விசேஷ்யபேதம் எவ்விதத்தாலும் தடுக்கமுடியாதது. ஆகவே ஏகார்த்தத்வம் ஸித்தி பெறுது. . ஆகையால் பாரிசேஷ்யத்தால் மற்றொரு வழியும் இல்லாததால் ஸமானாதி காணபதங்களுக்கு ஸ்வரூபமாத்ரத்தை போதிப்பதில் தாத்பர்யம் என்று அங்கீகரிக்கத்தக்கது.

இங்ஙனமாகில் பதங்களுக்கு பர்யாயத்வமும், ஒரே பதத்தால் ஸ்வரூபம் அறியப்பட்டபடியால் மற்றபதங்களின் ப்ரயோகத்துக்கு வையர்த்யமும், ப்ரவ்ருத்தி நிமித்தபேதமில்லாமையால் ஸாமானாதிகரண்யலக்ஷணத்திற்கு ஹாநியும் ப்ரஸங்கிக்கும் எனில், இவ்வண்ணமல்ல. ஒரே அர்த்தத்திற்கு அந்தந்த பதத்தால் உணர்த்தப்படும் அர்த்தத்திற்கு எதிர்தட்டான அர்த்தத்தைத் தள்ளுவதில் மட்டும் நோக்கு என்று ஒப்புக்கொள்ளப்படுவதால். ஒவ்வொரு பதத்திற்கும் பிரயோஜனமும் † அபர்யாயத்வமும், நிமித்தபேதலாபத்தினால் ஸாமானாதிகரண்யலக்ஷணஸித்தியும் உண்டாகின்றன. இதனாலேயே ஜகத்காரணத்வத்தால் சங்கிக்கப்பட்ட அந்ருதத்வ ஜடத்வ பரிச்சின்னத்வரூபமான தோஷங்களின் வ்யாவ்ருத்தியானது, ஸத்யஜ்ஞானாதி வாக்யத்தால் உண்டு பண்ணப்படுகிறது. வ்யாவ்ருத்தி ரூபமான தர்மமும் ப்ரஹ்மத்தை வந்தணுகாது. ப்ரஹ்மத்தினுடைய ஸ்வருபமோ, ஸகலமான இதரபதார்த்தங்களின் வ்யாவ்ருத்தி ரூபமாதலால்— எவ்வாறு வெண்மை முதலியவற்றுக்கு கருமை முதலியவைகளின் வ்யாவ்ருத்தியானது அப்பதார்த்தஸ்வரூபமேயொழிய வேறுதர்ம மல்லவன்றோ— வேறுதர்மம் காணப்படாமையால். அதை ஒப்புக்கொண்டால் || அநவஸ்தை வருவதலாலும். ஆதலால் ‡ கார்ஷ்ண்யவ்யாவ்ருத்தமாயும் ¶ ரக்திமவ்யாவ்ருத்தமாயுமிருக்கிறது "சௌக்ல்யம்" என்பதனால் சௌக்ல்ய ஸ்வரூபமாத்ர விஷயங்களான பதங்களுக்கு, வ்யாவர்த்திகத்தக்க வஸ்துபேதத்தால் எவ்வாறு அபர்யாயத்வமும் அர்த்தவத்த்வமும் ஏகார்த்தத்வமும். அதனாலேயே ஸாமானாதிகரண்ய லக்ஷணப் பொருத்தமும் ஸித்திக்கிறதோ,— அவ்வாறாக ஸத்யாதி பதங்களுக்கும் விலக்கப்படும் தர்ம பேதத்தால் பர்யாயத்வ தோஷம் ப்ரஸங்கியாது.

இவ்வண்ணம் அந்தந்தபதார்த்தங்களின் விரோதிவ்யாவ்ருத்திபரத்வம் கூறப்படுமேயாகில் லக்ஷணை ஏற்படவேண்டியதாகுமெனில், இவ்வண்ணமல்ல; வாச்யமல்லாத அர்த்தத்தை உணர்த்தினாலன்றோ லக்ஷணை ; எவ்வாறு கங்கையில் இடைச்சேரி இருக்கிறதென்கிற வாக்யத்தில் கரையை உணர்த்தும் விஷயத்தில் கங்காபதம் லக்ஷகமோ. கரை கங்காபதவாச்ய மல்லவன்றோ. இவ்விடத்திலோ ஸத்யாதி பதங்களுக்கு வாச்யைகதேசமான விசேஷணத்திற்கு பரித்யாகமிருந்தபோதிலும், வாச்யபராநாம்சமாக இருக்கிற விசேஷ்யஸ்வரூப ப்ரதிபாதனத்தினால் லக்ஷணைக்கு ப்ரஸக்தி இல்லை. அவ்வாறிருந்தபோதிலும் விசிஷ்டவாசியான சப்தத்திற்கு விசேஷ்யமாத்ரபரத்வம் சொல்லில்,ஸ்வாரஸ்யத்திற்குபங்கம் நேரிடுகிறது என்றால், இது தோஷமல்ல; ஸமானாதிகரணவாக்யங்களில் ஏகார்த்தபரத்வ பலத்தால் விசேஷணங்களின் பரித்யாகத்தினால் ஸ்வரூபமாத்ர பரத்வமே பதங்களுக்கு ஸ்வாரஸிகம்— அவ்வண்ணம் வ்யுத்பத்தி

† அபர்யாயத்வம்— ஒரே பொருளை உணர்த்தும் சப்தங்கள் பர்யாயங்கள். அப்படிக்கல்லாத சப்தங்கள் அபர்யாயங்கள் -கட:, கும்ப: என்கிற சப்தங்கள் - பர்யாயசப்தங்கள். பர்யாயசப்தங்கள் சேர்ந்து பரயோகிக்கத்தகாதவை.

|| அநவஸ்தை—முடிவின்மை. ‡ கார்ஷ்ண்யம்—கருப்புநிறம். ¶ ரக்திமா—சிகப்புநிறம்.

இருக்கிறபடியால். வ்யதிகரணவாக்யங்களில் பதங்களுக்கு விசிஷ்ட பரத்வம் ஸ்வாரஸிகம். லக்ஷணையை ஏற்றுக்கொண்டாலும் தோஷமில்லை வாக்யதாத்பர்யாநுகுணமான லக்ஷணையானது, அதற்கு விரோதியான முக்கிய வ்ருத்தியைக்காட்டிலும் அதிக பலமுள்ளதாகக் காணப்பட்டிருக்கிறதன்றோ— கங்காபதத்தில் போல. ஸமாநாதிகரண வாக்கியத்திற்கு ஐக்யத்திலேயே தாத்பர்யம் என்பது ஸர்வஸம்மதம் அன்றோ. ஐயா எல்லாபதங்களுக்கும் லக்ஷணையானது காணப்பட்டதில்லை- ஸரியுமல்ல. முக்யார்த்தத்தை உணர்த்துகிற ஒரு பதத்தால் தாத்பர்யம் நிச்சயிக்கப்பட்டாலன்றோ பதாந்தரங்களுக்கு லக்ஷணை யுக்தமானது எல்லாபதங்களுக்கும் லக்ஷணை அங்கீகரிக்கப்படுமேயாகில் தாத்பர்யத்திற்கு §நிச்சாயகம் எது ? கூறப்படுகிறது —¶ "விஷம் புங்க்ஷ்வ"(விஷத்தைச்சாப்பிடு) இது முதலியவாக்யங்களில் எல்லாபதங்களுக்கும் லக்ஷணை காணப்பட்டிருக்கிறது. அதில் விஷபதமானது நிஷித்தமான போஜ்யவஸ்துவை லக்ஷணாவ்ருத்தியினால் உணர்த்துகிறது. 'புங்க்ஷ்வ' என்கிறபதம் போஜநம் பண்ணவேண்டாமென்று காட்டுகிறது. அதில் யோக்யதை முதலிய ஸாமக்ரிகளின் உடன்பாட்டினால் வாக்யதாத்பர்யநிச்சயம், ஸத்யாதிவாக்கியங்களில் ஸமாநவிபக்திபலத்தால் ஐக்யதாத்பர்ய நிச்சயம் ; அந்த ( ஐக்யதாத்பர்ய நிச்சயத்தின் ) அவிரோதத்திற்காக ப்ராதிபதிகங்களுக்கு லக்ஷணை ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறது. ஏகபதலக்ஷணையிலுங் கூட வாக்யதாத்பர்ய விரோதமேயன்றோ ஹேது. கங்காயாம் கோஷ:. இது முதலிய வாக்யங்களிற்போல. அதற்கு விரோதமில்லாவிடில் ஒரு பதத்திற்குங்கூட லக்ஷணை காணப்பட்டதில்லை. கங்காயாம் மத்ஸ்யா: ப்ரதிவஸந்தி" (கங்கையில் மத்ஸ்யங்கள் வாஸம்பண்ணுகின்றன) இது முதலியவாக்யங்களிற்போல. ஆகையால் வாக்யதாத்பர்யத்தின் அவிரோதத்திற்காக ஒருபதத்தைப்போல் எல்லாபதங்களுக்கும் லக்ஷணை தோஷமன்று. ஆகையால், ஸமாநாதிகரணவாக்யம் வஸ்துமாத்ரபரமே.

இந்த அபிப்பிராயத்தால் மறுக்கிறார்—நேஷ்யுச்யதே என்று " ஸத்யஜ்ஞாநாதிகுணங்கள் காணப்படுகின்றன" என்று சோதனம் ஏற்படவே, "நேத்யுச்யதே" என்று சொல்லுகிறவருக்கு இது அபிப்பிராயம்— 'ப்ரதீயந்தே' என்பதினால் ஆபாதப்ரதீதிமாத்ர விவக்ஷை இருக்குமேயானால், அதனால் ஒரு ப்ரயோஜனமும் இல்லை. ப்ரமிதி விவக்ஷை என்று சொல்லப்படுமேயாகில், "நதப்ரமிதிர் ஜாயதே" என்று உபபாதிக்கப்படுகிறது. எதனாலெனில் கூறுகிறார்— ஸாமாநாதிகரண்யேந ஏகார்த்தத்வ ப்ரதீதே: என்று. சங்கிக்கிறார்—அநேக என்று எவ்வாறு ¥ வ்யதிகரணவாக்யங்களில் வெவ்வேறு அர்த்தங்களில் ப்ரவஸிக்கின்ற காரகபதார்த்தங்களின் பரித்யாகமில்லாமலிருந்தபோதிலும், ப்ரதாநார்த்தமான கார்யத்திற்கு ஏகத்வமானது, "ஆத்நைகத்வாதேகம் வாக்யம்" என்கிற விடத்தில் நிச்சயிக்கப்படுகிறதோ: அவ்வாறாக ஸமாநாதிகரண வாக்யங்களிலும் விசேஷண பூதகுணவாசியான சப்தார்த்தங்களின் பரித்யாகமில்லாமலிருந்தபோதிலும் விசேஷ்யைக்யம் ஸித்திக்கிறதென்று அர்த்தம். வினவுகிறவனை நிந்திக்கிறார்—அநபிஜ்ஞ: என்று. வ்யதிகரண ஸமாநாதிகரணவாக்யங்கள் இரண்டின் அதிதனைவிசேஷத்தை அறியாதவன் என்று அர்த்தம். தேவர்களுக்குப்பிரியன்.

¶ விஷம் புங்க்ஷ்வ—விஷத்தைச் சாப்பிடு அதாவது சத்ருவின் அன்னமாதலால் சாப்பிடாதே என்பது பொருள்.

§ நிச்சாயகம்—தாத்பர்யநிச்சயத்தை உண்டுபண்ணுகிறசப்தம்.

¥ [illegible]—வெவ்வேறு வேற்றுமையுடைய பதங்களால் இணைக்கப்பட்டவைகள்.

அதாவது ஆடு; அர்ஜுனன் என்று அர்த்தம். பரிஹரிக்கிறார்— ஏகார்த்தத்வம் என்று. ஏகார்த்தத்வமாவது— எல்லாபதங்களுக்கும் ஒரு அபிதேயத்தில் பர்யவஸானம்; வாக்யத்திற்கு அல்லவென்று அர்த்தம். தனித்தனியான அர்த்தங்களில் பர்யவஸிக்கின்ற பதங்களுக்கு ஒரு ப்ரதானார்த்தத்தில் அந்வயத்தினால் அர்த்தைக்ய மானது வ்யதிகரணவாக்யத்தில் மாத்ரமே. ஸமானாதிகரணவாக்யத்திலோ, பதங்களுக்கே ஏகார்த்தபர்யவஸாயித்வமென்பது சொல்லப்பட்டதாகிறது. அதனால் என்ன? என்று அபேக்ஷிக்குங்கால் ஸமானாதிகரணபதங்களுக்கு விசேஷணமாத்ரபரத்வத்திலும் விசிஷ்டபரத்வத்திலும் தூஷணத்தை ஒரே க்ரமத்தால் சொல்லுகிறார்— விசிஷ்ட என்று. "விசிஷ்ட" என்று ஆரம்பித்த முழுவாக்யத்தால் விசிஷ்டபக்ஷத்தில் தூஷணம் கூறப்பட்டது. விசேஷணபேதத்தால்-விசேஷணங்களுக்கு ஒன்றுக்கொன்றாலும் விசேஷ்யத்தாலுமுண்டாகிற பேதத்தால், விசேஷணங்களாலும் விசேஷ்யத்தாலும் அநேகார்த்தத்வம் உண்டாகுமென்று கருத்து. மேலும், அர்த்தசப்தமானது விசேஷ்யபரமாகவும் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது; அதனால் விசேஷண பேதமிருந்தால் விசேஷ்யபேதம் உண்டாகலாமென்கிற வேறு தூஷணமும் சொல்லப்பட்டதாக ஆகிறது. மேலும், விசேஷண பேதத்தால் விசேஷ்யபேதமென்று சொல்லில், † வ்யதிரேகவசத்தால் விசேஷ்யத்தின் அபேதத்தால் விசேஷணாபேதமும் உண்டாகலாமென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. விசிஷ்டைக்யதைப்ரதிபாதிக்கிற ஸமானவிபக்தியானது, பேதமின்றி விசேஷ்யைக்யத்தைப்போல், விசேஷணைக்யத்தையும் ப்ரதிபாதிக்கிறதென்று அபிப்ராயம் இவ்வாறாக விசிஷ்டபரத்வத்தில், ஒரேஸமபத்தில் அஹிப்ராய மென்கிறபக்ஷத்தில் தூஷணம் கூறப்பட்டதாக ஆகிறது—உத்தேஸ்யோபாதேயவிஹாஹஹாரிப்ரஸங்கமும் அர்த்தஸித்தம். க்ரமமாக அபிதான மென்கிறபக்ஷத்தில் அந்யோந்யஸமவாயமானது, ஆநந்தமயாதிகரணத்தில் சொல்லப்படப்போகிறது. விசேஷணபேதத்தால் அர்த்தபேதம் என்கிற இவ்வளவு அம்சத்தினால் விசேஷணமாத்ர பரத்வத்திலும் தூஷணம் உரைக்கப்பட்டதாக வாகிறது. விசேஷணங்கள் அநேகங்களாதலால் ஏகார்த்தத்வத்திற்கு ஹானி என்று பொருள். இவ்வண்ணம் பதங்களுக்கு ப்ரதிபாத்யபேதம் எடுத்துக்காட்டப்பட்டது.

அதனால் என்? எனில் சொல்லுகிறார்— ததச்சைகார்த்தத்வம் ந ஸித்யதி என்று ஸாமானாதிகரண்யலக்ஷணம் ஸித்தியாதென்று பொருள் ஆகையால் வஸ்துமாத்ரபரம் என்பது பாரிசேஷ்யத்தால் ஸித்தம். அதை அநுவதித்து சோதனம் செய்கிறார்— ஏவம் என்று. ஏவம் தர்ஹி— வஸ்துமாத்ரபரத்வம் சொல்லில். எதனால் என்று கேட்கில் சொல்லுகிறார்—அவிசிஷ்டார்த்தாபிதாயித்வாத் என்று. இதனால் " ததச்சைகார்த்தத்வம் ந ஸித்யதி " என்கிற விடத்தில் பலிதமான அர்த்தம் விவரிக்கப்பட்டது. இந்த பர்யாயத்வசோத்யத்தில், ப்ரவ்ருத்தி நிமித்தபேதமில்லாமையால் ஸாமானாதிகரண்ய லக்ஷணஹானியும், இரண்டில் ஒருபதத்திற்கு வையர்த்த்யமும் என்கிற இரண்டு சோத்யங்கள் கருதப்பட்டிருக்கின்றன; பரிஹரிக்கப்படப்போவதால் கூறப்பட்டுள்ள மூன்று சோத்யங்களையும் பரிஹரிப்பதற்காகச் சொல்லுகிறார்—ஏகார்த்த என்று. கவனமுள்ளமனதுடன் கூடியவனாகக்கேள். மறுமொழியானது அநேக வாக்யங்களால் ஸாதிக்கத்தக்கதாக இருப்பதால், மத்தியில் சோதனம் செய்யத்தக்கதல்ல. ஆனால் அர்த்தம் அறியவரிதாதலால் கவனம் வைக்கத்தக்கதென்று கருத்து. மூன்று அநுபபத்திகளையும் பரிஹரிக்கிறார்— ஏகத்வ இது முதலியதால். ஏகத்வதாத்பர்ய

---

† வ்யதிரேகம்—முற்கூறப்பட்ட அர்த்தத்திற்கு எதிர்பட்டானது.

நிச்சயம் ஸமானவிபக்திபினால் அர்த்தத்வத்வமாவது—ப்ரயோஜனத்துடன் சேர்ந்திருத்தல் § வ்யாவர்த்யபேதத்தால் செய்யப்பட்ட ¶ வ்யாவ்ருத்திபேதத்தால் அபர்யாயத்வமும் வ்யாவ்ருத்திரூபப்ரவ்ருத்திநிமித்தலாபத்தால் ஸாமாநாதிகரண்ய ஸித்தியும், † வ்யாவர்த்தகங்களின் ஸஹார்த்வத்தால் பதங்களுக்கு அதந்த வ்யாவ்ருத்திரூபமான ப்ரயோஜனமும் என்று அர்த்தம்.

ஏதது3க்தம் ப4வதி—லக்ஷணத: ப்ரதிபத்தவ்யம் ப்3ரஹ்ம ஸகலேதரவஸ்துவிரோதி4ரூபம் | தத்3விரோதி4ரூபம் ஸர்வைரேந பத3த்ரயேண ஸமேதா வ்யாவர்த்யதே | தத்ர ஸத்யபத3ம் விகாராஸ்பதா3சேதநவஸ்துநோ வ்யாவ்ருத்தப்3ரஹ்மபரம் | ஜ்ஞாநபத3ம் சாந்யாதீ4நப்ரகாஶஜட3ரூபாத்3வஸ்துநோ வ்யாவ்ருத்தப்3ரஹ்மபரம் | அநந்தபத3ம் ச தே3ஶத: காலதோ வஸ்துதஶ்ச பரிச்சி2ந்நவ்யாவ்ருத்தபரம் | ந ச வ்யாவ்ருத்திர்பா4வரூபோ(அ)பா4வரூபோ வா த4ர்ம: | அபி து ஸகலேதரவிரோதி4 ப்3ரஹ்மைவ | யதா2 ஶௌக்ல்யாதே3: கார்ஷ்ண்யாதி3வ்யாவ்ருத்திஸ்தத்பதா3ர்த2ஸ்வரூபமேவ, ந த4ர்மாந்தரம் | அத ஏகஸ்யைவ வஸ்துந: ஸகலேதரவிஸஜாதீயாகாரதாவக3மகத்வாதே3கார்த2பர்யாயம் ச பத3த்ரயம் | தஸ்மாதே3கமேவ ப்3ரஹ்ம ஸ்வயம்ஜ்யோதிர்நிரஸ்தநிகி2லவிஶேஷமித்யுக்தம் ப4வதி ||

ஏவம் வாக்யார்த2ப்ரதிபாத3நே ஸத்யேவ "ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீதே3கமேவாத்3விதீயம்" (சா - சு - உக) இத்யாதி3பி4ரைகார்த்2யம் | "யதோ வா இமாநி பூ4தாநி ஜாயந்தே" (தை-ப்4ரு-க) ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீத், ஆத்மா வா இத3மேக ஏவாக்3ர ஆஸீத்" (ஐத-க-க-க) இத்யாதி3ஜக3த்காரணதயா உபலக்ஷிதஸ்ய ப்3ரஹ்மண: ஸ்வரூபம் ப்ரதிபாத்3யதே— "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம" (தை-ஆ-க-க) இதி | தத்ர ஸர்வஶாகா2ப்ரத்யயந்யாயேந காரணவாக்யோக்தஸர்வேஷாம் ஸஜாதீய வ்யாவ்ருத்திஸித்3த்4யா ப்3ரஹ்மாவக3தி: | ஜக3த்காரணதயோபலக்ஷிதஸ்ய ப்3ரஹ்மணோ(அ)த்3விதீயஸ்ய ப்ரதிபாத3யிஷிதம் ஸ்வரூபம், தத3விரோதே4ந வக்தவ்யம் | அத்3விதீயஶ்ருதிர்கு3ணதோ(அ)பி ஸித்3த4தாம் ந ஸஹதே | அத்ர "நிரஞ்ஜநம்" (ஶ்வே-சு-கக) "நிர்கு3ணம்" (அத்4யாத்மோபநிஷத்) இத்யாதி3பி4ஶ்ச விரோத4: | அதஶ்ச தல்லக்ஷணவாக்யைரேவ ஜ்ஞாநைகரூபம் ப்ரதிபாத3யதி ||

§ வ்யாவர்த்யம்—விலக்கப்படத்தக்க வஸ்து. ¶ வ்யாவ்ருத்தி—விலக்குதல்.
† வ்யாவர்த்தகம்—வ்யாவ்ருத்தியைச் செய்கிற பதம்

ஸ்ரீபாஷ்யம்:—

இது சொல்லப்பட்டதாகவாகிறது—இலக்கணத்தாலறியத்தக்க ப்ரஹ்மமானது, இதரபதார்த்தங்களெல்லாவற்றுக்கும் விரோதிரூபமாயிருக்கிறது. அந்த (ப்ரஹ்ம) விரோதிகளான (வஸ்துக்களின்) ரூபங்களனைத்தும் இம்மூன்று பதங்களால் பலித்த அர்த்தத்தால் நிரஸிக்கப்படுகிறது. அவற்றுள் ஸத்பதமானது விகாராஸ்பதமாக விருப்பதால், அஸத்பவஸ்துவைக்காட்டிலும் வ்யாவ்ருத்தமான ப்ரஹ்மத்தைக்குறிக்கிறது. ஜ்ஞாநபதமும், அந்யாதீனப்ரகாசமான ஜடரூபவஸ்துவைக் காட்டிலும் வேறாக விருக்கிற ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிறது. அநந்தபதமும் தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவினாலும் பரிச்சின்னவஸ்துக்களைக்காட்டிலும் வ்யாவ்ருத்தமான வஸ்துவை ப்ரதிபாதிப்பதில் நோக்குள்ளது. வ்யாவ்ருத்தியானது பாவரூபமாகவோ. அபாவரூபமாகவோ இருக்கிற தர்மம் அல்ல; பின்னையோ வெனில் ஸகலமான இதரவஸ்துக்களுக்கு விரோதியாக இருக்கிற ப்ரஹ்மமே. எவ்வாறு வெண்மை முதலியவற்றுக்கு கருமை முதலிய நிறங்களின் வ்யாவ்ருத்தியானது அந்த பதார்த்தஸ்வரூபமேதானோ, வேறு தர்மம் அல்லவோ, இவ்வாறே இம்மூன்று பதங்களும் ஒரு வஸ்துவுக்கே ஸகலேதர விரோதியான ஆகாரத்தை அறிவித்து நிரம்பபிரயோஜனமுடையதாகவும் ஏகார்த்தங்களாகவும், அபர்யாயங்களாகவும், இருக்கின்றன. ஆகையால் ப்ரஹ்மமொன்றே ஸ்வயம் ஜ்யோதிஸாகவும் ஸகலவிசேஷங்களற்றதாயுமிருக்கிறதென்று சொல்லப்பட்டதாகவாகிறது.

இவ்வண்ணமாக வாக்யார்த்த ப்ரதிபாதனம் இருந்தால் தான் "ஸதேவ ஸோம்யே தமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்" இவை முதலியவைகளோடு ஐகார்த்யம் ஸித்திக்கும். "யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே" "ஸதேவஸோம்யே தமக்ர ஆஸீத்" "ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத்", இவை முதலியவைகளால் ஜகத்காரணமாக உபலக்ஷிக்கப்பட்டிருக்கிற ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் இதுவென்று கூறப்படுகிறது. "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம என்று" அதில் ஸர்வசாகாபரத்யயந்யாயத்தினால் காரணவாக்யங்கள் எல்லாவற்றிலும் ஸஜாதீய விஜாதீய வ்யாவ்ருத்தமாகவும் அத்விதீயமாகவும் ப்ரஹ்மம் அறியப்பட்டிருக்கிறது. ஜகத்காரணமாக உபலக்ஷிக்கப்பட்டதும், அத்விதீயமாயும், இங்கு ப்ரதிபாதிக்கப்படவேண்டிய ப்ரஹ்மஸ்வரூபமானது (முற்கூறிய) அந்த (லக்ஷணத்திற்கு) விரோதமின்றி சொல்லத்தக்கது. அத்விதீயத்வ சுருதியானது குணங்களாலும் ஸத்விதீயதையை ஸஹிக்கிறதில்லை. அப்படி இல்லாவிடில் "நிரஞ்ஜனம் நிர்குணம்" இது முதலியவைகளோடும் விரோதம் ஸம்பவிக்கும். அதனாலும் இந்த லக்ஷணவாக்யமானது, அகண்டைகஸ்வபாவத்தையே ப்ரதிபாதிக்கிறது.

ச்ருதப்ரகாசிகை—

ஐயா! "தத்த்வமஸி" முதலியவாக்யம் போல அந்வயமுகத்தால் உபலக்ஷணமாக ஆகட்டும். வ்யாவ்ருத்தி எதற்காக?—வ்யாவ்ருத்திகள அநேகமாயிருப்பதால் அநேகார்த்தத்வம் வந்து சேருகிறது. வ்யாவர்த்திக்கப்படத்தக்க ஆகாரங்கள் அநந்தங்களாக விருப்பதால் சிலபதங்களால் அவைகளின வ்யாவ்ருத்தியானது செய்வதற்கு சக்யமானது. ப்ரஹ்மத்திற்கு எவைகளினின்று வ்யாவ்ருத்தியோ அவவஸ்துககள எவை? ப்ரஹ்மத்திற்கு அநேக வ்யாவ்ருத்திகள வருவதால் தாமஙகளோடு கூடியிருககுந்தன்மை (ஏற்படும்). வ்யாவ்ருத்திகளை தாமங்களென்று ஒப்புககொள்ளாவிட்டால் பதஙகளுக்கு பர்யாயத்வம் (வரும்) இது முதலான அநேக சஙகைகளை பரிஹரிப்பதற்காகச சொல்லுகிறார்— ஏதுக்தம்பவதி என்று லக்ஷணத:— ஸ்வரூபலக்ஷணத்தினுல். தடஸ்த்த லக்ஷணத்தாலல்ல. இதனுல் ஜகத்காரணமாக சங்கிககப்பட்டிருக்கிற தோஷங்களின் வ்யாவ்ருத்தியின் பொருட்டு, ப்ரஹ்மத்திற்கு ஸகல இதரவிரோதித்வத்தை ப்ரதிபாதிக்கிற இதே ஸாமாநாதிகரண்யமானது வ்யாவ்ருத்திபரமாவதற்குத் தகுநதென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. பஹுவ்யாவ்ருத்திகளால் அநேகார்த்தத்வ ப்ரஸங்கத்தைப்பரிஹரிக்கிறா— தத்விரோதிரூபம் என்று. ஹலதோவ்யுதஸ்யதே என்று இந்த வாக்யம் ஸ்வரூபமாத்ரபரமே. இதனுல் ஐகார்த்யம் ஸித்தித்தது; மற்றபொருள்களுககு வ்யுதாஸமேவெனில், பலித்தது என்று கருத்து. வ்யாவர்த்திகத்தக்க ஆகாரஙகள் அநேகஙகளாக விருப்பதால் சிலபதஙகளால் வ்யாவ்ருத்தியானது சக்யமாகாதென்பதை பரிஹரிக்கிறார்— ஸர்வம் அநேந பதத்ரயேணஹலதோவ்யுதஸ்யதே என்று. $ ப்ரயோஜகரூபத்தால் வ்யுதாஸம்வரின் எல்லாம் வ்யுதஸ்தமாக ஆகிறதென்று அர்த்தம். விரோதிகள் எவைகள் எனில்? கூறுகிறார்—தந்த்ர என்று. ஜகத்காரணத்வத்தால் துச்சத்வம் வ்யாவ்ருத்திக்கப்பட்டது எதற்காக அஸத்யவ்யாவ்ருத்தி எனில் கூறப்பட்டது. விகாராஸ்பதத்வேந அஸத்யாத் என்று. அசைவற்றிருககிற வஸ்து, சிதம், முதலிய அர்த்தங்களுககும்பொதுவாக போதகமாக விருப்பதால், அநேகார்த்த ஸாதாரணமான ஜடசப்தவிவரணத்திற்காக "அந்யாதீனப்ரகாஸ" என்கிற சப்தம் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியும் ஸத்யாதிபதங்களில் ஒவ்வொருபதத்தினுலேயே ஸகலத்வ்யாவ்ருத்தியும் ஸித்திக்கிறது. ஆயினும்; ப்ரஹ்மத்தினிடத்தில் சங்கிக்கப்பட்டிருக்கிற, தன்னைக்காட்டிலும் வேறான பதார்த்தஙகளிலுள்ள விரோதி ஆகாரமானது ஒரு பதத்தினுல் நிவ்ருத்தி அடையாததலால் மூன்று பதங்களுக்கும் ஸாஃபல்யம். வ்யாவ்ருத்திகளால் ஏற்படக்கூடிய ஸதர்மகத்வத்தைப் பரிஹரிக்கிறா— நச என்று. † ப்ராபாகர பக்ஷத்திலும ஸித்தாந்தி மதத்திலும் பாவரூபமான தர்மம். § வைசேஷிகன் முதலியவர்களின் மதத்திலோ அபாவரூபமான தர்மம். அதனுல் "பாவரூப: அபாவரூபோவா" என்று சொல்லப்பட்டது. வ்யாவ்ருத்தியானது தாமமில்லாவிடில் வேறு எவ்விதமாக இருக்கக்கூடுமெனில் கூறுகிறார்—அபிது என்று. சிப்பிமுதலியவற்றில் தார்மத்திற்கு வ்யாவ்ருத்தித்வமானது ரஜதம் முதலியவற்றிற்கு விரோதியாக விருப்பதால் ஒப்புக்கொள்ளப்படுகிறதன்றே. இவ்வண்ணமாக ப்ரஹ்மமானது ஸகல இதர விரோதியாக இருப்பதால், தானே வ்யாவ்ருத்தி என்று அர்த்தம்.

ஸ்வரூபமே வ்யாவ்ருத்தி என்பதில் த்ருஷ்டாந்தத்தைக்கூறுகிறார்—யதா என்று. வெண்மை முதலியவற்றுக்கு கருமைமுதலியதின் வ்யாவ்ருத்தியானது வேறுதாமமல்ல,

$ ப்ரயோஜகரூபேண—மொத்தவகுப்பாய். † ப்ராபாகரர்—மீமாம்ஸகர்.
§ வைசேஷிகர்—கணாத மஹர்ஷியின் மதத்தை அநுஸரிப்பவர்.

அப்படிக்காணப்படாமையால் வேறு தர்மமாக ஒப்புக்கொள்ளப்படும்பக்ஷத்தில் அந வஸ்தை வருவதானுமென்று அபிப்ராயம். அங்ஙனமாகில், பதங்களுக்கு பர்யாயத்வம் உண்டாகட்டும் என்று ஆசங்கித்து கார்ஷ்ண்யவ்யாவ்ருத்தம் பீதிமவ்யாவ்ருத்தம், சௌக்ல்யம் என்று த்ருஷ்டாந்த வாக்யாபிப்ராயத்தால் பரிஹரிக்கிறார்— ஏகஸ்ய என்று. விலக்ஷத்தக்கவஸ்துக்களின் * வ்யுதாஸபேதத்தால் பதங்கள் ப்ரயோஜன முள்ளவைகள். அதினாலேயே அபர்யாயத்வம் என்று அர்த்தம்.¶ ப்ரதியோகியைக்குறிப் பிட்டுக்காட்டும் வேஷத்தால் ப்ராவ்ருத்திநிமித்தலாபம் ஏற்படுவதால் ஸாமாநாதிகர ண்யலக்ஷணஸித்தியுமென்று அபிப்ராயம். பர்யாயத்வம் முதலியவைகளின் ப்ரஸங் கத்திற்குப் பரிஹாரம் ஐகார்த்யத்திற்கு விரோதமில்லாமல் செய்யப்பட்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தால் சொல்லப்பட்டது— ஏகார்த்தம் என்று. ஸ்வரூபமாத்ர பரத்வத்தைக்கூறினதினால் ஐகார்த்யம் ரக்ஷிக்கப்பட்டதன்றோ. அர்த்தவத்தரம் என்று. தாப்பர்த்யத்தினால் த்ருஷ்டாந்தமான சௌக்ல்யத்தைக்காட்டிலும் பேதவாதிக்கு அபிமதமான ஸகுணபரத்வத்தைக் காட்டிலுமும் ப்ரயோஜனாதிக்யம் கருதப்பட்டிருக் கிறது. சௌக்ல்யாதித்ருஷ்டாந்தம் ப்ரத்யக்ஷமாகவல்லவோ இருக்கிறது. அதில் ஸ்பஷ்டார்த்தமாக கார்ஷ்ண்ய வ்யாவ்ருத்தம் இதுமுதலிய பதப்ரயோகம். ப்ரத்யக்ஷ த்திற்கு அகோசரமான பர ப்ரஹ்மத்தினிடத்திலேயோ வெனில் ஸகலேதர வ்யா வ்ருத்திவசனமானது அதிசப்ரயோஜனமுள்ளதாக இருப்பது பற்றி த்ருஷ்டாந்தத்தை க்காட்டிலும் ப்ரயோஜனாதிக்யமுள்ளது. ஜகத்காரண பூதமான ப்ரஹ்மத்திற்கு சங்கிக் கப்பட்டுள்ள தோஷங்களின் வ்யாவ்ருத்தியே அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறதேயொழிய, வேறுகுணம் அபேக்ஷிக்கப்படவில்லை என்பதனால் பேதவாதிபக்ஷத்தைக் காட்டிலும் ப்ரயோஜனாதிக்யம். இவ்வண்ணம் ஸத்யஜ்ஞாநாதிவாக்யத்திற்கு அநுக்ராஹகதர்க்கம் கூறப்பட்டது. தர்க்கத்தால் அநுக்ரஹிக்கப்பட்ட வாக்யத்தினால் எந்த அர்த்தம் அறி யப்பட்டதென்றால் சொல்லுகிறார்— தஸ்மாத் என்று. தஸ்மாத்— இந்த வாக்யமா னது சொல்லப்பட்டநியாயங்களால் அநுக்ரஹிக்கப்பட்டிருப்பதனால் என்று பொருள். ஏகம் என்று ஸமானவிபக்திநிர்தேசத்தால் பலித்தஐக்யம் உரைக்கப்பட்டது ஏவகாரத் தால், ஸ்வரூபத்தால் ஐக்யம்‡குணங்களால் பேதயமென்று. அம்சத்தால் அநேகார்த் தத்வம் தள்ளப்படுகிறது. இதை விசதமாக்குகிறார்— நிர்துதநிகிலவிசேஷம் என்று. நிர்விசேஷவஸ்துவுக்கு † துச்சத்வத்தை விலக்குவதற்காக “ஸ்வயம்ஜ்யோதி:”என் கிறபதம். இத்யுக்தம் என்று. “ஸத்யஜ்ஞானதி”வாக்யத்தினால், இந்தவாக்யம் பூரிக்கத் தக்கது. இப்படி ஸாமாநாதிகரண்யம் வேறுவிதமாய் பொருந்தாதலால் ஸத்யஜ்ஞாநாதி வாக்யத்திற்கு வஸ்துமாத்ரபரத்வம் உபபாதிக்கப்பட்டது.

பிறகு, காரணவாக்யத்துடன் ஒற்றுமை, மற்றபோதகவாக்யங்களோடு ஒற்றுமை என்கிற, இவ்விரண்டு ஹேதுக்களால் வஸ்துமாத்ரபரத்வம் உபபாதிக்கப்படுகிறது-ஏவம் இதுமுதலியதால். அதில் முதலில் காரணவாக்ய ஐகார்த்யம் என்கிற ஹேது கூறப்ப டுகிறது—ஏவம் என்று. ஏவம்—நிர்விசேஷவஸ்துபரமாக நிர்வாஹமிருந்தால்தான் கார ணவாக்ய ஐகார்த்யம் என்று பொருள். காரணவாக்ய ஐகார்த்யம் எதற்காக அபேக்ஷிக்கப் பட்டிருக்கிறது? ஐகார்த்யம்வரின்எவ்வாறு நிர்விசேஷபரத்வம் எனில்கூறுகிறார்—யுத: இது முதலியதால். “யதோவா இமானி” இது முதலியது லக்ஷணவாக்யம். காரண த்வத்தை முன்புசொல்லப்பட்டதாக வைத்துக்கொண்டு இந்தவாக்யம் லக்ஷணத்தை

* வ்யுதாஸம்—விலக்குதல். ¶ ப்ரதியோகி—ப்ரதிஸம்பந்தி.

‡ துச்சத்வம்— தர்மிஸ்வரூபத்தின் இன்மை.

விதிப்பதால், காரணத்தைமுதலில் சொல்லும் வாக்யத்தை எடுக்கிறார்—ஸதேவ என்று. உபலக்ஷிதத்திற்கு உபலக்ஷணமாவது, சந்திரனுக்கு கிளைபோல் ஸ்வரூபத்துக்கு வெளியிலிருந்தே காட்டிக்கொடுப்பது. ஸத்யம்ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம என்கிற இந்தவாக்யத்தினுலென்று அர்த்தம். காரணவஸ்துவினுடைய ஸ்வரூபபோதகமாகவிருப்பதால், காரணவாக்யத்தோடு ஒற்றுமை இதற்கு அபேக்ஷிதமென்று சொல்லப்பட்டதாகவாகிறது. காரணவாக்ய ஐகார்த்யமிருக்கட்டும் ; அந்த ஒற்றுமை ஸகுண ப்ரஹ்மத்துக்கு காரணத்வத்தைச்சொல்லும் "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" "யஸ்யஜ்ஞானமயம் தப:" தஸ்மாதேததூ ப்ரஹ்மநாமரூபமந்நஞ்ச ஜாயதே" " தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் " " ஸகாரணம் கரணாதிபாதிப:" (எவன் ஸர்வவிஷய ஸாமான்ய ஜ்ஞானமுள்ளவனோ, எவன் ஸர்வ வஸ்துக்களையும்பற்றி ஸர்வப்ரகாரஜ்ஞானமுள்ளவனோ, எவனுக்குஜ்ஞானமயமான தபஸ்ஸிருக்கிறதோ) (ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டியில் உந்முகமான அந்த ப்ரஹ்மத்தினிடத்தினின்று) இந்த § (அவ்யாக்ருதமென்ற அவஸ்தையுள்ள) ப்ரஹ்மமும், அதின் வாயிலாக நாமரூபமுள்ள (போக்த்ரு போக்யரூபமான) ப்ரபஞ்சமும் உண்டாகிறது. ஈச்வரர்களுக்கெல்லாம் சிறந்த மஹேச்வரனை அந்த பரமாத்மாவை. அவன் காரணவஸ்து, இந்திரியங்களுக்கு நியந்தாவான ஜீவனுக்கு ‡ நியந்தா' இது முதலிய வாக்யங்களோடேயே இருக்கட்டுமென்று சொல்லப்படுமேயானால், உத்தரம் சொல்லுகிறார்.—தத்ர என்று. தத்ர—காரண வாக்ய ஐகார்த்யம் அபேக்ஷிக்கப்பட்டிருக்கையில் ஸர்வசாகாப்ரத்யயந்யாயமானது, சொல்லப்பட்டிராத அர்த்ததின் ஸ்வீகாரத்தை பலமாகக்கொண்டது. அதனால், இங்கே சொல்லப்பட்டிராததும் வேறு உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டதாகவுமிருக்கிறவர்த்தம் ஸ்வீகரிக்கத்தக்கதாகவிருக்கையில் ஸகுணப்ரஹ்மமாத்திரத்தை ப்ரதிபாதிக்கிற உபநிஷத்துக்களில் நிர்குணமான ப்ரஹ்மமும் சொல்லப்பட்டதாக ஆகிறது. அதில் அபச்சேதந்யாயத்தால் நிர்குணவாக்யங்கள் ஸகுணவாக்யங்களைவிட அதிகபலமுள்ளவைகளாதலால், எல்லாவிடத்திலும் ஸஜாதீய விஜாதீய வ்யாவ்ருத்தமாயும் அத்விதீயமாகவுமிருக்கிற ப்ரஹ்மமே ப்ரதிபாதிக்கப்பட்டதாகவாகிறதென்று அபிப்ராயம். அதனால் என்ன? எனில், கூறுகிறார்—ஜகத் என்று "ஜகத்காரண" என்கிற இதுமுதலிய பதங்களால் காரணவாக்யங்களால்சொல்லப்பட்ட அர்த்தத்தை அநுவதிக்கிறார். ப்ரதிபிபாதயிஷிதம்— தாத்பர்யவிஷயம்—வஸ்து மாத்திரத்திலேயே தாத்பர்யமென்றுபொருள். "ததவிரோதேந வாக்தவ்யம்"—காரணவாக்யங்களாலறியப்பட்டிருக்கிற ப்ரஹ்மஸ்வரூப போதகமாதலால், அதற்கு விரோதமின்றி இந்த வாக்யத்தினுல் சொல்லத்தக்கதென்று அர்த்தம். "நரபதி: அத்விதீய: " இது முதலிய வ்யவஹாரத்தில் போல ஸமானனும் மேலானவனுமில்லை என்கிறஅர்த்தம் கொள்ளில், † அத்விதீயத்வம் பொருத்தமுள்ளதாவதால், அதோடு ஐகார்த்யம் இதற்குச்சொன்னபோதிலும், நிர்குணபரத்வம் ஸித்தியாதெனில் சொல்லுகிறார்—அத்விதீயத்வஸ்ருதி: என்று " ஸதேவ " " ஏகமேவ " என்று விஜாதீய ஸஜாதீய வ்யாவர்த்தகமான அவதாரணத்வயத்தோடு சேர்க்கை பெற்றிருப்பதால், இந்த அத்விதீயபதமானது குணத்தினாலும் ஸத்விதீயதையை ஸஹிக்கிறதில்லை என்று அபிப்ராயம். இவ்வண்ணமாக காரணவாக்யத்தோடு ஐகார்த்யத்தால் ஸத்யஜ்ஞாநாதி வாக்யத்துக்கு வஸ்துமாத்ரபரத்வம் உபபாதிக்கப்பட்டது. பிறகு, போதகவாக்யாந்தர ஐகார்த்யரூபமான ஹேது

§ அவ்யாக்ருதம்— நாமரூபவ்யாகரணமில்லாதது.

‡ நியந்தா—ஆஜ்ஞை இடுகிறவன் அல்லது ஏவுகிறவன்.

† அத்விதீயம்—தன்னுடைய துணையென்கிற இரண்டாவது பதார்த்தத்தைக்கூட உடையதில்லாதது.

சொல்லப்படுகிறது—அந்யயோ என்று. அந்யதா-ஸத்யஜ்ஞாநாதி வாக்யத்துக்கு விசிஷ்டபரத்வம் சொல்லில், 'நிரஞ்ஜனம் நிர்குணம்' இது முதலியவைகளோடு விரோதம் வரும் ஆகையால் அவைகளோடு அவிரோதத்தின்பொருட்டு இந்தவாக்யம் நிர்விசேஷவஸ்துமாத்ரபரமென்று அர்த்தம், "அந்யதா, நிரஞ்ஜனம் நிர்குணமித்யாதி ஸ்ருதிவிரோதப்ரஸ" என்பதினால், அத்விதீயசுருதிக்கு குணத்திலும் ஸத்விதீயதா நிஷேதபரத்வமும் ஆர்த்திகமாக உபபாதிக்கப்பட்டதாக ஆகிறது. மூன்று ஹேதுக்களால் உபபாதிக்கப்பட்ட அர்த்தத்தை நிகமநஞ்செய்கிறார்—அதஸ்ச என்று. அத:—முற்கூறப்பட்ட ஸாமாநாதிகரண்யம வேறுவிதமாக பொருந்தாதலாலும், பிறகு கூறப்பட்டுள்ள காரணவாக்ய சோதகவாக்யாந்தர ஐகார்த்ய ரூபமான, இரண்டுஹேதுக்களாலும் என்று அர்த்தம். ஏதல்லக்ஷணவாக்யம்— ஸ்வரூபலக்ஷணவாக்யம். அகண்டைகரஸம்— நிர்விசேஷைகஸ்வபாவத்தையே ப்ரதிபாதிக்கிறதென்று அர்த்தம்.

---

நநு ச ஸத்யஜ்ஞாநாதிபதாநாம் ஸ்வார்த்தப்ரஹாணேந ஸ்வார்த்தவிரோதிவ்யாவ்ருத்தவஸ்துஸ்வரூபோபஸ்தாபநபரத்வே லக்ஷணா ஸ்யாத்। நைஷ தோஷ:, அபிதாநவ்ருத்தேரபி தாத்பர்யவ்ருத்தேர்பலீயஸ்த்வாத்। ஸாமாநாதிகரண்யஸ்யைக்ய ஏவ தாத்பர்யமிதி ஸர்வஸம்மதம். நநு ச ஸர்வபதாநாம் லக்ஷணா ந த்ருஷ்டசரீ। தத: கிம்? வாக்யதாத்பர்யவிரோதே ஸத்யேகஸ்யாபி ந த்ருஷ்டா; ஸம்ஹிவ்யாஹ்ருதபதஸமுதாயஸ்யைதத்தாத்பர்யமிதி நிச்சிதே ஸதி த்வயோர்பஹூநாம் ஸர்வேஷாம் வா தத்விரோதாய ஏகஸ்யேவ லக்ஷணா ந தோஷாய। ததா ச சாஸ்த்ரஜ்ஞைரப்யுபகம்யதே। கார்யவாக்யார்த்தவாதிபிர்லிங்கவாசகேஷு ஸர்வேஷு பதாநாம் லக்ஷணா ஸமாச்ரீயதே। அபூர்வகார்யஸ்யைவ லிங்காதிசப்தவாச்யத்வாத் லிங்காதிபி: க்ரியாகார்யம் லக்ஷணயா ப்ரதிபாத்யதே। கார்யாந்விதஸ்வார்த்தாபிதாயிநாம் வேதசேஷாம் பதாநாமபூர்வகார்யாந்வித ஏவ சப்தவ்யுத்பத்திரிதி க்ரியாகார்யாந்விதப்ரதிபாதநம் லாக்ஷணிகமேவ। அதோ வாக்யதாத்பர்யவிரோதாய ஸர்வபதாநாம் லக்ஷணாபி ந தோஷ:। அத ஏவோர்த்தஜாதம் ப்ரதிபாதயந்தோ வேதாந்தா: ப்ரமாணம்॥

---

ஸ்ரீபாஷ்யம்—

இன்னும் ஐயா! ஸத்யஜ்ஞாநாதிபதங்கள், தன் அர்த்தத்தைவிழந்து, ஸ்வார்த்த விரோதிகளினின்று வேறுபட்டிருக்கிற வஸ்துஸ்வரூபத்தை உணர்த்துவதில் நோக்குள்ளவைகளாக ஆகின்றன என்று சொன்னால் லக்ஷணை ஏற்படுமே— எனில், உத்தரம்—இது தோஷமல்ல—அபிதாநவ்ருத்தியைவிட தாத்பர்யவ்ருத்தியானது அதிக பலமுள்ளதாக இருப்பதால். ஸாமாநாதிகரண்யத்திற்கு ஐக்யத்திலேயே தாத்பர்யமென்பது எல்லோருக்கும் ஸம்மதம்,

ஐயா ! எல்லாப்பதங்களுக்கும் லக்ஷணையானது எங்கும் காணப்பட்டிருக்க வில்லையே என்றால், அதனாலென்ன ? வாக்யதாத்பர்யத்திற்கு விரோதமில்லாவிடில், ஒரு பதத்திற்குக்கூட லக்ஷணைகாணப்பட்டதில்லை. சேர்ந்து ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற பதங்களின் ஸமுதாயத்திற்கு "இது தாத்பர்ய" மென்று நிச்சயிக்கப்பட்டுவிட்டால், அந்த தாத்பர்யத்திற்கு விரோதமில்லாமலிருப்பதற்காக இரண்டுபதங்களுக்கோ மூன்றுபதங்களுக்கோ, எல்லாபதங்களுக்குமோ, ஏதாயினும ஒருபதத்தைப்போல் லக்ஷணையைக்கற்பிப்பது தோஷத்தின் பொருட்டாகாது. அவ்வண்ணமே சாஸ்திரத்தில் நிலைபெற்றவர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. கார்யரூபவாக்யார்த்தவாதிகளால் லௌகிகவாக்கியங்களில் எல்லாபதங்களுக்கும் லக்ஷணை ஆச்ரயிக்கப்படுகிறது. ஏனெனில் அபூர்வரூபமான கார்யத்தை "லிங்" முதலியவைகளே முக்கிய வ்ருத்தியினால் ப்ரதிபாதிப்பதால், "லிங்" முதலியவைகளால் க்ரியா கார்யம் லக்ஷணையினால் ப்ரதிபாதிக்கப்படுகிறது. கார்யத்துடன் அந்வயித்து ஸ்வார்த்தத்தைச் சொல்லுகிற மற்றபதஙகளுக்கும் அபூர்வகார்யாந்விதமே முக்யார்த்தமாதலால் *க்ரியாகார்யாந்விதப்ரதிபாதநம் லாக்ஷணிகமே. ஆகையால் வாக்யதாத்பர்யத்தின் விரோதம் வாராமலிருப்பதற்காக எல்லாப்பதங்களுக்கும் லக்ஷணை கல்பிப்பதும் தோஷமாகாது. ஆதலால் இந்தஅர்த்தஸமூஹத்தையே ப்ரதிபாதனஞ்செய்கின்றவேதாந்தங்கள் ப்ரமாணம்.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்கு மேல், முக்யமான அர்த்தத்தைவிட்டு லக்ஷணையை அங்கீகரிப்பதில் தோஷத்தை வெளியிடுகிறார் — நநுச இது முதலியதால். ஸ்வார்த்தப்ரஹாணேந— ஸ்வார்த்தமோ விசேஷணத்தை த்வாரமாகக்கொண்ட விசேஷ்யம். அதை யிழப்பதாலென்று அர்த்தம். லக்ஷணையை ஒப்புக்கொண்டு அதனால் தோஷமில்லை என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார்—லக்ஷணைஷ: என்று. முக்யார்த்தத்தவம மேலே கூறப்படப்போகிறது. ஹேதுவைச்சொல்லுகிறார்— அபிதாநவ்ருத்தேரபி என்று. தாதபர்யவ்ருத்தியாவது தாத்பர்யத்தால் வந்த வ்ருத்தி—அன்றிக்கே அந்த அர்த்தத்திலேயே ஒரே நோக்குடையவ்ருத்தி. அதுவும் இங்கு லக்ஷணை வ்ருத்தியாக விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. வாக்ய தாத்பர்யத்திற்கு விரோதியாயுள்ள முக்கியவ்ருத்தியைவிட வாக்யதாதபர்யாநுகுணமான லக்ஷணைவ்ருத்தியானது அதிகபலமுள்ளதென்று பொருள். எந்த அர்த்தத்தில் தாத்பர்யம் ? எதை அநுஸரிப்பதற்காக லக்ஷணை ஸ்வீகரிக்கத்தக்கது, என்றால் சொல்லுகிறார்— ஸாமாநாதிகரண்யஸ்ய என்று. ஐக்ய ஏவதாத்பர்யமிதி— ஸமாந விபக்தியானது தாத்பர்யநிச்சயத்தை உண்டுபண்ணுகிறதென்று கருத்து. ஆநந்தமயாதிகரணத்தில் ஸித்தாந்தியினாலன்றோ இந்த அர்த்தம் கூறப்படப்போகிறது. ஸர்வஸம்மதம்—விசிஷ்டைக்யவாதிகளாலும், மற்றவர்களாலும் ஸம்மதிக்கப்பட்டிருக்கிறதென்று அர்த்தம்.

---

*க்ரியாகார்யாந்விதம்—க்ரியாரூபமான கார்யத்தோடு சேர்க்கைபெற்றது.

கங்காயாம் கோஷ: இதுமுதலிய வாக்கியங்களில் ஸர்வபதலக்ஷணை காணப்பட்டிருக்கவில்லையே என்று ஆக்ஷேபிக்கிறார்—நநுச என்று. தாத்பர்யகிச்சாயகமான சில பதத்தின் முக்கியவ்ருத்தியினால், அதற்கநுகுணமாக மற்ற பதங்களுக்கு லாக்ஷணிகத்வம் ஆச்ரயிக்கத்தக்கது, ஸர்வபதலக்ஷணை ஒப்புக்கொள்ளப்படுமேயாகில் அது ஸம்பவியாதென்று அபிப்பிராயம். தாத்பர்யாவிருத்தமான பதத்திற்கு முக்யார்த்த ஸ்வீகாரமானது தாத்பர்யவிருத்தபதலக்ஷணாஸ்வீகாரத்திற்கு விருத்தமன்று என்கிற எண்ணத்தினால் சொல்லுகிறார்— தத:கிம் என்று. தத:கிம் என்பதனால் கருதப்பட்டதை விவரியா கின்றுகொண்டு பதில் கேள்வி கேழ்ப்பதால் சொல்லக்கருதப்பட்ட அர்த்தத்தைக்கண்டித்துப்பரிஹரிப்பதற்காக எதிரகக்ஷியில் ஸாமுக தோஷத்தை உள்ளடக்கிக்கொண்டிருக்கிற ப்ரதிபந்தியைக்கூறுகிறார்-வாக்யதாத்பர்ய என்று. தாத்பர்யத்திற்கு விரோதமில்லாதபோது பதத்திற்கு முக்யார்த்தத்வம் சொல்வதைக்கொண்டு தாத்பர்ய விரோதமுள்ளவிடத்திலும் பதத்திற்கு லக்ஷணைசொல்லக்கூடாதென்றால் அப்போது "கங்காயாம் மத்ஸ்யா: ப்ரதிவஸந்தி" இதுமுதலிய வாக்யங்களில் விரோதமில்லாமையால் ஒரு பதத்திற்குக்கூட லக்ஷணை ஒப்புக்கொள்ளப்படாமையால், கங்காயாம் கோஷ: என்கிற இது முதலியவைகளிலும் ஒரு பதத்துக்குக்கூட லக்ஷணை வாராமல் போகவேண்டியதாக வருமென்று அபிப்பிராயம். "கங்காயாம் மத்ஸ்யா:" என்கிறவாக்கியத்தில் விரோதமில்லாமையால் லக்ஷணை அங்கீகரிக்கப்படவில்லை; "கங்காயாம் கோஷ:" என்கிற விடத்தில் விரோதமிருப்பதால் லக்ஷணைகல்பநம் தோஷமாகாதென்று சொல்லப்படுமேயாகில், அது இங்கும் ஸமாநமென்று சொல்லுகிறார்—ஸமபிவ்யாஹ்ருத என்று. "விஷம் புங்க்ஷ்வ" இதுமுதலிய வாக்கியங்களில் ஸர்வபதலக்ஷணையும் காணப்பட்டிருக்கிறதென்று அபிப்ராயம். ஏதத்தாத்பர்யநிர்ணயே ஸதி என்று. § அபவாதகமில்லாத ஸமானவிபக்தி கிர்த்தேசம கிர்ணாயகமென்று கருத்து. "த்வயோஸ்த்ரயாணாம் இத்யாதி" அவிரோதம் விரோதம் இவைகளே முக்யவ்ருத்தியையும் லக்ஷணாவ்ருத்தியையும் ஏற்றுக்கொள்வதில் ப்ரயோஜகங்களேயொழிய பதங்களின் ஏகத்வம் த்வித்வம் முதலியவைகள் ப்ரயோஜகங்கள் ஆகா என்று அர்த்தம். "விஷம் புங்க்ஷ்வ" இது முதலிய லௌகிகப்ரயோகங்களிலே மாத்ரம் ஸர்வபதலக்ஷணையானது கதியில்லாமையால் ஆச்ரயிக்கப்பட்டதென்பதில்லை, பரீக்ஷகர்களான மற்றவர்களாலுங்கூட ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறதென்று கூறுகிறார்—ததாச என்று. ததா-ஸர்வபதலக்ஷணைக்கு தோஷமில்லாமை ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஒப்புக்கொள்வதற்கு ஹேது இருப்பதினால் ஒப்புக்கொள்ளாமலிருக்கமுடியாது என்றுகருத்து.

எந்த பரீக்ஷகர்களால் எந்தவிடங்களில் ஸர்வபதலக்ஷணை ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறதென்றால் சொல்லுகிறார்-கார்யவாக்யார்த்த என்று. லௌகிகவாக்கியங்களில் எல்லாபதங்களும் லாக்ஷணிகங்கள் என்பதை உபபாதிக்கிறார்—ஆபூர்வகார்யஏவ என்று. க்ரியாகார்யம் லாக்ஷணிகமாக விருக்கட்டும். அதனால் எவ்வாறு ஸர்வபதலக்ஷணையெனில்கூறுகிறார்— கார்யாந்வித என்று. பதங்கள் க்ரியையோடு அந்விதமானதையே சொல்லுவதால் அபூர்வகார்யாந்விதாபிதாயிகளான காரகபதங்களுக்கு அந்த அபூர்வத்தோடு ஸம்பந்தம் பெற்றதே முக்யார்த்தமாதலால் அதோடு அந்வயத்தை விட்டு விட்டால் லக்ஷணை என்றே அர்த்தம்.

ஐயா! "கங்காயாம் கோஷ: ப்ரதிவஸதி" இது முதலிய வாக்யங்களில் கங்கா பதத்திற்கு லாக்ஷணிகார்த்தத்வம் இருந்தபோதிலும், அதோடு அந்விதார்த்தாபிதாயி

§ அபவாதம்—மறுப்பு

களான பதார்த்தங்களுக்கு அமுக்யத்வம் காணப்பட்டிருக்கவில்லையே என்று சொல்லப்படுமேயாகில், அப்படியல்ல—ககாரபதத்தால் லக்ஷிதமான கரையானது வாக்யத்தினர்த்தமாகாமையால். இங்கேயோ வாக்கியத்திற்கு ப்ரதானப்ரதிபாத்யமாகவிருக்கிற கார்யரூபமான அர்த்தத்தை உணர்த்துகிறபதம் லாக்ஷணிகமாதலால் அதோடு அந்விதமானதைச்சொல்லும் பதங்களுக்கு லக்ஷணை வந்தேதீறும். அதனாலேயே கார்யவாக்யார்த்தவாதிகளாலென்று உரைக்கப்பட்டது. ஐயா! "கமலாநி § நிமீலந்தி, ‡ குமுதாந்யுந்மிஷந்திச" என்கிறவிடங்களில் வாக்யார்த்த பூதமான மீலநம் முதலியவற்றுக்கு லாக்ஷணிகத்வமிருந்தபோதிலும், அதோடு அந்விதமான அர்த்தத்தைச்சொல்லுகிற கமலமுதலிய பதங்களுக்கு லாக்ஷணிகத்வம் காணப்படவில்லையே என்று வினவுவாயேயாகில், அபிப்பிராயத்தை யறியாதவனாக நீ சோதனஞ்செய்கிறாய். எல்லாபதங்களுக்கும் நிமீலனரூப வாக்யார்த்த பரத்வம ஒருவராலும் வ்யவஸ்தாபிக்கப்படாததால். நிமீலனரூபார்த்தத்திற்கு உபஸ்தாபகமான பதத்திற்கு லக்ஷணை சொன்னபோதிலும் அதோடு அந்விதார்த்தாபிதாயிகளான பதங்களுக்கு லாக்ஷணிகத்வம் ஏற்படவேண்டுமென்பது கிடையாது. உன்னாலேயோ எல்லாபதங்களுக்கும் கார்யபரத்வம் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் அக்கார்ய ஸமர்ப்பகமான பதத்திற்கு லாக்ஷணிகத்வம் ஸம்பவிக்கும்போது அதோடு அந்விதமான அர்த்தத்தைச்சொல்லுகிற பதங்கள் லக்ஷணையை அடைகின்றன.

(அதை உபபாதிக்கிறார்) கார்ய வாக்யார்த்த வாதியினால் பதங்களுக்கு விசிஷ்ட கார்யைகதேசத்தில் பதசக்தி நிச்சயிக்கப்படுகிறதா? அல்லது, விசிஷ்ட ஸ்தாயிகார்யைகதேசத்திலா? முந்தினபக்ஷத்தில் விசிஷ்டகார்யைகதேசத்வம் பொதுவாக விருப்பதால் ஸ்வார்த்தங்களில் காரகபதங்களுக்குப்போல "லிங்" முதலியவற்றுக்கு க்ரியாகார்யத்தில் முக்யத்வம் ப்ரஸங்கிக்கும் இரண்டாவது பக்ஷத்தில், விசிஷ்டஸ்தாயிகார்யைகதேச பரத்வத்தை விடுவது, எல்லாபதங்களுக்கும், ஸமமாதலால் 'லிங்' முதலியவற்றுக்கு க்ரியாகார்யத்தில் போல காரகபதங்களுக்கு க்ரியாகார்யாந்விதபரத்வத்தில் லக்ஷணை ஏற்படவேண்டும் பதங்களுக்கு விசிஷ்டகார்யைகதேசபரத்வம் துல்யமாக இருந்தபோதிலும் 'லிங்' முதலியது க்ரியாகார்யத்தில் லாக்ஷணிகம்; கார்யாந்விதமாத்ரத்தில் காரகபதங்களுக்கு முக்யத்வமென்று கூறப்படுமேயானால், கார்யாந்விதமாத்ரத்தில் காரகபதங்களுக்கு முக்யத்வம் இஷ்டமாகில் 'லிங்' முதலியவற்றுக்கு க்ரியாகார்யத்தில் எவ்வாறு லாக்ஷணிகத்வம்? ஸ்தாயிகார்யபரமாக வேதத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிறதென்கிற நிச்சயத்தால், லக்ஷணையினாலுங்கூட, க்ரியாகார்யபோதனம்

---

§ நிமீலந்தி—மூடுகின்றன; ‡ குமுதாநி—அல்லிப்பூக்கள், $ உந்மிஷந்தி—மலர்கின்றன;

ப்ராபாகர மீமாம்ஸகர்கள், லிங் லோட், தவ்யப்ரத்யாந்த பதங்களோடுகூடிய விதிவாக்கியங்களால் அபூர்வம் போதிக்கப்படுகிறதென்று கூறுகின்றனர். லிங் முதலிய ப்ரத்யயங்களால் நேராக அபூர்வமே சொல்லப்படுகிறது. அதுதான் விசேஷ்யம் க்ரியையினாலும் காரகங்களாலும் அதுவே விசேஷிக்கப்படுகிறது. வைதிகவாக்கியங்களில் அபூர்வரூபமான கார்யத்தோடு அந்வயித்த அர்த்தங்களைச்சொல்லுகிற பதங்களுக்கு அந்த அபூர்வகார்யத்தோடு அந்வயித்த அர்த்தத்திலேயே முக்கியவ்ருத்தி. லௌகிகவாக்யங்களில் அபூர்வகார்யாந்வய பரித்யாகத்தால் ஸர்வபதங்களும் லக்ஷணாவ்ருத்தியினாலேயே அர்த்தங்களை போதிக்கின்றன. இந்த லக்ஷணாகல்பநத்திற்கு பீஜம் தாத்பர்யாநுபபத்தியே. அர்த்தாநுபபத்தி என்று சிலர் கூறுவார்கள்.

ஸம்பவிக்கலாமென்றால் காரகபதங்களுக்கும் ஸ்தாயிபான கார்யாந்விதபரமாக வேதத்தில் ப்ரயோகம் காணப்படுவதால், லக்ஷணையினாலுங்கூட க்ரியா கார்யாந்விதபோதநம் உபபன்னமாவதால் க்ரியாகார்யாந்வித ப்ரதிபாதநம் லாக்ஷணிகமாக ஆகும். ஐயா! ‘கோ’ பதத்திற்கு ஃ ஸாஸ்நைமுதலிய அவயவஸம்ஸ்தானமுள்ள வ்யக்தியில் மாத்திரம் முக்யத்வ மிருந்தபோதிலும், வேறுப்ரமாணத்தால் *வண்டாதிகள் ஸித்திக்கிறதுபோல ‘லிங்’ முதலியது கார்யமாத்ர பரமாகில், கார்யவிசேஷத்திற்கு வேறு ப்ரமாணத்தால் ஸித்தி இல்லாமையாலும் இரண்டு இடத்திலும் ஒரு சக்தி கல்பிப்பது பொருந்தாததாலும், சக்தித்வய கல்பநத்தில் கௌரவத்தாலும், லிங முதலியவற்றுக்கு அபூர்வகார்யத்தில் முக்யத்வமென்பதுபற்றி க்ரியாகார்ய ப்ரதிபாதநம் ¶ லாக்ஷணிகம். அப்படி இல்லாவிட்டால் சப்த சக்தியானது கார்யமாத்ர விஷயமாதலாலும் ப்ரத்யக்ஷம் முதலியவற்றுக்கு விஷயமில்லாமலிருப்பதாலும், கார்யவிசேஷம் ப்ரமாணமற்றதாக ஆகவேண்டியதாகுமென்று சொல்லப்படுமேயானால், அல்ல— ‘கார்யவிசேஷம் ப்ராமாணிகமாகில், ‘அங்கு சக்தி கல்பநம் செய்யத்தக்கது. சக்தி கல்பிக்கப்பட்டால், அதற்கு ப்ராமாணிகத்வம்’ என்று அந்யோந்யாச்ரய தோஷம் ப்ரஸங்கிப்பதால். மேலும் கார்யவிசேஷத்திற்கு அப்ராமாணிகத்வத்தைப் பரிஹரிப்பதற்காக அங்கு சக்தி கல்பிக்கப்படுமேயாகில், அப்பொழுது காரகபதங்களுக்கு கார்யாந்விதமாத்ரபரத்வம் ஏற்படுவதால் கார்ய விசேஷாந்வயம் ப்ரமாணாந்தரத்துக்கு அகோசரமாதலாலும் இரண்டு இடத்திலும் சக்தி கல்பிப்பதில் கௌரவமேற்படுவதாலும் கார்யவிசேஷாந்வயத்தில் ப்ரமாணம் இல்லாமல்போகுமென்று அதைப்பரிஹரிப்பதற்காக கார்யவிசேஷத்தோடு அந்வயத்தில் காரகபதங்களுக்கு முக்யத்வமென்பதினால் க்ரியா கார்யாந்விதபரத்வம் லாக்ஷணிகமாக ஆகும். ‘லிங’ முதலியவற்றின் ஸமபிவ்யாஹார பலத்தால் காரகபதங்களுக்கு கார்யவிசேஷாந்வயபரத்வம் ஸித்திக்கிறது என்று சொல்லப்படுமேயானால் அப்பொழுது ஸ்வர்க காமபதத்தின் சேர்க்கைபலத்தால் ‘லிங’ முதலியவற்றுக்கு கார்யவிசேஷபரத்வஸித்தி என்று ‘லிங’ முதலியது கார்யமாத்ரபரமாக ஆகும். ஆகையால் லிங்முதலியவைகள் அபூர்வகார்யத்திலேயே முக்ய வ்ருத்தமாதலால் க்ரியாகார்யம் அமுக்யமானதுபற்றி காரகபதங்களுக்கும் க்ரியாகார்யாந்வித பரத்வம் லாக்ஷணிகமென்றே ஒப்புக்கொள்ளத்தக்கது. காரகபதங்களுக்கு அந்வயாம்சத்தில் லக்ஷணை எல்லாஇடத்திலுமில்லை என்று கூறப்படுமேயானால் ஸமாநாதிகரணவாக்யத்திலும் பதங்களுக்கு ப்ராதிபதிகாம்சத்திலேயே லக்ஷணை, ஸமாநவிபக்தியிலில்லை என்பது துல்யம்.

ஸர்வபதலக்ஷணாநுபபத்திபரிஹாரத்தை உபஸம்ஹரிக்கிறார்— அத: என்று. அத: எல்லாபதங்களுக்கும் லக்ஷணை கல்பிப்பது உபபத்திஸித்தமாதலாலும், லௌகிகர்களாலும் பரீக்ஷகர்களாலும் அங்கீகரிக்கப்பட்டிருப்பதாலும் என்று அர்த்தம். யதப்யாஹு: என்று தொடங்கி சாஸ்திரத்தினால் செய்யப்பட்டிருக்கிற தமக்கு அபிமதமான அர்த்தத்தின் ஸித்தியை உபஸம்ஹரிக்கிறார். அத: இதமேவ என்று. அத: - வஸ்து நிர்விசேஷமென்பதிலும்; அதேபரமார்த்தம், அதைத்தவிர்ந்தமற்றதெல்லாம் மித்யை என்பதிலும்; அந்த பேதம் தோஷத்தால் உண்டுபண்ணப் பட்டிருக்கிறது, தோஷமும் ஸத்தென்றாவது அஸத்தென்றாவது நிர்வசநம் செய்யத்தகாதது ஜ்ஞாநமாத்ரத்தினால்

ஃ ஸாஸ்நை—பசுக்களின் கழுத்துக்குக்கீழ்பக்கத்தில் தொங்கும் சதை.
* வண்ட:—ஒரு கொம்பு ஒடிந்தமாடு.
¶ லாக்ஷணிகம்—லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தத்தை போதிக்கிறபதம்.

*நிவர்த்திக்கத்தக்கது என்கிறவிஷயத்திலும்; சொல்லப்பட்டிருக்கிற உபபத்தியுடன் கூடிய சுருதிவாக்யங்களால் என்று அர்த்தம்.* **இதமேவார்த்தஜாதம்** — *முன்சொல்லப்பட்டதாகவே இருக்கிற அர்த்தஸமூஹமே ஒழிய ஸகுண வஸ்து முதலியதல்ல.* **ப்ரதிபாதயந்தோ வேதாந்தா ப்ரமாணம்** *என்று. வாக்யார்த்தங்களுக்கு கால்பனிகார்த்தத்தில் நோக்குண்டாய் தத்வத்தை உணர்த்துந்தன்மையில்லாமையால், கூறப்பட்டுள்ள அர்த்தத்தையே விஷயமாகக்கொண்டிருக்கிற வாக்யஸமூஹம் தத்வத்தில் ப்ரமாணமென்று அர்த்தம்.*

𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑍇 𑌚 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌬𑌲𑍀𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌸𑌤𑌿 𑌚 𑌵𑌿𑌰𑍋𑌧𑍇 𑌬𑌲𑍀𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 । 𑌵𑌿𑌰𑍋𑌧 𑌏𑌵 𑌨 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇, 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 । 𑌨𑌨𑍁 𑌚 “𑌘𑌟𑍋𑌽𑌸𑍍𑌤𑌿, 𑌪𑌟𑍋𑌽𑌸𑍍𑌤𑌿” 𑌇𑌤𑌿 𑌨𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌷𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌕𑌥𑌮𑌿𑌵 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑍀𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌿𑌶𑍇𑌷𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌭𑌾𑌵𑍇 𑌸𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌾𑌮𑍇𑌕𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌧𑌾𑌰𑌾𑌵𑌾𑌹𑌿𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌦𑍇𑌕𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌤𑍈𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌸𑌤𑍍𑌯𑌮𑍍; 𑌤𑌦𑍇𑌵𑌾𑌤𑍍𑌰 𑌵𑌿𑌵𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑌥𑌮𑍍? 𑌘𑌟𑍋𑌽𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑍍𑌭𑍇𑌦𑌶𑍍𑌚 𑌵𑍍𑌯𑌵𑌹𑍍𑌰𑌿𑌯𑍇𑌤𑍇; 𑌨 𑌚𑍋𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿, 𑌤𑌯𑍋𑌰𑍍𑌭𑌿𑌨𑍍𑌨𑌕𑌾𑌲𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌚𑍈𑌕𑌕𑍍𑌷𑌣𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌵𑌾 𑌭𑍇𑌦𑍋 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌵𑍇𑌚𑌨𑍀𑌯𑌮𑍍 । 𑌭𑍇𑌦𑌗𑍍𑌰𑌹𑌣𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌗𑍍𑌰𑌹𑌣𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌸𑍍𑌮𑌰𑌣𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌮𑌵𑌶𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌣𑍀𑌯𑌮𑌿𑌤𑌿 𑌨 𑌭𑍇𑌦𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑍋 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍂𑌲 𑌏𑌵 𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 ॥

**ஸ்ரீபாஷ்யம்.—**

ப்ரத்யக்ஷம் முதலியவற்றோடு விரோதம்வரின், சாஸ்திரத்திற்கு ப்ராபல்யம் உரைக்கப்பட்டது. விரோதம் வந்தாலன்றோ ப்ராபல்யமும் சொல்லத்தக்கது. விரோதமே காணப்படவில்லை—ப்ரத்யக்ஷத்திற்கு நிர்விசேஷ ஸந்மாத்ர ப்ரஹ்மத்தை க்ரஹிக்கும் தன்மை வாய்ந்திருப்பதால். அய்யா ! "குடம் உளது, வஸ்திரம் உளது" என்று நாநாவித ஆகாரங்களுள்ள வஸ்துக்களை விஷயமாகக்கொண்ட ப்ரத்யக்ஷமானது எவ்வாறு ஸந்மாத்ர க்ராஹி என்று சொல்லப்படுகிறது ? பேதவஸ்துக்களின் க்ரஹணமில்லாவிடில் எல்லாஜ்ஞானங்களுக்கும் விஷயம் ஒன்றாக இருப்பதால் *தாராவாஹிக

* *தாராவாஹிக விஜ்ஞானம்—வேறு வஸ்துக்களை விஷயீகரிக்காமல் தொடர்ச்சியாகவந்துகொண்டிருக்கிற ஒரே வஸ்து விஷயகமான ஜ்ஞானம்.*

விஜ்ஞானத்தைப்போல ஒரே வ்யவஹாரத்திற்கு ஹேதுத்வமே இருக்கவேண்டியதாக ஆகும். ஸரிதான்— அப்படியே இங்கு விவேசநம செய்யப்படுகிறது. எவ்வாறு? "குடம் உளது" என்கிற இடத்தில் அஸ்தித்வமும் (இருப்பும்) அதின் வேற்றுமையும் வ்யவஹரிக்கப்படுகிறது? இரண்டு வ்யவஹாரங்களுக்கும் ப்ரத்யக்ஷ மூலத்வம் ஸம்பவியாது— அவையிரண்டும் பின்னகாலங்களில் உண்டாகிறஜ்ஞானங்களுக்கு பலநைக விருப்பதால். ஏனெனில்— ப்ரத்யக்ஷஜ்ஞானமானது ஒரு க்ஷணமே நிலைபெற்றிருப்பதால். அந்த (ஏகக்ஷணவர்த்திஜ்ஞானத்தில்) ஸ்வரூபமோ அல்லது பேதமோ ப்ரத்யக்ஷத்துக்கு விஷயமென்று பகுத்தறியத்தக்கது. பேதக்ரஹணமானது ஸ்வரூப க்ரஹணத்தையும் அதனுடன் அதின் ப்ரதியோகி ஸ்மரணத்தையும் அபேக்ஷித்திருப்பதனாலேயே ஸ்வரூபவிஷயத்வம் அவச்யம் ஆச்ரயிக்கத்தக்கதாதலால், பேதம் ப்ரத்யக்ஷத்தால் க்ரஹிக்கப்படுகிறதில்லை. ஆகையால் பேதவ்யவஹாரம் ப்ராந்தி மூலமே.

---

ச்ருதப்ரகாசிகை:—

முன்பு, ப்ரத்யக்ஷத்தோடு விரோதம்வரின் சாஸ்திரத்திற்கு ப்ராபல்யமும் சாஸ்திரத்திலும் பேதாவலம்பிகளாக விருக்கும் வசனங்களுக்கு பாத்யத்வமும் கூறப்பட்டது. இதற்குமேல். ப்ரத்யக்ஷவிரோதமில்லை என்பதை உபபாதிப்பதற்குத்தொடங்குகிறார்— ப்ரத்யக்ஷாதி என்று. சாஸ்திரத்திற்கும் ப்ரத்யக்ஷத்திற்கும் விரோதம்வரின், சாஸ்திரத்திற்கு ப்ராபல்யத்தை ப்ரதிபாதிக்கிற க்ரந்தத்தோடு இனிகூறப்போகிற அர்த்தத்திற்கு ஸங்கதி என்று கருத்து சகாரம் ஸமுச்சயத்தில். அவிரோதபக்ஷம் புத்தியில் நிலைபெற்றிருப்பதால் அதற்கும் $ அப்யுபேத்யவாதம் செய்து சொல்லப்பட்டதற்கும் ஸமுச்சயம். விரோதத்தை ஒப்புக்கொண்டபோதிலுமென்று அர்த்தம். ஸதி ச என்று. இங்கு 'ச' சப்தம் 'ஹி' சப்தத்தின் அர்த்தமுள்ளது. அவிரோதத்தை ப்ரதிஜ்ஞை செய்கிறார்— விரோத ஏவநத்ருச்யதே என்று. ஹேதுவைச்சொல்லுகிறார்— நிர்விசேஷ என்று ¶விஷய விஷயிபாவரூபமான பேதவ்யாவ்ருத்தியின் பொருட்டு 'ஸந்மாத்ர ப்ரஹ்ம' என்று கூறப்பட்டது. ப்ரதீதிவிரோதத்தால் சோதநம் செய்கிறார்— நநு ச என்று. விரோதத்தை உபபாதிக்கிறார்—கடோஸ்தி இது முதலியதால். தனித்து அஸ்தி என்று மாத்திரம் ஜ்ஞாநம் வருகிறதில்லையன்றோ; பின்னையோ "குடம் உளது, வஸ்திரம் உளது" என்றேயல்லவோ ப்ரமிதி உண்டாகிறதென்று அர்த்தம். ப்ரதீதிக்கு ப்ராந்திரூபத்வம் ஸம்பவிக்கக்கூடியதாதலால், அதைவிலக்குவதற்காக வ்யவஹாரவிரோதத்தைச்சொல்லுகிறார்— விலக்ஷண என்று. பரிஹரிக்கிறார்-ஸத்யம் என்று. ஸத்யம்என்றுஅர்யாங்கீகாரத்தால்குடம் உளதுவஸ்திரம் உளது என்கிற இடங்களில், அஸ்தித்வவ்யவஹாரம் ஏகரூபமாக இருப்பதால் அவ்வளவு மாத்திரத்திலும் பேதா ‡ வபாஸமாத்திரத்திலும் அங்கீகாரமும், பேதவ்யவஹாரம் ப்ரத்யக்ஷமூலம்

---

$ 'அப்யுபேத்யவாதம்—எதிரிபக்ஷத்தை ஒப்புக்கொண்டும் ஸமாதானம் சொல்லுதல்.

¶ விஷயவிஷயிபாவரூபமானபேதம்—ஸத்வேறு, ஞானம்வேறு, ஸத் ஞானத்துக்கு விஷயம் என்று சொல்லக்கூடிய பேதம். ‡ அவபாஸம்—தோற்றம்.

என்பதிலும் பேதாவபாஸம் ப்ரத்யக்ஷம் என்பதிலும் அநங்கீகாரமும் ஸூசிப்பிக்கப் படுகிறது. தத்யைவ— எவ்வாறு ஸந்மாத்திரத்திற்கே ப்ரத்யக்ஷத்வமும் ஏகவ்ய வஹாரஹேதுத்வமும் உண்டாகுமோ அவ்வாறே என்று அர்த்தம். அதர - கடாதிவிஷய வ்யவஹாரம் ஸ்வரூபவிஷய வ்யவஹாரம் இவைகளின் கலப்பில். விவிச்யதே-எவ்வாறு "இதுவெள்ளி" எனகிற வ்யவஹாரத்தில் "இதம்" வ்யவஹாரத்திற்கு ப்ரத்யக்ஷமூலத்வமும், ரஜதவ்யவஹாரத்திற்கு ப்ராந்திமூலத்வமும் ஸம்பவிக்குமோ அவ்வாறு விவேசனஞ் செய்யப்படுகிறதென்று அர்த்தம். அதில இதமம்ச ரஜதாம்ச வ்யவஹாரங்களிரண்டுக்கும் அபாதிதத்வபாதிதத்வங்களால் விவேகம் உண்டாகிறது இந்த விடத்தில் ஸ்வரூபவிஷய பேதவிஷய வ்யவஹாரங்கள் இரண்டுக்கும் அபாதிதத்வம் விசேஷமின்றி இருக்க, எவ்வாறு விவேகம் உண்டாகிறது என்கிற அபிப்பிராயத்தால் கூறுகிறார்— கதம் என்று. யௌக்திகவ்யாயமிருக்கிற தென்கிற அபிப்பிராயத்தால் சொல்லுகிறார்— கடோஸ்தி என்று.

அஸ்தித்வம், பேதம் இரண்டும் ஒரு பதார்த்தமா ? அல்லது இரண்டா ? இரண்டாகில், அந்த இரண்டு வ்யவஹாரங்களும் ப்ரத்யக்ஷமூலமா ? அல்லது இரண்டில் ஒன்று மட்டுமா ? இரண்டுக்கும ப்ரத்யக்ஷமூலத்வம சொல்லப்படுமேயாகில், ப்ரத்யக்ஷமானது ஒரே ஸமயத்தில் இரண்டையும க்ரஹிக்கிறதா? அல்லது க்ரமமாக ஒன்றன் பின் ஒன்றாக க்ரஹிக்கிறதா? என்கிற விகல்பங்களைமனதில் வைத்துக்கொண்டு அஸ்தித்வ லக்ஷணமான ஸ்வரூபம் அதின்பேதம் இவையிரண்டுக்கும ஐக்யம் ஸம்பவியாது, பேதக்ரஹணமானது ஸ்வரூபக்ரஹணத்தையும் ப்ரதியோகிஸ்மரணத்தையும் அபேக்ஷித்திருப்பதாலும்,ஸந்மாத்ரக்ரஹணமானது அதை அபேக்ஷியாமலிருப்பதாலும் என்று அபிப்பிராயங்கொண்டு கூறுகிறார்— அஸ்தித்வம்தத்பேதஸ்ச என்று. பிந்ந: என்கிற வ்யவஹாரத்தில் போல கட: என்கிற அஸாதாரணவ்யவஹாரத்திலும் கடம், படத்தைக்காட்டிலும் வேறுபட்டதென்கிற ப்ரதீதியில் ப்ரதியோகியின் அபேக்ஷையிருப்பதால், கடவ்யவஹாரமே பேதவ்யவஹாரமென்று உரைக்கப்படுகிறது. இரண்டு என்கிறபக்ஷத்திலும் இரண்டுக்கும்ப்ரத்யக்ஷமூலத்வமில்லை என்று சொல்லுகிறார்— நச த்வயோரபி என்று. த்வயோரபி வ்யவஹாரயோ:— ஸ்வரூபவிஷய, பேதவிஷய வ்யவஹாரங்கள் இரண்டுக்கும். ப்ரத்யக்ஷமானது ஒரே ஸமயத்திலா ? அல்லது க்ரமமாக ஒன்றின்பின் ஒன்றாக மூலமாக ஆகிறதா? என்கிற விகல்பத்தை கருதி, ஒரே ஸமயத்தில் என்கிற பக்ஷத்தை தூஷிக்கிறார்— தயோ: என்று. ப்ரதியோகியின் அபேக்ஷை, அநபேக்ஷை என்கிற வைஷம்யத்தாலென்று கருத்து. க்ரமபக்ஷத்தை நிரஸிக்கிறார்—ப்ரத்யக்ஷஜ்ஞாநஸ்ய ,என்று. சகாரம் ஸமுச்சயத்தில். இவ்வண்ணம் ஒரே ஸமயத்தாலும் க்ரமத்தாலும் இரண்டு வ்யவஹாரங்களுக்கும் ப்ரத்யக்ஷமூலத்வம் ஒவ்வாததால், அவ்விரண்டில் ஒன்றுக்கு ப்ரத்யக்ஷவிஷயத்வத்தைச் சொல்லுகிறார்— தத்ர என்று. பேதம் ப்ரத்யக்ஷ விஷயமாக ஆகட்டும? எனறு கேட்கில் சொல்லுகிறார்— பேத என்று. அஸ்தித்வம் பேதம் இரண்டுக்கும் ஐக்யம் ஸம்பவியாது என்பதிலும், அந்த வ்யவஹாரங்கள் இரண்டும் பிந்நகாலஜ்ஞானபலன்கள் என்பதிலும், எது ஹேதுவாகக் கூறப்பட்டதோ அதிலேயே என்பது ஏவகாராபிப்ராயம். ப்ரத்யக்ஷம், ஸ்வரூபமாத்ர விஷயமாகில், எவ்வாறு பேதவ்யவஹாரத்திற்கு ஸம்பவம் ? என்று ஹோஷ்யம்வரின் சொல்லுகிறார்—அதோப்ராந்தி என்று அவ்வண்ணமே ஸமவித்ஸித்தி என்கிற க்ரந்தத்

யௌகபத்யம்—ஒரே காலத்தில்.

தில் “யௌகபத்யக்ரமாயோகாத் வ்யவச்சேத விதாநயோ:। ஐக்யாயோகாச்ச பேதோ ந ப்ரத்யக்ஷ இதி யோ ப்ரம: ॥” (பேதக்ரஹணம், ஸ்வரூபக்ரஹணம் இரண்டும் ஒரே ஸமயத்திலாவது, பிந்நகாலத்திலாவது ஸம்பவியாததாலும் இரண்டுக்கும் ஐக்யமும் பொருந்தாததாலும், பேதம் ப்ரத்யக்ஷமன்று என்கிற யாதொரு ப்ரமமுண்டோ அந்தப்ரமம்) என்று சொல்லியிருக்கிறது. வ்யவச்சேத:— பேதக்ரஹணம். விதாநம் ஸ்வரூபக்ரஹணம் இவ்வண்ணம் பேதத்தில் ப்ரமாணநுபபத்தி உரைக்கப்பட்டது.

---

𑌕𑌿𑌞𑍍𑌚, 𑌭𑍇𑌦𑍋 𑌨𑌾𑌮 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑍋 𑌨𑍍𑌯𑌾𑌯𑌵𑌿𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌨𑌿𑌰𑍂𑌪𑌯𑌿𑌤𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 । 𑌭𑍇𑌦𑌸𑍍𑌤𑌾𑌵𑌤𑍍 𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂, 𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌗𑍃𑌹𑍀𑌤𑍇 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌵𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃 । 𑌨 𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌗𑍃𑌹𑍀𑌤𑍇𑌽𑌪𑌿 𑌭𑌿𑌨𑍍𑌨 𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌸𑍍𑌮𑌰𑌣𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌤𑌤𑍍𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌭𑌾𑌵𑍇𑌨 𑌤𑌦𑌾𑌨𑍀𑌮𑍇𑌵 𑌨 𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 — 𑌇𑌤𑌿 । 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑌭𑍇𑌦𑌵𑌾𑌦𑌿𑌨𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌚 𑌨𑍋𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇, 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌭𑍇𑌦𑌯𑍋𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌤𑍍 । 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍋 𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌃, 𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍋𑌽𑌪𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । “𑌹𑌸𑍍𑌤𑌃 𑌕𑌰𑌃” 𑌇𑌤𑌿𑌵𑌤𑍍 “𑌘𑌟𑌃 𑌕𑍁𑌮𑍍𑌭𑌃” 𑌇𑌤𑌿 𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌨𑌾𑌪𑌿 𑌧𑌰𑍍𑌮𑌃; 𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑍇 𑌹𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌦𑍍𑌭𑍇𑌦𑍋𑌽𑌵𑌶𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌣𑍀𑌯𑌃 । 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌭𑍇𑌦𑍇 𑌚 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌭𑍇𑌦𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑍀𑌤𑍍𑌯𑌨𑌵𑌸𑍍𑌥𑌾 । 𑌕𑌿𑌞𑍍𑌚, 𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌵𑌸𑍍𑌤𑍁𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌸𑌤𑌿 𑌭𑍇𑌦𑌗𑍍𑌰𑌹𑌣𑌂, 𑌭𑍇𑌦𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌸𑌤𑌿 𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌵𑌸𑍍𑌤𑍁𑌗𑍍𑌰𑌹𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌣𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌭𑍇𑌦𑌸𑍍𑌯 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍂𑌪𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑍍 ॥

---

**ஸ்ரீபாஷ்யம்.—**

மேலும், பேதமென்கிற ஒரு பதார்த்தமானது நியாயத்தை அறிந்தவர்களால் நிரூபிப்பதற்கு சக்யமாகாது. பேதமானது வஸ்துஸ்வரூபமென்றால் வஸ்து ஸ்வரூபம் க்ரஹிக்கப்பட்டால் ஸ்வரூபவ்யவஹாரம்போல், எல்லாவற்றைக்காட்டிலும் பேதமென்கிற வ்யவஹாரம் ப்ரஸங்கிக்கவேண்டியதாகும். ஸ்வரூபம் க்ரஹிக்கப்பட்டிருந்தபோதிலும், “பின்ன:” என்கிற வ்யவஹாரம், எதைக்காட்டிலும் வேறுபட்டது என்று ப்ரதியோகியின் ஸ்மரணத்தை அபேக்ஷித்திருப்பதால் அந்தப்ரதியோகிபதார்த்தத்தின் ஸ்மரணமில்லாமையால் அப்பொழுதே பேதவ்யவஹாரமுண்டாகிறதில்லை என்று சொல்லத்தக்கதல்ல; (ஏனெனில்) ஸ்வரூபமாத்ரத்தை பேதமாகச்சொல்லுமவனுக்கு ப்ரதியோகியின் அபேக்ஷையானது உத்ப்ரேக்ஷிக்கத்தக்கதன்று—

ஸ்வரூபம்,பேதம் இரண்டுக்கும் ஸ்வரூபத்வம் விசேஷமின்றியிருப்பதால் எவ்வாறு ஸ்வரூப வ்யவஹாரம ப்ரதியோகியை அபேக்ஷிக்கிறதில்லையோ, பேத வ்யவஹாரமும் அப்படியேயாகும். ஹஸ்த: கர: என்பதுபோல கட: பின்ன: என்கிற இரண்டும் பர்யாயங்களாகவுமாக வேண்டிவரும். அந்த பேதம்தர்ம முமன்று. தர்மமாக ஒப்புக்கொண்டால் அதற்கு ஸ்வரூபத்தைக்காட்டிலும். பேதம் (வேறுபாடு) அவச்யம் ஒப்புக்கொள்ளத்தக்கது. அப்படியில்லாவிட்டால் ஸ்வரூபமாகவே ஆகும். அந்த தர்மத்திற்கு ஸ்வரூபத்தையபேக்ஷித்து பேதம் ஒப்புக்கொள்ளபபட்டால், அதற்கும் ஸ்வரூபத்துக்குமுள்ள பேதம், அதினுடைய தர்மம் அதற்கும் ஸ்வரூபக்துக்குமுள்ள பேதம், அதினுடைய தர்மமென்று அநவஸ்தை ஏற்படும். மேலும் ஜாத்யாதி விசிஷ்ட வஸ்துக்ரஹணம் வரின்,பேதகரஹணம்; பேதக்ரஹணம்வரின் ஜாத்யாதி விசிஷ்ட வஸ்துக்ரஹணம் என்று அந்யோந்யாச்ரயணதோஷம ஸம்பவிக்கும். ஆதலால் பேதம் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாதாதலால் ப்ரத்யக்ஷம் ஸந்மாத்ரத்திற்கே ப்ரகாசகம்

ச்ருதப்ரகாசிகை—

பிறகு, ப்ரமேயாநுபபத்தியைக்கூறுகிறார்—கிஞ்ச என்று. கிஞ்ச இது முதலியதால் ப்ரமாணத்துக்கு அநுக்ராஹகமான தாககமில்லாமையும் உபபாதிக்கப்பட்டதாக ஆகிறது. துர்நிரூபத்வத்தை ப்ரதிஜ்ஞை டண்ணுகிறார்— பேதோநாம என்று. விகல்பத்தை ஸஹியாமையால் என்று கருத்து. நீயாயவித்பி ஆபாதப்ரதீதியினால் த்ருப்தியுள்ளவர்களாலல்ல வென்று கருதது. ஸ்வரூபமா, தர்மமா என்கிற விகல்பத்தை மனதில் வைத்துக்கொண்டு ஸ்வரூபபக்ஷத்தை தூஷிக்கிறார்— பேதஸ்தாவத் என்று எதனாலெனில் சொல்லுகிறார்— வஸ்துஸ்வரூபமே என்று. ஸ்வரூபவ்யவஹாரவத்ஸர்வஸ்மாத்பேதவ்யவஹாரப்ரஸக்தே என்று. ப்ரதியோகியை அபேக்ஷியாத பேதவ்யவஹாரப்ரஸக்தியினால் என்று அர்த்தம் ஸ்வரூபக்ரஹணமானது சப்தவ்யுத்பத்தியையும் வ்யுத்பக்ஷசப்த ஸ்மரணத்தையும் அபேக்ஷியாமலிருந்தபோதிலும், பிந்ந: என்கிற வ்யவஹாரம்மாத்திரம் எவ்வாறு அந்த சப்த ஸ்மரணஸாபேக்ஷமாக ஆகிறதோ, அவ்வாறே ப்ரதியோகி ஸ்மரணமும் பேதவ்யவஹாரஸாமகரியிலுள்ளடங்கியது. ஆதலால் அந்த ப்ரதியோகியின் ஸ்மரணமில்லாமையால் அப்பொழுதே பேதவ்யவஹாரமில்லையே யொழிய பேதக்ரஹணமில்லாமையாலல்ல வென்கிற பரமதத்தை ஆசங்கித்துச் சொல்லுகிறார்— நச என்று. எதனாலென்று கேட்கில் சொல்லுகிறார்—ஸ்வரூப என்று. எவ்வாறு ஸ்வரூபக்ரஹணத்தில் ப்ரதியோகியின் அபேக்ஷை இல்லையோ, அவ்வாறே பேதவ்யவஹாரத்திலும் என்பது சப்தார்த்தம் 'ஹி' சப்தம் ஹேதுவில்-ஸ்வரூபக்ரஹணத்திற்போல பேதவ்யவஹாரத்தில் ப்ரதியோகியின் அபேக்ஷை ஸம்பவியாமையாவென்று அர்த்தம் அஸம்பவம் எதனாலெனில் கூறுகிறார்—ஸ்வரூப என்று. ஸ்வரூபம் பேதம் இரண்டுக்கும் ஸ்வரூபத்வம் விசேஷமின்றி இருக்கட்டும். அதனால் ப்ரதியோகிஸாபேக்ஷபேதவ்யவஹாரப்ரஸக்திக்கென்ன ப்ரயோஜனமென்கிற சங்கைவர, அதை விவரிக்கிறார்—யதா என்று. ஸ்வரூபபக்ஷத்தில் வேறுதூஷணத்தையும் சொல்லுகிறார்— ஹஸ்த:, கர: என்று. பர்யாயமாக இருக்குமேயாகில் சேர்ந்து ப்ரயோகமானது விடத்தக்கதாக ஆகும் என்று கருத்து. ஸ்வரூபபக்ஷத்தில், ம்ருஷாவாதிகளால் தூஷணாந்த

ரங்களும் சொல்லப்பட்டன. உதாஹரிக்கப்பட்ட தூஷணபரிஹாரத்தினால் அவைகளுக்கு பதில் சொல்லப்பட்டவைகளாக ஆகின்றனவென்று பாஷ்யத்தில் கண்டோக்தங்களாக இல்லை. அவைகள் கூறப்படுகின்றன—ஸ்வரூபபக்ஷத்தில். பிந்ந: என்று வ்யவஹரிப்பது யுக்தமன்று. பேதமேயாகவுள்ளதன்றோ பின்னம் இந்த வ்யவஹாரம் ஸித்திப்பதின்பொருட்டு ஸ்வரூபபூதமான பேதாந்தரம் ஸ்வீகரிக்கப்படுமேயானால் அவ்விடத்திலும் பிந்ந: என்கிற வ்யவஹாரம் அயுக்தமாதலால் அதற்கும் ஸ்வரூபபூதமான வேறு பேதம் ஆச்ரயிக்கத்தக்கதென்று அநவஸ்தைவரும். மேலும் சப்தாந்தரத்தால் தர்மமென்று சொல்லப்பட்டதாக ஆகும். அப்பொழுது தர்மபக்ஷதூஷணங்கள் நாலா பக்கங்களினின்றும் வந்து விழும். மேலும் பேதம் அநுவ்ருத்தமா? அல்லது வ்யாவ்ருத்தமா? வ்யாவ்ருத்தமென்று சொல்லப்படுமேயாகில், அது ஸ்வரூபமா? தர்மமா? முதல் பக்ஷத்தில் கடத்துக்குபேதவ்யவஹாரம் செய்யப்பட்டிருக்கையில்படவிஷயபேதவ்யவஹாரம் வாராமல் போகும்—வ்யாவ்ருத்தமாக விருப்பதால். தர்மமாகில் முற்கூறப்பட்டதோஷமும் தர்மத்வப்ரயுக்த தூஷணங்களும் வரும். அநுவ்ருத்தமானால் அதுவும் ஸ்வரூபமாகயிருக்குமேயாகில் சப்தாந்தரத்தால் ஸந்மாத்ரம் அங்கீகரிக்கப்பட்டதாகவாகும் தர்மபக்ஷத்தில் முன்போல்; மேலும் 'பிதி' தாதுவுக்கு ¶ விதாரணம் அர்த்தம். ஒரு வஸ்துவுக்கு பேதமாவது இரண்டாக ஆதல் அதன் கண்டத்துக்கும் அவ்வாறாக ஆகும். ஆதலால் வஸ்துவினிடத்தில் பேதத்தை ஒப்புக்கொண்டால் விதாரணபரம்பரையால் நாசமே ஸம்பவிக்கும் என்று இது முதலியவைகள். பிறகு தர்மபக்ஷத்தை தூஷிக்கிறார்—நாபி என்று எதனால் என்றால் சொல்லுகிறார்—தர்மத்வே என்று. ஸ்வரூபத்தைவிட தர்மத்திற்கு பேதமில்லை என்றால் அநிஷ்டத்தைக்கூறுகிறார். அந்யதா என்று. ஸ்வரூபம் தர்மம் இரண்டுக்கும் பேதம் இருக்கட்டும். அதனால் என்னெனில் சொல்லுகிறார்—பேதே வ என்று. தஸ்யாபிபேதஸ்தத்தர்ம:. தஸ்ய - தர்மமாக ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிற பேதத்திற்கு, ஸ்வரூபத்தை அபேக்ஷித்து எந்தபேதமுண்டோ அதுவும் அதற்கு தர்மமாகஸ்வீகரிக்கப்பட்டிருக்கிற பேதத்திற்கு தர்மம். அன்றிக்கே, ஸ்வரூபத்தைக்காட்டிலும் தர்மத்திற்கு எந்தபேதம் ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறதோ அதற்கு தர்மிபூதமான தர்மத்தைக்காட்டிலும் பேதங்கூட தர்மம். அப்படி இல்லாவிட்டால் ஸ்வரூபமேயாகும். அப்படியாகில் ஸ்வரூபபக்ஷத்திலுள்ள தூஷணங்கள் வரும். அந்த பேதமும் தர்மம்; அதற்கும் ஸ்ரூபத்தைக்காட்டிலும் பேதம் என்று அநவஸ்தையென்று பொருள். இவ்வாறாக தர்மபக்ஷத்தில் அநவஸ்தையைச்சொல்லி அந்யோந்யாச்ரயணத்தைச் சொல்லுகிறார்—கிஞ்ச இது முதலியதால். அது மூன்றுவிதம் தர்மியும் ப்ரதியோகியும் க்ரஹிக்கப்பட்டால் பேதக்ரஹணம் - பேதம் க்ரஹிக்கப்பட்டால் தர்மிப்ரதியோகி க்ரஹணம் என்று; தர்மமும் தர்மியும் க்ரஹிக்கப்பட்டால் பேதக்ரஹணம்—பேதம் க்ரஹிக்கப்பட்டால் தர்மதர்மிக்ரஹணமென்று; அயம்கட: என்கிற விடத்தில் இதம் சப்தத்தால் நிர்தேசிக்கப்பட்டிருக்கிற வஸ்துவினுடைய கடஜாதீயத்வ விசிஷ்ட க்ரஹணமானது, படஜாதீயத்தைக்காட்டிலும் பேதக்ரஹணத்தைமுன்னிட்டுக்கொண்டிருக்கிறது. அங்ஙனமில்லாவிடில் கடஜாதீயத்வத்திற்கு விரோதம் வருவதால். படத்தைக்காட்டிலும் பேதக்ரஹணமானது. இதம் சப்த நிர்திஷ்டத்திற்கு கடஜாதீயத்வ க்ரஹணத்தை முன்னிட்டு வருகிறது. அப்படியில்லாவிட்டால் படத்வம் ப்ரஸங்கிக்கவேண்டியதால் என்று. இவ்வண்ணம் தர்மதர்மிக்ரஹணத்திலும், தர்மியாகவும் ப்ரதியோகியாகவும் க்ரஹிக்கப்படுகிற வஸ்து க்ரஹணத்திலும், அந்தந்த வகுப்பைச்

¶ விதாரணம்—பிளத்தல்.

சாஸ்த்ர வஸ்து க்ரஹணத்திலும் மூன்று விதமாக அந்யோந்யாச்ரயணம் கூறப்பட்டது.
பாதகப்ரமாணமில்லாமையை முடிக்கிறார்.— அத: என்று. அத ஸ்வரூபதர்ம பக்ஷங்களில் சொல்லப்பட்ட தூஷணங்களால் நிரூபிக்கமுடியாமையாலென்று அர்த்தம். இவ்வளவு பாதகப்ரமாணங்களின் இன்மை உரைக்கப்பட்டது. ப்ரம்யாநுபபத்தி ரூபமான தர்க்கமும் அதற்கு உபேக்ஷிதம். பாதகர் விஷயமாகவோ, அர்த்தவ்யவஹார விஷயமாகவோ, உள்ள நிரூபணத்திலுள்ள விஷய விசேஷத்தில் ப்ரமாண § வ்யவஸ்தாபக மன்று தர்க்கம் கருத்தாம்.

கிஞ்ச, "க⁴டோ(அ)ஸ்தி, படோ(அ)ஸ்தி, க⁴டோ(அ)நுபூ⁴யதே, படோ(அ)நுபூ⁴யதே" இதி ஸர்வவ்யவஹாரேஷு ஸத்தாநுபூ⁴திஸம்ப³ந்த⁴ ஏவ த்³ருஶ்யதே । அத்ர ஸர்வாஸாம் ப்ரதிபத்தீநாம் ஸந்மாத்ராநுவர்த்தநம் த்³ருஶ்யத இதி தத்³ஏவ பரமார்த²:, விஶேஷாஸ்து வ்யாவர்த்தமாநதயா அபரமார்தா²:, ரஜ்ஜுஸர்பாதி³வத் । யதா² ரஜ்ஜுரவிஶேஷாநுவர்த்தமாநா பரமார்த²வஸ்து; வ்யாவர்த்தமாநாஸ்ஸர்பபூ⁴ச்சி²த்³ரஜலதா⁴ராத³யோ(அ)பரமார்தா²: । நநு ரஜ்ஜுஸர்பாதௌ³ "ரஜ்ஜுரியம் ந ஸர்ப:" இத்யாதி³ ரஜ்ஜ்வாத்³யபா³தி⁴தஜ்ஞாநேந பா³தி⁴தத்வாத் ஸர்பாதே³ரபரமார்த²த்வம்; ந வ்யாவர்த்தமாநத்வாத் । ரஜ்ஜ்வாதே³ரபி பரமார்த²த்வம் நாநுவர்த்தமாநதயா, கிந்து அபா³தி⁴தத்வாத் । அத்ர து க⁴டாதீ³நாம் அபா³தி⁴தாநாம் கத²மபரமார்த²த்வம்? । உச்யதே — க⁴டாதே³ர் த்³ருஷ்டா வ்யாவ்ருத்திஸ்ஸா கிம் பா³தே⁴தி விவேசநீயம் । கிம் க⁴டோ(அ)ஸ்தீத்யத்ர படாத்³யபா⁴வ:? । ஸித்³த⁴ம் தர்ஹி க⁴டோ(அ)ஸ்தீத்யநேந படாதீ³நாம் பா³தி⁴தத்வம் । அதோ பா³த⁴கஸம்ப³ந்தா⁴ விஷயநிவ்ருத்திர்வ்யாவ்ருத்தி: । ஸா வ்யாவர்த்தமாநாநாமபரமார்த²த்வம் ஸாத⁴யதி । ரஜ்ஜ்வாதே³ஸ்து ஸர்வத்ராபா³தி⁴தத்வமநுவர்த்ததே । தஸ்மாத் ஸந்மாத்ராதிரேகி ஸர்வமபரமார்த²ம் । ப்ரயோக³ஶ்ச ப⁴வதி — ஸத் பரமார்த²:, அநுவர்த்தமாநத்வாத், ரஜ்ஜுஸர்பாதௌ³ ரஜ்ஜ்வாதி³வத் । க⁴டாத³யோ(அ)பரமார்தா²:, வ்யாவர்த்தமாநத்வாத், ரஜ்ஜ்வாத்³யதி⁴ஷ்டா²ந ஸர்பாதி³வத் — இதி । ஏவம் ஸத்யநுவர்த்தமாநா(அ)நுபூ⁴திரேவ பரமார்த²:, ஶேஷம் ஸர்வம் ॥

ஸ்ரீபாஷ்யம்.—

மேலும் 'குடமிருக்கிறது, படமிருக்கிறது; குடம் அநுபவிக்கப்படுகிறது, படம் அநுபவிக்கப்படுகிறது' என்கிற வ்யவஹாரங்களில் எல்லாப்பதார்த்தங்களும்

§ வ்யவஸ்தாபகம்—நிலைநிறுத்தல்.

ஸத்தை, அநுபூதி இவைகளோடுகூடியவைகளாகவே காணப்படுகின்றன. இங்கு, எல்லாப்ரதிபத்திகளிலும் ஸந்மாத்ரம அநுவர்த்தமானமாகக் காணப்படுகிறதாதலால் அதுவே பரமார்த்தம. விசேஷங்களோ, விலகுவனவாதலால் அபரமார்த்தங்கள்— ரஜ்ஜ்வாதிகளைப்போலவும் ஸர்ப்பாதிகளைப் போலவும். ரஜ்ஜுவானது அதிஷ்டானமாக இருப்பதால், தொடர்ந்து வந்துகொண்டு பரமார்த்தமாயிருக்கிறது. வ்யாவர்த்தமானங்களான ஸர்ப்பம், பூமியின் பிளப்பு, ஜலதாரை முதலியவைகள் அபரமார்த்தங்கள். ஐயா! ரஜ்ஜுஸர்ப்பம் முதலியதில் இது ரஜ்ஜு, ஸர்ப்பமல்ல, இதுமுதலிய ரஜ்வாத்யதிஷ்டானங்களின் யாதார்த்யஜ்ஞானத்தினால் பாதிதமாதலால், ஸர்ப்பாதிகளுக்கு அபாரமார்த்யமேயொழிய வ்யாவர்தமானத்வத்தாலல்ல ரஜ்ஜ்வாதிகளுக்கும் பாரமார்த்யமானது, அநுவர்தமானத்வத்தாலல்ல. பின்னையோ, அபாதிதத்வத்தாலேதான், இவ்விடத்திலோ அபாதிதங்களான கடாதிகளுக்கு அபாரமார்த்யம் எங்ஙனம்? உத்தரம் சொல்லப்படுகிறது. கடம் முதலியவற்றில் வ்யாவ்ருத்தியானது காணப்பட்டிருக்கிறது. அது எவ்விதமான ஸ்வரூபமுள்ளதென்று விவேசநம் செய்யத்தக்கது கடோஸ்தி என்கிற விடத்தில் படாதிகளின் அபாவம் இருக்குமேயாகில், அப்பொழுது கடோஸ்தி என்கிற இந்த வ்யவஹாரத்தால் படாதிகளுக்கு பாதிதத்வம் ஸித்தம். ஆதலால் பாதத்திற்கு பலபூதையான விஷய நிவ்ருத்திதான் வ்யாவ்ருத்தி. அது வ்யாவர்த்தமானங்களுக்கு அபாரமார்த்யத்தை ஸாதிக்கிறது. ரஜ்ஜுபோல ஸந்மாத்ரம் அபாதிதமாக அநுவர்திக்கிறது ஆதலால் ஸத் ஒன்றைத்தவிர்த்து அதிகமாக இருக்கிறவை எல்லாம் அபரமார்த்தம் ℘ப்ரயோகமுமிருக்கிறது. ஸத் பரமார்த்தம், நீங்காமல் இருப்பதால் - ரஜ்ஜுஸர்ப்பாதிகளில் ரஜ்ஜு முதலியதுபோல. கடாதிகள் அபரமார்த்தங்கள், விலகுவனவாக இருப்பதால்-ரஜ்ஜ்வாதிகளையதிஷ்டானமாகவுடைய ஸர்ப்பாதிகளைப் போலவென்று-இங்ஙனம் அநுவர்த்தமானையான அநுபூதியே பரமார்த்தம், அதுவே ஸத்பதார்த்தம்.

---

ச்ருதப்ரகாசிகை:—

இதற்குமேல் பாதக ப்ரமாணத்தை உபந்யஸிக்கிறார்— கிஞ்ச என்று. அவ்விடத்தில் அநுமானத்தைச் சொல்ல விரும்பி வ்யாப்தியை சிக்ஷிக்கிறார்— கடோஸ்தி இது முதலியதால் $ வைதர்ம்யாச்ச ஸ்வப்நாதிவத்’ என்கிறவிடத்தில், ஸூத்ரகாரரேயே

---

$ வைதர்ம்யாச்சஸ்வப்நாதிவத்—ஜாக்ரிதஜ்ஞானங்களுக்குக்கூட ஸ்வப்நஜ்ஞானம் முதலியவைகளை திருஷ்டாந்தங்களாகக்கூறி நிராலம்பநத்வம் கூறியது ஸரியன்று. இவைகளுக்கு அவைகளைக்காட்டிலும் வேறுபாடு இருப்பதால்.

℘ ப்ரயோகம்—பக்ஷம் ஸாத்யம் ஹேது என்கிற மூன்று அவயவங்களோடு கூடிய அநுமானம்.

த்ருஶ்யத்வாநுமானம் நிராகரிக்கப்படப் போவதாலும், அதன் நிராஸமானது மித்யாத்வாநுமானங்களனைத்துக்கும் தூஷ்யத்வத்தைக்காட்டுவதற்காக வாதலாலும், பூர்வ பக்ஷத்தில் வ்யாவர்த்தமானத்வ ஹேது உபந்யஸிக்கப்படுகிறது. அநுவ்ருத்தத்வத்தைக்காட்டுவதற்காக கடோஸ்தியென்று கூறப்பட்டது. ஸத் அநுபூதியிரண்டுக்கும், இனி சொல்லப்போகிற ஐக்யத்தை மனதில் வைத்துக்கொண்டு அநுபூதிக்கு அநுவ்ருத்தியைக் காண்பிக்கிறார்— கடோநுபூயதே படோநுபூயதே என்று. அதனாலென்னவெனிற் சொல்லுகிறார்-அத்ர என்று வ்யாவர்த்தமானதயா-உத்தரோத்தரப்ரதிபத்திகளில் விஷயமில்லாமலிருப்பதால். ரஜ்ஜுஸர்ப்பாதிவத்-ரஜ்ஜுமுதலியவைகளைப்போலவும் ஸர்ப்பம் முதலியவைகளைப்போலவும் என்று அர்த்தம் அதைவிவரிக்கிறார்-யதா இதுமுதலியதால். பாதிதத்வ அபாதிதத்வங்களால் இரண்டு ஹேதுக்களும் உபாதியோடுகூடியவென்பதைக் காண்பியாநின்றுகொண்டு சோதனம் செய்கிறார்— நநு ச என்று. உபாதி நிவ்ருத்தியினால் பக்ஷத்தில் ¶ ஸாத்ய நிவ்ருத்தியைச்சொல்லுகிறார்— அத்ர து என்று. விபரீதமான உபாதியிருப்பதாலும், வ்யாகாதவிரோதமென்று அபிப்ராயம். பரிஹரிக்கிறார்— உச்யதே என்று இதுமுதலியதால். முதலில் விவாதமின்றியே ஒப்புக்கொள்ளப்பட்ட அம்சத்தைக்கூறுகிறார்— கடாதேர் த்ருஷ்டா வ்யாவ்ருத்தி: என்று. பக்ஷங்களெல்லாவற்றிலும் இருக்கிறதும பக்ஷத்திலில்லாமலிருக்கிறது மன்றோ, உபாதி. அதில் அந்யனால் உபாதி என்று சொல்லப்பட்ட தர்மத்திற்கு பக்ஷத்தில் இருப்பு கூறப்பட்டபடியால், வ்யாவர்தமானத்வ ஹேதுவுக்கு ஸோபாதிகத்வத்தை தூஷிக்க விரும்பி அதற்கு உபயோகியாக கடாதிகளில் காணப்பட்ட வ்யாவ்ருத்தியானது ஸம்வாதபலபூதமா, அல்லது பாதபலபூதமா என்று விவேசிக்கத்தக்கதென்று கூறுகிறார்— ஸா கிம் ரூபா என்று. பாததிற்கு பலபூதகமாக இருத்தலைக்காண்பிப்பதற்காக வ்யாவ்ருத்திஸ்வரூபத்தைக்கூறுகிறார்— கிம்கடோஸ்தி இத்யத்ர என்று. கடமானது இருக்கிறதென்றறியப்பட்ட விஷயத்தில் படமில்லாமை யென்று அர்த்தம். ஸிஞம்ரதா ஹி என்று. ரஜ்ஜுவில் பூமியின் பிளப்பு முதலியவைகளின் அபாவமன்றோ பாதிதத்வம் என்று கருத்து. ஆதலால் பாதபலபூதையே என்று கூறுகிறார்— அத: என்று பாதமாவது தோஷமற்ற காரணத்தாலுண்டாகிற நிஷேதபுத்தி— அதனால், முன்னிலையிருப்பதில் இருக்கும்அபாவம் வ்யாவ்ருத்தி. இவ்வாறாக உபாதியில்லாமையால், வ்யாவர்த்தமானத்வம் அபாரமார்த்யஸாதகமென்று கூறுகிறார்— ஸா என்று அபாதிதத்வபலபூதமான அநுவ்ருத்தியானது, பாமார்த்தத்வப்ரயோஜகமாயிருப்பதால், அநு

¶ ஸாத்ய வ்யாபகமாகவும் ஸாதனவ்யாபகமாகவுமிருக்கிறது உபாதி— உபாதியானது ஹேதுவை துஷ்டமாகச்செய்துவிடும் தன்மையுள்ளது. பர்வதம் புகையுள்ளது நெருப்பிருப்பதினால் என்று சொன்னால் ஆர்த்ரேந்தன ஸம்யோகம் (ஈரவிறகு ஸம்பந்தம்) உபாதி-இந்த உபாதி ஸாத்யமானபுகையுள்ளவிடங்களிலெல்லாம் தவராமலிருப்பதால் ஸாத்யத்திற்கு வ்யாபகம். ஸாதனமான நெருப்புள்ள இடங்களிலாததால் ஸாதனவ்யாபகம். உபாதியானது ஸ்வாபாவ்வத்வ்ருத்தித்வ ஸம்பந்தத்தினால் ஹேதுவினிடத்திலிருந்துகொண்டு ஹேது ஸாத்யங்களுக்குள்ள வ்யாப்தியைக்கொடுத்து விடுகிறது. அதாவது ஹேதுவுக்கு ஸாத்ய வ்யபிசார உந்நாயகமாக ஆகிறது. வஹ்னியானது தூமவ்யாபிசாரீ - தூமவ்யாபகமான ஆர்த்ரேந்தன ஸம்யோக வ்யபிசாரியாக இருப்பதால் - எது எதின் வ்யாபகவ்யபசாரியோ அது அதற்கு வ்யபிசாரி என்கிற நியாயத்தால் - உபாதியுள்ளஹேது துஷ்டஹேதுவாகப்போய்விடுவதால் அப்படிப்பட்ட ஹேதுவினால் ஸாத்யத்தை ஸாதிக்கமுடியாது.

வர்தமானத்தில் பாரமார்த்யத்தைக்காண்பிக்கிறார்— ரஜ்ஜுவத் என்று. அவ்யாதமாவது அவிரோதித்வம். அநுவ்ருத்தியாவது, அதனால் (அவிரோதித்வத்தால் உண்டுபண்ணப் பட்டவிஷயமானசத்ந்தி அந்வயம். அன்றிக்கேயுன்னிலையிலுருக்கும்வஸ்துவினிடத்தில் இருப்பு. இங்ஙனமாக வ்யாப்தியானது சிக்ஷிக்கப்பட்டது. தாக்கமாகரமல்ல, அநுகார ஸ்யமும் இருக்கிறதென்று சொல்லுகிறார்—ப்ரயோகஸ்ய பவதி என்று. மாயாவே தாந்திகளோ ஜ்ஞானமாத்ரத்திற்கு பாரமார்த்யத்தைக்கூறுகின்றனர். ஆதலால் ஸத்துக்கு பாரமார்த்யஸாதனம் எங்ஙனமெனில் கூறுகிறார்.—ஏவம்ஸதி என்று. பாரமார்த்யத்தி லும் அபாரமார்த்யத்திலும வ்யாவர்தமானத்வம், அநுவர்த்தமானத்வம் இரண்டுக்கும் ப்ரயோஜகத்வம் ஸித்தித்திருக்க என்று ஆத்தம. அங்ஙனமாகில் இரண்டு பாமார்த் தங்கள் இருக்கவேண்டியதாக ஏற்படுமே எனில் சொல்லுகிறார்— ஸைவஸதீ என்று.

நநு ஸந்மாத்ராநுபூதேர் விஷயதயா ததோ பேத: ।
நைவம்; பேதோ ஹி ப்ரத்யக்ஷாவிஷயத்வாந்நிரூபணத்வாத் ப்ரா
கேவ நிரஸ்த: । அத ஏவ ஸதோऽநுபூதிவிஷயதாऽபி
ந ப்ரமாணபதவீமநுஸரதி । தஸ்மாத் ஸதநுபூதிரேவ । ஸா ச ஸ்வ
ஸித்தா, அநுபூதித்வாத் । அந்யதா கடாதிவதநுபூ
தித்வப்ரஸங்க: । கிஞ்ச, அநுபவாபேக்ஷா சாநுபூதேரநந்யாதீநப்ரகா
ஶயிதவ்யா; ஸ்வதயைவ ப்ரகாஶமாநத்வாத் । நஹ்யநுபூதிரநு
பூதிரந்ய வடாதிவத் ப்ரகாஶா அநுபந்ததே; யேந ஸஜாதீய ப்ரகாஶா
ந்தராபேக்ஷேத ॥

ஸ்ரீபாஷ்யம்—

மேலும், ஸந்மாத்ரம் அநுபூதிக்குவிஷயமாக இருப்பதால், அதைக்காட் டிலும் வேறானது என்றால், இப்படியலல—பேதமானது ப்ரத்யக்ஷத்துக்கு விஷயமாக இல்லாமையாலும் எவ்விதத்தாலும் நிரூபிப்பதற்கு முடியாததா லும் முன்பே நிரஸிக்கப்பட்டு விட்டது. அதனாலேயே ஸத்துக்கு அநுபூதி விஷயத்வங்கூடப்ரமாணமார்க்கத்தை அநுஸரிக்கிறதில்லை. ஆதலால் ஸத் என் பது அநுபூதியே. அதுவும் ஸ்வதஸ்ஸித்தமாயுள்ளது—அநுபூதியாக இருப் பதால். மற்றொன்றால் ஸித்திக்கும்பக்ஷத்தில் கடமுதலிய வஸ்துக்களைப் போல அநநுபூதித்வம் ப்ரஸங்கிக்கும். மேலும் தனனிருப்பினாலேயேப்ரகா சிக்குந்தன்மையுடையதாதலால் அநுபூதிக்கு இதைக்ரஹிப்பதற்கு ஸஜாதீ மானமற்றொரு அநுபவாபேக்ஷையுங்கல்பிப்பதற்கு சக்யமாகாது. அநுபூதியா னது தான் இருக்கும்பொழுது(ஜடமான)கடம்முதலிய வஸ்துக்களைப்போல், அப்ரகாசமாகக் காணப்படுகிறதில்லையல்லவா. தான் இருக்கும்பொழுது எப்பொழுதாவது ப்ரகாசியாமலிருந்தாலல்லவோ கடம் முதலிய ஜடவஸ்துக களைப்போல் பராதீனப்ரகாசமென்று சொல்லக்கூடும்.

ச்ருதப்ரகாசிகை.—

பிறகு ஸத் அநுபூதிஇரண்டுக்கும் விஷயவிஷயிபாவரூபமான பேதத்தை வெளியிட்டுக்கொண்டு சோதகஞ் செய்கிறார்— நநுச என்று. ப்ரிந்தவம்— ஸாத்யம். விஷயதயா என்பது ஹேது. பரிஹரிக்கிறார்— நைவம் என்று. அதில் ஸாத்யாம்சத்தை தூஷிக்கிறார்— பேதே ஹி என்று. புரஸ்தாதேவ - ஜ்ஞேயபேத நிஷேதத்தாலேயே ஜ்ஞானபேதமும் நிரஸிக்கப்பட்டதென்று அர்த்தம். ஹேத்வம்சத்தை தூஷிக்கிறார்— அத: என்று. ந ப்ரமாணபதவீமநுஸரதி என்று. விஷய விஷயிபாவமானது ப்ராந்திஸித்தமென்று கருத்து. பேதம ப்ராந்திஸித்தமென்பது 'அபி' சப்தத்தால் ஸமுச்சயிக்கப்படுகிறது. சுருதியினால் ப்ரதிபாதிக்கத்தக்க அர்த்தங்களை தர்க்கத்தாலும் ஸாதியாநின்றுகொண்டு விஷயவிஷயிபாவம் நிரஸிக்கப்பட்டபிறகு, * க்ராஹகமில்லாமையால் சூன்யத்வசங்கையையும் வ்யாவர்த்தித்துக்கொண்டு ஸ்வப்ரகாசத்வத்தை உபபாதிக்கிறார்— ஸா ச என்று. சகாரம் சங்கையின் நிவ்ருத்தியில். அந்த இடத்தில் வ்யதிரேகி ஹேது வைக்கிறார்.— அநுபூதித்வாத் என்று. விபக்ஷத்தில் பாதத்தைக்காண்பிக்கிறார்— அந்யத:ஸித்தேஷு என்று. எது வேறொன்றினால் ஸித்திக்கிறதோ, அது அநுபூதியல்லாததாகக்காணப்பட்டிருக்கிறது. கடம்போல, என்கிற வ்யாப்தியானது அர்த்தத்தாலே காண்பிக்கப்பட்டது. இந்த வ்யதிரேகிக்கு பராபிமதமான ப்ரத்யநுமானம் உபாதியோடுகூடியதென்று காண்பியாநின்றுகொண்டு அர்த்தபலத்தால் அநுமாநாந்தரத்தையும் சொல்லுகிறார்— கிஞ்ச இது முதலியதால். அநுமாநாந்தரம் கண்டோக்தம். அர்த்தபலத்தால் ப்ரத்யநுமான நிராஸமாவது இருக்கலாம். அநுமாநாந்தரம் கண்டோக்தமென்பதில் கிஞ்சு சப்தம ஸ்வரஸம். ப்ரத்யநுமான நிராஸமானது கண்டோக்தமென்பதில் "ஜசக்யாகல்பயிதும்" என்கிற நிர்தேசமானது ஸ்வரஸம். கிஞ்சு என்று ஸ்வமதோபபத்திமாத்ரமல்ல; பரமதத்தில் அநுபபத்தியுமென்று அர்த்தம். அநுமாநாந்தரமும் என்றாவது அர்த்தம். அநுபவாபேக்ஷா என்று. முற்கூறப்பட்டதை ஸமுச்சயிக்கத்தக்க சப்தங்கள் இரண்டில்'கிஞ்சு'சப்தத்தால் ஸமுச்சிதமான அர்த்தத்தைவிட வேறான அர்த்தத்தினுடைய ஸமுச்சயபரம் 'ச' சப்தம. நசக்யாகல்பயிதும் ஜ்ஞானம்பரப்ரகாசம் - வஸ்துவாயிருத்தலால்; அல்லது ப்ரகாசித்தலால். கடம்முதலியதுபோல் என்று **ப்ரத்யநுமானம். இவைமுதலியவைகளால் பரப்ரகாசத்வமானது சொல்வதற்குசக்யமல்லவென்று அர்த்தம். எதனால் என்றால் சொல்லுகிறார்— ஸத்தயைவ என்று. "ஸத்தையைக்கொண்டே ப்ரகாசமானத்வாத்" என்கிற ஹேதுவுக்கு அஸித்திசங்கையைப்போக்குவதற்காக அதை விவரிக்கிறார்— நஹி என்று. இருக்கும் ஸமயத்தில் ஒருஸமயத்தில் ப்ரகாசியாமலிருத்தல் பராதீந ப்ரகாசத்வத்தில் ப்ரயோஜகம். ஆதலால் ப்ரத்யநுமானம ஸோபாதிகமென்று அர்த்தம். "இருக்கும் ஸமயத்தில் எப்போதும் ப்ரகாசிக்கும் தன்மையுடையதால்" என்று வ்யதிரேகியான அநுமாநாந்தரம் என்பது அதிஸ்புடமாக இருக்கிறது. ஸம்வித்ஸித்தியில் "யத்யப்ரகாசமானாபி: கதாசித்வதிஷ்டதே" என்று தொடங்கி "கடாதாவிவ தத்ராபி கல்பநீயம் ப்ரகாசகம்" என்று. இந்த க்ரந்தத்திற் சொல்லிய வண்ணம் "ஸ்வஸத்தயைவ ப்ரகாசமானத்வாத்" என்கிற ஹேதுவுக்கு அஸித்திசங்கை பரிஹரிக்கப்பட்டது. இருக்கும் ஸமயத்தில் எப்பொழுதும் ப்ரகாசித்தல் ஸுகம் முதலியவற்றிலும் இருக்கிறதென்பதால் அநைகாந்த்யம் என்று சொல்லப்படுமானால்

* க்ராஹகம்—விஷயத்தை க்ரஹிக்கிற ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணஜ்ஞானம்.
** ப்ரத்யநுமானம்—வாதி தன்பக்ஷத்தை ஸாதிப்பதற்காக எந்த அநுமானத்தை [illegible] அதற்கு விருத்தமான அர்த்தத்தை ஸாதிப்பதற்கு ஸாதகமாய் ப்ரதிவாதியால் [illegible] அநுமானம்—அதாவது ஸத்ப்ரதிபக்ஷம் என்றபடி.

*அல்ல— "ஸுகாதிவ்யதிரிக்தத்வேஸதி" என்கிற விசேஷணம் இங்கு சொல்லக் கருதப்பட்டிருப்பதால். ஸித்தாந்திமதத்தில், ஸுகம்முதலியதும் ஜ்ஞாநவிசேஷமாதலால் பக்ஷத்துள்ளடங்குவதால் அநைகாந்த்யமில்லை. இங்ஙனமாக அநுமாநாந்தரம் கூறப்பட்டது. சங்கிக்கப்பட்ட ப்ரத்யநுமாநத்திற்கு ஸோபாதிகத்வமுங் காணபிக்கப் பட்டது.*

---

கதமேவம் தர்ஹி—உத்பந்நாயாமப்யநுபூதௌ விஷயமாத்ராவபாஸதே । "கடோऽயமநுபூயதே" இதி நஹி கஶ்சித் "கடோऽயம்" இதி ஜாநந் ததாநீமேவாவிஷயபூதாமநுபூதிமப்யநுபவதி । ததஶ்ச கடாதிப்ரகாஶநிஷ்பத்தௌ சக்ஷுராதிகரணஸந்நிகர்ஷவதநுபூதே: ஸத்பாவ ஏவ ஹேது: । ததநந்தரமுத்பந்நார்தப்ரகாஶாதிஶயலிங்கேநாநுபூதிரநுமீயதே । ஏவம் தர்ஹ்யநுபூதேரஜடாயா அப்யர்தவஜ்ஜடத்வமிதி சேத்; கிமித்தமஜடத்வம் நாம ? ந தாவத் ஸ்வஸத்தாயா: ப்ரகாஶாவ்யபிசார:, ஸுகாதிஷ்வபி தத்ஸம்பவாத்; நஹி கதாசிதபி ஸுகாதயஸ்ஸந்தோ நாநுபூயந்தே, அதோऽநுபூதி: ஸ்வயமேவ நாநுபூயதே, அங்குல்யக்ரம் ஸ்வஸ்பர்ஶநே ஸ்வாத்மஸ்பர்ஶநாஶக்தமிவேதி ॥

---

**ஸ்ரீ பாஷ்யம்.—**

(பூர்வபக்ஷாநுவாதம்) பிறகு, இங்ஙனமென்னுகிறாயோ ?— அநுபூதி புண்டானாலும் "இது கடம்" என்று விஷயமாத்ரம் ப்ரகாசிக்கிறது. இது கடமென்று அறிகிறவன் ஒருவனாவது, அப்போதே "கடம் அநுபவிக்கப்படுகிறது" என்று விஷயமாகாததும் இது என்று சொல்லக்கூடாததுமான அநுபூதியையும் அநுபவிக்கிறானில்லையன்றோ? ஆதலால், கடம் முதலிய வஸ்துக்களின் ப்ரகாசநிஷ்பத்தியில் கண்முதலிய இந்திரியங்களுடைய ஸந்நிகர்ஷம் ஹேதுவாயிருக்குமாப்போல அநுபூதியின் இருப்பே ஹேது. அதற்குப்பிறகு அர்த்தங்களையடைந்துள்ள, ஏதோ ஒரு ஸமயத்தில் ஸம்பவிக்கின்ற ப்ரகாசாதிசயரூபமான அடையாளத்தினால் அநுபூதியானது அநுமிக்கப்படுகிறது. இங்ஙனமாகில் ஜடமல்லாத அநுபூதிக்கு அர்த்தங்களைப்போல ஜடத்வமும் ஏற்படவேண்டியதாகுமென்றால், அஜடத்வமாவதென்ன? ஸ்வஸத்தைதபினுடைய தவறுதப்ரகாசம்என்பதல்ல-- ஸுகம் முதலியவற்றில் கூட அதுஸம்பவிப்பதால். ஸுகாதிகளிலிருந்துகொண்டிருக்கும்பொழுது ஒருஸமயத்திலாவது அறியப்படாமலிருக்கிறதில்லையன்றோ. ஆதலால் அநுபூதியானது தன்னாலேயே அநுபவிக்கப்படுகிறதில்லை— வேறுபதார்த்தத்தைத்தொடுகிறவிரல்நுனிக்குத் தன்னைத் தொடுவது அசக்யமாயிருப்பதுபோல்— என்று.

சுருதப்ரகாசிகை—

பிறகு, ப்ராகட்யாநுமேயபக்ஷத்தை நிராகரிக்க எண்ணங்கொண்டு அநுவதிக்கிறார்— அஜ்ஞதவம் மநுஷே இது முதலியதால். முதலில் "ஸ்வஸத்தயைவ ப்ரகாசமாநத்வாத்" என்கிற ஹேதுவுக்கு அஸித்தியை உபபாதிக்கிறார்—உத்பந்நாயாம் என்று. இதனால் தன்னால் சொல்லப்பட்டிருக்கிற "வஸ்துத்வாத், பாஸமாநத்வாத்" என்கிற ப்ரதய நுமானத்திற்கு ஸோபாதிகத்வவ்யுதாஸம் ஸித்திக்குமென்று கருத்து. "உத்பந்நாயா மப்யநுபூதௌ விஷயமாத்ரமவபாஸதே" என்கிறவிடத்தில் "கடோயமிதி" என்று அத்யாஹாரம் செய்துகொள்ளத்தக்கது. "இது கடம்" என்று விஷயமாத்ரம் அவபாஸிக்கிறதென்று அர்த்தம். "கடோயமிதி ஜாநந்" என்றல்லவோ சொல்லப்ப டபோகிறது. (எப்படி யென்றால்) ஸம்வித்ஸித்தியில். "கடோயமிதி விஜ்ஞாநே கடமா த்ரம் ப்ரகாசதே-நவித்திரிதி யுஷ்மாகம கோஷ்டீஷு நு வ்யஷ்யதே" (இது கடம் என்கிற விஜ்ஞாநத்தில் கடம் மாத்ரம் ப்ரகாசிக்கிறது அறிவானது ப்ரகாசிக்கிறதில்லை என்றல்லவோ உங்களுடைய கோஷ்டிகளில் கோஷிக்கப்படுகிறது என்று) "கடோ நுபூயதே இதி" என்பதற்கு மேலே அந்வயம். முந்தினதோடு அந்வயமானால் "விஷ யமாத்ரமவபாஸதே" என்கிற இந்தவாக்யத்தோடு விரோதம் உண்டாகும். விஷயமாத் திரத்திற்கு அவபாஸம் எங்ஙனம்?— 'கடோநுபூயதே" என்று அநுபவமும் ப்ரகாசிக் கிறது என்கிற சங்கைவரின், விஷயமாதரத்திற்கே தோற்றத்தை உபபாதிக்கிறார்— கடோநுபூயதே இதுமுதலியதால். எப்பொழுது, இது கடமென்று அறிகிறானோ, அப்பொழுதே "கடோநுபூயதே" என்று அறிகிறானில்லை. எதனால் எனிற்சொல்லுகி றார்— அவிஷயபூதாமநிதம்பாவாம் என்று. அவிஷயபூதாம் - கடசப்தார்த்தத்தைக் காட்டிலும் வேறாக இருக்கிற ; அநிதம்பாவாம்-அயம் சப்தார்த்தைக்காட்டிலும் வேறாக இருக்கிற ; கம்புக்ரீவ விசிஷ்டமாய் பெருத்த அடிவயிறுள்ள வடிவத்துடன்கூடிய த்ரவ்யம் "கட" சப்தத்தின் அர்த்தம். சமீபித்தவிடத்தில் வர்தமானகால விசேஷத்தோடு கூடியிருத்தல் "அயம்" என்கிற சப்தத்தின் அர்த்தம். இரண்டைக்காட்டிலும் வேறாக வல்லவோ இருக்கிறது அநுபவம். அதுவோ "இது கடம்" என்கிற அநுபவவேளை யில் அநுபவிக்கப்படுகிறதில்லையென்று அர்த்தம் "அவிஷயபூதாம்" என்கிற பொது வான நிர்தேசமானது, படம் முதலியவைகளையும் காட்டுவதற்காக. அதனாலேதான் "அகடபூதாம்"என்று சொல்லவில்லை. அன்றிக்கே, "கடோநுபூயதே" என்கிற வாக்யத் துக்கு முந்தினதோடு அந்வயம். "இதி" சப்தம் ஹேதுவைசசொல்லுகிறது. யாதொ ருகாரணத்தால் கடமே அநுபூதியின் செயப்படுபொருளோ ; அநுபூதியும் அப்பொழுது அநுபூதியின் செயப்படுபொருளாகிறதில்லையோ ; அக்காரணத்தினால் விஷயமாத்ரம் தோன்றுகிறது என்று அர்த்தம். இதற்கே "நஹி" என்பது விவரணம். ப்ரகாசங்க ளான சப்தம், விளக்கு, வெளிச்சம முதலியவைகள் அறியப்பட்டவைகளாகவே இருந்து ப்ரகாசகங்களாகக் காணப்பட்டிருக்கின்றன. ஆதலால் அநுபூதியானது ப்ரகாசமில்லா திருக்குமேயானால், ப்ரகாசகத்வமும் ஸம்பவியாமல் போகவேண்டியதாகு மெனில் கூறுகிறார்— தஸ்மாத்கடாதி என்று. ஸத்தையினால் ப்ரகாசகமென்றும், அறியப்ப டுவதனால் ப்ரகாசகமென்றும் ப்ரகாசகம் இரண்டுவிதம். அவற்றுள் ஜ்ஞாநமானது ஸத் தையினால் ப்ரகாசககோடியில் சேர்க்கைபெற்றது. இங்ஙனம் நியமனம் யார் செய்கிறது? என்றால் சொல்லுகிறார்— தஸ்மாத் என்று. ஸ்வஸத்தையினாலேயே ப்ரகாசித்தல் என் கிற ஹேது ஸித்தியாததாலும், கம்மால்சொல்லப்பட்ட ஹேதுவுக்கு ஸோபாதிகத்வ நிராஸத்தாலும் என்று அர்த்தம். அநுபூதியானது தானே ப்ரகாசியாமல் போமேயாகில் அப்பொழுது இதில் எது ப்ரமாணமெனில் கூறுகிறார்:—ததநந்த்ரம் என்று. அர்த்தக

தகாதார்சித்கப்ரகாசாதிசயலிங்கேந எதோ ஒரு ஸமயத்திலுண்டாவதால் கார்யம், கார்யமாக விருப்பதால் ஹேதுவுடன்கூடியதென்று அநுமானத்தாலறியப்படுகிறதென்று அர்த்தம். விஷயத்தையடைந்திருக்கிற ப்ராகட்யலிங்கத்தால் எங்ஙனம் தன்னிடத்திலிருக்கிற ஜ்ஞாநம் அநுமிக்கப்படுகிறது? என்று கேட்கில், தனக்கு ப்ரகாசிக்கிறதாக இருப்பதால் தன்னை அடைந்திருக்கிற ஜ்ஞாநத்தினது அநுமானம் பொருத்தமுள்ளதாக ஆகிறது. ஜ்ஞானத்திற்குப் பிற்காலத்திலுண்டாகிற ப்ராகாசலிங்கத்தால் ஜ்ஞானம் அநுமிக்கப்படுமேயாகில் அப்பொழுது கடம் அநுபவிக்கப்படுகிறதென்று சொல்வது யுக்தமன்று; கடம் அநுபவிக்கப்பட்டதென்று சொல்லுவது யுக்தமென்று சங்கைவரின் கூறப்பட்டது 'ததநந்தரம்" என்று. அதிக நெருக்கத்தால் வர்தமானவ்யபதேசம் என்று அர்த்தம். அர்த்தத்திற்கும் இந்திரியத்திற்கும் ஸம்யோகமுண்டானவுடனே கடம் அநுபவிக்கப்படுகிறது என்கிற ப்ரதீதியுண்டாவதால்; ப்ராகட்யலிங்கத்தினுல் ஜ்ஞாநாநுமானத்திற்கு அநவகாசத்வ சங்கையும் இதனுல் பரிஹரிக்கப்பட்டது. ததநந்தர மென்பது, அநேகம் தாமரை இதழ்களை ஊசியினுல் குத்துவதுபோல, அநுமாநத்தின் ‡சைக்ரயத்தால் அவ்வாறு ஜ்ஞானம் உபபந்நமாகிறது என்று கருத்து. ¶ ம்ருஷாவாதியானவன் தன்னுடைய தர்சநப்ரஸித்தியினுல் அநிஷ்டத்தை ப்ரஸ்தாவிக்கிருன்— ஏவம் தர்ஹி என்று. ஜடத்வமாவது, ஜ்ஞானத்தைக்காட்டிலும் வேருகவிருத்தல்; அசித்த்வம் என்று அர்த்தம். இவ்விடத்திலும் அநுபூதியானது அஜடையென்று † விபர்யயத்தில் பர்யவஸாநம். § ப்ரஸஞ்ஜநீயமான ஜடத்வத்திற்கு அநிஷ்டத்வத்தை நிரஸிப்பதற்காக அஜடத்வத்தை விகல்பித்து தூஷிக்கிருர்— கிமிதம் என்று. கிமிதம்—ஒன்றுமில்லை. எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாததென்று அர்த்தம். அடுத்து இரண்டுபக்ஷத்தையும் காண்பிக்காமையால். மேல்க்ரந்தம் நிரூபிக்கமுடியாததென்பதற்கு விவரணமாக ஆகிறது. அன்றிக்கே, 'கிம்'சப்தமானது விகல்பபரம். ஹேதுவாகக்கூறப்பட்ட அஜடத்வமென்பதுஎன்ன; வித்யமானதசையில் எப்பொழுதும் ப்ரகாசமாநத்வமா? அன்றிக்கே, ஸாத்யமாக அபிமதமான தானே தனக்கு ப்ரகாசமாக விருக்கையா? என்கிற விகல்பம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. அவற்றுள் முதல் பக்ஷத்தில் உத்பத்திகாலத்திலும் ப்ராகாசததின் தவருமை விவக்ஷிக்கப்பட்டிருக்கிறதா? அல்லது உத்பத்தி க்ஷணத்திற்கு மேல் ப்ரகாசத்தின் அவ்யபிசாரமா? என்கிற விகல்பம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. அதில் முதற்பக்ஷத்தில், அஸித்தி முன்னமேயே கூறப்பட்டதென்றெண்ணி இரண்டாவதில் வ்யபிசாரதனைக்கூறுகிருர்—ஸுகாதிஷு என்ற. அதை விவரிக்கிருர்—நஹி என்று. வேறுபக்ஷத்தை தூஷிக்கிருர்—அத: என்று. அத: - ஹேதுவுக்கு அஸித்தியினுலும் § அநைகாந்திகத்வததாலும் ஸாத்யமுமில்லை என்று அர்த்தம். இதனுல் ஜடதவமானது அநிஷ்டமல்லவென்று காண்பிக்கப்பட்டது. வேறு அநுமானத்தால் ஸாதிக்கப்படப்போகிறதென்று சொல்லில கூறுகிருர்—அர்த்தாந்தரம் என்று. வ்யாஹதமாதலால் ஒரு ப்ரமாணமும் இந்த அர்த்தத்தை ஸாதிப்பதற்கு ஸாமர்த்தியமுள்ளதாகாது என்றர்த்தம். இந்த அர்த்தத்தையே கூறுகிருர்கள்— "அங்குள்யக்ரம் யதாத்மானம் நாத்மனா ஸ்ப்ரஷ்டுமர்ஹதி— ஸ்வாம்சேந ஜ்ஞாநமப்யேவம் நாத்மானம்

‡ சைக்ரயம்— விளம்பமில்லாமை.

¶ ம்ருஷாவாதி—உலகத்தை அஸத்யமென்று சொல்பவன்.

§ ப்ரஸஞ்ஜநீயம்—இல்லாததை ஏறிட்டுச்சொல்லுதல். † விபர்யயம்—மாறுதல்.

§ அநைகாந்திகத்வம்—வ்யபிசாரம்.

ஜ்ஞாதுமர்ஹதி'' (விரல்நுனியானது எப்படி தனதுடைய ஒரு அம்சத்தால் தன்னைத் தானாகவே தொடமுடியாதோ, அப்படியே ஜ்ஞானமும் தன்னைத்தானாகவே அறிந்து கொள்வதற்குத் தகுதியுள்ளதாகாதென்றபடி) இங்ஙனம், ஜடத்வ ப்ரஸங்கரூபமான தாக்கத்திற்கு விபர்யயத்தில் பர்யவஸாநமின்மையும், வ்யாப்தியின் இன்மையும், இஷ்டப்ரஸங்கத்வமும், வ்யாகாதஸ்வரூபமான ப்ரதிதர்க்கத்தால் அடிபடுதலும் காண்பிக்கப்பட்டது. இத்யதைவம்மநவேஷ, என்று முந்தியதோடு அந்வயம்.

𑌤𑌦𑌿𑌦𑌮𑌨𑌾𑌕𑌲𑌿𑌤𑌾𑌨𑍁𑌭𑌵𑌵𑌿𑌭𑌵𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌮𑌤𑌿𑌵𑌿𑌜𑍃𑌮𑍍𑌭𑌿𑌤𑌮𑍍। 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑍇𑌰𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌾𑌦𑌿𑌵𑌦𑌨𑍁𑌪𑌲𑌮𑍍𑌭𑌾𑌤𑍍, 𑌉𑌭𑌯𑌵𑌾𑌦𑌿𑌸𑌮𑍍𑌮𑌤𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑍇𑌰𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑌾𑌮𑌧𑌰𑍍𑌮𑌕𑌲𑍍𑌪𑌨𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 । 𑌅𑌤𑍋 𑌨𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑌨𑍁𑌮𑍀𑌯𑌤𑍇 । 𑌨𑌾𑌪𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌾 । 𑌅𑌪𑌿 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌾𑌧𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 ॥

ஸ்ரீபாஷ்யம்:—

இவைகளெல்லாம் அநுபவவிபவத்தை ஆலோசியாமலிருப்பவனது ஸ்வபுத்தியின் \$ விஜ்ரும்பணம் - அநுபூதியைக்காட்டிலும் வேறாயும் விஷயதர்மமுமாகவிருக்கிற ப்ரகாசத்திற்கு ரூபாதிகளைபபோல் உபலப்தியில்லாமையால். இருதிறத்தார்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அநுபூதியினாலேயே ஒன்றொழியாமல் எல்லாவ்யவஹாரங்களுக்கும் உபபத்திவருவதாகவிருக்க ப்ரகாசமென்கிற பெயருள்ள தர்மத்தை கல்பிப்பது உபபந்நமாகாததாலும். ஆகையால் அநுபூதியானது அநுமிக்கப்படுகிறதில்லை ; வேறு ஜ்ஞானத்தாலும் ஸித்திப்பதுமன்று ; பின்னையோ, எல்லாவற்றையும் ஸாதிக்கிற அநுபூதியானது தானாகவே ஸித்திக்கிறது.

ச்ருதப்ரகாசிகை—

பிறகு, ஸ்வயம்ப்ரகாசதவாதி சொல்லுகிறான்— தகிதம் என்று. அநாகலிதாநுபவவிபவஸ்ய, அநுபவத்திற்கு தன்னையொழிந்த மற்ற எல்லாவஸ்துககளுக்கும் ப்ரகாசகமாகவிருந்துகொண்டு தன் ஸ்வரூப ப்ரகாசத்தில் மற்றொன்றையபேக்ஷியாமலிருக்கிறதென்பது ஒருவிபவம். ப்ராகட்யத்தை ஹேதுவாகக்கொண்டு ''ப்ரகாசிகிறது'' என்கிற யாதொரு வ்யவஹாரமுண்டோ, அதையுமுண்டுபண்ணுவதற்கு இதுவே தகுதியுள்ளதென்பது மற்றொருவிபவம். இவ்வாறான இரண்டுவித அநுபவவிபவம் எவனால் ஆலோசிக்கப்படவில்லையோ, அவன் அநுபவவிபவத்தை ஆலோசியாதவன்;— அவனுடைய ஸ்வமதிவிஜ்ரும்பிதம் ப்ரமாணதர்க்கத்தை அபேக்ஷியாமல்

\$ விஜ்ரும்பணம்—விலாஸம். † ப்ராகட்யம்—ப்ரகாசம்.

தன்னுடைய உத்ப்ரேக்ஷாமாத்ரத்தின் விஜ்ரும்பிதமென்று அர்த்தம் அன்றிக்கே ஸ்வபுத்திமாஹாத்ம்யமென்று அதிக்ஷேபம். பாரிசேஷ்யத்தால் ஸ்வயம்ப்ரகாசத்வத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்விப்பதற்காக. முதலில் ப்ராகட்யலிங்கத்தை நிரஸனஞ்செய்கிறார்— அநுபூதி இதுமுதலியதால் "அநுபூதிவ்யதிரேகேண" என்கிற இந்த பதத்தால் அஸாதாரண்யப்ரதிக்ஷேபம் பலித்தது. "விஷயதர்ம" சப்தத்தால் ஆத்மதர்மத்திற்கு நிராஸம் பலித்தது. அதனால் ரூபாதிகளோடு ஸாம்யம் பலித்தது. அநுபூதியைக்காட்டிலும் வேறானவிஷயதர்மமான ப்ராகாசமானது, ப்ரத்யக்ஷயோக்யமா? இல்லையா? ப்ரத்யக்ஷயோக்யமில்லையானால் லிங்கஜ்ஞானமில்லாமையால் அநுமான முடியாது. ப்ரத்யக்ஷயோக்யமாகில் பிறர்களாலும் ரூபாதிகளைப்போல் அறியத்தக்கதாகவாகலாம் என்று கருத்து. அபேக்ஷாபுத்தியினால் உண்டாகிற இரண்டு மூன்று முதலிய எண்கள் எவ்வாறு அந்தந்த புருஷனாலேயே அறியத்தக்கதாக விருக்கிறதோ, அதுபோல ப்ராகட்யமும் அந்த புருஷன் ஒருவனாலேயே அறியத்தக்கதாக ஆகிறதென்று சொல்லப்படுமேயானால்; அல்ல; இரண்டு மூன்று முதலிய எண்கள் முந்தியே இருக்கின்றன—எவ்வாறு ஒரு இடத்தில் எல்லாதிக்குகளும் இருக்கின்றனவோ, அந்த திக்குகள் அந்தந்த உபாதிகளின் அபேக்ஷாபுத்தியினால் அறிவிக்கப்படுகிறதோ. இவ்வண்ணம் $ அபேக்ஷாபுத்தியினால்.¶அபிவ்யங்க்யமான த்வித்வம்முதலியது ‡‡ அபிவ்யஞ்ஜகம் எவனையடைந்திருக்கிறதோ அவனுக்கே ப்ரகாசிக்கிறது. இவ்விடத்திலோ ரூபம்முதலியவைகளைப்போல ஜ்ஞயதர்மமாக ஒப்புக்கொண்டிருப்பதால், எல்லோராலும் அறியப்படவேண்டும். அபிவ்யங்க்யம் என்கிறபக்ஷத்தில் ஸித்தாஞ்ஜனமுள்ளவனுக்கே நிதி தோன்றுவதுபோல, அபிவ்யஞ்ஜகமுள்ளவனுக்கே தோற்றமுண்டாகவேண்டிவரும். ஜ்ஞேயமானவஸ்து ஜ்ஞாதாவுக்கே தோற்றுகிறதென்பதில்லையோ— குயவனுக்கே குடம் ப்ரகாசிக்கிறதென்பது இல்லையோ. மேலும் நபாதிவத் என்று தர்மத்திற்கு நிராச்ரயமான உத்பத்திகூடாதாதலால் ⚘ அதீதங்களாகவும் ¶ அநாகதங்களாகவும் பிறந்துகொண்டிருப்பவைகளுமான அர்த்தங்களுக்கு ப்ராகட்யம் பொருந்தாதாதலால் ப்ராகட்ய மில்லாமலிருந்தாலும் ஜ்ஞானமறியப்படுகிறதென்பதனால். அங்குரூபாதிகளைப்போல் ப்ராகாசத்திற்கு உபலப்தியில்லாமையால் ப்ராகட்யத்தினால் ஜ்ஞானாநுமானம் ஸம்பவிக்கிறதில்லை என்று கருத்து. இவ்வண்ணம் ஸம்வித்ஸித்தியில் - அதீதேநாகதே சார்த்தே கதம் ப்ராகட்ய ஸம்பவ: । நஹி தர்மிண்யஸத்யேவ தர்மஸ்ஸம்பவம்ருச்சதி (சென்றதும் வரப்போகிறதுமான அர்த்தத்தில் எவ்வாறு ப்ராகட்யம் ஸம்பவிக்கும். தர்மி இல்லாமலிருக்கும்பொழுதே தர்மமானது ஸம்பவியாதன்றோ) (அவ்வாறு) என்றபடி.* அதீதாநாகதங்களிலும், த்வித்வாதிகள்போல ப்ராகட்யம் உண்டாகலாமென்றால், அல்ல;—த்வித்வாதிகளுக்கு நிராச்ரயமான உத்பத்தியானதுகூடாமையால்

---

$ அபேக்ஷாபுத்தி—இது ஒன்று, இது ஒன்று ஆகஇரண்டு இது முதலியது அபேக்ஷாபுத்தி. இவ்விதமானபுத்தியினால் த்வித்வம், த்ரித்வம் முதலிய எண்கள் உண்டாகின்றன. அபேக்ஷாபுத்தியினது நாசத்தால் த்வித்வம் முதலியஎண்கள் நசிக்கின்றன. எல்லா வஸ்துக்களிடத்திலும் ஏகத்வமொன்றே ஸ்வாபாவிகம்.

¶ அபிவ்யங்க்யம்— வ்யஞ்ஜகாவ்ருத்தியினால் அறிவிக்கத்தக்கது.

‡‡ அபிவ்யஞ்ஜகம்— வ்யஞ்ஜனையினால் அர்த்தத்தை உணர்த்தும் தன்மை வாய்ந்தது. ⚘ அதீதம்—சென்றது. ¶ அநாகதம்—வரப்போகிறது.

அவவிடத்தில் த்வித்வாதிகளுக்கு உத்பத்தியில்லாமலிருந்தபோதிலும் குடம்முதலியது போல த்வித்வாதிகளும் புத்தியில் நிலை பெற்றிருப்பதால் வ்யவஹாரத்திற்கு உபபத்தியிருப்பதாலும், எவாகள் த்வித்வம்முதலியதை ஒப்புகவொள்ளுகிறதில்லையோ அவாகளைககுறித்து த்வித்வாதிகள் § ப்ரதிபந்தியாகச் செய்யததககவைகளல்ல விஷய விஷயிபாவ ஸம்பந்தம, § வித்யமானத்தையே ஆச்ரயமாகக்கொண்டது என்கிற நியம மில்லாமையால் விஷய † விஷயிபாவமே ப்ராகட்யமென்று சொல்லப்படுமேயானல், அது ஸரியல்ல;— ஸம்பந்திகள் இரணடில்லாவிடில் ஸம்பந்தப்ரதீதி உபபன்ன மாகாததால், ஸம்பந்திஜ்ஞானமும் அறியப்படுகிறதென்று அநுமேயமே இல்லாமல் போகுமென்பதனல் ப்ராகட்யம் லிஙகமாக ஆகிறதில்லை. இவ்வணணம் ப்ராகட்ய மென்று பெயருள்ள வஸ்துவானது உபலப்திககு விஷயமாகாமலிருந்தபோதிலும், இன்றி அமையாமையால் கல்பிக்கப்படுகிறதென்று ஆசங்கித்து, கல்பகத்திற்கு அந்யதாஸித்தியைக் காண்பிக்கிறார்—உபய என்று. "அநுபூதியினல்" என்று சொல்லப்பட்டால் ப்ராகட்யத்திற்குஙாமாந்தரம் சொல்லப்பட்டதாக ஆகும் என்கிற சங்கையை நிரஸிப்பதற்காக "உபயாப்யுபேத" என்கிற சப்தம். எதை ப்ராகட்யஜாகமாகச்சொன்னேயோ அதனலேயே என்று ஏவகாராபிப்ராயம். அசேஷ்யவ்வவஹா ார:— $ ஹாகம, ¶ உபாதாநம் முதலியது. அது அநுபூதியினலேயே ஸம்பவிப்பதால், ப்ராகட்யம் அதனல் கல்பிக்கத்தக்கதல்ல. ஜ்ஞாதோகட:, ப்ரகடோகட:, என்கிற வ்யவஹாரமும் இஷ்டோகட:, * த்விஷ்டோ கட:, என்பதுபோல், அந்யதாஸித்தமென்பது "அசேஷ" சபதாபிப்ராயம். இச்சையினலுண்டான ஆத்தகதமான இஷ்டத்வத்தினல், இச்சை அநுமிக்கப்படுகிறதில்லையன்றோ கட: ப்ராகாசதே என்று கட கர்த்ருகமாக ப்ரகாசம் அறியப்படுகிறது "கடமநுஅவ தி"என்று. கடகாமகமாயும் அங்கர்த்ருகமாயும் அநுபவம் அறியப்படுகிறது. இவ்வாறு ஒன்றுக்கே கர்மகர்த்ரு வயவஹாராநுபபத்தயினல் கல்பிக்கப்படுறதென்றால், அது ஸரியல்ல;—தாதுபேதத்தைக்காரணமாகக்கொண்ட காரகபேதத்திற்கு அர்த்தபேத||நிபந்தனத்வமில்லாமையால் எவ்வாறு பரசுவை (கோடாலியை) எடுத்து மேலே தூக்கி வ்ருக்ஷத்தில் போடுகிற ஒருவன்விஷயத்தில், "பரசுவினல் விருக்ஷத்தை வெட்டுகிறான்" எனறு சொல்லப்படும் வாக்யத்தில் பரசுவுக்கு கர்மத்வம, கரணத்வம் இரண்டும் ச்ருதமாகவிருக்கின்றன. அப்படியிருந்தபோதிலும் அர்த்தபேதமில்லை. வ்ருக்ஷத்திற்கு கர்மத்வம் அதிகாணத்வம் இரண்டும் ச்ருதங்களாக விருக்கின்றன. ஆயினும் அர்த்தபேதமில்லை. அவ்வாறே வ்யவஹாரபேதம தாதுபேதநிபந்தனமாக வில்லாமையால் வ்யவஹாரமானது ப்ராகட்ய கல்பகமாக ஆகாதென்கிற அபிப்ராயத்தாலும் "அசேஷ வ்யவஹாரோபபத்தேஸ" என்று கூறப்பட்டது. "கடம் ப்ரகாசிக்கிறது" என்கிற வ்யவஹாரமானது கடத்தை அடைந்திருககிற அதிசயமில்லாவிடில் பொருந்தாது. அப்படியில்லாவிடில் அந்த வ்யவஹாரம் வஸ்திரத்திலும் ப்ரஸங்கிக்கும் அந்த அதிசயந்தான் "ப்ராகட்யம்" என்று கூறப்படுமேயானல். அல்ல; எநத அதிசயம் வ்யவஹார நிர்ணயகமோ அது எவ்வாறு கடத்திலேயே இருககும்? படத்திலேயும் ஏன் இருக்கக்கூடாது? இந்திரியஸம்யோகவசத்தாலென்று கூறப்படு

$ ப்ரதிபந்தி—விரோதி உத்தரம்.　§ வித்யமான— சப்தப்ரயோகாதிகரண காலத்திலிருக்கிற.　† விஷயி—ஞானம்.

‡ அநுமேயம்— அநுமிப்பதற்குத்தகுதியுள்ளது.

$ ஹாநம்—விட்டு விடுதல்.　¶ உபாதாநம்—எடுத்துக்கொள்தல்.

* த்விஷ்ட:—த்வேஷிக்கப்பட்டது.　|| நிபந்தனம்—ஹேது.

மேயானால், அதனால் ஜ்ஞானமே வ்யவஸ்தாபிக்கப்படலாம் ; வேறு அதிசயத்தை ஒப்புக்கொள்வதனால் யாது பயன் ? என்கிற இந்த அர்த்தமும் "அசேஷவ்யவஹார"சப்தத்தால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. "இது கடம்" என்கிற அநுபவவேளையில் அநுபூதியின் அநுபவமில்லை என்று எதுகூறப்பட்டதோ; அது சரியல்ல.—"அநுபூயதே" என்கிற சப்தத்தின் அப்ரயோகமானது அவிவக்ஷையினாலேயொழிய அநநுபவத்தாலல்ல. உலகம் என்பது, அநுபவிக்கப்பட்ட எல்லா அர்த்தங்களிலும் விவக்ஷையுண்டானால் அவையனைத்தையும் சொல்லுகிறது. ஒருபாகத்தில் விவக்ஷை உண்டானால் அநுபவிக்கப்பட்ட ஏகதேசத்தைச் சொல்லுகிறது. ஏகதேசவிவக்ஷையுமில்லாவிடில் ஒன்றையும் சொல்லுகிறதில்லை. ஆகையால் " அநுபூயதே" என்கிற சப்தத்தின் அப்ரயோகமானது அதின் அப்ரகாசத்திற்கு ஹேதுவாகாது. இதுவும் அசேஷவ்யவஹார சப்தத்தால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது—அபூர்ணமாயும் பூர்ணமாயுமிருக்கிற வ்யவஹாரம், அசேஷ சப்தத்தால் க்ரோடீகரிப்பதற்கு சக்யமாதலால். இவ்வாறாக வ்யவஹாரம் வேறுவிதமாக ஸித்திப்பதால், அநந்யதாஸித்தத்திற்கே கல்பகத்வமிருப்பதால் ப்ரகாசம் கல்பிக்கத்தக்கதாக ஆகாதென்று அர்த்தம்.

ப்ராகட்யாநுமேயத்வாநுபபத்தியை நிகமனம் செய்கிறார்— அத: என்று. அத: - அநுபலப்தி, வ்யவஹாராந்யதாஸித்தி இவ்விரண்டு ஹேதுக்களால் ப்ராகட்யமில்லாமையால், அநுபூதியானது ப்ராகட்யத்தால் அநுமிக்கத்தக்கதல்லவென்று கருத்து. மானஸப்ரத்யக்ஷத்தால் அறியத்தக்கதென்பதற்கு அநுபபத்தியை அபிப்ராயப்பட்டு கூறுகிறார்— நாபி ᛘ ஜ்ஞாநாந்தரஸித்தா என்று.

இது, இவ்விடத்தில் அந்யனால் சொல்லப்பட்ட அநுமானம்:— " ஜ்ஞாநம், மானஸப்ரத்யக்ஷத்தால் க்ராஹ்யத்தக்கது— க்ஷணிகத்வமிருக்கையில் ஆத்மாவுக்கு விசேஷகுணமாயிருப்பதால். ஸுகம், து:கம் ப்ரயத்நம்முதலியதுபோல என்று. "ஆத்மவிசேஷகுணத்வாத் " என்று மாத்திரம் சொன்னால் (ஸ்திரமான) தர்மாதிகளில் $ வ்யபிசாரம் வருமென்று அதைவிலக்குவதின் பொருட்டு " க்ஷணிகத்வே ஸதி " என்கிற விசேஷணம் சொல்லப்பட்டது † " க்ஷணிக விசேஷணத்வாத் " என்று சொன்னால் சப்தத்தில் வ்யபிசாரம். " க்ஷணிகாத்மகுணத்வாத் " என்று சொன்னால் ஆத்மமனஸ்ஸம்யோகத்தில் வ்யபிசாரம் வரும்,என்று அதை பரிஹரிப்பதற்காக ஆத்மவிசேஷ சப்தங்கள் இரண்டும்.

இப்படிச்சொல்வது பொருந்தாது. க்ஷணிகத்வம் குணத்வம் இரண்டில் ஒன்று அஸித்தமாதலால் ; த்ருஷ்டாந்தத்திலும் ஹேதுவில்லை. மேலும் எது மானஸப்ரத்யக்ஷவேத்யமோ அது, அறியவேண்டுமென்கிற இச்சை இல்லாமலேயிருக்க க்ராஹ்யமாகக் காணப்பட்டிருக்கிறது. திருஷ்டாந்தம்—ஸுகம் முதலியது. அதனால் மானஸப்ரத்யக்ஷ விஷயமான ஜ்ஞானம் அபுபுத்ஸிதக்ராஹ்யத்வவ்யாப்தமென்று சொல்லவேணும். ஆகையால் கடாதிஜ்ஞானவிஷயமான யாதொருஜ்ஞானமுண்டோ அதுவும் இச்சையின்றிக்கேயிருக்க க்ராஹ்யமாதலால் மானஸப்ரத்யக்ஷவேத்யமாகலாம். தத்விஷயமான ஜ்ஞானமும் அவ்வாறே என்று. அநந்தஜ்ஞானங்களின் பரம்பராஸமுதாயம் விலக்க முடியாததாக ஏற்படுவதால் வேறுஜ்ஞானங்களுக்கு அவகாசமில்லாமல்போகவேண்டிய

ᛘ ஜ்ஞாநாந்தரஸித்தா— வேறு ஜ்ஞானத்தால் நிலைபெற்றது.
$ வ்யபிசாரம்—தவறுதல். † க்ஷணிகம்— ஒருக்ஷணகாலமாத்திரமிருப்புள்ளது.

தாகும். மானஸப்ரத்யக்ஷக்ராஹ்யத்வம் ‡ அபுபுத்ஸிதக்ராஹ்யத்வம் உள்ளவிடத்தில் தான் உண்டு என்கிற நியமம் கிடையாது ; உறக்கம் முதலியதில் உச்ச்வாஸ நிச்வாஸ ப்ரயத்னமிருந்தபோதிலும், அதின் க்ரஹணமில்லாமையால் என்று சொல்லப்படுமே யானால் அல்ல ; அப்போது ஜீவாத்மாவினிடத்தில் ப்ரயத்னமே இல்லாமையால் தேஹதாரணம் முதலியவைகள் அத்தருணத்தில் பரமாத்ம ஸங்கல்பாதீனங்களென் றல்லவோ வேதாந்திகள். "அந்தராபூதக்ராமவத்" என்கிற அதிகரணத்தில் இவ்வர்த்தம் நன்கு நிர்ணயிக்கப்படுவது. தூங்குந்தருணத்தில் தேஹத்தைப்புரட்டுவது முதலியதோ வெனில், அங்கங்களுடையவும் ¶ ப்ரத்யங்கங்களுடையவும் நோவினாலாவது ஈ கொசு முதலியவற்றால் உண்டான துக்கம் முதலியதாலாவதுஅதிஸ்வல்ப விழிப்பிருக்கும் போது உண்டாகிறது. அப்போதுங்கூட ப்ரயத்னம் புத்திவிஷயம். ஆகையால் ஹேது வுக்கு வ்யபிசாரமில்லாமையால் மானஸக்ராஹ்ய மெல்லாம் அபுபுத்ஸிதக்ராஹ்ய மென்று ‡அநவஸ்தை வந்தேதீரும். $ புபுத்ஸித க்ராஹ்யமாகில் அப்போது அந்யோந்யா ச்ரயணம். ஜ்ஞானமிருந்தாலன்றோ இச்சை, இச்சை இருந்தாலன்றோ ஜ்ஞானமென்று.

மேலும், மானஸப்ரத்யக்ஷத்தாலறியத்தக்கதற்கு புபுத்ஸிதக்ராஹ்யத்வமிருந்த போதிலும் ஸுகாதிகளில் || உபலப்தி நியமம் காணப்படுவதால். புபுத்ஸைநியமோ உள்ளதாக எப்படி கல்பிக்கத்தக்கதோ அவ்வண்ணமேஜ்ஞானத்திலும் புபுத்ஸாநியமம் ஸித்திப்பதால் உபலப்தியும் தவறாமல் உண்டாகவேண்டிவரும். ஆதலால் அறிய வேண்டுமென்கிற இச்சையை முன்னிட்ட ஜ்ஞானபரம்பரை ஒருநாளும் ஒழிவில்லாத தாக ஏற்படும். ஜ்ஞானமானது புபுத்ஸிதக்ராஹ்யம் ; ஸுகாதிகளோ அப்படி யல்லவென்று சொல்லப்படுமேயாகில் அப்படியல்ல;— இரண்டுக்கும் மானஸப்ரத்யக்ஷ த்வம் ஸமானமாகவிருக்க ஒன்றைவிட ஒன்றுக்கு பேதகல்பநத்தில் நியாமகமில்லாமை யால். ஸுகாதிகளிலும் கடாதிவிஷயமானமுதல் ஜ்ஞானத்திலும் புபுத்ஸை; இரண்டா வது முதலியவைகளிலோ இல்லை என்று சொல்லப்படுமேயானால் அல்ல—நியா மகமில்லாமையால். மானஸக்ராஹ்யத்வம் இரண்டுக்கும் துல்யமாதலால், வரும் புபுத்ஸையை எவன் தடுக்கலாம். மானஸக்ராஹ்யத்வமிருக்கும்போதல்லவோ * புபுத்ஸை, ஸுகம் முதலியதும் கடாதி விஷயமான ‡‡ ப்ரதமஜ்ஞானமும் § மானஸப்ரத்யக்ஷவேத் யமல்லவென்று சொல்லப்படுமேயானால் அவ்வண்ணமல்ல— அவ்விடத்திலும் † நியாமக மில்லாமையால். மேலும் க்ஷணிகாத்மவிசேஷகுணத்வமிருந்த போதிலும் த்விதீயா திஜ்ஞானம் மானஸக்ராஹ்யமல்லவென்று கூறப்படுமேயாகில் ஹேதுவுக்கு @ அநை காந்த்யம் வருகிறது. எப்போது ப்ரத்யக்ஷத்தால் க்ரஹிக்கப்படுகிறதோ அப்போது

‡ அபுபுத்ஸித க்ராஹ்யம்—நாம் வேண்டுமென்று ஆசைப்படாமலிருக்கையிலும், நாம் வேண்டாமென்று நினைக்கும்போதும்கூட, அதுவாக நம் மனுபவத்துக்குவருவது. துக்கத்தை நாம் வேண்டாமென்று நினைத்தாலும் அதுவாகவருகிறது.

¶ ப்ரத்யங்கங்கள்—ப்ரதாநாவயவங்களைச்சார்ந்த அம்சங்கள் கைக்குவிரல் முதலியவை கள்போல. ‡ அநவஸ்தை—வரம்பு இல்லாமை.

$ புபுத்ஸிதம்—அறியவேண்டுமென்று இச்சிக்கப்பட்டது. || உபலப்தி—அறிவு.

* புபுத்ஸை—அறியவேண்டுமென்கிற எண்ணம்.

‡‡ ப்ரதமம்—முதலாவது.

§ மானஸப்ரத்யக்ஷம்— மன இந்திரியத்தால் உண்டாகிற ஜ்ஞானம்.

† நியாமகம்—நிர்ணயத்தை உண்டுபண்ணுகிற ப்ரமாணம்.

@ அநைகாந்த்யம்—வ்யபிசாரம்

மாநஸக்ராஹ்யம் என்று கூறப்படுமேயானால், அப்போது $ பக்ஷம், ஹேது, இரண்டும் ப்ரத்யக்ஷக்ராஹ்ய சப்தத்தால் விசேஷிக்கத்தக்கவைகளாக ஆகும். மேலும் அந்யர்களாலும் சொல்லப்பட்ட வேறு தூஷணங்கள் உரைக்கப்படுகின்றன. இரண்டாவது ஜ்ஞானம் மாநஸக்ராஹ்யமாக ஆகாமல் போமேயாகில் அந்த இரண்டாவதுஜ்ஞானத்திற்கு ப்ரமாணமில்லாமையால் சூந்யத்வமும் உண்டாகும். அதற்குப்பிறகு ப்ரதமத்திற்கும், அதற்குப்பிறகு அதற்குவிஷயமான கடம்முதலிய வற்றுக்கும் சூன்யத்வம் ஏற்படும். த்விதீயாதி ஜ்ஞானம் ஸ்வதஸ்ஸித்தமானால் ப்ரதமஜ்ஞானமும் அவ்வாறாக ஆகலாமென்று இதுமுதலிய அபிப்ராயத்தினால் "நாபி ஜ்ஞாநாந்தரஸித்தா" என்று கூறப்பட்டது.

பிறகு ¶ பாரிசேஷ்யத்தால் ஸ்வயம்ப்ரகாசத்வம் ஸித்தமென்று கூறுகிறார்— அபிது என்று. ஸர்வம் என்று, அநுபவமில்லாவிடில் ஸம்வித் சூன்யமான படியால் அதைச்சார்ந்த ஸித்தியுள்ளதான அனைத்தும் சூன்யமாக ஆகவேண்டியதாக ஏற்படுமாதலால் அதை பரிஹரிப்பதின் பொருட்டு ஸ்வயம் ப்ரகாசத்வம் அவசியம் ஒப்புக்கொள்ளத்தக்கதென்கிற அபிப்ராயத்தால் "ஸர்வம் ஸாதயந்த்யநுபூதி: ஸ்வயமேவ ஸித்யதி" என்று உரைக்கப்பட்டது. இவ்வண்ணமே *"ஸம்வித்ஸித்தியில் "ததேவம் பச்யதாம் ஸர்வசூந்யத்வாத் பிப்யதாம் ஸதாம் । கதிஸ்ஸ்வயம் ப்ரகாசத்வாத் ருதே நாந்யோபலப்யதே" (அதை இவ்வண்ணம் பார்ப்பவர்களும் ஸர்வசூந்யத்வத்தினின்று பயப்படுகிறவர்களுமான வாதிகளுக்கு ஸ்வயம்ப்ரகாசத்வத்தைத் தவிர்த்து வேறு கதி கிடையாது) என்று.

---

𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌶𑍍𑌚— 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌧𑍀𑌨𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾, 𑌸𑍍𑌵𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌦𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 𑌤𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌯𑌃 𑌸𑍍𑌵𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌦𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 𑌯𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌃 𑌸 𑌤𑌯𑍋𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑌾𑌧𑍀𑌨𑍋 𑌦𑍃𑌷𑍍𑌟𑌃, 𑌯𑌥𑌾 𑌰𑍂𑌪𑌾𑌦𑌿𑌶𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑍁𑌷𑌤𑍍𑌵𑌾𑌦𑍌 । 𑌰𑍂𑌪𑌾𑌦𑌿𑌰𑍍𑌹𑌿 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑍌 𑌸𑍍𑌵𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌚𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑍁𑌷𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌜𑌨𑌯𑌨𑍍 𑌸𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌰𑍂𑌪𑌾𑌦𑌿𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌧𑍀𑌨𑌚𑌾𑌕𑍍𑌷𑍁𑌷𑌤𑍍𑌵𑌾𑌦𑍌 । 𑌅𑌤𑍋𑌽𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑍇 𑌚 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍇 𑌚 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌹𑍇𑌤𑍁𑌃 ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

அநுமானமும் இருக்கிறது. அது எவ்விதமெனில் கூறுகிறார்— அநுபவமானது மற்றொன்றை அபேக்ஷிக்காமலே தன்னுடைய தர்மமும் வ்யவஹாரமும் உள்ளது. வேறுபதார்த்தங்களில் தன்ஸம்பந்தத்தால் அந்த தர்மத்

---

$ பக்ஷம்—ஸந்தேஹாஸ்பதமான ஸாத்யத்துடன் கூடியது.

¶ பாரிசேஷ்யம்—வேறுவழி ஒன்றுமில்லாமையால்மிஞ்சி இருத்தல்.

* ஸம்வித்ஸித்தி— இது ஆளவந்தார் அருளிச்செய்த மூன்றுஸித்தி க்ரந்தங்களுக்குள் ஒரு க்ரந்தம். மூன்று ஸித்திக்ரந்தங்களாவன—ஆத்மஸித்தி, ஸம்வித்ஸித்தி, ஈச்வரஸித்தி.

திற்கும் அந்த வ்யவஹாரத்திற்கும் ஹேதுவாக இருப்பதால், எது தன் ஸம்பந்தத்தினால் § அர்த்தாந்த்ரத்தில் எந்ததர்மத்திற்கும் எந்த வ்யவஹாரத்திற்கும் ஹேதுவோ அது அந்த தர்மவ்யவஹாரங்களில் தன்விஷயத்தில் ‡ அநந்யாதீனமாகக்காணப்பட்டிருக்கிறது. ரூபம்முதலியது ¥ சாக்ஷுஷத்வம் முதலியதில்போல. ரூபம்முதலியது § ப்ருதிவீ முதலியதில் தன் ஸம்பந்தத்தால் சாக்ஷுஷத்வம் முதலியதை உண்டுபண்ணுகின்றுகொண்டு தான்புலப்படுவது முதலியதில் (வேறு) ரூபாதிகளை அபேக்ஷிக்கிறதல்ல. ஆகையால் † அநுபூதியானது தன்னுடைய ப்ரகாசமானத்வ தர்மத்திலும் ப்ரகாசிக்கிறது என்கிற வ்யவஹாரத்திலும் தானே ஹேது.

---

ச்ருதப்ரகாசிகை—

பிறகு ஸ்வயம்ப்ரகாசத்வத்தில் || தர்காநுக்ராஹ்யமான ப்ரமாணத்தை உபந்யஸிக்கிறார்—¶ப்ரயோகஸ்ச என்று. பாரிசேஷ்யத்தால் மாத்திரம் ஸ்வதஸ்ஸித்தத்வமில்லை, ‡ ஸாதகமாக ப்ரமாணமும் இருக்கிறதென்று அர்த்தம். அநுபூதி: இது முதலியதால் இரண்டு அநுமானங்கள் சுருக்கத்திற்காக பிரிக்காமல் ஒன்றுசேர்த்து உரைக்கப்பட்டிருக்கின்றன. அநுபூதியானது அந்யாதீனமாக இல்லாத ஸ்வதர்மமுள்ளது, தன்ஸம்பந்தத்தால் அர்த்தாந்தரத்தில் அந்ததர்மத்திற்கு ஹேதுவாகஇருப்பதால். அநுபூதியானது அந்யாநதீநஸ்வவ்யவஹாரமுள்ளது, தன்ஸம்பந்தத்தால் அர்த்தாந்தரத்தில் அந்தவ்யவஹாரத்திற்கு ஹேதுவாக இருத்தலால் என்று. இவ்வண்ணமாக அநுமாநஸ்வரூபத்தின் பாகுபாடு அறியத்தக்கது. அதினாலேயே தான் வேறுபதார்த்தத்தில் வ்யவஹாரவிசேஷத்திற்கு ஹேதுவாக இருப்பதற்கு தன்னிடத்திலும் அந்த வ்யவஹாரத்தில் ஹேதுத்வமென்று மேலே கூறப்போகிறார். @ப்ராகட்யத்தை ஏற்றுக்கொண்டு அதை ¶உபஜீவித்து ப்ரதமாநுமாநம் உரைக்கப்பட்டது. அதை உபஜீவியாமல்தான் இரண்டாவது. ப்ராகட்யாங்கீகாரம் ஸ்வப்ரகாசதாவிரோதியல்ல. அதற்கு ஜ்ஞாநத்தை அநுமித்துக்கொடுக்கும் சக்தி ஒப்புக்கொள்ளப்படாமையால். தர்மவத்த்வமாவது அநந்யாதீந தர்மவத்த்வமாவது ஸாதிக்கத்தக்கதாகச்சொன்னால் ஸித்தஸாத்யதம் என்கிற தோஷம் வரும். அநுபூதித்வம் முதலியதர்மங்கள் வேறுஹேதுக்களை அபேக்ஷியாமலிருப்பதால். அநுபூதித்வஜாதியானது ஸாத்யமல்ல—நித்யமாகஇருப்பதால் ‡ ஜாதியை ஒப்புக்கொள்ளாமல் போனபோதிலும் அநுபூதித்வத்திற்கு அநுபூதிக்கு அவச்யமான காரணஸமுதாயத்தைத்

---

§ அர்த்தாந்தரம்—வேறுவஸ்து.

‡ அந்யாதீனம்— மற்றொன்றைச்சார்ந்திருக்கிற வஸ்து. அங்ஙனமல்லாதது அநந்யாதீனம். ¥ சாக்ஷுஷத்வம்— சக்ஷுரிந்த்ரியத்துக்கு கோசரமாக இருத்தல். அதாவது கண்ணுக்குப்புலப்படுதல். § ப்ருதிவீ—பூமி. † அநுபூதி—ஜ்ஞானம்.

|| தர்கம்—யுக்தி. ¶ ப்ரயோகம்—அநுமானம். ‡ ஸாதகம்—அநுகூலமானது.

@ ப்ராகட்யம்—வெளிப்படுதல், அல்லது பிரகாசித்தல்.

¶ உபஜீவித்து—ஆச்ரயித்து.

‡ ஜாதி—அநேக வ்யக்திகளில் ஒரேவிதமான வ்யவஹாரத்திற்கு ஹேதுவாயும் அவைகளை விட்டுப் பிரிக்கமுடியாதஸம்பந்தத்தால் அவைகளிடத்தில் நிலைபெற்றுமிருக்கிற ஒரு தர்மம்.

தவிர்த்த வேறு ஹேதுவின் அபேக்ஷை இல்லாமையால் ஸித்தஸாத்யதை என்கிற தோஷம் ஏற்படும். அதினால் "அநந்யாதீனஸ்வதர்மா" என்று சொல்லப்பட்டது. தன்னுடைய தர்மம்—தன்னால் உண்டுபண்ணத்தக்கதாக இருப்பதால் தன்ஸம்பந்தம்பெற்ற தர்மம் ஸ்வதர்மம். வேறு இடத்தில் தன்னால் ஸாதிக்கத்தக்க தர்மத்திற்கு மிகவும் ஸஜாதீயமாயிருக்கிற தர்மமென்று அர்த்தம். அர்த்தாந்தரே தத்தர்மஹேதுத்வாத் என்று ஹேதுவைச்சொல்லி இருப்பதால். ஸ்வதர்மசப்தத்தால் சொல்லப்பட்டதர்மமல்லவோ தத்சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு இடத்தில் தன்னால் ஸாதிக்கத்தக்க தர்மத்திற்கு மிகவும்ஸமானமாய் தன்னிடத்தில் அவச்யமாக இருக்கத்தக்க தர்மம் ஸ்வதர்மமாக விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. இதனாலேயே தன்னிடத்தல் § ரூபித்வத்தை † ஆபாதனம் பண்ணுமையால் த்ருஷ்டாந்தமான ரூபத்திற்கு ஸாத்யமின்மை என்கிற சங்கை விலக்கப்பட்டதாக ஆகலாம்— வேறு தண்டத்தை அபேக்ஷியாமல் தன்னிடத்தில் தண்டித்வத்தை ஆபாதனஞ்செய்யாமலிருக்கிற தண்டத்தில் வ்யபிசாரமும் பரிஹரிக்கப்பட்டதாக ஆகும். அந்ய சப்தமும் தனக்குமிகவும் ஸமானமான வேறுஒன்றைக் குறிக்கிறது. அப்படி இல்லாமல் ஹேதுமாத்ர நிரபேக்ஷத்வம் கூறப்படுமேயாகில் திருஷ்டாந்தத்தில் ஸாத்யம இல்லையென்று வரும். ரூபத்திற்கு சாக்ஷுஷத்வமானது சக்ஷுஸ்முதலியதை அபேக்ஷித்தன்றோ வருகிறது. தவறாமல் அப்படிப்பட்டஹேதுத்வாபேக்ஷையின்மை அநந்யாதீந சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அந்யாபேக்ஷா ஸாமான்யாபாவம் ஸாத்யமாகில் அயலாருடைய ஜ்ஞானத்திற்கு ||அநுமேயத்வம் காணப்படுவதால் பாததோஷம் ப்ரஸங்கிக்கும். ஞானாந்தரத்துக்கு விஷயமாகாமை இந்த அநுமானத்தால் ஸாத்யமல்லவே. பின்னேயோ தனக்கு மிகவும் ஸமானமான ஒன்றை அபேக்ஷியாத ப்ரகாசார்ஹத்வமாத்ரம். அதுஅயலாருடைய ஜ்ஞானத்திற்கும் ஒட்டுமாதலால்பாதிதவிஷயத்வமில்லை. அநந்யாதீனஸ்வவ்யவஹாரா என்கிற இடத்திலும் வ்யவஹாரமுடைமை ஸாதயமாகில் ‡ ஸித்தஸாத்யத்வம் வரும். அதினால் அநந்யாதீந சப்தம். அந்யசப்தம் அத்யந்த *ஸஜாதீயபரமாதலால் வாக்குமுதலியவற்றின் அபேக்ஷையிருந்து. பாதிதத்வசங்கை பரிஹரிக்கப்பட்டதாக ஆகும் கடம் முதலியவைகளுடைய ஹானாதி வ்யவஹாரத்தில் தனக்கு மிக்க ஸஜாதீயததை அபேக்ஷியாத ஹேது அநுபூதி என்றதனால் ஸித்தஸாத்யத்வதோஷ நிராகரணதின் பொருட்டு ஸ்வசப்தம். அதுவும்வேறு இடத்தில் தன்னால் ஸாத்யமான வ்யவஹாரத்தை மிகவும் ஒத்ததான வ்யவஹாரத்தைக்குறிக்கிறது. வ்யவஹாரத்திற்கு அத்யந்தஸஜாதீயத்வமாவது-அபின்னமான ப்ரவ்ருத்தி நிமித்தத்தோடு கூடியிருத்தல். வ்யவஹாராநுகுண்யமாத்ரமன்றோ "ப்ரகாசதே" என்கிற வ்யவஹாரத்திற்கு நிமித்தம். அயலாருடைய ஜ்ஞானவ்யவஹாரத்தில் பாததோஷபரிஹாரத்திற்காக அபேக்ஷையில் நிர்பந்தமில்லை யென்று விவக்ஷை.

ஹேதுவைச்சொல்லுகிறார்— ஸ்வஸம்பந்தாத் என்று. தர்மஹேதுத்வமும் வ்யவஹாரஹேதுத்வமும் ஹேதுவாக விவக்ஷிக்கப்பட்டால் வ்யபிசாரம் ஸம்பவிக்குமென்று அதைபரிஹரிப்பதற்காக தத்சப்தம்-தன்னுடைய யாதொருதர்மமும் வ்யவஹாரமும் உண்டோ அதற்கு அத்யந்தஸஜாதீயமானதர்மமும் வ்யவஹாரமும் தச் சப்தத்

§ ரூபித்வம்—ரூபத்துடன் கூடியிருத்தல். † ஆபாதனம்—எரிதல்.

‡ ஸித்தஸாத்யதை— ஏற்கனவே ஸித்தித்திருக்கிற ஒன்றைமீண்டும் ஸாதித்தல்; இது நியாயசாஸ்திரகாரர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஒரு தோஷம்,

|| அநுமேயம்—அநுமானத்தால் அறியத்தக்கது. * ஸஜாதீயம்—ஒற்றுமையுள்ளது.

தால் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. தனக்கு அக்நி ஸம்பந்தத்தால் தன்னிடத்தில் மூர்த்தி ஸ்வரூபத்திற்கு ஸஜாதீயமான ரூபாந்தரம், அதின் வ்யவஹாரம் இவைகளுக்கு ஹேதுவான கடமானது அக்நிஸாபேக்ஷமாக இருக்கிறதென்று அதில் வ்யபிசாரபரிஹாரத்திற்காக "அர்த்தாந்தர" என்று உரைக்கப்பட்டது.

மேலும் அர்த்தாந்தரசப்தமானது குறிப்பிடப்பட்டிருக்கிற அர்த்தத்தைக்காட்டிலும் விஜாதீயதையை ப்ரதிபாதிப்பதில் நோக்குள்ளது. அதனால் வேறு த்ரவ்யத்தில் ஸம்யுக்தத்வமென்ன தத்வ்யவஹாரமென்ன இவைகளுக்கு ஹேதுவான த்ரவ்யத்திற்கு பரத்ரவ்யஸாபேக்ஷத்வமிருப்பதால் அநைகாந்த்ய தோஷம் பரிஹரிக்கப்பட்டதாக ஆகும். த்ரவ்யத்திற்கு த்ரவ்யமன்றோ அத்யந்த ஸஜாதீயம். அய்யா! குடமானது வஸ்திரத்தில் ஸம்யுக்தத்வம் முதலியதை உண்டுபண்ணுகின்றுகொண்டு தனக்கு அப்படிப்பட்ட ஸம்யுக்தத்வத்தை உண்டுபண்ணுவதில் வேறுகுடத்தை அபேக்ஷித்திருப்பதினால் அநைகாந்த்யம் வருமெனில் இவ்வண்ணமல்ல. ஸஜாதீயாபேக்ஷாநியமமில்லாமை என்கிற ஸாத்யதர்மமானது அங்கே இருப்பதால். குடமானது தனக்கு ஸம்யுக்தத்வம் முதலியதில் தனக்கு அத்யந்தஸஜாதீயமான குடத்தையே அபேக்ஷிக்கிறதென்கிற நியமமில்லையன்றோ. புத்ரனிடத்திலுள்ள புத்ரத்வதர்மம் புத்ரத்வவ்யவஹாரம், இவைகளுக்கு ஹேதுவாயும் தனக்கு புத்ரவ்யவஹாரத்தின் பொருட்டு பித்ராந்தர ஸாபேக்ஷமாகவும் இருக்கிற பிதாவினிடத்தில் வ்யபிசாரபரிஹாரத்திற்காக ஸ்வஸம்பந்தாத் என்று சொல்லப்பட்டது. வித்யமாநஸ்வஸம்பந்தம் விவக்ஷிதம். வேறு இடத்தில் ஸ்வஸம்பந்தம் இருக்கும் காலத்திலுள்ள ஸ்வகததர்மாத்யந்த ஸஜாதீயதர்மத்திற்கும் அதை அபேக்ஷித்திருக்கிற வ்யவஹாரத்திற்கும் ஹேதுவாக இருப்பதாலென்று அர்த்தம். பிதாமுதலியவர்கள் தேசாந்தரம் போனாலாவது இறந்துபோனாலாவது புத்ரன்முதலியவர்களிடத்தில் புத்ரத்வதர்மமும் புத்ரத்வதர்மவ்யவஹாரமும் நீங்குகிறதில்லையன்றோ. இதனாலேயேதான் தன்னிடத்தில் அநந்யாபேக்ஷமான ‡ த்வைதீபாவத்தை உண்டுபண்ணுமலும் பரத்வைதீபாவத்திற்கு ஹேதுவாகவுமிருக்கிற த்ரவ்யத்தில் வ்யபிசாரமும் தூரத்தில் தள்ளப்பட்டது.

அய்யா! ஸித்தாந்திக்குங்கூட இந்த அநுமானம் அபிமதமானது. சேதனன் தன் ஸம்பந்தத்திற்கு ஸமகாலமான சரீரத்வத்தை சரீரத்தில் உண்டுபண்ணுகின்றுகொண்டு தன்னிடத்தில் சரீரத்வத்திலும் அதின் வ்யவஹாரத்திலும் அநந்யாபேக்ஷனாக இல்லை. பின்னையோ எனில். பரமாத்மஸாபேக்ஷனாக இருக்கிறான். பரமாத்மாவோ சேதனனாக இருப்பதால் அத்யந்தம் ஸஜாதீயன். அதனால் அவ்விடத்தில் அநைகாந்த்யம் என்று சொன்னால் இவ்வண்ணமல்ல. ஸ்வவ்யாபகதர்மஹேதுத்வம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதால். சரீரத்வமானது சேதநத்வவ்யாபகம் அன்று. ஈச்வரன் சேதனனாக இருந்தபோதிலும் அவனுக்கு சரீரமில்லாமையால். ஆகையால் ஸ்வதர்மசப்தத்தால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிற ஸ்வாவச்யம்பாவத்தால் பரிஹாரம்.

இப்படி சொல்லப்பட்டதாக ஆகிறது—தர்மசப்தம் ப்ரகாசபரமா? அல்லது தர்மமாத்ரபரமா? அந்யசப்தமும் அந்யமாத்ரபரமா? ஸ்வாத்யந்தஸஜாதீயபதார்த்தபரமா? அவற்றுள் ஹேது மாத்ராநபேக்ஷ ப்ரகாசபரத்வம் கூறப்பட்டால் திருஷ்டாந்தத்தில் ஸாத்யமில்லாமல்போகும். ரூபமானது கண்முதலியவைகளை அபேக்ஷித்தல்லவோ ப்ரகாசிக்கிறது. தனக்கு மிகவும் ஒற்றுமையுள்ள வேறுப்ரகாசத்தை அபேக்ஷியாமல் ப்ரகாசித்தல் ஸாத்யமாகில்] ஹேதுவுக்கு வீணான விசேஷணத்தை ப்ரயோகிக்கிற

‡ த்வைதீபாவம்— இரண்டாகப்போகுதல்.

தோஷம் ஸம்பவிக்கிறது. ஹேதுத்வமாத்ரத்தால் ஸாத்யம் ஸித்திப்பதால் ஏதோ ஒன்றுக்கு ஹேதுவாக இருந்துகொண்டு கடம் முதலியது ஸ்வப்ராகாசத்தில் வேறு கடம் முதலியதை அபேக்ஷிக்கிறதில்லையன்றோ. ஹேதுவை அபேக்ஷியாத தர்மமாக ஒப்புக்கொண்டால் அநுபூதித்வம் முதலியதால் ஸித்தஸாத்யதை ஏற்படும். கோடாலி முதலியதில் வ்யபிசாரமும் வரும். கட்டையை இரண்டாகப்பிளப்பதில் ஹேதுவான கோடாலிக்குத்தான் இரண்டு துண்டாக ஆவதில் ஹேத்வந்தராபேக்ஷை இருப்பதால். ஸ்வாத்யந்தஸஜாதீயாநபேக்ஷதர்மமாகச் சொன்னால் அநுபூதித்வம் முதலியதால் ஸித்தஸாத்யதை ஏற்படும். விஷயப்ரகாசமான அயலார்ஜ்ஞானத்தில் அநுமானத்தை அபேக்ஷித்திருக்கிற ப்ரகாசத்வம் காணப்படுவதால் பாதமும் வரும். ரூபத்தில் ரூபாந்தரத்தை அபேக்ஷியாத ஸ்வகதரூபித்வஹேதுத்வமில்லாமையால் திருஷ்டாந்தம் ஸாத்யசூன்யம். புத்திரனை அடைந்திருக்கிற புத்ரத்வத்திற்கு ஹேதுவாயும் தன்னிலும் வேறான பிதாவை அபேக்ஷித்த புத்ரத்வதர்மத்துடன் கூடியவனுமான பிதாவினிடத்தில் வ்யபிசாரமும். பரத்ரவ்யமான ஸம்யுக்தத்வத்திற்கு ஹேதுவாயும் த்ரவ்யாந்தரத்தை அபேக்ஷித்திருக்கிற ஸம்யோகத்துடன் கூடியதுமான திரவ்யத்திலும் வ்யபிசாரம்வரும். ஆகையால் இதுமுதலிய தோஷங்களை பரிஹரிப்பதற்காக இவ்வண்ணம் ப்ரயோகிக்கத்தக்கது— †அநுபூதி: ஸ்வஜந்ய பாகததர்மாத்யந்தஸஜாதீயதர்மபாக்த்வே ஸ்வாத்யந்த ஸஜாதீயாபேக்ஷாநியமாஹிதா—என்பது ப்ரதிஜ்ஞை, ஸ்வவிஸஜாதீயே ஸ்வாவச்யம்பாவி தர்மாத்யந்த ஸஜாதீய ஸ்வஸம்பந்த துல்யகால தர்மஹேதுத்வாத் என்பது ஹேது. அவ்வாறே அநுபூதியானது ஸ்வஜந்யபாகதவ்யவஹாராத்யந்த ஸஜாதீயவ்யவஹாரபாக்த்வே ஸ்வாத்யந்த ஸஜாதீயாபேக்ஷா நியமாஹிதா என்று. ப்ரதிஜ்ஞை. ஸ்வவிஸஜாதீயே ஸ்வாவச்யம்பாவி வ்யவஹாராத்யந்தஸஜாதீய ஸ்வஸம்பந்த துல்யகால வ்யவஹாரஹேதுத்வாத் என்பது ஹேது. வ்யவஹாரத்திற்கு ஸ்வாவச்யம்பாவித்வமாவது, அவச்யம்பாவி தர்மநிபந்தநத்வம். வ்யாப்தியைக்காட்டுவதை முன்னிட்டு த்ருஷ்டாந்தத்தைக்கூறுகிறார்— ய இதி. ஸாத்யஸாதனதர்மங்கள் இரண்டுகளையும் ஸ்வபக்ஷத்தில் காட்டுகிறார்— நுபாதிர்ஹி என்று. பக்ஷதர்மதாபலத்தால் ஸித்தமான தர்மத்தைச்சொல்லுகிறார்— அதோ ஙுபூதி: என்று. ப்ரகாசதே இதிவ்யவஹார இதி- அநுபூதி ப்ரகாசிக்கிறதென்கிற வ்யவஹாரத்திலும் அநுபூதி என்கிற வ்யவஹாரத்திலுமென்று அர்த்தம்.

அய்யா! தன் ஸம்பந்தத்தால் வேறுவஸ்துவில் அந்த தர்மத்திற்கும் வ்யவஹாரத்திற்கும் காரணமாக இருக்கை என்கிற ஹேது உபாதியுடன் கூடியது. ஸம்பந்த விசேஷத்தால் வேறு வஸ்துவினிடத்தில் அந்த தர்ம வ்யவஹார ஹேதுத்வமே தன்னிடத்தில் அந்ததர்ம வ்யவஹாரங்களின் அநந்யாதீநத்வத்தில் காரணமாக இருப்பதால்

† அநுபூதியானது அதாவது ஜ்ஞானமானது தான் எந்தவஸ்துவுடன் ஸம்பந்தப்படுகிறதோ அந்த வஸ்துவில் பிரகாசிக்கும் தன்மையை உண்டுபண்ணுகிறது. மற்ற வஸ்துக்களில் தான் உண்டுபண்ணும் பிரகாசத்திற்கு அத்யந்தம் துல்யமான ப்ரகாசத்வத்தை தன்னிடத்தில் உண்டுபண்ணிக்கொள்வதில் தன்னைப்போன்றவேறொரு ஜ்ஞானத்தை அபேக்ஷித்துத்தான் செய்துகொள்ளவேண்டுமென்கிற நியமமில்லாதது. அதாவது வேறுஜ்ஞானத்தை அபேக்ஷிக்காமலே தானே தன்னிடத்தில் பிரகாசத்தை உண்டுபண்ணிக்கொள்ளக்கூடியது. இது ப்ரதிஜ்ஞாவாக்யம், தன்னைக்காட்டிலும் வேறு ஜாதியான அதாவது ஜடமான வஸ்துவில் தன்னிடத்தில் கட்டாயம் உண்டாகக்கூடிய தர்மமான ப்ரகாசத்வத்திற்கு அத்யந்தம் துல்யமான ப்ரகாசத்வம் என்கிற தர்மத்தை தான் ஸம்பந்தப்பட்டகாலத்தில் உண்டாக்குவதால் என்பது ஹேது.

அர்த்த ஸம்பந்த விசேஷம் ஆச்ரயாச்ரயிபாவரூபம். அது ரூபம் முதலியவற்றிலுமிருக்கிறது. பக்ஷத்திலோ வென்றால் இல்லை என்று ஆக்ஷேபித்தால் இது ஸரியல்ல, இதற்கு ஸாத்யஸமவ்யாப்தி இல்லாமையால் உபாதித்வம் பொருந்தாது. ஆச்ரயாச்ரயிபாவமில்லாவிட்டாலும் ஸம்பந்தமாத்திரத்தால் அர்த்தாந்தரத்தில் ப்ரகாசதே என்கிற வ்யவஹாரஹேதுவான தீபத்திற்கு தன்னிடத்திலும் அர்த்த வ்யவஹாரத்தில் அத்யந்த ஸஜாதீயாநபேக்ஷத்வம் காணப்பட்டிருக்கிறதன்றோ முந்தி, ஜ்ஞாநத்திற்கு பரப்ரகாச்யத்வாதிகளால் தன்னுடைய ஸத்தையினாலேயே ப்ரகாசிப்பதால் என்கிற ஹேதுவுக்கு அஸித்தியும் வ்யாஹதியும் உரைக்கப்பட்டன. அதில் அயம் கட: என்கிற அநுபவவேளையில் அநுபூயதே என்கிற சப்தம் ப்ரயோகிக்கப்படாமையால் அஸித்தி சொல்லப்பட்டது. சாப்தவ்யவஹாரத்தின் வைகல்யபௌஷ்கல்யங்கள் விவக்ஷாவிசேஷஹேதுக்களாதலால், அர்த்தங்களின் அனுபவத்திலும் அநநுபவத்திலும் அவைகளுக்கு ப்ரயோஜகத்வமில்லை யென்று சொன்னதினால் அஸித்தியானது பரிஹரிக்கப்பட்டது. வ்யாஹதியுமில்லை இதையே உபபாதிக்கிறார்— விரல்நுனிக்கு தன் ஸ்வரூபத்தைத் தொடுதல் முதலியதின் வ்யாஹதியானது அனுபவத்தைப்பொறுத்திருக்கிறது. தீபம் முதலியவைகளிலும் ப்ரகாச்யத்வ ப்ரகாசத்வங்கள் காணப்படுகின்றன. நிரூபிக்கும் பொழுது ஒன்றுக்கே கர்மத்வமும் கர்த்ருத்வமும என்கிற விரோதமும் இல்லை. தீபம் இருளை விலக்குகிறது, இருள் விலக்கத்தக்கது தீபம் உத்பாதகம், ஜ்ஞாநம் உத்பாத்யம். ஜ்ஞாநம் உத்பாதகம், வ்யவஹாரம் உத்பாத்யம. கர்மத்வத்திற்கும் கர்த்ருத்வத்திற்கும் இயற்கையாக விரோதமிருப்பதால் பேதகத்வமானது அனுபவஸித்தமாக இருந்தபோதிலும் ஜ்ஞாபகங்களில் நியதமாய் விரோதமில்லை என்பதும அனுபவஸித்தம். ஜ்ஞாதாவிடத்திலும் மனதிலும் சப்தத்தை போதிக்கிறசப்தத்திலும் பதத்தைபோதிக்கிற பதத்திலும் என்று. அவ்வாறே இப்படிப்பட்ட அர்த்தாந்தரங்களிலும் அவிரோதமானது காணப்படுகிறதன்றோ. உத்பாதகங்களிலன்றோ விரோத நியமம் உத்பாதகங்களிலும் வெவ்வேறு ஆகாரத்தாலென்றால் விரோதமில்லை. அய்யா ! கடம் முதலியவைகளில் வ்யவஹாரார்ஹத்வமென்கிற தன்மையானது தன்னைவிட வேறான ஜ்ஞாநத்தைக்காரணமாகக்கொண்டதென்று காணப்பட்டிருக்கிறது. ஞாநத்தில் வ்யாப்தியானது பங்கம் செய்யப்படுமேயாகில் வ்யவஹாரத்திற்கு ஜ்ஞாநபூர்வகத்வ வ்யாப்தி பங்கத்தினால் அஜ்ஞாதமான ஜ்ஞாநத்திற்கே வ்யவஹாராஸ்பதத்வம உண்டாகும் எனில் இவ்வண்ணமல்ல ; கடம் முதலியவைகளில், அறியத்தக்க வஸ்துக்களைக்காட்டிலும் வேறான ஜ்ஞாதாவினால் காணத்தக்கதன்மை இருந்தபோதிலும் ஜ்ஞாதாவினிடத்தில் த்ருச்யத்வம் தன்ஜ்ஞாத்ருத்வத்தாலேயே என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுவதினால் அங்கு பரவாதியாலும் கர்மகர்த்ரு வ்யாப்திபங்கம் ஒப்புக்கொள்ளத்தான்வேண்டும். அவ்வாறே கடாதிகளில் தன்னிலும் வேறான இந்திரியம் மனஸ் இவைகளால் உண்டாகும் ஜ்ஞாநத்தில் த்ருச்யத்வமிருந்தபோதிலும் மனதில் (மனஸ் அறியப்படும்பொழுது) அது பக்னமாய்விட்டது. ஸ்வாநுமானத்தில் மனதுக்கே கரணத்வமிருப்பதால். அவ்வாறே எல்லா வாச்யங்களுக்கும் ஸ்வவ்யதிரிக்தசப்தவாச்யத்வமிருந்தபோதிலும் சப்தமென்கிற சப்தத்திலும் பதம் என்கிற பதத்திலும் அது பக்னமாகிறது. கடாதிகளுக்கு தன்னைக்காட்டிலும வேறான வாக் வ்யவஹார்யத்வமிருந்தபோதிலும் வாகிந்திரியத்தில் அது பக்னம்—ஆகையால் கர்மகர்த்ருபாவத்திற்கு விரோதி வ்யாப்தி இல்லை. வ்யவஹாரம் ஜ்ஞாநபூர்வகமென்பது ஒருவராலும் மறுக்கப்பட்டதன்று ஜ்ஞாநவ்யவஹாரத்திற்கு பூர்வம் ஜ்ஞாநகர்மத்வத்தின் இன்மையினது. ப்ரஸங்கம் வருமேயாகில் அது அநிஷ்டமல்ல. ப்ரகாசபூர்வத்வத்திற்கு வ்யாப்திபங்கமில்லாமையால் அதின் விரஹத்திற்குப்ரஸங்கமில்லை. ஆகையால் அவபாஸிக்கின்ற ஜ்ஞானத்திற்கே வ்யவஹாராஸ்பதத்வம் ஆகையால் ஸ்வவிஷய பரவிஷய வ்யவஹாராநுகுண்யம் ஜ்ஞாநத்திற்கு யுக்தம்.

𑌸𑍇𑌯𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 । 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌾𑌦𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌦𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌤𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌰𑍇𑌵 । 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑍇𑌃 𑌸𑍍𑌵𑌤𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌃 𑌸𑍍𑌵𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍋 𑌵𑌾𑌽𑌵𑌗𑌨𑍍𑌤𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌮𑌵𑌗𑌮𑌯𑌨𑍍𑌤𑍀, 𑌸𑌤𑍀 𑌤𑌾𑌵𑌨𑍍𑌨𑌾𑌵𑌗𑌮𑌯𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌦𑍇𑌵 𑌤𑌦𑌭𑌾𑌵𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌕𑌥𑌂 𑌸𑌾 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌮𑌵𑌗𑌮𑌯𑌤𑌿 ? । 𑌏𑌵𑌮𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 𑌨𑌾𑌵𑌗𑌮𑌯𑌤𑌿, 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑌸𑌤𑍀 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑍇 𑌕𑌥𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ? । 𑌨𑌾𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌤𑍋𑌽𑌵𑌗𑌨𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇, 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑍇𑌰𑌨𑌨𑍍𑌯𑌗𑍋𑌚𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌅𑌸𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌂 𑌸𑌾𑌧𑌯𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 “ 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑌿𑌯𑌂 ” 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌷𑌯𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌤𑌦𑌭𑌾𑌵𑌂 𑌸𑌾𑌧𑌯𑍇𑌤𑍍 । 𑌸𑍍𑌵𑌤𑌃𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑍇𑌨 𑌇𑌯𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌷𑌯𑍀𑌕𑌾𑌰𑌾𑌨𑌰𑍍𑌹𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌨 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑌶𑍍𑌶𑌕𑍍𑌯𑌾𑌵𑌗𑌮𑌃 । 𑌅𑌤𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌾𑌭𑌾𑌵𑌾𑌦𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑍇𑌽𑌪𑌿 𑌭𑌾𑌵𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾 𑌨 𑌸𑌨𑍍𑌤𑌿 ॥

ஸ்ரீபாஷ்யம்—

அப்படிப்பட்ட இந்த ஸ்வயம்ப்ரகாசாநுபூதியானது நித்யை— ஏனெனில், ப்ராகபாவம் முதலியது இல்லாமையால். அந்த முன் இல்லாமையின் அபாவமும் ஸ்வதஸ்ஸித்தமாக இருக்தலாலேயே. ஸ்வதஸ்ஸித்தையான அநுபூதிக்கு ப்ராகபாவமானது தன்னுலாவது மற்றொன்றினுலாவது அறிவதற்கு சக்யமாகாதன்றோ. அநுபூதியானது தன்னுடைய அபாவத்தைத் தெரிவிக்கிறதாக இருக்குமேயாகில் நிச்சயமாகத்தானிருந்துகொண்டு தெரிவிக்கமுடியாது. அது இருக்குமேயாகில் அதில்லையென்றால் விரோதம் வருகையாலே அதற்கு அபாவமில்லை. ஆதலால் எவ்வாறு அந்த அநுபூதியானது தன்னுடைய அபாவத்தை அறிவிக்கும். இவ்வாறே அநுபூதி இல்லாமலிருந்தாலும், தன்னுடைய அபாவத்தை அறிவிக்காது; அநுபூதியானது தானே இல்லாமலிருக்கையில் தன்னுடைய அபாவத்தில் எவ்வாறு ப்ரமாணமாக ஆகும். வேறொன்றினுல் அறிவதற்கும் சக்யமன்று— அநுபூதியானது வேறொன்றுக்கு விஷயமாக இல்லாமையால். இதின் ப்ராகபாவத்தை ஸாதிக்கிற ப்ரமாணமானது, “இது அநுபூதி” என்று அநுபூதியை விஷயீகரித்து அதின் அபாவத்தை ஸாதிக்கவேண்டும். அது ஸ்வதஸ்ஸித்தமாதலால் “இயம்” என்று விஷயீகரிப்பதற்கு அநர்ஹமாயிருப்பது பற்றி அதின் ப்ராகபாவமானது வேறொன்றினுல் அறிய சக்யமாகாது.

ஆகையால் இதற்கு ¶ ப்ராகபாவமில்லாமையால் உத்பத்திபாவ சொல்வதற்கு அசக்யமாயிருப்பதுபற்றி உத்பத்தியை ஒட்டிவரும் மற்றவிகாரங்களும் அதற்கு இல்லை.

ச்ருதப்ரகாசிகை—

பிறகு ஜ்ஞாத்ரு ஜ்ஞேய நிரஸநமும், ஜ்ஞாநத்தின் ஸ்வயம்ப்ரகாசத்வமும்$பௌத்த பக்ஷத்திலும் ஸமாநமென்று அதை வ்யாவர்த்திப்பதற்காக ஜ்ஞாநத்திற்கு நித்யத்வத்தை ஸாதிக்கிறார்— ஸேயம் என்று. ஸேயம் - பரமார்த்தமாக இருக்கிற ஸந்மாத்ரத்தோடு ஐக்யம் பெற்றதும் ப்ரமாணத்திற்கு அவிஷயமாக இருக்கிறதுமான, என்று அர்த்தம். அன்றிக்கே ஸ்வயம் ப்ரகாசத்வத்திற்கு ஹேதுபூதமான தர்மத்துடன்கூடி இருப்பதால் ப்ரஸித்திபெற்ற என்றும் அர்த்தம் சொல்லலாம். ஸ்வயம்ப்ரகாசத்வத்திற்கு நித்யதா ஹேதுத்வ விவக்ஷையால் 'ஸ்வயம் ப்ரகாசா' என்று உரைக்கப்பட்டது. சகாரம்-ஸாத்யஸமுச்சயத்தில், பௌத்தஸாம்யசங்கையைப் போக்கடிப்பதிலாவது. எதனாலென்றால் சொல்லுகிறார்—ப்ராகபாவாதி என்று. அதுவும் எவ்வாறு என்று சங்கைவரின் க்ராஹகமில்லாமையால் என்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிறார்— தத்பாவஸ்ச என்று. ஸ்வதஸ்ஸித்தமாக இருப்பதால் ப்ராகபாவம் முதலியவற்றின் அபாவத்தை விகல்ப முகத்தால் ப்ரதிபாதிக்க எண்ணங்கொண்டவனாக விகல்பகோடிகள் இரண்டிலும் அநுபபத்தியை ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார்—நஹி என்று. ஸ்வத: என்னும் பக்ஷத்தில்; அநுபூதியானது, தானிருந்துகொண்டு தன்னுடைய இல்லாமையைத்தெரிவிக்கிறதா? அல்லது இல்லாமலிருந்துகொண்டா? என்று விகல்பத்தைககருதி, இருந்துகொண்டு என்னும் பக்ஷத்தை தூஷிக்கிறார்— அநுபூதி:என்று. எதனால் என்றால் கூறுகிறார்—தஸ்யா: என்று க்ராஹ்யமான அனுபூதியினுடைய அபாவமில்லாமையாலென்று அர்த்தம். அநுபூதியானது♆அநுமித்பாதிரூபையாக இருந்துகொண்டு தன்னுடைய அபாவத்தைத்தெரிவிக்கிறதா? அல்லது ப்ரத்யக்ஷரூபையாகவா என்கிற விகல்பத்தில், லிங்கம் முதலியதில்லாமையால் ப்ரதமகல்பம் ஸம்பவியாதென்று எண்ணி இரண்டாவது கல்பம் க்ராஹ்யாபாவத்தால் தூஷிக்கப்பட்டது. முன் அபிப்ராயப்பட்டிருக்கிற விகல்பகோடிகள் இரண்டினுள் இல்லாமல் என்கிற பக்ஷத்தை க்ராஹகமான ப்ரமாணாபாவத்தால் தூஷிக்கிறார்— ஏவம் என்று. முதலில் உரைக்கப்பட்டுள்ள விகல்பகோடிகள் இரண்டினுள் அந்யத: என்கிற பக்ஷத்தைத்தூஷிக்கிறார்—நாபி என்று. அநுபூதியானது அந்ய §கோசரையாக இருக்கட்டும், அதினால் அபாவத்தை க்ரஹிக்காமைக்கு காரணம் என்ன? அபாவமானது அந்யகோசரத்வத்தை அடைவதற்கு அர்ஹமாகவன்றோ உள்ளது எனில் கூறுகிறார்— அஸ்யா: என்று. அஸ்யா:— வேறொன்றினுடைய ப்ராகபாவம் க்ரஹிக்கத்தக்கதல்லவன்றோ, பின்னேயோ அநுபூதியினுடையதே. ஆதலால் அந்த அநுபூதியைவிஷயீகரித்தே அதின் அபாவம் க்ரஹிக்கத்தக்கது. அந்த அநுபூதியானது விஷயமாவதற்கு

¶ அபாவங்கள்— நான்குவிதங்கள் ப்ராகபாவம், ப்ரத்வம்ஸாபாவம், அந்யோந்யாபாவம், அத்யந்தாபாவம் - என்று. ப்ராகபாவமாவது-ஒரு வஸ்து உண்டாவதற்குமுந்தி அதின் இல்லாமையே ப்ராகபாவம், அது உத்பன்ன வஸ்துவால் நாசமடைகிறது வஸ்து உண்டானபிறகு அதின் ப்ராகபாவம், காணப்படாமையால் (இது தார்க்கிக மதம்)

$ பௌத்தபக்ஷம்— புத்தமதஸ்தர்களின் கொள்கை.

♆ அநுமிதி—அநுமாநத்தாலுண்டாகிற ஜ்ஞாநம், § கோசரம்— விஷயம்.

அனர்ஹமாக இருப்பதால் அதின் ப்ராகபாவக்ரஹணம் சக்யமாகாதென்று பொருள். இவ்வண்ணம் ப்ராகபாவமில்லாமையால் உத்பத்தி இன்மை உரைக்கப்பட்டது. பிறகு பரிணாமம் முதலிய எல்லாவிகாராந்தரங்களின் அபாவத்தையும் உபபாதிக்கிறார்—அதோஸ்யா: என்று. ஆகையால் ஸ்வத:, பரத:, பக்ஷங்களிரண்டிலும் அபாவம் க்ரஹிக்கமுடியாமலிருப்பதாலென்று அர்த்தம். விகாரஸாமாந்யாபாவம் ஸாத்யமாகில் அநுத்பன்னத்வத்திற்கு அந்தமுள்ளதான ப்ராகபாவத்தில் வ்யபிசாரம் வரும். ஆகையால் பாவரூபவிகாரவிரஹத்திற்கு ஸாத்யத்வத்தை ஜ்ஞாபிப்பதின் பொருட்டு "பாவ" சப்தம். அன்றிக்கே பாவஸ்ய விகார: என்று ஷஷ்டீஸமாஸம். அதனால், பாவாபாவரூபவிகாரமாத்ரவிரஹம் ஸாத்யமென்கிறபக்ஷத்தில் ப்ராகபாவத்தில் வ்யபிசாரசங்கையை நிவாரணம் செய்வதற்காக பாவத்வமுமிருக்க அநுத்பன்னத்வம் விகாராந்தராபாவத்தில் ப்ரயோஜகமென்பது பலித்தது. அநுபூதியானது நாசமுள்ளதல்ல, பாவத்வேஸதி அநுத்பன்னத்வாத் எது நாசமுள்ளதோ அது பாவரூபமான அநுத்பன்னவஸ்துவல்ல. உதாஹரணம்—கடம். பௌத்தர்களால் ஒப்புககொள்ளப்பட்டிருக்கிற க்ஷணிகத்வத்தை வ்யாவ்ருத்திப்பதற்காக நித்யத்வத்தின் பொருட்டு அநுத்பத்தியும் அத்துடன் வ்யாப்தமான விகாராந்தராபாவமும் ஸாதிக்கப்பட்டன.

அநுத்பந்நேயமநுபூதிராத்மநி பேதமபி ந ஸஹதே, வ்யாபகவிருத்தோபலப்தே:। ந ஹ்யநுத்பந்நம் நாநாபூதம் த்ருஷ்டம் । பேதாதீநாமநுபாவ்யத்வேந ரூபாதிவதநுபூதிதர்மத்வம் ந ஸம்பவதி । அதோऽநுபூதேரநுபவஸ்வரூபத்வாதேவ அநுபாவ்யம் தர்மாந்தரம் நாஸ்தி । யதோ நிரஸ்தஸமஸ்தபேதா ஸம்வித் அத ஏவ நாஸ்யா: ஸ்வரூபாதிரிக்த ஆஶ்ரயோ ஜ்ஞாதா நாம கஶ்சிதஸ்தீதி ஸ்வப்ரகாஶரூபா ஸேயம் ஸம்விதேவ ஆத்மா ॥

ஸ்ரீபாஷ்யம்.—

உத்பத்தி இல்லாத இந்த அநுபூதியானது தன்னிடத்தில் பேதத்தையும் ஸஹிக்கிறதில்லை. நாநாத்வவ்யாப்தமான உத்பத்திக்குவிருத்தமான அநுத்பத்தி அறியப்படுவதால். அநுத்பன்னமான வஸ்துவானது நாநாபூதமாகக்காணப்படவில்லை. பேதம் முதலியவைகளுக்கு அநுபாவ்யத்வமிருப்பதாலும் ரூபம் முதலியவற்றுக்குப் போல் அநுபூதி தர்மத்வம் ஸம்பவியாது. ஆகலால் அநுபூதியானது அநுபவ ஸ்வரூபமாக இருப்பதினாலேயே அநுபாவ்யமான வேறு ஒரு தர்மமும் இதற்கு இல்லை. எக்காரணத்தினால் இந்த ஸம்வித்தானது எல்லாபேதங்களையும் நிரஸிக்கும் ஸ்வாபவமுள்ளதோ.

அதனாலேயே இந்த ஸம்வித்தின் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறான ஆச்ரயனான ஜ்ஞாதாவான ஒருவன் இல்லை. ஆகையால் ஸ்வப்ரகாசரூபை

யான அந்தஸம்வித்தே ஆத்மா. அஜடமாக இருப்பதாலும் அநாத்மத்வ வ்யாபகமான ஜடத்வமானது ஸம்வித்தில் இல்லாமல் இருந்துகொண்டு அநாத்மத்வத்தையும்கூட ஸம்வித்திலிருந்து விலக்குகிறது.

சுருதப்ரகாசிகை—

பிறகு அவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அநேகத்வவ்யாவ்ருத்தியின் பொருட்டு ஸஜாதீயபேதத்தை நிரஸநம் செய்கிறார்— அநுத்பந்நேயம் என்று. வ்யாபகவிருத்தோபலப்தே:. நாநாத்வ ¶ வ்யாபகமான உத்பத்திக்கு விருத்தமான அநுத்பத்தி காணப்படுவதால் என்று பொருள். § வ்யாப்தியைக் காட்டுகிறார்— ந ஹி என்று. இந்த க்ரந்தத்திற்கு எது அநுத்பன்னமோ அது பலவகைப்பட்டதல்லாததாகக் காணப்பட்டிருக்கிறதென்று அர்த்தம சொல்வது பொருந்தாது. ப்ரஹ்மத்தத்தவிர்த்து வேறு ஒரு வஸ்துவும் அநுத்பன்னமாகவும் பலவகை பேதமில்லாததாகவுமிருப்பதாக மாயாவேதாந்திகளால் ஒப்புககொள்ளப்படாததால், எது அநாநாபூதமோ அது அநுத்பன்னமென்று சொல்லப்பட்டால் வ்யாபகஜாதிஸ்வருத்தியினால் ‡வ்யாப்யமான நாநாத்வ நிவ்ருத்தியானது சொல்லப்பட்டதாக ஆகாது. ஆகையால் இது அர்த்தம்.—எது நாநாபூதமோ அது அநுத்பன்னமாகக் காணப்படுகிறதில்லை. உத்பத்தியுள்ளதாகவே காணப்படுகிறது என்று உத்பத்திக்கு நாநாத்வ வ்யாபகத்வம் காண்பிக்கப்பட்டது. இந்த உத்பத்தி நிவ்ருத்தியினால் நாநாத்வ நிவ்ருத்தி என்பது அர்த்தஸித்தம். அன்றிக்கே, எவ்வாறு அக்நி இல்லாதது புகையுள்ளதாகக் காணப்படுகிறதில்லை என்று சொன்னால், நெருப்புள்ளதே புகையுள்ளதென்று சொல்லப்பட்டதாக ஆகுமோ அவ்வாறே இவ்விடத்திலும் அநுத்பன்னமான வஸ்து நாநாபூதமாகக் காணப்படவில்லை என்று சொன்னால் உத்பத்தியுள்ளதே நாநாபூதமென்று சொல்லப்பட்டதாக ஆகும். அதினால் உத்பத்தியானது வ்யாபிகை என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அநுபூதியானது நாநாவாக ஆகிறதில்லை—அநுத்பன்னமாதலால் எது நாநாபூதமோ அது உத்பத்தியுள்ளதாகக் காணப்பட்டிருக்கிறது. கடத்தைப்போல் என்று † வ்யதிரேக்யநுமானமானது, அநுபூதியைப் பக்ஷமாக்கிச்சொல்லப்பட்டது. ஆகாயம் முதலியதுகளில் வ்யபிசாரம் சொல்லமுடியாது ; அவைகள் உத்பத்தியுள்ளவைகளென்று வேதாந்திகளால் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் என்று கருத்து. இவ்வாறாக ஸஜாதீயபேதம் நிஷேதிக்கப்பட்டது. இந்த உத்பத்தி இல்லாமை என்கிற விஷயத்தையும் மற்ற விகாரங்களில்லாமை என்றும் விஷயத்தையும் நிரூபிப்பதற்காக பேதத்தையும் விகாராந்தரத்தையும் பக்ஷமாகச்செய்து, § அந்வய்யநுமானத்தைக்கூறுகிறார்— பேதாதீநாம் என்று. ஆதிசப்தத்தால் உத்பத்தி முதலியவைகள் விவக்ஷிக்கப்பட்டன. பேதம் முதலியவைகள் அநுபூதிதர்மங்களல்ல— அநுபாவ்யமாக இருப்பதால்— ரூபாதிவத் என்று. வ்யாவ்ருத்தி

---

¶ வ்யாபகம்—அதிக தேசத்தை வ்யாபித்திருக்கும் வஸ்து.

§ வ்யாப்தி—தவறாமல் வ்யாப்யமுள்ள இடத்தில் வ்யாபகவஸ்துவினிருப்பு.

‡ வ்யாப்யம்—வ்யாபகத்தைவிட ஸ்வல்பதேசத்தை அடைந்திருக்கிற வஸ்து.

† வ்யதிரேகி—வ்யதிரேக வ்யாப்தியுள்ளது, வ்யாபகமில்லாமல்போனால் வ்யாப்யம் இராது என்பது.

§ அந்வயி—அந்வய வ்யாப்தியுள்ளது வ்யாப்யமிருந்தால் வ்யாபகமிருந்தேதீரும் என்பது.

ரூபதர்மமும் இல்லை என்று உபபாதிக்கிறார்—அநேரzநுபூதே: என்று. அந்யோபி—வ்யாவ்ருத்தி ரூபோபி என்று கருத்து. அன்றிக்கே, விகாராகாரத்வஜடத்வ நிஷேதத்தால் நித்யத்வ ஏகத்வ ஸ்வயம்ப்ரகாசத்வ ரூபதர்மமுடையதாகும் என்றும் சங்கையை நீக்குவதற்காகவும் முற்கூறப்பட்ட நாநாத்வாதிகளை விலக்குவதற்காகவும் வ்யதிரேகியநுமாநத்தைக்கூறுகிறார்— அநேரநுபூதே: என்று அந்யோபி - நித்யத்வாதிரூபோபி என்று அர்த்தம். அநுபூதியானது வ்யாவ்ருத்திரூபதர்மத்தையுடையது அன்று. அநுபவஸ்வரூபமாக இருப்பதால், எது வ்யாவ்ருத்தி ரூபமான தர்மத்தையுடையதோ அது அநநுபூதியாகக்காணப்பட்டிருக்கிறது. 'கடம்முதலியதுபோல' என்று வ்யதிரேகி. வ்யாவ்ருத்திரூபமான தர்மத்தை பக்ஷமாக ஆக்கி அநுபூதியின் தர்மத்வாபாவம் ஸாத்யமாக ஆகுமேயாகில், அப்பொழுது @ அநுபாவ்யத்வம் ஹேது. 'யதாரூபாதி'என்று ஸபக்ஷம். இது அந்வயி. இவ்வண்ணம் ஸ்வகதபேதம நிரஸிக்கப்பட்டது. ஜ்ஞேயபேதம் முந்தியே நிரஸிக்கப்பட்டது.

"அத்ராயம் புருஷ: ஸ்வயம்ஜ்யோதிர்பவதி" இது முதலிய வேதாந்தவாக்யங்களில் ஆத்மாவுக்கு நித்யத்வஸ்வயம்ப்ரகாசத்வாதிகள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன, இந்த இடத்திலோவென்றால் ஜ்ஞானத்துக்கு நித்யத்வம் முதலியது உரைக்கப்படுகிறது அது எவ்வாறு பொருத்தமுள்ளதாக ஆகும் எனில் கூறுகிறார்— யத: என்று. நிர்தூத நிகிலபேதா - ஸகலபேதநிஷேதத்தினால் விஜாதீயபேதங்கூட நிரஸிக்கப்பட்டதாதலால் விஜாதீயபேதமான ஜ்ஞாதாவுக்கு மித்யாத்வம் ஸித்திப்பதால் அந்த ஜ்ஞாதா ஆத்மா அன்று. பின்னேயோ பரமார்த்தபூதமான ஜ்ஞானமே ஆத்மா—என்று அர்த்தம். அன்றிக்கே; வேதாந்தங்களால் ஆத்மாவுக்கு ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற ஸஜாதீய விஜாதீய ஸ்வகதநாநாத்வமில்லாமையானது ஸம்வித்துக்கே உபபன்னமாகிறது என்பதினால் அந்த ஜ்ஞானமே ஆத்மா என்று அர்த்தம். ஸ்வரூப என்று ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறானவனும் ஜ்ஞானத்துக்கு ஆச்ரயமாயுமிருப்பவனுமன்றோ ஜ்ஞாதா-அவனோ பரமார்த்தமாக இல்லை- ஸம்வித்ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறாக இருப்பதினாலேயே அபரமார்த்தமாதலால்; அவன் ஆத்மா அல்ல, ஸம்வித்தேதான் ஆத்மா என்று அர்த்தம். ஸ்வப்ரகாசரூபா ஸைவாத்மா என்று வேதாந்தங்களால் ஆத்மாவுக்கு ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற ஸ்வயம்ப்ரகாசத்வமானது ஸம்வித்துக்கு ஒட்டுவதால் அந்த ஸம்வித்தே ஆத்மா என்று அர்த்தம். அன்றிக்கே சூன்யத்வ சங்கா நிராஸத்திற்காக சொல்லப்பட்டிருக்கிற ஸ்வப்ரகாசரூபா என்கிற ஸ்வயம்ப்ரகாசத்வம் ஸ்வதந்த்ரஸாதகமாகவுமாகிறது என்று சொல்லுகிறார்—அஜடத்வாச்ச என்று. இது வ்யதிரேகி. ஸம்வித் ஆத்மா, அஜடத்வாத். எது ஆத்மாவன்றோ அதுஜடம் உதாஹரணம் கடம் முதலியது என்று. இதைவிவரிக்கிறார்— அநாத்மத்வ என்று. அநாத்மத்வவ்யாப்தம் - வ்யாப்தமென்பது கர்தரி க்தப்ரத்யயம். வ்யாபகமென்று அர்த்தம். ப்ராப்த: என்பதுபோல.

---

௩௩—வ—கஹம்ஜாநாமீதி ஜ்ஞாத்ருதா வ்ருத்திவிஷயா । ஜெநவ்ய ஸா ஹ்ராஸவிஷயா, ரஜதஜெதவ ஶுக்திஶகலஸ்ய, கந்ருஸ்ஜெதஃ ஸாதநி கத்ருகாரயொமாகஃ । கஜெதா உ௩ஜெஷ்யாரஸ்ஹிதத்ய ஜெவ ஹிஷ்டிஜெஉ௩ஷ்யகாரிவிஶிஷ்டவிஷாநாஹிரோநவகஃ ஜ்ஞாத்ருக

---

@ அநுபாவ்யம்—அநுபவிப்பதற்கு யோக்யம்.

प्रत्ययस्य । ज्ञातृत्वं हि ज्ञानक्रियाकर्तृत्वम् । तच्च विक्रि-
यात्मकं जडं विकारिप्रकृतिगुणाहंकारग्रन्थिस्थमविक्रिये साक्षिणि
चिन्मात्रात्मनि कथमिव संभवति । दृश्यधर्मत्वादेव रूपादिवदे-
व कर्तृत्वादेर्नात्मधर्मत्वम् । सुषुप्तिमूर्च्छादावहं-
प्रत्ययापायेऽप्यात्मानुभवदर्शनान्नात्मनोऽहंप्रत्ययगो-
चरत्वम् । कर्तृत्वे चाहंप्रत्ययगोचरत्वे चात्मनोऽभ्यु-
पगम्यमाने देहस्येव जडत्वपराक्त्वानात्मत्वादिप्रसङ्गो दुष्प-
रिहरः । अहंप्रत्ययगोचरतया कर्तृतया प्रसिद्धाद्देहात्
तत्क्रियाफलस्वर्गादेर्भोक्तुरात्मनोऽन्यत्वं प्रामाणिकानां
प्रसिद्धमेव ॥

**ஸ்ரீபாஷ்யம்.—**

அய்யா! "அஹம் ஜாநாமி" என்று ஜ்ஞாத்ருத்வம் அநுபவஸித்தம் அல்லவா? உத்தரம். இவ்வண்ணமல்ல, அது ப்ராந்தியால் தோற்றுவது, சிப்பித்துண்டுக்கு ரஜதத்தைபோல. அநுபூதிக்கு தனக்குள்ளேயே தன்னைக் குறித்து கர்த்ருத்வம் பொருந்தாதாகையால். ஆதலால் மநுஷ்யோஹம்என்று ஆத்மாவுக்கு அத்யந்தம் வெளிப்பட்ட மநுஷ்யத்வம் முதலிய தர்மங்களுடன் கூடியதான தேஹத்தில் ஆத்மா என்றும் அபிமானம் போல ஜ்ஞாத்ருத்வமும் ஸம்வித்தில் அத்யஸ்தமாக இருக்கிறது. ஜ்ஞாத்ருத்வமாவது ஜ்ஞாநக்ரியையைச் செய்தல். விகாரமடைவதாயும் ஜடமாயும் விகாரத்தை அடையும் திரவ்யமான அஹங்காரமுடிச்சுக்குள்ளிருப்பதாயுமுள்ள அந்த ஜ்ஞாத்ருத்வமானது விகாரசூன்யமாயும் தான் ஸம்பந்தப்படாமல் பார்த்துக்கொண்டிருக்கும் ஸாக்ஷியாயுமிருக்கிற சின்மாத்ர ஸ்வரூபியான ஆத்மாவிடத்தில்எவ்வாறு ஸம்பவிக்கும். ரூபம்முதலியதுபோல. கர்த்ருத்வம் முதலியதும் அநுபவாதீனமான ஸித்தியுள்ளதாக இருப்பதினாலேயேஆத்மாவின் தர்மமல்ல— தூக்கம் மூர்ச்சைமுதலிய அவஸ்தைகளில் அஹம் ப்ரத்யயம் முற்றிலுமில்லாமல் போயிருந்தபோதிலும் ஆத்மாநுபவத்தைக்காண்பதால் ஆத்மாவுக்கு அஹம் ப்ரத்யகோசரத்வம் கிடையாது. ஆத்மாவுக்கு கர்த்ருத்வமும் அஹம் ப்ரத்யயகோசரத்வமும் ஒப்புக்கொள்ளப்படுமோயாகில் தேஹத்தைப் போல் ஜடத்வம், $ பராக்த்வம், அநாத்மத்வம் முதலியதின் ப்ரஸங்கம் எவ்விதத்தாலும் பரிஹரிக்கமுடியாது. அஹம்ப்ரத்யக்ஷத்திற்கு கோசரமாயும் கர்தாவென்று ப்ரஸித்திபெற்றிருக்கிறதுமான தேஹத்தைக்காட்டிலும், அதின் செய்கையின் பலமான ஸ்வர்கம் முதலியதை அநுபவிக்கிற ஆன்மாவுக்கு அந்யத்வமானது ப்ராமாணிகர்களுக்கு ப்ரஸித்தமே.

$ பராக்த்வம்—அயலாருக்கு பிரகாசிப்பது, தனக்குத்தானே ப்ரகாசியாதது

**ச்ருதப்ரகாசிகை:—**

தர்கத்தினால் ஜ்ஞாத்ருத்வம் நிரஸிக்கப்பட்ட பிறகு ஆத்மாவுக்கு அஹம் ப்ரத்யய கோசரத்வமானது தன்னநுபவத்திற்கு ப்ரத்யக்ஷஸித்தமாதலால் அதை § சோதநம்செய்கிறார்—நநுச என்று. சகாரம் சோத்யஸமுச்சயத்தில். ப்ரதீதிஸித்தா - தன் அநுபவத்தால் ஏற்படுவது என்று அர்த்தம். இந்தவிஷயத்தில் மறுமொழி கூறுகிறார்— நைவம் என்று. அவ்வநுபவம் ப்ராந்தி என்று கூறுகிறார்—ஸாப்ராந்திஸித்தா என்று அநுபவ விஷயமாக பூர்வம் அறியப்பட்ட ரஜதத்தையானது எவ்வாறு சுக்திஜ்ஞாநபாதிதமானதால் ப்ராந்திஸித்தையாக ஆகிறதோ அவ்வாறு என்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார்— ரஜததேவ சுக்தி சகலஸ்ய என்று. ப்ரமத்திற்கு அவகாசம் கொடுப்பதின் பொருட்டு "சகல" சப்தம். உடையாமல் முழுசாக இருக்கிற சுக்திக்குப்ரமாஸ்பதத்வம் பொருந்தாதலால். அன்றிக்கே ஜ்ஞாத்ருத்வம் அறியப்படாநிற்கையில் அதில் ஜ்ஞாநாம்சத்தினுடைய பாரமார்த்தியத்திலும் கர்த்ரம்சத்தினுடைய அபாரமார்த்யத்திலும் த்ருஷ்டாந்தமாக "ரஜததேவ சுக்திசகலஸ்ய" என்று கூறப்பட்டது. அந்த இடத்தில் இதம்ம்சமானது பாரமார்த்தம். "ரஜதத்தையே அபரமார்த்தம" என்று ப்ராந்திஸித்தத்வத்தை உபபாதிக்கிறார்— அநுபூதேரிதி—அதினாலென்ன பயனென்றால் சொல்லுகிறார்— அதோ மனுஷ்ய என்று. காத்ருத்வஸம்பந்தத்தின் இன்மையை உபபாதிக்கிறார்—ஜ்ஞாத்ருத்வம் ஹி என்று. அன்றிக்கே ஜ்ஞாதருத்வமென்பது என்ன—ப்ரஹ்ம ஸ்வரூபபூதஜ்ஞாநத்துக்கு ஆச்ரயத்வமா? அல்லது அந்த:கரண க்ரியாரூபமான ஜ்ஞாநத்துக்கு ஆசரயத்வமா? என்று விகல்பத்தை அபிப்ராயப்பட்டு முதலாவது கல்பத்தை தூஷிக்கிறார்— அநுபூதே: என்று முற்கூறப்பட்டுள்ள யுக்திகளால் அநுபூதிக்கே பாரமார்த்யம் ஸித்தித்திருப்பதால் அந்த அநுபூதிக்கு ஜ்ஞாத்ருத்வமானது தன்னிடத்தில் கர்த்ருத்வமாக ஆகலாம்—அதுவோ வ்யாஹதமென்று அர்த்தம். கர்த்ருத்வம் ஆச்ரயத்வம். ஜ்ஞாத்ருத்வமானது ப்ராந்தர்களான புருஷர்களுடைய ப்ரதீதிஸித்தமாதலாலும் அத்பஸ்தம். ஆரோபிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார்— அத: என்று. சரீரத்திற்கு உத்பத்திமுதலியவைகளால் ஆத்மபின்னத்வம் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் "அத்யந்த பஹிர்பூத" என்று உரைக்கப்பட்டது. இதற்குமேல் தன்னைக்குறித்தது மாத்திரம கர்த்ருத்வம் ஒவ்வாது என்பதில்லை, பின்னையோ தான் பிறன் என்கிற பேதமின்றி கர்த்ருத்வமே அடியோடு ஒவ்வாதென்கிற அபிப்ராயத்தால் இரண்டாவது கோடியை தூஷிக்கிறார்—ஜ்ஞாத்ருத்வம்ஹி என்று. அதினாலென்னவென்றால் கூறுகிறார்— தச்ச என்று. விக்ரியாத்மகம - க்ரியைக்கு உத்பத்தியும் விநாசமும் இருப்பதுபற்றி க்ரியாச்ரயத்வமும் எப்பொழுதாவது ஏற்படுமாதலால் அது ஒரு விகாரமென்று அர்த்தம். ஜடம் அறியப்படுவது - அதினாலேயே விகரிக்கும் த்ரவ்யமான அஹங்காரமுடிச்சில் இருக்கிறது. ஜடத்வ விக்ரியாத்மகத்வ ஸாம்யத்தாலென்று கருத்து. க்ரந்தியாவது கட்டுத்தளராமலிருப்பதற்காகப் போடுகிற ஒருவிதமான முடிச்சு. அஹங்காரம், எல்லாப்ரமங்களுக்கும் மூலமாதலால் க்ரந்தி என்று சொல்லப்பட்டது. இதற்கு எதிர்தட்டான ரூபத்தைச் சொல்லுகிறார்— அவிக்ரியே என்று. ஸாக்ஷித்வத்தை ஒப்புக்கொண்டதினாலேயே ஜ்ஞாத்ருத்வமும் ஒப்புக்கொள்ளப்பட்டதாக ஆகிறதென்கிற சங்கைவரின், ஸாக்ஷித்வமும் ஜ்ஞானஸ்வரூபத்திற்கு ஒத்தது என்கிற அபிப்ராயத்தால் ஸாக்ஷிணி என்று

---

§ சோத்யம் அல்லது சோதனம்—வினா.

சொல்லப்பட்டது. அவித்யாநுபவஸ்வரூபத்வமே ஸாக்ஷித்வமென்பதனால் ஜ்ஞாநத்வத்திற்கு விரோதமில்லை என்று கருத்து. சின்மாத்ராத்மந் ஸ்வயம்ப்ரகாசமானதில் - ஜடமான ஜ்ஞாத்ருத்வமானது அஜடத்திற்கு ஸம்பவிக்கிறதில்லை என்று கருத்து. கர்த்ருத்வம் முதலியது ஆத்மதர்மமல்ல—த்ருச்யத்வ ஸித்தித்வாத் - ரூபாதிவத் என்கிற அநுமானத்தை அபிப்ராயப்பட்டுச் சொல்லுகிறார்— த்ருச்யத்வஸித்தித்வாதேவ என்று. கர்த்ருத்வாதே. என்கிற இடத்திலுள்ள ஆதிசப்தத்தால் அஹம்ப்ரத்யயகோசரத்வம் க்ரஹிக்கப்படுகிறது. பேதாதிகள் அநுபூதியின் தர்ம்மங்களாக ஆகாமையில் எது ஹேதுவோ அதினாலேயே என்பது ஏவகாராபிப்ராயம். அஹமர்த்தம் அல்லவா ஆத்மா; அதோடு ஸமாநாதிகரணமாக அறியப்படுகிற ஜ்ஞாதா. ஆத்மாவாக இருக்கலாமே என்றால் கூறுகிறார்—ஸுஷுப்திமூர்ச்சாதௌ என்று "நாஹகலு" இதுமுதலிய ச்ருதியின் ஆகாரத்தைக்கொண்டு அஹம்ப்ரத்யயம் போனபோதிலும் என்று உரைக்கப்பட்டது. ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் அஹம்ப்ரத்யயகோசரத்வம் இவைகளில்லை என்பதில் மூன்று வ்யதிரேக்யநுமானங்களை ப்ரஸங்கரூபமாகக்கூறுகிறார்— கர்த்ருத்வே என்று. "ஆத்மா ந கர்த்தா" "நசாஹம் ப்ரத்யயகோசர:" என்று, இரண்டு ப்ரதிஜ்ஞா வாக்யங்கள், அஜடத்வாத். ப்ரத்யக்த்வாத், ஆத்மத்வாத், என்று மூன்று ஹேதுக்கள். எது கர்த்தாவோ எது 'அஹமென்கிற ஜ்ஞாநத்திற்கு கோசரமோ அது ஜடமாகவும் பராக்காகவும் அநாத்மாவாகவும் காணப்படுகிறது. சரீரம் போலவென்று. அன்றிக்கே; ஆத்மா கர்த்தாவுமல்ல அஹம் ப்ரத்யயகோசரமுமல்ல. ஜடத்வாதிகளுக்கு ப்ரஸங்கம் வருவதால். தேஹத்தைப்போல் என்று. ஜடத்வம் பார்க்கப்படுவதாகவே இருப்பது, பராக்த்வமாவது பிறருக்குத்தோற்றுதல். ஆத்மத்வம் புருஷார்த்தங்களுக்கு ப்ரதிஸம்பந்தியாக இருத்தல். அல்லது தேஹத்தைக்குறித்து நியந்தாவாக வ்யாபித்தல். அவைகளின் அபாவம் அநாத்மத்வம். ஆதிசப்தத்தால் க்ஷயித்வம் முதலியது விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அஹம்ப்ரத்யயகோசரமான தேஹத்திற்கு அநாத்மத்வம் ஸித்தித்ததல்லன்றோ அஹம் ப்ரத்யயகோசரனை கர்த்தாவுக்கு அநாத்மத்வப்ரஸக்தி வருமெனில் கூறுகிறார்—அஹம்ப்ரத்யயகோசராத் என்று. க்ரியாபலங்களான ஸ்வர்கம் முதலியவைகளை அநுபவிக்கிறவனென்பதினால் தேஹத்தைக்காட்டிலும் வேற்றுமை ஸித்தித்தது. ப்ராமாணிகர்களுக்கு - சார்வாகர்களைத் தவிர்த்தவர்களுக்கு.

---

ததாऽஹம்ப்ரத்யயாஸ்ரயாத் ஜ்ஞாதுரபி விலக்ஷண: ஸாக்ஷீ ப்ரத்யகாத்மேதி ப்ரதிபத்தவ்யம் । ஸ சாவிக்ரியாநுபவஸ்வரூபஸ்யைவ ஸாக்ஷித்வம் ஜடோऽஹ்யஹங்கார: ஸ்வரூபதயா ந ஸாக்ஷித்வமர்ஹதி । த்ருஷ்டதயாऽஸ்ய த்ருஷ்ட்வாத்ஸ்ய ஜடஸ்ய ஸாக்ஷித்வகாரணம் ஸம்பவ: । லோகேऽபி ஸாக்ஷித்வம் ஸாக்ஷாஜ்ஜ்ஞாத்ருத்வமேவ ஹி ஸாக்ஷிதோऽஸ்ய த்ருஷ்டதயாऽஹிவ்யநக்தி । தத்ரோதாऽபம் "ஜாநாம்யஹம்" இதி ஹ்யர்த்த: । ஸ்வப்ரகாசாயா: ஸ்வாத்மநோऽபி தத்ஸாக்ஷித்வம் ஜடாஹங்காரேணாஸாக்ஷித்வேந ஸித்தி ஸம்பவ:, ஸவிகாரவிகாராஸாக்ஷித்வகாரணஸ்ய தத்ஸாக்ஷித்வகத்வஸம்பந்தாத் । ஜாட்யகாரணதீஷ்டாஸ்யேக்ஷணிகீர்த்தாநாம் தத்ஸாக்ஷித்வமேவ நாபி காதமேந ஸ்வப்ரகாசோ ஹி த்ருஷ்ட்வா: । யத: "அஹம் ஜாநாமீ"தி ஜ்ஞாத்ராऽஹம்ப்ரத்யயஸித்தார்த்தோ ந ஸாக்ஷாத்காரயிதா

𑌧𑌰𑍍𑌮𑌃 । 𑌅𑌤 𑌏𑌵 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑍋𑌰𑍍𑌨𑌾𑌨𑍍𑌵𑍇𑌤𑌿 । 𑌤𑌤𑍍𑌰 𑌹𑍍𑌯𑌹𑌮𑌰𑍍𑌥𑌾𑌪𑌗𑌮𑍇𑌽𑌪𑌿 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌾𑌨𑍁𑌭𑌵𑌮𑌾𑌤𑍍𑌰𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌭𑌾𑌸𑌤𑍇 । 𑌅𑌤 𑌏𑌵 𑌸𑍁𑌪𑍍𑌤𑍋𑌤𑍍𑌥𑌿𑌤𑌃 𑌕𑌦𑌾𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌮𑌪𑍍𑌯𑌹𑌂 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 𑌪𑌰𑌾𑌮𑍃𑌶𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑍋 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑌮𑌸𑍍𑌤𑌭𑍇𑌦𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍈𑌕𑌰𑌸𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌂𑌵𑌿𑌦𑍇𑌵 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌜𑍍𑌞𑍇𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑍂𑌪𑌵𑌿𑌵𑌿𑌧𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌭𑍇𑌦𑌾 𑌵𑌿𑌵𑌰𑍍𑌤𑌤 𑌇𑌤𑌿 𑌤𑌨𑍍𑌮𑍂𑌲𑌭𑍂𑌤𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌬𑌰𑍍𑌹𑌣𑌾𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧𑌬𑍁𑌦𑍍𑌧𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌕𑌤𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾 𑌆𑌰𑌭𑍍𑌯𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 ॥

𑌇𑌤𑌿 𑌮𑌹𑌾𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑌕𑍍𑌷𑌃 ॥

---

ஸ்ரீ பாஷ்யம் —

அவ்வாறே ஸாக்ஷியான ப்ரத்யகாத்மா அஹமர்த்தமான ஜ்ஞாதாவைக் காட்டிலும் விலக்ஷணன் என்று அறியத்தக்கது. இவ்வண்ணம் விகாரமில்லாத அநுபவஸ்வரூபத்துக்கே அபிவ்யஞ்ஜகமாக இருக்கிற அஹங்காரமானது ஜடமாக இருந்தபோதிலும், தன்னிடத்திலிருப்பதாக அதை அபிவ்யஞ்ஜநம் செய்கிறது. அபிவ்யங்க்யங்களான வஸ்துக்களைத் தன்னிடத்திலிருப்பதாகக்காட்டுவது அபிவ்யஞ்ஜகங்களுக்கு ஸ்வபாவம். கண்ணாடி ஜலம் §கண்டம் முதலியவைகள் முகம், சந்திரபிம்பம், கோத்வம், முதலியவற்றைத் தன்னிடத்திலிருப்பதாகக்காட்டுகின்றன. "அஹம்ஜாநாமி" என்கிற இந்த ப்ரமமானது அதனால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. ஸ்வப்ரகாசையான அநுபூதிக்கு எவ்வாறு தன்னால் அபிவ்யங்க்யமாயும் ஜடரூபமாகவுமிருக்கிற அஹங்காரத்தால் அபிவ்யங்க்யத்வம் கூடுமென்று ஆக்ஷேபியாதே. சூர்யனுடைய கிரணஸமூஹங்களால் அபிவ்யங்க்யமான கரதலத்திற்குச்சூர்யகிரணாபிவ்யஞ்ஜகத்வம் காணப்படுவதால். ஜன்னலின் சந்துவழியாக வருகின்ற சூர்யகிரணங்களுக்கு அவைகளால்அபிவ்யங்க்யமான கரதலத்தாலேயும் ஸ்புடதரப்ரகாசம் காணப்பட்டிருக்கிறதன்றே. யாதொரு காரணத்தினால் "அஹம்ஜாநாமி" என்கிற ப்ரதீதியில் ஜ்ஞாதாவான இந்தஅஹமர்த்தமானது சின்மாத்ராத்மாவுக்கு பாரமார்த்திகதர்மமன்றே ; அக்காரணத்தினாலேயே ஸுஷுப்தி முக்திகளில் அந்வயிக்கிறதில்லை. அந்த ஸுஷுப்தி முக்திகளில் அஹம் என்கிற ஆகாரமில்லாமல் ஆத்மாவானது ஸ்வாபாவிகமான அநுபவமாத்ரரூபமாகத் தோற்றுகிறது.

அதினாலேயே தூங்கி எழுந்திருந்தவன் "சிலவேளையில் என்னையும்நான் அறிந்திலேன்." என்று சொல்லுகிறான். ஆகையால் உண்மையாகவே ஸமஸ்த

---

§ கண்டம்:— ஒரு கொம்பு முறிந்தகாளை.

பேதவிகல்பங்களற்றதான நிர்விசேஷ சின்மாத்ரைகரஸ கூடஸ்த நித்யஜ்ஞானமே ப்ராந்தியினால் ஜ்ஞாத்ருஜ்ஞேயஜ்ஞானரூபமான பற்பல விசித்ர பேதங்களுள்ளதாகத்திரிந்து தோற்றுதலால் அதற்கு மூலபூதமான அவித்யையைப் போக்குவதற்காகநித்யசுத்த புத்தமுக்தஸ்வபாவ ப்ரம்மாத்மைகத்வ வித்யையை அறிவிக்கும்பொருட்டு எல்லாவேதாந்தங்களும் ஆரம்பிக்கப் படுகின்றன— என்று. (மஹாபூர்வபக்ஷம் முற்றிற்று)

---

ச்ருதப்ரகாசிகை—

ஆத்மபின்னமான அஹங்காரத்திற்கு கர்த்ருத்வம்வரின் எவ்வாறு ஆத்மாவுக்கு ஸம்ஸாரபோக்த்ருத்வம் என்கிற சங்கையானது சரீரப்ரதிபந்தியினால் நிரஸிக்கப்பட்டது. ஸ்வர்காதிகளை அனுபவிக்கிறவனுக்கு ஆத்மத்வம் ஸித்தமாகில் ஜ்ஞாதாவாகவே ஆத்மா இருக்கவேண்டுமெனில் கூறுகிறார்— தது: என்று. சரீரத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு பட்டதென்று ஏற்றுக்கொள்ளுதல் ப்ரமாணபலத்தாலன்றோ ஒப்புக்கொள்ளப்படுகிறது. அவ்வாறே ஜ்ஞாதாவும் விலக்ஷணனாக ப்ரமாணஸித்தனாக இருப்பதால் ஒப்புக்கொள் ளத்தக்கதென்று அர்த்தம். அன்றிக்கே, அப்ராமாணிகமான அஹமப்ரத்யயகோசரமாக இருத்தலாலன்றோ சரீரத்திற்கு அநாத்மத்வம் முதலியது ஏற்படுகிறது. ப்ராமாணிகமான அஹம்ப்ரத்யயகோசரத்திற்கு எவ்வாறு அநாத்மத்வம் முதலியது எனில் சொல்லுகிறார்—அஹம்ப்ரத்யயகோசராத் என்று. தேஹத்திற்குஅப்ராமாணிகாஹம்ப்ரத்யய கோசரத்வம் ப்ரமாணபாதத்தாலேயேயன்றோ.அறியப்படுகிறது. இவ்வாறு கர்மபலத்தை அனுபவிக்கிறவனும் § ஔபாதிகாகாரமுள்ளவனுமான ஜ்ஞாதாவுக்கு ஆத்மத்வம் ப்ரமாணத்தால் பாதிக்கப்பட்டிருக்குமேயாகில் ஆத்மாவுக்கு அதைவிட வேற்றுமை ஒப்புக் கொள்ளத்தக்கதென்று அர்த்தம். ஆதலால் ப்ராமாணிகாப்ராமாணிக * விபாகமின்றி அஹம்ப்ரத்யயகோசரத்வமாத்ரமே அநாத்மத்வஸாதகமென்று கருத்து. அவிக்ரியமான ஆத்மாவுக்கு எவ்வாறு ஜ்ஞாத்ருத்வ ஸம்பவமெனில் கூறுகிறார்— ஏவம் என்று. அன்றிக்கே, ஜ்ஞாத்ருத்வம் அஹங்காரமுடிச்சிலுள்ளதென்று முந்தியே கூறப்பட்டது. எவ்வாறு அஹங்காரத்திற்கு ஜ்ஞாத்ருத்வம ஸம்பவிக்குமெனில் கூறுகிறார்—ஏவம் என்று. அஹங்காரத்திற்கு இந்த ஸம்வித்தைக்குறித்து ஆதாரமாக இருத்தல் அபிவ்யஞ்ஜகத்வ ப்ரயுக்தமென்று கருத்து. அஹங்காரம் அபிவ்யஞ்ஜகமாக இருக்கட்டும், எவ்வாறு இதற்குத்தன்னை ஆச்ரயித்ததாகக் காட்டிக்கொடுத்தல் எனில் கூறுகிறார்— ஆத்மஸ்ததயா என்று. ஸ்வபாவசப்தத்திற்கு $ ஔத்ஸர்கிகம் என்று அர்த்தம். எங்கேயாவது ஓரிடத்தில் ப்ரமாணபாதம் வருமேயாகில் அவ்வாறு அல்லவென்று கருத்து. தர்பணேதி. தன்னிடத்திலிருப்பதாக அபிவ்யஞ்ஜநம் தர்பணத்வப்ரயுக்தமல்ல, ப்ரதிபிம்பத்வப்ரயுக்தமுமல்ல, அபிவ்யஞ்ஜகத்வமாத்ரப்ரயுக்தமென்று காண்பிப்பதற்காக கண்டாதிகளையும் எடுத்தது. ஆதிசப்தத்தால் முண்டம் முதலியது. இவ்வண்ணமாக ஸம்வித்துக்கு ஜ்ஞாத்ருத்வாவபாஸமானது வ்யங்க்ருவ்யங்க்யபாவத்தால் உண்டுபண்ணப்பட்டதென்று சொல்லுகிறார்-ந்த்க்ருத:என்று. ஜடத்திற்கு அபிவ்யஞ்ஜகத்வம் தகுதியுள்ளதாக ஆகாது. ஸ்வப்ரகாசவஸ்துவுக்கு மற்றொன்றினால்காட்டப்படுதலும் அயுக்தம்-ஸம்வித்தினால்அபிவ்யஞ்ஜிக்கத்தக்க-வஸ்துவுக்கு விசேஷித்து ஸம்விதபிவ்யஞ்ஜகத்வம் அயுக்தமென்கிற இந்தஆசங்கையை தானே எடுத்துக்காட்டி நிரஸநம்செய்கிறார்-ஸ்வப்ரகாசாயா:

---

§ ஔபாதிகம்— உபாதியால் ஏற்படுகிறது. * விபாகம்—பிரிவு.
$ ஔத்ஸர்கிகம்—ஸாமாந்யம்.

என்று. எதனால் என்று சொல்லுகிறார்— ரவிகர என்று. கரதலத்திற்குக்கிரணப்ரபஞ் ஜகத்வம எங்கே காணப்பட்டிருக்கிறது எனில் கூறுகிறார்— ஜாலக என்று. இவ்வாறாக ஜ்ஞாத்ருத்வத்திற்கு அபாரமார்த்திகத்வம் கூறப்பட்டது. இதையே பரமார்த்தவஸ்து பாஸிக்கும் தருணத்தில் தோன்றாமையை விளக்குவதினால் உபபாதிக்கிறார்— யத: என்று. இதினால் "அஹம்ப்ரத்யயமானது. அழிந்துபோனபோதிலுங்கூட" என்கிற முற்கூறப்பட்ட அர்த்தம் விவரிக்கப்பட்டதாக ஆகிறது. "யத:" என்று ஸாத்யமே ஹேதுவாக நிர்தேசிக்கப்பட்டிருக்கிறது. 'அக்நிமத்த்வேந தூமவத்த்வம் என்பதுபோல. முக்தியோடு சேர்த்துச்சொல்லப்பட்டிருப்பதினால் ஸுஷுப்தியிலும் அஹம்ப்ரத்யயமில்லாமைக்கு ஆகம ப்ரமாணாதாரம் ஸூசிப்பிக்கப்பட்டது. அப்பொழுது எவ்வாறுதோற்றுகிறதெனில் கூறுகிறார்— ந ஹி என்று. "நாஹகல்வயமேவம் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மி" என்று தூக்கவிஷயமான ச்ருதி. "அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம், விமுச்ய நிர்மமஶ்ஶாந்தோ ப்ரஹ்மபூயாயகல்பதே" (அஹங்காரம், பலம், தர்பம் காமம் க்ரோதம், பிறரிடத்தினின்று பொருளைப் பெற்றுக்கொள்ளுதல், இவைகளை விட்டு என்னுடையதென்கிற எண்ணமில்லாதவனும் ஒழிவுள்ளவனுமான மனிதன் ப்ரஹ்மபாவத்தைப் பெறுவதற்குத் திறமையுள்ளவனாக ஆகிறான்)— என்று முக்திவிஷயமான ஸ்ம்ருதி. "மஹாபூதாந்ய ஹங்காரோ புத்திரவ்யக்தமேவச" என்று க்ஷேத்ரத்திற்குள் அடக்கமும் அஹங்காரத்திற்கு சொல்லப்படுகிறது. அஹங்கார விமூடாத்மா கர்தாஹமிதி மன்யதே" என்று. அதற்கு ப்ராந்திஸித்தத்வமும் சொல்லப்படுகிறது. ஹி சப்தமானது ச்ருதிஸ்ம்ருதிப்ரஸித்தியைக் காட்டுவதற்காக. ஸுஷுப்தி விஷயமான ச்ருதிமாத்ரமல்ல, பராமர்சமும் அவ்வாறு இருக்கிறதென்று சொல்லுகி[illegible]-- அத ஏவ என்று. அத ஏவ என்று ஸாத்யத்தை ஹேதுவாக பராமர்சித்திருக்கிறார். [illegible]பஸாதநங்களுக்கு விபரீத நிர்தேசம் எவ்வாறு என்றால்— இவ்வாறாக; ஜ்ஞப்தியில் [illegible] ஸாத்யமோ அது உத்பத்தியில்ஸாதனம். எது உத்பத்தியில் ஸாதநமோ அது ஜ்ஞப்தியில் ஸாத்யம். ஆகையால் அக்நி இருப்பதினாலேயேயன்றோபுகையின் உத்பத்தி என்பதுபோல. உத்பத்தியில் ஹேதுத்வத்தை அபேக்ஷித்து "அத ஏவ" என்று சொல்லப்பட்டது. அதினால் ப்ரஸ்துதபூர்வ வ்ருத்தத்வலிங்கத்துக்கு என்னவெனில் கூறுகிறார்— தஸ்மாத் என்று. தஸ்மாத் என்கிற இந்த பதத்தினால் "யதப்யாஹு: அசேஷ விசேஷ" என்று தொடங்கி சொல்லப்பட்டிருக்கிற ப்ரமாண தர்க்கங்களால் ஸ்வமதோபபாதனம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. நிரஸ்த ஸமஸ்தபேதவிகல்பேதி. பேதவிகல்பசப்தத்தினால் ஜ்ஞாத்ருஜ்ஞேயாதி பேதத்திற்கு அவாந்தரங்களானபற்பல பேதங்கள் விவக்ஷிக்கப்பட்டிருக்கின்றன. நிர்விசேஷசப்தத்தினால் ஸ்வகதநித்யத்வாதிபேதத்திற்கு நீக்குதல் ஏற்படுகிறது. எதனாலென்றால் சொல்லுகிறார்—சிந்மாத்ரைகரஸ என்று. சிந்மாத்ரமாகஇருப்பதால் என்றுஅர்த்தம். இதனால்சூன்யத்வத்திற்கு விலக்கும் ஏற்பட்டது. கூடஸ்தம்— விகாரமில்லாதது. அல்லது, எல்லாத்தோற்றங்களுக்கும் ஆதாரம். நித்யஸம்விதேவேதி சிந்மாத்ரசப்தம், ஸ்வயம்ப்ரகாசத்வபரம். ஸம்வித் என்கிற சப்தம விசேஷ்ய பரம என்பதினால் பௌநருக்த்யமில்லை. சிந்மாத்ரத்திற்கு எவ்வாறு பேதஸம்பவம் எனில் கூறுகிறார்—ப்ராந்த்யா என்று. ப்ராந்த்யா விவர்ததே என்கிற நிர்தேசமானது ¶ கரிகலப: என்கிற நிர்தேசம் போல. சத்தம்—

---

¶ கரிகலப:—யானைக்குட்டி - கலப; என்கிற பதமே யானைக்குட்டியை உணர்த்தும் தன்மை வாய்ந்திருக்க கரிபதம் ப்ரயோஜநமற்றதாக இருந்துகொண்டு கலப பதத்தின் விசிஷ்ட சக்தியைக் குறைத்து விசேஷ்யாம்சமான குட்டி என்கிற அர்த்தத்தை

அவித்யையினின்று விடுபட்டது. புத்தம் - ஸ்வயம் ப்ரகாசம். முக்தம், வாஸ்தவமாக பேததர்சனம் ஜன்மமுதலியதில்லாதது. இப்படிப்பட்ட ப்ரஹ்மாத்மைகத்வ வித்யாப்ராப்தியின்பொருட்டு எல்லா வேதாந்தங்களும் ஆரம்பிக்கப்படுகின்றன வென்று அர்த்தம். வேதாந்தங்களுக்கு ஆரம்பணீயத்வமாவது, அவைகளின் விசாரங்களுக்கு ஆரம்பணீயத்வம். "ஸர்வே வேதாந்தா ஆரப்யந்தே" என்பதற்கு 'யதப்யாஹு:' என்கிற பூர்வ வாக்யத்தோடு அன்வயம். ப்ரஹ்மமீமாம்ஸா சாஸ்திரம் ஆரம்பிக்கத்தகாததா? ஆரம்பிக்கத் தகுதியுள்ளதா? என்கிற விசாரத்தில் பந்தம் பரமார்த்தமாக இருப்பதுபற்றி அது ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தகாததாதலால் ஜ்ஞானத்தை உபாயமாகச்சொல்லும் வேதாந்த வாக்யவிசாரரூபமான சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதில்லையென்று பூர்வபக்ஷத்தைச்செய்து பந்தம் மித்யையானதால் ஜ்ஞானமாத்ரத்தினால் நிவர்த்யத்வம் அதற்கு ஸம்பவிக்கக்கூடுமாதலால் ஜ்ஞானத்தை அபேக்ஷித்து வேதாந்த விசாரரூபமான சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதென்றல்லவோ பரஹ்மஜ்ஞானபக்ஷத்தில் முதல் அதிகரணத்தின் அர்த்தம் சிக்ஷிக்கப்பட்டது. ஆகையால் பந்தம் மித்யையாக இருப்பதால் ஜ்ஞானம் ஒன்றினால் மாத்திரம் அதற்கு நிவர்த்திக்கத்தக்கதன்மை ஸம்பவிப்பதால் ஜ்ஞானபிரதானமான சாஸ்திரத்துக்கு கர்மவிசாரம் பூர்வவிருத்தமாகாதென்று சொல்லப்பட்டதாக ஆகிறதென்று வைஷம்யம். உபாயம் ஆத்மைகத்வ விஜ்ஞானம். உபேயம் நிர்விசேஷ சிந்மாத்ர பிரஹ்மம். நிவர்த்யம் மித்யாபூதம், என இம்மூன்றும் கர்மவிசாரத்தை அபேக்ஷியாததென்று முன்பு ஸவிஸ்தாரமாக உபபாதிக்கப்பட்டது. அது நிகமனக்ரந்தத்தால் சுருங்கச் சொல்லப்பட்டதாக ஆகிறது.

மகா பூர்வபக்ஷம் முற்றிற்று.

---

மாத்திரம் உணர்த்தும்படி செய்கிறது. இதற்கு ப்ரமாணம் சாஸ்திரகாரர்கள் வசனம். அதாவது—"விசிஷ்டவாசகாநாம் சப்தாநாம் ஸதிவிசேஷணே விசேஷ்யமாத்ரபர்யவஸாயித்வம்" என்று. இதற்குப்பொருள்—விசேஷணத்துடன் கூடின விசேஷ்யத்தைத் தானாகவே உணர்த்தும் தன்மைவாய்ந்த சப்தங்களுக்கு விசேஷணவாசகபதமும் ப்ரயோகிக்கப்பட்டால் அப்பொழுது தன்னால் உணர்த்தத்தக்க விசிஷ்டார்த்தத்தில் ஏகதேசமான விசேஷணாம்சத்தைவிட்டு விசேஷ்யத்தைமாத்திரம் போதிக்கும் தன்மை ஏற்படுகிறது.

𑌮𑌹𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌃 ॥

𑌤𑌦𑌿𑌦𑌮𑍌𑌪𑌨𑌿𑌷𑌦𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌰𑌣𑍀𑌯𑌤𑌾𑌹𑍇𑌤𑍁𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌰𑌹𑌿𑌣𑌾𑌮𑌨𑌾𑌦𑌿𑌪𑌾𑌪𑌵𑌾𑌸𑌨𑌾𑌦𑍂𑌷𑌿𑌤𑌾𑌶𑍇𑌷𑌶𑍇𑌮𑍁𑌷𑍀𑌕𑌾𑌣𑌾𑌮𑌨𑌧𑌿𑌗𑌤𑌪𑌦𑌵𑌾𑌕𑍍𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌤𑌦𑌰𑍍𑌥𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌸𑌕𑌲𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑌦𑌿𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌰𑍂𑌪𑌸𑌮𑍀𑌚𑍀𑌨𑌨𑍍𑌯𑌾𑌯𑌮𑌾𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌂 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾𑌸𑌹𑌵𑌿𑌵𑌿𑌧𑌕𑍁𑌤𑌰𑍍𑌕𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌮𑌿𑌤𑌿 𑌨𑍍𑌯𑌾𑌯𑌾𑌨𑍁𑌗𑍃𑌹𑍀𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌸𑌕𑌲𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌭𑌿𑌰𑌨𑌾𑌦𑌰𑌣𑍀𑌯𑌮𑍍 ॥

**ஸ்ரீபாஷ்யம்—**

கீழ்கூறப்பட்டுள்ள இவ்விஷயம், உபநிஷத்துக்களால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற பரமபுருஷனால் வரிக்கத்தக்க தன்மைக்கு ஹேதுவான குணவிசேஷங்களில்லாதவர்களாயும் அநாதியான பாபவாஸனையினால் கெடுக்கப்பட்ட முழு அறிவுடையவர்களாகவும் பதவாக்கியங்களுடைய ஸ்வரூபத்தையும் அவைகளால் உணர்த்தப்பட்டுள்ள அர்த்தங்களின் உண்மையையும் ப்ரத்யக்ஷம் முதலான ஸகலப்ரமாணங்களின் போதநஸ்வரூபத்தையும் அவைகளுக்கு அங்கங்களான சிறந்த ந்யாயமார்க்கங்களையும் அறியாதவர்களுமான சில துர்வாதிகளுடைய விகல்பத்தை ஸஹியாததும் ஸாரமற்றதாக இருப்பதுமான பற்பல குதர்க்கங்களால் கல்பிதமென்று நியாயங்களால் உதவிபுரியப்பட்டிருக்கிற ப்ரத்யக்ஷம் முதலிய எல்லாப்ரமாணங்களுடைய போதநக்ரமத்தையும் உண்மையையும் அறிந்தவர்களால் ஆதரிக்கத்தக்கதல்ல.

**ச்ருதப்ரகாசிகை.—**

பிறகு,முந்தி நடந்தேறிய கர்மவிசாரத்திற்கு விரோதியான வஸ்துஸாமர்த்யத்தை நிரஸிப்பதற்காக அன்யனால் சொல்லப்பட்டிருக்கிற உபாயங்களுக்கும் உபேயங்களுக்கும் நிவர்திக்கத்தக்கவைகளுக்கும் மூலம் ப்ரமாணதர்காபாஸம் என்பதை ப்ரதிஜ்ஞை செய்கிறார்- ததிதம்என்று. தமமால் அபிமானிக்கப்பட்டிருக்கிற அவைகளுககேப்ரமாணதர்க்கங்களின் பொருத்தத்தையும் சுருக்கமாக ப்ரதிஜ்ஞை செய்கிறார். அன்யர்கள் அனேக சாஸ்திரங்களை அறிந்தவர்களாகவும் அநேக க்ரந்தங்களை இயற்றினவர்களாகவுமிருந்த போதிலும் அவர்களுக்கு ஜ்ஞானமார்க்கத்தில் தவறுதல் வாராதென்கிற சங்கையையும் ஸரியான ஜ்ஞானமுண்டாவதற்கு ஹேதுவான காரண ஸமுதாயமில்லாமையைக்காட்டிக்கொண்டு வ்யங்க்யமாக பரிஹரிக்கிறார்—ததிதம் இதுமுதலியதால். பரம§புருஷசப்தத்தால் உபேயத்தையும், ¶ வரணீயதா'இது முதலியதால் உபாயத்தையும்'அநாதி' இது முதலியதால்

§ புருஷன்—புரங்களில் - சரீரங்களில் சேதே - வஸிக்கிறவன்.

¶ வரணீயதா—வரிக்கத்தக்க தன்மை.

நிவர்திக்கத்தக்கதையும் ☫ 'அநதிகத' இது முதலியதால் அன்யனுடைய பக்ஷம் மூலமில்லாதது என்பதையும், "ந்யாயாநுக்ருஹீத" இதுமுதலியதால் தன் பக்ஷம் மூலமுள்ளது என்பதையும், அர்த்தாத் அநேகவித்வான்களின் அங்கீகாரத்தையும் ப்ரதிஜ்ஞை செய்கிறார். "த்ரிதம்" என்பதனால். அடுத்தவாக்கியத்தில் ப்ரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதும் அன்யனால் கூறப்பட்டிருக்கிறதுமான உபாயம், உபேயம், நிவர்த்யம், இவை மூன்றும் சொல்லக்கருதப்பட்டது. "ஔபநிஷத பரமபுருஷ" சப்தத்தால் "தந்த்வௌபநிஷதம புருஷம் விருச்சாமி" என்கிற ச்ருதிவாக்யத்தை நினைக்கச்செய்கிறார். இதனால் நமக்கு இஷ்டமான ப்ரமாண, ப்ரமேய, விசேஷ ஸம்பந்தமானது ச்ருதியினாலேயே ஸ்பஷ்டமென்று ஸூசிப்பிக்கிறார். § 'பரம' சப்தத்தினால் ஈசுவரனைவிட வேறு தத்வமில்லை என்பது கூறப்பட்டது. "வரணீயதா ஹேது குணவிசேஷ விரஹிணம்" என்பதனால் "யமேவைஷ வ்ருணுதே தேநலப்ய:" என்று தனக்கு இஷ்டமான உபாயவிசேஷத்தைக்கூறுதல் பலித்தது. இந்த பதத்தினால் அநேகசாஸ்திரங்களை அறிந்தவர்களும் அநேக க்ரந்தங்களை இயற்றினவர்களுமான வேதாந்திகளுக்கு ப்ரம்ம ஸம்பவிக்கலாமென்பது பொருந்தாது என்கிற சங்கையும் பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது. சிறந்த சாஸ்திரார்த்தஜ்ஞாநோத்பத்திக்குக் காரணமாக இருக்கும் பதார்த்தங்களுக்குள் பகவத்பக்தியும் உள்ளடங்கியதால் அதில்லாத சாஸ்திரப்பயிற்சியானது தகுந்த ஜ்ஞாநகாரணமாகாது. இதில் ப்ரமாணம் "யஸ்யதேவே பராபக்திர்யதாதேவே ததாகுரௌ" இது முதலிய ச்ருதி. ஸ்ம்ருதியும் "வித்யாராஜந் நதேவித்யா மமவித்யாநஹீயதே. வித்யாஹீநஸ்தமோத்வஸ்தோ நாபிஜாநாஸி $கேசவம, (ஹேராஜாவே! உம்முடைய * வித்யை வித்யை அன்று, என்னுடைய வித்யை குறைவில்லாதது. வித்யை இல்லாமல் தமோகுணத்தினால் ஜ்ஞாநமழிந்தவராகி கேசவனை அறிகிறீரில்லை) த்ருதராஷ்டரர்—காவல்கணே தே கா வித்யா யா தே வித்யா @ ஜநார்தநே - யயா த்வமபிஜாநாஸி ¶ த்ரியுகம் மதுஸூதநம் (கவல்கணகுமார! ஸஞ்ஜய! ஜநார்தனன்விஷயத்தில் எந்த வித்யை உனக்கு இருக்கிறதோ, எதனால் ஷாட்குண்யபரிபூர்ணனை மதுஸூதனனை அறிகிறாயோ, அப்படிப்பட்ட வித்யை உனக்கு எது இருக்கிறது? ஸஞ்ஜயர்— "மாயாம் ந ஸேவே பத்ரந்தே ந வ்ருதா தர்மமாசரே| சுத்த பாவம் கதோ பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்தனம்"; (நான் கபடத்தை ஆசரிக்கிறதில்லை. உமக்குமங்களம் உண்டாக

---

☫ அநதிகத—அறியப்படாதது.

§ பரம—எதனைக்காட்டிலும் பர: -மேலானவன், மா-இல்லையோ, அவன்-ஸர்வேசுவரன் என்று அர்த்தம்.

$ கேசவன்—அழகிய கேசங்களை உடையவன். அல்லது க:ப்ச -ஈ:ப்ச கேசௌ ப்ரஹ்மருத்திரர்கள் - தௌவஹதி அவ்விருவர்களையும் வஹிக்கிறவர், அந்தர்யாமியாக இருந்துகொண்டு அவ்விருவர்களையும் முறையே உலகங்களை ஸ்ருஷ்டிப்பதிலும் ஸம்ஹரிப்பதிலும் ஏவுகிறவர்.

* வித்யை—புருஷார்த்தஸாதநஜ்ஞாநம். அன்றிக்கே புருஷார்த்தங்கள் இவைகள் என்று அறிதல்.

@ ஜநார்தனன்—ஜநை: அர்த்யதே—ஜநங்களால் (மோக்ஷத்திற்காக) வேண்டப்படுகிறவர். அல்லது ஜனர்கள் என்கிற அஸுரர்களை நாசஞ்செய்தவர். அல்லது பிறப்பை நாசஞ்செய்பவர், அதாவது மோக்ஷத்தைக்கொடுப்பவர்.

¶ த்ரியுகன்—மூன்று இரட்டை குணங்களுள்ளவன் அவைகளாவன—ஞானம் சக்தி, பலம்-ஐச்வர்யம், வீர்யம்-தேஜஸ்.

வேண்டும். வீணான தர்மத்தை ஆசரிக்கிறதில்லை. பக்தியினால் சுத்தமான சித்தத்தை அடைந்தவனாக சாஸ்திரத்தினால் ஜநார்தனனை அறிகிறேன் என்றபடி)" இந்த விடத்தில் "... "யா சுத்தபாவம் கத, சாஸத்ராத் வேத்மி ஜநார்தநம்" என்றதனால் உள்ளபடி "..." தத்வார்த்தஜ்ஞாநோதயமானது பக்தியை அபேக்ஷித்திருக்கிறதென்பது ஸித்தம். "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மதுஸூதந: । ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ்ஸவை மோக்ஷார்த்த சிந்தக: । பச்யத்யேநம் ஜாயமாநம் ப்ரஹ்மா ருத்ரோதவாபுந: । ரஜஸா தமஸா சாஸ்யமாநஸம் ஸமபிப்லுதம். (ஜநிக்கும்பொழுது எந்த ஜீவனை மதுஸூதனன் கடாக்ஷிக்கிறானோ அவன் ஸாத்விகனென்று அறியத்தக்கவன். அவனே மோக்ஷார்த்தத்தை சிந்திப்பவன். ஜநிக்கும்பொழுது இந்த ஜீவனை ப்ரஹ்மாவோ, ருத்திரனோ, பார்ப்பார்களேயாகில் அவனுடையமனதானது ரஜோகுணத்தினாலும் தமோகுணத்தினாலும் கவரப்பட்டுவிடுகிறது) என்கிற வசநத்தாலும் தத்வார்த்தஜ்ஞாநமானது பக்தியினால் உகந்த பகவானுடைய கடாக்ஷத்தை அபேக்ஷித்திருக்கிறதென்று அறியப்படுகிறது.

அய்யா! "யயா த்வாமபிஜாநாஸி, பக்த்யா வேத்மி" என்கிற வினாவிடைகளால் வித்யா பக்திசப்தங்கள் இரண்டுக்கும் அர்த்தைக்யம் தோன்றுகிறது. "பக்திரூபையான வித்யை மோக்ஷத்திற்கு ஸாதனமாகிறது" என்று முன்பு உபபாதிக்கப்பட்டது. அதனால் பக்தியானது சாஸ்திரஜ்ஞானத்தை மூலமாகக்கொண்டது, சாஸ்திரஜ்ஞாநம் பக்தியை மூலமாகக்கொண்டதென்று அந்யோந்யாச்ரயம் வருமென்று சொல்லப்படுமேயாகில்; இவ்வண்ணமல்ல— ச்ரவணம் பண்ணும் ஸமயத்திலேயே பரமாத்மாவினுடைய குணாதிகள் பதார்த்தங்களாக அறியப்படுமளவில் அந்த விஷயத்தில் அநுகூல புத்தியை வித்யாசப்தமும், பக்திசப்தமும் சொல்லுகிறது. அந்த அநுகூலபுத்தியினால் வாக்யார்த்த நிர்ணயம் நன்றாய் ஏற்படும். பூர்வபக்ஷமாக உபந்யஸிக்கப்பட்டிருந்தபோதிலும் பௌத்தர்களுக்கு அபிமதமான வேதாப்ராமாண்யம் முதலியவைகளில் வைதிகர்களுக்கு தீவ்ரமான த்வேஷமல்லவோ உண்டாகிறது. பகவத்குணங்கள் முதலியதில் சித்தத்திற்கு ※ அநுராகமுண்டாகிறது. இது ஸாக்ஷாத்காரதுல்யமான நிரந்தரத்யானரூபையான பக்தியல்ல. அதனால் அந்யோந்யாச்ரயமில்லை.

பிறகு சாஸ்திரார்த்த ஜ்ஞாநோத்பத்திக்கு ஹேதுவாக இருக்கிற பக்திக்கு விரோதியைச் சொல்லுகிறார்— அநாதி என்று. அன்றிக்கே, ஸம்யக்ஜ்ஞாந ஹேதுபூதமான பக்தியில்லாமையால் ஸம்யக்ஜ்ஞாந விரோதியாகிற பாபங்களின் தொடர்ச்சியைப் பகர்கிறார்— அநாதி என்று "வாஸநா" சப்தத்தால் பாபம் திடமான மூலமுள்ளதாக இருப்பதால் எவ்விதத்தாலும் தடுக்கமுடியாமை உரைக்கப்பட்டது. வாஸனையினால் பாபம், பாபத்தால் வாஸனை; அஜ்ஞானத்தால் பாபவாஸனை, பாபவாஸனையினால் அஜ்ஞாநமென்கிற அந்யோந்யாச்ரயதோஷத்தை பரிஹரிப்பதின்பொருட்டு "அநாதி" சப்தம். சேமுஷீ—மோக்ஷத்திற்கு உபயோகமான ஜ்ஞாநம். "அசேஷ" சப்தப்ரயோகத்திற்கு உபாயோபேய நிவர்த்ய விஷயமான எல்லா புத்தியும் தூஷிக்கப்பட்டதென்று கருத்து. இதனால் அர்த்தாத் தன்பக்ஷத்தில் நிவர்த்திக்கத்தக்கதும் சொல்லப்பட்டதாக ஆகிறது— கர்மத்திற்கே மோக்ஷப்ரதிபந்தகத்வமிருப்பதால். கெடுக்கப்பட்ட புத்திக்கு பலமான சிறந்த ஜ்ஞாநத்தின் இன்மையைக் காண்பிக்கிறார்—அநதிகத என்று. ப்ரத்யக்ஷவிரோதம் வரின் சாஸ்திரத்திற்கு ப்ராபல்யமானது அந்யனால் சொல்லப்பட்

※ அநுராகம் —அன்பு.

டிருப்பதால், பதம்பதமாகவும் ஸமுதாயத்தாலும் ஸவிசேஷபரத்வ ப்ராதான்யததாலும் முதலில் சப்த ப்ரமாணத்தைச் சொல்லுகிறார்—பத என்று ப்ரக்ருதி ப்ரத்யயங்களின் சேர்க்கையிருல்தான் பதம் ஏற்படுகிறதென்பது அறியப்படவில்லை என்று பதசப்தத்தின் கருத்து. வாக்யஸ்வரூபேதி—வாக்யம அநேக பதார்த்தங்களின் ஒரு சேர்க்கையைசசொல்லுகிற தென்பதும அறியப்படவில்லை என்று கருதது. ததர்த்தயாதாத்மயம் தாத்பர்யவிஷயம். ப்ரதயக்ஷாதி என்றவிடத்தில் ஆதிபதத்தால் அநுமானம் க்ரஹிக்கப் படுகிறது. 'ஸகல'சப்ததால் ஸ்பார்சநம் சாக்ஷுஷம் முதலிய ப்ரத்யக்ஷத்தின் அவாந்தர பேதம் விவக்ஷிக்கப்பட்டது. அந்வயம் வ்யதிரேகம முதலிய அநுமாநத்தின உள்பிரிவும் சொல்லக்கருதப்பட்டது. அன்றிக்கே, அந்தந்த வாதிகளுக்கு இஷ்டமான Ψஅர்த்தாபத்திமுதலிய வேறு ப்ரமாணங்களை விஷயமாகக்கொணடது ஸகலசப்தம். வ்ருத்தம்—போதகம். ததிதிகர்த்தவ்யதாரூப என்று. தர்க்கத்தினுலும் ப்ரமாணததிற்கு பாதமானது அன்யர்களால் கூறப்பட்டிருப்பதால், தர்கம் ப்ரமாணாநுக்ராஹகமென்றுகூட அறியப்படவில்லை என்று கருத்து. நாம் தர்க்கத்தை ப்ரமாணாநுக்ராஹகமாகவேயன்றோ ஏற்றுக்கொள்ளுகிறோம் எனில் கூறுகிறார்—ஸமீசீநந்யாய என்று. ப்ரமாணாநுக்ராஹக புத்தியினுல் ஸ்வீகரிக்கப்பட்டிருந்தபோதிலும அவர்களின தர்கம் ப்ரமாணவிருத்தமாதலால் அது சிறந்ததல்லவென்று கருதது. ¶ அபச்சேதந்யாயம் முதலிய ஸமீசீநந்யாயங்களேதான் எங்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன வெனில் கூறுகிறார்—ந்யாயமார்கானும் என்று. இது அபச்சேதந்யாயவிஷயம், இது $ ஸாமான்ய விசேஷ ந்யாயவிஷயம் என்று அந்தந்த ந்யாயஸஞ்சார விஷயங்களின் பாகுபாடு அறியப்படவில்லை என்று கருதது.

அங்ஙனமாகில் எதை அவலம்பித்து க்ரந்தங்கள் செய்யப்பட்டனவென்று கேட்கில் சொல்லுகிறார்— விகல்பாஸஹ என்று குதர்கங்கள் ப்ரமாண விருத்தங்களாகவும் மூலத்தளர்ச்சி, ஒன்றோடொன்று விரோதம், முதலிய வேறுதோஷங்களால் கவரப்பட்டவைகளாகவுமிருக்கிற தர்கங்கள். அவைகளும் மூன்று நான்கு பதங்களை உச்சரிக்கும் க்ஷணங்கள் கூட நிலை பெற்றிருக்கிறதில்லை, பின்னையோ அவைகள் விகல்பிக்கப்பட்டிருக்கிற இரண்டினுள் ஒரு பக்ஷத்தை அங்கீகரிதத க்ஷணததிலேயே அழிவடைகின்றன என்பதைக்கூறுகிறார்— விகல்பாஸஹ என்று. தர்கததிற்கு விகல்பாஸஹத்வமாவது அதற்கு விஷயமான ஸாதநம முதலியவைகளின் விகல்பங்களை ஸஹியாமையே. விவிதேதி—ப்ரஹ்மத்திற்கு அநுபவவிஷயத்வம் வரும்பக்ஷததில் அநுபூதித்வம்

---

Ψ அர்த்தாபத்தி— ப்ரத்யக்ஷம் முதலிய எட்டு ப்ரமாணங்களுக்குள் இது ஒரு ப்ரமாணம். அர்த்தத்தின் ஆபத்தி-அர்த்தாபத்தி. (உதாஹரணம்) பீநோதேவதத்த:, திவா ந புங்க்தே - என்று (தேவதத்தன் பருத்திருக்கிறுன். பகலில் சாப்பிடுகிறதில்லை) சாப்பிடாமல்போனுல் தேஹம் பெருக்காதாதலால் தேவதத்தன் நாள்தோறும் இரவில் புஜிக்கவேண்டும் என்று அர்த்தாபத்தி ப்ரமாணததினுல் ராத்ரிபோஜனம் ஸித்திக்கிறது.

¶ அபச்சேத ந்யாயம்—இது மீமாம்ஸகர்களால் கூறப்பட்டுள்ளது. இந்த ந்யாயத்தினுல் மூர்த்தியதைவிட பிந்தியது ப்ரபலமாக ஏற்படுகிறது.

$ ஸாமாந்யவிசேஷந்யாயம்—இதுஎல்லா சாஸ்த்ரகாரர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. பொதுவாக ஒரு விஷயத்தைச்சொல்லி பிறகு அதில் அடங்கியதை விசேஷித்துச் சொல்லியிருந்தால் அது வேறுவிதமாகப் பொருந்தாதாதலால் அந்த விசேஷத்தில் ஸாமாந்யத்தை ஸங்கோசம் செய்தல்.

இல்லாமல் போகும். ப்ரத்யக்ஷமானது ஸத் ஒன்றையே க்ரஹிக்கிறது. வேதாந்தங்களால் அறியத்தக்க ப்ரஹ்மமானது வேறு ப்ரமாணங்களுக்கு கோசரமன்று என்று இவ்விதமான குதர்க்கங்களுடைய அந்யோந்யவ்யாஹதிகளின் பலவகை சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட குதர்கமே கல்கம் - அஸாரபூதம். பௌத்தர்களால் க்ரஹிக்கப்பட்ட ஸாரத்தை உடையது, ஸாரமற்ற அடிக்கசடு என்று அர்த்தம். இதனால் கல்பிக்கப்பட்டது—உத்ப்ரேக்ஷிக்கப்பட்டது. 'இதி' சப்தம் ஹேதுவை உணர்த்துகிறது. சிலருக்கு ஸமீசீனமான அர்த்தாந்தர விஷயகஜ்ஞானமில்லாமலிருக்கும் ஸமயத்தில் கூட இதற்கு அஸமீசீநத்வநிச்சயம் எவ்வாறு எனில் கூறுகிறார்—ந்யாயாநுக்ருஹீத ப்ரத்யக்ஷாதி ஸகலப்ரமாணவ்ருத்தயாதாத்ம்ய வித்பி: என்று. இதனால் முற்கூறப்பட்ட விபரீதாகாரம் சொல்லப்பட்டது. பஹுவசநத்தினால் தன் பக்ஷத்திற்கு போதாயனர் முதலிய அநேக மிக்கச்சிறப்புடையவர்களின் அங்கீகாரம் ஸூசிப்பிக்கப்பட்டது. அநாதரணீயமிதி— சிஷ்யர்களுக்கு விஷயங்களை எடுத்துச் சொல்லுங்காலங்களில் பூர்வ பக்ஷத்தை நன்கு துலக்கிச் சொல்லுவதில் தனக்கு ஸாமர்த்தியமிருக்கிறதென்பதைக் காட்டுவதற்காகக்கூட ஆதரிக்கத்தக்கதல்லவென்று அர்த்தம். "அசேஷ விசேஷ ப்ரத்யநீக" என்று தொடங்கி "ஸர்வே வேதாந்தா ஆரப்யந்தே" என்கிறதோடு 'யதப்யாஹு:' "தத் அநாதரணீயம்" என்று அன்வயம்.

---

तथा हि — निर्विशेषवस्तुवादिभिर्निर्विशेषे वस्तुनीदं प्रमाणमिति न शक्यते वक्तुम्, सविशेषवस्तुविषयत्वात् सर्वप्रमाणानाम् । यत्तु स्वानुभवसिद्धमिति स्वगोष्ठीनिष्ठः समयः, सोऽप्यात्मसाक्षिकसविशेषानुभवादेव निरस्तः । "इदमहमदर्शम्" इति केनचिद्विशेषेण विशिष्टविषयत्वात् सर्वेषामनुभवानाम् । सविशेषोऽप्यनुभूयमानोऽनुभवः केनचिद्युक्त्याभासेन निर्विशेष इति निष्कृष्यमाणः सत्तातिरेकिभिः स्वासाधारणैः स्वभावविशेषैर्निष्कृष्टव्य इति निष्कर्षहेतुभूतैः सत्तातिरेकिभिः स्वासाधारणैः स्वभावविशेषैः सविशेष एवावतिष्ठते । अतः कैश्चिद्विशेषैर्विशिष्टस्यैव वस्तुनोऽन्ये विशेषा निरस्यन्त इति न क्वचिन्निर्विशेषवस्तुसिद्धिः ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

இந்த அர்த்தம் நிரூபிக்கப்படுகிறது. நிர்விசேஷ வஸ்துவாதிகளால் நிர்விசேஷவஸ்துவிஷயத்தில் இது ப்ரமாணமென்று ஒன்றும் சொல்வதற்கு சக்யமாகாது. எல்லாப்ரமாணங்களும் விசேஷமுள்ளவஸ்துக்களை விஷயீகரிப்பதால்.

தன் அநுபவத்தினால் ஸித்தமென்று தன்னுடைய கோஷ்டியில் நிலைபெற்றிருக்கிற யாதொரு ஸங்கேதமுண்டோ; அதுவும் ஆத்மஸாக்ஷிகமான ஸவிசேஷாநுபவத்தினாலேயே நிராகரிக்கப்பட்டது. எல்லா அநுபவங்

களும் "இதை நான் கண்டேன்" என்று யாதானும் ஒரு விசேஷத்தால் விசிஷ்ட விஷயமுள்ளவைகளாகவே இருப்பதால். அநுபவிக்கப்படுகிற அநுபவமானது ஸவிசேஷமாக இருந்தபோதிலும் ஏதோ ஒரு யுக்தி ஆபாஸத்தால் நிர்விசேஷமென்று நிஷ்கர்ஷிக்கப்படவேண்டுமாகில் ஸத்தையைவிட வேறாக இருப்பதும் தனக்கு அஸாதாரணங்களாகவுமிருக்கிற ஸ்வபாவ விசேஷங்களால் நிஷ்கர்ஷிக்கத்தக்கதாதலால் நிஷ்கர்ஷத்திற்கு ஹேதுவாயும் ஸத்தையைவிட வேறாக இருப்பதும் தனக்கு அஸாதாரணங்களாகவுமிருக்கிறஸ்வபாவவிசேஷங்களால் அது ஸவிசேஷமாகவே நிலைபெறுகிறது; ஆகையால் சில விசேஷங்களோடு கூடினதாகவே இருக்கிற வஸ்துவுக்கு மற்ற விசேஷங்கள் நிரஸிக்கப்படுகின்றனவென்பதால் ஓரிடத்திலும் நிர்விசேஷ வஸ்து ஸித்தி பெறாது.

ச்ருதப்ராகாசிகை—

இவ்வண்ணம் சுருங்கச் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்தை விரிவாக எடுத்துரைப்பதற்காகத் தொடங்குகிறார்— தத்ராஹ என்று.

அய்யா! பூர்வபக்ஷியால் முதலில் வேதாந்த வாக்கியங்கள் உதாஹரிக்கப்பட்டு, அவைகளில் நிரூபிக்கத்தக்கவிஷயங்களைத்தும் நிரூபணம் செய்யப்பட்டு, பிறகு வேறு ப்ரமாணதர்கங்கள் காண்பிக்கப்பட்டன. ஆகையால் ஸித்தாந்தத்திலும் அர்த்தக்கிரமத்தினால் அவைகளை நிரஸநஞ்செய்வதுதான பொருத்தமுள்ளது. அவ்வண்ணமிருக்க எவ்வாறு தொடக்கத்தில் ஸகல ப்ரமாண விஷயத்வத்தை நிரூபிப்பது பொருத்தமுள்ளதாக ஆகும்? மேலேயும் எவ்வாறு ப்ரத்யக்ஷம் முதலிய நிர்விசேஷ விஷயத்வத்தின் நிராஸத்தை முன்னிட்டு வேதாந்த வாக்யங்களின் யோஜனை செய்யப்படுகிறது? (உத்தரம்) சொல்லப்படுகிறது— ப்ரத்யக்ஷவிரோதத்தில் சாஸ்திர ப்ராபல்யம் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் அந்யனால் வேதாந்த வாக்யங்கள் முதலில் உதாஹரிக்கப்பட்டு பிறகு அவைகளைக்காட்டிலும் வேறாய் சொல்லத்தக்கவைகளெல்லாம் சொல்லப்பட்டிருக்கின்றன ப்ரபலமென்று அனைவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ப்ரமாணத்தை முன்னிடுவதல்லவோ உசிதம். ஸித்தாந்தியினாலோ வென்றால் ப்ரத்யக்ஷத்திற்கு விரோதம் வருமிடத்தில் சாஸ்திரத்திற்கு அதிகபலம் ஒப்புக்கொள்ளப்படாமையால் ப்ரத்யக்ஷம் முதலிய நிர்விசேஷவிஷயத்வத்தின் § நிராஸத்தை முன்னிட்டு அதற்கு விரோதமின்றி வேதாந்தவாக்யங்கள் ‡ ஸ்வரஸமாக வியாக்யாநிக்கப் படப்போகின்றன.

அதில் அன்யனால் தொடக்கத்தில் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிற நிர்விசேஷ ஸித்தாந்த $ பாரமார்த்த்யத்திற்குப்பொதுவாக எல்லாப்ரமாணங்களாலும் பஹிஷ்கரிக்கப்பட்டிருத்தல் என்கிற தூஷணத்தை முதலில் ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார்—நிர்விசேஷ

§ நிராஸம்—விலக்குதல்.

‡ ஸ்வரஸமாக கவியின்கருத்தை அனுஸரித்து, அல்லது இயற்கையாக அமைந்துள்ள வாக்யார்த்த ஸ்வபாவத்துக்குத் தக்கவாறு. $ பாரமார்த்த்யம்—உண்மை,

என்று. அர்த்தாத் ப்ரமாணாபாவமும தன்பக்ஷத்துக்கு அநுகூலமாக உரைக்கப்பட்டதாக ஆகிறது. ஆகாயமலர்கூட எனக்கு அநுபவஸித்தமென்று சொல்வதற்கு சக்யமென்பது பற்றி அதை விலக்குவதற்காக "இதம்" சப்தம். மற்றவர்களின் அங்கீகாரத்திற்கு நியாமகமான ப்ரமாணம் ஒன்றுமில்லை என்பது கருத்து. அன்றிக்கே, ஒரு ப்ரமாணவ்யக்தியும் நிர்விசேஷமான வஸ்துவை விஷயீகரிக்கிறதில்லை என்பது ஏகவசநத்தின் கருத்து. எதனால் எனில் கூறுகிறார்—ஸவிசேஷ என்று

அய்யா! விசேஷங்கள் நிர்விசேஷங்களன்றோ. அவ்வாறிருக்க நிர்விசேஷ வஸ்துவுக்கு அப்ராமாணிகத்வம எப்படி சொல்லக்கூடும்? என்றால், மறுமொழி உரைக்கப்படுகிறது—தர்மத்தினால் தர்மியானது விசேஷமுள்ளது - தர்மியினாலும் தர்மம் விசேஷமுள்ளது, ஒன்றுக்கு தர்மமாகவாவது தர்மியாகவாவது எது இருக்கிறதில்லையோ அது ப்ரமாணசூந்யமென்றல்லவோ க்ரந்தத்தின் அர்த்தம். விசேஷம் வ்யாவ்ருத்தியை உண்டுபண்ணுகிற வஸ்து. தர்மியும் தன்னை அடைந்திருக்கிற தர்மத்திற்கு வேறு ஆச்ரயத்தை அடைந்திருக்கிற தர்மத்தினின்று பேதத்தை உண்டுபண்ணுகிறதாதலால் விசேஷசப்தத்தால் சொல்லத்தக்கதாக ஆகிறது. மேலும், விசேஷம் நிர்விசேஷம் என்கிற இந்த இரண்டு சப்தங்களும் ஒரே அர்த்தத்தை உணர்த்துகிற சப்தங்களா? அல்லவா? ஒரே அர்த்தத்தை உணர்த்துகிற சப்தங்களென்று சொன்னால் இரண்டையும் சேர்த்து ப்ரயோகிக்கக்கூடாது. இரண்டாவது பக்ஷத்திலோ நிர்விசேஷத்வமில்லை; உணர்த்தத்தக்கபொருள்களில் வேற்றுமை இல்லாவிடில் அபர்யாயத்வம் பொருந்தாதாதலால்.

அய்யா! எல்லா ப்ரமாணங்களுக்கும் ஸவிசேஷ விஷயத்வம் எங்ஙனே? கந்தம் முதலியவற்றை க்ரஹிக்கிற ப்ரமாணமானது கந்தம் முதலியதை ஆச்ரயத்துடன் கூடியதாகத் தெரிவிக்கிறதில்லையன்றோ வெனில்; இவ்வண்ணமல்ல, ஆச்ரயமே விசேஷம் என்கிற நியமமில்லாமையால் ஸம்வித்தும் எல்லாவற்றுக்கும் விசேஷணமாக இருப்பதால் அதற்கு எல்லா அர்த்தங்களோடும் சேர்ந்திருத்தல் பொருத்தமுள்ளதாக ஆகிறதன்றோ. "அயம் கந்தோ ஜுபூயதே" என்று காலம் முதலிய விசேஷங்களோடு கூடியதாகவே கந்தம் முதலியவற்றின் ப்ரதீதி வருவதால் ஸவிசேஷவிஷயத்வத்திற்கு உபபத்தி. அவ்வாறே ப்ரதீதியும் உரைக்கப்படப்போகிறது.

அங்ஙனமாகில், நாம் வேறு ப்ரமாணத்தினால் நிர்விசேஷஸித்தியை ஒப்புக்கொள்ளுகிறோம்—எங்கள் அனுபவஸித்தமன்றோ அது, எனில் சொல்லுகிறார்—யஸ்து என்று, "து" சப்தத்தால் ஸமயத்தை விசேஷியாநின்றுகொண்டு. ஸமயவைசிஷ்ட்யத்திற்கு மூலமான ஸ்வாநுபவ ரூபமான ப்ரமாணவைஷம்யத்தை அபிப்ராயப்படுகிறார். "ஸ்வகோஷ்டீநிஷ்ட:" என்பதனால் ப்ரதிவாதியின் அஸம்மதியைக் காண்பிக்கிறார் ஆத்மஸாக்ஷிகாநுபவத்திற்கு ஸவிசேஷத்வத்வத்தைக் காண்பிக்கிறார்—இதமஹம் என்று. விசிஷ்டவிஷயத்வாத்—விசிஷ்டமான விஷயம் ஸ்வயமநுபவமே. சிலாமயமானபொம்மையின் சரீரம் என்பதுபோல் இந்த நிர்தேசம். அங்ஙனமில்லாவிடில் ஸ்வாநுபவ நிர்விசேஷத்வ நிராஸத்தில் கடம் முதலிய வஸ்துக்களுக்கு ஸவிசேஷத்வஸாதநம் பயன்படாததால் "அநுபூயமாநோப்யநுபவ:" என்கிற மேல் கிரந்தத்திற்கும் இப்படியே அர்த்தம்—"ஸ்வாநுபவஸித்தம்" என்கிற இந்த க்ரந்தத்தோடு அர்த்தைக்யமிருப்பதினால் அநுபவசப்தம் $ அநுவ்யவஸாயபரமல்ல. அநுவ்யவஸாய ரூபமான ப்ரத்யக்ஷம் இஷ்டமல்லவன்றோ.

---

$ அநுவ்யவஸாயம்—முதலில் உண்டாகிற ஜ்ஞானத்தை அனுஸரித்து அடுத்து

ஏனெனில் கடந்த விஷயமாதலால் ப்ரத்யக்ஷத்வம் பொருந்தாது. அந்யனுடைய ஜ்ஞாநம் ஸம்ஸ்காரநாசமுள்ளது. தன்னுடைய ஜ்ஞாநம அநுமாநத்தாலறியத்தக்கது மற்றதோ ஸ்ம்ருதிக்கு விஷயம். ஸ்ம்ருதிக்கு விஷயமாக* இருத்தல் இங்கே சொல்லக்கருதப்பட்டிருக்கவில்லை; அநுபவசப்தத்திற்கு அந்த அர்த்தமில்லாமையால். ஆகையால் அநுபூயமானத்வமாவது அவபாஸமாநத்வம் "இதம் அஹம்" என்கிற இரண்டு சப்தங்களால் கர்மாவோடும் கர்தாவோடும் கூடியதாகவே அநுபவமிருக்கிறதென்பது உரைக்கப்பட்டது. "அதர்சம்" என்பதனால் ¶அபரோக்ஷத்வவிசேஷாந்வயம அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. அதீதத்வமோவெனில் சொல்லக்கருதப்பட்டிருக்கிறதன்று. அப்படிக் கில்லாவிட்டால் அப்பொழுது §ஸ்வதஸ்ஸித்தத்வம் பொருந்தாமல் போவதால். கேநசித் விசேஷேணேதி சொல்லப்பட்டவைகளுகளுள்ளேயும் ஏதாவது ஒரு விசேஷணமானது கடாசிவரையில்சென்றுங்கூட விடத்தக்கதல்லவென்று கருதது. அன்றிக்கே, "அதர்சமிதி" என்கிற இடத்தில் ப்ரகாரவசனமான "இதி" சப்தமானது ப்ரக்ருத ஸஜாதீயரூபமான விசேஷத்தில் எவ்வளவுமட்டில ஸம்பவிக்குமோ அவ்வளவை க்ரஹிக்கிறது. அதனால் பரோக்ஷத்வம் வர்தமாநத்வம் முதலியது "கேநசித" என்பதனால் விவக்ஷிக்கப்பட்டதாக ஆகும். விஷயத்தின் வாயிலாக பரோக்ஷத்வம்.

அய்யா! நாம் 'இதமஹமதர்சம்" என்கிற ஜ்ஞானத்தை இல்லை என்று மறுக்கவில்லையன்றோ; அந்த ஜ்ஞாநமோவென்றால் தர்கத்தால் விசேஷித்து நிச்சயிக்கப்பட்ட விஷயத்துடன் கூடியதாக நிர்விசேஷத்தில் ப்ரமாணமென்று சொல்லில் கூறுகிறார்—ஸவிசேஷாபி என்று. ஸ்வவ்யாகாதம் காண்பிக்கப்படப்போகிறபடியால் "யுக்த்யாபாஸைந" என்று சொல்லப்பட்டது. நிர்விசேஷ இதி நிஷ்க்ருஷ்யமாண இதி—எப்பொழுது நிர்விசேஷமென்று நிஷ்கர்ஷிக்கப்படுகிறதோ அப்பொழுது இவ்வண்ணமன்றோ நிஷ்கர்ஷிக்கத்தக்கதென்று அர்த்தம். எவ்வாறு நிஷ்கர்ஷிக்கத்தக்கதென்றால் சொல்லுகிறா—ஸத்தாதிரேகிபி: ஸ்வாஸாதாரணை: என்று ஸத்தையைக்காட்டிலும் வேறாக இல்லாமலிருக்குமேயாகில் ஹேதுவானது பக்ஷத்தைக்காட்டிலும் வேற்றுமை இல்லாததாக ஆய்விடும். அது ஸரியன்று. ஹேதுவானது பக்ஷத்தை இதரவஸ்துக்களிடமிருந்து வேறுபடுத்தும் தன்மையுள்ளதன்றோ மேலும் ஒரு வஸ்துவை மற்றொன்றினின்று வேறுபடுத்தும் தர்மத்திற்கே வ்யாவ்ருத்திரூபத்வம் ஸம்பவிக்கிறது. ஸ்வரூபம் அறியப்பட்டால் தனக்கும் அன்யவஸ்து ‡ தாதாத்ம்யப்ரமவிரோதிக்கும் ஸ்வரூபமே வ்யாவ்ருத்தி. சுக்தித்வம் முதலியவற்றுக்குப்போல. ப்ரஹ்மத்திற்கோவென்றால் வேறுவஸ்துவை அதைக்காட்டிலும் வேறாக இருக்கிற வஸ்துவினிடத்தினின்று வேறுபடுத்தும் தன்மை வாய்ந்த தர்மத்வமில்லாமையாலும் ஸ்வரூபம் ப்ரகாசித்துக்கொண்டிருக்கையில் ப்ரமத்தை ஸஹிக்கும் தன்மை இருப்பதாலும் ஸ்வரூபமே வ்யாவ்ருத்தியல்லவென்று இனிசொல்லப்போகிற சௌக்ல்யாதி திருஷ்டாந்தவைஷம்யாபிப்ராயத்தால் 'ஸத்தாதிரேகிபி:" என்று உரைக்கப்பட்டது.

---

உண்டாகும் ஜ்ஞானம்— அதாவது முன்னிலையில் குடத்தைக்கண்ட உடன் இது குடமெனறு முதன்மையாக ஒரு ஜ்ஞாநமுண்டாகிறது. பிறகு கடமஹம் ஜாநாமி—குடத்தை நானறிகிறேன் என்கிற மற்றொருஜ்ஞாநம் அடுத்த க்ஷணத்திலுண்டாகிறது. இதுதான் அநுவ்யவஸாயம். இது தார்கிகர்களின்கொள்கை. இந்த அநுவ்யவஸாயத்தால் முந்தி எனக்கு கட விஷயகஜ்ஞாநமுண்டாயிருக்கிறதென்று அறிகிறான்.

§ ஸ்வதஸ்ஸித்தம்—ஸ்வயம் ப்ரகாசமுள்ள வஸ்து. ‡ தாதாத்மயம்—ஐக்யம்

ஹேது *ஸாதாரணமானல் ¶ அனைகாந்திகமாயும் ப்ரமத்துக்கு அவிரோதியாயுமாகும் சௌக்ல்யம் முதலியதுபோல. அஸாதாரணமாயிருக்கிற சுக்தித்வமேயன்றோ ரஜதப்ரமவிரோதி. அதனால் ஸ்வாஸாதாரணை: என்று உரைக்கப்பட்டது. ஸ்வசப்தத்தால் வ்யதிகரணஸித்திக்கு பரிஹாரமேற்பட்டது. ஸ்வபாவவிசேஷை:-தர்மவிசேஷங்களால். இவ்வண்ணம் ஸாமான்யமாக அர்த்தஸ்வரூபம் உரைக்கப்பட்டது. அதனால் உன்னுலும் நிராஸகஹேதுக்களாக அபிமானிக்கப்பட்டிருப்பவைகளுள் ஸத்தாதிரேகித்வம் ஸ்வாஸாதாரணத்வம் இரண்டும் விடத்தகாதவைகளென்கிற அபிப்ராயத்தினுல் 'ஸத்தாதிரேகிபி: ஸ்வாஸாதாரணை:' என்று மறுபடி கூறப்பட்டது. எந்தஎந்தஹேதுக்கள் விசேஷமுள்ள கடம் முதலியவஸ்துக்களிடமிருந்து வ்யாவ்ருத்தங்களாய் பொதுவாக ஸகல விசேஷாபாவங்களுக்கும் ஸாதகங்களோ அவைகள் அர்த்தஸாமர்த்தியத்தினுல் ஸாமான்யத்தில் உள்ளடங்கி இருக்கிற தன்ஸ்வரூபத்தையும் நிச்சயமாக நிவர்த்திப்பிக்கும் எனில் சொல்லுகிறுர்—அத:கைஸ்சித் என்று. அத: - அவைகளுக்கு ஸத்தாதிரேகித்வம் ஸ்வாஸாதாரணத்வம் இரண்டும் அவசியம் ஒப்புக்கொள்ளத்தக்கதாக இருப்பதால் என்று அர்த்தம். கைஸ்சித்திதி - ஸ்வாஸாதாரணை: - ப்ராமாணிகை: என்று அர்த்தம் விசிஷ்டஸ்யைவேதி என்று. நிர்விசேஷத்வஸாதகத்திற்கு நிவ்ருத்திவரின் நிர்விசேஷத்வம் ஸித்தியாததாலும், அது நிவர்த்திக்காமலிருந்தால் அவைகளாலேயே ஸவிசேஷத்வம் ப்ரஸங்கிப்பதாலும் என்று அபிப்ராயம். அந்யே இதி—நிர்விசேஷத்வஸாதகஹேதுக்கள் எந்த கடாதிகளினின்றும் வ்யாவ்ருத்தங்களோ அந்த கடாதிகளை அடைந்திருக்கின்ற அப்ராமாணிகங்களான ரூபாதிவிசேஷங்கள் இவ்விடத்தில் நிரஸிக்கப்படுகின்றனவே ஒழிய எல்லா விசேஷங்களும் நிரஸிக்கப்படவில்லை. அக்நியில்லாத இடத்தினின்று வ்யாவ்ருத்தமான தூமமானது, பக்ஷத்தில் அநக்நிமத்த்வத்தையன்றோ நிவர்த்திக்கிறது. வேறு ஆகாரத்தை நிவர்த்திக்காது என்று பொருள். நக்வசித்திதி-ஸ்வாநுபவத்திலும் ப்ரத்யக்ஷம் முதலிய வேறு ப்ரமாணங்களிலுமென்று அர்த்தம். ஸ்வவ்யாகாதம் ப்ரஸங்கிப்பதால் ஸகலவிசேஷ நிவ்ருத்தி ஸாதிப்பதற்கு அசக்யமாதலின் நிர்விசேஷ வஸ்து ஸித்தி இல்லை என்று சொல்லப்பட்டதாக ஆகிறது.

யதி ஹி ப்ரத்யக்ஷம் ஸ்வப்ரகாஶதா ச ஜ்ஞாத்ருவிஷயப்ரகாஶ-
நஸ்வபாவதயோபலப்தே: । [illegible] ச ஸவிஶேஷ-
[illegible] இதி [illegible] ப்ரமாண[illegible]: ।
ஸ்வாபாவிகாஸ்ச நித்யத்வாதயோ ஹ்யநேகே விஶேஷா: ஸந்த்யேவ ।
தே ச ந வஸ்துமாத்ரப்ரதீதி ஶக்யாபலாபநா: । வஸ்துமாத்ராப்யு-
பகமே ஸத்யபி [illegible] ஸ்வ[illegible]
[illegible] ஸ்வ[illegible]பாதநாத் । அத: ப்ராமாணிகவிஶேஷவிஶி-
ஷ்டமேவ வஸ்த்விதி வக்தவ்யம் ॥

* ஸாதாரணம்— ஸாத்யமுள்ள இடத்தில் போல ஸாத்யமில்லாத இடத்திலும் இருக்கும் துஷ்டஹேது. இது ப்ரபலமான ஒரு ஹேதுதோஷம்.

¶ அனைகாந்திகம்—இது வ்யபிசாரியான ஹேது.

ஸ்ரீபாஷ்யம்:—

ஜ்ஞாநத்திற்கு விஷயங்களை ப்ரகாசப்படுத்தும் தன்மையும் மற்றொன்றினால் ப்ரகாசிப்பிக்கப்படாமல் தனக்குத்தானாகவே ப்ரகாசிக்கும் தன்மையும் இயற்கையாகவே இருக்கிறது. ஏனெனில்; அது தனக்கு ஆச்ரயமாக இருக்கும் ஆத்மாவுக்கு விஷயங்களை ப்ரகாசப்படுத்தும் ஸ்வபாவமுள்ளதாகவே அறியப்படுவதால்; நித்திரை, மதம், மூர்ச்சைகளிலும் அநுபவம் ஸவிசேஷமென்றே அதை நிரூபிக்கும் தருணத்தில் மிக்கத் தெளிவாக உபபாதிக்கப்போகிறோம். தங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட நித்யத்வம் முதலிய அநேக விசேஷங்கள் நிச்சயமாகவே இருக்கின்றன. அவைகளும் வஸ்துமாத்ரமென்று உபபாதிப்பதற்கு ஸாத்யப்படாது வஸ்து மாத்ரமென்று ஒப்புக்கொண்டாலுங்கூட அதன்ப்ரகாரபேதத்தில் விவாதம் காணப்படுவதாலும் தனக்கு அபிமதமான அந்த ப்ரகாரபேதங்களால் தன்மதத்தை உபபாதனம் செய்யவேண்டியதாக இருப்பதாலும்; ஆதலால் ப்ராமாணிகங்களான விசேஷங்களால் வஸ்து விசிஷ்டமெனறே சொல்லத்தக்கது.

---

சுருதப்ரகாசிகை—

இவ்வண்ணம் கர்மகர்த்ருவ்யுதாஸத்தை ஒப்புக்கொண்டு ஸவிசேஷத்வம் ஆபாதனம் செய்யப்பட்டது. இதறகு மேல் கர்மகர்த்ருநிராஸமே அசக்யமென்று கூறுகிறார்.— தியோர்ஹி என்று. தீத்வமாவது விஷயப்ரகாசகத்வம். ஸ்வப்ரகாசதா- அநந்யாதீநப்ரகாசத்வம். இது இரண்டும் ஸ்வப்ரகாசவாதத்தில் ஸாதனமாகவும் ஸாத்யமாகவு, அந்யனால் உபந்யஸிக்கப் பட்டிருக்கிறது. ஜ்ஞாதுர்விஷய ப்ரகாசநஸ்வபாவதயோபலப்தே: என்று. தனக்கு ஆதாரமாக இருக்கிற ஆதமாவைக்குறித்து விஷயங்களைத்தவறாமல் ப்ரகாசிப்பிக்கும் தன்மையோடு விளஙகுகிறபடியால் தீத்வம் ஸ்வப்ரகாசத்வம் இரண்டும் ஸித்திக்கின்றனவென்று அர்த்தம். "தீதவம், விஷயஸாதநத்வம், அவ்வாறு அவபாஸமானம ... இருப்பதால்" என்பதனுல் ஸாத்யவிசிஷ்டதை இல்லை. உபலப்திவிசித்தமான ஸகர்மகத்வத்தை அங்கீகரிக்காமல் போவாயேயாகில், அப்பொழுது ஸகர்மகத்வத்தை ஹேதுவாகக்கொண்ட ஸ்வப்ரகாசத்வமும் ஸித்தியாதென்றுகருத்து. அன்றிக்கே, தீத்வம்-திஸ்வரூபமாத்ரம். ஸித்தமானது எல்லோருடைய ஒப்புதலையும் உபலப்திக்குக்காண்பிக்கிறது.

அய்யா! கர்மகர்தாக்களோடு கூடினஜ்ஞானம் ஆத்மபூதமல்ல, ஸ்வாபம் முதலிய நிலைமைகளில் அநுபவிக்கப்பட்டுள்ள வேறு ஒருவஸ்துவே நிர்விசேஷமென்று ஸாதிக்கப்படுகிறதென்றால் அதைமறுக்கிறார்—ஸ்வாப என்று அநுபவம்—‡‡ஆத்மஸ்புரணம். அப்பொழுது தர்மபூதஜ்ஞாநத்தின் ஸ்புரணமில்லையன்றோ. ஸ்வாவஸரே—அஹமர்த்தத்திற்கே ஆத்மத்வஸமர்த்தனம் செய்யும்ஸமயத்தில். நிபுணதரம் அன்யனால் ப்ரயோகிக்கப்பட்ட யுக்தியினாலேயே என்று கருத்து. "ஸுகமஹமஸ்வாப்ஸம், மாமப்யஹம் ந ஜ்ஞாதவாந்" இதுமுதலிய அன்யனால் கூறப்பட்ட பராமர்சத்தினாலேயே என்று அர்த்தம்.

---

‡‡ ஆத்மஸ்புரணம்—நான் என்கிற தோற்றம்.

அன்றிக்கே, நிபுணதரம். இது சொல்லப்பட்டதாக ஆகிறது—உன்னால் ஸ்வாநுபவாதீநமான நிர்விசேஷத்வமானது கர்மகர்த்தாக்களை விஷயீகரித்துக்கொண்டிருக்கிற ஜ்ஞாநத்திற்கு சொல்லப்படுகிறதா? அப்படிக்கின்றி அனுபவிக்கின்ற ப்ரகாசிக்கின்ற ஆத்மஸ்வரூபபூதமான ஜ்ஞானத்திற்கா? அப்படிக்கின்றி அவைகளைத்தாண்டி இருக்கும் வஸ்துவுக்கா? முதல் பக்ஷத்தில் கர்மகர்த்ரு ரூபமான விஷய நியமத்தினாலேயே நிர்விசேஷத்வமில்லை. இரண்டாவதிலோ ப்ரத்யக்த்வம் அனுகூலத்வம் முதலியவைகளால் ஸவிசேஷத்வம் விலக்கமுடியாதென்று சொல்லப்படப்போகிறது. மூன்றாவது பக்ஷத்தில் சூன்யமாக இருப்பதினாலேயே நிர்விசேஷத்வம் ஸாத்யமில்லை என்று முகாந்தரத்தினால் ஸவிசேஷத்வத்தையே சொல்லுகிறார்— ஸ்வாப்யுபகதாம்ச என்று. ஆதிசப்தத்தால் ஸ்வப்ரகாசத்வ ஏகத்வ ஆநந்தத்வாதிகள் விவக்ஷிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் வஸ்துமாத்ரமென்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறதென்றால், கூறுகிறார்— நேச என்று. உபபாதிக்கிறார்— வஸ்து என்று. பௌத்தர்களால் க்ஷணிகத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. இவனாலோ வென்றால் நித்யத்வம் கூறப்பட்டது. ‡ வைசேஷிகர்கள் முதலியவர்களாலோ வென்றால் ஜடத்வபரத்வங்கள் இவனாலோ வென்றால் ஸ்வப்ரகாசத்வ ஏகத்வங்கள். ஸ்வரூபமோ வென்றால் அவர்கள் அனைவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையால் விப்ரதிபத்தி விஷயமும் ஸம்ப்ரதிபத்தி விஷயமும் ஒன்றே என்று சொல்வது யுக்தமல்லவென்று அர்த்தம். விமதிக்கு அடுத்ததாக இருக்கிற அதினுடைய உபபாதனத்தாலும் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறானது என்பதை திடப்படுத்துகிறார்—ஸ்வாபிமத என்று. க்ஷணிகவாதியைக்குறித்து ப்ரஹ்மத்திற்கு நித்யத்வத்தை ஸாதிக்கிற உன்னால் ஸ்வரூபமாத்ரத்தைக்காட்டிலும் வேறாக இருப்பது ஏதாயினும் ஒன்று ஸாதிக்கப்பட்டுள்ளதா? இல்லையா? உண்டானால் ஸதர்மத்வம். இல்லாவிடில், $ஸித்தஸாதநத்வம்—ஸ்வரூபமாத்ரம் அபிமதமாதலால் “ஸம்வித் நித்யை” என்கிற ப்ரதிஜ்ஞாவாக்கியத்தை அடைந்திருக்கிற தர்ம தர்மி சப்தங்கள் இரண்டும் பர்யாயங்களா? அல்லவா? முதல்பக்ஷத்தில் ஸாதநத்தின் ஆயாஸம் பயனற்றதாக ஆகிறது. இரண்டாவது பக்ஷத்தில் ஸ்வரூபத்தைவிட வேறான தர்மாந்தர ஸ்வீகாரமென்று கருத்து. ‘ஸ்வமதோபபாதநாத் ந வஸ்துமாத்ரமிதி சக்யோபபாதநா:’ என்று அந்வயம். முன்பு ஸவிசேஷத்வ நிராஸக ஹேதுக்களால் ஸவிசேஷத்வம் உரைக்கப்பட்டது. பிறகு ஸாத்யதர்மங்களால். அதற்குப்பிறகு சில விசேஷ ஸாதகஹேதுக்களால். இந்த நிராஸகமான ஸாத்யஸாதந தர்மங்கள் அபாமார்த்தங்கள் எனில் கூறுகிறார்—அத: என்று. அத:-ஸாத்யமாகவும் ஸாதநமாகவும், சில தர்மங்கள் விசேஷவ்யுதாஸகமாக உன்னால் சொல்லப்பட்டிருப்பதால் பரமார்த்தபூதங்களான அந்த அந்த தர்மங்களோடுகூடியதென்று அர்த்தம். ‘ப்ராமாணிகை:’’.என்றதினால் “கைஶ்சித்” என்று முந்தி சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்திற்குக்கூட விசேஷம் காண்பிக்கப்பட்டது. விசிஷ்டமேவேதி-முற்கூறப்பட்டுள்ள ஸத்தாதிரேகித்வம் ஸ்வாஸாதாரணத்வம் இவைகளில்லாவிடில் ப்ரமத்திற்கு நாசம் உண்டாகாது. நிராஸகதர்மத்திற்கு அபாரமார்த்யம் ஸம்பவிக்குமேயாகில் சுக்தித்வத்திற்கு அபாரமார்த்யம் வரின் ரஜதத்திற்கு ஸத்யத்வம்போல் நிரவிக்கத்தக்க ஆகாரத்திற்கு ஸத்யத்வம் ப்ரஸங்கிக்கும். ஸாத்யதர்மத்திற்கு அபாரமார்த்யம் கூறப்படுமேயாகில்

$ ப்ரத்யக்த்வம்—தனக்குத்தான் ப்ரகாசித்தல்.

‡ வைசேஷிகர்கள்—கணாதமதத்தை அனுஸரித்தவர்கள்.

$ ஸித்தஸாதநம்— ஏற்கனவே ஸித்தித்திருப்பதை ஹேதுவினால் ஸாதித்தல். இதுப்ரயோஜநமற்றிருப்பதனால் தோஷமென்று தார்கிகர்களால் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

நித்யத்வாதிகளுக்கு விபரீதமான ஆகாரமுள்ள அ[illegible]த்பத்வம் ப்ரஸங்கிக்கும். ஸாதநா பாரமார்த்த்யத்திலும், ஸாத்யநித்யத்வாதிகளின் விபரீதாகாரத்திற்கு ஸத்யத்வம் வர வேண்டியதாக ஆகும் என்று கருத்து. இவ்வண்ணம் ஸ்வாநுபவ ப்ரஸங்கத்தால் அவகும் ஸவிசேஷத்வம் உபபாதிக்கப்பட்டது.

---

𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌏𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍍𑌯𑌭𑌿𑌧𑌾𑌨𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍—𑌪𑌦𑌵𑌾𑌕𑍍𑌯𑌰𑍂𑌪𑍇𑌣 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌯𑍋𑌗𑍇𑌨 𑌹𑌿 𑌪𑌦𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌯𑍋𑌰𑌰𑍍𑌥𑌭𑍇𑌦𑍇𑌨 𑌪𑌦𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌨𑌮𑌵𑌰𑍍𑌜𑌨𑍀𑌯𑌮𑍍 । 𑌪𑌦𑌭𑍇𑌦𑌶𑍍𑌚𑌾𑌰𑍍𑌥𑌭𑍇𑌦𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌨𑌃 । 𑌪𑌦𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌵𑌾𑌕𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍇𑌕𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌭𑌿𑌧𑌾𑌯𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍁𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌨𑌾𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌨 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌿 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌮𑍍 ॥

---

**ஸ்ரீபாஷ்யம்—**

சப்தத்திற்கோ வென்றால் விசேஷித்து ஸவிசேஷமான வஸ்துவினிடத்திலேயே அபிதானஸாமர்த்யம். பதவாக்யரூபமாக ப்ரவ்ருத்திப்பதால்: ப்ரக்ருதிப்ரத்யயஸம்பந்தத்தாலன்றோ பதத்வம் ஸித்திபெறுகிறது. ப்ரக்ருதி ப்ரத்யயம் இரண்டுக்கும் அர்த்தங்களின் வேற்றுமையினால் பதத்திற்கே விசிஷ்டார்த்தப்ரதிபாதனம் விடத்தக்கதன்று. பதபேதமும் அர்த்தபேதத்தைக் காரணமாகக்கொண்டது. பத§ஸங்காதரூபமான வாக்யத்திற்கு அனேக பதார்த்த † ஸம்ஸர்கவிசேஷத்தைச் சொல்லுகிற ஸ்வபாவமிருப்பதால் நிர்விசேஷவஸ்து ப்ரதிபாதநத்தில் ஸாமர்த்யமில்லாமையால் நிர்விசேஷ வஸ்துவில் சப்தம் ப்ரமாணமாகா.

---

**ச்ருதப்ரகாசிகை:—**

அதற்குமேல் முதலில் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிற ஸர்வ ப்ரமாணங்களுக்குமுள்ள ஸவிசேஷ விஷயத்வத்தைச் சொல்வதற்குத் தொடங்குகிறார். அதில் அந்யனால் ப்ரத்யக்ஷத்தைவிட அதிகபலமுள்ளதென்று சொல்லப்பட்டிருப்பதாலும் ஸவிசேஷ போதகத்வாதிசயம் தனக்கு அபிமதமாக இருப்பதாலும் முதலில் சப்தத்திற்குஸவிசேஷத்வத்தைக் கூறுகிறார்—சப்தஸ்யது என்று. து சப்தமானது அன்யனால் சொல்லப்பட்ட பலீயஸ்த்வத்திற்கு ஸூசகம். “விசேஷேண” என்கிற பதத்தினால் ஸவிசேஷவஸ்து போதகத்வாதிசயம் சொல்லப்படுகிறது. அன்றிக்கே எல்லா ப்ரமாணங்களுக்கும் ஸவிசேஷவஸ்து விஷயகத்வமானது ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்க சித்வஸ்துவினிடம் அந்தரங்கமாக இருப்பதால் ஸ்வப்ரகாசவ்ருத்தியை நிரூபித்து அதற்குப்பிறகு ஆத்மாவினி

---

§ ஸங்காதம்—கூட்டம். † ஸம்ஸர்கம்—ஸம்பந்தம்.

டத்தில் ப்ரத்யக்ஷாதிகளைக் காட்டிலும் அந்தரங்கமாக இருப்பதால உபகாரிஸம்பந்தமான சாஸ்திரத்திற்கு ஸவிசேஷவிஷயத்வத்தைச் சொல்லுகிறார்—சபதஸ்யது என்று. ஸவி சேஷகோசரத்வத்தில் ப்ரமாணாந்தரங்களைவிட அதிசயமானது 'விசேஷேண' என்பதினால் சொல்லப்படுகிறது 'து' சப்தத்தினால் அதற்கு உபயுக்தமான சப்தத்தினுடைய ஸவி சேஷகோசர ப்ரத்யக்ஷாதிபூர்வகத்வ ரூபமான விசேஷம் சொல்லப்படுகிறது.

ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதற்கு ஹேதுவைச்சொல்லுகிறார்— பதவாக்யரூபேண என்று. ஸவிசேஷ விஷயத்திற்கு அதினால் என்ன வென்கிற சங்கவாதின்பதரூபத்தினால் ப்ரவ்ருத்தியை விவரிக்கிறார்— "ப்ரக்ருதி" அதனால் என்னென்றால் கூறுகிறார்— ப்ரக்ருதிப்ரத்யயயோ: என்று. பதஸ்யைவேதி வாக்யம் அப்படியே இருக்கட்டும். பதமே ஸவிசேஷ பரமென்று கருத்து. வாக்யரூபத்தால் ப்ரவ்ருத்தியை விவரிக்கிறார் பதபேதஸ்ச என்று. பதபேதமாவது—பதங்களுக்கு அந்யோந்யபேதம்- ப்ரக்ருதிப்ர த்யயபேதம் மாத்திரமே அர்த்தபேதத்தை ஹேதுவாகக்கொண்டதல்ல. பின்னையோ பதபேதமென்று அர்த்தம். அப்படி இல்லாவிட்டால் வேறுபதம் பயனற்றதாக ஆக வேண்டியதாகுமென்று கருத்து. பதபேதம் அர்த்தபேத ஸிபந்தனமாக இருந்தபோதி லுங்கூட வாக்யத்தின் ஒற்றுமையினால் நிர்விசேஷத்வம் ஸித்திக்கிறதென்று சங்கை வாதின் வாக்யத்திற்கு ஸவிசேஷ விஷயத்வத்தைச் சொல்லாநின்றுகொண்டு நிர்விசேஷத் தில் ப்ரமாணத்தின் இன்மையை உபஸம்ஹரிக்கிறார்—பதஸங்காத என்று. அந்த அந்த பதாபிதேயங்களின் ஸம்ஸர்கவிசேஷமே வாக்யத்தினால் சொல்லத்தக்கது. அந்த அந்த பதங்களின் அர்த்தத்தை விட்டு வேறு அர்த்தம் வாக்யத்தினால் சொல்லத்தக்கதல்ல வென்று அர்த்தம்.

அய்யா ! நிர்விசேஷ சப்தத்தினால் நிர்விசேஷமான வஸ்து அறியப்பட் டதா ? இல்லையா? அல்லது ஸவிசேஷமான வஸ்து அறியப்பட்டதா ? முதல் பக்ஷத்தில் நிர்விசேஷவஸ்துவுக்கு சப்தத்தால் ப்ரதிபாதநமிருப்பதால் நிஷேதம் உப பன்னமாகாது. இரண்டாவது பக்ஷத்திலோ நிஷேதிக்கத்தக்க வஸ்துவின் அறிவு இல் லாமையால் நிஷேதம் பொருந்தாது. மூன்றாவது பக்ஷத்திலோ ஸவிசேஷநிரூபண செய்யப்பட்டதாக ஆகும். இவ்வண்ணமல்ல— ப்ரமப்ரமைகளின் பாகுபாட்டால் நிர் விசேஷவஸ்துவில் சப்தத்திற்கு ப்ராமாண்யம் நிஷேதிக்கப்படுகிறதே ஒழிய . பரம ஹேதுதவம் நிஷேதிக்கப்படுகிறதில்லை. ஆகையால் நிர்விசேஷசப்தத்தால் உண்டுபண் ணப்பட்டதும் ஒன்றோடொன்று அந்வயிப்பதற்குத்தகாததாக இருக்கிற அர்த்தங்களை விஷயீகரிக்கிறதுமான ப்ராந்தியானது ப்ரமிதிஜநகங்களான சப்தங்களால் பாதிக்கப் படுகிறதென்பது யுக்தம். அதி [illegible] அதற்குரிய ப்ரதிபக்ஷத்தை நிஷேதிக்கத்தக்க அஸாதாரணதர்மங்கள் இவை [illegible] காட்டிலும் விசேஷசப்தத்திற்கு ஸங்கோசத்தை ஒப்புக்கொள்ளாவிடிலோ§அதிகரணம ஸித்தியாததினால் நிஷேதசப்தத்திற்கு அந்வயமே

§ அதிகரணத்தின் லக்ஷணம்—விஷயோவிசயஸ்சைவ பூர்வபக்ஷ ஸ்ததோத்தரம். நிர்ணயஸ்சேதி பஞ்சாங்கம் ப்ராஞ்சோதிகரணம் விது:. (ப்ரதிபாதிக்கத்தக்க விஷ யம், ஸம்சயம், பூர்வபக்ஷம், அவ்வாறே அந்த பூர்வபக்ஷத்தை நிரஸிப்பதற்குத் தகுதியுள்ள மறுமொழி, தீர்மானமான ஸித்தாந்தம், இவ்வைந்துகளடங்கி இருக்கும் க்ரந்தஸந்தர்ப்பத்தை முன்னோர்கள் அதிகரணமெனப்பெயர் வாய்ந்துள்ளதாக அறி கிறார்கள்).

இல்லாமல்போகவேண்டியதாகும். விபக்தி இல்லாததும் வேறுபதத்தோடு சேர்க்கை பெற்றதாகவும் இல்லாத நிர்விசேஷசப்தமானது, அர்த்தத்தைச் சொல்லாதன்றோ. ஆதலால் ஸங்கோசமில்லாவிடில் வ்யாகாதம். எப்படி இருந்தாலும் விபக்தியின் அர்த்தமானது எவ்விதத்திலும் விவக்ஷிதமன்று. ஆயினும் நிர்விசேஷ பதத்திற்கு $ பஹுவ்ரீஹி ஸமாஸத்தால் அந்யபதார்த்தத்தைச்சொல்லுகை யென்பது விடத்தகாதது. † தத்புருஷப்ரயோகத்திலும் அதிகரணப்ரதானம் விடத்தகாதது. ஆகையால், நிர்விசேஷசப்தமானது ப்ரமாணமாக இருக்கிற வாக்யத்தில் இருக்குமேயாகில் அப்பொழுது விஷயங்களின் பாகுபாடு கண்டுகொள்ளத்தக்கது ஸகலவிசேஷ சூந்யப்ரதிபாதநத்தில் ஸாமர்த்யமில்லாமையால் நகரத்தில் என்னவிசேஷமென்கிற வினாவில் ஒரு விசேஷமுமில்லை என்கிற இதுமுதலிய உத்தரங்களில் ஸவிசேஷநிஷேதமானது எவ்வாறு ஸங்குசிதவிஷயமாகக்காணப்பட்டிருக்கிறதோ, அப்படியே சாஸ்திரங்களிலும், ''அவிசேஷாஸ்ததோஹி தே' என்று, கந்தம் முதலியகுணங்களோடு கூடியிருந்தபோதிலும் ப்ருதிவ்யாதிகளுக்கு சாந்தத்வ கோரத்வ மூடத்வ ரூபமான சிலவிசேஷங்களின் இன்மையைச்சொல்லவேண்டிய எண்ணத்தினால் அவிசேஷ சப்தம் ப்ரயோகிக்கப்படுகிறது இவ்வண்ணம், ஜ்ஞாந ஸ்வரூபனை ஆத்மாவினிடத்தில் அந்தரங்கமாக இருப்பதால் ''ஸ்வாநுபவ'' சப்தங்கள் இரண்டும் நிரூபிக்கப்பட்டன.

---

प्रत्यक्षस्य निर्विकल्पकसविकल्पकभेदभिन्नस्य न निर्विशेषवस्तुनि प्रमाणभावः। सविकल्पकं जात्याद्यनेकपदार्थविशिष्टविषयत्वादेव सविशेषविषयम्। निर्विकल्पकमपि सविशेषविषयमेव ; सविकल्पके स्वस्मिन्ननुभूतपदार्थविशिष्टप्रतिसन्धानहेतुत्वात्। निर्विकल्पकं नाम केनचिद्विशेषेण वियुक्तस्य ग्रहणम् ; न सर्वविशेषरहितस्य। तथाभूतस्य कदाचिदपि ग्रहणादर्शनादनुपपत्तेश्च। केनचिद्विशेषेण "इदमित्थम्" इति हि सर्वा प्रतीतिरुपजायते। त्रिकोणसास्नादिसंस्थानविशेषेण विना कस्यचिदपि पदार्थस्य ग्रहणायोगात्। अतो निर्विकल्पकमेकजातीयद्रव्येषु प्रथमपिण्डग्रहणम्। द्वितीयादिपिण्डग्रहणं सविकल्पकमित्युच्यते ॥

---

$ பஹுவ்ரீஹி ஸமாஸம்—இது அன்ய பதார்த்தத்தை ப்ரதானமாக உடையது. உதாஹரணம்—பீதாம்பர: மஞ்சளாடையுடையவன். பீத - மஞ்சள்நிறமுள்ள அம்பரம் வஸ்திரம் எவனுக்கு இருக்கிறதோ அவன் பீதாம்பரன்.

† தத்புருஷஸமாஸம்—விபக்தி வேறுபாடுள்ள இரண்டு பதங்களுடன் கூடியது. உதாஹரணம்-பூர்வகாய:- பூர்வ: காயஸ்ய-பூர்வகாய:, சரீரத்தினது முந்தினபாகம்.

ஸ்ரீபாஷ்யம்.—

‡ நிர்விகல்பகம் § ஸவிகல்பகம் என்று வேறுபட்டிருக்கிற ப்ரத்ய க்ஷத்திற்கு நிர்விசேஷவஸ்துவிஷயத்தில் ப்ராமாண்யமில்லை ஸவிகல்பக மானது ஜாதிமுதலிய அனேக பதார்த்தங்களுடன்கூடிய வஸ்துக்களை விஷ யீகரிப்பதினாலேயே ஸவிசேஷவிஷயம் நிர்விகல்பகமும் ஸவிசேஷவிஷயமே தான். ஸவிகல்பகத்தில் தன்னிடத்தில் அனுபவிக்கப்பட்டிருக்கிற பதார்த்த விசிஷ்டப்ரதிஸந்தானத்திற்கு ஹேதுவாக இருப்பதால். நிர்விகல்பகமாவது ஏதோ சில விசேஷத்தால் விடுபட்டிருக்கிற வஸ்து விஷயகமான ஜ்ஞானம். ஸர்வ விசேஷங்களாலும் விடுபட்டிருக்கிற வஸ்துவின் க்ரஹண மென்பதல்ல. அப்படிப்பட்ட வஸ்துவுக்கு ஒருபொழுதும் க்ரஹணம் காணப்படாதகா லும் அநுபபத்தியிருப்பதினாலும் எல்லா ப்ரதீதியும் ஏதோ ஒரு விசே ஷத்தோடே "இதம் இத்தம்" என்றல்லவோ உண்டாகிறது. முக்கோண வடிவம் கழுத்தின் கீழாகத்தொங்கும் கம்பளம்போன்ற சதை முதலிய அவயவங்களின் ‡‡ ஸம்ஸ்தானவிசேஷமில்லாமல் ஒரு பதார்த்தத்திற்கும் க்ரஹணம் வாராததலால் ஆகையால் நிர்விகல்பகமாவது ஏகஜாதீயத்ரவ்யங் களில முதலாவதான பிண்டத்தின்க்ரஹணம். இரண்டாவது தொடக்கமான பிண்டங்களின் க்ரஹணமானது ஸவிகல்பகமென்று கூறப்படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை:—

இனி வேறுப்ரமாணங்களுள் மூலபூதமாயிருக்கிற ப்ரத்யக்ஷத்திற்கு ஸவிசேஷவிஷ யத்வத்தை உபபாதிக்கிறார்—ப்ரத்யக்ஷஸ்ய இது முதலியதால். நிர்விகல்பகத்தில் அனு பவிக்கப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு ஸவிகல்பகத்தில்.|| ப்ரதிஸந்தானம் சொல்லப்போவ தால் அதற்கு உபயோகியாக ஸவிகல்பகஸ்வரூபம் காண்பிக்கப்பட்டது இதற்குமேல் நிர்விகல்பகத்திற்கு ஸவிசேஷவிஷயத்வத்தை ப்ரதிஜ்ஞைசெய்கிறார். நிர்விகல்பகமபி என்று. ஏகஜாதீயபிண்டங்களில் த்விதீயாதிபிண்டக்ரஹணத்திற்கு ஸவிகல்பகத்வத் தையும் ப்ரதமபிண்டக்ரஹணத்திற்கு நிர்விகல்பகத்வத்தையும் மனதில் வைத்துக் கொண்டு, ஹேதுவைச்சொல்லுகிறார்— ஸவிகல்பக என்று. விசிஷ்டப்ரதிஸந்தானம் என்பது ஷஷ்டீஸமாஸம் - அல்லது. * கர்மதாரயம். ஸ்வஸ்மிந் - நிர்விகல்பகத்தில்,

---

‡ நிர்விகல்பகம்—நிஷ்ப்ரகாரகம் ஜ்ஞானம். இது தார்கிகர்களின் கொள்கை.

§ ஸவிகல்பகம்—ஸப்ரகாரகம் ஜ்ஞானம். வேதாந்திகளுடைய ஸித்தாந்தத்தில் நிர் விகல்பகமும்,ஸவிகல்பகம்போல் ஸவிசேஷவிஷயமே. முதல்முதலில் கோ வ்யக்தி யைப்பார்த்து இது கோ என்று ஜ்ஞானமுண்டாவது நிர்விகல்பகம். இந்த ஜ்ஞானத்தில் கோத்வஜாதி கோரூபமான வ்யக்தி இவ்விரண்டுக்குமுள்ள பிறிக்கமுடியாத ஒருவித ஸம் பந்தம் இம்மூன்றும் விஷயங்கள். இதுஸவிகல் பகத்தில் தன்னிடத்திலனுபவிக்கப்பட் டுள்ள பதார்த்தங்களோடுகூடின வஸ்துவிஷயகஸ்மரணத்திற்கு ஹேதுவாக இருக்கிறது

‡‡ ஸம்ஸ்தானம்—அவயவங்களின்அமைப்பு. || ப்ரதிஸந்தானம்—ஸ்மரணம்.

* கர்மதாரய ஸமாஸம்—ஒரே விபக்தியிலிருக்கிற இரண்டுபதங்களுடன்கூடியது. உதாஹரணம் - நீலோத்பலம், நீலமான கருநெய்தல். இரண்டு பதங்களுக்குள் ஒன்று

அனுபவிக்கப்பட்ட ஜாத்யாதிபதார்த்த விசிஷ்ட வஸ்துவிஷய ப்ரதிஸந்தானமானது ஸவிகல்பகத்தில், ஹேதுவாக இருப்பதால் என்றுஅர்த்தம். ப்ரதமபிண்டமானது விசிஷ்டமாக அறியப்படுகிறதென்பது அர்த்தஸித்தம. ப்ரதமபிண்டமானது ஜாதிவிசிஷ்டமாக அறியப்பட்டாலன்றோ இரண்டாவது தொடக்கமான வ்யக்திகளில் ஜாதியின் அநுவ்ருத்தபுத்திரூபமான $ ப்ரதிஸந்தானம் பொருந்துகிறது. எவ்வாறு ப்ரதிஸந்தானம்? எல்லாவிசேஷஙகளாலும் விடுபட்டிருக்கிற விஷயமுள்ளதன்றோ நிர்விகல்பகம்; என்று ஹேதுவின் அஸித்தியை ஆசங்கிதக்கூறு...ா— நிர்விகல்பகம்நாம என்று. எல்லாவிசேஷஙகளாலும் விடுபட்டிருத்தலின் இவ்வைமையை உபபாதிக்கிறார்— ஸதாபூதஸ்ய என்று. எல்லா விசேஷங்களாலும் விடுபட்டிருக்கிற வஸ்துக்ரஹணமானது தர்சநத்தால் ஒப்புக்கொள்ளப்படுகிறதா? அல்லது அநுபபத்தியினுல் கல்பிக்கப்படுகிறதா? என்று. விகல்பித்து தர்சநம் ஸகலவிசேஷ சூன்யக்ரஹணத்திற்கு ஹேதுவல்லவென்று கூறுகிறார்— ஸதாசிதபி என்று. கல்பநதை நிரஸிக்கிறார்—-அநுபபத்தே: என்று. அநுபபத்தியானது நிர்விசேஷஜ்ஞாநததிற்கு பாதகமாகவே காணப்படுகிறது. அந்த நிர்விசேஷ ஜ்ஞானத்திற்கு கல்பகமான அநுபபத்தியோவென்றால் தூரத்தில் நிரஸிக்கப்பட்டதென்று கருத்து. அதர்சநத்தை விவரிக்கிறார்— கேநசித் என்று. ப்ரகாரவிசேஷநியமம் இல்லை என்று கருத்து. மேலே 'க்ரஹணயோகாத்'' என்கிற ஐந்தாம்வேற்றுமையினுல் ஹேதுத்வம ஸ்பஷ்டமாக இருக்கிறது. இந்த இடத்தில் பஞ்சமீஸ்தானத்தில் 'ஹி'' சப்தம். இதம் இத்தம் என்கிற ஜ்ஞாநத்தையே விவரித்துக்கொண்டு அர்த்தாத் ஸகலவிசேஷசூன்ய க்ரஹணகல்பனையையும் நிராகரிக்கிறார்— த்ரிகோண என்று. அநுபபத்தியை விவரிககிறார்—க்ரஹணயோகாத் என்று. †அத்யாஹாரம் செய்துகொள்ளப்பட்டிருக்கிற சங்காவாக்கியததோடு ''க்ரஹணயோகாத்''என்கிற ஐந்தாம்வேற்றுமை உருபை ஈற்றில் கொண்டிருக்கிற பதத்திற்கு அந்வயம், த்ரிகோணம் பசுவின்முகம். க்ரஹணயோகாத்-நேராகக் காணப்பட்டிருக்கிற வ்யாப்தி விரோதத்தால் ஸகலவிசேஷ சூன்யவஸ்துக்ரஹணத்தைக் கல்பிப்பது பொருத்தமுள்ளதல்ல வென்று அர்த்தம். ''அநுபபத்தே:'' என்பதனுல் விபக்ஷத்தில் பாதகதர்கமும் கருதப்பட்டிருக்கிறது—ஸவிசேஷவிஷயத்வமில்லாவிடில் ப்ரத்யயதவமே இல்லாமல் போகவேண்டியதாகும் என்று. இந்த தர்கத்தாலுதவிபுரியத்தக்க ப்ரமாணம் ப்ரத்யக்ஷம் யோக்யாநுபலப்தி இந்த இரண்டும். அன்றிக்கே, ''அநுபபத்தே:'' என்பதனுல் ஸவிசேஷவிஷயத்வத்தில் ஸாதகமான ப்ரமாணம் சொல்லக்கருதப்பட்டது. முதலாவதான இந்திரிய § ஸன்னிகர்ஷத்தாலுண்டாகிறஜ்ஞாநம், ஸவிசேஷவிஷயமுள்ளது, ஜ்ஞாநமாக இருப்பதால், ஸம்ப்ரதிபன்னஜ்ஞாநம்போல என்று இவ்வண்ணம் ஸாதகப்ரமாணததின் இன்மை பாதகப்ரமாணததின் இருப்பு இவைகளால் சொல்லக்கருதப்பட்டிருக்கிற சில விசேஷங்களில்லாத ஜ்ஞாநம் நிர்விகல்பகம் என்பது ஸித்தம. இதனுல் நிர்விகல்பக

---

விசேஷணமாயும் மற்றொன்று விசேஷ்யமாயும் இருக்கலாம் . அன்றிக்கே இரண்டுபதங்களும் விசேஷணங்களாகவுமிருக்கலாம் உதாஹரணம் - சீதோஷ்ணம்-சீதமாயும் உஷ்ணமாயுமுள்ளது. உபமாநோபமேயங்களை உணர்த்துகிற இரண்டு பதஙகளும் கர்மதாரயத்திலடங்கியது. (உதா) புருஷவ்யாக்ர: - புலிபோன்ற புருஷன். பத்மமுகம்-தாமரைமலர்போன்ற முகம், இது முதலியது.

$ ப்ரதிஸந்தானம்—முன் அனுபவிக்கப்பட்டிருக்கிற பதார்த்தங்களின்ஸ்மரணம்

† அத்யாஹாரம்— சேர்த்துக்கொள்ளுதல்

§ ஸன்னிகர்ஷம்—விஷயத்துக்கும் இந்திரியத்துக்கும் உண்டாகும் சேர்க்கை.

சப்தத்திற்கு வ்ருத்திஸங்கோசம் பலித்தது. இந்தஸங்கோசமானது எந்தவிஷயத்தில் என்றால் சொல்லுகிறார்—அத: என்று. அத: - சொல்லப்பட்டிருக்கிற அதர்சனம், அநுபபத்தி, இவ்விரண்டுகளால் என்று அர்த்தம்.

𑌤𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌥𑌮𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌗𑍋𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌰𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌕𑌾𑌰𑌤𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌤𑍇 । 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌦𑌿𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌷𑍍𑌵𑍇𑌵𑌾𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌿𑌃 । 𑌪𑍍𑌰𑌥𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌸𑌂𑌹𑌿𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑍂𑌪 𑌗𑍋𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌰𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑍍𑌵𑌂 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌦𑌿𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌵𑌸𑍇𑌯𑌮𑌿𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌦𑌿𑌗𑍍𑌰𑌹𑌣𑌸𑍍𑌯 𑌸𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌕𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌸𑌾𑌸𑍍𑌨𑌾𑌦𑌿𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑍂𑌪𑌗𑍋𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌰𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌪𑍍𑌰𑌥𑌮𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌥𑌮𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑌸𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌕𑌤𑍍𑌵𑌮𑍍 ; 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑍂𑌪𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌦𑍇𑌰𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌤𑍍 । 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑍂𑌪𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌦𑍇𑌰𑍈𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑌤𑍍𑌵𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌤𑍍, 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌿𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌥𑌮𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌽𑌪𑌿 𑌸𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍇𑌵 𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌤𑍍𑌥𑌮𑌿𑌤𑌿 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑍋 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌦𑌿𑌪𑌿𑌣𑍍𑌡𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌷𑍁 𑌗𑍋𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌰𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑌾 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌿𑌵𑌤𑍍 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌦𑍈𑌵 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌕𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 । 𑌅𑌤𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌕𑌦𑌾𑌚𑌿𑌦𑌪𑌿 𑌨 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 ॥

ஸ்ரீ பாஷ்யம்.—

அங்கு முதலாவதான பிண்டக்ரஹணத்தில் கோத்வம் முதலியவைகள் அநுவ்ருத்தமான ஆகாரங்களுள்ளவைகளாக அறியப்படுகின்றனவில்லை. இரண்டாவது தொடக்கமான பிண்டக்ரஹணங்களிலேயே அநுவ்ருத்திப்ராதீதி உண்டாகிறது. முதலாவதான ப்ரதீதியினால் அநுஸந்திக்கப்பட்ட கோ முதலியவஸ்துக்களின் அவயவ † ஸம்ஸ்தானரூபமான கோத்வம்முதலியவற்றுக்கு அநுவ்ருத்திதர்மவிசிஷ்டத்வமானது இரண்டாவது தொடக்கமான பிண்டக்ரஹணத்தால் நிச்சயிக்கத்தக்கதென்பதனால் இரண்டாவது தொடக்கமான பிண்டக்ரஹணம் ஸவிகல்பகம். ஸாஸ்னை முதலிய வஸ்து ஸம்ஸ்தானரூபகோத்வம் முதலியவற்றின் அநுவ்ருத்தியானது முதலாவதான பிண்டக்ரஹணத்தில் க்ரஹிக்கப்படுகிறதில்லை என்பதனால் முதன்மையான பிண்டக்ரஹணத்திற்கு நிர்விகல்பகத்வமே ஒழிய ஸம்ஸ்தானரூபமான

† ஸம்ஸ்தானம்— அவயவங்களின் அமைப்பு.

ஜாதிமுதலியவற்றின் அக்ரஹணத்தாலல்ல. ஸம்ஸ்தானரூபமான ஜாதிமுதலியவற்றுக்கும் இந்திரியங்களாலுண்டாகிற ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாக இருத்தல் ஸமானமாதலாலும், ஸம்ஸ்தானமின்றி ‡ ஸம்ஸ்தானிக்கு ப்ரதீதி பொருந்தாதாதலாலும் முதன்மையான பிண்டக்ரஹணத்திலும் ஸம்ஸ்தானத்துடன் கூடியதாகவே வஸ்து "இவ்வண்ணமுள்ளது" என்று க்ரஹிக்கப் படுகிறது. ஆகையால் இரண்டாவது தொடக்கமான பிண்டக்ரஹணங்களில் கோத்வம் முதலியவற்றின் அநுவ்ருத்திதர்மவைசிஷ்டயமானது ஸம்ஸ்தானிபோலவும் ஸம்ஸ்தானம் போலவும் எப்பொழுதுமே க்ரஹிக்கப்படுகிறதென்பதனால், அவைகளில் ஸவிகல்பகத்வமே. ஆகையால் ப்ரத்யக்ஷத்திற்கு ஒருபொழுதும் நிர்விசேஷவிஷயத்வமில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

முதலாவது இரண்டாவது வ்யக்திகளில் ஸவிகல்பக நிர்விகல்பகசப்தங்கள் ஸங்கேதமுள்ளவைகளாக ஏற்படுத்தப்பட்டவைகளல்ல. ஆகையால் அந்த இரண்டு பிண்டங்களிலும் வைஷம்யம் சொல்லத்தக்கதென்கிற சங்கைவரின் க்ரஹிக்கத்தக்கதான உருவத்தின் வேற்றுமையைக்காண்பிக்கிறார்— "தத்ர" இதுமுதலான இரண்டு வாக்யங்களால்.

கோத்வத்தின் அநுவ்ருத்திஜ்ஞானம் அதின் இன்மை இவ்விரண்டும் ஸவிகல்பகநிர்விகல்பகசப்தங்களில் $ ப்ரவ்ருத்திநிமித்தங்களென்பதைக்காண்பிக்கிறார்— 'ப்ரதமப்ரதீதி' என்று. தொடங்கப்பட்டுள்ள இரண்டுவாக்யங்களால், முந்தினக்ரந்தத்தால்சொல்லப்பட்டிருக்கிறகோத்வமானது ஸம்ஸ்தானசப்தத்தால்விசேஷிக்கப்பட்டது. அதனால் அன்யனுக்கு இஷ்டமான உருகின நெய்யை அடைந்துள்ள § க்ருதத்வம் முதலியவற்றின் ப்ரத்யக்ஷத்தில்போல வ்யஞ்ஜகத்தின் அபேக்ஷையினால் விளம்பமில்லை என்பது காண்பிக்கப்பட்டது. அதேஸம்ஸ்தானமானது அடுத்தக்ரந்தத்தில் ஸாஸ்நாதிசப்தத்தினால் குறிக்கப்படுகிறது. இவ்வண்ணமாக அநுவ்ருத்தியின் க்ரஹணாக்ரஹணங்களால் ஸவிகல்பகத்வமும் நிர்விகல்பகத்வமும்உரைக்கப்பட்டது. அநுவ்ருத்திமாத்திரத்தை க்ரஹிக்காமையினால் நிர்விகல்பகத்வமென்கிறதில்லை. பின்னையோ ஜாதியைக்ரஹிக்காமையாலும். அநுவ்ருத்தியின் க்ரஹணமில்லாவிடில் ஜாதியே க்ரஹிக்கப்படாததாக ஆகும் என்று சங்கைவர அதற்கு மறுமொழி உரைக்கிறார்—நபுநஸ்ஸம்ஸ்தாநாக்ரஹணாத் என்று. இங்கு "ஸம்ஸ்தானரூப" சப்தமானது ஜாதியின் அக்ரஹணரூபத்தியைக் காண்பிக்கிறது. கோத்வாதிகளுக்கு அஸாதாரணதர்மபூதமான அநுவ்ருத்தியின் க்ரஹணமில்லாமையால் கோத்வம் முதலியது க்ரஹிக்கப்படவில்லை என்று சங்கைவரின், அக்ரஹணரூபத்தியையே விவரிக்கிறார்— ஸம்ஸ்தாநரூபஜாத்யாதேரபி என்று. க்ரஹணத்திற்குக்காரணமான இந்திரியயோக்யதையிலும் அதே ஹேதுவென்று ஸூசிப்பிப்பதற்காக மீண்டும்"ஸம்ஸ்தான சப்தம்" சொல்லப்பட்டிருக்கிறது. நிர்விகல்பகம் ஸவிசேஷவிஷயமுள்ளது

---

‡ ஸம்ஸ்தானி—அவயவங்களின் அமைப்புள்ளதான வ்யக்தி.

$ ப்ரவ்ருத்திநிமித்தம்— அர்த்தத்தை உணர்த்தும் சப்தஸாமர்த்யத்திற்குஹேது

§ க்ருதத்வம்—க்ருதம் நெய், அதின் தர்மம்.

என்பதில் ஸவிகல்பகத்தில் நிர்விகல்பகாநுபூதார்த்தவிசிஷ்டப்ரத்யபிஜ்ஞாநம் ப்ரமாண மாக முந்தி உரைக்கப்பட்டது. பராபிமதமான நிர்விகல்பகத்தின் அபாவத்தில் யோக்யா நுபலப்தி என்கிற ப்ரமாணமும் அவ்விரண்டுக்கும் அநுக்ராஹகமான தர்கமும் இதனுல் சொல்லப்பட்டதாக ஆகிறது.

வஸ்துமாத்ரக்ரஹணம் என்று ஒப்புக்கொள்வது ப்ரமாணாநுபபத்தியினலேயா ? ப்ரமேயாநுபபத்தியினலேயா ? என்கிற விகல்பத்தை அபிப்ராயப்பட்டு முதலில் ப்ரமாணாநுபபத்தியை விலக்குகிறார்— ஐ ந் த் ரி ய க த் வ ா வி சே ஷ ா த் என்று. இதனுல் பூமியோடு பிரிக்கமுடியாமல் ஒன்றுபட்டிருக்கிற கந்தத்திற்கு வ்யாவ்ருத்தி ஏற்பட்டது ; எவ்வாறு ஜாதிமுதலியவை இந்திரியங்களால் உண்டாகிற ஜ்ஞாநங்களுக்குக் கோசரங்கள் ? ஸமவாயமானது இந்திரியத்தினுலுண்டாகும் ஜ்ஞா நத்திற்கு விஷயமல்லாததால் அது ஸரியல்லவென்று சொல்லப்படுமேயாகில், அப்பொழுது ஸவிகல்பகத்தில் விசிஷ்டக்ரஹணம் பொருந்தாது. ஆதலால் வேறு இந்திரியங்களால் க்ரஹிக்கத்தக்கதன்மை இல்லை என்பதுபற்றி ப்ரமாணாநுபபத்தி இல்லை. ஸந்நிஹிதமாக இல்லாமலிருத்தல் ப்ரமேயாநுபபத்தி, தனியாகப்பிரிக்க முடியா மல் சேர்ந்தே இருப்பதால் அது இல்லை என்று பரிஹரிக்கிறார்—ஸம்ஸ்தாநேநௌன்று. இதனுல் சக்ஷுரிந்திரியத்தினுல் உண்டாகிற ஜ்ஞாநத்திற்கு விஷயமாக இருத்தல் என் கிறதன்மை இருந்தபோதிலுங்கூட ப்ருதக்ஸித்தங்களான தண்டம் முதலியவைகளுக்கு வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. ஒரு இந்திரியத்தால் க்ரஹிக்கத்தக்கதன்மை இருக்க அப்ருதக்ஸித்தமாக இருத்தல், என்பதனுல் ப்ரமாணப்ரமேயாநுபபத்தி இல்லை என்று ஸம்ஸ்தாநத்தோடு கூடியதாகவே வஸ்து க்ரஹிக்கப்பட்டிருக்கிறதென்று அர்த்தம். இவ் வண்ணம் பூர்வம் " ஸம்ஸ்தாநரூப " சப்தத்தால் அபிப்ராயப்படப்பட்டுள்ள பொருள் விஸ்தரிக்கப்பட்டதாக ஆகிறது. அநுவ்ருத்தியின் க்ரஹணமில்லாமையால் ஸம்ஸ் தானரூபமான ஜாதிமுதலியவற்றின் அக்ரஹணம் சங்கிக்கத்தக்கதல்ல. † ப்ரகாரப்ரகாரி பாவத்தால் க்ரஹணத்திற்கு உபபத்தி இருப்பதாலென்று கருத்து.

முதலாவதான கோமுதலியவ்யக்திகளை க்ரஹிக்கும் ஸமயத்தில் அநுவ்ருத்தியின் க்ரஹணமில்லாமையால் கோத்வமானது க்ரஹிக்கப்படாமல் போகுமேயானுல் இரண் டாவது கோவ்யக்தியிலும் கோத்வமானது எவ்விதத்தாலும் க்ரஹிக்கப்படாது— அநு வ்ருத்தியின் க்ரஹணமில்லாமையால். அநுவ்ருத்தியானது அநேகவ்யக்திஸம்பந்தரூப மன்றோ. அதுவும் வ்யக்திகளில் ஸம்பந்தித்திருக்கிற பதார்த்தத்திற்கு முந்திய வ்யக்தி யில் நிலைபெற்றிருத்தலின் பராமர்சத்தினுலேயே இரண்டாவது தொடக்கமான எல் லாவ்யக்திகளிலும் க்ரஹிக்கப்படுகிறது. ஆதலால் முதல் கோவ்யக்தியில் கோத்வத்தின் க்ரஹணமில்லாமையால் அதின் அந்வயபராமர்சமில்லாதது பற்றி இரண்டாவது வ்யக்தி ஸம்பந்தரூபமான அநுவ்ருத்தியானது இரண்டாவதிலும் க்ரஹிக்கமுடியாததென்பதி னுல், அதிலும் கோத்வம் க்ரஹிக்கப்பட்டதாக ஆகாது. இவ்வண்ணம் முதலாவது இரண்டாவது வ்யக்திகளில் அந்வயபராமர்சமில்லாவிடில் மூன்றுவதிலும் அநுவ்ருத் தியானது க்ரஹிக்கப்பட்டதாக ஆகாது. அதனுல் கோத்வம் க்ரஹிக்கப்பட்டதன்று. இவ்வண்ணம் வேறு வ்யக்திகளிலுங்கூட கோத்வமானது எவ்விதத்தாலும் க்ரஹிக்க முடியாததாக ஆகும். ஆகையால் ப்ரதமபிண்டக்ரஹணத்திலேயே கோத்வக்ரஹணம் ஒப்புக்கொள்ளத்தக்கது. இ வ் வ ண் ண ம் ‡ ஸகலவிசேஷசூந்யவஸ்துக்ரஹணமானது

† ப்ரகாரம்—விசேஷணம், ப்ரகாரி-விசேஷ்யம்.

நிரஸிக்கப்பட்டது. ஜாதிமுதலியவைகளும் விசேஷ்யமும் தனித்தனியாக நிர்விகல்பகத்தில் க்ரஹிக்கப்படுகின்றன. ஸவிகல்பகத்திலேயே விசிஷ்டக்ரஹணமென்கிற பக்ஷமும் அர்த்தத்தினால் நிரஸிக்கப்பட்டதாக ஆகிறது.

விசேஷணமும் விசேஷ்யமும் தனித்தனியாக க்ரஹிக்கப்பட்டதென்று எவ்வாறு அறியப்பட்டது? தண்டம் குண்டலம் முதலியவைகளில் விசேஷணவிசேஷ்யங்கள் இரண்டுக்கும் தனித்தனியே க்ரஹணம் காணப்படுவதாலென்று கூறப்படுமேயானால்— அந்த விசேஷணவிசேஷ்யங்கள் இரண்டும் வேறுபடாமல் சேர்ந்திருக்கும் ஸமயத்தில் இரண்டுக்கும் தனித்து க்ரஹணமா? அல்லது வேறாக இருக்கும் ஸமயத்திலா? முதல் பக்ஷமானது ஸரியன்று, விசிஷ்டமாகவே க்ரஹணம வருவதால். தனித்திருக்கும்வேளையிலோ விசிஷ்டக்ரஹணமே இல்லை என்பதனால் அதன் ப்ரதீதிக்கு ஹேதுத்வமில்லை— ஆதலால் தனித்தவஸ்துக்களின் க்ரஹணமானது விசிஷ்டக்ரஹணத்துக்கு ஹேதுவாகாததால் கோத்வம் முதலியதில் ப்ருதக் க்ரஹணத்திற்கு ப்ரஸக்தி இல்லை.

அய்யா! விசேஷண விசேஷ்யபாவமானது ப்ரதியோகியோடு கூடியதாதலால் அந்த ப்ரதியோகியின் ஜ்ஞானத்திற்கு ப்ரதியோகி ஸ்வரூபஜ்ஞானம் அபேக்ஷிதமென்பதனால் விசிஷ்டப்ரதிபத்தியில் ஜாதிமுதலிய பதார்த்தங்களின் ஸ்வரூபமாத்ரத்தின் ப்ரதமக்ரஹணம் ஏற்றுக்கொள்ளத்தக்கது எனில்சொல்லப்படுகிறது. ப்ரதியோகிஜ்ஞானாபேக்ஷயாவது விசிஷ்டஜ்ஞானத்தில் ப்ரதியோகியின் தவறாததோற்றமா? அல்லது அந்த ஜ்ஞானத்திற்கு விசிஷ்டஜ்ஞானஹேதுத்வமா? முதலாவதை ஒப்புக்கொள்ளுகிறோம். இரண்டாவதிலும் ஜாதிமுதலியபதார்த்தங்கள் முதலில் ஒன்றோடொன்று அநுவ்ருத்தியின்றி விலகினவைகளாக க்ரஹிக்கப்பட்டதா இல்லையா? இல்லை என்கில் வ்யாவ்ருத்தங்களல்லவென்று க்ரஹிக்கப்பட்டிருக்கிற முன்பின் ஜ்வாலைகளுக்குப்போல விசேஷணவிசேஷ்யபாவப்ரதியோகிதாப்ரதீதியானது பொருந்தாது. வ்யாவ்ருத்தங்களாக க்ரஹிக்கப்பட்டிருக்குமேயாகில் அப்பொழுது வ்யாவ்ருத்தியும் பாரதந்த்ர்யாதிரூபமான விசேஷணவிசேஷ்யபாவத்தாலாவது அதற்கு உபயுக்தமான வேறு ஆகாரத்தாலாவது இல்லாமல்போமேயாகில் விசேஷணவிசேஷ்யபாவவ்யத்யாஸப்ரதீதியானது ப்ரஸங்கிக்கும். வஸ்துஸாமர்த்யத்தினால் வாஸ்தவமாகவே விசேஷணவிசேஷ்யபாவம் அறியப்படுகிறதென்றால் அப்பொழுது வஸ்துஸாமர்த்தியமானது விசேஷணவிசேஷ்யபாவரூபமாகவாவது அதற்கு ஸாதகமான வேறு ஆகாரரூபமாகவாவது ஆகும். வஸ்துவினது ஸ்வபாவம் ஸத்தையினால் உபகாரகமெனில் வஸ்துஸ்வபாவத்தினாலேயே விசிஷ்டப்ரதீதி ஸம்பவிப்பதால் ஸ்வரூபமாத்ர க்ரஹணத்தைக்கல்பிப்பது உசிதமன்று. அறியப்படும் தன்மையினால் உபகாரகத்வம சொல்லப்படுமேயாகில் அந்த ஸ்வபாவத்தால் விசேஷணம் வ்யாவ்ருத்தமென்று முந்தி ஜ்ஞானம் ஏற்பட்டிருப்பதினால் முதலிலேயே விசிஷ்டப்ரதீதியானது ஒப்புக்கொள்ளப்பட்டதாக ஆகும். ஆதலால் த்ரவ்யத்திற்கே முதலில் விசிஷ்டப்ரதீதியை ஒப்புக்கொள்வது நலம்.

அந்த ஸ்வபாவத்திற்கும் தனக்கு விசேஷ்யபூதமான விசேஷணத்தைக்குறித்து விசேஷணத்வம் முன்பு அறியப்படவில்லை. பின்னை ஸ்வரூபம்மாத்ரம் அறியப்பட்டிருக்கிறதென்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது விசேஷணம் அதின்ஸ்வபாவம் இரண்டுக்கும விசேஷண விசேஷ்ய பாவவ்யத்யாஸம் அறியப்படும். அதின் பரிஹாரத்திற்காக அந்தவஸ்துஸ்வபாவத்திற்கு வேறு ஆகாரத்தை ஒப்புக்கொண்டால்

‡ அநவஸ்தை வரும். வ்யத்பாஸ விசிஷ்டப்ரதீதியானது முதன்மையாக ப்ரஸங்கிக்கு மென்பதைப் பரிஹரிப்பதற்காக ஜாதிமுதலியவைகளின் ஸ்வரூபமே விசேஷணபாவமும்விசேஷ்யபாவமும் ; வேறு ஆகாராந்தரமல்லவென்று ஒப்புக்கொள்ளப்படுமேயாகில் அப்பொழுது முதலாவதான ப்ரதிபத்தியானது விசேஷணமாகவும விசேஷ்யமாகவும் ஆகவேண்டியதாகும். அவைகளின் ப்ரதிபத்தி இல்லாவிடில் ஸ்வரூபத்திற்கு க்ரஹணமில்லாமல் போகுதல் ப்ரஸங்கிப்பதால் அப்படியே ப்ரதீதி எனறுசொன்னால் முதலிலேயே விசிஷ்டப்ரதீதி உண்டாகவேண்டியதாக ஆகும்; ஒரு ப்ரதீதியில் விசேஷணமாகவும் விசேஷ்யமாகவும் ஜாதி முதலியவைகள் அறியப்பட்டவைகளாக இருப்பதால். ஆதலால் முதலிலேயே ஒன்றை மற்றொன்று ப்ரதியோகியாகக்கொண்ட விசேஷண விசேஷ்யபாவப்ரதீதியானது ஸம்பவிக்கிறதென்று ஒப்புக்கொள்ளத்தக்கது. இவ்வண்ணம் விசிஷ்டக்ரஹணம் ¶ப்ருதக் க்ரஹணபூர்வகமாகில் வெவ்வேறு ஸாமக்ரிகளால் அறியத்தக்கவஸ்துக்களினது கோசரத்வம் உபாதியாக ஆகும். பக்ஷத்தைவிட வ்யவச்சேதிக்கத்தக்க வேறுவஸ்து இல்லாமல் போனபோதிலும் கூறப்பட்டுள்ள தர்கபலத்தால் பக்ஷவ்யவச்சேதகத்வம் ஸித்திப்பதால் உபாதித்வம பொருந்தியுள்ளது. எவ்வாறு ப்ரத்வம்ஸாபாவத்திற்கு ஆதிமத்வஹேதுவினால் அநித்யத்வத்தை ஸாதிக்கும் விஷயத்தில் (அபாவாபாவம பாவரூபமாதலால்) பாவபதார்த்த ப்ரஸங்கரூபதர்கபலத்தால் பாவரூப ஆதிமத்வம் உபாதியாக ஆகிறதோ எவ்வாறு அக்நிமத்வஹேதுவினால் தூமாநுமாநத்தில் அக்னியுள்ள எல்லா இடங்களிலும் தூமோபலம்ப ப்ரஸங்கதர்கபலத்தால் ஆர்த்ரேந்தனஸம்யோகமானது உபாதியாக ஆகிறதோ அவ்வாறு என்றபடி. ஆகையால் ப்ரதமபிண்டக்ரஹணத்திலேயே கோத்வம க்ரஹிக்கப்படுகிறது- த்விதீயாதிகளில் அநுவ்ருத்திக்ரஹணம் ஒப்புக்கொள்ளததக்கது. ஆகையால் நிர்விகல்பகஸவிகல்பகங்கள் இரண்டும் கீழே நிரூபிக்கப்பட்டுள்ள ஸ்வரூபமுள்ளவைகளே.

அநுவ்ருத்தியின் ஜ்ஞாநாஜ்ஞாநங்களன்றோ ஸவிகல்பக நிர்விகல்பகங்களுக்குமுறையேப்ரயோஜகங்களாகக் கூறப்பட்டன ஆகையால் எவ்வாறு த்விதீயாதிக்ரஹணத்திற்கு ஸவிகல்பகத்வம் என்று கேட்கில் சொல்லுகிறார்— அத: என்று. அத: - முதல் க்ரஹணத்திலேயே ஸம்ஸ்தானத்துடன் கூடியதாகவே வஸ்து க்ரஹிக்கப்படுகிறபடியால் அநுவ்ருத்திக்ரஹணமில்லாத ப்ரதமேதரக்ரஹணத்தில்எவ்வாறு ஸவிகல்பகத்வமென்றால் சொல்லுகிறார்—த்விதீயாதி என்று த்விதீயாதிபிண்டக்ரஹணேஷு—இரண்டாவது தொடக்கமான பிண்டக்ரஹணங்களில். இதனால் ஸம்ஸ்காரத்துடன கூடின க்ரஹணம் ஸவிகல்பகம், மற்றது நிர்விகல்பகம், என்பது ஸித்தம். இதனால் ஜாதிமாத்ரத்தின் அநுவ்ருத்தியினாலேயே ஸவிகல்பகத்வம். ஜாதிகுணாதிகளில் ஏதாவது ஒன்றின்அநுவ்ருத்தியுள்ளக்ரஹணமும் ஸவிகல்பகமென்று ஸித்தித்தது. ஸர்வவிதாநுவ்ருத்தி சூன்யமான க்ரஹணமே நிர்விகல்பகம். அதாவது ஒரு வ்யக்தியில் ப்ரதமத்தில் இந்திரிய ஸன்னிபாதத்தாலுண்டாகும் ஜ்ஞாநம்.

அய்யா! ஒரு வ்யக்தியிலுங்கூட ஸம்ஸ்காரத்தால் உண்டாகிற தேசகாலாதிகளின் அநுவ்ருத்தியுடன் கூடின க்ரஹணம் ஸவிகல்பகமாக ஆகட்டும்—என்றால் ஸம்ஸ்காரஜந்யத்வம் அநுவ்ருத்திகோசரத்வம் இரண்டும் ஸமானமாக இருப்பதால் ஆகவே

‡ அநவஸ்தை—வரம்பில்லாமல் போகுதல். ¶ ப்ருதக்—தனித்து.

§ ப்ரதமேதர—முதலாவதைவிட வேறாக இருக்கிற.

† ஸம்ஸ்காரம்—திடமாக மனதில் நிலைபெற்றிருக்கிற பூர்வாநுபவ வாஸனை.

ஆகலாம. ஏகஜாதிய த்ரவ்யங்களில் ப்ரதமபிண்ட க்ரஹணமென்கிற வசனமோ வெனில் ஜாதியின அநுவ்ருததியைக்காட்டுவதற்காக, ஸம்ஸ்தாநிபோலவும ஸமஸ்தாஸம் போலவும் என்று திருஷ்டாந்தத்தைக்காட்டினது ஸ்பஷ்டீகரணத்திற்காக, இரண்டு திருஷ்டாந்தங்களை எடுத்தது பிண்டதர்மம் ஸம்ஸ்தானம் அதின் தர்மம் அநுவ்ருத்தி எனகிற தர்மி தர்மபாவரூப ஸாம்யத்தை ஹேதுவாகக்கொண்டது. இவ்வண்ணம் விகல்பகநிர்விகல்பகங்களில் ஸம்ஸ்காரத்தின் உதவி, அதினது இன்மை, இரண்டும் ஸாமக்ரீவைஷம்யமென்றும, கோத்வம் முதலியவற்றின் அநுவ்ருத்தியும் அதினது அபாவமும் க்ராஹ்யாகாரவைஷம்யமென்றும் சொல்லப்பட்டதாக ஆகிறது. இரண்டுவிதமான ப்ரத்யக்ஷத்திற்கும் ஸவிசேஷவிஷயத்வத்தை நிகமனம செய்கிறார்— அத: என்று.

அதஏவ ஸர்வத்ர பி⁴ந்நாபி⁴ந்நத்வமபி நிரஸ்தம் । இத³மித்த²மிதி ப்ரதீதாவித³மித்த²ம்பா⁴வயோரைக்யம் கத²மிவ ப்ரத்யேதும் ஶக்யதே । தத்ரேத்த²ம்பா⁴வஸ்ஸாஸ்நாதி³ஸம்ஸ்தா²நவிஶேஷ:, தத்³விஶேஷ்யம் த்³ரவ்யமித³ம்ஶ: த்வநயோரைக்யம் ப்ரதீதிபராஹதமேவ । ததா²ஹி — ப்ரத²மமேவ வஸ்து ப்ரத்யயநம் ஸகலேதரவ்யாவ்ருத்தமேவ ப்ரதீயதே । வ்யாவ்ருத்திஶ்ச கோ³த்வாதி³ஸம்ஸ்தா²நவிஶேஷவிஶிஷ்டதயேதி ப்ரதீதே: । ஸர்வத்ர விஶேஷணவிஶேஷ்யபா⁴வப்ரதிபத்தௌ தயோரத்யந்தபே⁴த³: ப்ரதீத்யைவ ஸுவ்யக்த: । தத்ர த³ண்ட³குண்ட³லாத³ய: ப்ருத²க்ஸம்ஸ்தா²நஸம்ஸ்தி²தா: ஸ்வநிஷ்டா²ஶ்ச கதா³சித் க்வசித்³த்³ரவ்யாந்தரவிஶேஷணதயாவதிஷ்ட²ந்தே । கோ³த்வாத³யஸ்து த்³ரவ்யஸம்ஸ்தா²நதயைவ பதா³ர்த²பூ⁴தாஸ்ஸந்தோ த்³ரவ்யவிஶேஷணதயாவஸ்தி²தா: । உப⁴யத்ர விஶேஷணவிஶேஷ்யபா⁴வ: ஸமாந: । அதஏவ தயோரைக்யப்ரதிபத்திஶ்ச । அயம் து விஶேஷ: — ப்ருத²க்ஸ்தி²திப்ரதிபத்தியோக்³யா த³ண்டா³த³ய:, கோ³த்வாத³யஸ்து நியமேந தத³நபாயிந: — இதி । அதோ வஸ்து விரோத⁴: ப்ரதீதிபா³தி⁴த இதி ப்ரதீதிப்ரகாரநிரூபணாதே³வோச்யதே । ப்ரதீதிப்ரகாரோऽபி இத³மித்த²மிதி ஸர்வஸம்மத: । ததே³தத்ஸூத்ரகாரேண "நைகஸ்மிந்நஸம்ப⁴வாத்" (ஶா-ஸூ-௨-௨-௩௩) இதி ஸுவ்யக்தமுபபாதி³தம் ॥

ஸ்ரீபாஷ்யம்.—

அதினாலேயே எல்லா இடத்திலும் பின்னாபின்னத்வமும் நிரஸிக்கப் பட்டது. இதம் இத்தம் எனகிற ப்ரதீதியில் இதமித்தம்பாவமிரண்டுக்கும் ஐக்யம எவ்வாறு அறிவதற்குசக்யமாகும். அதில்"இத்தம்பாவம்" ஸாஸ்நாதி

ஸம்ஸ்தானவிசேஷம். அதற்கு விசேஷ்யத்ரவ்யம் "இதமம்சம்" என்பதனால் இவ்விரண்டுக்கும் ஐக்யம் ப்ரதீதியினால் பாதிக்கப்பட்டதே. இதை உபபாதிக்கிறார்— முதலிலேயே வஸ்து ப்ரதீதிவிஷயமாக அரும் தருணத்தில் ஸகலமான இதரவஸ்துக்களைக்காட்டிலும் பேதமுள்ளதாகவே அறியப்படுகிறது. வ்யாவ்ருத்தியும் கோத்வாதி ஸம்ஸ்தாநவிசேஷத்தோடு கூடினதாக "இவ்வண்ணம்" என்று ப்ரதீதிவருவதால், நிச்சயிக்கப்படுகிறது. எல்லா இடத்திலும் விசேஷணவிசேஷ்யபாவப்ரதிபத்தியில், அவ்விரண்டுக்கும் அத்யந்தபேதமானது ப்ரதீதியினாலேயே மிகக ஸ்பஷ்டமாக இருக்கிறது. அதில் தண்டம் குண்டலம் முதலியவைகள் தனித்தனியான ஸம்ஸ்தானத்துடன் கூடியவைகளாகவும் தன்னிடத்திலேயே பர்யவஸாநமுள்ளவைகளாகவும் ஒரு ஸமயத்தில் ஒரிடத்தில் வேறு த்ரவ்யங்களுக்கு விசேஷணங்களாக இருக்கின்றன. சோத்வம் முதலியவைகளோ வென்றால் த்ரவ்யங்களின் ஸம்ஸ்தானங்களாகவே பதார்த்தபூதங்களாக இருந்துகொண்டு த்ரவ்ய விசேஷணங்களாக நிற்கின்றன இரண்டு இடத்திலும் விசேஷணவிசேஷ்யபாவம் ஸமானம். அதனாலேயே அவ்விரண்டுக்கும் பேத ப்ரதிபத்தியும் இவ்வளவுமாத்திரம் விசேஷம்.—தனித்து இருப்பை விஷயீகரிக்கிற ப்ரதிபத்திக்குயோக்யங்கள் தண்டாதிகள். கோத்வாதிகளோ தவறாமல் அப்படிப்பட்ட ப்ருதக்ஸ்திதிக்கு அநர்ஹங்கள் என்று ஆதலால்வஸ்து விரோதமானது ப்ரதீதியினால் பாதிக்கப்பட்டதென்று ப்ரதீதி ப்ரகாரத்தின் மறுத்தலால் சொல்லப்படுகிறது. ப்ரதீதியின் ஸ்வபாவமோ இதம் இத்தமென்றே எல்லோருக்கும் ஸம்மதமாக இருக்கிறதன்றோ.

அப்படிப்பட்ட இந்த விஷயம் ஸூத்ரகாரரால் "நைகஸ்மிந்நஸம்பவாத்" என்று மிக்க வ்யக்தமாக உபபாதிக்கப்பட்டிருக்கிறது.

---

**ச்ருதப்ரகாசிகை—**

ப்ரஸ்தாவம் வந்தபடியால் பேதாபேதத்தை நிராகரிக்கிறார்— அத ஏவ என்று. அத ஏவ - ப்ரதமபிண்டக்ரஹணத்திற்கு விசிஷ்டவிஷயத்வத்தை ஸமர்த்தித்ததினால் ஸர்வத்ர - இரண்டுபிண்டங்கள் ஜாதிவ்யக்திகள் குணக்ரியைகள் அவைகளைப்போலவே கார்யகாரணங்கள் இவைகளில் என்று அர்த்தம். எவ்வாறு என்று கேட்கில் கூறுகிறார்— இதமித்தமிதி.

பேதாபேதவாதியினால் பிண்டங்களுக்கு அந்யோந்யம் பேதாபேதங்களை ஸமர்த்திப்பதில் "இது இதாக" ஆகாதென்பதினால் பேதம், "இது இதாக" ஆகிறதென்பதினால் ¶ அபேதமென்று, ஒன்றுக்கே ஒரேஸமயத்தில் பாவாபாவரூப வ்யாஹதியைப்பரிஹரிப்பதற்காக ஜாதிஸ்வரூபத்தால் அபேதம் வ்யக்திஸ்வரூபத்தால் பேதமென்கிற இப்படிப்பட்ட இரண்டு ஆகாரங்களால் பேதாபேதம் உபபாதிக்கப்பட்டது. அபேதம்

---

¶ அபேதம்—ஐக்யம்.

ஜாதியை அடைந்துள்ளது. பேதம் வ்யக்தியை அடைந்துள்ளது என்று ஒரு வஸ்துவுக்கே இரண்டுவிதமான ஸ்வரூபமில்லை என்கிற சங்கையின் பரிஹாரத்திற்காக ஜாதி வ்யக்தி இரண்டுக்கும் அந்யோந்யம் பேதாபேதம் உரைக்கப்பட்டது அதை நிர்வஹிப்பதற்காக வேறு ஆகார ஸம்பந்தம் காணப்படாமையால் ப்ரதீதியே சரணமென்று ஆச்ரயிக்கப்பட்டது ஆதலால் அதை நிரஸிப்பதின்பொருட்டு முதலில் ஜாதிவ்யக்திகள் இரண்டும் வேறுபட்டவைகளென்றே ப்ரதீதிவருவதால் அபேதத்திற்கு ப்ரதீதி விரோதத்தைக்காட்டுகிறார்— இதமித்தம் என்று இதர்பாவம் விசேஷ்யம். இத்தம்பாவம் விசேஷணம், இத்தம் என்கிற அம்சம் எது? இதம் என்கிற அம்சம் எது? எனில் கூறுகிறார்—தத்ர என்று

இந்த இடத்தில் ஜாதிவ்யக்திகளுக்கு பேதாபேதவிஷயத்தில் நான்கு ஹேதுக்கள் பிறர்களால் சொல்லப்பட்டன அவைகளாவன—முதலாவதான பிண்டத்தைக்ரஹிக்கும் ஸமயத்தில் ஜாதிவ்யக்திகளின் பேதத்தை க்ரஹியாமலிருத்தல். ஒரு சப்தத்தால் இரண்டையும் சேர்ந்தே அறிதல் *மத்வர்த்தீயமான ப்ரத்யயத்தை அபேக்ஷியாமல் ஸமாநாதிகரணபதங்களின் ப்ரயோகம், † ஸஹோபலம்ப நியமம். என— இவற்றுள் ஸஹோபலம்ப நியமம், ‡ ஸமாநாதிகரண ப்ரத்யயம், இந்தஇரண்டும் பேதாபேதஸாதகங்கள். மற்றவை இரண்டும் அபேதஸாதகங்கள். இந்த நான்கு ஹேதுக்களையும் ஆசங்கித்து கூறுகிறார்— ததரஹி என்று. அவைகளை மனதில் வைத்துக்கொண்டு ப்ரதம பிண்டக்ரஹணத்தில்அபேதக்ரஹணத்தை நிரஸிக்கிறார்—ப்ரதமம் இதுமுதலியதால் ஸகலேதரவ்யாவ்ருத்தம்—விஜாதீயங்களான எல்லாவஸ்துக்களினின்றும் வ்யாவ்ருத்திக்கப்பட்டது என்றுஅர்த்தம். அதினால் பேதக்ரஹணத்திற்கு என்னவென்று கேட்கில்கூறுகிறார்-வ்யாவ்ருத்திம்ச என்று. கோத்வம் முதலிய ஸம்ஸ்தான விசேஷத்தோடுகூடியதாக "இத்தம்" என்கிற ப்ரதீதிஉண்டாவதால், வ்யாவ்ருத்தியும் நிச்சயிக்கப்படுகிறதென்று அர்த்தம், இதனால் அகண்டவாக்யார்த்த பங்கமும் ஆர்த்திகமாக செய்யப்பட்டதாக ஆகிறது. இந்த இடத்தில் சௌக்ல்யாதிவைதர்ம்யமும் கருதப்பட்டிருப்பதினால் அதுவும் முந்திகாண்பிக்கப்பட்டது. கோத்வாதி விசிஷ்டமாக ப்ரதீதி இருக்கட்டும் ஆயினும், அபேதமானது ஸ்வப்ரமாணத்தால் ப்ரஸங்கிக்குமேயானால் தடுக்கமுடியாதெனில் கூறுகிறார்— ஸர்வத்ர என்று. ஸர்வத்ர-கோத்வம் அதற்கு ஆச்ரயம் முதலியவைகளிலும், தண்டகுண்டலாதிகளிலும், தண்டதண்டிகள் இரண்டுக்கும்போல ஜாதிவ்யக்திகள் இரண்டுக்குங்கூட விசேஷண விசேஷ்யபாவமே அபேத விரோதி என்று அர்த்தம். விசேஷணவிசேஷ்யபரிவேதி- கோத்வம் வ்யக்தி இவ்விரண்டுக்கும் அநுவ்ருத்தி வ்யாவ்ருத்தி

---

* மத்வர்த்தீயப்ரத்யயங்களாவன—"ததஸ்யாஸ்த்யஸ்மின்னிதிமதுப்" இதுபாணினீஸூத்ரம். மதுப்ப்ரத்யயத்தை விதிக்கிறது. உதாஹரணம்-குணவாந், தீமான் புத்திமான் முதலியன இந்த மதுப்ப்ரத்யயத்தினால் விதிக்கப்பட்ட அர்த்தம்போன்ற அர்த்தமுடைய ப்ரத்யயங்களெல்லாம் மத்வர்த்தீய ப்ரத்யயங்கள். அதாவது, இன், வின் டன், லச், வலச் மிந்,முதலியன—இந்த ப்ரத்யயங்களெல்லாம் எந்த ப்ரக்ருதிகளின்மீது வருகின்றனவோ அந்த ப்ரக்ருதிகளால் உணர்த்தப்பட்ட அர்த்தங்களை உடையவன் என்கிற அர்த்தத்தைக்காட்டுகின்றன.

† உபலம்பம்—அறிதல். நியமம்—தவறாமை.

‡ ஸமாநாதிகரணங்கள்—பேதமின்றி ஒன்றோடொன்று அந்வயிக்கக்கூடிய ஒரே வேற்றுமையிலிருக்கிற பதங்கள்.

*க்ரஹமில்லாவிடினும் விசேஷணவிசேஷ்யபாவரூபமான வேறு ஆகாரத்தால் பேதம் க்ரஹிக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஆகாரத்தினலேயே பேதக்ரஹணமென்கிற நியமமில்லையென்று கருத்து. இரண்டு இடத்திலும் அத்யந்தபேதம் உளது என்றால் மத்வர்த்தீய ப்ரத்யயத்தை அபேக்ஷியாதஸாமாநாதிகரண்யமும், ஏகசப்தாநுவித்தப்ரத்யயமும், ஸஹோபலம்ப நியமமும் எவ்வாறு ஒரு இடத்தில் காணப்படுகிறது, வேறு இடத்தில் காணப்படுகிறதில்லையே என்றுகேட்கில் சொல்லுகிறார்—தத்ர என்று. தத்ர-கோத்வ கோத்வாச்ரய தண்டதண்ட்யாதிவர்கத்தில்.*

*ப்ருதக்ஸம்ஸ்தானவிசிஷ்டமாயும் தன்னிடத்திலேயே பர்யவஸாநமுள்ளதுமான வஸ்துவுக்கு, ஒருஸமயத்தில் ஸம்பவிக்கிற விசேஷணத்வமானது மத்வர்த்தீய ப்ரத்யயஸாபேக்ஷமான ஸாமாநாதிகரண்யப்ரத்யயத்தில் ப்ரயோஜகம். த்ரவ்யத்தின் ஸம்ஸ்தானமாகவே பதார்த்தமாக ஆகித்ரவ்யபர்யந்தபோதஜநகமாக இருப்பதால் த்ரவ்யத்திற்கு விசேஷணமாகவே இருத்தல், மத்வர்த்தீயப்ரத்யயத்தை அபேக்ஷியாத ஸாமாநாதிகரண்யத்தில் காரணம். ஸஹோபலம்பநியமத்திற்கும் அதின் அபாவத்திற்கும் § அப்ருதக்ஸித்தத்வ $ப்ருதக்ஸித்தத்வங்களே ‡ ப்ரயோஜகங்களே தவிர்த்து பேதாபேதங்கள் ப்ரயோஜகங்களல்லவென்று அர்த்தம். ஸஹோபலம்பநியமத்தில் இரண்டுக்கே சேர்க்கை இருப்பதால் ஸஹோபலம்பமானது த்வித்வத்திற்கு ஸாதகம். அதின் நியமமோவென்றால் பின்னங்களாக இருக்கிற இரண்டுக்குள் ஒன்றிலுமில்லை என்கிற அஸாதாரணாநைகாந்திகத்வத்தால் இரண்டுக்கும் ஸாதகமல்ல. மேலும் விருத்தமே—த்வித்வத்திற்கு ஸாதகமான ஸஹோபலம்பநியமமல்லவோ த்வித்வத்தினுடைய நியமத்தைக்காண்பிக்கிறது. ஏகசப்தாநுவித்தப்ரத்யயமோ ‘ ஏகோ தண்ட ” இதுமுதலிய இடங்களில் வேறு தண்டிகளின் வ்யாவ்ருத்தி காணப்படுவதுபற்றி வேறுதர்மியின்நிஷேதத்தில் நோக்கமுள்ளதாக இருப்பதால் . தர்மதர்மிகளுக்கு அபேதஸாதகமல்லவென்று கருத்து. இப்படியானல், ஜாதிகுண்டலாதிகளுக்கு வைஷம்யம் வருகிறது. . விசேஷணவிசேஷ்யபாவஸாம்யத்தால் இரண்டிடத்திலும் பேதம் ஸாதிக்கப்படுமேயாகில், அப்பொழுது ஸஹோபலம்ப நியமாதி வைஷம்யம் வருவதால் ஏகத்வமும் உண்டாகலாம் எனில்; சொல்லுகிறார்— உ ப ய த்ர என்று. விசேஷணவிசேஷ்யபாவாதி விசேஷத்தால் அதினலுண்டுபண்ணப்பட்டிருக்கிற பேதப்ரதிபத்தியானது தடுக்கமுடியாதது— விசேஷணவிசேஷ்யபாவமிருந்தால் பேதம அனைவர்களாலும் விவாதமின்றி ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால். ஸஹோபலம்ப நியமத்தில் ஐக்யமல்லவோ அஸம்மதம். அதனல் ஸம்ப்ரதிபன்னமான பேதத்திற்கு விரோதமான அபேதம் கல்பிக்கத்தக்கதல்ல. எவ்வாறு சீதத்வம உஷ்ணத்வம்முதலிய அவாந்தரவைஷம்யமானது த்ரவ்யத்வாதி ஸாதாரணாகார விரோதியான அத்ரவ்யத்வகல்பகமன்றன்றே, இவ்வாறே ஸஹோபலம்பநியமமும் பேதவிரோதியான ஆகாரத்திற்கு கல்பகமல்லவென்று கருத்து. அன்றிக்கே, தனித்து இருக்கிறவைகளும் விசேஷணங்களாக இல்லாமலே இருப்பவைகளுமான தண்டாதிகளுக்கு ஒரு ஸமயத்தில் ஸஹபாவமாத்ரத்தினல் விசேஷணத்வமானது கல்பிதமென்பதுபற்றி அத்யந்த பின்னங்களில் விசேஷணத்வமில்லாமையால், விசேஷணத்வமானது அத்யந்தபேதஸாதகஸமர்த்தமல்ல வென்று சொல்லப்படுமேயாகில்; மறுமொழி உரைக்கிறார்— உபயத்ர என்று. வ்யாவ்ருத்தப்ரதீதியில் வ்யாவர்த்தகமாக*

§ அப்ருதக்ஸித்தம்—இணை பிரியாமல் சேர்ந்தே இருக்கும் வஸ்து.
$ ப்ருதக்ஸித்தம்—தனித்திருக்கும் வஸ்து.
‡ ப்ரயோஜகங்கள்—ஹேதுக்கள்.

உபயோகப்படுத்துகிறது எதுவோ அது விசேஷணம். அந்த விசேஷணத்வமானது தண்டாதிகளிலும் முக்கியமென்பதுபற்றி விசேஷணமாதலால் அத்யந்தபேதம் யுக்தமென்று கருத்து.

கோத்வம் அதின் ஆச்ரயம் முதலியவைகளிலேயே ஸஹோபலம்பநியமம், வேறு இடத்திலில்லையென்கிற வ்யவஸ்தைஸித்திப்பதின்பொருட்டு ஐக்யம கல்பிக்கத்தக்கதென்று சொல்லப்படுமேயானால் அந்தவிஷயத்தில் கூறுகிறார்-இயாம்ஸ்து என்று. இவ்வளவே, அதிகம் கல்பிக்கவேண்டியதில்லை என்று அர்த்தம். ஸஹோபலம்பநியமவ்யவஸ்தைக்காக ஐக்யம் கல்பிக்கப்படுமேயாகில்; அது யுக்தமல்ல. அவ்விடத்திலேயே ஐக்யம்; வேறு இடத்திலில்லை என்கிற வ்யவஸ்தையின்பொருட்டு அர்த்தாந்தரகல்பனம் ப்ரஸங்கிப்பதால் ஐக்யம் அங்கே ஸ்வாபாவிகமாகில் அப்பொழுது ஸஹோபலம்பநியமமும் ஸ்வாபாவிகமாதலால் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு விருத்தமான வேறு அர்த்தத்தைக் கல்பிக்கிற கௌரவமாச்ரயிக்கத்தக்கதில்லை என்று கருத்து. அன்றிக்கே, விசேஷணவிசேஷ்யபாவத்தால் ப்ரஸித்தமான பேதப்ரதிபத்தியானது எவ்வாறு இரண்டிடத்திலும் துல்யமயோ, அவ்வாறே ஸஹோபலம்ப நியமமானது தண்டம் தேவதத்தன் முதலியவற்றிலும் உண்டாகவேண்டியதாகும். ஜாதி வ்யக்திகள் இரண்டுக்காவது அது இல்லாமல்போகவேண்டியதாகும் என்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்—இயாந் என்று. ஸாதாரணமான ஆகாரம் அங்கீகரிக்கப்பட்டவுடன் அவாந்தரபேதம் இழக்கத்தக்கதன்று என்பது அர்த்தம். கடத்தில் படத்தின் அபாவம பேதம் - அந்த இடத்தில் அதினுடைய ஸத்பாவம் அபேதம் என்கிற பாவாபாவவிரோதத்திற்கு "நஹித்ருஷ்டே அநுபபன்னம் நாம" என்கிற ந்யாயத்தால் ப்ரதிபராஹதியை ஆசங்கித்துச் சொல்லுகிறார்— அத: என்று. அத; - இவ்வண்ணம் பேதஸாமாநாதிகரண்யத்தால் அபேதத்திற்கு ப்ரதீதி இல்லாமையால், ப்ரதீதிப்ரகாரம் எவ்வாறு எனில் சொல்லுகிறார்— ப்ரதீதிப்ரகாரோஹி என்று. விசேஷணவிசேஷ்யங்கள் இரண்டுக்கும் ஐக்யமிருக்குமேயாகில், அப்பொழுது இரண்டிலொன்றே அறியப்படும். இரண்டுக்குள் ஒன்றுக்கு ப்ரதீதியாவது இருக்கட்டும். ஆயினும் ஐக்யமில்லை. எவ்வாறு முன்னனுபவிக்கப்பட்டிருக்கிற இரண்டுபுருஷர்களுக்குள் ஒருவன் பார்க்கப்பட்டால் புருஷர்கள் இருவருக்கும் ஐக்யமில்லையோ. அப்படி ஜாதி வ்யக்தி இரண்டுக்கும் ஸம்பந்த நியமமே ஐக்யம் என்று கூறப்படுமேயானால், பேதத்திற்கு ஸாதகமான ஸம்பந்த நியமமானது பேதநியதஸம்பந்தத்தால் நியமிக்கத்தக்கதாக இருப்பதால், இரண்டு வஸ்துக்களுக்கன்றோ ஸம்பந்தம். அதின் நியமமே ஐக்யம் என்று கூறப்படுமேயானால் ஸம்பந்தஸ்வரூபத்திற்கு பங்கம் ப்ரஸங்கிக்கும். இவ்வண்ணம் பேதாபேதநிராஸம் ஸூத்ரகாரருக்கு அபிமதமென்று சொல்லுகிறார்— த தே த த் என்று.

---

குத: ப்ரத்யக்ஷஸ்ய ஸவிஶேஷவிஷயத்வேந ப்ரத்யக்ஷாதித்ருஷ்டஸம்பந்தவிஶிஷ்டவிஷயத்வாத் அநுமாநஸ்யாபி ஸவிஶேஷவிஷயத்வம் । ப்ரமாணஸங்க்யாவிவாதே(அ)பி ஸர்வாப்யுபகதப்ரமாணாநாமயமேவ விஷய இதி ந கேநாபி ப்ரமாணேந நிர்விஶேஷவஸ்துஸித்தி:। வஸ்துகதஸ்வபாவவிஶேஷேஷ்வேவ வஸ்து நிர்விஶேஷமிதி வதந்து ஜநநீ வந்த்யாத்வவ்ருத்திஜ்ஞாயாமிவ ஸ்வவாக்விரோதமபி ந ஜாநாதி ॥

ஸ்ரீபாஷ்யம்—

ஆகையால் ப்ரத்யக்ஷம் ஸவிசேஷவிஷயமுள்ளதாதலால், அநுமானமும் ப்ரத்யக்ஷம் முதலியவற்றால் காணப்பட்டிருக்கிற ஸம்பந்தத்தோடுகூடின விஷயமுள்ளதாக இருப்பதால் ஸவிசேஷ விஷயமுள்ளதே.

ப்ரமாணஸங்க்யையில் விவாதமிருந்தபோதிலும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ப்ரமாணங்களுக்கு இதுவே விஷயமென்று (நிச்சயிக்கப்பட்டிருப்பதால்) ஒரு ப்ரமாணத்தாலும் நிர்விசேஷவஸ்து ஸித்தியாது. வஸ்துவை அடைந்திருக்கிற ஸ்வபாவவிசேஷங்களால் அதே வஸ்து நிர்விசேஷமென்று சொல்பவன், தன் தாயார் மலடி என்கிற ப்ரதிஜ்ஞையில் போல தன்சொல்விரோதத்தையும் அறிகிறானில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

பிறகு இதர ப்ரமாணங்களெல்லாம் ப்ரத்யக்ஷ மூலமாக இருப்பதால் அவைகளுக்கும் ஸவிசேஷ விஷயத்வத்தைக்கூறுகிறார்— அத: என்று. ப்ரத்யக்ஷாதிகளால் கண்டறிப்பட்டிருக்கிற தூமாதிஸம்பந்தத்துடன் கூடின அக்நி முதலியவைகளை விஷயமாகக்கொண்டிருப்பதால் என்று அர்த்தம். தனக்குஅபிமதமான மூன்று ப்ரமாணங்களும் உரைக்கப்பட்டன, வேறு ப்ரமாணங்களை ஒப்புக்கொண்டபோதிலும்அவைகளுக்கு ஸவிசேஷவிஷயத்வத்தைக் கூறுகிறார்— ப்ரமாணஸங்க்யா இது முதலியதால். ப்ரமாணங்கள் ஸவிசேஷ விஷயங்களாக இருக்கலாம்; அவைகள் தர்க்கங்களால் பாதிக்கப்பட்டவைகளென்று சங்கைவரின், எல்லாப்ரமாணங்களுக்கும் ஸவிசேஷவிஷயத்வத்தை ஸவிஸ்தாரமாகச் சொல்லும் இந்த ஸமயத்தில்கூட மூர்த்தி அவற்றின் ஸங்க்ரஹோக்தியைப்போல புத்திஸ்தமான ஸ்வஸித்திவாதத்திலும் நிர்விசேஷத்வஸித்தி இல்லை என்பதை ஜ்ஞாபிப்பதற்காக ஸவிசேஷத்வத்திற்கு பாதகமாக அந்யனால் சொல்லப்பட்ட யுக்தியை ஒப்புக்கொண்டபோதிலும் யுக்திரூபவிசேஷங்களால் ஸவிசேஷத்வம் விலக்கத்தகாதது என்று முற்கூறப்பட்டதை ஸ்மரிக்கச்செய்துகொண்டுவிரோதத்தைக்காண்பிக்கிறார்—வஸ்துகத என்று. அன்றிக்கே, மூர்த்தி ஸ்வாநுபவஸித்தமான விசிஷ்டத்தில் நிர்விசேஷத்வ நிஷ்கர்ஷமானது. நிஷ்கர்ஷகர்களால் ஸவிசேஷத்வம் ஆபாதனஞ்செய்யப்பட்டபடியால் தூஷிக்கப்பட்டது; அவை அனைத்தையும் ப்ரமாண நிர்விசேஷ விஷயத்வ நிஷ்கர்ஷத்திலும் அதிதேசிக்கிறார்—வஸ்துகத என்று.

---

𑌯𑌤𑍍𑌤𑍁 — 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌨 𑌭𑍇𑌦𑌵𑌿𑌷𑌯𑌮𑍍, 𑌭𑍇𑌦𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾𑌸𑌹𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍂𑌪𑌃 — 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌤𑌦𑌪𑌿 𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌦𑍇𑌰𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚 𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌦𑍂𑌰𑍋𑌤𑍍𑌸𑌾𑌰𑌿𑌤𑌮𑍍 । 𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌨𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌾𑌦𑌿𑌵𑌚𑍍𑌚 𑌪𑌾𑌤𑍍𑌰 𑌵𑍍𑌯

𑌵𑌹𑌾𑌰𑌵𑌿𑌶𑍇𑌷𑌹𑍇𑌤𑍋𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌪𑌿 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌹𑌿 𑌰𑍂𑌪𑌾𑌦𑍇𑌃 𑌭𑍇𑌦𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑌂𑌭𑌵𑌤𑍍𑌯𑍇𑌵 । 𑌅𑌤𑌶𑍍𑌚 𑌨𑌾𑌨𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌣𑍇 𑌵𑌾 । 𑌕𑍍𑌷𑌣𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌕𑍍𑌷𑌣𑍇 𑌵𑌸𑍍𑌤𑍁𑌭𑍇𑌦𑌰𑍂𑌪𑍇𑌣 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 𑌗𑍋𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌨𑌾 𑌗𑍃𑌹𑍀𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑍍𑌤𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌂 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌿𑌹 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ॥

ஸ்ரீபாஷ்யம்.—

ப்ரத்யக்ஷம் ஸந்மாத்ரத்தை க்ரஹிக்கிற ஸ்வபாவமுள்ளதாக இருப்பதால் பேதத்தை விஷயீகரிக்கிறதில்லை; பேதமும் விகல்பத்தை ஸஹியாமலிருப்பதால் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாதது என்று எது உரைக்கப்பட்டதோ, அதுவும்; ஜாதி முதலியவைகளோடு கூடினதாகவே இருக்கிற வஸ்துவானது ப்ரத்யக்ஷவிஷயமாக ஆவதால் ஜாதிமுதலியதே ப்ரதியோகியை அபேக்ஷித்துக்கொண்டு வஸ்துவுக்கும் தனக்கும் பேதவ்யவஹாரஹேதுவாக இருப்பதால் தூரத்தில் ஓட்டப்பட்டது. ஸம்வேதனம் போலவும் ரூபம் முதலியதுபோலவும் தன்னை ஒழிய வேறுவஸ்துவினிடத்தில் வ்யவஹார விசேஷத்திற்கு ஹேதுவாக இருக்கிற ஒரு வஸ்துவுக்கு தன்னிடத்திலும் அப்படிப்பட்ட வ்யவஹாரத்திற்கு ஹேதுத்வம் உண்டென்பது உங்களாலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. அது பேதத்திற்கும் நிச்சயமாக ஸம்பவிக்கிறது அதனாலேதான் அநவஸ்தைபாவது அந்யோந்யாச்ரயமாவது இல்லை. ப்ரத்யக்ஷஜ்ஞானம் ஒருக்ஷணமிருக்கிறதாக இருந்தபோதிலும் அதே க்ஷணத்தில் வஸ்துபேதரூபமான அதின் ஸம்ஸ்தானஸ்வரூபமான கோத்வாதிகள் க்ரஹிக்கப்படுவதால் வேறுக்ஷணத்தில் க்ரஹிக்கத்தக்க தொன்றுமிங்கு இல்லை.

ச்ருதப்ரகாசிகை.—

இவ்வண்ணம் நிர்விசேஷஸந்மாத்ரத்திற்கு பாரமார்த்யம் மற்றவைகளுக்கு அபாரமார்த்யம் என்கிற ப்ரதிஜ்ஞா பாதமானது ஸாமாந்யமாக ஸர்வப்ரமாண ஸவிசேஷகோசரத்வத்தால் காண்பிக்கப்பட்டது. பிறகு அன்யனால் கூறப்பட்ட ப்ரமாணதர்க ஸமுதாயத்தைவிசேஷித்து தூஷிப்பதற்குத்தொடங்குகிறார். சாஸ்திரத்திற்கு பலீயஸ்த்வத்தை விரும்புகிற அன்யனால் முதலில் சாஸ்திரம் உபந்யஸிக்கப்பட்டது. அதை விரும்பாதவனும் ப்ரத்யக்ஷத்திற்குஅவிருத்தமான அர்த்தத்தில் சாஸ்திரத்தைப்ரமாணமாக ஒப்புக்கொள்ளுகிறவனுமானவித்தாந்தியினால் ப்ரத்யக்ஷத்திற்கு ஸந்மாத்ரவிஷயத்வம் நிராகரிக்கப்படுகிறது. அதில் ப்ரத்யக்ஷம் ஸந்மாத்ரத்தை விஷயீகரிக்கிறதென்பதிலும் பேதம் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாதது என்பதிலும், பூர்வபக்ஷியினால் சொல்லப்பட்ட குதர்கத்தை அநுவதித்து நிரஸிக்கிறார்—யத்து என்று. 'யதது' இதுமுதலிய இரண்டுக்ரந்தங்களால் ப்ரமாணநுபபத்தி ப்ரமேயாநுபபத்தி இவைகள் அநுவதிக்கப்படுகின்றன. தத்யீதி. ஸவிசே

ஸவிஷயத்வே *பாதகம் மாத்ரமல்ல; நிர்விசேஷவிஷயத்வோபபாதநாநுபபத்தியும் என்பது அபிசப்தத்தின் பாவம். அன்றிக்கே பின்ன விஷயத்வம் மாத்திரம் ஸ்தாபிக்கப் பட்டதென்பதில்லை, ஸன்மாத்ர விஷயத்வமும் தூரத்தில் தூரத்திடப்பட்டதென்பது அபிசப்தத்தின் அர்த்தம். ஜாத்யாதேரேவேதி—ஸ்வபரநிர்வாஹகமாக இருப்பதால், வ்யாவ்ருத்திரூபதர்மாந்தரத்தை அபேக்ஷியாமலும் ப்ரதியோகியை அபேக்ஷியாமலே இருப்பதுமான என்று கருத்து. தூரோத்ஸாரிதம் ப்ரதியோகியின் ஸ்மரணத்தினால் உண்டான விளம்பமிருந்தபோதிலும் ஜ்ஞாநத்திற்கு கார்யஸித்திவரையில் ஸத்த்வம் கல்பிக்கத்தக்கது; அப்படி இருந்தபோதிலும் ப்ரதியோகியை அபேக்ஷியாத ஜாதிமுதலியவைகளே பேதமாதலால் ப்ரத்யக்ஷம் ஒருக்ஷணமிருந்தபோதிலுங்கூட அதனால் பேதமானது ஸ்வரூபமாக க்ரஹிக்கப்படுவதால் தூரத்தில் ஓட்டப்பட்டதென்று கருத்து. ‘‘ஜாத்யாதேரேவ’’ என்பதனால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிற பேதத்தின் ஸ்வபரநிர்வாஹகத்வத்தை, அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற யுக்தியினாலேயே காண்பிக்கிறார்—ஸம்வேதநவத் இது முதலியதால், ‘‘ஸம்வேதநவத் ரூபாதிவச்ச’’ என்கிற இந்த பதங்களால் அன்யனால் சொல்லப்பட்டிருக்கிற ‖ பக்ஷஸபக்ஷங்கள் இரண்டும் § ஸபக்ஷங்களாக்கப்பட்டன இதனால் பரோக்த தூஷணம் பரிஹரிக்கப்பட்டதென்பதைக் காண்பிக்கிறார்—அத ஏவ என்று. இந்த இடத்தில் ப்ரதம சசப்தத்திற்கு ஸ்வபரநிர்வாஹகத்வத்தை உபபாதித்ததினால் தூஷணபரிஹாரமும் ஸித்தமென்று கருத்து. இரண்டாவது சசப்தம் தூஷணத்வயஸமுச்சயத்தில். அநவஸ்தைக்குப் பரிஹாரம் ஸித்தித்தால் அநவஸ்தாபரிஹார ப்ரயோஜநமான ஸ்வபரநிர்வாஹகத்வம் ஸித்திக்கிறது. அந்த அநவஸ்தாபரிஹாரத்தை ப்ரயோஜநமாகக்கொண்ட ஸ்வபரநிர்வாஹகத்வம் ஸித்தித்தால் அநவஸ்தா பரிஹாரமென்று அந்யோந்யாச்ரயம் என்று கூறப்படுமேயானால், அல்ல. ப்ரமநிவ்ருத்தியின் அந்வய வ்யதிரேகங்களாலேயே ஸ்வபரநிர்வாஹகத்வம் ஸித்திப்பதால் அநவஸ்தைக்கு பரிஹாரம் ஏற்படுகிறது. ப்ரத்யக்ஷஜ்ஞாநம் மூன்று நான்குக்ஷணகாலமாத்ரமிருப்புள்ளதாக இருந்தபோதிலுங்கூட ஒருக்ஷணம் இருத்தலை அங்கீகரித்து பரிஹரிக்கிறார்— ஏகக்ஷணவர்த்தித்வேபி என்று.

இந்த இடத்தில் இது அநுஸந்திக்கத்தக்கது. ப்ரதீதியானது அங்கீகரிக்கப்படவில்லையா? அன்றிக்கே, அங்கீகரித்தபோதிலும் மூலமில்லையா? அல்லது மூலம் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாததா? அல்லது விஷயம் இல்லையா? அல்லது இருந்தும் நிரூபிக்கமுடியாததாக இருக்கிறதா? என்றும். அவற்றுள் முதலில் ப்ரதீதியின் அநங்கீகாரம் உபபன்னமாகிறதில்லை. வேதாந்திகளுக்கு அநாரம்பணீயத்வம் ப்ரஸங்கிப்பதால் வாதிப்ரதிவாதிகளாக இருந்து வ்யவஹரிக்கிறவர்களுடைய கதைக்கு அநுபபத்திவருவதாலும் மூலமும் இருக்கிறது. கார்யம் விவாதமின்றி உபயவாதிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கலால் காரணம் கல்பிக்கத்தக்கது. அறியப்பட்டிருக்கிற கார்யமல்லவோ காரணகல்பனையில் ப்ரமாணம். வ்யக்தமாக நிச்சயிக்கப்பட்டிருக்கிற கார்யமானது, காரண நிரூபணத்திற்காக அபலாபம் செய்யத்தக்கதாக ஆகாதென்று நீதியை அறிந்தவர்களின் அபிப்ராயம். எவ்விதத்தாலும்

* பாதகம்—ஸாத்யாபாவமுள்ளபக்ஷம். ப்ரதீதியினால் ப்ரமவிபர்யயஸம்சயங்களுக்கு பாதம் என்று சொல்லுகிற இடங்களில் பாதசப்தத்திற்கு நிவ்ருத்தி என்று அர்த்தம்.

‖ பக்ஷம்—ஸந்தேஹாஸ்பதமான ஸாத்யமுள்ளது.

§ ஸபக்ஷம்—நிச்சிதமான ஸாத்யமுள்ளது,

நிரூபிக்கமுடியாத தன்மையும் இல்லை. காரணத்திற்கு ஸாலபமாக நிரூபிக்கத்தக்க தன்மை கார்யோத்பத்திக்கு அநுரூபமாக இருத்தலன்றோ. கார்யோத்பத்தியினால் காரணத்திற்கு கார்யாநுரூபத்வம் ஸித்தம்; ஆதலால் துர்நிரூபத்வமில்லை. விஷயமும் இருக்கவே இருக்கிறது. விஷயமில்லாவிடில் அப்பொழுது அவனால் வினவப்பட்ட உன்னாலேயே சொல்லத்தக்கது. ப்ரபஞ்சம் பாத்யம் என்கிற ஜ்ஞாநம், விஷயமுள்ளது அல்லது விஷயமில்லாதது? என்று. ஸவிஷயமாக ஜ்ஞாநத்தை ஒப்புக்கொண்டால் விஷயம் அங்கீகரிக்கப்பட்டதே. இல்லை என்றால் பாத்யத்வமும் இல்லை என்பதினால் ப்ரபஞ்சத்திற்கு பாரமார்த்த்யம் ஸம்பவிக்கும். ஆகையால் விஷயம் இருக்கவே இருக்கிறது. பாத்ய விஷயத்வம் சொல்லக்கூடாது. அங்ஙனம் சொல்லும்பக்ஷத்தில், பேதத்திற்கு பாதகமானப்ரமாணத்தாலுண்டாகிற ப்ரதீதியும் மித்யாவிஷயமாதலால் பேதத்திற்கு பாரமார்த்த்யம் ப்ரஸங்கிக்கும். இவர்களைக்குறித்துச் சொல்லுகிறார்கள்— ஸ்வசாஸ்த்ர நிர்ணயே ஸத்யே ஸத்யாஸ்ஸ்யுர்லோக நிர்ணயா: ! (தன்சாஸ்திர நிர்ணயம் ஸத்யமாகில் லோகநிர்ணயங்கள் ஸத்யங்களாக ஆகும்) என்று.

சொல்லப்பட்டிருக்கிற விகல்பங்களுக்குள் மூந்திய நான்கு பக்ஷங்கள், அபிச என்று தொடங்கி சொல்லப்போகிற பாஷ்யத்தினால் அபிப்ராயப்படப்பட்டிருக்கின்றன வென்பதினால், அவைகளின் நிராஸம் அங்கு அறியப்படப்போகிறது. இவ்விடத்தில், ப்ரதானமாக இருப்பதால் முதலில் ஐந்தாவதான பாத்யவிஷயத்வ பக்ஷத்தை பரிஹரிக்க எண்ணங்கொண்ட பாஷ்யகாரரால் ப்ரத்யக்ஷபாதம் காணப்படவில்லை, ஆனதுபற்றி யுக்தியடியாகவந்த பாதம் பரிஹரிக்கப்படுகிறது. அதில்ப்ரதியோகியை அபேக்ஷியாத ஜாதிமுதலியதே பேதமாதலால் அந்த ஜாத்யாதி விசிஷ்ட விஷயமாக க்ஷணாந்தரத்தில் க்ராஹ்யமில்லாமையால் க்ரமயௌகபத்ய விகல்பாயோகரூபையான ப்ரமாணாநுபபத்தி பரிஹரிக்கப்பட்டது இவ்வண்ணம் ப்ரமேயாநுபபத்தியில் ஸ்வரூபபக்ஷத்தில் ப்ரதியோகி நிரபேக்ஷ பேதவ்யவஹார ப்ரஸக்தியும் இஷ்டமாகஇருப்பதால் பரிஹரிக்கப்பட்டது; ஹாரோபாதாநாதிரூபமாயும் கோத்வம் முதலிய சப்தத்தை அவலம்பித்திருக்கிறதுமான வ்யவஹாரத்திற்கும் ப்ரதீதிக்கும் ப்ரதியோகியின் அபேக்ஷை இல்லாமையால், சாப்தமான வ்யவஹார விசேஷத்தில் ப்ரதியோகி ஸாபேக்ஷத்வமானது, தாரா: களத்ரம் ✽ ஆப: ''இதுமுதலிய இடங்களில் ஸ்த்ரீத்வம், நபும்ஸகத்வம், பகுத்வம், முதலியவைபோல சப்தஸ்வபாவத்தைச் சார்ந்திருப்பதால் அர்த்த தூஷணமாகாது. வ்யாவ்ருத்தாதி சப்தப்ரயோகங்களிலேயே ப்ரதியோகியினது அபேக்ஷை காணப்படுவதால். கோத்வம் முதலியவற்றின் ப்ரதீதி வ்யவஹாரங்களில் அது இல்லாமையால் சாப்தவ்யவஹாரவிசேஷத்திற்கு ப்ரதியோகியை அபேக்ஷித்திருத்தல் சப்த விசேஷஸ்வபாவாதீநமென்று அன்வய வ்யதிரேகங்களால் நிச்சயிக்கப்படுகிறது. சப்தஸ்வபாவமானது ப்ரவ்ருத்தி நிமித்தம் ஸாதாரணமாக இருப்பதால் அதற்கு அவச்சேதகமான உபாதியை முன்னிட்டுக்கொண்டு அர்த்த விசேஷ ப்ரதீதிக்கு ஹேதுவாக இருக்கிறது. அஸாதாரணமான கோத்வ சப்தமோ கோத்வத்தை ஸ்வரூபத்தால் காண்பிக்கிறது. பேதசப்தமோ வ்யாவ்ருத்தி புத்திஹேதுத்வரூபமான ப்ரவ்ருத்தி நிமித்த ஸாதாரண்யத்தினால் அதற்கு அவச்சேதகமான மஹிஷம் முதலிய வேறுபதார்த்த ரூபமான உபாதியை முன்னிட்டு கோத்வத்தைக் காண்பிக்கிறது. பர்யாயத்வ ப்ரஸக்தியும் பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது. வ்யாவ்ருத்திரூபமான பரப்ரஹ்மத்தினிடத்தில் ப்ரஹ்ம

✽ ஆப:—ஜலம்,

சப்தத்தோடுகூட ஸ்வரூபசப்தத்தைப்போல அதிகார்த்தத்திற்கு விவக்ஷை இல்லாதிருந்தபோதிலுங்கூட பின்னசப்தத்திற்கு ப்ரயோகம் ஸம்பவிப்பதால் உபாதி. சப்தங்கள் $ வாச்யத்தைக்காட்டிலும் வேருக இல்லாமலிருந்தபோதிலும் தடஸ்தோபாதி பேதத்தினால் அவைகளுக்கு அபர்யாயத்வம் உபபன்னமாகிறது. அதில் ப்ரயோகாப்ரயோகங்கள் இச்சாஸித்தங்கள். பேதத்திற்கு வ்யாவ்ருத்யநுவ்ருத்தி விகல்பமும் பரிஹரிக்கப்பட்டது. வ்யாவ்ருத்தமென்று ஒப்புக்கொள்ளப்பட்டால், ஸ்வரூபவ்யாவ்ருத்த சப்தங்களைப்போல பேத சப்தத்திற்கு அநுவ்ருத்த ப்ரயோகம் ஸம்பவிப்பதால் பேதஸம்பந்த முள்ளது பின்னமென்றே என்கிற இதுவும், ஸ்வரூபத்துக்கே ஜாத்யாதிபேத விசிஷ்டத்வமிருப்பது பற்றி பின்ன சப்தப்ரயோகம் ஸம்பவிப்பதால் பரிஹரிக்கப்பட்டது. தர்மபூதமான ஜாத்யாதிகளில் பின்ன: என்கிற ப்ரயோகமானது உன்னுடைய மதத்தில் வ்யாவ்ருத்திரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் வ்யாவ்ருத்த சப்தம்போல் ஔபசாரிகம் வேறு தர்மங்களில்லாவிடினும் அதின்ஸம்பந்தகார்யமான வ்யாவ்ருத்தி புத்திக்கு ஹேதுவாக இருப்பதால் தர்மபக்ஷத்தில் அநவஸ்தையும் அந்யோந்யாச்ரயணமும் பரிஹரிக்கப்பட்டன— ப்ரதியோகி நிரபேக்ஷமான ஜாதிமுதலியதே பேதமாக இருப்பதாலும் அதற்கே ஸ்வபர நிர்வாஹகத்வம் அங்கீகரிக்கப்படுவதாலும்.

அவித்யையைக்காட்டிலும் ப்ரஹ்மத்துக்கு பேதமிருக்கிறதா? இல்லையா? இல்லையாகில் ப்ரஹ்மத்திற்கு ஜடத்வம் முதலியது ப்ரஸங்கிக்கும். இருக்கிறதானால் அந்த பேதம் ஸ்வரூபமா, தர்மமா என்கிற விகல்பத்தில் தூஷண பரிஹாரஸாம்யம் காணத்தக்கது. மேலும் ஸ்வரூபதர்ம விகல்பதூஷண பரிஹாரங்கள் அபேதத்திலும் துல்யங்கள் அபேதமானது ஸ்வரூபமாகில் ப்ரதியோகியை அபேக்ஷியாத அபேத வ்யவஹாரம் ப்ரஸங்கிக்கும். பரமாத்மநாபவத்யபேதீ கடத்வம்ஸேகடாகாசோ நபின்னோ நபஸாயதா ॥ (பரமாத்மாவோடு பேதமில்லாதவனுக ஆகிறன்—குடமுடைந்துபோனல் குடத்திலிருந்த ஆகாயமானது ஆகாயத்தோடு எவ்வாறு அபின்னமாக ஆகிறதோ) இது முதலிய இடங்களில் அபேதமானது ப்ரதியோகியுடன் கூடியதென்றல்லவோ தீர்மானிக்கப்படுகிறது. ப்ரஹ்ம, அத்விதீயம், இது முதலிய பதங்கள் பர்யாயங்களாக ஆகவேண்டியதாகும். தர்மமென்று கூறப்படுமேயாகில் ஸவிசேஷத்வம் ஏற்படும், ஆதலால் அபஸித்தாந்தம்.

---

[illegible]

---

$ வாச்யம்—பதத்தினது சக்தியினுல் உணர்த்தத்தக்கது.

𑌉𑌪𑌰𑌿𑌤𑌨𑌸𑍍𑌯 𑌗𑍃𑌹𑍀𑌤𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑍈𑌲𑌕𑍍𑌷𑌣𑍍𑌯𑌂 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌤𑌿𑌸𑌂𑌵𑍇𑌦𑌨𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍇 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌮𑍇𑌵𑌾𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌸𑌂𑌵𑍇𑌦𑌨𑌾𑌨𑌾𑌮𑍇𑌕𑌵𑌿𑌷𑌯𑌤𑌾𑌯𑌾𑌮𑍇𑌕𑍇𑌨𑍈𑌵 𑌸𑌂𑌵𑍇𑌦𑌨𑍇𑌨𑌾𑌶𑍇𑌷𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌦𑌨𑍍𑌧𑌬𑌧𑌿𑌰𑌾𑌦𑍍𑌯𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌸𑌜𑍍𑌯𑍇𑌤 । 𑌨 𑌚 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌰𑍂𑌪𑌵𑌦𑍍𑌰𑍂𑌪𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑌸𑌮𑌵𑍇𑌤𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌨𑌾𑌪𑌿 𑌤𑍍𑌵𑌚𑌾, 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌵𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑍍𑌯𑌪𑌿 𑌨 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌵𑌿𑌷𑌯𑌾𑌣𑌿 ; 𑌶𑌬𑍍𑌦𑌰𑌸𑌗𑌨𑍍𑌧𑌲𑌕𑍍𑌷𑌣𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌷𑌯𑌾𑌣𑍍𑌯𑍇𑌵 । 𑌅𑌤𑌃 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌂 𑌨𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌿𑌹 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 ॥

𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣𑍈𑌵 𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌗𑌮𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌨𑍁𑌵𑌾𑌦𑌕𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 । 𑌤𑌤𑍋 𑌜𑌗𑌤𑍍𑌵𑌨𑌾𑌶𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌯𑌶𑍍𑌚𑍈𑌵𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 ।

ஸ்ரீபாஷ்யம் —

மேலும் ப்ரத்யக்ஷம் ஸத் ஒன்றையே க்ரஹிக்கிறது என்று சொல்லில் 'குடம் இருக்கிறது வஸ்திரம் இருக்கிற'தென்கிற விசிஷ்ட விஷயமான ப்ரதீதியானது விரோதிக்கிறது. ஸத் ஒன்றைத்தவிர வேறான வஸ்துவின் ஸம்ஸ்தானரூபஜாத்யாதி ஸ்வரூபமான பேதமானது ப்ரத்யக்ஷத்தால் க்ரஹிக்கப் படாமல் போமேயாகில் குதிரையில் விருப்பமுள்ளவன் ஏன் எருமைக்கடாவைக்கண்டவுடன் விலகுகிறான். எல்லாஜ்ஞாநங்களிலும ஸத் ஒன்றே விஷயமென்று கூறப்படுமேயாகில் அந்த அந்த § ப்ரதிபத்தியினது விஷயங்களோடுகூட சேர்ந்திருக்கின்ற எல்லாசப்தங்களும் ஒவ்வொரு ப்ரதிபத்தியிலும் ஏன் நினைக்கப்படுகிறதில்லை? மேலும் குதிரையையும் யானையையும் விஷயீகரித்துக்கொண்டிருக்கிற இரண்டு ஜ்ஞாநங்களிலும் விஷயம் ஒன்றாகப்போனபடியால் மேல்வருகிற ஜ்ஞாநமானது ஏற்கனவே க்ரஹித்ததை க்ரஹிக்கிறதாக இருப்பதாலும் விசேஷமில்லாமையாலும் ஸ்ம்ருதியில்வேறுபாடு உண்டாகாது. ஸம்வேதநந்தோறும் விசேஷம் ஒப்புக்கொள்ளப்படுமேயாகில் ப்ரத்யக்ஷத்திற்கு விசிஷ்டார்த்த விஷயத்வமே ஒப்புக்கொள்ளப் பட்டதாக ஆகிறது. "எல்லா ஸம்வேதநங்களுக்கும் விஷயம் ஒன்றே" என்று கூறப்படுமேயாகில் ஒரு*ஸம்வேதநத்திலேயே எல்லாம் க்ரஹிக்கப்

§ ப்ரதிபத்தி—ஜ்ஞாநம்.   * ஸம்வேதநம்—ஞாநம்.

படுவதால் குருடன், செவிடன், முதலிய வ்யவஹார பேதங்கள் இல்லாமல்போகவேண்டிவரும். மேலும் கண்ணால் ஸத்தே க்ரஹிக்கப்படுகிறதில்லை. அதற்கு ரூபத்தையும் ரூபமுள்ளவஸ்துக்களையும் ரூபத்துடன்கூட ஒரு வஸ்துவினிடம் பிரிக்கமுடியாத ஸம்பந்தத்தால் நிலைபெற்றிருக்கிற பதார்த்தங்களையும் க்ரஹிக்கும் தன்மை இருப்பதால் ☫ த்வகிந்த்ரியத்தாலும் ஸத் க்ரஹிக்கப்படுகிறதில்லை. அது § ஸ்பர்சமுள்ள வஸ்துக்களை விஷயமாகக் கொண்டிருப்பதால். † ச்ரோத்ரம் முதலிய இந்த்ரியங்களும் ஸந்மாத்ரத்தை விஷயீகரிக்கிறதில்லை; பின்னை சப்தம் ரஸம் கந்தம் என்கிற விசேஷவிஷயங்களுள்ளவைகளே. ஆகையால் ஸத் ஒன்றைமாத்திரம் க்ரஹிக்கிற ப்ரமாணம் இங்கு ஒன்றும் காணப்படவில்லை.

நிர்விசேஷமான ஸந்மாத்ரத்திற்கு ப்ரத்யக்ஷத்தினாலேயே க்ரஹணம் வருமேயாகில் அந்த ஸந்மாத்ரத்தை விஷயமாகக்கொண்ட சாஸ்த்ரமானது ப்ராப்தவிஷயமாதலால் * அநுவாதமாகவே ஆகும். ஸந்மாத்ர ப்ரஹ்மத்திற்கு ‡ ப்ரமேயத்வமும் வந்துவிடும். அதனால் ப்ரஹ்மத்திற்கு ஜடத்வம் நாசம் முதலியவைகள் ஸம்பவிக்குமென்று உன்னாலேயே உரைக்கப்பட்டிருக்கின்றன.

---

ச்ருதப்ரகாசிகை—

இவ்வண்ணம் விஷயம் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாததென்கிற பக்ஷம் நிராவிக்கப்பட்ட பிறகு பேதப்ரதிஜ்ஞையை ஒப்புக்கொள்ளாமலிருந்தலே ப்ரதிவாதிகளுக்கு சரணம் என்று எண்ணி அதை நிராகரிக்கிறார்—அபிச இது முதலியதால். தொடக்கத்தில் ப்ரதிபத்திவிரோதம் கூறப்படுகிறது. ஸந்மாத்ர என்று. "யதிச" இது முதலியதால் வ்யவஹாரவிரோதம். "ஸர்வாஸ" இது முதலியதால் சப்தவிரோதம்.

அய்யா! ஓரிடத்தில் எல்லாசப்தங்களும் தவறாமல் ஸ்மரிக்கப்படுகின்றன. எல்லா ப்ரதிஜ்ஞிகளுக்கும் ஸத் ஒன்றே விஷயமென்று ஒப்புக்கொண்டிருப்பதால். இவ்வண்ணமல்ல—கடம்அறியப்பட்டவுடன் அதில் கடவ்யவஹாரப்ரஸங்கம் அபிப்ராயப்படப்பட்டிருப்பதால். இதில் பதில் தூஷணம். "ஸந்மாத்ர" என்கிற சப்தத்தின் அநுவ்ருத்தியானது தூஷிக்கத்தக்க அர்த்தம் இதுவே என்பதை ஜ்ஞாபகப்படுத்துவதற்காக. கிஞ்ச இது முதலியதால் ப்ரதிஜ்ஞியின் § அவாந்தரஜாதி விசேஷவிரோதம் கூறப்பட்டது. இந்த இடத்தில் கிஞ்ச என்கிற சப்தத்தால் தூஷிக்கத்தக்க அர்த்தத்தின் அநுஸந்தானத்தால் ஸந்மாத்ரசப்தமானது ப்ரயோகிக்கப்படவில்லை.¶ தாராவாஹிக ஜ்ஞானங்களில் காலபேத

---

☫ த்வக்—தோல். § ஸ்பர்சம்—தொடுதல். † ச்ரோத்ரம்—காது.

* அநுவாதம்—முந்தி சொல்லப்பட்டிருப்பதை மீண்டும் எடுத்துக்கூறுதல்.

‡ ப்ரமேயத்வம்—ப்ரமைக்கு விஷயமாக இருத்தல்.

§ அவாந்தர—உள்பட்டிருக்கிற அல்லது உள்ளடங்கின.

¶ தாராவாஹிக ஜ்ஞானம்—ஒரேவஸ்துவை விஷயமாகக்கொண்டு தொடர்ச்சியாக வருகிற ஜ்ஞானம். ;அதாவது ஸ்தம்பம், ஸ்தம்பம். ஸ்தம்பம், ஸ்தம்பம் என்பதுபோல.

மிருக்கிறபடியால் அதை விலக்குவதற்காக விசேஷாபாவாத் என்று உரைக்கப்பட்டது. $ஸ்ம்ருதிவைலக்ஷண்யம் நஸ்யாதிதி—அறியப்பட்டதென்றே பராமர்சம் ப்ரஸங்கிக்க வேண்டியதாகுமென்று அர்த்தம். தாராவாஹிகபுத்திகளில்போல ஜ்ஞாதமென்கிற பராமர்சத்தின் இன்மைக்கு உபபத்தி என்று சொல்லப்படுமேயாகில்— அல்ல. அவ்விடத்தில் அப்ரதிஸந்தானமானது தற்சமயத்திலுண்டான அறியவேண்டுமென்கிற இச்சையின்மையைச்சார்ந்திருப்பதால். இவ்விடத்திலோ அறியவேண்டு மென்கிற இச்சை இருந்தபோதிலும் அறியப்பட்டதென்கிற பராமர்சத்தின் இன்மையானது விஷயபேதத்தையே வ்யவஸ்தாபிக்கிறது. ப்ரதிஸம்வேதமிதி—விசேஷத்தை ஒப்புக்கொண்டால் என்கிற சங்கையானது அன்யனுக்கு வேறு கதி இல்லாமையை ஸூசிப்பிப்பதற்காக "ஸர்வேஷாம்" இதுமுதலியதால் இந்திரியஙகளுக்கு வ்யவஸ்தை இன்மை ப்ரஸங்கிக்கும் என்பது கூறப்பட்டது. இந்த்ரியங்களுக்கு வ்யவஸ்தை ஸித்திப்பதற்காக விஷய பேதங்களைச்சொல்லுகிறார்— நச இது முதலியதால். இங்கு முற்கூறப்பட்ட விசிஷ்ட விஷய ப்ரதிபத்திவிரோதவிவரணமும் அகாரணத்வ துர்நிரூபகாரணத்வ நிராஸமும் செய்யப்பட்டதாக ஆகிறது. நசைகார்த்தஸமவேதேதி— ரூபத்துடன்கூட ஒரு ஆச்ரயத்தில் அகலாமலே இருக்கிற என்று அர்த்தம. ஸமவேத சப்தம் விசேஷணமாக இருத்தலே ஸ்வபாவமென்கிறபொருளை உணர்த்துவதில் நோக்குள்ளது. எது விசேஷிக்கப்படுகிறதோ அது விசேஷம்— அதனால் ஸந்மாத்ர விலக்ஷணமாயும் ஒன்றுக்கொன்று வேறுபட்டதாகவுமிருக்கிற விஷயங்கள் ஸித்திக்கின்றன.

அய்யா! எல்லா ப்ரத்யக்ஷங்களும் ஸவிசேஷ விஷயங்களுள்ளதென்று உரைக்கப்பட்டன. சப்தம், கந்தம், ரஸம், இவைகள் ஆச்ரயத்துடன் கூடியதாகவாவது வேறு தர்மங்களுடன் கூடியதாகவாவது க்ரஹிக்கப்படுகிறதில்லையாதலால் அவைகளை க்ரஹிக்கிற ப்ரத்யக்ஷத்திற்கு எவ்வாறு ஸவிசேஷ விஷயத்வம்? இது இவ்வண்ணமல்ல. குணம், கர்மா, இரண்டும் அந்த அந்த ஸம்ஸ்தானங்களுள்ளதாகவும் காலத்துடன்கூடியதாகவுமிருப்பது பற்றி ஸவிசேஷமாக க்ரஹிக்கப்படுவதால். இதுவும் நிர்விகல்பகத்தை அபேக்ஷித்துக் கூறப்பட்டது. ஸவிகல்பகத்திலோ தேசம் முதலிய அனேகங்களுக்கு விசேஷத்வம் ஸம்பவித்தே இருக்கிறது. உலகத்தில் நிலைபெற்றிருக்கின்ற ஹேதுக்களால் நிரூபிக்கப்பட்டிருக்கிற இந்திரியங்களுடைய ஸந்மாத்ரவிஷயத்வத்தின் நிராஸத்தை முடிக்கிறார்—அத: என்று ப்ரத்யக்ஷத்திற்கு ஸந்மாத்ரவிஷயத்வமானது அன்யனால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அர்த்தாந்தரத்திற்கு விருத்தமென்றும் கூறுகிறார்—நிர்விசேஷ என்று. வேறொரு ப்ரமாணத்தால் அறியப்பட்டிராத விஷயத்தை ப்ரதிபாதிப்பதால் சாஸ்திரத்திற்கு அர்த்தவத்த்வம என்பது உலகத்தில் ஸித்தமாயுள்ளபேதத்திற்கு சாஸ்த்ராவிஷயத்வத்தைச் சொல்லுகிற அன்யர்களாலேயே ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ச்ருதிப்ராமாண்யவிரோதம் கூறப்பட்டது. அந்யனுக்கு அபிமதமான அர்த்தாந்தர விரோதத்தைக்கூறுகிறார்—ஸந்மாத்ரப்ரஹ்மண: என்று. அதனால் பலித்த அநிஷ்டத்தைக்கூறுகிறார்— தத: என்று.

---

കുതോ വസ്തുസംസ്ഥാനവൈജാത്യാദിലക്ഷണഭേദവിശിഷ്ടവിഷയ

മേവ പ്രത്യക്ഷം । സംസ്ഥാനാതിരേകിണോऽനേകേഷ്വേകാകാരബുദ്ധി

---

$ ஸ்ம்ருதி—பூர்வாநுபவத்தாலுண்டான ஸம்ஸ்காரமாத்ரத்தாலுண்டாகிற ஜ்ஞானம்.

போத்யவஸ்த்வந்தராதர்சநாத் தாவதைவ கோத்வாதிஜாதிவ்யவஹாரோப
பத்தே:| அதிரிக்தவாதிபிரபி ஸம்ஸ்தானஸ்ய ஸம்ப்ரதிபந்நத்வாச்ச ஸம்ஸ்தான
மேவ ஜாதி: | ஸம்ஸ்தானம் நாம ஸ்வாஸாதாரணம் ரூபமிதி யதா
வஸ்துஸம்ஸ்தானமனுஸந்தேயம் | ஜாதிக்ரஹணேனைவ பிந்ந இதி வ்ய
வஹாரஸம்பவாத், பதார்த்தாந்தராதர்சநாத், அர்த்தாந்தரவாதிநா
அப்யுபகதத்வாச்ச கோத்வாதிரேவ பேத:॥

ஸ்ரீபாஷ்யம்:—

ஆகையால் ப்ரத்யக்ஷமானது வஸ்துக்களின் ஸம்ஸ்தானரூபமான ஜாத்யாதிஸ்வரூபபேதங்களோடுகூடிய வஸ்துக்களையே விஷயீகரிக்கிறது. ஸம்ஸ்தானத்தைக்காட்டிலும் வேறாய் அநேகங்களில் ஏகாகாரபுத்தியினால் அறியத்தக்கவஸ்து காணப்படாமையாலும். அவ்வளவினாலேயே கோத்வாதி ஜாதிவ்யவஹாரம் பொருத்தமுள்ளதாக ஆவதாலும இவைவேறு என்கிற வாதத்திலுங்கூட ஸம்ஸ்தானம் எல்லோராலும் நன்கு அறியப்பட்டிருப்பதாலும், ஸம்ஸ்தானமே ஜாதி. ஸம்ஸ்தானமாவது வ்யக்தியின் ஸ்வாஸாதாரணரூபம். வஸ்துவுக்குத்தக்கபடி ஸம்ஸ்தானம் அநுஸந்திக்கத்தக்கது. ஜாதிக்ரஹணத்தினாலேயே "பின்ன:" என்கிற வ்யவஹாரம் ஸம்பவிப்பதாலும் வேறு பதார்த்தம் காணப்படாமையாலும் அர்த்தாந்தரத்தைச் சொல்லுகிற வாதியினாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதினாலும் கோத்வம் முதலியவைகளே பேதம்.

ச்ருதப்ரகாசிகை—

இவ்வண்ணம் நிருபிக்கப்பட்டிருக்கிற ப்ரத்யக்ஷத்தினது ஸர்மாத்ரக்ரஹண நிராஸத்தைத் தனக்கு இஷ்டமான வேறு அர்த்தத்தை நன்குஉபபாதிப்பதற்காக ப்ரத்யக்ஷம் விசிஷ்ட விஷயம் என்பதில் பர்யவஸிக்கச்செய்கிறார்— அத: என்று. அத: என்கிறபதத்தால் தொடங்கப்பட்டிருக்கிற பாஷ்யத்தில் ஜாதி என்பது வ்யக்தியினுடைய அவயவஸம்ஸ்தானமே. ஜாதி முதலியதே பேதம் என்கிற இரண்டு அர்த்தங்கள் கூறப்பட்டன. அவற்றுள் முதலில் ஸம்ஸ்தானமே ஜாதி என்பதை உபபாதிக்கிறார்— ஸம்ஸ்தான இது முதலியதால். ஸம்ஸ்தானத்தைக்காட்டிலும் வேறாக ஜாதியை ஒப்புக்கொள்ளுதல் தர்சநத்தினாலேயா? அல்லது அநுபவத்தினாலேயா? என்கிற விகல்பத்தைக்கருதி தர்சனமில்லை என்று சொல்லுகிறார்— ஸம்ஸ்தாநாதிரேகிண: என்று. "இது §ஸாஸ்னைமுதலியதுடன் கூடியது, இதுவும் ஸாஸ்னை முதலியதுடன் கூடியது. இது பெருத்த அடிவயிருள்ள ஆகாரமுடையது, இதுவும் அதுபோன்ற ஆகாரமுடையது;"

§ ஸாஸ்னை— மாடுகளுக்குக் கழுத்தின் கீழ் தொங்கும் சதை.

என்று ஸாஸ்னை முதலியது அநுவ்ருத்தபுத்திவ்யவஹாரத்திற்கு விஷயமாகக் காணப் படுகிறது. அதைவிட வேறாக அநுவ்ருத்தபுத்திவ்யவஹார விஷயமாக ஒன்றும் காணப்படவில்லையாதலால் என்று அர்த்தம் அன்றிக்கே, ஜாதி என்று தமக்கு அபி மதமாயுள்ள ஸம்ஸ்தானத்தைக்காட்டிலும் வேறாக பராபிமதஜாதியின் அஸாதாரண ரூபம் "ஏகாகாரபுத்திபோத்யஸ்ய" என்று. உரைக்கப்பட்டது. கல்பனமும் அநுப பன்னமென்று கூறுகிறார்— தாவதாஉ என்று. வ்யுத்பத்தியும் அநுகதமானப்ரயோ கமும், வ்யக்தி, ஜாதி விசேஷம் முதலிய சப்தங்களுக்குப்போல கவாதிசப்தங்களுக்கும் மிக்க ஒற்றுமையுள்ள உபாதியைச் சார்ந்திருப்பதால் பொருத்தமுள்ளதாகிறதென்று கருத்து. வேறுபெயரால் பராபிமதஜாதியானது ஒப்புக்கொள்ளப்பட்டது என்கிற சங்கையை நிரஸிப்பதற்காகக் கூறுகிறார்— அதிரேகவாநேபி என்று. பிறர்களால் அவயவிக்கு ஸம்ஸ்தானம் ‡ ஸமவாயிகாரணமாக ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறது. ஸம்ஸ் தானமென்பது என்ன? அவயவஸம்யோக விசேஷமா? அல்லது ஸ்வரூபமாத்ரமா? அல்லது வேறு ஏதாவதொன்றா? முதல் பக்ஷத்தில் நிரவயவங்களான ஆத்மாக்களில் ஸம்ஸ்தானமில்லாமையால் ஆத்மத்வஜாதியானது இல்லாமல் போகும். இரண்டாவது பக்ஷத்திற்கு விசிஷ்டவிஷயத்வம் இலலாமல் போகவேண்டிவரும். தொடர்ச்சியாக ஒரேவிதமான வ்யவஹாரமும் உண்டாகாது. ஜாதி எல்லாவற்றுக்குமே அடியோடுநாசம் உண்டாகும். மூன்றாவது பக்ஷத்தில் கதி இல்லாமையால் நம்முடைய பக்ஷம் அங்கீ கரிக்கத்தக்கதென்று சங்கைவரின் அவயவமில்லாமலிருக்கிற பதார்த்தங்களில்கூட ஜாதி வ்யவஹாரம் நிலைபெறுவதின் பொருட்டு, ஜாதி அஜாதி இவை இரண்டுக்கும் பொது வான ஸம்ஸ்தானமாத்ரத்தைக் காண்பிக்கிறார்— ஸம்ஸ்தானம் நாம என்று. கடத் திற்கு தரவ்யத்வம ஸம்ஸ்தானம் ஆகவேண்டாமென்று அஸாதாரணசப்தம். ரூபம் விசேஷ்யமான வ்யக்தியைவிட்டு தனித்து விலகி இராத விசேஷணம். அதினால் §கர்ப்ப தாஸன முதலியவாகளுக்கு நிராகரணம ஸித்திக்கிறது.

அய்யா! ஸ்வாஸாதாரணம் என்கிற இடத்தில் ஸ்வசப்தமானது வ்யக்திபரமா? அல்லது ஸஜாதீயபரமா? வ்யக்திபரமென்கிற பக்ஷத்தில் ஏகவ்யக்திபரமா? அல்லது ஸர்வவ்யக்திபரமா? முதல்பக்ஷத்தில் ஒரு வ்யக்தியைத் தவிர மற்றவ்யக்திகளில் கோத் வம் இல்லாமல் போகவேணடியதாகும். ஸ்வசப்தம் எல்லா வ்யக்திகளையும் குறிக்கிற

‡ தார்கிகர்களால் காரணங்கள் மூன்றுவிதங்களாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின் றன. அவையாவன— (1) ஸமவாயி, (2) அஸமவாயி, (3) நிமித்தம்—என்று. யத்ஸமவேதம் கார்யமுத்பத்யதே தத்ஸமவாயிகாரணம். (எந்த வஸ்துவினிடம் பிரிக்க முடியாத ஸம்பந்தத்துடனிருந்துகொண்டுகார்யமுண்டாகிறதோ) அது ஸமவாயிகாரணம் உதா-வஸ்திரத்திற்கு நூல். கார்யேண ஸஹ ஏகஸ்மின்னர்த்தே ஸமவேதம் ஸத்யத்கார்ய முதபாதயதி தத் அஸமவாயிகாரணம் (கார்யத்தோடுகூட ஒரு வஸ்துவினிடத்தில் இணை புரியாத ஸம்பந்தத்தோடு நிலைபெற்றிருந்து எதுகார்யததை உண்டுபண்ணுகிறதோ அது அஸமவாயிகாரணம்) உதா-வஸ்திரத்திற்கு தந்துஸம்யோகம். கீழ் கூறப்பட்டுள்ள இரணடு காரணங்களைக் காட்டிலும் வேறானது. நிமித்தகாரணம். உதா- குடம் முதலிய தற்கு குயவன் முதலியவர்கள்.

§ கர்ப்பதாஸன்—பிறப்பிலேயே அடிமைபூண்டவன். இந்த அடிமைத்தனமானது தாய் தந்தைகளுடைய அடிமைத்தனத்தால் கருவிலேயே சிசுவுக்கு உண்டாவதால் கர்ப்ப தாஸன் என்று சொல்லப்படுகிறான்.

தென்கிற பக்ஷத்தில் மஹிஷவ்யக்தியிலும் கோத்வம் இருக்கவேண்டியதாகும், அஸாதாரணசப்தமும் பயனற்றது. ஸஜாதீயபரமென்று சொல்லும் பக்ஷத்தில் ஜாதி என்பது ஸம்ஸ்தான விசேஷமாக இருப்பதால், ஸமானமான ஸம்ஸ்தான விசேஷங்களுடைய அஸாதாரணமான ரூபம்ஸம்ஸ்தானமென்று சொல்லப்பட்டதாக ஆகும். அதினால் ஆத்மாச்ரயம். ஸம்ஸ்தானநிரூபணமானது அந்த அஸாதாரணரூப ப்ரதிபத்தியை அபேக்ஷித்திருப்பதால். இவ்வாறு அல்ல:—ஸ்வசப்தம் ப்ரக்ருத பரமாக இருப்பதால், ப்ரக்ருதத்வமாவது அந்தந்த வ்யவஹாரங்களுக்கு கோசரமாக புத்தியில் நிலை பெற்றிருத்தல். இவ்வண்ணமாகில் ஒருகொம்புமுறிந்த கோவ்யக்தி புத்திஸ்தமாக இருக்கையில் கோத்வம் அதற்கு அஸாதாரணமாக இருப்பதுபற்றி இரண்டு கொம்புகளுமொடிந்த கோவ்யக்தியில் கோத்வம் இராமல் போகவேண்டியதாகும். அல்லது ஒரு கொம்புமுறிந்ததான கோவுக்கு கோத்வம் ஸம்ஸ்தானமாக இராமல் போகவேண்டியதாகும். கோத்வம் இரண்டுகொம்புகளும் முறிந்த கோவ்யக்தியிலுமிருப்பதினால் அதற்கு ஒருகொம்பு முறிந்தகோவ்யக்திக்கே உரித்ததென்கிற தன்மை இல்லாமையால் என்று சொல்லப்படுமானால், அப்படியல்ல. ஒரு கொம்புமுறிந்த கோவ்யக்தியைக்குறித்து கோத்வத்திற்கு ஸம்ஸ்தானரூபத்வமில்லாமையால். † கண்டத்வமேயன்றோ கண்டத்திற்கு ஸம்ஸ்தானம்.

கண்டம் உன்னுடைய புத்தியில் நிலைபெற்றிருக்கிறதா? அல்லது கோவா? அல்லது கண்டமான கோவா? முதல் பக்ஷத்தில் கண்டத்வமே கண்டத்துக்கு அஸாதாரணமானதால் § முண்டத்தினிடத்தில் கோத்வாபாவப்ரஸங்கமில்லை. அதினாலேயேதான் கண்டத்தைக்குறித்து கோத்வத்திற்கு ஸம்ஸ்தான ரூபத்வாபாவமும் அநிஷ்டமன்று இரண்டாவது பக்ஷத்தில் கோவுக்கு கோத்வம ஸாதாரணமாதலால் மஹிஷம் முதலியதில் கோத்வம் நிவர்திக்கிறது. கோக்களிலுமிருக்கிறதென்பதினால் ஒரு தோஷமுமில்லை. மூன்றாவது பக்ஷத்தில் எவ்வாறு நீலோத்பலத்திற்கு நீலத்வ விசேஷிதமான உத்பலத்வம் அஸாதாரணமோ, அவ்வாறே கண்டமான கோவுக்கு கண்டத்வ விசேஷிதமான கோத்வம் அஸாதாரணமாக இருப்பதுபற்றி முண்டத்தில் கண்டத்வ விசேஷித கோத்வமே நிவர்திக்கிறது; கோத்வம் மாத்ரமல்லவென்பதினால் ஒரு அனுபபத்தியுமில்லை. நீலத்வ விசேஷிதமான உத்பலத்வமானது இந்தீவரசப்த ப்ரவ்ருத்தி நிமித்தமாதலால் ஒரே ஸம்ஸ்தானம். கண்டத்வ கோத்வங்களோவென்றால் ஒன்றுக்கொன்று விசேஷண விசேஷ்யபாவத்தை அடைந்திருந்தபோதிலும் ஒருஸம்ஸ்தானமல்ல ஏக சப்தப்ரவ்ருத்தி நிமித்தத்வமில்லாமையால் என்று பேதம் ஆகையால் ஸ்வாஸாதாரணரூபம் ஸம்ஸ்தானம்.

அங்ஙனமாகில் ஸ்வபாவத்தில், தாரதம்யமில்லாமையால் ஜாதி, ரூபம், ஸம்ஸ்தானம் இவைகளுக்கு ¶ சௌக்ல்யம் முதலியவைகளைக்காட்டிலும் என்ன பேதம்? எனில் சொல்லுகிறோம். சௌக்ல்யாதிகளிலோவென்றால் சுக்லம் சுக்லதரம் என்று தாரதம்யமிருக்கிறது. சப்தம் முதலியவைகளிலும் உபாதியினாலோ தன்படியாலோ தீவ்ரதரத்வம் முதலிய தாரதம்ய மறியப்படுகிறது ‡‡ காடின்யம் $ மார்தவம் முதலிய ஸ்வபாவ தாரதம்யம் ஸ்பர்சாதிகளிலுமிருக்கிறது. எண்ணிக்கைகளிலும் ஏத்தக்குறைவுகள் அறியப்

† கண்டம்—ஒரு கொம்புமுறிந்த காளைமாடு. ¶ சௌக்ல்யம்—வெண்மைநிறம்.
§ முண்டம்—இரண்டு கொம்புகளும் முறிந்த காளைமாடு.
பூர்ணச்ருங்கம்— இரண்டு கொம்புகளுடன்கூடின காளைமாடு.
‡‡ காடின்யம்—கெட்டியாக இருத்தல். $ மார்தவம்—மெதுவாக இருத்தல்.

பட்டிருக்கின்றன. ♆ பரிமாணத்திலும் ஸ்புடதரமாக இருக்கிறது. இவ்வண்ணமாக கோத்வாதிகளில் கோதர: கோதம: என்று தாரதம்யம் அறியப்படுகிறதில்லை. இது முதலிய † வைஷம்யம கண்டுகொள்ளத்தக்கது.

இந்த இடத்தில் ஜாதிரூபமாயுள்ள ஸம்ஸ்தானலக்ஷணம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறதென்றால் ப்ரக்ருதாகாரத்தோடு மிக்கஸாத்ருசயமுள்ள வ்யக்திகளெல்லாம் "ஸ்வ" சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டிருக்கின்றன. ப்ரக்ருதாகாரத்தோடு என்பதினால் ஆத்மாச்ரய தோஷம் பரிஹரிக்கப்பட்டது. ஸமஸ்தானத்தின் நிரூபணமானது ஸமஸ்தானவிஷயமான அறிவை அபேக்ஷியாமலிருப்பதால். ஸாஸத்ருச சப்தத்தால் மஹிஷம் முதலியவைகளில் அதிப்ரஸங்கம் பரிஹரிக்கப்பட்டது. ஸமஸ்த சப்தத்தால் முண்டாதிகளில் அபாவப்ரஸங்கம் பரிஹரிக்கப்பட்டது. கோத்வம கண்டங்களுக்கே அஸாதாரணமாக இல்லாமையால்.

அய்யா! வ்யாவ்ருத்தமான ஸம்ஸ்தானமானது அநுவ்ருத்த வ்யவஹாரத்தை எவ்வாறு உண்டாக்கும்? மறுமொழி சொல்லப்படுகிறது. எவ்வாறு வ்யக்தித்வம் ஜாதி இல்லாமல்போனபோதிலும் அநேக வ்யக்திகளில் வ்யக்திசப்த ப்ரயோகமோ; எவ்வாறு கோத்வம் அச்வத்வம முதலிய ஜாதிகளில் வேறு ஜாதி இல்லாமலிருந்தபோதிலும் ஜாதி சப்தப்ரயோகமோ; பின்னங்களில் பின்னத்வ ஜாதி இல்லாமலிருந்தபோதிலுங்கூட பின்ன சப்த ப்ரயோகமோ; கண்டாதிகளில் கண்டத்வஜாதி இல்லாதபோதிலும் கண்டாதி சப்தப்ரயோகமோ; எவ்வாறு நித்யத்ரவ்யங்களில் $ விசேஷத்தை விரும்புகிறவர்களுக்கு விசேஷங்களில் விசேஷத்வமில்லாவிட்டாலும் விசேஷசப்த ப்ரயோகமோ; அப்படிப்போல கவாதி சப்தவ்யவஹாரம் உபபன்னமாகிறதென்றபடி.

மேலும், எது அநுவ்ருத்த வ்யவஹார மென்று நிரூபிக்கத்தக்கது. ககார ஒகார விஸர்ஜநீயங்களின் ஒன்றின்பின் ஒன்றாகஅமைக்கப்பட்டிருக்கிறஅக்ஷரங்களின் வரிசை க்ரமமானது எல்லா ஆகாச ப்ரதேசங்களிலும தோன்றுகிற அவைகளுக்கு தேசத்தாலும் காலத்தாலும் பொருந்துகிறதில்லை. அந்த வர்ணாநுபூர்வியானது உச்சாரணத்தைச் சார்ந்திருப்பதாலும், உச்சாரணமும, அழிவுள்ளதாக இருப்பதாலும் வர்ணாநுபூர்வியும் ப்ரதியோகி விநாசத்துடனகூடி இருப்பதாலும் ஆநுபூர்வியாகிற விசேஷத்துடன் கூடிய சப்தத்திற்கு எவ்வாறு அநுவ்ருததி ஸம்பவிக்கும். (ஸௌஸாத்ருச்யமே) மிக்க ஒற்றுமையே சப்தங்களுக்கு அநுவ்ருததி என்று சொல்லப்படுமேயாகில்) கோத்வம் முதலிய அர்த்தங்களுக்கும் அப்படிப்பட்ட அநுவ்ருத்தி உண்டென்று அங்கீகரிக்கப்படலாம்.

அய்யா! ஸௌஸாத்ருச்ய மென்பது என்ன? மறுமொழி உரைக்கப்படுகிறது. ஸத்ருசவ்யவஹாரத்திற்கு அஸாதாரண ஹேதுவான விஷய தர்மம ஸாத்ருச்யம். அதுவும் ப்ராதருத்வம்போல ப்ரதியோகியினால் நிரூபிக்கத்தக்கதும் ஒவ்வொரு வ்யக்திதோறும் வ்யாவ்ருததமாகவுமிருக்கிற பதார்த்தம் ஆதலால் வ்ருத்தி விகல்பம்முதலியவை

♆ பரிமணம்—அளவு. † வைஷம்யம்—வ்யத்யாஸம் அதாவது வேறுபாடு.
$ விசேஷம்—இது தார்கிகர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஏழுபதார்த்தங்களுக்குள் ஒன்று. இந்த விசேஷமென்கிற பதார்த்தமானது நித்ய த்ரவ்யங்களில் நிலைபெற்றிருக்கிறதென்றும் அநந்தமென்றும் அவர்கள் கொள்கை. இதில் விசேஷத்வமெனகிற ஒரு ஜாதி கிடையாது. இவ்வாறே ஸாமான்யத்திலும் ஸமவாயத்திலும் அபாவத்திலும் ஜாதி கிடையாது.

களுக்கு (தௌர்கட்யம்) இசைக்கக் கூடாமை இல்லை. நிர்தேசிக்கப்பட்ட ஆகாரத்தின் § பௌஷ்கல்யத்தால் ஸாத்ருச்யம் ஸௌஸாத்ருச்யமென்று விசேஷிக்கப்படுகிறது. அதைச் சொல்லுகிற சப்த ப்ரவ்ருத்தி நிமித்தமே பௌஷ்கல்யம் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. பௌஷ்கல்யசப்தத்தினால் † கவயமென்கிற மிருகத்தினிடத்திலிருக்கிற கோஸாத்ருச்யம் ஸௌஸாத்ருச்யமல்லவென்று ஸித்தித்தது. இங்ஙனமாகில் முதல் வ்யக்தியைத்தவிர்த்த மற்ற கோவ்யக்திகளில் கோவோடு மிக்க ஸத்ருசமென்றே ப்ரயோகம் வரட்டும்; கௌ: என்கிற ப்ரயோகம் வரக்கூடாது என்று சொல்லப்படுமேயானால்; சொல்லவேண்டுமென்கிற விருப்பமுண்டானால் அப்பொழுது ப்ரயோகிக்கப்படலாம்; அயம் கௌ: இது காளை; அயம் கவா ஸுஸத்ருச:, (இது காளையோடு மிக்க ஒற்றுமையுள்ளது) என்கிற ப்ரயோகத்தில் அர்த்தபேதமில்லாமையால். அப்படியானால் ஏன்ப்ரயோகிக்கப்படுகிறதில்லை என்று கேட்கில் வ்யவஹாரகௌரவத்தாலென்று சொல்லுகிறோம். கௌ: என்கிற வ்யவஹாரத்திலன்றோ லாகவத்தால் ஸௌகர்யம் இருக்கிறது. அப்படியானால் அதற்கு துல்யமான வஸ்துவினிடத்தில் அந்த சப்தப்ரயோகமானது @ மாணவகனிடத்தில் அக்நி சப்தம்போல் ¶ ஔபசாரிகமாக ஆகும். அல்ல- ஔபசாரிகத்வமானது ஸௌஸாத்ருச்யரூபமான அநுவ்ருத்தியின் இன்மையைக் காரணமாகக்கொண்டிருத்தலால். மாணவகன் அக்நி இரண்டுக்கும் ஸௌஸாத்ருச்ய மில்லையன்றோ; பின்னை ஸாத்ருச்ய லேசமாத்ரமே. பக்ஷத்திலோ ஸௌஸாத்ருச்ய லக்ஷணமான அநுவ்ருத்தியானது அறியப்படுகிறது. அதற்கு முக்யதா ஹேதுத்வமானது ஜாத முதலிய சப்தங்களுக்குப்போல வ்யவஹாரத்தினால் ஸித்தமாக இருக்கிறது. ஆகையால் அநுவ்ருத்த ப்ரயோகம் பொருத்தமுள்ளது. ஒரு அர்த்தத்தில் ஒரு சப்தத்திற்கு வ்யுத்பத்தியானது அதற்கு மிகவும் ஒற்றுமையுள்ள அர்த்தத்தில் மிக்க ஸத்ருசமான அநேக சப்தத்தின் ப்ரயோகத்தில் ஹேதுவென்று § உபலப்திக்குத்தக்கபடி ஒப்புக்கொள்ளத்தக்கது. அறியப்பட்டிராத வேறு ஒருஅர்த்தத்தை புதிதாக கல்பித்து வ்ருத்தி விகல்பம் முதலியதோஷங்களுக்கு * ப்ரதீதிசரணதையினால் பரிஹாரம் சொல்வதைவிட எல்லா இடங்களிலும் காணப்பட்டதாகவே இருக்கிற வஸ்துவில் ப்ரதீதிபலத்தால் சோத்ய பரிஹாரமானது லாகவந்யாயத்தால் பொருத்தமுள்ளதாக ஆகிறது. வ்யாப்திக்ரஹணமும் ஸௌஸாத்ருச்யரூபமான அநுவ்ருத்தியினாலேயே பொருத்தமுள்ளதாகிறதென்பதினால் அதுவும் உனக்கு அபிமதமான ஜாதியை கல்பிக்கத்திறமையுள்ளதன்று. ஆகையால் ஸம்ஸ்தானத்தைக்காட்டிலும் ஜாதி என்பது வேறுபட்டதன்று.

"அய்யா! ஸம்ஸ்தானமானது அஸாதாரணமான ஆகாரமானதாலும் அதன்றி ஸம்ஸ்தானிக்கு ப்ரதீதி உபபன்னமாகாததாலும் சிப்பிமுதலியதில் வெள்ளி முதலியப்ரமம் உண்டாகக்கூடாது, அஸாதாரணாகாரம் ப்ரகாசிக்குங்கால் ப்ரமம் ஸம்பவியாது என்று சொல்லப்படுமேயானால், அல்ல ஏதோ ஒரு ஸம்ஸ்தானவிசேஷத்துடன் கூடியதாக அறியப்பட்டிருக்கிற வஸ்துவில் அறியப்பட்டுள்ள ஸம்ஸ்தானத்திற்கு விரோதியல்லாத ஆகாரவிஷய ப்ரமம் உபபன்னமாவதால். நன்கு அறியப்பட்டுள்ள ஸம்ஸ்தானத்திற்கு விரோதியான ஆகாரப்ரமத்துக்கே யன்றோ உத்பத்தியின் அஸம்பவம். இது

§ பௌஷ்கல்யம்—நிறைவு, அல்லது பரிபூர்தி.

† கவயம்— பசுபோன்ற காட்டுமிருகம்.

@ மாணவகன்—சிறுவன். ¶ ஔபசாரிகம்—உபசாரத்தால் ப்ரயோகிக்கப்படுவது. அதாவது - கௌணப்ரயோகம். § உபலப்தி—ஜ்ஞானம்.

* ப்ரதீதிசரணதா—ஜ்ஞானத்தையே தனக்கு கதியாகக்கொண்டிருத்தல்.

வெளுப்பு என்கிற ப்ரதீதி இருக்கையால் கருப்பு முதலிய வர்ணவிஷயமான ப்ரமம் உண்டாகிறதில்லை. சௌக்ல்யமன்றோ சுக்லத்திற்கு அஸாதாரணம். சுக்திக்கு அஸாதாரணமல்ல. ஆகையால் அஸாதாரணாகாரப்ரதீதியும ப்ராந்தியும் உபபன்னமாகிறது. "இவ்வண்ணம் அஸாதாரணயும் ஆபேக்ஷிகமாகில் அப்பொழுது அஸாதாரணசப்தம் டயனில்லாமல்போகவேண்டியதாக ஆகும். ஒரு வஸ்துவுக்கு ஏதோ ஒரு ரூபம் அஸாதாரணமாக இராமலிருக்கா"தென்று, கூறப்படுமேயாகில் அல்ல. அஸாதாரண சப்தமானது சுக்தியை அபேக்ஷித்து சௌக்ல்யம் ஸம்ஸ்தானமென்பதை நிராகரிப்பதற்காக இருப்பதால். ஆதலால் ஸ்வாஸாதாரணரூபம் ஸம்ஸ்தானம், அதைக்காட்டிலும் ஜாதி என்பது வேறு பதார்த்தம் அல்ல வென்று ஸித்தித்தது.

இவ்வண்ணம் ஸம்ஸ்தானமே ஜாதி என்று உபபாதித்து மூர்த்தி ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள கோத்வம் முதலியதே பேதமென்பதைஉபபாதிக்கிறார்—ஜாதிக்ரஹணேநஏன்று. "ப்ரதியோகியை அபேக்ஷியாத கோத்வம் முதலியது ப்ரதியோகியை அபேக்ஷிக்கிற பேதமாவதற்குத் தகுதியுள்ளது அன்று. ஆதலால் ப்ரதியோகிஸாபேக்ஷமான இதரேதராபாவம் கோதவாதிகளைவிட வேறானபேதமென்று ஒப்புக்கொள்வதற்குத்தகுந்தது" என்கிற சங்கைசவரின் உத்தரம் சொல்லப்படுகிறது; ஜாதிக்ரஹணேநைவ பின்ன இதி வ்யவஹாரஸம்பவாத் என்று. இது பொருள்—கோத்வம் முதலியவைகளைக்காட்டிலும் வேறாக பேதத்தை அங்கீகரிக்கிறவனால் கூட அபாவாபாவவிஷயத்தில் ப்ரதியோகியை அபேக்ஷியாத பாவரூப பதார்த்தத்திற்கே வேறுவிதமாக இருப்பில்லாமையாலும் உபலப்தி இல்லாமையாலும் ப்ரதியோகியை அபேக்ஷித்துக்கொண்டிருக்கிற அபாவதவம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்போல இவ்விடததிலும் ஸம்பவிக்கிறது. ப்ரதியோகியை அபேக்ஷிததிருத்தலென்கிற தன்மை ப்ரதியோகியினால் நிரூபிக்கப்பட்ட வேஷமுள்ள ப்ரவ்ருத்தி நிமித்தத்துடன் கூடின சப்தஸ்வபாவத்தைச் சார்ந்திருப்பதால் அர்த்த ஸ்வரூபபேத ஹேதுத்வமில்லை. இவ்வண்ணம் அநுபபததிஇல்லை என்று உரைக்கப்பட்டது. தர்சநமும் இல்லைஎன்று கூறுகிறார்—பதார்த்தாந்தராதர்சநாத் என்று, நாமாந்தரத்தினால் அந்யோந்யாபாவம் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளதென்கிற சங்கையை நிரஸிக்கிறார்— அர்த்தாந்தர என்று. அர்த்தாந்தரவாதிநா- இதரேதராபாவரூபமான பேதமுமிருக்கிறதென்று சொல்லுகிறவனுலென்று அர்த்தம்.

---

ननु च जात्यादिरेव भेदश्चेत्, तस्मिन् गृहीते तद्व्यवहारवद्भेदव्यवहारस्स्यात् । सत्यम्, भेदश्च व्यवह्रियत एव, गोत्वादिव्यवहारात् । गोत्वादिरेव हि सकलेतरव्यावृत्तिः, गोत्वे हि गृहीते सकलेतरसजातीयबुद्धिव्यवहारयोर्निवृत्तेः । भेदग्रहणेनैव ह्यभेदनिवृत्तिः । "अयमस्माद्भिन्नः" इति तु व्यवहारे प्रतियोगिनिर्देशस्य तदपेक्षत्वात् प्रतियोग्यपेक्षा भिन्न इति व्यवहार इत्यलम् ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

அய்யா ! ஜாதிமுதலியவைகளே பேதமாகில் அவைகள் க்ரஹிக்கப்பட்டால் அந்த ஜாதி வ்யவஹாரம்போல் பேதவ்யவஹாரமும் வரவேண்டும் ?

ஸத்பமே—கோத்வம்முதலியதின் வ்யவஹாரத்தால் பேதமும் வ்யவஹரிக்க வேபடுகிறது. கோத்வம் முதலியதேயன்றோ ஸகலேதர வஸ்துவ்யாவ்ருத்தி. கோத்வம் முதலியது க்ரஹிக்கப்பட்டால் ஸகலேதரஸஜாதீயபுத்தி, வ்யவஹாரம், இரண்டும் நிவ்ருத்தி அடைவதால் பேதக்ரஹணத்தினாலேயே யன்றோ அபேத நிவ்ருத்தி வருகிறது. "இது இதைக்காட்டிலும் வேறுபட்டது" (பின்ன:)என்கிற வ்யவஹாரத்திலோ வென்றால் ப்ரதியோகியின் நிர்தேசமானது அந்த பேத வ்யவஹாரத்தை அபேக்ஷித்திருப்பதால் ப்ரதியோகியின் அபேக்ஷையினால் 'பின்ன:' என்கிற வ்யவஹாரம் என்று சொல்லப்பட்டது.

ச்ருதப்ரகாசிகை:—

முந்தி ப்ரதியோகியின் அபேக்ஷையினால் பேதவ்யவஹாரமென்று உரைக்கப்பட்டது. இவகு அதை அபேக்ஷியாத கோத்வம் முதலியது பேதம் என்று சொல்லப்பட்டது. அங்ஙனமாகில் பேதவ்யவஹாரமும் ப்ரதியோகியின் அபேக்ஷை இல்லாததாகவே ப்ரஸங்கிக்கலாமென்கிற அபிப்ராயத்தால் சோதனம் பண்ணுகிறார்— நநு என்று. இப்படிப்பட்ட "ச" சப்தமானது ஒரு அர்த்தத்தை விஷயமாகக்கொண்ட அநேக சோத்யங்களில் நோக்குள்ளது—ஸத்யமிதி. ப்ரதியோகியை அபேக்ஷியாத பேதஸ்வரூப வ்யவஹாரத்தில் அங்கீகாரம். பேதஜாதி வ்யவஹார விசேஷத்திலோ அநங்கீகாரம். பேதஸ்ச வ்யவஹ்ரியத ஏவேதி—க்ரஹிக்கப்படுகிறது மாத்திரமில்லை, ப்ரதியோகியை அபேக்ஷியாமலே வ்யவஹரிக்கவும் படுகிறதென்று அர்த்தம். உபபாதிக்கிறார்— கோத்வாதிவ்யவஹாராத் என்று. எவ்வாறு கோத்வாதிவ்யவஹாரமிருக்குங்கால் பேதவ்யவஹாரம் எனில் கூறுகிறார்— கோத்வாதி: என்று. கோத்வாதியே எவ்வாறு வ்யாவ்ருத்தி என்றுகேட்கில் கூறுகிறார்—கோத்வாதேளஎன்று. சொல்லப்பட்டிருக்கிறகோத்வரூபமான அபர ‡‡ஸாமான்யத்தில் உள்படாத பரஸாமான்யத்தை அபேக்ஷித்து அதின்விசேஷங்களுக்கு ஸஜாதீயத்வம் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. இந்தஇடத்தில் திர்யக்காக இருப்பது பற்றி ஸஜாதீயமானமஹிஷம் முதலியவைகள் கோத்வத்தால் விலக்கத்தக்கது. வ்யாவ்ருத்திக்கு ஸஜாதீய புத்தி வ்யவஹார நிவ்ருத்தி ஹேதுத்வமிருக்கட்டும். அதினால் வ்யாவ்ருத்திக்கு பேதத்வ விஷயத்தி லென்ன வெனில் சொல்லுகிறார்— பேதக்ரஹணேனைவஹ்யபேத நிவ்ருத்தி: என்று. அபேதநிவ்ருத்தி: அபேதபுத்தியின் நிவ்ருத்தி. இவ்வாறாக கோத்வம் முதலியதின் ப்ரதீதியிலும், ஹானோபாதாநாதியிலும் கோதவம் முதலிய சப்த வ்யவஹாரத்திலும், ப்ரதியோகியின் அபேக்ஷை இல்லை என்று உரைக்கப்பட்டது. அப்படியாகில் இது இதைவிட வேறு என்கிற இடத்தில் எவ்வாறு ப்ரதியோகியினது அபேக்ஷை, என்று சங்கைவரின் சொல்லுகிறார்— அயமஸ்மாத் என்று. ‡ ஹானாதிவ்யவஹாரத்திலுமல்ல, சாப்தவ்யவஹார மாத்ரத்திலுமல்ல, பின்னை சாப்த வ்யவஹார விசேஷத்திலேயே என்று ஜ்ஞாபிக்கிறது "து" சப்தம்.

"பேதஸ்ச வ்யவஹ்ரியத ஏவ" என்று தொடங்கி "பேதக்ரஹணேனைவஹ்ய பேதநிவ்ருத்தி:" என்பதை ஈறாககொண்ட க்ரந்தத்தால் ஒரு வஸ்துவை மற்றொரு

‡‡ ஸாமான்யம்—ஜாதி. இது பரம் அபரம் என இரண்டு வகைப்படும். அதிக தேசத்தை வ்யாபித்திருப்பது பரம். ஸ்வல்பதேசத்தை வ்யாபித்திருப்பது அபரம்.

‡ ஹானம்—விட்டுவிடுதல். § உபாதானம்—க்ரஹித்துக்கொள்ளுதல்.

வஸ்துவினிடத்திலிருந்துவேறுபடுத்துகிற தர்மத்திற்கே ஸ்வவ்யாவ்ருத்திரூபத்வம் தானு கவே ஸம்பவிக்கிறது. பரநிர்வாஹகத்வமில்லாவிடில் ஸ்வநிர்வாஹகத்வம ஸம்பவியாதாதலால்.' ஸ்வரூபம் ப்ரகாசிக்குங்கால் ப்ரமவிரோதிககு வ்யாவ்ருத்திரூபதர்மாந்தராபேக்ஷை இல்லையென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. ஆகவே ப்ரஹ்மத்திற்கு ஒருவஸ்துவைக்காட்டிலும் மற்றொருவஸ்துவை வேறுபடுத்துகிற தர்மரூபத்வமில்லாமையாலும் ஸ்வரூபம் ப்ரகாசிக்கும்பொழுது * அத்யாஸத்தை ஸஹிக்கும் தன்மை இருப்பதாலும் ஸ்வரூபமே வ்யாவ்ருத்தி என்பது ஸித்திபெறாது. அய்யா! தர்மியின்ஸ்வரூபமே அதைஅடைந்திருக்கிற பாவாபாவரூபமான ஸகலதர்மாந்தரங்களை அபேக்ஷித்து பேதமென்று கடாசியாக ஒப்புக்கொள்ளத்தக்கது. பேதாந்தரத்தை ஒப்புககொள்ளும் பக்ஷத்தில் அதைக்காட்டிலும் ஸ்வரூபத்துககு பேதாபேக்ஷையின் $ அநவஸ்தை ப்ரஸங்கிக்கும். ஸத்யம். அந்த ஸ்வரூபபேதமானது அத்யாஸ விரோதியன்று. அதின் நிவ்ருத்தியில் வேறு தர்ம ஸம்பந்தத்தை அபேக்ஷித்திருப்பதால். படத்ரவ்யத்தினுடைய ரூபாவ்யதிரேகப்ரமமன்றோ ஸ்பர்ச ஸாமாநாதிகரண்ய புத்தியினால் நிவாதிக்கத்தக்கது. ஆகையால் தர்மி ஸ்வரூபத்திற்கு தன்னிடத்திலுள்ள தர்மத்தை அபேக்ஷித்து ப்ரமவிரோதி பேதமானது தர்மாந்தர ஸம்பந்தம். ஆதலால் தன்னை ஆச்ரயித்திருக்கிற தர்மங்களுடைய ஸ்வரூபத்துக்கே, தனக்கு விருத்தமான வேறு தர்மங்களுள்ள வேறு தர்மியை அபேக்ஷித்து அத்யாஸவிரோதிபேதத்வம் ஸம்பவிக்கிறது. விசிஷ்ட வஸ்துவுக்கோ ஸ்வரூபமே விசிஷ்டம், தனக்கு விருத்தமான விசேஷணங்களுடன்கூடின வஸ்துவைக்காட்டிலும் வ்யாவ்ருத்தி என்பதும் யுக்தம். அர்த்தாந்தரைக்ய ப்ரமவிரோதியாக இருப்பதால். அங்கு விசேஷணத்தை அபேக்ஷித்து விசேஷ்யத்தின் ஸ்வரூபமே பேதம். விசேஷ்யத்தை அபேக்ஷித்து விசேஷணத்தின் ஸ்வரூபமேபேதம். அவை இரண்டையுமபேக்ஷித்தும் ஸம்பந்தத்தின் ஸ்வரூபமே பேதம் விசிஷ்டவஸ்துவுக்கு வேறுவிசிஷ்ட வஸ்துவை அபேக்ஷித்து ஸ்வரூபமேபேதம் ஸ்வரூபஸ்யபேத: என்கிற நிர்தேசமோ பதார்த்த ஸ்வரூபமென்பது போல வேறு அர்த்தமுள்ளதன்று. அதற்கு அஸாதாரணமாக இருக்கிற சப்தத்தால் சொல்லத்தக்கது ஸ்வரூபம். அந்த சப்தமும் வ்யுத்பத்தியினால் ஸித்தம். அன்றிக்கே ப்ரதியோகியாக அபிமானிக்கப்பட்டிருக்கிற அர்த்தாந்தரைக்யபுத்தி விரோதி ஸ்வரூபமாகிறது. ஆகையால் ஒன்றினுடைய தர்மமாக இருக்குந் தன்மை இல்லாமையாலும் தர்மத்துடன்கூடி இருத்தலென்கிற தன்மை இல்லாமையாலும் ஸ்வரூபம் ப்ரகாசிக்கும்பொழுதுகூட ப்ரமத்தை ஸஹிப்பதாலும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமே ஜடத்வம் முதலிய அத்யாஸத்திற்கு விரோதியான வ்யாவ்ருத்தியாக ஆவதற்குத் தகுதியுள்ளதல்லவென்பது ஸித்தம். ப்ரமாணப்ரமேயாநுபபத்திகள் பரிஹரிக்கப்பட்டன.

---

யத்த்வநுவ்ருத்தப்ரதீதீநாம் விஶேஷாணாம் வ்யாவர்த்தகத்வேநைகேநாவா ரோபாவ்ருத்திருக்தம், ததநேநைவாபாஸ்தம் வ்யாவ்ருத்தவ்ருத்தி விஶேஷஸ்ய ஸ்வாஶ்ரயவ்ருத்தித்வம் ॥

---

* அத்யாஸம்—ப்ரமம். சிப்பியைப்பார்த்து வெள்ளியென்று எண்ணுதல்முதலியது.

$ அநவஸ்தை—மேல் மேல் அபேக்ஷை.

ஸ்ரீபாஷ்யம்.—

கடம் முதலிய விசேஷங்கள் வ்யாவர்தமானங்களாதலால் மீளவும் அவைகளுக்கு அபாரமார்த்யம் சொல்லப்பட்டதென்பது யாதொன்றுண்டோ; அது பாத்யபாதகபாவத்தையும் வ்யாவ்ருத்தி அநுவ்ருத்தி விசேஷங்களையும் ஆலோசியாதவனுடைய ப்ராந்திஜ்ஞாநத்தால் கல்பிக்கப்பட்டுள்ளது.

ச்ருதப்ரகாசிகை.—

பிறகு அர்யனால் சொல்லப்பட்டிருக்கிற அநுமானத்தை அநுவாதம் செய்து தூஷிக்கிறார்—யத்புந: இது முதலிய க்ரந்தத்தினால். புந: என்கிற சப்தமானது கேவலதர்கத்தைககாட்டிலும அநுமானத்திற்கு வேறுபாட்டை ஸூசிப்பிக்கிறது. த்ருச்யத்வாநுமானமானது ஸூத்ரகாரராலேயே தூஷிக்கப்படப்போவதாலும சொல்லப்போகிற தூஷணமானது மிதயாத்வ விஷயமான எல்லா அநுமானங்களுக்கும் தூஷிக்கத்தக்கதன்மையைக் காட்டுவதையே ப்ரயோஜநமாகக் கொண்டிருப்பதாலும் வ்யாவர்தமானத்வாநுமானம் இங்கு தூஷிக்கப்படுகிறது. ஸாதாரணதூஷணஙகள் @ காலாத்யயாபதேசமும் ‡‡ ஸோபாதிகத்வமும் ℞ வ்யாகாதமும்.

அதில் ஆச்ரயம் அறியப்பட்டதா? இல்லையா? இல்லை என்கில் $ ஆச்ரயாஸித்தி. அறியப்பட்டது என்றால் ப்ரதிதியும் ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணஙகளால் ஸத்யமாக இருப்பதால் அதற்கு மித்யாத்வஸாதனம தர்மிக்ராஹக ப்ரமாணத்தால் பாதிக்கப்பட்டதாக ஆகிறது. ப்ரதிபன்னோபாதியில் பாதிதத்வம் மித்யாத்வததில் ப்ரயோஜகமாதலால் ஸோபாதிகத்வமும் சொல்லப்படப்போகிறது. அதில் தேசகாலவிஷய ப்ரமங்களில்கூட வஸ்த்வந்தரஙகள் உபாதிகளாக இருப்பதாலும் பாதசஜ்ஞாநோதயமில்

@ காலாத்யயாபதேசம்— எந்த ஹேதுவுக்கு ஸாத்யாபாவமுள்ள பக்ஷமிருக்கிறதோ அது காலாத்யயாபதேச தோஷமுள்ளது. உதாஹரணம் - அக்நி ஔஷ்ண்யமில்லாதது—பதார்த்தமாதலால்-ஜலம்போல - இது ப்ரத்யக்ஷத்தால் உஷ்ணத்வ நிச்சயமேற்படுவதால் பாதிதமானது.

. ‡‡ ஸோபாதிகத்வம இதுவும் ஹேதுதோஷம் (உதா) பர்வதம், புகையுள்ளது நெருப்புள்ளதாதலால். இந்த ஹேதுவினால் புகையை ஸாதிக்க முயற்சித்தால் ஆர்த்ரேந்தனஸம்யோகம், உபாதியாக ஏற்படுகிறது. இந்த உபாதியானது ஹேதுவில் ஸாத்ய வ்யபிசாரத்தை ஊஹிக்கச்செய்கிறது. ஸாத்யஸாதனஙகளுக்குள்ள வ்யாப்தியைக் கெடுத்து ஹேதுவை துஷ்டமாகச்செய்கிறது. இதையே வ்யாப்யத்வாஸித்தமென்றும் சொல்லுவார்கள். ℞ வ்யாகாதம்— விருத்த தோஷம்.

$ ஆச்ரயாஸித்தி— இதுவும் ஹேதுவினது தோஷம். உதாஹரணம் - ககநாரவிந்தம்-வாஸனையுள்ளது - அரவிந்தமாதலால் (ஆகாயத்தாமரை - மணம்பொருந்தியது. தாமரைமலராகஇருத்தலால் என்று இந்த அரவிந்தத்வஹேதுவால் வாஸனையை ஸாதிக்க முடியாது. வாஸனைக்கு ஆச்ரயமான ககநாரவிந்தம் உலகத்தில் இல்லாததால்.

¶ பாதம்—இதுவும் ஹேதுவின் தோஷம். எந்த ஹேதுவின் ஸாத்யாபாவம் ப்ரமாணாந்தரத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அது பாதிதஹேது. (உதா) நெருப்பு ஔஷ்ண்யமில்லாதது. த்ரவ்யமாகஇருத்தலால். என்று. இங்கு உஷ்ணத்வமானது ஸ்பர்சனப்ரத்யக்ஷத்தால் க்ராஹிக்கப்படுகிறது.

லாத ப்ராந்திகளில்கூட சோதயிதாவான புருஷனுடைய ஜ்ஞாநத்தால் பாதிதமாக இருப்பதாலும் விசேஷணவிசேஷ்யாம்சஸித்தியினால் விசிஷ்டோபாதி ஸித்தி என்று ஸவிஸ்தாரமாக சொல்லப்போகிறோம் ஸாத்பதர்மம் பரமார்த்தமா ? அபரமார்த்தமா? என்கிற விகல்பத்தில் பாரமார்த்தமானால் § அத்வைதத்திற்கு ஹாநிவருகிறது த்ருச்யத்வரூபமானஹேதுவுக்கு வ்யபிசாரமும் ஸம்பவிக்கிறது. பாரமார்த்தத்திலும் அதுஇருப்பதால். மித்யாத்வம் அபாரமார்த்தமென்றால் ப்ரபஞ்சத்துக்கு ஸத்யத்வம் வந்துவிடும். பாதகத்துக்கு பாதம்வரின் பாத்யஸ்வரூபத்துக்கு அபாதம் என்கிற நியாயத்தால். அதினாலேயே யன்றோ இரண்டு $ நஞ்கள் ப்ரக்ருதார்த்தத்தை ஸூசிப்பிக்கின்றனவென்று சாப்தப்ரஸித்தி. மித்யாத்வதர்மத்தில் தர்மாந்தரத்தை ஆரோபித்து ‡‡ ப்ரத்யவஸ்தானம் செய்வதால் இது ஸத்யஸமையான ஜாதி என்று சொல்லத்தக்கதல்ல. அப்ராமாணிகமான தர்மபரம்பரையின் ஆபாதனத்தினால் தூஷணமன்றோ ஸத்யஸமை. மித்த்யையாக இருக்கும்தன்மைக்கு மித்யாத்வம் ப்ராமாணிகம். † மாத்யமிகனால் சொல்லப்பட்டிருக்கிற ஜ்ஞாநத்தினாலுண்டாகிற * பாத்பதவதிற்கு உன்னால் பாத்யத்வம் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால். பரமார்த்த || ரஜ்ஜுவிலுள்ள ரஜ்ஜுபுத்திக்கு ஸர்பபுத்தியினால் யாதொருபாத்யத்வமுண்டோ அதற்கு பாத்யத்வம காணப்படுவதாலும். அங்ஙனமாகில் ஸத்யத்வத்திலும் ஸத்பத்வமிருக்கிறதா ? இல்லையா ? இல்லை என்றால் ஜகத்தானது அஸத்யமாக ஆகவேண்டியதாகும். இருக்கிறதென்றால் அதற்கும் ஸத்யத்வம் என்று அநவஸ்தை வரும் என்று கூறப்படுமேயாகில். அப்படியல்ல. ஸ்வபரநிர்வாஹகத்வம் ஒப்புக்கொள்ளப்படுவதால். உன்னால் மித்யாத்வத்திலுங்கூட ஸ்வபர நிர்வாஹகத்வம் அங்கீகரிக்கப்படுகிறதேயானால் அப்பொழுது மித்யாத்வத்திற்கே ஸ்வமித்யாத்வ நிர்வாஹகத்வமிருப்பதால் மித்யாத்வமானது வேறுமித்யாத்வத்தை அபேக்ஷியாமல் ஸ்வயமே மித்யையென்பதினால் ப்ரபஞ்சம் ஸத்யமாக ஆகவேண்டியதாகும். ஸாதநம் பரமார்த்தமா? அபரமார்த்தமா? என்கிற விகல்பத்தில் பாரமார்த்யத்தை ஒப்புக்கொண்டால் அத்வைதத்திற்கு ஹாநிவருகிறது. அபாரமார்த்யம் சொல்லப்பட்டால் தூமம் என்கிற புத்தியினால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற ஆவியைப்போல அஸாதகத்வமேற்படுவதால் வ்யாகாதம் வருகிறது. பேதவாதியினாலுங்கூட ப்ரபஞ்ச ஸத்யத்வத்திற்குஹேதுவான ஸத்யத்வஸாதநத்தை முன்னிட்டு அநுமானங்கள் உபந்யஸிக்கப்படுகின்றனவில்லை. அப்படி இருந்தபோதிலும் அது உபபன்னமாகிறது; அப்படியே எனக்கும் என்றுசொல்லப்படுமேயாகில்; அப்படியல்ல. ஸத்பத்வ ஸாதனமில்லாமலிருந்தபோதிலும் எங்களுக்கு நாங்கள் ஒப்புக்கொண்டதில் வ்யாஹதி இல்லை. உனக்கோவென்றால் மித்யாத்வாப்யுபகமஸாதகத்வாப்யுபகமங்களிரண்டுக்கும் வ்யாஹதி என்று வைஷம்யமிருப்பதால். அய்யா! ஸாதகதர்ம பாரமார்த்யம் அபேக்ஷிக்கப்படவில்லை. நாசகமான முத்கரம் நஷ்டமாகப்போனபோதிலுங்கூட முந்திநஷ்டமான கடம்நஷ்டமாகவேகாணப்படுகிறது. உத்பன்னமாக காணப்படவில்லை. அப்படிப்போல பாதகஜ்ஞாநம்

§ அத்வைதம்— த்வயோ: பாவ:த்விதா, த்விதைவ த்வைதம், ஐக்யம் என்று. பொருள். இரண்டு சைதந்யஸ்வரூபங்களுக்கு ஐக்யம் என்று மாயாவாதிகளின் நிர்வசனம்.

$ நஞ்—இது இன்மையை உணர்த்தும் சப்தம்.

‡‡ ப்ரத்யவஸ்தானம்— எதிர்த்தல்.

† மாத்யமிகன்—இவன் பௌத்தமதப்ரவர்த்தகர்களான நால்வருள் சிறந்தவன். இவன் ஸர்வசூன்யவாதி.

* பாத்யம்— அதுஷ்டகாரணஜந்யமான விஷேதபுத்தியினால் பாதிக்கத்தக்கது.

|| ரஜ்ஜு—கயிர்.

மித்யையாக இருந்தபோதிலும் அதினால் பாதிக்கப்பட்டிருக்கிறதற்கு மித்யாத்வமானது இருக்கவே இருக்கிறது என்று சொல்லப்படுமேயானால், அல்ல காரகத்திற்கும் § ஜ்ஞாபகத்திற்கும் வைஷம்யமிருப்பதால். நாசகமன்றோ காரகம் ஆதலால். அதினால் நாசமாக்கப்பட்ட வஸ்துவுக்கு அது நஷ்டமானபோதிலும் நாசமே. அப்படி காணப்படுவதால் பாதகம் ஜ்ஞாபகம். அது பாதிக்கப்பட்டால் அதினால் பாதிக்கப்பட்டதும் ஸத்யமாகவே ஆகவேண்டியதாகும். ஒருவனால் சொல்லப்பட்டிருக்கிற * அபவாகத்திலிருந்த கடத்தினது அபாவமானது அஸ்தி என்கிற வசனத்தால் பாதிக்கப்பட்டஅளவில் கடஸத்யத்வம் காணப்படுவதால் பாதகத்துக்கு பாதம் வரின் பூர்வம் பாதிக்கப்பட்டதற்கு ஸத்யத்வம் சொல்வது யுக்தமல்ல. மலரின்காம்பைப்பார்த்து உண்டான வண்டு என்கிற ப்ரமத்துக்கு பாதம் வந்தபோதிலும் வண்டு என்கிற புத்தியால் பாதிக்கப்பட்டிருக்கற பலாசபுஷ்பவிஷயமான அக்கப்ராமத்துக்கு அபாதித்வம் காணப்படுவதாலென்று சொல்லப்படுமேயாகில்; ஸித்தாந்தம் கூறப்படுகிறது. அந்த இடத்தில் வஸ்து நிவ்ருத்தி சொல்லப்படுகிறதா? புத்தி நிவ்ருத்திசொல்லப்படுகிறதா? முதலாவது ஸரியல்ல. $ தாவத்வத்திற்கு பரமார்த்தபூதமாயுள்ள ¶ வ்ருந்தத்தால் பாத்யத்வம் காணப்படுவதால். புத்தி நிவ்ருத்தி என்றால் அது பாதகாதீனையல்ல. ஜ்ஞானங்கள் க்ஷணிகங்களாதலால் தானாக நிவ்ருத்திப்பதால். வண்டு என்கிற புத்தியோ வென்றால் பிற்காலத்திலுண்டாகக்கூடிய தாவபுத்தியின் உத்பத்திக்குப்ரதிபந்திகை. அந்த ப்ரதிபந்தகத்வமும் ப்ரமா பாரமார்த்ய புத்திக்கே. அப்படி இல்லாவிடில் முந்தின ப்ரம நிவ்ருத்யபாவம் காணப்படுவதால். ஆதலால் உன்மதத்தில் ஒருபொழுதும் மிகுதிஇன்றி பரம நிவ்ருத்தி ஸித்தியாது. புத்தி நிவ்ருத்தியானது பாதகவிஜ்ஞானத்தினாலுண்டாகிறதென்கிற பக்ஷத்தில்கூட நிவர்த்தக ஜ்ஞானங்கள் அனைத்துக்கும் ப்ராந்திரூபோத்தரோத்தர நிவர்த்தகஜ்ஞானாபேக்ஷை இருப்பதால் ப்ரமபரம்பரை உபபன்னமாகிறது. மேலே வருகிற ஒரு ஜ்ஞானத்துக்கு தானாக நாசம்வரின் கால்பநிக கடாதி நாசம்போல அந்த ஜ்ஞாநநாசமும் கால்பநிகமாதலால் நாசக்லுப்தி ரூபப்ராந்தியானது ஸ்திரையானதால் மிகுதியின்றி ப்ரமநிவ்ருத்திரூபமான மோக்ஷம் அநுபபன்னமென்ற † க்ருத்ஸ்நமித்யாத்வ நிச்சேஷாவித்யா நிவ்ருத்திக்கு வ்யாகாதம் வருகிறது— இது முதலான வ்யாகாதங்கள் அநுஸந்திக்கத்தக்கன.

ஸோபாதிகத்வமும் அடுத்தே உரைக்கப்படப்போகிறது. த்ருச்யத்வ வ்யாவர்தமானத்வங்களுக்கு அஸாதாரண தூஷணம் ப்ரஹ்மத்தினிடத்தில் வ்யபிசாரம் அத்யஸ்தம் ஶ்ஶ ஸ்வாதிஷ்டான ஸமானாதிகரணமாக அறியத்தக்கது. உதாஹரணம். இது ரஜதம் என்ற.இவ்வண்ணம் கடம் இருக்கிறது படமிருக்கிறது என்று அதிஷ்டாநமான ஸத்துக்கும் ப்ரபஞ்சத்துக்கும் ஏகபுத்தியினால் அறியத்தக்க தன்மை இருப்பதால் த்ருச்யத்வம் அநைகாந்திகம், என்றாலும் ஆகாயம் கருப்புநிறமுள்ளது என்கிற அத்யாஸத்தில் ஆகாயம் சக்ஷுரிந்த்ரியக்ராஹ்ய மல்லாததால் ஏகபுத்தி வேத்யத்வம் @ அத்யஸ்தாதிஷ்டானம்

|| காரகம்—க்ரியையை உண்டுபண்ணுகிற வஸ்து.

§ ஜ்ஞாபகம்—ஞானத்தை உண்டுபண்ணுகிறவஸ்து. * அபவாகம்—காமரா உள்ளு.

$ தாவம்—கானகத்து நெருப்பு. ¶ வ்ருந்தம்— மலர்களின் காம்பு.

† க்ருத்ஸ்நம்—முழுவதும். ஶ்ஶ ஸ்வாதிஷ்டானம்—தனக்கு ஆச்ரயம்.

@ அத்யஸ்தாதிஷ்டானம்— ப்ரமத்துக்கு விஷயமாக இருக்கும் வஸ்து. சிப்பியைப்பார்த்து இதுவெள்ளி என்று உண்டாகும் ப்ரமத்தில் அத்யஸ்தமான ரஜதத்திற்கு அதிஷ்டானம் (ஆதாரம்) சிப்பி.

இரண்டுக்கும் நியதமன்று. ஆயினும் ஸன்மாத்ரத்திற்கு ப்ரத்யக்ஷக்ராஹ்யத்வம் அன்யனால் ஒத்துக்கொள்ளப்பட்டிருப்பதால் அநைகாந்த்யம் ஸித்தம்.

அய்யா! இந்த த்ருச்யத்வநியமமானது ஹேதுவாக விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. ஸத்தானது ஸ்வயம ப்ரகாசமானதால் ஸத்துக்கு த்ருச்யத்வ நியமமில்லை. அதுவும் தான் எப்படி? ஸத்துக்கும் அநுபூதிக்கும் பேதமில்லாமையால் என்று சொல்லப்படுமேயானால் அது ஸரியல்ல. ஸத் அநுபூதி இரண்டுக்கும் பேதாபாவம் ஸித்தித்தால் ஸத்துக்கு ஸ்வயம் ப்ரகாசத்வமிருப்பதால் த்ருச்யத்வ நியமாஸித்தியினால் த்ருச்யத்வ ஹேதுவுக்கு ¶ அநைகாந்த்யபரிஹாரம்; அநைகாந்த்யம் பரிஹரிக்கப்பட்டால் பேதாபாவமென்று அந்யோந்யாச்ரயண தோஷம் வருவதால். வேறு அநுமாநத்தால் பேதநிஷேதம் ஸித்திக்குமேயானால் அப்பொழுது இதில் ஸித்தஸாதயதாதோஷம் வருகிறது. இவ்வாறாக பரமதத்தில் அநைகாந்த்யம் பகரப்பட்டது. மேலும் ப்ரஹ்மத்துக்கு த்ருச்யத்வமானது ச்ருதிஸித்தம் "த்ருச்யதேத்வக்ர்யயாபுத்யா, ஆத்மாவாரேத்ரஷ்டவ்ய:" என்று. அநுபூதித்வாத் இதுமுதலான அநுமானத்தால் த்ருச்யத்வாபாவத்தை ஸாதிக்குங்கால் காலாத்யயாபதேசதோஷம் வரும். அதாவது §பாததோஷம்— 'யத்ததத்ரேச்யம்' என்கிற வாக்யத்தால் த்ருச்யத்வ ச்ருதியானது பாதிக்கத்தக்கதென்று கூறப்படுமேயானால் அது ஸரியல்ல; அது த்ருச்யத்வஸாமான்ய நிஷேதபரம். Ψ த்ருச்யதேத்வக்ர்யயாபுத்யாஸூக்ஷ்மயாஸூக்ஷ்மதர்சிபி:, என்கிற இந்த ச்ருதிவசனம் த்ருச்யத்வ விசேஷவிதான விஷயமாக இருப்பதாலும் † நசக்ஷுஷா க்ருஹ்யதேநாபிவாசா நாந்யைர் தேவை: மனஸாதுவிசுத்தேந, இது முதலியதில் த்ருச்யத்வ விசேஷ நிஷேதம் காணப்படுவதாலும் அத்ரேச்யம் இது முதலிய ஸாமான்ய நிஷேதம் அதில் பர்யவஸிப்பதாலும் அத்ரேச்யம் இது முதலிய ஸாமான்ய ச்ருதியினாலும் த்ருச்யத்வாபாவ ஸாதகாநுமானத்தாலும் ப்ரஹ்மத்துக்கு த்ருச்யத்வமில்லை என்று கூறப்படுமேயானால், அது ஸரியல்ல அங்ஙனமாகில், * நஹிம்ஸ்யாத் ஸர்வாபூதாநி என்கிற ஸாமாந்ய நிஷேத ச்ருதியினாலும் ஹிம் ஸாத்வாத் என்கிற அநுமாநத்தாலும் § அக்நீஷோமீயபசுஹிம்ஸா நிவ்ருத்தி ப்ரஸங்கம வருவதால். ஆகையால் த்ருச்யத்வம் அநைகாந்திகம். அநைகாந்திகமானது பரிஹரிக்க விரும்பப்படுமேயாகில் ப்ரஹ்மத்துக்கு மித்யாத்வமாவது ஒப்புக்கொள்ளத்தக்கதாக ஆகும். த்ருச்யதைகஸ்வபாவத்வமன்றோ ஹேதுவாக அபிமானிக்கப்பட்டிருக்கிறதென்பதினால் அநைகாந்த்யம் இல்லை. ப்ரஹ்மமானது ஸ்வயம் ப்ரகாசமாதலால் த்ருச்யதைகஸ்வபாவமுள்ளதல்லவென்று சொல்லப்படுமேயானால், அல்ல. அப்பொழுது ஹேதுவுக்கு ¶ பாகாஸித்திவரும். சிதசிதாத்மக ப்ரபஞ்சத்தில்

§பாதம்—ஸாத்யா பாவவத்தானபக்ஷம். ¶ அநைகாந்த்யம்—வ்யபிசாரம்.

‡ காலாத்யயாபதேசம்—பாததோஷம்.

$ ஸித்தஸாத்யத்வம் — ஏற்கனவே ஸித்தமான ஒரு வஸ்துவை ஹேதுவினால் மீண்டும் ஸாதித்தல். இது ப்ரபலமான அநுமானதோஷம்.

Ψ த்ருச்யதேத்வக்ர்யயா — ஸூக்ஷ்மதர்சிகளால் ஸூக்ஷ்மமாயும் சிறந்ததாயுமிருக்கிற புத்தியினால் காணப்படுகிறான்.

† நசக்ஷுஷாக்ரு—கண்ணாலும் பார்க்கப்படுகிறதில்லை, வாக்கினால் க்ரஹிக்கப்படுகிறதில்லை, மற்ற இந்த்ரியங்களாலும் க்ரஹிக்கப்படுகிறதில்லை. பரிசுத்தமான மனதினாலேயென்றால் க்ரஹிக்கப்படுகிறான்.

¶ பாகாஸித்தி—ஒரு அம்சத்தில் நிலை பெற்று மற்றதில் விலகுதல்.

ஜீவாம்சம் ஸ்வயம் ப்ரகாசமாக இருப்பதால். அஜிதமசமாத்ரத்வத அங்கீகரிக்கில் ஹேதுவுக்கு ஜீவனை அடைந்திருக்கிற நித்யத்வாதி தர்மங்களில் அனைகாந்திகத்வம். அவைகள் § தர்மபூதஜ்ஞாநத்தால் அறியத்தக்கவைகளே. பரமார்த்தபூதங்களும் வ்யாவர்த்தமாநத்வமும ப்ரஹ்மத்தினிடத்தில் அனைகாந்திகம். அந்ருதாதிகளைக்காட்டிலும வ்யாவ்ருத்தமாக ஒப்புக்கொண்டிருப்பதால் அதுவும் ஸ்வரூபமாத்ர மென்று சொல்வதற்கு சக்யமல்ல. ப்ரஹ்மமானது ஒரு வஸ்துவினுடையவும் தர்மமாக இல்லாமையாலும் அத்யாஸஸஹமாக இருப்பதாலும் வ்யாவர்த்தமானத்வ ஸ்வரூபமாக இருந்தபோதிலும் அநுபூதித்வம்போல அது ஸ்வகார்யகரம். ஹேதுவுக்கு ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபாடு இல்லாமலிருந்தபோதிலும் அதற்கு ஸாதநதசையில் காரய காதவமே தவிர்த்து தூஷண தசையில் இல்லை என்று சொல்வதற்கு நியாமகமில்லாமையால். மேலும் ப்ரஹ்மத்தினிடத்தில் ஸ்வரூபம் வ்யாவ்ருத்தியாகில் கடம் முதலியவைகளிலும் அப்படி ஆகட்டும் ப்ரஹ்மத்தினிடம் ஸ்வரூபத்தைவிட வேறாக இருக்கிறதானால் அப்பொழுது கடம் முதலியவைகளிலும் அப்படி இருக்கவேண்டியதாக ஆகும். எவ்விதத்தாலும் அனைகாந்த்யம விலக்கத்தகாதது. ப்ரஹ்மத்திற்கு ஜடாதிவ்யாவ்ருத்தத்வம் அபரமார்த்தமாகில் உள்ளபடியே ப்ரஹ்மம் ஜடமாகவே ஆகவேண்டி வரும். கடம் முதலியதில் வ்யாவர்த்தமானத்வம் மித்தையையாதலால் வ்யாவர்த்திக்கத்தக்கதில்லை என்பது பற்றி அபரமார்த்த சப்தமும் பயனற்றது. அதினாலும் அனைகாந்த்யம் மிக்க ஸ்பஷ்டமாக இருக்கிறது. அபரமார்த்தமே ஹேதுவென்று உன்னால் அங்கீகரிக்கப்பட்டிருப்பதால். அது விபக்ஷத்திலும் இருப்பதால். மேலும் அநுவர்த்தமானமாக இருக்கிற ஸந்மாத்ரத்திற்கு வ்யாவர்த்தமானங்களான கடாதிகளினின்று வ்யாவ்ருத்தி இருக்கிறதா? இல்லையா? இருக்கிறதென்று சொல்வாயேயாகில் அதினாலேயே வ்யாவர்த்தமானத்வ ஹேதுவானது ப்ரஹ்மத்தினிடத்தில் $ அனைகாந்திகம் இல்லை என்றால் கடம் முதலியவைகளில் போல வ்யாவர்த்தமாநத்வம ப்ரஹ்மத்தினிடத்தில் வரும். வ்யாவர்த்தமானங்களைக் காட்டிலும் வ்யாவர்த்தமாநதவ மில்லாமையால். எப்படி ரஜதம ரஜதத்தினிடத்தினின்று அவ்யாவ்ருத்தமோ, அப்படியே வ்யாவர்த்தமான வஸ்துவினிடத்தினின்று அவ்யாவ்ருத்தமும வ்யாவர்த்தமானமாகவே ஆகிறது. ஆகையால் இரண்டுவிதத்தாலும ப்ரஹ்மத்தினிடத்தில் அனைகாந்த்யம். அப்பா! ப்ரஹ்மமானது ஜடாதிவ்யாவ்ருத்தமே. வ்யாவர்தமானத்வமும் ஸத்யம். அதுவும் ஸ்வரூபமாதலால் அத்வைதஹானி இல்லை. அதுவும ஸத்யமாக இருப்பதால் ப்ரஹ்மத்துக்கு ஜடத்வம் முதலியதில்லை ஆகையால் அனைகாந்த்யமில்லை. பரமார்த்தமில்லாததும கடாதிகளை அடைந்திருப்பதுமான வ்யாவர்த்தமாநத்வமன்றோ ஹேது என்று கூறப்படுமேயானால் அபரமார்த்தபூதமான வ்யாவர்த்தமானத்வம் ஹேதுவாக சொல்லக்கருதப்படுமேயாகில் அப்பொழுது ஹேது அஸித்தம். கடாதிகளுடைய அன்யோன்ய வ்யாவ்ருத்திக்கு அஸத்யத்வம ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பதால்.

---

[illegible]
[illegible]

---

$ அனைகாந்திகம்—வ்யபிசாரமுள்ளது, ஸாத்யமில்லாத இடத்தில் இருக்கிறது.

§ தர்மபூதஜ்ஞாநம்—ஜ்ஞாநஸ்வரூபனான ஜீவனிடத்திலிருக்கிற ஜ்ஞாநரூபமான அஸாதாரண தர்மம்.

𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 । *𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌦𑍇𑌶𑍇 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌕𑌾𑌲𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌃, 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌦𑍇𑌶𑍇 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌕𑌾𑌲𑍇 𑌤𑌸𑍍𑌯𑌾𑌭𑌾𑌵𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑍍 𑌤𑌤𑍍𑌰 𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌬𑌲𑌵𑌤𑍋 𑌬𑌾𑌧𑌕𑌤𑍍𑌵𑌂 𑌬𑌾𑌧𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌦𑍇𑌶𑌾𑌨𑍍𑌤𑌰𑌕𑌾𑌲𑌾𑌨𑍍𑌤𑌰𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑌯𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌯𑍋𑌰𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌰𑍋𑌧 𑌇𑌤𑌿 𑌕𑌥𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌬𑌾𑌧𑍍𑌯𑌬𑌾𑌧𑌕𑌭𑌾𑌵𑌃 । 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌾 𑌕𑌥𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌰𑌜𑍍𑌜𑍁𑌸𑌰𑍍𑌪𑌾𑌦𑌿𑌷𑍁 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑌯𑍈𑌵𑌾𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑍋𑌬𑌾𑌧𑌕𑌤𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌾𑌨𑍍𑌤𑌰𑌵𑍍𑌯𑌾𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌨 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑌿𑌤𑌿 𑌨 𑌵𑍍𑌯𑌾𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑍇 𑌹𑍇𑌤𑍁𑌃 ॥

𑌯𑌤𑍍𑌤𑍁 — 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌦𑍍𑌰𑍂𑌪𑌾𑌯𑌾𑌃 𑌇𑌤𑌿, 𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌮𑍇𑌪𑍇𑌤𑌿 𑌨 𑌸𑌾𑌧𑌨𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 । 𑌅𑌤𑍋 𑌨 𑌸𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑍇𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁 । 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌯𑍋𑌶𑍍𑌚 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌷𑌯𑌿𑌭𑌾𑌵𑍇𑌨 𑌦𑍇𑌹𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌬𑌾𑌧𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑍇𑌵 𑌸𑌤𑍀𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌪𑌿 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌮𑍍 ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

இரண்டு ஜ்ஞானங்களுக்கும் விரோதம் வந்தாலன்றோ பாத்யபாதகபாவம். பாதிக்கப்பட்டது எதோ அதற்கே வ்யாவ்ருத்தி. இந்த இடத்தில் கடபடாதிகளில் தேச பேதத்தாலும் காலபேதத்தாலும் விரோதமே இல்லை.' எந்த இடத்தில் எந்த காலத்தில் எந்த வஸ்துவின் இருப்பு அறியப்பட்டிருக்கிறதோ அந்த இடத்தில் அந்த காலத்தில் அந்த வஸ்துவின் இன்மை அறியப்படுமேயாகில் அங்கு விரோதம் ஏற்படுவதால் பலமுள்ளதற்கு பாதகத்வமும் பாதிக்கப்பட்டதற்கு நிவ்ருத்தியும் வருகிறது வேறு இடத்திலும் வேறு காலத்திலும் ஸம்பந்தித்ததாக அனுபவிக்கப்பட்டிருக்கிற வஸ்துவுக்கு அதைக்காட்டிலும் வேறான இடத்திலும் காலத்திலும் அதின் இன்மை அறியப்படுமேயாகில் விரோதம் கிடையாது ஆதலால் எவ்வாறு இவ்விடத்தில் பாத்யபாதகபாவம் ? விரோதபாதகஸ்தலத்தில் நிவ்ருத்தமானவஸ்துவுக்கு விரோத பாதகங்களில்லாத இடத்தில் எவ்வாறு நிவ்ருத்தி சொல்லக்கூடும் ? ரஜ்ஜுஸர்பாதிகளிலோ வென்றால் எந்ததேசத்தில எந்த காலத்தில் எந்த வஸ்துவின் இருப்பு அறியப்பட்டிருக்கிறதோ அந்த தேசத்தில் அக்காலத்தில் அந்தவஸ்துவின் அபாவமே ஜ்ஞாநவிஷயமாதலால் விரோதமும் பாதகத்வமும் வ்யாவ்ருத்தியும் ஸம்பவிப்பதுபற்றி தேசகாலாந்தர வ்யாவர்தமாநத்வம் மித்யாத்வ வ்யாப்தமாகக் காணப்படாமையால் வ்யாவர்தமாநத்வம் மாத்திரம்

அபாரமார்த்யத்தில் ஹேதுவாகாது. அநுவர்த்தமானமாக இருப்பதால் ஸத் பரமார்த்தம், என்று எது சொல்லப்பட்டதோ அது ஸித்தமாகவே இருப்பதால் ஸாதிப்பதற்குத் தகுதியுள்ளதல்ல. ஆதலால் ஸந்மாத்ரமே வஸ்துவல்ல. அநுபூதிக்கும் ஸத்ரூபமான விசேஷத்துக்கும் விஷயவிஷயிபாவத்தால் பேதம் ப்ரத்யக்ஷஸித்தமாக இருப்பதாலும் பாதிக்கப்படாமலிருப்பதாலும் அநுபூதியே ஸதியைபதும் நிரஸிக்கப்பட்டது.

---

ச்ருதப்ரகாசிகை—

மூர்த்தி அந்யனால் பாதத்துக்குங்கூட பக்ஷத்திலின்று வ்யாவ்ருத்தியின் உபபாதனத்தினால் உபாதித்வம் மறுக்கப்பட்டது. அதைச்ராகரிக்கப்பதற்காக பக்ஷத்தில் பாதாபாவத்தைக் காண்பிக்க எண்ணங்கொண்டு பாதத்தை சிக்ஷிக்கிறார்—த்வயோ: என்று. விரோதமிருந்தால்தான் பாத்யபாதகபாவமே ஒழிய அஸ்திநாஸதி என்கிற இரண்டு ப்ரத்யய மாத்திரங்களுக்கு பாத்யபாதகபாவம் இல்லை என்று அர்த்தம். பாதிதஸ்யைவ வ்யாவ்ருத்திரிதி—ப்ரதிபன்னோபாதியில் பாதிதத்திற்கே மித்யாத்வஸாதகமான வ்யாவ்ருத்தியே ஒழிய அக்ருஹீதத்வமாத்ரம் மித்யாத்வத்திற்கு ஸாதகமாகாதென்று அர்த்தம். இங்குவ்யாவ்ருத்திவிசேஷம் வ்யாவ்ருத்தி சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. மேலே வ்யாவர்தமாநத்வமாத்ரம்— மாத்ரச்ப்ரத்யமிருப்பதால். அதனால் பக்ஷத்தில் பாதாபாவத்திற்கு என்னவென்று கேட்கில் கூறுகிறார்—அத்ர என்று. இரண்டுதேசங்களுக்கும் இரண்டுகாலங்களுக்கும்பேதமிருக்குமேயாகில் அவிரோதத்தைக்காண்பிப்பதற்காக அவைகள் இரண்டுக்கும் ஐக்யமிருக்குமேயாகில் விரோத பாதகங்களைக் காண்பிக்கிறார்—யஸ்மிந் என்று. பாவாபாவங்கள் இரண்டுக்கும் விரோதம் இருப்பதால் இரண்டுக்குள் ஒன்றுக்கு பாத்யத்வம்சொல்லியேதீரவேண்டியதாக இருக்கிறபடியால் பலமுள்ளதற்குபாதகத்வமும் மற்றதுக்கு பாதிதமாக இருப்பதால் நிவ்ருத்தியுமென்று அர்த்தம். சகாரம் ஏவகாரார்த்தத்தில். பாதிதத்திற்கே உன்றால் ஸம்மதிக்கப்பட்டிருக்கிற வ்யாவ்ருத்தி விசேஷமென்று அர்த்தம். ஸாமாநாதிகரண்யாநர்ஹத்வம் விரோதம். தோஷமற்றகாரணத்தினால் உண்டான நிஷேதபுத்தி பாதம். தோஷமற்றகாரணத்தினால் உண்டானதாயும் நிஷேத ரூபமாயுமிருப்பது பாதகம். முன்னிலையிலிருக்கும் வஸ்துவில் அபாவமாவது அநவபாஸமாவது ஸத்யத்வாவபாஸாபாவமாவது நிவ்ருத்தி-பக்ஷமாகிய கடம்முதலியதில் தேசகாலபேதத்தால் விரோதம் பாதம் இவைகளின் இன்மையை உபபாதிக்கிறார்— தேசாந்தர என்று.விரோதபாதங்களின் இன்மையால் அவைகளுக்கு பலபூதமான நிவ்ருத்தியுமில்லை என்று சொல்லுகிறார்—அந்யத்ர என்று. அந்யத்ர நிவ்ருத்தமைய விரோதபாதஸ்தலத்தில் நிவ்ருத்தமான வஸ்துவுக்கு, அந்யத்ர-விரோதபாதமில்லாத இடத்தில்,அல்லது அந்யத்ர ஸ்வதேசகாலவ்யதிரிக்த தேசகாலங்களில். அந்யத்ர ஸ்வதேசகாலங்களில். இந்த வைதர்ம்யத்தை த்ருஷ்டாந்தத்தால் விவரிக்கிறார்—ரஜ்ஜுஸர்பாதிஷு என்று. து சப்தம் கடாதிவைஷம்யத்தை ப்ரதானமாகக்குறிக்கிறது. இந்தப்ரகாரமாக தூஷணோபயோகியான வ்யாப்தியானது சிக்ஷிக்கப்பட்டது;பிறகுஅநுமான தூஷணஸித்தியைக் காண்பிக்கிறார்— இதிதேசகாலாந்தர என்று. இதிசப்தம் ஹேதுவில். மித்யாத்வம் வ்யாபகம், வ்யாவர்தமானத்வம் வ்யாப்யம். வ்யாவர்தமாநத்வமாத்ரமென்கிற மாத்ர சப்தத்தால் விரோதபாதஹேதுகமான வ்யாவ்ருத்தியானது வ்யாவர்திக்கப்படுகிறது. அன்றிக்கே, வ்யாவர்த்தமானத்வ ஹேதுவின் அஸித்தியை ப்ரதிஜ்ஞை செய்கிறார்—யத்புந: இதுமுதலியதால். அதற்காக பாதமூலம்விரோதமென்று சொல்லுகிறார்—த்வயோ

ரித்யர்தி—பக்ஷத்தில் அதின் அபாவத்தைக் காண்பிக்கிறார்— அத்ர என்று. விரோதத்தினின்மையை உபபாதிக்கிறார்-ப்ஸ்மீநீஎன்று. அதின் பலநிவ்ருத்தியைக்கூறுகிறார்-அந்யத்ர என்று. த்ருஷ்டாந்தத்தில் அதின் வைதர்மயததைக்காண்பிக்கிறார்—ரஜ்ஜு என்று. இவ்வண்ணமாக அஸித்தியைச் சொல்வதற்காக பாகுபாடு காண்பிக்கப்பட்டது. பிறகு அஸித்தியைக்கூறுகிறா—இதிதேசகாலாந்தர என்று. ஸோபாதிகத்வம் அர்த்தத்தால் ஸித்திக்கிறது. இது அரததம், படமிருக்கிறது என்கிற இடத்தில் படாபாவம் ஸாதிக்கவிரும்பப்பட்டிருக்கிறதா? அல்லது கடோZஸ்தி என்கிற இடத்திலுங்கூட அதின் அபாவம் ஸாதிககவிரும்பப்பட்டிருக்கிறதா? முதல் பக்ஷத்தில் ஸித்தஸாத்யதை தோஷம். இரண்டாவதில் வ்யாவர்தமாநத்வ சப்தத்தால் வ்யாவ்ருததிபுததி போத்யத்வம் மித்யாதவத்திற்கு ஹேதுவாக விவக்ஷிக்கப்பட்டதா? அல்லது ப்ரதிபன்னோபாதியில் பாதிதத்திற்கு வ்யாவ்ருத்தியா? முதல் பக்ஷத்தில் ஸோபாதிகத்வம். இரண்டாவதில் ஹேதுவின் அஸித்தியால் கடாதிகளுக்கு ஸத்யத்வம் என்று.

அய்யா! பாதார்ஹதைக்கு உபாதித்வம் கூறப்பட்டால் ஸாத்யாவிசிஷ்டத்வம் ஏற்படும். ஆதலால் பாதிதத்வமே உபாதியாக இருக்கலாம். அதற்கு ஸாத்யஸமவ்யாப்தி இல்லை ஸஹாயமில்லாமல் செல்லுகினறவனால் வழியில்காணப்பட்டிருக்கிற ரஜ்ஜுஸர்பமானது ஒன்றினாலும் பாதிதமாகாததால் எனறு சொல்லப்படுமேயானல், இவ்வண்ணமல்ல. ஈச்வரன் முதலியவர்களின் ஜ்ஞாநத்தினல் தவருமல் பாதிக்கப்பட்டிருப்பதால் ஈச்வரனைஒப்புக்கொள்ளாதவர்களுடைய பக்ஷத்திலும் இதுஉபாதியேஉன்னல் வழியில்காணப்பட்டிருக்கிற அந்த ரஜ்ஜுஸர்பததிற்கு மித்யாதவமானதுப்ரமாணத்தாலறியப்பட்டதா? இல்லையா? இல்லை என்று கூறப்படுமேயானல் நல்லஸர்பமே என்பதினல் அந்த இடத்தில் அவ்ருத்தியானது ஸாத்யஸமவ்யாப்கயபாவத்தின் பொருட்டாகாது. அறியப்பட்டிருக்குமேயாகில் அந்த ஜ்ஞாநத்தினலேயே அதற்கு பாதித்வம் ஸித்தமென்பதினல் ஸாத்யஸமவ்யாப்தி ஸித்திக்கிறது. அய்யா! ப்ரதிபன்னோபாதியில் பாதம் மித்யாத்வத்தில் ப்ரயோஜகமா? அல்லது கேவலபாதமா? முதல் பக்ஷத்தில் தேசகாலங்கள் உபாதியானதால் தேசகாலப்ரமத்திற்கு தேசகாலோபாதிகதவ மில்லாமையாலும் ஸர்வபக்ஷாநுயாயித்வமில்லாமையாலும் ஸாத்யஸமவ்யாப்தி இல்லாமையால் ப்ரதிபன்னோபாதியில் பாதமானது உபாதியாக ஆகாது. இரண்டாவது பக்ஷத்தில் க்ருத்ஸ்நமித்யாத்வம் என்று. இங்கே கூறப்படுகிறது. தேசகாலங்களே உபாதியென்று நியமமில்லையன்றோ. பின்னையோ வஸ்த்வந்தரமும் உபாதி— உபாதியானது அவச்சேதகம் அதினலேயேயன்றோ தேசகாலாதிப்ரதிபன்னோபாதியில் அபாதிதத்வாத் என்கிற இடத்தில் ஆதி சப்தத்தால் வஸ்த்வந்தரத்திற்கும் உபாதித்வத்தை பாஷ்யகாரர் உரைக்கப்போகிறார். ஆகையால் தேசகாலப்ரமத்தில் வஸ்த்வந்தரம் உபாதி. தேசகாலப்ரமத்துக்கு வஸ்த்வந்தரோபாதிகத்வமிருந்தபோதிலும் வஸ்து ப்ரமத்திற்கு தேசகாலோபாதிகத்வம் வரின்அந்யோந்யாச்ரயதோஷமில்லை, ப்ரமவ்யக்தி பேதததால். ஆகையால் எந்தவஸ்துவானது எந்த அவச்சேதகத்தால் அவச்சின்னமாக அறியப்பட்டிருக்கிறதோ அந்த அவச்சேதகத்தால் அவச்சின்னவஸ்துவுக்கு பாதம் மித்யாத்வத்தில் ப்ரயோஜகம். அன்றிக்கே, ஆரோபிக்கப்பட்டிருக்கிற ஸர்பத்வம் அதற்கு நிவர்தகமான திவாத்வம் முதலியவைகளை விட்டு க்ரியாந்தராவச்சின்னமான காலத்திற்கு ப்ராந்த்யபாதித்வம். இவ்வண்ணம் தேசத்திலுமென்பதனல் ஒரு தோஷமுமில்லை. இவ்வாறு விசிஷ்டோபாதியில் விசேஷண விசேஷ்யாம்சம் இரண்டுக்கும் அநுபபத்திபரிஹாரம் ஏற்பட்டிருக்கிறபடியால் விசிஷ்டோபாதி ஸித்திக்கிறது. ஆகையால் வ்யாவர்தமானத்வமாத்ரம் அபாரமார்த்த்யத்தில் ஹேதுவல்ல. சிலர்களால் இவ்வண்ணம் சொல்லப்பட்டது டோZஸ்தி என்கிற இடத்தில் கடசப்தம் அஸ்திசப்தம் இரண்டும் பர்யாயங்களா?

அல்லவா? பர்யாயங்களாக இருக்குமேயாகில் சேர்ந்து இரண்டிற்கும் ப்ரயோகம் கூடாது. இல்லையாகில் ஸத்தைக்காட்டிலும் கடம் விலக்ஷணம் என்று. இவ்வண்ணமல்ல. “அஸ்தி ப்ரஹ்மேதிசேத்வேத” இது முதலிய இடத்தில் அஸ்திப்ரஹ்மசப்தங்கள் இரண்டும் பர்யாயங்களானால் பௌநருக்த்ய தோஷம் வரும். இல்லையென்றால் ப்ரஹ்மத்துக்கும் ஸத்விலக்ஷணத்வம் என்று. இரண்டிடத்திலும் இந்தபரிஹாரம் ஸ்வசப்த ப்ராப்தமான ஸ்வபாவத்திற்கே நிஷேதார்த்தாநுவாத சங்கையின் பரிஹாரத்தின் பொருட்டு அஸ்திசப்தத்தால் நியமம் செய்யப்படுகிறது என்று. பிறகு பாரமார்த்ய்யத்திற்கு ஸாதகமாகச் சொல்லப்பட்டிருக்கிற அநுவர்தமானத்வ ஹேதுவை தூஷிக்கிறார்— யத்து இதுமுதலிய க்ரந்தத்தினால். ஸத்சப்தவாச்யமான ப்ரமாண ஸம்பந்தார்ஹமான அந்தந்த கடாதி ஸ்வரூபத்திற்கு பாரமார்த்யம் ஸாதிக்கப்படுகிறதா? *அல்லது அதிஷ்டானமாக அநுவர்திக்கப்பட்டிருக்கிற அர்த்தாந்தரத்திற்கா? என்கிற விகல்பத்தில் இரண்டாவது பக்ஷத்தில் ஆச்ரயாஸித்தியை அபிப்ராயப்பட்டு முதல் பக்ஷத்தில் ஸித்தஸாதநத்வம் தூஷணமாக உரைக்கப்பட்டது.

அய்யா! ஸத் ஒன்றே பாமார்த்தமென்றல்லவோ க்ரந்தகாரருடைய அபிப்ராயம், அவ்வாறு இருக்கஸித்தஸாதநத்வம் எவ்வாறு எனில், உத்தரம் சொல்லப்படுகிறது— இந்த அநுமானமானது ஸத்துக்கு பாரமார்த்யஸாதகமா? அல்லது ஸத்தைக்காட்டிலும் வேறான மற்றவஸ்துக்களின் அபாரமார்த்யத்திற்கா? அல்லது இரண்டுக்குமா? முதலில் ஸித்தஸாத்யதை, இரண்டாவதில் வ்யதிகரணாஸித்ததை. மூன்றாவதில் அம்சத்தில் ஸித்தஸாத்யதை. அம்சத்தில் வ்யதிகரணாஸித்தியும். நிகமனம் செய்கிறார்— அத: என்று. அர்யனால் ப்ரமாணப்ரமேயாநுபபத்தியினால் செய்யப்பட்டிருக்கிற பேததூஷணத்தை ஆச்ரயித்து அநுபூதியைக்காட்டிலும் ஸத்துக்குபேதம் நிரஸிக்கப்பட்டது. இந்த இடத்தில் பேததூஷணஹேத்வாபாஸ நிராஸத்தை ஆச்ரயித்து அநுபூதிக்கும் ஸத்துக்கும் அபேதமும் நிரஸிக்கப்படுகிறது— அநுபூதி இதுமுதலியதால். அநுபூதி ஸத்விசேஷயோ: என்கிற இடத்தில் விசேஷசப்தத்தால் அநுவர்தமானத்வ ஹேதுவுக்கு ஆச்ரயாஸித்தி ஸூசிப்பிக்கப்படுகிறது. ஸத்சப்தத்தால் வாச்யமான வஸ்துவுக்கு வ்யாவ்ருத்தத்வத்தாலும் அநுவ்ருத்தமான அர்த்தாந்தராபாவத்தாலும். ஸத்சப்தமானது ப்ரமாண ஸம்பந்தார்ஹமான வஸ்துவினிடத்திலன்றோ இருக்கிறது. கடஸ்ஸந், படஸ்ஸந் என்கிற அநுவ்ருத்த வ்யவஹாரமானது வ்யாவ்ருத்தசப்தம்போல் உபபன்னமாகிறதாதலால் ப்ரமாணஸம்பந்தார்ஹங்களான பதார்த்தங்கள் பரஸ்பரவ்யாவ்ருத்தங்களாக இருந்து கொண்டு ஸச்சப்தவாச்யங்களாக இருக்கின்றன.

---

யத்து — அநுபூதேஃ ஸ்வயம்ப்ரகாஶத்வமுக்தம்; தத்விஷயப்ரகாஶநவேலாயாம் ஜ்ஞாதுராத்மநஸ்ததைவ, ந து ஸர்வேஷாம் ஸர்வதா ததைவேதி நியமோऽஸ்தி। பராநுபவஸ்ய ஹாநோபாதாநாதிலிங்ககாநுமாநஜ்ஞாநவிஷயத்வாத்। ஸ்வாநுபவஸ்யாப்யதீதஸ்ய “அஜ்ஞாஸிஷம்” இதி ஜ்ஞாநவிஷயத்வதர்ஶநாச்ச। அதோऽநுபூதிர்ஹேதுஃ ஸ்வதஸ்ஸித்தேதி வக்தும் ந ஶக்யதே ॥

ஸ்ரீபாஷ்யம்—

அநுபூதிக்கு ஸ்வயம் ப்ரகாசத்வம் சொல்லப்பட்டதென்பது யாதொன்றுண்டோ அது விஷயப்ரகாசன வேளையில் ஜ்ஞாதாவான ஆத்மாவுக்கு அப்படியே ஒழிய எல்லோருக்கும் எப்பொழுதும் அப்படியே என்கிற நியமமில்லை. பராநுபவமானது ஹாநம் உபாதானம் முதலியதை லிங்கமாகக்கொண்ட அநுமாந ஜ்ஞாநவிஷயமாவதால் சென்றுபோன ஸ்வாநுபவத்துக்கும் 'அறிந்தேன்' என்று ஜ்ஞாநவிஷயத்வம் காணப்படுவதாலும். ஆதலால் அநுபூதியாயிருக்குமேயாகில் அது ஸ்வதஸ்ஸித்தை என்று சொல்வதற்கு சக்யமாகாது.

ச்ருதப்ரகாசிகை:—

பிறகு அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற ஸ்வயம் ப்ரகாசத்வமானது அபிமதிக்கப்பட்டிருக்க அதில் சிக்ஷிக்கத்தக்க அம்சம் இருக்கிறது என்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார்— யத்த்வநுபூதே: என்று ''து'' என்பது பக்ஷவைஷம்யத்தை உணர்த்துகிறது. சொல்லத்தக்க அம்சத்தைச்சொல்லுகிறார்— தத்விஷயப்ரகாசநவேளாயாம் என்று. மேலே வர்த்தமானதசாயாம் என்றல்லவோ சொல்லப்படப்போகிறது. அந்த ஜ்ஞாநம் நித்ய த்ரவ்யமானதுபற்றி எப்பொழுதுமிருப்பதால் வர்த்தமாநதசாயாம் என்கிற பதம் ப்ரயோஜனமற்றதென்கிற சங்கையைப் போக்கடிப்பதின் பொருட்டு விஷயப்ரகாசநவேளாயாமென்று பகரப்பட்டது. வர்த்தமானதசா சப்தத்தால் விஷயஸம்பந்தப்ரஸரத்திற்கு வர்தமாநத்வம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறதென்று அறியப்படுகிறது. ந து ஸர்வேஷாம் என்பதை உபபாதிக்கிறார்—பராநுபவஸ்ய என்று ஸர்வதா என்கிற பதத்தினது அர்த்தத்தை உபபாதிக்கிறார்—ஸ்வாநுபவஸ்யாபி என்று அநுபூதிச்சேத் என்கிற இந்தவாக்யத்தால் ஸ்வாச்ரயத்தைக் குறித்து விஷயப்ரகாசநவேளாயாம் என்று சொல்லப்பட்ட வைஷம்யத்தின் இன்மையானது உள்ளடக்கப்பட்டிருக்கிறது.

𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑍇𑌰𑌨𑍁𑌭𑌾𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑍇 𑌅𑌨𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌂
𑌤𑌤𑍍 । 𑌸𑍍𑌵𑌸𑌮𑌤𑍀𑌤𑌾𑌨𑍁𑌭𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌕𑍀𑌯𑌾𑌨𑍁𑌭𑌵𑌾𑌨𑌾𑌞𑍍𑌚𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑍇
𑌨𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌘𑌾𑌤𑌃 । 𑌪𑌰𑌾𑌨𑍁𑌭𑌵𑌾𑌨𑌾𑌮𑌨𑍁𑌮𑌾𑌨𑍇𑌨
𑌚 𑌹𑌾𑌨𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌾𑌦𑌿𑌲𑌿𑌙𑍍𑌗𑌕𑍇𑌨 𑌸𑍍𑌵𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌹𑌤𑍍𑌵
𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃 । 𑌸𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑌾𑌨𑍁𑌭𑌵𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌨𑌙𑍍𑌗𑍀𑌕𑌾𑌰𑍇 𑌤𑌦𑌭𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 ।
𑌸𑌾𑌵𑌧𑌾𑌨𑌵𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌚𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑍇𑌽𑌨𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌨𑍁-
𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌂 𑌨𑌾𑌮 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌦𑌶𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌵𑌸𑌤𑍍𑌤𑌯𑌇𑌵 𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿
𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌂, 𑌸𑍍𑌵𑌸𑌤𑍍𑌤𑌯𑌇𑌵 𑌸𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾 । 𑌤𑍇 𑌚𑌾𑌨𑍁-
𑌭𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑍍𑌯𑍇𑌽𑌪𑌿 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑌵𑌵𑍇𑌲𑌾𑌯𑌾𑌮𑌵𑌗𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌨𑌾-
𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑌪𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 । 𑌘𑌟𑌾𑌦𑍇𑌸𑍍𑌤𑍁 𑌅𑌨𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑌭𑌾𑌵𑌾𑌦𑍇𑌵

हारात्, अनुभाव्यत्वात् । तथाऽनुभूतेरनुभाव्यत्वेऽ
पि अनुभूतित्व[illegible] । घटादेर
ननुभाव्यस्याननुभूतित्वात् । घटादेरननुभू
तित्वं [illegible], । नानुभाव्यत्वव्याप्तेरिति चेत् ; नैवं
[illegible] अनुभूतित्वनिब
न्धनम्, नानुभाव्यत्व[illegible] । अनुभूतेरनुभाव्य
त्वे [illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥

ஸ்ரீபாஷ்யம்.—

அநுபூதிக்கு அநுபாவ்யத்வம் வரும்பக்ஷத்தில் அநுபூதித்வமில்லாமல் போகவேண்டிவரும் என்பதும் துஷ்டோக்தி. தன்னை அடைந்துள்ள அநுபவங்களுக்கும் அயர்களை அடைந்திருக்கிற அநுபவங்களுக்கும் அநுபாவ்யத்வமிருப்பதுபற்றி அநநுபூதித்வம் ப்ரஸங்கிப்பதால்—பராநுபவாநுமானத்தை ஒப்புக்கொள்ளாதபக்ஷத்தில் சப்தார்த்தங்களுடைய ஸம்பந்தக்ரஹணமில்லாமையால் ஸமஸ்தசப்தவ்யவஹாரங்களுக்கும் அழிவுவரவேண்டியதாகும். ஆசார்யனிடத்திலிருக்கும் சிறந்த ஜ்ஞாநத்தை அநுமானத்தால் கண்டறிந்து அவருடைய பக்கலில் சிஷ்யர்கள் அணுகுகிறார்கள். அதுவும் பொருந்தாது. மற்றொன்றுக்கு விஷயமாக ஆனதினாலேயே அநுபூதிக்கு அநநுபூதித்வம் வந்துவிடுகிறதென்பதும் ஸரியல்ல. அநுபூதித்வமாவது வர்தமானதசையில் தன் ஸத்தையினாலேயே தனக்கு ஆச்ரயமான ஆத்மாவுக்கு ப்ரகாசித்தல், அல்லது தன் ஸத்தையினாலேயே தன்னுடைய விஷயத்தைஸாதித்தல், வேறு அநுபவத்தால் அநுபாவ்யத்வமிருந்தபோதிலுங்கூட ஸ்வாநுபவஸித்தங்களான அவைகள் இரண்டும் அகலுகிறதில்லை. ஆதலால் அநுபூதித்வம் போகாது. கடாதிகளுக்கோ வென்றால் இந்த ஸ்வபாவமில்லாமையால் அநநுபூதித்வமே ஒழிய அநுபாவ்யத்வத்தாலல்ல. அவ்வாறே அநுபூதிக்கு அநுபாவ்யத்வமில்லாமலிருந்தபோதிலுங்கூட அநநுபூதித்வப்ரஸங்கம் தடுக்கமுடியாதது. அநநுபாவ்யமான ககந குஸுமாதிகளுக்கு அநநுபூதித்வம் இருப்பதால். ககநகுஸுமாதிகளுக்கு அநநுபூதித்வமானது அஸத்த்வத்தாலே ஏற்படுகிறதே ஒழிய அநுபாவ்யத்வத்தாலல்லவென்று சொல்லப்படுமேயானால், இவ்வண்ணமாகில் கடம்முதலியவைகளுக்கு அஜ்ஞாநாவிரோதித்வமே அநநுபூதித்வத்திற்கு ஹேதுவே ஒழிய அநுபாவ்யத்வமல்லவென்று நிசசயித்துக்கொள்ளலாம். அநுபூதிக்கு அநுபாவ்யத்வம் வரும்

பக்ஷத்தில் அதற்கு கடாதிகளுக்குப்போல அஜ்ஞாநாவிரோதித்வம் ப்ரஸங்கிக்கும் என்று சொல்லப்படுமேயானுல் அநநுபாவ்யத்வம் இருந்தபோதிலுங் கூட ககனகுஸுமம் முதலியவைகளுக்குப்போல அஜ்ஞாநாவிரோதித்வமும் தவறாமல் ப்ரஸங்கிக்கும். ஆதலால் அநுபாவ்யத்வம் வரின் அநநுபூதித்வம் வருமென்பது பரிஹஸிக்கத்தக்கது.

---

ச்ருதப்ரகாசிகை—

இவ்வண்ணம் அநுபூதிக்கு அநுபாவ்யத்வஸம்பவத்தை உபபாதநம்செய்து அதின் அஸம்பவத்தில் பரோக்தமான அநுமானத்தை தூஷிக்கிருர்— அநுபூதே: என்று. எதினுல் எனில் கூறுகிருர்— ஸ்வகத என்று. பராநுபவாநுமேயத்வத்தை ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் அநிஷ்டமான லௌகிக வ்யவஹாரவிரோதத்தைக் கூறுகிருர்— பர என்று. அதற்குமேல் வைதிக வ்யவஹாரவிரோதத்தைக்கூறுகிருர்— ஆசார்யஸ்ய என்று. பராநுபவாநுமாந என்கிற பதத்தை முதலில் கொண்டவாக்யத்தால் சார்வாக நிராஸமும் பலித்தது. அநுமானத்தை ஒப்புக்கொள்ளாதபக்ஷத்தில் சப்தார்த்தங்களுக்கு பரஸ்பரம் ஸம்பந்தக்ரஹணம் ஸம்பவியாமல் போகும் இவ்வண்ணம் பாதகம் கூறப்பட்டது. பிறகு வ்யாப்தியை தூஷிக்கிருர்— நசாந்ய என்று. தர்மிக்ராஹகப்ரமாண ஸித்தமான அஸாதாரணுகாரமானது ஸாதாரணமான ஆகாரம் இருக்குங்கால் விலகுகிறதில்லை என்கிற அபிப்ராயத்தால் அநுபூதிஸ்வரூபத்தை சிக்ஷிக்கிருர்—அநுபூதித்வம் என்று. இந்த இடத்தில் அநுபூதிசப்தம் ஜ்ஞானமாத்ரத்தை உணர்த்துகிறதே ஒழிய ஸ்ம்ருதிவிலக்ஷணபரமல்ல. ப்ரகாசமாநத்வமென்று சொல்லப்பட்டால் கடாதிகளுக்கும் அநுபூதித்வம் வரவேண்டியதாகுமாதலால் அதை வ்யாவர்திப்பதின்பொருட்டு ஸ்வாச்ரயம் ப்ரதி என்று கூறப்பட்டது. அணுத்வம் நித்யத்வம் முதலிய ஆத்மதர்மங்கள் ஜ்ஞாநாந்தரத்தால் ப்ரகாசிக்கத்தக்கவைகளாதலால் அவைகளை வ்யாவர்திப்பதற்காக ஸவஸத்தயைவ என்று உரைக்கப்பட்டது. சென்றுபோன அநுபவததின் வ்யாவ்ருத்தியைக்கருதி வர்தமாநதசாயாம் என்று உரைக்கப்பட்டது எப்படி இருந்தபோதிலும் அதிதாநுபவத்திற்கு, ஜ்ஞாநாந்தரமில்லாவிடில் ப்ரகாசம் பொருந்தாதாதலால் ஆர்த்திகமாக வ்யவச்சேதம் வருகிறது. ஆயினும் பராபிமதமான சென்றகாலத்திய அநுபவ அதீததிற்கு ஜ்ஞாநாந்தரத்தால் ஸித்தியை வ்யுத்பாதநம செய்வதற்காக இந்த விசேஷணம். விஷயஸம்பந்தத்துக்கு வர்தமானதசையில் என்று அர்த்தம். வர்தமானதசையில் தன்ஸத்தையினுலேயே ப்ரகாசமாநத்வம் என்று சொன்னுல் பராநுபவத்தில் அது ஸமபவியாதாதலால் அதை வ்யாவ்ருத்திப்பதற்காக ஸ்வாச்ரயம் ப்ரதி என்று உரைக்கப்பட்டது. இந்த லக்ஷணமானது ஸ்வயம் ப்ரகாசத்வ வாதிகளுக்கே இஷ்டமென்பதினுல் ஸர்வஸம்ப்ரதிபன்னமான லக்ஷணத்தைக் கூறுகிருர்— ஸ்வஸத்தயைவ என்று. ஸ்வாச்ரயம் ப்ரதிவர்தமானதசாயாம் என்கிற இரண்டு பதங்களுடைய அநுகர்ஷத்திற்கு உபலக்ஷணம் ஸ்வஸத்தயைவ என்கிற பதம். ஸாதநமென்று சொன்னுல் தண்டம் சக்ரம் முதலியவைகளுக்கும் அத்தன்மை இருப்பதால் அவைகளை வ்யாவ்ருத்திப்பதற்காக ஸ்வாச்ரயம் ப்ரதி என்று கூறப்பட்டது. சாக்ஷுஷஜ்ஞாநமானது ச்ராவண விஷயத்தை ஸாதிக்கிறதில்லை யாதலால் ஸர்வவிஷயஸாதகத்வாஸம்பவத்தை வ்யாவ்ருத்திப்பதற்காக ஸ்வசப்தம. இந்திரிய வ்யாவ்ருத்தியின் பொருட்டு ஸ்வஸத்தயைவ எனகிற பதம் இந்த்ரியம் முகலியவைகள் தனனுடைய ஸத்தையினுல் மாத்திரம் ப்ரகாசத்தை உண்டுபண்ணுகிறதென்பதில்லை. பின்னையோ

ஜ்ஞாநோத்பாதநத்தின் வாயிலாகவும் ப்ரகாசத்தை உண்டு பண்ணுகின்றன. வர்தமானார்தசாயாம் என்பதினால் காலம் கடந்துபோன அநுபாவத்திற்கு வ்யாவ்ருத்தி வருகிறது ஸ்வாச்ரயம் ப்ரதி என்பதினால் பராநுபவத்திற்கு வ்யாவ்ருத்தி வருகிறது. அதினாலென்னவென்றால் சொல்லுகிறார்—நேச என்று இவ்வண்ணம் அநுபாவ்யத்வ ரூபமான ஸாத்யதர்ம க்ராஸத்தால் அநுபாவ்யத்வத்தோடு அநநுபூதித்வத்திற்கு ஸாமாநாதிகரண்யம் காணப்படுவதால் அநுபாவ்யத்வத்தோடு வ்யாப்தியானது க்ராஸிக்கப்பட்டது. அங்ஙனமாகில் அநுபாவ்யத்வமிருந்தால் அநநுபூதித்வதர்சனம் எவ்வாறு என்று சங்கைவரின் ஸோபாதிகத்வத்தைக் கூறுகிறார்—கடாதேஸ்து என்று. அநநுபூதித்வம் அநுபூதிசப்தத்தால் வ்யவஹரிக்கத்தக்க தன்மையின் இன்மை என்பதினால் ஸாத்யாவிசிஷ்டதை இல்லை. அன்றிக்கே கூறப்பட்டுள்ள இரண்டுலக்ஷணங்களுக்குள் ஒன்று அநுபூதித்வம் ஸமுச்சயிக்கப்பட்ட இரண்டுமல்ல.ஒன்றை ஒன்று அபேக்ஷித்து இராததாலும் வாசப்த ப்ரயோகத்தாலும். ச சப்தம் ப்ரயோகிக்கப்படவில்லையன்றோ அவ்விரண்டினுள் ஒரு லக்ஷணத்துடன் சேர்ந்து இருமையாகிற அநநுபூதித்வமானது இரண்டினுள் ஒரு ஆகாரத்தின் இன்மையினால் ஏற்படுத்தப்பட்டிருப்பதால் ஸோபாதிகத்வமென்று அர்த்தம்.

பிறகு ப்ரதிதர்கபராஹதியைக் கூறுகிறார்—ததாநுபூதே: என்று. அன்றிக்கே ஆபாஸமாநயோக க்ஷேமத்வத்தைக்கூறுகிறார். ககநகுஸுமம் முதலியதின் அநநுபூதித்வத்திற்கு அஸத்த்வத்தை வேறுஉபாதியாக சங்கிக்கிறார்—ககந என்று. கடாதியின் அநநுபூதித்வத்திற்கும் வேறு உபாதி அஜ்ஞாநாவிரோதித்வம் என்று கூறுகிறார்—ஏவந்தர்ஹி என்று. ப்ரகாசநியமாபாவாவிரோதித்வம் அஜ்ஞாநாவிரோதித்வம் ஸுகம் முதலியதில் இல்லாமையால் ஸாத்யஸமவ்யாப்தியின் இன்மை சங்கிக்கத்தக்கதல்ல. ஸுகம் முதலியது ஜ்ஞாநவிசேஷமாதலால் அநநுபூதியாகாது. அஜ்ஞாநா விரோதித்வத்திற்கு உபாதித்வத்தை க்ராஸிப்பதின் பொருட்டு பக்ஷத்தில் அதை ப்ரஸங்கிக்கச்செய்கிறார்— அநுபூதே: என்று. அது உன்பக்ஷத்திலும் துல்யமென்று சொல்லுகிறார்— அநநுபாவ்யத்வேபி என்று. அநுபூதிக்கு அநுபாவ்யத்வம் வரும்பக்ஷத்தில் அநநுபூதித்வத்திற்கு உபாதியாகக் கூறப்பட்டிருக்கிற அஜ்ஞாநாவிரோதித்வமானது அநநுபாவ்யத்வ பக்ஷத்திலும் ப்ரஸங்கிக்குமென்று பொருள். அநுபாவ்யத்வம் வரும்பக்ஷத்தில் அநநுபூதித்வமும் அஜ்ஞாநாவிரோதித்வமும் வரும் என்று யாதொன்று கூறப்பட்டதோ அது ககந குஸுமாதிகளுக்கும்போல அநுபாவ்யத்வபக்ஷத்திலும் ப்ரஸங்கிக்குமென்று கூறப்பட்டது. ககந குஸுமம்முதலியதில் அநநுபூதித்வமும் அஜ்ஞாநாவிரோதித்வமும் அஸத்த்வப்ரயுக்தமேதவிர்த்து அநநுபாவ்யத்வ ப்ரயுக்தமல்லவென்று கூறப்படுமேயாகில் அநநுபாவ்யத்வ பக்ஷத்தில் அப்படிப்போல அஸத்த்வமும் ப்ரஸங்கிக்கும். ககந குஸுமாதிகளின் அஸத்த்வமானது அநநுபாவ்யத்வமாத்ர ப்ரயுக்த மல்ல. பின்னையோ ஸ்வயம் ப்ரகாசத்வமிருக்க அநநுபாவ்யத்வமில்லாமையினாலுண்டுபண்ணப்பட்டது. அநுபூதிக்கு அநநுபாவ்யத்வ மாத்ரத்தினால் அஸத்த்வப்ரஸக்தி இல்லை என்று சொல்லப்படுமேயானால் அநநுபாவ்யத்வம் வரும்பக்ஷத்தில் அப்படிப்போல அஸ்வயம் ப்ரகாசத்வமும் வரவேண்டியதாகும். ஆகையால் அஸ்வயம்ப்ரகாசத்வமிருக்க அநநுபாவ்யத்வ ப்ரயுக்தமான அஸத்த்வமானது அநுபூதிக்கு எவ்விதத்தாலும் தடுக்கமுடியாதது. அஸத்த்வமோ வென்றால் தர்மிக்ராஹகப்ரமாணத்திற்கு விருத்தமென்று சொல்லப்படுமேயாகில், அநுபாவ்யத்வம் வரும்பக்ஷத்தில் அநநுபூதித்வமும் அப்படியே என்று இவ்விதமனுஸந்திக்கத்தக்கதென்று பாஷ்யாபிப்ராயம். ஆகாயமலர் உதாஹரணத்திலோ ஆச்ரய வைகல்யதோஷம் சங்கிக்கத்தக்கதல்ல. க்யாதிக்கு "நாஸத்" என்று வ்யதிரேகதிருஷ்டாந்தத்வமானது அன்யர்களால் அங்கீகரிக்கப்பட்டிருப்பதால். சப்தஜ்ஞாநாநுபாதி

வஸ்து சூன்யோऽவபாஸோவிகல்ப:—ஸஸ்வபாவஸ்த்வவபாஸ·ப்ரதீதி:, என்றல்லவோ அவர்களால் சொல்லப்படுகிறது. அவற்றுள் ஆபாஸப்ரதீதிவிஷயமான வஸ்துவுக்குங்கூட நிஷேதாதிகரணத்வம் யுக்தமென்பது பாட்டர்களாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் பரமதப்ரக்ரியையினால் கபுஷ்பம் உதாஹரிக்கப்பட்டது. உபஹாஸ்யம்- ஸமீபத்திலிருப்பவர்களால்கூட சிறிக்கத்தக்கதென்று அர்த்தம்.

---

𑌯𑌤𑍍𑌤𑍁—𑌸𑌂𑌵𑌿𑌦𑌃 𑌸𑍍𑌵𑌤𑌃𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌾𑌦𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌦𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌰𑌸𑍍𑌯𑌤𑍇; 𑌤𑌦𑌨𑍍𑌧𑌸𑍍𑌯 𑌜𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌧𑍇𑌨 𑌯𑌷𑍍𑌟𑌿𑌃 𑌪𑍍𑌰𑌦𑍀𑌯𑌤𑍇 । 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌾𑌭𑌾𑌵𑌾𑌦𑌭𑌾𑌵𑍋 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍍, 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑍍𑌯𑍈𑌵 𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌤𑍍 । 𑌕𑌥𑌮𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌸𑍍𑌵𑌸𑌤𑍀 𑌤𑌦𑌾𑌨𑍀𑌮𑍇𑌵 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌂 𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌨𑌮𑌵𑌗𑌮𑌯𑌤𑍀𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌨 𑌹𑍍𑌯𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌸𑍍𑌵𑌸𑌮𑌕𑌾𑌲𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌮𑍇𑌵 𑌵𑌿𑌷𑌯𑍀𑌕𑌰𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑌿 𑌨𑌿𑌯𑌮𑌃, 𑌅𑌤𑍀𑌤𑌾𑌨𑌾𑌗𑌤𑌯𑍋𑌰𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

ஸ்வதஸ்ஸித்தையாக இருக்கிற ஸம்வித்துக்கு ப்ராகபாவம் முதலியது இல்லாமையால் உத்பத்தியானது நிராகரிக்கப்படுகிறதென்பது யாதொன்றுண்டோ; அது குருடனுக்கு பிறவிக்குருடனால் கோல் கொடுக்கப்படுவது போல். ப்ராகபாவத்தை க்ரஹிக்கிற ப்ரமாணமில்லாமையால் அபாவமானது சொல்வதற்கு சக்யமாகாதென்று கூறப்படுமேயாகில் அல்ல; அநுபூதியினாலேயே க்ரஹிக்கப்படுவதால். அநுபூதியானது தானிருந்துகொண்டு அப்பொழுதே தனக்கு விருத்தமான தன்னுடைய அபாவத்தை எவ்வாறு அறிவிப்பிக்கும் என்று சொல்லப்படுமேயானால்; அநுபூதியானது தன்னோடு ஸமகாலத்திலிருக்கிற பதார்த்தத்தையே விஷயீகரிக்கிறது என்கிற நியமமில்லையன்றோ—அங்ஙனமாகில் சென்றதும் இனிவரப்போகிறதுமான அநுபவங்களுக்கு அவிஷயத்வம் ப்ரஸங்கிக்கும்.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் பிறர்களால் சொல்லப்பட்ட நித்யத்வத்தை நிரஸநம் செய்கிறார்—யத்து இது முதலியதால். அய்யா! ஜ்ஞாநத்திற்கு நித்யத்வத்தை ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கு எவ்வாறு அதை நிரஸனம் செய்வது பொருத்தமுள்ளதாகஆகும்—(உத்தரம்) சொல்லப்படுகிறது. ஜ்ஞாநத்திற்கு ஆதாரமாக இருப்பவன் ஆத்மா. அந்த ஆன்மாவை ஆச்ரயித்திருப்பதும் ஸங்கோச விகாஸங்களுக்குத் தகுதியுள்ளதும் நித்யமாயுமுள்ள ஜ்ஞாநத்ரவ்யம் அர்யனுக்கு அபிமதமல்லாதது. ப்ரஸ்துதமானதும் இந்த்ரிய ஸம்யோகாதிகளின் அந்வய வ்யதிரேகங்களை அநுஸரிக்கின்றதும் ப்ரத்யக்ஷத்வாபரோக்ஷத்வ ப்ரமாணத்வா ப்ரமாணத்வாவஸ்தையுடன் கூடியதுமான லோகஸித்தமான

யாதொரு ஜ்ஞாநமுண்டோ அதற்கு அநித்யத்வம் உபபாதிக்கப்படுகிறதோ, அது நிர, ஸிக்கப்படுகிறது. விஷயஸம்பந்திஜ்ஞாநத்திற்சன்றோ ஸ்வயம் ப்ரகாசத்வம அந்யனால் ஸமர்த்திக்கப்பட்டது. ஸ்வயம்ப்ரகாசத்வஸமாநாதிகரணமான நித்யத்வம் அந்யனுக்கு இஷ்டம். ஸ்வதஸ்ஸித்தமாக இருப்பதுபற்றி நித்யத்வம் ஸமர்த்திக்கப்பட்டிருப்பதால். அதனால் அதினுடைய நிராஸம் யுக்தமானது. அதிலும் ம்ருத்த்ரவ்யம் ஸித்தமாக இருந்தபோதிலும் கடத்வம் முதலிய அவஸ்தையுள்ள ம்ருத்த்ராவ்யத்திற்கு அநித்யத்வம்போல ஜ்ஞாநமென்கிற த்ரவ்யத்திற்கு நித்யத்வமிருந்தபோதிலும் ஸ்ம்ருதித்வம் அநுபூதிதவம் முதலிய அவஸ்தையுள்ள ஜ்ஞாநத்திற்கு அநித்யத்வம் யுக்தமென்பதினால் ஸ்வபக்ஷவிரோதமில்லை. ஸ்வயம் ப்ரகாசத்வமிருந்தபோதிலும் உபாதேயதவம் ஒன்றிருப்பதினால் அதை வ்யாவ்ருத்திப்பதற்காக த்ருஷ்டாந்தம். "அந்தஸ்ய ஜாத்யந்தேந யஷ்டி: ப்ரதீயதே இதி. அஸித்தமானது அத்யந்தாஸித்தமான ஹேதுவினால் ஸாதிக்கப்படுகிறது, என்று அர்த்தம். அந்த இடத்தில் க்ராஹகமில்லாமையாலும் க்ராஹ்யமில்லாமையாலும் ப்ராகபாவத்திற்கு அபாவம் உரைக்கப்பட்டது. அதை ஆசங்கித்து †க்ராஹகமிருக்கிறதென்று சொல்லுகிறார்-ப்ராகபாவஸ்ய என்று. அங்குவிகல்பம் பூர்வபக்ஷியினால் கூறப்பட்டிருந்தாலேதான் அறியப்படுகிறதென்றுபக்ஷத்தை ஸ்தாபிப்பதற்காக அங்கு சொல்லப்பட்டிருக்கிற விரோதத்தை சங்கிக்கிறார்—கதம் என்று. ததாநீம் என்பது அபாவவிசேஷணம். க்ரியாவிசேஷணமல்ல. பரிஹரிக்கிறார்—நஹி என்று. ஸ்வஸமகாலவர்த்தித்வ நியமமானது * க்ராஹ்யஸாமான்ய ப்ரயுக்தமா? அல்லது க்ராஹ்யவிசேஷ ப்ரயுக்தமா? என்கிற விகல்பாபிப்ராயத்தால் முதலில் க்ராஹ்ய ஸாமாந்ய ப்ரயுக்தத்வபக்ஷத்தை மறுத்துக் கூறுகிறார்—நஹ்யநுபூதி: என்று. அன்றிக்கே, வர்தமானக்ரஹண நியமமானது க்ராஹகாநுபூதிஸ்வபாவத்தினலா? அல்லது க்ராஹ்யாநுபூதியின் அபாவ ஸ்வபாவத்தினலா? என் கி ற விகல்பத்தை அபிப்ராயப்பட்டு முதல் பக்ஷத்தை தூஷிக்கிறார்—நஹி என்று. "ஹி" சப்தம் ஹேதுவைச்சொல்லுகிறது. "ந" என்று ப்ரதிஜ்ஞை அத்யாஹாரம் செய்துகொள்ளத்தக்கது.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌿𑌯𑌮𑌃,
𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌸𑌮𑌕𑌾𑌲𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌃 [illegible] 𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌤𑍍𑌵𑌮𑍍; 𑌨 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌾𑌨𑌾𑌮𑍍; 𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌨𑍁𑌮𑌾𑌨𑌾𑌗𑌮𑌯𑍋𑌗𑌿𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾
𑌦𑌿𑌷𑍁 𑌕𑌾𑌲𑌤𑍍𑌰𑌯𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍋𑌽𑌪𑌿 𑌗𑍍𑌰𑌹𑌣𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 । 𑌅𑌤 𑌏𑌵
𑌚 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌾𑌵𑌿𑌨𑌾𑌭𑌾𑌵𑌃— 𑌨 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌸𑌮𑌕𑌾
𑌲𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌾 [illegible]; [illegible]

† க்ராஹகம்— அறிவதற்கு ஸாதநம்.

* க்ராஹ்யம்—ஜ்ஞாநத்தினல் அறியத்தக்கது.

[illegible] ப்ரத்யக்ஷவிரோதாத்: “இதமஹமத்ராக்ஷம்” இதி ப்ரத்யபிஜ்ஞா ச ந கடதே; அந்யேநாநுபூதஸ்ய ந ஹ்யந்யேந ப்ரத்யபிஜ்ஞாந ஸம்பவ: ॥

**ஸ்ரீபாஷ்யம்—**

*உபபாதிக்கிறார்--இந்தகர்தாவுக்கு ஸ்திரத்வமும் கர்தாவின் தர்மமான ஸம்வேதநத்திற்கு ஸுகதுக்காதிகளுக்குப்போல உத்பத்தி ஸ்திதி விநாசங்களும் நேரில் காணப்படுகின்றன. கர்தாவின் ஸ்தைர்யமோ வென்றால் “அதே இந்த வஸ்து முந்தி என்னால் அனுபவிக்கப்பட்டிருக்கிற” தென்கிற@ப்ரத்யபிஜ்ஞாப்ரத்யக்ஷத்தால் ஸித்தம். “நான் அறிகிறேன். நான் அறிந்தேன் ஜ்ஞாதாவாகவே இருக்கிற எனக்கு இப்பொழுது ஜ்ஞாநம் நஷ்டமாகப் போயிற்று” என்றும் ஸம்வித்துக்கு உத்பத்தி முதலியவைகள் ப்ரத்யக்ஷஸித்தங்களாக இருப்பதால் எதினால் அவைகளுக்கு ஐக்யம். இவ்வண்ணம் க்ஷண பங்குரமான ஸம்வித்தை ஆத்மாவென்று ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில் ‘முதல் தினத்தில் என்னால் இது பார்க்கப்பட்டது, மறுதினத்திலும் இதை நான் கண்டேன்” என்கிற ப்ரத்யபிஜ்ஞையும் இசையாது அந்யனாலனுபவிக்கப் பட்டவஸ்துவுக்கு வேறு ஒருவனுடைய @ப்ரத்யபிஜ்ஞா கோசரத்வம் ஸம்பவியாதன்றோ.*

**ச்ருதப்ரகாசிகை.—**

*இதற்குமேல் ஸ்திரத்வாஸ்திரத்வ $ வைதர்ம்யத்தினால் அது நிரஸிக்கப்படுகிறது.* **ஜ்ஞாதா** *என்று “ஹி” என்பது ஹேதுவில், சகாரத்தின் அர்த்தமுள்ள “ததா” என்கிற சப்தத்தால் வேறு ஹேது சொல்லப்படுகிறது. கர்த்ருஸ்தைர்யத்தை உபபாதிக்கிறார்—* **கர்த்ருஸ்தைர்யம் தாவத்** *என்று. ப்ரத்யபிஜ்ஞையினால் விஷயீகரிக்கப்படுவதால் கடம் முதலியவைகளுக்கு ஸ்திரத்வம் ஸித்திக்கிறது—அப்படிப்போல அந்த கடப்ரத்யபிஜ்ஞாகாலத்தில் முன் என்னால் இது அனுபவிக்கப்பட்டதென்று கர்தாவும் ப்ரத்யபிஜ்ஞைக்கு விஷயமாவதால் ஸ்திரனாக ஸித்திக்கிறான் என்று அர்த்தம். அதற்குமேல் ஜ்ஞாநத்தின் உத்பத்திஸ்திதிவிநாசங்களைக் காண்பிக்கிறார்—* **அஹம்** *இது முதலியதால்.* **ஜாநாமி** *என்பதனால் உத்பத்திஸ்திதி இரண்டும் ஸித்தம். அஜ்ஞாஸிஷம் என்பதனால் அதீதத்வ ப்ரதீதியானது ஏற்படுகிறது. இதின் தெளிவின் பொருட்டு அடுத்த பூர்வகாலத்திலுண்டான ஜ்ஞாநவிசிஷ்டத்வ பராமர்சத்யோதநத்திற்காக “ஜ்ஞாதுரேவ மம” என்று உரைக்கப்பட்டது. ‘உத்பத்யாதய:’ என்கிற இடத்திலுள்ள ஆதிசப்தத்தால் ஸ்திதிநிரோதங்கள் க்ரஹிக்கப்படுகின்றன. மூன்று நான்கு க்ஷணங்களில் நிலைபெற்றிருக்கிற ஸம்வித்துக்கு முதலாவது க்ஷணத்தோடு ஸம்பந்தம் † உத்பத்தி அதற்குப்பிற்பட்ட க்ஷணங்களோடு ஸம்பந்தம் § ஸ்திதி—ஸம்வித் ஸ்வயம் ப்ரகாசமாதலால்,*

*@ ப்ரத்யபிஜ்ஞை—ஸம்ஸ்காரத்தால் உதவிபுரியப்பட்டிருக்கிற இந்த்ரிய ஜன்யமான ஜ்ஞாநம். $ வைதர்ம்யம்—ஒற்றுமை இன்மை. † உத்பத்தி—தற்கால ஸம்பந்தம். § ஸ்திதி—உத்தரகாலாநுவ்ருத்தி.*

உனக்குக்கூட அநுபூதிக்கு அநுபவிதாவாக இருத்தல் இஷ்டமல்ல. அநுபூதி அநுபூதிமாத்ரமே. நிராச்ரயையாகவும் நிர்விஷயையாகவுமிருக்கிற ஸம்வித்தென்கிற ஒரு பதார்த்தம் அத்யந்தா $ நுபலப்தியினால் ஸம்பவியாதென்று உரைக்கப்பட்டது. இருவர்களாலுமொப்புக் கொள்ளப்பட்டிருக்கிற ஸம்வித்தே ஆத்மா என்கிற விஷயம் உபலப்தியினால் அடிக்கப்பட்டுவிட்டது. அநுபூதிமாத்ரமே யதார்த்த மென்பதற்கு ‡‡ நிஷ்கர்ஷகங்களான § ஹேத்வாபாஸங்களும் நிராகரிக்கப்பட்டன.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் ஸ்திரத்வத்தை ஒப்புக்கொண்டாலும் ப்ரதிஸந்தாநம் ஸம்பவியாமையால் ஆத்மத்வத்தை நிரஸிக்கிறார்— கிஞ்ச என்று. "அநுபூதே ராத்மத்வாப்யுமகமே தஸ்யாநித்யீத்வேபி" தி. ஆத்மத்வத்தை ஒப்புக்கொள்வதற்கு ஸாதகமாக ஸம்வித்துக்கு நித்யத்வத்தை ஒப்புக்கொண்டபோதிலும் என்று அர்த்தம். அநித்யத்வபக்ஷத்தில் மாத்திரம் ஸம்விதாத்மத்வாநுபபத்தி என்பதில்லை. நித்யத்வபக்ஷத்திலும் என்பது அபிசப்தத்தின் அர்த்தம். ஆத்மாவன்றோ ப்ரதிஸந்தானம் செய்கிறான். ப்ரதிஸந்தானம் இங்கு ஸம்பவிக்கிறதில்லை என்று அர்த்தம். அதின் அஸம்பவத்தை உபபாதிக்கிறார்—ப்ரதிஸந்தாநம் என்று. அதை உதாஹரிக்கிறார்—அஹம் என்று. அதினாலென்னவென்கிற சங்கைவரின் அது அன்யனுக்கு அநிஷ்டம் என்பதைக்கூறுகிறார்—பவத: என்று. உன்னுடைய அநங்கீகாரம்மாத்திரமல்ல, அநுபூதிக்கு அநுபவித்ருத்வமானது கமநக்ரியைக்கு * கந்த்ருத்வம் போல் உபபன்னமாகாதென்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிறார்—அநுபூதி: என்று. மாத்ரச் ப்ரத்யயத்தால் அநுபவித்ருத்வத்திற்கு வ்யாவ்ருத்தி ஸித்தித்தது.

அய்யா! தர்மத்வத்தாலும் அஸ்திரத்வத்தாலும் $ அப்ரதிஸந்தாத்ருத்வத்தாலும் ஸம்வித்துக்கு யாதொரு அநாத்மத்வமுரைக்கப்பட்டதோ அது சொல்லத்தக்கதல்ல. அநுபவித்ருத்வத்தை ஆத்மாகாரமாக ஒப்புக்கொள்ளாததாலும், விஷயாச்ரய சூன்யையான ஸம்வித்துக்கு குணபாவமில்லாமையாலும், அவைகளிரண்டின் ஸம்பந்தத்தாலுண்டுபண்ணப்பட்ட அநித்யத்வ ப்ரஸங்கமில்லாமையாலும், என்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்— ஸம்விந்நாம என்று. அய்யா! எவ்வாறு விஷயாச்ரயசூன்யஜ்ஞாநாபாவம். ஸ்வரூபபூதமான ஜ்ஞாநமானது உன்மதத்தில் விஷயாச்ரய சூன்யம். மறுமொழி சொல்லப்படுகிறது. இந்த ஆக்ஷேபம் மிக்கஸ்தூலமானது. உன்னால் ஜ்ஞாநசப்தவாச்யனை ஜ்ஞாதாவுக்கே அஜடத்வம் நித்யத்வம்முதலியதும் விஷயாச்ரய சூன்யத்வமும் ஆத்மத்வமும் ஸாதிக்கப்படுகிறதா? அதுஸித்தஸாதனம். ஜ்ஞாதாவைக்காட்டிலும் வேறானஜ்ஞாநத்திற்காகில் அப்பொழுது ஜ்ஞாதாவைக்காட்டிலும் வேறானதும் விஷயாச்ரயவிரஹிதமாயுமுள்ள ஜ்ஞாநத்தை சூன்யமென்றுசொல்லுகிறோம். ஜ்ஞாத்ருஜ்ஞேயம்

---

$ அநுபலப்தி—ஜ்ஞாநாபாவம். § ஹேத்வாபாஸங்கள்—துஷ்டஹேதுக்கள்.
‡‡ நிஷ்கர்ஷகம்—நிர்ணயத்தை உண்டுபண்ணுகிற வஸ்து.

* கந்த்ருத்வம்— கந்தா-நடப்பவன். அவனுடைய தர்மம். கந்த்ருத்வம்-அதாவது நடை. $ ப்ரதிஸந்தாதா— ப்ரதிஸந்தாநமுள்ளவன். அதாவது நினைவுள்ளவன் ஸ்மரிக்கிறவன்.

இவைகளை விஷயீகரித்துக்கொண்டிருக்கிற ஜ்ஞாநஸ்வரூபம் இம்மூன்றைக்காட்டிலும் வேறான ஜ்ஞாநமானது அநுபலபதியினால் நிரஸிக்கப்பட்டதென்று அர்த்தம். பௌத்த ஏகதேசிகளால § “தர்மிகல்பநாதோவரமதர்மகல்பநா” என்கிற லாகவந்யாயத்தால் ஜ்ஞாதாவை ஆத்மாவென்று சொல்பவனாலும் ஜ்ஞாநத்தை ஆத்மாவென்று சொல்பவனாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஸம்விததே ஆத்மாவென்று உரைக்கப்பட்டது. அதை ஆசங்கித்துப் பரிஹரிக்கிறார்—உபய என்று கல்பனையிலேதான் லாகவந்யாயம், உபலப்தியிலில்லை. அப்படி இல்லாவிட்டால் அத்யந்தலாகவத்தின் பொருட்டு மாத்யமிகனுடைய மதாநுஸாரத்தால் ஜ்ஞாநமும் இழக்கப்படும். கல்பநத்திலன்றோ லாகவந்யாயம் ஸம்விததோவென்றால் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமேயாகில ஜ்ஞாதாவும் அப்படியே அறியப்படுகிறான். ஆகையால் உபலப்திபராஹதமாதலால் ஸம்வித்துக்கு ஆத்மத்வம் அநுபபன்னம் என்று அர்த்தம் ஆச்ரயத்துடன் கூடியதாகவே ஸம்வித் அறியப்படுகிறது. அப்படி இருந்தபோதிலுங்கூட யுக்திகளால் நிர்விசேஷத்வம் ஸாதிக்கப்பட்டது என்று கூறப்படுமேயாகில் சொல்லுகிறார்— **அநுபூதிமாத்ரம் என்று.** அன்றிக்கே ஸம்வித பரமார்த்தமென்று உபயவாதிகளாலும் ஸம்மதிக்கப்பட்டிருப்பதால் அந்த ஸம்வித்தே ஆத்மாவென்று உரைக்கப்பட்டிருக்கிறதென்று ஆசங்கித்து தூஷிக்கிறார்— உபய என்று. உபலப்திபராஹதம்— ப்ரத்யக்ஷலக்ஷணமான ஆத்மத்வமானது அஹம்ஜாநாமி என்று ஜ்ஞாத்ருத்வ ஸமாநாதிகரணமாக உபலப்திக்கு விஷயமாவதால் பராஹதமென்று அர்த்தம். ஜ்ஞாதாவுக்கே ப்ரத்யகாத்மத்வமானது உபலப்திஸித்தமென்று சொல்லப்பட்டது அந்த உபலப்திக்கு நிர்விசேஷ ஸம்விதாத்மத்வ ஸாதக யுக்திகளால் பாதத்தை ஆசங்கித்து சொல்லுகிறார்—**அநுபூதி மாத்ரம் என்று.**

---

நநு ச — “அஹம் ஜாநாமி” இத்யஸ்மத்ப்ரத்யயே யோ(அ)யமம்ஶ: ப்ரகாஶைகஸ்வபாவஶ்சித்ரூப: ஸ ஆத்மா । தஸ்மிந் ஜ்ஞாநபலப்ரகாஶிததயா யுஷ்மதர்த்தலக்ஷணோ(அ)ஹம் ஜாநாமீதி ஸித்யந்நஹமர்த்தஶ்சிந்மாத்ராதிரேகீ யுஷ்மதர்த்த ஏவ । நைததேவம், “அஹம் ஜாநாமி” இதி தர்மிஸ்வரூபப்ரத்யக்ஷப்ரதீதிவிரோதாதேவ ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

“அஹம்ஜாநாமி” என்கிற **அஸ்மத்ப்ரத்யயத்தில்** யாதொரு **அம்சமுண்டோ** ப்ரகாசத்தையே ஸ்வபாவமாகக்கொண்ட சித்பதார்த்தம்— **அது ஆத்மா. அதில்** ஜ்ஞாநபலத்தால் ப்ரகாசிக்கப்பட்டிருப்பதால் யுஷ்மதர்த்த லக்ஷணமான “**அஹம்** ஜாநாமி” என்று ஸித்திக்கிற **அஹமர்த்தமானது** சிந்மாத்ரத்தைவிட **அதிகமாக** இருப்பதால் யுஷ்மதர்த்தமே— **இது** இவ்வண்ணமல்ல. “**அஹம்** ஜாநாமி” என்கிற தர்மி ஸ்வரூபமான ப்ரத்யக்ஷப்ரதீதியின் விரோதத்தாலேயே.

---

§ தர்மிகல்பநாதோ—புதிதாக ஒரு வஸ்துவை கல்பிப்பதைக்காட்டிலும் ஏற்கனவே இருக்கிற தர்மியினிடம் தர்மத்தைக் கல்பிப்பது ந்யாய்யமானது.

ச்ருதப்ரகாசிகை—

ப்ரத்யகர்த்தமன்றோ ஆத்மா— ப்ரத்யக்த்வமானது அஹமர்த்தத்திற்கு ஆத்மத்வம் சொன்னால் ஸித்தியாது. ஸம்விதாத்மத்வபக்ஷத்திலேயே ஸித்திக்கும் என்று வினவுகிறார்— நநுச என்று. அஸாதாரணமாக அனுபவத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அஹம்ஜாநாமி என்கிற அனுபவ விஷயத்தில் எது ப்ரத்யகர்த்தமோ அதுதான் ஆத்மா—எதனாலென்று கேட்கில் கூறுகிறார்— அநிதமம்சு என்று. இதமம்ச வ்யதிரிக்த:—பராகர்த்தத்தைக்காட்டிலும் வேறுபட்டதான ப்ரகாசம். இது ஹேதுவை உள்ளடக்கிக்கொண்டிருக்கிறது ப்ரத்யகர்த்தமாக இருப்பதாலென்று அர்த்தம். ப்ரத்யக்த்வம் எதனாலெனில் கூறுகிறார்—ப்ரகாசைகரஸ: என்று ஸ்வயம்ப்ரகாசமாக இருப்பதாலென்று அர்த்தம். சித்சப்தம் ஹேத்வபிப்ராயமுள்ளது ஜ்ஞாநமாக இருப்பதால் ஸ்வயம் ப்ரகாசத்வமென்று அர்த்தம் ப்ரத்யக்த்வமாவது தனக்குத்தான் ப்ரகாசித்தல். ஸ்வயம் ப்ரகாசத்வம்—அநந்யாதீன ப்ரகாசத்வம், அஹமர்த்தமோவென்றால் யுஷ்மதர்த்தலக்ஷணம். யுஷ்மதர்த்தலக்ஷணமானதால் பராகர்த்தவிசேஷம் அஹமர்த்தமென்று அர்த்தம். யுஷ்மதர்த்தலக்ஷணத்வம் எதனால் என்று கேட்கில் கூறுகிறார்— தத்பல என்று. தத்பல நிர்ப்பாஸித்த்வாத்- ஜ்ஞாநாதீந ப்ரகாசமுள்ளதாக இருப்பதால் அதுவும் சின்மாத்ரத்தைவிட அதிகமாக இருப்பதாலென்று அர்த்தம் இந்த ஸோத்ப க்ரந்தத்தில் ஸம்வித்துக்கு ஆத்மத்வ ஸாதநபக்ஷத்தில் வ்யதிரேகித்ரயமும் அஹமர்த்தத்திற்கு அநாத்மத்வ விஷயத்தில் அந்வயித்ரயமும் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. அதில் வ்யதிரேகிகளுக்கு வ்யதிரேகி த்ருஷ்டாந்தமும் அந்வயிகளுக்கு ஸபக்ஷமும் யுஷ்மதர்த்த சப்தத்தால் ஸூசிப்பிக்கப்பட்டது. அநுபூதியானது ஆத்மா, ப்ரத்யகாக இருப்பதால். எது ஆத்மாவன்றோ அது ப்ரத்யக அன்று. உதாஹரணம் —கடம். அநுபூதியானது, ப்ரத்யக்பூதை- ஸ்வயம ப்ரகாசமாக இருப்பதால். எது ப்ரத்யக்கன்றோ, அது ஸ்வயம் ப்ரகாசமன்று. கடம் போல. அநுபூதியானது ஸ்வயம் ப்ரகாசமுள்ளது, அநுபூதியாக இருப்பதால். எது ஸ்வயம் ப்ரகாசமுள்ளதன்றோ அது அநுபூதியல்ல. உதாஹரணம், கடம். என்று வ்யதிரேகித்ரயம் அஹமர்த்தமானது ஜ்ஞாநாதீநப்ரகாசமுள்ளது.—சித்தைக்காட்டிலும் வேறாக இருப்பதால், கடம்போல அஹமர்த்தமானது பராக், ஜ்ஞாநாதீநமான ப்ரகாசமுள்ளதாக இருப்பதால் கடம் போல. அஹமர்த்தமானது, ஆத்மாவல்லாதது பராக்காக இருப்பதால், கடம் போல, என்று அந்வயித்ரயம் - ஸ்வயம் ப்ரகாசத்வமே ஸம்விதாத்மத்வத்தில் ப்ரத்யக்ஷஹேதுவாக முந்தி உரைக்கப்பட்டது பூர்வபக்ஷோபந்யாஸத்தில், இவ்விடத்திலோவென்றால் அதினால் ப்ரத்யக்த்வத்தை ஸாதித்து அதினால் ஆத்மத்வம ஸாதிக்கப்பட்டது இதை பரிஹரிக்கிறார்— நைதத்தேவம் என்று. ஸம்வித்துக்கு ஸ்வயம் ப்ரகாசத்வம இஷ்டம் சிக்ஷிக்கத்தக்க அம்சமும் உரைக்கப்பட்டது. ஆகையால் ஸ்வதஸ்ஸித்தத்வ ஸாதகஹேதுவுக்கு ஸித்தஸாத்யதை ஜ்ஞாதாவுக்கு ஸ்வதஸ்ஸித்தத்வாபாவ ஸாதக ஹேதுவான சிதந்யத்வத்திற்கு அஸித்தி சொல்லப்படபோகிறது. வேறுநான்கு அநுமானங்கள் இங்கு நிரஸிக்கப்படுகிறது ஸம்வித்ஆத்மத்வம் முதலியது ப்ரதீதியினால் ஒப்புக்கொள்ளப்பட்டதா? அல்லது ப்ரத்யக்த்வ ஸித்தியின் அநுபபத்தியினாலா? அல்லது சுருத்யர்த்தாபத்தியினாலா ? அல்லது ச்ருதிஸ்ம்ருதிஸூத்ரங்களின் ஸ்வாரஸ்யத்தினாலா ?என்று விகல்பத்தை அபிப்ராயப்பட்டு முதல் பக்ஷத்தில் ப்ரத்யக்ஷ ப்ரதீதி விரோதத்தைச் சொல்லுகிறார்— அஹம்ஜாநாமி என்று. இதனால் அன்யனால் கூறப்பட்டுள்ள ஜ்ஞாந ப்ரத்யக்த்வாத்மத்வ, ஜ்ஞாத்ரு பராக்த்வாநாத்மத்வ[illegible]ளான அந்வயவ்யதிரேகயநுமானங்களுக்கு காலாத்யயாபதேசம் உரைக்கப்பட்டது. "அஹம்ஜாநாமி" என்கிற இடத்தில் அஹமர்த்தமானது ஸ்வாவபாஸத்திலும் கூட கடாவபாஸத்தில் போல் ப்ரதிஸம்பந்தியாக அஹமென்று அறியப்படுகிறது.

தாமியாக அபேக்ஷிக்கப்படும் ஜ்ஞாநசேஷத்வமாவதில்லை ஆகையால் அது ப்ரத்யக் ஆத்மாவும் ஜ்ஞாநமாத்ரமானது ஸ்வமாத்ரமாக அறியப்படாநின்றுகொண்டு ஸ்வாகாதிகள் போல பிறருக்கு பாஸிக்காததானதால் ப்ரத்யக்கல்ல ஆத்மாவுமல்ல, பின்னையோ பராக் - அர்த்தமாம் ஆகையால் நானென்னு ஹேதுக்களுக்கும் ப்ரத்யக்ஷபாதம் சொல்லப்பட்டதாக ஆகிறது.

---

கிஞ்ச — அஹமர்த்தோ ந சேதாத்மா ப்ரத்யக்த்வம் நாத்மநோ பவேத்। அஹம்புத்த்யா பராகர்த்தாத் ப்ரத்யகர்த்தோ ஹி பித்யதே ॥ நிரஸ்தாகிலது:கோऽஹமநந்தாநந்தபாக் ஸ்வராட்। பவேயமிதி மோக்ஷார்த்தீ ஶ்ரவணாதௌ ப்ரவர்த்ததே ॥ அஹமர்த்தவிநாஶஶ்சேந்மோக்ஷ இத்யத்யவஸ்யதி। அபஸர்ப்பேதஸௌ மோக்ஷகதாப்ரஸ்தாவகந்தத: ॥ மயி நஷ்டேऽபி மத்தோऽந்யா காசிஜ்ஜ்ஞப்திரவஸ்திதா। இதி தத்ப்ராப்தயே யத்ந: கஸ்யாபி ந பவிஷ்யதி ॥ ஸ்வஸம்பந்திதயா ஹ்யஸ்யா: ஸத்தா விஜ்ஞப்திதாऽபி ச। ஸ்வஸம்பந்தவியோகே து ஜ்ஞப்திரேவ ந ஸித்த்யதி ॥ சேத்துஶ்சேத்யஸ்ய சாபாவே சேதநாதேரஸித்திவத்। அதோऽஹமர்த்தோ ஜ்ஞாதைவ ப்ரத்யகாத்மேதி நிஶ்சிதம் ॥ "விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" இதி ச ஶ்ருதி:। "ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ" இதி ச ஸ்ம்ருதி: ॥ "நாத்மா ஶ்ருதே:" இத்யாரப்ய ஸூத்ரகாரோऽபி வக்ஷ்யதி। "ஜ்ஞோऽத ஏவ" இத்யதோ நாத்மா ஜ்ஞப்திமாத்ரமிதி ஸ்திதம் ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

மேலும் அஹமர்த்தமானது ஆத்மாவாக இல்லாவிடில் ஆத்மாவுக்கு ப்ரத்யக்த்வம் ஸம்பவியாது அஹம் புத்தியினலே ப்ரத்யகர்த்தமானது பராகர்த்தத்தினின்று வேறுபடுத்தப்படுகிறதன்றோ--நான் விலக்கப்பட்டிருக்கிறது ஸமஸ்த துக்கங்களுடன் கூடியவனாகவும் முடிவில்லாத ஆநந்தத்தை அடைந்தவனாகவும் கர்மத்துக்கு வசப்படாதவனாகவும் ஆகக்கடவேனென்று மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன ச்ரவணம் முதலியவற்றில் ப்ரவ்ருத்திக்கிறான் — அஹமர்த்தவிநாசமே மோக்ஷமென்று ஒருவன் எண்ணுவனேயாகில் அவன் மோக்ஷகதாப்ரஸ்தாவகந்தத்தினின்றும் விலகி விடுவான். நான் நாசமடைந்தபோதிலும் என்னைக்காட்டிலும் வேறாக ஜ்ஞப்தி என்று ஒரு வஸ்து இருக்கிறது என்று எண்ணி அதை அடைவதின்பொருட்டு ஒருவனுக்கும் முயற்சி உண்டாகாது. இந்த ஜ்ஞப்திக்கு தன் ஸம்பந்தத்தினலே யன்றோ

ஸத்தையும் விஜ்ஞப்தியை முதலியதும். தன் ஸம்பந்தமே விலகிவிடுமேயாகில் ஜ்ஞப்தியே ஸித்தியாது. வெட்டுகிறவன், வெட்டத்தக்கவஸ்து, இவ்விரண்டும் இல்லாவிடில் வெட்டுதல்முதலியது எவ்வாறு ஸித்தியாதோ அவ்வாறாக ஆகையால் அஹமர்த்தமான ஜ்ஞாதாவே ப்ரத்யகாத்மாவென்று நிச்சயிக்கப்பட்டது. 'அரே விஜ்ஞாதாவை எதனால் நிச்சயமாக அறிகிறான்' என்று ச்ருதி. 'இதை எவன் அறிகிறானோ அவனை க்ஷேத்ரஜ்ஞனென்று அதை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்' என்று பகவத்கீதை. ஸூத்ரகாரரும் 'நாத்மாச்ருதே:' என்று தொடங்கி "ஜ்ஞோऽதஏவ" என்று ஜ்ஞாநாச்ரயன் தான் ஆத்மாவென்று சொல்லப்போகிறார். ஆகையால் ஜ்ஞப்திமாத்ரம் ஆத்மா அல்லவென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் ப்ரத்யக்த்வம் விபரீதத்துக்கும் ஸாதகமென்று சொல்லுகிறார்—கிஞ்ச என்று. ப்ரத்யக்த்வம் தனக்குத்தான் ப்ரகாசித்தல். பிறனுக்கு ப்ரகாசித்தல் பராக்த்வம் இவ்விரண்டும் அஹம் இதம் என்கிற இரண்டு புத்திகளால் பிரிக்கப்படுகிறதன்றோ. ஆகையால் அஹம்புத்திபோய்விட்டால் ப்ரத்யக்த்வமே ஸித்தியாததலால் ப்ரத்யக்த்வம் அஹமர்த்தத்திற்கே ஆத்மத்வஸாதகமென்று அர்த்தம். ஸம்வித்தில் ப்ரத்யக்த்வமில்லாமையால் ஆத்மத்வஸாதக ஹேதுவுக்கு அஸித்தியும் பலித்தது. அஹமர்த்தத்திற்கு பராக்த்வமில்லாமையால் அநாத்மத்வஸாதக ஹேதுவினுடைய அஸித்தியும் பலித்தது. அஹம்புத்யா என்பதினால் "யுஷ்மதஸ்மத்ப்ரத்யயகோசரயோ:" என்கிற தன்னுடைய உக்திவிரோதமும் வருகிறது. "கோऽஹமித்யேவநிபுண:" "சப்தோஹமிதிதோஷாய நாத்மந்யேஷ:" இதுமுதலிய ஆகமவிரோதமும் உள்ளடங்கி இருக்கிறது. ஹிசப்தம் ப்ரஸித்திபரமாதலால் ஹேதுவிலாவது, அநுபூதி: - பராசீ - அஹமர்த்தத்தைக்காட்டிலும் வேறாக இருப்பதால். கடம்போல என்று. ப்ரத்யக்த்வ ஹேதுவுக்கு அஸித்திதார்ட்யமும் அந்த ப்ரத்யக்த்வஸாதகமான ஸ்வயம் ப்ரகாசத்வ ஹேதுவுக்கு ஸத்ப்ரதிபக்ஷத்வமும் அநுபூதி:, அநாத்மா, அஹமர்த்தவ்யதிரிக்தத்வாத். கடாதிவத் என்று. ஸம்விதாத்மத்வஸாதகமான ப்ரத்யக்த்வ ஹேதுவுக்கும் ஸத்ப்ரதிபக்ஷத்வமும் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறதென்று அறியப்படுகிறது. அஹம்புத்தியினால் பராகர்த்தத்தைக் காட்டிலும் ப்ரத்யகர்த்தத்திற்கு பேதத்தை ஸமர்த்தித்திருப்பதால். ஹி சப்தத்தாலுமிவ்விடத்தில் ஸம்வித்ப்ரத்யகத்வஹேதுவுக்கு அஸித்தியும் ஸித்தித்தது. ச்ருதார்த்தாபத்தியைச்சொல்வதற்காக முமுக்ஷுவினுடைய அபிஸந்தியைக் கூறுகிறார்— நிரஸ்த என்று. அதினால் என்னவென்றுகேட்கில் கூறுகிறார்— அஹமர்த்தவிநாச: என்று. எதின் ஸம்பந்தமுள்ளதாக துக்கஜ்ஞாநமும் எதின் ஸம்பந்தமுள்ளதாக துக்கநிவ்ருத்தியும், எதின் ஸம்பந்தமுள்ளதாக ஸுகப்ராப்தியும், அடைய விரும்பப்படுகிறதோ அதின் விநாசம் மோக்ஷமானால் அதிகாரமில்லாமையால் அப்ராமாண்யம் வரும். ப்ரமிதியை உண்டுபண்ணுதலல்லவோ சாஸ்திரத்திற்கு ப்ராமாண்யம், அறிய விரும்பப்பட்டிருக்கிறதும் க்ரஹிக்கத்தக்கதுமான சாஸ்திரத்திற்கு புருஷார்த்த பர்யவஸாநமில்லாவிடில் ச்ரவணமநநாதிகளுக்கு அதிகாரியானவன் ஸித்தியான். சாஸ்திரம் ச்ரவணம் முதலியதை அபேக்ஷியாமல் ஒருவனுக்கும் ப்ரமிதியை உண்டுபண்ணுகிறதில்லை. ஆகையால் அதிகாரி இல்லாமையால் ப்ராமாண்யமுண்டாகாதென்று சாஸ்திரப்ராமாண்யாந்யதாநுபபத்திரூப ச்ருத்யர்த்தாபத்தி உரைக்கப்பட்டது. அஹ

மர்த்தம் நஷ்டமானபோதிலும் ஜ்ஞப்தியானது நித்யையாக நிலைபெற்றிருக்கிறதென்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்— மயி நஷ்டேபி என்று. நான் நஷ்டமானபோதிலுங்கூட தான்ஸ்திரமாக இருக்கிறதென்பதனால் தன்னுடைய மண்டையை உடைத்துக் கொள்ளுதல் புருஷார்த்தமாக ஆகமாட்டாதென்று கருத்து. தனித்த ஸம்வித்துக்கு ச்ரவணாதிகளில் ப்ரவ்ருத்தி இல்லையன்றோ பின்னையோ அஹமர்த்தத்திற்கே. ஆதலால் ப்ரவ்ருத்திக்கிறஇவன் தன்நாசத்திற்கு ப்ரவ்ருத்திக்கிறானில்லை. அஹமர்த்தம் போனபோதிலும் ஜ்ஞப்தியின் இருப்பை ஒப்புக்கொண்டு தூஷணம் கூறப்பட்டது. அதற்குமேல் அதின் இருப்பே இல்லை என்றுகூறுகிறார்—ஸ்வஸம்பந்தி தயா என்று. ஸாமாந்யாகாரம் ஸத்தை, விஜ்ஞப்திதையானது விஷயப்ரகாசத்வரூப விசேஷாகாரம். ஆதிசப்தத்தால் ஸ்வயம் ப்ரகாசத்வம் விவக்ஷிக்கப்பட்டது. ஸத்தை ஆச்ரய ஸம்பந்தாதீனமாதலால் ஸ்வரூபலாபம் இருக்கும்பொழுது ஜ்ஞப்தித்வம் முதலியது ஸம்பவிப்பதாலும் எல்லாம் அதற்கு அதீனமென்று அர்த்தம். ஆகையால் ஸத்தையானது எதின் ஸம்பந்தத்தைச்சார்ந்திருக்கிறதோ அந்த ஸம்பந்திவியோகத்தில் ஜ்ஞப்தியின் ஸத்தையே இல்லை என்று சொல்லுகிறார்—ஸ்வஸம்பந்த என்று. கட ‡'கரகாகாச திருஷ்டாந்தங்களை விலக்குவதற்காக விஷயாச்ரய ஸம்பந்தத்திற்கு ஸத்தாஹேதுத்வ விஷயத்தில் த்ருஷ்டாந்தத்தைச்சொல்லுகிறார்—சேத்து:என்று. ஹேதநாதே: என்கிறஇடத்திலிருக்கிற ஆதி சப்தத்தால் ஸத்தை அதின்பலம் ¶ த்வைதீபாவம் இதுமுதலியது விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு ப்ரத்யக்ஷவிரோதத்தாலும் அஸித்தத்வத்தாலும் விபரீதஸாதகத்வத்தாலும் § ஸத்ப்ரதிபக்ஷத்வத்தாலும் ஸம்விதாத்மத்வாநுபபத்தியினாலும் ச்ருத்யர்த்தாபத்தியினாலும் அஹமர்த்தத்திற்கு ஆத்மத்வத்தைச் சொல்லுகிறார்—அத: என்று. இது பூர்வோத்தரஹேதுக்களுடைய ப்ரதிஜ்ஞை. ச்ருதிஸ்ம்ருதி ஸூத்ரங்களைக்காண்பிக்கிறார் — விஜ்ஞாதாரம் என்று. அறியத்தக்க ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் உரைக்கப்பட்டது. "$ விஜ்ஞாதாரம்ரேகேந விஜாநீயாத்" என்று, ஜ்ஞாத்ருத்வம் ஸ்வாபாவிகமாதலால் முக்தியிலும் விஜ்ஞாத்ருத்வம் இருக்கிறதென்பதைக் காண்பிக்கிறார்—ஜாநாத்யேவ என்று. 'ஜ்ஞோZத ஏவ" என்கிற இடத்தில் ஜ்ஞசப்தத்தால் குறிக்கப்பட்டவன் ஆத்மா, என்று தெரியப்படுத்துவதற்காக "நாத்மா ச்ருதே:" என்கிற ஸூத்ரம் எடுக்கப்பட்டது. உன்னால் அநித்யமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அஹமர்த்தத்திற்கு நித்யத்வத்தைச் சொல்வதும் அதற்கே ஆத்மத்வஸாதகமென்றும் ஜ்ஞாபிப்பதற்காக. ஆகையால் "நாத்மா" என்று ஸம்விதாத்மத்வ ப்ரதிக்ஷேப நிகமநத்தால் முற்கூறப்பட்டுள்ள அஹமர்த்தாத்மத்வப்ரதிஜ்ஞையிலும ஸம்விதாத்மத்வப்ரதிக்ஷேபத்திலும் அததற்குத்தக்கபடி கூறப்பட்ட ஹேதுக்கள் அநுஸந்திக்கத்தக்கவைகள்.

---

அஹம் ப்ரத்யயஸித்தோ ஹ்யஸ்மதர்த்த:; யுஷ்மத்ப்ரத்யயவிஷயோ யுஷ்மதர்த்த: । ததா ஹம் ஜாநாமீதி ஸித்தோ ஜ்ஞாதா யுஷ்மதர்த்த இதி வசநம் ஜாநீதே வ்யுத்பத்திவ்யாஹதார்த்தம் । ந சாஸௌ ஜ்ஞாதா ஹ்யர்த்த ப்ரகாச: । ஸ்வயம் ப்ரகாசமாத்ர: । நனு

---

‡ கரகம்— கிண்டி. ¶ த்வைதீபாவம்— இரண்டாக ஆகுதல்.

§ ஸத்ப்ரதிபக்ஷம்—ஸாத்யாபாவஸாதகமான விபரீத ஹேது எதற்கு இருக்கிறதோ அது. $ விஜ்ஞாதாரம்—அடே விஜ்ஞாதாச்ரயனை எதினால் அறியக்கூடும்.

தத³ந்யஸ்வபா⁴வதா ஹி ஸ்வயம்ப்ரகாஶதா । ய: ப்ரகாஶஸ்வபா⁴வ: ஸோ அநந்யாதீ⁴நப்ரகாஶ: । தீ³பவத் । ந ஹி தீ³பஸ்ய ஸ்வப்ரபா⁴பராதீ⁴நப்ரகாஶத்வேந அநந்யாதீ⁴நப்ரகாஶத்வம் வா । கிம் தர்ஹி ? தீ³பஸ்ய ஸ்வயம்ப்ரகாஶஸ்வபா⁴வஸ்யைவ ப்ரகாஶதே ; அந்யாநபி ப்ரகாஶயதி (ஸ்வ) ப்ரபா⁴யா ॥

---

**ஸ்ரீபாஷ்யம்.—**

*அஸ்மதர்த்தமானது அஹம்ப்ரத்யயத்தால் ஸித்தமன்றோ. யுஷ்மதர்த்தம் யுஷ்மத்ப்ரத்யய விஷயம் அதில் அஹம்ஜாநாமி என்கிற வ்யவஹார பலத்தால் ஸித்தித்திருக்கிற ஜ்ஞாதாவானவன் யுஷ்மதர்த்தம் என்று சொல்லுகிற வசநமானது என் தாயார் மலடி என்பதுபோல் வ்யாஹதமான அர்த்தமுள்ளது. இந்தஜ்ஞாதாவான அஹமர்த்தம் அந்யாதீநப்ரகாசமுள்ளதன்று. ஸ்வயம்ப்ரகாசமாக இருப்பதால். சைதந்யஸ்வபாவதையன்றோ ஸ்வயம்ப்ரகாசதை எது ப்ரகாசஸ்வபாவமுள்ளதோ அது தீபம்போல் அநந்யாதீனப்ரகாசமுள்ளது தீபம் முதலியவற்றிற்கு தன்னுடைய ஒளியின் பலத்தினால் ப்ரகாசிப்பிக்கப் பட்டிருத்தலால் அப்ரகாசத்வமாவது அந்யாதீநப்ரகாசத்வமாவது இல்லையன்றோ. பின்னேயோ ப்ரகாசஸ்வபாவமுள்ள தீபம் தானாகவே ப்ரகாசிக்கிறது. மற்றவைகளையும் தன்னுடைய ஒளியினால் ப்ரகாசிக்கச்செய்கிறது.*

---

**ச்ருதப்ரகாசிகை—**

*வேறு தூஷணமும் வ்யாஹதியும் இருக்கிறதென்று சொல்லுகிறார்—* **அஹம்ப்ரத்யய** *இதுமுதலியதால் (அஹம்ப்ரத்யயஸித்த இதி) ஸித்தசப்ததால் ஸ்வத ஸித்தியானது ஸூசிப்பிக்கப்பட்டது அதினாலேயே யன்றோ வேறு இடத்தில் யுஷ்மத்ப்ரத்யயவிஷய என்று உரைக்கப்பட்டது. அஹம்ப்ரத்யயஸித்தோஹி என்கிற இடத்திலுள்ள ''ஹி'' சப்தத்தினாலும் அஸ்மதாத்த யுஷ்மதர்த்த சப்தங்களாலும் யுஷ்மதஸ்மத்ப்ரத்யயகோசரயோ: என்கிற அந்த க்ரந்த ப்ரஸித்தியைக்காண்பிக்கிறார். ஜ்ஞாநமே ஸ்வயம் ப்ரகாசம் - அதைவிட வேறாக இருப்பதால் அஹமர்த்தம் அந்யாதீனப்ரகாசமுள்ளது. அதனால் ஆத்மா அல்ல; என்கிற சங்கைவாதியின் ஹேதுவுக்கு அஸித்தியை அபிப்ராயப்படாநின்றுகொண்டு அஹமர்த்தத்திற்கு வேறுப்ரகாசத்தினது அபேக்ஷையின்மையை ப்ரதிஜ்ஞைசெய்கிறார்—* **நசாஸௌ** *என்று எதனாலென்று கேட்கில் கூறுகிறார்—* **ஸ்வயம்ப்ரகாசத்வாத்** *என்று. ப்ரகாச: வ்யவஹாராநுகுண்யம், தானாகவே வ்யவஹாராநுகுண்ய சக்தியுடன்கூடி இருத்தலால், அஹமர்த்தமானது வேறு ப்ரகாசத்தை அபேக்ஷியாமலிருக்கிறதென்று அர்த்தம். அது எங்ஙனமெனில் கூறுகிறார்—* **சைதந்யஸ்வபாவாஹிஸ்வயம்ப்ரகாசதா** *என்று. சேதநா-ஜ்ஞாநம், அதின் தன்மை சைதந்யம்—ஜ்ஞாநத்வம். தத்ஸ்வபாவத்வம் ஜ்ஞாநத்வத்தை குணமாகக்கொண்டிருத்தல் என்று பொருள். ஜ்ஞாநத்வமே யன்றோ ஜ்ஞாநத்திற்கு ஸ்வயம் ப்ரகாசத்வம்.*

அப்படிப்போல் இவ்விடத்திலும் ஜ்ஞாநத்வம் ப்ராமாணிகமாக இருக்குமேயாகில் அதே ஸ்வயம் ப்ரகாசத்வம் இருக்கிறதென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அஜடமர்த்தத்திற்கு சைதந்ய ஸ்வபாவத்வத்தில் ச்ருதியை ப்ரமாணமாக சொல்லப்போகிறவராய்க் கொண்டு அதற்கு அநுக்ராஹகதர்கத்தை உபந்யஸிக்கிறார்— **ய: ப்ரகாசஸ்வபாவ:** இது முதலியதால். ஆத்மா தீபம் இவ்விரண்டுகளின் தர்மபூதஜ்ஞாநம் ப்ரபை இவைகளுக்கு நேராகவோ அல்லது பரம்பரையாகவோ எவ்விதமான வ்யவஹாராநுகுண்யமோ அவ்விதமானது இங்கு ப்ரகாச சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டது.

தீபத்தைச்சார்ந்த இருட்டிக்கு விரோதிரூபமான ஔஜ்வல்யம் ப்ரகாசம். ஜ்ஞாநத்திற்கோ வெனில் ஸ்புரணம். எது அதை ஸ்வபாவமாகக்கொண்டதாகவும் அஸாதர்மமாக உடையதாகவும் ஸ்வவ்யவஹாராநுகுண்யாபாதந சக்தியுள்ளதாகவுமிருக்கிறதோ அது அநந்யாதீந ப்ரகாசம். ஸ்வதர்மத்தை அபேக்ஷியாத ப்ரகாசமுள்ளதென்று அர்த்தம். ப்ரகாசஸ்வபாவத்தின் அஸித்தியானது சங்கிக்கத்தக்கதல்ல. எவ்வாறு ப்ராச்ரயமான தீபத்திற்கு ஔஜ்வல்யம் ப்ரத்யக்ஷஸித்தமோ, அவ்வாறே ஜ்ஞாதாவுக்கும் தானாகவே தன்னுடைய வ்யவஹாராநுகுண்யத்தை உண்டுபண்ணுதல் இனி சொல்லப்போகிற ச்ருதியின ஸ்வாரஸ்யத்தால் அறியப்பட்டிருப்பதால், ப்ரகாசஸ்வபாவமுள்ளவஸ்துவுக்கு தனக்கு தாமமாக இருக்கிற ப்ரகாசத்தை அபேக்ஷியாமல் ப்ரகாசிப்பது பொருத்தமுள்ளதென்று இவ்வளவேதான் இந்த க்ரந்தத்தால் சொல்லப்படுகிறது இதற்குமேல் கண்ணால் க்ரஹிக்கத்தக்கதன்மை இருக்க ப்ரபையைவிட வேறாக இருப்பதால் தீபமானது கடம் முதலியதுபோல் ப்ரபையின்பலத்தால் பிரகாசிப்பிக்கத்தக்கதென்பதினால் த்ருஷ்டாந்தத்திற்கு ஸாத்யவைகல்யத்தை ஆசங்கித்துக்கூறுகிறார்— **நஹி** என்று. கண்ணால் க்ரஹிக்கத்தக்க தன்மை இருக்க ப்ரபையைவிட வேறாக இருப்பதால். குடம் முதலிய வஸ்துக்களைப்போல் தீபமானது ப்ரபையினால் ப்ரகாசிப்பிக்கத்தக்கதென்று சொல்வது கூடாது. அந்தகாரத்தில் வ்யபிசாரம் வருவதால். ஆகையால் தீபத்திற்கு ப்ரபையினது அபேக்ஷை இல்லையென்று அபிப்ராயம். **அப்ரகாசத்வம் அந்யாதீநப்ரகாசத்வஞ்சேதி.** தனக்கு ௸ ஔஜ்வல்யரூபமான தர்மத்தின் இன்மையும் அதினாலுண்டுபண்ணப்பட்ட வேறு ப்ரகாசத்தின் அபேக்ஷையும் இல்லை என்று அர்த்தம். அர்த்தஸித்தத்தை சொல்வதற்காக ¶ ஆகாங்க்ஷையைக் காண்பிக்கிறார்— **கிந்தர்ஹி** என்று. உத்தரம் கூறுகிறார்— **தீப:** என்று.

தீபமானது தன்னை மாத்திரம் ப்ரகாசிப்பிக்கிறதென்பதில்லை. பின்னையோ தன் பரிகரங்களால் மற்றவைகளையும் ப்ரகாசிப்பிக்கிறது என்று அதிசயத்தைக் கூறுகிறார்— **அந்யாநபி** என்று. இவ்வண்ணமாவது பொருள். தீபமானது ப்ரபையை அபேக்ஷியாமல் ப்ரகாசிக்கிறதானால் ப்ரபையைப்போல் விஷயங்களையும் ப்ரகாசிக்கச்செய்யட்டும் என்று கேட்கில் சொல்லுகிறார— **அந்யாநபி** என்று. விஷயப்ரகாசநஸமர்த்தமாக இருந்தபோதிலும் ஸ்வரூபமானது ஒரு ஸமயத்திலுண்டாவதுபற்றி விஷயஸம்பந்தமில்லாமையால் ஸ்வரூபத்தால் ப்ரகாசிப்பிக்கிறதில்லை. பின்னையோ விஷயஸம்பந்தமுள்ளதும் இதின்பரிகரமாகவுமிருக்கிற ப்ரபையினாலென்று அர்த்தம். யதா ப்ரகாசயத்யேக:க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி: (எவ்வாறு ஸூர்யன் ஒருவனாகவே உலகமனைத்தையும் ப்ரகாசிப்

௸ ஔஜ்வல்யம்—ப்ரகாசம்.

¶ ஆகாங்க்ஷை—எந்த பதத்திற்கு எந்தபதமில்லாவிட்டால் அந்வயாநுபாவகத்வம் இருதோ அந்தபதத்திற்கு அந்த மற்றொருபதத்தோடு உள்ள ஸம்பந்தம்.

பிக்கிறார்) இதுமுதலிய நிர்தேசம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. அன்றிக்கே, அநுமானவிவக்ஷயினால் சொல்லுகிறார்—சைதந்ய ஸ்வபாவதாஹி என்று. சைதந்ய ஸ்வபாவதா - ஜ்ஞாநத்தை தர்மமாகக்கொண்டிருத்தல். இதேயன்றோ ஸ்வயம் ப்ரகாசத்வம். ஜ்ஞாநத்தை தர்மமாகக்கொண்டிருப்பதால் ஸ்வயம் ப்ரகாசத்வம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. புகையுடன் சேர்ந்திருத்தலன்றோ அக்நியுடன் சேர்ந்திருத்தலென்று சொல்லப்பட்டால் புகையுள்ளதாக இருப்பதால் அக்நியுள்ளது என்று எவ்வாறு சொல்லப்பட்டதாக ஆகுமோ அப்படிப்போல. இதுவும் அந்வயியானஹேது. வ்யாப்தியைக் காண்பிக்கிறார்—ய: என்று. ப்ரகாசஸ்வபாவ: - ப்ரகாசத்தை தர்மமாகக்கொண்டது. எது வேறு தர்மியினுடைய ப்ரத்யக்ஷத்தில் நேராகவோ பரம்பரையாகவோ ப்ரகாசித்துக்கொண்டிருப்பதினாலேயே ஹேதுவோ அது அநந்யாதீன ப்ரகாசசப்தத்தால் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. ரூபமுள்ள வஸ்து. அந்த ரூபி த்ரவ்யத்தில் இணைபுறியா, ஸம்பந்தத்தால் நிலைபெற்றிருக்கிற ஜாதிகுணம் முதலியது, இவைகளின் சாக்ஷுஷப்ரத்யக்ஷத்திற்கு நிமித்தமான ரூபத்திற்கும் தனக்கு எது ஆச்ரயமோ அதற்கும் மற்ற த்ரவ்யங்களுக்கும் அநுமாபகமான (தூமம்) புகை முதலியவற்றுக்கும் ப்ரகாசத்வத்தை விலக்குவதற்காக தர்ம்யந்தர அபரோக்ஷசப்தங்கள். பாஸமான சப்தமானது இந்த்ரியங்களை விலக்குவதற்காக. பக்ஷம ஸபக்ஷம் இரண்டுக்கும் பொருத்தமுள்ளதாக இருப்பதற்காக ஸாக்ஷாத்வாபரம்பரயாவா என்று கூறப்பட்டது. ஜ்ஞாதாவான ஆத்மா தனக்கு தர்மமாக இருக்கிற ப்ரகாசத்தை அபேக்ஷியாமலே ஸித்தியுள்ளவன். ப்ரகாசத்தை தர்மமாகக்கொண்டிருப்பதால், தீபம்போல, என்று அநுமான ஸ்வரூபம் ப்ரகாசிக்கிற ஸ்வபாவமுள்ளதாக இருப்பதால் நேராகவோ பரம்பரையாகவோ வேறு தர்மியின் ப்ரத்யக்ஷாவபாஸத்திற்கு ஹேதுவான தர்மத்துடன்கூடி இருப்பதால் என்பது ஹேதுவாசியான சப்தத்தினது அர்த்தம். தீபத்துக்குத் தன்னுடைய தர்மமாக இருக்கிற ப்ரபையை அபேக்ஷியாத ப்ரகாசத்வம்போல ஜ்ஞாதாவுக்கும் தன்னுடைய தர்மமாக இருக்கிற ஜ்ஞாநத்தை அபேக்ஷியாமல் ப்ரகாசித்தல் ஸித்தமாக இருப்பதுபற்றி பக்ஷதர்மதா பலத்தால் ஸ்வயம் ப்ரகாசத்வம் ஸித்திக்கிறது. த்ருஷ்டாந்தத்தில் ஸாத்ய ஸம்பந்தத்தைக்காண்பிக்கிறார்—நஹி என்று. ஸாதநஸம்பந்தத்தைக்காண்பிக்கிறார்— அந்ய ாநபி என்று. அநுமானபரத்வத்தைக்காட்டிலும் க்ரந்தத்திற்கு ச்ருத்யநுக்ராஹகதர்க பரத்வம் தகுதியுள்ளது. மேலே "ததாஹி ச்ருதய:" என்று சொல்லப்போவதால். முந்தின அநுமானம் சொல்லக்கருதப்பட்டிருக்குமேயானால், ததாச என்றல்லவோ சொல்லத்தக்கது. தொடக்கத்தில் "சைதந்யஸ்வபாவதாஹி ஸ்வயம்ப்ரகாசதா" என்று ஸமாநாதிகரண நிர்தேசஸ்வாரஸ்யத்தாலும் பஞ்சமயர்த்தத்வம சொல்லும்பக்ஷத்தில் ஸ்வாரஸ்யம் அழிந்துபோய் விடுகிறது. நிகமநத்திலும் "சித்ரூபதாஹி ஸ்வயம் ப்ரகாசதா" என்று கூறப்பட்டது.

சித்ரூபசப்தம் ஜ்ஞாநஸ்வரூபத்வத்தைக் குறிக்கிறது. ஜ்ஞாநத்தை தர்மமாகக்கொண்டிருத்தலென்கிற அர்த்தத்தை உணர்த்துவதில் நோக்குள்ளதல்ல. அடுத்த முன் க்ரந்தத்தில் சித்ரூபனே சைதந்யகுணமுள்ளவனென்று ஜ்ஞாந தர்மத்வத்தைத் தனித்துச்சொல்லி இருப்பதால். இவ்வண்ணம் முடிவில் ஸ்வயம ப்ரகாசதாபதத்தோடு ஸமாநாதிகரணமான சித்ரூபதா சப்தத்திற்கு ஜ்ஞாநஸ்வரூபதா பரத்வம் காணப்படுவதாலும் முந்தியும் ஸ்வயம் ப்ரகாசதாபதத்துடன் ஸமாநாதிகரணமான சைதந்ய ஸ்வபாவதா என்கிற பதத்திற்கு ஜ்ஞாநஸ்வரூபதையைக்குறித்தல் மிக்கத்தகுதியுள்ளதாக இருப்பதாலும சைதந்யஸ்வபாவதா இதுமுதலிய பாஷ்யக்ரந்தமானது ச்ருதிக்கு அநுக்ராஹகதர்க்கத்தை ப்ரதானமாகக்கொண்டது. இவ்வண்ணம் அநுக்ராஹகதர்கத்திற்கு ச்ரௌதத்வம் இருக்க அநுமாநமும் அர்த்தஸித்தம்.

[illegible]

**ஸ்ரீ பாஷ்யம்.—**

இதுசொல்லப்பட்டதாக ஆகிறது நிரூபிக்கிறுர்—ஒரே தேஜஸ்ஸ்வரூப த்ரவ்யமானது ப்ரபாரூபமாகவும் ப்ரபையுள்ளதாகவுமிருக்கிறது. என்றாலும் ப்ரபையானது ப்ரபையுள்ள த்ரவ்யத்திற்கு அதீனமாக இருக்கிறது. ஆயினும் அது தேஜோமயமானத்ரவ்யமே, சௌக்ல்யம் முதலியதுபோல குணமல்ல. தனக்கு ஆதாரமாயிருக்கிற வஸ்துவைவிட்டுவிலகி வேறு இடத்திலும் இருப்பதாலும் ரூபமுள்ளதாக இருப்பதாலும் சௌக்ல்யம் முதலியகுணங்களோடு வேற்றுமை இருப்பதாலும ப்ரகாசமுள்ளதாக இருப்பதாலும் தேஜோத்ரவ்யமே. வேறுவஸ்துவல்ல. தன் ஸ்வரூபத்திற்கும மற்றவைகளுக்கும் ப்ரகாசகமாக இருப்பதால் ப்ரகாசவத்த்வமும். இந்தப்ரபைக்கு குணத்வவ்யவஹாரமானது எப்பொழுதும் அதை ஆச்ரயித்திருத்தல், அதற்கு சேஷமாக இருத்தல், இவைகளடியாக உண்டானது. ஒளிக்கு ஆச்ரயமான மணி முதலியவைகளின் அவயவங்களே நாற்புறங்களிலும் சிதறி ஸஞ்சரியா நின்றவைகளாகப்ரபை எனவழங்கப்படுகின்றனவென்று சொல்வதுஸரியல்ல. மணி சூர்யன்முதலியவைகளுககு நாசம் வரவேண்டி வருவதால்.

**ச்ருதப்ரகாசிகை—**

ஜ்ஞானத்தை தர்மமாகக்கொண்டிருத்தலும் ஜ்ஞானஸ்வரூபத்வமும் சொல்லப்பட்டிருப்பதாலும ஏக ஜாதீயத்ரவ்யங்களை இரண்டுக்கும் தவறாத தர்மதர்மிபாவத்தில் ப்ரபை ப்ரபையுள்ளவஸ்து இவ்விரண்டையும த்ருஷ்டாந்தமாகச் சொல்லி இருப்பதாலும். ஜ்ஞானம் த்ரவ்யமாகில் இரண்டு ஜ்ஞானங்களுக்கு தவறாமல் தர்ம தர்மிபாவம் பொருந்தாது. வேறு இடத்தில் காணப்படாமையால். குணமென்று சொல்லப்படுமேயாகில் ஜ்ஞானாச்ரயத்வம் ஸம்பவியாது. குணங்களுக்கு குணமில்லாமையால். த்ரவ்யமாக இருந்தபோதிலும் ப்ரபைக்கும் ப்ரபையுள்ள வஸ்துவுக்கும்

தவறாமல் ஆச்ர்யாச்ரயிபாவம் காணப்படுகிறதென்று சொல்லக்கூடாது. ப்ரபை என்பது சிதறிப்பரவுகின்ற தீபத்தின் அவயவங்களாதலால் என்று ஆசங்கித்துக் கூறுகிறார்— ஏததுக்தம் என்று. எவ்வாறு ஒரே தேஜோத்ரவ்யம் ப்ரபாரூபமாகவும் ப்ரபையுள்ளவஸ்து ரூபமாகவும் இருக்கிறதோ இவ்வண்ணம் ஆத்மா சித்ரூபனாகவே இருந்துகொண்டு சைதந்யகுணமுள்ளவனாகவும் இருக்கிறான். யதாசப்தத்திற்கு மேலே அந்வயம். முதலில் ப்ரபைக்கு சிதறிப்போய் இருக்கிற தீபம் முதலியவைகளின் அவயவங்களைக்காட்டிலும் வேறுபாட்டை ப்ரதிஜ்ஞைசெய்கிறார்—ஏகமேவஎன்று. ஏகம் ஸஜாதீயமானது. தவறாமல் தர்மியை ஆச்ரயித்திருக்கிற தர்மத்திற்கு எவ்வாறு த்ரவ்யத்வம் என்றுகேட்கில் கூறுகிறார்—யுதஸித்தம் என்று. குணபூதா பரதந்த்ரமாயுள்ளது. இணைபுரியாமல் சேர்ந்தே இருக்கும் விசேஷணம் என்று அர்த்தம். தேஜஸ் த்ரவ்யமே என்று ப்ரதிஜ்ஞைபண்ணப்பட்ட த்ரவ்யவிசேஷத்வஸித்தியின்பொருட்டு முதலில் த்ரவ்யத்வத்தை உபபாதனம் பண்ணுகிறார்-ஸ்வாச்ரயாத்என்று. த்ரவ்யத்வம்இருக்கட்டும், அதிலும் தேஜஸ்தவத்தில் ப்ரமாணம் என்னவென்றுகேட்கில் கூறுகிறார்—ப்ரகாசவத்வாத் என்று. ப்ரகாச:-இருட்டுக்கு விரோதியாக இருக்கிற ஆகாரவிசேஷம். ஔஜ்வல்யம்-ப்ரகாசத்துடன் சேர்ந்திருத்தல். உபபாதிக்கிறார்—ப்ரகாசவத்த்வஞ்ச என்று. ஸ்வவிஷய பரவிஷய ஜ்ஞாநவிரோதியான இருளைப்போக்குதல் என்கிற கார்யம் காணப்படுவதால் என்று அர்த்தம். அங்ஙனமாகில் எவ்வண்ணம் இதற்கு குணமென்கிறவ்யவஹாரம் என்று கேட்கில் கூறுகிறார்— அஸ்யா: என்று "து" சப்தம் சௌக்ல்யாதிவைஷம்யத்தில் நோக்குள்ளது. இதற்குமேல் சிதருகின்ற அவயவங்கள் ப்ரபைஎன்பதை நிராகரிக்கிறார்— நச என்று. எதனாலெனில் சொல்லுகிறார்— மணி என்று. ஒவ்வொரு க்ஷணந்தோறும் விநாசம் ப்ரஸங்கிப்பதால் என்று அர்த்தம். அப்படிப்பட்ட சிதருதலை ஒப்புக்கொண்டால் மணி முதலியவைகள் கண்ணுக்குப்புலப்படாமல் போகவேண்டியதாகுமென்கிற ப்ரஸக்தியை பரிஹரிப்பதற்காக ஒவ்வொரு க்ஷணத்திலும் உத்பத்தி ஒப்புக்கொள்ளத்தக்கது. ஒவ்வொரு க்ஷணத்திலும் உத்பத்தி விநாசம் இவ்விரண்டையும் ஒப்புக்கொள்ளுதல் பொருத்தமுள்ளதாகாது. தீபத்திற்குபோல் உத்பத்தி விநாசங்களுக்குறியகாரணகலாபங்களின் தொடர்ச்சி இல்லாமையால். அதில்லாமலிருந்தாலும் தேஜஸ்த்வஸாமாந்யத்தால் தீபத்தில்போல் ப்ரத்யபிஜ்ஞையின் பாதத்தால் ஒவ்வொருக்ஷணத்திலும் விநாசம் முதலியவைகளை கல்பிக்கும்பக்ஷத்தில் ஸத்வம் த்ரவ்யத்வம் முதலியவைகளால் கடம் முதலியவற்றில்கூட க்ஷணிகத்வ ப்ரஸங்கம் வருமென்று கருத்து. ரத்நங்களில் க்ஷணிகத்வமானது ரத்நசாஸ்த்ரவிருத்தம். காலவிசேஷத்தில் அதின் உத்பத்தி முதலியது அறியப்படுகிறபடியால் ஸூர்யன் முதலிய தேஜோத்ரவ்யங்களிலும் க்ஷணிகத்வமானது ச்ருதிவிருத்தம். "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதா பூர்வமகல்பயத்" (ஸூர்யசந்திரர்களை பிரஹ்மதேவன் முன்போல படைத்தார்) "நாக்நிர்வா ந ஸூர்ய:" (அக்நியும் சந்திரனும் இல்லை ஸூர்யனுமில்லை) என்று காலவிசேஷத்தில் அவைகளின் உத்பத்தி விநாசங்கள் அறியப்படுவதால் ஸூர்யன் முதலியவற்றின் ஸ்ருஷ்டியையும் ப்ரளயத்தையும் ப்ரதிபாதிக்கிற வாக்யங்களுக்கு தொடர்ச்சியாக ¶ உபக்ரமோச்சேத பாதம் சொல்லத்தக்கதல்ல. ரத்நம் ஸூர்யன் முதலிய வஸ்துமாத்திரத்திற்கு க்ஷணிகத்வத்தில் ப்ரமாணமில்லாமையால். தேஜஸ்த்வமோ வென்றால் தேஜஸின் பரமாணுக்களை இச்சிக்கிறவர்களால்

‡‡ அயுதஸித்தங்கள்— எந்த இரண்டு வஸ்துக்களுக்குள் ஒன்று மற்றொன்றை ஆச்ரயித்தே இருக்குமோ அவ்விரண்டும் அயுதஸித்தங்கள். அதாவது பிரிக்கமுடியாத ஸம்பந்தத்துடன் கூடியவைகள். ¶ உபக்ரமம்— ஆரம்பம். உச்சேதம்—அழிவு.

ஹேதுவாக சொல்லத்தக்கதல்ல. தேஜஸின் பரமாணுக்களில் வ்யபிசாரம் வருவதால் ஸத்வாதிகளால் க்ஷணிகத்வம் சொல்லப்படுமேயாகில் ஜகத்துக்கு க்ஷணிகத்வம் ஏற்பட வேண்டியதாகும் என்று சொல்லப்பட்டது.

அய்யா! தூரத்திலிருந்தே அறியப்பட்டிருக்கிற கந்தத்துடன்கூடின கர்ப்பூரம் முதலியவைகளுக்கு கந்தத்துக்கு ஆச்ரயமாக இருக்கிற அவயவங்களின் சிதறுதல் விடத்தகாததாலும் பிற்காலத்தில் உபலம்பமிருப்பதாலும் ஒவ்வொரு க்ஷணந்தோறும் உத்பத்தி விநாசங்கள் ஒப்புக்கொள்ளத்தக்கவைகள். அவ்வண்ணமே மணி முதலியவைகளிலும் என்று-இவ்வண்ணமல்ல. காத்தில்லாத குடுக்கை ஸம்புடம் முதலியவைகளில் வைக்கப்பட்டு திடமாக மூடப்பட்டிருக்கிற பச்சைக்கர்ப்பூரம் முதலியவற்றிற்கு தூரத்தில் வாஸனையின் உபலம்பமில்லாததுபற்றி ஆச்ரய வஸ்துக்களின் அவயவங்களுடைய விசரணமில்லாமையால் முன்போல் ஸ்திதியின் $ உபலம்பத்திற்கு உபபத்தி ஏற்படுவதால்ப்ரதிக்ஷணோத்பத்தி விநாசங்கள் கல்பிக்கத்தக்கவைகளல்ல தூரத்திலறியப்படாநின்றவாஸனையுடையதான காத்துள்ளஇடத்திலிருக்கிற பச்சைக்கர்ப்பூரம் முதலியவைகளுக்கு அவயவங்களின் சிதருதல் இருக்கவே இருக்கிறது. அவயவியிடத்திலும் ஸூக்ஷ்மமான குறைவு இருக்கவே இருக்கிறது. தராசினால் நிறுத்து பரீக்ஷ பண்ணும்போதும் அல்பமான பரிமாணத்தின் குறைவு காணப்படுவதால். ஆகையால் ப்ரதிக்ஷணம்வெவ்வேறாக வந்துசேருகின்ற அவயவாந்தரவிசேஷங்களை ஹேதுவாகக்கொண்ட உத்பத்தி விநாசங்கள் கல்பிக்கத்தக்கவைகளல்ல. கல்பநத்திலும் அறியப்படுகிற கந்தத்துக்கு ஆச்ரயமாக உபயவாதி † ஸம்ப்ரதிபன்னமாகவே இருக்கிற காலாபக்கத்திலும் சிதருகின்ற சிலஅவயவங்களுக்குஸ்திதிமாத்ரம் கல்பிக்கத்தக்கது. அவ்வளவுமாத்திரத்தினால் கந்தோபலப்திக்கு உபபத்தி வருவதால். அனேகதர்மிகள் அவைகளின் உத்பத்திவிநாசங்கள் முன் காணப்பட்டிருந்த அவ்விரண்டின் ஸாமக்ரிகள் இவைகளை கல்பிப்பதில் கௌரவமேற்படுவதாலும். அன்றிக்கே கண்ணுக்குப்போல் மூக்குக்கும் ரச்மியின்வழியாக ஸம்பந்தமிருப்பதால் தூரத்திலிருக்கிற பதார்த்தங்களை அடைந்திருக்கிற கந்தத்தை க்ரஹிக்கும் தன்மை கல்பிக்கத்தக்கது. கௌரவமில்லாமையால் ரச்மிமத்த்வம் கல்பிக்கத்தக்கதென்பது மாத்திரமல்ல. பாரதத்தில் சொல்லப்பட்டுமிருக்கிறது. "நஹ்யாத்மா சக்யதே த்ரஷ்டுமிந்த்ரியை:காமகோசரை: | ப்ரவர்தமானைரநயைர்துர்தர்ஷைரக்ருதாத்மபி:- தேஷாந்துமநஸா ரசமீந் யதாஸம்பந்நியச்சதி" ததாப்ரகாசதே ஹ்யாத்மா தீபோதீப்யந் நிராக்ருதி:" என்று. (காமங்களுக்கு கோசரங்களாக இருப்பவைகளும் செல்லுகின்றவைகளும் நீதியைவிட்ட கன்றவைகளும் மனோதார்ட்யமில்லாதவர்களால் எவ்விதத்தாலுமடக்கமுடியாதவைகளுமான இந்த்ரியங்களால் ஆத்மா பார்க்க சக்யமன்று. அந்த இந்த்ரியங்களுடைய ரச்மிகளை மனதினால் எப்பொழுது நன்றாக அடக்குகிறானோ அப்பொழுது ஆத்மா ஜ்வலிக்கிற தீபம்போல் நிஷ்க்ருஷ்ட ஆக்ருதியுள்ளவனாக பிரகாசிக்கிறான்) இந்த்ரியங்களுக்கு ‡‡ பஞ்சீக்ருதபூதாப்யாயநங்களான வாயுதேஜஸ் முதலியவைகளோடு ஸம்பந்தத்தால் ரச்மிமத்த்வமும் பொருத்தமுள்ளதாக ஆகிறது.

$ உபலம்பம்—அறிதல் அல்லது ஞானம்.

† ஸம்ப்ரதிபன்னம்—விவாதமின்றி ஒப்புக்கொள்ளப்பட்டது.

‡‡ பஞ்சீக்ருதம்—கலக்கப்பட்ட ஐந்து பூதங்களுடைய அம்சங்களின் ஸமுதாயம். பஞ்சீகரணப்ரக்ரியையாவது— பகவான் பூதங்களை ஸ்ருஷ்டித்து ஒவ்வொரு பூதத்தையும் இரண்டாகச்செய்து இரண்டு பாகங்களுக்குள் அந்த அந்த பூதத்தைச்சார்ந்த பாகம் ஒன்றைவைத்துக்கொண்டு மற்ற ஒருபாகத்தை நான்காகப்பங்கிட்டு அந்த நான்கு

அய்யா! அக்நி வெய்யல் இவைகளின் ஸம்பந்தத்தால் ஜலம் கல் முதலியவற்றுக்கு உண்டாகிற சுடுகையின் தாரதம்ய ஜ்ஞானமானது நெருப்பு வெய்யல் முதலியவைகளின் அவயவங்களின் ஸம்பந்தமின்றி பொருத்தமுள்ளதாக ஆகாது. ஜலம் முதலியவற்றிற்கு ஸ்வத: ஔஷ்ண்யமில்லாததாலும் நிராச்ரயமான தர்மத்திற்கு ஸங்க்ரமணம் பொருந்தாததாலும் ஔஷ்ண்யத்திற்கு ஆச்ரயபூதமான அக்நியினுடையவும் வெய்யலுடையவும் அவயவத்திற்கு ஸம்பந்தம் ஒப்புக்கொள்ளத்தக்கது. இவ்வண்ணமே அவயவஸங்க்ராந்தியும் சிதறுதலில்லாவிடில் உபபன்னமாகாது. சொல்லுகிற தன்மையுள்ள ரச்மிகளுக்கு சரணதலங்களுக்குப்போல எவ்வாறு சிதறுதலில்லாமல் ஓரிடத்தில் ஸம்பந்தம் ஏற்படும்? அவயவங்களுடைய தாரதம்யத்தால் ஔஷ்ண்யதாரதம்யம் என்று சொல்லப்படுகிறது. நெருப்பினால் காய்ச்சப்பட்ட வஸ்துக்களில் அக்நியினுடைய அவயவங்களின் ஸம்பந்தத்தினாலேயே ஔஷ்ண்யம் அறியப்படுகிறது. ஜலம்முதலியவற்றில் ஸங்க்ரமித்திருக்கின்ற அக்நியின் அவயவங்களே ப்ரபை என்று சொல்லத்தக்கதல்ல. தீபத்தின் ப்ரபையினால் பகலிலும் இரவிலும் கவரப்பட்டிருந்தபோதிலும் ஜலம் பூதலம் முதலியவற்றில் ஔஷ்ண்யம் அறியப்படாததால்-வெய்யலால் தபிக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களிடத்திலும் கிரணங்களுடைய சிதறுதலால் அவயவங்களின் ஸங்க்ரமணம் கிடையாது. பனித்துளிகளுடையதுபோல ஸூர்யகிரணங்களால் க்ரஹித்துவிடப்பட்டிருக்கிற அக்நியின் அவயவங்களுடைய ஸங்க்ரமணத்தால் உஷ்ணோபலப்திக்கு உபபத்தி வருவதால் இங்கு கல்பகமும் தேடத்தக்கதல்ல. கல்பநாகௌரவமும் ப்ரஸங்கிக்கிறதில்லை. ஏனெனில் இந்த அர்த்தம் சாஸ்த்ர ஸித்தமாதலால் உபபாதிக்கிறார்—மாத்ஸ்ய புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. வஸந்தே * க்ரீஷ்மகே ரச்மிசதைஸ் ஸந்தபதி த்ரிபி: சரத்யபி ச வர்ஷாஸு சதுர்பி: ஸம்ப்ரவர்ஷதி ¶ ஹேமந்தே சிசிரே சைவ ஹிமமுத்ஸ்ருஜதே த்ரிபி: (வஸந்தத்திலும் க்ரீஷ்மத்திலும் ஸூர்யன் முன்னூறு கிரணங்களால் தபிக்கிறான். சரத்திலும் $ வர்ஷாஸமயத்திலும் நானூறு கிரணங்களால் மழைபொழிகிறான். ஹேமந்த காலத்திலும் § சிசிருதுவிலும் முன்னூறு கிரணங்களால் பனியை வெளியில் விடுகிறான், என்று) எவ்வாறு வர்ஷாகாலத்திலும் ஹேமந்த காலத்திலும் ஸூர்ய கிரணங்களால் விடப்பட்ட ஜலகணங்களும் பனித்துளிகளும் சிதறின கிரணங்களின் அவயவங்களன்றோ, கிரணங்களால் க்ரஹித்துவிடப்பட்டிருக்கிற ஜலத்தின் அவயவங்களோ. இவ்வாறே க்ரீஷ்மத்திலும் ஸூர்யகிரணங்களாலுண்டாகும் ஸந்தாபனம் சிதறின அதின் அவயவங்களின் கார்யமல்ல. பின்னையோ அவைக

பாகங்களையும் வேறுநான்கு பூதங்களிலும் சேர்ப்பிக்கிறார்—இவ்வாறாக எல்லா பூதங்களும் உண்டுபண்ணப்படும் ஸமயத்தில் ஒவ்வொருபூதத்தினுடைய நான்கு அரைக்கால் அம்சங்களையும் தன்னுடைய ஒரு அர்த்தாம்சத்தையும் சேர்த்து பகவான் ஒவ்வொரு பூதத்தையும் பூர்ணமாகச்செய்கிறார்— ஆதலால் ஒவ்வொருபூதத்திலும் ஐந்து பூதங்களின் அம்சங்களும் கலந்திருக்கின்றன. எந்த வஸ்துவை எந்தப்பெயரால் வ்யவஹரிக்கிறோமோ அந்த வஸ்துவில் அதின் அம்சம் ஸரிபாதி, மற்றவஸ்துக்களின் நான்கு அரைக்கால் அம்சங்கள். தன் அம்சம் அதிகமாக இருப்பதால் தன் வ்யவஹாரம் நிலைபெற்றுவருகிறது. த்ரிவ்ருத்கரணம் வேதத்தில் சொல்லப்பட்டிருப்பது பஞ்சீகரணத்திற்கு உபலக்ஷணம். பஞ்சபூதங்களோடும் மஹத் அஹங்காரம் இரண்டையும் சேர்த்து ஸப்தீகரணம் என்றும் சொல்லுவார்கள். இருபத்திநான்கு தத்வங்களில் பஞ்சபூதங்களும் ப்ரக்ருதி மஹதஹங்காரங்களும் சரீரத்திற்கு உபாதானங்கள்.

¶ ஹேமந்தம்—பனிகாலம். $ வர்ஷாகாலம்—மாரிகாலம்.

§ சிசிருது—மாசிபங்குனிமாதங்கள். * க்ரீஷ்மம்—வெய்யிற்காலம்.

ளால்க்ரஹித்துவிடப்பட்டிருக்கிற அக்நி அவயவங்களின் கார்யமென்று அறியப்படுகிறது. அவ்வாறே அக்நிம் வா வாதித்யஸ்ஸாயம்ப்ரவிசதி- உத்யந்தம் வா வாதித்யமக்நி ரநு ஸமாரோஹதி. (ஸூர்யன் ஸாயங்காலத்தில் அக்நியில் ப்ரவேசிக்கிறான். உதிக்கிற ஸூர்யனிடம் அக்நியானவன் அநுப்ரவேசம் செய்கிறான்) என்று. ச்ருதியில் கூறப்படுகிறது இந்த ச்ருதியில் ஸாயம்ப்ராதர் சப்தங்கள் ஆதித்யனுடைய || திரோதானதர்சனயுக்தமான காலவிசேஷ பரங்கள். இதற்கு ஸாயம் பாவப்ராதர்பாவங்கள் ஸூர்யனுக்குப்பக்கத்திலும் தூரத்திலுமிருக்கிற அந்த அந்த இடத்திலுள்ள புருஷர்களின் அபேக்ஷயினால் எப்பொழுதும் பொருத்தமுள்ளதாக ஆகின்றன. இந்த அர்த்தமானது புவநகோசத்தில் மிக்க ஸ்புடமானது. ஆதலால் ப்ரவிசதி என்பதினால் தூரத்திலிருக்கிற ஆதித்யனுக்கு அக்நியில் சொல்லப்படுகிற வ்யாப்தியானது ஸ்வரூபத்தால் உபபன்னமாகிறதில்லை. ஆதலால் கிரணங்களின் வழியாக ஏற்படுகிறது. "அக்நி: அநுஸமாரோஹதி" என்பதினால் ஆதித்யனால் அக்நியினது அவயவங்களின் உபாதானம் சொல்லப்படுகிறது. இந்த வாக்யமானது அக்நிக்கு அதிஷ்டாதாவான தேவதையின் ஆரோஹணபரமல்ல. "தஸ்மாத்தூம ஏவாக்நேர்திவா தத்ருசே" (ஆகலால் பகலில் அக்நிக்கு புகையே காணப்படுகிறது.) என்கிற அடுத்த வாக்யத்தினால் அக்நிக்கு ஆதித்யனுடைய பக்கத்தில் நெருங்குவதாலுண்டான தேஜோமாந்த்யம் சொல்லப்பட்டிருப்பதால். அப்படி இல்லாவிட்டால் ஸாயம் ப்ராதஸ்ஸமயங்களுக்கு எப்பொழுதும் ஸம்பவமிருப்பதால் அக்நிக்கு ஆதித்யனிடத்தில் எப்பொழுதும் ஆரோஹணமும் ஆதித்யனுக்கு அக்நியில் எப்பொழுதும் ஆரோஹணமும் ப்ரஸங்கிக்கும். அதினால் அக்நி, ஆதித்யன், இருவர்களுக்கும் ஸ்தாநவிநிமயத்தால் எப்பொழுதும் ஸ்திதியானது சொல்லப்பட்டதாக ஆகும். அப்படிசொல்வது ப்ரமாணாந்தர விருத்தம். ஆதலால் ஆதித்யனுக்கு அக்நியில் கிரணங்களின் வாயிலாக வ்யாப்தியும் கிரணங்களால் அக்நியின் அவயவங்களின் கிரஹணமும் இரண்டு வாக்யங்களால் சொல்லப்பட்டது. அதினால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற அக்நியின் அவயவங்களுடன் கூடினவர்ஷத்தினால் தாபமானது மாத்ஸ்யபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. உத்ஸர்ஜநப்ரகரணஸ்வாரஸ்யத்தால். ஆகையால் பனித்துளிகளுக்குப்போல் ஸூர்ய கிரணங்களால் விடப்பட்டிருக்கிற ஆக்நேயாவயவங்களுக்கு சிதரின கிரணங்களின் அவயவத்வமில்லாமையால் ரவிகிரணங்களில் ரவிமண்டலத்தில் ப்ரதிக்ஷணவிநாசோத்பத்தி கல்பநமானது பொருந்தாது. அதினால் சிதருகிற அவயவங்கள் ப்ரபையல்ல.

---

𑌦𑍀𑌪𑌵𑌦𑌵𑌯𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌤𑍍𑌤𑌿𑌃 𑌕𑌥𑌂𑌚𑌿𑌦𑌪𑌿 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌨 𑌹𑌿 𑌵𑌿𑌶𑌰𑌣𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌵𑌯𑌵𑌾 𑌦𑍀𑌪𑌾𑌸𑍍𑌥𑍂𑌲𑌾𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌵𑌿𑌶𑍀𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌤𑌤𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑍈𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨𑌾𑌵𑌯𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌾 𑌵𑌿𑌶𑍀𑌰𑍍𑌣𑌾𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌤𑌿 𑌸𑍁𑌖𑌂 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍍 ॥

𑌅𑌤 𑌏𑌵 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌾𑌶𑍍𑌚 𑌦𑍀𑌪𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍍𑌷𑌣𑌮𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌕𑌾𑌰𑌣𑌕𑌲𑍍𑌪𑌨𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌨𑌮𑍍 ।

---

|| திரோதானம்—மறைதல்.

¶ உபாதானம்—வாங்கிகொள்ளுதல் அல்லது ஏற்றுக்கொள்ளுதல்.

$ விநிமயம்—மாற்றிக்கொள்ளுதல்.

𑌪𑍍𑌰𑌭𑌾𑌯𑌾𑌸𑍍𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌸𑌮𑍀𑌪𑍇 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌧𑌿𑌕𑍍𑌯𑍇𑌨𑍌𑌷𑍍𑌣𑍍𑌯𑌾𑌧𑌿𑌕𑍍𑌯𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 [illegible], 𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾𑌶𑍌𑌷𑍍𑌣𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌤𑍍 । 𑌸𑌮𑌸𑍍𑌤𑌾 [illegible] 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇 [illegible] 𑌇𑌤𑌿 । 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌤𑌾 𑌹𑌿 𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌾 ॥

𑌯𑌥𑌾𑌹𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃— (𑌬𑍃-௬-௫-௧௩) “𑌸 𑌯𑌥𑌾 𑌸𑍈𑌨𑍍𑌧𑌵𑌘𑌨𑍋𑌽𑌨𑌨𑍍𑌤𑌰𑍋𑌽𑌬𑌾𑌹𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑍋 𑌰𑌸𑌘𑌨 𑌏𑌵, 𑌏𑌵𑌂 𑌵𑌾 𑌅𑌰𑍇𑌽𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌨𑌨𑍍𑌤𑌰𑍋𑌽𑌬𑌾𑌹𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌘𑌨 𑌏𑌵” (𑌬𑍃-௪-௪-௧௨) “𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌘𑌨 𑌏𑌵” (𑌬𑍃-௬-௩-௬) “𑌅𑌤𑍍𑌰𑌾𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌸𑍍𑌵𑌯𑌂𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿” “𑌨 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌪𑌰𑌿𑌲𑍋𑌪𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇” (𑌬𑍃-௬-௩-௩௦) “𑌅𑌥 𑌯𑍋 𑌵𑍇𑌦𑍇𑌦𑌂 𑌜𑌿𑌘𑍍𑌰𑌾𑌣𑍀𑌤𑌿 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾” (𑌛𑌾-௮-௧௨-௪) “𑌕𑌤𑌮 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌯𑍋𑌽𑌯𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌹𑍃𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃” (𑌬𑍃-௬-௩-௭) “𑌏𑌷 𑌹𑌿 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌰𑌸𑌯𑌿𑌤𑌾 𑌘𑍍𑌰𑌾𑌤𑌾 𑌮𑌨𑍍𑌤𑌾 𑌬𑍋𑌦𑍍𑌧𑌾 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃”(𑌪𑍍𑌰𑌶𑍍𑌨-௨-௪-௯) “𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌰𑌮𑌰𑍇 𑌕𑍇𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌤𑍍” (𑌬𑍃-௪-௪-௧௪) “𑌜𑌾𑌨𑌾𑌤𑍍𑌯𑍇𑌵𑌾𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃” “𑌨 𑌪𑌶𑍍𑌯𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌨 𑌰𑍋𑌗𑌂 𑌨𑍋𑌤 𑌦𑍁𑌃𑌖𑌤𑌾𑌮𑍍”(𑌛𑌾-௭-௨௬-௨) “𑌸 𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃” (௬-𑌛𑌾-௮-௧௨-௩) “𑌨𑍋𑌪𑌜𑌨𑌂 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂” (𑌪𑍍𑌰𑌶𑍍𑌨-௨-௬-௫) “𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌰𑌿𑌮𑌾𑌃 𑌷𑍋𑌡𑌶𑌕𑌲𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯𑌣𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿”(𑌤𑍈-௪-௧) “𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍋𑌮𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌰 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌃 ”— 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 । 𑌸𑍂𑌤𑍍𑌰𑌕𑌾𑌰𑌶𑍍𑌚(𑌶𑌾𑌰𑍀-௨-௩-௧௮-𑌸𑍂) “𑌜𑍍𑌞𑍋𑌽𑌤 𑌏𑌵” 𑌇𑌤𑌿 ॥

ஸ்ரீபாஷ்யம்—

தீபத்திலும் அவயவிப்ரதிபத்தியானது ஒருபொழுதும் உண்டாகாது. சிதறுதலை ஸ்வபாவமாகக்கொண்ட அவயவங்களுடன்கூடின தீபங்கள்நான்கு அங்குலங்கள்அளவு தவறுமல் பிண்டாகாரங்களாக இருந்துகொண்டு மேலே கிளம்பி அதற்குப்பிறகு ஒரே ஸமயத்திலேயே குறுக்காகவும மேலாகவும் கீழாகவும் ஒரே மாதிரியாக சிதறு நின்றுகொண்டு நாற்புறங்களிலும் பரவு கின்றனவென்று சொல்வதற்கு சக்யமல்ல. ஆகையால் சிறந்த காரணங்கள் வரிசைக்ரமமாகத் தோன் றுந்தருணத்தில் உண்டாவதாலும் அவைகள்

நாசமடையும்ஸமயத்தில் நசிப்பதாலும் ப்ரபையோடு கூடியவைகளாகவே தீபங்கள் கூடணங்தோறும் தோன்றி விநாசமடைகின்றனவென்று அறியப்படுகிறது. அக்நி முதலியதற்கு ஔஷ்ண்யம் முதலியதுபோல ப்ரபைக்கு தனக்கு ஆச்ரயவஸ்துஸமீபத்தில் ப்ரகாசாதிக்யம் உஷ்ணாதிக்யம் இது முதலியது உபலப்தியினால் வ்யவஸ்தை செய்யத்தக்கது. இவ்வண்ணம் ஆத்மா சித்ரூபனாகவே இருந்துகொண்டு சைதன்யகுணமுள்ளவன். சித்ரூபனைதயன்றோ ஸ்வயம்ப்ரகாசனை.

உபபாதக ச்ருதிகளாவன—எவ்வாறு உப்புக்கட்டியானது உள்ளிலும் வெளியிலும ரஸத்தில் அல்லது ருசியில் வ்யத்யாஸமின்றி எல்லாம்ரஸகனமாகவே இருக்கிறதோ இவ்வண்ணமே ※ இந்த ஆத்மா உள்ளங்கம் வெளியங்கமின்றி முழுமையும ப்ரஜ்ஞாநகனனே, விஜ்ஞாநகனனே. இந்த இடத்தில் இந்த புருஷன ஸ்வயம் ஜ்யோதிஸாக இருக்கிறான். விஜ்ஞாதாவான ஆத்மாவின் ஜ்ஞாநத்திற்கு அழிவில்லை எவன் இதை முகர்கிறேனென்று எண்ணுகிறானோ அவனஆத்மா. எவன் ஆத்மா—யாதொருவன் விஜ்ஞாநமயனாக பிராணனகளிலும் ஹ்ருதயத்தினுள்ளும் ஜ்யோதிர்மய புருஷனாக இருக்கிறானோ. இவனன்றோ பார்ப்பவன, கேழ்ப்பவன், ருசிபார்ப்பவன், முகர்கிறவன், மநநஞ் செய்பவன், அறிகிறவன், செய்கையுடையவன், விஜ்ஞாநஸ்வரூபியான புருஷன். விஜ்ஞாதாவான ஆத்மாவை எதினால அறியலாம் இந்தப்புருஷன் அறியவே அறிகிறான் பரமபுருஷனைப் பார்ப்பவன் ஸம்ஸாரத்தைப் பார்க்கிறதில்லை ரோகத்தையும் பார்க்கிறதுமில்லை. துக்கத்தையும் பார்க்கிறதில்லை. அவன் உத்தமனான புருஷன். உத்பத்தி ஸ்திதி விநாசங்களுள்ள இந்தசரீரத்தை நினைக்கிறதில்லை. இவ்வண்ணமே பரமபுருஷ ஸாக்ஷாத்காரம்பெற்று இருப்பவனான இந்த முக்தாத்மாவுக்கு முக்திதசையில் பரமபுருஷனை அடைந்து ஜீவனுடைய ஸங்கல்பத்தைச் சார்ந்த ஸ்வரூப,ஸ்திதி, ப்ரவ்ருத்திகளுடன்கூடின இந்த § பதினாறுகலைகள் நாசமடைகின்றன. அந்தஇந்த மனோமயனைக் காட்டிலும் விஜ்ஞாநமயனாகவும் ஹ்ருதயமத்யத்திலிருப்பவனுமான ஜீவாத்மா வேறாக இருக்கிறான் இதுமுதலியவைகள். ஸூத்ரகாரரே சொல்லப்போகிறார் "ஜ்ஞோzத ஏவ" என்று.

---

※ அநந்தர:—அபாஹ்ய:, என்கிற இடத்தில் அர்த்தமிவ்வாறு சொல்லத்தக்கது. அதாவது— ரஸகனமாக இல்லாத அந்தரங்கங்களில்லாதவன. ரஸகனமாக இல்லாத பாஹ்யாங்கங்களிலலாதவன. முற்றிலும் ரஸகனன் என்று பொருள். இரண்டிடத்திலும் விசேஷதிககதக்கவைகள ரஸகுணயாங்கஙகள.

§ பதினாறுகலைகளாவன—(1) ப்ராணன், (2) ச்ரத்தை, (3) ஆகாயம், (4) வாயு, (5) ஜ்யோதிஸ், (6) ஜலம், (7) பூமி; (8) இந்த்ரியம், (9) மனஸ், (10) அன்னம் (11) வீர்யம், (12) தபஸ் (13) மந்திரங்கள், (14) கர்மங்கள், (15) உலகங்கள் (16) உலகத்திலுள்ளபெயர்கள். இவைகளுடைய விஸ்தாரங்களை ப்ரச்னோபநிஷத்தில் காண்க.

ச்ருதப்ரகாசிகை—

வேறு தூஷணத்தை உரைக்கிறார்— தீபேபி என்று. அவயவி ப்ரதிபத்தியின் அநுபபத்தியை உபபாதிக்கிறார்—நஹி என்று தீபமானது சிதருதலே ஸ்வபாவமாகக் கொண்டதா? அல்லது ஸ்திரஸ்வபாவமுள்ளதா? சிதருதல் ஸ்வபாவமென்று சொல்லும் பக்ஷத்தில் பிண்டீபாவமானது $ மூர்த்த த்ரவ்யத்தை ப்ரதிபந்த காரணமாகக்கொண்டதாக ஆகும். ஸ்திரஸ்வபாவமுள்ளதென்று சொல்லும்பக்ஷத்தில் சிதருதலானது மூர்த்த த்ரவ்யத்தின் விநாசத்தை ஹேதுவாகக்கொண்டதாக ஆகும். இங்கு இரண்டும் அநுபலம்பத்தால் அடிபட்டது. விசரணம் ஸ்வபாவ ஸித்தமாக இருக்க பிண்டாகாரமானது வாயுவினால் உபபன்னமாகிறதென்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது காற்றில்லாத இடத்தில் பிண்டீபாவமானது இல்லாமல் போகவேண்டியதாக ஆகும். அசைவற்ற ஸூக்ஷ்மவாயுவினால் பிண்டீபாவமென்று சொல்லப்படுமேயாகில் சிதருதல் உண்டாகாது. அதுவும் ஸூக்ஷ்மவாயுவினாலென்று கூறப்படுமேயாகில் ஒன்றுக்கே விருத்தமான இரண்டு ஸ்வபாவங்கள் பொருந்தாதாதலால் பிண்டீபாவத்திற்கும் விசரணத்திற்கும் ஹேதுவான இரண்டு வாயுக்கள் ஒப்புக்கொள்ளத்தக்கவைகள். அவ்விரண்டுகளும் அந்யோந்யகாதகங்களாதலால் இரண்டுக்குள் ஒன்றுபோனால் பிண்டீபாவமேயோ விசரணமேயோ உண்டாகவேண்டியதாகும். அதை பரிஹரிப்பதின் பொருட்டு ஒன்றினால் மற்றொன்று தடைபட்டு விருத்தஸ்வபாவங்களுள்ள இரண்டு வாயுக்களின் பரம்பரையினால் ஸாமீப்யம் விலக்கம் இவைகள் கல்பிக்கப்படுமேயாகில் கௌரவம் உண்டாகும். அப்படி கல்பித்தபோதிலும் குறுக்காகச்செல்லுகிற ஸ்வபாவமுள்ளவைகளும் * ப்ரேரணமாத்ரத்திற்கு ஹேதுக்களாகவுமிருக்கிற வாயுவின் அவயவங்களுக்கு நாற்புறங்களிலும் ப்ரதிபந்தகத்வமில்லாமையால் பிண்டீபாவம இல்லாமல்போகவேண்டியதாகும்.

அய்யா! வெப்பத்தினால் உருகிப்போயிருக்கிற பார்த்திவாயவங்களின் திடமான ஸம்யோகத்தால் பிண்டீபாவம். அதினால் அதின் அவயவங்களை அடைந்திருக்கிற பசையின் அழிவினால் பிடிப்பு இல்லாமையால் அக்கியின் அவயவங்களின் ¶ விசரணம் என்று சொல்லப்படுமேயாகில்கூறுகிறார்—நஹி விசரண என்று. அக்கியின் அவயவங்கள் மேலே செல்வதை ஸ்வபாவமாக உடையவைகளாக இருக்குமேயாகில் அப்பொழுது சிதரும்பொழுது; குறுக்காகச் செல்லுதலுண்டாகாது அந்த அகனியின் அவயவங்கள் குறுக்கானகதியை ஸ்வபாவமாக உடையவைகளாக இருக்குமேயாகில் அப்பொழுது முதலில் மேல்நோக்கிச்செல்லுதல் இல்லாமல்போகவேண்டியதாக ஆகும். ஏகஜாதீயமான த்ரவ்யத்திற்கு உபாதி இல்லாவிடில் விருத்த ஸ்வபாவங்கள் பொருந்தாதாதலால். உபாதியோ காணப்படவில்லை. தீபம ப்ரபை இவைகள் இரண்டும் வெவ்வேறான அவயவகளென்று சொல்லப்படும்பக்ஷத்திலோவென்றால் விருத்த ஸ்வபாவத்வம் உபபன்னமாகிறது. மேலும் நான்கு அங்குலம் முதலிய அளவினது தாரதம்யத்திற்கு நியாமகமும் இல்லை. சிதருதலில் பக்கத்திலும் சிதருதல் ஸம்பவிக்கிறது. நாலாபக்கங்களிலும் ஒரேஸமயத்தில் சிதருவதற்கு நியாமகமில்லாமையால் என்று அபிப்ராயம். மேலும் சிதருகின்ற அவயவங்களுக்கு புழுதிகளுக்குப்போல தவறாமல் நேரான ப்ரஸரணத்தில் ஹேதுவில்லை. ப்ரஸரணத்திற்கு ♆ ஆர்ஜவநியமமானது மறைக்கிற பதார்த்தத்தைக்குறித்து ருஜுவான தேசத்திலேயே சாயையின் ஸம்பந்தத்தால் அறியப்படுகிறது. சாயையின் விஸ்தாரமோவென்றால் தடுக்கப்படுகிற ரச்மிகளின் பெரிதான

$ மூர்த்தம்—க்ரியாச்ரயமாக இருப்பது. * ப்ரேரணம்—தள்ளுதல் அல்லது தூத்துதல். ¶ விசரணம்—சிதறுதல். ♆ ஆர்ஜவம்—நேராக இருத்தல், நியமம்—தவறாமலிருத்தல்.

அக்ரபாகங்களால் உண்டுபண்ணப்படுகிறது. அநார்ஜவத்தால் உண்டுபண்ணப்பட்டதல்ல. சாயையின் ¶ கௌடில்யமோ வென்றால் மறைக்கிறவஸ்துவின் கௌடில்யத்தினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதே ஒழிய ப்ரஸரணத்தின் † அநார்ஜவத்தால் செய்யப்பட்டதல்ல. அதுவும் ருஜுவான ப்ரஸரணத்திற்கு ஸாதகம். அவயவங்கள் சிதருகின்றன வென்கிற பக்ஷத்தில் ரச்மிகளுக்கு புழுதிகளுக்குப்போல காத்தினால் அடித்துக்கொண்டுபோகப்படாமலிருத்தல் பொருந்தாது. கிழக்கு ஜாலகத்தினால் வெளிப்பட்டிருக்கிற ப்ரபையானது தென்றல் காற்றினால் அடித்துக்கொண்டுபோகப்படுகிறதில்லை யன்றோ. அப்படி இல்லாவிட்டால் புழுதிகளுக்கும் அதில்ப்ரோணமில்லாமை ப்ரஸங்கிக்கும். ஜன்னலின்வழியாய் வெளிப்பட்டிருக்கிற ப்ரபையானது காத்தினால் அடித்துகொண்டுபோகப்படாமலிருக்கிற தென்பது அதற்கு அப்புறத்திலுள்ள சுவர் முதலியதில் ப்ரபையின் சேர்க்கையினாலேயே அறியப்படுகிறது. ஆகையால் வில்லில் இழுத்துக் கட்டப்பட்டிருக்கிறநாண்கயிர்போல ப்ரபையானது சிதருகிறஅவயவமல்ல.

அதினாலென்னவென்று கேட்கில் சொல்லுகிறார்—அதஸ்ஸப்ரபாகா ஏவ தீபா: ப்ரதிக்ஷணமுத்பன்னா: என்று. தேஜஸானதால் மணி முதலியதின் விநாசத்தை ஒப்புக்கொள்ளில் அதிப்ரஸங்கம் வருவதால். விசாரணத்தைவற்றுக்கொண்டால் பிண்டபாவம் ஒரேஸமயத்தில் நாலாபக்கங்களிலும் விசரணம், ருஜுப்ரஸரணம், முதலிய அனேக நியமவ்யவஸ்தாபகமில்லாமையாலும எப்படி காணப்பட்டதோ அப்படி ஒப்புக்கொள்வதில் விரோதமில்லாமையாலும. தீபங்கள் ப்ரபையோடுகூடியவைகளாகவே ப்ரதிக்ஷணம் உண்டாகின்றனவென்று அர்த்தம். அப்படியாகில் எவ்வாறு ஒவ்வொரு க்ஷணத்திலும் உத்பத்திவிநாசங்கள் என்று அபேக்ஷிவரின் எவ்வாறு மணிமுதலியவைகளுக்கும் ப்ரதிக்ஷணவிநாசமானது ப்ரஸங்கியாதோ அவ்வாறு தீபக்ஷணிகத்வத்தில் இரண்டுஹேதுக்களைச்சொல்லுகிறார்—புஷ்கலகாரணக்ரமோபநிபாதாத் தத்விநாசே விநாசாச்ச என்று. சேராமலிருக்கிற தண்டசகராதிகளின் வ்யாவ்ருத்தியின் பொருட்டு புஷ்கல சப்தம். வத்தியின் அவயவத்தோடு அக்நியின் ஸம்பந்தம் தீபஸாமக்ரீ என்பது முதன்மைவாய்ந்த வத்தியின் அவயவத்தோடு அக்நிஸம்பந்தத்தால் காணப்பட்டிருக்கிறது. ப்ரதமமானவத்தியின் அவயவத்தோடு அக்நி ஸம்யோகத்திற்கே காரணத்வம என்று சங்கிக்கத்தக்கதல்ல. கடாசியிலும நடுவிலுமுள்ள வத்தியின் அவயவங்களுக்குக்கூடஅக்நி ஸம்பந்தமுள்ளஸமயத்தில் தீபத்தின் உத்பத்தி காணப்படுவதால். ஆகையால் ஒவ்வொரு அவயவத்திலும் அக்நி ஸம்பந்தத்தால் புஷ்கலமான காரண பரம்பரை காணப்பட்டிருக்கிறதென்பதினால் ஒவ்வொரு அவயவந்தோறும் அக்நிஸம்யோகத்தால் தீபம் உண்டாகிறது. அதில ப்ரதிக்ஷணம் உத்பத்தி இருக்குங்கால் ஒரே ஸமயத்தில் அனேக தீபங்கள் காணப்படாததால் விநாசமும் ஸித்தம். ப்ரதிக்ஷண விநாசத்திற்கு தனித்து அநுமாபகம் கூறப்படுகிறது. தத்விநாசே விநாசாச்ச என்று வத்தியினது அவயவவிநாசத்திற்கு தீபவிநாச ஸாமக்ரீத்வமானது கடாசியான வத்தியின் அவயவவிநாசத்தில் காணப்பட்டிருக்கிறது இவ்வண்ணமாக விநாசகாரணாநுவ்ருத்திதர்சனத்தினால் ப்ரத்யவயவ விநாசத்தோடு தீபம் நசிக்கவே நசிக்கிறது. இவ்வாறாக உத்பத்தி விநாசஸாமக்ரிகளின் அநுவ்ருத்திகளால் ஒவ்வொரு க்ஷணத்திலும் அநுமிக்கப்படுகிறது என்று அர்த்தம்.

ப்ரபையானது சிதரின தீபம்முதலியவைகளின் அவயவங்களல்லாதபக்ஷத்தில் தீபஸமீபத்தில் அந்த ப்ரபைக்கு ஔஷ்ண்யத்தின் ஆதிக்யம் முதலியது எவ்வாறு?

¶ கௌடில்யம்—கோணலாக இருத்தல். † அநார்ஜவம்—கோணுதல்.

அவயவங்கள் சிதருகின்றன வென்கிற பக்ஷத்திலேயன்றோ அவயவங்களின் * பாஹுள்ய ‡ வைரள்யங்களால் ஔஷ்ண்யாதிக்யம் மாந்த்யம் முதலியது பொருந்துகிறது என்று சொல்லப்படுமேயாகில் சொல்லுகிறார்—ப்ரபாயா: என்று. 'ப்ரகாசாதிக்யம் ஔஷ்ண்யாதிக்யம் இத்யாதி'' என்கிற வாக்யத்திலுள்ள ஆதிசப்தத்தால் ஆச்ரய வஸ்துவுக்கு தூரதேசத்தில் ப்ரகாசமாந்த்யமும் ஔஷ்ண்யமாந்த்யமும் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. உபலப்தியினால் வ்யவஸ்தாபிக்கத்தக்க விஷயத்தில் த்ருஷ்டாந்தத்தைச்சொல்லுகிறார்—அக்ந்யாதீநாம் என்று. சொல்லப்பட்டதை தார்ஷ்டாந்திகத்தில் அதிதேசிக்கிறார்—ஏவம் என்று. சித்ருபஏவ என்று ரூபசப்தம் தாமிஸ்வரூபபரம் அதினால் ஸ்வயம்ப்ரகாசத்வத்திற்கு என்னவென்று அம்பகைத்தவரின சித்ரூபத்வத்தை விவரிக்கிறார்—சித்ருபதாஹி என்று. இதனால் சொல்லப்போகிற ச்ருதிவாக்யத்தில் ஜ்ஞாநாதிசப்தம் விவரிக்கப்பட்டதாக ஆகிறது.

இவ்வண்ணம் அநுக்ராஹக தர்கத்தை உபந்யஸித்து ப்ரமாணத்தைக் கூறுகிறார்—ததாஹி ச்ருதய: என்று. 'ஸயதா ஸைந்தவகந:'என்று. அநந்தர: அந்தரங்கவ்யதிரிக்தன் அபாஹ்ய: பஹிரங்கவ்யதிரிக்தன். இவ்வாறு வ்யதிரேக நிர்தேசத்தால் நிச்சேஷ க்ரஹணம் செய்யப்பட்டது. அதையே சொல்லுகிறார்—க்ருத்ஸ்ந: என்று தார்ஷ்டாந்திகவிஷயமான பாஹ்யசப்தம் தர்மிபரம். அநந்தரசப்தம் தர்மபரம். க்ருத்ஸ்நசப்தம் அவ்விரண்டுகளில் ஒரு அம்சம் ஜடமாக இருக்குமோ என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக. இங்கு எல்லா இடத்திலும் ஏகரூபயமே த்ருஷ்டாந்தோப ஜீவ்யம் வேறு அல்ல த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திக விஷய வாக்யங்கள் இரண்டிலும் அநந்தர: அபாஹ்ய: என்றல்லவோ கூறப்பட்டது. சரீரித்வாவஸ்தையிலும் ஜ்ஞாநாத்மகத்வபரமானவாக்யத்தை உபாதானம் செய்கிறார் — விஜ்ஞாநகந ஏவ என்று. கநசப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிற நைரந்தர்யத்திற்கு ஜடாம்சத்தின கலப்பை ஏவகாரம் வ்யாவ்ருத்திக்கிறது. ஜ்ஞாநத்வமாவது ஸ்வயம்ப்ரகாசத்வம் என்று ஜ்ஞாபிப்பதற்காக இந்த இடத்தில் அயமென்று வாக்யமெடுக்கப்பட்டது. தர்மதாமிபாவத்தை ஜ்ஞாபிக்கிறார்—நவிஜ்ஞாது: என்று- ஜ்ஞாத்ருஸம்பந்தியான ஜ்ஞாநத்திற்கு நித்யத்வம் சொல்லப்பட்டால் ஜ்ஞாநஸாமானயத்திற்கு நித்யத்வசங்கைவர அதைப் போக்குவதற்காக ஜ்ஞாதாவுக்கே ஆத்மத்வத்தைக் காண்பிக்கிறார்—அத ய: என்று. ஜ்ஞாநகுணகத்வம் ஸ்வயம்ப்ரகாசத்வம் இரண்டையும் சேர்த்து ப்ரதிபாதிக்கிற வாக்யத்தைக் கூறுகிறார்—கதம: என்று. ஜ்ஞாநகுணகத்வ ஜ்ஞாநஸ்வரூபத்வ ப்ரதிபாதக வாக்யத்தைக்கூறுகிறார்—ஏஷஹி என்று அறியத்தக்க நிஷ்க்ருஷ்டமான ஆத்மஸ்வரூபத்திற்கு ஜ்ஞாத்ருத்வத்தைச்சொல்லுகிறார்—விஜ்ஞாதாரம் என்று. இதனால் ஜ்ஞாத்ருத்வம் ஸ்வாபாவிகமென்று பலித்தது. ஸம்ஸாரதசையில் மாத்திரமல்ல. முக்தியிலும் ஜ்ஞாத்ருத்வத்தை ஜ்ஞாபிக்கிறார்—ஜாநாத்யேவாயம் என்று. அவதாரணத்தின் ஸங்கோசமில்லாமையால் முக்தியிலும் ஜ்ஞாத்ருத்வம் ஸித்திக்கிறது. முக்தியில் ஜ்ஞாநத்தை நிஷேதிக்கிற ச்ருதிகளுக்கு விஷயங்களின் பாகுபாட்டைக் காண்பிக்கிறார்—ந பச்ய. என்றும் ஸ உத்தம: என்றும் புருஷனை அடைந்திருக்கிற முக்தனுக்கு ஜ்ஞாத்ருத்வமானது அனுவர்த்தித்துக்கொண்டிருக்கும்பொழுதே தேஹேந்த்ரியங்களுடைய நாசத்தைக் காண்பிக்கிறார்— ஏவம் என்று. அந்தக்கரணத்தைக்காட்டிலும் மேலானவனுக்கு ஜ்ஞாத்ருத்வத்தைக் காண்பிக்கிறார்—தஸ்மாத் வா என்று.

---

* பாஹுள்யம்—அதிகமாயிருத்தல். ‡ வைரள்யம்—ஸ்வல்பமாகயிருத்தல் அல்லது இடைவெளியோடு கூடியிருத்தல்.

இந்த அர்த்தம் ஸூத்ரகாரரால் கருதப்பட்டிருக்கிறதென்பதைக்கூறுகிறார்— வக்ஷ்யதி ச என்று. மூர்த்தி ஸூத்ரத்தை எடுத்தது அஹமர்த்தத்திற்கு ஆத்மத்வம் ஸூத்ரகாராபிமதமென்பதைத் தெரிவிப்பதற்காக. இந்த இடத்தில் உபாதானமானது ஜ்ஞாந குணகத்வ ஜ்ஞாநஸ்வரூபத்வங்களைச் சொல்லுகிற ச்ருதிகளுக்கு அவிரோதம் ஸூத்ரகாராபிமதமென்று தெரிவிப்பதற்காக ஜ்ஞாநமாக இருத்தலால் ஜ்ஞாநம் ஜ்ஞாநாந்தராச்ரயம் அல்லவென்று சொல்லப்படுமேயானால் வ்யாப்த்யநுரோதத்தால்* இவ்வாறு சொல்லப்படுமேயாகில் அப்பொழுது தர்மமாக ஸ்வீகரிக்கத்தக்கது. ச்ருதிபலத்தினால் ஸ்வதந்த்ரமாக ஸ்வீகரிக்கப்படுகிறதேயாகில் அப்பொழுது ச்ருதிபலத்தினாலேயே ஜ்ஞாநாச்ரயத்வம் அங்கீகரிக்கப்படலாம். ஜ்ஞாநாச்ரயத்வமானது தர்மபூத ஜ்ஞாநத்வ ப்ரயுக்தமாதலால் வியாப்தி விரோதமில்லை.

---

அத: ஸ்வயம்ப்ரகாசோऽயமாத்மா ஜ்ஞாதைவ, ந ப்ரகாசமாத்ரம்। ப்ரகாசஸ்யைவ கஸ்யசித் ஸதோ தீபாதிப்ரகாசவத்। தஸ்மாந்நார்ஹதி ஸம்விதாத்மத்வம் । ஸம்விதநுபூதிஜ்ஞாநாதிசப்தா: ஸம்பந்திசப்தா இதி ச சப்தார்த்தவித: । நஹி லோகவேதயோ: ஜாநாத்யாதே: அகர்மகஸ்ய அகர்த்ருகஸ்ய ச ப்ரயோகோ த்ருஷ்ட: ॥

---

**ஸ்ரீபாஷ்யம்—**

ஆகையால் ஸ்வயம் ப்ரகாசனான இந்தஆத்மா ஜ்ஞாநாச்ரயனே ப்ரகாச மாத்திரமல்ல ப்ரகாசஸ்வரூபனாக இருப்பதினாலேயே தீபம் முதலியவற்றின் ப்ரகாசம்போல் ஒரு வஸ்துவினுடையதாகவே ப்ரகாசம் இருக்கவேண்டும். ஆதலால் ஸம்வித்தானது ஆத்மாவாக இருப்பதற்குத் தகுதியுள்ளதல்ல. ஸம்வித், அநுபூதி, ஜ்ஞாநம், முதலிய சப்தங்கள் ஸம்பந்தி சப்தங்களென்றும் சப்தார்த்தங்களை அறிந்தவர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். உலகத்திலும் வேதத்திலும் கர்ம கர்த்தாக்களில்லாத "ஜாநாதி" முதலிய தாதுக்களின் ப்ரயோகம் முன்காணப்படவில்லை.

---

**ச்ருதப்ரகாசிகை.—**

ச்ருதியினால் ஜ்ஞாத்ருத்வ ஸ்வயம்ப்ரகாசத்வ ஸித்தியை நிகமனம் செய்கிறார்—அத: என்று. அய்யா ! நான் குடத்தை அறிகிறேன், என்கிற இடத்தில் ஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாதாவினுடைய ஸம்பந்தம் கொடுக்கப்படுகிறதென்று ஒப்புக்கொள்ளத்தக்கது. அப்படி இல்லாவிட்டால் ஸ்வஜ்ஞாந பரஜ்ஞாந விபாகத்திற்கு துர்க்ரஹத்வ ப்ரஸங்கம் வருவதால். தன்ஸம்பந்தமுள்ளதாக அறியப்பட்டிருக்கிற ஜ்ஞாநமானது ஸம்பந்தத்தின்

---

* அநுரோதம்—அநுஸரித்தல்.

ப்ரதீதியில்லாவிடில் எவ்வாறு ஸ்வஜ்ஞானமென்று வ்யவஹரிக்கப்படும்? அதனால் தன் ஸம்பந்தம் அறியப்படவே அறியப்படுகிறது. அந்த ப்ரதீதியானது அஹமர்த்தத்தால் உண்டாகிறதில்லை. அஹமர்த்தமானது ப்ரத்யக்காகவும் அனுகூலமாகவும் ஏகமாகவும் தானாக ப்ரகாசிக்கிறது. அஹமர்த்தமானது அர்த்தாந்தரத்தை விஷயீகரிப்பதற்கு ஸாமர்த்திய முள்ளதல்லவென்றல்லவோ உங்களுடைய கொள்கை. ஆகையால் தர்மபூத ஜ்ஞானத்தினாலேயே ஸம்பந்தத்தின் ப்ரதீதி. ஸம்பந்தமும் ஸம்பந்தி வஸ்துத்வயமில்லாவிடில் அறியப்படுகிறதில்லை என்பதினால் ஜ்ஞாத்ருஜ்ஞானங்கள் இரண்டுக்கும் ஸம்பந்த ப்ரகாசகமான ஜ்ஞானாந்தர வேத்யத்வம் வரும். அதனால் ஸ்வதோவபாஸம் ஜ்ஞானாந்தரத்தால் அவபாஸமென்கிற இரண்டு அவபாஸங்களில்லாமையால் ஜ்ஞானாந்தரத்தாலேயே ப்ரகாசிக்கத்தக்கதாக இருப்பதால் ஸ்வப்ரகாச்யத்வம் ஸித்தியாமையால் ஜ்ஞாதாவுக்கும் ஜ்ஞானத்திற்கும் ஜடத்வம் வரும். மேலும் ஜ்ஞானாந்தரத்தினால் ஸம்பந்த ப்ரதீதியானது அவச்யம் வரததக்கதாக ஆகுமேயானால் ஸம்பந்த விஷயஜ்ஞானத்தோடு கூட ஜ்ஞாத்ரு ஸம்பந்தத்திற்கும் ஜ்ஞானாந்தரத்தால் ப்ரதீதியின் அவச்யம் பாவத்தால் ஸம்பந்த ஜ்ஞானபரம்பரை ப்ரஸங்கிக்கும். அவச்யம்பாவாபாவத்தில் எல்லாஜ்ஞானங்களிலும் அஹம ஜானாமி என்று ஜ்ஞானஜ்ஞாத்ரு ஸம்பந்த ப்ரதீதியானது உண்டாகாது. இவ்வண்ணமல்ல. ஸ்வயம்ப்ரகாசப்ரத்யக்ஷத்தினாலேயே ஸம்பந்தப்ரதீதி வருவதால் நியதமான விசேஷணவிசேஷ்யபாவமல்லவோ ஸம்பந்தம். அஹமர்த்தமானது தன் விசேஷ்யதையையே ஸ்வபாவமாகக்கொண்டதாக ப்ரகாசிப்பிக்கிறது. தர்மபூதஜ்ஞானமும் தன் ஸ்வரூபத்தை விசேஷணதையையே ஸ்வபாவமாகக்கொண்டதாக ப்ரகாசிப்பிக்கிறது விசேஷண விசேஷ்யபாவதிற்கு பரஸ்பர ப்ரதியோகித்வமும் ஜ்ஞாதா ஜ்ஞானம் இவ்விரண்டினுடைய சேர்ந்திருததலாலேயே அறியப்படுகிறது.

அய்யா! ஸம்பந்த ப்ரதீதியில் ஸம்பந்திகளுடைய ஸஹாவபாஸமும் ஒரு ஜ்ஞானத்தினால் அறியத்தக்கதென்கிற தன்மை இல்லாவிடில் பொருந்துகிறதில்லை. ஆதலால் ஜ்ஞாத்ரு ஜ்ஞானங்கள் இரண்டுக்கும் ஜ்ஞானாந்தரவேத்யத்வம் ஸம்பவிக்கவேண்டிவரும். ஸுரபி புஷ்பம், இது முதலிய ஸதலத்தில் வேறான ஸாமக்ரிகளால் அறியத்தக்கதாக இருந்தபோதிலுங்கூட கந்தம் புஷ்பம் இரண்டும் ஸம்பந்த ப்ரதீதிவேளையில் ஒரு ஜ்ஞானத்தினால் அறியத்தக்கதன்மையல்லவோ காணப்படுகிறது என்று சொல்லப்படுமேயாகில், அல்ல. அந்த இடத்தில் ஸம்பந்திகளுக்கு ஸம்பந்தத்தோடுகூட ஏக ஜ்ஞான கம்யத்வத்திற்கு ஸஹாவபாஸ ப்ரயுக்தத்வமில்லாமையால் ஸம்பந்திகளுக்கு அந்த இடத்தில் ஏக ஜ்ஞான கம்யத்வம் ஜடதவ ப்ரயுக்தமன்றோ, இந்த இடத்தில் ஸ்வப்ரகாசத்வத்தால் தானாகவே சேர்ந்து அவபாஸிக்கின்ற ஜ்ஞாதருஜ்ஞானங்கள் இரண்டுக்கும் விசேஷண விசேஷ்யதைகஸ்வபாவத்வரூப ஸம்பந்தக்ரஹமானது ஜ்ஞானாந்தரத்தை அபேக்ஷியாமல் உபபன்னமாகிறது. ஆதலால் ஸம்பந்தாக்ரஹஸ்வபர ஜ்ஞானவிபாகாபாவ ஸம்பந்தஜ்ஞானபரம்பராப்ரஸங்கங்கள் தூரததில் ஓட்டப்பட்டன. இவ்வாறாக ஜ்ஞாத்ருத்வஸ்வயம்ப்ரகாசத்வோபபாதனத்தினால் "சின்மாத்ர வ்யதிரிக்தத்வாத்" என்கிற ஜடதவ ஸாதகஹேதுவானது நிரஸிக்கப்பட்டதாக ஆகிறது. ஜ்ஞானவ்யதிரிக்தமாதலால் ஜடத்தைச் சொல்பவனால் ஸ்வயம் ப்ரகாச வ்யதிரிக்ததவம் ஹேதுவாக சொல்லப்பட்டதா? அல்லது விஷயப்ரகாசாந்யத்வமா? முதல் பக்ஷத்தில் ஸாத்யாவிசிஷ்டத்வம் இரண்டாவது பக்ஷத்தில் பிரஹ்மததினிடத்தில் வ்யபிசாரம், ச்ருதிமுதலியதின் @ பாதமும்.

---

@ பாதம் — ஸாத்பாபாவமுள்ள பக்ஷம்.

அப்படிக்கின்றி ஸாச்ரயத்வ விஷயத்தில் தர்க்கத்தைக்கூறுகிறார்— **ப்ரகாசத்வா தேவ** என்று. ப்ரகாசத்வாத் - விஷயத்தோடு நேராக ஸம்பந்தித்து நேராகவோ பரம்பரையாகவோ அறியப்படாமலின்றிருப்பதுபற்றி § அபரோக்ஷ வ்யவஹாராநுகுண்யத்திற்கு ஹேதுவாக இருப்பதாலென்று பொருள். இதனால் ஸ்வரூபபூதமான ஜ்ஞானேந்த்ரியலிங்காதிகளுக்கு வ்யாவ்ருத்தி ஸித்தித்தது. வேறுஹேதுவையும் சொல்லுகிறார்—**ஸம்விதநுபூதி** என்று. ஸம்பந்திசப்தத்வம் சப்தஸ்வபாவாதீநமென்று ஸந்தேஹித்துச் சொல்லுகிறார்—**நஹி லோகவேதயோ:** என்று. எந்த இடத்தில் அர்த்த ஸ்வரூபத்திற்கு வேறுபாடு காணப்படுகிறதோ அந்த இடத்தில் சப்தஸ்வபாவத்திற்கு அதீனமாக இருத்தல் ஆச்ரயிக்கத்தக்கது. 'தாரா:" இதுமுதலிய இடங்களில் பஹுத்வம் முதலியவற்றுக்குப்போல. எங்கே வேறுபாடில்லையோ அந்த இடத்தில் அர்த்த ஸ்வபாவாயத்தத்வமே. எப்படி பார்யா இது முதலியவைகளில் ஏகத்வம் முதலியவற்றுக்கோ, அப்படியே லோகவேதங்களில் ஸகர்மகர்த்ருத்வம் காணப்படுவதால் ஸம்பந்திசப்தத்வமானது அர்த்த ஸ்வபாவாயத்தமே என்று அபிப்ராயம். அன்றிக்கே கர்மகர்த்ருஸம்பந்தித்வம் வ்யுத்பத்தி நிமித்தமாக இருக்கட்டும், ப்ரவ்ருத்திநிமித்தமல்ல, அதோ ஜ்ஞப்திமாத்ரமென்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்—**நஹிலோக** என்று. ப்ரவ்ருத்தி நிமித்தாந்தர கல்பனம் ப்ரயோகாதீனமன்றோ. ப்ரயோகமும் ஸம்பந்தியிலேயே ஆதத மென்பதினால் அர்த்தாந்தர கல்பனை ஸம்பவியாது. ஸ்வரூபபூதஜ்ஞானவாசி சப்தங்களுக்கு ஸம்பந்தி சப்தத்வமானது உன்மதத்திலும் உபபன்னமாகாதென்று சொல்லப்படுமேயானால் அல்ல. ஸ்வரூபகோசரங்களும் ஸ்வயம்ப்ரகாசத்வத்தில் ரூடங்களுமான ஜ்ஞானாதிசப்தங்கள் அநுபூதி முதலிய சப்தங்களைக்காட்டிலும் வேறு சப்தங்களாதலால். ஆகையால் ஸம்பந்தி சப்தத்வோபதேசமோ வென்றால் தர்மபூதஜ்ஞானத்தில் அவகாசமுள்ளது. நம்முடைய மதத்தில் விஷயாச்ரய ஸம்பந்திஜ்ஞானத்திற்கே விஷயாச்ரய ஸம்பந்தபாதத்தால் நிராச்ரயத்வமும் நிர்விஷயத்வமும் ஒப்புக்கொள்வதால் உன்மதத்தில் ஸம்பந்தி சப்தத்வோபதேசம் ப்ரயோஜநமற்றதென்று கருத்து.

---

யத்த்வஜடத்வாத்ஸம்விதேவாத்மேதி ; தத்ரேதம் ப்ரஷ்டவ்யம்.
அஜடத்வமிதி கிமபிப்ரேதம் ?; ஸ்வஸத்தயைவ ப்ரகாஶமானத்வமிதி சேத்;
ததா ஸதி தீபாதிஷ்வநைகாந்த்யம் । ஸம்விததிரிக்தப்ரகாஶ்யமதா
நஹ்யநுபவமந்தரேணாவஸிதிவிரோதாயஸ்ய । அவ்யபிசரிதப்ரகாஶஸத்தாக
த்வமிதி ஸர்வாதிஷு வ்யபிசாராந்நிரஸ்தம் ॥

---

**ஸ்ரீபாஷ்யம்:—**

அஜடமாதலால் ஸம்வித்தே ஆத்மாவென்று எது சொல்லப்பட்டதோ அந்த விஷயத்தில் இது கேழ்க்கத்தக்கது. எது அஜடத்வமென்று எண்ணப்பட்டிருக்கிறது ? தன்னுடைய ஸத்தையினால் உண்டுபண்ணப்பட்ட ப்ரகாசத்துடன்கூடி இருத்தலென்று சொல்லப்படுமேயானால் அப்பொழுது

---

§ அபரோக்ஷம்—ப்ரத்யக்ஷம்.

தீபம் முதலியவைகளில் வ்யபிசாரம் வரும். ஸம்வித்தைக்காட்டிலும்வேறான ப்ரகாசதர்மத்தை ஒப்புக்கொள்ளாமையால். அஸித்தியும் விரோதமும் தவறாத ப்ரகாசமுள்ளஸத்தையோடுகூடி இருத்தலும் ஸுகம் முதலியவைகளில் வ்யபிசாரம் வருவதால் நிரஸிக்கப்பட்டது.

---

**ச்ருதப்ரகாசிகை—**

அதற்குமேல் ஜடமாக இருப்பதால் ஸம்வித்துக்கு ஆத்மத்வ ஸமர்த்தனத்தை தூஷிப்பதற்காக அநுவதிக்கிறார்—**யச்சோக்தம்** என்று. அஜடத்வமென்பது தன்னுடைய ஸத்தையினால் உண்டுபண்ணப்பட்ட ப்ரகாசத்வமா? அல்லது தவறாத ப்ரகாச ஸத்தையோடுகூடி இருத்தலா? அல்லது தனக்கு ப்ரகாசித்தலா? அல்லது தனக்குத்தான் ப்ரகாசித்தலா? அல்லது ஸ்வயம்ப்ரகாசத்வமா? என ஐந்து விதமான விகல்பத்தை அபிப்ராயப்பட்டு கூறுகிறார்—**அஜடத்வம்.** என்று. **கிமபிப்ரேதம்** என்று. 'அஹம்ஜாநாமி' என்கிற ப்ரத்யக்ஷபாதம் எல்லோருக்கும்பொதுவான தூஷணம். முதலில் ஸ்வஸத்தையினால் உண்டுபண்ணப்பட்ட ப்ரகாசத்வபக்ஷத்தை தூஷிப்பதற்காக சொல்லுகிறார்— **ஸ்வஸத்தா** என்று. ஸ்வஸத்தா ப்ரயுக்த: ப்ரகாச: யஸ்ய என்று பஹுவ்ரீஹிஸமாஸம் - சொல்லப்போகிற அஸித்தியின் தூஷணத்திற்கு உபயோகியான பேதத்தை ஜ்ஞாபிப்பதற்காக ஸ்வஸத்தாப்ரயுக்தசப்தம். அனைகாந்த்யத்தைச்சொல்லுகிறார்—**ததாஸதி** என்று. தன்பக்ஷத்தில் ஜ்ஞாதா ஆத்மாவாதலால் ‡ ஸபக்ஷமாக இருக்கிற அதிலும் $ விபக்ஷமாக இருக்கிற ஆத்மாவல்லாத தீபத்தினிடத்திலும் இருப்பதால். பக்ஷத்ரய வ்ருத்தித்வரூபமான அனைகாந்த்யம் கூறப்பட்டது. அந்யபக்ஷத்தில் அநியதத்வமே அனைகாந்த்யம் ஸபக்ஷமில்லாமையால் வேறு இரண்டு தூஷணங்களைக்கூறுகிறார்—**ஸம்விததிரிக்த** என்று. ஸம்வித் ப்ரயோஜிகை - ப்ரகாசம் ப்ரயோஜ்யம். அதைவிட அதிகமாக ஒன்றையும் ஒப்புக்கொள்ளாததால் அஸித்தி. ஒப்புக்கொள்ளில் நிர்விசேஷத்வ விரோதம். இந்த அஸித்தி விரோதங்கள் இரண்டும் விகல்பஸர்வசிரஸ்ஸாதாரணங்களாக அநுஸந்திக்கத்தக்கவைகள். அன்றிக்கே பக்ஷவிபக்ஷங்களிலேயே வர்தமாநத்வம் விரோதம். பக்ஷமாக ஆய் இருக்கிற ஸம்வித்திலும் விபக்ஷமான தீபம் முதலியதிலும் இருப்பதால். அன்யனுடைய மதத்தைமாத்ரம் பர்யாலோசனை செய்யுங்கால் விரோதம் கூறப்பட்டது. இந்த ஸ்வஸத்தாப்ரயுக்த ப்ரகாசத்வமென்கிற இடத்தில் ப்ரகாசசப்தத்தினால் நேராகவோ பரம்பரையாகவோ வ்யவஹாராநுகுண்யம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறதா? பரம்பரையினாலேயோ? அல்லது நேராகவேயா? என்று விகல்பம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. முதல் பக்ஷமானது ஸ்வபரதர்சன பர்யாலோசனையினால் கூறப்பட்டிருக்கிற அனைகாந்த்ய விரோதங்களுள் ஒன்றினால் நிரஸிக்கப்பட்டதாக ஆகிறது. இரண்டாவதிலோவென்றால் அஸிததிபரம்பரையினாலேயே வ்யவஹாராநுகுண்யமானது ஜ்ஞப்தியில் உபயவாதிகளுக்கும் அநபிமதமாதலால், மூன்றாவதில் ஸத்தையைவிட வேறான ப்ரகாசத்தின் அங்கீகாரத்தைக்காரணமாகக்கொண்ட அஸித்தியும் நிர்விசேஷத்வ விரோதமும் வருமென்று அபிப்ராயம். இரண்டாவது பக்ஷத்தை நிரஸிக்கிறார்—**அவ்யபிசரித** என்று. ந வ்யபிசரதி ப்ரகாச:யஸ்ய ஸத்தாயாம் ஸ: அவ்யபிசரித ப்ரகாச ஸத்தாக: -ப்ரயோஜ்ய ப்ரயோஜகத்வமில்லாமலிருந்த போதிலும் வித்யமானதசையில் எப்பொழுதும் ப்ரகாசித்தல் என்று அர்த்தம். அதற்கு ஆத்மத்வமில்லாமையால் ஸம்ப்ரதிபன்னங்களான ஸுகதுக்காதிகளில் வ்யபிசாரம் சொல்லப்பட்டது.

---

‡ **ஸபக்ஷம்**— நிச்சிதமான ஸாத்யமுள்ளது.
$ **விபக்ஷம்**— நிச்சிதமான ஸாத்யாபாவமுள்ளது.

யத்³யுச்யேத—ஸுகா²தி³வத³ஹமர்தோ²பி பரஸ்மை
ப்ரகாஶமாநதயா க⁴டாதி³வஜ்ஜட³த்வேநாநாத்மா—இதி । ஜ்ஞாநம் வா கிம்
ஸ்வஸ்மை ப்ரகாஶதே ? தத³பி ஹ்யந்யஸ்யைவாஹமர்த²ஸ்ய ஜ்ஞாது-
ரவபா⁴ஸதே, ஸுக²ம் ஸுகீ²வ ஜாநாம்யஹமிதி । அத: ஸ்வஸ்மை ப்ர
காஶமாநத்வரூபமஜட³த்வம் ஸம்வித்³யஸித்³த⁴ம் । தஸ்மாத் ஸ்வாத்மாநம் ப்ரதி
ஸ்வஸத்தயைவ ஸித்⁴யந்நஜடோ³ऽஹமர்த² ஏவாத்மா । ஜ்ஞாநஸ்யாபி
ப்ரகாஶதா தத்ஸம்ப³ந்தா⁴யத்தா । தத்க்ருʼதமேவ ஹி ஜ்ஞாநஸ்ய ஸுகா²
தே³ரிவ ஸ்வாஶ்ரயம் ப்ரதி ப்ரகடத்வம் ப்ரத்யந்யமப்ரகட
த்வம் । அதோ ந ஜ்ஞப்திமாத்ரமாத்மா, அபி து ஜ்ஞாதைவாஹமர்த²: ॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

ஸுகம் முதலியது தவளுத ப்ரகாசத்துடன் கூடியதாக இருந்தபோதிலும் அந்யனுக்கு ப்ரகாசிக்கிற ஸ்வபாவமுள்ளதாக இருப்பதால், கடம்முதலியதுபோல் ஜடமாதலால்ஆத்மாவல்லவென்று சொல்லப்படுமேயாகில்; ஜ்ஞாநம் தானுகட்டும் தனக்கு ப்ரகாசிக்கிறதா ? அதுவும் நான ஸுகமுள்ளவன் என்பதுபோல நான் அறிவுள்ளவனுக இருக்கிறேன என்று தன்னைக்காட்டிலும் வேருக இருக்கிற அஹமர்த்தமான ஜ்ஞாதாவுக்கே ப்ரகாசிக்கிறது. ஆகையால் தனக்கு ப்ரகாசித்தலென்கிற அஜடத்வமானது ஸம்வித்தில் அஸித்தம். ஆதலால் தன் ஆத்மாவைக்குறித்து தன் ஸத்தையினுலேயே ஸித்திக்கிற அஜடமான அஹமர்த்தமே ஆத்மா. ஜ்ஞாநத்திற்கும் ப்ரகாசதையானது அந்த ஆத்ம ஸம்பந்ததைச்சார்ந்திருக்கிறது. ஸுகம் முதலியவற்றுக்குப்போல ஜ்ஞாநத்திற்கு தனக்கு ஆச்ரயமான சேதனனைக்குறித்து ப்ரகடத்வமும் மற்றவனைக்குறித்து அப்ரகடத்வமும் அந்த ஆத்மஸம்பந்தத்காலன்றே உண்டு பண்ணப்பட்டிருக்கிறது. அதனுல் ஜ்ஞப்திமாத்ரமாத்மா வல்ல. பின்னையோ ஜ்ஞாதாவான அஹமர்த்தமே.

---

ச்ருதப்ரகாசிகை—

பிறகு அதின் பரிஹாரமுகத்தால் தனக்குத்தான் தோன்றுதலென்கிற பக்ஷத்தைத் தொடங்குகிருர்—யத்யுச்யேத என்று. பரிஹரிக்கிருர்—ஜ்ஞாநம்வா என்று. யாருக்கு என்று கேட்கில் கூறுகிருர்—தததபி என்று. பிறருக்குத்தோற்றுதலை உபபாதிக்கிருர்—அஹம்என்று. ஆகையால் இவ்விதஸ்வரூபமுள்ள அஜடத்வம அஸித்தமென்று சொல்லுகிருர்—அத: என்று. அதற்குமேல் நான்காவது பக்ஷத்தைதூஷியாநின்றுகொண்டு அஸித்தியைக்கூறுகிருர்—தஸ்மாத் என்று. ஸ்வயம்ப்ரகாசதவபக்ஷத்திலும் ஸ்வயம்ப்ரகாசத்வமாவது ஜ்ஞாநகர்மதை இன்றி வ்யவஹாரத்திற்கு அநுகுணமாக இருத்தலா அல்லது

ஜ்ஞாநாந்தரத்தை அபேக்ஷியாத ப்ரகாசத்வமா? என்று அபிப்ராயப்படப்பட்டிருக்கிற விகல்ப த்தில் முதன்மையான பக்ஷமானது 'தஸமாத்'' என்கிற கரந்தத்தால் தூஷிக்கப்பட்டது. இதா ஆத்மாக்களை விலக்குவதின் பொருட்டு ஸ்வாத்மாநம் என்று சொல்லப்பட்டது 'ஸ்வஸத்தயைவஸித்யந்' என்பதினால் ஸ்வயம் ப்ரகாசத்வம் சொல்லப்பட்டது. தனக்குத் தான் ப்ரகாசித்தல் அஹமர்த்தத்திற்கு அதிகம். தனபொருட்டு பாஸிக்கிற வஸ்துவுக்கு தானாக பாஸிக்கிற தன்மை இருக்கிறது என்கிற அபிப்ராயத்தால் ''ஸ்வாத்மாநம் ப்ர திஸ்வஸத்தயைவ'' என்று கூறப்பட்டது. அதனால் ஜ்ஞாநகர்மதை இன்றி வ்யவஹா ரா நுகுணத்வம் ஜ்ஞாதாவினிடத்திலுமிருக்கிறதாதலால அது ஸ்வபக்ஷத்தில் வ்யபிசார முள்ளது. விபக்ஷபூதமான ஆத்மாவான ஜ்ஞாதாவினிடத்திலும இருப்பதாலென்று காண்பிக்கப்பட்டது. ஜ்ஞாநாந்தரத்தை அபேக்ஷியாத ப்ரகாசம ஸம்வித்தில் அஸித்தம். அது ஸ்வரூபபூதஜ்ஞாநாதீநமாதலால் அஹமர்த்தத்திற்கே அது என்கிற அபிப்ராயமானது ''ஸத்தயைவ'' என்றதனால் ஸூசிப்பிக்கப்பட்டது. அதையே விவ ரிக்கிறார்— ஜ்ஞாநஸ்யாபி என்று. அதின் ஸம்பந்தாதீனதையை உபபாதிக்கிறார்— தத்க்ருதமேவஹி என்று ஜ்ஞாநஸ்புரணத்திற்கு ஆச்ரய ஸம்பந்தங்கூட ஸாமக்ரியில் உள்ளடங்கியது அஜடமாக இருப்பதால். ஸம்வித்துக்கு ஆத்மத்வாஸித்தியை நிகமிக் கிறார்—அத: என்று.

𑌕𑌿𑌞𑍍𑌚 𑌯𑌦𑍍𑌯𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌃 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑍀 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌾 𑌚 𑌸𑌤𑍀 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌤𑌯𑌾𑌽𑌵𑌭𑌾𑌸𑌤𑍇, 𑌰𑌜𑌤𑌤𑌯𑍇𑌵 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌃, 𑌨𑌿𑌰𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌭𑍍𑌰𑌮𑌾𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌤𑍍—𑌇𑌤𑌿 । 𑌤𑌦𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍; 𑌤𑌥𑌾 𑌸𑌤𑍍𑌯𑌨𑍁𑌭𑌵𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑍇𑌨𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌤𑌾𑌽𑌵𑌭𑌾𑌸𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑍇𑌤, ‘𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑌹𑌮𑍍’ 𑌇𑌤𑌿, 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌤𑌯𑌾 𑌰𑌜𑌤𑌾𑌦𑌿𑌰𑌿𑌵 । 𑌅𑌤𑍍𑌰 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌵𑌭𑌾𑌸𑌮𑌾𑌨𑍇𑌨𑍈𑌵𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌶𑌿𑌨𑌷𑍍𑌟𑌿, 𑌅𑌹𑌮𑍍 𑌇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌮𑌿 । 𑌤𑌥𑌾𑌹𑌿 ‘‘𑌅𑌨𑍁𑌭𑌵𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍’’ 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌿𑌃 । 𑌤𑌦𑍇𑌵𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌮𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑍋𑌽𑌹𑌮𑌰𑍍𑌥𑍇 ‘‘𑌅𑌹𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿’’ 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌸𑌂𑌭𑍂𑌤𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌶𑍍𑌰𑌾𑌵𑌣𑌃 𑌕𑌥𑌮𑌿𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌯𑍇𑌤 ? ॥

ஸ்ரீபாஷ்யம்—

அதற்குமேல் அநுபூதியானது உண்மையாகவே விஷயமில்லாத தாகவும் ஆச்ரய மில்லாததாகவுமிருந்துகொண்டு § நிரதிஷ்டான ப்ரமம் பொருந்தாதாதலால் சிப்பியானது வெள்ளியாகத் தோன்றுவதுபோல் ஜ்ஞா தாவாகத் தோன்றுகிறதென்று எது சொல்லப்பட்டதோ; அது ஸரியல்ல.

§ அதிஷ்டானம்— ஆதாரம்.

அப்படியாகில் அநுபவத்தோடு ஸமாநாதிகரணமாக அநுபவிதாவான அஹமர்த்தமானது முன்னிலையிலிருக்கிற ப்ரகாசமுள்ள த்ரவ்யஸ்வரூபமாக வெள்ளி முதலியதுபோல "அஹம் அநுபூதி:" என்று அறியப்பட வேண்டியதாக ஆகும். இவ்விடத்திலோ வென்றால் இந்த அநுபூதியானது வேறாகத்தோனறுகிறதாகவே இருந்துகொண்டு தண்டமானது தேவதத்தனைப்போல அர்த்தாந்தரமான அஹமர்த்தத்தை விசேஷிக்கிறது. இதை நிரூபிக்கிறார்— நான் அனுபவிக்கிறேன் என்றல்லவோ ப்ரதீதி உண்டாகிறது. ஆதலால் இவ்வண்ணம் அநுபூதியுடன் கூடியதாக அஸ்மதர்த்தத்தை ப்ரகாசிப்பிக்கிற "நான் அநுபவிக்கிறேன்" என்கிற ஜ்ஞாநமானது தண்டமாத்ரத்தில் 'தண்டீ தேவதத்த:' என்கிற ஜ்ஞாநம் போல விசேஷணமாக இருக்கிற அநுபூதிமாத்ரத்தை அவலம்பித்து எவ்வாறு ப்ரதிஜ்ஞை பண்ணப்படலாம்.

ச்ருதப்ரகாசிகை:—

பிறகு அஹமர்த்தத்திற்கு ப்ராந்திஸித்தத்வத்தை தூஷிப்பதற்கு அநுவதிக்கிறார்— அந யதுத்தம் என்கிற இது முதலியதால். ஸம்வித்தும் மிதயையாக ஏன் இருக்கக்கூடாது என்று கேட்கில் கூறுகிறார்— நிரதிஷ்டாந என்று. அநுபூதியைத்தவிர்தத வஸ்துக்களுக்கு அபாரமார்தய நிச்சயத்தால் இந்த ஹேது உரைக்கப்பட்டது. தூஷிக்கிறார்— த த யு க் த ம் இது முதலிய க்ரந்தத்தால். அதிஷ்டாந ஸாமாநாதிகரண்யத்தால அதயஸதப்ரதீதியை தருஷ்டாந்தத்தினுல் உபபாதிக்கிறார்— புரோவஸ்தித என்று. ¶ பக்ஷத்தில் அதன் மாராட்டத்தைக் காண்பிக்கிறார்—அத்ர து என்று. ப்ருதகவபாஸமாநா - வ்யதிகரணமாக அவபாஸிக்கின்ற. அப்படி ப்ரதீதியைக் காட்டுகிறார்—ததாஹி என்று அதனுல் என்னவென்று கேட்கில் சொல்லுகிறார்—ததேவம் என்று. ததேவம் - ஆதலால் இங்கு சொல்லிய வண்ணம்.

தர்மதர்மிபாவப்ரதீதியில் விசேஷணமாக ப்ரதிபன்ன வஸ்துவில் அந்தவிசேஷணவிசிஷ்ட வஸ்துவின் அத்யாஸம் பொருந்தாது என்று அர்த்தம். அதில் ஸம்பந்தமாத்ராத்யாஸம் இல்லை அப்படி ஆனுல் ஸம்பந்தியான ஜ்ஞாதாவுக்கு பாரமார்த்யம் ப்ரஸங்கிப்பதால. அப்படி ஒப்புகொள்ளப்பட்டிருக்கவில்லை. அய்யா! விசேஷணததில் விசிஷ்டாதயாஸம காணப்படுகிறது. ப்ரபையில் மணியினது அதயாஸம்போல இந்த ஆக்ஷேபமானது ப்ருதகவபாஸமாநா என்கிற க்ரந்தத்தால் பரிஹரிக்கப்பட்டது. அப்படி ப்ரபையானது வையதிகரண்யத்தால் விசேஷணமாக இருகக வில்லையன்றோ. பின்னையோ, அயம மணி:, என்று மணியின் அத்யாஸத்திற்கு அதிஷ்டாநமாக இருக்கிற ப்ரபையானது மணியோடு ஸமாநாதிகரணமாகவன்றோ ப்ரகாசிக்கிறது.

அய்யா! அநுபவஸாமாநாதிகரண்யத்தினுல் ப்ரதீதிப்ரஸஞ்ஜநம் யுக்தமல்ல. திக்குக்களில் அழுக்கு, ஆகாயததில் சிவப்புநிறம், என்று வையதிகரண்யத்தாலும் அத்யாஸம் காணம்படுவதால். இவ்வணணமல்ல, இரண்டு பதங்களின் ப்ரவ்ருத்தி நிமித்தஙகளுக்கு ஒரு ஆதாரத்தில் இருப்பல்லவோ ஸாமாநாதிகரண்யம். இந்த இடத்தில்

¶ பக்ஷம்—ஸந்தேஹத்திற்கு ஆஸ்பதமான ஸாத்யமுள்ளது.

$ திக்த்வம் § மாலின்யம் * நபஸ்த்வம் † ஆருண்யம், இந்த இரண்டுக்கும் ஒரே ஆச்ரயத்தில் இருப்பதால் அர்த்தத்தால் ஸாமாநாதிகரண்யமிருக்கிறது. || வையதிகரண்யமோவென்றால் சப்தத்தை அணுகி இருக்கிறது. திக்குக்கள் மலினைகள் திக்குக்களில் மாலின்யம் என்கிற ப்ரயோகத்தில் அர்த்தபேதமென்ன. அத்யாஸங்களில் தர்மைக்ய ப்ரதீதியானது விடததகாதது ஆதலால் அதே இந்த இடத்தில் ஆபாதிக்கப்படுகிறது அநுபூதிரஹமிதி ப்ரதீயேத என்று. அய்யா! அநுபூதி:, அஹம் என்கிற ப்ரஸங்கம் எவ்விததத்தாலும சொல்லமுடியாது. அநுபூதித்வமாவது அதிஷ்டாநத்தின் ¶ அஸாதாரணாகாரமன்றோ. அதின் $ அஸ்புரணமானது ப்ரமததிற்கு அநுகுணமே. *சிப்பியானது, வெள்ளி என்று அறியப்படுகிறதில்லையன்றோ என்று. இங்ஙனமாகில் அநுபூதிக்கு விசேஷமில்லாமையால் வேறுரூபத்தால் ஸ்புரணமில்லாமையாலும அநுபூதியாகஸ்புரிப்பதில் விரோதத்தாலும அதின் அதிகாரணைகயாஸத்திற்கு உதயமில்லை. விரோதமின்றி க்ருத்ஸ்நாத்யாஸம் சொல்லப்படுமேயாகில் க்ரந்தத்தில் சொல்லப்பட்ட ஸாமாநாதிகரண்ய ப்ரதீதிப்ரஸங்கமானது எவ்விதத்தாலும் தடுக்கமுடியாது. இந்த அபிப்ராயத்தினாலன்றோ முன்னிலையிலிருக்கிற ‡ பாஸ்வர த்ரவ்யாகாரமாக ரஜதம் முதலியது போலென்று உரைக்கப்பட்டது. அய்யா! அத்யாஸததின் || அநுதயம சொல்ல சக்யமன்று. விஷயத்தோடு ஸம்பந்திதத அநுபூதியானது அஹம்ஜாநாமி என்கிற இடத்தில் ஜ்ஞாத்ரு அத்யாஸத்தில் ப்ரதீதி விஷயமாகிறது, அதோவென்றால் அதிஷ்டானமல்ல. நிர்விஷயையாயும் நிராச்ரயையாயும் இருக்கிற அநுபூதியே அதிஷ்டானம். அதின் அப்ரகாசத்தால் அத்யாஸத்தின் உதயம் என்று சொல்லப்படுகிறது. அந்த இடத்தில் * ப்ரதிபன்ன வஸ்துவுக்கு அதிஷ்டாநத்வம் பொருந்தாததனாலும் விஷயாச்ரய சூன்ய ஸம்வித்தானது யோக்யாநுபலப்தியினால் நிரஸிக்கப்பட்டிருப்பதாலும் விஷய ப்ரகாசகஸம்வித்துக்கே ஆத்மதவத்தை அங்கீகரித்து ஸ்வயம் ப்ரகாசத்வம் உன்னால் ஸமாத்திக்கப்பட்டிருப்பதாலும் அந்த ஸம்விததே அதிஷ்டானமென்று அதின் அவபாஸத்தில் அதற்கு சுக்தித்வம் போல் ப்ரமவிரோதித்வம் இருக்குமேயாகில் அத்யாஸத்திற்கு அநுதயம் என்று.

---

யதப்யுக்தம் — ஸம்வேதனஸம்வித்ப்ரதிபாஸ்யஸ்ய அஹங்காரஸ்ய ஜ்ஞா
த்ருத்வப்ரதிபாஸனாத் ஜ்ஞாத்ருத்வமேவ ஸ்யாத் — இதி । ததயுக்தம்;
ஜ்ஞப்தயா ஸஹிதாயா ஸ்வாநுபூத்யா ஏவ ஸ்யாத்ஸ்வம் ஸ்யாத்; தத்
ஸ்வ ப்ரதீதே: । ஸகலேதரோபாதானபூதஜ்ஞானாஶ்ரயத்வேன
ஸ்வானுபூதே: ஸ்யாத்வமிதிசேத்; ஸம்யக் ஏவம் ஸதி ததபாயா
தேவ ஜ்ஞாத்ருத்வம் ந ஸ்யாத் ॥

---

$ திக்த்வம்— திசையின் தர்மம்.　　§ மாலின்யம்—அழுக்கு.
* நபஸ்த்வம்—ஆகாயத்தின் தர்மம்.　　† ஆருண்யம்—சிவப்பு நிறம்.
|| வையதிகரண்யம்— வெவ்வேறான ஆதாரங்களில் நிலைபெற்று இருத்தல்.
¶ அஸாதாரணம்—மற்றவைகளுக்கு இல்லாமல் ஒன்றுக்கே உரித்தது.
$ அஸ்புரணம்— ப்ரகாசத்தின் இன்மை.　　* சிப்பி—கிழிஞ்சல்.
‡ பாஸ்வர— ப்ரகாசமுள்ள வஸ்து.　　|| அநுதயம்—தோன்றாமை.
* ப்ரதிபன்ன—விவாதமின்றி உபயவாதிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற.

யதப்யுக்தம்—அவிக்ரியஸ்யாத்மநோ ஜ்ஞாநக்ரியாகர்த்ருத்வரூபம் ஜ்ஞாத்ருத்வம் ந ஸம்பவதி । அதோ ஜ்ஞாத்ருத்வம் விக்ரியாத்மகம் ஜடம் விகாரப்ரக்ருத்யவ்யக்தபரிணாமாஹங்காரக்ரந்திஸ்தமிதி ந ஜ்ஞாத்ருத்வமாத்மந: ; அபித்வந்த:கரணரூபஸ்யாஹங்காரஸ்ய । கர்த்ருத்வாதிஹி ரூபாதிவத் த்ருஶ்யதர்ம: । கர்த்ருத்வேऽஹம்ப்ரத்யயகோசரத்வே சாத்மநோऽப்யுபகம்யமாநே தேஹஸ்யேவாநாத்மத்வபராக்த்வஜடத்வாதிப்ரஸங்க:—இதி । நைததுபபத்யதே । தேஹஸ்யாசேதநஸ்ய ப்ரக்ருதிபரிணாமத்வஸ்ய த்ருஶ்யத்வபராக்த்வபரார்த்த்வாதியோகாதந்த:கரணரூபஸ்யாஹங்காரஸ்ய । சேதநாஸாதாரணஸ்வபாவத்வாச்ச ஜ்ஞாத்ருத்வஸ்ய ।

ஏததுக்தம் பவதி—யதா தேஹாதேர்த்ருஶ்யத்வபராக்த்வாதிஹேதுஸித்தாத்மநீகத்ருஷ்ட்ருத்வப்ரத்யக்த்வாதேர்விருத்யதே, ஏவமந்த:கரணரூபாஹங்காரஸ்யாபி த்ருஶ்யத்வாதேவ தைரேவ ஹேதுபிஸ்ஸஹ தத்விருத்யதே— இதி ॥

அதோ விரோதாதேவ ந ஜ்ஞாத்ருத்வமஹங்காரஸ்ய, த்ருஶித்வவத் । யதா த்ருஶித்வம் தத்குணோऽஹங்காரஸ்ய நாப்யுபகம்யதே, ததா ஜ்ஞாத்ருத்வமபி ந தத்குணோऽப்யுபகந்தவ்யம் ॥

நச ஜ்ஞாத்ருத்வம் விக்ரியாத்மகம்; ஜ்ஞாத்ருத்வம் ஹி ஜ்ஞாநகுணாஶ்ரயத்வம் । ஜ்ஞாநஞ்சாஸ்ய நித்யஸ்ய ஸ்வாபாவிகதர்மத்வேந நித்யம் । நித்யத்வஞ்சாத்மநோ "நாத்மா ஶ்ருதே:" (ஶா-க-ந-கஅ) இத்யத்ர வக்ஷ்யதி । "ஜ்ஞோऽத ஏவ" (ஶா-க-ந-கக) இத்யத்ர "ஜ்ஞ:" இதி வ்யபதேஶேந ஜ்ஞாநாஶ்ரயத்வஞ்ச ஸ்வாபாவிகமிதி வக்ஷ்யதி । அஸ்ய ஜ்ஞாநஸ்வரூபஸ்யைவ மணிப்ரப்ருதீநாம் ப்ரபாஶ்ரயத்வமிவ ஜ்ஞாநாஶ்ரயத்வமவிருத்தமித்யுக்தம் ।

ஸ்ரீபாஷ்யம்—

'நான் பருத்தவன்' என்கிற இது முதலிய வ்யவஹாரங்களில் தேஹத்தில் ஆத்மாபிமான முள்ளவனுக்கே ஜ்ஞாத்ருத்வம் ப்ரதிபாஸிப்பதால் ஜ்ஞாத்ருத்வங்கூட மித்யை என்று எது சொல்லப்பட்டதோ அது ஸரியல்ல. ஆத்மாவாக அபிமானிக்கப்பட்டிருக்கிற அநுபூதிக்குங்கூட மித்யாத்வம் வரவேண்டியதாகும்; அநுபூதியுள்ளவனுக்கே ப்ரதீதிவருவதால்.

தன்னைத்தவிர்த்த மற்ற எல்லாவற்றையும் நாசம்செய்கிற தத்வஜ்ஞானத்தால் பாதிக்கப்படாமலிருப்பதால் அநுபூதிக்கு மித்யாத்வமில்லை என்று சொல்லப்படுமேயாகில ஸந்தோஷம் இங்ஙனமாகில் அதனால் பாதமில்லாமையாலேயே ஜ்ஞாத்ருத்வமும் மித்யையன்று ¶ விக்கிரியை இல்லாத ஆத்மாவுக்கு ஜ்ஞானக்ரியாகர்த்ருத்வரூபமான ஜ்ஞாத்ருத்வம் ஸம்பவிக்கிறதில்லை. ஆகலால் ஜ்ஞாத்ருத்வம் விக்ரியாத்மகம், ஜடம், விகாராஸ்பதமான அவ்யக்தபரிணாமாஹங்காரக்ரந்தியில் நிலைபெற்றது. ஆதலால் ஜ்ஞாத்ருத்வம் ஆத்மாவுக்கு இல்லை. பின்னையோ அந்தக்கரணரூபமான அஹங்காரத்திற்கு கர்த்ருத்வம் முதலியது ரூபம் முதலியதுபோல த்ருச்யதர்மமன்றோ. ஆத்மாவுக்கு கர்த்ருத்வமும் அஹம்ப்ரத்யயகோசரத்வமும் ஒப்புக்கொள்ளப்படும் பக்ஷத்தில் தேஹத்திற்குப்போல அநாத்மத்வமும் § பராக்த்வம், ஜடத்வம், முதலியதும் ப்ரஸங்கிக்கும், என்று யாதொன்று கூறப்பட்டதோ; இது பொருந்தாது அந்தக்கரணரூபமான அஹங்காரதிற்கு தேஹத்திற்குப்போல அசேதநத்வம் ப்ரக்ருதி பரிணாமத்வம், த்ருச்யத்வம், $ பராக்த்வம், பரார்த்தத்வம், முதலியவற்றின் ஸம்பந்தத்தாலும் ஜ்ஞாத்ருத்வம் சேதநாஸாதாரணஸ்வபாவமாதலாலும்.

இது சொல்லப்பட்டதாக ஆகிறது— எவ்வாறு தேஹம் முதலியது ‡‡ த்ருச்யத்வம் பராக்த்வம் முதலிய ஹேதுக்களால் அவைகளுக்கு விரோதிகளான @ த்ரஷ்ட்ருத்வம் ப்ரத்யக்த்வம் முதலியதைக் காட்டிலும் வேறானதென்று அறியப்படுகிறதோ, இவ்வண்ணம் அந்தக்கரண ரூபாஹங்காரமும் அந்த ‡ த்ரவ்யமாக இருத்தலாலேயே அதே ஹேதுக்களால் அதைக் காட்டிலும் வேறுபட்டதென்று அறியப்படுகிறது என்று ஆதலால் த்ருசித்வத்திற்குப்போல் அஹங்காரத்திற்கு விரோதத்தாலேயே ஜ்ஞாத்ருத்வமில்லை. எவ்வாறு த்ருசித்வமானது அதன கர்மாவான அஹங்காரத்திற்கு ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லையோ அவ்வாறே ஜ்ஞாத்ருத்வமும் அதின் கர்மாவுக்கு ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல. ஜ்ஞாத்ருத்வம் விக்ரியாத்மகமல்ல, ஜ்ஞாத்ருத்வமென்பது ஜ்ஞானகுணாச்ரயத்வமன்றோ. நித்யனான இந்த ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகதர்மமாதலால் ஜ்ஞானம் நித்யம். ஆத்மாவுக்கு நித்யத்வத்தை "நாத்மா ச்ருதே:" இது முதலிய ஸ்தலங்களில் கூறப்போகிறார். "ஜ்ஞோத ஏவ" என்கிற இடத்தில் "ஜ்ஞ:" என்கிற வ்யபதேசத்தால் ஜ்ஞானாச்ரயத்வமும் ஸ்வாபாவிகமென்று சொல்லப்போகிறார் ஜ்ஞான

¶ விக்ரியை—விகாரம், வேறுபாடு, மாறுதல்.
$ பராகதவம்—பிறருக்கு ப்ரகாசித்தல். ‡‡ த்ருச்யம்—காணத்தக்கது.
@ த்ரஷ்டா— பார்க்கிறவன். ‡ த்ரவ்யம்— குணங்களுக்கு ஆச்ரயம் அல்லது அவஸ்தையுள்ளது. ஜடம்— அமிச்ரஸத்வமில்லாதது. இது ப்ரக்ருதி-காலம் என இருவகைப்பட்டுள்ளது முக்குணங்களுக்கு ஆச்ரயமானது. ப்ரக்ருதி, இது நித்யை, அக்ஷரை, அவித்யை, மாயை, என வழங்கப்படுகிறது. காலம்—இது முக்குணங்களில்லாதது. இது நித்யம்-விபு. அகண்டகாலம் நித்யம். கார்யமானகாலம அநித்யம்.

ஸ்வரூபனாகவே இருக்கிற இந்த ஆத்மாவுக்கு மணி முதலியவைகளுக்கு ப்ரபாச்ரயத்வம்போல ஜ்ஞாநாச்ரயத்வமும் அவிருத்த மென்று உரைக்கப் பட்டது.

---

ச்ருதப்ரகாசிகை—

தேஹாத்மாபிமானமுள்ளவனுக்கு ஜ்ஞாத்ருத்வம் ப்ரதிபாஸிப்பதால் அது மித்யை என்று சொல்லப்பட்டதை ‡‡ அநுவதித்து தூஷிக்கிறார்— யதப்யுக்தம் இது முதலியதால். ததபார்தா தேவேதி. ஜ்ஞாத்ருத்வத்திற்கு அபாதிதத்வமானது முக்தியில்கூட ஜ்ஞாத்ருத்வபரச்ருதிவாக்யத்தால். ஜ்ஞாத்ருத்வத்திற்கு விக்ரியாத்மகத்வத்தை நிராகரிப்பதற்காக அதை அநுவதிக்கிறார்—யதப்யுக்தமவிக்ரியஸ்ய என்று. ஜ்ஞாநம் தாத்வர்த்தமாதலால் க்ரியை - தத்கர்த்ருத்வம் விகாரரூபம். அதினாலேயே ஜடம். விகாரமில்லாததும் அஜடமாக இருக்கிறதுமான ஆத்மாவுக்கு இது ஸம்பவிக்கிறதில்லை. விக்ரியாத்மகமாகவும் ஜடமாகவும இருப்பதால். அப்படிப்பட்ட அஹங்கார க்ரந்தியிலிருக்கிறதென்று அர்த்தம். எல்லா அத்யாஸங்களுக்கும் மூலமாக இருப்பதால் அந்த அஹங்காரம் க்ரந்தி அதற்குமேல் வேறு ஹேதுவாலும் ஜ்ஞாத்ருத்வம் அந்தக்கரணதர்மம் என்பதை உபபாதிக்கிறார்— கர்த்ருத்வாதி: என்று. த்ருச்யமாக இருப்பதால் என்று அர்த்தம். ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் சொல்லப்படுமேயாகில் அநிஷ்டத்தை ப்ரஸஞ்ஜநம் செய்கிறார்—கர்த்ருத்வே என்று இந்த இடத்தில் § வ்யதிரேகி அனுமானங்கள் அபிப்ரேதங்களென்று முந்தியேசொல்லப்பட்டிருக்கிறது. பரிஹரிக்கிறார்—நைதத் என்று.

“தேஹஸ்ய” இது முதலியதால் அந்தக்கரணத்திற்கு ஜ்ஞாத்ருத்வாபாவம் உபபாதிக்கப்பட்டது. ஆதிசப்தத்தால் அந்தவத்த்வக்ரஹணம். “சேதநாஸாதாரண” இது முதலியதால் ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வோபபாதனம். ஜ்ஞாத்ருத்வாபாவம் ஸாத்யமாக அபிப்ரேதம் - அந்தக்கரணம் தர்மி அசேதநத்வாதிகள் ஹேதுக்கள். “தேஹஸ்யேவ”என்று ஸபக்ஷம் காண்பிக்கப்பட்டது- ஜ்ஞாத்ருத்வமானது சேதநாஸாதாரணமென்று சொன்னதினால் ‡ வ்யதிரேகவ்யாப்தியும் சொல்லப்பட்டது. இவ்வண்ணம் பரோக்த வ்யதிரேகிகளுக்கு ப்ரத்யநுமானங்கள் கூறப்பட்டவைகளாக ஆகின்றன. அந்தக்கரணமானது ஜ்ஞாநாச்ரயமல்ல. அசேதநமாகவும் ப்ரக்ருதி பரிணாமமாகவும் த்ருச்யமாகவும் பராக்காகவும் பரார்த்தமாகவும் இருப்பதால் தேஹம்போல என்று. அய்யா! அசேதநமாக இருப்பதால் அஜ்ஞாத்ருத்வம ஸாத்யமாகில் ஸாத்யாவிசிஷ்டதை. இவ்வண்ணமல்ல. அசேதநசப்தத்தால் அநாத்மத்வம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதால். புருஷார்த்த ப்ரதிஸம்பந்தித்வம் தேஹத்தைக்குறித்து நியந்தாவாக உள்ளே ப்ரவேசித்திருத்தலாவது ஆத்மத்வம். அதின் அபாவம் அநாத்மத்வம். ப்ரக்ருதிபரிணாமத்வம் ப்ரக்ருதி கார்யத்வம். த்ருச்யத்வம் தவறாமல் ஜ்ஞாநாந்தராதீநமான ஸித்தியுடன்கூடி இருத்தல் பராகத்வம் பிறருக்கு பிரகாசித்தல். பரார்த்தத்வம் அன்யனுடைய ப்ரயோஜனத்தையே பலமாகக்கொண்டிருத்தல். ஜீவோபகரணத்வமென்று பொருள். ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம ஸாதிக்

---

‡‡ அநுவதித்து—முற்கூறப்பட்டிருப்பதை மீண்டும் எடுத்து உரைத்து.

@ வ்யாப்தி— தவறாத ஸம்பந்தம் § வ்யதிரேகி—வ்யதிரேக வ்யாப்தியுள்ளது.

‡ வ்யதிரேகவ்யாப்தி—வ்யாபகாபாவத்தால் வ்யாப்யாபாவத்தை ஸாதித்தல் உதாஹரணம்ஏது அக்நி இல்லாததோ அது புகை இல்லாதது என்று.

கத்தக்கதாகில் இந்த ஹேதுக்களின் ஸம்பவத்திற்குத்தக்கபடி தர்கங்கள் சேர்ப்பிக்கத்தகு கவைகள். $ ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வமில்லாவிடில தேஹததுக்குப்போல அநாத்மத்வமும் பாரார்த்தத்வமும் ப்ரஸங்கிககும். என்று.

அய்யா ! எவ்வாறு குடம் தேஹம் இந்த இரண்டுக்கும் அசேதநத்வம் முதலியது துல்யமாக இருந்தபோதிலுங்கூட இந்த்ரியஙகளுக்கு ஆச்ரயமாக இருத்தல் முதலியது தேஹத்துக்கு அஸாதாரணமாக இருக்கிறதோ அவ்வாறே தேஹாந்தககரணங்கள் இரண்டுக்கும் அசேதநத்வம் முதலியது துல்யமாக இருந்தபோதிலுஙகூட ஜ்ஞாத்ருத்வமானது அந்தக்கரணத்திற்கு அஸாதரண தர்மமாக இருக்கும். ஆகையால் இந்தரியாச்ரயத்வாபாவத்திற்குப்போல ஜ்ஞாதருத்வாபாவத்திற்கும் அசேதநத்வம் முதலியது ப்ரயோஜகமல்ல. அசித்விசேஷத்வமே ப்ரயோஜகம் அப்படியே ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம்இல்லாமலிருந்தபோதிலுங்கூட ப்ரத்யக்த்வம் முதலியது பொருந்தமுள்ளதாக ஆகலாமென்று இரண்டிடத்திலும விபக்ஷத்தில் பாதகாபாவத்தை ஆசங்கித்து பரிஹரிக்கிறார்—ஏதந்நீதம் என்று. எந்த த்ருச்யத்வம் முதலிய விருத்த தர்மங்களால் தேஹத்திற்கு த்ரஷ்ட்ருத்வம் முதலிய தர்மங்கள் அநுபபன்னஙகளோ, அந்த தருச்யத்வம முதலிய விருத்த தர்மங்களால் அந்தக்கரணத்திற்கும் அந்த ஜடசரவ்யமாக இருப்பதுபற்றி த்ரஷ்ட்ருத்வம் முதலிய தர்மங்கள் உபபன்னங்களாகா என்று அர்த்தம். ஜ்ஞாதருத்வாபாவத்தைக் குறித்து அசேதநத்வம் முதலியது ப்ரயோஜகமல்லவென்று சொல்லப்படுமேயாகில் தேஹத்துக்கு ஜ்ஞாத்ருத்வம் ப்ரஸங்கிக்கும் அதனுல் §சார்வாகனைக்குறித்து தேஹாத்மபேதமானது உன்னுலும் உபபாதிக்கமுடியாது தேஹத்திற்கு தேஹத்வரூபதர்மத்தால் அஜ்ஞாத்ருத்வம் என்பது ஸரியல்ல. கடம் முதலியதில் தேஹத்வமில்லாமலிருந்தபோதிலுங்கூட ஜ்ஞாத்ருத்வாபாவமிருப்பதால். ஆதலால் அங்கு அசித்த்வம் முதலியதற்கு ஜ்ஞாத்ருத்வாபாவப்ரயோஜகத்வ மொப்புக்கொள்ளததக்கதென்பதனுல் ஓரிடத்தில் ஜ்ஞாத்ருத்வாபாவ ப்ரயோஜகமான அந்த அசித்த்வம் முதலியதற்கு ஓரிடத்தில் அப்ரயோஜகத்வம் தகுதியுள்ளதன்று. ஆதலால் அசித்த்வம் முதலிய தர்மங்களால் தேஹத்திற்குப்போல் அந்தக்கரணததிற்குதரஷ்ட்ருத்வாதிகள் உபபன்னங்களாகாஎன்று அர்த்தம். ப்ரத்யக்த்வாதே: என்று ஆதிசப்தத்தால் அஜடத்வத்திற்கு க்ரஹணம். விவிச்யதே.—ப்ரத்யக்த்வம் முதலிய தர்மஙகளோடு ஸம்பந்தமில்லாததாக அறியப்படுகிறது என்று அர்த்தம். நைரேவஹேதுபி:தஸ்மாத் விவிச்யதே என்று பராக்த்வம் முதலிய தர்மங்களால் தேஹத்திற்கு ஜ்ஞாத்ருத்வாபாவம் சொல்லப்பட்டால் பராக்த்வம் வ்யாப்யம். ஜ்ஞாத்ருத்வாபாவம் வ்யாபகம் என்று ஸித்திக்கிறது. அதனுல் ஸ்வாபாவ வ்யாப்தங்களான பராக்குக்களில் அவகாசமில்லாத ஜ்ஞாத்ருத்வமானது ப்ரத்யக்வஸ்துவினிடத்திலுமில்லாமல் போமேயானுல், அப்பொழுது நிராச்ரயமாக ப்ரஸங்கிக்கவேண்டியதாகுமென்று முற்கூறப்பட்டுள்ள வ்யாப்தியை ஸ்தாபிப்பதற்காக விபக்ஷத்தில் பாதகமான † தர்கம் இருத இடத்திலும் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. தஸ்மாத்

$ ஆத்மா ஆப்நோதி—சராசரங்களனைத்தையும் வ்யாபித்திருக்கிறுன் என்பதினுல் ஆத்மசப்தவாச்யன் பரமாத்மா. § சார்வாகன்—வேதத்தை ப்ரமாணமாக ஒப்பாதவன் ப்ரத்யக்ஷப்ரமாணமொன்றையே ஒப்புகிறவன்.

† தாகம்—வ்யாப்யத்தை அஙகீகரித்து வ்யாபகாபாவத்தை ப்ரஸஞ்ஜனம் செய்தல். உதாஹரணம் பர்வதம் - நெருப்புள்ளது, புகையுள்ளதாக இருப்பதால் என்கிற ஸ்தலத்தில் புகை இருக்கட்டும் நெருப்பு இருக்கவேண்டாம் என்று சொன்னுல் நெருப்பு இல்லாமல் போனுல் புகையும் இராது என்று சொல்லுதல். இது ப்ரமாணுநுக்ராஹகமானதால் அநுகூல தர்கம்

விவிச்யதே இ போதகம் என்று அந்வயம். ஆகையால் அசேதநத்வ ஜடத்வாதி ஸ்வபாவ விரோதகத்தால் அஹங்காரத்திற்கு ஜ்ஞாத்ருத்வமில்லை என்று கூறுகிறார் — அத: என்று. நாம் த்ரஷ்ட்ருத்வம் முதலிய தர்மங்களின் அநுபபத்தியினால் தேஹாத்ம விவேகத்தைக்கூறுகிறோமில்லை. அதோ அன்யமதாநுஸாரத்தால் செய்யப்பட்டது. நாமோவென்றால் த்ருசித்வாநுபபத்தியினால் என்கிற சங்கைவரின் த்ருஷ்ட்ருத்வா பாவம் அசேதநத்வாதி ப்ரயோஜ்யம் என்பதில் ம்ருஷாவாதீ அஸாதாரணமான $ ப்ரதி பந்தியைக்கூறுகிறான் — த்ருசித்வவத் என்று. அதையே விவரிக்கிறார் — யதா என்று.

த்ருச்யத்வம் முதலியது ஸமாநமாக இருந்தபோதிலும் கடாதி விலக்ஷணமான தேஹத்திற்கு இந்த்ரியாச்ரயத்வம்போல அந்தக்கரணத்திற்கு த்ருசித்வம் உபபன்னமாகலாம் அந்தக்கரணத்திற்கு த்ருச்யத்வம் முதலியதால் தேஹத்திற்குப்போல த்ருசித்வம் உபபன்னமாகிறதில்லை என்று கூறப்படுமேயானால் அப்படி த்ருச்யமான அந்தக்கரணத்திற்கு த்ருச்யத்வம் முதலியதாலேயே தேஹத்திற்குப்போல த்ரஷ்ட்ருத்வமும் உபபன்னமாகிறதில்லை ஆகையால் த்ருசித்வாபாவத்தில் போல த்ரஷ்ட்ருத்வாபாவத்திலும் அசேதநத்வம் முதலியது ப்ரயோஜகம் அந்வய வ்யதிரேகங்கள் துல்யங்களாக இருப்பதாலும் வேறு உபாதி காணப்படாமையாலுமென்று கருத்து. அஹம் ப்ரத்யயகோசரத்வம் தேஹத்திற்குப்போல் அநாத்மத்வ ஸாதகமென்று எது உரைக்கப் பட்டதோ அது யுக்தமன்று பாகிதமான அஹம்ப்ரத்யயகோசரத்வத்திற்கு பக்ஷத்தில் வ்ருத்யபாவதகாலும் அபாகிதமான அஹம் ப்ரத்யயகோசரத்வமானது ஸபக்ஷமான தேஹம் முதலியதில் இல்லாமையாலும். அஹம்ப்ரத்யயகோசரத்வமாத்ரத்தால் ஆத்மாவினிடத்தில் அநாத்மத்வம் முதலியது ப்ரஸங்கிக்குமேயாகில் அப்பொழுது ரஜதப்ரத்யயகோசரத்வமாத்ரத்தினால் ப்ரமவிஷயமாக இருக்கிற ரஜதத்தில்போல ஸத்ய ரஜதத்திலுங்கூட ரஜதத்வாபாவமும் † அங்குளீயகநிர்மாணோர்ஹத்வமும் ப்ரஸங்கிக்கவேண்டியதாக ஆகும் என்பதனால் அஸங்கதம். ச்ருதிகளாலும் ப்ரத்யக்ஷத்தாலும் * காலாத்யாபதேசமும் — அதாவது பாதமும் அநாத்மத்வாதி ப்ரஸஞ்ஜகமான கர்த்ருத்வம் ப்ரயத்நாதாரத்வமா? அல்லது, ஸ்வதந்த்ரக்ரியாச்ரயத்வமா? அல்லது தாத்வர்த்தமாத்ராச்ரயத்வமா? முதல் பக்ஷத்தில் வ்யாப்தியின் அபாவம் ப்ரயத்நாதாரத்வம் அநாத்மத்வம் இவ்விரண்டுக்கும் ஓரிடத்தில் சேர்ந்திருத்தல் இல்லாமையால் பரமாத்மாவினிடத்தில் அநாத்மத்வம் முதலியது ப்ரஸங்கிக்கும் என்று சொல்லப்படுமேயாகில் "காதாரமீசம் புருஷம்" இது முதலியதால் காலாத்யாபதேசமும், ஜீவனிடத்தில அநாத்மத்வாதி ப்ரஸங்கம் பகரப்படுமேயாகில் 'ஸாதுகாரீ ஸாதுர்பவதி'' நல்ல காரியங்களைச்செய்பவன் தார்மிகனுக்கு நற்குலத்தில் தோன்றுகிறான், கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்' இதுமுதலிய விதிநிஷேதப்ரதிபாதகசாஸ்திரங்கள் ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலிய பலன்களை அனுபவிக்கிற போக்தாக்களையே கர்த்தாக்களாக சொல்லுவதால். ஜீவாத்மாவை கர்த்தா குணங்கள் கர்த்தாக்களல்ல. 'யதஸ்ஸ்வக்ருதபுக்புமாந்' (புருஷன் தான் செய்தவினைப்பயனைப் புஜிக்கிறான்) இது முதலியவைகளாலும் ப்ரத்யக்ஷத்தாலும் காலாத்யாபதேசமும். இரண்டாவது பக்ஷத்தில் பரமாத்மாவினிடத்தில் அவ்யாப்தி. ஜீவனிடத்திலோ வென்றால் உத்க்ராந்த்யாதிச்ருதி

$ ப்ரதிபந்தி — விரோதியான உத்தரம் † அங்குளீயகம் — மோதிரம்.

* காலாத்யயாபதேசம் — காலஸ்ய ஸாதனகாலத்தினுடைய அத்யய: அபாவம் - காலாத்யயம். காலாத்யயே அகாலத்தில், அபதேசம்-ப்ரயோகம்-காலாத்யயாபதேசம். இதுதான் பாததோஷம். (ஹேது — காலாத்யயாபதிஷ்டம்) தோஷம்-காலாத்யயாபதேசம். காலாத்யயத்தில் — அகாலத்தில், அபதிஷ்டம — ப்ரயோகிக்கப்பட்டது.

களால் காலாத்யயாபதேசம். மூன்றுவதுபக்ஷத்தில் ப்ரமாச்ரயமாக இருப்பதால் ஸ்வாபிமதமான ஆத்மாவினிடத்தில் அநாத்மத்வம ப்ரஸங்கிக்கும பேததாசனமும அதற்கு ஆச்ரயத்வமும் அபாரமார்த்திகமென்று சொல்லப்படுமேயாகில் பரமார்த்தபூதமான ஜ்ஞாத்ருத்வாச்ரயத்வம அநாத்மத்வத்திற்கு ஸாதகமா? அல்லது அபரமார்த்தபூதமான ஜ்ஞாத்ருத்வாச்ரயத்வமா? முதல் பக்ஷத்தில் கடம முதலியவற்றில்கூட பரமார்த்த பூதஜ்ஞாத்ருத்வாந்வயத்தை ஒப்புக்கொள்ளாமையால் வ்யாப்த்யபாவம். இரண்டாவதிலோ வென்றால் அபிமதமாயும் ப்ரமாச்ரயமாயுமிருக்கிற ஆத்மாவுக்குக்கூட அநாத்மத்வம் ப்ரஸங்கிக்கும்.

அதற்கு மேல் விக்ரியாத்மகத்வம் இல்லை என்று கூறுகிறார்— நச என்று. அதை உபபாதிக்கிறார்—ஜ்ஞாத்ருத்வம் ஹி என்று. குணக்ரியாச்ரயத்வ மிருந்தபோதிலும் அது ஏதோ ஒருஸமய விசேஷத்தில ஸம்பவிக்கிறதாக இருக்குமேயாகில் க்ரியாச்ரயத்வம்போல் விக்ரியாத்மகமாக ஆகும் என்று கேட்கில் கூறுகிறார்— ஜ்ஞாதுர்ஜ்ஞாதஸ்ய என்று தர்மம ஸ்வாபாவிகமாக இருந்தபோதிலும் தர்மீ அநித்யமாக இருக்குமேயாகில் தர்மமும் அநித்யமாக ஆகும். தர்மீ நித்யமாகில் தர்மம் உபாதியுடன் சேர்ந்திருக்குமே யானால் உபாதிபோனவுடன் தர்மம் நசிக்கவேண்டியதாதலால் அநித்யமாகும் இரண்டையும் வ்யாவர்த்திப்பதற்காக நித்ய ஸ்வாபாவிக சப்தங்கள். அஸ்ய விசேஷத்தால் *காதாசித்கத்வம் ப்ராமாணிகமாதலால் இஷ்டமானது இந்தஇரண்டு பதங்களால் 'நஹி ஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோ வித்யதே, அவிநாசித்வாத் ' என்கிற சருதியின் அர்த்தம் சொல்லப்பட்டதாக ஆகிறது இந்த சருதிக்கு இஃ அர்த்தம். ஜ்ஞாத்ரு ஸம்பந்தியான விஜ்ஞானம நித்யம். ஏனெனில் ஆத்மா அவிநாசியாக இருப்பதால். ¶விசிஷ்டம் நித்யமாதலால் விசேஷணமாக இருக்கிற ஜ்ஞானத்திற்கும் நித்யத்வம் ஸித்திக்கிறது. அன்றிக்கே தர்மீ நித்யமாதலால் அதற்கு ஸ்வபாவஸித்தமான தர்மத்திற்கு நித்யத்வம் ஸித்திக்கிறது. ஆத்மா நித்யமென்பதிலும் ஜ்ஞானம் அதற்கு ஸ்வாபாவிக தர்மமென்பதிலும் ப்ரமாணத்தை ஸமரிக்கும்படி செய்துகொண்டு சருதிவாக்யோ... திற்கு முந்தியே ஸூத்ரத்தை உதாஹரிக்கிறார்—நித்யத்வஞ்ச என்று. ஸூத்ரோதாஹரணத்தால் அதற்கு விஷயபூதமான சருதியும் அர்த்தத்தினுல் காணபிக்கப்பட்டதாக ஆகும். ஸூத்ரமும் முந்தி ஜ்ஞாநகுணகத்வத்தைக காணபிப்பதின் பொருட்டு எடுக்கப் பட்டது. இப்பொழுது நித்யத்வ ஜ்ஞாபநத்திற்காக உபாதானம செய்யப்பட்டது. "ஜ்ஞோதஏவ" என்கிற ஸூத்ரத்தில் 'ஜ்ஞ:' என்று வ்யபதேசத்தின விவரணம் "யாவதாத்மபாவித்வாச்ச ந தோஷ:" என்று ஸூத்ரம் இந்த இடத்தில் ஸ்வாபாவிகத்வ ஸித்தி என்று பாவம். ஜ்ஞானஸ்வரூபத்திற்கு ஜ்ஞாநாச்ரயத்வம எவவாறு என்று கேட்கில் கூறுகிறார்—அஸ்ய என்று.

---

ஸ்வயஞ்சோபரிமிதஜ்ஞாநஸ்வரூபம் ஸ்வஞ்ஞாநப்ரகாசமுச்யதே ... 

...

---

* காதாசித்கம— ஒருஸமயத்திலுண்டானது.
¶ விசிஷ்டம்—விசேஷணத்துடன சேர்ந்தது.

ஸ்ரீபாஷ்யம்—

ஸ்வயம் * அபரிச்சின்னமாகவே இருக்கிற ஜ்ஞாநமானது ஸங்கோச விகாஸங்களுக்குத்தகுதியுள்ளதென்று உபபாதிக்கப்போகிறோம். ஆகையால்க்ஷேத்ரஜ்ஞாவஸ்தையில் கர்மாவினால் ஸ்வரூபமொடுங்கி அந்தஅந்த கர்மாநுகுணமான தரதமபாவத்தோடு இருக்கிறது அதுவும் இந்த்ரியங்களின் வாயிலாக வ்யவஸ்தை பண்ணப்பட்டிருக்கிறது. அந்த இந்த இந்த்ரியங்கள் வழியாக உண்டாகிற ஜ்ஞாநப்ரஸரத்தை அபேக்ஷித்து உதயாஸ்தமயவ்யபதேசம் ப்ரவ்ருத்திக்கிறது ஜ்ஞாநப்ரஸரத்திலோவென்றால் கர்த்ருத்வமிருக்கவே இருக்கிறது அதுவும் ஸ்வாபாவிகமல்ல. பின்னையோ கர்மாவினால் உண்டுபண்ணைப்பட்டிருக்கிறது. ஆதலால் ஆத்மா விகாரமற்ற ஸ்வரூபமுள்ளவனே. இப்படிப்பட்ட ஸ்வரூபமுள்ள விக்ரியாத்மகமான ஜ்ஞாத்ருத்வமானது ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவுக்கே என்பதினால் ஒருபொழுதும் ஜடமான அஹங்காரத்திற்கு ஜ்ஞாத்ருத்வம் ஸம்பவியாது

அஹங்காரம் ஜடஸ்வரூபமாக இருந்தபோதிலுங்கூட சித்தினுடைய ஸாமீப்யமிருப்பதுபற்றி அதன் சாயையானது இதில் தாக்குவதினால் அந்த ஜ்ஞாத்ருத்வத்திற்கு ஸம்பவமென்று கூறப்படுமேயானால் இந்த சிச்சாயாபத்தி என்பது யாது? ஸம்வித்துக்கு அஹங்காரச்சாயாபத்தியா? அல்லது அஹங்காரத்திற்கு ஸம்விச்சாயாபத்தியா? ஸம்வித்துக்கு அஹங்காரச்சாயாபத்தி என்பது இல்லை. ஸம்வித்தில் ஜ்ஞாத்ருத்வமொப்புக்கொள்ளாததால் அஹங்காரத்திற்கும் ஸம்விச்சாயாபத்தி இல்லை. முற்கூறப்பட்ட ஜடமான அதற்கு ஜ்ஞாத்ருத்வமில்லாமையாலும் இரண்டும் $ சக்ஷுரிந்த்ரியகோசரங்களாக இல்லாமையாலும் அசாக்ஷுஷங்களுக்கு சாயைகாணப்பட்டதில்லையன்றோ. அப்படிக்கின்றி அக்நியின் சேர்க்கையால் இரும்பு உண்டையில் ஔஷ்ண்யம்போல் சித்ஸம்பர்க்கத்தால் ஜ்ஞாத்ருத்வத்திற்கு உபலப்தி என்று சொல்லப்படுமேயாகில், இது ஸரியல்ல. ஸம்வித்தில் வாஸ்தவமான ஜ்ஞாத்ருத்வத்தை ஒப்புக்கொள்ளாததினாலேயே அதின் ஸம்பந்தத்தால் அஹங்காரத்தில் ஜ்ஞாத்ருத்வமோ அதின் உபலப்தியோ ஒன்றுமில்லை. அசேதநமான அஹங்காரத்திற்கு ஜ்ஞாத்ருத்வாஸம்பாவத்தாலேயே அதன ஸம்பர்க்கத்தால் ஸம்வித்தில் ஜ்ஞாத்ருத்வமோ அதின் உபலப்தியோ ஒன்றும் இல்லவே இல்லை இரண்டினிடத்திலும் வாஸ்தவத்தில் ஜ்ஞாத்ருத்வமில்லை. அஹங்காரமோவென்றால் அநுபூதிக்கு அபிவ்யஞ்ஜகம் கண்ணாடி முதலியதுபோல அநுபூதியை தன்னிடத்திலிருக்கிறதாகவே அபிவ்யஞ்ஜநம் செய்கிறது, என்று எது உரைக்கப்பட்டதோ அது யுக்தமல்ல. ஸ்வயம் ஜ்யோதிஸான ஆத்மாவுக்கு ஜடரூபமான அஹங்காராபிவ்யங்க்யத்வம பொருந்தாததலால் அது சொல்லப்பட்டிருக்கிறது "சாந்தாங்கார

* அபரிச்சின்னம்—அளவிடப்படாதது. $ சக்ஷுஸ்—கண்.
† அங்காரம்—தணல். ‡ சாந்தாங்காரம்—கரி.

இவாதித்யம் அஹங்காரோ ஜடாத்மக: ஸ்வயம் ஜ்யோதிஷமாத்மாநம் வ்யநக்தீதி நயுக்திமத்" (எரிந்து தணிந்த தணல் ஆதித்யனை ப்ரகாசிப்பிக்கிறது என்பதுபோல் ஜடஸ்வரூபியான அஹங்காரமானது ஸ்வயம் ஜ்யோதிஸான ஆத்மாவை ப்ரகாசிக்கச்செய்கிறது என்பது யுக்தியுள்ளதல்ல) எல்லாபதார்த்தங்களும் ஸ்வயம் ப்ரகாசாநுபவாதீனஸித்தி யுள்ளவைகளன்றோ. அதில் அநுபவாதீன ப்ரகாசமுள்ள அசித்தான அஹங்காரமானது உதயாஸ்தமயமில்லாத ப்ரகாசமுள்ளதும் அசேஷார்த்தஸித்திக்கு ஹேதுவாகவுமிருக்கிற அநுபவத்தை அபிவ்யஞ்ஜநம் செய்கிறதென்பதை ஆத்மவித்துக்கள் பரிஹஸிக்கின்றார்கள்.

ச்ருதப்ரகாசிகை—

ஜ்ஞாநம் ஸ்வாபாவிக நித்யதர்மமானால் எப்பொழுதும் எல்லாவற்றையும் அறிதல் ப்ரஸங்கிக்கும் என்று கேட்கில் கூறுகிறார்—ஸ்வயம் என்று. ஸ்வயம் ஸ்வத:. "ஸம்பத்யாவிர்பாவ:" இது முதலிய ஸூத்ரத்தில் உபபாதிக்கப்போகிறோமென்று அர்த்தம். அடுத்தே என்றுவது அர்த்தம். அங்ஙனமாகில் இப்பொழுதுகூட ஒருக்கால் ஸர்வஜ்ஞத்வம் முக்தியிலும் ஒரு காலத்தில் ஜ்ஞானஸங்கோசம் ஏன் உண்டாகக்கூடாது.

§ க்ஷேத்ரஜ்ஞாவஸ்தையில் ஸங்கோசமாகில் அப்பொழுது எல்லோரும் அஜ்ஞர்களாக ஆகவேண்டுமென்று சொல்லப்படுமேயாகில்கூறுகிறார்—அத: க்ஷேத்ரஜ்ஞ என்று. அத:ஸங்கோசவிகாஸத்திற்குத் தகுதியுள்ளதாக இருப்பதால். கர்மணா என்பது ஸங்கோசத்தை உண்டுபண்ணுகிற உபாதி. க்ஷேத்ரஜ்ஞாவஸ்தாயாம் என்று. அப்பொழுதே தான் ✤ ஸங்கோசமென்று பொருள். எல்லோருக்கும் அஜ்ஞத்வப்ரஸக்தியானது கர்மங்களின் $ தாரதம்யத்தால்பரிஹரிக்கப்பட்டது. தாரதம்யசப்தத்தினால் தயாதிரோஹிதத்வாச்ச சக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா- ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்தே' (ஹேபூமியைரக்ஷிப்பவனே! அதனால் மறைக்கப்பட்டிருப்பதால் க்ஷேத்ரஜ்ஞனென்கிற பெயருள்ள சக்தியானது எல்லா ப்ராணிகளிடங்களிலும் தாரதம்யத்தால் நிலைபெற்று இருக்கிறது) என்கிறவசநம் நினைக்கும்படி செய்விக்கப்பட்டதாக ஆகிறது. கர்மணா என்கிற பதத்தினால் தயா என்கிற ச்லோகத்திலுள்ள பதம் வ்யாக்யானிக்கப்பட்டதாக ஆகிறது. தயா- கர்மரூபாவித்யையினால் என்று அர்த்தம். அவித்யாகர்மஸம்ஜ்ஞாந்யா த்ருதீயா சக்திரிஷ்யதே- யயா க்ஷேத்ரஜ்ஞசக்தி: ஸாவேஷ்டிதா ந்ருப ஸர்வகா. ஸம்ஸாரதாபாநகிலா நவாப்நோத்யதி ஸந்ததாந். அரசே! அவித்யை கர்மாவென்கிற பெயரை உடைய வேறு மூன்றுவது சக்தி விரும்பப்படுகிறது. எந்தசக்தியினால் எல்லோரையும் அடைந்திருக்கிற அப்படிப்பட்ட க்ஷேத்ரஜ்ஞசக்தியானது சுத்தப்பட்டிருக்கிறதோ. மிகவும் தொடர்ச்சியாக வந்துகொண்டிருக்கிற எல்லா ஸம்ஸாரதாபங்களையும் அடைகிறான் என்றல்லவோ ப்ரக்ருதம். ஜ்ஞாநம் நித்யமாக இருப்பதுபற்றி உத்பத்தி இல்லாமையால் இந்த்ரியாபேக்ஷை உண்டாகாது என்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்—தச்ச என்று. அன்றிக்கே, ஸ்தாவராதிகளில்கூட ஜ்ஞாநவிகாஸம் உண்டாகலாம்

✤ ஸங்கோசம்—மூடுதல், சுருங்குதல்.   $ தாரதம்யம்—ஏத்தத்தாழ்ச்சி.

§ க்ஷேத்ரஜ்ஞன்—ஜீவன்.

என்று கூறப்படுமேயாகில் அது விஷயத்தில் உரைக்கிறார்— தச்ச என்று இந்த்ரியங்களை த்வாரமாகக்கொண்டிருத்தல் ஸங்கோசவிகாஸங்களுக்கா மென்று அர்த்தம். அங்ஙனமாகில் உத்பத்திவிநாச $ வ்யபதேசமுண்டாகாமல் போகவேண்டிவரும் என்றுகேட்கில் சொல்லுகிறார்—தமிமம் என்று ‡ ப்ரஸரத்தின் அந்வய வ்யதிரேகங்களை அபேக்ஷித்து உதயாஸ்தமய வ்யபதேசமென்று அர்த்தம் அன்றிக்கே, ப்ரஸரிக்கிற அம்சம ப்ரஸரம் அதின் ப்ரஸரண † ஸங்கோசங்கள இரண்டும் உதயாஸ்தமயங்கள் என்று அர்த்தம். ஸங்கோசவிகாஸங்களை ஒப்புக்கொண்டால் * விக்ரியாத்மகத்வம உண்டாகவேண்டி வரும் என்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்—ஜ்ஞாநப்ரஸரேது என்று அப்படிப்பட்ட விக்ரியாத்மகத்வம் ப்ராமாணிகமாதலால் இஷ்டமென்று அர்த்தம். அசேதநத்திற்குப் போல பரிணாமமானது ஒப்புக்கொள்ளப்படவில்லையன்றோ என்பது ஏவகாராபிப்ராயம் இதனால் அவிகாரச்ருதிகளுக்கு விஷயம் காட்டப்பட்டது வேறுவிதத்தாலும் அவிகாரச்ருதிகளுக்கு நிர்வாஹத்தைக் காண்பிக்கிறார்— தச்ச என்று

அவிகாரச்ருதிகள் ஸ்வாபாவிகவிகார நிஷேதத்தில் தாத்பர்யமுள்ளவைகள் என்று பொருள். ஸ்வாபாவிகமான ரூபம் எவ்வாறு உளது என்று கேட்கில் பகருகிறார்— அவித்யா என்று ஸ்வரூபம்-ஸ்வாபாவிகரூபம், அவிகாரித்வ வாக்யங்கள் உபாதியினின்று விடுபட்ட ஸ்வாபாவிக ரூபபரங்கள் என்று அர்த்தம். ப்ரஸரணகர்த்ருத்வமும் விகாரரூபமாதலால் அந்தக்கரணத்திற்கே என்று கூறப்படுமேயானால் அது விஷயத்தில் மறுமொழி கூறுகிறார்— ஏவம்ரூபவிக்ரியாத்மகம் என்று. ஏவம் ரூபசப்தத்தால் தன்னுடைய தர்மபூத ஜ்ஞாநப்ரஸரண கர்த்ருத்வ ஸ்வரூபமான விகாரித்வம் சொல்லக்கருதப்பட்டது. ஜ்ஞாநஸ்வரூபனுக்கு ஜ்ஞாநமே எவனுக்கு ஸ்வாபாவிகமான தர்மமோ அவன் ஜ்ஞாநஸ்வரூபன். தன்னுடைய தர்மபூதமான ஜ்ஞாநத்தின ப்ரஸரண கர்த்ருத்வலக்ஷணவிகாரமானது அதை தர்மமாகக்கொண்ட ஆத்மாவுக்கே ஸம்பவிக்கிறதே ஒழிய ஜடமாக இருப்பதால் அந்த தர்மமில்லாத அஹங்காரத்துக்கு இல்லை என்று அர்த்தம். அன்றிக்கே ஸ்வரூபசப்தம் தர்மிபரம். ஜ்ஞாநஸ்வரூபனுக்கே தான் ஜ்ஞாநதர்மகத்வம் ஸம்பவிக்கிறதே ஒழிய கடம் முதலியவைகளுக்குப் போல ஜடரூபத்துக்கு ஸம்பவியாது என்று ஜ்ஞாநஸ்வரூபனாக இருப்பதால ஜ்ஞாநத்தை தர்மமாகக்கொண்டவனுக்கே ஸ்வதர்மபூதஜ்ஞாந ப்ரஸரண கர்த்ருத்வரூபமான விகாரஸம்பவமே ஒழிய ஜடஸ்வரூபனாக இருப்பதால் ஜ்ஞாநத்தை தர்மமாக உடைத்தாயிராத அஹங்காரத்திற்கு இல்லை என்று அர்த்தம். இவ்வண்ணம் விக்ரியாத்மகமாக இருப்பதால் ஜ்ஞாத்ருத்வத்திற்கு ஆத்மதர்மத்வாநுபபத்தியானது நிரஸிக்கப்பட்டது. இதற்குமேல் அந்யனால் சொல்லப்பட்டுள்ள ஜ்ஞாத்ருத்வ நிர்வாஹப்ரகாரங்களை நிரஸிக்கிறார்— ஜ்ஞாத்ருத்வமானது சிச்சாயாபத்தியினால் உண்டுபண்ணப்பட்டது. சித்ஸம்பர்க்கத்தாலுண்டுபண்ணப்பட்டது. சிதபிவ்யஞ்ஜகத்வத்தால் உண்டுபண்ணப்பட்டது என்கிற மூன்று பக்ஷங்கள். அவற்றுள் முதலாவதான சிச்சாயாபத்தி பக்ஷத்தை ஆசங்கிக்கிறார்—ஜட என்று தூஷிக்கிறார்— கேயம் என்று. கேயம் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாததென்று அர்த்தம். விகல்பிக்கிறார்—கிம் என்று. சிச்சாயா சப்தங்கள் இரண்டுக்கும் அந்தர்கதையான விபக்தி ஸமானமானது. ஷஷ்டியோ அல்லது ஸப்தமியோ என்று கருத்து. அஹங்காரச்சாயாபத்திஸ்ஸம்வித:—அஹங்காரத்தில் ஸம்வித்தை அடைந்திருக்கிற ஜ்ஞாத்ருத்வச்

$ வ்யபதேசம்— வ்யவஹாரம். ‡ ப்ரஸரம—வெளிப்படுதல்.
† ஸங்கோசம்—சுருங்குதல் அல்லது அடக்கம். * விக்ரியா—மாறுதல்.
§ விகாஸம்—மலர்ச்சி.

சாயாபத்தி என்று அர்த்தம் ஸம்வித்சாயாபத்தி ரஹங்காரஸ்ய என்று ஸம்வித்தில் அஹங்காரத்தை அடைந்திருக்கிற ஜ்ஞாத்ருத்வச்சாயாபத்தி என்று அர்த்தம். முதலாவதை தூஷிக்கிறார்— நதாவத் என்று. வேறு சிலரை நிரஸநஞ் செய்கிறார்— நாபி என்று முதலில் அசேதநத்வம் ப்ரக்ருதிபரிணாமத்வம் முதலியவைகளால் அஹங்காரத்திற்கு ஜ்ஞாத்ருத்வவ்யுதாஸத்தை அபிப்ராயப்பட்டு சொல்லுகிறார்— உக்த ரீத்யா என்று. வேறு தூஷணத்தைச் சொல்லுகிறார்— த்வயோரபி என்று. அதை விவரிக்கிறார்— நஹி என்று.

சித்ஸம்பர்க்கத்தை தூஷிப்பதற்காக சங்கிக்கிறார்— அத என்று. முன்போல விகல்பித்து தூஷிக்கிறார்—நைதத் என்று இது பொதுவான ப்ரதிஜ்ஞை. அஹங்காரத்தில் ஸம்வித்தினுடைய ஸம்பாகத்தால் ஜ்ஞாத்ருத்வத்தை நிரஸிக்கிறார்— ஸம்வித் என்று. அஹங்காரஸம்பாகத்தால் ஸம்வித்தில் ஜ்ஞாத்ருத்வத்தை தூஷிக்கிறார்— அஹங்காரஸ்யது என்று (ஸாதநாமிதி) ஜ்ஞாநம் அஜடமானதால் ஜ்ஞாநாச்ரயத்வம் ஸ்வமதத்தில் ஸம்பவிக்கிறது. அஹங்காரம் ஜடமாதலால் வஸ்துத: ஜ்ஞாநாச்ரயத்வமானது ஸ்வபக்ஷ பரபக்ஷம் இரண்டிலும் ஸம்பவியாதாதலால் அதின் ஸம்பர்க்கத்தால் ஸம்வித்தில ஜ்ஞாத்ருத்வம் இல்லை என்று கருத்து. உப்பளத்திலுள்ள கட்டை முதலியவைகளுக்கு உப்பின் ஸம்பந்தத்தால் லவணத்வத்தின் உத்பத்தி காணப்படுகிறது. இரும்புண்டையில் அக்நியின் ஸம்பர்க்கத்தால் ஔஷ்ணயம் அறியப்படுகிறது. அதனால் ஜ்ஞாத்ருத்வம் அதினுபலப்தியாவது என்று தனித்து சொல்லப்பட்டது. அய்யா! முற்கூறப்பட்ட இரண்டு பக்ஷங்களில் ஜ்ஞாத்ருத்வத்திற்கு சாயாபத்தி ஸம்பர்க்கங்கள் நிரஸிக்கப்பட்டன ஜ்ஞாநச்சாயாபத்தி ஸம்பர்க்கங்கள் என் நிரஸிக்கப்படவில்லை. சொல்லப்போகிற அபிவ்யக்தி பக்ஷாந்தர்ப்பாவத்தாலென்று சொல்லுகிறோம், ஜ்ஞாநத்திற்கு அஹங்காரத்தில் சாயாபத்தியாவது கண்ணாடியில் முகத்துக்குப்போல அஹங்காராதேயமாக அபிவ்யக்தியே. ஸம்பர்க்கபக்ஷத்திலும் அதிஷ்டாநதயா ஸம்பர்க்கமானது ஜ்ஞாத்ருத்வ ப்ரதீதிக்கு உபயோகமில்லாதது. ஆகையால் ஆதேயமாக இருப்பதால் ஸம்பர்க்கம் சொல்லத்தக்கது. அதுவும் அதிலிருப்பதால் அபிவ்யக்தியில் அந்தர்கதம், அதனால் அங்கு உபந்யஸிக்கப்படவில்லை. மேலும் § சாயாபத்தியானது ஸம்வித்துக்கு ஸாக்ஷாத்ஷமாக இருப்பதினாலேயே நிரஸிக்கப்பட்டது ஸம்பர்க்கமும் உபலம்பத்திற்கு அநுகுணமாக சொல்லத்தக்கதாக இருப்பதால் $ அப்ருதக்ஸித்தமான தர்ம தர்மிபாவத்தால் சொல்லத்தக்கது, அதோபொருந்தாது. அசேதனத்திற்கும்சைதந்யத்திற்கும் அப்படிப்பட்ட தர்மதர்மிபாவம் பொருந்தாதாதலால் தண்டம் தேவதத்தன் இவர்களுக்குப்போல் ஜ்ஞாநம் ஜ்ஞாதா இருவர்களுக்கும் தனித்திருத்தல் காணப்படாமையால் தனித்திருத்தலில்லாத வஸ்துக்களுக்கு ஸம்பர்க்கமும அநுபபன்னமென்று அநுஸந்திக்கத்தக்கது. அதற்மேல் அபிவ்யக்தி பக்ஷத்தை அநுபாஷிப்பதற்காக சாயாபத்திஸம்பர்க்க பக்ஷங்களுக்கும் அபிவ்யக்தி பக்ஷத்திற்கும் ஒன்றேயொன்று ஒற்றுமையில்லாமையைக் காண்பிக்கிறார்—உபயத்ர என்று. வஸ்துத இதி- சாயாபத்தி முதலியதால் ஆபாதநஞ்செய்யப்படாநின்ற அசயாஸத்திற்கு மூர்த்தியே ஸித்தத்வம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறதே யொழிய பாரமார்த்திகத்வம் விவக்ஷிக்கப்படவில்லை. வட்டமாகச்சுத்தப்படாநின்ற கொள்ளிக்கட்டை முதலியதற்குக்கூட ப்ரதிபிம்பம் காணப்படுவதாலும் உஷ்ண ஜலஸம்பர்க்கத்தால் அநுஷ்ணமான வஸ்துவினிடத்திலும்உஷ்ணோபலம்ப மிருப்பதாலும்

§ சாயாபத்தி— ஒளிவீசுதல். அல்லது நிழல்தாக்குதல்.
$ அப்ருதக்ஸித்தம்— தனித்திராதது. பிறியாமல் சேர்ந்தே இருக்கும் வஸ்து.

ஓரிடத்தில ஸ்வதஸ்ஸித்தமான ஜ்ஞாத்ருத்வாத்யாஸத்திஞல வேறு இடத்தில் ஜ்ஞாத்ருத்வ நிர்வாஹம் முந்தின இரண்டு பக்ஷங்களிலும் அபிவ்யக்தி பக்ஷத்திலோவெனருல ஜ்ஞாத்ருத்வத்தினுடைய ஸ்வதஸ்ஸித்தியை அபேக்ஷியாமல் ஜ்ஞாநாத்யாஸத்திஞல் ஜ்ஞாத்ருத்வ நிர்வாஹம் என்று. ¶ வைஷம்யம். அபிவ்யக்தி பக்ஷத்தைக்கூறுகிருர்—அஹங்காரஸ்து என்று. தூஷிக்கிருர்—தத்யுக்தம் என்று. எதஞல என்று அபேக்ஷிக்குங்கால் ஆத்மாவுக்கு அபிவ்யஞ்ஜகாபேக்ஷையுமில்லை, அஹங்காரத்திற்கு அபிவ்யஞ்ஜகத்வசக்தியுமில்லை, என்று கூறுகிருர்— ஆத்மா இது முதலியதால் தன்னுல் சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு ஸாம்ப்ரதாயிகத்வத்தைக்காட்டுவதற்காக த்ருஷ்டாந்தத்திஞலஅதை விசதப்படுத்துவதற்காகவும் ஆகமஸித்தி காரத்தைச் சொல்லுகிருர்— ததுக்தம் என்று.

"சாந்தாகார:" இதுமுதலிய ச்லோகத்தை விவரிக்கிருர்—ஸ்வயம் என்று. ஸ்வயம்ப்ரகாச சப்தத்தால் அபிவ்யஞ்ஜகாபேக்ஷையின் அபாவம் கூறப்பட்டது. அநுபவாதிசயஸித்தய:என்பதிஞல் அஹங்காரத்திற்கு அபிவ்யஞ்ஜகத்வாபாவம் உரைக்கப்பட்டது. "அசித்அஹங்கார" என்பதிஞல சித்தைக் காட்டிலும் வேருக இருப்பதால அந்த சித்துக்கு அதீனமான ப்ரகாசத்துடன் கூடியது என்று அன்யஞல் சொல்லப்பட்ட ஹேது ஸூசிப்பிக்கப்பட்டது. அநுதிதாநஸ்தமிதஸ்வரூபப்ராகாசம்—ஒருஸமயத்தில் அப்ரகாசமாக இருக்குமேயாஞல் அப்பொழுது அபிவ்யஞ்ஜகாபேக்ஷை உண்டாகும். அதில்லாமையால் ஒருபொழுதும அபிவ்யஞ்ஜகாபேக்ஷை இல்லை என்று கருத்து. அசேஷார்த்த ஸித்தி ஹேதுபூதம—என்ஞல் விஷயப்ரகாசகத்வத்தாலன்றோ ஸ்வயம்ப்ரகாசத்வம ஸமர்த்திக்கப்பட்டது, என்று கருத்து. பரிஹஸந்தீதி—இப்படிப்பட்ட அநுபவத்தை இப்படிப்பட்ட அஹங்காரம் அபிவ்யஞ்ஜநம் செய்கிறது என்பதை உன்னைச் சேர்ந்தவர்களே உன்ஸமீபத்திலிருப்பவர்களே சிரிக்கிருர்கள் என்று கருத்து.

---

கிஞ்ச — [illegible] ஸ்வாபாவிரோதாத் [illegible] | யதோக்தம் —

"[illegible] ||" இதி ||

ந ச [illegible] ||

கிஞ்சாஸ்ய ஸம்வித் [illegible] க்ஷி: கிம்ரூபோ வா ? ந தாவத் [illegible]

---

¶ வைஷம்யம்—வேற்றுமை.

[illegible]

**ஸ்ரீபாஷ்யம்.—**

மேலும், அஹங்காரம் அநுபவம் இரண்டுக்கும் ஸ்வபாவவிரோதத்தினாலும் அநுபூதிக்கு அநநுபூதித்வம் ப்ரஸங்கிப்பதாலும் வ்யங்க்த்ருவ்யங்க்யபாவமில்லை இது சொல்லப்பட்டிருக்கிறது "வ்யங்க்த்ருவ்யங்க்யத்வமந்யோந்யம் நசஸ்யாத்ப்ராதிகூல்யத:, வ்யங்க்யத்வேநநுபூதித்வம் ஆத்மநி ஸ்யாத்யதா கட:" (ப்ரதிகூல ஸ்வபாவமுள்ளதாக இருப்பதால் பரஸ்பரம் வ்யங்க்த்ருவ்யங்க்யபாவம் ஸம்பவியாது. வ்யங்க்யத்வத்தை ஒப்புக்கொண்டால் கடத்தில போல ஆத்மாவினிடத்தில் அநநுபூதித்வம் ஏற்படும்) ஸௌர்யகிரணங்களுக்கு தன்னால் அபிவ்யஞ்ஜிக்கத்தக்க கரதலத்தினால் அபிவ்யங்க்யத்வம் போல ஸம்வித்துக்கும் ஸம்வித்தினால் அபிவ்யங்க்யமான அஹங்காராபிவ்யங்க்யத்வம் என்று சொல்வது ஸரியன்று. அங்கேயும் ஸௌர்யகிரண ஸமூஹங்களுக்கு கரதலாபிவ்யங்க்யத்வமில்லாமையால் கரதலத்தால் தடுபட்டகதிகளுடன் கூடியவைகளாக வன்றோ ஸௌர்யரச்மிகள் பருளங்களாக தானே அதி ஸ்பஷ்டமாக அறியப்படுகின்றன. ஆதலால் கரதலம் அந்த கிரணங்களின் பாஹுள்யமாத்ர ஹேதுவே ஒழிய கிரணாபிவ்யஞ்ஜகமல்ல மேலும், இந்த ஸம்வித்ஸ்வரூபமான ஆத்மாவுக்கு அஹங்காரத்தினால் ஏற்படுத்தத்தக்க அபிவ்யக்தியானது எவ்விதமானது? உத்பத்தியன்று. ஸ்வதஸ்ஸித்தமாக இருப்பதுபற்றி மற்றொன்றினால் உண்டுபண்ணத்தக்க தன்மையினது இன்மை ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால். அதின் ப்ரகாசநமுமல்ல. அந்த ஸம்வித்தானது அநுபவாந்தரங்களால் அநுபாவ்யமல்லாததால். அதனாலேயே அஹங்காரத்திற்கு ஸம்விதநுபவஸாதநாநுக்ரஹமில்லை. அந்த அநுக்ரஹம் இரண்டுவிதமன்றோ. ஜ்ஞேயத்திற்கு இந்த்ரியஸம்பந்தத்தில் ஹேதுவாக இருத்தலாலாவது எப்படி ஜாதி முகம் முதலியவற்றை க்ரஹிக்கும் விஷயத்தில் வ்யக்தி தாபணம் முதலியவைகளுக்கு நயநம் முதலிய இந்த்ரிய ஸம்பந்த ஹேதுத்வமோ போத்தாவினிடத்திலுள்ள கல்மஷத்தைப் போக்குவதாலாவது, எவ்வாறு பரதத்வாவபோதனத்திற்கு ஸாதநமான சாஸ்திரத்திற்கு சமதமாதியினால். இப்படியே சொல்லப்பட்டிருக்கிறது.—"காரண

நாமபூமித்வாந்ந தத்ஸம்பந்தஹேதுதா" (இந்த்ரியங்களுக்கு விஷயமில்லாத தால் அந்த இந்திரியஸம்பந்த ஹேதுத்வம் இல்லை) என்று.

---

ச்ருதப்ரகாசிகை—

அஹங்காரம் அநுபவம் இரண்டுக்கும் முறையே அபிவ்யஞ்ஜகத்வத்தையும் அபி வ்யங்க்யத்வத்தையும் ஏற்றுக்கொள்ளாமையால் தூஷணம் கூறப்பட்டது. அவ்விர ண்டுக்கும் அபிவ்யஞ்ஜகத்வமும் அபிவ்யங்க்யத்வமும் இருக்கட்டும். அது ஒன்றோ டொன்று பொருந்துகிறதில்லை என்று கூறுகிறார்— கிஞ்ச என்று. ஸ்வபாவவிரோ தாத்—அனுபவத்தினிடத்திலுள்ள எல்லா அர்த்தங்களுடைய ஸித்திகாரணத்வமும் அந்த அனுபவத்தைக்காட்டிலும் வேறாக இருப்பதால் இந்த அஹங்காரத்திற்கு அந்த அநு பவாதீனமான ஸித்தித்வமும் விரோதம். பிதாபுத்ரன் இருவருக்கும் அன்யனைக் குறித்து புத்ரத்வம் அன்யனைக்குறித்து பித்ருத்வம் இரண்டு மிருந்தபோதிலும் இவ் விருவர்களுக்குமே பரஸ்பரம் பித்ருத்வ புத்த்ரத்வங்களின் $ வ்யத்யயம் எவ்வாறு பொ ருந்துகிறதில்லையோ. இவ்வண்ணம் மற்றொன்றை அபேக்ஷித்து அவ்விரண்டுக்கும் வ்யங்க்த்ரு வ்யங்க்யபாவமிருந்தபோதிலுங்கூட பரஸ்பரம் பொருத்தமுள்ளதாக ஆகிற தில்லை என்று அர்த்தம். வேறு தூஷணதையும் சொல்லுகிறார்—அநுபூதேரநநு பூதித்வ ப்ரஸங்காச்ச என்று. இந்த அர்த்தத்திலும் ஆத்மஸித்தி க்ரந்தத்தைக்காண் பிக்கிறார்— யதேர்க்தம் என்று.

ப்ராதிகூல்யத: - முற்கூறப்பட்ட ஸ்வபாவவிரோதசப்தத்தால் ப்ராதிகூல்யசப்தம் வ்யாக்யாகிக்கப்பட்டது. தன்னாலே வ்யங்க்யமான பதார்த்தத்திற்கே தன்னை வ்ய ஞ்ஜிப்பிக்கிற தன்மை இருக்கிறதென்பதில் அந்யனால் சொல்லப்பட்ட திருஷ்டாந் தத்தை தூஷிக்கப்போகிறவராகச்சொல்லுகிறார்— நச என்று. திருஷ்டாந்தத்திற்கு ஸாத்ய ‡‡ வைகல்யத்தைக்கூறுகிறார்— தத்ராபி என்று. அங்கு அப்படிப்பட்டதன் மைக்கு அந்யதாஸித்தியைக் காண்பிக்கிறார்— கரதல என்று. ப்ரஹ்மமானது ப்ர ஸாரண ஸ்வபாவமுள்ள த்ரவ்யமல்ல வன்றோ. ஆகையால் அதின் பாருஷ்ய ஹேதுத்வம் அஹங்காரத்திற்கு பொருத்தமுள்ள தல்லவென்று பொருள்.

அப்படி அஹங்காரத்தால் இதின் அபிவ்யக்தியை மூன்றாக விகல்பித்து தூஷிக் கிறார்— கிஞ்ச இது முதலியதால். கிம்ரூபா - கிம்சப்தத்திற்கு நிந்தை அர்த்தம் எவ் விதத்தாலும் நிரூபிக்கமுடியாததென்று அர்த்தம். எதினாலென்று அபேக்ஷைவரின் அபிவ்யக்தி என்பது உத்பத்தியா? அல்லது ப்ரகாசநமா? அல்லது அநுபவத்திற்கு ஸாதாநுக்ரஹமா? என்று மூன்றாக விகல்பத்தைக்கருதி உத்பத்தி பக்ஷத்தை தூஷிக்கிறார்—நதாவத் என்று. உண்டாகாத கடம் முதலியதற்கு அபிவ்யக்தி ஸம் பவியாததாலால் உத்பாதகமான தண்டம் சக்கிரம் முதலியவைகளுக்குக்கூட உத்பாதக மூகத்தால் அபிவ்யக்தி ஹேதுத்வமிருப்பதால் உத்பத்தியும் விகல்பகோடியில் வைக்கப் பட்டது. மேலும் வ்யங்க்யத்திற்கு ப்ரகாசத்தை உண்டுபண்ணுதல் வ்யஞ்ஜநம்-ஸம் வித்தானது தானே ப்ரகாசரூபமாக இருப்பதுபற்றி அதின் உத்பத்தியே அதின் ப்ர காசோத்பத்தி ரூபையான அபிவ்யக்தியாதலால் விகல்பகோடியில் உதபத்தி சேர்க்கப்

---

$ வ்யத்யயம்—மாற்றிக்கொள்ளுதல்.

‡‡ வைகல்யம்— குறைவு, அல்லது இன்மை.

பட்டது. ஸ்வதஸ்ஸித்தயேதி— அவ்விதமாகவன்றோ ப்ராகபாவத்தின அபாவம் கூறப்பட்டது. அநாதியாக இருப்பதிலுலென்றுவது அர்த்தம். அதற்குமேல் இரண்டாவதை நிரஸநம் செய்கிறார்—ந ா பி என்று. ப்ரகாசநம் அனுபவவிஷயமான ப்ரகாசத்தின் உத்பத்தி. அதற்குப்பிறகு மூன்றுவதைப் பற்றி மறுமொழி உரைக்கிறார்—தத: என்று. தத ஏவ - ப்ரகாசத்தின் அநுபபத்தியிலுலேயே. அய்யா ! அடுத்த க்ரந்தத்தின் உத்தானம் பொருந்தாது. அநுக்ரஹஸாதநங்களின் இரண்டுவகைகளும் அதின் நிராஸத்திற்கு உபயோகமில்லாமலிருப்பதால். மேலே ஆத்மஸித்தி க்ரந்தோதாஹரணமும் ஸங்கதமாகிறது. இந்த்ரியஸம்பந்தவாரியாக இருப்பதுபற்றி அநுக்ராஹகத்வை வித்யத்தில் உபயோகமில்லாமையால். இங்கு கூறப்படுகிறது. மூர்த்தி அநுக்ராஹ்யத்தால் உண்டுபண்ணத்தக்க ப்ரகாசத்திற்கு விஷயமான அநுபூதியின் பர்யாலோசனையிலுல் அந்த அநுபவஸாதநாநுக்ரஹம் தூஷிக்கப்பட்டது.

இப்பொழுது அநுக்ரஹ ப்ரகாரவிசேஷங்களின் பர்யாலோசனையிலுல் தூஷணத்தைக்கூறுகிறார்——ஸஹி என்று. இரண்டுவிதமும் பொருந்ாதென்பதைக்காட்டுவதற்காக தொடக்கத்தில் இரண்டுவிதத்தையும் கூறுகிறார்—ஜ்ஞேயஸ்ய என்று. சமமதமம் முதலியவைகள் சாஸ்திரத்திற்கு அநுக்ராஹகங்களென்று சொன்னது அந்ய மதத்திலுல். அது உபாஸநத்திற்கன்றோ அநுக்ராஹகம்.

அய்யா ! அது இரண்டுவிதமென்று சொல்வது யுக்தமன்று, அநுக்ரஹம் இரண்டு கோடிகளிலும் உள்படாததால். அநுமானம் முதலியதற்கு வ்யாப்திக்ரஹம் முதலிய அநுக்ரஹமும் இருக்கிறதென்று ? கூறப்படுகிறது. காரணநுக்ரஹமென்றும் கர்த்ரு அநுக்ரஹமென்றும் இரண்டுகோடிகளே. வ்யாப்திக்ரஹமும் காரணநுக்ரஹத்தில் உள்ளடங்கினது. அன்றிக்கே அநுக்ரஹம் த்ருஷ்டமுகத்தாலும் அத்ருஷ்ட முகத்தாலும் என இருவகைப்பட்டுள்ளது. வ்யாப்திக்ரஹணமும் த்ருஷ்டமுகத்தால் அநுக்ரஹம். ஆகையால் இந்த்ரியஸம்பந்த ஹேதுவாக இருத்தலால் என்று சொன்னது காரணநுக்ரஹத்திற்கும் த்ருஷ்டமுகத்தால் அநுக்ரஹத்திற்கும் உபலக்ஷணம். அவ்விடத்தில் அஹங்காரத்தால் அபிவ்யங்க்யையான ஸம்வித்துக்கு அநுமாந விஷயத்வம் ஸம்பவியாததலால் "இந்த்ரியஸம்பந்த ஹேதுவாக இருப்பதால்" என்று உரைக்கப்பட்டது. போத்தாவினிடதிலுள்ள பாபத்தைப்போக்கடிப்பதிலுல் என்பது கர்த்ரு அநுக்ரஹத்திற்கும் அத்ருஷ்டத்தின் வாயிலாக ஏற்படுகிற அநுக்ரஹத்திற்கும் உபலக்ஷணமாகக் கூறப்பட்டது. ஆத்மஸித்தி க்ரந்தத்திலும் இதே கருத்து.

இவ்விதமாக இரண்டுவிதத்தைக்காட்டினதால் அநுக்ரஹம் இரண்டுவிதமாக இருந்தபோதிலும் அது அஹங்காரத்திற்கு ஸுலபமாக சொல்லமுடியாது என்று ‡ அநுஷங்கத்தால் யோஜனைசெய்துகொள்ளத்தக்கது. எவ்வாறு இவ்விடத்தில் இரண்டுவிதமான அநுக்ரஹத்திற்கும் அநுபபத்தி ? என்கிற ஸந்தேஹத்தில் ஆத்மஸித்தி க்ரந்தத்தைக் கூறுகிறார்— யதோக்தம் என்று காரணாமபூமித்வாத் நதத்ஸம்பந்த ஹேதுதா ( இந்த்ரியங்களுக்கு அவிஷயமாதலால் அந்த இந்த்ரியங்களின் ஸம்பந்தத்திற்கு காரணமாக இருத்தல் ஸம்பவியாது.) என்று ஹேதுத்வரூபமான அநுக்ரஹம் பொருந்ாதென்று காண்பிக்கப்பட்டது. ¶ போத்தாவினிடத்திலுள்ள கல்மஷத்தைப்போக்கடித்தலென்

‡ அநுஷங்கம்—முந்தி சொல்லப்பட்டிருப்பதை வேறொரு இடத்தில் வாக்யார்த்த பூர்த்திக்காக சேர்த்துக்கொள்ளுதல். ¶ போத்தா— அறிகிறவன்.

கிற அநுக்ரஹத்தின் அநுபபத்தியானது க்ரந்தத்திலுள்ளதல்ல. இந்த இடத்தில் சில ஆசார்யர்கள் இவ்வாறு வியாக்யானம் செய்கிறார்கள். சமம் முதலியதற்கு அநுக்ராஹக த்வம் சாஸ்த்ரஸித்தம். அவ்வாறாக அஹங்காரத்திற்கு அநுக்ராஹகத்வம் சாஸ்த்ர ஸித்தமல்லவென்பது வ்யக்தமாக இருப்பதால் க்ரந்தத்தில் $ கண்டோக்தியினால் ப்ரஸமில்லை என்று. பூர்வார்த்தத்தின் உதாஹரணத்தினால் ச்லோகத்தினுடைய § உத்தரார்த்தத்தில் போத்தாவை அடைந்திருக்கிற கல்மஷத்தைப்போக்குதல் என்கிற அநுக்ரஹாநுபபத்தியானது காணத்தக்கதென்று ஆசார்யர்கள் அந்த உத்தரார்த்தம் இது தான். "அஹமர்த்தஸ்ய போத்த்ருத்வாத் ஸமேதைவ சோத்யதே" (அஹம் சப்தத்திற்கு வாச்யமான அர்த்தமானது போத்தாவாக இருப்பதால் அது அதினாலேயே சோதிக்கப்படுகிறதில்லை) என்று. ஒன்றுக்கே ஸ்வப்ரதியோகிதா ஸ்வபாவத்தால் சோத்யத்வமும் சோதகத்வமும் பொருத்தமுள்ளதாக ஆகாதென்று பொருள். இதல்லவோ பாஷ்யத்தின் அபிப்ராயம். அஹமர்த்தத்திற்கு போத்தாவை அடைந்திருக்கிற கல்மஷத்தைப்போக்கும் விஷயத்தில் கர்த்ருத்வம ஸ்வரூபத்தாலேயா? அல்லது அத்ருஷ்டத்தினாலுண்டுபண்ணப்பட்ட உபகாரத்தின் வாயிலாலேயா? முதலில கர்மகர்த்ருவிரோதம். ஒன்றுக்கே தன்னை அபேக்ஷித்து போதகத்வம் போத்யத்வம் இரண்டும் பொருந்தாததலால். இரண்டாவதில் ப்ரமாணங்களின் இன்மை. அந்தக்கரணத்திற்கு அத்ருஷ்டவசத்தால் அந்தக்கரணசுத்தி என்பதில் ப்ரமாணமில்லையன்றோ. முந்தி இந்த்ரியகோசரத்வத்தை ஒப்புக்கொள்ளாததால் தூஷணம் உரைக்கப்பட்டது.

கிஞ்ச அநுபூ4தேரநுபா4வ்யத்வாப்4யுபக3மேऽப்யஹமர்தே2ந ந தத3நுக்3ரஹஸம்ப4வ:; ஸ ஹ்யநுபா4வ்யஸ்யாநுப4வோத்பத்திப்ரதிப3ந்த4நிரஸநேந ப4வேத் । யதா2 ரூபாதி3க்3ரஹணோத்பத்திப்ரதிப3ந்த4கதமோநிரஸநேந சக்ஷுஷோ தீ3பாதி3நா । ந சேஹ ததா2வித4ம் நிரஸநீயம் த்3ருஶ்யதே । ந தாவத்ஸம்வித்3விஷயக3தம் தத3ஜ்ஞாநோத்பத்திப்ரதிப3ந்தி4 கிஞ்சித்3வஸ்த்வஹங்காரேண நிவர்த்யமஸ்தி । அஸ்தி ஹ்யஜ்ஞாநமிதி சேத்; ந, அஜ்ஞாநஸ்யாஹங்காரேண நிவர்த்யத்வாநப்4யுபக3மாத் । ஜ்ஞாநேநைவ ஹ்யஜ்ஞாநஸ்ய நிவ்ருத்தி: ॥

ஸ்ரீபாஷ்யம்.—

மேலும், அநுபூதிக்கு அநுபாவ்யத்வத்தை ஒப்புக்கொண்ட போதிலும் அஹமர்த்தத்தினால் அதின் அநுபவஸாதநாநுக்ரஹம் எளிதில்சொல்ல முடியாது; அந்தஅநுக்ரஹமோவென்றால் அநுபாவ்யமான வஸ்துவின் அநுபவத்தின்உத்பத்திக்குப்ரதிபந்தத்தை நிரஸிப்பதினால் உண்டாகவேண்டும். எப்படி தீபம் முதலியவற்றால் கண்ணுக்குரூபம்முதலியவற்றின் ஜ்ஞாநோத்பத்திக்கு

$ கண்டோக்தி— ஒரு அர்த்தத்தை அதை உணர்த்துகிற சப்தத்தால் தெளியச் சொல்லுதல். § உத்தரார்த்தம்—ஒரு ச்லோகத்தின் பிற்பாதி.

விரோதியான இருள்விலக்கத்தாலோ. இந்த இடத்தில் விலக்கத்தக்க அப்படிப்பட்ட வஸ்து ஒன்றும் ஸம்பவிக்கிறதில்லை. ஸம்விதாத்மாவை அடைந்திருக்கிறதும் அந்த ஜ்ஞானோத்பத்தியைத் தடுக்கிறதும் அஹங்காரத்தால் போக்கடிக்கத்தக்கதுமான வஸ்து ஒன்றுமில்லை. அஜ்ஞானமிருக்கிறதன்றோ வென்று சொல்லப்படுமேயாகில், இல்லை; அஜ்ஞானத்திற்கு அஹங்காரத்தால் விலக்கத்தக்கதன்மை ஏற்றுக்கொள்ளப் படாதாதலால். ஜ்ஞானமன்றோ அஜ்ஞானத்தைவிலக்கும் தன்மை வாய்ந்துள்ளது.

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் அநுபாவ்யத்வத்தை ஒப்புக்கொள்வதினால் தூஷணத்தைக்கூறுகிறார்— கிஞ்ச என்று. அநுக்ரஹஸ்வரூபத்தை சிக்ஷிக்கிறார்—நஹி என்று. வ்யக்தி ‡ தர்பணம் முதலியதில் அநுக்ரஹ ♆ ப்ரகாராந்தரம் காணப்பட்டிருந்தபோதிலுங்கூட எவ்வாறு ‡‡ ப்ரதிபந்த நிரஸனரூபமான அநுக்ரஹமே $ பரிசேஷமாக்கப்பட்டது? கூறப்படுகிறது. ஜாதிவ்யக்தி இரண்டுக்கும் தவறாமலிருக்கிற தர்ம தர்மிபாவத்தினால் வ்யக்தியானது ஜாதிக்கு வ்யஞ்ஜிகையாக இருக்கிறது. அவ்வாறாக அஹங்காராநுபவங்கள் இரண்டுக்கும் நியதமான தர்மதர்மிபாவமில்லை. அதோ அந்யனாலேயே நிரஸிக்கப்பட்டது. மூர்த்தத்ரவ்யமாகவும் கண்ணினது ரச்மிகளைத்திருப்பி அடிப்பதற்குக் காரணமாகவுமிருக்கிற கண்ணாடியானது மூர்த்தத்ரவ்யமாக இருக்கிற சாக்ஷுஷரச்மியை முகத்தோடு சேரும்படி செய்விக்கிறது- அவ்வாறு அஹங்காரமானது ஒன்றை திருப்பி அடிப்பதற்கு ஹேதுவாக இருக்கிற மூர்த்தத்ரவ்யமல்லவென்று இங்கு சொல்லப்படப்போகிற வேறு அநுக்ரஹப்ராகாரத்தினுடைய அநுபபத்தியை எண்ணிப்ரதிபந்தநிரஸநரூபாநுக்ரஹமே பரிசேஷமாக்கப்பட்டது இப்படிப்பட்ட அநுக்ரஹத்தில் த்ருஷ்டாந்தத்தைக் கூறுகிறார்— யதாநுபாதி என்று. அதினால் என்னவென்று வினவப்படுமேயானால் சொல்லுகிறார்— நசேஹ என்று. அதை நிரூபணம் செய்கிறார்— நதாவத் என்று. அஜ்ஞானம் ப்ராகபாவரூபமா? அல்லது பாவரூபமா? அல்லது நிரஸிக்கத்தக்கதான வேறொன்றாக சொல்லப்படுகிறதா? என்கிற மூன்று பக்ஷங்களைக்கருதி தாவத் சப்தம் ப்ரயோகிக்கப்பட்டது. "ந தாவத்" என்கிற க்ரந்தத்தால் விலக்கத்தக்கதான வேறு வஸ்து விலக்கப்பட்டது. அன்றிக்கே அஹங்காரத்திற்கு அஜ்ஞான நிராஸகத்வம் அஜ்ஞானத்திற்கு ஸம்வித் ஸம்பந்தித்வம் இரண்டும் பொருந்தாதென்று அபிப்ராயப்பட்டு முதலில் அஜ்ஞானத்திற்கு அஹங்காரத்தினால் விலக்கத்தக்க தன்மையை நிரஸிக்கிறார்— நதாவத் என்று. அஹங்காரத்தால் போக்கடிக்கத்தக்க அஜ்ஞானமிருக்கிறதென்று சங்கிக்கிறார்—அஸ்தி ஹி என்று. தூஷிக்கிறார் ந என்று. அஜ்ஞானசப்தமானது பாவரூபத்துக்கும் அபாவரூபத்துக்கும் பொதுவானது. தூஷணமும் பொதுவானது இரண்டுவிதமான அஜ்ஞானத்திற்கும் அஹங்காரத்தால் விலக்கத்தக்கதன்மை இல்லாமையால். எது நிவர்தகம் என்றால் சொல்லுகிறார்—ஜ்ஞாநமேவஹி என்று. ப்ராகபாவத்தையும் ஜ்ஞானோதபத்தியானது நிவர்திக்கச் செய்கிறது. பாவரூபத்திற்கும் ஜ்ஞான நிவர்த்யத்வம் அந்யனால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

‡ தர்பணம்—கண்ணாடி.
♆ ப்ரகாரம்— ரீதி அல்லது மாதிரி.
‡‡ ப்ரதிபந்தம்—தடை.
$ பரிசேஷம்—மிகுதி.

*இவ்வண்ணம் அஜ்ஞாநத்திற்கு ஸம்விதாச்ரயத்வமிருப்பினும் அஹங்காரத்தினுல் விலக்கத்தக்க தன்மை இல்லாமையால் அதின் நிரஸநரூபமான அநுக்ரஹம் ஸம்பவிக்கிறதில்லை என்று கூறப்பட்டது.*

---

ந ச ஸம்விதாஶ்ரயத்வமஜ்ஞாநஸ்ய ஸம்பவதி; ஜ்ஞாநஸமாநாஶ்ரயத்வாத் ஜ்ஞாநஸமாநவிஷயத்வாச்ச ஜ்ஞாத்ருபாவவிஷயபாவவிரஹிதே ஜ்ஞாநமாத்ரே ஸாக்ஷிணி நாஜ்ஞாநம் ஸ்தாதுமர்ஹதி; யதா ஜ்ஞாநாஶ்ரயத்வப்ரஸக்திரஹிதஸ்ய கடாதேர்நாஜ்ஞாநாஶ்ரயத்வம் । ததா ஜ்ஞாநமாத்ரேऽபி ஜ்ஞாநாஶ்ரயத்வாபாவேந நாஜ்ஞாநாஶ்ரயத்வம் ஸ்யாத் । ஸம்விதோऽஜ்ஞாநாஶ்ரயத்வாப்யுபகமேऽபி ஆத்மதயாऽப்யுபகதாயாஸ்தஸ்யா: ஜ்ஞாநவிஷயத்வாபாவேந ஜ்ஞாநேந ந தத்கதாஜ்ஞாநநிவ்ருத்தி: । ஜ்ஞாநம் ஹி ஸ்வவிஷய ஏவாஜ்ஞாநம் நிவர்த்தயதி, யதா ரஜ்ஜ்வாதௌ । அதோ ந கேநாபி கதாசித்ஸம்விதாஶ்ரயமஜ்ஞாநமுச்சித்யேத । அஸ்ய ச ஸதஸதநிர்வசநீயஸ்யாஜ்ஞாநஸ்ய ஸ்வரூபேணைவ தந்நிவ்ருத்திரூபேஷ்டத்வாவிஶிஷ்டாத்மகத்வே । ஜ்ஞாநப்ராகபாவரூபத்வஸ்ய வாஜ்ஞாநஸ்ய ஜ்ஞாநோத்பத்திவிரோதித்வாபாவேந ந தந்நிரஸநேந தஜ்ஜ்ஞாநஸாத்யநாநுக்ரஹ: । அதோ ந கேநாபி ப்ரகாரேணாஜ்ஞாநப்ரகாரேணாநுக்ரஹஹேதோரஸித்தி: ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

அஜ்ஞாநத்திற்கு ஸம்வித்தை ஆச்ரயித்திருத்தல் ஸம்பவியாதன்றே. ஜ்ஞாநத்தோடு ஸமாநமான ஆச்ரயமுள்ளதாக இருப்பதாலும் அந்த ஜ்ஞாநத்தோடு ஸமானவிஷயமுள்ளதாக இருப்பதாலும் ஜ்ஞாத்ருபாவம் விஷயபாவம் இவ்விரண்டுகளால் விடுபட்டு ஸாக்ஷியாக இருக்கிற ஜ்ஞாநமாத்ரத்தில் அஜ்ஞாநமானது உண்டாவதற்குத் தகுதியுள்ளதாகாதன்றே. எவ்வாறு ஜ்ஞாநாச்ரயத்வ ப்ரஸக்தி இல்லாமையால் கடம் முதலியவற்றுக்கு அஜ்ஞாநாச்ரயத்வமில்லையோ அவ்வாறே ஜ்ஞாநமாத்ரத்திலும் ஜ்ஞாநாச்ரயத்வமில்லாமையால் அஜ்ஞாநாச்ரயத்வம் ஸம்பவியாது ஸம்வித்துக்கு அஜ்ஞாநாச்ரயத்வத்தை ஒப்புக்கொண்டபோதிலும் ஆத்மாவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அந்த ஸம்வித்திற்கு ஜ்ஞாநவிஷயத்வமில்லாமையால் ஜ்ஞாநத்தால் அதை அடைந்திருக்கிற அஜ்ஞாநத்திற்கு நிவ்ருத்தி இல்லை. ஜ்ஞாநமோவென்றால் தனக்கு எதுவிஷயமோ அதிலேயே அஜ்ஞாநத்தை நிவர்திப்பிக்கிறது ரஜ்ஜு முதலியதில்போல. ஆகையால் ஸம்விதாச்ரயமான அஜ்ஞாநமானது ஒன்றினுலும் ஒருக்காலும் நாசம் செய்யப்படுகிறதில்லை. ஸத்

என்றும் அஸத் என்றும் நிர்வசனம் செய்யத்தகாததான இந்த அஜ்ஞானத்தினுடைய ஸ்வரூபமே நிரூபிக்கமுடியாததென்று மேலே சொல்லப்போகிறோம். ஜ்ஞாநப்ராகபாவரூபமான அஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாநோத்பத்தி விரோதித்வமில்லாமையால் அதின் நிரஸநத்தினால் அந்த அநுபவஸாதநாநுக்ரஹமில்லை. ஆகையால் ஒருவிதத்தாலும் அஹங்காரத்தால் அநுபூதிக்கு அபிவ்யக்தி இல்லை.

---

**ச்ருதப்ரகாசிகை—**

இதற்குமேல் ஜ்ஞாநத்திற்கு ஸம்விதாச்ரயத்வமும் பொருந்துகிறதில்லை என்று சொல்லுகிறார்— **நச** என்று. ஸம்விதாச்ரயத்வம்-ஸம்வித் ஸமபந்தித்வமென்று அர்த்தம். ஆச்ரயணம் ஸம்பந்தம் - ஸம்பந்தமும் கர்மத்வ ரூபமாகவும் ஆச்ரயத்வ ரூபமாகவுமிருப்பதினால் ஆச்ரயசப்தம் இரண்டுவிதமான ஸம்பந்தத்தையும் குறிக்கிறது. 'ஆச்ரயஸ்ய சேதஸோப்ரஹ்ம '' இதுமுதலிய ப்ரயோகத்தாலும் ஆச்ரயசப்தத்தால் விஷயத்திற்கும் உபஸ்தாபனம் யுக்தம். ஸம்வித்துக்கு அஜ்ஞாநஸம்பந்தமானது ஆச்ரயதையினலா ? விஷயதையினலா ? இரண்டு விதத்தாலும ஸம்பந்தம் பொருந்ாதென்று அர்த்தம். எதனுலென்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்——**ஜ்ஞாந** என்று. அதினல் என்னவென்றல் சொல்லுகிறார்— **ஜ்ஞாத்ருபாவ** என்று. ஸாக்ஷிணி - பார்ப்பவனுக்கேஸாக்ஷித்வம். ஜ்ஞப்திக்சோவென்றல் ஸாக்ஷித்வமும வ்யாஹதமாக ஆகிறதென்று அபிப்ராயம். ''பவிதுமர்ஹதி'' என்கிற நிர்தேசத்தினல் ஆச்ரயதையாலாவது விஷயதையாலாவது ஸம்பந்தமாத்ரம் விவக்ஷிக்கப்பட்டது. இதினல் வ்யதிரேக வ்யாப்தி காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. ஸம்விதாச்ரயத்வா பாவததில் அந்வயவ்யாப்தியைக் காண்பிக்கிறார்—**யதா** என்று. அஜ்ஞாநாச்ரயதவமாவது ஜ்ஞாநத்தின் ப்ராகபாவத்திற்கு ஆச்ரயமாக இருத்தல். அல்லது அநிர்வசநீயமாந அஜ்ஞாநத்திற்கு ஆச்ரயமாக இருத்தல். அது கடம் முதலியவற்றில் இல்லை என்று அர்தத. **ஜ்ஞாநாச்ரயத்வப்ரஸக்தீதி** ஜ்ஞாதாவுக்கும் அஜ்ஞாநாச்ரயத்வமும் ஜ்ஞாநாச்ரயத்வமும் காலபேதத்தால் விருத்தமன்று என்பது கருத்து. கடம் முதலியவற்றுக்கு ஜ்ஞாநாத்யந்தாபாவாச்ரயத்வமன்றே. ஜ்ஞாநம் அஜ்ஞாநத்திற்கு ஆச்ரயமல்ல. அஜ்ஞாநததிற்கு விஷயமுமல்ல அஜ்ஞாநாச்ரயத்வமும் அஜ்ஞாநவிஷயத்வமும் ஒப்புக்கொள்ளப்படுமேயாகில் ஜ்ஞாத்ருத்வம் ஜ்ஞேயத்வம் இரண்டும் ப்ரஸங்கிக்குமென்று ப்ரதிகூலதர்கம் சொல்லப்பட்டதாக ஆகிறது. இவ்வண்ணம் அஜ்ஞாநாச்ரயத்வத்தை ஒப்புக்கொள்ளாமல் தூஷணம் உரைக்கப்பட்டது. அதை ஒப்புக்கொண்டு தூஷணத்தை உரைக்கிறார்—**ஸம்வித்:** என்று. அவச்சின்னஜ்ஞாநத்திற்கு அநுபாவ்யத்வமொத்துக் கொண்டபோதிலும் அநவச்சின்னமாயும் ஆத்மபூதமாயுமிருக்கிற ஜ்ஞாநத்திற்கு அநுபாவ்யத்வத்தை ஒப்புக்கொள்ளாமையாலென்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிறார்— **ஆத்மதயா அப்யுபகதாயா:** என்று. ஜ்ஞாந விஷயத்திற்கே அஜ்ஞாந நிவ்ருத்தியை திருஷ்டாந்ததோடு கூறுகிறார்—**ஜ்ஞாநம்ஹி** என்று. அவிஷயத்தில்கூட அஜ்ஞாந நிவ்ருத்தி ஸம்பவிக்குமேயாகில் அப்பொழுது சுக்தி ஜ்ஞாநத்தினல் எல்லா ப்ரம நிவ்ருத்தியும் உண்டாகுமென்று அபிப்ராயம். இவ்வண்ணம் ஜ்ஞாநத்தால் நிவர்திக்கத்தக்க அஜ்ஞாநாச்ரயத்வத்தை ஒப்புக்கொண்டால் ஜ்ஞாநவிஷயத்வம் ப்ரஸங்கிக்கும் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. ஆச்ரயத்வத்தை ஒப்புக்கொள்வதினல் சொல்லப்பட்ட தூஷணத்தை நிகமனம் பண்ணுகிறார்— **அத:** என்று.

உன்றால் அஹங்காரத்தால் விலக்கத்தக்கதாகச் சொல்லப்பட்ட அஜ்ஞானமானது ஸதஸதநிர்வசநீயமா? அல்லது ஜ்ஞாநப்ராகபாவரூபமா? என்று விகல்பித்துக்கூறுகிறார்— அஸ்ய என்று. இரண்டாவதைப்பற்றி விடை அளிக்கிறார்—ஜ்ஞாநப்ராகபாவ என்று. விரோதிசப்தத்தால் ப்ரதிபந்தகத்வம் விவக்ஷிக்கப்பட்டது. § ஸஹாநவஸ்தானமாத்ரமல்ல அபிவ்யக்தி எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாதென்பதை நிகமனம் செய்கிறார்—அத. என்று கோபிப்ரகாரேண - உத்பாதகத்வத்தாலோ ப்ரகாசகத்வத்தாலோ அந்த அனுபவஸாதநாநுக்ராஹகத்வத்தினாலோ வென்று அர்த்தம்.

ந ச ஸ்வாச்ரயதயாऽபிவ்யங்க்யாபிவ்யஞ்ஜனமபிவ்யஞ்ஜகாநாம் ஸ்வபாவ:—, ப்ரதீபாதிஷ்வதர்சநாத், யதாவஸ்திதவஸ்துப்ரதீத்யநுகுணஸ்வபாவாச்ச ஜ்ஞாநதத்ஸாதநயோரநுக்ராஹகஸ்ய ச । தச்ச ஸ்வத:ப்ராமாண்யந்யாயஸித்தம் ॥

ந ச தர்பணாதிர்முகாத்யபிவ்யஞ்ஜக:, அபி து சாக்ஷுஷதேஜ:ப்ரதிபலநரூபதோஷஹேது: । தத்தோஷக்ருதச்ச தத்ராந்யதாவபாஸ: । அபிவ்யஞ்ஜகஸ்த்வாலோகாதிரேவ ॥

ந சைவம் தயாऽஹங்காரேண ஸம்விதி ஸ்வப்ரகாசாயாம் தாத்ருசதோஷாவஹநம் ஸம்பவதி । வ்யக்தேஸ்து ஜாதிராகார இதி ததாச்ரயதயா ப்ரதீதி:; ந து வ்யக்திவ்யங்க்யத்வாத் । அதோऽந்த:கரணபூதாஹங்காரஸ்ததயா ஸம்விதோऽபிவ்யக்தௌ த்ருஷ்டதோ ऽத்ருஷ்டதோ வா ந கிஞ்சிதிஹ காரணமிதி நாஹங்காரஸ்ய ஜ்ஞாத்ருத்வம் ததபிவ்யஞ்ஜகத்வம் வா ॥

ஸ்ரீபாஷ்யம்.—

அபிவ்யஞ்ஜகங்களுக்குத் தன்னிடத்திலிருப்பதாக அபிவ்யங்க்யங்களை அபிவ்யஞ்ஜநம் செய்தல் ஸ்வபாவமல்ல. ப்ரதீபம் முதலியவைகளில் காணப்படாமையால். ஜ்ஞாநம் ஜ்ஞாநஸாதனம் அநுக்ராஹகம் இம்மூன்றுக்கும் உள்ளபடி இருக்கிற, பதார்த்தஜ்ஞாநத்திற்கு அநுகுணமான ஸ்வபாவமிருப்பதால் அதுவும் ஸ்வத:ப்ராமாண்ய ந்யாயத்தால் ஸித்தம். கண்ணாடி முதலியது முகம் முதலியவற்றுக்கு அபிவ்யஞ்ஜகமல்ல, பின்னையோ சாக்ஷுஷதேஜஸின் ப்ரதிபலன ரூபதோஷத்திற்கு ஹேது. அதில் விபரீதமான தோற்றமானது அந்த ப்ரதிபலனரூபதோஷத்தால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. * ஆலோகம் முதலியதே அபிவ்யஞ்ஜகம். ஸ்வப்ர

§ ஸஹாநவஸ்தானம்—கூடசேர்ந்து இராமை. * ஆலோகம்—ஸூர்யப்ரகாசம்.

காசையாக இருக்கிற இந்த ஸம்வித்தில் அவ்வண்ணம் அஹங்காரத்தால் அப்படிப்பட்ட தோஷத்தைப் போக்குதல் ஸம்பவிக்கிறதில்லை வ்யக்திக கோவென்றால் ஜாதியானது ஆகாரமாதலால் அந்த வ்யக்தியை ஆச்ரயித்த தாகவே ஜாதியானது அறியப்படுகிறதே ஒழிய வ்யக்தி வ்யங்க்யமாக ஆகிற தில்லை. ஆகையால் வாஸ்தவத்தாலோ தோஷத்தாலோ அந்தக்கரணபூதமான அஹங்காரத்திலிருப்பதாக ஸம்வித்தின் உபலப்திக்கு ஒருகாரணமும் இங்கு இல்லை. ஆதலால் அஹங்காரத்திற்கு ஜ்ஞாத்ருத்வமாவது அவ்வாறாக உப லப்தியாவது இல்லை.

---

**ச்ருதப்ரகாசிகை—**

அதற்குமேல் தன்னிடத்தில் இருப்பதாகக் கூறப்பட்ட அநுபூதியின் அபிவ்யக்தி யை தூஷிக்கிறார்—நச என்று வ்யபிசாரத்தைச்சொல்லுகிறார்— ப்ரதீபாதிஷு என்று. வேறு ஹேதுவையும் சொல்லுகிறார் — யதாவஸ்தித என்று. ப்ரதீதி: - வ்யஞ்ஜகா காநுகுண்யம் அதற்கு அநுகுணமான ஜ்ஞாநம் முதலியவைகளின் ஸ்வபாவத்தாலெ ன்று அர்த்தம்.

தச்ச என்று. அதையே உபபாதிக்கிறார்— ப்ராமாண்யாப்ராமாண்ய விஷயங்களாக நான்கு பக்ஷங்கள். ப்ராமாண்யா ப்ராமாண்யங்கள் இரண்டும் பரத:, இரண்டும் ஸ்வத:, ப்ராமாண்யம் பரத:, வேறு ஸ்வத:, ப்ராமாண்யம் ஸ்வத:, மற்றது பரத:, என்று முதலாவது பக்ஷம்பொருந்தாது, நிஸ்வபாவத்வம் முதலியது ப்ரஸங்கிப்பதால். ப்ராமாண்யா ப்ராமாண்யங்கள இரண்டும் வேறு இடத்தி லிருக்கிறதுகளேயானால் அவை களின் ஸம்பந்தத்தால் ஜ்ஞாநத்திற்கு அவ்விதமான தன்மையும் அதின் ஸம்பந்த மில்லாவிடில் அநுஷ்ணசீதம் போல அநுபயத்வமும் பொருந்தியதாக ஆகும். வேறி டத்தில் அவ்விரண்டுமில்லாமலிருப்பதால் பரதஸ்த்வம் பொருந்தாது. ப்ராமாண்ய புபுத்ஸா பரம்பரையால் அநவஸ்தை ப்ரஸங்கத்தலாலும் இரண்டுக்கும் ஸ்வதஸ்த்வம் பொருந்தாது. விருத்த தர்மங்களாக இருப்பதுபற்றி வ்யாகாதம் வருவதால். வ்யக்தி பேதத்தால் அபாதமென்பது கூடாது. இது ப்ராமாண்யாச்ரயமான வ்யக்தி. இது அப்படிப்பட்டதல்லவென்பதில் நியாமகமில்லாமையால். அப்ராமாண்யத்திற்கே ஸ்வத ஸ்த்வம் பொருத்தமுள்ளதாக ஆகாது ப்ராமாண்யமே அதிகமாக இருப்பதாலும் மற்றது அதிகமாக இல்லாமலிருப்பதாலும் பகுவாக இருப்பவைகளுக்கு ஸ்வதஸ்த்வ மும் அல்பமாக இருப்பதற்கு ஔபாதிகத்வமுமனறோ யுக்தம். கடபடாதி ஜ்ஞாநங் களில் சுக்திரஜதாதி ஜ்ஞாநங்களுக்கு இதம்சங்களில்கூட ப்ராமாண்யம் காணப்படுவ தால் அதற்கு பாஹுள்யம். ஆகையால் ஸ்வத: ப்ராமாண்யம் - பரத: அப்ராமாண்யம் என்று. ஓரிடத்தில் தன்னிடத்திலிருப்பதாக அபிவ்யஞ்ஜகத்தை ஒப்புக்கொண்டு வ்ய பிசாரம் கூறப்பட்டது.

அதற்குமேல் ஓரிடத்திலும் அது இல்லை என்று சொல்லுகிறார்— நச என்று. அங்ஙனமாகில்; முகத்தைப் பார்ப்பதற்காகக் கண்ணாடி முதலியது அங்கீகரிக்கக்கூடா தெனில் கூறுகிறார் அபிது என்று. அந்த ஜ்ஞாநத்திற்கு ஹேதுவாக இருப்பதால் ப்ரதிபலநத்திற்கு மாத்ரமும் என்று பகர்கிறார் தத்தோஷ என்று. எது அந்த இடத்தில் அபிவ்யஞ்ஜகமென்றால் சொல்லுகிறார்—அபிவ்யஞ்ஜகஸ்து என்று. அஹங

காரமானது ¶ மூர்த்தமாகவும் $ ஸ்வச்சமாகவும் ஸ்தூலமாகவுமிருக்கிற த்ரவ்யமல்லாததாலும் ஸம்வித்துக்கு ஜ்ஞேயத்வமில்லாமையாலும் அசாக்ஷுஷமாக இருப்பதாலும் அஹங்காரத்தால் அவிஷயபூதமான ஸம்வித்தில் அந்த ஸம்வித்தை க்ரஹிக்கிற வஸ்துவினால் உண்டுபண்ணப்பட்ட ப்ரதிபலனரூபமான தோஷம் ஸம்பவியாதென்று சொல்லுகிறார்—ந சேஹ என்று. வ்யக்தியில் ஜாதிப்ரதீதியானது நியதமான தர்மதர்மிபாவத்தால் உண்டாகிறது. வ்யங்க்யத்வத்தாலல்லவென்று சொல்லுகிறார்—வ்யக்தே: என்று. இந்த தர்பணவ்யக்தி நிர்வாஹத்வயத்தை மனதில் வைத்துக்கொண்டு மூர்த்தி ப்ரதிபந்த நிரஸனரூபமான அநுக்ரஹம் தூஷிக்கப்பட்டது. தர்மதர்மிபாவத்தால் உள்ளபடி ஜாதியானது வ்யக்தியிலிருப்பதினால் அதற்கு உபலப்தி உண்டாகிறது. கண்ணுடியிலோவென்றால் ப்ரதிபலனரூப தோஷத்தினால். இவ்வண்ணம் அந்யபக்ஷத்தில் ஸம்பவிக்கிறதில்லை என்று சொல்லுகிறார்—அத: என்று. வாஸ்தவத்தில் தர்மதர்மிபாவம் காரணம், தோஷமோவென்றால் அதிலிருப்பதாக உண்டாகும் உபலப்திக்குக் காரணம். மூர்த்த ஸ்வச்சஸ்தூல த்ரவ்யத்வம் இரண்டும் அஹங்காரத்திலில்லை என்று அர்த்தம். வஸ்துத: காரணாபாவத்தால் ஜ்ஞாத்ருத்வம் இல்லை. தோஷரூபமானகாரணமில்லாமையால் அறியப்படுகிறதுமில்லை என்று சொல்லுகிறார்—நாஹங்காரஸ்ய ஜ்ஞாத்ருத்வம் ததோபலப்திர்வேதி.

தஸ்மாத் ஸ்வ ஏவ ஜ்ஞாத்ருதயா ஸித்யந்நஹமித்யேவ ப்ரத்யகாத்மா । ந ஜ்ஞப்திமாத்ரம் । [illegible] ॥

[illegible] ॥

[illegible] ॥

---

¶ மூர்த்தம்—க்ரியாச்ரயம்.　　$ ஸ்வச்சம்—நிர்மலம்.

ஸ்ரீபாஷ்யம்—

ஆகையால் தானாகவே ஜ்ஞாதாவாக ஸித்திக்கிற அஹமர்த்தமே ப்ரத்யகாத்மா. ஜ்ஞப்திமாத்ரமன்று அஹம்பாவம் போய்விடுமேயாகில் ஜ்ஞப்திக்குங்கூட ப்ரத்யக்த்வஸித்தி இல்லை என்று சொல்லப்பட்டது. தமோகுணம் அதிகரித்து ஆக்ரமிப்பதாலும் பராகர்த்தாநுபவமில்லாமையாலும் அஹமர்த்தத்திற்கு தனித்து வ்யக்தமான ப்ரகாசமிலலாமலிருந்தபோதிலும் விழிக்கிறவரையில் அஹம் என்று ஒரேவிதமாக ஆன்மாவுக்கு ஸ்பூர்த்தி இருப்பதால் ஃ ஸுஷுப்தியில்கூட அஹம்பாவனை விலகுகிறதில்லை. உனக்கு அபிமதையான அநுபூதிக்கும் அவ்வாறே ப்ரஸக்தி என்று சொல்லத்தக்கது. தூங்கி எழுந்திருந்தவன் ஒருவனுவது அஹம்பாவத்தினின்று விடுபட்டதும் அர்த்தாந்தரங்களுக்கு விரோதியான ஆகாரத்துடன் கூடியதுமான ஜ்ஞப்தியாகிய நான் அஜ்ஞாநஸாக்ஷியாக இருக்கிறேன் என்று இவ்விதமான ஸ்வாபஸமகாலையான அநுபூதியை பராமர்சிக்கிறுனில்லை. ஸுகமாக நான் தூங்கினேனென்று இப்படியல்லவோ தூங்கி எழுந்திருந்தவனுக்குபராமர்சம் வருகிறது. இந்த பராமர்சத்தால் அப்பொழுதுங்கூட அஹமர்த்தமாக. இருக்கிற ஆத்மாவுக்கே ஸுகித்வமும் ஜ்ஞாத்ருத்வமும் அறியப்படுகிறது எவ்வாறு இப்பொழுது ஸுகமுண்டாகிறதோ அவ்வாறு அப்பொழுது உறங்கினேன் என்பது இந்த ப்ரதிபத்தி என்று சொல்லத்தக்கதல்ல ப்ரதிபத்திக்கு அந்த ஸ்வரூபமில்லாமையால்.

ச்ருதப்ரகாசிகை—

ஜ்ஞாதாவுக்கு ஆத்மத்வத்தை நிகமனம் பண்ணுகிறுர்—தஸ்மாத் என்று. ஜ்ஞப்திக்கு ஆத்மத்வம் அயுக்தம். அஹந்தையில்லாவிடில் ப்ரத்யக்த்வம் பொருந்தாததலால். என்று சொல்லுகிறுர்—அஹம்பாவவிகமே என்று. அஹம் என்கிற வ்யவஹாராநுகுணமான பாஸமில்லாவிடில் தனக்குத் தான் தோற்றுதலானது இல்லாமல் போகும். ஆகையால் ப்ரத்யக்த்வமும் அஹமர்த்ததிற்கே ஆத்மத்வஸாதகம் என்று அர்த்தம். அதற்குமேல் ஸுஷுப்தியில் அஹமர்த்தத்திற்கு ஸ்புரணமிருக்கிறதென்பதை ஸாதிப்பதற்கு வேதாந்தத்தை அவலம்பித்தவர்களான அனைவர்களாலும் ஸ்வயம் ஜ்யோதிஷ்ட்வ ச்ருதிகளை அநுஸரித்து ஸுஷுப்தியில் ஆத்மஸ்புரணம் அங்கீகரிக்கத்தக்கது. அந்த

ஃ (தசைகள்) ஜாகரை, ஸ்வப்நம், ஸுஷுப்தி, என மூவகைப்பட்டுள்ளன. அவற்றுள் விழிப்புடன் செய்யும் வ்யவஹாரங்கள் அனைத்தும் ஜாகரதசாகார்யம். வெளி இந்த்ரியவ்யாபாரங்கள் முற்றிலுமொடுங்கி மனோவ்யாபாரமாத்திரத்தினுல் பூர்வகர்மாநுகுணமாகவும் வாஸநாநுகுணமாகவும் அத்ருஷ்டாநுகுணமாகவும் ஈசனுல் கல்பிக்கப்பட்டிருக்கிற தத்காலமாத்ராநுபாவ்யமான பதார்த்தங்களை அனுபவிக்கும் நிலைமைஸ்வப்நதசை. பாஹ்யேந்த்ரிய வ்யாபாரங்களும் மன இந்த்ரியவ்யாபாரங்களும் முற்றிலுமொடுங்கி நிர்வ்யாபாரனுன ஜீவாத்மா பரமாத்மாவினிடத்தில் சேர்க்கைபெற்று விஷயாநுபவக்லேசத்தை இழந்து இளைப்பாறி ப்ரமமாநந்தத்தை அநுபவிக்கும் தசை ஸுஷுப்தி.

ஸுஷுப்தியில் "நாஹகல்வயமேவம் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மி" என்கிற ச்ருதியினாலும் "என்னையுங்கூட நான் அறிந்தேனில்லை" என்கிற பராமர்சத்தாலும் அஹமர்த்தானுபவமில்லை ஆகையால் அநுபூதியின் ஸ்புரணமே அப்பொழுது என்கிற சங்கையில் அஹமர்த்தத்திற்கு அவிசதஸ்புரணமிருக்கிறதென்று உபபத்தியுடன் ப்ரதிஜ்ஞை செய்கிறார்—தம: இது முதலியதால் சகாரம் "து" சப்தத்தினர்த்தமுள்ளது. சங்காநிவ்ருத்தியில் வர்த்திக்கிறது. தமோகுணாபிபவத்தை ஹேதுவாகக் கொண்ட பராகர்த்தாநுபவாபாவத்தால் ஸ்புடமான அவபாஸமில்லை. விவிக்த ப்ரதிபாஸம் வ்யாவ்ருத்த ப்ரதிபாஸம். அனேக விசேஷணங்களோடு கூடிய அவபாஸம் ஸ்புடாவபாஸம், வ்யாவர்த்தக ப்ராஹ்மணத்வம் முதலிய பாஹ்யதர்மங்களோடு கூடியதாகவும் புத்தி ஸுகம் முதலிய ஆந்தரதர்மங்களோடு கூடியதாகவும் ப்ரதிபாஸமில்லாமையால் ஸகலேதர வ்யாவ்ருத்தமாகவும் ஸ்புடமாகவும் ப்ரதிபாஸத்தின் இன்மை. எந்த ஆகாரத்தால் ஸ்புரிக்கிறதென்றால் சொல்லுகிறார்— **அஹமித்யேகாகாரேண ஸ்புரண்** என்று. அஹமென்று சப்தாநுகாரமல்ல. பின்னையோ இதின வாச்யார்த்தாநுகாரம் - ப்ரத்யக்த்வாகாரத்தோடு ஸ்புரிப்பதாயென்று அர்த்தம். ஏகசப்தத்தால் அஹம்பாவத்தின் நீங்காமை சொல்லக்கருதப்படப்பட்டிருக்கிறது. அன்றிக்கே, ஏகாகாரேண ஸர்வாத்மஸாதாரணமான ஆகாரத்தாலென்று அர்த்தம். ப்ரத்யக்த்வம் முதலியதோவென்றால் ஸர்வாத்ம ஸாதாரணம் ஸுகம் துக்கம் முதலியவைகளும்தேவத்வம் முதலியவைகளும் ஸர்வாத்ம ஸாதாரணங்களல்லவன்றோ. ஸுஷுப்தியில் பாஸிக்கின்ற அஹம்பாவம் ஆத்மாவினிடத்தில, ஸாத்யம் அவ்வாறு ஸ்புரணம், ஹேது விசதாவபாஸமில்லாமையால் அஹமர்த்த ஸ்புரணமில்லை என்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்— **பவத்பியத்ராயர் அநுபூதோபி** என்று. அஹமர்த்தஸ்புரணத்தில் மாத்ரம் அவை சத்யதோஷம் என்பதில்லை அநுபூதி ஸ்புரணத்திலும் அது துல்யமாக உன்னால் சொல்லத்தக்கது. ஆகையால் விசதாவபாஸமில்லாமையால் நாஸ்தித்வம கூறப்படுமேயாகில் ஜ்ஞப்திரூப ஆத்மாவுக்கும் அப்பொழுது ஸ்புரணம் உண்டாகாமல் போகவேண்டியதாகும். ஜ்ஞாதா ஜ்ஞேயம் இவைகளுக்கு ஸம்பந்தமில்லாமையால் ஸ்புடமான அவபாஸமில்லை என்றல்லவோ அவனுடையகொள்கை என்று அபிப்ராயம்.

ம்ருஷாவாதிகளாலும் மற்றவாதிகளாலும் ஜாகராவஸ்தையிலேயே அவிசதமான அவபாஸம் நிர்விகல்பகத்தில் அங்கீகரிப்பட்டிருக்கிறது. அவர்கள விசதாவபாஸமில்லாமையால் அஹமர்த்தத்தின் அஸ்புரணத்தைக்கூறுவார்கள். அந்த நிர்விகல்பத்திலும் தனித்தனியாக வஸ்துமாத்ரத்தினுடைய அவபாஸத்தின் அங்கீகாரமானது பொருத்தமுள்ளதாக ஆகிறதில்லை அவிசதவஸ்துமாத்ராவபாஸமானது அன்யர்களால் அப்ராமாணிகமாக நிர்விகல்பகத்தில் ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறது. இந்த இடத்திலோவென்றால் "அத்ராயம் புருஷ: ஸ்வயம் ஜ்யோதிர்பவதி" இது முதலிய ச்ருத்யனுஸாரத்தினால் அவிசதமான அவபாஸமானது ப்ராமாணிகமாக ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறதென்று பேதம். ஆகையால் ஸுஷுப்தியில் ஆத்மஸ்புரணத்தை ஒப்புக்கொள்வதும் அவிசதமான அவபாஸத்தை ஒப்புக்கொள்வதும் துல்யமாக இருக்க ம்ருஷாவாதிமதத்தைவிட தன் பக்ஷத்தில் ப்ரமாணாநுகுண்யத்தைச் சொல்லவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனாக பரபக்ஷத்தில் ப்ரமாணாநுகுண்யாபாவத்தைக் காட்டுகிறார்— **நஹி** என்று. அஹம்பாவ வியுக்தார்த்தாந்தர ப்ரத்யகாகாரா—ஜ்ஞாத்ரு ஜ்ஞேயம் முதலிய ஸமஸ்தவிசேஷங்களாலும் விடுபட்டதென்று அர்த்தம். ப்ரத்யக்த்வஸித்தியின்பொருட்டு ஜ்ஞப்தி அஹம் என்கிற இடத்தில் அஹம்சப்தத்திற்கு உபாதானம். தன் பக்ஷத்தில் பராமர்சாநுகுண்யத்தைக்கூறுகிறார்— **ஏவம் ஹி** என்று. இந்த பராமர்சமானது ஸுஷுப்தி காலத்தில் ஸுகரூபமாக அனுபவிக்கப்பட்ட ஆத்மாவுக்கு கோசரம். அதீதகாலஸம்பந்தம் ஸ்வரூபம் இவ்விரண்டுகளுமோ வென்றால் பூர்வகாலத்திலனுபவிக்கப்பட்ட அர்த்

தத்தின் ப்ரத்யபிஜ்ஞையினாலும் யோக்யாநுபலப்தியினாலும் அநுமிக்கத்தக்கவைகள் தானாகவே அனுகூலமாக பாஸிக்கின்ற அஹமாத்தத்திற்கு ஸூகமஹமஸ்வாப்ஸம் என்கிற இந்த பராமர்சமானது அநுமானததால் அறியத்தக்க காலம் ஸ்வாபம இவைகளோடு கூடின ஜீவாத்மாவுக்கு கோசரமான ப்ரதயபிஜ்ஞா விசேஷம். இவ்வண்ணமாக தன் மதத்திற்கும் புறமதத்திற்கும் அடைவிலே பராமர்சத்தின் ஆநுகுண்யம் அதின் அபாவம், என்கிற வைஷம்யம் கூறப்பட்டது ச்ருதியின் ஸ்வாரஸ்யமும் நம்முடையமதத்தில் "அத்ராயம புருஷ: ஸ்வயம் ஜ்யோதி:" என்று புருஷசப்தத்திற்கு ச்ரவணமிருப்பதால். புருஷசப்தமானது ஸம்விந்மாத்ரபரமன்று. "ஏஷஹி த்ரஷ்டா ச்ரோதா ரஸயிதா க்ராதா மந்தா போத்தா கர்தா விஜ்ஞாநாத்மா புருஷ:" என்று ஜ்ஞாதாவுக்கே புருஷத்வ ச்ரவணமிருப்பதால் உலகத்தில் ஜ்ஞாதாவினிடத்தில் புருஷசப்தத்திற்கு ப்ரஸித்தி இருப்பதினாலும் ப்ரத்யக்த்வஸித்தியானது நம்முடைய மதத்திலேயே என்று சொல்லப்படப்போகிறது. கூறப்பட்ட பராமர்சத்தினால் பலித்த அர்த்தத்தைக்கூறுகிறார்—அநேந என்று. 'ஸூகமஹமஸ்வாப்ஸம்' என்கிற பராமர்சத்தில் ஸூகம் என்பதினால் அப்பொழுது அநுகூலமாக பாஸித்தல் அனுஸந்திக்கப்பட்டதாக ஆகிறது. அஹம் என்பதினால் தனக்குத்தான் தோற்றுதல் என்கிற ப்ரத்யக்த்வமும் அநுஸந்திக்கப்பட்டதாக ஆகிறது எப்படி மெதுவாகச்சென்றேன். மதுரமாக கானம் பண்ணினேன், என்கிற பராமர்சத்தால் முந்தின கமநத்தோடும் கானத்தோடுங்கூட அக்காலத்திலுள்ள மாந்த்யமும் மாதுர்யமும் அநுஸந்திக்கப்பட்டதாக ஆகிறதோ அப்படிப்போலென்று அர்த்தம்.

ஸ்வஸ்மை ஸ்வயம் அநுகூலம் என்று ஆநுகூல்ய ப்ரதியோகித்வாபிப்ராயத்தால் ஸூகித்வமென்று சொல்லப்பட்டது. ஸ்வஸ்மை பாஸதே என்று பாஸப்ரதிஸம்பந்தித்வரூப ப்ரத்யக்த்வாபிப்ராயத்தினால் ஜ்ஞாத்ருத்வமென்று கூறப்பட்டது. தர்மபூதஜ்ஞாநஸ்புரணத்தினாலன்று அதோ வென்றால் விஷயப்ரகாசநவேளையில் ஜ்ஞாதாவான ஆத்மாவுக்குஅப்படியே,எல்லோருக்கும் எப்பொழுதும் அப்படியேயல்லவென்பது பாஷ்யஸ்வாரஸ்யவிருத்தம. 'பும்ஸ்த்வாதிவத்த்வஸ்யஸதோபி வ்யக்தியோகாத'என்கிற ஸூத்ர ஸ்வாரஸ்யத்திற்கும் விருத்தம். அஸ்மரணியமாத்யுபயத்திக்கும் விருத்தம். ஸம்ஸாரதசையில் மனதின் வ்யாபாரமில்லாவிட்டாலும் ஜ்ஞானத்திற்கு ஆத்மவிஷயத்வம அதுவும் இந்த்ரியங்களின் வாயிலாக வ்யவஸிதம் என்கிற பாஷ்ய ஸ்வாரஸ்யத்திற்கும் விருத்தம் அப்படி இல்லாவிட்டால் இந்த ஸூத்ரபாஷ்ய வசனங்களுக்கு ஸங்கோசம உண்டாகும். ஸங்கோசத்தைக்காட்டுகிற ப்ரமாணமில்லாமையால் அதுவும் பொருந்தாது. ஆகையால் அப்பொழுது ஆன்மா ப்ரத்யக்காகவும் அநுகூலனாகவும் அநுஸந்திக்கப்பட்டானென்பது பராமர்சததால் பலித்த அர்த்தம். "ஸூகமஹமஸ்வாப்ஸம்" என்று ஸூகத்திற்கு ஸ்வாபக்ரியா விசேஷணத்வம் அறியப்படுந்தருணத்தில் எவ்வாறு ஆத்மவிசேஷணத்வம் சொல்லப்படுகிறதென்று வினவப்படுமேயாகில், இவ்வண்ணமல்ல க்ரியைக்கு ஸூகாச்ரயத்வமில்லாமையால் புருஷன் வாயிலாக க்ரியாவிசேஷணத்வம் யுக்தமாக இருப்பதால் என்று. ஆத்மாவுக்கு அப்பொழுது நாம் ஒன்றுமறிந்திலேனென்று அஜ்ஞாநஸாக்ஷியாக இருப்பைச் சொல்பவனால் அஜ்ஞாநாச்ரயபூதமான அஹமர்த்தானுபவமானது ஒப்புககொள்ளத்தக்கது. எப்படி காலையில் நாற்சந்திவீதியில் யானை இல்லை என்கிற பராமர்சத்தில் முந்திகஜாபாவத்திற்கு ஆச்ரய பூதமான ‡ சத்வரம் அநுஸந்திக்கப்பட்டதாக ஆகிறதோ அப்படியல்ல. 'அஸ்வாப்ஸம்' என்கிற

‡ சத்வரம்—நாற்சந்தி வீதி.

பராமர்சத்தினுல் மந்தமகச்சம் என்கிற இடத்தில் கமநம்போலஸ்வாபமும் அப்பொழுது அநுஸந்திக்கப்பட்டதாக ஆகவேண்டியதாகும்' என்று. சொல்லப்படுமேயானுல் அல்ல. காலையில் சதவாததில கஜமிலலை என்கிற இடத்தில் முந்தி கஜாபாவத்தின் அநுஸந்தானமில்லாமலிருந்தபோதிலுங்கூட இவ்விதமான பராமர்சததிற்கு எவ்வாறு உபபத்தியோ அப்படிபபோல ஸகலஜ்ஞாந நிவ்ருத்திரூபஸவாபத்திற்கு அப்பொழுது அநுஸந்தானமில்லாமலிருநதபோதிலுங்கூட இவ்விதமான பராமர்சத்திற்கு உபபத்தி வருவதால் அந்த இடததில் காலையில் சத்வரமே அனுபவிககப்பட்டது, கஜாபாவம் அனுபவிக்கப்படவில்லை. ப்ரதியோகியாக இருக்கிற கஜத்தின் ஸ்மரணமில்லாமையால். பிறகு சஜமானது இருககிறதா என்று வினவப்பட்டவனுல் யோகயார்த்தாநுஸ்மரணலிங்கததினுல் அபாவம் அநுமிக்கப்படுகிறது. அப்படிப்போல ஸகல ஜ்ஞாநநிவ்ருத்திரூப ஸ்வாபமும் யோக்யாநுஸ்மரணலிஙகததினுல் அநுமிக்கப்படுகிறது.

அய்யா! "ஸுகமாக நான் உறங்கினேன்" என்கிற பராமர்ச ஸ்வரூபம் இருக்க அத்தருணத்தில் ஸ்வாபம் முதலியவற்றின் அநநுபவமும் ஸுகித்வம் முதலியவற்றின் அநுபவமும எவ்வாறு சொல்லப்படுகிறது? எல்லாம் அநுபவிக்கப்பட்டதாக இருக்குமா? அல்லது அனுபவிககப்படாமலிருக்குமா? இதல்ல. ஸுகமாக நான் உறஙகினேன். என்கிற வயவஹாரததில் எநத அம்சத்தில் ப்ரதீதி ஸ்வாரஸ்யத்திற்கு அபவாதமிருக்கிறதோ அந்த விஷயமான ப்ரதிபத்தி ஸ்வாரஸ்யததிற்கு பங்கமிருந்தபோதிலும அபவதிககப்படாமலிருககிற அம்சவிஷய ப்ரதிபத்தி ஸ்வாரஸ்யத்திற்கு பஙகம் கூடாதாதலால். அந்த இடத்தில் ஸவாபதசையில் எந்த அர்த்தம் அநுபவிப்பதற்கு அசக்யமோ அந்த விஷயமான ப்ரதிபத்தி. ஸ்வாரஸ்யமானது பக்னமாக்கப்படுகிறது. எது எப்பொழுது அனுபவயோக்யமோ அந்த விஷயமான ப்ரதிபத்தி ஸ்வாரஸ்யம் இருக்கவே இருககிறது. பாஹ்யமான அந்தக்கரண ஜந்யமான ஸமஸ்த ஜ்ஞாநாபாவரூபமாதலால் ஸ்வாபம் அப்பொழுது அநுஸந்திப்பதற்கு சக்யமாகா. அநுஸந்தானம் இருக்கிறதென்று சொல்லப்படுமேயானுல் ஸ்வாபமே உண்டாகக்கூடாது. ஐந்த்ரியகங்களான ஸமஸ்தஜ்ஞாநஙகளின் நிவ்ருததி இல்லாமையால், இவ்வெண்ணமல்ல. ஸுகம் முதலியவற்றுககு ப்ரதிபத்தியின அநுபபத்தி: என்று சொல்லப்பட்டபடியே அர்த்தம். பிறகு இந்த பராமர்சததிற்கு அனயனுல் சொல்லப்பட்ட அந்யதாஸித்தியை அநுவதித்து பரிஹரிககிறுர்—நச இது முதலியதால். அநந்நுபவாத் என்று. இப்படி அர்த்தம். ப்ரதிபததி ஸ்வாரஸ்யத்தாலா? அல்லது அநுபபததியினுல் ஒப்புக்கொள்ளப்படுகிறதா? என்று விகல்பிதது அநதரூபதவாத ப்ரதிபத்தே: என்று ப்ரதிபத்தி ஸ்வாரஸ்யம் பரிஹரிக்கப்பட்டது எவ்வாறு மெதுவாகசசென்றேன். மதுரமாக கானம் செய்தேன். என்கிற பராமர்சவசநத்திற்கு அங்கு எப்படி இப்பொழுது மாந்த்யமும் மாதுர்யமும் இருக்கிறதோ அப்படிச்சென்றேன, பாடினேன் என்கிற அர்த்தம் பொருந்துகிறதில்லையன்றே, பின்னையோ சதிகாந ஸமகாலதவமே மாந்தயமாதுர்யங்களுக்கு பொருத்தமுள்ளதாக ஆகிறது. அப்படிப்போல ப்ரத்யகத்வ ஸுகித்வங்களும் ஸ்வாபஸமகாலிகஙகள் என்று அர்த்தம.

---

ந ச அஹமர்த்தஸ்ய ஜ்ஞாநாச்ரயஸ்ய ததாநீம் அஹமர்த்தஸ்யாஸ-
ஸ்பஷ்டாநுஸந்தாநாநுவ்ருத்தி: யதஸ்ஸுஷுப்த்யவஸ்தாயா: ப்ராகநு-
ஸந்திதம் வஸ்து ஸம்ப்ரத்யேதி "இதம் க்ருதம், இதம் கர்தவ்ய-
மிதி அதைதைதை தோ"......

கிஞ்சித³ஹமஜ்ஞாஸிஷம்" இதி ச பராம்ருஶதீதி சேத்; தத: கிம்? ந கிஞ்சிதி³தி க்ருத்ஸ்நப்ரதிஷேத⁴ இதி சேத்; ந, "நாஹமவேதி³ஷம்" இதி வேதி³துரஹமர்த²ஸ்யாநுவ்ருத்தே:; வேத்³யவிஷயோ ஹி ஸ ப்ரதிஷேத⁴: । ந கிஞ்சிதி³தி நிஷேத⁴ஸ்ய க்ருத்ஸ்நவிஷயத்வே ஸ்வாபி⁴மதாநந்த³ஸ்ம்ருதிரபி ப்ரதிஷித்³தா⁴ ஸ்யாத் । ஸுஷுப்திஸமயே சாநுஸந்தீ⁴யமாநமஹமர்த²மாத்மாநம் ஜ்ஞாதாரமஹமிதி பராம்ருஶ்ய ந கிஞ்சித³வேதி³ஷமிதி வேத³நே தஸ்ய ப்ரதிஷித்⁴யமாநே தஸ்மிந் காலே நிஷித்⁴யமாநாயா வித்தே³ஸ்ஸாக்ஷிணோ வர்த்தமாநஸ்ய ஜ்ஞாத்ரஹமர்த²ஸ்ய பா⁴ஸமாநேநைவ "ந கிஞ்சித³ஹமவேதி³ஷம்" இதி பராமர்ஶேந ப்ராப்யம் ஸித்³தி⁴மத்த்வம் ஜ்ஞாநாமேவ ஸாத்⁴யதே ॥

"மாமப்யஹம் ந ஜ்ஞாதவாந்" இதி அஹமர்த²ஸ்யாபி ததா³நீமநநுஸந்தா⁴நம் ப்ரதீயத இதி சேத்; ஸ்வாநுப⁴வஸ்வவசநயோர்விரோத⁴மயமபி ந ஜாநந்தி ப⁴வந்த: । "அஹம் மாம் ந ஜ்ஞாதவாந்" இதி ஸ்வாநுப⁴வவசநே । மாமிதி கிம் நிஷித்⁴யத இதி சேத்; ஸாது⁴ ப்ருஷ்டம் ப⁴வதா । தது³ச்யதே, அஹமர்த²ஸ்ய ஜ்ஞாதுரநுவ்ருத்தே: ந ஸ்வரூபம் நிஷித்⁴யதே; அபி து ப்ரபோ³த⁴ஸமயேऽநுஸந்தீ⁴யமாநஸ்யாஹமர்த²ஸ்ய வர்ணாஶ்ரமாதி³விஶிஷ்டதா । "அஹம் மாம் ந ஜ்ஞாதவாந்" இத்யத்ர விஷயோ விவேசநீய: । ஜாக³ரிதாவஸ்தா²நுஸம்ஹிதஜாத்யாஶ்ரமாதி³விஶிஷ்டோऽஸ்மத³ர்தோ² மாமித்யம்ஶஸ்ய விஷய: । ஸ்வாபாவஸ்தா²ப்ரஸித்³தா⁴விஶத³ஸ்வாநுப⁴வைகதாநஸ்வாஹமர்தோ²ऽஹமித்யம்ஶஸ்ய விஷய: । அத்ர ஸுப்தோऽஹமீத்³ருஶோऽஹமிதி ச மாமபி ந ஜ்ஞாதவாநஹமித்யேவ ஸ்வாநுப⁴வப்ரகார: ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

அஹமர்த்தமான ஆத்மா அஸ்திரமாதலால் அப்பொழுது அஹமர்த்தத்திற்கு ஸாக்ஷித்வாநுஸந்தானத்திற்கு அநுபபத்தி என்பதில்லை. யாதொருகாரணத்தினால் ஸுஷுப்திதசைக்கு முன் அனுபவிக்கப்பட்ட வஸ்துவை தூங்கி எழுந்திருந்தவன் என்னாலிது செய்யப்பட்டது, என்னால் இது அனுபவிக்கப்பட்டது நான் இதைச்சொன்னேன் என்று பராமர்சிக்கிறானே— இவ்வளவுகாலம் வரையில் நான் ஒன்றையும் அறிந்திலேன் என்றும் பராமர்சிக்கிறானென்று கூறப்படுமேயானால்; அதினாலென்ன? ந "கிஞ்சித்"

என்று எல்லாவற்றுக்கும ப்ரதிஷேதம் என்று சொல்லப்படுமேயானால் நானறிந்தேனென்று வேதிதாவான அஹமர்த்தத்திற்கே அநுவ்ருத்தி இருப்பதால் அறியத்தக்கவஸ்துவிஷயகமல்லவோ அந்த ப்ரதிஷேதம். ந கிஞ்சித் என்கிற நிஷேதம் க்ருத்ஸ்நவிஷயமாக இருக்குமேயாகில் உனக்கு அபிமதமான அநுபூதியும் நிஷேதிக்கப்பட்டதாக ஆகும் ஸுஷுப்தி ஸமயத்திலோ வென்றால் அநுஸந்திக்கப்படா நின்ற அஹமர்த்தமாகவும் ஜ்ஞாதாவாகவுமிருக்கிற ஆத்மாவை அஹமென்று பராமர்சித்து 'ந கிஞ்சிதவேதிஷம்' என்று அவனுடைய வேதநம் நிஷேதிக்கப்படா நின்றிருக்க அச்சமயத்தில் நிஷேதிக்கப்படா நின்றவித்தியின் ஸித்தியையும் அநுவர்தியா நின்ற ஜ்ஞாதாவான அஹமர்த்தத்தினுடைய அஸித்தியையும் 'ந கிஞ்சிதஹமவேதிஷம' என்கிற இந்த பராமர்சத்தினாலேயே ஸாதிக்கிறவன் அந்த இந்த அர்த்தத்தை தேவாகளுக்கே ஸாதிக்கட்டும். என்னைக்கூட நானறிந்திலேன், என்று அஹமர்த்தத்திற்குக் கூட அப்பொழுது அநநுஸந்தானம் அறியப்படுகிறதென்று சொல்லப்படுமேயாகில் தன அநுபவத்திற்கும் தனவசநத்திற்குமுள்ள விரோதத்தைக்கூட நீங்கள் அறிகிறீாகளில்லை. அஹம்மாம் நஜ்ஞாதவான், என்றல்லவோ அநுபவவசநங்கள். மாம் என்பதினால் எது நிஷேதிக்கப்படுகிறதென்று வினவப்படுகிறதேயானால் உன்னால் நன்கு வினவப்பட்டது. அதற்கு உத்தரம் உரைக்கப்படுகிறது. அஹமர்த்தமான ஜ்ஞாதாவுக்கு அநுவ்ருத்தியிருப்பதனால் ஸ்வரூபம் நிஷேதிக்கப்படுகிறதில்லை. பின்னையோ விழித்துக்கொண்டிருக்கிற ஸமயத்தில் அநுஸந்திக்கப்படா நின்ற அஹமர்த்தத்தினுடைய வர்ணாச்ரமம் முதலியவைகளோடுகூடி இருத்தல் அஹம் மாம் ந ஜ்ஞாதவான என்கிற வசநத்தில் விஷயம் விவேசிகத் தக்கது. ஜாகரிதாவஸ்தையில் அநுஸந்திக்கப்பட்டிருக்கிற ஜாதி முதலியவைகளோடு கூடின அஸ்மதர்த்தமானது மாம் என்கிற அம்சத்திற்கு விஷயம். ஸ்வாப்யயாவஸ்தையில் ப்ரஸித்தமானதும் அவிசதமான ஸ்வாநுபவத்தையே முக்கியமாகக்கொண்டதுமான அஹமர்த்தமானது அஹம் என்கிற அம்சத்திற்கு விஷயம். இங்கு தூங்கினவன் 'இப்படிப்பட்டவன் நான்' என்று என்னையும் நானறிந்திலேன இப்படியேயன்றோ. அநுபவத்தின் மாதிரி.

---

**ச்ருதப்ரகாசிகை:—**

பிறகு அநுபபத்தியை பரிஹரிக்கிறார்— நச இது முதலியதால். அநுபபத்தியும் ஆன்மாவினுடைய அஸ்திரத்வமாவது அல்லது அநுபவாபாவமாவது அவ்விடத்தில் பராமர்சத்தினால் ஆத்மாவின் ஸ்திரத்வத்தைககூறுகிறார்— யத: என்று. "என்னால் இது செய்யப்பட்டது" என்கிற இதுமுதலியவைகள் மாநஸிகஙகளாகவும் வாசிகங்களாகவும் காயிகங்களாகவுமுள்ள மூன்றுவித வ்யாபாரங்களை விஷயமாகக்கொண்ட பராமர்சத்தை ப்ரதானமாகக்கொணடவைகள். பிறகு அஹமர்ததாநுபவத்திற்கு ஸாதகமான நிஷேத ஸாமான்ய விஷயமான பராமர்சத்தை சங்கிக்கிறார்— ந த ா வ ந் த ம் என்று. அஹமர்த்தத்திற்கு நிஷேதவிஷயதவமில்லை என்கிற அபிப்ராயத்தால்

சொல்லுகிருர்—**நநகிம்** என்று. அன்யனுடைய விகக்ஷிதத்தை சங்கிக்கிருர்—**நகிஞ்சித்** என்று பரிஹரிக்கிருர் **ந** என்று வேத்ய விஷய: வேத்யட்ரதிபாஸ விஷயம முழுதும் விஷயம என்னும் பக்ஷதில அர்வ்ஷ்டானத்தச் சொல்லுகிருர்—**கிஞ்சித்** என்று. அநுபூதி நிஷேதமில்லை அதற்கு அநுவ்ருத்தி இருப்பதால் என்று ஆசங்கித்துக்கூறுகிருர்—**ஸாக்ஷாத் ஸமயோது** என்று. உன பக்ஷத்துக்கு இந்த பராமர்சம் விபரீதமென்று அர்த்தம். எவ்வாறு காலையில் ராஜவீதியில் யானையின அனுபவத்தைப் பதறி வினவப்பட்டவனும் பிறகு யோக்யாநுஸமரண விஙகத்தால் ராஜவீதியில் யானையின் இனமையை சொல்லாநின்றவனுமான பருஷனுல பூர்வகாலத்திலுண்டாயிருந்த சத்வரவிஷயமான அநுபவமின்றி சஜாதீயமானது சொல்வதற்கு சக்யமாகாதோ அவ்வாறே அஜ்ஞாநாச்ரயமாக அஹமர்த்தத்தைச் சொல்பவனுல் ஸ்வப்ந ஸமயத்தில் அஹமர்த்தாநுபவமானது ஒப்புக்கொள்ளத்தக்கது. அப்படி இருந்தபோதிலும் அஹமர்த்த நிவ்ருத்தி ஜ்ஞாநத்தின் தொடர்ச்சியைச் சொல்லுதல் சத்வரநிவ்ருத்தி, சஜாவஸ்தானம், இவைகளைச் சொல்லுகிற வசநத்தோடு துல்யமென்று கருத்து. **தேவாநாமேவ ஸாதுயது** அர்சாரூபிகளென்றே தேவர்கள். ப்ரதிவசநம் சொல்லாதவர்களென்று அர்த்தம். பொருமையுள்ளவர்களென்றவது. பிரதிவாதியின் அஸன்னிதியில் என்றவது உலகமர்யாதையைமீறி சொல்லப்பட்டதென்றவது, அர்த்தம.

பிறகு நிஷேத விசேஷ விஷயமான பராமர்சத்தைச் சொல்லுகிருர்—**மாமபி** என்று. பரிஹரிக்கிருர்—**ஸ்வாநுபவ** என்று ஸ்வாநுபவம் வசநம இவ்விரண்டுக்கும் அந்யோந்யம் விரோதமில்லை பின்னேயோ இரண்டுக்கும அஹமர்த்தாநுவ்ருத்தி நிஷேதசப்தத்தோடு விரோதமென்று அர்த்தம. அனுபவைகதேசங்களுக்கும் வசனைகதேசங்களுக்கும் பரஸ்பரம் விரோதமென்றவது அர்த்தம். விரோதத்தையே காண்பிக்கிருர்—**அஹம்** என்று நானறிந்கிலேன் என்கிற இடத்தில் அஜ்ஞாநஸாக்ஷியாக அஹமர்த்தாநுவ்ருத்திக்கு ஸ்வாநுபவம் ஸித்தித்திருக்க வசனமும் அதற்கு அநுகுணமென்பதினுல் அநுபவ வசனங்களோடு அஹமர்த்தாநுவ்ருத்தி நிஷேதவாக்ய விரோதமென்று அர்த்தம் நிஷேத சப்தம் அல்ல அர்த்தாநுபவம் இரண்டுக்கும் விரோதமென்றவது அர்த்தம அதில் "மாம்" என்ற பதத்தினுடைய அர்த்தத்தைச் சொல்வதற்காக அன்யனுடைய விதத்தை அநுஸரித்துப்பேசுகருர்—**மாமபி** என்று. முதலில் விருத்தமான அர்த்தத்தைச்சொன்னது அஸாது அர்த்த தத்வத்தின ப்ரச்னம ஸாது என்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிருர்—**ஸாது** என்று நிஷேதம் அநுவ்ருத்தி இவ்விரண்டுக்கும விஷயங்களின் பாகுபாட்டைககாண்பிககிருர் **ததுச்யதே** இதுமுதலியதால். அஹம மாம் என்ற இரண்டு பதங்களுக்கும் விசிஷ்ட விஷயத்வமே உசிதம. நீதிபேதம் ப்ரஸங்கிப்பதால் எனில் கூறுகிருர்—**அஹம் மாம்** என்று. விதிநிஷேதங்களுக்கு விஷயமொன்ருக இருக்குமேயாகில் வ்யாகாதமுண்டாகுமென்று அதின் நிவ்ருத்தியின் பொருட்டு விஷய விபாகம் செய்யத்தக்கதென்று அர்த்தம் விஷயவிபாகத்திற்கு மாராட்டம் வருமென்று சங்கைவர உசிதமான விஷயவிபாகத்தைக்காண்பிக்கிருர்—**ஜாகரித** என்று. எந்த ஸாமக்ரியின இனமையினுல் அப்பொழுது ப்ரகாசிக்கிறதில்லையோ அதே நிஷேதத்திற்கு விஷயம் எது மற்றது ஒன்றையும் அபேக்ஷியாமல் தானுக ப்ரகாசிக்கிறதோ அதே தொடர்ந்துவருகிறதென்பதினுல் ப்ரகாசியாததற்கு அநுவ்ருத்தியும் ப்ரகாசிக்கிறதற்கு நிஷேதமும் பொருத்தமுள்ளதாக ஆகாதென்று அர்த்தம். இவ்வண்ணம் விஷயவிபாகாநுகுணமாக அநுபவத்தைக் காட்டுகிருர்—**அத்ர** என்று. சப்தப்ரயோகம் விவக்ஷையைசார்ந்திருப்பதால் புத்தஸ்தமான அனைத்தையும் சொல்லுகிறதா? அல்லது அதில ஏகதேசத்தைச் சொல்லுகிறதா? ஒன்றையும் சொல்லாமலிருக்கிறதா? ஆகையால சப்தப்ரயோகம் விவக்ஷையைச் சார்ந்து

இருந்தபோதிலுங்கூட அநுபவம் ஏகரூபம் அதுவும் இவ்விஷய விஷயவிபாகத்திற்கு அநுகுணமே என்று அர்த்தம். இதினால், “நாஹகல்வய மேவம் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மி” என்கிற ச்ருதிவாக்யத்திலிருக்கிற அயமசப்தம் வியாக்யானிக்கப் பட்டது.

---

கிஞ்ச, ஸுஷுப்தாவாத்மநஸ்ஸாக்ஷித்வேநாத்மநஸ்ஸூ இதி ஹி ஸ்வகீயா ப்ரக்ரியா। ஸாக்ஷித்வஞ்ச ஸாக்ஷாஜ்ஜ்ஞாத்ருத்வமேவ। நஹ்யஜாநத ஸாக்ஷித்வம்। ஜ்ஞாதைவ ஹி லோகவேதயோஸ்ஸாக்ஷீதி வ்யபதிச்யதே; ந ஜ்ஞாநமாத்ரம்। ஸ்மரதி ச பகவாந் பாணிநி: “ஸாக்ஷாத்த்ரஷ்டரி ஸம்ஜ்ஞாயாம்” இதி ஸாக்ஷாஜ்ஜ்ஞாதர்யேவ ஸாக்ஷிசப்தம்। ஸ சாயம் ஸாக்ஷீ ஜாநாமீதி ப்ரதீயமாநோஸ்மதர்த்த ஏவேதி கதம் ஸ்வாபகாலே ஸோஹமர்த்தோ ந ப்ரதீயேத। ஸ்வஸ்மை ஸ்வயம் பாஸமாநோ ஹ்யாத்மாஹமித்யேவாவபாஸத இதி ஸ்வாபாத்யவஸ்தாஸ்வபி ப்ரகாசமாநோ ஹ்யாத்மாஹமித்யேவாவபாஸத இதி ஸித்தம்॥

---

ஸ்ரீபாஷ்யம்.—

மேலும் ஆன்மா ஸுஷுப்தியில் அஜ்ஞாநஸாக்ஷியாக இருக்கிறானென்றல்லவோ உங்களுடைய ப்ரக்ரியை. ஸாக்ஷித்வமாவது ஸாக்ஷாத் ஜ்ஞாத்ருத்வமே. அறியாதவனுக்கு ஸாக்ஷித்வமில்லையன்றோ. ஜ்ஞாதாவேயன்றோ உலகத்திலும் வேதத்திலும் ஸாக்ஷி என்று சொல்லப்படுகிறான். ஜ்ஞாநமாத்ரமல்ல. பகவானான பாணினியும் கூறி இருக்கிறார். அந்த இந்த ஸாக்ஷியானவன் ஜாநாமி என்று அறியப்படா நின்ற அஸ்மதர்த்தமே என்பதினால் எதினாலப்பொழுது அஹமர்த்தமானது அறியப்படமாட்டாது? தனக்குத்தானாக பாஸிக்கிற ஆத்மாவானது அஹமென்றே பாஸிக்கிறதாதலால் ஸ்வாபம் முதலிய அவஸ்தைகளில்கூட ப்ரகாசிக்கிற ஆத்மா அஹமென்றே பாஸிக்கிறதென்பது ஸித்தம்.

---

ச்ருதப்ரகாசிகை—

அன்யமதத்தினால் இந்த அர்த்தத்தை உபபாதிக்கிறார்— கிஞ்ச இது முதலியதால். ஸாக்ஷியாக ஆத்மா ஒப்புக்கொள்ளப்படட்டும் அதினாலென்ன வென்றுகேட்கில் சொல்லுகிறார்— ஸாக்ஷித்வஞ்ச என்று. ஸாக்ஷாத் ஜ்ஞாத்ருத்வம் - ஸாக்ஷாத்காரரூப ஜ்ஞாநத்திற்கு ஆச்ரயமாக இருத்தல். ஸாக்ஷாத்காரமில்லாதவனிடத்தில் ஸாக்ஷி சப்தம் ப்ரயோகிக்கப்பட்டால் அந்த பிரயோகம் கௌணமானது. உபபாதிக்கிறார்— நஹி என்று. அஜாநத: - அறியாதவனுக்கு என்று அர்த்தம். எதனாலென்றால் சொல்லுகிறார்— ஜ்ஞாதைவ ஹி என்று. சப்தப்ரயோகத்திற்கு நியாமகமான

லக்ஷணத்தைக்கூறுகிறார்— ஸ்மரதி என்று ஸாக்ஷி சப்தம ஸ்மரதி என்று அன்வயம்.

அதினால் அஹமர்த்தத்திற்கு ஆத்மத்வத்தில் என்னவென்று கேழ்க்கப்படுமேயாகில்; கூறுகிறார்— ஸ ச என்று இந்த அர்த்தத்தில் அநுமானமானது மேலே விஸ்தாரமாகச் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. இங்கு சுருக்கமாகச்சொல்லுகிறார்— ஆத்மனே ஸ்வயம் என்று. தன் பொருட்டுத்தானாக அவபாஸிக்கிறவன் அஹமென்றே அவபாஸிக்கிறான் என்று வ்யாப்திவசனம் - ஜாக்ரத்தான ஆத்மா ஸபக்ஷம் ஸ்வஸ்மை ப்ரகாசமானத்வாத் என்பது ஹேது. நிகமனம் செய்கிறார்—ஸ்வாபாதி என்று. அவிசத்மான அவபாஸம் எல்லோர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதாலும் ச்ருதிஸ்வாரஸ்யத்தாலும் பராமர்சஸ்வாரஸ்யத்தாலும் ஸாக்ஷிதவோபபத்தியினாலும் ப்ரத்யக்ஷவஸித்தியினாலும் ஸுஷுப்தியில், ஆத்மா அஹமென்று ஸ்புரிக்கிறதென்று சொல்லப் பட்டதாக ஆகிறது.

---

யத்து — [illegible] — இதி ; [illegible] ''அஹம் ஜாநாமி, ஜ்ஞாநம் மே ஜாதம்'' இதி [illegible] ॥

அபி ச [illegible] ''அஹம் [illegible]'' இதி । [illegible] ॥

யஃ ஸோஹமிதி ந ப்ரகாஶதே; நாஸௌ ஸ்வஸ்மை ப்ரகாஶதே, யதா கடாதிஃ। ஸ்வஸ்மை ப்ரகாஶதே சாயம் முக்தாத்மா; தஸ்மாதஹமித்யேவ ப்ரகாஶதே ॥

---

ஸ்ரீபாஷ்யம். —

மோக்ஷதசையில் அஹமர்த்தம் அநுவர்த்திக்கிறதில்லை என்று எது கூறப்பட்டதோ அது அழகல்ல அப்படியானல் ஆத்மநாசமே மோக்ஷமென்று வேறு விதத்தால ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதாக ஆகும். அஹமர்த்தம் தர்மமாத்ரமல்ல. எதனுல் அது போனபோதிலும் அவித்யா நிவ்ருத்தியில்போல ஸ்வரூபம் மிஞ்சி இருக்குமோ. விபரீதமாக அஹமர்த்தமானது ஆத்மாவுக்கு ஸ்வரூபமே ஜ்ஞாநமோ வென்றல் அதனுடைய தர்மம். நான் அறிகிறேன் ஜ்ஞாநம் எனக்கு உண்டாயிற்று, என்றும் அஹமர்த்தத்திற்கு தர்மமாக ஜ்ஞாநப்ரதீதி வருவதாலேயே.

மேலும் எவன் பரமார்த்தமாகவோ ப்ராந்தியினுலேயோ ஆத்யாத்மிகம் முதலிய துக்கங்களால் தன்னை துக்கமுள்ளவனுக அஹம் துகீ என்று அநுஸந்தானம் செய்கிறுனே, அவனே இந்த எல்லா துக்க ஸமுதாயங்களையும் மறுபடி உண்டாகாமல் தொலைத்து எவ்வாறு நான் கவலையற்றவனுகவும் ஸ்வஸ்தனுகவும் ஆவேன் என்று மோக்ஷேச்சை பிறந்தவனுக அதை ஸாதிப்பதில் ப்ரவ்ருத்திக்கிறுன். அவனே ஸாதநாநுஷ்டானத்தால் நானே இருக்கப்போகிற தில்லை என்று எண்ணுவானேயாகில் அவனே மோக்ஷகதாப்ரஸ்தாவத்தினின்று விலகவே விலகுவான். பிறகு அதிகாரி இல்லாமையாலேயே மோக்ஷசாஸ்திரம் முற்றிலும் அப்ரமாணமாக ஆகும், அஹமுபலக்ஷிதமான ப்ரகாசம் மாத்ரம் மோக்ஷதசையில் நிற்கிறதென்று சொல்லப்படுமேயாகில் இதினலென்ன. நான் நஷ்டமாய்போன போதிலுங்கூட ஓராநெரு ப்ரகாசம் மாத்ரம் இருக்கிறதென்றெண்ணி புத்திபூர்வகமாக கார்யம் செய்பவன் ஒருவனுவது ப்ரயத்நம் செய்யமாட்டான். ஆகையால் ஜ்ஞாதாவாக ஸித்திக்கிற அஹமர்த்தமே ப்ரத்யகாத்மா. அந்த ப்ரத்யகாத்மா முக்தியிலும் அஹமென்றே ப்ரகாசிக்கிறுன். தன்பொருட்டு ப்ரகாசிப்பதால் எவன் எவன் தன்பொருட்டு ப்ரகாசிக்கிறுனே அவன் எல்லோரும் அஹம் என்றே ப்ரகாசிக்கிறுன. ஸம்ஸாரியான ஆத்மா எதோ ஒருவிதமாக ப்ரகாசிப்பவனுகவே இருப்பதாக உபயவாதிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறுன்.

எது நானென்று ப்ரகாசிக்கிறதில்லையோ அது தன்பொருட்டு ப்ரகாசிக்கிறதில்லை கடம் முதலியதுபோல இந்த முக்தாத்மா தன்பொருட்டு ப்ரகாசிக்கிறுன். ஆகையால் அவன் அஹமென்றே ப்ரகாசிக்கிறுன்.

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் முக்தியில் அஹமர்த்தாநுவ்ருத்தியை அநுவதித்து தூஷிக்கிறார்— யத்து இது முதலியதால் "து" சப்தம் அர்த்த கௌரவவிசேஷத்தில். அபேசலம் - அஸாது என்று அர்த்தம் எதனாலென்று கேட்கில் சொல்லுகிறார்— தத்ராஸ்தி என்று ஸந்ததியின் உச்சேதத்தை மோக்ஷமாகச்சொல்லுகிற பௌத்தர்களை ஸ்வரூபநாசம் அபுருஷார்த்தமென்று தூஷிக்கிற உன்னால் வேறு சப்தத்தால் ஸ்வரூபநாசம சொல்லப்பட்டதாக ஆகும் என்று அர்த்தம். நையாயிகன் முதலியவர்களால் சொல்லப்பட்டிருக்கிற மோக்ஷத்திலும் அபுருஷார்த்தத்வம் துல்யம். துக்க நிவ்ருத்தி ஸுகப்ராப்தி இரண்டும் புருஷார்த்தம். இங்கு அபுருஷார்த்தரூபமான துக்கமில்லாமையால் புருஷார்த்த ஸம்பந்தம். ஸுகமில்லாமையால் அபுருஷார்த்த ஸம்பந்தமும் என்பதினால் முக்திக்கு புருஷார்த்தாபுருஷார்த்தமிச்ரத்வமன்றோ உண்டாகும். அஹமர்த்தமாரோபிதமன்றோ. ஆகையால் அது போய்விட்டால் ஸ்வரூபநாசம் ப்ரஸங்கியாதென்று சொல்லப்படுமேயாகில் சொல்லுகிறார்— ந ச என்று. எதினாலென்றுகேட்கில் கூறுகிறார்— அஹம் என்று. அஹமர்த்த தர்மமாக ஜ்ஞாநத்திற்கு ப்ரதீதி இருப்பதினாலேயே. முற்கூறப்பட்டுள்ள ஹேதுவினாலேயே என்று அர்த்தம். அஹமர்த்தத்திற்கு ஆத்மத்வ ஸமர்த்தநோபஜீவநத்தினால் ஸ்வரூபநாச ப்ரஸங்கம் உரைக்கப்பட்டது இவ்வண்ணம் தர்ம தர்மிபாவத்தால் ப்ரதீதியின் அநுவ்ருத்தி உபபாதிக்கப்பட்டது.

பிறகு ச்ருத்யர்த்தாபத்தியைச் சொல்லுகிறார்—அபிச இது முதலியதால் முந்தி அஹமர்த்தத்திற்கு ஆத்மத்வஸமர்த்தநத்திற்காக ச்ருத்யர்த்தாபத்தி உரைக்கப்பட்டது. இப்பொழுது அஹமர்த்தத்திற்கு முக்தியிலும அநுவ்ருத்தியின் உபபாதனத்தின்பொருட்டு அதே ச்ருத்யர்த்தாபத்தியை விஸ்தாரமாக உரைக்கிறார் எவன் தன் ஆத்மாவை துக்கி என்று எண்ணுகிறானோ அவனே அதின் நிவ்ருத்திஸாதநத்தில் ப்ரவ்ருத்திக்கிறான் அவன் அஹமர்த்தமே துக்கித்வம ப்ராந்திஸித்தமென்று சொல்லப்படுமேயாகில் எவன் தன்னாத்மாவை ப்ரமமுள்ளதாக நினைத்துக்கொள்ளுகிறானோ அவனே ப்ரம நிவ்ருத்தி ஸாதநத்தில் ப்ரவ்ருத்திக்கிறான். அவனும் அஹமர்த்தம் சந்தரன் இரண்டு என்கிற ஜ்ஞாநம் முதலிய ப்ராந்தியுள்ளவனுக்குங் கூட தன்னுடைய ப்ராந்தி நிவ்ருத்தியே அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறதே ஒழிய தன்விநாசம் அபேக்ஷிக்கப்பட்டதல்ல ஆகையால் அஹமர்த்தவிநாசம் அபுருஷார்த்தமென்கிற அபிப்ராயத்தால் பரமார்த்தத்தினாலோ ப்ராந்தியினாலோவென்று சொல்லப்பட்டது 'அநுஸந்தத்தே" என்கிற பதத்தை ஈற்றிலுடைய க்ரந்தத்தினால் "நிரஸ்தாகிலதுக்கோZஹம்" என்கிற இடத்தில் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிற சொல்லத்தக்கவிஷயம சொல்லப்பட்டது. "நிரஸ்த" என்கிறபதத்தை முதலிலுடைய ச்லோகத்தை விவரிக்கிறார்—ஸர்வமேதத் இதுமுதலியதால் அநாகுல:ஸ்வஸ்தோ பவேய மிதி அபுரர்பலமபோஹ்ய என்று இதின் பலம் கூறப்பட்டது அநாகுல: என்று வரப்போகிற துக்கசங்கையினால் மனதுக்கு உண்டாகும் கொந்தளிப்பு ஆகுலத்வம், அதின் இன்மை அநாகுலத்வம். , ஸ்வஸ்த: ஸ்வஸ்மிந் ஸ்தித: - ஸ்வபாவத்தில் நிலைபெற்றவன். யதாவஸ்திதமான ஆத்மாநுபவத்தில் நோக்கமுடையவன் - அநந்தாநந்தபாக் என்பது பலம். ஸஏவ - முன் துக்கமுள்ளவனே எவன் உண்டான அநிஷ்ட நிவ்ருத்தி - இஷ்டப்ராப்திகளில் அபிலாஷமுள்ளவனோ அவனே என்று அர்த்தம், "ச்ரவணாதௌ" என்று முந்தி சொல்லி இருப்பதால் இந்த இடத்தில் "தத்ஸாதந:" என்று இவ்வளவுமாத்திரம் சொல்லப்பட்டது. "அபவர்கேதஸௌ" என்கிற க்ரந்தத்தினால் பலித்த அர்த்தத்தைக்கூறுகிறார் -- தத்ர ஸாதிகாரி என்று. ச்ரவணம் முதலிய ஆயாஸத்தால் ஸாத்யமான சாஸ்த்ரத்திற்கு

புருஷார்த்தபர்யவஸாயித்வமில்லாவிடில் ச்ரவணாதிகளில் அதிகாரி இல்லாமையால் ச்ரவணம் முதலியதை அபேக்ஷிக்கிற சாஸ்திரத்திற்கு ப்ரமிதிஜநகத்வ லக்ஷணமான ப்ராமாண்யம் உண்டாகாதென்று அர்த்தம். ''மயி நஷ்டேபி'' என்கிற க்ரந்தத்தை விவரிக்கிறார்—அஹமுபலக்ஷிதம் இதுமுதலியதால். புத்திபூர்வகாரீ என்பதினால் 'கஸ்யாபி' என்கிறபதம் விவரிக்கப்பட்டது. ச்ருத்யர்த்தாபத்தியை நிகமனம் செய்கிறார்— அத: என்று. அஹமர்த்தம் போகும்பக்ஷத்தில் ஜ்ஞப்தியின் அஸித்தியும அநுஸந்திக்கத்தக்கது. அநுமானத்தைக் கூறுகிறார்—ஸச என்று. மேலும் அநுமாநமும இருக்கிறதென்று அர்த்தம். அந்வய வ்யாப்தியைகூறுகிறார்—யோ ய: என்று. ததாவபாஸமாநத்வேந-தன்பொருட்டு ப்ரகாசிப்பதால். வ்யதிரேக வ்யாப்தியைக்காட்டுகிறார்— ய:புந: என்று. உபநயத்தைச்சொல்லுகிறார்— ஸ்வஸ்மை என்று. நிகமனத்தைக்கூறுகிறார்—தஸ்மாத் என்று தன் பொருட்டு ப்ரகாசித்தல் ஹேது. அஹமென்று வ்யவஹாரார்ஹத்வம் ஸாத்யமென்பதினால் ஸாத்யாவிசிஷ்டதை இல்லை. அஹமென்றே ப்ரகாசிக்கிறது. அஹம என்கிற வ்யவஹாரார்ஹமாக ப்ரகாசிக்கிறதென்று அர்த்தம்.

---

நசாஹமிதி ப்ரகாஶமாநத்வேந ஆத்மநோ(அ)ஜ்ஞத்வஸம்ஸாரித்வாதி ப்ரஸங்க³: । மோக்ஷவிரோதா⁴ச்ச, அஜ்ஞத்வாத்³யஹமர்த²த்வாத் ப்ரத்யயஸ்ய । அஜ்ஞாநம் நாம ஸ்வரூபாஜ்ஞாநம் அந்யதா²ஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் வா । அஹமித்யாத்மந: ஸ்வரூபமிதி ஸ்வரூபஜ்ஞாநமேவாத்மநோ(அ)ஹம்ப்ரத்யயோ நாஜ்ஞத்வமாபாத³யதி; கு²தஸ்ஸம்ஸாரித்வம் । அபி து தத்³விரோதி⁴த்வாதே³வாஜ்ஞாநாதே³ர்நாஶயத்யேவ ॥

ப்³ரஹ்மாத்மபா⁴வாபரோக்ஷ்யநியமேऽபி நிரவஶேஷாவித்³யாநாஶேऽபி சாஹமித்யேவாத்மா ப்ரகாஶதே । ஶ்ருதயோ ஹி— ''தத்³தை⁴தத் பஶ்யந்ந்ருஷிர்வாமதே³வ: ப்ரதிபேதே³, அஹம் மநுரப⁴வம் ஸூர்யஶ்ச'' (ப்³ரு-௩-௪-௧௦) இதி, ''அஹமேக: ப்ரத²மமாஸம், வர்தாமி ச ப⁴விஷ்யாமி ச'' (அ-ஶி-௧) இத்யாதி³। ஸகலேதராஜ்ஞாநவிரோதி⁴நஸ்ஸ்வப்ரத்யயஸாத்⁴யஸ்ய பரஸ்ய ப்³ரஹ்மணோ வ்யவஹாரோ(அ)ப்யேவமேவ— ''ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தே³வதா:'' (சா-௬-௩-௨) ''ப³ஹு ஸ்யாம் ப்ரஜாயேய'' (தை-௬-௨) ''ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி''; (ஐ-௧-௧-௧) ததா²— ''யஸ்மாத்க்ஷரமதீதோ(அ)ஹமக்ஷராத³பி சோத்தம: । அதோ(அ)ஸ்மி லோகே வேதே³ ச ப்ரதி²த: புருஷோத்தம:'' (ஶ்ரீ-௧௫-௧௮) ''அஹமாத்மா கு³டா³கேஶ'' (ஶ்ரீ-௧௦-௨௦) ''ந த்வேவாஹம் ஜாது நாஸம்'' (ஶ்ரீ-௨-௧௨) ''அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக³த: ப்ரப⁴வ: ப்ரலயஸ்ததா²'' (ஶ்ரீ-௭-௬) ''அஹம் ஸர்வ

𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇” (கீ-ய-அ) “𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍” (கீ-கஉ-கு-எ) “𑌅𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾” (கீ-கச-கு-ச) “𑌵𑍇𑌦𑌾𑌹𑌂 𑌸𑌮𑌤𑍀𑌤𑌾𑌨𑌿” (கீ-எ-உசா)—𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 ॥

𑌯𑌦𑍍𑌯𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; 𑌕𑌥𑌂 𑌤𑌰𑍍𑌹𑍍𑌯𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌭𑌾𑌵𑍋 𑌭𑌗𑌵𑌤𑌾𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇? “𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍇𑌵 𑌚” (கீ-கங-ரு) 𑌇𑌤𑌿। 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃; 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍍𑌤𑍁 𑌦𑍇𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰 𑌇𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

**ஸ்ரீபாஷ்யம்:—**

அஹமென்று ப்ரகாஸிப்பதினால் அவனுக்கு அஜ்ஞத்வம், ஸம்ஸாரித்வம் முதலியவேறய தர்மங்கள் ப்ரஸங்கியாது. மோக்ஷவிரோதத்தால், அஹம்ப்ரத்யயமானது அஜ்ஞத்வாதிகளுக்கு ஹேதுவல்ல அஜ்ஞாநமென்பது ஸ்வரூபாஜ்ஞாநம் அந்யதாஜ்ஞாநம், அல்லது விபரீதஜ்ஞாநம் அஹமென்றே ஆத்மஸ்வரூபம் பாஸிப்பதால் ஸ்வரூபஜ்ஞாநரூபமான அஹம்ப்ரத்யயமானது அஜ்ஞத்வத்தை உண்டுபண்ணுகிறதில்லை அவ்வாறு இருக்க ஸம்ஸாரியாக இருக்குந்தன்மையை எவ்வண்ண முண்டாக்கும். பின்னேயோ அதற்கு விரோதியாக இருப்பதால் அதை நாசமே செய்யும், ப்ரஹ்மாத்மபாவாபரோக்ஷ்யத்தினால் விலக்கப்பட்ட மிச்சமில்லாத அவித்யையையுடையவர்களான வாமதேவர் முதலியவர்களுக்கு அஹமென்றே ஆத்மானுபவம் காணப்பட்டிருப்பதாலும், ச்ருதியை இது விஷயத்தில் ப்ரமாணமாக உபந்யஸிக்கிறார். “தத்தை தத்பச்யந்ருஷிர்வாமதேவ: ப்ரதிபேதே” அஹம் மநுரபவம் ஸூர்யச்ச ” என்று, “அஹமேவச வர்தாமி பவிஷ்யாமி” இது முதலிய வசந ஸமூஹம்— ஸமஸ்தமான இதராஜ்ஞாந விரோதியும் ‘ஸத்’ என்கிற சப்தத்தாலுண்டாகிற ப்ரத்யயமாத்ரத்திற்கு கோசரமாகவுமிருக்கிற பரப்ரஹ்மத்தின் வ்யவஹாரமும் இவ்வண்ணமே. “ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோதேவதா:” (ஸ்ருஷ்டியில் நோக்கமுள்ளவனை நான் இந்த ப்ருதிவீ அப், தேஜஸ், என்கிற மூன்று தேவதைகளை) ‘பஹுஸ்யாம் ப்ரஜாயேய’ (நான் உலகத்திலுள்ள அனேக வஸ்துக்களாக பரிணமிக்கக்கடவேன்) “ஸ ஈக்ஷத லோகான்னுஸ்ருஜா” (உலகங்களை நான் ஸ்ருஷ்டிக்கக்கடவேனென்று அவன் ஸங்கல்பித்தான்.) அவ்வாறே. “யஸ்மாத்க்ஷரமதீதோऽஹம் அக்ஷராதபி சோத்தம: அதோऽஸ்மிலோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம:” (யாதொரு காரணத்தால் நான் அசேதந பதார்த்தங்களை அதிக்ரமித்தவனாகவும் அக்ஷரசப்தத்தால் வாச்யர்களானஜீவர்களைக்காட்டிலும் உத்தமனாகவும் இருக்கிறேனோ. அதனால் நான் உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று ப்ரஸித்தி பெற்றிருக்கிறேன்) “அஹமாத்மா குடாகேச” (குடில குந்தலங்களை

உடையவனென்றே! அர்ஜுனா! நான் உலகமனைத்தையும் வ்யாபித்திருப்பவன்) "நத்வேவாஹம் ஜாதுநாஸம்" (நான் ஒருபொழுதும் இல்லாமலிருந்தேனென்பதில்லை) "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா-அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் அஹம் பீஜப்ரத: பிதா வேதாஹம் ஸமதீதானி" (நான் எல்லா உலகங்களுடையவும் உத்பத்திக்குக்காரணமாக இருப்பவன் அவ்வாறே லயத்திற்கும் காரணம். நான் எல்லாவற்றுக்கும் காரணம் என்னிடத்தினின்று எல்லாம் உண்டாகிறது நான் அவர்களை ம்ருத்யுவாக இருக்கிற ஸம்ஸார ஸமுத்ரத்தினின்று நன்கு மேலே தூக்கிவிடுபவன் நான் விதை போடுகிற தகப்பன்—சென்றவைகளை நான் அறிவேன்) இது முதலியவைகளில் அஹமென்றே ஆத்மாவினுடைய ஸ்வரூபமாகில் எவ்வாறு அஹங்காரத்திற்கு க்ஷேத்திரத்தில் அந்தர்பாவமானது பகவானால் உபதேசிக்கப்படுகிறது "மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவச" (ஐந்து மஹாபூதங்கள். அஹங்காரம், மஹத்தத்வம், மூலப்ரக்ருதி) என்று சொல்லப்படுகிறது. ஸ்வரூபோபதேசங்களனைத்திலும் அஹமென்றே உபதேசத்தாலும் அப்படியே ஆத்மஸ்வரூபப்ரதிபத்தியினாலும் அஹமென்றே ப்ரத்யகாத்மாவின் ஸ்வரூபம்.

---

ச்ருதப்ரகாசிகை—

ஸாத்ய விபரீதங்களுக்கு விசேஷஸாதகமாக இருப்பதால். விசேஷவிருத்தத்வத்தை சங்கிக்கிறார்—நச என்று ஆதிசப்தத்தால் ராகம் த்வேஷம் துக்கம் முதலியது விவக்ஷிக்கப்படிருக்கிறது. அய்யா! வ்யாபகமன்றோ ப்ரஸஞ்ஜநஞ் செய்யத்தக்கது. கார்யம் காரணத்திற்கு வ்யாபகமல்ல உண்மை. காரணஜாதீயத்தற்கோவென்றால் ஒரு ஸமயத்தில் கார்யப்ரஸக்தியானது வ்யாபிகை. ஆகையால அஹம் ப்ரத்யயத்தினால் ஆத்மாவுக்கு அஜ்ஞத்வம் முதலியவற்றுக்கு ப்ரஸஞ்ஜநம் அஜ்ஞத்வாதி ப்ரஸக்தியானது ச்ருதிவிருத்தை என்று சொல்லுகிறா— மோக்ஷ என்று. "நபச்யோ ம்ருத்யும் பச்யதி, ந ரோகம் நோத துக்கதாம்" என்றல்லவோ ச்ருதி (ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கிறவன் ஸம்ஸாரத்தையாவது ரோகத்தையாவது துக்கத்தையாவது பார்க்கிறானில்லை). ஆகையால் சேர்ந்துகண்ட மாத்திரத்திலேயே பாவத்தில பாண்டம் முதலியவற்றின் ப்ரஸக்தியானது ப்ரத்யக்ஷ பாதத்தால் எவ்வாறு நிராகரிக்கப்படுகிறதோ. அவ்வாறாக ¶ காலாத்யயாபதேசமென்று அர்த்தம். ஸோபாதிகத்வத்தைச் சொல்லுகிறார்-அஜ்ஞத்வாதி என்று ஸம்ஸாரித்வாஹமர்த்தங்கள் இரண்டுக்கும் ஸஹதர்சனமாத்ரத்தினால் முக்தியிலகூட ஸம்ஸாரித்வம் முதலியது ப்ரஸங்கிக்குமேயாகில் அனுபவத்திற்கும் அதோடு ஸஹபாவதர்சனத்தால் உன் பக்ஷத்திலும் முக்தியில் ஸம்ஸாரித்வம் ப்ரஸங்கிக்கும். அது மோக்ஷக்ராஹி ப்ரமாண விரோதத்தால் பாதிதம். ஸம்ஸாரித்வம் முதலியது அநுபவ ப்ரயுக்தமல்லாமையால் ஸோபாதிகத்வமென்று சொல்லப்படுமேயாகில் அது நம்ம பக்ஷத்திலும் ஸமானமென்று அபிப்ராயம். இதனால் அஹமென்கிற தோற்ற

---

¶ காலாத்யயாபதேசம்—பாதம்.

மானது தன்பொருட்டுத் தோற்றுதலால் உண்டுபண்ணப்பட்டதல்ல. பின்னேயோ அஜ்ஞத்வத்தால் உண்டுபண்ணப்பட்டது என்பதனுல் ஹேதுவுக்கு ஸோபாதிகத்வமும்· ச்ருதிபலத்தால் வ்யாப்தியானது பக்னமானபடியால் ஸஹதர்சனமாத்ரமே என்பது பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது.

இவ்வண்ணம் காலாத்யயாபதேசம் ஸோபாதிகத்வம் இரண்டும் கூறப்பட்டன. அதில் ஸோபாதிகத்வத்தை உபபாதிப்பதற்கு அஜ்ஞாநத்வத்தால் ஸம்பாவிதங்களான பக்ஷங்களை விகல்பிக்கிருர்—அஜ்ஞாநம் நாம என்று. தாமி ஒன்ருக இருக்க அதில் வேறு தர்மத்தை ஆரோபிப்பதினுல் உண்டாகிற ஜ்ஞாநம் அந்யதாஜ்ஞாநம. உதாஹரணம் சங்கு ,மஞ்சள் நிறமுள்ளதென்று - இது ரஜோகுணத்தின் கார்யம். வேறுதர்மியை வேறு தர்மியாக அறிவது விபரீதஜ்ஞாநம். உதாஹரணம-சிப்பியைப்பார்த்து இது வெள்ளி என்று எண்ணுதல். இது தமோகுணத்தின் கார்யம் "அயதாவத் ப்ரஜாநாதி புத்திஸ்ஸாபார்த்த ராஜஸீ | அதர்மம் தர்மமிதியா மந்யதே தமஸா வ்ருதா! ஸர்வார்த்தாந் விபரீதாம்ச்சபுத்திஸ்ஸாபார்த்த தாமஸீ" (அர்ஜுநு ! எந்தபுத்தி வஸ்துக்களை உள்ளபடி அறிகிறதில்லேயோ அது ராஜஸபுத்தி. பார்த்த ! தமஸினுல் ஸுவரப்பட்டதாக இருந்து கொண்டு எந்த புத்தியானது அதர்மத்தை தர்மமென்று எண்ணுகிறதோ எல்லாவஸ்துக்களையும் விபரீதங்களாகவும் எண்ணுகிறதோ அது தாமஸபுத்தி ) என்று ஸ்ம்ருதி இருப்பதால் அஹம்ப்ரத்யயம் ஸ்வரூபஜ்ஞாநரூபமாதலால் அதின் ப்ராகபாவம் அந்யதா ஜ்ஞாநம், விபரீதஜ்ஞாநம், இவைகள் விரோதத்தினுலேயே விலகிவிட்டனவென்று கூறுகிருர்— அஹமித்யேவ என்று. அஹமென்றே ஆத்மாவினுடைய ஸ்வரூபம். அஹம் என்கிற வ்யவஹார புத்திக்கு அர்ஹமே ஆத்மஸ்வரூபமென்று அர்த்தம். அஹம் ப்ரத்யயத்திற்கு அஜ்ஞத்வாதி ப்ரயோஜகத்வ தூஷணத்தினுல் அஜ்ஞத்வம் முதலியவற்றுக்கு அவித்யாந்வயமே உபாதி என்று அர்த்தத்தால் சொல்லப்பட்டதாக ஆகிறது. அன்றிக்கே கார்யகாரணபாவத்தால் வ்யாப்தியை அங்கீகரித்து அன்யனுல் அஜ்ஞத்வம் முதலியவற்றின் ப்ரஸங்கம் சொல்லப்பட்டதென்று வ்யாப்தியை நிராகரிப்பதற்காக கார்யகாரணபாவத்தை நிராகரிக்கிருர்—அஜ்ஞத்வாத்ய ஹேதுத்வாச்ச இதுமுதலியதால், அஜ்ஞத்வபலமுமில்லை என்று சொல்லுகிருர்—ததஸ்ஸம்ஸர்கித்வம் என்று. அவித்யை நீங்கினவர்களுக்குங்கூட அஹமென்று ஆத்மப்ரதிபத்தி காணப்படுவதால் அஹம் ப்ரத்யயதிற்கு முக்தாத்மாவினிடத்தில் அநுவ்ருத்தியைக் கூறுகிருர்— ப்ரஹ்மாத்ம பாவ என்று. "தத்வைததத்பச்யந்" என்று ப்ரஹ்மாத்மகத்வஸாக்ஷாத்காரவசனத்தினுல் மிருதி இன்றி அவிதயையின் விலக்கம் அறியப்படுகிறது. ப்ரஹ்மததிற்கும் அவ்விதப்ரதிபததியைச் சொல்லுகிருர்—ஸகலேதர என்று. ஸகலேதராஜ்ஞாந விரோதிந: ஸகலமான இதரவிஷங்களைப் போககும ஸாமர்த்தியமுள்ள கருடனுக்கு விஷத்திற்கு வசப்படுதல் ஸம்பவியாதென்று கருத்து. ஸச்சப்த ப்ரசயயமாத்ரபாஜ: - ஸச்சப்தஸ்ய - ஸத் என்கிற ப்ரத்யயத்துக்கும் விஷயமாக ஆகி இருககிற. மாத்ரச் ப்ரத்யயத்தினுல் பிற்காலத்திய நாமரூபபாக்த்வ வ்யாவ்ருத்தி ஏற்பட்டிருக்கிறது. இதனுல் அஹங்கார ஸ்ருஷ்டிக்கு முந்தியும் அஹம்ப்ரத்யயத்தை ஜ்ஞாபிக்கிருர— அஹம்ப்ரத்யயதவை ப்ரகாசப்படுத்துவதற்காக "அஹமிமா." என்கிற வாக்யத்தை முந்தி உபாதாநம் செய்கிருர். பஹுஸ்யாம் என்கிற வாக்யத்தில் அஸ்மத் யுத்தம: என்கிற ஸூத்ரவிஹிதமான உத்தம புருஷபலத்தால் அஹமென்றும் ப்ரத்யயம் ஸித்தித்தது. "அஹமிமாஸ்திஸ்ர:" என்கிற இடத்தில் அஹம் சப்தமானது கண்டோக்தமாக இருக்கிறது. அஹங்காரத்திற்கு நாமரூப வ்யாகர்த்ருத்வம் இல்லையன்றோவென்று கருத்து. அனேக உபநிஷத்துக்களில் அஹமென்கிற நிர்தேசத்தை ஜ்ஞாபிப்பதற்காக எடுக்கிருர்— ஸ ஈக்ஷத என்று. 'ஸ்ருஜா' என்கிற உத்தமபுருஷனுல் அஹம்சப்தா கர்ஷஸித்தி என்று

கருத்து. ஸ்ம்ருதியைக் காண்பிக்கிறார்— ததா யஸ்மாத் என்று. யஸ்மாத் என்கிற வசனம் க்ஷராக்ஷரங்களைத்தாண்டி இருக்கிற ஸ்வாபாவிக ரூபத்தால் அஹம்ப்ரத்யயத்தை ஜ்ஞாபிப்பதற்காக உபாதானம் செய்யப்பட்டது. அஹங்காரம் க்ஷராக்ஷராதீதமல்லவன்றோ. ஆகையால் அஸ்மி என்கிற உத்தமபுருஷனாலும் அஹமர்த்தம் ஸித்திக்கிறது, ஆத்மாவுக்கு அஹம் ப்ரத்யயத்தை ஜ்ஞாபிக்கிறார்— அஹமாத்மா என்று. அஹங்காரமானது சிதசிதந்தராத்மா அல்லவன்றோ. ஸ்வாபாவிக நித்யரூபத்தில் அஹம் ப்ரத்யயத்தைக்காண்பிக்கிறார்—நத்வேவாஹம் என்று. அஹங்காரம் நித்யமல்ல. ம்ருத்யுவிரோதியான முக்தியைக்கொடுப்பதாக இருந்தபோதிலும் அஹம் ப்ரத்யயவிஷயமென்று கூறுகிறார்—தேஷாம் என்று. அஹங்காரம் முக்தியைக்கொடாதன்றோ. இவ்வண்ணமாக அனேக ச்ருதி ஸம்ருதிவசனங்களை எடுத்தது அன்யனால் சொல்லக்கருதப்பட்ட அப்படிப்பட்ட இரண்டு மூன்று வசனங்களை நிராகரிப்பதற்காக. இந்த அஹம் சப்தங்களால் சின்மாத்ரம் உபலக்ஷிக்கப்படுகிறதேயாகில் அனேக வாக்யங்களிலுள்ள அஹம் சப்தத்திற்கு லக்ஷணையே தோஷம். மஹாபூதாந்யஹங்கார: என்று க்ஷேத்ராந்தர்பாவ வசனம் ஒன்று. அஹங்காரம், பலம், தர்பம், காமம், க்ரோதம், பரிக்ரஹம். விமுச்ய நிர்மமச்சாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே'' (''அஹங்காரம் பலம் கொழுப்பு ஆசை கோபம் க்ருஹம் ஆராமம் க்ஷேத்ரம் முதலிய போக்யவஸ்துக்கள். இவைகள் அனைத்தையும்விட்டு மமகாரத்தை இழந்து சாந்தியுள்ளவன் ப்ரஹ்மபாவத்தை அடைவதற்கு ஸமர்த்தனாக ஆகிறான்.) என்று. இழக்கத்தக்க தன்மையில் நோக்கங்கொண்டது இரண்டாவது வசனம். அஹங்கார விமூடாத்மா என்பது மற்றொன்று. இவை மூன்றும் உதாஹரிக்கப்படாமலிருந்தபோதிலுங்கூட அபிப்ராயப்படப்பட்டதே. ஏனெனில் மேலே பரிஹாரமிருப்பதால். முந்தி இந்த வசநாபிப்ராயத்தால் ஸுஷுப்தி முக்தி இவ்விரண்டிலும் அந்வயிக்கிறதில்லை என்று. கூறப்பட்டது. இந்த அர்த்தத்தை அவலம்பித்து வினவுகிறார்— கதம் தர்ஹி என்று. பரிஹரிக்கிறார்—உச்யதே என்று. அஹமர்த்தாஹங்காரங்கள் இரண்டுக்கும் அபேதபுத்தியினால் அந்யனால் வினவப்பட்ட ப்ரக்ருதி ப்ரத்யயங்களுக்கு அர்த்தவிபாக வ்யுத்பாதனத்தின் பொருட்டு ப்ரக்ருதிக்கு அர்த்தமாக இருக்கிற ஆத்மாவினிடத்தில் அஹம் புத்திக்கு ப்ராமாணிகத்வஸ்தைர்யத்தைக் காண்பிக்கிறார்—ஸ்வரூபோபதேசேஷு என்று.

---

அவ்யக்தபரிணாமவிசேஷஸ்யாஹங்காரஸ்ய க்ஷேத்ராந்த:பாதித்வம் பக-
வதைவோபதிஶ்யதே । ஸ சாநாத்மநி தேஹேऽஹம்பாவகரணஹே-
துத்வேந அஹங்கார இத்யுச்யதே । அஸ்ய த்வஹங்காரஶப்தஸ்யாபூ-
ததத்பாவே ச்விப்ரத்யயமுத்பாத்ய வ்யுத்பத்திர்த்ரஷ்டவ்யா । அய-
மேவ அஹங்கார உத்க்ருஷ்டஜநாவமாநஹேதுர்கர்வபர்யாயநாமா ஶா-
ஸ்த்ரேஷு பஹுஶோ ஹேயதயா ப்ரதிபாத்யதே । தஸ்மாதஹ-
ங்காரேதரா அஹம்புத்திராத்மகோசரைவ । ஶரீராத்மாபி-
மாநோऽவித்யைவ । யதோக்தம் பகவதா பராஶரேண— 'அநா-
த்மந்யாத்மபுத்திர்யா அஸ்வே ஸ்வமிதி யா மதி: । அவித்யாதருஸம்பூ-
திபீஜமேதத் த்விதா ஸ்திதம்''— இதி । யதி ஜ்ஞப்திமாத்ரமேவாத்மா, ததாநாத்மத்வாத்

காயே ஶரீரே ஆத்மத்வப்ரதிபாஸ: ஸ்யாத்; ந ஜ்ஞாத்ருத்வப்ரதிபாஸ:। தஸ்மாத் ஜ்ஞாதாऽஹமர்த்த ஏவாத்மா। ததுக்தம்—

“அத: ப்ரத்யக்ஷஸித்தத்வாதுக்தந்யாயாகமாந்வயாத்। அவித்யாऽயோகதஶ்சாத்மா ஜ்ஞாதாऽஹமிதி பாஸதே” இதி ॥

யதா ச— “தேஹேந்த்ரியமந:ப்ராணதீப்யோऽந்யோऽநந்யஸாதந:। நித்யோ வ்யாபீ ப்ரதிக்ஷேத்ரமாத்மா பிந்ந: ஸ்வத: ஸுகீ” இதி ॥

அநந்யஸாதந:—ஸ்வப்ரகாஶ:। வ்யாபீ—அதிஸூக்ஷ்மதயா ஸர்வாசேதநாந்த:ப்ரவேஶநஸ்வபாவ: ॥

---

ஶ்ரீபாஷ்யம்—

மூலப்ரக்ருதியின் பரிணாமபேதமாகிய அஹங்காரத்திற்கு க்ஷேத்ரத்தில் அந்தர்பாவமானது பகவானாலேயே உபதேசிக்கப்படுகிறது. அது ஆத்மா அல்லாத தேஹத்தில் அஹம்பாவத்தைச்செய்வதற்கு ஹேதுவாக இருப்ப தால் அஹங்காரமென்று சொல்லப்படுகிறது. இந்த அஹங்காரசப்தத்திற் கோவென்றால் ¶ அபூததத்பாவத்தில் (ச்வி) ப்ரத்யயத்தைகல்பித்து வ்யுத் பத்தி காணத்தக்கது. இதே அஹங்காரமானது மேன்மைதங்கியபெரியோ ர்களின் அவமானத்திற்கு ஹேதுவாய் கர்வமென்கிற வேறுபெயர்வாய்ந்த தாக சாஸ்திரங்களில் பெரும்பான்மையாக விடத்தக்கதாக ப்ரதிபாதிக்கப் படுகிறது. ஆகையால் பாதகமில்லாத அஹம்புத்தியானது ஸாக்ஷாத் ஆத்மகோசரையாகவே இருக்கிறது. சரீரகோசரையான அஹம்புத்தியோ வென்றால் அவித்யையே. பராசரபகவானால் இதுவிஷயமான ப்ரமாணவசனம் கூறப்பட்டிருக்கிறது “ச்ரூயதாஞ்சாப்யவித்யாயா ஸ்ஸ்வரூபம் குலநந்தந அநா த்மந்யாத்மபுத்திர்யா” (வம்சத்திற்குப்பெருமையை உண்டுபண்ணுகிறவனே! அவித்யையின்ஸ்வரூபமும் கேழ்க்கப்படலாம். ஆத்மாவல்லாத வஸ்துவில் ஆத்மபுத்தி யாதொன்றுண்டோ) என்று. ஜ்ஞப்திமாத்ரம் ஆத்மாவாக இருக் குமேயானால் அப்பொழுது ஆத்மாவல்லாத ஆத்மாபிமானவிஷயமான சரீரத்

---

¶ அபூததத்பாவம்— இது வையாகரணர்கள் வழங்கும் இலக்கணச்சொற்களுள் ஒன்று—இதற்கு அர்த்தம் மேல்வருமாறு— அபூதஸ்ய - தத்பாவ:— அபூததத்பாவ:— முன் எவ்வண்ணமாக ஒரு வஸ்து இருந்ததில்லையோ அது பிற்காலத்தில் அவ்வண்ண மாக ஆகுதல். இந்த அர்த்தத்தில் (ச்வி) என்கிற ப்ரத்யயம் ப்ரயோகிக்கப்படுகிறது. இது முற்றிலும் லோபித்துப்போகிறது, உதாஹரணம்— அசுக்ல: சுக்ல: பவதி -சுக்லீ பவதி. முந்தி வெளுப்பாக இல்லாமலிருந்தது இப்போது வெளுப்பாக ஆய் இருக்கி றது. இது முதலியது.

தில் ஜ்ஞப்திமாத்ரத்திற்கு ப்ரதிபாஸம் உண்டாகவேண்டும். ஜ்ஞாதாவுக்கு ப்ரதிபாஸம் கூடாது, ஆகையால் ஜ்ஞாதாவான அஹமர்த்தமே ஆத்மா. இது சொல்லப்பட்டிருக்கிறது. "அத: ப்ரத்யக்ஷஸித்தத்வா துக்தந்யாயா கமாத்வயாத். அவித்யா யோகதஸ்சாத்மா ஜ்ஞாதாஹமிதி பாஸதே. (ஆகையால் ப்ரத்யக்ஷஸித்தமாக இருப்பதாலும், முற்கூறப்பட்டிருக்கிற நியாய ஸம்பந்தத்தாலும், சாஸ்திர ஸம்பந்தத்தாலும், அவித்யா ஸம்பந்தத்தாலும் ஆத்மாவானது, "நான் ஜ்ஞாதா" என்று பாஸிக்கிறது என்று.) அவ்வாறே ப்ரமாணங்களும் "தேஹேந்த்ரியமந: ப்ராணதீப்யோ அந்யோ அநந்யஸாதந: நித்யோ வ்யாபீப்ரதிக்ஷேத்ரமாத்மா பிந்நஸ்ஸ்வதஸ்ஸுகீ. (தேஹம் இந்த்ரியங்கள் மனது ப்ராணன் புத்தி இவைகளைக்காட்டிலும் வேறாக இருப்பவனும் ஸ்வப்ரகாசமாகயிருப்பவனும் அழிவற்றவனும் எங்கும் தடையற்று வ்யாபிக்குந்தன்மையுள்ளவனும் சரீரந்தோறும் வேறுபட்டிருப்பவனும் தானே ஸுகமுள்ளவனுமாகவுமிருப்பவன் ஆத்மா) என்று. அநந்யஸாதந:— ஸ்வயம் ப்ரகாசன். வ்யாபீ. அதி ஸூக்ஷ்மமாக இருப்பதினால் எல்லா அசேதநங்களுக்குள்ளும் ப்ரவேசிக்கும் ஸ்வபாவமுள்ளவன்.

---

ச்ருதப்ரகாசிகை—

அந்யதாஸித்தியைக்காட்டிக்கொண்டு அதில் அஹங்காரசப்தத்தால் சொல்லக்கருதப்பட்டிருப்பதைக்கூறுகிறார் — அவ்யக்த என்று. (அவ்யக்த பரிணாம பேதஸ்ய) என்று. அஹமர்த்தத்திற்கு இல்லை என்று அர்த்தம். "அதாதோ அஹங்காராதேச:" இது முதலியவைகளில் சுத்தஸ்வரூபத்துக்கு அஹங்காரசப்தத்தால் அபிதானத்தை ஒப்புக்கொண்டிருந்தபோதிலும் விரோதமில்லை. அந்த அஹங்காரசப்தமோ அஹமர்த்த விஷய புத்திபரம். அஹங்காரசப்தவாச்யத்வ மாத்ரத்தினால் ப்ரத்யகாத்மாவும் க்ஷேத்ர பேதமாக ஆகுமேயாகில் அப்பொழுது ஹரிசப்தவாச்யத்வ ஸாம்யத்தினால் ஸிம்ஹம் தவளையாக ஆகவேண்டிவரும். அநேகார்த்தங்களைச்சொல்லுகிற ஸ்வபாவமுள்ள சப்தங்களின் ஐக்யமானது அர்த்தபேதம்கொள்வதற்கு விரோதமாகாதென்று கருத்து. இதற்கு ப்ரமாணம். ஆகமப்ராமாண்யத்தில். "ததாச ஹரி சப்தஸ்ய த்ருஷ்டா மண்டூகவாசிதா, இதி தச்சப்தவாச்யத்வாத் ஸிம்ஹோ மண்டூக ஏவகிம். ததாகோ சப்தவாச்யத்வாத் சப்தஸ்சாபி விஷாணவாந்." (ஹரிசப்தத்திற்கு தவளையை உணர்த்தும் தன்மை காணப்பட்டிக்கிறது அப்படி ஹரி சப்தவாச்யத்வமிருப்பதனாலேயே ஸிம்ஹமானது தவளையாகவே ஆகுமா? அவ்வண்ணமே கோசப்தத்தினால் சொல்லத்தக்கதன்மை இருப்பதினால் "கோ" என்கிற சப்தமும் கொம்புள்ளதாகஆகுமா? என்று.) பிறகு அஹங்காரசப்தத்திற்கு அவ்யக்தபரிணாமவிசேஷ வாசகத்வ ப்ரகாரத்தைக்காண்பிக்கிறார்—ஸ து என்று. அஹம்பாவ:-அஹமென்கிற புத்தி. பாவசப்தத்திற்கு புத்திவாசகத்வமானது அபிப்ராயபரமாக ப்ரயோகமிருப்பதால் அறியப்படுகிறது. எல்லாவிடத்திலும் அஹம் சப்தார்த்தத்தை ஏகரூபமாய் அங்கீகரித்து அஹங்காரசப்தத்திற்கு அவ்யக்தபரிணாமவாசகத்வத்தை வ்யாகரணப்ரக்ரியை உபபாதனஞ்செய்கிறார்— அஸ்யது என்று. ச்விப்ரத்யயம் முற்றிலும் லோபித்துக்கிடக்கிறது. க்ருஞ் தாதுவுக்கு காரணார்த்தத்தில் வஞ்ப்ரத்யயம். க்ஷேத்ராந்தர்பாவோபதேசத்திற்கு நிர்வாஹஞ்செய்யப்பட்டது. அஹங்காரம் பலம் தர்பம் என்று அஹங்காரத்தை விடத்தக்கதாகச்சொல்

லப்பட்டிருக்கிற உபதேசத்திற்கு நிர்வாஹஞ்செய்யப்படுகிறது. அயமேவது என்று. "அயம்" என்கிற சப்தத்தினுல் ப்ரஸ்துதமான அஹம்பாவம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிற தே ஒழிய அஹம்பாவகாரணத்திற்கு ஹேது விவக்ஷிக்கப்படவில்லை, எனெனில்; கர்வ மென்கிற வேறுபெயர் இதற்குண்டென்று சொல்லியிருப்பதனுல். மஹத் அஹங்காரமெ ன்கிறஇரண்டு தத்வங்களுள்ஒன்ருன அஹங்காரமானது கர்வமென்கிற வேறுபெயருள்ள தல்லவன்ரோ. ஆதலால் இவ்விடத்தில் அஹம்பாவமே அயம் சப்தத்தால் விவக்ஷிக்கப் பட்டது. சிறப்புற்றதேஹத்தில் அஹம்புத்தியானது உத்க்ருஷ்ட ஜனங்களின் அவ மானத்திற்கு ஹேது. அஹங்கார:அஹம் என்கிற புத்தி. மானஸவ்யாபாரத்தைச் சொல்லுகிற "க்ரு" என்கிற தாதுவுக்கு புத்திபரத்வம் தகுதியுள்ளது. எவ்வாறு எனில், "தத்கோவயவம் தேவம் சேதஸாஹி புரர்புத: குர்யாத்இதி" (அதையேமுக்கிய மான அவயவமாகக்கொண்ட பரமாத்மாவை ஜ்ஞானியானவன்மீண்டும் மனதினுலேயே அறியவேண்டுமன்ரோ) என்று. மனதினுல் த்யானஞ்செய்வதன்ரோ வேதநம். ஆத லால் அஹம்புத்தி என்பது "அஹங்காரம். ச்விப்ரத்யயத்தால் உணர்த்தப்பட்ட அர்த்த த்தை தன்னுள்ளடக்கிக்கொண்டிருப்பதனுல் அஹம்சப்தார்த்தமல்லாத சரீரத்தினிடத் தில் ப்ரயோகிக்கப்படுகிற இந்த "அஹம்பாவ, அஹங்கார"என்கிற இரண்டுசப்தங்களும் அஹம் புத்தியைத் தன்னுள்ளடக்கிக்கொண்டிருக்கின்றன. இந்த இடத்தில் பாவார்த் தத்தில் வ்யுத்பத்தி. முந்தி காணர்த்தத்தில் வ்யுத்பத்தி. "கர்வோZபிமானோZஹங் கார:" என்று நிகண்டு செய்தவர்கள்.

அய்யா! (பாவே) தாத்வர்த்தத்தில் வ்யுத்பத்தியுள்ள அஹங்காரசப்தத்திற்கு உபாதேயவஸ்துபரமாக ப்ரயோகமானது எவ்வாறு பொருந்தும்? "அதாதோ அஹங் காராதேச:" என்று. மறுமொழி கூறப்படுகிறது. அந்த அஹங்காரசப்தமோவென்ருல் நேராக அஹமர்த்தமான புத்தியைச் சொல்லுகிறதேயொழிய ஆத்மாவல்லாத சரீரத்தி னிடத்தில் ஆத்மபுத்தியைக்குறிக்கிற "ச்வி" ப்ரத்யயத்தின் அர்த்தத்தை அடக்கிக்கொ ண்டிருக்கிற அஹங்காரமல்ல. விடத்தக்கது க்ரஹிக்கத்தக்கது என்கிற ஸ்வரூபத்தால் சப்தத்தினுல் ஏற்படுகிற அஹம் புத்தி இரண்டுக்கும் விஷயங்களின் பாகுபாட்டை நிகமனஞ்செய்கிருர்— தஸ்மாத் என்று. இந்த அர்த்தத்தில் ப்ரமாணம் கூறுகி ருர்—யதோக்தம் என்று. அதே புராணத்தில் அநாத்மவிஷயமான அஹம் புத்திவச னங்களிரண்டுக்கும் ப்ராந்தத்வமும் ஆத்மவிஷயத்தில் அப்ராந்தத்வமும் ஸ்பஷ்டமாக கூறப்பட்டிருக்கிறது. எவ்வாறெனில்; "ஆகாசவாய்வக்நிஜலப்ருதிவீப்ய: ப்ருதக் ஸ்திதே! ஆத்மங்யாத்ம மயம்பாவம் க:கரோதிகளேபரே, பஞ்சபூதாத்மகே தேஹே தேஹீ மோஹதமோ வ்ருத: அஹம் மமைததித்யுச்சை: குருதே குமதிர்மதிம்" ஆகா யம், காற்று, நெருப்பு, ஜலம், பூமி, இவைகளைக்காட்டிலும் வேறுபட்டிருக்கிற ஆத்மா இருக்க, சரீரத்தில் எவன் ஆத்மமயமான பாவத்தை பண்ணுவான்? பஞ்சபூதமயமான தேஹத்தில் அஜ்ஞாநமாகிற இருளால் மூடப்பட்டு துர்புத்தியையுடையவனுன தேஹி யானவன் "நான் என்றும், "இது என்னுடையது" என்றும் எண்ணத்தை திடமாக ப்பாராட்டுகிருன் என்று.) ஆதி பரதசரிதத்தில்; ஆத்மங்யேஷ ந தோஷாய ஶப்தோஹ மிதி யோத்விஜ, 'அநாத்மங்யாத்மவிஜ்ஞானம் சப்தோவா ப்ராந்திலக்ஷண:' (பிராஹ்ம ணரே! ஆத்மாவினிடத்தில் அஹம் என்று உபயோகப்படுத்தப்படுகிற யாதொரு இந்த சப்தமுண்டோ, இது தோஷத்தின் பொருட்டாகா; ஆத்மாவல்லாத சரீரத்தி னிடத்தில் ஆத்மா என்கிற ஜ்ஞாநமோ, சப்தமோ, இரண்டும் ப்ராந்தியினுலுண்டா கிறது.) இந்த வசநார்த்தத்தையுங்கூட அஹமர்த்தாத்மத்வத்திற்கு ஹேதுவாகச் சொல்லுகிருர்—யதி என்று. அநாத்மநி என்று. ஆத்மாவல்லாததில் அஹம்

ப்ரதீதியானது எவ்வாறு ஆத்மாபிமானம் என்று அர்த்தம. அஹமாத்ரத்திற்கு ஆத்மத்வத்தை நிகமனஞ் செய்கிறார்—தஸ்மாத் என்று. இந்த அர்த்தத்தில் ஆத்மஸித்தி க்ரந்தத்தை உதாஹரிக்கிறார்—ததுக்தம் என்று. தர்மதர்மிபாவததால் ப்ரதீதிவருவது ப்ரத்யக்ஷஸித்தி. ஸ்திரத்வம் அஸ்திரத்வம் முதலியவைகளையும் ச்ருத்யர்த்தாபத்தியும் ந்யாயம் ஆகமம் என்பது உதாஹரிக்கப்பட்டிருக்கிற உபநிஷத்துக்களிலுள்ளவாக்யங்கள். அவித்யாஸம்பந்தமானது அடுத்து சொல்லப்பட்டிருக்கிற ப்ராந்தியோகம அஹமர்த்தமானது ஆத்மாவல்லாதபக்ஷத்தில நான பெருத்தவன் என்கிற ப்ராந்தி பொருந்தாது என்றுவது அர்த்தம். ஜ்ஞாதாவானவன் ஆத்மா என்கிற விஷயத்தில் ஸம்வாதமுள்ள க்ரந்தம் காண்பிக்கப்பட்டது. ஜ்ஞப்திமாத்ரம ஆத்மாவல்லவென்கிற விஷயத்திலும ஆத்மஸித்தி க்ரந்தத்தை உதாஹரிக்கிறார்—ததாச என்று. தீப்ய அந்ய:, என்கிறது இந்த இடத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஸாதனசப்தமானது உத்பாதகத்திற்கும் ஜ்ஞாபகத்திற்கும் பொதுவாக இருப்பதால் அதை வ்யாக்யானம் பண்ணுகிறார்— அநந்ய என்று. ஜீவஸ்வரூபம் விபு என்கிற சங்கையை விலக்குவதற்காக "வ்யாபீ" என்கிற சப்தத்தை வ்யாக்யானம் பண்ணுகிறார்—அதிஸூக்ஷ்ம என்று. புராணம் முதலிய க்ரந்தங்களில் வ்யாப்திசப்த ப்ரயோகமிருப்பதால் அதுவே இந்த ச்லோகத்தில் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. எந்த எந்த இடத்தில் ஜீவனுடைய வ்யாப்தியைச்சொல்லுகிற சப்தங்கள் காணப்படுகின்றனவோ அங்காங்கு இதே அர்த்தம் காணத்தக்கதென்று கருத்து. ஜீவனுக்கு தர்மபூதஜ்ஞானத்தால் வயாப்தியானது ஆத்மஸித்தியிலேயே சொல்லப்படுகிறது. வ்யாப்தியும் சைதந்யமாத்ரத்தாலேயொழிய ரூபத்தாலில்லையென்று. ஆதலால் சொல்லப்பட்டதே ஸரியான அர்த்தம்.

---

𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂—𑌦𑍋𑌷𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌸𑌮𑍍𑌭𑌵𑌨𑌾𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌬𑌾𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍—𑌇𑌤𑌿 ॥

𑌕𑍋𑌽𑌯𑌂 𑌦𑍋𑌷 𑌇𑌤𑌿 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍, 𑌯𑌨𑍍𑌮𑍂𑌲𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 । 𑌅𑌨𑌾𑌦𑌿𑌭𑍇𑌦𑌵𑌾𑌸𑌨𑍈𑌵 𑌹𑌿 𑌦𑍋𑌷 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌭𑍇𑌦𑌵𑌾𑌸𑌨𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌦𑌿𑌵𑌦𑍍𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌂 𑌕𑌿𑌂 𑌨𑌿𑌰𑍂𑌪𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑌦𑍍𑌭𑌵𑌮𑍍? 𑌅𑌨𑍇𑌨𑍈𑌵 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌨, 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌣𑌾𑌤𑍍, 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌨𑌿𑌖𑌿𑌲𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍁𑌬𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇 𑌸𑌤𑌿 𑌭𑍇𑌦𑌵𑌾𑌸𑌨𑌾𑌯𑌾 𑌦𑍋𑌷𑌤𑍍𑌵𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃, 𑌭𑍇𑌦𑌵𑌾𑌸𑌨𑌾𑌯𑌾𑌃 𑌦𑍋𑌷𑌤𑍍𑌵𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇 𑌸𑌤𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌨𑌿𑌖𑌿𑌲𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍁𑌬𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌨𑌿𑌶𑍍𑌚𑌯 𑌇𑌤𑌿 ॥

---

**ஸ்ரீபாஷ்யம் —**

தோஷ மூலமாக இருப்பதுபற்றி அந்யதாஸித்தி ஸம்பாவனையினால் ஸகலபேதங்களையும் அவலம்பித்து வருகிற ப்ரத்யக்ஷமானது சாஸ்திரத்தினால் பாதிக்கத்தக்கதென்று எது சொல்லப்பட்டதோ அந்ததோஷம் எது என்று சொல்லத்தக்கது. எந்த தோஷத்தை நீ மூலமாகக்கொள்வதனால்

ப்ரத்யக்ஷத்திற்கு அந்யதாஸித்தி ஏற்படுகிறதோ. அநாதிபேதவாஸனையே தோஷமென்று சொல்லப்படுமேயாகில் பேதவாஸனைக்கு திமிரம் முதலிய தோஷங்களுக்குப்போல உள்ளபடி இருக்கிற வஸ்துக்களின் விபரீத ஜ்ஞாந ஹேதுத்வமானது வேறுஇடத்தில் இதற்குமுன் உன்னால் அறியப்பட்டிருக்கிறதா? இந்த சாஸ்த்ர விரோதத்தினாலேயே அறியப்படப்போகிறதென்று சொல்லப்படுமேயாகில் அது ஸரியன்று, அந்யோந்யாச்ரய தோஷம் வருவதால். சாஸ்திரத்திற்கு ஒரு விசேஷமுமில்லாத வஸ்துவை உணர்த்தும் தன்மை நிச்சயிக்கப்பட்டால் பேதவாஸனைக்கு தோஷத்வ நிச்சயம் ஏற்படுகிறது. பேதவாஸனைக்கு தோஷத்வ நிச்சயம் ஏற்பட்டால் தான் சாஸ்திரத்திற்கு எல்லா விசேஷங்களையுமிழந்திருக்கிற வஸ்துவை உணர்த்தும் தன்மை நிச்சயிக்கப்படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை:—

அதற்குமேல் சாஸ்த்ரத்திற்கும் ப்ரத்யக்ஷத்திற்கும் ஏற்பட்டிருக்கிற விரோதத்தில் சாஸ்த்ரத்தின் ††ப்ராபல்யத்தை அநுவதித்து நிரஸிக்கிறார்— யதுக்தம் இது முதலியதால். அந்யனால் முன்பு ¶மூல §மூலிபாவம், ☙பரோக்ஷா $ பரோக்ஷரூபத்வம் முதலியது ‡ பாத்ய * பாதகபாவத்தில் காரணமன்று, ஜ்வாலாபேதாநுமானத்தில் வ்யபிசாரம் வருவதால். "||ஆதித்யோ $யூப:" இது முதலான இடங்களில்கூட யூபத்திற்கும் ஆதித்யனுக்கும் ஐக்யம் முதலியவற்றைச் சொல்லாமலொழிவது @தௌர்பல்யத்தினாலன்று. பின்னையோ, யூபாஞ்ஜந விதிசேஷமாயிருப்பதுபற்றி ஐக்யத்தில் தாத்பர்யமில்லாமையால்" என்று கூறப்பட்டிருக்கிறது. அந்த இடத்தில் ஜ்வாலாபேதாநுமானத்தைக்காட்டிலும் சாஸ்த்ரத்திற்கு மூன்றுவிதமாக வைஷம்யமிருக்கிறது. வேறு ப்ரமாணத்தாலே தோஷமூலத்வ நிச்சயமில்லாமையால் அந்யோந்யாச்ரயம், பாத்யம் பாதகம் இரண்டுக்கும் ஸமானதோஷத்வம், மூலத்தை அடியோடு நாசஞ்செய்தல், என்கிற இம்மூன்றும் ஜ்வாலாபேதாநுமானத்தில் கிடையாது. அதே விவரிக்கப்படுகிறது. (1) ஒரு திரியில் இருத்தலைக்காரணமாகக் கொண்ட ஸாத்ருச்யம் என்கிற தோஷத்திற்கு ஐக்யமில்லாமலிருந்தபோதிலும், ஐக்யப்ரதீதிக்குக் காரணமாயிருத்தலானது அப்பொழுது அணைக்கப்பட்டு ஏத்தப்பட்டிருக்கிற விளக்கில் காணப்பட்டிருப்பதுபற்றி கண்ணால் க்ரஹிக்கப்படுகிற ஜ்வாலைக்ய ப்ரதிபத்திக்கு ஓரிடத்தில் தோஷமூலத்வ நிச்சயத்தால் வேறுஇடத்தில் ஐக்யப்ரதிபத்தியிலும் தோஷமூலத்வம் ஸம்பவிப்பதால், சங்கைக்கு ☙ ஆஸ்பதமான ஜ்வாலைக்யப்ரத்யக்ஷமானது பரீக்ஷகனுக்கு நிச்சயத்தை உண்டுபண்ணுவதில் ஸாமர்த்யமுள்ளதாக ஆகாது. ஜ்வாலையிலுள்ள $ ஸாத்ருச்யரூப தோஷத்திற்கு ஐக்யமில்லாமலிருந்தபோதிலும் ஐகயப்ரதீதிஹேதுத்வமானது வேறு ப்ர

---

†† ப்ராபல்யம்—அதிக பலத்துடன்கூடி இருத்தல்.
¶ மூலம்—காரணம், §மூலி—கார்யம். ☙ பரோக்ஷம்—ப்ரத்யக்ஷமல்லாதது
$ அபரோக்ஷம்—ப்ரத்யக்ஷம். ‡ பாத்யம்—பாதிக்கத்தக்கது.
* பாதகம்—மற்றொன்றை பாதிக்கிற சாஸ்திரம் முதலியது.
|| ஆதித்யன்— ஸூர்யன். $யூபம்— யாகத்தில் பசுவைக்கட்டும் தூண்.
@ தௌர்பல்யம்—பலமற்றிருத்தல், பலத்தில் குறைந்திருத்தல்.
☙ ஆஸ்பதம—ஆதாரம். $ ஸாத்ருச்யம்—ஒற்றுமை.

மாணத்தாலே காணப்படாமல் போகுமேயாகில் அந்யோந்யாச்ரய தோஷமுண்டாகும், அநுமாநம் ப்ரபலமானதால் ப்ரத்யக்ஷத்திற்கு அந்யதாஸித்தி, *அந்த ப்ரத்யக்ஷத்திற்கு அந்யதாஸித்தி வருவதனால் அனுமானத்திற்கு ப்ராபல்யமென்று ஐக்யப்ரதீதிக்கு அந்யதாஸித்தி ஸம்பவமானது வேறு ப்ரமாணத்தால் காணப்பட்டிருப்பதால் அந்யோந்யாச்ரயமில்லை. இந்த இடத்தில் அவ்வாறு ப்ரமாணாந்தரத்தினால் பேதவாஸனைக்கு தோஷத்வம் காணப்பட்டிருக்கவில்லை. (2) மேலும் தீபத்தில் பாதிக்கத்தக்க ஜ்வாலைக்ய ஜ்ஞானத்திற்கு ஸாத்ருச்யம் என்கிற தோஷமூலத்வம் இருந்தபோதிலும் பாதகமான ஜ்வாலாபேதாநுமானத்திற்கு ஸாத்ருச்யமூலத்வம் காணப்பட்டிருக்கவில்லை. இவ்விடத்திலோ பாதிக்கத்தக்கப்ரத்யக்ஷம் பாதகமானசாஸ்த்ரம் இவையிரண்டுக்கும் அந்யனால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற தோஷமூலத்வமானது ஸமானமாக இருக்கிறதென்பதனால் தோஷஸாம்யம். (3) மேலும் அந்த இடத்தில் ஜ்வாலை என்கிற * தர்மியை க்ரஹிக்கிற ப்ரத்யக்ஷத்திற்கும், முதலிலுள்ளவத்தியின் அவயவத்தோடு அக்நிஸம்பந்தத்திலும் கடாசியிலுள்ள ‡‡ வத்தியின் அவயவத்தின் விநாசத்திலும் உத்பத்திவிநாசஙகள் இரண்டிலும் § வ்யாப்தியை க்ரஹிக்கிற ப்ரத்யக்ஷத்திற்கும், ஒவ்வொரு அவயவந்தோறும் அக்நிஸம்யோகம் வத்தியின் அவயவங்களின் விநாசமெனப்பெயருள்ள லிங்கத்தைக்ரஹிக்கிற ப்ரத்யக்ஷத்திற்கும் பேதாநுமானத்தால் பாதிக்கக்கூடிய விஷயத்வமில்லை. அது ஐக்யப்ரதிபத்திக்கே. இவ்விடத்திலோ சப்தமெனப் பெயர்கொண்ட தர்மியையும் அதற்கு நிர்தோஷத்வ ஸாதகமான லிங்கத்தையும் அந்த லிங்கத்திற்கு வ்யாப்தியையும் @ஆறுவிதமான தாத்பர்ய லிங்கங்களையும் க்ரஹிக்கின்றதுமான ப்ரத்யக்ஷத்திற்கும் அவைகளின் தாத்பர்யலிங்கங்களுக்கும் சாஸ்த்ரத்தினாலேயே பாதகம் வருவதால் †மூலோச்சேதித்வம் என மூன்றுவிதமான *வைஷம்யம். இந்த மூன்றுவிதமான வைஷம்யத்தை உபபாதிக்கபபோகிறவராய் கொண்டு பூர்வபக்ஷத்தை அநுவாதம் பண்ணுகிறார்—தோஷமூலத்வேந என்று. ஸகலபேதாவலம்பிப்ரத்யக்ஷஸ்ய என்று. இவ்விடத்தில் இது கருத்து. தத்வசுத்திகாரர் முதலிய சிலாகளால் காசம் திமிரம் முதலியதே ப்ரத்யக்ஷத்திற்கு தோஷமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது பொருத்தமுள்ளதன்று. ꙮகாசம் $திமிரம் முதலியது ஒரு ஸமயத்திலிருப்பதால். இதனால் ப்ரத்யக்ஷாந்தரஙகளுக்கு தோஷமூலத்வம் ஊஹிக்கப்படுகிறதேயாகில் சப்தரூபமாயிருப்பதால் சாஸ்த்ரத்திற்கும தோஷமூலத்வம் ஊஹிக்கப்படலாம். சாஸ்த்ரவிஷயத்தில் தோஷத்திற்கு யோக்யாநுபலப்தியினால் நிராஸம் வருமேயாகில் ப்ரத்யக்ஷத்திலும் அப்படியே ஆகலாம.

மேலும், §ஆயுர்வேதத்தில் தோஷங்களின் ஸ்வரூபமும் அவைகளின் நிவ்ருத்யுபாயம் முதலியதும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. எல்லா ப்ரத்யக்ஷத்திற்கும் தோஷமூலத்வாநுமானமும் அதற்கு விருத்தமும் கூறப்பட்டிருக்கிறது. மேலும் எல்லா ப்ரத்யக்ஷங்களுக்கும் தோஷமூலத்வம் வரின் ஸந்மாத்ரக்ராஹியான ப்ரத்யக்ஷத்திற்கும்தோஷ

---

* தர்மி—வஸ்து. ‡‡ வத்தி—திரி.

§ வ்யாப்தி—கார்யகாரணஙகள் இரணடுக்கும் தவறாமலிருக்கிற ஸம்பந்தம். அதாவது-எங்கே புகை இருக்குமோ அங்கே தவறாமல் நெருப்பு இருத்தல், இதை நியத ஸாஹசர்யம் என்று தார்கிகர்கள் கூறுவார்கள். இந்த வ்யாப்தியானது பல இடங்களில் பலதடவை காண்பதால் நிச்சயிக்கப்படுகிறது.

@ஆறுவிதமான தாத்பர்யலிங்கங்களாவன — உபக்ரமோபஸம்ஹாரங்கள், அப்யாஸம, அபூர்வதா, பலம, அர்த்தவாதம், உபபத்தி.

‡ மூலோச்சேதித்வம்— அடியோடு அழித்தல். *வைஷம்யம்— வேறுபாடு.

ꙮ காசம்—மஞ்சக்காமாலை. $ திமிரம்—மெல்லியதான சதையினால் கண்ணை மறைக்கும் ஓர் விநோதமான நேத்ரரோகம்

§ ஆயுர்வேதம்— வைத்தியசாஸ்திரம்.

மூலத்வமிருப்பதால் ஸர்மாத்ரமும் மித்யையாக ஆகும். தூஷிக்கிறார்— தோஷம் இது முதலியதால். தோயம் தோஷ இதி வக்தவ்யமிதி, 'தோயம் தோஷ:' என்கிற இந்த வசனவ்யக்தியினால் தோஷரூபமான மூலம் உரைக்கப்பட்டதோ அது எதுவென்று வினவப்பட்டால் இது தோஷமென்று சொல்லத்தக்கது என்று அர்த்தம். அன்றிக்கே, யச்சப்த ஸாமர்த்த்யத்தினால் தத் எனகிற சப்தம் ஆக்ஷேபத்தால் ஸித்தம். "தோஷ மூலத்வே" இது முதலிய க்ரந்தத்தினால் எந்த அர்த்தங்கள் உரைக்கப்பட்டனவோ அங்கு எது தோஷமென்று வினவுமின் சொல்லத்தக்கது என்று அர்த்தம். எதனால் சொல்லத்தக்கது எனில் கூறுகிறார்—யந்மூலதயா என்று. தோஷத்தைக்கூறாமல் அந்யதாஸித்தியானது ஸுலபமாக சொல்லமுடியாதன்றோ வென்று அர்த்தம். தோஷத்தை உரைக்கிறார்— அநாதி என்று. ஏவகாரமானது ஸ்வரூபத்தின் ¶ஸம்ப்ரதிபத்தியை ப்ரதானமாகக்கொண்டது. 'ஹி' சப்தத்தால் வேறு தோஷங்களின் அஸம்பவம் ஸித்திக்கிறது. தன் மதத்தில் தோஷத்வஸம்ப்ரதிபத்தி அபிமானத்தாலாவது 'ஹி' சப்தம். தோஷத்வமாவது விபரீதஜ்ஞான ஹேதுத்வம். ஆதலால் விபரீதஜ்ஞான ஹேதுவாக வ்யாப்தியானது காணப்பட்டிருப்பதால் பேதவாஸனையின் ஸ்வரூபத்திற்கு ஸம்ப்ரதிபத்தி வந்திருந்தபோதிலும் தோஷத்வஸம்ப்ரதிபத்தியில்லாமையால் வினவுகிறார்— பேதவாஸநாயா: என்று. திமிராதிவத் என்கிற இடத்திலுள்ள ஆதிசப்தத்தினால் ஸாத்ருச்யம் முதலியது $விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஸாதருச்யமல்லவோ ஜ்வாலையில் ஐக்ய ப்ரமத்திற்கு ஹேதுவாக இருக்கிறது. வேறு இடத்தில் முன்பு அறியப்பட்டிருக்கிறதென்று எவ்விதத்தாலும் சொல்லமுடியாமையால் சங்கிக்கிறார் அநேநைவ என்று. தூஷிக்கிறார்—ந என்று. இவ்வண்ணம ப்ரமாணாந்தரத்தால் தோஷத்வ நிச்சயமில்லாமையால் அந்யோந்யாச்ரயண தோஷாபாதன ரூபவைஷம்யம் உரைக்கப்பட்டது.

---

கிஞ்ச—யதி பேதவாஸநாமூலத்வேந ப்ரத்யக்ஷஸ்ய விபரீதார்த்தத்வம்; ஶாஸ்த்ரஸ்யாபி தந்மூலத்வேந ததேவ ஸ்யாத் ॥

அதோச்யேத—தோஷமூலத்வேऽபி ஶாஸ்த்ரஸ்ய ப்ரத்யக்ஷாவகதஸகலபேதநிரஸநஜ்ஞாநஹேதுத்வேந பரத்வாத் தத்ப்ரத்யக்ஷஸ்ய பாதகத்வம்—இதி । தந்ந; தோஷமூலத்வே ஜ்ஞாதேஸதி பரத்வஸ்யாகிஞ்சித்கரத்வாத் । ரஜ்ஜுஸர்பஜ்ஞாநநிமித்தபயே ஸதி ப்ராந்தோऽயமிதி விப்ரஜ்ஞாதேந கேநசித் "நாயம் ஸர்ப:, மா பைஷீ:" இத்யுக்தேऽபி பயாநிவ்ருத்திதர்ஶநாத் । ஶாஸ்த்ரஸ்ய ச தோஷமூலத்வம் ஶ்ரவணவேலாயாமேவ ஜ்ஞாதம் । ஶ்ரவணாவகதநிர்விஶேஷோபதேஶி ப்ரஹ்மைகத்வவிஜ்ஞாநாஸ்யாபாத்வாந்நநாஶ: ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

மேலும், பேதவாஸனையைக் காரணமாகக் கொண்டிருப்பதனால், ப்ரத்யக்ஷத்திற்கு விபரீதார்த்தத்தோடு கூடி இருத்தல் கூறப்படுமேயாகில், சாஸ்த்

---

¶ ஸம்ப்ரதிபத்தி—ஒப்புக்கொள்ளுதல். $ விவக்ஷிதம்—சொல்லக்கருதப்பட்டிருப்பது.

ரமும் அந்த பேதவாஸனை மூலமாக இருப்பதால் அவ்வாறேயாகும். அப்ப டிக்கின்றி சாஸ்த்ரம்தோஷமூலமாக இருந்தபோதிலும் ப்ரத்யக்ஷமாக அறிய ப்பட்டிருக்கிறஸகலபேத நிரஸனஜ்ஞானத்திற்கு ஹேதுவாக இருப்பதுபற்றி பிந்தியதாயிருப்பதனால் அந்த சாஸ்த்ரம் ப்ரத்யக்ஷத்திற்கு பாதகமாக ஆகக்கூடுமென்று உரைக்கப்படுமேயாகில், அது ஸரியன்று. தோஷமூலத்வம் அறியப்பட்டிருக்கையில் பரத்வம் (பிறபட்டிருத்தல்) என்பது பயனற்றது. ரஜ்ஜுவில் ஸர்பஜ்ஞானத்தால் பயம் உண்டாயிருக்கையில் இவன் $ ப்ராந்த னென்று நன்கு அறிந்தவனை ஒருவனால் "இது ஸர்பமல்ல, பயப்படாதே" என்று சொல்லப்பட்டபோதிலும் பயத்தின் நீங்காமை காணப்படுவதால். சாஸ்த்ரத்திற்கும் தோஷமூலத்வமானது ச்ரவணவேளையிலேயே அறியப்பட் டிருக்கிறது. மனனம் முதலியது ச்ரவணத்காலறியப்பட்டிருக்கிற ஸமஸ்த மான பேதங்களையும் போக்குகின்ற ப்ரஹ்மாத்மைகத்வவிஜ்ஞாநத்தின் ஆவ் ருத்தி ரூபமாயிருப்பதால்.

**ச்ருதப்ரகாசிகை.—**

பிறகு பாத்யபாதகம் இரண்டுக்கும் துல்யதோஷத்தைக்கூறுகிறார் — கிஞ்ச என்று. இதற்குமேல் தோஷமூலத்வம் ஸமானமாக இருந்தபோதிலும், "பிறபட்டிருத்தல்" என்பதனால் பாதகத்வத்தை சங்கிக்கிறார்--அத என்று அபச்சேதம் முதலியவைகளிலும் இது ரஜதம், "இது ரஜதமல்ல" எனகிற இத முதலியவைகளிலும் பிந்தினது பாதக மாகக் காணப்பட்டிருக்கிறது. ஆகையால் நிஷேதிக்கப்படத்தக்கதை உபஸ்தாபிக்கிற ப்ரமாணத்தை அபேக்ஷித்து நிஷேதிக்கிற சாஸ்த்ரம் பிந்தியிருப்பதால் பலவத்தரமென்று அர்த்தம்.

இவ்வண்ணம் ப்ரஹ்மத்தைப்ரதிபாதிக்கிற சாஸ்தரத்திற்கும் வ்யுத்பத்தி முதலிய வற்றுக்கு ப்ரத்யக்ஷம் முதலியது மூலமாயிருப்பதால் அந்த ப்ரத்யக்ஷபூர்வகமான அந்த சாஸ்த்ரத்திற்கு ப்ரத்யக்ஷம் முதலியவைகளை அபேக்ஷித்து பரத்வமிருப்பதால் ப்ரதிபாதிக்கப்படத்தக்க நிர்விசேஷ வஸ்துவின் ஸத்யத்வமும் துல்ய ந்யாயத்தால் ஸித் திக்கிறது. அதை தூஷிக்கிறார்—தந்ந என்று பரத்வம் ப்ரயோஜனமற்றதென்பதை உபபாதிக்கிறார்—ரஜ்ஜுஸர்ப என்று. பிந்தின ஜ்ஞாநத்திற்கு தோஷமூலத்வமிருப் பதுபற்றி ப்ராமாண்ய நிச்சயமில்லாமையால் பயம் நிவ்ருத்திக்கிறதில்லை.

அய்யா! ப்ராந்தத்வம் அறியப்பட்டதினால் பரத்வமானது பயனற்றதாயிருக்கட்டும், இவ்விடத்திலேயோ ப்ராந்தத்வ ஜ்ஞானமில்லையென்று சொல்லப்படுமேயாகில் கூறுகி றார்—சாஸ்த்ரஸ்ய என்று. ஜ்ஞாநத்வத்தை உபபாதிக்கிறார்—ச்ரவணவகத என்று. சாஸ்த்ரத்திற்கு பேதவாஸனாமூலத்வமானது முற்றிலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அந்தவாஸனைக்கு தோஷத்வமானது பேதவிஷயகமான மித்த்யாத்வஜ்ஞானத்தாலறியப் படுகிறது. அந்த மித்த்யாத்வ ஜ்ஞாநமும் ஜ்ஞாநததால் நிவர்திக்கத்தக்கதென்று அறியப் படுதலால். ஜ்ஞாநத்தால் நிவர்திக்கத்தக்கதென்கிற ஜ்ஞாநமும் ப்ரஹ்மாத்மைகத்வ ஜ்ஞாநத்திற்கு ஸமஸ்தமான பேதங்களையும் உபமர்திக்குந் தன்மையுள்ளதென்கிற

$ ப்ராந்தன்—ப்ரமமுள்ளவன்.

கணதஜ்ஞானத்தினால் என்று அறியப்படுவதால். ஆதலால் இப்படிப்பட்ட நிவர்த்தகஜ்ஞானத்தின் அப்யாஸரூபமான மனனத்தைச்செய்கிறவனால் சாஸ்த்ரத்திற்கு தோஷமூலத்வம் அறியப்படுகிறதென்று அர்த்தம். இவ்வண்ணம் பாத்யம் பாதகம் இரண்டுக்கும் துல்யதோஷத்வரூபமான வைஷம்யம் உரைக்கப்பட்டது.

கிஞ்ச—இத³ம் ஶாஸ்த்ரம்; ஸ்வதஸ்த்வஸம்பா⁴வ்யமானதோ³ஷம்; ப்ரத்யக்ஷம் து ஸம்பா⁴வ்யமானதோ³ஷமிதி கேநாவக³மகம் ப்ரமாணம்? ந தாவத்ஸ்வதஸ்ஸித்³தா⁴ நிர்விஶேஷாநுபூ⁴திரித³மவக³மயதி; தஸ்யா: ஸர்வவிஷயவிரஹாத், ஶாஸ்த்ரபக்ஷபாதவிரஹாச்ச । நாபி இந்த்³ரியஜம் ப்ரத்யக்ஷம், தோ³ஷமூலத்வேந விபரீதார்த²த்வாத் । தந்மூலத்வாதே³வ நாந்யாந்யபி ப்ரமாணாநி । அத: ஸ்வபக்ஷஸாத⁴நப்ரமாணாநப்⁴யுபக³மாந்ந ஸ்வாபி⁴மதஸித்³தி⁴: ॥

நநு வ்யாவஹாரிகப்ரமாணப்ரமேயவ்யவஹாரஸ்ஸர்வ ஏவ; கோ(அ)யம் வ்யாவஹாரிகோ நாம? ஆ தத்த்வஜ்ஞாநோத³யாத³பா³தி⁴த இதி சேத்; கிம் தேந ப்ரயோஜநம்? ப்ரமாணதயா ப்ரதிபந்நஸ்ய ப³ந்த⁴கத்வாயோகா³தே³வ ப்ரமாணகார்யாபா⁴வாத் ॥

ஸ்ரீபாஷ்யம்.—

மேலும், இது சாஸ்த்ரம்; இது தோஷ ஸம்பாவனையற்றது; ப்ரத்யக்ஷமோ ஸம்பவிக்கத்தக்க தோஷத்துடன்கூடியதென்று உன்னால் எந்த காரணத்தால் அறியப்பட்டது? * ஸ்வதஸ்ஸித்தையாயும் ஸகல விசேஷங்களுமற்றதான அநுபூதியானது இந்த அர்த்தத்தை உணர்த்தத்திறமையுள்ளதாக ஆகாது; ஏனெனில், அது எல்லா விஷயங்களினின்றும் விலகியிருப்பதாலும் சாஸ்த்ரபக்ஷபாதமில்லாமையாலும். இந்த்ரியங்களாலுண்டாகிற ப்ரத்யக்ஷமும் இந்த அர்த்தத்தை உணர்த்தத்திறமையுள்ளதாக ஆகாது. தோஷமூலமாயிருப்பதுபற்றி விபரீதார்த்தத்தையுடையதாகையால் அந்த தோஷத்தை மூலமாகக்கொண்டிருப்பதினாலேயே மற்றவைகளும் ப்ரமாணங்களாகா. ஆகையால் தன் பக்ஷத்தை ஸாதிக்கத்தக்கத் திறமையுள்ள ப்ரமாணத்தை ஒப்புக்கொள்ளாமையால் தனக்கு சம்மந்தமாக இருக்கிற அர்த்தம் ஸித்தி பெறுகிறதில்லை

* ஸ்வதஸ்ஸித்தம்—தானாகவே ஸித்திபெற்றிருக்கிற வஸ்து. அல்லது நித்யமாய் இருப்பது. அல்லது ஸ்வயம்ப்ரகாசமுள்ளது.

அய்யா! வ்யாவஹாரிகமான ப்ரமாணப்ரமேய வ்யவஹாரம் எங்களுக்கும் இருக்கவே இருக்கிறது. இந்த வ்யாவஹாரிகமென்பது யாது? ஆபாதப்ரதீதியினால் ஸித்திபெற்றதும் யுக்திகளால் நிரூபிக்கப்படுமேயாகில் அவ்வாறு நிலைபெற்றிருக்கதுமென்று சொல்லப்படுமேயாகில்; அதனால் யாது பயன்? ப்ரமாணமாக ஒப்புக்கொள்ளப்பட்டாலும் யுக்தியினாலுண்டான பாதத்தாலேயே ப்ரமாண கார்யமில்லாமையால்

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் மூலோச்சேதித்வத்தைச் சொல்லுகிறார்— **அபிச** என்று. இது சாஸ்த்ரம் என்பதினால் சபதாசி விலக்கப்படுகிறது. அஸம்பாவ்யமான தோஷமென்பதனால் பௌத்தாகமம் முதலியது விலககப்பட்டது. த்வயா—ப்ரமாணம் ப்ரமேயம் முதலியவற்றை உள்ளது உள்ளபடியே ஒப்புக்கொள்ளாதவனால் **ந தாவத் இதி** ஸ்வதஸ்ஸித்தமாக இருப்பதால் நிரஸிக்கப்பட்ட ஸமஸ்தமான விசேஷங்களோடு கூடியிருத்தல். இந்த விசேஷணமானது நிர்விஷய த்வத்தைக் காட்டுவதற்காக. யாது காரணத்தால் அறிவிக்கப்படுகிறதில்லை எனில் கூறுகிறார்— **தஸ்யா:** என்று. ஸர்வவிஷய விரக்தத்வாத்-நிர்விஷயத்வாத் என்று அர்த்தம். விஜ்ஞானமானது விஷயத்துடன் ஸம்பந்திக்காமல் ப்ரகாசப்படுத்தாதன்றோ. அநுபூதியானது உள்ளபடி நிர்விஷயையாக இருந்தாலும் ப்ராந்தியினால் இல்லாததாகஇருநதபோதிலுங்கூட சாஸ்த்ர ப்ராபல்யத்தைஉணர்த்திவைக்கிறது என்று சொல்லப்படுமேயாகில் கூறுகிறார்— **சாஸ்த்ரபக்ஷபாத விரஹாச்ச** என்று. அஸம்பந்தமும் அவித்யமானத்வமும் விசேஷமின்றி இருப்பதால் பௌத்தாதி சாஸ்த்ராந்தரங்களுக்கு ப்ராமாண்யத்தையுமறிவிப்பிக்கும் என்று அர்த்தம். ப்ரத்யக்ஷம் முதலியது அறியும்படிசெய்வியாது என்று கூறுகிறார்-**நாபி** என்று யோகிப்ரத்யக்ஷம்முதலியதும் ஐந்த்ரியமான ப்ரத்யக்ஷத்தை மூலமாககொண்ட சாஸ்த்ரத்தாலுண்டாகிற ஜ்ஞானத்தைககாரணமாகக கொண்ட அத்ருஷ்டகார்யமாதலால் $ஐந்த்ரியிக ப்ரத்யக்ஷம் முதலில் எடுக்கப்பட்டது. தந்மூலத்வாத - பேதவாஸனைககு மூலமான ப்ரத்யக்ஷத்தைமூலமாகக்கொண்டிருப்பதால். இவ்வண்ணம் ப்ரகருதகோசரமாய் சொல்லப்பட்ட ப்ரமாணாபாவத்தை அந்யனுக்கு அபிமதமான ஸர்வகோசர விஷயமாக உபஸம்ஹாரம் செய்கிறார்— **அத:** என்று. ந ஸ்வாபிமதார்த்தஸித்தி:— ஸ்வாபிமதம ப்ரத்யக்ஷதௌர்பல்யம் சாஸ்த்ரப்ராபல்யம் முதலியது. இது ‡‡ கண்டனகாரர் முதலியவர்களால் சொல்லப்பட்டிருக்கிற குதர்க்கங்களின் நிரஸனததிற்கு உபலக்ஷணார்த்தமாக உரைக்கப்பட்டது. அதில் ப்ரமாண வ்யாப்தி முதலியவற்றின் பங்கம் செய்யப்படுகிறது. அதில் இது வினவத்தக்கது. தனக்கு ஸம்மதமல்லாத அர்த்தங்களை ப்ரமாணமாக ப்ரதிபாதிக்கின்ற சாஸ்த்ராங்

---

$ ஐந்த்ரியிகம்—இந்த்ரியங்களால் உண்டானது.

‡‡ கண்டனகாரர்—இவர் ஸ்ரீஹர்ஷன் என்கிற கான்யகுப்ஜதேசீய ப்ராமஹ்மணன். இவர் செய்த க்ரந்தங்கள் இரண்டு அவைகளாவன—நைஷதம், அநிர்வசநீயதாஸர்வஸ்வம் இரண்டாவது க்ரந்தத்தை கணடந கணடநகாதயம் என்றும கண்டன காத்யம் என்றும கணடகாத்யமென்றும் கண்டனமென்றும் அறிஞர்கள் கூறுகின்றனர். இவர் சிந்தாமணி மந்திரத்தின் புரச்சரணததினால்வாக்தேவதையின ஸான்னித்யத்தைப்பெற்று அமாநுஷமான வாககையும் பிறகு அந்த தேவதையின் ப்ரஸாதத்தினாலேயே மாநுஷமான வாக்வைகரியையும் பெற்றவரென்று அறிஞர்கள் கூறுவார்கள்.

தாமானது அபாமார்த்தமான அர்த்தத்தோடுகூடியது என்கிற இந்த அர்த்தத்தில் உனக்கு ப்ரமிதியாவது அல்லது அதற்கு ஸாதனமாவது இருக்கிறதா? அல்லது இல்லையா? இருக்கிறதேயானால் ப்ரமாணம் முதலியவைகளுக்கு பங்கமில்லை. இல்லையானால் அதனாலேயே ப்ரமாணம் முதலியவைகளுக்கு பங்கமில்லை. ப்ரமிதி அதன் ஸாதனம் முதலியது இருக்கவே இருக்கிறது. அது வ்யாவஹாரிகம் என்று கூறப்படுமேயாகில் வ்யாவஹாரிகத்வம் என்பது என்ன? பாமார்த்தத்வமா? அல்லது அபாமார்த்தத்வமா? அபாமார்த்தமாயிருக்கிற ப்ரமாணமானது ஸாதகமா? அல்லது அஸாதகமா? அபாமார்த்தஸம்ஜ்ஞையுள்ள ஸாதகமானது மற்றவைகளுக்கும் ப்ரமாணமாக ஆகுமேயானால் அந்த அந்த பக்ஷங்களுக்கு ஸாதகமாகவேயாகும். அப்படிக்கின்றி அஸாதகமானால் அதனால் மிகவும் அந்யவாதிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ப்ரமாணம் முதலியதும் ஸாதகமாகும் உன்னால் சொல்லப்பட்டிருக்கிற ப்ரமாணம் முதலியது பரமார்த்தமாக ஆகுமேயாகில் ‡த்வைதியானவன் விஜயம் பெற்றவனாக ஆவான் என்று. ஸ்வபக்ஷபரபக்ஷபேதம் பரமார்த்தமா? அபரமார்த்தமா? பரமார்த்தமானால் பேதத்துக்கு மித்யாத்வமில்லை. அபரமார்த்தமானால் பரபக்ஷமே உன்னால் அங்கீகரிக்கப்பட்டதாக ஆய்விடும் என்பதனால் உன்னால் பேதத்துக்குபாரமார்த்த்யம் சொல்லப்பட்டதாக ஆகுமென்று. இது முதலிய வ்யாகாதங்கள் எல்லா இடத்திலும் அனுஸந்திக்கத்தக்கது என்று கருத்து.

இதற்குமேல் தன்பக்ஷத்தை ஸாதிக்கக்கூடிய ப்ரமாணத்தின் இன்மையைப்பற்றி உத்தரஞ்சொல்ல எண்ணங்கொண்டவராக சோதனஞ்செய்கிறார்— நநு என்று. மறுக்கிறார்-ஶ்ரேயம் என்று. வ்யாவஹாரிகஸ்வரூபத்தைக்காட்டுகிறார்-ஆபாத என்று தூஷிக்கிறார்— கிம் தேந என்று. ஸாத்ய நிச்சயரூபமான ப்ரயோஜனமில்லையென்று அர்த்தம். எதனால் என்று வினவப்படுமேயாகில் கூறுகிறார்—ப்ரமாணதயா என்று. யுக்தியினால் வருகிற பாதம் யௌக்திகபாதம் - புகை என்கிற புத்தியினால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற ஆவி முதலியவற்றிக்கு ஸாத்ய நிச்சயத்தைக் குறித்து ஹேதுத்வத்தின் இன்மை காணப்படுவதால் என்று அர்த்தம இவ்வண்ணமாக மூலோச்சேதித்வ வைஷம்யம் உபபாதிக்கப்பட்டது. இவ்வாறாக முந்தி அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற பாத்வாத்வை ஷம்யம் தூஷிக்கப்பட்டது.

---

𑌉𑌚𑍍𑌯𑍇𑌤 — 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 𑌅𑌯𑍋𑌗𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌬𑌾𑌧𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇; 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌯 𑌸𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌤𑌨𑌬𑌾𑌧𑌕𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑌨𑍍𑌦𑍈𑌕𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌃 — 𑌇𑌤𑌿 । 𑌤𑌦𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌅𑌬𑌾𑌧𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌦𑍋𑌷𑌮𑍂𑌲𑌸𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌤𑍍 ॥

---

‡ த்வைதிகள்—ப்ரஹ்மத்தைத்தவிர்த்து வேறாக சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சததை ஒப்புககொள்ளுகிறவர்கள். இந்த பெயர் ராமாநுஜ ஸித்தாந்திகளுக்கும் ஆநந்ததீர்த்தியர்களுக்கும் பொதுவாக இருந்தபோதிலும் பெரும்பான்மையாக பிந்தியவர்களே இந்த சப்தததால் வழஙகப்படுகிறார்.

¶ வ்யாவஹாரிகம்— வ்யாவஹாரத்திற்காக கல்பிக்கப்படும் வஸ்து அதாவது உள்ளபடி இல்லாதது.

𑌬𑌾𑌧𑌕𑌤𑍍𑌵𑌂 𑌭𑌵𑌤𑌿— 𑌯𑌥𑌾 𑌸𑌕𑌲𑍇𑌤𑌰𑌕𑌾𑌚𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌰𑌹𑌿𑌤𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌗𑌮𑍍𑌯𑌗𑌿𑌰𑌿𑌗𑍁𑌹𑌾𑌸𑍁 𑌵𑌸𑌤𑌸𑍍𑌤𑍈𑌮𑌿𑌰𑌿𑌕𑌜𑌨𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌤𑌸𑍍𑌵𑌤𑌿𑌮𑌿𑌰𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑌿𑌮𑌿𑌰𑌦𑍋𑌷𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌵𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 । 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌬𑌾𑌧𑌕𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌨 𑌤𑌨𑍍𑌮𑌿𑌥𑍍𑌯𑌾 𑌨 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌭𑍂𑌤𑌂 𑌦𑍍𑌵𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌵 । 𑌦𑍋𑌷𑍋 𑌹𑍍𑌯𑌯𑌥𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌹𑍇𑌤𑍁𑌃 । 𑌤𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑍂𑌲𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌬𑌾𑌧𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑌹𑌿𑌤𑌮𑌪𑌿 𑌸𑌵𑌿𑌷𑌯𑍇𑌣 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌸𑌹 𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌵—𑌇𑌤𑌿 । 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌚𑌾𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌾𑌃। 𑌵𑌿𑌵𑌾𑌦𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌤 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌵𑌤𑍍। 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌵𑌤𑍍, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾, 𑌅𑌸𑌤𑍍𑌯𑌹𑍇𑌤𑍁𑌜𑌨𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌵𑌦𑍇𑌵 ।

---

ஸ்ரீ பாஷ்யம்—

மேலும், (அப்படிக்கின்றி) சாஸ்த்ரம் ப்ரத்யக்ஷம் இரண்டுக்கும் அவித்யாமூலத்வமிருந்தபோதிலும் ப்ரத்யக்ஷவிஷயத்திற்கு சாஸ்த்ரத்தால் பாதமானது காணப்படுகிறது. சாஸ்த்ரவிஷயமான ஸத்ரூபமான அத்விதீயப்ரஹ்மத்திற்கு பிந்தின சாஸ்த்ரத்தினால் பாதம் காணப்படாமையால் நிர்விசேஷமான அநுபூதிமாத்ரமான ப்ரஹ்மமே பரமார்த்தமென்று சொல்லப்படுமேயாகில், அது ஸரியல்ல. அபாதிதமாக இருந்தபோதிலுங்கூட தோஷமூலமான சாஸ்த்ரத்திற்கு அபாரமார்த்யம் நிச்சயிக்கப்பட்டிருப்பதால். இது சொல்லப்பட்டதாக ஆகிறது. எவ்வாறு காசம் முதலிய கண்ரோகமற்ற ஸகல இதரபுருஷர்களுக்கு எட்டாத மலையினுடைய குஹைகளில் வாஸம் பண்ணுகிறவர்களும் தம் கண்ணிலுள்ள திமிரரோகத்தை அறியாதவர்களுமான திமிரரோகமுள்ள எல்லா ஜனங்களுக்கும் திமிரதோஷம் ஸமானமாக இருப்பதனால் சந்த்ரன் இரண்டு என்கிற ஜ்ஞானமானது பேதமின்றி உண்டாகிறது, அந்த இடத்தில் பாதக ஜ்ஞானமானது இல்லை, என்பதுபற்றி அந்த த்விசந்த்ரஜ்ஞானமானது மித்யையாகாமல் போகாது, என்பதினால் அந்த ப்ரமாத்மகஜ்ஞானத்திற்கு விஷயமாயுள்ள த்விசந்த்ரத்வமும் மித்யையே. தோஷமன்றோ அயதார்த்தஜ்ஞானத்திற்கு ஹேது. அவ்வாறு ப்ரஹ்ம ஜ்ஞானம் அவித்யையை மூலமாகக்கொண்டிருப்பதனால் பாதகஜ்ஞானமில்லாவிடினும், தனக்கு விஷயமாயிருக்கிற ப்ரஹ்மத்தோடுகூட மித்த்யையே என்று. இந்த விஷயத்தில் அநுமானங்களுமிருக்கின்றன. விவாதவிஷயமான ப்ரஹ்மம் மித்யை. அவித்யை உள்ளவனுக்கு உண்டாயிருக்கிற ஜ்ஞானத்திற்கு

விஷயமாயிருப்பதால் ; §ப்ரபஞ்சம்போல. ப்ரஹ்மமானது மித்யை, ஜ்ஞாந விஷயமாயிருப்பதால்; ப்ரபஞ்சம் போல. ப்ரஹ்மமானது மித்யை, அஸத்ய ஹேதுக்களால் உண்டான ஜ்ஞாநத்திற்கு விஷயமாயிருப்பதால் ப்ரபஞ்சம், போலவே.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் ப்ரஹ்மப்ரதிபாதக சாஸ்த்ரத்திற்கு இதைவிடப்பிற்பட்ட பாதகசாஸ்த்ரம் ஒன்றுமில்லையென்று ப்ரத்யக்ஷத்தைககாட்டிலும் வைஷம்யத்தைச் சங்கிக்கிறூர்— அதோச்யேத இது முதலியதால். சாஸ்த்ரத்திற்கு பாததர்சனுபாவரூபவைஷம்யத்தைச் சொல்லுவதற்காக ப்ரத்யக்ஷவிஷயத்திற்கு பாததர்சனததைக்கூறுகிறூர்— சாஸ்த்ர என்று. ப்ரத்யக்ஷ விஷயத்தைக் காட்டிலும் சாஸ்த்ரவிஷயததிற்கு வைஷம்யத்தைக் கூறுகிறூர்—சாஸ்த்ரவிஷயஸ்ய என்று. பிந்தியதால் பாதம் காணப்படாமையை ஒப்புக்கொண்டு தூஷிக்கிறூர்—தத் அயுக்தம் என்று. எதனுல் என்று கேட்கில் சொல்லுகிறூர்—அபாதிதஸ்ய என்று. எதற்குக்காரணம் துஷ்டமோ, எதற்கு மித்யை என்கிற ப்ரத்யயமிருக்கிறதோ அதுவே $ அஸமீசீனமான ஜ்ஞாநமென்று நீதியையறிநதவர்கள் கூறுகின்றனர். ஆதலால் துஷ்டமூலதவம் பாதகப்ரதயயம் இரணடும் தனித்தனியாக மித்த்யாதவத்திற்கு ஸாதகங்கள். பாதிககப்படாமலிருப்பதற்குங்கூட அபாரமார்த்தய நிச்சயமென்பது வ்யாகாததோஷமுள்ளது. அபரமார்த்தமென்று நிச்சயிக்கப்பட்டிருத்தலன்றோ பாதிதத்வம் என்று வினவப்படுமேயாகில், கூறுகிறூர்—ஏதுக்தம் என்று. அஜ்ஞாதஸ்வதிமிரஸ்ய என்று சில இடத்தில் காணப்படுகிறது. தோஷஜ்ஞாநத்தைக் காரணமாகக்கொண்ட பரோக்ஷமான பாதக ஜ்ஞாநோதயத்தின் நிராஸம் ப்ரயோஜனம். ஜ்ஞாதஸ்வதிமிரஸ்ய என்கிற பாடமோவெனில் எழுதுகிறவர்களுடைய தடுமாற்றத்தால் ஏற்படுத்தப்படுததப்பட்டிருக்கிறது. அது புருஷாந்தராகோசரம் என்கிற சொல்லுக்கு விருத்தமன்றோ. பாதகமில்லாவிடில் எவ்வாறு மித்த்யாத்வமென்றுகேட்கில் கூறுகிறூர்— தோஷேஹி என்று. எவனுக்கு ப்ராந்தியுண்டாயிற்றோ அவனிடத்திலேயே பாதக ஜ்ஞானமுண்டாகாமல் போனபோதிலுங்கூட வேறுமனிதனுடைய ஜ்ஞாநத்திறுல் மித்த்யாதவ நிச்சயமானது வ்யாஹதமாகாது என்று அர்த்தம். திர்யக்ஜந்துக்களுக்கு உயிருள்ளவரையில் பாதக ஜ்ஞாநம் உண்டாகாமலிருந்தபோதிலுங்கூட தேஹாத்மஜ்ஞானமானது மித்யையாயிருக்கிற அர்த்தத்தை விஷயமாகக்கொண்டிருக்கிறது. அந்த புத்தியானது ஸம்ஸர்கரூபதோஷத்தை மூலமாகக்கொண்டிருப்பதால் பாஹ்யப்ரமங்களில் தெளிவான உதாஹரணங்கள் விவக்ஷிக்கப் பட்டிருப்பதிறுலேயே அவைகள் இங்கு உரைக்கப்படவில்லை.

அய்யா ! திர்யக்குக்களுக்கு உண்டாயிருக்கிற தேஹாத்மப்ரமமானது நமக்கு ப்ரத்யக்ஷமல்ல ; கார்யம் அறியப்படாமையால். ப்ரமகாரணதோஷமும் எவ்விதத்தாலும் அறியமுடியாதது. ஆதலால் எவ்வண்ணம் தோஷமூலத்வஸம்பாவநாஜ்ஞாநமாத்ரத்தால் மித்த்யாத்வநிச்சயம்? உத்தரம் சொல்லப்படுகிறது; நம் முதலானோர்க்கு சாஸ்த்ரங்களைக்கேட்டு அறிவதற்கு முன்பு தேஹாத்ம ப்ரமம் காணப்படுவதால்அவை

---

§ப்ரபஞ்சம்—உலகம்.

$ அஸமீசீனம்—மேன்மையற்றது.

களுக்கும் சாஸ்த்ரத்தில் அதிகாரமில்லாமையால் தேஹாத்மப்ரமமும் அதடியாகவுண்டான தேஹஸம்ஸர்கரூபமான தோஷவத் அனுமானிக்கப்படுகிறது. தோஷமூலத்வ நிச்சயத்தால் மித்யாத்வ நிச்சயம். இவ்வண்ணம் திமிரதோஷமுள்ள ஜனங்களுக்கு திமிரதோஷஸம்பர்க்கத்தில் ஆப்தவாக்யம் முதலியது த்ருஷ்டாந்தம். அதனால் மித்யாத்வ நிச்சயம். இவ்வாறு ஸபக்ஷத்தில் ஸித்தமான அர்த்தத்தை தார்ஷ்டாந்திகத்தில் நிகமனஞ்செய்கிறார்— ததா என்று. ஜ்ஞானத்துக்கு மித்யாத்வமானது அந்ய மதத்தை ஒப்புக்கொள்வதனால் உரைக்கப்பட்டது. பிறதியுண்டாகிற ஜ்ஞானத்தினால் ஏற்படக்கூடிய பாதத்தின் அதாசனமானது மேலே நிரஸிக்கப்படப்போகிறது. சாஸ்த்ரத்திற்கு அவித்யாமூலத்வம் ஒப்புக்கொள்ளப்படுமேயாகில் அநிஷ்டத்தை ப்ரஸஞ்ஜநம்செய்கிறார்— **பவந்தி** இது முதலியதால் வ்யாப்திகளைக்காட்டுகிற வசனங்களிருப்பதால் "ப்ரயோகா:" என்று உரைக்கப்பட்டது. ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்த ஹேதுரூபமாக சொல்லுதல் அநிஷ்ட ப்ரஸங்கமானது இப்படியும் நியாயமாகும் என்று ஜ்ஞாபிப்பதற்காக, ஜ்ஞாநவிஷயத்வம் மாத்ரம் ஒரு ஹேது. துஷ்ட புருஷஜ்ஞாநவிஷயத்வம் ஒன்று மித்யாபூதமான காரண § கலாபங்களாலஉண்டாகிற ஜ்ஞாநத்துக்கு விஷயத்வம் ஒன்று என்று பேதம். முன்பு ஸபக்ஷமாகவே இருந்திருக்கிற அர்த்தம் இந்த இடத்தில் ஸபக்ஷம் என்பது ஏவகாரார்த்தம.

ந ச வாச்யம்— ஸ்வப்நஸ்ய ஹஸ்த்யாதிஜ்ஞாநஸ்யாஸத்யஸ்ய ஸத்ய கார்யஶுபாஶுபப்ரதிபத்திஹேதுபாவவத் அவித்யாகல்பேநாஸத்யஸ்யாபி ஶாஸ்த்ரஸ்ய ஸத்யப்ரஹ்மவிஷயப்ரதிபத்திஹேதுபாவோ ந விரோத:— இதி, ஸ்வப்நஜ்ஞாநஸ்யாஸத்யத்வாபாவாத் । தத்ர ஹி விஷயாணாமேவ மித்யாத்வம்; தேஷாமேவ ஹி பாதோ த்ருஶ்யதே; ந ஜ்ஞாநஸ்ய; ந ஹி மயா ஸ்வப்நவேலாயாமநுபூதம் ஜ்ஞாநமபி ந வித்யத இதி கஸ்யசிதபி ப்ரத்யயோ ஜாயதே । அபி து நஷ்டா விஷயா: கஜா ந ஸந்தீதி ஹி பாதகப்ரத்யய: । மாயாவிநோ மந்த்ரௌஷதாதிப்ரபவம் மாயாமயம் ஜ்ஞாநம் ஸத்யமேவ ப்ரீதிபயஸ்ய ச ஹேது:; தத்ராபி ஜ்ஞாநஸ்யாபாதிதத்வாத் । விஷயேந்த்ரியாதிதோஷஜந்யம் ரஜ்ஜ்வாதௌ ஸர்பாதிஜ்ஞாநம் ஸத்யமேவ பயாதிஹேது: । ஸத்யேவ தஷ்டேऽபி ஸ்வாத்மநி ஸர்பஸந்நிதாநாநுபூதி:, ஸத்யைவ ஶங்காவிஷபுத்திர்மரணஹேதுர்பவதி । ஸ்தப்தஜலாதௌ ஜலாதௌ ப்ரதிபிம்பிதோ வஸ்துதத்ஸ்வகதவிஶேஷநிஶ்சயஹேது: । ஏஷாம் ஸம்வேதநாநாமுத்பத்திமத்தயார்த்தக்ரியாகாரித்வாச்ச ஸத்யத்வமவஸீயதே । ஹஸ்த்யாதீநாம்

§ கலாபம்— ஸமூஹம்.

[illegible]

**ஸ்ரீபாஷ்யம்—**

ஸ்வப்நாவஸ்தையிலுண்டாகிற அஸத்யமான கஜம் முதலியவற்றின் விஜ்ஞாநத்திற்கு பரமார்த்தமான சுபாசுப ப்ரதிபத்தி ஹேதுத்வம் போல, அவித்யாமூலத்வமிருப்பதால் அஸத்யமான சாஸ்த்ரத்திற்கும் பரமார்த்தமான ப்ரஹ்மவிஷயப்ரதிபத்தி ஹேதுத்வமானது விருத்தமல்லவென்று உன்னால் சொல்லத்தக்கதல்ல. ஸ்வப்நஜ்ஞாநமானது அஸத்யமல்லாததாகலால். அந்த ஸ்வப்நத்தில் விஷயங்களுக்கேயன்றோ மித்யாத்வம். அவைகளுக்கேயன்றோ பாதம் காணப்படுகிறது. ஜ்ஞாநத்திற்கு பாதம் காணப்படவில்லை. "என்னால் ஸ்வப்நவேளையில் அநுபவிக்கப்பட்ட ஜ்ஞாநங்கூட இல்லை" என்று ஒருவனுக்காவது ஜ்ஞாநமுண்டாகிறதில்லையன்றோ. தர்சனமோ இருக்கிறது, அர்த்தங்களில்லை, என்றல்லவோ பாதகப்ரத்யயம். மாயாவியினுடைய மந்த்ரம், ஔஷதம், முதலியவைகளால் ஸம்பவிக்கிற மாயாமயமான ஜ்ஞாநமானது ஸத்யமாகவே இருந்துகொண்டு ப்ரீதிக்கும் பயத்திற்கும் காரணமாகிறது. அவ்விடத்திலும் ஜ்ஞாநத்திற்கு பாதகமில்லாமையால். விஷயம் இந்த்ரியங்கள் முதலியவற்றின் தோஷத்தாலுண்டாகிற ரஜ்ஜு முதலியவற்றில் ஸர்பாதி விஜ்ஞாநமானது ஸத்யமாகவே இருந்துகொண்டு பயம் முதலியவற்றுக்கு ஹேதுவாகவிருக்கிறது. தான் ஸர்பத்தால் கடிக்கப்படாமலிருந்தபோதிலுங்கூட ஸர்பத்தின் ஸந்நிதானத்தால் "நான் கடிக்கப்பட்டேன்" என்கிற புத்தியானது ஸத்யமாகவே உண்டாகிறது. ஸத்யமாகவேயிருக்கிற § சங்காவிஷபுத்தியானது மரணஹேதுவாகிறது. ஜலம் முதலியவற்றில் வாஸ்தவமாகவேயிருக்கிற முகம் முதலியவற்றின் ப்ரதிபனமானது வாஸ்தவமாய் முகத்தையடைந்திருக்கிற விசேஷங்களை நிச்சயிப்பதற்கு ஹேதுவாகவிருக்கிறது. இந்த ‡ ஸம்வேதனங்கள் அனைத்துக்கும் உத்பத்தி இருப்பதாலும் அர்த்தக்ரியாகாரித்வமிருப்பதாலும் ஸத்யத்வம் நிர்ணயிக்கப்படுகிறது. ஸ்வப்னத்தில் அநுபவிக்கப்படுகிற யானை முதலியவைகளில்லாமலிருந்தபோதிலும் எவ்வண்ணம் அவைகளின் புத்திகள் ஸத்யங்களாக ஆகின்றனவென்று வினவப்படுமேயாகில் அது அப்படியன்று புத்திகளுக்கு ஆலம்பநமாத்ரம் தவறாமல் இருக்கவேண்டியதாதலால்.

§ சங்காவிஷபுத்தி - ஸர்பம் தீண்டி இருக்குமோ எனகிற எண்ணம்.
‡ ஸம்வேதனம்—ஜ்ஞாநம்.

அர்த்தத்தினுடைய ப்ரதிபாஸமானத்வமே ஆலம்பனவிஷயத்தில் அபே க்ஷிக்கப்பட்டிருக்கிறதன்றோ. தோற்றமோ வெனில் தோஷவசத்தால் இருக் கவே இருக்கிறது. அது தத்வஜ்ஞானத்தால் பாதிக்கப்படுங்காலத்தில் அஸத் யமென்று நிச்சயிக்கப்படுகிறது. அபாதிதையான புத்தியானது ஸத்யமென் றே உரைக்கப்பட்டதன்றோ.

---

**ச்ருதப்ரகாசிகை—**

அய்யா! அஸத்யமான ஹேதுவினுல் உண்டாகிற புத்திக்கு விஷயமாயிருத்தல் அந்யத்ராஸித்தம். ப்ரபஞ்சவத் என்கிற த்ருஷ்டாந்தமும் ஸாத்யவிகலம், எவ்வாறு இவ் வண்ணம் ப்ரஸங்கம்? எனில் கூறப்படுகிறது. "ப்ரஹ்மத்துக்கு அநநுபூதித்வம் உன் னுடைய உக்தியினுலேயே ப்ரஸங்கிக்கிறது" என்பதுபோல் ப்ரஸஞ்ஜக ப்ரஸஞ்ஜநீய தர்மங்களின் வ்யாப்தியை அந்யமததால் ஒப்புக்கொண்டு தூஷணம் உரைக்கப்பட்ட தென்பதினுல் விரோதவில்லை. அஸத்யமான ஹேதுவினுலுண்டாகிற ஜ்ஞானத்திற்கு விஷயமாக இருப்பதால் ப்ரஹ்மத்துக்கு அஸத்யத்வமில்லை.

அஸத்யத்தினுல்கூட ஸத்யப்ரதிபத்தியானது காணப்படுகிறதென்கிற சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிருர்—நச இதுமுதலியதால. அஸத்யத்திற்கு ஸத் யோத்பத்தி ஹேதுத்வாநுபபத்தியா? அல்லது அதின் ஜ்ஞப்தி ஹேதுத்வா நுபபத்தியா? என்கிற விகல்பத்தைக் கருதி உத்பத்திஹேதுத்வத்திலும் ஜ்ஞப்தி ஹேதுத்வத்திலும் உதாஹரணங்கள் காண்பிக்கப்பட்டன. அவற்றுள் ஸ்வப்ந ஸமயத்திலநுபவிக்கப்படுகிற வஸ்துக்களுக்கு ஸத்யத்வம் ஸம்மதமாயிருந்தபோதிலும் விஷயங்களுக்கு அஸத்யத்வத்தை ஏற்றுக்கொண்டு பரிஹரிக்கிருர்— ஸ்வாப்ந என்று. ஜ்ஞாநம் ஸத்யமென்பதை உபபாதிக்கிருர்—தத்ர ஹி என்று. நிச்சயம் எவ்வாறு என்று கேட்கில் கூறுகிருர்—தேஷாமேவ என்று. ஜ்ஞாநத்திற்கு பாதத்தினது இன்மையைக் காண்பிக்கிருர்— நஹி என்று. எவ்வாறு உண்டாகிறது எனில் கூறுகிருர்—தர்சநந்து என்று. வேறு ஒன்றை விஷயமாகக்கொண்ட பாதமானது மற்ருரிடத்தில் ஸஞ்ச ரிக்கச்செய்வதற்குத் தகாதது என்று அர்த்தம். இங்கு அநேக உதாஹரணங்களைக்காட்டு வது, அந்தந்த ஜ்ஞாநஸாமக்ரீவிசேஷங்களுக்கு ஸத்யத்வத்தை ஜ்ஞாபிப்பதற்காக. அதுவும் ஜ்ஞாநஸத்யத்வத்தை நிர்வஹிப்பதற்காக. ஸ்வப்நத்துக்குக் காரணமான பூர்வா நுபவஸம்ஸ்காரம் ஸத்யம். ப்ரஸித்தமாயிருப்பதால் அது சொல்லப்படவில்லை. மா யாவிந: என்று. இந்த இடத்தில் 'மந்த்ரௌஷதாதி ப்ரபவம்" என்று சொன்னதனுல் காரணத்திற்கு ஸத்யத்வம் உரைக்கப்பட்டது. மாயாமயம்-மித்யாவிஷயமென்று அர்த் தம்; அல்லது விசித்ர விஷயம். விஷயேத்யாதி. விஷயதோஷம் ஸாத்ருச்யம் முதலியது. இந்த்ரிய தோஷம் - காசம் முதலியது ஆதிசப்தத்தால் தேசத்தைச் சார்ந் துள்ள தூரத்வம் முதலிய தோஷம் உரைக்கப்படுகிறது தோஷமும் ஸத்யம் ஸத் யைவ என்று. ஸர்பத்தின் ஸந்நிதானரூபமான காரணம் ஸத்யம், கடிக்கப்பட்டேன் என்கிற புத்தியும் ஸத்யம், சங்காவிஷபுத்தியிலும் ஸாமக்ரீ ஸத்யமாகவே இருக்கிறது. விஷமில்லாத ஸர்பத்தினுடைய கடியோ அல்லது இருளில் கல் மண்கட்டி முதலிய வைகளால் காலுக்கு ஹிம்ஸைஉண்டாவதோ ஸத்யமாகவே இருக்கிறதன்றோ, வஸ்து வித்— ஜலம் முதலியது ஸத்யம். அவைகளால் கண்ணெளி திருப்பியடிக்கப்படுவ தும் ஸத்யம். ஸம்வேதநங்களுக்கு ஸத்யத்வமானது நிச்சயிக்கப்பட்டா லன்றோ

சொல்லப்பட்ட உதாஹரணங்களில் ஸத்யத்தினின்று ஸத்யப்ரதிபத்தி ஏற்படும் என்று கேட்கில் கூறுகிறார் - ஏஷாம் என்று. உத்பத்தியுடன் கூடியிருத்தல் அர்த்தக்ரியா காரித்வம் இவ்விரண்டும் தனித்தனியாக ஸத்பத்வகதிற்கு ஸாதகம். சுக்தியில் வெள்ளியானது உத்பத்தியுடையதாக ஆகாதன்றோ. கார்யகாமும் ஆகாது. அதற்குமேல்ஜ்ஞாந ஸத்யத்வமானது விஷயஸத்யதையின வ்யாப்தியுள்ளது என்பதுபற்றி அந்த விஷய ஸத்யத்வ நிவ்ருத்தியினால் ஜ்ஞாநஸத்யத்வ நிவ்ருத்தி என்று ஸந்தேஹிக்கிறார்—ஹஸ்த்யா தீநாம் என்று. அபாவே-ப்ரதிபந்நமான உபாதியில் அத்தன்மையின் இன்மை. ஜ்ஞாநஸத்யத்வமானது ஸாலம்பநத்வமாத்ர வ்யாப்தியுள்ளது ; பாதிக்கப்படாமையால் என்று பரிஹரிக்கிறார்—நைதத் என்று. ஸாலம்பநத்வமாத்ரசப்தத்தினால் ஸத்யாலம்பநத்வம் வ்யாவ்ருத்திக்கப்பட்டது. மித்த்யையாயிருப்பதற்கு ஆலம்பநத்வம் எவ்வாறு எனில கூறுகிறார்—அர்த்தஸ்ய என்று. ஆலம்பநம் - விஷயம். ப்ரதிபாஸமாநத்வமேவ ஹி ஆலம்பநத்வே அபேக்ஷிதம் என்று. ப்ரதிபாஸமானத்வமே விஷயத்வம் என்று அர்த்தம்.

‡ அதீதங்கள் †அநாகதங்கள் முதலியவை இல்லாமலிருந்தபோதிலும் அவைகளின் ப்ரதிபாஸத்திற்கு ஆலம்பநத்வம் காணப்படுகிறபடியாலும், இருந்துங்கூட ப்ரதிபாஸமில்லாதவற்றுக்கு ஆலம்பநத்வம் காணப்படாமையாலும் என்று கருத்து. பக்ஷத்தில் ப்ரதிபாஸமாநத்வமுங்கூட இருக்கிறதென்று கூறுகிறார்—ப்ரதிபாஸ என்று. ப்ரதிபாஸமானதையாவது ஸம்வித்தை அபேக்ஷித்து ப்ரதிஸம்பந்தியாயிருத்தல். இல்லாமலிருக்கிற வஸ்துவுக்கு இருப்பதாகத தோற்றமுண்டாவதால் அந்தரூபத்தால் அதற்கு ஸத்யத்வம் அப்படி ஸாக்ஷாத் அவபாஸிக்கின்ற விஷயங்கூட ஜ்ஞாநஹேதுவாக ஆகலாம். விவாதமின்றி எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற வித்யமானவிஷயம்போல, இருப்பதாக பாவிதத்தல் இரண்டுக்கும் விசேஷமின்றி இருப்பதால். அப்படி ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் அஸத்யத்தினின்று ஸத்யோத்பத்தி உண்டாக வேண்டிவருமெனில் சொல்லுகிறார்—தோஷவசாத் என்று. இல்லாதவஸ்து இருப்பதாகத்தோற்றுவதில காரணம் தோஷமே யொழிய அவித்யமான விஷயமல்ல. அவித்யமான விஷயமானது ஜ்ஞாநத்திற்கு ஹேதுவாக அபேக்ஷிக்கப்படவில்லை. விஷயமாக மாத்திரம் அபேக்ஷிக்கப்படுகிறது. வித்யமான வஸ்துவோ வென்றால் அத்தன்மையோடு பாஸியாநின்றுகொண்டு விஷயமாகவும் ஹேதுவாகவும் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் உள்ளபடி விஷயத்தினது இருப்பே ஜ்ஞாநஹேதுத்வத்தில் உபாதி. தவறாமல் (கார்யோத்பத்திக்கு) முந்தின க்ஷணத்தில் இருக்கிற வஸ்துவுக்கன்றோ ஹேதுத்வம் காணப்பட்டிருக்கிறது. ஆதலால் அவித்யமானவிஷயத்துக்குஹேதுத்வம் பொருந்தாமையால் தோஷமே ஹேதுவாக இருப்பதுபற்றி அஸத்யத்தினின்று ஸத்யோத்பத்தி இல்லை என்று அர்த்தம். $ ப்ரதிபாஸமாநத்வம் இரண்டுக்கும் ஸமானமாக இருக்க எவ்வாறு ஒன்றுக்கு அஸத்யத்வநிச்சயம் எனில் கூறுகிறார்—ஸது என்று. புத்தியும் அஸத்யையாக ஏன் ஆகக்கூடாது எனில் கூறுகிறார்—அபாதிதா என்று. விஷயத்தின் இன்மையினாலே ஜ்ஞாநத்துக்கு அஸத்யத்வம் கூறுதல் § காலாத்யயாபதிஷ்டம் என்று அர்த்தம்.

ஐயா ! ஸ்வாப்நாதிவிஷய ஜ்ஞானத்தில், ஜ்ஞானமாத்ரம் சுபாசுபப்ரதிபத்திக்கு ஹேதுவா ? அல்லது ஜ்ஞானவிசேஷமா ? ஜ்ஞானமாத்ரமென்கிற பக்ஷத்தில்

‡ அதீதம்—சென்றது. †அநாகதம்— இனி வரப்போகிறது.
$ ப்ரதிபாஸமாநத்வம்—தோன்றுதல். § காலாத்யயாபதிஷ்டம்—பாததோஷமுள்ளது

அதிப்ரஸங்கம் வரும். ஜ்ஞான விசேஷமென்று கூறப்படுமேயானால் எது அந்த ஜ்ஞான விசேஷத்துக்கு §அவச்சேதகம்? விஷயம் அவச்சேதகமென்று கூறப்படுமேயானால் அந்த விஷயமானது ஃ உபலக்ஷணமாக இருந்துகொண்டு அவச்சேதகமாகிறதா? அல்லது விசேஷணமாக இருந்துகொண்டா? விசேஷணமாக இருந்துகொண்டு அவச்சேதகம் ஆகிறதென்று கூறப்படுமேயாகில் விசேஷ்யத்தோடுகூட கார்யத்தில் அந்வயிக்கிற ஸ்வபாவமுள்ளதன்றோ விசேஷணம். ஆகையால் யானை முதலியவைகளுக்குங்கூட சுப †ப்ரதிபத்தி ஹேதுத்வமிருப்பதால் பாரமார்த்யத்தினால் ஸத்யப்ரதிபத்தியுண்டாகிறது. உபலக்ஷணமாக இருந்துகொண்டு விஷயமானது ஜ்ஞானவிசேஷாவச்சேதகமென்று கூறப்படுமேயானால் @உபலக்ஷிக்கத்தக்க வஸ்துவுக்கு வெளியிலிருந்துகொண்டு உபலக்ஷிக்கத்தக்க வஸ்துவின் ப்ரதீதிக்கு உபாயமாயிருக்கிறதன்றோ உபலக்ஷணம்; ஆகலால் விஷயத்திற்கு ஜ்ஞானப்ரதிபத்தி ஹேதுத்வமிருப்பதால் அஸத்யத்தினின்றும் ஸத்யப்ரதிபத்தியுண்டாகிறது. ஜ்ஞானங்களுக்கு அந்தந்த வ்யவஹாராநுகுணமான ரூபமான ஸ்வபாவ விசேஷங்களால் வ்யாவ்ருத்தியிருப்பதால் அதிப்ரஸங்கமில்லையென்று சொல்லக்கூடாது. வ்யவஹாராநுகுண்யத்திற்கு †வ்யாவர்த்தகத்வம் சொல்லில் அதிப்ரஸங்கம் வருவதால். வ்யவஹாரவிசேஷாநுகுண்யத்திற்கு வ்யாவர்த்தகத்வம் சொல்லில் அதின் விசேஷமும் அதை ஸங்க்ரஹிக்கிற விஷயத்தைச்சார்ந்திருப்பதுபற்றி வ்யவஹாரத்திற்கு அவச்சேதகமாயிருப்பதால் ‡அந்ருதத்திற்கு ஸத்ஹேதுத்வம் என்று மறுமொழி கூறப்படுகிறது:—வ்யாவ்ருத்தமாகவேயிருக்கிற ஜ்ஞானம் சுபம் அசுபம் முதலியவைகளுக்கு *அநுமாபகமாகஇருக்கிறது - வ்யாவ்ருத்தியும் தன்னுடைய ஆலம்பநத்திலில்லாமலிருக்கிற வஸ்துவுக்குங்கூட ஆலம்பநத்வமானது "யோக்யதைசத்தால்" என்று முன்னமே கூறப்பட்டிருக்கிறது. ¶அந்யதாக்யாதி பக்ஷத்திலும் ஆலம்பநத்வமானது எல்லா ஜ்ஞானங்களுக்கும் விருப்படவே விரும்பப்படுகிறது. விசேஷணம் விசேஷ்யம் அவைகளின் ஸம்ஸர்கம் இவைகள் ஓரிடத்தில் ஸத்யமாக இருப்பதால். விசேஷணம் விசேஷ்யம் இரண்டுக்கும் அந்தத்தன்மைக்கு நிர்வாஹகம் ஸம்ஸர்கமே. அது தனக்குள்ள விசேஷணவிசேஷ்ய ஸம்பந்தித்வவிஷயத்தில் வேறு ஸம்ஸர்கத்தை அபேக்ஷியாமலிருக்கிறது. அந்த ஸம்ஸர்கமோ முன்னிலையிலிருக்கிற ப்ரமாதிஷ்டானத்தில் அறியப்படாநின்றுகொண்டு முன்னிலையிலிருக்கிற பதார்த்தத்தை அபேக்ஷித்து தான் தன்னுடைய ஸம்ஸர்க ரூபத்வத்தை நிர்வஹிப்பதில் ஸாமர்த்தியமில்லாமையால் முன்னிலையிலுள்ள வஸ்துவினிடத்தில் நாஸ்தி என்று புரோவர்த்தியான பதார்த்தத்தை அபேக்ஷிப்பதால் ஸம்ஸர்கம் அபாரமார்த்தமே ஒழிய ஸ்வரூபத்தால் அல்ல. ஆலம்பநத்வத்திலும் ஸந்நிஹிதஸ்வரூபமான ஸம்ஸர்கம் அபேக்ஷிதமல்ல, பக்கத்திலில்லாததற்கும்கூட ஆலம்பநத்வம் காணப்படுவதால். ஆகையால் ஸத்தாயுள்ள ரூபத்தினால் ஆலம்பநத்வமிருப்பதுபற்றி கஜாரோஹணம் முதலியவைகளை விஷயமாகக்கொண்ட ஜ்ஞானங்களுக்

§ அவச்சேதகம்—நியாமகம். † ப்ரதிபத்தி—ஜ்ஞானம்.

ஃ உபலக்ஷணம் — ஜ்ஞாநஸாதநம்.

@ உபலக்ஷிக்கத்தக்க—விசேஷித்து அறிவிக்கத்தக்க.

† வ்யாவர்த்தகம்—மற்றதினின்று ஒரு வஸ்துவை வேறுபடுத்துகிற குணம் தர்மம் முதலியது.

‡ அந்ருதம்—அஸத்யம் * அநுமாபகம் — அநுமிதியை உண்டுபண்ணுகிற வஸ்து.

¶ அந்யதாக்யாதி — ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக க்ரஹித்தல், வெள்ளியை சிப்பி என்பதுபோல

கூடவே அத்புதமான ‡ஹஸ்தி முதலிய ஆலம்பன வஸ்துக்களோடுகூடியவைகளாக பரமாத்மபூதமாயிருக்கிற ஸ்வப்னாவஸ்தையோடு சேர்ந்திருப்பதால், ஜாக்ராவஸ்தையிலுண்டாகிற ஜ்ஞானத்தைக்காட்டிலும் விலக்ஷணங்களாக இருந்துகொண்டு சுபாசுபப்ரதிபத்திக்கு நிமித்தங்களாக ஆகின்றன. ஆகையால் அதிப்ரஸங்கமில்லை அஸத்யத்தினின்று ஸத்யவஸ்து ப்ரதிபத்தியுமில்லை. ப்ரதிபிம்பத்தினால பிம்பத்தை அநுமிப்பதில் அஸத்யத்தால் ஸத்யப்ரதிபத்தி உண்டாகிறதென்று சொல்லக்கூடாது. ப்ரதிபிம்பத்தினுடைய ப்ரதிபாஸமானது ஸத்யமாகவேயிருந்துகொண்டு பிம்பத்திற்கு அநுமாபகமாகவிருப்பதால் உண்மையிலோவென்றால் அந்த இடத்தில் அநுமாபகம் அநுமேயம் இவை இரண்டுக்கும் பாகுபாடுகிடையாது. $தர்பணம் முதலியவைகளால் திருப்பி அடிக்கப்பட்டிருக்கிற கண்ணொளிகளால் பிம்பமே கண்ணாடிக்குள்ளிருப்பதாக க்ரஹிக்கப்படுவதால். ஆதலால் சிலவிடத்தில் உள்ளபடியிருக்கிற வஸ்துவினால் ஜ்ஞானமுண்டாகிறது; சிலவிடத்தில் அந்த வஸ்துவின் ப்ரதிபாஸத்தால் அர்த்தங்களின் ப்ரதிபத்தியுண்டாவது பற்றி அஸத்யத்திற்கு ஹேதுத்வம் கிடையாது - மேலும், அஸத்யத்தினால் ஸத்யப்ரதிபத்தி என்பது உன் பக்ஷத்தினால் கூறப்படுகிறதா? நம்முடைய பக்ஷத்தினாலா? உன் பக்ஷத்தில் அது முற்றிலும் ஸித்திபெறாது. சுபாசுபங்கள் இரண்டும் மித்யையானபடியால், அஸத்யத்தினால் அஸத்யப்ரதிபத்தியே உண்டாகவேண்டியதாகும். நம்முடைய பக்ஷத்தில் அந்த தோஷங்கிடையாது—யதார்த்தக்யாதியை ஒப்புக்கொண்டிருப்பதினால் ஸத்யத்தினாலேயே ஸத்ய ப்ரதிபத்தியுண்டாவதால் சுபாசுப ப்ரதிபத்தி முதலியவைகளுக்கு ஹேதுவாக இருக்கிற இந்த ஸ்வப்னத்தில் ஹஸ்தி முதலிய வஸ்துக்களை விஷயீகரிக்கிற ஜ்ஞானம் முதலியவைகளுக்கும் ஆறு உதாஹரண ஜ்ஞானங்களுக்கும் ஸம்ஸ்காரம் முதலிய ஸத்யமான ஸாமக்ரிகளோடு கூடியிருத்தல் ஸ்பஷ்டம். ஜ்ஞானங்களுக்கு ஸத்யத்வம் நிரூபிக்கப்பட்டது. ஆதலால் உத்பத்தியிலும் ஜ்ஞப்தியிலும் ஹேதுக்களுக்கு ஸத்யத்வம் ஸித்தித்தது.

---

[illegible]

---

‡ ஹஸ்தி—யானை. $ தர்பணம்—கண்ணாடி.

விசேஷோ வர்ணவிசேஷபுத்திஹேதுரிதி । ஹந்த தர்ஹி ஸத்யாதேவ ஸத்யப்ரதிபத்தி:; ரேகாயாஸ்ஸங்கேதஸ்ய ச ஸத்யத்வாத், ரேகாமயானாமபி ஸத்யமயபுத்திஸாத்ருஶ்யநிபந்தநா, ஸாத்ருஶ்யம் ச ஸத்யமேவ ॥

ஸ்ரீபாஷ்யம்—

மேலும், கோட்டினால் அக்ஷரஜ்ஞானம் வருகிற இடத்திலும் அஸத்யத்தினால் ஸத்யபுத்தி உண்டாகிறதில்லை ரேகையானது உண்மையாக இருப்பதால். ஐயா! வர்ணஸ்வரூபமாக அறியப்பட்டிருக்கிற ரேகையானது வர்ணபுத்திக்கு ஹேதுவாக ஆகிறது வர்ணஸ்வரூபமாக இருக்குந்தன்மையோவெனில் அஸத்யம். இவ்வண்ணமல்ல — அஸத்யமாக இருக்கிற வர்ணஸ்வரூபத்துக்கு உபாயத்வம் கூடாததால் ப்ரமிதிக்கு அவிஷயமாயிருக்கிற அஸத்துக்கு உபாயத்வமானது காணப்பட்டதில்லை; பொருத்தமுள்ளதுமல்ல — அப்படிக்கின்றி அதில் (ரேகையில்) ஏறிடப்பட்டிருக்கிற வர்ணபுத்திக்கு உபாயத்வம் கூறப்படுமேயாகில் அப்பொழுது அஸத்யத்தினால் ஸத்யபுத்தி உண்டாகாது. ஏறிடப்பட்டிருக்கிற புத்திக்கு ஸத்யத்வமிருப்பதினாலேயே. உபாயம் உபேயமிரண்டுக்கும் ஏகத்வமும் ப்ரஸங்கிக்கும். இரண்டுக்கும் வர்ணபுத்தித்வம் விசேஷமின்றியிருப்பதால். ரேகைக்கு அவித்யமானமான வர்ணஸ்வரூபத்தால் உபாயத்வம் சொல்லும்பக்ஷத்தில் ஒரே ரேகையில் அவித்யமானமான ஸர்வ வர்ணாத்மகத்வம் ஸுலபமாக இருப்பதால் ஒரு ரேகையின் தர்சனத்தினால் எல்லா வர்ணங்களின் ப்ரதிபத்தியும் உண்டாகலாம். அப்படிக்கின்றி பிண்டவிசேஷத்தில் தேவதத்தாதி சப்தங்களுக்கு ஸங்கேதமேற்பட்டிருப்பதுபோல, கண்ணால் க்ரஹிக்கத்தக்க வர்ணவிசேஷ ஸங்கேதவசத்தால் ரேகாவிசேஷம், வர்ணவிசேஷ புத்திக்குக்காரணமென்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது ஸத்யத்தினாலேயே ஸத்யப்ரதிபத்தியுண்டாகிறது. ரேகைக்கும் ஸங்கேதத்திற்கும் ஸத்யத்வமிருப்பதால் சித்திரத்தில் வரையப்பட்டிருக்கிற ரேகாரூபமான கவயத்தினால்கூட ஸத்யமான $ கவயமிருகபுத்தி உண்டாவதும் ஸாத்ருச்யத்தைக்காரணமாகக்கொண்டது ஸாத்ருச்யமும் ஸத்யமே.

ச்ருதப்ரகாசிகை—

பிறகு ஜ்ஞானத்தைக்காட்டிலும் வேறான அஸத்ய ஹேதுவினால் ஸத்யவஸ்து ப்ரதிபத்தியில் ஹேது ஸத்யமாயிருக்குந்தன்மை உபபாதிக்கப்படுகிறது—ரேகயா இது முதலியதால. ஹேதுவுக்கு அஸத்யத்தைக்காண்பித்துக்கொண்டு சோதனஞ்செய்கிறார்-

$ கவயம்—பசுவைப்போலிருக்கிற ஓர் மிருகம்.

ந்நு என்று. பரிஹரிக்கிறார்—நைவம் என்று. வர்ணாத்மதையானது வர்ணப்ரதிபத்திக்கு தனஸத்தையினால் உபாயமாகிறதா? அல்லது ப்ரமாவிஷயமாக இருப்பதினாலா? அல்லது ப்ரதீதமாயிருப்பதனாலா? என்கிற விகல்பத்தை அபிப்ராயப்பட்டு கூறுகிறார்—அஸத: என்று. அஸத்யமாகவிருப்பதுபற்றி தன்ஸத்தையினால் உபாயத்வம் அநுபபந்நம் என்பது 'அஸத:' என்கிற பதத்தின் அபிப்ராயம். அஸத்-ஸத்தைக்காட்டிலும் வேறாகஇருப்பதற்கு என்று அர்த்தம். அஸத இருப்பதினாலேயே ப்ரமாவிஷயமாக இருந்துகொண்டு உபாயமாக ஆகுதலும் பொருந்தாதென்பது நிருபாக்ய சப்தத்தின் அபிப்ராயம். உபாக்யை-ப்ரமிதி. அதற்கு விஷயமில்லாமலிருத்தல் நிருபாக்யத்வம். ப்ரதீதி விஷயமாயிருந்துகொண்டு உபாயத்வம என்பதற்கு அநுபபத்தியோவென்றால் இனி கூறப்படப்போகிறது. ஸத்தை, ப்ரமிதி இவ்விரண்டுமில்லாதபோதிலும வர்ணாத்மதைக்கு உபாயத்வமிருக்கிறதென்று கல்பிக்கப்படுமேயானால் அது உபபந்நமாகாது வ்யாப்தி விரோதத்தால். வ்யாப்திக்கு அநுகுணமாகவல்லவோ கல்பநம் ப்ரவ்ருத்திக்கிறது என்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார்—அநுபபந்நஞ்ச என்று. அதற்குமேல் ப்ராந்தியினால் அறியப்பட்டிருக்கிற வர்ணாத்மதைக்கு வர்ணப்ரதிபத்தி ஹேதுத்வம உண்டு என்கிற பக்ஷத்திலும புத்தி அம்சத்திற்கு ஹேதுத்வத்தில் பிறனுக்கு அனுபபத்தி காண்பிப்பதற்காகக் கூறுகிறார்—அத: என்று. தூஷிக்கிறார்—ஏவம்தர்ஹி என்று. எதனால் எனில் சொல்லுகிறார்—புத்தே: என்று. வேறு தூஷணத்தையுஞ்சொல்லுகிறார்—உபாய என்று. அதை உபபாதிக்கிறார்—உபயோ: என்று. புத்தி அம்சத்தை ஹேதுவாகக்கூறும் விஷயத்தில் தூஷணம் உரைக்கப்பட்டது. வர்ணாத்மதா என்கிற அம்சத்திற்கு ஹேதுத்வ விஷயத்தில் ஸிம்ஹாவலோக ந்யாயத்தாலே தூஷணம் கூறுகிறார்—ரேகாயா என்று அஸத்யமான வர்ணாத்மதா-அஸத்யமான வர்ணாத்மத்வே என்று அர்த்தம் அதிப்ரஸங்க பரிஹாரத்தின்பொருட்டு சங்கிக்கிறார்—அத என்று. அதிலும் தன் மதத்தின் ஸித்தியைக்கூறுகிறார்—ஹந்த என்று. அதை உபபாதிக்கிறார் — ரேகாயா: என்று. வேறு உதாஹரணத்தைப் பரிஹரிக்கிறார் — ரேகாகவயாதபி என்று.

---

𑌨 𑌚𑍈𑌕𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌨𑌾𑌦𑌵𑌿𑌶𑍇𑌷𑍈𑌰𑌰𑍍𑌥𑌭𑍇𑌦
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑍍𑌯𑌸𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌿𑌃, 𑌨𑌾𑌨𑌾𑌨𑌾𑌦𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌙𑍍𑌗𑍍𑌯
𑌸𑍍𑌯𑍈𑌕𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌦𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌙𑍍𑌗𑍍𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑍈𑌵 𑌵𑌿
𑌶𑍇𑌷𑌸𑍍𑌯 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌗𑍍𑌰𑌹𑌣𑌵𑌶𑌾𑌦𑌰𑍍𑌥𑌭𑍇𑌦𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌹𑍇
𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯𑍈𑌕𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌨 𑌹𑌾𑌨𑌿𑌃, 𑌗𑌕𑌾𑌰𑌾𑌦𑍇
𑌵𑍈𑌲𑌕𑍍𑌷𑌣𑍍𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌭𑌿𑌜𑍍𑌞𑌾𑌯𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌶𑌬𑍍𑌦𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌕𑌥𑌂
𑌸𑌤𑍍𑌯𑌾𑌸𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌵𑌿𑌷𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌦𑌾 ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

ஏகரூபமான சப்தத்திற்கு நாத விசேஷத்தால் அர்த்தபேத புத்தி ஹேதுத்வம் கூறப்படும்பக்ஷத்திலும் அஸத்யத்தினால் ஸத்யப்ரதிபத்தி உண்டாகுமென்பது கிடையாது. நாநாவித நாதங்களாலே ப்ரகாசிக்கின்ற ஒரே சப்

தத்திற்கு, அந்தந்த நாதங்களால் அபிவ்யஞ்ஜநஞ்செய்யத்தக்க ஸ்வரூபத்தால் அர்த்தவிசேஷங்களோடுகூட ஸம்பந்த க்ரஹணமிருப்பதால், அர்த்த பேதவிஷயகமான புத்தியின் உத்பத்திக்கு காரணத்வமிருப்பதால் சப்தத்திற்கு ஏகரூபத்வமும் அவ்வளவுசிறந்ததல்ல; ககாரம் முதலிய பாதகவர்ணமே காதினால க்ரஹிக்கத்தக்கதாக இருப்பதுபற்றி சப்தமாகிறபடியால். ஆதலால் அஸத்யமான சாஸ்த்ரத்தினால ஸத்யப்ராஹ்மவிஷய ப்ரதிபத்தியானது எவ்விதத்தாலும் உபபாதிக்கமுடியாது.

ச்ருதப்ரகாசிகை—

ஃஸ்போட வாதத்தைஅவலம்பித்துச்சொல்லப்படுகிற உதாஹரணத்தை பரிஹரிக்கிறார்—நாசைகரூபஸ்ய இதுமுதலியதால் நாதங்களால் ஸ்போட்யதே - அர்த்தம் வெளியிடப்படுகிறது, எனகிற வ்யுத்பத்தியினால் ஸ்போடம என்பது ஏகரூபமான சப்தம். அதற்கு §அபிவ்யஞ்ஜகங்களாக இருக்கிற நாதவிசேஷங்கள் அநேகங்கள்—கத்வம வத்வம முதலிய பேதம், $வ்யஞ்ஜகத்தை அடைந்திருக்கிறது-சப்தத்தில் ஏறிடப்பட்டு அர்த்தவிசேஷங்களின ப்ரதிபத்திக்கு ஹேதுவாக இருக்கிறது. அதில் அஸத்யத்தினால் ஸத்யோதபத்தி என்பதும் ஸரியல்லவென்று அர்த்தம். ஏனென்று கேட்கில் கூறுகிறார் — நாநாநாத என்று கத்வம் வத்வம் முதலிய விசேஷணங்களோடு கூடின அந்தந்த நாதங்களால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற அபிவ்யக்தி விசேஷம் ஸத்யம் அந்த அபிவ்யக்தி விசேஷத்தோடுகூடின ஸத்யமான சப்தம் அர்த்தப்ரதிபத்திக்குக்காரணமென்று அர்த்தம். ஆனால் கத்வம் வத்வம் முதலிய வ்யஞ்ஜக தர்மங்களோடுகூடியிருத்தல் சப்தத்திற்கு ஆரோபிதம். அப்படியிருந்தபோதிலும் அந்த ஜ்ஞானம் ஸத்யமே அர்த்தப்ரதிபத்திக்கு ஹேதுவாகிறது. ஜ்ஞானத்துக்கும ஸத்யமாகவேயிருக்கிற ஆலமபநத்தினால் ஸவாப்நமான ஜ்ஞானம்போல்

ǂ நாதம்—ஒலி. § அபிவ்யஞ்ஜனம்—ஸூசனம். $ வ்யஞ்ஜகம்— ஸூசகம்.

ஃ ஸ்போடம் — வையாகரணர்களால் மாத்திரம் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அநேக வ்யக்திகளால் அபிவ்யங்க்யமாகிற ஒரு ஜாதி.

ஸ்போட ஸ்வரூப நிரூபணம்.—ஸ்புடதி அர்த்த: அஸ்மாத் என்கிற வ்யுத்பத்தியினால் ஸ்போட சப்தம் அர்த்தங்களை போதிக்கிற ஸ்வபாவமுள்ளதென்று ஏற்படுகிறது - குடம வஸ்திரம் முதலிய வஸ்துக்களுக்கு கடபடாதி சப்தங்கள் வாசகங்களல்ல. ஸ்போடமே வாசகம் அந்த ஸ்போடம எட்டுவிதம். வர்ணஸ்போடம், பதஸ்போடம், வாக்யஸ்போடம், அகண்டபதஸ்போடம, அகண்டவாக்யஸ்போடம் வர்ணஜாதிஸ்போடம், பதஜாதிஸ்போடம், வாக்யஜாதிஸ்போடம் என்று. ஒரு வர்ணத்தின் வேறுபாடு முதலியதால் சக்த்தாவச்சேதகாநுபூர்விக்கு பங்கம் ஏற்படுவது ஒவ்வொரு பதத்திலும் ஓளதஸாங்கமாக இருப்பதால் ஒரு வர்ணஸங்காதரூபமான பதத்தால் ஒரு அர்த்தத்தில் சக்திக்ரஹம் வந்துவிடுவதால் எதனால் எதற்கு ஸ்மரணமென்கிற விஷயத்தில் யுக்தி இல்லாமையால் ருக்ஷப:, வ்ருஷப: வ்ருஷ:, இதுமுதலியவைகளுக்குபோல ப்ரயோகத்தில் நிலைபெற்றிருக்கிற கர், கார், குர், சகர் முதலிய அந்தந்த வரிசைக்ரமத்துடன்கூடின எல்லா வர்ணங்களுக்குமே வாசகத்வம் என்பது, வர்ணஸ்போடம்-இந்தஇடத்தில் கர் முதலியவைகள் வாசகங்களா இல்லையா என்பது விப்ரதிபத்திஸ்தலம். ராமம், ராமேண, ராமாய, ராமாத்

ஹரேள.ஹார், இ - முதலியவற்றை பெற்ற ரூபத்தில் எவ்வளவு அம்சம் த்ரவ்யம் முதலியவை களுக்கு வாசகங்கள் எவ்வளவு காமத்வாதிகளுக்கு வாசகங்கள் என்பது நிச்சயிப்பதற்கு சக்யமில்லாததால் ராம:' இது முதலிய பரிச்சேதமான பதமோ, கர்மத்வம் முதலியவை களுடன் கூடினதற்கு வாசகம் என்பது பதஸ்போடம் ததீம் ஹரே Zeா விஷ்ணோZவ, இது முதலிய இடங்களிலும் வாசிசமநாபாவம் ஸமானமாதலால் வாக்ய விசிஷ்டார்த்தத்தில் சக்தம் என்பது வாக்யஸ்போடம். ஒரு படம் என்பதுபோல் ஒரு பதம் அல்லது ஒரு வாக்யம் என்கிற ப்ரதீதியானது பாதமின்றி வருவதால் வர்ணங்களைக்காட்டிலும் வேறான பதமோ வாக்யமோ அகண்டம் வர்ணவ்யங்க்யம் என்பது அகண்டபதஸ்போடம் அகண்ட வாக்யஸ்போடம். இந்த ஸ்போடமென்பது என்ன பதார்த்தமென்று கேழ்க்கப்படுமேயாகில்; பாவம். இது இன்னது என்று நிரூபிக்கமுடியாத ஸ்வபாவமுள்ளது. ப்ரமாணஸித்தமாதலால் தள்ளுவதற்கு சக்யமன்று. முந்த பக்ஷத்தில் வர்ணங்களும் அநாவச்யகங்கள் - அவைகள் அநுபலஸித்தங்களென்று சொல்லப்படுமேயாகில் வ்யஞ்ஜகத்வாதிவிசேஷோபஹிதமான ஸ்போடமே ககார முதலிய வர்ணரூபமாக வ்யவஹரிக்கப்படுகிறதென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. பர்த்ருஹரியும் சொல்லுகிறார்-'பதே நவர்ணா வித்யந்தே வர்ணேஷ்வவயவா நச. வாக்யாத் பதாநாமத்யந்தம் ப்ரவிவேகோ ந கச்சந'—என்று. ஆகையால் அகண்டமானபதமோ வாக்யமோ இவ்வாறு ஐந்தும் வ்யக்திஸ்போடத்தின் அவாந்தரபேதங்கள். ஜாதிஸ்போடவாதிகளோவென்றால் முதலாவதான மூன்று பக்ஷங்களிலும் வகாரத்திற்கு பிந்தி இருக்கிற வடத்வம் முதலியது சக்ததாவச்சேதகமாக அந்தந்த ப்ரயோகத்துக்குத்தக்கபடி சொல்லத்தக்கது அங்ஙனம் சொல்லாவிடில் ஸர:, ரஸ:, இது முதலிய சப்தப்ரயோகங்களால் அர்த்த விசேஷ ப்ரதீதியானது ஸித்தியாமல் போகவேண்டியதாகும். அந்த ஸ்போடமானது உபாதி. உபாதிஎன்பது பரம்பரையாக எல்லா வ்யக்திகளிலும் இணைபுறியாமல் சேர்ந்திருக்கிற ஜாதியே. அது ஸர்வாதிஷ்டானப்ரஹ்மஸ்வரூபாதமிகை. அவித்யையோ ஆவித்யகதர்மவிசேஷமோ ஜாதி என்கிற பக்ஷத்தில் அதேவாசிகையாக இருக்கலா மென்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள் இந்த எட்டு பக்ஷங்களும் ஸித்தாந்த க்ரந்தங்களில் ஆங்காங்கு ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்போடமானது மஹாபாஷ்யகாரரான பதஞ்ஜலியினாலும் அதற்கு விவரணகாரரான கையடராலும் பற்பல இடங்களில் கிரந்தங்களில் உபந்யஸிக்கப்பட்டிருக்கிறது.

ஜாதியானது ப்ரஹ்மாத்மகமென்று பர்த்ருஹரி சொல்லுகிறார்—"ஸம்பந்திபேதாத் ஸத்தைவ பித்யமாநா கவாதிஷு-ஜாதிரித்யுச்யதே தஸ்யாம்ஸர்வே சப்தா வ்யவஸ்திதா:-தாம் ப்ராதிபதிகார்த்தஞ்ச தாத்வார்த்தஞ்ச ப்ரசக்ஷதே-ஸா நித்யா ஸா மஹாநாத்மாதாமாஹுஸ்த்வதலாதய:" என்று - இந்த எட்டு பக்ஷங்களிலும் வாக்யஸ்போட பக்ஷத்திலேயே க்ரந்தகாரர்களுக்கு தாத்பர்யம் அதிலும் ஜாதி ஸ்போடத்திலேயே பரமதாத்பர்யம். இவ்வண்ணம் பக்ஷபேதத்தால் அவித்யையாவது ப்ரஹ்மமாவது ஸ்போடமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் உபாதியோ ஜாதியோ அவித்யையோ ப்ரஹ்மமோ இவற்றுள் ஒன்று ஸ்போடமென்று வையாகரணர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதில் ப்ரமாணங்கள் அநேகவ்யக்த்யபிவ்யங்க்யா ஜாதி: ஸ்போட இதி ஸம்ருதா. கைச்சித்வ்யக்தய ஏவாஸ்யா த்வநித்வேந ப்ரகல்பிதா. ‖ சாஸ்த்ரேஷு ப்ரக்ரியாபேதை ரவித்யைவோபவர்ண்யதே - ஸமாரம்பாத்து பாவாநாமநாதிப்ரஹ்ம சாச்வதம். கிம்கர்ப்ப ஜம்யே கிம்கர்ப்ப: கீத்ருக்பாதீதிநோமதே — விசார: பலிதஸ்ஸர்வ: ப்ரக்ருதி ப்ரத்யயாச்ரய: - ததாயந்முக்யமேகேஷாம் தத்ரைதேஷாம் விபர்யய. ப்ராஹ்மணார்த்தே யதா நாஸ்தி கச்சித் ப்ராஹ்மணகம்பளே - தேவதத்தாதயோ வாக்யே ததைவஸ்யுரநர்த்தகா: ! அடாதீநாம் வ்யவஸ்தார்த்தம ப்ருதக்த்வேந ப்ரகல்பநம். தாதுபஸர்கயோ: சாஸ்த்ரே தாதுரேவது தாத்ருச:" என்று.

வேறுபாடுஅநுஸந்திக்கத்தக்கது. கத்வம் முதலிய தர்மங்களை ஆலம்பநமாகக்கொண்ட அபி வ்யக்தியோடுகூடின ஸ்வரூபத்தால் ஸ்போடத்துக்கு அர்த்தப்ரதி பத்திஹேதுத்வம் ஸம்பவிப்பதால், கத்வம் முதலிய தர்ம வைசிஷ்ட்யரூபமான அநர்த்தார்த்கத்திற்கு அர்த்தப்ரதிபத்தி விஷயத்தில் உபயோகமில்லை இவ்வண்ணம் சப்தத்திற்கு ஏகரூபத் வத்தை ஒப்புக்கொண்டு பரிஹாரங்கூறப்பட்டது. இதற்குமேல் அதை ஒப்புக்கொள் ளாமல் பரிஹரிக்கிறார்—சப்தஸ்ய ஏகரூபத்வம் என்று. எதனால் என்று கேட்கில் கூறுகிறார்—ககாராதே: என்று. ஏகாரத்தால் ஏகரூபமான சப்தம் வ்யாவர்த்திக் கப்படுகிறதேயொழிய துந்துபிவாத்யத்தின் சப்தம் முதலியது வ்யாவர்த்திக்கப்படுகிற தில்லை. அதோ அபிவ்யக்த நிலைவாதவிசேஷஆகாரத்தோடுகூடின ககாரம் முதலியதே. "அதற்குமேல் கௌ: என்கிற வ்யவஹாரத்தில் எது சப்தம்? ககார ஔகார விஸர் ஜநீயங்கள் என்றல்லவோ பகவானுன உபவர்ஷர்" என்று. ககாரம் முதலியவற்றுக்கே போதகத்வத்தை வ்யாக்யானம் செய்தார்கள்.

அய்யா, "தஸ்மிம்ஸ்தஸ்மிம்ஸ்து தந்மாத்ரம் தேந தந்மாத்ரதா ஸ்ம்ருதா" என்கிற சாஸ்த்ரவசத்தால் ஏகரூபமான சப்தம் மாத்ரம ஒப்புக்கொள்ளத்தக்கது. அவ்வாறிருக்க எவ்வண்ணம் அது நிரஸிக்கப்படுகிறது. இவ்வண்ணமல்ல - தந்மாத்ராவஸ்தையுடன் கூடின ஸூக்ஷ்மபூதகாரணகுணங்களுக்கு இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படும் தன்மைபொ ருந்தாததால், பஞ்சீக்ருதமான பூதகுணங்களுக்கேயன்றோ இந்த்ரியத்திலுண்டாகிற ப்ர த்யக்ஷவிஷயத்வம் மேலும் தயிர் அவஸ்தையில் பால் அவஸ்தைபோல தந்மாத்ராவஸ்தை. ஸூக்ஷ்மஆகாசகுணபூதமான சப்தந்தமாத்ரமானது ஸ்தூலாகாச ஸ்ருஷ்டிக்குப்பிறகு இருக்கிறதில்லை. எவ்வண்ணம் மஹாபூதங்களில் மூன்றாவதான தேஜஸ்ஸில் வெளு ப்பு கறுப்பு முதலிய நிறங்களின்றி ரூபதந்மாத்ரம் ஒன்று இருக்கிறது. வெளுப்பு கறு ப்பு முதலிய நிறங்கள் அபிவ்யஞ்ஜகத்தை அடைந்தவைகளாக ஏகரூபமான தேஜஸ்ஸி னிடத்தில் ஆரோபிக்கப்பட்டிருக்கின்றனவென்றும் சொல்வதற்கு பொருந்தாதோ, இவ்வண்ணம் இப்போது ஏகரூபமான சப்தத்திற்கு நித்யமாநத்வமும் அதில் அபி வ்யஞ்ஜகத்தையடைந்திருக்கிற கத்வம் கத்வம முதலியவைகளுக்கு ஆரோபிதத்வமும் ஸ்ருஷ்டியைச்சொல்லுகிற சாஸ்த்ரத்தை அநுஸரிப்பவர்களாலே ஒப்புக்கொள்ளத்தகா தது. இந்த இடத்தில் இது வாஸ்தவமான கருத்து—வர்ணங்களைக்காட்டிலும் வேறா யிருக்கிற ஏகரூபசப்தமானது தெளிவாக அறியப்படுதலினால் ஒப்புக்கொள்ளப்படுகிறதா? அல்லது கல்பநாவசத்தாலேயா? முதலாவது ஸரியன்று—ககாரம் முதலிய வர்ணங் களைக்காட்டிலும் வேறாக ஒன்றுக்கும் உபலம்பமில்லாமையால். இரண்டாவதுமன்று- கல்பகமில்லாமையால்.

ஆக்ஷேபணை வர்ணங்களுக்கு வாசகத்வம் பொருந்தாததால் 'ஒரு பதம்' இது முதலிய ஜ்ஞாநத்திற்கு வர்ணங்களின் உபபத்தி இல்லாமையாலும் வேறுபட்டிருக்கிற வர்ணங்களில் சப்தம் சப்தம் என்று தொடர்ந்த புத்திவருவதாலும் வர்ணங்களைக்காட்டி லும் வேறான பதஸ்போடம் ஸித்திக்கிறது. அந்த ந்யாயத்தினாலேயே பதங்களின் ஸங்கா தத்தைக்காட்டிலும வேறான வாக்யஸ்போடமும் ஸித்திக்கிறது என்று சொல்லப்படு மேயாகில் உத்தரம் சொல்லுகிறார்—ககாராதே: என்று. ஒன்று சேர்ந்திருக்கிற ககா ரம் முதலிய வர்ணங்களுக்கே வாசகத்வம். ஒரு பதம், ஒரு வாக்யம், என்கிற ஜ்ஞாந மும் வர்ணங்களுடைய ஸமுதாயவிஷயம் சப்தம், சப்தம, என்கிற அநுவ்ருத்தி புத்தியும் ச்ரோத்ரக்ராஹ்யத்வரூபமான உபாதியைக்காரணமாகக்கொண்டது. ஆகை யால் கல்பகங்கள் அந்யதாஸித்தங்களானபடியால் ஏகரூபமான சப்தத்திற்கு ஸித்தி இல்லை என்று அர்த்தம்.

ஆக்ஷேபணை-ஸௌம்ய! கல்பகங்களுக்கு அந்யதாஸித்தி இல்லை. அதை உபபாதிக்கிறேம்-ஒவ்வொரு வர்ணத்திற்கும் வாசகத்வமில்லை. அங்ஙனம் உண்டாகில் மற்ற வர்ணங்களுக்கு $ வையர்த்த்யம் வருவதால். மகார மாத்ரத்தினால் கோ, ‡ கவயம், கஜம், முதலிய வஸ்துக்களின் ப்ரதீதி இல்லாமையாலும் வர்ண § ஸமூதாயமும் வாசகமல்ல - க்ரமமாக உச்சரிக்கப்பட்டுக் காதால் கேட்கப்பட்டிருக்கிற வர்ணங்களுக்கு ஒரே ஸமயத்திலேயே சேர்ந்திருக்கும் ஸ்வபாவம் இல்லாமையால் * வ்ருக்ஷம் முதலியவைகளுக்குப்போல ஸமுதாயபாவம் உபபந்நமாகாததால். பூர்வபூர்வ வர்ணங்களைக்கேட்பதினால் உண்டுபண்ணப்பட்ட ஸம்ஸ்காரத்தை உதவியாகக்கொண்ட கடைசிவர்ணம் வாசகம் என்பது பொருத்தமுடையதல்ல. வர்ணங்களுடைய அநுபவத்தினாலுண்டாகிற ஸம்ஸ்காரங்களுக்கு அநுபவிக்கப்பட்டிருக்கிற வர்ணங்களின் ஸ்மரணஹேதுத்வமிருப்பதாலும் அநுபவிக்கப்படாமலிருக்கிற வேறு அர்த்தங்களின் ஜ்ஞாநத்திற்கு ஹேதுத்வமில்லாமையாலும் ப்ரயோஜநமற்றதாதலால் அவைகளின் உதவியில்லாத கடைசி வர்ணத்துக்கும் அர்த்தங்களை உணர்த்தும் தன்மை பொருந்தாமையால். அவ்வாறு வர்ணங்கள் வெவ்வேறாக இருப்பதால் ஒரு பதம் என்கிற ஜ்ஞாநமும் அந்த வர்ணங்களைக்காட்டிலும் வேறான அர்த்தத்தை விஷயமாகக்கொண்டதாக ஆவதற்கு உரியதாக ஆகிறது. வனம், சேனை, முதலியதன் ஜ்ஞாநத்தைப்போல ஒன்று என்கிற ஜ்ஞாநத்திற்கு ஸமுதாய விஷயத்வம் தகுதியுள்ளதாக ஆகாது. ஓரிடத்தில் ஸம்பந்தம்பெற்றிருத்தல் முதலியது போல ஏகாகாரத்திற்கு நிமித்தமான உபாதி இல்லாமையால்-ஒரு ஸ்ம்ருதியில் ஏறி இருத்தல் உபாதி என்று சொல்லப்படுமேயாகில் அல்ல. இரண்டு பதங்கள் மூன்றுபதங்கள் அநேக வாக்யங்கள் என்று அநேகங்களுக்கு ஏகப்ரத்யயாரூடத்வம் காணப்படுவதால். ஒரு அர்த்தத்தோடுகூடின வர்ணங்களின் ஸமுதாயம் ஒரு பதமென்று சொல்லத்தக்கதல்ல. வர்ணங்களுக்கு வாசகத்வம் பொருந்தாதபடியிருப்பதாலேயே ஒரு அர்த்தத்தை உணர்த்தும் தன்மை இல்லாமையால். மேலும் அநேக வர்ணங்களில் இது சப்தம் இது சப்தம் என்று தொடர்ந்துவருகிற சப்தம் என்கிற சப்தமானது வர்ணத்தைக்காட்டிலும் வேறான அர்த்தத்தை விஷயமாக உடையதாகக்கூறுவது யுக்தம். கடம், ¶ கரகம் ‖ அபவாரகம் இவை முதலியவைகளாலே பேதமிருந்தபோதிலும் ஏகார்த்த விஷயமான ஆகாச சப்தத்திற்கு கடகரகாதி வஸ்துக்களைக்காட்டிலும் வேறான அர்த்தங்களை விஷயமாகக் கொண்டிருத்தல் காணப்பட்டிருக்கிறதன்றோ. ச்ரோத்ரத்தினால் க்ரஹிக்கத்தக்கதாக இருத்தல் என்கிற உபாதியினாலே "சப்த" சப்தத்திற்கு அநுவ்ருத்தியென்பது யுக்தமாகாது. ச்ரோத்ரத்திற்கு ச்ரோத்ர க்ராஹ்யத்வம் பொருந்தாததால். ச்ரோத்ரக்ராஹ்யதையும் ச்ரோத்ரத்தாலே க்ரஹிப்பதற்கு சக்யமில்லாமையால். ப்ரமாணாந்தரத்தாலே ச்ரோத்ரக்ராஹ்யதாப்ரதீதி வருமேயாகில் விளம்பமில்லாத சப்தஸாக்ஷாத்காரம் பொருந்தாது. ஆதலால் கல்பகத்துக்கு அந்யதாஸித்தியில்லாமையால் வர்ணங்களைக்காட்டிலும் வேறாக இருக்கிற சப்தம் ஸ்போடம் என்று.

இந்த இடத்தில் மறுமொழி கூறப்படுகிறது—வர்ணங்களுக்கு வாசகத்வத்தின் அநுபபத்தியினால் ஸ்போடம் ஸித்திபெறாது. அந்த வர்ணங்களுக்கு ஸ்போடாபிவ்யஞ்ஜகத்வம் இருந்தபோதிலும், சோத்யம், பரிஹாரம் இரண்டும் துல்யமாயிருப்பதுபற்றி லாகவந்யாயத்தால் வர்ணங்களுக்கே வாசகத்வத்தை ஆசரயிப்பது ந்யாயமாயிருப்பதால்.

§ ஸமுதாயம்—கூட்டம். $ வையர்த்யம்—பயனில்லாமை.

‡ கவயம்—பசுபோன்ற ஒரு மிருகம். *வ்ருக்ஷம்—மரம்.

¶ கரகம்—கிண்டி. ‖ அபவாரகம்—தாழி.

இந்த விஷயத்தை உபபாதிக்கிறார்—ஒவ்வொரு வர்ணமும் ஸ்போடவ்யஞ்ஜகமாகாது - இரண்டாவது வர்ணம் பயனில்லாமல் போகவேண்டி வருவதாலும் ப்ரதமவர்ணமாத்ரத்தினாலேயே பதம் முதலிய பதஸ்போடத்தின் அபிவ்யக்தி ப்ரஸங்கிக்கவேண்டி வருவதால். எல்லா வர்ண ஸமுதாயமும் வ்யஞ்ஜகமல்ல. க்ரமமாக உச்சரிக்கப்பட்டு கேட்கப்பட்டிருக்கிற வர்ணங்களுக்கு ஒரே ஸமயத்தில் உத்பத்தி இல்லாததைப் பற்றி ஸமுதாயபாவம் பொருந்தாமையால். பூர்வபூர்வவர்ணங்களால் உண்டுபண்ணப்பட்ட ஸம்ஸ்காரத்தோடு கூடின கடைசி வர்ணம் வ்யஞ்ஜகமாகாது. வர்ணாநுபவத்தால் உண்டான ஸம்ஸ்காரங்களுக்கு அநுபவிக்கப்பட்டுள்ள வர்ணங்களின் ஸ்ம்ருதிமாத்ரத்திற்கு ஹேதுத்வமிருப்பதால் அநுபவிக்கப்பட்டிராத ஸ்போடப்ரதீதிக்கு ஹேதுத்வமில்லாமையால் அந்த ஸம்ஸ்காரத்தாலே உபகரிக்கப்பட்டிராத கடைசிவர்ணத்துக்கும் அந்த ஸ்போட வ்யஞ்ஜகத்வம் பொருந்தாமையால் - பதம் முற்றிலும் அறியப்படுகிறது ஆதலால் அந்த ப்ரதீதிக்கு அநுரூபமான காரணம் கல்பிக்கத்தக்கது. வரிசையாக உண்டாகிறதாக இருந்தபோதிலும் ஸம்ஸ்காரங்களுக்கு ஒரே ஸமயத்தில் கார்யகரத்வமுயுக்தம். வரிசையாகக் காணப்பட்டிருந்தபோதிலும் இரண்டு கடங்களுக்கு அவைகள் கடங்கள் என்று ஸ்மரணம் காணப்படுவதால் ஆதலால் ஒரே ஸமயத்தில் உண்டாகிற பூர்வவர்ணத்தின ஸம்ஸ்காரத்தின் உதவிபெற்ற அந்த வர்ணமோ அல்லது ஒரே ஸமயத்தில் நினைக்கப்படுகிற எல்லா வர்ணங்களுடைய ஸமுதாயமோ ஸ்போடத்திற்கு அபிவ்யஞ்ஜகமாகிறதென்று சொல்லப்படுமேயாகில் அப்போது ஸ்போடத்திற்கு அபிவ்யஞ்ஜகமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஸாமக்ரிக்கு அர்த்தாபிவ்யஞ்ஜகத்வமானது இருக்கலாம். சோத்யம் பரிஹாரம் இரண்டும் துல்யமாக இருப்பதால் அந்யதாஸித்தத்திற்கு அர்த்தாந்தரகல்பநம் பொருந்தாமையாலும், வர்ணங்களுக்கே வாசகத்வம் ஸம்பவிப்பதாக இருக்க அவைகளைக்காட்டிலும் வேறான ஒரு தர்மியை கல்பிப்பது பொருந்தாததாலும் லாகவந்யாயமானது அதிக பலமுள்ளதாயிருப்பதாலும் வர்ணங்கள் பின்னங்களாயிருந்தபோதிலும் ஒரே ஸமயத்தில் புத்தியில் ஏற்பட்ட ஏகவிபக்த்யந்தங்களான அநேக வர்ணங்களுடைய ஸமுதாயத்தை விஷயமாகக்கொண்டிருப்பதால் ஒருபதம் என்கிற புத்தியும் வேறு அர்த்தத்தைக்கல்பிக்கிறதாகவாகாது. அர்த்தம் ஒன்றாயிருப்பதால் பதங்களுக்கு ஐக்யம். பதத்தின் ஐக்யத்தால் அர்த்தைக்யமென்று அந்யோந்யாச்ரய தோஷமில்லை ஏகவிபக்த்யந்தங்களான வர்ணஸமுதாயத்துக்கு ஏகபதத்வம் நிச்சயிக்கப்பட்டிருப்பதால். $ 'ஸுப்திங்ந்தம்பதம்'' என்றல்லவோ பதநிஷ்காஷம் அதற்கும் முற்கூறப்பட்ட அபிப்ராயமேசாதவம இருக்குமேயாகில் அவ்யாபதிதோஷம் ஸம்பவியாது. ஏகவ்யுத்பத்தியினால் ஸித்தமான ஏகார்த்தப்ரதீதிக்கு உபயுக்தமான வர்ணஸமுதாயத்துக்காவது பதத்வம். அநேக வர்ணங்களில் 'இது சப்தம் இது சப்தம்'' என்கிற ப்ரத்யயம் கூட காதினால் க்ராஹிக்கத்தக்கதாயிருத்தல் என்கிற உபாதியைக்காரணமாகக்கொண்டிருப்பதால அந்யதாஸித்தமென்பதுபற்றி அர்த்தாந்தரஸித்தியில்லை. ச்ரோத்ரத்தால் க்ராஹிக்கத்தக்கதாக இருத்தல் என்கிற தன்மைக்குங்கூட ச்ரோத்ரத்தினால் க்ரஹணத்தைபேக்ஷயில்லை எவ்வாறு

---

$ ஸுப்திங்ந்தம்பதம்—ஸுப் என்று மும்மூன்று வசநங்களடங்கிய ஏழு விபக்திகளுக்கும் பெயர். திங்-என்பது மும்மூன்று வசநங்களடங்கியதும் தாதுக்களுக்குப்பின் ப்ரயோகிக்கப்படுவதுமான பரஸ்மைபதம் ஆத்மநேபதம் என்று பெயர்பூண்ட இரண்டுவிதமான ப்ரத்யயங்களுக்குப்பெயர் இந்த இரண்டு ப்ரத்யயங்களையும் ஈற்றில்கொண்டவைகளே பதம் என்று கூறப்படுகின்றன உதாஹரணம்— ''ராமன-க்ருஷ்ணன்-கோவிந்தன-பசதி யஜதி-ஜமதி'' முதலியது.

சாக்ஷாத்கங்களான வெண்மை கருப்பு, மஞ்சள் நிறம் மூன்றுக்கும் சாக்ஷாத்த்வ ஜ்ஞானத்தில் சக்ஷுஸ்ஸின் அபேக்ஷையில்லையோ ஆதி சாக்ஷாத்வம் இது சாக்ஷாத்வம் என்கிற வ்யவஹாரமும் சாக்ஷாத்த்வ ஜ்ஞானத்தைக்காரணமாகக்கொண்டதே சாக்ஷாத்த்வம் ச்ராவணத்வம் முதலியவற்றின் ஜ்ஞானமானது வேறு ப்ரமாணங்களால் அறியப் பட்டிருக்கிற † சக்ஷுஸ் ச்ரோத்ரம் முதலியவற்றின் அந்வயவ்யதிரேகங்களை அநுஸரித்திருக்கிற ஜ்ஞானகோசரமாயிருப்பதால. தத்க்ஷணத்திலேயே ''இது சப்தம்'' என்று அறிகிறார்களில்லையன்றோ முதலில் ககாரம் முதலிய வர்ணரூபத்தாலேயே சப்தம் நிச்சயிக்கப்பட்டபிறகு, வ்யுத்பந்நமான சப்தத்தின் ஸமரணத்தை முன்னிட்டே சப்தம் என்று அறியப்படுகிறது. ஆகையால் சப்தஸ்மரணத்தினால் உண்டான விளம்பம்போல ச்ரோத்ராநுமான விளம்பமும் அப்யாஸபாடவத்தாலுமுண்டுபண்ணப்பட்ட சைக்ரயத்தினால் பகுத்தறியப்படுகிறதில்லை ஆகையால் வர்ணஸமுதாயமே பதம், பதஸமுதாயமே வாக்யம் என்று நிலைபெற்றது. அஸத்யத்தால் ஸத்யவஸ்துவின் ப்ரதிபத்திநிராகரணத்தை உபஸம்ஹாரம் செய்கிறார்—அத: என்று.

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

அய்யா! சாஸ்த்ரமானது ஆகாயத்தாமரை மலர்போல் அஸத்யமல்ல- அத்வைத ஜ்ஞானமுண்டாவதற்குமுன்பு ஸத் என்று புத்தியினால் அறியத் தக்கதாயிருப்பதால்-தத்வஜ்ஞானமுண்டானலன்றோ சாஸ்த்ரத்திற்கு அஸத்யத்வம் - அப்போது சாஸ்த்ரமானது எல்லா பேதங்களும் நிரஸிக்கப்பட்டு

† சக்ஷுஸ்—கண்.

ஸிம்மாத்ரமாயிருக்கிற ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு உபாயமல்ல. எப்பொழுது உபாயமோ அப்பொழுது சாஸ்த்ரம் உளதே—உண்டு என்கிற புத்தியினால். இவ்வண்ணமல்ல—அஸத்தான சாஸ்த்ரத்தில் "அஸ்தி சாஸ்த்ரம்" என்கிற புத்தியானது மித்யையாயிருப்பதால் அதனாலென்ன? அதனால் இதுதான் மித்யாபூதமான சாஸ்த்ரத்தினாலுண்டாகிற ஜ்ஞானமும் மித்யையானதால், அந்த ஜ்ஞானத்திற்கு விஷயமாயிருக்கிற ப்ரஹ்மத்திற்கு மித்யாத்வம் ஸித்திக்கிறது - எவ்வாறு புகை என்கிற புத்தியினால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற பனிப்புகையினாலுண்டாகிற வஹ்நிஜ்ஞானம் மித்யையானதால் அந்த ஜ்ஞானத்திற்கு விஷயமாயிருக்கிற வஹ்நிக்கும் மித்யாத்வம் ஸித்திக்கிறதோ அவ்வாறென்றபடி. பிற்காலத்திய பாதத்தின் அதர்சனமும் ஸித்தியாது; சூந்யமே தத்வமென்கிற (சில பௌத்தர்களின்) வாக்யத்தாலே அதற்கும் பாதம் காணப்படுவதால். அது ப்ராந்தியடியாக வருகிறதென்று கூறப்படுமேயாகில் இதுவும் (நிர்விசேஷ ப்ரஹ்மாத்மைகத்வஜ்ஞானமும்) ப்ராந்திமூலமென்று உன்னாலேயே உரைக்கப்பட்டது. பிற்காலத்திலுண்டாகிற ஜ்ஞானத்தினால் பாதம் காணப்படாமலிருந்தாலோவெனில், (சூந்யம் தத்வம் என்று சொல்லுகிற) அந்த ஜ்ஞானத்திற்கே என்று, நிலைபெற்ற சூதர்களைக்கொண்டு பரிஹஸிப்பது போதும்.

---

ச்ருதப்ரகாசிகை—

ஸத்யமென்று அபிமானிக்கப்பட்டிருக்கிற ஸமயப்ரதிபத்திஹேதுக்களில் எவ்விதமான ஸமயத்வமோ அவ்விதமான ஸத்யத்வம் சாஸ்த்ரத்திற்கும் இருக்கிறதென்கிற அபிப்ராயத்தினால் சோதனம் செய்கிறார்—நநு என்று ககநதுஸுமவத் என்று யுக்திபாதமல்லவோ கூறப்பட்டது லௌகிக புருஷர்களால் அப்பொழுதே தான் நாஸ்தி என்று அறியப்பட்டிருத்தல் கூறப்படவில்லை - ஆதலால் அவ்விதமான அஸத்யத்வம் இல்லையென்று அர்த்தம் - ஹேதுவைக்கூறுகிறார்—ஸத்புத்திபோத்யத்வாத் என்று. ஸத் என்று அறியத்தக்கதன்மையே கார்யகாத்வத்திற்கு அநுகுணமே ஒழிய ஸத்யத்வம் அநுகுணமல்லவென்று அர்த்தம். அங்ஙனமாகில் ஸத்தாயுள்ள அத்வைதத்திற்கு பங்கமுண்டாகுமென்கிற கேள்வியின் மறுமொழி கூறுகிறார்—உத்பன்னே என்று. அங்ஙனமாகில அதுபோதகமாகாது என்று கேட்கில் கூறுகிறார்—நதந்நா என்று.

பரிஹரிக்கிறார்—நைவம் என்று. நைவம் - உபாயகாலத்திலும் ஸத்யத்வம் இல்லை என்று அர்த்தம். மித்யையான அர்த்தத்தை விஷயீகரிப்பதால் ஜ்ஞானத்திற்கு மித்யாத்வம் ஜ்ஞானம தோஷமூலமாதலால் விஷயமித்யாத்வத்தில் நிதர்சனத்தைக் கூறுகிறார்—யதா என்று. முன்பு பிற்காலத்திலுள்ள பாதாதர்சனத்தை ஒப்புக்கொண்டு தூஷணம் கூறப்பட்டது. இப்பொழுது அதே இல்லை என்று கூறுகிறார்—பார்யந்த்ய என்று. அதை உபபாதிக்கிறார்—சூன்யம் என்று. அந்த வாக்யமும் அதின் ப்ராமண்யமும் ப்ராந்திஸித்தமென்று சங்கிக்கிறார்—தத்து என்று. ஸாம்யத்தைக்கூறுகிறார்—

ஏதத்பி என்று. பிந்தியதான வாதத்தின் அதாசநத்தற்கு ப்ராமாண்ய ஹேதுத்வம் சொல்லுதல், ஸர்வசூந்யவாதிக்கே ஸாதகம். அதற்குமேல் நிஷேதிக்கத்தக்க வஸ்து வில்லாமையால் நிஷேதத்துக்கு உதயமில்லாமையால் என்று கேட்கில் கூறுகிறா— பாஶ்சாத்ய என்று ப்ராமாண்யம் முதலியவைகளுக்கு தோஷமூலத்வம் இரண்டுபெருக்கும் துல்யம். பாஶ்சாத்யபாதாதர்சனமோவெனில் சூன்யவாதிக்கு அதிகமென்று கருத்து. "ஸர்வசூன்யவாதிக்குங்கூட பிந்தின நிஷேதமிருக்கிறது; எல்லாமிருக்கிறது என்கிற வசனமல்லவோ அதற்கு நிஷேதம்;" என்று கூறப்படுமேயானால் அப்போது பரபஞ்சமித்யாத்வ வசநத்திற்கும் $ ப்ரபஞ்ச ஸத்யதாவசனமானது நிஷேதமாக ஆகலாம். நாஸ்தி என்கிற வசநமே நிஷேதம் என்று கூறப்படுமேயாகில் அது ¶ சூன்யவாதிக்கே என்று கருத்து இந்த வேதப்ராமாணயம் † மாயாவாதிகளுக்கும் பௌத்தர்களுக்கும் ஸமானம் இதுவிஷயமாகக்கூறுகிறார்கள். வேதோऽந்ருதோ புத்திக்ருதாகமோऽந்ருத: ப்ராமாண்யமேதஸ்யச தஸ்யசாந்ருதம். போத்தாந்ருதோ புத்தி பலே ததாந்ருதேயூயஞ்ச பௌத்தாஶ்ச ஸமாநஸம்ஸத:" - வேதம அந்ருதம் - பொய் மனிதனுடைய புத்தியினால் செய்யப்பட்டுள்ள ஆகமமும் அந்ருதம பொய் - இதற்கும் அதற்குமுள்ள ப்ராமாண்யமும் அந்ருதம் பொய் - அறிகிறவன் அந்ருதம பொய் - அவ்வாறே புத்தி பலம் இரண்டும் அந்ருதங்கள் பொய் - நீங்களும் பௌத்தர்களும் ஒரே கோஷடியில் சேர்ந்தவர்கள் — என்று. அய்யா! விஷயஸத்யத்வரூபமான சாஸ்த்ர ப்ராமாண்யமிருக்கிறதாதலால் இந்த விஷயத்தில் எங்களுக்கு பௌத்தாகளைவிட அதிக வேறுபாடு இருக்கிறதென்று கூறப்படுமேயாகில், அல்ல சில விஷயங்களுக்கு ஸத்யத்வம் உன்னால் சொல்லவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கிறதா? அல்லது எல்லா விஷயங்களுக்குமே ஸத்யத்வம விரும்பப்பட்டிருக்கிறதா? சில விஷயங்களுக்கு ஸத்யத்வம் புத்தாகமத்துக்குமுண்டு - ஸம்வித்தின் ஸ்வயம்ப்ரகாசத்வம முதலியது எல்லோராலும ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் - எல்லா விஷயங்களுக்கும் ஸத்யத்வமோவென்றால் உன்னால் ச்ருதிக்கும ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கவில்லை. மேலும் விஷயத்திற்கு ஸத்யத்வம் எவ்விதத்தாலும் சொல்லமுடியாது. ஸத்யமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ப்ரஹ்மத்திற்கு ப்ரமாண விஷயத்வம் ஒப்புககொள்ளப்படாமையால். "§ ஆதித்யோ † யூப:" என்கிறவிடத்தில் யூபத்துக்கும் ஆதித்யனுக்கும ஐக்யத்தை ப்ரதிபாதியாமலிருப்பது தாத்பர்யலிங்கமில்லாமையாலே ஒழிய ப்ரத்யக்ஷத்தின் ப்ராபல்யத்தாலல்லவென்று யாதொன்று உரைக்கப்படுகிறதோ அந்த இடத்தில் தாத்பர்யலிங்காபாவமானது ஒப்புக்கொள்ளப்பட்டே இருக்கிறது. அதனால் ⚹ ப்ரத்யக்ஷ விருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிப்பதில் அஸாமர்த்யமானது விலக்கத்தகாததாக வந்து சேருகிறது - வேதாந்திகளாலே அர்த்தவாதம் முதலியவற்றுக்கு வேறு அர்த்தத்தை உணர்த்துவதில் நோக்கமிருப்பதினாலே ஸ்வார்த்தத்தில் ப்ராமாண்யம் இழக்கப்படுகிறதில்லையன்றோ - @ மந்த்ரங்களுக்கும் அர்த்தவாதங்களுக்கும் ஸ்வார்த்தத்தில் ப்ரா

---

¶ சூன்யவாதி—மாத்யமிகன். அதாவது புத்தனுடைய தத்வோபதேசத்தை ஸரியாக க்ரஹித்த உத்தமசிஷ்யன் - பௌத்தர்களுள் தலைமைவாய்ந்தவன்.

$ ப்ரபஞ்சம்—உலகம். † மாயாவாதி—அத்வைதி.

§ ஆதித்யன்—ஸூர்யன். $ யூப:—யாகத்தில் பசுவைக்கட்டும் ஸ்தம்பம்.

⚹ ப்ரத்யக்ஷம்—இந்த்ரியார்த்த ஸந்நிகர்ஷத்தாலுண்டாகிற ஜ்ஞானம்.

|| அர்த்தவாதம்—விதிவாக்யார்த்தத்தை துதிக்கிற வசனஜாலம்.

@ மந்த்ரங்கள்—அனுஷ்டிக்கத்தக்க அர்த்தங்களை ப்ரகாசப்படுத்துகிற ச்ருதி வாக்யங்கள்

மண்டம் உஙகளாலேயே சொல்லப்பட்டிருப்பதால் ஆதலால் ஸ்துதிபரமாயின பதிஞல் யூபம் ஆதித்யன இரண்டுக்கும் * ஐகாத்மதை ப்ரதிபாதியாமலிருந்தாலும் ‡ அபஸித்தாந்தம் அர்த்தவாதஙகளுககு ஸ்வார்த்த ப்ராமாண்யமிருககிறபடியால் அவ்வாறு அந்த யூபம் ஆதித்யன இரண்டுக்கும் ஐகயாப்ரதிபாதநம என்று சொல்லப்படுமேயாஞல் மறுமொழி கூறப்படுகிறது. ப்ரமாணத்திற்கு விரோதமில்லாமலிருத்தலும் தாத்பர்யலிஙகம். $ உபகரமம † உபஸம்ஹாரம் முதலியவைகளில அபூர்வதையும் தாத்பர்யலிங்கமாகக்கூறப்பட்டிருக்கிறதனறோ—' அப்பாஸோzபூர்வதாபலம் " என்று. அபூர்வத்வமாவது @ ஸாதக ¶ பாதக ப்ரமாணஙகளுககு கோசரமாக இல்லாமலிருத்தல். இதில் ப்ரமாணங்களைக் கூறுகிறார்கள் — " * அஸந்நிக்ருஷ்டவாசாசத்வயமத்ர ‡ ஜிஹாஸிதம - தாதபாயேண பரிசஙிதகி: தத்விபர்யயதோzபிவா " என்று-அதஞல் வேறு ப்ரமாணஙகளுக்கு விஷயமாகாமையாகிற தாத்பர்யலிங்கம் இஙகில்லாததால் யூபம் ஆதித்யன் இரணடுககும் ஐகயம் சொல்லப்படவில்லையே ஒழிய அர்த்தவாதமாக இருப்பதுபற்றி ஸ்வார்த்தத்தில் ப்ராமண்யத்தின் இன்மையால அல்ல - ஆகையால் தாத்பர்யலிங்காபாவமென்பது ப்ரதயக்ஷாதி விரோதத்தில் நிலைபெற்றிருககிறதென்பதஞல் சாஸத்ரமானது அதற்கு விருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிப்பதில் ஸாமர்த்தியமுள்ளதாக ஆகாது - சாஸ்த்ர ப்ராபல்ய நிரஸநத்தை முடிவடையச்செய்கிறார்— அலம் என்று அன்றிக்கே 'யத்து ப்ரத்யக்ஷம்' இது முதலான ந்யாயமுகத்தால் செய்யப்பட்டிருக்கிற ✠ பரபக்ஷ ‡‡ ப்ரதிக்ஷேபத்தை முடிக்கிறார்—அலம் என்று ப்ரமாண விருத்தமான தர்கம் குதர்கம் - அதஞலேயே நிலைபெருமை - தனக்கு விருத்தமான பௌததமதத்திற்கு உபயுக்தஙகளான யுக்திகளைச்சொல்வதஞல் பரிஹஸிககததக்க தன்மை - ப்ரத்யக்ஷத்தைக்காட்டிலும் சாஸ்த்ரத்திற்கு ப்ராபல்யததைச்சொல்லுகிற அந்யஞல் ப்ரபலமென்று அபிமானிக்கபபட்டிருககிற சாஸ்தரத்தைமுன்னிட்டு பிந்தி தர்கம் கூறப்பட்டது - ஸித்தாந்தத்திலோவெனில் ப்ரபலமெனறு அபிமானிக்கப்பட்ட §லௌகிக ப்ரமாணங்களின் கதியை முதலில் நிரூபித்து அந்யஞல் கூறப்பட்டுள்ள துஷ்ட தர்கங்களை நிரஸநம் பண்ணி லௌகிக ப்ரமாணத்தில் சாஸ்தர † ப்ராபல்யமும் நிரஸிக்கப்பட்டது சாஸ்த்ரத்திற்கு லௌகிக ப்ரமாணஙகளுக்கு விருத்தமான அர்த்தஙகளை ப்ரதிபாதிப்பதில் அஸாமர்த்யத்தை உபபாதிப்பதிஞல் சாஸத்ரத்திற்கு ஸவிசேஷ பரத்வம் ஸாமான்யமாக ஸாமர்த்தியத்திஞல் ஸித்தித்தது விசேஷண சப்தத்திற்கு பதவாக்யரூபமாக ப்ரவ்ருத்தியிஞலும ஸவிசேஷ பரத்வத்தைத்தெளிவாகக் கூறியதிஞலும் சாஸ்த்ரத்திற்கு ஸவிசேஷபரத்வம் ஸாமான்யமாக ஸித்தித்தது.

---

* ஐக்யம்—ஒன்றுபட்டிருத்தல்.

§ அபஸித்தாந்தம-யுக்திகளாலும் ந்யாயஙகளாலும் நிலைபெறாத போலிஉறுதிமொழி.

$ உபக்ரமம்—தொடக்கம். † உபஸம்ஹாரம்—முடிவு.

@ ஸாதகம்—உபகாரகமான வஸ்து. ¶ பாதகம்—விருத்தமானது.

* அஸன்னிக்ருஷ்டம்—விலகியிருக்கிறது அல்லது தூரதிலிருக்கிறது.

‡ ஜிஹாஸிதம்—விடுவதற்கு விரும்பப்பட்டிருககிறது.

✠ பரபக்ஷம்—அயலான் கக்ஷி. ‡‡ ப்ரதிக்ஷேபம—நிராகரித்தல்.

§ லௌகிக—உலகத்தில் வழங்கப்பட்டுள்ளது.

† ப்ராபல்யம்—அதிக பலமுள்ளதாக இருத்தல்.

𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌮𑍍—𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌰𑌸𑌵𑌸𑍍𑌤𑍁𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌨𑌪𑌰𑌾𑌣𑌿, "𑌸𑌦𑍇𑌵 𑌸𑍋𑌮𑍍𑌯𑍇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌾𑌦𑍀𑌨𑌿— 𑌇𑌤𑌿; 𑌤𑌦𑌯𑍁𑌕𑍍𑌤𑌂. 𑌏𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌪𑌾𑌦𑌨𑌮𑍁𑌖𑍇𑌨 𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌜𑌗𑌦𑍁𑌪𑌾𑌦𑌾𑌨𑌤𑍍𑌵𑌂, 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌤𑌾, 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌃, 𑌸𑌤𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌧𑌾𑌰𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌨𑍇𑌕𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑌾𑌂, 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌸𑍍𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑌾𑌞𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯, 𑌏𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍀𑌤𑌿 𑌶𑍍𑌵𑍇𑌤𑌕𑍇𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌦𑍇𑌶𑌾𑌯 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 । 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌿𑌤𑌶𑍍𑌚𑌾𑌯𑌮𑌰𑍍𑌥𑍋 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑍇 । 𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌰𑌮𑍍𑌭𑌣𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍇 𑌨𑌿𑌪𑍁𑌣𑌤𑌰𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

ஸ்ரீபாஷ்யம்.—

வேதாந்தவாக்யங்கள் விசேஷங்களற்றதும் ஜ்ஞாநத்தையே ஸ்வபாவமாகக்கொண்டதுமான வஸ்து ஒன்றையே ப்ரதிபாதிப்பதில் நோக்குள்ளவைகள், "ஸதேவ, ஸோம்யேதமக்ர ஆஸீத்" இது முதலியவைகள் என்று எது சொல்லப்பட்டதோ அது பொருத்தமுள்ளதல்ல. ஒரு வஸ்துவை அறிவதனால் எல்லா வஸ்துக்களும் அறியப்படுகின்றனவென்கிற ப்ரதிஜ்ஞோபபாதனமடியாக ஸத் என்கிற சப்தத்திற்கு வாச்யமான பரப்ரஹ்மத்திற்கு ஜகதுபாதாநத்வம், ஜகந்நிமித்தத்வம், ஸர்வஜ்ஞத்வம், ஸர்வசக்தியோகம், ஸத்யஸங்கல்பத்வம், ஸர்வாந்தரத்வம், ஸர்வாதாரத்வம், ஸர்வநியந்த்ருத்வம், இவை முதலிய அனேக கல்யாணகுணங்களுடன் சேர்ந்திருத்தலையும், உலகமனைத்துக்கும் அந்த ப்ரஹ்மாத்மகத்வத்தையும் ப்ரதிபாதித்து இப்படிப்பட்ட $ ப்ரஹ்மாத்மகனாய் நீ இருக்கிறாய் என்று ச்வேதகேதுவைக்குறித்து உபதேசிப்பதின்பொருட்டு ப்ரகரணம் ப்ரவ்ருத்தித்திருப்பதால். இந்த அர்த்தம் வேதார்த்த ஸங்க்ரஹத்தில் விரித்து உரைக்கப்பட்டிருக்கிறது. இந்த க்ரந்தத்திலும் ஆரம்பணாதிகரணத்தில் நன்கு மிக்க தெளிவாக உபபாதிக்கப்படப்போகிறது.

$ ப்ரஹ்மாத்மகன்—ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாகக்கொண்டவன்.

ச்ருதப்ரகாசிகை:—

அப்படி இருந்தபோதிலும் எந்த வாக்யவிசேஷங்கள் அந்யனால் நிர்விசேஷபர மாக உதாஹரிக்கப்பட்டனவோ அவைகளுக்கு ஸவிசேஷபரத்வத்தை வாக்யதாத்பர் யத்தின் பர்யாலோசனையினால் ப்ரதிபாதிக்கத்தொடங்குகிறார்—யதுக்தம் இது முத லியதால். அதில் நிர்விசேஷபரத்வத்தை சுருக்கமாக அநுவாதம் செய்கிறார்—யதுக்தம் என்று. சோதகவாக்யங்களில் ப்ரஹ்மம் ஜ்ஞானைகாஸமாய் அறியப்பட்டிருப்பதால் அதற்குநிர்விசேஷத்வம அதுவும் காரணவாக்யங்களில் ப்ரதிபந்நம். 'வஸ்துமாத்ரம்'' என்கிற சப்தத்தினால் வேறிடத்தில் ஸகுணப்ரஹ்மத்தினிடத்தில் தாத்பர்யமின்மை ஸூசிப்பிக்கப்படுகிறது. ''இதயாதீதி'' என்று சொன்னால் அதே உபநிஷத்தில் பர்யவ ஸிக்கிறது என்பதுபற்றி அதை விலக்குவதற்காக இத்யேவமாதீநீ என்று உரைக் கப்பட்டது. அதை தூஷிக்கிறார் — ததயுக்தம் என்று. எதனால் என்று கேட்கில் கூறுகிறார்—ஏகவிஜ்ஞாநேந என்று. ''யேநாச்ருதம்'' இது முதலிய வாக்யத்தால் ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வவிஜ்ஞானம் ப்ரதிஜ்ஞை பண்ணப்படுகிறது. இதற்கு இது அர்த்தம் - கேட்கப்பட்டதும, மனனம்பண்ணப்பட்டதும, நன்கு அறியப்பட்டதுமான எந்த வஸ்துவினால் கேட்கப்பட்டிராததும் மனனம் செய்யப்பட்டிராததும் அறியப்பட் டிராததுமான வஸ்துவானது கேட்கப்பட்டதாகவும் மனனம்செய்யப்பட்டதாகவும் அறி யப்பட்டதாகவும் ஆகிறதோ என்று. ப்ரஹ்மத்தினுடைய ஸத்தையினால் அனைத்தும் அறியப்பட்டதாக ஆகிறதில்லை. தார்ஷ்டாந்திக ஸாமர்த்தயத்தினாலும ம்ருத்த்ருஷ்டாந்த ஸாமர்த்யத்தாலும் அறியப்பட்டதாக ஆகிறது ப்ரஹ்மத்தின் ஸத்தையினாலாவது ம்ருத் பிண்டத்தின்ஸத்தையினாலாவது அதின் கார்யமான ப்ரபஞ்சமாவது கடம் முதலியதா வது அறியப்படுகிறதில்லையன்றோ. '' கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம விஜ் ஞாதம்பவதி '' என்று முண்டகோபநிஷத்தில், ஆத்மநிகலுஅரே த்ருஷ்டேச்ருதேமதே விஜ்ஞாதே இதம்ஸர்வம்விதிதம '' என்று ப்ருஹதாரண்யகத்திலும் கேட்கப்படுவதாலும். அதனால் ப்ரதிஜ்ஞாவாக்யார்த்தமானது எவ்வாறு உரைக்கப்பட்டதோ அவ்வாறு என்ற படி. கடஜ்ஞானத்தாலே படஜ்ஞானம் ஸம்பவிக்கிறதில்லை என்பதனால். ஏகவிஜ்ஞா னத்தால் ஸர்வவிஜ்ஞானம் உண்டாவதில்லை என்று சங்கைவரின் கார்ய காரணங்களுக்கு அது காணப்பட்டிருக்கிறதென்று கூறுகிறார்—'' யதாஸோமய '' என்று. அதிலும் அஸத்கார்யவாதத்தின்வாயிலாக ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வவிஜ்ஞாநாநுபபத்தி சங்கை யைப் பரிஹரிக்கிறார்—வாசாரம்பணம் என்று. வாசா-வாசகசப்தமானது § அஜஹல் லக்ஷணையினால் வாக்பூர்வகமான வ்யவஹாரத்தை உணர்த்துகிறது. வாசா என்ற மூன்றும் வேற்றுமையினால், ப்ரயோஜனமாயிருப்பதுபற்றி ஹேதுத்வம் சொல்லக் கருதப்பட்டது ஆரம்பணமென்று கர்மார்த்தத்தில் ல்யுட். ஆரப்யதே ஆலப்யதே இதி ஆரம்பணம் '' ஆலம்பஸ்ஸ்பர்சஹிம்ஸயோ.'' என்று நிகண்டு. ம்ருத்பிண்டோந என்பது அர்த்தத்தால் ஸித்திக்கிறது. விகார: என்பது கடத்வசராவத்வாதி அவஸ்தை

---

§ அஜஹல்லக்ஷணையாவது — விடாதலக்ஷணை - அதாவது ஸ்வார்த்தத்தைவிடா மல் அர்த்தாந்தரத்தையும் உணர்த்தும் சப்தசக்தி. உதாஹரணம்.—சத்ரிணோ கச்சந்தி என்று. கொடைக்காரர்கள் போகிறார்கள் என்று அர்த்தம். இந்த வாக்யமானது அபிதா வ்ருத்தியினால் சத்ரிகளின் கமநத்தைச்சொல்வதுடன் ச்சத்ரமில்லாதவர்களுடைய கம னத்தையும் சொல்லுகிறது என்பது அஜஹல்லக்ஷணையின் மகிமை.

கள் - வாக்பூர்வகமான ஹானம் த்யாகம் @ உபாதானம் முதலிய வ்யவஹாரத்தின் பொருட்டு ம்ருத்பிண்டத்தினுல் நாமரூபங்கள் தொடப்படுகின்றன (வஹிக்கப்படுகின்றன). மண்ணுருண்டையானது வேறு பெயரையும் ரூபத்தையும் அடைந்ததாக ஆகிறது என்று அர்த்தம். கார்ய காரணங்களிரண்டும் ஒரு † த்ரவ்யம் என்கிற விஷயத்தில் ப்ரமாணத்தைக்கூறுகிறார்— (ம்ருத்திகேத்யேவஸத்யம) என்று. ‘ இந்த குடம் மண் ’ என்கிற ப்ரத்யபிஜ்ஞையால் ம்ருண்மயமான குடம் முதலியதுங்கூட ம்ருத்த்ரவ்யமாகவே இருப்பது ப்ராமாணிகம் என்று அர்த்தம். கடாதிகளில் உண்டாகிற புத்தி சப்தாதி பேதங்கள், த்ரவ்யபேதத்திலும் காணப்பட்டிருக்கின்றன. “இருக்கிறுன், படுக்கிறுன், நான் ஸுகமுள்ளவன், நான் துக்கமுள்ளவன்” இது முதலியவைகளில் த்ரவ்யைக்யத்திலும் காணப்பட்டிருக்கின்றன. ஆதலால் அவைகள் ¶ ஸாதாரணங்கள். அதில் “ ஆஸ்தே சேதே ஸுக்யஹம் து:க்யஹம் ” இது முதலியவைகளில் த்ரவ்ய ஐக்யத்துக்கு ‡ நிர்ணயகமான ஸாமக்ரீ ப்ரத்யபிஜ்ஞை - அந்த ப்ரத்யபிஜ்ஞையே இந்தவிடத்திலும த்ரவ்ய ஐகயத்துக்கு நியாமிகை என்று கருதது. இந்தவிடததில் ம்ருத்திகாமாத்ரத்திற்கு பாரமார்தயமும் விகாரங்களுக்கு அஸதயத்வமும விவக்ஷிக்கப்பட்டிருக்குமேயாகுல் ‘ இதி ’ என்கிற சப்தம் ப்ரயோஜனமற்றதாகும். அப்பொழுதும் “ ம்ருத்திகைவ ஸதயா ” என்றலலவோ சொல்லத்தக்கது விகாரங்களுக்கு அஸத்யத்வம் ஒப்புக்கொள்ளும பக்ஷத்தில் த்ருஷ்டாந்தமானது ஸாத்யவிகலமாகவாகும். ஸத்யத்வம் அறியப்படுவதால். குடம் முதலியவற்றுக்கு ஸத்யத்வமானது || வ்யாவஹாரிகம் என்று கூறப்படுமேயாகுல் ம்ருத்பிண்டத்திற்கும் ஸத்யதவமானது வ்யாவஹாரிகமாக இருப்பதுபற்றி காரணத்திற்கு ஸதயத்வஸித்தியில்லை. காரணத்திற்கு வ்யாவஹாரிகமான ஸத்யதவமே ஸம்மதமாயிருக்குமேயாகில் அது குடம் முதலியவற்றுக்கும் துல்யமாகவாகும். கார்ய காரண த்ரவ்யஙகளுக்கு ஐகயமிருப்பதால் காரண விஜ்ஞானத்தாலே கார்ய விஜ்ஞானமானது பொருத்தமுள்ளதாக ஆகட்டும். அப்படி இருந்துங்கூட உலகததில் பற்பல கார்ய வாக்யங்களுக்குப் பற்பல உபாதானங்களோடுகூடி இருத்தல் காணப்படுவதால் ஏகவிஜ்ஞானத்தாலே ஸர்வவிஜ்ஞானமானது பொருந்தாது என்கிற சங்கைவரின், ஜகத்துக்கு ப்ரஹ்மத்தையே காரணமாகக்கொணடிருத்தலைக்கூறுகிறா— ஸதேவ ஸோம்யேதமக்ரே என்று. சுருதியிலுள்ள “ ஸத ” சப்தார்தத்தைக்கருதி இந்தவிடத்தில் “ ஸத் சப்தவாச்யஸ்ய ” என்று உரைக்கப்பட்டது. இது ஸகுண ப்ரஹ்ம விஷயமென்று அந்யதாஸித்தியானது எவ்விதத்தாலும் சொல்லமுடியாது என்கிற அபிப்பிராயத்திலுல் “பரஸ்ய ப்ரஹ்மண:” என்று உரைக்கப்பட்டது. அக்ரே ஸ்ருஷ்டிக்கு முந்தியகாலத்தில என்று அர்த்தம். பிறகு ஸ்ருஷ்டிசொல்லப்படப்போவதால். விஜாதீய ஸஜாதீய ஸ்வகத நாநாத்வ வ்யாவ்ருத்தியானது இவ்விடத்தில் விவக்ஷிக்கப்பட்டிருக்குமேயாகுல் அக்ரே என்று சொல்வது பொருந்தாது ப்ரஹ்மத்திற்கு ஒரு காலவிசேஷததில் நிர்விசேஷத்வம் என்கிறதில்லையன்றே — $ வைஷம்ய Ψ நைர்க்ருண்ய பரிஹாரத்தின்பொருட்டு ஜீவர்களுடைய பஹுத்வமென்ன அவர்க

@ உபாதானம்—எடுத்துக்கொள்ளுதல்.

† த்ரவ்யம்—வஸ்து அல்லது பதார்த்தம். ¶ ஸாதாரணம்—பொதுவானது.

‡ நிர்ணயகம்—நிச்சயத்தை உண்டுபண்ணுகிற வஸ்து.

|| வ்யாவஹாரிகம்—உலகவழக்கத்திலுள்ளது.

Ψ வைஷம்யம்—எல்லா ப்ராணிகளிடத்திலும் ஸமபாவனை இல்லாமை.

$ நைர்க்ருண்யம்—தயையற்றிருத்தல்.

ளுடைய காமங்களின் பரிக்ரஹமென்ன அவைகளின் அநாதித்வமென்ன இவைகள ஒப்புக்கொள்ளத்தக்கதாக இருப்பதாலும் அந்த ஜீவர்களின் பஹுத்வமானது அபாரமார்த்திகமென்று சொல்லப்படுமேயாகில், அல்ல;— பாரமார்த்யபஹுத்வம் இப்பொழுதுமில்லாமையால் அந்த ப்ரச்நம் யுக்தமன்று. அத்விதீயபதத்துக்கு அவ்விதீயார்த்தத்வமென்பதுகூடாது. அந்த ஸ்ருஷ்டிப்ரகரணத்தில் – அதற்கு காலரூபமான விஜாதீயபேதமும் சேதநரூபஸஜாதீய பேதமும் ஸார்வஜ்ஞ்யம் முதலான ஸ்ருஷ்டிக்கு அநுகுணமான குணரூபமான ஸ்வகதபேதமும் அப்பொழுதிருக்கிறதால் விஜாதீயம் முதலிய மூன்றுவிதபேதங்களின் நிஷேதம் விருத்தம் - காரணவாக்யமாயிருப்பதால். இது காரணவாக்யமாக இல்லாவிடில் இப்படிப்பட்ட வாக்யங்களுக்கு ஸர்வசாகாப்ரத்யயந்யாயத்தால் விஜாதீயம் முதலியதின் பேதநிரஸநத்தில் நோக்கு இருப்பதுபற்றி காரணபரத்வமில்லாமையால் ப்ராஹ்மகாரணத்வம் அப்ரமாணமாகவேண்டிவரும். நிச்சயப்பொருளை உணர்த்துகின்றதும் தன்னுலே விலக்கத்தக்க வஸ்துவிசேஷத்தை உபஸ்தாபிப்பதில் ஸாமர்த்தியமுள்ளதாகவுமிருக்கிற ஏவகாரத்திற்கு சேர்ந்து ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற மற்றொரு பதத்தின் அர்த்தத்திற்கு விருத்தமான அர்த்தத்தை விலக்கும் தன்மை தவறாமல் காணப்படுவதால் 'ஸதேவ' என்கிற அவதாரணமானது அஸத்கார்யவாதத்தைத்தள்ளுவதில் நோக்குள்ளது. 'இவன் கற்றறிந்தவனே' என்கிற வாக்யப்ரயோகத்திலிருக்கிற ஏகாரமானது ப்ராஹ்மணத்தன்மையை விலக்காதன்றோ. பின்னையோ கற்றறியாமையையே வ்யாவர்த்திக்கிறது ஆதலால் சப்தஸ்வாரஸ்யத்தால் ஸதேவ என்பதனுல நிரஸிக்கத்தக்கது அஸத்த்வமே ஒழிய விஜாதீயபேதமல்ல. என்றாலும் அஸத்தானது ஸத்தைக்காட்டிலும் விஜாதீயம். ஆயினும் அதற்கு வ்யாவர்த்திக்கத்தக்கதன்மையானது விஜாதீயத்வாகாரத்தாலல்ல. பின்னையோ ஸத்துக்கு விரோதியாக இருந்ததலால் - ஸதேவ - ஒருபொழுதும் அஸத்தில்லை என்று அர்த்தம். ஸத் சப்தமானது ப்ரமாணஸம்பந்தயோக்யதாரூபமான ஸத்த்வத்தை ப்ரவ்ருத்தி நிமித்தமாகக்கொண்டு பரமாத்மாவினிடத்தில் நிலைபெற்றிருக்கிறது. இந்த ஸத் சப்தமானது விசேஷ்யமாக இருக்கிற பரமாத்மாவைச்சொல்லுகிறதாக இருந்தபோதிலும் காரணவிஷயத்வ ஸாமர்த்யத்தினால் காரணத்வத்திற்கு உசித குணங்களோடு கூடியவனும் ப்ரக்ருதி புருஷன் காலம் இம்மூன்றையும் சரீரமாகக்கொண்டவனுமான பரமாத்மாவை உணர்த்துகிறது. ஏகமேவ என்பது நாமரூப விபாகமில்லாத காரணவஸ்தையுடன் கூடின ப்ராஹ்மத்தைச் சொல்லுகிறது. காரணத்வாவஸ்தையில் ஏகத்வ நிச்சயமானது 'பஹுஸ்யாம்' என்று பஹுபவந ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டிக்கப்போகிற கார்யவர்க்கங்களின் பஹுத்வத்திற்கு ப்ரதியோகியான வஸ்துவின் ஏகத்வத்தை ப்ரகாசமாகக்கொண்டிருப்பதாலும் ஒரு ம்ருத்பிண்டத்தினால் மண்மயமான கார்யவர்க்கம் அறிந்ததும் என்று உரைக்கப்பட்ட த்ருஷ்டாந்த ஸாமர்த்யத்தினாலும் "தத்தேதம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத், தந்நாமரூபாப்யாம் வ்யாக்ரியத" என்கிற ச்ருத்யந்தரத்தோடு அர்த்தைக்யமிருப்பதாலும் இதுவே அர்த்தம். வைசேஷிகன் முதலியவர்களால் நித்யம என்று கூறப்பட்டிருக்கிற ஆகாசம் முதலியவற்றுக்குங்கூட ஸம்ஹாரம் உண்டு என்கிற அபிப்ராயத்துடன் கூடியது. ஏவகாரம் இவ்வண்ணம் நாமரூபவிபாகமில்லாமையால் ப்ராஹ்மத்திற்கு உபாதாநத்வம் ஸித்திக்கிறது. இனிவரப்போகிற அவஸ்தா விசேஷத்தோடுகூடியதான ஒரு வஸ்துவுக்கு முந்திய அவஸ்தை (நிலைமை) யின் ஸம்பந்தமல்லவோ உபாதாநத்வம் 'அத்விதீயம' என்கிற பதத்தினால் நிமித்தாந்தரம் நிஷேதிக்கப்பட்டது. உபாதாநம் ப்ரஸ்துதமாக இருப்பதுபற்றி நிமித்தகாரணம் புத்தியில் நிலைபெற்றிருப்பதாலும் பாதகத்ர ரூபமான விசேஷங்கள் விதிக்கப்பட்டிருப்பதாலும், நிஷேதமானது விதிக்கப்பட்டிருப்பதைவிட மற்றதை விஷயமாகக்கொண்டிருப்பதாலும்

மேலுள்ள வாக்யத்திற்கு ஸங்கதி அபேக்ஷிக்கப்பட்டிருப்பதாலும். "ஏகமேவ" என்கிற சப்தத்திற்கு அவிபக்தநாமரூபதா பரத்வமானது "பஹுஸ்யாம்" என்கிற வாக்யத்தால் அறியப்படுகிறது. "ததைக்ஷத தத்தேஜோऽஸ்ருஜத" என்கிற இந்த ச்ருதி வாக்யங்களால் அத்விதீயபதத்திற்கு நிமித்தாந்தராபாவத்தில் நோக்கு அறியப்படுகிறது. பரப்ரஹ்மமானது எப்போதுமிருப்பதால் "ஸதேவ" என்கிற அவதாரணமானது அஸத்கார்யவாதநிரஸனத்தில் தாத்பர்யமுள்ளதாயிருக்கிறதென்று மேலேயிருக்கிற "கதமஸத: ஸஜ்ஜாயேத" இது முதலிய வாக்யத்தால் அறியப்படுகிறது. "கதம்அஸத:" இது முதலான வாக்யமானது வைசேஷிகனுடைய மதநிரஸனத்தில் கருத்துள்ளதேயொழிய க்ஷணிகவாதிகளை நிரஸிப்பதில் நோக்குள்ளதுமல்ல, சூன்யவாதிகளை நிரஸிப்பதில் நோக்கமுள்ளதுமல்ல. க்ஷணிகவாதி, சூன்யவாதி, இவ்விருவர்கள் விஷயமாக நிராஸம்செய்யப்பட்டிருந்தபோதிலும ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வவிஜ்ஞானமானது வைசேஷிகமதநிராஸத்தை அபேக்ஷித்திருப்பதாலும "தத்தைகஆஹு: அஸதேவேதமக்ர ஆஸீத" என்று ஆரம்பிக்கப்பட்டிருப்பதாலும். க்ஷணிகத்வமும் சூன்யத்வமும் காலவிசேஷத்தில் உண்டாகிறதில்லையன்றோ. ஆதலால் "தத்தைகஆஹு:" இது முதலிய வாக்யம் அஸத்கார்யவாதநிராஸத்தில் நோக்குள்ளது. "குதஸ்துகலு ஸோம்யைவம் ஸ்யாத்" என்பதனால் ம்ருத்தினின்றுமுண்டான கடம் முதலியவைகளுக்கு ம்ருத்ஸ்வரூபத்வம்போல அஸத்தினின்று முண்டான வஸ்துவுக்கு அஸத்ஸ்வரூபத்வம்ப்ரஸங்கிக்குமென்று கருத்து. உத்பத்தியாவது திரவ்யத்திற்கு உண்டாகிற ஓர் அவஸ்தை என்கிற இந்த அர்த்தமானது, "வாசாரம்பணம்" என்கிற இந்த வாக்யத்தால் சிக்ஷிக்கப்பட்டிருக்கிறது - அதை அவலம்பித்து "கதம்அஸத: ஸஜ்ஜாயேத" என்று உரைக்கப்படுகிறது எவ்வாறு நிராச்ரயவஸ்துவுக்கு ஸம்பவமென்று அர்த்தம். "ததைக்ஷத" என்பதினால் ஸர்வஜ்ஞத்வமும "அஸ்ருஜத" என்பதினால் நிமித்தத்வமும "பஹுஸ்யாம்" என்பதினால் உபாதானத்வமும அந்த நிமித்தத்வ உபாதானத்வமிரண்டுக்கும் அநுகுணமான ஸர்வசக்தித்வமும ஸத்யஸங்கல்பத்வமும் "அநேநஜீவேந ஆத்மநா அநுப்ரவிச்ய" என்று ஸர்வாந்தரத்வமும சொல்லப்பட்டதாக ஆகிறது. ஜீவேந ஆத்மநா — ஜீவனை சரீரமாகக்கொண்ட என்னால் என்று அர்த்தம். "ஸிம்ஹேந பூத்வா ஸஹஸேநமயா தத்தா: வ்யாக்ரேண பூத்வா ஸஹஸேநமயா த்தா:" என்பதுபோல. ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களையுடைய பரமாத்மாவுக்கு அதற்கு விபரீதமான ஸ்வரூபத்தோடுகூடின ஜீவனோடு ஐக்யம் ஸம்பவியாததாலும, "யஸ்யாத்மாசரீரம்" இது முதலிய வசனத்தாலும "ததநுப்ரவிச்ய" என்று அசேதநத்தைப்போல ஜீவனிடத்திலும அநுப்ரவேசச்ரவணமிருப்பதாலும், சரீரவாசக சப்தத்திற்கு சரீரிபர்யந்தத்வமானது முக்யமென்பது பொருந்துதலாலும இதுவே அர்த்தம் - "ஸதாயதநா:" என்பதனால் ஸர்வாதாரதையும் அதனாலேயே ஸர்வநியமனமும ஸித்தித்தது. "ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி த்யாவாப்ருதிவ்யௌ வித்ருதே திஷ்டத:" என்று ப்ரசாஸனத்தினால் தாரகத்வம கேட்கப்படுதலால். இவ்வண்ணமாக சரீரிக்கு லக்ஷணங்களாக இருக்கிற ஸர்வாதாரத்வ ஸர்வநியமன ஸர்வாந்தரத்வங்களாலே ப்ரஹ்மம் ஜகத்தையே சரீரமாகக்கொண்டது என்பது சொல்லப்பட்டது. ஆதிசப்தத்தால் ஸ்ருஷ்டிக்கு உபயுக்தங்களாயிருக்கிற வேறு ச்ருதிகளால் ஸித்திதிருக்கிற குணங்கள் க்ரஹிக்கப்படுகின்றன. "ஐததாத்ம்யம்" என்பதினால் உலகமனைத்துக்கும ப்ரஹ்மாத்மகத்வமும் அறியப்படுகிறது. "தத்ஸத்யம்" என்பதனால் அந்த ப்ரஹ்மாத்மகமாயிருத்தலாலேயே ஜகத்துக்கு ப்ராமாணிகத்வம - ஜகத் தன்னிடத்தில் நிலைபெற்றிருப்பதாக உண்டாகிற எண்ணம் ப்ராந்தி என்று அர்த்தம். ஆகையால் எல்லா உலகத்துக்கும் அவன் ஆத்மா "ஐததாத்ம்யம இதம ஸர்வம ஸ ஆத்மா" என்கிற நிர்தேசமானது

"ராமாநுஜம் லக்ஷ்மண பூர்வ ஜஞ்ச" என்பதுபோல் அந்யோந்ய ஸம்பந்தித்வ தாத்பர்யாதிசயத்தால் செய்யப்பட்டிருக்கிறது. அன்றிக்கே "ஸத ஆத்மா அந்தர்யாம் யம்ருத:" என்பதுபோல எல்லா உலகத்துக்கும அந்தர்யாமியாயிருப்பதால் உனக்கு ஆத்மா அவன என்று அர்த்தம். ஆகையால் "த்வம்" சப்தமென்ன, அதினர்த்தமென்ன, அது விஷயமான புத்தியென்ன இம்மூன்றும் 'தத' சப்தவாச்யமான ப்ரஹ்ம பரியந்தங்களாக இருக்கின்றனவென்று "தத்வமஸி" என்ற வாக்யத்திற்கு பொருள் என்று கூறுகிறார்—ஏவம்பூத என்று 'ஏவம்பூத' சப்தத்திறைல் 'தத்' பதத்துக்கு ப்ரக்ருத பராமர்சித்வம் ஸூசிப்பிக்கப்பட்டது. இந்த ஸத்வித்யைக்கு ஸவிசேஷமான வஸ்துவினிடத்திலேயே ஆறுவிதமான தாத்பர்யலிங்கங்களிருக்கின்றன. தொடக்கத்தில் "உத்தமாதேசம ப்ராக்ஷ்ய:" என்கிற ஆதேசசப்தத்தினுல் ப்ரசாஸிதா கூறப்படுகிறான். இந்த விஷயத்தில் இரண்டு ச்லோகங்கள் ஆசார்யபாதாளால் அநுக்ரஹிக்கப்பட்டிருக்கின்றன "சாந்தோக்யே கேசிதாஹுராதிசதிருத்தமாதேசம ப்ராக்ஷ்ய இத்யத்ராஙபூர்வஸ்ஸூபதேசம ப்ரகடயதி ஸதோநப்ரசஸ்திமபஜேந்த: | நோகர்தர்யஸ்தி கர்மணயகணிவஞ்ஜிஹ ஸதகர்த்ருசாஸ்தௌ ந கர்மஸ்யாத் ஸ்யாத்கர்மோபதேசே ததிசமுத்தமாதேசவாசோபதேச்யம் || அதரப்ரூம: ப்ரசாஸ்திம் வததிதிசிரஸாவாங்மூகோநோபதேசம சாஸ்தௌ ஸோzதிப்ரஸித்தோ நஹிபரஇஹசாபேக்ஷிதார்த்த ப்ரஸங்க: | யுக்தோஸாதாரணோக்த்யா வஞ்கணிகரணேப்யத்ர வைவக்ஷிகத்வம் சாப்தோக்தம் காரகாணுமநுகரணதயாகர்தரிஸ்யாத்விவக்ஷா || என்று. (இதன் அர்த்தம் - சாந்தோக்யத்தில் "உத்தமாதேசம ப்ராக்ஷ்ய." என்கிறவிடத்திலுள்ள ஆங் என்கிற உபஸர்கத்தை முந்திவைதத்துக்கொண்டிருக்கிறதும வஞ் ப்ரத்யயத்தை ஈற்றில்கொண்டதுமான திஶ என்கிற தாதுவானது உபதேசம் என்கிற அர்த்தத்தை வெளிப்படுத்துகிறது. ஸச்சப்தவாச்யமான பரமாத்மாவினுடைய சாஸனத்தை வெளிப்படுத்துகிறதில்லை. வஞ் ப்ரத்யயமானது கர்த்தா என்கிற அர்த்தத்தில் சப்தசாஸ்த்ரத்தில் கிடையாது. கர்மத்வ ரூபார்த்தத்தில் வஞ் பாணினியினுல் விதிக்கப்பட்டிருக்கிறது. இந்தவிடத்தில ஸச்சப்தவாச்யமான பரமாத்மா என்கிற கர்த்தாவினுடைய சாஸனத்தில் கர்மணிவிஹிதமான வஞ் வாராது. கர்மோபதேசத்தில் வஞ் ப்ரத்யயமிருக்குமேயானுல் உத்தமாதேச என்கிற சுருதிவாக்யத்தினுல் அந்த கர்மத்வரூபமான அர்த்தமே உபதேசிக்கத்தக்கதாகுமென்று சொல்லத்தகாது என்று சிலர் கூறுகிறார்கள். இந்த விஷயத்தில் மறுமொழி கூறுகிறோம—முதலில ஆங் என்கிற உபஸர்கத்தையுடைய இந்த திஶி என்கிற தாதுவானது ப்ரசாஸ்தியைக்கூறுகிறது. உபதேசத்தைக் கூறுகிறதில்லை அந்த ஆதேச சப்தமானது சாஸனரூப அர்த்தத்தில் மிக்க ப்ரஸித்தி பெற்றிருக்கிறது - இங்கேயும வேறிடத்திலும அபேக்ஷிக்கப்பட்ட அர்த்தத்துக்கு ப்ரஸங்கமில்லையன்றே - அஸாதாரணோக்தியினுல் வஞ் ப்ரத்யயமானது இங்கு கரணத்வரூபார்த்தத்திலும விதிக்கப்பட்டிருக்கிறது என்பது யுக்தம காரகங்களுக்கு வைவக்ஷிகத்வம் சாப்திகர்களால் உரைக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் கரணத்வரூபார்த்தத்தில் விதிக்கப்பட்டிருந்தபோதிலும் இந்தவிடத்தில் வஞ் ப்ரத்யயத்துக்கு கர்தரிவிவக்ஷை இருக்கலாம் என்பதனுல் இஷ்டஸித்தி)

ஆதேச சப்தத்தால் உபதேசிக்கத்தக்க வஸ்து கூறப்படுகிறது. உபதேசம் என்பது ப்ரக்ருதியினது அர்த்தம். ப்ரத்யயார்த்தம் கர்மத்வம்:— "அகர்தரிசகாரகேஸம்ஜ்ஞாயாம்" என்கிற பாணினி ஸூத்திரத்தினுல் கர்த்தாவைக்காட்டிலும் வேறான காரகங்களில் வஞ் ப்ரத்யயம விதிக்கப்பட்டிருப்பதால் உபதேசத்தில் ப்ரஹ்மத்துக்கு கர்மத்வம் உபபந்நமாவதாலும். ப்ரசாஸனத்திலோவென்றால் ப்ரஹ்மமானது கர்மாவல்ல.

பின்னேயோ கர்த்ரு கர்தாவைக்காட்டிலும் வேருக இருக்கிற காரகங்களிலன்றே வஞ் ப்ரத்யயம் விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த இடத்தில் "கர்தரிச ப்ரத்யயம்" என் பது பொருந்தாது—"கிஙிதிச" என்று குணத்தை நிஷேதித்திருப்பதால் ஆதேச சப்த ரூபம் ஸித்திபெறுது. "பசாத்யச் ப்ரதயயம் என்பதும் பொருந்தாது. திசி தாது வானது இக்ப்ரத்யாஹார கடகமான இ என்கிற அக்ஷரத்தை ஈற்றுக்கு மூந்தின எழுத் தாகக்கொண்டிருப்பதால். "இகுபதாத்க:" என்கிற அபவாத ஸூத்ரத்திஞல் ப்ரத்யயம் வருவதால் குணம்வாராது—ஆதலால் இந்த ஆதேசசப்தமானது வஞ் ப்ரத்யயாந்தமே - அந்த ப்ரத்யயமோ கர்தா என்ற அர்த்தத்தாலே விதிக்கப்படாத திஞல் கர்மார்த்த்வமே யுக்தமாதலால் உபதேசிக்கத்தக்கதே ஆதேச சப்தத்திற்கு வாச்யமென்று. இந்த விஷயத்தில் மறுமொழிசொல்லப்படுகிறது. ப்ரஸித்தி ப்ராசுர் யத்தால் சாஸனம் ப்ரக்ருதியின் அர்த்தம். அங்ஙனமில்லாவிடில் ஸ்வாரஸ்ய பங்கம் வருவதால். முதலில் ஆ என்கிற உபஸர்கத்தையுடைய திசி தாதுவானது நியோக்தா வினுடைய ப்ரயோஜனத்தைக்கூறுகிறது. முதலில் உப என்கிற உபஸர்க்கத்தை யுடைய திசி தாதுவானது நியோஜ்யனுடைய ப்ரயோஜனத்தைக் கூறுகின்றதல்லவோ என்று ந்யாஸகாரர் சொல்லுகிருர் - நியோக்தரி ப்ரயோஜனம் யஸ்ய - எந்த அர்த்தத் துக்கு நியோக்தாவினிடத்தில் ப்ரயோஜனமிருக்கிறதோ, அர்த்தத்துக்கு வாசகம் என்று அர்த்தம். இவ்வண்ணம் மற்றவிடத்திலும் - மேலும் உபதேச்யதவமென்பது லௌ கிகமான கர்மபாகார்த்தத்துக்கும் அலௌகிகமான ப்ரஹ்மபாகார்த்தத்துக்கும் பொதுவா னது - சாஸித்ருத்வமோவெனில் ப்ரஹ்மத்துக்கு அஸாதாரணம். "அந்த: ப்ரவிஷ் டச்சாஸ்தாஜ நாநாம்", "ஏதஸ்யவா அக்ஷரஸ்யப்ரசாஸனே கார்கி" இது முதலிய ச்ருதிகளால் நிருபாதிகமான ப்ரசாஸனமானது ப்ரஹ்மத்துக்கே உரித்தமென்று ச்ருதி சொல்லுவதால். நிருபாதிகமான உபதேச்யத்வமானது ப்ரஹ்மத்துக்கே உரித்தது என்று சொல்லப்படுமேயாஞல் அல்ல. இஷ்டப்ராப்தி, அநிஷ்ட நிவ்ருத்தி, அவைக ளுக்கு ஸாதனங்கள் இவைகளுக்கு பொதுவாயிருப்பதால். என்றாலும் அபரிமிதமான ஸுகப்ராப்தி து:கநிவ்ருத்தி முதலியது ப்ரத்யக்ஷமாக உபதேசிக்கத்தக்கதாக இருக்கலாம். ஆயினும் ஸம்ஸார நிவ்ருத்தி, ப்ரஹ்மம், ப்ரஹ்ம உபாஸனங்கள் இவை அனைத்துக்கும் உபதேச்யத்வமென்பது ஸாதாரணம் - ப்ரச்நம் செய்யத்தக்க வஸ்துவுக்கு உபதேச்யத் வம் அர்த்தத்தால் ஸித்தித்தது. ஆதலால் உபதேச்யத்வகதநம் ப்ரயோஜனமற்றது. "யேநாச்ருதம் ச்ருதம்" இந்த ச்ருதிவசநத்தோடு ஏகவாக்யத்வமிருப்பதால். தன்னை கற் றறிந்தவரே அறிந்ததனுல் மற்றவைகளின் அறிவுக்குக்காரணமாயிருத்தல் என்கிற தன் மையிஞல் விசேஷிக்கப்பட்டிருக்கிற உபதேச்யத்வமானது அஸாதாரணமென்றுசொல்லப் படுமேயாஞல், அப்படியிருந்தபோதிலும் அப்படிப்பட்ட உபதேச்யத்வமானதுப்ரதிஜ்ஞா வாக்யத்தாலும் ப்ரஷ்டவ்யத்வயுக்தியிஞலும் அர்த்தஸித்தமாயிருப்பதுபற்றி அநபே க்ஷிதமான உபதேச்யத்வத்தைச்சொல்வதைக்காட்டிலும் அபேக்ஷிதமாயிருக்கிற ப்ரசாஸித் ருத்வமே சொல்லத்தக்கது என்பது பொருத்தமுள்ளது. "யேநாச்ருதம்" என்பதி ஞல் உபாதாநத்வம் ஸித்தித்திருக்க, ப்ரசாஸித்ருத்வத்திஞலன்றே நிமித்தத்வம் ஸித் திக்கும்—ப்ரபஞ்சத்திற்கு ப்ரஹ்மத்தைத்தவிர்த்து வேறு நிமித்தமிருக்குமேயாஞல் ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வவிஜ்ஞானத்வம் பொருந்தாது. ஆதலால் ப்ரதிபாதிக்கவேண் டுமென்று விரும்பப்பட்டிருக்கிற வஸ்துவை விவக்ஷிதமான அஸாதாரண ஆகாரத்தோடு கூடியதாகவே ப்ரதிபாதிப்பது தகுதியுள்ளது. வஞ் ப்ரத்யயமானது கரணரூபார்த் தத்தில் வ்யுத்பந்நமாக இருப்பதால் விவக்ஷாத:காரகாணும் ப்ரவ்ருத்தி:" என்கிற சாப் திகர்களால் கூறப்பட்ட ந்யாயத்தாலே கர்தாவினிடத்திலேயே வேறு கரணத்தை அபேக்ஷியாமல் ஸாதகதமத்வத்தை விவக்ஷிப்பதிஞல் அவ்வாறு ப்ரயோகம் உபபந்ந

மாறாது. அகாரி என்கிற சூத்ரத்துக்கு காணதவ விவக்ஷயில்லாவிடில் கர்த்தாவி னிடத்தில் அஸாக்ஷாதலால நிவ்ருத்தி ப்ரயோஜனம உபதேச பக்ஷத்தில் ப்ரகருத் யர்த்தத்தின் அஸ்வாரஸ்யமும் ப்ரத்யயத்தின் ஸ்வாரஸ்யமும வருகிறது. ப்ரசாஸன பக்ஷத்திலோவென்றால் ப்ரத்யயத்தின அஸ்வாரஸ்யமும் ப்ரதானபூதமான ப்ரகருத்ய ர்த்த ஸ்வாரஸ்யமும் அர்த்தத்தின ஔசித்யமும் என்பதிறைல் வைஷம்யம். ஆதலால் ப்ரசாஸ்த்தாவே ஆதேச சப்தத்தால் சொல்லத்தக்கவனென்று ஸ்வீகரிப்பது யுக்தம். இவ்வண்ணம் உபக்ரமத்தில் நிருபாதிகமான ப்ரசாஸனகுணஸம்பந்தம உரைக்கப்பட் டது. அவ்வண்ணமே ஜகதுபாதானத்வமும் நிமித்தத்வமும் அதற்கநுகுணமான ஸர் வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலியன அறியப்பட்டது. உபஸம்ஹாரத்திலும் தத்த்வ மஸி என்கிற ஸாமாநாதிகரண்யத்தால் ஜீவாந்தர்யாமித்வம் என்கிற குணவிசேஷம் உரைக்கப்பட்டது. இதே அர்த்தமானது அநேகம் தடவை ஆவ்ருத்திக்கப்பட்டிருப்ப தால் அப்பியாஸமுமிருக்கிறது இவ்வண்ணம ப்ரஹ்மத்தினுடைய ஜகத்காரணத்வம, ஜகதந்தராத்மத்வம் முதலிய குணங்கள் ப்ரமாணாந்தரத்தால் அப்ராப்தமாயிருப்பதால் அபூர்வதையும் ஸித்தித்தது. இவ்வண்ணம் உபாஸகனுக்கு “ தஸ்யதாவதேவசிரம் யாவந்நவி மோக்ஷ்யே அதஸம்பத்ஸ்யே ” என்று சரீரம கழிந்த உத்தரக்ஷணத்தில் மோக்ஷம் கேட்கப்படுவதால் பலனுமிருக்கிறது புத்ரனைக்குறித்து பிதாவினுடைய ப்ரதிவசன ரூபமாகயிருப்பதால் அர்த்தவாதமும் அடையப்பட்டது மருத்பிண்டம் முதலிய திருஷ்டாந்தத்தின் உபபாதனத்தினால் உபபத்தியும் ஸித்தித்தது. இந்த மூன்று திருஷ்டாந்தத்திலும் விவர்த பக்ஷத்துக்கநுகுணமான ஒரு திருஷ்டாந்தமும் காணப்படவில்லை, பின்னையோ பரிணாமபக்ஷத்துக்கநுகுணமாகவே காணப்படுகிறது. தார்ஷ்டாந்திக விஷயவாக்யத்திலும் “ ததைக்ஷத பஹுஸ்யாம் ” என்று உரைக்கப்பட்ட தேயொழிய “ ததப்ரமத் ” என்று உரைக்கப்படவில்லை - ஆதலால் இந்த சுருதியில் விவர்தபக்ஷ ப்ரஸக்தியுமில்லை. சுருத்யந்தரங்களிலும் “ ததாத்மாநம்ஸ்வயம் அகுருத ” இது முதலியவை கேட்கப்படுகிறதே ஒழிய “ வ்யவர்த ” என்று கேட்கப்படவில்லை. ஸூத்திரமும் பரிணாமாத் என்று இருக்கிறதேயொழிய விவர்தாத என்று இல்லை ஸ்ம் ருதிகளிலும் “ கடகமகுடகாணிகாதிபேதை: கநகமபேதமபீஷ்யதேயதைகம் - க்ஷிதி தலபரிணாமதோ நிலாந்த: ”—(அர்த்தம் ஒரு ஸ்வர்ணமானது கடகம் மகுடம் செவிப்பூ முதலிய பற்பல ஆபரண பேதங்களாலே வேறுபாடுள்ளதாக எண்ணப்படுகிறது - பூமி யினது பரிணாமத்தாலே.) இது முதலியவைகளில் பரிணாமபக்ஷங்களே காணப்படுகின் றன. ஆதலால் சுருதிஸ்மருதி ஸூத்ரங்களின் ஸ்வாரஸ்யத்தால் பரிணாமமே ஒப்புக் கொள்ளத்தக்கது அந்த பரிணாமமும ஸத்வாரகமாகவே இருப்பதற்குத்தகுதியுள்ளதாக இருக்கிறது—நிர்விகாரத்வ நிர்தோஷத்வ, அநுப்ரவேச சரீர சரீரிபாவாதிகளை விஷய மாகக்கொண்ட அநேக ச்ருதிஸ்வாரஸ்யத்தாலும், அப்படியில்லாவிடில் அவைகளுக்கு விரோதம் ப்ரஸங்கிப்பதாலுமென்று ஏகவிஜ்ஞானத்தால் ஸர்வவிஜ்ஞான ப்ரதிஜ்ஞா வாக்யம் ஏது ? அதின உபபாதநம் எவ்வாறு ? என்று ஆசங்கைவரின இதின் விஸ் தாரம் வேதார்த்த ஸங்க்ரஹத்தில என்று கூறுகிறார்—ப்ரபஞ்சித: என்று. இந்தவிடத் தில் அபேக்ஷிக்கப்பட்ட ஆத்மமானது எவ்வாறு அறியப்படப்போகிறதென்று கேட்கப் படுமேயாகில் கூறுகிறார்—அத்ராபி என்று. நிபுணதரம் - அந்த அதிகரணமானது இந்த அர்த்தத்தையே விஷயமாகக்கொண்டிருப்பதால் என்று கருத்து.

---

“ ஸய ஆத்மா தத்த்வமஸி ” (௬-௮-௧-௫) இத்யத்ராவிசார

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

" பீஷா " 'இது முதலிய ச்ருதியினால் ப்ரஹ்மகுணங்களைத்தொடங்கி 'தே யே சதம்' என்று தொடர்ந்து க்ரமமாக க்ஷேத்ரஜ்ஞர்களுடைய ஆநந்தாதிசயத்தைக்கூறி 'யதோ வாசோ...விதவான்' என்று இந்த ச்ருதி ப்ரஹ்மத்தினுடைய கல்யாண குணங்களின் அளவிறந்த தன்மையை அதிக ஆதரத்துடன் கூறுகிறது.

ச்ருதப்ரகாசிகை—

பிறகு இந்த ‡ அநுவாகத்தின் முடிவில் " யதோவாசோ ... ஸஹ " என்கிற ச்ருதியினால் வாக்குக்கும மனதிற்கும் நிவ்ருத்திசொல்லி இருப்பதால் நிர்குணத்வம் பலித்தது. ஆகையால் அந்த ச்ருதியுடன் @ ஐகார்த்த்யமிருப்பதால் ஸத்யஜ்ஞாநாதி வாக்யம நிர்விசேஷபரமென்று சங்கைவரின் ஆர்த்தமான குணநிஷேதபரமாக அந்யனால் கூறப்பட்டிருக்கிற இந்த வாக்யத்திற்கு சொலலப்பட்ட அர்த்தம் அநுகுணமாக இருப்பதை § உபபாதிக்கிறார்—'பீஷாஸ்மாத்' இது முதலியதால். 'பீஷாஸ்மாத்' என்கிற இந்த ச்ருதியினால் கட்டளை இடுபவனுடைய ஸ்வபாவம கூறப்படுகிறது. ψ 'க்ஷேத்ரஜ்ஞாநந்தாதிசயமுக்த்வா இதி' இந்த இடத்தில் * நிர்விசேஷத்வம் ப்ரதிபாதிக்கப்படவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்குமேயானால் வரிசையாக குணங்களினுடைய குறைவைக்கூறி ஸர்வாபாவத்தில் பர்யவஸித்தல் பொருத்தமுள்ளதாக ஆகும். இந்த விடத்திலேயோ க்ரமமாக குணங்களினுடைய ஆதிக்யத்தைக்கூறி வாக்குக்கும் மனதிற்கும் நிவ்ருத்தியைச்சொன்னது ஆநந்த்யத்தினாலே என்று அபிப்ராயம். அதை உபபாதிக்கிறார்— "ஸங்க்யாதும நைவ சக்யந்தே குணாதோஷாஶ்ச சார்ங்கிணி. ஆநந்த்யாத் ப்ரதமோராசி: அபாவாதேவ பஶ்சிம:" என்று. (எம்பெருமானிடத்திலுள்ள குணங்களும் தோஷங்களும் கணக்கிடுவதற்கு முடியவேமுடியாது, முதன்மையான குணராசியானது முடிவில்லாமையாலும், பிந்தின தோஷராசியானது இல்லாமையாலும் முதலில் மநுஷ்யாநந்தத்தைத்தொடங்கி க்ரமமாக அதிசயங்காண்பிக்கப்பட்டது. 'யுவா ஸ்யாத் ஸாது யுவாத்யாயக:' ஸாது-விதியை மீறாமல். அன்றிக்கே. நல்ல ஸம்ப்ரதாயத்தால் ஸித்தித்திருப்பதால், ஸ்வர, வர்ணம், முதலியவைகளின் தவறுதலில்லாதது, யுவசப்தத்தால் புதிதாயிருக்கும் தன்மை விவக்ஷிக்கப்பட்டது. மறதியின்மையால் எவ்வாறு நித்யம் புதிதாயிருக்குமோ அவ்வண்ணமாக அத்யயநமுள்ளவன் என்று அர்த்தம். அன்றிக்கே, தனோடு ஸமவயதுள்ளவர்களான எல்லோருக்கும் $அத்யாபகன் - அவர்களைக்காட்டிலும் அதிக ஜ்ஞாநமுள்ளவனென்று அர்த்தம். ஆசிஷ்ட: - மிக்கவிரைவுடன் கார்யம்செய்கிறவன். அன்றிக்கே, நன்றாய் ஆஹாரத்தை உட்கொள்வதில் திறமையுள்ளவன்-ரோகமில்லாதவனென்று அர்த்தம். அல்லது ஆசீர்வாதத்திற்குவிஷயமாயிருப்பவன்.

‡ அநுவாகம்—வேதத்தினது ஓர் உள்பிரிவும்.

@ ஐகார்த்த்யம்—ஒரே பொருளை உணர்த்தும் தன்மை.

§ உபபாதனம்—தெளிவாகக்கூறுதல். ψ க்ஷேத்ரஜ்ஞன்—ஜீவன்.

*நிர்விசேஷத்வம் — விசேஷங்களில்லாமலிருத்தல்.

$ அத்யாபகன்—படிப்பிக்கிறவன்.

ஸர்வஜனங்களையும் ரஞ்சிக்கச்செய்பவன் என்று அர்த்தம். "ஸர்வாந்தேவாந் நமஸ்யந்தி" என்பதுபோல, பலிஷ்ட:- மனோபலமுள்ளவன். த்ரடிஷ்ட: என்று சரீரபலம் கூறப்பட்டிருப்பதால். அனறிக்கே த்ரடிஷ்ட:, மிக்கதிடமுள்ளவன் - நிலைதவறின ஸ்வபாவமில்லாதவன் என்று அர்த்தம். பலிஷ்ட: சாரீரமானஸ ஸர்வவித பலங்களுமுள்ளவன் வித்தஸ்யபூர்ணு-ஐச்வர்யத்தால் நிறைந்தது "பூரணகுணஸுஹிதார்த்த ஸத்வ்யயதவ்ய ஸமாநாதிகரணேந", என்கிற ஸூத்திரத்தினால் ‡பாணினியினால் ஆறும்வேற்றுமை உறுபுவருவதற்கு அநுமதிகொடுக்கப்பட்டிருப்பதனால் ஸஏகோமாநுஷ ஆநந்த: - இவ்வாறு குணஸமுதாயத்தையும் விபூதியின் நிறைவையும சொல்லிவிட்டு "ஸஏகோமாநுஷஆநந்த:" என்கிற ச்ருதியினால் ஸ்வரஸமாக அவனுக்கே ஆநந்தத்வம் கூறப்பட்டிருக்கிறது. அநுகூலத்வமன்றோ ஆநந்தத்வம். || நிவாத்திக்கத்தக்க அநிஷ்டத்தை இஷ்டஸாதனத்தை இரண்டையும் அபேக்ஷியாமலிருக்கிற இஷ்டத்வமே அநுகூலத்வம். முற்கூறப்பட்ட லக்ஷண ஸம்பந்தத்தினால் குணவிபூதிகளிரண்டிற்கும ஆநந்தத்வம் உபபந்நமாகிறது. அதை விஷயீகரிக்கிற ஜ்ஞாநத்திற்கும அநுகூலத்வமானது விஷயாநுகூலத்வத்தால செய்யப்பட்டதென்பது அந்வயவ்யதிரேகங்களால் ஸித்திக்கிறது. இப்படிச் சொல்வதில் ச்ருதிஸ்வாரஸ்யமும் ஸித்திக்கிறது. குணவிபூதிகளுடைய மேன்மையைக்கூறி அது ஆநந்தமென்றல்லவோ உரைக்கப்பட்டிருக்கிறது. அதை விஷயமாகக்கொண்ட ஜ்ஞானமானது ஆனந்தமென்று கூறப்படவில்லை. * யுவத்வம் முதலிய அநேக குணங்களையும் விபூதியையும் சொல்லிவிட்டு அவைகளின் ஸமுதாயத்தை ஆநந்தசப்தத்தால் நிர்தேசித்து அந்த ஆநந்தத்திற்கு நிரதிசயத்வத்தை ப்ரதிபாதித்திருப்பதால் எல்லா குணங்களுக்கும் விபூதிக்கும் † அநவதிகாதிசயத்வம ப்ரதிபாதிக்கப்பட்டதாக ஆகிறது. அநுகூலஜ்ஞாநத்வமே ஆநந்தத்வம் என்றதனால் குணவிபூதிவிஷயமான ஜ்ஞாநத்திற்கு ஆநந்தத்வமிருந்தபோதிலும அந்த ஆநந்தத்திற்கு நிரவதிகாதிசயத்வத்தைக்கூறினதினால் குணவிபூதிகளுக்கும அநவதிகாதிசயத்வம அர்த்தத்தால் சொல்லப்பட்டதாக ஆகிறது. அந்த ஆநந்தத்தினுடைய அளவிறந்த தன்மை குணவிபூதிகளினுடைய அளவிறந்த தன்மையைக்காரணமாகக்கொண்டிருப்பதால். ஆரப்ய என்று. உபக்ரம வாக்யத்திற்குஅநுகுணமாக உபஸம்ஹார வாக்யமானது அர்த்தத்தில் சேர்ப்பிக்கத்தக்கதென்று கருத்து. "ச்ரோத்ரியஸ்ய சாகாம ஹதஸ்ய" என்கிற வாக்யங்களால் முகதாநந்தத்திற்கு பகவதாநந்தஸாம்யம் உரைக்கப்பட்டதாக ஆகிறது. பத்தசையில் நிரதிசயமான ஆநந்தத்திற்கு ஸம்பவமில்லாமையால் ச்ரோத்ரிய: ப்ரஹ்மநிஷ்டன். அகாமஹத:- அவித்யை முற்றிலும் நசித்தபடியினால் ஸமஸ்தமான ஸாம்ஸாரிக போகங்களால் கெடுக்கப்படாதவன். "ஸஏக: ப்ராஜாபதேராநந்த:" என்கிற வாக்யத்தை ஈற்றில்கொண்ட ச்ருதியினால் க்ஷேத்ரஜ்ஞனுடைய ஆநந்தாதிசயம் கூறப்பட்டது. "ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:" என்று பகவதாநந்தம் கூறப்படுகிறது. இந்த வாக்யத்திலுள்ள ப்ரஹ்மாநந்தத்தை நான்முகனுடைய @ ஆநந்த பரமாகக்கூறுமபக்ஷத்தில் ப்ரஹ்ம சப்தத்திற்கு ஸ்வாரஸ்யமில்லாமல் போகிறது. "பரம்ஜைமினிர் முக்யத்வாத்" "ஸ்யாச்சைக

---

|| நிவர்திக்கத்தக்க—விலக்கத்தக்க.

‡ பாணினி—இவர் 3982 ஸூத்ரங்களடங்கிய எட்டு அத்தியாயங்களுள்ள வ்யாகரண ஸூத்ரங்களைச்செய்தவர். இவருக்கு 'ஸாலாதுரீயர்' என்று மற்றொரு பெயருமுண்டு.

$விபூதி—நியாம்யவஸ்து. * யுவத்வம—யௌவநம.

† அநவதிகம்—எல்லை இல்லாதது. ¶ உபக்ரமம்—தொடக்கம்.

‡ உபஸம்ஹாரம்—முடிவு. @ ஆநந்தம—அனுகூல ஜ்ஞானம்.

ஸ்யப்ரஹ்ம சப்தவத்" என்று ப்ரஹ்ம சப்தத்திற்கு அந்த ப்ரஹ்மத்தினிடத்திலேயே முக்யவ்ருத்தி இருப்பதாக ஸூத்ரகாரரால் கூறப்பட்டிருப்பதாலும், பாஷ்யத்தில்முதல் ஸூத்ரத்திலிருக்கும் ப்ரஹ்மசப்த வியாக்கியான ஸமயத்தில் விஸ்தரிக்கப்பட்டிருப்பதாலும் "ப்ரஹ்மவிதாப்நோதிபரம் ப்ரஹ்மணேவிபஸ்சிதா. ஆநந்தம் ப்ரஹ்மண:, அஸத் ப்ரஹ்மேதிவேதசேத், அஸ்திப்ரஹ்மேதிசேத்வேத" என்கிற ப்ரகரணத்திலிருக்கிற ப்ரஹ்ம சப்தங்களுக்கு ப்ரஹ்மபரத்வமிருப்பதால் ப்ரகரணவிரோதமும் "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வான்" என்று முந்தியும் பிந்தியும் ஆநந்தப்ரதியோகியான ஷஷ்ட்யந்தமான ப்ரஹ்ம சப்தத்தின் ஸ்வாரஸ்ய விரோதமும், "ஸைஷாநந்தஸ்ய" என்று தொடங்கப்பட்ட ப்ரஹ்மாநந்தத்திற்கு நான்முகனுடைய ஆநந்தத்தால் உபஸம்ஹாரம்செய்திருப்பதும், "ததப்யேஷ ச்லோகோபவதி" என்று ப்ரஹ்மாநந்தத்தைத் தொடங்கி இனி கூறப்படப்போகிற ச்லோகத்திற்கு முற்கூறப்பட்ட விஷயத்வத்திற்கு விரோதமும் "ஸ ஏக: ப்ரஜாபதே:" என்கிற உபபதமில்லாத ஏகவசநாந்தமான ப்ரஜாபதி சப்த ஸ்வாரஸ்யபங்கமும். அதுஜாத்யேகவசனம் என்பது கூடாது. பஹுத்வத்தையும் ஏகத்வத்தையும் விவக்ஷிக்குங்கால் பஹுவசநமும் ஏகவசநமும் வரக்கூடிய ப்ரகரணமாயிருப்பதால். "தேவாநாம், தேவகந்தர்வாணாம், மநுஷ்யகந்தர்வாணாம், இந்த்ரஸ்ய, ப்ருஹஸ்பதே:, ப்ரஜாபதே:", என்றல்லவோ நிர்தேசிக்கப்படுகிறது. ஆகையால் ப்ரஜாபதி சப்தமானது நான்முகனையே உணர்த்துகிறது. "ஸ ஏகோ ப்ருஹ்மண:" என்கிற இடத்தில் ப்ரஹ்ம சப்தம் பகவானைச்சொல்லுகிறது. "தேயேசதம், ஸ ஏக:" என்று பகவதாநந்தத்திற்கு பரிச்சிந்நத்வம் எவ்வண்ணம் என்று கூறப்படுமேயானால் பரிச்சிந்நத்வமில்லை "ஒரு அரைக்ஷணத்தில் அநேக யோஜனை தூரம் செல்லுகின்ற சூர்யனுக்கு எய்யப்பட்ட அம்புபோல் செல்கின்றான்" என்கிற இது முதலிய வாக்யங்களில் ஸாம்யத்தைச் சொல்லுதலானது எவ்வாறு கதியின் மாந்த்யநிவ்ருத்தியில் நோக்குள்ளதோ பரிச்சிந்நத்வபரமன்றோ, அவ்வாறே "தேயே சதம் ஸ ஏக:" என்கிற நிர்தேசமும் சதுர்முகனுடைய ஆநந்தத்தைக்காட்டிலும் ப்ரஹ்மாநந்தத்திற்கு ஆதிக்யத்தைச் சொல்லுவதில் அபிப்ராயமுள்ளதேயொழிய பரிச்சேதத்தில் நோக்குள்ளதல்ல. அன்றிக்கே "தேயே சதம், ஸ ஏக:" என்கிற நிர்தேசத்திற்கு ஸங்க்யாவிசேஷத்தில் நோக்கு இருந்தபோதிலும் ஆநந்தத்திற்கு அபரிச்சிந்நத்வம் பலித்தது. "அண்டாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி-ச-த்ருசாநாம் ததா தத்ர கோடி கோடி சதாநிச-ரோமகூபேஷ்வநந்தாநி ப்ரஹ்மாண்டாநி ப்ரமந்தி தே" (உம்முடைய ரோமகூபங்களில் இப்படிப்பட்ட ஆயிரக்கணக்கான அண்டங்களுடைய ஆயிரங்களும் பதினாயிரங்களும், அவ்வாறே அந்த ரோமகூபங்களில் கோடிகளும் நூறு கொடிகளும் அநந்தங்களான ப்ரஹ்மாண்டங்களும் சுழலுகின்றன) இதுமுதலிய வசநங்களால் அண்டங்கள் அநந்தங்களாயிருப்பதால் அந்தந்த அண்டங்களில் சதுர்முகர்களும் அநந்தமாயிருப்பதால் மூன்று காலங்களிலுள்ள ஸமஸ்த ப்ரஹ்மாண்டங்களையும் அடைந்திருக்கிற சதுர்முகர்களுடைய ஆநந்தத்தை அபேக்ஷித்து நூறு மடங்காயிருப்பதால் "மேரோரிவாணுர் யஸ்யைதத் ப்ரஹ்மாண்டமகிலம் முநே" (மஹர்ஷே $ மஹாமேரு பர்வதத்திற்குப் பரமாணுபோல

$ மஹாமேரு—இது ஸ்வர்ணமயமான ஒரு மலை. இதில் சிம்சுமாரசக்கிரம் ஒன்று நாட்டப்பட்டிருப்பதாகவும் அந்த சக்கிரத்தில் எல்லா ஜ்யோதிர்க்ரஹங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றனவென்றும் அதை நடத்துகிற த்ருவன் உயர்ந்த ஸ்தானத்திலிருப்பதாகவும் இந்த மலையை ஸூர்யசந்திரர்கள் சுற்றிவருவதால் உதயாஸ்தமய வ்யவஹாரமென்றும் பூகோளககோளதத்வங்களை அறிந்த பெரியோர்கள் உரைக்கின்றனர்.

னந்த ப்ரஹ்மத்திற்கு இந்த ப்ரஹ்மாண்டமனைத்தும்) என்று கூறப்பட்ட தரிபாத் விபூதியோடுகூடியிருத்தலாலும் பகவதாநந்தத்திற்கு அத்யாந்தம முடிவின்மை ஸித்திப்பதால் என்று. கல்யாணகுணாநந்த்யமிதி க்ரமமாக குணங்களின அபகர்ஷம் கூறப்பட்டிருக்கவில்லையன்றோ. பனனேயோ குணங்களின் மேன்மையே கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் குண † ப்ரகர்ஷத்திற்கு நிரதிசயத்வம் இருப்பதால் வாக்குக்கும் மனதிற்கும் நிவ்ருத்தி என்று கருத்து. அத்யாதரேண இதி-ப்ரஹ்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும அந்த ப்ரஹ்மததினுடைய குணங்களில ஆதராதிசயம் கூறப்பட்டது. "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்" என்றல்லவோ ச்ருதி. ஆநந்தாந்விதம ப்ரஹ்ம வித்வாந் என்று ச்ருதி வசநமில்லையென்று கருத்து. இயம் ச்ருதி: என்று. நிர்குணபரமென்று உன்னால் கூறப்பட்டிருககிற சருதி வசநங்களில் இந்த ப்ரகரணத்திலுள்ள ச்ருதியும் நம்மால் கூறப்பட்டிருககிற அர்த்தத்திற்கு அநுகுணமானதே என்று கருத்து.

---

"ஸோ(அ)ஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" இதி ப்ரஹ்மவேதநபலமவாப்யஸ்ய பரஸ்ய விபஶ்சிதோ ப்ரஹ்மணோ குணாநந்த்யம் ப்ரவீதி। விபஶ்சிதா ப்ரஹ்மணா ஸஹ ஸர்வாந் காமாந் ஸமஶ்நுதே। காம்யந்த இதி காமா:—கல்யாணகுணா:। ப்ரஹ்மணா ஸஹ தத்குணாந் ஸர்வாந் அஶ்நுத இத்யர்த:। தஹரவித்யாயாம் "தஸ்மிந் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம்" (சா-௮-௧-௧) இதிவத் குணப்ராதாந்யம் வக்தும் ஸஹஶப்த:। ஃபலோபாஸநயோ: ப்ரகாரைக்யம் "யதா க்ரதுரஸ்மிந் லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி" (சா-௩-௧௪-௧) இதி ஶ்ருதேரேவ ஸித்தம்॥

---

**ஸ்ரீபாஷ்யம்.—**

"அவன் ஸர்வஜ்ஞனாயிருக்கிற ப்ரஹ்மத்தோடுகூட எல்லா கல்யாண குணங்களையும் அனுபவிக்கிறான்" என்று ப்ரஹ்மவேதந பலத்தை அறிவிக்கிற வாக்கியமானது ஸர்வஜ்ஞனான பரப்ரஹ்மத்தின் குணங்களுடைய ஆநந்த்யத்தைச்சொல்லுகிறது. எல்லாமறிந்த ப்ரஹ்மத்தோடுகூட எல்லா காமங்களையும்நன்றாக அனுபவிக்கிறான. காமங்களாவன:- காமிக்கப்படுபவைகள், கல்யாண குணங்கள். ப்ரஹ்மத்துடன்கூட அதன் குணங்களனைத்தையும் நன்

---

† ப்ரகர்ஷம்—மேன்மை.

ருப் அநுபவிக்கிறான் என்று அர்த்தம். தஹரவித்யையில், "தஸ்மிந் யதந்த: ததந்வேஷ்டவ்யம" என்கிற வாக்யத்தில் போல் குணப்ராதாந்யத்தைச் சொல்வதற்காக ஸஹ ச ஹஸ்ராத் லோகாவ்ரஸ் உபாஸநம் இரண்டுக்கும் ப்ரகாரைக்யம் "யதாக்ரதுரஸ்மிந்லோகே புருஷோபவதி ததேத: ப்ரேத்யபவதி" என்கிற சுருதியினாலேயே ஸித்தம்.

---

**சீருதப்ரகாசிகை.—**

இவ்வண்ணம் ஆர்த்தமான குணநிஷேத நிராஸத்தின் வாயிலாக குணநித்யத்தைப் ப்ரதிபாதிக்கிற ப்ரகரணத்திலுள்ள வாக்யாந்தரத்தோடு அர்த்தைக்யமிருப்பதால ஸத்யஜ்ஞாநாதிவாக்யத்திற்கு ஸவிசேஷவிஷயத்வம் கூறப்பட்டது. பிறகு, தன் வாக்யத்தின் ஏகதேசத்தாலுங்கூட ஸவிசேஷ பரத்வத்தை உபபாதிக்கிறார்—ஸோச்நுதே இதுமுதலியதால். பலமவடமயத் வாக்யம்ருதி 'ப்ரஹ்மவிதாப்நோதிபரம" என்கிற ப்ராஹ்மணத்தில் ப்ரஹ்மம், அதின்வேதநம, ப்ராப்தி, ப்ராப்யம், இந்நான்கும உரைக்கப்பட்டது. இதன விவரணமானது 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம்' முதலிய மந்த்ரத்தினால் செய்யப்படுகிறதென்று ச்ருதியே கூறுகிறது—'ததேஷாப்யுக்தா' என்று. அந்த ப்ராஹ்மணத்தையே நோக்கி இந்த ருக்கானது அத்யயனம செய்பவர்களால் சொல்லப்பட்டிருக்கிறதென்று அர்த்தம். மந்த்ரங்களுக்கு ப்ராஹ்மண விவரணரூபத்வம் காணப்பட்டிருக்கிறதாலும், உபக்ரமாதிகரண விஷய வாக்யங்களைப்போல, மேலெழ விரோத ப்ரதீதியிலலாமையாலும், மந்த்ர ப்ராஹ்மணங்கள் இரண்டுக்கும் நிதயநிர்தோஷத்வம் விசேஷமின்றி இருப்பதாலும், மந்த்ரத்தை அபேக்ஷித்து ப்ராஹ்மணத்திற்கு ப்ராபல்யம் கூறுவது பொருந்தாது தெளிவாய் அறிவதற்கு ஹேதுவாயிருத்தல் அதின் இலமை இவ்விரண்டுமே ப்ராபல்ய தௌர்பல்ய சப்தங்களால் விவக்ஷிக்கப்பட்டிருக்கின்றனவென்று சொல்லப்படுமேயானால் விரோதமில்லை. "ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம" என்கிற வாக்யத்தால் ப்ரஹ்மசப்தம விவரிக்கப்பட்டது. "யோவேத நிஹிதம் குஹாயாம்" என்பதனால் வித்சப்தம் விவரிக்கப்பட்டது. "பரமே வ்யோமந் ஸோச்நுதே" என்பதனால் ப்ராப்தி விவரிக்கப்பட்டது. "ஸர்வாந் காமாந்" இதுமுதலியதால் ப்ராப்யம் விவரிக்கப்பட்டது. அவற்றுள் இது பரசப்தார்த்தத்தின் விவரணமென்று காண்பிப்பதற்காக **ப்ரஸ்யவிபஸ்சிதோ ப்ரஹ்மணா:** என்று கூறப்பட்டது. விபஸ்சித்வமும போக்யகுணமாக உரைக்கப்பட்டிருக்கிறது. வாக்யத்தின் அர்த்தத்தை கூறுவதற்காக பதங்களுடைய அந்வயத்தைக்காட்டுகிறார்—**விபச்சிதா** என்று. இந்த வாக்யத்தில் குணவாசியான பதம் எது என்று சங்கைவர "யதாஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேஸ்ய ஹ்ருதி ஸ்திதா:" என்று விடத்தக்கதாகக் கூறப்பட்டிருக்கிற காமங்களை விலக்குவதின்பொருட்டு அவயவசக்தியினால் வ்யாக்யானம் செய்கிறார்— **காம்யந்தே** என்று. ப்ரஹ்மவேதநபலமாக இருப்பதுபற்றி முக்தர்கள் அநுபவிக்கத்தகாததாயிருப்பதால் இந்த இடத்தில் விடத்தக்கதான காமபரத்வம் உபபந்நமாகாததாலும, காம்யத்வரூபதர்மத்திற்கு ப்ரஹ்மஸ்வரூபத்திலும் ஸம்பவமிருந்தபோதிலும் வ்யதிரேகநிர்தேசத்தாலும், பஹுவசநாந்தமாக இருப்பதாலும், அவயவசக்திக்கும் அந்த அவயவசக்தியினால் கூறப்பட்டிருக்கிற போக்யத்வத்திற்கும் குணங்களில் ஸம்பவமிருப்பதாலும், "ஸவா ஏதேந திவ்யேந சக்ஷுஷா மனஸா ஏதாந்காமாந் பச்யந் ரமதே யஏதே ப்ரஹ்மலோகே" - "யஇஹ ஆத்மாநம்

அநுவித்ய வ்ரஜந்த்யேதாம்ஶ்ச ஸத்யாந் காமாந் ” - “ தஇமே ஸத்யா:காமா: ” என்கிற ச்ருத்யந்தரங்களோடு ஐகார்த்தயமிருப்பதாலும் கல்யாணகுணங்கள் காமசப்த வாச்யங்களென்று அர்த்தம். இது யாருடைய குணங்கள்? ப்ரஹ்மத்துக்கு § ஸஹபாவமும் “ புத்ரேணஸஹ $ ஓதநம் புங்க்தே ” என்கிற இடத்தில் புத்ரனுக்குப்போலே ¶ போக்தாவாயிருப்பதினாலேயா? அல்லது @ க்ஷீரத்தைப்போல ℘ போக்யதையினாலேயா? என்கிற சங்கையையும் பரிஹரித்துக்கொண்டு வாக்யார்த்தத்தைக்கூறுகிறார்—ப்ரஹ்மணா என்று. இந்த வாக்யமானது ப்ராப்யத்தைக்கூறுகிற ‘ பர ’ சப்தத்தின் விவரணரூபமாயிருப்பதாலும், “ ஸர்வாந் காமாந் ஸஹப்ரஹ்மணா ” என்று போக்யவாசியான பதத்தோடு இடைவிடாத ப்ரயோக ஸ்வாரஸ்யத்தாலும் ‘ ஸஹ ’ சப்தமானது ℘ போக்யஸாஹித்யத்தில் நோக்குள்ளது. ‡ ஸந்நிஹிதமான ப்ரஹ்மமே குணங்களுக்கு ஆச்ரயம். ஆகையால் அனந்தகுணவிசிஷ்டமான ப்ரஹ்மத்தை அநுபவிக்கிறான் என்று அர்த்தம். “ ஸஹயுக்தே ப்ரதாநே ” என்கிற சப்தாநுசாஸனத்திற்கு உடன்பட்டிருப்பதால் ‘ ஸஹ ’ சப்தத்தாலே ப்ரஹ்மத்துக்கு அப்ராதாந்யத்தை ஆசங்கித்து அதை பரிஹரிப்பதின்பொருட்டு ‘ ஸஹ ’ சப்தப்ரயோஜனத்தைக்கூறுகிறார்—தஹர என்று. “ யோவேத ” என்று விஹிதமான வேதநத்தில் ஸஹசப்தமானது குண ப்ராதாந்யத்தை ஸூசிப்பிக்கிறது. தஹர வித்யையில் உபாஸனத்தில் குணப்ராதாந்யமன்றோ கூறப்பட்டிருக்கிறது. அப்படியே இந்த இடத்திலும் உபாஸனத்தில் குணப்ராதாந்யத்தைச்சொல்லுவதற்காக “ ஸஹ ” சப்தம் என்று அர்த்தம். பலதசையில் குண ப்ராதாந்யம் கேட்கப்பட்டிருப்பதால், உபாஸனத்தில் எவ்வாறு குணப்ராதான்யம் ஸித்திக்கிறதென்று கேட்கில் கூறுகிறார்—பலோபாஸநயோ: என்று. பலம் உபாஸனம் இரண்டுக்கும் ஸகுணத்வமும் குணப்ராதாந்யமும் துல்யஸ்வபாவமுள்ளதென்று அர்த்தம். ‘குணப்ராதாந்யம் வகதும்’ என்கிற இந்த வாக்யத்தாலும் ஸஹசப்தத்திற்கு போக்ய ஸாஹித்யபரத்வம் ஸித்தம். அங்ஙனமில்லாவிடில் போக்தரு ப்ராதாந்யமல்லவோ ஸித்திக்கும். போக்யகுண ப்ராதாந்யம் ஸித்தியெபறாது. ச்ருத்யைவ என்கிற ஏவகாரத்தால் கூறப்பட்டிருக்கிற ந்யாயத்துக்கு புருஷ புத்தியினால் கல்பிக்கத்தக்க உதப்ரேக்ஷையை எதிர்பாராமலிருக்கிற ச்ருதியினால் கண்டோக்தத்வம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது.

---

“ 𑌯𑌸𑍍𑌯𑌾𑌮𑌤𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌤𑌂, 𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾𑌂 ” (𑌕𑍇𑌨-௨-௩) 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌤𑍍 ; “𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿𑌪𑌰𑌮𑍍” (𑌤𑍈-𑌆-௧-௧) “𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍇𑌦𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌭𑌵𑌤𑌿” (𑌮𑍁-௩-௨-௯) 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌵𑌾𑌪𑍍𑌤𑌿𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌚𑍍𑌚 । “ 𑌅𑌸𑌨𑍍𑌨𑍇𑌵 𑌸 𑌭𑌵𑌤𑌿। 𑌅𑌸𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿𑌵𑍇𑌦𑌚𑍇𑌤𑍍। 𑌅𑌸𑍍𑌤𑌿𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿𑌚𑍇𑌦𑍍𑌵𑍇𑌦 । 𑌸𑌨𑍍𑌤𑌮𑍇𑌨𑌂 𑌤𑌤𑍋𑌵𑌿𑌦𑍁𑌃 ” (𑌤𑍈-𑌆-௬-௧) 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑌯

---

§ ஸஹபாவம்—சேர்ந்திருத்தல். $ ஓதநம்—சோறு. ¶ போக்தா—புஜிக்கிறவன்.
@ க்ஷீரம்—பால். ℘ போக்யம்—அனுபவிக்கத்தக்க வஸ்து.
‡ ஸந்நிஹித—பக்கத்திலிருக்கிற.

ஜ்ஞாநாபாவபாவாப்யாமாத்மநாஶாத்மஸத்தாம் ச வததி । அதோ ப்ரஹ்மவிஷயவேதநமேவாபவர்கோபாயம் ஸர்வாஶ்ஶ்ருதயோ விதததி । ஜ்ஞாநஞ்ச உபாஸநாத்மகம் । உபாஸ்யம் ச ப்ரஹ்ம ஸகுணமித்யுக்தம் । "யதோ வாசோ நிவர்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ" (தை-ஆ-௯-௧) இதி ப்ரஹ்மணோऽநந்தஸ்யாபரிச்சிந்நகுணஸ்ய வாங்மநஸயோரேதாவதிதி பரிச்சேதயோக்யதாஶ்ரவணேந ப்ரஹ்மைதாவதிதி ப்ரஹ்மபரிச்சேதஜ்ஞாநவதாம் ப்ரஹ்மாவிஜ்ஞாதமித்யுக்தம்; அபரிச்சிந்நத்வாத் ப்ரஹ்மண: । அந்யதா "யஸ்யாமதம் தஸ்ய மதம்", "விஜ்ஞாதமவிஜாநதாம்" இதி மதஸ்ய விஜ்ஞாதஸ்ய ச வசநம் ததேவ விருத்யேத ॥

---

ஸ்ரீ பாஷ்யம்—

"எவனால் ப்ரஹ்மமானது புத்திக்கு விஷயமாகாததென்று அறியப்பட்டிருக்கிறதோ அவனால்தான் ப்ரஹ்மம் அறியப்படுகிறது; ப்ரஹ்மம் ஞான விஷயமென்று அறிந்தவர்களால் அறியப்படுகிறதில்லை," என ப்ரஹ்மத்துக்கு ஜ்ஞானவிஷயத்வம் கூறப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுமேயானால் "ப்ரஹ்மத்தை அறிந்தவன் உத்தமமான பதவியை அடைகிறான்," "ப்ரஹ்மத்தை அறிந்தவன் ப்ரஹ்மமே ஆகிறான்," என்று ஜ்ஞானத்தாலே மோக்ஷோபதேசமானது உண்டாகாமல் போகும். "ப்ரஹ்மமில்லையென்று அறிவானேயாகில் அவன் இல்லாதவனாகவே ஆகிறான்; ப்ரஹ்மமிருக்கிறதென்று அறிவானேயானால் அவனை அந்த ப்ரஹ்ம ஜ்ஞானத்தாலே ஸத்தையுள்ளவனாக அறிகிறார்கள்" என்று ப்ரஹ்ம விஷயமான ஜ்ஞானத்தின் ஸத்பாவா ஸத்பாவங்களால் ஆத்மநாசத்தையும் ஆத்ம ஸத்தையையும் சுருதி கூறுகிறது. ஆதலால் ப்ரஹ்ம விஷயமான வேதனமே மோக்ஷோபாயமென்று எல்லா ச்ருதிகளும் விதிக்கின்றன. ஜ்ஞானமும் உபாஸனரூபம்; உபாஸிக்கத்தக்க ப்ரஹ்மமும் ஸகுணமென்று கூறப்பட்டிருக்கிறது. "யதோவாசோ நிவர்தந்தே-அப்ராப்ய மநஸா ஸஹ" என்று முடிவற்றதும் அபரிச்சிந்நமான குணங்களோடு கூடியதுமான ப்ரஹ்மத்திற்கு இவ்வளவுதான் என்று வாக்காலும் மனதாலும் அளவிடுவதற்குத்தகாமை கேட்கப்படுவதினால் 'ப்ரஹ்மமானது இவ்வளவெ'ன்று ப்ரஹ்மவிஷயகமான பரிச்சேத ஜ்ஞானமுள்ளவர்களுக்கு ப்ரஹ்மமானது 'அறியப்படாததும்' 'எண்ணப்

படாததுமாக ஆகிறதென்று கூறப்பட்டது, ப்ரஹ்மமானது அபரிச்சிந்நமாயிருப்பதால். அங்ஙனமில்லாவிடில் "யஸ்யாமதம் தஸ்யமதம்"—"விஜ்ஞாதமவிஜாநதாம்" என்று மதத்வவிஜ்ஞாதத்வ வசநங்கள் அவ்விடத்திலேயே விரோதிக்கும்.

---

**ச்ருதப்ரகாசிகை—**

பிறகு, ஸகுணங்களுக்கே ஜ்ஞேயத்வம் காணப்பட்டிருப்பதால் ஜ்ஞேயத்வத்தை நிஷேதித்ததினால் நிர்குணத்வம் பலித்தது என்று ஜ்ஞேயத்வ நிஷேதபரமாக அந்யரால் சொல்லப்பட்ட வாக்யத்தை எடுக்கிறார்—யஸ்ய என்று. ஜ்ஞானமாத்ரத்திற்கு அவிஷயத்வமா? அல்லது உபாஸநாத்மகமான ஜ்ஞானத்திற்கு அவிஷயத்வமா? அல்லது ஏகுஜ்ஞேபாஸநாத்மகமான ஜ்ஞானத்திற்கு அவிஷயத்வம் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறதா? என்கிற மூன்று விகல்பத்தை அபிப்பிராயப்பட்டு முதலாவதான ஜ்ஞானமாத்ராவிஷயத்வத்தை தூஷிக்கிறார்—ப்ரஹ்மவித் என்று. ப்ரஹ்மத்தை அறிவதில் ச்ருதியினுடைய ஆதராதிசயத்தைக்காண்பிக்கிறார—அஸந்நேவ என்று. ப்ரஹ்மவேதநம் மோக்ஷோபாயமன்று; பின்னை ப்ரபஞ்சவிஷயமான மித்யாத்வஜ்ஞானமே அந்த மோக்ஷத்திற்கு உபாயமென்று அந்யர்களால் கூறப்படுகிறது. குறிப்பிடப்பட்டிராத விசேஷ விஷயங்களோடுகூடியதான "வித்யயா அம்ருதமச்நுதே" — "ததாவித்வாந் நாமரூபாத்விமுக்த:"—"ததோஜ்ஞானம் ப்ரவர்ததே"-'ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி' என்கிற இது முதலிய வாக்யங்களில் மோக்ஷத்திற்கு உபாயமாகக்கேட்கப்படுகின்ற ஜ்ஞானத்திற்கு ப்ரஹ்மவிஷயத்வம் ப்ரபஞ்சமித்யாத்வ விஷயத்வம் இரண்டும் பொதுவாயிருப்பதால அதை ஆசங்கித்துக்கூறுகிறார்— அத: என்று. அத: - சில வாக்யங்களில் மோக்ஷோபாய ஜ்ஞானத்திற்கு ப்ரஹ்ம விஷயத்வம் காணப்படுவதால். ஸர்வா: ச்ருதய: - நிர்தேசிக்கப்படாமலிருக்கிற விஷய விசேஷங்களையுடைய "வித்யயா அம்ருதமச்நுதே" இது முதலிய ச்ருதிகளுங்கூட ஸாமாந்யவிசேஷ ந்யாயத்தாலே ப்ரஹ்மவிஷயமானவேதநத்தையே அபவர்கத்திற்கு உபாயமாக விதிக்கின்றனவென்று அர்த்தம். அன்றிக்கே, சிலவாக்யங்களில் ப்ரஹ்மவிஷயத்வமானது கேட்கப்படில் ஜ்ஞானமாத்ரத்தை உபாயமாகச்சொல்லுகிற ச்ருதிகளும் ஸாமான்யவிசேஷ ந்யாயத்தாலே அந்த ப்ரஹ்மத்தினிடத்திலே பர்யவஸிக்கின்றனவென்று அபிப்பிராயம். அதற்குமேல் உபாஸநாத்மக ஜ்ஞாநாவிஷயத்வ பக்ஷத்தை தூஷிக்கிறார்—ஜ்ஞாநந்ச என்று. "ததேவ ப்ரஹ்மத்வம் வித்தி - நேதம் யதிதம் உபாஸதே" என்கிற ச்ருதியானது உபாஸநாத்மகமான ஜ்ஞானத்திற்கு அவிஷயத்வ சங்கைக்கு பீஜம். இது வாக்யார்த்த ஜ்ஞானத்திற்கு உபாயத்வாநுபபத்தியை உபபாதிப்பதனால் பரிஹரிக்கப்பட்டது என்று அர்த்தம:—"நேதம்யதிதமுபாஸதே" என்பதற்கு இது அர்த்தம். யாதொரு இந்த § ப்ரதீகத்தை உபாஸிக்கிறார்களோ அதல்ல - அந்த ப்ரஹ்மத்தையே நீ உபாஸிப்

---

§ ப்ரதீகோபாஸநமாவது:—(1) நாமாதிகளை ப்ரஹ்ம த்ருஷ்டியால் உபாஸித்தல். (2) ப்ரக்ருதியுடன்சேர்த்து ஜீவனை உபாஸித்தல். (3) ப்ரக்ருதியைவிட்டகன்ற கேவல ஜீவாத்மாவை உபாஸித்தல். (4) ப்ரஹ்ம சரீரபூதனாக ஜீவாத்மாவை உபாஸித்தல். இந்த ப்ரதீகோபாஸ்தி பண்ணுகிறவனுக்கு அர்ச்சிராதிகதியினால் ப்ரஹ்ம ப்ராப்தி கிடையாது.

பாயாக என்று. இதற்குமேல் ஸகுணோபாஸனவிஷயத்வ பக்ஷத்தை நிரஸிக்கிறார்— உபாஸ்யஞ்ச என்று. நிர்குணபரமாக அங்ஙனல் கூறப்பட்டிருக்கிற ஸத்விதயைக் சே ஸகுணவிஷயத்வத்தை உபபாதிப்பதனல் என்று கருத்து. அன்றிக்கே 'ஜ்ஞானஞ்ச உபாஸநாத்மகம்' என்று ஜ்ஞானவிசேஷ விஷயத்வத்தைக் கண்டோக்தியாகச்சொல்லி இருப்பதால் ஜ்ஞேயத்வமாத்ர நிஷேதமானது முற்றிலும் நிரஸிக்கப்பட்டதென்று கருத்து. உபாஸ்யஞ்ச என்று. ஜ்ஞேயத்வநிவருத்தியினல் ஸாதிக்கப்படவேண்டுமென்று விரும்பப்பட்ட குண நிவ்ருத்தியானது குணவ்தாநத்தால் பாதிக்கப்பட்டது. ஆதலால் அஜ்ஞேயத்வத்தை பாதித்து ஜ்ஞேயத்வத்தை ஆக்ஷேபிக்கிறார் என்று கருத்து. அங்ஙன மாகில் அவிஜ்ஞாதத்வ அமதத்வ ச்ருதிகளிரண்டுக்கும் அர்த்தமென்னவென்று கேட்கில் கூறுகிறார்—யதோவாச: என்று. "அனந்த" சப்தத்தால் 'ஸத்யம் ஜ்ஞானம்' இது முதலிய வாக்யம் ஸ்மரிப்பிக்கப்பட்டது. அநந்தஸ்ய என்பதினல் ஸ்வரூபானந்த்யம் கூறப்பட்டது. அபரிச்சிந்நகுணஸ்ய என்று குணனந்த்யம் கூறப்பட்டது. இந்த அர்த்தத்தில் "ஸத்வம முதலிய எல்லா குணங்களாலும் விடுபட்டிருக்கின்ற அந்த பரமாத்வாவினுடைய ஸர்வ குணங்களும் ஸர்வ ருஷிகணங்களாலும் சொல்லுவதற்கு சக்யமாகாதனன்றோ" (துதிப்பவர்கள்) குணங்களின் முடிவை அடைகிறதில்லை; அத ஞல் இந்த பரமபுருஷன் அனந்தன் என்று கூறப்படுகிறான். அநந்தகுணமுள்ளவனாய் இருந்தபோதிலும் உமக்கு ஆறுகுணங்களே முக்கியங்கள்-மஹாத்மாவும் சங்கு சக்கிரம் நந்தகம் இவைகளை கையில்கொண்டவரும் எங்கும்வியாபித்து இருக்கிறவரும் ஜயசீலரும் வஸுதேவ புத்திரராயுமிருக்கிற யாதொரு உம்முடைய குணங்களுண்டோ அவைகள் எல் லா உலகங்களும் ஒருங்குசேர்ந்து பதினாயிரக்கணக்கான வருஷங்களாலும் சொல்வதற்கு ஸாத்யமன்று. ஹே தேவசிரேஷ்ட! நான்முகனுடைய ஆயுள் உடையவனாயும் கோடி முகங்களுள்ளவனாயும் மிக்கபரிசுத்த மனதோடுகூடினவனாயும் ஒரு மனிதன் ஒரு ஸமயத் தில் இருப்பானேயாகில் அந்த மனிதன் உம்முடைய குணங்களின் பதினாயிரத்தில் ஒரு அம்சத்தை சொல்லுவனே சொல்லமாட்டானே, க்ருபை செய்வீராக. ஹே! குழந்தாய் எவ்வாறு ஸமுத்திரத்திலுள்ள ரத்னங்கள் கணக்கிடமுடியாதோ அவ்வாறே மஹாத்மா வான அனந்தனுடைய குணங்கள் எண்ணிறந்தவை. பாணப்ரயோகஞ்செய்பவர்கள் அம்பில்லாமையால் எய்யாமல் திரும்புகிறார்களே ஒழிய ஆகாயத்தில் இடமில்லாமையா லல்ல - அவ்வண்ணமே துதிக்க ஆரம்பிப்பவர்கள் புத்தியில்லாமையால் துதிப்பதில் நிவ்ருத்திக்கிறார்களேயொழிய கோவிந்தனுடைய குணங்களின் இன்மையிலல்ல" இது முதலியது காணத்தக்கது. பரிச்சிந்நத்வ ஜ்ஞானத்தாலே தர்மியான ப்ரஹ்மத்துக்கு எவ் வாறு அஜ்ஞாதத்வம் ஸம்பவிக்கும்? என்று கேட்கில் கூறுகிறார்-அபரிச்சிந்நத்வாத் ப்ரஹ்மண: என்று. ப்ரஹ்ம சப்தத்தால் வாச்யமாக இருக்கிற பரமாத்மாவுக்கு ஸ்வரூபத் தாலும் குணங்களாலும் அபரிச்சிந்நத்வம் இருப்பதால் என்று அர்த்தம். வேறு ச்ருதி களுக்கு விரோதமில்லாமலிருப்பதற்காக மாத்திரம் இவ்வாறு அர்த்தம் கூறப்பட்டதென் பதில்லை. இங்ஙனமன்றி வேறுவிதமாகக்கூறின் தன் வாக்யங்களுக்கு வ்யாஹதி ப்ர ஸங்கிப்பதாலும் என்று கூறுகிறார்-அந்யதா என்று. தத்ரைவ - தன் வாக்கியததிலேயே.

---

யதா — "த்ருஷ்டேர்த்ரஷ்டாரம் — ந பச்யே:"
(ப்ரு-ரு-ச-உ) இதி ச்ருதிர்த்ருஷ்டேர்த்ரஷ்ட்ருத்வப்ரஸக்தம் த்ரஷ்டா
ரம் ப்ரதிஷேதயதி — இதி । ததாஹ்யநேகவேதாந்தவாக்ய
யோமிதயா ஜ்ஞாத்ருஜ்ஞாநஸ்வரூபத்வம் கதம் ப்ரஹ்மண: ந

𑌤𑌯𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌃, 𑌨 𑌮𑌨𑍍𑌵𑍀𑌥𑌾𑌃, 𑌕𑌿𑌨𑍍𑌤𑍁 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌰𑌂 𑌮𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑌤𑌿𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌪𑌶𑍍𑌯𑍇𑌰𑍍𑌮𑌨𑍍𑌵𑍀𑌥𑌾 𑌇𑌤𑌿 𑌪𑌰𑌿𑌹𑌰𑌤𑌿 ॥ 𑌅𑌥𑌵𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌰𑍍𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌰𑌂 𑌮𑌤𑍇𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵𑍋𑌪𑌾𑌸𑍀𑌥𑌾 𑌇𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃; 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 “𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌰𑌮𑌰𑍇 𑌕𑍇𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌤𑍍” (𑌬𑍃-௪-௫-௧௫) 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 ॥

ஸ்ரீபாஷ்யம் —

'ந த்ருஷ்டேர்த்ரஷ்டாரம், நமதேர்மந்தாரம்' என்கிற ச்ருதியானது த்ருஷ்டி மதி இவ்விரண்டைக்காட்டிலும் வேறான த்ரஷ்டாவையும் மந்தாவையும் நிஷேதிக்கிறதென்று யாதொன்று கூறப்பட்டதோ அது ஆகந்துகமான சைதந்யகுண ஸம்பந்தமுள்ளதாக இருப்பதால் ஜ்ஞாதாவான ஆத்மாவுக்கு குதர்கத்தால் ஸித்திக்கிற அஜ்ஞாந ஸ்வரூபதையை நினைத்து அவ்வாறு ஆத்மாவைப்பாராதே, எண்ணுதே பின்னையோ த்ரஷ்டாவர்யும் மந்தாவாயுமிருக்கிற ஆத்மாவை த்ருஷ்டி மதி ரூபமாகவே பார், நினை என்று சொல்லுகிறதென்று பரிஹரிக்கப்பட்டது. அல்லது, த்ருஷ்டியினுல் பார்ப்பவனும், மதியினுல் எண்ணுகிறவனுமான ஜீவாத்மாவை நிஷேதித்து ஸர்வபூதாந்தராத்மாவான பரமாத்மாவையே உபாஸிப்பாயாக என்று வாக்யார்த்தம. அப்படிச்சொல்லாவிடில் 'விஜ்ஞாதாரம் அரேகேநவிஜாநீயாத்' இதுமுதலிய ஜ்ஞாத்ருத்வ ப்ரதிபாதக ச்ருதி விரோதமும் வரும்.

ச்ருதப்ரகாசிகை—

ஜ்ஞேயத்வ நிஷேதம் பரிஹரிக்கப்பட்டபிறகு ஜ்ஞாத்ருத்வ நிஷேதத்தை பரிஹரிக்கிருர்—யத்து இது முதலியதால். த்ருஷ்டே: மதே: என்கிற இரண்டு பதங்களும் ஐச்தாம வேற்றுமைப்பதங்கள் என்கிற அபிப்பிராயத்தால் 'வ்யதிரிக்த' என்கிற பதத்தை அத்யாஹாரம செய்துகொண்டு வாக்யயோஜனை செய்கிறதா? அல்லது ஷஷ்டீயந்தமாயிருப்பதாலே வ்யதிரிக்த பதத்தை சேர்த்துக்கொள்ளாமலே உன்னல் வாக்ய யோஜனை செய்யப்படுகிறதா? என்கிற விகல்பத்தை அபிப்பிராயப்பட்டு முதலில் அத்யாஹார பக்ஷத்தை அநுவதிக்கிருர்—நத்ருஷ்டே: என்று. பரிஹரிக்கிருர்—தத்து என்று. ப்ரஸக்தத்துக்கு அல்லவோ ப்ரதிஷேதம், என்கிற சங்கைவரின் ப்ரஸங்கத்தைக்காண்பிக்கிருர்— குதர்க ஸித்தாம் என்று. குதர்கம் எவ்வாறு உபந்யஸிக்கப்பட்டது என்று அபேக்ஷிக்குங்கால் ப்ரஹ்ம ஸ்வரூபம் ஜடம் என்கிற விஷயத்தில் அந்யனுலே உபந்யஸிக்கப்பட்டிருக்கிற இரண்டு ஹேதுக்களையும் ஸங்க்ரஹமாக உபபாதிக்கிருர — ஆகந்துக சைதந்யகுணயோகிதயா என்று. வந்தேறியாயிருப்

பதாலும் குணமாக இருப்பதாலும் என்று இரண்டு ஹேதுக்கள். † ஆகந்துகத்வாத் - அநித்யமாயிருப்பதால். நித்யமான ஆத்மாவிற்கு அநித்யமான ஜ்ஞானமானது ஸ்வரூபமாக ஆவதற்குத்தகுதியுள்ளதல்ல. குணமாயிருப்பதாலும் ஜ்ஞாநம் ஸ்வரூபமல்ல. அன்றிக்கே சைதந்யமாவது விஷயப்ரகாசம் - அது நித்யமான ஸ்வரூபமாக இருக்குமேயாகில் எப்பொழுதும் விஷயப்ரகாசம் ப்ரஸங்கிக்கும் என்று கருத்து. த்ருஷ்டி ச்ருதி மதி நிதித்யாஸநரூபமான ஜ்ஞானவிசேஷங்களுக்கு ஆச்ரயனுயிருக்கிற கர்தாவான ஆத்மாவினுடைய ஸ்வரூபத்திற்கு த்ருஷ்டி முதலியதே ஸ்வரூபமாக விதிக்கப்படின் ஆத்ம ஸ்வரூபத்திற்கு ஜ்ஞாநாவாந்தரபேதம் சங்கிக்கதக்கதல்ல. ஜ்ஞானவிசேஷரூபங்களான அந்த த்ருஷ்ட்யாதிகளுக்கு ஸ்வயம்ப்ரகாசத்வ லக்ஷணமான ஜ்ஞாநத்வம் பேதமின்றிஇருப்பதுபற்றி அவ்வளவு மாத்ரமே ஸ்வரூபத்திற்கு விவக்ஷிக்கப்பட்டதாக ஆகிறது. இந்த பரிஹாரம் அந்யபக்ஷத்திலும் ஸமானம். நேரான வாக்ய யோஜனையைக் கூறுகிறர்—அதவா என்று. த்ருஷ்டி, ச்ருதி, மதி, நிதித்யாஸநங்களுக்கு கர்தாவான ஜீவாத்மாவை நிஷேதித்து, பரமாத்மாவையே உபாஸிப்பாயாக என்கிற இந்த அர்த்தம் சொல்லப்பட்டதென்று அர்த்தம். அன்றிக்கே 'அபித்தாதி' என்கிற பதம் சேர்த்துக் கொள்ளத்தக்கது. ஜீவாத்மாவை விலக்கி பரமாத்மாவை உபாஸி, என்று ச்ருதி கூறுகிறதென்று வாக்யார்த்தம என வாக்யாந்தரம். அன்றிக்கே ப்ரதிஷித்தய-பரித்யாகம்செய்து என்று அர்த்தம். அதனல் ஸமாநகர்த்ருகத்வம் உபபந்நமாகிறது. "ய: ப்ராணேநப்ராணிதி, யோஅபாநேந அபாநிதி, ஏஷத ஆத்மா ஸர்வாந்தர:" என்கிற ச்ருதி ப்ரஸ்துதமாயிருப்பதால், ப்ராணனலே ப்ராணித்ருத்வம் முதலிய தர்மங்கள் ஜீவாத்மாவுக்கு ஸம்பவிக்கிறதாதலால் அந்த ஜீவாத்மாவுக்கு உபாஸ்யத்வமுண்டு என்கிற சங்கையை வ்யாவ்ருத்திப்பதின்பொருட்டு. "நத்ருஷ்டேர் த்ரஷ்டாரம்பச்யே:" இதுமுதலியது கூறப்படுகிறதென்பதனல் இதுவே அர்த்தம். அங்ஙனமன்றுகில் ச்ருத்யந்தர விரோதத்தைக் கூறுகிறர்—அந்யதா என்று. ஜ்ஞாநத்திற்கு குணத்வம் அவித்தம் - ஜ்ஞாநம் ஸ்வரூபமென்று ச்ருதியினலறியப்பட்டிருப்பதால். ஜ்ஞாநமாகில் † ஆகந்துகமென்று சொல்லத்தகாது. ஏனெனில் ஈச்வரஜ்ஞாநத்தில் வ்யபிசாரம்வருவதால். நம்முதலானவர்களுடைய ஜ்ஞாநத்திற்கும் ஆகந்துகத்வமானது பாதிதமாயிருக்கிறது. "‡ நவிஜ்ஞாதுர்விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்யதே" என்று ச்ருதி இருப்பதனல். இவ்வண்ணம் இரண்டு ஹேதுக்களுக்கும் பரிஹாரம் கூறப்பட்டது. விஷயப்ராவண்யம் தர்மபூத ஜ்ஞாநத்திற்கே ஸர்வஸாதாரணமான ஜ்ஞாநத்வம் ஸ்வப்ரகாசத்வரூபம். அதனல் எப்பொழுதும் விஷயப்ரகாசத்திற்கு ப்ரஸங்கமில்லை.

---

"ஜ்ஞாநம் ப்ரஹ்ம" (தை-ஆ-க) இதி ஜ்ஞாநஸ்யைவ ப்ரஹ்மஸ்வரூபம் வ்யஜ்யத இதி யதுக்தம்; தந்ந ஜ்ஞாநாஶ்ரயஸ்ய ப்ரஹ்மணோ ஜ்ஞாநம் ஸ்வரூபமிதி வ்யவஹ்ரியதே। ஜ்ஞாநமேவ ஹ்யநந்யாகாரமாநந்த இத்யுச்யதே। "விஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம" (ப்ரு-ரு-உ-அ) இத்யாநந்தஸ்வரூபமேவ ஜ்ஞாநம் ப்ரஹ்மேத்யர்த:। ஏதாவதைவ ஸமாதாநம்। அஸ்ய ஜ்ஞாநஸ்வரூபஸ்யைவ ஜ்ஞாத்ருத்வமபி

---

† ஆகந்துகம்—அநித்யம். ‡ விஜ்ஞாதா—அறிகிறவன்.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 । 𑌤𑌥𑍈𑌵 “𑌸 𑌏𑌕𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣 𑌆𑌨𑌨𑍍𑌦𑌃” (𑌤𑍈-௯-௧) “𑌆𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍” (𑌤𑍈-௯-௧) 𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌾𑌚𑍍𑌚 𑌨𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌅𑌪𑌿 𑌤𑍍𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌿 । 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌹𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 ।

ஸ்ரீபாஷ்யம்—

ஆநந்தோ ப்ரஹ்ம, என்கிற ச்ருதியினால் ஆநந்தமாத்ரமே ப்ரஹ்ம ஸ்வரூபமாக அறியப்படுகிறது என்று எதுகூறப்பட்டதோ அது ஜ்ஞாநாச்ரயமான ப்ரஹ்மத்திற்கு ஜ்ஞானம் ஸ்வரூபமென்று சொல்லுகிறதென்று பரிஹரிக்கப்பட்டது. அநுகூலமான ஜ்ஞாநமே ஆநந்தமென்று கூறப்படுகிறது. (விஜ்ஞாநம் ஆநந்தம் ப்ரஹ்ம) என்கிற ச்ருதியினால் ஆநந்தரூபமாகவே இருக்கின்ற ஜ்ஞாநம் ப்ரஹ்மமென்று அர்த்தம். அதனாலேதான் ஜ்ஞாநம் ஆநந்தம் இரண்டிற்கும் விஷயைக்யமிருப்பதினாலேயே உங்களுக்கு ஏகரஸதை ஸித்திக்கிறது. ஜ்ஞாநஸ்வரூபமான இந்த ப்ரஹ்மத்திற்கே ஜ்ஞாத்ருத்வமும் அநேக ச்ருதிகளாலே நன்றாயறியப்பட்டிருக்கிறதென்று கூறப்பட்டது. அப்படிப்போலவே “ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:” – “ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்” என்கிற வ்யதிரேக நிர்தேசத்தாலும் ஆநந்தம் மாத்ரம் ப்ரஹ்மம் அல்ல. பின்னையோ ஆநந்தமுள்ளது ப்ரஹ்மம் - ஜ்ஞாத்ருத்வமேயன்றோ ஆநந்தித்வம்.

ச்ருதப்ரகாசிகை—

ஜ்ஞேயத்வவிஷேத பரிஹாரார்த்தம் புத்திஸ்தமாயிருப்பதால் ஜ்ஞாத்ருத்வ விஷேதம் பரிஹரிக்கப்பட்டது. பிறகு வேறு ஆர்த்தமான குண விஷேதாந்தரம் பரிஹரிக்கப்படுகிறது—ஆநந்த இது முதலியதால். முன்கூறப்பட்ட பரிஹாரத்தை இங்கு எறிடுகிறார்—தத்ஜ்ஞாநாச்ரயஸ்ய என்று. எவ்வாறு அவனாலே இது பரிஹரிக்கப்பட்டது எனில் கூறுகிறார்—ஜ்ஞாநமேவஹி என்று. அங்ஙனமாகில ச்ருதிகளில் விஜ்ஞாநம் ஆநந்தம் இரண்டு சப்தங்களுக்கு ப்ரயோகத்தில் சேர்க்கையானது பொருந்தாது என்று கேட்கப்படுமேயாகில் மறுமொழிகூறுகிறார்— விஜ்ஞாநம் என்று. ஸ்வப்ரகாசத்வமும் அநுகூலத்வரூபமுமான ப்ரவ்ருத்தி நிமித்தபேதத்தாலே உபடந்நமாகிறதென்று கருத்து. அவ்வாறே உங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதென்று கூறுகிறார்— அதஏவ என்று. அதஏவ - ஜ்ஞாநம் ஆநந்தம் என்கிற இரண்டு சப்தங்களுக்கும் விஷயைக்யத்தினாலேயே என்று அர்த்தம். ஆநந்தத்திற்கு ஆநந்தாச்ரயத்வாபாவமானது ச்ருதியினாலா? வ்யாப்தியினாலா? – வ்யாப்தியினால் என்று கூறப்படுமேயானால் ஒரு வஸ்துவின் தர்மமாகவிருந்து தீரவேண்டும். ச்ருதிபலத்தினாலே ஸ்வதந்த்ரம் என்று கூறப்

படுமேயானால் அந்த ச்ருதியினாலே ஆநந்தாச்ரயத்வம் ஒப்புக்கொள்ளப்படலாம். தர்ம பூதமான ஆநந்தத்திற்கன்றோ ஆநந்தாச்ரயத்வாபாவம் காணப்பட்டிருக்கிறது) ஆகையால் வ்யாப்தி விரோதமுமில்லை. அதனால் ஸ்வதந்த்ரத்வம்போல் குணாச்ரயத்வமும் ச்ருதி ஸித்தமானதால் ஸ்வீகரிக்கத்தக்கதென்று கருத்து. இரண்டிடத்திலும் ப்ரமாணமிருந்தாலன்றோ ந்யாயஸஞ்சாரம் என்கிற ஆசங்கையின் திருஷ்டாந்த பூமியில் ப்ரமாணமானது காண்பிக்கப்பட்டிருக்கிறதென்பதைக் கூறுகிறார்—அஸ்ய என்று. தார்ஷ்டாந்திகத்திலும் கண்டோக்தியைக்காண்பிக்கிறார் — தத்வத் என்று. ஜ்ஞாத்ருத்வம் போல ஆநந்தித்வமும் கண்டோக்தமென்று அர்த்தம் ஜ்ஞாத்ருத்வ ச்ருதியும் ஆநந்தித்வத்தில் ப்ரமாணமென்று அபிப்ராயப்பட்டு கூறுகிறார்—ஜ்ஞாத்ருத்வமேவஹி ஆநந்தித்வம் என்று. ஏவகாரமானது ஜ்ஞாத்ருத்வத்தைக்காட்டிலும் ஆநந்தித்வம் வேறு என்பதை நிரஸிப்பதில் நோக்குடையது. ஹி சப்தமானது அதில் உபபத்தியை ஸூசிப்பிக்கிறது. அநுகூல ஜ்ஞாநாச்ரயத்வமேயன்றோ ஆநந்தித்வமென்று அர்த்தம். ஜ்ஞாத்ருத்வ ச்ருதியானது ஜ்ஞாநாச்ரயத்வ விசேஷத்திற்கும் ஆநந்தாச்ரயத்வவிசேஷத்திற்கும் விரோதி என்று அர்த்தம்.

---

यदप्युक्तम् — "यत्र हि द्वैतमिव भवति। (बृ-४-४-१४) "नेह नानास्ति किञ्चन। मृत्योस्स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति" (बृ-९-४-११) "यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्तत्केन कं पश्येत्" (बृ-४-४-१४) इति भेदनिषेधो बहुधा दृश्यत इति तत्रोच्यते, कृत्स्नस्य ब्रह्मकार्यतया तदात्मकत्वेनैक्यात्, तत्प्रत्यनीकनानात्वं प्रतिषिध्यते। न पुनः "बहु स्यां प्रजायेय" इति बहुभवनसङ्कल्पपूर्वकं ब्रह्मणो नानात्वं श्रुतिसिद्धं प्रतिषिध्यत इति परिहृतम्। नानात्वनिषेधादयमस्माकमेव विषय इति चेत्; न, प्रत्यक्षादिसकलप्रमाणानवगतं नानात्वं दुष्परिहरं ब्रह्मणः प्रतिपाद्य तदेव बाध्यत इत्युपहास्यमिदम् ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

"எந்த நிலைமையில் (ப்ரஹ்மத்தைக்காட்டிலும்) பேதம் இருப்பது போல் ஏற்படுகிறதோ - இந்த ப்ரபஞ்சத்தில் (ப்ரஹ்மத்தைத்தவிர்த்து) வேறான ஒரு வஸ்துவுமில்லை. எவன் இந்த ப்ரபஞ்சத்தில் (ப்ரஹ்மத்தைவிட) வேறாக வஸ்துகளிருப்பதுபோல் காண்கிறானோ அவன் அவித்யையினின்று

அவித்யையை நாடுகிறான் - எப்பொழுது இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே ஆயிற்றோ அப்பொழுது எவன் எதனால் எதைப்பார்ப்பான்'' என்று பேத நிஷேதம் பலவாறாகக்காணப்படுகிறது, என்று யாதொன்று கூறப்பட்டதோ; அது உலகம் அனைத்தும் ப்ரஹ்மகார்யமாக இருப்பதாலும் ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாகக் கொண்டிருப்பதாலும் ப்ரஹ்மாத்மகமாக இருப்பதுபற்றி ஒன்றாக இருப்பதால் அதற்கு விருத்தமான நாநாத்வம் நிஷேதிக்கப்படுகிறது. ஸுரநரதிர்யக் ஸ்தாவரரூபமாக பல வஸ்துக்களாக ஆகக்கடவேன், அதற்காக ஆசாசாதிரூபமாக நான் உண்டாகக்கடவேன் என்று பகுபவந ஸங்கல்பத்தைமுன்னிட்ட ச்ருதிஸித்தமான ப்ரஹ்மத்தின் நாநாபாவமானது நிஷேதிக்கப்படுகிறதில்லையென்று பரிஹரிக்கப்பட்டது. நாநாத்வநிஷேதத்தினால் இந்த ச்ருதியானது அபரமார்த்தவிஷயை என்று சொல்லப்படுமேயாகில் - அல்ல; ப்ரத்யக்ஷம் முதலிய ஸகல ப்ரமாணங்களால் அறியப்படாததும் எவ்விதத்தாலும் ஏறமுடியாததுமான நாநாத்வத்தை ப்ரஹ்மத்திற்கு ப்ரதிபாதித்து அதே பாதிக்கப்படுகிறதென்கிற இந்த வசனம் பரிஹஸிக்கத்தக்கது.

---

ச்ருதப்ரகாசிகை—

பிறகு, பேதநிஷேதத்தில் நோக்கமுள்ளவைகளென்று அன்யரால் சொல்லப்பட்டுள்ள சுருதிகளை ப்ரமாணங்களால் நிலைபெற்ற அர்த்தங்களுடன் சேர்ப்பிப்பதின்பொருட்டு அநுவாதம் செய்கிறார்—யதிதம் என்று. யத்ரஹி இது முதலியதால் பேதநிஷேதம் செய்யப்பட்டது. பேதஜ்ஞாநம்வரின அநர்த்தத்தைக்காண்பிக்கிறார் — ம்ருத்யோ: என்று. 'தமஸோவாஏஷதம: ப்ரவிசதி' என்கிறதுபோல். எப்பொழுதும் தொடர்ச்சியாகவந்துகொண்டிருக்கிற பேதத்திற்கு எவ்வாறு ப்ராந்தியினால் ஸித்தி? என்று கேட்கில் கூறுகிறார்—யத்ரது என்று. சொல்லப்பட்ட வாக்யங்களிலுள்ள பற்பலவிதங்களான வசனபங்கிகளின் அபிப்ராயத்தால் 'பஹுதா' என்று உரைக்கப்பட்டது. 'பஹுச:' என்கிற பாடத்தில் நிஷேதித்தலென்கிற க்ரியையின் ஆவ்ருத்தி அர்த்தம். பரிஹரிக்கிறார்—தத் என்று. தத் என்கிற சப்தத்திற்கு 'பரிஹ்ருதம்' என்கிற பதத்தில் $ அன்வயம் ஹேயகுணங்களனைத்திற்கும் விரோதியாகவும் எல்லா கல்யாணகுணாத்மகனாகவும் ச்ருத்யந்தாங்களில் ப்ரஸித்தமான ப்ரஹ்மத்திற்கு விகாரங்களுக்கு ஆதாரமாயும் ‡ க்லேசம் கர்மம் முதலிய §ஹேயங்களுக்கு உடன்பட்டுமிருக்கிற ஜகத்தோடு ஐக்யம் வ்யாஹதமாதலால் சுருதியானது ப்ரதிபாதிக்கிறதில்லை. ஹேயங்கள் அபாரமார்த்திகங்களாதலால் வ்யாஹதி இல்லை என்று சொல்லப்படுமேயானால்; ¶ அபாரமார்த்திகமென்று சொல்லும் பக்ஷத்தில் அது நிரஸனம் செய்யத்தக்கதா இல்லையா? நிரஸிக்கத்தக்கதல்லவென்று சொல்லப்படுமேயாகில் அதின் நிவ்ருத்தியின்பொருட்டு எற்

---

$ அன்வயம்—ஸம்பந்தம். ‡ க்லேசம்—துன்பம்.

§ ஹேயம்—இகழத்தக்கது. ¶ அபார்மார்த்திகம்—வாஸ்தவமல்லாதது.

பட்டுள்ள சாஸ்திரம் ப்ரயோஜநமில்லாததாக ஆகும். நிரஸிக்கத்தக்கதென்று கூறப்படு மேயாகில் நிரஸிக்கத்தக்கதின் ஸம்பந்தமே ஹேயஸம்பந்தம என்பதனால் அதற்கு விரோதியான வஸ்துவுக்கு அதின் ஸம்பந்தம்பெற்றிருத்தல் விருத்தம்.

மேலும், 'பஹுஸ்யாம்' என்று ஸங்கல்பத்தை முன்னிட்டு † பகுபவநமானது ச்ருதியினால் கூறப்படுகிறது - எல்லாவற்றையுமறிகிற தன்மைவாய்ந்திருக்கிற பரமாத்மாவுக்கு தனனிச்சையினால் தன்னிடத்தில் ஹேயங்களை ஏற்றுக்கொள்ளுதல் இசையாதாதலால் அப்படிப்பட்ட ஹேயங்களை ப்ரதிபாதிப்பது சக்யமல்ல. ஸர்வஜ்ஞனல்லவென்று சொல்லும்பக்ஷத்தில் "பச்யத்யசக்ஷுஸ்ஸச்ருணோத்யகர்ண:" "ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியாச" "யஸ்ஸர்வஜ்ஞ:" (கண்ணில்லாமலிருந்துகொண்டே ரூபஸா க்ஷாத்காரமுள்ளவனாக இருக்கிறான். காதில்லாமலே சப்தத்தை ஸாக்ஷாத்கரிக்கிறான். ஜ்ஞாநம் பலம் க்ரியை இவைகள் ஸ்வபாவத்திலேயே இருக்கின்றன - எவன் எல்லாமறிந்தவனோ) இதுமுதலிய சுருதிகளின் விரோதம். ஹேயங்கள் அபரமார்த்தங்களாக இருந்தபோதிலும் தன் ஸங்கல்பத்தால் தனக்கு முடிவில்லாத அபுருஷார்த்த ப்ரமத்தை ஏற்படுத்திக் கொள்வது ஸர்வஜ்ஞனுக்குப்பொருந்ாதன்றோ. ஸர்வஜ்ஞத்வமானது அவித்யையினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதென்று ஒப்புக்கொண்டிருப்பதால் அவித்யையை முன்னிட்டே பஹுபவந ப்ரமரூபமான ஸர்வஜ்ஞத்வம் என்று சொல்லக் கூடாது. (ஸ்வாபாவிகீ) என்று ச்ருதிவசனமிருப்பதால். "தஇமே ஸத்யா: காமா:" என்கிற ஸத்யத்வ ப்ரதிபாதக சுருதியினாலும். தன்னுடைய ஸர்வஜ்ஞத்வமானது அவித்யையினால் உண்டுபண்ணப்பட்டிருப்பதால் மித்யை என்று அறிகிறானில்லை என்றுசொல்லப்படுமேயானால், எல்லாவற்றையுமறிந்திருத்தல் என்கிற தன்மை இல்லாமல்போக வேண்டியதாகும். அறிகிறானென்று கூறப்படுமேயாகில் அந்த ஜ்ஞாநத்தினாலேயே பாதிக்கப்பட்டிருப்பதால் ஸர்வஜ்ஞத்வமுண்டாகாது. அதனால் முன்னிருந்த உலகத்தின் வடிவத்தை நன்கு பர்யாலோசனம்செய்து தன் ஸங்கல்பத்தை முன்னிட்டு ஜீவவர்க்கங்களுடைய கன்மங்களுக்குத்தக்கவாறு பரமாத்மா ஸ்ருஷ்டிசெய்கிறான் என்பது பொருந்தாது. அதனால் ஸர்வஜ்ஞதைக்கு ஆவித்யகத்வம் பொருந்தாததுபற்றி ஸர்வஜ்ஞனுக்குத் தன்னை அடைந்திருக்கிற ஹேயோபாதானம் இசையாது.

மேலும், ஹேயங்கள் தன்னை அடைந்திருக்கிறதென்று அறிகிறவனும் எல்லா வல்லமைகளுமுள்ளவனும் ஸத்யஸங்கல்பனுமான அந்த பரமாத்மாவுக்கு உடனே தன்னை அணுகியிருக்கிற ஹேயங்களை நீக்காமலிருப்பதும் பொருத்தமுள்ளதாகாது. அவன் சக்தியற்றவனென்று சொல்லும்பக்ஷத்தில் "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ" இதுமுதலிய ச்ருதிகளின் விரோதம் வருகிறது. இப்படிப்பட்ட விரோதம் கிடையாது, ச்ருதிபலத்தால் விரோதத்தினின்மைக்கொள்ளத்தக்கதாக இருப்பதால் என்று சொல்லப்படுமேயானால் அப்பொழுது "விஜ்ஞாநகநஏவைதேப்யோபூதேப்யஸ்ஸமுத்தாயதாந்யேவாநுவிநச்யதி - நஜாயதேம்ரியதேவாவிபஶ்சித் - வாயுஶ்சாந்தரிக்ஷஞ்சைததம்ருதம் - ஆத்மநஆகாசஸ்ஸம்பூத: - நநபோநபூமிர்நேமே த்யாவாப்ருதிவீ - அந்தவதே வாஸ்யதத்பவதி - நாஸ்யேஷ்டாபூர்தே க்ஷீயேதே" (ஜீவசரீரகனாகவே இருந்துகொண்டு சரீராதி ரூபமாக உண்டாகிற இந்த பூதங்களினின்று தானுமுண்டாகி அந்த பூதங்கள் நாசமடையும் தருணத்தில் அவைகளை அநுஸரித்து பிறகு தானும் நாசமடைகிறான். ஜ்ஞாதாவாகவும் ஜ்ஞாநஸ்வரூபனாகவுமிருக்கிற ஜீவாத்மா உண்டாகிறது

† பகுபவனம்—பலவாறாக ஆகுதல்.
ஆவித்யகத்வம்—அவித்யா ஸம்பந்தத்தால் ஏற்படுத்தப்பட்டிருத்தல்.

மில்லை. இறக்கிறதுமில்லை. இந்த காத்நம் ஆகாயமும் அழிவற்றது, ப்ரஹ்மத்தி னிடத்தினின்று ஆகாசம் உண்டாயிற்று - ஆகாயமுமில்லை, பூமியுமில்லை. த்யாவாப்ருதிவி களுமில்லை-இவனுக்கு அது முடிவுள்ளதாகவே ஆகிறது. இவனுக்கு ச்ரௌதஸ்மார்த்த கர்மாக்கள் குறைவடைகிறதில்லை.) இது முதலிய ச்ருதிகளாலுரைக்கப்பட்ட ஆத்மா முதலியவைகளின் நித்யத்வாநித்யத்வம் முதலியதும் ச்ருதிகளாலறியப்பட்டிருப்பதால் விரோதமில்லாமையால் இரண்டும் ஏற்றுக்கொள்ளத்தக்கது. ஆகையால் எல்லா இடத் திலும் சப்தத்தால் உணர்த்தப்பட்டவண்ணம் அர்த்தத்தை ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில் மீமாம்ஸாரம்பம் ப்ரயோஜனமற்றதாக ஆகும். ப்ரஸ்துதங்களான பேதாபேத ச்ருதிகள் இரண்டுக்கும் பாரமார்த்திகாபாரமார்த்திகங்களையோ ‡ ஸோபாதிக $ நிருபாதிகங்க ளையோ விஷயங்களாகக்கொண்டிருப்பதுபற்றி பாகுபாட்டை ஏற்படுத்துவது பொருந் தாது. அந்த பாகுபாட்டை ஏற்படுத்துவது விரோத பரிஹாரத்திற்காக. விரோதமோ இல்லை. ஆகையால் பேதத்திற்கு பாரமார்த்யம் ஸித்தித்தது. இதனால் விரோதம் ஒப்புக்கொள்ளத்தக்கது. இங்கே விரோதம் அறியப்படுகிறது. 'ம்ருத்யோஸ் ஸம்ருத் யுமாப்நோதியஇஹநாநேவபச்யதி' (எவன் ப்ரஹ்மத்தைத்தவிர்த்து வேறான அநேக வஸ்துக்கள் இருக்கிறதென்று காண்கிறானோ அவன் அவித்யையினின்று அவித்யையை அடைகிறான்.) என்கிற ச்ருதியினால் பேதஜ்ஞானம் ஸம்ஸாரஹேதுவென்று அறியப்படு கிறது. 'ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வாஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி - ஜுஷ்டம்யதாபச்யத்யந்யமீசமஸ்யமஹிமாநமிதி வீதசோக:' (ப்ரேரணஞ்செய்கிற பர மாத்மாவையும் தன்னையும் வேறாயிருப்பவர்களாக எண்ணி அந்த ஜ்ஞானத்தினால் ப்ரீதியடைந்தவனை பரமாத்மாவினால் ப்ரீதிக்கு விஷயமாக்கப்பட்டவன் மோக்ஷத்தை அடைகிறான். எப்பொழுது இந்த ஜீவன் ப்ரக்ருதியில் மூழ்கியிருக்கிற தன்னைக்காட்டி லும் தாரகத்வாதி குணங்களால் விலக்ஷணனாகவும் தன் கர்மங்களால் ப்ரீதியடைந்தவனா கவும் பரமாத்மாவையும் அவன் மகிமையையும் அறிகிறானோ அப்பொழுது சோகத்தை இழந்தவனாக ஆகிறான்) என்று பேதஜ்ஞானத்திற்கு மோக்ஷோபாயத்வம் ச்ருதிகளால் கூறப்படுகிறது. 'த்வைதிநோட்ததப்தர்சிந:'' இது முதலிய ஸ்ம்ருதிகளுக்கு விருத்தம். த்வாவிமௌபுருஷௌ (இந்த இரண்டு புருஷர்கள்) ஆவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர: (அழி வற்றவனான ஸர்வேச்வரன் உள்ளே ப்ரவேசித்து சேதநாசேதநங்களை) தரித்திருக்கச் செய்கிறான்) யஸ்மாத்க்ஷரமதீதோஹம் - (யாதொரு காரணத்தினால் நான் அசேதநங் களைத் தாண்டியிருக்கிறேனோ) இதுதொடங்கி ''யோமாமேவமஸம்மூடோஜாநாதி புரு ஷோத்தமம் - (எவன் மயக்கமற்றவனாக என்னை இவ்வண்ணம் புருஷோத்தமனென்று அறிகிறானோ) என்று பேதஜ்ஞானமுள்ளவனுக்கு அஸம்மூடத்வம் கூறப்படுகிறது - இது முதலிய வசநங்களால் அறியப்பட்டிருக்கிற பேதம் உலகத்தில் ஸித்தமாக இருப்பதால் அதை நிஷேதிப்பதற்காக பேதமானது அநுவதிக்கப்படுகிறது என்கிற வாதம் பொருத்த முள்ளதன்று.

மேலும், பேதமென்கிற உலகத்தில் ஸித்தமாகயிருப்பதால் 'அப்ராப்தேஹி சாஸ் த்ரம் அர்த்தவத்''வேறு ப்ரமாணங்களால் ஸித்தியாதவஸ்து விஷயத்திலன்றோ சாஸ்த்ரம் ப்ரயோஜநமுள்ளது, என்கிற நியாயத்தால் அபேதமே சாஸ்த்ரத்தாலறியத்தக்கதென்று கூறப்படுகிறது, அங்ஙனமாகில் - ஸோயம் தேவதத்த: (அந்த தேவதத்தன் தான் இவன்) இதுமுதலிய வ்யவஹாரங்களில் அபேதம்மாத்ரம் உலகத்தில் ஸித்தமாக இருப்ப தாலும் அப்ராப்த விஷயத்தில் சாஸ்த்ரம் ப்ரயோஜநமுள்ளதாக இருப்பதாலும் சாஸ்த் ரத்தினால் அபேதத்தை ப்ரதிபாதிப்பது யுக்தமன்று. தேவதத்தன் முதலியவர்களு டைய ஐக்யமன்றோ லோகஸித்தம், ஜீவபரமாத்மாக்களுடைய ஐக்யம் ஸித்தமன்று.

ஆகையால் அந்த ஜீவபரமாத்மாக்களுடைய அபேதம் சாஸ்த்ரத்தாலறியத்தக்கது என்று சொல்லப்படுமேயானால் அங்ஙனமாகில் கடபடாதிகளுடைய பேதமே லோகஸித்தம். ஜீவன் பரமாத்மா இருவர்களுக்குமுள்ள $ நியாம்யத்வம ‡ நியந்த்ருத்வம், @ தார்யத்வம் § தாரகத்வம் ¶ சேஷத்வம ♆ சேஷித்வம் ‡‡ வ்யாப்யத்வம் * வ்யாபகத்வம் முதலிய லக்ஷணபேதமானது உலகத்தில்ஸித்தமல்லாததால் அந்தபேதம் சாஸ்த்ரத்தால் ப்ரதிபாதிக்கத்தக்கதே. ஆசார்யபாதர்களால் கூறப்பட்டிருக்கிறது—"நத்வைதம் ப்ரதிபாதயந்த்யுபநிஷத்வாச: ப்ரஸித்தம் ஹித்தத் கிந்த்வத்வைதமநந்ய கோசரதயா தத்வேத்யமாஸ்தியதாம் - அப்ராப்தகலு சாஸ்த்ரமர்த்தவதிதி வ்யர்த்த: ப்ரயாஸோ யத: ப்ரக்யாதாதபரஸ்து சாஸ்த்ரவிஷயோபேதஸ்த்வதத்வைதவத்" (உபநிஷத்வாக்குக்கள் த்வைதத்தை ப்ரதிபாதிக்கிறதுகளில்லை, அது ப்ரஸித்தமன்றோ, பின்னேயோ வேறு ப்ரமாணங்களுக்கு கோசரமில்லாததால் அத்வைதமே அந்த உபநிஷத்துக்களால் அறியத்தக்கதென்று நிச்சயிக்கப்படலாம். சாஸ்த்ரம் அப்ராப்தவிஷயத்திலன்றோ ப்ரயோஜநமுள்ளது - என்கிற ப்ரயாஸம் பயனற்றது. ஏனென்றால் ப்ரஸித்தமான பேதத்தைக்காட்டிலும் விலக்ஷணமாக இருக்கிற பேதமானது உன்னுடைய அத்வைதம்போல் சாஸ்த்ரத்திற்கு விஷயம். என்று) இந்த அர்த்தம் பாஷ்யத்தில் அடுத்தே சொல்லப்படப்போகிறது. ஆதலால் அநுவாதமென்று நிர்வாஹம்செய்வது பொருத்தமில்லாதது. பேதச்ருதியானது உபாஸனத்தை ப்ரயோஜநமாகக்கொண்டது, தத்வப்ரதானமல்ல "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா-ஜுஷ்டம் யதாபச்யத்யந்யமீசம, (ஜீவாத்மாவையும் ஏவுகிறவனான பரமாத்மாவையும் வெவ்வேறாக இருப்பவர்களென்று எண்ணி ப்ரீதி அடைந்திருப்பவனும் தன்னைக்காட்டிலும வேறாக இருப்பவனுமான ப்ரபுவை எப்பொழுது பார்க்கிறானோ) என்கிற வாக்யங்களில் உபாஸனத்தைச்சொல்லுகிற பதஙகள் கேழ்க்கப்படுவதால் என்றுசொல்லப்படுமேயானால் அப்படி இருந்தபோதிலும் பேதம் வாஸ்தவமே - அந்த பேதஜ்ஞாநத்திற்கு மோக்ஷோபாயத்வம் கூறப்பட்டிருப்பதால். தத்வஜ்ஞாநத்தாலன்றோ மோக்ஷம். பேதச்ருதிகள் பலவிசேஷத்தைக்கருதி உபாஸநத்தைச்சொல்லியிருப்பதால் பேதம் வாஸ்தவமல்லவென்று சொல்லத்தக்கதல்ல. ஐக்யமும் உபாஸநார்த்தமாக இருப்பதால் அஸத்யத்வம் ப்ரஸங்கிக்கும். அபேதம் உபாஸநார்த்தமென்று சுருதியினால் சொல்லப்படுகிறதன்றோ "அத யோ஽ந்யாம் தேவதாமுபாஸ்தே, அந்யோஸாவந்யோஹமஸ்மீதி நஸவேத-ஆத்மேத்யேவோபாஸீத - (எவன் அவன்வேறு நான்வேறு என்று தேவதையை தன்னைக்காட்டிலும் வேறாக நினைத்து உபாஸிக்கிறானோ அவன் அறியாதவன். ஆத்மா என்றே உபாஸிக்கக்கடவன்) என்பதனால் ஐக்யத்திற்கே உபாஸநார்த்தத்வமும் பேதத்திற்கு $ தாத்விகத்வமும் யுக்தம் - † வைநதேயத்யாநத்தில் ஐக்யம் ஆரோபிதமாகக் காணப்பட்டிருக்கிறது. § மாந்த்ரிகன் வைநதேயன் இருவர்களுக்கும் பேதமே தாத்விகம் - விதிசேஷ

---

$ நியாம்யன்—ஸேவகன். ‡ நியந்தா—ப்ரபு. @ தார்யம்—தரிக்கத்தக்கது.

§ தாரகன்—தரிக்கிறவன்.

¶ சேஷன்—தன் ப்ரயோஜனத்தைக்கருதாமல் தன் எஜமானனுடைய பெருமையை உண்டுபண்ணுவதிலேயே பற்றுதலுள்ளவன்.

♆ சேஷி—அன்யனால் உண்டுபண்ணப்பட்ட அதிசயத்தை ஏற்றுக்கொள்பவன்.

‡‡ வ்யாப்யம்—வியாபிக்கப்படும்.

* வ்யாபகம்—வியாபிக்கும் தன்மை பொருந்தியது

$ தாத்விகம்—உண்மையானது. † வைநதேயன்—கருடன்.

§ மாந்த்ரிகன்—மந்த்ரங்களை உள்ளபடி அறிந்தவன்.

மாக இருக்கிற வாக்கியங்களைக்காட்டிலும் வேறாக இருக்கிற வாக்கியங்களில்கூட அபேதம அறியப்படுகிறதென்பதுபற்றி அதற்கு தாத்விகத்வம் என்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது—"க்ஷரம் ப்ரதானம மருதாக்ஷரம் ஹர:, க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:", ஜ்ஞாஜ்ஞௌ த்வௌ, த்வா ஸுபர்ணா-நித்யோ நித்யாநாம்", (ப்ரதானம க்ஷரம். ஜீவன நாசமில்லாதவனுதலால் அக்ஷரன்-ப்ரக்ருதிக்கும் ஜீவாத்மாவுக்கும் நியந்தாவாக இருப்பவன் குணங்களால் நிறைந்தவன பரமாத்மா - ஸர்வஜ்ஞன அஜ்ஞன் என இருவர்கள் - காமபலத்தை அனுபவிப்பவர்கள் - இரண்டு பக்ஷிகள் - நித்யனுக இருக்கிற பரமாத்மா நித்யர்களுக்கு) இது முதலிய விதி சேஷமல்லாத வாக்கியங்களாலுமறியப் பட்டிருப்பதால் பேதத்திற்கும் தாத்விகத்வம் விடத்தகாதது - உபாஸநத்திற்கு பலமாக இருக்கிற முக்திதசையில் அபேதமிருப்பதால் அபேதத்திற்கு பாரமார்த்த்யம் சொல்லப் படுமேயானுல் முக்திதசையில் பேதம ச்ருதியினுல் கூறப்பட்டிருப்பதால் பேதத்திற்கு தாத்விகத்வம் ஸித்திக்கிறது. ஆகையால் உபாஸநார்த்தமாக இருப்பதால் விஷயம பரமார்த்தமாக இல்லாததுபற்றி பேதச்ருதி நிர்வாஹமானது உபபன்னமாகாது. பேதா பேதங்கள இரண்டுக்கும் நியதபௌர்வாபர்யம விரோதம் இவ்விரண்டுமிருப்பதால் ஸகுணநிர்குணத்வங்களுக்குப்போல் அபச்சேதநியாய விஷயத்வம ஸம்பவியாததலால். விரோதநியாயத்தாலாவது உபக்ரமநியாயத்தாலாவது பிந்நிதான பேதத்தின நிஷேதோத்பத்திக்குப்ரதிபந்தகமே உண்டாகலாம். இதுவும் முந்தியே விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வண்ணம் வேறு இடத்தில் சொல்லப்பட்டிருக்கிற நியாயத்தால் உதவிபுரியப்பட்டுள்ள சருத்யர்த்த விரோதத்தின் விடத்தகாமையையும் இந்த நிர்வாஹங்களின் அநுபபத்தியையும் இங்கே எண்ணி நல்ல நிர்வாஹத்தைக் காண்பிக்கிருர்—தத் என்று. ஜகத: என்கிற பதம் ப்ரஹ்மபர்யந்தமானது அதற்கு ப்ரஹ்மகார்யதயா என்கிற பதத்தோடும் ஐக்யாத் என்கிற பதத்தோடும் அன்வயம. ததந்தர்யாமிகதயா என்கிற இடத்தில் ஸாமர்த்தியத்தால் 'ஜகத:' என்கிற பதம் சேர்த்துக்கொள்ளத்தக்கது. அதனுல் ஒரு தடவை ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற ஜகத் சப்தத்திற்கு நிஷ்கர்ஷகத்வ ஸநிஷ்கர்ஷகத்வ விரோத பரிஹாரம ஸித்திக்கிறது. "ஸர்வம் கல்விதம ப்ரஹ்ம - தஜ்ஜலான், (இதெல்லாம் ப்ரஹ்மமன்றே - ஜகத்தானது அந்த ப்ரஹ்மத்தினிடத்தினின்று உண்டாகிறது அதினிடத்தில் ஒடுங்குகிறது - அதனுல் ஜீவித்திருக்கிறது) என்று கூறப்பட்டது. ஜகத்தானது அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் உண்டாகிறது அதினிடத்தில் லயம டைகிறது என்பதை ஆதாரமாகக்கொண்டு கூறுகிருர்—ப்ரஹ்மகார்யதயா என்று. ப்ரஹ்ம சப்தமானது காரணவஸ்தையிலிருக்கிற சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்தைச்சொல்லுகிறது. அந்த ப்ரஹ்மத்தால் காப்பாற்றப்படுதலை ஆச்ரயித்துச்சொல்லுகிருர்—ததந்தர்யாமிகதயா என்று. தத் என்கிற சப்தமானது விசேஷ்யத்தை பராமர்சிக்கிறது. விசிஷ்டம் ப்ரக்ருதமாக இருக்குந்தருணத்தில் விசேஷ்யாம்சமும் ப்ரக்ருதமாக இருப்பதால் எவ்வாறு 'ஸந்மூலா: ஸதாயதநா:' என்கிற இடத்தில் ஸத் என்கிற சப்தத்திற்கு விசிஷ்டபரத்வமும் விசேஷ்யபரத்வமுமோ அப்படிப்போல - தத் ப்ரஹ்மம் எதற்கு அந்தர்யாமியோ அது ததந்தர்யாமிகம் - தத்பாவோ என்று அர்த்தம் - ததாத்வத்தால் எவ்வாறு ததந்தர்யாமிகத்வம் ஸித்திக்கும்? மறுமொழி உரைக்கப்படுகிறது - அநாமாவது ஸ்திதி - ப்ரஹமத்திற்கு ஜகத்தின் ஸ்திதிஹேதுத்வமும் உள்ளே அநுப்ரவேசித்து ப்ரசாஸநம் செய்ததால் தாரகத்வமும் ஸந்மூலா: "ஸோம்யேமா: ஸத்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:" என்கிற வாக்கியத்திலுள்ள "ஸந்மூலா: ஸத்ப்ரதிஷ்டா:" என்கிற இரண்டு பதங்களும் ஸத் சப்தத்தால் சொல்லப்படுகிற ப்ரஹ்மாதீநமான உத்

பத்தி லயங்களைக்கூறுகின்றன — ப்ரதிஷ்டா - நிஷ்டா - பர்யவஸானம - லயம் - ஸத்தான ஆதாரத்துடன் கூடியிருத்தல் அர்த்தமல்ல. அஙஙனம் பொருள் கொண்டால் ஸதாயதநா: என்று ¶ புநருக்திதோஷம ப்ரஸங்கிக்கும. இவ்வண்ணம் ப்ரஹ்மத்திற்கு உத்பத்திலய ஹேதுதவததைச் சொல்லுகிற இரண்டு பதஙகளின் இடையிலுள்ள ஸ்திதி ஹேதுதவத்தைச்சொல்லுகற ஸதாயதநா: எனகிற பதத்திஞல் தாரகத்வம் ஸித்திப்பதால் "ஏதஸயவா அக்ஷரஸய ப்ரசாஸநேகார்கி த்யாவாப்ருதிவ்யௌவித்ருதே திஷ்டத:" என்கிற இடத்தில் 'ஸ்தா' தாதுவிஞல் சொல்லப்பட்டிருக்கிற ஸ்திதிக்கு ப்ரசாஸநத்திஞல் தாரணுதீநத்வம் அறியப்படுவதால் - 'அந்த: ப்ரவிஷ்டச்சாஸ்தாஜநாநாம்' என்று தாரணத்திற்கு ஹேதுவான ப்ரசாஸநத்திற்கு உளளே ப்ரவேசிதது செய்யப்படுதல் கேழ்க்கப்படுவதால் 'தத்யதா அரேஷுநேமிரர்பிதா நாபாவரா அர்பிதா: ஏவமேவைதா பூதமாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ரா ஸ்வர்பிதா: ப்ரஜ்ஞாமாத்ரா: ப்ராணே அர்பிதா: - மயிஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரேமணிகணுஇவ - (எவ்வாறு ஆரக்காலகளில் சக்கரத்தின் வட்டைகள் இசைககப்பட்டிருக்கின்றனவோ ஆரக்கால்கள் நேமியில் இசைக்கப்பட்டிருக்கின்றனவோ இவ்வண்ணமே இந்த அசேதந பதார்ததங்கள் ஜீவவாக்கங்களிடத்திலும் ஜீவவர்க்கங்கள் பரமாதமாவினிடத்திலும் ஆபணஞ்செய்யப்பட்டிருக்கின்றன - நூலில் மணிகணஙகள்போல் எனனிடததில் இவை அனைத்தும் இசைக்கப்பட்டிருக்கிறது) என்கிற ச்ருதி ஸ்ம்ருதிகளால் அரநாபிமணிகண ஸூத்ர திருஷ்டாந்தங்களால் உள்ளே ப்ரவேசித்திருப்பவனுக்கு தாரகத்வம அறியப்படுவதால் - 'தத்ஸ்ருஷ்ட்வா - ததேவாநு ப்ராவிசத்' (அதை உண்டுபண்ணி - அதிலேயே அநுப்ரவேசித்தான்) என்று சொல்லப்பட்டிருக்கிற அநுப்ரவேசமானது ஸ்ருஷ்டிக்குப்பிறகு உணடாயிருப்பதாலும் உதாஹரிக்கப்பட்டிருக்கிற சுருதியோடு அர்த்தைக்யத்தாலும் ஸ்திதிக்காகவே ஏற்பட்டிருக்கிறது - 'ஸப்தப்ராணா: ப்ரபவந்தி' (ஏழு ப்ராணன்கள் உண்டாகின்றன) இது முதலிய வாக்யஙகளால் சொல்லப்பட்ட ப்ரக்ரியையிஞல் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிற ஜகத்துக்கு 'தேநேதம்பூர்ணம் புருஷேண ஸர்வம்' (அந்த புருஷஞல் இவை அனைத்தும நிறைந்திருக்கிறது) என்கிற வாக்யத்தால் ஸ்திதி ஸமயத்தில் வ்யாபகஞன பரமபுருஷஞல் பூர்ணத்வம் அறியப்படுவதால். ஸர்வசாகாப்ரத்யய ந்யாயத்தால் வ்யாபநம் நியமநம் தாரணம் இவைகளில் ஏதாவது ஒன்றைச்சொனஞல் மற்றொன்று ஸித்திப்பதாலும அநுப்ரவேசித்து செயயப்படுகிற ப்ரசாஸநத்திஞல் தாரகத்வமானது ஸ்திதி ஹேதுத்வமென்றல்லவோ அறியப்படுகிறது. இவ்வண்ணம் தஜ்ஜலாந் என்கிற வாக்யததை ஆதாரமாகக்கொண்டு 'ப்ரஹ்மகார்யதயா ததந்தர்யாமிகதயாச' என்று ஜகத்திற்கு சொல்லப்பட்டிருக்கிற பரமாத்மாந்தர்யாமிகத்வமானது ஹேயப்ரத்யநீகத்வ கல்யாணகுணைச்ரயத்வ ரூபமான உபயலிங்கமுள்ள ப்ரஹ்மத்திற்கு பரமார்த்தமான ஜகதுபாதானத்வாந்யதாநுபபத்தியிஞலும் கடகச்ருதியிஞலும் ஸித்தம். ச சப்தத்திற்கு மேலே இருக்கிற ததந்தர்யாமிகதயா ததாத்மகத்வேந என்கிற பதஙகளோடு அன்வயம். ஸ: ஆத்மாயஸ்யதத் ததாத்மகம்-ததந்தர்யாமிகத்வரூபேண ததாத்மகத்வேந என்று அர்த்தம். உள்ளே ப்ரவேசித்து நியமனம் செய்பவனல்லவோ ஆத்மா. ப்ரஹ்மகார்யதயா ததந்தர்யாமிகதயா ததாத்மகத்வேநச என்று சொல்லப்பட்டால் மூன்று ஹேதுக்களென்கிற சங்கை உண்டாகும் என்று அதை விலக்குவதற்காக ச சப்தத்திற்குமுந்தி ப்ரயோகம். இரண்டுவித ஐக்யம் விதிக்கப்பட்டிருப்பதாலென்று அர்த்தம்.

அய்யா, ஐக்யமானது கார்யகாரண நிபந்தனமென்று சொல்லப்படுமேயாகில் கார்யாவஸ்தையுள்ள ஜகத் விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கு காரணுவஸ்தையுடன்கூடின சித

¶ புநருக்தி — இரட்டித்துக்கூடுதல்.

சித் விசிஷ்ட ப்ரஹ்மத்தோடு ஸ்வரூபைக்யம் யுக்தம். அந்த ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாகக்கொண்டிருத்தல் ஐக்யத்திற்குக் காரணம் என்று சொல்லப்படுமேயாகில் ப்ரஹ்மத்தோடு ஜகத்துக்கு ஐக்யம் ஸம்பவியாது - பின்னையோ ப்ரகாரவிசிஷ்டமான ப்ரஹ்மத்திற்கு ஏகத்வ ஸங்க்யான்வயமே வருவதால் ஐக்யசப்தத்திற்கு அர்த்தபேதம் உண்டாகும், அங்ஙனமாகில் ஜகத்துக்கு ததாத்மகத்வேந ஐக்யாத் என்று சொல்வது யுக்தமாகாது - ப்ரகாரம் ப்ரகாரி இரண்டும் வேறுபாடுள்ளதாக இருப்பதால் - எனில் இவ்வண்ணமல்ல- ஜகத் ப்ரஹ்மம் இரண்டும் வேறுபட்டதாக இருந்தபோதிலும் இந்த இடத்தில் ஜகத் சப்தமானது ஜகத் விசிஷ்டமான ப்ரஹ்மபரமென்று சொல்லப்பட்டிருப்பதால ஐக்யசப்தத்திற்கும் அர்த்தபேதமில்லை. இரண்டுவிதத்தாலும் விசிஷ்டைக்யபரத்வமிருப்பதால்- (இதை உபபாதிக்கிறார்) கார்யகாரணபாவநிபந்தன ஐக்யமாவது, இரண்டு அவஸ்தைகளுள்ள சிதசித்விசிஷ்டவஸ்துவுக்கு ஐக்யம். எவ்வாறு ரூபம் ஸ்பர்சம் முதலியவைகளோடு கூடின கடத்திற்கு அப்படிப்பட்ட ம்ருத்த்ரவ்யத்தோடு ஐக்யமோ. சிதசிதாத்மக ஜகத் விசிஷ்டத்திற்கும் ஸ்வரூபத்தாலும் குணங்களாலும் நிரதிசயப்ருஹத்த்வ விசிஷ்டத்திற்கும் ஐக்யம் ப்ரகார்யைக்யம் எவ்வாறு நைல்யவிசிஷ்டத்திற்கும் உத்பலத்வ விசிஷ்டத்திற்கும் ஐக்யமோ-விசேஷணம்சங்களுக்கு ஐக்யமில்லாமையால் வஸ்துக்களின் ஐக்யத்திற்கு ஹானி இல்லை. மண் கடம் முதலியதிலகூட ஸ்வரூபத்திற்கும் ரூபஸ்பர்சாதிகளுக்கும் கார்யத்வகாரணத்வாவஸ்தைகள் இரண்டுக்கும் ஏகத்வமில்லாமையால - இவ்வளவு மட்டிலும் விசேஷம் - கார்யகாரணபாவத்தில் பின்னகாலங்களில் உள்ள அவஸ்தாரூபமான த்வாரக விசேஷணாச்ரயமாக இருக்கிற தர்மிக்கு ஐக்யம். "அவனே இந்த தருணனாக ஆனான்" என்பதுபோல. மற்ற இடத்தில் ஸமகாலஸம்பந்தி அத்வாரகாநேக விசேஷணாச்ரயதர்மிக்குஐக்யம். "இவன் வேதவித்தான ப்ராஹ்மணன்" என்பதுபோல். பால்யயௌவநம் இரண்டும் வெவ்வேறு காலங்களில் உண்டாகிற ஸத்வாரகாவஸ்தைகள்-வேதநமும் ப்ராஹ்மண சரீரமும் ஒரே காலத்திலுள்ள அத்வாரகவிசேஷணம். இவ்விதமாக இரண்டுவிதமான விசேஷணங்களோடுகூடின தர்மியின் ஐக்யம் ஐக்யசப்தார்த்தம் அதனால் 'ஜகத் சப்தவாச்யதர்ம்யைக்யாத ஜகத ஐக்யாத்' என்கிற நிர்தேசம் உபபன்னமாகிறது. அன்றிக்கே "க்ருத்ஸ்நஸ்ய ஜகத:" என்பது நிஷ்கர்ஷகசப்தம். ப்ரஹ்மசப்தமும் விசேஷ்யமாத்ரத்தைக் குறிக்கிறது கார்யாவஸ்தையைக்குறித்து ஆதாரமாக இருப்பதால் - ஆதாரத்வமும் நேராகவோ பரம்பரையாகவோ முக்கியமே. அதனால் ஜகத் ப்ரஹ்மகார்யம். தத் அந்தர்யாமிகசப்தம் வ்யாக்யானிக்கப்பட்டது. இவ்வண்ணம் ப்ரஹ்மகார்யமாக இருப்பதாலும் ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாகக்கொண்டிருத்தலாலும் ஜகத் ப்ரஹ்மாத்மகம். ப்ரஹ்மாத்மகத்வமாவது ஜகத்தானது ப்ரஹ்மத்திற்கு ப்ரகாரமாகவே இருக்கிற ஸ்வபாவத்தோடுகூடியிருப்பதால் ப்ரஹ்மத்தைவிட்டுத் தனித்து இருத்தல் இல்லாமையால் ப்ரஹ்மாந்தர்கதம் அந்த ப்ரகாரத்தால் ஐக்யம் - ஸ்வரூபைக்யம் இல்லை. விசிஷ்டத்தில் அந்தர்பாவமே ஐக்யமென்று அர்த்தம். தத்ப்ரத்யநீக நாநாத்வமிதி. விதிக்கப்பட்டிருக்கிற இரண்டுவித ஐக்யத்திற்கு ப்ரதிபடமான நாநாத்வம் நிஷேதிக்கப்படுகிறதென்று அர்த்தம். கார்யகாரணபேதம் குதர்க்கமூலமான ப்ராந்திக்கு விஷயம்-தன்னிடத்திலிருக்கிற பேதமானது லௌகிக ப்ரதீதிமூலமான ப்ராந்திக்கு விஷயம். அதனால் ப்ராந்திமூலத்வம் ஸமானமாக இருப்பதாலும் விஹிதமான ஐக்யத்திற்கு ப்ரத்யநீகத்வமும் ஸமானமாக இருப்பதாலும் அந்த ஆகாரத்தால் இரண்டுவித பேதத்தையும் நாநாசப்தத்தால் பராமர்சித்து நிஷேதிக்கப்படுகிறதென்பதினால் வாக்யபேதமில்லை. தத்ப்ரத்யநீகேதி. பேதநிஷேதமானது ஐக்யவிதிக்கு சேஷபூதம். அன்வயமுகத்தால் கூறப்பட்டிருக்கிற அர்த்தத்தை ஸ்திரப்படுத்துவதற்காகவே வ்யதிரேகோக்தி இருப்பதால், ஐக்யவிதியானது 'நேஹநாநாஸ்தி கிஞ்சந' என்கிற

ப்ரகரணத்தில் ச்ருதியினால் கூறப்படுகிறது. ஏகமைவாநுத்ரஷ்டவ்யமிதி. ஏகதா - ஏகதயா- பரமாத்மாவிற்கு சரீரமாக இருத்தலாகிற ஒரு ப்ரகாரத்தாலென்று அர்த்தம். அவ்வாறே, "அஹமேவ பரமாத்மா வர்த்தமானச பவிஷ்யாமிச நாந்ய:கஸ்சிந்மத்தோ வ்யதிரிக்த:. ஆத்மைவ ஸர்வபூதாநாமேக ஏவாஹமவ்யயம் - நாந்யத்கிஞ்சநம்ஷத்' அவ்வாறே 'பரமார்த்தஸ்த்வமேவைகோ நாந்யோஸ்தி ஜகத: பதே - அஹம்ஹரிஸ் ஸர்வமிதம் ஜநார்தநோ நாந்யத்தத: காரணகார்யஜாதம் - தத்ச்யுதாநாஸ்ய பரம்ததோந்யத்" (நானொருவன் முதலிலிருந்தேன். இருக்கிறேன், இருக்கப்போகிறேன்- என்னைவிட வேறானவன் ஒருவனுமில்லை- காணப்படுகிற ப்ரபஞ்சம் ஸ்ருஷ்டிக்குமுன் ஒரு ஆத்மாவாகவே இருந்தது, வேறு ஒருவஸ்துவும இருந்ததில்லை - உலகங்களுக்கு நாதனாக இருப்பவரே! நீர் ஒருவரே பரமார்த்தமாக இருப்பவர். மற்றொருவன் உலகத்துக்கு நாதனல்ல - இந்த ப்ரபஞ்சம் அனைத்தும ஜநார்த்தனனென்றும் ஹரி என்றும் சொல்லப்படுகிற நானே - என்னைத்தவிர்த்து வேறான காரணகார்யவர்க்கங்கள் இல்லை. சித சித்ரூபமான அந்த ஜகத்தானது அச்யுதஸ்வரூபமாகவே இருக்கிறது. அப்படிப்பட்ட அச்யுதனைத்தவிர்த்து வேறு வஸ்துவில்லை) இதுமுதலிய வாக்கியங்களில் ஐக்யவிதிக்குச் சேஷமாக பேத நிஷேதம் காணப்படுகிறது. சேஷத்வமானது விதிக்கப்பட்டிருக்கிற ஏகத்வத்திற்கு ஸ்திரீகரணரூபமான உபகாரத்தால் உண்டாகிறது. எப்படிப்பட்ட ஐக்யம் விதிக்கப்பட்டிருக்கிறதோ நிஷேதத்திற்கு அப்படிப்பட்ட ஐக்யவிரோதியான பேதவிஷயத்வமிருந்தால அதனால் பதார்த்தத்வம் ஸித்திக்கும். அந்த ஐக்யத்திற்கு அவிரோதியான அர்த்தாந்தர நிஷேதம் அதற்கு உபயுக்தமாகா - மண்ணே கடம் என்று சொல்லப்பட்டால் கட த்வித்வநிஷேதமானது மண் கடம் இவ்விரண்டுகளுக்கும் ஏகத்வோபகாரகமாகாதன்றோ - கட த்வித்வமானது ம்ருத்கடம் இவைகளின் ஏகத்வத்திற்கு விரோதியாக இல்லாததால். ஏகோ கட: என்று சொல்லப்பட்டாலும் கடத்தை அடைந்திருக்கிற ரூபபரிணாமாதிபேத நிஷேதமானது கடமென்று பெயருள்ள த்ரவ்யத்தின ஐக்யவிதிக்கு உபகாரகமாகா - ரூபபரிணாமாதிபேதத்திற்கு கடவ்யக்தியின் ஐக்யத்தைக்குறித்து விரோதித்வமில்லாமையால் - விதேயத்திற்கு விரோதியான அர்த்த நிஷேதமேயன்றோ விதிக்கு உபகாரகம். மேலும் உபகாரகாபாவமாத்ரமல்ல. எல்லா பேதங்களையும் நிஷேதிப்பதில் கருத்து என்பது ஐக்யவிதிக்கு விருத்தம். ஸமாநாதிகரணவாக்யத்தோடு ஐக்யவிதானத்தால், வெவ்வேறான விசேஷணங்களைச்சொல்லுகிற சப்தங்களுக்கு ஒரு விசேஷ்யத்தில் வ்ருத்தித்வமன்றோ ஸாமாநாதிகரண்யம் - ப்ரகார பேதம் இருக்கும்பொழுதே ஸமஸ்தபேதநிஷேதம் உபபன்னமாகாதன்றோ - ஆகையால் பேதநிஷேதம் ஐக்யவிதிசேஷமாதலால் காரயகாரணபேதமும் தன்னிடத்திலிருக்கிற பேதமும் நிஷேதிக்கப்படுகிறதென்று அபிப்ராயம். மேலும், "நசாஸ்யகஸ்சிஜ்ஜநிதாந சாதிப: - நதத்ஸமஸ்சாப்யதிகஸ்ச த்ருச்யதே. தேநார்ஹதிப்ரஹ்மணஸ்பர்தித்ம: - நத்வத்ஸமோஸ்த்யப்யதிக:குதோந்யோ லோகத்ரயே ப்யப்ரதிமப்ரபாவ" (இவனுக்கு பிதா ஒருவனும் கிடையாது, இவனுக்கு மேலதிகாரியுமில்லை, அந்த ப்ரஹ்மத்தோடு எவன்போட்டிபோடுவதற்குத் தகுதியுள்ளவன், நிகரற்ற ப்ரபாவமுள்ளவரே! மூன்றுலகங்களிலும் உமக்கு ஸமானன் இல்லை - அவ்வாறு இருக்க மேலானவன் அன்யன் எவ்வாறு இருப்பான்.) இதுமுதலியவைகளால் ஸவதந்த்ரரூப வஸ்துவிசேஷ விஷய நிஷேதம் காணப்படுதலால் ஸாமாந்யமாக அறியப்பட்டிருக்கிற பேதநிஷேதமானது அந்த இடத்தில் சாகபசு ந்யாயத்தால் பர்யவஸிக்கிறதென்பது அர்த்த ஸித்தம். அத ற்கு ப்ரத்யநீகாகாரத்வமென்று சொல்லப்பட்டிருப்பதாலும் சில வாக்கியங்களில் அது கண்டோக்தமாக இருப்பதாலும்.

பிறகு, உத்ஸர்காபவாத நியாயத்தை அபிப்ராயப்பட்டுக் கூறுகிறார்—நபுந: என்று. ப்ரஹ்மத்திற்கு கார்யரூபத்தால் நாநாத்வவிஷயமான சுருதி வாக்யோதாஹரண மானது ப்ரகாரநாநாத்வ விஷயக வாக்கியங்களையும் காட்டிக்கொடுப்பதற்காக. "ஏகஸ் ஸந் பஹுதாவிசார:, ஏகோதேவோபஹுதாநிவிஷ்ட:, த்வமேகோஸி பஹூநநு ப்ரவிஷ்ட:, யோவ்யக்தமந்தரே ஸஞ்சரந் யஸ்யாவ்யக்தம சரீரம், யோஅக்ஷரமந்தரே ஸஞ்சரந் - யஸ்யாக்ஷரம் சரீரம், யோ ம்ருத்யுமந்தரே ஸஞ்சரந் யஸ்யம்ருத்யு: சரீரம், ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மாதிவ்யோ தேவ ஏகோ நாராயண:" (ஒருவனாக இருந்துகொண்டு பலவாறாக ப்ரகாசிக்கிறான். ஸ்ருஷ்டி முதலிய கார்யங் களை லீலையாக உடையவனான பரமாத்மா ஒருவன் பலவாறாக சிதசித்வஸ்துக்களில் ப்ர வேசித்திருக்கிறான். நீர் ஒருவனாக இருக்கிறீர், அநேக வஸ்துக்களில் அநுப்ரவேசித் திருக்கிறீர். எவன் அவ்யக்தத்தின் உள்ளே ஸஞ்சரித்து நின்றுகொண்டு அவ்யக்தத்தைச் சரீரமாகக்கொண்டிருக்கிறானோ, எவன் அக்ஷரசப்தவாச்யர்களான க்ஷேத்ரஜ்ஞர்களுக் குள் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறானோ எவனுக்கு அக்ஷரம் சரீரமோ, எவன் ம்ருத்யு சப்தவாச்யமான ப்ரக்ருதிக்குள் ஸஞ்சரிக்கிறானோ, எவனுக்கு ம்ருத்யு சரீரமோ, இவன் எல்லா பிராணிகளுக்கும் அந்தராத்மாவாக இருப்பவன் - தோஷமற்றவன். அப்ராக் ருதமான ஸ்தானவிசேஷத்திலிருப்பவன், ஸ்ருஷ்டி முதலிய செய்கைகளால் க்ரீடிப்ப வன், நாரசப்தவாச்யங்களான ப்ராணிவர்க்கங்களுக்கு அடையத்தக்க ஸ்தானமாக இருப்ப வன்) என்று ப்ரகாரநாநாத்வமும் ப்ரகாரியின் ஐக்யமும் ஸ்பஷ்டமாகவல்லவோ சுருதி யினால் கூறப்பட்டிருக்கிறது. அன்றிக்கே, சாந்தோக்யத்திலும் தைத்திரீயத்திலும் 'பஹுஸ்யாம்' என்கிற ப்ரகரணத்தில் "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய, ததநுப்ர விச்ய, ஸச்சத்யச்சாபவத், நிருக்தஞ்சா நிருக்தஞ்ச, நிலயநஞ்சா நிலயநஞ்ச, விஜ்ஞாநஞ்சா விஜ்ஞாநஞ்ச" (இந்த ஜீவசரீரகனான தன ஸ்வரூபத்தால் அநுப்ரவேசித்து, சேதநரூபமா கவும் அசேதநரூபமாகவுமாயிற்று, ஜாதிகுணக்ரியைகளுடன் கூடியிருத்தலால் ஜாதிகுண க்ரியைகளைச்சொல்லுகிற சப்தங்களால் வாச்யமான அசேதநமாகவும் சேதநமாகவும், சேத நவர்க்கத்தை ஆச்ரயித்திருக்கிற அசேதநஜாதமாகவும் அசேதநஜாதத்திற்கு ஆதாரமாக இருக்கிற சேதநஜாதமாகவும், அஜடஸ்வரூபமாகவும் ஜடஸ்வரூபமாகவும)என்று சிதசித் துக்களில் அநுப்ரவேசத்தைமுன்னிட்டு நாமரூபங்களைப்பெறுதல் கேட்கப்படுவதால் ஹேயப்ரத்யநீகத்வ கல்யாணகுணைகதாநத்வரூபமான உபயலிங்கங்களோடுகூடியதாக இரு ந்தாலும் ப்ரஹ்மத்திற்கு இடையின்றி நேராக ஜகதுபாதாநத்வம் பொருந்தாததலாலும். 'பஹுஸ்யாம்' என்கிற இடத்திலும் ப்ரஹ்மத்திற்கு பஹுநாமரூபபாக்த்வமானது ஸத்வாரகமென்று ஸித்திப்பதால் சரீரமாதலால் ப்ரகாரபூத சிதசிந்நாநாத்வம் அர்த்த ஸித்தமென்கிற அபிப்ராயத்தால் "பஹுஸ்யாம்" என்கிற வாக்யம் உதாஹரிக்கப்பட் டது. இவ்வண்ணம் கார்யநாநாத்வமும் ப்ரகாரநாநாத்வமும் விதிக்கப்பட்டிருப்பதாலும் ஸாமாந்யநிஷேதமானது விதிக்கப்பட்டிருக்கிறதைவிட வேறாக இருப்பதை விஷய மாகக்கொண்டிருப்பதாலும் பேதச்ருதிகள் குதர்க்கஸித்தமான கார்யகாரணபேதவிஷயங் களென்றும் லௌகிக ப்ரதிஸித்தமான ஸ்வவிஷ்டபேத விஷயங்களென்றும் அர்த்தம்.

நாநாத்வநிஷேதத்தால் அபரமார்த்த விஷயத்வத்தைச் சங்கிக்கிறார்—நநுநாநாத்வ என்று. இது சுருதி. பேதமாயையால் நிஷேதத்தின் பொருட்டு அநுவதிக்கப்படுகிற தென்று கருத்து. பரிஹரிக்கிறார்—ந என்று. அப்ராப்தத்திற்கு அநுவாதம் கூடாதா தலால் விஷயங்களின் பாகுபாட்டால் விரோதமின்மையே ந்யாய்யம். இது ஆசார்ய பாதர்களால் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது—"யத்ப்ரஹ்மணோ குணசரீர விகாரபேத கர்மாதிகோசர விதிப்ரதிஷேதவாச:-அந்யோந்யபின்ன விஷயா ந விரோதகந்தமர்ஹந்தி

தந்நவிதய: ப்ரதிஷேதபாத்யா". (ப்ரஹ்மத்திற்கு குணம் சரீரம் விகாரம் பேதம் கர்மம் முதலியனாற்றை விஷயமாகக்கொண்டிருக்கிற யாதொரு விதிநிஷேத வசநங்களுண்டோ அவைகள் பரஸ்பரம் பின்னவிஷயங்கள், விரோதலேசத்தை அடையத்தகுதியுள்ளவைகளல்ல. ஆதலால் விதிகள் ப்ரதிஷேதத்தால் பாதிக்கத்தக்கவைகளல்ல) என்று. ஹேயங்களைத்தாலும் விடுபட்டிருப்பவனுக்கு ஹேயஸ்வரூபமுள்ள வஸ்துக்களோடு ஐக்யம் ஸம்பவியாததலாலும், ஹேயம் அபரமார்த்தமாக இருந்தபோதிலும் அது நிரஸிக்கத்தக்கதாக இருப்பதால் ஹேயத்வமானது விடத்தகாததாக இருப்பதாலும், அதற்கு எதிரிடையாக உரைக்கப்பட்டதற்கு அதின் ஸம்பந்தத்திற்குத் தகுந்தான வஸ்துவினது ஐக்யத்திற்கு வ்யாகாதமில்லாமையாலும், ஸர்வஜ்ஞருமான ப்ரஹ்மதிற்கு தன் ஸங்கல்பத்தால் தன்னை அடைந்திருக்கிற ஹேயமும் அந்த ஹேயவிஷயமான ப்ரமாபாதமும் பொருந்ாதலாலும், ப்ரஹ்மத்திற்கு ஸர்வஜ்ஞத்வத்தை ஒப்புககொள்ளாவிடில் ஸார்வஜ்ஞ்ய ச்ருதிவிரோதத்தாலும், ஸர்வசக்திகளுடன் கூடியவனுக்குத்தன்னை அணுகி இருக்கிற ஹேயங்களைநிவர்திக்கிறசக்தி இல்லை என்பது பொருந்தாததலாலும், சக்தியற்றவனென்று சொல்லும்பக்ஷத்தில் ஸர்வசக்தி ச்ருதிவிரோதத்தாலும், ச்ருதிபலத்தால் இப்படிப்பட்ட விரோதமில்லை என்கில், "தாந்யேவாநுவிநச்யதி, ந ஜாயதே ம்ரியதே வா" (அவைகளையே அநுஸரித்து விநாசமடைகிறான், பிறக்கிறதுமில்லை இறக்கிறதுமில்லை) இதுமுதலிய வாக்யங்களால் அறியப்பட்டிருக்கிற நித்யத்வம் அநித்யத்வம் நிர்குணத்வம் ஸகுணத்வம் முதலியதற்கு ச்ருதிபலத்தால் விரோதமில்லாமையால் ஓரிடத்திலும் நியாயஸஞ்சாரம் அபேக்ஷிக்கப்படாததுபற்றி மீமாம்ஸா சாஸ்திரத்திற்கு வையர்த்யம் வருவதாலும், பிந்நத்வா பிந்நத்வங்களுக்கு விரோதமில்லாமையால் பாரமார்த்திகம் அபாரமார்த்திகமென்கிற விபாகம் ஒப்புக்கொள்ளத்தகாததாக இருப்பதாலும், "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி" (ஜீவாத்மாவையும் நியந்தாவான பரமாத்மாவையும் தனித்திருப்பவர்களாக எண்ணி அந்த பரமாத்மாவினால் ப்ரீதிக்கு விஷயமாக்கப்பட்டவனாக மோக்ஷத்தை அடைகிறான்) "ஜுஷ்டம் யதாபச்யத்யந்யமீசம்" என்று ப்ருதக்த்வஜ்ஞாநத்திற்கு மோக்ஷோபாயத்வம் ச்ருதியினால் சொல்லப்பட்டிருப்பதாலும், "யஸ்மாத் க்ஷரமதீதோஹம்" இது முதலியதால் பேதஜ்ஞாநமுள்ளவனுக்கு அஸம்மூடத்வம் ஸ்ம்ருதியினால் கூறப்பட்டிருப்பதாலும், ஜீவன் பரமாத்மா இருவர்களுக்கும் நியாம்யத்வ நியந்த்ருத்வ ரூபபேதத்திற்கு கடபடபேதத்திற்குப்போல ப்ரமாணாந்தரகோசரத்வமில்லாமையால் அநுவாதம் ஸம்பவியாததலாலும், விதிக்கப்பட்டதற்கு நிஷேதம் கூடாததலாலும், உபாஸநார்த்தத்வாச்ரயணமானது "அத யோந்யாம்தேவதாமுபாஸ்தே" இதுமுதலிய வாக்யங்களாலறியப்பட்டிருக்கிற ஐக்யத்திலும் ப்ரஸங்கிப்பதால், ஐக்யம் விதிசேஷமல்லாத வாக்யங்களால் அறியப்படுகிறதென்று சொல்லும்பக்ஷத்தில் பேதமும் துல்யமாதலாலும்; பௌர்வாபர்ய விரோதம் நியதமாக இருப்பதுபற்றி அபச்சேதநியாயத்திற்கு அவிஷயமாக இருப்பதாலும்; விரோதாதிகரண நியாயத்தால் பேதச்ருதிக்குப்பின்பு இருக்கிற நிஷேதோத்பத்தி ப்ரதிபந்தகத்வமிருப்பதாலும்; ஐக்யவிதிசேஷமான பேதநிஷேதத்திற்கு விஹிதமான ஐக்யத்திற்கு விரோதியான பேதநிஷேதகத்வம் பொருந்துவதாலும்; அங்ஙனமில்லாவிடில், ஸமாநாதிகரணவாக்யங்களாலறியப்படும் தனக்கு சேஷிபூதமாகவுமிருக்கிற ஐக்யத்திற்கு விரோதித்வம் ப்ரஸங்கிப்பதாலும்; உத்ஸர்காபவாத நியாயத்தால் நிஷேதமானது விதிக்கப்பட்டிருக்கிற பேதத்தைத்தவிர்த்த மற்றதை விஷயமாகக்கொண்டிருத்தலாலும்; சாகபசுந்யாயத்தால் ஸாமான்யமான பேதநிஷேதமானது ஸ்வதந்த்ர பேத விசேஷ நிஷேதத்தில் பர்யவஸிப்பதாலும், பேதநிஷேத ச்ருதிகள் அப்ரஹ்மாத்மக

(அவித்யையை) அடைவதில்லை". "(அதை) பார்ப்பவன் அவித்யையைப்பாரான்", "ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயமாகாததும், சரீரமில்லாததும், இப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளதென்று நிர்வசனஞ் செய்யத்தகாததும், ஆதாரமற்றதுமான இப்ரஹ்மத்தினிடத்தில் எப்போது இவன் அபயார்த்தமாக நிலைபெறுகலை அடைகிறானோ, அதன்பிறகு அபயத்தை அடைந்தவனாகவாகிறான்". "பராவர வஸ்துவாகிய (அந்த ப்ரஹ்மமானது) ஸாக்ஷாத்கரிக்கப்பட்டவுடன் ஹ்ருதயத்திலுள்ள முடிச்சு (அவித்யை) பிளக்கப்படுகிறது. எல்லா ஸம்சயங்களும் அறுபடுகின்றன. இவனுடைய கர்மங்கள் எல்லாம் நாசமடைகின்றன". "ப்ரஹ்மத்தையறிகிறவன் ப்ரஹ்மமாகவேயாகிறான்". "அப்பரமபுருஷனை இவ்வண்ணமறிந்தவன் அவித்யையைக் கடக்கிறான். வேறுவழி கிடையாது", இது முதலிய சுருதிகள்.

ஶ்ருதப்ரகாசிகை—

ஐயா! வேறு இடத்தில் இருக்கிற வஸ்துவுக்கு மற்றொரு இடத்தில் தோற்றுவது மித்யாத்வமா? அல்லது முற்றிலும் அஸத்வமா? முந்தின கல்பத்தில் ஓரிடத்தில் பாரமார்த்யம் ஒப்புக்கொள்ளப்பட்டதாக ஆகும். இரண்டாவது கல்பத்திலோ என்றால், நிவர்த்திக்கத்தக்கதேயில்லை என்பதனால் சாஸ்த்ரம் பயனற்றதாக ஆகிறது. அத்யந்தாஸத்வம் என்பதும் பொருந்தாது-ஜ்ஞானத்துக்கு விஷயமாவதால். ஸ்வயம் பிரகாச வஸ்துவுக்கு ஊமாதிஷ்டானத்வம் உபபந்நமாகாது. அத்யாஸம் என்பது தன்னுடைய யதார்த்த ஸ்வரூபத்தின் அப்ரகாசத்தை மூலமாகக்கொண்டதன்றோ. பராதீன ப்ரகாசமான ஜட வஸ்துவுக்கே அது ஸம்பவிக்கிறது. ஆகையால் முந்தி ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிற ப்ரபஞ்சமித்யாத்வமும், ப்ரஹ்மத்தினுடைய ஊமாதிஷ்டானத்வமும் அயுக்தம் என்கிற இவ்விரண்டு ஆக்ஷேபங்களில் முந்தினதை பரிஹரிப்பதற்காக மித்யாத்வத்தின் லக்ஷணத்தைக்கூறுகிறார்-மித்யாத்வம்நாம என்று. நிவர்த்யத்வமே மித்யாத்வமென்று சொல்லும்பக்ஷத்தில் குண்டாந்தடி முதலியவைகளால் நிவர்த்திக்கத்தக்க கடம்முதலியவற்றில் *அதிவ்யாப்திவருகிறது. அதைப் பரிஹரிப்பதற்காக ஜ்ஞானசப்தம். அங்ஙனம் லக்ஷணம்கூறினும் சக்தியுள்ள ஈச்வரன் முதலியவர்களுடைய ஸங்கல்பரூபமான ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க வஸ்துவில் அதிவ்யாப்திவருகிறது. அந்த அதிவ்யாப்தியும் "யதாவஸ்தித வஸ்துஜ்ஞான" மாத்ரத்தால் நிவர்த்யத்வம் விவக்ஷிக்கப்பட்டிருப்பதால் பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது. ப்ரபலமான ப்ராந்திஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க ஸத்ய ரஜதம் முதலியவைகளில் அதிவ்யாப்தியைப் பரிஹரிப்பதற்காக 'யதாவஸ்தித' என்கிற சப்தம். 'யதாவஸ்திதஜ்ஞான நிவர்த்யத்வம்' என்று சொல்லப்பட்டால், ஸமாநாதிகரணபுத்தியுண்டாகும். அப்போது, ப்ராந்திஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதில் (ஸத்யரஜதஜ்ஞானத்தில்) உண்டான வ்யபிசாரமானது அப்படியே நிலைபெற்றிருக்கும். அவ்விடத்தில் ஜ்ஞானஸ்வரூபம் யதாவஸ்திதமன்றோ-விஷயத்துக்கே அயதார்த்தத்தன்மை. ஆகையால் யதாவஸ்திதம் ஜ்ஞானமென்று ஸாமாநாதிகரண்ய சங்கையை வ்யாவர்த்திப்பதற்காக யதாவஸ்தித வஸ்துஜ்ஞான நிவர்த்யத்வம் என்று உரைக்கப்பட்டது. ஜ்ஞானப்ராகபாவத்தில் வ்யபிசாரம் வருவதால் அதை நிரஸிப்பதற்காக "ப்ரதீயமாநத்வ பூர்வக"பதம். ஜ்ஞாநப்ராகபாவமுங்கூட ஒருஸமயத்தில்,

*அதிவ்யாப்தி—அலக்ஷ்யங்களில் லக்ஷணத்தினிருப்பு.

---

விஷயமாகக்கொண்ட அஜ்ஞானம் முந்தியே ஸித்தமாக இருக்கிறது. தன்னிடத்தில் அந்த வஸ்து இருப்பதாக தர்சனமானது அதைக்காட்டினும் அதிசயிதமான அஜ்ஞானமென்று கருத்து.

---

“𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌦𑌰𑌮𑌨𑍍𑌤𑌰𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇, 𑌅𑌥 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿” (தை-ஆ-௭-௨) 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋 𑌭𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿 𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌮𑍍; 𑌤𑌦𑌸𑌤𑍍। “𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌜𑍍𑌜𑌲𑌾𑌨𑌿𑌤𑌿 𑌶𑌾𑌨𑍍𑌤 𑌉𑌪𑌾𑌸𑍀𑌤” (ஶா-௩-௧௪-௧) 𑌇𑌤𑌿 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍। 𑌤𑌥𑌾 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌸𑍍𑌤𑌦𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌲𑌯𑌕𑌰𑍍𑌮𑌤𑌯𑌾 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑍁𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑍇𑌨 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇। 𑌅𑌤𑍋 𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌦𑍇𑌵𑌤𑌿𑌰𑍍𑌯𑌙𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌦𑌿𑌭𑍇𑌦𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑌿𑌤𑍍𑌯𑌨𑍁𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑌯𑌾 𑌅𑌭𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌨 𑌭𑌯𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃। 𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 “𑌅𑌥 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿” 𑌇𑌤𑌿 𑌕𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇; 𑌇𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇, “𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌦𑍃𑌶𑍍𑌯𑍇𑌽𑌨𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑍇𑌽𑌨𑌿𑌰𑍁𑌕𑍍𑌤𑍇𑌽𑌨𑌿𑌲𑌯𑌨𑍇𑌽𑌭𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇, 𑌅𑌥 𑌸𑍋𑌽𑌭𑌯𑌂 𑌗𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 (தை-ஆ-௭-௨) 𑌇𑌤𑍍𑌯𑌭𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾; 𑌤𑌸𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍇 𑌭𑌯𑌂 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿। 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃—“𑌯𑌨𑍍𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑌣𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋 𑌨 𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍇। 𑌸𑌾 𑌹𑌾𑌨𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑌹𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌰𑌂 𑌸𑌾 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾” (𑌗𑌾𑌰𑍁𑌡𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑍍) 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿। 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾 𑌅𑌨𑍍𑌤𑌰𑌂 𑌅𑌵𑌕𑌾𑌶𑌃 𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦 𑌏𑌵॥

𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌮𑍍—“𑌨 𑌸𑍍𑌥𑌾𑌨𑌤𑍋𑌽𑌪𑌿” 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌰𑌹𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍀𑌤𑌿; 𑌤𑌨𑍍𑌨, 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌹𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿। “𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌤𑍁” 𑌇𑌤𑌿 𑌚 𑌸𑍍𑌵𑌾𑌪𑍍𑌨𑌾𑌨𑌾𑌮𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑍈𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑍇𑌣 𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌤𑍍𑌵𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿॥

ஸ்ரீபாஷ்யம்—

'யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதர மந்தரம் குருதே - அத தஸ்யபயம்ப வதி'(எப்பொழுது இவன் இந்தப்ரஹ்மத்தினிடம் கொஞ்சம் பேதத்தைப்பா ராட்டுகிறனே அப்பொழுது அவனுக்கு பயம்ஸம்பவிக்கிறது) என்று ப்ரஹ் மத்தினிடத்தில் நாநாத்வதைநப்பார்க்கிறவனுக்கு பயம் ஸம்பவிக்கிறதென்று யாதொன்று உரைக்கப்பட்டதோ அது சரியல்ல. 'ஸர்வம் கல்விதம் ப்ர ஹ்ம - தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத' (ப்ரத்யக்ஷமாகக்காணப்படுகிற இந்த ப்ரபஞ்சமெல்லாம் ப்ரஹ்மமன்றோ - இவ்வுலகம் அந்த ப்ரஹ்மத்தினிடத்தி னின்று உண்டாயிருக்கிறது, அதினிடம் லயமடைகிறது, அதனால் ரக்ஷிக்கப் படுகிறது, என்று அநுஸந்தித்து சாந்தனாக உபாஸிக்கக்கடவான்.) என்று அதன் நாநாத்வாநுஸந்தானமானது சாந்திக்கு ஹேதுவென்று உபதேசிக்கப் பட்டிருப்பதால், இதை உபபாதிக்கிறார்—ததாஹி என்று அப்படியன்றோ- உலகம் அனைத்தும் அந்த ப்ரஹ்மத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்கு காரண வாக இருப்பதால் அந்த ப்ரஹ்மாத்மகத்வாநுஸந்தானத்தால் சாந்தி விதிக்கப் படுகிறது. ஆகையால் உள்ளபடி தேவர்கள் திர்யக்குகள் மனுஷ்யர்கள் ஸ்தா வரங்கள் என வேறுபட்டிருக்கிற ஜகத்தானது ப்ரஹ்மாத்மகமென்கிற அநு ஸந்தானமானது சாந்திக்கு ஹேதுவாக இருப்பதுபற்றி அபயப்ராப்திக்கு ஹேதுவாக இருப்பதால் பயஹேதுத்வத்திற்கு ப்ரஸங்கமில்லை.

இங்ஙனமாகில் அதறகுப்பிறகு அவனுக்கு பயம் உண்டாகிறது என்று ஏன் சொல்லப்படுகிறது? இதோ மறுமொழி உரைக்கப்படு கிறது கண் முதலிய இந்திரியங்களால் க்ரஹிக்கத்தகாதவனும் - சரீரமில் லாதவனும் ஜாதி குணம் முதலியவைகளைச்சொல்லுகிற தேவாதிபதங்களால் வாச்யனல்லாதவனும் ஆதாரமில்லாதவனுமான இந்த பரமாத்மாவினிடத்தில் எப்பொழுது இவன் பயமில்லாமலிருப்பதற்காக இடைவெளி இல்லாத ஸ்ம் ருதிரூபமான நிஷ்டையை அடைகிறனோ, அப்பொழுது அபயத்தைப்பெற்ற வனாக ஆகிறான் என்று அபயப்ராப்திக்கு ஹேதுவாக ப்ரஹ்மத்தினிடத்தில் எந்த நிஷ்டை உரைக்கப்பட்டதோ, அதற்கு ‡ விச்சேதம்வரின் பயம் உண் டாகிறது என்று மஹர்ஷிகளால் இதற்கு ஸம்வாதம் கூறப்பட்டிருக்கிறது. "ஒரு முகூர்த்தகாலமோ அல்லது க்ஷணகாலமோ வாஸுதேவன் சிந்திக்கப் படாமல் போவானேயாகில் அது இஷ்டஹாநி, அது பெரிதான அநிஷ்ட ப்ராப்திக்கு அணுகிவருவதற்கு சந்து. அது அந்த பரமாத்மாவினால் உண்டு பண்ணப்பட்ட சித்த ஸ்கலனம் - அது ஸ்வாதீனதை இல்லாமையால் உள்ள

படி இருத அங்கங்களின் வ்யாபாரம்'' இது முதலியது. ப்ரஹ்மத்தினிடத்தில் ப்ரதிஷ்டைக்கு அந்தரம் அவகாசம் விச்சேதமே.

'நஸ்தாநதோபி' என்கிற ஸூத்ரத்தில் ப்ரஹ்மமானது எல்லா விசேஷங்களாலும் விடுபட்டதென்று சொல்லப்போகிறார் - என்று யாதொன்று உரைக்கப்பட்டதோ; அது அப்படி அல்ல, ப்ரஹ்மமானது விசேஷங்களுடன் கூடியதென்றே அங்கு கூறப்போகிறார்—''மாயாமாத்ரந்து'' எனகிற ஸூத்ரத்தில் ஸ்வப்நகாலத்திலநுபவிக்கப்படுகிற பதார்த்தங்களுக்கு ஜாகரிதாவஸ்தையிலநுபவிக்கப்பட்டிருக்கிற பதார்த்தங்களோடு ஒற்றுமையில்லாமையால் மாயாமாத்ரத்வம் சொல்லப்படுகிறது என்பதினால் ஜாகரிதாவஸ்தையில் அநுபவிக்கப்பட்ட பதார்த்தங்களுக்குப்போல பாரமார்த்திகத்வத்தையே சொல்லப்போகிறார்.

---

ச்ருதப்ரகாசிகை—

''யதாஹ்யேவைஷ:'' இதுமுதலிய ச்ருதியை எடுத்துக்கொண்டு 'தத்ரப்ரஹ்மணி' இதுமுதலியதால் பூர்வபக்ஷியினால சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்தை அநுவதித்துத் தூஷிக்கிறார் - ததஸத் என்று. ததஸத - பயப்ராப்தி ஹேதுத்வம் இல்லை என்று அர்த்தம். எதனாலென்று கேட்கில் சொல்லுகிறார்—ஸர்வம் என்று. ப்ரஹ்மத்திற்கு கார்யமான ஜகத்ரூபமாக நாநாத்வாநுஸந்தாநம் மூக்திஹேதுவென்பது ஸித்தாந்தார்த்தம். இப்பொழுது அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற சாந்திஹேதுத்வததை ஒப்புக்கொண்டு கூறப்பட்டது. எவ்வாறு அவ்விடத்தில் நாநாதவாநுஸந்தானப்ரதீதி? எவ்வாறு அதற்கு பயப்ராப்திஹேதுதாவிரோதித்வம் என்று சங்கைவரின் இதை விவரிக்கிறார்—தத்ராஹி என்று. இந்த இடத்தில நாநாத்வாநுஸந்தானப்ரதீதியைக் காணபிக்கிறார்—ஸர்வஸ்ய என்று. ப்ரஹ்மம் என்று மாத்ரம் சொல்லப்பட்டிருக்கவில்லையன்றே; பின்னேயோ 'இவை அனைத்தும் ப்ரஹ்மம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸர்வ சப்தமானது பற்பலபேதமுள்ள ப்ரபஞ்சத்தைக்குறிக்கிறது. ஆதலால் நாநாத்வ விசிஷ்ட ப்ரஹ்மாநுஸந்தானம் ப்ரஸித்தமென்று அர்த்தம். அதனாலென்னவென்று கேட்கில் கூறுகிறார்— அத: என்று. நாநாத்வாநுஸந்தானமானது சாந்திஹேதுத்வம் வாயிலாக ஸமஸ்தபய நிவ்ருத்திரூபமான மோக்ஷோபாயமாக இருப்பதால் பேதபுத்திக்கு பயப்ராப்தி ஹேதுத்வோக்தியானது அதற்கு விருத்தமென்று அர்த்தம். மணி, கத்தி, கண்ணாடி முதலியவைகளை அடைந்திருக்கிற ப்ரதிபிம்பங்களில் போல தேஹங்களில் ராகம் த்வேஷம் முதலியது நிவ்ருத்தியின்பொருட்டு எல்லாம் ப்ரஹ்மத்தினிடத்தில் அத்யஸ்தம் என்கிற அநுஸந்தான விதியானது ஏன் இருக்கக்கூடாது? இவ்வண்ணமல்ல - ப்ரவ்ருத்திநிமித்தங்களின் பேதத்தால் ஒருஅர்த்தத்தில் வ்ருததித்வமல்லவோ ஸாமாநாதிகரண்யம் என்று உபபாதிக்கப்பட்டிருப்பதாலும், பதார்த்தத்வத்திற்கு இனி கூறப்போகிற தூஷணத்தால் உபஹதிவருவதாலும்.

இதற்குமேல சோத்யத்தை முன்னிட்டு இந்த ச்ருதியினது அர்த்தத்தைக் கூறு கிறார்—இது சொல்லப்படுகிறது என்று. 'அத்ருச்யே' என்பதினால் அநித்யா வ்ருத்தி ஏற்பட்டது. 'அநாத்மயே' என்றதனால் பத்த ஜீவர்கள் வ்யாவ்ருத்திகளைப் பட்டார்கள். அவர்கள் பரமாத்மாவினால் வ்யாப்யாகளன்றோ. அன்றிக்கே, ஆத்மயம் வ்யாப்யமான காமக்ருத சரீரம், அதில்லாதவன் அநாத்மியன. 'அநிருக்தே' என்பதினால் முக்த வ்யாவ்ருத்தி ஸித்தித்தது. அந்த முக்தாத்மா பத்ததசையில் தேவாதி சப் தங்களால் சொல்லப்பட்டிருந்தான். 'அநிலயநே' என்று நித்யமுக்த வ்யாவ்ருத்தி ஸித்தித்தது. அவர்களுக்கும் பகவான் ஆதாரமன்றோ - தன்னால் சொல்லப்பட்டிருக் கிற அர்த்தவிஷயமான உபப்ருஂஹணத்தைக் காட்டுகிறார் — யதேஷாக்ஷம் என்று. ஹாநி: - இஷ்டஹாநி:, சிதரம் - அநிஷ்ட ப்ராப்திரந்தரம். ப்ராந்தி: - அதினால் உண்டு பண்ணப்பட்ட சித்தஸ்கலனம. விக்ரியா - அதினால் உண்டான அஸ்வாதீநதையினால் அங்கங்களின் இருக்கவேண்டியபடி இல்லாத செய்கை. "ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே-தஸ்யுபிர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ப்ருசம்", "வரம் ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி:, ந சௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைச ஸம்" (பகவத் த்யாநமில்லாமல் ஒரு முகூர்த்த காலம் சென்றாலுங்கூட திருடர்களால் கொள்ளையிடப்பட்டு சொத்தை இழந்தவனைபோல் மனிதனுக்கு அதிகமாக அலறுதல்பொ ருத்தமுள்ளதாக ஆகும், ஸ்ரீகண்ணபிரானை தியானிப்பதில் நோக்கில்லாத ஜநங்களோடு சேர்ந்து வாஸம்செய்வதைவிட நெருப்பு ஜ்வாலைகளால் ஏற்படுத்தப்பட்ட கூட்டின் நடுவில இருப்பது சிறந்தது) இதுமுதலிய வசநங்கள் ஆதிசப்தததால் சொல்லக்கருதப் பட்டிருக்கிறது. அந்தர சப்தத்திற்கு விட்டுப்போகுதலெனகிற அர்த்தமெவ்வாறு என்று கேட்கில் கூறுகிறார்—ப்ரஹ்மணி என்று. இடைவெளி இலலாத தியானமன்றோ நிரந்தரம் என்று சொல்லப்படுகிறது. ஆதலால் அந்தரம் - என்றால் விட்டுப்போகுதல். அது எதற்கு என்று அபேக்ஷைவருங்கால் ப்ரதிஷ்டை ப்ரக்ருதமாக இருப்பதால் அதற்கு விச்சேதம். ப்ரக்ருத ப்ரஹ்ம விஷயமான 'ததப்யேஷ:' என்று உதாஹரிக்கப்பட் டிருக்கிற 'பீஷாஸ்மாத்வாத:' எனகிற அடுத்த சலோகததில வாயு, ஸூர்யன், முத லிய எல்லா சேதநர்களுக்கும் ப்ரசாஸிதாவாக இருத்தல் சொல்லப்பட்டிருப்பதால் அந்தர சப்தத்திற்கு உபாஸநவிச்சேதபரத்வமே யுக்தமே ஒழிய பேதபரத்வம் யுக்தமல்ல. ஆகை யால் இந்த அர்த்தமானது முன்பின்னிருக்கிற வாக்கியங்களுக்கும் ச்ருத்யந்தரத்திற்கும் உபப்ருஹ்மணத்திற்கும் அநுகுணம். அங்ஙனால் சொல்லப்பட்டதோவென்றால் அவை இரண்டுக்கும் விருத்தமென்று கருத்து.

ஐயா! 'யதாஹ்யேவைஷ:' என்கிற இடத்தில் ப்ரதிஷ்டையின் விச்சே தம் அர்த்தமானால் 'ஏதஸ்யாம்' என்று ஸ்த்ரீலிங்கமாகவன்றோ ஏதச்சப்தம் ப்ரயோ கிக்கப்பட்டிருக்கவேணடும், 'அதிதி: பாசாந்' என்கிற நியாயத்தால் விபக்தியினால் அறியப்பட்டிருக்கிற நபும்ஸகலிங்கத்திற்கு விவக்ஷை இன்மை என்று கூறப்படுமேயா னால், அப்படி இருந்தபோதிலும் அஸ்வாரஸ்யம் விலக்கததகாதது. ஸ்வரஸமாக அர்த் தம் ஸம்பவிக்கிறதாக இருக்க அப்படிப்பட்ட அஸ்வாரஸ்யம் பொருத்தமுள்ளதாக ஆகாது. ஸப்தமியும் அஸ்வரஸை. தஸ்யா: விச்சேத: என்று சொல்வதன்றோ ஸ்வர ஸம். 'தஸ்யாம் விச்சேத:' என்று கூறுவது ஸ்வரஸமன்று - ப்ரதிஷ்டாபரமாகச் சொல்லும்பக்ஷத்தில் ப்ராதிபதிகாஸ்வாரஸ்யமும உண்டாகும். முந்தின வாக்கியத்தில் 'யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருச்யே அநாத்ம்யே' என்று ப்ரஹ்மபரமாக ப்ரயோ கிக்கப்பட்டிருக்கிற 'ஏதஸ்மிந்' என்கிற பததிற்கு அடுத்த பிந்தின வாக்யததிலும்

புத்தியில் விபரிவ்ருத்தி இருப்பதால் என்று வினவப்படுமேயாகில; ஸமாதானம் கூறப்படுகிறது. § லிங்கத்துக்கும் ஸப்தமிக்கும் ப்ராதிபதிகத்துக்கும் அஸ்வாரஸ்யமில்லை, ஏதத்சப்தம் ப்ரஹ்மத்தை பராமர்சிப்பதால். அந்தர சப்தம் அவகாசத்தைச்சொல்லுகிறது; '$நிரந்தர ¶ஸாந்தரம' என்று ப்ரயோகங்கள் இருப்பதால். அந்தரமானது தேசத்தாலும் காலத்தாலும் உண்டாகிறது. காலத்தாலுண்டுபண்ணப்பட்ட அந்தரமானது விச்சேதமே. அய்யா! இங்ஙனமாகில் எதற்கு விச்சேதம் என்கிற அபேக்ஷைவரின் ப்ரதிஷ்டாயா: அந்தரமென்று அத்யாஹாரம் ஸம்பவிக்கலாம், அதோ யுக்தமன்று, அத்யாஹாரமில்லாமலே நிர்வாஹம ஸம்பவிப்பதால் என்றுகூறப்படுமேயானால்; அப்படியல்ல; - அருகாமையினால் கிடைத்த அர்த்தத்திற்கு அத்யாஹாராபேக்ஷை இல்லாமையால். ஆயினும், அஸ்வாரஸ்யம் என்று சொல்லப்படுமேயானால் பக்ஷாந்தரத்தில் அனேக அஸ்வாரஸ்யங்கள் வருவதால் அவைகளைக்காட்டிலும் இது கொஞ்சம் சிறந்தது. அப்படியன்றோ, பயஹேதுவானது அபயஹேது ப்ரதியோகியாதலால் அபயஹேதுபரமான ப்ரதிஷ்டா பதத்திற்கு ஐக்யவாசித்வமில்லாமையால் வாக்யவ்ருத்திக்கு அஸாமஞ்ஜஸ்யம் வருகிறது. அதனது ஸாமஞ்ஜஸ்யத்திற்காக ப்ரதிஷ்டா சப்தத்திற்கு ஐக்யபரத்வம் சொல்லில் முக்யமான அர்த்தத்திற்கு ஹானிவருகிறது. திடமான ஸம்பந்தமன்றோ ப்ரதிஷ்டை - 'ராஜ்யே ப்ரதிஷ்டித:' - (ராஜ்யத்தில் திடமான ஸம்பந்தம் பெற்றவன்) என்கிற லௌகிகவசனம் இந்த அர்த்தத்தில் ப்ரமாணம். முதன்மையாக அறியப்பட்டிருக்கிற ப்ரதிஷ்டாபதத்திற்கு அர்த்தபங்கமும் பொருத்தமுள்ளதாகாது - முந்தி விதித்திருக்கிற ஐக்யத்தை அறிவிப்பதில் நோக்குள்ளதாக இருத்தலால் விந்ததிதாதவாதத்திற்கு அஸ்வாரஸ்யமும். ஸப்தமியும் அஸ்வரஸை - பேதப்ரதியோகித்வ @ அவதித்வ ஸம்பந்த விவக்ஷையில் த்ருதீயை பஞ்சமீ ஷஷ்டிகளுக்கே ஸ்வாரஸ்யமிருப்பதால். க்ருதாதுவுக்கு ப்ரதிபத்தியை அர்த்தமாகக்கொள்வதால் அஸ்வாரஸ்யமும். 'மநஸ்குருதே' என்கிற யோஜனையில் அத்யாஹாரமும், 'ஏஷ ஹ்யேவாநந்தயாதி' என்கிறமுந்தினவாக்கியத்தாலறியப்பட்டிருக்கிற பேதவிரோதமும் (வருகிறது) அடுத்து 'பீஷாஸ்மாத்' என்று ||ப்ரசாஸித்ருத்வத்தால் பேதம் கூறப்படுகிறது. ஆகையால் மத்யத்தில் பேதநிஷேதமும் உபபன்னமாகாது. 'ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் நபிபேதி குதச்சந' - 'கதாசந' என்று முன்பின் வாக்கியத்தில் குணங்களோடுகூடின ப்ரஹ்மவேதனத்திற்கு அபயஹேதுத்வம் சொல்லப்பட்டிருப்பதால் ப்ரஹ்மத்தினிடம் பேதநிஷேதத்திற்கு அபயஹேதுத்வம் சொல்லுதல் விருத்தம். 'ப்ரஹ்மவிதாப்நோதி' என்று வேதநத்தில் தொடங்கியிருப்பதால் ப்ரஹ்மத்தினிடம் ப்ரதிஷ்டையின் வேதநரூபத்வமே தகுதியுள்ளது. ஐக்யரூபத்வம் யுக்தமன்று. ஐக்யம் ஐக்யபுத்தி இவ்விரண்டுக்கும் ப்ரதிஷ்டா சப்தவாச்யத்வமில்லையன்றோ. திடமான ஸம்பந்தத்தைச்சொல்லுகிற ப்ரதிஷ்டா சப்தத்திற்கோவென்றால் உபாஸிக்கத்தக்க பரஹ்மத்தைக்குறித்து உபாஸகனுக்கு இருப்பதினால் உபாஸ்யோபாஸக பாவரூபமான ஸம்பந்தத்தில் பர்யவஸானம் யுக்தம். ப்ரஹ்மம் நிர்விசேஷமென்பதிலும் அதைத்தவிர்த்தமற்றது மித்யை என்பதிலும் அன்யனால் சொல்லப்பட்டிருக்கிற இரண்டு ஸூத்ரங்களைப் பரிஹரிக்கிறார்—**யதுக்தம் என்று.**

§ லிங்கம்—பால். $ நிரந்தரம்—இடைவெளி இல்லாதது.

¶ ஸாந்தரம்—இடைவெளி உள்ளது.

@ அவதி—எல்லை.

|| ப்ரசாஸித்ருத்வம்—ஆளுகிறவனுடைய தன்மை.

ஸ்ம்ருதிபுராணயோரபி நிர்விஶேஷஜ்ஞாநமாத்ரமேவ பரமார்தோऽந்யதபாரமார்திகமிதி ப்ரதீயத இதி யதுக்தம் ததஸத் — "யோ மாமஜமநாதிஞ்ச வேத்தி லோகமஹேஶ்வரம்" (கீ-௧௦-௩) "மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்தித: । ந ச மத்ஸ்தாநி பூதாநி பஶ்ய மே யோகமைஶ்வரம் ॥ பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவந:" (கீ-௯-௪-௫) அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா । மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய । மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥ (கீ-௭-௬-௭) "விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத்" (கீ-௧௦-௪௨) "உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: । யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர: । யஸ்மாத்க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம: । அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥ (கீ-௧௫-௧௭-௧௮)

---

ஸ்ரீபாஷ்யம்.—

ஸ்ம்ருதிபுராணங்களில்கூட நிர்விசேஷ ஜ்ஞாநமாத்ரமே பரமார்த்தம், மற்றது அபார மார்த்திகம் என்று அறியப்படுகிறதென்று எது சொல்லப் பட்டதோ; அது ஸரியல்ல— 'எவன் என்னை பிறப்பில்லாதவனென்றும், ஆதியில்லாதவனென்றும் உலகங்களுக்கு மஹேச்வரனென்றும் அறிகிறானோ' "சராசரங்களனைத்தும் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன நான அவை களிடத்தில் அவைகளை ஆதாரமாகக் கொண்டிருப்பவனல்ல, சராசரங்கள் என் ஸங்கல்பமாத்திரத்திஞல் நிலைபெற்றிருக்கிறதேயொழிய என்னிடத்தில் நிலை பெற்றிருக்கவில்லை, ஈச்வரனுக்கு அஸாதாரணமாக இருக்கிற என்னுடைய ஸர்வ சக்தியோகத்தைப்பார் என் ஸங்கல்ப்பமானது சராசரங்களைபரிக்கிறது (தாங்குகிறது) அவைகளில் நிலைபெற்றிருக்கவில்லை. பூதங்களுடைய ஸத்தாநு வர்த்தகம்", "நான் எல்லாஉலகங்களும் உண்டாவதற்குக்காரணம், அவ்வாறே நாசத்துக்கும் காரணம், தநஞ்ஜய! என்னைவிடமிக்கச்சிறப்புள்ள வேறுவஸ்து ஒன்றும் கிடையாது. இவை அனைத்தும் நூலில் மணிகணங்கள் போல என்னிடத்தில் இசைக்கப் பட்டிருக்கிறது", "நான் இந்த ப்ரபஞ்சம் அனைத்தையும் ஸங்கல்பத்தின் ஏகதேசத்தால் அதிஷ்டாநமாக்கிக்கொண்டு

நிலைபெற்றிருக்கிறேன்", க்ஷராக்ஷர சப்தவாச்யங்களான சேதநாசேதநங்களைக்காட்டிலும் வேறாக இருப்பவனான உத்தமபுருஷனேயென்றால் பரமாத்மாவென்று சொல்லப்பட்டிருக்கிறான். குறைவற்றவனும் நியந்தாவாகவும் இருக்கிற எவன் மூவுலங்களையும் உள்ளே ப்ரவேசித்து தரிக்கிறானே, யாதொரு காரணத்தினால் நான் அழிதலை ஸ்வபாவமாகக்கொண்ட அசேதநங்களை தாண்டினவனாகவும் அழிவற்றவைகளான சேதநவர்க்கங்களைக் காட்டிலும் உத்தமனாகவுமிருக்கிறேனோ அதனால் உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று ப்ரஸித்திப்பெற்றிருக்கிறேன்.

---

**ச்ருதப்ரகாசிகை—**

இதற்குமேல் ஸ்ம்ருதிபுராணங்களுக்கு ஸவிசேஷ வஸ்து ப்ரதிபாதநத்திலுள்ள முக்கியக்கருத்தை உபபாதிக்கிறார்—**ஸ்ம்ருதிபுராணயோ:** என்று. 'ஸ்ம்ருதி' இது முதலியவற்றால் ஸாமான்யமாய் ப்ரமாணத்திற்கும் அதற்கு அவாந்தர ரூபமான சப்தத்திற்கும் ஸவிசேஷவஸ்துப்ராதான்யத்தை உபபாதித்ததாலும், சாஸ்த்ரத்திற்கு ப்ரத்யக்ஷவிருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிப்பதில் ஸாமர்த்தியமில்லாமையை உபபாதிப்பதாலும், விசேஷித்து வேதார்ந்தவாக்கியங்களுக்கு ஸவிசேஷபரத்வத்தை உபபாதித்ததினால் ஸ்ம்ருதிபுராணம இரண்டுக்கும் ச்ருதிகளுக்கு விருத்தமான அர்த்தத்தில் ப்ராமாண்யமில்லாமையாலும், அவ்விரண்டுகளுக்கும் ஸவிசேஷ பரத்வம் ஸித்தித்தது; இப்பொழுது ஸ்ம்ருதிபுராணங்களிலும் அந்யனால் உதாஹரிக்கப்பட்டிருக்கிற வசநங்களுக்கு முன்பின் பர்யாலோசனையினால் ஸவிசேஷபரத்வம் உபபாதிக்கப்படுகிறது. எவ்வாறு லௌகிக ப்ரமாண ச்ருதிவிருத்தங்களான அர்த்தங்களை இந்த சாஸ்திரம் ப்ரதிபாதிக்கிறதில்லையோ, இவ்வாறே பூர்வாபரவாக்கியங்களுக்கு விருத்தமான அர்த்தத்தையும் ஸ்ம்ருதி புராணங்கள் ப்ரதிபாதிப்பதற்கு சக்தியுள்ளவைகளல்லவென்று கருத்து. அந்யனால் எல்லாவற்றுக்கும் அவித்யையினால் ஸம்பவித்திருத்தல் ஸமானமாக இருப்பதால் ஸ்வாபாவிகமான வக்த்ருவைஷம்யத்தை ஒப்புக்கொள்ளாமையாலும், அத்வைதம் ஸ்பஷ்டமென்கிற ப்ரமத்தாலும், முந்தி புராணவசநங்களை உபந்யஸித்து, பிறகு பகவத்கீதாவசநங்கள் உதாஹரிக்கப்பட்டன. இவ்விடத்திலோவென்றால் ஸ்வாபாவிகமான வக்த்ருவைஷம்யத்தை ஒப்புக்கொள்வதாலும், அநந்தகுணவிபூதிமத்த்வம் ஸ்பஷ்டமாக இருப்பதாலும், பகவத்கீதாவசநங்களை முந்தி உபந்யஸித்து, பிறகு புராணவசநங்கள் துலக்கமாகக்காட்டப்படுகின்றன. அதனால் "ஸ்ம்ருதிபுராணயோ:" என்று உரைக்கப்பட்டது. அந்யனால் தன்னால் உதாஹரிக்கப்பட்டிருக்கிற வசநங்களுக்கு ப்ரதிபாத்யமாக எந்த அர்த்தம் சொல்லப்பட்டதோ, அதற்கு விபரீதமான அர்த்தத்தில் தாத்பர்யத்துடன்கூடின மிக்க ஸ்பஷ்டங்களான வசநங்கள் முதலில் காண்பிக்கப்படுகின்றன; பிறகு அவைகளுக்கு விரோதமின்றி அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற வசநங்களுக்கு அர்த்தத்தை ப்ரதிபாதிப்பதற்காக.

**யோமாமிதி** - இந்த இடத்தில் 'அஜம்' என்கிற பதத்தால் அசித்தோடு சேர்க்கைபெற்றிருக்கிற சேதநர்களுக்கு வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. 'அநாதிம்' என்பதனால் முக்தர்களுக்கு விலக்கம் ஏற்பட்டது. அந்த முக்தாத்மாவுக்குள்ள அஜத்வமானது ஆதியுள்ளது. லோகமஹேச்வரம் என்பதனால் நித்ய முக்த வ்யாவ்ருத்தி நிலை

பெ . ". லோக்யதே காணப்படுகிறது என்கிற வ்யுத்பத்தியினால் லோக ஏற்பட்டுள்ளது, ப்ரமாணங்களால ஸித்திபெற்றிருக்கிற மூன்றுவிதமான சேதநா சேதநர்கம் லோகசப்தத்தால் சொல்லப்படுகிறது. இந்த இடத்தில் "அஸம்மூடஸ்ஸ மர்தயேஷு" என்பது மேலே ப்ரதிபாதிக்கபபோகிற விஷயததிற்காகவும், அநு தாக அபிப்பிராயப்படப்பட்டிருக்கிறது. சேதநாசேதநங்களைக்காட்டிலும் ஆக அறிகிறவன் அஸம்மூடன் என்று சொன்னதனுல் ஸாவபதார்ததங்களைக் காட்டிலும் வைலக்ஷண்யம் தாத்விகம் என்பது சொல்லப்பட்டதாக ஆகிறதென்று அபிப் ராயம். தாரகதவம் முதலியவைகளால் வைலக்ஷண்யததை வைசத்யத்திற்காக 'மத்ஸ் தானி' என்று எடுக்கிறார். இந்த இடத்தில் சரீரலக்ஷணம் ஸூசிப்பிக்கப்பட்டதாக ஆகிறது. எல்லா வஸ்துக்களும் எனககு அதீனமான ஸ்திதியுடன் கூடி இருக்கின்றன, நான் அவைகளைச்சார்ந்த ஸ்திதியுள்ளவனல்லவென்று அர்த்தம. உலகததில் காணப் பட்டிருககிறமாதிரி நான் ஆதாரமல்ல, பின்னையோ ஸங்கல்பமாததிரத்தினுலென்றுசொல் லுகிறார்—ந ச என்று. நிஷேதமானது எது விஹிதமோ அதைவிடவேறாக இருப் பதை விஷயமாகக்கொண்டிருப்பதால் இதே அர்த்தம். யோகம் ஐச்வரம் - ஈச்வர னுக்கு அஸாதாரணமாக இருக்கிற சக்திஸம்பந்த்ததை என்று அர்த்தம். நச மதஸ்தானி' என்று. தாரகத்வத்தின் பாரமார்த்தியம நிஷேதிக்கப்படுமேயாகில் 'யோகமைச்வரமபச்ய' என்பது விருத்தம. அப்பொழுது 'என் ப்ராந்தியைப்பார்' என்றல்லவோ சொல்லத் தக்கது. 'யோகமைச்வரம்' என்பதை விவரியாநின்றுகொண்டு இதே அர்த்ததைச் சொல்லுகிறார்—பூதப்ருத் என்று. மம ஆத்மா - என்னுடைய ஸங்கல்பமென்று அர்த் தம். ஆத்மசப்தம் மதியையன்றோ சொல்லுகிறது. "யத்நேzர்கேzக்ஙௌ மதாவா த்மா" என்று நிகண்டு. ஆகையால் இவ்விடத்தில் ஆத்மசப்தம் ஸஙகல்பரூபமான ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. 'மமாத்மா பூதபாவந:" என்கிற இந்த வசநததினு லும 'மத்ஸ்தாநி பூதாநி' என்கிற வாகக்யததின் அர்த்தம் ஸ்பஷ்டமாக்கப்பட்டது. பூதபாவந: - பூதஙகளுடைய ஸத்தையை அநுவர்திக்கிறவன். இழ்ப்பட்டிருககிற ஈச் வரனுக்கன்றோ ஸகுணத்வம் என்கிறசஙகைவரின் காரணததைக்காட்டிலும வேறான வஸ்துவின் நிஷேதத்தைக் காண்பிப்பதற்காகவும், லக்ஷணத்தைக் காண்பிப்பதற்காக வும் ஜகத்காரணத்வத்தைச் சொல்லுகிறார்—அஹம் என்று. உத்பத்தியும் ப்ரளயமும் சொல்லப்பட்டது. ஸ்திதியோவென்றால் தாரகத்வத்தைச் சொன்னதனுல் ஸித்தி பெரு கிறது என்று தாரகத்வத்தை விசேஷிக்கிறார்—மயி என்று, விஷ்டப்யாஹம் என்ப தனுல் நியந்தருத்வம் கூறப்பட்டது. விஷ்டப்ய - அதிஷ்டாநஞ்செய்து, ஏகாம்சேந - ஸங்கல்பத்தின் ஏகதேசத்தால். தத் சரீரத்வ லக்ஷணம். "யோமாமஜம்" இது முத லியதால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிற சிதசித்வைலக்ஷண்ய கண்டோக்தியைக் காண்பிக் கிறார்—உத்தம: என்று. முந்தின வசநத்தில் பத்தமுக்தர்கள் இருவர்களும் க்ஷராக்ஷர சப்தங்களால் சொல்லப்பட்டார்கள். கூடஸ்த: - விகாரமில்லாதவன். முக்தனுக்கு ஜ்ஞாநஸஙகோசரூபமான விகாரமில்லாமையால், அல்லது கூடஸ்தசப்தம ஸாதாரண வஸ்துவைச்சொல்லுகிறது. எல்லா உலகங்களிலும் தன்னிஷ்டப்படி ஸஞ்சாரமுள்ள வனுக ஆகிறான் என்பதுபற்றி முக்தாத்மாவுக்கு உபயவிபூதி ஸாதாரண்யத்தால் கூடஸ் தத்வம். "பரமாத்மேத்யுதாஹ்ருத:" என்கிற வசநத்தினுல் "பரமாத்மா வ்யவஸ் தித:" என்கிற வாக்கியத்தோடு அந்வயித்த நாராயணுநுவாகம் ஸ்மரிப்பிக்கப்பட்டது. 'அக்ஷராதபிசோத்தம:' என்பதனுலும் அந்த இடத்திலேயே "ஸோzக்ஷர:பரம: ஸ்வராட்" என்று கூறப்பட்டிருககிறது. ஜ்ஞாநஸங்கோசரூபமான க்ஷரணமில்லாமை யால் அக்ஷரசப்தவாசயன் முக்தன். ஸ்வராட்-ஸ்வதந்த்ரன், கர்மத்திற்கு வசப்படாதவன் பரம: - ஜீவாத்மாக்களை அடைந்திருக்கிற அவஸ்தைகளுக்குள் இதற்குமேல்பட்ட அவ

ஸ்தாவிசேஷமில்லாமையால் பாரம்யம். ‘ ஸர்வாணி ’ என்கிற பதம் ப்ரஹ்மா சிவன் முதலியவர்களைக்குறிக்கிறது. அந்த அநுவாகத்தில் ‘ ஸ ப்ரஹ்மாஸசிவ: ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரமஸ்ஸ்வராட் ’’ என்கிற ஸமாநாதிகரணங்களான பத்தமுந்த ஜீவவாசி பதங்களால் பகவானன்றோ சொல்லப்பட்டிருக்கிறார். அந்த அநுவாகத்தில் ‘ விச்வமேவேதம் புருஷ: ’ என்று ஸாமாநாதிகரண்யவாக்கியம் கேழ்க்கப்படுகிறது. ஸாமாநாதிகரண்யத்திற்கு ஹேதுவும் அந்த அநுவாகத்தில் ஸ்பஷ்டம். “ தத்விச்வமுபஜீவதி; பதிம் விச்வஸ்யாத்மேச்வரம், வ்யாப்ய நாராயண:ஸ்தித:,’’ என்றும் இருக்கிற வாக்கிய ஜாலத்தில் தார்யத்வம் தாரகத்வம் நியந்த்ருத்வம் நியாம்யத்வம் சேஷித்வம் சேஷத்வம் வ்யாப்யத்வம் வ்யாபகத்வம் முதலியதே ஸாமாநாதிகரண்யத்துக்குக் காரணமே ஒழிய அவைகளின் ஐக்யம் அல்லவென்பது ஸ்பஷ்டம். அது இங்கு (ச)சால்லப்படுகிறது. ‘ ஆவிச்ய ’ என்கிற பதத்தினால் ‘ வ்யாப்ய நாராயண: ஸ்தித: ’ என்கிற வாக்கியத்தின் அர்த்தம் கூறப்பட்டது. ‘ பதிம்விச்வஸ்ய ’ என்பதின் அர்த்தமானது ஈச்வர சப்தத்தால் சொல்லப்பட்டது. ஈச்வர சப்தம சேஷிவாசகமன்றோ. அதனாலேயே ‘ பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் ’ என்கிற இடத்தில் வேறு பதியின் இன்மையைச்சொல்லக் கருதி ஆத்மேச்வரம் என்று உரைக்கப்பட்டிருக்கிறது. “ தத்விச்வமுபஜீவதி ” என்கிற வாக்யத்தின் அர்த்தமானது ‘ பிபர்தி ’ என்கிற பதத்தால் சொல்லப்பட்டது. அப்படியே “ வ்யாப்நோதி பாணேத்ஸ்வாம்யாதந்ய: பஞ்சதசோதித: ’’ என்பதினாலும, யோமாமேவமஸம்மூட: ’ என்பதினாலும் உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களைக்காட்டிலும் பரமாத்மா விலக்ஷணன் என்கிற ஜ்ஞானமுள்ளவனுக்கு அஸம்மூடத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. “ இதி குஹ்யதமம் சாஸ்த்ரம் ’’ என்பதனால் அந்த அர்த்தம் நிரம்பகூடமாக வைத்துப்பாதுகாக்கத்தக்கதென்று சொல்லப்பட்டது. ஆகையால் இந்த அர்த்தத்தில் தாத்பர்யம் என்பது ஸ்பஷ்டம். புருஷோத்தம சப்தத்திற்கு ஸமாஸவிஷயத்தில் சப்தாநுசாஸநவிரோதம சங்கிக்கத்தக்கதல்ல – “ நாஸோத்தமாதி ச ஸித்தம் பவதி ” என்கிற மஹாபாஷ்ய வசநத்தாலும், பாணிநியைப்போல புருஷோத்தம சப்தத்தின் நிர்வாஹத்தைச்செய்தவர்களான ரிஷிகள் ஆப்ததமர்களாக இருப்பதாலும். அன்றிக்கே புருஷோத்தம: என்று பஞ்சமீஸமாஸம் – ‘ அக்ஷராதபிசோத்தம: ’ என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது. பூர்வநிபாதமேதவென்றால் ஸாமாநாதிகரண்யம் சொல்லக்கருதப்பட்ட இடத்திலேயே ஒழிய அதின் அவிவக்ஷையுள்ள இடத்திலுங்கூட அநுசாஸந விரோத சங்கைக்கு ப்ரஸக்தி இல்லை. இவ்வண்ணம் இந்த வசநங்களால் சிதசித்வைலக்ஷண்யம் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால் ‘ க்ஷேத்ரஜ்ஞஞ்சாபிமாமவித்தி ’ இது முதலிய வசநங்களுக்கு அதற்கு விரோதமின்றி அர்த்தம் வர்ணிக்கத்தக்கது. ‘ யோலோகத்ரயமாவிச்ய பிபர்தி ’ இது முதலியதால் அனைத்துக்கும் பகவச்சேஷத்வம் தார்யத்வம் நியாம்யத்வம் வ்யாப்யத்வம் சரீரத்வம் முதலியது விதிக்கப்பட்டிருப்பதால், அது நிஷேதிப்பதற்குத்தகாததாதலால் – ‘ ந ததஸ்தி விநா யத் ஸ்யாத் ’ இது முதலியதால் பரமாத்மகமாக இல்லாத வஸ்துக்கு நாஸ்தித்வம் சொல்லப்படுகிறது. அவிநாபாவ சப்தத்திற்கு மித்யாத்வபரமாக ப்ரஸித்தி இல்லாமையாலும் அவ்வாறு ஒப்புக்கொள்ளத்தக்கதென்று அபிப்பிராயம். விநாசப்தமானது ஸம்பந்தத்தின் இன்மையைச்சொல்லுகிறது, அவிநாபாவ சப்தம் ஸம்பந்தநியமத்தைச்சொல்வதால்.

---

‘‘ 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌾𑌂𑌶𑍍𑌚
𑌮𑍁𑌨𑍇 𑌵𑍍𑌯𑌤𑍀𑌤𑌃 । 𑌅𑌤𑍀𑌤𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌰𑌣𑍋𑌽𑌖𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑍇𑌨𑌾𑌸𑍍𑌤𑍃𑌤𑌂
𑌯𑌦𑍍𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌲𑍇 ॥ 𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌸𑍌 𑌸𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌲𑍇

லேசாத்³த்⁴ருதபூ⁴தஸர்க³: । இச்சா²க்³ருஹீதாபி⁴மதோருதே³ஹ: ஸம்
ஸாதி⁴தாசேஷஜக³த்³தி⁴தோऽஸௌ ॥ தேஜோப³லைச்வர்யமஹா
வபோ³த⁴ஸுவீர்யசக்த்யாதி³கு³ணைகராசி: ॥ பர: பராணாம்
ஸகலா ந யத்ர க்லேசாத³ய: ஸந்தி பராவரேசே ॥ ஸ ஈச்வரோ வ்யஷ்டி
ஸமஷ்டிரூபோऽவ்யக்தஸ்வரூப: ப்ரகடஸ்வரூப: । ஸர்வேச்வர: ஸர்வ
த்³ருக் ஸர்வவேத்தா ஸமஸ்தசக்தி: பரமேச்வராக்²ய: । ஸம்ஜ்ஞாயதே
யேந தத³ஸ்ததோ³ஷம் சுத்³த⁴ம் பரம் நிர்மலமேகரூபம் । ஸந்த்³ரு
ச்யதே வாப்யவக³ம்யதே வா தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது³க்தம் ॥

ஸ்ரீபாஷ்யம்—

'ரிஷியே! அவன் ஸர்வபூதங்களுக்கும் மூலகாரணமாக இருக்கிற ப்ரதான த்தையும் மஹதஹங்காராதிகளையும ஸத்வரஜஸ்தமோ குணங்களாலுண்டாகிற தோஷங்களையும் தாண்டினவனாகவும் எல்லாவிஷய ஜ்ஞாநஸங்கோசத்தைக் கடந்தவனாகவும எல்லா வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாகவும இருக்கி றான உபயவிபூதி மத்தியத்தில் எது இருக்கிறதோ அது எல்லாம் அவனால் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது''

அந்த பரம புருஷன் ஸமஸ்தகல்யாண குணங்களை தர்மிஸ்வரூபமாக உடையவன். தன்னுடைய ஸாமர்த்திய லேசத்தாலேயே தரிக்கப்பட்டிருக்கிற கார்யவஸ்து ஸமூஹத்தையுடையவன் இச்சையினால் ஏற்றுக்கொள்ளப் பட்டும் தனக்கு அநுரூபமாகவுமிருக்கிற பெரிதான தேஹங்களுடன் கூடியவன. உலகங்களுக்கு ஹிதமான கார்யங்களை நன்றாகச்செய்து முடிப் பவன். தேஜஸ், பலம, ஐச்வர்யம், அபரிச்சின்னமானஜ்ஞானம், நல்லவீர்யம் சக்தி முதலிய குணங்களுடைய ஒருகுவியலாக இருப்பவன்; சிறப்புடைய வர்களான ப்ரஹ்மருத்ராதிகளைக் காட்டிலும மேன்மை பெற்றவன் பராபர வஸ்துக்களுக்கு நியந்தாவாக இருக்கிற எந்தபரமபுருஷனிடத்தில் ஸமஸ்தங் களானக்லேசம் முதலியவைகள் இல்லையோ அவன் எல்லாஉலகங்களுக்கும் நியந்தா. கார்யகாரண பாவாவஸ்தைபுடன்கூடின சேதநவர்க்கங்களை சரீரமாக உடையவன், அவ்யக்தமான ஸ்வரூபத்துடன்கூடியவன், ப்ரகாசிக்கிற ஸ்வரூபமுடையவன் எல்லாவற்றுக்கும், நியந்தா ஸ்வரூபத்தாலும் ப்ரகாரத் தாலும் எல்லாவற்றையும் அறிந்தவன், அவாப்த ஸமஸ்தகாமன்- எல்லாவற்

றையும் அப்ருதக்ஸித்தவிசேஷணங்களாகக் கொண்டவன், தனக்குமேலான ஒருவனுமில்லாத ஈச்வரனென்று பெயருள்ளவன். எந்த சாஸ்த்ரஜந்ய ஜ்ஞாநத்தினால் தோஷமற்றதும் சுத்தமாகவும் மிக்க நிர்மலமாயும் ஸதிர ஸ்வபாவமுள்ளதுமான அந்த ப்ரஹ்மம் அறியப்படுகிறதோ ; எந்த உபாஸநாத்மக ஜ்ஞாநத்தால் நன்றாக ஸாக்ஷாத்கரிக்கப்படுகிறதோ ; எந்த பரபக்தி ரூபமாகவும் அநுபவ ரூபமாகவுமிருக்கிற ஜ்ஞாநத்தால் அனுபவிக்கப்படுகிறதோ அது ஜ்ஞாநம், அதைக்காட்டிலும் வேறானது அஜ்ஞாநம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் புராணவசநங்கள் உபந்யஸிக்கப்படுகின்றன; அவற்றுள் 'ப்ரத்யஸ்தமிதபேதம்' என்கிற வசநத்தினுடைய அர்த்தத்தை வ்யாக்கியாநஞ்செய்ய எண்ணங்கொண்டவராக அதற்கு உபயோகியாக இருப்பதால் அதின் உபக்ரமத்திலும் உபஸம்ஹாரத்திலும் ஸவிசேஷபரத்வத்தைக் காண்பிக்கப்போகிறவராக உபக்ரமவாக்கியங்களை எடுக்கிறார்—ஸஸர்வ என்று. அவற்றுள் முதல் கிரந்தமானது ஹேயப்ரத்யநீகத்வத்தை ப்ரதிபாதிக்கிறது. ஸர்வபூத ப்ரக்ருதிம் - ப்ரதானத்தை, விகாராந் - மஹத்தத்வம் முதலியவைகளை, குணாதிதோஷாந்-ஸத்வரஜஸ்தமஸ்களாகிற ஹேதுவாகக்கொண்ட தோஷங்களை, அந்த தோஷங்கள் க்லேசம்முதலியவைகள், வ்யதீத:-விசேஷித்துத்தாண்டினவன். தவறாமல் அவைகளுக்கு அதீநனாக இல்லாமையால் ஸம்பந்தத்திற்கு அநர்ஹன் என்று அர்த்தம். அதீதஸர்வாவரண:-ஆவரணம்-ப்ரக்ருதி ஸம்பந்தம் கர்மவாஸனை முதலியது. அவைகளனைத்தும் எவனால் தாண்டப்பட்டதோ அவன் என்று பொருள். அன்றிக்கே ஸர்வவிஷயஜ்ஞாநாவரணம் ஸர்வாவரணம்-ஸர்வவிஷயஜ்ஞாந ஸங்கோசத்தை அதிக்கிரமித்தவன் என்று அர்த்தம். ஜ்ஞாநசக்திமுதலிய எல்லா குணங்களின் ஸங்கோசத்தை அதிக்ரமித்தவனென்றாவது அர்த்தம். அகிலாத்மதத்வத்தை விவரிக்கிறார்—தேந என்று. ம்ருதாத்மகோகட: என்பதுபோலில்லை என்றாவது அர்த்தம். புவநாந்தராளே - உபய விபூதிகளின் மத்தியத்தில்.

இதற்குமேல் திவ்யாத்ம ஸ்வரூபம் மங்களங்களுக்கே ஆஸ்பதமென்பதைக்கூறுகிறார்—ஸமஸ்த என்று. 'ஸமஸ்தகல்யாணகுணாத்மக:' என்பதினால் கல்யாணகுணவத்த்வம் சொல்லப்படுகிறதேயானால் ஆத்மசப்தம் ஸ்வபாவவாசியாக ஆகும். இவ்வண்ணம் சுருக்கப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு 'தேஜோபலைச்வர்ய' இது முதலியதால் விஸ்தாரம் செய்யப்படுகிறதென்று நிர்வாஹம். இந்த நிர்வாஹத்தாலும் திவ்யாத்ம ஸ்வரூபபரத்வம் யுக்தம்; அபேக்ஷிக்கப்பட்டிருப்பதை விதியாமல் அபேக்ஷிக்கப்படாமலிருப்பதை விதிப்பது தூர்பலம் என்கிற நியாயத்தால். அப்பொழுது கல்யாண சப்தம் பாவப்ரதாநம் ; ஸமஸ்த கல்யாணத்வம் குண: ஸ்வபாவ: யஸ்யஸ: ஸமஸ்தகல்யாண குண: 'த்வ்யேகயோர்த் விவசநை கவசநே' என்கிற ஸூத்திரத்தில்போல். அந்த ஸூத்திரத்திலிருக்கிற 'த்வ்யேகயோ:' என்கிற பதம் த்வித்வஏகத்வபரமாக வ்யாக்கியாநம் செய்யப்பட்டிருக்கிறது. அப்படி இல்லாவிட்டால் 'த்வ்யேகேஷு' என்று சொல்லத்தக்கதே ஒழிய 'த்வ்யேகயோ:' என்று சொல்லக்கூடாது. அந்த த்விவசநவிபக்தி நிர்தேசமானது பாவப்ரதாந நிர்தேசத்திற்கு ஸாதுத்வத்தைத் தெரிவிப்பதற்காகச் செய்

யப்பட்டிருக்கிறது. அதனாலேயே "குணேஸ்ஸங்க்யாஜ்ஞாநப்ரப்ருதய:" என்று அபியுக்தர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. ஸமஸ்த கல்யாண குணா: ஆத்மா தர்மிஸ்வரூபம் யஸ்ய ஸ: ஸமஸ்தகல்யாணகுணாத்மக: - 'சிலாபுத்ரகஸ்ய சரீரம்' என்கிற நிர்தேசம்போல பஹுவ்ரீஹியானது ஔபசாரிகம். திவ்யாத்மஸ்வரூபத்தை ஸ்துதிக்கிறார்—ஸ்வசக்தி என்று தன்னுடைய அம்சலேசத்தால் தரிக்கப்பட்ட பூதஸாகத்துடன் கூடியவர். அன்றிக்கே; சக்தி: - ஸாமர்த்தியம், தன்னுடைய குணங்களின் லவத்தினால் தரிக்கப்பட்ட பூதஜாதத்துடன் கூடியவர் என்று அர்த்தம். பூதஸர்க-பூதஸமூஹம். அன்றிக்கே ஸ்ருஜ்யதே உண்டுபண்ணப்படுகிறது என்று ஸர்கம் - கார்யவஸ்து ஜாதமென்று அர்த்தம்; அபிப்ராயவிசேஷத்தால் ஷாட்குண்யத்தை பிந்தி உரைக்கப்போகிறவராக முதலில் திவ்யவிக்ரஹத்தைக் கூறுகிறார்—இச்சா என்று. அபிமதத்வம் - அபிமதிக்குத்தக்கதாக இருக்கல். ஸாநுரூபத்வமென்று அர்த்தம். அர்ஹார்த்தத்தில் * க்ருத்யை - உதாஹரணம் - 'அத்ருஷ்டோ த்ரஷ்டா, அச்ருத: ச்ரோதா' என்று. அந்த இடத்தில் தப்ரத்யயமானது அர்ஹார்த்தத்தில் வந்திருக்கிறது. 'அச்சேத்யம் அக்ராஹ்யம்' இது முதலியதோடு அர்த்தைக்யமிருப்பதால். உலகத்தில் அபிமதவஸ்துவுக்கு அநநுரூபத்வமும் அநநுரூபவஸ்துவுக்கு அநபிமதத்வமும் காணப்படுகிறது. அதை விலக்குவதற்காக இச்சாக்ருஹீதாபிமத சப்தங்கள். உபபதமில்லாத இச்சாசப்தமானது நித்யேச்சைக்கும் அவதாரஸமயத்திலுண்டாகிற இச்சைக்கும் பொதுவானது; ஸங்கோசமில்லாமையால். பிறகு அவதாரத்தின் வாயிலாக ஸாதிக்கத்தக்க விக்ரஹப்ரயோஜனத்தைக் கூறுகிறார்—ஸம்ஸாதித என்று.

அதற்குமேல் ஷாட்குண்யத்தைச் சொல்லுகிறார்—தேஜ: என்று. இந்த இடத்தில் க்ரமவிவக்ஷை இல்லை. மஹாசப்தம் ஸூசப்தம் இரண்டும் எல்லா குணங்களுக்கும் ஸாதாரணங்கள். மஹத்த்வம் - அபரிச்சின்னத்வம்-உதாஹரணம் - 'மஹோத்ஸாஹோ மஹாபல:, மஹாபுத்திர் மஹாவீர்யோ மஹாசக்திர் மஹாத்யுதி:' என்று 'ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்பலமதுலம்' இது முதலியதும். ஸூசப்தத்தால் அவைகளுக்கு மங்களத்வம் சொல்லப்படுகிறது. இவ்வாறாக ஸ்வரூபத்தாலும் விக்ரஹத்தாலும் குணங்களாலும் மேன்மைபெற்றவனென்று சொல்லுகிறார்—பர: என்று. 'குணைர்தோஷாந்' என்கிற பதத்திலுள்ள தோஷசப்தார்த்தத்தை விவரிக்கிறார்—நயதீர என்று. க்லேசாதய: - க்லேசகர்மவிபாகாசயங்கள், அவித்யை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், க்லேசம் இவைகள் க்லேசங்கள். கர்ம - புண்யாபுண்ய ஸ்வரூபமாக இருப்பது. ஜாதி ஆயுஸ் போகங்கள் விபாகங்கள், ஆசய:, வாஸனை ஸம்ஸ்காரம் - "க்லேசகர்மவிபாகாசயைரபராம்ருஷ்ட: புருஷவிசேஷ ஈச்வர:" என்கிற யோகஸூத்ரத்தை ஸ்மரிக்கச்செய்கிறார்—ஸர்வேச்வர: என்று. யோகசாஸ்திரத்தைக்காட்டிலும் வேதாந்தார்த்தத்திற்கு வைஷம்யத்தைக்கூறுகிறார்—வ்யஷ்டி என்று. முந்திபேதச்ருதியின் அர்த்தம் உரைக்கப்பட்டது. அதற்குமேல் ஐக்யச்ருதியின நிர்வாஹத்தின்பொருட்டு கடகச்ருதியின் அர்த்தம் உரைக்கப்படுகிறது. 'வ்யஷ்டி" என்று. வ்யஷ்டிஸமஷ்டி சப்தங்களால் கார்யகாரணபாவாவஸ்தைகளுள்ள சேதநவர்கம் சொல்லப்படுகிறது, ரூபம் - சரீரம்,ஸ்வரூபம் ஸ்வாஸாதாரணம் சரீரம், சரீரலக்ஷணத்தை ஸூசிப்பிக்கிறார்—ஸர்வேச்வர: என்று. ஈச்வர:-நியந்தா, இதனால் நியாம்யத்வம் சரீரத்வமென்பது ஸித்திக்கிறது. நியாம்யவிசேஷமன்றோ சரீரம். ஸர்வஜ்ஞ: - ஸர்வத்தையும் அறிந்தவன், ஸ்வரூபத்தாலும் ப்ரகாரத்தா

* க்ருத்யா—என்று தப்ரத்யத்திற்குப்பெயர் - "க்ருத்யல்யுடோ பஹுளம்" அல்லது "க்தக்தவதூநிஷ்டா" என்று பாணினி ஸூத்ரம்.

லும் எல்லாவற்றையும் அறிகிறனென்று அர்த்தம், அன்றிக்கே "விச்வதஸ்சக்ஷு:" இது முதலிய ச்ருதி ப்ரக்ரியையினால் நாற்புரங்களிலும் கண்களுள்ளவனாக இருந்துகொண்டு எல்லாவற்றையும் அறிகிறான் என்று அர்த்தம். அன்றிக்கே; எல்லோருக்கும் கண்-எல்லாவற்றையுமறிந்தவனும்-"சக்ஷுர்தேவாநாமுதமர்த்யாநாம்" என்று ச்ருதி இருப்பதினால். சக்ஷு:-ஜ்ஞாநத்தைக்கொடுப்பவன்-அல்லது எல்லாவற்றையும் அடைகிறனென்பதினால் ஸர்வவேத்தா. அவாப்தஸமஸ்தகாமன் என்று அர்த்தம். ஸமஸ்தசக்தி:, சக்தி: கார்யோபயோகியான அப்ருதக்ஸித்த (ஒருபொழுதும் தனித்திராத) விசேஷணம். மேல் சொல்லப்பட்ட ப்ரகாரமாக எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்டிருப்பதால் இவனுக்கு எல்லாம் அப்ருதக்ஸித்த விசேஷணமென்று பொருள். "பரமேச்வராக்ய:" என்கிற இடத்தில் பரமசப்தத்தால் இவனுக்குமேல்பட்ட ஈச்வரன் ஒருவன் இருக்கிறான் என்பது நிஷேதிக்கப்பட்டது. பர: மா அஸ்ய என்கிற வ்யுத்பத்தியினாலன்றோ பரமசப்தம் நிஷ்பன்னமாகிறது.

இப்படிப்பட்ட ஈச்வர விஷயஜ்ஞாநத்திற்கே மோக்ஷோபாய வேதாந்தவத்தைக் கூறுகிறார்—ஸஜ்ஞாயதே என்று. ஸம்ஜ்ஞாயதே என்கிற பாடத்தில் 'அஸ்ததோஷம்' இது முதலியது ப்ரஹ்மத்துக்கு விசேஷணம். யேந எந்த சாஸ்த்ரஜந்யஜ்ஞாநத்தால், விஜ்ஞாயதே அறியப்படுகிறதோ, யேந எந்த உபாஸநாத்மக ஜ்ஞாநத்தால் நன்கு காணப்படுகிறதோ, யேந எந்த பரபக்தி ரூபமாகவும் அநுபவரூபமாகவுமிருக்கிற ஜ்ஞாநத்தால் அடையப்படுகிறதோ அநுபவிக்கப்படுகிறதோ என்று அர்த்தம். "பக்த்யாத்வநந்யயா சக்ய: அஹமேவம்விதோர்ஜுந (- ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப' (சத்துருக்களைத்தபிக்கச்செய்கிற அர்ஜுந! இப்படிப்பட்ட நான் என்னைத்தவிர்த்து மற்றொன்றையும் விஷயீகரிக்காமலிருக்கிற பக்தியினால் அறிவதற்கும் பார்ப்பதற்கும் அடைவதற்கும் சக்யன்) என்று வசநமிருப்பதால். ஸஜ்ஞாயதே என்கிற பாடத்தில் அஸ்ததோஷம் இது முதலியது ப்ரஹ்மஜ்ஞாநவிசேஷணம். 'அர்த்தேநைவவிசேஷோஹி நிராகாரதியாம்' (ஆகாரமில்லாத புத்திகளுக்கு அர்த்தத்தினாலேயே விசேஷமன்றோ) வசநத்தினால் ஜ்ஞாநத்திற்கு அஸ்த்ததோஷத்வம் முதலியது விஷயத்தின் வாயிலாக. அஸ்ததோஷம் என்பதினால் தோஷாஸ்பதமான அசித் விஷயஜஜ்ஞாநத்தினின்று வ்யாவ்ருத்தி ஸித்தித்தது. பரம்நிர்மலம் இதனால் ஒரு ஸமயத்தில் கர்மஸம்பந்தார்ஹதாரூபமான பலத்தோடுகூடின முக்தவிஷய ஜ்ஞாநத்தினின்று வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. 'ஏகரூபம்' என்பதனால் நித்யமுக்த விஷயானேகரூபஜ்ஞாநத்தினின்று வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. இம்மாதிரியாக ப்ரஹ்மவிசேஷணத்வ பக்ஷத்திலும் வ்யாவ்ருத்தி காணத்தக்கது. ப்ரஹ்மத்திற்கு விசேஷணமென்று சொல்லும்பக்ஷத்தில் ஏகரூபம் என்பது ஆச்ரயிக்க தன்மைக்கு உபயுக்தமான விசேஷணமாகவுமாகிறது. ஸ்திரஸ்வபாவம் - ஆச்ரிதர்களின் ஸம்ரக்ஷணம் முதலியதை விஷயமாகக்கொண்ட ப்ரதிஜ்ஞையில் மிக்க தார்ட்யமுள்ளவனென்று அர்த்தம். அஜ்ஞாநம் மோக்ஷோபயோகியான ஜ்ஞாநத்தைக்காட்டிலும் வேறானது. அல்லது அதற்கு விரோதி - 'ஸாவித்யா யா விமுக்தயே' (எது முக்தியின்பொருட்டு ஸாதனமாக இருக்கிறதோ அதுதான் வித்யை) என்று வசநமிருப்பதால். அன்றிக்கே, அஜ்ஞாநம் ஜ்ஞாநாபாவம் - ப்ரஹ்ம பர்யந்தத்வமில்லாமையால் உள்ளது உள்ளபடி வஸ்துக்களை விஷயீகரியாமலிருப்பதுபற்றி. ப்ரஹ்மவிசேஷணத்வபக்ஷத்தில் ஒரு வாக்யம். ஜ்ஞாநத்திற்கு விசேஷணமாகில் இரண்டு வாக்யங்கள். ப்ரத்யஸ்தமிதம் இது முதலிய ச்லோகத்தில் ப்ரத்யஸ்தமிதபேதம் என்கிற பதத்தை உள்ளத்தில் வைத்துக்கொண்டு ஸவிசேஷம் ப்ரஹ்ம என்கிற விஷயத்தில் வசநங்கள் காண்பிக்கப்பட்டன.

𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 𑌮𑌹𑌾𑌵𑌿𑌭𑍂𑌤𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑍇 𑌪𑌰𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌶𑌬𑍍𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯 𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌕𑌾𑌰𑌣𑍇 ॥ 𑌸𑌂𑌭𑌰𑍍𑌤𑍇𑌤𑌿 𑌤𑌥𑌾 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌭𑌕𑌾𑌰𑍋𑌽𑌰𑍍𑌥𑌦𑍍𑌵𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 । 𑌨𑍇𑌤𑌾 𑌗𑌮𑌯𑌿𑌤𑌾 𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌗𑌕𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌤𑌥𑌾 𑌮𑍁𑌨𑍇 ॥ 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌮𑌗𑍍𑌰𑌸𑍍𑌯 𑌵𑍀𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑌶𑌸𑌃 𑌶𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌯𑍋𑌶𑍍𑌚𑍈𑌵 𑌷𑌣𑍍𑌣𑌾𑌂 𑌭𑌗 𑌇𑌤𑍀𑌰𑌣𑌾 ॥ 𑌵𑌸𑌨𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌖𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 । 𑌸 𑌚 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌶𑍇𑌷𑍇𑌷𑍁 𑌵𑌕𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌤𑌤𑍋𑌽𑌵𑍍𑌯𑌯𑌃 ॥" (வி-பு-௬-௫-௭௫) "𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑌕𑍍𑌤𑌿𑌬𑌲𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌤𑍇𑌜𑌾𑌂𑌸𑍍𑌯𑌶𑍇𑌷𑌤𑌃 । 𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌾𑌨𑌿 𑌵𑌿𑌨𑌾 𑌹𑍇𑌯𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 ॥" (வி-பு-௬-௫-௭௯) "𑌏𑌵𑌮𑍇𑌷 𑌮𑌹𑌾𑌶𑌬𑍍𑌦𑍋 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯 𑌭𑌗𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 । 𑌪𑌰𑌮𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌨𑌾𑌨𑍍𑌯𑌗𑌃 । 𑌤𑌤𑍍𑌰 𑌪𑍂𑌜𑍍𑌯𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑍋𑌕𑍍𑌤𑌿𑌪𑌰𑌿𑌭𑌾𑌷𑌾𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 । 𑌶𑌬𑍍𑌦𑍋𑌽𑌯𑌂 𑌨𑍋𑌪𑌚𑌾𑌰𑍇𑌣 𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌹𑍍𑌯𑍁𑌪𑌚𑌾𑌰𑌤𑌃 ॥" (வி-பு-௬-௫-௭௬,௭௭)

ஸ்ரீ பாஷ்யம்.—

"ஹே மைத்ரேய! சுத்தனாகவே இருப்பவனும் உபயவிபூதிநாதனென்று பெயருள்ளவனும் ஸர்வகாரணங்களுக்கும் காரணமாக இருப்பவனும் பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறவனுமான பரமாத்மாவினிடத்தில் பகவத் சப்தம் யோகரூடமாக இருக்கிறது. பகாரமானது ப்ரக்ருதிபுருஷகாலங்களை கார்யோத்பத்தி யோக்யங்களாகச்செய்கிறான், அப்படியே ஸ்வாமியாகவுமிருக்கிறான் என்கிற இரண்டு அர்த்தங்களோடு கூடியதாக இருக்கிறது. சிஷியே! அவ்வாறாகவே ஸ்திதிகர்த்தா, ஸம்ஹாரகர்த்தா, ஸ்ருஷ்டிகர்த்தா இந்த மூன்றும் ககாரத்தின் அர்த்தம். ஸமக்ரமான ஐச்வர்யம், வீர்யம், கீர்த்தி, ச்ரீ, ஜ்ஞானம், வைராக்யம், இந்த ஆறுக்கும் பகம் என்று பெயர். பூதங்களுக்கு ஆத்மாவாக இருப்பவனும் எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்டவனுமான அந்த பரமாத்மாவினிடத்தில் சேதநங்களும் அசேதநங்களும் வஸிக்கின்றன. அவனும் எல்லா வஸ்துக்களிடத்திலும் வஸிக்கிறான், என்பதினால் குறைவற்றவனான பரமாத்மா வகாரத்தால் உணர்த்தப்படுகிறான். ஹேயகுணங்களின் ஸம்பந்தமில்லாத ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ், இவைகளனைத்தும் பகவத் சப்தத்திற்கு வாச்யங்கள்,

ஹே மைத்ரேய ! இவ்வித ஸ்வபாவமுள்ள பகவானென்கிற இந்த மஹா சப்தமானது பரப்ரஹ்மமாக இருக்கிற வாஸுதேவனைத்தவிர்த்து வேறு ஒரு தேவதையையும் அணுகா. பூஜ்யங்களான அவயவார்த்தங்களின் சக்தி, ரூடி, இவைகளோடுகூடிய இந்த சப்தமானது அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் முக்கியமாக வழங்கப்படுகிறதே ஒழிய ஔபசாரிகமல்ல. அந்த ப்ரஹ்மத்தைத்தவிர்த்த மற்றவர்கள் பக்கலில் உபசாரத்தாலன்றோ ப்ரயோகிக்கப் படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் 'அகோசரம்வசஸாம்' என்பதை வ்யாக்யானம்செய்ய விருப்பத்தினால் சப்தகோசரனென்பதில் வசநங்களைக்காண்பிக்கிறார்—சுத்தே இது முதலியதால். ஆங்கு 'அசப்தகோசரஸ்ய' இதுமுதலிய முந்தின ச்லோகத்தில் பகவத் சப்தம் முக்தாத்மாவினிடத்தில் ஔபசாரிகம் என்று உரைக்கப்பட்டது. அது எங்ஙனமென்று வினவுரின் முக்தாத்மாக்களை வ்யாவர்த்திக்கிற பகவத்சப்த ப்ரவ்ருத்தி நிமித்தத்தைக்கூறுகிறார்—சுத்தே என்று. எந்த இடத்தில் ப்ரவ்ருத்திநிமித்த பௌஷ்கல்யமோ, அவ்விடத்திலேயேயன்றோ முக்யத்வம், வேறு இடத்திலில்லை என்று கருத்து. சுத்தே - 'ஸித்தே சப்தார்த்த ஸம்பந்தே' என்கிற இடத்தில் ஸித்தசப்தம்போல சுத்த சப்தம் அவதாரணத்தை தனக்குள் அடக்கிக்கொண்டிருக்கிறது. சுத்தனே - நித்ய சுத்தன் என்று அர்த்தம். அப்பக்ஷ:, வாயுபக்ஷ:, (ஜலத்தையே குடிப்பவன் - காற்றையே சாப்பிடுகிறவன்) என்பதுபோல. ஸித்த சப்தம் அவதாரணத்தை உள்ளே அடக்கிக்கொண்டிருப்பதால், ஸித்தசப்தமானது நித்யபரமாகவன்றோ வ்யாக்கியானிக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்போல இந்த நித்யசுத்தத்வத்தால் ஸகலசேதந வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. நித்யஸித்தர்களுக்குங்கூட நித்யசுத்தத்வமானது பகவானுடைய நித்யேச்சாதீனமாக இருப்பதால். மஹாவிபூத்யாக்க்யே - விபூதியாக இருப்பதற்கு மஹாவிபூதித்வம் பொருந்தாததலால் உபயவிபூதிசேஷித்வம் ஸமஸ்தசேதந வ்யாவர்தகம். 'பரே ப்ரஹ்மணி' என்றதனுல் சேதந வ்யாவ்ருத்தி ஸித்தித்தது. கீழ்பட்டதாக இருக்கிற ஆத்மா தனித்த ப்ரஹ்ம சப்தத்தால் சொல்லப்பட்டது. 'அசப்தகோசரஸ்யாபி தஸ்யவை ப்ரஹ்மணோ த்விஜ' (ப்ராஹ்மணா ! சப்தங்களுக்குக் கோசரமாக இராமலிருந்தாலும் அந்த ப்ரஹ்மத்திற்கே) என்று. மேலேயும் 'பரப்ரஹ்மபூதஸ்ய' என்றல்லவோ பரமாத்மாவைச் சொல்லப்போகிறார். வேறு இடத்திலும் பரப்ரஹ்ம சப்தமானது பரமாத்ம பரமாகவே காணப்படுகிறது. ஆதலால் அபரமான ஆத்மாக்களை வ்யாவர்த்திப்பதற்காக "மஹாவிபூத்யாக்க்யே, பரேப்ரஹ்மணி" என்று உரைக்கப்பட்டது. ஸர்வகாரணகாரணத்வமும் பகவானுக்கே. ஜகத்வ்யாபாரத்தால் விடுபட்டவனன்றோ முக்தாத்மா இவ்வண்ணமாக உரைக்கப்பட்ட ப்ரவ்ருத்திநிமித்த பௌஷ்கல்யத்தால் ஸர்வேச்வரனிடத்திலேயே பகவத் சப்தம் முக்யவ்ருத்தியுள்ளது, வேறு இடத்திலில்லை என்று அர்த்தம். இந்த அர்த்தத்தை விவரணம்செய்துகொண்டு அக்ஷரம் அக்ஷரமாகவும் ஸமுதாயம் ஸமுதாயமாகவும் பகவத் சப்தார்த்தத்தைச் சொல்லுகிறார்—ஸம்பர்தா இது முதலியதால். சுத்தத்வமானது 'விகாஹேஹயை:' என்பதனுல் விவரிக்கப்பட்டது. போக்யஸம்பத்வாசகமான 'ஐச்வர்யஸ்ய' என்கிற சுலோகத்திலிருக்கிற ஸ்ரீ சப்தத்தால் போகவிபூதியும், ஸம்பரணம் முதலியதின் உக்தியினுல் லீலாவிபூதியும், காண்பிக்கப்பட்டதினுல் மஹா

விபூதித்வம் விவரிக்கப்பட்டது. ஸர்வகாரண காரணத்வமும் மேலே ஸ்பஷ்டம். அத னுலும ஜ்ஞாநசக்தி முதலியவைகளாலும் நிரதிசய ப்ருஹத்த்வமிருப்பதால் பரப்ருஹ்மத் வம் நன்ருக ப்ரகாசிக்கிறது. இதற்குமேலிருக்கிற க்ரந்தங்களுக்கு 'சுபே' இத முதலிய ச்லோகங்களின் விவரண ரூபத்வம் யுக்தம். 'ஹம்ச ஸம்ச வம்ச' என்று பிரித்துப் பொருள் உரைக்கப்படுகிறது. இந்த பதங்களுக்கு அந்தந்த தாதுக்களில் 'அந்யேஷ்வபி த்ருச்யதே" என்கிற ஸூத்ரத்தினுல் வ்யத்யயமும், டிலோபமும் செய்யப்பட்ட பிறகு இவ்விதம் ரூபம ஏற்படுகிறது என்று. ஹகாரத்தின் அர்த்தத்தைச்சொல்லுகிருர்- ஸம் என்கிற ச்லோகத்தினது ஓர் பாதியினுல். ஸம்பர்த்தா-ஸம்பரணம் - உபகரணங் களின் ஸம்விதாநம் ப்ரக்ருதிபுருஷகாலங்களை கார்யோத்பத்தியோக்யங்களாகச் செய்கிருர் என்று அர்த்தம். அண்டரூபகார்யோத்பத்திக்கு உபயுக்தையான மஹதாதிகளின் ஸ்ருஷ்டியானது ஸம்பரணமென்ருவது விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. பர்த்தா ஸ்வாமீ - தாரணம் வகாரவாச்யமாதலாலும் போஷகத்வமானது ரகாரவாச்யமான நேத்ருத்வத்தில் உள்ளடங்கி இருப்பதாலும் அபேக்ஷிக்கப்பட்டிருப்பதை விடுப்பதைவிட அபேக்ஷிக்கப் பட்டிராததை விடுப்பது பலஹீனமாதலாலும், ஸ்வாமித்வமிங்கு விவக்ஷிக்கப்பட்டிருக் கிறது. என்ருலும் ப்ரத்யயவிசேஷத்தோடு சேர்ந்திருக்கிற தாதுவுக்கு ஸ்வாமியிடத் தில் ரூடி. அப்படியிருந்தபோதிலும் முற்கூறப்பட்டுள்ள யுக்தியுடன்கூடின ※ ஆர்ஷ வசன பலத்தால் தாதுமாத்திரத்திற்கு ஸ்வாமிவாசித்வம் நிச்சயிக்கப்படுகிறது. இதி சப் தத்தைச்சேர்த்ததினுல் ஸைபர்த்ருத்வம் ப்ரத்ருத்வம் இரண்டும் ப்ரவ்ருத்தி நிமித்தங்க ளாக நிச்சயித்துக் கூறப்படுகின்றன. அதனுலேயே 'ஆத்தத்வயார்த்த:' என்று சொல்லப்பட்டது. மேலேயோவென்ருல் மூன்று ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் இருந்த போதிலுங்கூட இதிகரணத்தினுல் அவைகள் நிஷ்க்ருஷ்டங்களல்லாததால் மூன்று ப்ரவ்ருத்தி நிமித்தங்களோடுசேர்ந்த இந்த ஒரே அர்த்தம கூறப்பட்டது ஏகாரார்த்தத் தைச்சொல்லுகிருர்—நேதா என்று. @ உபஸர்க்கத்தினுல் ஸ்புடமாக்கப்பட்ட அர்த்தங் கள் தாதுக்களில் உள்ளடங்கியிருப்பதால் 'உத்கமயிதா, கமயிதா, ஸங்கமயிதா' என் கிற இவ்வித ரூபமுள்ள பதங்களுடைய அர்த்தத்தைச் சொல்லுகிருர்—நேதா என்று 'ஸ்ரஷ்டா' என்பதினுல் உத்கமயித்ரு சப்தத்தின் அர்த்தம் உரைக்கப்பட்டது. நேதா என்பதனுல் கமயித்ரு சப்தத்தின் அர்த்தம் உரைக்கப்பட்டது. 'ஸ்திதி கர்தா' என்று அர்த்தம். கமயித்ருசப்தத்தால் ஸங்கமயித்ரு சப்தார்த்தம் கூறப்பட்டது. அது ஸம்ஹாரம். உதாஹரணம் 'யஸ்மிந்நிதம் ஸஞ்சவிசேதிஸர்வம' (எந்த பரமாத்மாவினிடத்தில் இந்த ப்ரபஞ்சம் அனைத்தும் உண்டாகிறதோ லயமடை கிறதோ) என்கிற ச்ருதியில் 'வ்யேதிஸமேதி' என்கிற பதங்களால் ஸ்ருஷ்டியும் ஸம் ஹாரமும் கூறப்படுகின்றன; அப்படிப்போல். அன்றிக்கே காரணபூதமான ஸ்வஸ்வ ரூபத்தை அடையச்செய்கிறவர். தன்னிடத்தில் கார்யவர்க்கங்களுக்கு லயத்தை உண்டு பண்ணுகிறவர் என்று அர்த்தம். உபஸர்க்கங்களின் ப்ரயோகமில்லாவிடினும் அர்த்தங் கள் தாதுவில் ஒடுங்கி இருப்பதால் இவ்வண்ணம் பராசர பகவானுல் வியாக்கியானிக் கப்பட்டது.

அதற்குமேல் வகாரவ்யாக்கியானத்திற்கு முந்தியே ஹகார ரகார ஸமுதாயத் தின் பொருளை உரைக்கிருர்—ஐச்வர்யஸ்ய என்று. ஸமக்ரசப்தம் எல்லாவிடத்தி

---

※ ஆர்ஷம்—ரிஷியின் வசனம், அல்லது வேதவாக்கு.

@ உபஸர்கம்—தாதுக்களுக்கு முந்தி ப்ரயோகிக்கப்படும் 'ப்ர' முதலிய நிபாதங்கள்.

னும் அந்வயிக்கிறது. பரிச்சின்னனான நான்முகனைக்காட்டிலும் ஐச்வர்யத்தினால் வ்யாவ்ருத்தியின் பொருட்டு ஸமக்ரசப்தம் யச:- குணசாலி என்று உலகத்திலுண்டாகும் ப்ரஸித்தி, ஸ்ரீ: - போக்யமான ஸம்பத்து, வைராக்யம் - விரக்தி, பரிபூர்ணனாக இருப்பதால் ஒன்றிலும் ஆதரமில்லாமல் இருத்தல் என்று அர்த்தம். அவாகீ, அநாதர:, என்பது எப்படியோ - மதுப்ப்ரத்யயமானது ப்ரஸித்தார்த்தமுள்ளதாதலால் அது வ்யாக்கியானிக்கப்படவில்லை. பிறகு வகாரார்த்தத்தைக்கூறுகிறார்—வஸந்தி என்று. 'அந்யேஷ்வபித்ருச்யதே' என்று ஒப்ரத்யயத்திற்கு அநேகார்த்தங்களிருப்பதால் அதிகரணத்திலும் கரணத்திலும் வ்யுத்பத்தி. பூதாத்மநி-பூதங்களுக்கு ஆத்மாவாக இருப்பவர். அகிலாத்மநி-எல்லா வஸ்துக்களையும் சரீரமாகக்கொண்டவர். அன்றியும், பூதசப்தத்தால் கார்யம் சொல்லப்படுகிறது. அதற்கு ஆத்மாவாக இருப்பவர். அகிலாத்மநி கார்யத்தில் அந்தர்பூதர்களாக இராத நித்யமுக்தர்களுக்கும் ஆத்மாவாக இருப்பவர் என்று அர்த்தம். இதற்குமேல் ஸமுதாயசக்தி விஷயமான அர்த்தத்தைக்கூறுகிறார — ஜ்ஞாநசக்தி என்று. பாடக்ரமத்திலோவென்றால் 'ஏவமேஷ:' இதுமுதலிய இரண்டு ச்லோகங்களுக்குப்பிறகு 'ஜ்ஞாநசக்திபலைச்வர்ய' இதுமுதலிய ச்லோகம் படிக்கப்படுகிறது; ஆயினும் ப்ரவ்ருத்திநிமித்தவாசித்வ ரூபமான ஸங்கதிவசத்தால் 'ஏவமேஷ:' இது முதலிய இரண்டு ச்லோகங்களுக்குமுந்தி 'ஜ்ஞாநசக்தி' இதுமுதலிய ச்லோகம் இங்கு எடுக்கப்பட்டது. 'உத்பத்திம் ப்ரளயஞ்சைவ' இதை முதன்மையாகக்கொண்ட ச்லோகம் ப்ரக்ருதத்திற்கு அநுபயுக்தமாதலாலும் இவ்வாறு உபாதாநம் செய்யப்பட்டது. பகவச்சப்தவாச்யாநி - ப்ரவ்ருத்தி நிமித்தமாகச் சொல்லத்தக்கவைகளென்று அர்த்தம். அசேஷத: - தனித்துத்தனித்தல்ல, பின்னையோ எல்லாம் ஒன்றுசேர்ந்து என்று அர்த்தம். அசேஷ சப்தத்தால் ஷாட்குண்யத்தின் அவாந்தரபேதரூபமாக இருக்கிற சீலம் முதலிய குணஜாதமும் க்ரோடீகரிக்கப்பட்டது. ஆனால் ஐச்வர்யவீர்ய ஜ்ஞாநங்கள் முன்பு ஸ்பஷ்டமாக சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியிருந்தபோதிலும் சில ‡ஸமுதாயியினுடைய ஆவாபோத்வாபங்களால் ஏற்படுத்தப்பட்ட †ஸமுதாயபேதத்தால் சொன்னத்தை மறுபடியும் சொல்லுதல் என்கிற தோஷமில்லை. எதனால் சொல்லப்படாமலிருக்கிற குணஸாமாந்யகோசரத்வம் ஏற்படுமோ அப்படிப்பட்ட ஸமுதாய சக்தியானது இந்த இடத்தில் கல்பிக்கப்படுகிறதில்லை. வசநபலத்தினாலேயே சக்தியானது அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. முந்தி அக்ஷரார்த்தங்களைச்சொன்னதனால் ஹகார ஸகார வகாரங்கள் வ்யாக்கியாநிக்கப்பட்டன. அதற்குமேல் 'அத்' என்கிற அம்சத்திற்குப்பொருள் கூறுகிறார்—விநா என்று. 'கச்யப:பச்யகோபவதி' என்கிற நியாயத்தால் 'அத்' என்பதனால் ஈ என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. ஹேயம் நிஷேதிக்கத்தக்கது என்று அர்த்தம். இவ்வண்ணம் ப்ரவ்ருத்தி நிமித்த §பௌஷ்கல்யத்தினால் பகவானிடத்திலேயே முக்கிய விருத்தத்வத்தைச்சொல்லுகிறார்—ஏவம் என்று. மஹார்த்தங்களை கர்பீகரித்துக்கொண்டிருப்பதால் மஹாசப்தத்வம். முக்தாத்மாக்களை வ்யாவ்ருத்திப்பதின்பொருட்டு பரமப்ரஹ்ம என்று கூறப்பட்டது. எங்ஙனம் அந்த பரமாத்மாவினிடமே முக்யவ்ருத்தத்வம். வேறு இடத்திலும் அதின் ப்ரயோகம் காணப்படுகிறதே என்று வினவப்படுமேயாகில் ஸமாதாநம் கூறுகிறார்—தத்ர என்று. பூஜ்யங்களான அவயவார்த்தங்களின் உக்தி - பரிபாஷா - ரூடி - அவ்விரண்டுகளுடனும் கூடி

‡ ஸமுதாயி—ஒரு கூட்டத்தில் உள்ளடங்கியிருக்கிற பதார்த்தம்.

† ஸமுதாயம்—கூட்டம்.

§ பௌஷ்கல்யம்—நிறைவு.

னது. இதனாலேயே இந்த சப்தப்ரயோகம் ஔபசாரிகமல்ல, முக்கியவ்ருத்தமென்று அர்த்தம். வேறு இடத்தில் அமுக்கியத்வமென்று சொல்லுகிறார். அந்யத்ராஹி என்று. முக்தாத்மாவினிடத்தில் ஔபசாரிகமென்று சொன்னதனால் அர்த்தாந்தர ப்ரயோகங்களில் ஔபசாரிகத்வம் அர்த்தத்தினால் காண்பிக்கப்பட்டதாக ஆகிறதென்பதல்லவோ ஹி சப்தத்தை ப்ரயோகித்தவருடைய அபிப்ராயம். பகவத்சப்த ப்ரயோகத்திற்கு விஷயங்களான எல்லாவற்றிலும் ப்ரயோகம் அந்யதாஸித்தமாவதால் சக்திபேத கல்பநம் தகுந்ததல்லவன்றோ. எவனிடத்தில் ஜ்ஞாநம் முதலியவைகள் தடையற்றவைகளோ அவனே முக்யார்த்தம். குணலேச ஸம்பந்தத்தாலும் ப்ரயோகம் ஸம்பவிப்பதால் பரமாத்மாவைத் தவிர்த்து மற்ற இடங்களில் வ்ருத்தியானது ஔபசாரிகீ என்று அர்த்தம்.

---

“ 𑌸𑌮𑌸𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌯𑌶𑍍𑌚𑍈𑌤𑌾 𑌨𑍃𑌪 𑌯𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑍈𑌰𑍂𑌪𑍍𑌯𑌂 𑌰𑍂𑌪𑌮𑌨𑍍𑌯𑌦𑍍𑌧𑌰𑍇𑌰𑍍𑌮𑌹𑌤𑍍 ॥ 𑌸𑌮𑌸𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌤𑌤𑍍𑌕𑌰𑍋𑌤𑌿 𑌜𑌨𑍇𑌶𑍍𑌵𑌰 । 𑌦𑍇𑌵𑌤𑌿𑌰𑍍𑌯𑌙𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌲𑍀𑌲𑌯𑌾 ॥ 𑌜𑌗𑌤𑌾𑌮𑍁𑌪𑌕𑌾𑌰𑌾𑌯 𑌨 𑌸𑌾 𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌜𑌾 । 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍍𑌯𑌵𑍍𑌯𑌾𑌹𑌤𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 ॥ ” (வி-பா-சு-எ-எய-எஉ)

“ 𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌮𑌮𑌲𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌮𑌕𑍍𑌷𑌯𑌮𑍍 । 𑌸𑌮𑌸𑍍𑌤𑌹𑍇𑌯𑌰𑌹𑌿𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌖𑍍𑌯𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥ ” (வி-பா-க-உஉ-ருங) “ 𑌪𑌰𑌃 𑌪𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 । 𑌰𑍂𑌪𑌵𑌰𑍍𑌣𑌾𑌦𑌿𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ॥ 𑌅𑌪𑌕𑍍𑌷𑌯𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌰𑍍𑌦𑍍𑌧𑌿𑌜𑌨𑍍𑌮𑌭𑌿𑌃 । 𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌯𑌃 𑌸𑌦𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌕𑍇𑌵𑌲𑌮𑍍 ॥ 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌸𑍌 𑌸𑌮𑌸𑍍𑌤𑌂 𑌚 𑌵𑌸𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑍇𑌤𑌿 𑌵𑍈 𑌯𑌤𑌃 । 𑌤𑌤𑌃 𑌸 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍇𑌤𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌦𑍍𑌭𑌿𑌃 𑌪𑌰𑌿𑌪𑌠𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌜𑌮𑌕𑍍𑌷𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 । 𑌏𑌕𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌚 𑌸𑌦𑌾 𑌹𑍇𑌯𑌾𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌮𑍍 ॥ 𑌤𑌦𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑍈𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍂𑌪𑍇𑌣 𑌕𑌾𑌲𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ॥ ” (வி-பா-க-உ-கய-கச)

---

ஸ்ரீபாஷ்யம்—

ராஜனே! எந்த ரூபத்தினிடத்தில் இந்த சக்திகளனைத்தும் நிலை பெற்றிருக்கின்றனவோ அது எல்லா ரூபங்களைவிட விலக்ஷணமான ஸந்நிவேசத்துடன் கூடியதும் வேறானதும் இவ்விதமுள்ளதென்று அளவிட நிச்சயிக்கமுடியாததுமான ஹரியின் ரூபம். (அதாவது திவ்[illegible]ங்களவிக்ர

ஹம்) ஜநங்களுக்கு நியந்தாவாக இருப்பவனே! அந்த பரமபுருஷன் தேவன் § திர்யக் மனுஷ்யன் என்கிற பெயர்களுடனும் ¶ சேஷ்டைகளுடனுங்கூடின ஸமஸ்தசக்தி ரூபங்களையும் லோகோபகாரத்திற்காக தன் லீலையினால் செய்கிறான். (லௌகிக) ப்ரமாணங்களால் கண்டறிவதற்கு அசக்யனாக இருக்கிற அந்த பரமாத்மாவினுடையதான தேசநியமமில்லாததும் ப்ரதிபந்தகமில்லாததுமான அந்த் சேஷ்டையானது கர்மரூபமான ஹேதுவினால் உண்டாகிறதன்று. இவ்விதமான ஸ்வபாவத்துடன் கூடினதும் விஷ்ணுவென்கிற பெயருள்ளதுமான திவ்யாத்மஸ்வரூபமானது மலத்திற்கு § ப்ரதிபடமானது-அழிவில்லாதது. ஸ்வரூபத்தால் வ்யாபகமாயிருக்கிறது. தன்படியாகவே தர்மத்தினாலும் விகாரமில்லாதது. எல்லா ஹேயங்களாலும் விடுபட்டது. எவன் காலத்தினால் சிறந்த ப்ரஹ்மாதிகளைக்காட்டிலும் சிறப்புள்ளவனோ எவனைக்காட்டிலும் காலத்தினால் மேன்மைபெற்ற வஸ்து ஒன்றுமில்லையோ, எவன் எல்லா தேசங்களையும் வ்யாபித்திருப்பவனோ; எவன் எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாக இருப்பதால் எல்லா வஸ்துக்களுடனும் இணைபிரியாமலிருப்பவனோ; எவன் ஜாதி, ரூபம், ரஸம், கந்தம் முதலியவைகளைச் சொல்லுகிற சப்தரூபவிசேஷத்தால் விடுபட்டவனோ; எவன் உண்டாகிறது, இருக்கிறது, பரிணமிக்கிறது, விருத்தி அடைகிறது, அவயவங்களின் குறைவை அடைகிறது, நசிக்கிறது, என்கிற ஆறு பாவவிகாரங்களற்று எப்பொழுதும் ஸத்தாச்ரயனென்று சொல்வதற்குமாத்திரம் சக்யமாக இருக்கிறானோ; யாதொரு காரணத்தினால் எல்லா இடத்திலும் இவன் வஸிக்கிறானோ; எல்லா வஸ்துக்களும் இவனிடத்தில் வஸிக்கிறதோ, அக்காரணத்தினால் அவன் வாஸுதேவன் என்று கற்றறிந்தவர்களால் எங்கும் கூறப்படுகிறான். அந்த வாஸுதேவனே நிகரில்லாததும் தனக்குமேல்பட்ட வஸ்துவில்லாததும் ஸ்வரூபத்தாலும் குணங்களாலும் எல்லையில்லாத மேன்மைவாய்ந்ததாகவுமிருக்கிற ப்ரஹ்மம். சாச்வதமாக இருப்பவன்-பிறப்பில்லாதவன்-அழிவற்றவன்-குறைவில்லாதவன் - வ்ருத்திபரிணமங்களின்றி ஒரேவிதமான ஸ்வரூபத்துடன் கூடியவன், ஹேயகுணங்களில்லாமையால் எப்பொழுதும் நிர்மலனாக இருப்பவன், வ்யக்தாவ்யக்த ஸ்வரூபமாக இருக்கிற இந்த ப்ரபஞ்சமனைத்தும் அந்த ப்ரஹ்மமே. அவ்வாறே அந்த ப்ரஹ்மமானது புருஷரூபமாகவும் காலரூபமாகவுமிருக்கிறது.

---

§ திர்யக்—பசுபக்ஷி முதலியது. ¶ சேஷ்டை—செய்கை.

§ ப்ரதிபடம்—எதிரி.

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் அதே யோகப்ரகரணத்தில் உபஸம்ஹாரமிருந்தபோதிலுங்கூட ஸவிசேஷபரவாக்யங்களைக்காண்பியாநின்றுகொண்டு திவ்யவிக்ரஹவத்வத்தையும் கூறுகிறார்—ஸமஸ்தா: என்று. பத்தன் முக்தன் கர்மரூபையான அவித்யையும சக்திகளென்று சொல்லப்படுகின்றன. அந்தந்த அபிமானி தேவதைகள் வாயிலாக அவைகளுக்கு அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் இருப்பு 'யத்ர' என்கிற அநுவாதம் புரோவாதத்தை அபேக்ஷித்திருப்பதால் அஸ்த்ராபூஷணாத்தியாயத்தில் இங்கு சொல்லப்பட்டவண்ணம் இருக்கும் புரோவாதம் இருக்கிறதென்பது கவனிக்கத்தக்கது. 'தத்விச்வரூபவைரூப்யம்' என்பதனால் ஸந்நிவேசவைலக்ஷண்யம் கூறப்பட்டது. அந்யத் என்பதனால் வேறு த்ரவ்யமென்பது கூறப்பட்டது. மஹத்என்பதனால் பரிச்சேதிக்கவொண்ணாமை ஸகலேதரவிஸஜாதீயமாயும் விலக்ஷணஸந்நிவேசத்துடனுங்கூடிய வஸ்துவுக்கு எவ்வாறு நிந்திப்பதற்குத்தகுந்ததன்மை என்றுகேட்கில் கூறுகிறார்—ஸமஸ்த என்று. யாதுகாரணத்தினால் என்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்—ஸ்வலீலயா என்று. லீலை (விளையாட்டு) ப்ரயோஜனமானதால் அந்த லீலாபிஸந்திதான் ஹேது - கர்மாவினாலில்லை என்று அர்த்தம். யாது பயன் என்று கேட்கில் கூறுகிறார்—ஜகதாம் என்று. தன் கர்மபலபோகத்தின்பொருட்டு அல்லவென்று அர்த்தம். இதை விவரிக்கிறார்— நஸ என்று. வ்யாபிநீ-தேசநியமமில்லாதது. வைதிகனுடைய புத்திரர்களின் ஆநயநம் முதலியவைகளில்போல. வ்யாபகசக்தமாக இருந்தபோதிலும் ப்ரதிபந்தம் ஸம்பவிக்கலாமென்று சொல்லப்படுமேயாகில் சொல்லுகிறார் 'அவ்யாஹதாத்மிகா' அதற்கு ப்ரதிஹதி இல்லை என்று பொருள். அன்றிக்கே வ்யாபிநீ, எல்லா அவதாரங்களுக்கும் அநுகுணை. அவ்யாஹதா-தேசகாலவஸ்துக்களாலுண்டுபண்ணப்பட்ட ப்ரதிபந்தமில்லாதது, இவ்வண்ணம் 'ப்ர்த்பஸ்தமித' என்கிற ச்லோகத்திற்கு பரமாத்ம பரத்வம் ஒப்புக்கொள்ளப்பட்டபோதிலும் நிர்விசேஷபரத்வத்தை நிராகரிக்கவேண்டுமென்கிற விருப்பத்தால் உபக்ரமோபஸம்ஹாரங்களில் அதே ப்ரகணத்தில் ஸவிசேஷபரத்வம் காண்பிக்கப்பட்டது. அதற்குமேல் இந்த ச்லோகத்திற்கு பரிசுத்த ஜீவாத்ம ஸ்வரூபவிஷயத்வத்தையும் ப்ரத்யஸ்தமித பேதாதிபதங்களுக்கு கதிபயவிஷயத்வத்தையும்சொல்ல எண்ணமுள்ளவராக, அதற்காக பரமாத்மவிஷய பேதநிஷேதம் முதலியவைகளுக்கு சிற்சிலவிஷயத்வத்தைச்சொல்லுகிற வாக்கியங்களைக் காண்பிக்கப்போகிறவராய்க்கொண்டு, பரமாத்மவிஷய கதிபயபேதநிஷேதபரவசநோதாஹரணத்தினால் முக்தாத்மவிஷயத்தில் என்ன வந்தது என்கிற சங்கையில் முக்தனுக்கு பரமாத்ம ஸாம்யப்ரதிபத்தியின்பொருட்டு முக்தகுணங்களைப் பரமாத்மாவினிடத்தில் அதிதேசிக்கிற ச்லோகத்தைக் காண்பிக்கிறார்—ஏவம் ப்ரகாரம் என்று. இந்த ச்லோகோதாஹரணத்தினால் 'ப்ரத்பஸ்தமித' இது முதலிய ச்லோகங்களுக்குப்பிறகு பூர்வபக்ஷத்தில் படிக்கப்பட்டிருக்கிற ஜ்ஞாநஸ்வரூபம் என்கிற பதத்தை முதலில்கொண்ட ப்ரதமாம்சோபக்ரம ச்லோகத்திற்கும் சது ச்லோகிக்கும் ஸவிசேஷபரத்வத்தை ப்ரதிபாதிப்பதின்பொருட்டு ப்ரதமாம்சோபஸம்ஹாரத்திலும் ஸவிசேஷபரத்வம் காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. உபஸம்ஹாரம் புத்திஸ்தமாக இருப்பதால் உபஸம்ஹாரவசநோபாதாநம் செய்யப்படுகிறது. இவ்விதமான ரீதியையுடைய முக்தாத்மாவைக்குறித்து 'நிர்வ்யாபாரமநாக்யேயம்' இதுமுதலியதால் எந்த ப்ரகாரம் உரைக்கப்பட்டதோ அதோடுகூடினவனென்று அர்த்தம். இவ்வண்ணம் பகவானிடத்

---

* அபிஸந்தி—என்னவும்.

தில் முக்தகுணோத்தேசம் செய்யப்பட்டது. நிர்வ்யாபாரம் என்கிற பதத்தை முதன்மையாகக்கொண்ட ச்லோகத்தால் சொல்லப்பட்டிருக்கிற பேதராஹித்யம் ஸத்தாமாத்ரத்வம் வசஸாமகோசரத்வம் என்கிற முக்தகுணங்கள் பகவானிடத்தில நிர்தேசிக்கப்பட்டிருப்பதாலும் பகவானிடத்திலும் அந்த நிஷேதங்களுக்கு கதிபயவிஷயத்வம் ப்ராமாணிகமாதலாலும் அந்த நிஷேதங்கள் முக்தாத்மாவினிடத்திலும் அதேமாதிரியுள்ளவைகளென்பது பற்றி கதிபயவிஷயத்வம் ஸித்தமென்று கருத்து. அதற்குமேல் பரமாத்மாவுக்கு அதிக குணங்களைக்கூறுகிறார்—அமலம்-மலப்ரதிபடம்-ஸோபாதிகமான ஹேயவிரோதி என்று அர்த்தம். நித்யம்-சொல்லப்பட்ட ஆகாரத்தால் நித்யம். மலப்ரதிபடத்வம்நித்யமென்று அர்த்தம். வ்யாபகம் ஸ்வரூபத்தால் வ்யாபகம், அக்ஷயம் தானேகவே தர்மத்தால் விகாரமற்றது. முக்தனுக்கு பூர்வாவஸ்தையிலஜ்ஞான ஸங்கோசவிகாஸரூபமான விகாரமிருக்கிறது - நித்யஸித்தர்களுக்கும் அப்படிப்பட்ட தன்மை பராயத்தமாக இருப்பதினால் அவர்களின் வ்யவச்சேதம் ஏற்படுகிறது. ஸமஸ்தஹேயராஹித்யம்-முன்பு ஹேயப்ரத்யநீகத்வம் கூறப்பட்டது. இங்கு ஹேயகுணராஹித்யம் உரைக்கப்பட்டது-ஸ்வத: ஹேயாபரவமும் முக்தனுக்கு இல்லை - அது அவனுக்கு பரமாத்மாவின் ¶ ப்ரஸாதாதீநமாக இருப்பதால். பத்யதே என்கிற வ்யுத்பத்தியினால் பதசப்தம் ஏற்படுகிறது. அது திவ்யாத்மஸ்வரூபம். பரமபத சப்தத்திற்கு திவ்யலோகத்திலும் முக்தாத்மாவினிடத்திலும் ப்ரயோகமிருப்பதால் அவைகளை வ்யாவ்ருத்திப்பதின்பொருட்டு விஷ்ணுவாக்யமென்று சொல்லப்பட்டது.

பிறகு ப்ரதமாம்சோபக்ரமத்திலும் ஸவிசேஷபரத்வத்தைக்காண்பிக்கிறார்—பர: பராணாம் என்று. இதனால் சாஸ்த்ரோபக்ரமத்திற்குக்கூட ஸவிசேஷபரத்வம் சொல்லப்பட்டதாக ஆகிறது. இதனால் ‘ப்ரத்யஸ்தமிதபேதம்’ இது முதலிய பதங்களுக்கு கதிபயபேத நிஷேதபரத்வமும் ஸித்தம் என்று மூன்றுவிதமான ப்ரயோஜனங்கள். இதனால் ‘பர: பராணாம்’ இதுமுதலிய க்ரந்தஸமுதாயமானது ‘அவிகாராய’ இதுமுதலியஸங்க்ரஹ ச்லோகவிவரண ரூபமாதலால் ஜ்ஞானஸ்வரூபம் இது முதலிய ச்லோகத்தைக்குறித்து உபக்ரமத்வமானது அர்த்த க்ரமத்தால் ஸித்தமென்பதுபற்றி அதற்கும் ஸவிசேஷபரத்வம் ஸித்திக்கிறது. அன்றிக்கே ப்ரதமாம்சோபக்ரமோபஸம்ஹாரங்கள் இரண்டும் ஸவிசேஷபரமாதலால் உபக்ரமோபக்ரமபூதமாக இருந்தபோதிலும் ஜ்ஞானஸ்வரூபம் என்கிற ச்லோகத்திற்கு மஹாவாக்யஸ்வாரஸ்யவிரோதம் ந்யாய்யமல்லாததால் அதற்கும் ஸவிசேஷபரத்வம் ஸித்திக்கிறது. அன்றிக்கே நமஸ்கார ச்லோகம் சாஸ்த்ர ‡ உபக்ரமத்திற்கு § சேஷபூதமாக இருப்பதால் அதற்கு சேஷபூதமாக இருப்பது அதற்கு அநுகுணமான அர்த்தமுள்ளதாக வர்ணிக்கத்தக்கதென்று ஸித்திக்கிறது. உபக்ரமோபக்ரமபூதமான நமஸ்கார ச்லோகார்த்தாநுகுணமாக ‘பர: பராணாம்’ இதுமுதலியவற்றின் அர்த்தம் வர்ணிக்கத்தக்கதென்று சொல்லப்படுமேயாகில், அப்படியல்ல, அதற்கும் உபக்ரமமாக இருக்கிற ப்ரச்னோத்தரவாலாபத்தைச் சொல்லுகிற ச்லோகாநுகுணமாக அதின் அர்த்தம் சொல்லத்தக்கதாக இருப்பதால் என்று அபிப்பிராயம். இங்கு ப்ரஹ்மத்திற்கு எல்லா ஜகத்துக்களுக்கும் காரணமாக இருத்தல் என்றும் தன்மையின் ஸித்தியின்பொருட்டு வேதாந்தங்களில் ‘ஸத்யம் ஜ்ஞானமநந்தம்’ இது முதலிய வாக்கியங்களால் ஆநந்த்யம் கூறப்பட்டது. அது மூன்றுவிதமான பரிச்சேதமில்லாமை. தேசம்காலம் முதலியவைகளால் பரிச்சின்னங்களான கடம் முதலியவைகளுக்கு எல்லா வஸ்துக்களையும் குறித்து ஸர்வவித காரணத்வம் காணப்பட்டிருக்கவில்லையன்றோ. முக்காலங்களிலுமுள்ள கார்ய

|| வ்யவச்சேதம்—விலக்கம்  ¶ ப்ரஸாதம்—அநுக்ரஹம்.
‡ உபக்ரமம்—தொடக்கம்.  § சேஷம்—உபகாரகம்.

வர்க்கங்களுக்கு காரணத்வம் சொல்லப்பட்டாலும் ஸர்வதேசகத கார்யங்களுக்கு காரணத்வம் சொல்லப்பட்டாலும் தேசத்தாலும் காலத்தாலும் அபரிச்சேதங்கள் அபேக்ஷிக்கப்பட்டிருக்கின்றன. உபாதாநத்வம் ஸித்திப்பதற்காக வஸ்த்வபரிச்சேதம் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிறது. வஸ்துவினால் பரிச்சின்னனான ¶ குலாலன் உபாதானகாரணமாக ஆகிறானில்லையன்றோ. ம்ருத்பிண்டம் குலாலன் இரண்டுக்கும் ஸாமாநாதிகரண்யமில்லாமையால். ஆதலால் க்ருத்ஸ்நகாரணத்வ ஸித்தியின்பொருட்டு த்ரிவித பரிச்சேதராஹித்யத்தை ஸவிஸ்தாரமாகச்சொல்லப்போகிறவராக 'பர: பராணாம்' என்கிற பாதி ச்லோகத்தால் அதை சுருக்கமாக ப்ரதிஜ்ஞைசெய்கிறார் - பர:பராணாம்பரம: என்று. இதனால் காலத்தினால் பரிச்சேதமில்லாமை ஸித்தித்தது. நீண்டகாலமாக இருத்தல் பரசப்தவாச்யமாதலால். பரமாத்மா என்பதினால் தேசாபரிச்சேதம் கூறப்பட்டது. ஆப்நோதி (வ்யாபிக்கிறான்) என்றல்லவோ ஆத்மசப்தத்தின் வ்யுத்பத்தி. ஆத்மஸம்ஸ்தித:-எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாக இருப்பதால் ஸர்வவஸ்துவிசிஷ்டன். அன்றிக்கே, ஆத்மாவாக அனைத்தையும் தான் வ்யாபித்திருப்பதால் ஸர்வசரீரகனாக இருப்பதுபற்றி தன்னிடத்தில்தான் நிலைபெற்றிருப்பவன. ஸ்வநிஷ்ட:- மற்றதெல்லாம் சரீரமாக இருப்பதுபற்றி விசேஷணமாதலால் அந்த ப்ரஹ்மத்தினிடத்திலிருக்கிறது. ஆதலால் எல்லாவற்றுக்கும் பர்யவஸாநபூமி. 'ஸ்வநிஷ்ட:' என்பதனால் வஸ்துவினால் அபரிச்சேதம் கூறப்பட்டது. ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வமன்றோ வஸ்த்வபரிச்சேதம். இந்த வஸ்து இந்த வஸ்துவாக ஆகிறதில்லை என்பதல்லவோ வஸ்துபரிச்சேதம். அன்றிக்கே நித்யத்வ விபுத்வ குணங்களைவிட வேறு குணங்களால் நிகரானவனும் மேலானவனுமில்லாமலிருத்தல் வஸ்த்வபரிச்சேதம். தன் ஸ்வரூபத்தில் தான் நிலைபெற்றிருக்கிற பரமாத்மாவை அபேக்ஷித்து அந்த பரமாத்மாவினிடத்திலிருக்கிற மற்றவைகளுக்கு ஸமத்வம் அப்யதிகத்வம் ஸம்பவியாமையால் 'ஆத்ம ஸம்ஸ்தித:' என்கிற இந்த பதத்தினால் வஸ்த்வபரிச்சேதஸித்தி. இவ்வண்ணம் சுருக்கமாகச்சொன்ன அர்த்தத்தை உபபாதநஞ்செய்கிறார்—ரூப இதுமுதலியதால். அவற்றுள் காலாபரிச்சேதத்தை முதலில் சொல்லவேண்டுமென்கிற எண்ணங்கொண்டவராக காலத்தால் பரிச்சின்னமான வஸ்துக்களிடத்திலுள்ள ஐந்து கல்பனைகளின் நித்யத்வம் ப்ரஹ்மத்தினிடத்திலில்லை என்று சொல்லுகிறார்—ரூப என்று. ரூப சப்தத்தால் ஜாதி கூறப்படுகிறது. ரூபித்ரவ்யங்களுக்கு ஜாதி குணம் இரண்டும் ரூபங்களென்றல்லவோ நீதியை அறிந்தவர்கள் கூறுகின்றனர். வர்ணசப்தமானது ரூபமென்று பெயருள்ள குணவிசேஷத்தைச்சொல்லுகிறது. ஆதி சப்தத்தால் கந்தம் ரஸம் முதலியது குறிக்கப்படுகிறது. ஆஸநசயநாதி க்ரியைகளும் $ விஷாணம் முதலிய அவயவங்களோடு கூடி இருத்தலும் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. 'ரூபவர்ணாதி' என்கிற பாடத்தில் ரூபசப்தம் நீலம்பீதத்வம் முதலிய குணங்களைச்சொல்லுகிறது. வர்ணசப்தமானது தேவமனுஷ்யாதி வர்க்கங்களைக்குறிக்கிறது. ஜாதிபரமென்று அர்த்தம். அதைக்காரணமாகக்கொண்டது. அது விஷயமான நிர்தேச சப்தம் சப்தவாச்யங்களான அவைகளே விசேஷணம். அவைகளால் விடுபட்டவன் - அன்றிக்கே (ரூபவர்ணாதி) ரூபவர்ணாதிகளைச்சொல்லுகிற சப்தரூபங்களான விசேஷணங்களால் விடுபட்டவன். இவ்வண்ணம் அநித்யத்வ வ்யாபகமாகவும் கர்மக்ருதமாகவுமிருக்கிற ரூபாதிமத்த்வம் ப்ரஹ்மத்தினிடத்திலில்லையாதலால் கர்மக்ருதமான ரூபாதிகளின் நிவ்ருத்தியினால் அந்த ரூபாதிகளுக்கு வ்யாப்யமான காலபரிச்சேதத்தின் நிவ்ருத்தி என்று அர்த்தம். அன்றிக்கே அநித்யத்வத்திற்கு வ்யாப்யமான கர்மக்ருதரூபாதிகளின் இன்மையினால் அநித்யத்வம் ப்ரஹ்மத்தினி

¶ குலாலன்—குயவன்.   $ விஷாணம்—கொம்பு.

டத்தில் அநுபவிப்பதற்கு அசக்யமென்று அர்த்தம். இதனால் ‘ப்ரத்யஸ்தமிதபேதம்’ என்கிற பதத்திற்கு விஷயம் காண்பிக்கப்பட்டது.

அதற்குமேல் விகாரங்கள் அநித்யத்வ வ்யாபகங்களாதலால் அநித்யத்வ நிவ்ருத்தியின்பொருட்டு அதற்கு வ்யாபகமாக இருக்கிற விகாரராஹித்யத்தைக் கூறுகிறார்—அபக்ஷய ஒன்று. ‘ஜாயதே, அஸ்தி’ என்கிற இரண்டு அவஸ்தைகள் ஜந்மசப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. உத்பத்தி ஸ்திதி நாசங்களுக்கு ஒவ்வொன்றிலும் இரண்டு (வியா) ப்ரகாரங்களால் விகாரஷட்கம் ஸித்திக்கிறது, அவைகளால் விடுபட்டிருப்பதால் எப்பொழுதும் இருக்கிறது என்று சொல்வதற்கு சக்யமாக இருக்கிறது. ஸதாசப்தத்தால் ஏதோ ஒரு ஸமயத்திலுள்ள அஸ்தித்வத்திற்கு நிவ்ருத்தி ஏற்படுகிறது, ‘நதூத்பத்யதே இத்யாதி சப்தை:, என்பது கேவல சப்தாப்பிராயம். இதனால் ஸத்தாமாத்ரம் என்பதற்கு விஷயம் காண்பிக்கப்பட்டது. ‘அகோசரம் வசஸாம்’ என்பதற்கும் விஷயம் காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. ரூபவர்ணாதி ப்ரவ்ருத்தி நிமித்தமில்லாமையாலும் உத்பத்யாதி ப்ரவ்ருத்தி நிமித்தமில்லாமையாலும் கல்பனையானது விகாரவாசி சப்தங்களால் சொல்வதற்கு சக்யமாகாதென்பது அந்த பதத்திற்கு அர்த்தம் என்பது அபிப்ராயம். ‘அகோசரம் வசஸாம்’ என்பதனால் ஸர்வசப்த கோசரத்வம் சொல்லப்படுகிறதென்று கூறப்படுமேயாகில் ‘வசஸாமகோசரம் ஸத்தாமாத்ரம்’ என்று சொல்வதற்கு சக்யமாகாது.

இதற்குமேல் தேசாபரிச்சேதத்தை நாமநிர்வசநமுகத்தால் சொல்லுகிறார்—ஸர்வத்ர என்று. ப்ரஹ்மம் ஈச்வரனைக்காட்டிலும் வேறாக இருக்கிறதென்பதை நிஷேதிப்பதற்காகவும் தேவதாந்தரவ்யுதாஸத்திற்காகவும் நாமநிர்வசநமுகத்தால் அதின் உக்தி. § ஔணாதிகப்ரத்யயம் அநேகார்த்தங்களுள்ளதாக இருப்பதால் வாஸுதேவ சப்தத்திற்கு அதிகரணத்திலும் கர்தாவிலும் வ்யுத்பத்தி கூறப்படுகிறது—ஸர்வத்ர என்று. வேதாந்தங்களில் பரப்ரஹ்மத்திற்கு நிர்விகாரத்வம் முதலியது கூறப்பட்டிருக்கிறதன்றோ அவ்வாறு இருக்க எப்படி வாஸுதேவனுக்குச் சொல்லப்படுகிறதென்றுகேட்கில் கூறுகிறார்- தத் ப்ரஹ்ம என்று. ‘சைத்யம் ஹி யத் ஸா ப்ரக்ருதிர்ஜலஸ்ய’ என்பதுபோல் தத் என்கிற நிர்தேசம் - †‘‘நிர்திச்யமாந ப்ரதிநிர்திச்யமாநயோரேகத்வமாபாதயந்தி ஸர்வநாமாநி பர்யாயேண தத்தல்லிங்கமுபாததேதே’’ என்றல்லவோ சாப்திகர்கள். நித்யம் என்பதனால்கார்யமாத்ரம் வ்யாவ்ருத்திக்கப்பட்டது. ‘அஜம் அக்ஷரம் அவ்யயம் ஏகஸ்வரூபம்’ என்பதனால் ஸவிகார நித்யப்ரதாநங்கள் வ்யாவ்ருத்திக்கப்பட்டன - ஏகஸ்வரூப சப்தத்தால் வ்ருத்திபரிணாமங்களின் இன்மை விவக்ஷிக்கப்பட்டிருக்கிறது. ‘ஹேயாபாவாச்ச நிர்மலம்’ என்பதனால் § பத்தர்கள் வ்யாவ்ருத்திக்கப்பட்டார்கள். ஸதா என்பதனால் முக்தர்கள் வ்யாவ்ருத்திக்கப்பட்டார்கள். ப்ரஹ்மம் என்பதனால் நித்யஸித்

---

§ ஔணாதிகம் — உணாதிஸூத்ரங்களால் விதிக்கப்பட்டுள்ளது. இந்த ஸூத்ரங்கள் சாகடாயன மஹரிஷியினால் செய்யப்பட்டுள்ள சப்தாநுசாஸனங்கள் - ப்ரஸித்தர்களான ஒன்பது வையாகரணர்களுக்குள் இவர் ஒருவர்.

அவர்களாவன:—இந்திரன், சந்திரன், காசக்ருத்ஸனர், ஆபிசலி, சாகடாயனர், பாணிநி, அமரஸிம்மன், ஜைநேந்திரன், ஸரஸ்வதி.

† நிர்திச்ய — அநுவதிக்கப்படுவதையும் விதிக்கப்படுவதையும் ஒன்றுபடுத்துகிற ஸர்வநாமசப்தங்கள் அநுவாதக சப்தத்தினுடையவும் விதாயக சப்தத்தினுடையவும் லிங்கங்களை மாறிமாறி ஏற்றுக்கொள்ளுகின்றன.

§ பத்தர்கள்—ஸம்ஸாரிகள்.

தர்கள் வ்யாவ்ருத்திக்கப்பட்டார்கள். அன்றிக்கே ஏகஸ்வரூபம் என்பதனால் பத்தவ்யாவ்ருத்தி ஸித்தித்தது. ஸதா இதுமுதலியதால் முக்தவ்யாவ்ருத்தி ஸித்தித்தது. இவ்வண்ணம் தன்னைத்தவிர்த்த எல்லா வஸ்துக்களைக்காட்டிலும் விலக்ஷணமாக உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட ப்ரஹ்மம் வாஸுதேவனென்றே அர்த்தம். மூன்றவித் அபரிச்சேதத்தைச்சொல்லுகிற ச்ருதியும் அநந்தம் என்று. தேவதாவிசேஷத்தை நிச்சயம் செய்தது. அநந்த சப்தம் யோகரூடம். ஆதலால் நாராயணாதிசப்தங்களுக்கு பர்யாயமாக த்ரிவிதமான ஆநந்த்யமுள்ள பகவானிடத்தில் முக்கியமாக இருக்கிறது. ஸத்யஜ்ஞாநாதிவாக்யத்தில் அநந்தம் என்கிற பதம் ஆண்பால் இரண்டாம்வேற்றுமை. 'யோவேத' என்கிற வாக்கியத்திலுள்ள வேதநசப்தத்தோடு அந்வயிப்பதால் முதல்வேற்றுமையாகச்சொன்னால் 'தத்யோவேத' என்று தத் என்கிற பதம் அத்யாஹாரம் செய்துகொள்ளவேண்டியதாக ஆகும் - வாக்யபேதமும் உண்டாகும். ஆகையால் அந்த இடத்தில் சொல்லப்பட்ட அர்த்தமே பொருத்தமுள்ளது. ஆதலால் அதை அநுஸரித்து இங்கும் அபரிச்சேதத்தைச்சொல்லும் ஸமயத்தில் தேவதாவிசேஷம் நிர்ணயிக்கப்பட்டது. வஸ்த்வபரிச்சேதத்தைச்சொல்லுகிறார்—ஸதேவ என்று. ஸர்வமேவைதத் என்பதனால் வ்யக்தாவ்யக்த புருஷகால ஸமுதாயம் கூறப்படுகிறது. வ்யக்தாவ்யக்த ஸ்வரூபமான இவை அனைத்தும் அந்த ப்ரஹ்மம் என்று பொருள். இதனால் வஸ்த்வபரிச்சேதம் உரைக்கப்பட்டது. ஸர்வவஸ்துஸாமாநாதிகரண்யார்ஹத்வமன்றோ வஸ்த்வபரிச்சேதம். ஸர்வவஸ்துஸாமாநாதிகரண்யார்ஹதையினாலேயே சிதசித் சரீரகத்வத்திற்கு ஹேதுவான வ்யாபநம் பரணம் முதலிய குணங்களால் ஸ்வாம்யதிகாரஹித்யம் ஸித்திப்பதாலும் வஸ்த்வபரிச்சேதம் ஸித்திபெறுகிறது. ப்ரஹ்மத்தைத்தவிர்த்த வேறு ஒரு வஸ்துவுக்கும் ஸமஸ்தசிதசித்சரீரகத்வம் ஸம்பவியாதன்றோ.

---

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍍𑌯𑌾 𑌮𑌯𑌾𑌽𑌽𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌿𑌣𑍀। 𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌭𑌾𑌵𑍇𑌤𑍌 𑌲𑍀𑌯𑍇𑌤𑍇 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿॥ 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌾𑌧𑌾𑌰𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃। 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾𑌮𑌾 𑌸 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌚 𑌗𑍀𑌯𑌤𑍇॥" (வி-பு-௬-௪-௩௯,௪௰) "𑌦𑍍𑌵𑍇 𑌰𑍂𑌪𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑍂𑌰𑍍𑌤𑌂 𑌚𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌮𑍇𑌵 𑌚। 𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍇॥ 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑍍𑌷𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍॥ 𑌏𑌕𑌦𑍇𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑍇𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌨𑌾 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌿𑌣𑍀 𑌯𑌥𑌾॥ 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌶𑍍𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌥𑍇𑌦𑌮𑌖𑌿𑌲𑌂 𑌜𑌗𑌤𑍍॥" (வி-பு-க-உஉ,௫௫,௫௭) "𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌪𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌖𑍍𑌯𑌾 𑌤𑌥𑌾𑌽𑌪𑌰𑌾। 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌽𑌨𑍍𑌯𑌾 𑌤𑍃𑌤𑍀𑌯𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑍇॥ 𑌯𑌯𑌾 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑌾 𑌵𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌾 𑌨𑍃𑌪 𑌸𑌰𑍍𑌵𑌗𑌾। 𑌸𑌂𑌸𑌾𑌰𑌤𑌾𑌪𑌾𑌨𑌖𑌿𑌲𑌾𑌨𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍍𑌯𑌤𑌿𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌨𑍍॥ 𑌤𑌯𑌾 𑌤𑌿𑌰𑍋𑌹𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌾। 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌭𑍂𑌪𑌾𑌲 𑌤𑌾𑌰𑌤𑌮𑍍𑌯𑍇𑌨 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇॥" (வி-பு-

௬-௭-௬௧,௬௨) "ப்ரதாநஞ்ச புமாம்ஶ்சைவ ஸர்வபூதாத்மபூதயா | விஷ்ணுஶக்த்யா மஹாபாகே வ்ருதௌ ஸம்ஶ்ரயதர்மிணௌ || தயோஸ்ஸைவ ப்ருதக்பாவகாரணம் ஸம்ஶ்ரயஸ்ய ச || யதா ஸக்தம் ஜலே வாதோ பிபர்த்தி கணிகாஶதம் | ஶக்திஸ்ஸாபி ததா விஷ்ணோ: ப்ரதாநபுருஷாத்மந: || (வி-பு-௨-௭-௨௯, ௫௧) "ததேதக்ஷயம் நித்யம் ஜகந்முநிவராகிலம் | ஆவிர்பாவதிரோபாவஜந்மநாஶவிகல்பவத் || (வி-பு-௧-௨௨-௬௰)

இத்யாதிநா பரம்ப்ரஹ்ம ஸ்வபாவதயாவஸ்திதவிஷ்ணோ ஶேஷித்வம் ஸமஸ்தகல்யாணகுணாத்மகம் ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாராந்த: ப்ரவேஶநியமநாதிஶீலம் ப்ரக்ருத்யாதே: க்ருத்ஸ்நஸ்ய சிதசித்வஸ்துநஸ்ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்தயஸ்ய பாரமார்த்திகஸ்யைவ பரஸ்ய ப்ரஹ்மண: ஶரீரதயா ரூபத்வம், ஶரீரரூபதயாம்ஶஶக்திஶப்தோக்த்யாதி ஶரீரஸ்ய தத்ஸ்வாமிநா நாயிகாரண்யாதிஶாத் ததிதம் ததஸ்ய விஷ்ணோ: ஸ்வரூபேணாவஸ்திதிர்தர்ஶிதா க்ஷேத்ரஜ்ஞரூபேண ஸ்திதிர்தர்ஶிதா; க்ஷேத்ரஜ்ஞாவஸ்தாயாம் புண்யபாபாத்மககர்மரூபாவித்யாவேஷ்டிதத்வேந ஸ்வாபாவிகஜ்ஞாநரூபேணாநந்தாநந்தஸுகாநவிஷ்டருபாயத்வாகாரதயா ஸாநஸ்ஸ்தாநம் ச ப்ரதிபாதிதமிதி பரம்ப்ரஹ்ம ஸவிஶேஷம், ததிதம் ஜகதபி பாரமார்த்திகமேவேதி விஜ்ஞாயதே ||

**ஸ்ரீபாஷ்யம்.—**

வ்யக்தமான ப்ரபஞ்ச ஸ்வரூபிணியாகவும் அவ்யக்தமான தமஸ்ஸ்வரூபிணியாகவுமிருப்பதாக எந்த ப்ரக்ருதி என்னால் முன்பு கூறப்பட்டதோ, அந்த ப்ரக்ருதி, புருஷன், இவ்விரண்டும் பரமாத்மாவினிடத்தில் லயிக்கின்றன; பரமாத்மாவோவென்றால் எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரமாயிருப்பவன்; மேலதிகாரி இல்லாதவனான ஈச்வரன். அவன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விஷ்ணுவென்கிற பெயருள்ளவராகக் கோஷிக்கப்படுகிறார். அந்த ப்ரஹ்மத்திற்கு மூர்த்தமென்றும் அமூர்த்தமென்றும் சொல்லப்படுகிற இரண்டு ரூபங்கள் உள. அவ்விரண்டு ரூபங்களும் எல்லா பூதங்களிடங்களிலும்

க்ஷராக்ஷர ஸ்வரூபங்களாக நிலைபெற்றிருக்கின்றன. கர்மபந்தத்தினின்று விடுபட்டதான அந்த முக்தாத்மரூபமானது அக்ஷரமென்று சொல்லப்படுகிறது. இவ்வுலகமனைத்தும் க்ஷரமென்று சொல்லப்படுகிறது. ஓரிடத்திலிருக்கிற அக்நியின் ஒளியானது எவ்வாறு நாலாபக்கங்களிலும் பரவிச்செல்லுகிறதோ அவ்வாறு ப்ரஹ்மத்தின் சக்தியானது இந்த உலகமனைத்தையும் வ்யாபித்திருக்கிறது. விஷ்ணு சக்தியானது 'பரா' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாறே, க்ஷேத்ரஜ்ஞ ஸம்ஜ்ஞையுள்ள சக்தியானது அபரா என்று சொல்லப்பட்டிருக்கிறது. கர்மாவென்று பெயருள்ளதான அவித்யையானது மூன்றாவது சக்தியாக இச்சிக்கப்படுகிறது. ராஜனே! எல்லா வஸ்துக்களையும் அடைந்திருக்கிற அந்த க்ஷேத்ரஜ்ஞ சக்தியானது எதனால் சுற்றப்பட்டதாக இருந்துகொண்டு மிகவும் தொடர்ச்சியாயுள்ள எல்லா ஸம்ஸாரதாபங்களையும் அடைகிறதோ. பூமியைப் பாதுகார்ப்பவனே! அந்த க்ஷேத்ரஜ்ஞ சக்தியானது அவித்யையினால் மூடப்பட்டிருப்பதினால் கர்மதாரதம்யத்திற்கு அனுகுணமாக ஜ்ஞாநதாரதம்யத்துடன் இருக்கிறது. மஹாபுத்தியுள்ளவனே! ஸர்வபூதங்களையும் வ்யாபித்திருக்கிற விஷ்ணுசக்தியினால் பகவானைவிட்டு விலகி தனித்திருத்தலை ஸ்வபாவமாகக்கொண்டிராத ப்ரதாநம் புருஷன் இவ்விரண்டும் கவரப்பட்டிருக்கின்றன. அந்த சக்தியே ப்ரதாநம் புருஷன் இவ்விரண்டுகளையும் சேர்ப்பதிலும் (ஸம்ஸாரத்திலும்) தனித்தனியாகப் பிறிப்பதிலும் (மோக்ஷத்திலும்) காரணமாக இருக்கிறது. காற்று எவ்வாறு அநேகஜலபிந்துக்களை ஜலத்தில் பற்றுதலின்றி வஹிக்கிறதோ அவ்வாறு அந்த விஷ்ணுவினுடைய சக்தியும் பத்தாத்மாக்களையும் முக்தாத்மாக்களையும் தாங்கிக்கொண்டிருக்கிறது. முனிவர்களுக்குள் சிறப்புற்றவரே! க்ஷயமில்லாததும் ப்ரவாஹத்தால் நித்யமாயுமிருக்கிற அந்த இந்த உலகமனைத்தும் தோன்றுதல் மறைதல் என்கிற ஜன்மநாச விகல்பங்களுள்ளது.

இது முதலியதால் பரப்ரஹ்மமானது ஸ்வபாவத்தினாலேயே ஸமஸ்த தோஷங்களையும் நிரஸித்ததென்றும் ஸமஸ்தகல்யாணகுணாத்மகமென்றும் ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரம் உள்ளுக்குள் ப்ரவேசம் நியமனம் இவைகள் முதலியவற்றை லீலையாகக் கொண்டதென்றும் ப்ரதிபாதித்து எல்லா நிலைமைகளுடனும்கூடி நிலைபெற்றிருக்கிற சிதசித் வஸ்துக்களனைத்தும் பாரமார்த்திகமென்றும் அப்படி பாரமார்த்திகமாக இருக்கிற சிதசித்துக்களே பரப்ரஹ்மத்திற்கு சரீரமாக இருப்பதால் அவைகளுக்கு ரூபத்வத்தை சரீர, ரூப, தநு, அம்ச, சக்தி, விபூதி முதலிய சப்தங்களாலும் தத்சப்த ஸாமாநாதிகரண்யத்தாலும் சொல்லி அந்த பரப்ரஹ்மத்திற்கு விபூதியாக

இருக்கிற சித்பதார்த்தத்திற்கு ஸ்வரூபத்தோடு இருப்பையும் அசித்துடன் சேர்ந்திருப்பதால் க்ஷேத்ரஜ்ஞ ரூபமாக இருப்பையும் சொல்லி க்ஷேத்ர ஜ்ஞாவஸ்தையில் புண்யபாபாத்மக கர்மரூபா வித்யையினுல் சுத்தப்பட்டிருப்ப தால் ஸ்வாபாவிகமான ஜ்ஞாநரூபத்வாநுஸந்தாநமும் அசித்ரூபார்த்தாகார மாக அநுஸந்தாநமும் ப்ரதிபாதிக்கப்பட்டதினுல் பரப்ரஹ்மமானது ஸவி சேஷமென்றும் அதின் விபூதியாகஇருக்கிற ஜகத்தும் பாரமார்த்திகமென்றே அறியப்படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

இவ்வாறாக சாஸ்த்திரத்தின் தொடக்கத்தில் வாஸுதேவனெனப்பெயர்வாய்ந்த தும் உபயலிங்கங்களுடன்கூடியதுமான வஸ்து ப்ரதிபாதிக்கத்தக்கதென்று உரைக்கப் பட்டது. சாஸ்த்ரத்தின் முடிவிலும் அவ்வண்ணமே சொல்லப்பட்டிருக்கிறதென்ப தைக்காண்பிக்கிறார்—ப்ரக்ருதிர்யா என்று. பரமாத்ம சப்தத்திற்கு சில இடத்தில் ஜீவனிடத்திலும் ப்ரயோகம் காணப்பட்டிருப்பதால் அதை வ்யாவ்ருத்திப்பதற்காக ஸாக்ஷாத் பரமாத்ம லக்ஷணமான ஜகத்காரணத்வம் கூறப்பட்டது 'லீயதே பரமாத்மநி' என்று. அவன் ஈச்வரனைவிட வேறல்ல என்பதைத்தெரிவிப்பதற்காக பரமேச்வர சப்தம். ஈச்வரனும் தேவதாந்தரமல்லவென்பதைத் தெரிவிப்பதற்காக 'விஷ்ணுநாமா' என்று சொல்லப்பட்டது. இந்த இடத்தில் 'பரமாத்மா ஆதார: பரமேச்வர:' என்கிற பதங்களால் சரீரிலக்ஷணம் ஸ்பஷ்டமாயிற்று.

இவ்வண்ணம் சாஸ்த்ரத்தின் தொடக்கத்திலும்முடிவிலும் இடையிலுமுள்ள ப்ர கரணங்களின் உபக்ரமோபஸம்ஹாரங்களிலும் ஹேயப்ரத்யநீகமாயும் கல்யாணகுணை ஸ்பதமாயுமிருக்கிற நாராயணனே பரப்ரஹ்மமென்று ப்ரதிபாதிக்கப்படுகிறதென்பது காண்பிக்கப்பட்டது. அதற்குமேல் அவித்யாஸம்பந்தம் முதலியவைகளுங்கூட ப்ரஹ் மத்திற்கேயன்றோ ப்ரதிபாதிக்கப்படுகின்றன, அது எவ்வண்ணம் உள்ளபடி உரைக்கப் பட்ட ஸ்வரூபமுள்ள ப்ரஹ்மத்திற்குப்பொருந்துகிறது என்கிற சங்கைவரின், 'காடிந்ய வான்யோபிபர்தி' என்பதுபோல த்வாரித்வாரபாவத்தால் பொருந்துகிறது என்றுசொல் வதற்காக' பரமாத்மாவுக்கும் ஜீவர்களுக்கும் ஆத்மசரீரபாவத்தால் ஸம்பந்தத்தையும் அந்த ஜீவாத்மாக்களுக்கு வித்யா ஸம்பந்தம் முதலியதையும் சொல்லப்போகிறவராய்க் கொண்டு முதலில் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் சரீரசரீரிபாவரூபமான ஸம்பந்தத் தைக்காண்பிக்கிறார்-த்வேரூபே இதுமுதலியதால். 'மூர்த்தஞ்சாமூர்த்தமேவச' என்று. பத்தனும் முக்தனுமென்று அர்த்தம். இதை விவரிக்கிறார்—க்ஷராக்ஷரரூபே என்று. ஜ்ஞாநஸங்கோசரூபமான க்ஷரணமுள்ளது ஸங்கோசமில்லாத ஜ்ஞாநமுள்ளதென்றும் அர்த்தம். ஸர்வபூதேஷுச ஸ்திதே - அர்ஹம் (தகுதியுள்ளது) என்கிற அர்த்தத்தில் க்தப்ரத்யயம் வந்திருக்கிறது. எல்லா பூதங்களிடங்களிலும் ஸ்திதிக்கு அர்ஹங்கள். அதிக ஸூக்ஷ்மமாக இருப்பதனுல் வ்யாபிப்பதில் யோக்யங்களென்று அர்த்தம். அன் றிக்கே பத்தனுக்கு ஸ்வரூபத்தினுல் ஸர்வபூதஸ்திதி. முக்தனுக்கோவென்றால் தர்மபூத மாயும் விபுவாயுமிருக்கிற ஜ்ஞாநத்தின் வாயிலாக என்று. அக்ஷரம்தத்பரம் ப்ரஹ்மேதி- தத் முக்த ஸ்வரூபம்-அக்ஷரம் ; க்ஷரம் ஸர்வமிதம் ஜகத் - இதம் - பத்தனுடைய ரூபம் - க்ஷரமென்று அர்த்தம். ரூபத்வத்தை விசேஷிக்கிறார்—ஏகதேச என்று. சக்தி என் பது வேறாக பிறிக்கமுடியாத கார்யோபயோகியான விசேஷணம். 'ஏகதேசஸ்திதஸ்ய

விஸ்தாரிணீ’ என்கிற விசேஷணத்வயத்தால் அஸங்கீர்ணஸ்வபாவத்வம் சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் அகிலம் ஜகத் என்பதனால் சிதசிதாத்மகமான ஜகத் சொல்லப்படுகிறது. ந்யாயஸாம்யத்தினால் அக்ஷரத்திற்கும் சக்தித்வம் ஸித்திக்கிறது. அன்றிக்கே அகிலஜகத் சப்தத்தால் அக்ஷரத்திற்கும் க்ரோடீகாரம் - த்ரிபாத்விபூதியும் லோகசப்தவாச்யமாக இருப்பதாலும் ஜகத் சப்தம் அதற்கு ஸமாநமான அர்த்தத்துடன் கூடியிருப்பதாலும் அகிலசப்தத்திற்கு ஸங்கோசகமில்லாமையாலும் ‘க்ஷரம் ஸர்வம்’ என்கிற இடத்தில் க்ஷரஸாமாநாதிகரண்யம் அபவாதம், இங்கு அதில்லாமையால் அக்ஷரத்திற்கும் அபிதாநம் பொருத்தமுள்ளதாக ஆகிறது. இதம் சப்தமானது ப்ரக்ருதத்தைச்சொல்லும் ஸ்வபாவமுள்ளதாதலால் க்ஷராக்ஷரபரத்வம் இதற்குப்பொருத்தமுள்ளதாக ஆகிறது. அய்யா! க்ஷராக்ஷர சப்தங்கள் கார்யகாரணரூபமாக இருக்கிற பரப்ரஹ்ம பரங்கள். பரப்ரஹ்ம சப்தத்திற்கு முக்யார்த்தம் ஸித்திப்பதால். அப்படி இல்லாவிட்டால் ஒரு ப்ரகரணத்திலிருக்கிற ப்ரஹ்ம சப்தங்களுக்கு அர்த்தவைரூப்யமும் உண்டாகும். ஜகத்துக்கு ஜ்யோத்ஸ்நாஸ்தாநீயத்வமும் பொருத்தமுள்ளதாக ஆகிறது, ப்ரபை என்பது தேஜோத்ரவ்யத்தின் சிதருதலுள்ள அவயவமாதலால் அதற்கு அக்நிகார்யத்வம் பொருந்துவதால், இவ்வண்ணமல்ல - ‘ப்ரஹ்மணோரூபே’ என்கிற வ்யதிரேகநிர்தேசஸ்வாரஸ்யத்திற்கு பங்கம் ப்ரஸங்கிப்பதால், அதுவும் கார்யகாரணங்கள் இரண்டுக்கும் ப்ரஹ்மவ்யதிரிக்தத்வமில்லாமையால் - ஷஷ்டீஸ்வாரஸ்யத்திற்காக மூர்த்தத்வாமூர்தத்வங்கள் விவக்ஷிக்கப்பட்டிருக்குமேயாகில் அப்பொழுது மூர்தாமூர்தசப்த ஸ்வாரஸ்யத்திற்கு பங்கம், பாவப்ராதாந்யத்தை விவக்ஷியாமலிருக்கும் பக்ஷத்தில் ரூபசப்த ஸாமாநாதிகரண்யம் இசையாது. ப்ரஹ்மத்திற்கு இரண்டு ரூபங்கள் - மூர்த்தமாகவும் அமூர்தமாகவும் ப்ரஹ்மமன்றோ இருக்கிறதென்று சொல்லப்படுமேயானால் அப்பொழுது ப்ரதமாந்தமான ப்ரஹ்ம சப்தாத்யாஹாரதோஷம் ஸம்பவிக்கும். ஆறாம் வேற்றுமையுருபுடன்கூடின ப்ரஹ்மசப்தத்திற்கு மூர்தாமூர்த சப்தஸாமாநாதிகரண்யம் பொருந்தாததலால், மேலும், ‘ஸர்வபூதேஷு சக்திதே’ என்பதும் பொருந்தாது. ஸர்வபூத சப்தம் கார்யவாசியாதலால் அதில் கார்யஸ்திதியானது சொல்லப்படுமேயாகில் தன்னிடத்தில் தன்னுடைய வ்ருத்தி ப்ரஸங்கிப்பதாலும் காரணத்திற்கும் கார்யத்தைக்காட்டிலும் வேற்றுமையில்லாமையால் ஸ்வவ்ருத்திப்ரஸங்கிப்பதாலும். அவஸ்தாத்வயத்திற்கு ஸர்வபூதஸ்திதி என்றும் சொல்லத்தக்கதல்ல, தர்மிபர்யந்தமான க்ஷராக்ஷரசப்த ஸாமாநாதிகரண்யம் பொருந்தாததலாலும் அவைகளுக்கும் அவஸ்தாபரத்வம் சொல்லில் ஸ்வாரஸ்யத்திற்கு பங்கம் வருவதாலும் அவஸ்தாவத்வாசியான ஜகத்சப்த ப்ரஹ்மசப்த ஸாமாநாதிகரண்யம் பொருந்தாததலாலும் - அது ஸஹிக்கப்பட்டபோதிலுங்கூட காரணாவஸ்தைக்கு கார்யத்தில் இருத்தல் பொருந்தாததலாலும் சக்தி சப்தத்திற்கு கார்யவாசித்வம் பொருந்தாததலாலும் ச்லோகத்திற்கு இது அர்த்தமல்ல, உபசாரத்தாலுங்கூட கார்யோபயோகி விசேஷணமானது சக்தி சப்தத்தால் வ்யபதேசிக்கத்தகுதியுள்ளது, கார்யோபயோகி விசேஷணத்வமானது ஸமாநமாக இருப்பதால் சக்தியாவது சக்தியுள்ள வஸ்துவைக்குறித்து ஒருபொழுதும் வேறுபட்டிராத கார்யோபயோகி விசேஷணம் - கார்யமோவென்றால் காரணத்திற்கு அப்ருதக்பூதவிசேஷணமாகவும் கார்யோபயோகியாகவுமாகிறதில்லை. கார்யம் காரணம் இரண்டும் வேறு வஸ்து அல்லாததால் தனக்குத்தானே விசேஷணமாகஇருப்பது என்பது பொருந்தாததலால், கார்யத்வம் விசேஷணமென்று சொல்லப்படுமேயானால் அதை பாதிஏற்றுக்கொள்ளுகிறேன். ஆயினும், தர்மிவாசியான ஜகத் சப்தத்திற்கு கார்யதாவாசித்வமில்லாமையால் சக்திசப்தஸாமாநாதிகரண்யம் உபசரிதமாக இருந்தபோதிலும் பொருத்தமுள்ளதாக ஆகாது. கார்யோபயோகி அப்ருதக்பூதவிசேஷணம் சக்தி என்கிற முக்யத்வமானது நம்முடைய மதத்திலேயே ஸம்பவிக்கும். க்ஷரசப்தத்தை கார்யபரமாகச்சொல்லில் த்ருஷ்டார்த்தம் இசையாமல்

பேருகும். அதுவும் ஒளியானது சிதறுகின்ற தீபம் முதலிய தேஜஸ்வியான த்ரவ்யத்தின் அவயவமல்லாமையால் அக்நிகார்யத்வமில்லாமையால். “க்ஷரம்ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:” என்கிற ப்ரயோகத்தை அநுஸரித்து சேதநாசேதநபரத்வம் யுக்தமன்று. அசிதம்சத்திற்கு தன்னிடத்தில் தன்னுடைய வ்ருத்தி பரஸங்கிப்பதால் ஸர்வபூதஸ்திதியானது பொருந்தாது. சிதசித் ‡ ஸங்காதரூபமான பூதங்களில் இரண்டுக்கும் இருப்புபொருத்தமுள்ளதாக ஆகாதென்று சொல்லப்படுமேயானால், அல்ல. இரண்டு ஸமுதாயிகளுக்கு ஸமுதாய வ்ருத்தித்வம் உபபன்னமாகாததால். ஸமுதாயமன்றோ ஸமுதாயிகளிடத்தில் நிலைபெற்றிருக்கிறது. மேல் கிரந்தத்திற்கு § வைரூப்யமும் உண்டாகும். மேலே “பூபமூர்த்தமமூர்த்தஞ்ச” என்று மூர்த்தாமூர்த்த சப்தங்களால் இரண்டு ரூபங்களை ப்ரஸ்தாவித்து ஹிரண்யகர்ப்பன் முதலியவர்களை நிர்தேசித்து “மூர்த்தமேதத்ஹரேரூபம் பாவநாத்ரிதயாந்விதம்” என்று மூர்த்தசப்தவாச்ய ரூபத்திற்கு பாவநாத்ரயாந்வயம் சொல்லப்பட்டிருப்பதால். அசேதநத்திற்கு கர்மப்ரஹ்மபாவநாந்வயமில்லையன்றோ. “ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட்” என்கிற இடத்தில் இந்திரன்முதலிய பத்தர்களைவிட விலக்ஷணனைச் சொல்லியிருப்பதால், “ஸஸ்வராட்பவதி” என்பதுபோல் முக்தனைச்சொல்லுகிற ஸ்வராட் சப்த ஸாமாநாதிகரண்யத்தாலும் அக்ஷரசப்தமானது முக்தாத்மாவைக்குறிக்கிறது. ஆகையால் அதை அநுஸரித்து அக்ஷரசப்தம் இந்த இடத்திலும் முக்தாத்மாவைச்சொல்லுகிறது. ப்ரஹ்மசப்தார்த்தவைரூப்யமோவென்றால் ‘தபஸாசீயதே ப்ரஹ்ம-தஸ்மாதேதத் ப்ரஹ்ம நாமரூபமன்னஞ்சஜாயதே’ என்கிற ச்ருதியில்போல அநேக உபபத்திகளின் பலத்தினால் பொருந்துகிறது. ஆகையால் கீழ்எவ்வாறு அர்த்தம் உரைக்கப்பட்டதோ அதே ஸரி. ப்ரஹ்மத்தினது அவித்யாஸம்பந்தத்திற்கு த்வாரபூதமான ஜீவாத்மாவினிடத்தில் அவித்யா ஸம்பந்தத்தைக்காண்பிக்கிறார்—விஷ்ணுசக்தி: இது முதலியதால். ஸர்வகா - நான்முகன் முதலாக எறும்பு ஈறாக உள்ள எல்லா சரீரங்களிலும் நிலைபெற்றிருக்கிற இந்த ஏகவசநமானது ஜாதியைக்குறிப்பிடுகிறது. அன்றிக்கே தர்மபூதஜ்ஞாநத்தால் தானாகவே எல்லாவற்றையும் வ்யாபிப்பதற்குத்தகுதியுள்ளது. கர்மஜாவேஷ்டிதா - கர்மாவினால் ஸங்கோசத்தை அடைந்திருக்கிற ஜ்ஞாநமுள்ளது என்று பொருள். அங்ஙனமாகில் எல்லோரும் அஜ்ஞர்களாக ஆகட்டுமென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்- தயா என்று. க்ஷேத்ரஜ்ஞசக்தியானது கர்மதாரதம்யத்திற்குத்தக்கபடி ஜ்ஞாநதாரதம்யமுள்ளதென்று அர்த்தம். எல்லோருக்கும் ஜ்ஞாநநித்யத்வமும் முக்தியில் ஸர்வவிஷயகத்வமும் ப்ராமாணிகமாதலால் ஸங்கோசவிகாஸங்கள் இரண்டும் பத்தாவஸ்தையில் ஸித்தங்கள். அந்த தாரதம்யமும் “பும்ஸஸ்ஸக்த்யுபலக்ஷித:” “தச்சக்த்யாபசவோऽதிகா:” (புருஷனுடைய சக்தியினால் காட்டிக்கொடுக்கப்பட்டிருக்கிறது, அந்த சக்தியினால் பசுக்கள் மேன்மையுள்ளவைகள்) என்று வெளியிடப்பட்டிருக்கிறது. ஜாதிகளும் அப்ருதக்ஸித்ததர்மங்களாதலால் ரூபசப்தத்தால் சொல்லத்தக்கதாகலாமென்பதுபற்றி அதை விலக்குவதற்காக ப்ரஸ்துதரூபத்வமானது நியாம்யத்வ ரூபமென்பதைப்பகர்கிறார்— ப்ரதாநஞ்ச என்று. சித்அசித் இரண்டுக்கும் உள்ள பரமாத்மநியாம்யத்வம் தார்யத்வம் வ்யாப்யத்வம் நித்யத்வம் முதலியவைகள் ப்ரமாணாந்தரங்களுக்கு அகோசரங்களாக இருப்பதுபற்றி விதிக்கப்பட்டிருப்பதால் நிஷேத்யத்வம் அவைகளுக்குத்தகாதது என்று நியாம்யத்வாதிதர்மங்கள் பரமார்த்தங்களாக இருப்பதாலும் அவைகளுக்கு ஆச்ரயங்களாக இருக்கிற சிதசித்துக்களும் பரமார்த்தங்களாக இருப்பதுபற்றி நித்யத்வம் சொல்லப்பட்டிருப்பதாலும் அவ்விரண்டுகளுக்கும் ப்ரமவிஷயத்வாஸம்பவ

‡ ஸங்காதம் — சேர்க்கை அல்லது கூட்டம்.

§ வைரூப்யம்—ஒற்றுமையின்மை.

மும் காட்டப்பட்டதாக ஆகிறது. தர்மி ஸத்யமாக இல்லாவிடில் தர்மத்திற்கு ஸத்யத்
வம் யுக்தமாகாது- பாதிக்கத்தக்கதற்கு நித்யத்வமும் யுக்தமன்று. ஸர்வபூதாத்மபூதயா-
ஸர்வபூதங்களையும் வ்யாபிக்கிற என்று அர்த்தம். விஷ்ணு சக்த்யா - விஷ்ணுவின் நிய
மன சக்தியினால்-அப்படி இல்லாவிட்டால் ‘ சக்திஸ்ஸாபி ததாவிஷ்ணோ: ’ (விஷ்ணுவி
னுடைய அந்த சக்தியும் அப்படி) என்கிற அடுத்த வசநம் விரோதிப்பதால். அந்த சக்தி
யினால் சூழப்பட்டும் வ்யாப்தங்களாகவுமிருக்கின்றன - தவறாத தாரணமானது ச்ருதி
ஸித்தம், “ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கித்யாவாப்ருதிவ்யௌ வித்ருதே
திஷ்டத:” (ஹேகார்கி ! அழிவற்றவனும் சாச்வதனாக இருப்பவனுமான இந்த பர
மாத்மாவின் ஆஜ்ஞையில் ஆகாயம் பூமி இவ்விரண்டும் விசேஷித்து தரிக்கப்பட்டிருக்
கின்றன) என்றல்லவோ ச்ருதிசொல்லுகிறது - ஆகையால் பிபர்தி என்கிற மேல்ச்லோ
கத்திற்கு ஸாமஞ்ஜஸ்யம். ஸம்ச்ரயதர்மிணை - பகவானோடு அப்ருதக்ஸ்திதி தர்ம
முள்ளவைகள். ப்ருதக்பாவ: - உபகாரோபகாரணி பாவரூபமான ஸம்பந்தமில்லாமை
ஸம்ஹாரம் - அந்த ஸமயத்தில் கரணகளேபரம் இல்லை ஸம்ச்ரய: - கரணகரணி பாவ
ரூபமான ஸம்பந்தம் - ஸ்ருஷ்டி என்று அர்த்தம். அன்றிக்கே ஸம்ச்ரய: அவ்விரண்டு
க்கும் ஸம்பந்தம். ஸம்ஹாரம் ப்ருதக்பாவம் மோக்ஷம். அவை அனைத்தும் பகவந்நியம
நத்தைச் சார்ந்திருக்கிறதென்று அர்த்தம். இதில் த்ருஷ்டாந்தம் கூறுகிறார்—**யதா**
என்று. காரணத்தினின்று கார்யத்தினது பிரிவில் (விபாகத்தில்) த்ருஷ்டாந்தம்.
வாயுவானது ஜலத்தின் துளிகளை அதினிடத்தினின்று வேறுபடுத்தி சுமக்கிறது.
ஸம்யோஜகத்வ வியோஜகத்வங்களிலாவது த்ருஷ்டாந்தம். வாயுவானது ஒன்றோடொ
ன்று சேர்க்கையுற்றதும் சேராமலிருப்பவைகளுமான நீர் துளிகளை சுமக்கிறது. அன்
றிக்கே ப்ரக்ருதியையும் புருஷர்களையும் அடைந்திருக்கிற தோஷலேசமில்லை என்பதில்
த்ருஷ்டாந்தம் - வாயுவோவென்றால் அநேக ஜலகணங்களை அந்த ஜலகணிகைகளின்
ஸ்வபாவத்தால் தொடப்படாததாக இருந்துகொண்டு பரிக்கிறது. ப்ரதாநபுருஷாத்
மக: - ப்ரதாநம் புருஷன் இவ்விரண்டுக்கும் ஆத்மாவாக இருக்கிற - ஸமஸ்த சிதசித்
வஸ்துஜாதம் என்று சர்மா அத்யாஹாரம்செய்துகொள்ளத்தக்கது. அன்றிக்கே ப்ரதாந
சப்தத்தை அடுத்திருக்கிற புருஷசப்தம் பத்தஜீவர்களைச்சொல்லுகிறது. ஆத்மசப்தமா
னது ப்ராக்ருதி ஸம்ஸர்கமில்லாத முக்தாத்மாவைச்சொல்லுகிறது. அவர்களை பரிக்கி
றான் என்று. இப்படிப்பட்ட ஜகத்துக்கு பாரமார்த்யத்தைக்கூறுகிறார்-**ததேதத்** என்று.
மித்யையானது பாதிக்கத்தக்கதாக இருப்பதால் அநித்யமன்றோ - பாரமார்த்யமிருந்தா
லன்றோ நித்யத்வம் ஸம்பவிக்கும்

உதாஹரிக்கப்பட்டிருக்கிற வசநார்த்தங்களை சுருக்கமாகச்சொல்லுகிறார்— **இதி
யாதிநா** என்று. நிரஸ்தநிகிலதோஷத்வமும் - கல்யாணகுணாத்மகத்வமும் ‘ஸஸர்வபூத
ப்ரக்ருதிம், ஸமஸ்தகல்யாண’ இதுமுதலிய ச்லோகங்களின் அர்த்தம். ஜகத்துக்களின்
உத்பத்தி முதலியவைகளை லீலையாகக்கொண்டிருத்தல் பகவச்சப்த நிர்வசநத்தினால்
ஸித்தித்தது. ‘ அந்த: ப்ரவேசநியமநாதி ’ என்கிற இடத்திலிருக்கிற ஆதிசப்தத்தால்
அத்யக்ஷத்வம் அநுமந்த்ருத்வம் இவ்விரண்டும் சொல்லப்படுகின்றன. ‘இத்யாதிநா’ என்
கிற இடத்திலுள்ள ஆதிசப்தத்தால் ‘ க்ரீடதோபாலகஸ்ய ’ இதுமுதலிய வசநம் விவ
க்ஷிக்கப்பட்டது. அந்த அர்த்தம் லீலாசப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டது. ஸர்வாவஸ்
தாவஸ்திதஸ்ய - கார்யகாரணாவஸ்தைகளில் இருக்கிற பத்தனாகவும் முக்தனாகவுமிருக்
கிற என்று அர்த்தம். ப்ரமாணாந்தரகோசரமான அர்த்தத்தை நிஷேதிப்பதற்காக
வன்றோ ப்ராந்தி ஸித்தமென்று அநுவாதத்திற்கு ஸம்பவம். பரமாத்மநியாம்யத்வம்
முதலியதோவென்றால் ப்ரமாணாந்தரங்களுக்கு அகோசரமாதலால் விதிப்பதற்கே இச்
சிக்கப்பட்டிருக்கிறது, ஆகையால் விஹிதத்திற்கு நிஷேதம் அநுபபன்னமென்கிற

அபிப்ராயத்தால், 'பாரமார்த்திகஸ்யைவ' என்று உரைக்கப்பட்டது. நியந்த்ருத்வ நியாம்யத்வாதி ப்ரதிபாதநத்தால் ஸித்தமான அர்த்தமானது சரீரமாக இருப்பதால் அதற்கு ரூபத்வம் 'ததேவஸர்வமேவைதத்' என்கிற இடத்தில் தத் என்கிற சப்தத்தோடு ஸாமாநாதிகரண்யம். 'த்வேரூபே ப்ரஹ்மணஸ்தஸ்ய' இது முதலியதால் சொல்லப்பட்ட அர்த்தத்தைக் கூறுகிறார் — சரீரரூபதந்வம்ச என்று. (ப்ரதிபாதிதமிதி) இவ்வண்ணம் சாஸ்த்ரோபக்ரமோபஸம்ஹாரங்களிலும அவாந்தர ப்ரகரணோபக்ரமோபஸம்ஹாரங்களிலும் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதாலென்று அர்த்தம். 'ஜ்ஞாயதே' என்கிற பதத்தை ஈற்றில்கொண்ட க்ரந்த ஸ்ந்தர்ப்பத்தால் கூறப்பட்ட வசநங்களின் அர்த்த ஸங்க்ரஹம்செய்யப்பட்டது. உதாஹரிக்கப்பட்ட வசநங்களால் வஸ்துவுக்குஸவிசேஷத்வமும் ஜகத்திற்கு ஸத்யத்வமும் நிலைத்தது.

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

'ப்ரத்யஸ்தமிதபேதம்' என்கிற இடத்தில் தேவமநுஷ்யாதி ப்ரக்ருதிபரிணாம விசேஷங்களோடுசேர்ந்திருந்தபோதிலும் ஆத்மாவின் ஸ்வரூபமானது அந்த ப்ரக்ருதிபரிணாம விசேஷங்களை அடைந்திருக்கிற பேதமில்லாமையால்

அந்தபேதத்தைச்சொல்லுகிற தேவாதிசப்தங்களுக்கு அகோசரம் ஜ்ஞானஸத்தையையே லக்ஷணமாகக்கொண்டது-தன்னாலேயே அறியத்தக்கது ப்ரக்ராந்தயோகமுள்ளவனுடையமனதிற்கு கோசரமன்று எனக்கூறப்படுகிறதென்கிற இந்த க்ரந்தஸந்தர்ப்பத்தால் ப்ரபஞ்சாபலாபமில்லை. இது எப்படி அறியப்படுகிறது என்று வினவப்படுமேயாகில் அது சொல்லப்படுகிறது-இந்தப்ரகரணத்தில் ஸம்ஸாரமாகிற ரோகத்திற்கு முக்கியமான மருந்தாக யோகத்தைச் சொல்லி @ ப்ரத்யாஹாரத்தை ஈறாகக்கொண்ட யோகாவயவங்களையும் சொல்லி ழு தாரணை ஸித்திப்பதின்பொருட்டு சுபாச்ரயத்தைச்சொல்லுவதற்கு பரப்ரஹ்மமான விஷ்ணுவினுடைய சக்தி சப்தத்தால் சொல்லத்தக்க இரண்டு ரூபங்களையும் மூர்த்தம் அமூர்த்தம் என்கிற பாகுபாட்டுடன் ப்ரதிபாதித்து மூன்றாவது சக்திரூபமான கர்மா என்கிற அவித்யையினால் சுத்தப்பட்டிருக்கிற அசித்விசிஷ்டனை மூர்த்தமெனப்பெயருள்ள க்ஷேத்ரஜ்ஞனை மூன்று பாவனைகளின் ஸம்பந்தத்தால் அசுபனென்று சொல்லி இரண்டாவதாக இருப்பதும் கர்மாவென்கிற பெயருள்ள அவித்யையைவிட்டு விலகியதும் அசித்ஸம்பந்தமற்றதும் ஜ்ஞானத்தையே தன் ஸ்வரூபமாகக்கொண்டதுமான அமூர்தமென்கிற விபாகமானது நிஷ்பந்நயோகமுள்ளவர்களால் தியானிக்கத்தக்கதாக இருப்பதாலும் ப்ரக்ராந்தயோகனுடைய மனதிற்கு ஆலம்பநமல்லாததாலும் ஸ்வத: சுத்தி இல்லாமையாலும் (அதற்கு) சுபாச்ரயத்வத்தை நிஷேதித்து பரசக்தி ரூபமான இந்த அமூர்தமென்ன அபர சக்தி ரூபமான க்ஷேத்ரஜ்ஞனெனப்பெயர்வாய்ந்த மூர்தமென்ன பரசக்தி ரூபனான் ஆத்மாவுக்கு க்ஷேத்ரஜ்ஞதாப்ராப்திக்கு ஹேதுவாக இருக்கிற த்ருதீய சக்தி என்று பெயருள்ள கர்மரூபாவித்யை என்ன இப்படிப்பட்ட இந்த மூன்று சக்திகளுக்கும் ஆச்ரயமாக இருப்பதும் ‘ஆதித்யவர்ணம்’ இதுமுதலிய வேதாந்த வாக்கியங்களால் ப்ரதிபாதிக்கப்பட்டு ஸித்திபெற்றிருப்பதுமான மூர்த ரூபமானது சுபாச்ரயமென்று கூறப்பட்டது.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் அந்யனால் உதாஹரிக்கப்பட்ட வசநங்களை முன் உதாஹரிக்கப்பட்டிருக்கிற வசநங்களின் அர்த்தத்திற்கு அநுகுணமாக வ்யாக்கியாநம்செய்ய விருப்பமுள்ளவராக முதலில் ‘ப்ரத்யஸ்தமிதபேதம்’ என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்ட ச்லோகத்தை வ்யாக்கியாநம் செய்கிறார் — **ப்ரத்யஸ்தமித** என்று

---

@ ப்ரத்யாஹாரம்—வெளி இந்திரியங்களை விஷயங்களிலிருந்து அடக்குதல்.

ழு தாரணை—தியானிக்கத்தக்க வஸ்துவினிடம் மனதை நிலைநிறுத்துதல்.

''துக்கா ஜ்ஞாநமலாதர்மா: ப்ரக்ருதேஸ்தேநசாத்மந:''(துக்கம் அஜ்ஞாநம் மலம் இவைகள் ப்ரக்ருதி தர்மங்கள், அவைகள் ஆத்மதர்மங்களல்ல) என்றும், புமாந்நதேவோநநரோநபசுர்ந சபாதப:| சரீராக்ருதிபேதாஸ்து பூபைதே கர்மயோநய:| (ராஜனே! இந்த ஜீவாத்மா தேவனுமல்ல, மனிதனுமல்ல, பசுவுமல்ல, மரமுமல்ல, இந்த சரீரங்களின் ஆகாரபேதங்களோவென்றால் கர்மஸம்பந்தத்தாலுண்டாயிருக்கின்றன) இதுமுதலியவைகளில் ப்ரக்ருதியும் தேவாதி சரீரமும் உபாதிகளென்று அறியப்படுகிறபடியால் இரண்டுவிதங்களான வசநங்களின் அர்த்தங்களை நன்றாகப்பொருத்துவதற்காக 'தேவமனுஷ்யாதி ப்ரக்ருதி பரிணாம விசேஷ' என்று சொல்லப்பட்டது. 'ப்ரக்ருதே:' என்கிற இடத்தில் ப்ரக்ருதி சப்த நிர்தேசமானது சரீரமானது ப்ரக்ருதி பரிணாமரூபமாக இருப்பதாலென்கிற அபிப்ராயமுள்ளது. தேவமநுஷ்யாதி சப்தத்தால் ப்ரதிஷேதிக்கத்தக்க பேதத்திற்கு சரீரத்தில் இருப்பு காண்பிக்கப்பட்டது. அய்யா! முக்தாத்மாக்களுக்கு $ உபாஸ்யத்வமில்லாமையாலும் உபாஸக ஸ்வரூபமானது அசித்துடன் சேர்க்கைபெற்றிருப்பதால் ப்ரத்யஸ்தமித பேதத்வமில்லாமையாலும் அப்படிப்பட்ட தன்மையின் உபதேசம் பொருந்தாதாதலாலும் இந்த ச்லோகத்திற்கு பரிசுத்தாத்ம விஷயத்வம் பொருந்தாதாதலால் பரமாத்ம விஷயத்வம் ஸம்பவிக்கலாமென்கிற சங்கையின் பரிஹாரத்தின்பொருட்டு கூறப்பட்டது - 'தேவமநுஷ்யாதி ப்ரக்ருதி பரிணாமவிசேஷ ஸம்ஸ்ருஷ்டஸ்யாபி' என்று. இப்பொழுது ஸம்ஸரிக்கிறவனுக்கும் ஸ்வாபாவிகமான ஆகாரம் மறைபட்டிருப்பதால் ஆவிர்பவிக்கப்போகிற அந்த ஆகாரத்தின் அப்படிப்பட்ட அநுஸந்தாநத்திற்காக உபதேசமென்று கருத்து. 'தஸ்யாத்மபரதேஹேஷு ஸதோபி' என்கிற இதை ஸ்மரிப்பிப்பதற்காக 'ஸம்ஸ்ருஷ்டஸ்யாபி' என்று உரைக்கப்பட்டது. அபிசப்தம் விரோதத்தில்-பாதகியின் ஸம்ஸர்கத்தால் பாதகித்வம் உண்டாகிறது. உப்பளத்தின் ஸம்பந்தத்தால் பதார்த்தங்களுக்கு உப்புக்கரிக்கும் தன்மை உண்டாகிறது. அதனால் விரோதம். தத்கதபேதரஹிதத்வேந - பேதம் ரூபம் வர்ணம் முதலியது. இதனால் ப்ரத்யஸ்தமிதபேத சப்தமானது வ்யாக்யாநிக்கப்பட்டது. ப்ரத்யஸ்தமிதபேத சப்தத்தால் பேதத்திற்கு மீண்டும் உதயம் விநாசம் இவைகளின் இன்மை அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. அதனால் ப்ரளயகால வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. 'தத்பேதவாசிதேவாதி சப்தாகோசரம்' என்பதனால் 'அகோசரம்வசஸாம்' என்பது வ்யாக்யாநிக்கப்பட்டது. ஜ்ஞாநஸத்தைகலக்ஷணமென்பதனால் ஜ்ஞாநபதமும் ஸத்தாமாத்ரமென்கிற பதமும் வ்யாக்யாநிக்கப்பட்டது. ஸத்தாமாத்ரமென்கிற பதத்திலிருக்கிற மாத்ரச்ப்ரத்யயத்தின் அர்த்தத்தை விவரிக்கின்ற ஸத்தைகலக்ஷணமென்கிற இடத்திலிருக்கிற ஏகசப்தத்தால் ஜாயதே அஸ்தி இதுமுதலிய விகாரங்கள் வ்யாவ்ருத்திக்கப்பட்டன. ஸத்தாமாத்ரமென்று சொல்லப்பட்டால் எந்த ஆகாரத்தால் ஸத்தை என்று அபேக்ஷவரின் ஜ்ஞாநஸத்தைகலக்ஷணமென்று உறைக்கப்பட்டது. ஜ்ஞாநத்வாகாரத்தால் ஸத்தை என்று அர்த்தம். வசஸ்ஸுகளுக்கு அவிஷயமாகில் ஸத்தா வ்யாகாத பரிஹாரத்திற்காகவும் † ந்யாய § வைசேஷிகர்களால் சொல்லப்பட்டிருக்கிற ஜடஸ்வரூபதையை நிரஸிப்பதற்காகவும் ஆத்மஸம்வேத்யம் என்கிற பதத்தின் அர்த்தத்தைக்கூறுகிறார்—ஸ்வஸம்வேத்யம் என்று. அன்றிக்கே-அகோசரம் வசஸாம் என்கிற பதங்களை ஈற்றில்கொண்டிருக்கிற பதங்களால் கல்பநாவிகாரத்தினது இன்மையும் அவைகளைச்சொல்லுகிற சப்தங்களுக்கு கோசரமாக இல்லாமையும் சொல்லப்பட்டிருக்க பேதத்தை உண்டுபண்ணு

---

$ உபாஸ்யன்—உபாஸிக்கத்தக்கவன்.

† ந்யாயம்—கௌதமரிஷியினால் சொல்லப்பட்ட தர்கமதம்.

§ வைசேஷிகம்—கணாதரிஷியினால் சொல்லப்பட்ட தர்கமதம்.

கிற தர்மமில்லாமையால் எவ்வாறு ஸ்வவ்யாவ்ருத்தி க்ரஹணமென்கிற சங்கைவரச்சொல்லுகிறார்-ஆத்மஸம்வேத்யம் என்று. ப்ரத்யக்காக பாஸித்தல் ஸ்வவ்யாவர்தகம்-மற்றவைகள் இதுவென்றல்லவோ பாஸிக்கின்றனவென்று அர்த்தம். ஜ்ஞாநபதமானது தர்மதர்மிகள் இரண்டுக்கும் விசேஷமின்றி அஜடத்வத்தைச்சொல்லுகிறது. தர்மபூதஜ்ஞாநமானது ப்ருஹத்தாக இருப்பதால் பரிசுத்தாத்மஸ்வரூபம் ப்ரஹ்மசப்தத்திற்கு வாச்யமாகிறது. 'ப்ருஹ்மணோஹி ப்ரதிஷ்டாஹம்' இதுமுதலிய இடங்களில்போல உபபன்னமாகிறது. யோகயுக்-யோகத்தைத்தொடங்கினவன்-'ஏவம் ப்ரகாரமமலம்' என்கிற வசநத்தினால் பரமாத்மாவினிடத்தில் முக்தஸ்வபாவம் அதிதேசிக்கப்பட்டிருப்பதால் முக்தனுக்கு பரமாத்மஸாம்யம் அறியப்படுகிறது. ப்ரமாத்மாவுக்கும் 'அபக்ஷயவிநாசாப்யாம்' 'ரூபவர்ணாதி நிர்தேச' இதுமுதலிய வசநங்களால் சில பேதங்களின் இன்மையும் ஆறுவிதங்களான பாவவிகாரங்களின் இன்மையும் ஸ்பஷ்டமாகயிருப்பதால் அதற்கு அநுகுணமாக அதிவிஸ்தாரமின்றி ச்லோகம் வ்யாக்க்யாநிக்கப்பட்டது.

இந்த ச்லோகம்முக்தாத்மவிஷயமென்பதும் அதுயோகத்தைத்தொடங்கினவனுக்கு அகோசரம் என்பதும் எவ்வாறு அறியப்படுகிறது என்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார்—என்று. ப்ரகரணத்தினாலேயே அறியப்படுகிறதென்று பரிஹரிக்கிறார் — தத்ச்யதோ கதமிதம் இதுமுதலியதால். இந்த ப்ரகரணத்தில் இது $முக்தகச்லோகமன்று, பின்னையோ ப்ரபந்தத்திலுள்ளது - ஆகையால் 'பூர்வாபராபராம்ருஷ்ட: சப்தோந்யாம்குருதேமதிம்'(முன்பின் ஸம்பந்தமில்லாவிடில் சப்தமானது வேறுபுத்தியைஉண்டு பண்ணுகிறது) என்று அதை பரிஹரிப்பதின்பொருட்டு *முன்பின் ஸம்பந்தத்தினாலேயே அர்த்தம் வர்ணிக்கத்தக்கதென்று கருத்து. ஸம்ஸாரைகபேஷஜதயா யோகமபிநயதி ஏகசப்தத்தால் 'க்லேசாநாஞ்சக்ஷயகரம் யோகாதந்யந்நவித்யதே' (க்லேசங்களுக்கு க்ஷயத்தை உண்டுபண்ணுகிற வஸ்துவானது யோகத்தைவிட வேறு இல்லை, என்கிற ச்லோகத்தின் அர்த்தம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. வாக்யார்த்த ஜ்ஞாநமாத்திரத்திற்கு மோக்ஷோபாயத்வ நிராஸமும் ஸ்போரணம் செய்யப்பட்டது. யோகாவயவாந் ப்ரத்யாஹாரபர்யந்தாநிதி 'ப்ராணாயாமேநபவநே ப்ரத்யாஹாரேணசேந்த்ரியே-வசீக்ருதே தத: குர்யாத் ஸ்திதஞ்சேத: ஶுபாச்ரயே' (ப்ராணாயாமத்தால் காற்றும் ப்ரத்யாஹாரத்தால் இந்த்ரியங்களும் வசீகரிக்கப்பட்டபிறகு மனதை சுபாச்ரயமான பகவானுடைய திவ்யமங்களவிக்ரஹத்தில் நிலைபெற்றதாகச்செய்யவேண்டும்) இது முதலிய வசநங்களின் அர்த்தம் சுருக்கக்காட்டப்பட்டது. பரஸ்யப்ரஹ்மணோ விஷ்ணோ: சக்திசப்தாபிதேயமிதி 'விஷ்ணுசக்தி: பராப்ரோக்தா' என்கிற இடத்தில் விஷ்ணுவே ப்ரஹ்மத்தின் சக்தி என்று சிலர் கூறுகின்றனர். அதை வ்யாவ்ருத்திப்பதின்பொருட்டு விஷ்ணோ: என்று பிரித்துக்காட்டப்பட்டது - 'பரஸ்ய ப்ரஹ்மண: சக்தி:' 'பரமப்ரஹ்மபூதஸ்ய வாஸுதேவஸ்ய - ததஸ்ஸவாஸுதேவேதி, தத்ப்ரஹ்ம பரமம்நித்யம் - பரமாத்மாச ஸர்வேஷாம் - விஷ்ணுநாமாஸவேதேஷு வேதாந்தேஷு ச, பரப்ரஹ்மஸ்வரூபஸ்ய விஷ்ணோஶ்ஶக்தி ஸமந்விதம் - சக்திஸ்ஸாபிததாவிஷ்ணோ:, (பரப்ரஹ்மத்துடன் சக்தி-பரப்ரஹ்மமாக இருக்கிற வாஸுதேவனுடைய - அதனால் அவன் வாஸுதேவனென்று-அந்தப்ரஹ்மமானது தனக்குமேற்பட்டவஸ்துவில்லாதது. சாச்வதமாகஇருக்கிறது. பரமாத்மாவும் எல்லாவற்றுக்கும்-அவன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும்விஷ்ணுவென்று பெயருள்ளவனென்று-பரப்ரஹ்மஸ்வரூபியான விஷ்ணுவினுடைய சக்தியோடுசேர்ந்திருக்கிறவிஷ்ணுவினுடைய அந்த சக்தியும் அப்படியே) இது முதலியவைகளால் விஷ்

$ முக்தகம்—ஒரு கிரந்தத்திலும் சேராமல் தனித்திருக்கும் சுலோகம்.

ணுவுக்கே பரப்ரஹ்மத்வமும் ஜகத்திற்கு அந்த ப்ரஹ்ம சக்தித்வமும் அவன் சக்தியினால் நியமநஞ்செய்யத்தக்கதன்மையும் சொல்லப்பட்டிருக்கிறது பற்றி அதைப்ரதிபாதிக்கிற அநந்தவசநவிரோதத்தால் அது அயுக்தமென்று அபிப்ராயம். சக்திசப்தாபிதேயம்-அப்ருதக்ஸித்தவிசேஷணமன்றோ சக்தி-ப்ரஹ்மமோ ஒன்றுக்கும் விசேஷணமல்ல - ஆகையால் விஷ்ணுவினுடையதே சக்தி - அவனன்றோ பரஹ்மசப்தவாச்யன் என்று அபிப்ராயம். இந்த இடத்தில் “நாராயண: பரம் ப்ரஹ்ம, விஷ்ணுஸ்ததாஸீத்ஹரிரேவ நிஷ்கள:, பதிம்விச்வஸ்யாத்மேச்வரம், நதஸ்யேசேசஸ்சந, நதத்ஸமஸ்சாப்யதிகஸ்சத்ருச்யதே, யஸ்மாத்பரம் நாபரமஸ்தி கிஞ்சித், நதத்ஸமோஸ்த்யப்யதிக: குதோऽந்யோ லோகத்ரயே (நாராயணன் பரப்ரஹ்மம் - எங்கும் வ்யாபித்து இருக்கும் ஸ்வபாவமுள்ளவரும் அவயவங்களில்லாதவருமான ஹரி ஒருவரே அந்த ஸமயத்திலிருந்தார் - அனைத்துக்கும் நாதனும் தனக்குத்தான் பிரபுவும் - ஒருவனும் அவனுக்கு நாதனல்ல - அவனுக்கு ஸமானனும் மேலானவனும் காணப்படுகிறானில்லை. எவனைக்காட்டிலும் மேன்மை பெற்ற வஸ்து வேறொன்றுமில்லையோ - மூவுலகங்களிலும் அவனுக்கு நிகரான வஸ்துவே இல்லை - அவ்வாறு இருக்க மேலான மற்றொருவன் ஏது) இதுமுதலிய ச்ருதி ஸ்ம்ருதிகள் அநுஸந்திக்கத்தக்கவைகள். மூன்று சக்திகளுக்கும் ஆச்ரயமாக இருக்கிற திவ்ய விக்ரஹமானது உபாஸிக்கத்தக்கதெனக் கூறப்படுகிறது - விஷ்ணுவே சக்தி என்று சொன்னால் எவ்வாறு விஷ்ணுவின் விக்ரஹத்தினுடைய ஏகதேசமானது விஷ்ணுவுக்கே ஆச்ரயம்? அதற்கு ஆச்ரயபூதமான விக்ரஹம் ப்ரஹ்மத்திற்கு இல்லையன்றோ என்றதனால் இதுவும் தூஷணமாக பலித்தது - சக்திசப்தாபிதேயம்ரூபத்வயம் என்று. பரம் அபரம் எனப்பெயர்வாய்ந்துள்ள இந்த இரண்டு ரூபங்களுக்கும் மேலே பராபர சப்தஸமாநாதிகரணமான சக்தி சப்தத்தால் பராமர்சமிருப்பதால் பரமென்கிற ரூபகோசரமான சக்தி சப்தமானது பரமாத்மவிஷயமல்லவென்று அபிப்ராயம். தச்சவிஷ்ணோ: பரம் ரூபம். (அது விஷ்ணுவின் பரரூபம்) விஷ்ணுசக்தி: பராப்ரோக்தா (விஷ்ணு சக்தியானது ‘பரா’ என்று சொல்லப்படுகிறது) எனறல்லவோ கூறப்படுகிறது. ‘பூய மூர்த்தமமூர்த்தஞ்ச’ இதுமுதலிய வசநங்களின் அர்த்தத்தைக்கருதிச் சொல்லுகிறார்—மூர்த்தா மூர்த்தவிபாகேந என்று. ‘அவித்யாகர்ம ஸம்ஜ்ஞாந்யா த்ருதீயா சக்திரிஷ்யதே’ என்கிற இந்த ச்லோகத்தின் அர்த்தத்தைக்கூறுகிறார்—த்ருதீயா என்று. மூர்த்தாமூர்த்த விபாகேந’ என்று சொல்லப்பட்டிருப்பதனால் ‘மூர்த்தாக்யவிபாகம்’ என்று பிரித்து நிர்தேசம் செய்யப்பட்டது. (நிஷ்பந்நயோகித்யேயத்யேதி) க்ருத்யப்ரத்யயமானது விதிரூபமான அர்த்தத்தில் விதிக்கப்பட்டிருக்கவில்லை, பின்னேயோ சக்யம் என்கிற அர்த்தத்தைக்கருதுகிறது - ‘யோகித்யேயம் பரம்பதம்’ என்கிற இடத்திலும் அதே அர்த்தம். நிஷ்பன்னயோகமுடையவர்களால் தியானிப்பதற்குச் சக்யமாதலால் ப்ராரப்தயோகனுக்குத்தியானிப்பதற்கு அசக்யமென்று பலித்தது - ஸ்வதச்சுத்திவிரஹாத் என்று. இங்கு சுத்திக்கு அஸ்வாபாவிகத்வம் சொல்லப்படுகிறதில்லை-பின்னேயோ ஔபாதிகமான தோஷத்தை நீக்கிக்கொள்வதில் தான் சக்தியற்றவனாக இருப்பதால் பகவத்ப்ரஸாதத்தை அபேக்ஷித்திருத்தல் விவக்ஷிக்கப்பட்டது—சுபாச்ரயத்வம் ப்ரதிஷித்ய என்று. ‘ஸ்வத: சுத்திவிரஹாத்’ என்பதனால் சுபத்வம் நிஷேதிக்கப்பட்டது. ‘அநாலம்பநதயா’ என்பதனால் ஆச்ரயத்வம் நிஷேதிக்கப்பட்டது. இதனால் சுபாச்ரயத்வ ப்ரதிஷேதம் ஸித்தித்தது. சுபத்வம் ஹேயவிரோதித்வம் - ஹேயங்களில்லாமலிருத்தல் மாத்திரமல்ல - ‘சிந்த்யமாத்மவிசுத்த்யர்த்தம் ஸர்வகில்பிஷநாசநம்’ எல்லா பாபங்களையும் நாசம்செய்கிற பகவத் திவ்யமங்கள விக்ரஹமானது ஆத்மசுத்தியின் பொருட்டு சிந்திக்கத்தக்கது என்று) சொல்லப்பட்டிருப்பதால் மூன்று சக்திகளுக்கும் ஆச்ரயமாக இருத்தலைச்சொல்வதற்காக மூன்று சக்திகளையும் அநுவதிக்கிறார்—பரா என்று. இந்த

இடத்தில் 'ஸமஸ்தாச்ரயசக்தயச்சைதா:' என்கிற வசநத்தின் அர்த்தம் விவக்ஷிக்கப்பட்டது. 'ஏதா: சக்தய:' என்று பஹுவசநமிருந்தபோதிலும் ஸமஸ்த பதம் அநேக வ்யக்திகளை க்ரோடீகரிப்பதற்காக - பரசக்தியே பரமாத்மாவினுடைய ரூபமாதலால் பரசக்தி ரூபம் - அல்லது பரசக்த்யாத்மகம் - மேலேயும் இவ்வண்ணமாக பகவத் ஸாதாரணமென்பதனால் சதுர்முகாதி சரீரங்களுக்கு வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. அந்த சரீரங்கள் பகவானால் அதிஷ்டிதங்களாக இருந்தபோதிலும் அந்தந்த ஜீவவிசேஷாபிமான விஷயமாக இருப்பதால். ச்ருதிமூலத்தைக் காண்பிக்கிறார் — ஆதிந்ய என்று. மூர்த்த ரூபம் என்பதினால் 'மூர்த்தே பகவதோ ரூபே' என்கிற வசநார்த்தம் சொல்லப்பட்டது.

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

இந்த இடத்தில் பரிசுத்தாத்மஸ்வரூபத்திற்கு சுபாச்ரயதானர்ஹதையைச் சொல்லுவதற்காக 'ப்ரத்யஸ்தமிதபேதம்யத்' என்று சொல்லப்படுகிறது. இதை நிரூபிக்கிறார்—'ததாஹி' என்று தொடங்குகிற க்ரந்தத்தினால். ராஜனே! யோகிகளால் தியானிக்கத்தக்கதும் எல்லாவற்றையும்விட

சிறந்ததும் எல்லோராலும் அடையத்தக்கதுமான விஷ்ணுவென்கிற பெயருள்ள பரமாத்மாவினுடைய இரண்டாவதான யாதொரு ரூபமுண்டோ அது யோகத்திலிழிகிறவனால் சிந்திப்பதற்குச் சக்யமல்ல. ராஜனே! எந்த ரூபத்தில் இந்த எல்லா சக்திகளும் நிலைபெற்றிருக்கின்றனவோ அது எல்லா ரூபங்களைக்காட்டிலும் விஜாதீயமானதும் வேறானதுமான ஹரியினுடைய மஹத்தான ரூபமென்றும்சொல்லுகிறது. அப்படியே ஜகத்திற்குள்ளிருக்கிற சதுர்முகன் ஸனகன் ஸநந்தனன்முதலியவர்கள் அவித்யையினால் சுற்றப்பட்டிருப்பதால் அவர்களுக்கு சுபாச்ரயதாநர்ஹதையைச்சொல்லி பத்தர்களாகவே இருந்து பிறகு யோகத்தினால் போதமுண்டாகி தன்ஸ்வரூபத்தை அடைந்தவர்களுக்கும் ஸ்வத: சுத்தி இல்லாமையால்'சுபாச்ரயத்வம் பகவானை சௌநகரால் நிஷேதிக்கப்பட்டது. ஜகத்திற்குள் இருக்கிற ப்ரஹ்மதேவன்முதல் த்ருணம்வரைக இருக்கிற ப்ராணிகள் யாதொருகாரணத்தினால் கர்மாவினாலுண்டு பண்ணப்பட்டிருக்கிற ஸம்ஸாரத்திற்கு வசப்பட்டிருக்கிறார்களோ அதனால் அவர்கள் தியாநஞ்செய்பவர்களுக்கு தியாநவிஷயத்தில் உபகாரகர்களல்ல. அவர்கள் அனைவர்களும் அவித்யைக்கு உட்பட்டவர்களாகவும் ஸம்ஸாரகோசரர்களாகவுமிருக்கிறார்களன்றோ. பிற்காலத்தில் உண்டாயிருக்கிற போதமுள்ளவர்களாக இருந்தபோதிலுங்கூட தியாநவிஷயத்தில் உபகாரகர்களே அல்ல. அவர்களுக்குங்கூட யாதொரு காரணத்தினால் போதமானது வேறு இடத்திலின்று உண்டாகிறதோ அக்காரணத்தினால் ஸ்வபாவஸித்தமான போதம் கிடையாது. ஆதலால்நிர்மலமான அந்தப்ரஹ்மமானது இயற்கையாகவே ஞாநமுள்ளது.' இதுமுதலியதால் பரப்ரஹ்மரூபியான விஷ்ணுவின்தனக்கு அஸாதாரணமான ஸ்வரூபமே சுபாச்ரயமென்று கூறப்பட்டது. ஆதலால் இங்கு பேதாபலாபமானது அறியப்படுகிறதில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

கூறப்பட்டுள்ள அர்த்தங்களில் இந்த ச்லோகம் எந்த அர்த்தத்தை விஷயமாகக்கொண்டது என்று வினவினால் கூறுகிறார்—அந்ர என்று. சுபாச்ரயதைக்குத் தகுதி இல்லாமையைச்சொல்வதற்காக கூறப்படுகிறதென்றால் வேறு இடத்தில் இதற்கு அநர்ஹத்வகதநமும் மற்ற வஸ்துக்களுக்கு ததர்ஹத்வகதநமும் காணத்தக்கது என்று கேட்கல் கூறுகிறார்—ததாஹி என்று. இந்த இரண்டு அர்த்தங்களிலும் இரண்டு வசநங்களை எடுக்கிறார்— நதத் என்று. யோகயுஜா ப்ரக்ராந்தயோகமுடையவனால். இதனால் அநாலம்பநத்வம் கூறப்பட்டது. ஸ்வத: சுத்தி இன்மையும் ப்ரகரணஸித்தமென்று அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. 'அந்யேது புருஷ வ்யாக்ரசேதஸோயேப்யவ்யபாச்ரயா: அசுத்தாஸ்தே ஸமஸ்தாஸ்து தேவாத்யா: கர்மயோநய:' (ஹே புருஷச்ரேஷ்ட! பகவத்திவ்யமங்கள விக்ரஹத்தைத்தவிர்த்த மற்ற தேவாதிகள் எவர்கள்

மனதிற்கு ஆதாரங்களாக ஆகிறார்களோ கர்மவச்யர்களான அவர்கள் அனைத்தும் அசுத்தர்கள்) இதுமுதலியதால் பகவானுடைய விக்ரஹங்களைத்தவிர்த்த மற்ற எல்லா வஸ்துக்களுக்கும் சுத்தி இல்லாமை கூறப்பட்டிருக்கிறதன்றோ. மற்ற ரூபத்திற்கு அர்ஹதையைச்சொல்வதும் இத்தரூபத்திற்கு அனர்ஹத்வவிவக்ஷைக்கு ஸூசகம் என்பதும் ‘ச’ சப்தார்த்தம். அங்யேது என்கிற க்ரந்தத்தால் கர்மஸம்பந்தரூபமான அசுத்தியைச்சொன்னதினால் கர்மஸம்பந்தத்தினின்று விடுபட்டவர்களுக்கும் ஸ்வத: சுத்தி இல்லாமையானது ஸூசிப்பிக்கப்பட்டது. அவர்களுக்குங்கூட சுபாச்ரயபதத்திலிருக்கிற சுபசப்தத்தால் வ்யவச்சேதிக்கத்தக்கத் தன்மையை வெளிப்படுத்துவதற்காகக் கூறுகிறார்—ததா என்று. ஸ்வஸ்வரூபாபந்நாநாம் என்கிற பதத்தினால் ‘பர்ஸாதுத்பூதபோதாஸ்ச’ என்கிற பதம் வ்யாக்கியானிக்கப்பட்டது. ‘ஆப்ரஹ்ம ‡ஸ்தம்பபர்யந்தா:’ என்கிற இடத்திலுள்ள ஆங் அபிவிதியை உணர்த்துகிறது-ஸ்தம்பசப்தத்தின் சேர்க்கையால். ஸ்தம்பம் கர்மவச்யமன்றோ. ‘புமாந்நதேவ:’ என்று தொடங்கி ‘பூபைதே கர்மயோநய:’ என்று சொல்லியிருப்பதால். ‘தேஷாமப்யங்யதோ யத:’ என்பதை ஈறாகக்கொண்டிருக்கிற க்ரந்தத்தின் அர்த்தம் முந்தி உரைக்கப்பட்டது. அதற்குமேல் ‘தஸ்மாத்க்ஷமலம் ப்ரஹ்ம’ இதுமுதலியதின் அர்த்தத்தைச்சொல்லுகிறார்—பரஸ்ய என்று. ஸ்வஸாதாரணம் என்கிற க்ரந்தத்திற்கு முன்போலவே அர்த்தம். ‘ப்ரத்யஸ்தமித’ இதுமுதலிய ச்லோகத்திற்கு பேதநிஷேதத்தில் தாத்பர்யமில்லாமையை முடிவுசெய்கிறார்—அத: என்று.

---

“𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌚” 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌨 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍇। 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌦𑍇𑌵𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍇𑌣𑌾𑌵𑌭𑌾𑌸𑍋 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌾𑌵𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌵𑌚𑌨𑌾𑌤𑍍। 𑌨𑌹𑌿 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌕𑌾𑌯𑌾 𑌰𑌜𑌤𑌤𑌯𑌾 𑌅𑌵𑌭𑌾𑌸𑍋 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌜𑌗𑌤𑌿 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌰𑌜𑌤𑌜𑌾𑌤𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾 𑌭𑌵𑌤𑌿। 𑌜𑌗𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌸𑍍𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑍇𑌨𑍈𑌕𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍇𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌤𑌾 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌸𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌤𑌦𑌸𑌤𑍍। [illegible] 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 [illegible] 𑌤𑌸𑍍𑌯 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿[illegible] 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑍇। 𑌅𑌤𑍋𑌽𑌯𑌮𑌪𑌿 𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌨𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌬𑌾𑌧𑌕𑌃 ॥

---

‡ ஸ்தம்பம்—குத்துச்செடி. (சிலர் ஒருவிதமான மிக்கச்சிறியதான புழுவென்று சொல்லுகிறார்கள்.)

ஸ்ரீபாஷ்யம்—

ஜ்ஞாநஸ்வரூபம் என்கிற இடத்திலும் ஜ்ஞாநத்தைக்காட்டிலும் வேறாக இருக்கிற அர்த்தங்களனைத்திற்கும் மித்யாத்வம் ப்ரதிபாதிக்கப்படுகிறதில்லை. ஜ்ஞாநஸ்வரூபியான ஆத்மாவுக்கு தேவன் மனுஷ்யன் முதலிய அர்த்தங்களின் ஆகாரத்தோடு தோற்றம் ப்ராந்தி என்று இவ்வளவு மாத்திரம் சொல்லப்பட்டிருப்பதால். சிப்பியானது ரஜதமாகத் தோன்றுவது ப்ராந்தி என்று சொல்லப்பட்ட மாத்திரத்தில் உலகத்திலுள்ள எல்லா ரஜதஸமூஹமும் மித்யையாக ஆகிறதில்லையன்றே. ஜகத் ப்ரஹ்மம் இரண்டுக்கும் ஸாமாநாதிகரண்யத்தால் ஐக்யம் தோன்றுவதால் ஜ்ஞாநஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு அர்த்தாகாரதையானது ப்ராந்தி என்று சொன்னால் அர்த்தஜாதம் அனைத்துக்கும் மித்யாத்வம் சொல்லப்பட்டதாக ஆகுமென்று வினவப்படுமேயாகில் அது ஸரியல்ல. இந்த சாஸ்த்திரத்தில் பரப்ரஹ்மமாக இருக்கிற விஷ்ணுவானவர் அஜ்ஞாநம் முதலிய ஸமஸ்த தோஷஸமூஹங்களையும் நிரஸனம் செய்தவரென்றும் ஸமஸ்த கல்யாண குணாத்மகரென்றும் மஹாவிபூதியுள்ளவரென்றும் அறியப்பட்டிருப்பதால் அந்த பரப்ரஹ்மரூபியான விஷ்ணுவுக்கு ப்ராந்திதர்சனம் ஸம்பவியாததலால். ஸாமாநாதிகரண்யத்தால் ஐக்யப்ரதிபாதநமும் வ்யாப்த்தை ஸஹியாததென்றும் விருத்தமல்லவென்றும் அடுத்தே உபபாதிக்கப்படப்போகிறது. ஆதலால் இந்த ச்லோகமும் அர்த்தஸ்வரூபத்திற்கு பாதகமன்று.

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் 'ஜ்ஞாநஸ்வரூபம்' இது முதலிய ச்லோகத்திற்கு பேதமித்யாத்வத்தில் தாத்பர்யாபாவத்தைக் கூறுகிறார்— ஜ்ஞாநஸ்வரூபமிதீதி. அபிசப்தம் ஸமுச்சயார்த்தமுள்ளது. எல்லாவற்றுக்கும் மித்யாத்வப்ரதிபாதநாபாவத்தை உபபாதிக்கிறார்— ஜ்ஞாந என்று. ஜ்ஞாநஸ்வரூபனுக்கு (தேவமனுஷ்யாதி) அர்த்தாகாரமாகத்தோன்றுவது ப்ரமமாக இருக்குமேயாகில் அர்த்தாகாரத்திற்கு ஜ்ஞாநஸ்வரூபமாகத் தோற்றம் ப்ரமமாக ஆகிறதில்லை என்று அர்த்தம். அதையே திருஷ்டாந்தத்தால் உபபாதிக்கிறார்— நஹி என்று. திருஷ்டாந்தத்தினால் வைஷம்யமுகத்தால் சோத்யத்தை சங்கிக்கிறார்— ஜகத்ப்ரஹ்மணோ: என்று. அந்த இடத்தில் எல்லா ரஜத§ஜாதமும் சுக்திகா$சகலத்தோடு ஸாமாநாதிகரணமாகக்காணப்பட்டிருக்கவில்லை - பின்னையோ வ்யதிகரணமாக ப்ரமாணங்களால் அறியப்பட்டதாக இருக்கிறது. ஆதலால் எல்லா ரஜதஜாதத்திற்கும் சுக்தித்வத்தோடு விரோதமில்லை. பின்னையோ ஸமாநாதிகரணரஜதத்திற்கே விரோதம் அங்கு விரோதத்தால் ஸமாநாதிக்ருதரஜதத்திற்கு மித்யாத்வமும் அவிருத்தமாயும் அஸமாநாதிக்ருதமாயுமிருக்கிற ரஜதத்திற்கு அமித்யாத்வமும். இந்தஇடத்திலோ

§ ஜாதம்—ஸமூஹம். $சகலம்—துணுக்கு.

வென்றால் ப்ரஹ்மத்தைத்தவிர்த்த அனைத்தும் ப்ரஹ்ம ஸமாநாதிகரணமாகத் தோன்றுகிறது. ஆகையால் ஜ்ஞாநாகாரத்திற்கும் அர்த்தாகாரத்திற்கும் விரோதம் வரின் அர்த்தஜாதம் அனைத்துக்கும் மித்யாத்வம் பலித்தது என்று. இதைப்பரிஹரிக்கிறார்— ததஸ்ஸ் என்று. அங்கு முதலில் அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு ப்ரபந்தவாக்யார்த்த விரோதத்தைக் கூறுகிறார்— அஸ்மிந் என்று. ப்ரஹ்மத்திற்கு அவித்யாஸம்பந்தமும் ஜகத்திற்கு மித்யாத்வமும் இங்கு விருத்தம். 'ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ண்வாக்யம் பரமம் பதம் - தத்ஸ்ஸவாஸுதேவேதி - தத்ப்ரஹ்மபரமம் நித்யம் - ஹேயாபாவாச்ச நிர்மலம் - தாநிஸர்வாணி தத்வபு:-விபூதயோ ஹரேரேதா:- (ஸமஸ்தசேதநாசேதநவர்க்கங்களாலடையத்தக்கதாக விஷ்ணுவெனப்பெயருள்ள ப்ரஹ்மமானது எல்லா ஹேயகுணங்களினின்றும் விடுபட்டிருக்கிறது. அதனால் அவன் வாஸுதேவனென்று, அந்த பரப்ரஹ்மமானது சாச்வதமாயுள்ளது. ஹேயகுணங்களில்லாமையால் நிர்மலமானது - அவைகள் அனைத்தும் அவன் சரீரம் - இவைகள் ஹரியின் விபூதிகள்) இதுமுதலிய வசநத்தினுடைய என்று அர்த்தம். 'ப்ராந்திர்சாநத:ஸ்திதம் - விஷ்ணும் க்ரஸிஷ்ணும' (ப்ராந்திதர்சநத்தினால் நிலைபெற்றிருக்கிறது - சராசரங்களனைத்தையும் பக்ஷிக்கின்ற விஷ்ணுவை) என்று குணங்களுடன் கூடின விஷ்ணுவுக்கு ப்ரமாச்ரயத்வம் உரைக்கப்படுகிறது, ஆதலால் அதுயுக்தம், பரப்ரஹ்மமோவென்றால் தோஷம் என்கிற சங்கையை விலக்குவதற்காக 'பரஸ்யப்ரஹ்மணோர்விஷ்ணோ:' என்று உரைக்கப்பட்டது 'நிரஸ்தாஜ்ஞாநாதிநிகிலதோஷகந்தஸ்ய ஸமஸ்தகல்யாணகுணாத்மகஸ்ய' என்கிற இந்த இரண்டு பதங்களாலும் அவித்யா ஸம்பந்தத்திற்கு அநுபபத்தியானது கூறப்பட்டது. அவித்யாஸம்பந்தமிருக்குமேயாகில் நிரஸ்தஸமஸ்தஹேயத்வமும், ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வமும் பொருந்தாதன்றோ 'மஹாவிபூதே:' என்பதனால் ஜகந்மித்யாத்வாநுபபத்தி கூறப்பட்டது. ஜகத்திற்கு பகவத் விபூதித்வமானது பரமாணுத்தரஸித்தமல்லவன்றோ-எதனால் நிஷேதத்திற்காக அநுவாதம் ஏற்படுமோ-ஆதலால் விதிக்கவே விதிக்கப்படுகிறது. விதியோவென்றால் ப்ரமத்தையுண்டுபண்ணுகிறதில்லை - அப்படி ப்ரமத்தை உண்டுபண்ணும் தன்மை சொல்லப்படும்பக்ஷத்தில் நிஷேதவசநத்திற்குங்கூட ஸத்தாணபேதத்திற்கு அஸத்வவிஷய புத்திரூப ப்ரஹ்மபரத்வம் தடுக்கமுடியாததாக ஆகும். ப்ராமாண்யம் இரண்டுவாக்கியங்களுக்கும் ஸமானமன்றோ - ஆகையால் விதிக்கப்பட்ட அர்த்தம் பரமார்த்தமே என்பதனால் ஜகந்மித்யாத்வமில்லை என்று அர்த்தம் ஸாமாநாதிகரண்யத்தினால் ஐக்யப்ரதீதி உண்டாகுங்கால் ஜ்ஞாநாகாரார்த்தாகாரங்கள் இரண்டுக்கும் விரோதம்வருவதால் இரண்டுக்குள் ஒன்றுக்கு மித்யாத்வம் ஏற்படவேண்டும். சிப்பியே வெள்ளி என்கிற இடத்தில் போல என்கிற சங்கைவரின் கூறுகிறார்—ஸாமாநாதிகரண்யேந என்று பாதாஸஹம் - இரண்டு ஆகாரங்களில் மாத்ரம் இரண்டுக்குள் ஒன்றின்டாதத்தை அபேக்ஷியாமல்கூட ஸாமாநாதிகரண்யம் ஸம்பவிக்கிறதென்பதில்லை - பின்னேயோ பாதத்தை ஸஹிக்கிறதில்லை - இரண்டு ஆகாரங்கள் ஸித்தியாமல்போமேயாகில் ஸாமாநாதிகரண்ய லக்ஷணம் ஸித்தியாதாதலாலென்று பொருள். அங்ஙனமாகில் ஒருவஸ்துவில் இரண்டு ஆகாரங்களின் விரோதம் எவ்வாறு பரிஹரிக்கப்படுகிறது? என்று கேட்கில் சொல்லுகிறார்—அவிருத்தஞ்சேதி என்று.

இரண்டு ஆகாரங்களை ஒப்புக்கொண்டபோதிலும் ஸத்வாரகமாக இருப்பதால் ஐக்யப்ரதிபாதநம் அவிருத்தம் என்று கருத்து. அநந்தரமேவ - வேறு அதிகரணத்திலல்லவென்று அர்த்தம். முதலாவதான 'ச' சப்தம் சங்காநிவ்ருத்தியைக் குறிக்கிறது. இரண்டாவது ஸமுச்சயத்தைச்சொல்லுகிறது. மித்யாத்வ பாதவாபாவத்தை நிகமநம் செய்கிறார்—அதோ யம் என்று. இவ்வண்ணம் ஜ்ஞாநஸ்வரூபம் என்கிற ச்லோகத்திற்கு ப்ரபஞ்சமித்யாத்வமானது பொருந்தாமையை வெளிப்படுத்தினதினால் தள்ளப்பட்டது

𑌤𑌥𑌾 𑌹𑌿 — “𑌯𑌤𑍋 𑌵𑌾 𑌇𑌮𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌯𑍇𑌨 𑌜𑌾𑌤𑌾𑌨𑌿 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌭𑌿𑌸𑌂𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌸𑍍𑌵 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮” (𑌤𑍈. 𑌉. 𑌭𑍃. 𑌧) 𑌇𑌤𑌿 𑌜𑌗𑌜𑍍𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑌵𑌗𑌤𑍇 𑌸𑌤𑌿 “𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍇𑌦𑌂 𑌸𑌮𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌯𑍇𑌤𑍍 । 𑌬𑌿𑌭𑍇𑌤𑍍𑌯𑌲𑍍𑌪𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌦𑍍𑌵𑍇𑌦𑍋 𑌮𑌾𑌮𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿” (பா-ஆ-௧-௨௭௩) 𑌇𑌤𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌚 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 । 𑌉𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌂 𑌨𑌾𑌮 𑌵𑌿𑌦𑌿𑌤𑌸𑌕𑌲𑌵𑍇𑌦𑌤𑌦𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌯𑍋𑌗𑌮𑌹𑌿𑌮𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑌵𑍇𑌦𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑍈𑌃 𑌸𑍍𑌵𑌾𑌵𑌗𑌤𑌵𑍇𑌦𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌵𑍃𑌤𑍍𑌤𑍀𑌕𑌰𑌣𑌮𑍍 । 𑌸𑌕𑌲𑌶𑌾𑌖𑌾𑌗𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑌾𑌲𑍍𑌪𑌭𑌾𑌗𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌦𑌶𑌕𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌨 𑌤𑌦𑍍𑌵𑌿𑌨𑌾 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌯𑍋𑌗𑌾𑌦𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌂 𑌹𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍇𑌵 ॥

ஸ்ரீ பாஷ்யம்—

இதை உபபாதிக்கிறார்—‘யதோவா இமாநி பூதாநிஜாயந்தே, யேநஜாதாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி, தத்விஜிஜ்ஞாஸஸ்வ, தத்ப்ரஹ்ம’ என்கிற ச்ருதிவசநங்களால் ஜகஜ்ஜந்மாதிகாரணம் ப்ரஹ்மம் என்று நிச்சயிக்கப்பட்டிருக்க “இதிஹாஸபுராணப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்-பிபேத்யல்பச்ருதாத்வேதோமாமயம்ப்ரதரிஷ்யதி” (இதிஹாஸம் புராணம் இவ்விரண்டுகளாலும் வேதத்தை நன்றாக உபப்ரும்ஹணம் செய்யவேண்டும். வேதமானது என்னை இவன் ஏமாற்றிவிடுவானென்று ஸ்வல்பப்படிப்புள்ளவனிடத்தினின்று பயப்படுகிறது) என்கிற சாஸ்த்ரத்தினால், அர்த்தத்திற்கு இதிஹாஸ புராணங்களால் உபப்ரும்ஹணம் செய்யத்தக்கதென்று அறியப்படுகிறது. உபப்ரும்ஹணமாவது ஸகலவேதங்களையும் அந்த வேதங்களின் அர்த்தங்களையும் அறிந்தவர்களும் தன் யோகமகிமையினால் நேரில் வேத தத்வார்த்தங்களைக் கண்டறிந்தவர்களுமான மஹான்களுடைய வாக்கியங்களால் தன்னாலறியப்பட்டிருக்கிற வேதவாக்கியார்த்தங்களை ஸம்சயம்தீர தெளியச்செய்வது, எல்லா சாகைகளையும் அடைந்திருக்கிற வாக்கியார்த்தமானது ஸ்வல்ப பாகத்தை செவியுற்றதனால் அறிவதற்கு அசக்யமாதலால், அதன்றி நிச்சயமுண்டாகாதாதலால் உபப்ரும்ஹணம் செய்யத்தக்கதே.

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் ச்லோகத்தை தன்பக்ஷத்தில் வ்யாக்கியாநம்செய்வதற்காகத்தொடங்குகிறார்—ததாஹி என்று. இந்த இடத்தில் எதற்காக முதலாவதான ச்லோகத்தின் வியாக்கியானம்; சொல்லப்படுகிறது—'ஜ்ஞாநஸ்வரூபம்' என்கிற ச்லோகத்தில் இரண்டாம்வேற்றுமைப்பதங்களுக்கு விசேஷ்யமானது விஷ்ணுவென்று அறியப்படுகிறதில்லை. அவைகளுக்கு 'ப்ரணம்ய' என்கிற பதத்தோடு அந்வயமும் அறியப்படுகிறதில்லை. ச்லோகத்திற்கு விசிஷ்டார்த்த பரத்வமும், ப்ரகரணத்திற்கு விசிஷ்டார்த்தபரத்வமின்றி அறியப்படுகிறதில்லை. ஆகையால் நமஸ்கார ச்லோகங்கள் வ்யாக்கியானிக்கத்தக்கவைகள். வ்யாக்கியானிக்கத்தக்க அந்த ச்லோகங்களில் இரண்டாவது அத்தியாயத்தின் தொடக்கத்தில் நமஸ்காரஞ்செய்தல் யாதுகாரணத்திற்காக, முதலிலேயன்றோ அது செய்யத்தக்கது என்கிற சங்கை உண்டாகிறது. சாஸ்த்ரமானது வினாவிடை ரூபமாகத்தானிருப்பதால் முதலில் வினாக்களுக்கு சுருக்கமாக மறுமொழியைக்கூறி விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்கிற எண்ணமுண்டான ஸமயத்தில் இரண்டாவது அத்தியாயத்தின் தொடக்கத்தில் நமஸ்காரம்செய்யப்பட்டது. அப்படி இல்லாவிட்டால் வினாவுக்கு அடுத்தே நமஸ்காரம்செய்யப்படாமலிருக்கும் ஸமயத்தில் நம்முடைய வினாவுக்கு யாது மறுமொழி உரைக்கப்படுகிறதோ என்று சிஷ்ய புத்திக்கு ¶ வ்யாகுலதை உண்டாகும் என்கிற முற்கூறப்பட்ட சங்கையின் நிரஸநம் வாயிலாக நமஸ்காரச்லோகத்தின் ‡ ஸங்கதியைக்காட்டுவதற்காக ப்ரச்நச்லோகங்கள் வ்யாக்கியானிக்கப்பட்டன. 'ஜ்ஞாநஸ்வரூபம்' என்கிற ஆரம்பக்ரந்தத்தில் நிர்விசேஷ வஸ்துவைத்தவிர்த்த மற்றவை அனைத்துக்கும் ப்ராந்தி ஸித்தத்வம் காணப்படுவதால் அதற்கு அநுகுணமாகவே அர்த்தம் மேலே வர்ணிக்கத்தக்கதென்கிற சங்கையின் பரிஹாரத்தின்பொருட்டு தொடக்கத்தில் உபக்ரமிக்கப்பட்டிருக்கிற ப்ரச்நோத்தரவாலாப ச்லோகங்களால் சாஸ்த்ரத்தால் ப்ரதிபாதிக்கத்தக்கது. விபூதிகளுடன்கூடின தேவதாவிசேஷமே ஒழிய ஜ்ஞப்திமாத்ரமல்லவென்கிற சாஸ்த்ரதாத்பர்ய ஜ்ஞாபநத்திற்காகவும் முதலாவதான ச்லோகத்தின் வ்யாக்கியாநம். வ்யாக்கியாநம்செய்ய விரும்பப்பட்டிருக்கிற ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற ப்ராந்தியின் அந்வயத்திற்கு ஸத்வாரகத்வஸித்தியின்பொருட்டு ஸாமாநாதிகரண்யம் சரீரசரீரிபாவநிபந்தநமென்பது 'யந்மயம்' என்கிற 'மயட்' ப்ரத்யயத்தால் ஜ்ஞாபிப்பதற்காகவும் ப்ரச்நச்லோகங்கள் வ்யாக்கியானிக்கப்படுகின்றன. அந்த இடத்தில் இது வேதாந்த ச்ரவணம் பண்ணினவனுடைய வினாவா? அல்லது வேதாந்த ச்ரவணம் செய்யாதவனுடைய வினாவா? என்கிற விகல்பத்தில் வேதாந்தத்தைக் கேளாதவனுக்கு விசேஷித்துவினவுதல் பொருந்தாது. வேதாந்தத்தைக்கேட்டவனுக்கு கேழ்க்கத்தக்கது இல்லாமையால் வினாபொருத்தமுள்ளதாக ஆகாது என்கிற சங்கையாரின் வேதாந்த ச்ரவணம் செய்தவனுடைய வினாவென்று சொல்லுகிறார்—யதோவாச மைத்ரேய இது முதலியதால். 'அவலேதேஸதி' என்பதனால் ப்ரஹ்மமீமாம்ஸா ச்ரவணம்செய்யப்பட்டதென்பது உரைக்கப்பட்டது. வேதாந்த ச்ரவணம்பண்ணினவனுக்கு எவ்வாறு வினாபொருத்தமுள்ளதாகும் என்கிற சங்கையில் வேதாந்த ச்ரவணம் பண்ணினவனுக்கு இதிஹாஸபுராண விதியைக்காண்பிக்கிறார்—இதிஹாஸ என்று. இதிஹாஸ என்கிற பதத்தை முதன்மையாகக்கொண்ட ச்லோகத்தில் வேதசப்தம் வேதாந்தத்தை உணர்த்துகிறது. வேதத்திற்கு உபப்ரும்ஹணங்களாக இருக்கிற தர்மசாஸ்த்திர இதிஹாஸபுராணங்களில் தர்மசாஸ்த்திரங்கள் பூர்வபாகோபப்ரும்ஹணங்கள், இதிஹாஸபுராணங்கள் மேல்பாகத்திற்கு

¶ வ்யாகுலதை—கொழப்பம். ‡ ஸங்கதி—ஸம்பந்தம்.

உபப்ரும்ஹணங்கள் என்று பாகுபாடு அறியத்தக்கது. அதுவும் ஸ்ம்ருத்யதிகரணத்தில் வெளிப்படப்போகிறது. அவற்றுள் தர்மசாஸ்திரங்களில் ப்ரஹ்ம ப்ரதிபாதகமானது கர்மாக்கள் அந்த ப்ரஹ்மாராதனரூபங்களென்பதை ஜ்ஞாபிப்பதற்காக. இதிஹாஸபுராணங்களில் கர்ம ப்ரதிபாதநமானது கர்மாக்களுக்கு ப்ரஹ்மோபாஸநாங்கத்வ ப்ரதிபாதநத்திற்காக. இதிஹாஸத்திற்கு புராணங்களைவிட †அப்யர்ஹிதத்வம் விசேஷம். 'அல்பாச்தரம்' என்கிற சப்தாநுசாஸநத்தினால் புராணசப்தத்திற்கு பூர்வ § நிபாதம் வருவதாக இருக்க "அப்யர்ஹிதம் பூர்வம்" என்கிற $வார்த்திகத்தினால் ப்ரயோகத்தில் முதன்மைவாய்ந்திருக்கிற இதிஹாஸத்திற்கு அப்யர்ஹிதத்வம் அறியப்படுவதால். இந்த ச்லோகத்தினுடைய முதலாவது அர்த்தத்தை வியாக்கியானிக்கிறார்—உபப்ரும்ஹணம்நாம என்று. ஆறும்வேற்றுமையிலிருக்கிற இரண்டுவிசேஷணங்களால் ஆகமத்தாலும் விவேகத்தாலும் உண்டான ஜ்ஞாநமிருக்கிறதென்று சொல்லப்பட்டது. 'தத்வார்த்தாநாம்' என்கிற பஹுவசனமானது கபிலமதத்தைக்காட்டிலும் இதிஹாஸம் முதலியவைகளுக்கு ப்ராபல்யத்தைக்காண்பிப்பதற்காக. வ்யக்தீகரணம் - அஜ்ஞாதவிசேஷங்களோடுகூட தன்னால் அறியப்பட்டிருக்கிற அர்த்தங்களின் நிஷ்கர்ஷம். எவ்வாறு வேதத்தினால் செய்யத்தக்கதாக விதிக்கப்பட்டிருக்கிற ஸந்த்யோபாஸநம் முதலியதற்கு சரீரசுத்திப்ரகாரம் தந்ததாவனம் ஸ்நாநம் முதலிய விசேஷங்களுடன்கூட நிஷ்கர்ஷமோ. இவ்வாறே உபநிஷத்பாகத்திலும் அர்த்தநிஷ்கர்ஷம் ஸம்பாதிக்கத்தக்கது. உபநிஷதர்த்த நிஷ்கர்ஷம் ப்ரஹ்மவிசாரத்தால் ஸித்தம் - ஆகையால் உபப்ரும்ஹணாபேக்ஷை இல்லை என்கிற சங்கைவரின் ச்லோகத்தின்பின் பாதியை வ்யாக்கியாநம் செய்கிறார்—ஸகல என்று. பூர்வார்த்தத்தில் விதிக்கப்பட்டிருக்கிற உபப்ரும்ஹண கார்யத்தைக்கு உபபாதகம் உத்தரார்த்தம் - உபப்ரும்ஹணமாவது அத்யயநம்செய்யப்பட்டிராத சாகாந்தரங்களிலுள்ள அர்த்தங்களோடுகூட அத்யயநம்செய்யப்பட்டிருக்கிற சாகைகளின் அர்த்த நிஷ்கர்ஷம் - ஆதலால் உபப்ரும்ஹண விசாரணாபேக்ஷயமில்லை என்று அர்த்தம்.

அய்யா! எவ்வாறு ¶ ஆபாதப்ரதீதியினால் பலவாறான அர்த்தங்களை தெரிந்துகொள்வதனால் கர்மவிசாரத்திலும் அதற்கு அடுத்த ப்ரஹ்மவிசாரத்திலும் $ ராகத்தால் ப்ரவ்ருத்தி உண்டாகிறதோ அவ்வாறு அத்யயநம்செய்யப்படாநின்ற * சாகையில் அடங்கி இருக்கிற "அநந்தாவைவேதா:" என்கிற வாக்கியத்தினால் வேதங்களுக்கு ஆநந்த்யம் அறியப்படுவதாலும் அத்யயநம்செய்யப்பட்டிருக்கிற சாகைகளால் அறியப்படாததும் அவைகளுக்கு அவிருத்தங்களாயும் விருத்தங்களாயுமிருக்கிற அர்த்தங்களுக்கு ஸம்பவமிருப்பதாலும் "ஸ்ம்ருதேஸ்ச, அபிஸம்ரயதே" இது முதலிய ஸூத்ரங்களில் வேதாந்தார்த்தத்தின் நிர்ணயத்திற்கு உபப்ரும்ஹணத்தை அபேக்ஷித்திருத்தல் காணப்படுவதாலும் உபப்ரும்ஹண ச்ரவணத்தில் ராகத்தால் ப்ரவ்ருத்தி பொருத்தமுள்ளதாக ஆகிறது, அங்கு பூர்வபாகத்திற்கு உபப்ரும்ஹணங்களான தர்மசாஸ்த்திரங்களிலும் கேழ்க்கப்பட்டிருக்கிற உபநிஷத்பாகோபப்ரும்ஹணரூபமான இதிஹாஸபுராணங்களிலும் ராகத்தினால் ப்ரவ்ருத்தி உண்டாவதால் விதிக்கு வையர்த்த்யம் வருகிறது. அப்ராப்தவிஷயத்தி

† அப்யர்ஹிதத்வம்—மேன்மை. § நிபாதம்—ப்ரயோகம்.

$ வார்திகம் — ஸூத்ரகாரரால் சொல்லப்பட்டிராத சிலலக்ஷ்யஸித்தியைக்கருதி காத்யாயன மஹரிஷியினால் சொல்லப்பட்டிருக்கும் ஸூத்திரம்போல் கம்பீரார்த்தமுள்ள வசனம்.

¶ ஆபாதப்ரதீதி—ஸம்சயம் விபர்யயம் இவைகளை ஸஹிக்கும் புத்தி.

$ ராகம்—இச்சை. * சாகை—வேதத்தினிடைய ஓர் பாகம்.

லன்றோ சாஸ்த்திரத்திற்கு அர்த்தவத்த்வம். குருவினிடத்தினின்றே கேழ்க்கத்தக்கது என்கிற நியமவிதியுமல்ல, இந்த வசனத்தில் அதைச்சொல்லுகிற சப்தமில்லாமையால், இதிஹாஸ புராணங்களில் ச்ரவணார்த்தம் ப்ரவ்ருத்தித்தவனுக்கு இந்த வசநத்தின் அர்த்த ஜ்ஞாநம் - அந்த வசநார்த்த ஜ்ஞாநத்தால் இதிஹாஸபுராணச்ரவணத்தில் ப்ரவ்ருத்தி என்று அந்யோந்யாச்ரயதோஷமும் - ஆகலால் "உபப்ரும்ஹயேத்" என்கிற விதி பொருத்தமுள்ளதாக ஆகாது என்று. ஸத்யம், பாரதம் முதலிய ப்ரபந்தவிசேஷ ச்ரவணத்தின்பொருட்டு அதின் நடுவிலிருக்கிற இந்த வசநத்தினுல் நியாயஸித்தமான உபப்ரும்ஹணத்தின் அபேக்ஷையானது ஸாமான்யமாக அநுவதிக்கப்படுகிறது. உபப்ரும்ஹணம்செய்யத்தக்கதென்று அறியப்படுகிறது என்கிற இந்த வசநத்திற்கு இது அர்த்தம். நியாயஸித்தமான உபப்ரும்ஹணம் செய்யத்தக்கதென்பது இந்த வசநத்தாலும் அறியப்படுகிறது என்று 'உபப்ரும்ஹணம்நாம' இது முதலிய பாஷ்யத்தினுல் ந்யாயப்ராப்தியே காட்டப்படுகிறது. அன்றிக்கே - ஸமந்வயவிரோதபரிஹார லக்ஷணங்களாலேயே தத்வ ஸ்திதி நிச்சயிக்கப்பட்டிருப்பதாலும் வஸ்துவில் விருத்தாகாரம் ஸம்பவியாததலால் அத்யயநம் செய்யப்படாநின்ற ச்ருதியினுல் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு விருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிற வேறு ப்ரதேசம் ஸம்பவிக்கிறதாகில் வேதத்திற்கு ப்ராந்தி ஜல்பிதத்வம் ப்ரஸங்கிப்பதாலும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற தத்வத்திற்கு விருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிற ஒன்றின் ப்ரஸங்கத்திற்கு ஸம்பவமில்லாமையாலும் ப்ரஹ்மத்தினிடத்தில் அறியப்படாத குணவிபூதிவிசேஷமிருந்தபோதிலுங்கூட உபப்ரும்ஹண ஸஹஸ்ரங்களால்கூட அதின் (இயத்தா) பரிமாணத்தின் ப்ரதிபாதநம் பொருந்தாததலாலும் அறியப்பட்டிருக்கிற சில குணவிசேஷோபாஸநங்களுள் ஏதாவது ஒரு குணவிசேஷோபாஸநத்தினுலேயே புருஷார்த்த ஸித்திக்கு உபபத்திவருவதாலும் உபப்ரும்ஹண ச்ரவணத்தில் அபேக்ஷை இல்லாதவனைக்குறித்து உபப்ரும்ஹயேத் என்கிற விதியானது தகுதியுள்ளது.

அய்யா! இங்ஙனமாகில் நியாயங்களால் அநுக்ரஹிக்கப்பட்டிருக்கிற வாக்கியங்களால் அறியப்பட்டிருக்கும் வாக்யார்த்தங்களில் உபப்ரும்ஹணங்களால் நிர்ணயிக்கத்தக்கது இல்லாமையாலும், நிஷ்கர்ஷிக்கத்தக்க அம்சமானது ஸூத்ரங்களில் உதாஹரிக்கப்பட்டிருக்கிற வசநங்களாலேயே நிஷ்கர்ஷிக்கப்பட்டிருப்பதாலும், உபப்ரும்ஹணவிதியானது அத்ருஷ்டார்த்தமாக இருக்கலாம். த்ருஷ்டம் ஸம்பவிக்கிற இடத்தில் அத்ருஷ்டத்தை கல்பிப்பது ந்யாய்யமல்ல வசநம் த்ருஷ்டார்த்தத்வத்தையும் காண்பிக்கிறது. 'மாமயம ப்ரதரிஷ்யதி' என்று. வேதத்திற்கு ப்ரதாரணமானது அந்தவேதத்தின் அபிப்ரேதார்த்த விபரீதமான அர்த்தத்தைவர்ணிப்பதே. ஆதலால் அந்த விபரீதார்த்த நிவ்ருத்தி ரூபமான த்ருஷ்டபலம் வாசநிகம் அது இருக்க அத்ருஷ்டத்தை கல்பிப்பது உசிதமல்ல. அங்ஙனமாகில் அதேத்ருஷ்டமானபலமென்று கூறப்படுமேயானுல் அதுவும் யுக்தமல்ல. தத்வத்தின் மாறாட்டத்தைப்பற்றிய ப்ரதிபாதநத்தின் அஸம்பவத்தை நீயே சொல்லியிருப்பதாலும் ப்ரஹ்மத்தின் விபூதியை முழுமையும் அறியாமையும் அதின் எல்லா அவாந்தர விசேஷங்களை அறியாமையும் வேத ஃ ப்ரதாரணரூபமல்லாததால் அதின் நிவ்ருத்தியானது பலம் என்பது தகாததாலும். மறுமொழி கூறப்படுகிறது. பரதத்வ விஷயத்திலும் அதின் உபாஸநப்ரதிபாதநங்களிலும் @ விபர்யாஸத்திற்கு ஸம்பவமில்லை. ஆகிலும் "கிந்தேக்ருண்வந்தி கீகடேஷு காவோ நாசிரம் துஹ்ரேந தபந்தி வர்மம், ஆநோபரப்ரமகந்தஸ்யவேதோநைசாசாகம் மகவந்ரந்தயாந:" இது முதலிய வாக்கியங்களால் அறியப்பட்டிருக்கிற ப்ரமகந்தாதி வ்ருத்தாந்தம்போல பர

ஃ ப்ரதாரணம்—ஏமாற்றுதல் அல்லது வஞ்சித்தல். @ விபர்யாஸம்—மாறுட்டம்.

மாத்மாவினுல் ஸ்ருஷ்டிக்கத்தக்க தேவமனுஷ்யதிர்யகாதி விசேஷங்களும் அவைகளின் உத்பத்தியும் அவைகளின் வ்ருத்தவிசேஷங்களும் ச்ருதிஸாமான்யத்தால் அறியப்பட்டு இருப்பதால் வாக்கியாவிவக்ஷிதத்வத்தை எண்ணிக்கொண்டு அஹல்யாஜாராதி வாக்கியங்களுக்குப் பண்டிதர்களென்கிற எண்ணங்கொண்ட மற்றவர்களால் சொல்லப்பட்ட அர்த்தத்தைப்போல் வேதத்தின் பூர்வபாகத்தையும் உபநிஷத் பாகத்தையும் அடைந்திருக்கிற மந்த்ரார்த்த வாதங்களுக்கும் வேறு விதமாக அர்த்தம் எண்ணப்படுமேயாகுல் உபப்ரும்ஹணங்களைக்கேளாதவனுதலால் இவன் வேதத்தை வஞ்சிக்கவே வஞ்சிப்பான்; ஆனதுபற்றியே அதைப்பரிஹரிப்பதின்பொருட்டு உபப்ரும்ஹணவிதியானது உபபந்நமாகிறது. அந்யோந்யாச்ரயமுமில்லை. § ஸ்வாத்யாயவிதி வாக்யத்திற்கு ஸ்வாத்யாயத்தில் அந்தர்பாவமிருந்தபோதிலும் அத்யயநத்திஞல் விதிஜ்ஞாநம் - விதிஜ்ஞாநத்திஞல் அத்யயநம் என்று எவ்வாறு அந்யோந்யாச்ரயமில்லையோ அப்படிப்போல அந்த இடத்தில் விதியை அறிந்த புருஷனுடைய ப்ரேரணத்திஞலாவது அதின் அநுஷ்டாநதர்சநத்திஞலாவது † மாணவகனுக்கு ப்ரவ்ருத்தி உண்டாகிறது. இவ்வண்ணமாக உபப்ரும்ஹண விதியை அறிந்த ‡ சிஷ்டஜநவாதப்ரஸித்தியாலாவது அதை அறிந்திருக்கிற தன்னுடைய குருவசநத்திஞலாவது அதஞல் உபப்ரும்ஹணத்தை அறிவதில் ப்ரவ்ருத்தித்த வேறு புருஷனைப்பார்ப்பதஞலாவது உபப்ரும்ஹண ஜ்ஞாநம் ஸம்பாதிக்கத்தக்கதெனகிற ஜ்ஞாநத்தால் சிஷ்யனுடைய வினு பொருத்தமுள்ளதாக ஆகிறது. அதஞல் உபப்ரும்ஹண விதியானது பொருத்தமுள்ளதாக ஆகாது. அந்த இடத்தில் தனக்கு குருவான பராசரருக்கு ஸர்வஜ்ஞத்வப்ரஸித்தியாலும் அதஞலேயே எல்லா விஷயாஸ்தலங்களிலும் தான் கருந்த சிக்ஷைபெற்றவராக இருப்பதாலும் மைத்ரேயருக்கு அவரால் செய்யப்பட்டிருக்கிற புராணச்ரவணத்தில் ப்ரவ்ருத்தி உபபந்நமாகிறது.

வேறு புராணங்களைவிட இந்தப்புராணத்திற்கு மேன்மையைசொல்லப்போகிறவராக வினுக்களை அவதரிப்பிக்கிறுர்—த்வத்த என்று கீழ்நாட்டார் வடநாட்டார் முதலிய எல்லா வித்வஜ்ஜநங்களாலறியப்பட்டிருக்கிற இந்த புராணரத்நத்திற்கு மற்றப்புராணங்களைவிட ப்ரஸித்தி அதிகமாக இருப்பதால் தர்மசாஸ்திரத்தில் மாநவதர்மத்திற்குப்போலவும் வ்யாகரணங்களில் பாணினீயத்திற்குப்போலவும் ஸஜாதீயப்ரபந்தங்களைக்காட்டிலும் அதிக மேன்மையானது அபலாபம் செய்வதற்கு சக்யமன்று. அதிஞலேயே ப்ரஸித்தி ப்ராசுர்யத்தால் கௌர்ம முதலியதற்குப்போல நஷ்டகோசத்வ சங்கையானது தூரத்தில் ஓட்டப்பட்டது. அதிக விஸ்தாரமாக இல்லாததாலும் § ப்ரக்ஷேபமென்கிற சங்கை அவதரிக்கிறதில்லை அந்யபரையான உக்தி ப்ரஸித்த பரிக்ரஹாதிசயமுள்ளது - இது "பாசய பராசரேதம்" என்று அக்நே:சிவஸ்யமாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே, ராஜஸேஷுசமாஹாத்ம்யமதிகம் ப்ரஹ்மணோவிது: - ஸாத்விகேஷ்வதகல்பேஷுமாஹாத்ம்யமதிகம்ஹரே:- தேஷ்வேவயோகஸம்ஸித்தா: கமிஷ்யந்தி பராம்கதிம் - யஸ்மிந்கல்பேதுயத்ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணுபுரா - தஸ்யதஸ்யது மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே-( தாமஸகல்பங்களில் அக்கியினுடையவும் சிவனுடையவும் மாஹாத்ம்யம் நன்குசொல்லப்படுகிறது. ராஜஸங்களில் ப்ரஹ்மாவுக்கு மாஹாத்ம்யம் அதிகமென்றறிகிறுர்கள். ஸாத்விககல்பங்களில் ஹரியினுடைய மாஹாத்ம்யம் அதிகம். அந்த ஸாத்

§ ஸ்வாத்யாயம்—வேதம்.

† மாணவகன்—வேதாத்யயனம் செய்கிற ப்ரஹ்மசாரி.

‡ சிஷ்டர்கள்—வேதத்தில் கூறப்பட்டுள்ள கர்மங்களை உள்ளபடி அனுஷ்டிப்பவர்கள்.

§ ப்ரக்ஷேபம்—க்ரந்தத்திலில்லாத விஷயங்களைத் தாங்கள் இஷ்டப்படி பண்ணி இடையில் சேர்த்துவிடுதல்.

விகல்பங்களிலேயே யோகத்தால் நல்லஸித்திபெற்றவர்கள் உத்தமகதியை அடைவார்கள். முற்காலத்தில் ப்ரஹ்மாவினால் எந்த கல்பத்தில் எந்த புராணம் சொல்லப்பட்டதோ அதின் அதின் மாஹாத்ம்யமானது அதின் ஸ்வரூபத்தால் வர்ணிக்கப்படுகிறது) என்று ஸம்யக்ஜ்ஞாநநிஷ்பாதகஸத்வமூலமாக இருப்பதாலும் அந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாநங்களுக்கு ஹேதுபூதங்களான ராஜஸதமஸ்ஸுக்களை மூலமாகக்கொண்டிராததாலும் துஷ்டகாரணங்களுள்ள புராணாந்தரங்களோடு ஸாம்யம் எண்ணத்தக்கதன்று - ஸத்வத்திற்கு யதார்த்தஜ்ஞாநஹேதுத்வமும் ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநஹேதுத்வமும் ''ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்'' (ஸத்வகுணத்தினின்று ஜ்ஞாநம் உண்டாகிறது.) ''அயதாவத்ப்ரஜாநாதி புத்திஸ்ஸா பார்த்தராஜஸீ'' (ஹே குந்தீபுத்ர! எது உள்ளபடி அறிகிறதில்லையோ அது ராஜஸபுத்தி) ''ஸர்வார்த்தாந் விபரீதாம்ஸ்ச புத்திஸ்ஸாபார்த்ததாமஸீ'' (பார்த்த! எல்லா அர்த்தங்களையும் விபரீதங்களாக எது க்ரஹிக்கிறதோ அந்த புத்தியானது தாமஸமானது.) என்கிற வசநத்தால் ஸித்தம். ''ஸத்வம் லகுப்ரகாசகம் இஷ்டம்'' ''உபஷ்டம்பகம்சலஞ்சரஜ:''; ''குருவரணகமேவதம:'' ''ஸர்வாஸ்தாநிஷ்பலா: ப்ரேத்யதமோநிஷ்டாஹி தா: ஸ்ம்ருதா:'' (ஸத்வகுணமானது லேசானது, ப்ரகாசத்தை உண்டுபண்ணுந்தன்மையுள்ளது, எல்லோருக்கும் இஷ்டமானது-ரஜஸானது சலனத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ளது சாஞ்சல்யத்தை உண்டுபண்ணும் தன்மைவாய்ந்தது. தமோகுணமானது குருத்வமுள்ளது. ப்ரகாசத்தை மறைத்தலே அதற்கு ஸ்வபாவம் - அவைகளனைத்தும் லோகாந்தரத்தை அடைந்து பயனற்றவைகள் - அவைகள் தமஸ்ஸில் நிலைபெற்றவைகளென்று எண்ணப்பட்டிருக்கின்றன) என்றும் பிரஸித்தம்.

அய்யா! நான்முகன் சிவன்முதலியவர்களை ப்ரதிபாதிக்கிற புராணங்கள் ரஜஸ்தமஸ்ஸுக்களை மூலமாகக்கொண்டவைகள் என்கிற வசநமும் ரஜஸ் தமஸ்ஸுக்களைமூலமாகக்கொண்டிருப்பதுபற்றி அவைகளுக்கு ப்ராமாண்யமில்லாமையால் ஸாத்விக புராணங்களுக்கு ப்ராபல்யம் ஸித்திக்கிறதில்லை. இந்த வசநம் எத்வமூலமென்பதில் ப்ரமாணம் கிடையாது - அதனாலேயே அந்த வசநமாத்ரத்திற்கு அப்ராமாண்யம் சொல்வது யுக்தமே ஒழிய பஹுபுராணங்களுக்கு அப்ராமாண்யம் சொல்வது யுக்தமல்ல - ஒருங்கு சேர்ந்த அநேகங்கள் அதிக பலமுள்ளதாதலால். (மறுமொழி) சொல்லப்படுகிறது. இந்த வசநத்திற்கு ப்ராமாண்யத்தில் விவாதம் ந்யாயமல்ல. பாதகம் காணப்படாமையாலும் தானாகவே ஸித்தித்திருக்கிற ப்ரமாண்யமானது மறுக்கப்படாமையாலும் ''யோஹ்யகலுவா அஸ்யராஜஸோம்ச: ஸோஸௌ ப்ரஹ்மசாரிணோயோயம் ப்ரஹ்மா - யோஹ்ய கலுவா அஸ்ய ஸாத்விகோம்ச: ஸோஸௌ ப்ரஹ்மசாரிணோயோயம் விஷ்ணு: - யோஹ்யகலுவா அஸ்யதாமஸோம்சஸ்ஸோஸௌ ப்ரஹ்மசாரிணோயோயம்ருத்ர:'' (இந்த ப்ரஹ்மசாரியினுடைய யாதொரு ராஜஸாம்சமுண்டோ அந்த அம்சந்தான் ப்ரஹ்மா - இந்த ப்ரஹ்மசாரியினுடைய ஸாத்விகாம்சம் எது உண்டோ அதுதான் விஷ்ணு - இந்த ப்ரஹ்மசாரியினுடைய யாதொரு தாமஸாம்சமுண்டோ அதுதான் ருத்திரன்) என்றும். ''மஹாப்ரபூர்வைபுருஷ: ஸத்வஸ்யைஷ ப்ரவர்த்தக:'' (புருஷசப்தத்தால் சொல்லத்தக்க ஸ்ரீமந்நாராயணன் எல்லாவற்றையும் வ்யாபித்துக்கொண்டிருப்பவர் (விபு எல்லாவற்றுக்கும் நியந்தாவாக இருப்பவர் - இவர் ஸத்வத்திற்கு ப்ரவர்தகர்) என்றும் ச்ருதிகளின் ஒற்றுமையினால் அந்தந்த குணமயமாக அறியப்பட்டிருக்கிற அந்தந்த தத்வங்களின் அந்தந்த கல்பத்தில் அந்தந்த குணமயனான ப்ரஹ்மதேவனால் அந்தந்த புராணங்களில் ப்ரதிபாதநத்தை ப்ரதாநமாகக்கொண்டிருக்கிற வசநத்திற்கு அர்த்தம் பொருத்தமுள்ளதாக இருப்பதாலும் - ஸகலசாஸ்த்ரார்த்தங்களையும் நிலைநிறுத்துகின்ற மஹாபார

தத்தில் மோக்ஷதர்மத்தில் "ஜாயமானம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:! ஸாத்விக ஸ்ஸது விஜ்ஞேய: ஸவைமோக்ஷார்த்தநிச்சய:" (மதுஸூதநனை ஸ்ரீமந்நாராயணன் எந்த புருஷனை பிறக்கும் தருணத்தில் கடாக்ஷிக்கிறானோ அவன் ஸாத்விகனென்று அறியத்தக்கவன். அவனே மோக்ஷார்த்த நிச்சயமுள்ளவன்) இதுமுதலியதால் பகவத் கடாக்ஷத்தால் ஸத்வகுணமூலஸம்யக்ஜ்ஞாந நிச்சயத்தைச்சொல்லி "பச்யத்யேநம்ஜாயமாநம் ப்ரஹ்மாருத்ரோதவாபுந:! ரஜஸாதமஸாசாஸ்யமாநஸம்ஸமபிப்லுதம்" (பிறக்கிற ஸமயத்தில் எந்தசேதநனை ப்ரஹ்மதேவனாவது ருத்ரனாவது பார்க்கிறானோ அப்பொழுது அவனுடைய மனதானது ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் முறையே நன்கு கவரப்படுகிறது) என்று நான்முகன் சிவன் இவர்களுடைய கடாக்ஷத்தினால் ரஜஸ்தமஸ் அடியாக உண்டாகிற காலுஷ்யப்ரதிபாதநத்தாலும் நான்முகனையும் சிவனையும் ப்ரதிபாதிக்கிற ப்ரபந்தங்களுக்கு ரஜஸ் தமஸ்ஸுகளை அடியாகக்கொண்டிருத்தல் பொருத்தமுள்ளதாக ஆகிறது. இந்த வசநமானது ரஜஸ் தமஸ்களை மூலமாகக்கொண்ட புராணத்திலிருந்தபோதிலும் அப்ராமாண்யம் சங்கிக்கத்தக்கதல்ல, ப்ரஹ்மா சிவன் முதலியவர்களைப் புகழ்வதில் அதிக ஆவலுள்ள ப்ரபந்தத்திற்கு பகவானுடைய மேன்மையைச் சொல்வதில் ஆக்ரஹமில்லாமையால் இந்த வசநத்திற்கு தத்வபரத்வம் உபபன்னம் சொல்லுகிறவனுக்கு தன்னால் ப்ரதிபாதிக்கத்தக்க தேவதையினிடத்திலன்றோ ஆக்ரஹம் ஸம்பவிக்கிறது. வேறு தேவதையினிடத்திலுண்டாகாது. ஆகையால் இந்த வசநத்திற்கு காரணதோஷஸம்பவமில்லை. அனேக புராணங்களுக்கு அப்ராமாண்யம் சொல்வதைவிட இந்த வசநமாத்திரத்திற்கு அப்ராமாண்யம் தகுதியுள்ளது. ஒன்றுசேர்ந்திருக்கிற அனேகங்கள் அதிக பலமுள்ளதாதலால் என்று எது உரைக்கப்பட்டதோ அதுயுக்தமன்று. நேராக அர்த்தவிரோதமில்லாமையால் ப்ரஹ்மாவையும் சிவனையும் ப்ரதிபாதிக்கிற ப்ரபந்தங்களுக்கு ரஜோகுண தமோகுண மூலத்வமில்லை என்று அந்த புராணங்களில் அறியப்படுகிறதில்லையன்றோ. அந்தந்த ப்ரபந்தங்களிலேயே ப்ரமாணங்களாக நிச்சயிக்கப்பட்டிருக்கிற அவைகளுக்கு ப்ராமாண்யமும் ரஜோகுணதமோகுண மூலத்வமும் விருத்தமென்பதினால் பரம்பரையினால் விரோதம் பலித்தது. அங்கு பூயஸாம்பலீயஸ்த்வம் என்று சொல்லப்படுமேயானால், தனித்த இந்த வசநமாத்ர விரோதத்தால் அவைகளுக்கு அப்ராமாண்யம் ஏற்படுமாகில் அப்பொழுது இந்த தோஷமுண்டாகலாம். புராணங்களுக்கு ஒன்றோடொன்று விரோதமிருப்பதனால் எல்லாவற்றுக்கும் விசேஷமின்றி ப்ராமாண்யமானது அநுபபந்நமாக இருக்க எல்லாவற்றுக்கும் அப்ராமாண்யம் சொல்வதைவிட சிலவற்றின் ப்ராமாண்ய ஸித்திக்கு அநுகுணமான நிர்வாஹம் ந்யாய்யமாக இருக்க எதற்குப்ராமாண்யம் என்று அபேக்ஷையில் இந்தவசநமானது விஷயங்களின் வ்யவஸ்தையை மாத்திரம் செய்கிறது. ஆகையால் இதனால் ஸத்வாதிமூலத்வம் ஜ்ஞாபிக்கப்பட்ட அளவில் அதுஷ்டமூலங்களான ப்ரபந்தங்களால் துஷ்டமூலப்ரபந்தங்களுக்கு பாதம் ஸித்திக்கிறது. ஆகையால் பூயஸாம் பலீயஸ்த்வந்யாயத்தால் அந்த வசநத்திற்கு பாதமில்லை. பகவானை ப்ரதிபாதிக்கிற புராணங்களைவிட ப்ரஹ்மாவையும் சிவனையும் ப்ரதிபாதிக்கிற புராணங்கள் அதிகமாக இருப்பதால் அவைகளுக்கு ப்ராமாண்யமென்று சொல்லப்படுமேயானால் இந்த வசநமேவென்றால் அபாதிதமானது. இங்கே பூயஸாம்பலீயஸ்த்வ ந்யாயத்திற்கு அவதாரமில்லாமையால் இவ்வண்ணம் பாதகமில்லாத இந்த வசநத்தினால் புராணங்களுக்கு ஸத்வாதிமூலத்வம் அறியப்பட்டிருக்குமளவில் துஷ்டமூலபுராணபாகுள்யம் அதுஷ்டமூலமான ஒரு புராணத்தைக்கூட பாதிப்பதற்கு ஸாமர்த்தியமுள்ளதாக ஆகாது. ப்ராந்தியுள்ள ஆயிரம் மனுஷ்யர்களுடைய வசநங்களால் ப்ராந்தி இல்லாத ஒரு மனிதனுடைய வசநம் பாதிக்கப்படுகிறதில்லையன்றோ; ஆகையால் பகவானை ப்ரதிபாதிக்கிற தன்மைவாய்ந்திருப்பதுபற்றி ஸத்வமூல

மாகஇருப்பதால் காரணதோஷமில்லை. அவ்வாறே புராணாந்தரங்களுக்குப்போல இதற்கு பாதகப்ரத்யயம் காணப்படுகிறதில்லை. நாராயணனுக்கே பரமகாரணத்வத்தை ப்ரதிபாதிப்பதால் ப்ரத்யக்ஷ ச்ருதிகளிலோ நாராயணனுக்கே ஸாமாந்ய சப்தவிசேஷ சப்தங்களால் காரணத்வத்தை உரைத்து "நசாஸ்ய கச்சிஜ்ஜநிதா நசாதிப:" 'நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே" "நஹ்யேதஸ்மாதிதிநேத்யந்யத் பரமஸ்தி" "யஸ்மாத் பரம்நாபரமஸ்திகிஞ்சித்" (இவனை ஒருவனும் உண்டுபண்ணவில்லை, இவனுக்கு மேலதிகாரி கிடையாது, அவனுக்கு ஸமனானவனும் மேலானவனும் காணப்படுகிறானில்லை. இவ்வித மகிமைபொருந்தியவன், இவனைக்காட்டிலும் மற்றொருவனில்லை, இவனைவிடச் சிறப்புடையது ஒன்றுமில்லை, எவனைவிட பெருமைவாய்ந்தது வேறு ஒரு வஸ்துவுமில்லையோ) என்று காரணபூதனை அவனைத்தவிர்த்த வேறு வஸ்துவுக்கு பரத்வமும் நிஷேதிக்கப்படுகிறது. 'நப்ரஹ்மா நேசாந:" "ஏகோஹ வை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசாந:" "தஸ்யப்ரஹ்மாசதுர்முகோ ஜாயத, 'த்ர்யக்ஷ: சூலபாணி: புருஷோ ஜாயத' 'ததோஜஜ்ஞே உச்ராஸ்த்ரீவ ஷந்ருமணா:' 'விரூபாக்ஷாய ப்ரஹ்மண: புத்ராய.' அஜஸ்யநாபாவத்யேகமர்பிதம் - ஸப்ரஜாபதிரேக: புஷ்கரபர்ணே ஸமபவத் - யந்நாபிபத்மாதபவந் மஹாத்மாப்ரஜாபதி: (ப்ரஹ்மாவுமில்லை, ஈசாநனென்கிற ருத்திரனுமில்லை, அந்த நாராயணனிடத்தில் நான்குமுகமுள்ளவனாக ப்ரஹ்மா உண்டானார். முக்கண்களுள்ளவனும் சூலாயுதத்தை கையில் எந்தினவனுமான புருஷன் பிறந்தான். அவனிடத்திலின்று கோபத்தால் ஜ்வலிக்கிற உக்ரன் பிறந்தான். பற்பல ரூபங்களுள்ள கண்களுடன்கூடியவனும் நான்முகனுக்குப்புதல்வனாகவுமிருக்கிற சிவனின்பொருட்டு - பிறப்பில்லாதவனான ஸ்ரீய:பதியினுடைய நாபியின்மீது ஒருதாமரைமலர் வைக்கப்பட்டிருந்தது. அந்த ப்ரஜாபதி என்கிற ஒருபுருஷன் தாமரை மலரில் உண்டானான். எவனுடைய நாபிக்கமலத்திலின்று மஹாத்மாவான ப்ரஜாபதி உண்டானாரோ) என்று ப்ரஹ்மா சிவன் இரண்டுபேர்களுக்கும் நாராயணனிடத்திலின்று உத்பத்தியானது கேட்கப்படுகிறது. லிங்கபுராணத்தில் ப்ரஹ்மா விஷ்ணு இருவர்களைக் குறித்து "யுவாம்ப்ரஸூதௌகாத்ரேப்யோ மம பூர்வம் ஸநாதநௌ" (சாச்வதர்களான நீங்கள் இருவர்களும் என் அங்கங்களினின்று முன்பு உண்டானீர்கள்) என்கிற ருத்ரனுடைய வசநத்தால் ருத்ரனிடத்திலின்று ஹரி, சதுர்முகன் இவர்களுக்கு உத்பத்தி அறியப்படுவதால் புராணாந்தரங்களுக்கு ச்ருதி விரோதம் மிகவும் ஸ்பஷ்டமாக இருக்கிறது. ஆனால் சிலர்களால் மூன்று தேவர்களுக்கும் ஸாம்யமும் ஐக்யமும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்த விரோதம் எவ்விதத்தாலும் பரிஹரிக்க முடியாதது. ஸாம்யத்தைப்பெற்றவர்களும் ஒன்றாக ஆகி இருப்பவர்களாகவுமுள்ள அந்த மும்மூர்த்திகளுடைய உத்பத்தி ப்ரதிபாதநத்தில் பகவானிடத்திலின்று நான்முகனுக்கும் சிவனுக்கும் உத்பத்தி கேழ்க்கப்படுவதாலும் ருத்ரனிடத்திலின்று மற்றவர்கள் இருவர்களுக்கும் ஒரு வாக்யத்திலும் உத்பத்திக்கு ச்ரவணமில்லாமையாலும் காரணவாசிகளான சிவாதிசப்தங்களுக்கு ஆகாசாதிகளுக்குப்போல சார்யமென்று அறியப்பட்டிருக்கிற ப்ரஸித்தருத்ராதி பாத்வமில்லாமையாலும் 'ஸர்வேவிஷ்ணுமயாவேதா: ஸர்வேவிஷ்ணுமயாகுணா:' நஹி விஷ்ணுஸமா காசித் கதிரந்யா விதீயதே - இத்யேவம்ஸததம்வேதா காயந்தேநாத்ரஸம்சய: (எல்லா வேதங்களும் விஷ்ணுமயங்கள். எல்லா குணங்களும் விஷ்ணுமயங்கள். விஷ்ணுவுக்கு ஸமானமான வேறு ஒரு கதியும் விதிக்கப்படவில்லை. இவ்வண்ணம் எப்பொழுதும் வேதங்கள் சொல்லுகின்றன. இதில் ஸம்சயமில்லை) என்று லைங்கம் முதலியதில்கூட வேதங்களுக்கு பகவத்பரத்வ ப்ரதிபாதகத்வம் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதாலும் ஆகையால் நாராயணனுக்கே பரமகாரணத்வத்தைச்சொல்லுகிற ப்ரத்யக்ஷ ச்ருதிகளால் பாதகப்ரத்யயமுள்ள வேறு புராணங்களைக்காட்டிலும் வைலக்ஷண்யம் ஸ்பஷ்டம். அவ்வாறே நாராயணனையே பரமகாரணமாக ப்ரதிபாதிக்கிற மாநவாதி தர்மசாஸ்த்ரங்களு

ளோடும் அர்த்தைக்யம் ஸ்பஷ்டம். "ஆபோநாரா இதிப்ரோக்தா:, தத்விஸ்ருஷ்டஸ்ஸ புருஷ:, வித்யாத்து புருஷம்பரம், நாராயண: பரோऽவ்யக்தாத்" (ஜலம் நாரமென்று சொல்லப்பட்டிருக்கிறது, அவனால் உண்டுபண்ணப்பட்ட அந்த புருஷன், பரமபுருஷனென்று அறியவேண்டும். அவ்யக்த சப்தவாச்யமான மூலப்ரக்ருதியைக்காட்டிலும் வேறாகவும் மேன்மையுள்ளவனாகவுமிருப்பவன் நாராயணன்.) இது முதலிய வசநங்களால் நாராயணனுக்கன்றோ காரணத்வம் அவைகளில் கூறப்படுகிறது. புராணாந்தரங்களோவென்றால் தர்மசாஸ்த்ர விருத்தங்கள். அவ்வாறு ‡ வக்த்ருவைலக்ஷண்யமும் ப்ரத்யக்ஷச்ருதி ஸித்தமாக இருக்கிறது. "ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:" என்று. இந்த இடத்தில் பராசரருடைய புத்திரனாக இருப்பதால் வ்யாஸருக்கு மேன்மை கூறப்படுகிறது. அவ்வாறே லிங்கத்திலும் பராசரருக்கு வைலக்ஷண்யம் அறியப்படுகிறது, எப்படி என்றால் அந்த கிரந்தத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் "பராசரஸ்யாவதாரோவ்யாஸஸ்ய ச சுகஸ்யச - விநாசம் ராக்ஷஸாநாந்து க்ருதம்வை சக்திஸூநுநா" (பராசரருடையவும், வ்யாஸருடையவும், சுகருடையவும், அவதாரம் (உரைக்கப்பட்டது) சக்தியின் புதல்வரான பராசரரால் அரக்கர்களுடைய விநாசம்செய்யப்பட்டது.) என்று. இந்த இடத்தில் 'பராசரஸ்ய அவதார:' என்கிற வசநமானது அதிக மேன்மையைக் காட்டுவதற்காக. அப்படி இல்லாவிட்டால் 'பராசரஸ்யசோத்பத்திர்வ்யாஸஸ்ய ச சுகஸ்யச' என்றும் சொல்வதற்கு சக்யமன்றோ. § புலஸ்த்ய வஸிஷ்ட மகரிஷிகளுடைய வரதாநத்தாலடையப்பட்ட தேவதாபாரமார்த்யஜ்ஞாநவத்த்வமும் மஹத்தான வைலக்ஷண்யம். வரதானம் ஸித்தித்தால் இந்த புராணத்திற்கு ப்ராமாண்யம், புராண ப்ராமாண்யம் ஸித்தித்தால் அந்தப் புராணத்தாலறியப்பட்டிருக்கிற வரலாபத்திற்கு ஸத்யத்வம்என்று அந்யோந்யாச்ரயதோஷம்வருகிறதென்று சொல்லத்தக்கதல்ல வரலாபவசநத்திற்குப்பராசரர் வரலாபத்தைப்பெற்றவரல்லர் என்கிறபாதகப்ரத்யயமில்லாமையால் ஸ்வதஸ்ஸித்தமான ப்ராமாண்யத்திற்கு அபவாதமில்லை. பராசரருக்கு தேவதாபாரமார்த்யஜ்ஞாநலாபம் லிங்கத்திலும் அறியப்படுகிறது. எப்படி என்றால் அந்த லிங்கத்தில் இரண்டாவது அத்யாயத்தில் "தேவதாபாரமார்த்யஞ்ச விஜ்ஞாநஞ்ச ப்ரஸாதத: புராணகரணஞ்சைவ புலஸ்தயஸ்யாஜ்ஞயா குரோ:" (குருவான புலஸ்த்யருடைய ஆஜ்ஞையினால் தேவதாபாரமார்த்யஜ்ஞாநமும் அந்த குருவினுடைய ப்ரஸாதத்தினால் புராணம் செய்யும் சக்தியும் (ஸித்தித்தது) என்றும். அதிலேயே அறுபத்துமூன்றாவது அத்தியாயத்தில் 'அத தஸ்ய புலஸ்தயஸ்யவஸிஷ்டஸ்யசதீமத:, ப்ரஸாதாத் வைஷ்ணவம் சக்ரேபுராணம்வைபராசர:(பிறகு சிறந்தபுத்தியுள்ளவர்களானபுலஸ்த்யவஸிஷ்டமஹரிஷிகளுடைய ப்ரஸாதத்தினால் பராசரர்விஷ்ணுபுராணத்தைச்செய்தார் என்றும், அதற்கடுத்து "ஷட்ப்ரகாரம் ஸமஸ்தார்த்த ஸாதகஜ்ஞாந ஸம்ச்ரயம். தசஸாஹஸ்ரமமிதம் ஸர்வவேதார்த்த ஸம்யுதம் (ஆறு அம்சங்களுள்ளதும் ஸமஸ்த புருஷார்த்தஸாதகஜ்ஞாநத்திற்கு ஆதாரமாக இருப்பதும் பதினாயிரம் க்ரந்தங்களடங்கியதும் அபரிமிதமான கௌரவமுள்ளதும் எல்லா வேதங்களின் அர்த்தங்களோடு சேர்ந்ததுமான) என்கிற இந்த ச்லோகத்தால் இந்த புராணரதநத்திற்கு எல்லா வேதாந்தங்களோடும் சேர்ந்திருத்தலும் அதனாலேயே ஸமஸ்த புருஷார்த்த ஸாதகஜ்ஞாந ப்ரஸாதகத்வமும் சொல்லப்படுகிறது. ஆகையால் வக்த்ருவைலக்ஷண்யமும் ப்ரபந்த வைலக்ஷண்யமும் புராணாந்தரத்தால் ஸித்தமாக இருப்பதினால் அது எவ்விதத்தாலும் மறுக்கமுடியாது. இதுவும் வேறு மிகவும் மஹத்தான வைலக்ஷண்யமிருக்கிறது, அதாவது-ப்ரபந்தத்தின் தொடக்கத்தில் பொதுவாக வினா

‡ வக்தா—க்ரந்தங்களை இயற்றுகிறவன்.

§ புலஸ்த்தியர்—ராக்ஷஸவர்க்கங்களுக்கு கூடஸ்தர்.

இருக்க அதற்கு விசேஷத்தை ஆதாரமாகக்கொண்டு மறுமொழிகூறி இருக்கல்தான். “ஸோऽஹமிச்சாமி தர்மஜ்ஞ! ச்ரோதும் த்வத்தோ யதா ஜகத், பபூவ பூயச்ச யதா மஹா பாக பவிஷ்யதி - யந்மயஞ்ச ஜகத் ப்ரஹ்மந் யதச்சைதச் சராசரம். (தர்மங்களை அறிந்தவரே! மகாபாக்கியமுள்ளவரே அப்படிப்பட்ட நான் ஜகத் எப்படி உண்டாயிற்று, மறுபடியும் எப்படி உண்டாகப்போகிறது, ப்ரஹ்மந் ஜகத்தானது எவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. இந்த சராசரங்கள் அனைத்தும் எவனிடத்தினின்று உண்டாகிறது, இவைகளை உம்மிடத்திலினின்று கேழ்க்கவிருப்பமுற்றிருக்கிறேன்) இது முதலியதால் பொதுவாக வினவப்பட்டிருக்க ‘விஷ்ணோஸ்ஸகாசாதுத்பூதம்’ (விஷ்ணுவின் பக்கத்திலிருந்து ஜகத் உண்டாயிற்று) என்று விசேஷத்தை அவலம்பித்தன்றோ மறுமொழி என்று அறியப்படுகிறது. விசேஷம் வினவப்பட்டிருந்தால் ப்ரதிவசநமானது வினவப்பட்டிருக்கிற விசேஷத்தில் பக்ஷபாதத்தால் அதற்கு மேன்மையைச்சொல்வதில் நோக்கமுள்ளது ப்ரசம்ஸாமாத்ரம், தத்வபரமல்லவென்று ஸந்தேஹிக்கதக்கதாக ஆகலாம். (ஸாமாந்யமாக) பொதுவாக வினவப்பட்டிருக்கும் ஸமயத்தில் ப்ரதிவசநமானது அர்த்தவசத்தால் விசேஷத்தில் பர்யவஸாநத்தை அடைகிறதாதலால் தத்வபரத்வமே இருக்கலாம். ஆதலால் ‘தஸ்மாத்பவந்தம் ப்ருச்சாம: ஸூதபௌராணிகாத்யது, புராணஸம்ஹிதாம் புண்யாம் லிங்கமாஹாத்ம்யஸம்யுதாம் (ஹே ஸூதபௌராணிக! ஆதலால் இப்பொழுது பாவநமானதும் லிங்கமாஹாத்ம்யத்துடன் கூடியதுமான புராணஸம்ஹிதையை உம்மிடத்தினின்று கேழ்க்கிறோம்) என்று விசேஷத்தை ஆச்ரயித்து ப்ரச்நத்தின் தொடக்கமும் அதற்கு ப்ரதிவசநரூபமாயுமுள்ள புராணாந்தரங்களைக்காட்டிலும் மிக்கமேன்மை நன்கு ஸ்பஷ்டமாக இருக்கிறது. இந்த புராணத்தினுடைய அர்த்தமும் லைங்கம் முதலியவைகளில் சிற்சில இடத்தில் அங்கீகரிக்கப்படுகிறது. எப்படி என்றால் லைங்கத்தில் இரண்டாவதான புராணார்த்தாநுக்ரமணத்தில் “ஸர்வாஸ்வர்தேஷு விஷ்ணோச்ச ஜநநம் லீலயைவது, விஷ்ணோ: ப்ரஸாதாத்ஜிஷ்ணோச்ச விஷ்ணோச்சைவ துலம்பவ: (எல்லா ஜாதிகளிலும் விஷ்ணுவினுடைய ஜநநமானது லீலாமாத்ரத்தினாலேயே ஏற்படுகிறது. விஷ்ணுவினுடைய ப்ரஸாதத்தினால் அர்ஜுனனுக்கும் விஷ்ணுஸ்வரூபியான க்ருஷ்ணனுக்கும் உத்பத்தி) அதில் “லீலயைவ சக்ருஷ்ணேந ஸ்வகுலஸ்ய ச ஸம்ஹ்ருதி: - ஜரகாஸ்த்ரச்சலேநைவ கமநம் ஸ்வேச்சயைவது (க்ருஷ்ணனால் தன் வம்சத்தின் ஸம்ஹாரமானது லீலையினாலேயே செய்யப்பட்டது. ஜரகனென்கிற வேடனால் கண்ணனுடைய திருவடியைக்குறிவைத்து எய்யப்பட்டிருக்கிற அம்பினால் உண்டுபண்ணப்பட்ட ஹிம்ஸா வியாஜத்தினாலேயே தனிச்சையினாலேயே வைகுண்டகமநம்) என்று பகவதவதாரம் பூலோகபரித்யாகம் இரண்டும் லீலாமாத்ரத்தையன்றோ ஹேதுவாக உடையதென்று அங்கு சொல்லப்படுகிறது. அதனாலேயே இந்த புராணார்த்தமானது வேறு கிரந்தங்களில் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் அசைக்க ஒண்ணாமை அறியப்படுகிறது. அங்கனமாகில் இத்தோடு அர்த்தைக்யமிருப்பதால் அந்த புராணங்களும் ப்ரமாணங்களாக ஆகட்டுமென்று சொல்லப்படுமேயாகில் அல்ல. முற்றிலும் அவிரோதமில்லாமையால் - பகவானுக்கு மேன்மையை ப்ரதிபாதிக்கிற அம்சமோவென்றால் ஆக்ரஹமில்லாமையால் ஆதரிக்கத்தக்கதென்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த புராணம் முழுமையும் ஆக்ரஹமடியாகப்பிறக்கவில்லை என்பதும் தொடக்கத்திலிருக்கிற ப்ரச்நஸ்வபாவத்தால் அறியப்படுகிறதென்றும் சொல்லப்பட்டது. அதனால் வேறு இடத்தில் திடமான ஆக்ரஹத்தை கைக்கொண்டவர்களால்கூட ஆதரிக்கத்தக்கதாக இருக்கிறதன்னால் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்துடன்கூடி இருத்தலே அசைக்க ஒண்ணாமைக்குக் காரணம்.

மேலும் புராணாந்தரங்களில்போல இந்தப்புராணத்திற்குத்தன்னால் வ்யாஹதமான அர்த்த ப்ரதிபாதகத்வம் காணப்படுகிறதில்லை. முழு க்ரந்தத்தினாலும் பகவானுடைய மேன்

மையே அறியப்படுவதால் - புராணாந்தரங்களில் வ்யாகாதம் அறியப்படுகிறது. எங்ஙனமெனில், லைங்கத்தில் "யுவாம்ப்ரஸூதௌ காத்ரேப்யோமமபூர்வம் ஸநாதனௌ ! அயம் மே தக்ஷிணே பார்ச்வே ப்ரஹ்மா லோகபிதாமஹ: வாமபார்ச்வே ச மே விஷ்ணுர் விச்வாத்மா ஹ்ருத்யோத்பவ: ! (முற்காலத்தில் சாச்வதர்களான நீங்கள் இருவர்களும் என்னுடைய அங்கங்களினின்று தோன்றினீர்கள். உலகங்களுக்கு பிதாக்களான தக்ஷாதிகளுக்கும் பிதாவான இந்த ப்ரஹ்மா என்னுடைய வலது விலாப்புரத்திலிருந்து உண்டானன் உலகங்களை தன் சரீரமாகக்கொண்டவரும் அல்லது சராசராத்மகமான உலகங்களை வ்யாபித்திருப்பவரும் ஸர்வப்ராணிகளுடைய ஹ்ருதயகமலங்களில் சஹாரூபியாய் இருப்பவருமான விஷ்ணுவானவர் என்னுடைய வலது விலாப்புரத்திலிருந்து பிறந்தார்) என்றும் அதே க்ரந்தத்தில் "தத: ப்ரஹ்ருஷ்டஸ்ஸுமனா: ப்ரணிபத்ய மஹேச்வரம், ப்ராஹ நாராயணோ தேவ: ஸலிங்கம் லிங்கவர்ஜிதம், யதிப்ரீதிஸ்ஸமுத்பன்னா யதி தேயோவரஸ்ச நௌ பக்திர்பவது நௌ நித்யம் த்வயி சாவ்யபிசாரிணீ (பிறகு காந்தியுள்ளவரான அந்த நாராயணன் மிக்க மனக்களிப்புள்ளவராகவும் நல்ல மனதுடன் கூடியவராகவும் லிங்கமில்லாதவரும் லிங்கரூபியாக இருப்பவருமான மஹேச்வரனை நன்குபணிந்து (எங்களிடத்தில்) ப்ரீதியானது நன்கு உண்டாயிருக்குமேயானாலும் எங்கள் இருவர்களுக்கும் வரம் கொடுக்கத்தக்கதென்று (உள்ளத்தில் தோன்றியிருந்தாலும் எங்கள் இருவர்களுக்கும் எப்பொழுதும் உம்மிடத்தில் தவறுதலில்லாத பக்தியானது உண்டாகட்டும்) என்று ஹரிப்ரஹ்மா இருவர்களுக்கும் சிவனிடத்திலிருந்து உத்பத்தியும் சிவனுடைய ஆராதநமும் அவரிடத்தினின்று வரன்களைப்பெறுதல் முதலியதும் கூறப்பட்டிருக்கிறது. அந்த க்ரந்தத்தில் ஓரிடத்தில் "த்வத்கோபஸம்பவோ ருத்ரஸ் தமஸாச ஸமாவ்ருத:, த்வத்ப்ரஸாதாஜ்ஜகத்தாதா ரஜஸாச பிதாமஹ: (தமோகுணத்தால் நன்கு சூழப்பட்டவனை ருத்திரன் தேவரீருடைய கோபத்தினின்று பிறந்தான். உலகத்தைப்படைக்கிறவரும் ரஜோகுணத்துடன் கூடியவருமான பிதாமகன் தேவரீருடைய ப்ரஸாதத்தினின்று பிறந்தார்) என்று சதுர்முகன் சிவன் இருவர்களுக்கும் பகவானுடைய கோபத்தினின்றும் ப்ரஸாதத்தினின்றும் உத்பத்திசொல்லப்பட்டிருப்பதினால் பூர்வோத்தரவிரோதமேற்படுவதுபற்றி வ்யாகாததோஷம் ஸம்பவிக்கிறது. வஸுதேவர் முதலியவர்களிடத்தினின்று உத்பத்தியைப்போலவும் கைலாஸயாத்திரை முதலியதுபோலவும் ருத்திரனிடத்தினின்று உத்பத்தியும் அந்தருத்திராராதநமும் லீலையென்றுசொல்வதால் விரோதமில்லை என்றுசொல்லக்கூடாது. புராணரத்நமான விஷ்ணுபுராணத்திலும் பாரதம் முதலியதிலும் "மநஸைவ ஜகத்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதிய:, தஸ்யாரிபக்ஷக்ஷபணே கியாநுத்யமவிஸ்தர: ததாபியோ மநுஷ்யாணாம் தர்மஸ் தமநுவர்த்தம், குர்வந்பலவதாஸந்திம் ஹீநைர் யுத்தம் கரோத்யஸௌ, ஸாமசாபிப்ரதாநஞ்ச ததாபேத ப்ரதர்சநம்-கரோதி தண்டபாதஞ்ச க்வசிதேவ பலாயநம்-மநுஷ்யதேஹிநாம் சேஷ்டாமித்யேவ மநுவர்த்ததே-லீலாஜகத்பதேஸ் தஸ்ய சந்ததஸ்ஸம்ப்ரவர்த்ததே - ஈசங்நபிமஹாயோகீ ஸர்வஸ்யஜகத:ப்ரபு: - கர்மாண்யாரபதே சர்தும்கிநாசஇவ துர்பல: - தேகவஞ்சயதே லோகாரம்மாயாயோகே கேசவ: யேதமேவ ப்ரபத்யந்தே நதே முஹ்யந்திமாநவா: (எவர் மனதினாலேயே ஜகத்ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் செய்கிறாரோ - அவருக்கு சத்துருபக்ஷத்தை நாசம்செய்யும் விஷயத்தில் எவ்வளவு முயற்சிவேண்டும்? அப்படி இருந்தபோதிலும் எது மநுஷ்ய தர்மமோ அதின் அநுவர்தநத்தைச்செய்துகொண்டு பலவானோடு ஸந்தியையும் பலஹீநர்களோடு யுத்தத்தையும் அவர்செய்கிறார். ஸாமதானங்களையும் அவ்வாறே பேதத்தையும் காட்டுகிறார். தண்டபாதத்தையும் செய்கிறார் ஒரு ஸமயத்தில் ப்லாயநத்தையும் செய்கிறார். இவ்வண்ணம் மநுஷ்யதேஹமுள்ளவர்களுடைய சேஷ்டையை அனுஸரிக்கிறார். ஜகத்பதியான ஸ்ரீமந்நாராயணனுடைய லீலையானது தன் அபிப்பிராயப்படி ப்ர

வ்ருத்திக்கிறது. மஹாயோகியாயும் எல்லா ஜகத்துக்களுக்கும் பிரபுவாகவுமிருக்கிற விஷ்ணுவானவர் நியந்தாவாக இருந்தபோதிலும் பலஹீனனை அல்பன்போல் கர்மாக்களைச்செய்ய ஆரம்பிக்கிறார். கேசவன் அந்த மாயாயோகத்தினால் உலகங்களை வஞ்சிக்கிறார். எவர்கள் அவனையே சரணமடைகிறார்களோ அந்த மனிதர்கள் மோஹமடைகிறார்களில்லை) இதுமுதலிய வசநங்கள்போல ஆங்காங்கு ப்ரஸித்தமான § அபகர்ஷத்தின் பரிஹாரத்தில் நோக்குள்ள க்ரந்தம் காணப்படாமையாலும் பாரதம் முதலியவைகளில் தசரதன் வஸுதேவர் முதலியவர்களுக்கு ராமக்ருஷ்ணாதிகளை அபேக்ஷித்து பரத்வமானது ஜகத்காரணத்வம் முதலியவற்றின் வாயிலாக ப்ரதிபாதிக்கப்படாமையாலும் இந்த கிரந்தத்தில் பகவானை அபேக்ஷித்து ருத்ரனுக்கு பரத்வம் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதாலும், அதினால் ஸ்வவ்யாகாதமானது எவ்விதத்தாலும் பரிஹரிக்கமுடியாதது. அவ்வாறு இந்த க்ரந்தத்தில் ஸ்வவ்யாஹதி அறியப்படுகிறதில்லை என்பது யாதொன்றுண்டோ இதுவும் மஹத்தான வைலக்ஷண்யம். கீழ்சொல்லப்பட்ட லக்ஷண †ப்ரகர்ஷத்துடன் கூடினவைஷ்ணவபுராணத்திற்கும் காரணதோஷம் பாதகஜ்ஞாநம் ஸ்வவ்யாஹதி இவைகளுடன்கூடிய வேறுப்ரபந்தத்திற்கும் விரோதம்வரின் புராணரத்நத்திற்கு ப்ராபல்யமும் மற்றவைகளுக்கு தௌர்பல்யமும் மிகவும் ஸ்பஷ்டம். இவ்வாறாக ப்ரஸித்தியின் அதிசயத்தால் அடையப்பட்ட ஸஜாதீயப்ரபந்த ப்ரகர்ஷத்துடன்கூடி இருப்பதாலும் அதினாலேயே கஷ்டகோசத்வமில்லாமையாலும் அதிக விஸ்தாரமாக இல்லாததினால் ப்ரக்ஷேபசங்கையில்லாமையாலும் அந்யபரமான உக்தியினால் ப்ரஸித்தமான $ பரிக்ரஹாதிசயமுள்ளதாக இருப்பதாலும் ஸாமாந்யப்ரச்நத்தை முன்னிட்ட ப்ரதிவசநரூபமாதலால் ஆக்ரஹமூலத்வமில்லாமையாலும் அதனாலேயே இப்படிப்பட்ட வைலக்ஷண்யமில்லாததும் காரணதோஷம் பாதகப்ராப்த்யம் ஸ்வவ்யாஹதி இவைகளோடுகூடியதுமான வேறு ப்ரபந்தங்களுக்கு இத்தோடு விரோதம்வரின் தௌர்பல்யம் விடத்தகாததாக இருப்பதாலும் மேன்மைபொருந்திய வைஷ்ணவபுராணமானது ப்ரமாணங்களுள் மிகவும் சிறப்புற்றது.

---

தத்ர புலஸ்த்ய வஸிஷ்டவரப்ரதாநலப்த பரதேவதா பாரமார்த்ய ஜ்ஞாநவதோ பகவத꞉ பராசராத் ஸ்வாவகதவேதார்தோபப்ரும்ஹணம் புபுத்ஸமாநஸ்ய மைத்ரேயஸ்ய பரிப்ரச்ந꞉ — “ஸோऽஹமிச்சாமி தர்மஜ்ஞ ச்ரோதும் த்வத்தோ யதா ஜகத்। பபூவ பூயச்ச யதா மஹாபாக பவிஷ்யதி ॥ யந்மயம் ச ஜகத்ப்ரஹ்மந் யதச்சைதச்சராசரம்। லீநமாஸீத்யதா யத்ர லயமேஷ்யதி யத்ர ச ॥” (வி-௧-௧-௪,௫) இத்யாதிநா॥

---

ஸ்ரீபாஷ்யம்—

அதில் புலஸ்த்ய வஸிஷ்ட மகரிஷிகளின் வரப்ரதாநத்தாலடையப்பட்டிருக்கிற பரதேவதாபாரமார்த்யஜ்ஞாநமுள்ளவரான பகவானான பராசரரிடத்தினின்று தன்னாலறியப்பட்டிருக்கிற வேதார்த்தத்தின் உபப்ரும்ஹணத்

---

§ அபகர்ஷம்—தாழ்மை.

$ பரிக்ரஹம்—ஏற்றுக்கொள்ளுதல். † ப்ரகர்ஷம்—மேன்மை.

ஆதை விரும்புகிறவராக மைத்ரேயர் ச்ச பன்னினுர் 'ஸோஹமிச்சாமிதர்ம
ஜ்ஞ ச்ரோதும் த்வத்தோ யதாஜகந் பபூவ பூயஸ்சயதா மஹாபாக பவிஷ்
யதி - யந்மயஞ்ச ஜகத் ப்ரஹ்மந் யதஸ்சைதச்சராசரம் - லீநமாஸீத் யதா
யத்ர லயமேஷ்யதி யத்ரச. (தர்மங்களை அறிந்தவரே! எவ்வாறு உலகம்
உண்டாயிற்று. மஹாபாக்கியமுள்ளவரே! மறுபடியும் எவ்வாறு உண்டாகப்
போகிறது. ஹே ப்ரஹ்மந்! உலகமானது எதனுல் வ்யாபிக்கப்பட்டிருக்
கிறது (அல்லது) எதனுடைய ப்ராகர்யமுள்ளது. ஜங்கமஸ்தாவராத்மக
மான இந்த உலகம் எதனிடத்தினின்று உண்டாகிறது. எதனிடத்தில்
எவ்வாறு ஒடுங்கி இருந்தது. எந்த இடத்தில் லயத்தை அடையப்போகி
றது. இவை அனைத்தையும் தேவரீரிடத்தினின்று நான் கேட்க விருப்பமுள்
ளவனுக இருக்கிறேன்.) இது முதலியதால்.

ச்ருதப்ரகாசிகை—

இந்த எல்லா ஹேதுக்களுடைய ஸமூகத்தை அபிப்பிராயப்பட்டு ப்ரதாநபூதயுக்தி
யை கண்டோக்தியினுல் காட்டாநின்றுகொண்டு அதன்வாயிலாக ப்ரதிபந்தவைலக்ஷண்யத்
தைச்சொல்லுகிறவராக ப்ரச்நங்களை அவதரிப்பிக்கிருர்-தந்த்ர என்று 'புலஸ்த்ய வஸிஷ்ட
வரப்ரதாநலப்தபரதேவதா பாரமார்த்ய ஜ்ஞாநவாந:' என்கிற இடத்தில் தேவதாபாரமார்
த்யசப்தத்தால் தம: கார்யமான ஒரு தர்மியை வேறு ப்ரகாரமாக அறிதலாகிற விபரீத
ஜ்ஞாநம் வ்யாவர்திக்கப்பட்டது. இதனுல் தேவதாபாரமார்த்யஞ்ச என்கிற வசநமா
னது ஸ்புரிக்கும்படி செய்யப்பட்டது. ப்ரசம்ஸார்த்தகமான மதுப்ப்ரத்யயத்தினுல் ரஜ
ஸ்ஸின் கார்யமான வேறுப்ரகாரத்தோடுகூடி இருக்கிற வஸ்துவை அதற்கு விருத்தமான
வேறு ப்ரகாரத்தோடுகூடி இருப்பதாக எண்ணுதலாகிற அந்யதாஜ்ஞாநமும் வ்யாவர்த்
திக்கப்பட்டது. இதனுல் யதாவத்என்பதின் அர்த்தம் ஸூசிப்பிக்கப்பட்டதாக ஆகிறது.
தேவதாசப்தத்தினுல் கர்மாவினுலாவது உபாஸநத்தினுலாவது ஆராதிக்கத்தக்க தன்மை
யும் பலத்தைக்கொடுக்கும் திறமையும்சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. இதனுல் ஸவிசே
ஷத்வம் ஸித்தித்தது. 'யதாவத்' என்று ப்ரகாரத்தைச் சொன்னதனுலும் ஸவிசேஷத்வ
ஸித்தி என்பதனுல் வாலாபகதநமானது ஸவிசேஷத்வத்திற்கு உபபாதகம் என்று அபிப்
ராயம். பதவத் சப்தத்தால் ஜ்ஞாநவத்த்வம் கூறப்பட்டது. வாலாபத்தால் அதின்
அதிசயம் ஸித்தித்தது ஸோஹமித்யாதி ஸோஹம் தேவரீராலேயே எல்லா வித்யை
களிலும் முன்பேசிக்ஷிக்கப்பட்டிருக்கிற நான் என்று கருத்து. தர்மஜ்ஞ 'விசேஷோஸ்தி
நஸதாம் சிஷ்யபுத்ரயோ:' (ஸாதுக்களுக்கு சிஷ்யன புத்திரன் இவ்விருவர்களிடங்களி
லும் விசேஷமில்லை) என்கிற தர்மத்தை அறிந்தவரே! அன்றிக்கே 'ஆந்ருசம்ஸ்யம்
பரோ தர்ம:' ஆச்ரிதஸம்ரக்ஷணம் என்பது நிகரற்ற தர்மம்) என்கிற தர்மத்தை அறிந்த
வரே! ஆந்ருசம்ஸ்யம் ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதில் நோக்கு. 'ஆச்ரிதேத்யாந்ருசம்ஸ்யத:
என்கிற வசநத்தினுல். மஹாபாக - பரிபூர்ணக்ருத்யமன்றோ பாஸம்ரக்ஷணம். ஸ்வல்ப
ப்ரயோஜநத்தையும் அபேக்ஷியாமல் ரக்ஷிப்பவனே நீ என்று கருத்து. யதாயதோப
பூவ-ப்ரஹ்மருத்ராதிகளுக்குள் எவன் காரணமென்று அறிவதற்காக யத: என்று ப்ரச்நம்,

‡ விவர்தாதிஷ்டானத்வம் காரணத்வமா? அல்லது § பரிணாமித்வமா? அதிலும் ஸத்வாரக பரிணாமித்வமா? அல்லது அத்வாரக பரிணாமித்வமா? என்கிற ப்ரகாரபேதங்களை அறியவேண்டுமென்கிற எண்ணத்தினால் யதா என்று ப்ரச்நம். கல்பபேதத்தினால் ஸ்ருஷ்டி பேதம் என்கிற சங்கையினால் பவிஷ்யதி என்கிற ப்ரச்நம். தேளுக்கு பசுவின் சாணமும் தேளும் உபாதாநகாரணங்களாகக்காணப்பட்டிருப்பதால் கல்பபேதத்தால் உபாதாநாதிபேத சங்கை உபபந்நமாகிறதன்றோ. அதிலும் யத: யதா என்கிற பதங்களுக்கு முன்போல அர்த்தம். யதோயதாபூர்வ என்று ஒரே ப்ரச்நம் என்கிற சங்கையானது யந்மயம் என்கிற ப்ரச்நாந்தரவ்யவதாநத்தால் நிரஸநம் செய்யப்படுகிறது. எவ்வாறு காரணம் அறியத்தக்கதோ அவ்வாறு ஸ்ருஷ்டிப்ரகாரமும் தனியாக அறியத்தக்கதென்று ஜ்ஞாபிப்பதற்காக அறியத்தக்கதன்மை இருந்தபோதிலும் ப்ராதான்யத்தை த்யோதநம் செய்வதற்காக ப்ரகாரப்ரச்நமானது முந்தியே செய்யப்பட்டது. யத: என்று பஞ்சமியானது ஹேதுவை உணர்த்துகிறது. அதனால் நிமித்தோபாதாநங்கள் இரண்டுக்கும் தந்திரத்தினால் ப்ரச்நம். உள்ளுக்குள் இருப்பு முதலியதற்கு உபயுக்தமான ஆத்மசரீரபாவ ப்ரச்நம் யந்மயம் என்று. மயட்ப்ரத்யயம் ப்ராசுர்யத்தை அர்த்தமாகவுடையது. இதனால் வ்யாப்தி காட்டப்பட்டது. வ்யாப்யத்தைவிட வ்யாபகத்திற்கு ப்ராசுர்யமானது கடாகாசம் முதலியவற்றில் காணப்பட்டிருக்கிறதன்றோ. ஆத்மாவாக இருத்தலாலன்றோ வ்யாப்தி. ஆத்மத்வமாவது தாரகத்வம். அதனால் அந்தர்யாமியால் செய்யப்பட்டிருக்கிற ஸத்தா அநுவ்ருத்திரூபமான ஸ்திதி ப்ரச்நம் பலித்தது. யந்மயம் தாரகனான எந்த அந்தர்யாமியினால் ப்ராசுரமாக ஜகத் நிலைபெற்றிருக்கிறதென்கிற அர்த்தம் சொல்லப்பட்டதாக ஆகிறது. உள்ளே ப்ரவேசித்து ப்ரசாஸநத்தினால் தாரகத்வம் ஸ்திதிஹேதுத்வமென்று முந்தியே விசதமாக்கப்பட்டிருக்கிறது. ச சப்தத்தால் வெளிப்பட்டவர்களான போஷகர்கள் முதலியவர்களால் செய்யப்பட்டிருக்கிற போஷணாதிரூபமான ஸ்திதியும் மாதா பிதாக்கள் முதலியவர்களால் செய்யத்தக்க இஷ்டப்ராப்தி அநிஷ்டநிவாரணரூபையான ஸ்திதியும் வினவப்பட்டதாக ஆகிறது. யத: என்று உபாதாநமும் வினவப்பட்டிருப்பதால் மயட் ப்ராசுர்யார்த்தத்திலேயே கோபலீவர்த நியாயத்தால். யத: என்கிற ஐந்தாம்வேற்றுமைப்பொருளானது சுருக்கத்தக்கதல்ல. பலீவர்தசப்தத்திற்குப்போல் மயட்டுக்கு அநந்யதாஸித்தத்வமில்லாமையால் ஸங்கோசகத்வம் பொருந்தாது. பதாந்தரத்திற்கு ஏற்பட்டிருக்கிற வையர்த்யத்தை பரிஹரிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் பதாந்தரத்தின் அர்த்த ஸங்கோசம் கோபலீவர்த நியாயமென்று நியாயவித்துக்கள் கூறுகின்றனர். இங்கு மயட்டுக்கு அர்த்தாந்தரம் ஸம்பவிப்பதால் இது ஸங்கோசகமாகாது. யத: என்கிற பதமானது நிமித்தத்தையும் உபாதாநத்தையும் போதிப்பதற்கு சக்தியுள்ளது. ஸ்திதிப்ரச்நமபேக்ஷிக்கப்பட்டுமிருக்கிறது. ஆகலால் அபேக்ஷிதவிதியைவிட அநபேக்ஷிதத்தை விதிப்பது துர்பலம். யதோவா இமாநி இது முதலிய ச்ருதியில்கூட யத: என்கிற பதத்தினாலேயே நிமித்தோபாதாநங்கள் சொல்லப்பட்டிருப்பதாலும் ச்ருதியின் சாயையை அநுஸரித்து விதாநத்தாலும் யத: என்று தந்திரத்தினால் ப்ரச்நமாதலால் யந்மயமென்று

---

‡ விவர்தம்—ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக ப்ரமத்தால் எண்ணுதல், சிப்பியைப்பார்த்து வெள்ளி என்று. இந்த இடத்தில் சிப்பியில் தோன்றும் வெள்ளி ப்ராதிபாஸிகம். இந்த ரஜதத்திற்கு சிப்பியானது விவர்தோபாதானம்.

§ பரிணாமம் — ஒருவஸ்து மற்றொன்றாக மாறுதல் - மண் குடமாகமாறுவதுபோல் இங்கு மண்ணானது தன் நிலைமையைவிட்டு குடமாக மாறியிருக்கிறது. இங்கு குடத்திற்கு மண் பரிணாமி உபாதானம்.

ஸ்திதி ப்ரச்நம் செய்யப்படுகிறது. வேறு அர்த்தத்தை ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில் அபேக்ஷிதத்தின் அவசநமும் அநபேக்ஷிதவசநமும் உண்டாகும். ஸ்வார்த்திகமான மயட்டுமல்ல. ப்ரத்யயத்திற்கு அர்த்தம் ஸம்பவிப்பதாக இருக்கையில் அதை இழப்பது ந்யாய்யமாகாததால். ஆகையால் எவ்வாறு இங்கு பொருள்கூறப்பட்டதோ இந்த ஸரியானது. லயஸ்தாநப்ரச்நமும் லயப்ரகாரப்ரச்நமும் அத்யயநம் செய்யப்பட்டிராத வேறு சாகைகளில் ஸ்தாநபேத ப்ரகாரபேத சங்கையினால் செய்யப்பட்டது. தேவதாந்தரத்திற்கு லயஸ்தாநத்வமும் அதிலும் ஸத்வாரகத்வ அத்வாரகத்வ கார்ய ப்ரமரிவ்ருத்திரூபதை என்கிற பெயருள்ள ப்ரகாரபேதமுமன்றோ சங்கைக்கு ஆஸ்பதமாக இருக்கிறது. பூத பவிஷ்யத்ப்ரச்நமும் கல்பபேதத்தால் லயஸ்தாநப்ரகாரபேத சங்கையினால் செய்யப்பட்டது. சகாரத்தினால் லயகர்த்ரு ப்ரச்நமும் ஸூசிப்பிக்கப்பட்டது. அதுவும் கர்த்ருபேத சங்கையைக் காரணமாகக்கொண்டது. ஸ்வரூப ப்ரச்நபரமான இரண்டு ச்லோகங்களையும் வ்யாக்கியாநம்செய்ய விரும்பப்பட்டிருக்கிற ச்லோகத்தாலபேக்ஷிக்கப்பட்டிருப்பது பற்றி உதாஹரித்து ஆதி சப்தத்தால் வேறு ப்ரச்நங்களில் ப்ரதாநநோக்கமுள்ள ச்லோகங்கள் க்ரோடீகரிக்கப்பட்டன.

---

[illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

இந்த இடத்தில் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபவிசேஷம் அதின் விபூதி பேதங்களின் ப்ரகாரங்கள் அதின் ஆராதநஸ்வரூபம் பலவிசேஷம் இவைகள் வினவப்பட்டிருக்கின்றன. ப்ரஹ்ம ஸ்வரூபவிசேஷ ப்ரச்நங்களில் "யதஸ்சைதச்சராசரம்" என்று நிமித்தமும் உபாதாநமும் இரண்டும் வினவப்பட்டிருப்பதால் 'யந்மயம்' என்பதனால் ஸ்ருஷ்டிஸ்திதிலயங்களுக்கு காமாவாக இருக்கிற ஜகத்தானது எதை ஆத்மாவாகக்கொண்டிருக்கிறதென்று வினவப்பட்டது. 'ஜகச்சஸ:' என்று அதற்கு உத்தரம். இந்த தாதாத்ம்யமானது அந்தர்யாமிரூபமாக ஆத்மாவாக இருப்பதால் வ்யாப்தியினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதே ஒழிய வ்யாப்யவ்யாபகங்கள் இரண்டுக்குமுள்ள வஸ்துக்களின் ஐக்யத்தால் உண்டுபண்ணப்பட்டதன்று. 'ஜகச்சஸ:' என்கிற ஸாமாநாதிகரண்யமானது யந்மயம் என்கிறவினவுக்கு விடையாக இருப்பதால், யந்மயம் என்கிற மயட்டானது இந்த இடத்தில் விகாரத்தை அர்த்தமாகக்கொண்டதன்று. தனித்து ப்ரச்நம் ப்ரயோஜனமில்லாமல் போகவேண்டி வருவதால் - ப்ராணமயம் முதலிய இடங்களில்போல ஸ்வார்த்திகமுமன்று. 'ஜகச்சஸ:' என்கிற உத்தரம் பொருந்தாதலால்-அப்பொழுது விஷ்ணுவென்றல்லவோ உத்தரம் இருந்திருக்கும். ஆகையால் ப்ராசுர்யார்த்தத்திலேயே "தத்ப்ரக்ருதவசநே மயட்" என்கிற சப்தாநுசாஸநஸூத்ரத்தால் மயட் ப்ரத்யயம். உலகமனைத்தும் அந்த பரமாத்மாவுக்குச் சரீரமாக இருப்பதால் அந்த பரமாத்மப்ரசுரமே. ஆகையால் யந்மயம் என்பதற்கு ப்ரதிவசநமாக இருக்கிற ஜகச்சஸ: என்கிற ஸாமாநாதிகரண்யமானது ஜகத்திற்கும் ப்ரஹ்மத்திற்குமுள்ள சரீராத்மபாவத்தைக் காரணமாகக்கொண்டது என்று நிச்சயிக்கப்படுகிறது. அப்படிக்கின்றி நிர்விசேஷ வஸ்துவைப்ரதிபாதிப்பதில் ப்ரதாநநோக்கமுள்ளதாக சாஸ்த்ரம் ஒப்புக்கொள்ளப்படுகிறதேயாகில் இந்த எல்லா ப்ரச்நப்ரதிவசநங்களும் பொருந்தாது. அதின் விவரணரூபமான

முழுசாஸ்த்ரமும் இசையாது. அப்படி இருக்கும்பக்ஷத்தில் ப்ரபஞ்ச ப்ரமத்திற்கு அதிஷ்டானம் எது என்கிற இவ்வித ரூபமுள்ள ஒரு ப்ரச்நத்திற்கு நிர்விசேஷ ஜ்ஞாநமாத்ரம் என்கிற இவ்வித ரூபமுள்ள ஒரே உத்தரம் இருக்கவேண்டும். ஸாமாநாதிகரண்யமானது ஜகத் ப்ரஹ்மம் இரண்டும் ஒரே த்ரவ்யமென்று சொல்வதில் கருத்துள்ளதாக இருக்குமேயாகில் ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய கல்யாணகுணைகதாநதையும் அகிலஹேய ப்ரத்யநீகதையும் பாதிக்கப்படும். ப்ரஹ்மமானது எல்லா அசுபங்களுக்கும் ஆஸ்பதமாகவும் ஆகவேண்டியதாகும்-இந்த ஸாமாநாதிகரண்யமானது ஆத்மசரீர பாவத்திலேயே முக்யவ்ருத்தமென்று ஸ்தாபிக்கப்படப்போகிறது.

---

ச்ருதப்ரகாசிகை.—

'விஷ்ணோஸ்ஸகாசாத்' என்கிற ச்லோகத்திற்கு அர்த்தாந்தர ப்ரச்நோத்தாரூபத்வ சங்கையின் நிராஸத்திற்காக அந்த ச்லோகங்களுடைய அர்த்தத்தை ஸங்க்ரஹமாகக் கூறுகிறார் — அத்ர என்று. ப்ரஹ்மஸ்வரூப என்கிற ஸ்வரூபசப்தமானது விபூதிமுதலியவைகளை வ்யாவர்த்திக்கிறது. ஸ்வரூபவிசேஷ சப்தம் ப்ரஹ்மாதிகளை வ்யாவர்த்திக்கிறது. விபூதிபேதங்களின் ப்ரகாரம் விபூதிபேத ப்ரகாரம். அது ஜ்யோதிச்சக்ரம் புவநகோசம் முதலிய ப்ரச்நத்தில் உள்ளடங்கியது. வர்ணாச்ரம தர்மம் முதலியவற்றின் ப்ரச்நத்தினால் அவனுடைய ஆராதநஸ்வரூபம் வினவப்பட்டது. ப்ரதிவசநத்தில் பலவிசேஷத்தின் உக்தியானது காணப்படுவதால் மறுமொழியின் ரீதியினால் வினவின் பொருள் அறியப்படுகிறதென்கிற நீதியினால் பலவிசேஷமும் இங்கு வினவப்பட்டதாக ஆகிறதென்று முற்கூறப்பட்டிருக்கிற ப்ரச்நங்களில் உள்ளடங்கச் செய்விக்கப்பட்டிருக்கிறதென்கிற அபிப்பிராயத்தினால் பலவிசேஷங்களும் வினவப்பட்டனவென்று உரைக்கப்பட்டது. ப்ரயோஜனத்துடன்கூடின ஆராதநம் வினவப்பட்டதென்பதினால் அதில் அது உள்ளடங்கியது. இதே அர்த்தம் ஸகல ச்ருதிகளுக்கும் இதிஹாஸபுராணங்களுக்கும் ப்ரதிபாத்யமென்பது கருத்து. அதனால் ப்ரஸ்துத ச்லோகார்த்தத்திற்கு என்னவென்று அபேக்ஷை உண்டாகில் யந்மயம் என்கிற பதத்தினுடைய அர்த்தத்தை உபபத்தியுடன்கூட சொல்லுகிறார்—ப்ரஹ்மஸ்வரூப என்று. ஸ்ருஷ்டி ஸ்திதி லய கர்மபூதம் என்கிற பதமானது ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் சொல்லப்பட்டபடியால் ஸ்திதியைச்சொல்லுதல் அபேக்ஷிதமென்று ஜ்ஞாபிப்பதற்காக ஸ்திதிலய சப்தங்கள் இரண்டுகளாலும் ரக்ஷாஸம்ஹாரங்கள் விவக்ஷிக்கப்பட்டன. ஸ்திதி லயங்கள் இரண்டும் ப்ரயோஜ்ய கர்த்தாவினுடைய செய்கையாதலால் அவைகளுக்கு ஆச்ரயமாக இருப்பதுபற்றி ஜகத்துக்கு அந்த ஸ்திதிலய கர்மத்வமில்லாமையால் ஸ்ருஷ்டிஸ்திதிலய கர்மபூதமான ஜகத்தானது ஸ்திதியின்பொருட்டு எந்த ரூபமுள்ளதாக இருக்கிறதென்பது ப்ரச்நத்தின் அர்த்தம். அதனாலென்னவென்று கேட்கில் சொல்லுகிறார்—தஸ்யச என்று. ஜகச்சஸ: என்கிற ஸாமாநாதிகரண்யத்தால் அறியப்பட்டிருக்கிற தாதாத்ம்யமானது ஸ்வரூபைக்ய ரூபமென்று ஆசங்கித்துப்பரிஹரிக்கிறார்-இதஞ்ச என்று. இதம்-ஸாமாநாதிகரண்யத்தால் அறியப்பட்டிருக்கிறதென்று அர்த்தம். ஆகாயம் முதலியதில் வ்யாப்தி மாத்திரத்தினால் தாதாத்ம்யமானது காணப்படாததுபற்றி அதை வ்யாவர்திப்பதற்காக ஆத்மத்வத்தை விவரிக்கிறார்—அந்தர்யாமிரூபேண என்று. உள்ளே ப்ரவேசித்து நியமநம் செய்தலன்றோ ஆத்மத்வம் வ்யாப்யவ்யாபகயோ: என்று. ஜகத்

ப்ரஹ்மம் இரண்டுக்கும் வ்யாப்யத்வமும் வ்யாபகத்வமும் ச்ருதிஸித்தமாக இருப்பதா வென்று கருத்து. 'ததுவஸ்த்வைக்யக்ருதம்' என்கிற ப்ரதிஜ்ஞையை உபபாதிக்கிறார்— யந்மயம் என்று. விகாரமென்கிற அர்த்தத்தை ஸந்தேஹித்துப் பரிஹரிக்கிறார்— யந்மயமித்திமயட் என்று. எதனால் என்று வினவப்படுமேயாகில் கூறுகிறார்— ப்ருதக் என்று விகாரம் பொருள் எனக்கொண்டால் உபாதாநம் வினவப்பட்டதாக ஆகும். அது வினவத்தக்கதல்ல, யத: என்கிற பஞ்சம்யந்தபதத்தினால் உபாதாநமும் வினவப்பட்டிருப்பதால். ஆகலால் தனி ப்ரச்நத்திற்கு வையர்த்த்யம் ஸம்பவிக்கும். வேறு அர்த்தம் ஸம்பவிப்பதால் கோபலீவர்த நியாயமும் ஸம்பவிக்கிறதில்லை. அபேக்ஷித விதியை விட அநபேக்ஷிதவிதாநம் துர்பலம் என்கிற ந்யாயமும் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மாஜ்ஞாநவாதிக்கு அபிமதமான ஸ்வார்த்திக பக்ஷத்தைத் தூஷிக்கிறார்— நாபி என்று. பேதாபேதபக்ஷத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டதை தூஷிக்கிறாரில்லை அது மேலே தூஷிக்கப்படப்போகிறது. பொருள் ஸம்பவிக்கிறதாக இருக்க அதை ஆச்ரயிக்காமலிருப்பது பொருந்தாதென்று சப்தத்தாலுணர்த்தப்பட்டிருக்கிற அர்த்தத்தை ஸ்வீகரித்து அச்ருதத்தை கல்பிப்பதல்லவோ உசிதமானது. ச்ருதபரித்யாகம் உசிதமன்று. ப்ரஹ்மஜ்ஞாநவாதியினால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஸ்வார்த்திகத்வத்திற்கு அஸாதாரணமான தூஷணத்தைக்கூறுகிறார்— ஜகத் என்று ஸ்வார்த்திகத்வபக்ஷத்தில் 'யதிதம் ஜகத்ததேம' என்று சொல்லப்பட்டிருந்தால் அறியப்பட்டிருக்கிற ஜகத்ரூபமாத்ரத்திற்கு வினவத்தக்க தன்மை பொருந்தாததலால் ப்ரச்நத்திற்கு வையர்த்யம் வாராமைக்காக அது ஸத்யமா? அல்லது மித்யையா என்று வினவப்பட்டதாக ஆகிறதென்று ஒப்புக்கொள்ளத்தக்கது. அப்பொழுது மித்யா என்று உத்தரம் சொல்லத்தக்கது அங்கு இரண்டில் ஒன்றின் ஆகாரத்தை ஸ்தாபிக்கின்றதும் ஆகாராந்தர நிஷேதகமாயுமிருக்கிற சப்தம் சொல்லத்தக்கதாக இருக்க இரண்டு ஆகாரங்களுக்கு உபஸ்தாபகமான ஸாமாநாதிகரண்யம் உபபன்னமாகாதென்று அர்த்தம். பாதார்த்தம் ஸாமாநாதிகரண்யம் என்று சொல்லப்படுமேயானால் அதில்லை. என் தாயார் மலடி என்பதுபோல் ஸாமாநாதிகரண்யம் பாதார்த்தம் என்பது வ்யாஹதமாக இருப்பதாலென்று கருத்து. அப்படியாகில் எவ்வாறு உத்தரம் இருக்கலாமென்றுகேட்கில் சொல்லுகிறார்— ததாஹி என்று. விஷ்ணுவென்பது அந்யதாகாரோபஸ்தாபக சப்தம். ஆகாராந்தரத்தை நிஷேதிக்கிற சப்தம் ஏவகாரம். நேரான அர்த்தத்தைச்சொல்லுகிறார்— அத: என்று. அத: ஸ்வார்த்திகத்வம் விகாரார்த்தம் இரண்டும் அநுபபன்னமாதலாலென்று அர்த்தம். சப்தாநுசாஸநாநுமதியைக்காண்பிக்கிறார்— தத் என்று. ப்ரகர்ஷத்தால் செய்யப்பட்டது. ப்ரக்ருதம் ப்ரசுதம். ப்ராசுரமென்று அர்த்தம். 'அந்நமயோயஜ்ஞ: சகடமயீயாத்ரா' என்றல்லவோ அதற்கு உதாஹரணம்.

இதில் என்ன ப்ராசுர்யமிருக்கிறதென்று கேட்கில் சொல்லுகிறார்— க்ருத்ஸ்நஞ்ச என்று. 'அந்தர்பஹிஶ்சவ்யாப்ய' இதுமுதலிய ச்ருதியினால் அது உபபன்னமென்று கருத்து. ஸாமாநாதிகரண்யத்திற்கு ப்ரதிபாதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கிற சரீராத்மபாவஸம்பந்தத்வத்தை உபஸம்ஹரிக்கிறார்— தஸ்மாத் என்று. யந்மயம் என்கிற ப்ரச்நமானது ப்ராசுர்யத்தை அர்த்தமாகக்கொண்டிருப்பதால் ஜகச்சஸ: என்பது அதற்கு உத்தரமாதலால் ஸாமாநாதிகரண்யத்திற்கு சரீராத்மபாவஸம்பந்தத்வம் ஸித்தம். அந்த சரீராத்மபாவஸம்பந்தஸாமாநாதிகரண்யத்தால் ஸ்வார்த்திகத்வ நிவ்ருத்தி. அதனால் யந்மயம் என்கிற மயட் ப்ரத்யயத்திற்கு ப்ராசுர்யம் அர்த்தம் என்று அந்யோந்யாச்ரயம் என்று சொல்லப்படுமேயானால் இவ்வண்ணமல்ல. மயட் ப்ரத்யயத்தின் ஸ்வார்த்திகத்வ நிவ்ருத்தியும் ப்ராசுர்யார்த்த நிர்ணயமும் ஸாமாநாதிகரண்யத்தினுடைய சரீராத்மபாவஸம்பந்தத்வத்தை அபேக்ஷியாமலிருப்பதால். அர்த்தவத்த்வம் ஸம்பவிக்கிறதாக இருக்க

ஸிரர்த்நரத்வத்தை ஸ்வீகரிக்கக்கூடாததலால் ஸ்வார்த்திகத்வம் முற்றிலும் விலக்கப்பட்டது. ஜகச்சஸ: என்கிற ஸாமாநாதிகரண்யத்தாலும் நிரஸிக்கப்பட்டது. ஸ்வார்த்திகத்வமிருக்குமேயாகில் ஆகாரத்வயோபஸ்தாபகமான ஸாமாநாதிகரண்யத்திற்கு உத்தரத்வம் கூடாததலால் - சரீராத்மபாவநிபந்தநத்வம் கூடாததலாலல்ல. ஸாமாநாதிகரண்யத்தினுடைய ப்ரவ்ருத்திநிமித்த பூதாகாரத்வயோபஸ்தாபகத்வமானது மயட் ப்ரத்யயத்தினுடைய ஸ்வார்த்திகத்வ நிவ்ருத்தியை அபேக்ஷிக்கிறதில்லை. ஸாமாநாதிகரண்யத்தின் லக்ஷணஸ்வபாவத்திலேயே அதற்கு ஆகாரத்வயோபஸ்தாபகத்வம் ஸித்திப்பதால். ஆகையால் மயட் ப்ரத்யயத்திற்கு ஸ்வார்த்திகத்வ நிவ்ருத்தி. ஸாமாநாதிகரண்யமானது ஆகாரத்வயோபஸ்தாபகமாதலால். என்பதினால் இங்கு அந்யோந்யாச்ரயமில்லை. இவ்வண்ணமாக ஸ்வார்த்திகத்வம் நிரஸிக்கப்பட்டிருக்க தனியாக ப்ரச்நத்திற்கு ப்ரயோஜநமில்லாமையால் விகாரார்த்தத்வம் பொருந்தாமல்போக பாரிசேஷ்யத்தால் ஸ்திதிக்கு ப்ரச்நம் செய்யத்தக்க தன்மை இருக்க ஸ்திதிஸ்வபாவத்தாலும் அநுசாஸநாநுஸாரணத்தாலும் மயட் ப்ரத்யயத்திற்கு ப்ராசுர்யரூபார்த்த விசேஷபரத்வம் ஸித்திக்கிறது. அதனால் ஜகச்சஸ: என்கிற ஸாமாநாதிகரண்யத்திற்கு சரீராத்மபாவரூப ப்ரவ்ருத்திநிமித்தவிசேஷஸித்தி என்பதனால் அந்யோந்யாச்ரயமில்லை. இவ்வண்ணம் ஸாமாநாதிகரண்யத்திற்கு ம்ருத்ஷாவாதிக்கு அபிமதமான ஐக்யபரத்வம் சொல்லும்பக்ஷத்தில் மயட்டுக்கு ஆநர்த்தக்யம் ஸாமாநாதிகரண்யத்திற்கு அநுபபத்தி என்கிற இரண்டு தூஷணங்களும் ஸ்வரூபைக்யபரம் என்கிற பக்ஷத்தில் அர்த்தவிரோதம் யந்மயம் என்று சொல்லப்பட்ட ப்ரச்நோத்தரத்வாநுபபத்தி என்கிற இரண்டு தூஷணங்களும்காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. தன்னால் சொல்லப்பட்ட அர்த்தத்தை ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் தூஷணத்தைக் கூறுகிறார்—அந்யதா என்று. அப்படி இல்லாவிட்டால் எவ்வாறு ப்ரச்நப்ரதிவசநங்கள் இருக்கலாமென்று கேட்கில் சொல்லுகிறார்—ததாஹி ஸதி என்று. ஸாமாநாதிகரண்யத்திற்கு பேதாபேதவாதியால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஏகத்ரவ்யதாபரத்வத்தை தூஷிக்கிறார்—ஜகத் என்று. இந்த பக்ஷத்திலும் ஜகத்தானது யந்மயம், ஜகத்தானது யத்த்ரவ்யம் என்று கேட்கப்பட்டிருக்கவேண்டும். அப்பொழுது மயட்வையர்த்த்யமிருக்கிறதென்று காணத்தக்கது. யத: என்று உபாதாநம்கேட்கப்பட்டிருப்பதால். அதிக தூஷணம் கூறுகிறார்—ஸத்ய இது முதலியதால். ஸத்யஸங்கல்ப இது முதலியதால் ஜீவன்களை அடைந்துள்ள தோஷமும் ஸர்வாசுப இதுமுதலியதால் ப்ரக்ருதியை அடைந்திருக்கிற தோஷமும் ப்ரஹ்மத்தினிடம் ப்ரஸங்கிக்கிறதென்று சொல்லப்பட்டது அந்தக்கே உபயலிங்கத்வஹாநியும் விபரீதாகார ப்ராப்தியுமென்று அர்த்தம். சரீரத்தைச் சொல்லுகிற பதத்திற்கு சரீரிபரத்வம் சொல்லப்பட்டால் முக்யத்வம் ஸம்பவியாமையென்று வினவப்படுமேயானால் சொல்லுகிறார்—ஆத்மசரீர என்று. 'ஸ்தாப்யதே' ஸ்தாபிக்கப்படப்போகிறது என்று பொருள். அடுத்துவரப்போவதால் ஸ்தாப்யதே என்று சொல்லப்பட்டது.

---

கூதஃ ‹‹ விஶேஷாஸகாமாநுஷந்ஹிதம் ஜமதமெதேவ வ ஷியதழ்

ஷிதிஸம்யக்ககூ்ாஷெள ஜமதொஸ்ஸ ஜமஜுஸ:'' (வி-வா-க-க-

ருக) ஐதி ஸஹஜெஹெணாக்ஷயூம் ‹‹ வறஃவராணாழ்'' ஐதயாரஷ

விஷ்ரண வககு வராஜஹஹிதம் ஹமவதேம் விஷணம் ஷெஷெவ

ஷாஹிவெணாவஷிதழ் ‹‹ அவிகாராய'' ஐதிஶுாஷெ ஷ்யம

𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯, 𑌤𑌦𑍇𑌵𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭 𑌸𑍍𑌵𑌾𑌵𑌤𑌾𑌰 𑌶𑌙𑍍𑌕𑌰𑌾𑌦𑌿 𑌤𑍍𑌰𑌿𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌕𑌾𑌲𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌸𑌮𑌷𑍍𑌟𑌿𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌚 𑌨𑌮𑌸𑍍𑌕𑌰𑍋𑌤𑌿। 𑌤𑌤𑍍𑌰 “𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂” 𑌇𑌤𑍍𑌯𑌯𑌂 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿 𑌪𑍍𑌰𑌾𑌧𑌾𑌨𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌮𑌾𑌹। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌤𑍍𑌰 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 ॥

ஸ்ரீபாஷ்யம்—

ஆதலால் "விஷ்ணோஸ்ஸகாசாதுத்பூதம் ஜகத்தத்ரைவச ஸ்திதம், ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்சஸ:" (உலகமானது விஷ்ணுவின் பக்கத்திலிருந்து உண்டாயிற்று. அவரிடத்திலேயே நிலைபெற்றிருக்கிறது. இந்த ஜகத்துக்கு ஸ்திதியையும் நாசத்தையும் செய்பவர் அவர் ஜகத்தும் அவர்) என்று சுருக்கமாகச்சொல்லப்பட்ட அர்த்தத்தை 'பர:பராணாம்' என்று தொடங்கி விஸ்தாரமாகச்சொல்வதற்காக பரப்ரஹ்மமாக இருப்பவரும், ஆறு குணங்களால் நிறைந்தவரும் தன்னுடையதாகவே இருக்கிற ரூபத்தோடு இருப்பவருமான விஷ்ணுவை 'அவிகாராய' என்கிற ச்லோகத்தினால் முதலில் ப்ரணாமம் செய்து ஹிரண்யகர்ப்பன் தன்னுடைய அவதாரமாக இருக்கிற மஹாவிஷ்ணு சங்கரன் என்கிற த்ரிமூர்த்தி ரூபமாகவும் ப்ரதாநம்காலம் க்ஷேத்ரஜ்ஞர்களுடைய ஸமஷ்டிரூபமாகவும் வ்யஷ்டிரூபமாகவுமிருக்கிற அவரையே நமஸ்கரிக்கிறார்.

ச்ருதப்ரகாசிகை—

இவ்வண்ணமாக ப்ராக்ருத ச்லோக வ்யாக்கியாநத்திற்கு உபயுக்தமான அர்த்தம் விஸ்தரிக்கப்பட்டது. அதற்குமேல் சாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹமானவுடன் விஸ்தாரத்தின் தொடக்கத்தில் நமஸ்காரவிஷயமான ஏழு ச்லோகங்களையும் அவதாரிப்பித்து வ்யாக்யாநிக்கத்தக்க ச்லோகத்திற்கு நமஸ்கார ச்லோகாந்தரங்களோடு ஸங்கதியைக்காண்பிப்பதற்காக 'அவிகாராய' இது முதலிய ஆறு ச்லோகங்களுடைய வாக்யார்த்தத்தைக்கூறுகிறார்—அத: என்று. 'அத:' ப்ரச்நப்ரதிவசநம் முதலியவைகளால் சாஸ்த்ரமானது விபூதிகளுடன்கூடின ஸகுணவஸ்து ப்ரதிபாதகமென்று அறியப்படுவதாலும், ஸாமாநாதிகரண்யத்திற்கு விசிஷ்ட வஸ்துவில் முக்கியவ்ருத்தத்வம் இருப்பதாலுமென்று கருத்து. அத: என்கிற பதத்திற்கு வ்யஷ்டிரூபேண அவஸ்திதஞ்ச நமஸ்கரோதி என்பதோடு அந்வயம். அன்றிக்கே சாஸ்த்ரவாக்யார்த்தம் இவ்விதமாக இருப்பதால் விஷ்ணோஸ்ஸகாசாத் என்பதற்கு ஸங்க்ரஹ ரூபத்வமும், பர: பராணாம் இது முதலியவைகளுக்கு விஸ்தாரரூபத்வமும் ஸித்தமென்று அர்த்தம். விஷ்ணோ:ஸகாசாத் என்கிற இடத்தில் ஸகாசாத் என்கிற பதமானது ஷஷ்டிக்கு பஞ்சமியின் அர்த்தத்தை ஸம்பாதிப்பதற்காக எவ்

வாறு அஸ்யக்ருதே என்று சொல்லப்பட்டால் க்ருதே என்கிற சப்தத்திற்கு சதுர்த்தியின் அர்த்தத்தை ஸம்பாதிப்பதில் நோக்கமோ அப்படிப்போல. அன்றிக்கே ஸகாசாத் ஸஸங்கல்பாத், காசநம் ப்ரகாசநம் ஸங்கல்பரூபஜ்ஞாநம். அந்த ஸங்கல்பரூபமான ஜ்ஞாநத்துடன் கூடியவரிடத்திலிருந்து என்று அர்த்தம். இதனால் நிமித்தத்வம் ஸித்தித்தது. அன்றிக்கே ஸகாச சப்தம பார்ச்வத்தைச்சொல்லுகிறது. அதனால் சரீரம் உபலக்ஷிக்கப்பட்டது. 'ஸோபித்யாயசரீராத்ஸ்வாத்' என்கிற மநுஸ்ம்ருதி ச்லோகத்தில் போல சரீரத்திலின்று என்றுபொருள். தத்ரைவசஸ்திதம் என்பது ஸயஸ்தாநப்ரச்நத்திற்கு உத்தரம். 'தத்ரஸ்திதமிதி' ஸ்திதம் நிஷ்டையை அடைந்திருக்கிறது. இதனால் ஜகத்திற்கு நித்யத்வமும் அவஸ்தைகளுக்கு தோன்றுதலும் அழிதலும் ஸூசிப்பிக்கப்பட்டது. ஸயஸ்தாநப்ரச்நத்திற்கு உத்தரம் கூறப்பட்டது. பிறகு ஸத்தைச்செய்பிறவன் எவன் என்கிற வினாவுக்கும் பாஹ்யங்களான வஸ்துக்களின் ஸ்திதி விஷயமான வினாவுக்கும் உத்தரமளிக்கிறார்—ஸ்திதி என்று. ஜகச்ச ஸ: என்பது யந்மயம் என்பதனால் பலித்திருக்கிற ஸர்வாந்தர்யாமி ரூபத்தால் செய்யப்பட்டிருக்கிற ஸத்தை அநுவ்ருத்திரூபமான ஸ்திதி ப்ரச்நத்திற்கு உத்தரம். அன்றிக்கே, யந்மயம் என்று பலித்த ஸ்திதி ப்ரச்நத்திற்கும் ஸ்திதி ஸம்யம கர்த்தா என்பதே உத்தரம். ஜகச்ச ஸ: என்பதோவென்றால் யந்மயம் என்று கண்டோக்தமான அர்த்தத்திற்கு உத்தரம். இந்த ஸாமாநாதிகரண்யமானது ஆத்மாவாக இருந்து வ்யாபித்திலேக்காரணமாகக்கொண்டதென்று முன்னமே உபபாதிக்கப்பட்டது.

அய்யா! சௌக்ல்யம் முதலிய நிஷ்கர்ஷக சப்தங்களுக்கு தாற்பர்யந்தபோதஜாதத்வம் காணப்பட்டிருக்கவில்லை. யந்மயம் ஜகத் என்பதனால் ஜகத் சப்தத்திற்கு நிஷ்கர்ஷக சப்தத்வம் காணப்பட்டிருக்கிறதுபற்றி தாற்பர்யந்தாபிதாயகத்வமில்லாமையால் ஜகச்ச ஸ: என்கிற ஸாமாநாதிகரண்யம் உபபந்நமாகாதென்று வினவப்படுமேயாகில் மறுமொழி சொல்லப்படுகிறது. நிஷ்கர்ஷக சப்தங்கள் இரண்டுவிதங்களன்றோ - நியத நிஷ்கர்ஷகங்களென்றும் வைவக்ஷிக நிஷ்கர்ஷகங்களென்றும். அவற்றுள் சௌக்ல்யம் முதலிய சப்தங்கள் நியதநிஷ்கர்ஷகங்கள். மநுஷ்ய சுக்ல முதலிய சப்தங்கள் வைவக்ஷிக நிஷ்கர்ஷகங்கள். ப்ரயோகம் இவைகளுக்கு நியாமகமாக இருப்பதால், அங்ஙனமில்லாவிடில் நிஷ்கர்ஷகம் அநிஷ்கர்ஷகம் என்கிற விபாகமும் பொருந்தாது. அப்படியே ஜகத் சப்தமும் வைவக்ஷிக நிஷ்கர்ஷகம். அதனாலேயே யந்மயம் என்று வையதிகரண்யத்தால் பிறந்த ப்ரச்நத்திற்கு ஜகச்ச ஸ: என்று ஸாமாநாதிகரண்யத்தினால் உத்தரமானது அர்த்தபேதமில்லாமையால் பொருத்தமுள்ளதாக ஆகிறது. சுக்ல குணத்திற்கு ஆச்ரயம் எது என்கிற வினாவுக்கு சுக்ல: பட: என்கிற உத்தரம்போல். இவ்வண்ணம் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருப்பதும், இனி விஸ்தாரமாக சொல்லப்படப் போகிறதுமான அர்த்தத்திற்கு கொஞ்சம் விஸ்தாரரூபமாக ச்லோகங்களால் நமஸ்காரம் செய்யப்படுகிறதென்று நமஸ்காரச்லோக ஸங்கதி. ஸ்வேனைவரூபேண அவஸ்திதம் - ப்ரக்ருதிமுதலியவைகளோடு கூடியதல்லவென்று அர்த்தம். பரப்ரஹ்மத்திற்கன்றோ ஹேயஸம்பந்தத்தின் இன்மை. விஷ்ணுவுக்கோவென்றால் ஹேயஸம்பந்தத்தின் இன்மை கிடையாது என்கிற ஸந்தேஹம்வரின் 'விஷ்ணுநாமாஸவேதேஷு, ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ண்வாக்யம் பரமம்பதம்' என்கிற வசநங்களால் ப்ரஹ்மமே விஷ்ணுசப்தவாச்யமாதலாலும் விஷ்ணுவுக்கே பகவத்சப்தவாச்யத்வமிருப்பதாலும், விஷ்ணுவுக்கு ஹேயஸம்பந்தம் அநுபபன்னமென்கிற அபிப்ராயத்தால் பரப்ரஹ்மபூதம் இதுமுதலிய விசேஷணம் உரைக்கப்பட்டது. அவிகாராய விகாரசப்தம் தர்மியையும் தர்மத்தையும் உணர்த்துகிறது.

ஷோடசகச்ச விகார: இதுமுதலிய ப்ரயோகத்தால். தான் ஒன்றின் விகாரமாக இருந்து கொண்டு ஸ்ரீயமாக ஆகிறதில்லை. என்பதனால் அவிகார: இதனால் கார்யமான அசித்தின் வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. அன்றிக்கே விகார: - அவஸ்தை, மஹத்த்வம் அஹங்காரத்வம் முதலியது. எப்பொழுதும் அவைகளின் ஸம்பந்தமில்லாமையால் அவிகாரன்-அதனால் விகாரமுள்ள ப்ரக்ருதியானது அவிகார பதத்தால் வ்யாவ்ருத்திக்கிறது. இவ்வண்ணம் தத்புருஷபஹுவ்ரீஹி ஸமாஸங்களால் அவிகாராய என்கிற பதத்தினால் கார்யகாரண ரூபா வஸ்தாத்வயத்துடன் கூடின அசித்தின் வ்யாவ்ருத்தி ஸித்திக்கிறது. சுத்தாய என்பதனால் பத்தவ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. நித்யாய சுத்தமையோடு நித்யனாக இருக்கிற-அங்ஙனமில்லாவிடில் அவிகாராய என்பதனால் புநருக்தி உண்டாகும். நித்யபதமானது சுத்தியை விசேஷியாநின்றுகொண்டே சுத்திமத்தான வஸ்துவுக்கு விசேஷணம் எவ்வாறு மஹோதா: என்கிற இடத்தில் மஹச்சப்தமானது ஔதார்யத்தை விசேஷித்துக் கொண்டே தாதாவுக்கு விசேஷணமோ அப்படிப்போல. அதினால் முக்தவ்யாவ்ருத்தி ஸித்தித்தது. பரமாத்மந: என்பதனால் நித்யமுக்தவ்யாவ்ருத்தி ஏற்பட்டது. அவர்கள் பாரதீநர்களே ஒழிய பரமர்களல்ல. 'ப்ரதாநம் புருஷன் அவ்யக்தம் காலம் இவைகளுக்கெல்லாம் பரமம்' என்று சொல்லப்போவதால் அவிகாராய இதுமுதலிய நான்குபதங்களால் ப்ரதாநபுருஷ அவ்யக்தகாலங்களுக்கு வ்யாவ்ருத்தி என்று சிலர். நிமேஷம் முதலிய அவஸ்தைகளுடன்கூடின காலமானது வ்யக்தமாக இருந்தபோதிலுங்கூட அவிகாரபதத்தால் வ்யாவர்த்திக்கப்பட்டிருப்பதாலும் புருஷர்களுக்கு மூன்றுவகைப்பட்டிருத்தலே ப்ராமாணிகமாதலாலும் விசேஷணங்களுக்கு அந்த புருஷபேத வ்யாவர்த்தகத்தில் ஸாமர்த்யத்தினாலும் எவ்வாறு இங்கு சொல்லப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட இந்த அர்த்தங்களுக்கே வ்யாவர்த்தகத்வம் உசிதம். விலக்ஷணமான விக்ரஹத்தோடுகூடி இருந்தாலும் எல்லா வஸ்துக்களோட்டிலும் வைலக்ஷண்யத்தைக்கூறுகிறார்—ஸதைகரூபாய என்று. முதலாவதான ரூபசப்தம் ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. ஒரே ஸ்வபாவமுள்ளவனென்று அர்த்தம். ப்ரவ்ருத்திபவாதிகளான எல்லா அவஸ்தைகளிலும் ஸகலேதர ப்ரத்யநீகத்வம் மங்களாஸ்பதத்வம் த்யேயத்வம் முதலிய ஸ்வபாவம் நழுவாமலிருக்கிறதென்று அர்த்தம். அன்றிக்கே ஏகரூபம் திவ்யாத்ம ஸ்வரூபத்தோடு ஸமாநஸ்வபாவமுள்ளது. அதனாலும் ஹேயப்ரத்யநீகத்வம் முதலியது ஸித்தித்தது. இந்த பதங்களால் சுத்திஆநந்தமயாதிகாரணங்களுடையவும் அந்தர்நித்யவித்யையினுடையவும் அர்த்தங்கள் விவக்ஷிக்கப்பட்டன. முற்கூறப்பட்ட ஆத்மத்வமானது யத்ராத்மகோசட: என்பதுபோல் ஆகிறதில்லை என்று அதின்வைசத்யமானது அவயவசக்தியினால் விஷ்ணுசப்தத்தினாலும் ஸர்வஜிஷ்ணவே என்கிற பதத்தாலும் செய்யப்படுகிறது. இரண்டு பதங்களால் § ச்ருபன் § சபன் இரண்டும் வ்யாவர்த்திக்கிறது. உள்புகுந்து நியமநம் செய்வதன்றோ சரீரித்வம். இதனாலேயே ஆத்மத்வம் விவரிக்கப்பட்டதாக ஆகிறது. விஷ்ணுசப்தம் ரூடமான பதமாதலால் தேவதாவிசேஷநிர்ணயமும் ஸித்தித்தது. அன்றிக்கே விஷ்ணுசப்தத்தினாலேயே நியமநபர்யந்தமான வ்யாப்தி கூறப்பட்டது. வ்யாப்தியினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற வ்யாப்யவஸ்துவினுடைய தோஷஸம்பந்த சங்கையை விலக்குகிறார்—ஸர்வஜிஷ்ணவே என்று. விஷ்ணுவுக்கு எவ்வாறு காரணத்வம். ஹிரண்யகர்ப்பன் முதலியவர்களுக்கன்றோ ஸ்ருஷ்டி முதலியதில் காரணத்வமறியப்படுகிறதென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்—நம: என்று. அந்தந்த ஹிரண்யகர்ப்பன் முதலானவர்களை சரீரமாக உடையவரான விஷ்ணுவே ஸ்ருஷ்டி முத

§ ச்ருபன்—அரசன். சபன்—ஆணையம்.

தர்மமாத்ரத்தை போதிக்கும் தன்மை காணப்படுகிறது. அவ்வாறாக விஷ்ணு சப்தமானது விசேஷணமாக இருக்கிற விக்ரஹமாத்ரத்தை உணர்த்துகிறது. ஸமானவிபக்தியுடன் சேர்ந்திராத ப்ரஹ்ம சப்தத்தால் தர்மிக்கு தனித்து நிர்தேசமிருப்பதால் ப்ரஹ்மத்திறுடைய சக்திகளும் ப்ரஹ்மசக்திகள், ஆதலால் அஸமாந விபக்தியினால் நிர்தேசிக்கப்பட்டிருத்தல் என்று. அந்நிக்கே பசுவானுக்கு தேவன் மநுஷ்யன் முதலிய சப்தங்களால் வ்யபதேசம்போல சக்திவிபூதி முதலிய சப்தங்களால் வ்யபதேசமும் விபூதிகளோடு ஸாஜாத்யரூபத்தால் ஏற்படுகிறது. இந்த அர்த்தத்தை ஸ்ரீவத்ஸாங்கமிச்ராள் (கூரத்தாழ்வான்) பணித்திருக்கின்றனர். "ஸஜாதீயவ்யபதேசாயிதாவிபவாக்யாமபிபஜந்" (அந்த விபூதிவர்க்கங்களுக்கு ஸஜாதீயனாக இருந்துகொண்டு இவ்வண்ணமாக ராமக்ருஷ்ணாதிவிபவாமதேயங்களையும் அடையாநின்றவனாக) என்று. ஆகையால் எப்படி அர்த்தம் கூறப்பட்டதோ இதுதான் ஸரியானது. அதற்குமேல் ப்ரக்ருதிகாரணத்தை வ்யாவ்ருத்திப்பதற்காக ப்ரக்ருதியுடன்கூடின பரமாத்மாவை நமஸ்கரிக்கிறார்—ஏகாநேக என்று. காரணாவஸ்தையில் ஒருவர், கார்யாவஸ்தையில் அநேகர். அதற்குமேல் மனத்தில் இருக்கிற கார்யாவஸ்தையைக் கூறுகிறார்—ஸ்தூல என்று. அப்படியே புத்திஸ்தையான காரணாவஸ்தையைக்கூறுகிறார்—அவ்யக்த என்று. அந்த அவஸ்தையாலும் நழுவாத ஸ்வாபாவத்தோடுகூடி இருத்தலைச் சொல்லுகிறார்—முக்திஹேதவ: என்று. அதற்குமேல் காலவிசிஷ்டமாகச்சொல்லுகிறார்—ஸர்க என்று. காலத்திற்கு கூறப்போகிய விசேஷணோபபத்தியினால் ப்ரகரணம் விசிஷ்டபரமாக இருப்பதால். வேறு விசேஷணங்களோடுகூடியிருத்தல் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதினால் காலவைசிஷ்ட்ய தனத்தினது பாரிசேஷ்யத்தாலும் அது பாதிக்கப்படாமற்போனால் அபேக்ஷிதவிதிகளின் அபாவம் ப்ரஸங்கிப்பதாலும் தனித்த ப்ரஹ்மஸ்வரூபத்துக்கு காரணபரத்வம் சொல்லில் அண்டத்திற்குஉள்ளடங்கியிருக்கிற ஸ்ருஷ்டிமுதலியது சொல்லப்பட்டிருப்பதாலும் அண்டத்திற்கு வெளிப்பட்டிருக்கிற தத்வஸ்ருஷ்டிமுதலியது கூறப்படப்போகிறதாக இருப்பதாலும் பௌநருக்த்யம் ப்ரஸங்கிப்பதால் விஸ்தாரத்திலும் ப்ரதாநபுருஷவ்யக்த காலங்கள் "வ்யக்தம் விஷ்ணுஸ்ததாவ்யக்தம புருஷ: காலஏவச, ததாபுருஷரூபேண காலரூபேணசஸ்திதம் ப்ரஹ்மாதக்ஷாதய: கால:" (வ்யக்தமான ப்ரபஞ்சமும் அவ்வாறே அவ்யக்தமான பூதஸூக்ஷமமும் புருஷனும் காலமும் விஷ்ணுவே. அவ்வண்ணமே விஷ்ணுரூபியான ப்ரஹ்மமானது புருஷரூபியாகவும் காலரூபியாகவும் இருக்கிறது. ப்ரஹ்மா தக்ஷன் முதலியவர்கள் காலம்.) இது முதலியவைகளால் வ்யக்தாவ்யக்தாதிகளுடன்கூட சொல்லப்படப்போவதாக இருப்பதால் இந்த ச்லோகம் காலபரமே. அசித்விசிஷ்டவாசியான ச்லோகத்தை அடுத்திருப்பதால் இந்த ச்லோகத்திற்கும் காலபரத்வம் தகுந்தது. மேல்ச்லோகம் ஸமஷ்டி ஸ்திதி விநாசமூலபூதஜீவபரச்லோகத்துடன் சேர்ந்திருப்பதால். காலம் ஸ்ருஷ்டி ஸ்திதி விநாசமூலபூதமென்பது "ப்ரஹ்மாதக்ஷாதய: கால:, விஷ்ணுர்மந்வாதய: கால:, ருத்ர:காலாந்தகஸ்ச" இதுமுதலியவைகளால் ஸித்தம் ஜகந்மய:, அவச்சேதகதையினாலும் அவச்சேத்யதையினாலும் ஜகத்ப்ராணன். அதற்குமேல் க்ஷேத்ரஜ்ஞஸமஷ்டி ரூபமாக இருக்கிற பரத்மாவை நமஸ்கரிக்கிறார் — ஆதாரபூதம் என்று. அசேதநங்களுக்கு சேதநன் ஸ்வரூபத்தால், ஆதாரமாக இருப்பவன். "ஏவமேவைதாபூதமாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ராஸ்வர்பிதா:, ஜீவபூதாம்மஹாபாஹோயயே தம் தார்யதே ஜகத்" (இவ்வண்ணமாகவே இந்த அசேதநபதார்த்தங்கள் சேதநங்களாகிற ஆதாரங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஹே மஹாபாகுபலமுள்ளவனே! எதனால் இந்த உலகம் தரித்திருக்கும்படிசெய்யப்படுகிறதோ அப்படிப்பட்ட ஜீவஸ்வரூபமான) என்கிறவசநத்தினால் அணீயஸ்தவம் ப்ரக்ருதி

யைக்கூட வ்யாபிப்பதற்கு யோக்யமான ஸூக்ஷ்மஸ்வபாவத்தோடுகூடியிருத்தல், அங்கிக்கே விகாஸானுஸ்வரூபைஶ்ச என்று சொல்லப்பட்ட ப்ரகாரம் ஸ்ருஷ்டி தசையின் போல ஜ்ஞாநவிகாஸமில்லாமையால் அணீயஸ்த்வமே என்று அர்த்தம். ஸர்வபூதஸம்பவதி உண்டாகிறது என்கிற வ்யுத்பத்தியினால் பூதம் என்று தத்வங்கள் சொல்லப்படு கின்றன. பூமிபர்யந்தங்களான எல்லா தத்வங்களிலும் நிலைபெற்றிருக்கிற - அதற்குப் பிறகு க்ஷேத்ரஜ்ஞவ்யஷ்டி விசிஷ்டனை நமஸ்கரிக்கிறார்—ஜ்ஞாந என்று.

---

யதி நிர்விஶேஷஜ்ஞாநமாத்ரப்ரஹ்மாதிஷ்டாநப்ரமப்ரதிபாதநபரம் ஶாஸ்த்ரம் ஸ்யாத், ததா — "நிர்குணஸ்யாப்ரமேயஸ்ய ஶுத்தஸ்யாப்யமலாத்மந: । கதம் ஸர்காதிகர்த்ருத்வம் ப்ரஹ்மணோऽப்யுபகம்யதே" (வி-பு-௧-௩-௧) இதி ப்ரஶ்நஸ்ய, "ஶக்தயஸ்ஸர்வபாவாநாமசிந்த்யஜ்ஞாநகோசரா: । யதோऽதோ ப்ரஹ்மணஸ்தாஸ்து ஸர்காத்யா பாவஶக்தய: ॥ பவந்தி தபதாம் ஶ்ரேஷ்ட பாவகஸ்ய யதோஷ்ணதா" (வி-பு-௧-௩-௨) இதி ப்ரதிவசநஸ்ய ச ந கடதே । ததாஹி — நிர்குணஸ்ய ப்ரஹ்மண: கதம் ஸர்காதிகர்த்ருத்வம், ந ப்ரஹ்மண: பாரமார்த்திகஸ்ஸர்க:, அபி து ப்ராந்திபரிகல்பித: இதி ப்ரஶ்நபரிஹாரௌ ஸ்யாதாம் । உத்பத்த்யாதிகார்யம் ஸத்த்வாதிகுணயுக்தா அபரிபூர்ண கர்மவஶ்யேஷு த்ருஷ்டமிதி ஸத்த்வாதிகுணரஹிதஸ்ய பரிபூர்ணஸ்ய அகர்மவஶ்யஸ்ய கர்மஸம்பந்தாநர்ஹஸ்ய கதம் ஸர்காதிகர்த்ருத்வமப்யுபகம்யத இதி ப்ரஶ்நம், த்ருஷ்டஸகலவிஸஜாதீயஸ்ய ப்ரஹ்மணோ யதோதிதஸ்வபாவஸ்யைவ ஜலாதிவிஸஜாதீயஸ்யாக்நேரௌஷ்ண்யாதி ஶக்தியோகவத் ஸர்வஶக்தியோகோ ந விருத்யத இதி பரிஹார: ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

அதில் ஜ்ஞாநஸ்வரூபம் என்கிற இந்த ச்லோகமானது க்ஷேத்ரஜ்ஞ வ்யஷ்டிரூபமாக இருக்கிற பரமாத்மாவினுடைய ஸ்வபாவத்தைக்கூறுகிறது. ஆதலால் இந்த இடத்தில் நிர்விசேஷ வஸ்துவுக்கு ப்ரதீதி இல்லை.

சாஸ்த்ரமானது நிர்விசேஷ ஜ்ஞாநரூப ப்ரஹ்மாதிஷ்டாநப்ரஹ்மத்தைப் பகர்வதில் நோக்குள்ளதாக இருக்குமேயாகில் அப்பொழுது 'நிர்குணஸ்யா ப்ரமேயஸ்யசுத்தஸ்யாப்யமலாத்மந:கதம்ஸர்காதிகர்த்ருத்வம் ப்ரஹ்மணோஹ்

யுபகம்யதே' என்கிற சோத்யமும், 'சக்தயஸ்ஸர்வபாவாநாமசிந்த்ய ஜ்ஞாந கோசரா:- யதோऽதோ ப்ரஹ்மணஸ்தாஸ்து ஸர்காத்யாபாவசக்தய:' பலந்தி தபதாம் ச்ரேஷ்ட பாவகஸ்யயதோஷ்ணதா என்கிற பரிஹாரமும் எவ்வாறு பொருந்தும். அப்படி இருக்குமேயாகில் நிர்குணமான ப்ரஹ்மத்திற்கு எவ்வாறு ஸர்கம் முதலியவற்றில் கர்த்ருத்வம்? ப்ரஹ்மத்திற்கு பாரமார்த்திகமான ஸர்கமில்லை பின்னேயோ ப்ராந்தியினால் கல்பிக்கப்பட்டிருக்கிறதென்று சோத்யபரிஹாரங்கள் இரண்டும் இருந்திருக்கும்.

உத்பத்தி முதலிய கார்யமானது ஸத்வம் முதலிய குணங்களோடு கூடியவர்களும் அபரிபூர்ணர்களும் கர்மவச்யர்களுமாக இருக்கிற சேதநர்களிடம் காணப்பட்டிருப்பதால் ஸத்வாதி குணங்களால் விடுபட்டவனும் பரிபூர்ணனும் கர்மவச்யனாக இராதவனும் கர்மஸம்பந்தத்திற்கு அநர்ஹனாகவுமிருக்கிறவனுக்கு எவ்வாறு ஸர்காதி கர்த்ருத்வம் ஒப்புக்கொள்ளப்படுகிறதென்று சோத்யம். நேரில் காணப்படுகிற எல்லா வஸ்துக்களைக்காட்டிலும் விஜாதீயமாக இருப்பதும் கூறப்பட்டவண்ணமான ஸ்வபாவத்துடன்கூடியதுமாகவே இருக்கிற ப்ரஹ்மத்திற்கு ஜலம் முதலியவற்றைவிட வேறுபட்டிருக்கும் தன்மைவாய்ந்திருக்கிற அக்நி முதலிய வஸ்துக்களுக்கு ஔஷ்ண்யம் முதலிய சக்திஸம்பந்தம்போல எல்லா சக்திகளோடும் ஸம்பந்தமானது விருத்தமாகாதென்று பரிஹாரம்.

---

ச்ருதப்ரகாசிகை—

'ஹிரண்யகர்ப்ப' இது முதலிய பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தங்களில் இந்த ச்லோகமானது எதோடுகூடியிருக்கிற பரமாத்மாவினிடத்தில் சேர்க்குன்றது என்கிற சங்கைவரின் § ஸமாஸத்தில் உள்ளடங்கி இருக்கிற ப்ரஸ்துத ச்லோகார்த்தத்தை விவேசித்துக்காண்பிக்கிறார்—தத்ர என்று. பரமாத்மாவுக்கு ப்ரமஸம்பந்தம் ஸத்வாரகமே என்று அர்த்தம். அதனால் என்னவென்றுகேட்கில் கூறுகிறார்—தஸ்மாத் என்று. நிர்விசேஷ ஜ்ஞாநபரமென்று சொல்லும்பக்ஷத்தில் ப்ரச்நோத்தரவாக்யகதரத்தின் அநுபபத்தி முகத்தால் உபக்ரமவிரோதம் சொல்லப்பட்டது.

அதற்குமேல் மேலத்தியாயத்திலுள்ள சோத்யபரிஹாரங்களின் ஒற்றுமையின்மை கூறப்படுகிறது—யதி என்று. அன்றிக்கே சாஸ்த்ராரம்பத்திற்கு உபயோகியான ப்ரச்நோத்தராநுபபத்தியானது உரைக்கப்பட்டது. இப்பொழுது இந்த ப்ரச்நோத்தர விசேஷாநுபபத்தியானது கூறப்படுகிறது—யதி என்று. முந்தின அத்தியாயத்தில் 'ஜுஷ்ரஜோகுணம்' இதுமுதலியதால் குணஸம்பந்தம் சொல்லப்பட்டிருந்தபோதிலும் 'நிர்கு

---

§ ஸமாஸம்—அநேக ஸுபந்தபதங்களை உள்ளடக்கிக்கொண்டிருக்கிற ஒரு அகண்டபதம்

ஸஸ்ய' என்று சோதகம் செய்தவனுக்கு இது அபிப்பிராயம். குணத்வயம் ஸத்வாரகமாக இருப்பதால் ஸ்வயம் நிர்குணம் நிர்விசேஷ பக்ஷத்தில் அப்ரமேயஸ்ய இதுமுதலிய பதங்கள் பயனற்றவைகள். நிர்குணஸ்ய என்கிற பதத்தினாலேயே நிர்விசேஷத்வம் ஸித்திப்பதால். பரிபூர்ணத்வம் முதலியகுணங்கள் ஒப்புக்கொள்ளப்படாமையாலும் அப்ரமேயாதி பதாந்தரங்களின் சேர்க்கையே நிர்குணபதத்தால் கூறிப்படுத்தப்பட்டிருக்கிற விசேஷத்தினது விஷயஸங்கோசத்திற்கு ஸாதகம். நகடதேஇதி. 'ஸர்காத்யாபாவசக்தய:' என்று ஸர்வசக்தியோகத்தால் சோத்யத்திற்கு பரிஹாரம் கூருவதால் நிர்விசேஷபக்ஷத்திற்குப் பொருத்தமில்லை என்று கருத்து. அங்ஙனமாகில் எவ்வாறு சோத்யபரிஹாரங்கள் இரண்டும் ஸம்பவிக்கலாம் என்று கேட்கில் சொல்லுகிறார் — ததாஹிஸதீ என்று. நிர்குணஸ்ய ப்ரஹ்மண: என்பதினால் பதாந்தரங்களுக்கு வையர்த்த்யம் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. நிர்விசேஷத்திற்கு கர்த்ருத்வாநுபபத்திசோத்யம் செய்யப்பட்டால் கர்த்ருத்வம் பரமார்த்தமாக இருந்தாலன்றோ அவற்றின் அநுபபத்தி, அபர்மார்த்தமாக இருப்பதால் எவ்விதத்தாலும் கூடியாமல்போவதே பூஷணமென்று பரிஹாரம்சொல்லத்தக்கதென்று அர்த்தம். இந்த சோத்யபரிஹாரங்கள் இரண்டும் எதற்காக-இந்த அர்த்தம் ப்ரதிபாதிக்கப்படாமல் போமேயானுலென்று சங்கைவரின் தானே அந்தசோத்யபரிஹாரசரீரத்தைச் சொல்லுகிறார்—உத்பத்யாதி என்று. நிர்குணஸ்ய இதுமுதலிய விசேஷணங்களுக்கு விபரீதாகாரங்களால் கதமென்பதினால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிற கர்த்ருத்வத்தினுடைய வ்யாப்தியைக்காண்பிக்கிறார்—ஸத்வாதிகுணயுக்த இதுமுதலியதால். ஸத்வாதிகுணயுக்தா பரிபூர்ண கர்மவசயத்வங்கள் நிர்குணத்வாதிகளுக்கு யதாக்ரமமான விபரீதாகாரங்கள் - அமலாத்மக: என்பதற்கு விபரீதாகாரமும் கர்மவச்ய என்பதினால் அர்த்தஸித்தம். அமலாத்மத்வம் அமலஸ்வபாவத்வம், கர்மஸம்பந்தாநர்ஹத்வம்-அதற்கு விபரீதமான ஆகாரம் கர்மஸம் பந்தார்ஹத்வம் அதுவும் கர்மவச்ய சப்தத்தால் அர்த்தஸித்தம். கர்மஸம்பந்தார்ஹத்வ காரியமன்றோ கர்மவச்யத்வம், நிர்குணஸ்ய இதுமுதலிய பதங்களுக்கு வரிசை தவறாமல் அர்த்தம் கூறுகிறார்.—ஸத்வாதிகுணாஸஹிதஸ்ய இதுமுதலிய பதங்களால்.

'கர்மஸம்பந்தாநர்ஹஸ்ய' என்கிற இந்த பதத்தினால் அமலாத்மக :என்கிற பதம் வ்யாக்கியானிக்கப்பட்டதாக ஆகிறது. கர்மாவுக்கு வசப்படாமலிருத்தல் முக்தனுக்கும் இருக்கிறது. அவன் முக்தினநிலைமையில் கர்மஸம்பந்தமுள்ளவனாக இருந்தால் அதற்குத் தகுதியுள்ளவன். ஆதலால் அதற்கு வ்யாவர்த்தகமான கர்ம்ஸம்பந்தாநர்ஹத்வமே அமலாத்மத்வம்-அகர்மவச்யத்வம்-கர்மாக்களால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற சுகதுக்கங்களை அடையாமை கர்மவச்யர்களுக்கு விஸஜாதீயனாக இருத்தல் கர்மஸம்பந்தார்ஹத்வம் ஸ்ருஷ்டி முதலியவற்றில் கர்த்ருத்வம் ஒப்புக்கொள்ளப்பட்டால் முக்குணங்களுக்கு வசப்பட்டிருத்தல் அபேக்ஷையுள்ளவனாக இருத்தல் கர்மாதீனமான பலன்களை அடைதல், கர்மஸம்பந்தத்திற்குத் தகுதியுள்ளவனாக இருத்தல் இவைகள் ப்ரஸங்கிக்குமென்று விசேஷவிரோத ப்ரஸஞ்ஜநத்தினால் சோத்யம். அக்நியை த்ரவ்யமென்று சொல்லில் அநுஷ்ணத்வம் ப்ரஸங்கிக்கும் என்பதுபோல இந்த தர்கமானது தர்மிக்ராஹக ப்ரமாணத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் விஸஜாதீயதர்மிக்கு விஸஜாதீயமான தர்மத்தோடு சேர்ந்திருத்தல் தகுதியுள்ளது. அக்நித்வம் இருந்தபோதிலுங்கூட இடி நெருப்புக்கு ஜலத்தினலணைக்கப்படத்தக்க தன்மை இல்லாததுபோல. ஆகையால் எல்லா வஸ்துக்களையும்விட வேறுபட்டிருக்கிறதான ப்ரஹ்மத்திற்கு எல்லா சக்திகளுடைய ஸம்பந்தம் உபபன்னமாகிறதென்று பரிஹாரமென்று அர்த்தம். "சக்தயஸ்ஸர்வபாவாநாம்"

என்கிற க்ரந்தத்திற்கு இது அக்ஷரார்த்தம். அநித்யஜ்ஞாநகோசரா: தார்கிகத்ருதாக ப்ரமிதி ஸித்தங்கள். ஸர்காத்யா: ஸர்காதிகோசரங்கள். பாவசக்தய: - வஸ்துசக்திகள். 'ப்ரஹ்மணோ வஸ்துசக்தய:' என்கிற நிர்தேசமானது ப்ரஹ்மதாதாத்மயம் என்பது போல. அன்றிக்கே ப்ரஹ்மத்தினுடைய பாவசக்திகள் வஸ்து சக்திகள் ப்ரஹ்மத்தினுடைய வஸ்துத்வப்ரயுக்தங்கள். ஸத்தாப்ரயுக்தங்களான நிருபாதிகசக்திகள் என்றர்த்தம்.

---

[illegible]

---

ஸ்ரீபாஷ்யம்—

"பரமார்த்தஸ்த்வமேவைக:" இதுமுதலியதுங்கூட ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றது அனைத்துக்கும் அபாரமார்த்த்யத்தைச் சொல்லுகிறதில்லை. பின்னையோ எல்லாம் ப்ரஹ்மாத்மகமாக இருப்பதால், ப்ரஹ்மாத்மகமாக இராமல் ப்ரஹ்மத்தைவிட தனித்திருக்கிறவஸ்துக்களுக்கு அபாரமார்த்த்யத்தைச்சொல்லுகிறது. அதையே உபபாதிக்கிறார். "தவைஷமஹிமா யேநவ்யாப்தமேதச்சராசரம்" (எதனால் இந்த ஜங்கம ஸ்தாவராத்மகமான ப்ரபஞ்சம்

வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ இது உம்முடைய மஹிமைதான்) என்று. யாதொரு உன்றால் இந்த சராசரமனைத்தும் வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ அதனால் இவை அனைத்தும் உன்னை ஆத்மாவாகக்கொண்டதே - உன்னைவிட வேறு ஒன்றும் கிடையாது, ஆகையால் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பதால் நீ ஒருவனே பரமார்த்தமாக இருப்பவன். அதனால் இதுகூறப்படுகிறது- "தவைஷ மஹிமா யா ஸர்வவ்யாப்தி:" என்று. அப்படி இல்லாவிட்டால் தவைஷா ப்ராந்தி: என்று சொல்லத்தக்கது.'ஜகத:பதே த்வம்' இது முதலிய பதங்களுக்கு லக்ஷணையும் ஏற்படவேண்டியதாகும். லீலையினால் பூமியை ஸமுத்திரஜலத்தினடியிலிருந்து மேலே தூக்கிக்கொண்டு வராநின்ற மஹாவராஹரூபியான பகவானுடைய ஸ்துதிப்ரகரண விரோதமும் வரும். யாதொரு காரணத்தால் உலகம் முழுவதும் ஜ்ஞாந வடிவுள்ளவரான உம்மால் ஆத்மாவாக இருந்துகொண்டு வ்யாபிக்கப்பட்டிருப்பதால் உமக்குமூர்த்தியா அதனால் ஜகத்முழுவதும் த்வதாத்மகமென்கிற அநுபவத்திற்கு ஸாதநமாயுள்ள யோகமில்லாதவர்கள் இதை கேவலதேவமனுஷ்யாதி ரூபமென்று ப்ராந்தி ஜ்ஞாநத்தினால் பார்க்கிறார்களென்று சொல்லுகிறார் - "யதேதத் த்ருச்யதே" என்று. உள்ளபடி உன்னை ஆத்மாவாகக்கொண்டிருக்கிற ஜகத்தை தேவமநுஷ்யாத்யாத்மகமாகப் பார்ப்பதுமாத்ரமே ப்ரஹ்மமல்ல ஜ்ஞாநாகாரர்களான ஆத்மாக்களை தேவன் மனுஷ்யன் முதலிய அர்த்தாகாரமுள்ளவர்களாகப் பார்ப்பதும் ப்ரமம் என்று சொல்லுகிறார் - "ஜ்ஞாநஸ்வரூபமகிலம் என்று.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் நான்கு ச்லோகங்களையும் வ்யாக்யாநம்பண்ணுகிறார்-பரமார்த்த: என்று. எல்லாவஸ்துக்களும் ப்ரஹ்மபர்யந்தமாக இருப்பதுபற்றி அந்த ப்ரஹ்மத்திற்குச் சரீரமாதலால் எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்ட ப்ரஹ்மமே பரமார்த்தம். அந்த ப்ரஹ்ம பர்யந்தமல்லாதது மித்யை என்ற அர்த்தம். ஜகத:பதே என்பதினால் ஆகாசத்திற்கு வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. 'யேந வ்யாப்தம்' என்பதனால் அரசனுக்கு வ்யாவ்ருத்தி உண்டாயிற்று. இதனால் ஜகத்திற்கு சரீரலக்ஷணம் காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. வ்யாப்யத்வதர்மத்தோடுகூடச் சேர்ந்திருக்கிற நியாம்யத்வதார்யத்வசேஷத்வங்களுக்குள் ஒன்றல்லவோ சரீரலக்ஷணத்திற்கு த்யோதகம். ஜகத்தைச் சரீரமாகக்கொண்டிருக்கிற உன்னைத்தவிர்த்து மற்றது மித்யை என்று சொன்னால் அந்த ப்ரஹ்மபர்யந்தமாக இராத ஸ்வதந்த்ரமான வஸ்த்வந்தரத்திற்கே மித்யாத்வம் ஏற்படுமே ஒழிய அந்த ப்ரஹ்மத்திற்குச் சரீரமாக இருக்கிற ஜகத்திற்கு மித்யாத்வம் ஏற்படாது. எவ்வாறு ஹே பூபதியே! உன்னைக்காட்டிலும் வேறு ஒருவனில்லை என்று சொன்னால் பூமியானது மித்யையாக ஆகிறதில்லையோ அவனுக்கு துல்யனுக வேறு அரசனுக்கே மித்யாத்வம்

ஏற்படுகிறதோ அப்படிப்போல, அன்றிக்கே ஏகசப்தம் ப்ராதாந்யத்தைச் சொல்லுகிறது. "ஏகாதாகினிச்சாஸஹாயே" என்கிற ஸூத்திரத்திலுள்ள அஸஹாயபதத்தினுல் வ்யவச்சேதிக்கத்தக்கது ப்ராதான்யமன்ரே ப்ரஹ்மத்திற்கு ப்ராதான்யமானது ஜகத்தைக் குறித்து விசேஷ்யத்வரூபம். அப்பொழுது 'நான்யோऽஸ்தி' என்பதனுல் ப்ரதாநனுக இருக்கிற அன்யன் நிஷேதிக்கப்படுகிறுனேயொழிய அப்ரதாநமான அர்த்தாந்தரம் நிஷேதிக்கப்படுகிறதில்லை. கூறப்பட்டுள்ள அர்த்தத்திற்கு உபபாதகமாக இருப்பது வ்யாப்யத்வ ப்ரதிபாதகமான உத்தரார்த்தம் என்று சொல்லுகிறுர்; ததேவ என்று அதில்நிர்மானமாகக்கிடைத்த அர்த்தத்தைச் சொல்லுகிறுர்—யேந என்று யேந யஸ்மாத் என்று அர்த்தம். த்வதந்ய:-த்வதாத்மகமல்லாதது. உன்னுல் ஆத்மாவாக வ்யாபிக்கப்பட்டிருப்பதால் எல்லாம் த்வதாத்மகமாக இருப்பதுபற்றி உனக்குச் சரீரம். ஆகலால் த்வதாத்மகமாக இல்லாத உன்னைத்தவிர்த்த பதார்த்தம் வேறு இல்லை. ஆகையால் எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்டிருக்கிற நீ ஒருவனே பரமார்த்தமென்று அர்த்தம். 'தவைஷ மஹிமா' என்கிற ச்லோகத்தினது பாதியின் ஒரு அம்சமும் கூறப்பட்டுள்ள அர்த்தத்திற்கு உபபாதகமென்று சொல்லுகிறுர்—அத: என்று. மஹிமையானது வ்யாப்திரூபமாக இருப்பதால் 'யா ஸர்வவ்யாப்தி:' என்று உரைக்கப்பட்டது. வ்யாப்தியில் தாத்பர்யத்தால் அல்ல. வ்யாப்திக்கு மஹிமத்வத்திலன்ரே தாத்பர்யம். அன்றிக்கே வ்யாப்திக்கு கூறப்பட்டிருக்கிற அர்த்தத்தை உபபாதிக்கும் தன்மையானது மஹிமையின்வ்யாஹாரத்தாலென்று சொல்லுகிறுர்—அத இதமுச்யதே என்று. அது அன்யனுக்கு ப்ரதிகூலமென்பதைக்காண்பிக்கிறுர்—அந்யதா என்று. வ்யாபிக்கத்தக்க வஸ்துக்கள் வ்யாப்தி இவைகள் மித்யையாக இருக்கும் பக்ஷத்தில் எல்லாவற்றிலும் வ்யாப்தியானது உன் மகிமை என்று சொல்லத்தக்கதல்ல, பின்னையோ ப்ராந்தி என்று சொல்லத்தக்கதென்று கருத்து. எல்லாம் அபரமார்த்தம் என்று சொல்லும்பக்ஷத்தில் வேறு இரண்டு தூஷணங்களை உபந்யஸிக்கிறுர் — ஜகத:பதே என்று லக்ஷணே - அதிஷ்டாநலக்ஷணே - வஸ்துக்கள் அப்ரஹ்மாத்மகமாக இருப்பதுபற்றி ஸ்வதந்த்ரங்களென்று ப்ரத்யக்ஷத்தால் அறியப்பட்டிருப்பதால் அந்த ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தமான ப்ரஹ்மபர்யந்தத்வத்தை சாஸ்த்ரம் ப்ரதிபாதிக்கிறதில்லை. ஆதித்யோயூப: என்பதுபோலென்கிற சங்கைவரின் அபரோக்ஷரூபையாக இருந்தபோதிலுங்கூட அந்யதாஸித்தையான ஸ்வாதந்த்ர்ய ப்ரதீதியைவிட பரோக்ஷரூபையாக இருந்தபோதிலும் அநந்யதாஸித்தையான பாரதந்த்ர்ய ப்ரதிபத்தியானது அதிக பலமுள்ளதென்கிற அபிப்பிராயத்தால் ச்லோகத்தை அவதாரிப்பிக்கிறுர்—யத: என்று. பாரதந்த்ரிய ப்ரதிபத்தியானது பரமாத்மப்ரதீதியை அபேக்ஷித்துக்கொண்டிருக்கிறது. அந்த பரமாத்மப்ரதீதி இல்லாவிடில் பாரதந்த்ரிய ப்ரதிபத்தி ஸம்பவிக்கிறதில்லை. ஆதலால் ஸ்வாதந்த்ரிய ப்ரதிபத்தி அந்யதாஸித்தை என்று அர்த்தம். 'கேவலதேவமனுஷ்யாதிரூபமிதி' பரமாத்மாவுக்குச் சரீரமாக இருத்தலென்கிறதன்மையை விட்டொழிந்த ஜகத்ரூபமாதரமென்று அர்த்தம். இது அர்த்தம் எவ்வாறு தேஹாத்மப்ரமமானது ப்ரத்யக்ஷமாக இருந்தபோதிலும் பரோக்ஷமான சாஸ்த்ரஜ்ஞாநத்தால் பாதிக்கப்படுகிறதோ அவ்வாறே ஸ்வாதந்த்ரியப்ரமமும் தேஹத்தைக்காட்டிலும் வேருகயிருக்கிற தன் ஆத்மாவைக்கூட அறியாதவனுக்கு பரமாத்ம பாரதந்த்ர்யத்தின் அப்ரதிபத்தியானது எவ்வாறு உண்டாகும் என்பதையும் ந்யாயஸித்தை என்பதையும் காண்பிப்பதற்காக மூன்ருவது ச்லோகத்தின் ஆரம்பம். அதை வ்யாக்கியானம் செய்கிறுர்—நகேவலம் என்று. சேதநாசேதநாத்மகமான ஜகத்தில் 'ஜ்ஞாநஸ்வரூபமகிலம் ஜகத்' என்கிற ஜகத்சப்தத்தினுல் சேதநரூபமான ஜகத்தானது சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. எவ்வாறு 'த்ரிபிர் குணமயைர்பாவைரேபிஸ் ஸர்வமிதம் ஜகத், மோஹிதம்நாபிஜாநாதிமாமேப்ய:

பரமவ்யயம்' (இந்த குணமயங்களான மூன்றுபாவங்களால் மோஹித்திருக்கின்ற இந்த உலகமனைத்தும் என்னை இந்த குணமயபாவங்களைக்காட்டிலும் வேறுபட்டவனென்றும் அழிவற்றவனென்றும் அறிகிறதில்லை) என்கிற இந்த ச்லோகத்தில் ஜ்ஞாநஸ்வரூபனான பரமாத்மாவை ஜடரூபமான அர்த்த ஸ்வரூபனாக எண்ணுதல் ப்ரமம் என்று சொன்னதனால் அர்த்த ஸ்வரூபத்தை அர்த்த ஸ்வரூபமாக எண்ணுதல் ப்ரமமாகாதென்பதும் ஸித்தமே. தேஹாத்ம ப்ரமமானது ஸம்ஸர்கத்தால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. ஜலம் உஷ்ணம் என்பதுபோல ஆத்மாவின் அஸாதாரண தர்மமாக இருக்கிற ஜ்ஞாநத்தின் ப்ரகாசமிருந்தபோதிலும் அந்த தர்மபூத ஜ்ஞாநத்தினது அஸாதாரணதையை அறியாமையால் ப்ரமத்திற்கு உபபத்தி அன்றிக்கே பாவசப்தம் ஸ்வபாவபரம். ஸ்வபாவஸித்தங்களான சக்திகள் என்று அர்த்தம்

---

ந கேவலம் வஸ்துதஸ்ஸ்வாத்மக: ஜட³தே³வமநுஷ்யாத்³யாத்மகமிதி பா⁴ஸநமேவ ப்⁴ரம: । ஜ்ஞாநாகாராணாமாத்மநாம் தே³வமநுஷ்யாத்³யாகாரத்வபா⁴ஸநமபி ப்⁴ரம இத்யாஹ — “ஜ்ஞாநஸ்வரூபமேவமேவம்” இதி ॥

யே வாநவச்சி²ந்நோ ஜ்ஞாநஸ்வரூபாத்மவிஷயஸ்ஸ்ய ஸம வதா³த்மகாநாம் ஜ²வஸாய ந யோக்³யோமவச்சி²ந்நஸ்ஸ்வதே³வமநுஷ்யாதி³ ப்ரக்ருதிபரிணாமவிஶேஷஶரீரரூப இதரேஷு ஜட³வஸ்தூநாதிரிக்த ஜ்ஞாநஸ்வரூபாத்மகம் க்ஷேத்ரம் பஶ்யந்தீத்யாஹ “யத: ஜ்ஞாநவித³:” இதி । சந்த்³ர ஶ்லோகாநாம் பௌநருக்த்ய பரிஹாரம் லக்ஷணா, ஸம்விஶேஷ:, ஶாஸ்த்ரதாத்பர்யவிஶேஷஶ்ச ॥ “த்ரயாணாமபி தே³ஹஸம்ப³ந்த⁴வ்யக்தயே” இத்யுக்த ஸம்யக் ஷாத்ரஸ்ய ஜ்ஞாநைகாகாரதயா ஸமாநஸ்ய தே³வமநுஷ்யாதி³ ப்ரக்ருதிபரிணாமவிஶேஷரூப பி³ந்நஸம்ஸ்தா²ந க்ருதஸம்ஸ்தா²ந தே³வாத்³யாகாரேண சேதநஸம்நிவேஶ இத்யுச்யதே । பி³ந்நமத ஸம்ஸ்தா²நமபி சேதநம் ந ப்ரதிபத்³யதே । தே³வமநுஷ்யாதி³ விஷய விதி⁴ஶ்ரவிஶேஷ வத³ந்ஸ்தா²நம் ஸ்வஸம்ஸ்தா²நவத் ஸமீத்³யத: । யதோக்தம் ப⁴க³வதா “ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி³தாஸ்ஸமத³ர்ஶிந:” (கீ-ரு, க௮) “நிர்தோ³ஷம் ஹி ஸமம் ப்³ரஹ்ம” (கீ-ரு, கக) இத்யாதி³ஷு; “த்ரயாணாமபி தோ³ஷாணாம் ஸம்ஸ்தா²நம்” இதி தோ³ஷாதிரிக்தே வஸ்துநி ஸ்வபா⁴வமாத்ரேண வ்யாக்²யாத:॥

“யத்³யப்யுக்தம் வா: ஸம்ஸ்தா²நம்” இத்யுக்த்வாபி நாதிரிக்தம் ப்ரதீயதே; யதி³ த்ரிவா: ஸம்ஸ்தா²நம் இத்யுக்தமிதி ஶ்ரு வாப

स्वात्मस्वरूपयोः प्रयोगायोगात् तत्र परस्परस्वव्यक्तिनिष्ठत्ववचनः । आत्मस्वरूपस्यापि ज्ञानैकाकारत्वादन्याकारत्वप्रतिषेधायोक्तः ॥

ஸ்ரீபாஷ்யம் —

சிறந்த புத்தியுள்ளவர்களாகவும் ஆத்மாவை ஜ்ஞாநஸ்வரூபனாக அறியாநின்றவர்களாகவும் எல்லாம் பகவதாத்மகமென்கிற அநுபவத்திற்கு ஸாதநமான யோகத்திற்கு யோக்யமாயும் பரிசுத்தமாயுமிருக்கிற மனதை உடையவர்களாகவுமிருக்கிறார்களோ அவர்கள் தேவன் மனுஷ்யன் முதலிய ப்ரக்ருதியின் பரிணாமவிசேஷமான எல்லா ஜகத்தையும் சரீரத்தைவிட வேறாக இருக்கிற ஜ்ஞாநஸ்வரூபாத்மகமாகவும் உன் சரீரமாகவும் பார்க்கிறார்கள் என்று சொல்லுகிறார் (யேத்வஜ்ஞாநவித:) என்று அங்ஙனமில்லாவிடில் ச்லோகங்களுக்கு பௌநருக்த்யமும் பதங்களுக்கு வைக்ஷண்யமும் அர்த்தவிரோதமும் ப்ரகரணவிரோதமும் ஸம்பவிக்கும். ‘தஸ்யாத்மபரதேஹேஷு ஸதோऽப்யேகமயம்’ என்கிற இடத்தில் எல்லா ஆன்மாக்களும் ஜ்ஞானைகாகாரர்களாக இருக்க தேவமனுஷ்யாதி ப்ரக்ருதிபரிணாம விசேஷ ரூபமான பிண்டங்களின் ஸம்ஸர்கத்தால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதான ஆத்மாக்கள் தேவாத்யாகாரத்தால் வேறுபட்டவர்கள் என்கிற பேததர்சநமானது அதத்த்வம் என்று சொல்லப்படுகிறது. பிண்டத்தையும் ஆத்மாவையும் அடைந்திருக்கிறதில்லை. த்வைதம் மறுக்கப்படுகிறதில்லை. தேவமநுஷ்யாதி ரூபமாகவும் பற்பலவிதங்களாகவுமிருக்கிற பிண்டங்களிலிருக்கிற ஆத்மவஸ்துக்கள் அனைத்தும் ஸமமானவை என்று அர்த்தம். ‘சுநி சைவ ச்வபாகே ச பண்டிதாஸ் ஸமதர்சிந:’ (நாயினிடத்திலும் சண்டாளனிடத்திலும் பண்டிதர்கள் ஸமத்ருஷ்டியுள்ளவன்) ‘நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம’ (தோஷமில்லாத ப்ரஹ்மமானது எங்கும் ஸமமாகவன்றோ இருக்கிறது) இது முதலிய இடங்களில் பகவானான ஸ்ரீ க்ருஷ்ணனால் இவ்வண்ணம் கூறப்பட்டது. ‘தஸ்யாத்மபரதேஹேஷு ஸதோऽபி’ என்று தேஹத்தைவிட வேறாகயிருக்கிற வஸ்துவினிடத்தில் தான் ஐக்யம் என்கிற விஷயம் கூறப்பட்டிருப்பதால். “யத்யந்யோஸ்தி பர: கோऽபி’ என்கிற இடத்தில்கூட ஆத்மைக்யமறியப்படுகிறதில்லை. ‘யதி மத்த: பர: கோऽப்யந்ய:’ என்று ஒரு அர்த்தத்தில் பரசப்தம் அந்யசப்தம் இரண்டிற்கும் ப்ரயோகம் கூடாததலால் அங்கு ‘பரசப்தமானது தன்னைத் தவிர்த்த ஆத்மாவைச் சொல்லுகிறது அந்யசப்தமானது அதற்கும் ஜ்ஞாநைகாகாரத்வமிருப்பதால் வேறு ஆகாரத்தின் ப்ரதிஷேதத்தை பலமாகக் கொண்டிருக்கிறது.

ச்ருதப்ரகாசிகை—

நான்காவதை வ்யாக்கியானிக்கிறார்—யேபுந: என்று. "விஜ்ஞாநஞ்சாவிஜ்ஞாநஞ்ச" என்கிற இடத்தில் விஜ்ஞாநசப்தமானது ஆத்மாவைச்சொல்லும் ஸ்வபாவமுள்ளதாக இருப்பதால் ஜ்ஞாநஸ்வரூபாத்மவித: என்று உரைக்கப்பட்டது. அபுத்தய: என்று முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு ப்ரதியோகியாக சுத்தசேதஸ: என்று சொல்லப்பட்டதென்பதை ஸூசிப்பிக்கிறார்—யோகயோக்ய பரிசுத்தமநஸ: என்று. யோகயோக்யத்வத்தில் ஹேது பரிசுத்தத்வம். விசத்தமான மனதினாலென்றோ பசவத் ஸாக்ஷாத்காரரூபமான உபாஸநத்தின் நிஷ்பத்தியானது ச்ருதியில் கூறப்படுகிறது. மனதிற்கு சுத்தி கர்மயோகத்தாலுண்டாகிறது. யோகத்தால் யோக்யதா பரிசுத்தி என்றானது அர்த்தம். முன்ச்லோகத்தில் அகிலஜகத் சப்தத்தால் சேதநரூபமான ஜகத்தானது சொல்ல எண்ணப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தில் அகில ஜகத் சப்தத்தால் அசித்ரூபமான ஜகத்தானது சொல்ல எண்ணப்பட்டிருக்கிறது. எல்லாவற்றுக்கும் அபாரமார்த்யம் சொல்ல எண்ணப்பட்டிருக்கிறதென்கிற பக்ஷத்தில் முதல் ச்லோகத்தால் சுருக்கமாக உரைக்கப்பட்டுள்ள தூஷணத்தை சொல்லப்பட்டிராத தூஷணத்தோடுகூட விஸ்தாரமாக எல்லா ச்லோகங்களுக்கும் ஸாதாரணமாகக்கூறுகிறார்—அந்யதா என்று. ஸ்வாதந்த்ர்ய ப்ரமம் தேஹாத்ம ப்ரமம் என்கிற பிரிவினை இல்லாவிடில் ஐகரூப்யமென்று அர்த்தம். லக்ஷணா - 'பரமேச்வர-ஜகத:பதேதவமஹிமாத்மை' இதுமுதலிய சப்தங்களுக்கு லக்ஷணை. த்வம் சப்தமானது அபிமுகமாக இருக்கிறவரு அஹமர்த்தத்தைச்சொல்லுகிறது. அதனால் அதற்கு லாக்ஷணிகத்வம் - அர்த்தவிரோத: ப்ரத்யக்ஷம் முதலியவைகளால் பாதிக்கப்படாததாக ஸித்திக்கிற பதார்த்தத்திற்கு அஸத்யத்வம சொல்லப்படுமேயாகில் ப்ரமாண விரோதம். திரோதாநாநுபபத்தி முதலியது தர்கவிரோதம், உபயலிங்கத்வ விரோதமும். ப்ரகரணவிரோத:-ஸ்துதிவிரோதம். ரோமாந்தரங்களிலிருக்கிற முனிகள் ஸ்துதிக்கிறார்களென்பதல்லவோ ப்ரக்ருதம். துதிக்கிறவர்கள் அத்வைத ஜ்ஞாநமுள்ளவர்களாக இருக்கும்பக்ஷத்தில் துதித்தல் பொருந்தாது. அத்வைத ஜ்ஞாநமில்லை என்று சொல்லில் மிகவும் பொருந்தாது. சாஸ்த்ர தாத்பர்யவிரோத: உபக்ரமோபஸம்ஹாராவாந்தர ப்ரகரணம் உபக்ரமோப ஸம்ஹாரம முதலியவற்றின் விரோதம். அதற்குமேல் ஒன்றோடொன்று வ்யவதாநமுள்ளவைகளான ஆதிபரதருடைய ஸம்வாதபரமான நான்கு ச்லோகங்களை வ்யாக்யாநம்செய்கிறார்—த்வய இதுமுதலியதால்.

ப்ரஹ்மாத்வைதம் ஜீவாத்வைதம் என்றும் இரண்டுவிதமான அத்வைதம் சாஸ்திரத்தினால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் ப்ரஹ்மாத்வைதமென்பது ப்ரகார்யத்வைதம் ஜீவாத்வைதமென்பது ப்ரகாராத்வைதம். இதில் எது நியாமகமென்று வினவப்படுமேயாகில் கூறப்படுகிறது. ப்ரஹ்ம ப்ரகரணங்களில் ஸாமாநாதிகரண்யத்தால் ப்ரஹ்மாத்வைதம் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதாலும ஸாமாநாதிகரண்யமும் ப்ராகாரமே பதங்களுடன்கூடின ப்ரகாரியின் ஐக்யத்தை ப்ரதாநமாக ப்ரதிபாதிப்பதாலும், ஏகஸ்ஸந்பகுதாவிசார: என்று ப்ரகாரபகுத்வம் கண்டோக்தமாக இருப்பதாலும், ஐக்யவிதிசேஷமான 'நேஹ நாநாஸ்தி' இதுமுதலிய பேதநிஷேதமானது விதிக்சப்பட்டிருக்கிற ஐக்யத்திற்கு விரோதியான பேதத்தை விஷயமாகக்கொண்டிருப்பதாலும் ஸாமாந்ய நிஷேதமானது விஹிதவ்யதிரிக்த விஷயமாக இருப்பதால் ப்ரகாரியின் பகுத்வத்தை நிஷேதிப்பதில் நோக்குள்ளதாக இருந்தாலும் 'நதத்ஸமஸ்சாப்யதிகஸ்ச த்ருச்யதே' என்று ப்ரஹ்மத்திற்கு துல்யமான வேறு ப்ரகாரியின் நிஷேதமானது தெளிவாக வாசக சப்தத்தால் சொல்லப்பட்டிருப்பதாலும் ப்ரகார்யத்வைதமே ப்ரஹ்மாத்

ஸைதம். ஜீவாத்மாக்களுடைய பஹுத்வம் ச்ருதிஸித்தமாக இருப்பதாலும் அங்ஙனமில்லாவிடில் பத்தர்கள் முக்தர்கள் என்கிற வ்யவஸ்தை பொருந்தாததாலும், உபதேசம் பொருத்தமில்லாமல் போவதாலும், ஸுகம் முதலியவற்றின் வ்யவஸ்தை பொருந்தாமல் போவதாலும். 'புமாந்நதேவோ நநரோந பசுர்நச பாதப:. சரீரவிசேஷாபி. பேதோயம் மித்த்யாஜ்ஞாநநிபந்தந:' (ஜீவன் தேவனுமல்ல மனிதனுமல்ல. பசுவுமல்ல, மரமுமல்ல இந்த நான் முதலியபேதமும் மித்த்யாஜ்ஞாநத்தைக் காரணமாகக்கொண்டது.) 'ஜீவாதி பேதேஉபத்யவஸ்தே' (ஜீவன் முதலிய பேதமானது நாசம்செய்யப்பட்டிருக்க) இது முதலியவைகளால் பேதமில்லாதது விசேஷமானது தெளிவாகச் சொல்லப்பட்டிருப்பதாலும், முக்தர்களுக்கு ஸாம்யம் சொல்லியிருப்பதாலும். 'அஹம் த்வஞ்ச ததாந்யேச' (நானும் நீயும் அப்படியே மற்றவர்களும்) 'தத்ர ஸர்வைகமயந்த்ர' (அந்த இடத்தில் நீயும் இந்த இடத்தில் நானும்,) 'பரமம் ஸாம்யமுபைதி' (அந்த மஹானானது ஸாம்யத்தை அடையும் பித்ததாக) இது முதலிய ப்ராமணிகர்களுடைய வசனங்களை அநுஸரிப்பதாலும். 'ஏகோ வசீ:' என்கிற இடத்திலேபோல ஏகபக்ஷத்திற்கு ஸ்வாதந்த்ரிய வ்யக்தியை உணர்த்துவதில் கருத்து என்பது பொருந்தாததாலும், இனி சொல்லப்படப்போகிற ச்லோகத்தினுடைய சப்தஸ்வபாவத்தாலும், ஜீவாத்மைகத்வம் ப்ரகாராத்மைகமே 'நித்யோநித்யாநாம் சேதநச்சேதநாநாம் ஏகோ பஹூநாம் யோ விதநாதி காமாந்' (அநேக ஜீவர்களில் சேதநர்களில்லாதவைகளுக்கு விதிக்கிற ஒரு சேதநன் நித்யர்களான அநேக சேதநர்களுக்கு அபீஷ்டங்களை உண்டுபண்ணுகிறான்) என்கிற பொருளுள்ள இந்த வாக்யமானது சேதநர்களுக்கு இஷ்டத்தை விதிப்பதில் முக்யமான நோக்குள்ளதாக இருப்பதால் ஜீவர்களின் பஹுத்வங்களில் தாத்பர்யமில்லை. இருந்தாலும் வாக்யபேதம் ஏற்படவேண்டியிருக்கும் என்று கூறப்படுமேயானால் அல்ல. 'யதாஷ்டாகபாலம்:' (எட்டு கபாலங்களால் பக்குவம் செய்யப்பட்டதும் அக்நியை தேவதையாகக்கொண்டதுமான புரோடாசம்) என்கிறஇடத்தில் அஷ்டாகபாலத்வ குணத்துடன் கூடிய ஆக்நேயபுரோடாசவிதிபோல. வாக்யமானது விசிஷ்டவிதியில் நோக்குள்ளதாக இருப்பதால். இந்த வாக்யமானது நித்ய பஹுசேதந விசிஷ்டகாம ப்ரதாநவிதியை ப்ரதாநமாகக்கொண்டதாகவன்றோ அறியப்படுகிறது. நித்யர்களாகவும் ஸ்வல்பர்களாகவுமிருக்கிற சேதநர்களுக்கு அபீஷ்டத்தைக்கொடுப்பதைக்காட்டிலும் நித்யர்களாகவும் அநேகர்களாகவுமிருக்கிற சேதநர்களுக்கு அபீஷ்டதானம் சொல்லப்பட்டாலன்றோ காமப்ரதானத்திற்கு அதிசயம் ஏற்படுகிறது. ஜீவர்களுடைய பஹுத்வம் உலகத்தில் ஸித்தமாக இருப்பதால் அந்த விஷயத்தில சாஸ்திரத்திற்கு தாத்பர்யம் இல்லை. வேறு ஒன்றினால் (ப்ரமாணாந்தரங்களால்) கிடைக்காத அர்த்தத்தை உணர்த்துவதாலல்லவோ சாஸ்த்ரம் பயனுள்ளதாக ஆகிறது என்று சொல்லப்படுமேயானால் அல்ல. ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள ஜீவாத்மாக்கள் அநேகர்கள் என்கிற ஜ்ஞானம் உலகத்தில் நிலைபெற்றுள்ளது. ப்ரக்ருதியின் சேர்க்கையற்ற பரிசுத்தாத்மஸ்வரூபங்களின் பஹுத்வமானது உலகத்தில் ஸித்தமல்லாததால் அதிலல்லவோ சாஸ்திரத்திற்கு தாத்பர்யம் ஸம்பவிக்கிறது. உபாதியின் ஸம்பந்தத்தால் ஏற்படுத்தப்படுகிற ஆகாரம் அநித்யமாதலாலும் நிஷ்க்ருஷ்ட ஸ்வரூபம் நித்யமாக இருப்பதாலும் நித்யத்வ தர்மத்தோடு ஸாமாநாதிகரண்யமான பஹுத்வமானது சொல்லப்பட்டால் பரிசுத்தாத்ம ஸ்வரூபமல்லவோ உரைக்கப்பட்டதாக ஆகிறது. உபதேசமும் ஸம்பவிக்

குறிப்பு:—அச்சாபீஸ் மாறுதலினால் பக்கம் தவறுதலாய் விழுந்துவிட்டது. இந்த விஷயம் ஒன்றும் விடவில்லை.

கிறதில்லை. குரு ப்ராந்தியுள்ளவராக இருப்பாரேயாகில் உபதேசத்திற்கு ப்ரஸக்தி இல்லை. ப்ராந்தி இல்லாதவராக இருப்பாரேயாகில் த்வைத ப்ரதீதி இல்லாததனால் உபதேசத்திற்கு ப்ரஸக்தி முற்றிலும் இல்லை. த்வைதப்ரதீதி இருந்தபோதிலுங் கூட கண்ணாடியிலிருக்கிற தன் ப்ரதிபிம்பத்தைக் குறித்து சொல்லக்கருதப்பட்டதை உபதேசிப்பது என்பது ஸம்பவியாதன்றோ. ஸுகம் துக்கம் முதலியவற்றின் வ்யவஸ்தையினாலும் ஆத்மபேதம் ஸித்திக்கிறது.

ஸௌம்ய! ஸுக துக்க வ்யவஸ்தை என்பது என்ன? ஸுக துக்க வ்யக்திகளின் பருத்வமா? அல்லது சுகதுக்கங்களுக்கு ஆச்ரயமாக இருக்கிற வ்யக்திகளின் பருத்வமா? ஒருவனுக்கே அனேக ஸுகதுக்க வ்யக்தி தர்சனத்தினால் ஸுகாதி ஸ்வரூப பருத்வமானது ஆன்மாக்களின் ஐக்யத்திற்கு விரோதியல்லவென்பதுபற்றி வ்யவஸ்தை இல்லை. ஆச்ரயபேதமெனில் ஹேதுவானது ஸாத்யத்தைவிட வேறுபடாததாக ஆகிறதென்று சொல்லப்படுமேயானால் அல்ல. வ்யவஸ்தையானது உன்னால் சொல்லப்பட்டிருக்கிற இரண்டு ப்ரகாரங்களைக் காட்டிலும் வேறுபட்டதாக இருப்பதால். எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஒரு ஆச்ரயத்திலிருக்கிற ஸுக துக்காதிகளில் ப்ரதிஸந்தானம் காணப்பட்டிருக்கிறது. பிரதிபந்தகமில்லாமலிருக்கையில் ஒரு ஆச்ரயத்துடன் கூடியதாக ஸுகதுக்கங்கள்விஷயமான ப்ரதிஸந்தானத்தினது இன்மை வ்யவஸ்தை என்று பரிஹாரம். 'ஏகமயம்' என்கிற இடத்தில் மயட் ப்ரத்யயமானது † ஸ்வார்த்திகம். அன்றிக்கே ஏக சப்தமானது ※ பாவ ப்ரதானமானது ஐக்யமென்று அர்த்தம். அதனால் ப்ரசுரமாக இருப்பது ஏகமயம். சுத்தாவஸ்தையுள்ள ஆத்மாவுக்கல்லவோ ஐக்யப்ராசுர்யம். ப்ரக்ருதிஸம்ஸர்கமுள்ள ஆத்மாவுக்கோவென்றால் அது இல்லை. அவனுக்கு புத்தி ஸுகம் துக்கம் முதலிய ஆந்தரபேதத்தாலும் தேவத்தன்மை முதலிய வெளியிலுள்ள பேதத்தாலும் ஐக்யப்ராசுர்யமில்லாமையால். ஏகசப்தமானது ஸமானன் என்கிற அர்த்தத்தை உணர்த்துகிறது. 'ஏகோவ்ரீஹி: ஸுநிஷ்பன்ன: ஸுபுஷ்டம் குருதேப்ரஜா:' இது முதலியவாக்கியங்களில் அவ்வண்ணமாக ப்ரயோகம் காணப்படுவதால். 'தேவமநுஷ்யாதிப்ரக்ருதிபரிணமவிசேஷரூப' என்பதனால் 'துக்காஜ்ஞாநமலா தர்மா: ப்ரக்ருதேஸ்தே நசாத்மந:. புமான் ந தேவோ ந நரோ ந பசுர் நச பாதப: - சரீராக்ருதி பேதாஸ்து பூபைதே கர்மயோநய:-' என்கிற இரண்டு வசநங்களுக்கும் ஒரே அர்த்தத்துடன் கூடி இருத்தல் காட்டப்பட்டது. பிண்ட சப்தமானது 'பிண்ட:ப்ருதக்யத: பும்ஸ:' என்கிற ப்ரகரணத்திலுள்ள வசனத்தைநினைக்கச்செய்கிறது. "ஏகமயம்" என்று ஆத்மாவினிடத்தில் ஏகத்வத்தை விதித்து பேதம் நிஷேதிக்கப்படுமேயாகில்ஆத்மஸ்வரூப பேதமே நிஷேதிக்கத்தக்கதாக ஆகும் என்று சொல்லப்படுமேயாகில்; விதிக்கப்படுகிற

† ஸ்வார்த்திகம்— தனித்து வேறுபொருளை உணர்த்தாமல் தன்னுடைய ப்ரக்ருதியின் பொருளையே தானும் சேர்ந்து உணர்த்தும் தன்மையுள்ள ப்ரத்யயம்.

※ பாவப்ரதானம்—பாவமென்று தர்மத்துக்குப்பெயர். அந்த தர்மத்துடன் சேர்ந்த தர்மியை உணர்த்தும் ஸ்வபாவமுள்ள சப்தமானது ஸந்தர்ப்பத்திற்குத்தக்கபடி தர்மியைச் சொல்லாமல் அதின் ஏகதேசமான தர்மத்தை மாத்திரம் உணர்த்துவதில் நோக்குற்றது.

ஏகத்வமானது வ்யக்தியின் ஐக்யமாக இருக்குமேயாகில் இவ்வண்ணமாகலாம். அதோ ப்ரகாரங்களின் ஐக்யம். ஆகையால் பேத நிஷேதமானது வைஜாத்ய நிஷேதமே என்று கருத்து. ‘த்வைதிநோऽதத்த்ய தர்சிந:’ என்று பொதுவாக சொல்லப்பட்டிருக்க எவ்வாறு தேவாதி த்வைத நிஷேதம் என்று கூறப்படுகிறதென்று சொல்லப்படுமேயாகில் எவ்வாறு ஸாமான்யமாக த்வைத நிஷேதம் அறியப்பட்டிருக்க ஆத்ம த்வைத நிஷேதமென்று கூறப்படுகிறது? பிண்டம் ஆத்மா இவ்விரண்டின் பேத நிஷேதம் கூறப்படுகிறதில்லை? பிண்டம் ஆத்மா இவ்விரண்டுக்கும் பேதமானது ப்ரமாணஸித்தமாக இருந்தலாலென்று கூறப்படுமேயாகில் ஆத்மபேதமும் ப்ராமாணிகமாதலால் அர்த்தபேத நிஷேதம் கூறப்படுகிறதில்லை. பின்னையோ தேவாதிபேத நிஷேதம் கூறப்படுகிறதென்று கருத்து. ஆத்மாவை அடைந்திருக்கிற த்வைதமானது நிஷேதிக்கப்படாமலிருக்குமேயாகில் ‘ஆத்மா ஈத்தோக்ஷர ஙுூாக்த:’ ‘விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே’ என்கிற ஏகவசனம் பொருந்தாது. இந்த ஏகவசனம் ஜாதியைக்குறிக்கிறதென்று சொன்னால் தேஹசப்தத்திலும் ஏகவசனம் வரலாமென்கிற சங்கையும் தேவமனுஷ்யாதி பதத்தால் பரிஹரிக்கப்பட்டது. தேவாதிகளில் உட்பிரிவுபேதங்களைச் சொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினால் விவித சப்தம். அதிலும் அனேக விதங்களைச்சொல்லவேண்டுமென்கிற எண்ணத்தால் விசித்ர சப்தம். ஆத்மாக்களிடத்தில் ஜாதி ஒன்றாக இருத்தலால் ஏகவசனம். பிண்டங்களில் அவாந்தரஜாதிகள் பலவாறாக இருப்பதால் பஹுவசனமென்று அபிப்ராயம்.

ஸாம்யத்தில் ப்ரமாணத்தைக் கூறுகிறார் **யதோக்தம்** என்று. பஹுத்வம் விதிக்கப்பட்டிருப்பதாலும் ஸாம்யம் ப்ரதிபாதிக்கப்பட்டிருத்தலாலும் ஆத்மவ்யக்தி பேதநிஷேதம் இசையாது என்று கருதது. வேறு ஹேதுவையும் கூறுகிறார்- **தஸ்ய** என்று. வேறுவிதமாக அர்த்தம் சொல்லப்படுமேயாகில் இந்த ச்லோகத்திலுள்ள பதங்களுக்கு வ்யாகாதம் உண்டாகுமென்று அர்த்தம். **உச்யதேவாத்** என்று. ‘ஸமம் இத்யர்த்த:’ என்று அன்வயம்— ஏகவசனம் சொல்லப்பட்டிருந்தால் வ்யக்திகள் அனேகங்களாக இருந்தபோதிலும் ஜாதி ஒன்றாதலால் அதைக்கருதி ஏகவசனம் என்று நிர்வாஹம். அன்யநிஷேதத்தில் தாத்பர்யமுள்ளவசனத்திற்கு வேறுவிதமாக நிர்வாஹம் கூடாதாதலால் ஆத்மைகத்வம் ஸித்திக்கிறதென்கிற சங்கை ஸம்பவிக்க ‘**யத்யந்யோஸ்தி**’ இது முதலிய சுலோகத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—**யதி** என்று. ஒரு அர்த்தத்தில் இரண்டு இரண்டு சப்தங்கள் ப்ரயோகிக்கப்பட்டிருக்கின்றன மூன்று இடங்களில். அதனால் இரண்டில் ஒரு சப்தமானது ஆகாரபரமாக இருப்பதால் ஆத்மபேதநிஷேதமில்லை என்று பரிஹரிக்கப்படுகிறது. அந்த இடத்தில் இரண்டு சப்தங்களுக்கு என்ன அர்த்தம் என்று வினவப்படுமேயாகில் கூறுகிறார்—**தத்ர** என்று. பரசப்தத்தினால் தர்மியை அநுவதித்து அதற்கு வேறு சப்தத்தால் உணர்த்தப்பட்டிருக்கிற ஆகாராந்தரத்தோடு அன்வயம் நிஷேதிக்கப்படுகிறதென்று அர்த்தம். இவன் நான் இவன் அயலான் என்று சொல்வதற்கு முடியாமை எவ்வாறு? ப்ரத்யக்த்வம் பராக்த்வம் என்கிற பேதகதர்மங்கள் இருக்கின்றனவன்றோ வென்று கூறப்படுமேயாகில் இவ்வண்ணமல்ல. ப்ரத்யக்த்வம் பராக்த்வம் இரண்டும் தன்னையும் பிறனையும் அபேக்ஷித்து எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவாக இருப்பதுபற்றி வ்யாவர்த்தகங்களல்லாமையால். முன்பு தேவாதிகளில் இவன் ஒருவன் என்கிற அபிப்பிராயத்தினால் அவர்களுக்குள் விசேஷத்தைஅறிந்துகொள்ள

வேண்டுமென்கிற எண்ணத்தாலன்றோ ஸௌவீரராஜனால் ஆதிபரதர் வினவப்பட்டார். அதனால் இந்தசப்தங்கள் தேவாதிகளுடைய ஆகாரவிஷேதத்தில் நோக்குள்ளவைகளென்று கருத்து.

---

𑌏𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 — 𑌯𑌦𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌾 𑌦𑍇𑌵𑌾𑌕𑌾𑌰 𑌸𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌾𑌦𑌨𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍋𑌽𑌸𑍍𑌤𑍁, 𑌤𑌦𑌾 𑌸𑌮𑍍𑌭𑌵𑍇𑌦𑌾𑌕𑌾𑌰𑌃 ; 𑌅𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰 𑌇𑌤𑌿 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍍 — 𑌨 𑌚𑍈𑌵𑌮𑌸𑍍𑌤𑌿 ; 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌾𑌕𑌾𑌰𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌤𑌿 ॥

“𑌪𑍁𑌮𑌾𑌨𑍍 𑌨 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣” 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌪𑌰𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌪𑌿 𑌤𑍁 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌵𑍍𑌯𑌵𑌚𑍍𑌛𑍇𑌦𑌸𑍍𑌯 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇; 𑌨𑌾𑌦𑍇𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍍 । 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑍇 𑌚 𑌵𑍇𑌣𑍁𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌾𑌂 𑌵𑌾𑌯𑍂𑌨𑌾𑌂 𑌨 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌭𑍇𑌦𑌕𑌤𑍍𑌵𑌮𑍍 — 𑌅𑌪𑌿 𑌤𑍍𑌵𑌾𑌕𑌾𑌰𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑍇𑌵 । 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌾𑌯𑍁𑌕𑍇𑌵𑌲𑌤𑌾𑌕𑌾𑌰𑌾𑌣𑌾𑌂 𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌭𑍇𑌦𑌨𑌿𑌷𑍍𑌠𑍇𑌨 𑌕𑍃𑌤𑌾 𑌹𑌿 𑌷𑌡𑍍𑌜𑌾𑌦𑌿𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌭𑍇𑌦𑌾𑌃 — 𑌏𑌵𑌮𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌭𑍇𑌦𑌾𑌃 । 𑌯𑌥𑌾𑌽𑌤𑍍𑌰 𑌵𑍇𑌣𑍁𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌾𑌂𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌯𑍂𑌨𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌙𑍍𑌗𑍍𑌯𑌕𑍃𑌤𑍈𑌵; 𑌨 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌭𑍇𑌦𑌕𑌤𑍍𑌵𑌮𑍍 — 𑌤𑌥𑌾 𑌵𑌾𑌯𑌵𑍀𑌯𑌾𑌨𑌾𑌮𑌂𑌶𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌭𑍇𑌦𑍋𑌽𑌵𑌚𑌨𑍀𑌯𑌃 ॥

“𑌸𑍋𑌽𑌹𑌂 𑌸 𑌚 𑌤𑍍𑌵𑌮𑍍” 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 𑌏𑌕𑌤𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌦𑍍𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌣𑍍𑌯𑌨𑌾𑌹𑌂𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑌾𑌕𑌾𑌰 𑌇𑌤𑍍𑌯𑍁𑌪𑌸𑌂𑌹𑌰𑌨𑍍 𑌦𑍇𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌭𑍇𑌦𑍇 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌭𑍇𑌦𑌶𑍋𑌕𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍𑌯𑌾𑌹 । 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌦𑍇𑌶𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌰𑍂𑌪𑌮𑌿𑌤𑌿 𑌭𑍇𑌦𑌕𑌥𑍇𑌯𑌂 𑌨 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌶𑌬𑍍𑌦𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌷𑌯𑍇𑌣 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌥𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌨 𑌸𑌮𑍍𑌭𑌵𑌤𑍇 । 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌯𑌥𑌾𑌭𑍇𑌦𑍋𑌽𑌶𑍍𑌰𑌯𑌰𑍋𑌧𑍀𑌤𑍍𑌯𑌾𑌹 “ 𑌤𑌤𑍍𑌤𑍍𑌯𑌜 𑌭𑍇𑌦𑌂 𑌪𑌰𑌮𑌾𑌯𑍁𑌰𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 ” 𑌇𑌤𑌿 ॥

𑌅𑌨𑍍𑌤𑌰𑍇𑌷𑍍𑌵𑌪𑍇𑌕𑍍𑌷 𑌨𑌿𑌣𑍍𑌯𑌯 𑌇𑌤𑌿 𑌶𑍇𑌷𑌃 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌷𑌯𑌕𑌾 𑌯𑍇𑌵𑌦𑍇𑌶𑌸𑍍𑌯 । 𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 “ 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑍁𑌪𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 ” ( 𑌵𑌿 - 𑌪𑍁 - ௨ - ௧௩ - ௮௯ ) 𑌇𑌤𑌿𑌵𑌦𑍍𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

ஸ்ரீபாஷ்யம்—

இது சொல்லப்பட்டதாக ஆகிறது. என்னைக்காட்டிலும் வேறான ஒரு ஆத்மாவானவன் என்னுடையதான ஜ்ஞாநாகாரத்தைக் காட்டிலும் வேறு ஆகாரமுள்ளவனாக இருப்பானேயாகில் அப்பொழுது நான் இப்படிப் பட்ட ஆகாரமுள்ளவன், இவன் வேறுவிதமான இவ்வித ஆகாரமுள்ளவன் என்று எடுத்து உரைப்பதற்குத் தகுதியுள்ளவன். இவ்வண்ணமில்லை. எல்லோரும் ஜ்ஞாநாகாரமுள்ளவர்களாக இருப்பதுபற்றி ஸமானர்களாக இருப்பதால் என்று. 'வேணுரந்த்ரவிபேதேந' என்கிற இடத்திலும் ஆத்மாக்களுக்கு ஆகாரங்களின் வேறுபாடானது ஸ்வரூபத்தால் உண்டுபண்ணப் பட்டதல்ல. பின்னையோ தேவமனுஷ்யாதி சரீரங்களில் ப்ரவேசத்தாலுண்டு பண்ணப்பட்டதென்று உபதேசிக்கப்படுகிறது. ஆத்மைக்யமுபதேசிக்கப்படவில்லை. திருஷ்டாந்தத்திலும் அனேக ஓட்டைகளில் புறப்படுகிற வாயுவின் அம்சங்களுக்குஸ்வரூபைக்யமில்லை-பின்னையோ ஆகாரங்களின்ஸாம்யமே---. வாயுத்தன்மையினால் ஒரே ஆகாரமுள்ளதான அவைகளுக்கு பற்பல ஓட்டைகளினின்று வெளிப்படுதலாலன்றோ ஷட்ஜம்முதலான பற்பல பெயர் ஏற்படுகிறது. இவ்வண்ணமாக ஆன்மாக்களுக்கும் தேவன் மனுஷ்யன் முதலிய பற்பல பெயர் ஸம்பவிக்கிறது. எவ்வாறு தேஜோமயமாயும் ஜலமயமாயும் ப்ருதிவீமயமாயுள்ள த்ரவ்யங்களின் அம்சங்களாக இருக்கிற பதார்த்தங்களுக்கு அந்தந்த த்ரவ்யத்தன்மையினால் ஐக்யமே ஒழிய ஸ்வரூபைக்யங்கிடையாதோ; அவ்வாறேவாயுவைச்சார்ந்ததாயுள்ளஅம்சங்களுக்கும் ஸ்வரூபபேதமானது விடத்தகாதது. 'ஸோஹம் ஸசத்வம்' என்று எல்லா ஆத்மாக்களுக்கும் முற்கூறப்பட்டுள்ள ஜ்ஞாநாகாரத்தை தத்சப்தத்தால் பராமர்சித்து அதற்கு ஸமாநாதிகரணங்களாக இருக்கிற அஹம், த்வம், இதுமுதலிய அர்த்தங்களுக்கு ஜ்ஞாநமே ஆகாரம் என்று உபஸம்ஹரியாநின்றுகொண்டு தேவாதி சரீராகாரபேதத்தால் ஆத்மாக்களிடத்தில் பேதமோஹத்தை இழந்து விடுஎன்று சொல்லுகிறார். அங்ஙனமில்லாவிடில் தேஹத்தைவிட வேறாக உபதேசிக்கத்தக்க ஸ்வரூபத்தில் நான் நீ இவை எல்லாம் ஆத்மஸ்வரூபம் என்கிற பேதநிர்தேசமானது இசைகிறதில்லை. நான் நீ என்கிற இதுமுதலிய சப்தங்களால் உபலக்ஷிக்கத்தக்கதான 'ஸர்வமேததாத்மஸ்வரூபம்' (இவை அனைத்தும் ஆத்மஸ்வரூபம்) என்கிற இதோடு ஸாமாநாதிகரண்யத்தால் உபலக்ஷணத்வமும் இசைகிறதில்லை. அவனும் உபதேசித்த வண்ணம்செய்தானென்று சொல்லுகிறார்—"தத்யாஜபேதம் பரமார்த்ததருஷ்டி:" என்று

எதனால் இந்த நிர்ணயமென்று வினவப்படுமேயாகில் (உத்தரம்) உபதேசமானது தேஹாத்ம விஷயமாக இருப்பதால். அதுவும் " பிண்ட: ப்ருதக் யத: பும்ஸ: சிர: பாண்யாதி லக்ஷண: " என்று தொடக்கத்தினால்.

ச்ருதப்ரகாசிகை—

இவ்வண்ணம் பதார்த்தம் இருக்க ச்லோகத்தினால் என்னசொல்லப்பட்டதாக ஆகிறது என்கிற சங்கைவரின் வாக்கியார்த்தத்தை யோஜனம் செய்கிருர்—ஏததுக்தம் என்று. ஏஷ: என்கிற சப்தத்தின் அர்த்தத்தைக் கூறுகிருர்—ஏவமாகார: என்று. அந்யசப்தத்தின் பொருளைக்கூறுகிருர்—அந்யாந்நுசாகார: என்று ஆகாரங்களுக்கு ஐக்யமாவது ஆகாரங்களுடைய நல்ல ஒற்றுமைஎன்கிற அபிப்ராயத்தால் ஏவமாகார:- வேறுவிதமாக இருக்கிற ஆகாரமுள்ளவனென்று உரைக்கப்பட்டது. அப்படி இல்லாவிட்டால் ஸ்வரூபமாத்திரத்திற்கு ப்ரதிபத்தியானது ஒரு பதத்தினுலேயே ஸித்திப்பதால் வேறு பதங்களுக்கு ப்ரயோஜன மின்மை ப்ரஸங்கிப்பதால் வேறு பதம் ஆகாரபரம் என்று அர்த்தம். இந்த அர்த்தத்திற்கு விபர்யயத்தில் நிலைபெறுதல் மேல் ப்லோகத்தால் கூறப்பட்டிருக்கிறது. அது இங்கு உதாஹரிக்கப்படவில்லை. அதற்காகச்சொல்லுகிருர்-நசைவம்என்று.இதல்லவோ அந்த ப்லோகம்—'யதாஸமஸ்தபூதேஷு புமாநேகோவ்யவஸ்தித: ததாஹி கோபவான் ஸோஹம் இத்யேதத் விபலம்வச:. (எப்பொழுது எல்லா வஸ்துக்களிடத்திலும் புருஷன் ஒருவன் நிலைபெற்றிருக்கிருனே அப்பொழுது நீ யார் நான் அப்படிப்பட்டவன் என்கிற இந்தவசனம் பயனற்றது,) இங்கு ஏகசப்தமானது ஆகாரத்தின் ஐக்யத்தில்நோக்குள்ளது. ஸ்வயம் ப்ரகாசத்வம்-நித்யத்வம், அணுத்வம் முதலியது எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவாயுள்ளது—பேதஜ்ஞாநத்தை உண்டுபண்ணுகிற தேவமனுஷ்யாதி ஆகாரமோவென்றல் ஆத்மாவினிடத்திலில்லை. வ்யாவர்த்தகமில்லாமையால் அதைச்சொல்லுகிற சப்தத்தால் நிர்தேசிப்பது பொருத்தமுள்ளதாக ஆகாது. ‡ ப்ரத்யக்த்வம் † பராக்த்வம் ¶ பரோக்ஷத்வம் $ அபரோக்ஷத்வம் முதலியவைகள் வ்யாவர்த்தகங்களென்பதுபற்றி 'கோபவான்' என்கிற ப்ரச்னமானது அதைவிட வேருன ஆகாரத்தில் அபிப்ராயமுள்ளது. 'நஹி பவான்' என்று ப்ரச்நமில்லை. பவத் என்கிற சப்தமானது தர்மிமாத்திரத்தை உணர்த்துகிறது. கிம் சப்தமானது வ்யாவர்தகதேஹாத்யாகாரங்களைக் குறித்துச்சொல்லுகிறது. ஆதலால் அதைக்காட்டிலும் வேருன ஆகாரமில்லாமையால் அதைச்சொல்லுகிற சப்தத்தால் நிர்தேசம் பொருந்துகிறதில்லை என்று அர்த்தம். ஜ்ஞாநைகாகாரத்வேந ஸமாநத்வாதேவ என்று.முற்கூறப்பட்டுள்ள ஸமாநத்வத்தினுலேயே என்று கருத்து. சொல்லப்பட்ட நிர்வாஹத்திற்கு அகோசரமான திருஷ்டாந்தமுகத்தால் அத்வைத பரமாக அந்யனுல் சொல்லப்பட்டிருக்கிற ப்லோகத்தினுடைய அர்த்தத்தைக் கூறுகிருர்—வேணுரந்த்ர என்று.இயற்கையாக ஏகாகாரங்களாக இருப்பவைகளுக்கு உபாதிவசத்தினுல் அவாந்தரபேதங்கள் இருப்பதில் த்ருஷ்டாந்தோபந்யாஸம். அப்படிக்கின்றி எல்லாவிதங்களாலும் ஸாதர்ம்யத்தை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் ஆத்மாவுக்கு அசித்த்வம் ஆகாசகார்யத்வம் முதலியதும் உண்டாகவேண்டியதாகும். அது வேறுப்ரமாணங்களின் விரோதத்தால் இழக்சப்படுகிறதன்றோ, அவ்வாறே திருஷ்டாந்தத்தை அடைந்திருக்கிற ஆகாராந்தர

‡ ப்ரத்யக்த்வம்-தனக்குத்தான் ப்ரகாசித்தல்.
† பராக்த்வம்—பிறருக்கே ப்ரகாசித்தல்.
¶ பரோக்ஷத்வம்—கண் முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகாமலிருத்தல்.
$ அபரோக்ஷத்வம்-கண்முதலிய இந்திரியங்களுக்கு எதிர்பட்டிருத்தல்.

மும் என்று கருத்து. 'ததாஸௌ பரமாத்மந:' என்று சொல்லில் ※ ஷட்ஜம் முதலிய நாமபேதம்உண்டாகவேண்டாம்என்கிறஅபிப்பிராயத்தால் சொல்லுகிறார்— **ஏவமாத்மநாம் தேவாதிஸம்ஜ்ஞாபேத:** என்று. 'பேதஷ்ஷட்ஜாதிஸம்ஜ்ஞிந:' என்கிற பாடமிருப்பினும்ஷட்ஜாதிஸம்ஜ்ஞாபேத:என்றுவியாக்கியானிக்கப்பட்டது. அறிவதற்கு மிக்கப்ரயாஸமான ஷட்ஜாதிரூபபேதப்ரதிபத்திஸௌகர்யமானது ஸம்ஜ்ஞாபேதாதீன மாயிருந்தலால் என்று கருத்து. தார்ஷ்டாந்திகத்திலும் அப்படியே. திருஷ்டாந்தத்தில் வ்யக்திகளின் பஹுத்வமானது இருக்கிறதா என்கிற ஸந்தேஹம்வரின் வாயுவின் அம்சங்களுக்கு அனேகத்வத்தை நாகத்தால் ஸாதிக்கிறார்—**தைஜஸ** என்று. ஸ்பர்சத்துடன்கூடிய திரவ்யமாக இருந்தலால் என்று கருத்து. எந்த இடத்தில் ஆகாசதிருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த இடத்திலும் ஒரு ஆத்மாவுக்கு திருஷ்டாந்தமாக ஆகாசத்தைச்சொல்லி வேறு ஆத்மாவினிடத்தில்அத்தன்மைவாய்த்திருத்தல் எண்ணத்தக்கது. "ஸிதநீலாதிபேதேயதைகம்த்ருச்யதேநப:ப்ராந்தத்ருஷ்டிபிராத்மாபி ததைகஸ்ஸந்ப்ருதக்ப்ருதக்" (ஒரே ஆகாயமானது எவ்வாறு வெளுப்பு கருப்புமுதலிய நிறங்களால் வேறுபாடுள்ளதாகக் காணப்படுகிறதோ அவ்வாறே ஆத்மாவும் ஒன்றாக இருந்தபோதிலுங்கூட ப்ரமஜ்ஞாநமுள்ளவர்களால் வெவ்வேறாக க்ரஹிக்கப்படுகிறது.) ஆகாயத்திற்கு வெளுப்பு கருப்புமுதலிய நிறங்களின் வேறுபாடானது சரத்காலத்திலும் வர்ஷாகாலத்திலுமுள்ள ஸந்த்யாஸமயங்களில் மேகங்களின் ஸம்பந்தத்தால் முறையே உண்டாகிறது. அவ்வாறு ஒரே ஆத்மாவுக்கும் தேவமனுஷ்யாதி பேதம் ஒன்றின்பின் ஒன்றாக வரிசையாக உண்டாகிறது. அன்றிக்கே அதிலும் ப்ரதேசபேதங்களை ஏற்றுக்கொள்வதனுல் எல்லா ஆத்மாக்களுக்கும் திருஷ்டாந்தமாகலாம். ஆகாசத்தில் ப்ரதேசபேதங்களை ஒப்புக்கொள்ளாவிடில் கடம் முதலியதற்கு விபுத்வமாவது ஆகாசத்திற்கு அல்பத்வமாவது ப்ரஸங்கிக்கும்; கடம் முதலியவற்றுக்கு முழு ஆகாசத்தோடு ஸம்பந்தமா? அல்லது ப்ரதேசபேதத்துடனு? முதல்பக்ஷத்தில் கடம்முதலியவற்றுக்கு விபுத்வமாவது ஆகாசத்துக்கு அல்பபரிமாணத்வமாவது ஏற்படவேண்டியதாக ஆகும். இரண்டாவது பக்ஷத்தில் ப்ரதேசபேதம் அங்கீகரிக்கப்பட்டதாக ஆகும். வேதாந்திகள் ஆகாசத்திற்கு அவயவங்களில்லை என்று சொல்வது அபஸித்தாந்தம். வேதாந்தங்களில் அதற்கு அம்சபேதத்தால் பஞ்சீகரணம் உபதேசிக்கப்பட்டிருப்பதாலும் ஒரு அம்சத்தால் வாயுவாக பரிணமம் கூறப்பட்டிருப்பதாலும் உத்பத்திலயங்கள் காணப்படுவதாலும் என்று. அதினுலேதான் 'கடத்வம்ஸேகடாகாசோ நபின்னோபஸோயதா- ப்ரஹ்மணோஹயவித்வம்ஸே விஷ்ணுவாக்யேந ததாபுமான்." (கடம் உடைந்துபோனுல் எவ்வாறு கடாகாசம் ஆகாசத்தைவிட வேறுபடுகிறதில்லையோ அவ்வாறே ஜீவன் ஹேயங்கள் நாசமடைந்தவுடன் விஷ்ணுவென்கிற பெயருள்ள ப்ரஹ்மத்தோடு பேதமில்லாதவனுக ஆகிறுன்) என்கிற சௌநகருடைய வசனமும் ஆகாசத்தில்அம்சபேதங்கள் உண்டு என்கிறஅபிப்பிராயத்தால் ஜீவனுக்கு பரமாத்மாவைக்காட்டிலும் ஔபாதிக பேதமில்லாவிடில் திருஷ்டாந்த ஸமர்ப்பணபரமாக அறியத்தக்கது. 'யதாக்நிரக்நௌஸம்க்ஷிப்த: ஸமாநத்வமனுவ்ரஜேத்" (எவ்வாறு நெருப்பு நெருப்பில் போடப்பட்டதாய்கொண்டு ஸாம்யத்தை அடைகிறதோ) என்று அந்த இடத்திலேயே ஸாம்யதிருஷ்டாந்தத்தைச் சொல்லி இருப்பதனுல்.

※ ஷட்ஜம்-கண்டம் முதலிய ஆறுஸ்தானங்களிலிருந்து உண்டாவதால் அந்த நாதத்திற்கு இந்தப்பெயர்.

அதற்கு ஆதி பாதருடைய நிகமந ஶ்லோகத்தைச்சொல்லுகிறார்—ஸோஹம் என்று. பூர்வோக்தம்—நான்கு அத்தியாயங்களாலுரைக்கப்பட்டிருக்கிற ஸ: என்கிறபதம் ஞாநாகாரத்துடன் கூடின வஸ்துவைச் சொல்வதாக இருந்தபோதிலும் விஶேஷணம்சத்தில் தாத்பர்யத்தைக்காண்பித்துக் கொடுப்பதற்காக ஸர்வாத்மாகாம் ஜ்ஞாநாகாரம் என்று விஶேஷணம்ஶத்துக்கு நிஷ்கர்ஷித்து நிர்தேசம். அப்படி இல்லாவிட்டால் “தத்ஸாமாநாதிகரண்யேந” என்கிற அடுத்த வசனத்திற்கு விரோதம் வருவதால். ஜ்ஞாநமேவாகார மித்யுப ஸம்ஹாரன் என்று. ஸோஹம் இதுமுதலிய ஶ்லோகங்களுக்கு அடுத்த முந்தின ஶ்லோகத்தில் - “ஏகம் ஸமஸ்தம் யதிஹாஸ்தி கிஞ்சித் ததச்யுதோ நாஸ்தி பரந்ததோந்யத்” (இந்த ப்ரபஞ்சத்தில் எது ஒன்றிருக்கிறதோ அவை அனைத்தும் அச்யுதனே. அச்யுதனால் வ்யாபிக்கப்பட்டதேஅதைக்காட்டிலும் வேறு இல்லை) என்கிற அர்த்தத்தால் எல்லா ஆத்மாக்களும் பகவானுடைய சரீரமென்று சொல்லி இருப்பதால் ஸோஹம் இதுமுதலிய சுலோகமானது பகவதாத்மகத்வநிகமனபரம் என்கிற ஸந்தேஹம் உண்டாகலாம். அது ஸரியன்று—ப்ரகரணம் சரீராத்மவிவேகபரமாக இருப்பதாலும் அதின் நிகமனமும் அபேக்ஷிக்கப்பட்டிருப்பதாலும் அதின் நிகமன பரமான வேறு ஶ்லோகமில்லாமையாலும் அபேக்ஷித விதியைவிட்டு அபேக்ஷிக்கப்படாததை விதிப்பது பொருந்தாததாலும் இந்த சுலோகமானது ஆத்மாக்களுக்கு தேஹவ்யாவர்த்தகமான ஏகாகாரத்வ நிகமனத்தில் கருத்துள்ளதென்று அபிப்பிராயம். ‘த்யஜபேதமோஹம்’ என்கிற அம்சத்திற்கு அர்த்தம் சொல்லுகிறார்—தேவாத்யாகார பேதேந ஆத்மஸ்வ பேதமோஹம் பரித்யஜ என்று. தேவாதிசப்தமானது பேதசப்தவிவரணரூபமாயுள்ளது. தேஹத்தை அடைந்திருக்கிற தேவத்வாத்யாகார பேதமானது ஆத்மாவினிடத்தில் பேத மோஹத்திற்கு ஹேது. அந்த பேதமோஹத்தை விட்டுவிடு என்று அர்த்தம். பேதங்கள் முழுமையையும் நிஷேதிப்பதில் கருத்துள்ளதென்று சொல்லும்பக்ஷத்தில் அநிஷ்டத்தைக்கூறுகிறார்—அந்யதா என்று. அஹம், த்வம், முதலியசப்தங்கள் தேஹத்தை உணர்த்துகிறவைகளல்ல ? தத்சப்தத்தால் ஆத்மாவை பராமர்சித்து அந்த ஆத்மாவோடு தேஹங்களுக்கு ஐக்யம் உபதேசிக்கப்படுகிறதில்லை யன்றோ. அந்தக்கரணத்தையும் பொருளாகக் கொண்டவைகளல்ல. அந்தக்கரணங்களுக்கு பரமாத்மாவினிடத்தில் ஐக்யமோ பரஸ்பரம் ஐக்யமோ உபதேசிக்கப்படுகிறதில்லையன்றோ. தேஹத்துடன்கூடி இருக்கிற அந்தக்கரணத்தையும் இந்தசப்தங்கள் உணர்த்துகிறதில்லை. தேஹவிசிஷ்டங்களான அந்தக்கரணங்களுக்கு ஐக்யம் உபதேசிக்கப்படுதில்லையன்றோ. ஆதலால் அஹம் த்வம் முதலியசப்தங்கள் தேஹத்தைவிட வேறான ஆத்மாவைச்சொல்லுகின்றன வென்கிற அபிப்பிராயத்தினால் ‘தேஹாதிரிக்த’ என்று சொல்லப்பட்டது. அஹம்த்வம் முதலிய பதங்கள் உபலக்ஷணங்களாக இருப்பதால் உபலக்ஷிக்கப்படத்தக்க வஸ்துவில் பேதமில்லை என்று ஆசங்கித்து பரிஹரிக்கிறார்—அஹம் என்று ‘அஹம்த்வமாதி’ என்கிற இடத்திலுள்ள ஆதிசப்தத்தால் ஸர்வசப்தம் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. ‘உபலக்ஷ்யேண’ என்று ஔபசாரிகநிர்தேசம். உபலக்ஷ்யத்தைச் சொல்லுகிற பதத்தோடென்று அர்த்தம். ஸர்வமேததாத்ம ஸ்வரூபமித்யநேந என்று. அஹம் த்வம்ஸர்வம் என்கிற மூன்று பதங்களுக்கும் ஆத்மஸ்வரூப சப்தத்தோடு ஸாமாநாதிகரண்யம் பலித்தது. அம்மூன்று சப்தங்களுக்குள் ஒன்றான அஹம் த்வம் என்கிற சப்தங்களால் உணர்த்தப்படாநின்ற அர்த்தங்களுக்கு ஸஜாதீயமான அர்த்தத்தை உணர்த்துகிற ‘ஸர்வமேதத்’ என்கிற பதத்தோடு ஆத்மஸ்வரூப

சப்தத்திற்கு ஸாமாநாதிகரண்ய நிர்தேசத்தாலென்பதைத் தெரிவிப்பதற்காக 'ஸர்வமேதஜ்ஞாத்மஸ்வரூபம்' என்று உபாதாநம் செய்யப்பட்டது பாஷ்யத்தில். ச்லோகத்தில் 'ஸர்வமேதஜ்ஞாத்மஸ்வரூபம்' என்று காண்பிப்பதற்காகக் கூறப்பட்டது. ஆதலால் அஹம் த்வம் முதலிய சப்தங்களுக்கு உபலக்ஷ்யவாசகமாக அபிமானிக்கப்பட்டிருக்கிற ஆத்மஸ்வரூப சப்தத்தோடு ஸாமாநாதிகரண்யத்தினால் அஹம் த்வம் முதலிய சப்தங்களால் வாச்யங்களான அர்த்தங்களுக்கு உபலக்ஷணத்வமானது இசையாது. சந்திரன், கிளை § ஸாரஸபக்ஷி. ¶ கேதாரம், இப்படிப்பட்ட உபலக்ஷணவாசிகளாயும் உபலக்ஷ்யவாசிகளாகவுமிருக்கிற சப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் முக்கியமாகக் காணப்பட்டிருக்கவில்லை என்று அர்த்தம். லக்ஷணையினால் ஆகட்டுமென்று கூறப்படுமேயாகில் லக்ஷணையே தோஷமென்று கருத்து. அன்றிக்கே அநேக என்கிற பதம் உபலக்ஷ்யவிசேஷணம். ஸர்வமேதஜ்ஞாத்ம ஸ்வரூபம் என்கிற வாக்கியத்திலுள்ள ஆத்ம சப்தத்தால் நிர்தேசிக்கப் பட்டிருக்கிற இந்த உபலக்ஷ்யத்தோடு அஹம் த்வம் முதலிய சப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்யத்தினால் உபலக்ஷணத்வம் அஸங்கதமென்று அர்த்தம்.

இந்த யோஜனையில் அஹம் த்வம் முதலிய ஸஜாதீயார்த்தங்களைச் சொல்லுகிற ஸர்வபத ஸாமாநாதிகரண்ய நிர்தேசத்திற்கு ஹேதுத்வம் அர்த்தத்தால் ஸித்தித்தது. அஹம் த்வம் முதலியசப்தங்கள் உபலக்ஷ்ய பர்யந்தமான வ்ருத்தியுள்ளவைகளாக இருக்குமேயாகில் அப்பொழுது இவ்விதமான பொருளுள்ளதாக இருப்பதுபற்றி உபலக்ஷ்யவாசியான ஆத்ம ஸ்வரூபம் என்கிற பதத்தோடு ஸ: என்று தனித்து ஸாமாநாதிகரண்யம் காணப்படுவதால் உபலக்ஷணவாசகங்களான அஹம் த்வம் முதலிய சப்தங்களுடைய ஸாமாநாதிகரண்யம் பயனற்றது. அஹம் சப்தத்திற்கு அபேக்ஷிகமான ப்ரத்யக்த்வம் ப்ரவ்ருத்தி நிமித்தம். த்வம் சப்தத்திற்கு சேதநத்வமும் அபிமுகத்வமும். ஆத்ம சப்தத்திற்கு வ்யாபகத்தில் ஸமர்த்தமாக இருத்தல் ப்ரவ்ருத்தி நிமித்தம். ஸ: என்கிற பதத்திற்கு ப்ரக்ருதஜ்ஞாநாகாரம். கற்றுணர்ந்தவரே! 'ஸசஸர்வமேதஜ்ஞாத்மஸ்வரூபம்' என்கிற இடத்தில் ஆத்மஸ்வரூப விசேஷணமான தத் சப்தமானது எவ்வாறு பும்லிங்கமாக இருக்கக்கூடும்? மறுமொழி உரைக்கப்படுகிறது— 'ஆத்மா சுத்தோக்ஷர: சாந்த:' இது முதலிய இடங்களில் பரஜ்ஞாநமயனாக இருத்தலால் ப்ரக்ருதனான ஆத்மாவன்றோ தத் சப்தத்தால் பராமர்சிக்கப்படுகிறான். அதனால் விரோதமில்லை. அசித்தோடு சேர்க்கை பெற்றதும் தேவாதிரூபத்தால் அறியப்படுகிறதுமான இந்த ஆத்மஸ்வரூபம் அனைத்தும் ஜ்ஞாநத்தையே ஆகாரமாகக்கொண்ட அந்த ஆத்மா என்று அர்த்தம். நான்காவது பாதத்தை வியாக்கியானிக்கிறார்—ஸோऽபி என்று. இந்த ப்ரகரணமானது ஜீவாத்மா பரமாத்மாக்களுக்கு அத்வைதத்தை ஸாதிப்பதில் நோக்குள்ளதுமல்ல. ஆத்மஸ்வரூபங்களுடைய பஹுத்வத்தை நிஷேதிப்பதிலும் நோக்குள்ளதல்ல, ப்ரகாரைக்யத்தில் கருத்துள்ளதென்று எவ்வாறு அறியப்படுகிறது? என்கிற அபிப்பிராயத்தால் சொல்லுகிறார்— **தேஹஸ்ச** என்று பரிஹரிக்கிறார்— **தேஹாத்மா** என்று. அதுவும் எதனால் என்று கேட்கில் கூறுகிறார்— **தச்ச** என்று, தேஹம். ஆத்மா இவைகளின் ஸ்வரூபஸ்வபாவ விவேசனத்தில் நோக்குள்ளதென்பதை உபபாதிப்பதனால் ஜீவாத்மபரமாத்மாக்களுடைய ஐக்யத்தைக் கூறுதலில் நோக்குள்ளதென்பதும் ஆத்மாக்களின் பஹுத்வநிஷேதத்தில் நோக்குள்ளதென்பதும் உத்தரமளிக்கப்பட்டதே.

---

¶ ஸாரஸம்—ஓர்விதமான ஜலபக்ஷி § கேதாரம் நெல்விளையும் வயல்

“𑌵𑌿𑌭𑍇𑌦𑌜𑌨𑌕𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇” 𑌇𑌤𑌿 𑌚 𑌨𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌐𑌕𑍍𑌯𑌪𑌰𑌮𑍍 | 𑌨𑌾𑌪𑌿 𑌜𑍀𑌵𑌪𑌰𑌯𑍋𑌃 | 𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌐𑌕𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌰𑍀𑌤𑍍𑌯𑌾 𑌨𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 | 𑌜𑍀𑌵𑌪𑌰𑌯𑍋𑌰𑌪𑌿 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌐𑌕𑍍𑌯𑌂 𑌦𑍇𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌰𑌿𑌵 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 | 𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 “𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 | 𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿” (𑌮𑍁-௩-௧-௧) “𑌋𑌤𑌂 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍌 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯 𑌲𑍋𑌕𑍇 𑌗𑍁𑌹𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍌 𑌪𑌰𑌮𑍇 𑌪𑌰𑌾𑌰𑍍𑌧𑍇 | 𑌛𑌾𑌯𑌾𑌤𑌪𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍋 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑌯𑍋 𑌯𑍇 𑌚 𑌤𑍍𑌰𑌿𑌣𑌾𑌚𑌿𑌕𑍇𑌤𑌾𑌃” (𑌕॰-௩-௧) “𑌅𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑌾 𑌜𑌨𑌾𑌨𑌾𑌮𑍍” (𑌤𑍈-𑌆-௩-௨௰) 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾 ||

---

ஸ்ரீபாஷ்யம் :—

‘ விபேதஜனகே ஜ்ஞாநே’ என்பதும் ஆன்மாக்களுடைய ஸ்வரூபைக்யத்தைச்சொல்வதில் கருத்துள்ளதல்ல. ஜீவனுக்கும் பரவஸ்துவுக்கும் ஐக்யத்தைச் சொல்வதிலும் தாத்பர்யமுள்ளதல்ல. ஆன்மாக்களுடைய ஸ்வரூபைக்யமானது முற்கூறப்பட்ட வண்ணம் நிஷேதிக்கப்பட்டது. தேஹத்திற்கும் ஆன்மாவுக்கும் போல் ஜீவாத்மா பரமாத்மா இரண்டிற்கும் ஸ்வரூபைக்யம் ஸம்பவிக்கிறதில்லை. அவ்வண்ணம் சுருதி கூறுகிறது. “த்வா ஸுபர்ணாயுஜா ஸகாயாஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே. தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி அனச்னன்னன்யோஅபி சாகசீதி. (அபஹத பாப்மத்வம் முதலிய குணங்களால் அன்யோன்யம் ஸமானர்களும் சேர்ந்தே ஸஞ்சரிப்பவர்களும் இரண்டுபக்ஷிகள்போன்றவர்களுமானஜீவாத்மாபரமாத்மா இருவர்களும் மரம்போல் வெட்டத்தகுதியுள்ள ஒரு சரீரத்தை ஆச்ரயித்திருக்கிறார்கள். அவ்விருவர்களுக்குள் ஒருவனான ஜீவன் அதிபக்வமான கர்மபலத்தை அனுபவிக்கிறான். மற்றொருவனான பரமாத்மாவோ வென்றால் கர்மபலத்தை அனுபவியாதவனாகவே எதிரில் ப்ரகாசிக்கிறான்) “ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்யலோகே,குஹாம்ப்ரவிஷ்டௌ பரமேபரார்த்யே சாயாதபௌ ப்ரஹ்ம விதோவதந்தி பஞ்சாக்நயோ யே ச த்ரிணாசிகேதா: ” (எவர்கள் ஐந்து அக்னிகளின் சுச்ரூஷையினால் பரிசுத்தமான அந்தக்கரணமுள்ளவர்களோ “அயம் வாவய:பவதே” என்று தொடங்கப்பட்டிருக்கிற மூன்று அநுவாகங்களை அத்தியயனம் செய்திருக்கிறார்களோ அப்படிப்பட்ட ப்ரஹ்மவித்துக்கள் ஜீவாத்மா பரமாத்மா இருவர்களையும் அவசியம் ஸம்பவிக்கத்தக்க கர்ம பலத்தை அனுபவிக்கிறவர்களென்றும் ஸுக்ருதத்தால் ஸாதிக்கத்தக்க இந்த உலகத்தில் (பிராணிகளுடைய) ஹ்ருதயத்தில் ப்ரவேசித்திருப்பவர்களென்றும் அந்த ஹ்ருதய கமலத்திலுள்ள சிறந்ததான ஹார்தாகாசத்திலிருப்பவர்களென்றும் சொல்லுகிறார்கள்.

அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜநாநாம் ஸர்வாத்மா’ (எல்லாவஸ்துக்களுக்

கும் அந்தராத்மாவாக இருக்கிற பரமபுருஷன் பிராணிகளுக்குள்ளே ப்ர வேசித்தவனாக இருந்துகொண்டு நியமனம் பண்ணுகிறான்) இது முதலிய சுருதிகள்.

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் சாஸ்திரத்தின் முடிவிலிருக்கிற "விபேதஜாதே" இது முதலிய ஸ்லோகங்களுக்குப் பொருளைக் கூறப்போகிறவராய்க் கொண்டு அவைக ளுக்கு வேறு அர்த்தத்தை உணர்த்துவதில் கருத்துள்ளதாக இருந்ததை நிரா ஸம் செய்கிறார்— வி பேத இது முதலியதால். முதலில் ஆத்மஸ்வரூபைக்ய பரமா? ஜீவபரமாத்மைக்ய பரமா? என்று விகல்பித்துத் தூஷிக்கப்படுகிறது. இந்த இடத்தில் ச சப்தமில்லாததினால் ஆத்மப்ரஹ்ம சப்தங்கள் இரண்டுக் கும் ஸாமாநாதிகரண்யம் ஸம்பாவிதமானது. அப்படியாகில் ப்ரஹ்ம சப்தமா னது சுத்தாவஸ்தையுள்ள ஆத்மபரமாக ஆகும். இவ்வண்ணம் சுத்தாவஸ்தையுட ன்கூடின ஆன்மாவைக்காட்டிலும் ஜீவனுக்கு பேதமானது இல்லை என்பதனால் ஜீவ ஸ்வரூபைக்யம் சொல்லப்பட்டதாக ஆகும். ஆதலால் சங்கைக்கு ஆஸ்பதமாக ஆகா நின்ற ஆத்மைக்ய பரத்வத்தைத் தூஷிக்கிறார்.—ஆத்மா என்று. உத்தரீத்யா—சுருதி ஸ்ம்ருதி அர்த்தாபத்தி லௌகிகார்த்தாபத்தி முதலியவைகளால் என்று அர்த்தம், இரண்டாவது பக்ஷத்தை தூஷிக்கிறார். ஜீவ என்று. தேஹாத்மனோரிவ என்று. விருத்ததர்மத்துடன்கூடி இருத்தலாலென்று அர்த்தம். ப்ரத்யக்த்வம் பராக்த்வம் ஜடத்வம் அஜடத்வம் நித்யத்வம் பரிணாமித்வம் முதலிய விருத்ததர்மங்களால் எப்படி தேஹத்துக்கும் ஆத்மாவுக்கும் பேதமிருக்கிறதோ அவ்வண்ணம் ஜீவனுக்கும் பர மாத்மாவுக்கும் ஹேயார்ஹத்வம் உபயலிங்கத்வம் நியாம்யத்வம் நியந்த்ருத்வம் முத லிய விருத்த தர்மங்களால் ஐக்யம் உபபன்னமாகிறதில்லையன்றோ. விருத்ததர்மங் களோடு சேர்ந்திருப்பதில் ப்ரமாணத்தைக் கூறுகிறார்-த்வா சு என்று. ததா-விரு த்ததர்மங்களை என்று அர்த்தம். சகாரமானது ஹி சப்தத்தின் அர்த்தமுள்ளது. ஹேதுவைச்சொல்லுகிறது. சொல்லப்படப்போகிற ஹேதுக்களுக்கெல்லாம் பஞ் சமீ ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. அந்த பஞ்சமீ ஸ்தானத்தில் இந்த சப்தம் ப்ர யோகிக்கப்பட்டிருக்கிறது. ஸமானம் வ்ருக்ஷம்- சரீரம். பிப்பலம்— கர்மபலம். அபிசாகசீதி—தான் புஜிக்காமலிருத்தலாலும் அன்யனை புஜிக்கச் செய்வித்தலா லும் மிக்க ப்ரகாசிக்கிறான் என்று அர்த்தம்.

கற்றறிந்தவரே! இந்த மந்திரத்திற்கு எவ்வாறு ஜீவபரமாத்மாக்களின் பேதப்ரதிபாதனத்தில் கருத்து? அந்தக்கரண ஜீவபரமல்லவோ இந்த மந்திரம். பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்தால் இந்த மந்திரம் அவ்வாறு அந்தக்கரண ஜீவபர மென்று வ்யாக்கியானிக்கப்பட்டிருப்பதால். எவ்வாறெனில்—"தயோரந்ய: பிப்ப லம் ஸ்வாத்வத்தி" என்பதனால் ஸத்த்வம், அநச்நன்னன்யோ அபிசாகசீதி" என்ப தனால் ஜ்ஞன். அந்த இவர்கள் இருவர்களும், ஸத்த்வ க்ஷேத்ரஜ்ஞர்கள் என்று. 'ஸ்வாத்வத்தி' என்கிற பதங்களை சொல்லுடைய மந்திரத்தினால் ஸத்த்வம் கூறப் பட்டது. அபிசாகசீதி என்கிற பதத்தை சொல்கொண்ட வாக்கியத்தினால் கர்ம பலத்தை புஜியாதவன் மற்றொருவன் ஜ்ஞன் என்கிற க்ஷேத்ரஜ்ஞன் அபிபச்யதி என்று உரைக்கப்பட்டதென்று சொல்லப்படுகிறது. ஸத்த்வசப்தம் ஜீவனைச் சொ ல்லுகிறது. க்ஷேத்ரஜ்ஞ சப்தம் பரமாத்மாவைச் சொல்லுகிறதென்று சொல்லக்

கூடாது. ஸத்த்வசப்தம் க்ஷேத்ரஜ்ஞ சப்தம் இரண்டும் முறையே அந்தக்கரணத்தையும் ஜீவனையும் உணர்த்தும் தன்மை வாய்ந்துள்ளதாக ப்ரஸித்தி இருப்பதால். 'தவேதத் ஸத்த்வம் யேந ஸ்வப்நம் பச்யதி—அதயோயம் சரீர உபத்ரஷ்டா ஸ க்ஷேத்ரஜ்ஞ:—த்வா வேதௌ ஸத்த்வ க்ஷேத்ரஜ்ஞௌ' என்கிற வாக்கியத்திலுள்ள ஸத்த்வ க்ஷேத்ரஜ்ஞ சப்தங்கள் முறையே அந்தக்கரணத்தையும் ஜீவனையும் உணர்த்துகிறதென்று அவ்விடத்திலேயே வ்யாக்யானிக்கப்பட்டிருப்பதாலும், யேநபச்யதி எதனால் பார்க்கிறானோ என்கிற பொருளுடன்கூடின வாக்கியத்தினால் தர்சனத்திற்கு ஸாதகதமமாக இருப்பது அந்தக்கரணமென்று அறியப்படுவதால் ஸத்த்வமன்றோ அந்தக்கரணம். ஸ்வப்நத்தைக் காண்பவனானதால் அந்தக்கரணத்தைக்காட்டிலும் வேறாக இருக்கிற க்ஷேத்ரஜ்ஞனன்றோ ஜீவன். ஆகையால் 'த்வா ஸுபர்ணா' என்கிற இந்த மந்திரமானது அந்தக்கரணத்தையும் ஜீவனையும் உணர்த்துகிறதே ஒழிய, ஜீவ பரமாத்மாக்களை உணர்த்துகிறதில்லை என்று மறுமொழி உரைக்கப்படுகிறது. இந்த மந்திரம் ஜீவ பரமாத்மாக்களை ப்ரதிபாதிப்பதில்தான் கருத்துள்ளது என்கிற விஷயம் மறுக்கவொண்ணாது. ஏனெனில் இந்த மந்திரத்தின் அர்த்தத்தோடு ஸமானமான அர்த்தத்துடன் கூடி இருத்தலால் ப்ரத்யபிஜ்ஞைக்கு விஷயமாகிற 'ஸமானே வ்ருக்ஷே புருஷோநிமக்ந:' என்கிற அடுத்த மந்திரத்தில் ஜீவபரமாத்மாக்கள் உணர்த்தப்பட்டிருப்பதாலும் இந்த மந்திரமானது அந்த மந்திரத்தோடு ஸமானார்த்தமுள்ளதாக இருப்பதாலும், 'ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே' 'ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்ந:' என்கிற அந்த இரண்டு மந்திரங்களுக்கு அர்த்தைக்யமன்றோ அறியப்படுகிறது. 'ஸமானே வ்ருக்ஷே' என்கிற மந்திரத்திலும் புருஷன் ஜீவன். அந்தக்கரணத்துக்கு புருஷ சப்தத்தால் சொல்லத்தக்க தன்மை இல்லாததால், 'சோசதி முஹ்யமாந:, பச்யதி வீதசோக:' என்கிற பதங்களுக்கு அஸ்வாரஸ்யம் ப்ரஸங்கித்தலாலும். அன்யன் பரமாத்மா. ஈச சப்தத்தினால் சொல்லத்தக்கவனாக இருப்பதாலும் தன்னை விஷயீகரிக்கிற ஞானத்தினால் சோகநாசத்திற்குக் காரணமாக இருப்பதாலும். மேலே அடுத்துவரப்போகிற மந்திரத்தோடு அர்த்தைக்யமிருப்பதினால் மாத்திரம் 'த்வா ஸுபர்ணா' என்கிற மந்திரத்திற்கு ஜீவபரமாத்ம பரத்வமென்பதில்லை, பின்னையோ அதே மந்திரத்தில் 'ஸ்வாத்வத்தி, அநச்நன்னந்ய:' என்று போக்த்ருத்வ அபோக்த்ருத்வ ச்ரவணத்தாலும் அது நிச்சயிக்கப்படுகிறது. கண் காது முதலியவைகளுக்கு முறையே பார்க்கும்சக்தி கேட்கும் திறமை முதலியவைகள்போல் அந்தக்கரணத்துக்கும் காரணமாக இருப்பதுபற்றியே போக்த்ருத்வம் ஸம்பவிக்கிறதில்லை. ஜீவனுக்கும் வ்ருக்ஷ சப்தத்தால் சொல்லப்பட்ட தேஹஸம்பந்தமுள்ள தசையிலேயே கர்மபலத்தை புஜிக்காமலிருத்தலும் பொருந்துகிறதில்லை.

அங்ஙனமாகில் பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்திற்கு யாது பொருள்? உரைக்கப்படுகிறது. ஸத்த்வம்-பத்தஜீவன். 'த்ரவ்யாஸு வ்யவஸாயேஷு ஸத்வமஸ்த்ரீ து ஜந்துஷு' என்று நிகண்டுகாரர்களின் பாடத்தினால் ஸத்த்வ சப்தம் ஜந்து வாசகமென்று அறியப்படுவதால், ஜந்து-சேதனன், "ப்ராணீ து சேதநோ ஜன்மீ ஜந்து ஜந்ய சரீரிண:' என்று சேதந பர்யாயமாக ஜந்து சப்தம் படிக்கப்பட்டிருப்பதால், 'ந தத்ஸ்தி ப்ருதிவ்யாம்வா திவி தேவேஷு வா புன: - ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபிஸ் ஸ்யாத்த்ரிபிர் குணை:' என்று ப்ரயோகமிருப்பதால், 'வந்யான் விநேஷ்யன்னிவ துஷ்ட ஸத்வான்' என்று பிற்காலத்திலுள்ள கவிகளின் ப்ரயோகத்

தாலும். க்ஷேத்ரஜ்ஞ சப்தமானது இந்த இடத்தில் பரமாத்மாவைச் சொல்லுகிறது. வேறு அர்த்தங்களில் ப்ரஸித்தமான ஆகாச ப்ராண சப்தங்கள்போல அர்த்தம் பொருந்தாததனால் பரமாத்ம பரத்வம் பொருத்தமுள்ளதாக ஆகிறது. 'விஷ்ணோர் நாமஸஹஸ்ரம்மே' என்று தொடங்கி 'க்ஷேத்ரஜ்ஞோக்ஷர ஏவச' என்று ப்ரயோகமிருப்பதால். 'க்ஷேத்ரம் ஜாநாதி' என்கிற அவயவார்த்தத்திற்கு அந்த பரமாத்மாவினிடத்திலேயே நன்குபொருத்தமிருப்பதாலும். மோக்ஷதர்மத்தில் ‚ ததஸ்த்ரைகுண்யஹீநாஸ்தே பரமாத்மாநமஞ்ஜஸா — ப்ரவிசந்தி த்விஜச்ரேஷ்ட க்ஷேத்ரஜ்ஞம் நிர்குணாத்மகம்—ஸர்வாவாஸம் வாஸுதேவம் க்ஷேத்ரஜ்ஞம் வித்தி தத்வத: —விச்வமூர்த்தா விச்வபுஜோ விச்வபாதாக்ஷி நாஸிக:—ஏகச்சரதி க்ஷேத்ரேஷு ஸ்வைரசாரீயதாஸுகம்— க்ஷேத்ராணிச சரீராணி பீஜாநிச சுபாசுபே தாநிவேத்தி ஸயோகாத்மா தத:க்ஷேத்ரஜ்ஞ உச்யதே—என்று ப்ரயோகமிருப்பதாலும். 'யோஸ்யாத்மந: காரயிதா தம்க்ஷேத்ரஜ்ஞம் ப்ரசக்ஷதே — ய:கரோதிச கர்மாணி ஸ பூதாத்மேதிசோச்யதே' என்று ப்ரயோகமிருப்பதாலும். 'யேந ஸ்வப்நம் பச்யதி' என்கிறவாக்கியத்திலிருக்கிற யேந என்றகிபதமானது இத்தம்பாவரூபமான அர்த்தத்தை உணர்த்துகிற த்ருதீயாவிபக்தியை ஈற்றில்கொண்டது. எதோடு கூடினவனாக இருந்துகொண்டு பரமாத்மா ஸ்வப்நம் காண்கிறானோ என்று சொல்லப்படுகிறது. ஆகவே 'காடின்யவான் யோபிபர்தி' என்கிற இடத்தில் ப்ருதிவியின் வாயிலாக காடின்யம்போல ஸ்வப்நத்ரஷ்ட்ருத்வமானது ஜீவாத்மாவைத்துவாரமாகக்கொண்டு பரமாத்மாவுக்கு விசேஷணமாகிறதாதலால் விரோதமில்லை. சாரீரசப்தமும் 'தஸ்யைஷஏவ சாரீர ஆத்மா' என்கிற வாக்கியத்தில்போல தன்னைவிட வேறான ஸமஸ்த சிதசித்வஸ்துக்களையும் சரீரமாகக்கொண்ட பரமாத்மாவினிடத்தில் உபபன்னமாகிறது. 'உபத்ரஷ்டா' என்கிற சுருதிவாக்கியத்திலடங்கி இருக்கிற பதத்தால் ஏற்படுகிற நிருபாதிகமான த்ரஷ்ட்ருத்வமும் ஸர்வஜ்ஞனான அவனுக்கே பொருந்தமுள்ளதாக ஆகிறது. ஆகையால் 'த்வாஸுபர்ணா'என்கிற மந்திரமானது ஜீவபரமாத்மாக்கள் இருவர்களையே சொல்லுகிறது.'ருதம் பிபந்தௌ'என்கிற இடத்தில்பாநக்ரியையில் ஜீவபரமாத்மா இருவர்களுக்கும் ப்ரயோஜ்ய ப்ரயோஜக பாவத்தால் அன்வயம். பிபந்தௌ என்கிற பதத்திலுள்ள சத்ருப்ரத்யயமானது கர்தாவைமாத்திரம் சொல்லுகிறது, கர்த்ரு விசேஷத்தைக் குறிக்கிறதில்லை. ஆதலால் ப்ரயோஜ்யனாகவும் ப்ரயோஜகனாகவும் இருக்கிற இருவர்களும் கர்த்ரு விசேஷங்களாக இருப்பதுபற்றி அவர்கள் இருவர்களும் வேற்றுமை இன்றி க்ரோடீகரிக்கப்பட்டவர்களாக ஆகிறார்கள். அப்படி இல்லாவிட்டால் அநந்தர இதுமுதலியவைகளின் விரோதம் ஸம்பவிக்கும். அன்றிக்கே 'சத்ரிணோ கச்சந்தி' என்கிற வாக்கியத்தில்போல அஜஹல்லக்ஷணை. ஸுக்ருதஸ்ய-புண்ணியத்தினுடைய, ருதம்-பலத்தை,அன்றிக்கே,ஸுக்ருதஸ்ய என்கிற பதத்திற்கு லோகே என்கிற பதத்தோடு அன்வயம். அப்பொழுது, ருதம் ஸுக்ருதம், லக்ஷணையினால் அதன் பலம் சொல்லப் படுகிறது. ஏவம் 'புண்யஸ்யகர்தோ தாராத்வாதி' என்கிற இடத்தில் 'ஏவம், அந்ருதாதாத்மாநம் ஜுகுப்ஸேத் 'என்கிறஇடத்தில் புண்ணியத்திற்கு ப்ரதியோகியாக அந்ருத சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதால்.குஹாம்—ஹ்ருதயகுஹையை. பரமே, பரார்த்யே, என்பது லோகத்திற்கு விசேஷணங்கள். ஜீவபர விசேஷணங்களாகவாவது இந்த பதங்களை அன்வயிக்கலாம். அப்பொழுது லிங்கம் மாறிஇருப்பது சாந்தஸமாதலால் தோஷமில்லை என்று ஸமாதானம் சொல்லத்தக்கது. சாயாதபௌ அஜ்ஞஸர்வஜ்ஞர்கள் இருவர்கள்— 'ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீசநீசௌ' என்கிற வாக்கியத்தோடு ஏகார்த்தமாக இருப்பதால். ப்ரஹ்மவித: - அத்யாத்ம சாஸ்தி

ரத்தை நன்கு உணர்ந்தவர்கள். பஞ்சாக்நிகளும் த்ரிணசிகேதர்களும் கர்மவிசேஷ நிஷ்டர்களான ப்ரஹ்மவித்துக்கள் எவர்களோ அவர்கள் சொல்லுகிறார்கள். எவ்வாறு எனில், 'யேசவேதவிதோ விப்ரா யேசாத்யாத்மவிதோஜநா:, தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்' என்று.

'ருதம்பிபந்தௌ' என்கிற மந்திரத்தின் வைசத்யத்தின்பொருட்டுக் கூறுகிறார். **அந்தப்:ரவிஷ்ட:** என்று, இத்யாத்யா என்கிறபதத்திற்கு ச்ருதி: என்கிற பதத்தோடு அன்வயம்—

[illegible]

ஸ்ரீ பாஷ்யம்—

இந்த சாஸ்திரத்திலும் "ப்ரஹ்மஸ்வரூபத்தை மனனம்செய்பவனே! அந்தப் பரமபுருஷன் ஸர்வபூதங்களுக்கும் காரணமாக இருக்கிற அவ்யக்தத்தையும் மஹத்தத்வம் முதலிய விகாரங்களையும் ஸத்வம் முதலிய குணங்க

களையும் அவைகளின் கார்யங்களாக இருக்கிற லோகம் ஞானம் முதலியவற்றை யும் தாண்டி இருப்பவன்—அவித்யைமுதலிய எல்லா ஆவரணங்களையும் தாண்டி இருப்பவன்-சேதநாசேதநங்கள் அனைத்துக்கும் ஆத்மாவாக இருப்பவன்-உலகத்தினுள் எந்தவஸ்து இருக்கிறதோ அவை அனைத்தும் அந்தப்பரமபுருஷனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது, அந்த பரமபுருஷன் எல்லா கல்யாண குணங்களாலும் நிறைந்தவன். சிறப்புற்றவர்களுக்குள் சிறப்புற்றவன்-பராவர தத்வங்களுக்கு நியந்தாவாக இருக்கிற எந்த பரமாத்மாவினிடத்தில் க்லேசம்முதலியவை அனைத்தும் இல்லையோ, அவித்யை என்பது கர்மாவென்கிற பெயருள்ள வேறு ஒரு மூன்றாவது சக்தியாக விரும்பப்படுகிறது. அரசே! எந்தசக்தியினால் எல்லாவற்றையும் அடைந்திருக்கிற அந்த க்ஷேத்ரஜ்ஞசக்தியானது சுற்றப்பட்டிருக்கிறதோ' என்று பேதம் கூறப்பட்டிருப்பதாலும், 'உபயேபிஹி தேவதைநமதீயதே' 'பேதவ்யபதேசாச்ச' 'அதிகந்துபேதநிர்தேசாத்' இதுமுதலிய ஸூத்ரங்களிலும், 'ய ஆத்மநி திஷ்டந்நாத்மநோந்தரோயமாத்மா நவேத யஸ்யாத்மா சரீரம், ய ஆத்மாநமந்தரோயமயதி (எவன் ஆத்மாவினிடத்தில் இருக்கிறானோ ஆத்மாவுக்குள்ளே நிலைபெற்று இருக்கிறானோ, எவனை ஆத்மா அறிகிறானில்லையோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவின் ஹ்ருதயாகாசத்திலிருந்து அவனை நியமனம்செய்கிறானோ,) 'ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்த: (ஸுஷுப்தியில்) ஸர்வஜ்ஞனான பரமாத்மாவினால் ஆலிங்கனம் பண்ணிக் கொள்ளப்பட்டவனாக ஆகிறான். 'ப்ராஜ்ஞேநாத்மநா அந்வாரூட:' (உத்க்ராந்திஸமயத்தில்) (ப்ராஜ்ஞனான பரமபுருஷனால் எடுத்துக்கொண்டு போகப்பட்டவனாக ஆகிறான்) இதுமுதலிய வசனங்களால் ஜீவாத்மா பரமாத்மா இருவர்களுக்கும் பரஸ்பரம் விருத்தங்களான ஆகாரங்களால் ஸ்வரூபம் நிர்ணயிக்கப்பட்டிருப்பதால். ஸாதநாநுஷ்டானத்தினால் அவித்யையினின்று விடுபட்ட ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவோடு ஸ்வரூபைக்யம் ஸம்பவிக்கிறதில்லை. அவித்யைக்கு ஆச்ரயனாக இருத்தலென்கிற தன்மைக்குத் தகுதியுள்ள ஜீவனுக்கு அத்தன்மையை வஹிப்பதற்குத் தகுதிஇல்லாமை ஸம்பவியாததால். இந்த விஷயத்தைப்பற்றி அபியுக்தர்கள் கூறி இருக்கின்றனர். அதாவது-" பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் ஐக்யம் பரமார்த்தமென்று (சில அறிஞர்களால்) விரும்பப்படுகிறது. இது முற்றிலும் பிசகு- ஏனெனில் வேறுவஸ்துவானது அதைக்காட்டிலும் வேறானவஸ்துவின் தன்மையை அடைகிறதில்லையன்றோ " என்று.

---

ச்ருதப்ரகாசிகை—

ஶ்ருதிஸ்வாரஸ்யத்தால் மாத்திரமல்ல. இந்தப் பிரபந்தத்திலும் காணப்படுகிறதென்று சொல்லுகிறார்—**அஸ்மின்னபி** என்று. 'ஸ ஸர்வபூத' இது முதலியதால் ஹேயப்ரத்யநீகத்வமும் கல்யாணகுணாகரத்வமும் சொல்லப்பட்டன. ஜீவனுக்கு ஹேயான் பதத்வமானது 'அவித்யா' இது முதலியதால் உரைக்கப்பட்டது.

ஸ்ரீவசேகீ'பேதவ்யபதேசாத்' என்பதற்கு முந்தினதோடு ஸம்பந்தம். ஸூத்ரம் எடுக்கப்படவில்லை. மேலே இந்த ஸூத்ரத்திற்கு விஷயவாக்கியத்தை எடுக்காத தாலும் உதாஹரிக்கப்பட்டிருக்கிற புராணவசனங்கள் ஹேதுத்வோபந்யாஸத்தை அபேக்ஷித்திருப்பதாலும் ச்ருதிவாக்கியத்திற்கு ஹேதுத்வமன்றோ ச சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. 'உபயேபி' இதுமுதலாக எடுக்கப்பட்டிருக்கிற இரண்டு ஸூத்ரங்களுக்கும் விஷயவாக்கியம் 'ய ஆத்மநி' என்று. 'அதிகந்து' என்று தொடங்கியிருக்கிற ஸூத்திரத்திற்கு விஷய வாக்கியம் 'ப்ராஜ்ஞேநாத்மநா:' என்று. ஸூத்ரங்களில் இந்த ச்ருதிகளால் இவ்வண்ணம் அர்த்த நிர்ணயம் செய்யப்பட்டிருப்பதாலென்று பொருள். இவ்விதமாக உபநிஷத்துக்களாலும் புராணங்களாலும் ஸூத்ரங்களாலும் ஜீவாத்மா பரமாத்மா இருவர்களுக்கும் விருத்த தர்மத்வம் உபபாதிக்கப்பட்டது.

இதற்குமேல் 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி' இதுமுதலியவாக்கியங்களை உள்ளத்தில் வைத்துக்கொண்டு இதற்கு அந்யதாஸித்தியைச் சங்கிக்கிறார். நாஜ என்று. அதைத் தூஷிக்கிறார்—அவித்யாச்ரயத்வ என்று. அவித்யாச்ரயத்வ—யோக்யத்வம்—அவித்யாசப்தம் ஸமஸ்தஹேயங்களையும் காட்டுவதற்காக. ஆச்ரயத்வசப்தமானது ஸம்பந்தத்தைக்குறிக்கிறது. அவித்யாச்ரயத்வயோக்யத்வமாவது ஹேயஸம்பந்தத்தின் அத்யந்த பாவத்திற்கு அதிகரணமாக இல்லாமலிருத்தல். அவித்யாச்ரயத்வா நர்ஹத்வமாவது ஹேயஸம்பந்தத்தினுடைய அத்யந்தாபாவத்திற்கு அதிகரணமாக இருத்தல். 'அநச்நன்னன்ய:' என்கிற ச்ருதியினால் பரமாத்மாவுக்கு ஹேயஸம்பந்தாநர்ஹத்வம் ஸித்தித்தது. தேசகாலங்களின் * ஸன்னிகர்ஷமிருந்தபோதிலுங்கூட அந்த தேசகாலங்களின் அஸ்பர்சமானது ஸ்வபாவ ஸன்னிகர்ஷத்தினின்மையாலன்றோ. ஸ்வபாவஸன்னிகர்ஷத்தின் அபாவமே யன்றோ அயோக்யத்வம். ஆகாயத்திற்கு நனைத்தல் எரித்தல் முதலியதற்கு அநர்ஹமாக இருத்தல்போல. ஆகையால் ஹேயார்ஹமாகவும் ஹேயா நர்ஹமாகவும் இருக்கிற இரண்டு வஸ்துக்களுக்கும் ஹேயங்கள் விலகிப்போனபோதிலுங் கூட ஸ்வரூபைக்யம் ஸம்பவிக்கிறதில்லை. முதலில் நிக்ரஹிக்கத்தக்கவனாக இருந்து பிறகு அனுக்ரஹிக்கப்பட்டவனுக்கு நிக்ரஹிக்கத்தக்க தன்மை விலகிப்போனபோதிலுங்கூட நிக்ரஹாநுக்ரஹங்களைச் செய்கிற புருஷனோடு நிக்ரஹிக்கத்தக்கவனுக்கு ஐக்யம் ஸம்பவிக்கிறதில்லை என்று பொருள். சிறைச்சாலையினின்று விடுபட்டவனுக்கு § நியந்தாவான அரசனோடு ஸ்வரூபைக்யம் ஸம்பவிக்கிறதில்லை என்று பொருள். இந்த அர்த்தத்தில் புராணவசனத்தைக்கூறுகிறார்—யதோக்தம்என்று. யோகசப்தம் ஐக்யத்தை உணர்த்துகிறது. அங்ஙனம் அந்த சப்தத்திற்குப்பொருள் கூறாமல் போனால் 'அந்யத்த்ரவ்யம் ஹிதத்த்ரவ்யதாம் நைதி' என்று முற்கூறப்பட்டுள்ள பொருளுக்கு மறுப்புக்கூறியது பொருந்தாதலால், கற்றுணர்ந்தவரே! 'மித்யைதத்' என்கிறதற்கு மேலே அன்வயம்.' பரமாத்மாத்மநோர்யோகபரமார்த்த: அந்யத்த்ரவ்யம் தத்த்ரவ்யதாம் நைதி இத்யேதத் மித்த்யா' என்று பொருள் என்று சொல்லப்படுமேயானால் இவ்வண்ணமல்ல. ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவாக ஆகாமலிருப்பது ஸத்யமாக இருப்பதால். அப்படிக்கில்லாவிட்டால் ஜட

* ஸன்னிகர்ஷம்—ஸம்பந்தம் அல்லது சேர்க்கை.

§ நியந்தா—தலைவன் அல்லது ஆளுகிறவன், ஆஜ்ஞை இடுபவன்.

வஸ்துவுக்கும் அஜடமாகஇருக்கிற வஸ்துவுக்கும் ஸ்வரூபைக்யம் ப்ரஸங்கிக்கும். 'ருக் யஜுஸ்ஸாம நிஷ்பாத்யம் யஜ்ஞகர்மமதம் தவ' என்பதுபோல் இஷ்யதே என்கிற பதப்ரயோகத்திஞல் பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தம் அன்யனுடைய மதம் என்று வெளியிடப்பட்டது. அங்ஙனமில்லாவிடில் இஷ்யதேஎன்கிற பதம் பயனற்றதாக ஆகும்.

மேலும், ப்ரகரணமானது, பரமார்த்தஸ்து பூபால ஸம்க்ஷேபாச்ச்ரூயதாம்' என்று இனி கூறப்போகிற பக்ஷத்தைத் தவிர்த்த மற்ற எல்லாபக்ஷங்களின் நிராகரணத்தில் நோக்குள்ளதாக இருத்தலால். உத்தரார்த்தத்திற்கு இந்த ஶ்லோகத்தினது பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தைக்ய ஸமர்த்தனத்தில் நோக்கமானது பொருந்துகிறதில்லை. 'தர்மாய த்யஜத :' இது முதலிய க்ரந்தங்களால் அந்தந்த அர்த்தங்களுக்கு பாரமார்த்தியமல்லவோ நிரஸிக்கப்படுகிறது. தாஞகவே ப்ரக்ருதார்த்தத்தில் ஸ்வரஸமாக இருக்கிற ஏதத் சப்தத்திற்கு ப்ரக்ருதார்த்த மிருக்கும்பொழுதுகூட இனிகூறப்போகிற பொருளில் நோக்கத்தை ஆஶ்ரயிப்பதும் தகுதியுள்ளதன்று. மேலும், அந்யத்த்ரவ்யம் தத்த்ரவ்யம்நாம் நைதி இதியத் ஏதத்மித்த்யா-வேறு ஒருவஸ்துவானது மற்றொரு வஸ்துவின் தன்மையை அடைகிறதில்லை என்பது யாதொன்றுண்டோ இது மித்த்யை என்றல்லவோ அப்பொழுது பொருள். அங்ஙனமாகில் யதஶ்ஶப்த ஸ்வாரஸ்யத்திற்கு பங்கம் வருகிறது. யதஶ்ஶப்தத்திற்கு ஹேதுபரத்வமன்றோ ஸ்வரஸஸித்தமானது. யச் சப்தத்திற்குப்போல் ப்ரக்ருதார்த்தமான சரீரமாத்ர பராமர்சித்வம் ஸ்வரஸஸித்தமல்ல. 'அந்யத் த்ரவ்யம் தத் த்ரவ்யதாம் நைதீத்யேதத் ந மித்த்யேதி யத:தத: ஐக்யம் பரமார்த்த: ' என்று அன்வயித்தால் இரண்டு இதி சப்தங்களின் அத்தியாஹாரம் ப்ரஸங்கிக்கும். அத்தியாஹாரமில்லாமலே நிர்வாஹம் ஸம்பவிப்பதாக இருக்க அத்தியாஹாரம் பொருத்தமுள்ளதாக ஆகாது. முன்பு தனித்தே இருந்து கொண்டிருந்த பரமாத்மா ஜீவாத்மா இருவர்களுக்கும் ஐக்யம் பரமார்த்தமென்று விரும்பப்படுகிறது என்று கூறப்படுமேயாஞல் இது மித்த்யை, எந்தக்காரணத்திஞல் வேறு திரவ்யமானது மற்றொரு திரவ்யத்தின் தன்மையை அடைகிறதில்லையோ ஆதலால் முக்தியும் பரமாத்மா ஜீவாத்மா இருவர்களுக்கும் பேதம் இல்லை என்று சொல்லப்படுமேயாகில் இவ்வண்ணமல்ல. முக்தி ப்ராக்தியிஞல் தனித்திருப்பவர்களான இருவர்களுக்கும் என்கிற இந்த அர்த்தமானது கேட்க்கப்படாமலிருத்தலால் அத்தியாஹாரம் ப்ரஸங்கிக்கும். அந்த அத்தியாஹாரமானது அத்தியாஹாரமில்லாமலே நிர்வாஹம் ஸம்பவிக்கிற இடத்தில் பொருத்தமுள்ளதாக ஆகிறதில்லை.

மேலும் 'தஸ்மாத் பூர்வமபி பேதோ நாஸ்தி ' என்று முன்பு காதால் கேட்கப்படாத ஒரு வாக்கியாந்தரத்தின் அத்தியாஹாரத்திஞல் வாக்கியம் நிரப்பத் தக்கதாக ஆகும். அது அதை அபேக்ஷியாமலே நிர்வாஹம் ஸம்பவிக்கிற இடத்தில் பொருந்தாது. ஆகையால் ' முக்தியும் பேதம் கிடையாது' என்கிறவாக்கியமானது அத்யாஹாரம் செய்துகொள்ளத்தக்கதல்ல. இந்த கிரந்தமானது முன்பு வேறுபட்டிருக்கிற பரமாத்மா ஜீவாத்மா இருவர்களுக்கும் பிறகு அபேதமென்கிறபக்ஷத்தின் நிராகரணமாத்திரத்தில் அபிநிவேசமுள்ளதாக இருப்பதால் என்று கூறப்படுமேயாகில் அதஞல் யாது பயன். முக்தியும் ஐக்யம் ஸித்தித்திருக்கிறதென்று சொல்லப்படுமேயாகில் அல்ல. முன்பு வேறுபட்டிருந்த இரண்டுவஸ்துக்களுக்கு பின்பு ஐக்யத்தின் பொருந்தாமை சொல்லப்பட்டிருக்குமளவில் பிறகும் பேதம்ஸித்தித்திருப்பதால். ஆதலால் ஸ்வரஸஸித்தமான அர்த்தமே ஏற்றுக்கொள்ளத்தக்கது.

मुक्तस्य तद्धर्मापत्तिरेवेति भगवद्गीतादिषूक्तम् । इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः । सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च' (गी-१४-२) इति । इहापि 'आत्मभावं नयत्येनं तद्ब्रह्म ध्यायिनं मुने । विकार्यमात्मनः शक्त्या लोहमाकर्षको यथा (वि-६-७-३०) इति। आत्मभावम्-आत्मनः स्वभावम् । न ह्याकर्षकस्वरूपापत्तिराकृष्यमाणस्य । सूत्रयति च "जगद्व्यापारवर्जं प्रकरणादसन्निहितत्वात्, भोगमात्रसाम्यलिङ्गात्, मुक्तोपसृप्यव्यपदेशात्" इति । वृत्तिरपि "जगद्व्यापारवर्जं समानो ज्योतिषा" इति । द्रमिडभाष्यकारश्च "दैवतासायुज्यादशरीरस्यापि देवतावत् सर्वार्थसिद्धिः स्यात्" इत्याह । श्रुतयश्च "य इहात्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामांस्तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति, (छा-८-१-६) ब्रह्मविदाप्नोति परम्, सोऽश्नुते सर्वान् कामान् सह । ब्रह्मणा विपश्चिता, (तै-आ) एतमानन्दमयमात्मानमुपसंक्रम्य । इमान् लोकान् कामान्नी कामरूप्यनुसञ्चरन्' (तै-भृ-१०-५) स तत्र पर्येति (छा-८-१२-३) रसो वै सः । रसं ह्येवायं लब्ध्वाऽऽनन्दी भवति । (तै) यथा नद्यः स्यन्दमानाः समुद्रेऽस्तं गच्छन्ति नामरूपे विहाय । तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम् । (मु-३-२-८) तथा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति' (मु-३-१-३) इत्याद्याः ॥

---

**ஸ்ரீபாஷ்யம்—**

முக்தனுக்கு ப்ரஹ்மத்தினுடைய தர்மம் போன்ற தர்மத்தை ஆச்ரயித்தலே முக்தியென்று பகவத்கீதைமுதலியவைகளில் கூறப்பட்டிருக்கிறது—'இதம்ஜ்ஞாநமுபாச்ரித்ய மமஸாதர்ம்யமாகதா:, ஸர்கேபி நோபஜாயந்தே ப்ரளயே நவ்யதந்திச' (இனிகூறப்போகிற ஞானத்தை ஆச்ரயித்து என்னுடன் ஸாம்யத்தை அடைந்தவர்கள் ஸ்ருஷ்டி ஸமயத்தில்கூட பிறக்கிறார்களில்லை—ப்ரளயஸமயத்தில்கூட ஸம்ஹாரவிஷயமாகஆகிறார்களில்லை) என்று. இந்த யோகப்ரகரணத்திலும், 'ஆத்மபாவம் நயத்யேநம் தத் ப்ரஹ்மத்யாயிநம்முநே-விகார்யமாத்மந: சக்த்யாலோஹமாகர்ஷகோயதா '( ஹே ப்ரஹ்ம

ஸ்வரூபத்தை மனனம்செய்பவனே! வேறுபாட்டை அடையத்தக்கவனும் தியானம் செய்பவனுமான இவனை அந்த ப்ரஹ்மமானது தன்சக்தியினால் விகாரத்தை அடைவிக்கத்தக்க உலோகத்தை நெருப்புபோல தன்ஸ்வபாவத்தை (தோஷமற்றிருத்தலை) அடையச்செய்கிறது.) என்று. ஆத்மபாவத்தை-தன்னுடைய ஸ்வபாவத்தை-இழுக்கப்படுகிற வஸ்துவுக்கு இழுக்கும் ஸ்வபாவமுள்ள வஸ்துஸ்வரூபைக்யம் ஸம்பவியாதன்றோ—இந்த விஷயத்தை ஸாக்ஷாத்ஸூத்ரகர்தாவான ஸ்ரீவேதவ்யாஸ மஹரிஷியே கூறப்போகிறார்-'ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணதஸன்னிஹிதத்வாச்ச' 'போகமாத்ரஸாம்யலிங்காச்ச' 'முக்தோபஸ்ருப்யவ்யபதேசாச்ச' என்று. 'ஜகத்வ்யாபாரவர்ஜம் ஸமானோ ஜ்யோதிஷா' (உலகங்களை ஆக்கல் அளித்தல் அழித்தல் இவைகளைத்தவிர்த்து மற்ற எல்லாவிதங்களாலும் பரமாத்மாவோடு ஸமனாகஇருப்பவன்) என்று வ்ருத்தி கிரந்தமும்.த்ரமிடபாஷ்யகாரரும், 'தேவதாஸாயுஜ்யாதசரீரஸ்யாபி தேவதாவத்ஸர்வார்த்தஸித்திஸ்ஸ்யாத்' (தேவதையோடு ஸாயுஜ்யப்ராப்தியினால் சரீரமில்லாதவனாக இருந்தபோதிலுங்கூட ஜீவாத்மாவுக்கு பரமாத்மாவுக்குப்போல எல்லா அபீஷ்டார்த்தங்களின் ஸித்தியானது உண்டாகலாம்) என்று கூறுகிறார். சுருதிகளும் 'யஇஹாத்மாநமனுவித்ய வ்ரஜந்த்யேதாம்ஶ்ச ஸத்யாந்காமாம்ஸ் தேஷாம் ஸர்வேஷு லோகேஷு காமசாரோபவதி' (எவர்கள் இவ்வுலகத்தில் பரமாத்மாவையும் நித்யங்களான இந்த அபஹதபாப்மத்வம் முதலிய கல்யாணகுணங்களையும் உபாஸித்துப்பரலோகத்தை அடைகிறார்களோ அவர்களுக்கு எல்லா உலகங்களிலும் இஷ்டப்படி ஸஞ்சாரம் ஏற்படுகிறது)''ப்ரஹ்மவிதாப்னோதிபரம்' (நிரதிசயப்ருஹத்த்வாச்ரயமான வஸ்துவை உபாஸிப்பவன் எல்லாவஸ்துக்களைக்காட்டிலும் உத்க்ருஷ்டமான பரப்ரஹ்மத்தை அடைகிறான்) ஸோச்னுதே ஸர்வான்காமான்ஸஹ-ப்ரஹ்மணாவிபசிதா' (அவன் ஸர்வஜ்ஞமான ப்ரஹ்மத்தோடுகூட எல்லாகல்யாணகுணங்களையும் அனுபவிக்கிறான்) 'ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ரம்ய' (ஆநந்தமயனை இந்தஆத்மாவை அனுபவித்து) 'இமாம்லோகாங்காமான்னீ காமரூப்யநுஸஞ்சரந்' (முக்தாத்மாவானவன் ஸூக்ருதஸாத்தியங்களான இந்தஉலகங்களில் இஷ்டரூபத்துடன் தன்இஷ்டப்படி ஸஞ்சரித்துக்கொண்டு வேண்டியபோகங்களை அனுபவியாநின்றவனாகவும்) 'ஸ தத்ர பர்யேதி' அந்த முக்தாத்மா அந்தபரமாத்மாவை அனுபவிக்கிறான்.) 'ரஸோவைஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீபவதி' (அந்தப்பரமாத்மாவே ரஸசப்தத்திற்கு வாச்யன்-ரஸசப்தத்திற்கு முக்கியவாச்யனாக இருக்கிறபரமாத்மாவை அடைந்தன்றோ இந்த ஜீவாத்மா ஆநந்தமுள்ளவனாக ஆகிறான்) 'யதா நத்யஸ்ஸ்யந்தமாநாஸ்ஸமுத்ரே அஸ்தம்கச்சந்திநாமரூபேவிஹாய-ததாவித்வாந்நாமரூபாத்விமுக்த: பராத்பரம் புருஷமுபைதிதிவ்யம்.' ததாவித்வாந் புண்யபாபேவிதூயநிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி' (உத்பத்திஸ்தானங்களான மலைகளினின்று பெருகிவரும் நதிகள் எவ்வாறு தன்னிடமமைந்

துள்ள கங்கை யமுனை ஸரஸ்வதி என்கிற பெயர்களையும் வெளுப்பு கருப்பு சிகப்பு நிறங்களையும் இழந்து ஸமுத்திரத்தில் வீழ்ந்து அந்த கடல் நீரோடு ஒன்றுகலந்து அதோடு ஒன்றுபட்டவைகள் போலாகின்றனவோ அவ்வாறே பரப்ரஹ்மோபாஸகன் புண்யபாபரூபங்களான கர்மாக்களின் நாசத்தினால் தேவன் மனுஷ்யன் திர்யக் ஸ்தாவரம் என்கிற பெயர்களாலும் சுக்லம் க்ருஷ்ணம் முதலிய ரூபங்களாலும் விடுபட்டவனாக ப்ரஹ்மாதிகளைக் காட்டிலும் சிறப்புற்றவனும் ஸர்வப்ராணிகளுடையவும் ஹ்ருதயாகாசத்தில் வஸிப்பவனுமான திவ்ய புருஷனை அடைகிறான். அவ்வாறு பரப்ஹ்மோபாஸகன் புண்யபாபங்களை உதறிவிட்டு ஹேயகுணங்களை இழந்தவனாக (பரப்ரஹ்மத்தோடு) பரமஸாம்யத்தை அடைகிறான்.

---

ச்ருதப்ரகாசிகை

இதற்குமேல் ‘ ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி ’ இது முதலிய வாக்கியங்களின் நிர்வாஹத்தை அனேக ச்ருதிவாக்கியங்களுக்கு விரோதமன்றி சொல்லப்போகிறவராக முக்தனுக்கு பரப்ரஹ்மத்தோடு ஸாம்யாபத்தியைக் கூறுகிறார்— **முக்தஸ்ய** என்று. அங்கு ஐக்ய ச்ருதிக்கு ப்ரதிகூலமான அர்த்தத்துடன் கூடின ஸாம்யச்ருதியானது காண்பிக்கப்படப்போகிறதென்று எண்ணி வியாக்கியானிக்கத்தக்கதாக இருத்தலால் ப்ருகிருதமாக இருக்கிற உபப்ரும்ஹணவசனத்திற்கு ஸஜாதீயமாக இருப்பதும் ப்ரதிவாதிக்கு அபிமதமான அர்த்தத்திற்கு ப்ரதிகூலமான அர்த்தத்துடன்கூடினதுமான ஸ்ம்ருதிவசனத்தைக் காட்டுகிறார்— **இதம்** என்று. முக்த பரம் என்பதைத்தெளிவாகத் தெரிவிப்பதற்காக **ஸர்கேபி** என்று எடுக்கப்பட்டது. சாஸ்த்ராந்தரத்தில் மாத்திரமல்ல. இந்தசாஸ்திரத்திலும் முக்தனுக்கு பேதப்ரதிபத்தியானது இருக்கிறதென்று கூறுகிறார்— **இஹாபி** என்று. இஹ - யோகப்ரகரணத்தில். சுருக்கமான சொல்லின் தொடக்கத்தில் என்று அர்த்தம். ¶ ஸங்க்ஷேபம் விஸ்தாரம் இவ்விரண்டுகளைக்காட்டிலும் வேறு எது செய்யப்படலாம். ‘உனக்கு ’ என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மந: - தன்னுடைய சக்த்யா - ஸாமர்த்தியத்தினால், விகார்யம் - வேறு அவஸ்தையை அடைவிக்கச்செய்யத்தக்கது. தியானம் செய்கிற இந்த உபாஸகனை அந்த ப்ரஹ்மமானது தன்னுடையஸ்வபாவத்தை அடையச்செய்கிறது. ‘ ஆத்மந: சக்த்யா விகார்யம் லோஹம் ஆகர்ஷகோயதா ’ என்று அன்வயம். ஆகர்ஷக: - நெருப்பு.தோஷத்தை இழுக்குகிறது என்கிற வ்யுத்பத்தியினால் நெருப்புக்கு இந்தப்பெயர். ‘ யதாக்நிருத்ததசிக: கக்ஷம் தஹதி ஸாநில:-ததாசித்தஸ்திதோ விஷ்ணுர்யோகிநாம் ஸர்வகில்பிஷம்’ (எழுந்து ஜ்வலிக்கின்ற ஜ்வாலைகளுடன்கூடின நெருப்பானது காத்துடன் சேர்ந்துகொண்டு எவ்வாறு உலர்ந்தகாட்டை எரிக்கிறதோ அவ்வாறேயோகிகளுடைய உள்ளத்தில் நிலை பெற்றிருக்கிற விஷ்ணுவானவர் எல்லாபாபங்களையும் நாசம் செய்கிறார். என்றல்லவோ மேலே சொல்லப்போகிறார். **ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலும்** ‘ யதாக்நிஸங்காத் கநகமபதோஷம் ப்ராஜாயதே ’ ( எவ்வாறு ) நெருப்பின்

---

¶ ஸங்க்ஷேபம்—சுருக்கம்

சேர்க்கையால் ஸ்வர்ணம் தோஷமற்றதாக ஆகிறதோ?) என்று. அந்த அக்னியானது ஆத்மபாவம்-தன்னுடைய ஸ்வபாவத்தை நிர்தோஷத்தன்மையை உலோஹத்தை எவ்வாறு அடையச்செய்கிறதோ அப்படி என்றுபொருள். இது நல்ல பொருள். அன்றிக்கே ஆத்மசப்தமானது தான் என்கிற அர்த்தத்தைச் சொல்லாநின்றுகொண்டு அன்யயோகவ்யவச்சேதத்தில் தாத்பர்யத்தைக் காண்பிக்கிறது. எப்படி அக்னியானது உலோகத்தை ஆத்மபாவத்தை அதாவது ஸ்வபாவத்தை இயற்கையாக இருக்கிற ரூபத்தை அடையச்செய்கிறதோ அப்படிப்போல வென்று அர்த்தம்.

அன்றிக்கே ஆகர்ஷகம், அயஸ்காந்தம். உலோகத்தை தன்ஸ்வபாவத்தை அடையச்செய்கிறது. உலோகத்தை தன் வியாபாரத்தைச்செய்விக்கிறது. தன்னை அனுகரிக்கும்படி செய்விக்கிறது. 'ஸ்திதஃஸ்திதா முச்சலிதஃப்ரயாதாம்' என்பது போல். அயஸ்காந்தம் அசைவற்று நிற்குமேயாகில் உலோஹம் அசைவற்று நிற்கிறது. காந்தம் விரைவாகச்செல்லுங்கால் உலோகம் அதை அனுஸரித்தே தானும் விரைவாகச் செல்லுகிறது. இவ்வண்ணம் 'காமான்னீ காமரூப்யநுஸஞ்சரந், ஸர்வேஷு லோகேஷு காமசாரோபவதி' இதுமுதலிய சுருதிகளுக்கு அனுகுணமாக பரமாத்மா உபாஸகனைத் தன்சேஷ்டையை அனுகரிக்கும்படி செய்விக்கிறான். தன்னோடு ஸமானசேஷ்டையுள்ளவனாகச் செய்கிறான் என்று பொருள். அன்றிக்கே ஆத்மசப்தம் தன்னைச்சொல்லுகிறது. நிச்சயிக்கப்பட்டிருக்கிற ஸ்வரூபத்தை உணர்த்துவதில் நோக்குள்ளது. உபாஸகனைப் பரமாத்மா ஆத்மபாவத்தை அடையச்செய்கிறான். ப்ரக்ருதிஸம்பந்தமின்றிச்சுத்தனாக இருக்கும்தன்மையை அடையச்செய்கிறான். கேவலதையை அதாவது தனித்திருத்தலை அடையச்செய்கிறது. எவ்வாறு அயஸ்காந்தமானது கட்டையில் அமிழ்ந்திருந்த உலோகத்தை அந்த கட்டையினின்று மேலே பிடுங்கிஎடுத்து தனித்திருக்கும் தன்மையை அடையச்செய்கிறதோ அப்படிப்போல் என்று அர்த்தம். அன்றிக்கே 'பூப்ராப்தௌ ஆத்மநேபதம்' என்கிற வசநபலத்தால் பாவசப்தம் ப்ராப்தியைச்சொல்லுகிறது. ஆத்மப்ராப்தியை அடையச்செய்விக்கிறது. எப்படி அயஸ்காந்தமானது உலோகத்தை ஸ்வப்ராப்தியை அடையச்செய்கிறதோ என்று அர்த்தம். 'ப்ராப்திம்நயதி' என்கிற நிர்தேசமானது 'ஓதநபாகம்பசதி' என்பதுபோல. ஜீவனுக்குப்பரமாத்மாவின் சக்தியினால் வேறுபாட்டையடையத்தகுதியுள்ளவனாக இருத்தல் பொருத்தமுள்ளது. ஜீவனுக்கு பந்தத்திலும் மோக்ஷத்திலும் ஜ்ஞாநஸங்கோச விகாஸரூபமான விகாரத்திற்குத்தகுந்து இருப்பதால்.

இந்த ச்லோகத்தில் * தாதாத்ம்ய ப்ரதிபத்தியின் இன்மையைக் காண்பிக்கிறார்—நஹி என்று. 'ஆகர்ஷகஸ்வரூபாபத்திராக்ருஷ்யமாணஸ்ய' என்கிற நிர்தேசமானது சொல்லப்பட்டுள்ள எல்லா அர்த்தங்களுக்கும் பொதுவானது. அக்னி ஸுவர்ணம் இவைகளை திருஷ்டாந்தமாக எடுத்து உரைக்க விரும்புங்கால் ஆக்ருஷ்யமாண சப்தமானது விகாரார்ஹமான வஸ்துவை உணர்த்துகிறது. ஸமாநோ ஜ்யோதிஷா என்று. ஜ்யோதிஃ—பரப்ரஹ்மம். 'பரம்ஜ்யோதிருபஸம்பத்ய' 'அதயதஃபரோதிவோ ஜ்யோதிர் தீப்யதே' என்கிற ச்ருதி இருப்பதினால். அமிட என்று. அசரீரஃ சரீரமில்லாதவன்-அதாவது முக்தன், கர்மாவினால் உண்டுபண்ணப்பட்ட சரீரமில்லாமையால். ஸத்தி-அநுபவம், முக்தியில் ஜீவாத்மா பரமாத்மா இருவர்

* தாதாத்ம்யம்—அபேதம்.

களுக்கும் பேதத்தைச்சொல்லுகிற சுருதிகளைக்காட்டுகிறார்—சீநதயஸ்ச என்று. ஆப்நோதி, பரப்ரஹ்மத்தை அனுபவிக்கிறான் என்று பொருள். இதற்கு விவரண ரூபமான வாக்கியத்தைக்காண்பிக்கிறார்—ஸோத்நுதே என்று. அநுஸஞ்சரந் என்பதினால் பேதம் காண்பிக்கப்பட்டது. 'ரஸோவைஸ:' என்கிற இந்தச்சுருதிவசனத்தினால் ஆநந்தித்வாகாரத்தினால் ஸாம்யம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. பரமஸாம்யத்திற்கு உபயோகியான வைதர்ம்ய நிவ்ருத்தியைக் காண்பிக்கிறார்—யதாநத்ய: என்று. நதிகள் நதீஸ்வரூபத்தை இழந்து ஸமுத்திரத்துடன் சேர்க்கை பெறுவதால் வைதர்ம்யத்தை இழந்து சேர்க்கை பெறுதல் திருஷ்டாந்தத்தில் ¶ உபஜீவ்யம். ப்ராக்ருதங்களான நாமரூபங்களின் $ ப்ரஹாணத்தை முன்னிட்டதன்றோ பரமாத்மப்ராப்தி. அவ்வளவு மாத்திரத்தினால் பேத நிவ்ருத்தி இல்லை. 'புருஷமுபைதி' என்று கர்மகர்த்ருதாபாவ மறியப்படுவதால், ஸாம்யாபத்தியைக்காண்பிக்கிறார்-ததா என்று.

அறிவில் சிறந்தவரே! 'பரமம் ஸாம்ய முபைதி' என்று ஐக்யாபத்தி சொல்லப்படுகிறது. ஸமசப்தமானது ஸமான சப்த பர்யாயமாதலாலும் ஸமானசப்தத்திற்குப்போல ஐக்யத்தில் ப்ரயோகமிருப்பதாலும் ஸம சப்தத்திற்கு 'ஸமகாலவர்த்தி' இது முதலிய இடங்களில் ஐக்கியத்தில் ப்ரயோகம் காணப்படுகிறது. அவ்வாறே ஸமசப்த பர்யாயமாக அறியப்பட்டிருக்கிற ஸமான சப்தமும் ஐக்கியத்தில் ப்ரயோகிக்கப்படுகிறது. "ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே" என்று. "ஏகஸ்மின்னர்த்தே வ்ருத்தி ஸ்ஸாமாநாதிகரண்யம்" என்றும், ஒரு அதிகரணத்திலிருத்தலன்றோ ஸாமாநாதிகரண்யம். 'ஏகஸ்மின்னர்த்தே' என்று சொல்லி இருப்பதால்—அதற்கு பர்யாயம் ஸமசப்தம். என்றாலும் ஸம சப்தம் ஸாத்ருஶ்யத்திற்கும் வாசகம். ஆயினும் முக்திவாக்கியத்திலுள்ள ஸாம்ய சப்தமானது ஐக்கியத்தை உணர்த்துவதில் கருத்துள்ளது. 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி' இது முதலிய வேறு சுருதிவாக்கியங்களோடு அர்த்தைக்கியத்தினாலும், லயஸாயுஜ்ய சப்தஶ்ரவணத்தினாலும், நதீ ஸமுத்திரம் கடாகாசம் மடாகாசம் முதலிய திருஷ்டாந்த ஶ்ரவணத்தாலும். "ஸாதர்ம்ய மாகதா:" என்கிற ஸ்ம்ருதியோ வென்றால் ஸகுணப்ரஹ்மப்ராப்தியை விஷயமாகக்கொண்டது. அங்ஙனமில்லாவிடில் ப்ரத்யக்ஷ சுருதிவிரோதத்தாலும் ஸ்வரூபைக்ய விஷயமான பஹுசுருதி விரோதத்தாலும் அதற்கு பலக்குறைவு ஏற்படுவதால் ஐக்யாபத்தியே இந்த வாக்கியத்தால் ப்ரதிபாதிக்கப்பட்டது. ஐக்யத்திற்கு † பாரம்யமாவது மறுபடி பேத ப்ரமத்தின் அங்குரமற்றிருத்தல். இந்தவிஷயத்தில் மறுமொழி கூறப்படுகிறது. இந்த இடத்தில் ஸாம்ய சப்தமானது ‡ ஸாத்ருச்யத்தையே சொல்லுகிறது. ஐக்யத்தைச் சொல்லுகிறதில்லை. ஐக்யம் முக்கியார்த்தமென்று ஒப்புக்கொண்டபோதிலும் ஸ்வாரஸ்யமில்லாமையால் ஸமசப்தத்திற்கு ஸாத்ருச்யத்திலே யன்றோ ✱ ப்ராசுர்யம். அதற்கு அபவாதமில்லாமலிருக்கும் தருணத்தில் அஸ்வரஸமான அர்த்தத்தை ஏற்றுக்கொள்ளுதல் பொருத்தமுள்ளதாக ஆகாது. உன்னால் சொல்லப்பட்ட அபவாத ஹேதுக்களும் அடுத்தே பரிஹரிக்கப்படுகின்றன. ஸமம் முதலிய சப்தங்களுக்கு

¶ உபஜீவ்யம் - ப்ரதானம். $ ப்ரஹாணம் - இழத்தல்
† பாரம்யம்—மேன்மை, சிறப்பு. ‡ ஸாத்ருச்யம்— ஸமமாக இருத்தல்.
✱ ப்ராசுர்யம்—ஆதிக்யம்.

ஐக்யம் முக்கியார்த்தமல்ல. ஏகத்வத்தை சொல்லவேண்டுமென்கிற விருப்பமிருக்குந்தருணத்தில் ‘ ஏகோகட: ’ இதுமுதலிய இடங்களில் ப்ரயோகமில்லாமையால், ஸமம்முதலிய சப்தங்களுக்கு ஐக்யம்முக்கியார்த்தமாக இருக்குமேயாகில் ஏகசப்தத்திற்குப்போல ஸமாதிசப்தங்களுக்கும் ¶ ப்ரதியோகியை அபேக்ஷியாதப்ரயோகம் வரவேண்டியதாகும். ஸாமாநாதிகரண்யம், ஸமகாலவர்த்தி, இதுமுதலிய இடங்களில் யாதொரு ஸமாதிசப்த ப்ரயோகமுண்டோ, அது ஸாதாரண்யமென்கிற அர்த்தமுள்ளது, ஐக்யார்த்தமுள்ளதன்று. ஸாதாரண்யரூபமான அர்த்தத்திலும் ப்ரயோகம் அமுக்கியமானது, ப்ரயோகம் வேறுவிதத்தால் உபபன்னமாகும் ஸ்தலத்தில் சக்திகல்பனம் பொருந்தாததலால். அப்படியன்றோ அநேகப்ரதியோகிகளுடன்கூட ஏகரூபமான ஸம்பந்தத்துடன்கூடி இருத்தலன்றோ, ஸாதாரண்யம். எவ்வண்ணம் தனமானது தேவதத்தன் யஜ்ஞதத்தன் இருவர்களுக்கு சேஷமாக இருப்பதால் ( இருவர்களுடைய ) ஸம்பந்தம் பெற்றிருப்பதுபற்றி ஸாதாரணமோ அவ்விருவர்களுக்கும் தனத்தைக்குறித்து சேஷித்வமிருப்பதால் ஸாத்ருச்யமோ, அவ்விருவர்களுடைய ஸம்பந்தமுள்ளதாக தனம் ஆகிறதோ, அவ்வாறே நீலத்வம் உத்பலத்வம் என்கிற இவ்விரண்டு தர்மங்களையும் அபேக்ஷித்து ஆதாரமாக இருத்தலால் † ஸம்பந்தி த்ரவ்யம் ஸாதாரணம் அவ்விரண்டு தர்மங்களுக்கும் த்ரவ்யத்தைக்குறித்து ஆதேயத்வமிருப்பதால் ஸாத்ருச்யமிருக்கிறது. அந்த இரண்டு தர்மங்களின் ஸம்பந்தம்பெற்றது திரவ்யம். அவ்வாறே இரண்டுகளோடு ஸம்யோகமுள்ளதாக இருப்பதாலாவது அவச்சேத்யாவச்சேதக பாவத்தாலாவது ஸம்பந்தமுள்ள காலமானது அவ்விரண்டுக்கும் ஸாதாரணம். அந்தகாலத்தோடு ஸம்பந்தம் பெற்றிருத்தலென்கிற ஆகாரத்தால் அவ்விரண்டுக்கும் ஸாத்ருச்யமிருக்கிறது. அவ்விரண்டுகளோடு ஸம்பந்தமுள்ளது காலம். ஆதலால் ஒன்றோடொன்று ஸத்ருசங்களான வஸ்துக்களின் ஸம்பந்தமுள்ளதாக இருத்தலால் திரவ்யம் காலம் முதலியவைகளில் ஸமம் ஸமானம்முதலிய சப்தங்கள் லக்ஷணையினால் ப்ரயோகிக்கப்படுகின்றனவென்பதுபற்றி முக்கியங்களல்ல. ஆதலால் ஐக்யத்தில் ப்ரயோகமில்லாமையால் ஸமசப்தத்திற்கு ஐக்யம் முக்கியார்த்தமல்ல. முக்கியமான அர்த்தம் ஸம்பவிக்கிறதாக இருக்க லாக்ஷணிகமான அர்த்தத்தை ஸ்வீகரிப்பது பொருத்தமுள்ளதாக ஆகாது. ஆகையால் ஸாம்யசப்தமானது ஸாத்ருச்யத்தையே சொல்லுகிறது. முக்தாத்மகோசரமான ஸாமாநாதிகரண்யத்திற்கு உபபத்தியும் அடுத்தே பாஷ்யத்தில் உரைக்கப்படப்போகிறது. ஸாயுஜ்ய சப்தத்தால் முக்தியில் அபேதமென்று யாதொன்று கூறப்பட்டதோ அது யுக்தமன்று. ஸாயுஜ்ய சப்தமானது ஸமானகுணஸம்பந்தத்தைச் சொல்லும் சக்தியுள்ளதாக இருத்தலால், யுஜ்யதே என்கிற வ்யுபத்தியினால் யுக் சப்தம் குணபரமானது. தர்மியிலன்றோ குணம் ஸம்பந்தித்திருக்கிறது. ஸமானகுணமுள்ளவன் ஸயுக்—அவனுடைய தன்மை ஸாயுஜ்யம் என்றல்லவோ ✱ வ்யுத்பத்தி. ப்ரயோக விரோதத்தாலும் ஸாயுஜ்யம் ஐக்யபரமல்ல. ‘ ஏதாஸாமேவ தேவதாநாம் ஸாயுஜ்யம்—ஸார்ஷ்டிதாம் ஸமானலோகதாமாப்நோதி’ என்று அநேக தேவதைகளோடு ஒருவனுக்கு ஸாயுஜ்யாபத்தியானது கேழ்க்கப்படு

¶ ப்ரதியோகி—ஒன்றோடு நித்யஸம்பந்தமுள்ள மற்றொரு வஸ்து. அல்லது ஒன்றினால் தவறாமல் அபேக்ஷிக்கப்படும் வஸ்து.

† ஸம்பந்தி—ஸம்பந்தமுள்ள வஸ்து.

✱ வ்யுத்பத்தி—அவயவார்த்தத்தினால் பொருளை உணர்த்தும் சப்தசக்தி.

கிறது. அவயவமில்லாததும் வெட்டத்தகாததுமான ஒரு ஆத்மாவுக்கு அனேக தேவதைகளோடு ஐக்யம் பொருந்தாததன்றோ. க்ரமபாவியாக இருத்தலால்விரோதமில்லை என்று கூறப்படுமேயாகில், அங்ஙனமாகில் அக்னியுடன் ஏகீபூதனான ஒருவனுக்கு வருணஸாயுஜ்யம் வரின் அக்னித்வரூபமான உபாதியின் பரித்யாகத்தால் அக்நி தேவதைக்கு அபாவமானது உண்டாக வேண்டியதாகும். அக்நித்வரூபமான உபாதி இருக்கும் தருணத்தில் வருணனோடு ஐக்யமடைவது பொருந்தாது. ஔபாதிகமான பேதத்தை இழத்தல் ஐக்யாபத்தியே ஒழிய முக்தி இருக்கிற ஐக்யம் உண்டாகிறதில்லை. அக்நி இருக்கும்பொழுதே அதினின்று வேறுபட்டிருக்கிறவனுக்கு வருணஸாயுஜ்யமென்று சொல்லப்படுமேயாகில் ஒன்றாகப்போனவனுக்கு வேறுபடுதலென்பது உபாதியினுலுண்டாகத் தக்கது. உபாதியானது தேஹம் அந்தக்கரணம் முதலியது, அவைகளின் ஸம்பந்தம் காரணமல்லவென்று சொல்லப்படுமேயாகில் அதிப்ரஸங்கம் வருவதால் ஹேது சொல்லத்தக்கது. கர்மாவே ஹேதுவென்று கூறப்படுமேயாகில் அக்நி ஸாயுஜ்யதசையில் அந்த கர்மாமானது நஷ்டமாய்விட்டதா? இல்லையா? நஷ்டமாகப்போய் விட்டதேயாகில் மறுபடி உபாதியின் உதயமில்லாமல் அக்நியினிடத்தினின்று வேறுபாடடைதல் பொருந்தாதாதலால் அக்நித்வோபாதியின் அபரித்யாகத்தால் முக்தின உபாதியின் பரித்யாகரூபமான வருணஸாயுஜ்யாபத்தியானது அடைவிலே வருகிறதென்பதும்பொருத்தமுள்ளதாக ஆகாது. கர்மாவானது நஷ்டமாகவில்லை என்று சொல்லப்படுமேயாகில் அதனுல் உண்டுபண்ணப்பட்ட உபாதியானது நஷ்டமாகாததனுல் அக்நியோடு ஐக்யாபத்தி ஸம்பவிக்கிறது. ஔபாதிகபேதமானது பேதபரித்யாக ரூபமான ஐக்யாபத்திக்கு விரோதியாதலால் அந்த கர்மாவானது நசிக்காமலிருந்த போதிலுங்கூட அக்நிஸாயுஜ்யாபத்தி தசையில் அதினிடத்தினின்று பேதத்தை உண்டுபண்ணுகிற உபாதியை உண்டுபண்ணுகிறதில்லை. கர்மாக்களுக்கு கார்யகாரித்வமானது காலவிசேஷ நியதமாக இருப்பதாலென்று சொல்லப்படுமேயானுல் அப்படி இருந்தபோதிலுங்கூட வ்யவஸ்திதமான கர்மவிசேஷத்தால் கட்டப்பட்டிருக்கிற ஜீவனுக்கு அந்த கர்மாவினுல் கட்டப்பட்டிராத அக்நியினிடத்தினின்று அதே கர்மாவானது பேதத்தை உண்டுபண்ணுகிறதென்பதனுல் அக்னியோடு ஐக்யாபத்தியானதுபொருத்தமுள்ளதாக ஆகா.

மேலும் * ப்ருதிவியோடு ஒன்றாக இருந்து தனித்திருக்கிற கடத்திற்குப்போல அக்னியோடு ஒன்றாக இருந்து வேறாக ஆய் இருக்கிற ஜீவனுக்கு அஜத்வமும் நித்யத்வமும் பொருந்தாது. ஆதலால் பேதம் இருக்கையிலேயே அக்னி முதலியவைகளோடு ஸாயுஜ்யம். ஸமாநலோகதா ஸாஹசர்யத்தாலும் ஸாயுஜ்யம் ஐக்யமல்ல. ஒரு வஸ்துவுக்கு தான் இருக்கும் உலகத்தோடு ஸமானமான உலகத்தில் வஸித்தல் ஸம்பவியாதன்றோ. ஆகையால் ஸமாநலோகத்வம் போல் பேதம் வித்தமாக இருக்கையிலேதான் ஸாயுஜ்யம் உண்டாகிறது. ஸமாநலோகதையை அடைந்த பிறகு ஸாயுஜ்ய ப்ராப்தியே ஒழிய ஒரே ஸமயத்திலேயே முற்கூறப்பட்டிருக்கிற இரண்டும் ஸம்பவிக்கிறதில்லை. ஆதலால் அவ்விரண்டுகளுக்கும் விரோதமில்லை என்று சொல்லப்படுமேயாகில் அல்ல ஸாயுஜ்யம் ஸார்ஷ்டிதாம் ஸமானலோகதாம் என்று ஸாயுஜ்யம் முக்தி கேழ்க்கப் பட்டிருப்பதால்.

* ப்ருதிவீ—பூமி.

அர்த்தக்ரமத்தால் பாடக்ரமத்திற்குப்பாதம் என்று கூறப்படுமேயானால் அல்ல. அவயவசக்தியினால் உபஸ்தாபிக்கப்பட்ட அர்த்தமானது பாடக்ரமத்திற்கு அனுகுணமாக இருப்பதாலும் வேறு அர்த்தங்களை கல்பிப்பது காரணமில்லாததாக இருத்தலாலும். பாடக்ரமத்தை பாதிப்பதற்காக ஸாயுஜ்ய சப்தத்திற்கு ஐக்யாபத்தி லக்ஷணார்த்த விஷயையான ரூடி சக்தியானது கல்பிக்கப்படுமேயாகில் அப்பொழுது அன்யோன்யாச்ரயதோஷம் ஏற்படும்:— ஸாயுஜ்யத்திற்கு ஐக்யாபத்தி லக்ஷணத்வ நிச்சயம் வரின் பாடக்ரமத்திற்கு பாதம்-பாட கிரமத்திற்கு பாதம் வரின் ஸாயுஜ்யத்திற்கு ஐக்யாபத்தி லக்ஷணத்வ நிச்சயம் என்று. 'ஏதேஷாமேவ ஸலோகதாம் ஸாயுஜ்ய மச்நுதே' என்கிற வாக்கியத்திற்கு முந்தி உதாஹரிக்கப்பட்டிருக்கிற வாக்கியத்திலிருக்கிற க்ரமத்திற்குப் பாதமென்று சொல்லப்படுமேயானால் அல்ல. விருத்தார்த்த விஷயையான ரூடி சக்தியானது நிச்சிதமாக இல்லாததுபற்றி விரோதம் ஸ்புரிக்காமல் போவதால்.

மேலும் "அக்னேர்வா ஏதாநி நாமதேயாநி அக்நே ரேவ ஸாயுஜ்யம் ஸலோகதா மாப்நோதி, வாயோரேவ, இந்த்ரஸ்யைவ, ப்ருஹஸ்பதேரேவ, ப்ரஜாபதேரேவ, ப்ரஹ்மண ஏவ, ஸாயுஜ்யம் ஸலோகதா மாப்நோதி" என்று அனேக வாக்கியங்களுக்கு அதிக பல மிருப்பதால் உன்னால் சொல்லப்பட்ட க்ரமமே பாதிக்கத்தக்கது. மேலும் 'ஏதேஷாமேவ ஸலோகதாம் ஸாயுஜ்யமச்நுதே. அக்னேரேவ ஸாயுஜ்யம் ஸலோகதா மாப்நோதி' இது முதலிய வாக்கியங்கள் கர்ம விதிசேஷமாக இருக்கிற அர்த்தவாத ரூபங்கள் கர்மபலமாக இருத்தலால் அக்நி ஆதித்யன் முதலிய தேவதைகளோடு ஸாயுஜ்யம் அநித்யம். ஆதலால் கர்மபலத்தின் முடிவில் அக்நி முதலியதேவதைகளிடத்தினின்று அந்த தேவதைகளோடு ஸாயுஜ்யத்தை அடைந்தவர்களுக்கு வேறுபடுதல் வர்ஜிக்கத்தகாததாக இருத்தலால் மோக்ஷம் வரையில் ஜீவபேதஸ்திதி உங்களுக்கும் இஷ்டமாக இருப்பதால் அக்நி முதலிய தேவதைகளோடு ஸாயுஜ்யதசையிலுங்கூட பேதஸ்திதியானது வர்ஜிக்கத்தக்கதல்ல. அக்நி முதலிய தேவதைகளோடு ஸாயுஜ்யத்தை அடைந்தவர்களுக்கு அந்த தேவதைகளிடமிருந்து மீண்டும் வேறுபாடு ஏற்படுதல் உபாதியினாலென்று கூறப்படுமேயானால் உத்தரம் முந்தியே கொடுபட்டிருக்கிறது. அக்னி முதலிய தேவதைகளோடு ஸாயுஜ்யத்தைச்சொல்லி இருத்தல் அர்த்தவாதமாதலால் ஆதரிக்கத்தக்கதல்லவென்று சொல்லத்தக்கதல்ல. வேதாந்திகள் அர்த்தவாதங்களுக்கு சப்தத்தால் உணர்த்தப்படுகிற அர்த்தத்தில் ப்ராமாண்யத்தை ஒப்புக்கொண்டிருப்பதால். ஆகையால் ஸாயுஜ்யம் ஐக்யமல்ல. பின்னையோ ஸமானகுண ஸம்பந்தமே. லயமும் ஸ்வரூபைக்யமல்ல. லய சப்தத்திற்கு அந்த அர்த்தமில்லாமையால் சப்தங்களுக்கு அர்த்தங்களில் ¶ வ்யவஸ்தாபனமானது ப்ரயோகங்களுக்கு அநுகுணமாக செய்யத்தக்கது. நித்யநைமித்திக மஹா ப்ரளயங்களிலும் லயசப்தம் ப்ரயோகிக்கப்படுகிறது. அந்த இடங்களில் ஸ்வரூபைக்யாபத்தி கிடையாது, நித்யப்ரளயத்திலுமில்லை. ஸ்வர்க்கம் நரகம் முதலிய ஸ்தானங்களைக்குறித்துப் போக்குவரவைச்சொல்லுகிற சாஸ்திரத்தால் நைமித்திக ப்ரளயத்திலும் இல்லை. முந்தின

¶ வ்யவஸ்தாபனம்—இந்தப்பொருளைத்தான் இந்தசப்தம் சொல்லுமென்று குறிக்கப்பட்ட ஒருபொருளிலோ பலபொருள்களிலோ சப்தங்களுக்கு ரூடி சக்தியைக்கல்பித்தல்-இதைத்தான் அபிதாவ்ருத்திஎன்று லக்ஷணகாரர்கள் கூறுகின்றனர்.

கல்பத்தில் ப்ரளயமடைந்தவர்களான நாரதர் முதலியவர்கள் முந்தின ஜன்ம வ்ருத்தாந்த ஸ்மரணமுள்ளவர்களாகவே மறுபடியும் பிறக்கிறார்களென்று அறியப் படுவதால். புராணங்களில் நாரதரால் முந்தின $ கல்பத்திலுள்ள தன் பிறப்பு நடத்தை முதலியது இந்த கல்பத்தில் சொல்லப்பட்டிருக்கிறதென்று அறியப் படுகிறது. மஹாப்ரளயத்திலுமில்லை. ** வைஷம்ய § நைர்க்ருண்யங்கள் பரமபுருஷனை அணுகாமலிருப்பதற்காக ஜீவாத்மாக்களின் நித்யத்வமும் பகுத்வமும் கர்ம வாஸனைகளும் இருப்பதாக ஒப்புக்கொள்ளத்தக்கதாக இருப்பதால். அப்படியே 'ப்ரக்ருதிர்யா மயா க்யாதா வ்யக்தாவ்யக்தஸ்வரூபிணீ. புருஷஸ்சாப்யுபாவேதௌ லீயேதே பரமாத்மநி' (வ்யக்தமான ப்ரபஞ்ச ஸ்வரூபிணியாகவும் அவ்யக்தமான மஹதஹங்காரதன்மாத்ர ஸ்வரூபிணியாகவுமிருக்கிற யாதொரு ப்ரக்ருதியானது என்னால் சொல்லப்பட்டதோ அந்த ப்ரக்ருதி, புருஷன், இந்த இருவர்களும் பரமாத்மாவினிடம் லயிக்கின்றார்கள்) என்று சொல்லுகிற பராசரபகவானுடையவே 'ஹிம்ஸ்ராஹிம்ஸ்ரே ம்ருதுக்ரூரே தர்மாதர்மாவ்ருதாந்ருதே - தத்பாவிதா: ப்ரபத்யந்தே தஸ்மாத் தத் தஸ்ய ரோசதே, ப்ரதான காரணீபூதாயதோ வைஸ்ருஜ்ய சக்தய: - 'தேஷாம் ஹேயாநி கர்மாணி ப்ராக்ஸ்ருஷ்டா: ப்ரதிபேதிரே' (ஹிம்சை யை உண்டுபண்ணுகிறதும் உண்டுபண்ணாததுமான இரண்டு வஸ்துக்களையும், மெதுவாயும், க்ரூரமாயுமுள்ள இரண்டு வஸ்துக்களையும், தர்மாதர்மங்களையும், ஸத்யாந்ருதங்களையும்) (அதனால் ப்ரேரணம் செய்யப்பட்டவர்களாக அடைகிறார்கள். ஆதலால் அது அவனுக்கு ருசிக்கிறது) (யாதொரு காரணத்தினால் ஸ்ருஷ்டிக்கத் தக்க வஸ்துக்களிடமிருக்கிற சக்திகள் ப்ரதானகாரணங்களாக இருக்கின்றனவோ; அவைகளுக்குள் முந்தி ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகள் ஹேயங்களான கர்மாக்களை அடைந்தன) இது முதலியவைகளால் அப்பொழுது வாஸனையுடன்கூடின தர்ம ஸம்பந்தம் பெற்றஜீவர்களுடைய பகுத்வமானது காட்டப்பட்டது. அதனாலேயே பேதத்தை இழத்தலும் லய சப்தார்த்தமன்று. ப்ராக்ருத ‡ ப்ரதிஸஞ்சரத்தையும் மோக்ஷத்தையும் விஷயமாகக்கொண்ட ப்ரளய சப்தங்கள் இரண்டுக்கும் அர்த்தவைரூப்யம் சொல்வது உசிதமன்று. சக்தி பேதகல்பனம் அமுக்யத்வம் இவ்விரண்டினுள் ஒன்று ப்ரஸங்கிப்பதால். அவ்விடத்திலும் மஹாப்ரளயாதிகளில் லய சப்தத்திற்கு அமுக்கியத்வம் சொல்லத்தக்கதல்ல. அநேக அர்த்தங்களில் அமுக்கியத்வத்தை ஆச்ரயிப்பதைவிட முக்தி மாத்திரத்தை விஷயமாகக்கொண்ட ப்ரளயசப்தத்திற்கே அமுக்யத்வாச்ரயணம் பொருத்தமுள்ளதாக இருப்பதால். ஆதலால் எல்லா ப்ரயோகங்களுக்கும் அநுகுணமான அர்த்தம் ஸ்வீகரிக்கத்தக்கது. ஆகையால் விஜாதீயமான அவஸ்தையை இழப்பதனால் பிரிதலுக்கு † அபாதானமாக இருக்கிற காரணத்வ தர்மியான திரவ்யத்துடன் சேருதலே லயம். ஆகையால் ஐக்யம் லயசப்தார்த்தமல்ல.

---

$ கல்பம்—ப்ரளயகாலம், உலகமழியும் காலம்.

** வைஷம்யம்—ஸமமாக இல்லாமலிருத்தல்.

§ நைர்க்ருண்யம்—கருணை இல்லாமை. ‡ ப்ரதிஸஞ்சரம்—லயம்.

† அபாதானம்—விபாகம் எந்த வஸ்துவினிடத்திலிருந்து உண்டாகிறதோ அந்த(விபாகத்திற்கு அவதியாக இருக்கும்) வஸ்து. இந்த அபாதான ஸ்வரூபத்தை " த்ருவமபாயேऽபாதாநம் "(க-ச-உச) என்று பாணினிமஹரிஷி கூறி இருக்கிறார்.

ஆகாசம் முதலிய திருஷ்டாந்தோபன்யாஸமானது ஔபாதிகமான வைஷம்யத்தினின்மையைக் காரணமாகக்கொண்டது ஆகாசம் முதலிய தத்வங்கள்கூட அம்சங்களுடன் சேர்ந்திருப்பதால் பஞ்சீகரண வசனத்தினால் அவைகளுக்கு ப்ரதேச பேதங்களோடு கூடி இருத்தல் வேதாந்திகளால் அங்கீகரிக்கத்தக்கது. ஆகையால் மோக்ஷ விஷயச்ருதிகளில் ஸ்வரூபைக்யமானது ஓரிடத்திலும் அறியப்படுகிறதில்லை, நிர்குண ப்ராப்தி விஷயகமான ச்ருதியானது ஒன்றுகூட இல்லை என்கிற இந்த அர்த்தம் அடுத்தே உபபாதிக்கப்படப்போகிறது. ஆதலால் ஸாம்யஸ்மரணமானது ஸகுணப்ராப்தி விஷயமாக இருத்தலால் அதற்குப்பரமமோக்ஷ விஷயத்வமில்லை. அப்படிக்கு இல்லாவிட்டால் நிர்குண ப்ராப்திவிஷயமான ச்ருதி விரோதம் வருவதால் ஸ்ம்ருதிக்கு தௌர்பல்யம் ப்ரஸங்கிக்குமென்று சொன்னதும் துருக்தமாக ஏற்படும். ஆகையால் 'யதா பச்ய:' என்கிற வாக்கியத்தில் ஸாம்ய சப்தம் ஸாத்ருச்யத்தை உணர்த்துவதில் கருத்துள்ளது. எந்த ஆகாரத்தால் ஸாம்யமோ அந்த ஆகாரத்தின் நிரவதிகத்வம் பரம சப்தத்தால் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த வாக்கியமானது பரப்ரஹ்ம ப்ராப்திரூபமான பரமமோக்ஷத்தை பரப்ரஹ்மஸாம்யாபத்தி லக்ஷணமாகவே ப்ரதிபாதிக்கிறது.

---

ஸர்வாஸாம் பரவித்யாநாம் ஸகுணமேவ ப்ரஹ்மோபாஸ்யம்| ஸர்வேஷு காரணேஷ்வேவ | கதம் விகல்ப இதி ஸூத்ரகாரேணைவ “ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய”, “விகல்போऽவிஶிஷ்டபலத்வாத்” இத்யாதிஷூக்தம் | வாக்யகாரேண ச ஸகுணஸ்யைவோபாஸ்யத்வம் வித்யாவிகல்பஶ்சோக்த: — “யுக்தம் தத்குணகோபாஸநாத்” இதி | பாஷ்யக்ருதா ச வ்யாக்யாதம் — “யத்யபி ஸசித்த:” இத்யாதிநா | “ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி” இத்யத்ராபி “நாபரோபாஸிது: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம், நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி, பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே” இத்யாதிபிரேகார்த்யாத் [illegible] விநிர்திஷ்டஸ்ய [illegible] ஜ்ஞாநைகாகாரதயா ப்ரஹ்மப்ரகாஶதாவ்யதே | ப்ரகாரைக்யேந ச தத்வ்யவஹாரோ [illegible] ; [illegible] ஸோऽயம் [illegible] இதி ॥

அத்ராபி “விஜ்ஞாநம் ப்ராபகம் ப்ராப்யே பரே ப்ரஹ்மணி பார்த்திவ | ப்ராபணீயஸ்ததேவாத்மா ப்ரக்ஷீணாஶேஷபாவந:” (வி-பு-[illegible]-எ-௯௩) இதி பரப்ரஹ்மப்ராப்த்யர்த்தா பரப்ரஹ்மவத் ப்ரக்ஷீணாஶேஷபாவந: கர்மபாவநா ப்ரஹ்மபாவநா உபய பாவநேதி பாவநாத்ரய ரஹித: ப்ராபணீய இத்யபிதாய “க்ஷேத்ரஜ்ஞ: கரணீஜ்ஞாநம்

காரணம் தஸ்ய சேதி | நிஷ்க்ருஷ்டஸ்வரூபைகவிஷயம் ஹி க்ருதக்ருத்யம் நிவர்த்த-
யேத்; (வி-பு-௬-௭-௯௪) இதி காரணஸ்ய கர்மஜ்ஞாநாதே-
ஸ்ய அக்ஷீணாஶேஷபாபஸ்ய ஸ்வரூபப்ராப்த்யா க்ருதக்ருத்யத்வ-
நிவ்ருத்திவசநாத் யாவத்ஸ்வரூபஶேஷயித்ருத்வாத், "தத்பாவபாவமா-
பந்நஸ்ததாஸௌ பரமாத்மநா | பவத்யபேதீ பேதஶ்ச தஸ்யாஜ்ஞாநக்ருதோ
பவேத்" (வி-பு-௬-௭-௯௫) இதி முக்தஸ்ய ஸ்வரூபமாஹ | தத்பாவ:
ப்ரஹ்மணோ பாவ:, ஸ்வபாவ: ந து ஸ்வரூபைக்யம், | தத்பாவபா-
வமாபந்ந இதி த்விதீயபாவஶப்தாந்வயாத், பூர்வோக்தாயாஶ்ச விரோ-
தாத் | யத்வா ப்ரஹ்மண: அக்ஷீணாஶேஷபாவநத்வம் தத்பாவ: தத்ஸா-
மாநாதிகரண்யாத் | யதைவம் தத்பாவமாபந்நஸ்ததாஸௌ பரமாத்மநா ஸஹேதி
தி ஸஹார்திதா பவதி ||

ஸ்ரீ பாஷ்யம்.

பரவித்யைகளில் எல்லாவற்றிலும் ஸகுணப்ரஹ்மமே உபாஸ்யமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. பலமும் ஒரேவிதம். ஆகையால் வித்யா விகல்ப மென்று ஸூத்ரகாரராலேயே 'ஆநந்தாதய: ப்ரதானஸ்ய' 'விகல்போ விசிஷ்ட பலத்வாத்' இது முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. வாக்கியகாரராலும் ஸகுணத்திற்கே உபாஸ்யத்வமும் வித்யா விகல்பமும் கூறப்பட்டிருக்கிறது. 'யுக்தம் தத்குணகோபாஸநாத்' என்று பாஷ்யகாரரால் வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறது. 'யத்யபி ஸச்சித்த:' இது முதலியதால். 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி' என்கிற இடத்திலுங்கூட 'நாமரூபாத் விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்' நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி' 'பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேண அபிநிஷ்பத்யதே' இதுமுதலியவைகளோடு அர்த்தைக்யத்தினால் ப்ராக்ருதங்களான நாமரூபங்களால் விடுபட்டவனும் அந்த நாமரூபங்களால் உண்டுபண்ணப்பட்ட பேதத்தை இழந்தவனுமான ஜீவாத்மாவுக்கு ஜ்ஞானைகாகாரமுள்ளவனாக இருத்தலால் ப்ரஹ்மப்ரகாரத்வம் (ப்ரஹ்மஸாத்ருச்யம்) கூறப்படுகிறது. ப்ரகாரைக்யமுள்ள இடத்தில் ப்ரகாரித்ரவ்யைக்ய வ்யவஹாரம் முக்கியமே. 'ஸோயம் கௌ:' ஒரு பசுபோன்ற வேறு பசுவைப்பார்த்து இது 'அதே பசு' என்று இந்த இடத்திலும் 'அரசே! அடையத்தக்கதான பரப்ரஹ்மத்தினிடத்தில் விஜ்ஞானம் ஜீவாத்மாவுக்கு ப்ராப்தி ஸாதனமாக இருக்கிறது. அப்படியே முற்றிலும் அழிந்துபோன பாவனைகளை உடையவனை ஜீவாத்மா (ப்ரஹ்மத்தை அடைவிப்பிக்கத்தக்கவன். பரப்ரஹ்ம தியானத்தினால் ஆத்மா பரப்ரஹ்மம்போல் முற்றிலுமழிந்துபோன எல்லாபாவனைகளோடு

கூடியவனுக ஆகிறுன். கர்மபாவனே, ப்ரஹ்மபாவனே, உபயபாவனே என்கிற மூன்று பாவனேகளாலும் விடுபட்டவன் ப்ராபணீயன் (அதாவது ப்ரஹ்மத்தை அடைவிப்பிக்கத்தக்கவன்) என்று சொல்லி 'க்ஷேத்ரஜ்ஞ: கரணீ ஜ்ஞாநம் கரணம் தஸ்யவைத்விஜ - நிஷ்பாத்யமுக்திகார்யம்ஹி க்ருதக்ருத்யம் நிவர்தயேத்' (ப்ராஹ்மணு! க்ஷேத்ரஜ்ஞன் உபாஸகன். ஞானம் அவனுக்கு ஸாதநம். அந்த ஞானமானது முக்திகார்யத்தை உண்டுபண்ணிவிட்டு க்ருதக்ருத்யமாக ஆகி நிவர்த்திக்கிறது. அதாவது செய்ய வேண்டிய கார்யத்தைச் செய்ததாக ஆகி திரும்பிவிடும்.) என்று பரப்ரஹ்மத்யானரூபமான கரணத்திற்கு ப்ரக்ஷீணுசேஷபாவநாத்மஸ்வரூப ப்ராப்தியிலை க்ருதக்ருத்யமாக ஆகி நிவ்ருத்தித்தல் சொல்லிஇருப்பதனுல் ஸித்திவரையில் அனுஷ்டிக்கத்தக்கதென்று சொல்லி 'தத்பாவ பாவமாபன்ன ஸ்ததாஸௌ பரமாத்மனு - பவத்யபேதீ பேதஸ்ச தஸ்யாஜ்ஞாந க்ருதோபவேத்' (அந்த ஜீவாத்மா அந்த ப்ரஹ்மத்தினிடத்திலுள்ள ப்ரக்ஷீணுசேஷபாவநத்வ ரூபமான ஸ்வபாவத்திற்கு ஸமானமான ஸ்வபாவத்தை அடைந்தவனுக அப்பொழுது பரமாத்மாவோடு பேதமில்லாதவனுக ஆகிறுன். அவனுக்கு பேதமானது அஜ்ஞானத்தாலுண்டுபண்ணப்பட்டதாக ஆகும்.) என்று முக்தனுடைய ஸ்வரூபத்தைக் கூறுகிறுர். தத்பாவம்-ப்ரஹ்மத்தினுடைய பாவம்-ஸ்வபாவம்-ஸ்வரூபைக்யமல்ல. 'தத்பாவ பாவமாபன்ன:' என்கிற வாக்கியத்திலுள்ள இரண்டாவது பாவ சப்தத்திற்கு அன்வயமில்லாமல் போவதாலும் முற்கூறப்பட்ட அர்த்தத்திற்கு விரோதம் வருவதாலும். ப்ரஹ்மத்தினுடைய யாதொரு ப்ரக்ஷீணுசேஷபாவனத்வ ரூபமான பாவமுண்டோ, அதன் ஆபத்திதான் தத்பாவபாவாபத்தி. எப்பொழுது இவ்வண்ணமாக ப்ரஹ்மத்தினுடைய ப்ரக்ஷீணு சேஷபாவநத்வரூபமான பாவத்தை அடைகிருனே அப்பொழுது அந்த ஜீவாத்மா பரமாத்மாவோடு அபேதமுள்ளவனுக ஆகிறுன். பேதமற்றவனுக ஆகிறுன்.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் ஸகுணப்ரஹ்மோபாஸகனுக்கு ஸகுணப்ரஹ்மப்ராப்தியை இச்சுருதிகள் சொல்லுகின்றனவே ஒழிய பரப்ரஹ்மோபாஸகனுக்கு பரப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லுகிறதில்லை என்கிற சங்கைவரின் சொல்லுகிறுர். பரவித்யாஸு என்று. ப்ரஹ்மவித்யைகளிலென்று அர்த்தம். ஸர்வாஸு, அன்யனுல் ஸகுணவிஷயமாகவும் நிர்குணவிஷயமாகவும் சொல்லப்பட்டிருக்கிற தஹரவித்யை ஸத்வித்யை அக்ஷரவித்யை முதலிய எல்லாவித்யைகளிலும் என்று பொருள். 'அதீந்த்ரியத்வாதிகுணக:' என்கிற பரவித்யா வாக்யவிஷயஸூத்ரஸ்வாரஸ்யத்தால் அதற்கு ஸகுணவிஷயத்வம் அறியப்படுகிறது. 'ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய' என்கிற ஸூத்ரமானது உபாஸ்யனுக்கு ஸகுணத்வத்திற்காக உதாஹரிக்கப்பட்டது. 'விகல்போऽவிசிஷ்டபலத்வாத்' என்கிற ஸூத்ரமானது ப்ராப்யமான ப்ரஹ்மத்திற்கு ஸகுணத்வத்திற்காக எடுத்துக் கொள்ளப்பட்டது. இது பொருள். அன்யனுல்

நிர்குணவிஷயமென்று அபிமானிக்கப்பட்டிருக்கிற 'ஸத்யம் ஜ்ஞானம், ஆநந்தோ ப்ரஹ்ம' இதுமுதலிய வாக்கியங்களுக்கு ஆநந்தம் முதலியகுணங்களோடு கூடின பரப்ரஹ்ம விஷயத்வத்தையும் அந்த குணங்கள் எல்லா வித்யைகளிலும் தொடர்ந்து வருகின்றனவென்பதையும் சொல்லி அவைகளுக்குள் ஒரு வித்யையே பலத்தை அடையச் செய்வதின் பொருட்டு போதுமான திறமையுள்ளதென்று வித்யா விகல்பமும் கூறப்பட்டது. ஆகையால் அன்யனால் நிர்குணவிஷயம் ஸகுணவிஷய மென்று அபிமானிக்கப்பட்டிருக்கிற ஸத்வித்யை தஹர வித்யை முதலியவைகளில் உபாஸிக்கத்தக்க வஸ்துவும் பலமும் ஸகுணமாக இருப்பதால் ஸகுண ப்ராப்தியை விட வேறாக நிர்குணப்ராப்தி உண்டு என்று சொல்வது ப்ரமாணமில்லாதது. ஆதலால் முக்தியில் பேதபரங்களான சுருதிகளுக்கு அந்யதாஸித்தியானது உப பன்னமாகாது. அடையத்தக்கவஸ்து விஷயத்தில் வேற்றுமை இல்லாமையால். ஸூத்ரகாரருடைய அபிப்பிராயத்தை அறிந்தவர்களுடைய வசனத்தைக் காண் பிக்கிறார்— வாக்ய என்று. யுக்தம் தத்தநந்தோபாஸநாத் என்று. யுக்தம்-குணங் களோடு கூடிய ப்ரஹ்மமே அடையத்தக்கது. ஏனெனில் அந்த குணங்களோடு கூடின ப்ரஹ்மத்தை உபாஸிப்பதாலென்று அர்த்தம். வித்யாவிகல்பமும் அவ்வி டத்திலே காணத்தக்கது. ஸச்சித்தன்— ஸத்வித்யாநிஷ்டன், அப்படியானால் முக்தியில் அபேத சுருதிக்கு என்ன அர்த்த மென்று கேட்கில் கூறுகிறார்— ப்ரஹ்ம என்று. 'ஸயோ ஹவை தத்பரம் ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி' என்று. ப்ரக்ருதனான ப்ரம்ஹவேதனமுள்ளவனுக்கு ப்ரஹ்மபர்யந்த ஸ்வரூபாவிர்ப்பாவத் தைச் சொல்வதில் முக்கிய நோக்கமுள்ளது இந்த வாக்கிய மென்று எப்படிவிதித் திக்குமோ அப்படி மேலே சொல்லப்படப்போகிறது. இவ்விடத்திலோ வென்றால் வேறு அர்த்தம் உரைக்கப்படுகிறது. ப்ராக்ருத நாமரூபங்களின் த்யாகத்தை ஜ்ஞாபிப்பதற்காக 'நாமரூபாத் விமுக்த:' என்கிற ஶ்ருதி உதாஹரிக்கப்பட்டது ஸாம்ய ப்ரதிபத்தியின் பொருட்டு 'நிரஞ்ஜந:' என்கிற வாக்கியம் எடுக்கப்பட்டது. 'பரம்ஜ்யோதி:' என்கிற வாக்கியமானது அதே ஸாம்யம் ஸ்வாபாவிக மென்பதற்கு ஜ்ஞாபகம். அங்ஙனமாகில்அமுக்க்யத்வம் ஏற்படுமென்று சொல்லப்படுமேயாகில் கூ றுகிறார்— ப்ரகாரைக்யேச என்று. இந்த உதாஹரணமானது "ஸோயம் வ்ரீஹி:" இது முதலியதற்கு உபலக்ஷணம். 'யதர்துஷ்வ்ருது லிங்காநி நாநாரூபாணி பர்யயே. த்ருஶ்யந்தே தாநி தாந்யேவ ததா பாவா யுகாதிஷு' (§ ருதுக்களில் அந்தந்த ருதுவுக்கு உரித்ததான தளிர் புஷ்பம் காய்கனிமுதலிய பற்பலவிதங்களான ருது சின்னங்கள் அந்தந்த ருதுக்கள்மாறி மாறிவரும் தருணத்தில் அந்தந்த சின்னங் களே எவ்வாறு காணப்படுகின்றனவோ அவ்வாறே * யுகம்முதலியவைகளும் முறை யேமாறி மாறிவருங்கால் அந்தந்தயுகம் முதலியவைகளுக்கு உறித்ததான அதே வஸ்துக்கள் அப்படியே காணப்படுகின்றன ) இது முதலிய ப்ரயோகம் பாரதம் முதலிய கிரந்தங்களில் காணத்தக்கது. திருஷ்டாந்தத்தில் ப்ரகாரைக்யத்தில் கூட ப்ரகாரிகளை ஒன்று படுத்திச்சொல்வது முக்கியமாக இருந்தபோதிலும்கூட ஸ்வரஸமன்று. முன் பார்க்கப்பட்ட கோவினிடத்தில் வ்யக்த்யம்சத்தை விட்ட

§ ருதுக்கள்—இரண்டு இரண்டுமாதங்களடங்கிய கால விசேஷங்கள். இவை கள் ஒஷதிகளையும் விருக்ஷங்களையும் பக்குவப்படுத்தி தளிர்க்கவும் புஷ்பிக்கவும் பலிக்கவும் செய்யும் பருவகாலங்கள். இவைகள் வஸந்தம் க்ரீஷ்மம் வர்ஷை சரத்- ஹேமந்தம் சிசிரம் என அறுவகைப்பட்டிருக்கின்றன.

* யுகம்—தேவமானத்தால் பன்னீராயிரம் வருஷம் கொண்ட காலம். இது க்ருதம், த்ரேத, த்வாபரம், கலி, என நாலுவகைப்பட்டுள்ளது.

தனுல் அஸ்வாரஸ்யம், ஜாத்யம்சத்திற்கு மிக்க ஒற்றுமையுள்ளதாக இருத்தல் என்கிற தன்மையின் ஐக்யத்தால் முக்கியத்வம். தார்ஷ்டாந்திகத்திலோவெனில் 'கங்கையில் எடைச்சேரி' என்கிற வாக்கியத்திலுள்ள கங்காபதத்திற்குப் போல முற்றிலும் ப்ரவ்ருத்தி நிமித்தத்தின் பரித்யாகமில்லாமையாலும் பரமாத்மாவினி டத்தில்போல பரவ்ருத்தி நிமித்தபௌஷ்கல்ய மில்லாமையாலும் ப்ரவ்ருத்தி நிமித் தத்தின் ஏகதேசத்தில் அன்வயிக்கிற முக்தாத்மாவினிடத்தில் முக்கியகோடி என்கிற அபிப்பிராயத்தினுல் முக்கியமென்றே உரைக்கப்பட்டது. லாக்ஷணிகமான கங்காபதம்போல அத்யந்த அமுக்கியமல்ல வென்றுபொருள். முக்தனுக்கு அப ரிச்சின்ன ஞானாநந்தங்களிருந்தபோதிலும் ஜகத்காரணத்வத்திற்கு அனுகுணமான குணப்ருஹத்தவமும் ஸ்வரூப ப்ருஹத்தவமுமில்லை யன்ரோ, ஆகாரைக்கியமுள்ள இடத்தில்கூட ஆகாரியான வஸ்துவோடு மற்ருென்றை ஒன்றுபடுத்தி வ்யவஹ ரிப்பது அத்யந்தம் அமுக்கியமன்று என்பதில் 'ஸோயம்கௌ:' என்பது திருஷ் டாந்தம். யோகஸங்க்ரஹாரம்பத்தில் மாத்திரமல்ல. விஸ்தரத்தில்கூட ¶ வ்ய வதானமில்லாத ம்ருந்தினசுலோகங்களில் பேதப்ரதிபத்தியானது இருக்கிறதென்று சொல்லுகிருர்—அத்ராபி என்று. முக்தாத்மாவை விஷயமாகக்கொண்ட ப்ரகர ணாந்தரங்களில் மாத்திரமல்ல. இந்த ப்ரகரணத்திலுமென்று பொருள். இந்தசுலோ கத்தில் அப்படியே என்று ப்ரஹ்மஸாதர்ம்யோபதேசம் உபயோகிக்கப்படுகிறது. பரப்ரஹ்மவத் என்கிறபதத்தை முதலில்கொண்ட கிரந்தமானது ததைவ என்கிற இந்தபதத்திற்கு வியாக்கியானம். ப்ரக்ஷீணாசேஷபாவா சப்தத்தை வியாக்கியா னம் செய்கிருர்—கர்மபாவநா என்று, 'பரப்ரஹ்மவத் ப்ரக்ஷீணாசேஷகர்மபாவா:' என்கிற பாடத்தில் கர்மசப்தமானது யாகம்முதலிய க்ரியைகளுக்கும் உபாஸநங் களுக்கும் பொதுவாக அனுஷ்டிக்கத்தக்க மந்திரமாத்திரத்தில் கருத்துள்ளது. அப்பொழுது கர்மசப்தத்தால் 'த்ரிவிதாபாவபாவநா' என்கிற இடத்திலுள்ள பா வசப்தமானது வியாக்கியானிக்கப்பட்டதாக ஆகிறது. இந்த இடத்தில் இது பொருள். அடையத்தக்க பரப்ரஹ்ம விஷயஜ்ஞானமானது ப்ராப்தியை உண்டு பண்ணுகிறதாதலால் சுத்தஸ்வரூபமும் ப்ராப்யமென்று அதுஅனுஸந்திக்கத்தக்கது.

இந்த வ்யதிரேகமானது தத்பாவபாவித்வாத் என்கிற அதிகரணத்தின் அர்த் தம். அவ்விடத்தில் பத்தஸ்வரூபம் சிந்திக்கத்தக்கதென்று பூர்வபக்ஷம் செய்து கொண்டு முக்தஸ்வரூபம் சிந்திக்கத்தக்கதென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக் கிறது. இந்த சுலோகம் ஒரு ப்ரகரணத்திலிருக்கிற தென்பதைத் தெறிவிப்பதற் காக அடுத்தஸ்லோகமும் வியாக்கியானிக்கப்படுகிறது. க்ஷேத்ரஜ்ஞ: என்று. எவ்வளவுவரையில் க்ஷேத்ரஜ்ஞாவஸ்தையுள்ளவனோ அவ்வளவுவரையில் காணீ உபாஸகன், அவனுக்கு ஜ்ஞானம் காரணம், காரணமாகஇருக்கிற ஞானமானது முக்தி கார்யத்தை உண்டுபண்ணிவிட்டு திரும்பிவிடுமேஒழிய முக்திக்கு முந்தியே திரும் பாது என்று கருத்து. முக்தனுக்கு உபாஸனத்தினின்று நிவ்ருத்தியானது விதிக் கத்தக்கதல்லவன்ரோ. ஆகையால் மோக்ஷம்வரையில் அனுஷ்டிக்கத்தக்கதாக இருத்தல் சொல்லப்பட்டது என்று கருத்து. தத்பாவபாவசப்தத்தால் ப்ரஹ்ம ஸாம்யாபத்தி ஜ்ஞாபநத்திற்காகவும் 'விம்பதஜநகேஜ்ஞாநே' என்கிற இடத்தில்,

---

¶ வ்யவதானம். விலக்கம்.

ஜ்ஞாநேஎன்று பதம் பிறிக்கப்படவேண்டுமென்கிற சங்கையை விலக்குவதற்காகவும் 'தத்பாவபாவம்' என்கிற சுலோகம் வியாக்கியானிக்கப்படுகிறது. 'தத்பாவ' என்கிற சுலோகத்தில் தத்பாவஎன்று உபமான பூர்வபத பகுவ்ரீஹி, தஸ்யபாவஇவ பாவ: யஸ்யஸ: தத்பாவ:, தத்பாவஸ்யபாவ: தத்பாவபாவ:, என்று விக்ரஹம் சொல்லத் தக்கது. 'தத்பாவ' என்கிற பதத்திலுள்ளடங்கி இருக்கிற தச்சப்தபாவசப்தங்கள் இரண்டையும் வியாக்கியானம் செய்வதற்காகச் சொல்லுகிருர்—**தத்பாவ** என்று. பாஷ்யத்திலிருக்கிற தத்பாவசப்தம் பகுவ்ரீஹியல்ல, பின்னேயோ தத்புருஷஸமாஸம்-ஸமாஸமான துவியாக்கியானிக்கப்படவேண்டுமென்றுவிரும்பப்பட்டிருக்கும் தருணத்திலன்றே பகுவ்ரீஹிவிசிஷ்டரூபத்தால் பதத்தை எடுக்கவேண்டும். தச்சப்த மாத்திரங்கள் வியாக்கியானிக்கப் படவேண்டுமென்றுவிரும்பப்பட்டிருப்பதால்பகுவ்ரீஹி விசிஷ்டரூபத்தால் பதமெடுக்கப்படவில்லை. தச்சப்தத்தால் ப்ரஹ்மம் சொல்லப்படுகிறது. முதன்மைவாய்ந்திருக்கிற பாவசப்தத்தால் ஸ்வபாவம் கூறப்படுகிறது என்று பொருள். 'பாவோலீலாக்ரியாசேஷ்டா பூத்யபிப்ராயஜந்துஷு-பதார்த்தமாத்ரே ஸத்தாயாமாத்மயோநிஸ்வபாவயோ: 'என்று நிகண்டுகாரர்கள் கூறுகின்றனர். அன்றிக்கே பாஷ்யத்திலிருக்கிற தத்பாவசப்தமும் பகுவ்ரீஹி விசிஷ்டமானது. தத்பாவோப்ரஹ்மஞேபாவ: ஸ்வபாவ: இதி 'தத்பாவ' என்கிறபதத்தில் தச்சப்தத்தால் சொல்லத்தக்க ப்ரஹ்ம ஸம்பந்தம் பெற்றதாக அறியப்பட்டிருக்கிற பாவம் ஸ்வபாவம் என்று அர்த்தம். அல்லது ஶ்லோகத்திலும் தத்பாவசப்தம் தத்புருஷம் இரண்டாவது பாவசப்தம் ஸத்தையைச்சொல்லுகிறது. வ்யாவர்த்திக்கத்தக்கதைச் சொல்லுகிருர்—**நது** என்று. எதனுலென்று கேட்கில் கூறுகிருர்—**தத்பாவ** என்று.வேறுஹேதுவைச்சொல்லுகிருர்—**பூர்வோக்தகர்த்தவிரோதாச்ச** என்று.ஹேயப்ரத்யநீகத்வம் ஹேயார்ஹத்வம் முதலிய விரோதம் அர்த்தவிரோதம்.இவ்வண்ணம் சப்தபர்யாலோசனத்தாலும் அர்த்தபர்யாலோசனத்தாலும் பாவசப்தத்திற்கு ஸ்வபாவவாசித்வம் உபபாதிக்கப்பட்டது. ஸ்பாவசப்தத்தால் சொல்லத்தக்கது முன்சுலோகத்தில் சொல்லப்பட்ட ப்ரகாஶேஷபாவனத்வம் என்று சொல்லுகிருர்—**யத்** என்று. தச்சப்தத்தின் ஸாமர்த்தியத்திஞல் யத்வ்ருத்தத்தை ஆக்ஷேபித்து வியாக்கியானிக்கிருர்—**யதைவம்** என்று. அபேதீ என்கிற இடத்தில் பேதசப்தத்தின் வியாக்கியானத்திற்காக பேதசப்தத்தை இரண்டுஞ்ப்ரத்யயங்களால் பிரித்து நிர்தேசிக்கிருர்—**பேதாஹிதோபவதி** என்று.அன்றிக்கே பேதமில்லாதவனுக ஆகிருன் தாதாத்ம்ய முள்ளவனுக ஆகிருனில்லை என்று பொருள். அப்படிஇல்லாவிட்டால் 'பேதஶ்சதஸ்யாஜ்ஞாநக்ருத: ' என்று அடுத்த நிர்தேசம் பொருந்துகிறதில்லை.

---

ஜ்ஞாநைகாகாரதயா ப்ரோக்தநைகஸ்வாகாரஸ்யாஸ்ய தஸ்யாத்மநோ தேவாதிரூபத்வ: । தத்³பா⁴வபா⁴வஸ்ய கர்மரூபாஜ்ஞாநமூலத்வ:। ந ஸ்வரூபப்ரயுக்த:। ஸ தேவாதிபே⁴த:³ ப்ரக்ருதிபரிணாமரூபேண ஜ்ஞாநமூலேந கர்மணி விநஷ்டே ப்ரக்ருதிஸம்பந்தரூபேண க³தே ஏதத்³ப்³ரஹ்ம வதி । யதோக்த:ஸ்வரூபேண ஹேதுபா⁴வம் பா⁴வப்ரகாஶ்யக்ருதியுக்ஜ:। தேவாதிபே⁴தஸ்ய நாஶோ(அ)த்யந்தகாரணோ ஹி ஸ: (வி-பு-௬-௭-௯௩) இதி । அத ஏவ வக்ஷ்யதி—"விபே⁴த³ஜநகே(அ)ஜ்ஞாநே நாஶமாத்யந்திகம்

[illegible]

[illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம் :—

ஞானத்தையே வடிவமாகக்கொண்டிருத்தலால் பரமாத்மாவோடு ஏகப்ரகாரனாக இருக்கிற இந்த ஜீவாத்மாவுக்கு தேவமனுஷ்யாதி ரூபங்களால் அந்த பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபாடு இருக்கிறது. அந்த

பேதஸம்பந்தமானது இவனுக்கு கர்மரூபமான அஜ்ஞானத்தை மூலமாகக் கொண்டது. ஸ்வரூபத்தாலுண்டுபண்ணப்பட்டதல்ல. அந்த தேவாதி பேதமோவென்றால் பரப்ரஹ்மத்யானத்தினுல் மூலபூதமான அஜ்ஞானரூபமான கர்மாவானது நஷ்டமானவுடன் காரணமில்லாமையால் நிவர்திக்கிறதாதலால் அபேதமுள்ளவனுக ஆகிருன். அவ்வாறே கூறப்பட்டிருக்கிறது. ஏகஸ்வரூபபேதஸ்து பாஹ்யகர்மவ்ருதிப்ரஜ: — தேவாதிபேதே°பத்வஸ்தே நாஸ்த்யநாவரணோ ஹி ஸ: - (ஜ்ஞானைகாகாரனுக இருப்பதுபற்றி ஏக ஸ்வரூபனுன ஜீவனுக்கு தேவாதிபேதமானது பாஹ்யமான கர்மாவரணத்தினுலுண்டாகிறது. கர்மாவினுலுண்டுபண்ணப்பட்டிருக்கிற தேவாதிபேதம் நாசம் செய்யப்பட்டுவிட்டதேயாகில் பேதமே கிடையாது. ஏனெனில், அவன் கர்மரூபமான ஆவரணமில்லாதவன்) என்று. இதையே விவரிக்கிருர்- 'விபேதஜனகே°ஜ்ஞாநே நாசமாத்யந்திகம் கதே - ஆத்மநோ ப்ரஹ்மணோ பேதமஸந்தம் க: கரிஷ்யதி' (தேவாதிரூபமான பற்பல பேதத்தை உண்டுபண்ணுகிற அஜ்ஞானமானதுமுற்றிலும் நாசமடைந்த பிறகு ஜீவாத்மாவுக்கு இல்லாததான ப்ரஹ்மபேதத்தை எவன் உண்டுபண்ணுவான்) என்று. விபேத:- தேவதிர்யங் மனுஷ்யஸ்தாவராத்மகமான பற்பலபேதம். சௌநகரும் சொல்லி இருக்கிருர்—'சதுர்விதோ°பி பேதோ°யம் மித்யாஜ்ஞாந நிபந்தன:' (தேவதிர்யங் மனுஷ்யஸ்தாவராத்மகமான நான்குவிதமான இந்த பேதமானது மித்யாஜ்ஞாநத்தை காரணமாகக்கொண்டது). ஜ்ஞாநரூபனுன ஆத்மாவினிடத்திலுள்ள தேவாதிரூபமான பற்பல பேதங்களுக்கு ஹேதுவாக ஆகாநின்ற கர்மாவென்றுபெயருள்ளதான அஜ்ஞானமானது பரப்ரஹ்ம த்யானத்தினுல் முற்றிலும் நாசமடைந்தவளவில் ஹேதுவில்லாமையால் பரப்ரஹ்மத்தைக் காட்டிலும் ஜீவாத்மாவுக்கு இல்லாமலிருக்கிற தேவாதிரூபமான பேதத்தை எவன் உண்டுபண்ணப்போகிருன் என்று அர்த்தம். 'அவித்யாகர்மஸம்ஜ்ஞாந்யா' என்று இவ்விடத்திலேயே கூறப்பட்டிருக்கிறதன்றே. 'க்ஷேத்ரஜ்ஞஞ்சாபி மாம் வித்தி' இதுமுதலியதால் அந்தர்யாமி ரூபத்தால் எல்லோருக்கும் ஆத்மாவாக இருப்பதுபற்றி ஐக்யம் கூறப்பட்டிருக்கிறது. அங்ஙனமில்லாவிடில் 'க்ஷரஸ்ஸர்வாணி பூதாநி கூடஸ்தோக்ஷர உச்யதே - உத்தம: புருஷஸ்த்வந்ய:' இதுமுதலிய வசனங்களோடு விரோதம். அந்தர்யாமி ரூபத்தால் எல்லாவற்றுக்கும் ஆத்மாவாக இருத்தல் அந்த இடத்திலேயே பகவானுல் உரைக்கப்பட்டிருக்கிறது. ஈச்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே°ர்ஜுன திஷ்டதி' என்றும் 'ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்ட:' என்றும் 'அஹமாத்மா குடாகேச ஸர்வ பூதாசயஸ்ஸ்தித:' என்றும் அதே கூறப்படுகிறது. பூத சப்தமானது ஆத்மபர்யந்தமான தேஹத்தைச் சொல்லுகிறது. எக்காரணத்தால் எல்லாவஸ்துக்களுக்கும் இவன் ஆத்மாவாக இருக்கிருனே அக்காரணத்தினுலேயே எல்லாம் அந்த பரமபுருஷனுக்கு சரீரமாக இருப்பதுபற்றி அவைகளுக்கு தனித்து இருப்பு நிஷேதிக்கப்படுகிறது. 'நததஸ்தி விநாயத்ஸ்யாத்'

(அவனின்றி எந்த வஸ்து உண்டோ அந்த வஸ்து (எங்கும்) இல்லை) என்று. இது பகவானுடைய விபூதியின் உபஸம்ஹாரமென்று அவ்வாறே ஒப்புக் கொள்ளத்தக்கது. அதனால் இது கூறப்படுகிறது. 'யத்யத் விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜித மேவவா - தத்ததேவாவகச்ச த்வம் மமதேஜோம்சஸம்பவம். ஈசிதவ்யங்களான வஸ்துக்களுடன்கூடிய எந்த எந்த ஜந்துவானது காந்தியுள்ளதாகவாவது, தனதான்யங்களால் நிறைந்ததாகவாவது, மங்களகார்யங்களில் முயற்சியுள்ளதாகவாவது இருக்குமோ அந்தந்த ஜந்துவை என்னுடைய (நியமனசக்தியின்) ஏகதேசத்தால் உண்டானதென்று நீ தெரிந்து கொள்வாயாக. 'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்சேந ஸ்திதோஜகத்'. (நான் காரணாவஸ்தையிலும் கார்யாவஸ்தையிலும் முறையே ஸூக்ஷ்மமாகவும் ஸ்தூலமாகவுமிருக்கிற சிதசிதாத்மகமான இந்த ப்ரபஞ்சமனைத்தையும் என் மஹிமையினுடைய ஒரு அம்சத்தால் தரித்துநிற்கும்படி செய்து கொண்டு இருக்கிறேன்) என்று. ஆகையால் சாஸ்த்ரங்களில் நிர்விசேஷ வஸ்துவின் ப்ரதிபாதனமில்லை. உலகத்திலுள்ள எல்லாபதார்த்தங்களும் ப்ராந்திஸித்தங்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை. சித் அசித் ஈச்வரன் இந்தமூன்று தத்வங்களுக்கும் ஸ்வரூபபேத நிஷேதமும் இல்லை.

---

ச்ருதப்ரகாசிகை

தேவமனுஷ்யாதி பேதத்தின் இன்மையானது எவ்வாறு என்று சங்கைவரின் "பேதஸ்ச தஸ்ய" இது முதலிய வியாக்கியானம் செய்கிறார்— ஜ்ஞாநைகாகாரதயா என்ற.பரமாத்மாவோடு அபேதமுள்ளவனாக ஆகிறானென்ற பரமாத்மா ப்ரஸ்தாவனாக இருப்பதாலும் ஆத்மந: ப்ரஹ்மண: என்கிற இடத்திலும் பஞ்சமீ விவக்ஷையினாலும் அவனிடத்தினின்று பேதமென்று உரைக்கப்பட்டது. ப்ரஹ்மத்துக்கும முக்தாத்மாவுக்கும் வேறு ஆகாரத்தால் பேதமானது பிரமாணஸித்தமாக இருப்பதாலும் நிரஸிக்கத்தக்க பேத விசேஷமானது வேறுவசனங்களால் ஸித்தமாக இருப்பதாலும் பேதம் தேவாதி ரூபமென்று உறைக்கப்பட்டது. கர்ம ரூப சப்தத்தால் அஜ்ஞாந சப்தம் வியாக்கியானிக்கப்பட்டது. ஞாந விரோதி என்று வ்யுத்பத்தி என்று அர்த்தம். "அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா" என்றல்லவோ சுருதி இருக்கிறது. இந்த இடத்திலும் "அவித்யா கர்மஸம்ஜ்ஞாந்யா" என்றல்லவோ படிக்கப்படுகிறது. அதனால் பேதாராஹித்யத்திற்கு என்ன வென்று சங்கைவரின் "பேதஸ்ச தஸ்யாஜ்ஞாநக்ருதோ பவேத்" என்கிற இந்த கிரந்தத்தால் அர்த்தஸித்த மென்று அபிப்ராயப்படப்பட்டிருக்கிற காரணாபாவத்தை விளக்கிக் கொண்டு கார்யா பாவத்தை உபபாதிக்கிறார்—ஸது என்று. பேதம் தேவாதிரூபம் என்பதிலும் அஜ்ஞாநசப்தம் கர்ம பரம் என்பதிலும் ப்ரமாணத்தைக்கூறுகிறார்— யதோக்தம் என்று. ஆதி பரத சரித்திரத்தில் இந்த சுலோகமிருக்கிறது. அதில் மூர்த்தி தேஹம் இந்திரியங்கள் முதலிய பாஹ்யவஸ்துக்களோடு பேதமின்மை ஆத்மாவுக்கு உரைக்கப்பட்டது. 'ஸிதநீலாதி' இது முதலியதால் இந்த சுலோகத்தில் புத்தி சுகம் துக்கம் இச்சை முதலிய ஆந்தரவஸ்துக்களோடு பேதமுமில்லை என்று சொல்லப்படுகிறது. ஏகஸ்வரூப என்று. கர்மாவே வ்ருதி ஆவரணம் கர்மவ்ருதி-கர்மாவானது பாஹ்யம் ஆந்தரம் என இரு வகைப்பட்டுள்ளது. ஆந்தரமான

கர்மாவானது ஆத்ய ப்ராவண்யத்திற்கு ஹேதுவாக இருக்கிறது. பாஹ்யமான கர்மாவானது வெளியிலிருக்கிற ரூபரஸகந்த ஸ்பர்ஸ சப்தங்களாகிற விஷயங்களில் ¶ ப்ராவண்ய முண்டாவதற்குக் காரணமாக இருக்கிறது. அன்றிக்கே பாஹ்யம் ஸ்வாபாவிகமாக இல்லாத கர்ம. அதே வ்ருதி-அதனால் அதிகமாக உண்டாயிருக்கிறது ஏகஸ்வரூபபேதம். பாஹ்ய கர்மாவானது சரீரத்தை த்வாரமாகக்கொண்டு ஏகஸ்வரூபமான ஆத்மாவுக்கு ஆந்தரமான பேதத்தை உண்டுபண்ணுகிறதென்று அர்த்தம். த்வாரபூதமான தேவாதி சரீரபேதம் நஷ்டமாகப்போனவளவில் ஆந்தர பேதமில்லை. தேவாதிபேதம் நஷ்டமாகில் எவ்வாறு கர்மவ்ருதியை ஹேதுவாகக்கொண்ட ஆந்தரபேத நாசம் உண்டாகும்? என்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்— அநாவரணோஹி ஸ: என்று. ஸ: தேவாதி பேதத்தை இழந்த ஆத்மா. கர்மாவரணத்தினின்று விடுபட்டவனல்லவோ வென்று பொருள். அன்றிக்கே கர்மவ்ருதி: கர்மாவினாலுண்டாகிற வ்ருதி. தேவாதி சரீரம். அந்த ஸம்பந்தத்தினாலுண்டானது ஆந்தரபேதம். தேவாதிபேதம் நஷ்டமாயின் அது இல்லை. கர்மாவினாலுண்டாகிற ஆவரணத்தை ஹேதுவாகக்கொண்ட ஆந்தரபேதமானது தேவாதிபேதம் நாசமடைந்தால் எவ்வாறு உண்டாகிறதில்லை என்று கேட்கில் கூறுகிறார்—அநாவரணோஹி ஸ: என்று. கர்மஜாயவருதி: தேவாதிசரீர ரூபை என்று அர்த்தம். ஏததேவ- 'பேதப்ச தஸ்யா ஜ்ஞாநக்ருதோ பவேத்' என்று சொல்லப்பட்டதாகவே இருக்கிற அர்த்தத்தை 'விபேதஜநகே' என்கிற பதத்தை முதலில் கொண்டிருக்கிற சுலோகத்தினால் ''அநாவ்ருத்திர்ஸப்தாத்'' என்கிற அதிகரணார்த்தம் சொல்லப்படுகிறது. பரப்ராஹ்மத்தினால் நாசமடையும்படி செய்யப்பட்டிருக்கிற ஜீவாத்மாவினிடத்திலிருந்த தேவாதி பேதத்திற்கு மீண்டுவருதலை எவன் செய்யப்போகிறான் என்று சொல்லப்படுகிறது. விபேதசப்தத்தை வியாக்கியானம் செய்கிறார்- விபேதோ விஶோ விபேத: என்று. பேதம் தேவாதி ரூபமென்பதில் ப்ரமாணாந்தரத்தைக் கூறுகிறார்—யதோக்தம் என்று மித்யாஜ்ஞாந நிபந்தன:- மித்யாஜ்ஞாநம் ஆத்மவிஷயமான ப்ராந்திஜ்ஞாநம், அது கர்மத்தின் வாயிலாக மேல் மேல் வருகிற தேவாதி பேதத்திற்கு ஹேதுவென்று அர்த்தம். இதற்கு உத்தரார்த்தம்- ''தேவதிர்யங்மனுஷ்யாக்யஸ்தைவர்ரூப நாரக:'' என்று. வியாக்கியானிக்கத்தக்க சுலோகத்தின் வாக்கியார்த்தத்தை சொல்லுகிறார்— ஆத்மநி என்று. ப்ரஹ்மண: என்கிற பதம் பஞ்சம்யந்த மென்பதைக் காட்டுவதற்காக பரஸ்மாத் என்று கூறப்பட்டது. இரண்டு பதங்களுக்கும் வையதிகரண்யத்தால் ஷஷ்ட்யந்தத்வம் யுக்தமல்ல, சசப்தமில்லாமையால். அடுத்த முந்தின சுலோகத்தில் 'பரமாத்மநா பவத்யபேதி' என்று பரமாத்மா ப்ரதியோகியாக நிர்தேசிக்கப்பட்டிருப்பதாலும் அதனாலேயே ஸமாநாதிகரணமான ஷஷ்ட்யந்தத்வமும் யுக்தமல்ல. முன் விஸ்தரிக்கப்பட்டிருக்கிற அர்த்த விரோதத்தாலும் ஐந்தாம் வேற்றுமை உருபை ஈற்றில் கொண்டிருத்தலும் ஆறும் வேற்றுமை உருபை ஈற்றில் கொண்டிருத்தலும் விபர்யயத்தினால் இருக்கலாமென்று சொல்லப்படுமேயாகில் அல்ல. பரப்ராஹ்மத்துக்குக்கூட ஹேயகுணார்ஹத்வாபாதகமானது ஸ்வாபாவிகமாக ஆக வேண்டியதாக ப்ரஸங்கிக்கும். அதனால் ''பரஸ்மாத் ப்ரஹ்மண:'' என்று கூறப்பட்டது. அஸந்தம் — ஸத்சப்தமானது பரமார்த்த பர்யாயம். ''அநாசீ பரமார்த்தப்ச'' என்கிற இடத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறதன்றோ. அநித்யமென்று

¶ ப்ராவண்யம்—பற்றுதல்.

பொருள். அதனால் ஸ்வாபாவிகமான நித்யபேதத்திற்கு வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. அநித்யத்வம். ஒரு ஸமயத்தில் உண்டாகுதல். அநித்யமாக இருப்பதால் தேவாதிபேதமானது ஹேதுவை அபேக்ஷித்திருக்கிறது. அதை எவன் செய்யப்போகிறான்? ஒருவனும் செய்யப்போகிறதில்லை. ஹேத்வபாவாத்-கர்மரூபமானஹேது இல்லாமையால் என்று அர்த்தம். ஏகார்த்த விஷயத்தில் மாத்திரமல்ல. "பாஹ்ய கர்மவ்ருதி ப்ராஜ:' 'அஜ்ஞாநக்ருதோ பவேத்' என்கிற இடங்களில் அஜ்ஞாநசப்தம் கர்ம சப்தம் இவ்விரண்டும் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதனால் அஜ்ஞாந சப்தமானது கர்மாவென்கிற பொருளை உணர்த்துந்தன்மை வாய்ந்துள்ளது. இந்த ப்ரகரணத்திலும் ஸ்பஷ்டமாக சொல்லப்பட்டிருக்கிறதென்று சொல்லுகிறார்— **அவித்யா கர்ம ஸம்ஜ்ஞாந்யேதிஹ்யத்ரைவோக்தம்** என்று. ஆத்மாவுக்கு உண்டாயிருக்கிற ஔபாதிக பேதமானது உபாதி விலகினவுடன் அழிந்து விடுகிறதென்று சுலோகத்தின் அர்த்தம்.

உபாதி இல்லாமையால் இல்லாதபேதத்தை எவன் உண்டு பண்ணக்கூடுமென்றுவது அர்த்தம். இந்த சுலோகம் ம்ருஷாவாதிகளுக்கு அத்யந்தம் அஸ்வரஸம். அப்படியன்றோ— 'விபேதஜநகே'என்கிற இடத்தில் ஜநகசப்தமானது உத்பாதகனிடத்தில் ஸ்வரஸம்-அத்யாஸஹேதுவில் ஸ்வரஸமன்று. அஜ்ஞாநசப்தத்திற்கு உலகத்தாலும் சாஸ்த்ரத்தினாலும் அநிர்வசனீயமென்கிற அர்த்தத்தை உணர்த்தும் தன்மையானது அறியப்பட்டிருக்கவில்லை. கர்மாவைச் சொல்லும் திறமையுள்ளதாக இருத்தல் என்கிற வ்யுத்பத்தியானது இந்தப்ரபந்தத்திலேயே காண்பிக்கப்பட்டிருக்கிறது. நாசசப்தத்திற்கு பாதத்தைச் சொல்லும் தன்மையானது முக்கியமல்ல. அஸந்தம் என்கிற பதமும் வ்யவச்சேதிக்கத்தக்கது இல்லாமையால் பயனற்றது. இருக்கிற பேதத்தை ஒப்புக்கொள்ளாமையால், அதை ஒப்புக்கொண்டாலல்லவோ அதற்கு ஸாபல்யம். கரிஷ்யதி என்கிற பதமும் அஸ்வரஸம்-அத்யாஸகர்த்ருத்வ மில்லாமையால். இதற்குமேல் அத்வைத பரமாக அன்யனால் கூறப்பட்டிருக்கிற கீதாவசனத்தை வியாக்கியானிக்கிறார்— **க்ஷேத்ரஜ்ஞஞ்சாபி** என்று. அன்யனுக்கு அபிமதமான அர்த்தம் ஏதோ அதற்கு முன்பின் விரோதத்தைக்காட்டுகிறார்—அன்யதா என்று. "உத்தம:புருஷஸ்த்வந்ய:" என்று பேதத்தை ஸ்பஷ்டமாகச்சொல்லி இருப்பதனால் அதின் விரோதத்தால் ஸ்வரூபைக்யபரத்வமில்லை என்பது மாத்திரமல்ல, ஸாமாநாதிகரண்யத்திற்கு உபபாதகமான அந்தர்யாமித்வம் கண்டோக்தமாகவுமிருக்கிறதென்று சொல்லுகிறார்— **அந்தர்யாமி** என்று. 'ஈஸ்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுன திஷ்டதி' என்கிற சுலோகத்தில் பூத சப்தத்திற்கு ஆத்மபர்யந்த தேஹ பரத்வமானது "ப்ராமயன் ஸர்வபூதாநி' என்கிற இந்த சுலோகத்தினுடைய உத்தரார்த்தத்தால் அறியப்படுகிறது. 'ஈஹிம்ஸ்யாத் ஸர்வாபூதாநி' என்கிற இதுமுதலிய ப்ரயோகத்தாலும். 'ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்ட:' என்கிற சுலோகத்திலும் ஸர்வசப்தத்திற்கு ஆத்மபர்யந்தத்வமானது "மத்தஸ்ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹனஞ்ச" என்கிற வசனத்தாலறியப்படுகிறது. ஹ்ருத்தேசே - ஹ்ருதயதேசத்திலிருக்கிற ஆத்மாவினிடத்திலென்று அர்த்தம். "ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதி" என்கிற இடத்திலும் அப்படியே. அவ்வாறே "அஹமாத்மா குடாகேச" என்கிற இடத்திலும் அந்தர்யாமித்வபரதையைக் கூறுகிறார்—அஹம் என்று. எதனாலென்று கேட்கில் கூறுகிறார்—**பூதசப்தோஹி** என்று. முன்காட்டப்பட்டிருக்கிற ஸர்வசப்தத்தோடு அர்த்தைக்யத்தாலும் என்று கருத்து.

எல்லாம் பகவதாத்மகமென்று அன்வயரூபத்தால் கூறப்பட்டிருப்பதற்கு இது சேஷபூதமானது. 'நததஸ்தி' என்கிற வ்யதிரேகநிர்தேசமானது அதற்கு அனுகுணமே என்கிற அபிப்பிராயத்தால் சொல்லுகிறார்—**யதஸ்ஸர்வேஷாம்** என்று. அவிநாபாவசப்தமானது ஸம்பந்தநியமத்தைச்சொல்லுகிற தன்மைவாய்ந்திருப்பதால் என்று கருத்து. வேறு ஹேதுவையும் கூறுகிறார்—**பகவத்** என்று, 'ஏதாம்விபூதிம்யோகஞ்ச' என்று தொடங்கிஇருப்பதால் விபூதிபாத்வமறியப்படுகிறது. ஆதலால் உபக்கிரமத்திற்கு அனுகுணமே உபஸம்ஹாரமென்று பொருள். விபூதியை விதித்துவிட்டு அதையே மறுப்பது சக்யமல்லவென்று அர்த்தம். ப்ரகரணம் விபூதிபரமென்பதைக் காண்பிக்கிறார்—**யத்யத்** என்று. விபூதிமத், நியாம்யவஸ்துக்களுள்ளது. ஸ்ரீமத், போக்யஸம்ருத்தியுள்ளது. ஊர்ஜிதம் பலமுள்ளது. கல்யாணகுணாரம்பங்களில் முயற்சியுள்ளது. தேஜ: சத்துருக்களை அவமதிக்கிற ஸாமர்த்தியம், ப்ரசாஸனம். தேஜோம்சஸம்பவம் நியமனசக்திரூபமான என்னுடைய ஆஜ்ஞையின் ஏகதேசத்தைச் சார்ந்திருக்கிறதென்று அர்த்தம்.

சாஸ்திரத்திறகு பிறர்களால் கூறப்பட்டிருக்கிற அர்த்தத்தில் கருத்தில்லாமையை உபஸம்ஹாரம் செய்கிறார்—**அத:** என்று. அத:, ச்ருதியோஜனை முதலியதால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற நியாயங்களால் என்று அர்த்தம். ப்ராந்தத்வம், ப்ராந்தியினுல் விசித்தித்தல். ஜகத் ப்ரஹ்மம் இரண்டும் ஒரேத்ரவ்யம் என்கிற பக்ஷத்தில் ப்ரஹ்மத்திற்கு ஸவிசேஷத்வமும் ஜகத்திற்கு ஸத்யத்வமும் பொருத்தமுள்ளதாக ஆகிறது என்கிற சங்கைவரின் அதைவிலக்குவதற்காக சொல்லுகிறார்—**நாபி** என்று. சேதநர்களிடங்களில் அசித்தர்மங்களை எண்ணுதலும் பரதந்த்ரங்களான வஸ்துக்களிடங்களில் ஸ்வதந்த்ரங்களென்கிற எண்ணமும் ப்ரமமேயொழிய ஸ்வரூபபேதபுத்தியானது ப்ரமமல்லவென்கிற அபிப்பிராயத்தால் 'நஸ்வரூபபேத: நிஷேத:' என்று கூறப்பட்டது. அன்றிக்கே § ம்ருஷாவாதியையே உத்தேசித்து ஜீவன் பரமாத்மா இவ்விருவர்களுடைய ஸ்வரூபபேதநிஷேதத்தின் இன்மையைக்கூறுகிறார்—**நாபி** என்று. அசித்தை எடுத்தது திருஷ்டாந்தமாக.

§ ம்ருஷா—பொய்.

ஸ்ரீபாஷ்யம்—

விசேஷமற்றதும் ஸ்வயம்பரகாசமாகவுமிருக்கிற வஸ்துவினிடத்தில் ஈச்வரன் ஈசிதவ்யங்கள் முதலிய அளவிறந்த விகல்பங்களுடன் கூடின இந்த உலகம் அனைத்தும் தோஷத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தோஷமென்பது ஸ்வரூபத்தை மறைக்கிறதும், பற்பலவிதங்களாகவும் விசித்திரங்களாகவுமிருக்கிற விக்ஷேபங்களை உண்டுபண்ணுகிற தன்மைவாய்ந்துள்ளதும், ஸத்தென்றாவது அஸத்தென்றாவது நிர்வசனம் செய்யத்தகாததுமான அநாதியாக இருக்கிற அவித்யை. அந்த அவித்யை அவசியம் ஒப்புக்கொள்ளத்தக்கது; "அந்ருதேந ஹி ப்ரத்யூடா:" இது முதலிய ச்ருதிகளாலும், ப்ரஹ்மத்திற்கு 'தத் த்வமஸி' இது முதலிய வாக்யஸாமாநாதிகரண்யத்தினால் அறியப்பட்டிருக்கிற ஜீவைக்யத்தினது அநுபபத்தியினாலும். அந்த அவித்யையே ஸத்தென்றால் ஸத்தல்ல, ப்ராந்தி பாதம் இரண்டும் பொருந்தாமல்போகவேண்டுவதால். அது அஸத்துமல்ல, க்யாதி பாதம். இந்த இரண்டும் பொருந்தாமல்போகவேண்டுவதால். ஆகையால் இரண்டு கோடிகளினின்றும் விடுபட்டது இந்த அவித்யை என்று தத்வத்தை உணர்ந்தவர்கள் கூறுகின்றனர் என்று யாதொன்று உரைக்கப்படுகிறதோ, அது யுக்தமன்று; அந்த அவித்யையானது எதை ஆச்ரயித்து ப்ரமத்தை உண்டுபண்ணுகிறது? ஜீவனை ஆச்ரயித்து ப்ரமத்தை உண்டுபண்ணுகிறதில்லை. ஜீவபாவமானது அவித்யையினால் ஏற்படுத்தப்பட்டிருப்பதால். ப்ரஹ்மத்தை ஆச்ரயித்தும் ப்ரமத்தை உண்டுபண்ணுகிறதில்லை; அந்த ப்ரஹ்மமானது தனக்குத்தானேவே பிரகாசிக்கிற ஜ்ஞாநஸ்வரூபமாக இருப்பது பற்றி அவித்யாவிரோதியாக இருப்பதால். அந்த அவித்யையானது ஜ்ஞாநத்தினால் பாதிக்கத்தக்கதென்றல்லவோ (உன்னால்) அபிமானிக்கப்பட்டிருக்கிறது. "ஜ்ஞாநரூபம் பரம்ப்ரஹ்ம தந்நிவர்த்யம் ம்ருஷாத்மகம், அஜ்ஞாநஞ்சேத் திரஸ்குர்யாத் க: ப்ரபுஸ்தந்நிவர்தக:. ஜ்ஞாநம் ப்ரஹ்மேதி சேத் ஜ்ஞாநமஜ்ஞாநஸ்ய நிவர்தகம். ப்ரஹ்மவத் தத்ப்ரகாசத்வாத் ததபி ஹ்யநிவர்த்தகம், ஜ்ஞாநம் ப்ரஹ்மேதிவிஜ்ஞாநமஸ்தி சேத் ஸ்யாத் ப்ரமேயதா, ப்ரஹ்மணோ ஜ்ஞாநநுபூதித்வம் த்வதுக்த்யைவ ப்ரஸஜ்யதே". (அந்த ப்ரஹ்மத்தினால் நிவர்த்திக்கத்தக்க ம்ருஷாத்மகமான அஜ்ஞாநமானது ஜ்ஞாநரூபமான பரப்ரஹ்மத்தையே மறைக்குமேயானால் அதை விலக்கத்திறமையுள்ளவன் எவன்? ப்ரஹ்மம் ஜ்ஞாநஸ்வரூபமாயுள்ளது என்கிற ப்ரமாணஜ்ஞாநம் அஜ்ஞாநத்தைப்போக்கடிக்கும் திறமையுள்ளது, ஸ்வரூபஜ்ஞாநம் அஜ்ஞாநநிவர்த்தகமல்லவென்று கூறப்படுமேயானால், ப்ரஹ்மம்போல் அந்த ப்ரமாணஜ்ஞாநமானது அந்த ப்ரஹ்மத்

தின் ஸ்வரூபத்தைவிட வேறான ப்ரகாசமல்லாததலால்? அதுவும் அஜ்ஞாநத்திற்கு நிவர்த்தகமாகா. ப்ரஹ்மமானது ஜ்ஞாநம் என்கிற விஜ்ஞாநமிருக்கிறதேயாகில் ப்ரஹ்மத்திற்கு ப்ரமாவிஷயத்வம் ஸம்பவித்துவிடும். உன்னுடைய சொல்லினாலேயே அநுபூதிஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு அநநுபூதித்வம் ப்ரஸங்கிக்கிறது) ப்ரஹ்மமானது ஜ்ஞாநஸ்வரூபம் என்கிற ஜ்ஞாநமே அந்த அவித்யைக்கு பாதகம், ஸ்வரூபபூதமான ஜ்ஞானம் பாதகமல்லவென்று கூறப்படுமேயானால், அல்ல; இரண்டும் ப்ரஹ்மஸ்வரூபப்ரகாசமாக இருக்க ஒன்று அவித்யாவிரோதி மற்றொன்று அவித்யாவிரோதியல்லவென்கிற விசேஷம் அறியப்படாமையால். இது சொல்லப்பட்டதாக ஆகிறது—'ப்ரஹ்மமானது ஜ்ஞானரூபம்' என்கிற இந்த ஜ்ஞாநத்தினால் ப்ரஹ்மத்தினிடத்தில் எந்த ஸ்வபாவம் அறியப்படுகிறதோ, அது ப்ரஹ்மமானது ஸ்வயம்ப்ரகாசமாதலால் தானே ப்ரகாசிக்கிறது. ஆகையால் ப்ரஹ்மஸ்வரூபஜ்ஞாநம் அந்த ப்ரஹ்மவிஷயஜ்ஞாநம் இவ்விரண்டும் அவித்யாவிரோதிகளென்கிற விஷயத்தில் விசேஷம் யாதொன்றுமில்லை. மேலும், ஸ்வயம் அநுபவஸ்வரூபமான ப்ரஹ்மமானது வேறு அநுபவத்தினால் அநுபவிக்கத்தகாததாக இருப்பதுபற்றி உனக்கு அந்த ப்ரஹ்மவிஷயஜ்ஞாநம் உண்டாகிறதில்லை. ஆகையால் ஜ்ஞாநம் அஜ்ஞாநவிரோதியாக இருக்கிறதேயானால் தானேவிரோதியாக இருக்கிறது, ஆதலால் இந்த அவித்யைக்கு ப்ரஹ்மத்தை ஆச்ரயித்திருத்தல் ஸம்பவியாது. சிப்பி முதலியவைகளோவென்றால் தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்துவதில் தான் ஸாமர்த்தியமில்லாதவைகளாகவும், ஸ்வாஜ்ஞாநவிரோதிகளாகவும் இருந்துகொண்டு, ஸ்வவிஷயமான அஜ்ஞாநத்தை விலக்குவதில் ஜ்ஞாநாந்தரத்தை அபேக்ஷிக்கின்றன ப்ரஹ்மமோவெனில் ஸ்வாநுபவத்தால் ஸித்தமான ஸ்வயாதார்த்த்யமுள்ளதாக இருப்பது பற்றி ஸ்வாஜ்ஞாநவிரோதியே. அதனாலேயே வேறு நிவர்த்தகஜ்ஞாநத்தை அபேக்ஷிக்கிறதில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் அவித்யையைத் தூஷிப்பதற்காக அது விஷயத்தில் அன்யனால் கூறப்பட்டுள்ள அர்த்தத்தை அநுவதிக்கிறார்—யதபி என்று. நிர்விசேஷத்திற்கு எவ்வாறு ப்ரமம் ஸம்பவிக்கலாமென்று கேட்கின், கூறுகிறார்—தோஷ என்று. ப்ரஹ்மத்தைத்தவிர்த்து தோஷமென்கிற ஒரு வஸ்து தனித்து இருக்குமேயாகில் அத்வைதத்திற்கு ஹாநி வருகிறதென்று கேட்கப்பட்டால் சொல்லுகிறார்—தோஷச்ச என்று இந்த அர்த்தத்தில் அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற ச்ருதிகளையும் ஸ்ம்ருதிகளையும் அர்த்தாபத்திகளை

யும் காண்பிக்கிறார்—அந்ருதேந என்று. ஸதஸத்விலக்ஷணத்வத்தை உபபாதிக்கிறார்—ஸாது என்று. ப்ராந்திபாதயோரயோகாத் ப்ராந்திவிஷயத்வமும் பாதவிஷயத்வமும் இல்லாமல்போகவேண்டியதாக வருவதால். ப்ரமிதி ப்ராந்தி பாதங்களின்றி யமையாமையினால் ஸதஸதநிர்வசனீயத்வமென்று அர்த்தம் "ஸத்பாவ ஏவ பவ தா மயோக்த:" என்பதுபோல பரமதமல்லவென்பதைக் காண்பிப்பதற்காக ஸத்வவித: என்று சொல்லப்பட்டது. தூஷிக்கிறார்—தத்யுக்தம் என்று. [1]ஆச்ரயாநுபபத்தி, [2]திரோதாநாநுபபத்தி, [3]ஸ்வரூபாநுபபத்தி, [4]அநிர்வசநீயத்வாநுபபத்தி, [5]ப்ரமாணாநுபபத்தி, [6]நிவர்த்தகாநுபபத்தி, [7]நிவ்ருத்யநுபபத்தி இவைகளால் தூஷிக்கப்போகிறவராய், முதலில் ஆச்ரயாநுபபத்தியைக் கூறுகிறார்—ஸா ஹி என்று கிமாச்ரித்ய ஒன்றையும் ஆச்ரயித்து ப்ரமத்தை உண்டுபண்ணுகிறதில்லை என்று அர்த்தம், ஜீவனை ஆச்ரயித்தா? அல்லது ப்ரஹ்மத்தை ஆச்ரயித்தா? என்கிற விகல்பாபிப்ராயத்தால் கூறுகிறார்— நதாவத் என்று. ஜீவன் ஸித்தித்தால் அவித்யை ஸித்திக்கிறது. அவித்யை ஸித்தித்தால் ஜீவன் ஸித்திக்கிறான் என்பதனாலே அந்யோந்யாச்ரயதோஷமென்று அர்த்தம். ஜீவாஜ்ஞானவாத * நிராஸமானது மேலே (ஆரம்பணாதிகரணத்தில்) விரிவாகக் கூறப்படப்போகிறதாதலால் இங்கு சுருக்கமாக உபந்யஸிக்கப்பட்டது. இதற்கு மேல் ப்ரஹ்மாச்ரயபக்ஷத்தைத் தூஷிக்கிறார்— நாபி என்று விரோதித்வம் எவ்வாறென்று கேட்கின் கூறுகிறார்—ஸா ஹி என்று. ப்ரஹ்மவிஷயாஜ்ஞானத்திற்கு அந்த ப்ரஹ்ம ப்ரகாசத்தால் பாதிக்கத்தக்கதன்மை இருப்பதால் விரோதம். இவ்விடத்தில ஸ்ரீமந்நாதமுனிகளால் சொல்லப்பட்டுள்ள ச்லோகங்களைச் சொல்லுகிறார்—ஜ்ஞாநரூபம் என்று. ஸ்வப்ரகாசத்வம் சொல்லக் கருதப்பட்டிருக்கிறது. ஜ்ஞானத்தினால் விலக்கத்தகுதியுள்ளதென்பதில் ஹேதுவைக் கூறுகிறார்—மிருஷாத்மகம் என்று ஸ்வரூபஜ்ஞானம் அஜ்ஞானவிரோதியல்லவன்றோ. பின்னையோ ப்ரமாணஜ்ஞானமே விரோதி என்கிற பக்ஷத்தை அநுவதித்துத் தூஷிக்கிறார்—ஜ்ஞாநம் என்று, ப்ரஹ்மவத்தத்ப்ரகாசத்வாத் ஸ்வரூபத்தைவிட வேறுபடாத ப்ரகாசமாக இருத்தலால் என்று அர்த்தம் வெண்ணிறமுள்ளதும் காந்தியுள்ளதுமான திரவ்யமானது க்ரஹிக்கப்பட்டிருக்கும் தருணத்தில், ஆப்தவாக்கியம் முதலியவைகளால் திவ்யம் சுக்லபாஸ்வரம் என்று இவ்வளவுமாத்திரம் நூறுதடவை அறிவிக்கப்பட்டிருந்தபோதிலுங்கூட ப்ரமநிவ்ருத்தி உண்டாகிறதில்லையன்றோ. வேறு தூஷணத்தையும் சொல்லுகிறார்—ஜ்ஞாநம் என்று. அதனாலென்னவென்று கேட்கில் கூறுகிறார் ப்ரஹ்மண: என்று. இந்த ச்லோகங்களுக்குள் முதலாவது ச்லோகத்தினுடைய அர்த்தமானது முன்பு 'ஜ்ஞாநபாத்யாபிமதா' என்கிற க்ரந்தத்தை ஈற்றில்கொண்ட பாஷ்யத்தினால் சொல்லப்பட்டது. இரண்டாவது ச்லோகத்தை வியாக்கியானிக்கிறார்—ஜ்ஞாநஸ்வரூபம் என்று. ப்ரஹ்மஸ்வரூபப்ரகாசத்வேஸதி ஸ்வரூபவிஷயஜ்ஞானத்வம் இருக்கையில் என்று அர்த்தம. விசேஷாநவகமாத் விஷயவைஷம்யமில்லாமையால் என்று அர்த்தம். என் விசேஷம் அறியப்படுகிறதில்லை? ஜ்ஞானத்திற்கு ப்ரமாணஜந்யத்வம் என்கிற விசேஷமிருக்கிறதென்று சொல்லப்படுமேயானால்? அதனால் என்ன? விஷயவைஷம்யம் இல்லையன்றோ, ஸ்வரூபபூதமான ஜ்ஞானத்தைக் காட்டிலும் நிவர்த்தகஜ்ஞானத்திற்கு விஷயவைஷம்யமிருக்கிறதா? இல்லையா? இருக்கிறதென்று சொல்வாயேயாகில் ஸவிசேஷத்வம் வந்துவிடுகிறது. இல்லை என்று சொன்னால் ஸ்வரூபமே நிவர்த்தகமாக ஆகலாம். ப்ரமாண

---

* நிராஸம்—விலக்குதல்.

ஜந்யஜ்ஞானமானது அநிவர்த்தகமாகவாவது ஆகலாம். முன்னிலையிலிருக்கிற பாஸ்வர வஸ்துவை விஷயீகரிக்கிற ஜ்ஞானம்போல். ப்ரமாணஜந்ய ஜ்ஞானத்வம் நிவர்த்தகத்வத்தில் ப்ரயோஜகம். இது * சுக்ல † பாஸ்வரத்ரவ்யம் என்கிற வாக்கியத்திலேயுண்டாகிற ஜ்ஞானத்திற்கு ‡ நிவர்த்தகத்வமில்லாமையால். ஆதலால் ப்ரமத்தை ஸஹிக்கிற ஆகாரத்தைக்காட்டிலும் வேறான $ ஆகாரத்தை விஷயமாகக்கொண்டிருத்தல் நிவர்த்தகத்வத்தில் ¶ ப்ரயோஜகம். அறிவுடையவர்களால் புகழத்தக்கவரே! விஷய § வைஷம்யமில்லாவிட்டாலும் ஒரு ஜ்ஞானத்திற்கு ப்ரமாவிரோதித்வமும் ஒரு ஜ்ஞானத்திற்கு ப்ரமவிரோதித்வமும் அபிஜ்ஞை ψ ப்ரத்யபிஜ்ஞைகளிரண்டிலும் காணப்பட்டிருக்கிறது. "இவன் ஒரு தேவதத்தன்" என்கிற அபிஜ்ஞைக்கு விஷயம் ஒன்றாக இருந்தபோதிலும், முன் பார்க்கப்பட்டவனைக் காட்டிலும் இவன் அந்யனென்று புருஷத்வித்வ ப்ரமம் காணப்பட்டிருக்கிறது. ப்ரத்யபிஜ்ஞைக்கோவென்றால் 'ஸோயமேகோ தேவதத்த:' (அன்று நான் கண்ட தேவதத்தனும் இவனும் ஒருவனே) என்று தேவதத்தைக்யம் விஷயமாயிருந்தபோதிலுங்கூட த்வித்வவிரோதித்வம் காணப்பட்டிருப்பதால், விஷயவைஷம்யமில்லாமலிருந்தபோதிலும் ப்ரமாணஜ்ஞானத்திற்கு ப்ரமநிவர்த்தகத்வம் யுக்தம் என்கிற சங்கைவரின் கூறுகிறார்— ஏகதுக்கம் என்று. ஸத்பத்வம் ஜ்ஞானத்வம் முதலிய ஸ்வபாவமிருக்கிறதென்று கூறப்படுமேயானால், அது ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபடாதது என்பதைக் காண்பிப்பதற்காக ஸ்வபாவ சப்தம். இதனால் அபிஜ்ஞை ப்ரத்யபிஜ்ஞை இவ்விரண்டுக்கும் விஷயவைஷம்யம் உரைக்கப்பட்டதாக ஆகிறது. அபிஜ்ஞையில் ஒரு தர்மிக்கு ஒரு தேசத்துடனும் ஒரு காலத்துடனும் ஸம்பந்தம் அறியப்பட்டிருக்கிறது. இரண்டு காலங்களோடும் இரண்டு தேசங்களோடும் ஸம்பந்தம் அறியப்பட்டிருக்கவில்லை. ப்ரத்யபிஜ்ஞையிலோவென்றால் அது அறியப்பட்டிருக்கிறது. இது ஒரு தேசத்தோடும் ஒரு காலத்தோடும் ஸம்பந்தம் பெற்றுள்ளது என்கிற ஜ்ஞானமானது த்வித்வவிரோதியல்ல, ஒரு ‖ தர்மிக்கு இரண்டு காலங்களோடும் இரண்டு தேசங்களோடும் ஸம்பந்தமல்லவோ ஐக்யம். அதோ த்வித்வவிரோதி என்பதனால் அந்த ஜ்ஞானமானது த்வித்வப்ரமத்தை விலக்குகிறது ஆகையால் அங்கும் விஷயவைஷம்யமிருக்கிறதென்று பலித்தது. இதற்கு மேல் மூன்றாவது சுலோகார்த்தத்திற்கு விரோதத்தில் பர்யவஸானத்தைக்கூறுகிறார்— நீந்த என்று. ப்ரமாணஜ்ஞானத்வம் நிவர்த்தகத்வ வ்யாபகமாம். ஆகையால் அதிஷ்டானபூதமான ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு ப்ரமாணஜ்ஞானத்வமில்லாமையால் ப்ரமத்தைப்போக்கடிக்கும் திறமை இல்லை. அதிஷ்டானமாக இருப்பதால் சிப்பி முதலியதுபோல் ப்ரஹ்மஸ்வரூபமானது ப்ரமவிரோதியல்லாததால் ப்ரமாணாந்தரஜ்ஞானத்தை அபேக்ஷிக்கிறதென்கிற சங்கை வரின் ? சொல்லுகிறார்— சுக்த்யாதயஸ்து என்று. அதிஷ்

---

* சுக்லம்—வெண்ணிறமுள்ளது. † பாஸ்வரம்—நல்ல ஒளியுள்ளது.

‡ நிவர்தகம்—விலக்கத்திறமையுள்ளது. $ ஆகாரம்—உருவம்.

¶ ப்ரயோஜகம்—ஸாதகம். § வைஷம்யம்—ஒற்றுமை இல்லாமை.

ψ ப்ரத்யபிஜ்ஞை—முந்தி அனுபவித்தவஸ்துவை, நேரில் கண்டவுடன் அதுதான் இது என்று எண்ணுதல். ‖ தர்மி—தர்மங்களுடன் கூடியவஸ்து.

டானத்வத்திற்கு ஜ்ஞாநாந்தரவிஷயத்வம் * வ்யாபகம், ஆகலால் வ்யாபகநிவ்ருத்தியால் அதிஷ்டாநத்வத்தின் நிவ்ருத்தி, அதிஷ்டாநமாக இருத்தலாலேயே ப்ரஹ்மமானது ஸ்வரூபத்தின் ப்ரகாசமிருந்தபோதிலுங்கூட வேறு ப்ரமாணத்தை அபேக்ஷிக்கும். இவ்வண்ணமல்ல:- ‡ ஜடமாக இருத்தலாலேயே யன்றோ சிப்பி முதலியவற்றுக்கு ஸ்வரூப $ ஸ்புரணமிருக்கும்பொழுதுகூட ப்ரமாணாந்தராபேக்ஷை, அதிஷ்டாநத்வத்தாலல்ல ஆதலால் அதிஷ்டாநத்வம் உபாதியோடுகூடியது. இந்த இடத்தில் அஜடமாக இருப்பதால் ஸ்வரூபஸ்புரணத்தில் ப்ரமாணாந்தராபேக்ஷை இல்லை என்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது ஜடமாக இருத்தலாலேயே ப்ரம நிவ்ருத்தியில் சிப்பி முதலியவற்றுக்கு ஜ்ஞாநாந்தராபேக்ஷை- அதிஷ்டாநத்வத்தாலல்ல ஆகையால் அது உபாதியோடுகூடியது, ஆதலால் அஜடத்திலோவென்றால் ப்ரமாணாந்தராபேக்ஷை ப்ரம நிவ்ருத்திவிஷயத்திலுங்கூட உண்டாகாது என்று அபிப்பிராயம். ''சுக்தியாதயஸ்து'' என்கிற இடத்திலுள்ள ''து'' சப்தமானது ப்ரஹ்மத்திற்கு சிப்பி முதலியவற்றைக்காட்டிலும் வேற்றுமையை உணர்த்துவதில் கருத்துள்ளது. ப்ரஹ்மவிஷயப்ரமாணஜ்ஞாநமும் ப்ரமத்தை நீக்குகிறது. ப்ரபஞ்சமித்யாத்வவிஷயஜ்ஞாநமும் ப்ரமத்தை நீக்குகிறதென்று அத்வைதிகளின் கதி இரண்டுவிதமன்றோ. அவற்றுள் முதலாவது பக்ஷம் தூஷிக்கப்பட்டது.

---

अथोच्येत — ब्रह्मव्यतिरिक्तस्य मिथ्यात्वज्ञानमज्ञानविरोधीति। नेदं; ब्रह्मव्यतिरिक्तमिथ्यात्वज्ञानं किं ब्रह्मयाथात्म्याज्ञानविरोधि, उत प्रपञ्चसत्यत्वरूपाज्ञानविरोधीति विवेचनीयम्। न तावद् ब्रह्मयाथात्म्याज्ञानविरोधि, अतद्विषयत्वात् — ज्ञानाज्ञानयोरेकविषयत्वेन हि विरोधः। प्रपञ्चमिथ्यात्वज्ञानं तत्सत्यत्वरूपाज्ञानेन विरुध्यते। तेन प्रपञ्चसत्यत्वरूपाज्ञानमेव बाध्यत इति ब्रह्मस्वरूपाज्ञानं तिष्ठत्येव। ब्रह्मस्वरूपाज्ञानं नाम तस्य सद्वितीयत्वमेव; तच्च तद्व्यतिरिक्तस्य मिथ्यात्वज्ञानेन निवृत्तम्; स्वरूपञ्च [illegible] इति चेत्, न; ब्रह्मणोऽद्वितीयत्वं स्वरूप[illegible] तद्विरोधि सद्वितीयत्वरूपाज्ञानं [illegible] न स्याताम्। अद्वितीयत्वं [illegible] इति चेत्, न; आनन्दस्वरूपस्य ब्रह्मणो [illegible] सहैव प्रतिपादितत्वात्। अतो ज्ञानरूपस्य ब्रह्मणो विरोधादेव नाज्ञानाश्रयत्वम्॥

---

* வ்யாபகம்—அதிக தேசத்தில் இருக்கிறவஸ்து.
வ்யாப்யம்—ஸ்வல்பதேசத்திலிருக்கிற வஸ்து.

‡ ஜடம்—ஜ்ஞானமில்லாதது. $ ஸ்புரணம்—ப்ரகாசம்.

𑌕𑌿𑌞𑍍𑌚, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍈𑌕𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌿𑌰𑍋𑌹𑌿𑌤𑌮𑌿𑌤𑌿 𑌵𑌦𑌤𑌾 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌨𑌾𑌶 𑌏𑌵𑍋𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌿𑌰𑍋𑌧𑌾𑌨𑌂 𑌨𑌾𑌮 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑍋 𑌵𑌿𑌨𑌾𑌶𑍋 𑌵𑌾 । 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌸𑍍𑌯𑌾𑌨𑍁𑌤𑍍𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌿𑌰𑍋𑌧𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑌾𑌶 𑌏𑌵 ।

---

ஸ்ரீபாஷ்யம்—

அப்படிக்கின்றி ப்ரஹ்மத்தைத்தவிர்த்த மற்ற எல்லா வஸ்துக்களும் மித்யை என்கிற ஜ்ஞாநம் அஜ்ஞாநவிரோதி என்று சொல்லப்படுமேயாகில்,--அல்ல. ப்ரஹ்மத்தைத்தவிர்த்த மற்ற வஸ்துக்களனைத்தும் மித்யை என்கிற இந்த ஜ்ஞாநமானது ப்ரஹ்மத்தின் யாதாத்ம்யாஜ்ஞாநவிரோதியா? அல்லது ப்ரபஞ்சத்தின் ஸத்யத்வரூபமான அஜ்ஞாநத்திற்கு விரோதியா? என்று பகுத்தறியத்தக்கது. அது ப்ரஹ்மயாதாத்ம்யாஜ்ஞாநவிரோதியல்ல. இந்த ஜ்ஞாநமானது அதை விஷயீகரிக்காததால் ஜ்ஞாநம் அஜ்ஞாநம் இரண்டுக்கும் விஷயம் ஒன்றாக இருந்தாலல்லவோ விரோதம். ப்ரபஞ்சமித்யாத்வஜ்ஞாநமானது அந்த ப்ரபஞ்சஸத்யத்வரூபாஜ்ஞாநத்தோடு விரோதமுள்ளது. அந்த ப்ரபஞ்சமித்யாத்வஜ்ஞாநத்தால் ப்ரபஞ்சஸத்யத்வரூபமான அஜ்ஞாநமே பாதிக்கப்பட்டதாக ஆகிறதாதலால் ப்ரஹ்மஸ்வரூபாஜ்ஞாநம் இருக்கவே இருக்கிறது. ப்ரஹ்மஸ்வரூபாஜ்ஞாநமாவது அது இரண்டாவதோடுகூடி இருத்தலே அதோ அந்த ப்ரஹ்மத்தைத்தவிர்த்து மற்ற வஸ்துக்கள் அனைத்தும் மித்யை என்கிற ஜ்ஞாநத்தால் நிவ்ருத்தித்து விட்டது, ஸ்வரூபமோவென்றால் ஸ்வாநுபவஸித்தம் என்று சொல்லப்படுமேயானால் அது ஸரியல்ல:—ப்ரஹ்மத்தினுடைய அத்விதீயத்வஸ்வரூபமானது ஸ்வாநுபவஸித்தமாக இருப்பதால் அதற்கு விரோதியான ஸத்விதீயத்வரூபாஜ்ஞானமும் அதின் பாதமும் உண்டாகாது. அத்விதீயத்வம் தர்மமென்று கூறப்படுமேயானால் அது ஸரியல்ல. அநுபவஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு அநுபாவ்யமாக இருக்கிற தர்மத்தின் இன்மையானது உன்னாலேயே சொல்லப்பட்டிருப்பதால், ஆகையால் ஜ்ஞாநரூபமான ப்ரஹ்மத்திற்கு விரோதத்தாலேயே அஜ்ஞாநாச்ரயத்வமில்லை.

மேலும் ப்ரகாசத்தையே ஸ்வரூபமாகக்கொண்ட ப்ரஹ்மமானது அவித்யையினால் மறைக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லுகிறவனால் ஸ்வரூப

நாசமே சொல்லப்பட்டதாக ஆகும், ப்ரகாசத்தின் * திரோதானமாவது ப்ரகாசத்தினுடைய உத்பத்தியின் பிரதிபந்தம், அல்லது இருக்கிற ப்ரகாசத்தின் நாசம். ப்ரகாசத்திற்கு உண்டுபண்ணப்படத்தக்க தன்மை ஒப்புக்கொள்ளப்படாததால் ப்ரகாசத்தின் திரோதானம் ப்ரகாசத்தின் நாசமே.

---

ச்ருதப்ராகாசிகை—

இதற்கு மேல் இரண்டாவது பக்ஷத்தைத் தூஷிப்பதற்காகச் சங்கிக்கிறார்—அதேதர்சயேத என்று. தூஷிக்கிறார்—ந இது முதலியதால். இதமித்ரி, அய்யா! எவ்வாறு ப்ரபஞ்சஸத்யத்வம் அஜ்ஞானமென்று சொல்லப்படுகிறது? அஜ்ஞானமென்பது ஜ்ஞானப்ரதிபந்தகமன்றோ. ப்ரபஞ்சஸத்யத்வமானது ஒருவனுடைய ஜ்ஞானத்தையும் ப்ரதிபந்திக்கிறதில்லையன்றோ. வாஸ்தவம் தான். † ஆச்சாதகாஜ்ஞானம் இப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளது. ப்ரபஞ்சஸத்யத்வமும் அதன் ‡ ப்ரதிபாஸமும் விக்ஷேபரூபாஜ்ஞானமென்று அன்யன் ஒப்புக்கொண்டிருப்பதால் இவ்வண்ணம் உரைக்கப்பட்டது. முதலாவது பக்ஷத்தைத் தூஷிக்கிறார்—அநந்த் என்று. அதை விஷயமாகக்கொண்டிராததால் எவ்வாறு ப்ரஹ்மஸ்வரூபாஜ்ஞானவிரோதித்வம்? என்று கேட்கில் கூறுகிறார்—ஜ்ஞானாஜ்ஞானயோ: என்று. விரோதம் வருகிற இடத்திலன்றோ நிவ்ருத்தி என்று அர்த்தம். இரண்டாவது பக்ஷத்தைத் தூஷிக்கிறார்— ப்ரபஞ்ச என்று. ப்ரபஞ்சமித்யாத்வஜ்ஞானத்தால் ப்ரஹ்மஸ்வரூபாஜ்ஞானநிவ்ருத்தி பலித்ததென்று ஆசங்கிக்கிறார்—ப்ரஹ்மஸ்வரூப என்று. ஸத்விதீயத்வம் ஸத்விதீயத்வஜ்ஞானமென்று அர்த்தம். § ஸத்தையினால் ஸத்விதீயத்வம் ப்ரஹ்மஸ்வரூபாஜ்ஞானமாக ஆகாதன்றோ. பாரமார்த்த்யமல்லாததால். ஸத்விதீயத்வ விசிஷ்ட ப்ரஹ்மகோசராஜ்ஞானமானது நிவ்ருத்திக்கவுடன் விசேஷ்யாம்சகோசரமான ஜ்ஞானமும் நிவ்ருத்தித்துவிட்டபடியால் ஸ்வரூபஸித்தி எவ்வாறு என்று வினவப்படுமேயாகில் கூறுகிறார்—ஸ்வரூபம் து என்று. தூஷிக்கிறார்—ந என்று. அத்விதீயத்வமென்பது ஸ்வரூபமா? அல்லது தர்மமா? என்கிற விகல்பாபிப்ராயத்தால் முதலாவதான ஸ்வரூபபக்ஷத்தைத் தூஷிக்கிறார்—ந என்று. தர்மபக்ஷத்தில் அபஸித்தாந்தத்தைக் கூறுகிறார்—அத்விதீயத்வம் என்று. ஆச்ரயாநுபபத்தியை முடிக்கிறார்—அத: என்று. விரோததாதேவ முன் சொன்ன விரோதத்தாலேயே என்று அர்த்தம். இவ்வாறாக ஆச்ரயாநுபபத்தியானது நிரூபிக்கப்பட்டது.

இதற்கு மேல் திரோதாநாநுபபத்தியைக் கூறுகிறார்—கிஞ்ச என்று. கற்றுணர்ந்தவரே! உம்முடைய பக்ஷத்திலும் ஜீவாத்மாக்களுக்கு நித்யமாக ஸ்புரணமிருக்கிறது, ஆயினும் அவர்களுக்கு ஸ்வரூப திரோதானமின்றி தேஹாத்மப்ரமமுண்டாகிறதில்லை. ஆதலால் அநுபபத்தியானது ஸமானம். உண்மை. ஸ்வரூபஸ்புரணமிருக்கவே இருக்

---

திரோதானம்—மறைவு.   † ஆச்சாதகம்—மறைக்கிறஸ்வபாவமுள்ளது.
ப்ரதிபாஸம்—ப்ரகாசம்.   * ஸத்தை—ஸ்வரூபத்தின் நிலை.

கிறது. அதற்குத் திரோதானம் ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை. ஸ்வரூபஸ்புரணம் ப்ரமவிரோதியல்ல பின்னேயோ நித்யத்வம் அணுத்வம் நிரவயவத்வம் முதலியவைகளே ப்ரமவிரோதிகள். அவைகள் சாஸ்திரத்தினலறியத்தக்கவைகள். அவைகளுக்கு திரோதானமாவது அது விஷயமான ஜ்ஞாநப்ரஸராபாவரூபமான ஸங்கோசம் ஆகையால் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறான ஆகாராந்தரத்தின் திரோதானத்தை ஒப்புக்கொள்ளாததால் ஆத்மநாசத்திற்கு ப்ரஸக்தி இல்லை ஆத்மாவின் அஸாதாரணாகாரமான ஜ்ஞாநத்தினுடைய ஸ்புரணத்தினல் ப்ரமம் உபபன்னமாகாதென்று சொல்லப்படுமேயானல் அல்ல. அதற்கு அஸாதாரணத்வம் ஸ்புரிக்காததால். அஸாதாரணமாக ஸ்புரிக்கின்ற தர்மத்திற்கன்றே ப்ரமவிரோதம் காணப்பட்டிருக்கிறது. சுக்தித்வம் முதலியதற்குப்போல, சுக்தித்வமோவென்றல் சுக்தியின் அஸாதாரணதர்மமாக முந்தி அறியப்பட்டதாக இருந்துகொண்டு பிறகு ப்ரமத்தைப் போக்கடிக்கிறது. ஜ்ஞாநமானது தேஹத்தைக்காட்டிலும் வேறான ஆத்மாவின் அஸாதாரண தர்மமாக ஓரிடத்திலும் முந்தி பார்க்கப்பட்டிருக்கவில்லை. ஆகையால் ப்ரமம் ஸம்பவிக்கிறது. ஜ்ஞானம் ஆத்மாவினுடைய அஸாதாரணதர்மமாகக் காணப்பட்டிராததால் * அத்யாஸம், அத்யாஸத்தால் அஸாதாரணதர்மமாக க்ரஹிக்கப்படாமை என்று அந்யோந்யாச்ரயதோஷமானது அநாதியாக இருத்தலால் பரிஹரிக்கப்பட்டது, தர்மபூதஜ்ஞாநத்திற்கு நித்யத்வமும் திரோதானமும் உங்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அப்பொழுது ஜ்ஞாநநாசம் ப்ரஸங்கிக்குமென்று சொல்லப்படுமேயானல். அல்ல. ஜ்ஞாநம் த்ரவ்யமன்றோ- அதற்கு ஸ்வரூபத்தைத் தவிர்த்து வேறாக ஸங்கோசம் விகாஸமென்கிற இரண்டு அவஸ்தைகள் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆகையால் அதன் திரோதானமாவது கர்மாவினல் அதன் ஸங்கோசம். அதன் நிவ்ருத்தியோவெனில் ஜ்ஞாநத்தின் விகாஸம், அதே ப்ரகாசம். அதுவும் அநித்யம், அது அநித்யமாக இருந்தபோதிலும் நித்யமான ஜ்ஞாநத்ரவ்யத்திற்கு ஸ்வப்ரகாசத்வவாதமானது ஸ்வப்ரகாசரூபப்ரஸரணர்ஹதையை ஹேதுவாகக் கொண்டது, ஆகலால் இரண்டு அவஸ்தைகளும் தோன்றுவதும் அழிவதுமாக இருப்பது பற்றி த்ரவ்யம் நித்யமே, நம்முடைய அவஸ்தைகளின் ஸ்தானத்திலன்றோ உம்முடைய ப்ரகாசம். அதே ஸ்வரூபம், அதனல் திரோதானம் அதன் நிவ்ருத்தியே. இவ்வாறாக இந்த அர்த்தத்தை மனதில் கருதி 'ப்ரகாசைகஸ்வரூபம் ப்ரஹ்ம' என்று கூறப்பட்டது, ஆகலால் ஸ்வரூபத்தைவிட வேறான ப்ரகாசம் திரோதானம் என்கிற இரண்டு அவஸ்தைகளை ஒப்புக்கொள்ளாததால் ஸ்வரூபநாசமே திரோதானமாக ஆகுமென்று அர்த்தம்,

---

किंच — निर्विषया निराश्रया संवित्प्रकाशमानत्वसिद्धिः
स्वाश्रयदोषवशादनाश्रया अनन्यविषया तथाऽनन्यप्रतीत्य
त्ति चेत् स्वाश्रयदोषः पारमार्थिकः उत अपारमार्थिक
इति विवेचनीयम्। न तावत् पारमार्थिकः, अनभ्युपगमात्। नाप्य
पारमार्थिकः, तथा सति हि दृष्टिभेदेन दृश्यभेदेन दृष्टि

---

* அத்யாஸம்—ஒன்றின் மீது மற்றொன்றை ஏறிடுதல்.

கேவலஸ்ய ஸ்தாபயிதுமீஶ: | ந தாவத் த்ருஶிபி:- [illegible]

ஸ்ரீபாஷ்யம்—

மேலும், விஷயமில்லாததும் ஆச்ரயமில்லாததும் தானாக ப்ரகாசிக்கிற ஸ்வபாவமுள்ளதுமான இந்த அநுபூதியானது தன்னை ஆச்ரயித்திருக்கிற தோஷவசத்தினால் முடிவற்ற ஆச்ரயங்களுள்ளதாகவும் முடிவற்றவிஷயங்களுள்ளதாகவும் தன்னை அநுபவிக்கிறதென்கிற விஷபத்தில் இந்த அநுபூதியை ஆச்ரயித்திருக்கிற தோஷமானது உண்மையாக இருக்கிறதா? அல்லது அஸத்யமாக இருக்கிறதா? என்று விவேசனம் செய்யத்தக்கது. அது உண்மையானதல்ல—அப்படி ஒப்புக்கொள்ளாமையால்- அஸத்யமுமல்ல, அப்படி அஸத்யமாக ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில் அது * த்ரஷ்டாரூபமாகவாவது ‡ த்ருச்யரூபமாகவாவது ¶ த்ருசிரூபமாகவாவது ஒப்புக்கொள்ளத்தக்கது. அது த்ருசியல்ல—த்ருசியின் ஸ்வரூபபேதம் ஒப்புக்கொள்ளப்படாமையால், ப்ரமத்துக்கு அதிஷ்டானமாக ஆகியிருக்கிற ஸாக்ஷாத் த்ருசிக்கு $ மாத்யமிகபக்ஷப்ரஸங்கத்தால் அபாரமார்த்யம் ஒப்புக்கொள்ளப்படாமையாலும், த்ரஷ்டா, திருச்யம் அவைகளோடுகூடின த்ருசி இவை மூன்றும் கால்பனிகங்களாதலால் இந்த கல்பனைக்கு மூலமான வேறு தோஷமபேக்ஷிக்கப்படுவ

* த்ரஷ்டா—பார்ப்பவன் ‡ த்ருச்யம்—பார்க்கத்தக்கது

¶ த்ருசி—ஞானம் அல்லது தர்சனம்

$ மாத்யமிகன்—புத்தனுடைய சிஷ்யர்கள் நால்வருள் ஒருவன். இவன் ஸர்வசூன்யவாதி,

தால் அநவஸ்தை உண்டாகும். அதற்கு மேல் இதைப்பரிஹரிக்கவேண்டுமென்கிற விருப்பத்தினுல் பாமார்த்தமாக இருக்கிற ப்ரஹ்மரூபையான அநாதியே தோஷமென்று கூறப்படுமேயானுல், ப்ரஹ்மமே தோஷமானுல் ப்ரபஞ்சதர்சநத்திற்கே அது மூலமாக ஆகவேண்டியதாக ஆகும். ப்ரபஞ்சத்திற்கு ஸமாநமான வேறு ஒரு அவித்யையை கல்பிப்பதால் யாது பயன்? ப்ரஹ்மமே தோஷமானுல் அது நித்யமாதலால் அதற்கு அவித்யையினின்று விடுதலை ஒருக்காலும் உண்டாகாது. ஆதலால் எவ்வளவு வரையில் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேருன பாரமார்த்திகமான தோஷம் ஒப்புக்கொள்ளப் படவில்லையோ, அவ்வளவு வரையில் ப்ராந்தியானது உபபாதிக்கப்பட்டதாக ஆகிறதில்லை.

---

ச்ருதப்ரகாசிகை —

இதற்குமேல் ஸ்வரூபாநுபபத்தியைக் கூறுகிருர்— அபிச என்று. * ஜ்ஞாத்ருத்வம் முதலியவைகள் அபாமார்த்தங்களாக இருப்பதினுலன்றே வேறு தோஷம் அபேக்ஷிக்கப்படுகிறது. அப்படிப்போலிவ்விடத்திலுமென்று திருஷ்டாந்தமாக இனி கூறப்போகிற அநவஸ்தைக்கு ஸாதகமாக "நிர்விஷய" என்கிற பதத்தைத்தொடக்கத்தில் கொண்டவாக்ய § பரிபாடியின் ப்ரகடனம் செய்யப்பட்டது, அன்றிக்கே, விஷயாச்ரய பேதங்களுக்கு அஸத்த்வம் ப்ரதிபாஸம் இவை இரண்டுகளின் உக்தியானது தோஷ கல்பனைக்குக் காரணமாகச் செய்யப்பட்டிருக்கிறது. அதப்யுபகமாத் இதி. பரமார்த்தமென்று சொல்லும்பக்ஷத்தில் அத்வைதத்திற்கு ஹானிப்ரஸங்கிக்கும் என்று கருத்து, அபரமார்த்தபக்ஷத்தைத் தூஷிப்பதற்காக மூன்றுகோடிகளை ஸம்பாவிதங்களென்று சொல்லுகிருர்— ததாஸதி என்று. பரமார்த்தமல்லாததாக இருப்பது பற்றி மூல தோஷாந்தரம் அபேக்ஷிக்கப்படுவதால் அநவஸ்தை என்கிற தூஷணமானது மூன்று கோடிகளுக்கும் பொதுவானது த்ருஷ்த்வபக்ஷத்தில் அதிக தூஷணமிருக்கிறதென்பதைக் காண்பிக்கிருர்— நதாவத் என்று, த்ருஷ்டியானது அநவச்சின்னையா? அவச்சின்னையா? த்ருஷ்டி அநவச்சின்னை என்று சொல்லின் அது ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேருனதா? அல்லது ஸ்வரூபமேயா? என்கிற விகல்பத்தை எண்ணி அநவச்சிந்நபக்ஷத்தில் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறு என்கிறபக்ஷத்தை தூஷிக்கிருர்— த்ருஷ்டிஸ்வரூபபேதாநப்யுபகமாத் என்று. அநவச்சின்னையான இரண்டு த்ருஷ்டிகளை ஒப்புக்கொள்ளாமையாலென்று அர்த்தம். அநவச்சிந்நபக்ஷத்தில் ஸ்வரூபத்ருஷ்டிபக்ஷத்தை தூஷிக்கிருர்— ப்ரம என்று, அவச்சிந்ந த்ருஷ்டிக்கு தூஷணமாக இனி கூறப்போகிற அநவஸ்தையானது அநவச்சிந்நபக்ஷத்திலும் ஸமாநமானது. இந்த இடத்தில் அதிகமாக இரண்டு தூஷணங்களிருப்பதால் அது சொல்லப்படவில்லை. அவச்சிந்ந த்ருஷ்டியாகவும்

---

* ஜ்ஞாத்ருத்வம்— ஜ்ஞாநவானுடைய தன்மை § பரிபாடி— சைலீ

த்ரஷ்டாவாகவும், த்ருச்யமாகவும் ஒப்புக்கொள்ளுதலை தூஷிக்கிறார்— த்ரஷ்ட்ருத்ருச்யயோ: என்று. கால்பநிகத்வேந- அபரமார்த்தமாக இருப்பதாலென்று அர்த்தம் இந்த கால்பநிகத்வமானது தோஷாந்தராபேக்ஷைக்கு ஹேது. அவச்சிந்நத்ருஸிபக்ஷத்திலுங்கூட ஸ்வரூபமா? அதைக்காட்டிலும் வேறானதா? என்கிற விகல்பத்திலும், ஸ்வரூபபக்ஷத்திலும் * அநப்யுபகமரூப தூஷணம் துல்யம். ப்ரஹ்மஸ்வரூபமானது அவச்சிந்நமென்றும் அபரமார்த்தமென்றும் ஒப்புக்கொள்ளப்படாததால். ஆகையால் அவச்சிந்நபக்ஷத்தில் விகல்பிக்கப்படவில்லை. ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறு என்கிற, பக்ஷத்தில் அநவஸ்தை கூறப்பட்டது— அதைத்த் என்று. அபாமார்த்திகமென்று சொன்னால் அநவஸ்தை, பரமார்த்தமென்று சொன்னால் அத்வைதத்திற்கு ஹானி வருகிறது என்கிற இந்த தோஷங்களை பரிஹரிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினலென்று அர்த்தம். அநுபூதியே தோஷமாதலால் அத்வைதத்திற்கு ஹானி இல்லை. அது பரமார்த்தமாதலால் அநவஸ்தையுமில்லை என்று கருத்து. இதை தூஷிக்கிறார்—ப்ரஹ்மைவ என்று. அபரமார்த்தமாக இருப்பதனலேயே தோஷாந்தரத்தை அபேக்ஷித்ததென்கிற ஸாம்யத்தைக்கருதி ப்ரபஞ்சதுல்யசப்தம் கூறப்பட்டது. அத:--ப்ரதிபக்ஷத்தில் கூறப்பட்டிருக்கிற தூஷணங்களாலென்று அர்த்தம் தோஷத்தினின்று விடுபடாமை ப்ரஸக்தமாகவே அதைப் பரிஹரிப்பதற்காக ப்ரஹ்மவ்யதிரிக்தத்வம். அநவஸ்தையை பரிஹரிபபதற்காக பாரமார்த்திகத்வம்.

அந்யர்களால் அநவஸ்தையானது மூன்றுவிதமாக பரிஹரிக்கப்பட்டது. ஜீவாஜ்ஞாநவாதியினல் § பீஜாங்குர ந்யாயத்தால் ப்ரவாஹாநாதியாக இருத்தலாலென்று பரிஹரிக்கப்பட்டது. அவித்யையினல் ஜீவன் ஜீவனல் அவித்யையென்றல்லவோ அவர்களின் மதம். ப்ரஹ்மாஜ்ஞாநவாதியினல் ஸ்வரூபம் அநாதி என்று பரிஹரிக்கப்பட்டது. இருவர்களாலும் துர்கடத்வமென்கிற தன்மையினல் பரிஹரிக்கப்பட்டது. துர்கடத்வம் அவித்யைக்கு பூஷணம் தூஷணமல்லவென்று பரமார்த்தத்திற்கல்லவோ உபபத்தியின் அபேக்ஷை. பெரியமாளிகைகளை விழுங்குதல் முதலிய செய்கைகளில் "சிறியவாயுள்ள மனிதன் பெரியமாளிகையை விழுங்குவதென்பது பொருந்தா" தென்கிற யுக்தி ப்ரவ்ருத்திக்கிறதில்லை. ஆதலால் உபபத்தியை அபேக்ஷியாமலிருத்தல் அபாரமார்த்யத்திற்கு ஸாதகம். தோஷத்திற்கு ஸ்வபரநிர்வாஹகத்வம் இருப்பதாலும், வேறுதோஷத்தை அபேக்ஷித்தலில்லாமையாலும் அநவஸ்தை இல்லை. இந்த விஷயத்தில் மறுமொழி உரைக்கப்படுகிறது. ப்ரவாஹாநாதித்வமானது ப்ரஹ்மாஜ்ஞாநவாதியினல் முன்பே அறிவிக்கப்பட்ட உத்தரத்துடன் கூடியது: ஜீவன்களுக்கு நித்யத்வத்தைச் சொல்லுகிற சுருதிகளாலும், செய்யப்படாத வினைப்பயன்களின் வரவு செய்யப்பட்டிருக்கிற வினைப்பயன்களின் அழிவு முதலியவைகளை உணர்த்துகிற சருத்யர்த்தாபத்தியினலும் மோக்ஷம் வரையில் ஜீவன்களுக்கு இஷ்டமான ஸ்தாயித்வமானது இழக்கப்படவேண்டியதாக ஆகும். அபாரமார்த்யத்தில் ஸ்வரூபாநாதித்வமும் அநவஸ்தைக்குப் பரிஹாரமில்லை, அங்ஙனமாகில், மாத்யமிகனுடைய பக்ஷத்திற்கு விஜயம் ப்ரஸங்கிப்பதால்; அவ்விடத்தில் அதிஷ்டானமானது ப்ராந்தியினல் நிலை பெற்றிருக்கிறதென்று சொல்லப்படுமேயானல், அந்த ப்ராந்திக்கு வேறு அதிஷ்டானபேக்ஷை உண்டாகவேண்டிவரும், அதிஷ்டாநாந்தரமும் ப்ராந்தி ஸித்தமென்று சொல்லப்படும்பக்ஷத்

* அநப்யுபகமம்—அங்கீகாரம்

§ பீஜம்—வித்து அங்குரம்—முளை,

தில் அநவஸ்தை எற்படுமென்பது பற்றி, அநவஸ்தையினால் உதிஷ்டான டர்மாத்யமன்றோ ஸாதிக்கப்பட்டதாயிற்று. மாத்யமிகனால் அபரமார்த்தாதிஷ்டானத்திற்கு ஸ்வரூபாநாதித்வம் எற்றுக்கொள்ளப்பட்டால் அநவஸ்தை பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறதாதலால், அதிஷ்டாநாபாரமார்த்யமே எற்படும். மேலும் ஸ்வரூபாநாதித்வம் ஒப்புக்கொள்ளப்பட்டபோதிலும், மூலதோஷாபேக்ஷை இருக்கவே இருக்கிறது. ஜீவன் அநாதியாயிருக்கையிலும் அந்த அநாதித்வமானது அவித்யையினால் கல்பிக்கப்பட்டதென்று உங்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால். துர்கடத்வமும் பொருத்தமுள்ளதன்று; துர்கடத்வமாவது உபபத்தியை அபேக்ஷியாமை, அது அபாரமார்த்யஸாதகமாக ஆகுமேயானால், அபரமார்த்தமான ப்ரபஞ்சம் துர்கடமாக இருப்பது பற்றி உபபத்தியை அபேக்ஷியாமலிருப்பதால் மூலதோஷாபேக்ஷையும் உண்டாகாது. நிவர்தகஜ்ஞாநமிருக்கும் பொழுதுகூட அது இருக்கலாம். விரோதத்தால் அது இருக்கிறதில்லை என்று சொல்லப்படுமேயானால், அங்ஙனமாகில், அவித்யையானது உபபத்தியை அநுவர்திக்கிற தன்மைவாய்ந்ததாக ஆய்விடும். உபபத்தியானது பரமார்த்தத்வப்ரயுக்தமென்றும், அபரமார்த்தத்வப்ரயுக்தமென்றும் இரண்டுவிதமானது. அதில் துர்கடத்வமாவது பரமார்த்தத்வப்ரயுக்தமான உபபத்தியை அபேக்ஷியாமலிருத்தல், அபரமார்த்தத்வப்ரயுக்தமான உபபத்தியல்லவோ தோஷாபேக்ஷை, ஆதலால் ப்ரபஞ்சத்திற்கு மூலதோஷபரிகல்பனம் யுக்தமென்று சொல்லப்படுமேயானால்—அங்ஙனமாகில், அபரமார்த்தத்வப்ரயுக்தமான உபபத்திரூபதோஷாபேக்ஷையானது அபரமார்த்தபூததோஷத்திற்கும் இருக்கலாம், ஆதலால் அநவஸ்தையானது அந்த நிலைமையுள்ளதே; துர்கடத்வம் அநவஸ்தாபரிஹாரமாகுமேயானால், அதிஷ்டாநாபாரமார்த்யத்திலும் அநவஸ்தை பரிஹரிக்கப்பட்டதாக ஆகலாம். அங்கு அபாரமார்த்யப்ரயுக்தமான உபபத்தியானது விடத்தகாததாக இருப்பது பற்றி, அதிஷ்டாநாபேக்ஷை உண்டாகவே உண்டாகலாம் என்பதனால் அநவஸ்தை என்று சொலத்தக்கது, அது இதர தோஷத்திலும் துல்யமாதலால் அநவஸ்தை எவ்விதத்தாலும் பரிஹரிக்கமுடியாதது. ப்ரவாஹாநாதித்வபக்ஷத்திலும், அதிஷ்டானம் அபரமார்த்தமாக இருந்தபோதிலுங்கூட அநவஸ்தையானது எளிதில் பரிஹரிக்கத்தக்கது, பிதா புத்திரன் முதலியவர்களுடைய பரம்பரைபோல் அதிஷ்டாநபரம்பரைக்கு அநாதித்வம் ஒப்புக்கொள்வதால், ஜீவாஜ்ஞாநவாதியைக் குறித்து ப்ராஹ்மாஜ்ஞாநவாதியினால் துர்கடத்வ விஷயத்தில் எந்த தூஷணம் கூறப்பட்டதோ, அது ப்ராஹ்மாஜ்ஞாநவாதத்திலும் ஸமானம். அவித்யைக்கு துர்கடத்வமிருக்குமேயானால், முக்தர்களையும் பரப்ரஹ்மத்தையும் அவித்யைதானது ஆச்ரயிக்கும். சுத்தஸ்வரூபமான ப்ரஹ்மத்தை அசுத்தரூபையான அவித்யையானது விரோதத்தால் ஆச்ரயிக்கிறதில்லை என்று சொல்லப்படுமேயானால், அங்ஙனமாகில் அவித்யையானது உபபத்தியுடன் கூடியது. ஆதலால் முற்கூறப்பட்டுள்ள அந்யோந்யாச்ரயணம் முதலிய தூஷணங்கள் வந்துவிழுந்துவிடுமென்றல்லவோ உரைக்கப்பட்டது. அது உனக்கும் துல்யம். மோக்ஷத்தில்கூட அவித்யையானது ப்ரஹ்மத்தை ஆச்ரயிக்கும், பாதகஜ்ஞாநமிருக்கையில் அபரமார்த்தமான அவித்யையானது இருக்கிறதில்லை யன்றோவென்று சொல்லப்படுமேயானால், பாதகமிருக்கும்பொழுது அதன் பக்கத்தில் பாதிக்கத்தக்கவஸ்து நிலைபெற்றிருநதென்கிற இவ்விதமான உபபத்தியுள்ளதே அவித்யை என்பதனால் நம்மால் சொல்லப்பட்டிருக்கிற அநவஸ்தை முதலிய தூஷணங்கள் வந்துவிடுமென்று சொல்வதற்கு சக்யமானது. தோஷம் ஸ்வபாநிர்வாஹகமாகுமாகில் அதிஷ்டானமும் அவ்வாறு ஆகலாம். வேறொன்றைக் குறித்து அதிஷ்டாநத்வம் ஸித்தமானாலன்றோ ஸ்வநிர்வாஹகத்வம் என்று கூறப்படுமேயானால் வேறொன்றைக் குறித்து தோஷத்வம் ஸித்தித்

தாலன்றோ ஸ்வநிர்வாஹகத்வம், அதே இல்லை என்பதனால் துல்யமாக ஆய்விடலாம். அதிஷ்டாநத்திற்கும் ஆரோபிக்கத்தக்கதற்கும் பேதமானது காணப்பட்டிருக்கிறது. அங்கு அதிஷ்டாநத்திற்கு ஸ்வபரநிர்வாஹகத்வம் சொல்லும்பக்ஷத்தில், அதிஷ்டானம் அத்யஸ்தம் இரண்டுக்கும் ஐக்யம் ப்ரஸங்கிக்குமென்று சொல்லப்படுமேயானால், தோஷமாகவும் தோஷகார்யமாகவும் இருக்கிற * திமிரம் த்விசந்த்ரத்வம் இவ்விரண்டுக்கும் பேதம் காணப்பட்டிருக்கிறது. தோஷத்திற்கு ஸ்வபரநிர்வாஹகத்வம் சொல்லும்பக்ஷத்தில் தோஷம் அத்யஸ்தம் இரண்டுக்கும் ஐக்ய ப்ரஸங்கம் வருவதால் துல்யம், இந்த அபிப்ராயத்தினால் "எவ்வளவுவரையில் ப்ரஹ்மத்தைத்தவிர்த்து வேறான பாரமார்த்திக தோஷமொப்புக்கொள்ளப்படவில்லையோ அவ்வளவுவரையில் ப்ராந்தியானது உபபாதிக்கப்பட்டதாக ஆகாதென்று" உரைக்கப்பட்டது. ஆசார்யர்களால் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது—"ஸ்வரூபாநாதித்வஸ்வபரகடனே துர்கடநதா, ப்ரவாஹாநாதித்வம் புநரிதி சதஸ்ரோஹிகதய: அஸத்யாவித்யாயா கதிதுமநவஸ்தாபரிஹ்ருதௌ மதாஸ்த்வேதாஸ்துல்யா: ஸ்புடமஸததிஷ்டாநஸமயே" என்று.

---

𑌅𑌨𑌿𑌰𑍍𑌵𑌚𑌨𑍀𑌯𑌤𑍍𑌵𑌞𑍍𑌚 𑌕𑌿𑌮𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌮𑍍 । 𑌸𑌦𑌸𑌦𑍍𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 । 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌸𑍍𑌯 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌶𑍂𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌨𑌿𑌰𑍍𑌵𑌚𑌨𑍀𑌯𑌤𑍈𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌨 𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌹𑌿 𑌵𑌸𑍍𑌤𑍁𑌜𑌾𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌿𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌿𑌸𑍍𑌸𑌦𑌸𑌦𑌾𑌕𑌾𑌰𑌾 । 𑌸𑌦𑌸𑌦𑌾𑌕𑌾𑌰𑌾𑌯𑌾𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍇𑌸𑍍𑌸𑌦𑌸𑌦𑍍𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌵𑌿𑌷𑌯 𑌇𑌤𑍍𑌯𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌿𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌿 ।

---

ஸ்ரீபாஷ்யம்—

அநிர்வசநீயத்வம் என்னவென்று அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது? ஸத்தையும் அஸத்தையும் விட விலக்ஷணமாக இருத்தல் அநிர்வசநீயத்வம் என்று சொல்லப்படுமேயானால், அப்படிப்பட்ட வஸ்து ஒன்று உண்டு என்பதில் ப்ரமாணமில்லாமையால் அநிர்வசநீயதையே இராது இது சொல்லப்பட்டதாக ஆகிறது. எல்லாவஸ்துக்களும் ப்ரதீதியினால் வ்யவஸ்தாபிக்கத் தக்கவைகள். எல்லா $ ப்ரதீதிகளும் ஸதஸதாகாரமாக இருக்கின்றன. ஸதஸதாகாரமானஜ்ஞாநத்திற்கு ஸதஸத்விலக்ஷணம் விஷயமென்று ஒப்புக்கொ

---

* திமிரம்—கண்ரோகம்     $ ப்ரதீதி—ஜ்ஞாநம்

ள்ளப்படும்பக்ஷத்தில் எல்லாம் எல்லாப்ரதீதிகளுக்கும் விஷயமாக ஆகவே ண்டியதாக ஆகும்

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் அநிர்வசநீயத்வாநுபபத்தியைச்சொல்லுகிறார்— அநிர்வசநீயத்வஞ்ச என்று. அநிர்வசநீயதா வித்வான்களுடைய ஸன்னிதியில் எவ்வித்த்தாலும் உபபாதக் கமுடியாமலிருத்தல். எவ்வாறு ப்ரமாணசூன்யமென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்— ஏததுக்தம் என்று. ஸர்வம் ஸர்வப்ரதீதேர்விஷயஸ்ஸ்யாத் இதி, ஸதஸத்விலக்ஷணமென்று யாதொரு ப்ரதீதயுண்டோ அந்த ப்ரதீதியிலும் ஸதஸத்தே விஷயமாக ஆகலாமென்று பொருள். நீலம் பீதம் முதலியது ப்ரதீதிக்கு அநுகுணமாக வல்லவோ வ்யவஸ்தாபிக்கப்படுகிறது. ஆகையால் ஸதஸதாகாரையான ப்ரதீதிக்கு ஸதஸதாகாரமே விஷயம் ஸதஸத்விலக்ஷணமாக இருக்கிற வஸ்து விஷயமல்ல. இந்த விஷயம் க்யாதி விவேகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது— "நஹ்யந்யத அவபாஸ்யம், அந்யோவிஷய: அவபாஸநவ்யவஸ்தாப்யத்வாத் விஷயஸ்ய" (ஒன்று விஷயமாக இருக்க மற்றொன்று அவபாஸிக்கத்தக்கதில்லையன்றோ, விஷயங்கள் அவபாஸனத்தால் வ்யவஸ்தாபிக்கத்தக்கதாக இருப்பதால்) என்று. ஒரே விஷயத்திற்கு ஸத்தாயும் அஸத்தாயுமிருக்கும் தன்மை பொருந்தமுள்ளதாக ஆகாது. வ்யாப்திவிரோதத்தாலென்று சொல்லப்படுமேயானால், ஸதஸத்விலக்ஷணத்வமும் வ்யாப்திவிரோதத்தால் பொருந்தாது. ஸத்துக்கு அஸத்விலக்ஷணத்வமும் அஸத்துக்கு ஸத்விலக்ஷணத்வமுமல்லவோ காணப்பட்டிருக்கிறது, ஒன்றுக்கு ஸத் அஸத் இந்த இரண்டைக்காட்டிலும் விலக்ஷணமாக இருத்தல் காணப்பட்டிருக்கவில்லை என்று வ்யாப்திவிரோதம். இது விசேஷம்-- ஸதஸத்விலக்ஷணத்வம் ஓரிடத்திலும் காணப்பட்டதில்லை. ஸதஸதாத்மகத்வம் காணப்பட்டிருக்கிறது—என்று- இந்தவிஷயமானது ஸட்விதஸித்தி என்கிற க்ரந்தத்தில் உரைக்கப்பட்டிருக்கிறது--'நாஸத்ப்ரதீதேர்பீதாச்ச ஸதித்யபியந்ந தத். ப்ரதீதேரேவ ஸத்கிய நபாதாந்நாஸத் குதோஜகத்" என்று, உள்ளபடி பொருள்களை பராமர்சிக்கும்பொழுது ஸத்தாக இருத்தல் அல்லது அஸத்தாக இருத்தல் என்கிற இவ்விரண்டு குணங்களுக்குள் ஒன்றுதான் இருக்கவேண்டும். இப்படிக்கின்றி ஸத் அஸத் இவ்விரண்டைவிட வேறாக இருத்தல் ஒருபொழுதும் கூடாது. ஸத்தாக இருக்கிறகடம் முதலியவஸ்துக்களுக்கு ஸத் அஸத் இவ்விரண்டுகளையும் விட விலக்ஷணமாக இருத்தல் என்றும் தன்மை காணப்பட்டிருக்கிறதே என்றால், அல்ல அப்படியானால் ப்ரஹ்மத்துக்குங்கூட ஸத்தாகவுமஸத்தாகவுமிருக்கிற வஸ்துக்களைக்காட்டிலும் விலக்ஷணமாக இருத்தல் என்றும் தன்மை ப்ரஸங்கிப்பதால். இரண்டினுள்ளொன்றாக இருத்தல் என்பதை ஸஹிக்கிற ஸதஸத்விலக்ஷணத்வம் இஷ்டமே என்று கூறப்படுமேயானால், அது இருவருக்கும் துல்யம். இப்படிப்பட்ட ஸதஸத் வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிற உன்னால் வேறு சப்தத்தால் ஸத்வமே அங்கீகரிக்கப்பட்டதாக ஆகிறது. ஆகையால் உனக்கு இஷ்டமாக இருக்கிற ஸதஸத்விலக்ஷணமாக இருத்தல் என்றும் தன்மையானது விரோதத்தால் தூரத்தில் விலக்கித்தள்ளப்பட்டது. ஸத்வமாவது இருக்கிறதென்று அறியப்படிருத்தல், இல்லை என்கிற புத்திக்கு விஷயமாக இருப்பது அஸத்வம் அதாவது பாதிதத்வம் என்று, ஒன்றுக்கே இருக்கிற ஸத்வாஸத்வவிரோதமானது ஸதஸத்விலக்ஷணமாக இருக்கும்

தன்மையை ஏற்படுத்துகிறதென்று சொல்லப்படுமேயானால், எல்லா இடங்களிலும பூர்வபக்ஷஸித்தாந்தஜ்ஞானங்கள் இரண்டுக்கும் அந்யோந்யம் விருத்தங்களான ஆகாரங்கள் விஷயமாக இருப்பதால் இரண்டு ஆகாரங்களைகாட்டிலும் விலக்ஷணமாகவே இருக்கிற அர்த்தம் ஸாதிக்கத்தக்கதென்கிற ஸித்தாந்தத்தை ஸமர்த்திப்பது பயனற்றதாக ஆகும். அவ்வாறின பிறகு பேதம் எளிதில் நிரூபிக்கக்கூடியதென்பதை பூர்வபக்ஷமாகச்செய்து, பேதம் எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாததென்று உன்னால் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருப்பதில் இரண்டு ப்ரதீதிகளின் விரோதத்தினால் பேதமானது எளிதில் நிரூபிக்கததக்கதும் எவ்விதத்தாலும் நிரூபிக்கத்தகாததுமான பேதத்தைக்காட்டிலும் விலக்ஷணமாக ஆகவேண்டியதாகும். இவ்விதம் ஸம்வித்தின் ஸத்யத்வம் மித்யாத்வம் ஜடத்வம் அஜடத்வம் நித்யத்வம் அநித்யத்வம் முதலியவாதங்களில் ஸம்வித்துக்கு பூர்வபக்ஷஸித்தாந்தாகாரவிலக்ஷணமான ஆகாரத்துடன் சேர்ந்திருத்தல் ஏற்படவேண்டியதாக ஆகும், அதோ (உனக்கு) ஸம்மதமல்லாதது. ஆகையால் ஒன்றோடொன்று விருத்தங்களான ஆகாரப்ரதீதிகள் இரண்டிற்கும் ஏற்கனவே முந்தி அறியப்பட்டுள்ள ஆகாரங்களைவிட விலக்ஷணமான ஆகாரத்தை கல்பித்தல் வ்யாப்திவிருத்தமாதலால் ஸதஸத்வைலக்ஷண்யஸித்தி இல்லை, அப்படியானல் இன்றியமையாதவைகளான * க்யாதி $ பாதம் இவ்விரண்டுக்கும் யாது பரிஹாரம் கூறப்பட்டது என்று வினவப்படுமேயாகில், வேறுவிதமாகவே உபபத்தியானது சொல்லப்பட்டதாக ஆகிறது. ஸத்வம் இருக்க அநந்த வாதிகளுக்கு அபிமதங்களாக இருக்கிற அந்யதாக்யானம் முதலியவைகளாலேயே க்யாதி பாதம் இவ்விரண்டுக்கும் உபபத்தி ஏற்படுவதால். ஸத்தான வஸ்துவுக்கு எவ்வாறு பாதம் ? வேறு இடத்தில் ப்ரஸித்தமாயிருந்தலால் அய்யா! வேறு இடத்தில் ஸத்தாக இருக்குமேயானல் பாதமில்லை ஸத்தில்லாமல்போகுமேயானல் அஸத்க்யாதியானது ப்ரஸங்கிக்குமென்று உரைக்கப்படுமேயானல் அல்ல- வேறு இடத்தில் ஸத்தாக இருப்பதால், ஓரிடத்தில் ஸத்தாக இருக்கிற வஸ்துவுக்கு மற்றோரிடத்தில் ப்ரஸித்தமாக இருத்தலன்றோ அந்யதாக்யாதத்வம். வேறு ஓரிடத்தில் ஸத்தாக இருக்கிற ஒரு வஸ்துவுக்கு மற்றோரிடத்தில் க்யாதியானது தோஷத்திற்கு அதீனமாக இருப்பதால் உண்டாகிறது. வேறு இடத்தில் க்யாதி உண்டாவதற்கு தோஷம் காரணமா என்பது காணப்பட்டதில்லை என்று கேட்கப்படுமேயானல், தோஷத்திற்கு இது இவ்விதமென்று நிச்சயமாகச் சொல்வதற்கு யோக்யமல்லாத வஸ்துவின் தோற்றத்திற்கு தோஷம் காரணம் என்பது விவாதாஸ்பதமாக இருக்கிற பதார்த்தத்தைத்தவிர்த்து வேறு ஒரு இடத்திலும் காணப்பட்டதில்லை என்பதால் துல்யம். ஒன்றோடொன்று விருத்தங்களென்ற அறியப்பட்டிருக்கிற இரண்டு ஆகாரங்களைக் காட்டிலும் விலக்ஷணமாக இருத்தல் ஒன்றுக்கு விருத்தமன்று என்கிற இந்த அம்சம் உனக்கு அதிகம். § அக்யாதி பக்ஷத்தில் ஸத்வம் இருக்கையில் பேதக்ரஹணமில்லாமையால்

---

* க்யாதி—ஜ்ஞானம். $ பாதம்—தோஷமில்லாத காரணத்தினலுண்டாகிற நிஷேத புத்தி.

§ ஆத்மக்யாதி: அஸத்க்யாதி, அக்யாதி, அந்யதாக்யாதி, அநிர்வசநீயக்யாதி என்று ஐந்து க்யாதிகளை பகவத் ராமானுஜஸித்தாந்திகளைத் தவிர்த்து மற்றவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பகவத் ராமாநுஜஸித்தாந்தத்தில் ஸத்க்யாதி ஒன்றே ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

"ஆத்மக்யாதி ரஸத்க்யாதிரக்யாதி: க்யாதிரந்யதா । ததாऽநிர்வசன க்யாதிரித்யேதத்க்யாதி பஞ்சகம்" என்று அவைகளை ஸங்க்ரஹித்துக்காட்டுகிற சுலோகம். இந்த க்யாதிகளை முறையே யோகாசாரன், மாத்யமிகன், மீமாம்ஸகன், நையாயிகன், மாயாவாதி இவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்:

யோகாசாரா மாத்யமிகாஸ்ததா மீமாம்ஸகா அபி । நையாயிகா மாயிநஶ்ச ப்ராய: க்யாதீ: க்ரமாஜ்ஜகு: ।। என்று முற்கூறப்பட்டுள்ள விஷயத்தைக் காட்டுகிற ப்ரமாண சுலோகம்.

1. ஆத்மக்யாதியாவது— ஆத்மாவுக்கு அதாவது புத்திக்கு விஷயரூபமாக ப்ரதிபாஸம். இது ரஜதம் என்கிற புத்தியே ரஜதரூபமாக பாஸிக்கிறது. இது யோகாசார மதம்.

2. அஸத்க்யாதியாவது—அஸத்தான அதாவது இல்லாததான ரஜதம் முதலியவற்றுக்கு க்யாதி, அதாவது ப்ரதீதி என்று சூன்யவாதிகளான பௌத்தர்கள், அதாவது மாத்யமிகர்கள். வாசஸ்பதி மிச்ரர்களும் இதை அங்கீகரித்தார்கள். சிப்பியில் இது வெள்ளி என்று ஞ்ஞாநம் உண்டாகும் தருணத்தில் ப்ராஸித்தங்களான சுக்தித்வம் ரஜதத்வம் என்கிற இரண்டு தர்மங்களுக்கும் ஸமவாயமானது பொய்யாகவே பாஸிக்கிறது. ஆதலால் இது அஸத்க்யாதி.

3. அக்யாதியாவது— ந க்யாதி: அக்யாதி:— அப்ரதீதி. சுக்திரஜதஸ்தலத்தில் இது. இதம் ரஜதம் என்கிற இடத்தில் இதமம்சமே ப்ரத்யக்ஷப்ரதீதிக்கு விஷயம், ரஜதாம்சம் விஷயமல்ல. அதற்கு அதாவது அந்த ரஜதாம்சத்துக்குக்கண் முதலியவைகளின் ஸன்னிகர்ஷமில்லாமையால். ரஜதம் என்கிற ப்ரதீதியோவென்றால் ஸ்ம்ருதியின் ஆகாரத்தைக் காட்டுகிறது. இது மீமாம்ஸகனுடைய மதம்.

4. அந்யதாக்யாதியாவது— ஒரு வஸ்துவானது மற்றொருவஸ்துவாக அறியப்படுதல். தேசாந்தரத்தையும் காலாந்தரத்தையும் அடைந்திருக்கிற ரஜதமே சுக்தியுடன் சேர்க்கை பெற்றதாக தோஷத்தால் கெடுக்கப்பட்டிருக்கிற இந்திரியத்தினுல் சுக்தியாக க்ரஹிக்கப்படுகிறது. அங்ஙனமாகில் முன் அனுபவிக்கப்படாததற்கும் க்ரஹணம் வரட்டுமென்று சொல்லத்தக்கதல்ல. வஸ்துக்களின் ஸாத்ருச்யம் முதலியது நியாமகமாக இருப்பதால். இது நையாயிக மதம். கௌதமமஹரிஷியால் ப்ரவர்த்திக்கப்பட்ட தர்க்க சாஸ்த்ரம் நியாயமதமென்று சொல்லப்படுகிறது.

5. அநிர்வசநீயக்யாதியாவது— ஸத் என்றாவது அஸத் என்னுவது நிர்வசநம் செய்யத்தகாத ரஜதம் முதலியவற்றின் க்யாதி, ப்ரதீதி. சுக்தி ரஜதஸ்தலத்திலோவென்றால் ரஜதமானது ஸத்தன்று. ப்ராந்தியும் பாதமும் ஸம்பவியாமல் போகவேண்டிவருவதால், அந்த ரஜதம் அஸத்துமன்று. க்யாதியும் பாதமும் ஸம்பவியாமல் போகவேண்டிவருவதால். பாதம் ப்ரதியோகியை முன்னிட்டுக்கொண்டிருப்பது பற்றி அஸத்துக்கு அது ஸம்பவியாததாலால். பின்னேயோ சுக்தியினது அஜ்ஞாநபரிணாமமாக இருப்பதும் ஸத்தென்றாவது அஸத்தென்றாவது நிர்வசனம் செய்யத்தகாததுமான அபூர்வமான ரஜதம் உண்டாகிறது. அந்த ரஜதமே அந்த இடத்தில் ரஜதஜ்ஞானத்திற்கு விஷயம்.

இந்த விஷயம் ச்லோகத்தால் ஸங்க்ரஹிக்கப்பட்டிருக்கிறது.

[illegible] !

[illegible] ॥ என்று.

[illegible] ।

இது மாயாவாதிகளின் மதம்.

6. ஸத்க்யாதியாவது— ஜ்ஞானவிஷயத்திற்கு ஸத்யத்வம். இது ஸ்ரீ பகவத் ராமாநுஜ மதம்.

---

க்யாதி பாதம் இவ்விரண்டுக்கும் உபபத்தி ஏற்படுகிறது. ஸத்துக்கே பேதம் க்ரஹிக்கப்படாமையால் க்யாதி- பேதத்தின் க்ரஹணம் பாதம், ப்ரவ்ருத்திக்கு பாத்யத்வமும். யதார்த்தக்யாதிபக்ஷத்திலோவென்றால், சுக்தி ரஜதம் ஸ்வப்னாவஸ்தையில் காணப்படுகிறவஸ்து இது முதலியவற்றில் இருப்பதாலும் அதிகமாயில்லாமை, நிலையாயில்லாமை, அவனொருவனாலேயே அனுபவிக்கத்தக்கதாக இருத்தல் இவைகளின் க்ரஹணத்தாலும் க்யாதி பாதம் இவைகளுக்கு உபபத்தி. முன்னிலையில் இருக்கிறவஸ்துவில் ஸத்தாகவே இருக்கிற ரஜதத்திற்கு க்யாதி. சுக்தியின் ப்ராசுர்யத்தின் க்ரஹம் பாதம். அந்த ப்ராசுர்யக்ரஹத்தால் (ரஜத விஷய) ப்ரவ்ருத்தியானது பாதிக்கத்தக்கதாக ஆகிறது. அந்த பாதம் ப்ரவ்ருத்தியின் அநுத்பத்தி. * அலாதசக்கிரம் முதலியதிலோவென்றால் அக்யாதிபக்ஷத்தில் போல் அதற்கு உபபத்தி. ஆகையால் வேறுவிதமாகவே உபபத்தியானது ஸித்தமாக இருப்பதால் அநிர்வசநீயத்வத்தை கல்பிப்பது யுக்தமல்ல. இவ்வண்ணம் ஆச்ரயாநுபபத்தி திரோதாநாநுபபத்தி ஸ்வரூபாநுபபத்தி அநிர்வசநீயத்வாநுபபத்திகள் கூறப்பட்டன.

---

* அலாதசக்கிரம்— வட்டமாக கொள்ளிக்கட்டையைச் சுற்றுதல்.

---

[illegible] ।

[illegible] ।

தாநகவஸ, நிய்ராஹதஸ்யாயம்ஸ்ய நிய்ராஹதபேதகாரணம் ஸவி கல்பஸ்ஸித்தி ஹேதுபூதமஸத்யே । காரணாஜ்ஞாநவிஷயம் ப்ரத்யக்ஷம் தாவத் " அஹமஜ்ஞோ மாமந்யஞ்ச ந ஜாநாமி " இத்யபரோக்ஷாவபாஸ: । அயஞ்ச ந ஜ்ஞாந ப்ராகபாவவிஷய: । ஸ ஹி ஷஷ்டப்ர மாணகோசர: । அயஞ்ச அஹம் ஸுகீதிவதபரோக்ஷ: । அபாவஸ்ய ப்ரத்யக்ஷத்வாப்யுபகமேऽபி அயமநுபவோ நாத்ர ஜ்ஞாநாபாவவி ஷய: । அநுபவவேளாயாமபி ஜ்ஞாநஸ்ய வித்யமாநத்வாத் । அவித்ய மாநத்வே ஜ்ஞாநாபாவப்ரத்யக்ஷாநுபபத்தேஶ்ச ।

ஸ்ரீபாஷ்யம்—

அன்றிக்கே இவ்விதமிருக்கலாம். வஸ்துவின் ஸ்வரூபத்திற்கு * திரோதானத்தைச் செய்கிறதும் உள்ளுக்குள்ளிருப்பவைகளும் வெளியிலிருப்பவைகளுமான பற்பலவஸ்துக்களின் $ அத்யாஸத்திற்கு உபாதானகாரணமாக இருப்பது ஸத் என்றாவது அஸத் என்றாவது நிர்வசனஞ்செய்யத்தகுதியற்றதும், அவித்யை அஜ்ஞாநம் முதலியபதங்களால் சொல்லத்தக்கதும், வஸ்துவின் உண்மையை அறிதலால் விலக்கத்தக்கதும் ஜ்ஞாநத்தின் ‡ ப்ராகபாவத்தைவிட வேறான பாவரூபமாகவே இருக்கிற ஒருவஸ்துவானது ப்ரத்யக்ஷம் அநுமானம் என்கிற இரண்டு ப்ரமாணங்களால் அறியப்படுகிறது. அந்த வஸ்துவினால் மறைக்கப்பட்ட ப்ரஹ்மத்தை உபாதானமாக உடையதும், விகாரமில்லாததும், தானே ப்ரகாசிக்கின்றதும், ஜ்ஞாநமாத்ரத்தையே உருவாகக்கொண்டதும், அந்த அத்யாஸஹேதுவினாலேயே மறைக்கப்பட்ட ஸ்வரூபத்துடன் கூடியதுமான ப்ரத்யகாத்மாவினிடத்தில் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டிருக்கிற அஹங்காரம் ஜ்ஞாநம் ஜ்ஞேயமென்கிற யாதொரு அத்யாஸமுண்டோ, அந்த தோஷத்தினுடையதாகவே இருக்கிற ஒரு ஸமயத்திலுண்டாகிற அவஸ்தாவிசேஷத்தினால், அத்யாஸரூபமான ஜகத்

* திரோதானம்—மறைவு. $ அத்யாஸம்—கல்பனை அல்லது ஆரோபம்.

‡ ப்ராகபாவம்— ஒரு வஸ்து உண்டாவதற்கு முந்தின க்ஷணத்திலிருக்கிற அவ் வஸ்துவின் இன்மை.

தில் ஜ்ஞாநத்தினால் பாதிககத்தக்க ஸர்ப்பம் ரஜதம் முதலியவஸ்துக்களும், அந்தந்த வஸ்துவிஷயகஜ்ஞாநரூபமான அத்யாஸமும் உண்டாகிறது. மித்யாரூபமான அவை அஜ்ஞானத்துக்கும் அந்த தோஷமே உபாதானம். மித்யாபூதமான அர்த்தத்திற்கு மித்யாபூதமே காரணமாக ஆவதற்குத்தகுதியுள்ளதென்பது ஹேதுபலத்தாலறியப்படுகிறது. காரணமாக இருக்கிற அஜ்ஞாநவிஷயகமான ப்ரத்யக்ஷமோவென்றால் 'அஹமஜ்ஞ:' (நான் ஜ்ஞாநமில்லாதவன்) 'மாமந்யஞ்ச ந ஜாநாமி' (நான் என்னையும் மற்றவனையும் அறிகிறேனில்லை) என்கிற ப்ரத்யக்ஷஜ்ஞாநம். இந்த ப்ரத்யக்ஷாவபாஸமோவென்றால் ஜ்ஞாநப்ராகபாவத்தை விஷயமாகக்கொண்டதல்ல. அந்த ஜ்ஞாநப்ராகபாவமோவென்றால் ஆறாவது ப்ரமாணத்திற்கு கோசரமானது இந்த காரணஜ்ஞாநமோவென்றால் 'நான் ஸுகியாக இருக்கிறேன்' என்பதுபோல் அபரோக்ஷமாக இருக்கிறது. அபாவத்திற்கு ப்ரத்யக்ஷத்வம் ஒப்புக்கொண்டபோதிலுங்கூட இந்த அனுபவமானது ஆத்மாவினிடத்தில் ஜ்ஞாநாபாவத்தை விஷயீகரிக்கிறதில்லை. அனுபவவேளையிலுங்கூட ஜ்ஞாநமிருப்பதால் ஜ்ஞாநமில்லை என்று சொல்லின் ஜ்ஞாநாபாவப்ரதீதியானது பொருந்தாமல் போகவேண்டிவருதலால்.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் நஹி த்ருஷ்டே அநுபபந்நம் நாம (ஒரு வஸ்துவானது இவ்விதமான ஸ்வரூபஸ்வபாவமுள்ளதென்று நேரில் பார்க்கப்பட்டிருக்க, அந்த வஸ்து அவ்விதமான ஸ்வரூபஸ்வபாவமுள்ளதல்லவென்று சொல்வது ஸரியல்லவன்றோ) என்கிற நியாயத்தினால், ப்ரமாணத்தினால் நிலைபெற்றிருக்கிற ஒருவஸ்துவுக்கு தர்க்கத்தினால் பாதம் சொல்வது யுக்தமல்ல என்கிற அபிப்ராயமுள்ள அன்யனால் ப்ரமாணப்ரதிஜ்ஞை சங்கிக்கப்படுகிறது—அத ஸ்யாத் என்று. முன்பு தூஷிக்கப்பட்டிருக்கிற ஆகாரங்களை ஸாதிப்பதற்காகச் செல்லுகிறார்— வஸ்துஸ்வரூப என்று. இதனால் திரோதானம் கூறப்பட்டது— ஆந்தர பாஹ்ய என்று ஸ்வரூபம் உரைக்கப்பட்டது அத்யாஸத்தை உபாதானமாகக் கொண்டிருப்பதனாலே மித்யாத்வம் பலித்துவிட்டதன்றோ அவித்யைக்கு ஸத் என்றாவது அஸத் என்றாவது நிர்வசனம்பண்ணுவதற்குத் தகுதி இல்லாமலிருத்தல் உரைக்கப்பட்டது. சாஸ்திரங்களில் இந்த அவித்யையை ப்ரதிபாதிக்கிற சப்தங்களை ஞாபகப்படுத்துவதற்காக அவித்யை அஜ்ஞானம் முதலிய பதங்களால் சொல்லத்தக்கதென்று பகரப்பட்டது. விஸ்தாரதியினால் தூஷிக்கப்படப்போகிற ஆகாராந்தரத்தையும் ஸாத்தியமாகச் சொல்லுகிறார்— வஸ்துயாதாத்ம்யஜ்ஞாந என்று. ததுபஹித என்று ஆச்ரயமும். ஆந்தரமான அத்யாஸம் எது? பாஹ்யமான அத்யாஸம் எது ?

ப்ரபஞ்சமானது அவித்யையை உபாதானமாகக் கொண்டிருக்க எவ்வாறு ப்ரபஞ்சத்தைக்குறித்து ப்ரஹ்மத்திற்கு உபாதான காரணத்வம் என்று கேட்கப்பட்டால், கூறுகிறார் — தது பஹித என்று. நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்கிற ப்ரஹ்மத்திற்கு உபாதானகாரணத்வரூபமான தர்மம் பொருந்தாதென்பதை ஸூசனம் பண்ணுகிறார்— அவிகாரே ஸ்வப்ரகாசசின்மாத்ரவபுஷிப்ரத்யகாத்மநி என்று விகாரமில்லாமையாலும். மற்றொருவஸ்துவின் ப்ரகாசத்தை அபேக்ஷியாமல் தானே ப்ரகாசிப்பதாலும், ப்ரத்யக்காக இருப்பதாலும் அதாவது தன்பொருட்டுத் தானாகவே பிரகாசிப்பதாலும், விகாரத்திற்கு ஆஸ்பதமாகவும் ஜடமாகவும் பராக்ரூபமாகவும் இருக்கிற பரிணாமம் பொருந்துகிறதில்லை என்று பொருள், தானாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிற வஸ்துவுக்கு எவ்வண்ணம் அவித்யையினால் உண்டுபண்ணப்பட்ட ப்ரபஞ்சாத்யாஸம் ஸம்பவிக்கலாம் என்று வினவப்படுமேயாகில், அதற்கு உத்தரம் கூறுகிறார்—திரோஹிதஸ்வரூப என்று. மறைக்கிற பதார்த்தம் ஏது என்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்— தேநைவ என்று. தேநைவ அத்யாஸத்திற்கு ஹேதுவினாலேயே என்று அர்த்தம். அஹங்காரமும் ஜ்ஞாநமும் ஆந்தரமான ஆத்யாஸம். ஜ்ஞேயம் அதாவது அறியத்தக்கது பாஹ்யாத்யாஸம். அத்யாஸரூபே, அத்யஸ்தரூபே என்று அர்த்தம்: கர்மார்த்தத்தில் கப்ரத்யயம் வந்திருக்கிறது. தஸ்யைவ தோஷத்தினுடையவே. அவஸ்தாவிசேஷேண ஏதோ ஒரு ஸமயத்திலுண்டான ஒருவித நிலைமையினால், ரஜ்ஜுவில் ஸர்ப்பம் முதலியவற்றின் அத்யாஸம். இவ்வண்ணம் நிஷ்கர்ஷிக்கப்பட்டுள்ள ப்ரஹ்மத்திற்கு உபாதானத்வம் என்பதில் அநுபபத்தி சொல்லப்பட்டது, தோஷமே உபாதானம் என்கிற விஷயத்தில் யுக்தி சொல்லுகிறார்—க்ருத்ஸ்நஸ்ய என்று. ஸுவர்ணத்தின் வகுப்பைச் சார்ந்த ஆபரணங்களுக்கு ஸ்வர்ணமே உபாதானமாகக காணப்பட்டிருக்கிறதன்றோ, அப்படிப்போலென்று கருத்து, ஹேதுபலாத் கார்யகாரணம் இரண்டுக்கும் ஸஜாதீயத்வதர்சனரூபமான ஹேதுபலத்தினால், அதற்குமேல் ப்ரத்யக்ஷத்தைக் கூறுகிறார்— காரண என்று "அஹம் அஜ்ஞ:" என்பதற்கு "மாம் அந்யஞ்ச ந ஜாநாமி" என்பது விவரணம். "அஹம் அஜ்ஞ:" என்று அஜ்ஞாநஸ்வரூபத்தைக் கீர்த்தனம் செய்தபடி. "மாம் அந்யஞ்ச ந ஜாநாமி" என்று அதனுடைய மறைத்தலென்கிற கார்யத்தைக் கூறியபடி. காரணசபதத்தினால் கார்யரூபமான அஜ்ஞாநத்தை விலக்கியபடி. ஆகையால் ஸுஷுப்திகாலத்திலுள்ள அஜ்ஞாநம சொல்லக்கருதப்பட்டது. * ஜாகாணம் முதலிய அவஸ்தையில் ஸவிகல்பகப்ரத்யக்ஷத்தினால் கடம் முதலிய வஸ்துக்களை விஷயீகரித்துக்கொண்டிருக்கிற அஜ்ஞாநம் அறியப்படுகிறது. † ஸுஷுப்தியிலோவென்றால் ஒரு வஸ்துவையும் விஷயீகரிக்காத அஜ்ஞாநத்தின் ப்ரதீதி என்று ‡ தத்வசுத்திகாரர் முதலியவர்களால் உரைக்கப்பட்டது, ஜாகரிதாவஸ்தையிலேயே இந்த அஜ்ஞாநாநுபவமென்பது ஸம்பிரதாயம். மற்றவனையும் நானறிகிறேனில்லை என்று சொல்லப்பட்டிருப்பதால், ஸ்வப்னத்தில் அன்யவஸ்துவின் பராமர்சம் இல்லையன்றோ, (ந ஜாநாமி) நான் அறிகிறேனில்லை என்று ஆச்சாதகமாக அறியப்படாநின்ற அஜ்ஞாநம் காரணமாக இருப்பதால் காரணாஜ்ஞாநவிஷயம் என்று கூறப்பட்டது, அப்ரத்யக்ஷரூபமான அனுமானம்

---

* ஜாகரணம்—விழித்திருத்தல், ‡ தத்வசுத்தி—ஒரு வேதாந்த கிரந்தம்,

† ஸுஷுப்தி— ஜீவாத்மா பரமாத்மாவினிடம் லயித்து ஆநந்தவெள்ளத்திலமிழ்ந்து பாஹ்யமான ப்ரபஞ்சத்தை மறந்திருக்கும் நிலைமை.

முதலிய ப்ரமாணங்களை விலக்குவதற்காக அபரோக்ஷாவபாஸம் என்று சொல்லப்பட்டது. ஜ்ஞாநப்ராகபாவத்தை விஷயீகரித்துக்கொண்டிருக்கவேண்டுமென்பதை ஆசங்கித்து பரிஹரிக்கிறார்—அயந்து என்று- இதுவும் ஆகமாதி ப்ரமாணத்திற்கு விஷயமாக இருக்கலாமென்று ஸம்சயித்துக் கூறுகிறார்— அயம் து என்று. ப்ரத்யக்ஷப்ரமாணத்தைக் காட்டிலும் வேறுபட்டிருப்பவைகள் பரோக்ஷப்ரமாணங்கள், ஆகையால் பரோக்ஷப்ரமாணத்திற்கு விஷயமான ப்ராகபாவமானது அபரோக்ஷப்ரமாணத்திற்கு விஷயமாக இருக்கிற அஜ்ஞாநமாக ஆவதற்குத்தகுதியுள்ளதல்லவென்று பொருள். பாவபதார்த்தங்களை க்ரஹிக்கிற ப்ரமாணத்தினால் அபாவம் அறியத்தக்கதாக ஆகலாமென்பதிலும் தூஷணம் கூறுகிறார்—அபாவஸ்ய என்று, ஹேதுவைச் சொல்லுகிறார்— அநுபவ என்று, அபாவத்தினுடைய அநுபவவேளையில் ஜ்ஞாநமிருக்கிறதா? இல்லையா? இருக்கிறதேயானால் க்ரஹிக்கத்தக்க பதார்த்தமில்லாமையால் அபாவப்ரதீதி இல்லை, இல்லை என்றால் க்ரஹிக்கிற வஸ்து இல்லாமையால் அதனுடைய அபாவப்ரதீதி இல்லை என்று பொருள்.

---

[illegible]

பேக்ஷா । அஜ்ஞஸ்ய து ப்ரக்ருத்யூர்த்வஸ்தந: ஸ்வயம் விஷயதோ ந ப்ர
காஶவ்யவதாநாபேக்ஷி ஸைவாஜ்ஞாநஸ்ய வ்யாவர்த்தகத்வே
நாவஸரோ யுஜ்யதே । தஸ்மாத்ஜ்ஞாயோகவ்யவஹிதேந ப்ரத்ய
க்ஷேண ஸாக்ஷாதேவைவாஜ்ஞாநம் ப்ரதீயதே ।

ஸ்ரீபாஷ்யம்—

இது சொல்லப்பட்டதாக ஆகிறது.—அஹம் அஜ்ஞ: என்கிற இந்த அனுபவத்தில் அஹம் என்று ஆத்மா அபாவதர்மியாகவும், ஜ்ஞானம் ப்ரதியோகியாகவும் அறியப்படுகிறதா? இல்லையா? அறியப்படுகிறதேயானால் விரோதத்தினாலேயே ஜ்ஞாநாபாவாநுபவம் ஸம்பவிக்கிறதில்லை. இல்லையேயானால் தர்மிஜ்ஞாநத்தையும் ப்ரதியோகிஜ்ஞாநத்தையும் அபேக்ஷிக்கிற ஜ்ஞாநாபாவானுபவமானது மிகவும் ஸம்பவிக்கிறதில்லை. ஜ்ஞாநாபாவம் அனுமானப்ரமாணத்தினால் அறியத்தக்கது என்று பதிலும், அபாவமென்கிற பெயருள்ள ப்ரமாணத்திற்கு விஷயமென்பதிலும் இந்த அனுபபத்தியானது ஸமானமானது. இந்த அஜ்ஞாநம் பாவரூபமாகில் தர்மிப்ரதியோகிகளின் ஜ்ஞாநமிருந்தபோதிலும் விரோதமில்லாமையால் இந்த அநுபவமானது பாவரூபமான அஜ்ஞாநவிஷயமென்றே ஒப்புக்கொள்ளத்தக்கது என்று. வாதத்தில் வலிமை வாய்ந்தவரே! பாவரூபமாக இருந்தபோதிலும் அஜ்ஞாநமானது வஸ்துவினுடைய யதார்த்தஸ்வரூபப்ரகாசரூபமான ஸாக்ஷிசைதன்யத்தோடு விரோதப்படுகிறது. இப்படியல்ல. ஸாக்ஷிசைதன்யமானது வஸ்து யாதாத்ம்யத்தை விஷயமாகக்கொண்டதன்று. பின்னையோ அஜ்ஞாநத்தைவிஷயமாகக்கொண்டது. அப்படி இல்லாவிட்டால் மித்யாரூபமான அர்த்தத்தின் தோற்றம் பொருந்தாமல் போகவேண்டியதாக ஏற்படுவதால் அஜ்ஞானத்தை விஷயமாகக்கொண்ட ஜ்ஞாநத்தினால் அஜ்ஞாநமானது நிவர்த்திக்கப்படுகிறதில்லையன்றோ, ஆதலால் விரோதமில்லை. அய்யா! இந்த அஜ்ஞாநம் பாவரூபமாக இருந்தபோதிலுங்கூட விஷயவிசேஷத்தினின்று விலகினதாகவே ஸாக்ஷிசைதன்யத்திற்கு விஷயமாக ஆகிறது. அந்த விஷயமானது ப்ரமாணத்திற்கு அதீனமல்லாதஸித்தியுடன் கூடியதாக இருக்கிறதாதலால் எவ்வாறாக ஸாக்ஷிசைதன்யத்தினால் அஸ்மதர்த்தத்தினின்றும் வேறுபட்டிருக்கிற அஜ்ஞாநம் விஷயீகரிக்கப்படலாம்? இது தோஷமல்ல, எல்லா வஸ்துக்களும் அறியப்பட்டதாகவோ அறியப்படாததாகவோ ஸாக்ஷிசை

தன்யத்திற்கு விஷயமாக ஆகின்றன, அவற்றுள் ஜடமாக அறியப்படுவதி ஞல் ஸித்திக்கிற வஸ்துவுக்கே ப்ரமாணத்தால் * வ்யவதானம் அபேக்ஷிக்கப் படுகிறது. தானகவே ஸித்திக்கிற அஜடமான ப்ரத்யக் வஸ்துவுக்கோவெ ன்ருல் ப்ரமாணவ்யவதாநாபேக்ஷை இல்லை. ஆதலால் எப்பொழுதுமே அஜ்ஞானத்திற்கு எல்லாவஸ்துக்களைக்காட்டிலும் வேறுபாடுள்ளதாக ப்ர காசித்தல் பொருத்தமுள்ளதாக ஆகிறது. ஆதலால் நியாயத்திஞல் அநா வது பரமாணத்திற்கு ஸாதகமாக இருக்கிறதர்க்கத்தால் போஷிக்கப்பட்டுள் ள ப்ரத்யக்ஷத்திஞல் அஜ்ஞாநம் பாவரூபமாகவே அறியப்படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

பாவாபாவங்கள் இரண்டுக்கும் விஷயம் ஒன்ருக இருந்தாலன்றோ விரோதம், இங் கு விரோதமில்லை, அபாவத்தை விஷயீகரித்துக்கொண்டிருக்கிற ஜ்ஞாநம் க்ராஹகமாத லால், வேறுவஸ்துக்களை விஷயீகரிக்கிற ஜ்ஞானமானது அபாவப்ரதியோகியாக நில பெற்றிருமையால் என்கிற சங்கையை பரிஹரியாநின்றவராக, அநுபவேலாயில் ஜ்ஞாநத்திஞுடைய இருப்பையும், இல்லாவிடில் ஜ்ஞாநாபாவப்ரதீதியின் அநுபபத்தியை யும், அஜ்ஞாநம் பாவரூபமென்று சொல்லும்பக்ஷத்தில் விரோதத்தின் இன்மையையும் விவரிக்கிருர்— ஏதநுக்தம்பவதி என்று. ஜ்ஞாநப்ராகாமைமானது க்ராஹகம் என்று சொன்ஞல் விருப்பமில்லாமலிருந்தாலுங்கூட பாவாபாவம் இரண்டுக்கும் விஷயைக்ய மானது வந்துவிடுகிறதென்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிருர்— அஹம் என்று, 'ஜ்ஞாநஸ்பர்ச' என்கிற இடத்திலுள்ள ஜ்ஞாநசப்தமானது ஆத்மா குடம் முதலியவற் றை விஷயீகரிக்கிற ஜ்ஞாநத்தோடு ஸமானமானது. "இஹபூதலே கடோநாஸ்தி" (இந்த தரையில் குடம் இல்லை) என்கிற இது முதலிய சப்தப்ரயோகஸ்தலங்களில் அபாவத் தை க்ரஹிக்கையில் ப்ரதியோகி ஜ்ஞாநம் தர்மி ஜ்ஞாநம் இவைகளின் அபேக்ஷை காண ப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தவிடத்திலும். அபாவத்திற்கு தர்மியாக ஆத்மாவிஞு டையஜ்ஞாநம் இருக்கிறதென்று சொல்லத்தக்கது. ஆத்மா அபாவத்தைக்காட்டிலும் வேறுபட்டிருக்கிறதன்ருே, ஆகையால் அந்த அபாவவிஷயஜ்ஞாநம் இருக்கும் தருணத் தில் கூட அபாவத்தைத்தவிர்த்து வேறுவஸ்துக்களை விஷயீகரித்துக்கொண்டிருக்கிற ஜ்ஞானம் அபாவத்திற்கு ப்ரதியோகி என்கிற வசனம் விருத்தமாக ஆகும். அபாவம், தர்மி, ப்ரதியோகி, இம்மூன்றைத்தவிர்த்து வேருக இருக்கிற பதார்த்தங்களை விஷய மாகவுடைய ஜ்ஞாநம் அபாவத்திற்கு ப்ரதியோகி என்று சொல்லப்படுமேயாகுல், அப் பொழுது அபாவத்திற்கு ப்ரதியோகியாக ஜ்ஞாநத்திற்கும் ப்ரதீதி இருக்கிறதென்று சொல்லத்தக்கது, அறியப்படுகிற ஜ்ஞானமானது தன்னுடைய விஷயத்துடன் கூடிய தாக அறியப்படுகிறதாதலால் விஷயங்களுக்கும் ப்ரதீதி இருக்கிறது. இவ்வண்ணம் அபாவத்திற்கு ப்ரதியோகியான ஜ்ஞாநத்திற்கு அவச்சேதகமாக விஷயங்கள் அறியப் படுந்தருணத்தில் அந்த விஷயங்களை விஷயீகரிக்கிற ஜ்ஞாநத்திஞுடைய அபாவம்

---

* வ்யவதானம்—விலக்கம்

பொருந்தாதென்று கருத்து. அபாவம் வேறு * ப்ரமாணங்களுக்கு விஷயமென்கிறபக்ஷத்திலும் முற்கூறப்பட்ட தூஷணத்தை § அதிதேசம் செய்கிறார்—ஜ்ஞாநாபாவஸ்ய என்று. வேறு ப்ரமாணங்களுக்கு விஷயங்கள் இருக்கவேண்டுமென்கிற நியமமில்லாவிடினும் இருக்கிறதாகக் காண்பிப்பதற்கு சக்யமல்லவென்று கருத்து. நான் அஜ்ஞன் என்கிற வ்யவஹாரத்தில் அஜ்ஞாநமானது இருக்கிறதாகவன்றோ அறியப்படுகிறது. இந்த பக்ஷத்தில் அதிகமான வேறு தூஷணம் முன்பு உரைக்கப்பட்டது. அபரோக்ஷத்திற்கு பரோக்ஷரூபமான ப்ரமாணத்திற்கு விஷயமாக இருத்தலின் அநுபபத்திரூபமானது அர்த்தத்தினால் ஸித்தித்துவிட்டது. அஜ்ஞாநத்திற்கு பாவரூபத்வம் சொன்னால் முற்கூறப்பட்ட தூஷணம் இல்லை என்று சொல்லுகிறார்—அஸ்ய என்று. தர்மிப்ரதியோகியை விஷயீகரிக்கிற ஜ்ஞாநம் தர்மிப்ரதியோகிஜ்ஞாநம். அதனுடைய பாவரூபாஜ்ஞாநத்திற்கு விரோதமில்லை கடத்தை மறைக்கிற அஜ்ஞாநம் கடஜ்ஞாநத்தோடன்றோ விரோதிக்கிறது. கடஜ்ஞாநவிஷயமான ஜ்ஞாநத்தோடும் தர்மிஜ்ஞாநத்தோடும் விரோதப்படுகிறதில்லை என்று பொருள். வஸ்துக்களின் யதார்த்தஸ்வரூபத்தை விஷயீகரிக்கிற ஜ்ஞாநத்தினால் நிவர்த்திக்கத்தக்க அஜ்ஞாநமானது வஸ்துக்களின் யதார்த்தஸ்வரூப ப்ரகாசரூபமான ஸாக்ஷிசைதன்யத்தோடு விரோதிக்கிறதென்று வினவுகிறார்— நநுச என்று பரிஹரிக்கிறார்— நைவம் என்று. யாதாத்ம்ய சப்தத்தினால் நிச்சயிக்கப்பட்டிருக்கிற தனக்குச் சமானமான இரண்டாவது வஸ்துவில்லாமலிருத்தலென்கிற ஸ்வரூபம் சொல்லக் கருதப்பட்டது, ப்ரபஞ்சத்தினுடைய மித்யாத்வத்தின் ஸித்தவத்காரத்தால் ஹேதுவைக்கூறுகிறார்— அந்யதா என்று. அந்யதாஸ்வஸாக்ஷிஸ்வரூபப்ரகாசமாத்திரத்திற்கே வஸ்துயாதாத்ம்யவிஷயத்வம் சொன்னால் என்று அர்த்தம். அஜ்ஞாநவிஷயத்வம் இருக்கட்டும். அதனால் என்னவென்று கேட்கப்படுமேயாகில் சொல்லுகிறார்— நஹி என்று. ரஜதவிஷயகமான ஜ்ஞாநத்தினால் ரஜதம் நிவர்த்திக்கத்தக்கதல்லவன்றோவென்று அர்த்தம். கண்ணால் பார்க்கத்தக்க கடம் படம் முதலிய வஸ்துக்களுக்கு விசேஷணமாக இருக்கிற ரூபம் முதலியவற்றுக்குங்கூட கண்ணால் பார்க்கத்தக்க தன்மை காணப்பட்டிருக்கிறது. த்ருச்யமான அஜ்ஞாநத்திற்கு அவச்சேதகமான அஸ்மதர்த்தத்திற்கு கண்ணால் பார்க்கத்தக்கதாக இருக்கும் தன்மையை ஒப்புக்கொள்ளப்படாததால் அஸ்மதர்த்தாவச்சிந்நமான அஜ்ஞாநம் விஷயீகரிக்கப்படுகிறதில்லை என்கிற அபிப்பிராயத்தால் மறுபடியும் சோதனஞ்செய்கிறார்-நநு சேதம் என்று. விஷயவிசேஷம். அவச்சேதகவிசேஷம். 'ஸ:' என்று அந்த விஷயவிசேஷமே பராமர்சிக்கப்படுகிறது. பரிஹரிக்கிறார்—நைஷ தோஷ: என்று. அஸ்மதர்த்தமும் ஸர்வசப்தத்திற்கு வாச்யங்களாக இருக்கிற வஸ்துக்களில் உட்பட்டிருக்கிறது. ஜ்ஞாததயா அஜ்ஞாததயாவா— வேறுஜ்ஞாநத்தை அபேக்ஷிக்கிறதாகவாவது அல்லது அதை அபேக்ஷியாமலிருக்கிறதாகவாவது. ஸாக்ஷிசைதந்யஸ்யவிஷயபூதம்—ஸாக்ஷிசைதந்யத்தினால் ப்ரகாசிக்கிறதென்று பொருள். அஸ்மதர்த்தத்திற்கு ஸாக்ஷிசைதந்யவிஷயத்வம் உபசாரத்தால் கூறப்பட்டது, தானாகவே ப்ரகாசிக்கிற ஸ்வயம் ப்ரகாசவஸ்துவுக்கு விஷயத்வம் பொருந்தாததால், ஜடவஸ்துவுக்கு ஸ்வயம் ப்ரகாசத்வமில்

---

* ப்ரமாணம்—ப்ரமையை உண்டுபண்ணுகிற வஸ்து.

§ அதிதேசம்—ஓரிடத்தில் சொல்லி இருப்பதை மற்றொருடத்தில் எடுத்தல்.

$ ப்ரமை—யதாவஸ்திதவஸ்துவ்யவஹாராநுகுணமான ஜ்ஞாநம்.

லாமையால் அது ப்ரமாணஹீனமான ஸித்தியுள்ளதாக இருந்துகொண்டு த்ருச்யத்திற்கு விசேஷணமாக ஆகிறது. அஸ்மதர்த்தமோவென்றால் தனக்குத்தானாக ப்ரகாசிக்கும் தன்மை வாய்ந்ததாக இருப்பதால் தானே ஸித்தியாகின்றுகொண்டு அஜ்ஞாநாவச்சேதகமாக ஆகிறதென்று பொருள். த்ருச்யத்திற்கு அவச்சேதகமாக இருப்பதால் த்ருச்யமென்று கேள்வி. அது ஜடத்வத்தால் உண்டுபண்ணப்பட்டதாக இருக்கிறதாதலால் (ஸோபாதிகம்) உபாதியோடுகூடியதென்று பரிஹாரம். ஆகையால் அஜ்ஞாநம் அபாவரூபமென்கிற பக்ஷத்தில் முற்கூறப்பட்ட விரோதத்தாலும் அது பாவரூபமென்கிற பக்ஷத்தில் அந்த விரோதமில்லாமையாலும் என்று அர்த்தம். **ந்யாயோபப்ரும்ஹிதேந** என்று. இரண்டுபக்ஷங்களிலும் விரோதம் விரோதத்தின் இன்மை என்கிற ந்யாயத்தினால் உதவிபுரியப்பட்டிருக்கிற என்று அர்த்தம். இவ்வாறாக ந்யாயத்தினால் உபகரிக்கப்பட்டிருக்கிற ப்ரத்யக்ஷத்தினால் அஜ்ஞானத்திற்கு பாவரூபத்வமும் "நஜாநாமி" என்பதனால் ஆத்மாச்ரயத்வமும் ஸித்தித்தது. சாஸ்திரங்களில் அஜ்ஞாநசப்தத்திற்கு வாச்யமாக இருப்பதால் அவனுக்கு அபிமதமான கர்மாவின் விலக்கமானது ப்ரத்யக்ஷமாக ஸித்தித்தது, இதற்குச் சாஸ்திரங்களில் அஜ்ஞாநம் முதலிய சப்தங்களால் சொல்லத்தக்கதாக இருப்பதானது ஜ்ஞாநவிரோதியாக இருப்பதாலும் நான் அஜ்ஞன் ஜ்ஞாநமில்லாதவனென்று ஸ்பஷ்டமாக அறியப்பட்டிருப்பதாலும் ஸித்தம்.

---

𑌤𑌦𑌿𑌦𑌂 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌅𑌨𑍁𑌮𑌾𑌨𑌾𑌦𑌪𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌤𑌿 । 𑌵𑌿𑌵𑌾𑌦𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤 𑌸𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑌾𑌵𑌰𑌣 𑌸𑍍𑌵𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌯 𑌸𑍍𑌵𑌦𑍇𑌶𑌗𑌤𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 । 𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌾𑌰𑍍𑌥 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌦𑌿𑌤𑌿 । [illegible] 𑌵𑌾 [illegible] 𑌵𑌾 [illegible] । 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌥𑌂 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌾𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑌾𑌧𑌨𑍇 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌤𑌯𑌾 𑌉𑌪𑌨𑍍𑌯𑌾𑌸 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 — [illegible] 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌰𑌵𑌦𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 ।

---

ஸ்ரீபாஷ்யம்—

அப்படிப்பட்ட இந்த பாவரூபமான அஜ்ஞாநமானது அநுமானத்தாலும் ஸித்திக்கிறது. விவாதத்திற்கு ஆஸ்பதமாக இருக்கிற ப்ரமாணஜ்ஞாநமானது தன்னுடைய ப்ராகபாவத்தைக் காட்டிலும் வேறாக இருக்கின்றதும் தன்னுடைய விஷயத்தை மறைக்கிறதும் தன்னால் போக்கடிக்கத்தக்கதும் தன்னுடைய தேசத்தை அடைந்திருப்பதுமான வேறு வஸ்துவை முன்னிட்டுக்கொண்டிருக்கிறது- ப்ரகாசிக்கப்பட்டிராத அர்த்தத்தை ப்ரகாசிக்கச்

செய்வதால், இருட்டில் முதலிலுண்டான ப்ரதீபத்தின் ஒளிபோல் என்று, இருட்டென்பது ப்ரகாசத்தின் இன்மையே, அல்லதுரூபதர்சனததின் இன்மையே இவ்விரண்டுவித அபாவங்களேக்காட்டிலும் வேறுன ஒரு த்ரவ்யமல்ல, இவ்வாறிருக்க எவ்வண்ணம் பாவரூபமான அஜ்ஞாநத்தை ஸாதிப்பதில் திருஷ்டாந்தமாக சொல்லப்படுகிறது என்று கேட்கப்பட்டால், உத்தரம் கூறப்படுகிறது. அதிகமாக இருத்தல் ஸ்வல்பமாக இருத்தல் இது முதலிய நிலைமைகளின் ஸம்பந்தத்தினுலும் ரூபத்துடன் கூடி இருப்பதாகவும் அறியப்படுவதால் தமஸ்வேறு ஒரு திரவ்யமே என்பதனுல் முற்கூறப்பட்டுள்ள அநுமானம் தோஷமற்றது என்று.

ச்ருதப்ரகாசிகை—

அதற்கு மேல் தன்னுடைய விஷயத்தை மறைத்தல், தன்னுல் போக்கடிக்கத்தக்கதாக இருத்தல் என்கிற ஸ்வபாவங்களோடுகூட உபபாதிக்கப்பட்டிருக்கிற ஆகாரத்தோடுகூடியுமிருக்கிற அஜ்ஞாநமானது அநுமானத்தாலும் ஸாதிக்கப்படுகிறது. விவாதாத்யாஸிதம் இது முதலியதால். ஜ்ஞாநம் என்று சொன்னுல் ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு தனக்கு முற்காலத்தில் நிலையுள்ள வேறு வஸ்துவுடன் சேர்ந்திருத்தல் ஸம்பவியாதாதலால் அதை விலக்குவதற்காக ப்ரமாணஜ்ஞாநமென்று சொல்லப்பட்டது. அப்படிச் சொன்னபோதிலும் * தாராவாஹிகஜ்ஞாநத்தில் மேல் மேல் வருகிற விஜ்ஞாநங்களுக்கு ஸாதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கிற வேறு வஸ்துவை முன்னிட்டுக்கொண்டிருத்தலென்கிற தன்மை இல்லாமையால், அதை விலக்குவதற்காக விவாதாத்யாஸிதம் என்று சொல்லப்பட்டது அந்த ஜ்ஞாநம் எது என்று அபேக்ஷிக்குங்கால் ஸ்பஷ்டமாகத்தெறிந்துகொள்வதின் பொருட்டு ப்ரமாணஜ்ஞாநமென்று உரைக்கப்பட்டது. இது தர்மீ காண்பிக்கப்பட்டது. இதற்கு மேல் ஸாத்தியதர்மத்தைச் சொல்லுகிருர்—ஸ்வப்ராகபாவ என்று. வஸ்த்வந்தரபூர்வகம் என்று சொன்னுல் கடம் முதலிய ஸ்வவிஷயங்களை தனக்கு முந்தினவைகளாகக் கொண்டிருப்பதனுல் ஸித்தஸாதநமாகுமென்று அதை வ்யாவர்த்திப்பதற்காகக் கூறுகிருர்—'ஸ்வதேசகத' என்று. 'ஸ்வாச்ரயகத' என்று சொன்னுல் த்ருஷ்டாந்தத்திற்கு ஸாத்யவைகல்யம் வரும், இருட்டானது தீபத்தை ஆச்ரயித்ததல்லவன்றே, அதனுல் 'ஸ்வதேசகத' என்று சொல்லப்பட்டது. தர்மாதர்மங்களை விலக்குவதற்காகக் கூறுகிருர்— 'ஸ்வநிவர்த்ய' என்று. கற்றறிந்தவரே! ஸ்வநிவர்த்ய சப்தத்தால் எவ்வாறு தர்மாதர்மங்களுக்கு வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது? ஜ்ஞாநோத்பத்திக்கு ஹேதுவாக இருக்கிற அத்ருஷ்டம் ஜ்ஞாநோத்பத்தியினுலன்றே நாசமடைகிறது. இவ்வண்ணமல்ல. எல்லா தர்மாதர்மங்களுக்கும் ஜ்ஞாநத்தை ப்லமாகக் கொண்டிருத்தலில்லாமையால். ஜ்ஞாநத்தை உண்டுபண்ணுகிற

---

* தாராவாஹிகஜ்ஞாநம்—ஸ்தம்பம் ஸ்தம்பம் என்று ஒரே விஷயத்தை தொடர்ச்சியாக விஷயீகரித்துக்கொண்டுவருகிற ஜ்ஞாநம்.

வஸ்துக்களைக் காட்டிலும் வேறாக இருக்கிற தர்மம் முதலியவைகளுக்கு முந்தினக்ஷணத்தில் தானிருக்குமிடத்தில் இருத்தலாலும். அன்றிக்கே ஸ்வநிவர்த்ய என்கிற பதத்தினால் ஸம்ஸ்காரத்தை விலக்கியபடி. ஸம்ஸ்காரமானது ஜ்ஞாநத்தால் நிவர்த்திக்கத்தக்கதல்லவன்றோ. பயம் முதலியவற்றை வ்யாவ்ருத்திப்பதற்காகக் கூறுகிறார்— 'ஸ்வவிஷயாவரண' என்று. ப்ராகபாவம் இவ்வித ஸ்வபாவமுள்ளதாக இருப்பதால் அதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்— 'ஸ்வப்ராகபாவவ்யதிரிக்த' என்று. இது ப்ரதிலோம வ்யாவ்ருத்தி. வஸ்த்வந்தர பூர்வகம் என்று சொன்னால் அபாவமும் பதார்த்தமாக இருப்பது பற்றி வஸ்துசப்தவாச்யமாக இருப்பதால் அதை விலக்குவதின்பொருட்டுக் கூறுகிறார்— 'ஸ்வப்ராகபாவவ்யதிரிக்த' என்று. கடம் முதலிய ஸ்வவிஷயங்களை விலக்குவதற்காகக் கூறுகிறார்— ''ஸ்வவிஷயாவரண'' என்று. சுவர் முதலியவற்றை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஸ்வநிவர்த்ய' என்று. அறியத்தக்க வஸ்துவை அடைந்திருக்கிற (வித்தியின்) ஜ்ஞாநத்தினுடைய அபிவ்யக்தியின் ப்ராகபாவத்தை விலக்குவதற்காகக் கூறுகிறார்— 'ஸ்வதேசகத' என்று. ப்ரமாணஜ்ஞாநத்தால் அஜ்ஞானமானது விலக்கப்பட்டவுடன் அறியத்தக்கவஸ்துவை அடைந்திருக்கிற சைதன்யமானது நன்கு அபிவ்யக்தமாக ஆகிறதென்றல்லவோ அவர்களின் மதத்தினது கொள்கை. அபிவ்யக்தியின் ப்ராகபாவத்திற்கு விஷயத்தை மறைத்தலாவது ப்ராகசவிரோதியாக இருத்தலே ஒழிய அதற்கு ப்ரதிபந்தகமாக இருத்தலன்று. இவ்வாறாக அநுலோம வ்யாவ்ருத்தி. ஹேதுவைச்சொல்லுகிறார்—'அப்ரகாசித' என்று. நேராகவோ பரம்பரையாகவோ பாதிக்கத்தகாத வ்யவஹாராநுகுண்யத்திற்குக் காரணமாக இருக்கலாகிற ப்ரகாசகத்வம் இங்கு சொல்லக் கருதப்பட்டிருக்கிறது. நேராகவோ அல்லது பரம்பரையினாலோ என்று சொல்லப்பட்டாலன்றோ தீபப்ரபையிலும் ஜ்ஞாநத்திலும் ஹேதுவின் ஒற்றுமை ஸித்திக்கிறது. இது வெள்ளி என்கிற ஜ்ஞாநத்தில $ அதிவ்யாப்திதோஷத்தைப்பரிஹரிப்பதற்காக 'அபாத்யவ்யவஹாராநுகுண்யஹேதுத்வம்' என்று சொல்லப்பட்டது. ஹேது சரீரத்தில் விசேஷணமின்றி தனித்து 'ப்ரகாசகத்வாத்' என்று மாத்திரம் சொன்னால், தாராவாஹிகஜ்ஞாநத்தில் மேல் மேல் வருகிற ஜ்ஞாநங்களுக்கு ப்ரகாசகத்வமிருந்தாலும் ஸாதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கிற தர்மமில்லாதகாரணத்தால் வ்யபிசாரம் வருமென்று அதை விலக்குவதற்காகக் கூறுகிறார்— 'அப்ரகாசிதார்த்தப்ரகாசகத்வாத்' என்று. இந்திரியங்களில் வியபிசாரதோஷத்தை வ்யாவ்ருத்திப்பதற்காக ஹேதுவானது 'பாஸமானத்வேஸதி' என்று விசேஷிக்கப்படுகிறதென்று எண்ணத்தக்கது. திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறார்— 'அந்தகாரே' என்று. தீபப்ரபைபோல் என்று சொன்னால் மேல்மேல் உண்டாகிற ப்ரபைகளுக்கு ப்ரகாசிக்கப்பட்டிராத அர்த்தங்களை ப்ரகாசிக்கச் செய்தலென்கிற தன்மை இல்லாமையால் ஸாதன $ வைகல்யம் உண்டாகும். தன்னால் விலக்கத்தக்க வேறுவஸ்துவைதான் நிலைபெற்றிக்கும் க்ஷணத்திற்கு முந்தினக்ஷணத்தில் உடைத்தானதாக இருத்தல் என்கிற தன்மை இல்லாமையால் ஸாத்யவிகலதையும் உண்டாகுமென்று அந்த தோஷங்களை விலக்குவதற்காக முதலிலுண்டான ப்ரதீபத்தின் காந்திபோலென்று கூறப்பட்டது. அப்படிச் சொன்னாலும் பகலிலிருக்கும் தீபத்தின் ப்ரபைக்கு அவ்விதமான தன்மை காணப்படாமை

---

$ அதிவ்யாப்தி—அலக்ஷ்யத்தில் லக்ஷணமிருத்தல்,

* ப்ரபை—ஒளி. $ வைகல்யம்—இன்மை.

யால் அதை விலக்குவதற்காக அந்தகாரே என்று சொல்லப்பட்டது. திருஷ்டாந்தத்திற்கு ஸாத்யத்தின் இன்மையை ஸந்தேஹித்து பரிஹாரம் செய்கிறார்—* ஆலோகம் இது முதலியதால். ப்ரகாசமிருந்தால் கோட்டான் முதலிய பக்ஷிகளுக்கு இருள்ஸம்பவிப்பதால், எல்லா இடங்களிலும் ஒன்றுபோல் தொடர்ந்து வருகிற ஆகாரத்தைக் கூறுகிறார்—நுபதர்சனுபாவமாத்ரம் வா என்று. அன்றிக்கே கண்ணை மூடிக்கொண்டவனுக்கு இருட்டுவிஷயமான ஜ்ஞாந நிர்வாஹத்திற்காகக் கூறுகிறார்— நுபதர்சன என்று.

இந்த இடத்தில் கௌதமமதாநுஸாரிகளான தார்க்கிகர் முதலியவர்கள் சொல்லுகிற தூஷணத்தை அநுஸந்தானம் செய்கிறார். அந்த தமஸ்விஷயத்தில் $ உத்பாதக * ஜ்ஞாபகாநுபபத்தியினால் வேறு திரவ்யமென்பது தூஷிக்கப்பட்டது. ரூபமுள்ளதாக இருந்தபோதிலும் † பரமாணுக்களுக்கே உண்டுபண்ணத்தகாததாக இருத்தலென்கிற தன்மை. இருட்டுக்கோவென்றால் ரூபமுள்ளதாக இருத்தலாலும் பெரிதாக இருப்பதாலும் உண்டுபண்ணத்தக்க தன்மை இருக்கலாம். அதில் ரூபமுள்ளதாக இருப்பதால் அந்த ரூபமில்லாத வாயு ஆகாசம் முதலிய வஸ்துக்கள் உத்பாதகங்களாக ஆகிறதில்லை. ஸ்பர்சம் ரஸம் கந்தம் என்கிற குணங்களில்லாமையால் மற்ற திரவ்யங்களும் உத்பாதகங்களாக ஆகிறதில்லை. காரணவஸ்துவில் குறைம்பத்திலென்றோ கார்யத்தில் வைசேஷிககுணத்தின் தொடக்கம். இது உத்பத்தியின் அநுபபத்தி. பாஹ்யங்களான தீபப்ரபை ஸௌர்யகாந்தி சந்திரகாந்தி இவைகளால் உதவிபுரியப்படாமலிருப்பதால் கண்ணனது விஷயங்களை க்ரஹிக்கும் சக்தியுள்ளதாக ஆகிறதில்லை. ப்ரகாசத்தின் ஸமீபத்தில் இல்லாமையால் இதற்கு க்ரஹிக்கப்படத்தக்க தன்மையுமில்லை. ரூபத்தோடுகூடி இருக்கிறதென்கிற ப்ரதீதியோ வென்றால் ப்ராந்தியே. கண்களை மூடிக்கொள்ளுகிற ஸமயத்தில் கருப்பு நிறத்தின் தோற்றம் போல். இவ்வாறாக ஜ்ஞப்தியின் அநுபபத்தி. இந்த விஷயத்தில் பரிஹாரமானது வார்த்திககாரர்களால் உரைக்கப்பட்டிருக்கிறது, "தம: கலு சலம் நீலம் பராபரவிபாகவத்--ப்ரஸித்த தர்மவைதர்ம்யாத் நவப்யோ பேத்துமர்ஹதி" என்று, இந்த சுலோகத்தின் பொருள்- இருளானது சலனமுள்ளது. கருப்புநிறமுள்ளது. அதிகம் கொஞ்சம் என்று சொல்லக்கூடிய பாகுபாடுள்ளது, ப்ரஸித்த த்ரவ்யங்களுக்குள்ள தர்மங்களைக் காட்டிலும் விருத்ததர்மங்களுள்ளதாக இருப்பது பற்றி ப்ரஸித்தமான ஒன்பது த்ரவ்யங்களைக் காட்டிலும் வேறுபடுத்துவதற்குத் தகுதியுள்ளது—என்று. அதே இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. அங்கே * பகுளத்வ $ விரளத்வசப்தங்களால் பராவரசப்தார்த்வம் சொல்லப்பட்டது. ஆதிசப்தத்தால் சலிக்கும் தன்மை கூறப்பட்டது. "ரூபவத்தயா" என்பதனால் நீலசப்தார்த்தம் சொல்லப்பட்டது. த்ரவ்யாந்தரசப்தத்தினும் பத்

* ஆலோகம்—ப்ரகாசம், $ உத்பாதகம்—உண்டுபண்ணுகிற வஸ்து.

* ஜ்ஞாபகம்—ஜ்ஞாநத்தை உண்டுபண்ணுகிற வஸ்து.

† பரமாணு— அதிநுட்பமான அணு. இந்தபரமாணுக்கள் அநேகங்கள் ஒன்றுகூடி வரிசையாக த்வ்யணுகம் த்ரயணுகம் முதலியபெயர்களைப் பெற்று ஸ்தூலமான கார்யங்களாக ஆகின்றனவென்று நையாயிகர்களின் கொள்கை. இதற்கு பீலுவென்று அவர்கள் பெயரிட்டிருக்கிறார்கள்.

* பகுளத்வம்— ஆதிக்யம், $ விரளத்வம்—ஸ்வல்பமாக இருத்தல்.

தாவது த்ரவ்யமாக இருத்தல் கூறப்பட்டது, ‡ த்ரவ்யங்கள் ஒன்பது என்று சொல்வதற்குக் காரணம் அந்த ப்ருதிவீ முதலிய த்ரவ்யங்களிலுள்ள அன்யோன்யவிருத்தங்களான தர்மங்களே. அப்படி இல்லாவிட்டால் ப்ருதிவீ ஒன்றே த்ரவ்யம். வேறு ஒன்றும் த்ரவ்யமல்ல கந்தகுணமில்லாமையால் என்று சொல்வதற்கு சக்யம். இவ்வண்ணம் த்ரவ்யங்கள் இரண்டே இது முதலியது சொல்வதற்கு சக்யம். அதோ அபிமதமல்லாதது. த்ரவ்யங்களுக்கு ஒன்றுக்கொன்று விருத்தங்களான தர்மங்கள் இருப்பதால். இவ்வண்ணம் ஒன்பது த்ரவ்யங்களிலுள்ள தர்மங்களைவிட விருத்தங்களான தர்மங்களிருப்பதால் தமஸ் பத்தாவது த்ரவ்யமென்று ஒப்புக்கொள்ளத்தக்கதென்று வார்த்திகத்தின் பொருள்.

கண்ணை மூடிக்கொள்ளுகிற தருணத்தில் நீலரூபத்தின் தோற்றமானது பாதிதவிஷயம். இதேதாவென்றால் அபாதிதமாக இருப்பதால் அப்பொழுது இருப்பதற்குத் தகுயுதியில்லாதன்று. அப்படி இருந்தபோதிலும் ரூபத்தை நன்கு கண்டறிகிற வேளையில் ஜ்ஞாநம் இல்லாமையால் ப்ரத்யக்ஷமானது கண்மூட்டம் போலவும் ஸர்பவிக்கிறதென்று ஸந்தேஹிக்கப்படுகிறதென்று சொல்லப்படுமேயானால், நம் முதலியவர்களுக்கு ரூபத்தின் உபலப்தி உண்டாகும் ஸமயத்தில் கோட்டான் முதலிய பக்ஷிகளுக்கு ரூபத்தின் உபலப்தி இல்லாமலிருக்கையால் அந்த கோட்டான் முதலியவற்றின் ரூபோபலப்திக்குங்கூட ஸந்தேஹாஸ்பதமாயிருத்தல் என்ற சங்கை வந்துவிடுவதால். கோட்டான் முதலியபக்ஷிகளுக்கு ரூபத்தின் உபலப்தி உண்டாகும் தருணத்தில் நம் முதலியவர்களுக்கு ரூபத்தின் உபலப்தி இல்லாமையால் நம் முதலியவர்களுடைய ரூபோபலப்திக்குங்கூட சங்கைக்கு ஆஸ்பதமாக இருத்தல் ப்ரஸங்கிப்பதால். § ஆகம ஸ்வாரஸ்யத்தாலும் சங்கையானது விலக்கப்பட்டிருப்பதால் தமஸ்ஸானது பத்தாவது த்ரவ்யமென்று நிச்சயிக்கப்படுகிறது. "தமஸ்ஸைப் பகவான் படைத்தார். பகலுமில்லை, இரவுமில்லை, ஆகாயமுமில்லை, பூமியுமில்லை- இருளுமில்லை. ஜ்யோதிஸ் இருந்தது- மற்றொன்றுமிருக்கவில்லை. எவனுக்கு தேஜஸ் சரீரமோ- எவனுக்கு தமஸ் சரீரமோ" என்று ஸ்ருஷ்டிக்கத்தக்கதாகஇருத்தல், ஸம்ஹரிக்கத்தக்கதாக இருத்தல், சரீரமாக இருத்தல் முதலியவைகளன்றோ சுருதியில் கூறப்படுகின்றன. ப்ரகாசத்தை அபேக்ஷியாமலிருத்தல் எவ்வாறு அறிகிற பிராணிவிசேஷத்தைப் பொருத்திருப்பதாகக் காணப்படுகிறதோ, அவ்வாறே அறியத்தக்க வஸ்துவிசேஷத்தைப் பொருத்திருப்பதும் பொருத்தமுள்ளதாக இருக்கிறது. உலகத்தில் கார்யமானது எவ்விதமாக அறியப்பட்டதாக ஆகிறதோ அவ்வண்ணம் காரணத்தை கல்பிப்பதில் பிரமாணமாக ஆகிறதே ஒழிய நன்கு ஸ்பஷ்டமாக நிச்சயிக்கப்பட்டிருக்கிற கார்யமானது காரணநிரூபணத்தின் பொருட்டு அபலாபத்தை அடைவதற்குத் தகுதியுள்ளதாக ஆகிறதில்லை என்கிற ந்யாயத்தினால் பாதிக்கப்பட்டிராத ப்ரதீதியினால் ஸித்தித்திருக்கிற தமஸ்ஸுக்கு உத்பாதகவஸ்துவானது கல்பிக்கத்தக்கதாதலால் உத்பாதகாநுபபத்தியாவது ஜ்ஞாபகாநுபபத்தியாவது இல்லை. எப்படிஎன்றால்- "தமோ நாம த்ரவ்யம் பகுள விரளம் மேசகசலம் ப்ரதீதம் கோபி க்வசிதபிந பாதச்சததிருசே அத: கல்ப்யோ ஹேது: ப்ரமிதிரபிசாப்தீ விஜயதே நிராலோகம் சக்ஷு: ப்ரதயதி ஹித்தர்சனவசாத்", இந்த சுலோகத்துக்குப் பொருள்- நெருக்கமுள்ளதாகவும் இடைவெ

‡ த்ரவ்யம்—குணத்துக்கு ஆச்ரயமாக இருக்கிற வஸ்து.

§ ஆகமம்—சாஸ்த்ரம்.

ளியுள்ளதாக அங்குமிங்கும் ஸ்வல்பமாக இருப்பதாகவும் கருத்தநிறமுள்ளதாகவும் சலிக்கிறதாகவும் அறியப்படுவதால் இருள் ஒரு த்ரவ்யம் ஒருவராலும் ஓரிடத்திலும் இந்த ப்ரதீதிக்கு பாதம் காணப்பட்டிருக்கவில்லை. ஆகையால் ஹேதுவானது கல்பிக்கத்தக்கது இவ்விஷயத்தில் சப்தப்ரமாணத்தால் உண்டான ப்ரமிதியும் விளங்குகிறது. ஸூர்யன் சந்திரன் தீபம் முதலியவைகளின் ப்ரகாசத்தினால் போஷிக்கப்பட்டிருக்கிற ஸஹஜப்ரகாசத்தை இழந்திருக்கிற கண்ணானது அந்த இருளை தர்சனவசத்தால் வெளிப்படுத்துகிறதன்றோ, தமஸ் த்ரவ்யம் என்பதே பாஷ்யகாரருடைய மதம்- ஸித்தாந்தத்தில் அது தூஷிக்கப்பட்டிராததாலும் உண்டுபண்ணத்தக்கதாக இருத்தல் ஸம்ஹரிக்கத்தக்கதாக இருத்தல் சரீரத்வம் இவைகள் கேட்கப்பட்டிருப்பதால் ஸ்வச்ச த்ரவ்யமாக இருப்பதால் இருள் ஆகாசத்தினுடைய கார்யம். பஞ்சீகரணத்தினால் இருட்டில் ரூபத்தோடுகூடியிருத்தல் பொருத்தமுள்ளதாக ஆகிறது. அன்றிக்கே ரூபமுள்ளதாக இருப்பதால் தமஸ்ஸானது தேஜஸ்ஸின் கார்யம். ஸ்வச்ச த்ரவ்யமாக இருப்பதால் ஸ்பர்சத்தினது உபலப்தி இல்லை. இதி நிரவத்யம் என்று. ப்ரமாணத்தினால் ஸித்தித்திருப்பதால் ப்ரமாணவிருத்தமான தர்க்கம் அதடியாக ஸம்பவிக்கக்கூடிய பாதம் இவைகள் பொருந்தாததலால் தோஷமில்லை என்று அர்த்தம்.

---

𑌅𑌤𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 — 𑌅𑌹𑌮𑌜𑍍𑌞𑍋 𑌮𑌾𑌮𑌨𑍍𑌯𑌂 𑌚 𑌨 𑌜𑌾𑌨𑌾𑌮𑍀𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌸𑌹𑌿𑌤𑍇𑌨 𑌕𑍇𑌵𑌲𑍇𑌨 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌨 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌤𑍇 । 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑍇 𑌵𑌿𑌰𑍋𑌧 𑌉𑌕𑍍𑌤𑌃 — 𑌸 𑌹𑌿 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌽𑌪𑌿 𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 । 𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌶𑍍𑌰𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌵𑍍𑌯𑌾𑌵𑌰𑍍𑌤𑌕𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌰𑍍𑌥𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑍋 𑌵𑌾 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑍋 𑌵𑌾 — 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑍇 𑌕𑌥𑌮𑌿𑌵 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 । 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌶𑍍𑌚𑍇𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌵𑌰𑍍𑌤𑌕𑌾𑌶𑍍𑌰𑌯𑌵𑌿𑌷𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑍂𑌨𑍍𑌯𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌥𑌮𑌨𑍁𑌭𑍂𑌯𑍇𑌤 । 𑌅𑌥 𑌵𑌿𑌶𑌦𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌵𑌭𑌾𑌸𑍋𑌽𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑍀 — 𑌅𑌵𑌿𑌶𑌦𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌤𑍇 𑌤𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌵𑌿𑌷𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 𑌨𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍁𑌭𑌵𑌵𑌿𑌰𑍋𑌧 𑌇𑌤𑌿 — 𑌹𑌨𑍍𑌤 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑍇𑌽𑌪𑌿 𑌵𑌿𑌶𑌦𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌷𑌯𑌃 — 𑌆𑌶𑍍𑌰𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍍𑌵𑌵𑌿𑌶𑌦𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌷𑌯𑌮𑌿𑌤𑌿 𑌨 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑌾𑌤𑍍 । 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌹𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌿𑌵 𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 ।

---

ஸ்ரீபாஷ்யம்—

இந்த விஷயத்தில் ஸித்தாந்தம் கூறப்படுகிறது. "அஹமஜ்ஞ:, மாமந்யஞ்ச ந ஜாநாமி" என்கிற இடத்தில் உபபத்தியுடன் கூடியதாயும் தனித்

துமிருக்கிற ப்ரத்யக்ஷத்தினால் பாவரூபமான அஜ்ஞானம் அறியப்படவில்லை. "அஹமஜ்ஞ: மாமந்யஞ்ச ந ஜாநாமி" என்கிற வாக்யஜந்யஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாநப்ராகபாவம் விஷயமெனகிற பக்ஷத்தில் யாதொரு விரோதம் சொல்லப்பட்டதோ, அது பாவரூபாஜ்ஞாநத்திலும் ஸமானம். விஷயமாகவும் ஆச்ரயமாகவும் இருந்துகொண்டு அஜ்ஞாநத்திற்கு வ்யாவர்த்தகமாக ப்ரத்யக் வஸ்துவானது நன்கு பாஸிக்கிறதா? பாஸிக்கவில்லையா? பாஸிக்கிறதென்று சொல்லப்படுமேயாகில், அந்த ப்ரத்யக்வஸ்துவின் ஸ்வரூபஜ்ஞாநத்தினால் நிவர்த்திக்கத்தக்க அந்த அஜ்ஞாநமானது அது பாஸிக்கும் தருணத்தில் எவ்வாறு நிலை பெற்றிருக்கும். ப்ரத்யக் வஸ்துவானது பாஸிக்கவில்லை என்று கூறப்படுமேயானால், வ்யாவர்த்தகாச்ரயவிஷயமாக ஜ்ஞாநசூந்யமான அஜ்ஞானமானது எவ்வாறு அநுபவிக்கப்படலாம் அப்படிக்கின்றி விசதமான ஸ்வரூபத்தினுடைய ப்ரகாசமே அஜ்ஞாநவிரோதி. அவிசதமான ஸ்வரூபமோவென்றால் அறியப்படுகிறதாதலால் ஆச்ரயவிஷயஜ்ஞாநமானது இருக்கும்பொழுதுகூட அஜ்ஞாநாநுபவவிரோதமில்லை என்று. ஸந்தோஷம், அப்படியானால் ஜ்ஞாநப்ராகபாவங்கூட விசதஸ்வரூபத்தை விஷயமாக உடையது. ஆச்ரயப்ரதியோகிஜ்ஞாநமோவென்றால் அவிசதமான ஸ்வரூபத்தை விஷயமாகக் கொண்டதென்பது பற்றி வேறு இடத்தில் பிடிவாதத்தைத் தவிர்த்து ஒரு விசேஷமுமில்லை. அஜ்ஞாநமென்று ஸித்திக்கிற பாவரூபமான அஜ்ஞாநத்திற்கும் ப்ராகபாவஸித்தியில் போல் ஸாபேக்ஷத்வம்* இருக்கவே இருக்கிறது.

ச்ருதப்ரகாசிகை—

பிறகு ஸித்தாந்தம் சொல்வதற்குத் தொடங்குகிறார்— அத்ரோச்யதே என்று. கேவலேநசப்ரத்யக்ஷேண என்பது திருஷ்டாந்தமாக எடுத்துக் கூறப்பட்டது. உபபத்தியும் தூஷணமும் செய்யப்பட்டன, தனித்ததான ப்ரத்யக்ஷ ஸாதகமல்லவென்று பொருள். ஜ்ஞாநப்ராகபாவம் விஷயமென்று சொல்வதில் உபபத்தியன்றோ விரோதம். அது அஜ்ஞாநம் பாவரூபமென்று சொல்லுகிற தருணத்திலும் துல்யமென்று சொல்லுகிறார்— யஸ்து என்று, துல்யத்வத்தை உபபாதனம் செய்கிறார்— விஷயத்வேந என்று. ப்ரதிபன்னசப்தத்தால் பாஸனம் அதாவது ப்ரகாசம் கூறப்படுகிறது— தத்ஸ்வரூபஜ்ஞாநநிவர்த்யம் என்று. ஸ்வரூபஜ்ஞாநம். ஸ்வரூபத்தின் அவபாஸம் அதாவது ப்ரகாசம். தன்னாலேயோ வேறு ப்ரமாணத்தினாலேயோ ஸ்வரூபத்தின்

* ஸாபேக்ஷத்வம்— ஒன்றின் அபேக்ஷையோடு கூடி இருத்தல்.

அவபாஸத்தினுல் போக்கத்தக்கது அல்லது விலக்கத்தக்கதென்று அர்த்தம். இது வெள்ளி என்கிற ஜ்ஞானமுண்டாயிருக்கிற இடத்தில் இது வெண்மைநிறத்துடன் கூடின ப்ரகாசமுள்ள வஸ்து என்கிற இப்படிப்பட்ட நூறுப்ரமாணஜ்ஞானங்கள் உண்டாயிருந்தபோதிலுங்கூட ப்ரமநிவ்ருத்தியினது இன்மை காணப்படுவதால், ப்ரமாணஜ்ஞானம் ப்ரயோஜனமற்றதென்று *ஸித்தவத்காரத்தால், அது ஸ்வரூபஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதென்று உரைக்கப்பட்டது. வ்யாவர்த்தகாச்ரய விஷயஜ்ஞானசூந்யம். ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருத்தலால் ப்ரத்யகர்த்தம் $ வ்யாவர்த்தகம் என்று பொருள். தத்- †அவபாஸமில்லாதது. விஷயத்வேந என்கிற பதத்தை முதன்மையாகக் கொண்டிருக்கிற பாஷ்யத்தால் ஸ்வாத்மவிஷய அஜ்ஞான ப்ரதிபத்தியில் விரோதத்தின் ஸாம்யம் காண்பிக்கப்பட்டது. கடம் முதலியவஸ்துக்களை விஷயமாகக் கொண்டிருக்கிற ஜ்ஞானத்தின்ப்ரதிதியிலுங்கூட அஜ்ஞானம் விஷயமாகஇருப்பதால் வ்யாவர்த்தகமாக கடம் பாஸிக்கிறதா, இல்லையா? பாஸிக்கிறதானுல் கடஸ்வரூபஜ்ஞானத்தினுல் விலக்கத்தக்க கடாஜ்ஞானமானது அந்த கடம் பாஸித்துககொண்டிருக்கையில் எவ்விதமாக நிலைபெறும். கடம் பாஸியாமலிருக்குமேயாகில் வ்யாவர்தகவிஷயஜ்ஞானசூன்யமான அஜ்ஞானமானது எவ்வாறு அனுபவிக்கப்படலாம் என்று அர்த்தஸித்தமான விரோதம் காணத்தக்கது. இவ்வண்ணமாக அன்யனுல் பாவாபாவங்களுடைய விரோதமானது காண்பிக்கப்படவே, அதற்கு ப்ரதிபந்தியாக நிவர்த்ய நிவர்தகவிரோதம் சொல்லப்பட்டது. அதற்குமேல் விசதம் அவிசதம் என்கிற பாகுபாட்டினுல் விரோதத்தினின்மையை சங்கிக்கிறூர்— அத என்று. ப்ரத்யகர்த்தத்திற்கு ப்ரமாணஜ்ஞானத்தால் அவபாஸம் விசதாவபாஸம். அது தன்பக்ஷத்திலும் துல்யம் என்று சொல்லுகிறூர்— ஹந்ததர்ஹி என்று. விசதஸ்வரூபமானது எதற்கு அவச்சேதகமாகஇருக்கிறதோ அது விசதஸ்வரூபவிஷயம். விசதஸ்வரூபத்திற்கு ஸ்வவிஷயமான ஜ்ஞானத்தின் வாயிலாக ப்ராகபாவாவச்சேதகத்வம். ஜ்ஞானப்ராகபாவமும் விசதஸ்வரூபஜ்ஞானாவச்சின்னம் என்று அர்த்தம். ஜ்ஞானத்திற்கு அபாவாவச்சேதகத்வம் ப்ரதியோகியாக இருத்தலால். விசதஸ்வரூபஜ்ஞானம் ப்ராகபாவத்திற்கு ப்ரதியோகி என்று தாத்பர்யம். விரோதத்தின் இன்மை ஸித்திப்பதின்பொருட்டு இருக்கிறஜ்ஞானமானது அதைக்காட்டிலும் வேறு பதார்த்தம் என்று சொல்லுகிறூர்— ஆச்ரய என்று. ஆச்ரயம் ப்ரதியோகி இவ்விரண்டுகளின் ஜ்ஞானம் ஆச்ரயப்ரதியோகிஜ்ஞானம். அவிசதஸ்வருபவிஷயம் என்று. ஆச்ரயஜ்ஞானத்திற்கு அவிசதஸ்ரூபவிஷயத்வமாவது அவிசதமானப்ரத்யகர்த்தத்திற்கு விஷயமாக இருத்தல் ப்ரதியோகிஜ்ஞானத்திற்கு அவிசதஸ்வரூபவிஷயத்வமாவது அபாவத்திற்கு ப்ரதியோகியாக இருக்கிற அவிசதமான ஜ்ஞானத்திற்கு விஷயமாக இருக்கை. விஷயத்துடன் கூடின நிவர்த்தகஜ்ஞானமானது அபாவத்திற்கு ப்ரதியோகியாக இருத்தலால் இப்பொழுது ஜ்ஞானத்தை அவலம்பிக்கிறது. அதில் நிவர்தகஜ்ஞானவிஷயமான ப்ரத்யகர்த்தத்திற்கு இப்பொழுது விசதபாவமில்லாமையாலும் நிவர்தகஜ்ஞானம் இப்பொழுது இல்லாமையாலும் ப்ரதியோகிஜ்ஞானத்திற்கு அவைசத்யம். ஆச்ரயத்துடன் கூடிய ஜ்ஞானமானது இருந்துகொண்டன்றே அபரோக்ஷாவபாஸரூபமாக ஆகிறது. ஆதலால் அத

* ஸித்தவத்காரம்—நிச்சயம்,

$ வ்யாவர்தகம்—வேற்றுமையை உண்டுபண்ணுகிற வஸ்து.

† அவபாஸம்—ப்ரகாசம்.

* ப்ரதியோகி—தவராமல் ஒருவஸ்துவினுல் அபேக்ஷிக்கப்படுகிற வஸ்து.

ற்கு நிகழ்காலத்தில் இல்லாமையினால் வைசத்யத்தின் இன்மை ஏற்படுகிறது. இவ்வண்ணம் ஆச்ரயமாகப்ரகாசிக்கிறஸ்வரூபம் அவிசதமானது. ப்ரதியோகியாக ஸ்மரிக்கப்படுகிறஜ்ஞாநமானது இப்பொழுது அவிசதவிஷயமாக இருப்பதாலும் தத்காலத்திலில்லாததாலும் அவிசதம் என்பதுபற்றி அந்த இரண்டுவிஷயமான ஜ்ஞாநமும் அவிசதஸ்வரூபவிஷயமானது. அதேதா இருக்கிறது. விசதஜ்ஞாநமோவென்றால் இல்லாததாக அபாவத்திற்கு ப்ரதியோகி என்பதனால் விரோதமில்லை என்று அர்த்தம். இது அர்த்தம்—அஜ்ஞாநநிவர்தகமாக அபிமானிக்கப்பட்டிருக்கிற ப்ரமாணஜ்ஞாநத்தின் அபாவமானது முற்றிலும் உன்னாலும் ஒப்புக்கொள்ளத்தக்கது. அப்படி ஒப்புக்கொள்ளாவிட்டால் ப்ரமாணஜ்ஞாநத்தினால் விலக்கத்தக்க அஜ்ஞாநாநுபவம் ஸம்பவியாமல் போவதாதலால். அப்படியானபிறகு உன்னாலொப்புக் கொள்ளப்பட்டிருக்கிற ப்ரமாண ஜ்ஞாநாபாவமே அஹம் அஜ்ஞ: என்கிற ஜ்ஞானத்திற்கு விஷயமாக ஆவதற்குத்தகுதியுள்ளதாக ஆகிறதென்பதுபற்றி அபாவக்ரஹணாநுபபத்தியினால் பாவரூபத்வம் கல்பிக்கத்தக்கதல்லவென்று பூர்வபக்ஷத்தில் சொன்ன விரோதம் எவ்வண்ணம் பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது என்று வினவப்படுமேயானால் இவ்வாறாக பரிஹரிக்கப்பட்டது. அவ்விடத்தில் எந்த அர்த்தத்தை விஷயீகரித்துக்கொண்டிருக்கிற ஜ்ஞானம் அபாவத்துக்கு ப்ரதியோகியாக சொல்லப்படுகிறதோ அபாவத்துக்கு ப்ரதியோகியாக இருக்கிற ஜ்ஞாநத்திற்கு விஷயமாக இருக்கிற அந்த அர்த்தத்தினது ப்ரதிபத்தி இருக்கும் தருணத்தில் அந்த ஜ்ஞானத்தின் அபாவமானது உபபன்னமாகிற தில்லையென்றல்லவோ விரோதம். அந்த விஷயத்தில் இது பரிஹாரம். ஸ்ம்ருதியில் வந்து உதித்திருக்கிற அபாவப்ரதியோகிஜ்ஞானமன்றோ நிஷேதிக்கப்படுகிறது. எப்படி என்றால், கடத்தின் $ ஸாக்ஷாத்காரம் இல்லை என்று நிஷேதமிருக்குந்தருணத்தில் கடத்தின் ஸாக்ஷாத்காரம் ஸ்மரிக்கப்படுகிறது. நினைக்கப்படுகிற வஸ்துவுக்கு நினைவு எந்தகாலத்திலுண்டாகிறதோ அதே காலத்திலிருத்தலென்கிற நியமமில்லாமையால் நிஷேத வேளையில் நினைக்கப்படுகிற பதார்த்தத்திற்கு அபாவப்ரதியோகித்வ விரோதமில்லை. உன்னாலும் ஸ்ம்ருதியில் உதித்திருக்கிற நிவர்தக ஜ்ஞானத்திற்கு * ஸ்ம்ருதி ஸமான காலத்தில் இருத்தலில்லாமையால் அஜ்ஞாநத்திற்கு அவச்சேதகமாக ப்ரதிபத்தி இருந்தபோதிலுங்கூட ஸ்ம்ருதியில் வந்து உதித்திருக்கிற நிவர்தக ஜ்ஞானமானது அஜ்ஞாந விரோதியல்லவென்று சொல்லத்தக்கது. ஆகையால் தன்னை விஷயீகரிக்கிறதும் கடம் முதலிய வஸ்துக்களை விஷயீகரிக்கிறதுமான ப்ரமாணஜ்ஞானமானது தனக்கு விஷயமான ஆத்மாவோடுகூடவும், கடம் முதலிய வஸ்துக்களோடுகூடவும் ஸ்ம்ருதியில் ஆரூடமாய் அவிசதமாகத் தோன்றிக்கொண்டு அபாவத்திற்கு ப்ரதியோகியாக ஆகிறதாதலால் மிகவும் பொருத்தமுள்ளதாக ஆகிறதென்று. அனுபவிக்கப்பட்டிருக்கிறதற்கன்றோ ஸ்மரணம் உண்டாகும். ப்ரமாண ஜ்ஞானம் யாரால் அனுபவிக்கப்பட்டதென்று வினவப்படுமேயானால், உன்னுடைய நிவர்தக ஜ்ஞானம் யாரால் அனுபவிக்கப்பட்டது. ஆகமத்தினாலென்று சொல்லப்படுமேயானால் நமக்கும் ஆத்மஸாக்ஷாத்காரம் அதை விதிக்கிற வாக்கியத்தாலறியப்பட்டிருக்கிறது. கடம் முதலிய வஸ்துக்களின் ஸாக்ஷாத்காரமோவென்றால் ப்ரத்யக்ஷம் முதலியவைகளில் யாரோ ஒருவனால் அனுபவிக்கப்பட்டிருக்கிறது. மேரு பர்வதத்தின் ஸாக்ஷாத்காரம் எவ்வாறு நிஷேதிக்கப்படுகிறது? அதேதாவென்றால் ஒரு ப்ர

$ ஸாக்ஷாத்காரம்—ப்ரத்யக்ஷம்

* ஸ்ம்ருதி — பூர்வாநுபவத்தாலுண்டான ஸம்ஸ்காரமாத்ரத்தினாலுண்டாகிற ஜ்ஞானம.

மாணத்தாலும் முன்பு அனுபவிக்கப்பட்டதன்று சொல்லப்படுகிறது. இந்த இடத்தில் முன்பு யானையைக் கண்டிராத மனிதனால் எவ்வாறு இந்த நந்தவனத்தில் யானை இல்லையென்று சொல்லப்படுகிறது. ஸம்ஸர்க்கத்தின் அனுபவமில்லாவிடினும் ஸம்ஸர்கிகளான இரண்டு வஸ்துக்களின் அனுபவமாத்திரத்தினால் வேறு இடத்தில் இரண்டில் ஒன்றின் நிஷேதம் பொருத்தமுள்ளதாக ஆகிறதென்று கூறப்படுகிறதேயானால், இங்ஙனமாகில் ஸுமேருவின் ஸாக்ஷாத்கார ஸம்ஸர்கானுபவமில்லாவிடினும் மேருவினுடையவும் ஸாக்ஷாத்காரத்தினுடையவும் ஸ்வரூப ஜ்ஞானம் யாரோ ஒருவனுக்கு வந்திருப்பதினால் அவைகளின் ஸம்ஸர்க நிஷேதமானது பொருத்தமுள்ளதாக ஆகிறது. ப்ரமாண ஜ்ஞானங்கள் அபாவ ப்ரதியோகிகளாக இருப்பதால் அபாவத்திற்கு அப்பொழுது க்ராஹக வஸ்துவில்லையென்று எது கூறப்பட்டதோ அது எல்லாப்ரமாண ஜ்ஞானாபாவங்களுக்கும் ஒரே ஸமயத்தில் அனுபவம் ஸம்பவியாததாலால் சில ஜ்ஞானாபாவத்திற்கு வேறு ப்ரமாணத்தினால் க்ரஹணம் உபபன்னமாவதாலும் பரிஹரிக்கப்பட்டுவிட்டது. இவ்வண்ணம் பாவரூப பக்ஷத்தில் விரோத பரிஹாரஸாம்யம் காண்பிக்கப்பட்டது. ஐயா! விரோதஸாம்யம் சொல்வதற்கு ஸாத்தியப்படாது. அஜ்ஞானமானது நஞர்த்தமான அபாவத்திற்கு ப்ரதியோகியான ஜ்ஞானத்துடன் கூடியதாகவே அறியத்தக்கதாக இருந்தாலன்றோ நஞர்த்த ப்ரதியோகியான அந்த ஜ்ஞானமானது தனக்கு விஷயமாகவும் ஆச்ரயமாகவுமிருக்கிற ப்ரத்யகர்த்தத்துடன் கூடியதாக ப்ரகாசிப்பதால் விஷயமாகவும் ஆச்ரயமாகவுமிருக்கிற ப்ரத்யகர்த்தஜ்ஞானமிருக்கும்பொழுது அதனால் போக்கடிக்கத்தக்க அஜ்ஞானத்தின் ஸ்திதி என்று சொன்னால் விரோதம். பாவரூபமான அஜ்ஞானத்திற்கு ஜ்ஞானப்ரதிபத்தியின் அபேக்ஷை இல்லையன்றோ, ஸ்வரூபத்தினாலேயே ப்ரதிபத்தி ஸம்பவிப்பதால், பாவரூபமான கடத்திற்கு ஆச்ரய ஜ்ஞானம் ப்ரதியோகி ஜ்ஞானம் இவைகளை அபேக்ஷித்துக்கொண்டிருத்தல் காணப்பட்டதில்லையன்றோ என்று சொல்லுகிறார்-பாவரூபஸ்ய என்று.

---

तथा हि — अज्ञानमिति ज्ञानाभावस्तदन्यस्तद्विरोधी वा — त्रयाणामपि तत्स्वरूपज्ञानापेक्षा अवश्याश्रयणीया। यद्यपि तस्य स्वरूपप्रतिपत्तौ प्रकाशापेक्षा न विद्यते। तथापि प्रकाशविरोधित्वेनाकारेण प्रतिपत्तौ प्रकाशप्रतिपत्त्यपेक्षा अवश्यंभाविनीत्यज्ञानं न कदापि स्वरूपेण सिद्ध्यति। अपि त्वज्ञानमित्येव। तथा च ज्ञानाभाववत्तदपेक्षत्वं समानं ज्ञानप्रागभावस्थलेऽपि भवताप्यस्य प्रसज्येत, प्रतियोगित्वेनास्याप्येतज्ज्ञानप्रागभावत्वेन तद्गोचरज्ञानोत्पत्त्यसम्भवात् तज्ज्ञानस्य प्रतियोगितया परिग्रहात्। नित्यं च स्वप्रकाशत्वेन ... विषयस्य ... स्वरूपेणाज्ञानानुपपत्तिरित्युक्तं। ... कथं विरोधित्वस्य ... अज्ञानत्वादिति चेत्। किमिदं विरोधित्वं स्वरूपेण? अप्र

ப்ரகாஶிதஸ்வரூபஸித்திரேவ, ஸ்வாநுபவஸ்வரூபஸ்ய ப்ரகாஶி
தஸ்வரூபத்வம்। ஸ்வாநுபவஸ்வரூபஸ்யாபி அந்யேநாப்ரகாஶித
ஸ்வரூபஸம்பந்தஸித்திரேவ, அநுபவாந்தரவ்யாவ்ருத்த
நஸ்ய ஸமநேந ப்ரகாஶமேவஸ்வஸ்வரூபஸ்யாநந்யஸ்வரூபேணாப
ஸம்பந்தாதி ஸந்தவ்யேவோக்தம்।

---

ஸ்ரீபாஷ்யம்—

உபபாதிக்கப்படுகிறது—அஜ்ஞானமென்பது ஜ்ஞாநாபாவமா? அதைக்காட்டிலும் வேறு ஒன்ரு? அல்லது அதற்கு விரோதியா? மூன்றுகளுக்கும் அதன் ஸ்வரூப ஜ்ஞாநாபேக்ஷை அவசியம் ஆச்ரயிக்கத்தக்கது. என்ருலும், தமஸ்ஸின் ஸ்வரூபத்தை அறியும்விஷயத்தில் ப்ரகாசத்தின் அபேக்ஷை இல்லை. ஆயினும் ப்ரகாசத்திற்கு விரோதிஎன்கிற ஆகாரத்தால் ப்ரதிபத்தி ஏற்படும் ஸமயத்தில் அந்த ப்ரதிபத்தியில் ப்ரகாசத்தினுடைய அபேக்ஷை இருக்கவே இருக்கிறது. உமக்கு அபிமதமான அஜ்ஞானமானது ஒருபொழுதும் ஸ்வரூபத்தால் ஸித்திபெருகிறதில்லை. பின்னேயோ அஜ்ஞானமென்றே ஸித்திக்கிறது. அப்படியாகில் ஜ்ஞாநாபாவத்திற்குப்போல் அதை அபேக்ஷித்தல் ஸமானம். ஜ்ஞானத்தின் ப்ராகபாவமோ வென்ருல் உன்னுலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ப்ரதீதிக்கு விஷயமாகவுமாகிறதாதலால் இருவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஜ்ஞாநப்ராகபாவமே அஹம் அஜ்ஞன், அதாவது நான் அறிவில்லாதவன், என்னேயும் மற்றவனேயும் நான் அறிகிறேனில்லை என்று அனுபவிக்கப்படுகிறதென்று ஒப்புக்கொளளத்தக்கது. எப்பொழுதுமே தோஷத்தால் விடுபட்டதும் தனக்குத்தானுகவே ப்ரகாசிக்கின்றதுமான சைதன்யத்தையே தன் உருவாகக்கொண்டிருக்கிற ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞாநானுபவமானது ஸம்பவிக்கிறதில்லை. ஸ்வானுபவ ஸ்வருபமாக இருத்தலால், ஸ்வாநுபவஸ்வரூபமாயிருந்த போதிலும் அவித்யையினுல் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தோடு கூடியதாக இருந்துகொண்டு அஜ்ஞானத்தை அனுபவிக்கிறதென்று சொல்லப்படுமேயானுல் மறைக்கப்பட்டிருக்கிற தன் ஸ்வரூபத்துடன் கூடியிருத்தல் என்பது என்ன? அது ப்ரகாசப்படுத்தப்படாத ஸ்வரூபத்துடன் கூடி இருத்தல் என்று சொல்லப்படுமேயானுல், தன்னுடையதான அனுபவஸ்வரூபத்திற்கு எவ்வாறு ப்ரகாசப்படுத்தப்படாத ஸ்வரூபத்வம் ஸம்பவிக்கும்? தன்னுடையதான அனுபவ ஸ்வரூபத்திற்குங்கூட மற்ருென்றினுல் ப்ரகாசிக்கப்படாத ஸ்வரூபத்தோடுகூடி இருத்

தல் பொருத்தமுள்ளதாக ஆகிறதென்று சொல்லப்படுமேயானல் இப்படியாகில் ப்ரகாசம் என்கிற பெயருள்ள தர்மத்தை ஏற்றுக்கொள்ளாததினல் ப்ரகாசமே ஸ்வரூபமாதலால் மற்றென்றினல் ஸ்வரூபநாசமே ஏற்படுமென்று முக்தியே சொல்லப்பட்டது.

---

ச்ருதப்ரகாசிகை—

எவ்வாறு அபேக்ஷையோடு கூடி இருத்தல் என்று வினவினல் கூறுகிருர்—ததாஹி என்று. அபாவம் நஞர்த்தமாக ஸம்பவிப்பதால் அப்படி சொல்லப்பட்டது. ப்ரமாணஜ்ஞாநத்தைவிட வேறு என்ருவது அல்லது ப்ரமாணஜ்ஞாநத்திற்கு விரோதி என்ருவது அந்த ப்ரதிபத்தி. அப்பொழுது அந்த ஜ்ஞானமானது தன்னுடையதான விஷயத்தால் அவச்சின்னமாகவே அறியப்பட்டிருப்பதால் ப்ரத்யகர்த்தத்தினுடையவோ கடம் முதலிய வஸ்துக்களுடையவோ ஜ்ஞாநம் இருக்கும் தருணத்தில் அந்த ஜ்ஞாநத்தால் போக்கத்தக்க அஜ்ஞானம் க்ரஹிக்கப்படமாட்டாதென்று அர்த்தம். எப்படி இருட்டுக்கு ப்ரகாசவிரோதமிருந்தபோதிலும் அந்த இருட்டு விஷயமான ஜ்ஞாநத்தில் ப்ரகாசாபேக்ஷை இல்லையோ அப்படிப்போல் இங்கேயுமென்று கூறப்படுமேயானல் அதற்கு உத்தரம் சொல்லுகிருர்—யத்யபி என்று. பாவரூபமான அஜ்ஞானமும் ஸ்வரூபத்தால் ஸித்திக்கிறதென்கிற விஷயத்தில் மறுமொழி உரைக்கிருர்—பவநுபமத என்று. 'முக்தோஸ்மி - மூடோஸ்மி' மோஹமுள்ளவனுக இருக்கிறேன், மூடனுக இருக்கிறேனென்று ப்ரயோகபலத்தால் அஜ்ஞானம் ஸ்வரூபத்தால் ஸித்திக்கிறதென்று சொல்லப்படுமேயானல், அல்ல; ஒருமனிதனுக்கு ஏதோ ஒரு விஷயத்திலல்லவோ மோஹம். நிர்மலமான மதியையுடையவன் எவனே அவன் ஆத்மமோஹத்தை அடைகிறனில்லை. 'திங்மோஹாலாதசக்ராதி ப்ராந்தயச்சகதம்புந:' இது முதலிய இடங்களில் மோஹமானது விஷயத்துடனும் ஆச்ரயத்துடனும் கூடியதாகவன்றே அறியப்படுகிறது. முக்தோஸ்மி நான் மோஹமுள்ளவனுக இருக்கிறேன், என்பதனல் ஆச்ரயத்துடன்கூடி இருத்தல் அறியப்படுகிறது. விஷயமும் அர்த்தத்திற்கு அதீனமாக இருத்தலால் ஸித்திக்கிருக்கிறது. இந்த தூஷணமானது 'ஸம்வித் ஸித்திக்கிறதா இல்லையா?' என்கிற இடத்தில் சொல்லப்பட்டிருக்கிற வழியினல் பலித்தது. ஆகையால் ஸ்வாத்மவிஷயமான அஜ்ஞானமானது விஷயமாகவும் ஆச்ரயமாகவுமிருக்கிற ப்ரத்யகர்த்தத்தினுடைய ப்ரதிபத்தியின் இருப்பினல் நாசம் பண்ணப்பட்டுவிட்டது. கடம் முதலியவற்றின் அஜ்ஞானமோவென்ருல் விஷயமாகஇருக்கிற கடம் முதலியவற்றின் ஜ்ஞாநத்திற்கு விருத்தம். மாயாசப்தம் முதலியவைகளால் அஜ்ஞானப்ரதிபத்தி உண்டாகும் தருணத்தில் விஷயம் ஆச்ரயம் இவைகளின் அபேக்ஷை இல்லை என்று சொல்லப்படுமேயானல், இல்லை. மாயைமுதலிய சப்தங்களுக்கும் வ்யுத்பத்தியை அபேக்ஷியாமல் அர்த்தத்தை உணர்த்திவைக்கும் தன்மைஸம்பவியாததால் அஜ்ஞானம் முதலிய பதங்களுக்கு பர்யாயமாகவும் வ்யுத்பன்னமாக இருப்பதால் ஸ்வரூபத்தால் ஸித்தியானது எவ்விதத்தாலும்சொல்லமுடியாதென்கிற அபிப்பிராயத்தால் ஒருக்காலும் ஸ்வரூபத்தால் ஸித்திக்கிறதில்லையென்று சொல்லப்பட்டது. ஐயனே! ஸ்வரூபாவச்சின்னமான அஜ்ஞானப்ரதீதியானது நஞர்த்தத்திற்கு ப்ரதியோகியாதலால் ஜ்ஞாநாவச்சின்னமாகஸித்தித்தபோதிலும் நிவர்த்ய நிவர்தகவிரோதமில்லை. ஸ்வரூபபூதமான ஞாநத்தைக்காட்டிலும் வேருக அது ஸித்திப்பதால், ஸ்வரூபஜ்ஞானமானது அவித்யைக்கு நிவர்த்தகமல்லவன்

ரே, பின்னேயோ ப்ரமாண ஜ்ஞாநமே அவித்யா நிவர்தகம். ஆகையால் விரோதமில்லை என்று. இப்படியல்ல ; என்னையும் மற்றவனையும் நானறிகிறேனில்லை என்று விஷயம் ஆச்ரயம் இவைகளுடன் ஸம்பந்தித்த அஜ்ஞானத்துடன் கூடியதாக ப்ரதீதிவருவதால். ஸ்வரூபபூதமான ஜ்ஞானமானது ஆச்ரயத்துடனும் விஷயத்துடனும் கூடியதென்பது உன்னுடைய மதமல்லவன்றே. ஸ்வரூபமானது ஆச்ரயமாக இருப்பதாலேயே அஜ்ஞானத்திற்கு அவச்சேதகமா? அல்லது விஷயமாக இருத்தலாலுங் கூடவா? முதல் பக்ஷத்தில் உன்னுடைய அபிமதம் ஸித்திக்கிறதில்லை. அப்பொழுது ப்ரத்யகர்த்தத்திற்குத் தன்னைக்காட்டிலும் வேறாக இருக்கிற ஏதோ ஒன்றோடுசேர்ந்திருத்தலேயன்றோ ஸித்திக்கிறது. விஷயமாக இருப்பதால் அவச்சேதகமாகும் பக்ஷத்தில் ப்ரத்யகர்த்தத்திற்கு அஜ்ஞானம் ஆவரணமாக ஆகும். ஆவரணமாக இருத்தலாவது ப்ரத்யகர்த்த விஷயகமான ஜ்ஞானத்திற்கு ப்ரதிபந்தகமாக இருத்தல். ஆகையால் அதை விஷயமாகக்கொண்டிருக்கிற ப்ரமாண ஜ்ஞானத்தின் ப்ரதீதியானது அவசியமாக இருக்கவேண்டியதாதலால் முற்கூறப்பட்டுள்ள விரோதமானது தாண்டப்பட்டதாக ஆகவில்லை. ஆகையால் ஸ்வரூபபூதஜ்ஞான விஷயகமான ப்ரதீதியை ஒப்புக்கொள்வது பொருத்தமுள்ளதன்று. இரண்டு பக்ஷங்களிலும் ஸாதனம் தூஷணம் இரண்டும் துல்யமாக இருப்பதால் பாவரூபமான அஜ்ஞானம் ஏற்றுக்கொள்ளப்படலாம் என்று ஆசங்கித்து லாகவந்யாயத்தால் பரிஹரிக்கிறார்—ஜ்ஞானப்ராகபாவஸ்து என்று. ஒப்புக்கொள்ளப்படுகிறது. அஹம் அஜ்ஞ: என்கிற ஜ்ஞானம் அபாவரூபம் என்றுசொல்வதிலன்றோ * விப்ரதிபத்தி. அபாவத்தின் அநங்கீகாரமோ இல்லை. அப்படி இல்லாவிட்டால் ப்ரமாண ஜ்ஞானத்திற்கு ப்ராகபாவமில்லாமையால் அநாதியாக இருப்பதுபற்றி அதனால் கிரஸனம் செய்யத்தக்க பாவரூபாஜ்ஞாநத்திற்கு உதயமில்லாமை ப்ரஸங்கிப்பதால். ஆகையால் ஜ்ஞாநாபாவம் உன்னால் ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்டது என்று பொருள் அறியவும்படுகிறது. உலகத்தில் அந்தஅந்த ஜ்ஞானத்தினது இன்மையைச்சொல்லவேண்டுமென்கிற விருப்பத்தால் ஜ்ஞானம் நாஸ்திஎன்கிற வ்யவஹாரம் காணப்படுவதால். ப்ரதிபத்தி இல்லாவிடில் சொல்லவேண்டுமென்கிற விருப்பம் பொருந்தாததலால் ஜ்ஞாநாபாவப்ரதீதியானது இருக்கவே இருக்கிறதென்று அர்த்தம். ஆகையால் எல்லோராலும் விவாதமின்றி ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஜ்ஞாநாபாவத்தினாலேயே அஹம் அஜ்ஞ: என்கிற ப்ரதீதியானது பொருந்துகிறதாதலால் இதைவிட வேறான ஒன்றைக்கல்பிப்பதில் ஹேதுவில்லாமையால் லாகவத்தினால் அதே 'அஹம் அஜ்ஞ:' என்கிற ப்ரதீதிக்குவிஷயமாக ஒப்புக்கொள்ளத்தக்கது என்று பொருள். அறிஞர்களால் புகழத்தக்கவரே ! இரண்டுபேர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட அபாவமென்கிற ஒருபதார்த்தம் கிடையாது நம் மதத்தில்அபாவமென்பதுவேறு ஒரு பாவரூபமானவஸ்து. அன்யனுடைய மதத்திலோ பாவத்தைக்காட்டிலும் வேறானது. ஆதலால் எவ்வாறு இரண்டுபேர்களுடையஸம்மதியினால் 'அஹம்அஜ்ஞ:' என்கிற ப்ரதீதிக்கு உபபத்திஏற்படுகிறது? உத்தரம்கூறப்படுகிறது. இரண்டுபேர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டதென்று கூறப்பட்டிருக்கவில்லையன்றோ. பின்னேயோ உன்னால் ஒப்புக்கொள்ளப்படுகிறதென்று உரைக்கப்பட்டது. அபாவசப்தத்திற்கு வாச்யமாக ஒரு அர்த்தம் இருவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அது பாவரூபமானது அல்ல. அதைக்காட்டிலும்வேறானது என்று இவ்வளவே அதில் விவாதம். இந்தஇடத்தில் எது பாவரூபமாக தன்னால் அபிமானிக்கப்பட்டிருக்கிறதோ, எது அதைக்காட்டிலும் வேறாக அபாவசப்தத்திற்கு வாச்யமாக அன்யனால் அபிமானிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்விரண்டி

---

* விப்ரதிபத்தி—விவாதம்.

னுள் ஒன்றினால் அஹம் அஜ்ஞ: என்கிற ப்ரதீதிக்கு உபபத்திவருவதால் அவ்விரண்டைக் காட்டிலும் வேறான ஒரு அர்த்தத்தை கல்பிப்பது பொருத்தமுள்ளதாகஆகாதென்று கூறப்பட்டதாக ஆகிறது என்பதனால் விரோதமில்லை. ஐயனே! அபாவத்தை பாவாந்தரமாக விரும்புகிற உன்னால் ஜ்ஞானப்ராகபாவ சப்தத்தால் பாவரூபமான அஜ்ஞானமானது அங்கீகரிக்கப்பட்டதாக ஆகும். இப்படி அல்ல, இந்த ஆக்ஷேபமானது இரண்டு ஸித்தாந்தங்களையும் அறியாமையினாலன்றோ செய்யப்பட்டிருக்கிறது. ஸ்வயம்ப்ரகாசமாகவே இருக்கிற ஜ்ஞானத்தினுடைய ‡ ஸங்கோசரூபமான ஒரு நிலைமை ப்ராகபாவ சப்தத்தால் சொல்லப்படுகிறதென்பது நமக்கு அபிமதம். ஸ்வப்ரகாசமானஜ்ஞானமல்லாமையால் அஜ்ஞானம் பாவரூபமென்பது அன்யனுக்கு அபிமதம். ஆகையால் அவ்விரண்டுக்கும் எவ்வாறு ஐக்யம். அங்ஙனமாகில் ஜ்ஞானஸங்கோச ரூபமான நிலைமையை விட்டு அஜ்ஞானசப்தத்தால் சொல்லத்தக்கதென்று அன்யனால் சொல்லப்பட்டிருக்கிற பாவரூபமான அஜ்ஞானம் ஸ்வீகரிக்கப்படலாம். பாவரூபத்வம் என்கிற அம்சத்தில் இருவருக்கும் வேற்றுமைப்பாடு இல்லாமையால் என்று வினவப்படுமேயானால் *ப்ராமாணிகபதார்த்தத்தை விட்டுவிட்டு அப்ராமாணிகம் ஸ்வீகரிக்கப்படலாமென்கிற இந்தவிஷயம் பொருத்தமில்லாதது. (நவிஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோவர்ததே) விஜ்ஞாதாவினுடைய விஜ்ஞானத்திற்கு அழிவில்லை எக்காலத்திலுமிருக்கிறது. ஸாக்ஷாத்கரிக்கிற வல்லமையுள்ளவன் எல்லாவற்றையும் பார்க்கிறானன்றோ. வேந்தனே! அந்த அவித்யையினால் மறைக்கப்பட்டிருப்பதனால் க்ஷேத்ரஜ்ஞன் என்கிறபெயரையுடைய சக்தியானது எல்லா ப்ராணிகளிடங்களிலும் ஏற்றத்தாழ்த்தியுள்ளதாக இருக்கிறது. அது ப்ரசஸ்தப்ராணனில்லாத வஸ்துக்களிடத்தில் ஸ்வல்பமாகஇருக்கிறது என்கிற அர்த்தமுள்ள (அப்ராணிமத்ஸு ஸ்வல்பாஸா) என்று தொடங்கி (ஹிரண்யகர்ப்போதிதராம்பும்ஸ: சக்த்யுபலக்ஷித:) நான்முகன் புருஷர்களுக்குள் அதிகமான சக்தியுடன்கூடியவராகக் காணப்பட்டிருக்கிறார் என்று ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் ஸித்தமாக இருப்பதால் ப்ராமாணிகமான ஜ்ஞான நித்யத்வமும் அதன் ஸங்கோசம் முதலியதும் எவ்வாறு இழக்கக்கூடியதாக ஆகும். பாவரூபமான அஜ்ஞானமோ கல்பிக்கத்தக்கது. கல்பனைக்கு ஸாதகமான வஸ்து அன்யதாஸித்தமாக இருப்பதால் அப்ராமாணிகமான அந்த வஸ்து எவ்வாறு ஸ்வீகரிக்கப்படலாம். கல்பனையிலோவென்றால் லாகவந்யாயம் ப்ரவர்த்திக்கிறது. ப்ரமாணத்தினால் ஸித்தித்த அர்த்தத்திலோவென்றால் அந்த லாகவந்யாயம் ப்ரவ்ருத்திக்கிறதில்லை. ஆகையால் ‘அஹம் அஜ்ஞ:’ என்று ஜ்ஞானப்ராகபாவமே ப்ரதீதிவிஷயமாகிறது. இவ்வண்ணமாக ‘அஹம்அஜ்ஞ:’ என்கிற ப்ரத்யக்ஷமானது பாவரூபமான அஜ்ஞானத்திற்கு விஷயமென்பதில் ப்ரவரூபமான பக்ஷத்திற்கு உபபத்தி, அபாவரூபமான பக்ஷத்திற்கு அனுபபத்தி ரூபமான அனுகூலதர்க்கத்தினது அபாவம் கூறப்பட்டது. அதற்கு மேல் ப்ரதிகூல தர்க்கத்தினால் பாதஹனி கூறப்படுகிறது—நித்ய என்று. ‘நித்யமுக்த ஸ்வப்ரகாசசைதன்யைக ஸ்வரூபஸ்ய’ என்கிற பதம் ஹேதுவை உள்ளடக்கிக்கொண்டிருக்கிறது. நித்யமுக்தத்வமாவது பரமார்த்தமாகவே தோஷத்தால் தொடரப்படாமலிருத்தல், ஆதலால் பரமார்த்ததோஷம் ஸம்பவிக்கிறதில்லை. ஸ்வாநுபவஸ்வரூபமாக இருப்பதால் அபரமார்த்தமானபரானுபவம் ஸம்பவிக்கிறதில்லை என்று பொருள். அந்யானுபவரூபமானப்ரதேசபேதமில்லாமையாலும் என்பது ஏகசப்தாபிப்ராயம். ஏகசப்தத்தால் அறியத்தக்கதன்மையின் இன்மையும்சொல்ல

‡ ஸங்கோசம்—சுருங்குதல்

* ப்ராமாணிகம்—ப்ரமாணத்தினால் ஸித்தித்த வஸ்து

விரும்பப்பட்டிருக்கிறது. அபிப்ராயப்படப்பட்டிருக்கிற ஹேதுகர்ப்பத்வத்தை விவரிக்கிறார்-ஸ்வாநுபவஸ்வரூபத்வாத் என்று. அவித்யையினது நிவ்ருத்திதசையில் தொடர்ந்துவருகின்ற அவித்யாவபாஸவிரோதியான ஸ்வாநுபவத்தையே ஸ்வபாவமாகக்கொண்டிருத்தலென்கிற தன்மைஹேதுவாகச்சொல்லக்கருதப்பட்டிருக்கிறதேயொழிய ப்ரமமுண்டாகிற வேளையிலுங்கூட இருக்கிற ஸ்வயம்ப்ரகாசத்வம் மாத்ரம்சொல்லக்கருதப்பட்டிருக்கவில்லை. ஆகையால் ஸ்வாநுபவத்தையே ஸ்வபாவமாகக்கொண்டிருத்தல் மூர்த்தியுமிருப்பதால் என்றுபொருள். ஸ்வாநுபவ ஸ்வரூபத்திற்குங்கூட திரோதானத்தால் அஜ்ஞாநாநுபவம்ஸம்பவிக்கிறதென்று சங்கிக்கிறார்-ஸ்வாநுபவ என்று. தன்னபிப்ராயத்திற்கு இசைந்த அர்த்தத்தை விவரிப்பதற்கு திரோதான சப்தத்திற்கு வேறு அர்த்தமில்லை என்கிறதை ஜ்ஞாபிப்பதற்காக வினவுதலை முன்னிட்டுக்கொண்டு திரோதான சப்தார்த்தத்தைச் சொல்லுகிறார்—கிமிதம்திரோஹிதஸ்வஸ்வரூபத்வம் அப்ரகாசித ஸ்வரூபத்வமிதி சேத் என்று. ஸ்வாநுபவஸ்வரூபத்திற்கு ப்ரகாசிக்கப்படாமலிருத்தல் வ்யாஹதமென்கிற புத்தியால் தூஷிக்கிறார்—ஸ்வாநுபவ என்று. அன்யத: என்று பரிஹாரத்தை சங்கிக்கிறார்—ஸ்வாநுபவ என்று. வேறு வஸ்துவினால் ப்ரகாசிப்பிக்கப்படாத ஸ்வரூபத்துடன்கூடியிருத்தல் என்று சொல்லும்பக்ஷத்தில் முற்கூறப்பட்டுள்ள தூஷணத்தை அதிதேசிக்கிறார்—ஏவம்தர்ஹி என்று.

---

கிஞ்ச—ப்ரஹ்மஸ்வரூப திரோதாந ஹேதுபூதா-
ஜ்ஞாநம் ஸ்வயமநுபூதிகம் ஸத் ப்ரஹ்ம திரஸ்கரோதி, ப்ரஹ்மதிரஸ்க்ருத்ய ஸ்வயம் ததநுபவவிஷயோ பவதீத்யேதந்நாந்யாத்ருஷ்டம் । அநுபூதேரேவ திரஸ்கரோதீதி சேத், யதி அதிரோஹிதஸ்வரூபமேவ ப்ரஹ்ம அஜ்ஞாநமநுபவதி ததா திரோதாநகல்பநா நிஷ்ப்ரயோஜநா ஸ்யாத். அஜ்ஞாநஸ்வரூபஶ்ச நாஶ: । ப்ரஹ்மணோঽஜ்ஞாநதர்ஶநவத் அஜ்ஞாநகார்யாபிதவ்யஞ்ஜநதர்ஶநஸ்யாபி ஸம்பவாத் । கிஞ்ச, ப்ரஹ்மணோঽஜ்ஞாநாநுபவ: கிம் ஸ்வதோঽந்யதோ வா? ஸ்வதஶ்சேத் அஜ்ஞாநாநுபவஸ்ய ஸ்வரூபாநுபந்தித்வேநாநிர்மோக்ஷ: ஸ்யாத் । அநுபூதிஸ்வரூபஸ்ய ப்ரஹ்மணோঽஜ்ஞாநாநுபவஸ்வரூபமேவ ந ஶுக்திரஜதவாயதஜ்ஞாநேந ரஜதாநுபவஸ்யாபி நிவ்ருத்திவதஜ்ஞாநேநாஜ்ஞாநாநுபூதிரூப ப்ரஹ்மஸ்வரூபநிவ்ருத்திர்வா । அந்யதஶ்சேத், கிந்ததந்ய: । அஜ்ஞாநாந்தரமிதி சேத், அநவஸ்தா ஸ்யாத் । ப்ரஹ்மதிரஸ்க்ருத்யைவ ஸ்வயமநுபவவிஷயோ பவதீதி சேத், ததா ஸதி இதரஜ்ஞாநங்காவாஸ்திவஸ் ஸஸத்யா ப்ரஹ்ம திரஸ்கரோதீதி ஜ்ஞாநவாய்யஸ்வரஜ்ஞாநஸ்ய நஸ்யாத் । அயதஜ்ஞாநம் ஸ்வயநாதி ப்ரஹ்மண: ஸ்வஸாக்ஷிகம் ப்ரஹ்மஸ்வரூபதிரஸ்க்ருதிம் ச ஸ்வயமேவ கரோதி,

அந்யோந்யாச்ரயதோஷம் வருகிறது. அனுபவிக்கப்பட்டதாகவே இருந்து கொண்டு அஜ்ஞானம் ப்ரஹ்மத்தை மறைக்கிறதென்று சொல்லப்படுமேயானால் மறைக்கப்படாத ஸ்வரூபத்துடன்கூடியதாகவே ப்ரஹ்மமானது அஜ்ஞானத்தை அனுபவிக்கிறதேயாகில், அப்பொழுது திரோதான கல்பனை ப்ரயோஜனமற்றதாக ஆகும். அஜ்ஞானஸ்வரூபகல்பனையும், ப்ரஹ்மத்துக்கு அஜ்ஞானதர்சனம்போல அஜ்ஞானத்தின் கார்யமாக அபிமதிக்கப்பட்டிருக்கிற ப்ரபஞ்ச தர்சனமும் ஸம்பவிப்பதால். மேலும், ப்ரஹ்மத்துக்கு அஜ்ஞானாநுபவமானது தானாகவே இருக்கிறதா? வேறொன்றினால் ஏற்படுகிறதா? தன்னாலேயே உண்டாகிறதென்று சொன்னால் ப்ரஹ்மத்துக்கு அஜ்ஞானாநுபவமானது தன் ஸ்வரூபத்தினாலுண்டுபண்ணப்பட்டதாதலால், ப்ரஹ்மத்துக்கு அஜ்ஞானத்தினின்று விடுதலை இல்லாமல் போகவேண்டியதாகும். அநுபூதி ஸ்வரூபமான ப்ரஹ்மமானது அஜ்ஞானாநுபவ ஸ்வரூபமாக இருப்பதால் மித்யாரஜதபாதக ஜ்ஞானத்தால் ரஜதாநுபவத்திற்குங்கூட நிவ்ருத்தி உண்டாவதுபோல், நிவர்த்தகஜ்ஞானத்தால் அஜ்ஞானாநுபூதிரூபமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தின் நிவ்ருத்தியாவது உண்டாகலாம். வேறொன்றினாலென்றால் அந்த வேறான வஸ்து எது? வேறொரு அஜ்ஞானமென்று கூறப்படுமேயானால் அநவஸ்தை உண்டாகும். ப்ரஹ்மத்தை மறைத்தேதான் அனுபவவிஷயமாக ஆகிறதென்று சொல்லப்படுமேயாகில், அங்ஙனமாகில் இந்த அஜ்ஞானமானது காசம்முதலிய நேத்திரரோகம்போல், தன்னுடைய இருப்பினாலே ப்ரஹ்மத்தை மறைக்கிறதாதலால் அஜ்ஞானத்திற்கு ஜ்ஞானத்தால் பாதிக்கத்தக்க தன்மை உண்டாகாமல்போகும். அப்படிக்கின்றி இந்த அஜ்ஞானமானது தான் அநாதியாகஇருந்துகொண்டு ப்ரஹ்மத்திற்கு தனக்குச்சாக்ஷியாக இருக்கும் தன்மையையும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தின் மறைத்தலையும் ஒரு ஸமயத்திலேயே செய்கிறது, அதனால் அநவஸ்தை முதலிய தோஷங்களில்லை என்று. இதல்ல, ஸ்வாநுபவ ஸ்வரூபமான ப்ரஹ்மத்துக்கு ஸ்வரூபத்தின் திரஸ்காரமின்றி ஸாக்ஷியாக இருக்கச்செய்தல் பொருந்தாததால். வேறு காரணத்தால் மறைக்கப்பட்டுவிட்டதென்று சொல்லப்படுமேயானால், அப்பொழுது அநாதியாக இருத்தல் என்கிற தன்மையானது விலக்கித்தள்ளப்பட்டுவிட்டது, அநவஸ்தையும் முன்புகூறப்பட்டது. அஜ்ஞானத்தினால் மறைக்கப்படாத ஸ்வரூபத்துடன் கூடின ப்ரஹ்மத்துக்கே ஸாக்ஷித்வத்தை கல்பித்தால் ப்ரஹ்மத்திற்கு ஸ்வானுபவத்தையே முக்கியமாகக் கொண்டிருத்தலும் இல்லாமல்போகும்.

மேலும் அவித்யையினால் ப்ரஹ்மம் மறைக்கப்பட்டால் அந்த ப்ரஹ்மமானது கொஞ்சங்கூட ப்ரகாசிக்கிறதில்லையா ? அல்லது கொஞ்சம் ப்ரகாசிக்கிறதா? முதலாவது கல்பத்தில் ப்ரகாசமாத்திரத்தை ஸ்வரூபமாகவுடைய ப்ரஹ்மத்துக்கு ப்ரகாசமில்லாவிடில் துச்சதை ஏற்படுமென்று அடிக்கடி நம்மால் சொல்லப்பட்டிருக்கிறது. பிந்தின கல்பத்திலோவென்றால் ஸச்சிதாநந்தத்தையே ஸ்வரூபமாகக்கொண்ட ப்ரஹ்மத்தினிடத்தில் எந்த அம்சம் மறைக்கப்படுகிறது? எந்த அம்சம் ப்ரகாசிக்கிறது ? அம்சங்களில்லாததும் விசேஷங்களில்லாததும் ப்ரகாசமாத்ரத்தை ஸ்வரூபமாகவுடைய வஸ்துவினிடத்தில் இரண்டு ஆகாரங்கள் ஸம்பவியாததாலால் ப்ரகாசத்தினுடையமறைதலும் ப்ரகாசமும்ஒரே ஸமயத்தில் பொருந்தாது. அப்படிக்கின்றி ஸச்சிதாநந்தத்தையே ஸ்வரூபமாகக்கொண்ட ப்ரஹ்மமானது அவித்யையினால் மறைக்கப்பட்டிருக்கிற ஸ்வரூபத்துடன்கூடியதாக இருந்துகொண்டு அப்ரகாசம்போல் காணப்படுகிறதென்று சொல்லப்படுமேயாகில் ப்ரகாசமாத்திரத்தை ஸ்வரூபமாகக்கொண்ட ப்ரஹ்மத்திற்கு வைசத்யமாவது அவைசத்யமாவது எவ்விதமாயுள்ளது ? இது சொல்லப்பட்டதாக ஆகிறது, எது அம்சங்களோடும் விசேஷங்களோடுங்கூடியதாக இருந்துகொண்டு ப்ரகாசத்திற்கு விஷயமாக ஆகிறதோ அப்படிப்பட்ட அம்சங்களுடனும் விசேஷங்களுடனும்கூடிய அந்த வஸ்துவின் ஸம்பூர்ணமான அவபாஸம் விசதாவபாஸம். சிலவிசேஷங்களால் விடுபட்டிருக்கிற வஸ்துவின் அவபாஸம் அவிசதாவபாஸம். அதில் எந்த ஆகாரமானது அறியப்பட்டிருக்கவில்லையோ அந்த அம்சத்தில் ப்ரகாசமில்லாமையினாலேயே ப்ரகாசாவைசத்யமில்லை. எந்த அம்சம் அறியப்பட்டிருக்கிறதோ அந்த அம்சத்தில் அது விஷயமான ப்ரகாசம் விசதமே. ஆகையால் எல்லா' இடத்திலும் ப்ரகாசாம்சத்தில் அவைசத்யமானது ஸம்பவிக்கிறதில்லை. விஷயத்திலும் ஸ்வரூபம் அறியப்படாநின்றிருக்கும் தருணத்தில் அதிலுள்ள சில விசேஷங்களின் அப்ரதீதியே அவைசத்யம். ஆகையால் விஷயமல்லாததும் விசேஷங்களில்லாததும் ப்ரகாசமாத்ரமாகவுமிருக்கிற ப்ரஹ்மத்தினிடத்தில் ஸ்வரூபம் ப்ரகாசிக்கும்பொழுது சில விசேஷங்களின் ப்ரதீதிரூபமான அவைசத்யமென்கிற அஜ்ஞாந கார்யம் ஸம்பவிக்கிறதில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

வேறு தூஷணத்தை சொல்லுகிறார் — கிஞ்ச என்று. அபரமார்த்தமாதலால் தானிருந்துகொண்டு தன் ஸத்தையினால் மறைக்கிறதில்லை. பின்னேயோவென்றால் அறியப்படாநின்றுகொண்டு ப்ரஹ்மஸ்வரூபத்தை மறைக்கிறது. ஆதலால் திரஸ்கார

மானது அனுபவத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கிறது. அனுபவமும் திரஸ்காரத்தை முன்னிட்டுக் கொண்டிருக்கிறது. மறைக்கப்படாமலிருக்கிற ஸ்வானுபவ ஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞானாநுபவம் ஸம்பவியாததாலால் அந்யோந்யாச்ரயணமென்றுபொருள். இதைப் பரிஹரிக்கவேண்டியதிருப்பதால் திரஸ்காரத்தை அனுபவபூர்வகமென்று சங்கிக்கிறார்—அநுபூதமேவ என்று. அதில் தூஷணம் சொல்லுகிறார்—யதி என்று. மறைக்கப்படாமலிருந்தபோதிலுங்கூட அஜ்ஞானானுபவம் ஸம்பவிப்பதால். அதற்காக திரோதான கல்பனையும், அதற்காக ஆச்ரயகமான அவித்யாகல்பனையும் பயனற்றவைதென்று பொருள். அதை உபபாதிக்கிறார்—ப்ரஹ்மண: என்று. எவ்வாறு மறைக்கப்படாத ஸ்வரூபத்துடன் கூடியதாக இருந்தபோதிலுங்கூட ப்ரஹ்மத்துக்கு பாமார்த்தமல்லாத அஜ்ஞானத்தின் அனுபவம் ஸம்பவிக்கிறதோ. அவ்வாறே அபரமார்த்தமாக இருக்கிற ப்ரபஞ்சாநுபவமும் மறைக்கப்படாத ப்ரஹ்மஸ்வரூபத்துக்கு ஸம்பவிக்கிறதென்று. அதற்காக திரோதானகல்பனையும் அதற்காக ஆச்ரயகவித்யாகல்பனையும்பயனற்றதென்று அர்த்தம். அநுபவபூர்வகமாகவே திரஸ்காரம் ஸம்பவிக்கிறதென்கிற பக்ஷத்திலேயே விகல்பமுகத்தால் தூஷணங்கூறுகிறார்-கிஞ்ச என்று. ஸ்வத: பக்ஷத்தில் ப்ரஹ்மத்துக்கு அஜ்ஞானத்தினின்று விடுமுறையில்லாமை, ப்ரஹ்மஸ்வரூபநிவ்ருத்தி என்கிற இரண்டு தூஷணங்கள். ஸ்வாநுபவஸ்வபாவி என்கிறவிடத்திலுள்ள அபிப்ராயத்தினால் ஸ்வஜகத்திற்கும் நிவ்ருத்தியானது ஸூசிப்பிக்கப்பட்டது. அந்யத: பக்ஷத்தில் அநவஸ்தை. திரஸ்காரத்தைமுன்னிட்டுக்கொண்டிருக்கிற அநுபவபக்ஷத்தை சங்கிக்கிறார்-ப்ரஹ்ம என்று ப்ரஹ்மஸ்வரூபத்தை மறைத்து அநுபவவிஷயமாகிறதென்றுசொன்னால் ஸத்தையினால் ப்ரஹ்மஸ்வரூப திரஸ்காரமென்று சொல்லப்பட்டதாகஆகும். அறியப்படாதென்றதாக இருந்துகொண்டு ப்ரஹ்மஸ்வரூபத்தை மறைக்கிறதென்று சொல்லப்பட்டதாக ஆகாது. அப்பொழுது $ காசம் முதலியதுபோல் பரமார்த்தமாக இருப்பதால் ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதாக இருத்தல் ஸித்தியாதென்று அர்த்தம். அதற்குமேல திரஸ்காரம் அனுபவம் இரண்டிற்கும் ஒரே ஸமயத்திலிருத்தல் சங்கிக்கப்படுகிறது—அதைதம் என்று. அதைத் இதுமுதலிய கிரந்தத்தினால் தூஷிக்கிறார். ஸ்வாநுபவஸ்வரூபஸ்ய என்பது ஹேதுகர்ப்பமான விசேஷணம். ஸ்வாநுபவஸ்வரூபமானது ஸ்வாபாவிகமாக இருக்கிறது. பராநுபவமானது ஹேதுவில்லாமல் பொருந்துகிறதில்லை என்று அர்த்தம். வேறுஹேதுவினால் திரஸ்காரத்தை ஆசங்கித்து தூஷிக்கிறார்—ஹேது என்று. திரஸ்காரம் அநுபவம் இரண்டும் ஒரே ஸமயத்தில் ஸம்பவிக்கிறது என்கிற பக்ஷத்தில் முன் சொல்லப்பட்ட இரண்டு பக்ஷ தூஷணமும் வருகிறது. என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—அநவஸ்தாச பூர்வோக்தா என்று. இந்த அநவஸ்தையானது, ஜ்ஞானத்தினால் நிவர்த்திக்கத்தகாததாக இருத்தலென்கிற தூஷணத்திற்கும் உபலக்ஷணம். அடுத்துமுந்தி கூறியிருப்பதனுல், ஸ்வரூபத்தின் திரஸ்காரமில்லாமல் ப்ரஹ்மத்திற்கு ஸாக்ஷித்வத்தை ஏற்படுத்துவதில் அநிஷ்டத்தைக்கூறுகிறார்—அதிரஸ்க்ருத என்று

முன்பு விசதா விசதாவபாஸத்தை ஒப்புக்கொண்டு தூஷணம் உரைக்கப்பட்டது. இப்பொழுதோ வென்றால் அதையே தூஷிப்பதற்குத் தொடங்குகிறார்—அபிச என்று. விகல்பிக்கிறார்-அவிசிஷ்யமா என்று. முற்கூறப்பட்டுள்ள தூஷணத்தை அதிதேசிக்கிறார்-பூர்வஸ்மின் என்று. உத்தரஸ்மின் என்று. கிம்சப்தமானது நிந்தையில். பொருந்தாதென்று கருத்து. ஸத்சித்ஆநந்தம் முதலிய சப்தங்களுங்கூட ஸ்வரூப மாத்ரபரமென்று

$ காசம்—நேத்ரரோகம்.

ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால் மறைக்கப்பட்டுள்ளது மறைக்கப்பட்டிருந்தது என்கிற பிரிவானது பொருத்தமுள்ளதாக ஆகாது என்று கருத்து கோயமம்ச: திரஸ்க்ரியதே கோவரப்ரகாசதே என்று. இது எந்த விசேஷம் மறைக்கப்படுகிறது. எந்த விசேஷம் ப்ரகாசிக்கிறது என்பதற்குங்கூட உபலக்ஷணார்த்தமாக இருக்கிறது 'நிரம்சே நிர்விசேஷே' என்று. அடுத்து உரைத்திருப்பதனுல்-கோயமம்ச: என்று. அம்சபேதமானது சொல்வதற்கு சக்யமல்லவென்று அபிப்பிராயம். அதை உபபாதனம் செய்கிறார்—நிரம்சே என்று. ப்ரகாசமாத்ரே - மாத்ரச்ப்ரத்யயத்தினுல் அவிஷயத்வம் சொல்லக்கருதப்பட்டது. அவிஷயமாக இருக்கிற என்று பொருள் யுகபத் நஸங்கச்சேதே என்று. உன்னுல் காலபேதத்தால் ப்ரகாசமும் அதன் திரஸ்காரமும் சொல்லப்படுகிறதில்லையன்றோ. பின்னையோவென்ருல் ஒரு ஸமயத்திலேயே அப்பொழுது அம்சபேதமில்லாமையாலும் ஆகாரபேதமில்லாமையாலும் அவ்விரண்டும் ஸங்கதங்களாக ஆகிறதில்லை என்று கருத்து. இவ்வண்ணம் ப்ரகாசம் திரஸ்காரம் இரண்டுக்கும் ஒரே ஸமயத்திலிருத்தலுக்கு அனுபபத்தி இருந்தபோதிலுங்கூட அவிசத சப்தத்தினுல் எதிர்த்து விவாதம் செய்கிறான்—அத என்று. அத என்கிற சப்தமானது அனுமதிகொடுத்தலென்கிற அர்த்தத்தில் இருக்கிறது. தூஷிக்கிருர்—பரகாச என்று. கிம்ருபா-பொருந்தாதென்று அர்த்தம். அனுபபத்தி எவ்வாருக வருகிறதென்கிற சங்கைவரின் வைசத்யா வைசத்யஸ்வரூபத்தைச் சிக்ஷிப்பதற்காக இங்கே அதின் அனுபபத்தியையும் காண்பிப்பதற்காகச் சொல்லுகிருர்— ஏததுக்தம் என்று. வைசத்யா வைசத்யஸ்வரூபத்தை சிக்ஷிக்கிருர். யஸ்ஸாம்ச: இது முதலியதால். ஜ்ஞானத்தில் அதினது அனுபபத்தியைக்கூறுகிருர்-தத்ர என்று. ப்ரகாசாபாவதேவ ப்ரகாசாவைச்சத்யம்நவித்யதே என்று. தர்மி இல்லாமையால் தர்மமில்லை என்று பொருள். அறியத்தக்கவஸ்துவினிடத்திலும் அறியப்பட்ட அம்சமானது விசதமாக இருப்பதாலும் அறியப்பட்டிராத அம்சமானது அறியப்படாமலிருப்பதாலும் ஓரிடத்திலும் அவைசத்யம் ஸம்பவிக்கிறதில்லை என்று சொல்லுகிருர்—விஷயேபி என்று. ஒரு வஸ்துவில் சில அம்சத்திற்காவது சில ஆகாரத்திற்காவது ப்ரகாசத்தின் இன்மையானது ஸமுதிதரூபத்தினுடைய அவைசத்யமேஒழிய அந்த இடத்திலும் ப்ரகாசிக்கிற அம்சத்திற்கு அவைசத்யமென்பதில்லை என்று பொருள். தஸ்மாத் என்று. ஸ்வரூபே ப்ரகாசமாநே என்பதற்கு ப்ரஹ்மணி என்கிற முந்தின பதத்தோடு அன்வயமில்லை, பின்னேயோவென்ருல் பிந்தி இருக்கிறதில் அன்வயம். ஸ்வரூபம் ப்ரகாசித்துக்கொண்டிருக்கையில் சிலவிசேஷங்களின் அப்ரதிபத்திரூபமான அவைசத்யம் ப்ரஹ்மத்தினிடத்தில் ஸம்பவிக்கிறதில்லை என்று அர்த்தம். சில விசேஷங்களின் அப்ரதிபத்தி என்கிற சப்தமானது சில அம்சங்களின் அப்ரதிபத்தி என்பதற்கும் உபலக்ஷணமாக இருக்கிறது

---

[illegible]

க்த: । அபிச அபாரமார்த்திகதோஷமூலப்ரமவாதிநா நிரதிஷ்டாநப்ரமா ஸம்பவ: கதமபி நோபபாதநீய: । ப்ரமஹேதுபூததோஷவத் தோஷாஶ்ரயத்வவ ச்சாதிஷ்டாநாபாரமார்த்யேபி ப்ரமோபபத்தே: । அத: ஸர்வஶூந்ய த்வமேவ ஸ்யாத் ।

ஸ்ரீபாஷ்யம்—

மேலும், இந்த அவித்யையின் கார்யமாக இருக்கிற அவைசத்யமானது தத்வஜ்ஞாநத்தின் உதயத்தால் விலகுகிறதா இல்லையா? விலகுகிறதில்லை என்று சொன்னால் மோக்ஷமில்லை. விலகுகிறதென்று சொல்வாயேயாகில் வஸ்துவானது எவ்விதமான ஸ்வரூபமுள்ளதென்று பகுக்கறியத்தக்கது. விசதஸ்வரூபமென்று சொல்வாயானால் அந்த விசதஸ்வரூபமானது முன் இருக்கிறதா இல்லையா? இருக்கிறதென்று சொல்லப்படுமேயானால் அவித்யையின் கார்யமான அவைசத்யமும் அதின் நிவ்ருத்தியும் உண்டாகமாட்டாது. இல்லை என்று சொல்வாயேயாகில் மோக்ஷமானது கார்யமாக ஆவதால் அந்த மோக்ஷத்திற்கு அநித்யத்வம் ஏற்படும். இந்த அஞ்ஞானத்திற்கு ஆச்ரயத்தை நிருபணம் செய்யாமையினாலேயே அஸம்பவம் முந்தியே உரைக்கப்பட்டிருக்கிறது. மேலும், பரமார்த்தமாக இராத தோஷத்தினடியாக ப்ரமத்தைச்சொல்பவனால் ஆச்ரயமில்லாத ப்ரமத்தின் அஸம்பவமும் எவ்விதத்தாலும் உபபாதிக்கமுடியாதது ப்ரமத்துக்கு ஹேதுவாக இருக்கிற தோஷம் போலவும் தோஷாச்ரயத்வம் போலவும் அதிஷ்டானம் அபாரமார்த்தமாக இருந்தபோதிலுங்கூட ப்ரமம் பொருந்தமுள்ளதாக இருப்பதால். ஆகையால் ஸர்வசூன்யத்வமே உண்டாகும்.

ச்ருதப்ரகாசிகை—

வேறுவிதத்தால் தூஷணம் கூறுகிறார்—அபிச என்று. அவித்யாகார்யம் தன்னிவ்ருத்திப்ரஸங்கஸ்யாநாம் என்று. விசதஸ்வரூபமுள்ள வஸ்துவானது அவித்யைக்கு விரோதியாக இருப்பதால் என்று கருத்து - மோக்ஷஸ்யகார்யதயா என்று மோக்ஷஸ்ய-முக்தஸ்வரூபத்திற்கு. பாவரூபத்வமிருக்கையில் கார்யமன்றோ அநித்யம் வைசத்யமோ பாவரூபமானது. ஆகையால் அன்யமதத்தில் உன்னால் சொல்லப்பட்ட தூஷணம் உனக்கே வந்துசேருகிறது என்று அர்த்தம். முந்தி இல்லாதிருந்து பிந்தி உண்டாய் இருக்கிற வைசத்யத்திற்கு அநித்யத்வ ப்ரஸங்கம் பாதிதமானது. சாஸ்திரத்தினால் அது நித்யமென்று ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால் என்று சொல்வாயேயானால் அப்பொழுது ப்ரஹ்மத்திற்கு விசேஷங்களோடு சேர்ந்திருத்தலுண்டாகுமென்று அபிப்

ராயம். முற்கூறப்பட்டுள்ள ஆச்ரயாநுபபத்தியை அன்யனுல் சொல்லப்பட்டிருக்கிற ப்ரத்யக்ஷப்ரமாணத்திற்கு ப்ரதிகூலதர்க்கமாகச்சொல்லுகிறுர்—அஸ்ய என்று. ஸ்வரூபா நாதித்வம் முதலிய வழிகளால் பரிஹாரங்களுக்கு ப்ரதிபந்திபாவத்தை உள்ளத்தில் வைத்துக்கொண்டு வேறு தூஷணம் கூறுகிறுர்—அபிச என்று. எப்படி தோஷம் தோஷாச்ரயத்வம் முதலியது அபரமார்த்தமாக இருந்தபோதிலுங்கூட ப்ரமம் ஸம்பவிக்கிறதோ அப்படிப்போலவே அதிஷ்டானம் அபரமார்த்தமாக இருந்தபோதிலுங்கூட ப்ரமம் ஸம்பவிக்கிறது. அதிஷ்டானம அபரமார்த்தமாகில் அதுவும் ப்ரபஞ்சம்போல அபாரமார்த்யமாகப்போய்விட்டதுபற்றி வேறு அதிஷ்டானுபேக்ஷை உண்டாவதால் அநவஸ்தை உண்டாகுமென்று சொல்வாயேயானுல் அங்ஙனமாகில் தோஷத்திற்கும் ப்ரபஞ்சத்திற்குப்போல் பாரமார்த்யமில்லாமையால் தோஷாந்தராபேக்ஷையினுல் அநவஸ்தை உண்டாகும். தோஷம் அபரமார்த்தமாக இருந்தபோதிலும் ஸ்வரூபம் அநாதியாக இருப்பதால் அநவஸ்தை இல்லை என்று சொல்லப்படுமேயானுல் அங்ஙனமாகில் அதிஷ்டானம் அபரமார்த்தமாக இருந்தபோதிலும் ஸ்வரூபம் அநாதியாக இருப்பதால் அனவஸ்தை இல்லை. ப்ரவாஹம்போல் அநாதியாக இருப்பதாலும் துர்கடமாக இருப்பதாலும் பரிஹாரம் என்பதும் துல்யம். தோஷமானது ப்ரபஞ்சதர்சனத்திற்கும் ஸ்வதர்சனத்திற்கும்தானே நிர்வாஹகமாக இருப்பதுபற்றி தோஷாந்தராபேக்ஷையினுல் அநவஸ்தை இல்லை என்று சொல்லப்படுமேயானுல் அல்ல, அபரமார்த்தமாக இருக்கிற இதற்கு ஸ்வபர நிர்வாஹகத்வம் ஸம்பவியாதாதலால். ஸ்வப்நத்தில் த்விசந்த்ரஜ்ஞாநத்திற்கு ஹேதுவாக இருக்கிற விரல்களின் வின்யாஸ விசேஷமானது ஸ்வகல்பநத்தில் தோஷத்தை அபேக்ஷியாததாக இல்லையன்றே. அபரமார்த்த வஸ்துவுக்கு ஸ்வபரநிர்வாஹகத்வம் ஸம்பவிக்கட்டும். அப்படியானுல் அதிஷ்டானுபாரமார்த்யமிருந்தபோதிலும் ஸ்வபரநிர்வாஹத்வமிருப்பதால் அநவஸ்தை உண்டாகாது. அபரமார்த்த வஸ்துவுக்கு வேறு ஒருவஸ்துவைக்குறித்து அதிஷ்டானதவம் ஸித்தித்திருந்தாலன்றே ஸ்வநிர்வாஹகத்வம் ஸித்திக்குமென்றுசொல்லப்படுமேயானுல், அபரமார்த்தத்திற்கு மற்றென்றைக்குறித்து தோஷத்வம் ஸித்தித்திருந்தாலன்றே ஸ்வநிர்வாஹகத்வம் என்பதினுல் துல்யம். மித்யையாக இருக்கிற ஜகத்தினுடைய தோற்றத்தினுல் தோஷத்வம் ஸித்தமென்று கூறப்படுமேயானுல் அப்பொழுது அதனுலேயே அதிஷ்டானத்வமும் ஸித்தமாதலால் அதிஷ்டாநத்துக்கு ஸ்வபர நிர்வாஹகத்வம் ஸித்திக்கிறது அதிஷ்டானம் அபரமார்த்தமாக இருந்தால் ப்ரமம் எங்கும் காணப்பட்டதில்லை என்று சொல்லப்படுமேயானுல் தோஷதோஷாச்ரயத்வங்கள் அபரமார்த்தங்களாக இருந்தபோதிலும் ப்ரமம் காணப்பட்டதில்லை என்பதனுல் சர்சைதுல்யமென்று அபிப்ராயம் அதனுல் என்னவென்று கேட்கின் கூறுகிறுர்—ததஃச என்று. இவ்வண்ணம் நான் அஜ்ஞன் என்னையும் மற்றவனையும் அறிகிறேனில்லை என்கிற ப்ரத்யக்ஷத்திற்கு ப்ரதிகூல தர்க்கத்தினுல் அழிவு சொல்லப்பட்டது.

இந்த இடத்தில் சிலர் கூறுகிறுர்கள்—தூங்கி எழுந்திருப்பவனுடைய ' நான் ஒன்றையும் அறிந்தேனில்லை ' என்கிற பராமர்சத்தின் இன்றியமையாமையே பாவரூபாஜ்ஞாநத்தில் ப்ரமாணம். எவ்வாறு இன்றியமையாமை? இவ்வாறாக, நான் ஒன்றையும அறிந்தேனில்லை என்கிற பராமர்சமானது ஜ்ஞாநாபாவத்தை விஷயமாகக்கொண்டதல்ல. ஸ்வாபத்தில் ஜ்ஞாநாபாவமானது அனுபவிக்கப்பட்டிருததால், ஜ்ஞாநாபாவாநுபவத்தில் விஷயாவச்சின்னமான ப்ரதியோகியாக இருக்கிற ஜ்ஞானத்தினுடைய அபவாஸமன்றே ஒப்புக்கொள்ளத்தக்கது. அதை ஒப்புக்கொண்டால் ஸுஷுப்திக்கு வ்யாகாதம் வருகிறது. இது அஸ்மாணலிங்கத்தினுல் உண்டாகிறதும் ஜ்ஞாநாபாவ

த்தை விஷயமாக உடையதுமான அநுமிதிரூபமான ஜ்ஞானமென்று சொல்லத்தக்கதல்ல. அஸ்மரணத்திற்கு அநநுபவவ்யாப்யத்வமில்லாமையால், வழியில் செல்லுகிறவனால் தொடப்பட்ட த்ருணம் முதலியது ஸ்மரிக்கப்படுகிறதில்லையன்றோ. ஆகையால் ஸுஷுப்தியில் அநுபவிக்கப்பட்டிருக்கிற பாவரூபமான அஜ்ஞானமானது நான் ஒன்றையுமறியேன் என்கிற ப்ரத்யவமர்சத்தால் ஸ்மரிக்கப்படுகிறது. ஆகலால் அந்த ஸ்மரணத்தின் இன்றியமையாமையால் பாவரூபமான அஜ்ஞானம் ஸித்திக்கிறது-என்று. இது பொருந்துகிறதில்லை. அஜ்ஞானம் பாவரூபமாக இருந்தபோதிலுங்கூட அதற்கு ப்ரதியோகியின் அபேக்ஷையானது உபபாதிக்கப்பட்டிருப்பதால். ப்ரதியோகிக்கு ஸுஷுப்தியில் அவபாஸமில்லாமையால் அதின் ஸ்மரணம் பொருந்தாததலால் ப்ரதியோகியான ஜ்ஞானத்தினுடைய அவபாஸமவரின் ஸுஷுப்திவ்யாகாதம் உன்னாலேயே உரைக்கப்பட்டது. அதைக்காட்டிலும் வேறாக இருக்கிற வஸ்துவைச்சொல்லுகின்ற நஞர்த்தத்திற்கு ப்ரதியோகிஸ்வரூபமாக இருக்கிற ஜ்ஞானமானது அப்பொழுது ப்ரகாசிக்கிறதென்று சொல்லத்தக்கதல்ல. நான் ஒன்றையும் அறிந்திலேன். என்னையும் மற்றவனையும் அறிகிறேனில்லை என்று விஷயங்களோடுகூடிய ஜ்ஞானத்திற்கு ப்ரதியோகித்வம் அறியப்படுவதால். ஆகலால் அது அவபாஸிக்காவிடில் அஜ்ஞானாநுபவமில்லாமையால் அதின் ஸ்மரணம்பொருந்தாது. மேலும் ஸுஷுப்தியில் பாவரூபமான அஜ்ஞானத்தின் அநுபவமானது நிர்விகல்பமனோவ்யாபாரத்தினாலா? ஸவிகல்பகமனோவ்யாபாரத்தினாலா? முதல் பக்ஷத்தில் தனக்கு அபிமதமாக இருக்கிற ஸாக்ஷிசைதன்யாவபாஸரூபமான நிர்விகல்பத்திற்கு ஸம்ஸ்காரத்தை உண்டென்னும் திறமை ஒப்புக்கொள்ளப்படாததால் ப்ரதிஸந்தானமானது பொருந்தாது. இரண்டாவது பக்ஷமும் ஸரியல்ல. ஸுஷுப்திவிரோதத்தினால் அப்பொழுது மனோவ்யாபாரம் ஸம்பவியாததால். அதனால் நகிஞ்சிதவேதிஷம் என்கிற ஜ்ஞானம் ஸ்மரணமல்ல. பின்னையோ அஸ்மரணத்தை *லிங்கமாக உடையதும் ஜ்ஞானாபாவத்தை விஷயமாக உடையதுமான அநுமிதிரூபம். வழியில் செல்லுகிறவனால் தொடப்பட்டிருக்கிற த்ருணம் முதலிய வஸ்துக்களின் அஸ்மரணத்தினால் †வ்யபிசாரமில்லை. வேறு வ்யாஸங்கம் முதலிய ஸம்ஸ்காரவிரோதிகளின் அபாவத்தால் விசேஷிக்கப்பட்டிருக்கிற அஸ்மரணத்திற்கு வ்யபிசாரமில்லாமையால். 'ததந்யதீரதாத்பர்யம்படுத்வவிரஹோதிய: | துக்காதிதீவ்ரமுந்மாதோநப்யாஸோ தீர்க்ககாலதா, ஏதைஸ்ஸாத்ருஷ்டவைகுண்யம்கல்ப்யம் ஸம்ஸ்காரரோதிஷு, ஏதேஷ்வஸத்ஸ்வ ஸ்மரணாத்ஜ்ஞானாபாவோநுமீயதே' இந்த சுலோகங்களுக்குப் பொருள். எந்த வஸ்து ஸ்மரிக்கத்தக்கதோ அதைவிட்டு வேறு வஸ்துவினிடம் புத்தியைச்செலுத்துதல், தாத்பர்யத்தின் இன்மை, புத்தியின் அபாடவம், தீவ்ரமான துக்கம் முதலியது. சித்தவிப்ரமம், அடிக்கடி பழக்கமில்லாமை நீண்டகாலம்-இவைகள் ஸம்ஸ்காரத்தை தலையெடுக்கவிடாமல் செய்யும் சக்தியுள்ளவைகள். இவைகளோடு அத்ருஷ்டத்தின் வைகுண்யமும் ஏற்படுத்தத்தக்கது. ஸம்ஸ்காரத்தைத் தடுக்கிற இவைகள் இல்லாமலிருக்கும் தருணத்தில் ஸ்மரணமில்லாமையால் ஜ்ஞானத்தின் இன்மை அதாவது ஜ்ஞானாபாவமானது அநுமிக்கப்படுகிறது. மார்க்கத்தில் செல்பவனால் தொடப்பட்ட த்ருணம் முதலியது படுதரமான ஸம்ஸ்காரோதயத்திற்கு விரோதிகளிருப்பதால் ஸ்மரிக்கப்படுகிறதில்லை. வழியில் செல்பவன் நடந்து அநுகத்தக்க இடத்தில் ஸாதிக்கத்தக்க கார்யவிஷயமான சிந்தை முதலியதால் கவரப்பட்ட

---

* லிங்கம்—ஹேது. † வ்யபிசாரம்—தவறுதல்.

மனதுடன்கூடியவனுக ஆகிறானன்றோ. த்ருணம் முதலியவற்றில் ஆதாரமுமில்லை; ப்ரயோஜனமில்லாமையால், ப்ரயோஜனமில்லாமலிருந்தபோதிலுங்கூட யானைமுதலியவஸ்துக்களின் காக்ஷிபோல் த்ருணம்முதலியவற்றின் ஜ்ஞானமானது படுதரமன்று. விஷயத்தின் வைபுல்யம் வைசித்ரியம்முதலியது இல்லாமையால். ஜன்மாந்தராநுபவத்தாலுண்டான $ ஸம்ஸ்காரமோவென்றால் வெகுவாய் நரகாநுபவங்களாலும் பிறப்பினாலுமுண்டான தீவ்ரமான துக்கங்களின் ஆக்ரமணத்தினால் அஸ்பஷ்டமாக இருக்கிறது. ‡ உன்மாதமும் ஸம்ஸ்காரத்தின் உத்போதத்திற்கு விரோதி. அப்யாஸமும் அப்படியே. அதற்கு விஸ்மரணஹேதுத்வம் காணப்பட்டிருப்பதால்--காலத்தின் தைர்க்யமும் ஸம்ஸ்காரத்தை அடியோடு போக்குந்திறமையுள்ளதாகக் காணப்பட்டிருக்கிறது. இளமைப்பர்வத்தில் அனுபவிக்கப்பட்ட விஷயங்களுக்கு வார்த்தகத்தில் ஸ்மரணமில்லாமல் போவதால்--இந்த ஹேதுக்கள் ஸுஷுப்தியில் இல்லை. ஸம்ஸ்காரத்தின் உத்போதத்திற்கு விரோதியான ஓராளொரு அதிர்ஷ்டம் கல்பிக்கத்தக்கதல்ல; கல்பகமில்லாமையால்- ஸௌஷுப்திக ஜ்ஞானத்திற்கும் அது விஷயமான அர்த்த ஸ்மரணத்திற்கு விரோதியான அத்ருஷ்டத்திற்கும் கல்பனை கூடாததலால்-எதாவது ஒன்று கல்பகமாக உத்ப்ரேக்ஷிக்கப்படுமேயாகில் அப்பொழுதும் கல்பனை இல்லாமலே நிர்வாஹம் ஸம்பவிக்கிறதாக இருக்க கல்பனம் உபபன்னமாகிறதில்லை. நான் ஒன்றையும் அறிந்திலேன் என்கிற இந்த ஜ்ஞானமானது இவ்வண்ணம் அன்யபரத்வம் முதலிய ஸம்ஸ்கார நிரோதக ஹேதுக்களின் இன்மையினால் விசேஷிக்கப்பட்டிருக்கிற அஸ்மரணரூப ஹேதுவினால் உண்டாகிற ஜ்ஞாநாபாவாநுமிதிரூபமாயுள்ளது. உன்னாலும் ஜ்ஞாநாபாவமானது ஸுஷுப்தியில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதுவும் சொல்லப்பட்டிருக்கிற லிங்கத்தினால் அநுமிக்கத்தக்கதே என்று ஒப்புக்கொள்ளத்தக்கது. அது நமக்கும் துல்யம். ஆகையால் ஸ்ம்ருதித்வாநுபபத்தியினாலும் அநுமிதிரூபத்வோபபாதனத்தாலும், 'ந கிஞ்சிதவேதிஷம்' என்கிற ஜ்ஞாநமானது வேறுவிதமாகவே உபபன்னமாவதால்- அதனால் பாவரூபாஜ்ஞாநஸித்தி இல்லை—என்று. இப்படிப்பட்ட துர்வாதங்கள் பொருத்தமில்லாதவைகள் என்பது பாவரூபாஜ்ஞாநவிஷயகமான ப்ரத்யக்ஷத்தின் நிராகரணத்தால் ஸித்தம்.

---

[illegible]

---

$ ஸம்ஸ்காரம்—வாஸனை. ‡ உன்மாதம்—பைத்தியம் அல்லது சித்தப்ரமம்.

त्र ज्ञानस्यैव हि प्रकाशकत्वम् । सत्यपि दीपे ज्ञानेन विना विषयप्रकाशाभावात् । इन्द्रियाणामपि ज्ञानोत्पत्तिहेतुत्वमेव, न प्रकाशकत्वम् । प्रदीपप्रभायास्तु चक्षुरिन्द्रियस्य ज्ञानमुत्पादयतो विरोधितमोनिरसनद्वारेण उपकारकत्वमात्रमेव । प्रकाशकज्ञानोत्पत्तौ व्याप्रियमाणचक्षुरिन्द्रियोपकारकहेतुत्वमपेक्ष्य दीपस्य प्रकाशकत्वव्यवहारः । नास्माभिर्ज्ञानत्वं प्रकाशकत्वाभ्युपगमेन दीपप्रभा निदर्शिता । किन्तु ज्ञानस्येव स्वविषयावरणनिरसनपूर्वकप्रकाशकत्वाङ्गीकृतेरिति वाच्यः; न - नहि विरोधिनिरसनमात्रं प्रकाशकत्वम् । किन्तु अर्थावभासः । व्यवहारयोग्यतापादनमिति यावत्; तच्च ज्ञानस्यैव । यद्युपकारकाणामप्यप्रकाशितार्थप्रकाशकत्वमङ्गीकृतम्, तर्हीन्द्रियाणामप्युपकारकत्वेनाप्रकाशितार्थप्रकाशकत्वमङ्गीकरणीयम् । तथा सति तेषां स्वनिवर्त्यस्वसजातीयवस्त्वन्तरपूर्वकत्वाभावादेतदनैकान्तिकत्वमेतेन ।

---

ஸ்ரீபாஷ்யம்—

அநுமானத்தாலுங்கூட பாவரூபமான அஜ்ஞானம் ஸித்திக்கிறதென்று யாதொன்று கூறப்பட்டதோ அது யுக்தமல்ல. அநுமானம் ஸம்பவியாமையால், ஐய்யா! அநுமானம் கூறப்பட்டதன்றோ, கூறப்பட்டதென்பது உண்மை. ஆனால் அது தோஷமுள்ளதாகக் கூறப்பட்டிருக்கிறது. அஜ்ஞாநத்திலும் அபிமதமல்லாத வேறு அஜ்ஞாநத்தை ஸாதிப்பதுபன்றி ஹேதுவானது † விருத்தமாக இருப்பதால். அவ்விடத்தில் வேறு அஜ்ஞானத்தை ஸாதிக்காவிடில் ஹேதுவுக்கு * அநைகாந்த்ய தோஷம். ஸாதித்தால் அந்த அஜ்ஞானமானது அஜ்ஞான ஸாக்ஷித்வத்தை நிவாரணம் செய்கிறது. அதனால் அஜ்ஞாநகல்பனையானது பயனற்றதாக ஆகும். த்ருஷ்டாந்தமும் ஸாதநத்தால் விடுபட்டதாக ஆகிறது. தீபத்தினுடைய ஒளிக்கு ப்ரகாசிக்கப்பட்டிராத வஸ்துவை ப்ர

---

† விருத்தம்-விரோதமென்கிற தோஷமுள்ளஹேது. அதாவது ஸாத்யாபாவ வ்யாப்யமாக இருக்கிற ஹேதுவென்று கருத்து. * அநைகாந்த்யம்—வ்யபிசாரம்.

காசப்படுத்தும் தன்மை இல்லாமையால். எல்லாவிடத்திலும் ஜ்ஞாநத்திற்கே யன்றோ வஸ்துக்களை ப்ரகாசிக்கச்செய்யும் தன்மை. தீபமிருக்கும் ஸமயத்திலுங்கூட ஜ்ஞாநமில்லாவிடில் விஷயப்ரகாசமில்லாமையால். ¶ இந்த்ரியங்களுக்குங்கூட ஜ்ஞாநோத்பத்தியில் ஹேதுத்வம் மாத்திரமே, ப்ரகாசகத்வம் கிடையாது. தீபத்தின் ஒளிக்கோவென்றால் ஜ்ஞாநத்தை உண்டுபண்ணுகிற § சக்ஷுரிந்த்ரியத்திற்கு விரோதியான இருளை ஓட்டுதலின் வாயிலாக உபகாரத்தைச் செய்தல் மாத்ரமே. $ விஷயப்ரகாசகமான ஜ்ஞாநத்தின் உத்பத்தியில் வ்யாபரிக்கின்ற சக்ஷுரிந்த்ரியத்திற்கு உபகாரகஹேதுவாக இருத்தலை அபேக்ஷித்து தீபத்திற்கு ப்ரகாசகத்வ வ்யவஹாரம். நாம் ஜ்ஞானத்திற்குத்துல்யமான ப்ரகாசகத்வத்தை ஒப்புக்கொண்டு ஜ்ஞானத்திற்கு நிதர்சனமாக தீபப்ரபையைக்காட்டினோ மில்லை, பின்னையோ ஜ்ஞாநத்திற்கே தன் விஷயங்களை மூடுகின்ற வஸ்துக்களின் நிராஸத்தை முன்னிட்டுக்கொடிருக்கிற ப்ரகாசகத்வத்தை ஒப்புக்கொண்டு என்று சொல்லப்படுமேயானால், அல்ல. விரோதியின் நிராஸமே ப்ரகாசகத்வமல்ல வன்றோ, பின்னையோ அர்த்தங்களின் பரிச்சேதம். அதாவது வ்யவஹாரத்திற்கு யோக்யமாக இருத்தலை ஏற்படுத்துதலென்று அர்த்தம். அந்த வ்யவஹாரயோக்யதாபாதனமோ ஜ்ஞானத்திற்கே. உபகாரம் செய்கிற வஸ்துக்களுக்குங்கூட ப்ரகாசிக்கப்பட்டிராத வஸ்துக்களை ப்ரகாசப்படுத்தும் தன்மை ஒப்புக்கொள்ளப்படுமேயாகில் அப்பொழுது இந்த்ரியங்களுக்கும் ஜ்ஞாநோத்பத்தியில் அதிமாக உபகாரகத்வ சக்தி இருப்பதால் அப்ரகாசிதார்த்த ப்ரகாசகத்வம் ஒப்புக்கொள்ளத்தக்கது. அப்படி ஒப்புக்கொண்டால் அந்த இந்த்ரியங்களுக்குத்தன்னால் நிவர்த்திக்கத்தக்க வேறு வஸ்துக்களை முன்னிட்டுக்கொண்டிருத்தல் இல்லாமையால் ஹேதுவுக்கு அநைகாந்த்ய தோஷம் வருகிறது. ஆதலால் இந்த விசாரம் வேண்டாம் போதும்.

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் அனுமானத்தை தூஷிக்கிறார். யதுக்தம் இது முதலிய க்ரந்தத்தினால். அனுமாநாஸம்பவாத் என்று. உன்னால் சொல்லப்பட்ட அனுமானமானது *ஆபாஸமென்று கருத்து. நான் சொன்ன அனுமானமானது எவ்வாறு உம்மால் ¶துருக்தமென்று சொல்லப்படலாம் என்று கேழ்க்கப்பட்டால் சொல்லுகிறார்—அத்ர ப்ரேபி என்று. வேறு அஜ்ஞானத்தை ஸாதித்தலென்பது எவ்வாறு அவச்யமாக ஸம்பவிக்கும்?

¶ இந்த்ரியம்—இந்த்ரன் ஜீவன், அவனுடைய ஸத்தைக்கு லிங்கம் ஜ்ஞாபகமான சின்னம் அதாவது அடையாளம். § சக்ஷுரிந்த்ரியம்—கண்.
$ விஷயம்—இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படும் வஸ்து. * ஆபாஸம்—துஷ்டம்.
¶ துருக்தம்—தோஷத்துடன் கூடிய சொல்.

அந்த அஜ்ஞாநாந்தரஸாதனமானது எவ்வாறு இஷ்டமல்லாதது என்கிற சங்கைவரின், அதனுடைய அவச்யம்பாவத்தை உபபாதனம் செய்கிறார்—• தத்ர என்று. அஜ்ஞானம் அநபிமதம் என்பதை உபபாதிக்கிறார்—ஸாதநேச என்று. அதனால் என்னவென்று கேட்கின் சொல்லுகிறார்—தத்ரூ என்று. இந்த ப்ரமாண ஜ்ஞானத்திற்கு ப்ரகாசிக்கப்பட்டிராத வஸ்துக்களை ப்ரகாசிக்கச் செய்யுந்தன்மை இருப்பதால், ஸ்வவிஷயங்களை மறைக்கிற அஜ்ஞாநாந்தரத்திற்கு ஸாதகத்வமிருக்க அந்த அஜ்ஞானமானது, ப்ரஹ்மஸ்வரூபத்தை மறைக்கிறதும் ஸாதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்டிருப்பதுமான அஜ்ஞானத்தை மூடுகிறது. அதனால் மூடப்பட்டிருப்பதால் அந்த அஜ்ஞானம் ப்ரஹ்மத்தினால் ஸாக்ஷாத் கரிக்கப்படுகிறதில்லை. பரமார்த்தமல்லாததும் ப்ரதீதிவிஷயமாக ஆகாமலுமிருக்கிற பதார்த்தத்திற்கு கார்ய கரத்வம் பொருந்தாததலால் அஜ்ஞானத்தின் கல்பனை பயனில்லாதது. திரோதான ரூபமானகார்யார்த்தமாக அல்லவோ அந்த அஜ்ஞானத்தின் கல்பனை. ஸாக்ஷாத்கரிக்கப்படாமலே அது கார்யகரமாக ஆகுமேயானால் அப்பொழுது ஸத்தையினால் கார்யகரமாக இருப்பதுபற்றி $ காசம் முதலியதுபோல் ஸத்யமாக இருப்பதால் ஜ்ஞானத்தினால் நிவர்த்திக்கத்தக்கதாக ஆகாது. இவ்வண்ணம் அஜ்ஞானத்திற்கு ஜ்ஞானத்தினால் நிவர்த்திக்கத்தகாமையும் பயனில்லாமையும் காரணமாக அபிமதிக்கப்பட்டிராத அஜ்ஞாநாந்தர ஸாதகத்வமும் அதை ஸாதிக்காவிடில் அநைகாந்த்யமும் சொல்லப்பட்டது.

அய்யனே! கூறப்பட்டுள்ள ஹேதுவினால் உண்டாகிற ஜ்ஞானமானது நன்குநிச்சயரூபமாக இருக்குமேயானால் அதன்விரோதத்தினாலேயே ஹேதுவுக்கு அநைகாந்த்யதோஷம் வருகிறதில்லை. நன்கு நிச்சயரூபமாக இல்லாமலிருந்தபோதிலும் அப்படியும் ஹேதுவுக்கு அநைகாந்த்யதோஷமில்லை. அப்ரகாசிதார்த்த ப்ரகாசகத்வம் என்கிற ஹேதுவானது அங்கு நிலைபெற்றிராததால். மறுமொழி உரைக்கப்படுகிறது—ஹேதுவின் அநைகாந்த்யதோஷபரிஹாரமானது ஸாத்யவிஷய ஜ்ஞானத்திற்கு ப்ரமிதிரூபத்வத்தை விலக்குகிறது. ஜ்ஞானத்தின் ஸம்யக்த்வமோவென்றால் ஹேதுவின் அநைகாந்த்யதோஷ பரிஹாரத்தை விலக்குகிறது. ஆதலால் ஜ்ஞானத்திற்கு ஸம்யக்த்வமிருந்தால் அதற்கு சொல்லப்பட்டுள்ள ஹேதுவினால் உண்டாயிருத்தல் வ்யாஹதம். ஹேதுவுக்கு அநைகாந்த்ய தோஷமிருப்பதால். நல்ல ஜ்ஞானமானது துஷ்டஹேதுவினால் உண்டானதல்லவன்றோ. முற்கூறப்பட்டுள்ள ஹேதுவுக்கு அநைகாந்த்யமில்லையானால் அதற்கு அஸம்யக் நிச்சயரூபமான ஜ்ஞானத்தை உண்டுபண்ணும் தன்மையானது வ்யாஹதமாகிறது. அதுஷ்டமான ஹேதுவுக்கு அஸம்யக் ஜ்ஞானத்தை உண்டுபண்ணும் தன்மை பொருந்தாததால். இவ்வண்ணம் ஹேதுவின் அநைகாந்த்ய பரிஹாரம் ஜ்ஞானத்தின் ஸௌஷ்டவம் இவ்விரண்டுகளுக்கும அன்யோன்ய விரோதத்தால் அவ்விரண்டுகளுக்கும் இந்த இடத்தில் சேர்ந்து ஸித்தி இல்லாமையால் இரண்டுக்குள் ஒன்று இல்லாமலிருந்தபோதிலும் ஸாத்யஸித்தி இல்லாமையால் அநுமானம் அஸமஞ்ஜஸம் என்று அபிப்ராயம். அய்யா! ஹேதுவுக்கு அநைகாந்த்யமில்லை. ஸாத்யவிஷயஜ்ஞாநத்தில் ஹேதுவுக்கு வ்ருத்தி இல்லாமையால். அப்ரகாசிதமான அஜ்ஞானமானது இதனால் ப்ரகாசிக்கப்படுகிறதில்லையன்றோ. ஆனால் என்ன? ஸாக்ஷிசைதன்யத்தினால் ஸித்தமாகவே இருக்கிற அஜ்ஞானத்தின் இன்மையால் விவே

$ காசம்—நேத்திரரோகம்.

சனம் மாத்ரம் செய்யப்படுகிறது. இப்படி அல்ல. அஹமர்த்தத்திற்கு தர்மபூதமான ப்ரகாசத்தினின்று வெளிப்பட்டிருக்கிற ஸ்வரூப சைதன்யத்தினுல் அஜ்ஞான ஸித்தி வரின் அனுமானத்திற்கு ப்ராமாண்யம். அந்த ப்ராமாண்யத்தால் பாவரூபமான அஜ்ஞானத்தின் ஸித்தி. அது ஸித்தித்தால் ஜ்ஞாதாவும் அதனுல் கல்பிதமுனதால் அதனின்று வெளிப்பட்டிருக்கிற ஸாக்ஷிசைதன்யத்தினுல் அஜ்ஞாநாநுபவஸித்தி என்று தாண்டமுடியாததான சக்ரகதோஷம் வரவேண்டியதாக ஏற்படுவதால்.

வேறு தூஷணத்தைச் சொல்லுகிறூர்—த்ருஷ்டாந்தஶ்ச இதுமுதலியதால். அந்த இடத்தில் (அதற்கு)ஸாக்ஷாத்தாக ப்ரகாசகத்வமா? அல்லது பரம்பரையினுலா? அல்லது ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையினுலோ ப்ரகாசகத்வம் மாத்திரமா? அல்லது தன்னுடைய விஷயங்களை மறைக்கிற பதார்த்தத்தை விலக்குதல் ப்ரகாசகத்வமா? என்று நான்கு கல்பங்கள் ஏற்படுகின்றன. அவற்றுள் முதலாவது கல்பத்தில் திருஷ்டாந்தமானது ஸாதனத்திஞல் விடுபட்டது. இரண்டாவது பக்ஷத்திலோ வென்றூல் அஸித்தி. மூன்றுவதிலோ வென்றூல் இந்த்ரியங்களில் அநைகாந்த்யம். அந்த இந்த்ரியங்களுக்கு தங்களால் விலக்கத்தக்க வேறு வஸ்துவை முன்னிட்டுக்கொண்டிருத்தலில்லாமையால், அந்த இந்த்ரியங்கள் நேராகவோ பரம்பரையினுலோ ப்ரகாசங்களாக இருக்கிற இரண்டு வஸ்துக்களுக்குள் ஒன்றுக இருப்பதால். இந்த்ரியங்களையும் $ பக்ஷங்களாகச் செய்துகொண்டு அவைகளுக்கும் அப்படிப்பட்ட வஸ்த்வந்தர பூர்வகத்வத்தை கல்பிப்பது யுக்தமன்று. * அஹங்கார தத்வத்தினின்று உண்டாயிருக்கிற இந்த்ரியங்களுடைய உத்பத்திக்கு ¶ ஸ்வவிஷயாவரணஸ்வதேசகதவஸ்த்வந்தர பூர்வகத்வமில்லாமையால். § ஆலோகமேயன்றே அப்படிப்பட்டது. நான்காவதுபக்ஷத்திலோவென்றூல் ஸாத்யாபாவ: விசிஷ்டதை என்று அபிப்பிராயப்பட்டு முதலாவது கல்பத்தில் தூஷணம் சொல்லுகிறூர்— த்ருஷ்டாந்தஶ்ச ஸாதன விகல: என்று. எவ்வாறு ஜ்ஞானத்திற்கே ஸாக்ஷாத் ப்ரகாசகத்வம் என்கிற ஸந்தேஹம் வரின் அதை ஶ்ரீ உபபாதனம் செய்கிறூர்—ஸத்யபி என்று. ஜ்ஞானத்திற்கே ப்ரகாசகத்வம் என்பதனுல் இரண்டாவது கல்பத்தில் ஹேதுவுக்கு பக்ஷதத்தில் அஸித்தியானது பலித்தது. இந்த்ரியாணும் என்று சொன்னதினுல் மூன்றுவது பக்ஷத்தில் இந்த்ரியங்களில் அநைகாந்த்யம் சொல்ல விரும்பப்பட்டிருக்கிறது. தீபத்தினுடைய ஒளிக்கு பரம்பரையினுலுங்கூட வஸ்துக்களை ப்ரகாசிக்கச்செய்யும் தன்மையானது தூரத்திலிருக்கிறதென்று சொல்லுகிறூர்—ப்ரதீப என்று. தீபப்ரபை ப்ரகாசிக்கச்செய்கிற தென்கிற வ்யவஹாரம் எப்படி என்று கேழ்க்கப்படுமேயானுல் கூறுகிறூர்— ப்ரகாசக என்று. நான்காவது பக்ஷத்தைச் சங்கிக்கிறூர்—நாஸ்மாபி: என்று. நிரஸநபூர்வக என்று, நிரஸனத்தை

$ பக்ஷம்—ஸந்தேஹாஸ்பதமான ஸாத்யத்துடன் கூடியது.

* அஹங்காரம்— மஹத்தத்வத்தின் விக்ருதி - இது ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று மூன்று வகைப்பட்டுள்ளது. ஸாத்விகாஹங்காரத்தினின்று இந்த்ரியங்கள் உண்டாகின்றன. தாமஸாஹங்காரத்தினின்று தன்மாத்ரங்களென்று சொல்லப்படுகிற பூத ஸூக்ஷ்மங்கள் உண்டாகின்றன. அந்த பூதஸூக்ஷ்மங்களிடமிருந்து பஞ்ச மஹாபூதங்கள் உண்டாகின்றன. ¶ ஆவரணம்—மறைத்தல். § ஆலோகம்—ப்ரகாசம்.

ஶ்ரீ உபபாதனம்—நிரூபணம்.

ஹவாரமாகக்கொண்டிருக்கிற என்று அர்த்தம். ஸாத்யாவிசிஷ்டதையைச் சொல்லுகிருர்—நஹி என்று. ஜ்ஞானத்திற்கு விஷயாவரண நிரஸனரூபமான ப்ரகாசகத்வ மில்லையன்ருே. அது ஸாதிக்கத்தக்கதன்ருே. ஸம்ப்ரதிபன்னமல்லவென்று அர்த்தம். மாத்ரச்ப்ரத்யயத்திஞல் அர்த்தபரிச்சேதத்தின் வ்யுதாஸம் செய்யப்பட்டது. ஹி சப்தத்தால் விஷயாவரண நிராஸகத்வத்திற்கு ஸாத்யத்வம் பலித்தது. அதில் உபயவாதிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ப்ரகாசகத்வத்தைக் கூறுகிருர்—அபிது என்று. பரிச்சேதசப்தமானது பரிமிதி என்கிற அர்த்தமுள்ளது என்கிற ஸந்தேஹத்தை நீக்குவதற்காகக் கூறுகிருர்—வ்யவஹார என்று. வ்யவஹாரயோக்யதா - வ்யவஹாரத்திற்கு ப்ரதிஸம்பந்தியாக இருத்தல். அய்யா! ஹேதுவுக்கு ஸாத்யாவிசிஷ்டத்வமில்லை. ஸ்வவிஷயாவரண நிரஸன சப்தத்தால் ஸ்வப்ராகபாவ நிராஸகத்வம் சொல்லக்கருதப் பட்டிருக்கிறது, அதஞல் பாவரூபமான நிரஸனீய பூர்வகத்வம் ஸாத்யம் என்று. அல்ல. ஸ்வப்ராகபாவ நிராஸகத்வரூபமான ஹேதுவுக்கு இந்த்ரிய ஸம்யோகத்தில் அநைகாந்த்ய தோஷம் ஸம்பவிப்பதால். ஹேதுவானது பாஸமானத்வமிருக்க அப்ராகாசிதார்த்த ப்ரகாசகத்வாத் என்று விசேஷிக்கப்பட்டபோதிலும் முன்போல் விகல்பம் உண்டாகும். அவற்றுள் ஸாக்ஷாத் பக்ஷத்தில் த்ருஷ்டாந்தம் ஸாதனவிகலம். பரம்பரையிஞல் என்கிற பக்ஷத்தில் ஹேதுவுக்கு அஸித்தி. மூன்ருவதில் * லிங்கம் முதலியதில் வ்யபிசாரம், நான்காவதில் ஸாத்யா விசிஷ்டதை. பாஸமானத்வ சப்தத்தால் விசேஷிக்கப்பட்டிருக்கிற விஷயாவரணநிராஸகத்வத்திற்கு ஸம்ப்ரதிபத்தி இல்லாமையால்.

---

வ்யதிரேகோதாஹரணம், விவாதாத்யாஸிதமஜ்ஞாநம் ந ஜ்ஞாநேதர வ்யவஹாராச்ரயம்; அஜ்ஞாநத்வாத்; ஶுக்திகாத்யஜ்ஞாநவத் | ஜ்ஞாநேதராச்ரயம் ஹி தத் | விவாதாத்யாஸிதமஜ்ஞாநம் ந ஜ்ஞாநேதர வ்யவஹாராவரணம், அஜ்ஞாநத்வாத், ஶுக்திகாத்யஜ்ஞாநவத் | விஷயாவரணம் ஹி தத் | விவாதாத்யாஸிதமஜ்ஞாநம் ந ஜ்ஞாநநிவர்த்யம்; ஜ்ஞாந விஷயாநாவரணத்வாத்; யத் ஜ்ஞாநநிவர்த்யமஜ்ஞாநம் தத் ஜ்ஞாநவிஷயாவரணம், யதா ஶுக்திகாத்யஜ்ஞாநம் | வ்யோம நாஜ்ஞாநாபாவ:; ஜ்ஞாநத்வவிரஹாத்; கடாதிவத் | வ்யோம நாஜ்ஞாநாவரணம்; ஜ்ஞாநாவிஷயத்வாத் | யதஜ்ஞாநாவரணம் தத் ஜ்ஞாநவிஷயபூதம்; யதா ஶுக்திகாதி | வ்யோம ந ஜ்ஞாநநிவர்த்யாஜ்ஞாநம்; ஜ்ஞாநாவிஷயத்வாத் | யத் ஜ்ஞாநநிவர்த்யாஜ்ஞாநம்; தத்ஜ்ஞாநவிஷயபூதம்; யதா ஶுக்திகாதி | விவாதாத்யாஸிதம் வ்யதிரேகஜ்ஞாநம் ஸ்வவ்யாமஸாமாநாதி

---

* லிங்கம்—ஹேது.

ஶிக்தாஜ்ஞாநபூர்வகம் ந பவதி; ப்ரமாணஜ்ஞாநத்வாத்; பவதபிமதஜ்ஞாநஸாதநப்ரமாணஜ்ஞாநவத் ॥

ஜ்ஞாநம் ந வஸ்துநோ விநாஶகம்; ஶக்திவிஶேஷோபப்ரும்ஹணவிரஹே ஸதி ஜ்ஞாநத்வாத் । யத் வஸ்துநோ விநாஶகம் தச்சக்திவிஶேஷோபப்ரும்ஹிதஜ்ஞாநமஜ்ஞாநம் வா த்ருஷ்டம்; யதேஶ்வரயோகிப்ரப்ருதிஜ்ஞாநம்; யதா ச முத்கராதி । பாவரூபம் சாஜ்ஞாநம் ந ஜ்ஞாநவிநாஶ்யம்; பாவரூபத்வாத், கடாதிவதிதி । பயோத்பாதக—பாதகஜ்ஞாநேந பூர்வஜ்ஞாநோத்பந்நாநாம் பயாதீநாம் விநாஶோ த்ருஶ்யதே—இதி । நைவம்—ந ஹி ஜ்ஞாநேந தேஷாம் விநாஶ:; க்ஷணிகத்வேந தேஷாம் ஸ்வயமேவ விநாஶாத்; காரணநிவ்ருத்த்யா ச பஶ்சாதநுத்பத்தே: । க்ஷணிகத்வஞ்ச தேஷாம் ஜ்ஞாநவதுத்பத்திகாரணஸந்நிதாநவத்வோபலப்தே:; அந்ருதாநுபலப்யமாநவத்ருதே । அக்ஷணிகத்வே ச பயாதீநாம் பயாதிஹேதுபூதஜ்ஞாநஸந்தாநவிஶேஷேண ஸர்வேஷாம் ஜ்ஞாநாநாம் பயாத்யுத்பத்திஹேதுத்வேநாநேககாலயோகோபலப்திப்ரஸங்காச்ச ॥

ஸ்வப்ரகாஶவ்ருத்திஶிக்தவஸ்துஜாலபூர்வகஸ்திதிதி வ்யயபூர்வவிஶேஷணாபாதாநேந வ்யயோபகந்தவ்யதா வாச்யவிஷக்தா । அதோzந்தராநேநாபி ந பாவரூபாஜ்ஞாநஸித்தி: ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

ப்ரத்யனுமானங்களும்—விவாதத்திற்கு ஆஸ்பதமாக இருக்கிற அஜ்ஞானமானது ஜ்ஞானமாத்ரமான ப்ரஹ்மத்தை ஆச்ரயித்ததல்ல. அஜ்ஞானமாக இருப்பதால். சுக்திகைமுதலியவற்றின் அஜ்ஞானம்போல். அது ஜ்ஞாதாவையன்றோ ஆச்ரயித்திருக்கிறது. விவாதாஸ்பதமான அஜ்ஞானமானது ஜ்ஞானமாத்ர ஸ்வரூபமுள்ள ப்ரஹ்மத்தை மறைக்கிற திறமையுள்ளதல்ல; அஜ்ஞானமாக இருப்பதால், சுக்திகை முதலியவற்றின் அஜ்ஞானம்போல. அந்த அஜ்ஞானமானது விஷயத்தையன்றோ மறைக்கும் திறமையுள்ளது. விவாதாஸ்பதமான அஜ்ஞானமானது ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதல்ல, ஜ்ஞானவிஷயங்களை மறைக்காமலிருப்பதால், எந்த அஜ்ஞானம் ஜ்ஞானத்தால் விலக்கத்தக்கதோ அது ஜ்ஞானவிஷயங்களுக்கு ஆவரணம். சுக்திகை முதலியவற்றின் அஜ்ஞானம்போல. ப்ரஹ்மமானது அஜ்ஞானத்திற்கு

ரூபமல்ல, ஜ்ஞாத்ருத்வமில்லாமையால், கடம்முதலியதுபோல். ப்ரஹ்மமானது அஜ்ஞாநாவரணமுள்ளதல்ல ஜ்ஞானத்திற்கு விஷயமாக இல்லாததால், எது அஜ்ஞாநாவரணமுள்ளதோ அது ஜ்ஞாநவிஷயமாக இருக்கும். சுக்திகை முதலியதுபோல. ப்ரஹ்மமானது ஜ்ஞாநத்தினால் நிவர்த்திக்கத்தக்க அஜ்ஞாநமல்ல, ஜ்ஞானத்திற்கு விஷயமாக இராததால். எது ஜ்ஞானத்தினால் நிவர்த்திக்கத்தக்க அஜ்ஞானமோ அது ஜ்ஞானத்திற்கு விஷயமாக இருக்கும், சுக்திகை முதலியதுபோல். விவாதத்திற்கு இருப்பிடமான ப்ரமாண ஜ்ஞானமானது தன்னுடைய ப்ராகபாவத்தைக்காட்டிலும் வேறான அஜ்ஞானத்தை முன்னிட்டுக் கொண்டதாக இருக்கிறதில்லை. ப்ரமாண ஜ்ஞாநமாதலால். உன்னால் அபிமானிக்கப்பட்டுள்ள அஜ்ஞானத்திற்கு ஸாதனமாக இருக்கிற ப்ரமாண ஜ்ஞானம்போல. ஜ்ஞானமானது வஸ்துவுக்கு விநாசகமல்ல. சக்தி விசேஷத்தினால் போஷணையில்லாமை இருக்க ஜ்ஞானமாக இருப்பதால், எது வஸ்துக்களுக்கு விநாசகமோ அது சக்தி விசேஷத்தால் உபப்ரும்ஹணம் செய்யப்பட்டிருக்கிற ஜ்ஞானமாகவும் அஜ்ஞானமாகவும் பார்க்கப்பட்டிருக்கிறது. ஈச்வரன் யோகிகள் முதலியவர்களின் ஜ்ஞானம் போல. $ முத்கரம் முதலியதுபோலவும். பாவரூபமான அஜ்ஞானமானது ஜ்ஞானத்தினால் அழியச் செய்யத்தக்கதல்ல, பாவரூபமாக இருத்தலால், கடம் முதலியது போல. அப்படிக்கின்றி பாதகஜ்ஞானத்தினால் முந்தின ஜ்ஞானத்தினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற பயம முதலியவைகளுக்கு விநாசம் காணப்படுகிறதென்று சொல்லப்படலாம். இவ்வண்ணமல்ல. ஜ்ஞானத்தினால் அவைகளுக்கு விநாசம் இல்லையன்றோ, அவைகள் ஒரு க்ஷணகாலம் இருப்புள்ளவைகளாக இருப்பதுபற்றி தானே விநாசமடைவதால் காரணமில்லாமையால் பிறகு உண்டாவதில்லை. ஜ்ஞானம்போல் உத்பத்திக்குக் காரணமாக இருக்கிற வஸ்துவின் ஸன்னிதானதிலேயே உபலப்தி வருவதால் அவைகளுக்கு க்ஷணிகத்வம் ஸித்திக்கிறது. மற்றகாலங்களில் உபலப்தி இல்லாமையாலும் க்ஷணிகத்வமறியப்படுகிறது. பயம் முதலியவைகளுக்கு க்ஷணிகத்வத்தை ஒப்புக்கொள்ளாதபக்ஷத்தில் பயம் முதலியவற்றுக்கு ஹேதுவாக இருக்கிற ஜ்ஞான ஸந்ததியில் விசேஷமின்றி எல்லா ஜ்ஞானங்களும் பயம முதலியவைகளின் உத்பத்திக்கு ஹேதுவாக இருப்பதால் அநேக பயங்களின் உபலப்தியானது ப்ரஸங்கிப்பதாகும். தன் ப்ராகபாவத்தைவிட வேறான வஸ்துவை முன்னிட்டுக் கொண்டிருக்கிற என்கிற பயனற்ற விசேஷணத்தை எடுத்துக்கொள்வதனால் ப்ரயோக விஷயத்தில் ஸாமர்த்யம் வெளியிடப்பட்டது. ஆகையால் அநுமானத்தாலும் பாவரூபமான அஜ்ஞானம் ஸித்தி பெறுகிறதில்லை.

$ முத்கரம் — உருட்டுத்தடி.

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் இந்த அனுமானத்திற்கு ப்ரதிகூல தர்க்கத்தால் பராஹதியைக்கூறுகிறார்—ப்ரதிப்ரயோகா: என்று. தர்க்கமும வ்யாப்திமூலமாக இருப்பதால் ப்ரயோகா: என்று பகரப்பட்டது. ஸ்வதேசகதத்வ, ஸ்வ விஷயாவரணத்வ, ஸ்வநிவர்த்யத்வங்களுக்கு ப்ரதிகூலமாக வரிசையாக மூன்று அனுமானங்களும் அஜ்ஞானத்தை பக்ஷமாக வைத்துக்கொண்டு சொல்லப்படுகின்றன. விவாதாத்யாஸிதமான-அஜ்ஞானமானது ப்ரஹ்மத்தை ஆச்ரயித்தது ஆச்ரயித்திராதது என்கிற விவாதத்தால் ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறதென்று அர்த்தம். அதனால் சுக்திமுதலியதின் அஜ்ஞானத்திற்கு விலக்கம் ஏற்படுகிறது. அது ஜீவனையல்லவோ ஆச்ரயித்திருக்கிறது. அப்ராமாணிகமாக இருந்தபோதிலும் பாவரூபமான அஜ்ஞானத்தையும் ஜ்ஞானமாத்ர ப்ரஹ்மத்தையும் ஒப்புக்கொண்டு ப்ரதிகூல தர்க்கங்கள் சொல்லப்படுகின்றன. சுக்தி முதலியவற்றின் அஜ்ஞானத்திற்கு ஜ்ஞானத்தை ஆச்ரயித்திராமை எவ்வண்ணமென்று கேட்க்கப்படுமேயாகில் கூறுகிறார்—ஜ்ஞாத்ராச்ரயம் என்று. இவ்விதம் வ்யாப்தியானது காண்பிக்கப்பட்டது. அஜ்ஞானமென்று சொல்லும்பக்ஷத்தில் ஜ்ஞாதாச்ரயத்வம் ப்ரஸங்கிக்கும் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. வேறு ப்ரதிகூல தர்க்கத்தைக்கூறுகிறார்—விவலத என்று வ்யாப்தியைக்காண்பிக்கிறார்—விஷயாவரணம் என்று. அஜ்ஞானமென்று சொல்லும் பக்ஷத்தில் ஜ்ஞாதாவரணத்வம் ப்ரஸங்கிக்குமென்று அர்த்தம். மூன்றாவது ப்ரயோகத்தில் அறியத்தக்க வஸ்துக்களை மறைக்கிற ஸ்வபாவமுள்ளதல்லவென்று சொன்னால் ஜ்ஞானத்தால் நிவர்த்திக்கத்தகாமை ப்ரஸங்கிக்குமென்று அர்த்தம். இதற்குமேல் ப்ரஹ்மத்தைப் பக்ஷமாகச் செய்துகொண்டு மூன்று ப்ரதிகூல தர்க்கங்கள் உரைக்கப்படுகின்றன—ப்ரஹ்ம இது முதலியதால். அஜ்ஞானத்திற்கு ஆச்ரயமென்று சொன்னால் ப்ரஹ்மத்திற்கு ஜ்ஞாத்ருத்வம் ப்ரஸங்கிக்குமென்று பொருள். இரண்டாவது ப்ரயோகத்திலும் ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞாநாவரணத்வம் சொல்லின் ஜ்ஞேயத்வம் ப்ரஸங்கிக்குமென்று பொருள். மூன்றாவதிலும் ப்ரஹ்மமானது ஜ்ஞாநத்தினால் நிவர்த்திக்கத்தக்க அஜ்ஞாநமென்று சொல்லப்படுமேயாகில் ஜ்ஞேயத்வம் ப்ரஸங்கிக்குமென்று அர்த்தம். அதற்குமேல் ப்ரமாணஜ்ஞானத்தை பக்ஷமாக்கி ப்ராகபாவவ்யதிரிக்தத்வத்திற்கு ப்ரதிதர்க்கத்தைச் சொல்லுகிறார்— விவாதாத்யாஸிதம் என்று. ப்ரமாணஜ்ஞானம் பக்ஷமென்று சொல்லும்பக்ஷத்தில் ப்ராகபாவத்தைக்காட்டிலும் வேறாக இருக்கிற அஜ்ஞானத்தை முன்னிட்டுக் கொண்டிருத்தலின் அபாவம் ப்ரஸங்கிக்குமென்று அர்த்தம். அன்றிக்கே இது அனுமானமே, தாராவாஹிக ஜ்ஞானங்களில் முதலில் உண்டாயிருக்கிற ஜ்ஞானத்திற்கு பக்ஷத்வமும் மேல்மேல் வருகிற ஜ்ஞானங்களுக்கு ஸபக்ஷத்வமுமல்லவோ பொருத்தமுள்ளதாக ஆகிறது. ஜ்ஞானம் ந வஸ்துநோ விநாசகம் இதுமுதலியதால். வ்யதிரேகி அனுமானம் கூறப்பட்டது. வ்யதிரேக வ்யாப்தியை இரண்டுவிதமாகக் காட்டுகிறார்— யத்வஸ்துந: என்று. 'சக்திவிசேஷோப ப்ரும்ஹண விரஹேஸதி ஜ்ஞாநத்வாத்' என்று விசிஷ்டமன்றோ ஹேது. அதில் சக்திவிசேஷத்தினால் வ்ருத்திபண்ணப்பட்டிராத ஜ்ஞாநத்தைக் காட்டிலும் வேறுபட்டிருத்தல் என்றும் தன்மையானது விசேஷமின்றி இருப்பதால் சக்திவிசேஷத்தால் உபப்ரும்ஹிதமான ஜ்ஞானம் சக்தி விசேஷத்தால் உபப்ரும்ஹணம் செய்யப்பட்டிராத அஜ்ஞானம் இவ்விரண்டும் வ்யதிரேக வ்யாப்திக்கு பூமி என்று இரண்

டிடத்திலும் வ்யாப்தி காண்பிக்கப்பட்டது. பாவரூபமான அஜ்ஞானத்தை பக்ஷமாக வைத்துக்கொண்டு கூறுகிறார்—பாவரூபஸ்ய என்று. அஜ்ஞானமானது பாவரூபமென்று சொல்லப்பட்டால் ஜ்ஞாநமாத்ரத்தால் நிவர்த்திக்கத்தக்க தன்மை அதற்கு உண்டாகாதென்று கருத்து. பாவரூபத்வம ஜ்ஞாந நிவர்த்யத்வம் இவ்விரண்டுகளுக்கும் வ்யாப்தி இல்லை. பாவரூபமான பயம் முதலியவற்றுக்கு ஜ்ஞான நிவர்த்யத்வம் காணப்படுவதால் என்று வ்யாப்தி பங்கத்தை ஆசங்கிக்கிறார்— அதோரீயேந என்று. பூர்வஜ்ஞாநோத்பந்நாநாம்-முந்தினதான ப்ராந்தி ஜ்ஞாநத்தினால் உண்டாயிருக்கிற என்று அர்த்தம். பாதகஜ்ஞானத்தின் உதயத்தாலும் முந்தின பயம தொடர்ந்து அனுவர்த்திப்பதாலும் அதின் உத்பத்திக்குப் பிறகு பயம் முதலியவைகள் நிவர்த்திப்பதாலுமென்று கருத்து. பரிஹரிக்கிறார்— நைவம் என்று. தனக்கு ஆச்ரயமாக இருக்கிற வஸ்துவின் விநாசாதீனமான விநாசமுள்ள நச்வரங்களைவிட வேறாக இருக்கிற க்ஷணிகங்கள் பலத்தால் விநாச்யங்களன்றோ. சொல்லப்பட்டுள்ள விசேஷணத்தால் ஜ்வாலைக்கு வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. அப்படியே பயம் முதலியதும் நடுக்கம் முதலிய கார்யத்தை உண்டுபண்ணிவிட்டு தான் அழிகிறது என்று அர்த்தம். பயம் முதலியதற்கு க்ஷணிகத்வமில்லை. நெடுங்காலம் உபலப்தி இருப்பதாலென்று சொல்லப்படுமேயானால், அல்ல—காரணபூதமான ப்ராந்திஜ்ஞானம் முதலியதின் அநுவ்ருத்தியினால் பயம் முதலியதின் ஸந்ததியின் உத்பத்தியினாலன்றோ நெடுங்காலம் உபலப்தி உண்டாகிறது. அங்ஙனமாகில் எப்பொழுதும் பயஸந்ததியானது உபலப்திக்கு விஷயமாக ஆகவேண்டியதாகுமே என்று கேட்கப்பட்டால் இந்தவிஷயத்தில் சொல்லுகிறார்—காரணநிவ்ருத்யாசபஸ்சாதநுத்பத்தே: என்று. காரணபூதமான ப்ராந்திஜ்ஞானம் முதலியதின் நிவ்ருத்தியினால் கார்யபூதமான பயம் முதலியவற்றின் ஸந்ததியானது உண்டாகாததால் எப்பொழுதும் உபலப்தி இல்லை என்று அர்த்தம். 'பஸ்சாதநுத்பத்தே:' என்கிற பஞ்சமிக்கு முந்தி இருக்கிற 'க்ஷணிகத்வேந' என்கிற பதத்தோடு அந்வயம். காரண நிவ்ருத்தியினாலும் பிறகு உத்பத்தி இல்லாமையால் ஸித்தமான க்ஷணிக ஸ்வபாவத்தால் தானே அழிவதாலென்று அர்த்தம். அன்றிக்கே க்ஷணிகத்வமில்லை என்கிற சங்கைவரின் க்ஷணிகத்வம் உபபன்னமென்று அர்த்தவசத்தால் இழுக்கப்பட்டிருக்கிற வாக்கியத்தோடு அன்வயம். இவ்வண்ணமாக க்ஷணிகத்வத்தை ஒட்டிவந்த வினவுக்கு பரிஹாரம் செய்யப்பட்டது. அன்றிக்கே இவ்வாறு அல்லவென்று தூஷணப்ரதிஜ்ஞையை உபபாதனம் செய்வதற்காக பாதமேற்படும் வரையில் பயஸ்வரூபத்தின் தொடர்ச்சி இருப்பதால் அஸித்தியைக் கூறுகிறார்— க்ஷணிகத்வேந என்று. பாதக ஜ்ஞானத்திற்கு அடுத்தக்ஷணத்தில் நிவ்ருத்திவருவதால் அந்யதாஸித்தியைச் சொல்லுகிறார்—காரண நிவ்ருத்யாச என்று. அந்த க்ஷணிகத்வம் எதனால் ஸித்தித்ததென்கிற சங்கைவரின் அதை உபபாதிக்கிறார்—க்ஷணிகத்வஞ்ச என்று. ஸ்தாயிகளான கடம்முதலியவைகளன்றோ தண்டம் சக்கிரம் முதலிய காரணங்களின் நிவ்ருத்தியிலுங்கூட உபலப்தி விஷயங்களாக ஆகின்றன. ஜ்ஞானம் தீபஜ்வாலை முதலியது அவ்வாறாக அறிவுக்கு விஷயமாகிறதில்லை. அவ்வாறாகவே பயம் முதலியது காரணங்களின் ஸன்னிதானத்தையும் அவைகளின் நிவ்ருத்தியையும் அனுஸரித்து வருகிற ஸத்பாவாஸத்பாவங்களுள்ளதாக இருப்பதாக க்ஷணிகத்வம் நிச்சயிக்கப் பட்டிருக்கிறதென்று அர்த்தம். விபக்ஷத்தில் பாதத்தைக்கூறுகிறார்— அக்ஷணிகத்வேச என்று. ஸ்திரமான கடம் முதலியவைகளன்றோ ஒவ்வொரு க்ஷணந்தோறும் உண்டாகின்றவைகளாகவும், அனேகங்களாகவும் ஒரே ஸமயத்தில் அறியப்படுகின்றன. அவ்வண்ணம் இங்கும் ப்ரஸங்கிக்கும் என்று கருத்து. ஆதலால் பயம் முதலியது ஜ்ஞானத்தினால் நிவர்த்திக்கத்தக்கதல்ல. க்ஷணிகமாக இருப்பதால் தானாகவே நசித்

துவிடுகிறது. ப்ராந்திஜ்ஞான பரம்பரா ரூபமான காரணத்தின் நிவ்ருத்தியினால் பயஸந்ததியின் நாசமுண்டாகிறது. தோஷத்தின் நிவ்ருத்தியினால் அதன் நிவ்ருத்தி ஸம்பவிக்கிறது. இது ஸர்ப்பமல்ல, இது கயிர் என்கிற ஜ்ஞானமானது தன்னை விஷயமாகக்கொண்டிருக்கிற வ்யவஹாரத்திற்கு ஹேதுவே ஒழிய நேராக பயம் முதலியவற்றின் நிவ்ருத்திக்கு ஹேதுவல்ல. ரஜ்ஜுத்வமன்றோ ஸர்ப்பவ்யாவ்ருத்தி. ஆகையால் ஸர்ப்பவ்யாவ்ருத்திரூப ரஜ்ஜுத்வஜ்ஞானத்தினது இன்மையினால் ஸர்ப்பபுத்தியின் தொடர்ச்சி இருப்பதுபற்றி பிற்காலத்தில் பயத்தின் தொடர்ச்சி ஸர்ப்பவ்யாவ்ருத்திரூபமான ரஜ்ஜுத்வ ஜ்ஞானத்தினால் பரமார்த்த ஸர்ப்பாபிமான நிவ்ருத்தியினால் பயநிவ்ருத்தி என்று எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ரீதியினால் தூஷணம் கூறப்பட்டது. தன்பக்ஷத்திலோவென்றால் ஜ்ஞானவிசேஷமாகவே இருக்கிற பயம் முதலியது க்ஷணிகமாக இருத்தலால் தானாக நசிக்கிறது. பயாதிரூபமான ஜ்ஞானத்தின் அனுவ்ருத்தியோவென்றால் தோஷத்தினால் உண்டான ஸர்ப்பாதி ப்ரமத்தின் தொடர்ச்சியை மூலமாகக்கொண்டது. அந்த ப்ரம நிவ்ருத்தியினாலும் அந்த பயஸந்ததியின் நிவ்ருத்தி என்று பரிஹாரம். இவ்வண்ணம் அர்த்ததூஷணமானது கூறப்பட்டது. அதற்குமேல் ப்ரயோக தூஷணத்தைக் கூறுகிறார்— ஸ்வப்ராகபாவ என்று, ஸ்வ என்கிற சப்தமும், ப்ராக் சப்தமும், பாவவ்யதிரிக்த சப்தமும், அர்தரசப்தமும் ப்ரயோஜனமற்றவைகள், வஸ்து சப்தம் பாவவாசியன்றோ. அனுமானத்தால் பாவரூபமான அஜ்ஞானத்தின் அஸித்தியை நிகமனம் செய்கிறார்—அத: என்று.

---

[illegible]

[illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

ச்ருதியிலும், சுருக்யர்த்தாபத்தியிலும் அஜ்ஞானத்தின் அஸித்தியானது அடுத்தே சொல்லப்படப்போகிறது. மித்யையாக இருக்கிற வஸ்துவுக்கு மித்யையான வஸ்துவே உபாதானமாக ஆவதற்குத் தகுதியுள்ளதாக இருக்கிறது என்கிற இந்த விஷயமும் 'ந விலக்ஷணத்வாத்' என்கிற அதிகரண ந்யாயத்தால் பரிஹரிக்கப்படுகிறது. ஆகையால் அநிர்வசநீயமான அஜ்ஞானத்தை விஷயமாகவுடைய ஒரு ப்ரதீதியும் இல்லை. ப்ரதீதி ப்ராந்தி பாதங்களாலுங்கூட அப்படி ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல. அறியப்படுகிற வஸ்துவேயன்றோ ப்ரதீதி ப்ராந்தி பாதங்களுக்கு விஷயம். இந்த ப்ரதீதிகளாலும் வேறுப்ரதீதியினாலும் எது அறியப்பட்டதன்றோ அது இந்தப்ரதீதிகளுக்கு விஷயமென்று கல்பிப்பது யுக்தமன்று. சுக்தி முதலியவைகளில் ரஜதம் முதலியவற்றின் ப்ரதீதி வருவதால், ப்ரதீதிகாலத்திலுங்கூட அது இல்லை என்கிற பாதத்தாலும் வேறு வஸ்துவுக்கு வேறு வஸ்துவாகத் தோற்றம் பொருந்தாததாலும் ஸத் என்றாவது அஸத் என்றாவது நிர்வசனஞ் செய்யத்தகாததான அபூர்வமாகவே இருக்கிற இந்த ரஜதமானது தோஷவசத்தால் அறியப்படுகிறதென்று கல்பிக்கத்தக்கதென்று சொல்லப்படுமேயானால், அல்ல. அந்த கல்பனையினாலுங்கூட வேறு வஸ்துவுக்கு வேறுவிதமாகத் தோற்றம் விடத்தகாததாக இருப்பதால், வேறுவிதமாக பானத்தை ஒப்புக்கொண்டதினாலேயே க்யாதி, ப்ரவ்ருத்தி, பாதம், ப்ரமம், இவைகள் உபபன்னங்களாவதால் ஒருக்காலும் காணப்பட்டிராததும் காரணமில்லாததுமான வஸ்துவின் கல்பனை பொருத்தமுள்ளதாக ஆகாது. கல்பிக்கப்படாநின்றபோதிலுங்கூட இந்த அநிர்வசனீயம், அநிர்வசநீயமென்று அறியப்படுகிறதில்லையன்றோ. பின்னையோ பரமார்த்த ரஜதமென்றே அறியப்படுகிறது. அநிர்வசநீயம் என்றே அறியப்படுமேயானால் ப்ராந்திபாதம் இவ்விரண்டின் ப்ரவ்ருத்திகளுங்கூட ஸம்பவியாது. ஆகையால் வேறு வஸ்துவுக்கு வேறுவிதமாக பானமில்லாவிடில் ப்ரதீதி, ப்ரவ்ருத்தி, பாதம், ப்ரமம் இவைகளுக்கு உபபத்தி இல்லாததாலும் அது பரிஹரிக்கத்தக்கதாக இராததாலும் சுக்தி முதலிய வஸ்துக்களே ரஜதம் முதலிய வஸ்துக்களின் உருவத்தால் விளங்குகிறதென்ற பக்ஷம் ஒப்புக்கொள்ளத்தக்கது.

ச்ருதப்ரகாசிகை —

ச்ருதியினுலும் அர்த்தாபத்தியினுலும அகன் ஸித்தியை ஆசங்கித்துக் கூறுகிருர்—ச்ருதி என்று அநிர்வசனீயமென்கிற விஷயத்தில் அந்யனால் சொல்லப்பட்டிருக்கிற ஹேதுவை விஸ்தாரமாக தூஷிக்கிருர்—ப்ரதீதி என்று. ப்ரதீதியாவது—ப்ராந்தி அப்ராந்தி இவ்விரண்டுக்கும பொதுவான ரூபத்துடன் கூடியது. ப்ராந்தியாவது—இருக்கிற பேதத்தை உள்ளபடி அறியாமையை முன்னிட்டுக்கொண்டிருக்கிற பொதுவான ஆகாரத்தை மாத்திரம் க்ரஹிப்பதால் உண்டானதும் தனக்கு விஷயமாக இருக்கிற வஸ்துவின் அந்யதாபாவத்தால் விசேஷிக்கப்பட்டதும் ப்ரவ்ருத்தி முதலியவற்றுக்கு ஹேதுவாயுமிருக்கிற ஸ்வபாவத்துடன் கூடியது. பாதமாவது— ஆரோபிக்கப்பட்டிருக்கிற வஸ்துஸ்வபாவத்திற்கு விருத்தமான அதிஷ்டானுகாரத்தை அவகாஹிக்கிறபுத்தி. அப்படி ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல—அநிர்வசநீயமென்றுஒப்புக்கொள்ளத்தக்கதல்லவென்று அர்த்தம். ப்ரதீதி ப்ராந்தி பாதங்களுக்கு அநிர்வசநீய ஸித்தியானது ஸ்வவிஷயோல்லேக மாத்திரத்திலேயா அந்யதாநுபபத்தியினுலேயா வென்கிற விகல்பத்தை எண்ணி முதல் பக்ஷத்தை தூஷிக்கிருர்—ப்ரதீயமாநம் என்று. ப்ரதீயமானம்—ப்ரதீதியினுல் உல்லேகிக்கப்படுகின்ற. ஸ்வோல்லேகமானது ஸதோல்லேகமாக அங்கீகரிக்கத்தக்கதல்லவன்ருே. அவ்வாறுக அங்கீகரிக்கப்பட்டால் எல்லாவற்றுக்கும் உபப்லவம் ப்ரஸங்கிப்பதாலென்று கருத்து. இரண்டாவதை தூஷிக்கிருர்—ஆபி: என்று. ஆபி: - ப்ரதீதிப்ராந்தி பாதகப்புங்களால் ஸதிக்கப்பட்டிருக்கிற ப்ரத்யக்ஷப்ரதீதிகளால். ப்ரதீத்யந்தரேண-ப்ராமாணுந்தரத்தினுல் உண்டான. அன்றிக்கே ஆபி: -லௌகிகப்ரதீதிகளால். ப்ரதீத்யந்தரேண - ஆகமத்தினுலுண்டான அன்றிக்கே. ஆபி: ப்ரதீதிபி:- ரஜ்ஜு ரூபமான ஒரு அதிஷ்டானத்தில் ப்ரதீயமானமாக இருக்கிற ஸர்ப்பம்- பூமியின் பிளவு ஜலதாரை முதலிய வஸ்துக்களினுள்ள பஹுத்வத்தைக் கருதி ப்ரதீதியில் பஹுவசனம். ப்ரதீத்யந்தரேண - பாதகஜ்ஞாநத்தால். சுருக்கமாகச்சொல்லப்பட்டதூஷணத்தை விரிவாகச்சொல்வதற்காக அந்யனுடைய மதத்தை அநுவதிக்கிருர்—சுக்த்யாதிஷு என்று. அந்யஸ்ய அந்யதாபாநாயோகாச்ச என்று. அய்யனே! வேறுவிதமாக பாநம் பொருந்ாதென்பது எவ்வண்ணம்? கூறப்படுகிறது. தர்மதர்மிகள் இரண்டுக்கும் ஒன்றேடொன்று தாதாத்ம்ய பானம் அந்யதாக்யாதமல்ல. முன்னிலையிலிருக்கிற வெண்ணிற முள்ளதும் பளபளப்புள்ளதுமான ஒரு வஸ்துவின் துண்டானது ரஜதத்வஜாதியாக அறியப்படுகிறதில்லை ரஜதத்வமும் பளபளப்புள்ள ஒரு துணுக்காக அறியப்படுகிறதில்லை. சகலம் சகலமாகவும் ஜாதி ஜாதியாகவுமறியப்படுகிறது. ஆகையால் இவ்விரண்டினுள் ஒன்றுக்கு மற்றொருவஸ்துவாக பானமில்லை. வேறு தர்மிக்கு வேறு தர்மியோடு * தாதாத்ம்யமும் அந்யதாத்வமன்று. அது விஷயத்தை நாடி இருக்கிறதா? அல்லது ஜ்ஞாநத்தை நாடி இருக்கிறதா? விஷயத்தில் அந்த அந்யதாத்வமிருக்குமே யாகில் ப்ரதீதியானது யதார்த்தமே. இல்லையென்று சொல்வாயேயானுல் அஸத்க்யாதி ப்ரஸங்கிக்கும். ஜ்ஞாநத்தையே அடைந்திருக்கிறதேயாகில், விஷயம் வேறு ஜ்ஞானம் வேறு என்பது பொருந்துகிறதில்லை. கடவிஷயகமான ஜ்ஞானத்திற்கு படவிஷயகமான ஜ்ஞானத்வம் ஸம்பவியாதன்ருே. ஆத்மக்யாதி ப்ரஸங்கமும், ரஜதம் முதலியது ஜ்ஞாநாகாரமாக இருப்பதால். தன்னிடத்திலில்லாமலிருக்கிற ஆகாரத்தால் ப்ரகாசம் க்யானம் அன்

* தாதாத்ம்யம்—ஐக்யம்.

யதாக்யாதி யென்று சொல்லப்படுமேயாகில்—அல்ல. அஸத்க்யாதி ப்ரஸங்கிப்பதால். வேறு இடத்தில் இருப்பதற்கு வேறுஇடத்தில் க்யாதி தான் க்யாதத்திற்கு அன்யதாத்வம் என்று சொல்லப்படுமேயாகில் அல்ல—ஒரு கொம்பு முறிந்த பசுவினிடம் காணப்பட்டிருக்கிற அவயவஸம்ஸ்தான ரூபமான கோத்வத்திற்கு இரண்டுகொம்பும் முறிந்திருக்கிற பசுவினிடம் காண்கைக்கும் ப்ரமமாக வேண்டிவருவதால். வேறு இடத்திலேயே இருக்கிற வஸ்துவுக்கு வேறு இடத்தில் க்யாதம் பாதியில் அன்யதாத்வம் என்று சொல்லப்படுமேயாகில் வேறு இடத்திலேயே இருப்பு எவ்வாறு நிச்சயிக்கப்படுகிறது. இங்கு பாதத்தினால் என்று கூறப்படுமேயாகில், அல்ல—ப்ராந்தி ஜ்ஞானத்தினால் பாதிக்கப்பட்டிருக்கிற ஸத்ய ரஜதத்திற்குங்கூட இந்த இடத்தில் அஸத்வ நிச்சயம் ப்ரஸங்கிப்பதால். ப்ரவ்ருத்தி பாதத்தால் வேறு இடத்திலேயே ஸத்வ நிச்சயமென்று சொல்லப்படுமேயாகில் அல்ல. மந்திரம் ஔஷதம் முதலிய வஸ்துக்களால் தடைபட்டிருக்கிற சக்தியுள்ள அக்னிக்கும் ஒளஷ்ண்யாபாதியால் கொப்புளத்தை உண்டுபண்ணுதல் முதலியவற்றில் சக்தி இல்லாமையால் ஸத்யாத்வ நிச்சயம் ப்ரஸங்கிப்பதால். துஷ்டகாரண ஜந்யமான ஜ்ஞானத்திற்கு விஷயமாக இருப்பதால் இங்கே பாதிக்கப்படுகிறதென்று சொல்லப்படுமேயாகில், எவ்வாறு துஷ்டகாரண ஜந்யத்வ நிச்சயமுண்டாயிற்று. பாதகமான ஜ்ஞானத்தினது உதயத்தினாலென்று சொல்லப்படுமேயாகில் முந்தின ஜ்ஞானமே பாதகமாக ஆகலாம். பிந்தி இருக்கவில்லையென்கிற தன்மைக்கு ஒன்றும் செய்யத்திறமை இல்லாமையானது காட்டப்பட்டிருக்கிறதன்றோ. முந்தின ஜ்ஞானம் துஷ்டகாரணத்தினாலுண்டானதென்று நிச்சயிக்கப்பட்டால் பிந்தியுண்டாகிற ஜ்ஞானத்திற்கு பாதகத்வநிச்சயம் வரும். அதற்கு பாதகத்வம் நிச்சயிக்கப்பட்டால் முந்தின ஜ்ஞானத்திற்கு துஷ்டகாரணத்தினாலுண்டாயிருத்தல் நிச்சயிக்கப்படுகிறதென்பதனால் அந்யோந்யாச்ரயமும் உண்டாகும். மேலும் முன்னிலையிலிருக்கிற சுக்தியில் ரஜதம் பாஸிக்கவில்லை, அதோ ரஜதம் வேறிடத்திலிருக்கிறதென்பதில் என்ன ப்ரமாணம். முந்தின ஜ்ஞானம் ப்ரமாணமல்ல. இந்த இடத்திலிருப்பதாகவன்றோ அதை அறிவிக்கிறது. பாதகஜ்ஞானமும் ப்ரமாணமன்று. அந்த பாதக ஜ்ஞானமோவென்றால் முன்னிலையிலிருக்கும் வஸ்துவின்கண் அதின் அஸத்வத்தை அறிவிக்கிறது. ரஜதக்ராஹக ப்ரமாணமும் இதில் ப்ரமாணமல்ல. அது கடையில் ரஜதஸத்வத்தையன்றோ அறியும்படி செய்விக்கிறது. கடையிலிருக்கிற அந்த ரஜதத்திற்கும் முன்னிலையில் பாஸித்திருக்கிற ரஜதத்திற்கும் ஐக்யமில்லையன்றோ. ஓரிடத்திலுமில்லாத வஸ்துவுக்குத்தோற்றமென்பது பொருந்தாததால். வேறு இடத்தில் இருப்புள்ள வஸ்துவுக்கே பாணம் தோற்றம் நிச்சயிக்கப்படுகிறதென்று கூறப்படுமேயாகில், அல்ல--இல்லாத வஸ்துவுக்கு க்யாதம் கூடாதென்பது ஸம்பந்தத்தில் இருக்கப்பட்டிருப்பதால். முன்னிலையிலிருக்கிற வஸ்துவில் அறியப்படாநின்ற ரஜதரூபமான $ தர்மிஸம்பந்தமோ ரஜதத்வரூபஜாதி ஸம்பந்தமோ வேறு இடத்திலில்லையன்றோ. ஐயா! வேறு இடத்தில் ஸம்பந்தமாத்ரமிருக்கிறது, அது இங்கே பிரகாசிக்கிறதாகையால் வேறு இடத்திலுள்ளதற்கே வேறுஇடத்தில் க்யாதமென்று சொல்லப்படுமேயாகில் அல்ல-இரண்டு ஸம்பந்தங்களுக்கு அவ்யாபாரமில்லாமையால், வேறு இடத்தில் இருக்கிற ஸம்பந்தத்துக்கு வேறு இடத்தில் க்யாதமென்று சொல்லின் ஸம்பந்திக்குப்போல ஸம்பந்தத்திற்கும் வேறு ஸம்பந்தம் அபேக்ஷிக்கப்படும். வேறு ஸம்பந்தம் அவ்யாபாரமிக்கிறதென்று சொல்லும் பக்ஷத்தில் வேறு இடத்திலிருப்பதற்கு க்யாதம் உண்டாகாது. இரண்டாவது ஸம்பந்தமானது ஓரிடத்திலுமில்லாததால், ஸம்பந்தம் வேறுஸம்பந்தத்தை

$ தர்மி—தர்மங்களுடன் கூடிய வஸ்து.

அபேக்ஷியாமல் வேறு ஸம்பந்தமில்லாமல் போனபோதிலுங்கூட முன்னிலையிலிருக்கும் வஸ்துவில் பானமானது யுக்தமென்று சொல்லப்படுமேயானால்; இங்ஙனமாகில், வேறு ஸம்பந்தியின் ஸம்பந்தமும் முன்னிலையிலுள்ள வஸ்துவும் இடைவெளி இன்றிதொடர்ச்சியாக ப்ரகாசிக்கிறதாதலால் யதார்த்த க்யாதியே சொல்லப்பட்டதாக ஆகும். க்யாதிக்கு விஷயமாக இருக்கிற அம்சமிருப்பதாலும் அஸத்தான ஒன்றுக்காவது க்யாதி விஷயத்வமில்லாமையாலும். மேலும் சிப்பித்துண்டுக்கே ரஜதஜ்ஞானவிஷயத்வம். ரஜதோபாயத்தைக்காட்டிலும் வேருக இருக்கையில் ரஜதார்த்தமான ப்ரவ்ருத்திக்கு விஷயமாக இருத்தலால் என்று ஸாதிப்பதும் யுக்தமாகாது. இது நிரூபிக்கப்படுறது— இதம்சப்தத்தால் சொல்லப்படுகிற வஸ்துவுக்கு ரஜதத்வஜாதி விசிஷ்டதாஜ்ஞானவிஷயத்வமன்றோ ஸாத்யம். அது பாதிக்கப்பட்டிராத ப்ரவ்ருத்திக்கு விஷயமாக இருத்தல் என்பதனுல் உண்டுபண்ணப்பட்டிருக்கிற தென்கிற காரணத்தினுல் ஹேது உபாதியுடன்கூடியதாக ஆகிறது. சுக்தியானது ரஜதமாக ப்ரகாசிக்கிறதில்லை. சுக்தியாக இருப்பதால். ஸம்ப்ரதிபன்னம்போல், என்றும் பாதம் இதுமுதலிய தூஷணுபிப்ராயத்தால் வேறுவஸ்துவுக்கு வேறுவிதமாக பானம பொருந்தாததலாலுமென்று கூறப்பட்டது. ஆஷிக்கிறுர்—ந என்று. முன்னிலையிலிருக்கிற வஸ்துவுக்குவேறு இடத்திலேயே இருக்கிற ஆகாரத்தோடு கூடியதாக ஜ்ஞானம் அன்யதாபானம். ப்ரதிபன்னுகாரத்திற்கு முன்னிலையிலிருக்கிற பதார்த்தத்தில் அபாவ நிச்சயமும் ப்ரவ்ருத்திபாதத்திற்குத் துணையாக இருக்கிற இல்லை என்கிற ப்ரத்யயத்தால். மந்த்ரத்தினுலும் ஔஷதிகளாலும் தடைபட்டிருக்கிற ஔஷ்ண்யசக்தியுடன் கூடின அக்னிக்கு அக்னித்தன்மை இல்லை என்கிற ஜ்ஞானம் உண்டாகாதென்பது ப்ரஸித்தமன்ரோ. அதைகல்பித்தாலுங்கூட வேறுவிதமாக பாஸிப்பது எவ்வாறு விலக்கத்தகாதது என்கிற அபேக்ஷையின் சொல்லுகிருர்— கல்ப்யமாநம் ஹி என்று. அநிர்வசநீய மென்றே ப்ரதீதிவருகிற தென்று ஒப்புக்கொண்டால் ப்ரதீதிக்குப்ரமரூபத்வமும் பாதமும் ஏற்படுவதுடன் ப்ரவ்ருத்தியும் உண்டாகாமல்போகும் அநிர்வசநீயமான வஸ்துவானது நிர்வசநீயமென்று அறியப்படுமேயானுல் வேறு வஸ்துவுக்கு வேறுவிதமாகத் தோற்றமானது விடத்தகாததாக ஆகுமென்று பொருள்—தஸ்யாபரிஹார்யத்வாச்ச என்று. தஸ்ய அந்யதாபாநத்திற்கு. இது அபிப்ராயம்—வேறு வஸ்துவுக்கு வேறு விதமாக பானம் கிடையாது. இருக்கிற வஸ்துவுக்கே ப்ரதீதி வருவதால். அலௌகிகமானஸத்தென்றும் லௌகிகமான ஸத்தென்றும் ஸத்தானது இரண்டுவிதம். அநிர்வசநீயத்திலும் அலௌகிகமான ஸத்விமிருக்கிறது. இந்த இடத்தில் அந்த அலௌகிக ஸத்தான ரஜதம் ப்ரதீதி விஷயமாகிற தென்று சொல்லப்படுமேயானுல் அலௌகிக ஸத்தானது அலௌகிக ஸத்தாகவே அறியப்படுகிறதா? அல்லது லௌகிக ஸத்தாக அறியப்படுகிறதா? முதல் பக்ஷத்தில் ப்ரமத்வம் பாதம் ப்ரவ்ருத்தியின் அஸம்பவம் இவைகள் ஸம்பவிக்கின்றன- அலௌகிக ஸத்தானது லௌகிக ஸத்தென்று அறியப்படுமேயானுல் வேறு வஸ்துவுக்கு வேறுவிதமாகத் தோற்றமேற்படும். அலௌகிக ஸத்துக்கு லௌகிகஸத்தோடு பேதம் க்ரஹிக்கப்படாததால் ப்ரவ்ருத்தி முதலியவைகளுக்கு ஸம்பவமென்று மறுமொழி உரைக்கப்படுமேயானுல் அப்பொழுது அந்த இடத்தில் அநிர்வசநீயமான வஸ்துவை கல்பித்து அதில் பேதக்ரஹணமில்லாமையால் ப்ரவ்ருத்திபாதம் ப்ரமம் இவைகளை உபபாதிப்பதைவிட முதலிலேயே ஸம்ப்ரதிபன்ன ரஜதத்தைக் காட்டிலும் சுக்தித்வ ரூபபேதக்ரஹணமில்லாமையால் ப்ரவ்ருத்தி பாதம் ப்ரமம் இவைகளை உபபாதிப்பதில் கல்பநாலாகவத்தால் அநிர்வசநீயமான வஸ்துவானது உபபன்னமாகாது. இது முதலிய பதங்களுடன் கூடிய பதக பரம்பரையை அபிப்ராயப்பட்டு அது அபரிஹார்யமாக இருப்பதாலுமெனுன் சொல்லப்பட்டது.

[illegible]

[illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

யதார்த்தக்யாதியை விட்டு வேறு க்யாதியைச் சொல்லுகிறவர்களுக்கும் வெகுதூரம் சென்றும் அந்யதா க்யாதியானது அவச்யமாச்ரயிக்கத் தக்கது. அஸத் க்யாதி பக்ஷத்தில் அதாவது * மாத்யமிக பக்ஷத்தில் ஸத்ரூபத்தாலும். ஆத்மக்யாதி பக்ஷத்தில் அதாவது யோகாசாரபக்ஷத்தில் அர்த்த ஸ்வரூபத்தாலும் அக்யாதி பக்ஷத்திலும் அந்ய விசேஷணம் அந்யவிசேஷணமாக ப்ரதீதி விஷயமாவதாலும் இரண்டு ஜ்ஞானங்களும் ஒன்றாக

* மாத்யமிகன்—பௌத்தன்.

அறியப்படுவதாலும் விஷயாஸத்பாவ பக்ஷத்திலும் விஷயம் இருப்பதாக க்ரஹிக்கப்படுவதாலும் அன்யதாக்யாதி அவச்ய மாச்ரயிக்கத்தக்கது. மேலும் ‡ அநிர்வசநீயமான அபூர்வ ரஜதம் இங்கு உண்டாயிற்று என்று சொல்பவனுல் அந்த அபூர்வ ரஜதத்தின் உத்பத்திக்கு காரணம் சொல்லத்தக்கது. அதற்கு அந்த ரஜதவிஷய ப்ரதீதியானது காரணமாகாது. அந்த ப்ரதீதியானது அந்த ரஜத விஷயகமாதலால். அந்த ரஜதோத்பத்திக்கு முந்தி ப்ரதீதிக்கு ஸ்வரூபலாப மில்லாததால். விஷயமில்லாததாகவே ப்ரதீதியானது பிறந்து அந்த ரஜதத்தை உண்டுபண்ணி அதையே விஷயீகரிக்கிறதென்கிற இந்த உபபாதனம் § மகான்களுடையது. அப்படிக்கின்றி இந்த்ரியம் முதலியவைகளை அடைந்திருக்கிற தோஷம் அந்த ரஜதத்திற்கு $ உத்பாதகமென்று உரைக்கப்படுமோ அதல்ல. அந்த தோஷம் புருஷனை ஆச்ரயித்திருப்பதால் அர்த்தத்தை அடைந்திருக்கிற கார்யத்தைக்குறித்து அதற்கு உத்பாதகத்வம் ஸம்பவியாதாதலால். இந்த்ரியங்களும் அந்த ரஜதத்திற்கு உத்பாதகங்களாகா. அவைகள் ஜ்ஞானகாரணங்களாக இருப்பதால். துஷ்டங்களான இந்த்ரியங்களும் அந்த ரஜதத்திற்கு உத்பாதகங்களல்ல. அந்த துஷ்டேந்த்ரியங்களுக்கும் தன்னுடைய கார்யமாக இருக்கிற ஜ்ஞானத்திலேயேயன்றோ விசேஷத்தை உண்டுபண்ணும் திறமை அநாதியானமித்யா ஜ்ஞானம் அதற்கு உபாதானகாரணமென்பது முந்தியே நிரஸனம் செய்யப்பட்டிருக்கிறது. மேலும் இதற்கு முன்னில்லாததும் அநிர்வசநீயமாகவுமிருக்கிற இந்த வஸ்துவானதுதோன்றி ரஜதம் முதலிய வஸ்துவிஷயகமான புத்தியினுலும் சப்தத்தாலும் எவ்வாறு விஷயீகரிக்கப்படுகிறது? கடம் முதலிய வஸ்துவிஷயகமான புத்தியினுலும் சப்தத்தாலும் ஏன் விஷயீகரிக்கப்படுகிறதில்லை. ரஜதம் முதலிய வஸ்துக்களின் ஒற்றுமை இருப்பதால் ரஜதபுத்தி சப்தங்களால் விஷயீகரிக்கப்படுகிறதென்று சொல்லப்படுமேயானுல் அப்பொழுது ரஜதஸத்ருசமென்றே ப்ரதீதியும் சப்தமும் உண்டாகவேண்டும். ரஜதம் முதலிய ஜாதியின் ஸம்பந்தத்தாலென்று சொல்லப்பட்டால் அந்த ஜாதியானது பரமார்த்தமாக இருக்கிறதா? அல்லது அபரமார்த்தமா? அது பரமார்த்தமல்ல. அதற்கு அபரமார்த்தவஸ்து ஸம்பந்தம் பொருந்தாததலால். அபரமார்த்தமுமன்று; பரமார்த்த வஸ்துவோடு அன்வயம் கூடாததாலும் அப்ரமார்த்தத்தில் பரமார்த்தபுத்திசப்தம் இவ்விரண்டுகளுக்கும் நிர்வாஹகத்வம் கூடாததலாலும். இவ்வாருக அபரிபக்வமான குதர்க்கங்களின நிரஸனத்தினுல் யாது பயன். இவ்வளவோடு போரும்.

‡ அநிர்வசநீயம்—ஸத்தென்ருவது அஸத்தென்ருவது சொல்லத்தகாதது.

§ மஹாதாம்—ஜ்ஞானமில்லாதவர்களுடைய இந்த பதமானது இங்கு விருத்தமான அர்த்தத்தை உணர்த்துகிறது. $. உத்பாதகம்—கார்யத்தை உண்டுபண்ணுகிற வஸ்து

ச்ருதப்ரகாசிகை—

யதார்த்தக்யாதி பக்ஷத்தைத்தவிர்த்த பக்ஷங்களில் அன்யதாக்யாதி பக்ஷம் ப்ரபலம் என்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிறார்— கேயாத்யந்தர என்று. ஸாமயிகத்வா - பரம்பரையைச் சொல்லியென்று பொருள். அதை உபபாதிக்கிறார்— அஸத் என்று. இது * மாத்யமிகனுடைய பக்ஷம். அஸத்தென்றே ப்ரதீதி விஷயமாகிறதா? அல்லது ஸத்தென்று அறியப்படுகிறதா? அஸத்தென்று ப்ரதீதி விஷயமாகிறதென்று சொல்லப்படுமேயாகில், ப்ரமத்வம் பாதம் ப்ரவ்ருத்தி இவைகளுக்கு ஸம்பவமில்லை. ஸத் என்று ப்ரதீதி விஷயமாகிறதென்று சொல்லப்படுமேயாகில் வேறு வஸ்துவுக்கு வேறுவிதமாக பாநமுண்டாகலாமென்று பொருள். ஆத்மா என்று. இது ¶ யோகாசாரனுடைய பக்ஷம். ஆத்மசப்தம் ஜ்ஞானத்தை உரைத்தலில் முக்கியநோக்கமுள்ளது ஜ்ஞானமென்றே ப்ரதீதி விஷயமாகிறதா? அல்லது அர்த்தமென்று ப்ரதீதி விஷயமாகிறதா? முதல் பக்ஷத்தில் ப்ரவ்ருத்தி பாதம் ப்ரமத்வம் இவைகளுக்குஸம்பவமில்லை. இரண்டாவது பக்ஷத்தில் அன்யவஸ்துவுக்கு அன்யதாவாக பாநமென்று அர்த்தம். அக்யாதிபக்ஷே என்று. 'இது ரஜதமென்பது' ஒரு ஜ்ஞானமா? அல்லது இரண்டு ஜ்ஞானமா? என்கிற விகல்பத்தை மனதில் கருதி ஏகஜ்ஞானம் என்கிற பக்ஷத்தில் § ஜ்ஞேயத்தில் அந்யதாக்யாதியை ப்ரஸஞ்ஜிக்கச் செய்கிறார்— அன்யவிசேஷணமன்ய விசேஷ்யத்வேந என்று. இது ரஜதம் என்று ஒன்றாகவில்லையாலும் விவாதமின்றி ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஸத்ய ரஜதம்போல ஆரோபிக்கத்தக்கதிதம் ரஜத விஷயத்தை அனுஸரித்து வருகிற ப்ரயோகானுகுணமான ஸாமாநாதிகரண்யத்தால் ப்ரதீதமாக இருப்பது பற்றி அன்ய விசேஷணம் அன்யவிசேஷணமாக ப்ரதீதி விஷயமாகிறதென்று ஆபாதனம் செய்யப்பட்டதே ஒழிய அந்த பக்ஷம் உபன்யஸிக்கப்படவில்லை. இரண்டு ஜ்ஞானங்கள் என்கிற பக்ஷத்தில் ஜ்ஞானத்தில் அந்யதாக்யாதியை ப்ரஸஞ்ஜனம் செய்கிறார்— ஜ்ஞாநே என்று. ஜ்ஞானத்வயம் ஜ்ஞானத்வயமென்றே ப்ரதீதி விஷயமாகிறதா? அல்லது ஏகமென்று ப்ரதீதி விஷயமாகிறதா? வென்கிற விகல்பத்தில் முன்போல் தூஷணம்— விஷயாஸத்பாவ என்று. இல்லை என்று அறியப்படுகிறதா? அல்லது இருக்கிறதாக அறியப்படுகிறதா? முதல் பக்ஷத்தில் ப்ரவ்ருத்தி முதலியதற்கு அஸம்பவம் ஏற்படுகிறது. இரண்டாவது பக்ஷத்தில் வேறு வஸ்துவுக்கு வேறுவிதமாக பானமென்று அர்த்தம். அதற்குமேல் காரணத்வத்தை உபபாதனம் செய்கிறார்— ஸித்தே என்று. தஸ்யா: - ப்ரத்யக்ஷப்ரதீதிக்கு. தத்விஷயத்வேந - இருக்கிற விஷயத்தைக் காரணமாகக்கொண்டிருத்தலால். காரணமானது கார்யத்திற்கு முந்தின க்ஷணத்தில் தவறாது இருப்புடன் கூடியதல்லவோ என்று கருத்து. மனுத்ரயீத்ர முபபாதனம் என்று. அந்த லருத்திஜ்ஞானத்திற்கு விஷயங்களால் விடுபட்டிருக்கிற நிலைமையை ஸ்வீகரித்தலால் காரணத்வத்தை ஒப்புக்கொள்ளில் அபஸித்தாந்தம் வந்து விழுமாதலால். நிர்விஷய க்யாதிவாதிகளுக்கு

---

* மாத்யமிகன்—புத்தனுடைய சிஷ்யர்களுக்குள் சிறப்புற்றவன். இவன் ஸர்வசூன்யவாதி.

¶ யோகாசாரன்—இவன் பௌத்த ஏகதேசி. வைபாஷிகனுலும் ஸௌத்ராந்திகனுலும் முறையே க்ஷணிக மென்றும் அநுமேயமென்றும் சொல்லப்பட்டிருக்கிற ப்ரபஞ்சத்தை மித்யை என்று சொல்பவன். § ஜ்ஞேயம்—அறியத்தக்க வஸ்து.

ப்போல் அதன் ப்ரபாவத்தால் ப்ரவ்ருத்தி முதலியவற்றின் ஸித்தி வரின் அநிர்வசநீய கல்பனை பயனற்றதாக ஆவதாலும், விஷயரூபமான காரணமில்லாமல் உத்பத்தி சொல்லப்பட்டிருப்பதாலும் சப்தங்களுக்கு ஒரு அர்த்தத்தை உணர்த்தி ஓய்ந்து மறுபடி மற்றொரு அர்த்தத்தை உணர்த்துவதற்காக வ்யாபாரம் சொல்லப்படுவதாலும் மிகவும் அனுபபன்னமென்று அர்த்தம். அதேந்த்ரியார்த்தே என்று. ஆரிசப்தத்தால் விஷயத்தை அடைந்திருக்கிற தோஷமோ புருஷனுடைய * அநவதானமோ க்ரஹிக்கப்படுகிறது. தஸ்ய புருஷாச்ரயத்வேந என்று. தூரத்திலிருத்தல் முதலிய தோஷமானது விஷயங்களை அடைந்ததாக இருந்தபோதிலுங்கூட அந்த தோஷத்திற்கு புருஷனை நாடி இருத்தலும் ஸம்பவிப்பதால் இரண்டு இடங்களிலும் கார்யமானது உண்டு பண்ணத்தக்கது. விஷயமாத்ரத்தில் அல்ல. நியாமகமில்லாமையால். ஆகையால் புருஷனிடத்தில் போல் விஷயத்திலும் ஸம்பவிக்கிறதில்லையென்று கருத்து. அய்யனே! கண் புருஷனை ஆச்ரயித்திருந்தபோதிலும் வெளியில் ப்ரஸரித்து விஷயத்தில் ஸம்பந்தித்திருக்கிற கண்ணின் ஒளிக்கு அதில் கார்யகாரத்வம் காணப்பட்டிருக்கிறது, அல்ல. அதன் கார்யமான ஜ்ஞானமானது புருஷனை ஆச்ரயித்திருப்பதால் தோஷாம்சத்திற்கு கார்யகாரத்வமில்லாமையால். அய்யனே! † ஸாத்ருச்யம் முதலிய தோஷங்கள் விஷயமாத்ரத்தை அடைந்தவைகளாக இருக்கின்றன. அவைகளுக்கு அந்த விஷயங்களிலேயே கார்ய காரத்வமானது உபபன்னமாகிறது. இவ்வண்ணமல்ல. த்ரவ்யஸ்வரூபத்தை முன்னவையில் அந்த த்ரவ்யத்தை தவிட்டு விலக்ஷணஸாத்ருச்யம் முதலியவற்றுக்கு எப்பொழுதும் உத்பாதகத்வம் ப்ரஸங்கிப்பதால். புதியதாக வந்திருக்கிற மற்றொன்று அங்கு காணப்படாததால். இந்த்ரிய ஸம்யோகத்திற்குப்புருஷனிடத்திலிருக்கிற ஜ்ஞானத்தைத்தவிர்த்த மற்றதற்கு ஹேதுத்வம் ஸித்தியாததால். த்ருஷ்டிவிஷம் முதலிய ந்யாயம் இங்கு ஸம்பவியாததாலும், ஸம்பவித்தபோதிலும் எல்லோராலும் § உபலம்பம் ப்ரஸங்கிப்பதாலும். அறிவில் சிறந்தவரே! இந்த்ரியங்கள் எப்படி புருஷவிசேஷ ஸம்பந்தத்தால் அந்த புருஷ விசேஷத்திலேயே கார்ய விசேஷத்தை உண்டுபண்ணுகின்றனவோ இப்படியே விஷயவிசேஷ ஸம்பந்தத்தால் அந்த விஷய விசேஷத்திலேயே ஏதோ விசேஷத்தை உண்டுபண்ணட்டும். அது விஷயத்தில் சொல்லுகிறார்—நாபீந்த்ரியாணி என்று. புருஷனை அடைந்திருக்கிற ஜ்ஞானமென்கிற கார்யத்தை உண்டுபண்ணுதல் ‡ அன்வய வ்யதிரேகங்களால் நிலைபெற்றிருக்கிறது. விஷயேந்த்ரியஜன்யமான கார்யாந்தரம் காணப்பட்டிருக்கவில்லை. அதன் கல்பனையானது வேறு விதத்தினாலேயே ஏற்படுகிற உபபத்தியினால் விலக்கப்பட்டுவிட்டது என்று கருத்து. அப்படி இருந்தபோதிலுங்கூட துஷ்டபுருஷனுடைய ஸந்நிதானத்தினால் எவ்வாறு தேசம் முதலியவைகளில் தோஷங்கள் தோன்றுகின்றனவோ அவ்வாறே துஷ்டங்களாக இருக்கிற இந்த்ரியங்களின் ஸந்நிதானத்தால் விஷயத்தில் கார்ய விசேஷம் உண்டாகலாமென்று சொல்லப்படுமேயானால் சொல்லுகிறார்—நாபி துஷ்டாநி என்று. அன்வய வ்யதிரேகங்கள் முதலியவற்றைத்தாண்டி த்ருஷ்டாந்தமாத்ரத்தினால் ஒன்றும்ஸாதிப்பதற்கு சக்யமாகாதென்று கருத்து. இந்த விஷயத்தில் வேறுஹேதுவைத் தேடுவதனால் யாது பயன். அநாதியாக இருக்கிற பாவரூபமான அஜ்ஞானமே எல்லா

---

* அநவதானம்—கவனமில்லாமை.

† ஸாத்ருச்யம்—ஒற்றுமை.  § உபலம்பம்—அறிவு.

‡ அன்வயவ்யதிரேகங்கள்—இது இருந்தால் அது இருக்கவேண்டுமென்பது அன்வயம், இது இல்லாவிட்டால் அது இராது என்பது வ்யதிரேகம்.

வற்றுக்கும் உபாதானமாக இருந்துகொண்டு சுக்திரஜதம் முதலிய விசித்ரமான கார்யத்தையும் உண்டாக்கலாமென்று கூறப்படுமேயானால் சொல்லுகிறார்கூ **அநாதி என்று.** அது ஸ்வரூபாநாதியாக இருப்பதால் அதன்கார்யமும் முந்தியே உண்டாகலாம். துணைக் காரணமென்று ஸந்தேஹிக்கத்தக்க இந்த்ரியம் முதலியதோ வென்றால் நிரஸனம் செய்யப்பட்டது. § மித்யாபூதமான வஸ்துவுக்கு அர்த்தக்ரியாகாரித்வமானது யுக்தமன்று. ஆச்ரயாநுபபத்தி முதலியவைகள் முந்தியே உரைக்கப்பட்டுவிட்டனவென்றுகருத்து.

இவ்விதமாக அநிர்வசனீயமான ரஜதம் முதலியவற்றுக்கு உதபாதகாநுபபத்தியைச் சொல்லி அதன் உத்பத்தியில் கூட ரஜதாதி புத்தி சப்தான்வய நியமாநுபபத்தியைச் சொல்லுகிறார்—கிஞ்ச என்று. அது விஷயத்தில் வ்யவஸ்தையை உண்டுபண்ணுகிற பதார்த்தத்தை சங்கிக்கிறார்—**ரஜதாதி என்று.*** ப்ராதிபாஸிகமான ரஜதம் முதலியதற்கு அர்த்தக்ரியாகாரியான வ்யாவஹாரிகரஜதம் முதலியதோடு ஒற்றுமை இருப்பதால் என்று அர்த்தம். சொல்லப்பட்டதற்கு வ்யவஸ்தாபகத்வாபாவத்தை எண்ணி ஸாத்ருச்யத்திற்குக்காணப்பட்டிருக்கிற வேறு ஸாத்யத்தைக்கூறுகிறார்—**நர்ஹி என்று** அந்த வஸ்துவுக்கு துல்யமாக இருக்கிற வஸ்துவினிடம் அந்த வஸ்துபுத்தி உண்டாகுமேயாகில் அப்பொழுது ¶ கவயத்தினிடம் கோபுத்திபோல் அன்யதாக்யாதியானது உண்டாகலாமென்பது ஏவகாராபிப்ராயம். ஸாத்ருச்யத்திற்கு நிர்வாஹகத்வமில்லாவிடினும் அந்த ஜாதி ஸம்பந்தத்திற்கு அந்த புத்தி விஷயத்தில் நிர்வாஹகத்வம் காணப்பட்டிருக்கிறதென்று சங்கிக்கிறார்—**ரஜதாதி என்று** ஸா - அந்த ரஜதம் முதலிய ஜாதியானது. அபரமார்த்தாந்வயாயோகாத் - அபரமார்த்தமான வ்யக்தியுடன் அன்வயம் பொருந்தாததலால் என்று அர்த்தம். வ்யக்திபாதம் வந்தபோதிலும் ஜாதிக்குஅபாதிதத்வம் ப்ரஸங்கிக்கிறதென்று கருத்து. ஜாதியுமன்றோ பாதிக்கப்படுகிறது வ்யக்தி கிடையாது. ஜாதியோவென்றால் இருக்கிறதென்று ப்ரதீதி உண்டாகிறதில்லையன்றோ. ஜாதியுமில்லை என்றே யல்லவோ ப்ரதிபத்தி வருகிறது ஜாதியானது முந்தி அறியப்பட்டதாக இருந்தபோதிலும் அபிவ்யஞ்ஜக வ்யக்தி இல்லாமையால் அதற்குப்பிற்பாடு ப்ரதீதி இல்லையே ஒழிய ஜாதி இல்லாமையாலல்லவென்று சொல்லத்தக்கதல்ல. ஜாதியானது அபிவ்யஞ்ஜகத்துடன் கூடின பூர்வகாலத்தில் அறியப்பட்டிருந்தபோதிலும் அது அக்காலத்தோடு ஸம்பந்தம் பெற்றதாகவே பாதக ப்ரத்யயத்தின் நாஸ்திதைக்கு கோசரமாக இருப்பதால். ப்ரதிபன்னமான உபாதியில் நாஸ்தி என்கிற ப்ரத்யமன்றோ பாதம். அபரமார்த்த பக்ஷத்தை தூஷிக்கிறார்—**நாபி என்று.** பரமார்த்தாந்வயாயோகாத் - கடையிலிருக்கிற ரஜத வ்யக்தியோடு ஸம்பந்தம் பொருந்தாததலால் என்று அர்த்தம். வ்யக்தி இருந்தபோதிலுங்கூட ஜாதிக்கு ஏதாவது ஒரு ஸமயத்தில் பாதிதத்வம் ப்ரஸங்கிக்கிறதென்று கருத்து. ஒரு ஸமயத்திலாவது கடையிலிருக்கிற ரஜதத்தில் ரஜதத்வம் பாதிக்கப்படுகிறதில்லையன்றோ. பரமார்த்த வ்யக்தியுடன் அன்வயமில்லை என்று சொல்லின் பாதகத்தைக் கூறுகிறார்— **அபாமார்த்த என்று.** பரமார்த்த புத்தி சப்தயோ: - பரமார்த்த விஷயமான புத்தி சப்தம் இவ்விரண்டுகளுக்கும். பரமார்த்தமான வ்யக்தியில் ஜாதியானது அன்வயிக்காமல் போமேயா

---

§ மித்யா.. அஸத்யம்.

* ப்ராதிபாஸிகம்—ப்ரமத்தினால் ஒருவஸ்துவினிடம் தோன்றுகிற மற்றொரு வஸ்து. அதாவது சுக்தியில் ப்ராந்தி ஸித்தமான ரஜதம். ¶ கவயம்—பசுபோன்ற மிருகம்.

னுல் அதற்கு ஓரிடத்திலாவது பரமார்த்த புத்தி சப்தம் இவைகளில் ஹேதுத்வம் காணப்படாமையால் ப்ராந்திஸ்தலத்தில்கூட பரமார்த்த புத்தி சப்தம் இவைகளின் விஷயத்தில் நிர்வாஹகத்வம் உண்டாகாதென்று அர்த்தம். அன்றிக்கே, ஜாதியின் அபாரமார்த்யத்திலேயே வேறு தூஷணத்தையும் புத்தி சப்தங்களின் அன்வயாநுபபத்தியையும் கூறுகிறூர்—அபாரமார்த்த என்று. பாமார்த்த புத்தி சப்தயோ:-பாமார்த்தமாக இருக்கிற புத்தி சப்தம் இவ்விரண்டுகளுக்கும் என்று அர்த்தம். அஸத்யத்தினிடத்தினின்று ஸத்யவஸ்துவினுடைய உத்பத்தியின் நிராஸத்தை உபஜீவித்து இந்த தூஷணம் உரைக்கப்படுகிறது. வ்யக்திக்கு அந்த புத்தி சப்த நிர்வாஹகத்வத்தின் அஸம்பந்தத்தைக் காண்பிப்பதற்காக அபாமார்த்த என்று சொல்லப்பட்டது. அபாமார்த்த ஜாதிக்கு பரமார்த்தபூதமான புத்திசப்த நிர்வாஹகத்வம் பொருந்தாதாதலால் ஜாதியின் அபாரமார்த்யம் அயுக்தமென்று அர்த்தம். புத்தி, சப்தம் இவ்விரண்டுகளுக்கும் பாரமார்த்யமானது அவைகளுக்கு பாதக தர்சனமில்லாமையாலேயே ஸித்தம்.

---

[illegible]

[illegible]

---

ஸ்ரீபாஷ்யம்—

மேற்கூறப்பட்டுள்ள பற்பல க்யாதிபக்ஷங்களை ஆக்ஷேபித்து ஸாம்ப்ரதாயிகமான ஸ்வமதத்தை அதாவது யதார்த்த க்யாதியை இங்கு ஸ்பஷ்டமாக அருளிச்செய்கிறார்— எல்லா ஜ்ஞானங்களும் யதார்த்தங்களென்பது பகவத்போதாயனநாதமுனிமிச்ரர் முதலிய வேதார்த்த தத்வதர்சிகளான பரமாசார்யர்களுக்கு அபிமதம். ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் எல்லா வஸ்துக்களிடத்திலும் எல்லா வஸ்துக்களின் அம்சங்களிருப்பதாக அறியப்படுகிறது. தேவ திர்யங் மனுஷ்ய ஸ்தாவராத்மக ப்ரபஞ்சரூபமாக நான் பஹுவாக ஆகக்கடவேனென்கிற பல ஸங்கல்பத்தை முன்னிட்ட ஸ்ருஷ்டி, நாமரூபவ்யாகரணம், முதலியவைகளை தொடக்கத்தில் கொண்டிருக்கிற ப்ரகரணத்தில் "தாஸாம் த்ரிவ்ருத மேகைகாம்" என்கிற ச்ருதியினாலேயே த்ரிவ்ருத்கரணம் சொல்லப்பட்டிருக்கிறது. த்ரிவ்ருத்கரணமென்பது பஞ்சீகரணத்திற்கு உபலக்ஷணம். இந்த த்ரிவ்ருத்கரணமானது இந்த ச்ருதியில் சொல்லியிருக்கிற வண்ணமாகவே ப்ரத்யக்ஷத்தாலறியப்படுகிறதன்றோ. அக்னியினிடத்தில் யாதொரு சிவப்புநிறம் காணப்படுகிறதோ அது தேஜஸ்ஸினுடையது. வெண்மை நிறம் யாதொன்றுண்டோ அது ஜலத்தினுடையது. கருப்பு நிறம் ப்ருதிவியினுடையது, என்று இவ்வாறாக அக்னியிலேயே மூன்று ரூபங்கள் ச்ருதியினாலேயே காட்டப்பட்டிருக்கின்றன. ஆகையால் எல்லா வஸ்து ஸ்வரூப ஸ்வபாவங்களும் எல்லா வஸ்துக்களிலும் சேர்ந்திருக்கின்றன. விஷ்ணு புராணத்திலும் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் இவ்விதமாகவே சொல்லப் பட்டிருக்கிறது. பற்பல வீர்யமுள்ளவைகளான அந்த மஹத்முதலிய தத்வங்கள் சேர்க்கை இன்றி தனித்தனியாக வேறுபட்டிருந்தன பிறகு அவைகள் முழுமையும் சேர்க்கை பெறாமல் ப்ரஜைகளை உண்டுபண்ணுவதற்கு சக்தியற்றவைகளாக ஆயின. மஹத் தத்வம் முதலாக விசேஷங்களை ஈறாகக்கொண்டிருக்கிற இருபத்துமூன்று தத்வங்களும் அன்யோன்யம் சேர்க்கையைப் பெற்று ஒன்றை மற்றொன்று ஆச்ரயித்தவைகளாக இருந்துகொண்டு அண்டத்தை உண்டுபண்ணுகின்றன, இது முதலியதால் அப்படியே ஸூத்ரகாரரும் பூதங்களுக்கு மூன்று வஸ்து

ஸ்வரூபஸ்வபாவத்துடன் சேர்ந்திருத்தலைக்கூறி இருக்கிறார். மூன்று என்று சொன்னது ஐந்துக்கு உபலக்ஷணமாகக் கொள்ளத்தக்கது. எல்லா வஸ்துக்களும் பஞ்சீகரணத்தினால் ஐந்து பூத ஸ்வரூபங்களாக இருப்பதனால் எல்லா வஸ்துக்களிடத்திலும் எல்லா வஸ்துக்களின் வ்யவஹாரம் பொருத்தமுள்ளதாக ஆகும். பஞ்சபூத ஸங்காதாத்மகங்களான வஸ்துக்களிடத்தில் எந்த பூதாம்சம் எதில் அதிகமாக இருக்கிறதோ, அதை அனுஸரித்து அந்த வஸ்துவினிடம் அந்த வ்யவஹாரமென்று வ்யவஸ்தை அறியத்தக்கது. இவ்வண்ணம் முதலில் பூதங்களில் பூதாந்தர ஸத்பாவம் சொல்லப்பட்டது. இனிமேல் ஸத்ருசமான வஸ்துவினிடம் ஸத்ருசாந்தர வஸ்து ஸத்பாவத்தைச்சொல்லுகிறார்— ஸோமலதை இல்லாவிடில் பூதிகமென்று வழங்கப்படுகிற சிந்திக்கொடியானது யாகங்களில் உபயோகிக்கத்தக்கதென்று ச்ருதியினால் சொல்லப்பட்டிருக்கிறது. ஸோமலதையின் அவயவாம்சமானது பூதீகத்திலிருப்பதால் ஸோமமில்லாவிட்டால் அந்த ஸோமலதாஸ்தானத்தில் பூதீகத்தை உபயோகிக்க வேண்டுமென்று ச்ருதி கூறி இருக்கிறதென்று ப்ரமாணாநுகுணமான நியாயத்தை அறிந்தவர்கள் அறிகிறார்கள். நெல் இல்லாவிட்டாலும் நெல்லின் அம்சம் இருப்பதால் நீவாரம் க்ரஹிக்கத்தக்கதென்றும் ச்ருதி சொல்லுகிறது. எந்த த்ரவ்யம் எந்த திரவ்யத்தின் ஓரம்சத்தை அடைந்திருக்கிறதோ, அந்த த்ரவ்யமே அதற்கு ஸத்ருசம். சிப்பி முதலியதில் ரஜதம் முதலிய வஸ்துவின் ஸத்தையானது ச்ருதியினாலேயே அறிவிக்கப்பட்டிருக்கிறது. வெள்ளி சிப்பி முதலிய வஸ்துக்களின் வ்யவஹாரபேதமானது அந்த அந்த வஸ்துக்களின் ஆதிக்யத்தை ஹேதுவாகக்கொண்டது. நேரில் காணப்படுகிற சிப்பி முதலியது வெள்ளி முதலிய வஸ்துக்களுக்கு ஸத்ருசமாயும் அறியப்படுகிறது. ஆகையால் அந்த ரஜதத்திற்கு இந்த சிப்பியில் இருப்பானது ப்ரதீதியினாலும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஸமயத்தில் கண் முதலியவற்றின் தோஷத்தால் சிப்பியின் அம்சத்தால் விடுபட்ட ரஜதாம்சம் க்ரஹிக்கப்படுகிறது. அதனால் ரஜதத்தில் விருப்பமுள்ளவன் ப்ரவ்ருத்திக்கிறான். கண்ணின் தோஷம் நசித்து ரஜதாம்சம் க்ரஹிக்கப்பட்டால் அதினிடத்தினின்று நிவ்ருத்திக்கிறான். ஆகையால் சிப்பி முதலியவைகளில் வெள்ளி முதலிய வஸ்துக்களிருப்பதாக அறியப்படுவது யதார்த்தம். இது சிப்பி என்கிற ஞானத்தால் முந்தி உண்டான வெள்ளி என்கிற ப்ரமாத்மக ஜ்ஞானம் பாதிக்கப்படுகிறதென்பதும் சிப்பி அம்சத்தின் ஆதிக்ய க்ரஹணத்தால் பொருத்தமுள்ளதாக ஆகிறது. இது வெள்ளி என்கிற முதன்மையான ஜ்ஞானமும் இது வெள்ளியல்ல, சிப்பிதான் என்கிற பிந்தினகாலத்திலுண்டாகிற ஜ்ஞானமும் சிப்பியினுடைய அதிகாம்சத்தின் குறைவு நிறைவுகளை க்ரஹிக்காமையால் ஏற்படுகிறதே ஒழிய, ரஜதம் பொய், சிப்பியானது மெய்ப்பொருள் என்கிற ஜ்ஞானத்தினாலுண்டாகிறதன்று.

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் சொல்லப்படப் போகிற யதார்த்த க்யாதியே தன் ஸித்தாந்த மென்பதைக்காட்டுகிறார்—அதவா என்று. அந்த யதார்த்தக்யாதியே குருபரம்பரோபதேசக்ரமத்தால் ப்ராப்தமாயிருக்கிற தென்பதைக்காண்பித்துக் கொண்டு அதை ப்ரதிஜ்ஞை செய்கிறார்—யதார்த்தம் என்று. வேதவிதாம் - பகவத்போதாயநர் நாதமுனிமிச்ரர் முதலியவர்களுடைய என்று அர்த்தம். எதனாலென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்—ச்ருதிஸ்ம்ருதிப்ய: என்று சுருதியைக் காண்பிக்கிறார்—பஹுஸ்யாம்என்று. ஆதி சப்தத்தால் நாமரூப வ்யாகரணம் சொல்லப்படுகிறது. அப்படிக்கின்றி; ஸந்மூலா: இது முதலான வாக்யங்களால் சொல்லப்பட்டிருக்கிற ஸ்திதி ப்ரளயம் முதலியது க்ரஹிக்கப்படுகிறது, ஸ்ருஷ்டி முதலியது தொடக்கம் எந்த ப்ரகரணத்திற்கோ அது ஸ்ருஷ்ட்யாத்யுபக்ரமம். இந்த ச்லோகார்த்தம் எதற்காக வென்று வினவப்படுமேயானால் சொல்லப்படுகிறது. பாடக்ரமத்தால் அண்டஸ்ருஷ்டிக்குப் பிறகு த்ருவ்ருத்கரணம் ஏற்படுகிறது. அண்டஸ்ருஷ்டிக்கு முந்தியும் த்ருவ்ருத்கரணமிருக்கிறது. அண்டஸ்ருஷ்டிக்காகவே த்ருவ்ருத்கரணம் பரமாத்மாவினால் செய்யப்பட்டிருப்பதால் த்ருவ்ருத்கரணம் உபாயம். அண்ட ஸ்ருஷ்டியானது அந்த த்ருவ்ருத்கரணரூபமான உபாயத்திற்குப்பலம். உத்பத்தியில் பலம் பிந்தி உண்டாகிறது, ஸங்கல்பத்திலோ அதாவது அதுவிஷயமான மனோபாவத்திலோ முந்தி உண்டாகிறது. உபாயமோ வென்றால் உத்பத்தியில் முந்தி உண்டாகிறது. ஸங்கல்பத்தில் பிந்தி உண்டாகிறதென்பது எது எதனால் எவ்விதம், இது முதலியதில் லோகப்ரஸித்தம். ஆதலால் ' நாமரூபே வ்யாகரவாணி தாஸாம் த்ருவ்ருதமேகைகாம் கரவாணி ' என்கிற இந்த வ்யஷ்டி ஸ்ருஷ்டிஸங்கல்ப வாக்கியத்தில் அண்ட ஸ்ருஷ்டிக்கு உபாயமாக இருக்கிற த்ருவ்ருத்கரணமானது பிற்பாடு சொல்லப்பட்டிருக்கிறது. 'நாமரூபே வ்யாகரோத், தாஸாம் த்ருவ்ருதமேகைகாம கரோத் ' என்கிற உத்பத்திவாக்கியத்தில் நாமரூபவ்யாகரணமானது முந்திசொல்லப்பட்டிருந்தபோதிலுங்கூட பலமாக இருப்பதால் த்ருவ்ருத்கரணமானது பல ரூபமான ஸ்ருஷ்டிக்கு முந்தினதென்று நிச்சயிக்கப்படுகிறது. அர்த்தக்ரமத்தால்பாடக்ரமத்திற்கு பாதம் ந்யாய்யமாக இருப்பதால். அக்னிஹோத்ரம் ஜுஹோதி, யவாகூம் பசதி என்பதுபோல—இந்த அர்த்தத்தில் நிதர்சனம் தொடக்கத்தில் பஹுஸ்யாம் ப்ரஜாயேய'என்கிற வாக்கியம். இந்த இடத்தில் பஹுஸ்யாம் என்று பலஸங்கல்பம். அதற்காக 'ப்ரஜாயேய' என்று அந்த பலத்தினுடைய உபாய ஸங்கல்பம். இதனால் 'எது எதனால் எதற்காக' இது முதலிய உலகப்ரஸித்தியினால் மாத்திரம் இந்த இடத்தில் த்ருவ்ருத்கரணத்திற்கு பலபூத ஸ்ருஷ்டிக்கு முந்தின காலத்திலிருத்தல் நிச்சயிக்கப்படவில்லை. 'தொடக்கத்திலிருக்கிற ஸங்கல்ப வாக்கியத்தின் ஆனுகுண்யத்தாலும் இவ்வாறு ஜ்ஞாபிக்கப்பட்டது. இவ்விதமாகத்ருவ்ருத்கரணத்திற்கு அண்ட ஸ்ருஷ்டிக்கு முந்தி இருத்தலை ஜ்ஞாபிப்பதற்காக தொடக்கத்திலிருக்கிற ஸங்கல்ப வாக்கியம் அதற்கு அநுகுணமென்பதை தெரிவிப்பதற்காக பஹுஸ்யாம் இது முதலியதற்காக எடுக்கப்பட்டது. அண்டத்திற்குள்ளடங்கி இருக்கிற அக்னிமுதலிய வஸ்துக்களில் த்ருவ்ருத்கரணம் காட்டப்பட்டிருப்பதால் அண்ட ஸ்ருஷ்டிக்குப்பிறகு த்ருவ்ருத்கரணம் என்கிற சங்கைவா ச்ருதியின் அர்த்தத்தைக்கூறுகிறார்–ஏவம்ஹி ப்ரத்யக்ஷேண உபலப்யதே என்று. அக்னிமுதலிய சில வ்யக்திகளில் மூன்று ரூபங்களைக்காட்டினது இவ்வளவுதானென்கிற புத்தியினாலன்று- பின்னையோ அண்டத்திற்குள்ளடங்கி இருக்கிற வஸ்துவே ப்ரத்யக்ஷமாகக் காண்பதற்கு யோக்யமாக இருப்பதால் முற்கூறப்பட்டிருக்கிற த்ருவ்ருத்கரண ஸம்பாவனையைக்காண்பிப்பதற்காக வென்று கரு

த்து அண்டஸ்ருஷ்டிக்கு முந்தியே த்ருவ்ருத்கரணமிருக்கிறதென்பதை ஸ்பஷ்டமாக ஜ்ஞாபிக்கிறார்—புராணேஷு என்று. இந்த உபநிஷத்தில் மூன்றுபூதங்களுக்கு ஸ்ருஷ்டி சொல்லப்பட்டிருப்பதால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதாகக்கூறப்பட்டிருக்கிற வஸ்துக்களுக்குகலவை உரைக்கப்பட்டது. இது வேறு தத்வங்களின் ஸ்ருஷ்டியை எடுத்துக் கூறும் ப்ரகரணங்களில் அவைகளுக்கும் மிச்ரணத்தைக் காண்பிப்பதற்காக வென்பதை ஜ்ஞாபிப்பதற்காக புராணவசனங்கள் உதாஹரிக்கப்பட்டன. 'வைஷ்ணவே' என்று சொன்னதனல் ராஜஸதாமஸ புராணங்களைக்காட்டிலும் ஸத்வோத்தரமாகஇருப்பதால் விஷ்ணுபுராணத்திற்கு ப்ராமாண்யம் ஸூசிப்பிக்கப்பட்டது. 'ஸாத்விகேஷு ச ஸர்வேஷு விஷ்ணோர் மாஹாத்ம்யமிஷ்யதே'ஸத்வகுண ப்ரதானங்களான எல்லாப்புராணங்களிலும் விஷ்ணுவுக்குமாஹாத்ம்யம் பகரப்படுகிறது என்றுசொல்லப்பட்டிருப்பதால். ஸம்ஹததத்வம்,ஸமாகதத்வம் என்று இரண்டு அவஸ்தைகளிருக்கின்றன. ஸம்ஹத தத்வமாவது--தனியாகப் பிரிந்து இருப்பதற்குத்தக்கதான ஸம்யோகமாத்ரம். ஸமாகதத்வமாவது-தனித்துஇருப்பதற்குத் தகாததான ஸம்ச்லேஷ விசேஷம். இந்த இரண்டு தன்மைகளுமில்லாமையால் ஸ்ருஷ்டிப்பதற்கு சக்தியற்றவைகளாக ஆயினவென்று சொல்லுகிறார்— நாநாவீர்யா: என்று. இவைகள் இரண்டுகளையும் அடைந்ததனல் ஸ்ருஷ்டித்தனவென்று சொல்லுகிறார்—ஸமேத்ய என்று. ஒவ்வொரு பூதத்திலிடத்திலும எல்லாபூதங்களும் இருக்கின்றதகளேயானல் எல்லாசப்தங்களும் எல்லாவஸ்துக்களிடங்களிலும் ப்ரயோகிக்கப்படவாயே என்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்--பரஸ்பரஸமாச்ரயா: என்று. ஆச்ரயிக்கின்ற மற்றபூதங்களுக்கு ஒருபூதமானது ஆதாரம். ஆச்ரிதாச்ரய பாவமானது குறைந்திருத்தல் அதிகமாக இருத்தல் என்கிற தன்மையைக்காரணமாகவுடையது—சப்த வ்யவஸ்தை அதனுல் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதென்று கருத்து. எடுக்கப்பட்டிருக்கிற வசநத்திற்குப் பிறகு "ஸம் ப்ராப்யைக்யமசேஷத:" என்று. முழுமையும் ஸமாகதத்வம் கூறப்பட்டது. "மஹதாத்ய:" என்கிற பாடமிருக்கும்பொழுதே வ்ருத்தபங்கத்தைப்பரிஹரிப்பதற்காக தன் க்ரந்தத்தில் பாஷ்யகாரர்களால் 'மஹதாத்யா:' என்று சொல்லப்பட்டது. இதுதான் ச்ருதியின் அபிப்ராயம் என்பதை உருதிப்படுத்துவதற்காகஸூத்ரகாரருடைய வசனத்தைக் காண்பிக்கிறார்— ஸூத்ர: என்று. 'தத:ஸூத்ரகாரோபி அவதத்' என்று அந்வயம். தத: -- இந்த அர்த்தம் ச்ருதி ஸ்ம்ருதி ஸித்தமாக இருப்பதால் என்று அர்த்தம். இவ்விதமாக முதலில் பூதத்தில் வேறு பூதங்களின் இருப்பு கூறப்பட்டது. ஸத்ருச வஸதுவில் இனிமேல் சொல்லப்படப்போகிற ஸத்ருசாந்தர வஸ்துவின் ஸத்பாவத்திற்கு உபயோகியாக இருப்பதால். தேநாபிதாபிதா-ஆதிக்யத்தால் அபிதான வ்யவஸ்தை என்று அர்த்தம். துல்ய வஸ்துவினிடம் துல்யமான வேறு வஸ்துவின் ஸத்பாவத்தைச்சொல்லுகிறார்—ஸோம என்று. ந்யாயவித: - பரீக்ஷகர்கள். "ஸோமாபாவே பூதீகாநபிஷுணுயாத்" என்கிற இந்த விதியானது நியமத்தின் பொருட்டு ஏற்பட்டிருக்கிறது. ஸோமமில்லாவிட்டால் அதற்கு ஸமானமாக இருக்கிற வேறு வஸ்துக்களிடத்தில் தானுக பிரவ்ருத்தி வருவதால்- இதற்கு துல்யமான ந்யாயவித்தார்த்தத்தைச் சொல்லுகிறார்— வ்ரீஹி என்று. வ்ரீஹிபாவத: - வ்ரீஹியின் அவயவங்களிருப்பதால். அப்படியானுல் எவ்வாறு ஸத்ருச வஸ்துவினிடம் ஸத்ருசமான வேறு வஸ்துவின் இருப்பு என்று சொல்லப்பட்டால் கூறுகிறார்—ததேவ என்று. இதனுல் சிப்பி முதலியவற்றில் ரஜதம் முதலிய வஸ்துக்களுடைய அவயவங்களின் இருப்பு பலித்ததென்று சொல்லுகிறார்—சுக்த்யாதேள என்று. ச்ருத்யைவ போதித:-ப்ரதிநிதி ச்ருதியினுலேயே அபிமதமாக பலித்து விட்டது. அன்றிக்கே த்ருவ்ருத்கரண ச்ருதியினுலேயே அறிவிக்கப்பட்டிருத்தல் பலித்தது. சிப்பியில் தேஜஸ்ஸினுல் ப்ரசுரமான ரூப்யாம்சமானது த்ருவ்ருத்கரணத்தினுல்

ஸித்திக்கிறதென்று அர்த்தம். எவ்வாறு சப்தப்ரயோகத்திற்கு வ்யவஸ்தை என்று கேட்கில் கூறுகிறார்—நூப்ய என்று, சிப்பிவெள்ளி இவ்விரண்டுகளுக்கும் ஸாத்ருச்யமிருந்தாலன்றோ சிப்பியில் வெள்ளியின் ஸத்பாவஸித்தியும் சப்த வ்யவஸ்தைக்கு பூயஸ்த்வமே ஹேதுகத்வஸித்தியுமென்று கேழ்க்கப்படுமேயானால் சொல்லுகிறார்— நூப்யாதி என்று. இல்லையேல், சிப்பியில் வெள்ளியைச்சார்ந்த ஓரம்சமிருப்பதில் வேறு ப்ரமாணத்தைக் கூறுகிறார்—நூப்யர்தி என்று. அதனாலென்ன வென்றுகேட்கில் சொல்லுகிறார்—அத: என்று. ப்ரதீதே: - வெள்ளிக்கு ஸமானமென்று ப்ரதீதி வருவதால். சிப்பி முதலியவற்றில் வெள்ளிமுதலிய வஸ்துக்களின் அவயவஸத்தையானது எப்பொழுதும் க்ரஹிக்கப்படுமேயானால் ப்ரவ்ருத்தியும் எப்பொழுதுமுண்டாகும். பாதமும் பொருந்தாமல் போகுமென்று சொல்லப்படுமேயானால் கூறுகிறார்——சுதராசித் என்று. சுக்தியின் அம்சத்தை க்ரஹியாமலிருப்பதற்குதோஷம் காரணம். சிப்பியின் ப்ராசுர்யஜ்ஞானத்தினால் அபிபவமில்லாமையாலும் அத்ருஷ்டவசத்தாலும் ரஜதம் க்ரஹிக்கப்படுகிறது. அத்ருஷ்டவசத்தாலும் அந்த சிப்பியில் ஜலம் என்கிற க்ரஹணமில்லாமையாலென்று சொல்லப்படப்போகிற தன்றோ. வேறு உதாஹரணங்களில்கூட உபஜீவ்யத்வத்தின் பொருட்டன்றோ அந்த இடத்தில் அது சொல்லப்பட்டிருக்கிறது. பூயஸ்த்வேந பாத்யபாதகபாவ: என்று. சிப்பியின் ஆதிக்யத்தால் அந்த சிப்பி விஷயமான ஜ்ஞானத்திற்கு பாதகத்வம். அதனாலேயே ஜாதத்திற்கு அல்பத்வம் ஸித்தம். அதனால் ரஜத ஜ்ஞானத்திற்கு பாத்யத்வமென்று கருத்து. பூயஸ்த்வேந என்று சொன்னதனால் ப்ராந்தி ஜ்ஞானத்திற்கு ரஜத பூயஸ்த்வமிருப்பதால் அதனால் சிப்பியென்கிற ஜ்ஞானத்திற்கு பாத்யத்வ சங்கையா அதை விலக்குவதின் பொருட்டு பூயஸ்த்வத்தால் பாத்யபாதகபாவத்தை உபபாதிக்கிறார்——சுக்தி என்று.

அய்யனே ! நிறைவு இருக்கையில் குறைவு க்ரஹிக்கப்பட்டதே யானால் அந்யதாக்யாதியன்றோ— இவ்வண்ணமல்ல. குறைவின் க்ரஹம் அதாவது வைகல்யத்தின் க்ரஹம் வைகல்யக்ரஹமல்லவன்றோ-பின்னேயோ சிப்பியின் அதிகாம்ச வைகல்யத்தால் க்ரஹம். அதாவது அந்த அதிகாம்சத்தை விட்டு க்ரஹம்- அதன் அக்ரஹமென்று பலித்தது. பூயஸ்த்வத்தை முழுமையும் க்ரஹித்தல். அந்த பூயஸ்த்வஸாகல்யத்துடன் கூடியதாக க்ரஹம். அந்த இரண்டு க்ரஹங்களுடைய ரூபாத்-ஸ்வபாவத்தால். அப்படிப்பட்ட க்ரஹணாத்மகமாக இருப்பதாலென்று அர்த்தம். அல்லது பகுவ்ரீஹி ஸமாஸம். பாவப்ரதானமான நிர்தேசம். முற்பட்டும் பிற்பட்டுமிருக்கிற இரண்டு ஜ்ஞானங்களும் அப்படிப்பட்ட ரூபத்துடன்கூடி இருப்பதால் பாத்யபாதகபாவம் என்று பொருள். ஜ்ஞானத்துக்கு பாதிக்கப்படத்தக்க தன்மையானது ஸ்வரூபத்தாலன்று, விஷயத்தாலுமன்று, பின்னேயோ பாதிக்கப்படத்தக்க ப்ரவ்ருத்தியுடன் கூடி இருத்தல். பிந்தி உண்டாகிற ஜ்ஞானத்திற்கு பாதகத்வமாவது முந்தின ஜ்ஞானத்தினால் உண்டாகிற ப்ரவ்ருத்தியைத் தடுத்தல். அந்யதாக்யாதிவாதத்திலும் ஜ்ஞானத்திற்கு ஸ்வரூபத்தால் பாதிக்கப்படத்தக்கதன்மையானது அபிமதமல்லாதது. பின்னேயோ விஷய பாத்யத்வமே அபிமதம். நமக்கோவென்றால் ஜ்ஞானத்திற்கு பலபூதமான ப்ரவ்ருத்திக்கு பாத்யத்வமென்றுபேதம். ப்ரவ்ருத்திக்கு பாதிதத்வமாவது தடை செய்யப்பட்டிருக்கிற உத்பத்தியுடன் கூடி இருத்தல், அல்லது பயனில்லாமலிருத்தல். நாத: என்று மித்யார்த்த ஸத்யார்த்த சப்தங்களால் அன்யனுக்கு அபிமதமான மித்யாத்வ ஸத்யத்வங்கள் சொல்லக்கூடப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீபாஷ்யம்—

இவ்வண்ணமாக எல்லா வஸ்துக்களுக்கும் எல்லாவஸ்துக்களின் அம்சங்களோடு சேர்ந்திருத்தலென்கிற தன்மை இருந்தபோதிலும் அந்தந்த வஸ்துக்களுடைய அம்சங்களின் பூயஸ்த்வ ஸாகல்ய வைகல்ய க்ரமங்களால் அந்தந்த வஸ்து விஷயமான வ்யவஹாரம் உலகத்தில் நிலை பெற்றிருக்கிறது. ஸ்வப்நத்திலும் ப்ராணிகளின் புண்யபாபாநுகுணமாக பரம புருஷனாலேயே அந்தந்த புருஷனால் மாத்திரம் அநுபவிக்கத்தக்கதாயும் அந்தந்த காலத்திலே முடிவுள்ளவைகளுமான அப்படிப்பட்ட வஸ்துக்கள் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன. இந்த விஷயத்தில் ச்ருதி ப்ரமாண ஸம்வாதமிருக்கிறது. ஸ்வப்ந விஷயமான ச்ருதியாவது. அந்த ஸ்வப்நத்தில் நேராக ஜாக்ரத்தசையில் காணப்பட்டிருக்கிற ரதம் முதலியவைகளுக்கு ஸஜாதீயங்களான ரதங்களும் ரத்யங்களான அச்வங்களும் மார்க்கங்களும் இல்லை. அந்த ஸமயத்தில் விஜாதீயங்களான ரதங்களையும் ரத்யங்களான அச்வங்களையும் மார்க்கங்களையும் உண்டுபண்ணுகிறார். அந்த ஸ்வப்நத்தில் ப்ரத்யக்ஷமாக ஜாக்ரத் தசையிலநுபவிக்கப்பட்டிருக்கிற * ஆநந்தம் முதலியவைகளுக்கு ஸஜாதீயங்களான ஆநந்தங்களுமில்லை. § முத்துக்களுமில்லை ‡ ப்ரமுத்துக்களுமில்லை. அந்த ஸமயத்தில் விஜாதீயங்களான ஆநந்தங்களையும் முத்துக்களையும் ப்ரமுத்துக்களையும் ஸ்ருஷ்டிபண்ணுகிறான். அந்த ஸ்வப்நத்தில் த்ருஷ்ட ஸஜாதீயங்களான சிறு குட்டைகளும் புஷ்கரிணிகளும் நதிகளுமில்லை. விஜாதீயங்களான சிறியகுட்டைகளையும் புஷ்கரிணிகளையும் நதிகளையும் ஸ்ருஷ்டிக்கிறான். அந்த பரமபுருஷனல்லவோ கர்த்தா என்று. ஸ்வப்நாவஸரத்தில் ஸ்வப்தனாலநுபவிக்கப்படுகிற வஸ்துக்கள் அவனைத் தவிர்த்து மற்றவர்கள் எல்லோராலும் அநுபவிக்கத்தக்கவைகளாக ஆகிறதில்லை. ஆயினும் அந்த ஸ்வப்தனான புருஷனால் மாத்திரம் அநுபவிக்கத்தக்கதாக அப்படிப்பட்ட வஸ்துக்களை ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கிறான். அந்த பரமபுருஷனல்லவோ ஸ்வாபகாலிக வஸ்துக்களை ஸ்ருஷ்டிப்பவன். ஸத்ய ஸங்கல்பனாகவும் ஆச்சர்யகரமான சக்தியுள்ளவனாகவுமிருக்கிற அந்த பரம புருஷனுக்கு அப்படிப்பட்ட கர்த்ருத்வம் ஸம்பவிக்கிறதென்று அர்த்தம். எந்த புருஷன் இந்த ப்ராணிகள் உறங்கிக்கொண்டிருக்கும்பொழுது தானாகவே ஸங்கல்பித்து ஸங்கல்பித்து விசித்திரமான பதார்த்தங்களை உண்டு பண்ணி நின்றுகொண்டு விழித்துக்கொண்டிருக்கிறானோ அந்த பரமபுருஷனே ஜ்யோதிர்மயன். அவனே ப்ரஹ்மசப்தத்தால் சொல்லத் தக்கவன். அவனே அழிவில்லாதவன் அல்லது மோக்ஷத்தை அளிப்பவன் என்று சொல்லப்படுகிறான். அந்த பரம புருஷனை எல்லா உலகங்களும் அடைந்தி

* ஆநந்தம்—விநியோகத்தினாலுண்டாகும் ப்ரீதி.

§ முத்—ப்ரியதமமான போக்ய வஸ்துவைப் பார்ப்பதனாலுண்டாகிற ப்ரீதி.

‡ ப்ரமுத்—அஸாதாரணமான போக்யத்வ ஜ்ஞானத்தினாலுண்டாகிற ப்ரீதி.

ருக்கின்றன. அந்த பரம புருஷனை ஒருவனும் ஜ்ஞானத்தினாலும் பலத்தினாலும் சக்தியினாலும் அதிக்ரமிக்கிறானில்லை என்றும். ஸூத்ரகாரரும் 'ஸந்த்யே ஸ்ருஷ்டிராஹ ஹி - நிர்மாதாரஞ்சைகே புத்ராதயஶ்ச-என்கிற' இரண்டு ஸூத்ரங்களால் ஸ்வப்ந ஸமயத்தில் அபிவ்யக்தங்களாகிற வஸ்துக்கள் விஷயத்தில் ஜீவனுக்கு ஸ்ரஷ்ட்ருத்வத்தை ஆசங்கித்து 'மாயாமாத்ரந்துகார்த்ஸ்ந்யேநா நபிவ்யக்தஸ்வரூபத்வாத்' இது முதலியதால் ஜீவனுக்கு ஸங்கல்பமாத்திரத்தினால் ஸ்ரஷ்ட்ருத்வம் பொருந்துகிறதில்லை. ஜீவனுடைய ஸ்வாபாவிகமான ஸத்யஸங்கல்பத்வம் முதலிய எல்லா குணங்களும் ஸம்ஸாரதசையில் அபிவ்யக்த ஸ்வரூபமாக இல்லாததால், அந்த ஜீவனுக்கு விசித்ர பதார்த்த ஸ்ருஷ்டியானது பொருந்தாது. உறங்கிக் கொண்டிருக்கிற அந்தந்த புருஷனால் மாத்ரமனுபவிக்கத்தக்கதாக ஏற்பட்டிருக்கும் இந்த ஆச்சர்யகரமான இந்தப்பதார்த்த ஸ்ருஷ்டியானது ஈச்வரனுடையதே. தஸ்மின்லோகாச்ரிதாஸ் ஸர்வே ததுநாத்யேதி கச்சந-என்பதனால் பரமாத்மாவே அந்த ஸ்வாப்ந பதார்த்தங்களுக்கு ஸ்ரஷ்டாவென்று அறியப்படுகிறானென்று பரிஹரிக்கிறார்— $ அபவரகம் முதலிய இடங்களில் படுத்துக்கொண்டிருக்கிறவனும் ஸ்வப்நம் காண்பவனுமான மனிதனுக்கு அவன் செய்திருக்கிற புண்ய பாபங்களுக்கு பலமாக இருக்கிற தேசாந்தரகமனம் ராஜ்யாபிஷேகம் சிரச்சேதம் முதலியவைகள். தன் தேஹத்தாலேயே அனுபவிக்கத் தகாதவைகளாக இருப்பதால் படுத்திருக்கிற தேஹத்திற்கு ஸமானமான ரூபம் அவயவங்களின் அமைப்பு இவைகளுடன் கூடிய வேறு தேகத்தின் ஸ்ருஷ்டியினால் பொருத்தமுள்ளதாக ஆகின்றன.

---

ச்ருதப்ரகாசிகை—

ஏவம் என்று. ஸர்வஸ்ய ஸர்வத்வேபி வ்யவஹார வ்யவஸ்திதி: - ஊநம் உபாதானம் முதலிய நியமம். இவ்வண்ணம் பூயஸ்த்வ ஸாகல்ய வைகல்யங்களென்று அர்த்தம். ஸாதாரணாகார க்ரஹணம், பேதாக்ரஹ தோஷம், அத்ருஷ்டம் இவைகள் எல்லாவாதிகளாலும் ஒப்புக்கொள்ளத்தக்கவைகள், அவ்வளவினாலே ப்ரவ்ருத்தி முதலியவற்றுக்கு ஸம்பவமிருக்கையிலுங்கூட அதிக கல்பனையில் அன்யர்களுக்கு கௌரவம் ஏற்படும். அதில் இஷ்டமான ரூபரூபிகளின் தொடர்ச்சியான பானத்தால் ப்ரவ்ருத்தி த்வேஷிக்கப்பட்ட ரூபரூபிகளின் நிரந்தர பானத்தால் நிவ்ருத்தி. ரூபம் ரூபி இவ்விரண்டுகளுக்கும் வேறு தர்மியினிடமிருத்தலுக்கு விரோதியான வேறு தர்மத்தாலாச்ரயிக்கப்பட்டிருத்தலின் பானவிரஹத்தால் பானம் நிரந்தரபானம், அதனாலேயே பேதத்தின் க்ரஹணமில்லாமையால் ப்ரவ்ருத்தி சொல்லப்படுமேயானால் ரஜ்ஜு ஸர்ப்பங்களின் பேதத்தை க்ரஹிக்காமலிருக்கும் ஸமயத்தில் நிவ்ருத்தி உண்டாகக்கூடாது என்கிற இது முதலிய கேள்விகள் அவகாசத்தை அடைகிறதில்லை. எது அன்ய

---

$ அபவரகம்—தாழ்வாரம்.

மதத்தில் வேறுக்யாதிக்கு ஹேதுவாக ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறதோ, அதே நமக்கும் ப்ரவ்ருத்தி முதலியவற்றுக்கு ஹேது. ப்ராபாகரர்களால் மந்த்ரார்த்தவாதங்களுடைய அர்த்தங்களின் தாத்பர்யத்தை ஒப்புக்கொள்ளாமையால் பேதக்ரஹமொன்றினாலேயே நிர்வாஹம் செய்யப்பட்டது. இந்த இடத்திலோவென்றால், மந்த்ரார்த்த வாதங்களுக்கு ப்ரதீயமானமான அர்த்தத்தில் ப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்வதால் உபநிஷத் பாகங்களால் அறியப்பட்டிருக்கிற த்ருவ்ருத்கரணத்தையும் அதனால் காண்பிக்கப்பட்டிருக்கிற பஞ்சீகரணத்தையும் ஈச்வரனால் செய்யப்படும் ஸ்ருஷ்டி விசேஷத்தையும் அவ்வாறே ப்ரதிநிதி ந்யாயத்தையும் பேதத்தினது அக்ரஹத்தையும் ஆதாரமாகக்கொண்டு நிர்வாஹம் செய்யப்பட்டிருக்கிறதென்று வைஷம்யம். அந்த இடத்தில் ஒரு பூதத்தில் வேறு பூதப்ரமமுண்டாவதற்கு த்ருவ்ருத்கரணத்தால் நிர்வாஹம் ஸ்பஷ்டமாக செய்யப்பட்டிருக்கிறது. துல்யமான வஸ்துவினிடம் துல்யமான வேறுவஸ்து ப்ரமமுண்டாவதற்கோவென்றால் நிர்வாஹமானது ப்ரதிநிதி ந்யாயத்தினாலேயே செய்யப்பட்டிருக்கிறது. த்ருவ்ருத்கரணத்தினாலோவென்றால் உபயோகமில்லை என்று சில ஆசார்யர்கள். த்ருவ்ருத்கரணமும் விஜாதீயமான பூதங்களாலாரம்பிக்கப்பட்டிருக்கிற ஸத்ருசவஸ்துவில் விஜாதீய பூதங்களாலாரம்பிக்கப்பட்டிருக்கிறஸத்ருசாந்தர வஸ்து ப்ரம நிர்வாஹத்திற்கு உபாயமென்றும் ஸம்ப்ரதாயம். ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் ஸர்வஸ்ய என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்டிருக்கிற க்ரந்தங்களின் ஸ்வாரஸ்யத்தால் அவ்வாறு அறியப்படுகிறது. ஆதலால் த்ருவ்ருத்கரண சரவணத்தாலும் பஞ்சீகரண ஸ்மரணத்தாலும் ப்ரதிநிதிந்யாயத்தாலும் ஸத்ருச வஸ்துவில் ஸத்ருசாந்தர வஸ்து புத்தியின் யாதார்த்யம் நிரூபிக்கப்படுகிறது. அறிஞரே! ஸத்ருசவஸ்துவில் ஸத்ருசமான வேறுவஸ்து ப்ரமமுண்டாவதற்கு எவ்வாறு த்ருவ்ருத்கரணத்தான் உபயோகம்? த்ருவ்ருத்கரணத்திற்கு முந்தி ரஜதம் முதலிய வஸ்துக்களின் அவயவங்களில்லை யன்றோ—அப்படி இருந்தாலன்றோ த்ருவ்ருத்கரணமடியாக சிப்பியில் ரஜதம் முதலிய வஸ்துக்களின் சேர்க்கை உண்டாகலாம், அதோ இல்லை, த்ருவ்ருத்கரணம் அண்ட ஸ்ருஷ்டிக்கு முந்தியதாக இருப்பதால். சொல்லப்படுகிறது. பாஞ்ச பௌதிகங்களான பதார்த்தங்களில்கூட ஒரு கார்யமானது பரிணாம விசேஷமுள்ளதும் ப்ராசுர்யத்துடன் கூடியதுமான ஒவ்வொரு பூதத்தால் ஆரம்பிக்கப்படுகிறது. அதில் எந்த கார்யமானது எவ்வித பரிணாமமுள்ள எந்த பூதத்தின் அதிகாம்சமுள்ளதோ அவ்விதமான பரிணாமமுள்ள அந்த பூதமானது வேறு கார்யங்களிலுங்கூட இருப்பதால் அவைகளில் அப்படிப்பட்ட அந்த பூதத்தினுடைய அதிகாம்சங்களுள்ள அந்த கார்ய விஷயமானபுத்தி உபபன்னமாகிறது. என்றாலும் அவாந்தரமான ஆகார விசேஷமானது த்ருவ்ருத்கரணதசையிலில்லை. அப்படி இருந்தபோதிலும் த்ருவ்ருத்கரணத்தினால் கார்யத்தில் அநுப்ரவிஷ்டமான அந்த பூதத்திற்கு கார்யாந்தரங்களின் அவயவங்களுக்கு ஸமானமான பரிணாமம் ஸம்பவிப்பதால் வேறு பௌதிகத்தில் உண்டாகிற வேறு பௌதிக புத்திக்கு யாதார்த்யம் பொருந்துகிறது. அவ்வாறே சிப்பியில் உள்ளடங்கி இருக்கிறதும் சுக்லபாஸ்வர ரூபமாக பரிணமித்திருக்கிறதுமான தேஜோம்சத்திற்கு ரஜதத்தோடு நன்கு ஒற்றுமை இருப்பதால் ரஜதாவயவங்களோடு சேர்ந்திருத்தல் த்ருவ்ருத்கரணத்தினால் பொருத்தமுள்ளதாக ஆகிறது. ரஜதம் முதலிய வஸ்துக்கள் அவ்விதமான ஆகாரத்துடன்கூடிய அந்தந்த பூதவிசேஷங்களோடு கூடியவைகளாகவே யன்றோ நன்கு காணப்படுகின்றன. அதனால் சிப்பிமுதலிய வஸ்துக்களித்தில் வெள்ளி முதலிய வஸ்துக்களுடைய அவயவங்களின் ஸத்பாவம் இசைவுற்றதாக ஆகிறது. ஐயா! சிப்பி முதலிய வஸ்துக்களில் அறியப்படுகிற

அவயவங்களுக்கு எவ்வாறு வெள்ளி முதலிய வஸ்துக்களின் அவயவமாக இருத்தல் ஸம்பவிக்கும் ? அந்த சிப்பியிலுள்ள அவயவங்கள் வெள்ளி முதலிய வஸ்துக்களிடத்திலிருந்து இழுத்துக்கொண்டு வந்து வைக்கப்பட்டதல்லவன்றோ. உத்தரம் கூறப்படுகிறது. சிப்பியிலிருக்கும் அந்த அவயவங்களுக்கு ஸம்ப்ரதிபன்னமான வெள்ளி முதலிய வஸ்துக்களின் அவயவங்களுடன் மிக்க ஒற்றுமையுள்ள ஆகாரத்தோடுகூடி இருத்தலே ரஜதாத்யவயவத்வமே ஒழிய ரஜதம்முதலிய வஸ்துக்களிடத்திலிருந்து எடுத்துக்கொண்டு வந்து வைக்கப்பட்டிருத்தலல்ல ஸம்ப்ரதிபன்னமான வெள்ளி முதலிய வஸ்துக்களின் அவயவங்களுக்குப்போல. கடையிலிருக்கிற வெள்ளிமுதலிய பதார்த்தங்களின் அவயவங்கள் வேறு ஒரு வெள்ளி முதலிய வஸ்துக்களினிடத்தினின்றுகொண்டு வந்து வைக்கப்பட்டவைகளல்லவன்றோ-இவ்வண்ணமாகவே பூதிகை முதலிய கொடிகளிடங்களில் அறியப்படாநின்ற ஸோமலதை முதலியவற்றின் அவயவங்களுக்கும் ஸோமாத்யவயவத்வமாவது ஸம்ப்ரதிபன்னமான ஸோமலதை முதலியவற்றின் அவயவங்களுக்குமிக்க ஒற்றுமையுள்ளதாக இருத்தலே. அதுவும் மிக்க ஸ்பஷ்டமான ப்ரதீதியினால் ஸித்தம் அபாதிதமாகவுமிருக்கிறது. சிப்பித்துண்டு பூதிகைமுதலியவைகளில் முறையே வெள்ளி ஸோலதை முதலியவற்றின் ஒற்றுமை இல்லையென்று பாதகப்ரத்யயமானது உண்டாகிறதில்லையன்றோ. அந்த ரஜதாவயவங்கள் விஜாதீயங்களான சிப்பியின் அவயவங்களின் ப்ராசுர்யத்தால் அதிக பாலில் கலந்த ஸ்வல்பஜலம்போலவும் அதிக ஸ்வர்ணத்தில் கலந்த ஸ்வல்ப வெள்ளி போலவும் கார்யகரங்களாக ஆகிறதில்லை. அய்யா ! இங்ஙனமாகில் சிப்பி என்று அபிமானிக்கப்பட்டிருக்கிற சிப்பிக்குவியலுக்கு சிப்பித்தன்மையானது புருஷம்ருகத்தில் புருஷத்வம்போல விஜாதீயங்களான அவயவங்களின் சேர்க்கையினால் பரிபூர்ணமல்லாததாக ஆகவேண்டும். புருஷம்ருகத்வமாவது புருஷத்வம் ம்ருகத்வம் இவைகளைக்காட்டிலும் விலக்ஷணமான வேறு ஜாதியே ஒழிய குறைவுள்ள புருஷத்வமுமன்று ம்ருகத்வமுமன்று என்றுசொல்லப்படுமேயானால் அப்பொழுது சுக்தி என்று அபிமானிக்கப்பட்டிருக்கிற சுக்தி ஸமூஹத்திற்கும் சுக்தித்வம் ரஜதத்வம் என்கிற ஜாதிகளைக்காட்டிலும் விலக்ஷணமான வேறு ஜாதியோடுகூடி இருத்தல் உண்டாகலாம். அங்ஙனமான பிறகு புருஷம்ருகத்தில் புருஷவ்யவஹாரம்போல சிப்பி என்கிற வ்யவஹாரமானது முக்கியமல்லாததாக ஆகலாம். விஜாதீய வஸ்துவின் அவயவங்களோடு சேர்க்கை பெற்றதும் ப்ரமத்துக்கு அதிஷ்டானமாகவுமிருக்கிற சுக்திக்கு புருஷனோடு புருஷம்ருகத்துக்குப்போல வேறு சுக்தியோடு மிக்கநெருங்கின ஒற்றுமை இல்லாமையால். ஸௌஸாத்ருச்யமிருந்தாலன்றோ அந்தந்த வ்யவஹாரங்களுக்கு முக்யத்வம் ஏற்படுகிறது. அதில்லாமையாலன்றோ 'ஸிம்ஹோ தேவதத்த:' என்கிறவ்யவஹாரம் அமுக்கியமாக ஆகிறது. சுக்தியினுடைய அவயவங்களின் ப்ராசுர்யத்தால்சுக்தித்வம் புஷ்கலமாக இருக்கிறது. அதனாலேயே அந்த சுக்திஎன்கிற வ்யவஹாரமும் முக்கியமென்று சொல்லப்படுமேயானால் அப்பொழுது ரஜதாம்சம் ப்ரசுரமாக இல்லாமையினாலேயே ரஜதத்வமில்லை என்கிற ரஜதபுத்திக்கு யாதார்த்யம் உண்டாகாமல் போகட்டும். சொல்லப்படுகிறது. புருஷத்வத்திற்குப்போல சுக்தித்வத்திற்குஅவயவஸங்காத விசேஷத்தில் இருப்பில்லாமையால் அணுப்ரமாணமுள்ள சுக்தியினிடத்திலும் சுக்தித்வம் புஷ்கலமாக இருக்கிறது. புருஷத்வத்திற்கோ வென்றால் ஸங்காத விசேஷத்தில் நிலைபெற்றிருக்கும் ஸ்வபாவமிருப்பதால் ஸங்காதத்திற்கு வைகல்ய முண்டாகில் அந்த புருஷத்வத்திற்கு அபௌஷ்கல்யம். அல்லது அந்த இடத்தில் வேறு ஜாதி இருக்கலாம்—சுக்தித்வமோ வென்றால் அவ்வாறல்லவென்று சொல்லப்பட்டது. ஆகையால் சுக்தியின்

அவயவங்களில் சுக்தித்வமும் அந்த சுக்தி வ்யவஹாரமும் உபபன்னங்களாக ஆகின்றன. அந்த இடத்தில் விருத்த ஜாதியின் ஸம்பந்தமில்லாமையால். சுக்தி என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிற ஸங்காதத்திலோ வென்றால் சுக்தியின் அவயவங்களுடைய ப்ராசுர்யத்தால் அர்த்த க்ரியையின் வ்யவஸ்தையும் சப்த வ்யவஸ்தையும் பொருத்தமுள்ளதாக ஆகின்றன. அதிகமான சிப்பியின் அம்சங்களால் கலப்பட்டிருப்பது பற்றி ரஜதாம்சம் க்ரஹிக்கப்படாததால் க்ரஹிக்கப்பட்டிருக்கிற சுக்தியைச் சொல்லவேண்டுமென்கிற இச்சையினால் அந்த சுக்தி விஷயமாக ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற சப்தமானது முக்கியமென்று உபபன்னமாகிறது. ப்ரமத்திற்கு அதிஷ்டானமாக இருக்கிற சுக்திக்கு விஜாதீயமான ரஜதத்தின் அவயவங்களோடு சேர்க்கை உண்டாயிருப்பதால் வேறு சுக்தியோடு ஸௌஸாத்ருச்யத்திற்கு ஹானி ஏற்படுகிறது. சுக்த்யந்தரத்திற்கும் அல்பரஜதாம்சத்தோடு கலந்திருப்பதினால் ரஜதாம்சத்தின் திரோதானத்தால் சுக்த்யந்தர ஸௌஸாத்ருச்ய ப்ரதீதியானது உபபன்னமாகிறது. சிப்பியின் அவயவங்களுக்கோவென்றால் பரஸ்பரம் ஸௌஸாத்ருச்யமானது மிக்கப் பொருத்தமுள்ளது. கூறப்பட்டுள்ள நீதியினால் ரஜதாம்சத்திற்கும் ரஜதத்வம் முக்கியம். அந்த அம்சத்தில் விருத்தஜாதி ஸம்பந்தமில்லாமையால் வேறு ரஜதத்தின் அவயவங்களுடைய ஸௌஸாத்ருச்யமும் ப்ரமமுண்டாகிறதசையில் க்ரஹிக்கப்படாநின்ற அந்த ரஜதாம்சத்திற்கு ப்ரசுர சுக்தி க்ரஹணத்தால் மறைக்கப்பட்டிருத்தலில்லாமையால் ரஜதாவயவ ஸௌஸாத்ருச்ய ப்ரதீதியானது பொருத்தமுள்ளதாக ஆகிறது. அதனாலேயே ரஜதவ்யவஹாரமும் முக்கியம். ஆதலால் சுக்திமுதலியதில் ரஜதம் முதலிய வஸ்து விஷயகபுத்திக்கு யாதார்த்யம் பொருத்தமுள்ளது— அல்பமாக இருக்கிற ரஜதத்தை அதிகமென்று க்ரஹிக்கும் பக்ஷத்தில் அந்யதாக்யாதி ப்ரஸங்கிக்குமென்று சொல்லப்படுமேயானால் அல்ல. ப்ராசுர்ய க்ரஹணமில்லாமையால். அல்பத்வத்தின் அக்ரஹணமேயன்றோ அந்த இடத்திலிருக்கிறது. ப்ராசுர்யமானது ப்ரதியோகியை அபேக்ஷித்திருப்பதாலும் ப்ரதியோகியாக இருக்கிற சுக்தியின் க்ரஹணமில்லாமையால் அந்த ப்ராசுர்ய க்ரஹணத்தில் ப்ரவ்ருத்தி ஸம்பவியாமையாலும் சுக்தியைவிட ரஜதாம்சத்தின் ப்ராசுர்யம் க்ரஹிக்கப்படவில்லை என்பதனால் அந்யதாக்யாதி இல்லை. அய்யா! அல்பத்வத்தின் க்ரஹணாபாவமானது ப்ரசுரத்வக்ரஹணமாக ஆகலாம். உன்னுடைய மதத்தில் அபாவம் பாவாந்தரமன்றோ. அதனால் அந்யதாக்யாதி என்று சொல்லப்படுமேயானால் அல்ல- அல்பத்வாக்ரஹணமானது ப்ராசுர்யக்ரஹணமல்ல. பின்னையோ அல்பத்வ விஷயஜ்ஞான ஸங்கோசமென்பதனால் அந்யதாக்ரஹமில்லாமையால்—'நேதம் ரஜதம், இது ரஜதமல்ல' வென்கிற இடத்தில் நஞ்ஞுக்கு என்ன பொருளென்று வினவப்படுமேயானால் சுக்தித்வமென்றே சொல்லுகிறோம். எந்த ஆகாரக்ரஹணத்தினால் முந்தின ஜ்ஞானத்திலுண்டான ப்ரவ்ருத்திக்கோ நிவ்ருத்திக்கோ நிவாரணம் உண்டாகிறதோ அந்த ஆகாரமே நஞ்ஞுக்கு அர்த்தம். அந்த ஆகாரமானது ப்ரதியோகியை அபேக்ஷிக்கிற 'நேதம் ரஜதம்' இது முதலிய சப்தங்களாலும் அந்த * ப்ரதியோகியை அபேக்ஷியாமலிருக்கிற சுக்தி முதலிய சப்தங்களாலும் வ்யவஹரிக்கப்படுகிறது. இவ்வண்ணம் பூதத்தில் வேறுபூதங்களிருப்பதாலும் ஸமானவஸ்துவினிடம் ஸமானமான வேறு வஸ்துக்களிருப்பதாலும் சுக்தி ரூப்யாதிபுத்திக்கு யாதார்த்யம் உபபாதிக்கப்பட்டது. ஸ்வப்நகாலத்தில் காணப்படுகிற வஸ்துக்களுக்கு ஸமானமானவஸ்துவினிடத்தில் ஸமானமான வேறுவஸ்துவின் $ ஸத்பாவமோ பூத

* ப்ரதியோகி—ஒரு வஸ்துவினால் தவறாமல் அபேக்ஷிக்கப்படுகிற ப்ரதி ஸம்பந்தமுள்ள வஸ்து. $ ஸத்பாவம்—இருப்பு.

த்தில் வேறு பூதத்தின் ஸத்பாவமோ சொல்வதற்கு முடியாதன்றோ வென்று சொல்லப்படுமேயாகில் சொல்லுகிறார்—ஸ்வப்நேசு என்று. எவ்வாறு சில வஸ்துக்கள் ஸுக ரூபங்களாகவும் சில வஸ்துக்கள் துக்கரூபங்களாகவும் இருக்கின்றனவென்று கேட்கப்படுமேயாகில் சொல்லுகிறார்—புண்யபாபானுகுணம் என்று. பகவானைவ- உலகத்தை ஸ்ருஷ்டிக்கிற பரம புருஷனாலேயே, அவனருளாகில் மற்றவர்களாலும் அறியப்படலாம். எப்பொழுதுமறியப்படலாம் என்று கேட்கில் சொல்லுகிறார்— ந்ந்தத்என்று. எவ்வாறு நேரில் கண்டனுபவிக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களைவிட வேறுபாடுள்ளவைகளாக இருக்கின்றனவென்று கேட்கப்படுமேயாகில் சொல்லுகிறார்— நதாரூதா: என்று. ச்ருதியைக்காட்டுகிறார்—நதாஹி என்று. இந்த வாக்கியத்திற்கு ஸ்வப்நவிஷயத்வம் எப்படி ஸம்பவிக்கிறதென்று ஸந்தேஹம்வரின் 'ஸ்வப்நம் பச்யதி' என்கிற பூர்வ வாக்கியத்தை நினைக்கும்படி செய்விக்கிறார்—ஸ்வப்நவிஷய என்று. ரதயோகா: - குதிரை முதலியவைகள், ந பவந்தி - ஜாகரதசையில் பார்க்கப்பட்டிருக்கிற வஸ்துக்களுக்கு ஸமானங்களாக இருக்கிறதில்லை என்று அர்த்தம். ஆநந்தா:முத:ப்ரமுத: என்று. § ஸாதாரணமான ♃ போக்ய வஸ்துக்களைப்பார்ப்பதினாலுண்டாகிற ப்ரீதியானது முத் என்று சொல்லப்படுகிறது. $ அஸாதாரண போக்யத்வ ஜ்ஞாநத்தாலுண்டாகிற ப்ரீதியானது ப்ரமுத் என்று சொல்லப்படுகிறது. * விநியோகத்தாலுண்டாகிற ப்ரீதியானது ஆநந்தம். அன்றிக்கே. † விலக்ஷணமான விஷயத்தைப் பார்ப்பதனாலுண்டாகிற ப்ரீதியானது முத், அதற்கு தன்னுடைய விநியோகத்திற்குத்தக்கதாக இருத்தலென்கிற ஜ்ஞாநத்தினாலுண்டாகிற ப்ரீதியானது ப்ரமுத், விநியோகத்தாலுண்டாகிற ப்ரீதியானது ஆநந்தம் என்று. இந்த சப்தங்களால் விஷயங்கள் ‡ லக்ஷணாவ்ருத்தியினால் அறிவிக்கப்படுகின்றன. இவைகளுக்கு முக்கிய வ்ருத்தியினால் அர்த்தபோதகத்வத்தை ஒப்புக்கொண்டால் ஜாகரதசையில் நேரில் கண்டனுபவிக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களுக்கு ஸமானங்களாக இருத்தல் என்பதுபொருந்ாதலால். 'வேசந்தா:' க்ருஹங்கள் அல்லது சிறுகுட்டைகள்என்று பொருள். எவ்வாறு பொருந்துகிறதென்று கேழ்க்கப்படுமேயானால் கூறுகிறார்—ஸஹி கர்த்தாஎன்று. எல்லாசக்திகளும் வாய்ந்தவனன்றோ கர்த்தா-எதுபொருந்தாமல் போகுமென்று கருத்து. தத் என்கிற சப்தமானது ப்ரக்ருதனான ஜீவனை போதிக்கிறதில்லை. பின்னையோ ப்ரஸித்தமான பரமாத்மாவை உணர்த்துகிறது. வ்யாகாதம் ¶ பௌநருக்த்யம் என்கிற தோஷங்கள் வருகிறதென்கிற சங்கையை பரிஹரிப்பதற்காக இந்த ச்ருதிக்கு அர்த்தம் கூறுகிறார்—யத்யபிஸகல என்று. ஸ்ருஜதே என்கிற பதவிரோதபரிஹாரத்தின் பொருட்டு ந பவந்தி என்கிற நிஷேதத்திற்கு ஸங்கோசமன்றோ உத்

---

§ ஸாதாரணம்—பொதுவானது.　　♃ போக்யம்—அனுபவிக்கத்தக்கது.

$ விநியோகம்—உபயோகம்.　　* அஸாதாரணம்—பொதுவாக இல்லாமல் ஒருவனுக்கே உரித்ததாகத் தனித்திருக்கிற வஸ்து.

† விலக்ஷணம்—வேறுபாடுள்ளது.

‡ லக்ஷணாவ்ருத்தி—சக்யஸம்பந்தத்தால் வேறு அர்த்தத்தை உணர்த்தும் சப்தசக்தி. உதாஹரணம்-கங்கையில் இடைச்சேரி என்கிற ப்ரயோகம். இந்த இடத்தில் கங்கை என்கிற பதமானது ப்ரவாஹமென்கிற அர்த்தத்தை உணர்த்துவதில் பாததோஷமுள்ளதாக இருப்பதால் ப்ரவாஹரூபமான சக்யார்த்தத்திற்கு ஸமீபித்திருத்தலென்கிற ஸம்பந்தத்தை முன்னிட்டு கங்காபதம் கங்காதீரத்திலிருக்கிற இடைச்சேரியை உணர்த்துகிறது.　　¶ பௌநருக்த்யம்—சொன்னதை மறுபடியும் சொல்லுதல்.

ஸர்காபவாத நியாயத்தால் செய்யப்பட்டது. ஆதலால் வருங்காலத்தில் ஸ்திரமாக இருத்தல் வேறு புருஷனால் அனுபவிக்கத்தக்கதாக இருத்தல் என்கிற ஆகாரவிஷயமாக நிஷேதமே யொழிய அக்காலத்திலுள்ள அந்த புருஷனால் மாத்திரம் அனுபவிக்கத்தக்க தாக இருத்தலால் ஸ்வரூப நிஷேதமில்லை. ஆதலால் ஜாகராவஸ்தையிலனுபவிக்கப்ப ட்ட வஸ்துக்களுக்கு ஸமானங்களாகவும் அனேக புருஷர்களாலனுபவிக்கத்தக்கவைகளா கவும் காலாந்தரத்தில் ஸ்திரமாக இருப்பவைகளாகவும் ஆகிறதுகளில்லை என்று அர்த்தம். 'ஸஹிகர்த்தா' என்கிற வாக்கிய கண்டத்தை கூறப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு உபபாதகமாக வியாக்கியானம் செய்கிறார்—தஸ்ய என்று. ஸ்வப்நகாலத்திலுள்ள வஸ்துக்களின் ஸ்ருஷ்டியானது ஈச்வரனுடையதே என்பதை வெளிப்படுத்துவத ற்காக வேறு ச்ருதியை எடுத்துக்கூறுகிறார்— யஏஷ ஸுப்தேஷு என்று. ஸ்வப்நகாலத்திலுள்ள பதார்த்தங்கள் பரமார்த்தங்களென்பதை பூர்வபக்ஷமாக்கி ஸூத்ரகாரரால் அபாரமார்த்த்யம் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறதென்கிற வ்யாக்கியாதாக்களுடைய மதபேதத்தால் இந்த ச்ருதிக்கு இது அர்த்தமல்லவென்கிற சங்கையைவிலக்குவதற்காக சொல்லப்பட்டிருக்கிற அர்த்தமானது ஸூத்ரகாரருக்கு ஸம்மதமென்பதைக்கூறுகிறார்—ஸூத்ர என்று. ஸூத்ரார்த்தத்தைச்சொல்லுகிறார்—ஸ்வாப்நேஷு என்று. ஜீவனுக்குங்கூட ஸ்வப்நதசையில் ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய குணங்களின் ஆவிர்பாவமானது கல்பிக்கப்படுகிறதென்று சொல்லப்படுமேயானால் சொல்லுகிறார்-தஸ்மிந்லோகா: என்று. எது * அநந்யதாஸித்தமோ அது தான் கல்பகம். பரமாத்மலிங்கம் கேழ்க்கப்படுவதனால். ஸ்வப்நகாலத்திலனுபவிக்கப்படுகிற வஸ்துக்களின் ஸ்ருஷ்டியானது பரமாத்மாவினாலேயே செய்யப்பட்டிருக்கவேண்டுமென்பது பொருத்தமுள்ளதாக இருப்பதால் ஜீவனுக்கு ஸ்வரூபாவிர்ப்பாவம் கல்பிக்கப்படுகிறதில்லை என்று அர்த்தம். தாழ்வாரத்தில் படுத்திருக்கிறவனுக்கு தேசாந்தரகமனம் முதலியசெய்கைகள் யதார்த்தங்களாக ஆகின்றனவென்பது எவ்வாறு பொருத்தமுள்ளதாக ஆகுமென்று கேட்கப்படுமேயாகில் சொல்லுகிறார்— அபவாரகாதிஷு என்று. தனக்கு துக்கத்தை உண்டுபண்ணக்கூடிய வஸ்துக்களைத்தானே உண்டுபண்ணிக்கொள்வதென்பது பொருந்தாததால் அப்பொழுது ஜீவனுக்கு ஸ்வரூபாவிர்ப்பாவமானது கல்பிக்கப்படுகிறதில்லை என்பதும் அர்த்தத்தால் ஸித்திக்கிறது. தலை வெட்டுதல் முதலியவை சொல்லப்பட்டிருப்பதால். ஸமானமான வேறு தேஹத்தில் படுத்திருக்கிற தேஹவ்யவஹாரமானது இரண்டுக்குமுள்ள பேதத்தை க்ரஹியாமையால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதே ஒழிய அந்யதாக்யாதியினால் செய்யப்பட்டதல்ல. இவ்வண்ணம் ஸ்வப்நாவஸ்தையில் தோன்றுகிற பதார்த்தங்களிடத்தில் அந்தந்த புருஷனாலனுபவிக்கத்தக்கதாக இருத்தல், அக்காலத்தோடு முடிவுள்ளதாக இருத்தல், என்கிற பேதக்ரஹமில்லாமையால் ப்ரவ்ருத்தி முதலியது ஸம்பவிக்கிறது.

---

[illegible]

---

* அநந்யதாஸித்தம்—வேறுவிதத்தால் நிலைபெறாதது.

[illegible]

[illegible]

[illegible]

---

ஸ்ரீபாஷ்யம்—

மஞ்சள் நிறமுள்ள சங்கு முதலியதிலோ வென்றால் கண்ணிலிருக்கிற பித்தவஸ்துவுடன் கலந்த கண்ணொளிகள் சங்கு முதலியவைகளோடு சேர்க்கை பெருகின்றன, அச்சமயத்தில் பித்தத்தைச் சார்ந்த மஞ்சள் நிறத்தால் கவரப்பட்ட சங்கினிடத்திலுள்ள வெண்மை நிறம் க்ரஹிக்கப்படுகிறதில்லை. அதனால் தங்கத்தினால் பூசப்பட்ட சங்குபோல் சங்கானது மஞ்சள் நிறமுள்ளதாக அறியப்படுகிறது. பித்த த்ரவ்யமும் அதை அடைந்திருக்கிற

மஞ்சள் நிறமும் மிகவும் நுட்பமாக இருப்பதால் பக்கத்திலிருப்பவர்க ளால் க்ரஹிக்கப்படுகிறதில்லை. பித்தத்தால் கெடுக்கப்பட்ட த்ருஷ்டியையு டையவனுலோவென்றால் அந்த மஞ்சள் நிறமானது தன் கண்ணினின்றே வெளிப்பட்டிருப்பதனுல் மிக்க அருகாமையால் ஸூக்ஷ்மமாக இருந்த போதிலும் க்ரஹிக்கப்படுகிறது. அதை க்ரஹிப்பதனுல் உண்டுபண்ணப் பட்டிருக்கிற ஸம்ஸ்காரத்துடன் கூடிய கண்ணினது ஒளிகளால் தூரத்தி லிருந்தபோதிலுங்கூட க்ரஹிக்கப்படுகிறது.

செம்பருத்திப்பூவின் பக்கத்திலிருக்கிற ஸ்படிகமணியுங்கூட அதன் ஒளியினுல் கவரப்பட்டிருப்பதால் சிவப்பு நிறமுள்ளதென்று அறியப்ப டுகிறது. செம்பருத்திப்பூவின் ஒளியானது விஸ்தீர்ணமாக நாலாபக்க ங்களிலும் பரவி இருந்தபோதிலுங்கூட நிர்மலமான த்ரவ்யத்துடன் சே ர்க்கை பெற்றிருப்பதால் அதிஸ்பஷ்டமாக அறியப்படுகிறது என்கிற இந்த விஷயமானது உபலப்தியினுல் வ்யவஸ்தை செய்யத்தக்கது. கான லிலுண்டாகும் ஜலஜ்ஞாநத்திலுங்கூட தேஜஸ்ஸிலும் ப்ருதிவியிலுங்கூ ட ஜலமிருப்பதனுல் இந்திரிய தோஷத்தினுல் தேஜஸ்ப்ருதிவி இவை கள் இரண்டும் க்ரஹிக்கப்படாமலிருப்பதாலும் அத்ருஷ்ட வசத்தாலும் ஜலமே க்ரஹிக்கப்படுவதால் அந்த ஜ்ஞானம் யதார்த்தம். வட் டவடிவமாகச் சுற்றப்படுகிற கொள்ளிக்கட்டையிலும் அந்த கொள்ளிக்க ட்டையின் அதிவேகமுள்ள கதியினுல் எல்லாப்ரதேசங்களோடும் சேர்க் கை ஏற்படுவதனுல் இடைவெளியை க்ரஹிக்காமையால் அவ்வாறு ப்ரதீதி பொருத்தமுள்ளதாக ஆகிறது. சக்ரப்ரதீதியிலுங்கூட இடைவெளியை க்ர ஹியாமலிருப்பதை முன்னிட்டு அந்த அந்த இடத்தோடு சேர்க்கை பெற்றிருக்கிற அந்த அந்த வஸ்துவின் க்ரஹணமே. சிலஸமயத்தில் அல் லது சில இடத்தில் இடைவெளி இல்லாமையால் இடைவெளி க்ரஹிக்கப் படுகிறதில்லை. சில இடத்தில் அல்லது சில ஸமயத்தில் சைக்ரயத்தால் இடைவெளி க்ரஹிக்கப்படுகிறதில்லை என்று விசேஷம்- ஆதலால் அதுவும் யதார்த்தம்- கண்ணுடி முதலிய வஸ்துக்களில் தன் முகத்தை அறிதலும் யதார்த்தமே- கண்ணுடி முதலியவைகளால் திருப்பியடிக்கப்பட்ட கதியுடன் கூடியவைகளான நயநரச்மிகள் கண்ணுடி முதலிய வஸ்து ப்ரதேசங்களின் க்ரஹணத்தை முன்னிட்டு தன் முகம் முதலியதையும் க்ரஹிக்கின்றன, அவ்விடத்திலும் அதிசைக்ர்யத்தினுல் இடைவெளியை க்ரஹிக்காமையால் அவ்வாறு ப்ரதீதி உண்டாகிறது. திக்ப்ரமத்திலுங்கூட வேறு திசைகள் இந்த திசையிலிருப்பதால் அத்ருஷ்டவசத்தால் இந்த திசையினது அம்ச த்தால் விடுபட்டிருக்கிற வேறு திசைகளின் அம்சம் க்ரஹிக்கப்படுகி றது. ஆதலால் ஒரு திசையில் மற்றொருதிசையை க்ரஹிப்பதும் யதா ர்த்தமே.

ச்ருதப்ரகாசிகை—

மஞ்சள் நிறமுள்ள சங்கு முதலியதில் ஈச்வரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவஸ்துவென்று சொல்லுகிற ச்ருதிவசனமானது எடுத்துரைக்கமுடியாதென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்— பீத: என்று. மஞ்சள் நிறம்போல் வெண்மை நிறமும் க்ரஹிக்கப்படலாமே என்று கேட்கில் சொல்லுகிறார்— ஶுப்ர என்று. அங்ஙனமாகில் பக்கத்திலிருப்பவர்களால் கூட பித்த த்ரவ்யமானது க்ரஹிக்கத்தக்கதாக ஆகலாமென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்—பித்த. என்று. அங்ஙனமாகில் ஸூக்ஷ்மமாக இருத்தலால் அவனாலும் பித்தமானது க்ரஹிக்கத்தகாததாக ஆகலாமென்று கேட்கில் சொல்லுகிறார்— பித்தோபஹதநேத்ர என்று. தூரத்திலிருக்கும் சங்குக்கு மிக்க ஸாமீப்யமில்லாமையால் எவ்வாறு அந்த சங்கில் இருக்கிற பித்தத்ரவ்யம் க்ரஹிக்கப்படுகிறதென்று கேழ்க்கப்படுமேயானால் சொல்லுகிறார்— 'தத்க்ரஹண' என்று. வெகுதூரம் எழுந்து ஆகாயத்தில் பறக்கிறபறவை எவ்வண்ணம் பார்க்கஇயலாதோ, அவ்வாறு இருந்தபோதிலுங்கூட பக்கத்திலிருந்துமேலே எழும்பிப்பறக்கிற காலந்தொடங்கி இடைவெளி இன்றி தொடர்ச்சியாகப்பார்க்கப்படா நின்ற அந்த பக்ஷியானது அந்த தர்சனத்தினாலுண்டான வாஸனையுடன் கூடின கண்களால் எவ்வாறு தூரத்திலும் க்ரஹிக்கப்படுகிறதோ அப்படிப்போலென்று அர்த்தம். ப்ராபாகரர்களால் பித்தத்தினது பீதவர்ணமும் சங்கும் இடைவெளி இல்லாமல் க்ரஹிக்கப்படுகின்றனவென்று கூறப்பட்டது. இந்த இடத்திலோ வென்றால் ரூபத்தினிடத்தில் போல த்ரவ்யத்தில் கண்ணுக்கு ஸாமர்த்தியமிருப்பதால் பித்த த்ரவ்யம் க்ரஹிக்கப்படுகிறதென்று கூறப்பட்டிருக்கிறதென்பது விசேஷம். தங்கத்தால் பூசப்பட்டிருக்கிற சங்குபோலென்கிற த்ருஷ்டாந்தத்திலும் இது கருத்து. ஐயா ! பித்த த்ரவ்யம் சங்கு இவ்விரண்டுகளுக்குமுள்ளபேதம் க்ரஹிக்கப்படாமலிருப்பதால் பீதசங்க வ்யவஹாரம் ஏற்படுகிறதென்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது வஸ்த்ரத்தில் பீதவ்யவஹாரம் ஏன் உண்டாகக்கூடாது. அந்யதா க்யாதியிலாவது வஸ்திரத்தில் எவ்வாறு பீத வ்யவஹாரத்தினது இன்மை ? ப்ரமமிருக்கும்பக்ஷத்தில் அந்த ப்ரமத்திற்கு எது மூலமோ அதன் நிரூபணம் செய்யத்தக்கதே ஒழிய எல்லா இடத்திலும் ப்ரம மிருக்கவேண்டு மென்பதில்லை என்று சொல்லப்படுமேயாகில் துல்யம்.

ஜபாகுஸுமம் செம்பருத்திப்பூ ஸ்படிகம் முதலியதில் கண்ணினது தோஷத்தின் சேர்க்கை எவ்விதத்தாலும் சொல்ல முடியாததென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்— ஜபா என்று. ஜபாகுஸுமம் ஸ்படிகம், மரீசிகாஜலம், அலாத சக்ரம். திங்மோஹம், இவைகளில் வேறு த்ரவ்யத்தோடு ஸம்பந்தத்தால் ப்ரதீதி யதார்த்தமென்று நிர்வாஹம். செம்பருத்திப்பூவினது ஒளியின் ஸம்பந்தத்தால் ஸ்படிகம் சிவப்பு நிறமுள்ளதென்கிற ப்ரதீதி வருகிறதென்றால் அந்த புஷ்பத்தின் ஸம்பந்தத்தால் கல் முதலியவைகளிலும் அவ்வாறு ஜ்ஞானமுண்டாகலாமென்று கேட்கப்படுமேயாகில் கூறுகிறார்—ஸ்வச்ச என்று. மரீசிகா என்று. க்யாத்யந்தரவாதிகள் அனைவர்களாலும் அத்ருஷ்டத்துக்கு நியாமகத்வம் ஒப்புக்கொள்ளப்படத்தக்கது. அங்ஙனமில்லாவிடில் எல்லோருக்கும் எல்லா இடத்திலும் எப்பொழுதும் எல்லா வஸ்துவிஷயகமான ப்ரமம் ப்ரஸங்கிப்பதால். ஒரு ஸமயத்திலாவது ப்ரமாபாவத்திற்கு ப்ரஸங்கமில்லாமல் போகவேண்டி வருவதாலும். அலாத என்று. அந்தராளாக்ரஹணாத்-முன் பின் ஸமயங்களில் உண்டாகிற அந்த அந்த ப்ரதேச விசேஷங்கள் அலாத ஸம்யோகம் இவைகளின் இடைவெளியை க்ரஹியாமையால். க்ரமத்தை க்ரஹியாமையால் என்றுஅர்த்தம். அந்த ராளத்தைக் க்ரஹியாமலிருக்கும் தருணத்தில் எவ்விதம் யாதார்த்யம்

என்று கேட்கில் சொல்லுகிறார்— சக்ர என்று. சக்ரப்ரதீதி: - நல்ல சக்ராகார ஜ்ஞானம். என்ன விசேஷமென்று வினவப்படுமேயாகில் கூறுகிறார்—க்வசித் என்று. தர்பணே தீஷ்ட என்று. இடம் வலம் மாறுதல் எவ்வாறு என்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லப்படுகிறது. இடது பாகம் வலது பாகம் என்கிற வ்யவஹாரமெல்லாம் குறிப்பிடுகிற ஒரு இடத்தைக்கருதியன்றோ ஏற்படுகிறது. அதில் தனக்கு எதிராக இருப்பதனால் மாறி இருக்கிற இடதுவலதுபாகங்களையுடைய கண்ணாடியினுடையவும் முகத்தினுடையவும் இடைவெளியின் அக்ரஹணமே. மாராட்டமானது கண்ணாடியை அடைந்திருக்கிறது. அதனால் முகமானது க்ரஹிக்கப்பட்டிராத இடைவெளிடன் கூடியதாக இருப்பதுபற்றி அபிமுகமாக இருக்கிற கண்ணாடியினுடையவும் முகத்தினுடையவும் இடைவெளியை க்ரஹியாமையால் ஆபிமுக்யப்ரதீதியானது யதார்த்தம. இவ்வண்ணம் மாலின்யமும் அல்பத்வம் முதலியதும். தீங்மோர் ஹேபி என்று. எல்லா திக்குகளும், ஒரே இடத்திலிருந்தபோதிலும் கிழக்குமேற்கு முதலிய திசைகளின் வ்யவஹாரம் ப்ரதிஸம்பந்தியான வஸ்துவை அபேக்ஷித்துவருகிறது. அந்த இடத்தில் திகந்தர ப்ரதியோகிக்கும் திகந்தரத்துக்கும் இடை வெளி இன்றி பாரம், அதனால் யதார்த்த விஷயத்வம் என்று. திசைகள் அனேகங்களென்பது 'பத்ப்யாம் பூமிர்திஸ ஶ்ரோத்ராத்' என்கிற ஶ்ருதிவசனத்தால் அறியப்படுகிறது.

[illegible]

பவதி வ்ருத்யஃ । தோஷக்ருதஞ்ச ஸாமக்ரீத்வித்வம் தத்க்ருதம் க்ரஹணத்வித்வம் தத்க்ருதம் க்ராஹ்யாகாரத்வித்வமிதி நிரவத்யம் ॥
அதஸ்ஸர்வம் விஜ்ஞாநஜாதம் யதார்த்தமிதி ஸித்தம் ॥

ஸ்ரீ பாஷ்யம்—

சந்திரன் இரண்டு என்கிற ஜ்ஞானம் முதலியதிலும் விரல்களை கண்ணொளிபோகும் இடத்தில் வைத்து அதின் ப்ரஸரணத்தைத் தடுத்தல். திமிரம் முதலியவைகளால் கண்களினுடைய ஒளிகளின் கதிபேதம் ஏற்படுவதால் ஸாமக்ரிகளின் பேதத்தால் இரண்டு ஸாமக்ரிகளும் ஒன்றை மற்றொன்று அபேக்ஷியாமல் சந்திர க்ரஹணத்வயத்திற்கு ஹேதுவாக ஆகிறது. அவற்றுள் ஒரு ஸாமக்ரியானது தானிருக்குமிடத்தோடுசேர்ந்திருக்கிற சந்திரனை க்ரஹிக்கிறது. இரண்டாவதோ வென்றால் கொஞ்சம் கோணின கதியுடன் கூடியதாக இருந்துகொண்டு சந்திரனிருக்கிற இடத்திற்கு ஸமீபத்திலிருக்கிற இடத்தின் க்ரஹணத்தை முன்னிட்டு சந்திரனை தானிருக்குமிடத்தை விட்டு விலகினதாக க்ரஹிக்கிறது. அதனால் ஸாமக்ரிகளின் இரட்டையினால் ஒரே ஸமயத்தில் இரண்டு ப்ரதேசங்களோடு கூடின சந்திரன் க்ரஹிக்கப்படுவதில் க்ரஹண பேதத்தால் க்ரஹிக்கத்தக்க வஸ்துவின் ஆகார பேதத்தாலும், ஏக க்ரஹண மில்லாமையாலும், சந்திரன் இரண்டு என்கிற ப்ரதீதிவிசேஷமுண்டாகிறது. தேசாந்தரத்திற்கு அந்த சந்த்ரவிசேஷணத்வமானது தேசாந்தரத்தினுடையவும் க்ரஹிக்கப்பட்டிராத ஸ்வதேசத்தையுடையதான சந்திரனுடையவும் நிரந்தர க்ரஹணத்தாலுண்டாகிறது. அந்த இடத்தில் இரண்டு ஸாமக்ரிகளிருப்பது உண்மை. அதனால் இரண்டு தேசங்களுடன் கூடின இரண்டு சந்த்ர க்ரஹணமும், பாரமார்த்திகம்-க்ரஹணத்வித்வத்தினால் சந்திரனுக்கு ஸம்பவிக்கிற க்ராஹ்யாகாரத்வித்வமும் பாரமார்த்திகம். அந்த இடத்தில் விசேஷண த்வயத்துடன் கூடின சந்த்ர க்ரஹணத்வயத்திற்கு ஒரே சந்திரன் க்ரஹிக்கத்தக்கவன் என்கிற க்ரஹணத்தில் ப்ரத்யபிஜ்ஞானத்தில்போல் கேவலமான கண்ணுக்கு ஸாமர்த்தியமில்லாமையால் சாக்ஷுஷஜ்ஞானம் அவ்வண்ணமே நிலைபெற்றிருக்கிறது. இரண்டு கண்களுக்கும் ஒரு ஸாமக்ரியில் அந்தர்ப்பாவமிருந்தபோதிலும் திமிரம் முதலிய தோஷங்களால் வேறுபட்டிருக்கிற கண்களின் ஒளியே இரண்டு ஸாமக்ரிகளாக ஆகின்றனவென்று கார்யத்தினால் கல்பிக்கத்தக்கது. தோஷம் விலகின தருணத்திலோ வென்றால் தானிருக்குமிடத்துடன்கூடின சந்திரன் ஒன்று என்கிற ஜ்ஞானத்தால் அறியத்தக்கதாக இருத்தலால் சந்திரன் ஒன்று என்கிற ஜ்ஞானம் வருகிறது . ஸாமக்ரிகளின் த்வித்வமானது தோஷத்தாலுண்டுபண்ணப் பட்டிருக்கிறது. அந்த ஸாமக்ரிகளின்

த்வித்வத்தினுல் க்ரஹணத்வித்வம் ஸம்பவிக்கிறது அந்த க்ரஹண த்வித்வத்தினுல் க்ராஹ்யாகார த்வித்வம் ஸம்பவிக்கிறதென்று யதார்த்த க்யாதி ஸமர்த்திக்கப்பட்டது. ஆதலால் விஜ்ஞான ஜாதமனைத்தும் யதார்த்தமென்று ஸித்தித்தது.

---

ச்ருதப்ரகாசிகை—

த்விசந்த்ர என்று. அதனுல் என்னவென்று கேட்கில் கூறுகிருர். தத்ரைக என்று. இயற்கையில் நேராக ப்ரஸரிக்கிற ஸ்வபாவமுள்ளதாக இருந்தபோதிலும் கண்ணொளிக்கு வக்ரமாக இருத்தல் ஸம்பவிக்கிறது. கண்ணுடி முதலியதால் அது காணப்படுகிறபடியால். இவ்விடத்திலும் விரல்களால் தடுத்தல் அத்ருஷ்டம் முதலியதால் அதற்கு உபபத்தி ஏற்படுகிறது. அதனுல் என்னவென்று கேட்கில் கூறுகிருர்—அத: என்று. சந்திரனிடத்திலுள்ள ஏகத்வாக்ரஹணமானது சந்திரனிருக்கிற இடங்கள் இரண்டு என்கிற ப்ரதீதியின் இன்மைக்குக் காரணம். தேசாந்தரத்தை அடைந்திருக்கிற சந்தரனுக்கு அந்த தேசத்தை விசேஷணமாகக் கொண்டிருத்தல் எவ்வாறு ஸம்பவிக்குமென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிருர்—தேச என்று. அதனுல் ப்ரதீதியின் யாதார்த்த்யத்திற்கு என்னவென்றுகேட்கில் சொல்லுகிருர்—தந்ரஸ்ரமக்ரீஎன்று தேநதேச த்வயவிசிஷ்ட சந்த்ரக்ரஹணத்வயஞ்ச பாரமார்த்திகம் என்று. சைக்ர்யத்தினுல் பௌர்வாபர்யக்ரமம் க்ரஹிக்கப்படாதது பற்றி க்ரஹணத்வயம் என்கிறது. அதனுலேயே க்ரஹிக்கப்படாத பரஸ்பர பேதத்துடன்கூடியதாகவுமிருக்கிறதென்று கருத்து. விசேஷணத்வயத்துடன் கூடின விஷயக்ரஹணம் இரண்டாக இருந்தபோதிலும் விசேஷ்யைக்யமானது எவ்வாறு அறியப்படுகிறதென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிருர்—தத்ர என்று. தேவதத்தன் முதலியவர்களிடங்களில் தனித்திருக்கிற கண்ணுனது ஐக்ய ப்ரதிபத்தி ஸமர்த்தமாகக்காணப்பட்டிருக்க வில்லையன்றே. பின்னையோவென்ருல் ஸம்ஸ்காரத்தால் ஸம்ஸ்கரிக்கப்பட்டதாகவே ஸமர்த்தமாகக் காணப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்காரமானது விலம்பித்து உண்டாகப்போவதால் அப்பொழுது ஐக்ய ப்ரதிபத்தி என்று அர்த்தம். சாக்ஷுஷஜ்ஞானம் ததைவாவதிஷ்டதே என்று. க்ரஹிக்கப்படாத ஏகத்வத்துடன் கூடின சந்திரனை மாத்திரம் விஷயமாகக்கொண்ட சாக்ஷுஷஜ்ஞானம் இருக்கிறதென்று அர்த்தம். தஸ்யைவ என்கிற பாடத்தில் சந்திரமாத்திரத்திற்கே க்ராஹகமாக இருக்கிறதென்று அர்த்தம். ஒரு ஸாமக்ரியாக இருக்கிற இரு கண்களுக்கும் எவ்வாறு இரண்டு ஸாமக்ரிகளாக இருக்கும் தன்மை என்று கேட்கப்படுமேயானுல் சொல்லுகிருர்—த்வயோரப் சக்ஷுஷோ: என்று இயற்கையில் தோஷமில்லாத இந்த்ரியத்திற்கு தோஷத்துடன்கூடி இருக்தல் கார்யத்தினுல் கல்பிக்கத்தக்கதன்றே. அவ்வாருகவே ஸாமக்ரீ த்வித்வமும் என்று கருத்து.

அங்ஙனமாகில் எப்பொழுதுமே சந்த்ர த்வித்வம் க்ரஹிக்கப்படலாமென்று வினவப்படுமேயாகில் கூறுகிருர்— அபகதே து என்று. தோஷம் போனபிறகுஎவ்வாறு ஐக்ய ப்ரதிபத்தி ஸம்பவிக்கலாமென்கிற சங்கைவரின் த்வித்வ ப்ரதிபத்தியானதுஉபாதியினுல் உண்டாகிறதென்று சொல்லுகிருர்—தோஷக்ருதம் என்று. க்ராஹ்யாகாரத்வித்வம் என்று. தன் தேசத்தோடு கூடி இருக்தல் ஒரு ஆகாரம். க்ரஹிக்கப்படாத இடைவெளியுடன்கூடின வேறு ப்ரதேசம் ஒரு ஆகாரம். அதற்கு ஆகார

த்வமாவது விசேஷணத்வம் ஆகாரமல்லாததை ஆகாரமாக க்ரஹிப்பதால் ஸம்பவிக்கிற அன்யதாக்யாதி இல்லை. க்ரஹிக்கப்பட்டிராத இடைவெளியுடன் கூடி இருத்தலென்கிற தன்மை இருக்க அப்ரதானமாக பாஸிக்கிற வஸ்துவுக்கே விசேஷணத்வமிருப்பதால். ப்ராபாகரர்கள் நேத்ரவ்ருத்தியானது வித்தியை அடைந்திருக்கிற த்வித்வத்தையும் க்ரஹிக்கப்பட்டிராத பேதத்துடன்கூடின சந்திரனையும் க்ரஹிக்கிறதென்று பகர்கின்றனர். ஸம்வித் ஸித்தியில் ப்ராபாகரமதத்தை உபந்யஸிக்கும் ஸந்தர்ப்பத்தில் ''நேத்ரவ்ருத்திர் த்விதாபூதா த்வேது வித்தீ - விதந்வதீ த்வித்வம் சந்த்ரஞ்ச யுகபத் நிர்பாஸயதி தத்ர ந ॥'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. தேசத்தை அடைந்திருக்கிற த்வித்வத்தையும் க்ரஹிக்கப்பட்டிராத பேதத்துடன் கூடின சந்திரனையும் க்ரஹிக்கிறதென்று அதைக்காட்டிலும் இவ்விடத்தில் வைஷம்யம். சாக்ஷுஷ தேஜஸ்ஸின் கதிபேத ரூபமான இரண்டு ஸாமக்ரிகளால் உண்டாயிருக்கிறதும் அதிசைக்ரியத்தினால் க்ரஹிக்கப்பட்டிராத க்ரமத்துடன் கூடியதும் க்ரஹிக்கப்பட்டிருக்கிற பேதத்துடன் கூடியதுமான இரண்டு ஜ்ஞானங்கள் க்ரஹிக்கப்பட்டிராத ஏகத்வத்துடன் கூடின சந்திரனையும் க்ரஹிக்கப்பட்டிராத இடைவெளியுடன் கூடியதான தேசாந்தரத்தையும் தொடர்ச்சியாக க்ரஹிக்கிறது. அதனால் சந்திரன் இரண்டென்கிற வ்யவஹாரம் என்று பொருள். இதி நிரவத்யம். யதார்த்தக்யாதி ஸமர்த்தனமென்று பொருள்.

---

க்யாத்யந்தராணாம் து தூஷணாநி தைஸ்தைர்வாதிபிரேவ ப்ர
பஞ்சிதாநீதி ந தத்ர யத்ந: க்ரியதே । அதவா கிமநேந பஹு
நோபபாதநப்ரகாரேண । ப்ரத்யக்ஷாநுமாநாகமாக்யம் ப்ரமாண
ஜாதமாகமைகவேத்யம் நிரஸ்தநிகிலதோஷகந்தாநவதிகாதிசயாஸங்க்யேய
கல்யாணகுணகணம் ஸர்வஜ்ஞம் ஸத்யஸங்கல்பம் பரம் ப்ரஹ்மாப்யு
பகச்சதாம் கிம் ந ஸேத்ஸ்யதி । கிம் நோபபத்யதே । பகவதா ஹி பர
மப்ரஹ்மணா க்ஷேத்ரஜ்ஞகர்மாநுகுணம் தத்தத்போக்யதயா
[illegible] ஸ்ருஜதா [illegible]
ஸர்வபுருஷஸாதாரணாநுபவவிஷயா:, கேசந தத்தத்புரு
ஷமாத்ராநுபவவிஷயா: [illegible]
ஸ்ருஜ்யந்தே । தத்ர ஸர்வஸாதாரணாநுபவவிஷயதயா
தத்க்ருஹீததயா [illegible] இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம் ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

வேறு க்யாதிக்கு தூஷணங்கள் அந்த அந்த வாதிகளாலேயே விஸ்தரிக்கப்பட்டிருக்கிறபடியால் அந்த விஷயத்தில் யத்னம் செய்யப்படுகிறதில்லை. இல்லையேல் அனேகமான இந்த உபபாதனப்ரகாரத்தால் யாதுபயன்? ப்ரத்ய

க்ஷம் அநுமானம் ஆகமம் என்கிற ப்ரமாணவர்க்கங்களையும், சாஸ்த்ரத்தாலேயே அறியத்தக்கதும், விலக்கித்தள்ளப்பட்ட ஸமஸ்த தோஷசந்தங்களுமுள்ளதும் எல்லை இல்லாத அதிசயத்துடன் கூடியதும், எண்ணமுடியாததுமான கல்யாணகுணஸமூஹங்களுடன் கூடியதும், எல்லாவற்றையும் அறிந்ததும், ஸத்யஸங்கல்பத்துடன் கூடியதுமான பரப்ரஹ்மத்தை ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கு எதுதான் ஸித்தியாது? எதுதான் பொருத்தமுள்ளதாக ஆகிறதில்லை? க்ஷேத்ரஜ்ஞர்களுடைய புண்யபாபங்களுக்கு அநுகுணமாக அந்த க்ஷேத்ரஜ்ஞர்களின் போகத்திற்காகவே எல்லா உலகங்களையும் உண்டுபண்ணுகிறதும் ஆறு குணங்களால் நிறைந்திருப்பதுமான பரப்ரஹ்மத்தினால் சுகதுக்கபலாநுபவத்தின் பொருட்டும் உபேக்ஷாபலாநுபவத்தின் பொருட்டும் அனுபவிக்கப்படத்தக்கவைகளும் எல்லோருக்கும் பொதுவான அனுபவத்திற்கு விஷயமாக இருப்பவைகளுமான பதார்த்தங்களும் அந்தந்த புருஷர்களின் அனுபவமாத்திரத்திற்கு விஷயமாக இருப்பவைகளும் அந்த அந்தகாலத்தோடு முடிவுடையவைகளுமான சிலபதார்த்தங்களும் அப்படி அப்படி அனுபவிக்கப்படத்தக்கவைகளாக உண்டுபண்ணப்படுகின்றன. அதில் பாத்யபாதகபாவமானது எல்லோருடைய அனுபவத்திற்கும் விஷயமாக இருப்பதாலும் எல்லோருடைய அனுபவத்திற்கும் விஷயமாகாமலிருப்பதாலும் பொருத்தமுள்ளதாக ஆகிறதென்பதனால் எல்லாம் ஸமஞ்ஜஸமாக ஆகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

ஒருவர் ஒருவர்மீது கூறப்பட்டுள்ள க்யாத்யந்தர தூஷணங்கள் தனக்குஅபிமதமாக இருப்பதால் அந்த விஷயத்தில் தன்னுடைய முயற்சியினது இன்மையைக்கூறுகிறார்-க்யாதி என்று. 'அதவா கிமநேந' என்கிற பதாநுபூர்வியை முன்னிட்டவாக்கியத்தின் பாடமானது அனேக கோசங்களில் காணப்படுகிறது. வ்யாக்யாதாக்களால் வ்யாக்யானம் செய்யப்பட்டு மிருக்கிறது. அதில் பாசகர்த்த விஷயமான அபரோக்ஷப்ரமங்களில் ஒவ்வொரு உத்தரத்தினுலேயே பரிஹாரம் செய்யப்பட்டிருப்பதாக ஆகிறது. 'கிம் ந ஸேத்ஸ்யதி'என்கிற வாக்கியத்தினுல் ப்ரமாணத்தில் அஸ்தித்வம்கூறப்பட்டது. "கிம் நோபபத்யதே" என்பதனுல் உபபத்தி கூறப்பட்டது. ப்ரமாணம் எது? எவ்வாறு உபபத்தி என்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்— பகவதாஹி என்று. அதிலும் 'ஜகத் ஸ்ருஜதா' என்கிற பதங்களால் இந்த அர்த்தத்திற்கு ச்ருதி மூலத்வம் ஸூசிப்பிக்கப்பட்டது. ப்ரஹ்மமானது எல்லா கார்யங்களுக்கும் காரணமாக இருப்பதால். 'இதம் ஸர்வமஸ்ருஜத' என்றல்லவோ ச்ருதி வசனம். ப்ரதீயமானத்வம் விசேஷமின்றி இருப்பதால் இதுவும் அந்த ப்ரஹ்மத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று அர்த்தம். அங்ஙனமாகில் பாத்ய பாதகபாவத்திற்கு வ்யவஸ்தை எவ்வாறுகவென்று கேட்கப்படுமேயாகில் கூறுகிறார்— தத்ர என்று, அந்தந்த புருஷனுல் அனுபவிக்கப்படத்தக்கவைகளும் அந்தந்த காலத்தோடு முடிவடைகிறவைகளுமான ஸுகம் முதலியவைகளுக்கு மித்யாத்வமில்லையன்றோ வென்று கருத்து.

ச்ருதிவசனம் முதலியவைகளிலுள்ள அந்ருத சப்தமானது அநிர்வசநீயமெ ன்கிற பொருளை உணர்த்தும் தன்மையுள்ளதாக இராததால்- அந்ருத சப்தமானது ருதேதர விஷயமன்றோ. ருதமென்கிற பதம் கர்மாவைச் சொல்லுகிறது- 'ருதம் பிபந்தௌ' என்கிறவசனத்தினால். காமபலத்திலபி ஸந்தி இல்லாததும் பரமபுருஷனுடைய ஆராதனரூபமாக இருப்பதும் பரமபுருஷப்ராப்தியை பலமாகக்கொண்டதுமான கர்மாவானது ருதமென் று சொல்லப்படுகிறது. இந்த இடத்தில் அதைக்காட்டிலும் வேறாக இரு ப்பதும் ஸாம்ஸாரிகபோகங்களையே பலமாகக்கொண்டதும் ப்ரஹ்மப்ராப் திக்கு விரோதியாகவுமிருக்கிற கர்மாவானது அந்ருதமென்று சொல்லப் படுகிறது- 'ஏதம் ப்ரஹ்மலோகம் ந விந்தந்தி, அந்ருதேந ஹிப்ரத்யூடா:' என்கிற வசனத்தினால்- 'நாஸதாஸீந்நோஸதாஸீத்' என்கிற ச்ருதி வசனத் திலும் ஸதஸத் சப்தங்கள் இரண்டும் வ்யஷ்டிதசையிலுள்ளசிதசித்துக்களை விஷயமாகக்கொண்டவைகள். இந்தவசனமானது உத்பத்தி ஸமயத்தில் ஸத் த்யத் சப்தங்களால் சொல்லப்பட்டிருக்கிற சிதசித் வ்யஷ்டிபூதங்களான வஸ்துக்கள் இரண்டுகளுக்கும் லயஸமயத்தில் அசித்ஸமஷ்டிபூதமானதும் தமஸ்சப்தத்தால் சொல்லத்தக்கதுமான வஸ்துவினிடத்தில் ப்ரளயத்தை ப்ரதிபாதிப்பதில் நோக்கமுள்ளதாக இருப்பதால். இந்த இடத்தில் ஒன்று க்காவது ஸதஸதநிர்வசநீயத்வம் சொல்லப்படுகிறதில்லை. ஸத் அஸத் இரண்டுக்கும் காலவிசேஷத்தில் அஸத்பாவமாத்திரம் சொல்லப்பட்டிருப்ப தால். இந்த இடத்தில் தமஸ் சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிற வஸ்து வுக்கு அசித் ஸமஷ்டித்வம் 'அவ்யக்தமக்ஷரே லீயதே. அக்ஷரம் தமஸி லீய தே' என்று ச்ருதியினால் அறியப்படுகிறது. அர்த்தாங்கீகாரத்துடன் தமஸ் சப்தத்தினால் அசித் ஸமஷ்டிரூபையான ப்ரக்ருதியினுடைய ஸூக்ஷ்மா வஸ்தை உரைக்கப்படுகிறது. அந்த ப்ரக்ருதிக்கோ வென்றால் 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்' என்று மாயா சப்தத்தால் அபிதானமிருப்பதால், அநிர் வசநீயத்வம் என்று சொல்லப்படுமேயானால் இது இவ்வண்ணமல்ல. மாயா சப்தத்திற்கு அநிர்வசநீயமென்கிற அர்த்தத்தை உணர்த்தும் தன்மை காணப்பட்டிருக்கவில்லை. மாயா சப்தம் மித்யாபர்யாயமானதால், இதற்கு அநிர்வசநீயத்வம் தான் பொருளென்று சொல்லப்படுமேயானால் அதுவுமி ல்லை. எல்லா இடத்திலும் மாயா சப்தமானது மித்யை என்கிற அர்த்த த்தை உணர்த்தும் தன்மையுள்ளதல்லவன்றோ. உண்மையாகவே இருக் கிற அஸுரர்களுடையவும் ராக்ஷஸர்களுடையவும் அஸ்த்ரம் முதலியவை களில் மாயா சப்தத்திற்கு ப்ரயோகமிருப்பதால். 'தேநமாயாஸஹஸ்ரந்த ச்சம்பரஸ்யாசுகாமிநா— பாலஸ்ய ரக்ஷதா தேஹமைகைகச்யேந ஸூதிதம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகலால் மாயாசப்தமானது விசித்திர ங்களான வஸ்துக்களை ஸ்ருஷ்டிசெய்கிறதென்கிற பொருளை உணர்த்து கிறது.

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் ச்ருதிஸ்ம்ருதிகளாலும் அர்த்தாபத்தியினாலும் அநிர்வசநீய ஸித்தி யை தூஷிப்பதற்காக முதலில் ச்ருதிவாக்கியங்களை யோஜனம் செய்கிறார்— **யத்புந:** என்று. அந்ருதேந என்கிற பதத்தை முதலில் வைத்துக்கொண்டிருக்கிற ச்ருதியை வ்யாக்கியானிக்கிறார் **அந்ருதேந** என்று. **நூன்** நிரஸனம் செய்யப்பட்ட ப்ரகாரத்தால் அநிர்வசநீய மென்கிறபொருள் அப்ராமாணிகமானதால் அந்த அர்த்தத்தில் வ்யுத்பத்தி இல்லை என்று அர்த்தம். அந்ருத சப்தத்தை வ்யாக்கியானிக்கிறார்— **ருதேதரவிஷ யோஹ்யந்ருதசப்த:** என்று. ஹி என்கிற சப்தத்தினால் ருதேதரவிஷயத்வத்தில் ஸம் ப்ரதிபத்தியானது ஸூசிப்பிக்கப்பட்டது. ருதாபாவத்திற்கும் ருதவிரோதிக்கும் ருத பூதமான ப்ரஹ்மாச்ரயத்வம் உபபன்னமாகாததால் அதைக்காட்டிலும் வேறாகவே இருக்கிற நஞர்த்தமானது உன்னாலும் சொல்லத்தக்கதென்று கருத்து. அந்ருத சப் தார்த்தத்தை நிஷ்கர்ஷிப்பதற்காக ருத சப்தார்த்தத்தைக் கூறுகிறார்—**ருதமிதி** என்று. கர்மவாசி - புண்யகர்மாவைச்சொல்லுகிற ஸ்வபாவமுள்ளதென்று பொருள். ஸத்யம் என்கிற பொருளை உணர்த்துகிற ஸ்வபாவமுள்ளதல்லவென்று கருத்து. எதனா லென்று கேட்கப்படுமேயாகில், கூறுகிறார்— **ருதம்பிபந்தௌ** என்று. இந்த வா க்கியத்தில் ஸுக்ருதஸ்ய லோகே என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறதென்றுகருத்து. இவ்விதமான வாக்யாந்தரங்களில் ப்ரஸித்தியும் அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. யதா வ்ருக்ஷஸ்ய ஸம்புஷ்பிதஸ்ய தூராத்கந்தோ வாதி ஏவம் புண்யஸ்ய கர்மணோ தூராத் கந் தோ வாதி' என்று சொல்லிவிட்டு 'ஏவமந்ருதாதாத்மாநம் ஜுகுப்ஸேத்' என்று புண்ய த்திற்கு ப்ரதியோகியாக அந்ருதசப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் ருத சப்தம் புண்யத்தைச் சொல்லுகிறது. புண்யமும் மோக்ஷத்திற்கு விரோதியாகையால் எவ்வாறு அந்ருத சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிற பாபமாத்திரத்திற்கு க்ரஹணம் என்கிற சங்கைவரின் மோக்ஷப்ரகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிற புண்யத்தை விவ ரித்துக்கூறுகிறார்—**ருதம் கர்ம** என்று. மோக்ஷத்தை அடையவிருப்பமுள்ளவனுக்கு புண்யம் பாபம் இரண்டும் மோக்ஷவிரோதியன்றோ. ஆகையால் அந்த இரண்டும் பாப மென்று பகரப்படுகிறது. ஆகையால் நஞ் ஸமாஸத்தில் உள்ளடங்கி இருக்கிற ருத சப்தமானது கருதப்படாமலிருக்கிற பலத்துடன் கூடின கர்மாவை உணர்த்துகிறது என்று பொருள். '**பரமபுருஷாராதநவேஷம் தத்ப்ராப்திபலம்**' என்கிற இந்த வாக்கிய த்தினால் 'ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ:' என்கிற இந்த வசனம் ஸூசிப்பிக்கப்பட்டது. அந்ருத சப்தத்திற்கு ப்ரஹ்மப்ராப்திவிரோதி பரத்வமிருந் தால்தான் ருத சப்தத்திற்கு பந்தகமல்லாத கர்மாவை உணர்த்துந்தன்மை ஸித்திக்கி றதென்பது பற்றி அதன் அர்த்தத்தை அதற்கு முந்தின வாக்கியத்தினால் உபபாதிக் கிறார்—**ஏதம்** என்று. ருதாந்ருத சப்தம் இரண்டுக்கும் 'ஏவமந்ருதாதாத்மாநம் ஜுகுப் ஸேத்' இதுமுதலிய ச்ருதிகளில் புண்யபாப ரூபங்களான அர்த்தங்களை உணர்த்தும் தன்மை ப்ரஸித்தமாக இருப்பதால்- 'நஸுக்ருதம் நதுஷ்க்ருதம் ஸர்வே பாப்மாநோ தோ நிவர்தந்தே, க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி' இது முதலியச்ருதி வாக்கியங்களில் ஸுக் ருதம் துஷ்க்ருதம் இரண்டுக்கும் மோக்ஷவிரோதித்வம் கேட்கப்படுவதாலும் மோக்ஷ ப்ரகரணங்களில் முக்தி அடைய விருப்பமுள்ள சேதனனுக்கு ஸம்ஸாரமென்கிற பெயரை உடைய அநிஷ்டபலத்தைக்கொடுக்கும் ஸ்வபாவமுள்ளதாதலால் இரண்டும் பாப சப்தத்தால் சொல்லத்தக்கதாக இருப்பதாலும், இந்த அந்ருத சப்தத்திற்கு இந்தவாக் யத்திலேயே ப்ரஹ்ம ப்ராப்தி விரோதித்வம் கேட்கப்படுவதாலும், ' தஸ்யாந்தராயோ

ஸ்மைத்ரேய' இது முதலிய வாக்கியங்களில் புண்யம் பாபம் இரண்டு கர்மாக்களுக்கும் மோக்ஷத்திற்கு விரோதியான பலத்தைப் பயக்கும் தன்மை கேழ்க்கப்படுவதாலும், அந்ருதசப்தம் அநிர்வசநீய மென்கிற பொருளை உணர்த்தும் தன்மையுள்ளதென்பதாக வ்யுத்பத்தி இல்லாமையாலும், அந்ருத சப்தமானது அதைவிட வேறான வ்யுத்பத்தியினால் மோக்ஷ விரோதியான கர்மாவை உணர்த்துவதிலேயே நோக்கமுள்ளதென்று பொருள்.

நாஸதாஸீத்யாதி—இந்த இடத்தில் "அநாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்நா ஸதுச்யதே' என்று ப்ரஹ்மசப்தவாச்யமான சுத்தாத்மஸ்வரூபவிஷயமான ஸத ஸத் சப்த ப்ரயோகமானது ப்ரதிபந்தியாக அநுஸந்திக்கத்தக்கது. ஸத்அஸத் என்கிற இரண்டு சப்தங்களுக்கும் சிதசித் வ்யஷ்டிவிஷயத்வத்தை உபபாதிக்கிறார்—உத்பத்தி என்று. உண்டான வஸ்துவுக்கன்றோ ப்ரளயம். சிதசித் வ்யஷ்டிகளுக்கு உத்பத்தியோ ச்ருதி ஸித்தமாயுள்ளது. ஆகையால் அந்த வஸ்துக்கள் இரண்டுக்கும் ப்ரளயம் சொல்லப்படுகிறதென்று அர்த்தம். ஸத் த்யத் என்கிறசப்தங்களால் 'ஸச்ச த்யச்சாபவத்' என்கிற வாக்யம் நினைக்கப்படும்படி செய்யப்பட்டது. கார்யாவஸ்த சேதநத்ரவ்யமானது ஸத் சப்தத்தால் சொல்லப்பட்டிருப்பதால். இந்த இடத்தில் ஸச் சப்தத்தாலும் அதைவிட விலக்ஷணமாக இருக்கிற வஸ்துவை உணர்த்துகிற அஸத்சப்தத்தாலும் கார்யாவஸ்த சேதநாசேதந நிஷேதம் செய்யப்பட்டது. வேறு வாக்கியத்தோடு அர்த்தைக்யத்தால் என்று அர்த்தம். 'தமஆஸீத் தமஸாகூடம்' என்கிற அதற்கு அடுத்த வாக்யாபிப்ராயத்தால் அசித் ஸமஷ்டிபூதமாயும் தமஸ்சப்தத்தால் சொல்லத்தக்கதுமானவஸ்து வென்று கூறப்பட்டது. வேறு ஹேதுவைக்கூறுகிறார்— ஸதஸதோ: என்று. காலவிசேஷத்தில் அநிர்வசநீய மங்கீகரிக்கப்படுகிறதில்லையன்றோ. அசித்ஸமஷ்டிக்கு தமஸ்சப்தவாச்யத்வத்தை உபபாதனம் செய்கிறார்—அத்ர என்று.தமஆஸீத், 'மாயாந்து ப்ரக்ருதிம்' என்கிற இந்த இரண்டு வாக்கியங்களுக்கு மூர்த்தி வரிசையாக உபாதாந விவக்ஷையை சோத்ய ரூபத்தால் காண்பிக்கிறார்—ஸத்யம் என்று, ப்ரக்ருதி சப்தத்தால் சொல்லத்தக்கது மாயை என்று அர்த்தம். பரிஹரிக்கிறார்—நைதத்தேவம் என்று. எதனாலென்று கேட்கப்படுமேயானால் சொல்லுகிறார்— மாயா என்று. இதி சப்தம் ஹேதுவில். மாயாசப்தத்தால் சொல்லத்தக்கது ப்ரக்ருதி என்பது அபிப்ராயம். ஐந்த்ரஜாலிகன் முதலியவர்களிடங்களில் மாயாவீ என்கிற பதத்திற்கு ப்ரயோகம் காணப்படுவதால் மாயா மித்யா சப்தங்கள் இரண்டும் பர்யாயங்களானதால் அநிர்வாச்யத்திற்கும் மித்யாத்வ மிருப்பதால் மாயாசப்த வாச்யத்வம் என்கிற அபிப்ராயத்தால் சங்கிக்கிறார்—மாயா என்று. பரிஹரிக்கிறார்—ததபி நாஸ்தி என்று. மாயா சப்தத்திற்கு மித்யாபர்யாயத்வமே கிடையாது. அப்படி ஒப்புக்கொண்டபோதிலும் அந்யதா க்யாதி பேதாக்ரஹம் இவ்விரண்டுக்குள் ஒன்றினாலேயே உபபத்தி வருவதால் மித்யார்த்த விஷயத்வம் யுக்தமல்லவென்பதனால் அநிர்வசனீயவாசித்வம் இல்லை என்று கருத்து. அதை உபபாதிக்கிறார்—நஹி என்று. மாயா சப்தப்ரயோக விஷயங்களாக இருக்கிற எல்லா அர்த்தங்களிலும் மித்யாத்வத்திற்கு அநுவ்ருத்தி இல்லாமையால் என்று அர்த்தம். ஸத்யமாக இருக்கிற வஸ்துக்களில் மாயாசப்தப்ரயோகத்தைக்காண்பிக்கிறார்—யதோக்தம் என்று. ஜ்ஞாநத்தால் பாதிக்கத்தக்கவைகளுக்கு ஒவ்வொன்றாக சாஸ்திரத்தினால் சேதிக்கத்தக்க தன்மை இல்லை யன்றோ.ஆகையால் ஒவ்வொன்றாக மாயைகளுக்கு சேத்யத்வம் கூறப்பட்டிருப்பதால் மாயாசப்தம் ஸத்யமான அர்த்தத்தையே உணர்த்துவதில் கருத்துள்ளது. எங்கும் தொடர்ந்து வருகிறதர்ம

த்திற்கே ப்ரவ்ருத்தி நிமித்தத்வம் சொல்லப்படவேண்டுமாதலால் மாயாசப்தப்ரயோக விஷயங்களான எல்லா அர்த்தங்களிலும் தொடர்ந்துவருகிற ஆச்சர்யத்வமே மாயாசப்தப்ரவ்ருத்தி நிமித்தமென்று சொல்லுகிறார்--அத: என்ற. ஆச்சர்யத்வம்-ஆச்சர்யப்படத்தக்க தன்மை. அது விசித்திரமான அர்த்தங்களை உண்டுபண்ணும் திறமையுள்ளதாக இருப்பதால். விசித்ர சப்தமானது பற்பல பகுபாடுள்ள வஸ்துக்களை உணர்த்துகிறது. நாநாவிதமான கார்யங்களை உண்டுபண்ணுகிற ஸ்வபாவமுள்ளதாதலால் ப்ரக்ருதிக்கு ஆச்சர்யப்படத்தக்க தன்மை. மாயாசப்தமானது ஆச்சர்யப்பொருளை உணர்த்தும் தன்மையுள்ளதென்றல்லவோ சொல்லப்படப்போகிறது. ஆதலால் ஆச்சர்யத்வமே ப்ரவ்ருத்தி நிமித்தம். மாயாசப்தப்ரயோக விஷயங்களான அஸத்வஸ்துக்களிடங்களிலும் ஸத்யவஸ்துக்களிடங்களிலும் ஆச்சர்யப்படத்தக்கதன்மை இருக்கிறது.

---

व्यक्तमेतस्य मायाशब्दाभिधानं विचित्रार्थसर्गकरत्वादेव । 'अस्मान्मायी सृजते विश्वमेतत्तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः' इति मायाशब्दवाच्यायाः प्रकृतेर्विचित्रार्थसर्गकरत्वं दर्शयति । परमपुरुषस्य च तद्वत्तामात्रेण मायित्वमुच्यते; नाज्ञत्वेन । जीवस्यैव हि मायया निरोधः श्रूयते — "तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः" इति, 'अनादिमायया सुप्तो यदा जीवः प्रबुध्यते' इति च । 'इन्द्रो मायाभिः पुरुरूप ईयते' इत्यत्रापि विचित्राः शक्तयोऽभिधीयन्ते । अत एव हि "भूरि त्वष्टेव राजति" इत्युच्यते । न हि मिथ्याभूतः कश्चिद्राजते । "मम माया दुरत्यया" इत्यत्रापि गुणमयीति वचनात्सैव त्रिगुणात्मिका प्रकृतिरुच्यत इति न श्रुतिभिः [illegible]निवर्तनीयाज्ञानप्रतिपादनम् ॥

नाप्यैक्यावबोधसाध्या निवृत्तिः; नहि 'तत्त्वमसि' इति जीवपरयोरैक्यावबोधः सति सर्वज्ञे सत्यसंकल्पे सकलजगत्सृष्टिस्थितिनाशहेतुभूते तद्व्यतिरिक्ते प्रसक्ते ब्रह्मणि विरोधाज्ञानपरिकल्पनाहेतुभूता काचिदव्यवस्थितिः प्रसज्यते । ऐक्यावबोधस्य 'त्वम्' शब्देनापि जीवशरीरकस्य ब्रह्मणः समाभिधानादवगतः । अनेन जीवेनात्मनानुप्रविश्य नामरूपे व्याकरवाणि' इति सर्वस्य वस्तुनः परमात्मपर्यन्तस्यैव हि नामरूपभाक्त्वात् । अतो न ब्रह्माज्ञानपरिकल्पनम् ॥

ஸ்ரீபாஷ்யம்—

விசித்திரமான வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கும் வல்லமையுள்ளதாக இருப்பதினாலேயே ப்ரக்ருதியானது மாயாசப்தத்தால் சொல்லப்படுகிறது, 'அஸ்மாந் மாயீஸ்ருஜதே விச்வமேதத் தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:' என்று மாயாசப்தத்திற்கு வாச்யையான ப்ரக்ருதிக்கு விசித்திரங்களான பதார்த்தங்களை ஸ்ருஷ்டி செய்யும் தன்மையைக் காண்பிக்கிறார். பரமபுருஷனுக்கும் அப்படிப்பட்ட விசித்ரார்த்த ஸர்க்ககரமான மாயா சப்தவாச்யமான ப்ரக்ருதியுடன் கூடி இருத்தல் மாத்திரத்தினால் மாயித்வம் சொல்லப்படுகிறது. அஜ்ஞதையாலல்ல. ஜீவனுக்கே அன்றோ மாயையினால் திரோதானம் ச்ருதியினால் கூறப்படுகிறது. 'தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:' என்றும் 'அநாதிமாயயா ஸுப்தோ யதாஜீவ: ப்ரபுத்யதே' என்றும். 'இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே' என்கிற இடத்திலுங்கூட விசித்ரங்களான சக்திகள் கூறப்படுகின்றன, அதனாலேயேதான் 'பூரி த்வஷ்டேவ ராஜதி' என்று சொல்லப்படுகிறது. மித்யாபூதமான ஒருவஸ்து ப்ரகாசியாதன்றோ. 'மம மாயா துரத்யயா' என்கிற இடத்தில் கூட குணமயீ என்கிற வசனத்தால் மூன்று குணங்களுக்குமாஸ்பதமான அதே ப்ரக்ருதி சொல்லப்படுகிறதுஎன்பதனால், ச்ருதிகளால் ஸத் என்றாவது அஸத் என்றாவது சொல்லத்தகாததான அஜ்ஞானமானது ப்ரதிபாதிக்கப்படவில்லை. ஐக்யோபதேசத்தின் அனுபபத்தியினாலுமல்ல. 'தத்த்வமஸி' என்று ஜீவாத்மா பரமாத்மா இருவர்களுக்கும் ஐக்யோபதேசமிருப்பதால் எல்லாவற்றையும் அறிந்ததும் ஸத்யஸங்கல்பத்துடன் கூடியதும் எல்லா உலகங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி விநாசங்களுக்குக்காரணமாக இருக்கிறதும் தத் என்கிற சப்தத்தாலறியப்பட்டதுமான ப்ரக்ருத ப்ரஹ்மத்தினிடத்தில் விருத்தமான அஜ்ஞான பரிகல்பனைக்கு ஹேதுவாக இருக்கிற ஒருவித அனுபபத்தியும் காணப்படுகிறதில்லையன்றோ. ஐக்யோபதேசமோவென்றால் த்வம் சப்தத்தாலும் ஜீவனை சரீரமாகக்கொண்டிருக்கிற ப்ரஹ்மமே சொல்லப்படுவதால் மிகவும் பொருத்தமுள்ளது. 'அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாம ரூபே வ்யாகரவாணி' என்கிற ச்ருதியினால் எல்லா வஸ்துக்களுக்கும் பரமாத்மா ஈறாகவே நாம ரூபங்களைப் பெற்றிருத்தல் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞானபரிகல்பனமில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

ப்ரக்ருதிக்கு ஆச்சர்யத்தன்மையே மாயா சப்தத்தால் சொல்லத்தக்கதாக இருத்தலை காரணமாகக்கொண்டதென்று சொல்லுகிறார்—ப்ரக்ருதே: என்று. அதை உபபாதிக்கிறார்—அஸ்மாத் என்று. விசித்ரங்களான கார்யங்களை உண்டு பண்ணும் வல்லமை

யுள்ளதாக இருப்பதால் ப்ரக்ருதிக்கு ஆச்சர்யரூபத்வமென்பதனுல் 'மாயாமாத்ரம்' என்கிற ஸூத்ர விஷயமான பாஷ்யத்திற்கு விரோதமில்லை. இவ்விதமாக மாயாசப் தார்த்தம் உரைக்கப்பட்டது. இதற்குமேல் பகவானுக்கு மாயாஸம்பந்தம் ச்ருதியினு லேயே கூறப்பட்டிருப்பதால் அந்த மாயைக்கு அந்த பரமபுருஷனும் வச்யனே வென் கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக மாயீ என்கிற பதத்திலிருக்கிற மத்வர்த்திய ப்ர த்யயத்தின் அர்த்தத்தைக் கூறுகிருர்—பரமபுருஷஸ்ய ச என்று. மாயீ என்கிற பதத் தால் சொல்லப்பட்ட மாயா ஸம்பந்தமானது அதனுல் அந்த பரமபுருஷனுக்குமறை கப்படத்தக்க தன்மையைச்சொல்லவந்ததன்று. பின்னேயோவென்ருல், அந்தமாயைக்கு அந்தப்பரமபுருஷன் சேஷி என்பதை உணர்த்துகிறது. அந்த மாயையினுல் மறைக்கப் படத்தக்க தன்மையோ வென்ருல் ஜீவனுக்கே. அந்த ஜீவனுக்கே அப்படிப்பட்ட தன் மை ச்ருதிகளால் கூறப்பட்டிருப்பதால் என்று அர்த்தம். மாயையினுல் ஆக்ரமிக்கப்படு தல் ஜீவனுக்கே என்கிற இந்த அர்த்தத்தில் அன்யனுல்ஏற்கனவேசொல்லப்பட்டிருக்கிற வசனத்தைக் கூறுகிருர்—அநாதி என்று. 'இந்த்ரோ மாயாபி:' என்கிற இடத்திலுள்ள மாயாசப்த பஹுவசனத்தால் அனேக விசித்ர சக்திகளைச்சொல்லும் தன்மை அறியப்படு கிறது. மம என்று வ்யக்தமாக இருக்கிறது. முடிவுபெறச் செய்கிருர்— இதி என்று. மாயா சப்தத்திற்கு மித்யாபூத விஷயங்களில் ப்ரயோகம் காணப்படுகிறதென்று சொல் லப்படுமேயானுல் அந்த இடத்தில் லாக்ஷணிகமாக இருக்கலாம். அர்த்தத்திற்கு ஸத் யத்வமில்லாததுபற்றி அதற்கு ஆச்ரயத்வமில்லாமையால். ப்ராதிபாஸமோ வெனில் த்வித்வம் முதலிய எண்ணிக்கைகளை விஷயமாகக்கொண்டிருப்பதால் ஆச்சர்ய ரூபமா னது. மந்த்ரம் ஔஷதம் முதலியது ஆச்சர்யரூபமாக இருப்பதுபற்றி அந்த அர்த்த ஸம்பந்தத்தால் அதற்கு லாக்ஷணிகத்வம். அதற்குமேல் ச்ருத்யர்த்தாபத்தியினுல் அநிர் வசநீயஸித்தியை தூஷிக்கிருர்—நாபி என்று. ப்ரதிஜ்ஞையை உபபாதனம் செய்கி ருர்— நஹி என்று. அஜ்ஞானத்தை கல்பிக்காவிடில் அநுபபத்தி இல்லை, அதைக்கல்பி ப்பதிலேயே தான் அநுபபத்தி, விருத்ததர்மங்களின் ச்ரவணத்தாலென்கிற அபிப்ராய த்தால் தத் சப்தத்தால் அறியப்பட்டிருக்கிற விசேஷணங்கள் கூறப்பட்டன. ஸமானவி பக்திகளுள்ள பதங்களுடன்கூடின ச்ருதிவசன ஸித்தமாதலால் ஐக்யம் இழக்கப்ப டத்தக்கதல்ல. அவ்வாறு ச்ருதியினுல் உணர்த்தப்பட்டுள்ள அர்த்தத்தை இழப்பது அன்யாய்யமானதால் தத் சப்தத்தால் அறியப்பட்டிருக்கிற விசேஷணங்கள் ஸ்வீகரிக்கத் தக்கவைகளென்று கருத்து. ஐக்யோபதேசமானது உபபன்னமாகாதென்று கேட்கப் படுமேயாகில் கூறுகிருர்— ஐக்ய என்று. ஜீவன் பரப்ரஹ்மம் இவ்விரண்டுக்கும் ஹேய குணங்களின் ஸம்பந்தத்திற்குத் தகுதியுள்ளதாக இருத்தல் தகுதியற்றதாக இருத்தல் என்கிற இரண்டு விருத்தஸ்வபாவங்களாலன்ருே ஐக்யவிரோதம். ஜீவனைச ரீரமாகக்கொண்ட பரமாத்மாவுக்கு ஐக்யம் சொல்லப்பட்டால் ப்ரஹ்மத்திற்கு ஹேய ஸம்பந்தம் ஜீவன் வாயிலாக ஏற்படுவதால் விரோதம் பரிஹரிக்கப்பட்டதென்று அர்த் தம். உபபன்னதர:—முக்கியமாக இருப்பதால் உபபன்னம் என்று கருத்து. ஜீவனைச் சொல்லுகிற சப்தத்தால் ஜீவசரீரகமான பரப்ரஹ்மத்தைக்கூறுதல் முக்யமென்றுசொல் லப்படுமேயானுல் அந்த விஷயத்தில் சொல்லுகிருர்— அநேந என்று. ச்ருத்யர்த்தாப த்த்யஸித்தியை நிகமனம் செய்கிருர்— அத: என்று.

---

ஐதிஹாஸபுராணயோரபி ந ப்ரஹ்மாஜ்ஞாநவாத: க்வசிதபி த்ருச்யதே ॥

அசூ

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

இதிஹாஸபுராணங்களிலும் ப்ரஹ்மாஜ்ஞானவாதமானது ஓரிடத்திலாவது காணப்படுகிறதில்லை.

கற்றறிந்தவரே ? 'ஜ்யோதிம்ஷி விஷ்ணு:' என்று ப்ரஹ்மம் ஒன்றே தத்வமென்று ப்ரதிஜ்ஞைசெய்து, 'ஜ்ஞாநஸ்வரூபோ பகவான் யதோஸௌ' என்று மலைகள் ஸமுத்திரங்கள் பூமி முதலிய பேதங்களால் வேறுபட்டிருக்கிற உலகத்திற்கு ஜ்ஞானத்தையே ஸ்வரூபமாகக்கொண்ட ப்ரஹ்மத்தினது அஜ்ஞானத்தின் விஜ்ரும்பணத்வத்தைக்கூறி, 'யதா து சுத்தம் நிஜரூபி' என்று ஜ்ஞாநஸ்வரூபமாக இருக்கிற ப்ரஹ்மத்திற்கே தன் ஸ்வரூபத்தினிருப்புள்ள வேளையில் வஸ்துபேதங்களின் இன்மையினது தர்சனத்தால் அஜ்ஞான விஜ்ரும்பணத்வத்தையே உறுதிப்படுத்தி, "வஸ்த்வஸ்தி கிம், மஹீகடத்வம்' என்கிற சுலோகங்களால் ஜகத்தின் உபலப்தி ப்ரகாரத்தாலும் வஸ்துபேதங்களுக்கு அஸத்யத்வத்தை உபபாதித்து, 'தஸ்மாந்ந விஜ்ஞானம்ருதே' என்று ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கிற ப்ரஹ்மத்தைத் தவிர்த்த வஸ்துக்களின் அஸத்யத்வத்தை உபஸம்ஹாரம் செய்து விஜ்ஞாநமேகம் என்று ஜ்ஞாநஸ்வரூபமாக இருக்கிற ப்ரஹ்மத்தினிடத்தில் பேத

தர்சனத்திற்கு நிமித்தமாக இருக்கிற அஜ்ஞாநத்திற்கு மூலம் தன்னுடைய கர்மாவென்றே வெளிப்படுத்தி, 'ஜ்ஞானம் விசுத்தம்' என்று. ஜ்ஞானஸ்வரூபமான ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபத்தை விசோதித்து 'ஸத்பாவ ஏவம் பவதோ மயோக்த:' என்று ஜ்ஞாநஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கே ஸத்யத்வம் மற்ற வஸ்துக்களுக்கு ஸத்யத்வமில்லை. மற்ற வஸ்துக்களுக்கு அஸத்யத்வமே - அந்த புவநம் முதலியதற்கு ஸத்யத்வம் வ்யாவஹாரிகம். தத்வம் உனக்கு உபதேசிக்கப்பட்டதென்றல்லவோ உபதேசம் காணப்படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

இதிஹாஸபுராணங்களுக்கு ப்ரஹ்மாஜ்ஞாநத்தைக் குறிப்பிட்டு அறிவிப்பதில் கருத்தில்லாமையை ப்ரதிஜ்ஞை செய்கிறார்—இதிஹாஸ என்று. நந்வித்யாதி - ப்ரஹ்மைக்மேவ தத்வமிதி ப்ரதிஜ்ஞார்யேதி-ஜடம்அஜடம்இண்டுக்கும் ஸ்வரூபைக்யம்பொருந்தாததாலும் ஸாமாநாதிகரண்யமானது பாதிதார்த்தமாக இருப்பதாலும் மேல் வரப்போகிற ச்லோகங்களில் அதைத் தவிர்த்தமற்ற வஸ்துக்களுக்கு மித்யாத்வம் சொல்லப்பட்டிருப்பதாலுமென்று கருத்து. விஜ்ஞாநவிஜரும்பிதாநி-எதனால் பற்பல விதங்களாக அறியப்படுகிறதோ அல்லது எதனால் விபரீதமாகஅறியப்படுகிறதோஎன்று கரண வ்யுத்பத்தி. விஜ்ஞாநம்-அவித்யை-யதா துசுத்தம் இதுமுதலியதால் அதற்கு வ்யதிரேகமன்றோ உரைக்கப்படப்போகிறது 'விஜ்ஞாநேந விஜ்ரும்பிதாநி' என்கிற யோஜனையோவென்றால் யுக்தமல்லாதது. அஸ்வாரஸ்யத்தாலும் விஜ்ரும்பிதாநி என்கிற நபும்ஸகலிங்காந்தமான பதத்திற்கு பும்லிங்கபேதசப்தத்திற்கு விசேஷணமாக இருத்தல் பொருந்தாததால் விஜ்ரும்பித சப்தம் பாவார்த்த ப்ரத்யயாந்தமாதலால் ஷஷ்டீஸமாஸம் யுக்தமாக இருப்பதாலும், ப்ரஹ்மத்தைத்தவிர்த்த மற்ற வஸ்துக்கள் அவித்யையினால் கல்பிப்பட்டிருக்கின்றன வென்பதை வ்யதிரேக முகத்தால் ஸ்திரப்படுத்துகிறார் என்று கூறுகிறார்—யதாது என்று. சுத்தம் அவித்யையில்லாதது.நிஜரூபி-அதனால் உண்டுபண்ணப்பட்ட பேததர்சனமில்லாதது. அபாஸ்ததோஷம்-ராகம்முதலிய தோஷங்களில்லாதது. ஸங்கல்ப தரோ:- இதனால் நாலாபக்கங்களிலும் உண்டுபண்ணப்படுகிறது என்கிற வ்யுத்பத்தியினால் ஸங்கல்பசப்தம் தோஷத்தை உணர்த்துகிறது. 'வஸ்துஷு வஸ்துபேதா:' என்கிற இடத்தில் வஸ்துஷு என்கிற பஹு வசனத்தில் தாத்பர்யமில்லை- ஜடமாகக் காணப்பட்ட வஸ்துக்களிடத்தில் ஜடவஸ்துக்களை அடைந்திருக்கிற பேதங்கள் ஸம்பவிக்கிறதில்லை என்று அர்த்தம். அன்றிக்கே ஒரு வஸ்து சப்தமானது ஆகாரத்தை உணர்த்துகிறது. ஜடவஸ்துவை அடைந்திருக்கிற ஆகார பேதங்கள் இல்லை என்று அர்த்தம். 'வஸ்த்வஸ்திகிம். மஹீகடத்வம்'என்கிற இரண்டு ச்லோகங்களில் முதல் ச்லோகத்தால் அர்த்தஸ்வபாவம் உரைக்கப்பட்டது. இரண்டாவது ச்லோகத்தால் உதாஹரணம் காண்பிக்கப்பட்டதென்று பேதம். அந்த இடத்தில் எதனால் தத்வம்- இப்படி இருக்கையில் பரமார்த்தம் எது என்று அர்த்தம். முழுமையும் அபரமார்த்தமாக அறியப்பட்டிருக்குமேயாகில் எவ்வாறு அதில் ப்ராமாண்யம் என்கிற சங்கைவரின் சொல்லப்படுகிறது. ஸ்வகர்மஸ்திமிதாத்ம நிம்சயை: என்று. தத்வார்த்த நிச்சயத்திற்கு விரோதியான கர்மவசத்தாலென்று அர்த்தம்.

அன்றிக்கே ஆத்மவித்துக்களால் மாத்திரம் அஸத்யத்வம் அறியப்படுகிறதில்லை. பின்னையோ அஜ்ஞர்களாலும் கூட அறியப்படுகிறதென்று கருத்து. சாஸ்திரப்ரமாண த்தால் மாத்திரமல்ல, லௌகிகமான ஐடகஸ்துக்களோ க்ரஹிக்கிற ப்ரமாணத்தாலும் கூட அதற்கு மித்யாத்வம் ஸித்திக்கிறதென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. 'தஸ்மாந் ந விஜ்ஞாந ம்ருதே' என்கிற ச்லோகார்த்தமான அநாத்மபூத விஜாதீயபேத நிஷேத த்தை உப ஸம்ஹரிக்கிறார் என்று கூறுகிறார்— தஸ்மாத் என்று 'விஜ்ஞாநமேகம்' என்கிற ச்லோகமானது ஸஜாதீயரூபமான ஆத்மபேத நிஷேதத்தில் நோக்கமுள்ளது. **பேததர்சந நிமித்தாஜ்ஞாந மூலம் நிஜகர்மைவேதி.** பேததர்சனம் - ஸஜாதீயபே ததர்சனம். அது மேல்மேல் வரப்போகிற கார்யாஜ்ஞானத்திற்கு காரணமானது, அதற் கும் முந்தின கர்மாவே என்று அர்த்தம். ஏது தேவாதி சரீரபேதத்திற்கு ஹேதுவோ அதே என்பது ஏவகாராபிப்ராயம். அன்றிக்கே தேவாதி சரீரபேத ப்ரதீதியை ஹே துவாகக்கொண்ட அஜ்ஞானமானது ஆத்மாவினிடத்தில் தேவத்வம் முதலிய ஆகார ங்களின் ஆரோபண ரூபமாயுள்ளது. அதற்கு ஹேது கர்மாவென்று பொருள். ஆத்ம பின்னமான வஸ்துவில் உண்டாகிற ஆத்மபுத்திக்கும் அஜ்ஞாந சப்தவாச்யத்வம் தகு தியுள்ளது. அந்த புத்தியும் மூலாஜ்ஞாந கார்யமாதலால். 'ச்ரூயதாஞ்சாப்யவித்யாயா: ஸ்வரூபம் குலநந்தன — அநாத்மந்யாத்மபுத்திர்யா' என்று அந்த புத்திக்கு அஜ்ஞாந பர்யாயமாக இருக்கிற அவித்யா சப்தவாச்யத்வம் இருப்பதாலும்- 'ஜ்ஞாநம் விசுத்தம்' என்பதனால் ஸ்வகதபேதம் நிஷேதிக்கப்பட்டது. விசுத்தம் விமலம் என்பதனால் அ வித்யை, அந்த அவித்யையினால் உண்டுபண்ணப்பட்டபேததர்சனம் இவைகளில்லாதது என்று அர்த்தம். அதனால் உண்டுபண்ணப்பட்ட சோகம் முதலியவைகளில்லாதது என்று சொல்லுகிறார்— விசோகம் என்று. இவ்வண்ணமாக ஸதைகம் என்று. ஸஜாதீய பேத நிஷேதம் அனுவதிக்கப்பட்டது. ஸதைகம் என்று சொல்லப்பட்ட ப்ரகாரத்தால் ஸ்வகதபேதராஹித்யம் சொல்லப்படுகிறது. பரம பரேச முதலியசப்த ங்களால் சொல்லத்தக்கது சின்மாத்ரமே என்று கூறுகிறார்—பரம: என்று. இது அன்ய னுடைய மதமல்ல. தத்வமே உரைக்கப்பட்டதென்று சொல்லுகிறார்— ஸத்பாவ: என்று. ஸம்வ்யவஹாரபூதம்-நாலாபக்கங்களிலும் வ்யவஹரிப்பதற்குத் தகுதியுள்ளபேத த்துடன் கூடியது. புவநாச்ரிதம் - புவநத்தினால் அதிஷ்டானமாக ஆச்ரயிக்கப்பட்ட தாகவே இது இருக்கிறது. அதிலும் அஜ்ஞாநமே ஹேதுவென்று உரைக்கப்பட் டிருக்கிறதென்று அர்த்தம். அன்றிக்கே புவநாச்ரிதம் — புவநத்தை அடைந்திருக்கிற, ஸம்வ்யவஹாரபூதம்-வ்யாவஹாரிகமாக இருக்கிற இந்த லோகவித்தமானயாதொருஸத்ய த்வமுண்டோ அதிலும் காரணம் அவித்யை என்று சொல்லப்பட்டதென்று அர்த்தம். இந்த அபிப்ராயத்தினாலன்றோ அந்த புவனம் முதலியவற்றுக்கு ஸத்யத்வம் வ்யாவ ஹாரிகமென்று உரைக்கப்பட்டது. இஹோபதேசோத்ருச்யதே என்று. ஆதலால் இதி ஹாஸபுராணங்களில் ப்ரஹ்மஜ்ஞாநவாதமானது காணப்படவில்லை என்று சொல்வ தற்கு சக்யமாகாதென்று அர்த்தம்.

---

நைததேவம்; க்ருத்ஸ்நஸ்ய ஹாவநகோசஸ்ய விஷ்ணும் ஷுஶவெ
ஶூக்ஷா, வரிவஷ்நக்ஷம் ராவிவாஹுரம் ஸமேஷ்வத: ப்ரூஹ்யதாம்
உதாராஹ்ராலியேஸ் । விதிவிசேஷ ஜகதீ விதம்லோ வாஹநஸா
மாவாஸஸம்வேஷ்ஸூவைமஹேமாஜ்ஞாமெநகாகாவதயாகஸை ஷ

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

இது இவ்வண்ணமல்ல. இந்த இடத்தில் புவநகோசத்தினுடைய விஸ்தீர்ணமான ஸ்வரூபத்தைச்சொல்லி முன் சொல்லப்பட்டிராத ரூபாந்தரமானது சுருக்கமாக'ச்ரூயதாம்'என்று ஆரம்பித்து சொல்லப்படுகிறது. சித்துக்களோடும் அசித்துக்களோடும் சேர்க்கையுற்றிருக்கிற உலகத்தில் சிதம்சமானது வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததும் தன்னாலேயே அறியப்படத்தக்க ஸ்வரூபத்துடன்கூடியதும் ஜ்ஞாநத்தையே வடிவமாகக்கொண்டிருத்தலால்ஸ்பர்சிக்கப்படாத ப்ராக்ருதபேதத்துடன் கூடியதாகவும் விநாசமில்லாமலிருப்பதால் அஸ்திஎன்கிற சப்தத்தால் சொல்லத்தக்கதாகவும் இருக்கிறது. அசிதம்சமோவென்றால் சிதம்சத்தின் கர்மாவை நிமித்தமாகக்கொண்ட பரிணாமபேதமுள்ளதாகவும், விநாசமுள்ளதாக இருப்பதால் நாஸ்திசப்தத்தால் சொல்லத்தக்கதாகவும் இருக்கிறது. இரண்டும் பரப்ரஹ்மமாக இருக்கிற வாஸுதேவனுக்கு சரீரமாக இருப்பதால் வாஸுதேவாத்மகமென்று இதன் ரூபம் இங்கு சுருக்கமாக உரைக்கப்பட்டது. 'யதம்புவைஷ்ணவ: காய:ததோ விப்ரவஸுந்தரா-பத்மாகாரா ஸமுத்பூதா பர்வதாப்த்

யாதி' ஸம்புதா என்கிறச்லோகங்களில் சொல்லியவண்ணம் ஜலமானது விஷ்ணுவின் சரீரமாதலால் அந்த ஜலத்தின் பரிணாமமாக இருக்கிற ப்ரஹ்மாண்டமும் விஷ்ணுவின் சரீரம், அதற்கு விஷ்ணு ஆத்மா என்று 'ஜ்யோதீம்ஷி விஷ்ணு:' என்று தொடங்கி உரைக்கப்படப்போகிற ஸகலச்ருதிகளிலும் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற தாதாத்ம்யோபதேசோப ப்ரும்ஹணரூபமான ஸாமாநாதிகரண்யத்திற்கு சரீராத்மபாவமே காரணமென்கிறார். இந்த சாஸ்த்ரத்தில் முன்பும் இந்தவிஷயம் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. 'தாநி ஸர்வாணி தத்வபு:, தத்ஸர்வம் வை ஹரேஸ்தநு:, ஸ ஏவ ஸர்வபூதாத்மா விச்வரூபோ யதோவ்யய:' என்று. அப்படிப்பட்ட இந்த சரீராத்மபாவத்தைச் சார்ந்திருக்கிற தாதாத்ம்யமானது 'ஜ்யோதீம்ஷி விஷ்ணு:', என்கிற ஸாமாநாதிகரண்யத்தால் சொல்லப்படுகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

இதை நிரஸனம் செய்கிறார்—நைநதேவம் இதுமுதலியதால். நைதத்-நிர்மாத்ரப்ரஹ்மத்திற்கு அவித்யாஸம்பந்தமும் அவித்யையினால் ஏற்படுத்தப்பட்டிருப்பதால் ப்ரபஞ்சமித்யாத்வமும் கூறப்பட்டிருப்பது அப்ராமாணிகமென்று அர்த்தம். அப்படியானால் அர்த்த விரோதத்தாலும் ப்ரகரண விரோதத்தாலும் சாஸ்த்ர தாத்பர்ய விரோதத்தாலும் 'அசேஷ மூர்திர்பகவான்' இது முதலிய பதங்களுக்கு லக்ஷணாவ்ருத்தியினால் அர்த்தங்களை உணர்த்தும் தன்மை கல்பிக்கவேண்டியதாதலாலும் ப்ரபஞ்சதர்மிக்ராஹக ப்ரமாண விரோதத்தாலும் ச்ருதியானது விசேஷங்களுடன் கூடின வஸ்துவை ப்ரதிபாதிப்பதில் நோக்கமுள்ளதென்கிற உபபாதனத்தால் ஸ்ம்ருதிகளுக்கு அந்த ச்ருதி விருத்தமான அர்த்தத்தை உணர்த்துவதில் கருத்து வந்து விழுவதாலும் முன்பு கூறப்பட்ட தர்க்க விரோதத்தாலும் அதின் இன்மை. இந்த இடத்தில் அர்த்தவிரோதமாவது ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களுடன் கூடிய ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞாநம் முதலியவற்றின் ப்ரஸக்தியின் விரோதம். அவித்யைக்கு ஆச்ரயநிரோதானம் முதலியதின் அநுபபத்தியும் விஸ்தாரமாக ப்ரபஞ்சத்தின் ப்ரதிபாதநவையர்த்த்யம் பிரகரண விரோதம், மற்றதோவென்றால் ஸ்பஷ்டம் தசச்லோகியில் அஸ்தி நாஸ்தி, ஸத்யம், அஸத்யம் ஜ்ஞாநம் அஜ்ஞானம் முதலிய சப்தங்கள் முறையே ஆத்மாக்களையும் அநாத்மாக்களையும் விஷயமாகக் கொண்டவைகளாலதால் இங்கு தோஷமில்லை. அதில் நாஸ்தி அஸ்தி என்கிற இரண்டு சப்தங்களுக்கும் ஜ்ஞாநபாத்யத்வம் ப்ரவ்ருத்தி நிமித்தமா? அல்லது பரிணாமித்வம் ப்ரவ்ருத்தி நிமித்தமா? என்கிற விசாரத்தில் பரிணாமித்வபக்ஷத்தில் ஸ்வாரஸ்யமிருக்கிறது. மஹீகடத்வம் என்று உபபாதநத்தினால் அஜ்ஞாந சப்தத்திற்கும் அநிர்வசநீயம் என்கிற பொருளை உணர்த்துவதில் கருத்தில்லை. பின்னையோ கர்மபரத்வமே - யஜ்ஞ: பசு: இது முதலியவற்றின் ஸ்வாரஸ்யத்தாலும் வேறு இடத்தில் " சரீரக்ருதிபேதாஸ்து பூபைதே கர்மயோநய: அவித்யாகர்மஸம்ஜ்ஞாந்யா " " பாஹ்யகர்ம ந்ருதிப்ராஜ: " இது முதலிய வசனத்தாலும். சிதசித் வஸ்துக்களின் விவேசனம் இங்கு செய்யப்படுகிறதென்று அபிப்ராயப்பட்டு அதற்கு அனுகுணமான ஸங்கதியைக் கூறுகிறார்— அத்ர என்று. அத்ர - இந்தஇரண்டாவதான அம்சத்தில், விஸ்தீர்ணம் என்பது ஸ்வரூப விசேஷணம்

விஸ்தீர்ண சப்தத்தால் பெருக்திருக்தல் சொல்லக் கருதப்பட்டிருக்கிறது. சேர்ந்திருக்கிற ஸ்தூலரூபத்தைச் சொல்லிவிட்டு பிரிக்திருக்கிற ஸூக்ஷ்மரூபம் சொல்லப்படுகிறதென்று கருத்து. அன்றிக்கே விஸ்தீர்ணமென்பது க்ரியா விசேஷணம். மேலே இந்த இடத்தில் மித்யாத்வமானது சொல்லக்கருதப்பட்டிருக்குமேயானல் மூந்தி விஸ்தாரமாகச்சொன்னது பொருத்தமுள்ளதாக ஆகாது. மூர்த்தியே ப்ராந்தியுள்ளவனுக்கு வேறு ப்ரமத்தை உண்டுபண்ணுதல் செய்யத்தக்கதல்லவன்றே. ஆதலால் மூந்தி ஸவிஸ்தரமாக புவநகோசம் சொல்லப்பட்டிருப்பதால் மித்யாத்வமானது சொல்லப்படப்போகிறதில்லை என்று கருத்து. இனி கூறப்போகிற உள்ளத்திலுள்ள ஆதிபரதசரிதமானது விஸ்தார ரூபமாயுள்ளது. இது அதின் ஸங்க்ஷேபம். இனிசொல்லப்படப்போகிற ஸங்க்ஷேபமும் முற்கூறப்பட்ட ஸங்க்ஷேபமும் காணப்படுகிறது. ஆகையால் முற்கூறப்பட்டுள்ள ஸங்க்ஷேபமென்கிற ஸந்தேஹத்தை நீக்குவதற்காகக் கூறுகிறர்—அநுக்தம் என்று முன்சொல்லப்பட்டிராத ஸம்ஸ்ருஷ்டமான வேறுரூபம் சொல்லப்படுகிற தென்கிற சங்கையைப் போக்குவதற்காகக் கூறுகிறர்— ரூபாந்தரம் என்று. பிரிக்கப்பட்டதென்று அர்த்தம். மித்யாத்வத்தைத் தவிர்த்து சொல்லத்தக்கது எல்லாம் சொல்லப்பட்டது. ஆகையால் சொல்லப்பட்டிராததும் சொல்லத்தக்கதுமான ரூபாந்தரமன்றே மித்யாத்வம். வேறு அல்ல என்கிற சங்கையின் மித்யாத்வத்தைத்தவிர்த்து சொல்லப்பட்டிராத ரூபாந்தரத்தைக் கூறுகிறர்— சிதசிந்மிச்ர என்று. சிதசிந்மிச்ரே ஜகதி என்பதனல் 'ஸங்க்ஷேபச்ச்ரூயதாம் புந:' என்கிற இடத்தில் புந; என்கிற சப்தமானது வியாக்யானம் செய்யப்பட்டதாக ஆகிறது. சிதசிதாத்மகமான ஜகத்தில் ஸ்தூலரூபம் உரைக்கப்பட்டது. அதே ஜகத்தில் இந்த ரூபாந்தரமும் மீண்டும் உரைக்கப்படுகிறது என்று அதற்கு அர்த்தம். ஸத்தாமாத்ரமகோசரம்-வசஸாமாத்ம ஸம்வேத்யம். இது முதலிய வாக்கியங்களால் சொல்லப்பட்டிருக்கிற விசேஷணத்தைச்சொல்லுகிறர்— சிதம்சோவாங்மநஸ என்று. பேதத்தை நிஷேதிப்பதில்நோக்குள்ள 'த்வைதிநோதத்ய தர்சிந:' இது முதலிய வாக்கியங்களுடைய அர்த்தத்தை உள்ளத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறர்—அஸ்ப்ருஷ்ட என்று. சிதம்சத்திற்கு ஜ்ஞானைகாகாரத்வமும் அசிதம்சத்திற்கு பரிணமாஸ்பதத்வமும் சொல்லக்கருதப்பட்டிருக்குமேயாகில் அப்பொழுது அஸ்தி நாஸ்தி ஸத்யம் அஸத்யம் முதலிய சப்தங்களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தமாக எதற்காகக் கூறப்படுகிறது என்று வினவப்படுமேயானல் மறுமொழி உரைக்கப்படுகிறது. சாகாவிசேஷங்களில் 'ஸச்சத்யச்சாபவத்' 'விஜ்ஞாநஞ்சாவிஜ்ஞாநஞ்ச' ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்' இது முதலிய வாக்கியங்களில் ச்ரூயமாணங்களாக இருப்பவைகளும் அத்யயனம் செய்யப்பட்டிருக்கிற சாகைகளை அடைந்திருப்பவைகளுமான ஸத்ய அஸத்யாதி சப்தங்களுக்கு ஜ்ஞாநபாத்யத்வாபாத்யத்வங்கள் ப்ரவ்ருத்தி நிமித்தங்களா? அல்லது பரிணமித்வ அபரிணமித்வங்கள் ப்ரவ்ருத்தி நிமித்தங்களா ? என்கிற சங்கையை நிராகரிப்பதற்காக பரிணமித்வாபரிணமித்வங்களே நாஸ்தி அஸத்யாதி சப்தார்த்தம் ஜ்ஞாநபத்யத்வாபாத்யத்வங்கள் அல்லவென்று அதீதங்களாயும் அநதீதங்களாயுமிருக்கிற சாகைகளின் அர்த்தங்களை ஜ்ஞாபிப்பதின் பொருட்டு என்று. ப்ருதிவீமுதலிய தத்வங்களுக்கு ஸங்காதவிசேஷாவஸ்தையிலேயே ஜீவனைக்குறித்து சரீரத்வம் காணப்பட்டிருக்கிறது. தனித்தனியாக இருக்கிற ஒவ்வொரு தத்வத்திற்கும் ஜீவனைக்குறித்து சரீரத்வம் காணப்பட்டிருக்கவில்லை. மனுஷ்யாதிசரீரங்களுக்கும் அப்படிப்பட்ட பிண்டாவஸ்தையிலேயே

சரீரத்வம் காணப்பட்டிருக்கிறது. சாம்பல் முதலிய வஸ்துவாக இருக்கிற நிலைமை யிலில்லை என்று சித் அசித் இரண்டும் தனித்தனியாக இருக்கிற அவஸ்தா விசேஷங் களில் பகவானுக்கு சரீரமல்லவென்கிற சங்கையைப்போக்குவதற்காகச் சொல்லுகி ரூர்—உபயம் என்று. சித் அசித் இரண்டுகளின் ஸ்வரூபமானது அந்யோன்யம் சேர் க்கை பெற்றதாகவும் தனித்ததாகவும் பகவானுடைய சரீரமென்று அர்த்தம். நிஷ் க்ருஷ்டமான சிதசித்ரூபமானது பகவச்சரீரமென்பது ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால் பகவானைக்குறித்து சரீரத்வம் நிருபாதிகமாக இருப்பதுபற்றி ஸ்வரூபப்ரயுக்தத்வம்ஸி த்ததாதலால் முக்தாவஸ்தையிலுங்கூட ஜீவனுக்கு பகவச்சரீரத்வம் ஸித்திக்கது. ஏதத் ரூபம்-இந்த ஆகாரமென்று அர்த்தம். இதை உபபாதிக்கிரூர்—ததாஹி இது முத லியதால். தசச்லோகியில் அஸாதாரணமான பகவதாத்மகத்வம் ப்ரதிபாத்யமல்ல. அதோ எல்லாப்ரகாணங்களுக்கும் பொதுவானது. அஸாதாரணமாகப்ரதிபாதிக்கத்தக்க வஸ்துவோ வென்றால் ப்ரக்ருதிபுருஷ விவேகமே. சாஸ்த்ரமானது உபநிஷதர்த்தத்தி ன் உபப்ருஹ்மணத்தில் நோக்கமுள்ளதாக இருப்பதால் ஸாங்க்யம் முதலிய மதங்களை வ்யாவ்ருத்திப்பதின்பொருட்டு எல்லா ப்ரகாணங்களிலும் பகததாத்மகத்வம் சொல்லப் படுகிறது. இந்த இடத்தில் அஸாதாரணமாக ப்ரதிபாதிக்கத்தக்கது ப்ரக்ருதிபுருஷவி வேகமே என்கிற அபிப்ராயத்தினுலேயன்றோ முந்தி அநுக்தம்ரூபாந்தரமென்று உரை க்கப்பட்டது. பகவதாத்மகத்வத்திற்கு ஸர்வப்ரகாணஸாதாரண்யமன்றோ- முந்தியும் இது அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறதென்று மேலே சொல்லப்படப் போகிறது. தசச்லோகியிலிருக்கிற ஸாமாநாதிகரண்யம் சரீராத்மபாவ நிபந்தனமென்று ஜ்ஞாபி ப்பதற்காக முன் ச்லோகத்தை எடுக்கிரூர்—யதம்பு என்று. நிஷியினுல் அபிப்ரா யப்படப்பட்டிருக்கிற பலித்த அர்த்தத்தைச் சொல்லுகிரூர்—அம்புநோவிஷ்ணோ: என்று. பால்யாவஸ்தையில் சரீரமாக இருந்த வஸ்துவுக்கு வேறு அவஸ்தை வந்தி ருக்கும் தருணத்தில் சேதநனோடு ஸ்வரூபைக்யம் இல்லை அன்றோ பின்னையோவெ ன்றால் எந்த அவஸ்தையுடனிருந்தாலும் அந்த வஸ்து சரீரமே என்று கருத்து. தஸ்யசவிஷ்ணோராத்மேதி என்று. அபிப்ராயப்பட்டு என்று அர்த்தம். சரீராத்ம பாவம் இப்படிப்பட்ட ஸ்வரூபமுள்ளதென்று கருத்து. ஸகலச்ருதிகத தாதாத்ம்யோ பதேசோப ப்ருஹ்மண ரூபஸ்ய என்று அத்யயனம் செய்யப்பட்டிருந்த சாகைக ளில் கூட தாதாத்ம்யோபதேசமிருக்கிறது. அதற்கு இதே அர்த்தமென்று ஜ்ஞாப னமானது தாதாத்ம்யோபதேசத்திற்கு உபப்ருஹ்மணம் அல்லது ப்ரத்யக்ஷமாக இரு க்கிற எல்லா ச்ருதிகளிலுமுள்ள தாதாத்ம்யோபதேசோப ப்ருஹ்மணமாவது அத்திய யனம் பண்ணப்பட்டிராத சாகைகளில் அதற்கு விருத்தமான அர்த்தத்தின் ப்ரதி பாதன மில்லையென்று ஜ்ஞாபகம். இந்த இடத்தில் மூன்று இதி சப்தங்களுக்கு அநேந ச்லோகேந பகவான் இமமர்த்தபபி ப்ரோத்ய அயமர்த்த இத்யாஹ என்று அன்வயக்ரமம். இந்த இடத்தில் ஸமஷ்டி ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற ச்லோகத்தி லிருக்கிற வ்யதிகரண நிர்தேசத்தினுல் வ்யஷ்டி ஸ்ருஷ்டி ப்ரதிபாதகமான ச்லோக த்திலுள்ள ஸாமாநாதிகரண்யமானது சரீரசரீரிபாவத்தைக் காரணமாகக்கொண்டது என்பது மாத்திரம் அறியப்படுகிறதில்லை.

பின்னையோ வேறு ப்ரதேசங்களில் வ்யஷ்டயவஸ்தையுடன் கூடிய எல்லா வஸ்துக்களுக்கும் பகவானைக்குறித்து சரீரத்வமும் ஸாமாநாதிகரண்யத்திற்கு சரீர சரீரிபாவ நிபந்தநத்வமும் அடிக்கடி கண்டோக்தமென்று சொல்லுகிரூர் அஸ்மிந் என்று. சரீராத்மபாவத்திற்கு ஸாமாநாதிகரண்ய ஹேதுத்வம் கண்டோக்தமாக இருக்

கிறது. விச்வரூபோயதோ வ்யய; என்று. அவ்வாறே வேறு இடத்திலும் ''ஸர்வகத்வாத நந்தஸ்ய ஸ ஏவாஹம், ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:'' இது முதலியது கண்டு அறியத்தக்கது. ததிதம் இது முதலியதால் ஜ்யோதீம்ஷி என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்டிருக்கிற ச்லோகத்தில் மூன்று பாதங்களின் அர்த்தம் உரைக்கப்படுகிறது. ஸம்ஸ்ருஷ்ட வஸ்துவுக்கு பகவதாத்மகத்வம் சொல்லப்பட்டிருக்கிறதென்று அர்த்தம். ப்ரதாநாதி விசேஷாந்தம்சேதநாசேதநாத்மகம் என்று சொல்லப்பட்டிருப்பதனால் ஜ்யோதி: இது முதலிய சப்தங்கள் ஸம்ஸ்ருஷ்ட ஜீவனை உணர்த்துகின்றன.

---

[illegible]

---

ஸ்ரீபாஷ்யம்—

இந்த இடத்தில் அஸ்த்யாத்மகமாகவும் நாஸ்த்யாத்மகமாகவுமிருக்கிற உலகத்திலுள்ள வஸ்துக்களனைத்தும் விஷ்ணுவின் சரீரமாதலால் விஷ்ணவாத்மகமென்று கூறப்பட்டது. இது அஸ்த்யாத்மகம் இது நாஸ்த்யாத்மகம். இது நாஸ்த்யாத்மகம் என்பதில் இது ஹேது என்று சொல்லுகிறார்—

அஎ

ஜ்ஞாநஸ்வரூபோ பகவான் யதோஸௌ என்று. ஸமஸ்தமான க்ஷேத்ரஜ்ஞ ஸ்வரூபமாக இருக்கிற பகவானுக்கு ஜ்ஞானமே ஸ்வாபாவிகமான உருவம். தேவன் மனுஷ்யன் முதலிய வஸ்துக்களின் ஸ்வரூபம் உருவமல்ல. எந்த காரணத்தினால் இவ்வண்ணமிருக்கிறதோ அக்காரணத்தினாலேயே அசித்ரூபமான தேவன் மனுஷ்யன் மலை ஸமுத்திரம் பூமி முதலியவைகள் அந்த க்ஷேத்ரஜ்ஞ ஸ்வரூபனான பகவானுடைய பற்பலவிதமான அநுஸந்தானத்தால் உண்டானவைகளாக இருக்கின்றன. தேவமனுஷ்யாதிகள் ஜ்ஞானத்தையே வடிவமாகக் கொண்டதும் ஸத் என்கிற சப்தத்தால் வ்யவஹரிக்கத்தக்கதுமான அந்த பரமாத்மாவினுடைய தேவன் மனுஷ்யன் முதலிய வஸ்து ஸ்வரூபமாக தன் ஸ்வரூபத்தை பற்பலவிதமாக அநுஸந்திக்கை மூலமாகக்கொண்டவைகள். தேவன் மனுஷ்யன் முதலிய ப்ராணிகளின் ஆகாரத்தினுடைய அநுஸந்தானத்திற்கு மூலமான கர்மாவை மூலமாகக் கொண்டவைகள் என்று அர்த்தம். எக்காரணத்தினால் அசித் வஸ்துவானது க்ஷேத்ரஜ்ஞர்களுடைய கர்மாக்களுக்கு அநுகுணமான பரிணமத்துக்கு ஆபஸ்தமாக இருக்கிறதோ அதனால் அந்த அசித் வஸ்துவானது நாஸ்திசப்தத்தால் சொல்லத்தக்கதாக இருக்கிறது. மற்றது அஸத் என்கிற சப்தத்தால் சொல்லத்தக்கதாக இருக்கிறதென்பது இதனால் சொல்லப்பட்டதாக ஆகிறது அதையே விவரிக்கிறார்—யதாது சுத்தம் நிஜரூபி என்று. எப்பொழுது ஜ்ஞானத்தையே தன் வடிவமாகக்கொண்ட இந்த ஆத்ம வஸ்துவானது தேவன் மனுஷ்யன் முதலிய பிராணிகளின் ஆகாரமுள்ளவன் நான் என்று தன்னிடத்தில் பற்பல ப்ராணிகளின் ஆகாராநுஸந்தானத்திற்கு மூலங்களான கருமங்களின் நாசத்தால் தோஷமற்றதாகவும் பரிசுத்தமாகவும் வாஸ்தவமான தன்னுடைய ரூபமுள்ளதாக ஆகிறதோ, அப்பொழுது தேவமனுஷ்யாதிகளின் ஆகாரத்தோடு ஒன்றுபடுத்தி ஆத்மாவை எண்ணுதலுக்கு மூலமான கர்மாக்களுக்கு பலபூதங்களாகவும் அந்த ஆத்மபோகார்த்தங்களாகவுமிருக்கிற வஸ்துபேதங்கள் வஸ்துக்களில் உண்டாகிறதில்லை.

---

ச்ருதப்ரகாசிகை—

இதற்குமேல் மேலே வரப்போகிற ச்லோகத்தின் ஸங்கதியின் பொருட்டு விசிஷ்டவாக்யார்த்தாநுவாதத்தால் நான்காவது பாதத்தின் அர்த்தத்தைக் காண்பிக்கிறார்—அத்ர அஸ்த்யாத்மகம் என்று. யதம்பு என்று தொடங்கி இருக்கிற ச்லோகத்தால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற வையதிகரண்யத்தினால் ஸமஷ்டி அவஸ்தையிலுள்ள சிதசித் வஸ்துக்கள் இரண்டுகளுக்கும் பகவதாத்மகத்வம் சொல்லப்பட்டது. வ்யஷ்டியவஸ்தையை அடைந்திருக்கிற சேர்க்கையற்றதும் சேர்க்கையுற்றதுமான அந்த சிதசித் வஸ்துக்கள் இரண்டுக்கும் ஸாமாநாதிகரண்யத்தினால் பகவதாத்மகத்வம் கூறப்படுகிறது. ஜ்யோதீம்ஷி என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்ட ச்லோகத்தால். அந்த ச்லோகத்தில் மூன்று பாதங்களால் வ்யஷ்டியவஸ்தையை அடைந்திருக்கிற சேர்க்கையுற்றிருக்கிற சிதசித்வஸ்துக்கள் இரண்டுக்கும் பகவதாத்மகத்வம் உரைக்கப்பட்டது

நான்காவது பாதத்தாலோ வென்றால் நிஷ்க்ருஷ்டங்களான அவ்விரண்டு வஸ்துக்க ளுக்கும் கூட பகவதாத்மகத்வம் உரைக்கப்பட்டது என்று அர்த்தம். அடுத்த ச்லோ கத்தை அவதரிப்பிக்கிறார்—இதம் என்று. அசிதம்சத்திற்கு நாஸ்த்யாத்மகத்வ நிபந்த னமே தாத்பர்ய விஷயம். அசிதம்சத்திற்கு மித்யாத்வ சங்கையன்றோ விலக்கத்தக்க து. ஆதலால் அது பரிணாமமுள்ளதாக இருப்பதால் நாஸ்த்யாத்மகத்வத்திலேயே தாத்பர்யம். சிதம்சமோ வென்றால் பரிணாமமில்லாததால் அதற்கு அஸ்த்யாத்மகத்வம் பலித்ததாக ஆகலாமென்கிற அபிப்ராயத்தால் இதற்கும் நாஸ்த்யாத்மகத்வத்தில் இது ஹேதுவென்று சொல்லுகிறாரென்று கூறப்பட்டது. வ்யாக்யானிக்கத்தக்க க்ரந்தத்தில் ப்ரதீகத்தை எடுக்கிறார்—ஜ்ஞாநஸ்வரூப என்று. இந்த இடத்திலுள்ள ஜ்ஞாநஸ்வரூபோ பகவான் என்கிற ஸாமாநாதிகரண்யம் சரீரசரீரிபாவ நிபந்தன மென்பது முந்தின ச்லோகத்தில் யதம்புவைஷ்ணவ: காய: என்று சொல்லப்பட் டிருப்பதால் மாத்ரம் அறியப்படுகிறதென்பதில்லை. பின்னையோ இந்த சுலோகத்தி லும் அசேஷமூர்த்தி: என்பதனாலுமறியப்படுகிறதென்கிற அபிப்ராயத்தால் வ்யாக் கியானம் பண்ணுகிறார்—அசேஷ என்று. அசேஷ என்கிற சப்தத்தால் அசித்தும் சொல்லக்கருதப் பட்டிருக்குமேயாகில் பகவானைக்குறித்து அதற்கு மூர்த்தித்வம் விதிக்கப்பட்டதாக ஆகும். அப்ராப்தமாக இருப்பதால். அப்பொழுது நதுவஸ்துபூத: என்று தேவன் மனுஷ்யன் மலை ஸமுத்திரம் பூமி முதலிய வஸ்துக்களாக இருத்த லின் நிஷேதமானது பொருத்தமுள்ளதாக ஆகாது. அதனால் அசேஷசப்தமா னது க்ஷேத்ரஜ்ஞவிஷய மென்கிற அபிப்ராயத்தினால் அசேஷ க்ஷேத்ர ஜ்ஞா த்மநா என்று சொல்லப்பட்டது. இந்த இடத்தில் ஜ்ஞாநஸ்வரூப முதலிய சப் தங்களுக்கு பரம விசேஷ்ய பர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்தும் தன்மை இருந்தபோ திலும் வாக்யத்திற்கு விசேஷண விசேஷணத்தில் தாத்பர்யம். அதனால்ஜ்ஞானஸ்வ ரூபத்வமானது விசேஷணமாக இருக்கிற ஜீவனுக்கே விதிக்கப்படுகிறது. எவ்வாறு * 'லோஹிதோஷ்ணீஷா ருத்விஜப்ரசரந்தி' என்கிற இடத்தில் விசேஷணமான உஷ் ணீஷத்தை அடைந்திருக்கிற சிவப்பு நிறமே விதேயமாக இருந்துகொண்டு பரம் பரையாக ருத்விக்குகளின் ப்ரசார கர்ம விசேஷணமாகிறதோ அப்படிப்போல. 'காடி ன்யவான் யோ பிபர்தி' 'ந்ருஸிம்ஹமூர்த்திர் பகவான் ச்வேத;' இதுமுதலியது உதாஹ ரணமாகக் காணத்தக்கது. 'ஜ்ஞாநஸ்வரூப:' என்கிற இடத்தில் திவ்யாத்ம ஸ்வ ரூபத்வம் சொல்லப்படுகிறதென்று சங்கிக்கத்தக்கதல்ல; எல்லா கருமங்களும் நசித்த பிறகு ஜ்ஞானம் தோஷமற்றதாக ஏற்படுகிறது என்கிறவிவரணம் பொருந்தாததலால் திவ்யாத்மஸ்வரூபத்திற்கு கர்மாக்களும் அவைகளாலுண்டுபண்ணப்பட்டிருக்கிற ராகம் த்வேஷம்முதலிய ஹேய ஸம்பந்தங்களின் ப்ரஸங்கமுமில்லையன்றோ--'நதுவஸ்துபூத:' என்பதற்கு அர்த்தம் சொல்லுகிறார்-நதேவ மனுஷ்யாதி என்று. மலைமுதலியஸ்தா வரங்களைச் சொன்னது எல்லா சரீரங்களுக்கும் உபலக்ஷணமென்பதை ஜ்ஞாபிப்ப தற்காக தேவமனுஷ்ய முதலிய சப்தம். உத்தரார்த்தத்தை வ்யாக்கியானிக்கிறார்—யத ஏவம் என்று. 'சைலாப்திதராதிபேதான் விஜ்ஞாநவிஜ்ரும்பிதாநி ஜாநீஹி' என்பத னால் பலித்த ஹேதுஹேதுமத்பாவத்தை விவரிக்கிறார்— தத்விஜ்ஞான இதுமுதலிய தால். விஜ்ஞாந சப்தத்தை வ்யாக்கியானிக்கிறார்—தஸ்ய என்று. விஜ்ஞானம்-பற்பல ஜ்ஞாநம். 'நிஜகர்மபேதவிபின்ன சித்தை:-ஸர்வகர்மக்ஷயே,' என்று கர்மமூலமென்று

---

உஷ்ணீஷம்—தலைப்பாகை.

சொல்லப்படப்போவதால் மலைகள் ஸமுத்திரங்கள் பூமிமுதலிய வஸ்துக்களின்பேதம் எவ்வாறு வைவித்யானுஸந்தான மூலம் - கர்மாவன்றோ மூலமென்று கேழ்க்கப்படுமே யாகில் சொல்லுகிறார்—தேவாதி என்று. வைவித்யானுஸந்தானத்திற்குதேவாதிபேத ஹேதுத்வமானது மேல்க்ரந்தத்தோடு அர்த்தைக்யத்தாலும் 'அவித்யா ஸஞ்சிதம் கர்ம பாஹ்ய கர்மவ்ருப்தி ப்ராஜ:'' 'பூமைதே கர்மயோகய :' இது முதலிய வேறு செகங்க ளாலும் ஸத்வாரகமாக இருக்கிறது என்று பொருள். மூர்த்தி இதமஸ்த்யாத்மகம் இது முதலியதால் கூறப்பட்ட ச்லோக வாக்யார்த்தமானது எவ்வாறு பொருந்துகிறதெ ன்று கேழ்க்கப்பட்டால் சொல்லுகிறார்—யதர்ம என்று. ஜ்ஞாநஸ்வரூப: 'விஜ்ஞாநவி ஜ்ரும்பிதாசி என்பதனால் பலித்ததென்று அர்த்தம். ததேவ என்று பூர்வபக்ஷயோஜ னையில் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தங்களில் அபேக்ஷிக்கப்பட்டிருக்கிற அம்சத்தை உபஜீவித்து ஸித்தாந்தயோஜனை செய்யப்படுகிறது. விஜ்ஞாந விஜ்ரும்பிதத்வத்தையே வ்யதிரேக முகத்தால் விவரிக்கிறார் என்று அர்த்தம். மூர்த்தினச்லோகத்தில் தேவாதி பேதங்களுக்கு ஸ்வாத்ம வைவித்யானுஸந்தான மூலத்வம் ஸத்வாரகமென்கிற வ்யா க்கியானமானது அடுத்த ச்லோகத்தில் வ்யதிரேக முகத்தால் விவரணத்தில் கர்மஹே துத்வ ச்ரவண நிபந்தனமென்பதை ஸ்பஷ்டமாகச் செய்துகொண்டு சொல்லுகிறார்— தேவாத்யாகாரேண என்று. நிர்தோஷம் இது முதலிய பதங்களுக்கு அர்த்த வி பாகமானது 'ஜ்ஞானம் விசுத்தம்' இது முதலிய ச்லோக வ்யாக்கியானத்தில் விசத மாகக்கூறப்படப்போகிறபடியால் க்ரந்தலாகவத்திற்காக இந்த இடத்தில் அது விஸ்தரி க்கப்படவில்லை. நிர்தோஷம் - சரீர ஸம்பந்தமில்லாதது. பரிசுத்தம் அந்த சரீரஸம் பந்தத்தால் உண்டுபண்ணப்பட்ட ராகம் த்வேஷம் ஸுகம் துக்கம் முதலியவைக ளால் விடுபட்டது. நிஜரூபி-ஆவிர்ப்பவித்திருக்கிற ஸ்வரூபத்துடன் கூடியது. ஸங்க ல்பசப்தத்தை வ்யாக்கியானம் செய்கிறார்— ஏகீக்ருத்யாத்மகல்பநா என்கிறசப்தத் தால். ஸம் என்கிற சப்தத்திற்கு ஏகீகாரம் அர்த்தமென்று வையாகரணர்கள் கூறுகின்ற னர். முற்கூறியதுபோல் ஸத்வாரகமென்று வ்யாக்கியானம் பண்ணுகிறார்— ஆத்ம கல்பநா மூலகர்ம பலபூதா:' என்று. தன்னுடைய ஆத்மஸ்வரூபமேதேவமனுஷ்யா திகளின் ஆகாரத்தால் பலவகைப்பட்டிருக்கிறதென்கிற அனுஸந்தானமானது தே ஹத்தையும் ஆத்மாவையும் ஒன்று சேர்த்து அனுஸந்தானத்தின் பலம். அவ்விர ண்டுக்குள் ஒவ்வொன்றும் விஜ்ஞாந சப்தத்திலும் ஸங்கல்ப சப்தத்திலும் அர்த்தஸி த்தமாக இருக்கிறது. ஸுகதுக்கங்களன்றோ கர்மபலன், அவ்வாறு இருக்க வஸ்து பேதம் கர்மபலமென்பது எவ்வாறு பொருத்தமுள்ளதாக ஆகுமென்கிற சங்கைவரின் 'தத்போகார்த்தா:'என்று கூறப்பட்டது. சுகம் முதலிய போகங்களுக்கு வழியாக இரு ப்பதால் தேவாதிபேதங்கள் கர்மபலமென்று பொருள். 'போக்தாபோக்யம் ப்ரேரிதா ரஞ்சமத்வா' இது முதலியவைகளில் தத்போகார்த்தா: என்கிற வசனத்தினால் போக்ய சப்தத்தின் அர்த்தமானது நன்கு வெளியிடப்பட்டதாக ஆகிறது. போகஸ்தானங்க ளுக்கும் போகோபகரணங்களுக்கும் போகஸித்திக்கு ப்ரயோஜகமாக இருத்தலேபோக் யத்வமென்று அர்த்தம்—எழாம்வேற்றுமையிலுள்ள வஸ்து சப்தமானது ஜீவபர்யந்த மான தேஹத்தை அர்த்தமாகக்கொண்டிருக்கிறது. இரண்டாவதான வஸ்துசப்தமான து தேவாதிகளின் சரீரமாத்திரத்தைச் சொல்லுகிறது. வஸ்துபேதா: - தேவாதி சரீர பேதங்கள். இந்த இடத்தில் வஸ்துபேத சப்தத்தினால் பேதமானது வஸ்துரூபமாக இருப்பதால் பாரமார்த்யமும் பலித்தது.

ये देवादिषु वस्तुष्वात्मतयाभिमतेषु भोग्यभूताः देवमनुष्यशैलसमुद्रादिवस्तुभेदाः; ते तत्तत्कर्मक्षये विनष्टेषु न भवन्तीत्युच्यन्ते; कादाचित्कावस्थाविशेषयोगितया नास्तिशब्दाभिधेयत्वम्, इतरस्य सर्वदा निजसंज्ञापन्नैकाकारत्वेन अस्तिशब्दाभिधेयत्वमित्यर्थः । प्रतिक्षणमन्यथाभूततया कादाचित्कावस्थायोगिनोऽचिद्वस्तुनो नास्तिशब्दाभिधेयत्वमेवेत्याह— "वस्त्वस्ति किम्" इति । अस्तिशब्दाभिधेयो ह्यादिमध्यपर्यन्तहीनः सततैकरूपः पदार्थः । तस्य कदाचिदपि नास्तिशब्दानर्हत्वात् । अचिद्वस्तु किञ्चित् क्वचिदपि तथाभूतं न दृष्टवान् । ततः किमित्यत्राह— "यच्चान्यथात्वम्" इति । यद्वस्तु प्रतिक्षणमन्यथात्वं याति; तदूर्ध्वं पूर्वावस्थाप्रच्युत्या उत्तरोत्तरावस्थां जहातीति तस्य उत्तरावस्थस्य पूर्वावस्थायां न प्रतिसन्धानमस्ति । अतस्सर्वदा तस्य नास्तिशब्दाभिधेयत्वमेव । तथा ह्यनन्तरमित्याह— "मही घटत्वम्" इति । स्वकर्मणा देवमनुष्यादिभावेन स्थितानां येषां भोग्यभूतमचिद्वस्तु प्रतिक्षणमन्यथाभूतमीक्ष्यते— अनुभूयत इत्यर्थः । एवं सति किं सर्वदास्तिशब्दाभिधेयमादिमध्यपर्यन्तहीनं सततैकरूपमस्ति किम्? न ह्यस्तीत्यभिप्रायः । यद्येवम्, तस्माज्ज्ञानस्वरूपात्मव्यतिरिक्तस्याचिद्वस्तुनः कादाचित्कत्वेन सर्वदास्तिशब्दवाच्यत्वं न भवतीत्याह— "तस्मान्न विज्ञानमृते" इति ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

ஆத்மாக்களாக அபிமானிக்கப்பட்டிருக்கிற தேவன் மனுஷ்யன் முதலியவஸ்துக்களில் போக்யங்களாக இருக்கிற யாதொரு தேவன் மனுஷயன் மலை ஸமுத்திரம் பூமி முதலிய வெவ்வேறு வஸ்துக்களுண்டோ அவைகள் அந்த தேவன் மனுஷ்யன் முதலிய வஸ்துக்களாக ஆவதற்குக் காரணமாயிருந்த கர்மாக்கள் முற்றிலும் நாசமடைந்தபிறகு இருப்புடையவைகளாக ஆகிறதில்லை. ஆதலால் அசித்வஸ்துவானது ஏதோ ஒரு ஸமயத்திலுண்டாகிற ஒருவித நிலைமையுடன் சேர்க்கைபெறுவதால் நாஸ்தி சப்தத்தால்

சொல்லப்படுகிறது. மற்றதோ எப்பொழுதுமே தன்னிடத்தில் நிலைபெற்றிருக்கிற ஜ்ஞாநத்தையே வடிவமாகக்கொண்டிருப்பதால் அஸ்தி என்கிறசப்தத்தால் சொல்லப்படுகிறது என்று பொருள். ஒவ்வொரு நொடிப்பொழுது தோறும் வெவ்வேறாக மாறுதலடைகிறபடியால் ஏதோ ஒரு ஸமயத்திலுண்டாகிற நிலைமையுடன் கூடிய அசித்வஸ்துவானது நாஸ்தி என்கிற சப்தத்தாலேயே சொல்லத்தக்கதாக ஆகிறது என்று சொல்லுகிறார்--வஸ்த்வஸ்திகிம்-- என்று. தொடக்கம் மத்யகாலம் முடிவு இவைகளால் விடுபட்டு எப்பொழுதும் ஒருவிதஸ்வரூபத்துடன் கூடி இருக்கிற பதார்த்தமானது அஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதன்றோ- அது ஒருபொழுதும் நாஸ்தி என்கிற புத்திக்கு விஷயமாகத் தகுதியில்லாமலிருப்பதால். அசித் வஸ்து ஒன்றாவது ஒரு ஸமயத்திலாவது அவ்வித ஸ்வபாவமுள்ளதாக முன்புகாணப்பட்டிருக்கவில்லை. அதனாலென்னவென்று கேழ்க்கப்பட்டால் சொல்லுகிறார்—'யச்சாந்யதாத்வம்' என்று. எந்த வஸ்துவானது ஒவ்வொருக்ஷணந்தோறும் வேறுபாட்டை அடைகிறதோ அந்தவஸ்துவானது மேல்மேல் ஏற்படுகிற நிலைமைகளை அடைந்து முந்தி முந்தி இருந்த நிலைமைகளை இழந்துவிடுகிறதாதலால் முந்தின நிலைமையை அடைந்திருந்த அந்த வஸ்துவுக்கு பிந்தின நிலைமை ஏற்பட்டிருக்கும் ஸமயத்தில் * ப்ரதிஸந்தானமில்லை. ஆதலால் அது எப்பொழுதும் நாஸ்தி என்கிற சப்தத்தால் சொல்லத்தக்கதே. அவ்வண்ணமேயன்றோ அறியப்படுகிறதென்று சொல்லுகிறார்-- 'மஹீ கடத்வம்' என்று. தன்னுடைய கர்மாவினால் தேவன் மனுஷ்யன் முதலிய ப்ராணிகளின் தேஹஸம்பந்தமேற்பட்டிருப்பதினால் தடைசெய்யப்பட்டிருக்கிற ஆத்ம நிச்சயத்துடன்கூடிய மனிதர்களால் தனக்குபோக்யமாக இருக்கிற அசித் வஸ்துவானது ஒவ்வொரு க்ஷணந்தோறும் வேறுபாடுள்ளதாகக் காணப்படுகிறது- அநுபவிக்கப்படுகிறதென்று பொருள். வஸ்துஸ்திதி இவ்வாறாக இருக்கையில் ஏதாவது ஒரு அசித் வஸ்துவானது அஸ்தி நாஸ்தி என்கிற சப்தத்தால் வ்யவஹரிப்பதற்குத் தகுதியுள்ளதாயும் ஆதிமத்யாந்தமில்லாததாயும் எப்பொழுதும் ஒரே ஸ்வரூபமுள்ளதாகவும் காணப்பட்டிருக்கிறதா? இல்லவே இல்லைஎன்று அபிப்ராயம். எக்காரணத்தால் இவ்வண்ணமிருக்கிறதோ அதனாலே ஜ்ஞாநஸ்வரூபியான ஆன்மாவைக்காட்டிலும் வேறான அசித் வஸ்துவானது ஒருபொழுதும் ஓரிடத்திலும் தனித்த அஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதாக ஆகிறதில்லை என்று கூறுகிறார்— 'தஸ்மாத் ந விஜ்ஞானம்ருதே' என்று.

---

ச்ருதப்ரகாசிகை—

இந்த இடத்தில் அன்வயிக்கப்பட்டிருக்கிற பதங்களில் வ்யாக்கியானிக்கத்தக்க பதங்களை வ்யாக்கியானிப்பதற்காகச் சொல்லுகிறார்—யேதேவாதிஷு என்று. தேவா

---

* ப்ரதிஸந்தானம்—ஸ்மரணம்.

திஷ்ஷு வஸ்துஷ்வாத்மதயாபி மதேஷு முதலிலிருக்கிற வஸ்து சப்தமானது ஜீவபர்யந்தமான தேஹத்தையே குறிக்கிறதென்று அபிப்ராயம். சேர்க்கைபெற்றிருக்கிற ஆகாரத்திலன்றே ஆத்மாபிமானம். 'தத்போகார்த்தா:' என்று முந்தி சொல்லப்பட்டிருக்கிற பதத்தைச்சார்ந்த வ்யாக்கியானிக்கத்தக்க பதத்தை உதாஹரிக்கிறார்— போக்யபூதா: என்று. போக்யபூதா: என்கிற இந்த பதப்ரயோகத்தால் வஸ்துபேதா: என்கிற பதத்துக்கு அசிதம்சமாத்ரத்தில் தாத்பர்யம் உரைக்கப்பட்டது. நதுவஸ்துபூதா: என்று சொல்லப்பட்டிருப்பதால் முந்தின ச்லோகத்தில் சொல்லப்பட்ட பேதங்களே இங்கு சொல்லக்கருதப்பட்டிருக்கின்றனவென்று சொல்லுகிறார்-தேவமனுஷ்ய என்று. காரணமில்லாமையால் கார்யமில்லாமல் போவதன்றோ வ்யதிரேகம். அதை ஸ்பஷ்டமாகச்சொல்லுகிறார்—தந்மூலபூத என்று ப்ரதானமான ப்ரக்ருதார்த்தம் பலித்ததென்றுசொல்லுகிறார்—இத்யசித் வஸ்துந: என்று. முந்தினச்லோகத்தின் பலிதார்த்தத்தைச்சொல்லும் தருணத்தில் ஆத்மா அஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதென்பதில் ஹேதுவானது கூறப்படவில்லை. இந்த இடத்திலேயென்றால் அதற்கும் பலிதத்வத்தைக் கூறுகிறார்—இதரஸ்ய! என்று. உலகம் எவ்வாறாக அறியப்படுகிறதோ அவ்விதத்தாலும் வஸ்துபேதங்களுக்கு பரிணாமித்வத்தை இரண்டு ச்லோகங்களால் உபபாதித்து அவற்றுள் முதன்மைவாய்ந்துள்ள ச்லோகத்தினது வாக்கியார்த்தத்தைக் கூறுகிறார்—ப்ரதிக்ஷணம் என்று. ச்லோகத்திற்கு நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்க அர்த்தத்தில் நோக்கானது 'யதஸ்தி நாஸ்தி' என்கிற தொடக்கத்தால் அறிப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தில் ப்ரயோஜகசிக்ஷை. 'வஸ்த்வஸ்தி கிம்' என்கிற அர்த்தயோஜனைக்குத் தகுந்த வண்ணமாக இந்த இடத்தில் சொல்லத்தக்கதான யதஸ்தியந்நாஸ்தி என்று தொடக்கத்தினால் ஸித்தமான அர்த்தத்தைகூறுகிறார்—அஸ்திசப்த என்று. எப்பொழுதும் ஒரே ஸ்வரூபத்துடன்கூடி இருப்பதால் அஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்க தன்மை இருந்தாலன்றோ ச்லோகத்தின் முந்தினபாதியில் சொல்லப்பட்டிருக்கிற அதன் அபாவத்திற்கு நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்க தன்மையில் ஹேதுத்வம் ஸித்திபெருகிறது. ச்லோகத்தின் முற்பாதியை வ்யாக்கியானம் செய்கிறார்— அசித்வஸ்து என்று. நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதன்மைக்கு இதனாலென்னவென்கிற சங்கைவரின் ச்லோகத்தின் பிந்தினபாதியை அவதாரிப்பிக்கிறார்— தத: கிமித்யத்ராஹ என்று. யாதி என்று நிகழ்காலத்தைக் குறிப்பிட்டுச் சொன்னதற்கு அபிப்ராயத்தைச்சொல்லுகிறார்— ப்ரதிக்ஷணம் என்று. 'பூயோ ந தத் ததா' என்பதற்கு அர்த்தத்தைகூறுகிறார்—தத் என்று. மேல் மேல் வருகிற நிலைமையை அடைவதனால் என்பது பூய: என்கிற சப்தத்தின் அர்த்தம். 'ந தத்ததா' என்பதற்கு அர்த்தத்தைக் கூறுகிறார் பூர்வபூர்வாவஸ்தாம் ஜஹாதி என்று. தத்ர என்பதற்கு அர்த்தம் சொல்லுகிறார்- பூர்வாவஸ்தஸ்யோத்தரா வஸ்தாயாம் என்று. குதஸ்தத்வம் என்பதற்கு அர்த்தத்தைக்கூறுகிறார்—நப்ரதிஸந்தானம் என்று. தத்த்வம்-அந்த வஸ்துவின் பாவம். அது இது என்கிற நினைவுக்குத் தகுதியற்றிருத்தல் பலித்ததென்று அர்த்தம். அய்யனே! தத்த்வம் எதனால் பூர்வாவஸ்தத்வம் எதனாலென்று சொல்லப்பட்டது. எவ்வாறு ப்ரஸந்தான நிஷேதம்? சொல்லப்படுகிறது. குத: என்கிற சப்தமானது ப்ரமாணத்தின் ப்ரதிக்ஷேபத்தில் முக்கியநோக்கமுள்ளது. பர்வதம் நெருப்புள்ளது என்று சொல்லப்பட்டால் குத:என்கிற சப்தப்ரயோகத்தால் ப்ரமாணாகாங்க்ஷயல்லவோ த்யோதனம் செய்யப்படுகிறது. ஆதலால் ப்ரதிக்ஷேபபரமான குதச்சப்தமும் ப்ரமாண ப்ரதிக்ஷேபத்தில் முக்கியமான கருத்துள்ளது 'குத: ப்ரமாணாத்' எந்த ப்ரமாணத்தாலென்று அர்த்தம். முந்தின நிலைமையுள்ள வஸ்துவுக்கு மீண்டும் அவ்வித நிலைமையோடுசேர்ந்திருத்தலென்கிற தன்மையில் ப்ரமாணம் ப்ரத்யபிஜ்ஞை-அதனால் ப்ரமாணம்ப்ரதிக்ஷிப்தமானவுடன்

ப்ரதிஸ்ந்தானம் நிஷேதிக்கப்பட்டதாக ஆகிறதென்று கருத்து. அப்படி இல்லாவிட்டால் ந தத்ததா என்பதனுல் † பௌநருக்த்யம் ஏற்படும். ஹி சப்தத்தால் பலித்த அர்த்தத்தைச்சொல்லுகிருர்—அத: என்று. நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதென்பதில் ப்ரயோஜகசிக்ஷையானது செய்யப்பட்டது. சிக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தை உதாஹரணத்தால் அடுத்த ச்லோகம் காண்பிக்கிறதென்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிருர்— ததாஹி என்று. மஹீகடத்வ மென்கிற ச்லோகத்தை வ்யாக்கியானிக்கிருர்—ஸ்வகர்மணு இது முதலியதால். ''மஹீகடத்வம்'' என்கிற ச்லோகத்தில் யாதி என்கிற பதத்தைமுந்தினச்லோகத்திலிருந்து எடுத்துச்சேர்த்துக்கொள்ளவேண்டும். கர்மாவுக்கு ஆத்மநிச்சய விஷயத்தில் விரோதமானது நேரிலில்லை, பின்னேயோ பரம்பரையாக ஏற்படுகிறதென்று சொல்லுகிருர்—தேவமனுஷ்யாதிபாவேந என்று. தேவாதி தேகஸம்பந்தத்தாலென்று அர்த்தம். ஸ்திமிதம்-தடைசெய்யப்பட்ட மிக்கஸ்திரமாயும் ஸ்வரூபமாகவுமிருக்கிற ஆத்ம நிச்சயமானது தடுக்கப்பட்டிருப்பதனுல் அஸ்திரமான அசேதந வஸ்துக்களில் போக்யதா புத்தி உண்டாகிற தென்று கருத்து. அன்றிக்கே ஆத்ம ஜ்ஞாநமில்லாதவர்களால் கூட அசித் வஸ்துவுக்கு அஸ்திரத்வம் காணப்படுகிறதென்றுகூறுகிருர்—ததாஹி என்று. 'ஆலக்ஷ்யதே' என்கிற சப்தத்திற்கு சாக்ஷாத்ஜ்ஞாநத்தை உணர்த்தவேண்டிய விஷயத்தில் ப்ரயோகம் ஏராளமாக இருப்பதால் அதை விலக்குவதற்காக அனுபவிக்கப்படுகிற தென்று பொருள் கூறப்பட்டது. ச்லோகவ்யாக்கியானத்தின் முடிவை த்யோதனம் செய்கிருர்—இத்யர்த்த: என்று. ப்ருஹி இது முதலியதற்குப்பொருள் கூறுகிருர்—ஏவம் ஸதி என்று: இதனுல் அத்ர என்கிற பதம் வ்யாக்கியானிக்கப்பட்டது. அசித்வஸ்து என்கிற பதத்தால் ச்லோகத்திலிருக்கிற வஸ்துசப்தம் வியாக்கியானிக்கப்பட்டது. அஸ்தி சப்தார்ஹம் இது முதலிய விசேஷணம் ஸாமர்த்திய ஸித்தமாக இருத்தலால் சொல்லப்பட்டது. அல்லது இரண்டு ச்லோகங்களின் அபிப்ராயத்தைக் கூறுகிருர்—ஏவம்ஸதி என்று. நது வஸ்துபூத: என்று. புராணக்ரந்தத்தில் கிமப்யசித் வஸ்து, அசித் வஸ்து ஏதாவது ஒன்று, பாஷ்யத்திலும் அசித் விஷயமான வஸ்துசப்தப்ரயோகமிருப்பதால். 'தத்வஸ்து ந்ருப தச்ச கிம்' என்கிற க்ரந்தத்திலிருக்கிற வஸ்து சப்தத்தோடு துல்யத்வம் சங்கிக்கத்தக்கதல்ல, அஸ்தி கிம் என்பதனுல் ச்லோகத்திலிருக்கிற அஸ்தி சப்தத்திற்கு 'பவதி' என்கிற சப்தத்தின் அர்த்தம உரைக்கப்பட்டது. அதனுலேயே 'யதஸ்தி' என்கிற இடத்திலுள்ள அஸ்தி சப்தத்திற்குப்போல் ஆத்ம ஸ்வரூப பரத்வம் சங்கிக்கத்தக்கதல்ல. பலித்ததைச்சொல்லுகிருர்— நஹி என்று. அஸ்தி கிம் நஹ்யஸ்தி என்கிற பாஷ்யஸ்வாரஸ்யத்தினுல் இரண்டு ச்லோகங்களுக்கும் தொடக்கத்திலிருக்கிற அஸ்தி கிம் என்கிறப்ரத்யபிஜ்ஞான வாக்கியமானது பவத்யர்த்தமாக வ்யாக்கியானம் செய்யப்பட்டதாக அறியப்படுகிறது. அன்றிக்கே 'அஸ்திசப்தாபிதேய:' என்பதனுல் வஸ்த்வஸ்தி கிம் என்கிற இடத்திலிருக்கிற அஸ்தி சப்தமானது வியாக்கியானிக்கப்பட்டது. 'யதஸ்தி தஸ்மாந் ந விஜ்ஞாநம்ருதேஸ்தி' இது முதலியதோடு ஐகரூப்யத்தால். இவ்வண்ணம் வஸ்த்வஸ்திகிம், மஹீகடத்வம், என்கிற இரண்டு ச்லோகங்களுக்கும் தனித்தனியாக உறைக்கப்பட்டிருக்கிற வாக்கியார்த்தமானது பூர்வபக்ஷயோஜனையில் ஆச்ரயிக்கத்தக்கது. மேல் ச்லோகத்தினுடைய முதல் பாதியை வ்யாக்கியானிக்கிருர்— யஸ்மாத் என்று. யஸ்மாதேவம் தஸ்மாத் பரிணுமமுள்ளதாக இருத்தலாலேயே ஒழிய ஜ்ஞாநத்தால் பாதிக்கத்தக்கதாக இருத்தலாலல்லவென்று அர்த்தம். அசித் வஸ்து சப்தத்தால் வஸ்துஜாத சப்தார்த்தம் உரைக்கப்பட்டது. ஜாதசப்தத்தை மேலேவைத்து

† பௌநருக்த்யம்—சொன்னதை திருப்பிச்சொல்லுதல்.

க்கொண்டிருக்கிற வஸ்து சப்தமானது நித்யமென்கிற பொருளை உணர்த்துகிற 'ஸ்வபாவமுள்ளதல்லவென்று பொருள். 'கேவலாஸ்தி சப்தவாச்யம் என்று. இந்த ச்லோகத்திலிருக்கிற அஸ்தி சப்தமானது பவத்யர்த்தகமல்ல 'ததே தத்க்ஷயம் நித்யம்' இது முதலியதால் நித்யமாக சொல்லப்பட்டிருக்கிற ஜ்ஞானத்தைக்காட்டிலும் வேறுபட்டிருக்கிறவஸ்துவுக்கு நிஷேதிக்கத்தக்கத்தன்மை பொருந்தாதலாலும் யதஸ்தி என்றுதொடங்கப்பட்டிருக்கிறதற்கு அனுகுணமாக உபஸம்ஹாரம் செய்வது உசிதமாதலாலு மென்றுகருத்து. ப்ராகபாவ ப்ரத்வம்ஸாபாவங்களுக்குள்ள அசித் வஸ்துவுக்கு நாஸ்திசப்தத்தால் சொல்லப்படத்தக்க தன்மையும் அவச்சின்னமான அஸ்திசப்தத்தால் உணர்த்தப்படும் தன்மை இருப்பது பற்றி அதை விலக்குவதற்காக கேவலசப்தம். இவ்வண்ணம் ஆத்மாவைத்தவிர்த்த வஸ்துவுக்கு நாஸ்திசப்தத்தால் உணர்த்தப்படத்தக்கதன்மை உபஸம்ஹரிக்கப்பட்டது.

---

[illegible]

[illegible]

அஅ

ஸ்ரீபாஷ்யம்—

ஆத்மாவோ வென்றால் எல்லா இடத்திலும் ஜ்ஞாநத்தையே தன் வடிவமாகக்கொண்டிருத்தலால் தேவன் மனுஷ்யன் முதலிய பேதங்களுக்கு விரோதியான ஸ்வரூபத்துடன்கூடியதாக இருந்தபோதிலும் தேவாதி சரீரங்களில் ப்ரவேசிப்பதற்கு ஹேதுவாக இருக்கிறதும் தன்னாலேயே முன் ஜன்மங்களில் செய்யப்பட்டிருப்பதும் பற்பலவிதமாகவுமிருக்கிற கர்மாக்களை மூலமாகக்கொண்டிருக்கிற தேவ மனுஷ்யாதி பேதத்தால் ஆத்மா வேறுபட்டவனென்கிற புத்தியையுடையவர்களால் அந்தந்த தேவாதிரூபத்தால் பலவாறாக அநுஸந்திக்கப் பட்டவனாக இருப்பதுபற்றி அந்த பேதாநுஸந்தானமானது ஆத்மாவின்ஸ்வரூபத்தா லேற்படுத்தப்பட்டதல்லவென்று சொல்லுகிறார்— " விஜ்ஞாநமேகம் " என்று. ஆத்ம ஸ்வரூபமோ வென்றால் கர்ம ஸம்பந்தமில்லாதது. அதனாலேயே மலரூபமான ப்ரக்ருதியின் ஸ்பர்சமற்றது. அப்படிப்பட்ட ப்ராக்ருதி ஸ்பர்சமில்லாமையால் அதனாலுண்டுபண்ணப்படுகிற சோகம், மோஹம், லோபம்முதலிய ஸமஸ்தமான ஹேய குணங்களின் ஸம்பந்தமில்லாதது. வ்ருத்தி க்ஷயங்களுக்கு அநர்ஹமாக இருப்பதால் ஒன்றாக இருக்கிறது. அதனாலேயே எப்பொழுதும் ஏகரூபமாக இருக்கிறது. அந்த ஆத்மஸ்வரூபமும் வாஸுதேவனுக்கு சரீரமாக இருப்பதுபற்றி அந்த வாஸுதேவனை ஆத்மாவாகவுடையது அதாவது வாஸுதேவாத்மகம் வாஸுதேவாத்மகமாக இல்லாத ஒரு வஸ்துவும் உலகத்திலில்லாமையால் என்று சொல்லுகிறார்— 'ஜ்ஞானம் விசுத்தம்' என்று. சிதம்சமானது எப்பொழுதும் ஏகரூபமாக இருப்பதால் எப்பொழுதுமே அஸ்திசப்தத்தால் உணர்த்தத்தக்கதாக இருக்கிறது. அசிதம்சமோ வென்றால் க்ஷணந்தோறும் வெவ்வேறு பரிணமங்களோடுகூடி இருத்தலால் எப்பொழுதும் நாசத்தை உள்ளடக்கிக்கொண்டிருப்பது பற்றி எக்காலத்திலும் நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கது. இவ்விதமான ஸ்வரூபத்துடன் கூடின சிதசிதாத்மகமான உலகமானது வாஸுதேவனுக்கு சரீரம், வாஸுதேவனை அந்தராத்மாவாகக்கொண்டது என்று ஜகத்தின் யதார்த்த ஸ்வரூபமானது நன்கு உரைக்கப்பட்டதென்று சொல்லுகிறார்— 'ஸத்பாவ ஏவம்' என்று. இந்த இடத்தில் ஸத்யம், அஸத்யம், என்று 'யதஸ்தி நாஸ்தி' என்று தொடங்கப்பட்டிருக்கிறதற்கு உபஸம்ஹாரம் செய்யப்பட்டிருக்கிறது. ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறதும் ஜ்ஞாநத்தையே உருவமாகக்கொண்டிருத்தலால் எங்கும் ஸமமாக இருப்பதும் தேவன்மனுஷ்யன் முதலிய சப்தங்களால் வ்யவஹரிப்பதற்கே விஷயமல்லாத ஸ்வரூப பேதத்துடன் கூடியதாகவே இருந்துகொண்டு அசித் பதார்த்தங்களுடன் கலந்ததும் அண்டங்களுக்குள்ளடங்கியதும் தேவன் மனுஷ்யன் திர்யக் ஸ்தாவரமென்று நன்கு வ்யவஹரிப்பதற்குத்தகுந்த பேதமுள்ளதாகவும் யா

தொரு வஸ்து இருக்கிறதோ அதில் கர்மாவே ஹேதுவென்று சொல்லப்பட்டிருக்கிறதென்று கூறுகிறூர். 'ஏதத்து யத்' என்று. அதையே விவரிக்கிறூர்—'யஜ்ஞ:பசு:' என்று.

---

ச்ருதப்ரகாசிகை—

விஜ்ஞானம் இது முதலியதை வ்யாக்கியாநம் பண்ணுகிறூர்— ஆத்மாது என்று. து சப்தமானது அசித் பதார்த்தத்தைக்காட்டிலும் வேற்றுமையில் கருத்துள்ளது. ஸர்வத்ர எல்லாசரீரங்களிலும் ஏகசப்தத்தை வ்யாக்கியானிக்கிறூர்-ஜ்ஞாநைகாகாரதயா என்று. 'ஏகோவ்ரீஹிஸ்ஸம்நிஷ்பந்நஸ்ஸம் புஷ்டம் குருதே ப்ரஜா:'என்கிற இடத்தில் போல இந்த ஏக சப்தமானது ஆகார ஐக்யத்தில் முக்கியமான கருத்துள்ளது. அந்த ஆகாரமானது விஜ்ஞான சப்தத்தால் சொல்லப்பட்ட ஜ்ஞாநத்வமென்கிற அபிப்ராயத்தால் கூறப்பட்டது 'ஜ்ஞானைகாகாரதயா'என்று. நிர்தேசமானது பாவப்ராதான்யத்தில் கருத்துள்ளது. ஜ்ஞாநத்வம் ஒன்றையே ஆகாரமாகக்கொண்டிருத்தலாமென்று பொருள். ஸ்வரூபத்தாலும் தர்மத்தாலும் ஜ்ஞாநத்வமானது விசேஷமின்றி ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் ஆகாரமாகவல்லவோ இருக்கிறது. ஜ்ஞானைகாகாரதயா என்கிற இடத்தில் ஏகசப்தத்தால் ஸங்கோசம் விகாஸம் துக்கரூபத்வம் முதலியது விலக்கித்தள்ளப்பட்டது. 'தேவாதி பேதப்ரத்யநீகஸ்வரூபோபி' என்று. ஏகரூபமாக இருப்பதால் பேதத்திற்கு ப்ரத்யநீகமாக இருத்தல். 'நிஜகர்ம'முதலியபதத்தை வ்யாக்கியானம் செய்கிறூர்—தேவாதி என்று. பேதசப்தத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறூர்—விவித என்று. புத்தி சப்தத்தால் சித்த சப்தார்த்தம் சொல்லப்பட்டது. புத்தியின் பேதமும் ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்படா நின்ற தேவன் மனுஷ்யன் முதலியவர்களின் ஆகாரரூபமான விஷயபேதத்தால். பஹுதா-தேவத்வம்முதலிய பற்பல ப்ரகாரங்களுடன்கூடி இருப்பதாக ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறதென்று அர்த்தம். பஹுதா சப்தத்தால் ஏக சப்தத்திற்கு ஆகாரைக்யத்தில் கருத்து நன்குவெளியிடப்பட்டது. பலித்த அர்த்தத்தைக் கூறுகிறூர்—நாத்மஸ்வரூப ப்ரயுக்தம் என்று. ஔபாதிகமென்று அர்த்தம். உபாதியானது நீங்கிய ஸமயத்தில் ஸ்வரூபம எவ்விதமாயுள்ளதென்று அபேக்ஷை வரின்அடுத்த ச்லோகத்தை வ்யாக்கியானம் செய்கிறூர்-ஆத்மா என்று. விசுத்த பதத்தை வ்யாக்கியானம் பண்ணுகிறூர்—கர்மரஹிதம் என்று. விமல பதத்தை வ்யாக்கியானம் பண்ணுகிறூர்—தத ஏவ என்று. விமலபத வ்யாக்கியானமென்பதை ஸ்பஷ்டமாகச் செய்வதற்காக மலரூப சப்தம்-மலரூபமான ப்ரக்ருதியின் ஸம்பந்தமில்லாததென்பதனுல்''ஸர்வகர்மக்ஷயே ஜ்ஞாநமபாஸ்த தோஷம்'' என்பதின் அர்த்தம் அறிவிக்கப்பட்டது. கர்மக்ஷயத்தைச் சொல்லுகிற பதத்திற்கு அடுத்ததாக இருக்கிற பதமானது சரீரஸம்பந்தமில்லாததென்கிற அர்த்தத்தை உணர்த்துவதில் முக்கியமான நோக்கமுள்ளதென்று வ்யாக்கியானம் செய்யப்பட்டிருப்பதால். அப்படியே ச்ருதி இருக்கிறது 'அச்வ இவ ரோமாணி விதூய பாபம்சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய தூத்வா சரீரம க்ருதம் க்ருதாத்மா ப்ரஹ்மலோகமபி ஸம்பவாமி'' என்று. இந்த ச்ருதியின் பொருள், 'குதிரை தன் தேஹத்திலுள்ள மயிர்களை உதறுவதுபோல், பாபத்தை உதறி ராகுவின் முகத்திலிருந்து சந்திரன்போல் பாபத்தினிடத்திலிருந்து விடுபட்டு பாஞ்சபௌதி

கமாகவும் கர்மபலபோகார்த்தமாகவுமிருக்கிற சரீரத்தை விலக்கித்தள்ளிவிட்டு க்ருதார்த்தனாக இருக்கிற நான் சாச்வதமான ப்ரஹ்மலோகத்தை அடைந்து அந்த ப்ரஹ்மலோக நித்யவாஸ சுகத்தை அனுபவிக்கக்கடவேன்." இந்த இடத்தில் பாபம்விதூய என்று சொல்லிவிட்டு தூத்வா சரீரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலேயிருக்கிற பதங்களை வ்யாக்கியானிக்கிறார்—ததஸ்ச என்று, அதனாலேதான் என்று ஆத்தம். ச என்கிறசப்தமானது ஹேதுவின் நிரபேக்ஷமான ஸ்வபாவத்தை ஸூசிப்பிக்கிறது- விலக்கப்பட்ட ஸமஸ்தலோபம் முதலியதின் ஸம்பந்தமுள்ளதென்று பொருள். ஏகம் என்கிற பதத்தை வ்யாக்கியானம் செய்கிறார்— உபசயாபசயாநர்ஹதயைகம் என்று. உபசயாபசயௌ வ்ருத்திக்ஷயங்கள். அவைகளுக்குத்தகுதியுள்ளதாக இருத்தல் அவயவங்களுடன்கூடி இருத்தல்' அவயவங்களுடன் சேர்ந்திராமலிருத்தலாலேயே ஏகசப்தத்தால் சொல்லத்தக்க தன்மை, நிரவயவத்வம்-ஏகத்வமென்று அர்த்தம். தத ஏவ ஸதைகரூபம் என்று. அவயவங்களில்லாமையினாலே அவயவங்களிருந்தால் ஸம்பவிக்கக்கூடிய வ்ருத்திக்ஷயங்களில்லாததென்று அர்த்தம். ஸாமாநாதிகரண்யத்தை வ்யாக்கியானம் செய்கிறார்— தச்ச என்று யதம்பு வைஷ்ணவ: காய: - அசேஷமூர்த்தி:, என்று சொல்லப்பட்டிருப்பதனால் இதே அர்த்தம். 'ந யதோந்யதஸ்தி' என்பதை வ்யாக்கியானிக்கிறார்—அதந் என்று. யத: - யாதொரு வாஸுதேவனைக்காட்டிலும். அந்யத்-தன்னிடம் பர்யவஸானமுள்ள வஸ்துவானது இல்லையென்று' அர்த்தம். அன்றிக்கே வாஸுதேவாத் என்கிற பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு யோஜனை. எக்காரணத்தால் வாஸுதேவனைக்காட்டிலும் வேறு வஸ்துவில்லையோ அக்காரணத்தினாலென்று அர்த்தம். இந்த யோஜனையில் 'தத்' என்கிற சப்தமானது ப்ரஸித்தார்த்தத்தை பராமர்சிக்கிறது. இதைக்காட்டிலும் முந்தின யோஜனையானது மிகவும் சிறப்பு வாய்ந்தது. தத் என்கிற சப்தத்தால் எடுக்கப்பட்டிருக்கிற வாக்யமானது யத் என்கிற சப்தத்தால் துவக்கப்பட்டிருக்கிற வாக்கியத்திற்கு ப்ரதிநிர்தேசரூபமாக இருக்கிறதென்கிற ஸ்வாரஸ்யத்தாலும் பஞ்சமீவிபக்தியை ஈற்றில் கொண்டிருக்கிற பதத்தின் அத்யாஹாரத்தை அபேக்ஷியாமலிருப்பதாலும். 'ஜ்ஞானஸ்வரூப: 'யதாது' என்கிற இரண்டு ச்லோகங்களும் சிதசித் ஸாதாரணங்கள். வஸ்த்வஸ்தி என்கிற சப்தாநுபூர்வியை முதலில் கொண்டிருக்கிற இரண்டரை ச்லோகங்கள் அசித்ஸாதாரணங்கள். விஜ்ஞானம் என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்டிருக்கிற ஒன்றரைச்லோகம் சிதஸாதாரணமென்று பாகுபாடு அறியத்தக்கது. அன்யனுடையமதம் சொல்லப்படவில்லை, தத்வமே உரைக்கப்பட்டதென்கிற அபிப்ராயத்தால் ஸத்பாவ என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்ட ச்லோகத்தின் முற்பாதி உரைக்கப்பட்டது. அதில் யதாசப்தத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—சிதம்ச: என்று. யதா - எந்த ப்ரகாரத்தால் பரிணாமத்துடன்கூடி இருத்தல் பரிணாமமில்லாதிருத்தல் என்கிற எந்த ப்ரகாரத்தால். ஜ்ஞானத்தால் பாதிக்கத்தக்கதாக இருத்தல் பாதிக்கத்தகாததாக இருத்தல் என்கிற ப்ரகாரத்தாலல்லவென்று அர்த்தம். ஏவம்ரூப என்று. சரீரசரீரிபாவரூபமான எந்த ப்ரகாரத்தால் பகவதாத்மகத்வமோ ஸ்வரூபைக்யத்தாலல்ல வென்று அர்த்தம். ச்லோகத்தில் ஏவம் சப்தமானது யதா சப்தத்திற்குப்ரதியோகி-ஸத்யம் ஜ்ஞானம் அஸத்யம் அந்யச்ச யதாவஸ்திதம் 'ஏவம் ஸத்பாவ; உக்த: என்று அன்வயமானது அபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. ஆதலால் ஸத்யம் அஸத்யம் என்கிற சப்தங்களால் சொல்லத்தக்க தன்மைக்கு நிர்வாஹகங்களான பரிணாமித்வா பரிணாமித்வங்களும் பகவதாத்மகத்வமும் யதா சப்தத்தால் சொல்லக்கருதப்பட்டதாக இருக்கிறது. வேறு விஷயம் தொடங்கப்பட்டது, வேறுவிஷயம் முடிவுபெறும்படி செய்யப்பட்டதாக ஆகிறது.

அஸ்திநாஸ்தி சப்தத்தால் தொடங்கிஸத்யா ஸத்ய சப்தத்தால் முடிக்கப்பட்டிருப்பதாலென்றுகேழ்க்கப்பட்டால் சொல்லுகிறுர்—அத்ர என்று. தொடக்கத்திலும் முடிவிலும் வேறுசப்தங்களால் நிர்தேசத்திற்கு இது அபிப்ராயம். மற்ற சப்தங்களும் ஓரிடத்தில் இவ்விதமாக கேழ்க்கப்பட்டிருந்தால் அவைகளுக்கும் இதேப்ரவ்ருத்தி நிமித்தமென்று ச்லோகத்தின் பின்பாதிக்குபொருள் கூறுகிறுர்-ஏதத் என்று. ப்ரத்யஸ்தமிதபேதம், அகோசரம் வசஸாம், என்கிறஇந்த இரண்டு வசனங்களுடையவும் அர்த்தத்தை அபிப்ராயப்பட்டு கூறுகிறுர்-'ஜ்ஞானைகாகாரதயா ஸமமசப்தகோசரஸ்வரூபபேதம் என்கிறவாக்யத்திலிருக்கிற ஏவகாரத்தால்விரோதம் ஸூசிப்பிக்கப்பட்டது. புவநாச்ரிதத்வத்திற்குகடகமானபதத்தைச் சொல்லுகிறுர்-அசி நிமி ச்ரம் என்று. புவநாச்ரிதம் அண்டத்திற்குள்ளடங்கினது. போகஸ்தானத்தை அடைந்திருக்கிறதென்று அர்த்தம். ஸம்வ்யவஹாரசப்தத்தை வ்யாக்யானம் பண்ணுகிறுர்—ஸம்யக்வ்யவஹாரார்ஹபேதம் என்று. ஸம்யக் சப்தமானது ஸ்பஷ்டதையை முக்கியமாகச் சொல்லுகிறது. அந்த கர்மா எதுவென்று ஆகாங்க்ஷைவரின் மேல்ச்லோகம் அதின் விவரணமென்பதைச் சொல்லுகிறுர்—த் தேவவிவ்ருணோதி என்று. ஸ்வர்க்கமயஸ்காம:-ஸ்வர்க்க விஷயமான இச்சைஎன்று அர்த்தம். பலமானது இனிமேல் சொல்லப்படப்போவதாக இருப்பதால் தேவதைக்கும் பலத்திற்கும் யஜிக்கத்தக்கதாக இருப்பதாலும் ஸாதிக்கத்தக்கதாக இருப்பதாலும் கர்மாவில் அந்தர்ப்பாவமேற்படுகிறது.. இத்யாதி சப்தத்தால் தானம் ஹோமம் முதலியதும் பாபமும் சொல்லப்பட்டதாக ஆகிறது. பூ: முதலிய சப்தத்தால் பாபத்தின்பலமும் சொல்லப்பட்டதாக ஆகிறது. பசு முதலிய உபகரணங்களுடன் கூடின யஜ்ஞம் ஒரு கர்ம- இப்படிப்பட்ட யஜ்ஞாத்மகமாகவும் தானஹோமாத்யாத்மகமாகவு மிருக்கிற கர்மாவானது அதில் ஹேது. ஆச்ரிதமார்க்க த்ருஷ்டம். அவரவர்களால் ஆச்ரயிக்கப்பட்டிருக்கிற மார்க்கங்களுடன் கூடியவைகள் வர்ணாச்ரமங்கள். அவைகளில் காணப்பட்டிருக்கிறதென்று அர்த்தம்.

---

[illegible]

[illegible]

**ஸ்ரீபாஷ்யம்—**

உலகத்தின் வாஸ்தவ ஸ்வரூப ஜ்ஞாநத்திற்கு ப்ரயோஜனம் மோக்ஷோபாயத்தில் யத்னம்என்று சொல்லுகிறார்—"யச்சைதத்" என்று. இந்த இடத்தில் விசேஷங்களனைத்தாலும் விடுபட்டிருக்கிற பரப்ரஹ்மமென்கிற விஷயத்திலாவது அந்த பரப்ரஹ்மத்தை ஆச்ரயித்திருக்கிற ஸத்தென்றாவது அஸத்தென்றாவது சொல்வதற்கு ஸாத்தியப்படாத அஜ்ஞாநவிஷயத்திலாவது ஜகத்தானது அந்த அஜ்ஞானத்தால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறதென்கிறவிஷயத்திலாவது அநுகுணமான ஒருபதமும் காணப்படவில்லை. அஸ்தி நாஸ்தி சப்தங்களால் சொல்லப்படத்தக்கதான சேதநா சேதநாத்மகமான உலகமனைத்தும் தன்னைவிட சிறப்புற்றவஸ்துவில்லாததும் உத்க்ருஷ்டர்களான ப்ரஹ்ம ருத்ராதிகளுக்குங்கூடநியந்தாவாகவுமிருக்கிற பரப்ரஹ்மஸ்வரூபியான விஷ்ணுவுக்கு சரீரமாக இருப்பதால் அந்த ப்ரஹ்மாத்மகமாக இருக்கிறது.

ஜ்ஞாநத்தையே தன்னுருவாகக்கொண்டிருக்கிற ஆத்மாவுக்கு தேவன் மனுஷயன் முதலிய பற்பலவிதமான ஆகாரங்களின் அநுபவத்திலும் அசித்பரிணமத்திலும் ஹேதுவானது வஸ்துயாதாத்ம்ய ஜ்ஞாநவிரோதியான க்ஷேத்ரஜ்ஞர்களுடைய கர்மாவே என்று ப்ரதிபாதித்திருப்பதாலும் அஸ்திநாஸ்தி ஸத்யம் அஸத்யம் என்கிற சப்தங்களுக்கும் ஸத்தென்றுவரு அஸத்தென்றுவது சொல்லமுடியாததான வஸ்துவைச் சொல்வதில் ஸாமர்த்தியமில்லாமையாலும், நாஸ்தி அஸத்ய என்கிற இரண்டு சப்தங்களும் அஸ்தி ஸத்ய என்கிற சப்தங்களுக்கு விரோதிகள். அதனால் அவ்விரண்டு சப்தங்களால் அஸத்த்வமல்லவோ அறியப்படுகிறது, அநிர்வசநீயத்வமறியப்படுகிறதில்லை. இந்த இடத்தில் அசித் வஸ்துவினிடத்தில் நாஸ்தி அஸத்ய என்கிற சப்தங்கள் ப்ரயோகிக்கப்பட்டிருக்கின்றன. துச்சதை, மித்த்யாத்வரூபமான அர்த்தத்தைஉணர்த்துவதில் கருத்துள்ளவைகளாக ப்ரயோகிக்கப்பட்டிருக்கவில்லை, பின்னையோ விநாசித்வரூபமான அர்த்தத்தை உணர்த்துவதில்இவைகள் ப்ரதானமான நோக்கமுள்ளவைகள். வஸ்த்வஸ்திகிம் மஹீகடத்வம் என்கிற இடத்தில் விநாசித்வமேயல்லவோ உபபாதிக்கப்பட்டிருக்கிறது. ப்ரமாணமில்லாமலிருத்தலாவது ஜ்ஞாநத்தால் பாதிக்கத்தக்கதாக இருத்தலாவது உபபாதிக்கப்பட்டிருக்கவில்லை, ஒரு ஆகாரத்தோடு ஒருகாலத்தில் அநுபவிக்கப்பட்டிருக்கிற வஸ்துவுக்கு மற்றொருகாலத்தில் பரிணமவிசேஷத்தால்வேறுவிதமாக உபலப்தி வருவதால் நாஸ்தித்வம் உபபாதிக்கப்பட்டிருக்கிறது. துச்சத்வமாவது ப்ரமாணஸம்பந்தத்திற்குத் தகுதியற்றதாக இருத்தல். பாதமுங்கூட எந்தவஸ்துவானது எந்தஸம்பந்தம்பெற்றிருப்பதனால் அஸ்தி என்று அறியப்பட்டிருக்கிறதோ அதே வஸ்துவானது அந்த தேசம் காலம் முதலியதுடன் ஸம்பந்தம் பெற்றதாக இல்லை என்கிற உபலப்தியே ஒழிய ஒரு காலத்தில் அநுபவிக்கப்பட்டிருக்கிற வஸ்துவுக்கு மற்றொரு காலத்தில் பரிணமம் முதலியதால் நாஸ்தி என்கிற உபலப்தியல்ல. காலபேதத்தால் விரோதமில்லாமையால். அதனால் மித்யாத்வமில்லை. இது சொல்லப்பட்டதாக ஆகிறது. ஜ்ஞாநஸ்வரூபமான ஆத்மவஸ்துவானது ஆதிமத்யாந்தமில்லாததாக எப்பொழுதும் ஒரேஸ்வரூபத்துடன் கூடிஇருப்பதனால் தன் ஸ்வரூபத்தாலேயே எப்பொழுதும் அஸ்தி என்கிற சப்தத்தால் சொல்லத்தக்கதாக இருக்கிறது அசேதநமோ வென்றால் க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லப்படுகிற ஜீவாத்மாவுக்கு போக்யமாக இருப்பதுடன் அந்த போக்தாவான ஜீவனுடைய கர்மாக்களுக்கு அநுகுணமான பரிணமவிநாசங்களோடு சேர்ந்திருப்பதனால் எப்பொழுதும் நாஸ்த்யர்த்தகர்ப்பமாக இருப்பதுபற்றி நாஸ்தி சப்தத்தாலும் அஸத்ய சப்தத்தாலும் சொல்லத்தக்கதாக இருக்கிறது. அவ்விதமே சொல்லப்பட்டிருக்கிறது. "யத்துகாலாந்தரேணாபி நாந்ய ஸம்ஜ்ஞாமுபைதிவை. பரிணமாதி ஸம்பூதாம் தத்வஸ்து ந்ருப தச்ச கிம் அநாசிபரமார்த்தஞ்ச ப்ராஜ்ஞை ரப்யுபகம்யதே-- தத்து நாஸ்தி ந ஸந்தேஹோ நாசித்ரவ்யோப பாதிதம்" என்று.

ச்ருதப்ரகாசிகை—

அடுத்த ச்லோகத்தின் பொருளைக்கூறுகிறார்—ஜகத் என்று. கர்மாவுக்கு வசப்பட்டவன் எங்கும் செல்லுகிறானன்றோ. அன்றிக்கே கர்மவச்யனன்றோ எல்லாவிடத்திலும் செல்லுகிறான். ஆதலால் இவ்வாறு செய்யக்கடவானென்று அர்த்தம் விலங்கடிக்கப் பட்டவனே யன்றோ எங்கும் சிரைச்சாலையில் ஸஞ்சரிக்கிறான். ஆதலால் அதினின்று விடுவிப்பதற்காக முயற்சிக்கக்கடவானென்று கருத்து. த்ருவம்-சலனமில்லாமலிருக்கிறது. ஸதைகரூபம்-ஸ்வரூபத்தாலும் ரூபத்தாலும் குணத்தாலும் ஏகரூபமாயிருக்கிறதென்று அர்த்தம். அன்றிக்கே ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் ரூபத்தாலும் ஏக ரூபம் என்று அர்த்தம். 'தஸ்மாத்தைதேவம்' என்று முந்தினதோடு அன்வயம்.

இவ்வண்ணம் ச்லோகங்களுக்கு தன்னால் கூறப்பட்டுள்ள அர்த்தங்களுக்கு அனுகுணமாக இருத்தலை உபபாதித்து அன்யனால் கூறப்பட்டுள்ள அர்த்தங்களுக்கு அனுகுணமாக இல்லாமலிருப்பதை உபபாதிக்கிறார்— அத்ர இது முதலியதால். ஒரு பதமும் காணப்படுகிறதில்லை என்று சொல்லத்தக்கதல்ல. நாஸ்தி முதலிய சப்தங்களும் ஸாமாநாதிகரண்யமும் அஜ்ஞாநத்தை உணர்த்துகிற பதங்களின் ஸமூஹமும் அனுகுணமென்று சொல்லப்படுமேயானால் அந்த விஷயத்தில் மறுமொழி உரைக்கிறார்-அஸ்தி என்று. பரமஸ்யஇத்யாதி-பரம பரேச முதலிய சப்தங்களுக்கெல்லாம் உன்னுடையபக்ஷத்தில் முக்யார்த்தங்களுக்கு விதிஇல்லை என்று கருத்து. வேறு ஹேதுவையும் சொல்லுகிறார்—அஸ்தி நாஸ்தி ஸத்யாஸத்ய என்று முதலிலிருக்கிற ச சப்தமானது து என்கிற சப்தத்தினுடைய அர்த்தமுள்ளது. தன்னால் சொல்லப்பட்டிருக்கிற யோஜனையில் அனுகுணமான சப்தத்திற்கு அன்யபக்ஷத்தில் அனுகுணமாக இல்லாமலிருத்தலென்கிற வைஷம்யமிருக்கிறதென்று கருத்து. அஸ்தி ஸத்ய என்கிற இரண்டு சப்தங்களும் த்ருஷ்டாந்தார்த்தங்கள். எவ்வாறு அஸ்திஸத்ய சப்தங்கள் ஸத்விலக்ஷண பரங்களன்றோ அவ்வாறே நாஸ்தி அஸத்ய சப்தங்களும் அஸத்விலக்ஷண பரங்களல்லவென்று அர்த்தம். நிர்வசனம் பண்ணத்தகாத வஸ்துவைச்சொல்வதில் எவ்வாறு அஸாமர்த்தியம் என்று கேட்கில் சொல்லுகிறான்—நாஸ்தி என்று. விரோதமானது அர்த்தத்தின் வழியாக ஏற்பட்டிருக்கிறது. அதனால் என்னவென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்—அதஶ்ச என்று. அன்றிக்கே அநிர்வசநீயவஸ்த்வபிதாநாஸாமர்த்யாத் என்பதனால் வ்யுத்பத்தியின் இன்மை உரைக்கப்பட்டது. அந்யோந்யம் விருத்தங்களாக இருக்கிற அர்த்தங்களுடன் கூடிஇருத்தல் இங்கு வேறுஹேதுவாக உரைக்கப்பட்டது. ச, என்கிற சப்தம் ☨ ஸமுச்சயத்தில். அங்ஙனமிருந்தபோதிலும் ஸத்த்வமில்லாமையால் துச்சத்வமாவது மித்யாத்வமாவது சொல்லப்பட்டதாக ஆகிறதென்று கேழ்க்கப்படுமேயானால் அந்த விஷயத்தில் சொல்லுகிறார்—அத்ர என்று. அவ்விரண்டுகளும் எவ்வாறுவிநாசித்வத்தை முக்கியமாக உணர்த்துகின்றனவென்று வினவப்படுமேயாகில் மறுமொழி கூறுகிறார்— வஸ்து என்று, விநாசித்வமேயன்றோ மித்த்யாத்வ மென்கிற சங்கைவரின் விநாசித்வத்தின் ஸ்வரூபத்தை $ சோதிக்கிறார்—ஏகேந என்று. வேறு ஸமயங்களில் ஒரு ‡ ஆகாரத்துடன் அனு

---

☨ ஸமுச்சயம்—கூட்டுதல்.

$ சோதிக்கிறார்—நன்கு விசாரிக்கிறார்.

‡ ஆகாரம்—உருவம்.

பவிக்கப்பட்டிருக்கிற வஸ்துவுக்கு மற்றொரு ஸமயத்தில் வேறுவிதமான ஆகாரத்துடன் உபலப்திஉண்டாகட்டும். அதனால் எவ்வாறு விநாசித்வமானது துச்சத்வ மித்யாத்வங்களைக்காட்டிலும் வேறுபட்டதாக ஆகுமென்கிற சங்கைவா துச்சத்வம் முதலியதின் ஸ்வரூபத்தை சோதிக்கிறார்—**துச்சத்வம் ஹி** என்று. **பரிணமாதிநா** என்று. பரிணம சப்தமானது பரிணமஸாமான்யத்தையும் அந்த பரிணமத்தின் விசேஷத்தையும் உணர்த்துவதில் நோக்குள்ளது. எவ்வாறு † வாத சப்தமானது எல்லாக்கதைகளையும் பொதுவாகச் சொல்வதாக இருந்தபோதிலும் வீதராகனுடைய கதாமாத்ரத்தை உணர்த்துவதில் விசேஷ நோக்கமுள்ளதோ அப்படிப்போல. இவ்விடத்தில் இந்த பரிணமசப்தமானது விருத்தி அடைகிற அவஸ்தையைச் சொல்லுகிறது. பரிணமர்த்தி ஜன்மபி: என்று ப்ரயோகமிருப்பதால். 'யத்து காலாந்தரேணபி நாந்யஸம்ஜ்ஞாமுபைதி வை' பரிணமாதி ஸம்பூதாம்'என்று சொல்லப்படப்போகிற வசனத்தில் கண்வைத்து இவ்வண்ணம் கூறப்பட்டது. பரிணமசப்தமானது வேறுபாட்டை மாத்திரம் உணர்த்துகிறதென்று சொல்லும் பக்ஷத்தில் ஆதிசப்தமானது வேறுப்ரதேசத்தை நாடுதலென்கிற அர்த்தத்தைக் குறிக்கிறது. வேறு ஒரு ஸமயத்தில் அனுபவிக்கப்பட்டிருக்கிற வஸ்துவுக்கு வேறு ஒரு ஸமயத்தில் இல்லை என்கிற ஜ்ஞானமானது என் பாதமாகாதென்று கேட்கப்படுமேயாகில் அதற்கு மறுமொழி உரைக்கிறார்- **காலபேதே ந** என்று. விரோதமிருந்தாலன்றோ பாதம்,பாதிக்கப்படத்தக்கதன்மை யல்லவோ மித்யாத்வம், என்கிற அபிப்ராயத்தால் சொல்லுகிறார்—அத: என்று. பரிணமித்வம் அபரிணமித்வமென்கிற இரண்டு அர்த்தங்களிலும் நாஸ்தி அஸ்திமுதலிய சப்தங்கள் * பாரிபாஷிகங்களல்லவன்றோ. ஆதலால் எவ்வண்ணம் அவ்வர்த்தங்களை உணர்த்தும்விதம்? பரிணமங்களுக்கு ஆச்ரயமாக இருந்தபோதிலுங்கூட வஸ்து நித்யமாக இருப்பதால் நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதாக இருத்தலுங்கூட பொருந்தாதென்று வினவப்படுமேயாகில் மறுமொழி அளிக்கிறார்—**ஏதத்துக்தம் பவதி** என்று. எப்பொழுதுமிருக்கிற ஒரு ரூபத்துடன்கூடி இருத்தல் அஸ்தி சப்தத்தின் ப்ரவ்ருத்திநிமித்தம். விநாசத்தை உள்ளடக்கிக்கொண்டிருத்தல் நாஸ்தி சப்த ப்ரவ்ருத்திநிமித்தம் என்ற பொருள். குடமாக இருக்கிற நிலைமையில் ‡ பிண்டம் இல்லை. § கபாலங்களாக இருக்கும் நிலைமையில் குடம் இல்லை. பொடியாக இருக்கும் நிலைமையில் கபாலங்களின் ஸத்தை இல்லை என்பதனால் எப்பொழுதும் நாசத்தை உள்ளடக்கிக்கொண்டிருடிக்கிறது. முந்தின அவஸ்தையுடன்கூடிய வஸ்துவுக்கு மேல்வருகிற நிலைமையை யடைதலல்லவோ விநாசம். அந்த அவஸ்தையுடன் கூடிய வஸ்துவுக்கு அந்த உத்தராவஸ்தாப்ராப்தியே உத்பத்தி. ஆகையால் நாஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதன்மை அநித்வஸ்துவுக்கு. நித்வஸ்துவுக்கோவென்றால் வேறொரு அவஸ்தையை அடைவதும் அடைந்திருந்த அவஸ்தையை இழப்பதுமில்லாமையால் ஒரே ரூபமாக இருப்பதுபற்றி விநாசகர்ப்பத்வமில்லை. ஆதலால் அது அஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கதே. எது எப்பொழுதுமிருக்கிறதோ அது அஸ்தி சப்தத்தால் சொல்லத்தக்கது. 'ஸித்தே சப்தார்த்த ஸம்பந்தே' என்கிற இடத்தில் ஸித்த சப்தம்போல் இந்த சப்தம் நிச்சயத்தை உள்ளடக்கிக்கொண்டிருக்கிறது. அந்த இடத்தில் **ஸித்தே ஏவ** என்று வியாக்கியானம்செய்யப்பட்டிருக்கிறது.

---

† வாதம்—தத்வத்தை அறிந்துகொள்வதில்நோக்கத்துடன் கூடினவாதியின்கதை. * பாரிபாஷிகம்—அவயவார்த்தங்களின்றி ஸங்கேதத்தால் ஒரு அர்த்தத்தை உணர்த்துகிற சப்தம். ‡ பிண்டம்—மண்ணுருண்டை, § கபாலம்—மண்ஓடு.

‡ அப்பக்ஷ:, * வாயுபக்ஷ: இது முதலியபதங்களை த்ருஷ்டாந்தமாகக் காட்டி. அப்படியே இவ்விடத்திலுமென்று பொருள். அஸ்தி நாஸ்தி என்கிற சப்தங்களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் இதே என்கிற இந்த அர்த்தத்தில் ப்ரமாணத்தைக் கூறுகிறார்—யதோக்தம் என்று.

𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌅𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌯𑍋𑌗𑌿𑌨𑌿 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌿 𑌕𑍇𑌵𑌲𑌾𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌬𑍋𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌆𑌤𑍍𑌮𑌨 𑌏𑌵 𑌕𑍇𑌵𑌲𑌾𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌬𑍋𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌪𑍌𑌰𑌾𑌣𑌸𑍍𑌯 𑌦𑍈𑌤𑍇𑌯𑌸𑍍𑌯— "𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌰𑌂 𑌯𑌥𑌾 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑍋𑌕𑍍𑌯𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌤𑌃। 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌤𑍁 𑌹𑍇 𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌃 𑌯𑌥𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌤𑌃॥" 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌭𑌾𑌷𑌣𑌾𑌚𑍍𑌚। "𑌜𑍍𑌯𑍋𑌤𑍀𑌂𑌷𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌶𑍍𑌚 𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌤𑍍। 𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍋𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌤𑌿𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌶𑌬𑍍𑌦𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌸𑌙𑍍𑌕𑍋𑌚𑌵𑌿𑌕𑌾𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌾𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌅𑌚𑌿𑌤𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌾𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌤𑍇॥

𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂—𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍇𑌵𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃—𑌇𑌤𑌿। 𑌤𑌦𑌸𑌤𑍍, "𑌵𑍇𑌦𑌾𑌹𑌮𑍇𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍। 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍। 𑌤𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌮𑍃𑌤 𑌇𑌹 𑌭𑌵𑌤𑌿। 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌽𑌯𑌨𑌾𑌯', "𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨𑌿𑌮𑍇𑌷𑌾 𑌜𑌜𑍍𑌞𑌿𑌰𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌦𑌧𑌿" "𑌨 𑌤𑌸𑍍𑌯𑍇𑌶𑍇 𑌕𑌶𑍍𑌚𑌨, 𑌤𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑌶𑌃" "𑌯 𑌏𑌨𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌨𑍇𑌕𑌵𑌾𑌕𑍍𑌯𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍॥

ஸ்ரீபாஷ்யம்—

தேசகாலங்களையும் கர்மவிசேஷங்களையும் அபேக்ஷித்து இருப்புடையதென்றும் இருப்புடையதல்லவென்றும் வ்யவஹரிக்கக் கூடிய வஸ்துவினிடம் தனித்து அஸ்தி என்கிற புத்தியினுல் அறியத்தக்கதன்மையானது அபரமார்த்தமென்று உரைக்கப்பட்டது. ஆத்மா ஒன்றுக்கே

‡ அப்பக்ஷ:—ஜலத்தையே சாப்பிடுபவன்.
* வாயுபக்ஷ:—காற்றையே ஆஹாரமாக உட்கொள்பவன்.

தணித்து அஸ்தி என்கிற புத்தியினால் அறியத்தக்க தன்மை இருப்பது பற்றி, அந்த ஆத்மா பரமார்த்தவஸ்துவென்று உரைக்கப்பட்டது. விஷ்ணுவாதாரம் யதாசைதத் த்ரைலோக்யம் ஸமவஸ்திதம். பரமார்த்தஶ்ச மே ப்ரோக்தோயதாஜ்ஞாநம் ப்ரதாநத:'' [இந்த ச்லோகத்துக்குப்பொருள். சிதசிதாத்மகங்களான இந்த மூவுலகங்களும் எவ்விதம் விஷ்ணுவை அந்தராத்மாவாகக் கொண்டு நிலைபெற்றிருக்கின்றனவோ அவ்விதம் சொல்லப் பட்டது. எப்படி சிதம்சமானது ஸ்வதஸ்ஸித்தமான ஜ்ஞாநத்தையே தன்னுருவாகக்கொண்டிருப்பது பற்றி அழிவற்றதாக இருப்பதால் பரமார்த்தமோ, அப்படியே தலமைபற்றி எனக்குக்கூறப்பட்டது.] என்று ச்ரோதாவான மைத்ரேயர் ஸ்ரீபராசரமஹரிஷியினுடைய உபதேசத்தை அநுஸரித்துச்சொல்லியிருப்பதாலும், 'ஜ்யோதீம்ஷி விஷ்ணு:' இது முதலிய ஸாமாநாதிகரண்ய நிர்தேசத்திற்குக் காரணம் ஈஶ்வரனுக்கும் ஜகத்துக்கும் இருக்கிற சரீராத்மபாவஸம்பந்தமே. சித்வஸ்து அசித்வஸ்து இவ்விரண்டினிடம் முறையே அஸ்திநாஸ்தி என்கிற சப்தங்களின் ப்ரயோகத்திற்குக்காரணம் யாதெனில், ஜ்ஞாநமென்பது ஆத்மாவுக்கு கர்ம ஸம்பந்தத்தாலுண்டாகாமல் ஸ்வாபாவிக ரூபமாக இருப்பதால் அதனுடைய ப்ராதான்யமும் அசித்வஸ்துவுக்கு அது கர்ம நிமித்தமான பரிணாமத்துடன்கூடி இருப்பதால் அப்ராதான்யமுமென்று அறியப்படுகிறது. விசேஷங்களால் விடுபட்டிருக்கிற ப்ரஹ்மவிஜ்ஞாநத்தினாலேயே ச்ருதிகள் அவித்யையின் நிவ்ருத்தியைச் சொல்லுகின்றனவென்று எது உரைக்கப்பட்டதோ அது ஸரியல்ல ''வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்யவர்ணம்தமஸ: பரஸ்தாத், தமேவம் வித்வா நம்ருத இஹபவதி, நாந்ய:பந்தா வித்யதேயநாய, ஸர்வேநிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி, ந தஸ்யேசே கஶ்சந, தஸ்யநாம மஹத்யச:, ய ஏவம் விதுரம்ருதாஸ்தே பவந்தி'' இது முதலிய அநேக வாக்கியங்களின் விரோதத்தால்.

ச்ருதப்ரகாசிகை—

அஸத், அஸத்ய, ஸத்; ஸத்ய முதலியசப்தங்களுக்கு மித்யாத்வத்திலும் அமித்யாத்வத்திலும் ப்ரஸித்தி ஸ்வாரஸ்யமிருக்கிறதென்கிற சங்கைவரின், மித்யார்த்த

ச்ருதியின்பொருள்—'வேதாஹம்''சூர்யன்போல் ஜ்வலிப்பவனும் ப்ரக்ருதி மண்டலத்துக்கு அப்புறத்திலிருக்கிற த்ரிபாத்விபூதி ஸ்தானத்திலிருப்பவனுமான இந்தமஹாபுருஷனை நான் அறிகிறேன்.''தமேவம்''இவ்வண்ணம் அந்த பரம புருஷனை அறிபவன் இங்கெயே மூக்தனுக்கு துல்யனாக ஆகிறான். ''நாந்ய:'' மோக்ஷத்தை அடைவதற்கு (அவனைவிட) வேறு வழிகிடையாது. ''ஸர்வே'' மின்னல் வர்ணமுள்ள புருஷனிடத்தினின்று நொடி க்ஷணம் கலை காஷ்டை முதலிய எல்லாகால கலைகளும் உண்டாயின. ''நதஸ்ய'' அவனுக்கு ஒருவனும் தலைவனல்ல. ''தஸ்ய' அவனுக்கல்லவோ பெரும் கீர்த்தி. ''ய ஏவம்'' எவர்கள் இவ்வண்ணம் அறிகிறார்களோ அவர்கள் முக்தர்களாக ஆகிறார்கள்.

போதந ஸாமர்த்தியமுள்ளடங்கி இருக்கிறதென்பதையும் காண்பிக்கிறார்--தேச என்று. **கர்ம விசேஷாபேக்ஷயா** என்று. கார்க்குதல், ஆநந்திக்கச்செய்தல்,முதலிய செய்கைகளின் ஸத்பாவாஸத்பாவங்களால் ராஜத்வம் பித்ருத்வம் முதலிய தர்மரூபத்தால், அஸ்தித்வமும் நாஸ்தித்வமும் கர்மாவை அபேக்ஷித்து வருகிறது. உபாதியினுல் அதாவது ஒரு காரணத்தால் ஏற்படுகிற அஸ்தித்வ தர்மஸம்பந்தம் பெற்ற வஸ்துவுக்கு ஸ்வாபாவிகமான அஸ்தித்வ ஸம்பந்தமுள்ளதென்கிற புத்திக்கு விஷயமாக இருத்தல் பரமார்த்தமல்லவென்று பொருள். அபாரமார்த்ய கர்ப்பமான அஸ்த்யர்த்தத்தோடு சேர்ந்திருப்பதால் அசித்துக்கு நாஸ்தி அஸத்யம் முதலிய சப்தங்களால் சொல்லத்தக்க தன்மை என்று உரைக்கப்பட்டது. ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமான அஸ்தித்வஸம்பந்தத்தினுல் அந்த ஆத்மாவினிடம் அந்த அஸ்தித்வபுத்திவிஷயத்வம் பரமார்த்தமென்று கூறுகிறார்—**ஆத்மந ஏவ** என்று. தசச்லோகி க்ரந்தத்தில் பதம் பதமாக கூறப்பட்டுள்ள அர்த்தத்தை கேழ்ப்பவனுடைய ❋ அனுவாத ப்ரகாரத்தால் திடப்படுத்துகிறார்—**சீரோதுஸ்ச** என்று. ப்ரதாநத: -'த்வ்யேகயோ:' என்கிற வ்யாகரண ஸூத்ரத்தில் போல் பாவப்ரதானமான நிர்தேசம் - ப்ராதான்யேந என்று அர்த்தம். ப்ராதான்யம், உத்கர்ஷம், மேன்மை- அனுபாஷண ச்லோகத்தைச் சார்ந்த முன் பாதியினுல் பலித்த அர்த்தத்தைக்கூறுகிறார்—**ஜ்யோதீம்ஷி** என்று. அதொன்றினுலேயே தரிக்கத்தக்கத்ரவ்யமாக இருத்தலன்றோ சரீரலக்ஷணம். அதனுல்'விஷ்ணவாதாரம் என்பதனுல் ஆத்மசரீரபாவம் ஸித்தித்தது. அந்த ச்லோகத்தின் பிற்பாதியினுல் பலித்த பொருளைக்கூறுகிறார்—**சித்சித்** என்று. ஜ்ஞாநப்ராதான்யம் சப்தத்தால் நன்கு கூறப்பட்டிருக்கிறது. அதனுல் அசித்வஸ்துவுக்கு அப்ராதான்யம் அர்த்த ஸித்தமாதலால் சொல்லுகிறார்—**அசித்வஸ்து நப்ச** என்று. ப்ராதாந்யா ப்ரதாந்யே-மேன்மையும் தாழ்வும், அவ்விரண்டும் பரிணுமித்வா பரிணுமித்வ ஸ்வரூபங்கள்,அமித்யாத்வ மித்யாத்வ ஸ்வரூபங்களல்ல. ¶ தர்மியானது இருந்தாலன்றோ ப்ராதாந்யாப்ராதான்யங்கள். ப்ரதீதிமாத்ரத்தால் ஸித்திக்கிறதன்றோ மித்யை, ஆதலால் அதில் அப்ராதாந்ய சப்தம் ஸ்வரஸமல்லவென்று அபிப்ராயம். அப்படிக்கின்றி விசேஷங்களில்லாத ப்ரஹ்மாத்மைக்யஜ்ஞாநமானது நிவர்த்தகத்வபரமாக இருப்பதால் அன்யனுல் கூறப்பட்டுள்ள ச்ருதிகளுக்கு அந்த அர்த்தமில்லை என்பதைச் சொல்வதற்காக அன்யனுல் சொல்லப்பட்டிருப்பதை அனுவதிக்கிறார்—**யதுக்தம்** என்று. பரிஹரிக்கிறார்-**தத்ஸத்** என்று.

அந்த இடத்தில் ஜ்ஞாநத்திற்கு நிர்விசேஷ வஸ்துவிஷயத்வத்தையும் அதனுல் ஆத்மைக்யவிஷயத்வத்தையும் பரிஹரிக்கப்போகிறவராய்க்கொண்டு முதலில் நிர்விசேஷ வஸ்துவிஷயத்வத்தை விலக்குவதற்காக எடுக்கிறார்—**வேதாஹம்** என்று. இதனுல் விக்ரஹம் முதலியவைகளோடுகூடிய வஸ்துவிஷய ஜ்ஞாநமே உபாயம். வேறு வஸ்து உபாயமல்லவென்று சொல்லப்பட்டது. இதோடு ஸமானமான அர்த்தத்துடன் கூடி இருத்தலால் கூறுகிறார்— **ஸர்வே நிமேஷா:** என்று. அந்த இடத்திலோவென்றால் "அத்ப்யஸ்ஸம்பூதோ ஹிரண்யகர்ப்ப: இத்யஷ்டௌ" என்று ப்ரதீகோபாதாநம் செய்யப்பட்டிருக்கிறது. இதனுல் '**வித்யுத்**' என்கிற சப்தம் வ்யாக்கியானிக்கப்பட்டதாக ஆகிறது. வித்யுத: - மின்னல்போன்ற நிறமுள்ளவனை என்று அர்த்தம். "ஆதித்யவர்ணம்" என்பதோடு அர்த்தைக்யத்தால். "ந தஸ்யேசேகஸ்சந " என்பத

❋ அனுவாதம்—ஏற்கனவே சொல்லப்பட்டிருப்பதை மீண்டும் உரைத்தல்.
¶ தர்மி—அஸாதாரணதர்மத்தால் நிரூபிக்கத்தக்க வஸ்து.

ஞல் உபாயமாக இருக்கிற வேறு ஜ்ஞாநமில்லை. என்பது பலித்தது. அதிகமாக அறியத்தக்கவேறு வஸ்து இல்லாமையால் உரைக்கப்பட்டுள்ள ஆகாரத்துடன்கூடின புருஷனை அறிதலே உபாயமென்று காண்பிக்கிறார்—ய ஏநம் விது: என்று. இந்த வாக்யங்களையும் ஆதி சப்தத்தால் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிற மற்ற வாக்யங்களையும் எடுத்தது அநேக வாக்ய விரோதங்களைக் காட்டுவதற்காக.

---

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍍𑌯𑌪𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍇𑌵 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿; 𑌶𑍋𑌧𑌕𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌮𑍇𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌨𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌷𑍁 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌂 𑌨 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑍈𑌕𑍍𑌯𑌪𑌰𑌮𑍍, 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌪𑌦𑌯𑍋𑌃 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑌿𑌧𑌾𑌯𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌪𑌦𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂 𑌸𑌤𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌂 𑌜𑌗𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌾𑌮𑍃𑌶𑌤𑌿 — "𑌤𑌦𑍈𑌕𑍍𑌷𑌤, 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑌂 𑌤𑍍𑌵𑌂𑌪𑌦𑌞𑍍𑌚 𑌅𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌜𑍀𑌵𑌶𑌰𑍀𑌰𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌤𑌿, 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌦𑍍𑌵𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍈𑌕𑌵𑌸𑍍𑌤𑍁𑌪𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌦𑍍𑌵𑌯𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌭𑍇𑌦𑌾𑌸𑌮𑍍𑌭𑌵𑍇𑌨 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌮𑍇𑌵 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; 𑌉𑌭𑌯𑍋𑌃 𑌪𑌦𑌯𑍋𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌚 । "𑌸𑍋𑌽𑌯𑌂 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌃" 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨 𑌲𑌕𑍍𑌷𑌣𑌾, 𑌭𑍂𑌤𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌕𑌾𑌲𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑌯𑍈𑌕𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍍𑌯𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 । 𑌦𑍇𑌶𑌭𑍇𑌦𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 𑌕𑌾𑌲𑌭𑍇𑌦𑍇𑌨 𑌪𑌰𑌿𑌹𑍃𑌤𑌃 । "𑌤𑌦𑍈𑌕𑍍𑌷𑌤, 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍" 𑌇𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑍍𑌰𑌮𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 । 𑌏𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌞𑍍𑌚 𑌨 𑌘𑌟𑌤𑍇 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌨𑌿𑌖𑌿𑌲𑌦𑍋𑌷𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌾𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌾𑌶𑍍𑌰𑌯𑌤𑍍𑌵𑌞𑍍𑌚 𑌭𑌵𑌤𑌿 । 𑌬𑌾𑌧𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇 𑌚 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌪𑌦𑌯𑍋𑌰𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌚𑍇𑌤𑌿 𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌦𑍍𑌵𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍋𑌷𑌾𑌃 ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

ப்ரஹ்மமானது விசேஷங்களோடு கூடி இருத்தலாலேயே எல்லா வாக்கியங்களும் ஸவிசேஷஜ்ஞாநத்தாலேயே மோக்ஷத்தைச் சொல்லுகின்றன. சோதகவாக்கியங்களும் ப்ரஹ்மத்தை விசேஷங்களோடுகூடிய தென்றே ப்ரதிபாதிக்கின்றனவென்று சொல்லப்பட்டது. தத்வமஸி முதலிய வாக்கியங்

களில் ஸாமாநாதிகரண்யமானது நிர்விசேஷ வஸ்துக்களின் ஐக்யத்தைச் சொல்வதில் கருத்துள்ளதல்ல. தத் த்வம் என்கிற இரண்டுபதங்களும் விசேஷங்களுடன் கூடின ப்ரஹ்மத்தையே சொல்வதால். தத் என்கிற பதமானது எல்லா மறிந்ததும் ஸத்யஸங்கல்பத்துடன் கூடியதும் ஜகத்கா ரணமாகவுமிருக்கிற ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது. "ததைக்ஷத-பஹு ஸ்யாம்" இது முதலிய ச்ருதிவாக்கியங்களில் அந்த ப்ரஹ்மமே ப்ரஸ்தாவி க்கப்பட்டிருப்பதால். அந்த தத் பதத்தோடு ஸமாநாதிகரணமாக அதாவது அபேதாந்வய யோக்யமாக ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற த்வம் பதமும் அசித் தோடு சேர்ந்திருக்கிற ஜீவனை சரீரமாகக்கொண்டிருக்கிற ப்ரஹ்மத்தைப்ர திபாதிக்கிறது. ஸாமாநாதிகரண்யத்திற்கு இரண்டு ப்ரகாரங்களுடன் கூடி இருக்கிற ஒரு வஸ்துவை ப்ரதிபாதிப்பதில் தாத்பர்யமிருப்பதால். இரண்டு ப்ரகாரங்களையும் விட்டுவிட்டால் ப்ரவ்ருத்திநிமித்தபேத மில்லாமையால் ஸாமாநாதிகரண்யமே இழக்கப்பட்டதாக ஆகும். இரண்டு பதங்களுக்கும் லக்ஷணாவ்ருத்தி சொல்லவேண்டியதாக ஏற்படுகிறது. 'ஸோயம் தேவதத்த:' [இவன் தான் முன்புகண்ட அந்த தேவதத்தன்] என்கிற ப்ரத்யபிஜ்ஞாப்ர காசக வாக்கியத்திலுங்கூட லக்ஷணை இல்லை. ஒரு வஸ்துவானது இறந்தகா லத்தோடும் நிகழ்காலத்தோடும் ஸம்பந்தம் பெற்றிருப்பதுபற்றி ஐக்யப்ரதீதி க்கு விரோதமில்லாததால் - தேசபேத விரோதமானது காலபேதவிரோதத் தால் பரிஹரிக்கப்பட்டது 'ததைக்ஷத, பஹுஸ்யாம்' என்கிற தொடக்கத்தி ற்கு விரோதமும் ஒன்றை அறிந்ததனால் எல்லாம் அறியப்பட்டதாக ஆகி றது என்கிற ப்ரதிஜ்ஞையும் இசைகிறதில்லை. ஜ்ஞாநத்தையே தன் உருவ மாகக்கொண்டவனும் விலக்கித்தள்ளப்பட்ட ஸமஸ்ததோஷங்களுடன்கூடி யவனும் எல்லாவற்றையு மறிந்தவனும் எல்லா கல்யாணகுணஸ்வரூபனு மாக இருக்கிற பரமபுருஷனுக்கு அஜ்ஞாநமும் அஜ்ஞாநகார்யங்களாகவும் முடிவில்லாதவைகளாகவுமிருக்கிற அபுருஷார்த்தங்களுக்கு ஆச்ரயமாக இ ருப்பதும் ஸம்பவிக்கிறது. பாரார்த்த ஸாமாநாதிகரண்ய மொப்புக்கொள் ளப் பட்டால் தத்த்வம் என்கிற இரண்டு பதங்களுக்கும் அதிஷ்டான லக்ஷ ணையும் நிவ்ருத்திலக்ஷணையும் கல்பிக்கவேண்டியதாக இருப்பதால் அந்த லக்ஷணை முதலியவைகளே தோஷங்கள்.

---

ச்ருதப்ரகாசிகை—

அயய்னே! 'ஸதேவஸோம்ய, ஏகமேவ' இது முதலிய காரணவாக்கியங்களில் ப்ரஹ்மம் நிர்விசேஷமென்று அறியப்பட்டிருப்பதால் அந்த நிர்விசேஷப்ரஹ்மஜ்ஞா நமே நேராக மோக்ஷத்திற்கு உபாயமாக இருக்கிறது. ஆதலால் ஸகுணஜ்ஞாநத்திற்கு உபாயத்வமானது அந்த நிர்விசேஷ ப்ரஹ்மஜ்ஞாநத்தின் வாயிலாக ஆகலாம். அன் றிக்கே ஸகுணஜ்ஞாநத்திற்கு மோக்ஷோபாயத்தை ப்ரதிபாதிக்கிற வாக்கியத்திலுங்கூட ஸகுணத்வத்தில் தாத்பர்யம் கிடையாது வஸ்து மாத்ரமே காணப்படுகிறதென்று

வினவப்படுமேயானல், அந்த விஷயத்தில் சொல்லுகிருர்-ப்ரஹ்மண: என்று. ஸத்வித்யைமுதலிய வித்யாப்ரதிபாதகச்ருதி வாக்கியங்களிலுங்கூட ஸகுண விஷயத்வத்தை உபபாதநம் செய்திருப்பதால், ப்ரமாணஸித்தமாயும் வாஸ்தவமாகவுமிருக்கிற ப்ரஹ்ம ஸ்வரூபவிஷயஜ்ஞானமே மோக்ஷோபாயமாதலால், அவைகளும் ஸவிசேஷஜ்ஞாநத்வத்தை ப்ரதிபாதிப்பதிலேயே கருத்துள்ளவைகளென்று பொருள். அங்ஙனமாகில், சோதகவாக்கியங்களோடு விரோதம் வருகிறதென்று சொல்லப்பட்டால் சொல்லுகிருர்-சோதக என்று.

இவ்வண்ணமாக ஜ்ஞாநத்திற்கு நிர்விசேஷ விஷயத்வமானது அதற்கு விருத்தங்களான வசனங்களின் உதாஹரணத்தால் நிரஸிக்கப்பட்டது. அதற்குமேல்''தத்த்வமஸி'' இதுமுதலிய வாக்கியங்களிலுள்ள ஸாமாநாதிகரண்யத்திற்கு வேறு விதத்தால் பொருத்தமில்லாமையால் நிர்விசேஷஜ்ஞாநமே உபாயமென்கிற சங்கைவரின் அந்தஸாமாநாதிகரண்யமானது ஜீவாத்மபரமாத்மா இவ்விரண்டுக்கும் ஐக்யத்தைச்சொல்லவந்ததென்பதை நிராகரிக்கிருர்— தத்த்வமஸ்யாதி என்று. சோதகவாக்கியங்களில் ஸாமாநாதிகரண்யமானது அந்த ப்ரஹ்மததைவிட வேருன வஸ்துவினது வ்யாவ்ருத்தியின் வாயிலாக வஸ்துக்களின் ஐக்யத்தைச் சொல்வதில் கருத்துள்ளது. 'தத்த்வமஸி' இது முதலிய வாக்கியங்களில் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஸாமாநாதிகரண்யமானது அன்வயமுகத்தால் உபலக்ஷிக்கப்பட்டுள்ள வஸ்துக்களின் ஐக்யத்தில் கருத்துள்ளது. அசித் ப்ரஹ்மம் இது இரண்டுகளுக்குமோ வென்ருல், 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' இதுமுதலியதில் வாஸ்தவமல்லாத ரூபத்தை ஏறிடுவதனுல் ஸாமாநாதிகரண்யம். 'ஜ்யோதீம்ஷி விஷ்ணு:' இதுமுதலிய வாக்யங்களில் ஸாமாநாதிகரண்யமானது பாதார்த்தமுள்ளதென்று நான்குவிதமாகவன்ருே அந்யர்களால் ஸாமாநாதிகரண்யம் ஆங்காங்கு ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அவற்றுள் ''தத்த்வமஸி' இதுமுதலிய வாக்கியங்களில் அன்வயமுகத்தால் வஸ்துமாத்ரம் அறிவிக்கப்படுகிறதென்பதையும் கதி இல்லாமையால் பாதார்த்தத்தையும் ஆசங்கித்து அது நிராகரிக்கப்படுகிறது. அவற்றுள் முதன்மைவாய்ந்துள்ள வஸ்துக்களின் ஐக்ய பரத்வத்தை தூஷிப்பதற்காகச் சொல்லுகிருர்—நநிர்விசேஷ வஸ்த்வைக்யபரம் என்று. எதனுல் என்று கேட்கில் சொல்லுகிருர்— தத்த்வம் என்று. அது எவ்வண்ணமென்று கேழ்க்கப்படுமேயானுல் சொல்லுகிருர்— தத்பதம்ஹிஎன்று. 'ஹி'என்கிறசப்தம் ஹேதுவை உணர்த்துகிறது. ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களுடன்கூடின ப்ரஹ்மப்ரதிபாதனம் எவ்வாறு என்று வினவப்படுமேயானுல் உத்தரமளிக்கிருர்—ததைக்ஷத என்று. தத் என்கிறசப்தத்திற்கு ப்ரக்ருதமான எல்லாஆகாரங்களுடன்கூடின வஸ்துவை பராமர்சிப்பதென்பது வ்யுத்பத்தியினுல் ஸித்தமாக இருக்கிறது. வெண்ணிறமுள்ளதும் மங்களகரங்களான கண்களுடன் கூடியதும் நிறைந்த கொம்புகளுடன் கூடியதும் குடம்போன்ற மடியுடன் கூடியதுமான யாதொரு என்னுடைய பசுவுண்டோ அதை ஓட்டிக்கொண்டு வா என்பது எப்படியோ.

ஐயா! பசு இருக்கிறது, அதை ஓட்டிவா இது முதலிய வாக்கியங்களில் கொண்டுவருதல் முதலிய செய்கைகளுக்குத்தகுதியற்றதான ஸ்திதிமுதலிய விசேஷங்களால் விடுபட்டிருக்கிற வஸ்துவை பராமர்சித்தல் காணப்படுகிறது. அதுவும்முக்கியம், இவ்வண்ணமல்ல— ஆநயனக்ரியையோடு ஸமகாலான்வயத்திற்கு யோக்யமல்லாததாக இருந்தபோதிலுங்கூட ஸ்தித்யாதி விசேஷணத்தோடு முந்தினகாலத்தோடு சேர்ந்திருத்தல் சொல்லக்கருதப்பட்டிருப்பதால். அப்படி இல்லாவிட்டால் ஓடிக்கொண்டிருக்கிற கோ பிண்டத்திற்குங்கூட ஓட்டிக்கொண்டு வருதல் என்பதுப்ரஸங்கிக்கும். விசேஷண

மானது விசேஷ்ய வஸ்துவினிடம் எவ்வாறு அன்வயிப்பதற்குத் தகுதியுள்ளதோ அவ்வாறு அன்வயிக்கப்பட்டிருக்கிற அந்த விசேஷணத்தின் அபரித்யாகமன்றோ விவக்ஷிதத்வம் ப்ரக்ருதமாக இருக்கிற எல்லா விசேஷணங்களிலும் ஒன்றுக்காவது பரித்யாகம் ஏற்படுமேயாகில் ப்ரக்ருதத்வமே இழக்கப்படவேண்டியதாக ஆகும். வெண்ணிறமுள்ளதும் மங்களகரமான கண்களுடன்கூடியதும் பூர்ணமான கொம்புகளுடன்கூடியதும் குடம்போன்ற மடியுடன் கூடியதுமான யாதொரு என்னுடையபசுவுண்டோ அதைக்கொண்டுவா என்று சொன்னால் வெண்ணிறமொன்றைத்தவிர்த்த மற்ற எல்லா விசேஷணங்களுடன் கூடின கோவ்யக்தியை ஓட்டிக்கொண்டுவந்தபோதிலுங்கூட ப்ரக்ருதமான கோ வ்யக்தி ஓட்டிக்கொண்டுவரப்படாமல் போவதால். ஆதலால் எல்லா விசேஷங்களும் ப்ரக்ருதமாக இருக்க நிர்விசேஷ வஸ்துதான் ப்ரக்ருதம் என்பது தூரத்தில் ஓட்டப்பட்டது, ப்ரக்ருதமாக இருக்கிற எல்லா விசேஷணங்களையும் பரித்யாகம் செய்தபோதிலும் தர்மங்களின் ஐக்யத்தால் ப்ரக்ருதத்வம் ஸித்திக்கிறது. எல்லாஆகாரங்களும் இல்லாவிட்டால் ப்ரதிஸந்தாநத்திற்கே தகுதியற்றதாகப்போகவேண்டிவருவதால். தாழ்வாரத்தில் குடமிருக்கிறது. அதைக்கொண்டுவா" என்கிற வாக்கியத்தில் கடத்வத்தை சொல்லக்கருத்தில்லாத காரணம் பற்றி மண்ணை மாத்திரம் ஒருவன்கொண்டு வந்தால் அதனால் ப்ரக்ருதகார்யஸித்தி உண்டாகாதன்றோ. ஒரு ஆகாரமானது முற்றிலுமிழக்கப்பட்ட போதிலுங்கூட ஸம்பவியாத ப்ரக்ருதத்வமானது எல்லா ஆகாரங்களுமிழக்கப்பட்டிருக்கும் தருணத்தில் எவ்வாறு ஸம்பவிக்கும். மோதிரமாக இருந்தவென்கிற தன்மை நீங்கியபோதிலுங்கூட தங்கம் நினைக்கப்படுகிறதென்று சொல்லப்படுமேயானால், ப்ரத்யக்ஷத்தால் உண்மை, 'தத்' என்கிற சப்தமோவென்றால் ப்ரக்ருதமான ஆகாரமில்லாவிடில் ப்ரதிஸந்தானத்தையே உண்டுபண்ணச் சக்தியற்றதாக இருக்கிறது. அதனாலேயே எந்த மோதிரமோ, அதைக்கொண்டுவா என்று சொன்னால் தங்கம் மாத்திரம் தனித்துக்கொண்டு வரப்படுகிறதில்லை. ஆதலால் ப்ரக்ருதங்களான எல்லா ஆகாரங்களையும் இழந்துவிடும் பக்ஷத்தில் ப்ரதிஸந்தானத்திற்கே தகுதியற்றதான வஸ்துவுக்கு ப்ரக்ருதத்வமே இல்லை என்பதனால், 'தத்' என்கிறசப்தத்திற்கு வஸ்துமாத்ர பரத்வம் லாக்ஷணிகமாக ஆகும்.

'தத்' என்கிற பதத்தால் உணர்த்தப்பட்டிருக்கிற ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களுக்கும் 'த்வம்' என்கிற பதத்தால் உணர்த்தப்பட்டுள்ள அஜ்ஞத்வம் முதலிய குணங்களுக்கும் விரோதத்தால் 'தத்த்வமஸி' என்கிற வாக்கியம் விசேஷங்களைத்தாலும் விடுபட்டிருக்கிற சுத்த சைதன்யத்தை மாத்திரம் உணர்த்துகிறதென்று சொல்லப்படுமேயானால் அந்த விஷயத்தில் சொல்லுகிறார்—**தத்ஸமாநாதிகரணம்** என்று. 'கடஸ்ய சுக்ல:' என்கிற வாக்யத்தை முதன்மையாகக்கொண்ட வ்யதிகரணவாக்யங்களில் தர்மத்தைச்சொல்லும் திறமைவாய்ந்துள்ள சப்தத்திற்கு தர்மி பர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்திவைக்கும் தன்மை இல்லாததால் அதை விலக்குவதற்காக 'தத்ஸமாநாதிகரணம்' என்று கூறப்பட்டது. அசித் விசிஷ்டஜீவசரீரகம் என்று. அஜ்ஞத்வம் முதலிய குணங்களுக்கு ஸர்வஜ்ஞத்வம் முதலியகுணங்களுடன்கூடின பரமாத்மாவினிடத்தில் விரோதமானது நேராக இல்லாமல் ஒன்றின்வாயிலாக ஏற்பட்டிருப்பதால் பரிஹரிக்கப்பட்டதென்று அர்த்தம், த்வம் பதத்தின் ப்ரவ்ருத்தி நிமித்தமாக இருக்கிற ஸம்போதநீயார்த்தத்வ ரூபமான ஆபி முக்கியத்திற்கு ப்ரயோஜகமுபலக்ஷணமென்கிற அபிப்ராயத்தால் 'அசித் விசிஷ்டஜீவ' என்று, உரைக்கப்பட்டது

ஸாமாநாதிகரண்யமிருக்கையில் எவ்வாறு த்வம் பதமானது ஜீவவிசிஷ்டமான ப்ரஹ்மத்தை உணர்த்தும் திறமையுள்ளதென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்—ப்ரகாரத்வம் என்று. ப்ரகாரத்வயாவஸ்திதம்- இரண்டு ப்ரகாரங்களோடுகூடியது. ப்ரக்ருதங்களான தத் த்வம் பதங்களின் ப்ரவ்ருத்திநிமித்தபரமான ப்ரகாரத்வயசப்தமானது $ ந்யூநதையை வ்ருத்திக்கச் செய்கிறதே ஒழிய ப்ரகாரங்களின் த்ரித்வம் முதலியதை விலக்குவதில் கருத்துள்ளதல்ல. அதை உபபாதனம் செய்கிறார்—ப்ரகாரத்வயபரித்யாகே என்று. வேறு தூஷணத்தைக் கூறுகிறார்—த்வயோ: என்று. விரோதமில்லாமலே முக்கியமாக நிர்வாஹம் ஸம்பவிக்கிறதாக இருக்க ஒருபதத்திற்குகூட லக்ஷணையை கல்பிப்பது யுக்தமன்று. விரோதம் வந்தபோதிலுங்கூட ஒரு பதத்திற்கு லக்ஷணையைக் கல்பிப்பதனாலேயே விரோதத்தினது இன்மை ஸித்திப்பதாக இருக்க இரண்டு பதங்களுக்கு லக்ஷணையை கல்பிப்பது பொருந்தாதென்று அர்த்தம்.

அய்யா! இரண்டு பதங்களுக்கு லக்ஷணையை கல்பிப்பது தூஷணமாகா. ஸோயம் தேவதத்த:' இது முதலிய வாக்கியங்களில் காணப்பட்டிருப்பதால். அந்தஇடத்திலோ வென்றால், தேசவிசேஷத்தோடும் கால விசேஷத்தோடுங்கூடிய ஆகாரத்தில் தேசாந்தர காலாந்தரங்களுக்கு அன்வய விரோதத்தால் இரண்டு பதங்களும்லாக்ஷணிகங்களே. அதுவிஷயத்தில் பகர்கிறார்—ஸோயம் என்று. ஒரு வஸ்துவுக்கு இரண்டு தேசங்களோடு ஸம்பந்தம் ஏற்படுவதில் விரோதமா? அல்லது இரண்டு காலங்களோடு ஸம்பந்தம்வரின் விரோதமா? என்கிற விகல்பத்தை அபிப்ராயப்பட்டுக்கூறுகிறார்—பூத என்று விசிஷ்டாகாரத்தில் விசேஷணாந்தரங்கள் அன்வயிக்காதன்றோ. பின்னையோ விசேஷ்யமாத்திரத்தில் விசேஷணாந்தரான்வய முண்டு, அதனால் இரண்டு காலங்களின் ஸம்பந்தம் விருத்தமன்று. விருத்தமாக இருக்குமேயாகில் அப்பொழுது பௌத்தர்களால் சொல்லப்பட்டிருக்கிற க்ஷணிகத்வமே வந்து சேரும். அநேக காலங்களால் ஸாதிக்கத்தக்க தர்மங்களைச் செய்தலும் பலப்ராப்தியும் பொருந்தாமல் போகவேண்டியதாக ஆகுமென்று கருத்து. தேசபேத என்று. ஒரு வஸ்துவுக்கு இரண்டு தேசங்களின் ஸம்பந்தம் விரோதமாகில் அப்பொழுது விஷ்ணு ப்ரதக்ஷிணம் தீர்த்தஸ்நானம் முதலிய விதியானது பொருந்தாமல் போகவேண்டும். ப்ரத்யபிஜ்ஞாவிரோதமு மென்றுகருத்து. ஒரே ஸமயத்தில் இரண்டு இடங்களிலும் இரண்டுகாலங்களிலும் இருத்தலெவ்வாறு ஸம்பவிக்குமென்று வினவப்படுமேயானால் உத்தரம்கூறப்படுகிறது. இரண்டுதேசங்களின் ஸம்பந்தத்திற்காவது இரண்டு காலங்களின் ஸம்பந்தத்திற்காவது ஒரேஸமயத்திருத்தல் கிடையாது. அந்த தேசகால ஸம்பந்தங்களின் ப்ரதிபத்திக்கன்றோ யௌகபத்யம். ப்ரதிபத்தியோவென்றால் முறையே ஸம்பவிக்கிற தேசத்வய ஸம்பந்தத்தையும் காலத்வய ஸம்பந்தத்தையுமே காண்பிக்கிறது, அதனால் விரோதமில்லை. அப்படி இல்லாவிட்டால் சென்றுபோனதையும் இனிவரப்போகிறதையும் விஷயீகரித்துக்கொண்டிருக்கிற ஜ்ஞாநங்களில் விஷயமாக இருக்கிற † அதீதவிஷயத்திற்கும் § அநாகத விஷயத்திற்கும் ¶ வர்த்தமானத்வமாவது ஜ்ஞாநத்திற்கு அதீதத்வமாவது அநாகதத்வமாவது ப்ரஸங்கிக்கும் என்று, வேறு தூஷணத்தையும் சொல்லுகிறார்--ததைக்ஷ்ய என்று. ** உபக்ரமாதிகரணத்திலன்றோ உபக்ரமப்ராபல்ய முரைக்கப்பட்டதென்று கருத்து. உபக்ரமத்தின் தொடக்கத்திலேயே ஐக்யம் அறியப்பட்டு விட்டபடியால் உபக்ரமவிரோ

$ ந்யூநதை—குறைவு. † அதீதம்—சென்றுபோனது. § அநாகதம்—வரப்போகிறது.
¶ வர்த்தமானம்— நிகழ்காலம். ** உபக்ரமம்—தொடக்கம்.

தமில்லே. ஒன்றை அறிந்ததனால் எல்லாமறியப்பட்டதாக ஆகுமென்கிற அர்த்தத்துடன் கூடின ஏக விஜ்ஞாநத்தால் ஸர்வவிஜ்ஞான ப்ரதிஜ்ஞா வாக்யமோவென்றால் ததைக்ஷத, பஹுஸ்யாம், என்கிற வாக்கியத்திற்கு முந்தியதென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்— **ஏக விஜ்ஞாநேந** என்று. அந்த ச்ருதிவசனத்தில் ப்ரஹ்மத்திற்கு ஜகத்தைக்குறித்து நிமித்தத்வம் * உபாதானத்வம் அவைகளுக்கு அனுகுணங்களான ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தத்வம் முதலிய குணங்கள் ஸித்திப்பதாலென்று அர்த்தம். ஸூக்ஷ்மாவஸ்தையை அடைந்திருக்கிற சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமே காரணம், ஸ்தூலாவஸ்தையைப்பெற்றிருக்கிற அந்த ப்ரஹ்மமே கார்யமாக இருப்பதுபற்றி வேறுத்ரவ்யமில்லாமையால் காரணஜ்ஞாநத்தால் கார்யஜ்ஞாநமென்பது பொருத்தமுள்ளதாக ஆகிறது. ‡ ம்ருஷாவாதிக்கோவென்றால் காரணஜ்ஞாநத்தில் கார்யம் விஷயமாக இருப்பதனால் § அந்தர்ப்பாவமபிமதமாக இருக்குமேயானால் விரோதம். ஸத்யபதார்த்தத்தை விஷயமாகக்கொண்டிருக்கிற ஜ்ஞாநத்தில் மித்ய்யையாக இருக்கிற அர்த்தத்திற்கு விஷயத்வம் பொருந்தாததால்- மித்யாத்வேந என்று ஒரு பதத்திற்கு || அத்யாஹாரமும் ஏற்படவேண்டியதாக ஆகும். அந்தர்ப்பாவமில்லே என்கிற பக்ஷத்திலோவெனில் அறியப்பட்டிராத ஒரு வஸ்துவினிடத்தில் அறியப்பட்டதென்கிற வ்யவஹாரமானது முக்கியமாக உண்டாகாது. அதனால் நம்ம பக்ஷத்திலேயே ப்ரதிஜ்ஞாவாக்கியம் ஸ்வரஸம். வேறு ச்ருதிவசன விரோதத்தைக் கூறுகிறார்— **ஜ்ஞாநஸ்வரூபஸ்ய** என்று. ‘ஜ்ஞாநஸ்வரூபஸ்ய ஸர்வஜ்ஞஸ்ய’ என்கிற இந்த இரண்டு விசேஷணங்களால் தர்மிபூதஜ்ஞாநமும் தர்மபூத ஜ்ஞாநமும் விவக்ஷிக்கப்பட்டிருக்கின்றன. ஸர்வஜ்ஞனுக்கு அஜ்ஞத்வமும் எல்லா தோஷங்களேயும் விலக்கினவனும் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனுமான பரமபுருஷனுக்கு அளவிறந்த அபுருஷார்த்தமும் ஸம்பவிப்பதால் விரோதம்- ஜ்ஞாநஸ்வரூபஸ்ய என்கிற பதத்தால் திரோதாநாநுபபத்தியும் ஸூசிப்பிக்கப்பட்டது.

இவ்வண்ணமாக ஸாமாநாதிகரண்யத்திற்கு நிர்விசேஷவஸ்த்வைக்யத்தை அறிவிப்பதில் கருத்தென்பது தூஷிக்கப்பட்டது. அதற்குமேல் பாதார்த்ததத்வத்தை தூஷிக்கிறார்— **பாதார்த்தத்வேச** என்று. கயிர் ஸர்ப்பம் என்கிற இவ்வித ஸ்வரூபமுள்ள பாதார்த்தத்துடன்கூடின ஸாமாநாதிகரண்யமே கிடையாது. ஸாமாநாதிகரண்யத்திற்கு ஒரு விசேஷ்யத்தில் இரண்டு ப்ரகாரங்களே உபஸ்தாபிக்கிற ஸ்வபாவமுள்ளதாக இருப்பதுபற்றி பாதார்த்தத்வ விரோதமிருப்பதால். ஆதலால் இரண்டு பதங்களுக்கும் முக்கியார்த்தத்தை உணர்த்தும் திறமை அபிமதமாக இருக்க பாதார்த்தமான ஸாமாநாதிகரண்யம் ஸித்தியாது. ஸர்ப்ப சப்தத்தால் நஞர்த்தத்தை லக்ஷணாவ்ருத்தியினால் உணர்த்தி அஸர்ப்போ ரஜ்ஜு: என்கிற நிர்வாஹத்தை த்ருஷ்டாந்த வாக்கியத்திற்கு ஆசங்கித்து தார்ஷ்டாந்திக வாக்கியத்திற்கு அதைவிட அதிக தூஷணத்தைக்கூறுகிறார்—**பாதார்த்தத்வேச** என்று. ‘த்வம் தத்பதயோ:’ என்கிற இடத்தில் க்ரமவிவக்ஷை இல்லே. தத் என்கிற பதமானது * அதிஷ்டாந மாத்திரத்தை லக்ஷணாவ்ருத்தியினால்

---

* உபாதானம்—கார்யமாக மாறுகிற காரணம். ‡ ம்ருஷாவாதி—உலகமனேத்தையும் பொய்யென்று சொல்லுகிற அத்வைதி. § அந்தர்பாவம்—உள்ளடக்கம்.
|| அத்யாஹாரம்—சேர்த்துக்கொள்ளுதல். * அதிஷ்டானம்—ஆதாரம்.

உணர்த்திவைக்கிறது. த்வம் பதமானது ஜீவபாவ நிவ்ருத்தியை லக்ஷணையினால் அறிவிக்கிறது. அல்லது த்வம் பதத்தால் அதிஷ்டானலக்ஷணை-தத்பதத்தால் நிவ்ருத்திலக்ஷணை-ஆதிசப்தத்தால் ஸாமாநாதிகரண்ய லக்ஷணத்திற்கு ஹாநியும் உபக்ரமவிரோதமும் ஏக விஜ்ஞாநத்தால் ஸர்வ விஜ்ஞாந ப்ரதிஜ்ஞையின் பொருந்தாமையும் வேறுச்ருதிவசனங்களின் விரோதமுமென்கிற தூஷணங்கள் சொல்லக்கருதப்பட்டிருக்கின்றன.

---

[illegible]

[illegible]

---

ஶ்ரீபாஷ்யம்—

இவ்வளவு மாத்திரமன்றோ விசேஷம். சிப்பியைப்பார்த்து இது வெள்ளியல்ல என்கிற வ்யவஹாரத்தில் போல அறியப்பட்டிராத பாதத்தை

கதி இல்லாமல் ஏற்படுத்துவதும் தத் என்கிற பதத்தினால் அதிஷ்டாநத்தை த்தவிர்த்து வேறு ஒரு தர்மம் உணர்த்தப்படாததால் பாதத்தின் அனுபபத்தியும். அதிஷ்டானமோ வென்றால் ப்ராந்தி மறைக்கப்பட்டிருந்தது. மறைக்கப்பட்டிராத ஸ்வரூபமானது தத் என்கிற பதத்தால் உணர்த்தப்படுகிறதென்று சொல்லப்படுமேயானால் அல்ல. ப்ராந்தி அதிஷ்டானத்தின் ப்ரகாசமில்லாவிடில் அதை ஆதாரமாகக் கொண்டுவரும் ப்ரமம் பாதம் இவ்விரண்டுக்கும் ஸம்பவமில்லாமையால். ப்ரமத்துக்கு ஆச்ரயமான அதிஷ்டானமானது மறைக்கப்பட்டிராமலிருந்ததென்று சொல்லப்படுமேயானால் அதே அதிஷ்டாந ஸ்வரூபம் ப்ரமத்திற்கு விரோதியாக இருப்பதுபற்றி அது ப்ரகாசிக்கும் தருணத்தில் அந்த அதிஷ்டாநத்தை ஆச்ரயித்துப்ரமம் பாதம் இவ்விரண்டும் ஒருக்காலும் உண்டாகாது. ஆதலால் அதிஷ்டாநத்தைவிட வேறான பாரமார்த்திக தர்மம் அதன் மறைதல் இவைகளை ஒப்புக்கொள்ளாவிட்டால் ப்ராந்தி பாதம் இவ்விரண்டும் எவ்விதத்தாலும் உபபாதிக்கமுடியாதவைகள். அதிஷ்டானமாக ஒரு புருஷவடிவமாத்திரமறியப்படாநின்றிருக்க அதைவிட அதிகமாயுள்ளதும் பாரமார்த்திகமாக இருப்பதுமான ராஜத்வமானது மறைபட்டிருக்கையிலன்றோ இவன் வேடன் என்கிற ப்ரமம் வருகிறது. இவன் அரசன் என்கிற ஆப்தோபதேசத்தாலும் அந்த ப்ரம நிவ்ருத்தி உண்டாகிறது. அதிஷ்டான மாத்திரத்தின் உபதேசத்தால் ப்ரம நிவ்ருத்தி உண்டாகிறதில்லை. அது ப்ரகாசித்துக் கொண்டிருப்பதால் உபதேசிக்கத்தகாததாக இருப்பதாலும் ப்ரமத்தை நாசம் செய்யக்கூடிய தன்மையுள்ளதாக இல்லாததாலும். ஜீவனை சரீரமாகக் கொண்ட ப்ரமத்தையும் ஜகத்துக்கு காரணமாக இருக்கிற ப்ரஹ்மத்தையும் முக்கியவ்ருத்தியினால் முறையே இரண்டு பதங்களும் உணர்த்துகின்றன. இரண்டு ப்ரகாரங்களுடன் கூடிய ஒரு வஸ்துவை ப்ரதிபாதிப்பதால் ஸாமாநாதிகரண்யமும் ஸித்தித்தது. எல்லா தோஷங்களாலும் விடுபட்டதும் எல்லா கல்யாணகுணங்களாலும் நிறைந்ததுமான ப்ரஹ்மத்திற்கு ஜீவாந்தர்யாமியாக இருத்தலென்கிற வேறு ஒரு ஐச்வர்யமும் உபக்ரமத்திற்கு ஆனுகூல்யமும் ப்ரதிபாதிக்கப்பட்டதாக ஆகிறது. ஏக விஜ்ஞாநத்தால் ஸர்வவிஜ்ஞான ப்ரதிஜ்ஞையும் ஸூக்ஷ்மசிதசித் வஸ்துக்களை சரீரமாகக்கொண்டப்ரஹ்மமாகிற காரணமே ஸ்தூல சிதசித்வஸ்துக்களை சரீரமாகக்கொண்டு ஜகத்ரூபகார்யமாக இருப்பதால் உபபன்னமாகிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

சொல்லப்பட்டிருக்கிற த்ருஷ்டாந்தத்தாலும் உபலக்ஷிக்கத்தக்க ஸாமாநாதிகரண்யத்தாலும் தூஷணமிதில் அதிகமென்று சொல்லுகிறார்— இயாம்ஸ்து விசேஷ; என்று. பாதார்த்த விஷயத்தில் முற்கூறப்பட்டுள்ள தூஷணஹாநி விசேஷமல்ல

பின்னே அவைகளோடு கூட சொல்லப்படப்போகிற அதிகமான இரண்டு தூஷணங்கள் வந்துவிழுவதே விசேஷமென்று பொருள். அதிக தூஷணத்தைச் சொல்லுகிறார்— நேதம் ரஜதமிதி வதப்ரதிபன்னஸ்யைவ பாதஸ்யாகத்யா பரிகல்பநம் என்று. சிப்பியே வெள்ளி என்கிற இடத்தில் வேறு ப்ரமாணத்தால் இது வெள்ளியல்லவென்று பாதமறியப்படுவதால் பாதம் கல்பிக்கப்படுகிறது. இந்த இடத்தில் பாதம் அறியப்பட்டிராதிருந்த போதிலுங்கூட வெறு வழி இல்லாமையால் பாதம் கல்பிக்கப்படுகிற தென்று அர்த்தம். தத்பதேநாதிஷ்டாநாதிரேகிதர்மாநுபஸ்தாபநேந பர்தாநுபபத்திஶ்ச என்று. சிப்பியே வெள்ளி என்கிற இடத்தில் சுக்தித்வ ரூபமான விருத்த தர்மத்தை சப்தமே உபஸ்தாபிக்கிறது. ஆதலால் அங்கே பாதம் கல்பிக்கப்படுகிறது. இவ்விடத்திலோ வென்றால் அதிஷ்டான மாத்திரத்தை லக்ஷணையினால் உணர்த்துகிற தத் என்கிற பதத்தினால் சுக்தித்வம் போல் விருத்த தர்மத்தில் உபஸ்தாபனமில்லாத தால் பாதத்தை கல்பிப்பது பொருந்தாதென்று அர்த்தம். விரோதத்தை பரிஹரிப்பதற்காக லக்ஷணை என்று சொல்லப்படுமேயானால் இரண்டு பதங்களுக்குள் ஒரு பதத்தின் லக்ஷணையே விரோத பரிஹாரத்தின் பொருட்டுப் போதுமானது. அப்பொழுது விசேஷங்களோடு கூடி இருத்தலென்பது ப்ரஸங்கிக்குமென்பதும் அர்த்தத்தால்ஸித்தம். வேறு ப்ரமாணத்தால் பாதம் அறியப்பட்டிருப்பதாலும் சப்தத்தால் விருத்ததர்மங்களின் உபஸ்தாபநத்தாலும் பாதம் கல்பிக்கப்படுகிறது. இந்த இடத்திலோவென்றால் இரண்டுமில்லாமையால் அது பொருந்ாதென்று உரைக்கப்பட்டது.

அந்த இடத்தில் விருத்தங்களான ஆகாரங்களின் உபஸ்தாபநத்தை சங்கிக்கிறார்-- அதிஷ்டாநந்து என்று. அந்த அதிஷ்டாநமானது மறைக்கப்பட்டிராத ஸ்வரூபத்துடன் கூடியதாக எப்படி ஆகுமோ அப்படி உபஸ்தாபிக்கப்படுகிறதென்பது க்ரியா விசேஷணம். ப்ரகாசிக்கப்பட்டிராத விரோதியின் ப்ரகாசமல்லவோ பாதகல்பனம். தர்மங்களை உபஸ்தாபிப்பதே பாதகல்பனமென்கிற நியமமில்லையன்றோ. ஆதலால் தத் பதத்தால் முந்தி ப்ரகாசிக்கப்பட்டிராத விரோதியான அதிஷ்டாநத்தின் ஸ்வரூபத்தின் ப்ரகாசநத்தினால் பாதகல்பனமென்று அர்த்தம்.. இந்த இடத்தில் கூறுகிறார்—நஎன்று. விரோதி ரூபமான அதிஷ்டாநம் ப்ரகாசிக்கிறதா? அல்லது இல்லையா? என்று விகல்பித்து ப்ரகாசிக்கிறதில்லை என்கிற பக்ஷத்தில் தூஷணத்தைக்கூறுகிறார்—அதிஷ்டாந என்று. ததாச்ரய என்கிற பதத்திலிருக்கிற ஆச்ரய சப்தம் விஷயத்தைக்குறிக்கிறது. அல்லது அதை அதிஷ்டாநமாகக்கொண்ட ப்ரமம் பாதம் இவ்விரண்டுகளுக்கும் என்று அர்த்தம். ப்ரகாசபக்ஷத்தை சங்கிக்கிறார்—ப்ரம என்று. ப்ரமாச்ரயம் அதிஷ்டானம் என்கிற இடத்தில் பாடம் நன்கு பராமர்சிக்கத்தக்கது. ஆச்ரயசப்தமானது விஷயத்தை உணர்த்துகிறது. ப்ரமாச்ரயம் என்கிற இடத்தில் ப்ரமத்துக்கு ஆச்ரயணம் விஷயீகரணம் அத்ர என்று வையதிகரண்யத்தாலாவது-ப்ரமமானது ஆச்ரயிக்கத்தக்கது அதாவது ஸம்பந்திக்கத்தக்கது எதனால் என்று ஸாமாநாதிகரண்யத்தாலாவது கஷ்டப்பட்டு பகுவ்ரீஹி ஸமாஸமும் நிர்வஹிப்பதற்கு சக்யம், ஆரோபிக்கத்தக்க ஆகாரத்திற்கு எது அதிகரணமோ அது அதிஷ்டானம் என்றாவது பொருள். ப்ரமாச்ரயத்வத்திற்காக அதிரோஹிதமென்று சொல்லப்படுமேயானால் என்று அர்த்தம். தூஷிக்கிறார்— ததேவ என்று. இந்த அதிஷ்டானம் விரோதிரூபமா ? அல்லது அவிரோதியா ? என்கிற விகல்பாபிப்ராயத்தால் விரோதி என்கிறபக்ஷத்தில் தூஷணம் கூறப்பட்டது. அவிரோதித்வ பக்ஷத்தில் பாதகல்பநத்தின் அநுபபத்தி ப்ரமத்தினது ஸத்தை

என்கிற தூஷணம் ஸ்பஷ்டமென்பதனால் அது சொல்லப்படவில்லை. அது: என்று பாரமார்த்திக சப்தத்திற்கு இது அபிப்ராயம். ப்ரமவிரோதியான ஆகாரம் அபாரமார்த்திகமாக இருக்குமேயாகில் அக்யஸ்தரூபமே ஸத்யமாக ஆகவேண்டியதாகும். எப்படி சுக்தித்வம் அபரமார்த்தமாக இருக்கையில் ரஜதத்வம் ஸத்யமாக ஆகிறதோவென்று. விரோதியான ஆகாரம் அபரமார்த்தமாக இருந்தபோதிலும்கூட ப்ரம நிவ்ருத்தி பொருத்தமுள்ளதாக ஆகிறது. எப்படி பலாசவ்ருக்ஷத்தின் புஷ்பத்தில் காட்டுத்தீ என்கிற ப்ரமமுள்ளதும் புஷ்பத்தின் காம்பினிடத்திலுண்டான வண்டு என்கிற ப்ரமத்தால்பலாசபுஷ்பத்தைத் தழுவுகின்றதுமான வண்டுக்கு பலாசபுஷ்ப விஷயமான காட்டுத்தீ ப்ரமமும் புஷ்பத்தின் காப்புவிஷயமாக உண்டான வண்டு என்கிறப்ரமமும் விலகுகிறதோ இவ்வண்ணமே கூறுகிறார்கள். யாதொருகாரணத்தால் பெண்வண்டானது காம்பிலுண்டான ஆண் வண்டு என்கிற ப்ரமத்தால் காட்டுத்தீ என்கிற ப்ரமத்தை இழந்து பலாசபுஷ்பத்தைக் கட்டிக்கொள்ளுகிறதோவென்று என்கிற யாதொரு சோத்யமுண்டோ அது யுக்தமல்ல. அவ்விடத்திலும் பரமார்த்தமாயுள்ள விரோதியான ஆகாரத்தினாலேயே ப்ரமவிஷய நிவ்ருத்தி ஏற்படுவதால். காட்டுத்தீயாக இருத்தலென்கிற தன்மைக்கு விரோதியாக இருக்கிற பலாசபுஷ்பத்வாகாரம் பரமார்த்தம். ப்ரமரத்வவிரோதியான * வ்ருந்தத்வாகாரமும் பரமார்த்தம். பரமார்த்தமல்லவென்று சொல்லும் பக்ஷத்தில், அபரமார்த்தமான சுக்தித்வத்தில் ரஜதத்வம்போல § தாவத்வமும் ¶ ப்ரமரத்வமும் ஸத்யமாக ஆகவேண்டியதாகும். புஷ்பத்தினது காம்பிலுண்டான ப்ரமர ப்ரமத்தால் காட்டுத்தீ என்கிற ப்ரமம் நிவ்ருத்திக்கிறதென்று சொல்லப்படுமேயானால் அதனாலென்ன. ப்ரமரத்திற்கு காட்டுத்தீ என்கிற புத்தியின் நிவ்ருத்தியானது ஸத்யத்வ ப்ரதிபத்தியினாலுண்டுபண்ணப்பட்டிருக்கிறது. ஆதலால் அஸத்யத்தில் ஸத்யத்வ விஷயமான வேறு ப்ரமமிருக்கிறது; அதன் நிவ்ருத்தியும் வேறு அஸத்ய விஷயமான ஸத்யத்வ ப்ரமத்தாலென்று ப்ரம பரம்பரையினால் மிச்சமின்றி அவித்யா நிவ்ருத்தியானது பொருந்துகிறதில்லை. மேலும் தாவத்வ விஷயமான புத்திநீங்கினபோதிலும் தாவத்வ நிவ்ருத்தியானது ப்ரமர ப்ரமத்தாலுண்டாகிறதல்ல. பின்னை யதார்த்தமான புஷ்பத்வாகாரத்தாலேயே. அப்படி இல்லாவிட்டால் பரமார்த்தமான வெள்ளியில் அப்ரமார்த்தமான சிப்பி என்கிற புத்தியினால் வெள்ளி என்கிற புத்தியின் நிவ்ருத்திவருதால் வெள்ளிக்கும் சிப்பித்தன்மை ப்ரஸங்கிப்பதால். வேறு ஒரு ப்ரமத்தால் வேறு ஒரு ப்ரமம்நிவ்ருத்திக்கிறதென்று சொல்லும்பக்ஷத்தில் அநவஸ்தையும் உண்டாகும். கயிற்றிலுண்டாகிற ஸர்ப்பம் பூமியின் பிளவு ஜலதாரை என்கிற பரம்பரைக்குப்போலப்ரமத்தை நீக்குகிற வேறு ப்ரமத்துக்கும் நிவர்த்தகமான மற்றொரு ப்ரமாபேக்ஷை இருப்பதால்.

மேலும் வண்டு என்கிற ப்ரமம்போனவுடன் நிவர்த்தகமான அபாரமாரத்யஜ்ஞானத்தினால் வருகிற காட்டுத்தீ என்கிற ப்ரமமானது யதார்த்தமான பலாசபுஷ்ப ஜ்ஞானத்தாலேயே நீங்குகிறது. ஆகையால் மிச்சமில்லாமல் அவித்தையின் நிவ்ருத்திதான் மோக்ஷமென்று சொல்பவர்களால் ப்ரமங்களின் வருகைமுடிவு பெறுவதற்காக கடாசிவரையில் சென்றும் யதார்த்தாகாரம் ஒப்புக்கொள்ளத்தக்கது- ரஜ்ஜுத்வம்போல: கடாசியில் வந்த ப்ரமம்தானே நிலைபெற்றிராதென்று கூறப்படுமேயானால் அல்ல,

* வ்ருந்தம்—புஷ்பத்தின் காம்பு. § தாவம்—காட்டுத்தீ. ¶ ப்ரமரம்—வண்டு

தானே தன்னுடைய பாதத்திற்குகர்மாவென்று சொல்லும் பக்ஷத்தில் $ கர்மகர்த்ரு விரோதம் ப்ரஸங்கிப்பதால். மேலும் பாதகம் ஸத்யமாக இருப்பதால் பாதிக்கத்தக்கது மித்யையாக இருப்பதால் ஒன்றுக்கே நிவ்ருத்திக்கப்படத்தக்க தன்மை நிவ்ருத்தியைச் செய்கிற தன்மை இவ்விரண்டையும்ஒப்புக்கொள்வதில் அதற்கேமித்யாத்வமும் அதற்கே ஸத்யத்வமும் என்பதனுல் விரோதமுண்டாகும். மேலும் ப்ரபஞ்சமுங்கூட பாதகத்தை எதிர்பாராமல் தானே தன்னை நிவர்த்திக்கும்படி செய்துகொள்ளலாம். நிர்ஹேது கமாக தானுகவே நாசம் ஸம்பவிக்கும் பக்ஷத்தில், விநாசமென்பதுவேறு அவஸ்தா ரூப மாதலால் அவித்யையானது ஸூக்ஷ்மரூபத்தோடு நிலைபெற்றதாக ஆகும். நாசத்துக்கு க்காரணமான வேறு ஒரு அவித்யையும் இருக்கலாம். பரமார்த்தங்களான தர்ம ங்கள் அவைகளின் † திரோதானம் இவைகளில்லாவிடில் ‡ ப்ரமம் பாதம் இவ்விர ண்டின் அஸம்பவத்தை த்ருஷ்டாந்தத்தால் உபபாதிக்கிருர்— அதிஷ்டானே ஹி என்று. இந்த இடத்தில் ராஜகுமாரஸமாதி பகவானுனை பாஷ்யகாரருக்கு. இவ்வண் ணம் பதார்த்தத்வம் தூஷிக்கப்பட்டது. அதற்குமேல் தன்பக்ஷத்தில் இந்த தூஷ ணங்கள் இல்லை என்கிருர்—ஜீவசரீரக என்று. முக்கியவ்ருத்தமென்பதனுல் லக்ஷ ணையின் ஹாநியானது கூறப்பட்டது. $ப்ரகாரத்வய என்று. இதனுல் * ஸாமாநாதி கரண்யம் ஸித்தித்தது நிரஸ்தநிகிலதோஷஸ்ய இதுமுதலியதால் தத் என்கிற பத த்தால் சொல்லப்பட்ட குணங்களுக்கு விரோதமின்மை காட்டப்பட்டது. ¶ உபக்ர மாநுகூலதாச என்று. ஸதேவஸோம்யேதம்-ததைக்ஷத என்கிற தொடக்கத்திற்கு வி ரோதமின்மை உரைக்கப்பட்டது. ஏகவிஜ்ஞாநத்தால் ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞைக்கு பொருத்தமானது எவ்வாறென்று கேட்கில் கூறுகிருர்—ஸூக்ஷ்ம என்று. சிதசித்துக் களுடன் சேர்ந்த ப்ரஹ்மம் காரணம், தனித்த ப்ரஹ்மம் மாத்திரம் காரணமல்ல, அந்த விசிஷ்டப்ரஹ்மமே கார்யமென்பதனுல் ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞைக்கு உபபத்தி என்று அர்த்தம்.

---

“𑌤𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍” “𑌪𑌰𑌾𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌵 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇” ‘𑌅𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾......𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌾𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌯 𑌚 ॥

“𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌵𑌿𑌰𑍋𑌧𑌃 𑌕𑌥𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍; 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇; “𑌐𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨𑍈𑌵 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑌾𑌵𑍇 𑌹𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌵𑌤𑍍 । 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸𑌜𑍀𑌵𑌂 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌐𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌿𑌤𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌰 𑌚 𑌹𑍇𑌤𑌵𑌃—

---

$ கர்ம—கர்த்தாவினிடத்திலிருக்கிற வ்யாபாரத்தால் உண்டாகிற பலத்துக்குஆச்ரய மானது- † கர்த்தா—வியாபாரத்திற்கு ஆச்ரயமாக இருப்பவன்.

† திரோதனம்—மறைதல். ‡ ப்ரமம்—ஒரு தர்மியில் அறிவில்லாத வேறு தர்மத் தை அவகாஹிக்கிற ஜ்ஞாநம். $ ப்ரகாரம்—விசேஷணம். * ஸாமாநாதிகரண்யம்-- இரண்டு பதங்களை ஒரே விபக்தியில் ப்ரயோகித்தல். ¶ உபக்ரமம்—தொடக்கம்.

ஸந்மூலாஸ்ஸோம்யேமாஸ்ஸர்வா: ப்ரஜாஸ்ஸதாயதநாஸ்ஸத்ப்ரதிஷ்டா:" இதி; "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி ஶாந்த:" இதி ச ||

ததைவ ஶ்ருத்யந்தராணி ச ப்ரஹ்மணஸ்தத்வ்யதிரிக்தஸ்ய சிதசித்வஸ்துந: ஶரீராத்மபாவேந தாதாத்ம்யம் வதந்தி— "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" "ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம் ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ ஶரீரம் ய: ப்ருதிவீமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" "ய ஆத்மநி திஷ்டந்நாத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" "ய: ப்ருதிவீமந்தரே ஸஞ்சரந்" இத்யாரப்ய "யஸ்ய ம்ருத்யுஶ்ஶரீரம் । யம் ம்ருத்யுர்ந வேத । ஏஷ ஸர்வபூதாந்தராத்மாऽபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:" "தத்ஸ்ருஷ்ட்வா । ததேவாநுப்ராவிஶத் । ததநுப்ரவிஶ்ய । ஸச்ச த்யச்சாபவத்" இத்யாதீநி ||

---

ஸ்ரீபாஷ்யம்—

தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்-ஜகந்நியந்தாக்களான ப்ரஹ்ம ருத்ராதிகளுக்குங்கூட மஹேச்வரனாக இருப்பவனும் தனக்கு மேற்பட்டவனில்லாதவனுமான அந்த பரமபுருஷனை பராஸ்ய சக்திர்விவிதைவச்ரூயதே-அந்த பரமபுருஷனுக்கு பற்பலவிதமாகவே இருக்கிற, சிறந்த சக்தியானது ச்ருதியினாலறியப்படுகிறது. அபஹதபாப்மா - கர்மஸம்பந்தமில்லாதவன். ஸத்யகாம: ஸத்ய ஸங்கல்ப:, ஸத்யமான காமனையுடன் கூடியவன். ஸங்கல்பித்தவண்ணம் கார்யங்களை முடிவுபெறச் செய்ய வல்லமைபொருந்தியவன். இது முதலிய ச்ருதிவசனங்களுக்கு விரோதமில்லை. 'தத்த்வமஸி' என்கிற இடத்தில் உத்தேச்யம் விதேயம், இவைகளின் பாகுபாடு எவ்வாறு என்று கேழ்க்கப்படுமேயானால் இந்த இடத்தில் ஒன்றைக்குறித்து ஒன்றும் விதிக்கப்படுகிறதில்லை. ஐததாத்ம்ய மிதம் ஸர்வம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிற சேதநாசேதநங்களோடு கூடி இருக்கிற இந்த உலகமனைத்தும் ப்ரஹ்மாத்மகம் என்கிற ச்ருதியினாலேயே ப்ராப்தமாக இருப்பதால், சாஸ்திரமானது அப்ராப்தமான விஷயத்திலல்லவோ ப்ரயோஜநமுள்ளது. இதம் ஸர்வம் என்று சேதநா சேதநங்களுடன்கூடின உலகத்தை நிர்தேசித்து 'ஐததாத்ம்யம்' என்று அந்த ஜகத்திற்கே இந்த ப்ரஹ்மம் ஆத்மாவென்று அங்கு ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. அதில் ஹேதுவும் கூறப்பட்டி

ருக்கிறது. "ஸன்மூலாஸ்ஸோம்யேமாஸ்ஸர்வா: ப்ரஜாஸ்ஸதாயதநாஸ்ஸத் ப்ரதிஷ்டா:" ஹே ஸோமபாநத்திற்குத் தகுதியுற்றவனே! இந்த சேதநாசேதநங்களனைத்தும் ஸத் என்கிற சப்தத்தால் சொல்லப்படுகிற ப்ரஹ்மத்தை மூலமாகக்கொண்டவைகள். அதாவது அந்த ப்ரஹ்மத்தினிடமிருந்து உண்டானவைகள். அந்த ப்ரஹ்மத்தால் ரக்ஷிக்கப்படுகின்றன. அந்த ப்ரஹ்மத்தினிடம் ப்ரளய ஸமயத்தில் லயமடைகின்றன. 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம, தஜ்ஜலாநிதிசாந்த உபாஸீத' எல்லாம் அந்த ப்ரஹ்மத்தினிடத்தினின்று உண்டாகின்றன; அந்த ப்ரஹ்மத்தினிடம் லயமடைகின்றன, அந்த ப்ரஹ்மத்தால் பாதுகாக்கப்படுகின்றன, என்பதனால் ப்ரத்யக்ஷமாகக் காணப்படும் இந்த சேதநாசேதநாத்மகமான, ப்ரபஞ்சமனைத்தும் ப்ரஹ்மாத்மகமென்றல்லவோ அறிந்து சாந்தியுடையவனாக அந்த ப்ரஹ்மத்தை உபாஸிக்கக்கடவான்- என்பதுபோல. அப்படியே 'அந்த:ப்ரவிஷ்டஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா' எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாக இருக்கிற பரமபுருஷன் ப்ராணிகளுடைய ஹ்ருதய குஹையில் ப்ரவேசித்து நியமனம் செய்கிறான். 'ய:ப்ருதிவ்யாம் திஷ்டந், ப்ருதிவ்யா அந்தர:, யம்ப்ருதிவீ நவேத, யஸ்ய ப்ருதிவீ சரீரம், ய: ப்ருதிவீமந்தரோ யமயதி, ஏஷ ஆத்மாந்தர்யாம்யம்ருத:" எவன் ப்ருதிவியிலிருக்கிறானோ, ப்ருதிவிக்குள் ப்ரவேசித்திருக்கிறானோ, எவனை ப்ருதிவீ அறிகிறதில்லையோ, எவனுக்குப்ருதிவீ சரீரமோ, எவன் ப்ருதிவிக்குள் ப்ரவேசித்து நியமனம் பண்ணுகிறானோ, அவன் உனக்குஆத்மா. உனக்குள் புகுந்து உன் இந்திரியங்களை நியமனம் செய்கிறான் மோக்ஷத்தை அளிப்பவன் அல்லது அழிவற்றவன். 'ய ஆத்மநி திஷ்டந், ஆத்மநோந்தரோ யமாத்மா ந வேத, யஸ்யாத்மா சரீரம், ய ஆத்மாநமந்தரோ யமயதி, ஏஷ ஆத்மாந்தர்யாம்ம்ருத:' எவன் ஆத்மாவினிடமிருக்கிறானோ ஆத்மாவின் உள்ளே ப்ரவேசித்திருக்கிறானோ எவனை ஆத்மா அறிகிறதில்லையோ எவனுக்கு ஆத்மா சரீரமோ எவன் ஆத்மாவுக்கு உள்ளே இருந்துகொண்டு நியமனம் செய்கிறானோ; அவன் உனக்கு ஆத்மா. அந்தரிந்திரியத்தையும் பஹிரிந்திரியங்களையும் நியமனம் பண்ணுகிறவன். மோக்ஷத்தை அளிப்பவன் அல்லது அழிவற்றவன். 'ய: ப்ருதிவீமந்தரே ஸஞ்சரந்' என்று தொடங்கி' யஸ்யம்ருத்யுச்சரீரம் – யம் ம்ருத்யுர் ந வேத. ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:, தத் ஸ்ருஷ்ட்வா, ததேவாநு ப்ராவிசத், ததநுப்ரவிச்ய, ஸச்சத்யச்சாபவத்' எவன் ப்ருதிவிக்குள் ஸஞ்சரியா நின்றவனாக இருந்துகொண்டு. எவனுக்கு தமஸ்சப்தவாச்யமான ப்ரக்ருதி சரீரமோ, எவனைப்ராக்ருதி அறியாதோ. இவன் ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மா, கர்ம ஸம்பந்தமற்றவன் அத்புத ஸ்வபாவமுள்ளவன். ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களால் க்ரீடிப்பவன், நிகரற்றவன். ப்ரளயஸமயத்தில் சிதசித்வஸ்துக்கள் எல்லாவற்றாலும் அடையத்தக்கவன். அதைப்படைத்து அதையே அநுப்ரவேசித்தான். அதற்குள்

ப்ரவேசித்து சித்துக்களாகவும் அசித்துக்களாகவுமானான்-என்கிற இது முதலிய வேறு ச்ருதிகளும் ப்ரஹ்மத்திற்கும் அதைத்தவிர்த்த சிதசித் வஸ்துக்களுக்கும் சரீராத்மபாவத்தையே தாதாத்ம்ய மென்று கூறுகின்றன

ச்ருதப்ரகாசிகை—

வேறுச்ருதிகளின் விரோதத்தைக் கூறுகிறார்—தமீச்வராணும் என்று. வாக்கியமானது உத்தேச்யோபாதேய விபாகமுள்ளதாக இருக்குமேயாகில் உத்தேச்யம் அறியப்பட்டதன்றே. உபாதேயம் அதாவது விதேயமானது அறியப்படவில்லை. இந்த வாக்கியத்தில் தத் என்கிற பதமானது உத்தேச்யத்தைக் குறிக்கவந்ததல்ல, ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்களோடு கூடி இருத்தலென்கிற தன்மையானது ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களுக்கு கோசரமல்லாததால் த்வம் என்கிற சப்தமானது அந்தர்யாமியை உணர்த்துகிறதென்று சொல்லும் பக்ஷத்தில் அதற்கு உத்தேச்ய ஸமர்பகத்வம் பொருந்தாது. அந்தர்யாமியாக இருப்பவன் ப்ரத்யக்ஷம் முதலியதற்கு, விஷயமல்லாததால். ஆகையால் த்வம் சப்தத்தால் ஜீவஸாமான்யத்தை உத்தேசித்து அதற்கு தத் என்கிற பதத்தால் ப்ரஹ்மபாவம் விதிக்கப்படுகிறதென்று ஒப்புக்கொள்ளத்தக்கது. அதில் விரோதத்தால் ஸாமாநாதிகரண்யமானது விசேஷங்களொன்றுமில்லாத வஸ்துக்களின் ஐக்யத்தை உணர்த்துகிறதென்கிற அபிப்ராயத்தால் சோதனம் செய்கிறார்—' தத்த்வமஸீத்யத்ர உத்தேச்யோபாதேய விபாக:கதமிதி சேத் '' என்று. பரிஹரிக்கிறார்—நாத்ர என்று. வேறு ப்ரமாணங்களுக்கு கோசரமல்லாத அர்த்தத்திற்கு எவ்வாறு விதானமென்று கேள்வை வரின், ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களாலறியப்பட்டிருக்கிற அர்த்தத்தை விஷயமாகக் கொண்டிருக்கிற வாக்கியம் மாத்திரம் அனுவாதகமல்ல. பின்னேயோ வேறுவாக்கியங்களால் அறியப்பட்டிருக்கிற அர்த்தத்தை விஷயமாகவுடைய வாக்கியமும் அநுவாதக மென்கிற அபிப்ராயத்தால் வாக்கியாந்தர ப்ராப்தியைக் காண்பிக்கிறார்—ஐததாத்ம்யம்; என்று. இதே ப்ரகரணத்தில் முதலிலறியப்பட்டிருக்கிற நாமரூப வ்யாகரண ச்ருதியிலேயே பரமாத்மாவுக்கு சரீரமாக இருக்கிற சிதசித் வாசக சப்தங்களுககு பரமாத்ம பர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்தும் தன்மை அறியப்பட்டிருக்கிறதென்று கருத்து. அதனலென்ன வென்று கேழ்க்கப்பட்டால் சொல்லுகிறார்— அப்ராப் தேஹி என்று. அறியப்பட்டிராத அர்த்தத்தை விஷயமாகக்கொண்ட சாஸ்த்ரமானது தெரியாத விஷயத்தைத் தெறிவித்தலென்கிற ப்ரயோஜனமுள்ளதென்று பொருள். ஆதலால் அதே உத்தேச்யோபாதேய விபாகமுள்ளதே ஒழிய ப்ரக்ருதமான நிகமன வாக்கியமானது உத்தேச்யோ பாதேய விபாகமுள்ளதன்று. ஆகையால் இந்த நிகமந வாக்கியமானது நன்கு அறியப்பட்டிருக்கிற அர்த்தத்தை விஷயமாகக்கொண்டிருப்பதால் இதற்கு உத்தேச்யோபாதேய விபாகத்தோடு சேர்ந்திருத்தலில்லை என்று கருத்து.

ஐயா ! நிகமன வாக்கியத்திற்குங்கூட உத்தேச்யோபாதேயங்களின் பாகுபாட்டுடன்கூடி இருத்தல் அறியப்படுகிறது. எப்படி என்றால். ஆதலால் சப்தம் அநித்யம். ஆதலால் 'இது நெருப்புள்ளது'என்று. இந்த இடத்தில் சப்தம் பர்வதம் இவைகளை உத்தேசித்து அநித்யத்வம் அக்னிமத்த்வம் முதலியது விதிக்கப்படுகிறது. இது

யுச்தமல்ல- ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற அர்த்தத்தை விஷயமாகக்கொண்டிருக்கிற நிகமன வாக்கியத்திற்கு அறியப்பட்டிராத அர்த்தத்தை விஷயமாகக் கொண்டிருத்தல் சொல்லப்பட்டால் வ்யாகாத தோஷம் வருகிறது. ப்ரீதியோ வென்றால், விதாயக வாக்கியத்திலிருக்கிற உத்தேச்ய விதேய ஸமர்பக பதங்களின் ப்ரத்யபிஜ்ஞாநத்தினு லும் நிர்தேசவாக்கியத்தில் முன் பின்னுக இருக்கிற பதங்களின் ஸாரூப்யத்தாலும் உத்தேச்யவிதேய ப்ராந்தியே. "யத் வ்ருத்தயோக:ப்ராதம்ய மித்யாத்யுத்தேச்யலக்ஷ ணம்" என்று நீதியை அறிந்தவர்கள். அய்யா! எல்லா இடங்களிலும் உத்தே ச்யத்திற்கு அநுகுணமாகவல்லவோ *திங் விபக்தி இருக்கிறது. அதனுலே யன்றே யுஷ்மத் அஸ்மத் என்கிற இரண்டு சப்தங்களும் வேறு பதங்களோடாவது ஒன்றே டொன்ருவது ஸமாநாதிகரணங்களாக ப்ரயோகிக்கப்படுந் தருணத்தில் உத்தேச்யத்தி ற்கு அநுகுணமாக மத்யமபுருஷத்தினுடையவும் உத்தம புருஷத்தினுடையவும் வ்ய வஸ்தை காணப்படுகிறது. "த்வம் பூதாநாமதிபதிரஸி, அஹமஸ்மி ப்ரதம ஜாருத ஸ்ய". அவ்வாறே"யதக்நே ஸ்யாமஹம் த்வம், த்வம் வாஸ்யா அஹம், ஸ்யுஷ்டே ஸத் யா இஹாசிஷ:" இது முதலியவைகளில். (இந்த ச்ருதி வாக்யங்களின பொருள் ஹே அக்னியே! நான்நீயாக ஆவேனேயாகில், உன்னைப்போல் தேவதையாக ஆ வேனேயாகில், நீ நானுக ஆவாயேயாகில், என்னைப்போல் ப்ரார்த்தனையுள்ளனுக ஆவா யேயாகில் அப்பொழுது உன்னுடைய ப்ரார்த்தனைகள் யதார்த்தங்களாக ஆகும் என்று. ஆகையால் தத்த்வமஸி என்கிற இடத்திலும் மத்தியம புருஷப்ரயோகமிருப்பதால் த்வம் என்கிற பதத்திற்கு உத்தேச்ய ஸமர்பகத்வமும் தத் என்கிற பதத்திற்கு விதேய ஸமர்ப்பகத்வமும் விருப்பமில்லாதவனுல் கூட அங்கீகரிக்கத்தக்கது. இவ்வண்ண மல்ல—இரண்டு பதங்களாலறியப்பட்டிருக்கிற அர்த்தம் முன் வாக்கியத்தால் ப்ரா ப்தமாக இருப்பதால். அங்ஙனமாகில் மத்யம புருஷ நிர்தேசமானது எவ்வாறு பொ ருத்தமுள்ளதாக ஆகுமென்று கேட்கப்படுமேயானுல் மறுமொழி உரைக்கப்படுகி றது. தத் த்வம் என்கிற இரண்டு பதங்களும் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதாலும் உத் தேச்ய விதேய விபாகமில்லாமையாலும் ப்ரதம புருஷம் மத்யம புருஷம் இரண்டும் விசேஷமின்றி வருவதாக இருக்க நிகமந வாக்கியத்திற்கு ப்ராபக வாக்கியத்தை அநு ஸரிப்பது ந்யாய்யமாதலாலும் அதிலும் 'இதம் ஸர்வம்' என்று நிர்தேசிக்கப்பட்டிருக் கிற ஜகத்திற்குள்ளடங்கின சித் விசேஷங்களோடுகூடின பரமாத்மாவைச் சொல்லு கிற த்வம் என்கிறபதத்திற்கு ப்ராபக வாக்கியத்திலிருக்கிற உத்தேச்ய வாசிபதத்தால் வாச்யமான அர்த்தத்தின் ஏகதேசம் விஷயமாக இருப்பதால், அதை அநுஸரித்து மத்யமபுருஷ நிர்தேசம். வாதத்தில் வல்லவரே! 'ஐததாத்ம்ய மிதம் ஸர்வம்'என்று அசேதநத்தில் ப்ரஹ்மத்தின் அநுப்ரவேசத்தைச் சொல்லி, "தத்த்வமஸி" என்று ஜீவன் ப்ரஹ்மம் இரண்டுக்கும் ஸ்வரூபைக்ய முரைக்கப்படுகிறதென்கிற சங்கைவரின் கூறுகிறார்— இதம் ஸர்வமிதி ஸ ஜீவம் ஜகந் நிர்திச்ய என்று. ஸர்வசப்தமானது அசேதநங்களை மாத்திரம உணர்த்துகிறதல்ல. ஸங்கோசம் செய்வதற்கு ப்ரமாணமி ல்லாமலிருப்பதுடன் ஸ்வாரஸ்யத்திற்கு பங்கம் கூடாதாதலால். "ஸந்மூலாஸ்ஸோம்யே மாஸ் ஸர்வா: ப்ரஜாஸ்ஸதாயதநாஸ்ஸத் ப்ரதிஷ்டா:" என்கிற முன் வாக்கியத்தில், ஸர் வசப்தத்தால் ப்ரஜைகள் விசேஷிக்கப்பட்டிருப்பதாலும், ப்ரஜா சப்தமானது அசித் தோடு கலந்திருக்கிற சேதந விசேஷங்களைச் சொல்வதனுலும் 'இதம் ஸர்வமஸ்ருஜத'

* திங்—தாதுக்களின் மீது வரும் ப்ரத்யயம்.

இதுமுதலிய வேறுவாக்கியங்களில் விஜ்ஞானாவிஜ்ஞான சப்தங்களால் சொல்லத்தக்க சிதசிதாத்மகமான ஜகத்தை ஸர்வசப்தத்தால் நிர்தேசித்திருப்பதாலுமென்று கருத்து.

'ஐததாத்ம்யம்' என்கிற பதத்தை வ்யாக்கியானம் பண்ணுகிறார்— தஸ்யைஷ ஆத்மா என்று. 'இதம் ஸர்வம்' என்கிற இரண்டு பதங்களும உத்தேச்யத்தை உணர்த்துகின்றன- ஐததாத்ம்யம்—ஏததாத்மகத்வம் விதேயம். சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மம் காரணமாதலால் ப்ரக்ருதமாக இருந்தபோதிலுங்கூட ஏதத் சப்தமானது சித்துக்களையும் அசித்துக்களையும் காட்டிலும் விலக்ஷணமாக இருக்கிற விசேஷ்யாம்சத்தைச் சொல்லுகிறது. அர்த்தவசத்தால ப்ரஹ்மாத்மகத்வமானது ம்ருதாத்மகோ கட: என்கிற ப்ரயோகம்போல் ஸ்வரூபைக்யத்தால் உண்டுபண்ணப்பட்டதாக இருக்கலாமென்று சொல்லப்படுமேயானால் சொல்லுகிறார்—தத்ர ச ஹேதுருக்த: என்று. 'ஸதாயதநா:' என்பதனால் ஆதாராதேயபாவம் கூறப்பட்டது. இதனால் சரீரசரீரிபாவம ஸித்தித்தது. சேதனனால் தன் ஸத்தையுள்ளவரையில் தாங்கத்தக்க த்ரவ்யமன்றோ சரீரம். இந்த வாக்கியத்தில் ஹேதுத்வமானது ப்ரகாசமில்லாமலிருப்பதால் அதன் வைசத்யத்தின்பொருட்டு சொல்லுகிறார்—ஸர்வம் கலு என்று இந்த இடத்திலும் ப்ரமாணத்தினால் ஸதாயதநத்வம பலித்தது. ஸந்மூலா: என்கிற பதத்தைத்தொடக்கத்தில் கொண்டிருக்கிற வாக்கியத்தோடு அர்த்தைக்யத்தால் அந்த இடத்தில் ஸந்மூலா: என்பதனால் அந்த ப்ரஹ்மத்தினிடத்தினின்று உத்பத்தி கூறப்பட்டது. ஸத்ப்ரதிஷ்டா: என்பதனால் அந்த ப்ரஹ்மத்தினிடம் லயம் கூறப்பட்டது. ஸதாயதநா: என்பதனால் அந்த ப்ரஹ்மத்தால் ரக்ஷணமும் சொல்லப்பட்டது. அதுவும் உள்ளே ப்ரவேசித்து ப்ரசாஸநத்தால், தாரகனாக இருப்பதால் ஸ்திதிஹேதுத்வம்— "அந்த:ப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநாநாம்,ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி ஸர்வமிதம் வித்ருதம் திஷ்டதி" இதுமுதலியச்ருதிகளால் இவ்விதமாக நிச்சயிக்கப்பட்டுள்ள ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு உபாதாநத்வ, லயஸ்தானத்வங்கள் பொருந்தாதாதலால் எல்லாவற்றுக்கும் அந்த ப்ரஹ்மத்தால் ப்ராணநம் சொல்லப்பட்டிருப்பதாலும், சிதசித்துக்களை சரீரமாகக்கொண்டிருத்தல் ஸித்தித்தது. அதனால் ஸர்வசப்தமானது கார்யாவஸ்தையிலுள்ள சித்சித் சரீரகமான பரமாத்மாவைச் சொல்லுகிறது, ப்ரஹ்ம சப்தத்திற்கு ஸங்கோசமில்லாமையால் ஸ்வரூபத்தாலும ரூபத்தாலும் குணங்களாலும் எல்லை இல்லாத பெருக்கத்தைச் சொல்வதாலும் நிஷ்க்ருஷ்டமான ப்ரஹ்மத்திற்கு காரணத்வாநுபபத்தி ரூபமான அர்த்த ஸாமர்த்தியத்தாலும் ப்ரஹ்ம சப்தமானது காரணாவஸ்தையிலுள்ள சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது. இவ்வண்ணம் இரண்டு அவஸ்தைகளுடன் கூடியதும் சிதசித்துக்களை ப்ரகாரங்களாக உடையதுமான ப்ரஹ்மத்திற்கு ஏகத்வமானது ஸாமாநாதிகரண்யத்தால் ப்ரதிபாதிக்கத்தக்கதாக இருப்பதால் கார்ய காரணாவஸ்தைகளுள்ள ப்ரகாரியின் ஏகத்வம் இந்த வாக்கியத்திற்கு அர்த்தம். சிதசித் ப்ரகார விசிஷ்டத்வம் ப்ராதிபதிகத்தால் அறியத்தக்கது. இரண்டு அவஸ்தைகளுடன் கூடின வஸ்துவின் ஐக்யம் ஸாமாநாதிகரண்யத்தால் அறியத்தக்கதென்பதனால் வாக்கியபேதமில்லை. அதனால் எவ்வாறு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறதோ இதே ஸரியானது. அதற்குமேல் 'ஸர்வம் கலு' என்கிற வாக்கியத்தால் அறியப்பட்டிருக்கிற தாதாத்ம்யத்திற்கு சரீர சரீரிபாவ நிபந்தநத்வத்தை நியந்த்ருத்வம் நியாம்யத்வம் முதலியதாலும் சரீர சப்தத்தாலும் விசதமாக்குவதற்காக ச்ருதி வாக்கியங்களைக் காண்பிக்கிறார்—தத என்று. 'அந்த:ப்ரவிஷ்டச்சாஸ்தா' என்பது ஸர்வாத்ம சப்தத்திற்கு வ்யாக்கியானரூபமாயுள்ளது. இதனால் சரீராத்மபாவம் கூறப்பட்டது. உள்ளே ப்ரவேசித்து நியமனஞ்செய்யத்தக்கதாக இருத்தலன்றோ சரீரத்வம். அதை நன்கு வெளிப்படுத்துவதற்

காக உதாஹரிக்கிறார்— யः ப்ருதிவ்யாம் என்று. யः ப்ருதிவ்யாம் ய ஆத்மநி என்கிற இரண்டு பர்யாயங்களால் சேதநாசேதநங்கள் இரண்டுக்கும் பகவானை உத்தேசித்து சரீரத்வம் கூறப்பட்டது. ஆத்மநி திஷ்டந் என்று சொல்லப்பட்டால் யஜ்ஞவேதியில் நெருப்பு இருக்கிறது, எள்ளில் எண்ணெய் இருக்கிறது. என்பதுபோல ஸ்திதியானது வெளியிலிருத்தல் உள்ளே இருத்தலென்கிற இரண்டுக்கும் பொதுவாக இருத்தலால் அதை ஸ்பஷ்டமாக்குவதற்காகச் சொல்லுகிறார்— ஆத்மநோந்தர: என்று. அந்த ரோயமயதி என்பதனால் சரீரலக்ஷணம் கூறப்பட்டது. ஆதலால் அவனால் நியமிக்கத் தக்கது அவனுக்கு சரீரமென்று அர்த்தம். § சிலாபுத்ரகஸ்ய சரீரம் என்பதுபோல் இந்த நிர்தேசமல்ல. அபவாதகமில்லாமலிருக்கையில வ்யதிரேக நிர்தேச ஸ்வாரஸ்யத்திற்கு பங்கம் கூடாததால். யஸ்யப்ருதிவீசரீரம் என்று. வ்யதிரேக நிர்தேச ஸ்வாரஸ்யத்திற்கு பங்கமில்லாமையானது ப்ரகாண ஸித்தமாக இருப்பதாலும் அதற்கு அபவாதமில்லாமலிருக்கையில் அந்த இடத்திலும் ஔபசாரிகத்வத்தை ஆச்ரயிக்கக்கூடாததாலும் விருத்த தர்மங்களாக இருக்கிற $ அதிகரணாதிகர்தவ்யபாவம் வ்யாப்ய வ்யாபகபாவம் அஜ்ஞப்ராஜ்ஞபாவம் நியாம்ய நியந்த்ருபாவம் இவைகளால் ஸ்வாரஸ்ய பங்கமானது மிக்க மறுக்கப்பட்டிருபபதாலும். யம்ப்ருதிவீ நவேத’ என்பது திருஷ்டாந்தத்திற்காக சொல்லப்பட்டிருக்கிறது. எப்படி அசேதநம் அறியாதோ அப்படி சேதநனுமென்று கருத்து. ய ஆத்மநி என்கிற பர்யாயத்தினால் பரிசுத்தமான ஆத்மா பகவானுக்கு சரீரமென்று சொல்லப்படுகிறது. அசித்துடன் கலந்த சேதநவிசேஷங்களான நக்ஷத்திரங்கள், சந்திரன், சூர்யன் முதலியவைகள் பரமாத்மாவுக்கு சரீரங்களென்று தனித்துச் சொல்லப்பட்டிருப்பதால் ‘யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்’ என்று சொல்லப்பட்டிராத அசித்துடன் கலந்த ஜீவன்களும பரமாத்மாவுக்கு சரீரமென்று வேறாக சொல்லப்பட்ருப்பதாலும் பூதசப்தமானது ப்ருதிவீ முதலிய அசித்துக்களை மாத்திரம் உணர்த்துவதில் நோக்கமுள்ளதல்ல. யஸ்ய ப்ருதிவீ சரீரம், யஸ்யாபஸ்சரீரம் இது முதலிய வாக்யங்களால் ப்ருதிவீ முதலிய பூதங்கள் தனித்துச்சொல்லப்பட்டிருப்பதால். ‘யமாத்மா நவேத என்று. இவ்வளவுள்ளதென்கிற அறிவின் நிஷேதம் கூறப்பட்டது. பகவானுடைய ப்ரஸாதமில்லாவிடில அந்த பகவத் ஸ்வரூப விஷயஜ்ஞாநமானது அடைவதற்கு சக்யமாகாதென்பதாவது சொல்லப்படுகிறது. காரணாவஸ்தையிலிருப்பதும் பகவானுடைய சரீரம், சரீரியும் நாராயணனென்கிற பெயருள்ளதேவதா விசேஷமென்று ஜ்ஞாபிப்பதற்காகச்சொல்லுகிறார்— யः ப்ருதிவீமந்தரோஸஞ்சரந் என்று, ம்ருத்யு: தமஸ் சப்தத்தால் சொல்லப்படுகிற Ψ ப்ரக்ருதி-அந்த வாக்கியத்திலேயே தமஸ் சப்த ஸ்தானத்தில் ம்ருத்யுசப்தபாடமிருப்பதால், பரமாத்மாவுக்கு சரீர சரீரிபாவமானது அந்தந்த சேதநா சேதந வஸ்துக்களின் பெயரை அடைதலுக்கு ஹேதுவாக இருக்கிறதென்று சொல்லுகிறார்— தத்ஸ்ருஷ்ட்வா என்று.

---

ச்ருதாவபி— ‘‘அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஸ்ய நாமரூபே வ்யாகரவாணி’’ இதி ஹி ஹாதக்ஜீவாநுப்ரவேசேநைவ ஸர்வேஷாம் வஸ்தூநாம் ஸ்வரூபலாபமபி ப்ரதிபாதிதம் । ‘‘தஜ்ஜ

---

§ சிலாபுத்ரகம்— கல்லினால் செய்யப்பட்டிருக்கிற பாவை.

$ அதிகர்தவ்யம்— ஒன்றை ஆதாரமாக உடையவஸ்து. Ψ ப்ருக்ருதி— ஸத்வ ரஜஸ்தமோ குணங்களுக்கு ஆதாரமாக இருக்கிற ஜகத்காரணமான அசித் வஸ்து.

𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯, 𑌸𑌚𑍍𑌚 𑌤𑍍𑌯𑌚𑍍𑌚𑌾𑌭𑌵𑌤𑍍" 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌾𑌦𑍇𑌵𑍇𑌤𑍍𑌯𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌶𑍍𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌸𑍍𑌤𑍁𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌤𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌭𑌾𑌵𑌾𑌦𑍇𑌵𑍇𑌤𑍍𑌯𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌤𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌤𑍍𑌵𑍇𑌨𑍈𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌕𑍋𑌽𑌪𑌿 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌸𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌮𑌭𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 । 𑌅𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌶𑌬𑍍𑌦𑌾𑌨𑌾𑌂 𑌲𑍋𑌕𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌵𑌗𑌤𑌤𑌤𑍍𑌤𑌦𑌰𑍍𑌥𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑌿𑌧𑌾𑌯𑌿𑌤𑍍𑌵𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑌿𑌤𑌿 “𑌐𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 ‘𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿’ 𑌇𑌤𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑍇𑌨 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇 𑌉𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌃 ॥

𑌅𑌤𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑍈𑌕𑍍𑌯𑌵𑌾𑌦𑌿𑌨𑍋 𑌭𑍇𑌦𑌾𑌭𑍇𑌦𑌵𑌾𑌦𑌿𑌨𑌃 𑌕𑍇𑌵𑌲𑌭𑍇𑌦𑌵𑌾𑌦𑌿𑌨𑌶𑍍𑌚 𑌵𑍈𑌯𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑍇𑌨 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑍇𑌨 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌬𑌾𑌧𑌿𑌤𑌾𑌸𑍍𑌸𑍍𑌯𑍁𑌃 ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

இந்த இடத்திலும் அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்யநாமரூபே வ்யாகரவாணி, என்கிற ச்ருதியினுல் ப்ரஹ்மத்தை ஆத்மாவாகக்கொண்ட ஜீவன்வாயிலாக உள்ளுக்குள் ப்ரவேசத்தாலேயே எல்லாவற்றுக்கும் வஸ்துத்வமும் அந்தந்த வாசக சப்தங்களால் உணர்த்தப்படத்தக்கதன்மையும் ப்ரதிபாதிக்கப்பட்டது. தததநுப்ரவிச்ய, ஸச்சத்யச்சாபவத், என்கிற ச்ருதிவசனத்தினுல் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்தோடு துல்யமான அர்த்தமுள்ளதாக இருப்பதால் ஜீவனுக்கும் ப்ரஹ்மாத்மகத்வமென்கிற தன்மையானது ப்ரஹ்மத்தின் அநுப்ரவேசத்தாலேயே என்று அறியப்படுகிறது. ஆதலுல் சிதசிதாத்மகமான எல்லா வஸ்துக்களுக்கும் ப்ரஹ்மத்தோடு தாதாத்ம்யமானது சரீராத்ம பாவத்தாலேயே என்று அறியப்படுகிறது. ஆகையால் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்ற எல்லா வஸ்துக்களுக்கும் ப்ரஹ்மத்துக்கு சரீரமாக இருத்தலாலேயே வஸ்துத்வம் ஸித்திப்பதால் அந்த வஸ்துவை ப்ரதிபாதிக்கிற சப்தமும் அந்த ப்ரஹ்மபர்யந்தமாகவே தன்னுடைய அர்த்தத்தை உணர்த்துகிறது. ஆகையால் எல்லா சப்தங்களுக்கும் உலகத்தில் அர்த்தவிசேஷங்களில் சப்தங்களை வழங்குகின்ற ஸாமான்ய ஜனங்களுடைய வ்யுத்பத்தியினுலறியப்பட்டிருக்கிற அந்த அந்த பதங்களின் அர்த்தங்களோடுகூடின ப்ரஹ்மத்தைச்சொல்லுதல் ஸித்தமாக இருப்பதுபற்றி 'ஐததாத்ம்யமிதம் ஸர்வம்' என்று ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிற (ஸாமான்யமான) அர்

த்தத்திற்கு 'தத்த்வமஸி' என்கிற ஸாமாநாதிகாண்யத்தினுல் விசேஷத்தில் உபஸம்ஹாரம் செய்யப்பட்டிருக்கிறது.

ஆதலால் (அதாவது) ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் ச்ருதிகளால் சரீரசரீரிபாவம் சொல்லப்பட்டிருப்பதாலும் அந்த சரீரசரீரிபாவமானது நாமரூபங்களை ப்ரஹ்மமடைவதற்கு நிர்வாஹகமாக இருப்பதாலும் நிர்விசேஷவஸ்துவுக்கு ஐக்யத்தைச் சொல்பவனுக்கும் ஔபாதிகமாகவும் ஸ்வாபாவிகமாகவுமிருக்கிற பேதாபேதவாதிக்கும் பேதத்தை மாத்திரம் சொல்பவனுக்கும் வையதிகாண்யத்தாலும் ஸாமாநாதிகாண்யத்தாலும் ப்ரஹ்மாத்மபாவோப தேசங்கள் அனைத்தும் இழக்கப்பட்டவைகளாக ஆகும்.

ச்ருதப்ரகாசிகை—

ச்ருத்யந்தரங்களை அனுஸரிப்பதனுல் மாத்திரம் ஐததாத்ம்ய சப்தார்த்தம் நிச்சயிக்கப்படுகிறதில்லை, தன் ப்ரகாணத்திலிக்கிற வாக்யத்தாலுமென்று சொல்லுகிருர்— அத்ராபி என்று. இதனுல் ஜீவனைச் சொல்லுகிற சப்தத்திற்கு பரமாத்ம பர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்தும் திறமையும் ச்வேதகேதுவாலறியப்பட்டிருக்கிறதென்பது ஸித்தித்தது. ஜீவேநாத்மநா-ஜீவாத்மாக்களை சரீரமாகவுடைய என்னுல் 'வ்யாக்ரோணபூத்வாபஹவோமயாத்தா:' என்கிற ப்ரயோகத்தில்போல நாமரூபே என்கிறபதத்தை வ்யாக்யாநம் பண்ணுகிருர்— வஸ்துத்வம் சப்தவாச்யத்வஞ்ச என்று. அந்தந்த தேவன் மனுஷ்யன் முதலிய வஸ்துவாக இருத்தல்- தேவன் மனுஷ்யன் முதலிய சப்தங்களால் உணர்த்தப்படத்தக்க தன்மையுமென்று பொருள். அசித்ப்ரஹ்மம் இரண்டுக்கும் தாதாத்ம்யமானது அனுப்ரவேசத்தாலுண்டுபண்ணப்பட்டதாக இருக்கட்டும். ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்குமோ வென்ருல் ஸ்வரூபைக்யத்தாலுண்டுபண்ணப்பட்டதாகவே இருக்கலாம். ஜீவேந மயா என்று சப்தங்கள் கேழ்க்கப்படுவதனுலென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிருர்—ததநுப்ரவிச்ய என்று. அறிஞர்களுக்குள் சிறப்புற்றவரே! ஜீவனுக்குள் ப்ரவேசித்திருந்தபோதிலும் ப்ரஹ்மத்துக்கு நாமவாச்யத்வமானது வ்யாகரணத்தால் ஸித்தியாது. நாமரூபவ்யாகரண ச்ருதிக்கு நாமாக்களால் உணர்த்தப்படத்தக்க தன்மையை ப்ரதிபாதிப்பதில் கருத்தில்லாமையால். எப்படி ரூபவ்யாகரணமென்ருல் ரூபநிஷ்பாதனமாத்ரமே ஒழிய தனக்கு அந்த ரூபசப்தத்தால் உணர்த்தப்படத்தக்கதன்மையை உண்டுபண்ணுதலர்த்தமாகாதோ அப்படியே நாமவ்யாகரணமும் சப்தஸ்ருஷ்டியே ஒழிய அந்த சப்தத்தால் அறிவிக்கப்படத்தக்க தன்மையை தனக்கு ஏற்படுத்திக்கொள்ளுதலென்பதைச் சொல்லாது. இப்படியல்ல. 'தத்தேதம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்தந்நாம ரூபாப்யாம் வ்யாக்ரியத' என்கிற ஸமாந வாக்கியத்தில் ப்ரளயதசையில் உபஸம்ஹாரம் செய்யப்பட்டிருக்கிற நாமரூபங்களுடன் கூடின இதம் சப்தத்தால் சொல்லப்படத்தக்க ஜகதாத்மகமான ப்ரஹ்மத்துக்கு ஸ்ருஷ்டிதசையில் நாம ரூபங்களால் வ்யவஹரிக்கப்பட்டிருத்தல் கேழ்க்கப்படுவதால். நாமரூபாப்யாம் என்பது இத்தம் பாவத்தில் த்ருதீயை-நாமரூபங்களோடுகூடியதாக செய்யப்பட்டதென்று அர்த்தம். நாமாவோடுகூடி இருத்தலாவது நாமகர்த்ருத்வமே ஒழிய ✽நாமவாச்யத்வமல்லவென்று சொல்வது யுக்தமல்ல. § ஸம்ஜ்ஞாஸம்ஜ்ஞிஸம்பந்தத்தை

✽ நாம—சப்தம். § ஸம்ஜ்ஞி—பெயருள்ளது.

வ்யுத்பாதனம் பண்ணுகிற சப்தத்திலும் சப்தத்தை உச்சரிக்கிற புருஷனிடத்திலும் குடம் முதலிய வஸ்துக்களுக்கு போதகங்களான கடம் முதலிய சப்தங்களோடுகூடி இருத்தலென்கிற தன்மைக்கு ப்ரஸித்தி இல்லாமையால். சப்தத்தால் வாச்யமாக இருக்கிற வஸ்துவுக்கே சப்தத்துடன் சேர்ந்திருத்தலென்கிற ப்ரஸித்தி இருக்கிறது. சப்தத்தை உச்சரிக்கிறவனுக்கு சப்தத்தைக்குறித்து ‡ உபாதானத்வமில்லாமையால் நாமவிசிஷ்டத்வ ப்ரஸித்தி இல்லை. எல்லாவற்றுக்கும் உபாதானமாக இருக்கிற ப்ரஹ்மத்துக்கோவென்றால் சப்தத்தைக்குறித்து உபாதானத்வமிருப்பதால் ரூபவிசிஷ்டத்வம்போல் நாமவிசிஷ்டத்வமானது பொருத்தமுள்ளதாகஆகுமென்று சொல்லப்படுமேயானால், அல்ல- ஆகாயத்தில் கடம் முதலிய சப்தங்களோடு சேர்ந்திருத்தலென்பதற்கு ப்ரஸித்தி இல்லாமையால்- கடம் முதலிய சப்தங்களோடுகூடி இருத்தல் சொல்லப்பட்டால் ஆகாயத்திற்கு நாமித்வம் ஸ்வரஸமாக அறியப்படுகிறதில்லையன்றோ. வாச்யமாக இருப்பதால் சப்த ஸம்பந்தமுள்ள வஸ்துவினிடத்திலேயே யன்றோ ¶ நாமித்வ ப்ரதீதிக்கு ஸ்வாரஸ்யமிருக்கிறது, லக்ஷணாவ்ருத்தியினாலுங்கூட அந்த அந்த சப்தங்களால் உணர்த்தப்படத்தக்க தன்மை ப்ரஹ்மத்துக்கு ஸம்பவிக்கிறதென்று சொல்லத்தக்கதல்ல. லக்ஷணாவ்ருத்தி கௌணவ்ருத்திகளுக்கு க்ரமமாக விஷயங்களாக இருக்கிற $ கூலம் † மாணவகன் இவ்விரண்டுக்கும் முறையே கங்காபதம் அக்னிபதம் இவைகளை அபேக்ஷித்து நாமித்வ ப்ரஸித்தி இல்லாமையால். அறிஞரே! § ச்யேந சப்தத்திற்கு யாக விசேஷத்தைக்குறித்து * கௌணநாமத்வம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது, உண்மை. அது கதி இல்லாமல் ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறது. உயிரைவாங்குதலென்கிற குணம் ஸமமாக இருப்பதுபற்றி ப்ரயோகம் வேறுவிதமாக ஸித்தித்திருப்பதால். ‘யதாவை ச்யேநோ நிபத்யாதத்தே’ என்றல்லவோ ச்ருதி முக்கியமான சப்தத்திற்கேயன்றோ நாமத்வப்ரதீதியானது தானாகவே வந்திருக்கிறது. இந்த இடத்திலோவென்றால் தானாகவே ப்ராப்தமாக இருக்கிற முக்கியத்வத்திற்கு அபவாதமில்லாமையால் அதை இழப்பது யுக்தமன்று. ஆதலால் இந்த வாக்கியத்தினால் நாமவாச்யத்வமானது சப்த ஸ்வாரஸ்யத்தாலறியப்படுகிறது. இத்தோடு ஒரே அர்த்தமுள்ளதாக இருப்பதால் “நாமரூபே வ்யாகரவாணி” என்கிற இடத்திலும் ப்ரஹ்ம பர்யந்தமாக நாமரூபவ்யாகரணமே சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. மேலும் அக்ஷரங்களின் ஸ்ருஷ்டியை ப்ரதிபாதிக்கிறதென்கிற சங்கையும் உண்டாவதற்குத் தகுதியுள்ளதல்ல, நாமசப்தமானது அக்ஷரமாத்ரத்திற்கு பர்யாயமல்லாததால். ப்ரஹ்மத்தைத் தவிர்த்து மற்ற ஸமஸ்தமான அந்த அந்த பதார்த்த ஸ்வரூபவ்யாகரணோக்தியினாலேயே ஸித்தமாக இருப்பதால் ஆகாயத்திற்கு மாத்திரமுறித்ததானரூப சப்த நிஷ்பாதனமும் ரூபவ்யாகரணோக்தியினாலேயே ஸித்தமாக இருப்பதுபற்றி அதை

---

‡ உபாதானம்—அஸாதாரண காரணம்.
(அதாவது கார்ய த்ரவ்யமாக பரிணமிக்கிற காரணம்)

¶ நாமித்வம்—வாசக சப்தத்தோடு சேர்ந்திருத்தல்.

$ கூலம்—நதியின்கரை. † மாணவகன்—சிறுவன்.

§ ச்யேநம்—கோழிக்குஞ்சு முதலியதின்மீது வந்து விழுந்து கொத்திக்கொண்டு போய் அவைகளைக்கொன்று தின்கிற பறவை, அதாவது ஓர்வித கழுகு. இதை லகுடு என்பார்கள்.

* கௌணம்—குணத்தை நிமித்தீகரித்து ஏற்படும் பெயர்.

லாமையாலும் உண்மையாகவே இரண்டு தர்மங்களுக்கும் ஒரு அதிகாணத்தில் நிலை பெற்றிருத்தல் ஸம்பவிக்கிறதாக இருக்க அதை உபேக்ஷித்து அபரமார்த்தமான ஐக்ய விஷயத்வத்தை ஆச்ரயிப்பது பொருந்தாததாலும் ஐக்யம் அபரமார்த்த மென்றுசொன்ஞல் ஸாமாநாதிகரண்ய வாக்கியத்திற்கு ப்ராமாண்யம் இழக்கப்பட்டதாக ஆகிறது. ப்ரதிபாதிக்சப்படவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கிற வாக்கியம் மித்யையாக இருப்பதால். இவ்வண்ணம் அசித்துக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஸாமாநாதிகரண்யமானது ஸத்யத்திற்கும் அந்ருதத்திற்கும் ஐக்யமில்லாமையால் யுக்தமன்று. அந்தக்கரணம் சிந்மாத்ரம் இவ்விரண்டுக்கும் ஐக்யமில்லாமையால் 'ப்ரஹ்மாஹமஸ்மி' என்கிற ஸாமாநாதிகரண்யம் இசையாது. அஹம் சப்தமானது அந்தக்கரணரூபமான உபாதி விசிஷ்டமான ஜ்ஞப்தியைச் சொல்வதால் அதற்கு உபபத்தி என்று சொல்லப்படுமேயானல், அல்ல அஹம் சப்தத்திற்கு அந்தக்கரணரூப உபாதியுடன்கூடிய ஜ்ஞப்தியைச் சொல்லும் திறமை இல்லாமையால். எப்படி 'அஹம் இச்சாமி, த்வேஷ்மி' என்கிற இடத்தில் இச்சை முதலியதற்கு அஹமர்த்த விசேஷணமாக வ்யவஹாரம் வருவதால் அஹம் சப்தத்திற்கு அந்தக்கரணரூப உபாதி விசிஷ்டமான இச்சைமுதலியதைச் சொல்லும் திறமை இல்லையோ; இவ்வண்ணமே அஹம்ஜாநாமி என்கிற ப்ரயோகத்தால் அந்த அந்தக்கரணோபஹிதமான ஜ்ஞப்தியைச் சொல்லும் வல்லமை அஹம் சப்தத்திற்குப் பொருந்தாது. ஜ்ஞப்தியே ஜ்ஞப்தியினல் விசேஷிக்கப்படுகிறதில்லையன்றே. அறிகிறவன், அறியத்தக்க வஸ்து, இவைகளோடு இணைபுறியாத ஜ்ஞானம் இவைகளைவிட வேருன ஒருவொரு முயல்கொம்புபோன்ற ஜ்ஞாநமானது லௌகிகர்களுடைய புத்திக்கு கோசரமல்லாததால் அந்த ஜ்ஞாநத்தைச் சொல்லவேண்டுமென்கிற விருப்பத்தால் அஹம் சப்த ப்ரயோகமானது பொருத்தமுள்ளதாக ஆகாது. ஆகையால் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற ஸாமாநாதிகரண்யம் தகாதது இரண்டு அந்தக்கரணங்களுக்கும் ஐக்யமில்லாமையாலும், அஹம் முதலிய சப்தங்களுக்கு முற்கூறப்பட்டுள்ள நியாயத்தால் அந்தக்கரணோபஹிதமான ஜ்ஞப்திவாசித்வமில்லாமையாலும். அஹம் மனுரபவம் இது முதலிய ஸாமாநாதிகரண்யமும் பொருத்தமில்லாதது. ப்ராணன் முதலிய அசேதன வஸ்துவுக்கும் ஜீவனுக்கும் ஐக்யமில்லாமையால் 'ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா, அஹமேவேதம் ஸர்வம், மதத்ஸ்ஸர்வமஹம் ஸர்வம்' இது முதலியதும் யுக்தமல்ல. அஹம் ஹரி:, ஸர்வமிதம் ஜநார்தன: என்று ஜீவனையும் ஈச்வரனையும் சொல்லுகிற இரண்டு சப்தங்களுக்கும், அசித்தையும் ஈச்வரனையும் சொல்லுகிற இரண்டு சப்தங்களுக்கும் ஸாமாநாதிகரண்யம் யுக்தமல்ல. ஜீவன் ஈச்வரன் இவ்விரண்டும் ப்ருதிவீ முதலியவைகளும் சிந்மாத்ரத்தில் கல்பிதமாக இருப்பதால் கயிற்றில் கல்பிக்கப்பட்டிருக்கிற ஸர்ப்பம், பூமியின் பிளவு, ஜலதாரை, இவைகளைச்சொல்லுகிற சப்தங்களுக்கு ஒன்றோடொன்று ஸாமாநாதிகரண்யமில்லையன்றே. அத்யஸ்த வஸ்துக்களைச் சொல்லுகின்றவைகளான அஹம் ஹரி:ஸர்வம் இது முதலிய சப்தங்கள் அதிஷ்டானமாக இருக்கிற பரப்ரஹ்ம ப்ரதானங்களாக இருப்பதால் ஒரு அதிகரணத்தில் அதாவது ஒரு விசேஷ்யத்தில் இருத்தலென்கிற ஸாமாநாதிகரண்ய லக்ஷணம் பொருத்தமுள்ளதாக ஆகிறதென்று சொல்லப்படுமேயானல் அல்ல. ஆக்ருதியைச் சொல்லுகிற சப்தங்கள் வ்யக்திபர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்துவதுபோல அத்யஸ்த வஸ்துவைச் சொல்லுகிற சப்தங்கள் அதிஷ்டானபர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்துகின்றன வென்கிற வ்யுத்பத்தி இல்லாமையால். ரஜத (வெள்ளி) சப்தத்திற்கு சுக்தித்வத்திற்கு ஆச்ரயமான த்ரவ்யத்தைச் சொல்லும் சக்தி இருப்பதாக

வ்யுத்பத்தி இல்லை யன்றோ. அப்படிப்பட்ட வ்யுத்பத்தியின் இன்மையானது சிப்பித்துண்டு முதலியதில் ரஜதம் முதலிய சப்தங்களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தமான ரஜதத்வம் முதலிய தர்மங்களின் இன்மையால் ஏற்படுகிறது. அன்பரே! அத்யஸ்த வஸ்துக்களைச் சொல்லுகிற சப்தங்கள் அதிஷ்டானத்தில் முக்கிய வ்ருத்தியுள்ளவைகள். 'இதம் ரஜதம்' இது வெள்ளி என்கிற வ்ருத்தர்களின் வ்யவஹாரத்தை மூலமாகக்கொண்ட வ்யுத்பத்தி இருப்பதால் என்று கூறப்படுமேயானால் மறுமொழி உரைக்கப்படுகிறது, எந்த அர்த்தத்தைச் சொல்லவேண்டு மென்கிற விருப்பத்தால் சப்தப்ரயோகம் இன்றியமையாததாக ஏற்பட்டிருக்கிறதோ அந்த சப்தப்ரயோகத்திற்கு அந்த அர்த்தத்தை உணர்த்தும் திறமை நிச்சயம். அதில் இதுசொல்லத்தக்கது. அத்யஸ்த வஸ்துவைச்சொல்லுகிற சப்தத்திற்கு அதிஷ்டான பர்யந்தம் அர்த்தத்தை உணர்த்தும் திறமையுண்டு என்பதில் ப்ராந்தியுள்ளவர்களின் ப்ரயோகம் மூலமா? அல்லது அறிஞர்களுடைய ப்ரயோகம் மூலமா? முதலாவது பக்ஷம் ஸரியல்ல, ரஜதத்திலும் முன்னிலையிலிருக்கிற வஸ்துவிலும் முறையே இது அத்யாஸத்தால் விஷயீகரிக்கப்பட்டதல்ல. அத்யஸ்த வஸ்துவுக்கு அதிஷ்டானமல்ல என்கிற புத்தியினாலேயே அங்கே ரஜத சப்த ப்ரயோகமிருப்பதுபற்றி அந்த ப்ரயோகமானது அத்யஸ்தத்தைச் சொல்லுகிற சப்தத்திற்கு அதிஷ்டான பர்யந்தமாக அர்த்தத்தை உணர்த்தும் திறமையுண்டென்பதற்கு ஸாதகமாக இல்லாமையால். தேவதத்தத்வதர்மாபாவாஜ்ஞாநத்தினால் ஸம்பவிக்கிற தேவதத்த சப்த ப்ரயோகமானது தேவதத்த சப்தம் யஜ்ஞதத்தனைச் சொல்வதில் மூலமாகாதன்றோ. இரண்டாவது பக்ஷத்திலும் ரஜ்ஜுஸ்ஸர்ப்ப: (கயிர் பாம்பு) என்கிற ப்ரயோகமானது ஸர்ப்பசப்தமானது முன் அநாரோபித புத்தி மூலப்ரயோகாநுவாத ரூபமாக இருப்பதால் ஆரோபிக்கப்பட்டிருக்கிற விஷயத்தில் சக்தியை கல்பிப்பதில் மூலமாக ஆகாது.

அன்பரே! விசேஷ்யத்தை விட்டு இணைபுறியாத விசேஷணவாசக சப்தங்களுக்கு விசேஷ்ய பர்யந்தம் அர்த்தத்தை உணர்த்தும் தன்மை இஷ்டமானது. அத்யாஸத்தால் கல்பிக்கப்பட்ட வஸ்துவானது அதிஷ்டானத்திற்கு அதைவிட்டுப்பிரிக்க முடியாத விசேஷணமாக இருக்கிறது. அது இருந்தால் அவபாஸிப்பதாலும் அதில்லாவிடில் அவபாஸமில்லாமையாலு மென்று சொல்லப்படுமேயானால் அல்ல. வேறு இடத்திலிருக்கிற விசேஷணத்துக்கு முன்னிலையிலிருக்கிற வஸ்துவை உத்தேசித்து அப்ருதக் ஸித்தி இல்லாமையாலும், அக்யாதி பக்ஷத்தில் அத்யஸதம் அதிஷ்டாநம் இவ்விரண்டுமே இல்லாமையாலும், ம்ருஷாவாதி பக்ஷத்தில் மண்ணின் விவர்தமாக இருக்கிற குடம் முதலியதற்கும் அவித்யை என்கிற தோஷத்தினது விவர்தமாக இருக்கிற ரஜதத்திற்கு ஸ்வர்ணத்தைக் குறித்துப்போல முன்னிலையிலிருக்கிற வஸ்துவைக் குறித்து அப்ருதக் விசேஷணத்வ மில்லாமையாலும். ஆகையால் ஜீவேச்வர ஸாமாநாதிகரண்யம் யுக்தமன்று. மேலும், தத்த்வமஸி முதலிய வாக்கியங்களில் ப்ரஹ்மத்திற்குவாசகமாக இருக்கிற பதத்தோடு சேர்க்கைபெற்றிருக்கிற த்வம் முதலிய ஜீவவாசக பதமானது முக்கியார்த்தத்தை இழக்காமையினால் ஸமாநாதிகரணமா? அல்லது அதை இழந்ததனாலா? முதலாவது பக்ஷத்தில் வஸ்துவுக்கு ஸவிசேஷத்வமும், தோஷத்திற்கு அர்ஹமாகவும் அநர்ஹமாகவுமிருக்கிற இரண்டு வஸ்துக்களுக்கும் ஐக்யத்தின் அனுபபத்தியும். இரண்டாவது பக்ஷத்தில் ஜீவன் ப்ருஹ்மம் இந்த இரண்டுக்கும் ஐக்யம் ஸித்தியாது. ஜீவபாவம் மித்யையானதால் அதிஷ்டானமாத்ரத்திற்கு பாரமார்த்த்யமும் ஸித்தியாது. ப்ரக்ருத்யம்சத்தைச் சொல்லக் கருதப்பட்டிருகிற அர்த்தைக்யத்தை உணர்த்துவதில் முக்கியமான கருத்துள்ள ஸமாநவிபக்திக்கு

அதனல் சொல்லக்கருதப்பட்டிராத அர்த்தைக்யத்தைப்ரதிபாதிப்பதில் ஸாமர்த்திய மில்லாமையாலும், அதனல் சொல்லக்கருதப்பட்டிராத விசேஷண மித்யாத்வத்தை ப்ரதிபாதிப்பதில் ஸாமர்த்திய மில்லாமையாலும். ப்ரஹ்ருஷ்டோ ஜநபத: (தேச மானது அதிக ஸந்தோஷமுள்ளது), அக்நிர்மாணவக: (சிறுவன் நெருப்பு) என்கிற இந்த இடங்களில் ஜநபதத்திற்கும் ப்ரஹர்ஷமுள்ள வஸ்துவுக்கும், அக்னிக்கும் மாணவகனுக்கும் ஐக்யமும், ஜநபதத்வம் அக்னித்வம் இவ்விரண்டும் மித்யையானதால் அவைகளின் அதிஷ்டானமாத்ரத்திற்கு பாரமார்த்யமும் ஸித்தியாதன்றோ. ஜநபதசப்தத்தால் வாச்யமான அர்த்தத்தைவிட வேருன வெளிப்பட்டிருக்கிற அர்த்தம் லக்ஷணவ்ருத்தியினல் உணர்த்தப்படுகிறது. த்வம் சப்தத்தாலோ வென்றால் வாச்யார்த்தத்தினது ஏகதேசமானது லக்ஷணையினல் உணர்த்தப்படுகிறது, ஆதலால் அதற்கு அத்தன்மையை விதிக்கும் பக்ஷத்தில் அதிஷ்டானைக்யமும் விரோதத்தால் ஜீவபாவமித்யாத்வமும் ஸித்திக்கிறதென்று சொல்லப்படுமேயானல் அல்ல. ஜ்ஞாத்ரு பதத்தோடு ஸமாநாதிகரணங்களாக வழங்கப்படுகிற த்வம் முதலிய சப்தங்களுக்கு ஜ்ஞப்தியுடன் வையதிகரண்யத்தினல் ஜ்ஞப்தியை உணர்த்தும் தன்மை ஸித்தியாததால் வாச்யார்த்தத்தினது ஏகதேசத்தில் லக்ஷணை எவ்விததாலும் சொல்வதற்கு ஸாத்தியபபடாது. அது ஸித்தித்தாலும் அதிஷ்டானைக்யமும் இதரமான ஆகாரத்துக்கு மித்யாத்வமும் ஸித்தியாது. தூரத்திலிருக்கிற பர்வதத்திற்கு முன்னிலையில எறிகிற நெருப்பைக்கண்டு மலை நெருப்புப்பத்தி எரிகிறது என்று சொன்னல் மலைக்கும் நெருப்புக்கும் ஐக்யமும் தாழ்வரை முதலிய வேறு ப்ரதேசங்கள் மித்யையானதால் அதிஷ்டான மாத்ரத்திற்கு பாரமார்த்யமும் ஸித்தியாதன்றோ. ஆகையால் சொல்ல உத்தேசிக்கப்பட்டிருக்கிற ஏகத்வத்திற்கும் ஜீவபாவமித்யாத்வத்திற்கும் ஸித்தி இல்லை. ஆகையால் எல்லா ஸாமாநாதிகரண்யமும் ம்ருஷாவாதிகளுக்கு விருத்தம்.

ஔபாதிகமான பேதாபேத பக்ஷத்திலும் முக்கியவ்ருத்தியினல் ஸாமாநாதிகரண்யம்பொருத்தமுள்ளதாக ஆகிறதில்லை. அதை நிரூபிக்கிறோம்—அந்த ஔபாதிக பேதாபேதவாதி மதத்தில் ஈச்வரனே யன்றோ ப்ரஹ்மம். ஜீவேச்வரர்களுக்கும் அசித்தீச்வரர்களுக்கும் க்லேசம் கர்மம் முதலியவைகளுக்குத் தகுதியுற்றிருத்தல் அவைகளுக்கு தகுதியற்றிருத்தல். பரிணமத்துடன் சேர்ந்திருத்தல், பரிணமமில்லாமலிருத்தல், இப்படிப்பட்ட விருத்த ஸ்வபாவ ஸம்பந்தத்தால் அவைகளைச் சொல்லுகிற சப்தங்களுக்கு கடம் படம் முதலிய சப்தங்களுக்குப்போல ஸாமாநாதிகரண்யமில்லை. பேதம் போல அபேதமுமிருப்பதால் அதற்கு உபபத்தி என்று பகரப்படுமேயானல், அல்ல. ஏதோ ஒரு ஆகாரத்தால் ஐக்யமிருந்தபோதிலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தபாவாபாவ லக்ஷணமான விசேஷ்யாம்சபேதமானது அறியப்படா நின்றிருக்கையில் ஸமாநவிபக்திக்கு ஐக்ய ப்ரதிபாதநத்தில் ஸாமர்த்தியமில்லாமையால். எக்காரணத்தால் முதலாவதான பதத்தால் அறியப்பட்டிருக்கிற விசேஷ்யத்தைக் காட்டிலும் வேறு பதத்தால் உணர்த்தப்பட்டிருக்கிற விசேஷ்யத்திற்கு கொஞ்சங்கூட பேதத்தை ஸஹியாமலிருக்கிற அபின்னத்வமே ஸாமாநாதிகரண்யத்தால் அறியத்தக்கதாக இருக்கிறதோ அக்காரணத்தாலேயே யன்றோ கண்டம் முண்டம் இரண்டுகளுக்கும் வ்யக்தி ஜாதி ஸ்வரூபத்தாலும்,கடம் சராவம் இரண்டுகளுக்கும் கார்யகாரண ஸ்வரூபத்தாலும், கோவுக்கும் வாலுக்கும் அவயவாவயவி பாவத்தாலும், அல்லது ஏகதேச ஏகதேசி பாவத்தாலும், பின்னத்வம் போல அபின்னத்வமும் ஒப்புக்கொள்ளப்படா நின்றிருந்தபோதிலுங்கூட கண்ட: முண்ட:, கட: $ சராவ:, கௌ: § புச்சம் என்று ஸாமாநாதிகரண்யம் கிடையாது.

$ சராவம்—வாணய் அல்லது மடக்கு § புச்சம்—வால்.

அன்பரே! ஃசித் * அசித் இவ்விரண்டும் ப்ராஹ்மத்தினுடைய ஏகதேசமாதலால் சுக்ல: க்ருஷ்ண: ரக்தஃசாயம்பட: (இந்த வஸ்த்ரமானது வெளுப்பாகவும் கருப்பாகவும் சிவப்பாகவுமிருக்கிறது) என்கிற ப்ரயோகத்தில் போல'வ்யக்தம் விஷ்ணுஸ்தா வ்யக்தம் புருஷ:கால ஏவச' இது முதலிய இடங்களில் ஸாமாநாதிகரண்யம் பொருத்தமுள்ளதாக ஆகிறது. இவ்வண்ணமல்ல † அவயவாவயவிபாவமிருந்தபோதிலுங்கூட ‡ அங்குளி: புருஷ: (விரல் மனிதன்)என்று ஸாமாநாதிகரண்யம் காணப்படாமையால். அறிஞர்களுக்குள் சிறந்தவரே! சுக்லர்முதலிய சப்தங்களோடு ஒற்றுமை ஏன் இருக்கக்கூடாது?மறுமொழி உரைக்கப்படுகிறது-¶ படத்துக்கு அம்சபேதமும் சுக்லம் முதலிய சப்தங்களுக்கு படசப்த சரவணத்திற்குமுந்தி ஒன்றோடொன்று ஸாமாநாதிகரண்யத்தினது இன்மையும் இருந்தபோதிலுங்கூட § சௌக்ல்யம் முதலியவைகள் அப்ருத் ஸித்தவிசேஷணங்களாக இருப்பதால் விசேஷ்ய பர்யந்தம் அர்த்தத்தை உணர்த்துகிற சுக்லம் முதலிய சப்தங்களோடு ஒன்று சேர்ந்து சித்ர சப்தத்தால்போல் சொல்லப்பட்டிருக்கிற விசேஷ்யத்தைக்காட்டிலும் பட சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிற விசேஷ்யத்திற்கு கொஞ்சமேனும் வேற்றுமை இல்லாமையால் ஸாமாநாதிகரண்யம். வெட்டுதல் முதலிய செய்கைகளுக்கு உறித்ததான கை முதலிய அவயவங்களுக்குஅவயவியைக்குறித்து அப்ருதக்ஸித்தவிசேஷணத்வம் இல்லை. வெட்டுதல் முதலிய செய்கையிலும் இந்த்ரியங்கள் நாசமடையாமலிருப்பதாலும் அந்த அந்த $ கோளகங்கள் அந்தந்த இடத்தைவிட்டு நழுவாத ஸ்வரூபத்துடன் கூடி இருப்பதாலும். இவ்வண்ணமாகில் அருக்கப்பட்ட கை முதலிய அவயவங்களுக்குப்போல உயிர் துறந்த சரீரத்துக்கும் சிதறுதலும் நழுவாமலுமிருக்கிற ஸ்வரூபம் காணப்படுவதால் ஆத்மாவைக்குறித்து அதற்கு அப்ருதக்ஸித்தியானது ஏற்படலாமென்று சொல்லப்படுமேயானால்,அல்ல. சரீரமென்று பெயர் பெற்ற @ பூத ஸங்காதத்திற்கு சைதில்யம் ஏற்பட்ட பிறகே ஜீவாத்மா சரீரத்தைவிட்டு உத்க்ரமிப்பதால். ஜீவாத்மா சரீரத்தைவிட்டுப் போன பிறகு கிழிந்துபோன வஸ்த்ரத்தில் வஸ்த்ரமென்கிற புத்திபோல முன் சரீரத்தில் சரீரபுத்தியானது ப்ராந்திரூபமாக ஏற்படுகிறது. வெட்டுகிற ஸமயத்தில் சிதிலமாகாத அம்சங்களுடன்கூடின கை முதலிய அவயவங்களுக்கோ வென்றால் · வெட்டின பிறகு சைதில்யம் என்பது விசேஷம். ஆகையால் அதைச்சொல்லுகிற சப்தங்கள் ஹஸ்தம் முதலியதைமாத்திரம் சொல்லுகிற தன்மைவாய்ந்ததாகஇருப்பதால். ஹஸ்தம் முதலிய அவயவங்களின் ஸங்காத ஸ்வரூபியான அவயவிக்கு ஹஸ்தம் முதலியஅவயவங்களைக்காட்டிலும் வேற்றுமை இருப்பதால். வேற்றுமையின் இன்மையைக்காட்டுகிற ஏகத்வமானது ப்ரமாணவிருத்தமாதலால் ஸமாந விபக்தியானது அதைப்ரதிபாதிப்பதற்குச் சக்தியுள்ளதாக ஆகாது பெரியோரே! ஹஸ்தத்வம் முதலியதர்மங்கள் சௌக்ல்யம் முதலியவைகளைப்போல புரிக்க முடியாதவைகளாக கடத்தினுடையது போல சரீரம் முதலியவற்றின் ஒரு பக்கத்தில் அதாவது ஒரு பாகத்திலிருக்கின்றன.

---

ஃ சித்—அறிவுள்ள வஸ்து. * அசித்—அறிவில்லாதது. ஏகதேசம்—அவயவம்.
† அவயவி—அவயவமுள்ளது. ‡ அங்குளி—விறல். ¶ படம்—வஸ்திரம்.
§ சௌக்ல்யம்—வெண்ணிறம். $ கோளகம்—அமைக்கப்பட்டிருந்த ஸ்தானம்,
@ ஸங்காதம்—சேர்க்கை.

ஆகலால் சுக்ல:க்ருஷ்ண:பட: என்பதுபோல ஹஸ்த: பாத: மனுஷ்ய: என்று சொல்வது யுக்தமாகும். யுக்தியை அறியாமையால் உலகம் ப்ரயோகிக்கிறதில்லை மறுமொழி கூறப்படுகிறது. உலகத்திலுள்ள ஜனங்கள் விசேஷித்த அறிவுள்ளவர்களாக இருந்தபோதிலுங்கூட யுக்தியை அறியாதவர்களாக இருப்பதால் சுக்லம்முதலிய சப்தங்களை விசேஷ்ய பர்யந்தம் அர்த்தத்தை உணர்த்தும் தன்மை பொருந்தியவைகளாக ப்ரயோகிக்கிறார்கள். ஹஸ்தம் முதலிய சப்தங்களை அவயவிபர்யந்தங்களாக ப்ரயோகிக்கிறார்களில்லை. ஆகையால் அபிஜ்ஞர்களுடையவும் அநபிஜ்ஞர்களுடையவும் ப்ரயோகங்களுக்கு அனுகுணமாக வ்யவஸ்தாபகமான ப்ரமாணம் யுக்தி சொல்லத்தக்கது. அதைச்சொல்லுகிறார். சில அப்ருதக்ஸித்ததர்மங்கள் சிலவற்றின் ஏகதேசத்திலேயே தவறாமல் இருக்கின்றன, சிலது ஓரிடத்திலேயோ வேறு இடத்திலேயோ நியமமில்லாமலிருக்கின்றன. அவற்றுள் தவறாமல் ஏகதேசத்திலிருக்கிற தர்மவாசக சப்தங்கள் அந்த அந்த ஏகதேச பூதமாக இருக்கிற த்ரவ்யமாத்திரத்திலிருக்கின்றன- ஏகதேசமென்கிற ஜ்ஞானத்தை தவறாமல் உண்டுபண்ணுவதனுல் ஹஸ்தம் முதலியவைகள் ஏகதேசங்களென்றே அறியப்படுகிறதுகளன்றோ, ஏகதேச வ்ருத்தி நியமமில்லாத தர்மவாசக சப்தங்கள் ஏகதேசத்வ ப்ரதீதி நியமத்தை இழந்து விசேஷ்யத்தில் வர்த்திக்கின்றன. ஆகையால் சுக்லம் முதலிய சப்தங்களால் ஏகதேசத்தைவிட்டு அதற்கு ஆச்ரயமாத்திரத்தை உபஸ்தாபிப்பதால் அதனுல் உபஸ்தாபிக்கப்பட்டிருக்கிற ஆச்ரயத்தைக்காட்டிலும் படத்வாச்ரயத்திற்கு வேற்றுமை இல்லாமையால் படசப்தத்திற்கு ஸாமாநாதிகரண்யம் யுக்தமானது. ஏகதேசமாத்திரத்தை உணர்த்துகிற ஹஸ்தம் முதலிய சப்தங்களால் ஏகதேசியானது உணர்த்தப்படாமலிருப்பதுபற்றி ஹஸ்தம் முதலிய ப்ராதிபதிகங்களால் அறியப்பட்டிருக்கிற விசேஷ்யத்தைக் காட்டிலும் வேறானதால் ஸாமாநாதிகரண்யம் யுக்தமன்று. ஏதாவது ஓரிடத்தில் ஸாமாநாதிகரண்யமிருக்குமேயாகில் அந்த இடத்தில் ஹஸ்தம் முதலிய சப்தத்திற்கு அவயவியில் லக்ஷணையினுலாவது மனுஷ்யன் முதலிய சப்தங்களுக்கு அவற்றின் ஏகதேசத்தில் லக்ஷணையினுலாவது ப்ராதான்யம் முதலியதில் அபிப்ராயத்தினுல் உபசாரத்தாலாவது அது இருக்கலாம். "சித்ரம் ஆகாசம்" என்கிற இடத்திலோ வென்றால், ஆகாசத்வத்திற்கு ஸமுதாய வ்ருத்தித்வமில்லாமையால் சித்ரத்தில் புஷ்கலமாக இருப்பதால் ஏகதேசத்தில் லக்ஷணை இல்லை. ஜீவத்வம் அசித்த்வம் முதலிய தர்மங்கள் உன்மதத்தில் ப்ரஹ்மத்துக்கு நியதமான ஏகதேசத்திலிருப்புள்ளவைகளாதலால் அவைகளைச் சொல்லுகிற சப்தங்களோடு ஈச்வரனைச்சொல்லுகிற சப்தங்களுக்கு முக்கிய வ்ருத்தியினுல் ஸாமாநாதிகரண்யமில்லை

ஐயனே! தலை, கை, வயிறு, கால், சரீரம் என்று ப்ரயோகம் காணப்படுகிறது. உண்மை. ஏராளமான எல்லா அவயவங்களையும் எடுத்துக்கூறுமிடத்தில் அவயவியான சரீரமானது அந்த அவயவங்களை விட வேறிட்டதாக இல்லாமையால் ஸாமாநாதிகரண்யம் ஸம்பவிக்கிறது, ஒவ்வொன்றுக்கும் ஸாமாநாதிகரண்யமோ வென்றால் ஏகதேசத்தில் லக்ஷணை ப்ரஸங்கிப்பதால் அமுக்கியமே. இவ்வண்ணமாக சித்துக்களையும் அசித்துக்களையும் சொல்லுகிற சப்தங்களுக்குள் ஒவ்வொன்றுக்கும் ஈச்வரனைச்சொல்லுகிறபதத்தோடு ஸாமாநாதிகரண்யமானது அயுக்தமாக ஆகும். ஏகதேசங்களைச்சொல்லுகிற சப்தங்களுக்கு ஏகதேசியினிடம் சக்தி இல்லாமையால். 'வ்யக்தம் விஷ்ணுஸ்ததா வ்யக்தம், ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநிவிஷ்ணு:, பூதாநி விஷ்ணுர் புவநாநி விஷ்ணு:" என்றல்லவோ தனித்தனியாக ஸாமாநாதிகரண்யம். அவ்வண்ணமாகவே அஹம் ஸர்வம் என்று அசித்தையும் ஜீவனையும் சொல்லுகிற இரண்டு பதங்களுக்கும் ஸாமாநாதிகரண்யம் யுக்தமன்று. எல்லா இடங்களிலும் அமுக்யையான வ்ருத்தி

யினால் ப்ருஹ்மம் உணர்த்தப்படுவதனால் ஸாமாநாதிகரண்யத்தில் அதே தோஷம். முக்கியமான ஸாமாநாதிகரண்யம் ஸம்பவிக்கிறதாக இருக்க அதை விட்டு அமுக்கிய வ்ருத்தியை ஆச்ரயிப்பது ந்யாயமல்லாததால், ஸ்வபாவஸித்தமான பேதாபேதபக்ஷத்திலும் போக்தா- போக்யவஸ்து- நியந்தா இம்மூன்றும் ப்ரஹ்மத்தினுடைய அம்சமென்று ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பதால். அசித்துக்கும் ஜீவனுக்கும், அசித்துக்கும் ஈச்வரனுக்கும், ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும், ஸாமாநாதிகரண்யமானது 'கட:சராவ:' என்பதுபோல் பொருத்தமில்லாதது என்கிற இந்த விஷயமானது நிலைபெற்றது. கொஞ்சமேனும் விசேஷ்ய பேதத்தை ஸஹியாததாகவே இருக்கிற அபேதமானது ஸாமாநாதிகரண்யத்தால் அறியத்தக்கதாக இருப்பதால் அவைகளுக்கு ப்ரஹ்மஸாமாநாதிகரண்யமும் சிந்திக்கத்தக்கது. ப்ரஹ்மத்தைச் சொல்லுகிற பதங்களுக்கு ஸத்வம் த்ரவ்யத்வம் முதலிய ஸாதாரணாகாரம் ப்ரவ்ருத்தி நிமித்தமாக ஆகுமேயானால் தத்த்வமஸி என்று சொன்னால் நீ ஸத்தாக இருக்கிறாய், நீ த்ரவ்யமாக இருக்கிறாய், என்று சொல்லப்பட்டதாக ஆகலாம். அப்பொழுது உபதேசம் பயனற்றது. ஒருவனாவது நான் ஸத்தல்லவென்றாவது நான் த்ரவ்யமல்லவென்றாவது நினைக்கிறானில்லையன்றோ. வேறு ஸத்தோடு ஏகத்வமானது உபதேசிக்கத்தக்கதென்று சொல்லப்படுமேயானால் அல்ல. அந்த ஸாமாநாதிகரண்யமானது அறியத்தக்கதாக இல்லாமையால். ஸாமாநாதிகரண்யமானது முன் சொல்லப்பட்டிருக்கிற விசேஷ்யத்திற்கு வேறுபதத்தால் உணர்த்தப்பட்டிருக்கிற விசேஷணான்வயத்தை அறிவிக்கிறதேயொழிய விசேஷணத்தோடு அன்வயித்திருக்கிற வஸ்த்வந்தரத்தின் ஐக்யத்தை அறிவிக்கிறதில்லையன்றோ. "ப்ராஹ்மணஸ்த்வமஸி" (நீப்ராஹ்மணனாக இருக்கிறாய்,) என்று சொல்லப்பட்டால், த்வம் சப்தத்தால் குறிக்கப்பட்டிருப்பவனுக்கு வேறு ப்ராஹ்மணனோடு ஐக்யமானது சொல்லப்பட்டதாக ஆகிறதில்லையன்றோ. பின்னையோ அவனுக்கு ப்ராஹ்மணத்வ விசேஷணத்தோடு வைசிஷ்ட்யமே ப்ரதிபாதிக்கப்பட்டதாக ஆகிறது. ஆகையால் சொல்வதற்கு விரும்பப்பட்டிருக்கிற ஐக்யத்தின் ஸித்தி இல்லாமையால் உபதேசம் பயனற்றதே. அம்சவிசேஷண ஸாதாரணாகாரம் ப்ரவ்ருத்திநிமித்தமாகில், அப்பொழுது ப்ரஹ்மம் முதலிய சப்தங்களுக்கு அதைவிட வேறான அம்சவாசியான பதத்துடன் ஸாமாநாதிகரண்யத்தில் விரோதம் உண்டாகும். எப்பொழுது நிரதிசய ப்ருஹத்வம் ப்ரவ்ருத்தி நிமித்தமோ அப்பொழுது தத்த்வமஸி என்று சொன்னால் நிரதிசய ப்ருஹத்தாக நீ இருக்கிறாய் என்று சொல்லப்பட்டதாக ஆகும். அப்பொழுது அணுவாக இருக்கிற ஜீவனுக்கு நிரதிசய ப்ருஹத்த்வ குண விரோதம். நீ நிரதிசயமான ப்ருஹத் வஸ்துவின் அம்சமென்று அர்த்தங்கொண்டால் ஏகதேசத்தில் லக்ஷணை. ப்ரஹ்ம சப்தத்திற்கு ப்ருஹத்தாக இருக்கிற வஸ்துவின் ஏகதேசம் முக்கியார்த்தமல்லவன்றோ. இவ்வண்ணம் அஸாதாரணமாக இருக்கிற வேறு ஆகாரத்தை ப்ரவ்ருத்தி நிமித்தமாகக் கொண்டாலும் அனுபபத்தியானது காணத்தக்கது. ஆகையால் மூன்று குத்ருஷ்டிகளுக்கும் விருத்தமாக இருக்கிற ஸாமாநாதிகரண்யமானது பாஷ்யகாரருடைய பக்ஷத்திலேயே முக்கியம். வேறு வ்யாக்யானங்களில் சொல்லப்பட்டிருக்கிற நிர்வாஹத்தைவிட உம்மால் சொல்லப்பட்டிருக்கிற நிர்வாஹத்திற்கு என்ன வேற்றுமை? மேலும், ஆத்மபேதம் ஸித்தித்தாலன்றோ சரீர சரீரிபாவம், அதே இல்லை. காலவிசேஷத்தில், ஐக்யம் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால். 'புருஷம்சாப்யுபாவேதௌவியேதே பரமாத்மநி; ஸகாசாதாத்ம நஸ்தத்வதாத்மாந: ப்ரபவந்திஹி' இது முதலிய வாக்கியங்களால் சித் அசித் இரண்டுக்கும் உத்பத்தியும் ப்ரளயமும் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதாலும் கார்யம் காரணம் இரண்டும் ஒரே த்ரவ்யமாக இருப்பதாலும் ஒரே வஸ்துவானது சரீரமாகவும் சரீரியாகவும் ஆகாதன்றோ.

अत्रेदं तत्त्वम् — अचिद्वस्तुनः चिद्वस्तुनः परस्य च ब्रह्मणः भोग्यत्वेन भोक्तृत्वेन चेशितृत्वेन च स्वरूपविवेकमाहुः काश्चन श्रुतयः — "अस्मान्मायी सृजते विश्वमेतत्तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः" "मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम्" "क्षरं प्रधानममृताक्षरं हरः क्षरात्मानावीशते देव एकः"; अमृताक्षरं हर इति भोक्ता निर्दिश्यते, प्रधानमात्मनो भोग्यत्वेन हरतीति हरः । "स कारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः" "प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेशः" "पतिं विश्वस्यात्मेश्वरं शाश्वतं शिवमच्युतम्" "ज्ञाज्ञौ द्वावजावीशनीशौ" "नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान्" "भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा" "तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति" "पृथगात्मानं प्रेरितारं च मत्वा जुष्टस्ततस्तेनामृतत्वमेति" "अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीं प्रजां जनयन्तीं सरूपाम् । अजो ह्येको जुषमाणोऽनुशेते जहात्येनां भुक्तभोगामजोऽन्यः" "समाने वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः । जुष्टं यदा पश्यत्यन्यमीशमस्य महिमानमिति वीतशोकः" इत्याद्याः॥

स्मृतावपि — "अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् । जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥" "सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् । कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः । भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥" "मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् । हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥" "प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।" "मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधा-

[illegible]

---

ஸ்ரீபாஷ்யம்—

இந்த இடத்தில் இது உண்மையென்று அறியத்தக்கது. மேலே உதாஹரிக்கப்படப்போகிற சில ச்ருதிகள் அசித் வஸ்துவுக்கும், சித் வஸ்துவுக்கும் பரப்ரஹ்மத்துக்கும் முறையே போக்யத்வம் போக்த்ருத்வம் ஈசித்ருத்வம் என்கிற அஸாதாரண குணங்களால் ஸ்வரூபத்தின் பாகுபாட்டைக் கூறுகின்றன. 'அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விச்வமேதத்தஸ்மிம்ச்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:' (இதன் பொருள்—ஆச்சர்ய சக்தியுள்ள பரமபுருஷன் இவ்வுலகமனைத்தையும் இந்த ப்ரக்ருதியினின்று உண்டுபண்ணுகிறான். அதில் அந்த ப்ரக்ருதி கார்யமான ஸம்ஸாரத்தில் பரம புருஷனைவிட வேறாக இருக்கிற பரதந்த்ரசேதனனான ஜீவன் மாயையினால் (கர்ம பந்தத்தால்) கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறான்.) மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேச்வரம் - க்ஷரம் ப்ரதானமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநா வீசதே தேவ ஏக:' இவைகளின் பொருள்- ப்ரக்ருதியை மாயையென்றும் மஹேச்வரனை மாயையையுடையவ னென்றும் அறியவேண்டும். க்ஷரமென்பது ப்ரதானம்-ப்ரதானத்தை தனக்கு போக்யமாக ஏற்றுக்கொள்பவனான ஜீவாத்மா அக்ஷர சப்தவாச்யன், அழிவற்றவன், நிகரில்லாதவனான பரமபுருஷன் ப்ரதானத்திற்கும் ஜீவாத்மாவுக்கும் §நியந்தாவாக இருக்கிறான்) "அம்ருதாக்ஷரம் ஹர:" என்று ♆ போக்தா நிர்தேசிக்கப்படுகிறான். ப்ரதானத்தை தனக்கு போக்ய வஸ்துவாக ஸ்வீகரிப்பவனாதலால் ஜீவாத்மா ஹரன் என்று சொல்லப்படுகிறான். 'ஸகாரணம் கரணாதிபாதிபாதிபோ ந சாஸ்ய கச்சிஜ்ஜநிதா ந சாதிப:" (அந்த பரமபுருஷன் எல்லாவற்றுக்கும் காரணம். இந்த்ரியங்களுக்கு அதிபதியாக இருக்கிற ஜீவனுக்கும் அவன் தலைவன். இவனை உண்டு பண்ணினவன் யாருமில்லை. இவனுக்குத்தலைவன் ஒருவனுமில்லை) 'ப்ரதான க்ஷேத்ரஜ்ஞபதிர் குணேச:' - ப்ரக்ருதிக்கும் க்ஷேத்ரஜ்ஞனென்கிற ஜீவனுக்கும் அவன் இறைவன். குணங்களால் பெருமை வாய்ந்தவன். பதிம்விச்வஸ்யாத்மேச்வரம் சாச்வதம் சிவமச்யுதம் (உலகமனைத்துக்கும் ரக்ஷகனாக இருப்பவனும் தனக்குத்தானே இறைவனாக இருப்பவனும் நித்யனும் மங்களகரனும் பக்தர்களை ரக்ஷிக்கிற விருதத்தினின்று நழுவாதவ

---

§ நியந்தா—அதிபதி அல்லது தலைவன். ♆ போக்தா—அனுபவிக்கிறவன்.

னும்) ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீசநீசௌ. (ஜ்ஞாநாச்ரயனுகவும் ஜடமாக யிருக்கிற ஜீவனும் ப்ரக்ருதியும் அஜ சப்தத்தால் சொல்லப்படுகின்றன. இவ்விரண்டுக்குள் ஜீவன் ப்ரக்ருதிக்கு போக்தாவாக இருப்பதால் ஈசன். அவனுக்கு உடன்பட்டிருப்பதால் ப்ரக்ருதியானது பாதந்த்ரவஸ்து). நித்யோ நித்யாநாம் சேதநஸ்சேதநாநாம் ஏகோபஹூநாம்யோவிததாதிகாமான் (ஒரு நித்யனுன சேதனன் நித்யர்களான அநேக சேதனர்களுக்கு காமங்களை (அபீஷ்டங்களை) உண்டு பண்ணுகிருன்). போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்சமத்வா- (கர்மபலன்களுக்கு போக்தாவாக இருக்கிற ஜீவன் போக்யமான ப்ரக்ருதியையும் நியந்தாவான பரமாத்மாவையும் நினைத்து) தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி அநஸ்நன்னன்யோ஽பிசாகசீதி- (அந்த இரண்டு சேதனங்களுக்குள் ஒரு சேதனன் அதாவது.ஜீவன் கர்மபலனைருசியுடன் அனுபவிக்கிருன். மற்ருெருவன் அதாவது பரமாத்மாவானவன் கர்மபலனை அனுபவியாமல் ஸாக்ஷியாக இருந்துகொண்டு அபிமுகமாகப்ரகாசிக்கிருன்). ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்சமத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி- (ஜீவனையும் ப்ரேரகனுன பரமாத்மாவையும் வேறுபட்டிருப்பவர்களென்று எண்ணி உபாஸித்து அப்படிப்பட்ட உபாஸனத்தினுல் ப்ரஸன்னனுனபரம புருஷனுல் ப்ரீதியுடன் கடாக்ஷிக்கப்பட்டிருக்கிற ஜீவன்மோக்ஷத்தை அடைகிருன்). அஜாமேகாம் லோஹித சுக்லக்ருஷ்ணாம் பஹ்வீம்ப்ரஜாம் ஜநயந்தீம் ஸரூபாம் - அஜோஹ்யேகோ ஜுஷமாணே஽நுசேதே ஜஹாத்யேநாம் புக்தபோகாமஜோன்ய: - (சிவப்பு, வெளுப்பு கருப்பு நிறங்களுள்ளதும் அதாவது ரஜஸ் ஸத்வம் தமஸ் என்கிற முக்குணங்களுள்ளதும் தனக்கு ஸமானமான அனேக கார்யங்களை உண்டுபண்ணுகிறதும் ஒப்பற்றதும் நித்யமாயுமிருக்கிற ப்ரக்ருதியை பிறப் பில்லாதவனுன ஒருவன் ஜீவன் ப்ரீதியுடன் கூடினவனுக அனுபவிக்கிருன். ஜீவவர்க்கங்களாலனுபவிக்கப்படும் போகங்களுக்கு ஆஸ்பதமாக இருக்கிற இந்த ப்ரக்ருதியைபிறப் பிறப்பில்லாதவனுன மற்ருெருவன் அதாவது பரமாத்மா கொஞ்சமேனும் தனக்கு ஸம்பந்தமின்றி இழந்து விடுகிருன்). 'ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ அநீசயா சோசதி முஹ்யமாந:-ஜுஷ்டம் யதாபஸ்யத்யந்யமீசமஸ்ய மஹிமாநமிதி வீதசோக: (ஒரு சரீரத்திற்குள் ஜீவன் ப்ரவேசியாநின்றவனுக ப்ரக்ருதியினுல் மயக்கப்படாநின்றுகொண்டு அதில் பரமபோக்ய புத்தியினுல் அமிழ்ந்து துக்கத்தை அனுபவிக்கிருன். அவ்வண்ணம் துக்கானுபவமுள்ள ஜீவன் எப்பொழுது தன்னைவிட விலக்ஷணனுகவும் தனக்கு நியந்தாவாகவுமிருக்கிற அந்த பரம புருஷனையும் அவனுடைய மஹிமையையும் நன்கு உணர்கிருனே அப்பொழுது இவன் ஸம்ஸாரதுக்கத்தை இழந்தவனுக ஆகிருன்.)

ஸ்ம்ருதியிலுங்கூட அதாவது பகவத்கீதையிலுங்கூட 'அஹங்கார இதீயம்மே பின்னு ப்ரக்ருதி ரஷ்டதா-அபரேயமிதஸ்த்வ ந்யாம் ப்ரக்ருதிம் வித்திமே பராம் - ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் - ஸர்வ

பூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்திமாமிகாம்—கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம், ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமிபுந:புந:- பூதக்ராம மிமம் க்ருத்ஸ்நமவசம் ப்ரக்ருதேர்வசாத்—மயாத்யக்ஷேண ப்ரக்ருதிஸ்ஸூயதே ஸசராசரம்- ஹேதுநாநேந கௌந்தேய ஜகத்விபரிவர்ததே- ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்த்யநாதீ உபாவபி' மமயோநிர்மஹத் ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம்-ஸம்பவஸ்ஸர்வபூதாநாம் ததோபவதிபாரத- என்று- (இந்தஈலோகங்களுக்கு ப்பொருள்-கந்தம் முதலிய குணங்களுடன் கூடினப்ருதிவீ ஜலம்முதலிய பஞ்சபூதஸ்வரூபத்தாலும் மனதுமுதலிய பதினொருஇந்திரியஸ்வரூபத்தாலும் மஹதஹங்கார ரூபத்தாலும் எட்டுவிதமாக பிறிக்கப்பட்டிருக்கிற ப்ரக்ருதியை என்னுடையதென்று அறிவாயாக- இது என்னுடைய அப்ராதான ப்ரக்ருதி. ஹேபாஹுபல முள்ளவனே! இந்தசேதந போக்யையான அசேதந ப்ரக்ருதியைக்காட்டிலும் விஜாதீயமான ஆகாரத்துடன்கூடியதும் அந்தஅசேதந ப்ரக்ருதிக்கு போக்த்ரியாக இருப்பதால் ப்ரதானமாக இருப்பதும் சேதநஸ்வரூபிணியுமான ப்ருதியையும் என்னுடையதென்று அறிவாயாக- எதனால் இந்த அசேதநமாக இருக்கிற உலகமனைத்தும் தரிக்கப்படுகிறதோ- ஹே குந்தீ புத்ர! ஸ்தாவர ஜங்கமாத்மகமான எல்லாபூதங்களும் எனக்கு சரீரமாக இருப்பதும் தமஸ் சப்தத்தால் சொல்லத்தக்கதும் நாமரூபவிபாகாநர்ஹமாகவுமிருக்கிற என்னுடைய ப்ரக்ருதியை நான்முகனுடைய ஆயுள் முடிவடையும் தருணத்தில் (என் ஸங்கல்பத்தால்) அடைகின்றன அதாவது ஸ்தூலமான ப்ரபஞ்சமனைத்தும் ஸூக்ஷ்மமான ப்ரக்ருதியில் லயமடைகின்றன. நான் அவைகளை மீண்டும் கல்பத்தின்தொடக்கத்தில் ஸ்ருஷ்டிக்கிறேன். என்னுடையதாகவும் விசித்திர பரிணாமமுள்ளதுமான, ப்ரக்ருதியை எட்டு விதமாக பரிணமிக்கச்செய்து ஜகன்மோஹினியாகவும் குணமயியாகவுமிருக்கிற ப்ரக்ருதிக்கு வசப்பட்டிருந்ததால் அஸ்வதந்த்ரமாக இருக்கிற தேவதிர்யங் மனுஷ்ய ஸ்தாவராத்மகமாக நான்குவிதமாய் பிறிவடைந்திருக்கிற இந்த பூதக்ராம மனைத்தையும் நான் மறுபடியும் மறுபடியும் அந்த அந்த ஸமயத்தில் ஸ்ருஷ்டிக்கிறேன். ஆதலால்க்ஷேத்ரஜ்ஞர்களுடைய கர்மங்களுக்குத்தக்கபடி என்னுடைய ப்ரக்ருதியானது ஸத்யஸங்கல்பனும் தலைவனுமான என்னால் கடாக்ஷிக்கப்பட்டதாக இருந்துகொண்டு சராசரங்களுடன்கூடின உலகத்தை உண்டுபண்ணுகிறது. ஹேகுந்தீ நந்தன! இந்தக்ஷேத்ரஜ்ஞ கர்மாநுகுணமான என்னுடைய ஈக்ஷணரூபமான ஹேதுவினாலன்றோ உலகமானது அடிக்கடி தோன்றுவதும் மறைவதுமாக இருந்துகொண்டு சுழன்று வருகிறது. ப்ரக்ருதி, புருஷசப்தவாச்யனான ஜீவன், இவ்விரண்டையும் அநாதியாக இருப்பவைகளாக அறிவாயாக. பாரதவம்சத்திலுதித்தவனே! ஸ்தூலரூபமாக இருக்கிற எல்லா உலகத்துக்கும் காரணபூதமான என்னுடைய காரணாவஸ்தையிலுள்ள தமஸ் சப்தத்தால் சொல்லத்தக்க யாதொரு ஸூக்ஷ்ம ப்ரக்ருதியுண்டோ அந்த அசேதந ப்ரக்ருதியினிடம் சேதந புஞ்ஜ ரூபமான கர்ப்பத்தைநான்

உண்டு பண்ணுகிறேன். அதனால் பிரமன் முதலாகவும் புல் ஈறாகவுமிருக்கிற எல்லா பூதங்களும் உண்டாகின்றன. ஜகத்துக்குக்காரணமாக இருக்கிறதும் மஹத்தான ப்ரபஞ்சரூபமாக பரிணாமசக்தியுள்ளதுமான என்னுடைய ப்ரக்ருதி என்று பெயருள்ள பூத ஸூக்ஷ்மரூபமான யாதொரு அசித் வஸ்துவுண்டோ அதில் சேதநனென்று பெயருள்ள கர்ப்பத்தை நான் சேர்ப்பிக்கிறேன், அவ்வண்ணமாக என்னால் செய்யப்பட்டுள்ள சிதசித் ஸம்ஸர்க்கத்தால் தேவன் முதலாக ஸ்தாவரம் ஈறாக அசித்துக்களுடன் சேர்க்கை பெற்ற எல்லா பூதங்களுக்கும் ஸம்பவமுண்டாகிற தென்று அர்த்தம்.

---

ச்ருதப்ரகாசிகை—

ஏகையால் ஸ்வரூபபரிணாம பக்ஷத்தாலேயே நிர்வாஹம் சிறப்புற்றதென்கிற ஸந்தேஹத்தை பரிஹரிப்பதற்காகவும்,எல்லா ச்ருதிகளுக்கும் முக்கியார்த்தத்வத்தை ஜ்ஞாபிப்பதற்காகவும் அந்தந்த இடங்களில் சிதருண்டதாக சொல்லப்பட்டிருக்கிற அர்த்தங்களை ஒன்று சேர்த்துக் காட்டுவதனால் அநாயாஸமாக அவைகளை மனதினால் க்ரஹிப்பதற்காகவும் தொடங்குகிறார்- **அத்ரோதம் தத்வம்** என்று. ‘போக்யத்வேந போக்த்ருத்வே ந ச’ என்கிற இடத்திலுள்ள ச சப்தமானது விசேஷமின்றி ஈசிதவ்யங்களாக இருப்பதுபற்றி அவ்விரண்டுக்கும் ஒரு கோஷ்டியில் ப்ரவேசத்தைக் காட்டுகிறது. அஸ்மாந்மாயீ என்கிற இடத்தில் மாயாசப்தத்தின் பொருளை நிர்ணயம் செய்வதற்காக எடுக்கிறார்—**மாயாந்து ப்ரக்ருதிம்** என்று. அன்ய சப்தத்தால் சொல்லத்தக்கவன் ஆத்மா என்பதை வெளிப்படுத்துவதற்காகச் சொல்லுகிறார்— **க்ஷரம் ப்ரதானம்** என்று. ப்ரக்ருதமான அர்த்தத்தைவிட வேறுபொருளை உணர்த்துவதில் இந்த சப்தத்திற்கு ப்ரஸித்தி அதிகமாதலால் அந்த அப்ரக்ருதார்த்த விஷயமான ப்ரமத்தைப்போக்குவதற்காக ஹர சப்தத்தை வ்யாக்கியானம் பண்ணுகிறார்— **ப்ரதானம்** என்று. இந்த இடத்தில் -‘வ்யக்தா வ்யக்தம் பரதேவிச்வமீச:’என்கிற முந்தின வாக்கியத்தில் ச்ரவணமிருப்பதால் தார்யத்வதாரகத்வ ரூபமான பேதமும் ஸித்தித்தது. ஈச்வர ஈசிதவ்யதா ரூபமான பேதத்தையும் காண்பிக்கிறார்—**ஸகாரணம்** என்று. காரணாதிபாதிபசப்த வ்யாக்கியானத்தின் அர்த்தத்தைக் கூறுகிறார்— **ப்ரதான** என்று. குணேச:- ஸத்வம் ரஜஸ்தமஸ் என்கிற குணங்களுக்கு நியந்தாவாக இருப்பவர். தனக்கு மேலான அதிகாரி இல்லை என்பதைக் காண்பிக்கிறார்—**பதிம்** என்று. இதனால் சேஷசேஷித்வ ரூபமான பேதமும் ஸித்தித்தது. ரக்ஷணமென்கிற க்ரியையை உணர்த்துகிற ‘பா’ தாதுவினின்று நிஷ்பன்னமாக இருப்பதால் பதி சப்தமானது ரக்ஷகனைச் சொல்லுகிறது, சேஷியைச்சொல்லுகிறதில்லை என்று சொல்லத்தக்கதல்ல. சேஷியினிடத்தில் இந்த பதி சப்தம் ரூடமாக இருப்பதால். அங்ஙனமில்லாவிடில் ‘கமேர்டோ:’ என்று டோப்ரத்யயாந்தமானகமிதாதுவினின்று நிஷ்பன்னமாக இருப்பதால் கோ சப்தமானது மனுஷ்யன் முதலியதற்கு வாசகமாக ஆகவேண்டியதாக ஏற்படும். நடையுள்ள எல்லா வஸ்துக்களிலும் ப்ரயோகமில்லாமையாலும் நின்றுகொண்டிருக்கிற கோவினிடத்திலும் கோ சப்தம் ப்ரயோகிக்கப்படுவதாலும் அங்கு ரூடி சக்தியானது ஆச்ரயிக்கப்படுகிறதென்று சொல்லப்படுமேயானால் இவ்வண்ணமாகவே, வ்ருத்தௌச

மாதாபிதரௌ ஸாத்வீபார்யாஸுத: சிசு: - அப்யகார்ய சதம் க்ருத்வா பர்தவ்யா மனு ரப்ரவீத், இதன் பொருள்— வயதுசென்றவர்களாக இருக்கிற தாய் தந்தைகளையும் பதிவ்ரதையாக இருக்கிற மனைவியையும் சிறுவனாக இருக்கிற புத்திரனையும் பற்பல அகார்யங்களைச் செய்தாவது காப்பாற்றவேண்டுமென்று மனு சொல்லி இருக்கிறார்- என்கிற நியாயத்தால் மாதா பிதாக்களை ரக்ஷிக்கிற புத்திரனிடத்தில் பிதா முதலியோர் களை அபேக்ஷித்து, பதிசப்த ப்ரயோகமில்லாமையாலும், வாஸக்ருஹம் முதலியவை களை ரக்ஷிக்காமலிருந்தபோதிலும் ஸ்வாமியினிடம் பதிசப்த ப்ரயோகத்தாலும் சேஷி யினிடம் பதி சப்தம் ரூடமாக இருக்கிறது. அப்படியே 'தாஸபூதாஸ்ஸ்வத ஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:-' இதன் பொருள்- எல்லா ஜீவாத்மாக்களும் பரமாத்மாவுக்கு தானாகவே அடிமை செய்பவர்கள் அப்படியே- நந்தவ்ய: பரமச்சேஷீசேஷாநந்தார ஈரிதா: - நந்த்ரு நந்தவ்யபாவோயம் ந ப்ரயோஜந பூர்வக:. (இதன் பொருள்- தனக்கு மேல்பட்டவனில்லாத சேஷியாக விளங்குகிற ஸ்ரீமந்நாராயணன் நமஸ்கரிக்கத்தக்க வன். மற்றவர்கள் வணங்குகிறவர்களென்று சொல்லப்பட்டிருக்கிறார்கள்) இந்த நமஸ் கரிக்கிறவனாக இருத்தலும் நமஸ்கரிக்கப்படுகிறவனாக இருத்தலென்கிற தன்மையும் ப்ரயோஜநத்தை முன்னிட்டு ஏற்பட்டதல்லவென்று தாஸசேஷ சேஷி சப்தங்களின் ப்ரயோகமானது $ பகவத்சாஸ்த்ரங்களில் காணப்படுகிறது. பதி முதலிய சப்தங்க ளில்லாமலிருந்தபோதிலுங்கூட 'வ்ரீஹீந் ப்ரோக்ஷதி''(பொருள்— நெல்லுகளை சுத்த தீர்த்தத்தால் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ப்ரோக்ஷணம் செய்கிறான்) இது முதலிய இடங்களில் த்விதீயாவிபக்தி கேழ்க்கப்படுவதால் ப்ரோக்ஷணம் முதலிய வற்றுக்கு வ்ரீஹி முதலியவைகளைக்குறித்து சேஷத்வம் போல ''யஸ்யாத்மாசரீரம்'' இது முதலியதால் ஜகத்துக்கு பரமாத்மாவைக்குறித்து சரீரத்வமானது அறியப்பட்டி ருப்பதாலும்,சரீரத்துக்கு பரப்ரயோஜனத்தின் பொருட்டே இருத்தலென்கிற ஸ்வபா வம் ''ஸங்காத: பரார்த்தத்வாத்'' இது முதலியவைகளால் ப்ரஸித்தமாக இருப்பதாலும் ஜகத் ப்ரஹ்மம் இரண்டுக்கும் சேஷ சேஷிபாவம் ஸித்தித்தது. ஆகையால் எவ்வாறு அர்த்தம் இங்கு கூறப்பட்டிருக்கிறதோ இதே ஸரியானது. வேறுவிதத்தாலும் பேத த்தின் ஸித்தியைக் காண்பிக்கிறார்—ஜ்ஞாஜ்ஞௌ ஒன்று. உத்பத்தி ப்ரளயபாவ ப்ரதி பாதனத்தைக் காண்பிக்கிறார்—நித்யோ நித்யாநாம் என்று. வேறு ஆகாரத்தாலும் பேதத்தைச் சொல்லுகிறார்—போக்தா என்று. பகவானுக்கு தோஷ லேசஸம்பந்த த்தின் இன்மையைக் காண்பிக்கிறார்— தபோ: என்று. பேதஜ்ஞானமானது மோக்ஷத்தி ற்கு ஹேதுவென்று கூறுகிறார்—ப்ருதக் என்று. முக்தியில் பேதத்தைச்சொல்லுகிறார்— அஜாம் என்று. ஜீவன் ஈச்வரன் இருவர்களுக்கும் தன் படியாகவே இருக்கிற பேதத் தையும் விசேஷங்களுடன் சேர்ந்திருத்தலையும் ஸ்பஷ்டமாக்குவதற்காகச் சொல்லு கிறார்—ஸமாநே என்று ப்ருதக்த்வ ஜ்ஞானமே மோக்ஷோபாய மென்பதில் கருத்து ள்ள இரண்டு வாக்கியங்களின் மத்தியில் 'அஜாமேகாம்' என்கிற பதங்களைத்தொடக்க த்தில் கொண்ட வாக்கியம் எடுக்கப்பட்டிருக்கிறது. ஸமாநே வ்ருக்ஷே, அஜாமேகாம், என்கிற வாக்கியங்களுக்கு ப்ரதானமாக இருத்தல் ப்ரஸங்கத்தால் வருதலென்கிறகுண ங்களின் ஸாம்யத்தால், ஜுஷ்டம் - ப்ரீதியுடையவனை.

ஸம்ருதாவபி என்று. எட்டு விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிற ப்ரக்ருதியானது என்னுடையது என்கிற இந்த வசநத்தினால் காரணாவஸ்தையிலும் பேதம் ஸித்தித்தது.

---

$ பகவத் சாஸ்த்திரம்—பாஞ்சராத்ர சாஸ்திரம்.

கல்பக்ஷயத்தில் என்னுடையதான ப்ரக்ருதியை அடைகின்றன என்கிற இடத்திலும் அப்படியே. 'ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி' என்கிற இடத்திலும் அதன் ஸித்தி. 'மயாத்யக்ஷேண' என்கிற இடத்திலோவென்றால் ஸ்வபாவங்களின் அஸாங்கர்யமும் காரணாவஸ்தையில் பேதமும் ஸித்திக்கின்றன. 'ப்ரக்ருதிம்' என்கிற இடத்தில் அநாதித்வமானது கண்டோக்தமாக இருக்கிறது. 'மமேதி' என்கிற இடத்திலுங்கூட காரணாவஸ்தையில் பேதஸித்தி ஏற்படுகிறது. உதாஹரிக்கப்பட்டிருக்கிற ஸ்ம்ருதிவசநங்களில் வ்யாக்கியானம் செய்யத்தக்க அம்சத்தை வ்யாக்கியானம் செய்கிறார்—ஜகத்யோநி என்று. ஜகத்யோநி சப்தத்தால் 'த்ரிகுணம் தஜ்ஜகத்யோநி:' என்கிற வசனம் நினைக்கும்படி செய்விக்கப்படுகிறது. கார்யாவஸ்தையை வ்யாவ்ருத்திப்பதற்காக பூதஸூக்ஷ்மமென்று உரைக்கப்பட்டது.

---

ஏவம் ஸூக்ஷ்மஸ்தூலபேதேநாவஸ்திதயோஸ்ஸர்வாவஸ்தாவஸ்திதயோஶ்சிதசிதோ: பரமபுருஷஶரீரதயா தந்நியாம்யத்வேந தத³ப்ருத²க்ஸ்தி²திம் பரமபுருஷஸ்ய சாத்மத்வமாஹு: காஶ்சந ஶ்ருதய:—"ய: ப்ருதி²வ்யாம் திஷ்ட²ந், ப்ருதி²வ்யா அந்தரோ, யம் ப்ருதி²வீ ந வேத³, யஸ்ய ப்ருதி²வீ ஶரீரம், ய: ப்ருதி²வீமந்தரோ யமயதி" இத்யாரப்⁴ய "ய ஆத்மநி திஷ்ட²ந்நாத்மநோ(அ)ந்தரோ யமாத்மா ந வேத³, யஸ்யாத்மா ஶரீரம், ய ஆத்மாநமந்தரோ யமயதி, ஸ த ஆத்மா(அ)ந்தர்யாம்யம்ருத:" இதி । ததா²—"ய: ப்ருதி²வீமந்தரே ஸஞ்சரந் யஸ்ய ப்ருதி²வீ ஶரீரம், யம் ப்ருதி²வீ ந வேத³" இத்யாரப்⁴ய "யோ(அ)க்ஷரமந்தரே ஸஞ்சரந் யஸ்யாக்ஷரம் ஶரீரம், யமக்ஷரம் ந வேத³,—யோ ம்ருத்யுமந்தரே ஸஞ்சரந் யஸ்ய ம்ருத்யு: ஶரீரம், யம் ம்ருத்யுர்ந வேத³, ஏஷ ஸர்வபூ⁴தாந்தராத்மா(அ)பஹதபாப்மா தி³வ்யோ தே³வ ஏகோ நாராயண:"; அத்ர ம்ருத்யுஶப்³தே³ந தமஶ்ஶப்³த³வாச்யம் ஸூக்ஷ்மாவஸ்த²மசித்³வஸ்த்வபி⁴தீ⁴யதே; அஸ்யாமேவோபநிஷதி³—"அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே" இதி வசநாத் । "அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" இதி ச ॥

ஏவம் ஸர்வாவஸ்தாவஸ்தி²தசித³சித்³வஸ்துஶரீரதயா தத்ப்ரகார: பரமபுருஷ ஏவ கார்யாவஸ்த²காரணாவஸ்த²ஜக³த்³ரூபேணாவஸ்தி²த இதீமமர்த²ம் ஜ்ஞாபயிதும் காஶ்சந ஶ்ருதய: கார்யாவஸ்த²ம் காரணாவஸ்த²ஞ்ச ஜக³த் ஸ ஏவேத்யாஹு:—"ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத், ஏகமேவாத்³விதீயம், ததை³க்ஷத, ப³ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி

[illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

இவ்வண்ணம் போக்தாவாகவும் போக்யரூபமாகவு மிருக்கிறதும் எல்லா நிலைமைகளுடனும்கூடி இருப்பவைகளுமான சித் அசித் இரண்டும்பரமபுருஷனுக்கு சரீரமாக இருப்பதுபற்றி அவனால் நியமிக்கப்படத்தக்கதாக இருப்பதால், அந்தபரமபுருஷனை விட்டுத்தனித்திராமல் அவனோடேயே எப்பொழுதும்சேர்ந்தே இருக்கையும், பரமபுருஷனுக்கு ஆத்மத்வத்தையும் சிலச்ருதிகள் கூறுகின்றன அந்தச்ருதிகளாவன-'ய:ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம்ப்ருதிவீநவேத, யஸ்ய ப்ருதிவீ சரீரம், ய:ப்ருதிவீ மந்தரோ யமயதி' (இதன் பொருள்- எவன் ப்ருதிவியிலிருக்கிறானோ ப்ருதிவிக்குள்ளிருக்கிறானோ எவனை ப்ருதிவீ அறியாதோ எவனுக்கு ப்ருதிவீ சரீரமோ

எவன் ப்ருதிவிக்குள் ப்ரவேசித்து நியமனம் செய்கிறுனே) என்பதுதொடங்கி 'ய ஆத்மநி திஷ்டந், ஆத்மநோந்தரோ, யமாத்மாநவேத, யஸ்யாத்மா சரீரம். ய ஆத்மாநமந்தரோ யமயதி, ஸத ஆத்மாந்தர்யாம்ய ம்ருத: (பொருள்-எவன் ஆத்மாவினிடத்திலிருக்கிறுனே-ஆத்மாவுக்குள் ப்ரவேசித்திருக்கிறுனே, எவனை ஆத்மா அறியாதோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளே இருந்து நியமனம் பண்ணுகிறுனே, அவன் உனக்கு அந்தர்யாமீ, அழிவற்றவன், அல்லது அவன் மோக்ஷமளிப்பவன்) அப்படியே. 'ய: ப்ருதிவீமந்தரே ஸஞ்சரந் யஸ்ய ப்ருதிவீ சரீரம், யம் ப்ருதிவீ நவேத' என்று தொடங்கி யோக்ஷரமந்தரே ஸஞ்சரந்,யஸ்யாக்ஷரம் சரீரம், யமக்ஷரம் நவேத, யோ ம்ருத்யுமந்தரே ஸஞ்சரந், யஸ்ய ம்ருத்யுச்சரீரம்,யம் ம்ருத்யுர் நவேத, ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹத பாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:'' இந்த இடத்தில் ம்ருத்யு சப்தத்தால் தமச் சப்தத்தால் சொல்லத்தக்க ஸூக்ஷ்மாவஸ்தையுடன்கூடின அசித்வஸ்து சொல்லப்படுகிறது. இதே உபநிஷத்தில் 'அவ்யக்தமக்ஷரே லீயதே அக்ஷரந்தமஸி லீயதே''என்கிற வசனத்தினுல் பரமாத்மாவுக்கு சித்துக்களும் அசித்துக்களும் சரீரங்களென்று நன்கு ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ''அந்த:ப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'' என்றும் (பொருள்-எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாக இருக்கிற பரமபுருஷன் ஜீவன்களுக்குள் ப்ரவேசித்து நியமநம் பண்ணுகிறுன், இவனுலும் சேதநா சேதநங்களுக்கும் பரமாத்மாவுக்கும் சரீராத்மபாவம் பலித்தது

இவ்வண்ணம் எல்லா நிலைமைகளுடன்கூடி இருக்கிற சிதசித்வஸ்துக்களை சரீரமாகவுடையவனுனதால் அந்த சிதசித்வஸ்துக்களை ப்ரகாரமாகக்கொண்ட பரமபுருஷனே கார்யாவஸ்தையுடனும் காரணுவஸ்தையுடனுங்கூடி ஜகத்ரூபமாக இருக்கிறு னென்கிற இந்த அர்த்தத்தைத் தெரிவிப்பதற்காகவே சில ச்ருதிகள் கார்யாவஸ்தையுடனும் காரணுவஸ்தையுடனும் கூடிய ஜகத்தானது அவனே என்று சொல்லின. அந்த ச்ருதிகளாவன- ''ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம் - ததைக்ஷத, பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி தத் தேஜோ ஸ்ருஜத''என்று தொடங்கி,'' ஸந்மூலாஸ்ஸோம்யேமாஸ்ஸர்வா: ப்ரஜாஸ்ஸதாயதநாஸ்ஸத்ப்ரதிஷ்டா: ஐததாத்ம்யமிதம் ஸர்வம், தத்ஸத்யம், ஸ ஆத்மா, தத்த்வமஸி ச்வேதகேதோ'' என்று- (இந்த ச்ருதிகளுக்குப் பொருள் - ஹே. ஸோமபாநத்திற்குத் தகுதியுள்ளவனே! நேரில் காணப்படுகிற இந்த சிதசிதாத்மகமான ப்ரபஞ்சமானது ஸ்ருஷ்டிக்கு முந்தி அதாவது ப்ரளயகாலத்தில் ஸத் என்கிற சப்தத்துக்கு வாச்யமான ப்ரஹ்மமாகவே இருந்தது. ப்ரஹ்மத்தோடு அபின்னமாகவே இருந்தது. நாமரூபவிபாகமில்லாததாகவும் வேறு நிமித்த காரணத்தை அபேக்ஷியாமல் தானே உபாதானமாகவும் நிமித்தகாரணமாகவுமிருந்தது. அந்த ப்ரஹ்மமானது சேதநா சேதநாத்மகமான வ்யஷ்டி ப்ரபஞ்சரூபமாக நான்

பலவிதமாக ஆகக்கடவேன் அதற்காக நான் ஸமஷ்டி ஸ்ருஷ்டிபூதமான இருபத்திநான்கு தத்வங்களாக பரிணமிக்கக்கடவேன் என்று ஸங்கல்பித்தது. அது உடனே தேஜஸ்ஸை உண்டுபண்ணிற்று. ஹே ஸோமபாநத்திற்குத்தகுதியுள்ளவனே! இந்த ப்ரஜைகள் ஸத் என்கிற சப்தத்தால் சொல்லப்படுகிற ப்ரஹ்மத்தினிடத்திநின்று உண்டாகின்றன அந்த ப்ரஹ்மத்தால் ரக்ஷிக்கப்படுகின்றன, அந்த ப்ரஹ்மத்தில் லயிக்கின்றன. இவ்வுலகனைத்தும் ப்ரஹ்மாத்மகம். அந்த ப்ரஹ்மம் ஸத்யமாக இருக்கிறது. அது சேதநா சேதநங்களனைத்தையும் வ்யாபித்துக் கொண்டிருக்கிறது. ஹே ச்வேதகேதோ! நீ அந்த ப்ரஹ்மாத்மகமாக இருக்கிறாய்) என்று. அப்படியே "ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயே யேதி, ஸதபோதப்யத, ஸதபஸ்தப்த்வா, இதம் ஸர்வமஸ்ருஜத" (பொருள். அந்த பரமபுருஷன் நான் தேவ திர்யங் மனுஷ்யஸ்தாவராத்மகமாக பலவாறாக ஆகக்கடவேன் என்று. ஸங்கல்பித்தார். அவர் அவ்வாறு ஸங்கல்பித்து இவை அனைத்தையும் படைத்தார்) என்பது தொடங்கி 'ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத், (சாச்வதமாக இருக்கிற ப்ரஹ்மமானது சேதநா சேதநரூபமான ப்ரபஞ்சமாக ஆயிற்று.) இது முதலியவைகள்.

இந்த இடத்திலும் வேறு ச்ருதிகளால் ஸித்தித்திருக்கிற சித்துக்கும் அசித்துக்கும் பரம புருஷனுக்குமுள்ள ஸ்வரூப விவேகமானது ஸ்மரிக்கும்படி செய்விக்கப்பட்டது, 'ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா., அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி" (நான் ப்ருதிவீ அப் தேஜஸ் முதலிய அசேதந வஸ்துக்களுக்குள் ஜீவனைச் சரீரமாகக்கொண்ட என்ஸ்வரூபத்தால் அனுப்ரவேசித்து அல்லது என்னை ஆத்மாவாகக் கொண்ட ஜீவன் வாயிலாக அனுப்ரவேசம் செய்து ஒவ்வொரு வஸ்துக்களுக்கும் பெயரையும் உருவத்தையும் ஏற்படுத்துகிறேன்) என்று. "தத்ஸ்ருஷ்ட்வா, ததேவாநுப்ராவிசத். "ததநுப்ரவிச்ய, ஸச்சத்யச்சாபவத், விஜ்ஞாநஞ்சா விஜ்ஞாநஞ்ச, ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்" என்று அதைப்படைத்து அதிலேயே உள்புகுந்தார். அதினுள் ப்ரவேசித்து சேதநங்களாகவும் அசேதநங்களாகவும்ஆனார். ஸத்ய வஸ்துவான பரப்ரஹ்மமானது விஜ்ஞாநஸ்வரூபியான சேதந ரூபமாகவும் ஜடமாகஇருக்கிற அசேதந ஸ்வரூபமாகவும் நித்யமான ஜீவஸ்வரூபமாகவும் அழிவுள்ள ப்ருதிவீ முதலிய வஸ்து ஸ்வரூபமாகவும் ஆயிற்று) என்று. அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய" என்று ஜீவனுக்கு ப்ரஹ்மாத்மகத்வம் சொல்லப்படிருப்பது ததநுப்ரவிச்ய, ஸச்சத்யச்சாபவத், விஜ்ஞாநஞ்சா விஜ்ஞாநஞ்ச, என்பதோடு அர்த்தைக்யத்தினால் ஆத்மசரீரபாவத்தைக்காரணமாகக்கொண்டதென்று அறியப்படுகிறது. நாமரூப வ்யாகரணம் இப்படிப்பட்டதே. "தத்தேதம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத், தந்நாமரூபாப்யாம்வ்யாக்ரியத", (இந்த ப்ரபஞ்சரூபமாக பரிணமித்திருக்கிற பூதஸூக்ஷ்மமானது

ஸ்ருஷ்டிக்குமுந்தி நாமரூபவ்யாகரணத்தால் விடுபட்டிருந்தது) அது தத்வ ஸ்ருஷ்டிகளுக்குப்பிறகு நாமரூபங்களால் வ்யாகரணம் செய்யப்பட்டது. என்கிற இடத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் கார்யாவஸ்தையுடனும் காரணாவஸ்தையுடனும்கூடி இருப்பவன் ஸ்தூல சிதசித்வஸ்துக்களையும் ஸூக்ஷ்ம சிதசித்வஸ்துக்களையும் சரீரமாகவுடையபரமபுருஷனே. ஆகையால் காரணத்தைக்காட்டிலும் கார்யமானது வேறான வஸ்துவாக இல்லாதது பற்றி காரணஜ்ஞாநத்தால் கார்யம் அறியப்பட்டிருப்பதால் தனக்கு அபிமதமான ஏகவிஜ்ஞாநத்தால் ஸர்வவிஜ்ஞானமென்பது நன்கு பொருத்தமுள்ளதாக ஆகிறது,

---

ச்ருதப்ரகாசிகை—

இவ்வண்ணம் சித் அசித் ஈச்வரன் இம்மூன்றுக்கும் பேதமிருக்க எவ்வாறு ஒன்று என்கிற நிச்சயம் பொருத்தமுள்ளதென்கிற ஸந்தேஹம் வரின் கடகச்ருதிகளை அவதரிப்பிக்கிறார்—ஏவம் என்று- 'ய: ப்ருதிவீமந்தரே ஸஞ்சரந்' என்று ஸுபாலோப நிஷத்தில் சொல்லப்படுகிறது. மரணம் அல்லது யமன் முதலிய அர்த்தங்களை விலக்குவதின்பொருட்டு ம்ருத்யு சப்தத்தை வ்யாக்கியானம் செய்கிறார்—அந்த என்று. லீயதே இதி வசநாத் — லயக்ரமங்கள் ஜ்ஞாபகப்படுத்தப்படுவதாலென்று அர்த்தம். 'யஸ்யாவ்யக்தம் சரீரம், யஸ்யாக்ஷரம் சரீரம், யஸ்ய ம்ருத்யுச்சரீரம் என்றல்லவோ க்ரமம். இந்த க்ரமமானது "அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸிலீயதே" என்கிற க்ரமத்தோடு பொருந்துகிறது. தமஸ்ஸுக்கு ஏகீ பாவம் மாத்ரம் ச்ருதியினால் சொல்லப்பட்டிருக்கிறது லயமல்ல. தமஸ்த்வத்துக்கு அழிவு இல்லாமையால். கார்யத்திற்கு உபயோகப்படாத தமஸ்ஸைச்சரீரமாகக்கொண்டிருக்கிற பரமபுருஷனிடத்தில்கார்யோபயுக்தமான தமஸ்ஸுக்கு ꙳ ஏகீபாவம் ம்ருத்யுவென்கிற பெயருள்ள தமஸ்ஸானது ப்ரஹ்மத்துக்கு சரீரமென்று சொல்லப்படுவதால் விசேஷணபூதமான தமஸ்ஸோடு தமஸ்ஸுக்கு ஏகீபாவம் யுக்தமானது. எல்லாவஸ்துக்களுக்கும் பரமபுருஷன் ஆத்மாவென்பதை விவரிப்பதற்காகக் கூறுகிறார்— அந்த: ப்ரவிஷ்ட: என்று. இதனாலும் சரீராத்மபாவம் பலித்தது. உள்ளே புகுந்து நியமிக்கப்படத்தக்கதன்மையன்றோ சரீரத்வமென்பது. உள்ளே ப்ரவேசம் சாஸனம் இவைகளால் அரசன் ஆகாயம் இவைகளுக்கு * வ்யாவ்ருத்தி ஏற்படுகிறது. இந்த சரீரலக்ஷணம் பாஷ்யகாரருக்கு அபிமதமானது, பேதச்ருதிகளுக்கும் கடக ச்ருதிகளுக்கும் விரோதமில்லாமல் ஐக்ய வாக்யங்களுக்குப்பொருள் கூறுகிறார்—ஏவம் என்று. கடகமாக எடுக்கப்பட்டது- 'ஸந்மூலா:' என்று. அத்ராபி என்று சாந்தோக்ய ப்ரகரணத்திலும் தைத்தரீய ப்ரகரணத்திலுமென்று அர்த்தம். ஹந்தாஹமிமா: என்று சாந்தோக்யத்தில், தத்ஸ்ருஷ்ட்வா இது முதலியது தைத்திரீயத்தில். ஜீவேநாத்மநா என்பதினுடைய வ்யாக்கியானார்த்தத்தைச் சொல்லுகிறார்—ஆநேந என்று. அனுப்ரவேசத்தின் ச்ரவணமில்லாவிடினும் பொதுவாகச் சொல்லப்பட்டிருக்கிற நாமரூப வ்யாகரணமானது ஸாமான்யவிசேஷ ந்யாயத்தினால் அனுப்ரவேசத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கிற நாமரூப வ்யாகரணத்தில்

---

꙳ ஏகீபாவம்—ஒன்று சேருதல். * வ்யாவ்ருத்தி—விலக்கம்.

பர்யவஸிக்கிறதென்று கூறுகிறார்— ஏவம்பூதமேவ என்று. அல்லது ஸர்வசாகா ப்ரத்யய ந்யாயத்தால் ஓரிடத்தில் சொல்லப்பட்டிருப்பதற்கு வேறு இடத்தில் க்ரஹித்துக்கொள்ளத்தக்க தன்மை இருப்பதால் ஓரிடத்தில் அறியப்பட்டிருக்கிற அனுப்ரவேசமானது கார்யத்துக்கு உபயோகியாக இருப்பதுபற்றி வேறிடத்திலும் ஸ்வீகரிக்கத்தக்கதென்று சொல்லுகிறார்— ஏவம் என்று. ஏவம் பூதசப்தமானது அனுப்ரவேசத்தை முன்னிட்டுக்கொண்டிருத்தலென்பதில் நோக்குள்ளது. இந்த நாமரூப வ்யாகரணச்ருதியின் உபபாதனத்தினால் ஜீவன்களுக்கு உத்பத்தி ப்ரளய நாமரூப வ்யாகரணமும் அதன் அபாவமுமே ஒழிய ஸ்வரூப நிஷ்பத்தி விநாசங்களல்லவென்பது சொல்லப்பட்டதாக ஆகிறது. இதனால் முன் சொல்லப்பட்ட சங்கையும் பரிஹரிக்கப்பட்டதாக ஆகிறது. கால விசேஷத்தில் சொல்லப்பட்ட ஐக்யமும் நாமரூப வ்யாகரணாபாவமாத்திரமே ஒழிய ஸ்வரூபைக்ய மல்லவென்று அறியப்படுவதால். அதற்கு மேல் எல்லா ச்ருதிகளுக்கும் இந்த அர்த்தத்தில் முக்கியத்வத்தைக் காண்பியாநின்றவராக முதலில் ஏக விஜ்ஞாநத்தினால் ஸர்வவிஜ்ஞான மென்பது அன்யனுடைய மதத்தில் பொருத்தமுள்ளதாக ஆகிறதில்லை என்றும் முன்சொல்லப்பட்ட தன்னுடைய மதத்தில் பொருத்தமுள்ளதாக ஆகிறதென்றும் கூறுகிறார்— அத: என்று. கார்ய காரணங்களுக்கு ஐக்ய ப்ரதிபாதநத்தாலும் ஏகவிஜ்ஞாநத்தால் ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞையினாலும் ஸாமாநாதிகரண்யத்தாலும் என்று மூன்றுவிதமாக வல்லவோ அத்வைத ப்ரதீதியானது ஏற்படுகிறது. இந்த இடத்தில் முன் சொல்லப்பட்டிருக்கிற இரண்டும் நாம் சொன்னரீதியினால் பொருத்தமுள்ளதாக இருக்கிறதென்பது அத: என்கிற பதத்தை தொடக்கத்தில் கொண்ட பாஷ்யத்தால் சொல்லப்பட்டதாக ஆகிறது. விசிஷ்டம் காரணம், அதே கார்யமாக இருப்பதால் காரணத்தைக்காட்டிலும் கார்யத்திற்கு வேற்றுமை இன்மை ஏற்படுகிறது. ஆகலால் கார்யகாரணம் இரண்டுக்கும் ஐக்யத்தை ப்ரதிபாதிப்பதில் நோக்குள்ள ச்ருதிகளுக்கு அந்த இரண்டும் ஒரு த்ரவ்யமென்பதே ப்ரதிபாதிக்கத்தக்க விஷயமே ஒழிய விசிஷ்டத்வ நிஷேதம் ப்ரதிபாதிக்கத்தக்கவிஷயமல்ல. அது விதிக்கப்பட்டிருப்பதால். ஏக விஜ்ஞாநத்தால் ஸர்வ விஜ்ஞாநமும் இவ்வண்ணமே, எப்படி மண்ணுருண்டையினால் அந்த மண்ணின் கார்யமான குடம் வாணாய் முதலிய வஸ்துக்களின் ஜ்ஞாநமிருந்தபோதிலுங்கூட பிண்டத்தை அடைந்திருக்கிற ரூபம் முதலியவற்றின் நிஷேதம் செய்யப்பட்டதாக ஆகாதோ அப்படிப்போல. உபபன்னதரம் என்கிற பதத்திலுள்ள தரப் ப்ரத்யயத்தினால் முக்கியத்வம் எல்லா இடத்திலும் சொல்ல விரும்பப்பட்டிருக்கிறது. இவ்வண்ணம் ஸத் வித்யையின்தொடக்கத்திலுள்ள ஏக விஜ்ஞாநத்தால் ஸர்வவிஜ்ஞாநத்திற்கு முக்கியத்வமானது கூறப்பட்டது.

---

'ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாநுப்ர
விஶ்ய நாமரூபே வ்யாகரவாணி' இதி, 'திஸ்ரோ தேவதா:' இதி
ஸர்வமசித்வஸ்து நிர்திஶ்ய தத்ர ஸ்வாத்மகஜீவாநுப்ரவேஶேந நாம
ரூபவ்யாகரணவசநாத் ஸர்வே வாசகா: ஶப்தா: அசித்விஶிஷ்டஜீவவி
ஶிஷ்டபரமாத்மந ஏவ வாசகா இதி காரணாவஸ்தபரமாத்மவாசிநா

ஶப்தேந கார்யாவஸ்தஶப்தஸ்ய ஸாமாநாதிகரண்யம் உபபத்யதே । அதஃ ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டாகாரம் ப்ரஹ்மைவ கார்யம் காரணம் சேதி ப்ரஹ்மோபாதாநம் ஜகத் । ஸூக்ஷ்மசிதசித்வஸ்து ஶரீரகம் ப்ரஹ்மைவ காரணமிதி ॥

ப்ரஹ்மோபாதாநத்வேऽபி ஸங்காதஸ்யோபாதாநத்வேந விஶிஷ்டைகதேஶஸ்ய ஸ்வரூபஸ்ய ஸ்வபாவாஸங்கரோऽப்யுபபத்யதே । யதா ஶுக்லக்ருஷ்ணரக்ததந்துஸங்காதோபாதாநத்வேऽபி சித்ரபடஸ்ய தத்தத்தந்துப்ரதேஶ ஏவ ஶௌக்ல்யாதிஸம்பந்த இதி கார்யாவஸ்தாயாமபி ந ஸர்வத்ர வர்ணஸங்கரஃ ; ததா சிதசிதீஶ்வரஸங்காதோபாதாநத்வேऽபி ஜகதஃ கார்யாவஸ்தாயாமபி போக்த்ருத்வபோக்யத்வநியந்த்ருத்வாத்யஸங்கரஃ । தந்தூநாம் ப்ருதக்ஸ்திதியோக்யாநாமேவ புருஷேச்சயா கதாசித்ஸம்ஹதாநாம் காரணத்வம் கார்யத்வம் ச । இஹ து சிதசிதோஸ்ஸர்வாவஸ்தயோஃ பரமபுருஷஶரீரத்வேந தத்ப்ரகாரதயைவ பதார்த்ததா: பரமபுருஷஸ்ஸர்வதா ஸர்வப்ரகாரீ இதி விஶேஷஃ । ஸ்வபாவபேதஸ்ததஸங்கரஶ்ச தத்ர சாத்ர ச துல்யஃ । ஏவஞ்ச ஸதி பரஸ்ய ப்ரஹ்மணஃ கார்யாநுப்ரவேஶேऽபி ஸ்வரூபாந்யதாபாவாபாவாத் அவிகாரத்வமுபபந்நதரம் । ஸ்தூலாவஸ்தஸ்ய நாமரூபவிபாகவிபக்தஸ்ய சிதசித்வஸ்துந ஆத்மதயாऽவஸ்தாநாத் கார்யத்வமப்யுபபந்நதரம் । அவஸ்தாந்தராபத்திரேவ ஹி கார்யதா ॥

நிர்குணவாதாஶ்ச பரஸ்ய ப்ரஹ்மணோ ஹேயகுணாஸம்பந்தாத் உபபத்யந்தே । "அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸஃ" இதி ஹேயகுணாந் ப்ரதிஷித்ய "ஸத்யகாமஸ்ஸத்யஸங்கல்பஃ" இதி கல்யாணகுணாந்விதயதீயம் ஶ்ருதிரேவாந்யத்ர ஸாமாந்யேநாவகதம் குணநிஷேதம் ஹேயகுணவிஷயம் வ்யவஸ்தாபயதி ॥

ஜ்ஞாநஸ்வரூபம் ப்ரஹ்மேதிவாதஶ்ச ஸர்வஜ்ஞஸ்ய ஸர்வஶக்தேர்நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணகுணாகரஸ்ய ப்ரஹ்மணஸ்ஸ்வரூபம்

𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍀𑌯𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌯𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮[illegible]𑌃 । “𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍” “𑌪𑌰𑌾𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌵 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌚” “𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌰𑌮𑌰𑍇 𑌕𑍇𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌤𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌮𑍇[illegible]𑌯𑌨𑍍𑌤𑌿 ; “𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾𑌶𑍍𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍀𑌯𑌤𑌯𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌯𑌾 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌤𑌾𑌮𑍍 ॥

“𑌸𑍋𑌽𑌕𑌾𑌮𑌯𑌤 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍” ‘𑌤𑌦𑍈𑌕𑍍𑌷𑌤 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍” “𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌤” 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌸𑍍𑌵𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍍𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌸𑍍𑌥𑌿𑌰𑌤𑍍𑌰𑌸𑌰𑍂𑌪𑌤𑌯𑌾 𑌨𑌾𑌨𑌾𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑌿𑌤𑌿 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑌾[illegible] 𑌤𑌤𑍍 𑌨𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌤𑍇 [illegible] “𑌇𑌹 𑌨𑌾𑌨𑍇𑌵 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿’ “𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨” “𑌯𑌤𑍍𑌰 𑌹𑌿 𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑌿𑌵 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌦𑌿𑌤𑌰 𑌇𑌤𑌰𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 । 𑌯𑌤𑍍𑌰 𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑍂𑌤𑍍𑌤𑌤𑍍𑌕𑍇𑌨 𑌕𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌤𑌤𑍍𑌕𑍇𑌨 𑌕𑌂 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌤𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 । 𑌨 𑌚𑌾𑌨𑍇𑌨 “𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑍇𑌯” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌸𑍍𑌵𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌕𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌨𑌾𑌨𑌾𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌭𑌾𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌨𑌾𑌨𑌾𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌨𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌤𑍇 । ‘𑌯𑌤𑍍𑌰 𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑍂𑌤𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌿𑌷𑍇𑌧𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌦𑍌 𑌚 𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌮𑍍—“𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌂 𑌪𑌰𑌾𑌦𑌾𑌦𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍇𑌦” “𑌤𑌸𑍍𑌯 𑌹 𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌤𑍋 𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌵𑌸𑌿𑌤𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌦𑍃𑌗𑍍𑌵𑍇𑌦𑍋 𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌃” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

நான் இந்த எல்லா அசித் வஸ்துக்களுக்குள் என்னை ஆத்மாவாகக்கொண்ட ஜீவன் வாயிலாக ப்ரவேசித்து நாமரூப வ்யாகரணம் செய்கிறேன். 'திஸ்ரோ தேவதா:' என்று எல்லா அசித்வஸ்துக்களையும் சொல்லி, அவைகளில் தன்னை ஆத்மாவாகக்கொண்ட ஜீவனுடைய அநுப்ரவேசத்தால் நாமரூப வ்யாகரணம் சொல்லி இருப்பதால் வாசக சப்தங்களனைத்தும் அசித்துடன் கூடின பரமாத்மாவுக்கே வாசகங்களாதலால் காரணாவஸ்தையுடன் கூடின பரமாத்மவாசக சப்தத்தோடு கார்யவாசக சப்தத்திற்கு ஸாமாநாதிகரண்யமானது முக்கிய வ்ருத்தம். ஆகையால் ஸ்தூலங்களாகவும் ஸூக்ஷ்மங்களாகவுமிருக்கிற சித்துக்களையும் அசித்துக்களையும் ப்ரகாரங்களாகவுடைய ப்ரஹ்மமே கார்யமும் காரணமுமாக இருப்பதால் ஜகத்தானது ப்ரஹ்மத்தை

உபாதானமாகவுடையது. ஸூக்ஷ்மசிதசித் வஸ்துக்களை சரீரமாகக்கொண்ட ப்ரஹ்மமே காரணமாதலால் ஜகத்தைக்குறித்து ப்ரஹ்மத்துக்கு உபாதானத்வமிருந்த போதிலும் ஸங்காதம் உபாதானமாகையால் சித்துக்களுக்கும் அசித்துக்களுக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஸ்வபாவங்களின் அஸாங்கார்யமும் மிக்கப்பொருத்த முள்ளது. எப்படி வெளுப்பு கறுப்பு சிவப்பு நூல்களின் ஸங்காதத்தை உபாதானமாகக் கொண்டிருந்தபோதிலும் சித்ர படத்துக்கு அந்தந்த நூலுள்ள இடத்திலேயே வெளுப்பு முதலிய குணங்களின் ஸம்பந்தம் இருப்பதனால் கார்யாவஸ்தையிலுங் கூட எல்லா இடத்திலும் ஸாங்கர்யமில்லையோ; அப்படியே ஜகத்தானது சித் அசித் ஈச்வரன் இம்மூன்று பதார்த்தங்களின் ஸங்காதத்தைக் காரணமாகக் கொண்டிருந்தபோதிலும் கார்யாவஸ்தையிலும் போக்த்ருத்வம் போக்யத்வம் நியந்த்ருத்வம் முதலிய குணங்களுக்கு ஸாங்கர்யமில்லை. தனித்திருந்த துக்கு யோக்யங்களாகவே இருக்கிற நூல்களுக்கு புருஷனுடைய இச்சையினால் ஒரு ஸமயத்தில் சேர்க்கப்பட்ட அவைகளுக்கு காரணத்வமும் கார்யத்வமும். இவ்விடத்திலோ வென்றால் எல்லா அவஸ்தைகளுடன் கூடின சித் அசித் இவ்விரண்டும் பரமபுருஷனுக்கு சரீரமாதலால் அந்த பரமபுருஷனுக்கு ப்ரகாரங்களாக இருப்பதனாலேயே அவைகளுக்கு பதார்த்தத்வம் ஸித்தித்திருப்பதால் அப்படிப்பட்ட சிதசித்துக்களை ப்ரகாரங்களாகவுடைய பரமபுருஷன் எப்பொழுதும் எல்லாசப்தங்களாலும் சொல்லத்தக்கவனாக ஆகிறானென்பது விசேஷம்- ஸ்வபாவங்களின் பேதமும் அவைகளின் அஸாங்கர்யமும் அங்கும் இங்கும் துல்யம்- ஆகவே பரப்ரஹ்மத்துக்கு கார்யபூதமான ஜகத்தில் அநுப்ரவேசமிருந்தபோதிலும் ஸ்வரூபத்தின் வேறுபாடில்லாமையால் விகாரமில்லை என்று சொல்வது மிக்கப்பொருத்தமுள்ளது. ஸ்தூலாவஸ்தையை ஆச்ரயித்து தனித்தனியாக நாமங்களாலும் ரூபங்களாலும் பகுக்கப்பட்டிருக்கிற சிதசித்வஸ்துக்களுக்கு ஆத்மாவாக இருப்பதால் ப்ரஹ்மத்திற்கு கார்யத்வமும் மிக்கப்பொருத்தமுள்ளதாக ஆகிறது. கார்யத்வமென்பது வேறு அவஸ்தையை அடைவதேயன்றோ.

நிர்குணவாதங்களும் பரப்ரஹ்மத்துக்கு ஹேய குணங்களின் அஸம்பந்தத்தால் பொருந்துகிற தன்றோ 'அபஹதபாப்மா விஜரோவிம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸோபிபாஸ:' என்று ஹேயகுணங்களை நிஷேதித்து 'ஸத்யகாம:ஸத்ய ஸங்கல்ப:' என்று கல்யாணகுணங்களை விதிக்கிற இந்த ச்ருதியே வேறு இடத்தில் ஸாமான்யமாக அறியப்பட்டிருக்கிற குணநிஷேதத்தை ஹேய குண விஷயமென்று வ்யவஸ்தை செய்கிறது. ப்ரஹ்மம் ஜ்ஞாநஸ்வரூபமென்கிற வாதமும் எல்லாமறிந்ததும் எல்லா சக்திகளாலும் நிறைந்ததும் எல்லா ஹேய குணங்களுக்கும் நிவர்தகமாகவும் கல்யாண குணங்களுக்கு § ஆகாரமாகவுமிருக்கிற ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபமானது ஜ்ஞாந

§ ஆகாரம்—இருப்பிடம், அல்லது நிதி.

மொன்றாலேயே நிரூபிக்கத்தக்கதென்றும் ஸ்வயம் ப்ரகாசமாக இருப்பதனால் ஜ்ஞாநஸ்வரூபமென்றும் ஒப்புக்கொண்டிருப்பதால் நன்கு பொருத்தமுள்ளது. 'யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித், பராஸ்ய சக்திர்விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியாச, விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்' இது முதலிய ச்ருதிகள் ஜ்ஞாத்ருத்வத்தை அறிவிக்கின்றன. 'ஸத்யம் ஜ்ஞாநம்' இது முதலிய ச்ருதிவசனங்கள் ஜ்ஞாநத்தாலேயே நிரூபிக்கத்தக்கதாக இருப்பதாலும் ஸ்வப்ரகாசவஸ்துவாக இருப்பதாலும் ஜ்ஞாநஸ்வரூபத்தை அறிவிக்கின்றன. 'ஸோऽகாமயத, ததைக்ஷத, பஹுஸ்யாம், தந்நாமரூபாப்யாம் வ்யாக்ரியத', என்று ப்ரஹ்மமே தன் ஸங்கல்பத்தால் விசித்திரமான ஸ்தாவர ஜங்கமரூபமாக பற்பலவிதமாக இருப்பது பற்றி 'ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹநாநேவ பச்யதி, நேஹநாநாஸ்தி கிஞ்சந, யத்ரஹித்வைதமிவபவதி,ததிதர இதரம் பச்யதி,யத்ரத்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்,தத்கேந கம் பச்யேத், கேந கம் விஜாநீயாத்' இது முதலிய ச்ருதிவசநங்களால் அதற்கு ப்ரத்யநீகமாக அதாவது விருத்தமான ப்ரஹ்மாத்மகமாக இல்லாத வஸ்துக்களின் நாநாத்வமானது தத்வமல்லாததால் அது நிஷேதிக்கப்படுகிறதே ஒழிய 'பஹுஸ்யாம் ப்ரஜாயேய' இது முதலிய ச்ருதி ஸித்தமான தன் ஸங்கல்பத்தால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற பற்பல நாமரூபங்களை அடைந்திருப்பதால் ப்ரஹ்மத்தினுடைய நாநா ப்ரகாரத்வமும் நிஷேதிக்கப்படுகிறதில்லை. 'ஸர்வம் தம் பராதாத்யோऽந்யத்ராத்மநஸ்ஸர்வம்வேத, தஸ்யஹவா ஏதஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதமேதத்யத் ருக்வேத:' இது முதலிய ச்ருதிவசனங்களால்'யத்ரத்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்' இது முதலிய நிஷேத வாக்யங்களின் தொடக்கத்திலும் அது ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் அதன் உபஸம்ஹாரத்தை அடைந்திருக்கிற தத்வமஸி என்கிற ஸாமாநாதிகரண்யத்துக்கு முக்கியத்வத்தைச் சொல்லுகிறார்—அஹமிமா: என்று. உபாதாநத்வம் ஸ்வபாவங்களின் அஸாங்கர்யம் இவைகள் எவ்வண்ணம் பொருத்தமுள்ளவைகளாக ஆகின்றனவென்று வினவப்படுமேயானால் சொல்லுகிறார்- அத:ஸ்தூல என்று. வரப்போகிற அவஸ்தாவிசேஷத்துடன் கூடியதாக இருக்கிற வஸ்துவுக்கு முந்தின அவஸ்தையுடன் சேர்க்கை யன்றோ உபாதாநத்வம். ஆதலால் அவஸ்தா விசேஷங்கள் இரண்டும் ஸ்தூல ஸூக்ஷ்ம சப்தங்களால் காண்பிக்கப்பட்டன. இதனால் ஒரு கால விசேஷத்தில் ஒன்றாகவே இருந்ததென்கிற வசனமானது நாமரூப விபாகமில்லாததென்கிற அபிப்ராயத்துடன் கூடியதென்று பலித்தது. உபாதாநத்வமிருக்கையிலுங்கூட ஸ்வபாவங்களின் அஸாங்கர்யத்தைக் கூறுகிறார்—ஸூக்ஷ்ம என்று. த்ருஷ்டாந்தத்தால் இந்த அர்த்தத்தை உபபாதனம் செய்கிறார்—யதா என்று. அன்பரே! வெளுப்பாகவும் கருப்பாகவும் மற்றும் வேறு நிறமுள்ளவைகளுமான நூல்கள் காரணாவஸ்தையிலும் வேறு பட்டிருப்பவைகள். அவைகளில் ஏதாவது ஒரு நூலைக்குறித்து ஏதாவது ஒன்றுக்கு காரணத்வமில்லை. ஆகையால் அங்கு ஸ்வபாவாஸாங்கர்யம் ந்யாய்யமானது. இந்த இடத்திலோவென்றால் சிதசித் ப்ரஹ்மரூப ஸங்காதத்திற்கு ஜகத்தைக்குறித்து உபா

தாநத்வ மிருந்தபோதிலும் காரணாவஸ்தையில் பரமாத்மா ஒருவனே ஸ்வ சப்தத்தால் ச்ருதியில் சொல்லப்படுகிறான். சேதநா சேதநங்களோவெனில் சொல்லப்படுகிறதில்லை. மேலும் பரமாத்மாவுக்கு முந்தி ஏகத்வமும் அவனைத்தவிர்த்த மற்ற சேதநாசேதநங்கள் இரண்டுக்கும் உத்பத்தி முதலியதும் ச்ருதியில் கூறப்படுகிறது. ஆதலால் ஸ்வபாவங்களுக்கு அஸாங்கர்யம் என்று சொல்லப்படுமேயானால் சொல்லுகிறார்—தந்த்ராநாம் என்று. நூல்களுக்குள் ஒன்றுக்கொன்று ப்ராதான்யா ப்ராதான்யத்தை வஹிக்காமையினால் அந்த இடத்தில் ஏதாவது ஒரு நூலைச்சொல்லுகிற சப்தத்தினால் ஸமுதாயம் சொல்லப்படுகிறதில்லை. இந்த இடத்திலோ வென்றால் எல்லாவற்றையும் ப்ரகாரங்களாகக்கொண்டிருக்கிற பகவானுக்கு ஸர்வசப்தங்களாலும் சொல்லத்தக்கவனாக இருத்தல் பொருத்தமுள்ளதாக இருப்பதுபற்றி ஏகதேசவாசியான சப்தத்தாலுங்கூட விசிஷ்டமே சொல்லப்படுகிறபடியால் விசிஷ்டத்திற்கே காரணத்வ மிருப்பதால் முந்தியுங்கூட பேதமிருக்கிறபடியால் ஸ்வபாவங்களுக்கு அஸாங்கார்யமானது பொருத்தமுள்ளதென்று கருத்து. எந்த ஆகாரத்தினலொற்றுமை என்று வினவப்படுமேயானால் சொல்லுகிறார்—ஸ்வபாவ என்று. உப்பளத்திலிருக்கிற எல்லா வஸ்துக்களுக்கும் உப்புயகரிக்கும் ஸ்வபாவ மேற்படுவதுபோல் ப்ரஹ்மத்துக்கு வேறுபாட்டைஸந்தேஹித்துச் சொல்லுகிறார்—ஏவஞ்ச என்று. அங்ஙனமாகில் உபாதாநத்வமே பொருந்தாதென்று கேழ்க்கப்படுமேயாகில் கூறுகிறார்—ஸ்தூலாவஸ்தஸ்ய என்று. ஆத்மாவாக இருப்பதால் எவ்வாறு கார்யத்வமென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்-அவஸ்தா என்று. அவிகார ச்ருதிகளுக்கு ப்ரக்ருதியை அடைந்திருக்கிற ஸ்வரூபாந்யதா பாவரூபமான விகாரமானது ப்ரஹ்மத்தினிடத்திலில்லை என்று அர்த்தம். ஸ்தூலரூபமானகார்யாவஸ்தையிலுள்ள சிதசித்வஸ்துக்களை நியமனம் செய்தலென்கிற அவஸ்தாந்தர ப்ராப்திதான் ப்ரஹ்மத்துக்கு கார்யத்வம் என்பது கார்யத்வ வாதிகளான ச்ருதிகளுக்கு அர்த்தம். காரணாவஸ்தையிலிருக்கிற சிதசித் வஸ்து நியமனம் கார்யாவஸ்தையிலிருக்கிற சிதசித் வஸ்து நியமன மாகாதன்றோ. அந்த அந்த அவஸ்தையுடன் சேர்ந்திருக்கிற சிதசித்வஸ்துக்களின் நியமனரூபங்களான விசேஷங்களே ப்ரஹ்மத்தினுடைய அத்வாரகாவஸ்தைகள். ஸ்வரூபத்தின் வேறுபாடு ஜ்ஞாநஸங்கோசம் முதலிய விகாரங்களோவென்றால் சேதநாசேதநங்கள் வாயிலாக ப்ரஹ்மத்துக்கு வருகிற ஸத்வாரகாவஸ்தைகள் என்று அர்த்தம். எவ்வாறு க்ராஹக க்ரஹணத்தினால் ஸன்னிஹிஸமாம்நாதங்களாகவும் பரமா பூர்வசேஷங்களாகவு மறியப்பட்டிருக்கிற வஸ்துக்களில் யாகம் வ்ரீஹி முதலியவற்றுக்கு அத்வாரக சேஷத்வமும் ப்ரோக்ஷணம் முதலியதற்கு ஸத்வாரகசேஷத்வமும் முக்கியமென்றே அறியப்படுகிறதோ; அவ்வாறே பஹூஸ்யாம் என்று க்ராஹக க்ரஹணத்தினால் பரமாத்மாவினுடையதாக அறியப்பட்டிருக்கிற எல்லா அவஸ்தைகளிலும் ஸ்வரூபத்தின் வேறுபாடு ஜ்ஞாந ஸங்கோசம் முதலிய ஸத்வாரகாவஸ்தைக்கும் அந்த அந்த வஸ்துக்களை நியமநம் செய்தலாகிற அத்வாரகாவஸ்தைக்கும் பரமாத்ம ஸம்பந்தம் முக்கியமே என்று கருத்து.

நிர்குண என்று. அபஹதபாப்மா இதுமுதலியதும் இங்கு கொஞ்சம் விவரிக்கப்பட்டது. ச்ருதிரேவ என்று. மதாந்தரஸ்தர்களால் சொல்லப்பட்டிருக்கிற நிர்வாஹங்களில் ச்ருதஹானியும் (சப்தத்தால் நேராக உணர்த்தப்பட்டிருக்கிற அர்த்தத்தை விடுவதும்) அச்ருதகல்பனமும் (சப்தத்தால் உணர்த்தப்பட்டிராத அர்த்தத்தை கல்பிப்பதும்) இருக்கிறது. இந்த மதத்திலோ வென்றால் நிர்வாஹமானது ச்ருதியினால் சொல்லப்பட்டதாகவே இருப்பதுடன் சுருதியினால் உணர்த்தப்பட்ட அர்த்தத்திற்கு அனுகுணமாகவுமிருக்கிறதென்று வைஷம்ய மென்று கருத்து.

அதற்குமேல் ஆர்த்தகுண நிஷேதத்தில் கருத்துள்ள தென்பதாக மதாந்தரஸ்தர்களால் அபிமானிக்கப்பட்டிருக்கிற ச்ருதிகளின் பொருளைக் கூறுகிறார்—ஜ்ஞாநஸ்வரூபம் என்று. ஸர்வஜ்ஞஸ்ய இது முதலிய பதங்கள் மங்களகரங்களான குணவிசேஷங்களை விதிக்கிற வாக்கியங்களின் ஸ்மரணத்தை பலமாகக்கொண்டவைகள். "தத்குணஸாரத்வாத்" இது முதலிய ஸூத்ரங்களில் ஸித்தமாகவே இருக்கிற இரண்டு நிர்வாஹங்களும் இங்கு கூறப்பட்டன. ஈச்வரன் ஜ்ஞாதாவாக இருப்பதால் ஜ்ஞாநத்தினலேயே நிரூபிக்கப்படத்தக்கதன்மை உரைக்கப்பட்டது. ஜ்ஞாதாவுக்கு ஜ்ஞாநமல்லவோ நிரூபகம். தாப் என்கிற ப்ரத்யயதிற்கு முக்கியத்வம் பொருள்-ஈச்வரன் ஜ்ஞாநஸ்வரூபன், ஜ்ஞாநத்தை குணமாகவுமுடையவன் என்பதை உணர்த்துவதில் கருத்துள்ள ச்ருதிகளைக்காண்பிக்கிறார்—யஸ்ஸர்வஜ்ஞ: என்று. ஜ்ஞாநஸ்வரூபதாம்-இரண்டுவிதத்தாலும் ஜ்ஞானவ்யபதே சத்துக்கு யோக்யனாக இருக்கும் தன்மையை-ஜ்ஞாநஸ்வரூபனாக இருத்தலும் ஜ்ஞாநகுணமுள்ளவனாக இருத்தலும் விதிக்கப்பட்டிருப்பதால் இரண்டும் பொருத்தமுள்ளதென்று அர்த்தம்- ஜ்ஞாநத்துக்கு ஜ்ஞாநாச்ரயத்வம் பொருந்தாதென்கிற கேழ்விக்கு பரிஹாரம் முந்தியே செய்யப்பட்டிருக்கிறது. பேதத்தை நிஷேதிக்கிற ச்ருதிகளின் பொருளைக்கூறுகிறார்—ஸோகாமயத என்று. விசித்ரஸ்திரத்ரஸநுபதயா-விசித்திரங்களான ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் சரீரமாகக்கொண்டிருப்பதால். அப்ரஹ்மாத்மக என்பதனுல் ப்ரஹ்மத்தை அந்தர்யாமியாகக் கொள்ளாமலிருத்தல் உரைக்கப்பட்டது. விதிக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களைவிட வேறானதும் தன்னுல் தான் நிலைபெற்றிருக்கிறதுமான வஸ்துக்களின் நாநாத்வம் என்று பொருள். அன்றிக்கே. ஸ்திரத்ரஸரூபதயா - ஸ்தாவர ஜங்கமாத்மகமாக இருப்பதால். அப்ராஹ்மாத்மக என்று. அப்ராஹ்மபூதமென்று அர்த்தம். அப்படி சொல்லப்பட்டதால் கார்யகாரணங்களின்பேத நிஷேதம் செய்யப்பட்டதாக ஆகும். ஐக்யச்ருதிகள் ப்ரகார விசிஷ்ட வஸ்த்வைக்யத்தில் கருத்துள்ளவைகளாதலால் ஐக்யச்ருதிகளுக்கு சேஷமாக இருக்கிற பேதநிஷேதமும் அவைகளை அநுஸரித்து ப்ரகாரிபேத நிஷேதத்திலேயே நோக்கமுள்ளதாக இருப்பதற்குத் தகுதியுள்ளதென்று அர்த்தம். ஸாமான்யமாக சொல்லப்பட்டிருக்கிற நிஷேதமானது விசேஷவிதி காணப்பட்டால் அந்த விசேஷத்தைத்தவிர்த்த மற்றவைகள் ஸாமான்ய நிஷேதத்திற்கு விஷயமாகக் காணப்பட்டிருக்கிறது. நஹிம்ஸ்யாத் இது முதலியவைகளில்—விசேஷவிதியை ஸாமான்ய நிஷேதமானது பாதிக்கிறதேயானல் வைதயான ஹிம்ஸைக்கு அதர்மம் ப்ரஸங்கிக்குமென்கிற அபிப்ராயத்தால் கூறுகிறார்—நபுந: என்று. சொல்லப்பட்ட அர்த்தத்தை உபக்ரமத்தாலேயே உபபாதானம் செய்கிறார்—யத்ரத்வஸ்ய என்று யோநீயத்ராத்மந: என்று. அந்யத்ர என்கிற அவ்யயமானது விநாசப்தத்திற்கு பர்யாயம். ப்ரஹ்மண: ப்ருதக்பூதம் - ப்ரஹ்மத்துடன் அவிநாபாவமில்லாத வஸ்து இல்லை என்று அர்த்தம். பேத விசேஷ நிஷேதம் காணப்பட்டிருப்பதால் பொதுவாக இருக்கிற பேத நிஷேதமும் அந்த விசேஷ நிஷேதத்திலேயே பர்யவஸிக்கிறது. "சாகோவா மந்த்ரவர்ணாத்" என்கிற நியாயத்தால் என்று கருத்து.

---

ஸவ௱ விஷவிரீஹ்ரராணாம ஸ்வஹாவமெஹ௯ம ஸ்ரா௯வமெஹ௯ஹ வஷ

ஷீ௩ாம காயபுகாரணஹாவம காயபுகாரணயொர௩௩ ஜ்கவஹ வஷஷீ

௩ாம ஸவபுரவஸாம ஶ்ரு௯தீ௩ாஉவிரொயஃ; விஷவிதொஃ வாஉரா௯ஷ

ஸவபுஷா ஶரீராசூஹாவம ஶரீரஹ௯௯தயொஃ காரணஹ ஶாயாம

नामरूपविभागानर्हसूक्ष्मदशापन्नं कार्यदशायां तद-
र्हस्थूलदशापन्नं चेत्येवं श्रुतिभिरेव ज्ञायत इति ब्रह्म-
ज्ञानवादेष्वौपाधिकब्रह्मभेदवादस्यान्यस्याप्यन्याय्य-
त्वमस्य सकलश्रुतिविरुद्धस्य न कथञ्चिदप्यवकाशो द्र-
ष्टव्यः । चिदचिदीश्वराणां पृथक्स्वभावतया तत्त्वश्रुतिसिद्धा-
नां शरीरात्मभावेन प्रकारप्रकारितया श्रुतिभिरेव प्रति-
पन्नानां श्रुत्यन्तरेण कार्यकारणभावप्रतिपादनं कार्य-
कारणयोरैक्यप्रतिपादनञ्च दृष्टव्यम् । यथा— पृथ-
गात्मानं षड्यामानान्तदितिवाक्यैः पृथक्त्वज्ञानं सदायतना-
दिवाक्यैरैक्यं सदायतनत्वज्ञानं “ उशद्वर्णनिर्गा
सर्वाणि” इत्यधिकारवाक्यं कारणः कर्तृत्वतया विदधाति; तथा
चिदचिदीश्वराणां विविक्तस्वरूपस्वभावान् “क्षरं प्रधानममृताक्षरं
हरः क्षरात्मानावीशते देव एकः” “पतिं विश्वस्यात्मेश्व-
रम्” “ज्ञाता नारायणः परः” इत्यादिवाक्यैः पृथक्
प्रतिपाद्य “यस्य पृथिवी शरीरम्” “यस्यात्मा शरीरम्” “य-
स्याव्यक्तं शरीरम् । यस्याक्षरं शरीरम् । एष सर्वभूता-
न्तरात्मापहतपाप्मा दिव्यो देव एको नारायणः” इत्या-
दिभिर्वाक्यैश्चिदचितोः सर्वावस्थावस्थितयोः परमात्मशरी-
रतां परमात्मनश्चात्मतां प्रतिपाद्य शरीरिपरमात्माभि-
धायिभिस्सदात्मादिशब्दैः कारणावस्थः कार्यावस्थश्च परमा-
त्मैक एवेति प्रतिपन्नं वस्तुत्रयम् 'सदेव सो-
म्येदमग्र आसीत्' 'ऐतदात्म्यमिदं सर्वम्' 'सर्वं खल्विदं
ब्रह्म' इत्यादिवाक्यं प्रतिपादयति । चिदचिद्वस्तुशरीरिणः
परमात्मनः परमात्मशब्देनाभिधाने हि नास्ति विरोधः; यथा
देवमनुष्यादिशरीरकस्यात्मविशेषस्य 'अयमात्मा सर्वः' इत्या-
त्मशब्देनाभिधानम् इत्यलमतिविस्तरेण ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

இவ்வண்ணம் சித் அசித் ஈச்வரன் மூன்றுக்கும் ஸ்வரூபபேதத்தையும் ஸ்வபாவபேதத்தையும் சொல்லுகிறவைகளும் கார்யகாரண பாவத்தையும்

கார்யகாரணங்கள் இரண்டுக்கும் (அநந்யத்வத்தை) அபேதத்தைச்சொல்லுகிறவைகளுமான எல்லா ச்ருதிகளுக்கும் அவிரோதமானது சித் அசித் இரண்டுக்கும் பரமாத்மாவுக்கும் எப்பொழுதும் சரீராத்மபாவத்தையும் சரீரபூதங்களான சித்அசித் இரண்டுக்கும் காரணாவஸ்தையில் நாமரூப விபாகங்களுக்கு அநர்ஹமான ஸூக்ஷ்ம தசாப்ராப்தியையும் கார்யதசையில் நாமரூப விபாகங்களுக்குத்தக்கதான ஸ்தூலதசாப்ராப்தியையும் சொல்லுகிற ச்ருதிகளாலேயே அறியப்படுகிறதாதலால் ஸர்வ ச்ருதிகளுக்கும் விருத்தமாக இருக்கிற ப்ரஹ்மாஜ்ஞாநவாதத்துக்கும் ஔபாதிகமான ப்ரஹ்மபேதவாதத்துக்கும் அபந்யாய மூலகமான இன்னும் மற்றதற்கும் எவ்விதத்தாலும் அவகாசமானது காணப்படவில்லை. வெவ்வேறான ஸ்வபாவமுள்ளவைகளாக அந்த அந்த ச்ருதிகளால் ஸித்தமாக இருப்பவைகளும் சரீராத்மபாவத்தால் ப்ரகாரப்ரகாரிகளாக ச்ருதிகளாலேயே அறியப்பட்டிருக்கிற சிதசிதீச்வரதத்வங்களுக்கு வேறு ச்ருதிகளால் கார்யகாரண பாவப்ரதிபாதனமும் கார்யகாரணங்கள் இரண்டுக்கும் ஐக்ய ப்ரதிபாதனமும் விருத்தமல்லவன்றோ. எப்படி உத்பத்தி வாக்கியங்களால் தனித்தனியாக ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பவைகளும் ஸமுதாயத்தை அநுவதிக்கிற இரண்டு வாக்கியங்களால் இரண்டு ஸமுதாயபாவத்தை அடைந்திருக்கிறவைகளுமான ஆக்நேய யாகம் முதலிய ஆறு யாகங்களை தர்சபூர்ணமாஸாப்யாம் என்கிற அதிகார வாக்கியமானது பலகாமனையுள்ளவனுக்குச் செய்யத்தக்கதாக விதிக்கிறதோ, அப்படி வெவ்வேறான ஸ்வரூப ஸ்வபாவங்களுள்ள சிதசிதீச்வரர்களை 'க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:, க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:, பதிம் விச்வஸ்யாத்மேச்வரம், ஆத்மாநாராயண: பர:' இது முதலிய வாக்கியங்களால் தனித்தனியாக ப்ரதிபாதித்து, யஸ்ய ப்ருதிவீ சரீரம், யஸ்யாத்மா சரீரம், யஸ்யாவ்யக்தம் சரீரம், யஸ்யாக்ஷரம் சரீரம், ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோதேவ ஏகோ நாராயண:, இது முதலிய வாக்கியங்களால் எல்லா அவஸ்தைகளுடனும் சேர்ந்திருக்கிற சித் அசித் இரண்டும் பரமாத்மாவுக்கு சரீரங்களென்பதையும் பரமாத்மா, அந்த சித சித்துக்களுக்கு ஆத்மா என்பதையும் ப்ரதிபாதித்து சரீரியாக இருக்கிற பரமாத்மாவைச் சொல்லுகிற ஸத் ப்ரஹ்ம முதலிய காரணாவஸ்தையுடனும் கார்யாவஸ்தையுடனும் கூடிய பரமாத்மா ஒருவனே என்று வெவ்வேறாக அறியப்பட்டிருக்கிற மூன்று வஸ்துக்களையும் 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத், ஐததாத்ம்யமிதம் ஸர்வம், ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' இது முதலிய வாக்கியம் ப்ரதிபாதிக்கிறது. சித்துக்களையும் அசித்துக்களையும் சரீரமாகக்கொண்ட பரமாத்மாவை பரமாத்ம சப்தத்தால் சொன்னால் விரோதமில்லையன்றோ. எப்படி மனுஷ்யபிண்ட சரீரமுள்ள ஆத்ம விசேஷத்தை இந்த ஆத்மா சுகமுள்ளவன் என்று ஆத்ம சப்தத்தால் சொல்வதில் விரோதமில்லையோ. இதுவிஷயமான மிக்க நீண்டவிசாரம் வேண்டாம். இத்துடன் போதுமானது.

ச்ருதப்ரகாசிகை—

மற்ற வ்யாக்யாதாக்களாலும் உம்மாலும் நிர்வாஹ ப்ரகாரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அதில் என்ன விசேஷமென்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்— ஏவம் என்று. நம்மால் சொல்லப்பட்டிருக்கிற நிர்வாஹமானது ச்ருதிகளாலேயே கூறப்பட்டிருக்கிறது. ஸ்ம்ருதிக்கும் அனுகுணமானது. அந்த வ்யாக்யாதாக்களால் செய்யப்பட்டிருக்கிற நிர்வாஹமானது ச்ருதிவிருத்தமானது, ச்ருதியினால் சொல்லப்பட்டதுமல்ல, போலியான தர்க்கத்தை மூலமாகவும் கொண்டது. 'அபந்யாயமூலஸ்ய ஸகலச்ருதி விருத்தஸ்ய' என்கிற இந்த பதங்களும் எல்லா இடங்களிலும் அன்வயிக்கின்றன. அந்யஸ்ய என்பது ஸ்வாபாவிகமான பேதாபேதத்தையும் தன்னிடத்திலுள்ள பேதத்தையும் சொல்லுகிறது. இந்த அர்த்தத்தை வைதிகத்ருஷ்டாந்தத்தால் உபபாதிக்கிறார்— சிதசித்தீச்வராணும் என்று. ஆக்நேய: - அக்நீஷோமத்தைச் சார்ந்த. உபாம்சு யாஜங்கள் இரண்டு, ஐந்திரங்கள் இரண்டு, ஐந்த்ராக்னங்கள் இரண்டு ஆக ஆறு யாகங்கள், உத்பத்திவாக்கியம் என்பது முதலாவதான ப்ரதிபத்தியை உண்டுபண்ணுகிற வாக்யம். ப்ருதத்பன்னன்-தனித்தனியாக ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற உத்பத்தி வாக்கியங்களால்- யதாக்நே யோஷ்டாகபாலோமாவாஸ்யாயாஞ்ச பௌர்ணமாஸ்யாஞ்சாச்யுதோபவதி இது முதலியவைகளால், ஸமுதாயாநுவாதி வாக்யத்வயேந-ய ஏவம் வித்வாந் பௌர்ணமாஸீம் யஜதே, ய ஏவம் வித்வாநமாவாஸ்யாம் யஜதே, இந்த இரண்டு வாக்கியங்களாலும். தர்சபூர்ணமாஸாப்யா மென்று ஸ்வர்கத்துக்குஸாதனமாக இருத்தலென்கிற ஆகாரத்தால் ஒன்றுபடுத்தி அதனால் செய்யத்தக்கதாக விதிக்கிறது என்றுபொருள். அப்படி இந்த இடத்தில் அர்த்த ப்ரதிபாதனத்தைக் காண்பிக்கிறார்— ததா என்று. சரீரபூத என்று, கார்யாவஸ்தையுடனும் காரணவஸ்தையுடனும்கூடி இருக்கிற பரமாத்மா ஒருவனே என்கிற வசனபங்கியினால் தனித்தனியாக அறியப்பட்டிருக்கிற மூன்று வஸ்துக்களையும் ப்ரதிபாதிக்கிறதென்று அர்த்தம். ஆக்நேயத்தை முதலாகக்கொண்ட ஸமுதாயத்தில் அதில் உள்ளடங்கிய ஒரு வ்யக்தியைச்சொல்லுகிற சப்தத்தால் ஸமுதாயத்திற்கு அபிதானம் காணப்பட்டிருக்கவில்லை. இந்த இடத்திலோ பரமாத்மாவைச் சொல்லுகிற சப்தத்தால் ஸமுதாயாபிதானம் எவ்வண்ணம் ஏற்படுமென்று வினவப்படுமேயாகில் கூறுகிறார்—சித சித்வஸ்து என்று. திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறார்—யத்ர என்று.

அங்கு ஒன்றுக்கொன்று ப்ரகார ப்ரகாரி பாவமில்லாமையால் ஸமுதாயத்தில் அடங்கி இருக்கிற ஒரு வ்யக்தியைச்சொல்லுகிற சப்தத்தால் ஸமுதாயத்திற்கு அபிதானமில்லை. இந்த இடத்திலோ வென்றால் அப்படி இல்லாமையால் பொருத்தமுள்ளது. எவ்வாறு என்று வினவப்படுமேயாகில் உத்தரம் கூறப்படுகிறது. அர்த்த ஸாமர்த்தியத்தாலும் சப்தஸாமர்த்யத்தாலும் சித் அசித் இரண்டும் ப்ரஹ்மத்தை விட்டு என்றும் பிரியாமலே இருக்கிற விசேஷணமாதலாலும் ப்ரகாரங்களால் விடுபட்டிருக்கிற ப்ரஹ்மத்துக்கு ஜகத்காரணத்வம் பொருந்தாததாலும் ப்ரகாரியைச்சொல்லுகிற சப்தத்தால் ப்ரகாரங்களுடன்கூடின வஸ்துவுக்கே உபஸ்தாபனம் ஸித்திக்கிறது. ஸத் ப்ரஹ்ம என்கிற சப்தங்கள் இரண்டும் விசிஷ்டத்துக்கு ஸத்த்வப்ருஹத்த்வகுண ஸம்பந்தமிருப்பதால் விசிஷ்டத்தை உணர்த்துவதில் ஸாமர்த்தியமுள்ளவைகள். ஆத்மசப்தமும் வ்யாப்தி ரூப ப்ரவ்ருத்தி நிமித்தமானது வ்யாப்யத்தை உணர்த்துகிறது என்று. அன்றிக்கே

‘அக்ஷராத் ஸம்பவதீஹ விச்வம், யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித், யஸ்ய ஜ்ஞாநமயம் தப:, தஸ்மாதேதத்ப்ரஹ்ம நாமரூப மன்னஞ்ச ஜாயதே ஆத்மந ஆகாசஸ்ஸம்பூத:’ இது முதலிய ச்ருதிவசனங்களில் பரமாத்மாவைச் சொல்லுகிற சப்தங்களால் காரணம் கூறப்படுகிறது. அவைகளுக்கு விசேஷணங்களாக இருக்கிற சித்சித்துக்களைச் சொல்லும் விஷயத்தில் சக்தி இல்லை. லக்ஷணையில் அதே தோஷம் ஆகையால் எல்லா இடத்திலும் ஸ்வரூப பரிணாமமே ஸ்வாரஸமாக வருகிறதென்று சொல்லப்படுமேயானால் சொல்லுகிறார்—சிதசித் என்று. வேறு ச்ருதிகளின் பலத்தினால் ஸ்வரூபவிகாரத்துக்கு ஸம்பவமில்லாமையால் சொல்லப்படாமலிருந்தபோதிலுங் கூட கார்யோபயுக்தமான விசேஷணமானது ப்ருஷதாஜ்ய ந்யாயத்தினால் அர்த்தஸ்வபாவத்தால் அருகாமையில் கொண்டுவந்து சேர்ப்பிக்கப்பட்டதாக அனுஸந்திக்கத்தக்கதென்று கருத்து. அதையே உலகத்தில் வழங்குகிற ப்ரயோகத்தாலும திடப்படுத்துகிறார் யதா என்று. இந்த ஆத்மா சுகமுள்ளவன் என்கிற ப்ரயோகத்தால் ஒரு ஆத்மாவுக்கு ஸுகியாகஇருத்தலென்கிற குணத்தை விதித்தால் சரீரமில்லாத ஆத்மாவுக்கு விஷய சுகம் ஸம்பவியாததலால் அப்படிப்பட்ட விஷயசுகத்துக்கு உபயுக்தமான மநுஷ்யன் முதலிய பிண்டத்துடன் சேர்ந்திருத்தல் அர்த்தத்தால் ஸித்திக்கிறது, அப்படிப்போலென்று கருத்து.

---

யச்சாந்யது³க்தம் — ப்³ரஹ்மாத்மைகத்வவிஜ்ஞாநேநைவாவித்³யாநிவ்ருத்தியுக்தா — இதி, தத³யுக்தம், ப³ந்த⁴ஸ்ய பாரமார்த்தி²கத்வேந ஜ்ஞாநநிவர்த்யத்வாபா⁴வாத் । புண்யாபுண்யரூபகர்மநிமித்ததே³வாதி³ஶரீரப்ரவேஶதத்ப்ரயுக்தஸுக²து³:கா²நுப⁴வரூபஸ்ய ப³ந்த⁴ஸ்ய மித்²யாத்வம் கத²மிவ ஶக்யதே வக்தும் । ஏவம்ரூபப³ந்த⁴நிவ்ருத்திர்ப⁴க்திரூபாபந்நோபாஸநப்ரீதபரமபுருஷப்ரஸாத³லப்⁴யேதி பூர்வமேவோக்தம் । [illegible] ஜ்ஞாநஸ்ய யதா²வஸ்தி²தவஸ்து[illegible] விபரீதவிஷயஸ்ய [illegible] ப⁴வதி — ‘‘[illegible]’’ இதி ஶாஸ்த்ராத் । ‘‘உத்தம: புருஷஸ்த்வந்ய:’’ ‘‘ப்ருத²கா³த்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா’’ இதி ஜீவாத்மவிஸஜாதீயஸ்ய தத்³கு³ணயோகி³நோ ப்³ரஹ்மணோ ஜ்ஞாநம் பரமபுருஷார்த²லக்ஷணமோக்ஷஸாத⁴நமித்யவக³ம்யதே ॥

கிஞ்ச [illegible]ஸ்யாபி நிவர்தகஜ்ஞாநஸ்ய மித்²யாரூபத்வாத்தஸ்ய நிவர்தகாந்தரம் ம்ருக்³யம் । நிவர்தகஜ்ஞாநமித³ம் ஸ்வவிரோதி⁴ ஸர்வம் பே⁴த³ஜாதம் நிவர்த்ய க்ஷணிகத்வாத்ஸ்வயமேவ நஶ்யதீதி சேத் ; [illegible]

க்ருத்ஸ்நபேதவிஷயா நிவர்தகாந்வேஷணீயத்வே । தத்விநிர்மோ
ப்ரஹ்மஸ்வரூபவேதித்வேந ; ததா ஸதி நிவர்தகஜ்ஞாநோத்பத்தி
ரேவ ந ஸ்யாத், தத்விநாஸே த்ருஷ்டி ததுத்பத்த்யஸம்பவாத் ॥

ஸ்ரீபாஷ்யம்—

ஸ்வரூபத்தாலும் ஸ்வபாவத்தாலும் ப்ருஹத்த்வகுணமுள்ள ஆத்மா ஒன்று என்கிற ஜ்ஞாநத்தாலேயே அவித்யையின் அழிவு பொருத்தமுள்ளதாக ஆகிறதென்று யாதொரு விஷயம் கூறப்பட்டதோ அது பொருத்தமுள்ளதல்ல. பந்தம் பாரமார்த்திகமாக இருப்பதுபற்றி ஜ்ஞாநத்தினால் அது நிவர்த்திக்கத்தக்கதாக இருப்பதால் புண்யபாபரூபங்களான கர்மங்களால் உண்டாகிற தேவமனுஷ்யாதி தேஹங்களில் ப்ரவேசம், அந்த தேஹ ப்ரவேசத்தாலுண்டுபண்ணப்பட்டிருக்கிற சுகதுக்காநுபவம், இப்படிப்பட்ட பந்தத்திற்கு எவ்விதம் மித்யாத்வம் சொல்லமுடியும். இப்படிப்பட்ட பந்தநிவ்ருத்தியானது பக்திரூபத்தை அடைந்திருக்கிற உபாஸநத்தினால் ப்ரீதியையடைந்த பரமபுருஷனுடைய ப்ரஸாதத்தாலடையத்தக்கதென்று முந்தியே சொல்லப்பட்டிருக்கிறது. உள்ளபடி இருக்கிற வஸ்துக்களுக்கு எது விபரீதமோ அதை விஷயமாகக்கொண்டிருக்கிறதும் உனக்கு அபிமதமாகவுமிருக்கிற ஐக்ய ஜ்ஞாநம் மித்யாரூபமாதலால் அதனால் பந்தத்தின் விவ்ருத்தியே பலமாக ஆகிறது. மித்யைததந்யத்ரவ்யம் ஹிநைதிதத்ரவ்யதாம்யத:, (பொருள்) எக்காரணத்தால் ஒரு வஸ்து அதைவிடவேறாக இருக்கிற மற்றொரு வஸ்துவாக ஆகாதோ அக்காரணத்தால் ஜீவன் பரமாத்மா இவ்விரண்டு வஸ்துக்களுக்கும் ஐக்யம் மித்யை என்கிற சாஸ்திரத்தினாலும் உத்தம:புருஷஸ்தவந்ய:, ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்சமத்வா, என்று ஜீவாத்மாவைவிட விஜாதீயனாகவும் ஜீவாத்மாவுக்கு அந்தர்யாமியாகவுமிருக்கிற ப்ரஹ்மவிஷயக ஜ்ஞாநமானது மோக்ஷஸாதநமென்று உபதேசிக்கப்பட்டிருப்பதாலும். மேலும் உனக்கு அபிமதமாக இருக்கிற நிவர்த்தக ஜ்ஞாநமும் மித்யாரூபமாதலால் அதற்கு நிவர்த்தகமான வேறு ஒருஜ்ஞாநம் உன்னால் தேடத்தக்கது. இந்த நிவர்த்தக ஜ்ஞாநமானது தனக்கு விரோதியாக இருக்கிற எல்லா பேத ஜாதத்தையும் போக்கி க்ஷணிகமாதலால் தானே நாசமடைகிறதென்று சொல்லப்படுமேயானால் அது ஸரியல்ல. அதன் ஸ்வரூபம் அதன் உத்பத்தி அதன் விநாசம் இவைகள் கல்பிக்கப்பட்டிருப்பதால் விநாசம் அதன் கல்பனை இவைகளுக்கு கல்பகரூபமான அவித்யைக்கு நிவர்த்தகமான மற்றொன்று தேடத்தக்கது. அதன் விநாசம் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமே என்று சொல்லப்படுமேயானால் அங்ஙனமாகில் நிவர்த்தக ஜ்ஞாநத்தின் உத்பத்தியே ஏற்படாது. அதன் விநாசமிருக்கும்பொழுது அதன் உத்பத்தி ஸம்பவியாதாதலால்.

கூஅ

ச்ருதப்ர்காசிகை—

7 நிவ்ருத்த்யனுபபத்தியைச் சொல்வதற்காக அனுவதிக்கிறார்—யத்புந: என்று. தூஷிக்கிறார்-தத்யுக்தம் இது முதலியதால். ப்ரபஞ்ச மஜ்ஞாநத்தால் பாதிக்கத்தக்கது, ஜ்ஞாநமானது ஐக்யத்தை விஷயமாகவுடையது, இது இரண்டும் அன்யனுக்கு அபிமதம், அவற்றுள் முதலாவதான ஜ்ஞாநபாத்யத்வாநுபபத்தியைக் கூறுகிறார்- பந்தஸ்ய என்று. எல்லா ப்ரமாணங்களுக்கும் அநுகுணமான பாரமார்த்யத்தை உபபாதிக்கிறார்—புண்யாபுண்ய என்று. ஜ்ஞாநமாத்திரத்தினால் ஸித்தியுள்ள வஸ்துவுக்கு ஹேது ஹேதுமத்பாவ நியமம் பொருந்தாது. பரமார்த்தமான வஸ்துவுக்கே அர்த்த க்ரியா காரித்வமும் உத்பத்தியுமிருப்பதால். முன் உபபாதிக்கப்பட்டிருக்கிற அஸத்யத்திற்கு ஹேதுத்வாஸம்பவத்தையும் உத்பத்தியின் அஸம்பவத்தையும் உபஜீவித்து உரைக்கப்பட்டது. ப்ரதீதியினால் மாத்திரம் ஸித்தி பெற்றதும் வேறு இடத்தில் இருப்புடையதுமான ஒரு வஸ்துவானது இந்த இடத்தில் ஒன்றையுமுண்டு பண்ணுகிறதில்லையன்றோ. தானுமிப்பொழுது தன்னால் உண்டுபண்ணப்படுகிறதில்லை. மேலும் பரமார்த்தமல்லாததற்கு ப்ராந்திஜ்ஞாந ஸாமக்ரியைத்தவிர்த்த வேறுஹேதுவின் அபேக்ஷையும் காணப்பட்டிருக்கவில்லை. அங்குராதி ஸாமக்ரியே முதன்மைவாய்ந்தஸாமக்ரியாக ஆகா, மலையின் உச்சியிலுள்ள மண்ஜலம் வித்து இவைகளின் ஸம்பந்தத்தினால் வீட்டுவாராண்டாவிலிருப்பவனுக்கு அங்குர ப்ரமம் ப்ரஸங்கிக்க வேண்டியதாக ஏற்படுவதால். பதார்த்தங்களுக்கு அர்த்தக்ரியா காரித்வமும் உத்பத்தியும் மித்யை என்று சொல்லத்தக்கதல்ல. ஜ்ஞாநத்தால் பாதிக்கத்தக்க தன்மை இல்லாமையால். எல்லாம் மித்யை என்றுசொல்லப்படும்பக்ஷத்தில் பாவஞ்செய்தபோதிலுங்கூட ப்ராயச்சித்தத்தை அபேக்ஷிக்க வேண்டியதில்லை. மித்யை என்கிற புத்தியேபோதுமென்று கருத்து. உன்னாலும் அவித்யைக்கு ஜ்ஞாநத்தால் நிவர்த்திக்கத்தக்கதன்மை சொல்லத்தக்கது. அது ஸத்யமாக இருந்தால் எப்படி உபபன்னமாகிறதென்று கேழ்க்கப்பட்டால் சொல்லுகிறார்—ஏவம்நுப என்று. பரமார்த்தத்திற்கு ஜ்ஞாநத்தினால் நிவர்த்திக்கத்தக்க தன்மையானது த்ருஷ்டத்வாரா பொருந்துகிறதில்லை, பின்னையோ அத்ருஷ்டத்தின்வாயிலாக. எப்படி உண்மையான பாம்புக் கடி விஷத்துக்கு உபாஸநத்தினால் ப்ரீதியடைந்த கருட ப்ரஸாதத்தால் நிவ்ருத்தியோ அப்படி மித்யை என்ற ஜ்ஞாநத்தினால் நிவ்ருத்தி இல்லை என்று அர்த்தம். ப்ரபஞ்சமானது ஜ்ஞாநத்தினால் நிவ்ருத்திக்கத்தக்கதல்லவென்பது கூறப்பட்டது. ஐக்ய ஜ்ஞாநத்திற்கு உபாயத்வாநுபபத்தியைச் சொல்லுகிறார்—பவதமபிமதஸ்ய என்று. தத்த்வஜ்ஞாநமன்றோ மோக்ஷோபாயம். பின்ன விஷயமான அபேத ஜ்ஞாநமானது அதத்த்வ ஜ்ஞாநரூபமாதலால் விபரீதபலங்கூடவென்று அர்த்தம். அத்வைதம் அதத்ய மென்பதில் ப்ரமாணத்தைக் கூறுகிறார்—மித்யை தத் என்று. ஐக்யம் அதாத்விகமென்பது கண்டோக்தியினால் காண்பிக்கப்பட்டது. ஐக்யத்திற்கு அஸத்யத்வம் எப்படி ப்லிக்கிறதோ அப்படி பேதஜ்ஞாநத்திற்கே மோக்ஷஹேதுத்வத்தைக் கூறுகிறார்— உத்தம என்று. ஸ்ம்ருதிவசநங்களின் * ஸங்கதியின் பொருட்டு சுருதி பிந்தி எடுக்கப்பட்டிருக்கிறது. ஐக்யஜ்ஞாநம் நிவர்த்தகம் என்கிற விஷயத்தில் ப்ரமாண விரோதம் கூறப்பட்டது. அதற்குமேல் ψ தர்க்க விரோதம் சொல்லுகிறார்—அபிச என்று. காட்டுத்தீ விஷத்தைப்போக்குகிற விஷம் இவைகள் த்ருஷ்டாந்தங்களென்கிற அபிப்ராயத்தால் சங்கிக்கிறார்—நிவர்த்தகஜ்ஞாநம் என்று.

---

* ஸங்கதி—ஸம்பந்தம். ψ தர்க்கம்—யுக்தி.

நிவர்த்தகஜ்ஞாநமும் அதன் விநாசமும் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறானதா? அல்லது ஸ்வரூபமா? என்கிற விகல்பத்தை அபிப்ராயப்பட்டுச் சொல்லுகிறார்—ந என்று. ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறாக இருப்பதால் கடம்முதலியதுபோல் விநாசம் கால்பநிகம். எப்படி ஸ்வப்ந தசையில் காணப்படுகிற பதார்த்தங்களின் ஸ்வரூபம் அவைகளின் உத்பத்தி ஸ்திதி இவைகள் கால்பநிகங்களோ அப்படியே நாசமும் கால்பநிகமென்று கருத்து. விநாச தத்கல்பநா கல்பகநபாவித்யாயா என்று. விநாசம் கல்பிக்கத்தக்கது. அந்த விநாச விஷய ப்ரமபுத்தியானது கல்பனே.கல்பகம் ப்ராமாச்ரயம் முதலியது இப்படிப்பட்ட அவித்யைக்கு என்று பொருள். ஸ்வரூப பக்ஷத்தை தூஷிக்கிறார்—ததாஸ்தி என்று. முந்தின பக்ஷத்தில் தூஷணமானது வேறு விதத்தாலும் வேதார்த்த ஸங்க்ரஹத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பாவரூபத்துக்கு நாசமென்பது பிற்காலத்திலுள்ள நிலைமையை அடைதலே அதோ இங்கு பொருந்துகிறதில்லை. ப்ரஹ்மத்தை விட வேறாக இருக்கிற அவஸ்தையுடன் கூடிய ஒரு வஸ்துவை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் அத்வைதத்தின் ஹாநிக்கு ப்ரஸங்கம் வருவதால். அபாவமென்பது பாவாந்தரமன்றே. கடத்திற்கு ப்ராகபாவம் என்பது பிண்டத்வம் முதலிய பூர்வாவஸ்தையே ப்ரத்வம்ஸமென்பது கபாலத்வம் முதலிய பிந்தின நிலைமையே, இதரேதராபாவமும் அச்வத்திளிடத்திலுள்ள கோத்வா பாவம் அச்வத்வரூபமே. கோவினிடத்திலுள்ள அச்வத்வாபாவம் கோத்வரூபமே. ஸம்ஸர்காபாவத்திற்குபாவரூபத்வம் எவ்வாறு பொருந்தும்? கடஸம்ஸர்காபாவம் பூதலமேயாகுமேயாகில் கடஸம்ஸர்கமிருக்கும்பொழுதே ஸம்ஸர்காபாவமிருக்கலாம். பூதலத்தைவிட அது வேறான வஸ்துவென்று சொல்லப்படுமேயாகில் அப்பொழுது அபாவமானது அங்கீகரிக்கப்பட்டதாக ஆகிறது. மறுமொழி உரைக்கப்படுகிறது. உன்பக்ஷத்தில் அபாவாச்ரயத்திற்கு எந்த வைலக்ஷண்யமோ அதே ஸம்ஸர்காபாவம். பூமிமாத்ரமே அபாவாச்ரயமாக ஆகில் அப்பொழுது பாவாச்ரயமான பூதலத்தில் கூட அபாவாச்ரயத்வம் ப்ரஸங்கிக்கும். அவ்விடத்திலும் மஹீமாத்ரமிருப்பதால். ஒரு ஒரு விசேஷத்துடன்கூடின பூதலமானது அபாவத்துக்கு ஆச்ரயமாகில் அதேவிசேஷம் ஸம்ஸர்காபாவம் என்று. காலவிசேஷத்தோடு சேர்ந்திருத்தலிருக்க தேசவிசேஷத்வமே அந்த விசேஷம், அப்பொழுதே கடத்துடன்கூடின வேறு ப்ரதேசத்தை விலக்குவதற்காக தேசவிசேஷத்வமென்று உரைக்கப்பட்டது. வேறு ஸமயத்தில் கடத்துடன் கூடின அதே தேசத்தை விலக்குவதற்காக காலவிசேஷ விசிஷ்டத்வேஸதி என்று உரைக்கப்பட்டது. இதைப்பற்றி அபியுக்தர்கள் கூறுகின்றனர். அது எங்ஙனமென்று வினவப்படுமேயாகில் மேல் வருமாறு கண்டுகொள்ளத்தக்கது. ஸம்ஸர்காபாவமேவம் விதுரிஹ ஸூதியோ பாவமே வத்வபாவம் மந்வாநா: கும்பவத் பூதலத இதர பூபாக பேதஸ்த்வபாவ:, யஸ்தத் தத்காலபேத வ்யதிகரிதக்ருஹ ப்ராங்கணேதி ப்ரதேச:கும்பா பாவாச்ரயோந்யைரகணி ஸ இஹந: க்வாதி கஸ்யோபலம்ப: என்று. நாசமென்பது அவஸ்தாந்தரமாதலால் கர்மநாசத்தைச் சொல்லுகிற உனக்கும் சோத்யம் துல்யமென்று சொல்லப்படுமேயானுல் அல்ல. கர்மா வென்பது நம்ம பக்ஷத்தில் பகவானுடைய ப்ரீதி அப்ரீதி ரூபமாயுள்ளது. அவற்றுள் எது ஸம்ஸாரபலானுகுண ஸங்கல்பமோ அது விநாசம் செய்யத்தக்க கர்மம் எது மோக்ஷானுகுண ஸங்கல்பமோ அதே முந்தியதின் நாசமென்று பொருத்தமுள்ளதே. தாது:ப்ரஸாதாந்மஹிமாநமீசம், இது முதலிய வைகளால்.

ஸ்ரீபாஷ்யம்—

மேலும் நிர்மாத்ர ப்ரஹ்மத்தைத் தவிர்த்த எல்லாவஸ்துக்களின் நிஷேதத்தை விஷயமாகக் கொண்டிருக்கிற ஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாதா யார்? அத்யாஸரூபமென்று சொல்லப்படுமேயாகில் அல்ல. அது நிஷேதிக்கப்படத்தக்கதாக இருப்பதுபற்றி நிவர்த்தக ஜ்ஞாநத்திற்கு கர்மாவாதலால் அதற்கு கர்த்ருத்வம் பொருந்தாததால். ப்ரஹ்மஸ்வரூபமே ஜ்ஞாதாவென்று சொல்லப்படுமேயானால் ப்ரஹ்மத்திற்கு நிவர்த்தக ஜ்ஞாநத்தைக்குறித்து ஜ்ஞாத்ருத்வமானது எவ்வித ஸ்வரூபத்துடன் கூடியது? அல்லது அத்யஸ்தமா? அத்யஸ்தமாக இருக்குமேயானால் இந்த அத்யாஸமும் அதற்கு மூலமான வேறு அவித்யையும் நிவர்த்தகஜ்ஞாநத்திற்கு விஷயமல்லாததாக இருக்கவே இருக்கிறது. நிவர்த்தகமான வேறு ஜ்ஞாநத்தை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் அதுவும் மூன்று ரூபமுள்ளதாக இருப்பதால் ஜ்ஞாதாவை அபேக்ஷித்து அநவஸ்தை ஏற்படும். ப்ரஹ்மஸ்வரூபமே ஜ்ஞாதாவென்று சொல்லும் பக்ஷத்தில் நம்முடைய பக்ஷமே ஏற்றுக்கொள்ளப்பட்டதாக ஆகும். நிவர்த்தக ஜ்ஞாநஸ்வரூபமும் தன்னை அறிகிறவனும் ப்ரஹ்மத்தைவிட வேறாக இருப்பதால் தன்னால் நிவர்த்திக்கத்தக்கதில் உள்ளடங்கியதென்கிற வசனமானது பூதலத்தைத் தவிர்த்தமற்றது முழுமையும் தேவதத்தனால் சேதிக்கப்பட்டது என்கிற இடத்தில் சேதந க்ரியையிலேயே இந்த * சேத்தாவுக்கும் இந்த சேதநக்ரியைக்கும் சேதிக்கப்படத்தக்க வஸ்துவினிடம் அநுப்ரவேசத்தைச் சொல்லுகிற வசனம்போல் பரிஹஸிக்கத்தக்கது. அத்யஸ்தனாக இருக்கிற ஜ்ஞாதாவானவன் தன்னுடைய நாசத்திற்கு ஹேதுவாக இருக்கிற நிவர்த்தகஜ்ஞாநத்தில் தான் கர்த்தாவாகவுமாகிறதில்லை. தன நாசமானது புருஷார்த்தமல்லாததால். அந்த நாசம் ப்ரஹ்மஸ்வரூபமென்று ஒப்புக்கொள்ளப்படும் பக்ஷத்தில் பேத தர்சனமென்ன அதற்கு மூலமான அவித்யை முதலியவைகளென்ன இவைகளின் கல்பனமே உண்டாகாது. ஆதலால் தைவத்தாலடிக்கப்பட்டவனை மீண்டும் உலக்கையினாலடிப்பதுபோன்ற இந்த விசாரம் போதும். ஆகையால் பந்தமானது அநாதிகர்ம ப்ரவாஹரூபமான அஜ்ஞாநத்தினடியாக உண்டாயிருப்பதால் அதன் நாசமான துகூறப்பட்டுள்ள ஜ்ஞாநத்தினாலேயே. அந்த ஜ்ஞாநத்தின் உத்பத்தியானது நாடோறும் செய்யப்படாநின்ற பரமபுருஷாராதன வேஷம் பூண்ட ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநவிசேஷத்தால் ஸம்ஸ்க்ரிக்கப்பட்டிருக்கிற வர்ணாச்ரமங்களுக்குத் தக்கதான கர்மங்களால் அடையத்தக்கது. அதில் பலத்தில் விருப்பத்துடன் செய்யப்படும் கர்மங்களைத்தும் அல்பாஸ்திரபலன்களுடன்கூடியதென்பதும் பலத்தைக்கருதாமல் செய்யப்படுகிறவைகளும் பரமபுருஷனுடைய ஆராதனவேஷம்பூண்டவைகளுமான கர்மங்கள் உபாஸநரூப

* சேத்தா—வெட்டுகிறவன்.

மான ஜ்ஞானோத்பத்தியின்வாயிலாக ப்ரஹ்மயாதாத்ம்யானுபவ ரூபமான முடிவில்லாத சாச்வதபலன்களுடன் கூடியதென்பதும் கர்மஸ்வரூபஜ்ஞானமில்லாவிடில் அறியப்படுகிறதில்லை. பலாபேக்ஷையுடன் கூடினதாக செய்யப்படுதலென்கிற ஸ்வரூபத்தின் பரித்யாகத்தை முன்னிட்டு எப்படி இங்கு கூறப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட ஸ்வரூபத்துடன் கூடின கர்மங்களின் உபாதானம் ஸம்பவிக்கிறதில்லை என்று கர்மவிசாரத்திற்கு பிறகு கர்மங்கள் அல்பாஸ்திரபலனுள்ளவைகளென்று நிச்சயிக்கப்பட்டுவிட்டபடியால்ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கதென்று "அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா" என்கிற ஸூத்ரத்தினால் கூறப்பட்டது.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் நிவர்த்தக ஜ்ஞானத்திற்கு ஜ்ஞாதாவின் அனுபபத்தியைக்கூறுகிறார்— அபிச என்று. ஸ்வரூபபூதஜ்ஞானத்திற்கு வேறுஜ்ஞாதாவின் அபேக்ஷை இல்லையன்றோ அதனால் அதை விலக்குவதற்காக 'க்ருத்ஸ்ந நிஷேத விஷய ஜ்ஞானஸ்ய' என்று உரைக்கப்பட்டது. ப்ரமாணத்தால் உண்டாகிற ஜ்ஞானமானது ஆச்ரயத்துடன் கூடியதாகவே காணப்பட்டிருக்கிறதன்றோ. ஜ்ஞாதா ப்ரஹ்மத்தைவிட வேறானவனோ? அல்லது வேறுபடாதவனோ? என்கிற விகல்பாபிப்ராயத்தால் சொல்லுகிறார்— சிந்மாத்ர என்று. முதலில் கோயம் என்று தர்மி ப்ரச்னம் ப்ரஹ்மத்தைவிட வேறானதென்கிற பக்ஷத்தில் தூஷணம் கூறுகிறார்—ந என்று. கர்ம கர்த்ருத்வ விரோதத்தாலென்று கருத்து. நிவர்த்திக்கப்படத்தக்க தன்மை இருந்தாலன்றோ கர்மகர்த்ரு விரோதம். ஆகையால் அதன் பரிஹாரத்திற்காக ஸ்வரூப பக்ஷத்தை சங்கிக்கிறார்—ப்ரஹ்ம என்று. இது ஜ்ஞாத்ருத்வ தர்ம விகல்பம். கிம் ஸ்வரூபம் என்று. ஸ்வரூபம் ஸ்வாபாவிகமென்று அர்த்தம். பிந்தி உண்டாவதாக புத்தியில் நிலைபெற்றிருப்பதால். அத்யஸ்த பக்ஷத்தை தூஷிக்கிறார்— அத்யஸ்தஞ்சேத் என்று. நிவர்த்தகஜ்ஞானவிஷய தயா திஷ்டத்யேவ என்று. ஜ்ஞாத்ருத்வாத்யாஸமும் அதற்கு மூலமான வேறு அவித்யையும் நிவ்ருத்தி அடைய வேண்டுமேயாகில் அது வேறு நிவர்த்தகத்தை அபேக்ஷிக்கிறுப்பதால் வேறான நிவர்த்தகத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளாமையால் அது இரண்டும் இருக்கவே இருக்கிறதாதலால் மிகுதி இன்றி அவித்யா நிவ்ருத்தியானது உண்டாகாதென்று அர்த்தம், நிவர்த்தக ஜ்ஞானாந்தரத்தை ஒப்புக்கொள்ளில் அதுவும் ஒன்றுக்கு ஒன்றைக்குறித்து ஸித்தி ரூபமாக இருப்பதால் ஜ்ஞாதாவை அபேக்ஷிப்பதால் அநவஸ்தை உண்டாகுமென்று சொல்லுகிறார்—நிவர்த்தக என்று. முதலாவது பக்ஷத்தை தூஷிக்கிறார்—ப்ரஹ்மஸ்வரூபஸ்ய என்று. நிருபாதிகமாக இருக்கிற ப்ரஹ்மஸ்வரூபத்துக்கே ஒப்புக்கொள்ளப்படாநின்ற ஜ்ஞாத்ருத்வமானது ஸ்வாபாவஸித்தமென்பது உங்களுக்கும் ஸித்தாந்தமாக ஆகலாமென்று அர்த்தம். ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறான ஜ்ஞாதாவுக்கும் நிவர்த்தக ஜ்ஞானத்திற்கும் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறாக இருத்தலென்கிற உபாதியை ஏற்றுக்கொள்ளுதலை பலமாகக்கொண்ட ப்ரபஞ்ச நிவர்த்தகமாகவும் ப்ரபஞ்சமூலமான அவித்யைக்கு நிவர்த்தகமாகவுமிருக்கிற ஜ்ஞானத்தினாலேயே நிவ்ருத்தியானது உண்டாகப்போகிறதென்று ஆசங்கித்து வ்யாகாதத்தால் தூஷிக்கிறார்— நிவர்த்தக ஜ்ஞாந ஸ்வரூபம் என்று. ஜ்ஞாதாவுக்கும் நிவர்த்தக ஜ்ஞானத்தால் நிவ்ருத்திவாரின் நிவர்த்தக ஜ்ஞானத்திற்காக ச்ரவணம் முதலியவற்றில் ப்ரவ்ருத்தியே உண்டாகாமல்,

போகவேண்டியதாகும் என்று சொல்லுகிறார்—அந்யஸ்தோஜ்ஞர்தா என்று. ஜ்ஞாதா வின் நாசமானது பரமபுருஷார்த்த ரூபமான ப்ரஹ்மஸ்வரூபமாதலால் அபுருஷார்த்த த்வமில்லை என்று ஆசங்கித்துச் சொல்லுகிறார்— தந்நாசஸ்ய என்று. பூர்வபக்ஷநிரா கரணத்தை உபஸம்ஹரிக்கிறார்— இதி என்று. இவ்வண்ணம் ப்ரஹ்மத்தைத்தவிர்த்த மற்ற எல்லா வஸ்துக்களுக்கும் மித்யாத்வ நிராகரணத்தினால் பந்தம் ஸத்யமென்று ஸித்தித்துவிட்டபடியால் அந்த பந்த நிவ்ருத்தியானது கர்மங்களை அபேக்ஷித்துக் கொண்டிருக்கிற உபாஸனாரூபமான ஜ்ஞானத்தினாலேயே என்பதனால் கர்மவிசாரம் ப்ரஹ்ம விசாரத்திற்கு முந்தினகாலத்தில் நடத்தப்பட்டிருத்தல் வேண்டுமென்பது யுக்தமென்று சொல்லுகிறார்-தஸ்மாத் என்று. தஸ்மாத்ஸாதந சதுஷ்டயமானது ப்ரஹ்மவிசாரத்தை க்குறித்து முந்தி இருக்கவேண்டுமென்பதில் வஸ்து ஸாமர்த்தியம் என்கிற ஹேதுவா னது கூறப்பட்டது. அதுவும் நிர்விசேஷமான ப்ரஹ்மத்தினிடம் அத்யஸ்தமான ப்ர பஞ்சத்திற்கு கர்மங்களை அபேக்ஷியாத ஜ்ஞானத்தால் நிவிர்த்திக்கப்படத்தக்கதன்மைஎன் பது யாதொன்றுண்டோ அதுவும் பொருந்தாதென்று உபபாதானம் செய்திருப்பதால் வஸ்து ஸாமர்த்தியம் ஸித்தியாமல் போவதாமென்று அர்த்தம். ஸ்வரூபாநாதித்வத் தை விலக்குவதற்காக ப்ரவாஹ சப்தம். அநிர்வசநீய வ்யாவ்ருத்தியை உத்தேசித்து கர்ம சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. உக்தலக்ஷணஜ்ஞானாதேவ-உபாஸனாத்மக ஜ்ஞானத்தினாலேயே அதன் உத்பத்தியானது வர்ணாச்ரமங்களுக்குத் தகுந்த கர்மங்களால் அடையத்தக்கதாக இருக்கட்டும், அதனால் உபாஸநாதி ஸ்வரூபஜ்ஞானத்தைக்குறித்து ப்ரஸ்துத கர்மவிசார பூர்வ வ்ருத்தத்வத்திற்கு என்ன வென்று வினவப்படுமேயாகில் கூறுகிறார். தத்ர என்று. கர்மவிசாரத்தாலேயே அதற்கு அல்பாஸ்திரபலத்வம் பலித்ததென்று கருத்து. அநபிஸம்ஹிதபல என்று. யஜ்ஞேநதாநேந இது முதலிய கர்மவிநியோஜக வாக்யார்த்தஜ்ஞானமானது பதார்த்தஜ்ஞானத்தை முன்னிட்டே உண் டாவதால் பதார்த்த பூதமான கர்ம ஸ்வரூபமென்கிற பெயருள்ள விசேஷ்யஜ்ஞானமில் லாமல் உபாஸனத்தின் வாயிலாகஅநந்தஸ்திரபலத்வ ரூபமான விசேஷணமும் அறிய ப்படுகிறதில்லை என்று அர்த்தம், அதனால் இவ்விடத்திலென்னவென்று கேழ்க்கப்படு மேயாகில் சொல்லுகிறார்—கேவல என்று. கேவலாகார:- ஆத்மயாதாத்ம்யபுத்திஸம்ஸ் கார சூன்யமான உருவம், விடுவதற்காகவும் எடுத்துக்கொள்வதற்காகவு மல்லவோ ஒன்றின் ஜ்ஞானம்-அதில் பலத்தில் வாயிலாக கர்மங்கள் விடத்தக்கவைகள். ஸ்வரூப த்தால் எடுத்துக்கொள்ளப்படத்தக்கவைகள். ஹானம் உபாதானம் இரண்டுக்குமாக ஏற்படுகிற ஜ்ஞானமானது கர்மவிசாரமில்லாவிடில் ஸித்தியாது. ஆதலால் கர்மவிசா ரம் நிவ்ருத்தித்து விடும்பக்ஷத்தில் அந்த ஜ்ஞானத்திற்கு பலமான ஹானம் உபாதா னம் இரண்டும் ஸம்பவியாதென்று அர்த்தம். அதாத: சப்தத்தை நிகமனம் பண்ணு கிறார்— இதிகர்ம விசாராநந்தரம் என்று. ப்ரஹ்ம விசாரம் செய்யத்தக்க தென்பத னால் ப்ரஹ்மஜிஜ்ஞாஸா சப்தார்த்தம் கூறப்பட்டது. விசாரம் செய்யத்தக்கது என் பதில் அதிக விவாதம் கிடையாது. விசாரமானது சப்தத்தால் நேராக உணர்த்தப்ப டுகிறது, சப்தமின்றி அர்த்தத்தால் ஸித்திக்கிறது, என்று இவ்வளவே யன்றோ வை ஷம்யம். அதாத: சப்தார்த்தத்திலேயே யன்றோ அதிக விவாதம். அதனாலேயே அதாத: என்று இவ்வளவு சப்தாநு பூர்வீ எடுக்கப்பட்டது. இவ்வண்ணம் ஸூத்ரத்தி லுள்ள அக்ஷரங்களின் யோஜனை செய்யப்பட்டது.

---

தத்ர பூர்வபக்ஷவாதீ³ மந்யதே — வ்ருத்³த⁴வ்யவஹாராத்³ருதே ஶப்³த³ஸ்ய போ³த⁴கத்வஶக்த்யவதா⁴ரணாஸம்ப⁴வாத், வ்யவஹாரஸ்ய ச கார்யபு³த்³தி⁴பூர்வகத்வேந கார்யார்த² ஏவ ஶப்³த³ஸ்ய ப்ராமாண்யமிதி கார்யரூப ஏவ வேதா³ர்த²: । அதோ ந வேதா³ந்தா: பரிநிஷ்பந்நே பரே ப்³ரஹ்மணி ப்ரமாணபா⁴வமநுப⁴விதுமர்ஹந்தி । ந ச புத்ரஜந்மாதி³ஸித்³த⁴வஸ்துவிஷயவாக்யேஷு ஹர்ஷஹேதுத்வேந காலத்ரயவர்திநாமநந்தாநாம் ஸுலக்³நஸுக²ப்ரஸவாதி³ஹர்ஷஹேதூநாமந்தரோத்பத்திவார்தாஸம்பா⁴வநயா ச ப்ரியார்த²ப்ரதிபத்திநிமித்தமுக²விகாஸாதி³லிங்கே³நார்த²விஶேஷபு³த்³தி⁴ஹேதுத்வநிஶ்சய:; நாபி வ்யுத்பந்நேதரபத³விப⁴க்த்யர்த²ஸ்ய பதா³ந்தரார்த²நிஶ்சயேந ப்ரக்ருத்யர்த²நிஶ்சயேந வா ஶப்³த³ஸ்ய ஸித்³த⁴வஸ்துந்யபி ஶக்திநிஶ்சய:; ஜ்ஞாதகார்யஹியாயிபதா³ஸம்பா⁴யஸ்ய தத³ம்ஶவிஶேஷநிஶ்சயரூபத்வாத் । ந ச ஸர்பார்தி³தஸ்ய "நாயம் ஸர்போ ரஜ்ஜுரேஷா" இதி ஶப்³த³ஶ்ரவணஸமநந்தரம் ப⁴யநிவ்ருத்திதர்ஶநேந ஸர்பாபா⁴வபு³த்³தி⁴ஹேதுத்வநிஶ்சய:; அத்ராபி நிஶ்சேஷ்டம் நிர்விஷம் சேதநம் வஸ்த்வந்தராத்³யர்த²போ³த⁴கேஷு ப³ஹுஷு ப⁴யநிவ்ருத்திஹேதுஷு ஸத்ஸு விஶேஷநிஶ்சயாயோகா³த்

---

ஸ்ரீபாஷ்யம்—

அதில் பூர்வபக்ஷவாதியானவன் நினைக்கிறான். வ்ருத்தர்களுடைய வ்யவஹாரமில்லாவிடில் சப்தத்துக்கு போதகத்வ சக்திநிச்சயம் ஸம்பவியாததால் வ்யவஹாரமானது கார்யபுத்தியை முன்னிட்டுக் கொண்டிருப்பதால் கார்யார்த்தத்திலேயே சப்தத்திற்கு ப்ராமாண்யம் என்பதனால் வேதார்த்தம் கார்ய ரூபமே. ஆகையால் வேதாந்தங்கள் பரிநிஷ்பன்னமான பரப்ரஹ்மத்தினிடத்தில் ப்ரமாணபாவத்தை அனுபவிப்பதற்குத் தகுதியுள்ளவைகளல்ல. புத்திரனுடைய பிறப்பு முதலிய ஸித்தவஸ்துக்களை விஷயமாகக்கொண்ட வாக்கியங்களில் ஸந்தோஷ ஹேதுக்களாக முக்காலங்களிலுமுள்ள வஸ்துகள் முடிவில்லாதவைகளாக இருப்பதாலும் புத்ரஜன்மலக்னம் ஸுகப்ரஸவம் முதலியஸந்தோஷ ஹேதுக்களான வேறு ஸித்தங்களுடைய மேல்மேல்வரவின் ஸம்பாவனையினாலும் ப்ரீதிவிஷயமான விஷயங்களின் அறிவைக்காரணமாகக்கொண்டமுகவிகாஸம் முதலிய அடையாளங்களால் குறிப்பிடத்தக்க ஒரு அர்த்த விசேஷ விஷயகமான புத்திக்கு ஹேதுத்வ நிச்சயமுண்டாகிறதில்லை. வ்யுத்பன்னங்களான பதங்களைக்காட்டிலும் வேறான பதங்களைச் சார்ந்த விபக்த்யர்த்தத்திற்கு வேறு பதங்களின்

அர்த்தநிச்சயத்தாலாவது ப்ரக்ருதியின் அர்த்த நிச்சயத்தாலாவது சப்தத்திற்கு ஸித்தவஸ்துவினிடம் அபிதான சக்தியின் நிச்சயமுண்டாகிறதில்லை. அந்த ஜ்ஞாதமான கார்யத்தைச் சொல்லுகிற பதஸமுதாயமானது அந்த கார்யாம்சவிசேஷ நிச்சயரூபமாக இருப்பதால். ஸர்ப்பத்தினிடமிருந்து பயந்தவனுக்கு இது ஸர்ப்பமல்ல இது கயிறு என்கிற சப்தத்தைக்கேட்டவுடன் பயநிவ்ருத்தியைக்காண்பதனால் ஸர்ப்பத்தின் அபாவபுத்திஹேதுத்வ நிச்சயமில்லை. இந்த இடத்திலும் இந்தவஸ்து அசைவற்றிருக்கிறது விஷமில்லாதது அசேதனம் இதுமுதலிய அர்த்த ஜ்ஞாநங்கள் அனேகங்கள் பயநிவ்ருத்திஹேதுக்களாக இருக்கும்பொழுது விசேஷநிச்சயம் ஏற்படாததால்.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் தாத்பர்யார்த்தம் சொல்லப்படுகிறது தத்ர இது முதலியதால். அக்ஷரயோஜனையில் அன்யனால் வேறு விதமாக சொல்லப்பட்டிருக்கிற அக்ஷரார்த்தமானது நிரஸிக்கப்பட்டது. அதை நிரஸநம் செய்யும் ஸமயத்திலேயே அன்யனால் வேறு விதமாகக்கூறப்பட்ட தாத்பர்யார்த்தமும் நிரஸிக்கப்பட்டது அன்யனால் ப்ரபஞ்சம் ஸத்யமாக இருப்பதுபற்றி அதற்கு ஜ்ஞாநத்தால் நிவர்த்திக்கப்படத்தக்க தன்மை இல்லாமையால் ஜ்ஞாநத்திற்காக ப்ரஹ்மவிசாரமானது ஆரம்பிக்கத்தக்கதல்லவென்று பூர்வபக்ஷத்தைச் செய்துகொண்டு ப்ரபஞ்சம் மித்யையாக இருப்பது பற்றி அதற்கு ஜ்ஞாநத்தினால் நிவர்த்திக்கப்படத்தக்க தன்மையிருப்பதால் ப்ரஹ்மவிசாரம் ஆரம்பிக்கத்தக்கதென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது. அது முந்தியே நிரஸனம் செய்யப்பட்டது. அதற்குமேல் ஸூத்ரகாரருடைய அபிப்ராய விஷயமான நிரஸிக்கத்தக்க சங்கையை உபந்யஸித்து அந்த ஸூத்ரகாரருடைய அபிப்ராய கோசரமான பரிஹாரத்தையும்சொல்வதற்குத்தொடங்குகிறார்—தத்ர இது முதலியதால். கர்மவிசாரத்திற்குப் பிறகுஅந்த கர்மங்கள் அல்பாஸ்திரபலன்களுடன் கூடியவைகளென்று நிச்சயிக்கப்பட்டிருப்பதாலேயே ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கதென்று சொல்லிவிட்டு ஸித்தவஸ்துவினிடம் சப்தங்களுக்கு வ்யுத்பத்தி இல்லாமையால் ப்ரஹ்ம விசாரம் செய்யத்தக்கது என்கிற வசனம் வ்யாகாத தோஷமுள்ளதென்கிற அன்யனுடைய சோதனமானது பூர்வமீமாம்ஸையை அறியாமையால் செய்யப்பட்டது. அதாதோ தர்மஜிஜ்ஞாஸா என்கிற ஸூத்ரத்தில் அத்தியயனம் செய்தபிறகு வேதாத்தியயனம் செய்து முடிந்துவிட்டபடியினாலேயே தர்மவிசாரம் செய்யத்தக்கது என்று சொல்லிவிட்டு § ப்ராபாகரர்களால் அத்தியயனமானது ஆசார்யகத்தை அதிகாரகமாகக்கொண்டிருப்பதால் தர்மவிசாரம் செய்யத்தக்கதென்று பூர்வ பக்ஷத்தைச் செய்து அர்த்தபோதாதிகாரமாக இருப்பதால் தர்மவிசாரம் செய்யத்தக்கதென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது. ¶ பாட்டர்களாலோ வென்றால் அத்தியயனமானது ஸ்வர்கார்த்தமாக இருப்பதால் தர்மவிசாரம் செய்யத்தக்கதல்லவென்று பூர்வ பக்ஷத்தைச் செய்துகொண்டு அர்த்த ஜ்ஞாநார்த்தமாக இருப்பதால் அது செய்யத்தக்கதென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது. அதுவும்உன் பக்ஷத்தில் வ்யாஹதமாயுள்ளது. அந்த இடத்தில் ஸூத்ராக்ஷரங்களை யோஜனம் செய்து தாத்பர்யார்த்தம் கூறப்பட்டது. இந்த இடத்திலும் அக்ஷரார்த்தத்தைக் கூறி

---

§ ப்ராபாகரர்கள்—மீமாம்ஸகர்கள்,  ¶ பாட்டர்கள்—மீமாம்ஸகர்கள்.

தாத்பர்யார்த்தம் சொல்லப்படுகிறதென்பது பொருத்தமுள்ளது. அக்ஷர யோஜனையில் ப்ரஹ்ம விசாராரம்பத்தில் கர்மங்கள் அல்பங்களாயும் அஸ்திரங்களாகவுமுள்ள பலன்களுடன் கூடியவைகளென்கிற நிச்சயத்துடன் கூடின அநந்த ஸ்திரபலாபாதப்ரதீதியானது விசிஷ்ட ஹேதுவாக உரைக்கப்பட்டது. அநந்தஸ்திரபலாபாதப்ரதீதி இல்லாவிடில் அல்பமாகவும் அஸ்திரமாகவுமிருக்கிற பலத்திலேயே த்ருப்தியுள்ளவனாக இருக்கலாம், அல்பாஸ்திரபலத்வ நிச்சயமில்லாமல் போமேயானால் ஒழிவானது உண்டாகலாம்;என்று விசிஷ்டஹேது இந்தஇடத்தில் ஸம்பாவிதமான ப்ராமாண்யத்துடன்கூடின ஆபாத ப்ரதீதியானது சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட அதுபாவ்ருத்திக்குஹேதுவாக இருக்கிறது. அவ்விடத்தில் ப்ரஹ்மஜ்ஞாநத்தின் அநந்தஸ்திரபலாபாத ப்ரதீதிக்கு ப்ராமாண்ய ஸம்பாவனையானது பொருந்தாதது- ஸித்தவஸ்துவில் சப்தத்துக்கு போதகத்வ நிச்சயமில்லாமையால் என்கிற விசிஷ்ட ஹேதுவில் விசேஷ்யாம்ச ஸித்தியை ஆசங்கித்து ஸித்தவஸ்துவில் வ்யுத்பத்தி ஸம்பவிப்பதால் அநந்தஸ்திரபலாபாத ப்ரதீதி இருக்கிறதென்று பரிஹரிக்கப்படுகிறது. இந்த இடத்தில் பூர்வபக்ஷம் சொல்பவன் ப்ராபாகரன். ஸூத்ரகாரர்களுக்கு இனிமேல் உண்டாகப்போகிற தர்சனங்களை அறியும் வல்லமை இருப்பதாலும் சிலர்களால் சொல்லப்பட்டிருமவிருந்தபோதிலும் ஸம்பாவ்யமானங்களான ப்ரதிகூல பக்ஷங்கள் ஆசங்கித்து நிரஸனம் செய்யத்தக்கதாக இருப்பதாலும் இவ்வண்ணம் பூர்வபக்ஷம் செய்தல்யுக்தம். அன்றிக்கே சோதநாலக்ஷணமான அர்த்தமே வேதத்தால் ப்ரதிபாதிக்கத்தக்கதென்பது ஜைமினிமதம். சோதனையாவது க்ரியையில் ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிற வசனம். அதை ஆசங்கித்து ஸித்தவஸ்துவும் வேதத்தால் ப்ரதிபாதிக்கத்தக்கதென்று ஸூத்ரகாரர்களால் ஸாதிப்பது யுக்தமானது. அக்ஷரயோஜனையில் ப்ரஹ்ம விசாரம்செய்யத்தக்கதென்று சொல்லப்பட்டிருப்பதாலும் ப்ரஹ்ம விசாராரம்பம் யுக்தமல்லவென்று பூர்வபக்ஷத்தின் முடிவில் சொல்லப்பட்டிருப்பதாலும் ப்ரஹ்மவிசாராரம்பம் யுக்தமென்பது நிலை பெற்றதென்று ஸித்தாந்தத்தை முடிவுக்குக்கொண்டுவந்திருப்பதாலும் தீபத்தில் கண்டோக்தங்களாக இருக்கிற விஷயம் ஸம்சயம் இரண்டும் அர்த்தஸித்தங்கள். ப்ரஹ்மவிசாரம் என்று சொல்லப்பட்டிருப்பதால் ப்ரஹ்மமீமாம்ஸை விஷயமென்பது ஸித்தித்தது. ஆரம்பமானது யுக்தமல்லவென்றும் யுக்தம் என்றும் சொல்லப்பட்டிருப்பதால் ஸம்சயம் ஸித்திபெற்றது. ப்ரஹ்மமீமாம்ஸையானது ஆரம்பிக்கத்தக்கதா? அல்லது ஆரம்பிக்கத்தகாததா? என்று. அதற்காக சிந்திக்கப்படுகிறது. வேதாந்தங்கள் ப்ரஹ்மத்தினிடம் ப்ரமாணமா? அல்லது இல்லையா? என்று. அதற்காக பரீக்ஷிக்கப்படுகிறது சப்தத்துக்கு ஸித்தவஸ்துவை உணர்த்துகிற ஸாமர்த்திய நிச்சயம் ஸம்பவிக்கிறதா இல்லையா என்று. அதற்காக விசாரிக்கப்படுகிறது வ்ருத்த வ்யவஹாரத்தைத் தவிர்த்த மற்ற இடத்தில் சப்தங்களுக்கும் அர்த்தங்களுக்கும் ஸம்பந்தாவதாரணம் ஸம்பவிக்கிறதா இல்லையா என்று. வ்ருத்த வ்யவஹாரத்திலும் சப்தத்திற்கு ஸித்தவஸ்து போதகத்வ நிச்சயம் ஸம்பவிக்கிறதா இல்லையா என்றும். ஸம்பவிக்கிற தில்லை என்று பூர்வபக்ஷம். ஸம்பவிக்கிறதென்று ஸித்தாந்தம், எப்பொழுது வ்யவஹாரத்தைத்தவிர்த்து மற்ற இடத்தில் வ்யுத்பத்தி இல்லையோ வ்யவஹாரத்திலும் சப்தம் ஸித்தமான அர்த்தத்தை உணர்த்துகிறதென்கிற நிச்சயம் ஸம்பவிக்கிறதில்லையோ அப்பொழுது சப்தத்துக்கு ஸித்தவஸ்துபோதன ஸாமர்த்தியமில்லாமையால் வேதாந்தங்களுக்கும் பரிநிஷ்பன்னரூபமான ப்ரஹ்மத்தினிடம் ப்ராமாண்யம் கிடையாதென்கிற நிச்சயமுள்ள புருஷனுக்கு அநந்தஸ்திரபலாபாத ப்ரதீதிக்கு ப்ராமாண்ய ஸம்பாவனா ஸித்தி இல்லாமையால் விசிஷ்டஹேதுவில்லாமையால் ஆரம்பிக்கத்தக்கதல்லவென்று பூர்வபக்ஷத்தில் பலபலிபாவம். ஸித்தாந்தத்திலோ வென்றால்எப்பெ

முது வ்யவஹாரத்தைத்தவிர்த்த மற்ற இடத்தில் வ்யுத்பத்தியும் வ்யவஹாரத்தில் ஸித்தவஸ்துபரத்வாவதாரணமும் ஸம்பவிக்கிறதோ அப்பொழுது சப்தத்துக்கு ஸித்தரூபார்த்தத்தில் ஸாமர்த்தியத்தினுல் வேதாந்தங்களுக்கும் பரிநிஷ்பன்னரூப மான ப்ரஹ்மத்தினிடத்தில் ப்ராமாண்யத்தால் ப்ராமாண்யாபாவ நிச்சயமில்லாத புரு ஷனுக்கு அநந்த ஸ்திரபலரூப ப்ரஹ்மவிஷயா பாதப்ரதீதி ப்ராமாண்ய ஸம்பாவனை ஸி த்தித்திருப்பதால் விசிஷ்ட ஹேதுவின் ஸித்தியினுல் ப்ரஹ்மமீமாம்ஸை ஆரம்பிக்க த்தக்கதென்று விசாரங்களுக்கு பலபலிபாவம்.

பூர்வ பக்ஷத்தைச் சொல்ல ஆரம்பிக்கிருர்-தத்ர என்று. முந்தி மருஷ்ராவாதியினுல் சொல்லப்பட்ட ஸூத்ர தாத்பர்யம் நிரஸனம் செய்யப்பட்டது. அதன் வ்யாவ்ருத்தி யை ஸூசிப்பிக்கிருர் தத்ர சப்தத்தால். தத்ர ப்ரபஞ்சத்திற்கு ஸத்யத்வம் நிலைத்திரு க்கையில் என்று அர்த்தம். பூர்வபக்ஷத்தை உபபாதனம் செய்கிருர்-வ்ருத்தவ்யவஹா ராத் என்று. வ்ருத்த: - வ்யுத்பத்தியுள்ள ப்ரயோஜ்யனும் ப்ரயோஜகனும். அவ்விருவ ர்களுடைய வ்யவஹாரம் காயிகமாயும் வாசிகாயுமுள்ளது. வ்யவஹாரத்தைத்தவிர்த்த மற்ற இடத்தில் சக்தி நிச்சயம் உண்டாகவேண்டாம். அதனுல் என்னவென்று கேட் கில் சொல்லுகிருர்—வ்யவஹாரஸ்ய ச என்று. கார்யபுத்தியை முன்னிட்டுக் கொண் டிருப்பதின் பலத்தைக் கூறுகிருர்—கார்யார்த்த ஏவ என்று. அதனுல் பலித்ததைச் சொல்லுகிருர்—கார்யநுப என்று. வேதம் சப்தாத்மகமாக இருப்பதாலும் சப்தம் வ்யுத்பத்தியை அபேக்ஷித்திருப்பதாலுமென்று கருத்து. அதனுலென்னவென்று வினவ ப்படுமேயாகில் சொல்லுகிருர்—அத: என்று. அத: - வேதார்த்தம் கார்யரூபமாக இரு ப்பதாலென்று பொருள்-ந ப்ரமாணபாவமநுபவிதுமர்ஹந்தி. ப்ராமாண்ய ஸம்பா வனையுமில்லை. அயோக்யமாக இருப்பதாலென்று அர்த்தம். முதலாவதான வ்யுத்பத்தி யானது வ்ருத்த வ்யவஹாரத்தைத்தவிர்த்து மற்றொன்றினுலும் உண்டாகிறதில்லை. குடம் இருக்கிறது என்று சொன்னவுடன் ப்ரவ்ருத்தி இல்லாமலிருக்கையில் அதற்கு போதக த்வம் அறியப்படுகிறதில்லையன்ருே. பசுவைக்கொண்டுவா இதுமுதலியசப்தங்கள் ப்ரயோ கிக்கப்பட்டவுடன் $ ப்ரயோஜ்யனுடைய ப்ரவ்ருத்தியைக்கண்ணுற்று ப்ரவ்ருத்தியா னது கார்யபுத்தியை முன்னிட்டுக்கொண்டிருக்கிறதென்று அறிவுடையவனுன ௲ வ்யுத் பித்ஸுவானவன் இந்த சப்தமானது கார்யரூபமான அர்த்தத்தை அறிவிப்பதில் சக்தி யுள்ளது என்று நிச்சயிக்கிருன் அந்தவ்யவஹாரங்களில் அனேக ப்ரயோகங்களில் தொ டர்ந்து வருகிற சப்தத்திற்கு தொடர்ந்துவருகிற அர்த்தத்தோடு ஸம்பந்தத்தையும் விலக்கப்பட்டிருக்கிற அர்த்தத்தோடு ஸம்பந்தத்தையும் க்ரஹித்துக்கொண்டு சேர்த்துக் கொள்ளுதல் விலக்குதல் வாயிலாக அர்த்த விசேஷங்களோடு சப்தவிசேஷங்களுக்கு ஸம்பந்தத்தை நிச்சயிக்கிருன் என்பதனுல் முதலில் கார்யார்த்தத்திலேயே வ்யுத்பத்தி ஏற்படுகிறது. முதலிலேயே இந்த சப்தத்துக்கு இது அர்த்தம் என்று சொன்னுல் இந்த சப்தத்துக்கு இது அர்த்தமென்கிற இந்த வாக்கியத்திலுள்ள பதங்களுக்கு அர்த்த ப்ரதீதி உண்டாகிறதில்லையன்ருே. இவ்வண்ணம் கார்யார்த்தத்திலேயே வ்யுத்பத்தி யை ஏற்படுத்திக்கொண்ட புருஷனுக்கு பிற்காலத்தில் இந்த சப்தத்திற்கு இது அர்த் தமென்று கற்றுக்கொடுத்தபோதிலுங்கூட முதலில் கார்யார்த்தபரமாக வ்யுத்பன்னமாக இருக்கிற சில பதங்களோடு சேர்ந்திருத்தல் காணப்படுவதால் முதலில் வந்த வ்யுத்பத்தி க்கு விரோதமின்றி அந்த அந்த சப்தங்களுக்கு அர்த்த ஸம்பந்தம் க்ரஹிக்கப்படுவதால்.

---

$ ப்ரயோஜ்யன்—ஏவத்தக்கவன். ப்ரயோஜகன்—ஏவுகிறவன்.

௲ வ்யுத்பித்ஸு—வ்யுத்பத்தியில் விருப்பமுள்ளவன்.

எல்லா சப்தங்களும் கார்யார்த்த ப்ரதானங்களென்றே க்ரஹிக்கப்படுகின்றன. அத ஞல் ஏதே லௌகிகங்களோ அதே வைதிகங்களென்கிற ந்யாயத்தினுல் வேதாந்தங்கள் ஸித்தவஸ்துவிஷயத்தில் போதகங்களாக ஆகிறதில்லை என்று அர்த்தம். வேதாந் தங்கள் ஸம்ஸ்க்ருத சப்தங்களாக இருப்பதால் வேறு பாஷையினுல் முதலில் வ்யுத்ப த்தி வந்த மனிதனுக்கு ஸம்ஸ்க்ருத சப்தத்தில் இந்தசப்தத்துக்கு இது அர்த்தம் என்று வ்யுத்பத்தி உண்டுபண்ணப்படுமேயாகில் ஆரம்பத்திலேயே ஸித்தவஸ்துவில் வ்யுத் பத்தியானது உண்டு பண்ணப்பட்டதாக ஆகலாமென்று சொல்லப்படுமேயாஞல் அல்ல. கார்யார்த்தபரங்களாக முதலில் வ்யுத்பன்னங்களான பாஷாந்தர சப்தங்கள் ஒரே அர்த்தத்தை உணர்த்துகிற ஸ்வபாவமுள்ளவைகளாக (அதாவது) பர்யாயங்களாக நிச்சயிக்கப்பட்டிருப்பதால் ஸம்ஸ்க்ருத சப்தங்களும் கார்யபரங்களாகவே வ்யுத்பன்ன ங்களாக ஆகலாம்.

ஸித்தவஸ்துவில் வ்யுத்பத்திக்கு || பாட்டர்களால் சொல்லப்பட்ட உதாஹரண த்தை நிரஸனம் செய்கிருர்—நச என்று. முக்காலங்களிலுமிருக்கிறவைகளுக் கென்று ¶ பஞ்சிகையில் கூறப்பட்டிருக்கிறது, அது இவ்விடத்தில் அபிப்ராயப்படப்பட்டிரு க்கிறது. தேசம் காலம் யோக்யதை முதலியவைகளால் புத்திரனுடைய பிறப்பை அறி கிருன் என்று சொல்லப்படுமேயாகில் சொல்லுகிருர் ஸலக்ன என்று. நல்ல லக்னம் ஸுகப்ரஸவம் முதலியதால் அன்யதா ஸித்தியானது * நயவிவேகத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. ஆதிசப்தத்தால் பிதாமாதா முதலியவர்களுக்கு ப்ரீதிவ்ருத்தியும் பிற்காலத்தில் உண்டாகக்கூடிய ஸம்பத்து முதலியதும் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. வ்யுத்பத்தியாவது சப்தத்திற்கு அர்த்த விசேஷங்களோடுகூட ஸம்பந்தத்தை க்ரஹித்த லே ஒழிய அர்த்தமாத்ரத்தோடல்லவென்கிற இவ்வித தூஷணை மூறைக்கப்பட்டிருக் கிறது ‡ நையாயிகன் முதலியவர்களால் சொல்லப்பட்டிருக்கிற உதாஹரணத்தை நிரஸனம் செய்கிருர்—நாபி என்று. இது வ்யுத்பன்ன பதங்களைக்காட்டிலும் வேருன பதத்திற்கு பதாந்தரார்த்த நிச்சயோதாஹரணம். எது அவ்யக்தமாகக்கூவுகிற தென் கிற வினவுக்கு (பிக: கூஜதி) குயில் கூவுகிறதென்று ஒருவனுல் சொல்லப்பட்டவு டன் கூஜதி சப்த வ்யுத்பத்தியுள்ளவனை ஒரு வ்யுத்பித்ஸுவால் பிக சப்தார்த்தம் அறியப்படுகிறது. இது வ்யுத்பன்னபதங்களைவிட வேருன பதத்தினது * விபக்த்ய ர்த்தத்திற்கு † ப்ரக்ருத்யர்த்த நிச்சயோதாஹரணம். (காஷ்டங்களால்) விறகுகளால் (ஸ்தாலியில்) பாத்திரத்தில் (ஓதனத்தை) அன்னத்தை (பசதி) பக்குவம் செய்கிருன் என்று சொன்னவுடன் வ்யுத்பன்ன விபக்தியுடன் கூடின பசதி சப்தார்த்தத் துடன் கூடின வ்யுத்பித்ஸுவினுல் காஷ்டம் முதலிய ப்ரக்ருதியின் அர்த்தம் அறியப் படுகிறது, ஜ்ஞாதா என்று. இப்பொழுது கேழ்க்கப்பட்டிருக்கிற இந்த வாக்கியத் தில் முந்தி கார்யபரமாக வ்யுத்பன்னமாக இருக்கிற வாக்கியத்திலுள்ள சில பதங்கள்

---

|| பாட்டர்கள்—குமாரில பட்டருடைய மதத்தைப் பின்பற்றினவர்களான மீமாம் ஸகர்கள். ¶ பஞ்சிகை—ஒரு க்ரந்தம். * நயவிவேகம்—ஒரு வேதாந்த கிரந்தம். ‡ நையாயிகன்—கௌதமரிஷியினுல் செய்யப்பட்டுள்ள தர்க்கசாஸ்திர வழியைபின் பற்றுகிறவன். * விபக்தி—வேற்றுமை. † ப்ரக்ருதி—ப்ரத்யயம் எந்த சப்தத்தின் மேல் ஏறிடப்படுமோ அந்த சப்தகணடம்.

காணப்படுவதால் இந்த பதஸமுதாயமும் கார்யத்தைச்சொல்லுகிற ஸ்வபாவமுள்ள தென்று அறியப்படுகிற தென்கிற அபிப்ராயத்தால் ஜ்ஞாதகார்யாபிதாயிபதஸமுதாயஸ்ய என்று கூறப்பட்டது. ததம்ச விசேஷ: கார்யாம்ச விசேஷம்-கார்யமானது அனேக $ காரகன்களோடுகூடியதன்றோ. அந்த கார்யம் விசேஷணாம்ச நிச்சயரூபமாதலால். அந்த பதாந்தரார்த்த நிச்சயத்திற்கும் ப்ரக்ருத்யர்த்த நிச்சயத் திற்கும் என்று அர்த்தம். அன்றிக்கே ததம்ச விசேஷ: கார்யத்தைச் சொல்லுகிற ψ பதஸமுதாயாம்ச விசேஷம்-¶ம்ருஷாவாதிகளால் சொல்லப்பட்ட உதாஹரணத்தை தூஷிக்கிறார் நச என்று. § வாசஸ்பதியினால் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்தை ஆசங்கித்து பரிஹரிக்கிறார்—**கார்ய** என்று. அவனால் இவ்வண்ணமல்லவோ ஸித்த வஸ்துவில் ப்ராமாண்யம் உபபாதிக்கப்பட்டிருக்கிறது எல்லா சப்தங்களுக்கும்தொடர்ந்துவருகிற அர்த்தம் சொல்லத்தக்கது. கார்யரூபமான அர்த்தத்தைச் சொல்லும் தன்மையுடன் சேர்ந்திருத்தல் தொடர்ந்துவருகிறதா? அல்லது கார்யத்துடன் அன்வயித்த தன்னுடைய அர்த்தத்தைச் சொல்லும் திறமையுடன் சேர்ந்திருத்தல் தொடர்ந்துவருகிறதா ? முதலாவது பக்ஷத்தில் காரகபதங்களில் ‡ வ்யபிசாரம் வருகிறது. அவைகளுக்கு கார்யாபிதாயித்வ மில்லாமையால். இரண்டாவது பக்ஷத்தில் லிங்கம் முதலியவைகளில் வ்யபிசாரம் வருகிறது. அவைகளுக்கு கார்யத்துடன் சேர்க்கையுற்ற ஸ்வார்த்தத்தைச் சொல்லும் திறமை இல்லாமையால். மூன்றாவது பக்ஷத்தில் காரக பதங்களில் வ்யபிசாரம் ஸம்பவிக்கிறது. அவைகளுக்கு காரகங்களோடு அன்வயித்த ஸ்வார்த்தத்தைச் சொல்லும் திறமை இல்லாமையால். ஆதலால் பதங்களுக்கு அன்யான்விதமான ஸ்வார்த்தத்தைச் சொல்லும் திறமையானது தொடர்ந்து வருகிறதென்று சொல்லத்தக்கது அன்விதாபிதான வாதியால்.

---

கார்யாந்விதே வ்யுத்பத்திவ்யாப்திபலேந ஶப்தஸ்ய ப்ரவர்தகா-ர்யாவபோதகத்வமிதி ஸர்வபதாநாம் கார்யபரத்வேந ஸம்பந்தஃ பதைஃ கார்யஸ்யைவ விஶிஷ்டஸ்ய ப்ரதிபாதநாத் அந்யாந்விதஸ்வார்தே பதஶக்திநிஶ்சயஃ । இஷ்டஸாதநதாவச்சிந்நஸ்ய கார்யாந்விதாகாரேண வ்யுத்பத்திஹேதோஃ; ந ஸ்வரூபேண, அதீதாநாகதவர்தமாநேஷ்வாந்விதேஷு வ்யுத்பத்த்யஸம்பவஃ । “இஷ்டாப்யுபாயோ ஹி ஸாத்யதாமநுரீயதே ந ஸித்தஃ; க்ருதோ க்ருத்யதிஸாத்யஃ, இதிவ்யாப்யாவஸு ஜாயதே; தாவஸ்ப்ரவர்தகே । அதஃ கார்யாந்விதே ஏவ வ்யுத்பத்திஹேதோரிதி ப்ரவர்தகஸ்யைவ

---

$ காரகன்—க்ரியை உண்டுபண்ணும் திறமையுள்ளது.

ψ ஸமுதாயம்—கூட்டம். ¶ ம்ருஷாவாதி—அத்வைதி. § வாசஸ்பதி—ஒரு மீமாம்ஸகன். ‡ வ்யபிசாரம்—தவறுதல்.

ஶப்தவ்யுத்பத்த்யா கார்யபரத்வேந வேதவேதாந்தாநாம் ஸித்தே ப்ரயோஜநாபாவாச்ச ஸ்வர்காதிப²லவதல்பாஸ்திரத்வாபாவாத் "அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்யயாஜிந: ஸுக்ருதம் பவதி" இத்யாதிபி: கர்மணாமேவ ஸ்திரப²லத்வப்ரதிபாதநாத் கர்மப²லாபேக்ஷயா ஸ்திர ப்ரஹ்மஜ்ஞாநப²லாநந்தஸ்திர ப்ரஹ்மஜ்ஞாநஹேதோ: ப்ரஹ்மவிசாரஸ்யாரம்போ ந யுக்த: - இதி॥

ஸ்ரீபாஷ்யம்—

கார்யபுத்தி ப்ரவ்ருத்தி இவ்விரண்டுக்குமுள்ள † வ்யாப்திபலத்தினுல் சப்தத்திற்கு ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிற அர்த்தத்தை உணர்த்தும் திறமை அறியப்பட்டிருப்பது பற்றி எல்லா பதங்களும் கார்யார்த்த போதனத்தில் நோக்கமுள்ளதாதலால் எல்லா பதங்களாலும் விசிஷ்டமான கார்யமே ப்ரதிபாதிக்கப்படுவதால் மற்றென்றேடு அன்வயித்த ஸ்வார்த்த மாத்ரத்தில் ᛘ பதசக்தி நிச்சயமில்லை. இஷ்டஸாதநதாபுத்தியோ வென்றல் கார்யபுத்தியின் வழியாக ப்ரவ்ருத்திக்குக் காரணமாக இருக்கிறதே ஒழிய ஸ்வரூபத்தாலல்ல. சென்றதும் இனிவரப்போகிறதும் நிகழ்காலத்திலுள்ளவைகளுமான இஷ்டோபாய புத்திகளில் ப்ரவ்ருத்திக்கு உபலப்தி இல்லாமையால், இஷ்டோபாயமானது என்னுடைய ப்ரயத்னமில்லாவிடில் ஸித்திபெருதாகையால் என் ப்ரயத்னத்தால் ஸாத்தியமென்கிற புத்தியானது எவ்வளவுக்குள் உண்டாகிறதில்லையோ அவ்வளவுக்குள் ப்ரவ்ருத்திக்கிறனில்லை. ஆதலால் கார்யபுத்தியே ப்ரவ்ருத்தி ஹேதுவாக இருப்பது பற்றி ப்ரவர்த்தகமே சப்தத்தால் சொல்லத்தக்கதாக இருப்பதால் கார்யமே வேதத்தால் அறியத்தக்கதாக இருப்பதாலும் பரிச்சின்னரூபமான ப்ரஹ்ம ப்ராப்திரூபமான அநந்தஸ்திரபல $ ப்ரதிபத்தி இல்லாமையாலும் "அக்ஷய்யம் ஹவை § சாதுர்மாஸ்யயாஜிந: ஸுக்ருதம்பவதி" இது முதலியவைகளால் கர்மங்களுக்கே ஸ்திரமான பலன்கள் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதாலும் கர்மபலன்கள் அல்பங்கள், அஸ்திரங்கள், ப்ரஹ்மஜ்ஞாந பலன்கள் எண்ணிறந்தவைகள், சாச்வதங்கள், என்கிற ஜ்ஞானத்தைக்காரணமாகக் கொண்டிருக்கிற ப்ரஹ்ம விசாராரம்பமானது யுக்தமல்ல- என்று.

---

ᛘ சக்தி—இந்த பதத்தால் இந்த அர்த்தம் அறியத்தக்கதென்கிற ஈச்வரனுடைய இச்சை என்பது தார்க்கிகர்களின் கொள்கை. $ ப்ரதிபத்தி—ஜ்ஞானம்.

§ சாதுர்மாஸ்யம்—ஒரு யாகம்.

ச்ருதப்ரகாசிகை—

மற்றதோடு அன்வயித்திருத்தல் ஸித்த வஸ்துவுக்கும் இருக்கலாமாதலால் கார்யரூபமான அர்த்தத்திலேயே வ்யுத்பத்தி என்கிற நிர்பந்தம் பொருந்ாது. இந்த ஆசங்கையை அபிப்ராயப்பட்டு பரிஹரிக்கிறார்—கார்யபுத்தி என்று. கார்யபுத்தி வ்யாப்திபலேந என்கிற பதத்திற்கு மேலே ஸர்வபதாநாம் கார்ய பரத்வேந என்பதோடு அன்வயம். சப்தம் ப்ரயோகிக்கப்பட்டவுடன் ⸸ ப்ரவ்ருத்தி காணப்படுவதால் சப்தத்திற்கு ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிற அர்த்தத்தை உணர்த்தும் திறமை இருப்பதால் கார்யபுத்திக்கும் ப்ரவ்ருத்திக்குமிருக்கிற வ்யாப்தி பலத்தால் * ப்ரவர்த்தகமும் கார்யரூபமாக இருப்பதால் எல்லா பதங்களாலும் விசிஷ்டமான கார்யமே ப்ரதிபாதிக்கப்படுகிறது. ஆகையால் மற்றொன்றுடன் அன்வயித்த ஸ்வார்த்தமாத்ரத்தில் பதங்களுக்கு சக்தி நிச்சயிக்கப்படுகிறதில்லை. பின்னையோ விசிஷ்ட கார்யாம்ச விசேஷத்தில் பதங்களுக்கு சக்தி நிச்சயமென்று அர்த்தம். அறிஞர்களுக்குள் சிறந்தவரே! கார்யமே ப்ரவர்த்தகமாகில் ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிறது சப்தார்த்தமாதலால் எல்லா சப்தங்களுக்கும் இருக்கலாம். அதில் — இஷ்டஸாதநதாபுத்தியானது ப்ரவர்த்தகமாதலால் என்று பாட்டர்களால் சொல்லப்பட்ட அர்த்தத்தை ஆசங்கித்துக் கூறுகிறார்— இஷ்டஸாதநதா என்று. ஸ்வப்ரயோஜநோபாயமானது அன்யனால் பாதிக்கப்படுகிறதேயானால் அந்த இடத்திலும் ப்ரவ்ருத்தி உண்டாகிறதில்லையாதலால் இஷ்டோபாயதா புத்தியானது இருந்துகொண்டிருக்கிறபோதிலுங்கூட அதற்கு அப்ரவர்த்தகத்வமானது காணப்பட்டிருக்கிறது. அதனால் கார்யபுத்தியானது ப்ரவ்ருத்திக்கு வ்யாப்யை என்று கருத்து. நண்பரே! கார்யபுத்தியும் ப்ரவ்ருத்தியுடன் தவறாமல் சேர்ந்திருக்கிறதில்லை. தனமில்லாத ப்ராஹ்மணனுக்கு யாகம் செய்யவேண்டுமென்கிற . எண்ணமிருந்தபோதிலுங்கூட ப்ரவ்ருத்தி இல்லாமையால் இவ்வண்ணமல்ல. என்றாலேயே இது ஸாதிக்க சக்யமென்கிற புத்தியல்லவோ கார்யபுத்தி. அந்த புத்திக்கு ப்ரவ்ருத்தி வ்யபிசாரம் கிடையாது. தனமில்லாதவனுக்கு இவ்விதமான ப்ரதிபத்திகிடையாது. பின்னையோ யாகம் ஒருக்கால் செய்யத்தக்கது. பொருள் முதலியவற்றின் லாபத்தால் யாகம் அனுஷ்டிக்கப்படுமேயாகில் பலப்ராப்தி இருக்கிறது என்று. ஆகையால் தோஷமில்லை. அதனாலென்னவென்கிற அபேக்ஷை வரின் உபபாதனம் செய்யப்பட்டிருக்கிற ஹேது சரீரத்தைச் சொல்லாநின்று கொண்டும் வேறு சங்கையை பரிஹரித்துக்கொண்டும் பூர்வபக்ஷத்தை முடிக்கிறார்—அத: இது முதலியதால். ப்ரஹ்மவிசாராரம்பத்தில் விசிஷ்டஹேதுவானது கூறப்பட்டது. அதில் அநந்தஸ்திரபலாபாத ப்ரதீதி ரூபமான விசேஷ்யாம்சத்திற்கு அஸித்தி கூறப்பட்டது. இந்த விஷயத்தில் சோத்யமானது ஆபாதனம் செய்யப்பட்டது. உபாஸநவிதிக்கு சேஷபூதங்களான மந்திரார்த்த வாதங்களில் அநந்தஸ்திரபலாபாத ப்ரதீதியின் ஸித்தியினால் விசேஷ்யாம்சத்திற்கு அஸித்தி இல்லையாதலால் விசிஷ்டமே ஹேது. இதை ஆசங்கித்துக்கூறுகிறார்—அக்ஷய்யம்ஹவை என்று. இதுபொருள். மந்திரார்த்தவாதங்களில் அநந்தஸ்திரபலப்ரதீதியினால் ப்ரஹ்மவிசாராரம்பமிருக்குமேயானால் அப்பொழுது பூர்வபாகத்திலும் "அக்ஷய்யம் ஹவை சாதுர்மாஸ்ய யாஜிந: ஸுக்ருதம் பவதி" இது முதலியவைகளால் அநந்தஸ்திரபலப்ரதீதியினால் அல்ப

---

⸸ ப்ரவ்ருத்தி—சேஷ்டை செய்கை.

* ப்ரவர்த்தகம்—ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிற திறமை யுடையது.

ஸ்திரபலத்வ நிர்ணய ரூபமான விசேஷணாம்சம் ஸித்தி பெருததால் ப்ரஹ்மவிசாராரம்பம் யுக்தமன்று. விசிஷ்ட ஹேதுவில் விசேஷணம் விசேஷ்யம் இவ்விரண்டுக்குள் ஒரு அம்சத்திற்கு அஸித்தி என்கிற அபிப்ராயத்தால் கர்மபலால்பாஸ்திரத்வ ப்ரஹ்மஜ்ஞான பலாநந்தஸ்திரத்வ ஜ்ஞாநஹேதுகமென்று சொல்லப்பட்டது.

---

உச்யதே — நிகிலலோகவிதிதஶப்தார்தஸம்பந்தாவதாரணப்ரகாரபரித்யாகேந ஸர்வஶப்தாநாம் அலௌகிகே கார்யார்தே வ்யுத்பத்த்யவதாரணம் ப்ராமாணிகா ந பஹுமந்யந்தே। ஏவம் ஹி பாலாஶ்ஶப்தார்தஸம்பந்தாவதாரணம் குர்வந்தி — மாதாபித்ருப்ரப்ருதிபிரம்பாதாதமாதுலாதீந் ஶஶிம்ருகபக்ஷிஸரீஸ்ருபாதீம்ஶ்ச "ஏநமவேஹி இமம் ஜாநீஹி" இத்யங்குல்யா நிர்திஶ்ய நிர்திஶ்ய தைஸ்தைஶ்ஶப்தைஸ்தேஷு தேஷ்வர்தேஷு பஹுஶஶ்ஶிக்ஷிதாஶ்ஶநைஶ்ஶநைஸ்தைஸ்தைஶ்ஶப்தைஸ்தேஷு தேஷ்வர்தேஷு ஸ்வாத்மநாம் புத்த்யுத்பத்திம் த்ருஷ்ட்வா ஶப்தார்தயோஸ்ஸம்பந்தாந்தராதர்ஶநாத் ஸங்கேதயித்ருபுருஷாஜ்ஞாநாச்ச தேஷு தேஷு தேஷாம் ஶப்தாநாம் ப்ரயோகாச்ச போதகத்வநிபந்தநம் இதி நிஶ்சிந்வந்தி ॥

---

ஸ்ரீபாஷ்யம்—

இந்த இடத்தில் சொல்லப்படுகிறது. எல்லா உலகங்களிலும் ப்ரஸித்தமாக அறியப்பட்டிருக்கிற சப்தார்த்தங்களுடைய ஸம்பந்த நிச்சய ப்ரகாரத்தை விலக்கித்தள்ளிவிட்டு எல்லா சப்தங்களுக்கும் அலௌகிகார்த்தத்தில் அவதாரணத்தை§ ப்ராமாணிகர்கள் பஹுமானிக்கிறார்களில்லை. இவ்வண்ணமன்றோ சிறுவர்கள் சப்தார்த்த ஸம்பந்தத்தை நிச்சயிக்கிறார்கள். மாதா பிதா முதலிய சப்தங்களால் தாய் தகப்பன் மாமன் முதலியவர்களையும் சந்திரன் பசு மிருகம் பக்ஷி ஸர்ப்பம் முதலியவைகளையும் இதை "அறிந்துகொள் இதையும் தெரிந்துகொள்" என்கிற அபிப்ராயத்தால் விரலால் குறிப்பிட்டு குறிப்பிட்டு சுட்டிக்காட்டி அந்தந்த சப்தங்களால் அந்தந்த அர்த்தங்களில் பலதடவை சிக்ஷிக்கப்பட்டவர்கள் மெள்ள மெள்ள அந்தந்த சப்தங்களால் அந்தந்த அர்த்தங்களில் தங்களுக்கு ஏற்படுகிற புத்தியின் உத்பத்தியைக்கண்டு சப்தம் அர்த்தம் இவ்விரண்டுக்கும் வேறு ஸம்பந்தம் காணப்படாமையாலும் ஸங்கேதம் செய்த புருஷனை அறியாமையாலும்

---

§ அவதாரணம்—நிச்சயம்.

அந்த அர்த்தங்களில் அந்த சப்தங்களுக்கு ப்ரயோகமானது போதகத்வ சக்தியைக் காரணமாகக்கொண்டதென்று நிச்சயிக்கிறார்கள்.

---

ச்ருதப்ரகாசிகை—

**அத்ராபிதீயதே** என்று. இந்த பூர்வபக்ஷத்தில் ஸூத்ரகாரரால் பரிஹாரங் கூறப்படுகிறதென்று அர்த்தம். **நிகில** என்று. வேறுவிதமாகச் சொல்லுகிற உம்மாலும் மேல் சொல்லப்படப்போகிற ப்ரகாரத்தாலேயே சப்தவ்யுத்பத்தியானது செய்யப்பட்டிருக்கிறதென்று நிகில லோக சப்தத்தின் கருத்து. **ப்ராமாணிகர்கள்**—ப்ரமாணத்தால் அர்த்தத்தை ஸ்வீகரிக்கிறவர்கள் என்று அர்த்தம். எப்படி ஸம்பந்த நிச்சயம் என்று வினவப்படுமேயாகில் சொல்லுகிறார்—**ஏவம்கில** என்று. **மாதாபித்ருப்ரப்ருதிபி:** என்று. இதுகருத்து. எப்பொழுது சிறுவன் தானாகவே சப்தார்த்த ஞானத்திற்கு தகுந்தவனாக ஆகிறானோ அப்பொழுதும் இவனை வ்ருத்தர்களான உபாத்தியாயர் முதலியவர்களால் வ்யுத்பத்தியை உண்டுபண்ணிவைப்பதற்கு ச்ரத்தையுள்ளவர்களான தாய் தகப்பன் முதலியவர்கள் தானாக வ்யுத்பத்தி உண்டாவதற்குத் தகுதியற்றவனாக இருக்கும் தசையில் உபேக்ஷை பண்ணுகிறார்களில்லையன்றோ. பின்னேயோ அக்ஷராப்யாஸம் முதலியதற்கு உபயோகமான சிக்ஷைகளை முதலிலேயே தங்கள்புத்திபூர்வகமாகச்செய்கிறார்கள் § அம்பா தாத (தாய் தகப்பன்) முதலிய சப்தங்களின் ஸமுதாயமானது ப்ரதி ஸம்பந்தி சப்தாபேக்ஷையுள்ளது. * சசி பசு முதலிய சப்தங்களின் ஸங்காதமானது ப்ரதிஸம்பந்தியின் சப்தங்களில்லாததென்று பாகுபாடு. ஸம்பந்தி சப்தமல்லாத சப்த வ்யுத்பத்திக்கு முந்தியே அம்பா முதலிய சப்த வ்யுத்பத்தியானது காணப்படுகிறது. அந்த வ்யுத்பத்தியானது உமக்கு அபிமதமான சப்தார்த்த ஸம்பந்தக்ரஹணத்திலோ பொருந்துகிறதில்லை. ஒருவனைக்குறித்து தகப்பனாக இருப்பவன் ( தன் ஔரஸபுத்திரர்களைத் தவிர்த்து) மற்றவனுக்கும் தகப்பனாக இருக்கமாட்டானன்றோ. ஆகையால் சப்தார்த்த வ்யுத்பத்தியில் விருப்பமுள்ளவனுக்கு மாதாபிதா முதலியவர்களிடங்களில் அன்யர்களால் அந்தந்த சப்த ப்ரயோகத்துக்கு ஸம்பவமில்லாமையால் முதலில் அம்பா முதலிய சப்தார்த்த வ்யுத்பத்தியானது உன் மதத்தில் ஸம்பவிக்கிறதில்லை. ஆதலால் முதலாவதான வ்யுத்பத்தியானது புத்திபூர்விகையாகவே உண்டாகிறதென்பதைக் காண்பிப்பதற்காக இரண்டுகோடிகள் சப்தங்களில் காண்பிக்கப்பட்டது. தற்செயலாக ஏற்படுகிற வ்ருத்தவ்யவஹாரத்தால் அந்தந்த சப்தங்களின் வ்யுத்பத்தியின் அனுபபத்தியும், எல்லா ஜனங்களாலும் அறியப்பட்டிருக்கிற வ்யுத்பத்திப்ரகார நிராஸமும். **ஏநமவேஹி இமஞ்சாவதாரய** என்று. ஏநம் போதகசப்தத்தையும் இமம் போத்யமான அர்த்தத்தையும் அறிவாயாகவென்று அர்த்தம். **பஹுச:** என்று எவ்வளவுக்குள் விரலால் சுட்டிக்காட்டுதலாலும் சப்த ப்ரயோக ‡ ஸாஹசர்யதர்சனத்தாலும் உண்டுபண்ணப்பட்டிருக்கிற வாஸனைகளின் ஆதிக்யத்தினுடைய உதயத்தினால் தானே அந்தந்த அர்த்தங்களில் அந்தந்த சப்தங்களைப்ரயோகிப்பதற்கும் அர்த்தத்தைத் தனித்துப் பார்ப்பதனால் சப்தத்தை நினைப்பதற்கும் சப்தத்தை மாத்திரம் தனித்துக் கேட்பதனால் அர்த்தத்தை நினைப்பதற்கும் ஸமர்த்தர்களாக ஆகிறார்களோ, அவ்வளவுவரையில் என்று அர்த்தம். **சிக்ஷிதர்கள்**—அந்த

---

§ அம்பா—மாதா. ¶ தாத—பிதா. * சசி—சந்திரன்.
‡ ஸாஹசர்யம்—கூடச்சேர்ந்திருத்தல்.

ந்த சப்தங்களால் அந்தந்த அர்த்தங்களில் உண்டுபண்ணப்பட்டிருக்கிற ஜ்ஞானமுடையவர்கள். இங்ஙனமாகில் விரலால் குறித்துக்காட்டப்பட்டிருக்கிற அர்த்தங்களில் இந்த சப்தங்கள் ஸங்கேதமுள்ளவைகளாகச் செய்யப்பட்டிருக்கின்றனவென்று எண்ணப்படலாமென்று கேட்கப்படுமேயாகில், அன்றிக்கே, லிங்கம்போல் ஜந்யஜநகபாவம் முதலிய வேறு ஸம்பந்தத்தால் போதகங்களென்று நினைக்கப்படலாமென்று வினவப்படுமேயாகில், அந்த விஷயத்தில் கூறுகிறார்—ஸம்பந்தாந்தராதர்சநாத் ஸங்கேதயித்ருபுருஷாஜ்ஞாநாச்ச என்று. இது பொருள்-யாத்ருச்சிகமாக ஏற்படுகிற வ்யுத்பத்தியிலும் சோத்யம் துல்யம். சப்தப்ரயோகத்திற்குப்பிறகு ப்ரயோஜ்யனுடைய ப்ரவ்ருத்தியைப்பார்த்தவனை வ்யுத்பித்ஸுவுக்கு இந்த சங்கையானது உண்டாகிறது. இந்த சப்தப்ரயோகத்திற்குப் பிறகு இவனுடைய ப்ரவ்ருத்தியானது ஜந்யஜநகபாவம் முதலிய ஸம்பந்தத்தாலா? அல்லது ஸங்கேதத்தாலா? என்று. அதில் வேறு ஸம்பந்தத்தாலென்கிற சங்கையினுலேயே உண்டாகிறதில்லை என்று சொல்லப்படுமேயானல் புத்திபூர்வகமான வ்யுத்பத்தியிலும் இந்த பரிஹாரம் ஸமானம். ஸங்கேதபுத்தியின் உத்பத்தியும் பொருந்துகிறதில்லை. இந்த நம்ம தாய்தந்தைமுதலியவர்கள் சப்தங்களுக்குஅர்த்தங்களில் ஸங்கேதத்தை ஏற்படுத்துகிருர்களா? அல்லது முந்தியே ஒருவன் ஸங்கேதத்தைச் செய்திருக்கிருனு என்று. அவற்றுள் முதலாவது பக்ஷம் ஸரியல்ல. அநேக புருஷர்களால் அந்தந்த அர்த்தங்களில் ஒரேவிதமான சப்தப்ரயோகம் காணப்படுவதால். இரண்டாவது பக்ஷமும் ஸரியல்ல. இந்த மனிதனல் முன்பு சப்தங்கள் (அர்த்த விசேஷங்களில்) ஸங்கேதமுள்ளவைகளாக செய்யப்பட்டிருக்கின்றனவென்று ஸங்கேதத்தை ஏற்படுத்தின புருஷன் அறியப்படாமையாலென்கிற பரிஹாரம் உமக்கும் துல்யம். அது நமக்கும் ஸமானம். எல்லா ப்ரமாணங்களுக்கும் அர்த்தத்தை அறிவிப்பிக்கும் தன்மை பேதமின்றி இருந்தபோதிலும் ப்ரத்யக்ஷத்துக்கு தன்னுடைய இருப்பினுல் ஜ்ஞானத்தை உண்டுபண்ணுதல் என்கிற ஸ்வபாவமிருப்பதால் மற்ற ப்ரமாணங்களைக்காட்டிலும் இதற்கு வேற்றுமையும் மேன்மையும். அனுமானம் சப்தம் இவ்விரண்டு ப்ரமாணங்களும் அறியப்பட்டவைகளாக இருந்துகொண்டு ஜ்ஞாபகங்களாக இருக்கின்றன. அவற்றுள் அனுமானமானது ஜந்யஜநகபாவம் முதலிய வேறு ஸம்பந்தங்களின் பரிஜ்ஞானத்தினுல் அறியப்படத்தக்க வஸ்து விஷயமான அறிவை உண்டுபண்ணுகிறது. சப்தமோவென்றால் போத்யபோதகபாவரூபமான ஸம்பந்தஜ்ஞானத்தினுலேயே அறியப்படத்தக்கதை அறிவிக்கிறது. இவ்விதமாக ஸம்பந்தாந்தர சங்கையும் ஸங்கேதமுள்ளதாக செய்யப்பட்டிருக்கிறதென்கிற சங்கையும் விலக்கித்தள்ளப்பட்டது. வேறு ஸம்பந்தங்களில்லாமையாலும் ஸங்கேதம் செய்த புருஷன் இவனென்று அறியப்படாமையாலும் போத்யபோதகபாவமே ஸம்பந்தமென்று சிறுவர்களால் அறிவதற்கு ஸாத்தியமாகாதென்று சொல்வாயேயானுல் அது உனக்கும் துல்யம். மேலும் சப்தத்தை உச்சரித்தவுடன் ப்ரயோஜ்யவ்ருத்தனுடைய ப்ரவ்ருத்தியைக் கண்ணுற்று ப்ரவ்ருத்தியானது கார்யபுத்தியை முன்னிட்டு ஏற்பட்டிருக்கிறதென்று அனுமானித்து எதற்குப்பிறகு எது உண்டாகிறதோ அது அதற்குக்காரணம் என்கிற நியாயத்தால் சப்தோச்சாரணத்தால் இவனுக்கு கார்யபுத்தி உண்டாயிற்று. ஆதலால் சப்தார்த்தம் கார்யரூபமென்று அறிந்து கொள்வதற்குச்சிறுவர்களால் முடியவே முடியாது. ஸாத்தியப்படாமலிருத்தலும் காணப்படுகிறது. சிறுவர்கள் கூறப்பட்டிருக்கிற வண்ணமாக சப்தத்திற்கு கார்யார்த்த பரத்வத்தை நிச்சயிக்கிருர்களில்லை யன்றே. ஆகையால் சிறுவர்களால் எவ்விதத்தாலும் அறியமுடியாதென்கிற கேழ்வையானது உம்ம பக்ஷத்திலேயே அதிகமாக ப்ரஸங்கிக்கிறது. காலபரிபாகத்தால் அறியப்படுகிறதென்று கூறப்படுமேயானுல் இந்த பரிஹாரம் நம்ம பக்ஷத்தில் மிக்க பொருத்தமுள்ளது.

[illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

மீண்டும் வ்யுத்பன்னசப்தங்களைவிட வேறான சப்தங்களில் இந்தசப்தத்திற்கு இது அர்த்தமென்று முந்தி இருந்த வ்ருத்தர்களால் கற்பிக்கப்பட்டவர்கள் எல்லா சப்தங்களுக்கும் அர்த்தத்தை அறிந்து பிறர்களுக்கு அர்த்த

ங்களை அறிவிப்பதற்காக அந்தந்த அர்த்தங்களை அறிவிக்கத்திறமை வாய்ந்த வாக்ய ஜாலத்தை பிரயோகிக்கிறார்கள். வேறு விதத்தாலும் சப்தார்த்த ஸம்பந்த நிச்சயம் எளிதில் ஸாத்தியமாக இருக்கிறது. ஒரு மனிதனால் கையை அசைத்தல் முதலியதால் 'உன் தகப்பன் ஸுகமாக இருக்கிறான் என்று தேவதத்தனுக்குத் தெரியப்படுத்து என்று அனுப்பப்பட்ட ஒருவன் அந்த விஷயத்தைத் தெரிவிக்க முயன்றவனாக உன்பிதா சுகமாக இருக்கிறார் என்று சப்தத்தை ப்ரயோகிக்கிறான். பக்கத்திலிருக்கிற மற்றொருவ்யுத்பித்ஸுவானவன் ஊமைபோல் சேஷ்டைகளை அறிந்தவனாக இருந்துகொண்டு அந்தவிஷயத்தைத் தெரிவிப்பதில் ப்ரவ்ருத்தித்தவன் இவன் என்று அறிந்து அவனை பின்தொடர்ந்தவனாக, அதைத்தெரிவிப்பதற்காக ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற சப்தத்தைக்கேட்டு, இந்தசப்தம் அந்த அர்த்தத்தின் ஜ்ஞாநஹேதுவென்று நிச்சயிக்கிறான் என்பதனால் கார்யார்த்தத்திலேயே வ்யுத்பத்தி என்கிற நிர்பந்தமானது காரணமில்லாதது. ஆகையால் வேதாந்தங்கள் பரிநிஷ்பன்னமான பரப்ரஹ்மத்தையும் அதின் உபாஸனத்தையும் அபரிமிதபலமுள்ளதென்று அறிவிக்கின்றனவாதலால் ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கது: வேதம் கார்யார்த்தபோதனபரமாக இருந்தபோதிலும் ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கதே. எப்படி என்றால்" ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: - ஸோந்வேஷ்டவ்ய: ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:, விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத, தஹரோஸ்மிந்நந்தர ஆகாச: தஸ்மிந்யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம் தத்வாவவிஜிஜ்ஞாஸிதவ்யம், தத்ராபி தஹ்ரம் ககநம் விசோகஸ்தஸ்மிந்யதந்தஸ்துபாஸிதவ்ய" (இந்தச்ருதிவசனங்களுக்குப் பொருள்-ஹே உபாஸக! பரமாத்மாவானவன் வேதாந்தவாக்கியங்களால் ச்ரவணம் பண்ணத்தக்கவன்;- பிறகு மனனம் செய்யத்தக்கவன்; பிறகு தர்சன ஸமானாகாரமான தியானத்தினால் ஸாக்ஷாத்கரிக்கத்தக்கவன் அவன் தேடத்தக்கவன் அவன் நன்கு அறிவதற்கு விரும்பத்தக்கவன். ஸ்வரூபத்தை அறிந்து உபாஸனை செய்யக்கடவான். இந்த ஸூக்ஷ்மமான ஹ்ருதயபுண்டரீகத்தில் யாதொரு தஹரசப்தவாச்யமானஸூக்ஷ்மாகாசஸ்வரூபனான பரமாத்மாவுண்டோ அவனும் அவனிடத்தில் யாதொரு குணஜாதமுண்டோ அதுவும் தேடத்தக்கது. அதே நன்கு அறியவிரும்பத்தக்கது. அந்த ஹ்ருதயபுண்டரீகத்தில் ஸூக்ஷ்மமானயாதொரு ஆகாசமுண்டோ அந்த தஹராகாச சப்தவாச்யன் ஸம்ஸாரபந்தமில்லாத பரமாத்மா- அவனிடத்தில் எந்த குணஜாதமிருக்கிறதோ அது உபாஸிக்கத்தக்கது.) இது முதலிய ச்ருதிவசனங்களால் அறியப்பட்டிருக்கிற உபாஸனவிஷயகார்யத்தில் அதிகாரமுள்ளவனுக்கு "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்

இது முதலிய ச்ருதிகளால் ப்ரஹ்ம ப்ராப்தியானது பலமாக கேழ்க்கப்படுகிறதாதலால் ப்ரஹ்மஸ்வரூபத்துக்கும் அதன் விசேஷங்களுக்கும் துக்கத்துடன் கலர்காத தேச விசேஷரூபமான ஸ்வர்க்கம் முதலியதுபோலவும், ராத்ரிஸத்ரத்தில் பலமாகக் கூறப்பட்டிருக்கிற ப்ரதிஷ்டைபோலவும், பிராமண யநிந்தைக்கும் அபரிமிதயாதனைகளுக்கும் ஸாத்திய ஸாதனபாவம் போலவும் கார்யத்துக்கு உபயோகியாக இருந்தலாலேயே ஸித்தி ஏற்படுவதால்.

---

ச்ருதப்ரகாசிகை—

புநஸ்ச என்று. இந்த சப்தத்திற்கு இது அர்த்தமென்று வ்யுத்பத்தி இருக்குமேயானால் அன்விதாபிதானத்துக்கு பங்கம் ப்ரஸங்கிக்குமென்று சொல்லப்படுமேயாகில் அல்ல. ஸமுதாயஜ்ஞாநத்திற்காக ப்ரத்யேகபதபத வ்யுத்பத்தி இருப்பதால், காவ்யம் முதலியவைகளில் வாக்கியார்த்த ஜ்ஞாநத்திற்கு உபயோகியாக ஏற்படுகிற பதார்த்த ஜ்ஞாநமானது வாக்கியார்த்த ஜ்ஞாநத்திற்கு விரோதியல்லவன்றோ. அக்ஷரசிக்ஷையும் பதார்த்தஜ்ஞாநவிரோதினியல்லவன்றோ. இவ்வண்ணம் அந்தந்த பதங்களால் ஒன்றோடொன்று சேர்க்கையுற்ற ஸ்வார்த்தாபிதான வ்யுத்பத்திக்கு ஒவ்வொரு பதந்தோறும் உண்டாகிற அர்த்த வ்யுக்பத்தியானது விரோதினியல்ல. பின்னையோ உபயுக்தையே. எப்படி உம்மபக்ஷத்தில் ஆவாபோத்வாபரூபமான தனித்தனிப்பதத்தினுடைய அர்த்தத்தில் உண்டாகிற வ்யுத்பத்தியானது வாக்கியார்த்தஜ்ஞாநத்திற்கு உபயுக்தமாக இருப்பதால் விரோதினியன்றோ அப்படிப்போல. உம்முடைய பக்ஷத்திலோ வென்றால் ப்ரத்யேகபதவ்யுத்பத்தியானது பிறகு உண்டாகக்கூடியது. இந்த பக்ஷத்திலோ வென்றால் முந்தி உண்டாகிறது என்பது விசேஷம் வாக்யார்த்தஜ்ஞாநத்திற்கு உபயோகியாக இருத்தல் ஸமாநம். சப்தத்தால் அன்வயபர்யந்தம் அபிதானமன்றோ அன்விதாபிதானம். ப்ரத்யேக பதபதார்த்த வ்யுத்பத்தியிலுங்கூட அதிலேயே வ்யுத்பத்தி உண்டுபண்ணப்படுகிறதாதலால் விரோதமில்லை. அபிஹிதான்வய பக்ஷத்தில்அர்த்தங்களுக்கு ஒன்றோடொன்று அன்வயபோதநயோக்யமாக இருத்தல் சப்தங்களுக்கு தத்தம் அர்த்தங்களை உணர்த்துகிற சக்தி சப்தங்களாலுங்கூட அன்யோன்யம் அன்வயிக்க யோக்யமாக அர்த்தத்தை உணர்த்துதல், என்கிற மூன்றும் கல்பிக்கத்தக்கன. அன்விதாபிதான பக்ஷத்திலோ வென்றால் சப்தங்களுக்கு அன்வயபர்யந்தமாக ஸ்வார்த்தபோதன சக்தியை ஒப்புக்கொள்வதால் கல்பனையில் லாகவம் இருக்கிறபடியால் அதே இந்த இடத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அன்விதாபிதானபங்கப்ரஸங்கமும் பரிஹரிக்கப்பட்டது. இந்த சப்தத்துக்கு இது அர்த்தமென்கிற இடத்திலுங்கூட இது அர்த்தமென்று தெரிந்துகொள்ளென்றல்லவோ சொல்லப்பட்டதாக ஆகிறது. ஆகையால் கார்யார்த்தத்திலேயே வ்யுத்பத்தி என்று சொல்லப்படுமேயானால் இங்ஙனமாகில் யாத்ருச்சிக வ்யுத்பத்தியிலும் ஸித்தவஸ்துவிலேயே வ்யுத்பத்தி உண்டாகலாம். ப்ரயோஜ்யவ்ருத்தனுக்கு கார்யபுத்தியானது உண்டாயிருக்கிறதென்றல்லவோ வ்யுத்பத்தியைத் தேடுவதில் விருப்பமுள்ளவன் அறிகிறான். சப்தத்தால் அறியத்தக்கதன்மை கார்யத்திற்கே. புத்திக்கு இல்லை, புத்தியானது சப்தத்தாலுண்டாகிறதே ஒழிய சப்தத்தால் வாச்யையாக ஆகிறதில்லை என்று கூறப்படுமேயானால் இந்த இடத்

திலும் சப்தபோத்யத்வம் அந்தந்த பதார்த்தத்திற்கே; புத்திக்கு அல்ல கடவிஷயகமானபுத்தியானது கடசப்தத்தால் வாச்யையாக ஆகாதன்றோ. பின்னையோ அந்த சப்தத்தால் உண்டாகிறது. வாச்யமோவென்றால் கடமே என்று பரிஹாரம் ஸாவ்யமென்று அபிப்ராயப்பட்டு இதை அறிந்துகொள் இதையும் நிச்சயமாகத்தெரிந்துகொள் என்கிற அபிப்ராயத்தால் 'அங்குல்யா நிர்திச்ய' என்று சொல்லப்பட்டது. **தத்ததர்த்தாவபோதி வாக்யஜாதம் ப்ரயுஞ்ஜதே** என்று. யாத்ருச்சிக வ்யுத்பத்தியில் சில சப்தங்களுக்கு கார்யார்த்தபரமாக வ்யுத்பத்தி காணப்படுவதால் வ்யுத்பத்தியை உண்டுபண்ணுகிற புருஷர்களும் கார்யார்த்தத்திலேயே வ்யுத்பத்தியை உண்டுபண்ணுகிறவர்களாக இருந்துகொண்டு (காமாநய) பசுவைக்கொண்டுவா இதுமுதலியவாக்கியத்தை ப்ரயோகிக்கிறார்களென்று சொல்லப்படுமேயானால் அனேகசப்தங்களுக்கு ஸித்தவஸ்துபரமாக வ்யுத்பத்தி காணப்படுவதால் வ்யுத்பத்தியை உண்டுபண்ணுகிற புருஷர்களும் அப்படியேவ்யுத்பத்தியை ஏற்படுத்தி அந்தந்த அர்த்தங்களைச் சொல்லவேண்டுமென்கிற விருப்பத்தால் சப்தங்களை ப்ரயோகிக்கிறார்கள். வ்யுத்பத்திதர்சனம் ப்ரயோகதர்சனம் இந்த இரண்டும் இந்த இடத்தில் ஸமானமென்று கருத்து. இவ்வண்ணம் புத்திபூர்வக வ்யுத்பத்தியினால் சப்தங்களுக்கு ஸித்தவஸ்து பரத்வம் கூறப்பட்டது யாத்ருச்சிக வ்யுத்பத்தியிலும் ஸித்தமாக இருக்கிற அர்த்தத்திலும் வ்யுத்பத்தி இருக்கிறதென்று சொல்லுகிறார்— **ப்ராகாரந்தரேணாபி** என்று. வாசகசப்தங்களை அபேக்ஷியாமலே அந்தந்த அர்த்தஜ்ஞானம் சேஷ்டை முதலியதால் ஸம்பவிக்கிறதென்று காண்பிக்கிறார்— **ஹ்ருஷ்டவத்** என்று. அன்யனால் சொல்லப்பட்டிருக்கிற யாத்ருச்சிக வ்யுத்பத்தியில் வ்யுத்பத்தியைப்பெறவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனைத்தவிர இரண்டுபுருஷர்களின் அபேக்ஷையும் பதம்முதலியதின் அபேக்ஷையும். இதில்லாவென்றால் வ்யுத்பத்தியைப் பெறுவதில் விருப்பமுள்ள மனிதனைத்தவிர்த்து மூன்று புருஷர்களின் அபேக்ஷை இருக்கிறதென்பதனால் வைஷம்யம் மேலும் உனக்குப் புத்திரன் பிறந்திருக்கிறான் என்கிற வாக்கியத்திற்கும் பசுவை ஓட்டிக்கொண்டுவா இது முதலிய வாக்கியத்திற்கும் வைஷம்யமானது எவ்விதத்தாலும் உபபாதிக்கமுடியாது. முக்காலங்களிலுமுள்ள ஸந்தோஷஹேதுக்களான வஸ்துக்கள் அனேகங்கள் என்கிற எண்ணத்தாலன்றோ புத்திரனுடைய பிறப்பை உணர்த்துகிற வாக்கியத்தில் வ்யுத்பத்தி அசக்யமென்று உரைக்கப்பட்டது. அது இல்லை. பக்கத்தில் நேர்ந்திருக்கிற புத்திரஜன்மாவைக் கண்டு அதைத் தெரிவிப்பதற்காக முயற்சியுள்ள ஒரு மனிதன் அறியப்பட்டிருக்கவே பிறகு ஜாதகர்மா முதலிய ஸம்ஸ்காரங்கள் பார்க்கப்படவே அதற்குமுன் முகமலர்ச்சி இல்லாமையால் அஸம்பாவிதமான புத்ரஜன்மவிஜ்ஞானமுள்ள புருஷனுக்கு இந்த வாக்கியத்தைக்கேட்டவுடன் உண்டாகப்போகிற முகமலர்ச்சிக்கு சென்றதும் இனிவரப்போகிறதுமான வேறு ஸந்தோஷஹேதுவான வஸ்துவின் ச்ரவணம் ஹேதுவென்கிற சங்கை உதியாததலால். பக்கத்திலிருக்கிற ஹேதுவைவிட்டு காணப்படாத ஹேதுவிஷயமான சங்கையானது புத்தியை நாடாதன்றோ. நல்ல லக்னம் ஸுகப்ரஸவம் முதலிய வேறுஹேதுவென்கிற சங்கை உண்டாகலாமென்றுகேழ்க்கப்படுமேயானால் இவ்வண்ணமல்ல-நல்ல லக்னம் முதலியது மாத்திரம் ஸந்தோஷஹேதுவென்பது பொருந்தாததால், மற்றொருவனுடைய புத்ரஜனனம் முதலியதைச்சார்ந்திருக்கிற நல்ல லக்னம் முதலியது ஸந்தோஷகாரணமாகிறதில்லையன்றோ. ஆகையால் தன்னுடைய புத்திரஜன்மாவுக்கு விசேஷணங்களாக இருக்கிற நல்ல லக்னம் முதலியவைகளே ஸந்தோஷஹேதுக்கள். ஆதலால் தன் புத்திரனுடைய பிறப்பானது அறியப்படாமலிருக்கையில்

நல்ல லக்னம் முதலியவைகள் ஸந்தேஹகாரணங்களாக ஆகாமையால் இந்த வாக்கியத்திற்குத்தன் புத்திரனுடைய பிறப்பைத் தெரியப்படுத்தும் திறமை அவசியம் அறியப்பட்டதாக ஆகலாம். முந்தியே புத்திரஜனனமஜ்ஞானம் ஸம்பவித்திருப்பதால் இந்த வாக்கியத்திற்கு நல்ல லக்னம் முதலியதை அறிவிப்பதிலேயே நோக்கமென்று சங்கையுண்டாகலாமென்று கேழ்க்கப்படுமேயானால் இவ்வண்ணமல்ல. அதற்கு முந்திமுகமலர்ச்சி இல்லாமையால் முந்தியே புத்திரஜனன ஜ்ஞாநசங்கை உதியாததால், ஆகையால் புத்திரஜன்மாவானது ஸமீபத்திலிருப்பதாலும் முந்தி முகவிகாஸமில்லாமையாலும் மூடனுமையான முகமலர்ச்சிக்குக் காரணமான இந்த வாக்கியத்திற்கு புத்திரஜன்ம ஜ்ஞாபகத்வத்தை வ்யுத்பத்தியைப் பெருவதில் விருப்பமுற்ற சிறுவனை எண்ணுகிறான். அந்த இடத்தில் இவ்விதம சங்கை உண்டாகிறது. இந்த வாக்கியமானது புத்திரஜன்மம் முதலியதை மாத்திரம் தெரிவிக்கிறதா? அல்லது நல்ல லக்னம் முதலியவைகளுடன் கூடின புத்திரஜன்மம் முதலியதைத் தெரிவிக்கிறதா?' என்று. இப்படிப்பட்ட ஸந்தேஹத்தால் கவரப்பட்டிருத்தல் (காமாநய) பசுவை ஓட்டிவா இதுமுதலியவாக்கியத்துக்கும் துல்யம் இந்த வாக்கியமானது பசுவை ஓட்டிவருவதை மாத்திரம் சொல்லுகிறதா? அல்லது முன்னிலையிலிருக்கிற பிண்டத்தில் வெண்மை நிறம் முதலிய விசேஷங்கள் காணப்படுகின்றன, அவைகளோடுகூடின பசுவை ஓட்டிவருவதை ப்ரதிபாதிக்கிறதா? என்கிற ஸந்தேஹம் உபபன்னயாக இருப்பதால். ப்ரயோகபேதத்தால் ஆவாபோத்வாபங்கள் வாயிலாக சங்கையை விலக்குதல் இரண்டிடத்திலும் துல்யம். புத்திரஜன்ம வாக்கியத்தைக்காட்டிலும் காமாநய) பசுவை ஓட்டிக்கொண்டுவா இது முதலிய வாக்கியங்களுக்கு அனேக அர்த்தாந்தர சங்கையினுல் கவரப்பட்டிருத்தல் மிகவும் காணப்படுகிறதாதலால் அர்த்த விசேஷ நிச்சயமானது செய்வதற்கு மிக்க அசக்யமானது. பசுவை ஓட்டிக்கொண்டுவா என்கிற சப்தப்ரயோகம் செய்த உடன் வேறு வியாபாரமில்லாமல் பசுவானது ஓட்டிககொண்டுவரப்பட்டிருந்த போதிலும் ப்ரயோஜ்ய வ்ருத்தனுடைய ப்ரவிருத்தியானது 'பசுவை நன்றாகக்காட்டு, பசுவை முன்னிலையில் நிற்கச்செய், பசுவைக்கொடு, பசுவை விற்றுவிடு' இது முதலிய அனேகார்த்த விஷயமான சங்கைக்கு ஹேதுவாக இருப்பதால். மேலும் பசுவை ஓட்டிக்கொண்டுவா இது முதலிய சப்தங்கள் ப்ரயோகிக்கப்பட்டவுடன் பசுவை ஓட்டிவருவதற்கு முன்னதாகவே எழுந்திருத்தல் மேல்வஸ்திரத்தை இடுப்பில் வரிந்துகட்டிக்கொள்ளுதல் தடியை எடுத்தல் தற்செயலாக நேர்ந்திருக்கிற ஜனங்களுடன் ஸம்பாஷித்தல் செல்லுதல் முதலிய அவாந்தரங்களாக இருக்கிற அனேக வியாபாரங்கள் எந்த புருஷனுக்கு இப்பொழுது வ்யுத்பத்தியில் அறியப்படுகிறதுகளோ அந்த மனிதனுக்கு அவைகளுக்குள் ஏதாவது ஒரு அர்த்தத்திற்கு வாசகமென்கிற சங்கையானது 'காமாநய' இது முதலிய வாக்கியத்திற்கு உண்டாகிறது. பிறகு பசுவை ஓட்டிக்கொண்டுவருதலும் தற்செயலாக செய்யப்பட்டதாக இருக்கலாமே ஒழிய வாக்கியத்தினுலுண்டுபண்ணப்பட்ட * ப்ரேரணத்தினுலல்லவென்றும் † சங்கை உண்டாகிறது. ஆகையால் அர்த்தவிசேஷ ஸம்பந்த நிச்சயம் உண்டாகிறதில்லை. அனேக ப்ரயோகங்களால் ‡ அன்வய $ வ்யதிரேகங்களால் அர்த்த விசேஷ நிச்சயமென்று சொல்லப்படுமேயானுல்

---

* ப்ரேரணம்—விதித்தல், ஏவுதல். † சங்கை—சந்தேகம். ‡ அன்வயம்—தவறாமல் சப்தப்ரயோகத்தால் அர்த்தத்தின் ஜ்ஞானம். $ வ்யதிரேகம்—சப்தப்ரயோகமில்லாவிடில் அர்த்தத்தின் ப்ரதிபத்தி இல்லாமை.

இவ்வண்ணமாகவே 'உனக்கு புத்திரன் பிறந்திருக்கிறான்.' இது முதலிய வாக்கியத்தினால் அர்த்தவிசேஷ நிச்சயமானது நன்கு ஸம்பவிக்கிறது. இவ்வண்ணம் ஸித்தவஸ்துவில் சப்தவ்யுத்பத்திக்கு § உபபத்தியை ‡ உபபாதனம் செய்ததால் வேதாந்தங்களுக்கு பரப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கும் ஸாமர்த்யம் பொருத்தமுள்ளதென்று கூறுகிறார் —அதோ வேதாந்தா: என்று.

அதற்குமேல் கார்யார்த்த பரத்வத்தை ஒப்புக்கொண்டு ப்ரஹ்மவிசாரம் செய்யத்தக்கதென்று கூறுகிறார்— கார்யார்த்தத்வேபி என்று வேதாந்தவாக்யங்களுக்கு கார்யார்த்தபோதகத்வ மொப்புக்கொள்ளப்பட்ட போதிலும் ¶ ஸ்தாவகத்வஸித்திக்கு ஹேதுவாதலாலும் பலத்திற்கு ஸாதனமாதலாலும் இரண்டு ப்ரகாரங்களால் ஸித்த வஸ்துவில் தாத்பர்யம் மேலே விளம்பிச் சொல்லப்படப்போகிறது. இவ்விடத்திலோ வென்றால் வேறு ப்ரகாரத்தால் உபபாதிக்கப்படுகிறது. அநந்தஸ்திரபலவிஷயமான @ ஆபாதப்ரதீதியானது ஸாதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்டிருப்பதால் பலமாக தாத்பர்யம் கூறுவது இந்த இடத்தில் உசிதமென்று இங்கு பலரூபத்தால் ஸித்தி சொல்லப்படுகிறது. அனேக வாக்கியங்களை எடுத்தது உபாஸநத்தில் தாத்பர்யமதிகமென்பதை ஜ்ஞாபிப்பதற்காகவும் || உபஸர்க விசேஷம் ‡‡ ஸங்ப்ரத்யயத்தின் சேர்க்கை சேர்க்கை இன்மை,இவைகளிருந்தபோதிலும் அர்த்தபேதமில்லை என்பதைத் தெரிவிப்பதற்காகவும், உபாஸந விஷயகார்யாதிக்ருத என்று உபாஸநவிஷயகமாண ப்ரயத்னத்தால் ஸாதிக்கத்தக்கதான அபூர்வத்தில் அதிகாரமுள்ளவனுக்கு விசேஷிக்கிறதன்றோ விஷயமென்று சொல்லப்படுகிறது ப்ரஹ்மஸ்வரூப தத்விசேஷணாதம் என்று விசேஷணங்கள் குணங்களும் $ விபூதிகளும். விதிவாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிற பலத்திற்கு அர்த்தவாதத்தில் சொல்லப்பட்டிருக்கிற விசேஷணத்தில் தாத்பர்ய மிருக்கிறதென்று தெரிவிப்பதற்காக "துக்காஸம் பின்னதேச விசேஷரூபஸ்வர்க்காதிவத்" என்று சொல்லப்பட்டது "யஸ்மிந்நோஷ்ணம் நசீதம் நாரதி:" (பொருள். எந்த இடத்தில் உஷ்ணவஸ்து வில்லையோ சீதமான பதார்த்தமில்லையோ துக்கமுமில்லையோ) என்றல்லவோ ச்ருதிகூறுகிறது. ஸ்வர்க்கமென்கிறபலம் விதிவாக்கியத்தை நாடி இருக்கிறது. விசேஷணமானது வேறு இடத்தில் பலம் விதிவாக்கியத்தை அடைந்திராமலிருந்தபோதிலும் விதியினலபேக்ஷிக்கப்பட்டிருக்கிற அன்யபரமான அர்த்தவாதத்தில் சொல்லப்பட்டிருக்கிற பலத்தில் தாத்பர்யமிருக்கிறதென்பதைக் காண்பிப்பதற்காக 'ராத்ரிஸத்ரப்ரதிஷ்டாவத்"என்று உரைக்கப்பட்டது."ராத்ரீருபேயாத்- ப்ரதிதிஷ்டந்திஹவா ஏதே ய ஏதா ராத்ரீருபயந்தி " என்றல்லவோ ச்ருதி இருக்கிறது. இதன்பொருள். ராத்ரிஸத்ரத்தைச் செய்யக்கடவான், எவர்கள் ராத்ரிஸத்ரத்தை அனுஷ்டிக்கிறார்களோ அவர்கள் ப்ரதிஷ்டையைப் பெறுகிறார்கள். ப்ரதிஷ்டையில் விருப்பமுள்ளவன் ராத்ரிஸத்ரத்தை அனுஷ்டிக்கக்கடவானென்கிற வசன

§ உபபத்தி—யுக்தி. ‡ உபபாதனம்—நிரூபணம்.

¶ ஸ்தாவகத்வம்—ஸ்தோத்திரம் செய்கிறதன்மை.

@ ஆபாதப்ரதீதி—ஸம்சய விபர்யயங்களை ஸஹிக்கிற ஜ்ஞானம்.

|| உபஸர்க்கம்—தாதுக்களுக்கு முந்தி சேர்க்கப்படும் 'ப்ர' முதலிய சப்தங்கள்.

‡‡ ஸங்ப்ரத்யயம்—தாதுக்களுக்குப்பின் சேர்க்கப்படும் ப்ரத்யயவிசேஷம். இதற்கு இச்சை அர்த்தம். $ விபூதிகள்—நியமனம் செய்யப்படத்தக்க வஸ்துக்கள்.

மில்லாமலிருந்தபோதிலும் அர்த்தவாத வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிற பலத்தில் தாத்பர்யம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிற தென்று அர்த்தம். விதேயத்திற்கு உபகாரகமாக இருக்கிற விரோதபலத்திலும் தாத்பர்யமிருக்கிறதென்பதைத் தெரிவிப்பதற்காக "அபகோரண சதயாதநாஸாத்ய ஸாதனபாவவச்ச" என்று சொல்லப்பட்டது. 'தஸ்மாத் ப்ராஹ்மணுயநாபகுரேத, யோபகுருதே சதெந யாதயாத்' பொருள். ஆகையால் ப்ராஹ்மணனைக்குறித்து ஹுங்காரம் த்வங்காரம் முதலிய கெட்ட சொற்களை முன்னிட்டு நிந்தை செய்யக்கூடாது. எவன் அப்படி நிந்திக்கிறனே அவனை தண்டதரனை வைவஸ்வதன் நூருயாதனைகளை அனுபவிக்கச்செய்வான். என்றல்லவோ ச்ருதி இருக்கிறது. இதனால் மோக்ஷோபாய விரோதியான பலத்திலும் தாத்பர்யம் ஸித்தமென்று அபிப்பிராயம். தொடர்ந்துவருகிற ஹேதுவானது கார்யத்துக்கு உபயோகியாக இருப்பதாலேயே ஸித்திப்பதாலென்று சொல்லப்பட்டது. உபாஸந விஷயகார்யத்திற்கு உபயோகியாக இருப்பதால் பலமாக ஆய் இருக்கிற ப்ரஹ்மஸ்வரூபத்திலும் அதற்கு விசேஷணமான குணம் முதலியதிலும் விதிவிரோதியான பலத்திலும் ஸம்ஸார ஹேதுத்வம் முதலியதிலும் விவக்ஷையானது செய்யத்தக்கதென்று அர்த்தம்.

---

" மாசோநய " [illegible]

[illegible]

ஸ்ரீபாஷ்யம்—

"பசுவை ஓட்டிக்கொண்டுவா" இதுமுதலிய வாக்கியங்களிலுங்கூட கார்யார்த்தத்தில் வ்யுத்பத்தி இல்லை. உமக்கு அபிமதமான கார்யமானது எவ்விதத்தாலும் நிரூபிக்க முடியாமலிருப்பதால். ஆந்தரமான ப்ரயத்னத்தின் ஸத்தையை அடுத்து உத்தரக்ஷணத்தில் உண்டாகக்கூடிய ப்ரயத்ந த்திற்கு உத்தேச்யமன்றோ உமக்கு கார்யம். க்ருதிக்கு உத்தேச்யத்வமாவது க்ருதிக்கு கர்மாவாக இருத்தல். க்ருதி கர்மத்வமாவது - க்ருதியினால் அடைவதற்கு மிக்க இஷ்டமாக இருத்தல் இஷ்டதமமானது சுகமா? அல்லது இருக்கிற துக்கத்தின் நிவ்ருத்தியா? அதில் ஸுகம் முதலியதில்விருப்பமுள்ள புருஷனால் தன் ப்ரயத்னமல்லாவிடில் அது ஸித்தியாதெனறு அறியப்பட்டிருக்குமேயாகில் அப்பொழுது ப்ரயத்னத்தில் விருப்பமுள்ள புருஷன் ப்ரவ்ருத்திக்கிறானதலால் ஓரிடத்திலாவது இச்சாவிஷயத்திற்கு க்ருதிக்கு ஆதீனமான ஸித்தியுடன் கூடி இருத்தலென்பதைத் தவிர்த்துதனித்ததான க்ருதிக்கு உத்தேச்யமாக இருத்தலென்கிற ஒரு தர்மமானது அறியப்படுகிறதில்லை. இச்சைக்கு விஷயமாக இருக்கிற வஸ்துவுக்குப்ரேரகத்வமாவது ப்ரயத்நத்திற்கு அதீனமான ஸித்தியுடன் சேர்ந்திருத்தலே. அதனாலேயே ப்ரவ்ருத்தி ஏற்படுவதால் புருஷனுக்கு அநுகூலமாக இருத்தல் க்ருத்யுத்தேச்யத்வமாகா ஏனெனில் ஸுகமே புருஷானுகூலம், துக்கநிவ்ருத்தியானது புருஷானுகூலமல்ல. புருஷனுக்கு அனுகூலம் ஸுகம்- அவனுக்கு ப்ரதிகூலம் துக்கமென்றல்லவோ ஸுகதுக்கங்களுடைய ஸ்வரூபவிவேகம். துக்கம் ப்ரதிகூலமாக இருப்பதால் அதன் நிவ்ருத்தியானது இஷ்டமாகஇருக்கிறதே ஒழிய அனுகூலதையினாலல்ல- அனுகூல ப்ரதிகூல ஸம்பந்தமின்றி

ஸ்வரூபத்துடனிருத்தலன்றோ துக்க நிவ்ருத்தி ஆகையால் ஸுகத்தைத்தவிர்த்த க்ரியை முதலியதற்கு அனுகூலத்வம் ஸம்பவிக்கிறதில்லை. ஸுகார்த்தமாக இருப்பதால் அதுவும் அனுகூலமென்று சொல்லக்கூடாது. அது துக்காத்மகமாக இருப்பதால் ஸுகார்த்தமாக இருத்தலானுங்கூட அதன் உபாதான விஷயமான இச்சாமாத்ரமே உண்டாகிறது. க்ருதியைக்குறித்து சேஷித்வம் க்ருத்யுத்தேச்யத்வமல்ல. உம்முடைய பக்ஷத்தில் சேஷித்வம் நிரூபிக்கப்படாமையால் பிறனை உத்தேசித்து ப்ரவ்ருத்திக்கிற க்ருதியின் வ்யாப்திக்குத்தக்கதாக இருத்தல் சேஷத்வமாதலால் அதற்கு ப்ரதிஸம்பந்தியானது சேஷி என்று அறியப்படுகிறதில்லை. அப்படியானால் க்ருதியானது சேஷமல்லாததால் அதைக்குறித்து அதனால் ஸாத்தியத்திற்கு சேஷித்வமில்லாமையால். அன்யனை உத்தேசித்து உண்டாகிற ப்ரவ்ருத்திக்குத்தகுதியுற்றிருத்தல் சேஷசப்தவாச்யமாதலால் அதைவிட வேறாக இருப்பதுசேஷி. உத்தேச்யத்வமே நிரூபிக்கப்படுவதாலும் ப்ரதானனுக்கும் தன்வேலைக்காரனை உத்தேசித்த ப்ரவ்ருத்திக்குத் தகுதியுற்றிருத்தல் காணப்படுவதாலும். ப்ரதானபுருஷனேவென்றால் தன்வேலைக்காரனை போஷிப்பதில் தன்னை நன்கு பாதுகார்த்துக்கொள்ளுகிற உத்தேசத்தினால் ப்ரவ்ருத்திக்கிறானென்று கூறப்படுமேயானால் அல்ல வேலைக்காரனும் ப்ரதானனாக இருக்கிற ப்ரபு போஷணத்தில் தன்னுடைய நன்மையில் உத்தேசத்தினாலேயே ப்ரவ்ருத்திக்கிறான், கார்யத்தின் ஸ்வரூபமே நிரூபிக்கப்படாமையால் கார்யத்துக்கு எது ப்ரதிஸம்பந்தியோ அது சேஷம், அதற்குப்ரதிஸ்ம்பந்தியாக இருப்பது சேஷி என்பதும் அஸங்கதமானது.

---

ச்ருதப்ரகாசிகை—

ப்ராவர்த்தகவாக்கியத்திலும் உன்னுடைய அபிமதஸித்தி இல்லை என்று சொல்லுகிறார்—காம் என்று. கார்யார்த்தே - ப்ரதானமென்று உன்னால் அபிமானிக்கப்பட்டிருக்கிற க்ருத்யுத்தேச்யரூபமான கார்யார்த்தத்தில். எதனாலென்று கேட்கில் சொல்லுகிறார்— பவதபிமத என்று. வேர்வைத்தண்ணீர் ச்ரமம் முதலியவைகளிலும் க்ருதிஸாத்தியத்வமிருப்பதால் அவைகளை விலக்குவதற்காக க்ரியா கார்யத்திலும் உத்தேச்யத்வம் அங்கீகரிக்கத்தக்கது. த்வதுக்தோத்தேச்யத்வஸ்ய துர்நிரூபதயா-உன்னால் சொல்லப்பட்டிருக்கிற அந்த உத்தேச்யத்வரூபமான கார்யமானது எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாமலிருப்பதாலென்று அர்த்தம். துர்நிரூபத்வம் எவ்வாறென்று வினவப்படுமேயானால் சொல்லுகிறார்—க்ருதி என்று. க்ருதிபாவபாவி—க்ருதி, ஆந்தரமான ப்ரயத்னம் அதன் ஸத்பாவத்தை அடுத்து உண்டாகிற க்ருதி ஸாத்யத்வமானது பாவார்த்தம். முதலியவைகளிலுங்கூட இருக்கிறபடியால் அதை விலக்குவதற்காக க்ருத்யுத்தேச்யமென்று கூறப்பட்டது. க்ருத்யுத்தேச்யத்வம்-க்ருதி ப்ரதானத்வமென்று அர்த்தம். கார்யத்திற்கு க்ருதி ஸாத்யத்வம், இஷ்டத்வம், க்ருத்யுத்தேச்யத்வம், என்கிற இம்மூன்றும் அவன் மதத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இஷ்டத்வம் க்ருதி ஸாத்யத்வம் இந்தஇரண்டும் பலத்திற்கும் பாவார்த்தத்திற்கும் ஸா

மான்யங்கள். க்ருதி ப்ரதானத்வமானது இரண்டு ஆதாரங்களைக்காட்டிலும் விலக்ஷண மாக பலபாவார்த்தங்களின் வ்யாவ்ருத்தியை உண்டுபண்ணுகிறதாக வர்ணிக்கப்படுகிற தன்றோ. டீகையில் 'கார்யமர்த்தம் ப்ரதிபாதயதோ வேதஸ்ய ப்ராமாண்யம்' என்று கூறப்பட்டிருக்கிறது, இந்த இடத்தில் அர்த்த சப்தத்தால் ப்ராதான்யமானது சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. பஞ்சிகையில் கார்யமர்த்தம் ப்ரதானதயா ப்ரதிபாதயதோ வேதஸ்ய ப்ராமாண்யம் தத்ரைவ ப்ராமாண்ய சப்த வ்யுத்பத்தே: வ்யுத்பத்யாயத் தத்வாத்தஸ்ய' பொருள்—கார்யரூபமான அர்த்தத்தை ப்ரதானமாக ப்ரதிபாதிக்கிற வேதத்திற்கு ப்ராமாண்யம்-அதிலேயே ப்ராமாண்ய சப்தத்திற்கு வ்யுத்பத்தி ஏற்பட்டிருப்பதால். அது வ்யுத்பத்திக்கு அதீனமாக இருப்பதால். என்று. ப்ரகரணபஞ்சிகையில் -க்ருதிஸாத்யம் ப்ராதான்யத் தத் கார்யமபிதீயதே' க்ருதி ஸாத்யமானப்ரதானம் எதுவோ அந்த கார்யம் சொல்லப்படுகிறதென்று. அவற்றுள் மூன்றாவது ஆகாரமாக ஸம்மதிக்கப்பட்டிருக்கிற க்ருத்யுத்தேச்யத்வமானது க்ருதிஸாத்யத்வம் இஷ்டத்வம் இந்த இரண்டு ஆகாரங்களுக்குள் ஒரு ஆகாரத்தில் முடிக்கிற தென்கிற அபிப்ராயத்தால் தூஷிப்பதற்குச் சொல்லுகிறார்—க்ருத்யுத்தேச்யத்வஞ்ச என்று. பாணினியினால் சொல்லப்பட்டிருக்கிற ரீதியினால் கர்மத்வத்தை விவரிக்கிறார்—க்ருதிகர்மத்வஞ்ச என்று இஷ்டதமத்வமானது கார்யத்திலில்லை என்று சொல்லுகிறார்— இஷ்டதமஞ்ச என்று. க்ருதிகர்மத்வமாவது ப்ரவர்த்தகத்வமென்று சொல்லப்படுமேயானால் கூறுகிறார்— தத்ர என்று. அதுவும் இஷ்டத்துக்கு தன்னுடைய ப்ரயத்னத்தால் ஸாதிக்கத்தக்கதாக இருத்தலே என்று அர்த்தம். ஆதிசப்தத்தால் துக்கநிவ்ருத்தி சொல்லப்படுகிறது. 'ஸ்வப்ரயத்நாத்ருதேயதி' இது முதலியதற்கு இது கருத்து. க்ருதிஸாத்யத்வத்தைக் காட்டிலும் வேறான க்ருதி கர்மத்வமென்பது இஷ்ட தமத்வத்தில் பர்யவஸிக்கிறது 'ப்ரயத்நேச்சு: - செய்யவிருப்பமுள்ளவன். ப்ராப்தே-ஆந்தரமான ப்ரயத்னத்தை விரும்புகிற அவன் அதை உண்டுபண்ணுகிறானென்று அர்த்தம். இஷ்டதமத்துக்கே இரண்டு ரூபங்கள் இருக்கின்றன. இச்சா விஷயத்வம் ப்ரேரகத்வம் என்று. அவற்றுள் ப்ரேரகத்வம் க்ருத்யுத்தேச்யத்வம் என்று கூறப்படுமேயானால்சொல்லுகிறார்—இச்சாவிஷயஸ்ய என்று. எதனாலென்று வினவப்படுமேயானால் சொல்லுகிறார்—தத ஏவ என்று. 'புருஷானுகூலத்வம் க்ருத்யுத்தேச்யத்வம்' என்று கூறப்படுமேயானால் சொல்லுகிறார்—நச என்று. ஸுகமே புருஷானுகூலமென்று சொல்லத்தக்கதல்ல, ஸுகத்தைவிட மற்றதுக்கும் அனுகூலத்வம் காணப்படுவதாலென்று சொல்லப்பட்டால் உத்தரமளிக்கிறார்— நச துக்கநிவ்ருத்தே:புருஷானுகூலத்வம் என்று. துக்க நிவ்ருத்தி ஸுகமாக ஆகிறதில்லை யன்றோ என்று அர்த்தம். இதை உபபாதிக்கிறார்—புருஷானுகூலம் என்று.

அங்ஙனமாகில் துக்க நிவ்ருத்திக்கு இச்சாவிஷயத்வமானது எவ்வாறு ஸம்பவிக்குமென்று கேழ்க்கப்படுமேயாகில் சொல்லுகிறார்—துக்கஸ்ய என்று. தானாகவே இஷ்டமாக இருத்தல் அனுகூலத்வமே ஒழிய வேறு இஷ்டங்களுக்கு ஹேதுவாக இருப்பதாலாவது அநிஷ்ட நிவ்ருத்தி ரூபமாக இருப்பதாலாவது இஷ்டத்வமில்லை. இவ்வண்ணமே தானாகவே அநிஷ்டமாக இருத்தல் ப்ரதிகூலத்வமே ஒழிய வேறு அநிஷ்டங்களுக்கு ஹேதுவாக இருப்பதாலாவது இஷ்ட நிவ்ருத்திரூபமாக இருப்பதாலாவது அநிஷ்டத்வமில்லை. ஆகையால் துக்க நிவ்ருத்தி இஷ்டமானது. துக்கம் ப்ரதிகூலமாக இருப்பதால் அனுகூலதையினாலல்லவென்று அர்த்தம். துக்கநிவ்ருத்திக்குஆனுகூல்யாபாவத்தை உபபாதனம் செய்கிறார்-அனுகூலப்ரதிகூலஎன்று ஸ்வரூபேண அவஸ்திதி: ஸுகநிவ்ருத்தி ரூபையாகவும் துக்கநிவ்ருத்தி ரூபையாகவுமிருப்பது, அனுகூல

ப்ரதிகூலஸம்பந்தமில்லாத தன்ஸ்வரூபத்தோடு இருத்தலில் துக்கநிவ்ருத்தி அம்சத்துக்கு ஸாமாநாதிகரண்யத்தால் வ்யபதேசம். துக்கநிவ்ருத்தியே ஸுகமானால் துக்கநிவ்ருத்தி இருக்கையில் சுக நிவ்ருத்தி உண்டாகக்கூடாது. அப்பொழுது ஸுஷுப்தியிலுங்கூட ஸுக ஸம்பந்தம் ப்ரஸங்கிக்கும் இரண்டுக்குள் ஒன்றின் நிவ்ருத்தியானது இரண்டுக்குள் ஒன்றின் ஸம்யோகமாகுமேயாகில் உறக்கத்திலும் ஸுக துக்கங்களின் ஸம்பந்தம் ப்ரஸங்கிக்குமென்று கருத்து. அபூர்வத்துக்கு ஆனுகூல்யாஸம்பவத்தில் த்ருஷ்டாந்தாபிப்ராயத்தால் க்ரியை முதலியவற்றை எடுத்தது. 'க்ரியாதே:' என்கிற இடத்திலுள்ள ஆதிசப்தத்தால் ப்ரயத்னம் சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. ஸுகத்துக்கு ஸாதனமாக இருப்பதுபற்றி அனுகூலத்வமென்று சொல்லப்படுமேயானால் அந்த விஷயத்தில் சொல்லுகிறார்—ந என்று. எதனாலென்று கேழ்க்கப்படுமேயானால் கூறுகிறார்— துக்காத்மகத்வாத் என்று. தஸ்ய-க்ரியை முதலியதற்கு ப்ரதிகூலமாக பாஸிப்பதாவது ப்ரதிகூல விஷயஜ்ஞானமாவது துக்கமே ஒழிய அவைகளைவிட வேறாக இருக்கிற ஆத்மாவைச்சார்ந்திருக்கிற வேறு குணமல்லவென்று அபிப்ராயப்பட்டுதுக்காத்மகத்வாத் என்கிற இந்த ஹேதுவானது கூறப்பட்டது. ஸுகார்த்ததயா என்று. தண்டம் சக்கிரம் முதலியது குடமாக ஆகிறதில்லையன்றோவென்று அர்த்தம். அஸுகார்த்தமான வஸ்துவைக்காட்டிலும் ஸுகார்த்தமாக இருக்கிற வஸ்துவுக்கு என்னவேற்றுமையென்று கேழ்க்கப்படுமேயானால் கூறுகிறார்— ஸுகார்த்த தயாபி என்று. க்ருதிக்கு எது சேஷியோ அதுதான க்ருதிக்கு உத்தேச்யமென்கிற பக்ஷத்தை தூஷிக்கிறார்—நச என்று, அநிரூபணாத்-எவ்விதத்தாலும் நிரூபிக்கமுடியாததாக இருப்பதாலென்று பொருள். பரோத்தேச ப்ரவ்ருத்த க்ருதி வ்யாப்த்யர்ஹத்வம் சேஷத்வமென்கிற பக்ஷத்தை அனுவாதம்செய்து தூஷிக்கிறார்—நசபரோத்தேசப்ரவ்ருத்தஇது முதலியதால். 'நசபரோத்தேச ப்ரவ்ருத்த்யர்ஹதயா:' என்று. உத்பத்தி என்பது ப்ரவ்ருத்தியுள்ளவனுடைய வ்யாபாரம். ஆகையால் ப்ரவ்ருத்திக்குத்தகுதியுற்றிருத்தல் உத்பத்யர்ஹத்வம்-பரோத்தேச ப்ரவ்ருத்யர்ஹதையானது சேஷரூபமாக இருப்பதாலென்று அர்த்தம். 'உத்தேச்யத்வஸ்யைவ நிரூப்யமாணத்வாத்'என்று. இது அர்த்தம்-க்ருதிக்கு உத்தேச்யமாக இருத்தல் க்ருதிசேஷித்வம். சேஷித்வமென்பது சேஷமாக இருக்கிற வஸ்துவுக்கு ப்ரதிஸம்பந்தியாக இருத்தல். பரோத்தேசப்ரவ்ருத்திக்கு அர்ஹமாக இருத்தல் சேஷத்வம் என்று சொல்லப்பட்டால் உத்தேச்யத்வமென்பது உத்தேச்யத்வம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறதென்பதனால் ஆத்மாச்ரய தோஷம் ஏற்படுகிறது. உத்தேச்ய நிரூபணத்திற்கு உபயுக்தமான சேஷத்வ நிரூபணமானது உத்தேச்ய நிரூபணத்தை அபேக்ஷிப்பதால் என்று பரோத்தேச ப்ரவ்ருத்தியின் அயோக வ்யவச்சேதம் சொல்லக்கருதப்பட்டிருக்கிறதா? அல்லது அன்யயோகவ்யவச்சேதம் சொல்லக்கருதப்பட்டிருக்கிறதா? என்கிற விகல்பத்தில் முதலாவதுகல்பத்தில் ராஜாவினிடத்தில் அதிவ்யாப்தியைச் சொல்லுகிறார்—ப்ரதாநஸ்யாபி என்று. இங்கு உத்தேச்ய சப்தத்தால் ப்ரயோஜந பாவாபிஸந்தியானது சொல்லக்கருதப்பட்டிருக்கிறது. அதன் பரிஹாரமுகத்தால் இரண்டாவது கல்பத்தை சங்கிக்கிறார்-ப்ரதாநஸ்து என்று. பரோத்தேசத்தால் ஏற்படுகிற ப்ரவ்ருத்தியின் அன்யயோக வ்யவச்சேதமானது சொல்வதற்கு விரும்பப்பட்டிருக்கிறது. அதோ ப்ரதானத்துக்கு இல்லை. தன்னுத்தேசத்தாலும் அதற்கு ப்ரவ்ருத்தி ஏற்படுவதால். ஆதலால் அதிவ்யாப்தி இல்லை என்று அர்த்தம். பரிஹரிக்கிறார்—ந என்று. ப்ருத்யர்களில் அவ்யாப்தியைச் சொல்லுகிறார்—

ப்ருத்யோபிஷீ என்று. கார்யத்திற்கு ப்ரதிஸம்பந்தியாக*இருத்தல் சேஷத்வம் என்கிற பக்ஷத்தை தூஷிக்கிறார்—கார்யஸ்வரூபஸ்ய என்று. கார்யத்தின் ஸ்வரூபம் நிரூபிக்கப்படாநின்றிருக்கையில் பலம் பாவார்த்தம் இவைகளைக்காட்டிலும் வேறான ஆகாரத்தால் அதை நிரூபிப்பதற்காக கார்யத்வம் க்ருத்யுத்தேச்யதவ மென்று உரைக்கப்பட்டது. உத்தேச்யத்வமாவது சேஷித்வம். சேஷித்வமாவது சேஷப்ரதிஸம்பந்தியாக இருத்தல். சேஷத்வமாவது கார்யப்ரதிஸம்பந்தியாக இருத்தலென்று சொல்லப்படுமேயாகில் ஆத்மாச்ரயதோஷமுண்டாகும். கார்ய நிரூபணத்துக்கு உபயுக்தமான சேஷத்வ நிரூபணமானது கார்யநிரூபணத்தை அபேக்ஷித்திருப்பதால் என்று அர்த்தம்.

பாஷ்யகாரருக்கு அபிமதமாக இருக்கிற சேஷத்வ லக்ஷணத்தை அங்கீகரித்து க்ருத்யுத்தேச்யத்வ ஸமர்த்தனமும் சக்யமன்று. அப்படியன்றோ "பரகதாதிசயாதானேச்சயா உபாதேயத்வமேவ யஸ்யஸ்வரூபம் ஸ சேஷ: பரச்சேஷீ" இதன் பொருள் சேஷகமாக இருக்கிற வஸ்துவைக்காட்டிலும் வேறானசேஷியை அடையத்தகுதியுள்ள மேன்மையை உண்டுபண்ணவேண்டுமென்கிற விருப்பதால் உபாதேயத்வமே எந்த வஸ்துவுக்கு ஸ்வரூபமோ அது சேஷம். இதனாலுண்டுபண்ணப்படுகிற அதிசயத்தை அடைகிற மற்றவன் சேஷீ என்று. பாஷ்யகாரர் வேதார்த்தஸங்க்ரஹத்தில் சேஷி லக்ஷணத்தைச் சொன்னார். 'சேஷ:பரார்த்தத்வாத், என்கிற சேஷசேஷிபாவ லக்ஷண ப்ரதிபாதகமான ஜைமினீய ஸூத்ரத்திற்கு அன்யர்களால் வியாக்கியானம் வேறுவிதமாகச்செய்யப்பட்டிருப்பதால் அதை விலக்குவதற்காக அந்த ஸூத்ரத்திற்கு அர்த்தம் இந்த லக்ஷணக்ரந்தத்தால் உள்ளது உள்ளபடி காண்பிக்கப்படுகிறது. இதன் அர்த்தம் உரைக்கப்படுகிறது.—அன்யனுடைய ப்ரயோஜனமே எவனுக்கு பரமப்ரயோஜனமோ அவன் சேஷன். அன்யன் சேஷீ என்று வாக்கியார்த்தம். இந்த இடத்தில் பரசப்தம் அன்யன் என்கிற அர்த்தத்தை உணர்த்துகிறது. பரசப்தம் அதிசய சப்தம் இவ்விரண்டுக்கும் கர்மதாரயஸமாஸசங்கையைப் போக்குவதற்காக மத்தியில் கத சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. அதனால் தன்னை அடைந்திருக்கிற அதிசயத்திற்கு ஆதாயகனாகஇருக்கிற சேஷியினிடத்தில் அதிவ்யாப்தி விலக்கப்பட்டது. அதிசய சப்தமானது ப்ரதிகூலங்களான ஆகாரங்களுக்கு இதரங்களான ஆகாரங்களை உணர்த்துவதில் நோக்கமுள்ளது. அல்லது நிக்ருஷ்டங்களான ஆகாரங்களைக்காட்டிலும் வேறாக இருக்கிறஆகாரங்களை உணர்த்துவதில் நோக்கமுள்ளது. அதனால் அன்யனை அணுகுகிறவிநாசத்துக்கு ஹேதுவாக இருக்கிற சஸ்திரம், நெருப்புமுள்,முதலியவைகளுக்கு விநாசம்செய்யப்படத்தக்க வஸ்துவைக் குறித்து சேஷத்வம் விலக்கித்தள்ளப்பட்டது. துக்கஹேதுக்களாக இருக்கிற யாதநா சரீரங்களில் அவ்யாப்தி இல்லை. அவைகளும் துக்கத்தை உண்டுபண்ணி அதன் வாயிலாக பாபக்ஷய ரூபமான அதிசயத்துக்குக் காரணமாக இருப்பதால். அபூர்வமானது உண்டாகாமலிருக்கையில்* வ்ரீஹி முதலியவைகளால் அதிசயாதானமுண்டுபண்ணப்படாமையால் அவைகளில் அவ்யாப்தி என்று சொல்லத்தக்கதல்ல. ஸத்தாலாபம் அதிசயரூபமாதலால். தாழ்மையை உருவமாகக்கொண்ட தர்மத்தைக்காட்டிலும் வேறாக இருக்கிற ஆகாரமன்றோ அதிசயம். கல்வியில் சிறந்தவரே! எந்தவஸ்துஸ்வரூபமான ஸம்பந்தத்திற்குத் தகுதியுள்ளதோ, அல்லது வ்யவஹாரத்துக்குத் தக்கதோ, அதே ஸத்தென்பதன்றோ உம்முடைய மதம்- ஸத்தாஜாதி இல்லாமையால்

* வ்ரீஹி—நெல்.

அவ்வாறு இருக்க எவ்வாறு ஸ்வரூபமே ஆகாரமென்று உரைக்கப்படுகிறது. அல்ல ஸ்வரூபமே ஸத்தாரூபமாக இருந்தபோதிலும் அதன் லாபத்துக்கு ஆகாரத்வம் உபபன்னமாவதால். ஸத்தாலாபமன்றோ அதிசயமென்று கூறப்பட்டது. ஸத்தாரூபமான ஸ்வரூபத்தினுடைய லாபமாவது ப்ரதமலக்ஷண ஸம்பந்தம். ஸ்வரூபமில்லாமலிருந்தபோதிலுங்கூட புத்தியில் நிலைபெற்றிருப்பதால் பராதிசயாதானம் பொருத்தமுள்ளதாக ஆகிறது. இச்சயா என்கிற பதத்தினால் அன்யனை அடைந்திருக்கிற அதிசயமானது இச்சாவிஷயமாக இருப்பதால் ப்ரயோஜனத்வமறியப்படுகிறது. இச்சா பதமும் உபபதத்துடன் சேர்ந்திராமையால் நேராகவே இச்சாவிஷயத்வமபிப்ராயப்படப்பட்டிருக்கிறது. நேராக எது இச்சாவிஷயமோ அது பரமப்ரயோஜனம். அவாந்தரப்ரயோஜனமானது அந்த பரம ப்ரயோஜனார்த்தமாக இருப்பதனால் இஷ்டமேயொழிய அதற்குநேரில் இச்சாவிஷயத்வமில்லை. ஆகையால் பரம ப்ரயோஜன ஜ்ஞாபகோ 'இச்சயா'' என்கிற பதத்தால் பரார்த்தத்வாத் என்கிற பதத்திலுள்ள அர்த்த சப்தமானது வ்யாக்யானம் செய்யப்பட்டதாக ஆகிறது. அர்த்யதே வேண்டப்படுகிறது என்கிற வ்யுத்பத்தியினால் அர்த்த சப்தம் ஏற்படுகிறது. இச்சிக்கப்படுகிறதென்று அர்த்தம். உபபதமில்லாத அர்த்தசப்தமானது தானாகவே பரமப்ரயோஜனத்தைச்சொல்லுகிறது. இதனால் தனக்குமேன்மையை உண்டுபண்ணுகிற ப்ருத்யன் முதலிய வஸ்துக்களிடம் லக்ஷணத்திற்கு அவ்யாப்திசங்கையின் நிராஸம். வேலைக்காரன் தன்னுடைய அலங்காரம்முதலியதைக்கூட ஸ்வாமியிசங்கைன் அதிசயத்தின்பொருட்டு ஆகிறதென்று தன்புத்தியினால்தனக்கு அதிசயத்தை உண்டுபண்ணிக்கொள்ளுகிறானன்றோ. அதனால் ப்ருத்யனால் தன்னுடைய அதிசயாதானத்திற்கு பராதிசயமானது பரமப்ரயோஜனமாக இருப்பதால் அவ்யாப்தி இல்லை. உபாதேயத்வம் ஸ்வீகரிக்கத்தக்கதாக இருத்தல். வ்யவஹரிக்கத்தக்கதாக இருத்தலென்று அர்த்தம். இச்சைஸ்வீகாரம் இரண்டும் வஸ்துக்குத் தக்கபடி ஸம்பவிக்கின்றன. சேஷசேஷீ இவ்விரண்டுக்குள் ஒன்றிலாவது ஸம்பவமிருந்தால் இச்சை ஸ்வீகாரம் இவ்விரண்டும் அவைகளை அடைந்தவைகளாக ஆகின்றன. எப்படி ராஜப்ருத்யன் ராஜா அவனுடைய அரண்மனை முதலியதிலோ. இரண்டும் அசேதனங்களாக இருக்குமேயாகில் இச்சை ஸ்வீகாரம் இரண்டும் இரண்டைவிட வேறான சேதநத்தை அடைந்திருக்கின்றனவோ. எப்படி ப்ரபை ப்ரபையுடன்கூடியது, யாகம் அந்தயாகாங்கம் முதலியதிலோ. உபாதேயத்வம் எடுத்துக்கொள்வதற்குத்தக்கதாக இருத்தல். அதனால் அகிஞ்சித்காரதசையில் அவ்யாப்தி பரிஹாரம் ஏற்பட்டது. ஏவகாரத்தால் ஒரு ஸமயத்தில் ஸ்வப்ரயோஜனத்தில் அபேக்ஷை இன்றி பரப்ரயோஜநஸாதகர்களாயும் சிறந்த க்ருபை ஸ்நேஹம் இவைகளுடன் கூடியவர்களாகவுமிருக்கிற மனிதர்களிடம் ஏற்படுகிற அதிவ்யாப்தி நிரஸிக்கப்பட்டது.

அன்றிக்கே எரு ஆகாரத்தால் உபஹிதமாக இருப்பதற்கு சேஷத்வமிருக்க அதனால் உபஹிதமல்லாததற்கு சேஷத்வத்தை விலக்குவதற்காக ஏவகாரம். எது உபாதியுடன் சேர்ந்ததன்றோ அது வேறு ப்ரயோஜனத்திற்கு ஸாதகமாதலால் அதற்கு பராதிசயைக ப்ரயோஜநத்வமில்லாமையால். ஸ்வரூபம் தன்னுடையரூபம். அஸாதாரணதர்மம். நிரூபகதர்மமென்று பொருள். நிரூபக சப்தத்திற்கு வ்யுத்பாதனம் ப்ரயோஜனமாதலால் வ்யாவ்ருத்திக்கத்தக்க தர்மங்களின் அபேக்ஷை இல்லை. பராதிசயமே எதற்கு பரம ப்ரயோஜனமோ அதுமற்றொன்றைக்குறித்து சேஷமென்று இலக்கண

சொல்லப்பட்டதாக ஆகிறது. எதனுல் பரம ப்ரயோஜனமான பராதிசயத்திற்கே ஆதாயகத்வம் லக்ஷணமோ அதனுலேயே பாகதமான அதிசயாதானத்தின் அயோகாந்யயோக வ்யவச்சேத விகல்பத்தால் ராஜா ப்ருத்யன் இவ்விருவர்களிடங்களிலும் அதிவ்யாப்தி அவ்யாப்திகளைச் சொல்லுதல் நம்ம பக்ஷத்தில் எரங்குகிறதில்லை. பராதிசய மாத்ராதாயகத்வம் என்பது லக்ஷணமாகாததால். த்வாரசேஷியைநாடி இருக்கிற அதிசயத்திற்கு பரமசேஷியை அடைந்திருக்கிற அதிசயத்தைக் குறித்து ப்ரயோஜகத்வமிருந்தபோதிலும் அது பரம ப்ரயோஜனமல்லாமையால் த்வாரசேஷியைக்குறித்து சேஷபூதமான வஸ்துவில் லக்ஷணத்திற்கு அவ்யாப்தியானது ஸந்தேகிக்கத்தக்கது. சேஷமாக இருக்கிற வஸ்துவை அடைந்திருக்கிற அதிசயத்தை அபேக்ஷித்து சேஷியை அடைந்திருக்கிற அதிசயத்திற்கு மேன்மை மாத்திரம் சொல்லக்கருதப்பட்டிருப்பதால் பரமசேஷியை அடைந்திருக்கிற அதிசயரூபமான பரமப்ரயோஜநத்வத்திற்கு நிராகரிக்கத் தக்க தன்மை இல்லாமையால். ஆதலால் த்வார சேஷியை அணுகி இருக்கிற அதிசயமானது சேஷமாக இருக்கிற வஸ்துவை அடைந்திருக்கிற வேறான அதிசயத்தை உண்டுபண்ணுகிறபடியால் ப்ரயோஜனத்வமானது பரம சப்தத்தால் நிரஸனம் செய்யத்தக்கது. அய்யனே! புருஷஶ்ச கர்மார்த்தத்வாத், என்று புருஷனுக்கு கர்ம சேஷத்வமானது கர்ம மீமாம்ஸையில் ஸித்தாந்தம் பண்ணப்பட்டிருக்கிறது. புருஷனும் ஸ்வர்க்கத்தில் விருப்பமுள்ளவனாதலால் அவனுக்கு பராதிசய நிஷ்பாதனமே பரம ப்ரயோஜனமாக ஆகிறதில்லை. ஆதலால் அவ்யாப்தி என்றுசொல்லப்படுமேயானுல் அல்ல. அவனுக்கு கர்த்ருத்வத்தாலு பஹிதமான வேஷத்தால் சேஷத்வத்தாலும் உபஹிதனுக்கு கர்மத்தைச் செய்வதே முக்கிய ப்ரயோஜனமாக இருப்பதாலும் கர்மசேஷத்வம் பொருந்துவதால். வாதத்தில் திறமை வாய்ந்தவரே! இந்த லக்ஷணமானது அஸம்பவ தோஷத்தால் கெடுக்கப்பட்டுவிட்டது அறிவுள்ளவன் ஒருவனுவது பிறரை அடைந்திருக்கிற மேன்மையானது தன் பரமப்ரயோஜனமென்று எண்ணி அதற்காக ப்ரவ்ருத்திக்கிறானில்லையன்றோ. பின்னையோ பரப்ரயோஜனத்தையும் தன் ப்ரயோஜனார்த்தமாக எண்ணியன்றோ ப்ரவ்ருத்திக்கிறான். சொல்லப்படுகிறது இவ்வெண்ணம் அஸம்பவமில்லை. அசேதநங்களில் பராதிசயத்தையே ப்ரயோஜனமாகக் கொண்டிருத்தல் என்கிற தன்மை காணப்படுவதால். என்றாலும் சேதநன் தன் இச்சையினுல் தன்னுடைய ப்ரயோஜனத்தையே அன்யனுடைய ப்ரயோஜனமாக எண்ணுகிறான். ஆயினும் லக்ஷணத்திற்குக் குறைவொன்றுமில்லை. ஜன்மக்ரியை இவை முதலியவைகளை அறிந்தவர்களான மத்தியஸ்தர்களால் பராதிசய நிஷ்பாதனத்தையே ப்ரயோஜனமாகக் கொண்டிருப்பதாக அறிவதற்கு சக்யமாக இருப்பதால். இச்சை ஸ்வீகாரம் இவ்விரண்டும் ஸம்பவத்துக்குத் தக்கபடி என்று சொல்லப்பட்டிருக்கிறதன்றோ. அப்படிப்ரதிபத்தியோக்யத்வமநிஷ்டமாக இருந்தபோதிலும் விடத்தகாத தென்பதை ப்ருத்யன் தானும் அறிகிறான். மேலும் பராதிசயம் பரமப்ரயோஜன மென்கிற ஜ்ஞானமானது தன்படியாகவே சேதநனுக்கும் உண்டாகிறது. சிறந்த கருணை நேசம் இவைகளோடு கூடியவர்களிடங்களில் அது காணப்படுவதால். தயை என்பது தன் ப்ரயோஜனத்தை அபேக்ஷியாமல் அன்யதுக்கத்தை ஸஹியாமலிருத்தல். இந்த இடத்தில் அனுகூலர்களைக் காட்டிலும் வேறாக இருக்கிற மனிதன் பர சப்தத்தால் சொல்லக்கருதப்பட்டிருக்கிறான். பொருள் முதலியவற்றில் விருப்பத்தால் அன்யனுடைய துக்கத்தைத்தனிக்க

விருப்ப முள்ளவனுக்கு அந்த துக்கத்தின் தொடர்ச்சியானது அனிஷ்டமாக ஆகலா மென்பதனால் அதை விலக்குவதற்காக ஸ்வார்த்தா நபேக்ஷசப்தம். என்றாலும் க்ருபையினால் அன்யனைக் காப்பாற்றுகிறவனுக்கு சாஸ்த்ர ஸித்தமான அத்ருஷ்ட மிருக்கிறது. ஆயினும் அத்ருஷ்டாபிஸந்தி இல்லாதவனுக்கே அன்யனுடைய துக்கத்தைப்பார்த்த நிமிஷத்திற்கு அடுத்த நிமிஷத்திலேயே அவனறியாமல் கண்ணீர்விடுதல் முதலிய துக்கக்குறிகள் காணப்படுவதாலும் அவனைக்காப்பாற்றுகிற தசையிலும் அத்ருஷ்டாபி ஸந்தியின் இன்மை காணப்படுவதாலும் ஸ்வப்ரயோஜனத்தில் அபேக்ஷை இன்மை யுக்தமானது, அன்யனுடைய துக்கத்தைப் பார்த்ததனாலுண்டுபண்ணப் பட்டிருக்கிறதும் அச்சமயத்திலுண்டாகிறதுமான தன் துக்கத்தின் நிவர்த்தி ரூபமான பலத்தினால் அந்தப்ப்ரவ்ருத்தி என்பதனால் ஸ்வார்த்தாநபேக்ஷை இல்லையென்று சொல்லப்படுமேயானால் இப்படிப்பட்ட ஸ்வார்த்தத்வம் சேஷனுக்குமிருக்கிறது. அவன் ஸ்வார்த்தா நபேக்ஷையை நாசம் செய்கிறதில்லை. பின்னேயோ அதற்கு அனுகூலமே. அன்யனுடைய துக்கத்தை உணர்த்தலென்கிற துக்க நிவ்ருத்தியையும் அன்யனுடைய அபிவ்ருத்தியின் உணர்ச்சியாகிற ப்ரீதியையும் தவிர்த்து ஸ்வார்த்தா நபேக்ஷத்வம் சொல்லக்கருதப் பட்டிருப்பதால். அவ்வண்ணமே மித்திரன் முதலியவர்களிடங்களில் ஸ்னேஹத்தின் ஆதிக்யத்தால் ஸ்வப்ரயோஜனத்தை அபேக்ஷியாமலுண்டாகுகிற ப்ரவ்ருத்தியானது பந்துக்களுக்கும் பொருளுக்கும் கீர்த்திக்கும் தர்மத்துக்கும் ஹானியைச் செய்கிறதாகவும் ப்ராண நாசத்தை உண்டுபண்ணுகிறதாகவும் காணப்படுகிறது. ஸம்பந்த விசேஷத்தோடு கூடியவர்களிடங்களில் உண்டாகிற ப்ரீதியானது ஸ்னேஹமென்று சொல்லப்படுகிறது. அஸ்தானத்தில் பயத்தை ஆசங்கித்தல் தோஷம் தோன்றாமலிருத்தல் தோஷத்தில் குணபுத்தி இவைமுதலியவைகள் எந்தநேசத்தின்பரிணாமங்களோ, ஸ்நேஹமுள்ள தாய்தகப்பன் முதலியவர்கள் தன்ஸத்தையை அபேக்ஷியாமல்புத்திரன் முதலியவர்களின் துக்கத்தை நிவ்ருத்திசெய்வதற்காக ப்ரவ்ருத்திக்கின்றவர்களாகக்காணப்படுகின்றார்கள். அப்படி ப்ரவ்ருத்தித்தலானது அந்த புத்திரன் முதலியவர்களை அணுகிஇருக்கிற துக்கத்தை தாங்காமையினால் செய்யப்பட்டிருக்கிறது. எவனுடைய துக்காதிசயதர்சனமானது தன்ஸத்தையில் அபேக்ஷையினது இன்மையைஉண்டுபண்ணுமோ அவன் சிறந்த ப்ரீதிக்கு விஷயமாகஇருப்பவன் அன்யனுடைய அனர்த்தத்தாலுண்டாகிற அப்ரீதியின் தாரதம்யமானது அவனிடத்திலுள்ள ப்ரீதிதாரதம்யத்தைக்காரணமாகக்கொண்டிருப்பதால். எவன் உயர்ந்தப்ரீதிக்குவிஷயமாக இருக்கிறானோ அவனுடைய அபிவ்ருத்தியும் அதிசம்ப்ரியமாக ஆகிறது. அவனுடையப்ரீதி தாரதம்யத்திற்கு அவன் ஸம்பந்தம்பெற்ற ப்ரீதியின் தாரதம்யம் ஹேதுவாக இருப்பதால் தன் ப்ரீதிக்கு ஹேதுவாக இருக்கிற தன்னுடைய ப்ரயோஜனங்களுக்கு ஸாதனமென்று அபேக்ஷியாமல் தன் இச்சைக்கு விஷயமாக இருப்பதால் அவனுடைய அப்யுதயமும் பரமப்ரயோஜனமாக ஆகிறது. ஆகையால் கருணையினாலோ ஸ்னேஹத்தினாலோ அன்யனுடைய துக்கத்தை ஸஹியாமலிருத்தல் காணப்படுவதால் பரப்ரயோஜனம் பரமப்ரயோஜனமாக ஸித்தித்து விட்டபடியால் சேஷ லக்ஷணத்திற்கு அஸம்பவமில்லை. பரமப்ரயோஜனரூபமான பாரதிசயத்தை உண்டுபண்ணுகிற தன்மையானது மித்ரன் முதலியவர்களிடத்திலுங்கூட ஸம்பவிப்பதால் லக்ஷணத்திற்கு அதிவ்யாப்தியானது சங்கிக்கத்தக்கதல்ல. அவர்களுக்கு பாரதிசயத்தையே ப்ரயோஜனமாகக்கொண்டிருத்த லென்கிற நியமமில்லாமையால். அது அவர்களுக்கு ஆகார விசேஷத்தால் உபஹிதலென்கிற நியமமில்லாமையால்.

ரூபத்தாலோ அல்லது உயிருள்ளவரையிலோ ஒரு புருஷனைக்குறித்து நியதமல்லாததாகவும் புருஷபேதத்தாலும் அநியதமாகவுமிருக்கிறது. ப்ருத்யர்களிடங்களிலோ அது நியதமாகஇருக்கிறது. சேஷிவிசேஷ நியமமில்லாவிடினும் யாரோவொருவனைக்குறித்து பாரார்த்யமானது அவனுடைய ஆத்மாவுள்ளவரையிலிருக்கிறது. இப்படிப்பட்ட தன்மை எங்கே காணப்படுகிறதில்லையோ அவர்களுக்குப் பாரார்த்யமில்லை. அங்ஙிங்கே என்றாலும் கர்ப்பதாஸன் முதலியவர்கள் தங்களுக்கு இருக்கிற பிறர்களுக்கே ப்ரயோஜனமாக இருத்தலென்கிற ஸ்வபாவத்தை அறியாதவர்களாக இருந்துகொண்டு சேஷிக்கு அதிசயாதானத்தையுங்கூட ஸ்வார்த்தமாக நினைக்கிறார்கள். அப்படியிருந்தபோதிலும் நான் பெருத்தவன் என்று தன்னுடைய ஆத்மாவுக்கு தேஹம் முதலியவற்றுடன் ஐக்யபுத்தி ஏற்படுவதுபோல அது ப்ராந்தியாக இருப்பதால் லக்ஷணத்திற்கு அவ்யாப்தி இல்லை. ஸ்வார்த்ததா புத்தியானது நான் ஸ்தூலனென்கிற புத்திபோல் ப்ரமாணத்தால் பாதிக்கப்பட்டிருப்பதால். ஸ்வார்த்தத்வ ப்ராந்திமாத்திரத்தால் பாரார்த்யத்திற்கு ஹானி இல்லை. ஆத்மாவுக்கு உண்டாகிற 'நான் ஸ்தூலன்' என்கிற ப்ராந்தியினால் தேஹவைலக்ஷண்யத்திற்கு ஹானி இல்லையன்றோ. இவ்வண்ணம் சித் அசித் இரண்டுக்கும் ஸ்வாதந்த்ரிய புத்தியானது ச்ருதியினால் பாதிக்கப்பட்டிருப்பதால் லக்ஷணத்திற்கு அவ்யாப்தி தோஷமில்லை. வ்ரீஹி முதலியவைகளில் இவைகள் யாகஸம்பந்தம் பெற்றவைகளென்கிற ஜ்ஞானமில்லாமல் போனபோதிலும் அவைகளுக்குள்ள யாகசேஷத்வத்திற்கு ஹானி இல்லையன்றோ. பரமப்ரயோஜனரூபமான பரகதாதிசயத்தை தவறாமலுண்டுபண்ணாமலிருக்கிற ஸ்வதந்த்ராபிமான புருஷனுக்கு சேஷத்வலக்ஷணம் எவ்வாறு பொருந்துமென்று வினவப்படுமேயானால் அல்ல. இவன் புத்தியினால் அப்படிப்பட்ட எண்ணமில்லாமலிருந்தபோதிலும் உள்ளபடி அவன் பரமாத்மாவினுடைய லீலைக்கு உபகரணமாக இருப்பதால் பரமாத்மாவின் லீலாரஸரூபமான அதிசயமானது தவறாமல் ஸித்தி பெறுவதால். தத்வத்தை அறிந்தவர்களால் ஈச்வரபரிகரமாக தவறாமல் அறியப்படாமலிருத்தல் இவனுடைய [illegible]. அதனால் இவனால் பரிகாரமுள்ளவனாக அறியப்படாமலிருத்தலென்கிற அதிசயமானது அன்யனுக்கு ஸித்திக்கலாம். நீதி அறிந்தவர்களால் அந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. 'மாநாகுபகாரிதா ஸர்வஸ்யாத் யேவ தத் பரிகரத்வேந ஜ்ஞாயமாநத்வாத்' என்று சேஷபூதமான வஸ்துவினாலுண்டு பண்ணப்பட்ட லீலா ரஸாதிசயத்தை அடைதல் பரமாத்மாவினுடைய அவாப்த ஸமஸ்தகாமத்வ குணத்திற்கு விரோதியல்ல. இச்சை இருக்கையில் தனக்கு இஷ்டமான விநியோகத்திற்கு அனுகுணமான பரிகரங்களின் ஸம்ருத்தியல்லவோ அவாப்த ஸமஸ்தகாமத்வம் - பகவான் பாஷ்யகாரர் வேதாந்தஸாரத்தில் இவ்வண்ணமல்லவோ கூறுகிறார்—ஆத்மத்ருப்தனென் இவனுக்கு அவாப்த ஸமஸ்தகாமத்வமாவது எப்பொழுதும் அபிமதமான ஸகல போகோபகரணங்களின் இருப்பே என்று. ஆகையால் கூறப்பட்டுள்ள சேஷலக்ஷணம் பொருத்தமுள்ளது. இவ்வாறாக நம்மால் சொல்லப்பட்டிருக்கிற சேஷலக்ஷணத்தை அங்கீகரித்து க்ருதியைக்குறித்து சேஷித்வம் க்ருத்யுத்தேச்யத்வம் என்று அன்யர்களால் சொல்லுவதற்கு சக்யமாகாது. விகல்பத்தை ஸஹியாமையால். உன்னால் த்வார சேஷித்வம் க்ருத்யுத்தேச்யத்வம் என்பது அபிமதிக்கப்பட்டிருக்கிறதா? அல்லது பரமசேஷித்வம் க்ருத்யுத்தேச்யத்வமென்று அபிமதிக்கப்பட்டிருக்கிறதா? முதல் பக்ஷத்தில் பாவார்த்தத்துக்குக்கூட க்ருதி சேஷத்வமுண்டாகலாம். அது க்ருதி ஸாத்தியமாக இருப்பதால். இரண்

டாவது பக்ஷத்தில் ஸ்வர்க்கத்துக்கு க்ருதியைக்குறித்து சேஷித்வமுண்டாகலாம். க்ருதியினால் ஸாதிக்கத்தக்க அபூர்வமும் ஸ்வர்க்கஸாதனமாதலால். ஆதலால் க்ருதி சேஷித்வ ரூபம் க்ருத்யுத்தேச்யத்வமானது பலபாவார்த்த விலக்ஷணாகாரத்தால் ஸித்திக்கிறது.

---

𑌨𑌾𑌪𑌿 𑌕𑍃𑌤𑌿𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌤𑍍𑌵𑌂 𑌕𑍃𑌤𑍍𑌯𑍁𑌦𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍; 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌕𑍃𑌤𑌿𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑍍 । 𑌸 𑌚𑍇𑌷𑍍𑌟𑌵𑌿𑌷𑌯𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌤𑍍𑌵𑌾𑌤𑌿𑌰𑍇𑌕𑌿 𑌕𑍃𑌤𑍍𑌯𑍁𑌦𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍇𑌨 𑌕𑍃𑌤𑌿𑌸𑌾𑌧𑍍𑌯𑌤𑌾𑌕𑍃𑌤𑌿𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌤𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍂𑌪𑌮𑍇𑌵

𑌨𑌿𑌯𑍋𑌗𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌵𑌿𑌷𑌯𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌾𑌦𑍍 𑌦𑍁𑌃𑌖𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑍁𑌖𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌤𑌰𑌸𑌾𑌧𑌨𑌤𑌯𑍈𑌵𑍇𑌷𑍍𑌟𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌤 𑌏𑌵 𑌹𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌤𑌾; 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑍈𑌵 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; [illegible] 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌸𑍁𑌖𑌸𑌾𑌧𑌨𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌕𑍍𑌷𑌣𑌭𑌙𑍍𑌗𑌿𑌕𑌰𑍍𑌮𑌾𑌤𑌿𑌰𑍇𑌕𑌿 𑌸𑍍𑌥𑌿𑌰𑌂 𑌸𑍁𑌖𑌸𑌾𑌧𑌨𑌮𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌸𑍁𑌖𑌸𑌾𑌧𑌨𑌤𑌾𑌯𑌾𑌮𑍇𑌵 𑌹𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌅𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌨𑍍𑌵𑌯𑌿𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 [illegible] 𑌸𑍁𑌖𑌸𑌾𑌧𑌨𑌂 𑌭𑌵𑌤𑌿 [illegible] 𑌕𑍃𑌤𑌿𑌸𑌾𑌧𑍍𑌯𑌤𑌾 [illegible] ॥

---

ஶ்ரீபாஷ்யம்—

க்ருதி ப்ரயோஜநத்வமும் க்ருத்யுத்தேச்யத்வமல்ல. புருஷனுக்கு க்ருத்யாரம்ப ப்ரயோஜனமேயன்றோ க்ருதி ப்ரயோஜனம் – அது இச்சாவிஷயமாயுள்ளது. ஆகையால் இஷ்டத்வத்தைவிட வேறான க்ருத்யுத்தேச்யத்வம் நிரூபிக்கப்படாததால் க்ருதிஸாத்யதா க்ருதி ப்ரதானத்வ ரூபமான கார்யம் எவ்விதத்தாலும் நிரூபிக்க முடியாததே. நியோகமும் நேராக இச்சாவிஷயமாக இருக்கிற ஸுகம் துக்க நிவ்ருத்தி இவ்விரண்டைக்காட்டிலும் வேறானதால் அவைகளுக்கு ஸாதனமாக இருப்பதனாலேயே இஷ்டத்வமும் க்ருதி ஸாத்யத்வமும். அதனாலேயேயன்றோ அது க்ரியையைக்காட்டிலும்

வேறுபட்டிருக்கிறது. அங்ஙனமில்லாவிடில் க்ரியையே கார்யமாக ஆகலாம், ஸ்வர்க்ககாமபதஸந்நிதியாலே சுகத்துக்கு ஸாதனமாக யாகம் முதலிய ப்ரத்யயங்களால் வாச்யமான கார்யமானது ஸ்வர்க்க ஸாதனமே என்று தெரிகிறபொழுதில் அழிந்துபோகிற ஸ்வபாவமுள்ள கர்மங்களைவிட வேறானதும் சாச்வதமும் ஸ்வர்கஸாதனமாகயிருக்கிற அபூர்வமே கார்யமென்று ஸ்வர்கஸாதனதோல் லக்ஷணத்தாலேயே யன்றோ அபூர்வ வ்யுத்பத்தி ஏற்படுகிறது. ஆகையால் முதலில் அநந்யார்த்தமாக அறியப்பட்டிருக்கிற கார்யத்தின் அநந்யார்த்தத்வத்தை நிர்வஹிப்பதற்காக அபூர்வமே பிறகு ஸ்வர்கஸாதனமாக ஆகிறது என்பது பரிஹரிக்கத்தக்கது. ஸ்வர்க காமபதத்துடன் அன்வயித்திருக்கிற கார்யத்தைச் சொல்லுகிற பதத்தால் முதலிலும் அநந்யார்த்தத்வம் சொல்லப்படாமையாலும் ஸுகம் துக்க நிவ்ருத்தி ஆகிய இவைகளின் ஸாதனங்கள் இவைகளைவிட வேறான அநந்யார்த்தத்திற்கு க்ருதிஸாத்யதா ப்ரதீதியானது பொருந்தாததாலும்.

---

ச்ருதப்ரகாசிகை—

அதற்குமேல் க்ருதி ப்ரயோஜனத்வம் க்ருத்யுத்தேச்யத்வமென்கிற பக்ஷத்தை தூஷிக்கிறார்—நாபி என்று. சைதன்யமுள்ளதும் ப்ரயோஜனமுள்ளதுமான க்ருதி என்கிற ஒரு வஸ்து இல்லையன்றோ. ஆதலால் க்ருதிப்ரயோஜனமாவது க்ருதியுள்ள புருஷனுக்கு ப்ரயோஜனமென்று அர்த்தம். அதனால் என்னவென்று அபேக்ஷையாகில் அது இஷ்டத்தில் பர்யவஸிக்கிறதென்று சொல்லுகிறார்—ஸச என்று. க்ருதிஸாத்யதா க்ருதிப்ரதானத்வரூபம் கார்யம் ஆதுர்நிதிரேவ என்று. க்ருதிப்ரதானத்வ சப்தத்தால் வேர்வைஜலம் முதலியதின் வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. க்ருதி ஸாத்யதா சப்தத்தால் ஆத்மாவுக்கு வ்யாவ்ருத்தி ஏற்பட்டது. அதற்கு க்ருதி சேஷித்வமன்றோ இருக்கிறது விசிஷ்டம் லக்ஷணமாதலால் அதில் விசேஷ்யாம்சமானது நிரூபிக்கமுடியாமல் போனால் விசிஷ்டமே ஸித்தியாதென்று பொருள். இவ்வண்ணம் ஒன்றுவது ஆகார ரூபமான ப்ரயோஜனத்வம் தூஷிக்கப்பட்டது. அதற்குமேல் ஸ்வத: இஷ்டத்வரூபமான ப்ரயோஜனத்வத்தையும் அதனாலுண்டுபண்ணப்பட்டிருக்கிற க்ருதி ஸாத்யத்வத்தையும் தூஷிக்கிறார்—நியோகஸ்யாபி என்று. இஷ்டி: இச்சை-இங்கே இச்சைக்கு விஷயமாக ஆய்இருக்கிற அர்த்தாந்தர ஸாதநத்வ மில்லாமையால் இஷ்டத்வமென்பது ஸ்வத: இஷ்டத்வமே சொல்ல விரும்பப்பட்டிருக்கிறது. அது ஸுகத்துக்கும் துக்க நிவ்ருத்திக்கும் ஸமானம். தானாகவே இஷ்டமாக இருத்தலும் ஸ்வத: இஷ்டத்வத்தாலுண்டுபண்ணப்பட்டிருக்கிற க்ருதி ஸாத்யத்வமும் அவ்விரண்டுகளுக்கே ஆகையால் தானாக இஷ்டத்வமும் அப்படிப்பட்ட இஷ்டத்வத்தாலுண்டுபண்ணப்பட்டிருக்கிற க்ருதி ஸாத்யத்வம் இரண்டும் அவைகளுக்கு ஸாதனமாக இருப்பதால் இஷ்டமான நியோகத்துக்கு ஸித்திக்கிறதுகளில்லை என்று அர்த்தம். ஸாதனமாக இருப்பதால் இஷ்டத்வத்தை உபபாதனம் செய்கிறான்—அதஏவஹி என்று. ஸாதனமாக ஸித்தியை அங்கீகரிக்காத பக்ஷத்தில் தாதுவின் அர்த்தமே கார்யமாக ஆகலாம் என்று சொல்லுகிறார்—

அந்யதா என்று. இதை விவரிக்கிறார்—ஸ்வர்ககாம என்று. அத: என்று, ஸ்வர்க காமபதான்வயத்திற்கு முந்தி தாதுவின் அர்த்தமாத்திரத்திற்கே கார்யதா ப்ரதிபத்தியினாலும் அதோடு அன்வயம் வரின் அதற்கு ஸாதனமாகவே ப்ரதிபத்தியினாலுமென்று அர்த்தம். ப்ரதமமனன்யார்த்ததயா ப்ரதிபன்னஸ்ய கார்யஸ்யா நந்யார்த்தத்வ நிர்வஹணாய பூர்வமேவ பச்சாத் ஸுகஸாதகம் பவதிஎன்று. இது அர்த்தம். எப்படி தனக்கு ப்ராதான்யத்தை நிர்வஹிப்பதின் பொருட்டு தன் வேலைக்காரர்களுக்கு அபிமதவஸ்துக்களை ப்ரபுவானவன் கொடுக்கிறானோ அப்படிப்போல அபூர்வமும் தான்ப்ரதானமாக இருந்து கொண்டு தனக்கு ப்ராதான்யத்தை நிர்வஹிப்பதற்காகத்தன்னை கர்மங்களின்வாயிலாக உண்டுபண்ணுகிற புருஷனுக்கு ஸ்வர்கத்தைக்கொடுக்கிறது என்று பஞ்சிகையில் இந்த விஷயம் நன்கு சொல்லப்பட்டிருக்கிறது. 'ஆத்மஸித்த்யனுகூலஸ்ய நியோகஸ்ய ப்ரஸித்தயே । குர்வத் ஸ்வர்காதி கமபி ப்ரதாநம் கார்யமேவ ந:' என்று உபஹாஸ்யம் பக்கத்திலிருப்பவர்களால்கூட சிரிக்கத்தக்கது. அத: என்று. சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்தை விவரிக்கிறார்— ஸ்வர்ககாம என்று. கார்ய ப்ரதிபத்தியானது ப்ரதானமென்பது ஒரு பதத்தைக்கேழ்க்கும் தருணத்திலே ஏற்படுகிறதா? அல்லது ஸ்வர்க காம பதத்தோடு சேர்ந்திருக்கிற தருணத்திலே ஏற்படுகிறதா? என்கிற விகல்பத்தை அபிப்ராயப்பட்டு முதலாவது கல்பத்தில் தூஷணமானது 'அந்யதாக்ரியைவ கார்யம் ஸ்யாத்' என்பதனால் கூறப்பட்டதாக ஆகிறது அதே பக்ஷத்தில்அங்கீகாரத்தால்வேறு தூஷணமும் ஒரு பதத்தால் கார்யம் அநந்யார்த்தமாக ப்ரதிபன்னமாக இருக்கட்டும், அப்படி இருந்தபோதிலும் அன்விதாபிதான தசையில் அறியப்பட்ட அர்த்தமே நல்ல அர்த்தம். அதனால் அநந்யார்த்தத்வமில்லை என்று. இரண்டாவது கல்பத்தில் தூஷணம் கூறப்படுகிறது. ஸ்வர்ககாமபதான்வித என்று. ஸ்வர்ககாமபதத்தோடு சேர்ந்திருக்கிற லிங் முதலியதால். அதற்குஸாதனமாகவே சொல்லப்பட்டிருப்பதால் முதலில் அநந்யார்த்தமாக அறியப்பட்டிருக்கிறதென்று சொல்வது யுக்தமல்லவென்று அர்த்தம். வ்யுத்பத்தி தசையில் அபூர்வமானது ஸாதனமாக அறியப்படுகிறது. அபிதான தசையிலோவென்றால் அநந்யார்த்தமாகவும் ஸ்தாயியாகவும் கார்யமென்றே அறியப்படுகிறதென்கிறசங்கைவரின அபூர்வ வ்யுத்பத்தியுள்ளவனான புருஷனுக்குங்கூட ஒரு பதத்தைக்கேழ்க்கும் தருணத்தில் அநந்யார்த்தத்வ ப்ரதீதியின் அனுபபத்தியைக்கூறுகிறார்-ஸுக என்று. விசேஷமின்றி ஸாமான்யம் கிடையாது என்கிறநியாயத்தால்ஸாத்யமென்று ஸாமான்யமாக சொல்லப்படாநின்றிருந்தபோதிலும் விசேஷத்தில் நிலைபெற்றதாக அறியப்படுகிறது. ஸுகமோ துக்கநிவ்ருத்தியோ அவைகளுக்கு ஸாதனமோ இம்மூன்றே க்ருதி ஸாத்தியங்கள். ஆகையால் இம்மூன்றுக்குள் ஒன்று ஸாத்தியமாக இருக்கத்தக்கது. அதில் ஸுகத்வ துக்க நிவ்ருத்தித்வங்கள் பொருந்தாதலால் ஸாத்யம் ஸாதனமாகவே இருக்கிறதென்று அறியப்படுகிறது க்ருதியோவென்றால் இம்மூன்றுக்குள் ஒன்றைத்தான் விஷயீகரிக்கிறது. அப்படி காணப்படுவதால் எப்படி தர்சனமோ அதை அனுஸரித்தே ஒப்புக்கொள்ளத்தக்கது. க்ருதிக்கு க்ரியையைத்தவிர்த்தமற்றதை விஷயீகரிக்கிற தன்மை காணப்படாததாலன்றோ க்ருதி அபூர்வம் இரண்டுக்கும் ஸ்டைகமாக பாவார்த்தமானது வைக்கப்பட்டிருக்கிறது' ஆகையால் மூன்றுக்குள் ஒன்றாக இருத்தல் என்கிற தன்மை இல்லாவிடில் ஸாத்யம் என்கிற ஜ்ஞானமே உண்டாகாது என்று அர்த்தம். மேலும் அன்விதாபிதான வாதியினால் ஸ்வர்ககாமபதத்தோடு சேர்ந்தே இருக்கிற லிங் முதலியது கார்யத்தைச் சொல்லுகிறதென்று சொல்லத்தக்

